



# உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாட்டின் மையநோக்க விளக்கப் பாடல்

பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் -
பிறந்த பின்னர், யாதும் ஊரே.யாவரும் கேளிர்!

உண்பது நாழி உடுப்பது இரண்டே
        உறைவிடம் என்பது ஒன்றேயென
        உரைத்து வாழ்ந்தோம் -
        உழைத்து வாழ்வோம்.
தீதும் நன்றும் பிறர் தர வாரா எனும்
நன் மொழியே நம் பொன் மொழியாம்!

போரைப் புறம் தள்ளி
பொருளைப் பொதுவாக்கவே
அமைதி வழி காட்டும்
அன்பு மொழி
அய்யன் வள்ளுவரின் வாய்மொழியாம்!

ஓரறிவு முதல் ஆறறிவு உயிரினம் வரையிலே
உணர்ந்திடும் உடலமைப்பை பகுத்துக் கூறும்
ஒல்காப் புகழ் தொல்காப்பியமும்
ஒப்பற்ற குறள் கூறும் உயர் பண்பாடு
ஒலிக்கின்ற சிலம்பும், மேகலையும்
சிந்தாமணியுடனே வளையாபதி குண்டலகேசியும்
செம்மொழியான நம் தமிழ் மொழியாம்!

அகமென்றும் புறமென்றும் வாழ்வை
அழகாக வகுத்தளித்து
ஆதி அந்தமிலாது இருக்கின்ற இனிய மொழி -
ஓதி வளரும் உயிரான உலக மொழி -

கம்ப நாட்டாழ்வாரும்
கவியரசி அவ்வை நல்லாளும்
எம்மதமும் ஏற்றுப் புகழ்கின்ற
எத்தனையோ ஆயிரம் கவிதை நெய்வோர் - தரும்,
புத்தாடை அனைத்துக்கும்
வித்தாக விளங்கும் மொழி !

நம் மொழி - நம் மொழி - அதுவே
செம்மொழி - செம்மொழி - நம் தமிழ் மொழியாம்!
வாழிய வாழியவே ! வாழிய வாழியவே ! வாழிய வாழியவே !

**கலைஞர்**




# உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு

## கோவை - சிறப்பு மலர்

திி. ஆ. 2041 ஆனி 9-13, கி.பி.2010 சூன் 23-27

# உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு - சிறப்பு மலர்

## மலர்க் குழு

தலைவர்

பேராசிரியர் **க. அன்பழகன்**
மாண்புமிகு நிதித்துறை அமைச்சர்

துணைத் தலைவர்கள்

முனைவர் **மு. நாகநாதன்**
துணைத் தலைவர், மாநிலத் திட்டக்குழு

முனைவர் **க. திருவாசகம்**
துணைவேந்தர், சென்னைப் பல்கலைக்கழகம்

முனைவர் **சிலம்பொலி சு. செல்லப்பன்**

உறுப்பினர்கள்

முனைவர் **கரு.அழ. குணசேகரன்**
இயக்குநர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

வானதி திரு. **திருநாவுக்கரசு**, சென்னை

பூம்புகார் திரு. **பிரதாப்சிங்**, சென்னை

ஒருங்கிணைப்பாளர்

திரு. **கூ.வ. எழிலரசு**
இயக்குநர், தமிழ் வளர்ச்சித் துறை

---


## பதிப்பு விவரம்

உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு - சிறப்பு மலர்

© தமிழ்நாடு அரசு

தி.ஆ. 2041 ஆனி 09-13 கி.பி. 2010 சூன் 23-27, கோவை

**விலை ரூ. 600**

சிறப்பு மேற்பார்வை
முனைவர் சிலம்பொலி சு. செல்லப்பன்

ஓவியப் பாடல்கள்
கவிஞர் கூ.வ. எழிலரசு

ஆக்கத்துணை
திரு. க.ந. வீரபாகு சுப்பிரமணியன்
துணை இயக்குநர் - உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

தமிழ் வளர்ச்சித் துறை
உதவி இயக்குநர்கள்
திரு. ம.சி. தியாகராசன்
திரு. வெ. குமார்

கண்காணிப்பாளர்
திரு. கா.பொ. இராசேந்திரன்

முதுநிலை ஒப்பச்சர்கள்
செல்வி சொ. கலைச்செல்வி
திரு. தி. சதாசிவம்

தட்டச்சர்
திரு. எ. பழனி

ஒப்பச்சர்கள்
புலவர் வெற்றியழகன்
திரு. அரங்க. செல்லராமன்
முனைவர் சா. இராமு

வடிவமைப்பு
திரு. இரா. பாலாஜி
('தமிழரசு', செய்தி - மக்கள் தொடர்புத் துறை)

திரு. கா. நசீர் உசேன்
(டிஜிட்டல் பிரிண்டஸ்)

திரு. சி.ஆர். சிவானந்தன்
(சிலைக்காண்)

திரு. டி. கன்னியப்பன்
(அக்கார்ட் கிராபிக் மீடியா)

கணினியச்சு
கா. இந்திராகாந்தி
(ரமணா கிராபிக்ஸ்)

உலகத் தமிழாராய்ச்சி நிறுவன ஆய்வு மாணவர்கள்
திரு. பொ. வேல்முருகன்
திரு. சு. செந்தில்குமார்

# தமிழ்த் தாய் வாழ்த்து

நீராரும் கடலுடுத்த நிலமடந்தைக் கெழிலொழுகும்

சீராரும் வதனமெனத் திகழ்பரதக் கண்டமிதில்

தெக்கணமும் அதிற்சிறந்த திராவிடநல் திருநாடும்

தக்கசிறு பிறைநுதலும் தரித்தநறும் திலகமுமே!

அத்திலக வாசனைபோல் அனைத்துலகும் இன்பமுற

எத்திசையும் புகழ்மணக்க இருந்த பெரும் தமிழணங்கே!
தமிழணங்கே!

உன் சீரிளமைத் திறம்வியந்து

செயல் மறந்து வாழ்த்துதுமே !
வாழ்த்துதுமே !
வாழ்த்துதுமே !!

– ‘மனோன்மணீயம்’ சுந்தரனார்



உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாட்டைத் தொடங்கி வைப்பவர்
மேதகு இந்தியக் குடியரசுத் தலைவர்

**திருமதி பிரதிபா தேவிசிங் பாட்டீல்**

राष्ट्रपति
भारत गणतंत्र
**PRESIDENT**
**REPUBLIC OF INDIA**

## MESSAGE

I am happy to learn that the "World Classical Tamil Conference" is being held during June 23 - 27, 2010 at Coimbatore.

The Tamil language occupies a unique place among the languages in the world. The language, its rich literature and its cultural dynamics are representation of the evolution of a great heritage and tradition. The Chief Minister of Tamil Nadu, Shri Karunanidhi, himself a renowned poet, orator and litterateur, has contributed immensely towards the promotion and enrichment of Tamil literature and language.

I am confident that the Conference will be an opportunity for the participants, researchers and common people, particularly the younger generation, from India and abroad, to exchange ideas and thoughts on various aspects of Tamil culture including art, literature, music, dance, history and contemporary issues. In this way the rich heritage of the State would be highlighted at this grand conference.

I extend my warm greetings and felicitations to the organizers and the participants and wish the Conference all success.

Pratibha Patil

Pratibha Devisingh Patil

New Delhi
June 14, 2010

सत्यमेव जयते

प्रधान मंत्री

Prime Minister

**MESSAGE**

I am glad to know that a World Classical Tamil Conference is being organized under the inspiring leadership of Dr. Kalaignar M. Karunanidhi. It is particularly gratifying that the UPA government was able to declare Tamil as a Classical Language. This historic step came about entirely because of the untiring efforts of Dr. Karunanidhi.

I am pleased to learn that the World Classical Tamil Conference is inspired by a new noble concept "*pirapokkum ella uyirkkum*" (All humans are one in circumstances of birth). This gathering of scholars from all over the world should be a moment of great pride and celebration for the entire country.

I convey my greetings on this joyous occasion to the organizers and participants.

(Manmohan Singh)

New Delhi
4 June, 2010

**SONIA GANDHI**
Chairperson
United Progressive Alliance (UPA)

10, Janpath
New Delhi - 110 011
Ph : 23012656, 23012686
Fax : 23018651

## MESSAGE

Classical Tamil culture, its literature, history and art, has deeply enriched human civilization from ancient times, and provided the world with some of its most immortal classics . The World Classical Tamil Conference, presided over by Dr. Kalaignar M Karunanidhi who is himself an illustrious embodiment of its living traditions, is a fitting tribute to its abiding stature, and its relevance to our times.

Classical Tamil literature reflects not just the beauty and grace of the Tamil language, but also Tamil culture's openness to new ideas from all corners of the world, and to its deep spiritual values. More than 2000 years ago, Tamil Nadu had thriving trade and cultural links with the Greeks and Romans, China, South-East Asia and the Arab lands. Chroniclers from those lands have written of the vibrancy and prosperity of Tamil society, and of the many ways in which their own cultures were enriched by their contacts with Tamil Nadu. To give just a few examples: It was Prince Bodhidharma of Kanchi who took Zen Buddhism to China, from where it spread to Japan; it was the Pallava script of Tamil Nadu from which the Javanese script evolved; the great Tamil classic Manimekhala continues to be performed in Thai and Cambodian dance; and Tamil words have enriched several European languages.

The Tamil language has produced some of the great masterpieces of world literature. Tiruvalluvar's sacred Kural continues to provide mankind invaluable ethical guidance, and inspires our values and beliefs to this day. Another great classic, Sangam poetry, enriched by contributions of people from all walks of life—farmers and fisherfolk, housewives and merchants, labourers and herdsmen as well as scholars and sages— also reflects the inclusive tradition of Tamil society.

Contd…2

That tradition of equality and inclusiveness was rousingly carried forward in the poetry of Subramanya Bharati, whose works fired the patriotism of all Indians during the freedom movement. Indeed, Tamil culture and literature have a long and shining tradition of speaking out against social divisions and superstitions, and seeking to teach universal truths. This is evident in the fact that Jains and Buddhists, Shaivites and Vaishnavites, Christians and Muslims, as well as rationalists and agnostics, have all expressed themselves most eloquently in the Tamil language. Classical Tamil culture constitutes a heritage that every Indian is truly proud of.

I warmly felicitate Dr. Kalaignar M Karunanidhi for his untiring efforts to preserve, nurture and encourage the rich heritage of Tamil Nadu, and send my greetings to all the distinguished participants in the World Classical Tamil Conference. I am sure the Conference will encourage many more people to discover the jewels of classical Tamil literature. I hope it will also inspire Indians in other parts of the country to learn the Tamil language.

Sonia Gandhi

New Delhi
June 5, 2010



உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாட்டுச் சிறப்பு மலர் வெளியிடுபவர்
மேதகு தமிழ்நாடு ஆளுநர்

**திரு. சுர்ஜித் சிங் பர்னாலா**

Surjit Singh Barnala

GOVERNOR

Dated: 8th June, 2010

**MESSAGE**

I am happy to learn that the 'World Classical Tamil Conference' is to be held under the Presidentship of Dr. Kalaignar M.Karunanidhi, Hon'ble Chief Minister of Tamil Nadu from 23rd 27th June 2010 at Coimbatore and is to be inaugurated by Her Excellency Smt. Pratibha Devisingh Patil, President of India and a Special Souvenir is being brought out in commemoration.

Language is a medium of communication. It is a symbol of growth of our civilization. Tamil is an ancient and a rich language. It has made great contributions to the nation's freedom movement and to the spread of art and culture. The earliest works on Tamil Grammar - Tholkappiyam, devotional literature of 'Nayanmars', the great epics like Kamba Ramayanam, Silapathikaram, the world renowned Thirukkural are the jewels of Tamil Language. Subramania Bharathi's poetic songs evoked patriotic fervour in the people. These bear testimony to the claim of Tamil being a classical language. Tamil Sangams - the congregation of Tamil Poets and Scholars and the contributions of laureates for the spread and growth of Tamil language have been immense.

Dr. Kalaignar, a prolific writer, a poet and an orator par excellence, has dedicated himself towards the growth of Tamil. The initiatives taken by him to get Tamil a 'classical language' status deserves commendation.

The growth of a language depends upon the quality of thought. It grows through encounter and absorption with other languages. It is befitting to have the World Classical Tamil Conference under the Presidentship of Dr. Kalaignar, the renowned Tamil Scholar, here in Coimbatore, known for its 'Kongu Tamil'. Tamil is seen spreading in all spheres. It is the duty of every Tamil speaking person to preserve Tamil and dedicate himself for the spread of this beautiful language, maintaining its high value and standards.

I am sure, this 'World Classical Tamil Conference" would pave the way for enriching Tamil language, to develop poetic and oratorical skills in youth besides coining new words to keep in tune with technological advancements.

I convey my warm felicitations to Dr.Kalaignar M.Karunanidhi, Hon'ble Chief Minister of Tamil Nadu and to all the participating delegates from India and abroad and to all those who are associated with this World Classical Tamil Conference.

I wish the World Classical Tamil Conference all success.

Surjit Singh Barnala

**(SURJIT SINGH BARNALA)**
**GOVERNOR OF TAMIL NADU**



# அந்நாள் முதலமைச்சர் பேரறிஞர் பெருந்தகை அண்ணா வாழ்த்துகிறார்

தமிழ்மொழி பற்றி நடக்கும் ஆராய்ச்சிகளையும் முடிவுகளையும் தமிழ் மொழியின் வளர்ச்சிக்கு மட்டுமே பயன்படுத்திக் கொள்வோம் என்று உறுதியாகத் தெரிவித்துக் கொள்வோம்!

தமிழ்ப் பண்பாடு உலகத்தில் எல்லா மனிதர்களையும் சகோதரர்களாகவும் தோழர்களாகவும் ஏற்றுக் கொள்ளும்; தன்னிடம் வருபவர்களை வாழ்த்தி வரவேற்கும்; எந்த மொழியையும் உரிய முறையில் மதிக்கும்; அறிவுச் செல்வம் உலகின் எந்தக் கோடியில் இருந்தாலும் தேடிச் சென்று எடுத்து வரும்!

ஆனால்... தமிழர்கள் தமக்கென்று உள்ளதை ஒருகாலும் இழக்கச் சம்மதிக்க மாட்டார்கள்!

இங்கிலாந்திலிருந்தும் பிற நாடுகளிலிருந்தும் வருகிற நிபுணர்கள், தமிழ்மொழி இத்தகைய அருமையான மொழி என்று கூறுகிற நேரத்தில் – அந்த மொழிக்குச் சொந்தக்காரர் நாம் என்று நினைக்கும்போது அந்த மொழி மீது பற்று, பாசம் ஏற்படாமலா இருக்கும்?

அத்தகைய மொழிக்கு எந்தக் காலத்திலாவது – எந்த நோக்குடனாவது – எப்படிப்பட்டவர்களிடமிருந்தாயினும் தனிமரியாதை கிடைக்கவில்லை யென்றால் அதைத் தமிழகம் பொறுத்துக் கொள்ளாது.

ஆழ்கடல் கொந்தளித்துக் கொண்டுதானிருக்கிறது, பக்குவமாகக் கடக்க வேண்டுமானால் நல்ல நாவாயின், கப்பலின் மூலம் கடக்கலாம். அதுபோலத் தமிழர்களை அணைத்துக் கொண்டு சென்றால் அவர்களைவிடச் சிறந்தவர்கள் யாரும் இருக்க முடியாது.

ஆனால், உண்மையான ஒற்றுமை உணர்வினை 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற பொன்மொழியில் வடித்து ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தந்த தமிழரின் பெருந் தன்மையை எண்ணி எண்ணி நெஞ்சம் விம்முகிறது.

'யாதும் ஊரே – யாவரும் கேளிர்' என்று பாடிய புலவர் 'தீதும் நன்றும் பிறர்தர வாரா' – என்றும் அடுத்த அடியில் பாடியிருக்கிறார்.

நல்லது வரவேண்டுமா; அது நாம்தாம் செய்து கொள்ள வேண்டும்; கெட்டது வரவேண்டுமா? நாம் தாம் வரவழைத்துக் கொள்ள வேண்டும்!

எனவே, தீது வருமோ என்று ஐயப்பாடு கொள்ள வேண்டாம்! அது நாமாகத் தேடிக் கொண்டால்தான் வரும்! பிறர் தருவதல்ல – தீதும் நன்றும்! நாம் வேண்டாம் என்றால் அது வராது.

தமிழருக்குத் தீது பிறர் தருவதால் அல்ல – நாமே தீது தேடிக் கொண்டாலொழிய தமிழர்களுக்குத் தீது ஒருபோதும் வராது.

தமிழ் மொழியின் அருமை பெருமையை நாம் உணர்வதோடு பிறரும் உணர்ந்து, தமிழர்களாகிய நம்மை அவர்கள் நோக்கி,

"இந்தத் தமிழ்மொழி உங்களுக்கு மட்டும் உரிய மொழி அல்ல; எங்களுக்கும் அதுதான் மொழி; அதுதான் இணைப்பு மொழி. அதுதான் பொது மொழி; அதுதான் ஆட்சி மொழி" என்று கூறும் காலம் வரும்!

அந்தக் காலம் அவசர நடையால் வருவதல்ல; அவசரக் கோலத்தில் கிட்டுவதல்ல! தூண்டில் போடுபவன் முள் அருகில் மீன் வரும் வரை எப்படிப் பொறுமையுடன் இருப்பானோ அத்தகைய பொறுமையை நாம் கைக்கொள்ள வேண்டும்; கற்றுக் கொள்ள வேண்டும்.

தமிழ் மறையிலும் தமிழ் நெறியிலும் காலம் – இடம் – வகை – பொருள் அறிந்து செய்ய வேண்டும் என்று கூறப்பட்டிருக்கிறது.

அந்த வழி நடந்து தமிழ் மொழியை அரியாசனத்தில் அமர்த்திடக்கூடிய நன்னாளை நாம் உருவாக்குவோம்! தமிழ் ஆராய்ச்சியில் மட்டும் அல்லாமல், 'தமிழ் மொழியானது அதன் ஆற்றலையும், அதன் தூய்மையான பண்பையும் பழுதில்லாது பாதுகாக்க வேண்டும்' என்பதிலும் அறிஞர்கள் அக்கறை கொண்டுள்ளனர்.

கருத்தரங்கின்முன் வைக்கப்பட்ட அறிக்கைகளும், எடுத்துரைக்கப்பட்ட கருத்துகளும், மக்களைப் புது வழியில் சிந்திக்கத் தூண்டிடும் தன்மையானவை; புதிய கோணங்களிலிருந்து உண்மையை அறிந்திடத் தூண்டும் அளவுக்கு மிக உயர்ந்த தரத்தை உடையனவாக அவை இருந்தன என்று கருதுகிறேன். இந்த மட்டில், கருத்தரங்கு மாபெரும் வெற்றியைத் தேடியுள்ளதென்றே நான் கருதுகிறேன்.

வளம் – செறிவு – நெகிழ்வு – பல்துறை இயக்கம்– என, இவையனைத்தையும் தனக்கெனப் பெற்றுள்ளது தமிழ்மொழி என்பது என்போன்ற சாதாரண மனிதர்களின் கருத்தாகும். இந்த உயர்மொழியை உருவாக்கிப் பாதுகாத்து வருவது நாமல்ல; வளமும் செறிவும் நெகிழ்வு முடைய இம்மொழியைப் பல நூற்றாண்டுகளுக்கு முன்பிருந்தோர், செப்பனிடவோ சீர்திருத்தவோ அவசியமில்லாதபடி விட்டுச் சென்றிருக்கிறார்கள்.

செழுமைமிக்க பாரம்பரியத்தின் சொந்தக்காரர்கள் நாம். மிகச் சிறந்த இலக்கியங்களைக் கொண்ட வலிமைமிக்க – உயிர்த் துடிப்புள்ள ஒரு மொழியின் சொந்தக்காரர்கள் நாம்!

ஆராய்ச்சி அறிஞர்கள் இம்மொழிக்குப் புதிய வலிவு தேடவோ, புதிய இலக்கணம் வகுக்கவோ, செறிவைக் கூட்டவோ முயலவில்லை. அவர்கள் முயற்சியின் நோக்கமெல்லாம், தமிழ் மொழியின் தொன்மையை ஆராய்ந்து அதன் வயதைக் கணிப்பதிலும், மக்களது எண்ணங்களை எடுத்துரைக்கக் கூடியதாக – இங்கு மட்டுமில்லாமல் உலக மக்களது எண்ணங்களை யெல்லாம் எடுத்துரைக்கக்கூடியதாக – நாடுகளுக் கிடையேயான அறிவார்ந்த கருத்துப் பரிமாற்றத்துக்கும் பயன்படக்கூடியதாக – தமிழ் மலர வேண்டுமென்பது தான்!

இப்பரந்த நோக்கங்களை மனத்தில் கொண்டால், பிற மொழிகளிடத்துப் பற்றுக் கொண்டோரால் – தமிழர்களாகப் பிறந்தும் தமிழ் மொழியினிடத்து விரோதம் கொண்டோரால் தங்கள் தமிழ் குன்றிடவோ, குறைவுறவோ கூடாது என்றெண்ணிடும் தமிழ் மக்களுக்கு நாம் மிகப் பெரிய நன்மை செய்தவர்கள் ஆவோம். இக்கருத்தரங்கின் வழிகாட்டுதல்கள், இனி வருங்காலத்தில் நடைபெறவிருக்கும் ஆராய்ச்சி களுக்கெல்லாம் பயன்பட்டு நல்ல பல பலன்களை அளித்திடுமெனவும் நம்புகிறேன்.

'தமிழ் மொழி, தொன்மை மிக்கது' என்பதாலேயே ஒரு சங்கடம் ஏற்படுகிறது. அதற்குப் புறம்பான சிலவற்றைப் புகுத்திக் கூறிடவும், ஐயப்பாடுகள் சிலவற்றை எழுப்பிடவும், உகந்ததாகச் சிலவற்றைக் கூறிடவும், விரோதமானதைச் சொல்லிடவும், தேவையானதை எடுத்துக் கூறவும், மொழியின் தொன்மை காரணமாக இடமேற்பட்டுவிடுகிறது. உலகெங்கும் உள்ள பழைய கோட்டை கொத்தளங்கள் குறித்தும், பழைய கருத்துகள் – முறைகள் ஆகியவை குறித்தும் இவ்வாறு நிகழுகிறது.

எனவே இங்குக் குழுமித் தாங்கள் இதுகாறும் நடத்திய ஆராய்ச்சி குறித்துக் கலந்துரையாடும் பன்னாட்டு அறிஞர் பெருமக்களுக்கு என் நன்றி.

"பல ஆராய்ச்சிகளால் செறிவூட்டப்பட்ட நவீன மொழிகள் எனப்படுகின்றவற்றோடு தொன்மைத் தமிழ் மொழி எந்த அளவுக்கும் மட்டமானதல்ல" என்பதே இந்த அறிஞர் பெருமக்கள் கண்ட முடிவாகவுள்ளது.

தமிழ் ஒரு பண்டைய மொழி என்பது மட்டுமல்லாமல் நவீன மொழிகள் அனைத்துக்கும் இணையாகவும் உள்ளது என்பது ஆராய்ச்சியாளர்களின் முடிவு; 'புத்தம் புதிய கருத்துகளைத் தெரிவிக்கவும் தமிழால் முடியும்' என்பதை அவர்கள் கண்டுள்ளனர். இந்த உண்மையை எவ்வாறு நிலைநாட்டுவது? பல்வேறு கருத்துகளையும் ஆராய்ந்து பார்ப்பதன் மூலமும் ஏற்பதன் மூலமும்தாம் இதனைச் சாதிக்க முடியும்.

மனிதனின் நுண்புலமிக்க கருத்துகளை மட்டுமல்லாமல், விஞ்ஞானக் கருத்துகளையும் இம்மொழியின் மூலம் எடுத்தியம்ப இயலும். இதை அறியாதார் வெளிநாடுகளிலும் இங்கேயும் உள்ளனர்; அவர்களுக்கு இந்த உண்மையை நாம் எப்படி உணர்த்தப் போகிறோம்? தொடர்ந்த இடைவிடாத முயற்சியின் மூலமும், எப்பக்கமிருந்து நற்கருத்துகள் வந்தாலும் அவற்றை ஏற்றுச் செயல்படுவதன் மூலமும்தான் இதைச் செய்ய முடியும். இதையே இக்கருத்தரங்கம் தன் நோக்கமாகக் கொண்டிருக்கிறது. மாநாடு அதன் நோக்கத்தில் வெற்றி பெற வாழ்த்துகின்றேன்.

"தமிழர்கள் தங்களை உணரத் தொடங்கி விட்டார்கள்! தமிழனின் பண்பு, யாருக்கும் தாழ்ந்ததாக இருப்பதல்ல! யாரையும் தாழ்த்துவதும் அல்ல! முன்பிருந்த மன்னர்கள், அலைகடலை வென்றார்கள்; நமது வணிகர்கள் நாவாய்களில் ஏறிக்கொண்டு மோரீஸ் தீவுக்கும், பிஜித் தீவிற்கும், மடகாஸ்கருக்கும் சென்று தமிழ் மணம் பரப்பினர்" என்று இப்போது ஆராய்ச்சியாளர்கள் அறிவித்திருக்கிறார்கள்; ஆனால், இந்தச் செய்தியை நமது பழம்பெரும் கதைகள் வெகு நாட்களுக்கு முன்பே கூறியிருக்கின்றன.

தரணி மெச்ச வாழ்ந்தோம் ஒருநாள்! 'தரணியிலிருந்து யார் என்ன கொடுப்பார்கள்' என்று ஏங்குகிறோம் இன்று!

ஞாயிறாகத் திகழ்ந்தோம் அன்று! இருட் குகையில் சிக்கித் தவிக்கிறோம் இன்று! அதற்காக, 'அந்த ஞாயிறு பழுதாகிவிட்டது' என்று பொருள் அல்ல; 'நமது கண்கள் பழுதாகிவிட்டது' என்றுகூடக் கூற மாட்டேன்; கொஞ்சம் மங்கலாகிவிட்டது; மங்கலான கண்களைக் கொஞ்சம் துடைத்து விட்டுக் கொண்டு பார்த்தால் ஞாயிறு தெரியும்!

நாமும் ஏறிட்டுப் பார்த்து நெஞ்சு நிமிர்த்தி, 'ஞாயிறு போற்றுதும் – ஞாயிறு போற்றுதும்' என்று இளங்கோவடிகள்போல் பாடலாம்!

தமிழகம் இன்று, தனது இயல்பான மாண்புகளை 'மறந்து துயில் கொள்கிறது' என்று கூறமாட்டேன்; 'மயங்கிக் கிடக்கிறது' என்று கூறமாட்டேன்; 'தயக்கம் இருக்கிறது' என்றுதான் கூறுவேன்! 'நம்மால் முடியுமா' என்ற தயக்கம் நமக்கு இருக்கிறது; சேரன் வடநாட்டின் மீது படையெடுத்துச் சென்றபோது, 'நம்மால் முடியுமா' என்று அவன் தயங்கவில்லை!

சோழன் நாவாய்களைச் செலுத்தி அலைகடலுக்கு அப்பாலுள்ள நாடுகளை வென்றபோது, 'நம்மால் முடியுமா' என்று அவன் தயங்கவில்லை! காட்டுப்புறத்தில் தினை பொறுக்கச் சென்ற கிராமத்துத் தமிழ்ச் சீமாட்டி ஒருத்திமீது புலி பாய்ந்து வந்தபோது, 'நம்மால் முடியுமா' என்று அவள் நினைக்கவில்லை; கையில் கிடைத்த முறத்தால் அடித்து விரட்டினாள்; 'காட்டுக்கு அரசன் ஆயிற்றே நாம்; இவள் வீட்டுக்கு அரசிதானே; வேல் எடுக்காமல் – வாளை எடுக்காமல் – குப்பை அள்ளும் முறத்தால் தாக்க வருகிறாளே; இது தமிழ்நாடு அல்லவா – இது தமிழச்சியின் ஆற்றல் திறம் அல்லவா' என்று எண்ணி அந்தப் புலி, வெட்கத்தால் ஓடியிருக்கும் என்றே கருதுகிறேன்.

அன்று தமிழ்ப் பெண்கள் புலியை முறத்தால் அடித்துத் துரத்தினர்; இன்றும் தமிழ்ப் பெண்கள், நமது பகையை முறத்தால் அடித்து விரட்டத் தயார்; எனினும், அந்த முறம் கிடைத்தால், 'அதை எங்கு விலைக்கு விற்றுக் காசாக்கலாம்' எனக் கருதுகிற பகைதான் நமது பகை!

வானத்தில் பறக்கும் புள்ளினம் வேறு பக்கம் பறந்து கொண்டிருப்பினும், இனிய கானத்தில் ஈர்க்கப்பட்டு, கப்பல் இருக்கும் திசை நோக்கி வரும்! கப்பல்மீது புள்ளினம் சிறகடித்துப் பறப்பது, கப்பலுக்கு வானக்குடை விரித்ததுபோல் அக்காட்சி அமைய வேண்டும்! தமிழரின் இசையை அந்தப் புள்ளினம் கேட்டு அவை பாட – புள்ளினத்தின் பாட்டை இவர்கள் பாட வேண்டும்!

பறவைகளாகிய எங்களுக்குத் தூய உள்ளம்; ஆகவே நாங்களும் தமிழினம்தான்; உயர உயரப் போகிறோம்; இதுதான் தமிழன் மாண்பு; ஆகவே நாங்களும் தமிழினம்' என்று கூறிட வேண்டும் அந்தப் பறவைகள்;

இந்த நாளை எண்ணித்தான் பார்க்கிறோம்; 'எண்ணியது நடக்கும் – நாம் திண்ணியராகப் பெற்றால்' என்று வள்ளுவர் கூறுகிறார்! உலகத்தில் நாம் எண்ணியது நடக்கும் – நாம் திண்ணியராகப் பெற்றால்!

'தயங்காதே தமிழா – மயங்காதே தமிழா' என்ற பாடங்களோடு, தமிழர் திண்ணியராகவும் வேண்டும்; அவ்விதம் திண்ணியரானால் உலகில் அவர் எடுக்கின்ற காரியங்கள் அனைத்தும் முடியும் என்ற நம்பிக்கையை – நாதம் நிறைந்த பாடத்தைப் பெற்றால், நம்மை உலகிற்கு யார் என்று அறிவிக்கும் நாளும் வரும்!

இத்தகைய நற்செய்தியை எடுத்துச் செல்லும் திருத் தூதர்களாய் நீங்கள் சென்று வாருங்கள் – வென்று வாருங்கள்! தமிழகத்திற்கு வளம் சேர்த்துத் தாருங்கள்!

**(1968ஆம் ஆண்டு நடைபெற்ற உலகத் தமிழ் மாநாட்டில் அண்ணா ஆற்றிய உரைகளிலிருந்து)**



உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாட்டுத் தலைவர்

மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர்

**கலைஞர் மு. கருணாநிதி**

**மு. கருணாநிதி**
முதலமைச்சர்

தலைமைச்செயலகம்
சென்னை – 600 009

நாள். 10-06-2010

## வாழ்த்து

அய்யன் திருவள்ளுவரின், "பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்" என்னும் மணிமொழி அணிசெய்திட, பண்டைத் தமிழ்ப் பண்பாடு பரிமளிக்கும் கொங்குச் சீமையின் கோவை மாநகரில், 2010 சூன் திங்கள் 23 முதல் 27 வரை "உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு" அரியதொரு வரலாற்று நிகழ்வாகத் தமிழக அரசின் சார்பில் எழில் குலுங்கிட– எழுச்சி பொங்கிட நடைபெறுவதையொட்டிச் சிறப்பு மலர் வெளியிடப்படுகிறது.

தமிழ்மொழி வரலாற்றில் 21ஆம் நூற்றாண்டின் தொடக்ககாலச் சாதனைகளாக – தமிழ் மொழியின் பெருமையையும், தனித்தன்மையையும் மீட்டெடுத்துத் தமிழ்மொழியைச் "செம்மொழி" என மத்திய ஐக்கிய முற்போக்குக் கூட்டணி அரசு மூலம் அறிவிக்கை வெளியிடச் செய்தது; சென்னையில் செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனத்தை நிறுவிடச் செய்தது; இந்திய அளவிலும், பன்னாட்டளவிலும் தமிழாய்வில் புகழ் முத்திரைகள் பதித்துள்ள அறிஞர் பெருமக்களுக்கு இந்தியக் குடியரசுத் தலைவரின், "குறள் பீடவிருது", 'தொல்காப்பியர் விருது' ஆகியவற்றை ஆண்டுதோறும் வழங்கிட ஆவன செய்தது போன்ற அரும்பணிகளை வெற்றிகரமாக நிறைவேற்றி, நெஞ்சமெய்தும் பெருமிதத்துடன் உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு தமிழ்த் திருவிழாவாகக் கோலாகலமாக நடைபெறுகிறது.

இம்மாநாட்டின் வாயிலாக, இந்தியப் பேரரசில் தமிழ், ஆட்சிமொழி எனும் தகுதி பெற்றிட வேண்டும்; சென்னை உயர்நீதிமன்றத்தின் வழக்குமொழியாகிட வேண்டும்; உலகெங்கும் வாழும் தமிழ் மக்களை ஒருங்கிணைத்துத் தமிழ் மொழி, இன, பண்பாட்டுக் கலை மரபுகள் பேணிப் பாதுகாக்கப்பட நிலையான அமைப்பு ஒன்று உருவாகிட வேண்டும்; தமிழ்மொழி அறிவியல் தொழில்நுட்பம், தகவல் தொழில் நுட்பம், மொழியியல், மானிடவியல், கல்வெட்டியல், இதர அறிவுசார் துறைகள் அனைத்திலும் தொடர்ந்து வளர்ச்சி கண்டு தமிழ் என்றும் ஏற்றம் பெற்றிட வேண்டும் என்பனவெல்லாம் என் இதயமார்ந்த விழைவாகும். இத்தகைய அரும்பணிகளுக்கெல்லாம் இயக்கு திறனாக அமைந்திடத்தக்க வகையில் உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாட்டு நிகழ்வுகளும், மாநாட்டு மலர்ப் பணிகளும் சிறக்க எனது உளமார்ந்த நல்வாழ்த்துகளை உரித்தாக்குகிறேன்.

(மு. கருணாநிதி)



உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாட்டுச் சிறப்பு மலர்க்குழுத் தலைவர்
மாண்புமிகு தமிழ்நாடு நிதியமைச்சர்
பேராசிரியர் **க. அன்பழகன்**

**க.அன்பழகன்**
நிதித் துறை அமைச்சர்

தலைமைச்செயலகம்
சென்னை – 600 009

நாள். 10–06–2010

# வாழ்த்துரை

'இனிமைத் தமிழ்மொழி எமது–எமக்கு
இன்பந் தரும்படி வாய்த்த நல்லமுது' என்று **புரட்சிக் கவிஞரும்,**

'சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே' எனவும்
'யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல்
இனிதாவது எங்குங் காணோம்' என்று **தேசியக்கவி பாரதியாரும்,**

'இருந்தமிழே உன்னாலிருந்தேன் – வானோர்
விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன்'
என்று **தமிழ்விடுதூது ஆசிரியரும்,**

'என்றுமுள தென்றமிழ் இயம்பி இசைகொண்டான்' (அகத்தியன்)
எனக் **கவியரசர் கம்பரும்,**

'தனித்தியங்கும் தகுதி தமிழினுக்குண்டு; தமிழ்
பிறமொழித் துணையின்றியே வளரும் ஆற்றல் பெற்றது'
என்று **டாக்டர் கால்டுவெல்லும்,**

'நாலடியும், ஈரடியும் (திருக்குறளும்) போன்ற ஒழுக்க
நூல்களைப் பெற்றுள்ள தமிழ் மக்கள், தமிழ்மொழி
எவ்வகையிலும் பிற மொழிகளைவிடத் தாழ்ந்ததென்று எண்ணித்
தமிழர்கள் தலைதாழ்ந்து நடக்கத் தேவையில்லை'
என்று **ஜி.யு.போப் பாதிரியாரும்,**

'தமிழ்மொழி ஜெர்மன் நாட்டுப் பல்கலைக்கழகங்களில்
ஒரு பாடமொழியாகப் பயிற்றுவிக்கத்தக்க சிறப்புடையது'
என்று **அறிஞர் கார்ல் கிரவுலும்,**

'நமது தாய்மொழியான தமிழ் ஓர் உயர்தனிச் செம்மொழி.
இது உலகில் வேறு எந்த இனத்துக்காவது, தாய்மொழியாக
இருந்திருக்குமானால், உலகப் பொது மொழியாகவே ஆகியிருக்கும்'

என்று **பேரறிஞர் அண்ணாவும்,**

போற்றி உரைத்தவாறு சீரும், சிறப்பும், செம்மையும் வாழ்ந்த நம் தாய்மொழியாகிய தமிழ், ஒரு செம்மொழி என்பதை ஏற்று அறிவிக்க வேண்டுமென்னும், தமிழக முதல்வர் கலைஞரின் வேண்டுகோளை ஏற்று நடுவண் அரசு 2004 ஆம் ஆண்டு அறிவித்ததைத் தொடர்ந்து, அதைக் கொண்டாடும் முறையில் நடைபெறுவதே கோவை, உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு.

இந்தியத் திருநாட்டின் குடியரசுத் தலைவர் மேதகு பிரதீபா பாட்டில் தொடங்கிவைத்திட, முதல்வர் கலைஞர் தலைமை ஏற்றிட நடைபெறும் இம்மாநாடு உலகின் வேறெந்த நாட்டிலும், வேறெந்த மொழிக்கும், இப்படி ஒரு மாநாடு நடைபெற்றதில்லை என்று வியந்து கூறுமாறு பல்லாயிரக்கணக்கான மக்கள், மாநாட்டுப் பந்தலில் அமர்ந்து பங்கேற்றிடுமாறு, மிகப் பெரியதொரு பொது அரங்கில் தொடக்கவிழா நடைபெறுகின்றது. தமிழ் நாட்டின் கிராமப்புர மக்களிடம் நிலவும் கலை நிகழ்ச்சிகள், தமிழ் இசை முழங்கும் அரங்குகள், பன்னாட்டு அறிஞர்களும் தமது ஆய்வுக் கட்டுரைகளை வாசித்து விவாதிக்கும் இருபதுக்கும் மேற்பட்ட ஆய்வரங்குகள், மாபெரும் தமிழக வரலாற்றுச் சிறப்புணர்த்தும் கண்காட்சி ஆகியவை மாநாட்டில் இடம்பெறுகின்றன.

இதுகாறும் நடைபெற்றுள்ள உலகத் தமிழ் மாநாடுகள் தமிழ் மொழியின் தனிச்சிறப்பைப் பரப்ப துணையாயின எனினும், இந்த மாநாடு, இதுகாறும் பிறமொழி ஆதிக்கத்தாலும் சூழ்நிலைத் தாக்கத்தாலும், தமிழ் மண்ணிலேயே சிறுமைப்படுத்தப்பட்டு, புறக்கணிக்கப்பட்டிருந்த நமது தமிழ் மொழி, எப்படிப்பட்ட தகுதியும், சிறப்பும், தனித்தன்மையும், தொன்மையும், முதன்மையும், மேன்மையும், வளமையும், சீரிளமையும் வாய்ந்த மொழி என்பதை உலகோர் உணரவும், தமிழர் தெளியவும் பேரளவில் ஏதுவாகும் எனலாம். அதன் பயனாகத் திக்கெட்டும் தமிழ் முழக்கம் ஒலிக்கும்!

வாழ்க நந்தமிழ்ச் செம்மொழி!
வளர்க அதன் உயர்நெறி!

அன்பன்,

(க.அன்பழகன்)



உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாட்டு ஏற்பாட்டுக் குழுத் தலைவர்

மாண்புமிகு தமிழகத் துணை முதலமைச்சர்

திரு **மு.க. ஸ்டாலின்**

**மு. க. ஸ்டாலின்**
துணை முதலமைச்சர்

தலைமைச்செயலகம்
சென்னை – 600 009

நாள். 11–06–2010

# வாழ்த்து

மாண்புமிகு தமிழக முதலமைச்சர் முத்தமிழறிஞர் தலைவர் கலைஞர் அவர்கள் தலைமையில் உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு ஜூன் 23 முதல் 27ஆம் நாள் வரை நடைபெற உள்ளது. தமிழ்ச் சமுதாயத்தின் வரலாற்றில் சிறப்பானதொரு நிகழ்வான இம்மாநாட்டையொட்டிச் சிறப்பு மலர் வெளியிட இருப்பது அறிந்து மிகுந்த மகிழ்ச்சி அடைகிறேன்.

**"கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே**
**முன்தோன்றி மூத்த குடி"**

என்ற புறப்பொருள் வெண்பாமாலை வரிகளுக்கேற்ப, உலகின் மூத்த முதல் இனம் தமிழ் இனமாகும்.

**"திங்களொடும் செழும்பரிதி தன்னோடும்**
**விண்ணோடும் உடுக்களோடும்**
**மங்குல் கடல் இவற்றோடும்**
**பிறந்த தமிழுடன் பிறந்தோம் நாங்கள்"**

எனும் பாவேந்தரின் எழுச்சிமிகு கவிதை வரிகள் முழங்குவது போல், உலகில் மூத்த முதல் மொழி தமிழ் மொழியாகும்.

இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ் என முத்தமிழாய் வளர்ந்து வளம் பெற்ற மொழி நமது தமிழ்மொழி.

தமிழ்மொழி; தொன்மை – தனித்தன்மை – பொதுமைப் பண்பு – நடுவுநிலைமை – தாய்மைத் தன்மை – பண்பாடு – கலை – உயர்ந்த சிந்தனை – இலக்கியத் தனித் தன்மைப் பங்களிப்பு – மொழிக்கோட்பாடு என்ற உயர்ந்த கோட்பாடுகள் அனைத்தையும் ஒருங்கே பெற்று, செம்மொழி என்ற தனித் தகுதியையும் பெற்றுள்ள மொழி ஆகும்.

உயர்தனிச் செம்மொழி என்று முதன்முதலில் முன்மொழிந்தவர் தமிழ் அறிஞர் பரிதிமாற் கலைஞர். இத்தகைய வளம் பெற்ற மொழிக்குச் செம்மொழித் தகுதியைப் பெற்றுத் தந்து தமிழர்களின் நூற்றாண்டுக் கனவை நனவாக்கியவர் தமிழக முதல்வர் தலைவர் கலைஞர் அவர்கள்.

இத்தகைய சிறப்புமிக்க தமிழ்மொழியின் சிறப்பை உலகுக்கு எடுத்துக்காட்டும் வகையில் உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு, உலகத் தமிழர்களின் உள்ளங்கனெல்லாம் மகிழுமாறும், வரலாற்றின் பொன்னேட்டில் பொறிக்கப்பட வேண்டிய அளவிலும் இம்மாநாட்டு நிகழ்ச்சிகள் நடைபெறவுள்ளன.

**"தேமதுரத் தமிழோசை உலகமெலாம்**
**பரவும் வகை செய்தல் வேண்டும்'**

என்ற பாரதியின் கனவு மெய்ப்படும் வகையில், இம்மாநாட்டில் உலகத் தமிழர்கள் ஒன்று கூடி, செம்மொழியின் பெருமைகளைப் பறைசாற்றிட உள்ளனர்.

உலகத் தமிழ் அறிஞர்களும், தமிழ் கூறும் நல்லுலகின் தமிழ்ப் பெருங்குடி மக்களும் கூடிடும் இம்மாநாட்டின் பெருமைகளை எடுத்தியம்பும் வகையில், இச்சிறப்பு மலர் அமைந்திட, எனது நெஞ்சம் நிறைந்த நல்வாழ்த்துகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

11/6/2010

(மு.க. ஸ்டாலின்)

**இரா. ஆவுடையப்பன்,** பி.ஏ., பி.எல்.,
பேரவைத் தலைவர்,
தமிழ்நாடு சட்டமன்றப் பேரவை

தலைமைச்செயலகம்
சென்னை – 600 009

நாள். 31-05-2010



## வாழ்த்து

**"கல்தோன்றி மண் தோன்றாக் காலத்தே
முன்தோன்றிய மூத்த குடி நம் தமிழ்க் குடி."**

மிகப்பெரும் பாரம்பரியமும், பண்பாடும், கலாச்சாரமும் மிக்கது நமது தமிழ் நாகரிகம். தமிழ் மொழி என்பது அதன் பாரம்பரியத்தாலும், பழம்பெருமையாலும் செம்மையுற்றுள்ளது என்பதற்குச் சான்றுகள் பல உண்டு.

அதன் செம்மை கண்டு வியந்து, தமிழின்பால் அளப்பரிய ஆர்வம்கொண்ட ஆங்கிலேயர்கள் பலருண்டு. கல்லறையில் "ஓர் தமிழ் மாணவன் உறங்குகிறான்" என்று எழுதும்படி வேண்டிக் கொண்ட ஜி.யூ. போப்பின் கல்லறைக் குறிப்பிலிருந்து தமிழின் உன்னதத்தைப் புரிந்து கொள்ள முடிகிறது. தமிழின் பல நூறு இலக்கியங்களை அதன் அருமையும் பெருமையும் கண்டு அன்றே உலகுக்குத் தெரிவிக்க, ஆங்கில மொழியில் மொழியாக்கம் செய்த கால்டுவெல் பாதிரியார், ஜோசப் பெஸ்கி வரிசையில் இன்னும் பலருண்டு.

காலத்தாலும், வாழ்ந்த முன்னோர்களாலும் பலவாறு செம்மைப்பட்டு இன்று தமிழ்க் கலாச்சாரத்தின், பண்பாட்டின், தமிழ் இனத்தின் காலப்பெட்டகமாக விளங்கும் நம் தமிழ் இனத் தலைவர் டாக்டர் கலைஞர் அவர்களின் அயராத முயற்சியின் விளைவாக நம் தமிழ் மொழி செம்மொழியாக ஒரு சிறப்பான ஏற்றத்தைப் பெற்றுள்ளதை உலக அரங்கில் அனைவருக்கும் பறைசாற்றும் வகையில் உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாட்டின் முலமாகக் கொண்டாடும் நாள் தமிழர் ஒவ்வொருவரின் வாழ்விலும் ஒரு மகத்தான நாள்; இந்நாள்.

தமிழை நம் ஆன்றோர்களும், சான்றோர்களும் எவ்வாறெல்லாம் நேசித்துள்ளனர் என்பது அவர்களின் கூற்றின் மூலம் அறிய முடிகிறது. அதில் குறிப்பாக,

"யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல்
இனிதாவது எங்கும் காணோம்."

– மகாகவி பாரதியார்

"தமிழுக்கும் அமுதென்று பேர் - அந்தத்
தமிழின்பத் தமிழெங்கள் உயிருக்கு நேர்."

– பாரதிதாசன்

"சாம்போதும் தமிழ்படித்துச் சாதல் வேண்டும் - என்றன்
சாம்பலதும் தமிழ்மணந்து வேதல் வேண்டும்."

– ஈழத்துக் கவிஞர் சச்சிதானந்தன்.

நம் தமிழ் மொழியின் பெருமைகளை நாம் பேசுவதைக் காட்டிலும் பிறமொழியினர் ஆதாரத்துடன் தெரிவிக்கும்போது அதன் அருமையும், பெருமையும் நம் இளம் தலைமுறையினர் நன்கு உணர்ந்துகொள்ள வழிவகுக்கும். அதற்கு அரியதோர் மாநாடு நம் முத்தமிழ் அறிஞர் டாக்டர் கலைஞர் அவர்கள் தலைமையில் 2010ஆம் ஆண்டு ஜூன் 23 முதல் 27ஆம் நாள் வரையில் கோயம்புத்தூரில் நடைபெறவிருக்கும் உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு வழி வகுப்பதாக அமையும் என்பதில் ஐயமில்லை.

"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்"

என்று தொடங்கும் மாண்புமிகு முதல்வர் தலைவர் கலைஞர் அவர்களின் உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாட்டு மையநோக்குப் பாடல் தமிழின் சிறப்பையும், தொன்மையையும், பண்பாட்டையும், கலாச்சாரத்தையும், பழக்க வழக்கங்களையும் உலகறியச் செய்யும் வகையில் அமைந்துள்ளது. இது உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாட்டிற்கு மேலும் ஒரு சிறப்பாக அமையும்.

அன்று தமிழனின் வீரத்தைக் கடல்கடந்து பரப்பிய மூவேந்தர்கள் வரிசையில் இன்று தமிழ் மொழியின் மாண்பு உலகெங்கும் பரவிடும் வகையில், தமிழ் மொழிக்குச் செம்மொழிச் சிறப்பைப் பெற்றுத் தந்த நம் தலைவர் டாக்டர் கலைஞர் அவர்களின் சீரிய முயற்சியில் நடைபெறும் உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு சிறக்க தலைவர் கலைஞர் அவர்களுக்கு உறுதுணையாக நின்று பாடுபடுபவர்கள் அனைவரையும் பாராட்டுவதுடன், விழா மலர் சிறப்புறவும் வாழ்த்துகிறேன்.

அன்புடன்,

Vice-President
Republic of Mauritius

## *MESSAGE*

## *WORLD CLASSICAL TAMIL CONFERENCE 2010*

*It is with immense pleasure that I send my very warm greetings to the organizers and all participants of the World Classical Tamil Conference 2010. Since the Eighth World Tamil Conference held in Tamil Nadu in 1995, the whole international Tamil community has been looking forward to this great gathering of the Tamil family, which has now become a tradition.*

*This conference will be a golden opportunity for Tamil scholars and intellectuals from all over the world to debate key issues relating to Tamil culture, civilization and language. Renowned writers, poets and laureates will be expected to express their views on the development of Tamil culture and language. The conference will recommend concrete measures to spread Tamil language across the globe.*

*The chosen venue for the conference will be Coimbatore in Tamil Nadu, the seat of the Kongu region. This beautiful region shelters the Potini Hill, the abode of Tamil God Murugan, as well as some 250 Iron Age and Sangam Age sites, the famous port Musiri, and has produced brilliant poets and intellectuals like Poruntil Ilankiranar, Pavananti Atikal, Atiyarkunallar and Konguvel.*

*Tamils have been referred to as the last surviving classical civilisation on earth and Tamil is the first classical language of India recognized as such in 2004. To qualify as a classical language, Tamil has fulfilled the criteria of being an ancient language, being an independent tradition that arose mostly on its own and not as an offshoot of another tradition, and having a large and extremely rich body of ancient literature. Tamil has an origin independent of Sanskrit and has the longest unbroken tradition amongst the*

*four major Dravidian languages which are Tamil, Telugu, Kannada and Malayalam. Tamil language has one of the oldest written traditions in all of Asia having produced rich literary work dating back 2000 years.*

*In addition to the rich Tamil language, Tamil civilization can be proud of its excellence in the arts, sciences and other intellectual fields; Dravidian architecture, sculpture, traditional music and dance are but a few. The 55 themes of the conference will include language and literature, traditional arts, cultural studies, religion, cinema and music, science and medicine, sculpture and drama. This variety of themes will no doubt enable a more than thorough examination of the multiple facets of Tamil culture and civilization.*

*This conference will afford a chance to members of the Tamil diaspora to renew with the land of their ancestors, its tradition, culture and language. Some seventy million Tamilians are spread across the globe in over fifty countries. This Tamil diaspora is a growing togetherness rooted in an ancient heritage, a rich language, and a vibrant culture. Their passion for, and love of, their language and culture is the motive force that binds the Tamil diaspora worldwide. The Tamil community of Mauritius is proud to belong to this diaspora.*

*I wish to congratulate very warmly the Tamil Nadu Government for taking the initiative of organising the World Classical Tamil Conference in Coimbatore from 23 to 27 June 2010.*

*My very sincere wishes for a resounding success to the Conference!*

***Angidi Veeriah Chettiar,*** *G.O.S.K.C.B.E.*
*Vice-President of the Republic*
*Mauritius*
*17.05.2010*

OFFICE OF THE VICE PRESIDENT
MAURITIUS

# உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு
# பணிக்குழுவினர்
# மாண்புமிகு அமைச்சர் பெருமக்கள்



மாண்புமிகு மின்சாரத்துறை அமைச்சர்
ஆர்க்காடு நா. வீராசாமி



மாண்புமிகு கூட்டுறவுத்துறை அமைச்சர்
கோ.சி.மணி



மாண்புமிகு வேளாண்மைத்துறை அமைச்சர்
வீரபாண்டி எஸ். ஆறுமுகம்



மாண்புமிகு சட்டம், நீதிமன்றங்கள் மற்றும்
சிறைச்சாலைத்துறை அமைச்சர்
துரைமுருகன்



மாண்புமிகு உயர்கல்வித்துறை அமைச்சர்
முனைவர் க.பொன்முடி



மாண்புமிகு போக்குவரத்துத்துறை அமைச்சர்
கே.என்.நேரு



மாண்புமிகு மக்கள் நல்வாழ்வுத்துறை அமைச்சர்
எம்.ஆர்.கே. பன்னீர்செல்வம்



மாண்புமிகு ஊரகத் தொழில் மற்றும்
கால்நடை பராமரிப்புத்துறை அமைச்சர்
பொங்கலூர் நா. பழனிசாமி



மாண்புமிகு வருவாய்
மற்றும் வீட்டுவசதித்துறை அமைச்சர்
இ. பெரியசாமி



மாண்புமிகு சுற்றுலா மற்றும்
பதிவுத்துறை அமைச்சர்
என். சுரேஷ்ராஜன்



மாண்புமிகு செய்தித்துறை அமைச்சர்
பரிதி இளம்வழுதி



மாண்புமிகு உணவுத்துறை அமைச்சர்
எ.வ.வேலு



மாண்புமிகு குடிசைமாற்று வாரியம் (ம)
இடவசதி கட்டுப்பாட்டுத்துறை அமைச்சர்
சுப. தங்கவேலன்



மாண்புமிகு பிற்படுத்தப்பட்டோர் நலத்துறை (ம)
கைத்தறித்துறை அமைச்சர்
கே.கே.எஸ்.எஸ்.ஆர். இராமச்சந்திரன்



மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை அமைச்சர்
தா.மோ. அன்பரசன்



மாண்புமிகு இந்து சமயம் மற்றும்
அறநிலையத்துறை அமைச்சர்
கே.ஆர்.பெரியகருப்பன்



மாண்புமிகு பள்ளிக்கல்வித்துறை அமைச்சர்
தங்கம் தென்னரசு



மாண்புமிகு வணிகவரித்துறை அமைச்சர்
எஸ்.என்.எம். உபயதுல்லா



மாண்புமிகு சுற்றுச்சூழல் துறை அமைச்சர்
டி.பி.எம். மைதீன்கான்



மாண்புமிகு வனத்துறை அமைச்சர்
என். செல்வராஜ்



மாண்புமிகு நெடுஞ்சாலை மற்றும்
சிறுதுறைமுகங்கள்துறை அமைச்சர்
வெள்ளக்கோவில் மு.பெ.சாமிநாதன்



மாண்புமிகு தகவல்,
தொழில்நுட்பவியல்துறை அமைச்சர்
மரு. திருமதி. பூங்கோதை ஆலடி அருணா



மாண்புமிகு சமூகநலத்துறை அமைச்சர்
திருமதி. பி.கீதாஜீவன்



மாண்புமிகு ஆதிதிராவிடர் நலத்துறை அமைச்சர்
திருமதி. ஆ. தமிழரசி



மாண்புமிகு மீன்வளத்துறை அமைச்சர்
கே.பி.பி.சாமி



மாண்புமிகு பால்வளத்துறை அமைச்சர்
உ. மதிவாணன்



மாண்புமிகு கதர்த்துறை அமைச்சர்
கா.இராமச்சந்திரன்



மாண்புமிகு சட்டப்பேரவைத் துணைத் தலைவர்
வி.பி. துரைசாமி



அரசு தலைமைக் கொறடா
திரு. அர. சக்கரபாணி

# செம்மொழித் தமிழுக்குச் சிறப்புகள் சேர்ப்போம்



"ஓங்கல் இடைவந்து உயர்ந்தோர் தொழவிளங்கி
ஏங்கொலிநீர் ஞாலத் திருளகற்றும் - ஆங்கவற்றுள்
மின்னேர் தனியாழி வெங்கதிரொன்(று) ஏனையது
தன்னே ரிலாத தமிழ்!"

– என்று தனக்கு நிகரொன்றும் இல்லாத மொழி தமிழ் என ஒரு தனிப்பாடல் பகர்கிறது. அந்தத் தன்னேரில்லா இனிய தமிழ்மொழி எனது தாய்மொழி என எண்ணுந்தோறும் என் இதயம் விம்மி விம்மிப் பெருமிதம் கொள்கிறது.

மாண்புமிகு தமிழக முதல்வர்

**கலைஞர் மு. கருணாநிதி**

அப்பெருமித உணர்வோடு, நான் இதுவரை ஆற்றிய தமிழ்த் தொண்டுகளுக்கெல்லாம் தலையாயதாய்க் கருதி – தமிழன்னையின் புகழ் மகுடத்தில் வையமெல்லாம் ஒளிவீச வைரமாமணி பதித்திடும் வண்ணமாக, உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாட்டை நடத்துவதில் என் சிந்தை செம்மாந்து மகிழ்ச்சியில் திளைக்கிறது; சிறகடித்துப் பறக்கிறது.

இந்த மகிழ்ச்சியினூடே, எனக்கு இத்தகைய அரிய வாய்ப்பினை வழங்கியுள்ள எனதருமைச் செந்தமிழ் நாட்டுச் செல்வ மக்களையும், என்னை வளர்த்து ஆளாக்கி, வண்ணத்தமிழ் மக்களின் எண்ணமெலாம் சிறக்கத் தொண்டுகள் புரிந்திடுக என ஆணையிட்டு அறிவுரை நல்கிச் சென்றுள்ள உலகின் ஒப்பற்ற சிந்தனையாளர் தந்தை பெரியார், அறிவுலக மாமேதை பேரறிஞர் அண்ணா ஆகியோரையும் இவ்வேளையில் நன்றியோடு நினைந்து வணங்கிச் செம்மொழித் தமிழின் மேன்மையை இம்மலரின் வாயிலாக எடுத்துரைத்திட முற்படுகிறேன்.

1967ஆம் ஆண்டு சட்டமன்றத் தேர்தலுக்கு முன்பாகச் சென்னை விருகம்பாக்கத்தில் நடைபெற்ற திராவிட முன்னேற்றக் கழக மாநில மாநாட்டில், பேரறிஞர் அண்ணா அவர்கள் உரையாற்றியபோது,

> "1967 தேர்தலில் "திராவிட முன்னேற்றக் கழகம் ஆட்சியைக் கைப்பற்றும் என்பதில் எனக்குச் சிறிதும் ஐயமில்லை. ஆட்சியைக் கைப்பற்றுவது மட்டுமே கழகத்தின் முடிவான குறிக்கோளாகாது. தமிழ்மொழி, கலை, நாகரிகப் பண்பாடு ஆகியவை பிறமொழி ஆதிக்கத்தால், கலாச்சாரத் தாக்குரவால் சிதைந்து அழிந்துவிடாமல் பாதுகாக்கப்பட வேண்டும் என்பதே நமது இலட்சியம். அதற்கு இன்னும் ஓர் ஐம்பது ஆண்டுக் காலத்திற்கேனும் நமது தொண்டு, கழகத்தின் பணி தொடர்ந்து நடைபெற்றாக வேண்டும்."

– என்று கூறினார்.

அந்தச் சிந்தனையை அடித்தளமாகக் கொண்டு 1967இல் அண்ணா தலைமையில் அமைந்த திராவிட முன்னேற்றக் கழக அரசும், அண்ணா அவர்களுக்குப்பின் எனது தலைமையில் ஐந்து முறை அமைந்த கழக அரசும் தமிழ் வளர்ச்சிப் பணிகள் பலவற்றை அடுக்கடுக்காக நிறைவேற்றித் தமிழ் உணர்வைப் பேணி வளர்த்தது; தொடர்ந்து வளர்த்து வருகிறது. அந்தத் தமிழ் உணர்வு இன்றைய அறிவியல் – தகவல் தொழில்நுட்பவியல் முன்னேற்றங்களுக்கேற்ப என்றும் உயிர்த்துடிப்புடன் தழைத்துச் செழித்திட வழிவகை கண்டாக வேண்டுமெனும் வேட்கையோடு, "உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு" கொங்குச் சீமையில், கோவை மாநகரில் கூட்டப்படுகிறது.

1968ஆம் ஆண்டில், சென்னையில் பேரறிஞர் அண்ணா அவர்கள் முன்னின்று நடத்திய இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டு நிகழ்ச்சிகள் ஒன்றன்பின் ஒன்றாக என் சிந்தையில் நிழலாட, என்னை வளர்த்து ஆளாக்கிய அண்ணன் அருகில் இருக்கிறார்; ஆற்றுப்படுத்துகிறார் எனும் உணர்வுடனேயே உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு நடத்தப்படுகிறது.

1966ஆம் ஆண்டு மலேசிய நாட்டில் முதல் உலகத் தமிழ் மாநாடு நடைபெற்றதைத் தொடர்ந்து இதுவரை 8 முறை உலகத் தமிழ் மாநாடுகள் நடைபெற்றுள்ளன. அம்மாநாடுகளினின்றும் சற்று வேறுபட்டு, நமது அருமைத் தமிழ் மொழியின் 'செம்மொழி' மாண்பு எந்நாளும் செழிப்பதற்கு வழிவகை காணும் நோக்கில் இம்மாநாடு நடைபெறுகிறது.

'செம்மொழித் தமிழ்' என எண்ணும்போது, நமது இந்தியப் பேரரசு மூலம் 2004ஆம் ஆண்டில் அதற்குரிய ஆணையைப் பெறுவதற்கு நாம் கடந்துவந்த பாதையில் ஏற்பட்ட நெடும் போராட்டத்தை – "தமிழ் செம்மொழி" எனும் அங்கீகார உரிமையைப் பெறுவதற்காகக் குரல் கொடுத்துப் பாடுபட்ட பெருமக்களை நன்றி உணர்வோடு நினைவுகூர வேண்டியது நமது இன்றியமையாத கடமையாகும்.

உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு என்ற வகையில், இது, முதல் மாநாடாகும். நமது தமிழ்மொழி, 'செம்மொழி' என்பதற்கான அனைத்துத் தகுதிகளையும் நிரம்பவே பெற்றிருப்பதால், அதனைச் செம்மொழியென அனைவரும் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று; இன்று, நேற்றல்ல – ஒரு நூற்றாண்டுக் காலத்திற்கு முன்பே குரலெழுப்பப்பட்டது.

அன்று எழுப்பப்பட்ட அந்தக் குரல் – தமிழ்க் குரல் – மெல்ல மெல்ல ஆனால் உறுதியாக, காலப்போக்கில் – தமிழறிஞர்களின் குரலாக – தமிழ் ஆர்வலர்களின் குரலாக – தமிழ்ச் சமுதாயத்தின் குரலாக – அரசியலரங்கத்தில் ஆற்றல் செறிந்த குரலாக – உருப்பெற்று; அந்தக் குரலை, கேளாக் காதினர் மதித்திடத் தவறிவிட்டாலும்; செவித்திறனும், சீர்த்த பண்பும் உடையோர் அதனை மதித்துப் போற்றி; அந்தக் குரலின் மாண்பமைந்த நியாயத்தை உணர்ந்து; "தமிழ் செம்மொழியே" என, இந்தியத் திருநாட்டளவில் அங்கீகாரம் செய்து பிரகடனப்படுத்தப்பட்ட நாள் 12.10.2004.

அந்த நாள், ஒரு நூற்றாண்டுக்கும் மேலாக நடைபெற்ற உரிமைப் போராட்ட வரலாற்றில், உயர்ந்த நாள், உன்னதமான நாள்; மாத்தமிழர் என்றென்றும் மறந்திடவியலாத மரகதத் திருநாள்! முன்னைப் பழைமைக்கும் பழைமையாய், பின்னைப் புதுமைக்கும் புதுமையாய், என்று பிறந்ததென்ற இயல்பறியாததாய், சீரிளமைத் திறம் கொண்டதாய் வளர்ந்து செழித்திருக்கும் செந்தமிழ், செம்மொழியெனப் பிரகடனப்படுத்தப்பட்ட பரிணாம வரலாற்றை; உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு நடைபெறும் வேளையில் நினைவுகூர வேண்டியது கடமையாகிறது.

1887இல் முதன் முதலாக, பரிதிமாற்கலைஞர் அவர்கள், "தமிழ்மொழியின் வரலாறு" என்ற தமது நூலின் முடிவுரையில்:

"திருந்திய பண்புஞ் சீர்த்த நாகரிகமும், பொருந்திய தூய்மொழி புகல் செம் மொழியாம் என்பது இலக்கணம். இம்மொழி நூலிலக்கணம் தமிழ் மொழியின் கண்ணும் அமைந்திருத்தல் தேற்றம்." எனக் கூறி, உரிய விளக்கங்கள் அளித்து, "தென்னாட்டின்கட் சிறந்தொளிராநின்ற அமிழ்தினுமினிய தமிழ்மொழி எவ்வாற்றான் ஆராய்ந்த வழியும் உயர்தனிச் செம்மொழியேயாம் என்பது நிச்சயம்."

– என்று தமிழ்மொழியைச் செம்மொழி என நூறாண்டுகளுக்கு முன்பே அறுதியிட்டு, உறுதியாக நிலைநாட்டிக் குரல் கொடுத்தார்.

அதனால்தான்; மதுரை மாவட்டம், திருப்பரங் குன்றத்திற்கு அருகில் விளாச்சேரி எனும் கிராமத்தில் தமிழறிஞர் பரிதிமாற்கலைஞர் வாழ்ந்த இல்லத்தை அரசுடைமையாக்கி, மேம்படுத்தி, அவரது மார்பளவு வெண்கலச் சிலை ஒன்றையும் நிறுவி 31.10.2007 அன்று திறந்து வைத்து; அங்கு வைக்கப்பட்டிருந்த பார்வையாளர்கள் புத்தகத்தில்,

"தமிழுக்குச் செம்மொழித் தகுதி கோரிக்
குரல்கொடுத்த முதல் தமிழன் பரிதிமாற்கலைஞர்
புகழ் வாழ்க!"

– என நான் எழுதிக் கையெழுத்திட்டுப் போற்றினேன்.

அதற்கு முன்னதாக, அவரது நூல்கள் அனைத்தையும் அரசுடைமையாக்கி, அவரது மரபுரிமையர்க்கு 2.12.2006 அன்று 15 இலட்ச ரூபாய் பரிவுத் தொகை இந்த அரசினால் வழங்கப்பட்டது. மத்திய அரசு மூலம் 17.8.2007 அன்று பரிதிமாற்கலைஞர் நினைவுச் சிறப்பு அஞ்சல் தலையும் வெளியிடப்பட்டது.

தமிழ்மொழியைச் செம்மொழியென்று பிரகடனப் படுத்துவதற்கு அடித்தளம் அமைத்த பரிதிமாற்கலைஞர் – நூறாண்டுக் கால மொழி உரிமை வரலாற்றைத் தொடங்கி வைத்த தமிழறிஞர் – ஏறத்தாழ 33 ஆண்டுகள் மட்டுமே வாழ்ந்த அப்பெருமகனார் தமிழ் மொழி வரலாற்றில் நிலைத்த புகழைக் கொண்டுள்ளார் என்பது நினைந்து பெருமிதம் கொள்ளத்தக்கது.

பரிதிமாற்கலைஞர் தமிழ் செம்மொழியென 1887ஆம் ஆண்டு குரல் கொடுத்ததற்கு 30 ஆண்டுகளுக்கு முன்பாக – 1856ஆம் ஆண்டில் மேனாட்டுத் தமிழறிஞர் கால்டுவெல் அவர்கள், தாம் எழுதிய "திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் (A Comparative Grammar of the Dravidian Languages)" என்ற உன்னதமான நூலில்,

"திராவிட மொழிகள் அனைத்திலும், உயர்தனிச் செம்மொழியாய் நிலைபெற்று விளங்கும் தமிழ், தன்னிடையே இடம் பெற்றிருக்கும் சமஸ்கிருதச் சொற்களை அறவே ஒழித்துவிட்டு உயிர் வாழ்வதோடு அவற்றின் துணையை ஒருசிறிதும் வேண்டாமல் வளம் பெற்று வளர்வதும் இயலும்" என்று எழுதியுள்ளார்.

'திராவிட மொழிகள் (Dravidian Languages)' என்ற சொல்லாக்கத்தை உருவாக்கித் தந்த அறிஞர் கால்டுவெல் அவர்களின் நூல்கள் தமிழகத்தில் பிராமணர் அல்லாதார் இயக்கத்திற்கு ஊக்கமளிப்பதாக அமைந்தன. தமிழ், தமிழர்தம் நாகரிகம், பண்பாடு ஆகியவற்றில் அவர் கொண்டிருந்த பற்றின் அடிப்படையிலேதான், அறிஞர் அண்ணா அவர்கள் இரண்டாம் உலகத்தமிழ் மாநாட்டின்போது, அவரது திருவுருவச் சிலையைச் சென்னை மெரினா கடற்கரை காமராசர் சாலையில் 2.1.1968 அன்று நிறுவிடச் செய்தார்கள். டாக்டர் கால்டுவெல் அவர்கள் தமிழைச் செம்மொழியென்று அறிவித்தது; செம்மொழி வரலாற்றில் நமக்கு மாணிக்கப் புதையலாகக் கிடைத்திட்ட மகத்தான பொன்னேடாகும்.

சைவ சித்தாந்த மகா சமாஜம் 15.3.1918 அன்று சென்னைப் பச்சையப்பன் கலாசாலை மண்டபத்தில் நடத்திய கூட்டத்தில் திராவிட மொழிகளுள் தொன்மையும் சீர்மையும் தலைமையும் பெற்றொளிர்கின்ற உயர்தனிச் செம்மொழி தமிழேயாம்; அந்தத் தமிழ் மொழியைச் சர்வ கலா சங்கத்தாரால் ஆரியம், அரேபியம், பாரசீகம் முதலிய ஏனைத் தனி மொழிகளோடொப்ப வைத்துப் போற்றப்பட வேண்டுமென்னும் தீர்மானம் கே. சுப்பிரமணியபிள்ளை முன் மொழிய, ரா.பி. சேதுப்பிள்ளை வழிமொழிய நிறைவேற்றப்பட்டது.

1911ஆம் ஆண்டு தோற்றுவிக்கப்பட்ட கரந்தைத் தமிழ்ச் சங்கம் தொடங்கிய காலம் முதல் தமது வாழ்நாள் இறுதிவரை அதன் தலைவராக இருந்து அரும் பணியாற்றியவர் தமிழறிஞர் த.வே.உமாமகேசுவரம் பிள்ளை அவர்கள். அதனால்தான், 18.2.2006 அன்று சென்னை அண்ணா அறிவாலயத்தில் – கலைஞர் அரங்கில் நடைபெற்ற தமிழவேள் உமாமகேசுவரனார் அஞ்சல் தலை வெளியீட்டு விழாவில் நான் உரையாற்றியபோது:

"உமாமகேசுவரனார் பெயர் இன்று மற்ற அறிஞர்களை விட அதிகமாக நினைவுக்கு வரவேண்டிய காலகட்டம் இது. காரணம் தமிழ்ச் செம்மொழி என்று

எண்ணினால், பரிதிமாற்கலைஞருக்கு அடுத்து, நம் நினைவுக்கு வருகிற பெயர் தமிழவேள் உமாமகேசுவரனாரின் பெயர்தாம். அவர்தாம் கரந்தைத் தமிழ்ச் சங்கத்தில் தமிழ், செம்மொழியாக ஆக்கப்படவேண்டும் என்ற தீர்மானத்தை இயற்றியவர். இல்லையேல், தமிழ் செம்மொழியாவதற்கு எந்த ஆதாரத்தை வைத்து நாம் மத்தியிலே இருக்கின்ற அரசோடு பேச முடிந்தது ?"

– என்று எடுத்துரைத்தது, எனது நினைவில் அழுத்தமாக அச்சாகியுள்ளது.

தஞ்சை – கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் ஏழு–எட்டாம் ஆண்டுகளுக்கான விழா, 24.5.1919 மற்றும் 25.5.1919 ஆகிய நாள்களில் திருக்கோவலூர் ஆதீனம், திருப்பாதிரிப்புலியூர் திருஞானியார் மடத்தின் தலைவர் திரு.சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாச்சார்ய சுவாமிகள் அவர்கள் தலைமையில், தமிழவேள் த.வே.உமாமகேசுவரம் பிள்ளை, தமிழறிஞர் வேங்கடசாமி நாட்டார், திரு.டி.என்.குருமூர்த்திப் பிள்ளை, திரு.டி.கூரத்தாழ்வார் முதலியார் முன்னிலையில் நடைபெற்றது. அவ்விழாவில், "தமிழ்மொழியானது தொன்மையும், சீர்மையும், செம்மையும் வாய்ந்து விளங்குகின்ற ஓர் உயர்தனிச் செம்மொழியென உறுதிப்பட பல திறத்தாராலும் ஏற்றுக்கொள்ளப்படுவதால், சென்னைப் பல்கலைக் கழகத்தார் தாம் இதுகாறும் கொண்டிருந்த கொள்கையை மாற்றித் தமிழ்மொழி, ஓர் உயர்தனிச் செம்மொழியே என்பதை ஒப்புக்கொண்டு, இத்தென்னாட்டுப் பல்கலைக் கழகத்தில் அதற்கு முறைப்படி முதலிடமும், உரிமைகளும் கொடுக்க வேண்டும்" என்று வற்புறுத்தித் தீர்மானம் இயற்றப்பட்டது.

செம்மொழி வரலாற்றில் ஒரு முக்கிய மைல்கல் போன்று அமைந்த மகத்தான இந்தத் தீர்மானம்தான் தமிழ்மொழியை உயர்தனிச் செம்மொழியாக அறிவிக்க வேண்டுமென்று அமைப்புரீதியாகக் கோரி நிறைவேற்றப்பட்ட முதல் தீர்மானம் ஆகும். எனவே, செம்மொழி வரலாற்றில் கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் பணி, ஆற்றல் மிக்கதோர் அத்தியாயமாக இடம் பெற்றுள்ளது.

1919ஆம் ஆண்டு ஜூன் மாதம் 22ஆம் நாளன்று, திருச்சி டவுன்ஹாலில் நடைபெற்ற பிராமணர் அல்லாதார் மாநாட்டில், "சென்னைப் பல்கலைக் கழகமும், அரசுப்பணித் தேர்வாளர்களும்; பாரசீக மொழி, அரேபிய மொழி, வடமொழி ஆகிய மொழிகளுக்குச் சமமாக; செறிவும், செழிப்பும் நிறைந்த மிகப் பழைமை வாய்ந்த இலக்கியங்களைக் கொண்டுள்ள தமிழ்மொழியை, செம்மொழியாக அங்கீகாரம் செய்யவேண்டும்" எனும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

அதன்பின்னர், விடுதலைப் போராட்ட வீரரும், அகில இந்திய காங்கிரசு தலைவர்களுள் ஒருவரும், பாகிஸ்தான் பிரிவினையைத் தீவிரமாக எதிர்த்தவரும், உருது, அரேபியம், இந்தி, பாரசீகம், வங்காளம், ஆங்கிலம் ஆகிய மொழிகளைக் கற்றுத் தேர்ந்த பன்மொழி அறிஞரும், கவிஞரும், பண்டிதநேரு அவர்களின் மத்திய அமைச்சரவையில் இந்தியாவின் முதல் கல்வி அமைச்சராகப் பணியாற்றியவரும், இலவசத் தொடக்கக் கல்வியை அறிமுகப்படுத்தியவரும், இந்தியத் தொழில்நுட்ப நிறுவனங்களை(IITs) உருவாக்கியவருமான மௌலானா அபுல்கலாம் ஆசாத் அவர்கள்; 15.3.1951 அன்று – சாகித்ய அகாடமியை உருவாக்குவதற்காக நடத்தப்பட்ட மாநாட்டில் தொடக்க உரையாற்றியபோது, "இந்திய அரசியல் சட்டத்தால் அங்கீகாரம் செய்யப்பட்டுள்ள பதினான்கு மொழிகளுள் சமற்கிருதமும், தமிழும் அடங்கும்; தமிழ்மொழி செழுமையும், தொன்மையும் மிக்க இலக்கியத்தைக் கொண்டது; அம்மொழியிலுள்ள கவிதைகள் வெளிநாட்டு மொழிகளில் மொழியாக்கம் செய்வதற்குரிய தகுதி படைத்தவை; தமிழ் உண்மையிலேயே ஒரு செம்மொழி என்பதை நாம் நினைவில் கொள்ளவேண்டும்; தமிழ் செம்மொழியென அங்கீகாரம் செய்வதற்குரிய தகுதிப்பாடுகள் அனைத்தும் பண்டைக் காலத்தைச் சார்ந்தவை" என்று குறிப்பிட்டார். இக்கூற்று ஓர் ஆவணமாகவே போற்றப்படத் தக்கதாகும்.

1955ஆம் ஆண்டு டிசம்பர் திங்கள் 26, 27, 28 ஆகிய நாள்களில் சிதம்பரம் – அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் நடைபெற்ற அகில இந்தியக் கீழ்த்திசை மாநாட்டில் தலைமையுரை ஆற்றிய பேராசிரியர் தெ.பொ.மீனாட்சி சுந்தரனார்; மௌலானா அபுல்கலாம் ஆசாத் அவர்களின் இந்த உரையைச் சுட்டிக்காட்டி, "அவ்வாறு தமிழ்மொழியைச் செம்மொழியென அங்கீகாரம் அளித்திட வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்; அப்படித் தேவையான அங்கீகாரத்தை இந்தக் கீழ்த்திசை மாநாடு வழங்க வில்லையெனில், வேறு யார்தாம் வழங்கமுடியும் ?" என்று வினாக் கணை தொடுத்தார்.

1966ஆம் ஆண்டில் மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் தமது நுண்ணிய ஆய்வு ஆராய்ச்சிக்குப் பிறகு, தமிழ்மொழி செம்மொழியே என மொழி அறிஞர்கள் அனைவரும் ஏற்றுப் போற்றும் வகையில், உரிய சான்றுகளுடன் "உலகின் முதன்மையான செம்மொழி (The Primary Classical Language of the world)" என்ற அரிய நூல் ஒன்றை ஆங்கிலத்தில் எழுதி வெளியிட்டார்.

பாவாணர் அந்நூலில் எடுத்துரைத்த அசைக்க முடியாத ஆதாரங்கள் தமிழ் ஆர்வலர்களையும், அறிஞர்களையும் மட்டுமல்லாமல், பிறமொழி அறிஞர் களையும் குறிப்பாக, வடமொழி மற்றும் ஆங்கிலப் புலமை மிக்கோரையும் பெரிதும் ஈர்த்து ஏற்றுக் கொள்ளச் செய்தன.

பாவாணரின் தமிழ்மொழி மேதைமையையும், ஆழ்ந்த தமிழ்ப் பற்றினையும், தமிழ் செம்மொழியே என அனைவரும் ஏற்றுக் கொள்வதற்கு அவர் எடுத்துக் கொண்ட சீரிய முயற்சிகளையும் பாராட்டிப் போற்றிடும் வகையில்; கழக அரசு 1974இல், "செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்" ஒன்றினை நிறுவி, அதன் முதல் இயக்குநராக மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் அவர்களை நியமித்தது.

1996இல் அவரது படைப்புகள் அனைத்தையும் அரசுடைமையாக்கி, அவரது மரபுரிமையர்க்கு 20 இலட்ச ரூபாய் பரிவுத்தொகையை வழங்கியதோடு; அவரது நினைவுச் சிறப்பு அஞ்சல்தலையை மத்திய அரசின் மூலம் 18.2.2006 அன்று வெளியிட்டுப் பெருமைகொண்டது. அதுமட்டுமல்லாமல், மதுரை மாவட்டம் சாத்தமங்கலம் கிராமத்தில், பாவாணர் மணிமண்டபமும், அதில் பாவாணரது முழுஉருவச் சிலையும் தமிழக அரசின் சார்பில் அமைக்கப்பட்டு, 30.10.2007 அன்று திறந்து வைக்கப் பட்டுள்ளது.

அதனைத் தொடர்ந்து, நீண்ட இடைவெளிக்குப் பின், அருமை நண்பர் எம்.ஜி.ஆர். அவர்கள் தமிழக முதலமைச்சராக இருந்தபோது மதுரையில் 1981ஆம் ஆண்டு நடைபெற்ற ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டின்போதும், 1995இல் தஞ்சையில் நடைபெற்ற எட்டாம் உலகத் தமிழ் மாநாட்டின்போதும் எழுப்பப்பட்ட தமிழ்ச் செம்மொழிக் கோரிக்கைகள் பயனளித்திட வில்லை.

1996இல், நான்காம் முறையாகக் கழக அரசு பதவியேற்றபோது, புதிதாகத் தோற்றுவிக்கப்பட்ட தமிழ்ப் பண்பாட்டுத் துறை அமைச்சகத்தின் தலையாய முதல் பணியாக, தமிழைச் செம்மொழி என அறிவிக்கக் கோருவதற்கான அனைத்து முயற்சிகளையும் மேற்கொள்ள வேண்டுமென்று நான் அறிவுரைகள் வழங்கினேன். 20.6.1996 அன்று தமிழ்ப் பண்பாட்டுத் துறை அமைச்சர் திரு.தமிழ்க்குடிமகன் அவர்கள் தலைமையில், அண்ணா பல்கலைக்கழகத்தின் முன்னாள் துணைவேந்தர் முனைவர் வா.செ.குழந்தைசாமி, சென்னைப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தர் முனைவர் ப.க.பொன்னுசாமி, தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் முன்னாள் துணைவேந்தர்கள் முனைவர் ச.அகத்தியலிங்கம், முனைவர் அவ்வை நடராசன், முனைவர் சி.பாலசுப்பிரமணியம்; திருச்சி பாரதிதாசன் பல்கலைக்கழகத்தின் முன்னாள் துணைவேந்தர் முனைவர் ச.முத்துக்குமரன், ஆசியவியல் ஆய்வு நிறுவனத்தின் இயக்குநர் முனைவர் ஜி.ஜான்சாமுவேல், திரு.மணவை முஸ்தபா, தமிழ்வளர்ச்சி மற்றும் பண்பாட்டுத் துறையின் செயலாளர் ஆகியோர் கலந்துகொண்ட கூட்டத்தில்; தமிழ்மொழியைச் செம்மொழியென அறிவிப்பது தொடர்பாக, ஆசியவியல் நிறுவனத்தின் இயக்குநர் முனைவர் ஜி.ஜான்சாமுவேல் அவர்களால் தயாரிக்கப்பட்ட வரைவு அறிக்கை பரிசீலிக்கப்பட்டு, ஒருசில மாற்றங்களுடன் ஏற்கப்பட்டு, மத்திய அரசுக்குப் பரிந்துரைக்கப்பட்டது. அம் முடிவின்படி, அந்த அறிக்கையில் தமிழ்மொழியின் பெருமைகள் விளக்கப்பட்டுள்ளதுடன் அறிஞர் பெருமக்கள் தமிழ் மொழியின் செம்மொழித் தன்மை குறித்து ஆய்ந்து நிறுவியுள்ள கருத்துகளும் இடம் பெற்றுள்ளன.

கிரேக்க மொழியுடன் தமிழ்மொழியாளரின் உறவு தொடங்குவதற்கு முன்னரே, தமிழ்மொழி செம்மொழித் தகுதியை அடைந்துவிட்டது என்று கில்பர்ட் சிலேட்டர் குறிப்பிடுகிறார். தமிழ்மொழி கிரேக்க மொழியைவிடச் செறிவானதென்றும், இலத்தீன் மொழியைவிட மேன்மையானது என்றும், ஆங்கிலம் மற்றும் செருமன் மொழியைவிட ஆற்றல் வாய்ந்தது என்றும் டாக்டர் வின்சுலோ குறிப்பிட்டுள்ளார். பிரெஞ்சு இந்தியவியல் அறிஞர் பியரி மெய்லி செம்மொழித் தமிழின் சங்கப் பாடல்கள், கிரேக்க மொழியின் நுட்பமான கவிதைத் தொகுதிகளுக்கு அறைகூவலாக விளங்குகின்றன என்கிறார்.

தமிழ் மீது கொண்ட பற்றால் 'நன்னெறி முருகன்' எனத் தம் பெயரை மாற்றிக் கொண்ட, மேற்கு வங்கத்தைச் சேர்ந்த இந்திய மொழிகள் குறித்த ஆய்வியல் அறிஞர் பேராசிரியர் டாக்டர் சுனீத்குமார் சட்டர்ஜி, 'தற்போதைய இந்தியப் பண்பாடு மற்றும் சமயத் தத்துவத்தைப் பொறுத்த வரையில் திராவிட மொழியே பாவு நூலாகவும், ஆரியமொழி ஊடிழையாகவும் உள்ளன; இந்தியப் பண்பாட்டுச் செல்வத்துக்குத் திராவிடர்கள் ஆற்றிய பங்கு ஐம்பது விழுக்காட்டுக்குக் குறையாதது' என்று தெளிவாகத் தெரிவித்துள்ளார்.

அறிஞர் ஏ.கே.இராமானுசன் 'இலக்கிய இயற்கையடைவு' என்ற தம் நூலில், இந்தியாவின் இரண்டு செம்மொழிகளுள் ஒன்றான தமிழ் மட்டுமே, சமகால இந்திய நிகழ் மொழியாகும் என்றும்; இது கடந்தகாலத் தொல் பழைமையோடு தொடர்ந்து வழக்கு மொழியாக மக்களிடையே ஏற்றுக் கொள்ளத்தக்கதாக உள்ளது என்றும் கூறியுள்ளார்.

சங்க இலக்கியங்கள் புகழ்பெற்ற காலப்பழைமை கனிந்த தமிழ்ப் பாடல்களாகச் செம்மையுடன் விளங்குகின்றன என்று டாக்டர் கமில்சுவலபில் தெரிவிக்கிறார். மொகஞ்சதாரோ என்ற இடத்தைக் கண்டுபிடித்த பேராசிரியர் ஆர்.டி.பானர்ஜி 'ஆரியர்கள் வருகை புரிந்த காலத்திற்குப் பல நூறு ஆண்டுகளுக்கும் முன்னரே அமைந்திருந்த, சிந்துவெளி நாகரிகமானது,

ஆரிய நாகரிகத்திற்கும் முந்தைய அதிசய நாகரிகம் என்பதை நிலை நிறுத்தியுள்ளது என்றும்; அம் மக்களைத் திராவிடர்கள் அல்லது திராவிட இனத்தில் மூத்தவர்கள் என்று தென்னிந்தியாவில், திராவிட மொழிகளைப் பேச்சு வழக்காகக் கொண்டு வாழும் பல்வேறு சமுதாயத்தைச் சேர்ந்தவர்களாகப் பின்னர்ச் சுட்டிக்காட்டப்பட்டது' என்றும் எழுதியுள்ளார். சொல்லமைவு நுணுக்கத்தைப் பெருமளவில் வடஇந்திய மொழிகளுக்குத் தமிழ்மொழி வழங்கியுள்ளதை முனைவர் பர்ரோ பட்டியலிட்டுள்ளார்.

இத்தகைய பல்வேறு அறிஞர்களின் கருத்துகளுடன் தமிழைச் செம்மொழியாக அறிவிக்க வேண்டுமென்று, தக்க வரலாற்றுப் பின்னணியோடும், சான்றுகளோடும், கழக அரசின் சார்பில் மத்திய அரசின் கல்வித்துறைக்கு அனுப்பப்பட்ட இந்த அறிக்கை மீது, ஆய்வுசெய்து கருத்துரை வழங்குமாறு மைசூரிலுள்ள இந்திய மொழிகள் நடுவண் ஆணையத்திற்கு மத்திய அரசு அனுப்பியது. அந்த ஆணையமும், "செம்மொழிக்குரிய அனைத்துத் தகுதிப்பாடுகளும் தமிழுக்கு இருப்பதால், நடுவண் அரசு தமிழைச் செம்மொழியாக அறிவிக்கலாம்" என மத்திய அரசுக்குப் பரிந்துரை செய்தது.

இதற்கிடையே, இரண்டாயிரம் ஆண்டுப் பாரம்பரியம் மிக்க நம் தமிழ்மொழியைச் செவ்வியல் மொழி வரிசையில் சேர்த்து, அதன் வளர்ச்சிக்கு நிதியுதவி அளிக்க வேண்டுமென மனோன்மணீயம் சுந்தரனார் பல்கலைக் கழகம், தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகம், சென்னைப் பல்கலைக்கழகம், திருச்சி பாரதிதாசன் பல்கலைக் கழகம் உட்பட தமிழகத்திலுள்ள அனைத்துப் பல்கலைக் கழகங்களும் தீர்மானங்கள் நிறைவேற்றி மத்திய அரசை வலியுறுத்தின.

இப்படிப் பல்வேறு அமைப்புகள், வேறுபட்ட சூழ்நிலைகளில் தீர்மானங்கள் பல நிறைவேற்றி மத்திய அரசை வலியுறுத்திய பின்னும் அக்கோரிக்கை நிறைவேற்றப் படவில்லை. இந்நிலையில் தமிழக அரசின் சார்பில், "அரிய இயல்புகள் அனைத்தையும் கொண்டிருந்தாலும், தமிழ் இன்னமும் இந்தியத் திருநாட்டின் செம்மொழியென அங்கீகரிக்கப்படவில்லை; ஆனால், சமற்கிருதம், பாரசீகம், அரேபியம் ஆகிய மொழிகளுக்கு அந்த அந்தஸ்து வழங்கப்பட்டுள்ளது. எனவே தமிழை, மத்திய அரசின் மனிதவள மேம்பாட்டுத் துறையும், பல்கலைக்கழக மானியக் குழுவும் செம்மொழியென அங்கீகாரம் செய்வதோடு, மேலும் தாமதமின்றி உரிய நிதியுதவியும் அளித்திடல் வேண்டும்" என்று நமது நாட்டுப் பிரதமர்களாக விளங்கிய திரு. தேவேகவுடா, திரு. ஐ.கே. குஜ்ரால், திரு. வாஜ்பாய் ஆகியோர்க்குத் தமிழக அரசின் சார்பில் கடிதங்கள் எழுதியும் எந்தப் பயனும் ஏற்படவில்லை.

தலைநகர்த் தமிழ்ச் சங்கம், தில்லித் தமிழ்ச் சங்கம் மற்றும் தமிழ் அமைப்புகள் சார்பில், தமிழை மத்திய ஆட்சிமொழியாகவும், செவ்வியல் மொழியாகவும் ஏற்றிடக் கோரி; தில்லியில் 2000, ஏப்பிரல் திங்கள் 29, 30 ஆகிய நாள்களில் மாநாடு ஒன்றை நடத்தி அதன் மூலம் மத்திய அரசுக்கு அழுத்தம் கொடுக்கப்பட்டது.

பேராசிரியர் இ.மறைமலை அவர்கள் கேட்டுக் கொண்டதற்கிணங்க, 2000, ஏப்பிரல் திங்களில் அமெரிக்கத் தமிழறிஞர் பேராசிரியர் முனைவர் ஜார்ஜ் எல்.ஹார்ட்டு அவர்கள், தமிழ்மொழியைச் செம்மொழியெனக் கூறும் நிலைப்பாடு பற்றி வழங்கிய அறிக்கை, உலகெங்கிலும் உள்ள கல்வியாளர்களின் கவனத்தைப் பெரிதும் ஈர்த்தது. ஆங்கிலத்தில் வரையப்பட்ட கருத்தாழம் மிக்க அந்த அறிக்கை தமிழ்ச் செம்மொழி வரலாற்றில் ஓர் ஆணிமுத்தை ஒத்த அத்தியாயமாகும்.

அமெரிக்காவிலுள்ள பர்க்லி நகரில் அமைந்துள்ள கலிஃபோர்னியா பல்கலைக்கழகத்தில், 1975ஆம் ஆண்டு முதல் தமிழ்ப் பேராசிரியராகப் பணிபுரிந்து வரும் ஜார்ஜ் எல்.ஹார்ட் ஹார்வர்டு பல்கலைக் கழகத்தில் வடமொழி இலக்கியம் பயின்று மாடிசன் நகரில் உள்ள விஸ்கான்சின் பல்கலைக்கழகத்தில் வடமொழிப் பேராசிரியராகவே பணியாற்றியவர்; தமிழ், வடமொழி, ஐரோப்பியச் செம்மொழிகளான இலத்தீனம், கிரேக்கம், இரஷ்யன், செருமன், பிரெஞ்சு ஆகிய மொழிகளின் இலக்கியங்களை விரிவாகக் கற்றறிந்தவர்; இந்தி மொழியில் மகாதேவி வர்மா, துளசிதாசர், கபீர் ஆகிய பெருமக்களின் இலக்கியப் படைப்புகளையும் விரிவாகப் படித்தறிந்தவர்.

இத்தகைய பன்மொழிப் புலமையையும், இலக்கியத் திறனறிவினையும் ஒருங்கே பெற்ற பேராசிரியர் ஜார்ஜ்எல்.ஹார்ட் அவர்கள், "தமிழ்மொழி உலகின் மிகவுயர்ந்த செவ்வியல் இலக்கியங்களையும், மரபுச் செல்வங்களையும் பெற்றுத் திகழும் உயர்தனிச் செம்மொழிகளுள் ஒன்று என்பதனை நான் எவ்விதத் தயக்கமும் இன்றித் தெளிவாக அறுதியிட்டுக் கூறுவேன்." "தமிழ் ஒரு செவ்வியல் மொழி என்ற கருத்தை நிலைநாட்டுவதற்காக நான் இதைப்போன்று ஒரு கட்டுரை எழுத வேண்டியுள்ளது என்ற எண்ணமே எனக்கு இயல்புக்கு மாறானதாகத் தோன்றுகிறது. இச்செயல் எப்படியிருக்கிறது என்றால், 'இந்தியா ஒரு மிகப்பெரிய நாடு, இந்துசமயம் உலகின் மிகப்பெரிய சமயங்களுள் ஒன்று' என்னும் கூற்றை நிலைநாட்ட முற்படுவது போன்றுள்ளது. 'தமிழ் செவ்வியல் மொழி' என்னும் தகுதி நிலையை மறுக்க முனைவது, இந்தியப் பண்பாட்டின் பெருமைக்கும், வளமைக்கும் இன்றியமையாத மையக் கூறாக விளங்கும் – உயிராதாரமாக விளங்கும் – உறுப்பு ஒன்று 'அதற்கு

இருக்கக்கூடாது' என்று மறுக்க முனைவதற்கு ஒப்பானதாகும்" என்று கூறித் தமிழ் செம்மொழி என இந்திய அரசினால் ஏற்கப்படாத அவலத்தை எண்ணி வருத்தத்தோடு எழுதியுள்ளார்.

பேராசிரியர் ஜார்ஜ் எல்.ஹார்ட்டு அவர்களது இந்த அறிக்கையில் உள்ள கருத்துகள் இந்தியத் திருநாட்டின் கல்வியாளர்கள் மத்தியில் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தியதோடு; தமிழ் ஆர்வலர்கள் மத்தியில் பெரும் எழுச்சியையும் ஏற்படுத்தியது.

ஆட்சி அளவில் என்று மட்டுமல்லாமல், கட்சிரீதியாகவும் – அரசியல் ரீதியாகவும், தமிழ்ச் செம்மொழிக் கோரிக்கையைத் தொடர்ந்து முன்னெடுத்துச் செல்ல வேண்டியது அவசர அவசியம் என்று திராவிட முன்னேற்றக் கழகம் முடிவு செய்து, 2001 சட்டமன்றத் தேர்தல் அறிக்கையில், முதல்முறையாக, "தமிழ் மொழியைச் செம்மொழியாக அறிவித்திட வேண்டுமென்று தி.மு.க. வலியுறுத்தும்" என்ற வாக்குறுதியை இடம்பெறச் செய்தது. தேர்தல் வாக்குறுதியுடன் நில்லாமல்; கழகம், அந்த வாக்குறுதியை நிறைவேற்றுவதற்கான செயல் திட்டங்களையும் வகுத்து, களத்தில் இறங்கியது.

2002ஆம் ஆண்டு, மே திங்கள் 4 மற்றும் 5ஆம் நாள்களில் தலைநகர்த் தமிழ்ச் சங்கமும், பெங்களூர்த் தமிழ்ச் சங்கமும் இணைந்து; தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ச் செவ்வியல் மொழி, திருக்குறள் தேசிய நூல் எனும் முப்பெரும் முழக்கத்துடன் மாநாடு நடத்தின. அந்த மாநாட்டில், இனியும் காலங் கடத்தாமல், உடனே தமிழ்மொழியைச் செவ்வியல் மொழியாக அறிவிக்க வேண்டுமென மைய அரசை மிகவும் வற்புறுத்திக் கேட்டுக்கொண்டு தீர்மானம் நிறைவேற்றப் பட்டது.

2003, ஏப்பிரல் திங்கள் 13ஆம் நாள், தமிழ்மொழி அகாதெமியின் சார்பில் சென்னையில் நடைபெற்ற பத்தாவது தேசிய மொழிகளின் மாநாட்டில் கலந்துகொண்டு உரையாற்றியபோது, "எல்லோராலும் தமிழ் செம்மொழியாக ஆக்கப்படவேண்டும் என இங்கே பேசப்பட்டது. ஆக்கப்பட வேண்டும் என்பதைவிட, அழைக்கப்படவேண்டும் என்பதுதான் பொருத்தம். ஏனென்றால், ஏற்கெனவே தமிழ் செம்மொழிதான். அது செம்மொழி என்று அழைக்கப்பட வேண்டும் என்பதுதான் இன்றைக்கு நாம் எடுத்து வைத்திருக்கின்ற கோரிக்கை." என எடுத்துரைத்து, ஒரு மொழி செம்மொழி என அழைக்கப்பட மொழியியல் வல்லுநர்கள் குறிப்பிடும் பதினொரு தகுதிப்பாடுகளும் முற்றிலும் பொருந்தக் கூடிய, உலகத்தின் ஒரே மொழியாகத் தமிழ் திகழ்கிறது என விளக்கினேன்.

அன்று நான் ஆற்றிய அந்த உரை, தமிழ் ஆர்வலர்கள் மத்தியில் பெரும் உணர்ச்சியையும், வரவேற்பையும் ஏற்படுத்தியதோடு; ஆங்கில நாளேடுகளிலும் விரிவாக வெளியிடப்பட்டு, மத்திய அரசியலாரின் கவனத்தையும், கருத்தையும் ஈர்த்தது.

2003, மே திங்கள் 3, 4ஆம் நாள்களில் திருவனந்தபுரம் தமிழ்ச் சங்கமும், தலைநகர்த் தமிழ்ச் சங்கமும் இணைந்து, திருவனந்தபுரம் தமிழ்ச் சங்க வளாகத்தில் நடத்திய மாநாட்டில், நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தில், "உலகில் உள்ள மொழிகளில் தமிழ், கிரேக்கம், இலத்தீன், சமற்கிருதம், சீனம் ஆகிய ஐந்தும் மூத்த மொழிகளாகும். ஆனால், இந்த மொழிகளுள் கிரேக்கம், இலத்தீன், சமற்கிருதம் போன்ற மொழிகள் வழக்கொழிந்த நிலையிலும், அவற்றிற்குச் செவ்வியல் மொழித் தகுதி கொடுக்கப்பட்டுள்ளது. ஆனால், காலத்தொன்மை, இலக்கிய வளம், தாய்மைத் தன்மை, உயிரோட்டம் ஆகியவற்றைப் பெற்ற தமிழ்மொழியைச் செவ்வியல் மொழி என அறிவிக்க இந்திய அரசு மறுக்கிறது. தமிழைச் செவ்வியல் மொழியாக ஏற்றுக் கொண்டு அதற்குரிய நிலையினை உருவாக்கிட வேண்டும்" என்று குறிப்பிடப்பட்டிருந்தது.

18.8.2003 அன்று செம்மொழிக் கோரிக்கை நிறைவேற்றப்பட தலைநகர்த் தமிழ்ச் சங்கம், தில்லித் தமிழ்ச் சங்கம் ஆகிய தமிழ் அமைப்புகளின் சார்பில், நாடாளுமன்றம் முன் உண்ணாவிரதப் போராட்டம் நடத்தப்பட்டது. அந்த உண்ணாவிரதத்தில், திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் மத்திய அமைச்சர்களும், நாடாளுமன்ற உறுப்பினர்களும் இலக்கியச் செல்வர் குமரி அனந்தன் அவர்களும் கலந்துகொண்டனர். எம்.ஜி.ஆர். கழகத் தலைவர் அருமை நண்பர் திரு. ஆர்.எம்.வீரப்பன் அவர்கள் 13.8.2003 அன்று வெளியிட்ட அறிக்கையில், இந்த உண்ணாவிரதப் போராட்டத்திற்குத் தமது ஆதரவைத் தெரிவித்தார்.

இந்த உண்ணாவிரதப் போராட்டம் நடைபெற்ற பிறகு, 19.8.2003 அன்று போராட்டக் குழுவின் சார்பில் இந்தியப் பிரதமர் திரு. வாஜ்பாய் அவர்களிடமும், குடியரசுத் தலைவர் திரு. அப்துல்கலாம் அவர்களிடமும் தமிழைச் செம்மொழியாக ஏற்றுக் கொள்ளக் கோரும் மனுக்கள் கொடுக்கப்பட்டன.

அதனைத் தொடர்ந்து, தமிழைச் செம்மொழியாக அறிவித்திட எழுப்பப்பட்டு வரும் கோரிக்கை நிறைவேற்றப்படாதது குறித்து, திராவிடர் கழகத் தலைவர் திரு. கி.வீரமணி அவர்கள் 2.9.2003 அன்று ஓர் அறிக்கை வெளியிட்டுக் கண்டனம் தெரிவித்திருந்தார்.

2003ஆம் ஆண்டு, செப்டம்பர்த் திங்கள் 20, 21 ஆகிய நாள்களில் நடைபெற்ற விழுப்புரம் மாவட்டத் தி.மு.க.

மாநாட்டில் தமிழ் செம்மொழி என அறிவிப்பதில், மத்திய அரசின் மெத்தனப் போக்கைச் சுட்டிக் காட்டி நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தை ஒட்டி, தி.மு.க. தலைமை இலக்கிய அணி சார்பாக, தமிழகம் முழுவதும் 15 மாவட்டத் தலைநகரங்களில் தமிழ்ச் செம்மொழி – ஆட்சிமொழிக் கருத்தரங்குகள் நடத்தப்பட்டன.

கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் முயற்சியால், 10.1.2004 அன்று நடைபெற்ற தமிழறிஞர்களின் கூட்டத்தில் மேற்கொள்ளப்பட்ட முடிவின்படி, 12.1.2004 அன்று தொடங்கி ஒருகோடி கையொப்பம் பெற்றுத் தமிழ் செம்மொழி கோரிக்கை வலியுறுத்தப்பட்டது.

2004, மே மாதம் நடைபெற்ற நாடாளுமன்றத் தேர்தலையொட்டி; திராவிட முன்னேற்றக் கழகம் வெளியிட்ட தேர்தல் அறிக்கையில், முதன்முதலாகச் செம்மொழிக் கோரிக்கையின் நோக்கத்தை விளக்கி; "இந்தியாவில் உள்ள அனைத்துப் பல்கலைக் கழகங்களிலும் தமிழுக்கென்று துறை ஏற்படுத்திடவும், தமிழ் ஆராய்ச்சிக்கென மத்திய அரசு ஆண்டுதொறும் நிதி ஒதுக்கிடவும், உலகளாவிய (Global) பல்கலைக் கழகங்களில் தமிழ் ஆராய்ச்சிப் பணி நடைபெறவும் வாய்ப்பாக, செம்மொழிக்குள்ள அனைத்துத் தகுதிகளும் கொண்ட தமிழ்மொழியை உயர்தனிச் செம்மொழியென அறிவிக்க வேண்டுமெனத் திராவிட முன்னேற்றக் கழகம் மத்திய அரசைத் தொடர்ந்து வலியுறுத்தும்" என்ற வாக்குறுதி இடம் பெற்றது.

நாடாளுமன்றத் தேர்தல்கள் நடைபெற்று, அதில் தியாகத் திருவிளக்காம் திருமதி சோனியாகாந்தி அவர்களின் தலைமையில் அமைந்த ஐக்கிய முற்போக்குக் கூட்டணி வெற்றி பெற்று; டாக்டர் மன்மோகன்சிங்கு தலைமையில் அமைந்த மத்திய அரசில் கழகத்தின் கோரிக்கை ஏற்கப்பட்டு, ஐக்கிய முற்போக்குக் கூட்டணி சார்பில் வெளியிடப்பட்ட குறைந்தபட்ச பொதுச்செயல்திட்ட அறிக்கையில் (National Common Minimum Programme); தமிழ்மொழி, செம்மொழியெனப் பிரகடனப்படுத்தப்படும் (Tamil will be declared as a Classical Language) என்ற செயல்திட்டமும் இடம் பெற்றது. இது செம்மொழி வரலாறு ஒரு சிறப்பான கட்டத்தை எட்டிவிட்டது என்பதை உலகத்திற்குப் பறைசாற்றியது.

7.6.2004 அன்று நாடாளுமன்றக் கூட்டுக் கூட்டத்தில் உரையாற்றிய இந்தியக் குடியரசு தலைவர் டாக்டர் ஏ.பி.ஜெ.அப்துல்கலாம் அவர்கள், தமிழ் செம்மொழியெனப் பிரகடனப்படுத்தப்படும் (Tamil will be declared as a Classical Language) என்று செய்த அறிவிப்பு, தமிழறிஞர்களையும், தமிழ் ஆர்வலர்களையும், உலகெங்கிலும் வாழும் தமிழர்களையும் மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தியது.

அதனைத் தொடர்ந்து, திருமதி சோனியா காந்தி அவர்களின் வழிகாட்டுதலிலும், டாக்டர் மன்மோகன்சிங்கு அவர்களின் தலைமையிலும் இயங்கி வரும் மத்தியிலுள்ள ஐக்கிய முற்போக்குக் கூட்டணி அரசு, 12.10.2004 அன்று, தமிழைச் செம்மொழியெனப் பிரகடனம் செய்து அறிவிக்கை ஒன்றை வெளியிட்டது!

இந்த அறிவிக்கை வெளியானதும், நான் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவில்லை!

தந்தை பெரியார் அவர்கள் என்னைத் தட்டிக் கொடுத்துப் பாராட்டியபோதெல்லாம் – அறிஞர் அண்ணா அவர்கள் என்னை அரவணைத்து உச்சிமுகர்ந்து அன்புமழை பொழிந்தபோதெல்லாம்; அடைந்த மகிழ்ச்சிக்கு ஈடான மகிழ்ச்சி அப்போது என்னுள் குடிகொண்டிருந்தது. அதன் வெளிப்பாடாகத்தான் 10.10.2004 அன்று சென்னையில் தமிழ் மொழி அகாதமி நடத்திய பாராட்டு விழாவிலும்; 17.10.2004 அன்று மதுரையில், மதுரைத் தமிழ்ச் சங்கமும், தமிழார்வம் உடைய 30க்கும் மேற்பட்ட சங்கங்களும் இணைந்து நடத்திய பாராட்டு விழாவிலும்; நான் ஆற்றிய உரைகள் அமைந்திருந்தன. அந்த உரைகளில்,

"தமிழ் மொழி செம்மொழி என அறிவிக்கப்பட்டதைக் கொண்டாடுகின்ற வகையில் நாமெல்லாம் இங்கே கூடியிருக்கிறோம். அதற்கு ஒரு பாராட்டு விழா என்றும், அந்தப் பாராட்டு விழா எனக்கென்றும் குறிப்பிட்டிருப்பதை என்னால் ஏற்றுக்கொள்ள இயலவில்லை. திராவிட மொழி ஒப்பிலக்கணம் கண்ட கால்டுவெல் என்கின்ற பேரறிஞர், அவரைத் தொடர்ந்து பல ஆண்டுக் கால இடைவெளிக்குப் பிறகு, தமிழ்மொழி செம்மொழியாக ஆக்கப்பட வேண்டும் என்று முதல் குரல் கொடுத்த சூரிய நாராயண சாஸ்திரி என்ற பரிதிமாற் கலைஞர், அவர்களைத் தொடர்ந்து தமிழ்ச் சங்கங்கள் பல, தமிழ்ப் புலவர்கள் பலர், தமிழ்ப் பேரறிஞர்கள் பலர் – இப்படி நூற்றுக்கணக்கில், ஆயிரக் கணக்கில் இந்த ஒரு நிலை நாம் எய்துவதற்காகப் பாடுபட்டிருப்பதை எண்ணிப் பார்க்கும்போது, அவர்களுக்கெல்லாம் நீங்கள் தெரிவிக்க வேண்டிய பாராட்டுகளை, வழங்க வேண்டிய நன்றியை என் வாயிலாக இன்றைக்கு வழங்கியிருக்கின்றீர்கள் என்றுதான் நான் கருதுகின்றேன்; நீங்கள் நன்றியினை ஒரு மூட்டையாகக் கட்டி, என்னுடைய தலையிலே வைத்து, இதைக் கொண்டுபோய் அவர்களிடத்திலே சேர்த்திடு என்று கட்டளையிட்டு இருக்கிறீர்கள் என்றுதான் உங்களுடைய பாராட்டுகளை நான் ஏற்றுக் கொண்டுள்ளேன்.

நான் ஒரு கருவி. இந்தக் கருவியைத் தமிழ்நாட்டு மக்கள் பயன்படுத்திக் கொண்டார்கள். தமிழ்ப் புலவர்கள், தமிழ்ப் பேரறிஞர்கள் பயன்படுத்திக் கொண்டிருக் கிறார்கள். உளி சிற்பம் செதுக்குவதற்காகப் பயன்படுத்தப் பட்டால்,

அந்த உளியே அந்தச் சிற்பத்தை செதுக்கியதாகப் பொருள் கொள்ள முடியுமா? அந்தப் பணியை ஆற்றியது சிற்பி. அதைப்போல நான் உளிதான், சிற்பிகள் பலர், பல்லாயிரவர். அந்தச் சிற்பிகளுக்கெல்லாம் என் சிரம் தாழ்ந்த வணக்கத்தை, நன்றியை இந்த நேரத்தில் தெரிவித்துக் கொள்கிறேன்" என்று கூறினேன்.

பின்னர், 5.3.2006 அன்று திருச்சியிலே நடைபெற்ற தி.மு.கழக மாநாட்டில் திருமதி சோனியாகாந்தி அவர்கள் முன்னிலையில் நான் உரையாற்றியபோது தான் என்னுள் பெருக்கெடுத்த உணர்வுகள் குற்றாலத்து அருவியெனக் கொட்டின. அவ்வுரையின் ஒரு பகுதியில்,

"தமிழைச் செம்மொழியாக்க; நூற்றைம்பது ஆண்டுக் காலமாக சூரிய நாராயண சாஸ்திரி என்ற பரிதிமாற் கலைஞர் அவர்களுடைய கோரிக்கை பூத்து, காய்த்து, பழுத்து, அது அழுகிவிடுமோ என்றெல்லாம் நாம் பயந்திருந்த காலத்தில்; "நாங்கள் இருக்கிறோம், அஞ்சாதீர்கள்" என்று சொல்லுகின்ற இன்றைய மத்திய ஆட்சி நாம் விடுத்த அந்த வேண்டுகோளை ஏற்றுத் தமிழைச் செம்மொழி என்று அறிவித்திருக்கிறது; தமிழைச் செம்மொழி என்று அறிவித்து; அதைத் தொடர்ந்து அம்மையார் அவர்களே, நவம்பர் 8 அன்று நீங்கள் எனக்கு ஒரு கடிதம் எழுதினீர்கள். அந்தக் கடிதத்தில்,

**November 8, 2005**

**Dear Thiru Karunanidhiji,**

**I have received your letter of 28th October. I am glad that all the formalities for declaring Tamil as a Classical Language have now been completed. This is an achievement for all the constituents of the UPA Government, but particular credit goes to you and your Party.**

**With Regards,**

**Yours sincerely,**
**Sonia Gandhi.**

அதாவது, தமிழைச் செம்மொழியாக ஆக்குவதற்குத் தேவையான சடங்கு, சம்பிரதாயங்கள் எல்லாம் முடிந்து அது நிறைவேறிவிட்டது. இந்தச் சாதனைக்கு ஐக்கிய முற்போக்குக் கூட்டணிக் கட்சிகள் காரணம் என்றாலும்கூட, குறிப்பாகவும் சிறப்பாகவும், நீதான் இதற்குக் காரணம். உன் தலைமையிலே உள்ள திராவிட முன்னேற்றக் கழகம்தான் இதற்குக் காரணம் என்று எழுதினீர்கள்.

நான் உங்களுக்குச் சொல்கிறேன். இது ஒரு கடிதமாக அல்ல. காலா காலத்திற்கும், இன்னும் நூறாண்டுக் காலம், இருநூறாண்டுக் காலத்திற்கும் பிறகு என் கொள்ளுப் பேரன் எடுத்துப் படித்து நம்முடைய தாத்தா கட்டிக் காத்த செப்பேடு இது என்று பாராட்டுகின்ற அளவிற்கு ஆக வேண்டும் என்ற ஆர்வம் உள்ளவன் நான்.

இளமைப் பருவத்தில் தமிழ் வாழ்க, தமிழர் வெல்க என்று புலி, வில், கயல் பொறித்த கொடி பிடித்து அரசியல் வாழ்வைத் தொடங்கியவன் நான். அந்த அரசியல் வாழ்வுதான் இன்றளவும் தொடர்ந்துகொண்டிருக்கிறது. தமிழ் செம்மொழியாக ஆக, ஒரு வரலாறு உண்டு என்றால், அந்த வரலாற்றை – பெருமையை எனக்கு அளிக்கும் வகையில் நீங்கள் எனக்கு எழுதிய அந்தக் கடிதம் பொன்னெழுத்துகளால் பொறிக்கப்பட்டு, வைரங்கள் பதிக்கப்பட்டு, என்னுடைய கல்லறையிலே எதிர்காலத்தில் மாட்டப்பட வேண்டிய ஒன்று. என்னுடைய நினைவகத்திலே இருக்க வேண்டிய ஒன்று என்கின்ற அந்தப் பூரிப்போடு நீங்கள் எழுதிய அந்தக் கடிதத்திற்காக என்னுடைய நன்றியையும், வணக்கத்தையும், பாராட்டுகளையும், வாழ்த்துகளையும் உங்களுக்குத் தெரிவித்துக் கொள்கின்றேன்".

இந்த நன்றி உரையின் ஒவ்வொரு சொல்லும் நான் வாழும் காலம் வரை எனது இதயத்திலும்; ஏன், நான் மறைந்த பிறகும்கூட, எனது கல்லறையிலும் எதிரொலித்துக் கொண்டே இருக்கும்!

தமிழ் செம்மொழியாக அறிவிக்கப்பட வேண்டுமென்று, தமிழறிஞர்கள் முதலில் எழுப்பிய குரல் – அமைப்பு ரீதியாக எதிரொலித்து – தமிழர்களின் இதயக் குரலாக மாறி – அரசியல் அரங்கில் ஏற்றம் பெற்று – ஆட்சி மூலமாக அந்தக் குரல் ஆற்றல் பெற்று – தக்கோரிடத்தில் சரியான தருணத்தில் தகுதி படைத்தோரால் உரிய முறையில் எடுத்துரைக்கப்பட்டதால்; தமிழ் அன்னை இன்றைக்குத் தங்கத் தேரிலே வீற்றிருந்தபடி தரணியிலே பவனி வருகிறாள்!

காலம் கனிந்தது! தமிழர்களின் நூறாண்டுக் காலக் கனவு நனவானது! தமிழ் செம்மொழியெனப் பிரகடனம் ஆயிற்று! செம்மொழி வரலாற்றின் முதல் பாகம் சிறப்பாக நிறைவெய்தியுள்ளது. செம்மொழிக்கு நாம் அடுத்தடுத்து ஆற்றிட வேண்டிய பணிகள் தொடர் தொடராய் அணிவகுத்து நிற்கின்றன.

அவற்றை ஆய்ந்து எண்ணித் தொகுத்திட – செயல் திட்டங்களை வகுத்திட உலகெங்கும் வாழும் தமிழாய்ந்த தலை மக்களை அழைத்து, கொங்குச் சீமையில், கோவை மாநகரில் நடத்தப்படுகிறது உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு! தந்தை பெரியார் அவர்களும், பேரறிஞர் அண்ணா அவர்களும், பரிதிமாற் கலைஞர் முதலான தமிழ்ச் சான்றோர்களும், கால்டுவெல் முதலான பன்னாட்டு அறிஞர் பெருமக்களும், ஆய்ந்து அறிவித்த நெறிகளின் அடிப்படையில் செம்மொழித் தமிழுக்குச் சிறப்புகள் சேர்க்கும் திருப்பணிகளை விழிப்புடன் நிறைவேற்றிட அலைகடலென என்றும் ஆர்த்தெழுவோம்! வாழ்க செம்மொழித் தமிழ்! வெல்க உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு! ❖



கோவை - திருப்பேரூர் கோவில் யாழித் தூண்

# செம்மொழித் தமிழன்னைக்கு மலர்மாலை அணிவிப்போம்

மாண்புமிகு நிதித்துறை அமைச்சர்
பேராசிரியர் க. அன்பழகன்



மாந்தர்தம் வாழ்விற்கும், வளர்ச்சிக்கும் பெருந்துணையாவது அவர்கள் படைத்துக்கொண்ட மொழியே ஆகும். 'மொழி'யை மனித இனம் படைத்துக்கொள்ளாமல் இருந்திருந்தால், விலங்கு நிலை அளவிலேயே மனித இன அறிவு வளர்ச்சி முடிந்து போயிருக்கும். "மொழி ஒரு கலை, அது மிகச் சிறந்ததொரு கலை" என்றார் ஓ. ஜெஸ்பர்சன் (O.Jesperson). உலகம் அறிவியல் வளர்ச்சியால் உயர்ந்தோங்கி வியக்கத்தக்க வகையில் முன்னேற்றம் கண்டிருந்தாலும், உலகில் வாழும் மாந்தர் அவரவர் பேசும் மொழியால் மட்டுமே அடையாளம் காணக் கூடியவர்களாக இருக்கின்றனர். இவ்வகையில் தமிழினத்தின் அடையாளமாகத் திகழ்வது தமிழ்மொழியே.

உலகில் ஏறத்தாழ 3000–த்திற்கும் மேற்பட்ட மொழிகள் பேச்சுவழக்கில் உள்ளன என்று அறிஞர்கள் கருதுகின்றனர். இவற்றுள் அந்தந்த மொழிக்கெனத் தனி எழுத்துப் பெற்றுள்ளவை முந்நூறு அளவில் இருக்கலாம்; அவற்றுள்ளும் செம்மொழி எனும் உயர்தனிச் சிறப்புடைய மொழியாக விளங்குபவை மிகச் சிலவே. கிரேக்கம், இலத்தீன், சமற்கிருதம், எபிரேயம் ஆகியவை செம்மொழிகள் என அறிஞர்களால் கருதப்பட்டன. ஒரு மொழியின் செம்மொழித் தகுதிகள் பற்றி உலக மொழிநூல் அறிஞர்கள் பலரும் ஆராய்ந்து கருத்துரைத்துள்ளனர். 'தமிழ்மொழியின் வரலாறு' வரைந்த பரிதிமாற் கலைஞர் ஆய்வுக் கண்ணோட்டத்துடன் அணுகி, தமிழ்மொழி ஒரு தனிமொழி, உயர்தனிச் செம்மொழி என்பன போன்ற தொடர்களால் அதன் சிறப்பினைப் புலப்படுத்தி, அது ஒரு செவ்வியல் (Classical) மொழி என்பதனைச் சென்னைப் பல்கலைக் கழகம் ஏற்க வேண்டுமென்று முதன்முதலில் சான்றுகளுடன் வலியுறுத்தியுள்ளார்.

'தான் வழங்கும் நாட்டின்கண் உள்ள பல மொழி கட்கும் தலைமையாக உள்ள தகுதியும், அவற்றிலும் மிக்க மேதகவு உடைமையும் கொண்ட மொழியே உயர்தனிச் செம்மொழியாகும். இவ்விலக்கண அடிப்படையை ஆராயுமிடத்து, தமிழ்மொழி, தெலுங்கு, கன்னடம், மலையாளம் முதலியவற்றிற்கெல்லாம் தலைமையும், அவற்றிலும் மிக்க மேதகவும் உடையதாகையினால் உயர்மொழி ஆகும் என்க. தான் வழங்கும் நாட்டில் பயிலும் மற்றைய மொழிகளின் உதவியின்றித் தனித்து இயங்கவல்ல மொழியே தனிமொழி எனப்படும். திருந்திய பண்பும், சீர்த்த நாகரிகமும், பொருந்திய தூய் மொழி, புகல் செம்மொழியாம் என்பது இலக்கணம்' என்று பரிதிமாற்கலைஞர் குறிப்பிட்டுள்ளார்.

1966இல் மொழிஞாயிறு தேவநேயப் பாவாணரால் வெளியிடப்பெற்ற 'The Primary Classical Language of the World' என்னும் நூல், உலக மொழிகள் அனைத்திற்கும் செம்மொழியான தமிழே தாய்மொழி ஆகும் தகுதியுடையது என்று சான்றுகள் பல தந்து அறிவிக்கின்றது.

'சங்க இலக்கியத் தொகுதியில் இடம்பெறும் பாக்களில் இடம்பெறும் 26,350 அடிகளே, உலகின் ஒப்புயர்வற்ற செவ்வியல் மொழி தமிழ் என்பதனை நிலைநிறுத்தப் போதுமான சான்று' என்கிறார் அறிஞர் கமில்சுவலபில். 'இன்றுள்ள இந்திய மொழிகளுள் எல்லாம் செவ்வியல் மொழியாக அமைந்து, இன்றளவும்

(சங்கத் தமிழே போன்று) அதே செழுமையுடன் தொடரும் ஒரே மொழி தமிழ்' என்று, தமிழ் மொழியின் செவ்வியல் தன்மையைப் பாராட்டுகிறார் பேராசிரியர் ஏ.கே. இராமானுசன்.

தொன்னாளிலேயே, இலக்கண, இலக்கிய அறிவும் பெற்றவர்களாக இருந்த புலவர்கள் தமிழைத் திட்டமிட்டு ஒரு செவ்வியல் மொழியாகவே வளர்த்துவந்தனர் என்பது குறிப்பிடத்தக்கது. தமிழ்மொழியைச் செம்மொழியாகப் பேணி வளர்க்கும், செந்தமிழ் காக்கும் பணி, சங்க காலத்திற்கு முன்னரே தொடங்கிவிட்டது எனலாம். செவ்வியல் நிலையில் முழுமையாக வளர்த்தது மட்டுமன்றிப் பண்டைச் சான்றோர் தமிழ் மொழியைச் 'செந்தமிழ்' என்றே சிறப்பித்து, அழைத்து வந்தனர். தமிழர்களின் மேற்கூறிய மொழி காக்கும் முயற்சியின் தனிப்பெருஞ் சான்றாக நிலவுவன தொல்காப்பியமும், சங்க இலக்கியமும் ஆகும். இத்தகைய செவ்வியல் மொழியாகத் தமிழைக் காக்கும் முயற்சி ஒரு வட்டார வழக்காக உருக்கொண்ட கன்னட மொழி, செந்தமிழிலிருந்து பிரிந்து சென்ற காலத்தையொட்டித் தொடங்கப்பட்டிருக்கலாம் என்று கருதுகின்றார் டாக்டர் கமில்சுவலபில்.

"தமிழ் மொழியின் சீரிய ஒலியமைப்பு, சொல்லமைப்பு, தொடரமைப்பு ஆகியன செவ்வியல் தன்மைக்குத் தக்க எடுத்துக்காட்டுகளாக அமைகின்றன. அவற்றில் அமைந்துள்ள இலக்கண வரன்முறைகள், இக்கால மொழியியல் வல்லுநர்களை மிகவும் வியப்பில் ஆழ்த்தியுள்ளன. மிகப் பழங்காலத்திலேயே தமிழ்மொழி செவ்வியல் நிலையினை எய்தியதென்பதே திராவிட நாகரிகத்தின் உயர்தனிச் சிறப்பை உலகிற்கு எடுத்துக்காட்டும் சான்றாக நிலைபெற்றுவிட்டதாக அறிஞர் கில்பர்ட் சிலேட்டர் (Guilbert Slater) கூறியுள்ளார்.

தமிழ் மொழியின் செவ்வியல் இலக்கியமான சங்க இலக்கியங்கள் காலத்தால் பழையன என்பது மட்டுமன்றித் தமிழ்ச் சமுதாயத்தின் ஒட்டுமொத்தமான பண்பாட்டு நலன்களின் வெளியீடாகவும், தமிழர்களின் சமுதாய வாழ்வின் சித்திரமாகவும் அமைந்து நாம் பெருமை கொள்ள ஏதுவாகும் கலை வடிவங்களாகத் திகழ்கின்றன.

'The Relationship Between Tamil & Sanskrit' (தமிழுக்கும், சமற்கிருதத்துக்குமிடையில் நிலவிய உறவு) எனும் நூலில் ஜார்ஜ் எல். ஹார்ட்டு அவர்கள், 'குடும்ப வாழ்க்கை, குழுவின் கூட்டு வாழ்க்கை, உடன்பிறப்புகளின் அன்புப் பிணைப்பு ஆகியவை தமிழ்ச் செவ்வியல் இலக்கியங்களின் அடித்தளமாகவும், உயிர் மூச்சாகவும் அமைகின்றன. வான்மீகி இராமாயணத்தில் காணப்படும் இத்தகைய மானிட உறவுகள்கூடத் தமிழ் இலக்கியத்தின் தாக்கத்தால் வடமொழியில் இடம் பெற்றவை என்று கருதுவதற்கு வாய்ப்புகள் உள்ளன' எனக் கூறுவது தமிழின் செம்மொழித் தகுதியை விளக்கும் பிறிதொரு சான்றாக விளங்குகின்றது.

மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர், தொன்மை மிக்க உலக மொழிகள் அனைத்திலும், தமிழே தொன்மை, முன்மை, எளிமை, ஒளிமை, இளமை, வளமை, தாய்மை, தூய்மை, செம்மை, மும்மை, இனிமை, தனிமை, பெருமை, திருமை, இயன்மை, வியன்மை என்னும் பல்வகைச் சிறப்புகள் அனைத்தையும் ஒருங்கே பெற்றிருப்பது என்பதனைச் சான்றுகளுடன் வரைந்துள்ளார்.

இத்தகைய பெருமைக்குரிய தமிழ்மொழி நமக்கெல்லாம் தாய்மொழியாக வாய்த்துள்ளதால், யாம் பெற்றுள்ள பெரும் பேற்றினை எண்ணி எண்ணி இறும்பூது கொள்கின்றோம். அறிஞர் பெருந்தகை அண்ணா கூறியவாறு, "நமது தாய்மொழியாம் தமிழ் மட்டும் உலகில் வேறு எந்த ஒரு இனத்துக்கேனும் தாய்மொழியாக வாய்த்திருக்குமேயானால், அவர்கள், இந்த உலகாளும் மொழியாகவே தமிழை ஆக்கியிருப்பர்" என்பது நம்மைச் சிந்திக்க வைப்பதாகும். என்ன செய்வது ? வரலாற்றில் பல முனைகளில் வெற்றி பெறத் தவறிய நம் தமிழ் மக்களின் தாய்மொழியாகவன்றோ தமிழ் உள்ளது ?

உலகில் தாம் பேசும் மொழியைக் காத்து வளர்த்துக் கொள்ளும் தகுதி படைத்த ஓர் இனம்தான், உலக மாந்தரிடையே வளரும் வாழ்வியல் போராட்டங்களையும் தாக்குரவுகளையும் வென்று நிலைத்து நிற்கவல்லதாகும். ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியம் தொடங்கி, இந்த நூற்றாண்டுவரை தமிழ் மொழியின் அடிப்படை வளர்ச்சிக் கூறுகளின் எல்லைகள் தகுந்த விரிவடைந்துள்ளன. இயல், இசை, நாடகம் என வகுத்துரைக்கப்பட்ட முத்தமிழ், இன்று அறிவியல் தமிழாகவும், கணினி – இணைய வலைத்தள மொழியாகவும் ஆக்கம் பெற்றுவருகிறது. உலகளாவிய நிலையில் இணையங்களிலும், வலைத் தளங்களிலும், ஊடகங்களிலும் மதிப்பான இடம்பெற்ற மொழியாகத் தமிழ்ச் செம்மொழி இலங்குகிறது.

பழைமைக்குப் பழைமையான மொழியேயாயினும், இன்றைய அறிவியல் காலத் தேவைகட்கு எல்லாம் ஈடுகொடுக்குமாறு, தமிழ்மொழி விரிந்தும், பரந்தும்

வேரூன்றியும் நிலைபெற்றிருப்பதற்குக் காரணம் அதனிடம் பொதிந்துள்ள செம்மொழித் தகுதிக் கூறுகளே என்பது வெள்ளிடைமலை.

தொன்மையினால் உருக்கொண்ட தனித்தன்மை; அனைவரும் உடன்படலாகும் பொதுமைப் பண்புகள்; நடுவுநிலைமை; பல மொழிகளுக்கும் தாயாகுமாறு அமைந்த மூலக்கூறு உடையதாதல்; நாகரிக மேம்பாடு எய்திய ஓர் இனத்தின் பண்பாடு, கலை, வாழ்வியல் உணர்வுகளை முழுமையாகப் புலப்படுத்தும் இலக்கியங்களைப் பெற்றிருத்தல்; பிறமொழிகள் அல்லது அவற்றின் இலக்கியங்களின் தாக்குரவுக்கு மிகுதியாக இடமளிக்காது, வழிவழி வந்த மரபு காத்தலால் தனித்தன்மையுடன் இயங்கும் ஆற்றல்; இலக்கிய வளம் பெருகுவதற்கு ஏதுவான மரபுகள்; மொழிக் கோட்பாடுகள் ஆகியவற்றைக் கொண்டதாகத் தமிழ் திகழ்வதனால், இது கால ஓட்டத்தால் விளையும் குறைகளையெல்லாம் வெல்லும் மொழியாக ஏற்றம் உடையதாகின்றது.

இந்தியத் துணைக்கண்டத்தில், தமிழ் மொழிக்கு வாய்த்து வந்துள்ள பிறமொழிச் சூழல், சற்று ஆழமாய்ச் சிந்திக்க வேண்டிய பொருண்மை உடையது.

தமிழும், தமிழரும் உலகின் எந்த மொழியினரையும் வெறுத்தவர்களோ, பகைத்தவர்களோ அல்லர். 'யாதும் ஊரே, யாவரும் கேளிர்!' என்னும் கணியன் பூங்குன்றன் பாவடியே அதற்குச் சான்று. தமிழ் நிலத்தில் தமிழ்மொழி உரிமை காத்திட மொழிப் போராட்டங்கள் நடைபெற்ற அந்தக் காலங்களைக் கூர்ந்து ஆய்வு செய்து காண்போமேயானால், தமிழும், தமிழரும் தங்கள் மீது திணிக்கப்பட்ட வேற்றுமொழி மேலாண்மைக்கு இடந்தராது, அவற்றைப் புறந்தள்ளவும், தங்கள் மொழி உரிமை வாழ்வை மீண்டும் நிலைநாட்டிக்கொள்ளவும் நடத்திய அறப் போராட்டங்களே அவை எனத் தெளியலாகும்.

'பழைமைக்குப் பழைமையாய்ப் புதுமைக்குப் புதுமையாய்ப்' பொலிவுற்றுத் திகழும் தமிழ், அந்நாளில் ஆரியத்திற்கு நிகரென வாழ்ந்ததாகப் பாரதியார் கூறியுள்ளது கருதத்தக்கதாகும். தமிழ் பல வகையிலும் புறக்கணிக்கப்பட்டு – இழிவுபடுத்தப்படுவது பாரதியாருக்கும், உடன்பாடு ஆகாமையினாலேயே, அந்நாளில் தமிழ் ஆரியத்துக்கு நிகராக வாழ்ந்ததைச் சுட்டிக்காட்டினார் எனலாம். மேலும், அவர் "கன்னிப் பருவத்தில் அந்நாள் – என் காதில் விழுந்த திசை மொழியெல்லாம் என்னென்னவோ பெயருண்டு – பின்னர் யாவும் அழிவுற்றிறந்தன கண்டீர்" எனத் தமிழ்த்தாய் கூறியதாகவே பாடியுள்ளார். 'ஆரியம் போல் உலக வழக்கு அழிந்தொழிந்து சிதையாமல் (செந்தமிழ்) வாழ்வதாக' மனோன்மணீயம் சுந்தரனார் பெருமிதத்துடன் கூறுகிறார். இவையெல்லாம், ஆரியத்தினும் தமிழைத் தாழ்த்தி இழிவுபடுத்தும் சமயப் பழக்கவழக்கச் சடங்குகட்கும், கோயில் வழிபாட்டிற்கும், எவ்வித நியாயமும் இல்லை என்பதனையும், அந்த அநீதியைத் துடைத்துத் தமிழின் தகுதியை நிலைநிறுத்த வேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டதாலேயே, உரிமைக்குப் போராடும் எண்ணம் தமிழர்களிடம் முகிழ்த்தது என்பதனையும் வெளிப்படுத்துகின்றன. பாவேந்தரின் "தனித்தியங்கும் தன்மை தமிழினுக்குண்டு, தமிழே ஞாலத்தின் தாய்மொழி பண்டு" என்னும் முழக்கமும் இந்த உணர்வின் வெளிப்பாடே. தமிழின் தகுதியைக் குறைத்து, நீசமொழி என்று ஒதுக்கும்போது, இவ்வாறு தமிழின் தகுதியை நிலைநாட்டிட வீறு மொழி புகன்று உரிமைக் குரல் எழுப்பிய வீரர்களை நாம் என்றும் மறக்கவியலாது.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இயேசுவின் தொண்டில் ஈடுபட்டு, கிறித்தவ சமயப் பரப்புநராக, இந்த நாட்டிற்கு வந்த அயர்லாந்து நாட்டவரான கால்டுவெல், நெல்லை மாவட்ட இடையன்குடியில், சுமார் ஐம்பது ஆண்டுகட்கு மேலாகப் பாதிரியாராகப் பணி செய்தவர். ஏழை எளிய மக்களின் அறியாமையைப் போக்குவதிலும் அவர்கள் நல்வாழ்வுக்கு வழிசெய்வதிலும் ஆர்வம் கொண்டவராதலின், அம் மக்களுடன் நெருங்கிப் பழகிடும் ஆர்வத்தில், அவர்களுடைய தமிழைப் பேசக் கற்ற நிலையில், தமிழ்மொழி இலக்கிய வளமுடையதாவதனை அறிந்து, அதனை நிறைவாகக் கற்றார். தமிழ்மொழியைக் கற்றபோது, அது மிகவும் தொன்மையான வரலாறு கொண்ட மொழி என்பதனை உணர்ந்து, அம்மொழி இந்த நாட்டில் இழிபிறவியினர் மொழியாக இழிவுபடுத்தப் படுவதனை ஏற்க மனமின்றி, அதன் தகுதியை உலகறியச் செய்யும் ஆர்வத்தில், தெலுங்கு, கன்னடம், மலையாளம் முதலான தென்னக மொழிகளையும், வடமொழியையும் கற்றுத் தேர்ந்து, தாம் அறிந்திருந்த ஒப்பியல்மொழி இலக்கண ஆய்வு முறையை மேற்கொண்டு, அம்மொழிகளை ஒப்பியல் முறையில் ஆய்வு நடத்தி, பல உண்மைகளை எடுத்துக்காட்டினார். அவ்வாறு அவர் நிகழ்த்திய ஆய்வு 1856இல் இலண்டனில் வெளிவந்தது. அதனைச் சென்னைப் பல்கலைக்கழகம் 1858ஆம் ஆண்டில் வெளியிட்டது.

அந்த ஒப்பியல் மொழி ஆய்வு ஏடுதான், தமிழின் தனித் தகுதியை அறிஞர் உலகு உணர ஏதுவாயிற்று. அதுகாறும் தவறாகக் கருதப்பட்டு வந்தது போன்று, தமிழ்மொழி வடமொழியினின்றும் பிறந்தது அல்லவென்றும், தமிழ் முதலான தென்னக மொழிகள் யாவும் ஒரு தனிமொழிக் குடும்பமாகும் என்றும், அதனைத் திராவிட மொழிகள் என்று அழைப்பதே பொருத்தம் என்றும் அறுதியிட்டுக் கூறினார் டாக்டர் கால்டுவெல்.

மேலும், ''வேறு பல மொழிகளைப் போன்று தமிழ்மொழி வடமொழியின் துணையின்றி இயங்க முடியாத மொழி அன்று. சில நூற்றாண்டுகளாகத் தமிழிலே வலியப் பிணைக்கப்பட்டுள்ள வடமொழிச் சொற்களை எல்லாம் அறவே நீக்கிவிடினும், தமிழ் தூய நற்றமிழாக இயங்கும் ஆற்றல் படைத்தது'' என்றார்.

மேலும், அவரது ஆய்வு நூலில், கடந்த இரண்டாயிரம் ஆண்டுகளாகத் தமிழின் மீது நடைபெற்று வந்த ஆரிய மொழி, கலாச்சாரத் தாக்குரவை நன்கு ஆராய்ந்து உண்மை கண்ட டாக்டர் கால்டுவெல் அந்தச் சூழ்நிலையைக் குறித்தும் இவ்வாறு கூறியுள்ளார்:

''இரண்டாயிரம் ஆண்டுகட்கும் மேற்பட்ட காலமாக, மிகப்பெரிய இனத்தவரும் (ஆரியர்), ஆற்றலும் நன்கு மதிக்கற்பாடும் (சமுதாயச் செல்வாக்கும்) உடையவரும், சமயத் துறையால் வழிபாட்டிற்கு உரியவருமான ஆரிய மக்களின் சமற்கிருத மொழியை எதிர்த்து நின்று, தம் ஆட்சியை (மக்கள் பேச்சு வழக்கு மொழியாக உள்ள நிலை) நிலைநாட்டி வந்துள்ள திராவிட மொழிகள், தமது இடத்தினைப் (மக்கள் பேச்சுவழக்கை) பற்றவரும் வேறு எம்மொழி முயற்சியையும் இனி, வருங்காலங்களிலும் எதிர்த்து அழித்துவிடும்'' என்று திராவிட மொழிகள் அம்மொழி பேசும் மக்களிடம் கொண்டுள்ள இயற்கையான பிடிப்பை, தொன்மைநாள் முதல் தொடர்ந்து வழிவழி வரும் தலைமுறை உறவைப் பாராட்டிக் குறிப்பிட்டுள்ளார் டாக்டர் கால்டுவெல்.

**"தனித்தியங்கும் தன்மை தமிழினுக்குண்டு**
**தமிழே ஞாலத்தின் தாய்மொழி பண்டு"**

என்னும் புரட்சிக் கவியின் முழக்கம்

**எட்டுத்திக்கும் எட்டக் கொட்டு முரசே**
**எந்தமிழ் மொழிக்குண்டோ ஈடு என–**
**எட்டுத்திக்கும் எட்டக் கொட்டு முரசே.**

என்று பன்னாட்டுத் தமிழ் மக்களும் ஒன்று திரண்டு முழங்கும் கோவை, உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு, தமிழக முதல்வர் முத்தமிழ் அறிஞர் கலைஞர் தலைமையிலான புதியதோர் வரலாறாகும்.

**நன்றியுரை**

அத்தகைய மாநாட்டின் சிறப்பு மலரை – சிந்தனைக்கு விருந்தாகும் முத்தமிழ் மலரை உருவாக்கி வழங்குவதில் நான் பெருமகிழ்வடைகிறேன்.

இத்தகைய உயர்தனிச் செம்மொழியாம் தமிழைச் ''செம்மொழி'' என அறிவிக்க வேண்டுமென்று, நடுவண் அரசிடம் மாண்புமிகு முதல்வர் முத்தமிழறிஞர் டாக்டர் கலைஞர் அவர்கள் பல ஆண்டுகளாகவே வலியுறுத்திவந்தார். ''ஒண்டமிழ்த்தாய்ச் சிலம்படியின் முன்னேற்றம் ஒவ்வொன்றும் உன்முன்னேற்றம்'' என்பதனைத் தமிழர்க்கு உணர்த்தும் தனிப்பெரும் தலைவராய்த் திகழும் மாண்புமிகு முதல்வர் முத்தமிழறிஞரின் வேண்டுகோளை, அதுகுறித்து உரிய ஆய்வுக் கருத்துகளைப் பெற்றபின் நடுவண் அரசு ஏற்றுக்கொண்டு 12.10.2004ஆம் நாளன்று தமிழ் ஒரு 'செம்மொழி' என அறிவித்து அறிவிக்கை வெளியிட்டது.

தமிழ், 'செம்மொழி' என அறிவிக்கப்பட்ட பின், தமிழக முதல்வர் அவர்களின் தலைமையில், மத்திய மனிதவள மேம்பாட்டுத் துறை அமைச்சர் திரு. அர்சுன்சிங் அவர்களால், சென்னையில் செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனம் 18.8.2007 அன்று தொடங்கி வைக்கப்பட்டுள்ளது. இந்நிறுவனத்திற்குச் சென்னை மாவட்டத்தை ஒட்டியுள்ள காஞ்சிபுரம் மாவட்டம், பெரும்பாக்கம் கிராமத்தில் 16.59 ஏக்கர் நிலம் தமிழக அரசால் வழங்கப்பட்டுள்ளது. தமிழக முதல்வர் கலைஞர் அவர்களின் தலைமையில் செம்மொழி நிறுவனத்தின் ஆட்சிக் குழுக்களாக, எண்பேராயமும் ஐம்பெருங் குழுவும் அமைக்கப்பட்டுள்ளன. சென்னையில், செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனம் செயல்பட, நடுவண் அரசு ரூ.76.32 கோடி நிதி ஒதுக்கீடு செய்துள்ளது. சென்னை காமராசர் சாலையில் உள்ள பாலாறு இல்லத்தில், செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவன அலுவலகத்தை முதல்வர் கலைஞர் அவர்கள் 30.6.2008 அன்று திறந்து வைத்துள்ளார்.

உலகெலாம் வாழும் தமிழர்கள் போற்றிக் கொண்டாடி மகிழும் வகையில் 'செம்மொழி' ஏற்புடைமையைப் பெற்ற தமிழக முதல்வர் கலைஞர், அன்னைத் தமிழுக்கு ஆற்றவேண்டியதொரு கடமையாக மேற்கொண்டு

உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு, சூன் 23 முதல் 27 வரையில் கோவையில் நடைபெறும் என அறிவித்துள்ளார். மாநாட்டைச் சிறப்பாக நடத்துவதற்கு வேண்டப்படும் பல்வேறு பணிகளையும் மேற்கொள் வதற்காகத் தமிழக அமைச்சர்கள் தலைமையில் 21 பணிக் குழுக்களையும் அமைத்து ஆணையிட்டு உள்ளார்கள். ஒரு மொழியினைச் சிறப்பிக்கும் மாநாடு என்ற வகையில் உலகத்தில் எந்நாட்டிலும், எக்காலத்திலும் இம்மாநாட்டுக்கு இணையாக மற்றொரு மாநாடு இல்லை என்று உலகம் வியக்குமாறு, இம் மாநாடு பல கோணங்களிலும் ஒளிரும்.

இம் மாநாட்டிற்கெனச் சிறப்பு மலர் ஒன்றை வெளியிடக் கருதி, மலர்க் குழுவின் தலைவராக என்னை முதல்வர் அறிவித்தார். அனைவரும் மகிழுமாறு மலர்ப் பணி சிறப்பாகச் செய்து முடிக்கப்பட்டுள்ளது.

மலர் தயாரிப்புக் குழுவின் துணைத் தலைவர்களாக மாநிலத் திட்டக் குழுத் துணைத் தலைவர் முனைவர் மு. நாகநாதன், சென்னைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் முனைவர் க. திருவாசகம், முனைவர் சிலம்பொலி சு. செல்லப்பன் ஆகியோர் பொறுப்பேற்றுக் கொண்டனர். உறுப்பினர்களாக மதிப்பிற்குரிய திருவாளர்கள் வானதி திரு. திருநாவுக்கரசு, திரு. பிரதாப்சிங், உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் முனைவர் கரு. அழ. குணசேகரன், குழு ஒருங்கிணைப் பாளராகத் தமிழ் வளர்ச்சித் துறை இயக்குநர் திரு. கூ.வ. எழிலரசு ஆகியோர் செயற்பட்டனர். மாநாட்டு ஒருங்கிணைப்பாளர் தமிழ்ப் பல்கலைக்கழகத் துணை வேந்தர் முனைவர் ம. இராசேந்திரன், மாநாட்டுத் தனி அலுவலர் திரு. கா. அலாவுதீன், இ.ஆ.ப., ஆகியோர் குழுவிற்குத் தகுந்த கருத்துரைகளை வழங்கி ஊக்கமளித்தனர். மலருக்குரிய பொருண்மைச் சிறப்புடைய கட்டுரைகள், கவிதைகள், எழில்மிகு ஓவியங்கள் ஆகியவற்றைத் தகுதிசான்ற அறிஞர் பெருமக்களிடமிருந்து பெறுவதற்காகவும், பல்வேறு துறை சார்ந்த பேராசிரியர்களையும், ஓவியர்களையும் அழைத்துக் கலந்தாலோசித்திடவும் மலர்க் குழுவின் கூட்டங்கள் பலமுறை நடத்தப்பெற்றன. மலர் சிறப்பாக அமைய வேண்டும் என்பதில் மிகுந்த கவனம் செலுத்தப்பட்டு, வெளியிடுவதற்குரிய படைப்புகள் தெரிவுசெய்யப்பட்டன. படைப்புகளையும், ஓவியங்களையும் தெரிவுசெய்திட, எனது வேண்டுகோளை ஏற்று முனைவர் சிலம்பொலி செல்லப்பனார் எழிலார்ந்த மலரை உருவாக்கும் பணியினை மேற்பார்வை செய்தார். காலத்தால் நிலைத்து நிற்க வேண்டிய இம்மலர் மாண்புமிகு முதல்வர் கலைஞர் அவர்களின் வழிகாட்டுதலோடு, வண்ணச் சித்திரங்களுடன் கவினார்ந்த முறையில் கருத்தாழம் மிக்கதாகவும், வரலாற்றில் இடம்பெறத்தக்கதாகவும் உருவாக்கப்பட்டுள்ளது.

இந்த மலரை எழில் மிக்கதாக அச்சிட்டுக் காலத்தில் முடித்து வழங்கிய பூம்புகார் பதிப்பக உரிமையாளர் பிரதாப்சிங் அவர்கட்கும் என் நன்றி உரியதாகும். இந்த மலரை மணம்கமழத் தயாரிப்பதில் இடைவிடாது பணியாற்றிய குழுவின் பொறுப்பாளர்கள்; தமது படைப்புகளைக் காலத்தில் வழங்கிய பேராசிரியர்கள், அறிஞர்கள், கவிஞர்கள், ஓவியர்கள்; மலரின் வடிவமைப்புக்கு உதவியவர்கள், மெய்ப்புத் திருத்துநர்கள் என, இப்பணிக் குழுவுடன் இணைந்து மலர் சிறக்கப் பாடுபட்ட அனைத்து அன்பு நெஞ்சங்களுக்கும் என் பாராட்டுகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**"எங்கள் வாழ்வும் எங்கள் வளமும்**
**மங்காத தமிழென்று சங்கே முழங்கு!"**





# பிறர் தர வாரா


கவிஞர் **கனிமொழி**
மாநிலங்களவை உறுப்பினர்




**“இந்த நாட்டின் மத வரையறைகள், நில விதிமுறைகள், மரியாதை பற்றிய கோட்பாடுகள் எல்லாம் சாதிச் சட்டங்கள் என்ற ஒன்றுடன் காலா காலத்திற்கும் ஒன்றாக்கப்பட்டுப் பிணைக்கப்பட்டிருக்கின்றன.”**

– எட்மண்ட் பர்க்

(எட்மண்ட் பர்க் – இங்கிலாந்து பாராளுமன்றத்தில் இந்திய மக்களுக்காக, அவர்களின் உணர்வுகள் மதிக்கப்பட வேண்டும் என்று 17 ஆம் நூற்றாண்டில் முதல் குரல் கொடுத்த சிந்தனையாளர். அவர் 1761ஆம் ஆண்டு பாராளுமன்றத்தில் ஆற்றிய உரையிலிருந்து...)

Nikolas B. Dirks என்ற கொலம்பியப் பல்கலைக் கழகப் பேராசிரியர் எழுதிய “Castes of Mind” என்ற ஆராய்ச்சிப் புத்தகத்தில் இந்தியாவைப் பற்றி நினைக்கும்போது சாதி என்பதைப்பற்றிச் சிந்திக்காமல் இருக்க முடியவில்லை என்கிறார்.

சாதி என்பது இந்தியச் சரித்திரத்தில் நீக்கமற வியாபித்து உள்ள ஒன்று. இந்திய நாகரிகம், பண்பாடு, வாழ்வியல் வழிமுறைகள் இவற்றின் அடிப்படையாக, மையப் புள்ளியாக இருப்பது நமது சாதிய முறைகள் என்றால் அது மிகையில்லை. மனித குலம் என்ற ஒற்றை இலக்கை நோக்கி உலகம் பயணிக்கத் தொடங்கியுள்ள இந்தக் காலகட்டத்தில், கறுப்பின மக்களை அடிமைகளாக்கி, தன் பொருளாதார வளர்ச்சியின் முதலீடுபோல் பாவித்த அமெரிக்கா போன்ற நாடுகள் கூட தன் வெள்ளைத் திமிரை ஒதுக்கி வைத்துவிட்டு, சமூக நீதியின் கொடியை உயர்த்திப் பிடிக்கத் தொடங்கியிருக்கும் இந்த நேரத்தில், சாதி என்பது புதிய வெளிச்சத்தின் கதிர்களை இந்தியத் துணைக் கண்டத்தின் மீது விழாமல் தடுக்கும் விண்ணுயர் சுவர். ‘சற்றே விலகு, ஈசனின் உருவத்தைக் காணவேண்டும்’ என்று நந்தி பகவானிடம் கெஞ்சிய நந்தனின் கதறல்களின் நீட்சி. இன்று வரை சாதி என்ற ஆணவ நந்திகள் நந்தன்கள் கோவில் பிரகாரத்திற்குள் மட்டுமில்லை சமூகத்திற்குள்ளும் தெருக்களுக்குள்ளும் ஊருக்குள்ளும் நுழைய விடாது தடுக்கின்றன.

மனிதர்கள் இந்தக் கணினி யுகத்தில், வலைப் பின்னல்களின் மூலம் தம் உறவுகளை, தோழமைகளை உருவாக்கிக் கொள்ளும் சூழலில், பிரமனின் தலையில் பிறந்தால் உயர் சாதி, இடையில் பிறந்தால் குறைச் சாதி, காலில் பிறந்தால் இழிச் சாதி. அவனில் இல்லாது வெளியில் பிறந்தால் தீண்டப்படாதவன் என்று இன்றும் வாழ நேர்கிறது.

காலில், தொடையில், இடையில், முகத்தில் பிறப்பதை எல்லாம் முடிவு செய்வது எது ? முனியனும், எல்லையாவும் எங்குப் பிறப்பது, சர்மாவும் சாத்திரியும் எங்குப் பிறப்பது என்று முடிவு செய்வது விதி என்ற ஒன்று என்கிறது மதம். அந்த விதி என்ற நீக்கமற நிறைந்த அரும் பொருளை நிருணயிப்பது எது ? உனது கரும வினை. அதை முடிவு செய்வது இரண்டு. ஒன்று ஊழ்வினை, மற்றது மூதாதையர் செய்த பாவ புண்ணியம். இந்த ஜென்மத்தில் தவறு செய்தால் அடுத்த ஜென்மத்தில் பாம்பாய், நரியாய், தீண்டத் தகாதவனாய்ப் பிறப்பாய். தாய் தந்தையர் பாவம் என்ற கடனை உனக்கு வைத்து விட்டுச் சென்றால் அதற்குத் துன்பம் என்ற வட்டியை நீ செலுத்த வேண்டும். வங்கிகள் கூட இப்போதுதான் நாடுவிட்டு நாடு சேவைகளைத் தொடங்கி இருக்கின்றன; பிளாஸ்டிக் பணம் என்று எல்லை கடந்து விரிந்திருக்கின்றன. ஆனால், ஊழ் என்பது பிறப்பு, ஜென்மங்கள் தாண்டிய பேங்க் அக்கவுண்ட். இந்த ஜென்மத்தில் போட்டால் அடுத்த ஜென்மத்தில்கூட எடுத்துக் கொள்ளலாம். அதாவது உன் வாழ்க்கை உன் கையில் இல்லை என்று

மதம் மனிதனைத் தன் வசத்தில் வைத்துக்கொள்ளப் பயன்படுத்திய சங்கிலிதான் விதி, ஊழ்வினை, அனைத்தையும் ஆட்டுவிப்பவன் இறைவனே போன்ற வரிகள்.

இந்த விதியும் ஊழ்வினையும்தாம் பீகாரின் தலித் மக்களை, அவர்கள் நடக்கும் பாதச்சுவடுகூட இந்தப் பூமியில் இருக்கக்கூடாது என்பதற்காக முதுகில் முள் செடிகளைக் கட்டிக்கொண்டு நடக்கக் கட்டாயப் படுத்துகிறது. இந்த நம்பிக்கைதான், அனைத்துச் சாதியினரும் அருச்சகர் ஆகலாம் என்ற தந்தை பெரியாரின் கனவை நிஜமாக்க உறுதிபூண்ட முதல்வர் கலைஞரின் ஆணையை எதிர்த்து, உச்சநீதிமன்றம் சென்றிருக்கிறது. நம் சுயமரியாதையை எள்ளி நகையாடுகிறது.

கீதையில் அருச்சுனனைப் போரிடச் சொல்லி வற்புறுத்தும் கிருஷ்ணன்:

**"ஸர்வ தர்மான்பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ**

**அஹம் த்வாம் ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா ஷுச."**

எல்லா விதமான அறங்களையும் துறந்து, என்னிடமே சரணடைவாயாக. உன்னை எல்லாப் பாவ விளைவுகளினின்றும் நான் விடுவிக்கின்றேன், பயப்படாதே என்று கூறுகிறான்.

போர் முடிந்து அருச்சுனனும் பாண்டவர்களும் சாதித்தது என்ன? பிணக்களம், விதவைகளின் கதறல், எரிந்து சாம்பலாகிப் போன பாலைவனப் பிரதேசம், கண்ணீர், வலி, போரின் வடுக்கள், இவை மட்டும்தாம் அந்த வெற்றியின் எச்சங்கள். கண்ணன் 'கடமையைச் செய், அதன் பலனும் பாவமும் என்னையே சாரும்' என்று சொன்னதன் பலன் இதுதான். போரின் முடிவில் கிருஷ்ணனே துவாரகை தன் கண்முன்னே அழியக் கண்டவனாய், தன் குடிமக்கள் ஒருவரை ஒருவர் அழித்துக்கொள்வதைக் கையறுநிலையில் பார்த்து மனம் நொந்தவனாய், வாழும் ஆர்வம் அற்றவனாய்த்தான் மரணத்தைத் தழுவுகிறான்.

சிலப்பதிகாரத்தில், கணவனால் காலம் முழுதும் உதாசீனப்படுத்தப்பட்டு, தனித்து வாழ்ந்ததால் யாசகம் வேண்டிய துறவிகளுக்குக்கூடப் பிச்சையிட முடியாது சமூகம் அவளை ஒதுக்கி வைத்திருந்த நிலையையும் சகித்து, கோவலனின் குற்றங்களை மன்னித்து, அவனை ஏற்றுக் கொள்கிறாள் கண்ணகி. அவள் அவனோடு சென்று மதுரையில் புதுவாழ்வு தொடங்க நினைக்கும்போது கோவலன் கள்வன் என்று குற்றம் சாட்டப்பட்டுக் கொல்லப்படுகிறான். நீதி கேட்டு வழக்குரைத்து மதுரையைத் தீக்கிரையாக்குகிறாள் கண்ணகி. அதன் பிறகு அவளிடம் வரும் மதுராபதி என்ற மதுரையின் ஆதி தெய்வம், 'நடந்தவற்றுக் கெல்லாம் உனது கணவனின் பூர்வ ஜென்ம பாவங்கள் தாம் காரணம் என்று சொல்லிக் கோவலன் பரதனாகப் போன ஜென்மத்தில் இருந்தான். அவன் அப்போது சங்கமன் என்ற நிரபராதியின் கொலைக்குக் காரணமாக இருந்தான். அவனது மனைவி நீலியின் சாபம்தான் இப்போது கோவலன் அதுபோலவே கொலையுறுவதற்குக் காரணம் என்றும் சொல்கிறது. ஆனால், மதுராபதிக்கு கண்ணகியின் துன்பங்களுக்கு யார் காரணம் என்று விளக்கிச் சொல்லத் தோன்றவில்லை. பெண்ணடிமை போற்றிய சமூகத்திற்கும் அந்தக் கேள்வி எழவில்லை. அதையும் விதியின் கணக்கு அல்லது பத்தினியின் கடமை என்று நினைத்திருக்கலாம்.

**"வருந்திப் புலம்புறு நோய்**
**தோழிநீ ஈதொன்று கேட்டியென் கோமகற்கு**
**ஊழ்வினை வந்தக் கடை**
**மாதராய் ஈதொன்று கேளுன் கணவற்குத்**
**தீதுற வந்த வினை;"**

அதனால்தான் தலைவர் கலைஞர் எழுதிய பூம்புகார் படத்திலும், நாடகத்திலும் மதுராபதியையே ஒதுக்கிவிட்டார்.

ஏன் திருக்குறளில் கூட

**"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று**
**சூழினுந் தான்முந் துறும்."**

என்ற குறளுக்கு வ.உ.சி. அவர்கள் எழுதிய உரையில் விதியைப் போல வலிமையுடையது யாதொன்றும் இல்லை என்ற பொருளைத்தான் தருகிறார். ஆனால், கலைஞர் உரையில் ஊழ் என்பதை இயற்கை என்ற பொருளில் பயன்படுத்தி "இயற்கை நிலையை மாற்றி மற்றொரு செயற்கை நிலையை அமைத்திட முனைந்தாலும், இயற்கை நிலையே முதன்மையாக வந்து நிற்பதால் அதைவிட வலிமையானவையாக வேறு எவை இருக்கின்றன?" – பகுத்தறிவுக் கருத்தை அங்கே பதிவு செய்கிறார்.

உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாட்டிற்காகத் தலைவர் கலைஞர் அவர்கள் எழுதியுள்ள பாடலில்

பழம் தமிழ் இலக்கியங்களில் இருந்து சில வரிகளை எடுத்துப் பயன்படுத்தி ஊடும் பாவுமாய் நெய்து தமிழும் வாழ்வும் கலந்து தமிழர்களுக்கான ஒரு கொள்கைப் பாடலை உருவாக்கியிருக்கிறார்கள்.

அந்தப் பாடல் சங்கத் தமிழன் எத்தகைய சிந்தனைகளுக்குச் சொந்தக்காரன் என்று உலகிற்குப் பறைசாற்றும் பாடல். இன்று நாம் உலகச் சந்தை, சிற்றூராய்ச் சுருங்கிய உலகு, ஒரே மக்கள் போன்ற "மிக்க" புரட்சிகரமான கருத்துகளை முன்வைத்துக் கொண்டிருக்கிறோம். ஆனால் 2000 ஆண்டுகளுக்கு முன்னால் தமிழ்க் கவிஞன் கணியன் பூங்குன்றன் "யாதும் ஊரே, யாவரும் கேளிர்" – எவ்வூராயினும் அது எம் ஊரே, எல்லோரும் என் உறவே என்று வேற்றுமைகளை எல்லாம் அந்த ஒற்றை வரியில் உடைத் தெறிந்தான். தலைவர் கலைஞர், "பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்" – (பிறப்பினால் அனைவரும் சமம்) என்று தன் பாடலைத் தொடங்கி அடுத்த வரியாகப் "பிறந்த பின்னர், யாதும் ஊரே, யாவரும் கேளிர்" என்ற மனித நேயப் பிரகடனத்தை வைக்கிறார். இந்த இரண்டு வரிகளில் நம்மைப் பிடித்த சாதிப் பிணி அழிக்கப் படுகிறது, நொறுக்கப்படுகிறது.

அடுத்து,

**"உண்பது நாழி உடுப்பது இரண்டே**
**உறைவிடம் என்பது ஒன்றேயென**
**உரைத்து வாழ்ந்தோம் –**
**உழைத்து வாழ்வோம்"**

என்று பொதுஉடைமைக் கொள்கையை, எளிமையை, சிவப்புக் கோட்பாட்டை எடுத்து வைக்கிறார்.

அடுத்த வரிகள்தாம் ஈரோட்டுப் பாசறையில் வார்க்கப்பட்ட எழுதுகோலின் வெளிப்பாடு,

**"தீதும் நன்றும் பிறர் தர வாரா எனும்**
**நன் மொழியே நம் பொன் மொழியாம்"**

பொன் எழுத்துகளால் பொறிக்கப்பட வேண்டிய வரிகளும் இவைதாம்.

சாத்திரங்களில் தொடங்கி, வழிவழியாக எது நம்மை அடக்கி வைத்ததோ, உன் வாழ்க்கை என்பது உன் வசத்தில் இல்லாதது, அது முன்னால் தீர்மானிக்கப் பட்டது, அதை மாற்ற முடியாது, வறுமை, தீண்டாமை, கல்வி அறிவின்மை, எல்லாம் உன் விதிப் பயன், மாற்ற முடியாது, கூடாது. சாதியும், பெண்ணடிமையும் நம் வாழ்வியல் நெறி என்று எதை எல்லாம் சமூகத்தின் கருவறைக்குள் வைத்துப் போற்றிப் பாதுகாத்ததோ, சாதி என்ற அமைப்பு இல்லா விட்டாலும், உழைக்கும் மக்களின் சுமைகளுக்குக் கார்ல் மார்க்ஸ் எந்த மதத்தின் பிடியைத் தகர்த்து அடிமைத் தளைகளை உடைத்தெறிந்தாரோ, அதே மதத்தைக் கேள்விக்கு உள்ளாக்கித்தான் தந்தை பெரியாரும், திராவிட இயக்கமும், அண்ணாவும், கலைஞரும், பேராசிரியரும் இன்று சமூக நீதி என்ற கனவை நனவாக்கி இருக்கிறார்கள். அந்தச் சமூக நீதி என்ற கருத்தை ஆயிரமாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே எடுத்து இயம்பியவன் என் தமிழ்க் கவிஞன்.

தீதும் நன்மையும் மற்றவரால் உருவாக்கப் படுவதில்லை. நீ நிருணயித்துக் கொள்வது. உனக்காக நீ போராடு; அநீதியை எதிர்த்துக் கேள்வி கேள்; அறியாமையை உடைத்து எறி; புதியதோர் உலகத்தை நீ உருவாக்கு; நல்லதும் கெட்டதும் இன்பமும் துன்பமும் உன் கையில்.

'விதியை எழுதப் பிறந்தவன் நீ. உன் தலையில் எழுதப்பட்டதல்ல விதி' என்று அறைகூவல் விடுத்த இனம் இது. அந்த இனம் பாதை மாறியது. இரும்புக் கூட்டில் அடைக்கப்பட்டது. அந்தக் கூட்டை உடைத்து அழைத்து வந்தது திராவிட இயக்கம். இன்று அதன் சின்னமாக விளங்கும் தலைவர் பயன்படுத்தியிருக்கும் இந்த வரி, சமூக நீதியின் வித்து, தனிப்பட்ட வாழ்வியல் உபதேசமல்ல, புரட்சியின் வித்து, புதுமையின் வித்து, மனித நேயத்தின் வித்து. உலகத் தமிழர்களையெல்லாம் கோவையில் ஒன்று சேர்க்கும் இந்த மாநாடு செம்மொழித் தமிழுக்கான மாநாடு மட்டுமன்று. தமிழ் இனம் தன்னை மீண்டும் மீட்டெடுப்பதற்கான, தனது அடையாளங்களை அறிந்துகொள்வதற்கான, தன் தனித்தன்மையை உணர்வதற்கான மாநாடு. கடந்து வந்த பாதையைப் போற்றுவதற்கும் போக வேண்டிய தூரத்தைப் புரிந்துகொள்வதற்குமான மாநாடு. சமூக நீதிக்கான சூளுரையை, சுயமரியாதைக்கான சுடரை நம் இதயங்களில் மீண்டும் ஏற்றிக்கொண்டு செல்ல, 'உலகத் தமிழர்களே ஒன்றுபடுங்கள்' என்று அழைக்கும் மாநாடு!

❖

# உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாட்டின் சீர்மிகு பணிகள்

திரு. **கா. அலாவுதீன்,** இ.ஆ.ப.,
தனி அலுவலர்



**உ**லக மொழிகளில் மிகவும் தொன்மை வாய்ந்த தமிழ் மொழியின் சிறப்பினை அறிஞர் பெருமக்கள் பெரிதும் போற்றிப் புகழ்ந்துள்ளனர். பரிதிமாற் கலைஞர் அவர்கள் தமிழ்மொழியின் தொன்மை மற்றும் சிறப்பின் அடிப்படையில் அதனைச் செம்மொழியாக அறிவிப்பதற்குப் பெருமுயற்சி மேற்கொண்டார். அதன் பின்னரும் தொடர்ந்து பல முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டிருந்தாலும் தமிழ் மொழியானது செம்மொழியாக அறிவிக்கப்படவில்லை. இந் நூற்றாண்டின் தொடக்கத்தில் மைய அரசில் தமிழ்நாடு மிக முக்கியப் பங்காற்றுகின்ற வாய்ப்புக் கிடைத்தபோது மாண்புமிகு தமிழக முதலமைச்சர் அவர்கள் எடுத்துக் கொண்ட சீரிய முயற்சியின் விளைவாக மைய அரசு தமிழ் மொழியின் தொன்மையினையும், சிறப்பினையும் உணர்ந்து தமிழ் மொழியினைச் செம்மொழியாக 2004இல் அறிவித்தது. அதனைத் தொடர்ந்து தமிழ்ச் செம்மொழி தொடர்பான ஆய்வுகளை மேற்கொள்ள வழிவகை செய்யப்பட்டது.

தமிழ்ச் செம்மொழியின் சிறப்பினைப் பரப்பவும், செம்மொழித் தொடர்பான ஆராய்ச்சிகளை ஊக்குவிக்கவும் மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் முயற்சியின் பயனாகச் சென்னையில் செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனம் அமைக்கப்பட்டது. இதற்கு மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் தலைமையில் ஒரு நிருவாகக் குழுவினையும் மைய அரசின் மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் அமைத்தது. தமிழ் மொழியினைச் செம்மொழியாக அறிவித்துப் பெருமைப்படுத்தியதைத் தொடர்ந்து அதைக் குறித்த உணர்வை உலகமெங்கும் வாழும் தமிழர்களுக்கு ஊட்டும் வகையில் தமிழ்நாடு அரசு கோவையில் ஜூன் 23ஆம் நாள் முதல் 27ஆம் நாள் வரை உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாட்டினை நடத்துவதென முடிவு செய்து அறிவித்தது. இம் மாநாட்டுப் பணிகளை மேற்கொள்வதற்கென்று சென்னையில் தனி அலுவலர் நியமிக்கப்பட்டு அதற்குத் தனியாக ஓர் அலுவலகமும் ஏற்படுத்தப்பட்டது. அதேபோல் கோவையிலும் சிறப்புப் பணி அலுவலர் நியமிக்கப்பட்டு அதற்கெனத் தனியாக ஓர் அலுவலகமும் ஏற்படுத்தப் பட்டது.

உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாட்டின் முதல் பணியாக மாநாட்டு இலச்சினையை உருவாக்குவதில் மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் தனிக்கவனம் செலுத்தினார்கள். தமிழ்மொழி, செம்மொழியாக அறிவிக்கப்பட்ட பின் நடத்தப் பெறும் உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாட்டிற்காக வடிவமைக்கப்பட்டு உருவாக்கப்பட்டிருக்கும் இந்த இலச்சினை பல்வேறு சிறப்புகளைக் கொண்டுள்ளது.

கடற்கோள்களை எதிர்கொண்டும், கால வெள்ளத்தைக் கடந்தும் சீரிளமைத் திறத்தோடு தமிழ் மொழி திகழ்கிறது என்பதைக் குறிக்கும் வகையில் சுனாமி அலைகளும், அய்யன் திருவள்ளுவர் திருவடிகளில் சுருளும் அழகிய பின்னணியில் இலச்சினை உருவாக்கப் பட்டுள்ளது. வழக்கமாக, தத்துவ விளக்கங்களுக்கேற்ப மூன்று விரல் முத்திரைகளைக் கொண்டு சிலைகள் வடிவமைக்கப் பட்டிருக்கும். ஆனால், திருவள்ளுவர் சிலையோ அறம், பொருள், இன்பம் எனும் முப்பாலைக் குறிப்பிடும் வகையில் மூன்று விரல்களுடன் அமைக்கப் பட்டுள்ளது.

மேலும், திருவள்ளுவரைச் சுற்றியுள்ள மேல்வட்டத்தில் உலகத் தொன்மையான நான்கு நாகரிகங்களில் ஒன்றாகக் கருதப்படும் திராவிட நாகரிகமாகிய சிந்துவெளி நாகரிகச் சின்னங்களும் குறியீடுகளும் இடம் பெறுகின்றன. சிந்துவெளிப் பள்ளத்தாக்கில் செழித்து வளர்ந்த நகர்மய நாகரிகம் ஐயாயிரம் ஆண்டுகளுக்கும் முற்பட்டது. சிந்து நதிக்கரையில் 1,500 ஏக்கர் பரப்பளவில் செழித்தோங்கி 700 ஆண்டுகள் சிறந்து விளங்கியது சிந்துவெளி நாகரிகம். அகழ்வாய்வில் கண்டெடுக்கப்பட்ட

சிந்துவெளிச் சின்னங்களுடன் கூடிய குறியீடுகள் – எழுத்துப் பொறிப்புகள், தமிழகத்தின் கொங்கு மண்டலச் சூலூர், விழுப்புரம் அருகில் கீழ்வாலை, சோழ மண்டலத்தில் மயிலாடுதுறை, செம்பியம், கண்டியூர் ஆகிய இடங்களிலும் கிடைத்துள்ளன. படகும், கப்பலும் தமிழர்கள் திரைகடலோடித் திரவியம் தேடிய திறன்மிகு வரலாற்றையும், காளைச் சின்னம் தமிழர்களின் வேளாண்மைத் தொழில் சிறப்பையும் வெளிப்படுத்துகின்றன.

இலச்சினையில் ஏழு குறியீடுகளும் (சின்னங்கள்) இடம் பெறுகின்றன. ஏழு என்பது தமிழர்களுக்குரிய கணக்கீட்டு முறையில் சிறப்பான எண்ணாகும். ஏழு நாள்கள், அகப்பொருள் திணைகள் ஏழு, புறப்பொருள் திணைகள் ஏழு, திருக்குறள் 133 அதிகாரங்கள், அறத்துப்பாலில் பாயிரம் தவிர 34 அதிகாரங்கள், பொருட்பாலில் 70 அதிகாரங்கள், காமத்துப்பாலில் 25 அதிகாரங்கள் இவற்றின் கூட்டுத் தொகை ஏழின் சிறப்பை விளக்கிச் சொல்லுகின்றன. அத்துடன் உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாட்டின் மையக் கருத்தாகப் “பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்” என்ற இன்றைக்கும் என்றைக்கும் மிக அவசியமான மைய நோக்கக் கருத்தினையும் மாநாட்டு இலச்சினையில் இடம்பெறச் செய்து அறிவித்தார்கள். இந்த இலச்சினையானது 23.10.2009 தேதியில் வெளியிடப்பட்டது. மாநாட்டு மைய நோக்கப் பாடல் மாண்புமிகு முதலமைச்சர் அவர்களால் இயற்றப்பட்டுக் கிராமி மற்றும் ஆஸ்கார் விருதுகள் பெற்றுத் தமிழகத்திற்குச் சிறப்புச் சேர்த்த ஏ.ஆர். இரகுமான் அவர்களால் இசையமைக்கப்பட்டுள்ளது. அது தமிழகத்தின் மூலை முடுக்குகளிலெல்லாம் முழங்கித் தமிழ் உணர்வைத் தட்டி எழுப்பும் என்பது திண்ணம்.

அதன்பின் உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாட்டினை யொட்டி பல்வேறு நாடுகளிலிருந்து அறிஞர்கள் கலந்துகொண்டு தங்களுடைய ஆராய்ச்சிக் கட்டுரைகளை வெளியிடும் வகையிலும், ஆய்வுகளை மேற்கொள்ளவும், அவற்றிலிருந்து திறம்படத் தெரிவு செய்யப்பட்ட கட்டுரை யாளர்கள், அறிஞர்கள் பெருமக்களை ஊக்குவிக்கவும் இலங்கையைச் சேர்ந்த பேராசிரியர் கா. சிவத்தம்பி அவர்கள் தலைமையில் ஆய்வரங்க அமைப்புக் குழு அமைக்கப்பட்டது. இக் குழு பல்வேறு நாடுகளிலிருந்து அறிஞர் பெருமக்கள் மற்றும் ஆராய்ச்சியாளர்களிடமிருந்து பல்வேறு தலைப்புகளின் கீழ் இணையத்தளம் மூலமாகவும், மின்னஞ்சல் மூலமாகவும், தபால் மூலமாகவும் ஆய்வுக் கட்டுரைகளை அனுப்புமாறு அறிவித்தது. அறிஞர் பெருமக்களிடமிருந்து பெறப்பட்ட கட்டுரைகளை ஆய்வு செய்து இறுதியாக 1020 கட்டுரைகளைத் தெரிவு செய்துள்ளார்கள்.

மேலும் மாநாட்டு ஆயத்தப் பணிகளை மேற்கொள்ளவும் மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் தலைமையில் தலைமைக் குழுவும், மாநாடு தொடர்பாக அரசியல் கட்சிகளின் ஆலோசனைகளைப் பெறுவதற்குப் பல்வேறு அரசியல் கட்சித் தலைவர்கள் அடங்கிய ஆலோசனைக் குழுவும் அமைக்கப்பட்டன. மாநாட்டிற்கான பல்வேறு ஆயத்தப் பணிகளையும் திறம்பட நிறைவேற்றுவதற்குப் பொது அரங்க அமைப்புக் குழு, பொது அரங்க நிகழ்ச்சிக் குழு, வரவேற்புக் குழு, விருந்தோம்பல் குழு, தங்குமிட வசதிக் குழு என மொத்தம் 21 குழுக்கள் அமைக்கப்பட்டு அமைச்சர்கள் தலைவர்களாகவும், சிலர் துணைத் தலைவர்களாகவும், சிலர் ஒருங்கிணைப்பாளர்களாகவும், உறுப்பினர் களாகவும் நியமிக்கப்பட்டுப் பணிகள் விரைவாக நடைபெற்றன.

மாநாடு அறிவிக்கப்பட்ட பின் 06.11.2009ஆம் நாள் மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் கோவை சென்று மாநாடு நடத்துவதற்குத் தேவையான இடத்தை நேரடியாகப் பார்வையிட்டு, கொடிசியா மற்றும் அதனைச் சுற்றியுள்ள இடங்கள் மாநாடு நடத்துவதற்குத் தகுதியான இடம் எனத் தெரிவு செய்தார்கள். அதனடிப்படையில் பல்வேறு கட்டமைப்பு வசதிகளை மேம்படுத்தும் பொருட்டுப் பணிகளுக்கு ஒப்புதல் தரப்பட்டது. நெடுஞ்சாலை மேம்பாட்டுப் பணிகள் ரூ.59.80 கோடி, கோவை மாநகராட்சி சாலைப் பணிகள் ரூ.27 கோடி, மாநகராட்சியின் பிற பணிகள் ரூ.7.3 கோடி ஒதுக்கீடு செய்யப்பட்டுப் பணிகள் மேற்கொள்ளப்பட்டன. ஆய்வரங்குகள் அமைப்பதற்கும், சிறு அரங்கங்கள் உருவாக்குவதற்கும் ரூ.9.86 கோடியும், மாநாட்டுப் பந்தல் அமைக்கவும் இடவசதிகள் செய்யவும் ரூ.8.2 கோடியும், கண்காட்சி அரங்கம் அமைக்க ரூ.5.69 கோடியும், பாதுகாப்புத் தடுப்புகள் போன்ற பணிகளுக்காக ரூ. 6.32 கோடியும், அலங்கார ஊர்திகள் வடிவமைப்பதற்கு ரூ.2.4 கோடியும் ஒதுக்கிப் பணிகள் விரைவாக மேற்கொள்ளப்பட்டன. தமிழ்நாடு மின் வாரியம் மூலம் புதை மின்வடப் பணிகளுக்காக ரூ.56 கோடியும், கோவை மாநகராட்சி தன்னுடைய சொந்த நிதியிலிருந்து கோவை மாநகர உள் கட்டமைப்பு வசதிக்காக ரூ.25.24 கோடி மற்றும் தனியார் பங்களிப்பு மூலம் ரூ. 31 கோடி மதிப்பிலும் மாநாடு தொடர்பான பணிகள் திறம்படச் செயற்படுத்தப்பட்டன. மாநாட்டுக்கு வரும் வெளிநாட்டுப் பேராளர்கள், அறிஞர்கள், கட்டுரையாளர்கள் ஆகியோரின் தங்குமிட வசதிக்காக ரூ.7.05 கோடியும், உணவு விருந்தோம்பல் பணிக்காக ரூ.3.62 கோடியும், போக்குவரத்து வாகன

வசதிக்காக ரூ. 1.96 கோடியும் ஒதுக்கப்பட்டது. மேலும் உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு நினைவாகக் கோவை மத்திய சிறைச்சாலைப் பகுதியில் முதற்கட்டமாக ரூ.20 கோடி மதிப்பில் ‘செம்மொழிப் பூங்கா’ அமைப்பதற்கான பணிகளும் மேற்கொள்ளப்பட்டன. இப்பூங்காவில் தமிழ் இலக்கியத்தில் இடம் பெற்ற தாவரங்கள் குறிப்புகளோடு இடம் பெற்று நறுமணமும், தமிழ் மணமும் கமழச் செய்யும்.

உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாட்டினையொட்டிப் பொதுமக்களிடையே தமிழ் மொழியின் சிறப்பினை உணர்த்தும் வகையில் கவியரங்கம், கருத்தரங்கம் மற்றும் பட்டிமன்றங்கள் ஆகிவற்றை நடத்துவதற்கான பணிகளும் விரைந்து மேற்கொள்ளப்பட்டன. தமிழர் பண்பாடு, கலாச்சாரம், நாகரிகம், மொழித் தொடர்பு பற்றியும் தமிழின் தொன்மையினைப் பொதுமக்கள் பார்வையிடுவதற்கும் தமிழ்ச் செம்மொழியின் சிறப்பினை வெளிக்காட்டும் வகையிலும் மாபெரும் கண்காட்சி அமைக்கவும் ஏற்பாடு செய்யப்பட்டது.

உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாட்டின் ஓர் அங்கமாகத் தற்கால அறிவியல் உலகில் தமிழின் வளர்ச்சியை வெளிக்காட்டும் வகையில் தமிழ் இணைய (கணினி) மாநாடும் நடைபெறுகிறது. இதனை உத்தமம் (உலகத் தமிழ்த் தகவல் தொழில்நுட்ப மன்றம்) என்ற அமைப்புடன் இணையத் தமிழ் வளர்ச்சிக்கான வருங்கால வாய்ப்புகள், தேவையான செயல் திட்டங்கள் பற்றி விவாதிக்கவும், செம்மொழித் தமிழ் அறிஞர்கள் மற்றும் தமிழ் இணைய வல்லுநர்களிடையே பிணைப்பு ஏற்படவும், பொது மக்களிடையே தமிழ் இணைய வளர்ச்சியையும் பயன் பாடுகளையும் விளக்கவும் இம் மாநாடு பெரிதும் பயனுள்ளதாக அமையும். இதன்மூலம் கணினிப் பயன்பாட்டில் தமிழ் மொழியின் நிலை பற்றியும் அதனை விரிவுபடுத்துவது பற்றியும் விரிவாக விவாதித்துச் செயல்திட்டம் தயாரிக்கப்பட்டும், இம் மாநாட்டின்போது ஆய்வுக் கட்டுரைகள் வாசிக்கவும், இன்றைய இளைய தலைமுறையினரிடம் இணையத் தளத்தின் மூலம் தமிழ் மொழியின் பயன்பாட்டினை விளக்கும் வகையில் பல்வேறு ஆராய்ச்சிகள், முயற்சிகள் மேற்கொள்வதற்கும் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன. மேலும் மென்பொருள் பயன்பாட்டில் தமிழ் மொழியின் பங்கினைப் பொதுமக்களுக்கு விளக்கும் வகையில் தமிழ் இணையக் கண்காட்சியும் நடைபெறவுள்ளது.

அறிஞர் பெருமக்களும் மற்றவர்களும் தமிழரின் பண்பாடு மற்றும் கலாச்சாரச் சிறப்பினை உணரும் வகையிலும் மாலை நேரங்களில் பொழுது போக்கும் வாய்ப்பாகவும் கலை நிகழ்ச்சிகளுக்கும் ஏற்பாடு செய்யப்பட்டது. மேலும், தமிழ் இலக்கியம், கலை வளர்ச்சி ஆகியவற்றை வெளிப்படுத்தும் வகையில் “இனியவை நாற்பது” என்னும் தலைப்பில் 40 அலங்கார ஊர்திகள் வடிவமைக்கப்பட்டன. கோவை மாநகரில் ஜூன் 23ஆம் நாள் மாநாட்டின் தொடக்க நாளன்று மேதகு குடியரசுத் தலைவர் அவர்கள் மாநாட்டைத் தொடங்கி வைத்துச் சிறப்புரையாற்றிய பின் அலங்கார ஊர்திகளின் அணிவகுப்பு நிகழ்ச்சிகளைப் பார்வையிடவும் இசைவு தெரிவித்தார்கள்.

பொதுமக்களிடையே மாநாடு பற்றி விளம்பரப் படுத்துவதற்காக ரூ. 10 கோடி ஒதுக்கீடு செய்யப்பட்டு வானொலி, தொலைக்காட்சிகள், பிற ஊடகங்கள் ஆகியவற்றின் மூலம் விளம்பரப்படுத்தவும் நடவடிக்கை எடுக்கப்பட்டது. அரசு அலுவலகங்கள், பேருந்துகள், பள்ளிப் பாடப் புத்தகங்கள் ஆகியவற்றிலும் விளம்பரம் செய்யப்பட்டது.

இவ்வாறு உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாட்டினை யொட்டித் தமிழ் மொழியின் தொன்மை, தமிழர்தம் பண்பாடு, கலாச்சாரம் தொடர்பான ஆய்வுக் கட்டுரைகளை விவாதிப்பதுடன், செம்மொழித் தமிழின் சிறப்பினைப் பொதுமக்களுக்கு உணர்த்தும் வகையில் பொது அரங்க நிகழ்ச்சிகளும், மாபெரும் கண்காட்சியும், அலங்கார ஊர்திகளின் அணிவகுப்பும், கலை நிகழ்ச்சிகளும் நடத்தப்படும்.

நிறைவு நாளான ஜூன் 27ஆம் நாள் தமிழ்ச் செம்மொழியின் பயன்பாட்டினை மேலும் ஊக்குவிக்கும் வகையில் பல்வேறு தீர்மானங்களும் நிறைவேற்றப் படவுள்ளன. இம் மாநாடு சிறப்பாக நடைபெறுவதற்காகத் துணைவேந்தர், தஞ்சாவூர் பல்கலைக் கழகம், கோவை மாவட்ட ஆட்சியர் மற்றும் அரசின் பல்வேறு துறைகள் குறிப்பாகப் பொதுப்பணித்துறை, உயர்கல்வித்துறை, தமிழ்நாடு மின்வாரியம், போக்குவரத்துத் துறை, நெடுஞ்சாலைத்துறை, செய்தி மற்றும் மக்கள் தொடர்புத் துறை, நகராட்சி மற்றும் குடிநீர் வழங்கல் துறை, கூட்டுறவு மற்றும் உணவு வழங்கல் துறை, கோவை மாநகராட்சி ஆகியவை பணியாற்றின.

எல்லாச் சாலைகளும் ரோமை நோக்கிச் செல்கின்றன (All roads lead to Rome) என்பதைப் போல் இம் மாநாட்டிற்காக அனைத்துச் சாலைகளும் கோவையை நோக்கிச் செல்கின்றன என்பது மிகையன்று ❖

# மலர் மணம்

## கவிதைகள்

## கலையும் பண்பாடும்

## இலக்கியம்

## தொல்லியல்



## ஆட்சித் தமிழ்



## அறிவியல் தமிழ்

❖ ❖ ❖

# உயர்தனிச் செம்மொழி



பரிதிமாற் கலைஞர்

வடமொழி, இலத்தீன், கிரீக்கு முதலியன போலத் தமிழ்மொழியும், 'உயர்தனிச் செம்மொழி'யாமாறு சிறிது காட்டுவாம். தான் வழங்கும் நாட்டின்கணுள்ள பல மொழிகட்குத் தலைமையும் அவற்றினும் மிக்க மேதகவுடைமையுமுள்ள மொழியே 'உயர்மொழி'. இவ்விலக்கணத்தான் ஆராயுமிடத்துத் தமிழ், தெலுங்கு முதலியவற்றிற் கெல்லாந் தலைமையும் அவற்றினும் மிக்க மேதகவும் உடைமையால் தானும் உயர்மொழியே யென்க. தான் வழங்கும் நாட்டிற் பயிலும் மற்றைய மொழிகளின் உதவியின்றித் தனித்து இயங்கவல்ல ஆற்றல் சான்றதே 'தனிமொழி' என்னப்படும். தான் பிறமொழிகட்குச் செய்யும் உதவி மிகுந்தும் அவை தனக்குச் செய்யும் உதவி குறைந்தும் இருத்தலே வழக்காறு. தமிழ்மொழியினுதவி களையப்படின், தெலுங்கு முதலியன இயங்குதலொல்லா; மற்றுத் தமிழ்மொழி அவற்றினுதவியில்லாமலே சிறிது மிடர்ப்படுதலின்றித் தனித்து இனிமையின் இயங்கவல்லது. இஃது இந்திய மொழி நூற் புலவர்கள் பலர்க்கும் ஒப்ப முடிந்தது. ஆதலின் தமிழ் தனிமொழியே யென்க.

இனிச் செம்மொழியாவது யாது? திருந்திய பண்புஞ் சீர்த்த நாகரிகமும் பொருந்திய தூய்மொழி புகல் 'செம்மொழியாம்' என்பது இலக்கணம். இம்மொழிநூ லிலக்கணம் தமிழ் மொழியின் கண்ணும் அமைந்திருத்தல் தேற்றம். என்னை? இடர்ப்பட்ட சொன்முடிபுகளும் பொருண்முடிபுகளுமின்றிச் சொற்றான் கருதிய பொருளைக் கேட்டான் தெள்ளிதி னுணரவல்லதாய்ப் பழையன கழிந்து புதியன திருத்தமெய்தி நிற்றலே திருந்திய பண்பெனப்படுவது. இது தமிழ்மொழியின்கண் முற்றும் அமைந்திருத்தல் காண்க. நாட்டின் நாகரிக முதிர்ச்சிக் கேற்பச் சொற்களும் ஏற்பட்டுப் பாஷைக்கும் நாகரிக நலம் விளைத்தல் வேண்டும். அவ்வாறு சொற்களேற்படுமிடத்துப் பிற பாஷைச் சொற்களன்றித் தன் சொற்களே மிகுதல் வேண்டும். இவையும் உயர்தனித் தமிழ்மொழிக்குப் பொருந்துவனவாம். ஆகவே, தமிழ் தூய்மொழியுமாம். எனவே, தமிழ் செம்மொழியென்பது திண்ணம். இதுபற்றி யன்றே தொன்றுதொட்டுத் தமிழ்மொழி 'செந்தமிழ்' என நல்லிசைப் புலவரால் நவின்றோதப் பெறுவதாயிற்று. ஆகவே, தென்னாட்டின்கட் சிறந்தொளிராநின்ற அமிழ்தினுமினிய **தமிழ்மொழி எவ்வாற்றான் ஆராய்ந்த வழியும் 'உயர்தனிச் செம்மொழியேயாம் என்பது நிச்சயம்.** இவ்வள வுயர்வுஞ் சிறப்பும் வாய்ந்த அருமைத் தமிழ்மொழியை உண்ணாட்டுப் புன்மொழிகளோ டொருங் கெண்ணுதல் தவிர்ந்து, வடநாட்டுயர்தனிச் செம்மொழி சமஸ்கிருதமெனக் கொண்டாற் போலத் தென்னாட்டுயர்தனிச் செம்மொழி தமிழெனக் கொண்டுபுகுதலே ஏற்புடைத்தாம்.

("தமிழ்மொழியின் வரலாறு" என்னும் நூலிலிருந்து)

# சமற்கிருதத் துணைவேண்டாத் திராவிடத் தனித்தன்மை

**டாக்டர் கால்டுவெல்**



திராவிட மொழிகள் வட இந்திய மொழிகளிலிருந்து பற்பல இயல்புகளில் வேறுபடுகின்றன. அவ்வாறிருந்தும், அத் திராவிட மொழிகள், வட இந்திய மொழிகளைப் போலவே, சமற்கிருதத்திலிருந்து பிறந்தனவாகச் சமற்கிருதப் பண்டிதர்களால் கருதப்பட்டன. தாங்கள் அறிந்த எப்பொருளுக்கும் பார்ப்பன மூலம் கற்பிக்கும் இயல்பினர் அப் பண்டிதர்கள். அவர்கள் கூறும் அம்முடிவை, முதன்முதலில் வந்த ஐரோப்பிய அறிஞர்களும் அவ்வாறே ஏற்றுக்கொண்டனர். தங்கள் கருத்தை ஈர்த்த ஒவ்வொரு திராவிட மொழியும் சமற்கிருதச் சொற்களை ஓரளவு பெற்றிருப்பதை அவர்கள் காணாதிருக்க முடியாது. அவற்றுள் சில, இவை எம்மொழிச் சொற்கள் என்பதை அரும்பாடுபட்டே அறிந்துகொள்ள வேண்டிய நிலையில் பெரிதும் சிதைவுண்டிருக்கும். எனினும் சில சிறிதும் சிதைந்து மாறுபாடுற்றிரா என்பது உண்மை. ஆனால், அம்மொழி ஒவ்வொன்றும் சமற்கிருதம் அல்லாத பிறமொழிச் சொற்களையும், சொல்லுருவங் களையும் அளவின்றிப் பெற்றிருப்பதையும் அவர்கள் தெளிவாகக் காண்பர் என்றாலும், அச் சொற்களே அம் மொழி வடிவில் பெரும் பகுதியை உருவாக்குகின்றன; அச் சொற்களிலேயே அம் மொழியின் உயிர்நாடி நிற்கிறது என்ற உண்மையை உணர்ந்திருக்க மாட்டார்கள். அவ்வறியாமையின் பயனாய், அம் மொழிகளில் காணலாகும் அச் சமற்கிருதப் புறத்தன்மைகளுக்குக் காணமுடியாத யாதோ ஒரு சில மூலத்திலிருந்து தோன்றிய வேற்று மொழிக் கலவையாம் என்ற பெயர் சூட்டி அமைதியுற்றனர். உண்மையில் சமற்கிருத மொழிச் சிதைவுகளாய கௌரிய இனத்தைச் சேர்ந்த வங்காளம் போலும் மொழிகளிலும், சமற்கிருதத்திற்குப் புறம்பான சில சொற்களும் சொல்லுருவங்களும் இடம் பெற்றுள்ளன; அப் பண்டிதர்கள் கருத்துப்படி, திராவிட மொழிகளுக்கும் அக் கௌரிய மொழிகளுக்குமிடையில் மதிப்பிடத்தக்க வேறுபாடு எதுவும் இல்லையாதல் வேண்டும். இவ்வாறு, திராவிட மொழியில் காணலாகும் சமற்கிருதப் புறத்தன்மைகளை, வேற்று மொழிக் கலவைகளாக மதித்து ஒதுக்குவது, உண்மை நிலையிலிருந்து உருண்டோடி வீழ்வதாகும். மேலும், திராவிடம் சமற்கிருதத்திலிருந்து பிறந்தது என்ற கருத்து, முந்திய தலைமுறையினராய மொழிநூல் வல்லுநர்க்கு ஏற்புடையதாய் விளங்கினும், இக் காலை அறவே அடிப்படையற்றுப் போன கட்டுக்கதையாகிவிட்டது. மேலே கூறிய பண்டிதர்கள் சமற்கிருத மொழியை ஆழக் கற்று, வட இந்திய மொழிகளை விளங்க அறிந்தவரே எனினும் அவர்கள் திராவிட மொழிகளை அறவே கண்டறியாதவராவர்; அல்லது, ஒரு சிறிதே அறிந்தவராவர். ஒப்பியல் மொழி நூல் விதிமுறைகளில் ஒரு சிறு பயிற்சியும் பெறாத எவரும், திராவிட மொழிகளின் இலக்கண விதிகளையும் சொற்களையும் நன்கு கற்றுத் தேர்ந்து, அவற்றைச் சமற்கிருத இலக்கண முறைகளோடும் ஒப்புநோக்க அறியாத எவரும், திராவிட இலக்கண அமைப்பு முறையும், சொல்லாக்க வடிவங்களும், இன்றியமையாச் சிறப்பு வாய்ந்த அவற்றின் எண்ணற்ற வேர்ச் சொற்களும், எத்தகைய சொல்லாக்க, சொற்சிதைவு முறைகளினாலேயாயினும், சமற்கிருதத்திலிருந்து தோன்றியனவாகும் என்று கூற உரிமையுடையவராகார்.

(திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் –
தமிழாக்கம் : புலவர் கா. கோவிந்தன்)

# செம்மொழிச் சிந்தனைகள்

முனைவர் வா.செ. குழந்தைசாமி



மனிதன் காடுகளில் வேட்டையாடி விலங்கெறிந்து வாழ்ந்த காலப் பகுதி அளவிட இயலாதது. அவனது நாகரிக வரலாறு, அவன் மிகச் சிறிய அளவிலாவது, வளங்களில் அடிப்படை யானவையான நிலவளத்தைப் பயன்படுத்தி, நீர் வளத்தைப் பயன்படுத்திப் பயிர் செய்யத் தொடங்கிய காலத்தில்தான் ஆரம்பித்தது.

அறிவியல் ஆய்வாளர்களில் டார்வினுக்கு இணையானவரான ஆல்ஃப்ரெட் வாலெஸ் (Alfred Wallace) ஓர் அரிய, ஆனால் மிகச் சாதாரணமான ஓர் உண்மையைச் சொன்னார்.

**"உலக உயிர்களில் மனிதன் மட்டும்தான்**
**கருவிகள் படைக்கத் தெரிந்தவன்."**

சற்று விரிவாகச் சொல்வதானால்

**கருவிகள் படைப்போன் மாந்தன்**
**கருவியால் உயர்வோன் மாந்தன்.**

ஒவ்வொரு முக்கியமான புதிய கருவியும் சமுதாயத்தில் ஒரு புரட்சியை உருவாக்கி இருக்கிறது. ஒரு புதிய யுகத்தையேகூட உருவாக்கி இருக்கிறது.

**கலப்பையை அன்றோர் மேதை**
**கண்டனன்: மானிடத் திற்(கு)**
**அளப்பரும் சேவை செய்தான்.**

எனவே அடையாளம் தெரியாத ஒரு மேதை, இன்றிலிருந்து ஏறத்தாழ எண்ணாயிரம் ஆண்டுகட்கு முன்பு கலப்பையைக் கண்டுபிடித்தான். இந்த எளிய கருவிதான் மனித சமுதாயத்தின் நாகரிக வாழ்விற்கு வித்திட்டது. வேளாண்மை யுகத்தைத் தொடங்கி வைத்தது. வேளாண்மை யுகம் கலப்பையின் கொடை.

வேளாண்மையுகம் 18ஆம் நூற்றாண்டுவரை தொடர்ந்தது. 18ஆம் நூற்றாண்டின் இறுதியில் கண்டுபிடிக்கப்பட்ட நீராவி இயந்திரம்தான் தொழில் யுகத்தை (Industrial Age) வளர்த்தது. 15ஆம் நூற்றாண்டில் கண்டுபிடிக்கப்பட்ட அச்சு இயந்திரம்தான் ஐரோப்பாவின் மறுமலர்ச்சிக் காலத்தை உருவாக்கியது. 14ஆவது நூற்றாண்டுவரை, கீழை நாடுகள் கல்வியிலும், செல்வத்திலும் முன் நின்றன. பதினைந்தாம் நூற்றாண்டில்தான் – அச்சு இயந்திரம் கண்டுபிடிக்கப்பட்ட பின்னர்தான் – மேலை நாடுகள் முந்தத் தொடங்கின. அது தொடர்கிறது. இரண்டாவது உலகப் போருக்குப் பின் கணிப்பொறி கண்டுபிடிக்கப்பட்டது. அது இன்றைய கல்வியுகத்தை (Knowledge Era) தோற்றுவித்தது. எனவே புதிய கருவியின் உருவாக்கமும், மனித சமுதாய முன்னேற்றமும் ஒன்றோடொன்று நெருக்கமான தொடர்புடையது.

வேளாண்மை யுகத் தொடக்கத்திலிருந்து உலகில் ஆறு மாபெரும் நாகரிகங்கள் தோன்றின. முதல் நாகரிகங்களான அவற்றின் தொடக்க காலம் பின் வருமாறு:

1. மெசபடேமியா நாகரிகம் . . . . 4500 B.C. முதல் 1800 B.C. வரை.

2. சிந்துவெளி நாகரிகம் . . . . . 4000 B.C. முதல் 1800 B.C. வரை.

(சிந்துவெளி நாகரிகத்தை இரண்டாவதாகக் குறிப்பிடுகிறோம் என்றாலும் ஏறத்தாழ மெசபடேமியா நாகரிகத்திற்குச் சம காலமானதாகவே அதைக் கருத வேண்டும்.)

3. எகிப்து நாகரிகம்.... 3500 B.C. முதல் 2180 B.C. வரை.

4. மத்திய தரைக் கடல் நாகரிகம் அல்லது மினோவன் (Minoan and Mycenaean civilization) . . . . 2000 B.C. முதல் 1000 B.C. வரை.

5. சீன நாகரிகம் . . . . . 1700 B.C. முதல் 1050 B.C. வரை.

6. மெசோ அமெரிக்க நாகரிகம் 1200 B.C. முதல் 700 B.C. வரை.

மேலே கூறப்பட்ட நாகரிகங்கள் அனைத்தும் உன்னத நிலையை அடைந்திருந்த காலம் உண்டு. ஆனால், கால வெள்ளத்தில் ஒவ்வொன்றாக இவற்றுள் சில, எந்த விதமான அடையாளமுமின்றி மங்கி மறைந்துவிட்டன.

சிந்துவெளி நாகரிகத்தின் தொடர்ச்சியாக, அந்தப் பாரம்பரியம் தொடர்வதாக நிலைத்திருப்பது இந்திய நாகரிகம். இந்திய நாகரிகம் போலத் தொடர்ச்சி குன்றாது இன்றும் இருப்பது சீன நாகரிகம். மற்ற நாகரிகங்கள், அவற்றின் அழிவுகளைக் கொண்ட சின்னங்களைத் தவிர வேறு பரம்பரைத் தொடர்பு என எதுவும் இல்லாது மறைந்துவிட்டன. மெசபடோமியாவின் இன்றைய பகுதியான ஈராக், ஈரான் போன்ற நாடுகளில் வாழ்ந்த மக்கட்கும், இன்று அங்கு வாழும் மக்கட்கும் எந்த விதமான தொடர்பும் இல்லை. பேசும் மொழிக்கும் தொடர்பு இல்லை. இது எகிப்து நாகரிகத்திற்கும், மத்திய தரைக்கடல் நாகரிகத்திற்கும், மெசோ அமெரிக்க நாகரிகத்திற்கும் பொருந்தும். இவை அனைத்தும் முழுமையாக மறைந்துவிட்டன. எனவே, மனித சமுதாயத்தில் நாகரிக வாழ்வு, ஏறத்தாழ, இன்றிலிருந்து 6000 ஆண்டுகட்கு முன்பு தொடங்கிய காலம் முதல் தொடர்ந்து வரும் உலக நாகரிகங்கள் இரண்டுதான். அவை யாவன:

1. இந்திய நாகரிகம்
2. சீன நாகரிகம்

இந்திய நாகரிகத்தைப் பொறுத்தவரை 1953இல் பூனே பல்கலைக்கழகத்தில் பட்டமளிப்பு விழாச் சொற்பொழிவில் டாக்டர் C.P. இராமசாமி ஐயர் அவர்கள் பின் வருமாறு கூறினார்:

"The two greatest components of culture in India are Sanskrit and Dravidian"

(இந்தியக் கலாச்சாரத்தின் இரண்டு பெரிய உறுப்புகள் வடமொழியும், திராவிடமுமாகும்.)

டாக்டர் C.P. இராமசாமி ஐயர் அவர்கள் தலை சிறந்த வழக்கறிஞர்; சிறந்த நிருவாகி எனப் பெயர் பெற்றவர் என்பது மட்டுமன்றி, இந்திய வரலாறு, நாகரிகம், கலை, இலக்கியம், தத்துவ மரபு பற்றி ஆழ்ந்த ஞானமுடையவர்.

அடுத்து நாம் இன்னொரு சான்றுக்கு வருவோம். டாக்டர் சுனிதி குமார் சட்டர்ஜி. அவர் தலை சிறந்த இந்தியவியல் நிபுணர், தேசிய அளவிலும், சர்வதேச அளவிலும் மதிக்கப்படுபவர். இந்திய நாகரிகம் பற்றி அவர் கூற்றுப் பின்வருமாறு:

"One thing I would like to reiterate in this connection. There cannot be any conception of India without either Dravidian (and other pre Aryan) or Aryan."

(ஓர் அம்சத்தை நான் இங்கு வலியுறுத்த விரும்புகிறேன். திராவிட (மற்றும் ஆரியருக்கு முந்திய) அல்லது ஆரியர் என்பன இல்லாது இந்தியா என்பது பற்றிக் கருதவே இயலாது.)

**இந்திய நாகரிகம் என்பது சிந்துவெளி நாகரிகத்தின் தொடர்ச்சி என்பது ஏற்கப்பட்ட ஒன்று.**

**இந்திய நாகரிகம் என்பது திராவிட நாகரிகத்தையும் ஓர் உறுப்பாகக் கொண்டது என்பது இதுவரை கூறியவற்றிலிருந்து உறுதி பெறுவதாகும்.**

ஆரிய நாகரிகத்தின் பங்களிப்புகள் அனைத்தையும் தாங்கி நிற்பது வடமொழி என்பது பொதுவான கருத்து. திராவிட நாகரிகம் உருவாக்கிய இலக்கியம், தத்துவம் மற்ற நாகரிக உறுப்புகள் போன்றவற்றிற்குக் கொள்கலன் (Container) என்ன என்ற கேள்வி எழுகிறது. திராவிட நாகரிகத்தின் பாரம்பரியத்தைத் தாங்கி நிற்பது தமிழ் மொழியேயாகும். அறிஞர் பலர் இந்த உண்மையை எடுத்துரைத்துள்ளனர். நாம் மீண்டும் சுனிதி குமார் சட்டர்ஜி அவர்களின் ஆய்வுக்கு வருவோம். அவர் பின் வருமாறு கூறுகிறார்.

"In order to understand and appreciate the basic and characteristic contribution of Dravidian land to Indian literature as a whole, we have thus to take full note of "the Matter of Tiravida-nadu or Dravida-desa". This is to be found, of course, for the classical Old Dravida Period in the Sangam Literatue of Tamil in the first instance."

(இந்திய இலக்கியத்திற்குத் திராவிடத்தின் பங்களிப்பின் அடிப்படைக் கூறுபாட்டை உணர்ந்து கொள்வதற்குத் திராவிட நாடு அல்லது திராவிட தேசம் என்பதன் முழுக் கருப்பொருளையும் கவனத்திற் கொள்ள வேண்டும். திராவிடத்தின் தொன்மையான செவ்வியல் காலத்தின் பங்களிப்பை முதலாவதாக, நாம் தமிழிலுள்ள சங்க இலக்கியங்கள் மூலம்தான் அறிய முடியும்.)

எனவே இந்திய நாகரிகம் என்பது வடமொழி, தமிழ் ஆகிய இரண்டு மொழிகளையும் கொண்டது என்பது இன்று உலகம் ஒப்பும் உண்மையாகும்.

அண்மைக் காலம் வரை,

**இமயம் முதல் குமரி வரை பரவி நிற்கும்**
**இந்தியத்தின் பண்பாட்டில், இலக்கியத்தில்,**
**சமயம் எனும் சிந்தனையில், தத்துவத்தில்**
**தமிழ் மொழியின் பங்குண்டு** .....

என்ற உண்மை ஆய்வாளர்களால் அறியப் பட்டிருந்தாலும், இந்தியத் துணைக் கண்ட அளவில் பரவலாக ஏற்கப்படவில்லை. இந்திய அரசமைப்பில் ஆரம்பத்தில் 15 இந்திய மொழிகள் இடம் பெற்றிருந்தன. இப்பொழுது இருப்பவை 22. இந்த 22 மொழிகளில் ஒன்றாக மட்டுமே தமிழ் இடம் பெற்றிருந்தது. இந்திய அரசமைப்பில் வடமொழிக்குத் தனி இடமுண்டு. தமிழின் பழைமை, அதன் வளம், இந்திய நாகரிகத்திற்கும், பண்பாட்டிற்கும் தமிழ் மொழியின் பங்களிப்பு ஆகியவற்றிற்கு ஏற்றதாக அதன் இடம் இல்லையே என்ற ஏக்கம் தமிழறிஞர்களிடையே நீண்ட காலம் இருந்து வந்தது.

இந்தியத் துணைக் கண்டத்தில் வடமொழிக்கு இணையான இடம் வரலாற்று உண்மையின் அடிப்படையில் தமிழுக்கும் கொடுக்கப்பட வேண்டும் என்பது பரிதிமாற் கலைஞர் காலம் முதல் தமிழர்களுடைய விருப்பமாக, வேண்டுகோளாக, கோரிக்கையாக இருந்து வந்தது. உலக அளவில் மொழி வல்லுநர்களால், தொல்லியல் துறை, வரலாற்றுத் துறை அறிஞர்களால் ஏற்கப்பட்ட உண்மை. இந்திய அரசின் அதிகாரபூர்வமான ஒப்புதலைப் பெறாதிருந்ததுதான் தமிழ் அறிஞர் பெருமக்களின் பெருங்குறை: நியாயமான குறை. இறுதியாகத் தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்களின் முறையான எடுத்துரைப்பின் மூலம் தமிழ் மொழி, செம்மொழி (Classical Language) என அதன் தகுதிக்குப் பொருத்தமான ஏற்பைப் பெற்றது. அதாவது உண்மை அங்கீகரிக்கப்பட்டது. "வாய்மையே வெல்லும்" என்பது இந்தியத் துணைக் கண்டத்தின் முதற் கூற்று (Motto). வாய்மையும் அதன் பின்னால் வலிமையின் துணை இருந்தால்தான் வெல்லும் எனும் உண்மையை நிலை நிறுத்துவது போல, உலகறிஞர்களால் ஒப்புக் கொள்ளப்பட்ட, தமிழ் ஒரு செம்மொழி* (Classical Language) என்ற உண்மையை முன்னிலைப் படுத்துவதற்கு, டாக்டர் கலைஞர் அவர்களின் தளராத முயற்சி தந்த வலிமை துணை செய்தது என்பது இன்று வரலாறு.

மூவாயிரம் ஆண்டுகளுக்கு மேற்பட்ட வரலாறு உள்ள தமிழ் மொழியில் அண்மைக் காலத்தில் இடம் பெற்ற இரண்டு மாபெரும் நிகழ்வுகளை இங்குக் குறிப்பிட வேண்டும். தமிழில் உள்ள தலை சிறந்த இலக்கியப் படைப்பான சங்க நூல்கள் செவ்வியல் இலக்கியங்கள் என (Classical Language) அடையாளம் கண்டு, அதன் வழி பல மேலை நாட்டு அறிஞர்கள் தமிழ் ஒரு செவ்வியல் மொழி என்பதை இருபதாம் நூற்றாண்டில் ஒப்புக்கொண்டனர். அதன் வழி இந்திய அரசு நாம் முன்னர் எடுத்துரைத்தபடி, 12.10.2004இல் அதிகாரபூர்வமாகத் தமிழும் அதற்குப் பின்னர் 25.11.2005இல் அதிகாரபூர்வமாக வடமொழியும் ஆகிய இந்தியாவின் இரண்டு பண்டை மொழிகளும் செவ்வியல் மொழிகள் என அறிவித்தது. தமிழ் மொழி தனது பாரம்பரியமான பண்டைப் பெருமையுடன், இருபதாம் நூற்றாண்டில் பெற்ற சிறப்புகள் பின்வருமாறு:

1. இன்று உலகில் ஏறத்தாழ 6000 மொழிகள் இருக்கின்றன. அவற்றுள் 6 மொழிகள் மட்டுமே செம்மொழிகள் என்ற சிறப்புடையவை. அவற்றுள் இடம் பெற்றதன் மூலம் 6000 – மொழிகளுள் ஒன்று என்பதில் இருந்து, உலகின் ஆறு செம்மொழிகளுள் ஒன்று என்ற இடத்தைப் பெற்றது.

2. இந்திய அரசமைப்பில் 22 மொழிகள் இடம் பெற்றுள்ளன. அவற்றுள் தமிழும் ஒன்று என்ற நிலையே இருந்து வந்தது. இப்பொழுது வடமொழியும் தமிழும் செவ்வியல் மொழிகள். எனவே 22இல் ஒன்று என்ற நிலையில் இருந்து உயர்ந்து, இந்தியாவின் இரண்டு செம்மொழிகளுள் ஒன்று என்ற நிலையைத் தமிழ் பெற்றுள்ளது.

வடமொழியும், தமிழும் உலகின் மிகப் பழைமை வாய்ந்த மொழிகள் எனினும், அண்மைக் காலம் வரை தமிழ் மொழியின் சீரும், சிறப்பும் உலக அரங்கில் பரவலாக அறிமுகமாகவில்லை. வடமொழி இலக்கியங்கள் அடையாளம் காணப்பட்டதுடன், ஐரோப்பிய மொழிகளிலும் அவை மொழி பெயர்க்கப்படும் வாய்ப்பு ஏறத்தாழ இரு நூற்றாண்டுகட்கு முன்பே அமைந்தது. தாரா ஷுகோ என்ற மொகலாய இளவரசர் கி.பி. 1657இல் தமக்கிருந்த வடமொழிப் பற்றினாலும், பரந்த மனப்பான்மையினாலும், புலவர் பலர் துணை கொண்டு ஐம்பது முக்கியமான உபநிடதங்களைப் பாரசீக மொழியில் மொழி பெயர்த்தார். இதிலிருந்து ஐரோப்பிய அறிஞர்கள், 1801இல் முதன் முதலில் இலத்தீன் மொழியில் மொழி பெயர்த்தனர். இதன் வழி உபநிடதங்களின் பெருமை மேலை நாடு முழுவதும் பரவியது. இந்த வாய்ப்பு பழந்தமிழ் இலக்கியங்கட்கு இருபதாம் நூற்றாண்டுவரை கிடைக்கவில்லை – திருக்குறள், நாலடியார் விதிவிலக்கு.

கிழக்கிந்தியக் கம்பெனியின் தலைமையகம் சென்னையிலிருந்து கோல்கத்தாவிற்கு மாறியது வடமொழிக்கு ஒரு பெரிய வரமாக அமைந்தது. அங்கு

நீதிபதியாக வந்த வில்லியம் ஜோன்ஸ் (Sir William Jones) என்பவர் 1784இல் ஆசியாட்டிக் சொசைட்டி (Asiatic Society) என்ற நிறுவனத்தை உருவாக்கினார். அதன் வழியும், கோல்புருக், முக்கியமாக மாக்ஸ் முல்லர் (Max Muller) போன்றவர்கள் முயற்சியாலும் 18, 19ஆவது நூற்றாண்டுகளிலேயே வடமொழி நூல்கள் பரவலாக மொழி பெயர்க்கப்பட்டு அறிமுகமாயின. வடமொழி இலக்கியத்தைச் செவ்வியல் இலக்கியம் (Classical Literature) எனவும். கிரீக், இலத்தீன் போன்று வடமொழி செவ்வியல் மொழி என்றும் அடையாளம் கண்டவர்கள் ஐரோப்பியர்கள்தாம்.

தமிழின் நிலைமையோ முற்றிலும் வேறு. சங்க காலம் தாண்டி, ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுக் காலப்பகுதியில், தமிழ் நிலத்திலேயே தமிழ் ஆட்சி மொழியாக இருந்த காலம் மிகக் குறைவுதான். மற்றத் திராவிட மொழிப் பிரிவுகள் போல், தனித்தன்மையை இழந்து, கன்னடம், தெலுங்கு, மலையாளம் போல் மாறிவிடாது, தமிழ் தொடர்ந்து, தனித்தன்மையைக் காத்ததும், தலை நிமிர்ந்து நின்றதும், உலக மொழி வரலாற்றில் ஓர் ஒப்பற்ற சாதனைதான். தமிழ் மொழியின் முக்கியமான படைப்புகளாகிய சங்க நூல்கள், ஐம்பெரும் காப்பியங்கள், பதினெண் கீழ்க்கணக்குப் போன்றவை பத்தொன்பதாவது நூற்றாண்டின் பிற்பகுதியிலும், அதற்குப் பின்னரும்தான் ஏடுகளிலிருந்து பெறப்பட்டுப் பதிப்பிக்கப்பட்டன – திருக்குறள், தொல்காப்பியம் போன்றவை விதிவிலக்கு.

காலம் கடந்து, பார்வைக்கு வந்த தமிழ் இலக்கிய நூல்கள் ஆங்காங்குத் தனி மனிதர்களால், சிறு நிறுவனங்களால் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டன. இப்பணியில் கிறித்தவப் பாதிரிமார்களின் பங்கு குறிப்பிடத்தக்கது. எனினும் ஓர் ஆசியாட்டிக் சொசைட்டி, ஒரு மாக்ஸ் முல்லர் தமிழுக்கு வாய்க்கவில்லை. மனித நாகரிகம் தொடங்கிய காலத்தைச் சேர்ந்த ஓர் இனத்தின் பாரம்பரியத்தில் இருந்து வளர்ந்த தமிழ், குடத்திலிட்ட விளக்காகவே இருந்தது. ஒரு சான்று கூறலாம்.

ஒரு மொழியின் இலக்கிய வளர்ச்சிக்கு, உறுதியான, ஐயத்திற்கிடமில்லாத சான்று அதன் இலக்கணம்தான். இன்று முறையான அமைப்புடைய பண்டைய இலக்கண நூல்கள் நான்கு மட்டுமே பேசப்படுகின்றன. அவை பின் வருமாறு: (காலக் கணிப்பில் கருத்து வேறுபாடு உண்டு):

1. பாணினியின் வடமொழி இலக்கணம்: 500 B.C.

2. தொல்காப்பியரின் தமிழ் இலக்கணம்: 300 B.C.

3. டயோனிசியஸ் திரேக்ஸ் – Dionysius Thrax: கிரேக்க இலக்கணம்: கி.மு. இரண்டாம் நூற்றாண்டு முதல் கி.பி. முதல் நூற்றாண்டு.

4. வர்ரோ (Varro)வின் இலத்தீன் இலக்கணம் : கி.மு. இரண்டாம் நூற்றாண்டு.

(பேரா. அகத்தியலிங்கம்)

மொழித் துறையில் நாம் கண்ட சாதனையை எண்ணி மனித சமுதாயமே, பெருமைப்படத்தக்க, முழுமையான சிறப்புடையது தொல்காப்பியம். ஆனால், பாணினி போன்று இன்றும் அது அறிமுகம் பெறவில்லை.

இந்தப் பின்னணியில் மைய அரசு தமிழின் செவ்வியல் தன்மையை அங்கீகரித்தபின் உருவாக்கப்பட்ட 'செம்மொழித் தமிழ் மத்திய ஆய்வு நிறுவனம்' (Central Institute of Classical Tamil) மேற்கொண்டுள்ள பணிகளில் முக்கியமான, செம்பதிப்பு, மொழி பெயர்ப்புப் பணிகள் கடந்த காலத் தேக்கத்தை ஈடு செய்யும் தகுதி வாய்ந்தவை.

**செம்பதிப்பு: மொழி பெயர்ப்புத் தொகுப்புகள் (41 நூல்கள்) :**

**பத்துப்பாட்டு**

**எட்டுத் தொகை**

**பதினெண் கீழ்க்கணக்கு**

**தொல்காப்பியம்**

**முத்தொள்ளாயிரம்**

**இறையனாரகப் பொருள்**

**சிலப்பதிகாரம்**

**மணிமேகலை**

இவை அனைத்திற்கும் செம்பதிப்புகள் வெளியிடப்படும். இவை அனைத்திற்கும் இதுவரை வெளியிடப்பட்டுள்ள ஆங்கில மொழி பெயர்ப்புகள் தொகுக்கப்படும். விரிவான விளக்கங்கள் சேர்க்கப்படும். புதிய மொழி பெயர்ப்புத் தேவைப்படின் அப்பணியும் மேற்கொள்ளப்படும். எதிர்காலத்தில் இந்தி மற்ற இந்திய மொழிகளிலும் மொழி பெயர்ப்பு முயற்சி மேற்கொள்ளப்படும்.

மேலே கூறப்பட்டிருப்பவை போன்ற முயற்சிகள் ஒரு புறமிருக்க, இவற்றிற்கு இணையாக, தமிழ், வடமொழி இரண்டும் இந்தியாவின் செம்மொழிகள் என ஏற்கப்பட்டதன் விளைவாக – இதுவரை உணரப்படாத, உணரப்பட்டிருப்பினும் வலியுறுத்தப்படாத – பல உண்மைகள் நமது சமுதாயத்தில் இடம் பெறுவதற்கான, ஏற்கப்படுவதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்பட வேண்டும்.

✶ எப்படி ஆரியம் சார்ந்த இந்தியப் பண்பாட்டுக்கு வடமொழி கொள்கலனாக விளங்குகிறதோ, அவ்வாறே திராவிடம் சார்ந்த இந்தியப் பண்பாட்டிற்குத் தமிழ்மொழி கொள்கலன் (Container) ஆகும்.

✶ எப்படி ஐரோப்பிய நாகரிகத்தை அறிந்து கொள்வதற்குக் கிரேக்கமும், இலத்தீன் மொழியும் தேவையோ, அதுபோலவே, இந்திய வரலாற்றை, இந்திய நாகரிகத்தை, பண்பாட்டை, அதன் ஆன்மிக, தத்துவ மரபுகளை முழுமையாக உணர்ந்துகொள்ள வடமொழி, தமிழ் ஆகிய இரண்டு மொழிகளும் தேவை.

இந்தியாவின் செவ்வியல் மொழிகள் வடமொழியும் தமிழும் என்ற உண்மை ஏற்கப்படும் பொழுது, வடமொழி போன்று தமிழும் இந்தியப் பண்பாட்டின், நாகரிகத்தின் தூண் என்ற வரலாற்றுண்மை பரவலாக அறியப்படும். தமிழ் ஒரு மாநில மொழி என்ற நிலையினின்றும் உயர்ந்து, இந்தியத் துணைக் கண்டத்தின் இரு பண்பாட்டு மொழிகளுள் ஒன்று என்ற நிலையைப் பெறும். இதனால் ஏற்படும் நன்மைகள் பின்வருமாறு:

✶ தமிழ் மொழி தமிழ் மக்களின் தாய் மொழி – இமயம் முதல் குமரி வரை, இந்திய மக்களின் பண்பாட்டு மொழி என்ற நிலைமை படிப்படியாக இடம் பெறும்.

✶ இதுவரை ஒரு கண்கொண்டு பார்த்து வந்ததால் முழுமையாக அறியப்படாதிருந்த பண்டைய இந்திய வரலாற்றை, இந்தியப் பண்பாட்டை, நாகரிகத்தை, இரு கண்கள் கொண்டு முழுமையாகப் பார்க்கும் வாய்ப்பு உருவாகிறது.

✶ பண்டை இந்தியாவின் வரலாற்றிற்கு, பண்பாட்டிற்கு அடிப்படையான மொழிகள் வடமொழியும், தமிழும் என்ற உண்மை அதிகாரபூர்வமாக, ஏற்கப்படும்பொழுது தமிழ் மொழி இந்திய அறிஞர் உலகிற்கும், குறிப்பாக இந்தியவியல் (Indology) நிபுணர்கள், ஆய்வாளர்கள், வரலாற்றாசிரியர்கள் ஆகியோருக்கும் முக்கியமான மொழியாகிவிடும்.

✶ இந்தியத் துணைக் கண்டத்தின் செவ்வியல் மொழிகள் இரண்டில் தமிழும் ஒன்று என்ற தகுதியால், வடமொழிபோலத் தமிழ் எல்லாப் பல்கலைக்கழகங்களிலும், குறிப்பாக மையப் பல்கலைக்கழகங்களில் இடம் பெறும் வாய்ப்பு உருவாகும்.

✶ வடமொழி, பாரசீகம், அரேபியம், பாலி, பிராகிருதம் ஆகிய மொழிகளில் புலமை பெற்ற பேரறிஞர்கள் தேசிய அளவில் குடியரசுத் தலைவரால் ஆண்டுதொறும் கௌரவச் சன்னது (Certificate of Honour) வழங்கப்படுகின்றனர். அவர்கட்குப் புலமைத் தொகை வழங்கப்பட்டு வருகிறது.

✶ பண்டைத் தமிழ் சார்ந்த அறிஞர்களும், இளந் தலைமுறை ஆய்வாளர்களும் இவ்வாறு குடியரசு தலைவரால் கௌரவிக்கப்படுவர்.

✶ மைய அரசு வடமொழிக் கல்விக்கும் ஆய்விற்கும் ஆண்டுதொறும் கணிசமான நிதி ஒதுக்குகிறது. இது தவிர பல மாநில அரசுகள் நிதி ஒதுக்குகின்றன. வடமொழி இந்த நாட்டின் பண்பாட்டுமொழி, செவ்வியல்மொழி என்ற தகுதியில்தான் இந்த உதவி அளிக்கப்படுகிறது. இந்தியாவின் பண்பாட்டு மொழிகளுள் தமிழும் ஒன்று என்பது ஏற்கப்படுவதால் தமிழ்க் கல்விக்கும், ஆய்விற்கும் மைய அரசின் உதவி இயல்பாகவே கிட்டும்.

✶ அயல் நாடுகளில், குறிப்பாக மேலை நாடுகளில் உள்ள இந்திய ஆய்வுத் துறைகள் (Department of Indian Studies) வடமொழிக்கு இணையான இடத்தைத் தமிழுக்கும் வழங்குவதற்கு வழிவகுக்கும்.

✶ நாம் இங்கு ஒரு கருத்தைக் கோடிட்டுக் காட்ட வேண்டும். செவ்வியல் மொழிகளின்/பண்டை மொழிகளின் பட்டியலில் திராவிட மொழிகளில் மிகவும் மூத்த மொழியான தமிழ் இடம் பெறுவது இந்தியப் பண்பாட்டில், நாகரிகத்தில் திராவிடத்தின் பங்கைப் பிரதிபலிப்பதாகும். இது திராவிடமொழிக் குடும்பங்கள் அனைத்திற்கும் பெருமை சேர்க்கும் நிகழ்வு.

✶ நாம் மேலே பட்டியலிட்டுள்ள நிகழ்வுகள் இடம் பெறுவதற்கு, மைய அரசின் அறிவிப்பு வழிவகுக்குமே தவிர, இவை அனைத்தும் தானாக நடந்துவிடாது. நீண்ட காலப் புறக்கணிப்பை ஈடு செய்து, நேர் நிறுத்துவது சாதாரணமான பணி அன்று. நாடு தழுவிய புரிதல் வேண்டும்: ஏற்பு வேண்டும். நம்மை எதிர் நோக்கும் மகத்தான பணி; தேசியப் பணி. தமிழக அரசும், தமிழகப் பல்கலைக் கழகங்களும், அறிஞர் பெருமக்களும் ஆய்வுணர்வுடன், ஆழ்ந்த ஈடுபாட்டுடன் தேசியப் பார்வையொடு திட்டமிட்டு, அமைதியாக, ஆரவாரமின்றிச் செயலாற்ற வேண்டும். மைய அரசும், தொடர்புடைய மைய நிறுவனங்களும் உள்ளத்தில் உண்மையொடு, தங்கட்கு உரிய பொறுப்பை ஏற்க வேண்டும்.

எதிர்கால உயர்வுக்கும் பெருமைக்கும் எல்லாரும் முயலலாம். கொள்கை அளவில் எல்லாரும் பெறலாம். ஆனால், பண்டைப் பெருமை என்பது சில இனங்கட்கு மட்டுமே உரிய சொத்து. இன்று ஓர் இனமோ, நாடோ, நினைத்தால் சம்பாதிக்கக் கூடியதன்று. **வடமொழி மட்டுமன்றி, இன்னொரு செவ்வியல் மொழிக்கும் இந்தியர்களாகிய நாம் சொந்தக்காரர் என்பது தமிழர்கட்கு மட்டுமன்றி இந்தியர் அனைவருக்கும் பெருமை சேர்ப்பதாகும்.**

✶ Classical Language என்பதில் classical என்பது மேலை நாட்டில் உருப்பெற்ற ஒரு பண்பாட்டுச் சொல் (Cultural term). அதன் தமிழ் மொழிபெயர்ப்பாகச் செவ்வியல் மொழி, செம்மொழி என இரு சொற்களும் வழக்கில் உள்ளன.

❖

# செம்மொழி

## வரையறைகளும் தமிழும்



முனைவர் கா.சிவத்தம்பி

(முக்கிய முன் குறிப்பு : இதே விடயம் பற்றி அண்மையில் திரு. முத்து என்பவர் என்னுடன் செய்த நேர்காணலின்பொழுது செம்மொழியாகத் தமிழ் என்ற கருதுகோளை நன்கு விவரித்து ஆராய்ந்துள்ளேன். எனவே இக்கட்டுரையைப் பொறுத்தவரையில் குறிப்பிட்ட அப்பகுதியினைச் சிறிய மாற்றங்களுடன் தருவது பொருத்தமாகவிருக்கும் என்ற நினைப்பில் அவ்வாறு செய்துள்ளேன். இவ்விடயம் பற்றிய ஆய்வுகள் இப்பொழுதுதான் தொடங்கியுள்ள படியினால் அந்த நேர்காணலில் கொடுத்த விடயங்களை அப்படியே எழுதினால் அது கூறியது கூறலாகும். எனவேதான் அந்த நேர்காணலில் வரும் இக் கட்டுரைக்கியைந்த பகுதியினை மீளத் தருகிறேன்.)

செம்மொழி என்ற சொல் இன்று Classical language என்பதற்கான மொழிபெயர்ப்பாகக் கொள்ளப்படுகிறது. இம்மொழி பெயர்ப்பு இந்திய ஆட்சி அமைப்புச் சட்டத்தில் Classical language எனச் சமற்கிருதம், அரபு, உருது போன்ற மொழிகள் பற்றிக் குறிப்பிடும்பொழுது பயன்படுத்தப்பட்ட சொல்லாகும். தமிழக முதல்வர் கலைஞர் மு. கருணாநிதி அவர்களது முயற்சியின் காரணமாக மத்திய அரசு நிலையிலும் தமிழ் Classical language ஆக (செம்மொழியாக) ஆக்கப் பெற்றது. இப்பொழுது உலகின் Classical languageகளுள் ஒன்று என்ற கருத்தில் தமிழ் குறிப்பிடப்படுகின்றது.

இங்குக் கிளம்பும் மிகப் பிரதானமான பிரச்சினை செம்மொழி என்பது Classical languageஐக் கருதுமா என்பதே. செம்மொழியென்ற சொற்றொடர் செம்மையான மொழியென்றதன் குறுக்க வடிவமாகும் (செந்தமிழ்). இன்று செம்மொழியென்னும் சொல் Classical language என்பதனைக் கருதப் பயன்படுத்தப்பட்டாலும் தமிழ் லெக்சிகனில் அக்கருத்துத் தரப்படவில்லை. அங்குத் தரப்படும் கருத்துகள் பின்வருமாறு:

செம்மொழி என்பது நல்வார்த்தை, தொகையில்லாத ஒரு மொழி என்பதாகும். ஆனால், இப்பொழுது செம்மொழி என்னும் பதம் Classical language என்பதற்கான மொழி பெயர்ப்பாகக் கொள்ளப் படுகின்றது. உங்கள் வினாவிற்கான விடையை இரண்டு நிலைப்படுத்திக் கூற விரும்புகிறேன். முதலில் செம்மொழி Classical language என்னும் எண்ணக் கருத்துப் பற்றிய சிற்றாய்வாகவும், அடுத்தது கிரேக்க, இலத்தீன், ஈபுரு மொழிகளைக் குறிப்பிடுவது போல தமிழையும் குறிப்பிடலாமாவென்பது பற்றியதுமாகும். தமிழ் லெக்சிகனில் செம்மொழியெனும் தொடருக்குத் தரப்பட்ட கருத்துகளுள் இக்கருத்துகள் வரவில்லை யென்பதும் முக்கியமாகும்.

இன்று செம்மொழியென்னும் தொடர் Classical language என்ற கருத்துப்படப் பயன்படுத்தப் படுகின்றது. இடுகுறிப் பெயராக அன்றேல் காரண

இடுகுறிப் பெயராக நாம் சில கலைச்சொற்களைப் பயன்படுத்தி வருகிறோம் என்பது உண்மையெனினும் தமிழின் இந்திய நிலை அந்தஸ்தையும் உலகநிலை அந்தஸ்தையும் குறிப்பிடப் பயன்படுத்தப்படுகின்ற சொற்றொடரில் கருத்து மயக்கமில்லாதிருப்பது அத்தியாவசியமாகும். இப்பின்புலத்திலே உலகின் Classical language என ஆங்கிலத்திலே குறிப்பிடப் பெறும் மொழிகள் பற்றி நோக்குவோம்.

முதலில் இத்தொடர் உண்மையில் Classical language என்பதிலும் பார்க்க Classical Civilization என்று சொல்வது மரபு. உண்மையில் கிரேக்க, உரோம நாகரிகங்களையே மேல்நாட்டு மரபில் Classical Civilization என்று கொள்ளுவர்.

மேல்நாட்டு நாகரிகம் இவ்விரண்டு மொழி இலக்கியம், கலைகள், பண்பாடு ஊடாகவே உருவாகிற்று. ஆனால், இப்பொழுது Classical language என்னும் தொடர் சற்று அகலப்படுத்தப்பட்ட கருத்தினையுடையதாகக் காணப்படுகின்றது. இவ்வழி நோக்கும்பொழுது உலகின் Classical language ஆகக் கிரேக்கம், இலத்தீனுக்கு அப்பாலே Hebrew, சீனம், சமற்கிருதம் ஆகிய மொழிகளையும் சேர்த்துச் சொல்லுதல் மரபாகிவிட்டது.

இந்திய மரபில் சமற்கிருத மேலாண்மைவாதிகள் சமற்கிருதத்தைச் சேர்த்துக் கொண்டாலும் உலகநிலையில் அறிஞர்கள் கிரேக்கம், இலத்தீன், Hebrew, சீனம் என வருவனவற்றை Classical language எனக் கொள்வர். காரணம் இவை இன்றும் பேசப்படுவனவாக, வழக்கிலுள்ள மொழிகளாக உள்ளன. கிரேக்கம் – நவீன கிரேக்கமாகத் தொடர்கிறது. இவற்றிடையே கால வேறுபாடு உண்டெனினும் மொழித் தொடர்ச்சியமைப்பில், மொழிப் பயன்பாட்டுநிலையில் நிச்சயமானதொரு தொடர்ச்சி நிலையைக் காணலாம். சீனத்திற்கும் அத்தகையதொரு தொடர்ச்சி நிலை உண்டு.

இக்கட்டத்திலே Classical language என்னும் தொடருக்கான மேலுமொரு விளக்கத்தையும் அடுத்து அதற்குப் பொருத்தமான தமிழ்ச் சொற்றொடரையும் நோக்குவோம். Hebrew இஸ்ரேலின் உத்தியோகபூர்வ மொழியாகும். இவ்வாறு நோக்கும்பொழுது Classical language என்பதற்கு மூன்று முக்கியப் பண்புகள் இருக்க வேண்டுமென்று கொள்ளலாம்.

(அ) தொன்மை

(ஆ) தொடர்ச்சி

(இ) செழுமை வளம்

மேலே குறிப்பிட்ட சமற்கிருதம் தவிர்த்த நாலு மொழிகளும் இன்றும் ஏதோவொரு வகையில் பேசப்படுகின்றன. சமற்கிருதமெனும் சொல்லின் கருத்து நன்கு செய்யப்பட்டுள்ளதென்பதாகும். இது உண்மையில் பேச்சு வழக்கு நிலையில் பயன்படுத்தப் படுவதில்லை. வடமொழியாளர் சாதாரணமாகப் பேசும் மொழிகளைப் பிராக்கிருத மொழிகள் என்பர். சமற்கிருதம் இந்து சமயச் சடங்குகளில் இடம் பெறும் மொழியெனினும் அதனைப் பேச்சு மொழியாகக் கொண்ட எவரும் இலர். ஆனால், சமற்கிருத நாடகங்களில் சமூக உயர்நிலையிலுள்ள பாத்திரங்கள் சமற்கிருத மொழியில் பேச மற்றைய பாத்திரங்கள் பிராக்கிருத மொழிகளிற் பேசுவர்.

இந்திய ஆட்சியமைப்பு நிலையில் சமற்கிருதம் Classical languageஆகக் கொள்ளப் பட்டமைக்குக் காரணம் இந்திய வைதீக நாகரிகத்தின் ஊற்றாக இருப்பதாலாகும். சமற்கிருத வளர்ச்சியிலும் இரு நிலைகளைக் குறிப்பிடுவர்.

(அ) Vedic Sanskrit

(ஆ) Classical Sanskrit

இந்த Classical language மொழி நடையிலேதான் காளிதாசன் போன்ற பெரும் புலவர்கள் எழுதியுள்ளனர். தமிழ் இலக்கணத்தில் சமற்கிருதம் என்று குறிப்பிடப்படாமல் வடமொழியென்ற பதமே பயன்படுத்தப்படுவதைக் காணலாம். இதற்குக் காரணம் சமற்கிருதம், பாலி ஆகிய இரண்டு மொழிகளையும் குறிக்க வடமொழி என்னும் சொல் பொதுவானதாகும்.

மற்றைய Classical languageக்குரிய தொன்மையும் தொடர்ச்சியும் சமற்கிருதத்திற்கு இல்லை. இனித் தமிழை எடுத்துக் கொள்வோம். தமிழ் திராவிட மொழிக் குடும்பத்தைச் சார்ந்தது. இன்றைய மொழியறிவு நிலையின்படி தமிழைத் தென்திராவிட மொழிகளுக்கான (South Dravidian language) முதன்மை உதாரணமாகக் கொள்வர். இத்தென் திராவிட மொழிகளுள் கன்னடம், துளு, மலையாளம் போன்றவை வரும். தெலுங்கு மத்திய திராவிட மொழி (Central

Dravidian language) என்று கொள்ளப்படுகிறது. இவற்றுள் தமிழின் முதன்மையை நோக்குவோம். அனைத்திந்திய மட்டத்தில் இன்று பேசப் பெறும் மொழிகளுள் தமிழே தொன்மையும் தொடர்ச்சியுமுள்ள மொழியாகும்.

தமிழின் எழுத்து வழக்குபற்றிப் பேசும் பொழுது கி.மு. 3ஆம் நூற்றாண்டுக்குரிய பிராமிக் சாசனங்களை உதாரணம் காட்டுவர். ஆனால், தமிழ் மொழியோ நீண்டகாலம் பேச்சு வழக்கிலிருந் திருத்தல் வேண்டும்.

இந்தியாவின் பெருங்கற்படைப் பண்பாடு (Negalithic Culture) ஏறத்தாழ கி.மு. 700–1000 ஆண்டுகள் என்பர். அப்பண்பாடு உள்ள இடங்களில் தமிழ் காணப்படுவதாகச் சிலர் கூறுவர். இன்னுமொரு முக்கியத் தகவல் திராவிடத்தின் பழைமையை ஆராய்ந்த பேராசிரியர் தொமஸ்பரோ வேத சமற்கிருதத்தில் திராவிடச் சொற்கள் பல காணப்படுவதாகவும் அடுத்து வரும் சமற்கிருத வளர்ச்சியில் அவை படிப்படியாகக் குறைவதாகவும் எடுத்துக் கூறியுள்ளார். இவ்வாறு வடபகுதியில் பேசப்பட்ட திராவிட மொழிகளின் எச்சசொச்சமாக Brahui என்னும் மொழியைக் காணலாம்.

இலக்கியங்களைப் பொறுத்தவரையில் இருக்கு வேதம் ஏறத்தாழ குறைந்தபட்சம் கி.மு. 1000–1800 ஆண்டுகளுக்குரியதாகக் கொள்ளப்படல் வேண்டும். அத்தகைய தொன்மை நிலைப்பட்ட தமிழ் இலக்கியச் சான்று இருப்பதாகத் தெரியவில்லை. எம்மிடம் இப்பொழுதுள்ள தமிழ் இலக்கியச் சான்று சங்ககாலம் எனக் குறிப்பிடப் பெறும் ஏறத்தாழ கி.மு. 250 – கி.பி. 100 என்ற காலத்துக்குரியதென்பர்.

ஆனால், இந்தக் காலத்துக்குரிய இலக்கியங்களைப் பார்க்கும்பொழுது அவை மிகவும் செம்மையான செழுமையான இலக்கியப் பாரம்பரியம் ஒன்றின் அடிப்படையிலே தோன்றியுள்ளனவென்பது தெரியவரும். புராதனத் தமிழ்க் கவிதை இயற்கைச் சூழலால் தீர்மானிக்கப்பட்டதென்பது திணைக் கோட் பாட்டின் மூலம் தெரியவருகிறது. இப்பாடல்களினூடே இலியட், ஒடிசி போன்ற கதைப் பாடல் போன்ற எதுவும் காணப்படவில்லை. ஆனால், அவ்வாறு இருந்திருப் பதற்கான சாத்தியப்பாடு உள்ளனவென்று கைலாசபதி வாதிடுவார்.

இந்திய நிலையில் தமிழின் மிக முக்கியமான சிறப்புகள் யாவையெனின் தொன்மையான இலக்கியங் களைக் கொண்டுள்ளமை மாத்திரமல்லாமல் அது இன்றும் வழக்கு மொழியாக வுள்ளமையாகும். இதற்கு மேலாகத் தமிழுக்கு இன்று ஓர் அனைத்துலகப் பரிமாணமும் வந்துவிட்டது. சிங்கப்பூர், மலேசியா, தென்னாப்பிரிக்கா, ரெயூனியோன் போன்ற நாடுகளில் தமிழுக்கோர் அந்தஸ்து உண்டென்று குறிப்பிடல் வேண்டும். சிங்கப்பூர், மலேசியா ஆகிய நாடுகளைத் தவிர்த்த நாடுகளில் வளரும் தமிழிலக்கியம் இல்லை.

இப்பொழுது தங்கள் வினாவிற்கு வருவோம். இத்தகைய தகுதியினைப் பெற்று உள்ள மொழியொன்றினை உலகின் செம்மையான மொழிகளுள் ஒன்றாக மாத்திரமல்லாமல் தொல்சீர் மொழியாகவும் கொள்வதில் தவறே இல்லை. Classical language என்பதற்குச் செம்மொழிகள் என்பதிலும் பார்க்க, 'தொல்சீர் மொழிகள்' என்பதே பொருத்தமானதாகும். துரதிர்ஷ்டவசமாக உலக நிலைப்பட்ட மொழியில் இலக்கிய ஆய்வு நிலைகளில் இவை முதன்மைப்படுத்தப்படவில்லை. ஒன்றில் தமிழைக் குறைத்து மதிப்பிடுவார்கள். அல்லது மிகைப்பட மதிப்பிடுவார்கள். மேலே கூறப்பட்டவாறு மொழி இலக்கிய வரலாற்றடிப்படைகளிலே தமிழின் இடம் நன்கு கணிக்கப்படல் வேண்டும்; பேணப்படல் வேண்டும்.

நிறைவாக Tamil As a Classical language என்பதனைத் தொல்சீர் மொழிகளுள் ஒன்றாகத் தமிழ் என்றே மொழி பெயர்த்தல் வேண்டும். அதாவது செம்மொழி என்பதிலும் பார்க்க தொல்சீர் மொழியென்பதே பொருத்தமானதாகும்.



# தமிழின் செம்மொழித் தகுதிபற்றிய அறிக்கை



பேராசிரியர் முனைவர்

**ஜார்ஜ் எல்.ஹார்ட்டு**

(செம்மொழித் தகுதி ஆணையைப் பெறுவதற்கு முன்னர்ப் பேராசிரியர் மறைமலை இலக்குவனார் கேட்டுக்கொண்டதற்கிணங்க எழுதப் பெற்ற கட்டுரை இது.)

'தமிழ் மொழியைச் செம்மொழி எனக் கூறும் நிலைப்பாடு பற்றி, அதன் தகுதி நிலை பற்றி எழுதுக' என்று என் அன்பிற்குரிய நண்பர் பேராசிரியர் இ. மறைமலை அவர்கள் என்னைக் கேட்டுக் கொண்டார். அவரது வேண்டுகோளுக் கிணங்க நான் இச்சிறு விளக்கவுரையை எழுத முற்பட்டுள்ளேன். இப்பணி எனக்கு மிகப்பெரு மகிழ்ச்சியளிப்பதாகும்.

நான் அமெரிக்காவில் உள்ள பர்க்லி நகரில் அமைந்துள்ள கலிஃபோர்னியா பல்கலைக் கழகத்தில், 1975ஆம் ஆண்டு முதல் தமிழ்ப் பேராசிரியனாகப் பணிபுரிந்து வருகிறேன். நான் தற்போது அப் பல்கலைக்கழகத்தின் தமிழியல் புலத்தின் (தமிழ் இருக்கைக்கு) (Tamil Chair) தலைவனாக உள்ளேன். நான் 1970ஆம் ஆண்டில் ஹார்வர்டு பல்கலைக்கழகத்தில் வடமொழி (சமற்கிருதம்) இலக்கியம் பயின்று பட்டம் பெற்றேன். நான் முதற்கண், மாடிசன் நகரில் உள்ள விஸ்கான்சின் பல்கலைக்கழகத்தின் வடமொழிப் பேராசிரியனாக 1969இல் கல்விப் பணியிற் சேர்ந்தேன். தமிழ், சமற்கிருதம் (வடமொழி) ஆகிய இருமொழி இலக்கியங்களை நான் முறையாகக் கற்றுத் தேர்ந்துள்ளேன். இவற்றுடன், ஐரோப்பியச் செம்மொழிகளான இலத்தீனம், கிரேக்கம் ஆகிய இருமொழி இலக்கியங்களையும் நான் விரிவாகக் கற்றுத் தேர்ந்துள்ளேன். இம்மொழிகள் அனைத்திலும் உள்ள நூல்களை மூல மொழியிலேயே கற்றுச் சுவைத்துள்ளேன் என்பதனை இங்குக் குறிப்பிட விழைகிறேன். நான் தற்கால ஐரோப்பிய மொழிகளின் இலக்கியங்களையும், மொழி ஒப்பியலையும் நன்கு கற்றுள்ளேன். எனக்கு ருசியன், செருமன், பிரெஞ்சு ஆகிய மொழிகள் தெரியும். அம்மொழிகளின் இலக்கியங்களை மிக விரிவாகப் படித்துள்ளேன். அவற்றைப் போலவே, தற்கால இந்திய மொழிகளில் தமிழ், மலையாளம் ஆகிய மொழிகளின் இலக்கியங்களை மூல மொழியிலும், அவை நீங்கலாக மற்ற எல்லா மொழிகளிலும் உள்ள இலக்கியங்களை மொழியாக்கம் வாயிலாகவும் நான் விரிவாகப் படித்துள்ளேன். நமது காலத்தில் வாழுகின்ற தெலுங்கு மொழி அறிஞர்களுள் தலைசிறந்தவராக விளங்குபவரான திருமிகு

வி. நாராயணராவ் அவர்களுடன் நான் தெலுங்கு மொழி இலக்கியங்கள் குறித்து மிக நீண்ட நாள்கள் விவாதித்திருக்கிறேன். (நான் நன்றாக அறிந்திருக்கிறேன்.) தெற்கு ஆசியவியல் துறையின் உறுப்பினராக நான் நீண்ட காலமாக இருந்து வருகிறேன். எனவே, இந்தி மொழி இலக்கியம் பற்றியும் அதன் செழுமை பற்றியும் நான் கற்றுக்கொள்ளும் நல்வாய்ப்பினைப் பெற்றிருந்தேன். மகாதேவி வர்மா, துளசி, கபீர் ஆகிய பெருமக்களின் (இந்தி மொழி) இலக்கியப் படைப்புகளையும் நான் மிக விரிவாகப் படித்தறிந்துள்ளேன்.

மிகப் பல ஆண்டுகளை, (1983ஆம் ஆண்டு தொடங்கி) எனது வாழ்வின் மிகப் பெரும் பகுதியை, சமற்கிருதம் கற்பதில் செலவிட்டுள்ளேன். காளிதாசர், மகர் ஆகிய இருபெரும் புலவர்கள் வடமொழியில் எழுதிய ஒப்பற்ற இலக்கியச் செல்வங்களை மூலமொழியிலேயே நான் படித்துச் சுவைத்திருக்கிறேன். அது போன்றே, பாரவி, ஸ்ரீஹர்ஷர் ஆகியோரின் (சமற்கிருத) இலக்கியப் படைப்புகள் சிலவற்றையும் நான் படித்துள்ளேன். 'இருக்கு' வேதத்தின் ஐந்தாம் பகுதியாக விளங்கும் நூலை முழுமையாகவும், அதன் வேறு பல பிரிவுகளை மூலத்திலும் படித்துள்ளேன். இதனைப் போன்றே சமற்கிருதத்தில் எழுதப்பட்டுள்ள உபநிடதங்கள் (உபநிஷத்துகள்) பலவற்றையும், மகாபாரதம் எனும் காவியத்தின் பெரும் பகுதியையும், 'கதாசரித் சாகரம்' எனும் பெரு நூலையும், ஆதிசங்கரரின் படைப்புகளையும் இன்னும் சமற்கிருத மொழியில் எழுதப்பட்டுள்ள எண்ணற்ற பல நூல்களையும் நான் படித்துச் சுவைத்துள்ளேன்.

எனது கல்விச் செருக்கையும், புலமைச் சிறப்பையும் காட்டுவதற்காக நான் இவற்றையெல்லாம் இங்கே பட்டியலிடவில்லை. அதற்கு மாறாக, ஒரு மொழியைச் 'செம்மொழி' என்று முடிவு கூறுவதற்கும் அதனுடைய இலக்கியத்தைச் 'செவ்வியல் இலக்கியம்' என்று ஆராய்ந்து தேர்ந்து எடுத்துரைப்பதற்கும் எனக்கு உள்ள தகுதி இஃது என்பதனை நிலைநாட்டுவதற்காகவே நான் இவற்றைக் கூற வேண்டியதாயிற்று. செம்மொழி குறித்து ஒருவர் எந்தவிதமான அடிப்படை விதிகளைத் தேர்ந்து வைத்துக் கொண்டு, அவற்றையொட்டிப் பரிசீலிக்க முனைந்தபோதிலும், 'தமிழ்மொழி உலகின் மிகவுயர்ந்த செவ்வியல் இலக்கியங்களையும், மரபுச் செல்வங்களையும் பெற்றுத் திகழும் உயர்தனிச் செம்மொழிகளுள் ஒன்று' என்பதனை நான் எவ்விதத் தயக்கமும் இன்றித் தெளிவாக அறுதியிட்டுக் கூறுவேன்.

இவ்வாறு நான் கூற முனைவதற்குக் காரணங்கள் பலவுள்ளன. அவற்றை இனி ஒவ்வொன்றாக எடுத்து விளக்க முற்படுகின்றேன்.

(1) முதலாவதாகத் தமிழ்மொழி மிகுந்த பழைமைச் சிறப்பு வாய்ந்த மொழி; ஏனைய தற்கால இந்திய மொழிகளின் இலக்கியங்களுக்கெல்லாம் காலத்தில் மிகவும் முற்பட்ட, ஏறத்தாழ ஆயிரம் ஆண்டுகளுக்கும் அதற்கு மேலும் முற்பட்ட பேரிலக்கியங்களைக் கொண்டது தமிழ் மொழி. தமிழில் மிகப் பழம்பெருநூல் தொல்காப்பியம். தொன்மைக்காலக் கல்வெட்டுகளிலிருந்து, இந்நூலின் பகுதிகள் காலத்தால் மிக முற்பட்டவை எனவும் ஏறத்தாழ கி.மு. 200க்கு முன்பே இந்நூல் எழுந்துள்ளது எனவும் தெரிகின்றது. பழந்தமிழரின் பேரிலக்கியங்கள் சங்க இலக்கியங்களாகும். அவை பத்துப் பாட்டும் எட்டுத்தொகை நூல்களும் பிறவும் ஆகும். அவை ஏறத்தாழ கி.பி. முதல் இரு நூற்றாண்டுகளில் எழுந்தவை எனக் கொள்ளலாம். அவை, வடமொழியில் காளிதாசரின் பேரிலக்கியங்கள் தோன்றுவதற்கு இரு நூற்றாண்டுகளுக்கு முன்னரே தோன்றிவிட்டன. மதச் சார்பற்ற இந்தியாவில் முதன்முதலில் எழுந்த மதச் சார்பற்ற பெருங்கவிதை இலக்கியத் தொகுப்பு (சங்க இலக்கியங்கள்) என்றால் அது மிகையாகாது.

(2) இரண்டாவதாக, தமிழ், இந்தியாவில் தோன்றிய, இந்திய மண்ணிற்கு மட்டுமே தனிச் சிறப்பான இலக்கிய மரபினைக் கொண்டது. இந்த இலக்கிய மரபு வடமொழியிலிருந்து பெறப்பட்டது அன்று என்பது குறிப்பிடத்தக்கது. உண்மையைச் சொல்வதானால், தென்னாட்டில் (தென்னிந்தியாவில்) சமற்கிருத மொழியின் செல்வாக்கு வலிமை பெறுவதற்கு முன்னரே தமிழ் இலக்கியங்கள் தோன்றிவிட்டன. அதனால்தான் தமிழ் இலக்கியங்கள் யாவும் வடமொழியில் அல்லது வேறு இந்திய மொழிகளில் உள்ள எந்த இலக்கியத்தையும் போல இல்லாமல், தன்மையால் இயல்பாய் முற்றிலும் மாறுபாடுத் தனிச் சிறப்புடன் விளங்குகின்றன.

சிறந்த இலக்கியக் கொள்கை, விழுமிய இலக்கண மரபுகள், உயர்ந்த முருகியற் செம்மை, இவை அனைத்திற்கும் மேலாக, தனித்து விளங்கும் தனக்கேயுரிய மிகப் பெரிய இலக்கியச் செல்வம் ஆகியவற்றைக் கொண்டிலங்குவது தமிழ் மொழியாகும். வடமொழியிலோ வேறு எந்த இந்திய மொழியிலோ காணப்படாத, அவற்றிலிருந்து முற்றிலுமாக வேறுபட்டு விளங்குகின்ற, இந்தியப் பெருநாட்டினுக்கு உரித்தான இந்திய மக்களிடம் காணப்படுகிற கலைநயம் தோய்ந்த ஒருவகை நுட்ப உணர்வைத் (Sensibility) தமிழ் இலக்கியங்கள் தம்மகத்தே கொண்டுள்ளன. வளமிக்க விரிந்து பரந்த அறிவின் மாட்சியும் மரபும் அவற்றின்கண் பெரிதும் இடம் பெற்றிருக்கின்றன.

(3) மூன்றாவதாக, தமிழ் மொழியின் செவ்வியல் இலக்கியங்களின் தன்மை, அவற்றைச் சமற்கிருதம், கிரேக்கம், இலத்தீனம், சீனம், பாரசீகம், அரபு ஆகிய மொழிகளில் எழுந்து விளங்கும் பேரிலக்கியங்களுக்கு நிகராக (அவற்றுடன் ஓரணியில் வைத்து) எண்ணத்தக்க நிலையை, தகுதியை அவற்றுக்கு வழங்குகிறது. தமிழ் இலக்கியங்களின் சொற்செறிவும், பொருளாழமும், அவற்றின் நுட்பமும் திண்மையும் (Subtlety), அகலமும் விரிவும் (Profundity), அவை நுவலும் பல்வேறு பாடுபொருள்களும் களமும் (Varied Scope) நவீன காலத்திற்கு முந்தைய இந்திய இலக்கியங்களில், கால அளவில் முற்பட்ட பழந்தமிழ் இலக்கியங்கள் மட்டுமே, சமூகத்தில் தாழ்வுற்ற, பிற்பட்ட, கடைப்பட்ட மக்களையும் கருப்பொருளாகக் கொண்டுள்ளன. அவற்றின், மனிதகுலம் அனைத்தையும் வயப்படுத்தும் உலகளாவிய கோட்பாடும் (Universality) தமிழ்மொழியை உலகம் தழுவிய மிகப் பெரிய செவ்வியல் மொழி, மரபுகள், இலக்கியங்களுடன் ஒருங்கே வைத்து, அவற்றுள் ஒன்று எனப் போற்றும் தகுதி நிலையை அளிக்கின்றன. வான்புகழ் வள்ளுவர் வழங்கிய திருக்குறள் ஒழுக்க நெறிகளைக் கற்பிக்கும் உலகின் தலைசிறந்த அறநூல் என்பதனை அனைவரும் அறிவோம். எனினும் இந்த நூல், தமிழில் செவ்வியல் மொழி, இலக்கிய மரபுகளைத் தம்முள் கொண்டு விளங்குகிற, ஒன்றிலிருந்து ஒன்று பெரிதும் வேறுபட்ட பாடுபொருள்களை உடைய, பல்வேறு பெருநூல்களின் தொகுப்பில் (பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள்) ஒன்றாகும். இந்தப் பேரிலக்கியத் தொகை நூல்களின் வாயிலாக, மனிதகுல வாழ்வியலின் ஒவ்வொரு பரிமாணமும், ஒவ்வொரு தோற்றமும் மிக நுட்பமாகவும், விரிவாகவும், விளக்கமாகவும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. இந்த இலக்கியப் படைப்புகளின் ஆய்வுக்குட்படாத, இவற்றின் ஒளிபடாத வாழ்வியல் துறைகளே இல்லை எனலாம்.

(4) இறுதியாக, தமிழ்மொழி நவீனகால இந்தியப் பண்பாடு, மரபுகளின் முதன்மையான, தனித்துவம் உடைய வாயில்களில் ஒன்றாக விளங்குகிறது. சமற்கிருதக் கவிதை மரபின்மீது தென்னக மரபுகளின் செல்வாக்கைப் பற்றி நான் மிக விரிவாக எழுதியுள்ளேன். இதற்கு நிகராக இன்னொரு முக்கியச் செய்தியுமுண்டு; தமிழில் சங்கத் தொகை நூல்களின் காலத்தில் தோன்றிப் பரவத் தொடங்கிய இந்து சமயச் சார்புடைய, புனிதமான (வழிபாட்டுப்) பேரிலக்கியங்கள் நவீனகால (இந்திய) இந்து சமய வளர்ச்சிக்குப் பெரிதும் உறுதுணையாக இருந்துள்ளன. அந்தப் பக்தி இலக்கியச் சிந்தனைகளும், கருத்துகளும் (தெலுங்கு, கன்னடம், சமற்கிருதம் ஆகிய மொழிகளில் எழுந்த) பாகவத புராணத்திலும் ஏனைய நூல்களிலும் எடுத்தாளப் பெற்று, அவற்றின் வழியாக, இந்தியத் திருநாடு முழுவதும் பரவின. 'வேதங்களுக்கு ஒப்பானவை' என்று போற்றப்படும் புனிதமான சமய (பக்தி) இலக்கியங்கள் தமிழிலுள்ளன; இவை தமிழுக்கே உரியன. இவை தென்னிந்திய வைணவத் திருக்கோவில்களில் (திருப்பதி முதலானவை) வேத மந்திரங்களுடன் சேர்த்து ஓதப்பெறுகின்றன. தற்கால இந்தோ – ஆரிய மொழிகளுக்கு எவ்வாறு வடமொழி (சமற்கிருதம்) மூலமொழியாக விளங்குகிறதோ அதேபோன்று தற்காலத் தமிழ், மலையாள மொழி இலக்கியங்களுக்குச் செவ்வியல் மொழியாகத் திகழ்ந்த தொன்மைத் தமிழே மூலமொழியாக விளங்குகிறது.

இந்தோ – ஐரோப்பிய மொழிகளில், சமற்கிருதம் மிகமிகப் பழையது, தொன்மையானது; கால வகையில் சிறிதளவும் மாறாது, மாற்றத்திற்கு இடங்கொடாது, இன்றளவும் பழைமைக்குப் பழைமையாக இருந்து வருகிறது. அதேபோன்று, திராவிட மொழிகளில் தமிழ் முன்னைப் பழைமைக்கும் பழைமையாக மிகவும் தொன்மை யானதாக இருந்து வருகிறது. எனினும், திராவிட மொழிகளின் இயல்பையும், வளர்ச்சியையும் புரிந்து கொள்ள மொழியியலாளர்கள் நாடவேண்டியதும் அவர்களுடைய ஆய்வுகளுக்கு உதவும் உரைகல் (கட்டளைக்கல்)லாகத் திகழ்ந்து வருவதும் தமிழேயாகும்.

தமிழ் செம்மொழியாக இன்னும் அங்கீகரிக்கப் படாமல் ஏற்றுக் கொள்ளப்படாமல் இருப்பது ஏன் என்பதனை விளங்கிக் கொள்ள முடியாத வகையில் இதற்கு ஒரேயொரு அரசியல் காரணம் மட்டுமே இருப்பதாக நான் அறிகிறேன். அதாவது, தமிழ் செம்மொழியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டால், ஏனைய இந்திய மொழிகளும் இதுபோன்ற தகுதியை வழங்க வேண்டும் என்று கோரிக்கை விடுக்கக்கூடும் என்ற அச்சம் காரணமாக இருக்கலாம். இந்த அச்சமும் கவலையும் தேவையற்றவை. தற்கால இந்திய மொழிகளின் செழுமையையும் வளத்தையும் நான் மிக நன்றாக அறிவேன் – ஆம், அவை செழிப்பாற்றலும், விளைவிக்கும் (உற்பத்தித்) திறனும் உடைய உலகின் மிகச் சிறந்த மொழிகளின் வரிசையில் இடம் பெறுவன என்றும் நான் அறிவேன். அவை ஒவ்வொன்றும் சிறப்பான தற்கால இலக்கியங்களை ஈன்றெடுத்துள்ளன. (அவற்றுள் சில மொழிகளில் தலைசிறந்த இடைக்கால இலக்கியங்களும் தோன்றியுள்ளன.) அவ்வாறு எழுந்த இலக்கியங்கள் உலகின் மிகப் பெரிய இலக்கியங்கள் எவற்றுடனும் ஒன்றாக வைத்து எண்ணத்தக்க உயர்வுடையன. அவ்வாறிருப்பினும், அந்த மொழிகளுள் எவையும்

செம்மொழி அல்ல. ஆங்கில மொழியையும் ஏனைய நவீன கால ஐரோப்பிய மொழிகளையும் போன்று (இவற்றில் கிரேக்கம் மட்டும் விதிவிலக்கானது) அவை (அதாவது, மேற்சொன்ன ஏனைய இந்திய மொழிகள்) யாவும், முன்னரே காலூன்றிப் பிற்காலத்தே எழுந்தன; அவை யனைத்தும் இரண்டாம் ஆயிரம் ஆண்டு தொடங்கிய பின் (கி.பி. 1000க்குப் பின்னர்) வளர்ச்சி பெற்றவையாகும். கிரேக்க மொழி, ஐரோப்பாவில் தோன்றிய ஓர் உயர்தனிச் செம்மொழி என்று உலகமனைத்திலும் ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது. இந்நிலை ஐரோப்பாவைச் சேர்ந்த பிரெஞ்சு மக்கள் அல்லது ஆங்கில மக்கள் தத்தம் மொழிகளுக்குச் செம்மொழித் தகுதிநிலை வழங்க வேண்டும் எனக் கோரிக்கை விடுக்க வழிகோலவில்லை.

ஒரு மொழி செவ்வியல் மரபு உடையது என்று அழைக்கப்படுவதற்குத் தகுதி பெற வேண்டுமெனில், அது பல்வேறு அடிப்படை விதிமுறைகளுக்குப் பொருந்துவதாக இருத்தல் வேண்டும்; அவையாவன: (1) அது தொன்மை மிக்கதாக, பழைமைச் சிறப்பு வாய்ந்ததாக இருத்தல் வேண்டும்; அது இன்னொரு மொழி மரபில் கிளைத்து வளர்ந்ததாக இல்லாமல், தனக்கேயுரிய தனித்துவமுடைய மொழி மரபினைப் பெற்றதாகவும் அம்மொழிமரபு பெரிதும் தானே படைத்த இலக்கியச் செழுமையில் வளர்ந்ததாகவும் இருத்தல் வேண்டும். இதற்கெல்லாம் மேலாக அம்மொழி விரிந்து பரந்த வளம்செறிந்த தொன்மை வாய்ந்த பேரிலக்கியச் செல்வத்தைக் கொண்டதாகவும் இருத்தல் வேண்டும்.

இந்தியாவின் ஏனைய தற்கால மொழிகளைப்போல் அல்லாமல், தமிழ் இம்மூன்று அடிப்படைத் தேவைகளையும் ஒருங்கே நிறைவு செய்கின்றது. தமிழ்மொழி 'முன்னைப் பழைமைக்கும் முன்னைப் பழைய' மொழி (இலத்தீனத்தைப் போன்று மிகப் பழைமை வாய்ந்தது; அரபு மொழியினும் மிகத் தொன்மையானது); முற்றிலும் தனித்துவமுடைய, தனக்கேயுரிய மொழி மரபில் தோன்றி வளர்ந்தது. அதனில் சமற்கிருதமோ ஏனைய மொழிகளோ எவ்விதத் தாக்கமும் செல்வாக்கும் ஏற்படுத்தவில்லை. அதனுடைய தொன்மை இலக்கியங்கள் விவரிக்க ஒண்ணாத அளவிற்கு மிக விரிந்துபட்டவை, மிகச் செழுமையானவை.

'தமிழ் ஒரு செவ்வியல் மொழி' என்ற கருத்தை நிலைநாட்டுவதற்காக நான் இதைப் போன்று ஒரு கட்டுரை எழுத வேண்டியுள்ளது என்ற எண்ணமே எனக்கு இயல்புக்கு மாறான விந்தையானதாகத் தோன்றுகிறது. இச்செய்தி எப்படி இருக்கிறது என்றால், 'இந்தியா ஒரு பெரிய நாடு, இந்து சமயம் உலகின் மிகப் பெரும் சமயங்களுள் ஒன்று' என்னும் கூற்றை நிலைநாட்ட முற்படுவது போன்றுள்ளது. 'தமிழ் உலகின் உயர்தனிச் செம்மொழிகளுள் ஒன்று' என்னும் தகுதி நிலை, இப்பொருள் பற்றி நன்கறிந்த அறிஞர் குழாத்தில் உள்ள எவரும் எளிதில் விளங்குகிற மிகத் தெள்ளத் தெளிவான கருத்து ஆகும். 'தமிழ் செவ்வியல் மொழி' என்னும் தகுதி நிலையை மறுக்க முனைதல் இந்தியப் பண்பாட்டின் பெருமைக்கும் தொன்மைக்கும் இன்றியமையாத மையக் கூறாக விளங்கும் – உயிராதாரமாக விளங்கும் உயர்வு ஒன்று 'அதற்கு இருக்கக் கூடாது' என்று மறுக்க முனைவதற்கு ஒப்பானதாகும்.

(தமிழாக்கம் : **கு. பாலசுப்பிரமணியன்**,
மொழிபெயர்ப்புத் துணை இயக்குநர் (ஓய்வு)

**பேராசிரியர், முனைவர் ஜார்ஜ் எல். ஹார்ட்டு:**

அமெரிக்காவின் பர்க்கிலியிலுள்ள கலிபோர்ஃனியாப் பல்கலைக்கழகத்தில் தமிழ், சமற்கிருதத் துறைகளுக்குப் பொறுப்பேற்றுள்ள பேராசிரியர் முனைவர் ஜார்ஜ் ஹார்ட்டு, ஹார்வார்டு பல்கலைக்கழகத்தில் இளங்கலை, முதுகலை பட்டங்களுடன் முனைவர் பட்டமும் பெற்றவர். சமற்கிருதம், தமிழ், கிரேக்கம், இலத்தீன் மொழிகளில் புலமை பெற்றிருப்பதுடன் அவற்றின் இலக்கியங்களையும் மூலமொழியிலேயே ஆழக் கற்றறிந்தவர்.

தமிழ் மொழி, இலக்கியம், பண்பாடு தொடர்பான கல்வித் திட்டத்தை அமெரிக்காவில், அத்தகைய மற்றெதையும்விட முதன்மையானதாக மேம்படுத்தியவர் பேராசிரியர் ஹார்ட்டு. தமிழ், சமற்கிருத மொழிகளுக்கான பாட நூல்கள் எழுதியுள்ளார். தமிழின் செவ்வியல் இலக்கியங்களையும், கம்பர் தமிழில் பாடிய இராமாயணத்தையும் மொழி பெயர்த்துள்ளார். பேராசிரியர் திருமணம் செய்து கொண்டுள்ள தமிழ்ப் பெண்ணான திருமதி கௌசல்யா ஹார்ட்டும் பல தமிழ் மொழிப் பாடநூல்களின் ஆசிரியரும் தமிழ் விரிவுரையாளருமாவார்.

# செம்மொழித் தமிழின் தொன்மை - புறச்சான்றுகள்



ஐராவதம் மகாதேவன்

தமிழைச் செம்மொழியென மத்திய அரசு அறிவித்திருப்பது தமிழ்மக்களை மகிழ்ச்சியில் ஆழ்த்தியுள்ளது. ஆயினும் தமிழுக்கு இந்த அறிவிப்பு ஏதோ புதிதாகக் கிடைத்த கௌரவம் ஆகாது. தமிழ் ஈராயிரம் ஆண்டுகளாகவே ஒரு செம்மொழியாகத் திகழ்ந்துள்ளது. இதைத் தமிழறிஞர்கள் மட்டுமன்றித் தமிழை விரும்பிக் கற்ற உலக அறிஞர்கள் பலரும் பலமுறை எடுத்துக் காட்டியுள்ளனர்.

ஒரு செம்மொழிக்கு இரு தகுதிகள் கட்டாயமாக இருக்க வேண்டும். இலக்கிய வளமும் தொன்மையுமே அவ்விரு தகுதிகளாகும். இவற்றில் ஏதாவது ஒரு தகுதியை மட்டும் பெற்றிருந்தால் அந்த மொழி செம்மொழியெனக் கருதப்படுவதில்லை. எடுத்துக் காட்டாக, இந்தியாவின் வடகிழக்குப் பகுதியில் வசிக்கும் பழங்குடி மக்கள் பேசிவரும் முண்டா மொழிகள் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகள் பழைமை வாய்ந்தவை. ஆயினும் இந்த மொழிகளுக்கு இலக்கிய வளம் கிடையாது; எழுத்துகள்கூட இல்லை. ஆகையால், முண்டா மொழிகள் செம்மொழி என்ற தகுதியைப் பெறவில்லை. இன்னொரு பக்கம், ஆங்கில மொழி நிரம்பிய இலக்கிய வளம்பெற்ற மொழியாகத் திகழ்கின்றது; ஆயினும் இம்மொழியின் தொன்மை ஓராயிரம் ஆண்டுகளுக்கு மேல் இல்லை. ஆகவேதான் ஆங்கிலேயரும் தம் மொழியைச் செம்மொழி எனக் கூறிக் கொள்வதில்லை.

இந்திய நாட்டில் இலக்கிய வளமும் தொன்மையும் உள்ள மொழிகள் இரண்டேதான்: சமற்கிருதமும் தமிழும். ஆகையால்தான் மத்திய அரசின் அறிவிப்பு இவ்விரு இந்திய மொழிகளைச் செம்மொழிகளென அங்கீகரித்துள்ளது. இவற்றுள் சமற்கிருதம் வேத காலத்திலிருந்தும் தமிழ் சங்க காலத்திலிருந்தும் நமக்குக் கிடைத்துள்ளதால், சமற்கிருதம் தமிழைவிடப் பழைமையானது என்று இன்று கிடைத்துள்ள சான்றுகளின் அடிப்படையில் பொதுவான ஒரு கருத்து உலக அறிஞர்களிடையே நிலவுகிறது. ஆயினும் வேதங்களிலேயே திராவிட மொழிச் சொற்கள் காணப்படுவதாலும், இந்தியத் துணைக் கண்டத்தின் வடமேற்கு, வடகிழக்குப் பகுதிகளில் இன்றும் திராவிட மொழிகள் (பிராகூய், குருக், மால்தோ) பேசப்பட்டு வருவதாலும், சிந்துவெளிப் பண்பாடு திராவிட மக்களால் உருவாக்கப்பட்டது என்ற கருத்தை உலகின் பெரும்பாலான அறிஞர்கள் ஏற்றுக் கொள்வதாலும், **திராவிட மொழிக் குடும்பத்தைச் சார்ந்த தமிழ் இந்தியாவின் மிகத் தொன்மையான முதல் செம்மொழி என்ற பெருமைக்கு உரித்தாகிறது.**

தமிழ் இலக்கியத்திலேயே அதன் தொன்மைக்குப் பல சான்றுகள் இருப்பது உண்மைதான். ஆயினும், தமிழின் தொன்மையை ஐயத்திற்கு அப்பாற்பட்டு நிலை நாட்ட இலக்கியங்கள் மட்டும் போதாது. தொல்காப்பியம், திருக்குறள், சிலப்பதிகாரம் முதலிய பழந்தமிழ் நூல்களின் காலக் கணிப்பைப் பற்றி அறிஞர்களிடையே கருத்து வேற்றுமை நிலவுகிறது. சுவடிகளில் எழுதப்பட்டுள்ள பழைய நூல்களில் பாடபேதங்களும் இடைச்செருகல்களும் உள்ளன என்பதைச் சுவடியியல் அறிஞர்கள் எடுத்துக் காட்டியுள்ளனர்.

இந்தச் சூழ்நிலையில்தான் தமிழின் தொன்மையை ஐயமின்றி எடுத்துக்காட்டும் புறச் சான்றுகள் முக்கியத்துவம் பெறுகின்றன. கல்வெட்டுகளும், பழைய காசுகளும், இலச்சினைகளும், எழுத்துப் பொறித்த மண்பாண்டச் சில்லுகளும் தமிழின் தொன்மைக்கு நேரடியான புறச்சான்றுகள் ஆகும்.

**பழந்தமிழ் எழுத்துகள்:** பிராமி எழுத்துகளால் எழுதப்பட்டுள்ள கல்வெட்டுகள் தமிழ் நாட்டில், முக்கியமாக மதுரையைச் சுற்றிலும் உள்ள பகுதிகளில்,

இயற்கையான குகைகளில் பொறிக்கப்பட்டுள்ளன. இவ்வெழுத்துகள் அசோக மன்னரின் புகழ்பெற்ற கல்வெட்டுகளில் காணப்படும் எழுத்துகளைப் பெரும்பாலும் ஒத்திருப்பதால் தமிழ்நாட்டுக் குகைக் கல்வெட்டுகளின் காலம் கி.மு.3ஆம் நூற்றாண்டின் இறுதி அல்லது 2ஆம் நூற்றாண்டின் தொடக்கமாக இருக்கலாம் என்று கணிக்கப்பட்டுள்ளது. பிராகிருத மொழிகளுக்கான மௌரிய காலத்துப் பிராமி எழுத்துகளைக் கூட்டியும் குறைத்தும், வேறு பல மாற்றங்களைப் புகுத்தியும் தமிழை எழுதுவதற்கு ஏற்ற தமிழ்ப் பிராமி எழுத்துமுறை உருவாக்கப்பட்டது. இந்த எழுத்துகளே தமிழ் மொழியை எழுத குகைக் கல்வெட்டுகளிலும், காசுகளிலும், இலச்சினைகளிலும், சில்லுகளிலும் பயன்படுத்தப்பட்டு வந்தன. இவையே சங்ககாலத் தமிழ் எழுத்துகள் ஆகும்.

**கல்வெட்டுகள்:** குகைக் கல்வெட்டுகளில் மிகவும் முக்கியமானவை மூன்று: அவை மாங்குளத்தில் பாண்டியன் நெடுஞ்செழியனும் (கி.மு.2 ஆம் நூற்றாண்டு), ஜம்பையில் அதியன் நெடுமான் அஞ்சியும் (கி.பி. முதல் நூற்றாண்டு), புகலூரில் சேரல் இரும்பொறையும் (கி.பி.2ஆம் நூற்றாண்டு) வெட்டி வைத்த கல்வெட்டுகளாகும். இக்கல்வெட்டுகளின் எழுத்தமைதியைக் கொண்டு இவை சங்ககாலத்தைச் சார்ந்தவை என்று உறுதியாகக் கூறலாம்.



**படம்-1: இரும்பொறை கல்வெட்டு. புகளூர். கி.பி. 2ஆம் நூற்றாண்டு.**

**நடுகற்கள்:** அண்மையில் வைகைக் கரையில் புலிமான்கோம்பை என்ற ஊரில் மூன்று நடுகற்களும், தாதப்பட்டி என்ற ஊரில் மேலும் ஒரு நடுகல்லும் கிடைத்துள்ளன. இவை பெருங்கற்காலச் சின்னங்களாகும். இவற்றில் தமிழ் பிராமி எழுத்துகளில் தமிழ் மொழியில் கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டுள்ளன. எழுத்தமைதியிலிருந்து இவற்றின் காலத்தைக் கி.மு. 2–1 நூற்றாண்டுகள் எனக் கணிக்கலாம். புலிமான்கோம்பையில் ஒரு நடுகல்லில் தொல்காப்பியம் கூறும் ஆகோள் என்ற சொல் காணப்படுகிறது. சங்க நூல்களில் நடுகற்களைப்பற்றிக் கூறப்பட்டுள்ள செய்திகளை இந்த நடுகற்கள் உறுதிசெய்கின்றன. ஆகையால், இக்கல்வெட்டுகள் மிகவும் சிறப்பான கண்டுபிடிப்புகளாகக் கருதப்படுகின்றன.



**படம்-2: பெருங்கற்காலத்து நடுகல். புலிமான்கோம்பை. கி.மு. முதல் நூற்றாண்டு. இக்கல்வெட்டு கி.மு. 3ஆம் நூற்றாண்டுக்கும் முந்தையது என்று தமிழ்ப் பல்கலைக் கழகம் கூறியிருக்கிறது.**

**காசுகள்:** பாண்டியன் பெருவழுதியின் பெயர் பொறித்த செப்புக் காசு அதன் எழுத்தமைதியிலிருந்து கி.மு. 2ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது என்று கணிக்கப்பட்டுள்ளது. கி.பி. முதல் நூற்றாண்டில் வெளியிடப்பட்ட இரும்பொறை என்ற பெயர் பொறித்த செப்புக்காசுகள் கரூரில் கண்டெடுக்கப்பட்டுள்ளன. அதற்குப் பிற்காலத்திய சேர மன்னர்களான மாக்கோதை, குட்டுவன் கோதை ஆகியோரின் பெயர்கள் பொறித்த வெள்ளிக் காசுகளும் கிடைத்துள்ளன.



**படம்-3: குட்டுவன் கோதை வெள்ளிக்காசு. கி. பி. 3ஆம் நூற்றாண்டு.**

**இலச்சினைகளும் மோதிரங்களும் :** சங்க காலத் தமிழர்கள் பொன், வெள்ளி, செம்பு உலோகங்களால் ஆக்கிய இலச்சினைகளையும் மோதிரங்களையும்

பயன்படுத்தினர். அண்மைக் காலத்தில் கரூரில் அமராவதி ஆற்றுப்படுகையில் கண்டெடுக்கப்பட்ட தமிழ் பிராமி எழுத்துகள் பொறித்த பல இலச்சினைகளும் மோதிரங்களும் சங்க காலத்தைச் சார்ந்தவை யாகும்.



Fig.4

படம்-4: குறவன் என்ற பெயர் பொறித்த வெள்ளி இலச்சினை. கரூர். கி.மு. முதல் நூற்றாண்டு.

**சில்லுகள்:** தமிழகமெங்கும் நடைபெற்றுவரும் அகழ்வாய்வுகளில் நூற்றுக்கணக்கான எழுத்துப் பொறித்த சில்லுகள் கிடைத்துவருகின்றன. இவற்றைத் தொல்லியல் முறைப்படி ஆய்வு செய்த அறிஞர்கள் இவற்றின் காலம் கி.மு.3ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 3ஆம் நூற்றாண்டு வரை என்று கணித்துள்ளனர். ஆயினும் வரலாற்று அறிஞர்கள் இதுவரை இச்சில்லுகள் காட்டும் ஒரு முக்கியமான விஷயத்தைப் பற்றிக் கவனம் செலுத்தவில்லை. எழுத்துப் பொறித்த சில்லுகள் தமிழகமெங்கும் சின்னஞ்சிறு குக்கிராமங்களிலும் அகழ்வு செய்யும்போது கிடைத்து வருகின்றன. இந்திய நாட்டிலேயே தமிழகத்தில்தான் எழுத்துப் பொறித்த சில்லுகள் மிக அதிக அளவில் கிடைத்துள்ளன. சாமானிய மக்கள் தங்கள் வீடுகளில்



Fig.5

படம்-5: கண்ணன் ஆதன் என்ற பெயர் பொறித்த சில்லு. கொடுமணல். கி.மு. 2ஆம் நூற்றாண்டு.

புழங்கிய சட்டி பானைகளின் மீது கையில் கிடைத்த இரும்பாணியைக் கொண்டு தங்கள் பெயர்களைக் கீறியுள்ளனர். சங்ககாலத்தில் தமிழகத்தில் எழுத்தறிவு மிகவும் பரவலாக இருந்துள்ளது என்பதற்கு இச் சில்லுகள் மிக முக்கியமான புறச்சான்றாக உள்ளன.

**வெளிநாடுகளில்:** தமிழர்கள் சங்ககாலத்திற்கு முன்னரே மேலை நாடுகளுடனும் கீழை நாடுகளுடனும் வாணிபத்தில் ஈடுபட்டிருந்தனர் என்று சங்கப் பாடல்கள் மூலமாகவும், தமிழகத்தில் அதிகமாகக் கிடைக்கும் ரோமானிய நாணயங்களிலிருந்தும் ஏற்கெனவே தெரிய வந்துள்ளது. தமிழ் பிராமி எழுத்துகள் பொறித்த சில்லுகள் எகிப்து நாட்டில் செங்கடல் கரையில் உள்ள துறைமுகங்களிலிருந்தும், தாய்லாந்து நாட்டில் அகழ்வு ஆய்வுகளிலும் கிடைத்துள்ளது தமிழரின் வெளிநாட்டு வாணிபத்தை உறுதி செய்கின்றன. தமிழ் மொழியில் பொறிக்கப்பட்டுள்ள இச்சில்லுகளின் காலம் கி.பி. 1–2 நூற்றாண்டுகள் எனக் கணிக்கப்பட்டுள்ளது.



படம்-6: கொ(ற்)ற பூமான் என்ற பெயர் பொறித்த சில்லு. எகிப்து நாட்டின் பெரெனிகெ துறைமுகம்:. கி.பி. முதல் நூற்றாண்டு.

தமிழின் தொன்மைக்கும் செம்மொழி என்ற தகுதிக்கும் இரு தூண்களாக விளங்கும் சங்க இலக்கியங்களையும், கல்வெட்டுகள், காசுகள், இலச்சினைகள், சில்லுகள் போன்ற புறச் சான்றுகளையும் மேலும் ஆய்ந்து அவற்றின் அருமை பெருமைகளை உலகறியச் செய்வது இன்றைய தமிழறிஞர்களின் தலையாய கடமையாகும்.

❖

# சங்கத் தமிழில்

## செவ்வியல் மாண்புகள்

பேராசிரியர் **தமிழண்ணல்**

சங்கத் தமிழ் என்பது பொதுவாக இலக்கியம் என்ற பார்வையில் எட்டுத் தொகை, பத்துப்பாட்டு இரண்டையுமே குறித்தது. இக்கால ஆய்வறிஞர் பலரும் இவற்றையே அடிப்படையாகக் கொண்டனர்.



எனினும், பொதுப் பார்வையில் தொல்காப்பியம் காலத்தால் முற்பட்ட இலக்கண நூலாகும். பிறமொழி இலக்கண நூல்கள் போலன்றி, தொல்காப்பியம் இலக்கியத்திற்கும் இலக்கணம் கூறுகின்றது. அதற்குப் பொருளதிகாரம் என்று பெயர்.

திருக்குறள் அறநூலாகத் திகழ்கின்றது. அதில் காமத்துப்பாலும் இணைந்திருப்பது ஒரு புதுமையாகும். பிறமொழி நீதி நூல்களில் இல்லறம் பற்றிய பல்வேறு கருத்துகளும் உண்டெனினும், காமத்துப்பால் போல, இல்லற இன்பம் துய்ப்பதற்கான நெறிமுறைகள் கூறப்படுவதில்லை. அங்கெல்லாம் காமசாத்திரங்கள் தனித்தும் விரித்தும் கூறப்படுவனவேயன்றி, அறத்தொடு சார்த்திக் கூறும் மரபு இல்லை.

இரட்டைக் காப்பியங்களுள் ஒன்றாய, சிலப்பதி காரத்தில் அகத்திணை, புறத்திணை இலக்கிய மரபுகள் நிரம்பிக் கிடக்கின்றன. மணிமேகலை புத்த சமயம் சார்ந்ததெனினும் அதிலும் சங்க இலக்கியச் சாயலுண்டு. இவற்றை நாம் பொதுவாகச் சங்க காலச் சாயலுடையன எனலாம். ஒரு குடும்பத்தில் பிறந்தவர்களிடையே கூர்ந்து நோக்கினால் நடை உடை பாவனைகளிலும் கண், மூக்கு, பார்வை, முகபாவம், தோற்றம், குணம், பழக்க வழக்கம் போன்றவற்றிலும் அறிவு, திறமை போன்றவற்றிலும் ஏதேனும் சில ஒற்றுமைகள் காணப்படும். ஒருவனது சாயலை வைத்தே, 'நீ இன்னார் மகனா' என்று கேட்டுவிடுவார்கள்.

சங்க இலக்கியம் தொன்மையிலும் இலக்கிய வளத்திலும் தனித் தன்மைக் கூறுகளிலும் கிரேக்க இலக்கியத்தோடும் இலத்தீன் இலக்கியத்தோடும் ஒப்ப வைத்து எண்ணத் தக்கதாகும். ஆயினும், அவ்விரு மொழியினர்க்கும் இருந்த வரலாற்று உணர்வும் வரலாற்றுப் பதிவும் அவர்கள் அளவு தமிழர்க்கு இல்லாமற் போனது ஒரு குறையே ஆகும்.

**செம்மொழிச் செவ்வியல் மாண்பு**

தமிழ் மிகத் தொன்மைமிக்க காலம் முதலே 'செம்மொழி'யாகத் திகழ்கிறது. அதிலுள்ள வாய்மொழி இலக்கியப் பண்புகளும், விலங்கு நிலையை விட்டு மனித நிலைக்குச் சிறிது சிறிதாக மாறிய வீரநிலைக் காலமும், பண்பாட்டு மானுடவியல் வளர்ச்சிக் காலமும் அதன் முதிர்ந்த, செறிந்த செம்மொழித் தன்மையைக் காட்டுகின்றன. இதனை அடிப்படையாகக் கொண்டு வளர்ந்த இலக்கியமே தமிழ்ச் சங்கச் செம்மொழிச் செவ்வியல் இலக்கியம்.

செவ்வியல் என்பது ஆங்கிலத்தில் 'Classicism' என்று கூறப்படும். செவ்வியல் இலக்கியத்திற் கென்று சில வரையறைகள் வகுக்கப்பட்டன. கி.பி. 15ஆம் நூற்றாண்டிற்குப் பிறகே பிரெஞ்சு, செருமனி, ஆங்கிலம் போலும் ஐரோப்பிய மொழிகள் இலக்கிய வளம் பெற்று வளரத் தொடங்கின. இதனை அவர்கள் தங்கள் மொழிகளுக்கான 'மறுமலர்ச்சிக் காலம்' என்று கூறிக் கொண்டனர். 'கிரேக்க மொழி' இலக்கியங்களே ஊற்றுக் கண்ணாக உணர்ந்தனர். எனவே, முதன்முதல் அதனையே 'செவ்வியல் இலக்கியம்' என அழைத்தனர். பிறகு அதன் வழிப்பட்ட இலத்தீன் இலக்கியம் 'செவ்வியல் இலக்கியம்' எனப்பட்டது.

காலப்போக்கில் தொன்மையுடைய மொழிகள் எனப்பட்ட ஈபுரு, அரேபியம், பாரசீகம், சீனம், சமற்கிருதம் போல்வனவும் செவ்வியல் மொழிகள் என்ற பட்டியலில் சேர்ந்தன.

தமிழும் இவற்றுடன் மட்டுமன்றி, முதன்முதலில் கண்டறியப்பட்ட கிரேக்க, இலத்தீன் மொழிகளுடன் ஒப்பிடற்பாலதான செவ்வியல் மொழியேயாயினும் உலகினரால் உணரப்படாதிருந்தது. தமிழக வரலாறு மேடு பள்ளங்கள் நிறைந்தது. சங்க காலத்திற்குப் பிறகு, சில சில இடைவெளிகளினூடே, ஏறத்தாழ ஆயிரம் ஆண்டுகளாக இது பிற மொழியாளரால் ஆளப்பட்டது. ஆள்வோர் எவ்வழி குடிகள் அவ்வழி என்பது அறியப்பட்ட உண்மையேயாகும். பாரத நாட்டில் கி.பி. நான்காம் நூற்றாண்டில் தோன்றிய காளிதாசருக்குப் பிறகுதான் 'தூய தனி இலக்கிய வகைகள்' தோன்றின. அதற்கு முந்திய வேதம், உபநிடதம், புராணம், இதிகாசம் எல்லாம் தூய தனிவகை இலக்கியங்கள் அல்ல. அவை சமய தத்துவவழிப் போதனை செய்யும் நூல்களாகும்.

தமிழர்களின் அடிமை மனப்பான்மையும் தாழ்வு மனப்பான்மையும் வடுப்போலப் பொதுமக்களிடம் பதிந்து போயின. ஆதலால், தமிழை இன்றளவும் – அதன்

தகுதிக்கேற்ற அளவு உலகிடைத் தூக்கிக் காட்ட இயலவில்லை.

செவ்வியல் என்பது பற்றிய வரையறைகளைப் பலரும் விரிவாக விளக்கியுள்ளனர். அவற்றுள் அடிப்படையான சிலவற்றைத் தெரிந்து கொள்ளுதல் வேண்டும்.

முதல் தகுதி 'தொன்மை'யாகும். அது கருதியே ஈபுரு முதல் சீனம் வரை செவ்வியல் மொழிகள் என வழங்கப்பட்டன.

தொன்மை மிக்க காலத்திலேயே நன்கு வளர்ந்து, முதிர்ச்சி பெற்ற செவ்வியல் மொழிகளாக விளங்கியிருத்தல் வேண்டும். ஏதேனும் ஒரு துறையில் சிறப்புற்றிருக்க வேண்டும். அவை தத்துவச் சிந்தனைகளாக இருக்கலாம்; சமய அடிமூலங்களாக இருக்கலாம். அறிவியல், கலையியல் போலும் பல்வேறு துறைகளில் சிறப்புற்றிருத்தல் வேண்டும். இலக்கிய மொழியாக வளர்ச்சியுற்றிருத்தல் வேண்டும்.

இவ்வகையில் எண்ணிப் பார்த்தால் கிரேக்க மொழி ஒன்றே, சொற்பொழிவுக் கலை முதல் தருக்கம் எனப்படும் அளவையியல், அறிவியல் சார்ந்தவை எனப் பல்வேறு துறைகளில் இன்றளவும் நினைவுகூருமாறு அறிஞர்களையும் நூல்களையும் பெற்றிருந்தது.

அதனால்தான் உரோம நாட்டு இலத்தீன், தொடக்கத்தில் கிரேக்கத்தையே ஒவ்வொரு துறையிலும் பின்பற்ற நேர்ந்தது.

பிற தொன்மைமிக்க மொழிகள் ஒவ்வொரு துறையிலும் ஓங்கி உயர்ந்து விளங்கின.

தமிழ் மொழியில் கிரேக்க மொழி போன்று அறிவியல், வானியல் முதலான பல துறைகளும் வளர்ந்து விளங்கினவெனினும் தெற்கே ஏற்பட்ட மூன்று கடல்கோள்களால் அனைத்தும் இழக்கப்பட்டன. இது எவ்வாறு தெரிகிறது என்றால், காப்புணர்ச்சியோடு தொகுக்கப்பட்டு இன்று நமக்குக் கிடைக்கின்ற தொகை நூல்களின் வழி அறியப்படுகிறது. பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, சிலப்பதிகாரம் ஆகியவற்றையும் தொல்காப்பியத்தையும் நுட்பமாக ஆராய்ந்தால், இப்பலதுறை அறிவு தமிழரிடம் இருந்ததை உய்த்துணர முடிகிறது.

தூய தனி இலக்கிய வகை என்று எடுத்துக் கொண்டால் தமிழோடு ஒப்பிடக் கூடியது, கிரேக்கம் ஒன்றே என்று மேனாட்டு அறிஞர்கள் குறிப்பிட்டுள்ளனர். கிரேக்க இலக்கியத்தைக் காப்பியம், தனிப்பாடல், நாடகம் (Epic, Lyric, Drama) என வகைப்படுத்துவர். தமிழிலுள்ள அகத்திணைப் பாடல்கள் அனைத்தும் நாடக வகையின; கூற்று முறை சார்ந்தன; தனிப்பாடல் வகையினவாகும். நெடும் பாடல்களாகிய பத்துப்பாட்டில் காப்பியக் கூறுகள் நிரம்பவுள்ளன.

சிலப்பதிகாரம் தமிழில் தோன்றிய இசை, கூத்து, நாடகம், நாட்டுப்புறப்பாட்டு போன்ற பலவற்றின் களஞ்சியமாகும். அதிலுள்ளவை திடீரெனத் தோன்றியிருக்க முடியாது. எத்தனையோ நூற்றாண்டுகளின் வளர்ச்சி அதில் வெளிப்படுகிறது.

தொன்மை, தொன்மைமிக்க காலத்திலேயே இலக்கிய வளம், சிந்தனைச் செல்வமுடைமை என்ற இவை தவிர, வேறு சில பண்புகளும் குறிக்கத்தக்கன.

மரபுடைமை என்பது ஒன்று. பல காலமாகப் பின்பற்றி வந்த, செறிவும் செழிப்பும் உடைமையை, செவ்வியற் புலவர்கள் தடம் மாறாது பின்பற்றுவர். நடப்பியல், புனைவியல், குறிக்கோளியல் எல்லாம் அதிலடங்கும். மரபுக்குக் கட்டுப்படுதல் என்பது, அக்காலப் புலவர்களிடம் இயல்பாக அமைந்தது. அது வாய்மொழி இலக்கியத்திலிருந்து பெறப்பட்டது. தமிழில் பாணர், பொருநர், விறலியர், கூத்தர்களிடமிருந்து புலவர்கள் பெற்ற செல்வமே இன்று நமக்குக் கிடைத்துள்ள இலக்கியச் செல்வங்கள் ஆகும். எழுதப்படாமல், செவியிற் கேட்டு, நினைவில் வைத்துப் பாடுவனவாதலின், அவை ஒரு தன்மைக்குக் கட்டுப்பட்டே தொடர்ந்தன. ஒரு விளையாட்டரங்கம் அமைத்து, சில விதிகளுக்குக் கட்டுப்பட்டு விளையாடுவது போன்றதே 'மரபு' என்பது. விதிகளுக்கு அடிமையாவது, கண்டபடி ஆடவிடாமல் தடுத்துவிட்டது என்றெல்லாம் கூற, மரபில் இடமில்லை. சங்கப் பாடல்கள் அனைத்தும் இம்மரபுக்குக் கட்டுப்பட்டும், சிலபோது அம்மரபு எனும் அடித்தளத்தின்மீதே புலவோர் தங்களது தனித்திறனை வெளிப்படுத்தியும் பாடப் பட்டனவாகும். இவை ஒரே அச்சில் வார்த்தது போல் தோன்றினாலும், கூர்ந்து நோக்கினால், புலவர் செய்துள்ள 'தனித்தன்மை' புலனாகும்.

**நோம்என் நெஞ்சே நோம்என் நெஞ்சே**
**இமைதீய்ப் பன்ன கண்ணீர் தாங்கி,**
**அமைதற்கு அமைந்தநம் காதலர்**
**அமைவில ராகுதல் நோம்என் நெஞ்சே. (குறுந். 4)**

காமஞ்சேர் குளத்தார் பாடிய இப்பாடல், தலைவியினுடன் சேர்ந்து பொருந்தி வாழவேண்டிய தலைவன், அவ்வாறு மனம் ஒன்றி வாழாமை கருதித் தன் நெஞ்சம் நோவதாகக் கூறுகிற பாங்கில் உளது. வருந்தும் நெஞ்சம் சொல்லிச் சொல்லிப் புலம்புவது போன்ற பாவின் நடை, பொருளுக்கேற்ற சந்தமுடையதாகிறது.

**நோம்என் நெஞ்சே நோம்என் நெஞ்சே**
**புன்புலத்து அமன்ற சிறியிலை நெருஞ்சிக்**
**கட்குஇன் புதுமலர் முட்பயந் தாஅங்கு**
**இனிய செய்தநம் காதலர்**
**இன்னா செய்தல் நோம்என் நெஞ்சே. (குறு. 202)**

அள்ளூர் நன்முல்லையார் பாடியது இது. தலைவன் பிரிந்து, வருந்தியவன், திரும்ப வந்து தோழியைத் தூதாக அனுப்புகின்றான். அவளிடம் தலைவி, தலைவன் முன்போல இல்லை என்று கூறி, 'வாயில் மறுக்கின்றாள்!' அதாவது சிறு ஊடல் கொண்டு, அவனை உடனே ஏற்க உடம்படவில்லை.

நெருஞ்சிப்பூ கண்ணுக்கு இனிதாக இருக்கும். நெருங்கிப் போனால் காலில் முள் குத்தும். மேலும் முதலில் அழகிய சிறிய பூவாக இருந்ததே, முற்றிக் காயாகும்போது முள்ளாகிவிடுகிறது. காதலித்துப் பிறர் அறியாதிருந்த 'களவுக் காலத்தில்' மிக அன்பாகவும், இனிமையாகவும் பழகியவன், திருமணமான பின், பிரிந்தும் அத்துணை அன்பின்றியும் நடப்பதை, இவ் உவமை மூலம் தலைவி சுட்டிக்காட்டுகிறாள்.

முன்னர்க் காட்டிய பாடல் போலவே, 'நோம் என் நெஞ்சே' எனப் புலம்பும் நடையில் இது இருந்தாலும், ஓர் அழகிய உவமை மூலம் தனித்தன்மை பெறுகிறது. மரபு வழிப்பட்ட பாடல்களும் இங்குக் கூறப்பட்ட உவமை போல, மேற்பார்வையாகப் பார்க்கும்போது, ஒன்று போலவே இருந்தாலும், அணுகச் சென்று நுனித்துப் பார்க்கும்போது, தனிச்சிறப் பொன்றனை வெளிப்படுத்தும். அது முள்ளாகாது, கூர்மையுடைய இனிய திறனாகும்.

ஒரு மொழி, இலக்கியம் என்பன பிறர்க்குக் கடன்படாது, தனக்கே யுரிமையுடைய தன்மைகளையும் இலக்கியத்தையும் பெற்றிருத்தல் வேண்டும். பிற மொழிகட்குக் 'கடன்' – அதாவது தனது செல்வாக்கைத் தந்திருக்கலாம். பிறவற்றிடமிருந்து பெற்றதாக இருத்தல் கூடாது.

இராபர்ட் கால்டுவெல், தமக்கு முற்படப் பல ஐரோப்பிய அறிஞர்கள் எழுதிய ஆய்வுரைகளின் மேம்பட, 'திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்' என ஒரு நூல் எழுதினார். அதில்தான் அவர் தமிழின் தனிச் சிறப்புத் தன்மையினை எடுத்துக் காட்டினார்.

'தென்னிந்திய மொழியினத்திற்குரிய தனிச் சிறப்புகளையும் அடிப்படையமைப்பையும் உரிமையொடு கொண்டிலங்குவது தமிழ் மொழியே.'

'திராவிட மொழிகள் அனைத்தினும் மிகவும் திருந்திய பண்பட்ட நிலையிலுள்ளது தமிழ் மொழியே, வேண்டுமென்றால், வடசொற்களை அறவே அகற்றித் தனித்தியங்கும் ஆற்றல் வாய்ந்திருப்பதோடன்றி, அவற்றின் உதவி இல்லாமல் மிகவும் மேம்பட்டு வளமுற்று மிளிரும் ஆற்றலும் வாய்ந்ததாகும்.'

1875இல் வெளியிடப்பட்ட முன்னுரை இது. அண்மையில் அமெரிக்க நாட்டுத் தமிழறிஞர், முன்னாள் சமற்கிருதப் பேராசிரியர், ஜார்ஜ். எல். ஹார்ட்டு என்பார், "கிறித்தவக் கால ஊழியின்படி, கி.மு. மூன்றாம் நூற்றாண்டளவில், தமிழ் இலத்தீனை விடவும், கிரேக்கத்தை மிகவும் ஒத்திருக்கிறது. அது உருவாக்கியுள்ள பேரிலக்கியமாம் சங்க இலக்கியம் அம்மொழிக்கே முற்றிலும் உரிமையுடையதாகும். வெளியிலிருந்து சிறிதளவு செல்வாக்கையும் பெறாதது அது. ஏ.கே. இராமானுசன் சங்க இலக்கியத்தை, செவ்வியல் இலக்கியம் – Classical Literature – என்று குறிப்பிடுவது மிகவும் பொருந்தும். பிற்காலத் தமிழ் இலக்கியம் அனைத்திற்கும் சங்க இலக்கியமே உரைகல்லாகவுள்ளது; தமிழின் பிற்கால இலக்கியங்களை உருவாக்க உதவியுள்ளது. மேலும் முக்கியமான கருத்து யாதென்றால், சங்க இலக்கியம் என்பது உலகப் பேரிலக்கியக் கருவூலங்களுள் ஒன்று. அந்நூல்கள் தமிழுக்கேயுரிய முறையில் மானுட வாழ்வை, மனித அனுபவங்களை, பழக்க வழக்கங்களைப் பாடுகின்றன.

மனித வாழ்வை நேரே பாடுவதென்ற இது, சமற்கிருதம், இலத்தீன், கிரேக்கம் மற்றும் எம்மொழி இலக்கியத்திலும் காணாத, அவற்றினின்றும் முழுவதும் வேறுபட்ட ஒன்றாகும். அவ் இலக்கிய வடிவங்கள், மொழி, அதன் மரபுகள், அது வெளிப்படுத்தும் மன உணர்வுகள் எல்லாம் முற்றிலும் தமிழுக்கே உரிமையுடையனவாகும்."

Even more important sangam Literature is one of the great literary treasures of the world. Its works provide a Tamil perspective on life and on human experience that is quite different from anything found in Sanskrit, Latin, Greek or any other language. Its meters, its language, its conventions and its spirit are all purely Tamil. (Prof. George L. Hart).

தமிழறிஞர்கள் பலரும் தமிழையும் தமிழ் இலக்கியச் சிறப்பையும் பற்றி மிகுதியாகவும் விரிவாகவும் எழுதியுள்ளனர். எனினும், 'ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச் சான்றோன் எனக் கேட்ட தாய்' என்பதற்கு ஒப்பப் பிற நாட்டு அறிஞர்கள் கூறியுள்ளவற்றைத் தொகுத்துக் காண்பதே பெருமைக்குரியதாகும்.

அடுத்து, செவ்வியற் பண்புகளுள் ஒன்று, அதன் பிற்கால இலக்கிய வளர்ச்சி அனைத்திற்கும் அது ஊற்றுக் கண்ணாக விளங்கித் தன் செல்வாக்கைச் செலுத்தியிருக்க வேண்டும் என்பதாகும். தமிழ் இலக்கிய வரலாற்றைக் கற்பார் இதை நன்குணர்வர். காலந்தொறும் தோன்றிய தமிழ் இலக்கியங்களில் – காப்பியம், நீதி இலக்கியம், சிற்றிலக்கியம், பத்திமை இலக்கியம் – யாதாயினும் அதில் நேர்முகமாகவோ, மறைமுகமாகவோ சங்க இலக்கியச் செல்வாக்கு இருக்கும்.

தமிழ்ச் செம்மொழி மாண்புகளுள், அதில் தோன்றிய செவ்வியல் இலக்கியம் முற்றிலும் மானுட வாழ்வைப் பற்றியதாகவே இருக்கின்றன. கிரேக்கம், இலத்தீன், சமற்கிருதம் எல்லாம் புராண இதிகாச அதியற்புத இயற்கை இகந்த நிகழ்வுகளின் அடிப்படையில் விளங்குவன. மனித வாழ்வைப் பற்றிக் குறிப்பால் உணர்த்துவன.

சங்க இலக்கியத்திலும் சிற்சில இடங்களில் தாக்கணங்கு, அணங்கு, சூரரமகளிர், புத்தேளுலகு (மேலுலகம்), தேவர்கள் என இடம் பெறுவன ஆங்காங்கு உள. ஆயினும் அவை மானுட வாழ்வாகிய அடிக்கருத்துகளைச் சிறப்பிக்க வருவனவே தவிர, அவை அடிக்கருத்தா வதில்லை.

பரிபாடல் போலும் பத்திமைப் பாடல்களும் மனித நல்வாழ்வையே நோக்கியன. 'மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம்' என்பதே அவற்றின் அடிப்படை.

சங்கப் பாடல்களில் உள்ளத்தை உயர்த்தும் சிந்தனைகள் உள. உலகத்தின் உச்சத்தைத் தொடும் கருத்துகள் உள. அன்றும் இன்றும் என்றும் மாறாத உண்மைகள் உள. இனிவரும் காலத்தும் – மானுடம் உள்ளவரை நிலைபேறாகக்கூடிய அறக்கருத்துகள் உள.

நாம் இன்று எதைச் செய்தாலும் ஒன்றை எதிர்பார்த்துச் செய்கிறோம். கடவுளுக்குப் பல ஆயிரம் ரூபாயில் ஒரு வெள்ளிக் கவசம் செய்தால், அந்த அளவு புண்ணியம் கிடைக்கும் என்று கணக்குப் போடுகிறோம்.

செய்த பாவம், பணம் செலவழித்துப் பரிகாரம் செய்தால் அது தீர்ந்துவிடும் என நம்புகிறோம். செய்த பாவத்திற்கு அழவேண்டும்; வருந்த வேண்டும்; திருந்த வேண்டும்; மீண்டும் நல்வழிக்குத் திரும்ப வேண்டும் என்பதனை மறந்துவிடுகிறோம்.

**தினை விதைத்தால் தினை விளையும்;**

**வினை விதைத்தால் வினை விளையும்;**

**திறமையை மதித்தால் திறமை வளரும்;**

**காக்கை பிடிப்பதைப் போற்றினால், அப்பழக்கமே வளரும்.**

ஒப்புரவுக்குப் பொருள் சொல்ல வந்த திருவள்ளுவர், 'கைம்மாறு வேண்டா கடப்பாடு' என்றார். தாம் சேர்த்த செல்வத்தைப் பிறருடன் பகிர்ந்து நுகர்வதைக் கடப்பாடு – கடமை – கட்டாயம் செய்ய வேண்டியது என்றார்.

ஒரு தொழிலில் போடும் மூலதனம் முதலாளியுடையது என்றால், அதற்காக உழைப்பவர் பாடுபடும் உழைப்பு ஒரு மூலதனமே என்றார் காரல் மார்க்சு. அத்தொழிலை யாருக்குச் செய்கிறோம்? வாணிகம் செழிக்கிறது என்றால் வாங்குவோரால்தானே? ஒருவன் மிகப் பெரிய விடுதி நடத்தினால், அதில் பல ஆயிரம் பேர் வந்து தங்கிப் போவதால்தானே அவனுக்குப் பொருள் சேர்கிறது. ஒருவருமே வரவில்லையெனில், அவன் செல்வனாவது எவ்வாறு? இதிலிருந்து, செல்வங் குவிப்பதில், நுகர்வோனுக்கும் ஒரு பங்குண்டு என்றால் தவறாகுமா? அதனால்தான் அதை 'ஈகை' என்னாது 'ஒப்புரவு' என்ற சொல்லால் குறித்தார் திருவள்ளுவர்.

இதனால் எதனையும் எதிர்பார்க்காது நன்மை செய்க; நன்மை வளர வேண்டும் என்பதற்காக நன்மை செய்க. நன்மை செய்வதால் நமக்கென்ன கிடைக்கும் என்பதையெல்லாம் எண்ணாதே. நன்மைக்காக – உலகில் நன்மை வளர வேண்டும் என்பதற்காக நன்மை செய் என்று சொல்ல வந்தான் சங்கப் புலவன்.

நன்றாக மீண்டும் எண்ணிப் பாருங்கள்! ஒரு பள்ளியில், திறமையுள்ள மாணவர்களைப் போற்றினால் திறமை வளரும்; எல்லோரும் அத்திசை நோக்கி நடப்பர். அங்குத் தவறான நிருவாகத்தால் தீமைக்குச் சிறப்புச் செய்து, போற்றி வெளிச்சம் போட்டால், பலரும் அத்தீய வழிக்கே திரும்புவர்.

நன்மைக்காக நன்மை செய்தல் என்பதே பேர் அறம். புண்ணியத்திற்காக நன்மை செய்தல் என்பது அடுத்த நிலை. ஒரு காரியத்திற்காக என்று, சிறிய மீனைப் போட்டுப் பெரிய மீனைப் பிடிப்பது போல் செய்தால் அது கடைப்பட்டது. பிற்கால ஔவையாரும் 'வேண்டி வினை செயேல்' என்றார்.

ஆய் அண்டிரனை உறையூர் ஏணிச்சேரி முட மோசியார் புகழ்ந்து பாடும்போது, 'அம்மன்னன் எதனையும் எதிர்பாராது, நன்மைக்காக நன்மை செய்தல், பெரியவர்கள் சென்ற வழி என்பதனால் அதே வழியில் செல்லுதல் என்று எண்ணி அறம் செய்து வாழ்வதைப் பாடினார்.

**இம்மைச் செய்தது மறுமைக்கு ஆம்எனும்**

**அறவிலை வணிகன் ஆஅய் அல்லன்**

**பிறரும் சான்றோர் சென்ற நெறிஎன**

**ஆங்குப் பட்டன்று அவன்கை வண்மையே. (புறம். 134)**

ஆய் என்னும் வள்ளலது கைவண்ணம் – கொடைக்குணம் இப்பிறவியில் செய்தது மறுபிறவியில் நன்மை தரும் என எண்ணி, ஒன்றைக் கொடுத்து ஒன்றை வாங்கும் அறவிலை 'வாணிகம்' அன்று. ஆய், அற வணிகன் அல்லன்.

இம்மை, மறுமை நம்பிக்கையும் இப்பிறப்பில் நன்மை செய்தவனுக்கு மேலுலகில் நல்ல வரவேற்புக் கிடைக்குமென்பதும் இதுபோன்ற கருத்துகளும் காணப்படும் சங்க இலக்கியத்தில்தான் இப்பாடலும் உளது. பிறகு ஏன் அறம் செய்து, பிறரை வாழ வைத்து வாழ்கின்றான் என வினவினால், அதுதான் சான்றோர் பலரும் சென்ற வழி, அதனால் அவனும் அவ்வழியில் நடக்கின்றான் என்று முடமோசியார் கூறுகிறார்.

இன்பம் எது? துன்பம் எது? இரண்டிற்கும் அதிக வேறுபாடில்லை என்பதுபோல், முதலெழுத்து மட்டும் மாறியுளது. சிலருக்குத் துன்பமாகத் தோன்றுவது, மற்றும் சிலருக்கு இன்பமாகத் தோன்றலாம். சிலபோது இன்பமாகத் தோன்றுவது துன்பமாக மாறிவிடலாம். இது காலம், இடம், சூழல், மனிதமனம் தொடர்பான ஒருணர்வு.

தலைவன் பிரிந்து சென்ற பின் நெடுநாளாகியும் திரும்பவில்லை. அதனால் தோழி தலைவியிடம், 'நீ இவனிடம் கொண்ட காதல் தவறாகிவிட்டது. சிறிதும் கவலையற்றிருக்கும் அவனைப் பற்றி நீ கவலைப்படுகிறாய்! இது பரிதாபமாயிருக்கிறது!' என்றாள். அதற்குத் தலைவி சொன்ன விடைதான் பாட்டு; கபிலர் பாடியது.

நாம் புதுமுயற்சியில் ஈடுபடுகிறோம். அப்போது பல தடைகள், துன்பங்கள் வந்தாலும் அவற்றை இன்பமாகவே நம் உள்ளம் ஏற்கிறது. பிறருக்கு நாளும் உதவப் போய்த் துன்பப்பட நேர்கிறது; அடிபட்டவனைக் காப்பாற்றப் போய்த் துன்பமாகிறது; நோயிற் படுத்த பிள்ளையைக் காப்பாற்றத் தாய் படும் துன்பம் பெரிது. இவை எல்லாம் துன்பமா, இன்பமா?

தலைவனால் துன்புற்றதைத் தோழி சொன்னபோது, தலைவி சொல்கிறாள்:

**கறிவளர் அடுக்கத்து ஆங்கண் முறிஅருந்து**
**குரங்கு ஒருங்கிருக்கும் பெருங்கல் நாடன்**
**இனியன் ஆகலின், இனத்தின் இயன்ற**
**இன்னா மையினும் இனிதோ**
**இனிதெனப் படூஉம் புத்தேள் நாடே.** (குறுந். 288)

மிளகுக் கொடிகள் வளர்கின்ற மலையடுக்கம்; (கறி – மிளகு). அதன் தளிர்களைத் தின்றுகொண்டு, குரங்குகள் கூடியிருக்கும் பெருங்கல் நாடனாகிய காதலன் இனியவனே! நல்லவனே!

மேலும் இனத்தின் இயன்ற இன்னாமையினும் – நமக்கு வேண்டியவர்களுக்காகப் படும் துன்பத்தைவிட; இனிதெனப் படூஉம் புத்தேள் நாடு – மிக இனிமையுடையது என்று உலகோரால் பேசப்படும் துறக்கவுலகம் (சொர்க்கம்) இனிதோ?

நம்பால் அன்புடையவர்க்கும் நாம் அன்பு செலுத்துபவர்க்கும் ஒரு துன்பம் வந்தபொழுது, அதை நீக்க நாம் படும் துன்பமே இனிது. அது தேவருலக இனிமையைவிட மேலான இனிமையுடையது.

காவிரி நாட்டிலும் பஞ்சம். மக்கள் பட்டினியால் வாடிய பொழுது சிறுகுடி கிழான் என்ற பண்ணன் குடிமக்களுக்கு உணவு தந்து காப்பாற்றினான். பல வரிசைகளில் சென்று, சோற்றுத் திரளை வாங்கியுண்டு உயிர் பிழைப்பதைக் கேள்விப்பட்டான் கிள்ளிவளவன் என்ற சோழவேந்தன். அம்மக்கள் சென்று கொண்டிருந்த வரிசையிலே, நடந்து சென்றான். சாரி சாரியாய்ப் போன வரிசையிலே நடந்த அவனுக்கு நடக்க முடியவில்லை. அவ்வாறு போய்க் கொண்டிருந்த மக்களிடம் கேட்டான். 'ஐயா! பசிப்பிணி மருத்துவன் இல்லம் அணித்தோ? சேய்த்தோ?' என்று கேட்டான். அவ்வள்ளற் பெருமகனைப் பற்றி, 'யான் வாழும் நாளும் பண்ணன் வாழிய' என்றான். பரிசிலர் வள்ளல்களைப் பாடி வயிற்றுப் பசி தீர்த்துக் கொண்ட ஒரு காலத்தில், வள்ளலாகிய வேந்தன் தன் கீழ்க் குடிமகன் ஒருவனை 'யான் வாழும் நாளும் பண்ணன் வாழிய' என்றான்; என் வாழ்நாளையும் சேர்த்து அவன் நீடூழி வாழ்க என்றான்.

இன்று மழை நீர்ச் சேகரிப்புப் பற்றி எவ்வளவோ பேசுகிறோம். குளங்களும், ஏரிகளும், ஊருணிகளும், கண்மாய்களும், சிற்றாறுகளும், ஓடைகளும் அமைத்தும், திருத்தியும், நீர் நிரம்பி நிற்கச் செய்தும் யார் நிலத்தோடு நீரை இணைத்து, பயிர்கள் தழைக்கச் செய்து, மக்களுக்கு உணவு தடையின்றிக் கிடைக்கச் செய்கிறார்களோ, அவர்களே இப்பூவுலகில் தம் புகழை நிலை நிறுத்தியவர்கள்; மற்றவர்கள் எல்லாம் புகழை இழந்தவர்களே!

இவ்வாறு பாண்டியன் நெடுஞ்செழியனைக் குடபுலவியனார் பாடினார்.

'வேந்தே! நீ நீடு வாழ்க!

**செல்லும் உலகத்துச் செல்வம் வேண்டினும்**
**ஞாலம் காவலர் தோள்வலி முருக்கி**
**ஒருநீ ஆகல் வேண்டினும் சிறந்த**
**நல்லிசை நிறுத்தல் வேண்டினும் மற்றுஅதன்**
**தகுதி கேள்இனி! மிகுதி யாள!'**

என்று கூறி அறவுரை கூறத் தொடங்கினார், குடபுலவியனார்.

**நீர் இன்று அமையா யாக்கைக்கு எல்லாம்**
**உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோர்!**

*உணவு தந்து பசியாற்றுபவரே உயிர் கொடுத்தவர் ஆவர். ஏன்?*

**உண்டி முதற்றே உணவின் பிண்டம்**
**உணவெனப் படுவது நிலத்தொடு நீரே!**

இந்த உடம்பு உணவாலானது. உணவு விளைவது நிலமும் நீரும் சேர்வதால் கிடைப்பது.

**நீரும் நிலனும் புணரியோர் ஈண்டு**
**உடம்பும் உயிரும் படைத்திசி னோரே.**

அந்த நிலத்திற்குத் தவறாது நீர் கிடைக்கச் செய்கின்றவர் உடம்பையும் உயிரையும் படைத்தவர் எனலாம். நிலமும் நீரும் சேர்ந்தால் – புணர்ந்தால், உடம்பும் உயிரும் படைக்கப்படுமாம். கண்கண்ட உண்மை இது! தலைதூக்கி ஆடும் தளிர்களையும் பயிர்களையும் பாருங்கள்! தரையில் வரண்டு கிடக்கும் புல்லைப் பாருங்கள்! அவை மாய்ந்து மடியாமல் உயிர் பெற்றுத் தழைத்து மேலெழுந்து காற்றில் அசைந்து தங்கள் உயிர்ப்பை – எழுச்சியைக் காட்டுகின்றனவே!

**வித்தி வான்நோக்கும் புன்புலம் கண்ணகன்**
**வைப்பிற்று ஆயினும், நண்ணி ஆளும்**
**இறைவன் தாட்கு உதவாதே!**

விதைத்து வான்மழையை எதிர்நோக்கும் வரண்ட நிலங்கள் எத்துணை அகன்று பரந்து கிடந்து என்ன பயன்? அரசனது ஆட்சிச் சிறப்புக்கு அவை உதவா. அதனால்,

**அடுபோர்ச் செழிய! இகழாது வல்லே**
**நிலன்நெளி மருங்கில், நீர்நிலை பெருகத்**
**தட்டோர் அம்மஇவண் தட்டோரே!**
**தள்ளா தோர்இவண் தள்ளா தோரே!** (புறம். 18)

பாண்டியன் செழியனே! அலட்சியப்படுத்தாது, விரைந்து மேடு பள்ளமாகக் கிடக்கும் இப்பூமியில், நீர்நிலைகள் ஆறாக, ஓடையாக, ஊருணியாக, குளமாக, குட்டையாக – பெருகும்படி மழை நீரைத் தடுத்து நிறுத்தியவர்களே, தங்கள் புகழ் அழியாது தடுத்து நிறுத்தியவர்கள் ஆவார்கள்! அவ்வாறு செய்யாதவர்கள், தங்கள் புகழை நிலைநிறுத்தாமல் தவறவிட்டவர்கள் ஆவார்கள்! அன்றைய வேந்தனுக்குச் சொன்ன அறிவுரை மட்டுமா இது. இன்றும் மழை நீர்ச் சேகரிப்பு, நதி நீர் இணைப்பு, அணைகட்டித் தேக்கிக் காத்தல் என்று பலவாறு பேசப்படும் சிந்தனை அல்லவா இது!

சங்கப் பாடல்கள் சாகா வரம்பெற்ற அமிழ்தம் அனையவை. அவற்றின் மாண்புகளை நாமும் அறிந்து, உலகிற்கும் உணர்த்துவோமாக!

# உலக அறிஞர்கள் பார்வையில் செம்மொழித் தமிழ்



பேராசிரியர் ப. மருதநாயகம்

பதினெட்டாம் நூற்றாண்டில் மேலை ஐரோப்பிய நாடுகளிலிருந்து தமிழகம் வந்த கிறித்துவத் துறவிகள் தமிழிலிருந்த திருக்குறள் உள்ளிட்ட பல அற இலக்கியங்களால் பெரிதும் ஈர்க்கப்பட்டார்கள். அவர்கள் விவிலியத்தைத் தமிழில் மொழி பெயர்க்கவும் சமயச் சார்பான நூல்களை எழுதவும் தமிழைக் கையாள வேண்டியிருந்ததால் அதன் கட்டமைப்பையும் சொல்வளத்தையும் உணர்ந்து கொண்டார்கள். இராபர்ட் டி நொபிலி (Robert De Nobile), சீகன் பால்கு (Ziegenbalg), வீரமாமுனிவர் (Beschi) போன்றவர்கள் சமயப் பணியோடு தமிழ்ப் பணியும் செய்து தமிழின் ஏற்றத்தை மேலை அறிஞர்களுக்குத் தொட்டுக் காட்ட முடிந்தது. ஆனால் இருபதாம் நூற்றாண்டில் தொல்காப்பியமும், சங்க இலக்கியங்களும் நன்கு அறிமுகமான பிறகே செம்மொழித் தமிழின் பெருமை உலக அறிஞர்களின் பார்வையைக் கவர்ந்தது. அதன் பிறகு அவர்கள் எழுதிய நூல்களும் கட்டுரைகளுமே நாம் இப்பொழுது கணக்கில் கொள்ள வேண்டியவை.

தமிழ் உள்ளிட்ட தென்னிந்திய மொழிகள் இந்தோ–ஐரோப்பியக் குடும்பத்தைச் சார்ந்தவை அல்ல என்பதைக் கால்டுவெல்லுக்கு ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னமேயே கண்டறிந்து சொல்லிய எல்லிஸ் (F.W. Ellis) தமிழின் தொன்மை பற்றியும் ஆங்காங்கே குறிப்பிடுவார். ஹீப்ரு மொழிக்கும் தமிழுக்கும் உள்ள நெருக்கத்தைச் சான்றுகளோடு எடுத்துக் கூறும் எல்லிஸ்,

> **“பொதுவாக இந்திய மொழிகளிலும், சிறப்பாகத் தென்னிந்திய மொழிகளிலும் காணப்படும் நெடுங்கணக்கு, எழுத்துமுறை, சிங்களம், பர்மியம், ஜாவா மொழிகளின் நெடுங்கணக்கு எழுத்துமுறையும் தமிழிலிருந்தே பெறப்பட்டன என்பதை நிறுவும்”**

என்பார். திருக்குறளின் முதல் பதின்மூன்று அதிகாரங்களை ஆங்கிலத்தில் விளக்கங்களோடு தரும் அவரது நூலில், தமிழின் சொல்வளம் பற்றிப் பல அரிய குறிப்புகள் உள்ளன. அன்னார் ‘அறம்’ எனும் தமிழ்ச் சொல்லை ‘virtue’ என்று மொழிபெயர்த்தாலும் அது சுட்டும் பல பொருள்களைப் பட்டியலிட்டுக் காட்டுவார். பழம்பெரும் செம்மொழியான கிரேக்கத்தில் ‘இனியவை கூறல்’ என்ற தொடருக்கு நேரடியான தொடரோ சொல்லோ இல்லாததால் அரிஸ்டாட்டில் தடுமாறுவதை அவர் எள்ளி நகையாடுவதைக் காணலாம்.

Aristotle describes it as the intermediate habit between flattery and moroseness, between that disposition which inclines the feeble-minded in all cases to sacrifice their own opinions in deference to others and that by which men are excited to contend for the mere sake of contention.

ஐரோப்பிய அறிஞர்கள் சிலர் இந்திய மொழி எதிலுமே ‘gratitude’ எனும் ஆங்கிலச் சொல்லுக்கு இணையான சொல் இல்லையென்றும் அதற்குக் காரணம் அப் பண்பு இந்தியர்களுக்கு இல்லையென்றும் கூறியுள்ளது பொய்க் குற்றச்சாட்டும் அவதூறும் ஆகுமென்பார் எல்லிஸ். திருவள்ளுவரின் ‘செய்ந்நன்றி அறிதல்’ எனும் அதிகாரம் ஒன்றே இதற்குத் தக்க விடையாகும் என்று கூறித் தமிழ் மொழியின் சொல்வளத்தையும் தமிழரின் பண்பாட்டுச் சிறப்பையும் ஒருங்கே நிலைநாட்டுவார்.

தமிழின் தொன்மை பற்றிக் கால்டுவெல் (Caldwell) தமது திராவிட ஒப்பிலக்கணம் (Dravidian Comparative Grammar) எனும் ஆங்கில நூலில் கூறும் கருத்துகளில் பல செம்மொழித் தமிழின் நுட்பக் கூறுகளைப் புலப்படுத்தும். அவர் கருத்தின்படி, திராவிட மொழிக் குடும்பமானது இந்தோ–ஐரோப்பிய மொழிக் குடும்பத்திற்கும் சிதிய மொழிக் குடும்பத்திற்கும் ஓர் இணைப்புப் பாலமாக இருந்திருக்க வேண்டும். சில கூறுகளில், சிறப்பாக, இடப்பெயர்களைப் பொறுத்தவரையில் மாந்த மொழி வரலாற்றில், இந்தோ–ஐரோப்பிய நிலைக்கும், சிதிய நிலைக்கும், அவை ஒன்றிலிருந்து ஒன்று பிரிந்த நிலைக்கும் முந்தைய காலத்தைச் சேர்ந்த மொழியோடு திராவிட மொழிக் குடும்பம் தொடர்புடையது. மொழிகளுக்கும் மொழிக் குடும்பங்களுக்கும் உள்ள உறவு பற்றிய ஆய்வில் இடப்பெயர்கள், குறிப்பாக தன்மை முன்னிலை ஒருமைப் பெயர்கள் தெளிவுதரக் கூடியவை. ஏனெனில் அவையே ஏனைய மொழிக் கூறுகளைவிட நிலைத்த தன்மை கொண்டவை; காலத்தால் அதிக மாறுபாட்டிற்கு உட்படாதவை. தமிழிலுள்ள சுட்டுப்பெயர்களும் அவற்றை ஒட்டிய வினாச் சொற்களும் அழகானவை,

சீரொழுங்குடையவை. உலகிலுள்ள வேறு எந்த மொழியிலும் அல்லது குடும்பத்திலும் இதனை யொத்த, அல்லது இதற்கு அடுத்த நிலையில் வைக்கக்கூடிய முறை இல்லை.

I need not call attention to the beautiful and philosophical regularity of this quadruple set of remote, proximate, and intermediate demonstratives and interrogatives. In no other language or family of languages in the world shall we find its equal or even its second.

திராவிட மொழிக் குடும்பமானது வடமொழிக்கு முற்பட்ட சில தொன்மையான மொழிக் கூறுகளை இன்னும் தக்க வைத்துக் கொண்டுள்ளது. சிறப்பாக, அதன் சுட்டுப் பெயர்கள் வடமொழியிலிருந்து கடனாகக் கொள்ளப்பட்டவையல்ல. மாறாக, அவை வடமொழியும் இந்தோ–ஐரோப்பிய மொழிக் குடும்பத்தின் ஏனைய உறுப்பினர்களும் இத்தகைய தொன்மையான அடிப்படைக் கூறுகளை எங்கிருந்து பெற்றனவோ அந்தத் தொன்மொழியோடு தொடர்புடையவை.

இந்தோ–ஐரோப்பிய மொழிக் குடும்பத்தின் தொன்மையான மூலம் என்று கருதப்படுகின்ற வடமொழிக்கும் முன்னைய மொழியோடு திராவிட மரபுத் தொடர்கள் நெருக்கமான உறவு பெற்றுள்ளதற்குச் சான்றுகள் தென்படுகின்றன. அதேசமயத்தில் அவை சிதிய மொழிக் குடும்பத்தோடு, சிறப்பாக, உக்கிரிய (Ugrian) மொழிகளோடு, மேலும் நெருக்கமான, மேலும் தெளிவான, மேலும் அடிப்படையான உறவு கொண்டிருந்தமையும் தெளிவாகிறது.

தமது சமற்கிருத மொழி (The Sanskrit Language) என்ற நூலில் பரோ (Burrow) தமிழின் தொன்மைபற்றிப் பேசுகிறார்:

சமற்கிருதத்திற்குக் கடனளித்த அயல்மொழிக் குடும்பங்களில் தலைமை இடம் பெறுவது திராவிட மொழிக் குடும்பமே. வேத காலத்திற்குப் பிறகு பல சொற்கள் கடன்பெறப்பட்டது தெளிவாகத் தெரியினும் இருக்கு வேதத்திலேயே சில சொற்கள் காணப்படுகின்றன.

வடமொழியிலுள்ள சம்கிதைகளிலும் பிராமணங்களிலும் பாணினியிலும் பதஞ்சலியிலும் மகாபாரதத்திலும் உள்ள தமிழ்ச் சொற்களை எடுத்துக் காட்டும் பரோ, பாலிக்கும் பிராகிருதத்திற்கும் தமிழ்ச் சொற்கள் சென்றிருப்பதும் திராவிட மொழிக் குடும்பத்தின் தொன்மையைக் கண்டறிய உதவும் என்பார்.

சுனிதி குமார் சாட்டர்ஜி தமது, வங்க மொழியின் பிறப்பும் வளர்ச்சியும், (The Origin and Development of the Bengali Language) என்ற நூலுக்கு எழுதிய முன்னுரையில் தமிழ் ஒரு காலத்தில் இந்தியத் துணைக்கண்டம் முழுவதும் பேசப்பட்ட மொழியென்பதை ஏற்றுக் கொள்கிறார். "It is regarded as certain that Dravidian Speakers were at one time spread over the whole of Northern India as well, from Balochistan to Bengal."

இருக்குவேதத்து ஆரிய மொழியிலேயே திராவிட மொழியின் தாக்கம் இருப்பதற்கு அவர் சான்றுகள் தருகிறார். அவற்றுள் சில வருமாறு : அணு, அரணி, கபி, கலை, காலம், நீலம், நீஹர (மேகம், பனி), புஷ்கர (தாமரை), புஷ்பம் (பூ), பூசை, பழம், பிளம், பீஜம் (விதை), மயில், இரவு, உருவம், சாயி (மாலை). பிராமணங்களில் தமிழ்ச் சொற்கள் மேலும் பெருகுவதையும் அவர் குறிப்பிடுகிறார். இவற்றுள் வெறும் பொருள்களைக் குறிக்கும் சொற்கள் மட்டுமல்லாமல் அரிய அறிவுத் துறைகளுக்கும், கருத்தாக்கங்களுக்கும் அடிப்படையான 'அணு', 'கலை', 'காலம்', 'இரவு', 'உருவம்' போன்ற சொற்களும் இருப்பது நோக்கற்பாலது. இருக்குவேத காலத்திலேயே ஆரியர்களின் மொழியையும் பேச்சையும் பண்பாட்டையும் பழக்க வழக்கங்களையும் தமிழர்களின் மொழியும் பேச்சுவழக்கும் பண்பாடும் உருமாற்றம் செய்தன என்பதற்கும் சுனிதி குமார் சாட்டர்ஜி சான்றுகள் தருகிறார்.

எமனோ, பரோ, குவிபர் ஆகிய மொழிநூல் வல்லுநர்களுக்குப் பின்னால் வந்த பல மேலை அறிஞர்கள் வெறும் சொல் அளவில் மட்டுமல்லாமல் வேத மொழியானது தமிழ்த் தொடர்களின் தாக்கத்திற்கும் ஆளானது என்பதைக் கண்டு அறிவித்தார்கள் என்று பிரான்சுவாகுரோ (Francois Gros) தமது Deep Rivers : Selected Writings on Tamil Literature எனும் நூலில் தெரிவிக்கிறார்.

Considering only the most reliable works, those of experts such as Emeneau, Burrow and Kuiper and of a younger generation, Southworth, Colin Masica, or even McAlpin, we know that the Dravidian influence is perceptible from the most ancient strata of the Veda, not only in phonology and vocabulary but also in the structure of phrases and that it may go back to the Indo-Iranian.

தமிழின் தாக்கம் இருக்குவேத காலத்திற்கு முன்னதாகவே வடமொழியின் மூலமான இந்தோ – இரானியக் குடும்பத்திலிருந்தே தொடங்கிவிட்டது என்பதை இவ்வறிஞர்கள் கூறக் காணலாம்.

மிச்சிகன் பல்கலைக்கழகத்து மொழியியல் பேராசிரியர்களான ஏ.எல். பெக்கர் (A.L. Becker), கீத் டெய்லர் (Keith Taylor) ஆகியோர் சிகாகோ பல்கலைக்கழகத்துப் பேரறிஞர் ஏ.கே. இராமனுஜனுடன் நிகழ்த்திய கலந்துரையாடலில் வரும் தொல்காப்பியரைப் பற்றிய முடிவுகள் நாம் அறிய வேண்டியவை. பெக்கர், "அமெரிக்கப் பல்கலைக்கழக நூலகங்களில் எல்லாம் தொல்காப்பியரின் சிலையை நிறுவ வேண்டும்; ஏனெனில் அவர் மேலை உலகின் பிளேட்டோ, அரிஸ்டாட்டில் போன்றாரோடு ஒப்பிடற்குரிய தகுதி பெற்றவர்; அவர்களுக்கிருந்த சிந்தனையாற்றல், கற்பனைத்திறன், மொழியின்பால் ஈடுபாடு ஆகியவற்றைப் பெற்றிருந்த தொல்காப்பியர் தமிழின் அறிவுலகைத் திறந்து காட்டினார்; மொழி பற்றிய நுணுக்கங்களையெல்லாம் நுட்பமான ஆய்வுக்கு உட்படுத்தினார்; கோட்பாடுகளின் வரையறைகளை யெல்லாம் தெளிவுபடுத்தினார்; மொழியைப் புரிந்துகொள்ளத் துணை செய்யும் மரபுகளையும் நாம் ஆராயாது ஏற்றுக்கொண்ட எல்லாவற்றையும் தெளிவாக விளக்கியமையால் தொல்காப்பியர் இன்றியமையாத அறிஞர் ஆகிறார்" என்று எடுத்துரைக்க, ஏ.கே. இராமானுஜன்,

"தொல்காப்பியர் கவிதை இயல் தந்த மனிதர்; அவர் மொழி இலக்கணம் உரைத்தவரும் ஆவார்; அன்னார் தமிழ்மொழிக்குச் செய்யவேண்டிய எல்லாவற்றையும் செய்திருக்கிறார்;

சொல்லாட்சிக் கலை (rhetoric), யாப்பிலக்கணம் (prosody), கவிதை இயல் (Poetics) ஆகிய மூன்றிலும் அவர் வித்தகர்; மொழிஇயல் ஆசான்களுக்கெல்லாம் தலையாய சான்றெனத் தக்கவர் (the ultimate linguistic guru) ஆவார்; மொழிக்கு அவர் செய்யாதது ஏதுமில்லை; அவர் தம் மொழியியல் ஆய்விற்குப் பேச்சு மொழியிலிருந்து கவிதை மொழிவரை உள்ள எல்லாக் கூறுகளையும் எடுத்துக்கொள்கிறார்" என்று உலக மொழி இலக்கண நூல்களிலெல்லாம் தொல்காப்பியத்தை ஒத்தது வேறில்லை என்பதைத் தெளிவாக்குகிறார்.

மார்ட்டின் செய்மர் ஸ்மித் என்பார் தமது இருபதாம் நூற்றாண்டு உலக இலக்கியத்திற்கு வழிகாட்டி (A Guide to Twentieth Century World Literature) எனும் பெருநூலில் ஏறத்தாழ நானூறு இலக்கியங்கள் பற்றிப் பேசுகிறார். தமிழ் இலக்கியத்தை அறிமுகம் செய்யும்போது செம்புலப் பெயல்நீராரின் கவிதையை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துக் கொடுத்து அதனைப் புகழ்ந்து கூறிவிட்டுத் தொல்காப்பிய–சங்கக் கவிதை இயலைக் கீழ்க்கண்டவாறு மேலை அறிஞர் உலகம் உணரும் வகையில் பாராட்டுவார்:

தமிழ்க் கவிதை இயல் வடமொழிக் கவிதை இயலினின்றும் முற்றிலும் மாறுபட்டது; வியப்புக்குரியது; அதனை அறியத் தற்செயலாக வாய்ப்புக் கிடைக்கும் மேலை நாட்டினர்க்கு அது இன்ப அதிர்ச்சியூட்டும் புதையலாகும். அதில் கவிதை அகமென்றும் புறமென்றும் பகுக்கப் பெற்றுள்ளது. அங்கு ஒரு குறியீட்டுத் திறவுகோலும் (Symbolic key) மிகமிக மேம்பாடுடைய நிலப்பாகுபாட்டைப் பயன்படுத்தும் உத்தியும் உள்ளன. மேற்கத்திய நாடுகளில் வாழும் போலிச் சோதனைகள் எல்லாவற்றைக் காட்டிலும் அக்கவிதையியல் இன்றைய நடைமுறைக்கு ஏற்றது. செவ்வியல் சார்ந்த தமிழ்க் கவிதையியல் மேலைக் கவிஞர்கள் தரும் வறண்ட வாழ்க்கைத் தத்துவத்திற்கு மருந்தாகி உள்மன இன்பங்களை அதிகரிக்க வல்லது. தமிழில் உள்ள அகத்திணைக் கவிதைகள் சிறு தவறும் இல்லாத, பெரிதும் பொருத்தமான, உளவியல் அடிப்படை கொண்ட ஓர் அமைப்பிற்குள் இயங்குகின்றன.

கவிஞரும் திறனாய்வாளரும் பன்மொழி அறிஞருமான ஸ்மித்தின் மதிப்பீட்டை யாரும் புறக்கணிக்க இயலாது.

திருக்குறள், நாலடியார், திருவாசகம் ஆகியவற்றை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த போப் அடிகளார் (Rev. G.U.Pope) தமிழில் வடமொழியின் தாக்கம் அதிகம் என்று தமிழர்கள் எண்ணியிருந்த காலத்திலேயே தமிழின் தனித்தியங்கும் ஆற்றலைப் பாராட்டி, "Tamil is an independent language with a copious and original Vocabulary" என்று எடுத்துரைத்தார். திருக்குறளுக்கும் நாலடியாருக்கும் அவர் எழுதிய ஆங்கில முன்னுரைகளில் தமிழின் சொல்வளம் சிறப்பாகப் பேசப்படுகிறது. அளவிறந்த சொற்களைக் கொண்டிருக்கும் தமிழ் வினைத்தொகை, வேற்றுமைத் தொகை, பண்புத்தொகை, உவமைத் தொகை, உம்மைத்தொகை, அன்மொழித்தொகை ஆகிய ஆறு தொகைகள் வழியும் பெயரெச்சம், வினையெச்சம், சொல்லெச்சம் போன்ற இலக்கண உத்திகள் வழியும் சொற்சிக்கனத்தைக் கையாளக் கவிஞர்களுக்குப் பெருந்துணையாயிருந்ததைத் தமது மொழிபெயர்ப்புப் பணியால் உணர்ந்து கொண்ட போப், "Ellipsis, though difficult to master, is one of the great beauties of Tamil" என்பார். புறநானூறு, திருக்குறள், நாலடியார் போன்ற நூல்களிலிருந்து தெளிவாகும் தமிழர்களின் அறவுணர்வை வியந்து போற்றும் போப் தமிழினத்திற்கு இதற்காக இறைவன் தனிப்பெரும் பேறு அளிப்பது உறுதி என்று உள்ளம் நெகிழ்ந்து உரைப்பார்.

I have felt sometimes as if there must be a blessing in store for a people that delight so utterly in compositions thus remarkably expressive of a hunger and thirst after righteousness. They are the foremost among the peoples of India and the Kural and Nālati have helped to make them so.

வடமொழியிலுள்ள அறநூல்களோடு இவற்றை ஒப்பிட்டு அவற்றின் கருத்தொற்றுமைகளால் அவை வடநூல்களின் தழுவல்கள் அல்லது மொழி பெயர்ப்புகள் என்று கூறிவந்தவரை மறுத்துத் தமிழ்ப் பாடல்களே மூலமாயிருந்திருக்க வேண்டும் என்பார் போப். ஒற்றுமைக் கூறுகளுள்ள பாடல்களை அருகருகு வைத்து அவற்றின் இயல்பான தன்மை, சொல்லாட்சி, கருத்தை வெளிப்படுத்தும் பாங்கு ஆகியவற்றை ஆராய்வார் இதனைப் புரிந்துகொள்ள முடியும் என்று கூறும் அடிகளார், கால ஆராய்ச்சிகூடத் தேவையில்லை என்பதைப் புலப்படுத்துவார். அன்னார் நாலடியாரில் கையாளப்பட்டுள்ள வெண்பா வகைகளை ஆழமான ஆய்வுக்கு உட்படுத்தி அறமுணர்த்தலுக்கு அப்பாவகை சிறப்புறப் பயன்படுதலைச் சுட்டிக் காட்டுவதோடு வடமொழி யாப்பு, மேலை மொழி யாப்பு வகைகளோடு தமிழ் யாப்பை ஒப்பிட்டு அதன் பெருமையை எடுத்துக்காட்டுவார்.

The system may at first appear artificial but its superiority to Sanskrit prosody is very striking. It is admirably adapted to the nature of the Tamil language and seems naturally evolved from it. The great variety of the melody of Venpā verse is apparent from the fact that 512 types of the longer lines can be formed. This variety is in effect much increased by the fact that a tēmā may be really a spondee or a trochee and a pulimā may be anapaest, tribrach, bacchius or cretic; and similarly the feet.

அவர் காலத்தில் ஆங்கிலக் கல்வியால் கவரப்பட்டிருந்த தமிழ் இளைஞர்களுக்கு அவர்களது அரிய மொழியான தமிழைப் புறக்கணிக்க வேண்டாமென்று அடிகளார் கூறிய அறிவுரை நம்மவர் அறிய வேண்டிய செய்தியாகும்.

திருக்குறள், நாலடியார் போன்ற அற இலக்கியங்களை முதலில் போற்றிவந்த மேலை அறிஞர்கள் காலத்தே சங்க இலக்கியங்கள் நல்ல ஆங்கில மொழிபெயர்ப்புகள் மூலம் வெளியுலகிற்கு அறிமுகப்படுத்தப் பெறவில்லை. அவற்றின் செம்பதிப்புகள் அச்சேறி மொழிபெயர்ப்புகளும் வரத் தொடங்கியவுடன் அவை உலக இலக்கிய அரங்கில் இடம்பெறத்தக்கவை என்பது உணரப்பட்டது. Interior Landscape, Poems of Love and War எனும் இரண்டு தொகுதிகள் மூலம் அகப்புறப் பாடல்கள் சிலவற்றை ஆங்கிலத்தில் தந்த ஏ.கே. இராமானுஜன் பத்துப்பாட்டையும் எட்டுத் தொகையையும் ஒத்த போரையும் காதலையும் பற்றி

நாடகத் தற்கூற்றுப் பாக்களைக் கொண்ட தொகை நூல்களை வேறு எந்த மொழியிலும் காண இயலாது என்று கருத்தறிவித்தார். கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்துப் பேராசிரியரும் பல இலக்கியங்களில் ஆழங்கால் பட்டவருமான ஆஷர் (R.E. Asher) சங்கப் பாடல்களைத் தரத்தில் விஞ்சியவை உலக இலக்கியத்தில் இல்லை (They are "unsurpassed in world literature") என்று உறுதிபடக் கூறினார். இவர்களுக்கெல்லாம் முன்னமேயே பியர் மெயில் (Pierre Meile) எனும் அறிஞர் தமது ''திராவிட இலக்கியங்கள்'' எனும் ஆங்கிலக் கட்டுரையில் சங்கச் சான்றோர் கவிதைகள் பற்றிக் கூறியிருந்த கருத்துகள் நேர்மையானவை என்பது தெளிவாகியது. அன்னார் இருபதாம் நூற்றாண்டின் முதற்பத்திலேயே, சங்க இலக்கியங்கள் சமயம் சாராதவை, தலையாய செவ்விலக்கியங்கள், தன்னுணர்ச்சிப் பாக்களின் அளவுகோலாகக் கருதப்பெறும் பிண்டாரின் கவிதைகளினும் மேலானவை, பிற இந்திய மொழிகளில் உள்ள இலக்கியங்களின் செயற்கைத்தன்மை அற்றவை என்றெல்லாம் எடுத்துரைத்திருந்தது வியப்புக் குரியதாகும்.

The literary qualities of these poems are of the highest order. Short, elegant and unexaggerated, almost always lively and animated with very human feelings, sometimes of most poignant emotion, they are classics in the fullest sense, more sober and less rhetorical than Pindar who is the best term of comparison. These are the only literary productions of India which are free of conceits and which, without abusing intellectual virtuosity, have the grace, the balance and the sobriety of Attic art.

என்று அவர் மதிப்பீடு செய்திருப்பது உயர்வு நவிற்சியற்றது என்பதை இப்பொழுது மேலை அறிஞர் உலகம் புரிந்து கொண்டுள்ளது.

ஜார்ஜ் ஹார்ட் (G.L. Hart) தமது The Poems of Ancient Tamil, Their milieu and Their Sanskrit Counterparts, The Relation between Tamil and Classical Sanskrit Literature எனும் இரண்டு நூல்களிலும் லியன்ஹார்டு (Siegfried Lienhard) எனும் அறிஞர் தமது "Tamil Literature Conventions and Sanskrit Muktaka Poetry" எனும் கட்டுரையிலும் வடமொழி இலக்கியங்களில் சங்கச் சான்றோர் கவிதைகளின் தாக்கம் பற்றி விரிவாகப் பேசுகின்றனர். லியன்ஹார்டு பல வடமொழிக் கவிசமயங்கள் எனப்படும் உத்திகள் தமிழிலிருந்து பெறப்பட்டவையென்றும் இவை பிராகிருத நூல்களின் வழியாகத் தமிழிலிருந்து வடமொழிக்குச் சென்றிருக்கவேண்டும் என்றும் தெளிவுபடுத்திப் பல சான்றுகள் தருவார்.

இவர்களிருவருடைய கூற்றுகளையும் ஏற்றுக் கொள்ளும் கர்நாடகப் பல்கலைக் கழகத்து வடமொழிப் பேராசிரியர் கே. கிருஷ்ணமூர்த்தி தமது காளிதாசனைப் பற்றிய நூலில் பிராகிருத, வடமொழிக் காப்பியங்கள் கவிதை உத்திகளுக்கு மட்டுமல்லாமல் யாப்பு வகைகளுக்கும் சங்க இலக்கியங்களுக்குக் கடன் பட்டிருக்கின்றன என்பார்.

Āryā and Skandhaka (or Khandaa), sometimes called Āryāgiti are metres based on syllabic instants (mātrās) and they have their origin in Tamil metres. While paumacariu is in Āryā, all the later Prakrit kāvyas like Setubandha are mostly in Āryāgiti metre. Kalidāsā's nati in the Abhijñānā Sākuntala sings about summer in a Mahārāsṭi verse in her love - letter. This culture of the Deccan was influenced primarily by Tamil sources... Mahārāsṭra and Vidarbha bordering Tamilnadu must have acted as a bridge or carrier of Tamil poetic conventions directly into Mahārāsṭri Prakrit and through it into classical Sanskrit.

ஜார்ஜ் ஹார்ட்டும் லியன் ஹார்டும் சுட்டிக்காட்டிய காளிதாசன் கவிதைகளில் காணப்படும் சங்க இலக்கியச் செல்வாக்கு அவனுக்குப் பெருமை சேர்ப்பதாகும் என்பதைப் புரிந்து பேசுகிறார் வடமொழிப் பேராசிரியர் கிருஷ்ணமூர்த்தி.

செம்மொழிக்குரிய தகுதிகளையெல்லாம் பட்டியலிட்டு அவையெல்லாம் தமிழுக்கிருப்பதால் அதனைச் செம்மொழியென்று இந்திய அரசு அறிவிக்கவேண்டுமென்று வலியுறுத்திய ஜார்ஜ் ஹார்ட் செம்மொழித் தமிழ் பற்றியும் தமிழில் உள்ள செவ்விலக்கியங்கள் பற்றியும் தொடர்ந்து எழுதி வருகிறார். தமிழ், சமற்கிருத இலக்கியங்களின் தரம் பற்றியும் அவற்றிற்கிடையே நிகழ்ந்த கொள்ளல், கொடுத்தல் பற்றியும் சமற்கிருதப் பேராசிரியரும் கிரேக்கம், இலத்தீன், எபிரேயம், தமிழ், சமற்கிருதம் ஆகிய ஐந்து செவ்வியல் மொழி இலக்கியங்களையும் முறையாகப் பயின்றவருமாகிய ஜார்ஜ் ஹார்ட் கூறும் கருத்துகள் செம்மொழித் தமிழின் உண்மையான சிறப்பை ஒப்பீட்டு முறையில் உலகிற்கு உணர்த்துபவை. அவற்றின் சுருக்கம் வருமாறு:

தமிழ்க் கவிதையைத் தோற்றுவித்த இந்தியாவின் தென்பகுதி மரபிற்கும் சத்தசாயி நூலிற்கு முந்தைய சமற்கிருதக் கவிதைக்கும் நெருக்கமான உறவு இருப்பதை நாம் தெளிவாகக் காணமுடியும். இந்த உறவு எவ்வாறு ஏற்பட்டது என்பதற்கு மூன்று வழிகளை எண்ணிப் பார்க்கலாம். (1) சமஸ்கிருதத்திலிருந்து தமிழ் இவற்றைப் பெற்றிருக்கலாம். (2) இரண்டு இலக்கியங்களிலும் காணப்பெறும் பாடுபொருள்களும் கவிதைக் கருக்களும் உத்திகளும் சமஸ்கிருதக் காவியங்களுக்கு முற்பட்ட காலத்தில் ஓர் அனைத்திந்திய மரபிற்குச் சொந்தமானவையாக இருந்திருக்கலாம். (3) சமஸ்கிருதம் அவற்றை இராமாயண, மகாபாரத காலத்திற்குச் சற்று முன்பாகவே தமிழிலிருந்து எடுத்துக் கொண்டிருக்கலாம். இவ்விளக்கங்களில் சமஸ்கிருதத்திலிருந்து இக்கவிதைக் கூறுகளைத் தமிழ் பெற்றிருக்கலாம் என்ற முதல் ஊகம் முற்றும் தவறானதென்று ஹார்ட் சான்றுகளோடு நிறுவுவார். சங்கத் தொகை நூல்கள் காலத்தில் சமஸ்கிருதக் காவியங்கள் தமிழகத்தில் அறியப்பட்டிருந்தனவாயினும் குறிப்பிட்ட கவிமரபுகளையும் உத்திகளையும் தமிழ் சமஸ்கிருதத்திலிருந்து பெற்றிருக்கமுடியாது. அவை தமிழ் இலக்கியங்களில் முற்றும் பொருத்தமானவையாய் இடம்பெற்றுள்ளன. சான்றாக, மலர்கள், விலங்குகள் பற்றிய கூறுகள் தமிழுக்கே உரிய முறையில் குறிப்பாகப் பொருள் உணர்த்தும் வகையில் பயன்படுத்தப் பெற்றுள்ளன. சமஸ்கிருதக் காவியங்களில் இவை குறிப்பாகப் பொருள் உணர்த்தவில்லை; வெறும் வருணனைகளாகவே நின்றுவிடுகின்றன. சமற்கிருதக் காவியங்களிலும்

வடமொழியிலுள்ள புத்த சரிதத்திலும் அவை தமிழ் இலக்கியங்களைவிட மிகக் குறைவான அளவிலேயே இடம்பெறுகின்றன. மேலும், இக்கவிதைக் கூறுகள் இந்தோ–ஆரியப் பண்பாட்டைவிடத் தமிழ்ப் பண்பாட்டிற்கே பெரிதும் ஏற்றவையாய் உள்ளன. மலர்களை எடுத்துக் கொண்டால் பழந்தமிழகத்தில் அவை பலவகைகளில் பயன்படுத்தப் பெற்றனவென்றும் தமிழ்ச் சமுதாயத்தின் ஒவ்வொரு இன்றியமையாத வாழ்வுத்துறையிலும் அவை தம் பங்களிப்பைச் செய்தனவென்றும் அறிகிறோம். ஆனால் பழம் இந்தோ–ஆரியச் சமுதாய வாழ்க்கையில் மலர்களுக்கு இத்தகைய இடம் அளிக்கப்படவில்லை. சமஸ்கிருதக் காவியங்களிலும் மலர்கள் சங்க இலக்கியங்களினும் குறைவான இடங்களிலேயே குறிப்பிடப்பட்டுள்ளன. விலங்குகளை எடுத்துக் கொண்டாலும் அவை தமிழ்ச் சமுதாயப் பண்பாட்டு மரபிற்கு ஏற்ற இடத்தையே இலக்கியங்களில் தரப்பட்டிருப்பதை அறியலாம். திருமணம் மாந்தர்களின் வாழ்வில் மையமான, தூய்மையான நிகழ்வாகத் தமிழர்களால் கருதப்பெற்றது. எனவேதான், தமிழ்க் கவிஞர்கள் இயற்கை உலகில் பின்னிக்கிடந்த கொடிகளிலும் கூடி மகிழ்ந்த விலங்குகளிலும் ஆண்–பெண் காதலின் இயல்பான சிறப்பைக் கண்டார்கள். ஆனால் பழம் இந்தோ –ஆரிய சமுதாயத்தில் திருமணத்திற்கு இத்தகைய சிறப்பிடம் அளிக்கப்படவில்லை. எனவே ஆரியர் களிடமிருந்து ஆண்–பெண் காதலைக் குறிப்பாகச் சுட்டும் பறவைகள், விலங்குகள் பற்றிய காட்சிகளைத் தமிழர்கள் பெற்றார்கள் என்று சொல்வது பொருந்தாது.

இவ்விலக்கியக் கூறுகள் பொதுவான அனைத்திந்திய மரபிற்குச் சொந்தமாயிருந்தன வென்றும் தமிழ் மரபும் ஆரிய மரபும் அவற்றை ஒன்றிலிருந்து ஒன்று கடனாகப் பெறாமல் தனித்தனியே எடுத்துக் கொண்டனவென்றும் கூறுவது சரியா? இந்த ஊகத்தை முற்றுமாகப் புறக்கணிக்க முடியாதென்றாலும் சூழ்நிலைகளிலிருந்து நிர்ணயிக்கப் பெறும் சாட்சியம் (Circumstantial evidence) இதற்கு எதிரானதாகவே உள்ளது. சமஸ்கிருதக் காவியங்கள் எழுதப்பெற்ற காலத்தில் சொற்கள், பழக்க வழக்கங்கள், செய்யுள் அடிகள் தொடர்பான திராவிடக் கூறுகள் பேரளவில் ஆரிய இந்தியாவைச் சென்றடைந்தன. சமஸ்கிருதக் காவியங்களிலும் புத்த சரிதத்திலும் இவை மேலெழுந்தவாரியாக, தொழில்நுட்பம் அற்ற தன்மையில், வெறும் ஒப்பீடுகளாக, ஒருபுடை உவமைகளாகவே பயன்படுத்தப் பெறுகின்றன. அவை ஆரிய இந்தியாவிற்கு வெளியிலிருந்து பெறப்பட்டவை என்பது தெளிவாகவே தெரிகிறது. தமிழில் எவ்வளவு நுண்ணிய முறையில் குறிப்பால் பொருள் உணர்த்த இவை கையாளப்பட்டுள்ளன என்பதை அறியாத வடநூலார் வெளிப்படையான வெற்று வருணனைகளுக்காக இவற்றை எடுத்துக் கொள்கின்றனர். சமஸ்கிருதத்தின் ஆதிகாவியம் என்று கருதப்பெறும் இராமாயணத்திலும் புத்தசரிதத்திலும் இவை குறிப்பிடத்தக்க அளவிற்கு இடம் பெற்றாலும் அவற்றைக் கலை நயம் இன்றி அவ்வாசிரியர்கள் கையாள்வதால் அவை அவர்கள் காலத்திற்குச் சற்று முன்தான் வெளி மூலத்திலிருந்து பெறப்பட்டவை என்பதை நாம் அறிய முடிகின்றது. அவ்வுத்திகள் சிறப்புறச் செயல்படாமையால் அக்காவியங்களிலும் கவிதை பொலிவிழந்து தரத்தில் தாழ்ந்து போகிறது. ("In my opinion the relative newness of the southern poetic elements in the Ramayana and the Buddhacarita accounts for their clumsy treatment in those two works, and, since they are quite important for the effects the authors wish to achieve in those works, this accounts at least in part for the inferior poetic quality of those poems.")

காளிதாசனின் படைப்புகள் தோற்றம் பெற்றபோது, பல புதிய கூறுகள் தென்னகத்திலிருந்து சமஸ்கிருதக் கவிதை உலகில் புகுந்திருந்தன. செவ்வியல் சமஸ்கிருதத்திலும் காளிதாசனின் கவிதைகளிலும் புகுந்த தென்னிந்தியக் கூறுகளின் எண்ணிக்கை மிகப் பெரிது. தென்னக மரபின் ஏதோ ஒரு கூறின் தாக்கத்திற்கு உட்படாத கவிதையை அவற்றில் காண முடியாது. ("There is scarcely a verse in which some element cannot be found that can be traced back to the southern tradition.") தென்னகக் கூறுகளை இயல்பாகவும் நுட்பமாகவும் பயன்படுத்துவதிலும் வடக்கிற்குச் சொந்தமான கூறுகளோடு முறையாக அவற்றை இணைப்பதிலும் காளிதாசன் வெற்றி கண்டான். நமக்குத் தெரிந்த அளவில், இதனை முதலில் செய்த வடமொழிக் கவிஞன் அவனே. காளிதாசன் தலைசிறந்த கவிஞனானதாலும், இந்த இருபெரிய பண்பாடுகளின் இணைப்பை அவன் செம்மையுறச் செய்ததாலும் எதிர்காலத்து வடமொழிக் கவிதைக்கும் இதர இந்திய மொழிகளின் கவிதைக்கும் அவன் வழி காட்டியாகவும் அளவுகோலாகவும் ஆனான். ஆனால், அவனைப்பற்றி எழுதியவர்களால் அவனது கவிதைத் தரத்தை எட்ட முடியவில்லை என்பது வருந்தத்தக்க உண்மையாகும். காளிதாசனுக்குப் பிறகு சமஸ்கிருதக் கவிதை உலகில் புதுமை ஏதும் நிகழவில்லை. அக்கவிதையானது மரபுக்கு அடிமையாகி தேவையற்ற முறையில் கடினமானதாக வளர்ச்சி பெற்றது. காளிதாசனுக்குப் பிறகு வந்தவர்கள் கவிதை உணர்வு அற்றவர்களாகவே தென்படுகிறார்கள். இங்கொன்றும் அங்கொன்றுமாகவே நல்ல கவிதையைக் காணமுடியும். ஒரே ஒரு விதிவிலக்கென்று பாகவத புராணத்தின் பெயர் தெரியாத ஆசிரியரைக் குறிப்பிடலாம். அவர் தமிழ் ஆழ்வார்களின் கவிதைகளிலிருந்தும் அவற்றின் மரபிலிருந்தும் தமது கவிதைக்குரிய உந்துசக்தியைப் பெற்றார். ஆனால் அவரைப் பின்பற்றக்கூடிய தரமான கவிஞர்கள் அவருக்குப் பின்னால் வடமொழியில் தோன்றவில்லை.

இவ்வாறெல்லாம் தமிழ்ச் செவ்விலக்கியங்களின் உயர்வைப் பல ஏதுக்கள் காட்டி நிறுவி வருபவர் ஜார்ஜ்ஹார்ட்.

செம்மொழித் தமிழ் பற்றியும் தமிழ்ச் செவ்விலக்கியங்கள் பற்றியும் எல்லிஸ், போப், சுவெலபில், பிரான்சுவா குரோ, ஹார்ட் போன்றோர் தொடங்கி வைத்த ஆய்வுப்பணி டேவிட் சல்மன் (David Shulman), துபையான்ஸ்கி (Dubiansky), வாசக் (Vacek), பக் (Buck), பெல்லகிரினி (Guido Pellegrini) போன்றவர்களால் தொடரப்படுகிறது. தமிழ் உயர்தனிச் செம்மொழி என்பதை உலக அறிஞர் அரங்கம் உறுதிப்படுத்தும் நாள் நெருங்கிக் கொண்டிருக்கிறது. இதனை "உலக முதல் செம்மொழித் தமிழ் மாநாடு" விரைவுபடுத்தும் என்பதில் ஐயமில்லை.

❖

# செம்மொழித் தொன்மையும் தொடர்ச்சியும்



முனைவர் ம. ரா. போ. குருசாமி

**பிற செம்மொழிகளும் தமிழும்**

இலத்தீன், கிரேக்கம், சமற்கிருதம், சீனம் ஆகியவை தமிழைக் கணக்கில் கொள்ளாதபோது செம்மொழிகள் எனப்படுகின்றன.

ஒரு மொழியைச் செம்மொழித் தரம் உடையதாகச் சொல்வது, அந்த மொழியின் அமைப்பைக் கருதித்தான். சமுதாயத்தில் ஒரு மொழிக்குப் பிற மொழிகளுக்கு இல்லாத அளவுக்குச் செல்வாக்கு இருக்கலாம். அதனால் பரவலாக அந்த மொழி வழக்கில் இருக்கும், செல்வாக்கு உள்ளதனாலேயோ பரவலாக வழங்குகிறது என்பதாலேயோ ஒரு மொழி செம்மொழி ஆகிவிடாது. எடுத்துக்காட்டாக ஆங்கில மொழியைக் கொள்ளலாம். அரசியல் செல்வாக்கால் / ஆட்சி மேலாண்மையால் வேறு எந்த மொழிக்கும் இல்லாத அளவுக்கு ஆங்கிலம் சிறப்புப் பெற்றுள்ளது. ஆங்கிலேயரின் 'சாம்ராஜ்யம்' கதிரவன் மறையாத எல்லைப் பரப்பினை உடையதாக இருந்தது. இன்று அந்தப் 'பேராண்மை' ஆங்கிலருக்கு இல்லை. ஆனால், ஆங்கிலத்தின் செல்வாக்கு எவ்வகையிலும் குறைந்துவிடவில்லை. உலகப் பொதுமொழிகளுள் ஆங்கிலமே முதல் இடத்தில் இருக்கிறது என்பது மிகையன்று. ஆனால், ஆங்கிலத்தைச் செம்மொழி – கிளாசிக்கல் லாங்குவேஜ்– என்று எவரும் சொல்ல மாட்டார்கள்.

சமற்கிருதத்தைப் பேசுவார் எவரும் இல்லை. அந்த மொழிக்கு என்று உலகில் எந்த நாடும் இல்லை. புகழ் இருக்கிற அளவுக்கு அந்த மொழிக்குச் செல்வாக்கு இல்லை. ஆனால், சமற்கிருதம் ஒரு செம்மொழி என ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது.

இந்திய அரங்கில் வெள்ளை அரசினரின் ஆதரவால் ஐந்து மொழிகள் செம்மொழிகளாக அறிவிக்கப்பட்டன. அவை : சமற்கிருதம், பாரசீகம், அரேபியம், பாலி, பிராகிருதம் என்பனவாகும். 1835 இந்திய வரலாற்றில் குறிப்பிடத்தகுந்த ஆண்டாகும். கல்வித்துறை மற்றும் நீதி நிருவாகத் துறை ஆகியவற்றின் நடைமுறைக்குரிய நெறிமுறைகளை மெக்காலே வகுத்து வரையறுத்த ஆண்டு அதுதான். அந்த அறிக்கையின் நடைமுறைக் கோளாறுகள் பிரிட்டிஷ் ஆட்சிக்குப் பின்னும் இங்கே தொடர்ந்து கண்ணுங் கருத்துமாகப் பேணப்பட்டு வருகின்றது.

மேற்குறித்த ஐந்து மொழிகளில் பாலி, பிராகிருதம் தவிர ஏனைய மூன்றும் செம்மொழி என்ற தகுதிப்பாட்டிலே இன்றும் போற்றப்படுகின்றன. இந்த வரையறையை மெக்காலே உறுதி செய்ததற்கு மதஅடிப்படையே காரணம். இந்துக்களின் செம்மொழியாகச் சமற்கிருதமும் இசுலாமியரின் செம்மொழிகளாக அரேபியமும் பாரசீகமும் ஏற்கப்பட்டுள்ளன. மொழியின் தரத்தை முடிவு செய்வதற்குச் சமயப் பின்னணி அமைத்தது வெள்ளையாட்சியின் 'ராஜதந்திரமே' காரணம் ஆகும் என்று கொள்வதில் தவறு ஏதும் இல்லை.

செம்மொழி என்னும் தகுநிலை பெறுவதற்குத் தொன்மை ஓர் இன்றியமையாத அலகு ஆகும். தொன்மையைச் செவ்வியலுக்கு ஒரு தகுதியாக ஏற்றுக் கொண்டால், சமற்கிருதம் முன் நிற்கும். அரேபியமும் பாரசீகமும் அந்த தகுதியைப் பெறுவதற்கு வழி இல்லை. அரேபிய எழுத்து வடிவம் பெற்றதே ஏழாம் நூற்றாண்டில் தான். அந்த நூற்றாண்டில்தான் குரான் செவ்விலக்கியமாகிறது. கி.பி. 8–9ஆம் நூற்றாண்டுப் பரப்பினையே பாரசீகத்தின் பொற்காலம் என்பர் வரலாறறிந்தோர். எவ்வகையில் பார்த்தாலும் தமிழின் தொன்மை இம்மொழிகட்கு இல்லை. பிரித்தாளும் பிரித்தானியப் பான்மையால் இசுலாமியரின் உவப்புக் கருதி அரேபியமும் பாரசீகமும் செம்மொழிகளாகக் கொள்ளப்பட்டன. சமற்கிருதம் இந்துக்களின் உவப்புக்காகச் சேர்க்கப்பட்டது என்றாலும் தொன்மை முதலான செவ்வியற் கூறுகளில் அது தகுதிப்பாடு

உடையதே என்பதில் ஐயமில்லை.

மேலே பட்டியலிடப்பட்ட மொழிகள் தவிர மற்றுள்ள இந்திய மொழிகளெல்லாம் தமிழ் உட்பட நாட்டு மொழிகள் எனப்பட்டன. ஆங்கிலத்தில் இவற்றை Vernacular என்று குறிப்பர். இந்தச் சொல்லுக்குச் சேம்பர்ஸ் அகராதி தரும் விளக்கம் வருமாறு: indigenous, native, spoken by people of the country or the country of one's own country a native language or dialect verna a home slave – மண் அல்லது நாட்டுக்கே உரிய என்ற விளக்கத்தோடு verna – சொந்த இடத்தில் பிறந்த அடிமை என்ற குறிப்பும் நம் நாட்டத்துக்கு உரியது.

**Classic / Classical**

கலை, பண்பாடு இவற்றின் ஆய்வுகளின்போது classic என்ற சொல்லும் classical என்ற சொல்லும் மீண்டும் மீண்டும் எடுத்தாளப் பெறுகின்றன. எனவே, இந்த இரு சொற்களையும் பற்றிய தெளிவு நமக்கு வேண்டும். இந்தச் சொற்களின் பின்னணியும் ஆதரவும் தேவை இல்லாமலே தமிழ் செவ்வியல் மொழிதான் என்பதனை நான் மறக்கவில்லை. ஆங்கிலத்தை மறந்துவிட்டு / புறக்கணித்துவிட்டு எந்த ஆராய்ச்சியையும் மேற்கொள்ளத் தெரியாத – மேற்கொள்ள விரும்பாத மெக்காலேதனம் இன்னமும் இங்கே இருப்பதால் இந்த ஆங்கிலச் சொற்கள் பற்றிக் கருதிப் பார்க்க வேண்டியுள்ளது.

பொதுவாகத் தொன்மை, சீர்மை ஆகிய இரண்டு இயல்புகள் classic / classical என்ற சொற்களின் ஆட்சியிலே காணப்படுகின்றன. ஆனால், அந்த அளவோடு மேலைநாட்டு மரபு நின்றுவிடுவதில்லை.

ஆங்கிலம் – ஆங்கிலம் – தமிழ் அகராதிகள் பல உண்டு. அவற்றுள் சென்னைப் பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ள அகரமுதலியைவிடச் சிறந்ததாக நான் கருதுகின்ற ஓர் அகராதி தரும் விளக்கத்தை இங்குக் காணலாம்.

Classic : Having very High Standard or Quality - தரம் அல்லது தகுதியில் மிகச் சிறப்புடைய... பண்டைய கிரேக்க அல்லது ரோம இலக்கிய மேம்பாடுடைய... ஏற்றுக் கொள்ளப்பட்ட மேம்பாடுடைய.

Classical : (opposite : modern) - of the art of ancient Greece Rome – பண்டைய கிரேக்க, இலத்தீன் கலைக்குரிய முதல் தரமான இலக்கிய நயம் வாய்ந்த.

Classicism the theory and practice of classical art and literature பண்டைய கிரேக்கக் கலை, இலக்கியங்கள் பற்றிய கொள்கை. இந்த அகராதியின் விளக்கத்தினால் மட்டுமன்றி, மேலைநாட்டுப் பின்னணி நல்கும் விளக்கங்களிலும் கிரேக்க, உரோமானியத் தொடர்பு செவ்வியலுக்கு உண்டு என்பதையும் நினைவிற் கொள்ள வேண்டியுள்ளது. கலைக்களஞ்சியங்களில் என்சைக்ளோப்பீடியா பிரிட்டானிக்காவுக்கு எப்போதும் முதல் இடம் உண்டு என்பதை மறுப்பார் இல்லை. அதனை ஆதாரமாகக் கொண்டு ஆனந்தவிகடன் வெளியீட்டகம் மிகச் சிறப்பாகப் பிரிட்டானியா தகவல் களஞ்சியம் வெளியிட்டுள்ளது.

செவ்வியல்வாதம், செவ்விலக்கியம் Classicism என்ற தலைப்புகளில் விகடனின் பிரிட்டானிய தகவல் களஞ்சியம் தரும் விளக்கங்கள் வருமாறு:

**செவ்வியல் வாதம்** (Classicism)

தொன்மையான கிரேக்க, ரோமானியக்

கலைகளை அடிப்படையாகக் கொண்ட

கலைமரபு அல்லது அழகியல் அணுகுமுறைகள்.

நவீன 'செவ்வியல் வாதம்' என்பது தொன்மைக் கலையின்

தாக்கத்தை உடைய நவீன கலைகளைக்

குறிக்கும். தொன்மைக் கலைகளின்

தாக்கத்தால் உருவானதால் 'செவ்வியல்'

என்ற பிரிவில் இவை அடங்குகின்றன.

ஒத்திசைவு, தெளிவு, கட்டுப்பாடு. பொதுத் தன்மை,

குறிக்கோள் போன்ற தன்மைகளைக் கொண்ட செவ்வியல்.

**செவ்வியலிலக்கியம் (Classical Literature)**

கலைத்துறைகளில் பண்டைய கிரேக்கம்

மற்றும் ரோம் நகரின் கோட்பாடுகள்,

வரலாற்று மரபு அழகியல் அணுகுமுறைகள்

அல்லது கலைப் பாணி. பண்டைய காலத்தில்

உருவாக்கப்பட்ட படைப்பு அல்லது அந்தப்

படைப்புகளால் உத்வேகம் பெற்ற பிந்தைய

படைப்புகளை இது குறிக்கலாம். பண்டைய

காலத்தின் உத்வேகம் கொண்டு பிற்காலத்தில்

படைக்கப்பட்டவற்றை நவீன செவ்வியல் எனும்

சொல் குறிக்கிறது. மிக விரிந்த தளத்தில்

செவ்வியல் என்பது நேர்த்தி, துல்லியம்,

எளிமை, கண்ணியம், கட்டுப்பாடு, ஒழுங்கு

மற்றும் விகிதாசார அளவு உள்ளிட்ட

நீடித்து நிற்பதும் உலகளாவியதுமான

பண்புகளைப் பின்பற்றுவதாகும்.

(பிரிட்டானியா தகவல் களஞ்சியம்

– 2 : பக். 228

– விகடன் பிரசுரம் 2007)

**மேலைச் செவ்வியல்**

செவ்வியல் (கிளாசிகல்) என்பதற்குக் கிரேக்க / உரோமானியத் தாக்கம் வேண்டும் / உண்டு என்பது மேலைநாட்டு மொழிகளுக்கு மட்டுமே பொருந்தும். திறனாய்வுத் துறை தொடர்பான ஆய்வுகளை மேற்கொள்ளும் நம்மவர்கள் நம் நாட்டுச் செவ்வியலை வரையறை செய்வதற்குக் கிரேக்க / உரோமானியக் கலைகளை மூல ஆதாரங்களாகக் கொள்ள வேண்டியதில்லை. இந்தோ–ஐரோப்பிய மொழிக் கூட்டத்தைச் சேர்ந்த சமற்கிருதச் செவ்வியலை ஆராய்வதற்குக்கூடக் கிரேக்க / உரோமானியப் பின்னணி தேவை இல்லை.

**தொன்மை மட்டுமா?**

கிரேக்க / உரோமானியச் செவ்வியலுக்கென வகுக்கப்பட்டுள்ள, பல கூறுகளை நம் மொழிகளின் செவ்வியல் ஆய்வுக்கு ஏற்றுக்கொள்ளலாம். அந்தக் கூறுகளை ஒரு பட்டியலிட்டு நோக்குவோமாயின் சீரிய கலைகள் யாவற்றுக்குமே அவை பொதுவாக / பெரும்பாலும் ஏற்றுக் கொள்ளப்படும் தகுதி உண்டு. அந்தக் கூறுகள் நேர்த்தி, துல்லியம், தெளிவு, குறிக்கோள், கண்ணியம், ஒழுங்கு, கட்டுப்பாடு போன்றனவாகும். இவை எல்லாவற்றையும் ஒரே சொல்லில் அடக்கிச் சுட்டவேண்டுமென்றால் 'செம்மை' என்று சொல்லலாம். Perfection என்ற ஆங்கிலச் சொல் செவ்வியலுக்கு நேரானதாகும். இந்தச் செம்மை அல்லது செவ்வியல் இன்று – நேற்று என்று அடையாளப்படுத்தக் கூடிய எளிய கால எல்லைக்குள் அடங்கக்கூடியதாக இருத்தல் கூடாது என்பது செம்மொழித் தகுதிக்குக் கூடுதலான ஓர் இலக்கணமாக அறிவுலகம் வரையறுத்துள்ளது. செம்மை, தொன்மை ஆகிய இரண்டு பண்புகள் செம்மொழிக்குரிய அடிப்படைகளாகும்.

தமிழை ஒரு செம்மொழி – செவ்வியல் மொழி என்று நாம் கொண்டாடும்போது அதன் தொன்மையும் செம்மையும் நினைவிலே கொள்ள வேண்டுவனவாகும்.

சிவ பரம்பொருளைச் செம்பொருள் என்றும் முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பரம்பொருளே பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியனே என்றும் இலக்கணம் சொல்வர் சைவ சமயச் சான்றோர். தொன்மையும் புதுமையும் இணையாவிடின் பரம்பொருள் நம் அறிவெல்லைக்குள் அளவிடப்படுவதான அற்பப் பொருளாகிவிடும். இந்த இயல் பழைமைக்குப் பழையதாய், புதுமைக்குப் புதியதாய் – இருப்பது செம்மொழிக்கும் உரியது என்பதைத் தமிழைச் செம்மொழி எனக் கொண்டாடுவோர் மனங்கொள்ள வேண்டும்.

தொன்றுதொட்டு இன்றுவரை உயிரும் உயிர்ப்பும் கொண்டதாயிருப்பதே செம்மொழி இயல்பு என்பதை மறவாமல் போற்ற வேண்டும்.

பழையது என்பது மட்டுமே செம்பொருள் என்றால், இன்றைய வாழ்வுக்குப் பயன்படாத 'கிழடு' ஆகிவிடும். பழம்பெருமை இல்லாவிடின், நேற்றுப் பெய்த மழையில் இன்று தலைகாட்டும் 'காளான்' ஆகிவிடும். இருமையும் கொண்டதே செம்மைக்கு இயல்பாகும்.

'உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும் செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று' என்பது தொல்காப்பியச் சூத்திரத்தின் ஒரு பகுதி. உயிரைக் காட்டிலும் நாணம் சிறந்தது; அந்த நாணத்தைவிடக் கற்பொழுக்கம் சிறந்தது. இந்தப் பண்பாட்டு விளக்கத்தை நமக்குத் தருவது ஓர் இலக்கண நூல் என்பதை நினைவிலே கொள்ள வேண்டும். நாணத்துக்குக் கேடு வரினும், கற்புக்குக் கேடு வரினும் மானம் அழிந்தது என்பது தெளிவு. மானம் என்ற அதிகாரத்துள் முதற்குறளுக்கு விளக்கம் வரைந்த பரிமேலழகர் "இறப்ப வரும்வழி இளிவந்தன செய்தாயினும் உய்க என்னும் வடநூல் முறைமையை மறுத்து, உடம்பினது நிலையின்மையையும் மானத்தினது நிலையுடைமையையும் தூக்கி, அவை செய்யற்க என்பதாம்" என்று விளக்கியுள்ளமை இங்கே நினைவூட்டத்தக்கது. 'மானம் அழிந்தபின் உயிர் வாழாமை முன்இனிதே' என்ற பண்பாட்டுச் சீர்மையை ஓர் இலக்கண நூல் வரையறுத்து விதிக்குமாயின், அந்த விதி பிறந்தமைக்கு உரிய இலக்கியம் எத்துணைப் பழைமை வாய்ந்ததாயிருக்க வேண்டும்! வாழ்வரங்கிலே நெடுங்காலம் வேர் ஊன்றிய கருத்தே இலக்கியத்தில் இடம் பெறும். இலக்கிய மரபிலே ஆழங்காற்பட்ட பண்பே இலக்கண நூலில் விதியாக இடம் பெறும். இஃது அடிப்படையான விதி.

**செவ்வியற் செய்திகள்**

தொல்காப்பியர் காலம் பற்றிக் கருத்து வேறுபாடு உண்டு. எனினும் கி.மு. மூன்றாம் நூற்றாண்டுக்குப் பின் தொல்காப்பியக் காலத்தை வரையறுத்தல் இல்லை.

அப்படியென்றால், இரண்டாயிரத்து முந்நூறு ஆண்டுப் பழைமையுடையது தொல்காப்பியம். இத்துணைப் பழைமையுடைய இலக்கணத்தில் உயிர், நாணம், கற்பு என்ற கணிப்பு இடம் பெற வேண்டுமாயின், அந்தப் பண்பாட்டை உருவாக்கிப் போற்றிய இலக்கியமும் அந்தச் சீர்மை சான்ற இலக்கியத்தைத் தந்த பண்பாடும் எத்துணைப் பழைமை வாய்ந்ததாயிருக்க வேண்டும் என்பதை எண்ணிப் பாருங்கள்.

**மேலும் சில**

'இம்மை மாறி மறுமை யாயினும்
நீ ஆகியர் எம் கணவனை
யான் ஆகியர் நின் நெஞ்சு நேர்பவளே'

என்பது மடவாரின் இம்மை மறுமை ஆவலைப் பண்பாட்டு ஓவியமாகக் காட்டியது.

'மரம்சா மருந்தும் கொள்ளார்
உரம் சாச் செய்யார் உயர் தவம்'

என்பது கொல்லாமை யறத்தை மரம் செடி கொடிகளுக்கும் சார்த்திக் கண்ட – சார்த்திக் கொண்ட பண்பாட்டு ஓவியமாகும்.

'யாதும் ஊரே யாவரும் கேளிர்'

என்பது மேடையலங்கார ஆரவாரச் சொல் அன்று என்பதை அடுத்த வரி புலப்படுத்திவிடும்.

'தீதும் நன்றும் பிறர்தர வாரா.' – இப்படி ஒரு தத்துவத் தெளிவு பிறக்க வேண்டுமாயின் தமிழ்ப் பண்பாட்டின் சீர்மை எத்துணைத் தொன்மை உடையது என்பதை எண்ணிப் பாருங்கள். அம்மட்டோ ?

'மாட்சியிற் பெரியோரை வியத்தலும் இலமே
சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே'

என்ற ஞானத் தெளிவையும் கணியன் பூங்குன்றனார் தெளிவுறுத்துகின்றார் அல்லரோ!

ஆதரிக்கும் வள்ளலை 'அவன்' என்றும் அவனது வள்ளன்மையை நாடித் தேடும் புலவரை 'அவர்' என்றும் சுட்டும் பண்பாடு புறநானூற்றிலே காணப்படுகிறது. 'அவனை அவர் பாடியது' – 'மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் பாடியது' என்ற தொல் வழக்காறுகள் நினைவிற் போற்றத் தக்கன அல்லவோ!

'புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்
வலவன் ஏவா வான ஊர்தி
எய்துப என்ப'

போன்ற வரிகள் பாரறிய நம் பண்பாட்டுப் பழைமையினைப் புலப்படுத்துவன அல்லவோ!

எழுத்துகட்குப் பெயரிட்ட நம் முன்னோர் உயிரெழுத்து, மெய்யெழுத்து எனக் குறித்தமை மற்ற எம்மொழிக்கும் இல்லாத சிறப்பினைச் சுட்டுவதாகும். வௌவல், கான்சொனென்ட் என்று முறையே உயிரெழுத்தையும் மெய்யெழுத்தையும் குறிப்பிடுவர். இயங்கும் / இயக்கும் உயிர் என்றோ, இயக்கப்படும் உடல் (மெய்) என்றோ ஆங்கில நெடுங்கணக்கில் பெயர் இல்லை. 'அல்' என்றும், 'அச்' என்றும் வடமொழியில் முறையே உயிரெழுத்தையும் மெய்யெழுத்தையும் குறிப்பர். அங்கும் நம் மொழியிற் போல உயிர் இயல்பையும் மெய் இயல்பையும் அல், அச் என்ற பெயர்கள் சுட்டுவதில்லை.

உயிர்மெய் யெழுத்துக்குத் தமிழ் வரையறுத்துள்ள இலக்கண நுட்பம் வேறு எம்மொழியிலும் காணல் இயலாது. எல்லா மொழிகளிலும் தானே இயங்கவல்லது உயிர் என்பதும் உயிரோடு சேர்ந்தே மெய் இயங்கும் என்பதும் பொது இயல்புகளே. ஆனால், உயிர், மெய், உயிர்மெய் என்று பெயரிட்ட பாங்கிலேயே தத்துவத் தெளிவையும் இணைத்துச் சுட்டியது தமிழ் மட்டுமே. உயிர்மெய்க்குத் தந்த விளக்கத்தைச் சற்றே எண்ணிப் பாருங்கள்.

'புள்ளிவிட்டு அவ்வொடு முன்உரு வாகியும்,
ஏனை உயிரோடு உருவு திரிந்தும்,
உயிர் அளவாய் அதன் வடிவு ஒழித்து, இருவயின்
பெயரொடும் ஒற்றுமுன்னாய் வரும் உயிர் மெய்'

இந் நூற்பாவினைத் தத்துவ விளக்கங்கொண்டு விரிக்கப் புகின், மிக விரியும். இலக்கணத்தில் தத்துவத்தை இணையச் செய்த சீர்மை / செம்மை தமிழ் மொழியின் தனிச் சிறப்பு என்பது சற்றும் மிகை அன்று.

திணைப் பாகுபாட்டிலும் தமிழ் இலக்கணம் தன் முத்திரையைப் பதித்துள்ளது. பொருள்களை உயர்திணை, அஃறிணை, (அல் + திணை) என இரண்டாக்கினர். 'திணை' என்ற சொல்லுக்கு ஒழுகலாறு என்பது பொருள். பொருள்களைப் பிரிப்பதற்குரிய அலகு / அளவீடு அதனதன் ஒழுகலாற்றைப் பொறுத்தது. உயர்திணை என்றால், ஒழுகலாற்றால் உயர்ந்தது, அஃறிணை என்றால் ஒழுகலாற்றால் உயர்வு அல்லாதது.

உயர்திணை என்று ஒன்றைச் சொல்லிவிட்டால், அடுத்தது உயர்வு இல்லாத திணை; தாழ் திணை என்றுதானே சுட்ட வேண்டும் ? தமிழ் இலக்கணம் உயர்வு பெற்றதை உயர்திணை என்று சொன்னதோடு, உயர்வு அல்லாத திணை என்று சொல்லியதுதான் தமிழ் மொழியின் செவ்வியல் சுட்டுவதாகும். எதுவுமே – படைக்கப்பட்ட எதுவுமே தாழ்ந்தது அன்று. அந்தந்தப்

பொருள் அந்தந்த எல்லையில் சிறப்புக் கொண்டதேயாகும். கருடனின் கூரிய பார்வை மனிதனுக்கு இல்லை. நாயின் மோப்ப ஆற்றல் நமக்கு இல்லை. இப்படி எண்ணிப் பார்த்தால், எதனையும் தாழ்வு என்று சுட்டுதல் பண்பாடு ஆகாது. உயர்திணை, அஃறிணை என்று தொன்றுதொட்டு வரும் இலக்கணம் பேசுகிறது என்றால், தமிழ்மொழியின் செவ்வியல் எத்துணை உயர்வுடையது என்பதை விளக்கிட வேறு சான்றுகள் தேடவேண்டுமோ ?

### தொன்மை தொடர்தல் வேண்டும்

தமிழின் செவ்வியலைப் பழைமையோடு சார்த்திக் காண்பது போதாது. பழைமை ஒன்றையே போற்றும் இனம் வளராது, வாழாது.

இலக்கியத்தில் – மொழியில் செவ்வியல் தொடர் வழக்காக அமைதல் வேண்டும்.

கத்தி முன்னொரு காலத்தில் கூர்மையாக இருந்தது என்றால், பயன்பாட்டுக்கு உதவாது. என்றும் புலராது யாணர்நாட் செல்லுகினும் நின்றலர்ந்து தேன்பிலிற்றும் கற்பக மலர் போன்றது திருக்குறள் என்று விளக்கும் திருவள்ளுவமாலைச் செய்யுள் நினைவிலே கொள்ளத்தக்கது. பண்டுபோல இன்றும் இனியும் பயன்படும் சீர்மையே செவ்வியலின் தன்மையாகும்.

உள்ளுறை என்ற தனிச்சிறப்பான தமிழ் இலக்கிய உடைமை சங்க நூல்களோடு ஒடுங்கி விடுவது செவ்வியலுக்குப் பொருந்தாது. (உள்ளுறையின் தனித்தன்மையை நிறுவிக் காட்டுவது இக்கட்டுரையின் எல்லைக்கு அப்பாற்பட்டது என்பதால் விரித்துரைக்கவில்லை.) கருப்பொருட் காட்சியை உட்கருத்து உடையதாகக் கற்பித்துக் காட்டுவது உள்ளுறை என்று அதன் இலக்கணத்தை மிகச் சுருக்கமாகச் சொல்லலாம். இயற்கைக் காட்சியில் உவமை ஒவியம் மட்டுமே இருக்கும். உபமேயம் ஆகிய பொருளை இலக்கிய அறிஞன்தான் நுணுகி நோக்கி விளங்கிக் கொள்ள வேண்டும். அற்புதமான இந்த உள்ளுறைக் காட்சி நம்மாழ்வார் திருவாய்மொழியிலும் அமைந்துள்ளது.

> ‘மெல்இலைச் செல்வ வண்கொடிப் புல்க
> வீங்கு இளம் தாள் கமுகின்
> மல்இலை மடல் வாழை ஈன்கனி சூழ்ந்து
> மணம் கமழ்ந்து
> புல்இலைத் தெங்கினூடு கால் உலவும்
> தண் திருப்புலியூர்
> மல்லல் அம் செல்வக் கண்ணன் தாள் அடைந்தாள்
> இம் மடவரலே’

இயற்கைக் காட்சி (கருப்பொருட்காட்சி) மட்டும் கொண்ட இப்பாசுரத்தின் உட்பொருளை விரித்துக் காணும்போது உள்ளுறை என்ற தொன்மரபு நம்மாழ்வாரால் பேணி ஆளப்பட்டது தெளிவாகும்.

பூங்குன்றனாரின் தத்துவக் காட்சி தமிழ்மொழியின் செவ்வியலை விளக்கி நிற்பது தெளிவு. அந்தத் தத்துவக் காட்சி புறநானூற்று அளவிலே நின்றிடுமாயின் தமிழ்ச் செவ்வியல் தொன்மைக்கு மட்டுமே உரியதென்று ஒடுங்கிவிடும்.

> ‘நோக்குமிடமெல்லாம்
> நாமன்றி வேறில்லை
> நோக்க நோக்கக்
> களியாட்டம்’

என்றும்,

> ‘தீக்குள் விரலை வைத்தால் - நந்தலாலா
> நின்னைத் தீண்டுமின்பம்
> தோன்றுதடா நந்தலாலா’

என்றும் பாரதியாரில் காணும்போது தமிழ் செவ்வியல் உயிரும் உயிர்ப்பும் உடையதாயிருப்பதை உணர முடிகிறது. செவ்வியலுக்கு மரணம் இல்லை.

பழைமையில் சீர்மை கண்டு, புதுமைக்குப் பெருமை சேர்த்து அமரத்துவம் பெறுவதே செவ்வியல். அத்தகு செவ்வியல் கொண்டதே செம்மொழியாகிய தமிழ்மொழி !

# உலகச் செம்மொழிகள்



**முனைவர் ஜி. ஜான் சாமுவேல்**

### சமுதாயத் தேவை

இடைக் காலம், மறுமலர்ச்சிக் காலம் ஆகிய காலகட்டங்களில் ஒவ்வொரு மொழிக் குழுவினரும் தத்தம் மொழி அல்லது இலக்கிய வரலாற்றில் இடம்பெற்ற செவ்வியல் காலம்பற்றி ஆர்வத்துடன் பேசுவதைக் காண்கின்றோம். பெரும்பாலும் இந்த ஆர்வம் மறுமலர்ச்சிக் காலங்களில் பொங்கி வழிவது இயல்பே. மறுமலர்ச்சிக் காலங்களில் ஏற்படுகின்ற பல்வேறு பண்பாட்டுத் தாக்குரவுகள், மோதல்கள் ஆகியவற்றின் விளைவாகக் கடந்துபோன பழைய பொற்காலமான செவ்வியல் காலங்களின்மீது ஆர்வமும் அவற்றை மீண்டும் கலை இலக்கியங்களில் கொண்டுவரும் முயற்சியும் (Classical Revival) பெரும்பாலான பழைமை வாய்ந்த மொழிகளிலெல்லாம் ஏற்பட்டுள்ளன.

பிறநாட்டுப் பண்பாட்டுத் தாக்கத்தால் தத்தம் இலக்கியப் பண்பாட்டுப் பாரம்பரியங்களின் தனித்தன்மைக்கு ஊறு ஏற்பட்டுவிடும் என்ற அச்சவுணர்வு தோன்றும்போதும், இத் தாக்கங்களின் விளைவாகத் தத்தம் இன அடையாளங்கள் (racial or ethnic identity) அழிந்துவிடுமோ என்று அஞ்சும்போதும், தத்தம் இன அடையாளத்தை நிலைநாட்ட வேண்டிய சமுதாய–அரசியல் தேவைகள் ஏற்படும்போதும் ஒவ்வொரு மொழிக் குழுவினரும் (Linguistic community) தனித்தன்மையினை இழக்காத தம் பழங்காலப் பண்பாட்டுப் பாரம்பரியங்களைச் செவ்வியல் பண்பாடுகளாக நினைவுகூர்ந்து அவற்றிற்குப் புத்துயிர் நல்க முயலும் பொதுப்போக்கினை உலகெங்கிலும் காணலாம்.

ஒவ்வொரு மொழிக் குழுவினரின் வரலாற்றிலும் செவ்வியல் காலகட்டமே பொற்காலமாகக் காட்டப் பட்டுள்ளது. பிறநாடுகளின் அல்லது பிற இனப் பண்பாடுகளின் நெருக்கத்திற்கு ஆட்பட்டுத் தம் அடையாளத்தை (Tamil identity) நிலைநிறுத்த வேண்டிய நிர்ப்பந்தத்துக்கு ஆளான மறுமலர்ச்சிக் காலத் தமிழர்கள் பிறபண்பாட்டுத் தாக்குரவு அதிக அளவிற்கு இல்லாத தனித் தன்மை வாய்ந்த சங்க காலத்தைப் பொற்காலமாகவும் செவ்வியல் காலமாகவும் கண்டனர். இந்நிலையில் சங்கத் தமிழ் செவ்வியல் மொழி அல்லது செம்மொழியாகவும், சங்க இலக்கியங்கள் செவ்வியல் இலக்கியங்களாகவும் தமிழர்களால் ஏற்றுப் பாராட்டப்பட்டன.

செவ்வியல் மொழி அல்லது செம்மொழி என்னும் தகுதிப்பாடு அம்மொழி பெற்றிருக்கும் இலக்கிய வளம், இலக்கியத் தனித்தன்மை போன்ற சிறப்பியல்புகளால் ஏற்படுவதேயன்றி. அம் மொழியின் தொன்மை, அதன் வளம் போன்றவற்றை மட்டும் அடித்தளமாகக் கொண்டு ஏற்படுவதல்ல என்பது குறிப்பிடத்தக்கது.

உலகச் செம்மொழிகள் என்று கி.பி.18 ஆம் நூற்றாண்டுவரை கிரேக்கமும், இலத்தீனும் மட்டுமே கருதப்பட்டுவந்தன. ஐரோப்பிய நாகரிகத்தின் ஆணிவேராகத் திகழ்ந்த கிரேக்க நாட்டிலும் உரோம நாட்டிலும் முகிழ்த்தெழுந்த இவ்விரு மொழிகளும் ஐரோப்பியப் பண்பாட்டு ஆதிக்கம் மேலோங்கியிருந்த காலகட்டங்களில் உலகச் செம்மொழிகள் என்னும் தகுதிப்பாட்டினைப் பெற்றன. இவ்விரு பண்பாடுகளின் தாக்குரவு பெற்ற கலைகள் அனைத்தும் செவ்வியல் கலைகள் (classical arts) ஆயின.

### கிரேக்க மொழி

கிரேக்க மொழியைப் பொறுத்தவரையில் கி.மு.475 முதல் 448 வரையுள்ள காலத்தை கிரேக்கச் செவ்வியல் காலமென்றும், கி.மு.448 முதல் 400 வரையுள்ள காலத்தை இடைச் செவ்வியல் காலமென்றும் வரையறுக்கும் மரபு உள்ளது. இக்கால கட்டத்தில் கிரேக்க இலக்கியங்கள் கிரேக்க தேசியக் கலாச்சாரக் கலையுணர்வின் வெளிப் பாடாகவும், பிற கலாச்சாரப் பாதிப்புகள் அதிகமின்றியும் வளர்ந்ததால் அது செவ்வியல் காலம் என்று சுட்டப் படுகின்றது. சிலர் பெரிக்கிளிஸ் மன்னர்களின் காலத்தைக் கிரேக்கச் செவ்வியல் காலமென்று குறிப்பிடுகின்றனர். இவர்களைப் பொறுத்தவரையில் ஏகிலஸ், சோபாகிளிஸ், சாக்கரடீஸ், பிளேட்டோ, அரிஸ்டாடில் போன்றவர்களின் வளமான படைப்புகள் தோன்றிய காலகட்டமே செவ்வியல் காலமாகச் சுட்டப்படுகின்றது.

இலியத், ஒடிசி என்றும் ஆதிக் காப்பியங்கள் கிரேக்க இலக்கிய வரலாற்றில் தொன்மைமிக்க படைப்புகளாக அமைந்துள்ளன. இக்காப்பியங்களைத் தொடர்ந்து சாபோ (Sappho) கொரினா (Corinna) என்னும் இரு பெண்பாற் கவிஞர்களின் தன்னுணர்வு சார்ந்த படைப்புகளும், அனகிரியோன் (Anacreon) போன்றோர்களின் படைப்புகளும் கிரேக்க நாட்டில் தோற்றம் பெற்றன. இக்கால

கட்டத்தில் பிண்டார் போன்ற பெருங்கவிஞர்களின் குழுப்பாடல்கள் கிரேக்க இலக்கிய வரலாற்றில் மிகப் பெரிய திருப்பு மையங்களாக அமைந்தன. இவற்றைத் தொடர்ந்து ஏதென்சு நகரைச் சார்ந்த ஏகிலஸ், யூரிபைட்ஸ், சோபோகிளிஸ் போன்றோரின் துன்பியல் நாடகங்கள் கிரேக்க மண்ணில் மலர்ந்தன. கி.மு.5ஆம் நூற்றாண்டில் துசிடைட்ஸ் (Thucydides), ஹிரோடோட்டஸ் (Herodotus) போன்றோர் அரிய வரலாற்று நூல்களைப் படைத்துக் கிரேக்க மொழிக்கு வளம் சேர்த்தனர். சாக்கரடீஸ், பிளேட்டோ, அரிஸ்டாடில் போன்ற மிகப் பெரிய தத்துவ மேதைகளும், அறிஞர்களும் இவர்களைத் தொடர்ந்து கிரேக்க மண்ணில் உதித்தனர். கணித மேதையான பித்தகோரஸ் போன்ற மாமேதைகள் இக்காலகட்டத்தில் கிரேக்க இலக்கிய வீதிகளில் வலம் வந்தனர்; சிற்பம், கட்டடக் கலை போன்றன இக் காலத்தில் உச்ச நிலையினை அடைந்தன. கிறித்துவுக்குப் பின்னர்க் கிறித்தவத் திருமறையின் புதிய ஏற்பாட்டுப் பகுதி கிரேக்க மொழியில் அழகுற எழுதப்பட்டது. அதற்கு முன்னர்ப் பழைய ஏற்பாடு எபிரேயமொழி தெரியாத யூதர்களுக்காகக் கிரேக்க மொழியில் மொழிபெயர்த்து எழுதப்பட்டது. செம்மொழியான கிரேக்க மொழி அதிகம் மாற்றம் பெறாமல் இன்றும் பேசப்படும் உயிரோட்டமுள்ள மொழியாகத் திகழ்கின்றது. இந்நிலையில் தமிழைப் போன்று கிரேக்கமும் செம்மொழி, வாழும் மொழி என்னும் இரட்டைத் தகுதிப்பாடுகளைப் பெற்றுச் சிறப்பது குறிப்பிடத்தக்கது.

### இலத்தீன் மொழி

கிரேக்கத்திற்கு அடுத்த நிலையில் இடம்பெறும் மற்றொரு செம்மொழியான இலத்தீன்மொழி தற்போது வழக்கிழந்த மொழியாகிவிட்டது. எனினும் இன்றைய பேச்சு வழக்கிலுள்ள ருமானியன், இத்தாலியன், பிரெஞ்சு, ஸ்பானிஸ், போர்த்துகீசியம் ஆகிய மொழிகளுக்கு இலத்தீன்மொழி ஆணிவேராக அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

கி.மு. 3ஆம் நூற்றாண்டிலிருந்து இலத்தீன் மொழி எழுச்சி பெற்றுள்ளதைக் காண்கின்றோம். உரோம நாட்டின் வளர்ச்சியும், கிரேக்கத்தை அது வீழ்த்திய நிகழ்ச்சியும், இலத்தீன் மொழியின் எழுச்சிக்குத் தோற்றுவாயாக அமைந்துள்ளன. கிரேக்கர்களை அடிமைகளாகச் சிறைப்படுத்தி உரோமுக்குக் கொண்டுவந்து அவர்கள் வாயிலாக உயர்குடியைச் சார்ந்த உரோம நாட்டு மக்களுக்குக் கல்வி தரப்பட்டபோது இலத்தீன் மொழியும் பெருமளவிற்கு விரிவடைந்து வளரத் தொடங்கியது எனலாம். தொடக்க நிலையில் கிரேக்க நூல்கள் இலத்தீன் மொழியில் மொழிபெயர்க்கப்பட்டன. காலப்போக்கில் கவிதைகளும், நாடகங்களும் இலத்தீன் மொழியில் எழுதப்பட்டன.

கி.மு.70 முதல் கி.பி.20 வரையுள்ள காலகட்டம் உரோம நாட்டின் பொற்காலம் என வரையறுக்கப்பட்டது. இக் காலகட்டத்தில் தலைசிறந்த எழுத்தாளர்களும், தன்னிகரற்ற வீரர்களும், கவிஞர்களும், நாடக மேதைகளும், பேச்சாளர்களும் இந்நாட்டில் தோன்றினர். ஜூலியஸ் சீசர் வாழ்ந்த இக்காலத்தில் சிசரோ போன்ற மிகச் சிறந்த இலக்கியவாதிகளும், கவிஞர்களும் வாழ்ந்தனர். வர்ஜில், ஹாரஸ், பிராப்பர்டியஸ் (Propertius), திபுலஸ் (Tibullus), ஆவிட் (Ovid), லிவி (Livy) போன்ற உலகப் பெரும் எழுத்தாளர்களின் காலமிது. அறிவியலும் தத்துவமும், வரலாற்று நூல்களும் இக் காலகட்டத்தில் பெருமளவில் மலர்ந்து கிரேக்க நாட்டிற்கு இணையான அறிவுக் கருவூலங்களை ஓரளவு இலத்தீன் மொழியில் தோற்றுவித்தன. எனினும் கிரேக்கத்தோடு ஒப்பிடும் அளவுக்கு இலத்தீன் மொழியின் இலக்கிய வளம் உயர்ந்ததன்று என்பதே வரலாற்றுத் திறனாய்வாளர்களின் உண்மையான கணிப்பு ஆகும்.

உரோமப் பேரரசின் வீழ்ச்சிக்குப் பின்னரும் மேற்கு ஐரோப்பாவில் இலத்தீன் மொழி முக்கிய இடத்தைத் தொடர்ந்து வகித்தது. இதற்குக் காரணம் இது கிறித்தவத் திருச்சபையின் மொழியாகத் திகழ்ந்ததுவேயாகும். தூய ஜெரோம் கி.பி. 5இல் கிறித்தவத் திருமறையை இலத்தீன் மொழியில் மொழி பெயர்த்தார். இதைத் தொடர்ந்து ஏறத்தாழ 1000 ஆண்டுகளாகத் தத்துவம், இறையியல், அறிவியல், வரலாறு ஆகியவற்றின் மூலமொழியாகவும் மேற்கு ஐரோப்பிய அறிஞர்கள், எழுத்தாளர்கள் ஆகியோரின் பண்பாட்டு ஆராய்ச்சிப் பரிமாற்றக் கருவியாகவும் இலத்தீன் மொழி திகழ்ந்தது. கிரேக்கமும், இலத்தீனும் ஐரோப்பியப் பண்பாட்டின் ஆணிவேராகவும் அடித்தளமாகவும் அமைந்தன. இதனால் தாய்மொழி எதுவாக இருப்பினும், ஐரோப்பிய அறிஞர்களின் தகுதிப்பாட்டை அளக்கும் கருவியாகவும், அளவுகோலாகவும் கிரேக்க, இலத்தீன் மொழியறிவு அமைந்துவிட்டது.

### ஆசியச் செம்மொழிகள்

செம்மொழிகள் எவை என்று ஐரோப்பியப் பண்பாட்டில் வரையறுக்கப்பட்டு அவற்றிற்குரிய தகுதிப்பாடுகள் வழங்கப்பட்டது போன்று மேற்கு ஆசியாவிலும், கிழக்கு ஆசியாவிலும், தெற்கு ஆசியாவிலும் இவை போன்ற முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. இவற்றின் விளைவாக ஆசிய நாட்டின் பல மொழிகள் செம்மொழிகள் வரிசையில் இடம்பெறத் தொடங்கின. எனினும், இவை உலகச் செம்மொழிகள் என்ற பொதுநிலையில் ஏற்றுக் கொள்ளப்படவில்லை. இவற்றுள், தெற்காசியாவில் முகிழ்த்த இந்தோ–ஐரோப்பிய மொழிக் குடும்பத்தைச் சார்ந்த சமற்கிருதம் மட்டுமே கி.பி. 18ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர் உலகச் செம்மொழிகளின் வரிசையில் இணையும் வாய்ப்பினைப் பெற்றுள்ளது.

### எபிரேய மொழி

ஐரோப்பாவிற்குக் கிழக்கில் அமைந்த நடுகிழக்கு

நாடுகள் (Middle East countries) ஆசியச் செம்மொழிகளின் ஓர் உட்பிரிவின் பிறப்பிடமாக உருப்பெற்றன. இப்பகுதிகள் செமிட்டிக், அரபி, எபிரேயம் ஆகிய மொழிக் குடும்பங்களின் தொட்டிலாகவும் வளர்ப்புப் பண்ணையாகவும் திகழ்ந்தன. இவற்றுள் கி.மு.1200 முதல் பழைமை பெற்று விளங்கும் ஓர் உயரிய மொழி எபிரேய மொழியாகும். இம்மொழியில் எழுதப்பட்ட கிறித்தவத் திருமறையின் பல புத்தகங்கள் காலத்தால் மிகவும் தொன்மையானவை. யூத சமயத்தோடு பின்னிப் பிணைந்து வளர்ந்த ஏராளமான கவிதைகளும் உரைநடை இலக்கியங்களும் 3000 ஆண்டுகளுக்குமுன் எபிரேய மொழியில் வளர்ந்து செழித்தன. யூத சமுதாயம், சமயம் ஆகியன தொடர்பான சட்ட நூல்கள் இவற்றுள் முதன்மையானவை எனலாம். இம் மொழியின் வரலாறு கி.பி.12 வரை தொடர்ந்தது. தத்துவம், கணிதவியல் தொடர்பான எண்ணற்ற நூற்களை இக் காலகட்டத்தில் எபிரேய மொழி தோற்றுவித்தது. எனினும் எபிரேய மொழி பேச்சு மொழியாகத் தொடரவில்லை. அரமெய்க் மொழியே இப்பகுதியின் பேச்சு மொழியாகத் தொடர்ந்தது. இசுரேல் நாட்டு தேசிய மொழியாகத் தற்போது எபிரேயம் ஏற்றம் பெற்றுப் புதுப்பொலிவும் பெற்றுப் பேச்சு மொழியாகவும் வளர்ந்து சிறப்பது குறிப்பிடத்தக்கது.

### அரபி மொழி

நடுகிழக்கு நாடுகளின் மற்றொரு செம்மொழியான அரபி மொழியின் தொடக்க நிலைப்படைப்புகள் வாய்மொழி இலக்கியங்களாகவே அமைந்தன. கி.பி. 6ஆம் நூற்றாண்டிற்கு முன்னரே இந்த வாய்மொழி இலக்கிய மரபுகள் மிகச் சிறப்பாக இம்மொழியில் வளர்ச்சி பெற்றுள்ளன. இசுலாமிய சமயத்தின் தோற்றம் அரபிமொழி ஒரு செம்மொழியாக மலரத் துணை நின்றது. முகமது நபியின் உரைகள் கி.பி. 632இல் திருக்குரானாக இம்மொழியில் எழுத்து வடிவம் பெற்றன.

காதலைப் பாடும் இலக்கியங்கள் இசுலாமிய சமயத்தாரின் கண்டனத்துக்குட்பட்ட போதிலும் கிறித்தவர்களால் பேணி வளர்க்கப்பட்ட கேசல் (ghazal) காதற் பாடல்கள் கி.பி.7ஆம் நூற்றாண்டிற்குப் பின் அரபி மொழியில் வலுவடைந்தன. இதையொட்டி கி.பி.8ஆம் நூற்றாண்டில் அரபி மொழியின் பொற்காலம் தொடங்கியது. பாக்தாத் நகரை மையமாகக் கொண்டு தொடங்கிய இப்புதிய இலக்கிய யுகம் ஏறத்தாழ 300 ஆண்டுகள் தொடர்ந்தது. இவற்றின் விளைவாகப் புதிய வகையான கவிதைக் குவியல்கள், புதுப்புது இலக்கிய உத்திகள், புதிய உணர்த்தும் முறைகள் ஆகிய இக்காலகட்டத்தில் மிகச் சிறப்பாக அரபி மொழியில் உதயமாயின. இக்காலத்தில் உரைநடை இலக்கியம் உச்சநிலையினை எய்தியது. கணிதம், வேதியல், மருத்துவம் போன்ற துறைகளில் சிரியமொழி (Syrian) வாயிலாகக் கிரேக்கத் தாக்கம் அரபி மொழியில் அழுத்தமாகப் பதிந்தது. கி.பி. 9ஆம் நூற்றாண்டில் மொழியியல், சட்டம், புவியியல், வரலாறு போன்றன தொடர்பான அரிய படைப்புகள் இம்மொழியில் மிகப்பெரும் அளவில் எழுந்தன. அரபிச் செம்மொழி என்பது குரானை மட்டும் மையமாகக் கொண்டதல்ல என்பதும் அது பல துறைகளைத் தழுவி வளர்ந்த இம்மொழியின் முழுப் பரிமாணத்தையும் உள்ளடக்கியது என்பதும் குறிப்பிடத்தக்கன.

### பார்சி மொழி

இசுலாமிய சமயத்தின் பரவுதலாலும் அரபியின் பாதிப்பாலும் வலுப்பெற்றுச் செம்மொழித் தகுதிப் பாட்டொடு வளர்ந்த மற்றொரு மொழி பர்சியன் அல்லது பார்சி மொழி என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. இம்மொழியின் வளர்ச்சி நிலையினைக் கி.மு.6ஆம் நூற்றாண்டிலிருந்து அறிவதற்குத் தக்க சான்றுகள் பல உள்ளன. எனினும் கி.பி.7ஆம் நூற்றாண்டிற்குப் பின்னரே மிகப்பெரிய வளர்ச்சியினை இம்மொழியில் நாம் காணமுடிகின்றது. தொடக்கநிலையில் அரபி மொழியின் தாக்கம் பார்சி மொழியில் மிகுந்திருந்தது. காலப்போக்கில் பார்சியின் தாக்கம் அரபி மொழியில் பெருமளவிற்கு ஏற்பட்டது. கி.பி.10ஆம் நூற்றாண்டளவில் பார்சிய நாட்டின் வடகிழக்குப் பகுதியில் தனித்தன்மை வாய்ந்த பார்சி இலக்கியங்கள் உருவாகின. இவற்றைத் தொடர்ந்து இரு நூற்றாண்டுகளில் அரிய பல காப்பியங்களை இம்மொழி உலகிற்குத் தந்தது. தத்துவம், கணிதம், வரலாறு தொடர்பான அரிய கலைக் கருவூலங்களும் இக் காலகட்டத்தில் எழுந்தன. இத்தகைய வளமான வளர்ச்சியால் பார்சி மொழி செம்மொழிகளுள் ஒன்றாகக் கருதப்படும் நிலையினைப் படிப்படியாக எய்தியது.

### சமற்கிருத மொழி

தெற்கு ஆசியாவில் சமற்கிருதமும், தமிழும், பாலியும் உயர்தனிச் செம்மொழிகளாக ஏற்றம் பெற்றன. சமற்கிருத மொழி பன்முகத் தகுதிப்பாடுகளைப் பெற்றுத் திகழ்ந்ததால் காலப்போக்கில் உலகச் செம்மொழிகளுள் ஒன்றாக ஏற்றம் பெற்றது. சமற்கிருத இலக்கிய வரலாற்றில் 3500 ஆண்டுகளுக்கு முன்னரே வேதகால சமற்கிருதம் எழுச்சி பெற்றுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

வேதகால சமற்கிருத இலக்கியங்கள் சமயம் சார்ந்தனவாக அமைந்தபோதிலும் அவற்றிற்குப் பின்னர்த் தோன்றிய சமற்கிருத இலக்கியப் படைப்புகள் பல்வேறு துறைகளையும் பல்வேறு வகைப்பாடுகளையும் தழுவி நின்று வளர்ந்தன என்பது சுட்டத்தக்கது. இம்மொழியில் பிறந்த மகாபாரதமும், வால்மீகியால் கலைவடிவம் பெற்ற இராமாயணமும், இந்து சமய உலகொடு மட்டும் நின்றுவிடாது கிழக்கிலும், மேற்கிலும் பரந்து பரவி பல்வேறு மொழிகளில் பெருந் தாக்குரவுகளை ஏற்படுத்தின. இப்பெருங் காப்பியங்கள் அல்லது இதிகாசங்களைத் தொடர்ந்து 36 வகைப் புராணங்களும், தந்திர நூல்களும், காவியங்களும் இம்மொழியில் எழுந்தன. பல்வேறு தன்னுணர்ச்சிப் பாடல்களும், நாடகங்களும் பெருமளவிற்குப் படைக்கப்பட்டன. பாணினியின் அஸ்டத்தியாதி ஒப்பற்ற மொழிநூல் படைப்பாகவும்,

அறிவியல் பூர்வமான மொழியாய்வு நூலாகவும், பேரிலக்கணமாகவும் மலர்ந்தது. காத்யாயனா, பதஞ்சலி, பர்தரஹரி போன்றோர் அரிய பல்துறை தழுவிய படைப்புகளைத் தந்து சமற்கிருத இலக்கியச் சோலையை வளப்படுத்தினர். காளிதாசரின் படைப்புகள் இம்மொழியின் தன்னேரற்ற இலக்கியக் கருவூலங்களாகத் திகழ்ந்தன. கிரேக்க இலக்கியத்திற்கு இணையாகக் கவிதையியலும், பாட்டியலும், அலங்கார நூல்களும் இம்மொழியில் பெருகின. கவுடில்யரின் அர்த்தசாஸ்திரம் போன்ற பல்துறை சார்ந்த படைப்புகள் இம்மொழியில் பெருக்கெடுத்தன. இவை யனைத்தும் இம்மொழிக்கு உலகப் புகழினை ஈட்டித் தந்தன.

### பாலி மொழி

இந்திய நாட்டின் பழைமை வாய்ந்த மொழிகளுள் ஒன்றாகப் பாலி மொழி அமைகின்றது. கி.மு.3ஆம் நூற்றாண்டைய தேரவாத பௌத்தக் கோட்பாடுகள் இம்மொழியில் வாய்மொழியாக வழங்கப்பட்டு கி.மு.முதல் நூற்றாண்டளவில் அவை இம்மொழியில் வரிவடிவம் பெற்றுள்ளன. பாலி மொழியில் எழுந்துள்ள நூல்கள் பௌத்த சமயச் சார்புடையன. தம்மபதம், ஜாதகக் கதைகள், திரிபிடகம் ஆகியன இம்மொழியின் சிறப்பு வாய்ந்த நூல்களாகும். பாலி மொழி இலக்கியங்கள் சமயச் சார்புடையனவாக அமைந்தபோதிலும் பல்வேறு வகைப்பட்டன (variety) வாகப் பரந்து சிறப்பதாலும், தொடக்க காலம் முதல் இன்றளவும் உலகின் பெருஞ் சமயங்களுள் ஒன்றான பௌத்தத்தின் சிந்தனைகளைத் தாங்கி நிற்பதாலும், இலங்கைத் தீவில் திகழும் சிங்களப் பண்பாட்டின் அடித்தளமாக அமைவதாலும், தாய்லாந்து, பர்மா போன்ற தென்கிழக்காசிய நாடுகளின் பண்பாட்டுப் பாரம்பரியங்களின் ஆணிவேராகப் பொலிவதாலும் இதனையும் உலகச் செம்மொழிகளுள் ஒன்றாக இணைக்கவேண்டும் என்ற கோரிக்கை நிலவுகின்றது. வேதகால இந்து சமயத்திற்கு எதிரிடையான, பௌத்த சிந்தனைகளைப் பேச்சுமொழியில் பரப்ப உகந்த மொழியாகப் பாலிமொழியினைப் பௌத்தர்கள் தொடக்க நிலையில் ஏற்றுப் போற்றினர். எனினும், பௌத்த நூல்களின் எழுச்சியால் பேச்சுமொழியான பாலி மொழி காலப்போக்கில் இலக்கிய மொழியாக மலர்ந்து செம்மொழித் தகுதிப்பாட்டினைத் தொட்டு நிற்பது குறிப்பிடத்தக்கது.

### தமிழ் மொழி

சமற்கிருதத்திற்கு இணையான வரலாற்றுத் தொன்மையினையும், இலக்கிய இலக்கணத் தனித்தன்மையினையும் பெற்றுச் சிறக்கும் தமிழ்மொழி இந்திய மொழிக் குடும்பங்களுள் மிகப்பெரிய மொழிக் குடும்பமாகத் திகழும் திராவிடமொழிக் குடும்பத்தின் தலைமை வாய்ந்த மொழியாக மலர்ந்துள்ளது. பாணினிக்கு இணையான அல்லது பாணினியின் படைப்பையும் விஞ்சும் திறன்கொண்ட இலக்கணப் பண்பாட்டு நூலான தொல்காப்பியமும், கிரேக்கச் செம்மொழிக் கவிதைகளை விஞ்சும் சங்கப் படைப்புகளும், தன்னேரில்லாத தமிழ்மறையான திருக்குறளும், புரட்சிக் காப்பியங்களான சிலம்பும், மேகலையும் ஏனைய பிற இலக்கிய இலக்கணக் குவியல்களும் தமிழை உலகச் செம்மொழிகளுள் ஒன்றாக இணைத்து ஏராளமான வெளிநாட்டு அறிஞர்களைக் காணச் செய்துள்ளன.

கிரேக்க மொழியினைப் போன்று செம்மொழித் தகுதிப்பாட்டினையும், வாழும் மொழி என்ற ஏற்றத்தினையும் தமிழ்மொழி ஒருங்கே பெற்றுச் சிறக்கின்றது. "என்று பிறந்தவள் என்றறியா இயல்பினள் எங்கள் தாய்" என்று பாரதியாரைப் பாடவைத்த இந்த மொழி சித்தியமொழிகளோடும், செமிட்டிக் மொழிகளோடும், ஏலாமைட் மொழிகளோடும், உரல் அல்டெயிக் மொழிகளோடும், கிரேக்க இலத்தீன் மொழிகளோடும் உறவு கொண்டுள்ள ஒரே இந்திய மொழி என்பதைப் பல்வேறு அறிஞர்களும் ஆய்ந்து காட்டியுள்ளனர். இம்மொழியின் வேர்களும், விழுதுகளும் பாரெங்கும் பரவி நிற்கும் பரந்து விரிந்த இப்பாங்கினை விரிவாய்வு செய்யும்போது உலக மொழிகளின் தாயாக இலங்கும் உயரிய சிறப்பை இது பெற்றிருப்பதை நிலைநாட்ட முடியும். இத்தகைய ஆய்வுகள் உலகச் செம்மொழிகளுள் ஒன்றாக இணையும் சிறப்பினைத் தமிழுக்கு நல்கும் என்பது உறுதி.

### சீன மொழி

கிழக்கு ஆசியாவின் மிகப்பெரிய மொழியான சீன மொழி சமற்கிருதத்தைப் போன்று மிகப் பழைமையான மொழியாக அமைகின்றது. கி.மு.14ஆம் நூற்றாண்டளவில் தோற்றம் பெற்ற இம்மொழி, வாழும் மொழியாகவும் உலகின் பெரும்பாலோர் பேசும் மொழியாகவும் மலர்ந்துள்ளது வியப்புக்குரியது. இதன் தொடக்க இலக்கியங்கள் கி.மு.12ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டதாக நம்பப்படுகின்றது. இசையோடும் நடனத்தோடும் இணைந்த இம்மொழியின் தொடக்ககாலப் பாணர் மரபு கவிதைகள் (bardic poetry), சௌ மன்னர்களின் (Chou dynasty) காலத்தைச் சார்ந்தவை. கி.மு.6ஆம் நூற்றாண்டில் இம்மொழியில் தத்துவப் படைப்புகள் ஏராளமாகப் பெருக்கெடுத்தன. லாவோட்சுவின் (Lao-tsu) எழுத்துகளும், கன்பூசியசின் சிந்தனைகளும் இந்த வரிசையில் குறிப்பிடத் தகுந்தவை. இக் கால கட்டத்தையொட்டி சீன மொழியில் இசைப் பாடல்களும் (lyrical poetry) கதைபொதி பாடல்களும் (ballads) பெருமளவிற்குத் தோன்றின. எனினும் கி.பி.7ஆம் நூற்றாண்டு முதல் 10ஆம் நூற்றாண்டு வரையிலான காலமே சீன இலக்கியத்தின் பொற்காலமாகக் கருதப்படுகின்றது. இக்கால கட்டத்திற்குப் பின்னர் நாவல் இலக்கியப் படைப்புகளும் நாடக இலக்கியங்களும் கி.பி.13ஆம் நூற்றாண்டு வரை பெருமளவிற்குத் தோன்றின. இவற்றில் இந்திய பாரசீகப் பண்பாட்டுத் தாக்கங்களைப் பெருமளவிற்குக் காணமுடிகின்றது. சீனமொழி ஆசிய நாடுகளின் செம்மொழிகளுள் குறிப்பிடத்தக்க இடத்தைப் பெற்றுள்ளது.

## ஜப்பானிய மொழி

சீனமொழியொடு தொடர்புடைய மற்றுமொரு பழைமை வாய்ந்த மொழியாக ஜப்பானிய மொழி அமைகின்றது. கி.பி.7ஆம் நூற்றாண்டு முதல் எழுச்சிபெற்ற ஜப்பானியமொழி இலக்கியச் சிறப்புமிக்க மொழியாக அமைந்தபோதிலும் இது உலகச் செம்மொழி வரிசையில் வைத்து நோக்கப்படவில்லை. அரபி மொழியைப் போன்று தொன்மைச் சிறப்பு இல்லாதபோதிலும் அரபி மொழிக்குத் தரப்பட்ட செம்மொழித் தகுதிப்பாடு ஜப்பானிய மொழிக்குத் தரப்படவில்லை. இதற்குக் காரணம் சீனமொழியின் ஆதிக்கத்திற்கு அதிக அளவில் இது இடங்கொடுத்த தேயாகும். ஜப்பானிய மொழியின் வடிவ அமைப்பு சீனமொழிக்கு மாறுபட்டபோதிலும் சீனமொழியின் வரிவடிவம் ஜப்பானிய மொழியில் பெருமளவிற்கு இடம்பெற்றது செம்மொழித் தகுதிப்பாட்டினை இம்மொழி பெறாமைக்கு ஒரு காரணமாக அமைந்துள்ளது எனலாம். கி.பி.9ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்ட ஜப்பானிய மொழி சீனமொழியின் ஆதிக்கத்தைப் பெருமளவிற்குத் தவிர்த்துள்ளது. இக்காலகட்டத்தில் இம்மொழி பன்முகப் படைப்புகளைத் தந்துள்ளது. ஜப்பானிய மொழியில் கி.பி.7ஆம் நூற்றாண்டில் தொகுக்கப்பட்ட மன்யோசு நூலின் கவிதைகள் சங்க அகப்பாடல்களைப் போன்றே அமைவது குறிப்பிடத்தக்கது. இலக்கியவளம் மிக்க ஜப்பானிய மொழியும் செம்மொழிகளுள் ஒன்றாகக் கருதும் தகுதிப்பாடுடையது என்பதில் எந்த ஐயமுமில்லை.

## உலகச் செம்மொழித் தகுதிப்பாடு

மொத்த நிலையில் நோக்கும்போது கிரேக்கம், இலத்தீன், எபிரேயம், அரபி, பார்சியன், சமற்கிருதம் , பாலி, தமிழ், சீனம், ஜப்பானியம் ஆகிய பத்து மொழிகள் செம்மொழித் தகுதிப்பாட்டிற்கு உரிய மொழிகளாக அமைந்துள்ளன. தொன்மை, பன்முகத் தன்மை, பிற பண்பாட்டுக் கூறுபாடுகளில் ஏற்படுத்தியுள்ள தாக்குரவு, தனித்தன்மை, இலக்கிய வளம் ஆகியவற்றை அடித்தளமாகக் கொண்டே செம்மொழி எனும் தகுதிப்பாடு கணிக்கப்படுகின்றது. இந்நிலையில் 6000க்கு மேற்பட்ட மொழிகள் பேசப்படும் உலகில் ஏறத்தாழ பத்து மொழிகளே செம்மொழித் தகுதிப்பாட்டினைப் பெறுகின்றன. இவற்றுள்ளும் ஏறத்தாழ 1600 மொழிகள் பேசப்படும் இந்தியத் திருநாட்டில் செம்மொழித் தகுதிப்பாட்டினைப் பெறும் மொழிகள் சமற்கிருதம், பாலி, தமிழ் ஆகிய மூன்று மொழிகளே என்பது குறிப்பிடத்தக்கது.

சமயச் சார்பு அதிக அளவிற்கு நிறைந்துள்ள மொழிகள் என்ற நிலையில் இலத்தீன் மொழி, அரபி மொழி, பார்சி மொழி, பாலி மொழி, எபிரேய மொழி ஆகியன காட்சி தருகின்றன. சமயச் சார்பு குறைந்த மொழிகளாகக் கிரேக்கமும், தமிழும், சீனமொழியும் திகழ்கின்றன. சமயமும், சமயச் சார்பின்மையும் விரவிய மொழிகளாக சமற்கிருதம், ஜப்பானியம் போன்ற மொழிகள் அமைகின்றன.

கால அடிப்படையில் நோக்கும்போது ஒவ்வொரு மொழியின் வரலாற்றிலும் செம்மொழிக் காலம் அல்லது செவ்வியல் காலம் என்பது பலவாக வேறுபட்டு நிற்பதைக் காணமுடிகின்றது. அரபி, ஜப்பானியம், பார்சி போன்ற மொழிகளின் செவ்வியல் காலம் கி.பி. 6ஆம் நூற்றாண்டிற்குப் பின்னரும், ஏனையவற்றின் செவ்வியல் காலம் கிறிஸ்து பிறப்பதற்கு முன்னரும் தொடங்குகின்றன. செம்மொழிகளை வாழும் மொழிகள் என்றும், வழக்கிழந்த மொழிகள் என்றும் இரு கூறுபடுத்தலாம். இவற்றுள் சமற்கிருதம், இலத்தீன் ஆகியன வழக்கிழந்த மொழிகள் என்னும் பிரிவில் அடங்குவன. எபிரேய மொழி வழக்கிழந்த மொழியாக அமைந்து இப்போது இசுரேல் நாட்டின் தேசிய மொழியாக, பேச்சு மொழியாக வியத்தகு நிலையில் புதுப்பிறவி எடுத்துள்ளது. வாழும் மொழிகள் அனைத்தும் குறிப்பிட்ட காலம் வரை செம்மொழிகளாகத் தொடர்ந்து ஒரு குறிப்பிட்ட காலத்திற்குப் பின் தற்கால மொழிகளாக மலர்கின்றன. இவை யனைத்தும் இரட்டைத் தகுதிகளை (Dual status) பெறுகின்றன. தமிழைப் பொறுத்தமட்டில் கி.பி. 6ஆம் நூற்றாண்டுவரை செம்மொழி காலகட்டமாகவும், கி.பி. 6ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்ட காலம் தற்காலம் என்ற நிலையிலும் இரட்டைத் தகுதிப்பாட்டைப் பெற்று நிற்பதைக் காணலாம்.

உலகச் செம்மொழிகள் என்ற கண்ணோட்டத்தில் நோக்குமிடத்தில் முன்னர்ச் சுட்டியவாறு கி.பி.18ஆம் நூற்றாண்டுவரை ஐரோப்பியப் பண்பாட்டின் ஆணி வேராகத் திகழ்ந்த கிரேக்கம், இலத்தீன் ஆகிய இருமொழிகள் மட்டுமே இப்பிரிவில் பேசப்பட்டன. ஆசிய மொழிகளுள் ஒன்றுகூட இப்பிரிவில் இடம் பெறாதது ஐரோப்பிய மேலாண்மையின் விளைவாக இருக்கலாம் என்பதில் ஐயமில்லை. பிற ஆசிய மொழிகளின் உயர்தனி இலக்கியச் சிறப்புகள் ஐரோப்பியர்களுக்குக் கி.பி.18ஆம் நூற்றாண்டுவரை அதிகமாகத் தெரியாமல் இருந்திருக்கலாம். ஆனால், கிறித்தவத் திருமறையின் பழைய ஏற்பாடு எழுதப்பட்ட எபிரேய மொழியின் உயர்தனிச் சிறப்பு அவர்களுக்கு நன்றாகவே தெரிந்திருந்தது என்பதில் ஐயமில்லை. கி.பி.1604இல் ஜேம்சு அரசனால் திருமறையின் பழைய ஏற்பாட்டின் உயர்தனிச் சிறப்புவாய்ந்த மொழிபெயர்ப்பு ஆங்கில மொழியில் மேற்கொள்ளப்பட்டது. இக் காலகட்டம் முதல் ஆங்கிலம் உள்ளிட்ட அனைத்து ஐரோப்பிய மொழிகளும் கிறித்தவத் திருமறையின் பாதிப்புக்கு உட்பட்டன. தாவீது மன்னனின் திருப்பாடலும் (Psalms), பேரரசன் சாலமனின் உன்னதப் பாட்டும் (Song of Songs) இசையா தீர்க்கரின் புத்தகமும், யோபுவின் புத்தகமும் (Book of Job) ஏனைய பிற நூல்களும் ஐரோப்பிய மொழிகளில் பெருந் தாக்கத்தினை ஏற்படுத்தின. இதற்கு முன்னரே தூய ஜெரோம் அவர்களால் கி.பி. 4ஆம் நூற்றாண்டில் கிறித்தவத் திருமறை இலத்தீன் மொழியில் மொழி பெயர்க்கப்பட்டது. தம் படைப்புகளுக்குக் கிரேக்க இலத்தீன் இலக்கியங்களை மூலவூற்றாகக் கொண்ட

ஐரோப்பியப் படைப்பாளர்கள் இலத்தீன் மூலமாகக் கி.பி. 4ஆம் நூற்றாண்டிலும் ஆங்கிலம் வாயிலாகக் கி.பி. 17ஆம் நூற்றாண்டிலும் தங்களுக்கு மிகச் சிறப்பாக அறிமுகமான எபிரேய இலக்கியப் பெருமைகளை அறிந்திருந்தும் எபிரேய மொழியை உலகச் செம்மொழி வரிசையில் இணைத்துக் கொள்ளவில்லை.

18ஆம் நூற்றாண்டில் கல்கத்தாவில் சர் வில்லியம் ஜோன்சு ஆசியக் கல்விச் சங்கத்தை அமைத்து அதன் மூலமாக சமற்கிருத இலக்கியங்களை செருமன், ஆங்கிலம் போன்ற ஐரோப்பிய மொழிகளில் மொழிபெயர்க்க தகுந்த வாய்ப்புகளை ஏற்படுத்தியபோது சமற்கிருத இலக்கியங்கள் மொழி என்னும் தடையினை உடைத்தெறிந்து ஐரோப்பா முழுவதும் மொழிபெயர்ப்பு வாயிலாகப் பாய்ந்து பரவின. இதன் விளைவாக ஐரோப்பிய எழுத்தாளர்களின் பார்வை கிரேக்கத்தையும், இலத்தீனையும், எபிரேயத்தையும் விட்டு சமற்கிருத இலக்கியங்கள் பக்கம் திரும்பின. தெற்கு ஆசிய நாடான இந்தியாவில் வளர்ந்த போதிலும் சமற்கிருதம் இந்தோ–ஐரோப்பிய மொழியே என்பதை சர் வில்லியம் ஜோன்சு நிறுவிக் காட்டினார். இந்தப் பின்னணியில் உலகச் செம்மொழி வரிசையில் மற்றுமொரு மொழியாக சமற்கிருதம் கி.பி. 19ஆம் நூற்றாண்டு முதல் ஏற்றுக் கொள்ளப்பட்டது. உலகெங்கிலும் வழங்கும் பத்து மொழிகள் செம்மொழித் தகுதியுடையனவாக அமைந்த போதிலும் இன்றைய நிலையில் கிரேக்கம், இலத்தீன், சமற்கிருதம் ஆகிய ஐரோப்பிய மொழிக் குடும்பத்தைச் சார்ந்த மூன்று மொழிகள் மட்டுமே உலகச் செம்மொழிகளாக அமைந்துள்ளன.

இந்தோ–ஐரோப்பிய மொழிகளுள் பழைமை வாய்ந்த மொழிகளான கிரேக்கம், இலத்தீன், சமற்கிருதம் ஆகிய மூன்று மொழிகளுக்கு மட்டுமே உலகச் செம்மொழி என்னும் அங்கீகாரம் நல்கப்பட்டு இலக்கிய, இலக்கண வளமிகுந்த தமிழ், சீனம், எபிரேயம் போன்ற ஆசியமொழிகள் இப்பகுப்பில் புறக்கணிக்கப்பட்டுள்ளன என்பது குறிப்பிடத் தக்கது. மேற் கூறிய மூன்று மொழிகள் மட்டும்தாம் உலகச் செம்மொழிகள் என்று பறைசாற்றும் மரபுச் சிந்தனை கால வளர்ச்சியும் மொழி ஆய்வு வளர்ச்சியும் வியத்தகு முறையில் ஏற்பட்ட இக் காலகட்டத்தில் முழுநிலையில் மறுபரிசீலனைக்குரியது. இம்மூன்று மொழிகளை இந்தோ–ஐரோப்பிய அல்லது இந்தோ–ஆரிய மொழிக் குடும்பத்தைச் சார்ந்த செம்மொழிகள் என்று குறிப்பிடலாமே தவிர உலகச் செம்மொழிகள் இவை மட்டும்தாம் என்று முடிவு செய்துவிட முடியாது. பழைமை மிக்க ஆசிய மொழிகளுள் ஒன்றுகூட இப்பிரிவில் இடம் பெறாதது கூர்ந்து நோக்கத்தக்கது.

தமிழ் மொழிக்குத் தேசிய நிலையில் செம்மொழித் தகுதிப்பாட்டினைக் கி.பி.2004இல் மைய அரசு வழங்கியுள்ளது. உலக அளவில் ஆசிய மொழிகள் அல்லது இந்திய மொழிகள் பற்றி ஆய்வு செய்யும் அறிஞர்களில் பெரும்பாலோர் தமிழை உலகச் செம்மொழிகளுள் ஒன்றாகவே குறிப்பிடுகின்றனர். எனினும் உலக அரங்கில் நாம் இந்தத் தகுதிப்பாட்டினை இதுவரை பெறமுடியவில்லை. கி.பி. 18, 19 ஆகிய நூற்றாண்டுகளில் சமற்கிருத இலக்கியங்களை மொழிபெயர்த்து ஐரோப்பாவில் பரப்ப கல்கத்தாவின் ஆசியக் கல்விச் சங்கம் நிறுவன அடிப்படையில் துணை நின்றது. தமிழிலக்கியங்களை மொழிபெயர்த்த கிறித்தவ அருள் தொண்டர்களின் முயற்சிகளுக்குத் துணைநிற்க அப்படியொரு அமைப்பு தமிழகத்தில் இல்லாதுபோனது ஒரு பெருங்குறையாக அமைந்துவிட்டது.

தொன்மைச் சிறப்பாலும், பன்முகப்பட்ட இலக்கிய வகைகளைப் பெற்றிருக்கும் பெரும்பேற்றாலும், தனித்தன்மை மிக்க இலக்கியப் பண்பாட்டுக் கூறுகளைக் கொண்ட தனிச் சிறப்பாலும் உயர்ந்து சிறக்கும் தமிழ் மொழி உலகச் செம்மொழிகளுள் ஒன்று என்று ஒட்டுமொத்தமாகக் கருதப்படும் தகுதிப்பாட்டினை இன்னமும் பெறாமலிருப்பதற்கு மற்றொரு காரணமாக அமைவது தரமான தமிழ்ப் புலமையினை உலக அளவிற்கு எடுத்துச் சொல்லாமல் இருப்பதுவும், பிறநாட்டு அறிஞர்களோடு இணைந்து உலகளாவிய நிலையில் தமிழாய்வில் ஈடுபட நாம் தயங்குவதுமாகும்.

தமிழ்மொழியின் வேர்களும், விழுதுகளும் உலக மொழிகளில் இருப்பதை மேல்நாட்டு அறிஞர் பலரும், ஆசிய நாட்டு அறிஞர்களும் தொடர்ந்து எடுத்தியம்பிவருகின்றனர். இத்துறையில் பல ஆய்வுகள் பிறநாட்டறிஞர்களால் மேற்கொள்ளப்பட்டுள்ளன. இந்த ஆய்வு நீரோட்டத்தில் தமிழறிஞர்கள் இணைந்து செயற்பட்டு உலக மொழிகளுக்கெல்லாம் தமிழ்மொழி அடித்தளமாக அமைந்துள்ள பாங்கினை ஆராய்ச்சிபூர்வமாக நிலைநாட்ட முன்வரவேண்டும். இச்செயல் தமிழ்மொழியின் உலகளாவிய தகுதிப்பாட்டை நல்ல அடித்தளத்துடன் உறுதியாக நிலைநிறுத்தத் துணைபுரியும்.

இந்தியா, இலங்கை, சிங்கப்பூர் ஆகிய மூன்று நாடுகளில் ஆட்சிமொழியாகும் சிறப்புப் பெற்ற ஒரே இந்திய மொழி தமிழ் மொழிதான் என்பதை நாம் மறந்துவிட முடியாது. யூத இனத்திற்கு அடுத்த நிலையில் உலகெங்கும் அதிக அளவில் பரந்து வாழ்கின்ற ஒரே இனம் தமிழ் இனம் என்பதையும் உலகின் 58 நாடுகளில் தமிழர்கள் வாழ்கின்றனர் என்கின்ற உண்மை நிலையினையும் நாம் மறந்துவிட முடியாது. சமற்கிருதத்திற்கு அடுத்த நிலையில் பிறநாட்டு அறிஞர்களால் உலகெங்கிலும் ஆய்வு நிகழ்த்தப்படுகின்ற ஒரே மொழி தமிழ்மொழிதான் என்பதையும் யாரும் மறுத்துவிடமுடியாது. மேற் கூறிய வாய்ப்புகளையெல்லாம் பயன்படுத்திக்கொண்டு, மைய அரசு தேசிய நிலையில் தமிழ் மொழியைச் செம்மொழியாக அறிவித்திருக்கின்ற அரிய வாய்ப்பினையும் நழுவ விடாது தமிழறிஞர்களும், தமிழக அரசும் தொடர்ந்து இணைந்து முயன்றால் உலகச் செம்மொழிகளின் வரிசையில் தமிழ் மொழி விரைவில் இடம்பெறும் என்பது உறுதி. இப்பெரும் பயணத்தின் முதல் முயற்சியாக உலகச் செம்மொழித் தமிழ் மாநாடு அமையும் என்று நம்புவோம்.

❖

# திராவிடம்

## என்னும் கருத்தியல் தோற்றமும் - வளர்ச்சியும்

திராவிடம் என்பது இந்தியத் துணைக் கண்டத்தின் தெற்கிலுள்ள நிலப் பகுதியைக் குறிப்பது. முதன்முதலாக இனத்தைக் குறிக்க வந்த இச்சொல், காலப் போக்கில் தென்னக மக்களையும், தென்மொழிக் குடும்பத்தையும் அடையாளம் காட்டுவதாக அமைந்தது.

'வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறு நல்லுலகம்' என்று தொல்காப்பியப் பாயிரம் தமிழகத்தின் நில எல்லையைக் குறிப்பிடுகிறது. இது பண்டைய திராவிடத்தின் நிலப்பகுதியை வரையறுக்கிறது எனலாம்.

பல்லாயிரமாண்டுகள் பழைமை வாய்ந்த குமரிக்கண்டத்தின் ஒரு பகுதியாக நிலவியதே அன்றைய திராவிடம். அதுவே மனிதஇனம் தோன்றிய முதற்பகுதி. அதுவே முதன்மொழியாகிய தமிழ் பிறந்த இடம். அதுவே நாகரிகத்தின் தொட்டில் ஆக விளங்கியது.

மொழித் தெளிவும் மொழியுணர்வும் இல்லாதோர் 'தமிழ்' என்பதை ஒலிக்க இயலாத நிலையில் அதனைப் பலவாறாகச் சிதைத்துத் 'திராவிடம்' ஆக்கிவிட்டனர். தமிழ் 'த', வடமொழியில் 'த்ரா' ஆவது இயல்பு. தேகம் என்பதைத் 'திரேகம்' என்றும், பாகதம் என்பதைப் 'பிராகிருதம்', என்றும், பெரிது என்பதைப் 'பிருகத்' என்றும் வழங்குவன இதற்குச் சான்றாகும்.

காலப்போக்கில் தமிழ் என்பது தமிழ்மொழியை மட்டும் குறிப்பதாக நின்றது. அதிலிருந்து கிளைத்த தெலுங்கு, கன்னடம், மலையாளம் உள்ளிட்ட இருபத்தொரு மொழிகளையும் ஒன்று சேர்த்து வழங்குதற்கு ஒரு சொல் தேவைப்பட்டபோது கால்டுவெல் முதலான அறிஞர்கள் 'திராவிடம்' என்னும் சொல்லைப் பயன்படுத்தத் தொடங்கினர். இது வடசொல் என்றும் இதிலிருந்துதான் தமிழ் என்னும் சொல் வந்தது என்றும் அவர் கருதினார். ஆனால், ஸ்டன் கனொவ், ஏ.எல்.பாஷம் முதலானோர் தமிழ் என்னும் சொல்லில் இருந்தே 'திராவிடம்' என்னும் சொல் வந்தது என்று கூறுவர். அவர்கள் கருத்துப்படி, தமிழ் – தமிழ – தமிள – த்ரமிள – த்ரமிட – த்ரவிட – திராவிட என இச்சொல் வந்திருக்க வேண்டும். இஃது ஏற்கத்தக்கது.

கால்டுவெல்லுக்கு முன்னரே பழைமையான காலத்தில் குமரில பட்டராலும், ஆதிசங்கரராலும் திராவிடம் என்னும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. அவர்களும் திராவிடம் என்பதைத் தமிழ் என்னும் பொருளிலேயே பயன்படுத்தினர்.

தந்தை பெரியாரின் வருகைக்குப் பின்னர்த் திராவிடம் என்பது ஒரு கருத்தியல் கோட்பாடாக மலர்ந்தது.



முனைவர் இரா. குமரவேலன்

- திராவிடம் என்பது தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய மொழிகளைக் குறிக்கும் சொல்.
- திராவிடம் என்பது ஆரிய இனத்திலிருந்து வேறுபட்ட தமிழ் சார்ந்த இனம் என்பதைக் குறிக்கும்.
- திராவிடம் என்பது வந்தேறிகளான பார்ப்பன மக்களிடமிருந்து மாறுபட்ட இனத்திற்குரிய தமிழ் (பிராமணரல்லாத) மக்களைக் குறிக்கும்.
- திராவிடம் என்பது சமற்கிருதம் என்னும் வடமொழியிலிருந்து வேறுபட்ட பழைமையான மொழியைக் குறிக்கும்.
- திராவிடம் என்பது வடநாட்டினர் ஆதிக்கத்திலிருந்து தன்னுரிமையைக் காக்கத் துடிக்கும் தமிழ் உணர்வாளரைக் குறிக்கும்.
- திராவிடம் என்பது தமிழ் மொழியை இந்தி முதலான பிற மொழிகளின் ஆதிக்கத்திலிருந்து காக்கும் ஓர் அடையாளச் சின்னம்.
- திராவிடம் என்பது வேத உபநிடதங்களையும் பழைமைப் புராணங்களையும் இழிந்த இதிகாசங்களையும் அறவே வெறுக்கும் ஒரு கருத்தோட்டம்.
- திராவிடம் என்பது சங்க காலச் சிறப்புமிக்க பண்பாட்டையும் நாகரிகத்தையும் ஒழுக்கத்தையும் நினைவுபடுத்தும் ஒரு வரலாற்று உணர்வு.
- திராவிடம் என்பது ஆரிய நாகரிகத்திலிருந்து பெரிதும் வேறுபட்ட தனித்தன்மை மிக்க ஒரு நாகரிகத்தை உணர்த்தும்.
- திராவிடம் என்னும் தமிழர் நிலப்பகுதி காலத்தால் முதலில் தோன்றிய ஒன்று. பின்னரே, உலகின் பிற பகுதிகள் மக்கள் வாழும் நிலங்களாக மாறின என்னும் நிலவியல் உண்மையைப் பறைசாற்றுவது.
- திராவிடம் மொகஞ்சதாரோ, அரப்பா முதலான சிந்து சமவெளி நாகரிகத்தைத் தன் பழைய நாகரிக வாழ்விற்குச் சான்றாகக் கொண்டது.
- திராவிடம் கீழைத்திசை நாடுகளொடும், மேற்கே உரோமாபுரி, எகிப்து, மெசபடோமியா முதலான நாடுகளோடும் ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே வாணிகத் தொடர்பும் அரசியல் தொடர்பும் கொண்டது.
- திராவிடம், ஆரியர்கள் ஆடு மாடுகளை மேய்த்துக்கொண்டு நாடோடிகளாக வாழ்ந்த பழங்காலத்தில், உழவுத்தொழிலை நன்கறிந்து, பெரிய வீடுகளையும் கோட்டை கொத்தளங்களையும் கட்டி வாழ்ந்த ஒரு பேரினம் எனத் திகழ்ந்தது.
- திராவிடம், மொழி வளத்தாலும், இலக்கிய இலக்கண வளத்தாலும், கற்பனை–கருத்து வளத்தாலும், கலை–அறிவியல் திறத்தாலும் இந்தியாவின் பிற பகுதிகளைக் காட்டினும் சிறந்து விளங்குவது.
- திராவிடம் மட்டுமே இந்தியாவில் ‘பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்’, ‘யாதும் ஊரே யாவரும் கேளிர்’, ‘ஒன்றே குலம் ஒருவனே தேவன்’ முதலான எண்ணற்ற வாழ்வியல் தத்துவங்களைத் தான் பயில்வதே அன்றி, உலகிற்கும் அளித்து மகிழ்வது.
- திராவிடம் மட்டுமே இந்தியாவின் பிற இனங்களைக் காட்டிலும் ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன் அகம் புறம் என்னும் எல்லா வகையிலும் சிறந்து ஒரு ‘வீர யுக’க் காலமாகத் திகழ்ந்தது.
- திராவிடம் தன்னிகரற்ற ‘திருக்குறள்’ என்னும் இலக்கியத்தையும், தொல்காப்பியம் என்னும் இலக்கணத்தையும் கொண்டு ஈடு இணையற்று விளங்குவது.
- திராவிடம் (தமிழ்) இந்தியாவின் பழைமையான ஒப்பற்ற ‘உயர்தனிச் செம்மொழி’யைத் தனக்குரியதாகக் கொண்டு தலைநிமிர்ந்து வாழ்வது.
- திராவிடம் என்பது ஆங்கிலேயர் நுழையும் வரைக்கும் அயலவரான எந்த மன்னர் பரம்பரைக்கும் தோற்று அடிமையாக வாழ்ந்தது இல்லை என்னும் பெருமையை உணர்த்துவது.
- திராவிடம் என்பது தந்தை பெரியார் தந்த பகுத்தறிவு உணர்வும், பேரறிஞர் அண்ணா தந்த இன–மொழி உணர்வும், முத்தமிழறிஞர் முதல்வர் கலைஞர் தந்த இலக்கிய–அரசியல் உணர்வும் ஒருசேர அமைந்த கொள்கையில் ஊற்றம் பெற்றது.
- திராவிடம் என்பது பேரறிஞர் அண்ணாவின் கடமை, கண்ணியம், கட்டுப்பாடு என்னும் மூன்று அரண்களைப் பெற்று வளர்ந்தது.

– இக்கொள்கைகளும் கோட்பாடுகளும் கடந்த நூறு ஆண்டுகளாகப் பின்னிப் பிணைந்து படிப்படியாக வளர்ந்ததே ‘திராவிடக் கருத்தியல்’ என்னும் தத்துவம் ஆகும்.

திராவிடக் கருத்தியலில் சிறப்பான இடம் பெறுவது அதன் நாகரிகமும் பண்பாடும்தாம். தொன்மைக் காலத்திலிருந்தே உயர்ந்த நாகரிக வாழ்வையும், உலகம் போற்றும் பண்பாட்டையும் கொண்டிருந்தது திராவிடம். ‘‘நாகரிகம் என்பது முதலில் இந்தியாவில்தான் தோன்றியது; அதுவும் தொன்மையான ஆதிக்காலத்துத் திராவிடர்களிடமிருந்துதான். பின்னர், அது மெசபெடோமியா சென்று பாபிலோனியம் உள்ளிட்ட பிற பழங் கலாசாரங்களை உருவாக்கியது. இன்றைய நாகரிகம் இவற்றிலிருந்தே தோன்றியது’’ என்பர் சுநீதி குமார் சட்டர்ஜி.

உண்மையில் சொல்லப் போனால் திராவிடக் கருத்தியல், தொல்காப்பியர் காலத்தில் முளைவிட்டுச் சங்க காலத்தில் வளர்ந்து செடியாகிச், சிலப்பதிகாரக் காலத்தில் கிளைவிட்டுப் பரவிச், சோழர் காலத்தில் மரமாகித் தழைத்து வளர்ந்து, இருபதாம் நூற்றாண்டளவில் கனிந்தது எனலாம்.

இளங்கோவடிகள் புகார்க் காண்டம், மதுரைக் காண்டம், வஞ்சிக் காண்டம் என்னும் மூன்று பகுதிகளை அமைத்ததும், கதையொடு மூவேந்தர்களை இணைத்துச் செயல்பட வைத்ததும், தென்னகம் முழுவதற்கும் உரியதாகக் காப்பியம் பாடி முடித்ததும் இன்றைய திராவிடக் கருத்தியலின் ஒரு முன்னோட்ட நிலையாக உணர்தற்கு உரியது.

வடநாட்டை ஆண்ட எந்த இனத்தைச் சேர்ந்த அரசனும் வேங்கடத்தைத் தாண்டித் தெற்கே நுழைய முடியாமற் போனதற்கும் தமிழ் அல்லது திராவிட இன உணர்வு ஒரு காரணமாக இருந்திருக்க வேண்டும் என்பது வரலாற்று ஆய்வுகள் மூலம் அறியத் தக்கதாகும்.

நாட்டு உணர்வோ இன உணர்வோ வெறும் நில எல்லையைச் சார்ந்ததாக மட்டுமே தோன்றுவதில்லை. அந்த நாட்டின் மக்கள் பிரிவுகள், பேசும் மொழிகள், பின்பற்றும் சமயநெறிகள், மேற்கொண்ட அக ஒழுக்கப் பண்பாடுகள், களத்தில் பிறரொடு மாறுபட்டுப் போர்புரிந்தபோது வெளிப்படுத்திய புற ஒழுக்க நெறிமுறைகள், அரசியல்–சமூக – பொருளாதார மேம்பாடுகள் ஆகிய அனைத்தின் தாக்கத்தாலும் தோன்றி வளர்வதே ஓர் இனத்தின் கருத்தியல் கோட்பாடுகள். அந்த வகையில் 'திராவிடக் கருத்தியல்' உருவாகி வளர்ந்துள்ளது என்று உறுதியாகக் கூறலாம்.

சான்றாக ஒன்றனை இங்குச் சுட்டலாம். சேரன் செங்குட்டுவன் வடபுலம் நோக்கிப் படையெடுத்துச் செல்வதற்குக் காரணமான சூழலை விளக்கும் இளங்கோவடிகள், அங்கிருந்த கனகவிசயர், "தென்றமிழ் நாடாளும் வேந்தர் செருவேட்டுப் புகன்றெழுந்து, மின்தவழும் இமய நெற்றியில் விளங்கு வில் புலி கயல் பொறித்த நாள் எம்போலும் முடிமன்னர் ஈங்கில்லை போலும்'' என்று கூறியதாகத் தெரிவிப்பர். இதிலிருந்து அந்தக் கால கட்டத்திலேயே – அதாவது ஏறத்தாழ ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே – இந்தியத் துணைக்கண்டத்தில் இருந்த பிற பகுதியினர் சேர சோழ பாண்டிய வேந்தர்களை ஒரு தனிக் குழுவினராகவே கருதினர் என்பது தெளிவாகிறது. 'வில் புலி கயல்' ஆகியவற்றை ஒன்றாக இணைத்தே கண்டனர் என்பதும், சேர சோழ பாண்டியர் என வேறுவேறாகக் கருதாமல் 'தென்தமிழ் நாடாளும் வேந்தர்' என ஓர் இனத்தவராகவே கருதினர் என்பதும் உறுதியாகின்றன. இளங்கோ அடிகள் இந்த இடத்தில் தாம் கனவுகண்ட ஒருமைத் தமிழகத்தை நினைவூட்டுவதோடு, பிற்காலத் 'திராவிடக் கருத்திய'லுக்கும் கால்கோள் செய்தார் எனலாம்.

இறையுணர்வுக் காலகட்டத்திலும் மொழி யுணர்வோ, இனவுணர்வோ சிறிதும் குறைவுபடவில்லை. மாறாக வளர்ந்தே காணப்பட்டது. மூவர் தேவாரத்தில் தமிழ் என்னும் சொல் 315 இடங்களிலும், நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் 93 இடங்களிலும், பெரிய புராணத்தில் 314 இடங்களிலும் இடம் பெற்றுள்ளன. (ப.கிருட்டினன், தமிழ் நூல்களில் தமிழ்மொழி, தமிழினம், தமிழ்நாடு, ப.134) அது மட்டுமல்லாமல் நாளும் தமிழ்வளர்த்த திருஞானசம்பந்தர் 'திராவிட சிசு' என வழங்கப்பட்டதும், திருநாவுக்கரசர் 'ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்' என்று பாடியதும் அக்காலத்தே வளர்ந்த தமிழின உணர்வினை வெளிப்படுத்துவன ஆகும்.

ஆயினும், காலப்போக்கில் மொழி வேறுபாட்டாலும், சமய வேறுபாட்டாலும், அயலவரின் தலையீடுகளாலும், அரசாண்ட மன்னர்களின் நடவடிக்கைகளாலும் முன்னைய தமிழர் கனவு கண்ட ஒருமைத் தமிழகமோ, திராவிடக் கருத்தியல் உணர்வோ வளரமுடியாமல் தடைப்பட்டது.

நீறு பூத்த நெருப்பாக இருந்த இந்த உணர்வு மீண்டும் தலைகாட்டக் காலத்தை எதிர்பார்த்துக் காத்திருந்தது. அந்தக் காலமும் ஆங்கிலேயர் ஆட்சியின்போது உருவாயிற்று.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் 3% மக்கள்தொகை கொண்ட பார்ப்பனர்கள் சிறந்த கல்வி வசதி பெற்று உயர்ந்த பதவிகளில் அமர்ந்து மற்றவர்களை ஏய்த்துக் கொண்டிருந்த நிலையைப் பார்ப்பனரல்லாத தலைவர்கள் உணர்ந்தனர். கல்வி, நிருவாகம், அரசியல் முதலிய துறைகள் அவர்களின் கட்டுப்பாட்டுக்குள் இருந்தமை அவர்களுக்கு எரிச்சல் ஊட்டியது. பார்ப்பனர் ஆதிக்கத்தை ஒழிப்பது நம் முதல் கடமை என்று அவர்கள் கருதினர். இதற்கான ஒரு வாய்ப்பு எதிர்பாராமல் அமைந்தது.

1890 முதல் காங்கிரசு மாநாடுகளுக்குத் தவறாமல் சென்று வந்த டாக்டர் டி.எம்.நாயர் (தரவாட்டு மாதவன் நாயர்), 1916ஆம் ஆண்டு தில்லி இம்பீரியல் சட்டப் பேரவைக்கு நடந்த தேர்தலில் பார்ப்பனர் சூழ்ச்சியால் தோற்கடிக்கப்பட்டார். இந்தச் சூழலைப் பயன்படுத்திக்கொண்டு சி.நடேச முதலியார் 'திராவிட சங்கம்' என்னும் ஓர் அமைப்பை உருவாக்கினார். அதன்மூலம் திராவிடர்கள் அரசியலில் உயரவேண்டும் என்று அவர் கருதினார். நாயரும், நடேசனாரும் பிட்டி தியாகராயரோடு இணைந்து திராவிட சங்கத்தை வலிமை உடையதாக்கினர்.

அன்னி பெசண்ட் அம்மையார் 'ஹோம் ரூல்' இயக்கம் தொடங்கியபோது அதில் சி.பி. இராமசாமி ஐயர் முதலான பார்ப்பனர்கள் மிகுதியாக இடம்பெற்றிருந்தனர். இது 'பார்ப்பனர் இயக்கம்' என்று கூறிப் படித்த பார்ப்பனரல்லாத தலைவர்கள் அதனைப் புறக்கணித்ததோடு 'நீதிக் கட்சி'யினைத் தொடங்கினர். பிரித்தாளும் (divide et

imperia) சூழ்ச்சியினரான ஆங்கிலேயர் உடனடியாக அன்னி பெசண்டுக்கு எதிரான இந்த இயக்கத்தை ஆதரித்துச் செயல்பட்டனர். ரௌலட் சட்டம் வந்தபோது காங்கிரசு அதனைக் கடுமையாக எதிர்த்தது. அந்தச் சூழலில் 1920ஆம் ஆண்டு பொதுத்தேர்தல் வந்தது. தேர்தலைக் காங்கிரசு புறக்கணித்தது. நீதிக்கட்சி பிரிட்டிஷார் ஆதரவொடு சென்னை மாகாண ஆட்சியைப் பிடித்தது. ஒருவகையில் பார்ப்பனர் ஆதிக்கம் ஒழிய ஆங்கில அரசே காரணமாக அமைந்தது.

1920 முதல் 1937 வரை இவ்வியக்கத்தைச் சேர்ந்த ஏ.சுப்பராய ரெட்டியார், டி.என்.சிவஞானம், டாக்டர் சுப்பராயன் (சுயேச்சை), பி. முனியசாமி, பொப்பிலி அரசர் ஆகியோர் சென்னை மாகாண முதல்வர்களாகச் செயல்பட்டனர். ஒரு பக்கம் நீதிக்கட்சி, மற்றொரு பக்கம் தென்னிந்திய நல உரிமைச் சங்கம், இன்னொரு பக்கம் டாக்டர் டி.எம்.நாயர் முதலானோரின் திராவிட சங்கம். இந்த மூன்று அமைப்புகளும் திராவிட உணர்வைத் தோற்றுவிப்பதற்குக் காரணம் ஆயின. எனினும் 1925ஆம் ஆண்டு நடந்த காஞ்சிபுரம் மாநாட்டில் தந்தை பெரியார் கொண்டு வந்த வகுப்புரிமை பற்றிய தீர்மானம் ஏற்கப்படாததால், அவர் அதிலிருந்து விலகினார். நீதிக்கட்சியில் தலைமையேற்றுச் சில காலம் பணியாற்றிய அவர் 1944இல் நீதிக்கட்சி மாநாட்டில் அறிஞர் அண்ணா கொண்டு வந்த தீர்மானத்தின்படி 'திராவிடர் கழகம்' என்னும் அமைப்பினை உருவாக்கினார்.

1920ஆம் ஆண்டு தொடங்கி இவ்வாறு படிப்படியாக வளர்ந்த பார்ப்பனரல்லாதார் இயக்கம் இருபத்தைந் தாண்டுக் காலத்தில் 'திராவிடக் கருத்தியல்' என்னும் கோட்பாட்டினை உருவாக்கியது. இதற்கு மூல முதற்காரணமாக அமைந்தவர் தந்தை பெரியார் அவர்களே ஆவார். திராவிடக் கருத்தியலுக்கான அனைத்து அடிப்படைகளையும் நுணுகி ஆராய்ந்து வெளிப் படுத்தியதோடு, நாடெங்கும் தன் தொண்டர்களொடு பயணம் மேற்கொண்டு அதனை விளக்கியுரைத்து மக்களிடையே 'திராவிடம்' என்னும் உணர்ச்சியையும் 'திராவிடர் நாம்' என்னும் எழுச்சியையும் காலூன்றச் செய்தார். அவருக்குப் போர்முரசாகவும் தளபதியாகவும் விளங்கியவர் அறிஞர் அண்ணா.

திராவிடக் கருத்தியலின் அடிப்படையில் தமிழர்க்கு 'வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம்' கம்யூனல் ஜி.ஓ. மூலம் 1921ஆம் ஆண்டு கிடைத்தது. அதே ஆண்டு பெண்களுக்கு வாக்குரிமை வழங்கப்பட்டது. டாக்டர் முத்துலட்சுமி அம்மையாரின் அரும்பணியால் 'தேவதாசி முறை' ஒழிக்கப்பட்டது. தாழ்த்தப்பட்ட மக்களுக்குப் பல இடங்களில் நிலப் பட்டாக்கள் வழங்கப்பட்டன. கோயில்கள் அறநிலையப் பாதுகாப்புச் சட்டங்கள்வழி ஒழுங்குபடுத்தப்பட்டன. பொதுச் சொத்துகள் அரசின் மேற்பார்வையில் இயங்கச் சட்டம் வழிசெய்தது. இவையனைத்தும் திராவிடக் கருத்தியலின் தாக்கத்தால் விளைந்த பயன்கள் என்பது இங்கு நினைக்கத்தக்கது.

திராவிடம் என்றதும் அஃது ஆரியப் பார்ப்பனருக்கு எதிரானது என்றும், பார்ப்பனரைப் பகைவராகக் கருதுவது என்றும் தவறான கருத்து ஒன்று பரப்பப்பட்டது. அதற்கு அறிஞர் அண்ணா அவர்கள் அந்தக் காலத்திலேயே தெளிவான விளக்கமும் விடையும் தந்தார்.

"நம்முடைய குற்றச்சாட்டுகள் எல்லாம் பார்ப்பனியத்தின் மீதேயன்றிப் பார்ப்பனர் மீது அல்ல என்பதைத் தெளிவாகவே விளக்கியிருக்கிறோம். தீண்டாமையைப் பார்ப்பனியம் என்று கூறுகிறோம். புரோகிதத்தைப் பார்ப்பனியம் என்று கூறுகிறோம். கோயில்களில் உள்ள ஏற்பாடுகளையும் அங்கு நடக்கும் அட்டூழியங்களையும் பார்ப்பனியம் என்று கூறுகிறோம். சாதியில் உயர்வு தாழ்வு கற்பிப்பதைப் பார்ப்பனியம் என்று கூறுகிறோம்."

"உடன்கட்டை ஏறும் வழக்கத்தைப் பார்ப்பனியம் என்றும் அது ஒழிக்கப்படவேண்டும் என்றும் கூறிவந்தோம். அது சட்டபூர்வமாக ஒழிக்கப்பட்டது."

"குழந்தைப் பருவத்தில் இருக்கும் பெண்களுக்குத் திருமணம் செய்துவைக்கும் வழக்கம் பார்ப்பனியத்தின் விளைவு என்று கூறினோம். அதைத் தடைசெய்து சர்க்கார் 'சாரதா' சட்டத்தைக் கொண்டுவந்து நிறைவேற்றியது."

"தீண்டாமை பார்ப்பனியத்தால் ஏற்பட்ட பாதகம் என்று கூறினோம்."

"நாம் பார்ப்பனரின் விரோதிகளல்லர். பார்ப்பனியத்தின் விரோதிகளே என்பதற்கு எண்ணற்ற சான்றுகளை இதுவரை எடுத்துக்காட்டி வந்திருக்கிறோம்"

– என்று பேரறிஞர் அண்ணா 6–3–1949இல் திராவிட நாடு இதழில் விளக்கியுள்ளார். இந்த விளக்கம் வேறொரு காரணத்திற்காகச் சொல்லப்பட்டதென்றாலும் உண்மையில் 'திராவிடக் கருத்தியல்' பற்றிய விளக்கமாகவே இருத்தலைக் காணலாம்.

திராவிடக் கருத்தியலின் அடிப்படை நாதம் 'சமூக நீதி' என்பதே. மனிதருள் ஏற்றத் தாழ்வில்லை. உயர்ந்த இடத்தில் இருக்கும் ஒருவன் துய்க்கும் அனைத்தும் சமுதாயத்தின் அடித்தட்டில் இருக்கும் ஒருவனுக்கும் கிடைக்க வேண்டும் என்பதே திராவிட இயக்கத்தின் குறிக்கோள். அதன் விளைவே இன்று கலைஞர் கொண்டு வந்திருக்கும் அத்தனை முன்னேற்றத் திட்டங்களும் எனலாம். எங்கோ இருப்பவனுக்கும் 'நிலப்பட்டா', கடைநிலைக் கிராமத்தாருக்கும் 'வண்ணத் தொலைக் காட்சி, வறுமை நிலையில் நோய்வாய்ப்பட்டால் அதற்கெனக் 'கலைஞர் உயிர்காக்கும் நலத்திட்டம்', எந்த இனத்தில் பிறந்தாலும் கோயில் அருச்சகர் ஆகலாம் – இவை போன்ற எண்ணற்ற நலத்திட்டங்கள் அனைத்தும் திராவிடக் கருத்தியல் தமிழர்க்குத் தந்த பலன்கள், பயன்கள் ஆகும்.

பெரியார் தொடங்கிவைத்த 'மகளிர் முன்னேற்றம்' என்னும் கருத்தியல் இன்று பல்வேறு நிலைகளில் உச்சநிலை அடைந்துள்ளது. 'பெண் ஏன் அடிமையானாள்?' என்று அவர் தொடுத்த வினாவும் விளக்கமும் மக்களிடையே எழுச்சியை உண்டாக்கின. இன்று தமிழகத்தில் உள்ள 'மகளிர் சுயமுன்னேற்றக் குழுக்களின்' எண்ணிக்கை இதற்குச் சான்று பகர்கிறது. மாநகராட்சி மன்றத் தலைவர் பதவிகளிலிருந்து பஞ்சாயத்து உறுப்பினர் வரை மகளிர் பெற்றிருக்கும் பங்கும் பணியும் இன்று மக்களை வியப்பில் ஆழ்த்தும் வண்ணம் உள்ளன. அன்னை நாகம்மையார், மூவலூர் மூதாட்டி இராமாமிர்தத்தம்மையார், டாக்டர் தருமாம்பாள் அம்மையார், டாக்டர் முத்துலட்சுமி அம்மையார் உள்ளிட்ட பல பெருமக்களின் பெயரால் மகளிர்க்கான நலத்திட்டங்களைக் கலைஞர் அரசு உருவாக்கிச் செயல்படுத்திக் கொண்டிருப்பதும் இங்கு நினைக்கத் தக்கது.

ஒரு காலத்தில் உயர் சாதியினர் மட்டுமே ஆரம்பக் கல்வியிலிருந்து உயர்கல்வி வரை படிக்கத் தகுதியுடையோர் என்றிருந்த நிலையை மாற்றி, 'அனைவருக்கும் கல்வி' என்றும், 'சமச்சீர் கல்வி' என்றும் முறையாக எங்கணும் கொண்டு வந்திருக்கும் வளர்ச்சி நிலை ஒரு பக்கம். உயர்கல்விக்கெனப் பல்வேறு திட்டங்களை அறிமுகப்படுத்தி ஏற்றத்தாழ்வு ஏதுமில்லாமல் படிப்பதற்கு வாய்ப்பினை நல்கியுள்ள நிலை மற்றொரு பக்கம். மதிய உணவு, கட்டணமில்லாக் கல்வி, உதவித் தொகை, போக்குவரத்து வசதி, தங்கும் விடுதிகள், வேறு பிற சலுகைகள் எனக் கல்வி வளர்ச்சியில் அக்கறை காட்டுவதும் திராவிடக் கருத்தியலின் விளைவுகளே.

தமிழ்மொழிக் காப்பும் வளர்ச்சியும் என்பது திராவிடக் கருத்தியலின் அடிப்படைக் கொள்கைகளுள் ஒன்று. தமிழுக்குத் தீங்கு எத்திக்கில் இருந்து வந்தாலும் எந்த வடிவத்தில் வந்தாலும் திராவிட இயக்கம் எதிர்த்து நின்று தமிழைக் காப்பதில் தவறியதில்லை.

சென்னை மாநிலத்திற்குத் 'தமிழ்நாடு' என்று பெயரிட்டதும், தமிழைச் 'செம்மொழி' நிலைக்கு உயர்த்திடச் செய்ததும் திராவிட இயக்கத்தின் தலையாய தமிழ் வளர்ச்சிப் பணிகளாகும். தமிழறிஞர்களைப் போற்றுவதிலும், தக்க விருதுகளை வழங்குவதிலும் தமிழகம் முதல் நிலையில் இருக்கிறது. கலைஞர் அரசு நடத்தும் 'செம்மொழி மாநாடு' அதன் மகுடத்தில் மின்னும் மாணிக்கமாக ஒளிவிடுதலைக் காண்கிறோம்.

ஒரு நாட்டின் பாதுகாப்பு நிலையும், வளமான வாழ்க்கை நிலையும் அந்த நாட்டின் கருத்தியல் கோட்பாட்டை உருவாக்கக் காரணமாக இருக்கும். ஓர் இதழாளர் அண்மையில் இரண்டு நாடுகளை இதற்குச் சான்றாகக் காட்டினார். ஒன்று, வட கொரியா. தன்னைப் பாதுகாத்துக் கொள்வதற்கு மிகுந்த நிதியைச் செலவிட வேண்டிய கருத்தியல்நிலை காரணமாக மக்களை வறுமையில் ஆழ்த்தியிருக்கிறது. ஆனால், பிற ஐரோப்பிய நாடுகளைப் போல அல்லாமல் போர்ச் சிதைவுகளோ, அழிவுகளோ சிறிதும் இல்லாத சுவிட்சர்லாந்து என்னும் நடுநிலைக் கருத்தியல் கொண்ட நாடு பொருளாதார வளத்தோடு அமைதி காத்து வருகிறது. (டெக்கான் கிரானிகிள், 7.2.2010).

கருத்தியல் நாட்டின் நிலையைப் பாதிக்கவும் செய்யும், உயர்த்தவும் செய்யும் என்பது அறியத்தக்கது. ஆதிக்க நாடுகளில் அதிபர் வைப்பதுதான் சட்டம். அவர் எடுக்கும் முடிவு பகுத்தறிவுக்கும் மக்கள் நலனுக்கும் ஒத்ததாக இருக்குமானால் அந்த நாடு வளம்பெறும்; இன்றேல் அவதிக்கு உள்ளாகும். போரால் நலிந்த நாடுகளை இதற்குச் சான்றாகக் காட்டலாம். மக்களாட்சி உள்ள நாடுகளில் ஆளுவோர் (குறிப்பாக ஆளும் கட்சித் தலைவர்) அதன் கருத்தியலை உருவாக்குகிறார். அதனால் தனிப்பட்ட ஒருவரின் அல்லது ஒரு கட்சியின் விருப்பு வெறுப்புகளே அந்தக் கருத்தியலுக்குக் காரணமாகிறது. இந்தியக் கருத்தியலும் இங்கிலாந்தின் கருத்தியலும் இவ்வகையில் உருவாகின்றன.

மேலும், ஒரு நாட்டின் அல்லது இனத்தின் கருத்தியல் என்பது மக்களின் பண்பாட்டுக்கும் நாகரிகத்துக்கும் தேவைக்கும் ஏற்ப மாறக் கூடியது. இந்தியக் கருத்தியல் (காங்கிரசு பேரியக்கம் பின்பற்றுவது) என்பது வேறு. இதனால் முல்லைப் பேரியாற்றுச் சிக்கல், பாலாற்றுச் சிக்கல், காவிரியாற்றுச் சிக்கல், தேசிய மொழிச் சிக்கல், மாநிலப் பிரிவுச் சிக்கல், இலங்கைத் தமிழர் சிக்கல் என எதிலும் ஒரு முடிவுக்கு வர இயலாது. பொதுவுடைமைக் கருத்தியல் என்பது இந்தியப் பெருநாட்டுக்குப் பொருந்தி வராத ஒன்று. பிறந்த இடத்திலேயே தோற்றுப்போன அந்தக் கருத்தியல் இந்தியா போன்ற ஒரு பெரிய ஏழைமக்கள் மிகுந்த ஒரு நாட்டிற்குத் தகுந்த வளர்ச்சித் திட்டத்தைத் தர இயலவில்லை. மதவாதக் கருத்தியல் என்பது, நாத்திகம் உள்ளிட்ட பன்மதச் சூழல் கொண்ட இந்தியாவைப் பிளவுபடுத்துமே தவிர ஒன்றுபடுத்தாது.

ஆகவே, தமிழகத்தைப் பொறுத்தவரை திராவிடக் கருத்தியல் ஒன்றே பலனளிப்பதாக இருக்க முடியும். இதனைக் கடந்த ஒரு நூற்றாண்டுத் தமிழக வரலாறு மெய்ப்பித்துக் காட்டியிருக்கிறது. நீதிக் கட்சியும் திராவிட இயக்கமும் நடத்திய ஆட்சிகளால் தமிழக மக்கள் பெற்ற நலன்கள் இதற்குச் சான்று பகரும். இனி, வருங் காலங்களிலும் திராவிடக் கருத்தியலே வெல்லும் என்பது உறுதி.

❖

# உலகெங்கும் கொண்டு சேர்ப்போம் உயர்தனிச் செந்தமிழை



முனைவர் சிலம்பொலி சு. செல்லப்பன்

பகலவனிலிருந்து சிதறி விழுந்த ஒரு சிறு நெருப்புக் கோளம் சுழன்று சுழன்று குளிர்ந்து இந்நிலவுலகாயிற்று என்பர் அறிவியலார். விரைந்தாடும் பம்பரத்தின் நடுப் பகுதியே மற்றப் பகுதியைவிட மிகுவிசையில் சுற்றும். அஃதொப்பவே பம்பரம்போற் சுழன்ற நெருப்புக் கோளத்தின் நடுப்பகுதியே முதலில் குளிர்ந்து கடினப்பட்டு உறைந்தது. இதுகொண்டு உலகின் நடுக்கோட்டுப் பகுதியே முதலிற்றோன்றிய நிலப்பகுதி எனலாம். இந் நடுக்கோட்டுப் பகுதியில் இருந்து கடலில் மூழ்கிய இலெமூரியாக் கண்டமே நம் பண்டைய தமிழகம். ஆதலின் உலகில் முதன்முதலில் தோன்றிய நாடு தமிழ் நாடே! அங்குத்தான் முதல் மாந்தரினம் தோன்றியிருக்க முடியும். எனவே தமிழினமே உலகில் முதலிற்றோன்றிய மாந்தரினம். அம் மக்கள் பேசிய மொழி தமிழ் என்பதனால் தமிழே ஞால முதன்மொழியாம்.

**உலக முன்னாடு உயர்தமிழ் நாடதே**

**உலக முன்மக்கள் ஒண்டமிழ் மக்களே**

**உலக முன்மொழி ஒண்டமி ழே,யிதை**

**உலகம் இன்(று) அறி யாநிலை உள்ளதே.**

எனப் புலவர் குழந்தை வேதனையுடன் பாடுகிறார்.

**தமிழர் இமயம்வரை பரவி வாழ்ந்தனர்**

இலெமூரியாக் கண்டத்தைக் கடல் கொண்ட பின்னர்த் தமிழர் அங்கிருந்து வெளியேறிக் குமரி முதல் இமயம்வரை பரவி ஆட்சி செய்தனர். "குமரியொடு வட இமயத்து ஒரு மொழி வைத்து உலகாண்ட சேரலாதன்" எனச் சேர மன்னனைச் சிலப்பதிகாரம் சிறப்பித்துக் கூறுகிறது. அங்கு வாழ்ந்த தமிழர்கள் சிந்து சமவெளி நாகரிகம் கண்டு உலக முதல் நாகரிகத்திற்கு உரியவர் என்ற பெயரும் பெற்றனர்.

தமிழுக்குப் பின்னரே உலகில் பிறமொழிகள் தோன்றின. சீனம், கிரேக்கம், சமற்கிருதம், இலத்தீன், ஈபுரு ஆகிய மொழிகள் தமிழொப்பத் தொன்மை வாய்ந்தவையாய்க் கருதப் பெறுகின்றன. இம் மொழிகளே செம்மொழி என்னும் பெருமை பெறுகின்றன. ஒரு மொழியில் இடம் பெற்றிருக்கும் இலக்கியத்தின் தரம் கொண்டே அது செம்மொழி என வழங்கப்படுகிறது. தமிழ் மொழியை ஆய்ந்த பரிதிமாற்கலைஞர் தமிழை ஓர் உயர்தனிச் செம்மொழி என நிறுவிக் காட்டியுள்ளார்.

செம்மொழித் தன்மை என்பது அம்மொழியின் தொன்மை (Antiquity), ஒத்திசைவு (Harmony), தெளிவு (Clarity), தன்னடக்கம் (Restraint), கண்ணியம் (Serenity), இலட்சியம் (idealism), பொதுமை (Universality), பகுத்தறிவு (Reason), ஒழுங்கு (Order), கண்ணோட்டம் (Humanism) போன்ற கூறுபாடுகளின் தொகுப்பாகக் கருதப்படுகிறது என்கிறார் டாக்டர் வா.செ. குழந்தைசாமி.

செம்மொழிக்குரிய தகுதிப்பாடுகளாக (1) தொன்மை, (2) தனித்தன்மை, (3) பொதுமைப் பண்பு, (4) நடுவுநிலைமை, (5) பலமொழிகட்குத் தாய், (6) பட்டறிவு வெளிப்பாடு, (7) பிறமொழித் தாக்கமின்மை, (8) இலக்கிய வளம், (9) உயர் சிந்தனை, (10) கலை, இலக்கியத் தனித்தன்மை வெளிப்பாடு – பங்களிப்பு, (11) மொழிக் கோட்பாடு என மொழியியலார் வகுத்துள்ளனர் என்பதனை அறிஞர் மணவை முஸ்தபா சுட்டிக் காட்டுகிறார்.

எவ்வகையில் கூறினும் இத்துணைத் தகுதிப் பாடுகளையும் ஒருசேரப் பெற்றிருப்பது தமிழ் மொழியேயாம்! உலகின் மூத்த மொழிகளுள் ஒன்றாயும் உலக முதன் மொழியாயும் ஒப்புக்கொள்ளப்பட்டது நம் தமிழ். "நம் தமிழ் மொழி உலகில் பிற நாட்டவரின் தாய்மொழியாய் இருந்திருக்குமேயானால் இந்நேரம் அது உலகப் பெருமையை அடைந்திருக்கும்" என்கிறார் பேறறிஞர் அண்ணா.

நம் மொழிக்குள்ள பெருமை அளவுக்குள் அடக்கிக் கூற முடியாதது. அறிஞர்கள் பல்வேறு வகையில் பலபடப் பாராட்டியுள்ளனர். "நம் மொழிக்குள்ள தொன்மை, முன்மை, தூய்மை, தாய்மை, இளமை, வளமை, இனிமை, தனிமை, செம்மை, மும்மை போன்ற சிறப்புகள் அனைத்தையும் வேற்றுமொழிகள் பெற்றிருக்கவில்லை."

நம் மொழி ஒரே வகை ஒலிப்புடையது; உலக வழக்கு, செய்யுள் வழக்கு என இரு வகை வழக்குகளையுடையது; இயல், இசை, நாடகம் எனும் முப்பெயர் கொண்டது. வெண்பா, ஆசிரியப்பா, வஞ்சிப்பா, கலிப்பா என நான்கு வகைப் பாக்களைக் கொண்டது; எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என ஐந்து இலக்கணம் பெற்றது; எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை எனச் செய்யுளுறுப்புகள் ஆறு உடையது; குறிஞ்சி, முல்லை,

மருதம், நெய்தல், பாலை, கைக்கிளை, பெருந்திணை என திணை ஏழு கொண்டது; அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழைபு என எட்டு வனப்புடையது; நகை, அழுகை, இளிவரல், வியப்பு, அச்சம், வீரம், வெகுளி, உவகை, நடுநிலை என ஒன்பது சுவை பொருந்தியது; சுருங்கச் சொல்லல் முதலிய பத்து அழகுகளால் நிறைந்தது.

இதனைப் புலவர் குழந்தை தமது இராவண காவியம் தாய்மொழிப் படலத்தில் அழகுறப் பாடியிருப்பதனைக் காணலாம்.

**"ஒருவகை ஒலிப்பும் இருவகை வழக்கும்**
**உரியமுப் பெயரும்நாற் பாவும்**
**இருதகை வரும்ஐந் தியலும் ஆ றுறுப்பும்**
**எழுவகைத் திணையும்எண் வனப்பும்**
**மருவிய ஒன்பான் சுவையும்பத் தழகும்**
**வகைபட அமைதமிழ் மொழியைத்**
**திருகிய மனத்தார் சிறப்பிலை என்று**
**செப்பின்ஒப் பவர்பொறுப் பவரே!"**

பிறமொழிகளைப் போன்று தமிழ் எழுத்துகளில் ஒலித் தடுமாற்றம் எதுவும் இல்லை. அறிஞர் பெருனாட்டுசா 'fish' என்பதனை 'Ghoti' என எழுதலாமே என்றாராம்! அதற்கு அவர் தந்த விளக்கம் : 'fish' என்பதில் எப், ஐ, ஷ் என்னும் ஒலிகள் உள்ளன. 'laugh' எனும் சொல்லில் 'gh', 'எப்' ஆக ஒலிக்கிறது. Women என்ற சொல்லில் 'o', 'ஐ' ஆக ஒலிக்கிறது. 'Station' என்ற சொல்லில் 'ti', 'ஷ்' ஆக ஒலிக்கிறது. ஆகவே எப், ஐ, ஷ் என்பதனை gh, o, ti என்று எழுதலாமல்லவா! இதைச் சுட்டி fish என்பதனை ghoti என எழுத இடமேற்படுகிறது என்றாராம் அவ்வறிஞர். தமிழில் இக் குழப்பம் இல்லை. ஒரெழுத்துக்கு அதற்குரிய ஒலி ஒன்று மட்டுமே!

உலக மொழியியலறிஞர்கள் தமிழைச் செம்மொழி என ஏற்றுக் கொண்டுள்ளனர். பின் ஏன் தமிழைச் செம்மொழியாக அங்கீகரிக்க வேண்டும் என்னும் கோரிக்கை அரசுக்கு வைக்கப்பட்டது? அதற்கெனப் பல போராட்டங்கள் நடந்தது ஏன்? செம்மொழியாக ஒப்புக் கொள்ளப்பட்டுள்ள தமிழைச் செம்மொழி என அரசிடம் கேட்க வேண்டிய நிலை எதனால்? அமெரிக்காவில் கலிபோர்னியா பல்கலைக் கழகத்தில் பேராசிரியராய்ப் பணிபுரியும் டாக்டர் ஜார்ஜ் எல். ஹார்ட் (Prof. George L. Hart), "தமிழ் ஒரு செவ்வியல் மொழி என நிறுவ நான் ஒரு கட்டுரை எழுத வேண்டியிருப்பது எனக்கு மிகவும் விந்தையாக இருக்கிறது. இஃது, இந்தியா ஒரு மகத்தான நாடு என்பதனையும் இந்து மதம் உலகின் மாபெருஞ் சமயங்களில் ஒன்று என்பதனையும் நிரூபிக்க வேண்டும் என்பதுபோல் உள்ளது" என ஒரு கட்டுரையில் எழுத வேண்டிய நிலை நேரிட்டதேன்?

இந்திய மைய அரசின் மனிதவள மேம்பாட்டுத் துறையின்கீழ் செவ்வியல் மொழிகள் எனும் ஒரு பட்டியல் இருக்கிறது. அதில் பாலி, பிராகிருதம், சமற்கிருதம், அரேபியம், பாரசீகம் ஆகிய மொழிகள் இடம் பெற்றுள்ளன. இம்மொழிகளில் சிறந்துள்ள அறிஞர்கட்கு ஆண்டுதோறும் குடியரசுத் தலைவர் மாளிகையில் விருதுகள் வழங்கப் பெறுகின்றன. இம்மொழிகளில் கல்வியை, ஆய்வை மைய அரசு ஊக்குவித்து வருகிறது; குறிப்பாக சமற்கிருத மொழிக்கு மிகுந்த அளவில் நிதியுதவி வழங்கப்பட்டு வருகிறது. அந்த வகையில் தமிழுக்கும் அத்தகைய ஊக்குவிப்பும் நிதியுதவியும் அரசு அளிக்க வேண்டுமென்பதனால், உலக மொழியியலாளர் செம்மொழி என ஒத்துக்கொண்டுள்ள தமிழ், அரசுப் பட்டியலில் இல்லாதது ஏன்? அதுவும் சேர்க்கப்பட வேண்டும், தமிழைச் செம்மொழி என அரசு அறிவித்து சமற்கிருதத்தோடு ஒத்த மதிப்பைத் தர வேண்டுமென்பதற்காகவே தமிழ்ச் செம்மொழிப் போராட்டங்கள் நடைபெற்றன. தமிழ் அமைப்புகள், அறிஞர்களின் போராட்டத்தொடு டாக்டர் கலைஞர் அவர்கள் மைய அரசை வற்புறுத்தி இதனைச் செய்ய வேண்டுமென உறுதியாக நின்றதனால் 12.10.2004 அன்று செம்மொழிப் பட்டியலில் தமிழைச் சேர்க்க மைய அரசு ஆணை வழங்கியது. இந்திய மொழிகளில் தமிழும், சமற்கிருதமுமே செம்மொழிகள். சமற்கிருதத்தைச் செம்மொழி என அறிவித்து, இதற்கு முன்னர் எவ்வித அரசாணையுமில்லை. அரசில் ஆங்கிலேயர் காலத்திலிருந்து அளித்து வந்த உதவி வழமையாகத் தொடர்ந்து அளிக்கப்பட்டு வந்ததுவே தவிர எந்த ஆணையின் பாற்பட்டுமன்று.

18ஆம் நூற்றாண்டில் தொடங்கி வடமொழியிலிருந்த வேதங்கள், உபநிடதங்கள், மனு தரும சாத்திரம் போன்ற எண்ணற்ற நூல்கள் ஆங்கிலத்திலும், ஐரோப்பிய மொழிகளிலும் பெருமளவில் மொழிபெயர்க்கப்பட்டன. கொல்கத்தாவில் நீதிபதியாக இருந்த சர் வில்லியம் ஜோன்ஸ் 'ஆசியக் கல்விச் சங்கம்' எனும் ஓர் அமைப்பை நிறுவினார். வடமொழியை நன்கு அறிந்த அவர் வடமொழி நூல்கள் ஆங்கிலத்தில் வெளிவர மிகுதியும் உதவினார். ஆங்கில அரசின் செயற்பாடுகள் அப்போது கொல்கத்தாவை மையமாகக் கொண்டு இயங்கியதாலும், ஜோன்ஸ் போன்றோரின் உதவியாலும் சமற்கிருத மொழி ஆங்கில அரசில் தனித்த செல்வாக்குப் பெற வழியேற்பட்டது. அரசின் உதவி அம்மொழிக்கு மிகுதியாகக் கிடைக்கலாயிற்று. அதனுடைய தொடர்ச்சியாகவே, நாடு விடுதலை பெற்ற பிறகும் அவ்வுதவிகள் தொடர்ந்து வந்த நடைமுறை காரணமாக வழங்கப்பட்டு வந்தன.

சமற்கிருதம் அரசியல் செல்வாக்குப் பெற்றிருந்த வேளையில் தமிழின் அருமை பெருமைகளை எடுத்துச் சொல்லும் நிலை தமிழ்நாட்டில் இல்லாமல் போயிற்று. தமிழரின் பண்பாட்டுக் களஞ்சியமான சங்க இலக்கியங்கள் அப்போது அச்சில் வெளிவரவில்லை. அவற்றை எடுத்துக் கூறுவாரும் இல்லை. மேக்ஸ்முல்லர் சமற்கிருத நூல்களை மேலைநாட்டு மொழியில் மொழி பெயர்த்துக் குவித்தபோது தமிழரின் பண்டைய இலக்கியங்கள்கூடப் பரவலாக நமக்குக் கிடைக்கவில்லை. இவ்விலக்கியங்கள் கிடைத்ததன்பின் கால்டுவெல், ஜி. யு. போப்பு போன்றோர் பயின்று தமிழின்

பெருமையை, தொன்மையை, தனித்த பண்பாட்டை உலகுக்கு எடுத்துக் கூறும் நிலை ஏற்பட்டது.

தமிழுக்கு எது செய்தாலும் அது வடமொழிக்கு எதிராகச் செய்யப்படுவது போன்ற ஓர் எண்ணத்தைச் சிலர் எவ்வாறோ உருவாக்கிவிட்டனர். என் வயல் செழித்துப் பயன்தர வேண்டுமென உழைத்தால் அது பிறர் வயலை அழிக்கச் செய்வது என்று கூறுவதா? இஃது ஒருபுறமிருக்கத் தமிழினும் வடமொழியே உயர்ந்ததென்ற கருத்தைப் பரப்பித் தமிழர்களிலேயே சிலர் தடுமாறித் தவறிழைத்தனர்.

உலகப் பொதுமறை எனப் போற்றப்படும் திருக்குறளே வடமொழி வழியில் வந்தது என வாதிட்டோரும் உண்டு. திருக்குறளினும் வேதங்களே சிறந்தவை என்ற கருத்து மோதல் நடைபெற்றதுண்டு. ஆரியம் சிறந்தது, தமிழ் சிறந்தது எனும் மோதல்கள் வேண்டா. ஆரியம் வேதத்தைக் கொண்டிருக்கிறது; தமிழ் திருக்குறளைக் கொண்டிருக்கிறது. எனவே வேற்றுமை பாராட்ட வேண்டாம் என்கிறார் ஒருவர்.

**ஆரியம் செந்தமிழும் ஆராய்ந்து இதனினிது**
**சீரிய(து)என்(று) ஒன்றைச் செப்பரிதால் – ஆரியம்**
**வேதம் உடைத்து; தமிழ்திரு வள்ளுவனார்**
**ஒது குறட்பா உடைத்து.**

என்றார் புலவர் வண்ணக்கஞ் சாத்தனார். வெள்ளிவீதியார் எனும் புலவரோ, ஆரியம் வேதத்தைக் கொண்டிருக்கலாம். வேதத்தையும் திருக்குறளையும் ஒன்றெனக் கூறிவிட முடியாது. வேதத்தைப் பார்ப்பனர்களே படிக்க முடியும்; திருக்குறளையோ யாவரும் கற்கலாம் எனக் கூறி வேதத்தினும் திருக்குறளை ஒருவகையில் உயர்வெனச் சொல்லலாம் என்றார்.

**செய்யா மொழிக்குந் திருவள் ளுவர்மொழிந்த**
**பொய்யா மொழிக்கும் பொருள்ஒன்றே – செய்யா**
**அதற்குரியர் அந்தணரே ஆராயின் ஏனை**
**இதற்குரியர் அல்லாதார் இல்.**

கோதமனார் எனும் புலவரோ, இன்னும் ஒருபடி மேலே போய், வேதத்தினும் திருக்குறள் உயர்ந்ததுவே என்றார். எங்கே ஏட்டிலே எழுதினால் அதன் ஆற்றல் குறைந்துவிடுமோ என ஆரியர்கள் வேதத்தை ஏட்டில் எழுதவில்லை. ஆனால், திருக்குறளோ ஏட்டில் எழுதப்பட்டது மட்டுமன்று. தமிழ் வல்லுநரோ அல்லரோ எவர் சொன்னாலும் அதன் ஆற்றல் குறைந்து விடுவதில்லை.

**ஆற்றல் அழியுமென்(று) அந்தணர்கள் நான்மறையைப்**
**போற்றியுரைத் தேட்டின் புறத்தெழுதார் – ஏட்டெழுதி**
**வல்லுநரும் வல்லாரும் வள்ளுவனார் முப்பாலைச்**
**சொல்லிடினும் ஆற்றல்சோர் வின்று.**

வடமொழி உயர்ந்தது என்று கூறியே தமிழைப் புறந் தள்ளிவரச் செல்வாக்குள்ளவர் முயன்றதாலும் தமிழின் பெருமையை உரியவாறு எடுத்துச் சொல்ல ஆட்சிச் செல்வாக்குள்ளவர் இல்லாமற் போனதாலும் தமிழ் தனக்குரிய செல்வாக்கைப் பெற முடியவில்லை.

எத்துணை இடர்ப்பாடுகளிருந்தபோதிலும் அவற்றை யெல்லாம் தாண்டி, தமிழ், செம்மொழி எனும் அரசொப்புதலைப் பெற்றுள்ளது. ஒப்புதல் பெற்றது மட்டும் போதாது; தமிழை உலகெங்கும் போற்ற, மதிக்கத்தக்க திட்டங்களைத் தீட்டி, அதற்கான நிதி ஒதுக்கீட்டினைப் பெற்று இடையறாது செயலாற்ற வேண்டும்.

தமிழ் செம்மொழியாக அறிவிக்கப்பட்டிருப்பதனால் இந்தியப் பல்கலைக்கழக மானியக் குழு அதிக நிதி ஒதுக்கும். இந்தியா முழுவதும் உள்ள பல்கலைக்கழகங்களில் தமிழ்மொழி ஒரு முக்கிய இடத்தைப் பெற்று ஆய்வுகள் மேற்கொள்ளப்படும்; அதைத் தொடர்ந்து உலகின் பல பகுதிகளில் தமிழ்மொழி ஆய்வு விரிவடையும் என எதிர்பார்க்கலாம். பன்னாட்டு மொழிக் கலைக் களஞ்சியங்களில் தமிழ் இலக்கியங்கள், கட்டுரைகள், வரலாறு, பண்பாட்டுக் கருத்துகள் இடம் பெறும். இந்தியப் பல்கலைக் கழகங்களிலும் உலகப் பல்கலைக் கழகங்களிலும் தமிழ் மொழிக்குத் தனி இருக்கை நிறுவப்பெறும். கல்வெட்டு ஓலைச்சுவடிகள் ஆய்வு தமிழ் மொழியை மையப்படுத்தி மேற்கொள்ளப்பெற்று உண்மையான வரலாறு, பண்பாட்டுக் கருத்துகள் வெளிவர ஏதுவாகும். அறிவியல் தமிழ் வளர்ச்சிக்கு வேகமூட்டும் வகையில் பல திட்டங்கள் வகுத்துச் செயற்படுத்த முடியும். இந்திய மொழிகளில் மட்டுமல்லாது ஆங்கிலம், பிரெஞ்சு, செருமனி போன்ற மொழிகளில் தமிழ் இலக்கியங்களும் புதிய படைப்புகளும் மொழிபெயர்க்கப்பட்டு உலகமெங்கும் பரவும்.

தமிழ் உலகெலாம் சீரோடும் சிறப்பொடும் வளர்ந்துவரும் சூழ்நிலை உருவாகியுள்ள இவ்வேளையில் தமிழர்கள் விழித்தெழுந்து தாய்த் தமிழைப் பேணிக் காக்க ஆற்ற வேண்டிய சில இன்றியமையாக் கடமைகள் உள்ளன. தமிழ்வழிக் கல்வி. ஆலயங்களில் தமிழில் வழிபாடு, ஆட்சியில் தமிழ், நீதிமன்றங்களில் தமிழ், தமிழ் நாட்டில் தமிழைக் கட்டாயமாகப் படிக்கின்ற நிலை, மருத்துவம் அறிவியல் கல்விகளில் தமிழ், தமிழ்வழிப் பயில்வோர்க்குத் தமிழ்நாட்டில் பணி அமர்த்தலில் முன்னுரிமை, தமிழன் தமிழனொடு தமிழில் பேசுவதைக் கடமையாகக் கருதும் சூழ்நிலை, தமிழ்ப் பெயர்கள் சூட்டுதல், பிறமொழிக் கலப்பைத் தவிர்த்தல், தமிழாய்ந்தோர்க்கு உரிய சிறப்பும் மதிப்புமளித்தல் ஆகிய செயல்கள் நடைமுறைப்படுத்தப் பட வேண்டும்.

**தாயெழில் தமிழை என்றன்**
**தமிழரின் கவிதை தன்னை**
**ஆயிரம் மொழியிற் காண**
**இப்புவி அவாவிற் றென்றே**
**தோயுறும் மதுவின் ஆறு**
**தொடர்ந்தென்றன் செவியில் வந்து**
**பாயுநாள் எந்த நாளோ?**
**ஆரிதைப் பகர்வார் இங்கே?**

எனப் பாவேந்தர் பாரதிதாசன் ஏக்கத்தொடு பாடினார். அவர் ஏக்கம் நீங்க உலகெங்கும் தமிழை விரும்பி ஏற்கும் நிலையை மலரச் செய்வோமாக! ❖

# எம்மொழி செம்மொழி



ஒலிக்கடலில் முதன்முதலாய்
உதித்துவந்த பேரலையே!
கலைக்கடலை நாவினால்
கடையவந்த செவியமுதே!

எம்மொழிக்கும் மூத்தவளே!
எம்மொழியாய் வாய்த்தவளே!
செம்மொழியாய் மொழிகளுக்குள்
செம்மாந் திருப்பவளே!

மேல்வாய் பிரசவித்த
மெல்லிய ஒலிவளர்ந்து
பால்வாய்ப் பருவமுறப்
பைந்தமிழே! நீபிறந்தாய்!

பிறந்தநாள் அறியாத
பேரழகே! பிறமொழிகள்
இறந்தநாள் காணநிதம்
இளமைபெற்று வந்தவளே!

நயந்த மொழிகளிங்கு
நாலா யிரமிருந்தும்
உயர்ந்தவளே! உன்னைப்போல்
உயிர்மெய்யோ டிருப்பவர்யார்?

வல்லினமும் மெல்லினமும்
வளமான இடையினமும்
நல்லினமாய் ஒன்றுபட்டு
நடக்கவழி செய்தவளே!

வலஞ்சுழித் தோடும்
வளமான சொல்நதியே!
நலஞ்செழித்த இனத்தவர்தம்
நாவின் அறுவடையே!

உருவான படைப்பையெல்லாம்
உயர்திணை அஃறிணையென்று
எருவான பண்பாட்டை
இலக்கணத்தில் வைத்தவளே!

வாயின் சுவாசமே!
வைதாலும் தித்திக்கும்
காயாத கனிச்சுவையே!
காதருந்தும் கள்ளே!

எம்மொழி செம்மொழி
எனக்கேட்டால், தலைநிமிர்ந்து
எம்மொழி செம்மொழி
எனச்சொல்லும் புகழ்கொடுத்தாய்!

தாய்ப்பாலுக் கப்பால்உன்
தனப்பாலைக் குடித்ததொரு
வாய்ப்பால் நமைவளர்த்தாய்
வையகத்தில் உயர்வளித்தாய்!

முப்பதே ஒலிகளுக்குள்
முழுவுலகும் அளப்பவளே
ஒப்பதே இல்லாத
உயர்இனத்தின் உயிர்மூச்சே!

பாடையிலே தேவர்களின்
பாடைகள் போனபின்னும் – மக்கள்
பாடையிலே ஆடையிலே
படிப்படியாய்ச் செழித்தவள்நீ!

முச்சங்கப் பாலருந்தி
மூன்று குணம்பெற்றுக்
கச்சுக் குமரியெனக்
காப்பியத்தில் ஒளிர்ந்தவளே!

நச்சுப்பல் லாய்க்கொல்லும்
நாற்பாலுக் கெதிராக
இச்சைப்பால் முப்பாலாய்
எமைஒன்று சேர்த்தாய்நீ!

சமண பவுத்தச்
சமயத் துறவிகளும்
தமது மொழியென்று
தாலாட்ட வளர்ந்தவளே!

உயர்மொழிநீ தனிமொழிநீ
உன்னதமாம் செம்மொழிநீ
உயிர்மொழிநீ மெய்மொழிநீ
உயர்வைத் தருபவள்நீ!

தேவாரம் தொடுத்தவளே!
திருவா சகத்தேனே!
நாவார ஆழ்வாரின்
நயங்களிலே ஆழ்ந்தவளே!

ஏசு மதத்தார்
ஈந்ததொரு கொள்கையினால்
ஏசா மதத்தை
எந்தமிழர்க் களித்தவளே!

மக்கா மதீனாவின்
மக்காத கொள்கையுடன்
'நிக்கா' முடித்தவளே
நேயம் வளர்த்தவளே!

மதம்மாற்ற வந்தவரை
மதம்மாற்றி வைத்தவளே!
நிதம்மாற்றம் பெற்றிங்கு
நித்தம் வளர்பவளே!

இமயத்தில் கொடியேற்றி
இறுமாந் திருந்தவளே!
சமயங்கள் அனைத்தையும்
சமமாக மதித்தவளே!

உன்னாலே பிறந்தோம்
உன்னாலே வளர்ந்தோம்
உன்னாலே பெருமைபெற்றே
உலகத்தில் வாழுகிறோம்!

அகம்நீ! புறம்நீ! எம்
ஆருயிரும்நீ எங்கள்!
முகம்நீ! முகவரிநீ!
முடியாத புகழும்நீ!

கவிக்கோ அப்துல் ரகுமான்

# கணவாய் வழிவரும் காற்று!



நுதற்கண் கடவுள்
நுவன்ற தமிழே!
முதற்கண் வணக்க
முனக்கு; – புதர்க்கண்
கிடந்தேன் புழுவாய்;என்
கீழ்மையைநீ போக்க
நடந்தேன் புலிப்போத்தாய்
நான்!

விறகுநான்; வண்டமிழே!
உன்னருள் வாய்த்த
பிறகுநான் வீணையாய்ப்
போனேன்; – சிறகுநான்
சின்னதாய்க் கொண்டதொரு
சிற்றீசல்; செந்தமிழே!
நின்னால் விமானமானேன்
நான்!

உண்ணும் உணவும்
உடுத்தும் உடுக்கையும்
எண்ணும் தமிழே!
எனக்கீந்தாய்! – நண்ணும்
எவர்க்கும் நலம்செய்வாய்
என்றும்; எனக்குத்
துவர்க்கும் பிறமொழிச்
சொல்!

கைத்திடும் காஞ்சிரங்
காயையும் கன்னலாக்கி
வைத்திடும் வல்லமைகொள்
வண்டமிழே! – எய்த்திடும்
வேழம்போல் ஆவேன்நீ
விட்டுவிட்டால்; கைவிட்ட
ஈழம்போல் ஆவேன்நான்
ஈங்கு!

மூப்படைந்த போதும்
முதிர்தமிழே! போனவாரம்
பூப்படைந்த பெண்போல்
பொலிகின்றாய்; – யாப்படைந்த
பாட்டுள் அமர்ந்தபடி
பாராள்வாய்; அம்மா!என்
ஏட்டுள் அடங்குமோஉன்
ஏர்?

தருவாய் நிழல்தான்
தருவாய்; நிதம்என்
வருவாய் எனநீ
வருவாய்; – ஒருவாய்
உணவாய் உளதமிழே!
ஓர்ந்தேன்; நீபாட்டுக்
கணவாய் வழிவரும்
காற்று!

பாநாட்டும் நுண்பொருளைப்
போர்த்தபடி நூலோர்தம்
நாநாட்டில் வீற்றிருக்கும்
நற்றமிழே! – மாநாட்டைக்
கூட்டுகின்றார் எம்தலைவர்;
கூட்டியேநின் ஏற்றத்தை
நீட்டுகின்றார் இன்னும்தான்
நீடு!

காவியக் கவிஞர் வாலி

# செம்மொழிப் பெண்ணாள்

கணிப்பொறிப் பித்தன்நீ
நரிமுகத்தில் விழித்தால்
நல்லதென்பது பொய்யாக்கி
'எலி' முகத்தில் விழிக்கிறாய் எப்பொழுதும்!

காற்றடைத்த பானமும்
வறட்டி தட்டிய வட்டரொட்டியும்
இணையத்தின் மறுபக்கமும்
நாற்காலி மோட்சம் உனக்கு.

கணிப்பொறி சலித்த கணங்களில்
காதலிக்கவும் செய்கிறாய்

எங்ஙனம் காதலிப்பேன்
முகத்தில் முள்முளைத்த பின்னும்
நாவில் தமிழ்முளைக்காதவனை ?

உதடு ஒட்டாத குறளொன்று கேட்டேன்
உதடு கடித்தாய்.

ஓரெழுத் தொருமொழி என்றேன்
சீபோ என்றாய்

வெண்பா ஓசை என்னென விளித்தேன்
விழித்தாய்.

முதல்மாந்தன் தமிழன்என முன்மொழிய
ஆதாரம் சொல்லென்றேன்
நீண்ட மூச்சிழுத்து
மொத்தமாய் விட்டாய்.

வடசொற் கிளவி வடவெழுத்தொரீஇ...
நூற்பா நிறைவுசெய் என்றேன்
குளிர்பானத்தில் குதித்துவிட்டாய்.
குரல் துத்தம் கைக்கிளை
உழை இளி விளரி தாரம்
எவை குறித்த சொற்கள் இவை என்றேன்.
விட்டுவிடுவெனக் கெஞ்சினாய்.

உலக மயமாதலெனும் சுனாமியிலும்
மூழ்காத மொழி தமிழ்எனும் கூற்றுக்குச்
சான்றொன்று சொல்என்றேன்.

சவ்வு மிட்டாயை
ஒருகடை வாயிலிருந்து
மறுகடைவாய் மாற்றி மென்றாய்.

இணையத்தில் அண்டம் அளக்கிறாய்
நிலவில் ஈரம் பார்க்கிறாய்
செவ்வாயில் யுரேனியம் தேடுகிறாய்
பெற்றவள் பெருமைமட்டும்
கற்றிலை ஒன்றும்.

தமிழ் பேசு
தமிழ் அறி
தமிழ் துய்

இன அடையாளம்
மொழியென்று
குன்றின்மேல் நின்று கூவு.

பிறகுன்னைக்
காதலிப்பது குறித்துப்
பூவா தலையா
போட்டுப் பார்க்கிறேன்!







கவிப்பேரரசு வைரமுத்து

# எது தமிழ்ச் செல்வம்?



'என்னஉங்கள் தமிழ்ச்செல்வம் ?' என்றே கேட்கும்
எதிரிகட்கே இதைப்பதிலாய்ச் சொல்நீ நண்பா!
முன்னையிங்கே பன்மொழிகள் மண்ணின் மீது
முளைத்தாலும் மூத்தமொழி தமிழில் உள்ள
கன்னல்நேர் இலக்கியங்கள் தனித்தே நின்று
காட்டுகின்ற ஒளிமணிகள் ஒன்றி ரண்டா ?
மன்னியநம் வாழ்வியலின் இலக்க ணத்து
வரைபடம்'தொல் காப்பிய'நூல் என்றே கூறு!

அறநெறிக்கே 'திருக்குறள்'தான்! காதல் வாழ்வின்
அன்புநெறிப் பெரும்புதையல் 'அகநா னூறு'!
மறக்கலங்கள் கல்வெட்டே 'புறநா னூறு'!
வரலாற்றுப் பதிவேடே 'சிலம்'பாம்! ஈகை
நெறிக்கு 'மணி மேகலை'தான்! மணவின் பத்தை
நேர்'சிந்தா மணி'யொன்றே வியப்பாய்க் காட்டும்!
பறையறைந்து தமிழ்வேந்தர் வீரம் ஈரம்
பக்குவமாய் மொழிவதுதான் 'பதிற்றுப் பத்து'!

விழுமியநூல் 'நாலடியார்' ஒழுக்கச் சட்டம்!
வெற்றிக்கே 'கலிங்கத்துப் பரணி'! நாட்டின்
அழகுணர்த்தும் 'நளவெண்பா'! சொல்லாட் சிக்கே
அருங்'கம்ப இராமாய ண'ந்தான் சாட்சி!
பழிகாணா வள்ளல்களின் கொடையுள் ளத்தைப்
'பாணாற்றுப் படைநூல்கள்' படம்பி டிக்கும்!
பழையபுகார் ஏற்றுமதிப் பெருமை யெல்லாம்
'பட்டினப்பா லை'காட்டும் அருமை என்னே ?

முத்து'நந்திக் கலம்பக'மோ தமிழுக் காக
மூச்சிழந்த மானமன்னன் மாண்பைக் கூறும்!
தத்துவங்கள் வாழ்கடலே 'சித்தர் பாடல்'!
'தலப்பாடல்' மண்மணத்தின் சான்றாய் நிற்கும்!
வித்தகர்கள் 'பாரதி' 'பா வேந்தர்' பாடல்
விழிதிறக்க வைத்ததன்றோ தமிழர் தம்மை ?
எத்தனையோ இனும்சொல்வோம்; தோழா! கேட்டும்
இகழ்ந்துரைப்போர் 'விழிபெற்ற குருடர்' என்போம்!

கவிவேந்தர் கா. வேழவேந்தன்



# “இற்றைத் திங்கள் இவ் வெண்ணிலவில்...”

அற்றைத் திங்கள்... அவ்வெண் ணிலவில்...
அண்ணா எங்கள் உடனிருந்தார்!
அலைகட லோரம் தம்பிய ரோடும்
அறிவுரை யாடி அகம்நெகிழ்ந்தார்!
மற்றை நிலத்துப் பிறமொழி யாளரும்
மலைக்கச் செந்தமிழ் அன்னைக்கே
‘மாநாடு’ கண்டார்! தேன்கூடு போல
மக்கள் குவிந்தார் சென்னைக்கே!
இற்றைத் திங்கள்... இவ்வெண் ணிலவில்...
இதயம் கலந்தோம் கலைஞரொடும்!
இரவல் பெற்ற அண்ணாவின் இதயம்
இரண்டறக் கலந்த தலைவரிடம்!
ஒற்றைத் தமிழன் விழிகசிந் தாலும்
உள்ளம் துடிப்பது அவரல்லவா!
“உயர்தனிச் செம்மொழி மாநாடு” கோவையில்!
உலகத் தமிழர் மகிழ்வல்லவா!

அரண் அமைந் ததுபோல் தமிழர்க் கெல்லாம்
அன்புத் தலைவர் இருக்கின்றார்!
அணு அணு வாகத் தமிழில் தோய்ந்தும்
ஆய்ந்தும் இலக்கியம் படைக்கின்றார்!
தருணம் வாய்க்கும் பொழுதெல் லாம்,நம்
தாய்மொழிக் கேஅவர் தொண்டல்லவா!
“தற்கா லம், இது பொற்கா லம்”எனத்
தமிழ்க்கொடி பறப்பது இன்றல்லவா!
இரணியன் வழிவந் தவர்நம் பெருமை
எடுத்துச் சொல்வது கடனல்லவா!
‘ஈரம், வீரம்’ நமதிரு கண்கள்
என்பது தான்நம் மரபல்லவா!
தரணி மிசைத்தமிழ்ப் பரணி முழக்கம்
தலைவர் கலைஞரின் விழைவல்லவா!
தன்னேரி லாத அறிஞர் படைப்புகள்
தமிழ்வர லாற்றுப் பதிவல்லவா!

அன்னைத் தமிழின் உயர்வெம் உயர்வாம்!
அவள்துயர்ப் படில்,எம் தாழ்வென்போம்!
அறம்,பொருள், இன்பம் தமிழ்மறை என்போம்!
அகம்,புறம் எங்கள் வாழ்வென்போம்!
பன்னெடுங் காலத் தொன்மைச் சரிதப்
பண்பா டெங்கள் வேர்என்போம்!
பஃறுளி யாற்றின் குமரிக் கண்டப்
பாரம் பரியம் நாம்என்போம்!
“தன்னை வென்றவன்” என்றார் அண்ணா!
‘தரணியை வெல்வான்’ எனச் சொன்னார்!
தமிழக மே,நம் கலைஞர் பின்னால்!
‘தகுதி’ அறிந்தே அவர்சொன்னார்!
முன்னைத் தமிழர் வாழ்வியல் நெறியில்
முன்னே றிடுவோம் புதுமைக்கே!
“முத்தமிழ் அறிஞர்” வழிபின் பற்றி
முடிசூட் டிடுவோம் தமிழுக்கே!



கவிச்சுடர் கவிதைப்பித்தன்

# பாட்டுப் பாராட்டு

- இசைப் பாடல்



பல்லவி

வள்ளுவர் கோட்டம் உன்கோட்டம் – உன்
வார்த்தைகள் தமிழின் உயிரோட்டம்!
அறிஞரும் கலைஞரும் நடப்பதுபோல் – குறள்
அடிஇரண்டும் தரும்எழில் தோற்றம்!
அறம் பொருள் இன்ப
விருந்தளித்தாய் – அதில்
அகம் புறம் இரண்டுக்கும்
மருந்தளித்தாய்...
காலையும் மாலையும் உன் நினைவு – கலைஞர்
கண்களில் கண்ட ஒருகனவு...
(வள்ளுவர் கோட்டம்)

சரணம் – 1

வாழ்வியல் இலக்கணம் நீவகுத்தாய் – தமிழ்
வாழ்ந்திட இலக்கியம் நீபடைத்தாய்
உலகுக்குப் பொதுமை நீகொடுத்தாய் – மனித
உயிரெலாம் உயர்வுற நெறிசமைத்தாய்!
தமிழர்க்கு அய்யன் நீயல்லவோ – எங்கள்
தலைகளை நிமிர்த்திய தாயல்லவோ ?
அமிழ்தினும் இனிதுஉன் முப்பாலே – செம்மொழித்
தமிழர்க்குத் திருக்குறள் தாய்ப்பாலே!
காலையும் மாலையும் உன்நினைவு – கலைஞர்
கண்களில் கண்ட ஒருகனவு...
(வள்ளுவர் கோட்டம்)

சரணம் – 2

கன்னியா குமரியில் சிலையானாய் – செம்மொழிக்
கலைஞரின் நெஞ்சினில் நிலையானாய்!
அலைகளும் தொழும்திரு மறையானாய் – முத்தமிழ்
அறிஞரின் எழுத்தினில் உரையானாய்!
ஓவியம் பலஇந்த உலகிலுண்டு – உனக்கோர்
ஒப்பற்ற ஓவியம் தமிழில்உண்டு!
அருளோவியமாம் கலைஞர் கையால் – ஒரு
குறளோவியமாய் மலர்ந்தவன்நீ...
காலையும் மாலையும் உன்நினைவு – கலைஞர்
கண்களில் கண்ட ஒருகனவு...
(வள்ளுவர் கோட்டம்)



கவிஞர் மு.மேத்தா

# மீண்டுமொரு சங்ககாலம் மலர வேண்டும்

கற்கால வாழ்க்கையிலே உலக மெங்கும்
கான்விலங்காய் மாந்தரினம் வாழ்ந்த போது
பொற்காலம் படைத்திட்டான் தமிழன்! அன்று
பொன்னேட்டில் பதித்திட்டான்; அதுவே சங்க
நற்காலம்; நாகரிகம் முதிர்ந்த காலம்!
நன்னூல்கள் கணக்கின்றி எழுந்த காலம்!
முற்காலத் தமிழகத்தை அறிவ தற்கு
முச்சங்க வரலாறே சான்று கூறும்!

தென்குமரிக் கண்டத்தில் அன்றி ருந்த
தென்மதுரை, கபாடபுரம் என்னும் ஊர்கள்
முன்னிரண்டு சங்கங்கள் இயங்கி வந்த
மூதூர்கள்! அக்கண்டம் கடலில் மூழ்க,
பின்னாளில் நான்மாடக் கூடல் என்னும்
பேர்பெற்ற மாமதுரை நகரம் தன்னில்
தன்னேரில் லாத்தமிழ்க்குச் சங்கம் கண்டார்
தமிழ்வளர்த்த கடைச்சங்கம் அஃதே யாகும்!

அகத்தியனார் முதலான புலவோர் பல்லோர்
அருந்தமிழை வளர்த்தார்கள் முதற்சங் கத்தில்!
அகத்தியமே இலக்கணமாய் அமைந்த தன்று!
அரியபல நூல்களெல்லாம் வடிக்க லானார்!
புகழ்மிக்க தொல்காப்பி யர்தம் மோடு
புலவோர்கள் தமிழாய்ந்தார் இடைச்சங் கத்தில்
வகைவகையாய்த் தொகைதொகையாய்
நூல்கள் யாத்து
வையகத்தில் தமிழுக்குப் புகழைச் சேர்த்தார்.

கடைச்சங்கக் காலமதோ தமிழன் கண்ட
களங்கமிலாப் பொற்காலம்; போற்றும் காலம்;
மடைதிறந்த வெள்ளமெனத் தமிழைப் பாய்ச்சி
மதுவுண்ட வண்டெனவே மயங்க வைத்தார்!
படைதிரண்டு களம்நோக்கிச் செல்லும் போதும்
பாத்தொடுத்துத் தமிழ்வளர்த்தார்!
புலவோர் அன்று
படைத்திட்ட இலக்கியப்பூஞ் சோலை தன்னில்
பழக்குலைகள் சரஞ்சரமாய்த்
தொங்கக் காண்போம்!



குடிதழுவிக் கோலோச்சி வாழ்ந்த மன்னன்
குடவோலை முறைவைத்துத் தேர்வு செய்து
குடியாட்சி முறையாலே ஆண்ட காலம்
குறைகேட்டும் அறங்காத்தும் வந்தார்; என்றும்
குடிஉயரக் கோலுயரும் என்னும் உண்மை
குவலயத்துக் குரைத்திட்டான் தமிழன்; மக்கள்
மடிநீங்கப் புகழ்ஓங்க மகிழ்ச்சி பொங்க
மண்ணாட்சி புரிந்தவனும் தமிழன் ஆவான்!

அகமென்றும் புறமென்றும் வாழ்வு கண்டு
ஐந்துவகை நிலம்கண்டு, திணைகள் கண்டு
நிகரில்லாக் கலைவளர்த்துத் தொழிலைப் பேணி
நிலையுயர்ந்து வாழ்ந்திருந்தார் அற்றை மக்கள்!
புகழ்மணக்கக் காவியங்கள் வடித்துத் தந்த
புலவோரும் எண்ணற்றோர் வாழ்ந்தி ருந்தார்
பகைப்புலத்தை வீழ்த்துகின்ற மறவர் கூட்டம்
பார்புகழும் பெருவெற்றி கொண்ட துண்டு!

வள்ளுவரும் இளங்கோவும் மதுரைக் கூல
வாணிகராம் சாத்தனாரும் அவ்வை யாரும்
தெள்ளுதமிழ் இலக்கியங்கள் வடித்த காலம்!
சிலம்போடு மேகலையும் பிறந்த காலம்;
களவியலும் கற்பியலும் ஒழுகி யொத்த
காதலர்கள் மணவாழ்க்கை ஏற்ற காலம்!
உளவியலை நன்றாக உணர்ந்த மேலோர்
ஒழுக்கத்தைப் பேணுதற்கே நூலை யாத்தார்!

மீண்டுமொரு சங்ககாலம் மலர வேண்டும்
மெத்தனமாய் இருக்கின்ற தமிழர் தம்மைத்
தூண்டுதற்கே என்கவிதை பயன்பட் டட்டும்
தொன்மைப்புகழ் தமிழினந்தான் எழுச்சி கொள்ள
வேண்டுவதே இன்றைக்குத் தேவை என்பேன்;
வீணான பழங்கதைகள் பேச வேண்டா!
கூண்டுக்குள் அடைபட்ட சிங்கக் கூட்டம்
கூண்டுடைத்து வெளிவரட்டும்; எழுச்சி காண்போம்!

கவிக்கொண்டல் மா. செங்குட்டுவன்

# உயர்த்திப் பிடிப்போம் தமிழ்க்கொடி!



உயர்த்திப் பிடிப்போம் தமிழ்க்கொடியைத் – தமிழர்
ஒற்றுமை உறுதிக் களம்காண்போம்!
அயர்வில் லாதே இணைந்தெழுவோம் – ஆதி
அன்னைத் தமிழால் ஒருங்கிணைப்போம்!
முயற்சி அதுநம் மூலதனம் – உழைப்பின்
முற்றம் அமைப்போம் ஞாலமுன்னே!
வியப்பின் வியப்பாம் செம்மொழிநம் – கலைஞர்
வெற்றித் தமிழ்மா டென்போமே!

உலகில் மூத்த குடியாமே! – மாந்தர்
ஒலித்த நாமுதல் நம்மொழியே!
நிலம்கும ரிக்கண் டம்தனிலே – கடற்கோள்
நிகழ்த்திய தாக்கத் திடைபுரண்டே
தலமெலாம் முற்றும் தமிழினமும் – ஓங்கும்
தமிழ்மொழி நம்மொழியும், மற்றைக்
கலந்த கலப்பின் பிறப்பிடமே – வையம்
காண்பிற இனமொழி அறிவாய்வே!

மூத்த மொழிநம் இனப்பெருமை – அருமை
முச்சங் கத்தின் நூல்கள் கண்டோம்!
யாத்த முத்தமிழ்ச் சான்றோர்கள் – படைத்த
நானிலப் பண்பாட் டுக்கலைதேர்
காத்தளி காதல் வீரமன்பு – காலக்
கணக்கின் வரலாற் றின்உண்மை
பூத்தொளி வெள்ளம் இருள்விரட்டும் – இனமொழி
புதுமை வழங்கினம் பழங்காலம்!

காட்டு மிராண்டி களாய்அந்நாள் – பிறஅக்
கண்டம் மக்கள் திரிபோதில்
நாட்டும் ஞானம் நாகரிகம் – கல்வி
நனிதேர் பல்கலை மெய்யுணர்வு
பூட்டும் அறியாமை விலக்கும் – ஆற்றல்
புரிபகுத் தறிவுக் கண்திறந்தோம்!
ஊட்டும் உணர்வுக் கற்புநெறி – தரணி
ஒளிக்கதிர் வழங்கிய தமிழினமே!

நிலமும் பொழுதும் பகுத்துணர்ந்தார் – தமிழர்
நீணிலம் ஐவகை நிலம்பிரித்தார்!
நலமுறு முதல் உரி கருப்பொருளாய் – இலக்கண
நம்தமிழ்ப் பொருளி லக்கணமோ
'இலபிற மொழிகளில் இதுவரைக்கும்' – என்னும்
இயல்பால், எழுத்து சொல்முதலாய்
வலம்வரு தொல்காப் பியம்உலகில் – மூத்த
வகுத்த இலக்கண மும்படைத்தார்.

அகம்புறம் நூற்கள் அறிவுறுத்தும் – உண்மை
அறமுணர் ஒழுக்கம் அருளாட்சி
தகவுசால் கருத்துடைப் பன்னூற்கள் – அய்யன்
தலைமைத் திருக்கு றள்முதல்நூல்
சிகரம் புரண்டோடும் நதிபோல் – சென்றே
திசைகள் எட்டும் வயப்படுத்தும்!
முகத்தை அழிக்கும் தொழுநோய்கள் – இடைவர
முகவரி இழந்தோம் அயலாரால்!

வேற்றவர் ஆதிக் கத்தாலும் – ஆட்சி
மிரட்டிய அயலார் மொழியாலும்
மாற்றலர் சாதி மதத்தாலும் – கொடிய
மாமுக டித்தனச் சதியாலும்
கூற்றெனப் பாய்ந்த கொடுங்கோலால் – வீழ்ச்சி
கொண்டோம், கொடிய இருள்கிழித்தே
தோற்றினர் உதய சூரியனாய்த் – தந்தை
சுடரெழு பகலவன் பெரியாரே!

தந்தை பெரியார் தம்புரட்சி – கண்ட
தமிழர் திராவிட இயக்கத்தால்
செந்தமிழ்ப் பேரறிஞர் அண்ணா – முனைந்த
தி.மு. கழகத் திறனாலே
முந்தெழுச் சிக்கனல் சுடர்வீசும் – ஆரிய
மூட மாயைகள் மிரண்டோடும்!
வந்திடர் செய்த வஞ்சம் வென்றே – கலைஞர்
வாழ்வித் தார்பே ராசானுடன்!

முரசொலிக் கும்நம் தமிழ்க்களமே – வெற்றி
முழக்கம் ஏற்றே தலைநிமிர்வோம்
கரங்கள் கோடி கோடியாக – வையக்
கவின்தமிழ் மறவர் கைகோப்போம்!
சுரங்கம் வெட்டிய தங்கம்போல் – மூழ்கித்
தொல்கடல் எடுத்தசீர் முத்துகள்போல்
வரமெலாம் வந்துதாள் பணிதல்போல் – செம்மொழி
மாநாட்டுப் பயன்காண் போம்யாம்!

தலைமகன் கலைஞர் தாம்கண்ட – செம்மொழி
தந்த முதல்வர்க்கோ நன்றிசொல்வோம்!
அலைஅலை யாகவே ஆர்த்தெழுவோம் – தமிழ்க்கொடி
அவனியில் பறந்திடும் செயல்காண்போம்!
நிலைபெறக் காலக் கணக்குவிடை – சமரச
நெறிநிறை வையகத் தமிழரெலாம்
விலையிலா ஒருகுடைக் கீழிணைவோம் – செம்மொழி
விடிவுகாண் மாநா டேவாழி!

பெருங்கவிக்கோ வா.மு.சேதுராமன்



# செம்மொழித் தமிழே! உன்றன் சிறப்பினைச் சொல்லப் போமோ?



எம்மொழி தானும் இங்கே
எழுமுன்னர் எழுந்து வந்த
செம்மொழித் தமிழே! உன்றன்
சிறப்பினைச் சொல்லப் போமோ?
தெம்மாங்காய், தென்றல் காற்றாய்
தென்கடல் குமரி தன்னில்
அம்மாநீ தோன்றி வந்த
அழகுதான் என்னே! என்னே!

செம்மையின் இருப்பே! உன்பால்
சேராத பண்பும் உண்டோ?
இம்மையில் நாங்கள் பெற்ற
இன்பமே! அன்பே! எங்கள்
வெம்மைக்கோர் தெப்பம் நீயே!
விழுங்கிடும் அப்பம் நீயே!
மம்மரை மாய்க்க வந்த
மருந்தும்நீ! விருந்தும் நீயே!

வாய்ப்பேச்சு வழக்கில் ஒவ்வோர்
வட்டாரம் தோறும், தேனே!
தேய்ந்தேதான் போகின் றாய்நீ!
திரியவும் செய்கின் றாய்நீ!
ஆய்ந்தேதான் பார்க்கும் போது,
அன்னைஉன் பொருளில் மட்டும்
தேய்மானம் இருப்ப தில்லை!
தெளிபொருள் விளக்கம் நீயே!

பழைமையில் உன்னை வெல்லப்
பாரினில் மொழிகள் இல்லை!
இளமையில் இணைஉ னக்கோ
இன்னொரு மொழியும் இல்லை!
வளமையில் தமிழே! நீதான்
வழிகாட்டும் ஒளிவி ளக்காம்!
நிலைமையில் இன்று நீயோ
நிமிர்ந்துளாய் இமயத் தைப்போல்!

தமிழர்செய் தவம்கொ டுத்த
தலைவர்நம் கலைஞர், உன்னை
இமையெனத் தாங்கித் தாங்கி
இன்புறு கின்றார் அன்றோ?
தமிழனை அவரைப் போலத்
தாங்குவார் எவரிங் குண்டு?
தமிழுக்கு அவர்கொ டுத்த
தகுதிபோல் யார்கொ டுத்தார்?

மாநாடு காணு கின்றாய்
மாணிக்கத் தமிழே! அங்கே
தேனோடை போல வேதான்
தெள்ளுதமிழ் திரண்டே ஓட,
மரகதக் குயில்கள் பாட,
மாநாடு நடக்கும் அன்றோ?
மகுடம்நீ ஏந்து கின்ற
மாநாடு இதுதான் என்னே;
மகிழ்வின்பூக் காடு என்பேன்!

புலவர் இளஞ்செழியன்



# தமிழர் மாண்பு



உளத்தினில் உறுதியும் செயலினில் தூய்மையும்
ஊக்கமும் உடைய தாகும்
ஒப்புர வுடைமையும் தப்பிலா நடத்தையும்
உருவமாய்க் கொண்ட தாகும்
களத்தினில் வாகையும் கருத்தினில் செம்மையும்
கனிவுமே வடிவ தாகும்
கன்றாத வாழ்க்கையும் குன்றாத செல்வமும்
காலமும் வென்ற தாகும்
வளத்தினில் மிக்கதாம் வறுமையே அற்றதாம்
வடிவினில் எழில தாகும்
வற்றிடாப் பண்புகள் வழங்கிடும் விழுமியம்
வார்த்திட வாய்த்த தாகும்
குளத்தினில் தாமரை கோடுயர் இமாலயம்
குன்றாத புகழில் வானம்
கொண்டதாம் எந்தமிழ் நந்தலில் மரபினால்
குவலயம் மகிழு மாமே!

அன்புதான் பண்பதாம் அறமதே பயனதாம்
ஆற்றிடும் இல்ல றத்தின்
அருள்நெறி தெளிவுற ஆற்றலும் புலப்பட
அமைந்ததாம் தமிழர் மாண்பு!
என்பையும் பிறர்க்கென ஈந்திடும் இயல்பதே
ஏற்றமாம் பண்பின் மிக்க
ஈகையின் சிறப்பினால் ஈட்டிய புகழினால்
என்றுமே தழைக்கும் மாண்பு!
துன்புகள் வம்புகள் தொடர்ந்திடும் போதினும்
துயரமே மிகுந்த போதும்
துவளாத மனத்துடன் சோர்விலா முயற்சியும்
தோற்றியே வென்று நிற்பார்!
மன்னிய உலகமும் மாறிடும் வாழ்க்கையும்
வகுத்தவை ஆயி ரங்கள்
மனத்தினில் ஏற்றியே மானுடம் போற்றியே
வாழ்வது தமிழர் மாண்பு!

விருந்தினர் போற்றுதல் வருந்துதல் இன்றியே
விருப்புடன் தொண்டு செய்தல்
வியந்திடப் பொதுப்பணி நயந்திட ஆற்றுதல்
விளங்கிட நிலைத்து நிற்றல்
மருந்தென வாய்த்ததாம் அமிழ்தமே ஆயினும்
மட்டுமாய் உண்டி டாமல்
மருவிடும் எவர்தமின் பசிப்பிணி அகற்றுதல்
மாசிலாத் தமிழர் மாண்பு!
அருந்திடும் நீரினும் தண்ணிய அன்புறும்
அகத்தினால் பிணித்து நின்றே
ஆக்கமும் தேக்கமும் அவரவர் செயலென
ஆர்த்திடும் கொள்கை பற்றி
இருந்தமிழ் போற்றியே இனியன ஆற்றியே
இகபர வாழ்வு யாதும்
ஏற்றமும் இறக்கமும் ஒன்றெனக் கொள்வதே
இனியநல் தமிழர் மாண்பு!

அவரவர் தேவைக்காம் அளவினில் நீரையே
அளித்திடும் ஊரு ணீயாம்!
அனைவரும் விரும்பிய அளவுக்குக் கனிகளை
அளித்திடும் நடுவூர் நின்ற
எவரெவர் விரும்பிடும் இனியநல் பழுமரம்
இதமுறும் வண்ணம் தானே!
இலைதழை வேருடன் ஈர்மரப் பட்டையும்
இன்கனி காயும் ஈந்து
தவப்பெரும் ஈகியாய்த் தன்னையே தந்திடும்
தனியொரு மரமும் உண்டு!
தாமிவை மூன்றுமே ஒப்புர வாளர்க்குச்
சரியான உவமை யாகும்!
உவப்புறும் இலக்கியம் உடையதாம் இலக்கணம்
உண்டடா தமிழர் வாழ்வில்
உணர்ந்திடில் பண்பாடு உயரிய மாண்புகள்
ஊட்டிடும் உணர்வு மூளும்!

ஒழுக்கமே விழுப்பமாம் உண்மையே நன்மையாம்
உலகமே வரினும் தீய
பழியினால் வருமெனில் பாரதும் வேண்டிடாப்
பண்பினில் சிறந்து நிற்பார்!
இழுக்கமே வழுக்கியும் வளர்த்திடா மாண்பினால்
இனியநற் புகழ தாயின்
உயிரையும் ஈந்துநல் உவகையே கொள்ளுவர்
உயர்ந்தவர் மாண்பி னாலே!
பழுக்கவே காய்ச்சிய இரும்பது போலவே
பயன்படும் பான்மை யாலே
பாரினில் எவர்க்குமாம் உதவிகள் ஆற்றிடும்
பக்குவ மனமும் பெற்றார்!
அழுக்கினை அகற்றிய மனத்தினர் பிறர்க்கென
ஆயுளும் ஈந்து நிற்பார்!
அற்புதம் அருமையாம் ஆய்தமிழ் மாண்புகள்
அகிலமே வியக்கு மம்மா!

கவிக்கோ ஞானச்செல்வன்

# குறள் வாழ்வு!

மிரட்டவந்த மாடுகளாய்ச் சமணம் பௌத்தம்
மேல்மினுக்கும் வைதீகம் முட்ட; பாட்டு
இரண்டடியால் உலகளந்த பெருமான் எங்கள்
எழுச்சிக்குத் தளமிட்ட வள்ளு வர்தாம்
திரண்டுவந்த எதிர்ப்புகளைக் கொம்பு சீவித்
திரட்டிவைத்த மெய்யுணர்வுக் கொள்கை, தம்மால்
வரண்டுவந்த தமிழ்வாழ்வை வளமாய் மாற்ற
வகுத்தளித்த திருக்குறளால் வாழு கின்றோம்!

அறிவாலே அறியாமை நீங்கும்; மேலும்
அதட்டுகின்ற மடமைகளும் நீங்கும், அம்புக்
குறியாலே அழிகின்ற பகையைப் பாட்டுக்
கொள்கையெனும் அம்பாலே அழித்தார்; சாதி
வெறிகாணாத் தமிழ்நாட்டில் பிறந்து, மக்கள்
வேற்றுமையை நீக்குதற்கும் வழிவ குத்தார்;
தறிகெட்டே ஓடாமல் தமிழர் கொள்கை
தலைமுறைக்கும் அளப்பதற்கு நியாயம் கண்டார்!

வாழுகின்ற தமிழர்முறை தலைகீ ழாக்கி
வழிமறைக்க முயற்சித்த மதங்க ளெல்லாம்
தாழுகின்ற நிலைகண்டார்; புரட்சி செய்து
தனக்கென்ற வழிகண்டார்; மேலோர் தம்மைச்
சூழுகின்ற படியெல்லாம் வெற்றி கண்டார்;
சூழ்ச்சியிலாச் சமுதாயம் படைப்ப தற்கு
வாழுகின்ற குறள்தந்தார்; அறத்தால் செய்யும்
வழிகண்டார்; வாழ்வதற்கே அறிவைத் தந்தார்.

குளிர்நிலவைப் பிடிப்பதற்கே ஆசை வைத்துக்
கூரையிலே குரங்காட்டம் ஆட லாமா?
வளர்பூவை முகர்வதற்கே விருப்பம் கொண்டு
வயிற்றின்மேல் அப்பூவை வைக்க லாமா?
தளிர்இலைகள் பழுப்பிலையைக் கிண்டல் செய்து
தரைவிழுந்து மண்பூசிக் கிடக்க லாமா?
பலர்போற்றும் திருக்குறளை ஆய்ந்தி டாமல்
பஞ்சாங்கம் பார்த்தபடி இருக்க லாமா?

சவுக்கையிலை தைத்துண்ணப் பயன்ப டாது
சம்மட்டி மரமறுக்கப் பயன்ப டாது
தவிக்கின்ற குழந்தைவிரல் தாயின் பாலைத்
தாராமல் பசிதணிக்கப் பயன்ப டாது
குவிக்கின்ற செல்வத்தை ஓரி டத்தில்
குவியவிடின் எவருக்கும் பயன்ப டாது
அவித்துவைத்த நெல்விதைக்குப் பயன்ப டாது
அறியாமை குறளுக்குப் பயன்ப டாது.

அறையொன்றாய் இருந்தால்தான் அணைப்பு கிட்டும்
அறமொன்றாய் இணைந்தால்தான் ஆக்கம் கிட்டும்
இறையொன்றாய் இருந்தால்தான் ஆட்சி யென்னும்
இழுக்கின்ற தேர்கிட்டும், வள்ளு வத்தில்
இறையென்றே வைத்தெண்ணும் மக்கட் பண்பை
எடுத்துவைத்துப் பார்த்தால்தான் பொருளும் கிட்டும்
கறையொன்று வாராமல் வாழும் பண்பே
கரைசேர்க்கும், கனிவாக்கும் அருளும் கிட்டும்.



புலவர் பனப்பாக்கம் சீத்தா

# புறப்பாட்டைப் புதிதாக்கு!



தன்னைப் பெற்ற அன்னைத் தமிழைத்
தரிசிக்கச் சென்றான் அன்னையின் பிள்ளை
அன்னையை நெருங்க அனுமதி இல்லை
மன்னனின் தங்கச் சிறை யிலிருந்தாள்!

"தமிழே, தமிழே, தாயே தமிழே!
அரசவைத் தாயே! அழவைத் தாயே!
எங்கள் குடிசைக்கு எப்போது ஏகுவாய்?
எங்கள் துயரை எப்போது பாடுவாய்?"

கதறிப் பார்த்தான்; கண்ணீர்ப் பரல்களைச்
சிதறிப் பார்த்தான்; தாய்வரவில்லை
அன்னையின் கையில் அரசனின் விலங்கு
இன்னொரு கையில் இறைவனின் விலங்கு

அவள் –
வேந்தனைப் போற்றிப் பாடலாம்; இன்றேல்
வேதியக் கடவுளைப் பாடலாம்; உழைக்கும்
மாந்தனைப் பற்றிப் பாடினால், பாவம்
புலவன் அடுப்பில் பூனை தூங்கும்.

❖ ❖ ❖

ஆண்டுகள் இரண்டாயிரம் கடந்தன
மீண்டு தாயிடம் சென்றான் தமிழன்
இருகை களிலும் இருசங் கிலிகள்
இன்றும் இருந்தன; ஆனால் அவற்றை

இறைவன் ஒன்றும் அரசன் ஒன்றும்
ஏந்திட வில்லை; அதற்குப் பதிலாய்
இருந்த சங்கிலி இந்தித் திணிப்பு!
இன்னொரு சங்கிலி ஆங்கிலப் படிப்பு!

இரண்டும் தமிழை இருபுறம் இழுக்கையில்
ஏழைத் தமிழனை எங்ஙனம் நெருங்குவாள்?
காலம் கடந்தது; ஓலம் தொடர்ந்தது
ஆளும் விலங்கில் அன்னை மெலிந்தாள்.

❖ ❖ ❖

உழவுத் தமிழனை, உழைப்புத் தமிழனை
நெசவுத் தமிழனை, பசித்த தமிழனைத்
தாழ்த்தப்பட்ட சாதித் தமிழனைச்
சபிக்கப்பட்ட சேரித் தமிழனை

மலங்களை அள்ளும் ஆதித் தமிழனை
மலைகளில் வாழும் அதியத் தமிழனை
அலைகளில் நீந்தும் குப்பத் தமிழனை
அளங்களில் வாடும் உப்புத் தமிழனை

ஆலைஜீவியாய் மூளைஜீவியாய்
அடங்கிக் கிடக்கும் அடிமைத் தமிழனை
உலைக்களம் வேகும் நெருப்புத் தமிழனைச்
செருக்களம் சாகும் துருப்புத் தமிழனை

இறுக்கிடும் தளைகள் எவையோ அவையே
என்தமிழ் அன்னை சிறைப்படும் தளைகள்
அறுத்திட வேண்டும் தளைகளை என்று
ஆர்த்தெ ழுந்தது மொழிப்போர் அன்று!

சின்னச் சாமியின் நெருப்பு ரணங்கள்
திராவிடச் சமரில் விழுந்த பிணங்கள்
அன்னையின் விடிவுக்கு அழைத்தன தமிழனை
அரும்பிப் பூத்தது தமிழியச் சிந்தனை!

❖ ❖ ❖

தமிழிலே அறிவியல்; தமிழிலே பொறியியல்
தமிழிலே பொருளியல்; தமிழிலே புவியியல்
சட்டங்கள் தமிழிலே; சபைகளும் தமிழிலே
பட்டங்கள் தமிழிலே; பணியெலாம் தமிழிலே!

தமிழாட்சித் தமிழகம்; தன்னாட்சித் தாயகம்
இத்தகைய லட்சியம் எதிர்காலம் நிச்சயம்
பெற்றவளே தாயே, அதோ தெரிகிறதா விடிவெள்ளி?
புத்தெழுச்சி உண்டாக்கு; புறப்பாட்டைப் புதிதாக்கு!



கவிஞர் தணிகைச் செல்வன்

# அறிவியலில் நிமிர்ந்து நிற்போம்!



அறிவியலில் ஐந்தாமிடம் பெற்றி ருந்தும்
அகிலத்தில் முதன்மைஇடம் பெறுவ தற்கே
அறிவியலார் அனுதினமும் முயற்சி செய்தே
அயராமல் உழைக்கின்றார் நமது நாட்டில்!
அரிகோட்டா கல்பாக்கம் அதற்குச் சாட்சி!
அணுஉலைகள் நம்மக்கள் அமைத்த தாலே
எரிசக்தி மின்சக்தி பெறுவ தற்கே
இந்தியா தன்னிறைவு பெற்ற தன்றோ!

தொலைத்தொடர்பு மையமாய் இயங்கு கின்ற
செயற்கைக்கோள் இன்சாட்டே இந்தி யாவின்
தொலைதூரப் பார்வைக்குக் கிடைத்த வெற்றி!
தொல்லைபல விஞ்ஞானி கண்ட போதும்
நிலைஉயரப் பாடுபட்டார்! நமது நாட்டை
நிமிர்ந்தபடி உலகரங்கில் நடக்கச் செய்தார்!
தலைவணக்கம் செய்திடுவோம் அவர்க ளுக்கே!
தாரணியில் அவர்புகழும் நிலைத்து நிற்கும்!



கணினிஎனத் தமிழாக்கம் செய்யப் பெற்ற
கம்ப்யூட்டர் சாதனைகள் சொல்வ தென்றால்
மணித்துளிகள் போதாது; நாள்கள் வேண்டும்!
மணிமணியாய் அதுவேலை செய்வ தாலே
மனிதர்க்கோ அதன்மீது கோபம் உண்டு!
வருங்காலம் மனிதர்க்கு வேலை யின்றிக்
கணிப்பொறியின் ஆதிக்கம் ஓங்கக் கூடும்;
காலத்தின் கட்டாயம் தடுப்பார் யாரே ?




சந்திரனில் கால்பதித்தார் மேலை நாட்டார்!
சரித்திரத்தில் முதன்மைஇடம் பெற்று விட்டார்
தந்திரமோ மந்திரமோ ஏது மில்லை –
சாதனைதான்! அதையாரும் மறுப்பார் இல்லை!
சந்திரனைப் பாம்பொன்று விழுங்கு தென்று
சனாதனிகள் விட்டகதை பொய்த்த தாலே
சந்திரனில் குடியேற முயற்சி செய்வோம்;
சரித்திரத்தில் பாரதத்தின் பெருமை சேர்ப்போம்!

கவிஞர் நெ.அ.பூபதி

# அவள் மேல்தான் ஆசை...!



பார்க்கும் போதெல்லாம் பசியை ஆற்றும்
'லட்சுமி' களைஎலாம் நிறைந்தது அவள்முகம்!
இனிய முகத்தின் இரண்டு கண்களும்
சிந்தை கவர்ந்து சீண்டி விடுபவை!
மங்கள கரத்தின் மறுபதிப் பானவள்
மனத்தில் எப்போதும் மகிழ்ச்சி விதைப்பவள்!
எண்பதைத் தாண்டியும் என்மனங் கவர்ந்தவள்
அழகொளிர் முகத்தில் சுருக்கக் கிறுக்கல்
போட்ட கிறுக்கன் புத்தியில் லாதவன்!
ஆயிரங் கண்கள் பார்த்து அதிசயித்த
தளதள வெனும்அவள் தங்க மேனியின்
இளமையைப் பறித்த இரக்கமில் லாதவன்
எவனென்று தெரிந்தால் இடுப்பை ஒடிக்கலாம்!
மணலிற் பிடுங்கிய சர்க்கரை வள்ளிக்
கிழங்காய்க் கிறுகிறுத்திட அன்று வைத்தவள்!

தட்டுத் தடுமாறி நடக்கும் போதும்
தன்கால் உறுத்தும் சிறுதுரும் பினையும்
அப்புறப் படுத்தும் அருமையே அருமை!
தன்உடை அனைத்தும் கும்மிக் கும்மித்
தானே துவைப்பதில் கெட்டிக் காரி!
அந்தத் துணிகளைக் கொடியின் மீது
உள்ளத் தெம்போடு உதறி உதறிக்
காயப் போடுவது கண்கொளாக் காட்சி!
புடைவையின் இரண்டு பக்கக் கரையின்
சரிகைப் பின்னலை ரசித்துப் பிரித்துச்
சுருக்கமில் லாமல் மடிப்புமில் லாமல்
நிறைவாய்ப் போட்டு நெஞ்சந் தொடுவாள்!

துறுதுறு வென்ற துடிப்பின் வடிவம்!
சோம்பிக் கிடப்பதும் சுணங்கிக் கிடப்பதும்
பார்த்தறி யாத பாட்டிக் கிழவியின்
பற்களை முதுமை பறித்துக்கொண் டாலும்
பெண்மைப் பாங்கும், மென்மைப் பாங்கும்
பறிபோ காதது பெயரர் புண்ணியம்!

நரம்புகள் புடைத்த மெலிந்த கரங்களால்
எத்தனை பணிகள் முதுமகள் புரிகிறாள்!
வாடகை இன்றி நொடிநொடி தோறும்
சிலந்திகள் கட்டும் ஒட்டடை வீடுகள்
வீட்டுக்கு ஆகாதெனத் துடிப்பாள் – அழிப்பாள்!

பேரப் பிள்ளைகள் மீதவள் காட்டும்
பாசம் – பணிவிடை பாடங்க ளாகும்!
சரியான சுவைமிகு சத்துணவை மருந்தாய்
உண்ணக் கொடுப்பதில் உயர்ந்த கலைமகள்!

பூக்கும் செடிகொடி புன்னகைக் காகத்
தண்ணீர் ஊற்றித் தவமிருந்து காப்பாள்!
வீட்டுச் செல்லப் பிராணிகள் எல்லாம்
விரும்பி அவளின் கால்களைச் சுற்றும்!
பயன்படும் பழைய பழமொழி கூறிப்
பண்படுத் துவதில் ஔவைப் பாட்டி!

பருவப் பேத்திகள் பழக வேண்டிய
பாங்கெலாம் பக்குவ மாக உரைப்பாள்!
கடுஞ்சொல் அறியாக் காவியக் கிழவி!
உறக்க மறியா உத்தமிக் கிழவி!
என்மனங் கவர்ந்த இனிய கிழவி
இல்ல இலக்கிய மான கிழவி
வாழ்வின் இலக்கண வகையறி கிழவி!
ஒவ்வொரு செயலும்என் உள்ளந் தொடுவதால்
அவள்மேல் தான்நான் ஆசை வைத்துள்ளேன்!

கவிஞர் பொன்னடியார்



# புதிய விடியல்

இயற்கையில் ஏற்றங்கள் நிரம்ப உண்டு
எண்ணத்தில் தடைகளோ எண்ணிலடங்கா!
ஏட்டிலே எழுதிவிட்டான் என்ன செய்ய?
எல்லாம் அவன்விட்ட வழியே யப்பா!
ஒட்டாது ஒருதுளி மண்ணுங் கூட
உடம்பிலே எண்ணெயைத் தேய்த்திட் டாலும்!
கிட்டாது நமக்கெல்லாம் விதியின் கோடு
கிழித்திட்டான்! வேறு வேலை பாரு மய்யா!
வேதாந்தம் இப்படியே பேசிப் பேசி
விடியலையே காணாது போன மக்கள்!
தாழ்வுக்கும் தப்பாமல் தமக்குத் தாமே
தருமங்கள் பேசுகின்ற தாழ்வு உண்டு!
காக்கைக்கும் பசியால் கத்துகின்ற
கதவோரம் பல்லிக்கும் பஞ்சாங்கம் பார்க்கும்
பயமென்னும் பயணத்தில் போகு மட்டும்
பலனில்லை; பயனில்லை! எல்லாம் பாழே!
சடங்கின் சுமைகளை ஏற்றி ஏற்றிக்
கிடங்கின் கிழமாய்ப் போனான் போனான்!
மனித நேயப் பெரியார் சொன்னார்
மனிதனை நினைமற்றதைமற என்றார்!
மானுடம் கேட்டிருந்தால் மாப்பழிதான்
மண்ணில் முளைத்திடுமோ! மனத்தில் வைப்பீர்
விண்ணைத் தொட்டு கன்னம் வருடும்
வியக்கும் கோபுரங்கள் விளைந்தென்ன!
மண்ணை நம்பிப் பிறந்த மனிதன்
மனத்தில் பேதம் தேவை தானா?
விழுதை ஊன்றி வெல்லக் கனிகள்
வழங்கும் மரங்கள் சாதி பார்க்கா.
தின்னும் மனிதன் நாக்குச் சொல்லும்
திகட்டா இப்பழம் சாதி மாம்பழம்!
பிறந்த பிள்ளைக்குக் கொடுப்பது இங்கே
பெற்ற தாயின் முலைப் பாலா?
பாழும் சாதியின் கள்ளிப் பாலா?
படுமூட நம்பிக்கையின் மடிப் பாலா?
ஒட்டு மாம்பழந் தானே சுவைக்கும்!
ஒட்டு மாம்பழம் இருகலப் புதானே?
ஒட்டு மாம்பழம் சுவைக்கு மனிதன்
ஒருசாதிக் குட்டையில் உழல்வது சரியா?
சுற்றமும் சாதியும் சுற்றிச் சுற்றிச்
சோடிகள் சேர்ந்து பெற்ற பிள்ளை
குற்றமும் குறையுமாய்ப் பிறக்கு மென்று
கூறுவர் விஞ்ஞானக் கூடத் தார்கள்
தேவை ஒருபிள்ளை மட்டும் தானே
தேவை மிஞ்சினால் திருட்டு தானே?
தேர்ந்த ஒரு பிள்ளை வேண்டு மென்றால்
தீர்த்திட வேண்டுமே ஒருசாதி திருமணத்தை!
பழைய வீட்டை இடித்துத் தள்ளிப்
பார்க்கும் நண்பர்கள் பாராட்டிச் சொல்ல
வீட்டைக் கட்டி அழகு பார்ப்போம்
விளக்கமுறப் பூஞ்செடிகள் வாயிலில் வைப்போம்
நாய்க்கும் இடமுண்டு; நல்ல விதமாய்ப்
பூனைக்கும் புறாவுக்கும் பேழை யுண்டு
அடடா.. புதுமை வாழ்வில் மிதக்க
ஆயிரம் அடிக்குமேல் தாவி விட்டோமே!
ஆனாலும் அடிநெஞ்சில் ஒரேஒரு நெருடல்...
ஆயிரம் காலப் பழைமைச் சீக்கை
அடிமைப் படுத்தும் அழுக்குச் சகதியை
அறிவைத் தின்னும் அழிவுப் புழுக்களைப்
பேதம் வளர்க்கும் பொல்லா நோயினைப்
பாசங் கொட்டி நேசங் காட்டி
அடிமன வாசலில் ஊஞ்சல் கட்டி
ஆராரோ பாடுவது என்ன நியாயம்?

பெருஞ்சிகிச்சை தேவை இங்கு; பெரியார் சொன்ன
பெருஞ்சிறப்புத் தத்துவங்கள் மலர வேண்டும்
நாட்டுநலம் வீட்டுநலம் எல்லாம் பெருக
நாகரிகப் பேருலகம் பூத்துக் குலுங்க
மனித நேயப் பூக்காடு மணம்மொண்டு வீச
மனித குலமே சூளுரைக்க வேண்டும்.
பழைமை 'பிரபவ' சீட்டைக் கிழித்துப்
புதுமைத் தைப் பாவை
பொன்னடி வைத்தாள்
புதிய கணக்கைத் திறப்போமே!
விடியும் பொழுதெலாம் – புது
விடியலில் கிண்கிணி கேட்போமே!



**கவிஞர் கலி.பூங்குன்றன்**

# தாய்மொழிதான் வேண்டும்!



நாடறிந்த சர்வாதிகாரி
கெய்ச்சர்!

அவனது காலடியில்
கிடந்தது
அந்தக் கீரைப்பாத்தி
நாடு!

அந் நாட்டை
ஜெர்மனியுடன் சேர்த்துக்கொள்ள
ஆழச் சிந்தித்தான்
கெய்ச்சர்!

எதனைப் பெருமையாக
ஒருநாடு கருதுகிறதோ
அதனைச் சிறுமைப்படுத்தினால்
எதனை உயிரினும் மேலாக
நினைக்கிறதோ அதனை
அழித்தொழித்தால்
அடிமையாகிவிடும்
அந் நாடு!

அடிமைப் படுத்தப்பட்டது
ஆஸ்திரிய நாடு!

தாய்மொழியைப் பேச
எவரும் வாய் திறக்கக்
கூடாது! பேசினால்
நாக்கு அறுக்கப்படும்
இது அரசக் கட்டளை!

ஆஸ்திரிய நாட்டு
மக்கள் மீது திணிக்கப்பட்டது
ஜெர்மன் மொழி!

ஆட்சி அதிகாரத்தை
எதிர்த்து நிற்கமுடியவில்லை
மக்களால்!

மறைவாகத் தமக்குள்ளே
இரவுப் பொழுதுகளில்
மட்டுமே கிசுகிசுத்துக்
கொள்ள முடிந்தது
தாய்மொழியில்!

அந்நிய மொழித்
திணிப்பிலிருந்து
அன்னை மொழியை
மீட்டெடுக்கச்
சின்னப் புயல் ஒன்று
அங்கே மையம் கொண்டது!

அந்தச் சிற்றூர்ப் பள்ளியில்
ஒரு கலைவிழா

அழைக்கப்பட்டிருந்தாள்
சர்வாதிகாரியின் மனைவி.

கலைத்திறன் காட்டினர்
பள்ளிப் பறவைகள்!
கண்டு புருவம் உயர்த்தினாள்
அரசி.

நடிப்பாற்றலால்
மகாராணியின்
இதயத்தில் இடம்பெற்றாள்
ஓர் ஏழைச் சிறுமி!

அந்த இளம்பிறை நடித்த
ஊமை நாடகம்
அரசியின் உள்ளத்தை
உலுக்கிவிட்டது!

மொழி உணர்வு
பறிக்கப்பட்டுத்
தொண்டைக் குழிகளில்
குத்துப்பட்டுக் கிடக்கும்

கொடூரத்தை முகத்தில்
அறைந்து சொன்னது
அந்த ஊமை நாடகம்!

மேடை ஏறித்
தேன் சிந்தும்
அந்தப் பூ மாலையை
மடிசுமந்தாள் மன்னி!

உனது நடிப்புக்குப்
பரிசு தரப் போகிறேன்
எது வேண்டும் கேள்?
என்றாள் அரசி.

தாய் தந்தையுடன்
நீ வசிக்க வீடு
ஒன்று தரட்டுமா?

வேண்டாம்!

உன் தந்தைக்கு
அரசாங்கத்தில்
வேலை தரட்டுமா?

வேண்டாம்!

ஆடை அணிகலன்களை
உனக்கு அள்ளித் தரட்டுமா?

வேண்டவே வேண்டாம்!

தயங்கித் தயங்கிச்
சிறுமி வாய்திறந்தாள்!

என் வீட்டில்
சிரமம்தான்
நீங்கள் எனக்கு
எதுவும் தரவேண்டாம்!

எங்கள் தாய்மொழியில்
பேசினால் தண்டனையாம்!
தடை விதித்துள்ளார்
மன்னர்.

அந்தக் கொடிய
தடை தகர்க்கப்பட
வேண்டும்.

எங்களுக்கு எங்கள்
தாய்மொழிதான் வேண்டும்!

அந்த மகர யாழை
மார்புற அணைத்துக் கொண்டாள்
மன்னனின் மனைவி.

தனக்காக எதையுமே
கேட்காமல்
தாய்மொழியை மட்டுமே
கேட்கும்
சிறுமியின் மொழி உணர்வை
மனம் ஏந்தி
அந்தப்புரம் திரும்பினாள்
அரசி!

கெய்ச்சரின் மனம் மாறியது!

பூவாய்த் திறந்து திறந்து
ஆஸ்திரிய நாட்டு மக்களின்
நாக்குகள் இப்பொழுது
தாய்மொழி பேசுகின்றன!

கவிஞர் பல்லவன்

# இறக்கும்போதும் கொடுத்த ஏந்தல்!



குன்றத் தமிழனின்
குன்றாத குணங்களில்
என்றும் நிலைத்த குணம்
இணையிலாக் கொடைத் திறம்!

அதற்கு ஓர்
அரிய சான்று!
இதோ ஓர்
ஏற்றமிகு காட்சி!

செங்குருதி ஆறாகிச்
சிதைந்த உடல் சேறாகி
அங்கங்கே சிதறிய
அங்கங்களிலிருந்தும்
வீர முழக்கங்கள்
விதவிதமாய் எதிரொலிக்க
புறநானூற்றுக் காலப்
போர்க்களமொன்று!

இருவேந்தர்கள்
எதிரெதிரே!

ஒருவன்
குடக்கோச் சேரன்
நெடுஞ்சேரலாதன்!

மற்றவன்
சோழன்
வேற்பஃறடக்கை
பெருவிறற் கிள்ளி!

போர் முடிந்தநிலை!
ஏனெனில்
முடிவேந்தர் இருவரும்
முடியும் நிலை!

அந்நேரம்
களம்பாட வந்தார்
கவிவேந்தர்
கழாத் தலையார்!

குடக்கோச் சேரலாதன்
குற்றுயிராய்க் கிடந்தான்!

வெற்றியைப் பாடவந்த புலவர்
வேந்தனின்
வெற்றுடலைப் பார்த்து
விக்கித்தார்!

பாடவந்த புலவருக்குப்
பரிசில் தரவேண்டுமே!
எதைத் தருவது
என்று ஏங்கினான் அரசன்!

காற்றும் கசங்கிப்போன
களத்தில்
ஏற்ற பரிசு
எதுவும் மிஞ்சலையே!

முன்னும் பின்னும் பார்த்த
முடிவேந்தன்
தன்னைத் தான் பார்த்தான்
தவிப்போடு இறுதியாக!

ஆகா கழுத்தில் ஓர்
ஆரம் கிடக்கிறதே!

ஆரத்தைக் கழற்றினான்
அணிவித்தான் புலவருக்கு
அடுத்த கணமே
அவனுயிர் பிரிந்தது!

எனினும்
புறநானூற்றில்
புதிதாகப் பிறந்தான்!

இறக்கும்போதும்
இருந்ததைக் கொடுத்தான்
என்ற
ஏற்றத்தைப் பெற்றான்
குடக்கோச் சேரக்
கொடைவள்ளல்!

பாடல் : புறம் – 368 கழாத் தலையார் பாடலை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டது.

கவிஞர் பொன் செல்வகணபதி



# தமிழா! தமிழா!



தமிழனைத் தமிழன் காணும் போதெலாம்
தமிழில் பேசுதல் வேண்டும்! – நம்
அமிழ்தாம் தமிழை ஏய்த்துத் தள்ளும்
அவலம் நீங்கிடல் வேண்டும்!

பிறமொழி கலந்து பேசுதல் மறுத்துப்
பைந்தமிழ் வாயில் நிறுத்து! – இனிப்
பிறந்திடும் தலைமுறை தமிழினில் பேசுதல்
பெற்றவர் தருவதைப் பொறுத்து!

இணைய வலைத்தளம் ஊடக மெங்கும்
இயங்குக தமிழென் றாடு! – அதைப்
பிணைக்கப் பிறமொழி வந்திடும் போது
புரிந்தே தமிழ்ச்சொல் போடு!

ஆட்சி நீதி மருத்துவம் பொறியியல்
அனைத்தும் தமிழில் என்றே – நடுவண்
ஆட்சியில் தமிழும் ஆட்சி மொழியென
ஆணையும் வரட்டும் இன்றே!

விற்பனை நிலையம் வீதியின் பெயர்கள்
விளங்கிடத் தமிழில் எழுது! – நாளும்
கற்கவும் கேட்கவும் வணங்கவும் வாழ்த்தவும்
கனித்தமிழ் கேளிப் பொழுது!

எழுதவும் பேசவும் தமிழிலை என்றால்
எப்படித் தலைமுறை தாண்டும்? – நீ
தொழுதது போதும் பிறரை நோக்கித்
தோளை உயர்த்திடல் வேண்டும்!

உற்றிடும் வாய்ப்பினை உணர்ந்தே தமிழை
உயர்த்திப் போற்று! வாழும்! – நீ
பெற்றிடும் பிள்ளையர் பெயரைத் தமிழினில்
பீடுடன் சூட்டு மீளும்!

எம்மொழி செம்மொழி ஈடிலை என்றே
ஏறென எழுந்தே முழங்கு! – சீர்
நம்மினம் தொல்லினம் நானில மறிய
நற்றமிழ் அனைத்திலும் வழங்கு!

தாரணி மொழிகளுள் தனிமொழி தமிழே
தாழ்வு மனம்விடு தமிழா! – நீ
பேரணி கொண்டு தமிழுக் குழைத்திடு
பொங்கிடும் தமிழே! தமிழா!



கவிஞர் கூ.வ. எழிலரசு






# சிறுகை அளாவிய சொற்கூழ்



தகிக்கும் வெப்பத்தைப் பொருட்படுத்தாமல்
சிதறிக் கிடக்கும் கூழாங்கற்களின்
தணிந்த குரலைக் கேட்டபடி
ரசாயன நெடி வீசும்
வற்றிய இந்நதியின் படுகையில்
மிக நிராதரவானவளாக நின்றுகொண்டிருக்கிறேன்.

விம்மல்களுடனும் தேம்புதல்களுடனும்
அவை எனக்குச் சொல்லிச் செல்லும்
வாழ்வின் கதை
எனக்கு எமது ஆயிரமாயிரம்
ஆண்டுகளின் வரலாற்றை நினைவூட்டுகின்றன.
எம் முன்னோர்களைச் சீராட்டி வளர்த்த
புராதன நாகரிகமொன்றின்
தொட்டிலாய் இருந்தது
இந்நதி.

என் செவிகளில் ஒலிக்கும்
அதன் ஒருசொல்
ஒருசொல் மட்டுமேயல்ல.

முன்பொரு நாள்
இந்நதி பொங்கிச் சீறிய தருணத்தில்
நீர்ச்சுழிப்பை எதிர்த்து நீந்திய
சொற்களைச் சேகரித்து
அணியென
இப்போது சூடிக்கொள்கிறேன்.

நற்றிணை
குறுந்தொகை
கலித்தொகை
அகம், புறம், முல்லை, காஞ்சி, குறிஞ்சி
பட்டினப்பாலை, மலைபடுகடாம்,
நாலடியார், நான்மணிக்கடிகை
திரிகடுகம், திருக்குறள், ஆசாரக்கோவை
சிலப்பதிகாரம், மணிமேகலை
முத்தொள்ளாயிரம்...
எண்ணற்ற இச்சொற்களினின்றும் பிறந்த
ஒரேயொரு வாக்கியம்
இவ்வுலகிற்கு அறிவிக்கிறது
"யாதும் ஊரே, யாவரும் கேளிர்"
இப்போது
நான் இந்நதியின் தலைமாட்டில் உயர்ந்து நிற்கும்
குன்றின் மீதேறி நின்று கூவுகின்றேன்
எம்மொழி, எம்நாகரிகம், எம் வரலாறு!

எல்லோரும் கேளுங்கள்!

“பஃறுளி ஆற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள
வடதிசைக் கங்கையும் இமயமும் கொண்டு
தென்றிசை யாண்ட தென்னவன்” கதையை
“அருந்தமி ழாற்றல்
தெரியாது மலைத்த கனக விசயரை
வென்றெம் தாய்க்குச் சிலை வடித்த
எம்‘தண்தமிழ்க் கிழவர்’களின் வீரக் காதையை
“மகத வினைஞரும் மராட்டக் கம்மரும்
அவந்திக் கொல்லரும் யவனத் தச்சரும்
தண்டமிழ் வினைஞர் தம்மொடு கூடி”த்
தொழிலிற் செழித்து வாணிகம் போற்றி
வாழ்ந்திருந்த கதையை!

யாராவது எமக்குச் சொல்லுங்கள்.

யான் வாழும் ஊரில்
வாழ்ந்து மறைந்த ஆன்றவிந் தடங்கிய
கொள்கைச் சான்றோர்
இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டன்றோ ?
இன்னா செய்தாரை ஒறுக்க
அவர்நாண நன்னயம் புரியும்
வேறோர் இனம் இப்புவியில் உண்டெனில்
எமக்குச் சொல்லுங்கள்!
யாரேனும் எனக்குக் காட்டுங்கள்
இடரொன்று வரின் புன்னகையால்
வெல்லும் பேராற்றல் கொண்ட
மனிதர் வாழும் மற்றோர் உலகை!

எம்தமிழுக்கு இணையான
மற்றொரு மொழியை
இப்புவியினில் காண முடியாத மகாகவியும்
எம்தமிழை அமுதென அழைத்த புரட்சிக் கவியும்
எனக்குச் சொல்ல ஒரு சொல்லையும்
விட்டு வைக்கவில்லை.
கையறு நிலையில் நான் தவிக்கிறேன்.
ஒரு நூற்றாண்டின் கனவு
இப்போது கைகூடி யிருக்கிறது!
இப்போது நாங்கள் சொல்கிறோம்.

எம்மொழி
உயர்தனிச் செம்மொழி
பத்தொன்பதாம் நூற்றாண்டில்
பரிதிமாற் கலைஞர் கண்ட கனவு
இருபத்தியோராம் நூற்றாண்டில்
நற்றமிழ்க் கலைஞரால்
மெய்ப்பட்டிருக்கிறது!
பாரியும் ஓரியும்

அதியனும் உலவித் திரிந்த
மேற்குமலைச் சாரலில்
செம்மொழியின் பெருமிதத்தைப்
பறைசாற்றப் புறப்பட்டுக்
கடுகி விரையும் எம்தலைவனின்
தேரில்
ஒருசிறு குழந்தையாய்த்
துள்ளிக் குதிக்கிறேன்.

நானும் ஒருகவியென
வெட்கத்தோடு புன்னகை புரிகிறேன்.
என்சிறுகை அளாவிய
சொற்கூழ் அருந்திக் களித்துக் கிடக்கும்
அறிஞர்களின் அருகமர்ந்து
என்மழலை மொழியில்
இவ்வுலகிற்குச் சொல்கிறேன்.
எம்மொழி, உயர்தனிச் செம்மொழி!

கவிஞர் சல்மா

# வேழத்தின் வெட்கம்!



எல்லா ஆறுகளிலும்
தண்ணீர்தான் ஓடும்
ஆனால்
கண்ணீரும் செந்நீரும்
கலந்தோடிய ஆறுதான்
வரலாறு!

வரலாற்றில்
ஒரு போர்க்களம்.

களத்தில் ஒரு வனம்.
வனமென்றால்
பிருந்தாவனமல்ல
பிணங்களின் வனம்!

வனமெங்கும் மணம்.
மணமென்றால்
மகரந்த மணமல்ல
மரணத்தின் மணம்!

எதிரிகளை நரம்பு நரம்பாக
வியர்க்க வைத்துக் கொண்டு
வருகிறது சோழர் படை.

குடம் குடமாய்க்
குருதியைக் கொட்டுவது எதற்கு?
மகுடம் எனும்
குடத்தை அடைவதற்கு!

சோழரின் படைகண்டு
காற்று அலறிற்று
மரங்கள் மிரண்டன
ஓடும் மேகங்களுக்கோ
உள்நாக்கு வளருது!

சக்கராயுதம் ஏந்திய
பகவான்கள் அல்ல – தேர்ச்
சக்கரங்களையே ஆயுதமாய் ஏந்தும்
பலவான்கள் அவர்கள்.

கிள்ளி எனும் சோழனவன்
மலைகளை விரல் நகத்தால்
கிள்ளி எடுத்த சோழனவன்.

கிள்ளியின் ஆணைக்கே
துள்ளியது சோழர்படை!

பகைவரின் நிலையென்ன?



தன்னைச் சுற்றி
நூல் கோட்டை கட்டி
உள்ளிருக்கும் பட்டுப்பூச்சி போல;
தன்னைச் சுற்றிக்
கல் கோட்டை கட்டி
உள்ளிருக்கும்விட்டில்பூச்சி ஆயினர்.

கற்களால் ஆன கோட்டைக்கோ
முட்களால் ஆன பெருங்கதவு!

தீப்பிடித்த கரையைப் பார்த்த
மாலுமிகளாய்த்;
திகைத்தது சோழர்படை!

கோட்டைக்குள் பகைவர்
கொக்கரக்கோவென நகைத்தனர்.

கோட்டைக்குள் நுழைந்துவிட்டால்
ஒவ்வொரு பகைவனாய்த்
தோலுரித்து – உரித்த தோலில்
தீயெரித்துக் – கூட்ட, தோலில்
முரசடித்துப் பார்க்கும் ஆதவன்
சோழர் படைக்கு!

முள் கதவைத் திறப்பதெப்படி?
முன் வந்தது வேழப்படை!

அதிலும் ஒரு வேழம்
ஆயிரங்கால் தூணான
ஒரே ஒரு காலாய்க் கொண்ட
பட்டத்து வேழம்

'நகருங்கள்... நகருங்கள்
அடிபெயர்ந்து வருகின்றன பார்
சிகரங்கள்'.

யானைப் படையைக் கண்டவர்
மோனையோடு சொன்னார்கள்,

அடி எடுத்து வைத்து வருகிறதா?
அல்லது
அடி எடுத்து வைத்து வருகிறதா?

பட்டத்து யானையைப் பார்த்தவர்
படபடத்துச் சொன்னார்கள்.

கிள்ளியின் பட்டத்து யானை
இமயத்தின் குழந்தையாய்
அசைந்து அசைந்து வந்தது.

முள்ளால் ஆன கோட்டைக் கதவை
முட்டியது; மூர்க்கமாய்
முட்டியது.

பிளிறியது களிறு
பிதுங்கியது கல்சுவரு.

கோட்டைக் கதவிரண்டையும்
தன் தந்தத்தால் குத்தி
ஆங்காரமாய்ப் பெயர்த்து
ஆஜானுபாகுவாய் நின்றது.

பிறகென்ன...?

திறந்து கிடக்கும்
இனிப்புக் கடைக்குள் நுழைந்து
பசியெடுத்த சிறுவர்களாய்ச்
சோழர் படை புகுந்தது
பகைவர் கோட்டைக்குள்...!

❍

வெற்றிவேல்... வீரவேல் எனும்
வீரக் கூச்சலோடும்
சூரப் பாய்ச்சலோடும்
தாய்மண் திரும்பினர் வீரர்கள்.

உருட்டி எடுத்த நெய்யில்
புரட்டி எடுத்த அதிரசத்தைச்
சுருட்டி எடுத்துத் தின்பதுபோல்
காதலியர் உதடுகளைத் தேடி
வீரர்கள் விரைந்தனர்.

களத்தின் ஆட்ட நாயகனான
பட்டத்து யானை மட்டும்
பதுங்கிப் பதுங்கி ஒரு
மரத்தின் பின் ஒதுங்கியது.

பட்டத்து யானையின்
காதல் யானை
சிணுங்கிச் சிணுங்கி
மரத்தை நெருங்கியது.

பட்டத்து யானை தன்
காதல் யானைக்கு முகம் காட்ட
மறுத்தது
மரத்தின் பின் நின்று தவித்தது.

ஏன்?

மீசையை அழகு படுத்துகையில்
தவறிப்போய்
மீசையை மழித்துக் கொண்ட
வீரக் காதலன் தன்
காதலிக்கு முகம் காட்டுவானா?

பகைவர் கோட்டைக் கதவை
முட்டித் தூக்கியபோது
பட்டத்து யானையின் தந்தமொன்று
சிறிதே உடைந்துவிட்டது.

உடைந்த தந்தத்தோடு எப்படி
உகந்த காதலியிடம்
முகம் காட்டுவது என்ற

துக்கத்திலும்; கொஞ்சம்
வெட்கத்திலும் நின்றது
பட்டத்து யானை!

❍

கொடிமதில் பாய்ந்திற்ற கோடும் அரசர்
முடிஇடறித் தேய்ந்த நகமும் –
பிடிமுன்பு
பொல்லாமை நாணிப் புறங்கடை
நின்றதே
கல்லார்தோள் கிள்ளி களிறு!

(முத்தொள்ளாயிரம் 28)





வித்தகக் கவிஞர் பா. விஜய்

# ஆய்த எழுத்துக்கு முன் ஔவை

பண்பாட்டை முன்னிறுத்திச் செதுக்கி வைத்த
பலநூறு பாட்டெல்லாம்; மூன்று வேந்தர்
முன்மொழிந்து வைத்தார்கள்; தமிழின் தொன்மை
முகவரிக்கு முகம்தந்தார்; நிலத்தை ஐந்து
எண்ணிக்கை வகைப்பிரித்து; வாழச் சொல்லி
எதுகைக்கும் மோனைக்கும் இமயம் தந்தார்
பெண்ணுக்கு முன்னுரிமை கொடுத்து; ஆதிப்
பெருமகளைக் கவிமகளாய் எழுதச் சொன்னார்.

நூற்றுக்கும் மேற்பட்ட கவிதைப் பெண்டிர்
நுண்ணறிவை நன்கறிவார்; அவர்கள் செய்யுள்
காற்றுக்குள் அகப்பட்ட சருகு போலக்
காணாமல் போனதுவே; ஔவை என்னும்
பேற்றுப்பெயர் மறப்பெண்ணோ எழுது கோலைப்
பெருந்துடுப்பாய்க் கரைகடந்து வந்தார்; இந்த
மாற்றத்தை நவபெண்கள் ஏற்றுக் கொண்டு
மரபுக்கும் புதுமைக்கும் பாலம் செய்வீர்!

நற்றிணையில் களவுகளை நிலவு போல
நனிமயக்கும் கற்பனையைக் கறந்து தந்தார்
கற்றவரும் மற்றவரும் வியக்கும் வண்ணம்
கரும்புச்சா றருவியிலே குளிக்கச் செய்தார்
நெற்கதிராய் நாணமுறும் காதல் பெண்ணை
நெடுந்தொகையாய்க் குறுந்தொகையில் சிவக்க வைத்தார்
கொற்றவனாம் அதியமானின் ஆயுள் காக்கக்
கூழாங்கல் வடிவத்தில் நெல்லி தந்தார்!

உரம்போட்டுத் தமிழ்ப்பயிரை வளர்த்தார்; சங்க
உடம்பிற்கே உயிர்மூச்சைத் தானம் செய்தார்
புறநூலின் பாடலுக்கு வீரம் தந்து
புயல்நாரில் பூத்தொடுத்தார்; வான வில்லின்
நிறம்கொண்டு அகநூலை வரைந்து தந்தார்
நெருப்பிற்கும் நிலவிற்கும் நடுவில் நின்றார்
சிரம்தாழ்த்தி உன்னைநான் வணங்கு கின்றேன்
செம்மொழியின் சொல்லெடுத்து வாழ்த்து கின்றேன்!



கவிஞர் கபிலன்



# கபில நிலா

○ கபிலனே!
வெடி வைத்துத் தகர்க்கப்படும்
குறிஞ்சியிலிருந்து
சிதறித் தெறித்த
பறவைகளின் இறகுகளாக
உதிர்ந்து கிடக்கின்றன
உன் பாடல்கள்.

○ அவரைப் பூக்களின்
வாசம் தேடிவந்த
கீழைக்காற்றின் பிரிவாற்றாமையை
மறைந்திருந்து இசைக்கிறது
உன் யாழ்.

○ போர் முற்றுகைப் பொழுதில்
நெற்கதிர் கொய்து வர
நீ பழக்கிய குருவிகளின்
கூரலகுகள் உடைந்து
குருதி வழிகிறது.

○ வாழை மிளகு சந்தனம் மூங்கில்
பிச்சி குவளை செங்காந்தள் ஆம்பல்
வீரத்தைச் சூதுவென்ற
உன் பறம்பு மலையில்
நீ பாடிய
வேங்கைகள் இல்லை
வேங்கை மரங்களும் இல்லை
வேங்கை மலர்களை உண்ணும்
மான்களும் இல்லை.

○ பாரியாக நீயும்
நீயாகப் பாரியும்
உயிர்மாற்றிக்கொண்ட நட்பை
உப்பிட்ட ஈரத்தில்
கண்ணீராக மீட்டினாய்.

○ அவனுக்குப் பின்
அவனின் செல்லங்கள்
அங்கவை சங்கவையை
உன் கண்ணிமைகளின் குடை பிடித்து
வெயில் மறைத்துக் கூட்டிச் சென்றாய்.
பெண்மைக்கு இடந்தராத நிலத்திலிருந்து
பூக்களும் பறவைகளும் அருவிகளும்கூட
உங்களுடனேயே வந்துவிட்டன.

○ தேடியலைகிறேன் உங்களைத்
தாகத்தோடு
தலை குனிந்து வருகின்றன
என்னோடு
விரலிகளைப் போலச்
சில மயில்களும்.

○ அங்கவை சங்கவையின்
கண்களிலிருந்து
தொலைந்த அந்தக் கடைசிநிலா
நீ வடக்கிருந்த பாறையின்மேல்
விழுந்து
உடைந்து
சிதறிக் கிடக்கிறது
தென்பெண்ணை வெளியெங்கும்
கண்ணீர்ச் சில்லுகளாய்!

கவிஞர் பழநிபாரதி

# எம் தமிழ் செந்தமிழ்

திரைகடல் ஓடி அன்று
திரவியம் சேர்த்ததமிழ்!
திரைப்படம் நாடி வந்து
திராவிடம் வளர்த்ததமிழ்!

அகம்புறம் இரண்டென
அனுபவம் உரைத்ததமிழ்!
நவம் நவம் நவமெனப்
புதுமைகள் செழித்ததமிழ்!

சிலம்புகள் சினம்உரைக்க
தரணியில் ஒலித்ததமிழ்!
குளம்புகள் பிளபிளக்கப்
பரணியில் ஜெயித்ததமிழ்!

குறுந்தொகை குறும்புரைக்கக்
காதலில் களித்ததமிழ்!
குறவஞ்சி தளதளக்கச்
சாரலில் குளித்ததமிழ்!

நற்றிணை நளவெண்பா
நெடுந்தொகை நடந்ததமிழ்!
பற்றினால் தேவாரம்
வாசகம் புரிந்ததமிழ்!

கபிலரின் குறிஞ்சியில்
களிறுகள் பிளிர்ந்ததமிழ்!
கம்பனின் காண்டத்தில்
கவிதைகள் மலர்ந்ததமிழ்!

சித்தர்கள் சத்தமாய்ச்
சனாதனம் எதிர்த்ததமிழ்!
சித்திரக் கவிபடைத்துப்
புலமையைப் பதித்ததமிழ்!

எத்தனை எத்தர்கள்
இடறியும் எழுந்ததமிழ்!
மொத்தமாய்த் தமிழனைப்
பிடறியில் சுமந்ததமிழ்!

அன்றுநம் பாரதி
அன்னையாய் மதித்ததமிழ்!
அவனுக்கொரு தாசனும்
அடுத்ததாய் உதித்ததமிழ்!

திருக்குறள் வழிநின்று
பொதுமறை படைத்ததமிழ்!
திருக்குவளை மொழிதந்த
கலைஞரைக் கொடுத்ததமிழ்!

கவிஞர் நா. முத்துக்குமார்



# நானிலம் போற்ற நந்தமிழ் வெல்க!



நம்மொழி தமிழ்மொழி நானிலம் வலம்வரச்
செம்மொழி ஆயிற் றெனச்செவித் தேன்பாய்ந்து
இதயங் குளிரவு மெம்மவர் மகிழ்ந்தார்!
பரிதிமாற் கலைஞர் பதியம் போட்டதைக்
குருதிநீர் பாய்ச்சிக் கொள்கையாற் காத்தே
எத்திக்கும் முழங்கிட எழுதியும் பேசியும்
முத்தமிழ்க் கலைஞர் முயற்சி கொண்ட
மதியினை என்றும் மன்பதை மறவாத்
தமிழறி ஞர்பலர் தங்குரல் எழுப்பியும்
அரசியற் றலைவர்கள் அடிக்கடி நெம்பியும்
செந்தமிழ் இங்குச் செம்மொழி ஒச்சிட
செறிந்த வரலாற்றைச் செப்பும் ஞாலம்!
சூறைக் காற்றாற் சிதைந்திலை! பூக்கும்
பூகம்பந் தன்னிலும் புதைந்திலை! அலையெழு
ஆழிச் சீற்றம் அழித்து விடாத
ஊழித் தீயால் உறைபனிக் குளிரால்
மறைந்தொழி யாத மாத்தமிழ் இன்றோ
மகுடம் சூடி மகிழ்வு கண்டதே!
உலக அரங்கில் உலாவினி வருதலால்
நிலந்தனில் தமிழ்த்தாய் நிமிர்நடை காண்பாள்!
பல்கலைக் கழகங்கள் பாரிடை நின்றே
பைந்தமிழ் மொழிக்கே வெண்சா மரம்வீசும்!
கன்னித் தமிழரின் கனவு களுக்குக்
கால்கள் முளைக்கும்! கோலது ஒச்சும்!
முடங்கிக் கிடந்த மூத்த இலக்கியம்
முத்தமிழ் முழங்க முகவரி காட்டும்!
இலத்தீன் கிரேக்கு, ஈபுரு, சீனம்
சமற்கி ருதமெனச் சாற்றிய மொழியிடை
முதுமொழி உலகின் முதன்மொழி தமிழே!
முரசறை! புவிமிசை முழங்குக வெங்கும்!
தட்டுக தடந்தோள்! தலைநிமிர் தமிழா!
தொன்மை முதன்மை எண்மை ஒண்மை
இளமை வளமை தாய்மை தூய்மை
செம்மை மும்மை இனிமை தனிமை
பெருமை திருமை இயன்மை வியன்மை
ஆயின பதினா றுடைக்கூறு ஏறிய
செவ்வியல் மொழியே தமிழ்தா னென்றுணர்!

பேரொளிப் பிழம்பு ! பிழையிலாக் கரும்பு !
வல்லின மெல்லின இடையின வெழுத்தால்
சொல்லின் நரம்பெழு சுவையறி கூற்றே !
எழுத்து, சொல்பொருள் யாப்பணி ஐந்தும்
பழுத்த மொழிவேர் பைந்தமிழ் ஒன்றே
வகுத்த தென்று வையத்தே ஓம்புக !
சிந்துவில் எகிப்தில் சுமேரிய நிலத்தில்
முந்திய வேர்விடு முளைத்துக் கிளைத்த
குமரிக் கண்டத்துக் கருவின் தருவிது !
இயல், பெயர் திரி, உரி திசை, சொற் பொருணயம்
உயர்வால் தோன்றிய உயிரின் மூச்சிதே !
மனிதம் பேசிய ஆதியும் இஃதே !
பாதி வழியில் பிறந்த மொழிகள்
கடன்பல வாங்க உதவிய வங்கி !
தலைஇடை கடையெனக் கழகம் வளரச்
செந்தமிழ்ப் புலவர் செறிய விளங்கும் !
இலக்கியம் இலக்கணம் இஃதன் வரம்பில் !
குறிஞ்சி, முல்லை, மருதம் நெய்தல்
பாலையின் ஐவகை பான்மை நிலத்தே
உயர்திணை அஃறிணை உற்றறி துணிய
ஒற்றுமை வேற்றுமை ஓதியே நின்றது
முதல், உரி கருவென முகிழ்த்த தெதனில் ?
அறம்பொருள் இன்பம் அவனிக் களித்த
அழகுசெய் ஏடுகள் ஆழ்கட லெதனில் ?
நிலம்நீர் விசும்பு காற்றுதீ தோன்றின
புலனறி காலத்தால் பூத்ததே நம்மொழி !
தொன்மையால் தனித்த தன்மையால், புதுமைப்
பண்பால், நடுநிலை, பன்மொழித் தாய்மையால்
பட்டறி விலக்கியப் பாங்கால் திறத்தால்
பிறமொழி கலவா வியல்பால், இலக்கியக்
கருவள முயர்மிகு சிந்தனை, கலைதகு
பங்களிப்பால், மொழிக்கோட் பாட்டால்
பதினொன் றடிப்படைப் பண்பென எண்ணுக !
சொல்லச் சொல்லச் சாலம் பெருகும்
ஈண்டு முற்றவும் எடுத்துக் கூறவோ !
பண்டு தொட்டு வழங்கலி னறிக !
அங்கையின் நெல்லிபோற் றெளிவாய் இஃதை !
நானிலம் போற்ற நம்தமிழ் வெல்க !
செந்தமிழ் தழைத்துச் சிறக்க வாழ்க !
உலகுவாழ் அறிஞர் ஒன்றுகூ டியேற்ற
செம்மொழி போற்றும் எம்மான்
தென்மொழிக் காவலர் கலைஞர் வாழியவே !

கவிஞர் தமிழ்தாசன்

# சேலை கட்டி வந்த செம்மொழி

எல்லா மொழிகளுக்கும்
முந்திப் பிறந்தவளே! மூத்தவளே!!
அன்று நீ –
ஓலைக்குப் பிறந்தவள்தான்
இன்று நீ –
வலைப் பூவிலே வளர்கிறாய்!
அன்று நீ –
ஓசையாய்த் திரிந்தவள்தான்
இன்று நீ –
திசையெங்கும் ஒளிர்கிறாய்!!

பிறமொழிக் கலப்பு –
சிறையிலிருந்து மீண்டாய்!
சிலிக்கான் –
பள்ளத்தாக்குவரை நீண்டாய்!!

அகரம் தொடங்கி
சிகரம் தொட்டாய்!
கிராமம் கிளர்ந்து
நகரம் நடந்தாய்!!
கடல்கள் கடந்து
காற்றில் குளித்தாய்!
உடல்கள் விடுத்து – எம்
உயிரில் நிலைத்தாய்!!

எட்டுக்கோடியர் மனத்தில் – கூடு
கட்டி வாழும் நீ
கொங்கு நாட்டில் இன்று – வீடு
கட்ட வருகின்றாய்!
கைத்தறி மணக்கும் – கனிவுக்
கோவையில் நீ
செம்மொழியெனும் – பட்டுச்
சேலை கட்டி வருகின்றாய்!!

காகிதம் கண்டாய் – உடன்
கணினியைக் கொண்டாய் உன்னில்
ஆயுதம் வைத்தாய் – இருப்பினும்
அகிம்சை காத்தாய்!

பொங்கும் பூம்புனலாய்
ஓடிவந்து காதில் புகுந்தாய்!
அமுதகானமாய் அருகில் வந்து
அறுசுவை தந்தாய்!!
நெற்றியில் –
வெற்றித் திலகமிட்டு
ஏற்றம் பல கண்டாய்!
எழுத்தியலில் –
வடிவம் மாற்றியமைத்து
மாற்றம் சில கொண்டாய்!!
இலக்கணம் மாறாத – நல்
இலக்கியம் பல தந்தாய்!
இருப்பினும் –
தலைக்கனம் இல்லாத – சொல்
விளக்கியாய் நீ திகழ்ந்தாய்!!
மூவேந்தர் வழிவந்த தமிழே!
பாவேந்தர் பலர் அருந்திட்ட அமுதே!!
உன்புகழ் பாடி மகிழாதோர்
தமிழரில்லை!
உன்மகிமை தேடி அறியாதோர்
மனிதரில்லை!!
இம்மைக்கும் எம்மைக்கும்
உன்புகழ் மணக்கும்!
காற்றிருக்கும் என்றைக்கும்
எம்தமிழ் இருக்கும்!!
உண்மைக்கும் செம்மைக்கும் –தமிழ்
உதாரணமாய் இருக்கும்!
எளிமைக்கும்இனிமைக்கும் – அதுவே
எடுத்துக்காட்டாய் விளங்கும்!!

தனிமொழியாய்த் தழைத்து
வளர்ந்தவளே! உலகைவலம்
வந்தவளே!!
செம்மொழியாய்ச் செழித்து
நின்றவளே! அகிலம் வென்றவளே!!
தமிழே! நீ வாழ்வாங்கு
வாழ்வாய்! உன்னைப்
போற்றுவோரும்
ஏற்றமுற்று வாழ்வர்!
தமிழென்று சொன்னாலே
தரணியே மணக்கிறது!
தாய்மொழியாய் உனைக்
கொண்டதாலே
எம்பிறப்பே சிறக்கிறது!!

நெஞ்சோலையில்
பூத்திட்ட தமிழே!
மஞ்சோலையில்
மகிழ்வித்த அமுதே!
உதிரத்தில்
கரைந்திட்ட தமிழே!
உயிரோடு
கலந்திட்ட உயிரே!

பொன்னேட்டில் பதித்தாலும்
மண்ணேட்டில் உதித்தாலும்
பொருள் மாறமாட்டாய்!
தங்கத்தில் பொறித்தாலும்
தகரத்தில் அடித்தாலும்
நிறம்மாற மாட்டாய்!!
அழகுமொழியாய்க் காட்சியளித்தவள் –
தெள்ளமுதமொழியாய் இனித்திட்டவள்!
ஆட்சிமொழியாய்
அரியணை யேற்றவள் – இன்று
செம்மொழியாய்ச் சிறப்புற்றாளே!!
தட்டச்சில்
எட்டிப் பார்த்துக்
கணினியைக்
கைப்பற்றினாய்!
அனைவரையும் கவரும்
இணையம் புகுந்தாய்!
இன்று –
இமயம் வென்றாய்!!



கவிஞர் அருள் வீரப்பன்

# எங்கள் தமிழ்மொழி!

ஞானம் விளைந்திட வீணை இசைத்ததில்
நாதம் வளர்த்ததமிழ்! – கொடும்
நஞ்சினை யேபகை ஊட்டிடி னும்உண்டு
நின்று நிலைத்ததமிழ்!
தானைத் தலைவர்மூ வேந்தர்கள் தம்முடி
தாங்கி வளர்த்ததமிழ்! – கூடல்
சங்கப் பலகைமீ னாட்சியின் ஊஞ்சலில்
ஆடிக் களித்ததமிழ்!

வள்ளுவ னார்குறள் வாழ்க்கை முறையை
வடித்துக் கொடுத்ததமிழ்! – எங்கள்
மாகவி கம்பன் இளங்கோவின் காவியம்
வாரிக் கொடுத்ததமிழ்!
தெள்ளும் சமரச வள்ளல் அருட்பாவாம்
தேனில் நனைந்ததமிழ்! – பல
சித்தர்கள் நால்வர், ஆழ்வார்களின் நாவினில்
சிந்தி இனித்ததமிழ்!

சிந்தும் அண் ணாமலை காவடிச் சிந்தில்
சலங்கை ஒலித்ததமிழ்! – அருட்
சித்தன் அருண கிரிஎனும் பித்தன்
திருப்புகழ் தந்த தமிழ்!
முந்திஅவ் வையெனும் பாட்டிநிலாச் சோற்றை
ஊட்டி வளர்த்ததமிழ்! – பாலை
முள்ளிலும் கல்லிலும் உ.வே.சா. சென்றங்கு
மூழ்கி எடுத்ததமிழ்!

அக்கினிக் குஞ்செங்கள் பாரதி நாவினில்
ஆவென் றெழுந்ததமிழ்! – அவர்
ஆக்கினை ஏற்றிட்ட பாரதி தாசனின்
போர்க்குரல் கேட்டதமிழ்!
செக்கிழுத் தும்கல் லுடைத்தும் வ.உ.
சிதம்பரம் காத்ததமிழ்! – மிகச்
சின்ன வயதினில் கொடிக்குயி ரீந்த
குமரனின் தியாகத்தமிழ்!

கல்வி வளர்ச்சிக் கழகம் அமைஅவி
நாசிலிங் கத்தின்தமிழ்! – அவர்
கட்டளை ஏற்றுக் களஞ்சியம் தந்திட்ட
தூரனின் வெற்றித்தமிழ்!
முல்லை மலர்மணம் வீசும் கவிகண்ண
தாசன் இனியதமிழ்! – ஊரின்
மூலை முடுக்கிலும் முத்தமிழ் கண்ட
கலைஞர் அழகுதமிழ்!

வங்கக் கடல்மடி தூங்கும் அண்ணாவின்
விரலில் மிளிர்ந்ததமிழ்! – அவர்
வாரி யணைத்திட்ட செல்வக் குழந்தைகள்
வாழ்த்தி மகிழ்ந்ததமிழ்!
எங்கள் உயர்தமிழ் செம்மொழி யாயிற்று!
இன்று தலைநிமிர்ந்தோம்! – எங்கள்
ஏட்டில் எழுத்தினில் பேச்சில் எம்வாழ்வில்
இமயமென உயர்ந்தோம்.



கவிஞர் சக்திக் கனல்

# தமிழ் செவ்வியல் மொழி!

செந்தமிழ் நம்மொழி செவ்வியல் மொழியாம்
சிறப்புக் குரியது வாழ்க!
அந்தமில் புகழும் அருங்கலைத் திறனும்
ஆர்ந்தே திகழ்வது தமிழாம்!
சிந்தையை அள்ளும் செழுங்கலைக் காவியம்
சிறக்கப் பயின்றது தமிழாம்!
முந்தைப் பழைமையும் பிந்தைப் புதுமையும்
மூவா இளமையும் வாய்க்கும்!

கல்லும் தோன்றாக் காலத்தில் தோன்றிக்
கருத்தில் வளர்வது தமிழே!
சொல்லும் பொருளும் சுவையில் இணைந்து
சுடரும் கவிதை மொழியும்
நல்லோர் இதயம் நாடித் தெளிந்து
நலமார் பொருள்கள் விரியும்
தொல்லோர் வகுத்த துறைத்தீந் தமிழே
துணிவோம் செவ்வியல் மொழியாம்!

எத்தனை யோமொழி உலகினில் தோன்றி
இலக்கியம் கண்டவை எல்லாம்
செத்தே போயின அம்மொழி எல்லாம்
செம்மொழி என்றே பகர்வார்
எத்தனை யோபல ஆயிரம் ஆண்டாய்
இலக்கிய வளமை பூண்டே
புத்திள மைத்திறம் பொலியும் எங்கள்
பூந்தமிழ் செவ்வியல் மொழியே!

உலகுக் கெல்லாம் பொதுவறம் நாட்டும்
உயர்மறைத் திருக்குறள் உண்டு!
உலகம் வியக்கும் சங்கத் தமிழின்
உயர்வாம் இலக்கியம் உண்டு!
நலமார் இலக்கண மரபில் திகழும்
நற்றமிழ்த் தொல்காப் பியமும்
சிலவோ இவையெம் செந்தமிழ் மொழியைச்
செவ்வியல் மொழியாய்க் காட்டும்!

முத்தமிழ் விரியும் முத்தமிழ் நாட்டின்
சொத்தாம் சிலப்பதி காரம்
தித்திக் கும்நறும் தீந்தமிழ் இசையின்
தேவாரந் திருவா சகமும்
முத்தொள் ளாயிரம் நளவெண் பாவும்
மும்மணிக் கோவையும் ஒளிரும்
முத்தென மிளிருங் கம்பன் காவியம்
முழுவதும் செவ்வியல் மொழியே!

உலகின் பலவாம் நாடுகள் தம்மில்
உயர்வாய் வழங்கும் மொழியே!
உலகின் பல்கலைக் கழகங் களிலே
ஓதும் மொழிசெந் தமிழே!
கலைகள் பலவும் காவியம் பலவும்
கனிந்தே நிறைந்தது தமிழே!
நிலவும் புகழில் நிலைக்கும் நம்தமிழ்
நெறியால் செவ்வியல் மொழியாம்!

செவ்வியல் மொழியாய் ஏற்றுத் தமிழைச்
சிம்மா சனத்தில் வைப்போம்!
எவ்வித மொழிக்கும் இதுதாழ்ந்த தில்லை
என்றே முழங்கி மகிழ்வோம்!
ஒவ்வாப் பழைமை ஒதுக்கிப் புதுமைகள்
ஓங்கி நிமிரச் செய்வோம்!
அவ்வை வளர்த்த தமிழை இந்த
அகிலம் முழுதும் வளர்ப்போம்!

இயலிசை நாடக முத்தமிழ் என்றே
ஏத்திப் புகழ்ந்தது போதும்!
வியன்புகழ் கொண்ட விஞ்ஞா னத்தமிழ்
அறிவியல் தமிழை வளர்ப்போம்!
இயலும் பல்கலை இணையக் கணித்தமிழ்
இணையிலை யாகச் செழிப்போம்!
பயிலும் மொழிதான் தமிழே யென்று
பலநிலை களிலும் வைப்போம்!

ஆட்சி மொழியும் தமிழே பலகலை
ஆளும் மொழியும் தமிழே!
மாட்சிமை கொண்ட கோயில் வழிபாடும்
வாணிக மொழியும் தமிழே!
காட்சியும் கல்வியும் கலையும் எல்லாக்
களங்களும் தமிழே வழங்கும்
சாட்சிகள் வழங்கும் நீதியும் தமிழே
சட்டமன் றங்களும் தமிழே!

அயல்மொழி எதனையும் பயில்வோம் ஆனால்
ஆளும் மொழிதான் தமிழே!
அயல்மொழி இலக்கியம் அறிவியல் கலைகள்
அனைத்தும் தமிழில் கொணர்வோம்!
நயமாய் நம்மொழி நானிலத் தெல்லா
நாடுகள் கொண்டு செல்வோம்!
அயல்மொழி நம்மேல் ஆதிக்கம் செலுத்தும்
அறமில் தீவினை எதிர்ப்போம்!

நமதிளம் மழலைகள் தமிழை மறந்தே
அயல்மொழி மூலம் பயின்றால்
தமிழனென் றேநாம் தரணியில் இனியும்
தலைநிமிர்ந் திடவும் தகுமோ ?
அமிழ்தாம் மொழியில் பெயர்களை வைப்போம்
அயல்மொழி மோகம் விடுவோம்!
தமிழே உயர்தனிச் செம்மொழி யென்றே
தலைமை ஓங்கிடச் செய்வோம்!



தமிழன்பன் ப.முத்துசாமி

# செம்மொழியாம் செந்தமிழின் சீர்மை!

நிலவொன்று, கதிரொன்று, பரந்தி ருக்கும்
நீலவண்ண வான்ஒன்று, ஞாலம் ஒன்றே!
பலநூறு மொழிகளெல்லாம் இருந்த போழ்தும்
பன்னரிய பெருவளத்தால் இனிய மாண்பால்
உலகெங்கும் ஒளிர்கின்ற மொழியும் ஒன்றே!
ஒண்டமிழே அதுவென்றால் மறுப்பார் உண்டோ?
விலகாத இருள்நீங்க, அடிமை எண்ணம்
வீழ்ந்திடவே விழிப்புணர்வைத் தமிழால் பெற்றோம்!

அருந்தமிழே மூலமொழி! உலகில் அந்நாள்
அடிபதித்த முதல்மாந்தன் தமிழன்; அன்னோன்
பிறந்தகமோ தெற்கிருந்த குமரிக் கண்டம்;
பிழைத்திடவே உட்புகுந்த ஆரி யத்தின்
கரவுகளை அறியாமல் தமிழர் அந்நாள்
களங்கத்தை மடிசுமந்து மானம் போக்கி
வரலாற்றுப் பழிசுமக்க லானார்! வீணே
வல்லிருளில் தளைப்பட்டார்! மீண்டார் இந்நாள்!

ஆங்கிலம்போல் இலத்தீன்போல் கிரேக்கம் போல
அயற்சொற்கள் கலப்படத்தால் அழிவெய் தாமல்
ஓங்குதனித் தன்மையெலாம் ஒருங்கே பெற்ற
உயர்தனிச்செம் மொழியாக மிளிரு கின்ற
பாங்குமிகு பைந்தமிழோ கல்வெட் டாலும்
பழம்பெருமை மெய்க்கீர்த்தி, செப்பேட் டாலும்
நீங்காமல் நெஞ்சுள்ளே நிமிர்ந்து நிற்கும்
நீள்புவியில் அரசோச்சி நிலைத்து நிற்கும்!

தொன்மையுடன் தனித்தன்மை தூய்மை மேன்மை
துலங்குமொழிக் கோட்பாடு பொதுமை மற்றும்
பண்பாடு நாகரிகம் கலப்பும் இன்மை
பார்போற்றும் நடுநிலைமைப் பண்பாம் என்னும்
மன்னும்சீர்த் தகுதிகளாம் செம்மொ ழிக்கே!
மங்காத தமிழுடனே இவற்றை யெல்லாம்
தன்னுள்ளே கொண்டிலங்கும் தகைமை சான்ற
தமிழுக்கு நிகரற்ற பெருமை சேர்ப்போம்!

பனிமலையின் கொடுமுடியின் உயரம் என்றும்
பாய்ந்துவரும் நீல் ஆற்றின் நீளம் என்றும்
தனிச்சிறப்புக் கொண்டிலங்கும் அமைதி வாரி
தான்பெற்ற ஆழமென்றும் ஆய்வு செய்தே
இனித்தபுகழ்ப் பாவாணர் எடுத்துச் சொன்னார்!
இலக்கியத்தில் இலக்கணத்தில் செழுமை வாய்ந்த
கனித்தமிழோ மூத்திருந்தும் இளமை மேவக்
கவினார்ந்த செம்மொழியாய்ச் சிறக்கக் கண்டோம்!

வளர்ந்தமொழி, முதிர்ந்தமொழி உலகோர் போற்றும்
வளம்யாவும் நிறைந்தமொழி! வையம் வானம்
அளந்தமொழி! அரசியலை, மலைக்கச் செய்யும்
அறிவியலை அணுவியலை மெய்ம்மை மற்றும்
உளவியலை உலகியலை உணர்ந்து தேர்ந்த
ஒப்பில்லா உயர்மொழியாம்! கணினி மூலம்
விளங்குமெழில் பூத்தமொழி! புலவர் நாவில்
விளையாடி மகிழ்வதுவும் தமிழே அன்றோ!

வேற்றுமொழிச் சொற்களினைக் கடன்வாங் காமல்
வீறார்ந்த தனித்தன்மை விளங்கப் பெற்றும்
ஊற்றெனவே கலைச்சொற்கள் உருவாக் கத்தால்
ஊடகத்தில் வலைத்தளத்தில் முதன்மை பெற்றே
ஏற்றமுடன் இணையத்தளம் எங்கும் காண
எண்ணற்ற குறுந்தகட்டில் ஆட்சி செய்யும்
மாற்றத்தால் புதுமைபல விளைத்து வாழும்
மாத்தமிழோ மலராக மணத்தல் பாரீர்!

திருக்குறளை, சிலம்பைத்தொல் காப்பி யத்தைத்
தேவாரம் திருவாசக அருட்பா தன்னை,
குறுந்தொகையோ டெண்தொகையை, பத்துப் பாட்டை,
குறவஞ்சி மேகலையை நளவெண் பாவைப்
பெருங்கதைசிந் தாமணியை, கீழ்க்க ணக்கைப்,
பிள்ளைத்தமிழ் கோவைஉலா பரணி தூது
அருளாளர் ஆழ்வார்தம் பாசு ரத்தை
அணிசெய்யும் மணித்தமிழைப் போற்றி வாழ்வோம்!



முனைவர் கடவூர் மணிமாறன்

(நீல் ஆறு – நைல் நதி, அமைதி வாரி – பசிபிக் கடல்)

# தமிழ்த் தாய்



பத்தமிழ்ப் பாட்டாகி நிற்பவளே! இந்தப்
பாரில்முன் பிறந்துயர்ந்த வெற்பவளே! நெஞ்சில்
புத்தமிழ்தாய் இனிப்பேற்றிக் கிடப்பவளே! வையப்
புதுமைகளை உள்வாங்கி நடப்பவளே! எண்ணில்
சித்தர்தம் பாட்டான பூமகளே! மங்காச்
சிறப்புரையாய் அறிஞர்கொள் நாமகளே! என்றும்
வித்துப்போல் வளர்ந்துபயன் தருபவளே! கருத்தை
வேண்டுமட்டும் ஈந்துயர்த்தும் தருவவளே! வாழ்க!!

நாலடியாய் நடைபயிலும் அறத்தவளே! வீரம்
நல்குமுயர் பரணிப்பா மறத்தவளே! பிறந்த
காலமதை உணரவொண்ணா மூத்தவளே! முதுமைக்
கலப்பென்னும் காலமுறை நீத்தவளே! காக்கும்
ஆலனைய நிழல்சொல்லாய் விரிந்தவளே! மேலை
அறிஞர்க்கும் அறிவுவளம் சொரிந்தவளே! தாக்கும்
வேலனைய சொல்வழங்கும் வானவளே! உலகே
விரும்பநிற்கும் சுவைக்கொம்புத் தேனவளே! வாழ்க!!

கீழ்க்கணக்கும் மேல்கணக்கும் ஈன்றவளே! தமிழர்
கெழும்புகழை உலகறியும் சான்றவளே! நெஞ்சில்
ஆழ்ந்தினிக்கும் மேகலையை அணிந்தவளே! அறிஞர்
அறிந்துவக்கும் பழக்கருத்தாய்க் கனிந்தவளே! வெற்றி
சூழ்ந்துவரத் தமிழர்க்கு வாய்த்தவளே! வேதச்
சூழ்ச்சியரை மாவளத்தால் சாய்த்தவளே! எம்முன்
காழ்த்திருக்கும் அறிவமிழ்தத் தூயவளே! நெஞ்சில்
களிப்பேற்றும் மொழிக்குடும்பத் தாயவளே! வாழ்க!!

அருணகிரி வண்ணத்தில் எழுந்தவளே! எம்மின்
அறிவகற்றும் பயிர்நாற்றுக் கொழுந்தவளே! நான்கு
'வருணத்தைச்' சாய்த்துயர்ந்து சிரிப்பவளே! வெற்றி
வாகையொன்றே என்றென்றும் தரிப்பவளே! வான்போல்
கருணையவன் வடலூரான் அன்னையளே! அவனின்
கவிதைக்குள் இளநீராம் தென்னையளே! ஆளும்
அருளாளர் கலைஞருளம் இருப்பவளே! மனிதம்
ஆளுமுயர் ஐம்பூத நெருப்பவளே! வாழ்க!!

பாவலர் இறையரசன்



# இணையத்தில் இன்பத் தமிழ்!

மயில்பொறியை வானத்தில் பறக்க வைத்தோம்
மணிபல்லவத் தீவிற்குப் பறந்து சென்றோம்
குயில்மொழியாம் கண்ணகியை அழைத்துச் செல்லக்
குன்றுக்கு வானவூர்தி வந்த தென்றே
உயில்போன்று நம்முன்னோர் எழுதி வைத்த
உண்மைகளை அறிவியலின் அற்பு தத்தைப்
பயில்கின்ற காப்பியத்தில் படித்த தெல்லாம்
பார்தன்னில் நனவாகக் காணு கின்றோம்!

அணுப்பிளந்த செய்தியினை ஔவை சொன்னாள்
அவிழ்த்துவிட்ட புளுகுமூட்டை என்று ரைத்தார்
அணுக்குண்டைப் பொக்ரானில் வெடித்த போதோ
அருந்தமிழன் அறிவுதனைப் போற்றி நின்றார்
முணுமுணுத்தார் அம்புமுனை நெருப்பைக் கக்கி
முன்னேறிச் சென்றதனைப் பொய்யே யென்றார்
முணுமுணுத்த வாய்பிளந்தே இசுகட் என்று
முகிழ்த்த,ஏவு கணைகண்டு வியப்பி லாழ்ந்தார்!



வான்மீதில் தெரிகின்ற மீன்கள் தம்மின்
வகைசொல்லி; ஒளிர்கின்ற திசையைக் கொண்டே
தேன்தமிழில் கோள்கள்தம் அசைவைச் சொல்லித்
தெளிவான ஞானத்தால் கதிரைச் சுற்றி
நீள்வட்டப் பால்வீதி உள்ள தென்றும்
நிற்காமல் சுற்றுகின்ற விஞ்ஞா னத்தை
ஆன்மீகப் போர்வையிலே சொன்ன தாலே
அறிவியலைத் தமிழ்மொழியில் இல்லை யென்றார்!

கணியனவன் யாதும்ஊர் என்று ரைத்த
கருத்திங்கே கணினிவழி வந்த தின்று
தனித்தீவாய் வாழ்ந்துவந்த மக்க ளெல்லாம்
தமராக இணைகின்றார் இணையத் தாலே
இனிநம்மின் வீட்டிற்குள் இருந்த வாறே
இத்தரையின் நிகழ்ச்சிகளைப் பார்ப்ப தோடு
தனித்தனியாய் அவர்மொழியில் பேசு தற்கும்
தகவல்கள் பெறுதற்கும் வாய்ப்பைப் பெற்றோம்!

அறிவியலுக் கேற்றமொழி அல்ல வென்னும்
அறிவிலிகள் கூற்றையெல்லாம் பொய்யா யாக்கிச்
செறிவான கணிப்பொறியின் மொழியா யாக்கிச்
செம்மையான குறியீட்டின் எழுத்து மாகி
அறிகின்ற விசைப்பலகை பொதுவா யாகி
அறிஞரெல்லாம் போற்றுகின்ற சொல்தொ குப்பும்
நெறியான மென்பொருளின் தளம மைந்தே
நிகரில்லா இணையமொழி ஆன தின்று!

பிறமொழியின் அறிவெல்லாம் இணையத் தாலே
பிறக்குமினி தமிழினிலே உலகந் தன்னில்
சிறகடிக்கும் புதுமையெல்லாம் ஒருநொ டிக்குள்
சிறப்பாகத் தமிழினிலே பூக்கு மின்று!
வரவாக இவையெல்லாம் தமிழில் சேர
வாய்ப்புதனைத் தந்தவர்நற் ''கலைஞர்' தாமே
சிரமான கலைஞர்தாம் இணையத் துள்ளே
சீர்தமிழைச் சேர்த்ததாலே உயர்ந்தோம் நாமே!

பாவலர் கருமலைத்தமிழாழன்

# உலகமெல்லாம் முப்பாலில் அடங்கிச் செல்லும்



கவிஞர் தேனிராபாண்டியன்

ஓரடியில் உலகத்தை அளந்தாள் அவ்வை!
ஓரிரண்டின் அடிகளாலே உலக ளந்தே
சீரடியைப் பேரடியாய் எடுத்து வைத்தே
சீர்செய்தான் உலகத்தை வள்ளு வன்தான்!
பேரடியாம் மூவடியில் உலக ளந்த
பெருமானைப் போலிவனும் இறையென் றானான்!
நாரடியில் மணக்கின்ற மலரைப் போல
நற்குறளால் சிறக்கின்றான் வள்ளு வன்தான்!

வள்ளுவனின் அறத்துப்பால் வாழ்வைச் சொல்லும்
வடித்துவைத்த பொருட்பாலோ ஆட்சி சொல்லும்
உள்ளூறும் மூன்றாம்பால் அன்பைச் சொல்லும்
உலகமெல்லாம் முப்பாலில் அடங்கிச் செல்லும்!
அள்ளியள்ளிப் பருகினாலும் தெவிட்டி டாமல்
அருந்தேனின் பலாச்சுளையாய் இனிக்கும் பாக்கள்!
தெள்ளுதமிழ் வள்ளுவனின் செறிவுப் பாக்கள்!
தெளிவாக்கும் உலகத்தின் அறிவுப் பாக்கள்!

எடுத்தியம்ப வருவோரும் எழுது வோரும்
எழுந்துவந்து பரப்புவோரும் பாடல் தம்மைத்
தொடுப்போரும் குறள்தன்னைத் தொட்டி டாமல்
தொகைக்கருத்தைக் கூறுதற்கே இயலா திங்கே!
இடுக்கண்தான் வரும்போது குறளெ டுத்தே
இனிமையுடன் படித்தாலே இன்னல் நீங்கும்!
வடுக்களாகத் தடம்பதித்து வாழ்வைச் சொல்லி
வழிவகுக்கும் பெருநூலே குறளே என்பேன்!

# மானுடத்தின் கண்கள்



தகதகக்கும் கதிர்வெடித்தே கடலில் வீழ்ந்தே
　　தணல்தணிந்து நிலமகளாய் மலர்ந்தாள் என்பர்
தகைசான்ற அறிவியலார்! உண்மை! தங்கத்
　　தமிழினமும் மொழியுமவள் உடன்பி றந்தே
பகைபலவும் புறங்கண்டே வாழும் சீர்மை
　　புவியின்மிசை பேருண்மை! இன்று மண்ணில்
தகுமொழிபல் லாயிரந்தான்! அத்த னைக்கும்
　　செம்மொழிநம் தமிழன்றோ அன்னை யாவாள்...!

பண்பாடு நாகரிகம் ஒழுக்கம் கல்வி
　　பொன்மலைபோல் திகழ்ந்ததுவும் சங்க காலம்
கண்ணிகர்த்த காதல்வீரம் கனிந்தே: வாழ்க்கைக்
　　கண்ணியத்தைக் காத்ததுவும் சங்க காலம்
இன்பத்தின் ஊற்றுக்கண் பத்துப் பாட்டு
　　எட்டுத்தொகை : கீழ்க்கணக்கு தாங்கி நிற்கும்
எண்ணங்கள் ஒவ்வொன்றும் வைர மாகும்
　　என்றென்றும் மானுடத்தின் கண்க ளாகும்...!

தாங்கொண்ணாத் துயர்க்கடலில் எம்மை ஆழ்த்திச்
　　சங்கத்தமிழ்ச் சுவடிகோடி விழுங்கி விட்ட
பாங்கறியாப் பெருங்கடலே! செவிகொ டுப்பாய்...!
　　பார்வியக்கப் பைந்தமிழர் கீர்த்தி ஓங்கத்
தீங்கறியாப் பொற்கால ஆட்சி நல்கும்
　　தாயனையார் எம்முதல்வர் உனைமன் னிப்பார்..!
வீங்குபுகழ்ச் சங்கத்தமிழ் அனைத்தும் வாரி
　　வண்டமிழ்த்தாய்க் காலடியில் சேர்ப்பாய் நீயே...!



கவிஞர் வேலூர் ம. நாராயணன்

# தமிழ்த் தாயே! தமிழ்த்தாயே!



அன்னையின் வயிற்றில் கருவாகி
அன்புடனே நானும் உருவாகி
மண்ணை முத்தமிட்ட நேரத்திலே
“மா”என்று அழைத்தது உனைத்தானே!

அன்றுமுதல் இன்றுவரை
அகரம்முதல் ‘ன’ கரம்வரை
நன்றாய்ப் பேசிநான் எழுதிடவே
நல்வாய்ப்பு வழங்கிய நாயகியே!

பெற்ற அன்னைக்கும் மேலாக... எனைப்
பேணி வளர்க்கும் தமிழ்த்தாயே!
கற்றோர் நிறைந்த அவைதனிலும் – நான்
கம்பீரமாய்ப் பேசிப் பேரெடுக்க

உற்ற துணையாய் நீயிருந்து...
ஓசை நயத்துடன் உடன்வந்து
மாற்றார் போற்றிப் பாராட்ட – எனை
மகிழ்ச்சியில் ஆழ்த்தும் மணித்தமிழே!

நாடுகள் பலநான் சென்றாலும்
நலத்துடன் என்னுடன் நீயிருந்து
கேடுகள் எதுவும் அண்டாமல்
கீர்த்தி மாலைகள் தருபவளே...!

எத்தனை பெருமைகள் வந்தாலும்
எத்தனை புகழுரை கிடைத்தாலும்
அத்தனையும் உனது திருவடிக்கே
அடியேன் காணிக்கை ஆக்குகிறேன்...!

அனைத்து மொழியிலும் மூத்தவளே!
ஆருயிராய் நெஞ்சில் பூத்தவளே – எந்தப்
பிணக்கும் இல்லாமல் காப்பவளே!
பெருமைகள் எனக்குச் சேர்ப்பவளே!

எம்மொழியோ இதுவென எண்ணிடாமல்
நம்மொழி இதுவென மதிப்பளித்துச்
செம்மொழி அரியணை ஏற்றிவைத்த
தேசத் தலைவர்களை வணங்குகிறேன்!

ஒருநாளும் உனைநான் மறவேன்
உன்பணி செய்யாது மறையேன்... நீ
தருகின்ற ஆசியில் தரணியில்
தலைநிமிர்ந்து நலமாக வாழ்வேன்.

உன்காலத்தைக் கணிக்க முடியவில்லை – இளைய
கன்னியே உனக்கு மூப்பில்லை!
ஞாலமே வியக்கும் நற்றமிழே
எமக்கு நல்லாசி வழங்கிட வேண்டுமம்மா!

கவிஞர் இரவிபாரதி

# செம்மொழி வாழ்க!



ஆதிமொழி யானதமிழ் அன்னையே !இவ் வையம்
அரும்பியநாள் அரும்பியநல் அறிவான ஒளியே!
ஓதுமொழி யாவினும்உள் உயிர்ப்பாகி நின்றே
உதிக்குமொழி யாவினுக்கும் தாயான முதலே!
தீதுமொழி சொல்லாதே சிந்தைதெளி வாக்கிச்
சிறப்புறவே மாந்தர்தமைச் சீராக்கும் தெளிவே!
நாதவொலி நயக்கடலே! நல்லமுதக் குடமே!
நற்றமிழே! பொற்றமிழே! நடமிட்டு வாழ்க!

சங்கமெனும் அரங்கத்திலே தழைத்தெழுந்த கொடியே!
சத்தான புலவர்மனம் தனிலாடும் நடமே!
பொங்குமன எழுச்சியெலாம் புகலவரும் பொன்னே!
பொருளான பொருளாகிப் பொலிவுமிகும் பொற்பே!
தங்குமொழி இலக்கணத்தில் தனக்குநிகர் தானாய்த்
தனித்தன்மை தழைத்தென்றும் தானோங்கும் தருவே!
எங்குமுள தமிழரினத் திதயத்தின் எழிலே!
ஈடில்லாக் குலவிளக்கே! இனிதேநீ வாழ்க!

மறந்தேனும் தமிழ்மறவா மனச்செவ்வி யோர்கள்
மனக்கயத்தே மலர்ந்தொளிரும் மணமுளபொன் மலரே!
அறிந்தோரின் அகப்பொழிலில் அளைந்தாடி இன்பம்
அரும்பிடவே அளித்துவக்கும் அன்புமலர்க் கொம்பே!
நறுந்தேனும் நயஞ்சாலா நல்லிசையாய் நாட்டின்
நாடகமாய் இலக்கியமாய் நயமளிக்கும் நலனே!
இருந்தேநீ கற்கண்டாய் எந்தமிழர் வாழ்வில்
என்றென்றும் இனித்திருக்க எந்தமிழே! வாழ்க!

ஒருமொழியாய்க் காலமெனும் வரைகடந்த வனப்பே!
ஒப்பிலவாம் எண்தொகையும் பதின்பாட்டும் பெற்றாய்!
வருமொழியார் வாய்மயக்கில் வஞ்சத்தில் வீழா
வலிமையுடன் வளமைபல வாரியமை வடிவே!
பெருமொழியாம் பலவுலகிற் பேச்சற்றே போகப்
பெருமைமிகு இளமையுடன் பிறங்கிடுமெம் தாயே!
திருமொழியாய்த் தென்னவரின் திருவமுதாய்த் திகழும்
தீந்தமிழே! பூந்தமிழே! திங்களேநீ வாழ்க!

கண்பாடும் காதலர்தம் களிமலரும் நெஞ்சிற்
கனிந்துகனிந் தூற்றெடுக்கும் கன்னல்நறுஞ் சாறே!
பண்பாடும் பாடல்களிற் பாநலமே பெருக்கிப்
பயின்றொலிக்கும் பண்ணாகிப் படர்ந்துவரும் பாவாய்!
பண்பாடும் பயில்மரபும் பசுமையோடே செழிக்கப்
பைந்தமிழர் உளக்கோயில் பற்றியொளிர் பரமே!
மண்பாடும் மாபுகழே யாம்வாரிக் கொள்ள
மணங்கனிந்துன் மணம்பரப்பி மலர்ச்சியுடன் வாழ்க!

வள்ளுவனைத் தந்துபுகழ் வாரிமகிழ் கொண்டாய்!
வளமான சங்கநிதி நினக்கெனவே பெற்றாய்!
உள்ளுந்தோறும் உயிரினிக்கும் வாசகத்தேன் கோவை
ஒருமூலன் மந்திரமும் உவப்புடனே கண்டாய்!
தெள்ளுமணி மேகலைநற் சிலம்புசிந்தா மணியும்
தேவாரம் பிரபந்தம் சேக்கிழார் சொல்லும்
கள்ளுநிகர் கம்பன்கவி வில்லிபா ரதமும்
கண்டநறும் கனித்தமிழே கண்மணியே! வாழ்க!

கவிஞர் சொ. கலைச்செல்வி



அத்தர் ஜமாஅத் பள்ளிவாசல் – ஒப்பணக்கார வீதி, கோவை

# கொங்குக் கலைவளம்



முனைவர் சி. சுவாமிநாதன்

ஒரு சமுதாயத்தில் வாழும் மக்களின் வாழ்க்கை முறையின் வெளிப்பாடே பண்பாடாகும். வாழ்க்கை அமைப்பு என்பது அச் சமுதாயத்தின் பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள், மரபுகள், கலைகள், இலக்கியங்கள் முதலியவற்றால் அறியப்படுவது. சுருங்கக் கூறின் பண்பாடென்பது ஒரு தலைமுறையினர் சென்ற தலைமுறையினரிடம் பெற்றுக்கொண்ட வாழ்க்கை முறையாகும். இத்தகைய பண்பட்ட வாழ்க்கை முறையிலிருந்து மனிதனுக்கு இயல்பாகத் தோன்றுகின்ற உணர்வு கலை உணர்வு ஆகும். ஒரு சமூகத்தின் அழகியல் உணர்வுகளின் மையமாகக் கலைகள் விளங்குகின்றன. இக் கலைகள் முதலில் இயற்கையோடும் பின்பு சடங்கியலோடும், சமயத்தோடும் பின்னர்ச் சமுதாயத்தோடும் இணைந்து காணப்படுகின்றன. இக்கட்டுரை கொங்கு நாட்டு மக்களிடையே வழக்கிலுள்ள சில கலைகளையும் பண்பாட்டையும் அறிமுகம் செய்ய முயல்கின்றது.

### கலை

மானிடரின் அழகிய படைப்புகளைக் கலை என்கிறோம். படைப்பு என்பது எழுத்து வடிவினதாகவோ, வரைதலாகவோ, பொருளாகவோ, செயலாகவோ, நிகழ்த்துதலாகவோ இருக்கலாம். கொங்கு நாட்டில் மேற்சொன்ன எல்லா வகையிலான கலைகளும் தொன்மைக் காலந்தொட்டே வழக்கிலிருந்திருக்கின்றன.

### படைப்புக் கலை

எழுத்து வடிவிலான படைப்புக் கலை என்று எடுத்துக் கொண்டால் தமிழ் இலக்கியத்துக்குக் கொங்குநாடு செழுமையான பங்களிப்பைச் செய்திருக்கிறது. சங்ககாலம் முதல் இன்றுவரை எல்லாக் காலங்களிலும் எல்லா வகையான இலக்கியங்களையும் கொங்கு நாடு சார்ந்த எழுத்தாளர்கள் படைத்துத் தந்துள்ளனர். சங்ககாலப் புலவர்களின் நயம்படு சொற்களால் புகழ்ப்பெற்ற சிற்றரசர் பலர் கொங்குநாட்டைச் சேர்ந்தவர்களாவர். அதியமான், வல்வில்ஓரி, கழுவுள் ஆய் அண்டிரன், குமணன், நன்னன், பிட்டங்கொற்றன் முதலியோர் சங்கப் புலவர்களால் பாடப்பெற்ற கொங்கு நாட்டுச் சிற்றரசர்கள் ஆவர். சேரவேந்தர் பாலை பாடிய பெருங்கடுங்கோ கொங்குநாட்டுப் புலவரில் குறிப்பிடத் தக்கவர். "வினையே ஆடவர்க்கு உயிரே" (குறுந் –135) என்ற சிந்தனை இவர் பாடியதுதான். 'நீர் கேட்டுப் பெறாது அவமானப்பட்டுப் பின் பெற்ற நீரை அருந்தாது உயிர் நீத்த சேரமான் கணைக்கால் இரும்பொறை' கொங்குநாட்டுப் புலவரும் அரசரும் ஆவார்.

> "குழவி இறப்பினும் ஊன்தடி பிறப்பினும்
> ஆளன் றென்று வாளில் தப்பார்"
>
> (புறம் – 74)

என்ற புகழ்பெற்ற பாடல் இவருடையது. கூடலூர் கிழார், குன்னூர் கிழார் மகனார் கண்ணத்தனார், பொன்முடியார், அரிசில் கிழார், குடவாயில் கீரத்தனார் ஆகிய புலவர் பெருமக்கள் கொங்குநாட்டவர் என்பர்.

பழைமையான காப்பியங்களுள் ஒன்றாகக் கருதப்படும் 'தகடூர் யாத்திரை' பெருஞ்சேரல் இரும்பொறைக்கும் அதியமானுக்கும் இடையே நடந்த போரைப் பொருளாகக் கொண்டது. இந்நூல் கொங்குநாட்டைச் சேர்ந்ததாகும். தனிச்சிறப்பு மிக்க பெருங்காப்பியமாகக் கொங்கு வேளிர் இயற்றிய 'பெருங்கதை' விளங்குகிறது. இவரது ஊர் கொங்கு நாட்டிலுள்ள விஜயமங்கலமாகும். சங்ககிரி வட்டாரத்தைச் சார்ந்த பித்தர்பாடி இயற்றிய 'தக்கை இராமாயணம்' கொங்கு நாட்டுப் படைப்புகளில் குறிப்பிடத்தக்கது. தக்கை என்பது உடுக்கை போன்றதோர் இசைக்கருவி. இவ்விசைக் கருவியை ஒலித்துக் கொண்டே பாடப்படும் வகையில் அமைந்தது இந்த இராமாயணம். அழகும், நயமும் மிக்க 3250 பாடல்களைக் கொண்டது இக்காப்பியம். சிரவை ஆதீனம் கந்தசாமி சுவாமிகள் இயற்றிய 'பக்த மான்மியம்' வைணவ அடியார்களின் வரலாறு பேசும் சிறந்த காப்பியமாகும். இந்நூலில் 7367 பாடல்கள் அமைந்துள்ளன. கொங்கு நாட்டைச் சேர்ந்த புலவர் குழந்தை என்னும் திராவிட இயக்கக் கவிஞரால் இயற்றப்பட்டது 'இராவண காவியம்' ஆகும். இது 3100 பாக்களால் ஆனது. இராவணனை நாயகனாகக் கொண்டு எழுதப்பட்ட இந்நூல் இனிய கவித்திறத்துக்குச் சிறந்த எடுத்துக்காட்டு. அ. கிருஷ்ணசாமி நாயுடு இயற்றிய 'திருவள்ளுவர் காவியம்' கொங்கு நாட்டில் தோன்றிய காப்பியங்களில் குறிப்பிடத்தக்கது. இது 4030 வெண்பாக்களைக் கொண்டது; 1958இல் வெளியிடப்பட்டது.

நன்னூல், வச்சணந்திமாலை, நேமிநாதம் முதலிய இலக்கண நூல்கள் கொங்கு நாட்டில் தோன்றியவையே. சமய இலக்கியங்களில் தேவாரத்தில் குறிக்கப் பெற்ற வைப்புத் தலங்களான கொடுமுடி, திருநணா, திருச்செங்கோடு, கரூர், வெஞ்சமாக் கூடல் முதலியன கொங்கு நாட்டைச் சேர்ந்தவையாகும். சிற்றிலக்கிய வகைகளுள் கோவை, உலா, அந்தாதி, பிள்ளைத்தமிழ் முதலிய நூல்கள் கொங்குநாட்டில் மலர்ந்துள்ளன.

அவ்வகையில் ஐவேலி அசதிக்கோவை, திருச்செங்கோட்டுக் கோவை, பேரூர்க்கோவை, கபிலர்மலை வருக்கக்கோவை, உலகுடையான் கோவை முதலிய பல கோவை நூல்கள் இப்பகுதியில் எழுந்துள்ளன. தூது எனும் வகையில் பேரூர்ப்பட்டிப் பெருமான் தூது, புலவர்விடு தூது, வண்டுவிடு தூது குறிப்பிடத்தக்கன. பிள்ளைத்தமிழ் நூல்களில் சிரவை ஆதீனம் கந்தசுவாமிகள் தண்டபாணி பிள்ளைத்தமிழ், இராமானந்த சுவாமி பிள்ளைத்தமிழ் உட்பட ஆறு பிள்ளைத் தமிழ் நூல்களைப் பாடியுள்ளார்.

குறவஞ்சி நூல்களுள் அலகுமலைக் குறவஞ்சி, சிவன்மலைக் குறவஞ்சி, பூந்துறைக் குறவஞ்சி முதலியன குறிப்பிடத்தக்கன. பள்ளு இலக்கியங்களில் மோரூர்ப் பள்ளு, வையாபுரிப்பள்ளு, கொடுமுடிப்பள்ளு, திருச்செங்கோட்டுப்பள்ளு, ஐயனாரப்பன் பள்ளு முதலியன கொங்குநாட்டில் தோன்றியவையாகும். உலா என்னும் வகையில் பேரூர் உலா, அவினாசி உலா போன்றன கொங்குநாட்டில் மலர்ந்தவை ஆகும். இப்படியாகச் சங்ககாலம் முதல் சிற்றிலக்கியக் காலம் வரை கொங்கு நாட்டில் தொடர்ந்து இலக்கியங்கள் தோன்றி வளர்ச்சி பெற்றிருப்பது போல் அண்மைக் காலத்திலும் பல படைப்பாளர்கள் தோன்றி இலக்கியங்களைப் படைத்துக்கொண்டே இருக்கின்றனர். அவ்வகையில் ஆய்வுக்கலையில் முத்திரை பதித்த கோவை கிழார், பெரியபுராணத்துக்கு உரை எழுதிய சி.கே. சுப்பிரமணிய முதலியார், வரலாற்றுப் புதின ஆசிரியர் இ.பாலகிருஷ்ண நாயுடு, வட்டார நாவல் ஆசிரியர் சண்முக சுந்தரம் போன்றோர் கொங்குநாட்டவரே. பெரியசாமித்தூரன், உடுமலை நாராயணகவி, புலமைப்பித்தன், புவியரசு, சிற்பி, இளமுருகு, கங்கைகொண்டான், அக்னிபுத்திரன், தேனரசன், தமிழ்நாடன், ஞானி, கு. சின்னப்ப பாரதி, சுப்பாரதி மணியன், சி.ஆர். இரவீந்திரன், சூர்யகாந்தன், பெருமாள்முருகன் போன்ற படைப்பாளர்கள் கொங்குநாட்டுப் படைப்பாளர்களுள் குறிப்பிடத் தக்கவர்களாவர்.

**ஓவியக் கலை**

வரலாற்றுக்கு முந்தைய எழுத்து அறிவு தோன்றுவதற்கு முன் வாழ்ந்த மனிதன் மனத்தில் இருந்த கலை உணர்வு ஓவியங்களாக மலர்ந்தன. தன் மனத்தில் தோன்றிய எண்ணத்தை வெளிப்படுத்தப் பண்டைய மனிதன் மேற்கொண்ட முயற்சியே ஓவியக் கலை ஆகும். கொங்குநாட்டில் குகை ஓவியங்கள் பல கண்டுபிடிக்கப் பட்டுள்ளன. குறிப்பாகக் கோவை வெள்ளெருக்கம் பாளையம், கோவலூர், மறையூர், தெங்கு மரஹாடா, வெள்ளக் கோம்பை, மருதமலை போன்ற ஊர்களிலுள்ள குகைகளில் பாறை ஓவியங்களாக இவை காணப்படுகின்றன. உடுமலை அருகேயுள்ள மறையூரில் ஊருக்கு வடமேற்கில் உள்பக்கம் சாய்வாக உள்ள பாறையில் பழங்கால ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளன. இதில் சுமார் பத்து அடி உயரத்தில் நிற்கும் உருவத்தைச் சுற்றிலும் நூற்றுக்கணக்கான மான்கள் வரையப்பட்டுள்ளன. இந்த ஓவியம் வெண்மை வண்ணத்தில் இருப்பதனால் இதன்காலம் கி.மு. 5000 என்று கணக்கிட்டுள்ளனர். இந்த ஓவியத் தொகுப்புக் கொற்றவை வழிபாட்டின் மூலமுதல் வடிவமாகக் கருதப்படுகின்றது.

கொங்குநாட்டில் வெள்ளியங்கிரிக்கு அருகிலுள்ள வேடர்பாத்தியில் இரண்டு பாறை ஓவியங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இவை இரண்டும் குகை ஓவியங்களாகும். வேட்டையாடுதலைச் சித்திரிக்கும் ஓவியங்களாக இவ்வோவியங்கள் அமைந்துள்ளன. கோவனூருக்கு மேற்கில் உள்ள பாலமலையில் உள்பக்கம் சாய்ந்து நிற்கும் பாறையில் வெள்ளை வண்ணத்தில் தீட்டப்பெற்ற தொல்பழங்கால ஓவியங்கள் உள்ளன. இந்த ஓவியத் தொகுப்பில் வேட்டையாடும் காட்சி, போரிடும் காட்சி, விலங்குகளின் உருவங்கள் ஆகியவை வரையப்பட்டுள்ளன. இப்படியாகத் தொன்மைக் காலத்திலிருந்து வழக்கிலிருந்த ஓவியக்கலை மரபு இன்றும் கோயில்களில் ஓவியம் தீட்டுதல் என்பதாகத் தொடர்ந்து வளர்ந்து வருகின்றன. கொங்கு நாட்டிலுள்ள கோயில்களில் காணப்படும் ஓவியங்கள் முழுமையும் கொங்கு மக்களின் ஓவியக்கலைத் திறனுக்குச் சான்று பகர்வனவாகும்.

**சிற்பக் கலை**

கொங்குநாடு பண்டைக்காலந் தொட்டே சிற்பக் கலையில் தனித்த இடம் பெற்றுத் திகழ்ந்துள்ளது. சிற்பக் கலையின் தொடக்கமாகக் கருதப்படும் நடுகல் சிற்பங்கள் முதல் சுடுமண் பொம்மைகள், செப்புத் திருமேனிகள் வரை பல கலைச்செல்வங்களைக் கொண்டு திகழ்கின்றது. சிற்பக்கலை ஆக்கமும் ஊக்கமும் பெற்றது பல்லவர் காலத்தில்தான். கொங்கு நாட்டில் பல்லவர் காலம் தொடங்கி நாயக்கர் காலம் வரை கொங்குநாட்டிற்கே உரிய தனித்த பாணியில் சிற்பக் கலை வளர்ச்சி பெற்றுள்ளது என்றால் மிகையன்று.

**நடுகல் சிற்பம்**

பண்டைத் தமிழர் போரில் இறந்துபட்ட வீரனுக்கு அவன் வீரத்தை நினைவுகூரும் வகையில் நடுகல் நட்டு வழிபட்டனர். தொடக்க காலத்தில் வெறும் கல்லை மட்டும் நட்டு வணங்கிய மக்கள் பின்னர் வீரனின் உருவத்தையும் அக்கல்லில் செதுக்கினர். இவையே நடுகல் சிற்பங்களாகும். இத்தகைய நடுகல் சிற்பங்கள் கொங்கு நாட்டில் பழமங்கலம், வெள்ளியங்கிரி, ஆலாந்துறை, பேரூர் ஆகிய இடங்களில் உள்ளன. சிற்பக் கலையின் தோற்றத்திற்கு அடிப்படை இந்நடுகல் சிற்பங்களாகும். ஈரோடுவட்டம் பழமங்கலம் என்ற இடத்தில் ஒரு கையில் கத்தியும், மற்றொரு கையில் வில்லும் ஏந்திய நிலையில் உள்ள நடுகல்லில் அவனது வீரத்தைப் புகழும் கல்வெட்டும் பொறிக்கப்பட்டுள்ளது. இதுபோன்ற செய்திகள் உரைநடையில்தான் பொதுவாக அமையும். பல்லாயிரக்கணக்கான தென்னிந்திய நடுகற்களில் பழமங்கலத்திலுள்ள நடுகல்லில் மட்டும் வீரனின் புகழ் பாடல் வடிவில் உள்ளது. அப்பாடல் வருமாறு;

> **"வாய்த்தபுகழ் மங்கலத்து வந்தெதிர்த்த மாற்றலரைச்**
> **சாய்த்தமகன் வென்ற சயம்பெருக - சீர்த்தபுகழ்**
> **நிக்குவனம் கற்பொறிக்கப் பட்டான் கரையகுலச்**
> **சொக்கனேந்த லேஉலகில் தான்."**

சேலத்தில் உள்ள தீப்பாஞ்ச அம்மன் கோயிலில் இரண்டு பெண்களின் உருவங்கள் ஒரே பலகைக் கல்லில் செதுக்கப்பட்டுள்ளன. இவர்களின் கணவன்மார்கள் போரில் கொல்லப்பட்ட செய்தி அறிந்தவுடன் தீயில் பாய்ந்து இறந்ததால் அவர்களின் புகழை நிலை நிறுத்தும் வண்ணம்

மக்கள் சிலை வைத்துக் கோயில் கட்டி வணங்கி வருகின்றனர். இவற்றால் வீரர்களுக்கேயன்றி வீர பத்தினிக்கும் நடுகல்லும் கோயிலும் அமைக்கப்பட்டதனை அறிய முடியும். இந் நடுகல் வழிபாடாகிய வீர வழிபாட்டில் இருந்தே கோயில்களும் சிற்பங்களும் தோன்றின. மக்கள் கூடும் இடமாகக் கோயில் விளங்குவதனால் அங்குப் புராணக் கதைகளைச் சிற்பங்களாக வடித்தனர். மேலும் கொங்கு நாட்டில் கோயில்களும் சிற்பங்களும் மிகுதியாக உள்ளன.

### சுடுமண் பொம்மைகள்

தமிழ்நாட்டில் பல இடங்களில் சுடுமண் பொம்மைகள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. அவற்றுள் கொங்கு நாட்டில் காணப்படும் சுடுமண் பொம்மைகள் மிக அழகான நேர்த்தியான உருவங்களுடன் வடிக்கப்பட்டவை. கொங்கு நாட்டில் குறிப்பாகக் கோவையிலிருந்து சுமார் 22 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள போளுவாம்பட்டி என்ற கிராமத்தில் பல அரிய சுடுமண் பொம்மைகள் தொல்லியல் துறையினரால் கண்டெடுக்கப்பட்டன. அவை பெரும்பாலும் சமண, பௌத்த சமயத்தைச் சார்ந்தவையாகும். இங்குப் புத்தர், மைத்ரேயர், இயக்கர் போன்ற உருவங்கள் காணப்படுகின்றன. மேலும் போளுவாம்பட்டியில் மரக்கல்லினாலான சிறிய பெண் தெய்வங்கள் அல்லது அரசிகளின் சிற்பங்கள் கிடைக்கின்றன. இதன் காலம் கி.பி. 10ஆம் நூற்றாண்டு என்று சொல்லப்படுகின்றது. இதன் தொடர்ச்சி கொங்கு நாட்டில் இன்றும் தொடர்ந்து கொங்கு நாட்டுப்புறத் தெய்வக் கோயில்களில் காணப்படுகின்றன. இதனை முனியப்பன் தெய்வச்சிலைகள், குதிரைச்சிலைகள், நேர்த்திக் கடனாகச் செய்யப்படும் சிறுவர், சிறுமியர், பெரியவர் உருவங்கள் கொண்ட சிலைகள் உறுதிப்படுத்தும்.

### கற் சிற்பங்கள்

தமிழ்நாட்டில் பல்லவ மன்னர்கள் ஆட்சியில் குடைவரைக் கோயில்களும் கட்டுமானக் கோயில்களாகிய கற்றளிகளும் தோன்றின. வழிபாட்டிற்குரிய கற்சிலைகளும் செப்புத் திருமேனிகளும் வடிக்கப்பட்டன. சிவனுக்கும் திருமாலுக்கும் சக்திக்கும் முருகனுக்கும் எனப் பல வடிவங்களில் சிற்பக் கலைப்படைப்புகள் உருவாயின. பல்லவர் காலத்தில் நாமக்கல்லில் இரண்டு குடைவரைக் கோயில்களை அதியமான் சோமன் என்பவன் தோற்றுவித்தான். இரண்டு கோயில்களில் ஒன்று நரசிம்மப் பெருமாளுக்கு உரியது. மற்றது பள்ளி கொண்ட பெருமாளுக்கு எடுக்கப்பட்டது. நரசிங்கப் பெருமான் கோயிலில் ஐந்து வரலாற்றுச் சிற்பங்கள் உள்ளன. ஒன்று கருவறையின் நடுவில் உள்ள நரசிங்கப்பெருமாள் உருவம். மேலும் சந்திரனும் சூரியனும் தோன்ற இருமருங்கும் நான்முகனும் சிவபெருமானும் தோன்றுகின்றனர். சீறிய சிங்கப் பெருமாளின் தோற்றம் இங்கு உண்டு. பக்கச் சுவரில் இரணியனை மடியில் கிடத்தி அவன் கால்களும் கரங்களும் தொய்ய மார்பில் நகத்தினால் பிளக்கின்ற காட்சி அழகுற வடிவமைக்கப்பட்டுள்ளது. நரசிங்கப் பெருமாள் தூணில் தோன்றலும் வைரவாள் பற்றிச் சிடுகும் ஏந்தி இரணியன் பாயும் காட்சி சித்திரிக்கப் பட்டுள்ளது. இது கி.பி. 8ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது. பேரூர், கொழுமம் கோயில்களிலுள்ள சிற்பங்கள் உலகப் புகழ்பெற்றவை.

கொங்கு நாட்டில் பாண்டியர் காலத்தைச் சேர்ந்த சிற்பங்கள் பல உள்ளன. பேரூர்க் குடலுருவி மாரியம்மன் கோயிலுக்கு அருகிலுள்ள புளிய மரத்தடியில் இலகுவீசர் சிற்பம் உள்ளது. இது அமர்ந்த நிலையில் உள்ளது. இடக்கையில் தண்டும் வலக்கையில் அக்கமாலையும் ஏந்தியுள்ளது. இது எட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த சிற்பம் ஆகும். இதே பேரூரில் இறவாப் பனைக்குக் கீழ் சப்த மாதர்களுள் ஒருவரான சாமுண்டாவின் சிற்பம் உள்ளது. இது கி.பி. 9 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது. இவ்வாறாகச் சோழர் காலம், நாயக்கர் காலம், அண்மைக்காலம் வரை கொங்குநாடு சிற்பக்கலையில் கைதேர்ந்து விளங்கி வருகிறது.

### மரச் சிற்பங்கள்

மண், கல், உலோகம் இவற்றில் உருவம் அமைப்பது போலவே மரத்திலும் சிற்பங்களைச் செதுக்கியுள்ளனர் சிற்பிகள். கொங்கு நாட்டில் திருக்கோயில்களின் கதவுகளிலும் தேர்களிலும் மரத்தாலான சிற்பங்களைச் செதுக்கி வைத்துள்ளனர். பேரூர், அவினாசி போன்ற ஊர்களில் உள்ள தேர்கள் இதற்குச் சான்றுகளாகும். பேரூரிலுள்ள சாந்தலிங்கர் திருமடத்தில் சிதைந்த நிலையில் பழைய தேர் ஒன்று நிறுத்தி வைக்கப்பட்டுள்ளது. இத்தேரில் நிறையச் சிற்பங்கள் உள்ளன. இவற்றில் இராமர் திருமுடி சூடும் காட்சி மிக அழகாகச் செதுக்கப்பட்டுள்ளது. அதில் இராமனும் சீதையும் அமர்ந்த நிலையில் உள்ளனர். மார்பில் பூணூல் காணப்படுகிறது. இடுப்பிற்குக் கீழ் உள்ள ஆடை சிறப்பாகச் செதுக்கப்பட்டுள்ளது. நெற்றியில் நாமம் அமைந்துள்ளது. சிம்மாசனத்தை அனுமன் தாங்குமாறும், அங்கதன் உடைவாளைக் கையிற் பிடித்த வண்ணமும், பரதன் வெண்கொற்றக் குடை பிடிக்கவும், இருபக்கமும் இருவர் கவரி வீசவும், பேழையிலிருந்து மௌலியை (மணிமுடி) எடுப்பது போலவும் சிற்பம் செதுக்கப்பட்டுள்ளது. இச் சிற்பத்தின் கீழ் ஒரு பெண் அஞ்சலி செலுத்துவதாக அமைந்துள்ளது. இதனைப் பார்க்கும்போது,

> **"அரியணை அனுமன் தாங்க**
> **அங்கதன் உடைவாள் பற்றப்**
> **பரதன்வெண் குடைக விக்க**
> **இருவரும் கவரி வீச**
> **விரைசெறி கமலத் தாள்சேர்**
> **வெண்ணெய்மன் சடையன் தங்கள்**
> **மரபுளோர் கொடுக்க வாங்கி**
> **வசிட்டனே புனைந்தான் மௌலி"**

என்ற கம்பராமாயணக் காட்சியை மனத்தினில் கொண்டே இச்சிற்பத்தைச் செதுக்கியிருக்கலாம். பேரூர்க் கனக சபையிலும் மரச் சிற்பங்கள் உள்ளன.

### நாட்டுப்புறக் கலைகள்

கொங்கு நாட்டுக் கோயில்கள் பலவற்றில் நடனச் சிற்பங்கள், கும்மி, கோலாட்டச் சிற்பங்கள் கலையம்சம் பொருந்திய ஷவையாகச் செதுக்கப்பட்டிருப்பதனைக் காணலாம். கொங்கு நாட்டில் வழங்கும் நாட்டுப்புறக் கலைகளில் கும்மி, கோலாட்டம், ஒயிலாட்டம், அண்ணன்மார் சாமி கதைப்பாடல் ஆகியவை புகழ் பெற்றவையாகும். ❖

# நாடக உத்திகள்



முனைவர் மு. தங்கராசு

நாடகம் ஒரு நிகழ்கலை. காண்போரின் கண்ணையும் கருத்தையும் கவருவது. தொன்மைச் சிறப்பு வாய்ந்த தமிழ் மேடை நாடகக் கலை பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் மறுமலர்ச்சி கண்டு இருபதாம் நூற்றாண்டில் மிளிரத் தொடங்கியது. பலர் நாடகம் படைத்தனர். பல குழுக்கள் நாடகத்தை நடத்தின. புதுமைகள் பல புகுத்தப் பெற்றன. மக்கள் கண்டு சுவைத்த மகிழ் கலையாக விளங்கியது. குறைவான பாத்திரங்களைக் கொண்டு நாடகங்களை உருவாக்குதல். சுருக்கமான உடையாடல்களை அமைத்தல், நடைப்பியல் சார்ந்த கதையமைப்பு களினாலும் நடிகரின் ஆற்றல் வாய்ந்த நடிப்பினாலும் நாடகங்களைச் சிறக்கச் செய்தல், கதைப்பொருளோடு ஒட்டியமைந்த தலைப்புகளை அமைத்தல் முதலிய நிலைகளால் தமிழ்மேடை நாடகம் சிறப்புற்று விளங்கியது. மேடை நாடகங்களில் பயன்படுத்தும் உத்திகளாலும் அவை உன்னத நிலையைப் பெற்றன. அவற்றுள் சில உத்திகளை மட்டும் இக்கட்டுரை காட்டுகிறது.

### அரங்க அமைப்பு முறையில் உத்திகள்

அரங்க அமைப்பில் பல்வகை உத்திகளைக் கொண்டு தமிழ் நாடகங்கள் நடத்தப் பெற்றன. அவற்றுள் ஒன்று அகன்ற மேடையமைப்பு முறையாகும். இதனை 'டிராமாஸ்கோப்' என்ற கலைச் சொல்லாலும் சுட்டுவர். நடிகர் மனோகர் இந்தப் புதுமையைப் பேராசிரியர் ஏ.எஸ். பிரகாசம் அவர்கள் எழுதிய 'விசுவாமித்திரர்' நாடகத்தின் மூலம் தமிழ் மேடைக்கு அறிமுகப் படுத்தினார். இந்த அகன்ற மேடைக் காட்சி அமைப்பினால் பல வியப்பூட்டும் நிகழ்ச்சிகளை யெல்லாம் உண்மையில் அரங்கில் நடப்பதுபோல் சித்திரித்துக் காட்ட முடியும். ஆறும், கடலும், காடும், குகையும், மாடமாளிகைகளும், கூடகோபுரங்களும், விண்ணின் காட்சியும், இன்னும் இதுபோன்ற எத்தனையோ புதுமைகளும் இந்த அகன்ற மேடை அமைப்பினால் அழகாக அமைக்கப்படுகின்றன. விசுவாமித்திரர் நாடகத்தில் திரிசங்கு சொர்க்கக் காட்சியும், துரியோதனன் நாடகத்தில் மயன் மாளிகைக் காட்சியும் காண்பவர் கண்கள் நம்ப மறுக்கும் மாபெரும் சாதனைக் காட்சிகளாக அமைந்து சிறந்திருக்கின்றன. மனோகரின் ஏனைய புராண நாடகங்களான சூரபத்மன், இலங்கேசுவரன் ஆகியனவும் இவ்வுத்தி முறையினாலாயே வெகுவாகப் பாராட்டப்பட்டன.

புராணத்தைப் படித்தவர்களும் கேட்டவர்களும் பல வியப்பூட்டும் நிகழ்ச்சிகளைப் படித்தும் கேட்டும் இருக்கிறார்கள். அந்த எண்ணத்தோடு நாடகத்தையும் பார்க்கிறார்கள். அப்போது இதுபோன்ற அரங்க அமைப்புகள் காட்டப் பெற்றால்தான் மனநிறைவு பெறுவார்கள். புராணத்தில் வரும் கதைமாந்தர்கள் தேவர்களும் அரக்கர்களும் மற்றவர்களும் ஆவர். அவர்கள் மந்திர தந்திர நிகழ்ச்சிகளைச் செய்பவர்களாகக் காட்டப்பட்டால்தான் பொருத்தமாக அமையும். எனவே, இத்தகைய மாபெரும் காட்சி அமைப்பு முறை தவிர்க்க முடியாத உத்தியாக அமைந்து சிறப்புப் பெறுகிறது.

ஒரு நாடகத்திற்குத் தேவையான அரங்க அமைப்புகள் எல்லாவற்றையும் அமைத்து அவற்றை ஓர் அச்சில் பொருத்திச் சுழல வைத்து ஒவ்வொரு காட்சியாக வருமாறு செய்வது 'சுழல்மேடை உத்தி முறை' எனப்படும். இந்தச் சுழல்மேடை உத்தி முறையில் அவ்வப்போது அரங்கத்தை மாற்றிக் கொண்டிருக்க வேண்டியதில்லை. ஒரு காட்சி முடிந்தவுடன் அந்த அச்சினைச் சுழற்றினால் அடுத்து, தேவையான காட்சி வந்து நிற்கும். இந்தப் புதிய முறையை முதன்முதலில் சேவா ஸ்டேஜ்குழுவினர் 'வானவில்' என்ற நாடகத்தில் பயன்படுத்தினர். இதனைப் பின்பற்றிச் சோ தமது 'சரஸ்வதியின் சபதம்' என்ற நாடகத்தை அமைத்தார். சுழல் மேடைக்கு அமைக்கப்படும் அச்சு, கொட்டகை மேடையில் குழி தோண்டிப் புதைக்கப்படுதல் வேண்டும். சில இடங்களில் மேடையைத் தோண்டுவதற்கு மறுப்புத் தெரிவிக்கப்படுவது உண்டு. எனவே, இந்த உத்தியைப் பல குழுவினர் கையாளுவதில்லை. முன்னர்ப் பயன்படுத்தியவர் களும் பின்னர்க் கைவிட்டுவிட்டனர்.

நாடகத்திற்கு வேண்டிய அரங்க அமைப்புகளை வரிசையாக அமைத்துக்கொண்டு ஒன்றன்பின் ஒன்றாகத் தள்ளுவது 'தொடர்வண்டி அமைப்பு முறை' (Truck Stage) எனப்படும். இந்தக் காட்சி அரங்கம் நகர்த்தப்படுவதற்கு வசதியாக மேடையில் தண்டவாளம் பொருத்தப்பட்டிருக்கும். புகைவண்டி போன்று தண்டவாளத்தின் மீதே காட்சி அரங்கம் இருக்கும். முன்பின் காட்சிகள் மீண்டும் மாறி வர வேண்டிய நேரத்தில் அதற்குத் தகுந்தாற் போல இந்த அமைப்புகளை மாற்றித் தள்ளும் வசதியும் உண்டு. இத்தகைய தொடர்வண்டி முறையில் அரங்கக் காட்சிகளை அமைத்துப் புதுமை படைத்தவர் கோமல் சுவாமிநாதன். இவர் எழுதிய 'யுத்த காண்டம்' என்ற நாடகத்தில் இம்முறையைப் பயன்படுத்தி வெற்றி கண்டார்.

காட்சி அமைப்புடைய அரங்கத்தைப் பக்கவாட்டில் நகர்த்தும் முறைதான் உண்டு. மீண்டும் அக்காட்சி வரும்போது சேர்த்து இணைத்து விடுவார்கள். ஆனால், ஆசிரியர் பத்து தம் 'இருள்' என்ற நாடகத்தில் ஒரு காட்சி நடந்து கொண்டிருக்கும்போதே பார்வையாளர்களை நோக்கி விரைந்து வருமாறு செய்துள்ளார். ஒரு குறிப்பிட்ட காட்சியில் கொலை ஒன்று நடக்கிறது. அந்தக் கொலை நடக்கும்போது, திரைப்படத்தில் அண்மைக் காட்சி (Close up) எடுப்பது போல அமைய வேண்டும் என்பதற்காகக் காட்சி அரங் கத்தையே வேகமாக உள்பகுதியிலிருந்து முன்னோக்கி வருமாறு உருவாக்கினர். அப்படிச் செய்வதனால் காண்பவர்கள் அந்தக் கொலையை மிக அருகில் இருந்து பார்ப்பது போன்ற உணர்வு ஏற்படும். அதே நேரத்தில் யாரும் எதிர்பார்க்காதபோது காட்சி தங்களை நோக்கி வருவதனால் காண்பாரும் வியப்படைவார்கள்.

மேடையிலேயே 'இயங்கேணி' (Lift) பயன்படுத்துதல் ஒரு புதிய உத்திமுறையாகும். கீழ்த் தளத்திலிருந்து மேல் மாடிக்குச் செல்ல இந்த இயங்கேணி பயன்படுத்தப்படுகிறது. இயங்கேணி பயன்படுத்தும் அளவுக்குக் காட்சியும், அரங்கத்தில் உள்ள கட்டமைப்பும், மாடியின் சிறப்பும் அமைதல் வேண்டும். பத்து தம் 'டிராப்' (Trap) என்ற நாடகத்தில் இந்த முறையைப் பயன்படுத்தினார். இந்த இயங்கேணிக் காட்சி முழுக்க ஒரு கட்டத்தில் இயங்குவது போலவே அமைந்து காண்போரை வியப்பில் ஆழ்த்தியது. வியப்பூட்டத்தக்க வகையில் அமைக்கப்பட்ட காட்சிகளில் இதுவும் ஒன்று.

ஒரு வீடு, ஏதாவது ஓர் அலுவலகம் அல்லது ஒரு சூழ்நிலை என மேடையில் ஓர் அரங்கம் அமைத்து, அந்த ஓர் அரங்கத்திலேயே முழு நாடகத்தையும் நடத்தி முடித்தல் சிலரால் மேற்கொள்ளப்பட்ட உத்தியாகும். இதனை 'ஒரே அரங்க அமைப்பு நாடகம்' (One Set Play) என்று கூறலாம். இத்தகைய உத்திமுறையினைக் கையாண்டு மிக நல்ல வெற்றியைக் கண்டவர் கே. பாலசந்தர். அவர் 'சதுரங்கம்', 'மேஜர் சந்திரகாந்த்' முதலான நாடகங்களை இந்த அமைப்பில் உருவாக்கி மேடை ஏற்றினார். அவருடைய 'நீர்க்குமிழி' மருத்துவமனையில் ஒரு குறிப்பிட்ட பகுதியில் நோயாளிகள் இருக்கும் இடத்தில் நடைபெறும் நாடகம்.

நாடக மேடையை இரு பகுதிகளாக்கி, இரண்டு தனித்தனி அரங்க அமைப்புகளை ஏற்படுத்தி நடத்தப் பெறும் நாடகங்கள் சில உண்டு. இவற்றை 'இரண்டு அரங்க அமைப்பு முறை' (Double set System) நாடகங்கள் எனலாம். இந்த இரண்டு அமைப்புகளையும் கதைச் சூழ்நிலைக்குத் தக்கவாறு பயன்படுத்துவர். விளக்கு ஒளியின் உதவியால் ஒரு பகுதியை இருட்டடித்து, மறு பகுதியை ஒளிபெறச் செய்து நாடகம் நடத்தப் பெறும். தனித்தனியான திரைச்சீலைகள் மூலம் காட்சிகளை மறைத்தல் மற்றொரு வகை. கே. பாலசந்தரின் 'நாணல்' என்ற நாடகத்தில் வீடும் காவல் நிலையமும் இந்த வகையில் காட்சிப்படுத்தப்பட்டன.

### காட்சி அமைப்பில் உத்திகள்

இடைவெளியில்லாத தொடர் காட்சியமைப்பு (Non Stop System). இருவேறு முழு நாடகங்கள் ஒரே நாடகமாக அமையுமாறு காட்சியமைப்புகளை உருவாக்குதல். வியப்பூட்டும் காட்சியமைப்புகளை உருவாக்குதல் முதலிய உத்திகளையும் பயன்படுத்தித் தமிழ் மேடை நாடகங்கள் சிறப்பு நிலையடைந்துள்ளன. ஒரு நாடகத்தின் முதல் காட்சி தொடங்கியது முதல் இடைவேளை வரை சிறிதும் இடைவெளியின்றித் தொடர்ந்து நடத்தி, மீண்டும் இடைவேளை தொடங்கி நாடகம் முடியும் வரையிலும் தொடர்ந்து நாடகம் நடப்பதற்கேற்ற வண்ணம் காட்சிகளை அமைப்பதை 'இடைவெளி இல்லாத் தொடர் காட்சி அமைப்பு' எனலாம். இக்காட்சியமைப்பிற்கு ஏற்ப கதை மாந்தரின் உரையாடல்கள் ஆங்காங்கே தனி மொழியாக அமையும். அவ்வாறு அந்த மாந்தர் பேசும்போது மேடையில் எல்லா விளக்குகளும் அணைக்கப்பட்டு உட்பகுதி இருட்டிக்கப்பட்டு முன்பகுதியில் தனிமொழி பேசும் ஒரு கதைமாந்தரின் மீது மட்டும் ஒளி குன்றிய நிலையில் விளக்கொளிபடும். இந்த இருள் சூழ்ந்த மயங்கிய ஒளியில் அடுத்த அரங்க அமைப்பு மாற்றப்பட்டுவிடும். இந்தத் தொடர் காட்சியமைப்பு பார்ப்பவர்களுக்குத் திரைப்படம் பார்ப்பது போன்ற உணர்வையும் விறுவிறுப்பையும் உண்டாக்கும்.

பல நாடகங்களில் வியப்பூட்டும் காட்சிகள் மேடையில் காட்டப்பட்டன. மனோகர் தம் அகன்ற மேடை அமைப்பு முறையில் செய்தது போன்ற சில காட்சிகளைச் சிலர் சாதாரண மேடைகளில் ஓரளவு செய்து காட்டினர். ஒரு விமானம் மேடையில் வந்து இறங்குவது போன்ற காட்சியை 'ரகசியம் பரம ரகசியம்' என்ற நாடகத்தில் அமைத்தனர்.

கலா நிலையம் குழுவினர் நடித்த சுஜாதாவின் 'கடவுள் வந்திருந்தார்' என்ற நாடகத்தில் எதிர்கால மனிதன் வரும் காட்சியும், அவன் பயன்படுத்தும் விமானமும் வியப்பூட்டும் வண்ணம் மேடையில் தோன்றின.

இடைவேளை வரை ஒரு நாடகமும் இடைவேளைக்கு பின் ஒரு நாடகமும் என இரண்டு முழுமையான குறு நாடகங்கள் நடத்தப் பெற்றுள்ளன. சுஜாதாவின் 'ஒரு கொலை ஒரு பிரயாணம்' என்ற இந்த 'இரு நாடகம்' பூர்ணம் விசுவநாதனின் கலாநிலையம் நடத்தி வந்ததாகும். முதல் பகுதி ஒரு வீட்டின் மாடியில் நடக்கும் நிகழ்ச்சியை வைத்துத் துப்பறியும் முறையில் விறுவிறுப்பாக அமைக்கப்பட்ட நாடகம். பிற்பகுதியாக அமைவது ஒரு பிரயாணம். சென்னையிலிருந்து புகைவண்டியில் புறப்பட்டுச் செல்லும் ஒரு குடும்பத்தினரின் பயண நிகழ்ச்சியே இந்த நாடகம். அந்தப் புகைவண்டி சேலம் வரை சென்றதும் காட்சி முடிகிறது. இந்நாடகத்தில் புதுமையான உத்தி என்னவென்றால், பயணம் செய்வதற்குப் புகைவண்டியில் ஒரு பெட்டி போன்ற அமைப்பே மேடையில் காட்டப்படுவது. அந்தப் பெட்டி அசைவதில்லை. ஒளிவீச்சுகளின் உதவியாலும், ஒளிஅமைப்பின் உதவியாலும் அது ஓடுவது போன்ற உணர்வை உண்டாக்கினார்கள். அதே நேரத்தில் உள்ளே அமர்ந்திருக்கும் அத்தனைப் பேரும் புகைவண்டியில் சென்றால் எப்படி அசைவுகளுக்கு ஆளாவார்களோ அதேபோன்ற உடலசைவுகளுடன் ஏறத்தாழ ஒரு மணி நேரமும் நடித்தனர். இந்த உத்திகளின் காரணமாக 'ஒரு கொலை ஒரு பிரயாணம்' மக்களிடையே நல்ல வரவேற்பைப் பெற்றது.

## ஒளியமைப்பு

மேடை நாடகம் ஒளியமைப்பினால் மிகவும் சிறக்கிறது. காட்சியின் தன்மைக்கேற்பவும் விளக்கு ஒளி அமைய வேண்டும். மகிழ்ச்சி நிறைந்த காட்சிக்கு முழு ஒளியையும் வருத்தமிக்க காட்சிக்குக் குறைந்த ஒளியையும் பயன்படுத்த வேண்டும். இறத்தல் காட்சி குறைந்த ஒளியில் நிகழின் சிறப்பாக அமையும். மேடைக்கு மேல் விளக்குகளோடு (Over Head Lights) அடிவிளக்குகளும் இன்றியமையாதவையாகும். மேல் விளக்குகள் மட்டும் இருப்பின் மேடையில் நடிக்கும் நடிகர் முகம் தெளிவாகத் தெரியாது. அவர்கள் முகம் தெளிவாகத் தெரிவதற்கு அடிவிளக்குகள் (Foot Lights) தேவை. சிலர் அடிவிளக்குகள் தேவையில்லை என்று கருதுகின்றனர். அவற்றிற்குப் பதிலாக ஒளிவீச்சு விளக்குகளை (Spot Lights) நடிகர் பக்கமாகத் திருப்பி ஒளி பெறச் செய்யலாம் என்கின்றனர். ஆனால் இதில் ஒரு குறைபாடு உண்டு. நடிகர் அவ்விளக்கொளியில் இருக்கும் வரை அவர் முகம் தெளிவாகத் தெரியும். அவர் அதனின்றும் நகர்ந்தால் அவர் முகம் இருளடையும்.

ஒளியின் உதவியினால் தான் ஒரு நாளின் பல்வேறு நிலைகளைக் காட்ட முடிகிறது. நிகழ்ச்சிகளுக்குத் தக்கவாறு ஒளிக்கதிர்களை நாடக மேடையின் பல பகுதிகளில் படுமாறு செய்து குறிப்பிட்ட சூழ்நிலையையும் உணர்ச்சியையும் வெளிப்படுத்த இயலும். இக்கால மேடை நாடகங்களுக்கு ஒளிஅமைப்பு மிகவும் இன்றியமை யாததாக விளங்குகிறது. இதன் உதவி பல புதுமைகளுக்கு அடிப்படையாக அமைகிறது. "இன்றைய நாடகங்களில் ஒளிஅமைப்பு இதற்குமேல் எதிர்பார்க்க இயலாத அளவுக்குக் காலை, மாலை, பகல், இரவு ஆகிய நேரங்களில் வித்தியாசத்தை வெளிப்படுத்துகிறது'' என்று ஒளியின் தேவையினையும் அதனால் உண்டாகும் நன்மையினையும் எடுத்துக் கூறுவார் டி.எஸ். சேஷாத்திரி.

இன்பக் காட்சிக்கும், துன்பக் காட்சிக்கும் ஏற்றவாறு ஒளியினை மாற்றி மாற்றி அமைத்து மேடையில் நடப்பது உண்மையே என்று கருதும் வகையில் காண்போர் மயங்குமாறு செய்வது உண்டு. ஒளி விளக்குகள் மேடையில் பல்வேறு நிலைகளில், பல்வேறு கோணங்களில் பொருத்தப்பட்டிருக்கும். தேவைப்படும் போது தேவையான விளக்கின் மூலம் ஒளியைப் பாய்ச்சி நாடகத்தின் தரத்தை உயர்த்த இந்த உத்தி முறை பயன்படுகிறது.

## ஒலியமைப்பு

ஒளியமைப்பினைப் போல ஒலியமைப்பு முறையும் பல்வேறு சூழ்நிலைகளில் பயன்படுத்தப்படும். ஒலியைப் பயன்படுத்தும் முறையை எடுத்துக்காட்டும் வகையில் அறிஞர் தா.ஏ. ஞானமூர்த்தி அவர்கள் "ஒரு வீடு எவ்வித ஒலியுமின்றி அமைதியாக இருக்கும் சூழ்நிலையில் அவ்வீட்டிலுள்ள கடிகாரத்தின் 'டிக் டிக்' ஒலி மட்டும் கேட்குமாறு செய்து கொண்டிருக்கலாம்'' என்று குறிப்பிடுகிறார். அமைதியான சூழலைப் புலப்படுத்த பயன்படுத்துவது போலவே, அவலம் முதலான வேறு சூழல்களைப் புலப்படுத்தவும் ஒலி மிகுதியும் பயன்படுகிறது. மனோகரின் எல்லா நாடகங்களிலும் ஒலியமைப்பு மிகுதியாகத் துணை செய்வதைக் காணமுடியும். வியப்பூட்டும் காட்சிகள் மேடையில் திடீரெனத் தோன்றும் போது வெடிச்சத்தம் கேட்கும். புராண வரலாற்று நாடகங்களில் போர்க் காட்சிகள் வரும்போதும் ஒலியமைப்பின் துணை பெரிதும் வேண்டப்படுகிறது. அச்சத்தைத் தரும் 'திகில்' நாடகங்கள், துப்பறியும் நாடகங்கள் முதலானவற்றிற்கு ஒலியின் மூலம் தனி வேகத்தையும் ஆர்வத்தையும் ஊட்ட முடியும்.

மனோகர் அகன்ற மேடை முறையை உண்டாக்கியது போலவே, இந்த ஒலியமைப்பிலும் ஒரு புதுமையான உத்தியைப் பயன்படுத்தினார். ஒலி பல திசைகளில் இருந்து வருவது போல் அமைந்த (Stereo phonic) ஒலி முறையைத் தம் நாடகங்களில் அவர் பயன்படுத்தி யுள்ளார். இரண்டு

முறைகளும் சேருகிறபோது நாடகம் வியக்கத்தக்க நிலையில் உருவாகிவிடுகிறது. ஒலியமைப்பின் துணைக் கொண்டே ஊர் மக்களுக்கிடையே வதந்தியைப் பரப்புவது போன்று 'பாரத மாதா கி ஜே' என்ற நாடகத்தில் காட்சி ஒன்றை அமைத்திருந்தார்.

### ஒப்பனையும் ஆடை அணிகலன்களும்

மேடை நாடகத்திற்கு மிகுதியும் பயன்படும் ஒரு கலை 'ஒப்பனைக் கலை'. ஏழு மணிக்கு நாடகம் என்றால் ஆறரை மணிக்கு ஒப்பனை அறை வந்து சேர்ந்தால் போதும். புனைய வேண்டிய வேடம் புனைந்து மேடைக்குக் குறிப்பிட்ட நேரத்தில் போய்விடலாம் என்கிற அளவுக்கு ஒப்பனைக் கலை வளர்ந்துள்ளது. நாடக ஆசிரியன் படைத்த பாத்திரங்களின் தன்மையும் பாங்கும் உணர்ந்து அவற்றிற்கேற்ப ஒரு நடிகனைப் பொருத்தமாக மாற்றி அமைக்கும் திறன் ஒப்பனைக் கலைஞனிடம் இருக்கிறது. இன்று பல நாடகங்களுக்கு என்று தனியாக உடையோ நகையோ தயார் செய்ய வேண்டிய நிலை இல்லை. வரலாற்று நாடகங்களையும், புராண நாடகங்களையும் நடத்துகிற வர்கள் மட்டும் அவற்றிற்குரிய ஆடை அணிகலன்களைத் தயார் செய்து கொள்ள வேண்டியிருக்கிறது. அணிகின்ற ஆடை அணிகலன்கள் புனைகின்ற வேடத்திற்குப் பொருத்தமாக இருந்தால்தான் நாடகத்தின் பாங்கு ஆற்றல் வாய்ந்ததாகவும் சுவையுடையதாகவும் அமையும்.

### ஆசிரியரும் கதைமாந்தரும் பேசுதல்

தான் படைத்த கதை மாந்தர்களிடம் தானே பேசுவது போன்று நாடகத்தில் புதுமை செய்வதுண்டு. சோ தாம் எழுதிய 'சரஸ்வதியின் சபதம்' என்ற நாடகத்தில் இந்த உத்தியைக் கையாண்டு ஒரு புதுமையைப் படைத்தார். தம்மை ஏன் இவ்வாறு படைக்க வேண்டும் என்றும், தமக்கு என்னதான் முடிவு என்றும் கதைமாந்தர்கள் ஒரு கட்டத்தில் நாடகாசிரியனிடம் கேட்கும் இந்த உத்தி அதிகமாக நாடகங்களில் கையாளப்படுவதில்லை. 'உறவுக்கு கை கொடுப்போம்' என்ற நாடகத்தில் விசு இதே உத்தியை ஓரளவு கையாண்டார். நாடகத்தின் இடைவேளையின் போது எல்லாக் கதைமாந்தர்களும் மீண்டும் ஒன்றுசேர முடியுமா என்கிற அளவுக்கு ஆளுக்கொரு சிக்கலில் சிக்கிக் கொண்டு தவிப்பார்கள், அப்போது ஆசிரியருக்கும் ஐயம் ஏற்படுகிறது, தான் படைத்த பாத்திரங்களிடம் தனித்தனியே பேசுகிறார். இந்த உத்தி சிறந்த முறையில் 'உறவுக்குக் கைகொடுப்போம்' நாடகத்தில் பயன்படுத்தப் பட்டுள்ளது.

### நாடகக் காட்சி நேரம்

தெருக்கூத்துப்போல இரவு தொடங்கி விடியும்வரை நாடகம் சுமார் ஐந்து அல்லது ஆறு மணி நேரம் நடைபெற்றதுண்டு. பின்னர், சி. கன்னையா, டி.எஸ். இராசமாணிக்கம், டி.கே.எஸ். சகோதரர்கள் முதலானோர் படிப்படியாக இந்தக் கால அளவை மாற்றி, மாலையில் நாடகம் தொடங்கப்பட்டு நடுஇரவுக்குள் முடிக்கும் நிலையை உருவாக்கினார்கள். இருந்தாலும் குறைந்தது மூன்று மணி நேரம் நாடகம் நடத்துவது என்ற நிலை அண்மைக்காலம் வரை இருந்து வந்திருக்கிறது. பின்னர் இரண்டரை மணி நேரம் மட்டுமே நாடகம் நடத்தப்பட்டு வந்தது. அது மேலும் குறையத் தொடங்கி இரண்டு மணி நேரமும், ஒரு மணியும் ஐம்பது நிமிடமுமாக நடத்தப்படுகின்றன. பெரும்பாலும் இரண்டு மணி முதல் இரண்டரை மணி என்ற அளவுக்கு மிகாமல் இருப்பது இன்றைய நாடகங்களின் கால அளவாக அமைந்துள்ளது.

கதை அமைப்பில், மாந்தர் படைப்புகளில், உரையாடலில், தலைப்பிடுவதில், நடிப்பில், மேடைக் காட்சி அமைக்கும் முறையில், ஒளியமைப்பில், ஒலியமைப்பில், ஒப்பனையில், பிற தொழில் நுணுக்கங்களில் என்று பல புதுமைகளைப் படைத்துக் கொண்டு புதிய உத்தி முறைகளைக் கையாண்டு தமிழ் மேடை நாடகம் வளர்ந்தது.

இருபதாம் நூற்றாண்டின் நிறைவுப் பகுதியில் தன் நிலையில் தளர்ச்சி கண்ட தமிழ்மேடை நாடகம் இன்று அடையாளம் தெரியாமல் போய்க் கொண்டிருக்கிறது. காக்க வேண்டியது நம் அனைவரின் கடமை.



# கொங்குநாட்டுச் செப்புத் திருமேனிகள்



முனைவர் இரா. நாகசாமி



ஈராயிரம் ஆண்டுகளான தங்க முத்திரை கம்பீரமான ஆண்மகனும் எழிலான நங்கையும் இணைந்து

உலகெலாம் போற்றும் கலைகள் பல உள. பண்டைய பண்புகளைப் பிரதிபலிக்கும் நாடுகளாம் எகிப்து, சுமேரியா, அஸ்ஸீரியா, இந்தியா, கிரேக்கம், இத்தாலி எனப் பற்பல நாடுகளும் உலகக் கலைகளுக்கு எடுத்துக்காட்டான பொருள்களைக் கொடுத்துள்ளன. அவ்வகையில் நம் பாரதத் திருநாடு சிந்துவெளிக் காலம் தொட்டு செப்புத் திருவுருவச் சிலைகளை உலகுக்களித்துள்ளது. அவற்றில் இடுப்பிலே கைவைத்துக் கரங்களை வளையல்கள் அலங்கரிக்க ஒய்யாரமாக நிற்கும் நாட்டியப் பெண் ஒருத்தியின் உருவமே உலகப் புகழ்வாய்ந்துள்ளதாம். இவ்வுரு இருவகையில் சிறப்புடையதாம். முதலாவதாக நாட்டியக் கலை இந்திய நாட்டில் நாலாயிரம் ஆண்டுகளுக்கும் மேலாகவே மிக உயர்ந்த நிலையில் இருந்தது என்பதற்கு எடுத்துக்காட்டு. இரண்டாவதாக, இவ்வுரு இரண்டங்குல உயரமே உள்ள சிறிய உரு ஆகிலும் செம்பினால் உருவமைக்கும் கலை நாலாயிரம் ஆண்டுகட்கும் முன்பே மிக உயர்ந்த நிலையில் இருந்தது என எடுத்துக்காட்டுகிறது. இதேபோல் மற்றும் ஒரு செப்பு உருவின் கால்பகுதி மட்டும் மொகஞ்சதாரோவில் கிடைத்துள்ளது. அது முற்றிலும் கிடைத்திருந்தால் உலகிலேயே ஈடு இணையற்ற கலைப்பொருளாக இருந்திருக்கும் என்பதில் ஐயமில்லை. ஆயினும் கிடைத்துள்ள பகுதியே அதன் கலை வண்ணத்தைக் காட்டப்போதுமானது. ஆதலின் செப்பால் வடித்தெடுத்த சிலையின் கலை இந்தியாவின் மிகப் பண்டையக் கலை என்பதில் ஐயமில்லை.

தமிழ்நாட்டைப் பொறுத்தவரை இதுகாறும் கிடைத்துள்ள செப்பு–உருவங்களில் மிகத் தொன்மை யானது நெல்லை மாவட்டம் ஆதிச்சநல்லூரில் 150 ஆண்டுகளுக்கு முன்னர் நடந்த அகழ்வாய்வில் வெளிப்பட்டதே ஆகும். அவற்றில் பல உருவங்கள் கிடைத்தன. ஒன்று ஒரு பெண் உருவமாகும். அதைத் 'தாய்த் தெய்வம்' என்றழைத்தனர். மனிதனைத் தோற்றுவித்து, வளர்த்து, காத்து, இறந்ததும் தன்னகத்துள்ளே அடக்கிக் கொள்ளும் நிலத்தை வேண்டி "நிலமாகிய அன்னையே இதோ இறந்துபட்ட இம் மனிதனின் உடலை உன்னிடத்தில் புதைக்கின்றேன். மண்ணால் மூடுகின்றேன். இவன் உடலை மிகவும் அழுத்தாதே. தாயின் மடியில் கிடக்கும் குழவிபோல் இவனை ஏற்றுக்கொள்'' என வேண்டிப் புதைக்கும் மரபு முற்காலத்தில் உண்டு. அவ்வாறு வணங்கப்பட்ட நிலமென்னும் தாய்த் தெய்வ உரு அது. சென்னை அருங்காட்சியகத்தில் இன்றும் பாதுகாக்கப்பட்டு உள்ளது. நாய், கோழி, எருமை, போன்ற சில உருவங்களும் இவற்றோடு உள்ளன. இவை இறந்தோரைப் புதைத்த ஈமத் தாழிகளில் கிடைத்தன. இதை அடுத்து ஏறக்குறைய அதே காலத்தைச் சேர்ந்த ஒரு புலியின் உருவம் கொடுமணல் என்னும் கொங்கு நாட்டுப் பண்டைய ஊரில்

கிடைத்துள்ளது. இவ்வுருவம் உயிர்த் துடிப்புள்ள உருவமாக உள்ளது. வாலை வளைத்து நிமிர்ந்து புல்லரித்து நிற்கும் புலி அது. மிகச் சிறந்த கலை நுணுக்கம் வாய்ந்த கொங்கு நாட்டுக் கலைகளிலேயே மிகச் சிறந்த தொன்மை வாய்ந்ததாகும்.

மூன்றாவதாகக் கோவை மாநகருக்கு அருகில் போளுவாம்பட்டி என்ற இடத்தில் அகழ்வாய்வில் கிடைத்த செம்பினாலான ஒரு சிறிய எருது வரலாற்றுச் சிறப்புடையதாகும். ஓர் உள்ளங்கையிலே வைத்து அதன் அழகை ரசிக்கலாம் என்கிற அளவுக்குச் சிறிய உருவமே ஆயினும் அது அளிக்கும் உண்மை உலகளாவியதாகும். கொங்கு நாடு உழுகுடிப் பெருமக்களின் நாடு ஆதலின் இவ்வுருவமும் உழவின் பெருமையைப் பறைசாற்றும் சின்னமாகும். அக்காலம் தொட்டு இன்றுவரை நம்மிடை ஒரு பண்பு உண்டு. ஊர்களில் உழுதலை ஆண்டுதொறும் தொடங்கும்போது மக்கள் எல்லாம் ஒன்று திரண்டு "பொன் ஏர் உழுதல்" என்னும் விழா எடுப்பர். அப்பொழுது தேர்ந்தெடுத்த நிலத்தில் ஒரு குழி தோண்டி ஏர் போன்ற செம்பினால் ஆன சிறு கலப்பையில் இரு எருதுகளின் உருவங்களைப் பூட்டி நிலத்தில் புதைத்துவிட்டு அங்கு வழிபாடு செய்து முதன் முதல் ஏர் கொண்டு உழுவர். இதன் பின்னர் மற்றைய நிலங்களில் ஏர்கொண்டு உழுவர். இது வேளாண்மையின் சிறப்பையும், ஊர் மக்களனைவரும் ஒரு சமுதாயக் குடிகள் என்பதனையும் குறிக்கும் மகத்தான சின்னமாகும். அதுதான் போளுவாம்பட்டியில் கிடைத்த எருதளிக்கும் செய்தியாகும். அது மாநிலத் தொல்லியல் துறையில் உள்ளது.

இதற்கடுத்துக் கூறக்கூடிய உன்னதக் கலையின் எடுத்துக்காட்டு கோவையில் உள்ளது. அது ஓங்கி உலகளந்த உத்தமனாம் திரிவிக்கிரமப் பெருமாளின் செப்புத் திருமேனியாகும். கோவை மாநகரின் ஒரு பகுதியான சிங்கநல்லூர் என்ற பகுதியில் உள்ள பெருமாள் கோயிலில் வழிபாட்டில் இருக்கிறது. சுமார் 2½ அடி உயரம் உள்ள இச் செப்புத் திருமேனி 8ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. பல்லவர் கலையை ஒத்துள்ளது. முதலில் இவ்வுலகளந்தார் இங்கு ஓடும் ஆற்றின் மறுபுறம் உள்ள வெள்ளலூர் என்ற இடத்தில் இருந்ததாகவும் ஒரு பெரு வெள்ளத்தின் போது அடித்து வரப்பட்டு இக்கரையில் தட்டியதாகவும் அதனை எடுத்துச் சிங்கநல்லூரார் கோயில் கட்டிப் பிரதிட்டித்து வழிபட்டு வருவதாகவும் இங்குள்ள செவிவழிச் செய்தியாகும்.

வெள்ளலூர் என்னும் ஊர், ஏராளமான ரோமானிய தங்கக் காசுகளையும், அணிகலன்களையும் அளித்துள்ளது. இவ்வணிகலன்கள் இந்தியாவில் மிகப் புகழ்வாய்ந்தவை. ரோமானிய அணிகலன்கள் தவிர நம் நாட்டுப் பொன்னாலான அணிகலன்களும் அதில் கிடைத்துள்ளன. "யவனத் தச்சரும், மகதக் கொல்லரும்,



சிவபெருமானும் உமையன்னையும்.
உலா வரும் செப்புத் திருமேனி – அவிநாசியப்பர் திருக்கோயில்
கொங்குநாட்டுக் கலை

மராட்டக் கம்மரும், தண் தமிழ் வினைஞரும் கூடி"த் தமிழகத்தில் கலைப் பணிபுரிந்துள்ளனர். அப்பணி இவ்வூரிலும் நடந்ததா அல்லது வெளியிலிருந்து இங்குக் கொண்டு வரப்பட்டதா எனத் தெரியவில்லை. எப்படி இருப்பினும் தொடர்பு கொண்டவை என்பதில் ஐயமில்லை. ஆதலின் கைவினை முற்றிய வினைஞர்கள் இவ்வூரில் எழிலே உருவான உலகளந்த பெருமாளைத் தோற்றுவித்திருக்கிறார்கள் எனலாம். இவ்வூரில் மிகவும் தொன்மை வாய்ந்த சிவாலயம் ஒன்று உள்ளது. போர்க் காலங்களில் செப்புத் திருமேனிகளைப் பாதுகாப்பாகப் பூமிக்கடியில் புதைப்பது மரபு. அவ்வாறு புதையுண்ட பெருமாள் சிலை வெள்ளத்தால் அடிக்கப்பட்டு வந்திருக்கலாம். தமிழ்நாட்டில் உள்ள தெய்வீக செப்புத் திருமேனிகளுள் மிகவும் தொன்மையானவற்றில் இதுவும் ஒன்று. பல்லவர் காலத்தது என முன்னரே கூறியுள்ளேன். பல்லவர்கள் கொங்கு நாட்டைக் கைப்பற்றிக் கருவூலத்தைத் தங்கள் கீழ்க் கொண்டு வந்தனர். அவ்வமயம் காவிரியின் அக்கரையில் இருந்த நாமக்கல்லில் அதியமான் ஆண்டிருக்கிறான். அவனுக்கு அதியேந்திரன் என்ற பெயரும் இருந்தது. அவன் நாமக்கல்லில் இரண்டு குடைவரைக் கோயிலை எடுத்திருக்கிறான். இரண்டும் பெருமாளுக்கு எடுக்கப்பட்டவை. அதில் நரசிம்மர் கோயிலில் உள்ள சிற்பங்கள் வடிவாலும், அங்க வளைவுகளாலும், எழிலாலும் உலகப் புகழ் பெற்றவை. அங்கு உலகளந்த பெருமாளின் பாறைச் சிற்பம் ஒன்று உள்ளது. அந்தச் சிற்பத்தைப் போலவே சிங்கநல்லூர் செப்புத் திருமேனி இருக்கிறது.



மாணிக்க வாசகர் செப்புத் திருமேனி –
அவிநாசியப்பர் திருமேனி
கொங்குநாட்டுக் கலை

ஆதலின் ஏறக்குறைய 700இல் தோற்றுவிக்கப் பட்டதாகக் கொள்ளலாம். அப்பொழுது காஞ்சியை ஆண்ட பல்லவ மன்னன்தான் மாமல்ல புரத்திலும் காஞ்சியிலும் மாபெரும் கோயில்களைத் தோற்றுவித்தான். அவனது பட்டப் பெயர்களைப் போலவே நாமக்கல் அதியேந்திரனின் பட்டங்களும் உள்ளன. ஆதலின் அங்கு நிலவியது பல்லவர் மரபே. ஆதலின் சிங்கப்பெருமாள் செப்புத் திருமேனி பல்லவர் சிற்பக்கலைபோல் உள்ளது சிறப்பே.

கொங்கு நாட்டில் புகழ்பெற்ற சிவத்தலங்களுள் 'பாண்டிக் கொடுமுடி'யும் ஒன்று. இக்கோயிலைச் சிறப்பாக நான்முகன், நக்கபிரானான சிவபெருமான், நாராயணன் மும்மூர்த்திகளும் ஒரே கோயிலில் விளங்கும் சிவத்தலமாகும். சைவ நாயன்மார்கள் நால்வரும் பாடியுள்ள சிறப்புப் பெற்றது. "நற்றவா உன்னை நான் மறக்கினும் சொல்லும் நா நமச்சிவாயவே" என்னும் உள்ளம் உருக்கும் தேவாரப் பாடல் பெற்ற தலம் இதுதான்.

7ஆம் நூற்றாண்டிற்கு முன்பிருந்தே திகழும் இக்கோயிலில் அழகிய செப்புத் திருமேனிகள் வழிபாட்டில் உள்ளன. இக் கோயிலில் உள்ள பெருமாள் வீரநாராயணர் எனப் பெயர். அவ் வீரநாராயணப் பெருமாள் கோயிலில் உள்ள திருமாலின் செப்புத் திருமேனி நின்ற நிலையில் நான்கு கரத்துடனும் உள்ளதும் சிங்கநல்லூர் திரிவிக்கிரமர் போலவே வனப்பும் அங்க வளைவுகளும் உள்ளதாகையில் அதுவும் 7ஆம் நூற்றாண்டின் இறுதியில் தோற்றுவிக்கப்பட்டுள்ளது எனலாம். இந்திய நாட்டில் உள்ள திருமால் செப்புத் திருமேனிகள் அனைத்திலும் இதுவே எழிலார்ந்தது எனப் புகழ் பெற்றுள்ளது. இங்குள்ள சிவபெருமானின் பெயர் கொடுமுடி நாதர் மகுடேச்சுரர் என்றும் அழைப்பர். அங்குள்ள இரு செப்புத் திருமேனிகளைக் குறித்தல் வேண்டும். சதுர நடம் ஆடும் சிவபெருமானின் உருவம் இங்கு உள்ளது. பெரும்பாலும் தமிழகத்தில் எல்லாக் கோயில்களிலும் ஆனந்தத் தாண்டவம் ஆடும் திருமேனிதான் காணப்படும் சதுரநடம் ஆடும் பெருமானின் உருவம் காணப்படுவது அரிதே. அந்தியில் ஆடிய நடம் ஆதலின் அதை அந்தி நடம் என்றும் அழைப்பது மரபு. 10ஆம் நூற்றாண்டுச் செப்புத் திருமேனி அது.

இது தவிர மிகவும் சிறந்த உயர்ந்த முப்புரம் எரித்த முதல்வராம் திரிபுர சம்ஹார மூர்த்தியும் உடன் உறையும் திரிபுர சுந்தரியின் உருவும் கொங்கு நாட்டுக்கெனத் தனி ஒரு கலை மரபு உண்டென எடுத்துக் காட்டுவதாக உள்ளன. கம்பீரமாகவும் பெருமிதமாகவும் தோற்றம் அளிக்கும். இவ்விரு உருவும் தமிழக செப்புத் திருமேனிகளில் தனியிடம் வகுப்பவையாம்.

சற்றொப்ப 35 ஆண்டுகளுக்கு முன்னர்க் காவிரியின் வடகரையில் நாமக்கல்லுக்கு அருகில் மணற்பள்ளி என்ற இடத்தில் பூமிக்கடியிலிருந்து சில செப்புத் திருமேனிகள் வெளிப்போந்தன. அவற்றிலும் சதுரத் தாண்டவம் ஆடும் சிவபிரானின் தோற்றமும் திரிபுரம் எரித்த சிவனின் தோற்றமும் எழிலார்ந்தவை. அவையிரண்டும் கொடுமுடி திருமேனிகளின் பாங்கை ஒத்திருப்பதால் அவையும் கொங்கு நாட்டுக் கலையின் மாண்பை எடுத்துரைக்கின்றன.

இறுதியாகக் கொங்கேழு தலங்களில் புகழ் வாய்ந்த மற்றொரு சிவத்தலம் அவினாசியாகும். அவினாசிக் கோயிலில் மாணிக்கவாசகப் பெருந்தகையின் செப்புத் திருமேனி ஒன்று உள்ளது. இதைக் கன்னட தேசத்துப் பெண்மணி கொடுத்ததாகக் கூறுவர். இதைக் கூறும் எழுத்துகள் நாகரி எழுத்துகளில் அத்திருமேனியின் பீடத்தில் பொறிக்கப்பட்டுள்ளன. எழில்வாய்ந்த உருவம் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்தது எனலாம். தென்பாண்டி நாட்டுத் திருச்செல்வர் மணிவாசகர். அவர் உருவம் உள்ளது கொங்குநாடு. கொடுத்தவரோ கன்னட தேயத்தவர். நம் பண்பும் கலையும் மொழி கடந்தும் மொழிபெயர் தேயத்தோர் இங்குற்றுத் திருமேனி படைத்ததும் தமிழ் கூறும் "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்னும் மகத்தான கருத்தைத் தொனிப்பது போல் தோன்றுகின்றன.

# சங்க இலக்கியங்களில் விளையாட்டுக் கலை



முனைவர் செங்கைப் பொதுவன்

உழைப்பும் உறக்கமும் வாழ்வு. இடையே விளையாட்டு. திளைப்பும் மகிழ்வும் விளையாட்டின் பயன். ஆடிப் பாடி இன்புறுவது திளைப்பு. சூழலை, சூழல் நிகழ்வுகளை ஐம்புலன்களால் துய்த்து இன்புறுவது மகிழ்வு.

உயிரினங்கள் தம் அறிவுக்குத் தக்கவாறு விளையாடித் திளைக்கின்றன. மனிதன் தன் மன அறிவால் மற்றவற்றையும் கண்டு மகிழ்கிறான். மரம் உடலை ஆட்டித் திளைக்கும். மானும் மயிலும் துள்ளி விளையாடித் திளைக்கும்.

கிரேக்க நாட்டு ஒலிம்பிக் விளையாட்டு மிகப் பழைமையானதாக வரலாறு கூறுகிறது. அது கி.மு. 776இல் தொடங்கி 4 ஆண்டுகளுக்கு ஒருமுறை நடைபெற்று வந்தது. கி.மு. 393இல் நிலநடுக்கம் ஒன்று நிகழ்ந்தபோது ஒலிம்பிக் விளையாட்டு அரங்கம் அழிந்தொழிந்தது. அதன்பிறகு ஒலிம்பிக் விளையாட்டுத் தொடர் விட்டுப் போயிற்று. தற்கால ஒலிம்பிக் போட்டி 1896இல் தொடங்கி 4 ஆண்டுகளுக்கு ஒருமுறை நடைபெற்று வருகிறது.

தொல்காப்பியர் காலம் கி.மு. 711 என்று அறிஞர் குழு ஒன்று அறுதியிட்டிருந்தாலும் கி.மு. 5ஆம் நூற்றாண்டுக்கு முந்தியது என்பதைப் பெரும்பாலோர் ஒப்புக்கொண்டுள்ளனர்.

'கெடவரல்', 'பண்ணை' என்னும் உரிச்சொற்கள் விளையாட்டைக் குறிப்பவை என்று தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். உரிச்சொல் செய்யுளுக்கு உரிய சொல் என்பதனை நாம் அறிவோம். எனவே தொல்காப்பியர் காலத்துக்கு முன்பே விளையாட்டுகளைப் பற்றிச் சொன்ன பாடல்கள் இருந்தன என்பது தெளிவாகிறது. நெடியோன் என்னும் பாண்டியன் நடத்திய முந்நீர் விழாவில் வளிதொழில் – நாவாய்ப் போட்டி நடைபெற்றது என்று காண உள்ளோம். இவற்றால் தமிழக விளையாட்டுகளும் ஒலிம்பிக் போட்டிகளுக்கு இணையான அல்லது முந்தைய தொன்மை உள்ளவை என உணர்ந்து கொள்ளுதல் வேண்டும்.

சங்க நூல்களில் 50 இடங்களில் விளையாட்டு என்னும் சொல் பயின்று வந்துள்ளது. 'மழை விளையாடும் மலை' 'புலி விளையாடிய புலவுநாறு வேழம்' 'வரிபுனைச் சிற்றில்... சிறுவிளையாட்டு' 'செம்மூதாய் கண்டும் கொண்டும் விளையாடி' 'கடலாடி, புனல் படிந்து, அலவன் திரை உழக்கி, பாவை சூழ்ந்து, பல்பொறி மருண்டு பகல் விளையாடல்' 'துறைவனொடு நக்கு விளையாடல்' 'விளையாடு ஆயமோடு ஒரை ஆடல் அறம்' வட்டுநா அடிக்கும் விளையாட்டு இன்னகை முதலான சங்க நூல் செய்திகளால் விளையாட்டு என்றால் என்ன என்பதனை ஓரளவு புரிந்துகொள்ள முடிகிறது.

இப்படிப்பட்ட விளையாட்டுகளையும், தற்கால விளையாட்டுகளோடு ஒப்புமையுடைய விளையாட்டு களையும் கருத்தில் கொண்டு சங்கப் பாடல்களை முழுமையாக அணுகித் தொகுத்ததில் கண்டறியப்பட்ட விளையாட்டுகள் 96. அந்த விளையாட்டுகளின் பெயர்களை ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்து அகர வரிசைப்படுத்தி மேற்கோளுடன் கூடிய செய்தித் தொகுப்பு நூலாகத் தமிழில் முன்பே வெளியிடப்பட்டுள்ளது. அவற்றுள் 7 விளையாட்டுகள் மட்டும் இங்குப் பார்வைக்கு வைக்கப்படுகின்றன.

அவை வெறும் வரலாற்றுச் செய்திகள் அல்ல. சங்க காலத் தமிழரின் உடல் திற வெளிப்பாடுகள். வெறும் உல்லாசப் பொழுதுபோக்குகள் மட்டுமல்ல, உள்ளப் பண்பாட்டின் ஊற்றுகள். கவலையை மறக்கும் களியாட்டங்கள் மட்டுமல்ல, கலைத் திறமையின் கண்ணாடிகள்.

**மணிவட்டு** hockey game

'உருள்கின்ற மணிவட்டைக் குணில் கொண்டு துரந்தாற்போல்' சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்குச் சிலை செய்யக் கல் கொண்டு வருவதற்காக இமயமலைக்குச் சென்றான் என்று சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது. மணிவட்டு என்பது சிறிய பந்து. குணில் என்பது வளைதடி. குணிலால் மணிவட்டை அடிக்கும் செய்தி இதில் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. இது இக்கால ஹாக்கி விளையாட்டின் முன்னோடி.



ஹாக்கி விளையாட்டு தோன்றிய இடம் இந்தியா என்று அதன் வரலாறு ஒப்புக்கொள்கிறது. இந்த உண்மையை உறுதிப்படுத்தும் மிகப் பழைமையான அடிப்படைச் சான்றாக இந்தச் சிலப்பதிகார அடியைக் கொள்ளலாம்.

**நீச்சல் நடனம்** synchronized swimming

கரிகாற் சோழனின் மகள் ஆதிமந்தியின் காதலன் ஆட்டனத்தி. இந்த ஆட்டனத்தியும், காவிரி என்பவளும் இணைந்து நீச்சல் நடனம் ஆடினர். கழார் என்னும் ஊரின் காவிரியாற்று மடுவில் ஆடினர். கரிகாலனின் தலைமையில் இந்த விளையாட்டு நடைபெற்றது. அரசச் சுற்றமும் அதனைக் கண்டு களித்தது. (அகம் 222, 236, 376)



ஆட்டனத்தியின் உடல் கட்டழகும் வலிமைத் திறமும் ('மொய்ம்பு') கொண்டது. காவிரிக்குத் 'தாழிருங் கதுப்பு' (=கூந்தல்). ஆட்டனத்தி ஆடுவது போலவே காவிரியும் ஆடினாள். ('உரைஇ'). இன்னிசை முழக்கத்திற்கேற்ப அவர்கள் இருவரும் ஆடினர். இக்காலத்திலும் இன்னிசைத் தாளத்தோடுதான் இந்த விளையாட்டு நிகழ்கிறது.

விளையாடும்போது ஆட்டனத்தி பச்சை குத்தி ஒப்பனை செய்யப்பட்டிருந்த தனது கால்களையும், சிவந்த காலடிகளையும் புரட்டிக் காட்டினான். வயிற்றில் கட்டியிருந்த கச்சு தெரியும்படி புரண்டான். வயிற்றுக்குக் கீழே 'பாண்டில்' கட்டியிருந்த பாண்டிலின் மணி ஒலிக்கும்படி உருண்டான். இவை அவன் விளையாடிக் காட்டிய நீச்சல் – நடனக் கூறுகள்.

அவனொடு சேர்ந்து நீச்சல் – நடனம் ஆடிய காவிரி அவன் உடலை உரச நேர்ந்தது. அதனால் உணர்வுப் பெருக்கமுற்ற காவிரி அவனை அடையும் நோக்கத்தோடு அவனை ஆற்றுவெள்ளம் இழுத்துச் செல்வது போலப் பாவனை காட்டி இழுத்துச் சென்று விட்டாள். விளைவு வேறாக முடிந்தது. உண்மையாகவே ஆற்றுவெள்ளம் காவிரியை அடித்துச் சென்று விட்டது. ஆட்டனத்தி மயங்கிய நிலையில் காவிரிக் கரையில் ஒதுக்கப்பட்டுக் கிடந்தான்.

மருதி என்பவள் ஆட்டனத்தியைக் காப்பாற்றினாள். அவன் யார் என்று தெரியாமல் தான் காப்பாற்றிய கட்டழகனொடு வாழ்ந்து வந்தாள். அவனும் காப்பாற்றியவளுக்குக் கடமைப்பட்டிருந்தான்.

காதலனைத் தேடிக் கொண்டு ஆதிமந்தி ஆற்றோரமாகவே சென்றாள். 'ஆட்டனத்தியைக் காணீரோ', 'கடல் கொண்டன்று. புனல் ஒளித்தன்று' என்று சொல்லிக் கதறிக்கொண்டே சென்றாள். மருதிக்கு உண்மை தெரிய வந்தது. ஆட்டனத்தியை ஆதிமந்தியிடம் ஒப்படைத்தாள். இனித் தனக்கு வாழ்க்கை இல்லை என்று எண்ணிக் கடலுக்குள் பாய்ந்து உயிர் துறந்தாள்.

இந்த வரலாறு ஒருபுறம் இருக்க நாம் எடுத்துக் கொண்ட விளையாட்டை எண்ணுவோம். ஒலிம்பிக், பன்னாட்டுப் போட்டிகளில் அணிநீர் நடன விளையாட்டு (நீச்சல் நடனம்) மகளிர்க்கு மட்டுமே நடத்தப்படுகிறது. அதில் ஒற்றையர், இரட்டையர், ஆயம் என்று 3 பிரிவுகளில் போட்டிகள் நடைபெறுகின்றன (solo, duets, team). சில நாடுகளில் ஆடவருக்கும் தேசியப் போட்டிகள் நடத்தப்படுகின்றன.

உடலை நீருக்குள் வைத்துக்கொண்டு இடுப்பையும் கால்களையும் நீருக்குமேல் உயர்த்திக் கால்களால் நடனமாடிக் காட்டுவது இதன் கலைத் திறங்களுள் ஒன்று. மல்லாந்த நிலையில் எம்பி நீருக்குமேல் கரணம் போட்டுக் காட்டுவது மற்றொரு வகை. இந்த இரண்டு கலைத்திறங்களோடு ஆட்டனத்தி சங்க காலத்திலேயே நீச்சல் நடன விளையாட்டை அரங்கேற்றியுள்ளான்.

எனவே இந்த விளையாட்டின் மிகப் பழைமையான சான்று சங்கப் பாடல்களே. மேலை நாடுகளில் அண்மைக் காலத்தில்தான் அரங்கேறியுள்ளன. (In 1933-1934 Katherine Curtis organized a show. "The Modern Mermaids" for the World Exhibition in Chicago, which the announcer introduced as "Synchronized Swimming.")

**வட்டுநா** golf play

சங்க காலத் தமிழகம் விளையாட்டைப் பொது நோக்கில் 2 வகையாகப் பகுத்துப் பார்த்திருக்கிறது. 1. சிறுபாடு. 2. பெரும்பாடு. பாடு என்னும் சொல் உழைப்பு, முயற்சி என்னும் பொருள்களைத் தரும். சிறிய அளவில் முயன்று விளையாடுவது சிறுபாடு. வங்கா என்றால் அணில். அணிலின் முதுகுக் கோடுபோலப் பாறையில் வரைந்து அதில் இக்கால ஆடுபுலி விளையாட்டைப் போல விளையாடிய விளையாட்டு சிறுபாடு. இந்த விளையாட்டில் சலிப்பு ஏற்பட்டபோது அவர்கள் வட்டுநா அடிக்கும் விளையாட்டில் ஈடுபட்டனர். வட்டு எனப்பட்ட அந்தப் பந்திலும், வட்டுநா எனப்பட்ட பந்து மட்டையிலும் அரக்காலான செம்புள்ளிகள் இருந்தன.

'நெல்லிவட்டு' 'உருள்கின்ற மணிவட்டு' என்னும் தொடர்களில் 'வட்டு' என்பது குண்டையும், குண்டான பந்தையும் உணர்த்துவதனைக் காணலாம்.

'கால்ஃப்' விளையாட்டில் புல்வெளி மேட்டின் மீதிருந்து இக்காலத்தில் பந்து அடிக்கப்படுகிறது. சங்க கால வட்டுநா விளையாட்டில் பந்து பாறையின் மீதிருந்து அடிக்கப்பட்டது. வட்டுநா என்பது பந்தை அடிக்கும் கோல். மணிவட்டை அடிக்கும் கோல் நுனி வளைந்திருந்தது. வட்டுநா விளையாடிய மட்டையின் நுனி நாக்கைப்போல் விரிந்திருந்தது.

**நாவாய் வளிதொழில்** yachting, wind surfing

காற்று எந்தத் திசையில் வீசினாலும் அதன் உள்ளுவிசையைப் பயன்படுத்தித் தான் விரும்பும் திசையில் நாவாயைச் செலுத்தச் சங்க காலக் கரிகாலனின் முன்னோரும் அறிந்திருந்தனர். இந்தக் கைத்திற உத்திதான் இக்கால ஒலிம்பிக் விளையாட்டுகளில் ஒன்றாக இடம்பெற்றுள்ள பாய்மரப் படகுப் போட்டியிலும் கையாளப்படுகிறது.



முந்நீர் விழாவின் நெடியோன் நடத்திய கடல் விழாவில் காற்றை ஆளும் இந்தக் கலைப் போட்டியைத் தவிர வேறு என்ன நடந்திருக்க இயலும் ?

**பண்ணை பாய்தல்** swimming, diving side roll



ஆற்றங்கரையில் இருந்த மருத மரத்தில் அவள் ஏறினாள். தண்ணீரில் பாய்ந்தாள். அவள் அணிந்திருந்த பொன்னணிகள் மின்னின. கூந்தல் விரிந்து பறந்தது. இந்தக் காட்சியானது வானத்திலிருந்து இறங்கும் மயில் போல இருந்தது.

இச் செய்தி இக்கால ஒலிம்பிக் நீச்சல் மகளிர் வளைந்துந்தும் பலகைமீது ஏறி நீரில் கரணம் போடும் காட்சியை நினைவுக்குக் கொண்டுவருகிறது.

**குத்துச்சண்டை** Boxing



காவிரிப்பூம்பட்டினத்து மன்றத்தில் பலரும் கூடி ஆற்றலை வெளிப்படுத்திக் கொண்டனர். அப்போது வெறுங்கையால் தாக்கியும் விளையாடினர். கையால் தாக்கி விளையாடியது இக்காலக் குத்துச் சண்டையை நினைவூட்டுகிறது.

**மற்போர்** wrestling



தித்தன் என்னும் அரசன் உறையூரில் இருந்துகொண்டு சோழநாட்டை ஆண்டுவந்தான். அவன் மகன் போர்வைக் கோப்பெருநற்கிள்ளி, சாத்தந்தையார், பெருங்கோழி நாய்கன் மகள் நக்கண்ணையார் என்னும் இரண்டு பெண் புலவர்கள் இவன் ஆமூர் மல்லனொடு மற்போர் புரிந்ததை நேரில் கண்டு பாடியுள்ளனர்.

காவிரியும் கொள்ளிடமும் பிரியுமிடம் முக்கொம்பு. இதனைச் சூழ்ந்துள்ள பகுதி முக்காவல் நாடு. இதனை அப்பகுதிக் கண்ணனூரிலுள்ள சோழர்காலக் கல்வெட்டால் அறியலாம். இந்த முக்காவல் நாட்டு ஆமூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட அரசன் மல்லன். இன்றும் அந்த ஆமூர் உள்ளது.

இந்த மல்லனுக்கும், தித்தன் மகன் கிள்ளிக்கும் இடையே மற்போர் நிகழ்ந்தது. போரின்போது கிள்ளி தனது ஒரு காலைத் தன் மார்பில் படும்படி மண்டியிட்டுக் கொண்டும், மற்றொரு காலால் தன்னைத் தாக்கும் தார்வீரனை உதைத்துத் தள்ளிக்கொண்டும் போரிட்டான். யானை தென்னை மட்டையை உருவுவது போலத் தன்னொடு மற்போர் புரிந்த மல்லனை அப்போது அவன் உருவி எறிந்தான். இது கிள்ளியின் மற்போரை விளக்குகிறது. கிள்ளி வென்றான். (மல்லன் சாகவில்லை) என்பதனால் இந்த இருவருக்கும் இடையே நடந்தது போர் அன்று. விளையாட்டு எனத் தெரிகிறது.

இன்னும் இளஞ்சிறுவரின் முக்கால் சிறுதேர், வளர்சிறுவரின் வலார்வில், சிறுமியரின் வண்டல் பாவை, காளையரின் ஏறுதழுவல், கன்னியரின் கழங்கு, தெற்றி, பந்து, பொதுமகளிரின் புனலாட்டு, அவைமாந்தரின் புதுமொழி, முதுமொழி, செதுமொழி, நரைமூதாளரின் வல்லநாய் என்றெல்லாம் சங்க கால விளையாட்டை விரித்துக்கொண்டே செல்லலாம்.

இவ்வாறு சங்க கால விளையாட்டுகளின் பாங்கினையும், பழைமையையும் உணர்ந்து போற்றுவோமாக.

❖

# நாடகக்கலையும் நிகழ்த்துகலையும் சிலப்பதிகாரமும்



பேராசிரியர் மு. இராமசுவாமி

கலைகளைக் காட்சிக்கலை, கேட்புக்கலை என்கிற இருபெரும் பிரிவிற்குள் அடக்கிப் பார்ப்பது பொதுமரபு! காட்சிக்கலையும் (கண்ணால் பார்த்து அனுபவிப்பது) கேட்புக்கலையும் (காதால் கேட்டு அனுபவிப்பது) கலைகள் எல்லாவற்றிற்கும் அடிப்படைகளாகும். பார்வை வடிவின் அழகியலாய் விரியும் காட்சிகளின் வார்ப்புகள் அனைத்தும் – ஓவியம், சிற்பம் போன்றன – காட்சிக் கலைகளாகும்.

இவை வெளி (space) சார்ந்தவை. அதைப்போலவே கேள்வி வடிவின் அழகியலாய் விரியும் ஒலிக் கோவைகளின் வார்ப்புகள் அனைத்தும் – இசை, பாடல்கள் போன்றன – கேட்புக் கலைகளாகும். இவை காலம் (time) சார்ந்தவை. கேட்புக்கலையும் காட்சிக் கலையும் – காலமும் வெளியும் – இணைந்து இயங்குகிற புள்ளியில் கருக்கொள்வது நிகழ்த்துகலை. நிகழ்த்தப்படுகிற கணத்தில் மட்டுமே இதன் அழகியல் அனுபவம் கலைவடிவாவதால் இது நிகழ்த்து கலையாகிறது. மேடைப் பேச்சு, பாட்டுக் கச்சேரி, ஆடல் பாடல், ஆட்டம், வித்தை, சர்க்கஸ், நாட்டியம், நாடகம் என்று படைப்பு வெளிக்குள் மனிதர்கள் நிகழ்த்துபவராயும் படைப்பிற்கான உந்துவினை புரியும் பார்வையாளராயும் இருவேறு நிலைகளில் பிரிந்துநின்று, படைப்பாக்கக் கணத்தில், மனம் சார்ந்து ஒருவருக்கொருவர் ஊடுவினை புரிந்து, படைப்பு அனுபவத்தை உயிர்த்தெழச் செய்கிற நிலையில் அது நிகழ்த்து கலையாகிறது.

இது காலம், வெளி இரண்டையும் தன் உள்ளீடாகக் கொண்டது. அந்த வகையில் நாடகமும் நிகழ்த்துகலைக்குள் அடங்குகிறது. அதைத் தாண்டியும் நாடகத்தின் இருப்பு இன்னொரு நிலையிலும் இருந்து கொண்டிருக்கிறது. அதனாலேயே அது நாடகமாக இருந்து கொண்டிருக்கிறது. அதாவது, நாடகமானது சமூகம் சார்ந்து, பார்த்துக் கேட்டு இரசிக்கும் கலையாகவுமிருக்கிறது; தனித்து வாசித்து மகிழ்வதற்குரிய இலக்கியமாகவுமிருக்கிறது.

கலையாயும், இலக்கியமாயும் இரண்டும் இணைந்த ஒருருவாய் நாடகம் அமைந்திருக்கிறது. அதுதான் நாடகத்தைத் தனித்து அடையாளப்படுத்திக் கொண்டிருக்கிறது. காலம், வெளியைத் தாண்டி நாடகத்தின் இருப்பை உணர்த்துகிற இன்னொன்றாக 'நாடகிய நிகழ்வு' (dramatic action) அமைந்திருக்கிறது. அதாவது நாடகச் செயற்பாட்டிற்குரியதான முரணை நகர்த்துவதாய் இந்த நாடகிய நிகழ்வு அமைந்திருக்கிறது. முரண் வளர்ச்சிதான் நாடகம். அந்த வகையில் நாடகம் இயங்கியல் தன்மை கொண்டது. இதுதான் நாடகத்தை இலக்கிய நிலையிலும் அடையாளப்படுத்துகிறது. நிகழ்த்து கலைக்கு இந்த 'நாடகிய நிகழ்வு' நிபந்தனை அன்று. ஆயின் நாடகமாவதற்கு இதுவே நிபந்தனை! முரண் சார்ந்த நாடகிய நிகழ்வைத் தூபமிட்டுக் கொண்டே, என்ன நிகழும் அல்லது என்ன நிகழவிருக்கிறது எனும் ஆர்வத்தை இயல்பாகத் தூண்டி முன் நகர்கிற தன்மைதான் நாடகத்தன்மை! இத் தன்மையை முழுமையாய்க் கொண்டிலங்கும் இலக்கிய வகைமையே நாடகமாகும்.

நாடகம் கலையாகும்போதே, அதாவது நிகழ்த்தப்படும்போதே முழுமை பெறுவதாயினும் இலக்கிய நிலையிலேயே நாடகம் என்பதற்குரிய அடையாளமான முரண் நிகழ்வுக் குணவியல்பை அது இயல்பிலேயே கொண்டிருக்கிறது என்பது முக்கியம். அதேபோல் காலம், வெளிக்கான படைப்புச் சுதந்திரம், நாடகிய நிகழ்வைப் பாதுகாக்கும் மேல்தோலாய் இருந்து நாடகப் பிரதியை வடிவமைத்திருக்கும் என்பதும் முக்கியம். ஆக, நாடகப் பிரதிக்குள் வார்த்தைகளில் உள்ளமுங்கிக் கிடக்கும் காலம், வெளி, நாடகிய நிகழ்வு ஆகிய மூன்றும், நாடகக்கலையில் காட்சியாய்ப் பருண்மை நிலையில் வெளிப்பட்டுத் தோன்றி நிகழ்த்துதலை அர்த்தமுள்ளதாக்குகிறது. இதுதான் நாடகத்திற்கும் நாடகக் கலைக்குமான இயங்கியல் உறவாகும்.

இந்தக் குணவியல்புகளை இனங்கண்டு கொண்டதனால்தான் சிலப்பதிகாரத்தை 'நாடகக் காப்பியம்' என்று இங்குள்ளோரால் இலகுவில் இனங்கண்டுகொள்ள முடிந்திருக்கிறது. அதுதவிர்த்து, வேறெந்தக் காப்பியத்திற்கும் இத்தகைய மகுடத்தைச் சூட்டித் தமிழ்ச் சான்றோர்கள் அழகு பார்த்திருக்கவில்லை. தமிழர்களுக்கு நாடகத்தின் குணவியல்புகள் நன்கு தெரிந்திருக்கின்றன என்பது இதிலிருந்து நன்கு தெரிகிறது. 'மதுரைக் காண்டம்' வரையிலான 'சிலப்பதிகாரம்', கிரேக்கத் துன்பியல் நாடகங்களுக்கு இணையான மாபெரும் 'நாடகம்' என்பதில் எவருக்கும் மாற்றுக் கருத்து இருக்கமுடியாது. எல்லாத் தமிழ்க் காப்பியங்களும் பிறப்பிலிருந்து கதை சொல்லத் தொடங்க, சிலப்பதிகாரம், மணிமேகலை போன்றவை மட்டுமே காலத்தையும் வெளியையும் கைக்குள் பிடித்து இழுத்தபடி, நாடகிய நிகழ்வு தொடங்க இருக்கிற இயங்கு

புள்ளியிலிருந்து கதையைத் தொடங்குகின்றன. கதைநாயகர்களின் திருமணத்திலிருந்து கதையைத் தொடங்குகிறது 'சிலப்பதிகாரம்'! முல்லை சார்ந்து ஆய்ச்சியர் குரவையும், குறிஞ்சி சார்ந்து குன்றக்குரவையும், நெய்தல் சார்ந்து கானல்வரியும், பாலை சார்ந்து வேட்டுவவரியும், மருதம் சார்ந்து ஊர்சூழ்வரியும் ('புல்லென் மருள்மாலைப் பூங்கொடியாள் பூசலிட ஒல்லென் ஒலிபடைத்தது ஊர்' எனும்படி ஒப்பாரித் தன்மை கொண்ட நாட்டார் கதைப் பாடல் மரபு) என்று அக்காலத்திய பல்வேறு வகையிலான நிலம் சார்ந்த நிகழ்த்துகலை வடிவங்களைத் தனக்குள் கட்டமைத்து அழகுபடுத்தியிருக்கும் சிலப்பதிகாரத்தின் நாடகக் கட்டமைப்பானது, 'மாகவான் நிகர்வண்கை மாநாய்கன் குலக்கொம்பர் ஈகைவான் கொடியன்னாள் ஈராறாண் டகவையாள்.....மாதரார் தொழுதேத்த வயங்கிய பெருங்குணத்துக் காதலாள் பெயர்மன்னுங் கண்ணகி'யின் மணவாழ்க்கையில் தொடங்கி, 'கோநகர் பிழைத்த கோவலன் தன்னொடு வானவூர்தி ஏறினள்...கானமர் புரிகுழற் கண்ணகி' என்று முடிவதற்கு இடைப்பட்ட பகுதியேயாகும்.

அதுவே நாடகக் கதைக் களம்! சிலம்பின் முதல் காதை 'மங்கல வாழ்த்துப் பாடல்'! காதையின் நிறைவில் எதிர்மறையாய் அமங்கலத் தொனியில், 'காதலற் பிரியாமல் கவவுக்கை ஞெகிழாமல் தீதறுகென ஏத்திச் சின்மலர் கொடுதூவி' என்று குறிப்புமுரணாய் ஒன்றை முன்வைக்கையில் வாசக மனம் இது காட்டும் முரண்நிகழ்வின்மீது அதீத ஆர்வம் கொள்கிறது. இங்கு, 'யானை எருத்தத் தணியிழையார் மேலிரீஇ மாநகர்க் கீந்த' புதுமணத் தம்பதியரின் வாழ்க்கை பற்றி வாசக மனத்திற்குள் நாடகம் ஒன்று உருக்கொள்ளத் தொடங்கி விடுகிறது.

பாட்டுப் பாடிக் கதை சொல்லத் தொடங்குகையில் நிகழ்த்துகலையாகும் இது, நிகழ்த்துநர்கள் மூலம் முரண் நிகழ்வின் அடிப்படையில் காட்சிப்படுத்தப்படுகையில் நாடகக்கலையாக மனத்திற்குள் தங்கிப் போகிறது. நிகழ்த்துகலைகள் அனைத்தும் நிகழ்த்துநர் பார்வையாளர் இருப்பு சார்ந்து, எந்த வெளியையும் காட்சிப்படுத்தும் நிகழ்த்தும் வெளியாய் ஆக்கிவிடுவதால், நிகழ்த்துகலையான நாடகக் கலைக்கும் காட்சிப்படுத்துதல் எனும் அந்தப் பண்பு இயல்பிலேயே அமைந்திருக்கிறது. அது முப்பரிமாணத் தன்மை கொண்டது. எதுவொன்றையும் நிகழ்த்தும் காலத்தில் எந்தவெளியும் நிகழ்த்தும் வெளியாவதால் நிகழ்த்துதல்கள் பெரும்பான்மையும் குறியீட்டுத்தன்மை சார்ந்தே அமைகின்றன.

அது வெற்றுவெளியாக அமைந்திருக்கிறபோதும் கற்பனையைத் தூண்டும் இந்தக் காரியத்தைச் செய்துகொண்டிருக்கிறது. அசைவுகள், ஆட்டங்கள், பயன்படு பொருள்கள் அனைத்தும் குறியீட்டுத் தன்மை சார்ந்தனவாகவே இருக்கின்றன. நிகழ்த்துகலையின் குணமாய் இந்தக் குறியீட்டியல் பண்பு அமைந்திருக்கிறது. நாடகக் கலையும் இதற்கு விதிவிலக்கானதில்லை. ஆயின் நாடகக்கலையானது நிகழ்த்துகலையினின்றும் வேறுபட்டுத் தனித்துத் தெரிவதற்குக் காரணம், கதாபாத்திரங்களுக்கு இடையிலான முரண் நிகழ்வு எனும் குணப்பேறுதான்!

நிகழ்த்துதல் என்பது காட்சிப்படுத்துதலாகும். முரண் நிகழ்வைக் காட்சிப்படுத்துகையில் அது நாடகமாகிறது. அதாவது, நாடகப் பிரதியை உருவாக்கிய படைப்பாளியின் கற்பனையைத் தம் கற்பனையால் (வியாக்கியானத்தால்) மெருகுபடுத்தி, இன்னொரு புதிய படைப்பாக, கதாபாத்திர நிகழ்த்துநர்களைக் கொண்டு இன்னொருவகை அழகாக நெறியாளுநர் ஆக்கித் தருவதாகும் அது. முன்காலத்தில் நாடக ஆசிரியரே நடிகர்களைக் கொண்டும், காட்சியமைப்புகளைக் கொண்டும், இசையைக் கொண்டும் இந்தக் காட்சிப் படுத்தலையும் செய்துவந்தார். 'வாத்தியார்' என்று அவர் அழைக்கப்பட்டார். அவருடைய கற்பனை மட்டுமே நாடகக்கலை உருவாக்கமாக முன்நின்றது. ஆயின் நாடகங்கள் அச்சில் வரத் தொடங்க, நாடகங்கள் திசை எட்டும் பரவ, நாடகக்கலை அனுபவத்தைக் காட்சிவடிவாய் அனைவரிடமும் கொண்டு சேர்க்க ஒரு வாத்தியாரால் முடியாது போக, நிறைய 'வாத்தியார்'கள் தேவைப்படும் சூழலில், நெறியாளுநர், ஒப்பனையாளர், வடிவமைப்பாளர் என்கிற புதிய சமூகங்களின் தேவை, சமூக நிர்ப்பந்தம் காரணமாய்ப் பிற்பாடு தோன்ற வேண்டியதாய் இருந்தது. இவர்கள் நாடகாசிரியரின் மூலக்கருத்தை வியாக்கியானம் செய்பவர்கள் என்பதாய்க் குறைவாக மதிப்பிட முடியாதவர்கள். நாடகப் படைப்பை இன்னொரு புதிய படைப்பாகச் செழுமைப்படுத்தக் கூடியவர்கள். பல்வேறு நெறியாளுநர்கள் தங்கள் தங்கள் சூழலமைவிற்கேற்ப வேறு வேறு தொழில்நுணுக்கர்களின் ஒத்திசைவில், ஒரே நாடகத்தைப் பல திக்குகளிலும் பல வகைகளில் காட்சிப்படுத்துகையில், அந்நாடகம் நெறியாளுநர்களின் கற்பனைக்கேற்ப, பல்லுயிராய்ப் பெருகி புதுப்புதுப் படைப்பு அனுபவங்களைத் தரத்தொடங்குகின்றன. நாடகம், நாடகக்கலை என்கிற நிகழ்த்துகலையாய்ப் புதுப் பரிமாணங்கொள்கிறது. நாடகக்கலை என்கிற நிகழ்த்துகலையாகிற நிலையில் அதை நிகழ்த்துவதற்கு நிகழ்த்துபவர்கள் தேவையாகின்றனர். காட்சிப் படுத்துதல்களில் நாடக முரண்நிகழ்வை முன்நகர்த்திச் செல்ல எதிரும் புதிருமான உயிருள்ள கோடுகளான கதாபாத்திர நிகழ்த்துநர்கள் தேவைப்படுகின்றனர். நிகழ்த்துகலையில் ஆடிப் பாடிப் பேசி நிகழ்த்துநர்களாய் இருப்பவர்கள், நாடகக்கலையில் பாத்திரங்கள் ஏற்று நடிக்கும் நடிகர்களாகின்றனர்.

கதாபாத்திரங்களாவதற்கு, நடிகர்கள் சில உளவியல் உடலியல் வித்தைகளைக் கைவரப் பெற்றிருக்க வேண்டியதிருக்கிறது. அது நடிப்பு என்பதாகிறது. நடிப்பை எளிதாக விளக்குவதானால் அது 'போலச் செய்தலும்' (நிகழ்த்துபவர்) 'நம்ப வைத்தலு'மான (காண்பவர்) இருவேறு மனங்களின் அந்தக் கண நெசவில் உருவாகும் ஒரு படைப்பு நிகழ்வு என்று கூறலாம். 'போலச் செய்தல்' என்பது வெறும் புறவய வெளிப்பாடாக மட்டுமன்றி, இன்னொரு நபராக இன்னொரு புதிய சூழலில், 'தான்'—ஐப் பொருத்திப் பார்க்கையில் அகத்தில் உள்வயமாய் ஏற்படும் மாற்றங்களின் பார்வை வடிவ வெளிப்பாடு என்று அமைதி கூறலாம். நிகழ்த்துநர் காண்போரைச் சார்ந்தும், காண்போர் நிகழ்த்துநரைச் சார்ந்தும் ஒன்று மற்றொன்றின் தீராத நிபந்தனைகளாகி அதன்வழி அழகியலைத் தரவல்லது.

இதுதான் செயிற்றியனார் மொழியில் 'உய்ப்போன் செய்தது காண்போர்க் கெய்துதல் மெய்ப்பாடென்ப மெய்யுணர்ந்தோரே' என்றாகிறது. 'உய்ப்போன்' என்பது இன்னொருவராய்த் தன்னை இன்னொரு சூழலில் நிறுத்தி, மனத்தளவில் அதை உய்த்தனுபவித்து உணர்ச்சிக்குறிப்புகளால் (bhava) அதைப் பூரணப்படுத்துவது. காண்போர்க்கு அவ்விதமே எய்துவதன் மூலம் அது சுவையுணர்வாய்ப் பரிமளிக்கிறது. அதாவது நமக்குப் புரிகிற மொழியில் சொன்னால் 'நடிப்பு' என்பதாகிறது. 'மெய்யின்கண் பட்டுத் தோன்றுவதால் அது மெய்ப்பாடாயிற்று' எனில் 'பட்டுத் தோன்றுவது' எது? அது அகம்! அகம் புறவயமாய் மெய்யின்கண் பட்டுத் தோன்றுதல் என்பதுதான் அது! 'அகத்தின் அழகு முகத்தில் தெரியும்' என்கிற எளிய தமிழ்ச் சொலவடை இதை விளக்கப் போதுமானது!

சிலம்பின் 'வேனிற்காதை'யில் முத்தாய்ப்பாக ஒரு நிகழ்வு! கோவலனிடம் மாதவியின் மடல் கொடுக்க வருகிறாள் வசந்தமாலை. 'ஆடல் மகளே ஆதலின் ஆயிழை பாடுபெற் றனவப் பைந்தொடி தனக்கு' என்று மடல் வாங்க மறுக்கிறான் கோவலன்! 'ஆடல் மகளே ஆதலின்.....' என்கிற வார்த்தைக்குப் பின்னாலிருக்கிற வலியை, முரண்நிகழ்வை வெளிக்கொணர்வதாயிருக்க வேண்டும் கோவலன் கதாபாத்திரத்தின் மனநிலை. அதை வெளிப்படுத்துகிற நடிப்பு நுணுக்கம் அந்த இடத்திற்குத் தேவைப்படுகிறது. இதற்கான மனநிலையும், 'வாடிய உள்ளத்து வசந்தமாலை' மாதவியிடம் அச்செய்தியைக் கூற, 'மாலை வாராராயினும் மாணிழை காலை காண்குவம் எனக் கையறு நெஞ்சமொடு பூமலர் அமளிமிசைப் பொருந்தாது வதிந்தனள்' என்கிற மனநிலையும் வேறு வேறானவை. 'கையறு நெஞ்சம்', 'பொருந்தாது வதிந்தனள்' எனும் குறிப்புகள் மாதவியின் மனநிலையைச் சொல்லிய போதிலும் நெறியாளுநர் குறிப்பாக அது விளங்கிய போதிலும் 'காலை காண்குவம்' என்பதை வெளிப்படுத்தும் வலி உருவாக்கிய சத்துவ உணர்ச்சிக் குறிப்புதான் நடிப்பிற்கு அவசியமானதாகும். நடிப்பு என்பது உளவியல் உடலியல் (psycho physical action) நிகழ்வாகும். நடிப்பில், உடலுக்கு மனமும் மனத்திற்கு உடலும் ஒன்றிலிருந்து ஒன்று பிரியாமல், ஒன்று மற்றொன்றின் நிபந்தனைகளாகின்றன. மேற்சொன்னதில் கோவலன் வலி வேறு; கண்ணகியின் வலி வேறு! முன்னது வெறுப்பில் எழுந்த வேதனை! பின்னது வெறுக்கப்பட்டதால் எழுந்த வேதனை! இரண்டையும் துல்லியமாய் வெளிப்படுத்தும் சத்துவ உணர்ச்சிக் குறிப்புகளின் பிறப்பிடங்கள் வேறு வேறானவையாகும். நடிகர்களால் அப்படி வெளிப்படுத்தப்படும்போதுதான் சுவையுணர்வாய் அவை பரிமளிக்கின்றன. இவற்றை உய்த்துணரும் திறன் பெற்றவர்களைக் கதாபாத்திர நிகழ்த்துநர்களாய்க் கொண்டு, நெறியாளுநரின் வடிவமைப்பில் நாடகப் பிரதி காட்சிப்படுத்தப்படும்பொழுது அதைப் பார்வையாளர்கள் அப்படியே உள்வாங்குகையில் அது நாடகக்கலையாகிறது.

இன்னொரு உதாரணம், கனாத்திறமுறைத்த காதையில், 'குலந்தரு வான்பொருட் குன்றந் தொலைத்த இலம்பாடு நாணுத் தரும்' என்கிற கோவலனுக்கு, 'நலங்கேழ் முறுவல் நகைமுகங் காட்டிச் சிலம்புள கொண்ம்' என்கிற கண்ணகியின் பதிலின் பின் உள்முகமாய் மறைந்திருக்கிற மனவுணர்வும் அவசியம் பேசப்படக்கூடியதாகும். 'இலம்பாடு நாணுத் தரும்' என்பதும் 'சிலம்புள கொண்ம்' என்பதும் கருத்தைச் சொல்லுகிற வெறும் வார்த்தைகள் அல்ல. உள்ளனுபவத்தைக் கொட்டித் தீர்க்கும் உயிர்ப்புள்ள வார்த்தைகள் அவை! 'நலங்கேழ் முறுவல் நகைமுகங் காட்டி' என்பது கதாபாத்திரத்திற்கான நெறியாளுநர் குறிப்பாகும். 'சிலம்புள கொண்ம்' என்பது முரண்நிகழ்வை உறுதிப்படுத்துகிறது. இந்தவகை உரையாடல்களில் உள்ளமிழ்ந்து கதாபாத்திரத்தின் மனது ஒளிந்திருப்பதால், மொழியின் உள்ளார்த்தம் நாடகக்கலையை இயங்கியல் தளத்தில் நகர்த்திச் செல்கின்றது.

நடிப்பு என்பது புறவயமான அசைவுகள் மற்றும் வார்த்தைகளை மட்டும் சார்ந்ததில்லை; அகவய அசைவுகள் மற்றும் உள்ளார்த்தம் சார்ந்தது. உடலியல் நிலையில் ஏற்படும் சிறுசிறு மெய்யசைவுகளும், வெளிப்படும் வார்த்தைகளும் மிகச் சிக்கலான உளவியல் நிகழ்வுடன் தொடர்பு பட்டவை என்பதுதான் நடிப்பின் அடிப்படையாகும்.

சத்துவ உணர்ச்சிக் குறிப்புகளான, மெய்ம்மயிர் சிலிர்த்தல், பொறிநுதல் வியர்த்தல், நீர் வார்தல், குரல் மாறுபாடு போன்ற நடிகரின் அகவய, ஆழ்மனச் செயற்பாடுகள் உள்வய நடிப்பு நுணுக்கங்கள் கைவரப் பெற்றவர்களால் மட்டுமே வெளிப்படுத்தப்படக் கூடியவையாகும். இவ் வெளிப்பாடுகளின்மூலம் நிகழ்த்துநரின் சக இருதயனாகிறான் பார்வையாளன்! மாடாக ஒருவர் நடிப்பதாக வைத்துக் கொள்வோம். மாடு மாதிரி சப்தமிட்டுக் கொண்டும் தலையை ஆட்டிக் கொண்டும் கொம்புகளால் முட்டுவதாகப் பாவனை செய்து கொண்டும் ஒருவர் மாடுபோலச் செய்யமுடியும், நம்ப வைக்கவும் முடியும். இந்தப் 'போலச்செய்தல்' முழுமையானதில்லை. இந்த நம்பவைத்தலும் முழுமையானதில்லை. இவற்றுள் மனரீதியான முழுமையான ஒன்றுதலுக்கு இடமில்லை. குறியீட்டு நிலையில் அறிவுபூர்வமாக மட்டுமே 'வெளிப்படுத்துகிற – ஏற்றுக்கொள்கிற' கௌரவ உடன்படிக்கையாகும் இது. ஆனால் அதை மீறித் தன் அகவய நுணுக்கங்களைத் தூண்டி, மாட்டின் உடற்சிலிர்ப்பைத் தன் தோல் அசைவின் மூலம் அப்படியே காட்ட முற்படுகிறபொழுது, சாத்விக பாவத்தைத் தொடுகிறபோது, கலை புதிய சாளரத்தைத் திறக்க வழிகாட்டும்போது, ஒன்றுதலும் பரவசமும் நிகழ்கின்றன. நடிப்பின் கீழ்க்கோட்டைத் தொட்டுவிட்ட பேருவகையும் அங்கு உருவாகிறது. உடல், நடிகரின் ஆக்ஞைக்குக் கீழ்ப்படிந்து நிற்பதைப்போல மனசும் மண்டியிட்டுக் கூடுவிட்டுக் கூடு பாயும் வித்தைக்கு வழிகாட்டும்போது, 'உய்த்துணர்வின்றித் தலைவரு பொருண்மையின் மெய்ப்பொருள் நேரிற்காணும்' அனுபவம் கிடைக்கையில் நல்ல நடிகராவதற்கான அடிப்படைப் பண்புகளை அந் நிகழ்த்துநர் பெற்றிருக்கிறார் என்பதாகிறது.

'ஊர்சூழ்வரி'யில் 'காய்சினந் தணிந்தன்றிக் கணவனைக் கைகூடேன் வேந்தன் தனைக்கண்டித் திறங்கேட்பல் யானென்'ற கண்ணகியின் சத்துவ உணர்ச்சிக் குறிப்புகளுக்கு வகைதொகை காட்டி, நடிப்பிற்கு வாய்ப்பேற்படுத்தித் தருகிற நல்ல ஆசிரியராயும்

நெறியாளராயும் இருக்கிறார் இளங்கோவடிகள்! இறுதியில் வரும், 'என்றாள் எழுந்தாள் இடருற்ற தீக்கனா நின்றாள், நினைந்தாள்; நெடுங்கயற்கண் நீர்சோர நின்றாள், நினைந்தாள்; நெடுங்கயற்கண் நீர்துடையாச் சென்றாள் அரசன் செழுங்கோயில் வாயில்முன்' எனும் பகுதி நடிப்பவருக்கும் நெறியாளருக்கும் நாடக ஆசிரியரின் குறிப்புகளாகும். கதாபாத்திரத்தின் மனஉணர்ச்சி வார்த்தைகளால் வடித்துத் தரப் பெற்றுள்ளது. பார்வையாளரின் மனவெளிக்குள் கதாபாத்திரத்தின் உணர்ச்சிப்பாடுகள் கூட்டாகக் கும்மி கொட்டுவதால் உணர்வுபூர்வச் சங்கிலிப் பிணைப்பில் கதாபாத்திரத்தின் சக இருதயனாகிறார் பார்வையாளர். இன்னொரு இடத்தில், 'செம்பொற் கொடியனையாள் கண்டாளைத் தான்காணான் மல்லன்மா ஞாலம் இருளூட்டி மாமலைமேற் செவ்வென் கதிர்சுருங்கிச் செங்கதிரோன் சென்றொளிப்ப' என்று தற்குறிப்பேற்ற அணியாக வரும் பகுதி காட்சியின் பின்புலத்தை, களத்தை, காலத்தை, ஒலிக்குறிப்புகளை, ஒளியமைப்புகளை உணர்த்தக் கூடியதாக உள்ளது. இது ஒரு சான்று. இதுபோல் எண்ணற்ற இடங்கள் உள்ளன. உரையாடல்கள், மன உணர்வுகள், பாத்திரத்தின் சிறுசிறு அசைவுகள் மூலம் மன உணர்வுகளின் பெரும்பெரும் அசைவுகளைப் படம்பிடித்துக் காட்டும் பாங்கு இவையெல்லாம் இளங்கோவை மிகப்பெரும் நாடகாசிரியனாக நமக்கு அடையாளங் காட்டுகின்றன. நிகழ்த்துகலையாயும் நாடகக்கலையாயும் தனித்தனியே அழகு செய்யும் எண்ணற்ற இடங்கள் சிலம்பு முழுக்கவும் இதுபோல் நிறைந்து, வாசிப்போரிடையே நாடக அனுபவத்தை மிக நுணுக்கமாகத் தந்து கொண்டிருக்கிறது.

சிலம்பின் 'வழக்குரை காதை' முற்ற முழுக்கவுமான ஒரு நாடகம். முரண் நிகழ்வுகளை வளர்த்திச் செல்லும் நாடகியப் பாங்கு முழுமையாகக் கைவரப் பெற்ற பகுதியாகும் இது. உச்சநிலைக்குரிய அத்தனைக் குணவியல்புகளும் முழுமையாக அமைந்திருக்கும் பகுதியாகும். முந்தைய 'ஊர்சூழ் வரி'யினுடைய தொடர்ச்சி 'வழக்குரை காதை'யில் 'ஆங்கு' எனும் சொல்லாட்சி கொண்டு நிறுவப்பட்டு, அதன் தொடக்கம் அமைந்திருக்கிறது. அதைத் தொடர்ந்து வரும் முதல்பகுதி, கோப்பெருந்தேவி தனக்கு வந்துற்ற தீக்கனாவினைத் தன் சேடியிடம் கூறுகிறாள். அதுவும் முரண் நிகழ்வாகக் காட்சிப்படுத்தப்பட்டுள்ளது.

1) குடையொடு கோல்வீழ (நிமிர்ந்து நிற்கும் வெண்கொற்றக் குடையும் செங்கோலும் விழுந்து கிடக்க)
2) நின்று நடுங்கும் கடைமணி இன்குரல் (மணியின் இன்குரல் ஓசை நடுக்கம் தர)
3) திசை இருநான்கும் அதிர்ந்திட (அசைவற்ற எண்திசையும் அதிர)
4) கதிரை இருள் விழுங்க (ஒளியை இருள் விழுங்க)
5) விடுங்கொடி வில்லிர (பகலில் தெரியும் வானவில் இருட்டில் தோன்ற)
6) வெம்பகல் வீழும் கடுங்கதிர் மீன்(இரவில் தெரியும் விண்மீன்கள் பகலில் எரிந்துவிழ)

இவையே மீண்டும் கோப்பெருந்தேவியால் திரும்பவும் கூறப்படுகிறது ஒரு பிதற்றலைப் போல! இதற்கு முரணாக, 'வையங் காக்கும் பாண்டியன் பெருந்தேவி வாழ்கென ஆயமுங் காவலுஞ்சென் றடியீடு பரசியேத்த', 'கோப்பெருந் தேவி சென்றுதன் தீக்கனாத் திறமுரைப்ப, அரிமா னேந்திய அமளிமிசை இருந்தனன் திருவீழ் மார்பின் தென்னவர் கோ'. 'அப்பால்' இந்தக் காட்சி நிகழ்ந்து கொண்டிருக்க, 'இப்பால்' கண்ணகி வாயிலோனிடம் தன்னை அறிமுகப்படுத்தி முறையிடும் காட்சி நிகழ்கிறது. இதைக் காட்சி வடிவாக அற்புதப்படுத்தியிருக்கிறார் இளங்கோவடிகள்!

காட்சியை எப்படி அமைக்கலாம் என்று நெறியாளுநருக்குத் தீனி போடும் இடங்களில் ஒன்று இது! 'அறிவறை போகிய பொறியறு நெஞ்சத்து இறைமுறை பிழைத்தோன் வாயிலோயே, இணையரிச் சிலம்பொன் றேந்திய கையள் கணவனை யிழந்தாள் கடையகத் தாளென்று அறிவிப்பாயே அறிவிப்பாயே' என்று கண்ணகியின் கோபத்தையும் வேகத்தையும் குமுறலையும் கொட்டி வெளிப்படுத்தும் சொற்களால் கண்ணுக்குள் காட்சியைக் கொண்டுவந்து நிறுத்துகிறார் இளங்கோ! வாயிலோனும், அதே படபடப்புடன் அரசனை நாடி, வாழ்த்தி, 'கானகம் உகந்த காளி, தாருகன் பேருரங் கிழித்த பெண்ணும் அல்லள், செற்றனள் போலும் செயிர்த்தனள் போலும் ......கணவனை இழந்தாள் கடையகத்தாளே' என, பாண்டிய மன்னனும், 'வருக மற்றவள் தருக ஈங்கு' என, வாயிலோனும் 'வாயில் வந்து கோயில் காட்ட' என்கிற அடுக்கிவரும் நிகழ்வுகளின் பல்கூற்றினுள் உள்ளார்த்தம் நிறைந்த உள்மனச் சித்திரங்களான உரையாடல்களும் உள்ளன; செயற்படவேண்டிய நெறியாளர் குறிப்புகளும் உள்ளன. அடுத்து விறுவிறு என்று பாண்டிய மன்னன், கண்ணகியின் உரையாடல்கள் அமைந்துள்ளன. எதிரும் புதிருமான இந்தவகை உரையாடல்களுக்கு இடையில் உள்ள மெல்லிய இடைவெளிக்குள் மன உணர்வுகள் மண்டியிட்டுக் கிடக்கின்றன. நல்ல நடிகர்களுக்கு மிகப்பெரும் தீனியாய் அமையும் இப்பகுதி! இறுதியில் 'மன்பதை காக்கும் தென்புலங் காவல் என்முதற் பிழைத்தது கெடுகவென் னாயுள் என மன்னவன் மயங்கி வீழ்ந்தனன்'. 'கணவனை இழந்தோர்க்குக் காட்டுவ தில்என்று இணையடி தொழுதுவீழ்ந் தனள்' கோப்பெருந்தேவி! 'வையங்காக்கும் தென்னவர்கோ' என்று போற்றப்படும் மன்னன், அதற்கு முரணாக 'மன்பதை காக்கும் தென்புலங் காவல் என்முதற் பிழைத்தது' என்று உயிர் துறக்கிறான். 'பாண்டியன்பெருந் தேவி வாழ்கென' வாழ்த்திய சொல் தேயுமுன்னே அதற்கு முரணாகத் தேவியின் உயிர் காய்ந்தது. முரணமைவில் காய்களை நகர்த்தி, நாடகம் என்பதாய்க் காட்சிப்படுத்தும் அழகும், நிகழ்த்து கலைக்கான குறிப்புகள் உள்பொதிந்து நாடகக் கலையாய் மிளிர்கிற பேரழகும் கொண்டு அமைந்திருக்கிறதனாலேயே 'சிலப்பதிகார'த்தைத் தமிழர்கள் தனியாக இனங்கண்டு, அதை 'நாடகக் காப்பியம்' என்று மிகச் சரியாகக் குறிப்பிட்டு அழைத்திருக்கின்றனர்.

சிலப்பதிகாரத்தின் 'அரங்கேற்று காதை'யானது, இசை, நாட்டியம், நாடகம் போன்றவற்றிற்கான பல்விதக் குறிப்புகளின் களஞ்சியமாய் விளங்குகிறது என்பது போக, சிலப்பதிகாரம் முழுவதுமே நிகழ்த்துகலைக் கூறுகளைக் கொண்டிலங்கும் மிகச் சிறந்த நாடகக் கலையாய் விளங்குகிறது. ❖

# தமிழக நாட்டுப்புறக் கலைகள்





முனைவர் கரு. அழ. குணசேகரன்

தமிழக நாட்டுப்புறக் கலைகள் உழைக்கும் மக்களால் காலங் காலமாக விழாக்கள், சடங்குகள் போன்றவற்றில் நிகழ்த்தப்பட்டு வரக் காணமுடிகிறது. நமது இந்திய நாட்டுப்புறக் கலைகள் யாவும் அறுவடைக் காலங் களிலேயே நாட்டுப்புறங்களின் திறந்தவெளி அரங்குகளில் நிகழ்த்தப்பெறுகின்றன. தமிழகத்திலும் தை, மாசி, பங்குனி, சித்திரை, வைகாசி, ஆனி என ஆறு மாதங்கள் வரை நாட்டுப்புறக் கலைஞர்கள் கலை நிகழ்ச்சிகளை அம்மன் விழாக்கள் மற்றும் கருப்பண்ண சாமி, சுடலை மாடசாமி போன்ற தெய்வங்களின் பெயரால் நடத்தப்படும் விழாக்களில் நடத்துகின்றனர். பிற மாதங்களில் விவசாயப் பணிகளைச் செய்யும் கூலித் தொழிலாளிகளாக விளங்குகின்றனர்.

**நாட்டுப்புறக் கலைகளின் வகைகள்**

1. சடங்குமுறைக் கலைகள்
2. தொழில்முறைக் கலைகள்

எனும் இருநிலைகளில் நாட்டுப்புறக் கலைகளைப் பிரித்தறியலாம். பெண்களால் ஆடப்படும் சடங்குமுறை ஆட்டங்களில் ஒன்று கும்மி ஆட்டம் ஆகும். இது அம்மன் விழாக்களில் முளைப்பாரி எடுத்து ஆடிப் பாடப்படுவதாகும். கரகாட்டம் எனப்படுவது இரு பெண்கள் இணைந்து நையாண்டி மேள வாசிப்புக்கேற்ப ஆடப்படும் தொழில்முறை ஆட்டம் ஆகும். இவர்கள் கலையைத் தொழிலாகக் கொண்டோராக விளங்குகின்றனர்.

இந்தியா ஒரு சாதியச் சமூக நாடு. இனக்குழுச் சமூக அமைப்பாக இருந்தபோது ஒவ்வோர் இனக்குழுவும் ஆட்டக் கலையினைக் கொண்டிருந்த நிலை என்பது வேதகால வளர்ச்சியில் சாதி அமைப்புகளாக உருவாயின. ஒவ்வொரு சாதிக்கும் ஒரு கலையை மக்கள் கொண்டிருந்தனர். மலையின மக்கள் ஒவ்வோர் இனமும் ஒருவித ஆட்டக் கலையைக் கொண்டு விளங்குவதை இன்றளவும் காண முடிகிறது.

**நீலகிரி மலைத்தோடர் :** வட்டவடிவ ஆட்டம் வலப்புற அசைவில் நின்றநிலையில் குனிந்தும் நிமிர்ந்தும் ஆடவரும் பெண்டிரும் இணைந்து தோடர் ஆட்டம் ஆடுகின்றனர்.

**கோத்தர்**

1. கால்கோள் (காலடித் துள்ளல் ஆட்டம்)
2. பிப்பாலாட்
3. திருகனாட்டம் (திருகல் ஆட்டம்)
4. கொய்னாட் (குனிந்து சுழன்றாடும் ஆட்டம்)

போன்ற நான்கு வகை ஆட்டங்களை ஆடி வருகின்றனர். கோத்தர் ஆட்டங்கள் அனைத்தும் வட்டவடிவிலே விளங்குகின்றன.

**தேவராட்டம்:** நாயக்கர் இன மக்களில் குறிப்பிட்ட சாதியினர் ஆடுகின்றனர்.

**பறையாட்டம்:** தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த பறையர் சாதியினர் ஆடுகின்றனர்.

**நாட்டுப்புற ஆட்டங்கள்**

நாட்டுப்புற நடனங்களை நாம் இருவகையினதாகப் பிரிக்கலாம்.

1. வட்டவடிவ ஆட்டம்
2. நேர்கோட்டு வடிவ ஆட்டம்

சான்று:

கும்மி – வட்டவடிவ ஆட்டம்

ஒயிலாட்டம், தேவராட்டம் – நேர்கோட்டு வடிவ ஆட்டம்.

வட்டவடிவ ஆட்டத்தில் எளிய காலடி வைப்புகளும், ஒரியல்புத் தன்மை கொண்ட இசைப் பாடலும் பெரும்பாலும் இடம் பெறுவது இயல்பு. நேர்கோட்டு வடிவ ஆட்டங்களில் முறையான பயிற்சி பெற்றவர்களே ஆடமுடியும். ஆட்ட அடவுமுறைகளுக்கும், பாட்டுப் பாடுவதற்கும் ஆசான்கள் முறையே பயிற்சி அளித்திடுவர். இவ்விரு வடிவமுறையிலிருந்து விலகிக் கூடுதலான கலைக்கூறுகளுடன் விளங்குபவை கூத்து வடிவங்கள் பெறுகின்றன.

**கூத்து வடிவங்கள்**

| | |
|---|---|
| வடபகுதி (ஒசூர், காஞ்சிபுரம், சென்னை, செங்கற்பட்டு, கடலூர்) | தெருக்கூத்து வடிவம் |
| கிழக்குப்பகுதி (தஞ்சை) | நாத்ததேவன் குடிக்காடு கூத்து; ஆர்சுத்திப் பட்டுக் கூத்து. |
| மேற்குப்பகுதி (கரூர், சேலம், கோவை) | அண்ணன்மார் சாமி கூத்து |
| தெற்குப்பகுதி (நெல்லை, தூத்துக்குடி) | கணியான் கூத்து |

எனுமாறு அனைத்துப் பகுதிகளிலும் நாட்டுப்புறக் கலைவடிவங்கள் மண்டிக் கிடக்கும் தமிழக வட்டாரங்கள் ஆட்டங்கள், பாட்டுகள், கூத்துகள் என விளங்குகின்றன. இக்கலை வடிவங்கள் வட்டாரத் தன்மைகளைத் தன்னகத்தே கொண்டு அம் மக்களின் வாழ்வியலையும் மண்ணின் வாசனைத் தன்மைகளையும் கொண்டு விளங்குகின்றன.

**தமிழ் இலக்கியங்களில்**

1. நாட்டுப்புறக் கூத்துகள்
2. சடங்குசார் கூத்துகள்
3. தெய்வக் கூத்துகள்
4. போர்க் கூத்துகள்

எனும் நான்கு வகையான கூத்துகள் இருந்துள்ளன எனும்படி கூறப்பட்டிருப்பினும் நாட்டுப்புறக் கூத்துகள் இன்று சடங்கு சார்ந்ததும், தெய்வம் சார்ந்ததும் என இணைவு கொண்டு விளங்குகின்றமையைக் காணமுடிகிறது. போர்க்கூத்துகள் இன்று காணமுடிவதில்லை. விறலியர் என்பார் பெண்பாற் கலைஞர்களாவர். இவர்கள் பாடி ஆடிக் கலை நிகழ்ச்சி நடத்துகின்றவர்கள். கோடியர், வயிரியர், கண்ணுளர் என்று தமிழிலக்கியத்தில் குறிப்பிடப்படுவோர் விறலியரொடு சேர்த்துக் கூத்தர் என்றே பொருள் கொள்ளக் கூடியவர் களாக உள்ளனர். இசைக் கருவி இசைப்போராகவும், பாடுவோராகவும், ஆடுவோராகவும் இப்பெண் கலைஞர்கள் விளங்கியுள்ளனர்.

**தமிழகத்தில் கூத்துகளின் பிற பிரிவுகள்**

| | |
|---|---|
| வசைக்கூத்து | புகழ்க்கூத்து |
| வேத்தியல் | பொதுவியல் |
| வரிக்கூத்து | வரிச் சாந்திக் கூத்து |
| சாந்திக் கூத்து | விநோதக் கூத்து |
| ஆரியக் கூத்து | தமிழ்க் கூத்து |
| இயல்புக் கூத்து | தேசிக் கூத்து |

குதித்தாடுவது கூத்தெனப்படும் எனுமாறு பலவகையாகத் தமிழறிஞர்கள் உரை செய்து விளக்கியுள்ளனர். எனினும் இன்று நாம் காணும் கூத்துகளில் அவ்வாறான வகைப்பாட்டினைக் காண நேர்வதில்லை. மாறாக, வட்டாரம், இனம், சாதி, சார்ந்த கூத்துகளாகவே அடையாளம் காணமுடிகின்றன.

**சாதி அடிப்படையில் தமிழகக் கூத்துகள்**

**கணியான் கூத்து** : கணியான் சாதியினர் நெல்லை மாவட்டத்தில் ஆடுகின்றனர்.

**தெருக்கூத்து** : வன்னியர் சாதியினர் (காஞ்சிபுரத்தை மையமிட்ட பகுதிகள்); ஆதித்திராவிடர், குறவர், அருந்ததியர், தொம்பர் (சேலம், தருமபுரிப் பகுதிகள்)

**அண்ணன்மார்சாமி கதைக் கூத்து** : கொங்கு வேளாளர் (கவுண்டர்) திருச்சி, கரூர், ஈரோடு, கோவை.

**நார்த்தேவன் குடிகாடு கூத்து; ஆர்சுத்திப்பட்டு கூத்து** : கள்ளர் சாதியினர், (இரட்டை வேடங்களில் பாத்திரங்கள் தோன்றி நடித்தல்) தஞ்சைப் பகுதிகள்.

**இராஜாராணி ஆட்டம் (அ) நாலுபேர் ஆட்டம்** : பறையர் சாதியினர் – மதுரை, தேனி பகுதிகளில் நிகழ்த்துவர்.

கள்ளர் சாதியினர் தஞ்சைப் பகுதிகளில் நிகழ்த்தும் கூத்து மட்டும் சடங்குசார் கூத்துக் கலை வடிவமாக இன்று காண முடிகிறது. பிற யாவும் குறிப்பிட்ட சாதியினரால் சடங்கு நிறைவேற்றும் முகத்தான் கூலி பேசித் தொழில்முறைக் கலைஞர்களால் நிகழ்த்தப் படுபவையாக விளங்குகின்றன.

**ஆட்டங்களை வகைப்படுத்துதல்**

ஆட்டங்களின் வளர்ச்சி நிலைகளாகவே கூத்துகளை நாம் காண்கிறோம். ஆட்டங்கள் யாவும் குறிப்பிட்ட சாதிகளைச் சார்ந்தோராக நாட்டுப்புறங்களில் விளங்கக் காண்கிறோம்.

**ஆண்கள் ஆடும் ஆட்டம்**

**பெண்கள் ஆடும் ஆட்டம்**

**ஆண்பெண் இணைந்த ஆட்டம்**

**இசைக்கருவிகள் இல்லாத ஆட்டம்**

**பாட்டுகள் உள்ளவை மற்றும் பாட்டுகள் இல்லாத ஆட்டம்.**

எனுமாறு நமது நாட்டுப்புற ஆட்டங்களை வகைப் படுத்தலாம். ஆண்கள் மட்டும் ஆடும் ஆட்டங்களாகத் தேவராட்டம், சேவை ஆட்டம் (நாயக்கர் இனத்தில் ஒரு பிரிவு), ஒயிலாட்டம் போன்றவை உள்ளன.

பெண்கள் மட்டும் ஆடும் ஆட்டங்களாகக் கும்மி, கோலாட்டம், மாரடிப்பு ஆட்டம் போன்றவை காணப்படுகின்றன.

ஆண்களும் பெண்களும் இணைந்தாடும் ஆட்டங்களாக நாட்டுப்புறங்களில் காண முடிவதில்லை. தொழிற்கலைஞர்கள் (கூலி பெற்று) ஆண் பெண் என இணைந்து ஆடும் குறவன் குறத்தி ஆட்டத்தினைக் காண முடிகிறது. மலையின மக்களான (நீலகிரி) தோடர், கோத்தர், இருளர் இனத்தார் ஆடும் இனக்குழு மக்கள் ஆட்டங்களில் ஆண் பெண் எனக் குழும நிலையில் இணைந்து ஆடக் காணமுடிகிறது. இனக்குழு மக்கள் எனும் நிலையிலிருந்து சாதிகளாக வளர்ச்சி பெற்றுள்ள மக்களிடையே ஆண்கள் பெண்கள் இணைந்தாடக் காண முடிவதில்லை. நாகரிக வளர்ச்சி கோயில்சார் கலாச்சாரம் போன்றவற்றால் ஆட்டங்கள் ஆண் பெண் என இணைந்தாடப்படவில்லை. உடைமைச் சமூகமாக மாறிய வேளைகளில் இம்மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன எனக் காண முடிகிறது.

கும்மி எனும் பெண்களாடும் ஆட்டத்தில் கை கொட்டும் முறையே தாளம் என அமைந்து இசைக் கருவியில்லாத ஆட்டமாக அமைகிறது. இதுபோன்றே கோலாட்டம் என்பதும் வட்ட வடிவம் கொண்டது. பெண்கள் தனித்தும் ஆண்கள் தனித்தும் இது ஆடப் படுகிறது. கோல்களே இசைக்கருவிகளாக இடம்பெற்றுள்ளமையை இங்கு நினைவுகூரலாம்.

பெண்கள் ஆடும் ஆட்டங்களான கும்மி மற்றும் கோலாட்டம் போன்றவற்றில் ஆடுவோரே முன்பாட்டு மற்றும் பின்பாட்டு எனும் முறைகளில் குழும நிலையில் பாடிக்கொண்டு ஆடுவதைக் காணமுடிகிறது. ஆண்கள் ஆடும் ஒயிலாட்டம், ஒயில் கும்மி ஆட்டம் போன்ற ஆட்டங்களில் முன்பாட்டு மற்றும் பின்பாட்டு முறைமையில் குழும நிலையில் ஆடக் காணமுடிகிறது.

**காலோடு காலு ஒரசிடாமே – ஒங்க**
**கால்மணிக் கச்சம் சிதறிடாமே**
**மேலோடு மேலு ஒரசிடாமே – ஒங்க**
**மேனியின் வேர்வை சிதறிடாமே**

என்று முன்பாட்டினை ஒருவர் 2 வரிகள் பாடப் பாடிய பாடலின் அதே 2 அடிகளை அவ்வாறே பின் பாட்டுக்காரர்கள் பாடி ஆடுவர். ஆமா, போடு, அப்படி, இப்படி, தா, வாங்கு எனும் சொற்களைப் பின்பாட்டுக்காரர்கள் இணைத்துப் பாடிக் கொள்வது மரபாகும்.

**தானாதன்னை தான தன்னை**
**தானாதன்னை தான தன்னை**

எனும் இசைக்குறிப்பு கும்மி ஆட்டத்தில் இடம்பெறும் தொன்மையானதாகும். வட்டாரத்துக்கு வட்டாரம் ஆடப்படும் கும்மி ஆட்டங்களில்

**தந்தன தன்னானே – னானே**
**தந்தன தன்னானே**
**தந்தன தந்தன தந்தன – தந்தன**
**தந்தன தன்னானே**

என்னும் பலவகைச் சந்தங்களில் இசைக் குறிப்புகளின் அடி நிலையில் பாடல்கள் பாடப்பட்டு ஆட்டங்கள் ஆடப்படுவது இயல்பு.

'த'கரம் "தா தா தைதோம் தா"

'ன'கரம் "னானே னன்னே"

'ர'கரம் "ராரிரரோ ராரா ரோ"

'ல'கரம் "லாலே லாலீ லாலாலே"

என்பன போன்ற த, ன, ர, ல எனும் எழுத்துகளில் நாட்டுப்புற இசைக் குறிப்புகள் அடித்தளங்களாக அமைகின்றன. நாட்டுப்புற இசைக்கான இசைக்குறிப்பு (Musical Notation) உருவாக்கத் தகரம், னகரம், லகரம், ரகரம் போன்றவை ச,ரி,க,ம,ப,த,நி,ச எனும் செந்நெறி இசை ஆதார எழுத்துகள் போலத் துணை செய்ய வல்லன என ஆய்வுலகம் கருதி ஆய்வு மேற்கொள்ள இடமுண்டு.

**இசைக் கருவிகள்**

தவில், நாதசுரம், பம்பை, உறுமி, தமுக்கு, தாளம் (சால்ரா) ஆகிய இசைக்கருவிகள் இணைந்து வாசிக்கும் இசைக்கு நையாண்டி மேள இசை என்றும் நையாண்டி மேளச் செட்டு என்று குழுவினரையும் அழைக்கின்றனர். உறுமி எனும் தோலிசைக் கருவி 14ஆம் நூற்றாண்டில் நாயக்கர்கள் வருகையின்போது இடம்பெற்றிருந்த ஒரு தோலிசைக் கருவியாகும். இக்கருவியை வாசித்தவர் அருந்ததியினர். இவர்கள் தாழ்த்தப்பட்ட சாதியினராகையால் பறையர் பள்ளர் குடியிருப்பினை ஒட்டிக் குடியமர்த்தப்பட்டுள்ளனர்.

உடுக்கை, குடுகுடுப்பை, மகுடி, புல்லாங்குழல், கத்தக்குழல், சங்கு, கால்மணிக் கச்சம், குடத்தாளம், மட்டையடித்தாளம், செகண்டி, பறை, பெரியமேளம், ஜிம்பலாக்கொட்டு, பானைத் தாளம் போன்ற இசைக் கருவிகள் தமிழகத்தில் பல்வேறு ஆட்டங்களில், பாடல்களுக்கான இசை மற்றும் தாளம் தரும் இசைக்கருவிகளாக உள்ளன.

1. குழல் இசைக் கருவி
2. நரம்பிசைக் கருவி
3. தோலிசைக் கருவி
4. துணை இசைக் கருவி
5. குரல் (Vocal)

எனுமாறு ஐவகையில் நாம் அவற்றை அடக்கிக் காணமுடியும். வில்லிசை, உடுக்கை போன்ற இசைக்கருவிகளில் நரம்பு

பயன்படுத்தப்பட்டாலும் நரம்பு இசைக் கருவியாக மட்டும் கணக்கிட இயலாத நிலை உள்ளது. நரம்பிசைக் கருவி தனித்த நிலையில் நாட்டுப்புற இசைக்கருவிகளில் தமிழகத்தில் காண முடியவில்லை.

### ஆடல் முறைகள்

தமிழக நாட்டுப்புற ஆட்டங்களில் காணும் ஆட்டமுறைகளைப் பொதுவாகக் கீழ்வருமாறு வகைப்படுத்தியும் பகுப்பாய்வு செய்தும் கூறுபடுத்தி விளக்கிட வழிவகை செய்வதாக அமையும்.

* அமர்ந்தாடுதல் * சுழன்றாடுதல்
* நின்றாடுதல் * தவழ்ந்தாடுதல்
* உருண்டாடுதல் * குதித்தாடுதல்
* வீழ்ந்தாடுதல் * கை இணைந்தாடுதல்
* கை கொட்டி ஆடுதல் * கைவீசி ஆடுதல்
* எத்தி ஆடுதல் * குனிந்தாடுதல்
* பின்னக்கால் ஆட்டம் ஆடுதல்

என்பன போன்ற ஆடல் முறைகள் இன்று நாம் காணும் ஆட்டங்களில் காணமுடிகிறது. குறவன் குறத்தி ஆட்டத்தில் குறவனும், குறத்தியும் எதிரெதிராக நின்றும் அமர்ந்தும் ஆடுகின்றனர். கரகாட்டத்தில் கரகத்தைத் (குடக்கூத்து) தலையில் கை தொடாதவாறு வைத்த நிலையில் நின்ற இடத்திலேயே வலப்புறம் சுழன்று ஆடுவர். ஒயிலாட்டத்தில் நின்றாடல் முறை முதன்மை இடம்பெறுகிறது. பாம்பு நடனம் ஆடும்போது மகுடி இசை வாசிப்புக்கேற்ப ஆடும் முறைகளில் தவழ்ந்தாடும் முறை பெரிதும் நிகழ்த்தக் காண முடிகிறது. உருண்டாடல் முறை ஆட்டமும் பாம்பு நடனத்தில் நிகழ்த்தக் காணலாம்.

### பாடல்கள் இடம்பெறல்

தமிழக நாட்டுப்புறக் கலைகளில் ஆட்டங்கள், கூத்துகள், இசை நாடகங்கள் போன்றவற்றில் பாடல்கள் இடம் பெறுகின்றன.

தொழிற்களப் பாடல்கள்

சடங்கு முறைப் பாடல்கள்

கதைப் பாடல்கள்

கொண்டாட்டப் பாடல்கள்

என வகைப்படுத்தலாம். தொழிற்களப் பாடல்களில்

ஏற்றப் பாடல்கள்

நடுகைப் பாடல்கள்

களையெடுப்புப் பாடல்கள்

கதிர் அறுவடைப் பாடல்கள்

வண்டிக்காரன் பாடல்கள்

எனப் பலவகை உள. இவை விவசாயத் தொழில் தொடர்பான பல பிரச்சினைகளை வாழ்வியலோடு இணைந்து வெளிப்படுத்தக் கூடியவையாக விளங்கும். ஒவ்வொரு தொழிற்களப் பாடல்களும் தொழில் தன்மைகளுக்கேற்ப வேறுபடுவதோடு அவை வட்டாரத் தன்மைகளுக்கேற்பவும் வேறுபடக்கூடியவை. வட்டார மொழியால் வட்டார இசைத்தன்மையால் அவை பல வகைப்பாடு பொருள்களைக் கொண்டமையும். சடங்குமுறைப் பாடல்கள் தொல்குடிச் சமூகம் தொடங்கி இன்றைய சமூகம்வரை வேறுபட்ட முறைகளில் சடங்கு முறைகளை வாழ்வில் மேற்கொண்டு வருகின்றனர்.

தொன்மைக் கதைகளும் வாழ்வியல் கூறுகளும் கொண்டவையாக நமது தமிழ் நாட்டுப்புறச் சடங்கு முறைப் பாடல்கள் அமைவது இயல்பு. சாமிக்குச் சாமி, சாதிக்குச் சாதி, மதத்துக்கு மதம், வட்டாரத்துக்கு வட்டாரம், நிலத்துக்கு நிலம் என அவை வேறுபடும்.

**ஒருமலை நாதா உச்சிமலை – நாதா**
**உச்சிமலை – நாதா**
**ஒசக்கே நிக்கும் சாமிநாதா சாமிமலை – நாதா**
**சாமிமலை – நாதா**

**எந்த எந்த நாதா மலையச்சுத்தி – நாதா**

**எறக்குவேனே திசிகன் காவடியை**

எனக் குன்றிலிருக்கும் முருகனை எண்ணிப் பாடும் சடங்குமுறைப் பாடல் ஆகும்.

**என்னரசே பொன்னரசே – அப்படி**
**என்ன சொல்லி கண்ணசந்தே**
**ஆத்தாடியோ அப்பாடியோ**
**ஆத்தாடியோ அப்பாடியோ**

எனச் சாவுச் சடங்கில் பாடும் பாடல் இராமநாதபுரம், சிவகங்கை மாவட்டப் பகுதிகளில் விளங்கும். கன்னியாகுமரி நாகர்கோவில் பகுதிகளில் பிணத்தை முன்வைத்து மார்புகளில் அடித்து இறந்தவரின் புகழ் பாடி ஆடும் மாரடிப்புப் பாடல் என்பது தாயாரடிப் பாடல் என வழக்கில் கூறப்படுகிறது. பிறப்பு முதல் இறப்பு வரை உள்ள சடங்குமுறைகளில் பல்வேறு வகையான தெய்வங்களை எண்ணிச் சடங்கு நிறைவேற்றும் முகத்தான் பாடப்படும் பாடல்களாகப் பல உள்ளன.

### கதைப் பாடல்கள்

தேசிங்கு ராசன் கதைப்பாடல், மதுரைவீரன் கதைப்பாடல், கட்டபொம்மு கதைப்பாடல், ஐவர் ராசாக்கள் கதை, மைக்கேலம்மன் கதை, மணிக்குறவன் கதை எனப் பல்வேறு வட்டாரங்களில் நாயகர்களாக விளங்கியவர்களின் கதைகளைப் பாடும் கதைப் பாடல்கள் உண்டு. இக்கதைப்பாடல்கள் வில்லுப்பாட்டின் கலைவடிவத்திலும், உடுக்கடிக் கதைப்பாடலிலும், சாமியாட்டம், பேயாட்டம் என்பதான பல வகைகளிலும் பாடப்படுகின்றன.

தொன்மைசார் கதைகளும், வரலாற்றுக் கதைப்பாடல்களும் இடம்பெறுவதோடு அண்மைக் காலங்களில் உருப்பெற்ற மைக்கேலம்மா கதைப்பாடல், தனுஷ்கோடி அழிந்த கதைப்பாடல் என நகர்சார் கதைப்பாடல்களும், மலையினக் கதைப் பாடல்களும், மக்களிடம் பாடக் காணமுடிகிறது.

**கேளிக்கைப் பாடல்கள்**

அறுவடைக் காலங்களில் அம்மன் தொடங்கிப் பலவகையான குலதெய்வங்கள் மற்றும் பல தெய்வங்கள் சார்ந்த விழாக் குறவன் குறத்தி ஆட்டம், சேவையாட்டம், ஒயிலாட்டம், கும்மி ஆட்டம் என்பன போன்ற பல வகையான கலைநிகழ்ச்சிகளின்போது,

**சாலை நல்லாக் கடந்து வாடி – புள்ளே**
**சந்தைப் பேட்டை தாண்டி வாடி**
**ஓடை நல்லாக் கடந்து வாடி – புள்ளே**
**ஓடிப் போவோம் தஞ்சாவூரு.**

என்பன போன்ற கேளிக்கைப் பாடல்கள் பல விழாக்களில் கொண்டாடப்படும்போது சாமி வரலாறு குறித்த கதைப்பாடல்கள் பல இடம்பெறக் காணலாம்.

**ஊடகங்களில் நாட்டுப்புறக் கலைகள்**

ஊடகங்களில் இன்று நாட்டுப்புறக் கலைகள் பல உள்வாங்கப்பட்டுக் காட்டப்படுகின்றன. பாடல்கள், இசை வகைகள், நாட்டுப்புறக் கதைகள், நாட்டுப்புற வாழ்வியல் நிகழ்ச்சிகள், வட்டார மொழிநடைகள், உடைகள், பழக்க வழக்கங்கள் எனப் பல நிலைகளில் நேரிடையாகவும், தழுவிய நிலையாகவும், மறைமுகமாகவும் மேற்குறிப்பிட்ட நாட்டுப்புற வழக்காறுகள் காட்டப்படுகின்றன. நாட்டுப்புற மக்களின் பாடல்கள், கதைகள் போன்ற விழுமியங்களை எடுத்தாளும் ஊடகங்களை எடுத்தாளும் ஊடகவியலாளர் வழியே நாட்டுப்புற மக்களின் பண்பாட்டுச் செய்திகள் பலராலும் அறியப்படுகின்றன என மனங்கொள்கின்ற போதிலும் அவர்களுக்கான அங்கீகாரம், சமூக மதிப்பு நிலைகள் போன்றவற்றை எவ்வகையில் தந்து நாட்டுப்புற மக்களுக்கு ஊடகவியலார் துணைநல்குகின்றனர் என்பது குறித்து அதிகம் சிந்திக்க வேண்டியதாக உள்ளது. சொத்து அபகரிப்பு, நாட்டுப்புற மக்கள்தம் உழைப்புகள் சுரண்டப்படுதல் எனும் விமர்சனங்கள் குறித்து நாட்டுப்புற ஆய்வாளர்கள் முன்வைக்கும் பிரச்சினைகள் புதிதாக எழுகின்றன.

**சங்கமத்தில் நாட்டுப்புறக் கலைகள்**

அரசியல் நடவடிக்கைகளுக்காகவும், அரசு விழாக்கள் நடத்துவதற்காகவும் தமிழகத்தில் கடந்த மூன்று ஆண்டுகளாக நடைபெற்றும் வரும் சென்னை சங்கமம் நிகழ்ச்சிகளுக்காகவும், சினிமாக்களுக்காகவும் எனும் பலவித நோக்கங்களில் நாட்டுப்புறக்கலைகள் நடத்தப் படுவதால் நாட்டுப்புறக் கலைஞர்கள் சடங்குமுறைக் கலைஞர்கள் எனும் நிலையிலிருந்து மெல்லமெல்லத் தொழிற் கலைஞர்களாக ஆக்கப்பட்டு வருகின்றனர். தொழிற் கலைஞர்களாக இருப்போர் மனநிலைகளில் நவீனத் தாக்கங்கள் மண் சார்ந்த தன்மைகளிலிருந்து வேறுபடுகின்றன.

பார்வையாளர்கள் இரசிக்கும் விதங்கள், ஊடகங்களில் நாட்டுப்புறக் கலைகள் பெறும் செல்வாக்கு நிலைகள், நாட்டுப்புறக் கலைகள் சந்தைப் பொருள்களாக மாறும் விதங்கள், நாட்டுப்புறக் கலைஞர்கள் நிறைய வாய்ப்புகளைப் பல நிலைகளில் பெறுவதால் புதிய புதிய நாட்டுப்புறக் கலைஞர்களின் வருகைகள், நாட்டுப்புறக் கலைஞர்களில் நிகழ்த்து முறைகளில் ஏற்படும் நவீனத்துவங்களின் தாக்கங்கள் எனப் பல நிலைகளில் ஆய்வுகள் நிகழ்த்த வேண்டிய தேவைகள் உள்ளன.

உலகமயமாதலினால், நவீனத்துவங்களின் தாக்கங்களினால் மண்ணின் கலைகள் பல பிரச்சினை களை எதிர்கொண்டுள்ளன.

**நாட்டுப்புறக் கலைகளின் நலிவு**

நாட்டுப்புறப் பாடல்கள், கதைகள், கலை நிகழ்ச்சிகளில் ஊடகங்கள் செலுத்தும் செல்வாக்குகளினாலும், நவீனத் தொழில் நுட்பங்கள் விவசாயத் தொழில்களில் ஆதிக்கம் செலுத்துவதானாலும் அவை கொள்ளும் மாற்றங்கள் விரைந்த நிலையில் ஏற்படுகின்றன. ஏற்றம் இறைக்கும் தொழில் தந்த ஏற்றப் பாடல்கள் இன்று மின்சார இறவை (பம்ப் செட்) இயந்திரம் வந்தமையால் காணாமல் போயுள்ளன. நடுகைப் பாடல், கதிர் அறுவடைப் பாடல் போன்ற பல பாடல்கள் இன்று இழந்துபட்டு வருகின்றன. கூத்துகள், நாடகங்கள் போன்றவை நாட்டுப்புறங்களில் நடத்தப்படுவதற்குப் பதிலாகத் தொலைக்காட்சிச் செல்வாக்கினால் திரைப்படங்கள் மற்றும் சினிமாப் பாட்டுக் கச்சேரிகள், சினிமா நடனங்களின் தாக்கங் களினால் புதிதாய் உருப்பெற்ற நடனக்குழுக்கள் போன்ற கலை நிகழ்ச்சிகள் இடம்பெற்றுவருகின்றன. நாட்டுப்புறக் கலைகளுக்கும் கலைஞர்களுக்கும் ஒரு புறம் வேலை வாய்ப்புகள் உருவாயினும் மேற்கூறிய காரணங்களால் தொழில் வாய்ப்புகள் பறிபடும் சூழல்களும் உருவாகி வருகின்றன.

நாட்டுப்புறக் கலைகள் நமது மரபுச் செல்வங்கள் நமது பண்பாட்டின் அடையாளங்கள், பாடல்கள், கதைகள் வழியே கலை இலக்கிய உருவாக்கத் திறன்கள் (Creative) வளர்த்திடும் ஊற்றுக் கண்கள் விலைமதிப்பில்லா வியர்வையில் உதித்த கலைகளைக் காப்பதில் பெருமிதம் கொள்வோம். ❖

# பழந்தமிழிசையும் இன்றைய இசையும்

முனைவர் அரிமளம் சு.பத்மநாபன்



"பழந்தமிழ் மக்கள் அந்நாள்
பறவைகள் விலங்கு, வண்டு,
தழை மூங்கில் இசைத்ததைத் தாம்
தழுவியே இசைத்த தாலே
எழும் இசைத் தமிழே!"

என்பர் பாவேந்தர் பாரதிதாசன். உலக இசை வரலாற்றினை மிகவும் நுணுகி ஆராய்ந்தால் இப்புவியுலகில் தொல்பழங் காலத்திலேயே நுணுக்கமான இசையறிவு பெற்றுத் திகழ்ந்தவர்களாகத் தமிழர்கள் விளங்கினர் என்ற உண்மையை உணர முடியும். பிற நாடுகளில் இசைக் கலை நாட்டுப்புற இசையின் தன்மையைப் பெற்றிருந்த காலத்திலேயே தமிழ் இசை மிகவும் உயர்ந்த நிலையைப் பெற்றிருந்தது. பண்டைக்கால ஆரியர்களும், எகிப்தியர்களும், ஈபுரு இனத்தவரும் உயர்ந்த நேர்த்தியான இசை வடிவத்தைப் பெறுதற்கும் முன்னரே, பண்டைத் தமிழகம் அறிவியல் அடிப்படையில் மிகவும் உறுதியான தலைசிறந்த வளர்ச்சியுற்ற இசை முறைமையைத் தன்னகத்தே கொண்டிருந்தது. இவ்விசை முறைமை இந்தியத் துணைக்கண்ட நாடுகள், சீனா, ஜப்பான், பாரசீகம், அரேபியா, கிரீசு ஆகிய நாடுகளின் இசை முறைமைகளிலும் பெருஞ் செல்வாக்கைச் செலுத்தித் தாக்கங்களை ஏற்படுத்தியிருந்தது. பித்தகோரசு தம்முடைய இசையறிவை இந்தியாவிடமிருந்தே பெற்றார் என்று ஸ்ட்ராபோ கூறுகின்றார். பித்தகோரசு கி.மு. ஐந்தாம் நூற்றாண்டில் இந்தியாவிற்குப் பயணம் மேற்கொண்டிருந்தார்.

குரல் திரிபு முறையின் அடிப்படையில் பண்களை உருவாக்கும் முறையைத் தமிழர் ஈராயிரம் ஆண்டுகளுக்கும் முன்னரே அறிந்து வைத்திருந்தனர். மூர்ச்சனைகளும் பாலைகளும் இவ்வடிப்படையிலேயே பெறப்பட்டன. இதற்கான அடிப்படைச் சான்றுகள் பண்டைக்கால கிரேக்கர்கள் இம்முறையிலேயே தங்கள் இசை வடிவங்களைப் பெற்றனர்.

பித்தகோரியன் பாலை என்பது இன்றைய இசையில் தேவகாந்தாரி என்று அழைக்கப்படும் பண்ணின் இறங்கு நிரலை (அவரோகணம்) ஒத்ததே யாகும். மேலும், கணிதவியலில் பித்தகோரசு உருவாக்கிய குறியீடான $\pi$ என்பதன் மதிப்பு 22/7 ஆகும். அவருக்குத் தமிழிசையின் சுரவியலே இதற்கான அடிப்படையாக இருந்திருக்கக்கூடும் என்பது அறிஞர்களின் கருத்தாகும். இசையியலில் 7 எண்ணிக்கை ஏழு சுரங்களையும் 22 எண்ணிக்கை ஏழு சுரங்களுக்கான 22 அலகுகளையும்(சுருதிகள்) குறிக்கும். சுரங்களின் ஒலி அதிர்வுகளின் கணக்கீடே சுருதி எனப்படும். சுரங்கள், சுருதிகள் பற்றிய விளக்கங்கள் சிலப்பதிகாரத்தில் ஆங்காங்கே நுணுக்கமாகத் தரப்பட்டுள்ளன. 'மகரத்தின் ஒற்றால் சுருதி விரவும்' என்னும் பழம்பாடல் அடியின் மூலம் சுருதி தமிழ்ச் சொல்லே என்பது விளங்கும்.

இன்றைக்கு மோகனம் என்று வழங்கப்படும் தமிழரின் முதல் பண்ணான முல்லைப் பண்ணே சீனா, ஜப்பான், ஜாவா, பசிபிக் தீவுகள் ஆகிய நாடுகளிலும், ஸ்காட்ச் இசை, செல்டிக் நாட்டுப்புற இசை வடிவங்களிலும் காணப்படுகிறது. ஆப்பிரிக்க இசையிலும் அமெரிக்க இந்தியர்களிடமும்கூட இப்பண் காணப்படுகிறது. உலக அளவில் இந்த இசை வடிவம் விளங்குவதற்கு இப்பண்ணில் ஐந்தன் தொடர்பில் (Cycle of the fifth) அமைந்துள்ள சுரங்களின் (நரம்புகள்) குரல்(ச) – இளி (ப) உறவே (சட்ஜ பஞ்சம பாவம்) அடிப்படையாகும்.

மிகவும் தொன்மையான காலத்திலேயே அயல் நாட்டு இசையின் மீது இந்திய இசை மிகுந்த செல்வாக்குச் செலுத்தி வந்தது. கிரேக்கர்கள் பெரும்பாலும் அவர்களின் இசையியலுக்கு இந்தியாவையே நாடியிருந்தனர் என்று ஸ்ட்ராபோ என்பார் குறிப்பிடுகின்றார். மகா அலெக்சாந்தர் ஒரு தென்னிந்திய இசைவாணரைத் தம்முடன் கிரேக்கத்திற்கு அழைத்துச் சென்றார். இவர் குறிப்பிடும் இந்திய இசை, அடிப்படையில் தமிழ் இசையே என்பது உள்ளங்கை நெல்லிக்கனி.

**தமிழ் இசையின் தொன்மை**

தொல்காப்பியக் காலத்திற்குப் பல நூற்றாண்டுகட்கு முன்னரே தமிழர் கலை, இலக்கியம், பண்பாடு, நாகரிகம் ஆகிய அனைத்திலும் சிறந்து விளங்கினர். ஆரியர் வருகைக்கு முன் இமயம் முதல் குமரிவரை இந்தியா முழுவதும் நிறைந்திருந்த திராவிட இன மக்கள் மொகஞ்சதாரோ, அரப்பா பண்பாட்டினைக் கட்டிக் காத்தவர்கள் என்பதும் சிந்து சமவெளி நாகரிகம் திராவிட

தலையாயது தமிழ் மொழியே என்றும் உலக அறிஞர்கள் பலராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. திராவிட இந்தியா முழுவதிலும் அவர்தம் இசையும் யாழும் குழலும் பிற கருவிகளும் இருந்து வந்தன என்பதனைக் கல்வெட்டு ஆராய்ச்சியாளர்களும் தொல்பொருள் ஆராய்ச்சியாளர் களும் உறுதிப்படுத்தி வருகின்றனர். பல்வேறு வரலாற்று நிகழ்வுகள், இயற்கைச் சீற்றங்கள் ஆகியனவற்றின் விளைவாக, இறுதியில் இந்தியாவின் தென்பகுதியைத் தம் வாழ்விடமாகக் கொண்ட தமிழ்ச் சமூகம் வரலாற்றுக் காலத்திற்கு முன்னரே கலை, இலக்கியத்தில் மிகவும் தேர்ச்சி பெற்று விளங்கியதுடன் சிறந்த நூல் முறைமையையும் இலக்கணத்தையும் பெற்று இயல், இசை, நாடகம் என மூவகைத் தமிழுக்கும் பல்வேறு நூல்களைப் படைத்திருந்தனர் என்பது கற்பனையன்று. இவை குறித்த பல செய்திகளுக்குச் சான்றுகளாகவே தொல்காப்பியம் முதலான பண்டைத் தமிழ் நூல்கள் திகழ்கின்றன. அவற்றின் வழி தமிழ் இசையின் தொன்மையை அறிய முடியும்.

உலகில் மொழி உருப்பெறுவதற்கும் முன்னரே இசை பிறந்துவிட்டது என்பது பரிணாம வளர்ச்சித் தத்துவத்தின் அடிப்படையிலானது. மனிதன் முதன் முதலில் தன் உணர்ச்சிகளை வெளிப்படுத்தப் பயன்படுத்தியது உடல் மொழி (Body Language). அதுவே நாடகக் கலைக்கு அடிப்படையாக அமைந்தது; அடுத்துப் பிறந்தது இசைமொழி. அதற்குப் பின்னர் தான் மொழி தோன்றி, இயலும் பாடலும் பிறந்தன. இவ்வடிப்படையில் தமிழைவிடத் தமிழிசை மிகவும் தொன்மையானது என்பது வெள்ளிடைமலை. தொல்பழங்காலத்தில் இசைக்கலை சீருடனும் சிறப்புடனும் விளங்கியதற்குத் தொல்காப்பியமே சான்று பகர்கின்றது.

தொல்காப்பியர் காலத்திற்கு முன்னரே பாணர்கள் தமிழகத்தில் நிலைபெற்றிருந்தனர் என்றும், பாணர் மூலம் தலைவியின் ஊடலைத் தீர்ப்பது முந்தையோர் கடைப்பிடித்த வழக்கம் என்றும் கீழ்க்காணும் தொல்காப்பிய நூற்பா அறிவுறுத்தும்.

**பாணன் கூத்தன் விறலி பரத்தை**
**யாணஞ் சான்ற அறிவர் கண்டோர்**
**பேணுதகு சிறப்பிற் பார்ப்பான் முதலா**
**முன்னுறக் கிளந்த அறுவரொடு தொகைஇத்**
**தொன்னெறி மரபிற் கற்பிற்குரியர்.**

**(செய்யுளியல் – 182)**

பின் வரும் நூற்பாக்கள் மூலம் தொல்காப்பியர் காலத்திலும் அதற்கு முன்பும் தமிழ்நாட்டில் இசை, இசைக் கலைஞர்கள், நாடகம், நாட்டியம், இசைக் கருவிகள் சிறந்து விளங்கிய பாங்கினை அறியலாம்.

**தாவி னல்லிசை கருதிய கிடந்தோர்க்கு**
**சூதர் ஏத்திய துயிலெடை நிலையும்**
**கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்**
**ஆற்றிடைக் காட்சி யுறழத் தோன்றி...**

**(புறத்திணை – 29)**

**தெய்வ முணாவே மாமரம் புட்பறை**
**செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ**
**அவ்வகை பிறவுங் கருவென மொழிப.**

**(அகத்திணை – 20)**

**நாடக வழக்கினு முலகியல் வழக்கினும்**
**பாடல் சான்ற புலனெறி வழக்கங்**
**கலியே பரிபாட் டாயிரு பாவினு**
**முரிய தாகு மென்மனார் புலவர்.**

**(அகத்திணை – 56)**

இந் நூற்பாக்களில், 'மொழிப', 'என்மனார் புலவர்' எனக் குறிப்பிடப்பட்டிருப்பதன் மூலம் இவற்றின் தொன்மையினை உணரலாம்.

தமிழ் இசையின் தொன்மை குறித்து மேலும் சில செய்திகளைத் தொல்காப்பியம் முதலான பண்டைத் தமிழ் நூல்கள் மூலமும் உரையாசிரியர்களின் உரை மேற்கோள்கள் மூலமும் அறியலாம்.

**அளபிறந் துயிர்த்தலும் ஒற்றிசை நீடலு**
**முளவென மொழிப விசையொடு சிவணிய**
**நரம்பின் மறைய வென்மனார் புலவர்."**

**(எழுத்.33)**

'நரம்பின் மறை' என்பது இசை இலக்கணம் பற்றிய நூலைக் குறிக்கும். தொல்காப்பியர் காலத்துக்கு முன்னரே இசைத்தமிழ் நூல்கள் இருந்தன என்பதற்கு இந்நூற்பா ஒரு நற்சான்று. நரம்பு என்ற சொல் சுரத்தைக் குறிப்பது. இங்கு, நரம்பு என்ற சொல் இசையையும் யாழையும் குறிக்கும். எனவே, நரம்பின் மறை என்பது இசைக்கலை பற்றிய ஒரு பெருநூல் என்பது தெளிவு.

## சங்க இலக்கியமும் இசையும்

பண்டைக் காலத் தமிழர்களின் இசை வாழ்க்கை, பண்கள், இசைக் கருவிகள், இசைக் கலைஞர்கள், இசைப் பாடல்கள் பற்றிய ஏராளமான குறிப்புகள் சங்க இலக்கியத்தில் பரவலாகக் காணப்படுகின்றன. தொல்காப்பியத்திலும் சங்க இலக்கியத்திலும் காணப்படும் இசைச் செய்திகளே சிலப்பதிகாரத்தில் தமிழிசை இலக்கணம் குறித்த ஆழமான செய்திகளை இளங்கோவடிகள் பதிவு செய்ய அடிப்படையாக விளங்கியிருக்கக் கூடும்.

இன்றைய, இந்திய இசை, கருநாடக இசை என வழங்கப்படும் தென்னிந்தியச் செவ்விசை ஆகிய இசைகளுக்கெல்லாம் அடிப்படை பழந்தமிழிசையே என்பதற்கு ஆதாரமாக விளங்குவது சிலப்பதிகாரமே யாகும். மேலும், இசைத்தமிழின் கருவூலமாக விளங்கும் பக்தி இலக்கியங்களான தேவார, திவ்வியப் பிரபந்தங்களுக்கும் முன்னோடி சங்க இலக்கியமே என்பதையும் நினைவில் கொள்ள வேண்டும். பக்தி இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள பண்கள் , இன்றைய கருநாடக இசையில் வழங்கப்படும் இராகங்கள், இசைக்கருவிகள் ஆகியவற்றின் இலக்கணங்களைச் சங்க இலக்கியத்தில் பரவலாகக் காண

முடிகிறது. இதன் மூலம் நம் இசையின் தொன்மையையும் தனிச் சிறப்பையும் வளமையையும் அறிய இயலும்.

இசைக் கலைஞர்களற்ற சமூகம் நல்ல சமூகமில்லை என்பதே பழந்தமிழரின் கருத்து என்பதனைக் கீழ்க்காணும் புறநானூற்று அடிகள் தெளிவாக்குகின்றன.

**துடியன் பாணன் பறையன் கடம்பனென்**
**றிந்நான் கல்லது குடியு மில்லை**

(புறம். 335)

## புறநானூற்றுக் காட்சி

போரிலே பெரும் விழுப்புண் பெற்ற தலைவனைக் காப்பதற்கு வருமாறு தோழியை அழைக்கும் தலைவி, அவனை வரவேற்கச் செல்லும் பொழுது பல்வகை இசைக் கருவிகளோடு யாழ் முழங்கவும், மணிகள் இசை முழங்கவும், ஆம்பல் குழல் ஊதியும், காஞ்சி பாடியும் ஆடுவோம் என்று தோழியிடம் கூறுகின்றாள். இவ்வாறு வாழ்க்கையின் ஒரு பகுதியாக இசை விளங்குவதையும், ஒருவரோ பலரோ பாடல்களைப் பாடப் பலர் அதற்கேற்ப பக்க வாத்தியங்களை இசைக்கவும் கூடிய இசை நிகழ்ச்சி இக்கால இசை யரங்கிற்கு ஒப்ப நிகழ்வதையும் பின் வரும் புறநானூற்றுப் பாடல் காட்சிப்படுத்துகின்றது.

பாடல்: 281 திணை: காஞ்சி துறை: பேய்க் காஞ்சி

பாடியவர்: அரிசில் கிழார்

**தீங்கனி யிரவமொடு வேம்பு மனைச்செரீஇ**
**வாங்குமருப் பியாழொடு பல்லியங் கறங்கக்**
**கையபய் பெயர்த்து மையிழு திழுகி**
**ஐயவி சிதறி ஆம்பல் ஊதி**
**இசைமணி எறிந்து காஞ்சி பாடி**
**நெடுநகர் வரைப்பிற் கடிநறை புகைஇக்**
**காக்கம் வம்மோ காதலந் தோழி**

( வாங்குதல் = வளைத்தல். மருப்பு = யாழின் கோடு / யாழின் தண்டுப் பகுதி)

இதுபோன்று பண்டைத் தமிழரின் இசையோடு இயைந்த வாழ்க்கை , இயற்கையில் இசை காணும் பண்பு ஆகியன பற்றிய குறிப்புகள் சங்க நூல்களில் பரவலாகக் காணப்படுகின்றன.

காற்றின் ஓசை குழலுக்கும், வண்டின் ஓசை யாழுக்கும், அருவியின் ஓசை முழவிற்கும் இப்பாடலில் ஒப்பிட்டிருப்பது போன்ற இதே பண்பினை சங்க இலக்கியம் அனைத்திலும் மட்டுமின்றித் தொடர்ந்து காப்பிய நூல்களிலும் பக்தி இலக்கியங்களிலும் இடைக்கால நூல்களிலும் காண முடியும். மேலும் பிற்காலத்தில் பாரதியார், பாரதிதாசன் பாடல்களிலும் இதனைக் காணலாம்.

## இசைக் கருவிகள்

தோற்கருவிகள் (Percussion Instruments), காற்றுக் கருவிகள் (Wind Instruments), நரம்புக் கருவிகள்(String Instruments), கஞ்சக் கருவிகள் (Bell metal Instruments) எனச் சங்க நூல்களில் பல்வகை இசைக் கருவிகள் குறித்தும் பரவலாகப் பல்வேறு செய்திகள் இடம் பெற்றுள்ளன. அக் கருவிகள் நாகரிக வளர்ச்சி, அறிவியல் முன்னேற்றம் ஆகியன வற்றின் விளைவாகப் பெற்ற உருமாற்றங்களும் வளர்ச்சி நிலைகளுமே இன்றைக்கு நம்மிடையே வழங்கி வரும் பல்வேறு இசைக் கருவிகளாம் என்பதில் ஐயமில்லை. தமிழ் நாட்டின் வரலாற்று நிகழ்வுகளின் அடிப்படையில் அவற்றின் பெயர்களிலும் மாற்றங்கள் ஏற்பட்டன. யாழ் வீணையாகவும், முழவு மிருதங்கமாகவும், பெருவங்கியம் நாதஸ்வரம் எனவும் உரு மாறியதை எடுத்துக் காட்டாகக் கொள்ளலாம்.

இனி, சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள இசைக் கருவிகளைக் காண்போம்.

**தோற் கருவிகள்:** தண்ணுமை, முழவு, தட்டை, முரசு, பறை, தொண்டகச் சிறுபறை, கிணை, பதலை, துடி, தடாரி, எல்லரி, ஆகுளி, மத்தரி, சில்லரி, பம்பை, குளிர்.

**கஞ்சக் கருவிகள் :** பாண்டில் , சிறுமணிகள்

**நரம்புக் கருவிகள்:** சீறியாழ், பேரியாழ், வில்யாழ், கருங்கோட்டு யாழ், செங்கோட்டுயாழ் கின்னரம். சங்க இலக்கியத்தில் எவ்விடத்திலும் வீணை பற்றிய குறிப்பு காணப்படவில்லை.

**காற்றுக் கருவிகள்:** குழல், சங்கு, வளை, கோடு, தூம்பு (நெடுவங்கியம்), கொம்பு, வயிர், வங்கியம், பெருவங்கியம்.

இக் கருவிகள் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ள சில பாடல் வரிகளை மட்டும் ஈண்டுக் காண்போம்:

**வணரமை நல்யாழ் இளையர் பொறுப்பப்**
**பண்ணமை முழவும் பதலையும் பிறவும்**
**கண்ணறுத் தியற்றிய தூம்பொடு சுருக்கி**

(பதிற்றுப்பத்து : 41)

**திண்வார் விசித்த முழவொடு, ஆகுளி,**
**நுண்உருக்கு உற்ற விளக்கு அடர்ப் பாண்டில்,**
**மின்இரும் பீலி அணித்தழைக் கோட்டொடு,**
**கண்இடை விடுத்த களிற்று உயிர்த்தூம்பின்,**
**இளிப்பயிர் இமிரும் குறும்பரம் தூம்பொடு,**
**விளிப்பது கவரும் தீம்குழல் துதைஇ,**
**நடுவுநின்று இசைக்கும் அரிக்குரல் தட்டை,**
**கடிகவர்பு ஒலிக்கும் வல்வாய் எல்லரி,**
**நொடிதரு பாணிய பதலையும், பிறவும்,**

(மலைபடுகடாம் 3–11)

**ஏழ்புழை ஐம்புழை யாழிசைக் கேழ்த்தன்ன, இனம்**
**வீழ்தும்பி வண்டொடு மிஞிறார்ப்ப**

(பரிபாடல் 8: 22,23)

ஏழ் புழை, ஐம்புழை என்பன ஏழு துளையிட்ட குழல், ஐந்து துளையிட்ட குழல் எனப் பொருள் படுவனவாகும். சங்க நூல்கள் முழுவதிலும் இவை போன்று இன்னும் ஏராளமான சான்றுகள் உள்ளன.

சிலப்பதிகார உரையில் அடியார்க்கு நல்லார் மேற்கோளாகத் தந்திருக்கும் பழம் பாடல் ஒன்று இசைக்கருவிகளைப் பின்வருமாறு பட்டியலிடுகிறது:

**பேரிகை படக மிடக்கை யுடுக்கை**
**சீர்மிகு மத்தளஞ் சல்லிகை கரடிகை**
**திமிலை குழமுழாத் தக்கை கணப்பறை**
**தமருகந் தண்ணுமை தாவி றடாரி**
**யந்தரி முழவொடு சந்திர வலைய**
**மொந்தை முரசே கண்விடு தூம்பு**
**நிசாளந் துடுமை சிறுபறை யடக்க**
**மாசி றகுணிச்சம் விரலேறு பாகந்**
**தொக்க வுபாங்கந் துடிபெரும் பறையென**
**மிக்க நூலோர் விரித்துரைத் தனரே.**

**பண்கள்:** சங்க இலக்கியத்தில் பின் வரும் பண்களின் பெயர்கள் காணப்படுகின்றன:

ஆம்பல் பண், காஞ்சிப்பண், காமரம், குறிஞ்சி, செவ்வழி, நைவளம், பஞ்சுரம், படுமலை, பாலைப் பண், மருதப் பண், விளரிப் பண், முல்லைப் பண், நோதிறம், காந்தாரம்.

இப்பண்களே இன்றைக்கும் கருநாடக இசையில் வெவ்வேறு பெயர்களில் இராகங்களாகப் பாடப்பட்டு வருகின்றன. சங்க காலப் பண்கள் மறைந்துவிட்டன என்றோ அழிக்கப்பட்டு விட்டன என்றோ கருதவேண்டிய தேவையில்லை. இன்றைய இசை பழந்தமிழ் மரபின் தொடர்ச்சியே என்பதனைக் கீழ்க் காணும் பட்டியல் உறுதிப்படுத்தும்.

| சங்க காலப் பண் | இன்றைய இராகம் (கருநாடக இசை) |
|---|---|
| நைவளம் | கம்பீர நாட்டை |
| படுமலை | நடபைரவி |
| முல்லைப் பண் | மோகனம் |
| மருதப் பண் | கரஹரப்ரியா |
| விளரிப் பண் | தோடி |
| பஞ்சுரம் | சங்கராபரணம் |

தொல்காப்பிய அடிப்படையில் பண்களுக்கும் நிலமும் பொழுதும் குறிக்கப்பட்டன. பெரும்பொழுதும் கூறப்படுவதுண்டு.

| பண் | பொழுது | நிலம் | உணர்வு |
|---|---|---|---|
| ஆம்பல் | மாலை, முன்னிரவு | முல்லை | ஏக்கம் |
| காஞ்சி | மாலை, முன்னிரவு | முல்லை | துன்பம் |
| காமரம் | மாலை முன்னிரவு | மருதம் | இன்பம் |
| குறிஞ்சி | நள்ளிரவு | குறிஞ்சி | அச்சம் |
| செவ்வழி | மாலை | முல்லை நெய்தல் | இரக்கம் |
| நைவளம் | பகல் | முல்லை நெய்தல் | இன்பம் |
| பஞ்சுரம் | --- | பாலை | அச்சம் |
| படுமலை | — | — | இன்பம் |
| மருதம் | காலை | மருதம் | இன்பம் |
| விளரி | --- | நெய்தல் | ஏக்கம் |
| பாலை | நண்பகல் | பாலை | ஏக்கம் |

**இசைக் கலைஞர்கள் :** பாணர், பாடினி, பொருநர், கூத்தர், விறலியர், கிணையர், கோடியர், பறையர், வயிரியர், துடியர் என்று சங்க கால இசைக் கலைஞர்கள் அழைக்கப்பட்டனர்.

**இசைப் பாடல்கள்:** அகவன் மகளிர் பாடல், மறையோர் பாடல், உழிஞைப்பாடல், தழிஞ்சிப்பாடல், விறற்களப்பாடல், வெறியாட்டப்பாடல், துணங்கைப் பாடல், ஆடல் மகளிர் பாடல், வேதப்பாடல், வள்ளைப்பாடல் என்று சங்க காலத்தில் பாடல்கள் வழங்கி வந்துள்ளன. பெரும்பாலும் இப் பாடல்கள் சடங்கு சார்ந்தவையாகவும் தொழில் சார்ந்தவையாகவுமே காணப்படுகின்றன.

இன்றைய இசையியலில் வழங்கி வருகின்ற தாளங்களுக்கான மூல வேர்களும் சங்க நூல்களில் வெகுவாகக் காணப்படுகின்றன. ஆயினும் தாளம் என்ற சொல் பரிபாடலில்தான் முதன்முதலாகக் காணப்படுகிறது.

**பாடுவார் பாணிச் சீரும் ஆடுவார் அரங்கத் தாளமும்**

**(8 : 109)**

**அதிர் குரல் வித்தகர் ஆக்கிய தாள**
**விதி கூட்டிய விய மென்னடை போல.**

**(10 : 24–25)**

## நிறைவுரை

சங்க நூல்கள் அனைத்தும் ஒரே கால கட்டத்திலோ, ஒரே இடத்திலோ, ஒரே பகுதியிலோ, ஒரே புலவராலோ, ஒரே கருப் பொருளைக் கொண்டோ இயற்றப்பட்டவை யல்ல என்பதை மிகவும் கவனத்தில் கொள்ள வேண்டும். எனினும், இசை குறித்த செய்திகளில் பெரும்பாலும் வேறுபாடுகளற்ற ஒருமைத் தன்மை காணப்படுவதால் பண்டைத் தமிழர் ஒரு மாபெரும் தொன்மை மிக்க இசை மரபினைப் போற்றி வளர்த்தனர் என்பதில் ஐயமில்லை.

இன்றைய இந்திய இசை, கருநாடக இசை என வழங்கப்படும் தென்னிந்தியச் செவ்விசை ஆகிய இசைகளுக்கெல்லாம் அடிப்படை பழந்தமிழிசையே என்பதற்கு ஆதாரமாக விளங்குவது சிலப்பதிகாரமே யாகும். மேலும், இசைத்தமிழின் கருவூலமாக விளங்கும் பக்தி இலக்கியங்களான தேவார, திவ்வியப் பிரபந்தங்களுக்கும் முன்னோடி சங்க இலக்கியமே என்பதையும் நினைவில் கொள்ள வேண்டும். பக்தி இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள பண்கள் , இன்றைய கருநாடக இசையில் வழங்கப்படும் இராகங்கள், இசைக் கருவிகள் ஆகியவற்றின் இலக்கணங்களை சங்க இலக்கியத்தில் பரவலாகக் காண முடிகிறது. இதன் மூலம் நம் இசையின் தொன்மையையும் தனிச் சிறப்பையும் வளமையையும் அறிய இயலும்.

பண், பாடல், தாளம், இசைக் கருவி, இசைக் கலைஞர்கள் என அனைத்திலும் பல்வேறு மாற்றங்களும் வளர்ச்சி நிலைகளும் ஏற்பட்டுள்ளனவே யன்றி இதில் எதுவும் அழிந்துவிடவில்லை. எந்தவொரு பொருளும் முற்றிலுமாக அழியக் கூடியதன்று; மாறாக வேறு உருவினைக் கொள்ளும் என்ற தத்துவம் இசைக் கலைக்கும் பொருந்துவதே.

'வாழையடி வாழை யென வந்த திருக்கூட்ட மரபு' என்று வள்ளலார் கூறியது போன்று நம் இசைக்கான மரபு தலைச் சங்க காலத்திலேயே தோன்றி இன்றுவரை தொடர்ந்து கொண்டிருக்கிறது என்பது உண்மை; வெறும் புகழ்ச்சியில்லை. ❖

# தமிழக ஆடற்கலை





மருத்துவர் மா. இரா. கலைக்கோவன்

### வரலாற்றுக்கு முற்பட்ட காலம்

ஒரு கலையின் பழைமையும் வளமையும் அது வளர்ந்து செழித்த நாட்டின் பெருமையைக் காட்டும் கண்ணாடிகளாகும். தமிழ்நாட்டில் ஆடற்கலை, வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலிருந்தே பயிலப்பட்டு வருவதனைப் பழங்கால ஓவியங்களில் காணப்படும் மனிதத் தோற்ற நிலைகள் சில வெளிப்படுத்துகின்றன. வேட்டைக்காரன் மலை, கீழ்வாலை ஓவியங்களில் குழு ஆடலைக் காணமுடிகிறது. தமிழர் நாகரிகமாகக் கருதப்படும் சிந்துவெளிக் காலத்தில் (கி.மு. 2500 – 1500) ஆடற்கலை வளர்ந்திருந்தது. அகழாய்வில் கிடைத்த வெண்கலப் பெண் வடிவத்தின் நின்ற கோலத்தை ஆடற்கோலமாக அடையாளம் கண்டுள்ளனர்.

### தொல்காப்பியக் காலம்

சங்க காலத்திற்கு முற்பட்டதாகக் கருதப்படும் தொல்காப்பியத்தில் வள்ளி, காந்தன், தேர்க்குரவைகள், அமலை, வெறியாட்டு ஆகிய ஆடல்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. கற்பியலில் பாணர், கூத்தர், விறலியர் எனும் தொழிற்சார்ந்த கலைஞர்கள் அறிமுகமாகின்றனர். சிறு சிறு குழுக்களாக அமைந்து வளமை தேடி ஊர் ஊராய்ச் சென்று கலை வளர்த்த அவர்தம் வாழ்க்கைச் சூழல்களும் கலைத்திறனும் சங்க இலக்கியங்களில் விரிவாகப் பேசப்பட்டுள்ளன. அகத்திணை இயலில் இடம்பெறும், 'நாடக வழக்கினும்' என்னும் தொடரும் மெய்ப்பாட்டியலின் நூற்பாக்களும் தொல்காப்பியர் கால ஆடல் திறனை உணர்த்துகின்றன.

கி.மு. நான்காம் நூற்றாண்டு முதல் கி.பி. மூன்றாம் நூற்றாண்டின் இடைப்பகுதி வரையில் அமைந்த சங்க காலம் தொட்டுச் சோழர் காலம் வரை தொடர்ந்து



கிடைக்கும் ஆடற்கலைத் தரவுகளை ஆடற்கல்வி, உடன்கூட்டம், ஒப்பனை, அரங்கம், ஆடுநர் வாழ்க்கை எனும் தலைப்புகளின் கீழ் ஆராயலாம்.

### 1. ஆடற்கல்வி

சங்க மக்களின் வாழ்க்கையில் இசையும் கூத்தும் இரண்டறக் கலந்திருந்தன. உணர்வுகளின் வெளிப்பாடாகவும் சடங்குகள், விழாக்கள் இவற்றோடு தொடர்புடையனவாகவும் விளங்கிய இவ்விரு கலைகளும் தொழில் முறையாகவும் வழக்கில் இருந்தன. மக்கள் தமக்குள் மகிழ்ந்தாடிய ஆடல் வகைகள் பெரும்பாலும் குழு ஆடல்களாகவே அமைந்தன. அவை கண்டும் கேட்டும் கற்றுக் கொள்ளப்பட்டன. தொழில்முறைக் கலைஞர்கள் மூத்தவர்பால் இக்கலையைப் பயின்று தேர்ந்தனர். 'படுகின்ற இயங்களின் கண்ணொலியையும் பாட்டினையும் பயின்று மகளிர் ஆடும் அரங்கம்' எனும் பாடலடி ஆடற்கலை முறைப்படியும் பயிற்றுவிக்கப் பட்டிருக்கலாம் எனக் கருத வைக்கிறது.

சங்க கால ஆடல்களைக் குழு ஆடல்கள் தனியர் ஆடல்கள் என்றும், அக ஆடல்கள் புற ஆடல்கள் என்றும், மக்கள் ஆடல்கள் தொழில்முறை ஆடல்கள் என்றும் முவ்வேறு வகைப்படுத்தலாம். மக்கள் ஆடல்கள்பால், வயது வேறுபாடின்றிப் பெரும்பாலும் குழு ஆடல்களாக அமைந்தன. அறுவடை, விழாக்கள், போர் வெற்றி, தெய்வம் பரவுதல் இவற்றின் காரணமாகவும் இன்னபிற உணர்வு வெளிப்பாடுகளின் நிமித்தமாகவும் அவை ஆடப்பட்டன. அவற்றுள் தலையாயவை குரவையும் துணங்கையும் ஆகும்.

வரிக்கூத்துகளுள் ஒன்றான தோளியைப் பெண்கள் ஆடினர். 'கை மாண் தோளி' என்று அவ்வாடல் சிறப்பிக்கப்படுவதனால், தோள்களை அசைத்து அது ஆடப்பட்டதாகக் கருதலாம். வெற்றி பெற்ற மன்னரும் வீரர்களும் போரில் இறந்த வேந்தரின் உடலைச் சூழ நின்று வாள் உயர்த்தி ஆடிய ஒள்வாள் அமலையும் குழு ஆடலாகும்.

துடியின் ஒலிக்கு ஏற்ற தாளத்தில் தழையுடன் கட்டிய கண்ணியைத் தலையில் சூடி, வெற்றியின் களிப்பில் வீறுகொண்டு மறவர்கள் தோள் அசைத்து நிகழ்த்திய

துடியாடல் புறம் சார்ந்ததாகும். அகம் சார்ந்த தனியாடலாகவும் இது நிகழ்த்தப்பட்டது. கொங்கு நாட்டினர் மணிக்கச்சினை இடையில் கட்டிக்கொண்டு, தெருவில் ஆடிய உள்ளிவிழா ஆடலும் குழு ஆடலே.

தொழில்முறைக் கலைஞர்கள் ஆடிய ஆடல்களைப் பற்றி நேரடிச் சான்றுகள் இல்லை என்றாலும், தொகையும் பாட்டும் எடுத்துரைக்கும் பேடியாடல், துடியாடல், கழைக்கூத்து, வெறியாடல் இவையும் கலித்தொகையின் கடவுள் வாழ்த்துக் குறிக்கும் கொடுகொட்டி, பாண்டரங்கம், கபாலக் கூத்து, பரிபாடல் சுட்டும் குடக்கூத்து, மல்லாடல் இவையும் பெரும்பாணாற்றுப்படை சுட்டும் நாடகமும் அவர்களால் நிகழ்த்தப்பட்டதாகக் கொள்ளலாம்.

சங்க காலத் தொழில்முறைக் கலைஞர்கள் கோடியர், வயிரியர், கண்ணுளர் எனப் பலராய் இருந்தனர். பொருநர் என்றும் அறியப்பட்ட அவர்களைக் குறிக்கும் சங்கப் பாடல்கள் அவர்களைப் பல ஊர்ப் பெயர்வனராகவும் சுரம் செல் மக்களாகவும் குறிப்பதனால், அவர்கள் ஓரிடத்துத் தங்காது ஊர் ஊராய்ச் சென்று கலை நிகழ்ச்சிகள் நடத்தி வாழ்க்கை வளர்த்த கலைஞர்கள் என்பது புலப்படும். பதிற்றுப்பத்தும் மலைபடுகடாமும் குறிக்கும் கண்ணுளரைக் கூத்தர் என்கிறது பிங்கல நிகண்டு. அரும்பத உரைகாரரும் அடியார்க்கு நல்லாரும் அவர்களைச் சாந்திக் கூத்தர் என்பர்.

தொல்காப்பியத்தில் ஊடல் தீர்க்கும் வாயில்களுள் ஒன்றாகக் குறிக்கப்படும் கூத்தர்கள் சங்க காலத்தில் அருகினர் போலும். கோடியர், வயிரியர் பற்றிப் பரக்கப் பேசும் சங்க இலக்கியங்கள், தாமரைப் பூம்போது சிதைந்து விழுமாறு கூத்தர்கள் ஆடுகளத்தில் ஆடிய தகவல் மட்டுமே கூறி அமைதி காண்பது சிந்திக்கத்தக்கது.

ஆடற்கலைஞர் குழுக்களுடன் இணைத்துப் பேசப்படும் விறலியர் அக் கலைஞர்தம் பெண்டிர் ஆவர். விறல்பட ஆடியதால் விறலியர் என்றும் விழாக் காலங்களில் ஆடியதால் ஆடுகள மகளிர் – ஆடுகளப் பாவையர் என்றும் அழைக்கப்பட்ட அவர்கள் பல்வகைப் பண்களைப் பாடவும் பல்வேறு இசைக்கருவிகளை இயக்கவும் தெரிந்திருந்தனர்.

சங்கம் மருவிய காலம், களப்பிரர் காலம் என்றெல்லாம் அழைக்கப்படும் கி.பி. 250க்கும் கி.பி. 550க்கும் இடைப்பட்ட காலத்தில் தமிழ்நாட்டில் நிலவிய ஆடற்கலை அறிய, சிலப்பதிகாரம் உதவுகிறது. நகர்ப்புறத்தே ஆடல் கற்பித்த ஆசான்கள் வேத்தியல், பொதுவியல் எனும் இருவகைக் கூத்தின் இலக்கணங்களையும் அல்லியம் முதல் கொடுகொட்டி ஈறாக அமைந்த பதினோராடல்களையும் அறிந்திருந்தனர். நகர்ப்புறங்களில் ஆடல் பயில அகலமான மனைகள் அரங்க அமைப்புகளுடன் இருந்தன. குழந்தைகள் ஐந்து வயது அடைந்தவுடன் ஆடற்கல்வி தொடங்கப்பட்டது.

ஊர்ப்புறத்தே நூல் முறைப்படி ஆடல் பயிற்று வித்தமைக்குக் குறிப்புகள் இல்லை என்றாலும், முன்னோர் வழக்கே தம் வழக்காய் மக்கள் கண்டும் கேட்டும் ஆடலைக் கற்றனர் எனக் கருதலாம். 'ஆடவர் காண நல் அரங்கேறி ஆடலும் பாடலும் அழகும் காட்டிக் கண்டோர் நெஞ்சம் கொண்டு' அவரால் பயன் பல பெறுதல் நோக்கம் என்பதால், பொதுமகளிர் தம் குலமரபுப்படி ஆடலைக் கருத்தாய்ப் பயின்றனர்.

நாடகக் கணிகையர், கூத்தர், கூத்தியர், தோரிய மடநதையர் என்பார் தொழில்முறை ஆடற் கலைஞர்களாய் அமைந்தனர். சங்க காலத்தில் விறலி என்ற பெயரில் அறியப்பட்ட ஆடுமகள் இக்காலத்தே ஆடற்கூத்தி என அழைக்கப்பட்டார். ஆடற் பரத்தையர் நாடகக் கணிகையராயினர். கோடியர், வயிரியர் அருகினர்.

கி.பி. 550க்கும் கி.பி. 900க்கும் இடைப்பட்டு விளங்கிய பல்லவர், பாண்டியர் ஆட்சியில் பக்தி இயக்கம் பரவியது. இறையுணர்வு தழைத்ததனால், கோவில்கள் பெருகின. அரசர்களையும் செல்வர்களையும் நாடி வளர்ந்த கலைகள், கோவில்கள் நோக்கி ஈர்க்கப்பட்டன. இறைவழிபாட்டின் இன்றியமையாக் கூறுகளாக இசையும் ஆடலும் ஒன்றியதனால், ஒவ்வொரு கோவிலிலும் அவற்றில் வல்லவர் பணியமர்த்தப்பட்டனர். சங்க காலத்தின் தொடக்கப் பகுதியில் இறைவனை நோக்கி ஆடும் மக்கள் மீது இறைவன் இவர்ந்திருப்பான் எனக் கருதியும் ஆடல்கள் நிகழ்ந்தன. சங்க காலத்தின் இறுதிப் பகுதியில் இறைவனே ஆடுவான் எனும் கருத்துத் தழைத்தது. பாண்டரங்கம், கொடுகொட்டி இவற்றைச் சிவபெருமான் நிகழ்த்தினார் எனவும் மல்லாடல், குடக்கூத்து இவற்றைத் திருமால் நிகழ்த்தினார் எனவும் நம்பினர்.

சங்கம் மருவிய காலத்தில் மக்கள் ஆடல்களாக இருந்த பேடியாடல், துடியாடல் இவையும் இறையாடல்களாயின. இறைவனை முன்னிறுத்தி வணங்கியே ஆடல்கள் தொடங்கின. பெரும் பகுதி, வாழ்க்கை நிகழ்வுகளைப் பாடுபொருளாய்க் கொண்டும் சிறுபகுதி இறையருள் வேண்டியும் மக்கள் ஆடலாய் நிகழ்ந்த குரவை, சங்கம் மருவிய காலத்தில் இறை நோக்கிய, இறை பற்றிய ஆடலாக மாறியது. இந்த இறைநோக்கு நிலை பல்லவர், பாண்டியர் காலத்தில் பல்கிப் பெருகியது. சங்க காலத்தின் பிற்பகுதியில் மூன்று ஆடல்களை மட்டும் ஆடியவராகக் காட்டப்பெறும் சிவபெருமான் பல்லவர், பாண்டியர் காலத்தில் ஆடல் தெய்வமாக உயர்த்தப்பட்டார். இந்த நிலை சங்கம் மருவிய காலத்திலேயே தொடங்கிவிட்டதெனலாம்.

மண்டல நிலையில் நின்று உள்ளாளம் பாடி வீசி எடுத்த பாதம் அண்டம் உற நிமிர்ந்தாடும் இறைவனைக் காரைக்காலம்மையின் மூத்த திருப்பதிகம் காட்டுகிறது. இறைவனாடும் காடரங்கு அணங்கு ஆடும் காடு என்று சுட்டும் அம்மை, அங்கு இறைவன் கால் உயர் வட்டணை இட்டு நட்டம் ஆடியதாகக் குறிப்பிடுகிறார். சுத்த நிருத்தம், அவிநயக் கூத்து இவ்விரண்டிலும் சிவபெருமான் காளியை வென்றதாக சம்பந்தரும் குறிப்பிடுகிறார்.

சிவபெருமானின் ஆடல் நாயக நிலையும், ஆடியும் பாடியும் இறைவனை வழிபடுதலே சிறப்புடையது என ஆழ்வார்களும், நாயன்மார்களும் பாடல்களை இயற்றியதும் ஆடற்கலை மக்களிடையே மிகுந்த செல்வாக்குப் பெற வழியமைத்தன. இறைக்கோவில்கள் அனைத்திலும் ஆடல் நிகழ்வுகள் இடம்பெற்றன. ஒவ்வொரு கோவிலுக்கும் தனித்தனியே கூத்தியர் இருந்தனர்.

இக்காலத்தில் ஆடற்கல்வி கலை வல்ல ஆண்களாலும் பெண்களாலும் வழங்கப்பட்டது. ஆடல் ஆசிரியர்கள் அதற்கென அமைந்த அரங்குகளில், கருவி அமைந்த குழுவோடு இருந்து பயிற்றுவித்தனர். அரங்குகளில்

இருந்தவர் ஆசாரியர் என்றும் கோவில்களில் இருந்தவர் நட்டவம் என்றும் குறிக்கப்பட்டனர். 'அரங்கியல் மகளிர்க்கு ஆடல் வகுக்கும் தலைக்கோல் பெண்டிர்' எனும் பாடலடியால், தலைக்கோலியரும் ஆடல் ஆசிரியர்களாகத் திகழ்ந்தமையை அறிய முடிகிறது. அரங்க நிகழ்வுகளின் அமைப்பாளர்களாகவும் விளங்கிய அவர்கள் நடநவில் மகளிர் என்றும் அழைக்கப்பட்டனர். ஆடற் கல்வி புகட்டிய நிறுவனங்கள் பல ஊர்களில் இருந்தன.

சோழப் பெருவேந்தர்களின் ஆட்சிக்காலத்தில் சமயம் தழைத்தது. கோவில்களின் எண்ணிக்கை பெருகி, அது ஒரு பெரும் நிறுவனமாக மாறியது. பொருளாதார வசதிகளும் மன்னர், மக்கள் அணைப்பும் கிடைத்த நிலையில் கலைஞர் பலரைக் கோவில்கள் பணியமர்த்திக் கொண்டன. ஒவ்வொரு கோவிலிலும் பாடுவாரும் கருவிக் கலைஞர்களும் ஆடற்பெண்களும் இருந்தனர். நாள் வழிபாடுகளின்போதும் இறை ஊர்வலங்களின்போதும் ஆடல், பாடல் நிகழ்வுகள் இருந்தன. அதனால் கலைகள் வளம் பெற்றன. பல ஆடற்கலை, இசைக்கலை நூல்கள் சோழர் காலத்தே வழக்கில் இருந்தமையைத் தமிழிலக்கண, இலக்கிய உரையாசிரியர்களின் மேற்கோள்கள் தெரிவிக்கின்றன.

சோழர் காலத்தில் கோவில்களிலும் தளிச்சேரிகளிலும் ஆடல் பயிற்றுவிக்கப்பட்டது. அதற்கென்றே பல கோவில்களில் நாடக சாலைகளும், திருக்காவணங்களும், நிருத்த மண்டபங்களும் இருந்தன. தளிச்சேரிகள் ஆடற்பெண்களின் வாழிடங்களாகும். சோழ மண்டலத்தில் இருந்த நூற்றிரண்டு தளிச்சேரிகளைத் தஞ்சாவூர் இராஜராஜேசுவரத்துக் கல்வெட்டு வெளிச்சப்படுத்துகிறது. அவற்றுள் நாற்பத்தொன்பது தளிச்சேரிகள் கோவில்களைச் சார்ந்தும் ஐம்பத்து மூன்று தளிச்சேரிகள் ஊர்களுக்குள்ளும் இருந்தன. அவற்றுள் கூத்திகள், தேவனார் மகளார், கூத்தப்பிள்ளை, தளிச்சேரிப் பெண்டுகள், தேவரடியார், தளியிலார், பதியிலார் எனப் பல பெயர்களால் அழைக்கப்பட்ட ஆடற்கலை மகளிர் இருந்தனர்.

ஆடல் கற்பிக்க நட்டுவ ஆசான்களும் தலைக்கோல் மகளிரும் கூத்தர்களும் இருந்தனர். இயல், இசை, நாடகங்களின் முறையைத் தெரிந்த அறிஞர்கள் நட்டுவர், நடையறிபுலவர் என அழைக்கப்பட்டனர். திருவிடைமருதூர்க் கோவிலில் அகமார்க்க நட்டுவம், அவிநய நட்டுவம் என இரு நட்டுவ முறைகள் இருந்தன. நட்டுவ ஆசான்களைப் போலவே தலைக்கோலியரும் ஆடல் பயிற்றுவித்ததுடன் ஆடியும் மகிழ்வித்தனர்.

கூத்தர்கள் கோவில் திருவிழாக்களில் பங்கேற்று ஆடல் நிகழ்த்தியதுடன், மரபு வழியாகக் கலையைப் பயிற்றுவித்தனர். தந்தை – மகன், தாய் – மகள், மாமன் – மைத்துனன், அண்ணன் – தம்பிகள் என்று உறவின் முறையாகக் குடும்பம் முழுவதுமே கூத்துக் கலையைப் பயின்று ஆடியமையை அறிய முடிகிறது. சில கோவில்களில் இக்கூத்தர்கள் ஆடற்கலைஞர்கள் போலத் தொடர்ந்து புரக்கப்பட்டமைக்கும் கல்வெட்டுச் சான்றுகள் உள்ளன.

சோழர் காலத்தில் பல்வேறு வகையான ஆடல்கள் பயிலப்பட்டன. எனினும், மிகுதியும் பயிலப்பட்டது சாந்திக் கூத்தாகும். அதன் ஒரு பிரிவாக விளங்கிய சொக்கத்தின் நூற்றியெட்டுக் கரணங்களும் சோழர் காலத்தில் இரண்டிடங்களில் சிற்பங்களாக வடிக்கப்பட்டன. முதல் தொடர் தஞ்சாவூர் இராஜராஜேசுவரத்திலும், இரண்டாம் தொடர் சோழமார்த்தாண்ட சதுர்வேதிமங்கலத்திலிருந்த திருமயானமுடையார் கோவிலிலும் அமைக்கப்பட்டன.

இவை தவிர, புள்ளமங்கை ஆலந்துறையார் கோவில், மேலப்பெரும்பள்ளம் வலம்புரநாதர் கோவில், பொன்செய் நல்துணையீசுவரம், கும்பகோணம் நாகேசுவரர் கோவில், திருநாவலூர்த் திருத்தொண்டீசுவரம், திருவெண்காடு சுவேதாரண்யேசுவரம், திருச்சின்னம்பூண்டி, திருச்சடை முடிநாதர்கோவில், நாலூர் திருமயானம், திருநறையூர் சித்தேசுவரம், சீனிவாசநல்லூர்க் குரங்கநாதர் கோவில், திருவையாறு ஐயாறப்பர் கோவில் இவற்றில் பல கரணச் சிற்பங்களைக் காணமுடிகிறது.

சாந்திக்கூத்தின் இரண்டாம் வகையான மெய்க்கூத்து சோழர் காலத்தில் வழக்கில் இருந்தது. திருவிடைமருதூர்க் கோவில் கல்வெட்டொன்று அங்கு அகமார்க்க வகை ஆடலைக் கற்பிக்கும் நட்டுவர்கள் இருந்தமையைத் தெரிவிக்கிறது. அதே கோவிலில் உள்ள மற்றொரு கல்வெட்டு, அகமார்க்கமான மெய்க்கூத்தின் உட்பிரிவான தேசிக் கூத்துக்குரிய பாடல்கள் அங்குப் பாடப்பட்டதாகக் கூறுகிறது. குளத்தூர் சுந்தரசோழீசுவரம் உடையார் கோவில் கல்வெட்டும் மெய்க்கூத்தைக் குறிக்கிறது.

சாந்திக்கூத்தின் மூன்றாம் வகையான அவிநயக் கூத்து திருவிடைமருதூரில் அமைந்தது. அவிநயக்கூத்து எனக் கொள்ளத்தக்க சிற்பத் தொகுதியைக் கும்பகோணம் நாகேசுவரர் கோவில் கண்டபாதப் பகுதியில் பார்க்க முடிகிறது. நான்காம் வகையான நாடகமும் பயிலப்பட்டது. அந்தரமகளிர் அன்னார் நாடகம் இயற்றியதாகக் கூறும் சிந்தாமணி, சுதஞ்சணன் சரிதம் நாடகமாக நடிக்கப்பட்டதனைத் தெரிவிக்கிறது. கடலூர் பாடலீசுவரக் கல்வெட்டு, கன்னிவனபுராணம் பாடி நாடகம் செய்தவருக்கும் பூம்புலியூர் நாடகம் செய்தவருக்கும் பாலையூரில் நாடகஞ் செய் நாவலன் நிலம் வழங்கப்பட்டமையைக் குறிப்பிடுகிறது.

திருநள்ளாறு தர்ப்பாரண்யேசுவரர் கோவிலில் மாசிமக விழாவின்போது ஐந்தங்கம் நாடகம் நிகழ்த்தப்பட்டது. தஞ்சாவூர் இராஜராஜேசுவரத்தில் வைகாசிப் பெரிய திருவிழாவின்போது இராஜராஜேசுவர நாடகம் நிகழ்ந்தது. திருநல்லூர் கல்யாணசுந்தரேசுவரர் கோவிலில் நெற்றிக்கண் நங்கையால் கோவண நாடகம் நிகழ்த்தப்பட்டது. திருவாவடுதுறை கோமுத்தீசுவரத்தில் வடுகமாங்குடி பாண்டிகுலாசனி என்பவரால் திருமூலநாயனார் நாடகம் நடிக்கப்பட்டது. நெடுங்களத்தில் கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டளவில் நிகழ்ந்த சித்திரைத் திருவிழாவில், 'புவனசுந்தரி கலியாணம், திருநெடுங்கள புராணமான வினைய பராக்கிரமம்' உள்ளிட்ட ஐந்து கூத்துகள் நிகழ்த்தப்பட்டன. ஆடியவர்களுக்கு நாற்பத்தைந்து கலம் நெல் வழங்கப்பட்டது.

சோழர் காலத்தில் சாக்கைக் கூத்து, ஆரியக் கூத்து, தமிழ்க் கூத்து, விநோதக் கூத்து இவற்றுடன் பல்வகைக்

கூத்துகளும் நிகழ்த்தப்பட்டன. திருவாவடுதுறை கோமுத்தீசுவரர் கோவில், திருவிடைமருதூர் மகாலிங்கேசுவரர் கோவில், திருநள்ளாறு தர்ப்பாரண்யேசுவரர் கோவில், வயலகம் விசுவநாதசாமி கோவில் இவற்றில் ஆரியக்கூத்து ஆடப்பட்டது. மானம்பாடி நாகநாதசாமி கோவிலில் உள்ள கல்வெட்டு, சித்திரை விழாவில் ஐந்து நாள்கள் தமிழ்க்கூத்து நடைபெற்றதைக் கூறுகிறது. திருவொற்றியூர் ஆதிபுரீசுவரர் கோவிலில் உள்ள இராஜராஜன் திருமண்டபத்தில் மூன்றாம் குலோத்துங்கன் விநோதக்கூத்து கண்டருளினார். விநோதக் கூத்தின் ஒரு பிரிவான குடக்கூத்து சோழர் காலத்தில் பெருவழக்குப் பெற்றிருந்தது. வைகறையாட்டம், குனிப்பம், பதினோராடல், குரவை, துணங்கை, வாளமலை இவையும் அக்காலத்து இருந்தன.

**2. உடன்கூட்டம்**

ஆடலுக்குத் தேவையான பாடல்களை இயற்றியவர்கள், அவற்றிற்கு இசையமைத்துப் பாடியவர்கள், ஆடலுக்கும் பாடலுக்கும் கருவியிசை தந்தவர்கள், அவ்விசையை ஒருங்கிணைத்தவர்கள் இவர்களை உடன்கூட்டமாகக் கொள்ளலாம். சங்க காலத்தில் பாணர்களும் பாடினியர்களும் பாடகர்களாய் அமைந்தனர். பாணர் இசைப்பாணராகவும், யாழ்ப்பாணராகவும் இருந்தனர். ஆடற்கலைஞர்களும் பாடகர்களாகத் திகழ்ந்தனர். அரசர்களைப் புகழ்ந்தும் தெய்வங்களைப் பரவியும் மரபு நிலைகளைப் பகர்ந்தும் வெற்றிகளைக் கொண்டாடியும் இவர்கள் பாடிய பாடல்கள், புலவர்களாலும் இக்கலைஞர்களாலும் இயற்றப் பட்டிருக்கலாம்.

இசைக் கருவிகளுள் முழவு முதன்மையானதாக விளங்கியது. இம்முழவிற்குத் தலைக்கோல் இருந்தது. பாடுமகளிரின் குரலொடு பொருந்தப் புல்லாங்குழல், யாழ் இசைக்கப்பட்டன. முழவு போல் ஆடலுக்குப் பெரிதும் பயன்பட்ட மற்றோர் இசைக்கருவி பறையாகும். துடி, தடாரி, தண்ணுமை எனும் தோல் கருவிகளும் ஆடலுக்குப் பயன்பட்டன.

சங்கம் மருவிய காலக் கவிஞர்கள், நூல் நெறிகளைக் கடைப்பிடித்துச் சிறக்கப் பாடல் இயற்றினர். அவற்றைப் பாடிய தோரிய மடந்தையர் ஆடி முதிர்ந்த பெண்களாவர். தலைப்பாட்டு, இடைப்பாட்டு, கடைப்பாட்டுப் பாடக் கூத்தியர் இருந்தனர். யாழ், குழல் வாசிப்பில் தேர்ந்த பாணர்கள் பாடல்கள் இயற்றிப் பாடியதுடன், வழங்கு கதைப் பாடல்களையும் பாடினர்.

ஊர்ப்புறத்துக் குரவை, துணங்கை ஆடல்களில் தனிப்பாடலும், குழுப் பாடலும் இடம் பெற்றன. பாடல்களுக்கு இசை கூட்டிய இசையாசிரியர்கள் ஆடல்களுக்கு ஏற்ற வகையில் கூட்டிசையும் தனியிசையும் தரக் கருவி ஞானத்துடன் கவிஞானமும் பெற்றிருந்தனர்.

ஆடல்களுக்கும் அவை நிகழ்ந்த களங்களுக்கும் ஏற்றவாறு சங்கம் மருவிய கால இசைக் கருவிகள் அமைந்தன. அரண்மனை அரங்கேற்றங்களில் தண்ணுமை, குழல், யாழ், முழவு, இடக்கை என்பன தலைமை இடம் பெற்றன. ஊரகப்பகுதி ஆடல்களில் அவரவர் நிலஞ்சார்ந்த இசைக்கருவிகள் தலைமை இடம்பெற்றன. குன்றக்குரவை ஆடிய குறிஞ்சி மக்கள் தொண்டகப்பறை, சிறுபறை, கடமாக்கொம்பு, மணி இவற்றை இசைக்கருவிகளாகக் கொண்டனர். பாலை நிலத்து வள்ளிக்கூத்திற்கு ஆறெறி பறை, சூறைச் சின்னம், கோடு, குழல், மணி இவை இசைக் கருவிகளாயின. வென்றிக் கூத்து, துடி, சிறுபறை, வயிர் இவற்றின் தாளத்திற்கு நிகழ்ந்தது. தேர்க் குரவைகளுக்குக் கொடும்பறையும் சங்கும் நெடுவயிரும் இடிக்குரல் முரசும், இழுமென் பாண்டிலும் இசைக்கருவிகளாய் அமைந்தன.

பல்லவர், பாண்டியர் காலத்தில் கோவில்கள் அமைந்திருந்த ஒவ்வோர் ஊருக்கும் பாடல் இருந்தது. ஊர்வளம், சமய நிலை, இறைச் சிந்தனைகள், சமுதாயச் செய்திகள் இவற்றுடன் பாடல்கள் அமைந்தமையால் விரும்பிப் பாடுவார் மிகுந்தனர். பெண்கள் இசையாசிரியர் களாகவும், கவிஞர்களாகவும், பாடகர்களாகவும் திகழ்ந்தனர். இசையமைத்தவர்கள் கவியெழுதும் ஆற்றலும் பெற்றிருந்தனர். மொந்தை, முழவு, குழல், தாளம், வீணை இவற்றின் கூட்டிசைக்கேற்ப வாய்மூரி பாடினர்.

பல்லவர், பாண்டியர் காலத்தில் இசைக்கருவிகள் பல்கிப் பெருகின. அவை தனித்தும் ஒருங்கிணைந்தும் ஆடலுக்குத் துணை நின்றன. தோல், துளை, நரம்பு, கஞ்சக்கருவிகள் என அமைந்த இவற்றுடன் மிடறும் சேர்ந்து எழுப்பிய ஒலியினை, 'பஞ்சமா சப்தம்' எனக் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. தனியிசையிலும் கருவித்திரள் இசையே ஆடலுக்கு உகந்ததாகக் கொள்ளப்பட்டது. ஆடற்கலைஞர்களுக்குப் பாடல்களும் இசையும் கற்றுத்தரப் பாணர்களும் பிடாரர்களும் அடிகள்மாரும் உதவினர். கருவிக் கலைஞர்களிடம் இசைக் கருவிகளை இயக்கும் முறைகளை ஆடற்பெண்கள் கற்றுத் தேர்ந்தனர்.

கோவில்களிலும், அரசவைகளிலும் பல்வகைப் பாடல் களையும் பாடியவர்கள் காந்தர்வர்கள் என்றழைக்கப்பட்டனர். தஞ்சாவூர் இராஜராஜேசுவரத்தில் காண, பாடவென்றே சிலர் இருந்தனர். பாணர்கள் சங்கத் தொடர்ச்சியாகவும் பதிகம் பாடியவர்கள் பல்லவர் காலத் தொடர்ச்சியாகவும் அமைய, காந்தர்வர்களும் பாசுரம் பாடியவர்களும் காண, பாட இருந்தவர்களும் சோழர் காலப் புதுத் தோன்றல்களாக அமைந்தனர்.

தோல், காற்று, கஞ்சக் கருவிகளை வாசித்த சோழர் காலக் கலைஞர்கள் உவச்சர்கள் எனப்பட்டனர். அவர்களை வழிநடத்திச் சென்ற இசையாசிரியர்கள், 'தலைப்பறை' என்றும் 'நாயகம்' என்றும் அழைக்கப்பட்டனர். மத்தளம், கரடிகை, மண்டை, செண்டை, சகடை, குடமுழவம், உடுக்கை, பேரிகை, திமிலை, படகம், பூக்கரகம், பெருவடகம், தட்டழி இவை தோல் கருவிகளாக அமைந்தன.

தாளவிசைக்குத் தோல்கருவிகள் விளங்கினாற் போலப் பண்ணிசைக்குக் காற்றுக் கருவிகளும், நரம்புக் கருவிகளும் உதவின. எக்காளம், சின்னம், தாரை, சங்கு, கொம்பு, குழல் இவை காற்றுக் கருவிகளாகும். வீணையின் வரவால் யாழ் செல்வாக்கிழந்தாலும், சோழர் காலத்திலும் அது பயன்பாட்டில் இருந்தது. பொன்செய் நல்துணையீசுவரம் கோவிலில் யாழிசைப் போட்டியொன்று சிற்பக் காட்சியாக இடம் பெற்றுள்ளது. பல்லவர், பாண்டியர் கால இறையாடல் சிற்பங்களில் அறிமுகமாகும் சிரட்டைக் கின்னரி சோழர் காலத்தில் பெருவழக்குப் பெற்று விளங்கியது.

**3. ஒப்பனை**

சங்க காலத்தில் மக்கள் ஆடலாக இருந்தாலும் தொழில்முறைக் கலைஞர்களின் ஆடலாக இருந்தாலும் ஆடலுக்கு ஏற்பவும் இடச் சூழலுக்கு ஒப்பவும் ஒப்பனை செய்து கொண்டனர். குறிஞ்சிக் குரவையர் வேங்கைப் பூக்களைச் சூடியும் மலர்மாலைகள் அணிந்தும் ஆடினர். மருதப் பெண்கள் பொன் அணிகலன்கள் அணிந்து ஆடினர். அவர்தம் இடையில், பூங்கொத்துகளைத் தழையுடன் மிடைந்து செய்யப்பட்டிருந்த ஆடையும் பொற்காசுகளால் ஆன அணிகலனும் இருந்தன.

துணங்கை ஆடிய பரத்தையர் தம்மை அழகுபடுத்திக் கொள்வதில் அக்கறை செலுத்திப் பொன்னாலான தலைக்கோலம், பொற்குழைகள், தோளில் பொற்றொடிகள், பிணைத்த தழையாடை இவற்றுடன் கால்களில் சிலம்பணிந்து ஆடினர். செம்பஞ்சிக் குழம்பு பூசப் பெற்றிருந்த அவர்தம் நகங்கள் முருக்க மர அரும்புகளை ஒத்தன. விறலியர் ஆவிரைப்பூ மாலைகளுடன், மயிர்ச்சாந்து அணிந்து, நறுமணம் கமழும் கூந்தலில் பல்வகை மலர்களைச் சூடியிருந்தனர்.

சங்கம் மருவிய காலத்து நாடகக் கணிகையர் வாசனை கூட்டிய மணங்கமழும் தம் கரியகூந்தலைப் பத்துவகைத் துவர், முப்பத்திருவகை ஓமாலிகைகளில் ஊறிய நன்னீரில் நீராட்டிப் புகையில் புலர்த்தி, மான்மதச் சேறூட்டி, ஐந்து வகை பெற வகுத்து முடித்தனர். தலை முதல் பாதம் வரை பல்வேறு அணிகளை அணிந்து, சண்பகம், முல்லை, தாழை மலர்களைக் குழலில் தகவுற வைத்து எழிலுற விளங்கினர். குரவையும் வரிக்கூத்தும் ஆடியவர்கள் அவற்றிற்கேற்ப ஒப்பனை செய்துகொண்டனர்.

பல்லவர், பாண்டியர் காலத்தே குரவை ஆடிய இளம் பெண்கள் மலர்மாலைகள், கோல் வளைகள் அணிந்து கோலம் பூண்டு ஆடினர். அவர்தம் இடையைக் காசுகள் கோத்த அணிகலன்கள் அலங்கரித்தன. ஒப்பனை செய்வதற்கென்றே இக்காலத்தில் வண்ண மகளிர் இருந்தனர். அகில் குழம்பால் மார்பகத்தே கொடி வரைந்து கொள்ளுதல் சிறப்பான ஒப்பனையாகக் கருதப்பட்டது. நுண் துகில் அணிந்து பூவினுள் பிறந்த புனையிழை போல ஒப்பனை செய்து மகளிர் ஆடினர்.

சோழர் கால ஒப்பனை முறைகளைத் தலைக்கோலம், அணிகலன்கள், ஆடைகள், பூசுபொருள்கள் என்று நாற்பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம். தலைக்கோலங்களில் பூச்சரங்கள், முத்துமாலைகள், மணிமாலைகள், முகப்பணிகள் இவை உரிய இடங்களில் அழகுறப் பொருத்தப்பட்டன. சடைப்பந்தம், கேசபந்தம், குந்தளம், தமிழம் எனும் நால்வகைத் தலைக்கோலங்களைச் சோழச் சிற்பங்களில் பார்க்க முடிகிறது.

பொன்னாலும் வெள்ளியாலும் மணிகளாலும் செய்யப்பட்ட பல்வேறு அணிகலன்கள் கொள்ளப்பட்டன. ஆடலுக்கு அணியப்பட்ட ஆடைகள் இடுப்பில் இருந்து முழங்கால் அல்லது கணுக்கால் வரையிலுமாய் அமைந்தன. உடலின் மேற்பகுதியை மறைக்கும் வகையில் ஆடைகள் இல்லை.

கூத்துகளை நிகழ்த்தியவர்கள் பூசுவதற்கு அரிசிமாவும் மை எண்ணெயும் மஞ்சள் பொடியும் பயன்படுத்தினர். சாந்திக்கூத்தர் வாசிகை வைத்து, மணித்தோடு அணிந்து, முகத்தில் சுண்ணம் எழுதி, ஏந்து சுடர்வாள் பிடித்து, ஈசனுக்கும் காளிக்கும் கூத்தாடினர்.

**4. அரங்குகள்**

சங்க கால அரங்குகள் ஆடலுக்கேற்ப அமைந்தன. குரவையாடியவர்கள் வேங்கை, காஞ்சி மரங்களின் நிழல், மலையுச்சி, தெருக்கள், மணல்வெளி, குன்றுகள், மன்றுகள் ஆகியவற்றையே அரங்காகக் கொண்டு ஆடினர். துணங்கையோ அதற்கென அமைக்கப்பட்ட விழாக்காலக் களத்தில் அல்லது பரத்தையர் சேரியில் ஆரவாரத்துடன் நிகழ்த்தப்பட்டது. சில ஊர்களில் ஆடல் நிகழ்த்துவதற்கென்றே களங்கள் இருந்தன. வெறியாடிய வேலன் களம் அமைத்து ஆடினார். இக்களம் வீடு, முன்றில், துருத்தி, தெரு முதலிய இடங்களில் அமைக்கப்பட்டது.

நெய்தல் மலர் மாலைகளாலும் நறவம் பூக்களாலும் மணம் கமழ்ந்த பந்தல்களில் அரசர்கள் பலராய் அமர்ந்து காண விறலியர் நடனம் நடைபெற்றது. சில இடங்களில் அவை புகழ் அரங்குகளும் இருந்தன. சங்கம் மருவிய காலத்தில் சிற்ப நூலாசிரியர்கள் வகுத்த இயல்புகளினின்று வழுவாது, குற்றமில்லாத நிலத்தில், ஊரின் நடுவே தேரோடும் வீதிகளுக்கு எதிர்முகமாக நிலம் தேர்ந்து அரங்கமைத்தனர். புதுமையும் அழகும் நிரம்பியதாய் அமைக்கப்பட்ட இத்தகு அரங்குகளில் அரங்கேற்றம் நிகழும் முன் தலைக்கோல் நிறுத்தப்பட்டது.

பல்லவர், பாண்டியர் காலத்தில் ஆடல் நடந்த இடம் ஆடம்பலம், அரங்கம் என்று குறிப்பிடப்பட்டது. நூற்றுக்கணக்கானோர் அமரும் அளவிற்கு அரங்கில் இருக்கை வசதிகள் இருந்தன. தமிழ்நாட்டின் பல ஊர்களில் ஆடரங்குகள் இருந்தமையைத் திருமுறைகள் சுட்டுகின்றன. சோழர் காலத்தில் நிருத்த மண்டபம், சதுர்சாலை, நாடக சாலை, திருக்காவணம், திருவோலக்க மண்டபம், கூத்துக் கண்டருளும் இடம், அரங்கம், அம்பலம், வீதிகள், பல்வேறு மண்டபங்கள் என ஆடரங்குகள் பெருகின.

திருவொற்றியூர் ஆதிபுரீசுவரர் கோவிலில் இருந்த திருவோலக்க மண்டபம் பதியிலார், தேவரடியார் ஆடல்களைக் கண்டது. இங்கு நிகழ்ந்த பதியிலாரின் அகமார்க்க ஆடலையும் விநோதக் கூத்தையும் காணச் சோழப் பெருவேந்தர்களே வருகை தந்ததாகக் கல்வெட்டுகள் கூறுகின்றன. ‘திருவீரட்டானமுடைய நாயனார் கோவில் பதியிலாரும் தேவரடியாரும் நூற்றுக்கால் திருமண்டபத்து முதலியார் நாடற்கரிய கூத்தரும் நாயகரும் ஏறியருளினால், முற்பாடு திருத்திரை எடுத்தால் பதியிலார் ஆடவும் பிற்பாடு திருத்திரை எடுத்தால் தேவரடியார் ஆடவும் கடவ’ என்பது கல்வெட்டுப் பாடம். இவை தவிர, இறை ஊர்வலம் நிகழ்ந்த அனைத்து வீதிகளுமே அரங்குகளாகி ஆடல் கண்டன.

**5. ஆடுநர் வாழ்க்கை**

சங்க காலத்தில் வாழ்க்கையின் ஓர் அங்கமாகவே

ஆடல்கள் விளங்கின. சமுதாயக் கூட்டுறவை நிலைப்படுத்தும் முறையில் மக்கள் அனைவரும் பால், வயது, நில வேறுபாடின்றிப் பங்கேற்றதனால், இவ்வாடல்கள் சமூக வளர்ச்சிக்குப் பேருதவியாக இருந்தன.

தொழில்முறைக் கலைஞர்களின் வாழ்க்கை வறுமையின் பிடியில் இருந்தமையை ஆற்றுப்படை நூல்கள் தெளிவாக்குகின்றன. அதனாலேயே அவர்கள் இடம்விட்டு இடம் பெயர்ந்து பல்லூர்களுக்கும் சென்று ஆடல் நிகழ்ச்சிகளை நடத்திப் பசி நீங்கி வாழ்ந்திருந்தனர். தொழில்முறைக் கலைஞர்களுக்கு சமூகத்தில் மதிப்பிருந்தது. செவியறிவுறுத்தும் உயர்நிலையை அவர்கள் பெற்றிருந்தனர். மக்கள் ஆடல்கள் உணர்வு வடிகால்களாக அமைய, தொழில்முறை ஆடல்கள் புகழ் பரவவும் வரலாறு பேசவும் உதவின. சுருங்கச் சொன்னால், சங்கச் சமுதாயத்தில் ஆடற்கலை, சமூகம் சார்ந்த பயனுறு கலையாகவே வளர்ந்து திகழ்ந்தது.

சங்கம் மருவிய காலத்தில் மதுரை, புகார், வஞ்சி, காஞ்சிபுரம் முதலிய நகரங்களில் ஆடற்பெண்கள் பலராய் இருந்தனர். அவர்கள் வாழ்ந்த தெருக்கள் நாடகக் கணிகையர் தெரு, கூத்தியர் தெரு என்றழைக்கப்பட்டன. மதுரையில் அதுபோல் தெருக்கள் இரண்டு இருந்தன. அங்குக் குடியிருந்த பெண்கள், 'சுடுமண் ஏறா வடுநீங்கு சிறப்பின் முடியரசு ஒடுங்கும் கடிமனை வாழ்க்கை'யராவர்.

தொழில்முறைக் கலைஞர்களாய் ஊர்ப்புறத்தும், நகர்ப்புறத்தும் வாழ்ந்த பாணர்கள் பாடினியர்கள் கூத்திகள் செல்வர்களையும், மன்னர்களையும் அண்டி வாழ்ந்தனர். அரண்மனைகளில் கூத்தியர் பலராக இருந்தனர். செங்குட்டுவனின் வடபுலப் படையெடுப்பின்போது ஆடல் மகளிர் நூற்றிருவர் உடன்சென்றனர். கருவிக் கலைஞர்கள் இருநூற்று எண்மர் சென்றனர். அரசர், செல்வர் அணைப்பற்ற நிலையில் இக்கலைஞர்கள் ஊர் விழாக்களில் ஆடல் நிகழ்த்தி வாழ்க்கை நடத்த வேண்டியிருந்தது. விழாக்கால வளமைகள் வாழ்க்கை முழுவதும் வாராமையின் அவர்கள் வறுமையில் வாடிய நிலைகளும் இருந்தன.

புரப்பாரை நாடித் தொழில்முறைக் கலைஞர்கள் அல்லலுற்ற நிலைக்குப் பல்லவ, பாண்டியர் காலப் பத்திமை எழுச்சி முடிவு கட்டியது. இறைவழிபாட்டில் ஆடல் சிறப்பிடம் பெற்றதால் தொழில்முறைக் கலைஞர்கள் ஆங்காங்கே உள்ள கோவில்களில் பணி பெற்று நிலைத்த வாழ்வுக்கு உரியவராயினர். அவர்களுக்கு வாழ்நாள் முழுவதும் பணிப் பாதுகாப்புத் தரப்பட்டது. வாழ்க்கைத் தேவைகளை நிறைவு செய்து கொள்ள வாய்ப்பாக நிலம் தரப்பட்டது. அரண்மனைக் கலைஞர்கள் வளமாக வாழ்ந்தமைக்குப் பாடல்களும் சிற்பங்களும் சான்று பகர்கின்றன. நாடகக் கணிகையர், 'வீழ்ந்தோர் நல்கும் வெறுக்கை அன்றிக் காணி கொண்டும்' வாழ்ந்தனர். செல்வவளம் பெற்றிருந்தனர்.

சோழர் கால ஆடற்கலைஞர்களுள் பதியிலார் உயர்நிலையில் இருந்தனர். திருக்கோவில்களுக்கு வருகை தந்த அரசர்கள் முன்னிலையிலும் இறைவன் திருக்காவணங்களில் எழுந்தருளிய விழாக் காலங்களிலும் ஆடல் நிகழ்த்திய கலைஞர்களாகப் பதியிலார்களையே பெரும்பாலான கல்வெட்டுகள் சுட்டுகின்றன. ஆடற்பெண்கள் முறையான மணவாழ்க்கையில் ஈடுபட்டுக் குடும்பத்துடன் வாழ்ந்தமைக்குக் கல்வெட்டுச் சான்றுகள் உள்ளன. இடைச்சோழர் காலம்வரை அவர்தம் வாழ்க்கை பாதுகாப்பானதாகவும், செல்வச் செழிப்புடையதாகவும் விளங்கியது. இருக்க மனைக்கும், உணவுக்கும் பிற தேவைகளுக்கும் நிலவருவாயும் இருந்தமையால் அவர்கள் வாழ்க்கை அமைதியாகச் சென்றது. பணியாற்றிய கோவில்களுக்கும் பத்திமையொடு சென்று வணங்கிய கோவில்களுக்கும் இவர்கள் அள்ளி வழங்கியிருக்கும் கொடைகள், இறைக்கோவில்கள்பால் இவர்கட்கிருந்த ஈடுபாட்டையும் இவர்தம் அருள் உள்ளத்தையும் விளக்குகின்றன.

ஆடற்பெண்களைப் போலவே ஆடலாசான்களும், பாடலாசான்களும், இசையாசிரியர்களும், கருவிக் கலைஞர்களும், கூத்தர்களும் சோழர் காலத்தில் வளமான வாழ்க்கையைப் பெற்றிருந்தனர். சமுதாயத்தின் ஓர் அங்கமாய் இக்கலைஞர்கள் விளங்கியதை மடைவிளாகக் கூட்டுக் குடியிருப்புகள் நிறுவும். சபை உறுப்பினர்களாகவும், ஆவணங்களுக்குச் சான்றாளர்களாகவும், அறக்கட்டளை களுக்குக் காப்பாளர்களாகவும், ஆடற்கலைஞர்களைப் பொறுப்பேற்கச் செய்தமை அவர்களிடம் அரசர்களுக்கும், மக்களுக்கும் இருந்த நன்மதிப்பையும் நன்னம்பிக்கையையும் புலப்படுத்தும். சமுதாயப் பொறுப்புள்ள கலைஞர்களாக அவர்கள் திகழ்ந்தமையால்தான், நாடாண்டவர் ஊருக்கும் கோவிலுக்கும் துன்பம் நேர்ந்த காலங்களில் அவற்றை ஒழுங்குபடுத்தவும் தீர்வு காணவும் இக்கலைஞர்களை நாடமுடிந்தது.

திருவொற்றியூர்க் கொற்றியம்மை அரசரிடம் நேரிடையாக வேண்டிக் கோவிலுக்கான உதவிகள் பெற்றமையும், கோவிலார் வேண்ட உறவாக்கின தலைக்கோலியின் பெயரால் மன்னர் ஊர்ப்பெயர் அமைத்ததையும் ஆடற்கலைஞர்களுக்கு அரசிடத்தும் மக்களிடத்தும் இருந்த செல்வாக்கை உணர்த்தப் போதுமான சான்றுகளாக அமையும். ஆடற்கலைஞர்களிடமும், கருவிக் கலைஞர்களிடமும் மன்னர்கள் கொண்டிருந்த பெருமதிப்பு, கோவில்களில் அக்கலைஞர்களைப் பணியமர்த்த அவர்கள் வழங்கிய நேரடி ஆணைகளால் புலப்படும். வேறெந்தத் தொழிற்கலைஞர்களுக்கும் சோழர் காலத்தில் இப்பெருமை கிடைக்கவில்லை.

முற்சோழர், இடைச்சோழர் காலத்தில் வளர்நிலைகளின் உச்சத்தைக் கண்ட ஆடற்கலை, பிற்சோழர் காலத்தில் தேயத் தொடங்கியதையும் ஒழுக்க நெறிகளொடு வாழ்ந்த ஆடற்கலைஞர்களின் வாழ்க்கையில், நிலையில்லாத பின்னாளைய ஆட்சிகளும் அவற்றின் விளைவான பாதுகாப்பற்ற சமுதாயச் சூழல்களும், பொருளாதாரச் சீர்குலைவும் இணைந்து இருள் சேர வைத்ததையும் பிற்காலக் கல்வெட்டுகள் சுட்டுகின்றன.

# ஓவியக் கலை

முனைவர் ஆ. பத்மாவதி



மனித இனம் தனது நாகரிகத்தின் தொடக்கத்தி லிருந்தே ஓவியங்கள் தீட்டத் தொடங்கியிருந்ததைக் காணமுடிகிறது. தொல்பழங்காலத்தைச் சேர்ந்த ஓவியங்கள் தமிழகத்தில் இருபத்தைந்து இடங்களுக்கும் மேலாகக் கண்டுபிடிக்கப் பட்டிருக்கின்றன. இந்தியாவில் உத்திரப்பிரதேசத்தில் பிம்பெட்கா என்ற இடத்தில் கண்டுபிடிக்கப்பட்டுள்ள ஓவியங்கள் மிகவும் புகழ் பெற்றவை. தமிழகத்தில் முதல்முறையாக மல்லப்பாடி என்ற இடத்தில் சென்னைப் பல்கலைக்கழகத் தொல்லியல் துறையால் கி.பி. 1980இல் புதிய கற்காலத்தைச் சேர்ந்த ஓவியங்கள் கண்டு பிடிக்கப்பட்டன.

பின்னர்க் கீழ்வாலை என்ற இடத்தில் அனந்தபுரம் கிருஷ்ணமூர்த்தி என்பவரால் 1980இல் தொல்பழங்கால ஓவியங்கள் கண்டுபிடிக்கப்பட்டு வெளியுலகிற்குத் தெரியப்படுத்தப்பட்டன. அங்குத் தீட்டப்பட்டுள்ள ஒரு காட்சியில் குதிரைமீது அமர்ந்த நிலையில் ஒருவன் கடிவாளத்தைப் பிடித்திருக்க, மற்றொருவன் இடையில் குறுவாளுடன் காணப்படுகிறான். ஆதலால், இவ்வோவியம் இரும்புக் காலத்தைச் சேர்ந்ததாக இருத்தல் வேண்டும். மற்றொரு காட்சியில் நான்கு பேர் பயணம் செய்கின்றனர். ஒரு படகில் ஒருவன் கையில் துடுப்பு உள்ளது. அவர்கள் தலையில் கொம்புகளுடனும், நீண்ட பறவை மூக்குகளுடனும் காணப்படுகின்றனர். உலகம் முழுவதிலும் பல்வேறு இடங்களில் கிடைத்துள்ள தொல்பழங்கால ஓவியங்களில் இதே பறவை மூக்குடன் மனித உருவங்கள் காணப்படுவது குறிப்பிடத்தக்கது. சேர்ந்து கைகோத்து நடனமிடும் காட்சியும் உள்ளது. அதே இடத்தில் சிந்துவெளி முத்திரைகளில் காணப்படும் குறியீடுகள் காணப்படுகின்றன. அருகிலுள்ள செத்தவரை என்ற இடத்திலும் இதே காலத்தைச் சேர்ந்த ஓவியங்கள் கிடைத்துள்ளன.

இங்கு அழகிய மான், மீன், எருமை, காட்டுப்பன்றி ஆகியவை தீட்டப்பட்டுள்ளன. வெளிக்கோடுகள் செங்காவி வண்ணத்திலும் உட்புறம் வெள்ளை வண்ணத்திலும் வரையப்பட்டுள்ளன. இங்குள்ள மிருகங்களின் உடலின் உள்பாகங்கள் தெரிவதாய் வரையப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது. இதன்பின்னர்த் தமிழகத்தில் பல இடங்களில் தொல்பழங்கால ஓவியங்கள் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன.

தொல்பழங்காலத்தில் தொழில் மட்டுமே வாழ்க்கை. ஆதலால், அக்காலத்தில் வெளிப்பட்ட ஓவியங்கள் தொழில் சார்ந்தவையாகத்தான் தோன்றின என்பதனை இவ்வோவியங்கள் உணர்த்துகின்றன. சண்டையில் வெல்ல, மிருகங்களை வேட்டையாட, மழை பெய்ய, ஓவியம் தீட்டி அதன்மூலம் அவ்விளைவை ஏற்படுத்த முடியும் என்று நம்பியிருக்கின்றனர். மனித உழைப்பின் வெளிப்பாடாக, தொழில் சார்ந்தவையாக இருந்த கலைகள் நாகரிகம் வளர வளர, சமூக முன்னேற்றத்தின் வெளிப்பாடாக வர்க்கங்கள் தோன்றியபோது உடல் உழைப்பில் ஈடுபடுவோர், மூளை உழைப்பில் ஈடுபடுவோர் என்ற பாகுபாடு தோன்ற ஆரம்பித்தது. அப்போதுதான் கலையிலும் இரு பிரிவுகள் தோன்றின.

உழைப்புத்திறன் பெருகி வளர்ந்தபோது அதன் வளர்ச்சிப் போக்கில், உற்பத்தித் திறனும் பெருகி உபரி உற்பத்தி ஏற்பட்டபோதுதான் தனிச் சொத்துரிமை தோன்றியது. மனித வரலாற்றில் ஏற்பட்ட இப்புதிய வளர்ச்சி உழைக்கும் வர்க்கம், ஆளும் வர்க்கம் என்ற இரு வேறுபட்ட வர்க்கத்துடன் கூடிய பண்பு மாற்றத்தைத் தோற்றுவித்தது.

அப்போது ஆடல், பாடல், ஓவியம் போன்ற கலைகள், உழைப்பில் நேரடியாக ஈடுபடாத ஒரு பிரிவினரை மகிழ்விப்பதற்காகவும் பொழுது போக்கிற்காகவும் நிகழ்த்தப்பட்டன. உழைப்பில் ஈடுபடுவோர் தங்கள் தொழிலின்போது உருவான அக் கலைகளை, தொழில் ரீதியாகப் பயன்படுத்திவந்தனர். ஆக, உழைப்பிலிருந்து பிரிந்து சென்ற கலைகள் அதாவது பண்படுத்தப்பட்ட அல்லது செவ்வியல் கலைகளாயின. உழைப்பில் நேரிடையாக ஈடுபடுகின்ற உழைக்கும் மக்களின் ஆடல், பாடல், ஓவியம் உள்ளிட்ட கலைகள் நாட்டுப்புறக் கலைகள் ஆயின. செவ்வியல் கலைகளில் திறன் படைத்த அந்தக் கலைஞர்களுக்குத் தொழிலே கலைதான். இவர்கள் நேரடியாக உற்பத்தியில் ஈடுபடாதவர்கள். கலைகளை நடத்திக் காட்டிப் புகழ் பெற்றவர்கள், போற்றப்பட்டவர்கள்.

ஆகவே, உற்பத்தியில் தொடர்புடைய ஆனால், நேரடியாக ஈடுபடாத உயர்வர்க்கம் அல்லது ஆளும் வர்க்கம் மற்றும் உற்பத்தியில் நேரடியாக ஈடுபடும் உழைக்கும் வர்க்கம் அல்லது உழைப்பாளிகள் என்ற இந்த இரு பிரிவினர்களைத் தவிர மூன்றாவதாகத் தோன்றிய புதிய வர்க்கத்தினர்தாம் இந்தக் கலைஞர்கள். மனிதகுல வளர்ச்சியில் மனிதன் எடுத்து வைத்த முக்கியமானதோர் அடி இதுவாகும்.

சமூகம் வளர வளர மொழியும் வளர்ந்தது. சமூகம் பண்படப் பண்பட மொழியும் மக்கள் நடைமுறையும் பண்பட்டது. மொழியைச் சரியான முறையில் எடுத்தாளத் தெரிந்தவர்கள் புலவர்களாயினர். அவர்கள் கூறியதெல்லாம் பாடல்களாயின. அவர்களது பாடல்களின் உள்ளடக்கம் மன்னர் மற்றும் குறுநிலத் தலைவர்களது

குணநலன்களாகிய காதல், வீரம், கொடை, வெற்றி, பண்பாடு போன்றவையாகும். அன்றைய வீரயுகத்தின் தேவை புலவர்களை உருவாக்கியது. அரசு உருவாக்கக் காலமாதலால் அக் காலம் அரசர்களையும், குறுநிலத் தலைவர்களையும் உருவாக்கியது. இக்காலத்தைத் தான் சங்க காலம் என்றும் வீரயுகம் என்றும் கூறுகிறோம்.

அக் காலத்தில் ஆடற்கலை, பாடற்கலை, ஓவியக்கலை, கட்டடக் கலை போன்றவை மிகவும் உன்னத நிலையை எட்டியிருந்தன. கூத்தரும் விறலியரும் பாணரும் பாடினியும் சிறப்படைந்தனர். அவர்கள் மீட்டிய இசைக் கருவிகளும் ஆடல் பாடல்களும் மிகச் சிறப்பாகக் கூறப்பட்டிருப்பதுபோல, ஓவியக் கலைஞனின் ஆற்றலும் வருணிக்கப்பட்டிருக்கிறது. இக் கலைகள் அனைவரையும் கவர்ந்திழுத்திருக்கிறது.

(எ – டு) :

**சுடுமண் ஓங்கிய நெடுநிலை மனைதோறும்**

**மையறு படிவத்து வானவர் முதலாக**

**எவ்வகை உயிர்களுக்கும் உவமங் காட்டி**

**வெண்சுதை விளக்கத்து வித்தகர் இயற்றிய**

**கண்கவர் ஓவியங் கண்டு நிற்குநரும்**

என்ற பரிபாடல் அடிகள், தெய்வங்கள் முதல் பலவகை உயிர்களும் ஓவியங்களாகச் சுவர்களில் வரையப்பட்டிருந்ததைக் கூறுகின்றன. சுவர்களில் மட்டுமல்ல, திரைச்சீலைகளிலும் (Curtains) ஓவியம் வரைந்து அதனை ஓவிய எழினி என்றனர். நடனம் அரங்கேறுகின்ற அரங்கில் திரைச்சீலை எவ்வாறு அமைக்கப்பட்டிருந்தது, அதில் எவ்வகை ஓவியங்கள் தீட்டப்பட்டிருந்தன என்பதற்குச் சிறந்த சான்றாகச் சிலப்பதிகாரத்தின் அரங்கேற்று காதையில் கூறப்பட்டிருப்பதனைக் கண்டு களிக்கலாம்.

நெடுநல்வாடை என்ற சங்க இலக்கியத்தில் அழகான காட்சி ஒன்று; அரசன் போருக்குச் சென்று விட்டான்; அங்குப் பாசறையில் தங்கியிருக்கின்றான். அரண்மனையில் அரசி, அரசனின் வரவிற்காக ஏங்கியிருக்கிறாள். அரண்மனையின் மாடத்திலிருந்து கொண்டு வெளியே எட்டிப் பார்க்கின்றாள்.

நல்ல கூதிர்காலம். செடி கொடிகளில் மலர்கள் பூத்துக் குலுங்குகின்றன. காற்றில் மகிழ்ச்சியாக ஆடுகின்றன. அரசி நினைக்கின்றாள்; இந்த ஓரறிவு உயிர்கள்கூட இவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கின்றனவே; நம்மால் முடியவில்லையே என்று வருந்திச் சோர்வுடன் வந்து கட்டிலில் அமர்கின்றாள். சோகத்தில் மேலே பார்க்கின்றாள். அங்கேயும் சந்திரனும் அவன் மனைவி உரோகிணியும் ஆனந்தமாக விண்ணிலே பறந்து செல்கின்ற ஓவியக் காட்சி, அரசியை மேலும் வாட்டுகின்றது – தம்மால் எப்போதும் தலைவனுடன் சேர்ந்து மகிழ்ச்சியுடன் இருக்க முடியவில்லையே என்று. அதுமட்டுமா, மன்னனைப் பிரிந்து தனித்திருக்கின்ற அந்த அரசி அழகிய பட்டாடைகள் அணிந்தும் அழகிய அணிகலன்கள் அணிந்தும் தன்னை அழகுபடுத்திக் கொள்ளவில்லை. அதனால் அந்த அரசியின் தோற்றம் எப்படியிருந்தது தெரியுமா? 'புனையா ஓவியம்' போல இருந்ததாம். புனையா ஓவியம் என்றால் என்ன? அதுதான் கோட்டோவியம் (line drawing). இவ்வாறு உழைப்பில் ஈடுபட்ட மனிதனால் தோன்றிய கலைகள், ஓவியக்கலை உட்பட சமூக வளர்ச்சியுடன் சேர்ந்தே வளர்ந்து உயர்ந்து அரண்மனைவரை சென்றன. கலைஞன், தொழில் ரீதியாக வளர்ந்த நிலையை அடைந்திருந்தான்.

சமூகத்தின் அடுத்த கட்ட வளர்ச்சி என்பது மதங்கள். மதங்கள் தங்களது கருத்துகளை ஓவியங்கள் மூலம் வெளிப்படுத்தவும் தலைப்பட்டன. சமணர்களும், பௌத்தர்களும் தாங்கள் வசிக்கும் குகைகளில் ஓவியங்கள் வரைந்து வழிபட்டதை மதுரைக்காஞ்சியும், இந்திரன், ஊர்வசி, கௌதம முனிவர், அகலிகை, பூனை ஆகிய ஓவியங்கள் திருப்பரங்குன்றத்து மலையில் வரையப்பட்டிருந்ததைப் பரிபாடலும் கூறுகின்றன. சங்க இலக்கியங்கள் சித்திரமாடம், சித்திரக்கூடம் என்று அரண்மனைகளில் ஒரு தனியிடம் அமைக்கப்பட்டிருந்ததனையும் கூறுகின்றன.

சங்க அரசர் பலர் சித்திரக் கூடத்தில் துஞ்சினர். இந்தக் கூடங்களில் வரையப்பட்டிருந்த சித்திரங்கள் எதனைப் பிரதிபலித்தன? அக் கூடங்களில் நடந்த நிகழ்ச்சிகள் யாவை? அல்லது அரண்மனை வாழ்வில் இக்கூடங்களின் பங்கு என்ன? என்பவை பற்றி இன்னும் ஆய்வு செய்யப்பட வேண்டும். மாடத்திலும் கூடத்திலும் வரையப்பட்ட இவ்வோவியங்கள் சுவர் ஓவியங்களேயாகும். பின்னர், திருமங்கையாழ்வாரும், தொண்டரடிப் பொடியாழ்வாரும் தில்லைச் சித்திரக் கூடத்து இறைவனைப் பாடியுள்ளனர். அவர்கள் காலத்தில் சித்திரக் கூடத்தில் பள்ளிகொண்ட பெருமாளைப் பாடியுள்ளதால், அவர்கள் காலத்தில் சித்திரக் கூடத்தில் பள்ளிகொண்ட பெருமாள் அமைக்கப்பட்டிருந்தார் என்பது தெரிகிறது. அதுபோலக் குற்றாலத்தில் உள்ள சித்திர சபையில் சிவனின் உருவங்கள் வரையப்பட்டிருக்கின்றன. இவ்வூர்களிலும் இதுபோன்ற பிற இடங்களிலும் காணப்படுகின்ற ஓவியங்கள், சங்க இலக்கிய மரபை அடியொற்றித் தொடர்ந்து நீடித்து வருகின்ற வழக்கமேயாகும். இதன் பின்னர், நல்லோர் செல்கின்ற உலகம் புத்தேள் உலகமென்பதும், இந்திரலோகம் என்பதும் சங்க காலத்திய நம்பிக்கையாதலால் அக்கால சித்திரமாடங்களில் இந்திரலோகக் காட்சிகள் வரையப் பெற்றிருக்கலாம். ஆதலால் மன்னர்கள் இறக்கும் தருவாயில் அவர்களைச் சித்திர மாடத்திற்குக் கொண்டு சென்றிருத்தல் வேண்டும்.

மகாராஷ்ட்டிர மாநிலத்தில் அஜந்தா எல்லோரா குடைவரைகளில் கி.பி. 2ஆம் நூற்றாண்டில் அப்பகுதியை ஆட்சி புரிந்த சாதவாகன மன்னர்களது ஓவியங்கள் காணப்படுகின்றன. அக்கால மக்களும் அரச மரபினரும் பயன்படுத்திய ஆடை அணிகலன்கள் தலைப்பாகை போன்றவற்றுடன் காணப்படும் இவ்வோவியங்கள் புத்த ஜாதகக் கதைகளின் அடிப்படையில் வரையப் பெற்றிருக்கின்றன. வாகட அரச மரபினரின் சைவ சமய ஓவியங்களும் அஜந்தா குடைவரைகளில் இடம் பெற்றிருக்கின்றன. இங்குள்ள சாளுக்கியர் கால ஓவியங்களில் அரசன் அரசியர் உருவங்கள் ஆடை அணிகலன்களுடன் காணப்படுகின்றன. தோழியர் உருவங்கள் சற்று மாறுபட்டிருக்கின்றன.

முற்காலப் பாண்டியர், பல்லவர் காலங்களிலும் பின்னர்ச் சோழர் காலங்களிலும் கலைகள் வளர்ந்து சிறந்து உன்னத நிலையை எட்டியிருந்தன. இக் காலத்தில் ஆடல் பாடல் உள்ளிட்ட அனைத்துக் கலைகளும் இறைவழிபாட்டில் முக்கியப் பங்காற்றியது போலவே ஓவியக்கலையும் முக்கியப் பங்கு வகித்திருக்கிறது.

சித்தன்னவாசல் குடைவரைக் கோவிலில் கருவறை விதானத்தில் வரையப்பட்டுள்ள தாமரைத் தடாகமும் முன்மண்டபத்தின் இரு தூண்களிலும் வரையப்பட்டுள்ள ஆடல் அரசியின் உருவமும் அரசன் அரசி உருவங்களும் பாண்டியர் கால சமண சமயத்தின் தலைசிறந்த சுவரோவியங்கள் ஆகும். காஞ்சி கைலாசநாதர் பிரகாரச் சுவற்றினை ஒட்டி உள்ளடக்கிய நிலையில் உள்ள அங்காலயங்கள் அல்லது தேவக்குலிகைகள் என்றழைக்கப் படும் 52 அமைப்புகளில் இறைவியின் அழகிய உருவங்கள் தீட்டப்பட்டிருந்தன. இவற்றுள் சில மட்டுமே எஞ்சியுள்ளன. புகழ் பெற்ற இவ்வோவியங்களும் மேலும் பல ஓவியங்களும், பனைமலையிலுள்ள சிவன் – பார்வதி ஆகியோர் ஓவியங் களும் சைவ சமயத்தின் தலைசிறந்த சுவரோவியங்கள் ஆகும். சிற்பங்கள் செய்தமைத்து அதன்மேல் சுதைபூசி அதில் அச்சிற்பங்களின் ஓவியத்தைத் தீட்டியிருந்தனர் என்பதைத்தான் பல்லவர் கால இவ்வோவியங்கள் நமக்கு உணர்த்துகின்றன.

சோழர் கால ஓவியக் கலைக்குச் சிறந்ததோர் எடுத்துக்காட்டாகத் திகழும் ஓவியங்கள் தஞ்சைப் பெரிய கோவில் ஓவியங்கள்தாம். இதில் தில்லைச் சிற்றம்பலத்தில் தொழுகின்ற காட்சியும், சுந்தரரது திருமண நிகழ்வுக் காட்சியும், திரிபுரம் எரித்த திரிபுராந்தகர் உருவமும், சுந்தரரை சிவபெருமான் தடுத்தாட்கொள்வதும், சுந்தரரும் சேரமான் பெருமாள் நாயனாரும் யானை மீதமர்ந்து விண்ணில் பாய்ந்து செல்வது போன்ற காட்சிகளும் எழில் வாய்ந்தவை. இங்குத் தீட்டப்பட்டிருக்கின்ற சுந்தரர், சேரமான் பெருமாள் நாயனார் ஓவியங்கள்தாம் சேக்கிழார் பெரியபுராணம் எழுதுவதற்கு ஆதாரமாகத் திகழ்ந்திருக்கின்றன. இங்குள்ள புகழ்பெற்ற ஓவியமானது கருவூர்த்தேவர், இராஜராஜன் ஓவியம் என்று கூறப்படும் ஓவியங்கள் ஆகும். அந்த உருவங்கள் கருவூர்த்தேவரோ, இராஜராஜனோ அல்லர். கருவூர்த்தேவர் இராஜராஜன் காலத்திற்குப் பிற்காலத்தவர். அக்கோவில் பற்றிப் பதிகம் பாடியவர். சைவ சமயத்தைச் சிறப்பிக்கும் இவ்வோவியங்களில் காணப்படும் நடனக் கலைஞர்களும் பறையிசைக் கலைஞர்களும் நிகழ்த்துகின்ற கலை நிகழ்வுகள் எழிலார்ந்தவை.

சோழ அரசு முதலாம் இராஜராஜன் காலத்தில் சோழப் பேரரசு ஆனது. அதற்கு அடிப்படை தலைசிறந்த அவனது அரசமைப்பு. இந்த அரசமைப்பிற்கு முதுகெலும்பாய்ச் சைவ சமயம் அமைக்கப்பட்டிருந்தது. இத்தகைய கட்டமைப்பு களுக்குப் பின்னணியில் ஆக்கபூர்வமான அறிவுரைகளை நல்கியவர் இராஜராஜனுக்கு இராஜகுருவாக விளங்கிய ஈசான சிவபண்டிதர் ஆவார். அவர்தம் சீடர்தாம் சர்வசிவ பண்டிதர். இவர்களது ஓவியங்கள்தாம் தஞ்சைக் கோவிலில் தீட்டப்பட்டிருக்கின்ற ஓவியங்கள். இந்தப் புகழ் பெற்ற சோழர்கால ஓவியங்களின் மேல் பின்னர் ஆட்சிக்கு வந்த நாயக்க மன்னர்கள் சுதை பூசி ஓவியங்கள் வரைந்திருந்தனர் என்பதனை 1931ஆம் ஆண்டு அண்ணாமலை பல்கலைக்கழகத்தில் பணிபுரிந்த எஸ்.கே. கோவிந்தசாமி என்ற வரலாற்றுத் துறை விரிவுரையாளர் கண்டறிந்து சோழர்கால ஓவியங்கள் வெளிப்படப் பேருதவி செய்திருக்கிறார் என்பதனை இச்சமயத்தில் நன்றியுடன் நினைவுகூர்தல் அவசியம். இன்று நாம் அன்றாட வாழ்க்கையில் சில முக்கியமான நிகழ்ச்சிகளைப் புகைப்படம் எடுத்துப் பாதுகாப்பது போல அன்று ஓவியமாகச் சுவர்களிலே வரைந்து பாதுகாக்கும் வழக்கம் இருந்தது என்பதனைத்தான் காளிதாசனின் அந்நூல் நமக்கு உணர்த்துகிறது.

இராமநாதபுரத்திலுள்ள சேதுபதி அரசர்களின் அரண்மனைச் சுவர்கள் முழுவதும், அன்றைய அரசியல், சமயம் மற்றும் ஆடல் பாடல் போன்ற கலை நிகழ்ச்சிகள் குறித்த ஓவியங்கள் தீட்டப்பட்டிருக்கின்றன. அவை அன்றைய நிகழ்ச்சிகளையும், வரலாற்றையும் நமக்குச் சிறப்பாக எடுத்தியம்புகின்றன. அண்மையில், மதுரையிலுள்ள திருமலை நாயக்கர் அரண்மனையைப் புதுப்பிக்கும் பணியில், தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை ஈடுபட்டிருந்தபோது, அங்குள்ள மிகப் பெரிய தூண்களில் நாட்டிய மகளிரின் ஓவியங்கள் வரைந்திருந்தது கண்டுபிடிக்கப்பட்டது. அத் தூண்களின் மேல் அடுக்கை (layer) அகற்றியபோது உள்ளே வரையப்பட்டிருந்தது தெரியவந்தது.

அரசன், அரசவை நிகழ்ச்சிக்காக அப்பகுதிக்கு வருகை தரும்போது இருபுறமும் நாட்டிய மகளிர் நின்று பூச்சொரிந்து வரவேற்பது வழக்கமாக இருந்திருக்கிறது என்ற புதிய தகவல் இவ்வோவியங்களின் கண்டுபிடிப்பால் தெரியவருகிறது. கலைஞர்கள் ஆனாலும் சரி, வினைஞர்கள் ஆனாலும் சரி, அவர்களது தொழில் வல்லமை தோன்றி வளரக் காரணமாக அமைந்தது சமூகத்தில் அவர்கள் மேற்கொண்ட உழைப்பின் விளைவேயாம்.

மனிதன் தன் தேவையைப் பூர்த்தி செய்ய இயற்கையுடன் போராடுவதில் ஏற்பட்ட மாற்றமும் வளர்ச்சியும்தாம் நாகரிக சமூகத்தின் அளவுகோலாக உள்ளது. அதற்கு மிக மிகச் சிறந்த சான்றுகளாகவும், தடயங்களாகவும் திகழ்வன கட்டடக் கலை, சிற்பக்கலை உள்ளிட்ட கலைகள். அவற்றுள் ஓவியக்கலையும் ஓவியனின் ஆற்றலும்தாம் முன்னோடியாகத் திகழ்ந்திருக்கின்றன.

சிற்பக் கலைக்கும், கட்டடக் கலைக்கும் ஏன் எழுத்துக் கலைக்கும்கூட அடிப்படையாகத் திகழ்ந்தது ஓவியக்கலைதான். எழுத்தை ஓவியம் என்றும் ஓவியத்தை எழுத்து என்றும் கூறும் வழக்கமிருந்தது. கல்லில் ஓவியம் வரைந்துதான் சிற்பங்கள் செதுக்கப்பட்டன. கல்லிலும் செம்பிலும் எழுத்துகள் பொறிக்கப்படுகின்றபோது ஓவியத்தால் எழுதிய பின்னரே உளியால் செதுக்கினர். இதற்குப் பல சான்றுகள் உள்ளன. சமூகம் பண்படப் பண்பட அந்தப் பண்பாட்டை, பண்பாட்டின் வளர்ச்சியை, நமக்குப் படம் பிடித்துக் காட்டி அதன் உன்னத வளர்ச்சியை வரலாற்றுக்கு ஆதாரங்களாக அளித்துவிட்டுச் சென்றவர்கள் கலைஞர்கள். அவர்களுள் ஒருவன் ஓவியக் கலைஞன். அவன் விட்டுச் சென்ற ஓவியக் கலையின் கூறுகளையும் அவன் திறனையும் உள்வாங்கி எழுதப்படுவதுதான் உண்மையான வரலாறாகும்.

சித்தன்னவாசல், பனைமலை ஓவியங்கள் போன்ற பழம்பெருமை வாய்ந்த ஓவியங்கள் ஏறத்தாழ அழிந்து விட்டன. நாம் கண்டு சுவைத்து வரலாற்று ஆய்விற்குப் பயன்படுத்தி மகிழ்ந்த அனுபவத்தை நம் வருங்காலச் சந்ததியினரும் அனுபவிக்க வேண்டுமல்லவா! அதற்காக நாம் அதுபோன்ற ஓவியங்களைக் காப்பாற்ற வேண்டிய கட்டாயச் சூழலில் இருக்கிறோம். அதற்கான விழிப்புணர்வைத் தொடர்ந்து ஏற்படுத்துவோம். வெற்றி பெறுவோம். ❖

# கட்டடக் கலை



தொல்லியலறிஞர் மா. சந்திர மூர்த்தி

ஒவ்வொரு கலாசாரத்திற்கும் ஓர் அடிப்படை உண்டு. நம் கலாசாரத்திற்கு அடிப்படையாக இருப்பது கோயில்கள்தாம். இந்தக் கோயில்களைப் புரிந்து கொள்வதால் மட்டுமே நம்முடைய பண்பாட்டை, பாரம்பரியத்தை, கட்டுமானத் திறனை, கட்டடக் கலையை, ரசிப்புத் தன்மையை எல்லாவற்றுக்கும் மேலாக நம்முடைய பக்தியை முழுவதுமாகத் தெரிந்து கொள்ள முடியும்.

**சங்க காலம் - கட்டடக் கலை**

சங்க காலத்தில் முறையோடு வகுத்துத் தொகுக்கப்பட்ட மனைநூல்கள் இருந்தனவெனச் சங்க இலக்கியங்கள் மூலம் அறிகிறோம். சிலப்பதிகாரம் மயன்முறையைப் பற்றிக் குறிப்பிடுகிறது. "நூலோர் சிறப்பின் முகில் தோய் மாடம், மயன் பண்டிழைத்த மரபினதுதான்" என்னும் சிலப்பதிகார அடிகள் அக்காலத்தில் சிற்ப நூல்களும், சிற்பிகளும் இருந்தனர் எனத் தெரிவிக்கின்றன. இத்தகைய பனுவல்களின் துணைகொண்டு இறைவனுக்குக் கோட்டமும், அரசருக்கு அரண்மனையும், பெருமக்களுக்கு மாடமும் மாளிகையும் திறம்பட வகுத்தனர். எடுத்துக்காட்டாகப் பூம்புகார், மதுரை, காஞ்சி, வஞ்சி போன்ற நகரங்கள் இம்முறையினால் அமைக்கப்பட்டன. புகாரின் அமைப்பைப் பட்டினப் பாலையும் சிலம்பும் – மதுரையின் பொலிவைப் பரிபாடலும் – காஞ்சியின் அமைப்பைப் பெரும்பாணாற்றுப் படையும், தண்டியலங்காரமும் விரித்துக் கூறும்.

இத்தகைய கோயில்களையும் மனைகளையும் அமைக்கக் கட்டடக்கலை நூல் அறிந்த புலவர் இருந்தனர். அவர்களை "நூலறி புலவர்" என்று நெடுநல்வாடை அழைக்கிறது. நூலறி புலவரால் மனைகள் யாவும் நாள் குறித்துத் திசைகளையும், அவற்றில் நிற்கும் தெய்வங்களையும் நோக்கி அமைக்கப்பட்டன.

சங்க காலத் தொடக்கத்தில் இருந்த கோட்டங்கள் பலவும் மரத்தினால் அமைக்கப்பட்டிருந்தன. பண்டு இருந்த இம்முறை, இன்றும் தில்லை, கேரளம் போன்ற இடங்களில் உள்ளன. மரக் கோட்டங்களோடு களிமண் கோட்டங்களும் எழுந்தன. அக்கோட்டத்தின் கூரை மரத்தால் வேயப்பட்டிருந்தது. பின்னர் மரக் கோட்டங்களும், களிமண் கோட்டங்களும் சுடுமண் ஓங்கிய நெடுநிலைக் கோட்டங்களாக மாறின. வித்தகர் இயற்றிய வெண்சுதை விளக்கங்கள் கோட்டத்தின் அழகை மிளிரச் செய்தன.

இத்தகைய கோயில் பற்றிச் சங்க இலக்கியம் விரித்துக் கூறும். புறநானூற்றுப் பாடல் ஒன்று சங்க காலத்தில் முக்கட்செல்வனாகிய சிவபிரானுக்கு அமைந்த கோயிலைக் குறிக்கிறது. சிலப்பதிகாரம் ஆறுமுகச் செவ்வேளுக்கும் – பிறவா யாக்கைப் பெரியோனுக்கும் – நீலமேனி நெடியோனுக்கும் – ஞாயிற்றுக்கும்– திங்களுக்கும் பூம்புகார் நகரில் கோட்டங்கள் இருந்ததைக் குறிப்பிடுகின்றன.

அமரர் தருக்கோட்டம், வெள்யானைக் கோட்டம், புகர்வெள்ளை நாகர்தம் கோட்டம், பகல்வாயில் உச்சிக்கிழான் கோட்டம், ஊர்க்கோட்டம், வேற் கோட்டம், வச்சிரக்கோட்டம், புறம்பணையான் வாழ் கோட்டம், நிக்கந்தக் கோட்டம், நிலாக் கோட்டம் என்றெல்லாம் சிலம்பு உணர்த்துவது நோக்கத்தக்கது.

சங்க காலத்தில் புகார், மதுரை, திருவேகம்பம் (காஞ்சி), திருவனந்தபுரம், அழகர்மலை, (திருமால் குன்றம்) திருவரங்கம், திருவேங்கடம், திருப்பரங் குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம், பழமுதிர் சோலை போன்ற இடங்களில் கோயில்கள் அமைந்திருந்தன. இத்தகைய கோட்டங்களையும், கோயில்களையும் மனை நூல் மரபுப்படி அந்தணர், ஆசான், நூனெறி மக்கள் உடன் இருந்து அழகு பெற அமைத்தனர்.

உறையூர், புகார், கரூவூர், கொற்கை, தொண்டி, மதுரை போன்ற நகரங்களில் நடந்து முடிந்த அகழ்வாராய்ச்சிகள் பண்டைய காலத்தில் கோயில்களும், கட்டடங்களும் இருந்த செய்தியை மெய்ப்பிக்கின்றன. அக்கால செங்கற்கள் எத்துணைப்

பெரிய அளவில் உறுதியாகவும், திண்மையாகவும் இருந்தன என்பதைப் புதையுண்ட நகரங்களின் வெளிப்பாடுகள் தெளிவுபடுத்துகின்றன.

சங்க காலத்தில் ஆட்சி செய்த சேர, சோழ, பாண்டியர்களால் கட்டப்பட்ட கோட்டங்களும் கோயில்களும் பெரும்பாலும் சுட்ட செங்கற்களால் கட்டப்பட்டவையே. கி.பி. 4ஆம் நூற்றாண்டில் இருந்த கோச்செங்கணான் என்னும் சோழ அரசன் சிவனுக்கு எழுபது கோயில்கள் கட்டிவைத்தான் என அறிகிறோம்.

அம்பலம், கோட்டம், கோயில், நகரம், மன்றம், ஆலயம், நியமம், பள்ளி, பொதியில், தளி, தானம், தேவகுலம் என்னும் பல சொற்கள் ஆலயத்தின் பெயர்களாகப் பண்டை நாளில் குறிக்கப்பட்டன. இத்தகைய ஆலயங்கள் காலத்தாலும், காலத்தின் கோலத்தாலும், இயற்கையின் சீற்றத்தாலும், மக்களின் கவனக் குறைவாலும் அழிந்துபட்டன. இவ்வாறு அழிந்த செங்கற் கோயிலை,

> **"இட்டிகை நெடுஞ்சுவர் விட்டம் வீழ்ந்தென**
> **மணிப்புறாத் துறந்த மரஞ்சோர் மாடத்து"**

என அகநானூறு கூறும்.

**பல்லவர் காலம் - குடைவரைக் கோயில்கள்**

சங்க காலத்திற்குப் பின் தமிழகத்தில் எஞ்சியுள்ள கோயில்களில் மிகவும் தொன்மையானவை பல்லவர் காலத்திலிருந்துதான் காணப்படுகின்றன.

காஞ்சியை மையமாகக் கொண்டு தொண்டை நாட்டில் 300 ஆண்டுகள் ஆட்சி செய்தவர்கள், பல்லவர்கள். சிம்மவர்மன் முதல் அபராஜித பல்லவன் வரை தொடர்ந்து பல வகை ஆலயங்களைத் தோற்றுவித்தனர்.

சுமார் 1400 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தவர் அப்பர் பெருமான். அவர் தம் பதிகத்தில் பலவிதமான கோயில்களைப் பாடியிருக்கிறார்.

> **"பெருக்காறு சடைக்கணிந்த பெருமான் சேரும்**
> **பெருங்கோயில் எழுபதினோ டெட்டும் மற்றும்**
> **கரக்கோயில் கடிபொழிற்சூழ் ஞாழற் கோயில்**
> **கருப்பறியல் பொருப்பனைய கொகுடிக் கோயில்**
> **இருக்கோதி மறையவர்கள் வழிபட் டேத்தும்**
> **இளங்கோயில் மணிக்கோயில் ஆலக் கோயில்,**
> **திருக்கோயில் சிவனுறையும் கோயில் சூழ்ந்து**
> **தாழ்ந்திறைஞ்சத் தீவினைகள் தீரு மன்றே."**

அப்பர் பாசுரத்தைக் கொண்டு பெருங்கோயில், கரக்கோயில், ஞாழற் கோயில், கொகுடிக் கோயில், இளங்கோயில், மணிக் கோயில், ஆலக் கோயில் முதலான பல்வகைக் கோயில்களைப் பற்றி நாம் தெரிந்து கொள்ள முடிகிறது. எனவே பல்லவர் காலத் தொடக்கத்திலும், இறுதியிலும் கோயில்களின் தோற்றத்தை இலக்கியம் மூலமாகவும், கல்வெட்டுச் சான்றுகள் மூலமாகவும் அறிய முடிகிறது. திருவாரூர் பூங்கோயில், கச்சூர் ஆலக்கோயில், கடம்பூர் கரக்கோயில், மீயச்சூர் இளங்கோயில், வைகல் மாடக்கோயில், கருப்பறியல் கொகுடிக் கோயில் என இற்றைக்கு ஏறத்தாழ 1400 ஆண்டுகளுக்கு முன்னரே இருந்து வந்த பலவகைக் கோயில்களை அறிய முடிகிறது. பல்லவர் காலக் கோயில்களை 1. குடைவரைக் கோயில்கள், 2. ஒற்றைக் கற்கோயில்கள், 3. கட்டடக் கோயில்கள் என்று மூன்று வகையாகப் பிரிக்கலாம். இவற்றையே குடைவித்த கோயில்கள் செதுக்குவித்த கோயில்கள், கட்டுவித்த கோயில்கள் எனவும் கூறலாம்.

பல்லவர் கோயில்களில் மிகவும் தொன்மையானவை மகேந்திரவர்மன் காலத்தைச் சேர்ந்தவை. இம் மன்னன் தன் நாட்டின் பல பகுதிகளில் மலைகளைக் குடைவித்துக் கோயில்கள் அமைத்திருக்கிறான். மகேந்திரவர்ம பல்லவன் மண்டகப்பட்டு என்னுமிடத்தில் முதல் குடைவரைக் கோயிலைத் தோற்றுவித்தான். இக்கோயில் திருமாலுக்கும், நான்முகனுக்கும், சிவபிரானுக்குமாகத் தோற்றுவிக்கப் பட்டதாகும். "இக்கோயிலை மரமின்றி, சுதையின்றி, உலோகமின்றி, செங்கலின்றித் தோற்று வித்தேன்" எனக் கூறுகிறான். ஆதலின் இதற்கு முற்பட்ட கோயில்கள் இவை அனைத்தையும் கொண்டு அமைக்கப்பட்டன என அறிகிறோம்.

மகேந்திரன் காலக் குடைவரைக் கோயில்கள் நீண்ட சதுரமான மண்டபம்போல் அமைக்கப்பட்டு உள்ளன. அவற்றை 'மண்டபக் கோயில்கள்' என்றும் அழைக்கலாம். இவன் தோற்றுவித்துள்ள குடைவரைக் கோயில்கள் மாமண்டூர், மகேந்திரவாடி, பல்லாவரம், வல்லம், திருச்சி, சிங்கவரம், தளவானூர், கீழ்மாவிலங்கை ஆகிய பல ஊர்களில் உள்ளன.

மகேந்திரனுக்குப் பிறகு வந்த அவனது மைந்தன், வாதாபிகொண்ட நரசிங்கபோத்தரசன், மாமல்லன் என்று புகழ் பெற்றவன். இவன் திருக்கழுக்குன்றம் மலைக்குச் செல்லும் வழியில் குடைவரைக் கோயில் ஒன்றை எடுத்தான். அதில் இவனது விருதுப் பெயரைக் குறிக்கும் 'வாதாபி கொண்ட நரசிங்கப் போத்தரையன்' என்ற கல்வெட்டு உள்ளது. மாமல்லபுரத்துக் குடைவரைக் கோயில்கள் அனைத்தும் இவனது காலத்ததாக வரலாற்று ஆசிரியர்கள் முன்னர்க் கருதினர். ஆனால் இப்பொழுது அவற்றில் பெரும்பாலும் இரண்டாம் நரசிம்மவர்மன் என்று பெயர் பெற்ற இராசசிம்மன் காலத்தவையாகக் கருதப்படுகின்றன.

மாமல்லபுரத்துக்கு அருகில் சாளுவன் குப்பம் என்ற இடத்தில் இரண்டு குகைக் கோயில்களுள்ளன. ஒன்றில் வெளிமுகப்பு முழுவதிலும் யாளியின் முகம் செதுக்கப்பட்டுள்ளது. ஆதலின் இதை ஊரார் 'புலிக்குகை' என்பர். இது குகைக்கோயில்களின் அமைப்பிலேயே வியத்தகு வடிவுடையது.

### ஒற்றைக் கற்கோயில்கள்

பல்லவர்கள் மலையைக் குடைவித்து மண்டபக் கோயில் அமைத்ததோடன்றிக் குன்றுகளைச் செதுக்கிக் கோயில்களாகவும் அமைத்துள்ளனர்.

இவ்வகையைச் சேர்ந்த அனைத்தும் மாமல்லபுரத்திலேயே உள்ளன. பஞ்சபாண்டவ ரதம் என்று அழைக்கப்படும் ஐம்பெரும் தளிகளும் இவ்வகையைச் சார்ந்தவையே. இவை பல கோயில் அமைப்புகளை நன்கு காட்டுகின்றன.

இவையனைத்தும் குன்றைச் செதுக்கி அமைத்த ஒற்றைக் கற்கோயில்களாகும். இவற்றைச் செதுக்குவதில் ஒரு முறை உண்டு. கட்டடக் கோயில்களை எடுக்கக் கீழிருந்து கற்களை ஒன்றொன்றாக அடுக்கி மேலே எடுத்துச் செல்ல வேண்டும். ஆனால், ஒற்றைக் கற்கோயில்களை அமைக்க மேலிருந்து படிப்படியாகக் கீழே செதுக்கி வரவேண்டும். இதைக் காண்பிக்கும் வகையில் ஓர் ஒற்றைக் கற்கோயில் மகிஷமர்த்தினி குகைக்கு எதிரில் தொடங்கப்பட்டுள்ளதைக் காணலாம். இது பல்லவர் காலத் தொழில்நுட்பத் திறனையும், சிற்பிகளின் சிற்றுளி ஆற்றலையும் கண்டு வியக்கும் வகையில் உள்ளது.

### கட்டடக் கோயில்கள்

பல்லவர் காலக் கட்டடக் கோயில்களில் மிகவும் தொன்மையாக எஞ்சியுள்ளது காஞ்சிபுரத்திற்கு அருகில் உள்ள கூரம் சிவாலயமாகும். இதை முதலாம் பரமேசுவரவர்மன் காலத்தில் 'வித்யாவிநீதன்' என்பவன் எடுத்தான். இதற்கு 'வித்யாவிநீத பல்லவ பரமேச்வர கிருஹம்' எனப் பெயர். இது தூங்கானை மாட வடிவில் அமைந்துள்ளது. தொடர்ந்து பல்லவர்கள் மண்ணிலும், மலைமீதும், கடற்கரையிலும் அவர்கள் விட்டுச் சென்ற அழியாப் படைப்புகளையும் இன்றும் காணலாம்.

பரமேசுவரவர்மனுக்குப் பிறகு அவன் மகன் இராசசிம்மன் காலத்தில்தான் சிறந்த கட்டடக் கோயில்கள் எடுப்பிக்கப்பட்டன. இவன் எடுத்த கோயில்கள் காஞ்சிபுரம், மாமல்லபுரம், பனைமலை, திருப்பத்தூர் ஆகிய இடங்களில் எஞ்சியுள்ளன. மாமல்லபுரத்தில் கடற்கரையோரத்தில் உள்ள 'கடற்கரைக் கோயில்' உலகப் புகழ் வாய்ந்தது.

பல்லவர்களுடைய கட்டடக் கோயில்களிலேயே மிகவும் உன்னதச் சிறப்பும் எழிலும் வாய்ந்தது காஞ்சி கைலாசநாதர் ஆலயம். இதை 'இராஜசிம்மேச்வரம்' என்று கல்வெட்டுகள் கூறும். அன்று கட்டப்பட்ட கற்கோயில்களில் மிகவும் பெரிய கோயில் இதுதான். ஆதலின் இதற்குப் 'பெரிய திருக்கற்றளி' என்ற பெயர் உண்டு. பெரிய விமானமும், சிறு சிறு ஆலயங்களைக் கொண்ட திருச்சுற்றும் உள்ளன. இக்கோயிலின் முகப்பில் இராசசிம்மன் மகன் இரண்டாம் மகேந்திரன் என்பவனால் கட்டப்பட்ட மற்றொரு சிறு கோயிலும் இருக்கிறது. அதற்கும் முன்னர்ச் சிறு சாலையோடு கூடிய நுழைவாயில் இருக்கிறது. பெருங்கோபுர அமைதி இங்கு இல்லை. இப்பகுதியில் எழில்மிகு சிறு ஆலயம் ஒன்றைத் தோற்றுவித்தவர் இராசசிம்மனின் மாதேவி ரங்கபதாகை ஆவார். விழுப்புரம் அருகில் உள்ள பனைமலைக் கோயில் சற்று மாறுபட்ட அமைப்பை உடையதாக இருக்கிறது.

எட்டாவது நூற்றாண்டின் மத்தியில் ஆண்ட நந்திவர்மன் பல்லவ மல்லன் காலத்தில் எடுப்பிக்கப்பட்ட சில கோயில்கள் காஞ்சியில் உள்ளன. அவனால் கட்டப்பட்டதாகக் கருதப்படும் வைகுந்தநாதர் கோயில் என்னும் 'பரமேச்வர விண்ணகரம்' சிறப்புடையது. ஒன்றின்மேல் ஒன்றாக மூன்று கருவறைகள் உடையது இக் கோயில் விமானம். இக்கோயிலைச் சுற்றிலும் உள்ள திருச்சுற்றில் பல்லவர்களுடைய வரலாறு சிற்பமாகச் சித்திரிக்கப்பட்டுள்ளது. உத்தரமேரூரில் உள்ள சுந்தரவரதர் கோயிலும் இம் மன்னன் காலத்திய ஒப்பற்ற படைப்பாகும்.

மேலே குறிக்கப்பட்டுள்ள பல்லவர் காலக் கோயில்களில் பெரும்பாலானவை மணற்கல்லால் கட்டப்பட்டவை. இவற்றில் விமானங்கள்தாம் மிகவும் உயர்ந்து நிற்கும். ஆயினும் அவை 35 அல்லது 40 அடிக்கு மேல் இருக்கமாட்டா. கற்களை அடுக்கிச் சுவர்களை எடுப்பித்த பிறகு அச்சுவர்களிலேயே சிற்பத்தைச் செதுக்குவது இவர்கள் கடைப்பிடித்த ஒரு மரபாகும். இவ்வாறு சுவர்களிலேயே சிற்பங்கள் செய்வது மண்ணீட்டாளரின் கலையைப் பின்பற்றியதாகும். கி.பி. 7ஆம் நூற்றாண்டின் தொடக்கம் வரையில் செங்கற்களால் சுவர்களை எழுப்பி அதிலேயே சுதையால் உருவங்களைச் செய்வது மரபாக இருந்து வந்துள்ளது.

அதே கலையைப் பல்லவர்கள் கல்லிலே மாற்றி அமைத்ததை அவர்களது கட்டடக் கோயில்களில் காண்கிறோம். இவ்வாறு செதுக்கப்பட்ட சிற்பங்களின் மீது சுண்ணாம்புச் சாந்து பூசி வண்ணங்கள் தீட்டியுள்ளனர்.

திருவதிகையில் வீரட்டானம் என்னும் கோயில் பல்லவ மன்னன் பரமேசுவரன் காலத்தில் கட்டப்பட்டது. நிருபதுங்கவர்மன் காலத்தில் இது திருப்பணி செய்யப்பட்டது. இக்கோயிலின் அமைப்பில் ஒரு சிறப்பைக் காண்கிறோம். இதன் அடிப்பகுதி மட்டும் கருங்கல்லால் ஆனது. மேல்பகுதி முழுவதும் செங்கல்லால் கட்டப்பட்டுள்ளது. சுவரின் புறத்தே சுதை உருவங்கள் உள்ளன.

இக்கோயிலின் அமைப்பைக் கொண்டுதான் தஞ்சைப் பெருவுடையார் திருக்கோயில் கட்டப்பட்டதோ என்று வியக்கும் அளவுக்கு இதன் அமைப்பு உள்ளது. இக்கோயிலின் விமானம் சுமார் 80லிருந்து 100அடி உயரம் இருக்கும். பல்லவர் காலக் கோயில்களில் மிகவும் உயரமானது இதுவே. பல்லவர் காலக் கோயில்களில் உயர்ந்த கோபுரம் என்பதே இல்லை எனலாம்.

### பாண்டியர் காலம் - கட்டடக் கலை

தொண்டை மண்டலத்தில் பல்லவர் ஆட்சி செய்த அதே காலத்தில் பாண்டிய நாட்டுப் பகுதியை முற்காலப் பாண்டியர் ஆட்சி செய்து வந்துள்ளனர். கி.பி. 6ஆம் நூற்றாண்டு தொடங்கி கி.பி. 9, 10ஆம் நூற்றாண்டு வரை ஆண்ட பாண்டியர் மதுரையைத் தலைநகராகக் கொண்டிருந்தனர். இம் மன்னர்களுள் செழியன் சேந்தன் முதல் சோழன் தலைகொண்ட வீர பாண்டியன்வரை இவர்கள் காலத்தில் எடுப்பித்த குடைவரைக் கோயில்களும், ஒற்றைக் கற்றளியும். கட்டடக் கோயில்களும் அக்காலத்திய கோயிற் கலை வரலாற்றைச் சிறப்பாக எடுத்தியம்புகின்றன.

தொண்டை மண்டலத்தில் பல்லவர்கள் எடுப்பித்த குடைவரைக் கோயில்களைவிடத் தென்பாண்டி நாட்டில் பாண்டியர் எடுப்பித்த குடைவரைக் கோயில்களே எண்ணிக்கையில் மிகுந்துள்ளன. பல்லவர் கோயில்களைக் காட்டிலும் இவை காலத்தாலும் முற்பட்டுள்ளன. பல்லவர் காலக் குடைவரைகள் எளிமையாகவும் சிற்பங்கள் குறைந்தும் காணப்படும். பாண்டியரது குடைவரைக் கோயில்களோ எழில் மிகுந்தும் சிற்பங்கள் நிறைந்தும் விளங்குகின்றன. பாண்டியர் குடைவரைக் கோயில்களோ கட்டுமானத் திறன் மிகுந்தும் எழில் மிகு சிற்பங்கள் நிறைந்தும் விளங்குகின்றன. பல்லவர்களது கோயில்களை விடப் பாண்டியர்தம் கோயில்களில் தொன்மையான சிற்ப மரபைக் காண முடிகிறது. பழைமையும் பெருமையும் மிக்க பாண்டி நாட்டுக் குடைவரைக் கோயில்களைப் பிள்ளையார் பட்டி, மலையடிக்குறிச்சி, ஆனைமலை, திருப்பரங்குன்றம், குன்றக்குடி, திருமெய்யம், குடுமியான்மலை, சித்தன்ன வாசல், மகிபாலன்பட்டி, பிரான்மலை, அழகிய பாண்டியபுரம், மூவரை வென்றான் ஆகிய இடங்களில் காணலாம்.

பிள்ளையார்பட்டி போன்ற பழைமையான குடைவரைக் கோயிலின் உண்ணாழி அரைவட்டமாகத் தூங்கானை வடிவில் (கஜப்பிருஷ்டம்) காணப்படுகின்றது. இக்கோயிலில் உள்ள 'எக்காட்டூர் கோன் பெருந்தச்சன்' என்னும் பண்டைத் தமிழ்க் கல்வெட்டின் மூலமும், சிற்பங்கள் மூலமும் இக்கோயில் கி.பி. 5ஆம் நூற்றாண்டைச் சார்ந்த தொன்மை வாய்ந்த கோயில் என்பதை அறிகிறோம்.

பாண்டிய நாட்டில் சிவனுக்கும், திருமாலுக்கும், முருகனுக்கும் தனித்தனியே குடைவரைகள் எடுக்கப்பட்டுள்ளதைக் காண்கிறோம். திருப்பரங்குன்றத்தில் சிவன், திருமால், கொற்றவை, கணபதி, முருகன் ஆகிய ஐந்து தெய்வங்களுக்கும் தனித்தனியே கருவறை எடுத்துத் தோற்றுவிக்கப்பட்ட குடைவரைக் கோயிலைக் காணலாம். இது கி.பி. 8ஆம் நூற்றாண்டில் ஆட்சிபுரிந்த பராந்தக நெடுஞ்செழியன் காலத்தது. இம் மன்னன் காலத்தில் தோற்றுவிக்கப்பட்ட மற்றொரு குடைவரைக் கோயிலை ஆனைமலையில் காணலாம்.

இக் கோயில் இம்மன்னனின் முதல் மந்திரி மூவேந்த மங்கலப் பேரரையனான மாறங்காரியால் குடைவிக்கப்பட்டு அவன் தம்பி மாறன் எயினன் என்பானால் முகமண்டபம் எடுத்துப் புனித நீராட்டிய செய்தியைக் கி.பி. 770இல் வெட்டப்பட்ட கல்வெட்டுக் கூறுகிறது. இது நரசிங்கப் பெருமாளுக்குத் தோற்றுவிக்கப்பட்ட குடைவரையாகும். இக் குடைவரையை அடுத்து இவன் சமகாலத்தில் முருகனுக்குத் தோற்றுவிக்கப்பட்ட மற்றொரு குடைவரையைக் காணலாம். இதனைப் 'பட்டசோமாசி பரிவிராஜகர் புதுக்கி'னார் என அங்குள்ள வட்டெழுத்துக் கல்வெட்டால் அறிகிறோம்.

### வெட்டுவான் கோயில்

பாண்டியர் காலத்தில் எடுப்பிக்கப்பட்ட ஒற்றைக் கற்றளியைக் கழுகு மலையில் காணலாம். இக்கோயில், சிகரம் முதல் அதிட்டானம் வரை மேலிருந்து கீழாய் குடைவிக்கப்பெற்றுள்ளது. வெட்டுவான் கோயில் எனப் பொதுமக்களால் அழைக்கப்படும் இக்கோயில் பராந்தகன் நெடுஞ்சடையன் காலத்தது. கச்சியும், தஞ்சையும் கொண்ட கன்னரதேவன் என்று புகழ் கொண்ட மூன்றாம் கிருஷ்ணன் எல்லோராவில் எடுத்த கைலாசநாதர் கோயிலைப் போன்று இக்கோயில் தோற்றமளிப்பதனால் இதனைக் கலை வல்லுநர்கள் 'தென்னகத்து எல்லோரா' எனப் புகழ்ந்துரைப்பர்.

பாண்டியர் காலக் கட்டடக் கோயில்களில் காலத்தால் அழிந்தன போக எஞ்சியுள்ள கட்டடக் கோயில்கள் மிகச் சிலவே. அவற்றில் ஒன்று திருப்பத்தூரில் உள்ள திருக்கற்றளி நாதர் கோயில் ஆகும். திருக்கற்றளி நாதர் கோயில் அதிட்டானம் முதல் சிகரம் வரை கற்றளியாகவே அமைந்து விளங்கக் காண்கிறோம். பல்லவ மன்னர்கள் கட்டடக் கோயில்களை மணற் கல்லில் அமைக்க, இவர்கள் கருங்கல்லில் கோயில்களை அமைத்து மகிழ்ந்துள்ளனர்.

### பாண்டியப் பெருவேந்தர் காலம்

கி.பி. 12ஆம் நூற்றாண்டு இறுதியில் பாண்டிய நாட்டில் பாண்டியப் பெருவேந்தர்களின் ஆட்சி ஏற்பட்டவுடன் அவர்களின் கலைப்படைப்புகள் புத்தொளி பெற்று வளரத் தொடங்கின. மதுரை மீனாட்சி அம்மன் கோயில் திருச்சுற்றுகளும், கோபுர வாயில்களும் பாண்டியர் காலக் கட்டடக் கலையைச் சேர்ந்தவை. இங்குள்ள கோபுரங்கள் பிற்காலத்தில் புனரமைக்கப்பட்டாலும், பெரும்பாலான கோபுரங்களின் உட்புறங்கள் தொடக்ககாலப் பாண்டியர் கட்டடக் கலையின் சாயலையே கொண்டுள்ளன.

### சோழர் காலம் - கட்டடக் கலை

தமிழகத்தில் 400 ஆண்டுக்காலத் தொடர்ச்சியான வரலாற்றைப் பெற்றவர்கள் சோழர்கள். ஈடும், எடுப்பும்

இன்றி சிறந்து விளங்கிய ஒரு மாபெரும் பேரரசை அவர்கள் உருவாக்கினர். விசயாலயன் தொடங்கி மூன்றாம் இராசராசன் வரை சோழநாட்டில் ஆட்சி செய்த அரசமரபினர் எழில் கொழிக்கும் எண்ணற்ற ஆலயங்களை அற்புதமாக அமைத்து மிகப் பெரும் சாதனைகளை நிகழ்த்திக் காட்டியவர்கள். சுமார் கி.பி. 850இல் தஞ்சாவூரை முத்தரையர் என்பவர்களிடமிருந்து கைப்பற்றிச் சோழப் பேரரசை நிறுவியவன் விசயாலய சோழன் ஆவான். அதிலிருந்து சுமார் 300 ஆண்டுகள் தமிழகத்தின் பெரும்பகுதியைச் சோழர்கள் ஆண்டனர். இக்காலமே தமிழகக் கோயில் கலை வரலாற்றில் பொற்காலம் எனலாம்.

சோழர் காலத்தில் விசயாலயன் காலம் தொடங்கி இராசராசன் காலம் வரையில் கோயில் கலையில் ஒரு குறிப்பிட்ட காலகட்டம் எனலாம். இக்காலத்தில் பெரும்பாலான கோயில்கள் பல்லவர் கால இறுதியில் எந்த அமைப்பில் இருந்தனவோ அவற்றைப் போலவே அமைக்கப்பட்டன. சைவ நாயன்மார்களாலும், வைணவ ஆழ்வார்களாலும் பாடல் பெற்ற பல கோயில்கள் இதற்கு முன்னர்ச் செங்கற் கோயில்களாக இருந்தன. அவை இக்காலத்தில் முற்றிலும் கருங்கற் கோயில்களாக (கற்றளிகளாக) மாற்றி அமைக்கப்பட்டன. இக்காலக் கோயில்கள் அதிக உயரமின்றிச் சற்றேறக்குறைய 30 அடி உயரத்திற்குள்ளாகக் கட்டப்பட்டன.

புதுக்கோட்டைக்கருகில் நார்த்தாமலை என்ற குன்றில் ஒரு கோயில் உள்ளது. அது தமிழகக் கோயில் அமைப்பிலே தனித்தன்மை வாய்ந்தது. இக்கோயில் இரண்டு சுவர்களைக் கொண்டது. வெளிச்சுவர் சதுர அமைப்பிலும், உட்சுவர் வட்ட வடிவிலும் உள்ளன. இக்கோயில் விசயாலய சோழன் பெயரால் விசயாலய சோழீச்சுரம் என்று கல்வெட்டுகளில் பொறிக்கப் பெற்றுள்ளது. மேலும் காளியாப்பட்டி சிவன் கோயில், பனங்குடி பரமேச்சுவரர் ஆலயம், விராலியூர் பூமீச்சுவரர் ஆலயம் இம்மன்னன் காலத்தவை.

**ஆதித்த சோழன்**

விசயாலய சோழனது மகன் ஆதித்த சோழன் தொண்டைநாடு பாவிய இராசகேசரி என்ற பட்டம் கொண்டிருந்தான். அவன் சத்யாத்ரி மலையிலிருந்து கீழைக்கடல் வரையில் காவேரியின் இருமருங்கிலும் ஏராளமான கற்கோயில்களைக் கட்டினான் என்று அன்பில் செப்பேடுகள் கூறுகின்றன. ஆதித்த சோழன் கட்டிய பல கற்கோயில்கள் இன்னும் நிலைத்துள்ளன. அவற்றில் குடந்தைக் கீழ்க்கோட்டம், சீனிவாசநல்லூரில் உள்ள குரங்கநாதர் கோயில், கண்ணனூர் பாலசுப்பிரமணியர் கோயில் ஆகியவை குறிப்பிடத்தக்கவை.

**பழுவேட்டரையர்**

ஆதித்த சோழன் காலத்தில் மற்றொரு சிறந்த மரபைக் காண்கிறோம். இம்மன்னனுக்கு உறுதுணையாக நின்ற பழுவேட்டரையர் எனப்படும் குறுநில மன்னர்கள் தங்கள் தலைநகரங்களில் கோயில்களை எழுப்பியுள்ளனர். பழுவூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட பழுவேட்டரையர்கள் பழுவூரில் கோயில் எடுத்துள்ளனர். இவற்றுள் அகத்தீச்சுரம் என்று பெயர் பெற்ற கோயில் மிகவும் சிறந்தது. இது 'அவனிகந்தர்ப்ப ஈச்சுரகிருஹம்' என்று கல்வெட்டில் குறிக்கப்படுகிறது. ஒரே திருச்சுற்றில் இரண்டு விமானங்கள் இங்குக் கட்டப்பட்டுள்ளன. ஒன்று 'வடவாயில் ஸ்ரீகோயில்' என்றும், மற்றது 'தென்வாயில் ஸ்ரீகோயில்' என்றும் பெயர் பெற்றிருந்தன. இரண்டும் அடியிலிருந்து முடிவரை கற்றளியாகும்.

**இருக்கு வேளிர்**

கொடும்பாளூரைத் தலைநகராகக் கொண்டு இருக்கு வேளிர் என்ற குறுநிலத் தலைவர்கள் ஆண்டனர். அவர்களில் விக்ரம கேசரியாகிய பூதி என்னும் மன்னன் தன் பெயரால் ஒரு கோயில் எடுப்பித்தான். இக்கோயிலுக்கு 'விக்ரமகேசரீச்சுரம்' என்று பெயர். இக்கோயிலில் மூன்று விமானங்கள் ஒரே திருச்சுற்றில் கட்டப்பட்டன. பூதி தம் பெயராலும், வரகுணா, கற்றளி பிராட்டியார் என்ற தம் இரு மனைவியர் பெயராலும் இம்மூன்று விமானங்களையும் எழுப்பினான் எனக் கல்வெட்டுக் கூறுகிறது. தற்பொழுது இவை 'மூவர் கோயில்' என்று வழங்கப் பெறுகின்றன.

**பராந்தக சோழன்**

ஆதித்த சோழனின் மகன் மதுரை கொண்ட கோப்பரகேசரி என்று பெயர் பெற்ற பராந்தக சோழன் காலத்திலும் பல கற்கோயில்கள் கட்டப்பட்டன. இவை ஆதித்த சோழன் கால மரபைப் பின்பற்றியே கட்டப் பட்டுள்ளன. பராந்தகன் காலக் கோயில்களில் பசுபதி கோயில் என்று வழங்கும் புள்ளமங்கை, எறும்பூர், திருவாவடுதுறை, திருவாமாத்தூர், நங்கவரம், காட்டுமன்னார்குடி முதலிய ஊர்களில் உள்ள கோயில்கள் புகழ் பெற்றவை. இக்கோயில்களுள் கட்டடக் கலை எழிலுக்கும், எளிமைக்கும் எடுத்துக்காட்டாகத் திகழ்பவை புள்ளமங்கை பிரம்மபுரீசுவரர் கோயிலும், எறும்பூர் கடம்பவனேசுவரர் கோயிலும் ஆகும்.

**செம்பியன் மாதேவி**

இக்காலக் கோயில்களைக் குறிக்கும்போது கண்டராதித்த சோழனின் தேவியார், உத்தமசோழனின் தாயார் செம்பியன் மாதேவியாரைச் சிறப்பாகக் குறிக்க வேண்டும். தம் வாழ்நாள் முழுவதும் பாடல் பெற்ற பல தலங்களைக் கற்றளியாக மாற்றி அமைப்பதிலும், பொருள்களை வாரி அளிப்பதிலுமே செலவழித்தார். இவ்வம்மையார் எடுப்பித்த கோயில்கள் செம்பியன் மாதேவி, கோனேரி ராசபுரம், ஆடுதுறை, திருக்கோடிக்காவல், குற்றாலம், திருநறையூர், கண்டராதித்தம், விருத்தாசலம், திருவெண்ணெய்நல்லூர் முதலிய இடங்களில் உள்ளன.

**இராசராசன்**

இராசராசன் தமிழகத்தை ஆண்ட ஒப்பற்ற பெருமன்னன் ஆவான். தமிழகத்தை ஆண்ட மன்னர்களிலேயே தலையாய மன்னன் அவனே. சுருங்கச் சொன்னால் இந்தியாவிலேயே அன்று ஆண்ட மன்னர்களில் அவனை ஒப்பார் யாரும் இலர்.

அவனது ஆற்றலையும், திறமையையும், பக்திப் பெருக்கையும் பிரதிபலிக்கும் வகையில் அவன் எடுப்பித்ததுதான் தஞ்சைப் பெரிய கோயில். அதைத் தென்திசை மேருவென தோற்றுவித்தான் என்று அவன் கல்வெட்டுகள் கூறுகின்றன.

சுற்று வட்டாரங்கள் எங்கும் கல் என்பதே இல்லாத தஞ்சையில் கருங்கல்லைக் கொண்டே 216 அடி உயரத்திற்கு, 13 அடுக்குகளைக் கொண்ட விண்ணிழி விமானத்தைத் தோற்றுவித்து அதற்கு இராசராசேச்சுவரம் எனப் பெயர் அளித்து மகிழ்ந்தான்.

அவன் ஆணையை மேற்கொண்டு திருச்சுற்றையும், கோபுரத்தையும் அமைத்தான் அவனது சேனாதிபதி கிருஷ்ணன் ராமன் என்னும் மும்முடிச் சோழ பிரம்மமாராயன். இம்மாபெரும் கோயிலைக் கட்டிய பெருந்தச்சன் இராசராசகுஞ்சர மல்லன் என்பவன் ஆவான். குறைந்த அளவு ஆழத்திற்கே அடித்தளம் அமைக்கப்பட்டுள்ளது. இயற்கையான கற்பாறையின் மீது அடித்தளம் அமைந்திருப்பதால் தான் இவ்வளவு பெரும்பாரத்தைத் தாங்கும் சக்தி அதற்கு உள்ளது என்பர்.

உலகமே கண்டு வியக்கும் வண்ணம் திராவிடக் கலைப்பாணிக்குத் தலைசிறந்த சான்றாகத் திகழும் இப்பெருவுடையார் கோயிலைத் தன்னுடைய 25ஆவது ஆட்சியாண்டில் கி.பி. 1010இல் கட்டி முடித்தான். இது இன்று ஆயிரம் ஆண்டுகளைக் கடந்தும் பெரிய கோயில் என்றே வழங்கப் பெறுகின்றன.

கிழக்குப் பார்த்து அமைந்துள்ள இக்கோயிலுக்கு இரண்டு திருவாசல்கள் உள்ளன. முதல் திருவாசல் 'கேரளாந்தகன் திருவாசல்' என்றும், இரண்டாவது திருவாசல் 'இராசராசன் திருவாசல்' என்றும் வழங்கப் படுகின்றன.

**இராசேந்திர சோழன்**

தஞ்சையில் இராசராசன் தோற்றுவித்த மாபெரும் கோயிலைப் போலவே இவன் மகன் இராசேந்திர சோழன் (கி.பி. 1012–1044) கங்கைகொண்ட சோழபுரத்தில் தம் வெற்றிச் சின்னமாக மாபெரும் கோயில் ஒன்றைத் தோற்றுவித்து அழியாப் புகழ் கொண்டான். இவ்விமானத்தின் மொத்த உயரம் 180 அடி ஆகும். இது தஞ்சைக் கோயிலை விட சற்று உயரம் குறைந்தது ஆகும்.

எனினும் கட்டட அமைப்பில் கட்டுமானத் திறனில் – நுணுக்கத்தில் மிகமிகச் சிறந்தது. பல்வேறு அங்கங்களை இணைத்துப் புதுமை மிக்கதாய்க் கட்டப்பட்டுள்ளது இக்கோயில். இக்கோயிலை முதலாம் இராசேந்திரன்தான் கட்டினான் என்பதற்கு 'எசாலம்' செப்பேடே தெளிவான ஆதாரம் ஆகும். இன்றைக்கு 980 ஆண்டுகட்கு மேலாகியும் கல்லிலே வடித்த காவியமாக, கலைஞர்களை வியக்கவைக்கும் கலைக்கருவூலமாக – சிற்பக் களஞ்சியமாக – ஆன்மீக அமைதியின் இருப்பிடமாக – இராசேந்திரனின் போர்த் திறனையும், பேராற்றலையும் உலகோர்க்கு அறிவிக்கும் அழியாத வெற்றியின் சின்னமாகச் சோழ மண்ணில் திகழ்கிறது. இயற்கையின் சீற்றத்தாலும், காலத்தின் கோலத்தாலும், இன்றுவரை சிதைவுறாது, ஆழமாக வேரூன்றி நிற்கும் கல்லால மரம் இது.

சோழர் காலப் பெருங்கோயில்களில் கும்பகோணத்திற்கு அருகிலுள்ள தாராசுரம் கோயிலும் மிகச் சிறந்தது. இக்கோயிலை இரண்டாம் இராசராச சோழன் எடுப்பித்தான். சோழர் காலக் கோயில்களில் மிகவும் உயர்ந்ததாகவும் சிறந்ததாகவும் கட்டப்பட்ட கடைசிக் கோயில் திரிபுவனத்தில் இருக்கும் திரிபுவன வீரேச்சுரமாகும். இதைத் திரிபுவனவீரன் என்னும் பெயர் பெற்ற மூன்றாம் குலோத்துங்க சோழன் கட்டினான்.

சோழர் காலத்திற்குப் பின்னர்க் கோயில் கட்டட அமைப்பில் புதிய திருப்பம் ஏற்பட்டது. கி.பி. 12ஆம் நூற்றாண்டிலிருந்து கோபுரங்கள் தனிச் சிறப்பைப் பெற்றன. தஞ்சையைப் போன்று கங்கைகொண்ட சோழபுரத்திலும், தாராசுரத்திலும், கடைசியாக திரிபுவனத்திலும் விமானத்தின் முன்புறம் இரு கோபுரங்கள் எழுப்பப் பட்டுள்ளன. சற்றேறக்குறைய இதே காலத்தில் இரண்டாம் குலோத்துங்க சோழன் காலத்திலிருந்து கோயிலின் நான்கு புறங்களிலும் நான்கு கோபுரங்கள் எழுப்பப்பெறும் மரபு தொடங்கியது.

விசயநகரப் பேரரசு காலத்தில் உயர்ந்த கோபுரங்கள், நூற்றுக்கால் மற்றும் ஆயிரங்கால் மண்டபங்கள், திருச்சுற்று மாளிகைகள் போன்ற விரிவாக்கங்கள் செய்யப் பெற்றன.

கோயிலின் இந்தக் கலைப்பாணி எப்படிப்பட்டதாக இருந்தாலும், நம் மக்கள் எல்லோரும் கொண்டாடும் இடமாகத்தான் கோயில்கள் இருக்கின்றன. தமிழர்கள் இந்தக் கோயில்களைக் கட்டுவதற்கு அடிப்படை இலக்கணமாக வைத்துக்கொண்டது மனிதனைத்தான். மனிதனுடைய முடி, தலை, கழுத்து, தோள், பாதம், கால் ஆகிய பகுதிகள் முறையே கோயில் விமானத்தின் 1. ஸ்தூபி, 2. சிகரம், 3. கிரீவம், 4. பிரஸ்தரம், 5.பாதம், 6. அதிட்டானம் ஆகிய அங்கங்களாயின.

இதனால்தான் திருமூலர், 'உள்ளம் பெருங் கோயில் ஊனுடம்பு ஆலயம்' என்று பாடினார். கோயில்கள் மனிதனை மையமாகக் கொண்டிருந்ததால் யாருமே கோயிலுக்கு எதிரானவர்களாக இருந்ததில்லை. ❖

# நாடகமும் வளர்த்த தமிழிசை



திரு. டி. கே. எஸ். கலைவாணன்

"பாட்டுத் திறத்தாலே இவ் வையத்தைப்
பாலித்திட வேண்டும்"

என்றார் நம் மகாகவி பாரதியார்.

தமிழிசை என்றால் என்ன? என்று கேட்பவர்களும் இருக்கத்தான் செய்கிறார்கள். ஆம், அதுவே அவர்களுக்குப் புரியவில்லை. அதென்ன தமிழில் பாடுவது என்கிறார்கள். சரி அப்படியென்றால் எது தமிழிசை என்பதையும் அவர்கள் புரிந்து கொள்ளத்தான் வேண்டும். நம் மரபிசையைத் தமிழில் பாடுவது தான் தமிழிசை. இசைக்கென்று இருக்கும் மரபினைச் சார்ந்து இசை இலக்கண முறைகள் வழுவாமல், அதன் நுணுக்கங்களுடன் தமிழ்மொழியில், அதுவும் பிற மொழிக் கலப்பில்லாத தனித் தமிழில் பாடல்கள் இயற்றி அதற்கு வர்ணமெட்டமைத்து கீர்த்தனங்களாக, அதாவது முறையான பாடல்களாகப் பாடப்படுவதே தமிழிசையாகும். இதைத்தானே நம் முன்னோர்கள் செய்தார்கள். ஆனால், நாம்தான் பாடுவதில்லை. இசைக் கலைஞர்களுக்கு ஒரு மாபெரும் கடமையும், பொறுப்பும் இருக்கிறது என்று சொன்னால் அது தமிழில் பாடுவதுதான். ஆனால், அதற்கு அவர்கள் கூறும் கருத்து, தமிழில் எங்கே மரபிசைப் பாடல்கள் இருக்கின்றன என்பதுதான். இது ஓர் அறியாமை நிறைந்த கருத்தாகும். ஏராளமான பாடல்களை நம் முன்னோர்கள் தமிழில் தந்திருக்கும்போது, அதைத் தெரிந்துகொள்ளாமல் பாட மறுப்பது, தெரிந்து கொண்டும் பாடாமல் இருப்பது என்று ஒரு பிடிவாத நிலையிலேயே இருந்து வருகின்றனர் நம் சங்கீத வித்வான்கள். எனவே இதனைக் களைவதற்காகத்தான் நான் பல்லாண்டுகளாகப் பல மேடைகளில் பேசியும், பாடியும் விளக்கமளித்து வருகிறேன். ஓரளவு மாறுதலும் கிடைத்துள்ளது கண்டு மகிழ்கிறேன். ஆனால், இன்னும் முழுமையாக வெற்றி பெறவில்லை யென்பதையும் வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்கிறேன்.

மரபிசை என்றாலே அது ஏதோ பிற மொழியில் தான் உள்ளது, வளர்ச்சி பெற்று வந்திருக்கிறது என்று இசைவல்லுநர்கள் எண்ணுகிறார்கள். அது தவறு. இசை இலக்கண மரபுகள் யாவும் முதன்முதலில் தமிழில் தான் இயற்றப்பட்டன. தொல்காப்பியர் காலத்திலேயே இது தொடங்கப் பட்டது. சங்க காலத்தில் வளர்ச்சி பெற்றுத் திகழ்ந்துள்ளது. நல்ல மரபு வழிக் கீர்த்தனங்கள் என்று பாடப்படுகின்ற தியாகராஜர், முத்துசாமி தீட்சதர், சியாமா சாஸ்திரிகள் ஆகிய சங்கீத மும்மூர்த்திகள் என்று போற்றப்படும் இவர்கள் இயற்றிப் பாடிய பாடல்களுக்கெல்லாம் காலத்தால் முற்பட்டவை சீர்காழி மூவர் என்று போற்றப்படும் முத்துத் தாண்டவர், அருணாச்சலக் கவிராயர் மற்றும் மாரிமுத்தாபிள்ளை ஆகியோரின் தமிழ்க் கீர்த்தனங்கள் ஆகும். அவை மட்டுமல்ல, நம் சைவக்குரவர் நால்வர் – அப்பர், சுந்தரர், ஞானசம்பந்தர், மாணிக்கவாசகர் ஆகியோரின் தேவாரம், திருவாசகம் ஆகிய தமிழ்ப்பாடல்களும் காலத்தால் முற்பட்டவையே. எனவே, பிற மொழியில் தான் மரபு வழி இசை தோன்றியது என்று வாதிடுபவர்களுக்கு நான் மேலே கூறியுள்ளவை தான் விளக்கம். எவை காலத்தால் முற்பட்டவை? அவற்றைத் தோற்றுவித்தவர்கள் யார் என்பதை மறுப்பவர்கள் தெரிந்துகொள்ள வேண்டும்.

தமிழில் தோன்றிய இசை இலக்கண முறைகளை நம் தாய் மொழியாகிய தமிழில் பாடித்தானே விளக்க வேண்டும். கேட்போரை மகிழ்விக்க வேண்டும் என்பதை அறியாமல் வீண்பிடிவாதம் செய்யும் இசைக் கலைஞர்கள் குறித்து நான் பரிதாபப்படுவதைத் தவிர வேறு வழி யில்லை. ஏனெனில் அவர்கள் நல்ல தமிழ்ப் பாடல்களைப் பாடும்போது கிடைக்கும் தமிழ்ச் சுவையையும், இன்பத்தையும், பொருளின் இனிமையையும் உணராமல் இருக்கிறார்களே என்ற ஆதங்கம்தான். இச்சூழ்நிலையே, நம் செட்டி நாட்டரசர் இராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் 1943ஆம் ஆண்டிலேயே ஒரு மாபெரும் தமிழிசை இயக்கம் தொடங்கக் காரணமாக அமைந்தது. இக் கலைஞர்களை எப்படியும் தமிழில் பாடச் செய்ய வேண்டும் என்று உறுதி கொண்டார் அவர். அப்போதும் அவர்கள் பிடிவாதம் கொண்டு தமிழில் பாட மறுத்து, பின்னர்ப் படிப்படியாகக் காலப்போக்கில் தங்கள் பிடிவாதத்தைச் சிறிது தளர்த்தினார்கள் என்பதை வரலாறு நமக்கு உணர்த்துகிறது.

இன்னும் பிற்பட்ட காலத்தில் தமிழில் ஏராளமான பாடல்கள் நம் மரபுவழி இசையிலேயே சுராதாளக் குறிப்புகளோடு, நம் இசைக் கலைஞர்கள் பாடுவதற் கென்றே இயற்றப்பட்டன. அவற்றை இயற்றிய பெருமைக்குரியோர் பாபநாசம் சிவன், இசை அரசு எம்.எம். தண்டபாணி தேசிகர், நீலகண்ட சிவன், ஊத்துக்காடு வேங்கட சுப்பையர், ம.ப.பெரியசாமி தூரன், மாயூரம் வேதநாயகம் பிள்ளை ஆகியோர் ஆவர். மேலும் சிலரும் இயற்றினார்கள். இவர்களுள் தனித்தமிழில் பாடியவர்கள் வெகு சிலரே, அவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள் இசையரசு தண்டபாணி தேசிகர், ம.ப. பெரியசாமித் தூரன், பாபநாசம் சிவன் ஆகியோர் ஆவர். ஆனால் சிவன் சில பாடல்களில் சமற்கிருதச் சொற்கள் கலந்தும் இயற்றியுள்ளார். மேலும், நம் தேசிகர் அவர்கள், மகாகவி பாரதியார் பாடல்கள், இராமலிங்க சுவாமிகள் இயற்றிய திருவருட்பா மற்றும் பாவேந்தர் பாரதிதாசன், ஏன்? நம் தெய்வப் புலவர் திருவள்ளுவனார் (திருக்குறள்) ஆகியோரின் பாக்களைக்கூட மரபு வழியில் இசையமைத்துப் பாடிய பெருமை பெற்றவர் ஆவார். எனவே, இசையரங்கில் பாட ஏராளமான பாடல்களை இவர்கள் தமிழில் தந்தும், இசைக் கலைஞர்களால் அவை பரவலாகப் பாடப் பெறாமல் முடக்கப்படுவது எந்த வகையில் நியாயம்? இதனை இசைக் கலைஞர்கள் பொறுப்புடன் உணர்ந்து தாம் கற்ற மரபுவழி இசையினைத் தமிழில் பாடிப் பரப்பிட வேண்டுமாய் அவர்களை வணங்கி, வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன்.

அவ்வாறு இசைக்கலைஞர்கள் தாம் பாடும் அரங்குகளில் பாடி வளர்க்காத தமிழிசையினை, நம் தமிழ் நாடகக் கலைஞர்கள் தாங்கள் நடிக்கும் நாடகங்களில் பாடி வளர்த்திருக்கின்றனர் என்பது வரலாறு. இது நமக்கு வியப்பைத் தருகிறதல்லவா?

ஆம்! உண்மைதான். அந்நாளில் நாடகங்களில் பாடல்கள் யாவும் தமிழிலேயே பாடப்பட்டன. உரையாடல்களும் தமிழில்தான். தாங்கள் ஏற்று நடிக்கும் நாடகப் பாத்திரங்களில், அவர்களுக்குத் தரப்படும் பாடல்களில் நல்ல தமிழ் மணம் கமழ்ந்தன. தாள நுணுக்கங்களும், சந்தங்களும் வெளிப்பட்டுக் கேட்போரை மகிழ்வித்தன என்பது நமக்கு மகிழ்ச்சியையும், பெருமையையும் அளிக்கின்றன. அந்நாளைய நடிகர்களோடு புகழ்பெற்ற இசைக்கலைஞர்களும்கூட மேடை நாடகங்களில் நடிப்பதோடு இடையிடையே சிறந்த தமிழ்ப்பாடல்களை மரபுவழியில் பாடியும் மகிழ்வித் திருக்கின்றனர். மேடையில் மரபிசை பாடும் வல்லுநர்கட்குத் தாங்கள் எந்தவகையிலும் குறைந்தவர்கள் அல்லர் என்பதை நிரூபிக்கும் வகையில் அற்புதமாகப் பாடியும் இசை நுணுக்கங்கள், தாள வகைகள், சந்தச் சிறப்பு ஆகியவற்றை வெளிப்படுத்தியும் அவையோரின் பலத்த கரகோஷத்தினைப் பெற்றுப் புகழ் அடைந்தவர்கள் நம் தமிழ் நாடகக் கலைஞர்கள் என்றால் அது மிகையாகாது. பாடல்களில்தான் எத்தனை வகை. அரிச்சந்திர ராமாயணம், மகாபாரதம், அருணாசலக் கவிராயரின் இராம நாடகம், அசோகமுகி நாடகம், கோபாலகிருஷ்ண பாரதியின் நந்தனார் சரித்திரம், இரணிய சங்கார நாடகம், உத்தர ராமாயண நாடகம், சுந்தரர் நாடகம், காத்தவராயன் நாடகம், சிறுத்தொண்டர் நாடகம், குற்றாலக்குறவஞ்சி, விராலி மலைக் குறவஞ்சி, அழகர் குறவஞ்சி, சரபேந்திர பூபாலக் குறவஞ்சி மற்றும் திரிகூடராசப்பக் கவிராயரின் திருக்குற்றாலக் குறவஞ்சி ஆகிய அனைத்து நாடகங்களும் பாடல்கள் நிறைந்த பாடல் இலக்கியங்கள் என்று சொன்னால் அது மிகையாகாது. 1891இல் பேராசிரியர் சுந்தரம்பிள்ளை 'மனோன்மணீயம்' என்னும் அற்புதமான நாடகத்தை அகவற்பாவால் எழுதியிருக்கிறார். 'நாடக இயல்' தந்த பரிதிமாற்கலைஞர் 'மான விஜயம்' என்னும் நாடகத்தை அகவற்பா நடையில் தந்திருக்கிறார்.

பண்டைக்கால நாடகப் பாடல்கள் வெண்பா, கலித்துறை, விருத்தம், தோடையம், திபதைகள், தருக்கள், கொச்சகம், தாழிசை, அகவல், கண்ணிகள், சிந்துகள், வண்ணம், ஒரடி, கும்மி, கலிவெண்பா முதலிய பலவிதமான பாவினங்களில் எழுதப்பட்டிருந்ததை அறிகிறோம். தமிழ்நாடகத் தந்தை தவத்திரு சங்கரதாஸ் சுவாமிகளின் நாடகங்களில்கூட மேற்குறிப்பிட்ட அனைத்தும் இடம் பெற்றிருக்கின்றன. இவ்வாறு நாடகம் என்பது அந்நாளில் மரபினை மீறாமல் பாடல்களாகவே நிறைந்திருந்தன என்பது வரலாறு.

மரபு வழி இசையில் மெட்டுகள் அமைந்த பாடல்களை, நாடகங்களில் எழுதியவர் நம் தமிழ்நாடகத்

தந்தை தவத்திரு. சங்கரதாஸ் சுவாமிகள் ஆவார்கள். அவர்களின் முதன்மை மாணாக்கர்தாம் எம் தந்தை அமரர் அவ்வை டி.கே.சண்முகம் அவர்கள். தம் ஆறாவது வயதிலேயே "அபிமன்யு சுந்தரி" என்னும் நாடகத்தில் "அபிமன்யு" வேடம் தாங்கி நல்ல தமிழ்ப் பாடல்களைப் பாடியவர். அந்நாளில் ஏராளமான தமிழ்ப்பாடல்கள் நாடக மேடை வாயிலாகப் புகழ் பெற்றிருக்கின்றன. "சம்பூரண ராமாயணம்" நாடகத்தில் இடம் பெற்ற பல பாடல்கள் இன்றும் புகழுடன் விளங்குகின்றன. தவத்திரு. சங்கரதாச சுவாமிகள் பாடல்கள்தாம் அந்நாளில் பெரும்பாலான நாடகக் குழுக்களின் நாடகங்களிலே பாடப் பெற்று வந்தன. சுவாமிகள் எழுதிய இராமாயணம் பாடல்கள், சிறுத்தொண்டர், வள்ளித் திருமணம், பவளக்கொடி, சீமந்தனி, கோவலன் சரித்திரம், நல்லதங்காள், பக்தபிரகலாதா, அபிமன்யு சுந்தரி, அல்லி அர்ஜுனா, சதி அனுசுயா, சுலோசனா சதி, சத்தியவான் சாவித்திரி, மணிமேகலை, பிரபுலிங்க லீலை போன்ற நாடகங்களில் இடம் பெறும் பாடல்கள் அனைத்தும் மரபிசையில் அமைந்தவையாகும். அத்தனையும் புகழ் பெற்ற பாடல்கள். நாடக உலகிற்குக் கிடைத்த செல்வங்களாகும். மேலும் ஏகைசிவ சண்முகம்பிள்ளை, சாம்பூர் வடகரை சுப்பைய்யா பாகவதர், மதுர பாஸ்கரதாஸ், இலட்சுமண தாஸ், ராஜா எஸ்.எஸ் சண்முகதாஸ், உடுமலை முத்துசாமிக் கவிராயர், சந்தக்கவி சுப்புராய முதலியார் குடந்தை வீராசாமி வாத்தியார், உடுமலை நாராயண கவி, டி.கே. சுந்தர வாத்தியார், சுப்புராமய்யர், அரிகேசநல்லூர் முத்தையா பாகவதர், 1933க்குப் பின் கவி ஆறுமுகனார், கு.சா.கிருஷ்ணமூர்த்தி, டி.கே.முத்துசாமி (இவர் அவ்வை சண்முகத்தின் மூத்த சகோதரர்), பி.வேங்கடாசலம், புத்தனேரி சுப்பிரமணியம், எம்.கே. ஆத்மநாதன், திருச்சி பாரதன் போன்ற தலைசிறந்த நாடகப் பாடலாசிரியர்கள் நாடகங்களுக்காக நல்ல தமிழ்ப் பாடல்களைத் தந்தவர்களாவர். அவர்களுடைய அற்புதமான பாடல்களை, தங்கள் தேன் குரலால், நாடக மேடையில் பாடித் தமிழை வளர்த்த பெருமை பல கலைஞர் களுக்குண்டு. அவர்களுள் குறிப்பிடத் தக்கவர்கள் எஸ்.ஜி. கிட்டப்பா, எஸ்.ஜி. செல்லப்பா, டி.ஆர். மகாலிங்கம், கே.பி. சுந்தராம்பாள், எம்.கே. தியாகராஜ பாகவதர், வி.ஏ. மகாதேவன், சி.எஸ். ஜெயராமன், பி.எஸ்.கோவிந்தன், வி.வி. சடகோபன், மதுரை உடையப்பா, கடையநல்லூர் எம்.ஏ. மஜீத், எம்.எம்.மாரியப்பா ஆகியோர் ஆவர். இன்னும் கோல்டன் பி.சாரதாம்பாள், எஸ்.ஆர். ஜானகி, எஸ்.டி. சுப்புலட்சுமி உள்ளிட்ட பல தமிழ் நடிகைகளும்கூட தமிழிசையைப் பாடிப் பரப்பியுள்ளனர்.

1925ஆம் ஆண்டிலேயே டி.கே.எஸ். சகோதரர்களின் பாலசண்முகானந்த சபா, நவாப் இராஜமாணிக்கம் பிள்ளையின் ஸ்ரீதேவி பாலவினோத சங்கீத சபா ஆகிய இவ்விரண்டு நாடக சபாவினரும் அந்நாளில் நாடகம் மூலம் நல்ல தமிழிசையினைப் பரப்பினார்கள்.

நடிகர்கள் அனைவரும் சேர்ந்து பாடும் தொடக்கப் பாடலான சுவாமிகள் எழுதிய 'கல்விக்குரிய கலைவாணி', நாடகக் குழுவில் சேரும் கலைஞர்களுக்கு முதலில் கற்றுத்தரும் பாடலான 'மூலமந்திரமான நற்பொருளே', நாரதர் பாடும் பாடல் 'சரிகமபதநியாம்', இராமாயண நாடகத்தில், ராமன் பாடும், "ஆறுதல் சினமே, கோசலை மகிழும் விநோதா, (என் தந்தையார் இப்பாடல்களைப் பாடி நடித்திருக்கிறார்) பரதன் பாடும் "தசரதராஜகுமாரா" "நீ போய் உரைப்பாய் அனுமனே" ஆகிய பாடல்களையும் "வள்ளி திருமணம்" நாடகத்தில் இடம் பெறும் முருகன் பாடும் "மகா சுகிர்தரூப சுந்தரி, "எல்லோரையும் போலவே என்னை எண்ணலாகுமோடி போடி", "சம்போ மகாதேவா சாம்பசதாசிவா", "தேடி வந்தேனே புள்ளிமானே"ஆகிய பாடல்களையும், "பவளக்கொடி" நாடகத்திலே இடம் பெறும், 'காண்டீபன் மைத்துனா', "காமி சத்யபாமா கதவைத் திறவாய்" சதி அனுசுயா நாடகத்தில் இடம் பெறும் நாலாம் யுகக்கலியின் பெருமை, சுலோசனா சதி நாடகத்தில் இடம்பெறும் பூவின் விபரம் பலகோடி, இல்லறமே துறவறமே, 'சீமந்தனி' நாடகத்தில் இடம் பெறும் 'எதிரிலுலாவும் இவன்அழகை (மூச்சையடக்கிப் பாட வேண்டிய பாடல்) 'சாற்றுகிறேன் ஆர்யவர்த்த' (காதலன் காதலி அறிமுகப் பாடல்) போன்ற பாடல்களையும், கோவலன் நாடகத்தில் இடம்பெறும் அடைக்கலமே, சத்தியவான் சாவித்திரியில் இடம்பெறும் "இப்படிச் செய்திட்ட துஷ்டன்" போன்ற பாடல்களையும் பின்னாளில் ராஜாபர்த்ருஹரி நாடகத்தில் வரும் நாயகர் பட்சமடி, தேசபக்தி நாடகத்தில் வரும் "கொக்கு பறக்குதடி பாப்பா, கதர்க் கப்பல் கொடி தோணுதே", தமிழ்ச் செல்வம் நாடகத்தில் வரும் தலைவணங்கிடுவாய் தமிழா! அவ்வையாரில் வரும் 'பெருமை கொள்வாய் தமிழா!, இராஜராஜசோழனில் இடம்பெறும் "சிரித்த முகம் அழகு விரித்த முகம் போன்ற இனிமையான பாடல்களை நாம் இன்றைக்கும் மறக்க முடியுமா? இவையனைத்தும் மரபு வழி இசையிலேயே மெட்டமைக்கப்பட்ட காலத்தால் அழிக்க முடியாத பாடல்களாகும். ஆரபி, யமன் கல்யாணி, காபி, சுத்தசாவேரி, பைரவி, ஜோன்புரி, காம்போதி, கல்யாணி, ஆனந்தபைரவி, நாத நாமக்கிரியை போன்ற இனிமையான ராகங்களில் பாடப் பெற்றவையாகும். நல்ல தாளங்களில் அமைக்கப்பெற்ற பாடல்களாகவும் விளங்கின. அரிகேசநல்லூர் முத்தையா பாகவதரின் 'ஆண்டவன் தரிசனமே' என்ற பாடலும் நாடக மேடையில் புகழ் பெற்ற பாடலாகும். மேலும். சங்கரதாஸ் சுவாமிகள் பாடல்களில் நிறைய சந்தங்கள் இருக்கும். அருணகிரிநாதரின் திருப்புகழ்ச் சந்த பாடல்களுக் கிணையாகப் பாடல்கள் புனைந்தவர் அவர். உதாரணமாக, 'ஆண்ட சக்ரவர்த்தி' என்று தொடங்கும் திருப்புகழ்ச்சந்தப் பாடல் அவ்வகையைச் சார்ந்தது. சுவாமிகள் எழுதி கே.பி. சுந்தராம்பாள் அவர்களால் பாடப்பெற்றுப் புகழடைந்ததுதான் 'ஞானப்பழத்தைப் பிழிந்து' என்ற பாடல் (இது திருவிளையாடல் என்ற திரைப்படத்தில்கூட

இடம் பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது.) அப்பாடலை சுவாமிகள் முருகனைப் பாடும் நிலையில், தம் குருவான வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளைத் துதித்துப் பாடுவது போல் அமைந்துள்ளதும் ஒரு தனிச் சிறப்பாகும்.

மேலும், அன்று நாடக மேடையில் பாடி நடித்த எஸ்.ஜி.கிட்டப்பா அவர்கள் தம் சங்கீதத்தில் பாடும் சில பிடிகளும், சங்கதிகளும், பிர்கா வகைகளும் மேடையில் பாடும் புகழ்பெற்ற பல சங்கீத வித்வான்களாலும் பாட முடியாதவையாகும். திணறிப்போவார்கள். அதேபோல், நாடகக் கலைஞராகவும், திரைப்படக் கலைஞராகவும் புகழ் பெற்ற டி.ஆர். மகாலிங்கம் அவர்களுக்கு மூச்சு நிற்பது போல் (அதாவது மூச்சையடக்குதல்) பல சங்கீத வித்வான்களுக்குங்கூட நிற்காது. தாம் பாடும்போது ஒரு சுரத்தில் நின்றால், அப்படியே பிடித்துக் கொண்டிருப்பார். அவர் மூச்சுப் பிடித்துப் பாடும் திறமையை வியந்து அவையோர் பலத்த கைதட்டல் தந்த பிறகுதான், அடுத்த சுரத்துக்குப் போவார் என்றால், அவருடைய உழைப்பின் திறனை எண்ணி யாரும் வியக்காமல் இருக்க முடியாது. அடடா ? என்ன உழைப்பு !

சில பாடல்களுக்குக் கதையும் இருக்கிறது. ஆம்! 'வள்ளி திருமணம்' நாடகத்தில் எஸ்.ஜி. கிட்டப்பா பாடிய 'எல்லோரையும் போலவே எண்ணலாகுமோடி, போடி' என்ற சுத்தசாவேரி ராகத்தில் அமைந்த பாடலில் அவர் போட்ட சங்கதிகளையும், பிடிகளையும் கேட்டு மயங்கிப் போய்த்தான் கே.பி. சுந்தராம்பாள் அம்மையார் அவர் மேல் காதல் கொண்டு, பின்னர் அவரையே மணந்து கொண்ட சூழ்நிலை ஏற்பட்டதாக அவர்கள் வாழ்க்கை வரலாற்றின் மூலம் அறிகிறோம் என்றால், நல்ல தமிழிசைக்கு எத்தகைய சக்தி இருக்கிறது என்பதை நாம் உணர்ந்துகொள்ள முடிகிறது.

என் தந்தையார் ஏராளமான தமிழ்ப் பாடல்களை இசை மரபிலே பாடி அதனை வளர்த்து வந்திருக்கிறார். பின்னாளில்தான், நாடக மேடையின் அமைப்பே மாறுதல் அடைந்து, பாடல்கள் பெருமளவில் குறைந்து போய், பின்னர்ப் பாடல்களே இல்லாமல், ஏன் தொடக்கப் பாடல்கூட இல்லாத நிலையில் இன்று நாடகங்கள் அரங்கேறி வருகின்றன என்பதை எண்ணிப் பார்க்குபோது நாடகத்தின் இன்றைய நிலையினைப்பற்றி என்னவென்று சொல்வது ? நாடகம் என்பது நடிப்பும் பாட்டும் இணைந்ததல்லவா ?

ஆனால், அன்று, ராமாயணம் நாடகத்தில் ராமன் பாடி நடிக்கிறார் என்றால் ராவணனுக்கும் பாடல் வைத்திருந்தார். அதிலும் எப்படி ? சாதாரணமான பாட்டாக அது இல்லை. ஏனெனில், ராவணன் இசை நுணுக்கங்கள் தெரிந்த வித்வானல்லவா ? தன் கானத்தால் கயிலைநாதனையே கவர்ந்தவன் அவன். அதனால் காம்போதி ராகத்தில் ஆதி தாளத்தில் (2 களைச் சவுக்கம்) 6 அட்சரம் தள்ளி, முதலடியை எடுப்பது போல் பாடல் அமைத்தார். 'காலதாமதம் நீ செய்யாதே, மாதே சீதே வாதே இப்போதெனைச் சேர்' என்று பாடல் தொடங்குகிறது. இப்பாடலை, ராவணன் நேரம் கருதிப் பாடாமல் விட்டுவிட்டால், அவையோர் கரகோஷம் செய்து, கூச்சலிட்டு, கட்டாயம் பாட வைத்துவிடுவார்கள். இதுதான் அன்றைய நாடக ரசிகர்களின் சங்கீத ரசனை.

எனவே, சங்கீத வித்வான்கள் வளர்க்கத் தவறிய தமிழிசையினை நம் நாடகக் கலைஞர்கள் எங்ஙனம் வளர்த்தார்கள் என்பதை நாம் மேற்குறிப்பிட்ட பல சான்றுகளின் மூலமாக நன்கு அறிந்து கொள்ள முடிகிறதல்லவா ?

எத்தகைய பாடல்களெல்லாம் நாடக மேடைகளில் பாடப்பட்டன, அதன் மூலம் சங்கீத வித்வான்களை விடவும் நாடகக் கலைஞர்கள் தமிழிசையினை எந்த வகையில் பாடிப் பரப்பியுள்ளார்கள் என்பதை நாம் அறியும்போது, ஒரு தனிப் பெருமிதம் ஏற்படுகிறது

ஆம்! முத்தமிழாக விளங்கும். இயல்—இசை—நாடகம் ஆகிய மூன்றில் நடுநாயகமாக விளங்கும் இசைக் கலையினை அதுவும் தமிழிசையினை முழுமையாக வளர்த்த பெருமைக்குரியது நம் நாடகக் கலை என்பதை நமக்கு முன்னே புகழுடன் வாழ்ந்து மறைந்த நம் நாடகக் கலைஞர்களின் ஒப்பற்ற இசைத் திறமையின் மூலம் நன்கறிந்து அதனை உறுதி செய்கிறோம்.

தமிழிசை வளர்த்த நாடகம் வாழ்க! நாடகம் வளர்த்த தமிழிசை வெல்க!



# சிவ சிற்ப வளர்ச்சி



முனைவர் த. சந்திரகுமார்

சங்க இலக்கியங்கள் பண்டையத் தமிழ் மக்களின் சமயம், நம்பிக்கைகள், தெய்வ வழிபாடு, சிற்பக்கலை போன்ற பல செய்திகளைக் கொண்டுள்ளது. சங்க கால மக்கள் தாங்கள் வாழ்ந்த இல்லங்கள் மற்றும் தெய்வ இருப்பிடங்கள் போன்ற இடங்களில் இறை உருவங்களை ஓவியமாகவும் சிற்பங்களாகவும் செய்து மகிழ்ந்துள்ளனர். தொல் காப்பியம், நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு மற்றும் புறநானூறு போன்றவை சிவபெருமானைப்பற்றிக் கூறும் பாடல்களைக் கொண்டுள்ளன. பத்துப்பாட்டு நூல்களில், திருமுருகாற்றுப்படை முருகப் பெருமானைப் பற்றியதாகும். பரிபாடலில், திருமால் மற்றும் முருகப் பெருமானைப் போற்றும் பாடல்கள் உள்ளன. பல இலக்கியங்கள் தெய்வம், கடவுள் என்ற பொதுச் சொற்களைத் தம்முள் கொண்டு திகழ்கின்றன. தெய்வங்களின் செயல்கள், தோற்றம், வீரம், ஒப்பனைகள், கொடி, தன்மைகள், குணம், இருப்பிடம், வண்ணம், ஆயுதங்கள் மற்றும் வாகனங்கள் ஆகியவற்றினைச் சார்ந்த பாடல்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன.

உலகம் ஐந்து பெரும் பொருள்களால் கூடி உருவானதென்பதை மக்கள் நன்கு அறிந்திருந்தனர்.

> **"நிலம், தீ, நீர், வளி, விசும் போடைந்தும்**
> **கலந்த மயக்கம் உலகம்......"**

என்று தொல்காப்பியம் குறிப்பிடுகின்றது.

> **"ஐம்பெரும் பூதத்து இயற்கை போல ................"**

என்று புறநானூறு குறிப்பிடுகின்றது.

வான் தெய்வமாகக் கதிரவன் என்னும் வெய்யோன் போற்றப்படுகின்றான். ஞாயிறு அம்சத்தைத் தம்முள் கொண்டனவாகக் கருதப்படுகின்ற பல தெய்வ உருவங்களும் கோட்பாடுகளும் பின்னர் தோன்றின. திருமால் சூரிய நாராயணனாகவும், சிவன் மார்த்தாண்ட பைரவராகவும் (மார்த்தாண்டம் என்றால் சூரியன்) போற்றப்படுகின்றார்கள்.

> **"நீரும் நிலனும் தீயும் வளியும்**
> **மாக விசும் பொடு ஐந்து உடன் இயற்றிய**
> **மழு வாள் நெடியோன் தலைவன் ஆக...."**
>
> **(453–454)**

என்றும் மதுரைக்காஞ்சி குறிப்பிடுகின்றது. சங்க கால மக்கள் இயற்கை வழிபாட்டினையும் போற்றியுள்ளனர் என்பதை இக் குறிப்பு சுட்டுகின்றது.

திராவிட நாகரிகத்திற்குத் தொடர்புடையதாகக் கருதப்படுகின்ற மொகஞ்சதாரோ, ஹரப்பா நாகரிகத்தில் இலிங்க வழிபாடு மேன்மையுற்றிருந்தது என்பதற்கு உறுதியான அகழ்வாய்வுச் சான்றுகள் கிடைத்துள்ளன. இந்நாகரிகத்தின் காலம் கி.மு. 3500 – 2500க்கும் இடைப்பட்ட காலமாகக் கருதப்படுகின்றது. இலிங்கம் என்பதற்கு இறைவனின் அடையாளம் என்று கொள்ளப்படுகிறது. ஆண், பெண் ஆகியவர்களை பிரித்துணருவதற்கு எது ஏதுவாக இருக்கிறதோ அதுவே இலிங்கமாக ஏற்றுக் கொள்ளப்படுகிறது.

**1. ஆலமர் கடவுள்**

சிவனே ஆலமர் கடவுளாகக் கருதப்படுகின்றார். இவர் ஆல மர நிழலில் அமர்ந்து அருமறைகளைப் போதிப்பவராகக் கருதப்படு கின்றார். வேதம், ஆகமம், இசை ஆகியவற்றினைச் சனகாதி முனிவர்களுக்கு உபதேசிப்பவராகக் கருதப்படுகின்றார். நல்வழி அல்லது தட்சிணாமார்க்கம் காட்டும் இறைவன் என்பதனால் தட்சிணாமூர்த்தி எனப்படுகின்றார். தீய நெறிகளைக் காட்டும் வழியினர் வாமாச்சார மார்க்கத்தினர் எனப்படுகின்றார்கள்.

சங்க கால மக்கள் தட்சிணா மார்க்கத்தில் திளைத்தவர்கள் ஆவார்கள்.

"ஆலமர் செல்வன் அணிசால் பெருவிறல் போல" என்று இவரைக் கலித்தொகை போற்றுகின்றது.

"ஆலமர் கடவுளன்ன....." என்று புறநானூறு குறிப்பிடுகின்றது.

ஆலமரத்தின் கீழ் அமர்ந்து வேதங்களை உபேதசிக்கின்றவராக இவர் சிற்பங்களில் காட்டப்

படுகின்றார். ஆலமரமே பௌத்த சமயத்தில் போதிமரம் என்று போற்றப்படுகின்றது. இக்கருத்தினைக் கண்ணுறும்போது தமிழரின் மர வழிபாட்டு விளக்கம் கிடைக்கின்றது. மரத்தடியிலும் மலர்ச்சோலைகளிலும் தெய்வங்கள் வீற்றிருப்பதாகக் கருதப்படுவதனால் வனங்கள் காக்கப்பட்டன. நந்தவனங்கள் பெருக்கம் பெற்றன. புனிதமான தலவிருட்சக் கோட்பாடு தோன்றியது. காஞ்சிபுரம், திருக்கழுக்குன்றம், திருவண்ணாமலை, திருப்பனந்தாள், திருப்பாதிரிப்புலியூர், சிதம்பரம், திருவாவடுதுறை மற்றும் மதுரை போன்ற வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த ஊர்கள் மர வழிபாட்டின் பெருமையை விளக்குகின்றன. பனை, அத்தி மற்றும் வேம்பு மரங்கள் முறையே சேர, சோழ, பாண்டியர்களின் அரசு சின்னங்களாகவே விளங்கியிருந்தன என்பதை இங்கு நோக்க வேண்டும்.

மொகஞ்சதாரோவில் கிடைத்த (முத்திரை 222 மற்றும் 235) உருவம் தட்சிணாமூர்த்தி வடிவத்தின் முன்னோடியாக அமைந்த சிற்பம் என்று கருதப்படுகின்றது.

**2. திரிபுராரி**

சங்க கால மக்கள் போற்றிய மற்றொரு வடிவம் திரிபுராரி அல்லது திரிபுராந்தகர் ஆவார். மூன்று புரங்களைக் கொண்டு தேவர்களுக்கு இன்னல்களை விளைவித்த மூன்று அவுணர்களை அழித்த நிகழ்வினை இது குறிக்கின்றது.

> **"ஆறறி அந்தணர்க்கு அருமறை பலபகர்ந்து**
> **தேறுநீர் சடைக்கரந்து திரிபுரம் தீ மடுத்துக்..."**

என்று கலித்தொகை கடவுள் வாழ்த்துப் பாடல் குறிப்பிடுகின்றது. இதனை,

> **"திரிபுரம் எரியத் தேவர் வேண்ட**
> **எரிமுகப் பேரம்பு ஏவல் கேட்ப**
> **உமையவள் ஒரு திறன் ஆக ஓங்கிய**
> **இமையவர் ஆடிய கொடு கொட்டி ஆடலும்"**

என்று சிலப்பதிகாரம் குறிப்பிடுகின்றது. புறநானூறும் இந்த வடிவம்பற்றிக் குறிப்பிடுகின்றது.

> **"ஓங்கு மலைப் பெருவிறல் பாம்பு ஞாண் கொளீஇ**
> **ஒரு கணை கொண்டு மூஎயில் உடற்றி..."**

திரிபுராந்தகரின் கதையை விளக்கும் சிற்பக் காட்சி காஞ்சிபுரத்திலுள்ள கைலாசநாதர் கோவிலில் முதன்முதலாக இடம் பெற்று, படிப்படியாக மற்றக் கோவில்களிலும் இடம் பெறத் தொடங்கியது. திருவதிகை, திருவிற்கோலம், திருஅச்சிறுப்பாக்கம் மற்றும் வேதாக்கொல்லை ஆகிய இடங்களில் உள்ள தலபுராண வரலாற்றுடன் இக் கதை தொடர்பு படுத்தப்பட்டு மக்களால் போற்றப்பட்டு வருகின்றது. சென்னை அரசு அருட்காட்சியகத்திலும் கி.பி. 850 – 870ஆம் ஆண்டுக் காலத்தினைச் சார்ந்ததாகக் கருதப்படுகின்ற செப்புத் திருமேனியும் இருக்கின்றது.

**3. நடராசர்**

சிவனின் நடன வகைகள் பற்றி இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. கொடுகொட்டி, பாண்டுரங்கம் மற்றும் காபாலம் என்கின்ற நடனங்களை இறைவன் நிகழ்த்தினார் என்று கலித்தொகை கடவுள் வாழ்த்துப் பாடலில் உள்ளது. கொடிகொட்டி நடனத்தைக் கொட்டிச்சேதம் என்று சிலப்பதிகாரம் கூறுகின்றது. இதனைக் கொக்கரை என்று அப்பர்பிரான் தன் திருப்பாலைத்துறை பதிகத்தில் குறிப்பிடுகின்றார்.

கொடுகொட்டியும் பாண்டரங்கமும் திரிபுரம் எரித்த காலத்தில் சிவன் ஆடியவையாகும். பிரம்ம கபாலத்தை ஏந்தி நடனமாடியது காபாலமாகும்.

ஆனந்த தாண்டவம் புரியும் அழகிய புடைப்புச் சிற்பம் ஒன்று மகேந்திரவர்ம பல்லவனால் குடையப்பட்ட சீயமங்களத்தில் இடம் பெற்றிருக்கிறது. சிவனின் ஊர்த்துவ தாண்டவ வகை காஞ்சிபுரம் கைலாசநாதர் கோவிலில் சித்திரிக்கப்பட்டுள்ளது. இந்த வடிவம் திருமாலின் திரிவிக்கிரம வடிவத்தின் இணைக் கோட்பாடு வடிவமாகும்.

பின்னர்ச் சோழர்கள் காலத்தில் சிதம்பரம், தஞ்சை பெரியகோவில், திருவண்ணாமலை, குடந்தை சாரங்கபாணி, விருத்தாசலம், திருமுட்டம் ஆகிய தலங்களில் இவ்வடிவம் காட்சிப்படுத்தப்பட்டுள்ளது.

**பஞ்சதேக மூர்த்தி**

சிவனார் ஐந்து முகங்கள் மற்றும் உடல்கள் கொண்டவர் என்று ஆகமம் மற்றும் சித்தாந்த நூல்கள் குறிப்பிடுகின்றன. ஒவ்வொரு முகத்திலும் முக்கண்கள் உடையவர் என்றும் பத்துக் கரங்கள் கொண்டவர் என்றும் திருமூலர் குறிப்பிடுகின்றார்.

> **"அஞ்சு முகம்உள ஐம்மூன்று கண்ணுள**
> **அஞ்சினொரு அஞ்சு கரதலம் தான்உள**
> **அஞ்சுடன் அஞ்சு ஆயுதம்உள நம்பிஎன்**
> **நெஞ்சு புகுந்து நிறைந்து நின்றானே"**

என்று பாடுகின்றார்.

தத்புருடர், அகோரர், சத்யோஜாதர், வாமதேவர் மற்றும் ஈசனார் என்கின்ற ஐந்து முகங்கள் முறையே கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு மற்றும் விண்ணோக்கிய முகங்கள் ஆகும் என்று சைவாகமங்கள் குறிப்பிடுகின்றன.

தஞ்சாவூர் பெரிய கோயில் அமைப்பு சிவனின் ஐந்து முக அமைப்பினை உணர்த்தும் வகையில் கட்டப்பட்டுச் சிற்பங்கள் வைக்கப்பட்டுள்ளன என்ற கருத்து நிலவுகிறது. இக் கோயிலைக் கட்டிய மாமன்னன் முதலாம் இராசராச சோழன் (கி.பி. 985–1014) பஞ்சதேக மூர்த்தி சிற்பம் ஒன்றினைச் செய்து கோயிலுக்கு வழங்கினான் என்று இக் கோயில் கல்வெட்டொன்று கூறுகிறது.

**சோமாஸ்கந்தர்**

பல்லவர்கள் தங்களின் கோயில்களில் சோமாஸ் கந்தர் (சிவன், உமா தேவி மற்றும் கந்தன்) வடிவங்களை முதன்முதலாக உருவாக்கினார்கள். முதலாம் மகேந்திரவர்ம பல்லவன் (கி.பி. 580–630) மும்மூர்த்திகளான சிவன், திருமால், பிரம்மன் ஆகியோர்க்குச் சிலை வடித்தான். இம்மன்னனுக்குப் பின்னர் வந்த முதலாம் நரசிம்மவர்ம (கி.பி. 630 – 668) பல்லவனால் மாமல்லையில் குடையப் பட்டதாகக் கருதப் படும் இராமானுஜ மண்டபத்தில் சோமாஸ்கந்தருக்கு உருவத்தினைச் செய்வித்தான். தொடர்ந்து ஆட்சி புரிந்த இரண்டாம் மகேந்திரன் (668–72), முதலாம் பரமேசுவரவர்மன் (672–700) மற்றும் இராஜசிம்ம பல்லவன் (700–728) காலங்களில் பெருமளவில் சோமாஸ்கந்தர் படிமங்கள் புடைப்புப்பாங்கில் செய்யப்பட்டன. இவைபோன்று பாண்டிய நாட்டிலும் இவரது படிமங்கள் செய்யப்பட்டு வழிபடப்பட்டு வந்துள்ளன. கழுகுமலை (வெட்டுவான் கோவில்) மற்றும் திருப்பரங்குன்றம் (8ஆம் நூற்றாண்டு) ஆகிய இடங்களிலும் இப்படிமங்கள் காணப்படுகின்றன.

சோழர்கள் காலத்தில் (கி.பி. 850 – 1280) சோமாஸ் கந்தருக்குச் செப்புத் திருமேனிகளும், சிலாமேனிகளும் செய்யப்பட்டன. திருவாரூர், நாகப்பட்டினம், திருநள்ளாறு, திருமறைக்காடு, திருக்காறாயில், திருவாய்மூர் மற்றும் திருக்கோளிலி ஆகிய ஏழூர்களும் சோமாஸ்கந்தர் தலங்களாகும் என்று குறிக்கப் பெறுகின்றன. முசுகுந்த சக்ரவர்த்தி திருவாரூர் சோமாஸ்கந்தரை வழிபட்டதாக அவ்வூர் தலபுராணம் குறிப்பிடுகின்றது.

சோழர்களைத் தொடர்ந்து தமிழகத்தில் வேரூன்றிய விஜயநகர மன்னர்கள் காலத்திலும் (14 – 16ஆம் நூற்றாண்டுகள்) நாயக்கர்கள் (17–18ஆம் நூற்றாண்டுகள்) காலத்திலும் சோமாஸ்கந்தர் சிற்பங்கள் போற்றப்பட்டு இன்றளவும் பின்பற்றப்பட்டு வருகின்ற போக்கினைக் காணலாம். பெரியநாயகர் – பெரியநாயகி என்கின்ற பெயரால் சிவன், உமாதேவி சிற்பங்கள் வைக்கப் பட்டுள்ளன. தாய் – தந்தை – மகன் என்கின்ற உறவுக் கோட்பாடுகள் கொண்ட புராணக் கதை உருவாக்கப்பட்டதனால் முருகன் (குமரக் கடவுள்) மற்றும் கணபதி சிற்பங்கள் உடன் இணைந்து காணப்படுகின்றன.

விநாயகர் வழிபாடு சாளுக்கிய நாட்டிலிருந்து பாண்டியப் பகுதிகளில் பரவிப் பின்னர் தொண்டை மண்டலப் பகுதிகளில் பரவியிருக்கலாம் என்ற கருத்து நிலவுகிறது. பிள்ளையார்பட்டி, (5–6ஆம் நூற்றாண்டு) கழுகுமலை, திருமலைபுரம், திருப்பரங்குன்றம் (கி.பி. 773), ஆனைமலை (கி.பி. 770), குன்னக்குடி, திருக்கோளக்குடி, திருவெள்ளறை, செவிலிப்பட்டி, தேவர்மலை மலையக்கோவில், அரிட்டாபட்டி, வரிச்சியூர், மூவரைவென்றான், குறத்தியறை (ஐந்துமுக விநாயகர்), சிவகிரி, வீரசிகாமணி, மகிபாலன்பட்டி, குடுமியான்மலை, கங்கை கொண்டான், திருக்கோகர்ணம் (கி.பி. 8ஆம் நூற்றாண்டு), குன்னாண்டார்கோவில் (முத்தரையர்) போன்ற பாண்டிய நாட்டுப் பகுதிகளில் பண்டைய கணபதி சிற்பங்கள் இருக்கின்றன.

**முருகன்**

சங்க காலத்தில் தனியொரு தெய்வமாகக் கருதப்பட்ட முருக வழிபாடு தனித்தும், முருகன் சோமாஸ்கந்தருடன் இணைந்தும், தனியொரு மூர்த்தமாக சிவ வழிபாட்டுடன் இணைந்தும் காணப்படுகிறது. தனிச் சன்னிதிகளில் பிரதிட்டை செய்து வைக்கப்பட்டு இருக்கின்றன. மாமல்லபுரத்திலுள்ள திரிமூர்த்தி குடைவரை மற்றும் தர்மராஜ ரதம் (பிரம்ம சாஸ்தா) மற்றும் திரிச்சிராப் பள்ளியிலும், பாண்டிய நாட்டில் திருப்பரங்குன்றம், கழுகுமலை, ஆனைமலை (தெய்வானையுடன்) மற்றும் லாடன்கோவில் ஆகிய இடங்களிலும் பண்டைய கந்தனின் படிமங்கள் இருக்கின்றன.

பல்லவருக்குப் பின்னர் வந்த சோழர்களும் இதனையே பின்பற்றினர். முதலாம் ஆதித்த சோழன் (கி.பி. 870 – 907) கண்ணனூரில் (புதுக்கோட்டை மாவட்டம்) தனியொரு முருகன் கோவிலைக் கட்டினான்.

**முடிவுரை**

சங்க காலத்தினைச் சார்ந்த தாய்த் தெய்வ உருவங்கள், கடைமலைப்புத்தூர் 5 – 6 ஆம் நூற்றாண்டிலிருந்து பல்லவர்கள் மற்றும் சோழர்கள் கால கலைப்படைப்புகள் சங்கப் பண்பாட்டினை ஒட்டியே அமைந்து உள்ளதைக் காணமுடிகிறது. பிற்காலத்தில் பல புராணக் கதைகளின் உருவாக்கங்களினால் புதிய சிற்பப் படைப்புகள் உருவாக்கம் பெற்றன. விஜயநகர – நாயக்கர் காலத்தில், ஸ்தல புராணங்களுக்கு விளக்கம் தரும் சிற்பங்கள் பெருக்கம் அடைந்தன. ❖

# ஈழத் தமிழர்களின் மரபான இசையும் நடனமும்

திரு பால. சுகுமார்



ஈழத் தமிழர்கள் உலகில் வாழ்கின்ற எல்லாச் சமூகங்களையும் போலவே தமக்கான தனித்துவமான வரலாற்றையும் பண்பாட்டையும் கொண்டிருக்கின்றனர். பல்லாயிரமாண்டு பழைமையும் புதிய பண்பாடுகளின் காலநீட்சியும் பெற்றுள்ள ஈழத் தமிழர்கள் இன்று உலகெங்கும் பரந்து வாழ்கின்றனர். இன்று உலகில் ஈழத் தமிழர்கள் வாழாத நாடே இல்லை என்று சொல்லுமளவிற்கு அவர்களின் உலக வெளி பரந்துள்ளது. ஆனாலும், சில தவிர்க்க முடியாத அடையாளச் சிக்கல்களை உலக வெளியில் சந்திக்க வேண்டிய நிர்ப்பந்தத்தை ஈழத்தமிழ்ச் சமூகம் பெற்றுள்ளமையை நாம் முதலில் விளங்கிக்கொள்ள வேண்டும். ஈழத் தமிழர்கள் இதுவரை காலமும் கட்டிக்காத்து வந்த இசை நடன மரபுகள் எவை? பொதுப்பரப்பில் நம்மவர்கள் எதனை மிகுதியாகத் தமது பண்பாட்ட டையாளமாகக் கற்கின்றனர்? கருநாடக இசையும், பரதநாட்டியமும் இன்றுவரை நம்மவர்களின் கைகளில் வீச்சுடனும் ஆழத்துடனும் வெளிப்பட்டுள்ளது.

இத்தகைய ஒரு பகைப்புலத்தில் ஈழத்தமிழர்களின் மரபான இசைபற்றியும் நடனம் பற்றியும் நாம் சிந்திக்க வேண்டியவர்களாக உள்ளோம். இசையிலுள்ள ஒத்திசை, ஒழுங்கு, இராகம் என்பன பண்பாட்டுக்குப் பண்பாடு வேறுபடும். ஒவ்வோர் இனத்தினிடையேயும் இது தமக்கான தனித்துவமான பண்புகளைக் கொண்டிருக்கும். ஈழத்தமிழினமும் தனக்கான இசை மரபையும் பல தனித்துவமான பண்புகளையும் கொண்டுள்ளது. பண்பாட்டு அடிப்படையில் தமிழ்நாட்டோடு ஈழத்தமிழர்கள் நெருக்கமான தொடர்புகளையும் அடிப்படையான சில ஒற்றுமைகளையும் பெற்றிருந்தாலும், தமிழ்நாட்டிலிருந்து வேறுபட்ட தனித்துவமான பல பண்பாட்டு அடையாளங் களை ஈழத்தமிழ்ச் சங்கம் பெற்றுள்ளது. அதில் இசையும், நடனமும் முக்கிய ஒரு கதையாடலாக உள்ளன. இசை ஈழத்தமிழர்கள் மத்தியில் நம்பிக்கைகள் சார்ந்து கிராமிய வழிபாட்டு முறைகளோடு இணைந்ததாகவும், அதே நேரத்தில் இவற்றையெல்லாம் கடந்து வாழ்விய லொடு நெருக்கமான தொடர்புடைய தாகவும் உள்ளது. தமிழிசை மரபின் அறாத் தொடர்ச்சியான ஒரு நீட்சியையே நாம் நமது மரபிலும், இசை மரபிலும் காணமுடிகின்றது. சுவாமி விபுலானந்தர் யாழ் நூலை ஆக்கியதற்கான அடிப்படை ஈழத் தமிழர்களிடையே மரபினடிப்படையில் நீண்டிருந்த இசை மரபின் தாக்கமே என்பதனை நாம் இங்கு மனங்கொள்ள வேண்டும். அவருடைய இளமைக்காலத்தில் அவர் காதுகளில் ஒலித்த கண்ணகி குளிர்த்தியும், வசந்தன் பாடல்களும், கூத்திசையும் அவரது இசை பற்றிய ஆராய்ச்சிக்கான அடித்தளமாக அமைந்தன.

ஈழத் தமிழர்களின் பாரம்பரியமான தாயகப் பிரதேசங்களான வடக்கிலும் கிழக்கிலும் இன்றுவரை இந்த இசை மரபின் பயில் நிலையை நாம் அவதானிக்க முடியும். இலங்கையில் உள்ள சிங்கள சமூகம் வடஇந்திய இசைமரபொடு நெருக்கமான தொடர்பைக் கொண்டிருந்த போதிலும் அறுபதுகளுக்குப் பின்பு ஏற்பட்ட சிங்கள தேசிய எழுச்சி தங்களுக்கான பண்பாட்டு அடையாளங்களைக் கட்டமைக்கத் தொடங்கியது. அவர்களது வண்ணமும், கவியும் பல்வேறு கிராமிய இசை மரபுகளும் இன்றைய சாத்திரிய சங்கீதத்திற்கு அடிப்படைகளாக அமைந்தன. இதன் வாரிசுகளாக நாம் அமரதேவா, ஹேமதாச போன்றோர்களை இனங்காண முடியும். ஆனால், ஈழத் தமிழர்களின் இசை மரபுகள் இன்னமும் சாத்திர மயப்படாமல் மக்கள் இசையாகவே வழக்கில் உள்ளன. பேராசிரியர் வித்தியானந்தன் ஈழத்துப் பாரம்பரிய இசை மீட்டுருவாக்கத்திற்குப் பல ஆரம்ப முயற்சிகளை மேற்கொண்டார். அவரது முயற்சியினால் இலங்கை ஒலிபரப்புக் கூட்டுத்தாபனத்தின் அனுசரணையோடு ஈழத்துப் பாரம்பரிய இசை மரபுகள் பற்றிய இசைத்தட்டு வெளிப்பட்டது. அவரது இந்த முயற்சி இசைத்தட்டு வெளியீட்டுடன் நின்றுவிட்டது. அடுத்த கட்டத்திற்கு அது எடுத்துச் செல்லப்படவில்லை.

பின்னைய நாள்களில் அதாவது தொண்ணூறுகளின் பிற்பகுதியில் கிழக்குப் பல்கலைக்கழக நுண்கலைத்துறை



ஈழத்து இசை மரபை மாணவர்களது கல்வி முறைமைக்குள் இணைத்துச் செயற்பாடாக்கியது. பல்கலைக்கழகம் சார்ந்த பல்வேறு நிகழ்ச்சிகளிலும், பொது நிகழ்ச்சிகளிலும், தொலைக்காட்சித் தயாரிப்புகளிலும் இசை மரபின் தொடர்ச்சியை வெளிப்படுத்தியது. குறிப்பாகக் கண்ணகி குளிர்த்தி, கிழக்கிசை, லயம் ஆகிய நிகழ்ச்சிகள் ஈழத்தமிழரின் இசை மரபின் தொடர்ச்சியை அதன் மீட்டுருவாக் கத்திற்கான அடிப்படைகளைத் தந்துள்ளன. இதுபோலவே திருமறைக் கலாமன்றம் யாழ்ப்பாணக் கூத்துப் பாடல்களையும் இசை நாடகப் பாடல்களையும், வசந்தன் பாடல்களையும் நிகழ்த்துகைகளாகவும் அண்மைய நாள்களில் ஒலி ஒளி இறுவட்டுகளாகவும் வெளியிட்டு ஆவணப்படுத்தி உள்ளது.

ஈழத்தமிழர்களின் தனித்துவமான இசை மரபுகள் என நாம் அடையாளம் காணக்கூடியவையாக: கரகம், கும்மி, மழைக்காவியம், ஒப்பாரி, வயல் பாடல்கள், அம்பா பாடல்கள், கவி, ஊஞ்சல் பாடல்கள், குளிர்த்திப் பாடல்கள், உடுக்கடி காவியம், காத்தவராயன் பாடல்கள், கோவலன் கதைப் பாடல்கள், கண்ணகி வழக்குரை, மாரியம்மன் நடை, மந்திர உச்சாடன முறைகள், கூத்திசைப் பாடல்கள், ஆட்டக் காவடி, இசை, நடைக் காவடி இசை, வேடிக்கைப் பாடல்கள், இசுலாமியரின் கல்யாணப் பாடல்கள், பக்கீர் பாடல்கள், கிறித்தவர்களின் சிலுவைப்பாடுகள் பற்றிய பாடல்கள் என நீண்டு செல்லும். இந்த இசை மரபு தங்களுக்கான தனித்துவமான தாள ராக ஒத்திசைவுகளைக் கொண்டுள்ளன. இந்த இசை மரபில் இணைந் திருக்கின்ற இசைக் கருவிகள் முக்கியமானவை.

**உடுக்கு :** உடுக்கு இரண்டு வகைப்படும். வெங்கல உடுக்கு எனப்படும் பெரிய உடுக்கு மர உடுக்கு, தேங்காய்ச் சிரட்டைகள் இணைந்த உடுக்கு என இரண்டு வகைப்படுத்தலாம்.

**இதனொடு பறைமேளம்:** பறைமேளத்திலும் நாம் இரண்டு வகையை அவதானிக்கலாம். சங்க இலக்கியத்தில் சொல்லப்படுவதுபோலச் சிறுபறை, பெரும்பறை எனும் பாகுபாட்டை நாம் ஈழத்திலும் காணலாம். பறையோடு இணைந்து வருகின்ற சொர்ணாளி ஈழத்திசையில் குழல் வாத்தியமாக உள்ளது. சல்லரி எனப்படும் தாளம், சிலம்பு, தாளமாங்காய், மத்தளம், கொட்டு, சங்கு என இவற்றை வகைப்படுத்தி நாம் விளங்கிக்கொள்ள முடியும். இன்று நம் மத்தியில் இசைவாணர்களும் இசை விற்பன்னர்களும் உள்ளனர். நாம் கருநாடக இசையையே நம்மிசையாகக் கருதி அதனையே நம் மாணவர்களுக்குப் பயிற்றிவிக்கின்றோம். ஆனால், நம் இசைமரபை மறந்து போயுள்ளோம். வெறும் தெலுங்குக் கீர்த்தனைகளைப் பயிலுகின்ற நாம் நம் எதிர்காலச் சந்ததியினருக்கு நம் இசை மரபைக் கற்றுக்கொடுக்க வேண்டும். புலம்பெயர் நாடுகளில் உள்ள தமிழ்ப் பாடசாலைகள் இதில் தீவிரக் கவனம் கொள்ள வேண்டும். அதனுடன் நமது பல்கலைக்கழகங்கள் இதில் அக்கறையொடு செயற்பட்டுக் கல்விப் பாடத்திட்டத்தில் ஓர் அங்கமாக இதனையும்



இணைக்க வேண்டும். புலம்பெயர்ந்த வெளிநாடுகளில் இயங்குகின்ற ஈழத்தமிழர்கள் இதில் காத்திரமாகப் பங்களிப்புச் செய்ய முடியும்.

ஈழத்தமிழர் நடனம் என்று நாம் பேசுகின்றபொழுது கடந்த இரண்டாயிரம் வருடங்களாகத் தொடர்கின்ற கூத்து மரபையே நாம் கருத்தில் எடுக்க வேண்டும். கூத்து என்பது நடனத்துக்கான தமிழ்ச் சொல். காலப்போக்கில் ஏற்பட்ட சமற்கிருதச் செல்வாக்கு "நட்" என்ற சொல்லடியாக வந்த நடனம் என்ற சொல் தமிழ்ச் சொல்லாகவே இன்று பயன்பாட்டில் உள்ளது. ஈழத்தமிழர்களின் நடன மரபென்பது அவர்களது பண்பாட்டு உருவாக்கத்தின் மூலக் கூறுகளுள் ஒன்று. ஓர் இனம் தனித்துவமாகப் பேசப்படுவதற்கு அதற்கான பண்பாட்டு அடையாளங்கள் முக்கியப்படும். அதிலும் குறிப்பாக நடன நாடக வடிவங்கள் சிறப்பிடம் பெறுகின்றன. ஈழத்தமிழர்களின் நடன முறைகள் பலவகைப்பட்ட கூத்து வடிவங்களுள் பல நூற்றாண்டுகளாக யாழ்ப்பாணம், மன்னார், மட்டக்களப்பு, திருகோணமலை, வன்னி யெனத் தமிழர் வாழ் பிரதேசமெங்கும் செறிந்து பரந்துள்ளது.

**பறைமேளக் கூத்து:** இது மட்டக்களப்பிலேயே பெருவழக்கில் உள்ளது. இதில் தனியே ஆடல் வடிவம் மட்டுமே. இங்குப் பாடல்கள் இல்லை. சொர்ணாளியும், பறையும் அதனொடு சிலம்பும் இணைந்த இசைக்குப் பறை வாசிப்பவர்களே ஆடுகின்ற மரபு இதனுடையது. இன்றைக்குச் சிங்களர்கள் மத்தியிலுள்ள கண்டியன் நடனத்திற்கான மூலம் இங்கிருந்துதான் தொடங்குவதாகச் சில ஆய்வு முடிவுகள் கூறுகின்றன.

**வசந்தன் கூத்து :** வசந்தன் தனியே பாடலும் ஆடலும் இணைந்த இதில் பாத்திரங்கள் என்றில்லாமல் ஒரு கதையை ஆட்டமுறையின் மூலம் வெளிப்படுத்துவது. சிறுவர்கள் பெரும்பாலும் பங்கு கொள்கின்ற இந்த ஆட்டமுறை பல்வேறு விதமான ஆட்டக் கோலங்களை வெளிப்படுத்தியிருக்கும். இங்குக் கதை கூறும் மரபே முக்கியப்பட்டாலும் இதில் ஆட்டமே பிரதானமாக வெளிப்படும்.

**மகிடிக் கூத்து :** இதுவும் கதைப் பாடல் ஆடலெல்லாம் கலந்ததாக இருந்தாலும் பல்வேறு வகையான ஆட்ட முறைகள் பாடல் முறைகளின் இணைவைக் காணமுடியும். வடமோடி, வசந்தன், தென்மோடி, பிற்காலத்தில் இசையில் வந்து சேர்ந்த விசயங்களென எல்லாவற்றினுடைய கலவையையும் நாம் இங்குக் காணமுடியும்.

**மன்னார்க் கூத்துகள் :** இதில் வடபாங்கு, தென்பாங்கென இரண்டு மரபுகள் காணப்படுகின்றன. வடபாங்கு யாழ்ப்பாண மரபையும், தென்பாங்கு மாதோட்ட மரபையும் வெளிப்படுத்துகின்றன. இக்கூத்துகளுள் ஆடல் குறைந்த அளவில் வெளிப்பட பாடல்களே பிரதானப் பங்கு வகிக்கின்றன. ஆனாலும், பாத்திரங்களின் வரவு, தரு என்பன மிகுந்த ஆட்டக் கோலங்களை வெளிப்படுத்தி நிற்கும்.

**யாழ்ப்பாணக் கூத்துகள் :** வட்டுக்கோட்டை, உடுப்பிட்டி பகுதிகளில் வழக்கில் இருந்த மரபு வடமோடிக்கு அண்மித்த சாயலுடையதாக இருக்க, கரையோரப் பிரதேசங்களில் உள்ள கூத்துகள் தென்மோடியை அண்மித்ததாக உள்ளன. இதேவேளை காத்தவராயன் சிந்து நடைக் கூத்தையும் நாம் யாழ்ப்பாண மரபில் இணைத்துக் கொள்ள முடியும்.

**வன்னிக் கூத்துகள் :** இங்குக் காத்தவராயன் கூத்தும், கோவலன் கூத்தும் முக்கியம் பெறுகின்றன. காத்தவராயன் கூத்து சிந்துநடையும், துள்ளல் தன்மையையும், தனித்துவமான இசை மரபையும் கொண்டது. கோவலன் கூத்து மட்டக்களப்பு தென்மோடியின் சாயலை உள்வாங்கிய ஒரு வடிவமாகக் காணப்படுகின்றது.



**வடமோடி, தென்மோடிக் கூத்துகள் :** ஈழத்தமிழர்களின் செந்நெறி சார்ந்த ஆட்டமரபாக நாம் வடமோடி, தென்மோடி ஆட்ட வடிவங்களையே கொள்ள முடியும். குறிப்பாக மட்டக்களப்பில் ஆடப்படுகின்ற இந்த வடிவங்கள் இத்தகைய பண்பைப் பெற்றுள்ளன. இதனாலேயே கூத்து மீளுருவாக்க முயற்சியில் ஈடுபட்ட பேராசிரியர் வித்தியானந்தன் மட்டக்களப்புக் கூத்துகளைப் பேராதனைப் பல்கலைக் கழகத்தில் மேடையேற்றினார். ஆடலிலும் பாடலிலும் இரு மோடிகளுக்கும் வேறுபாடு உண்டு. தென்மோடி ஆட்டங்கள் வடமோடி ஆட்டங்களைவிட நுணுக்கமானவை. வடமோடி ஆட்டங்கள் அழகு வாய்ந்தவை. தென்மோடியில் பாட்டுகளை இழுத்துப் பாட, வடமோடியில் நடிகர் தம் பாட்டைப் படிக்கப் பக்கப் பாட்டுக்காரர் முழுதாக அதனைப் பாடி முடிப்பர். தென்மோடியில் கடைசிப் பகுதியை மட்டும் பிற்பாட்டுக்காரர் படித்து முடித்துவிட்டுப் பாட்டு முழுவதுக்குமுரிய தருவைப் பாடுவார். ஒவ்வொரு பாத்திரத்தின் வரவு நடைபெறும்போதும் வெவ்வேறு வகையான தாளங்களை மத்தளத்தில் இசைப்பர். அத்தாளங்கள் வாயால் சொல்லப்படும்போது பதவரிசை தாளக்கட்டு எனப்படும். ஆட்டத்திற்குரிய தாளங்களைச் சொற்கோப்பினாலேயே தொடுத்து அல்லது கட்டி அமைத்தலே தாளக்கட்டு. தாளக்கட்டு, பாத்திர வரவின்போது அண்ணாவியார் திரும்பத் திரும்பப் படிப்பார். எட்டுமுறை, பன்னிரண்டு முறை என அண்ணாவியாரின் மனநிலைக்கேற்ப அது அமையும். இத்தாளக்கட்டுகள் ஆண்கள், பெண்களுக்கு வேறு வேறானதாக இருப்பதொடு பாத்திர வேறுபாட்டையும் பிரதிபலிக்கும் ஆண்களுக்குரிய தாளக்கட்டு உலா, பொடியடி, வீசாணம், எட்டு, நாலடி, குத்துமிதி, பாச்சல் என அமைந்திருக்கும். பெண்களுக்குரிய தாளக்கட்டுகள் ஒய்யாரம், பொடியடி,

வீசாணம், எட்டு, தட்டடி, அடந்தை, குத்துநிலை என வரிசைப்படும். வடமோடி ஆட்டங்களின் திறனும் அழகும் இத்தாளக்கட்டில் வெளிப்படுகின்ற ஆட்டங்களினால் வெளிப்படும். இத்தாளக்கட்டுக்கான ஆட்டங்களே வடமோடி தென்மோடியின் உயிர்த் தன்மையாகும். இவையே ஏனைய ஆட்ட முறைகளிலிருந்து வேறுபடுத்துவதோடு இதற்குரிய கலைப் பெறுமானத்தையும் செந்நெறித் தன்மையையும் பெற்றுக் கொடுக்கின்றன.

இன்று நாம் ஈழத் தமிழரின் நடனம் என்ற ஒரு கருத்துருவாக்கத்தைக் கொள்வதற்கான அடிப்படைகளை வடமோடி தென்மோடி ஆட்ட முறைகளில் காணலாம். ஆகவே, இதனை அடிப்படையாக வைத்தே கடந்த சில ஆண்டுகளாகப் பேராசிரியர் சு. வித்தியானந்தன் விட்ட இடத்திலிருந்து அடுத்தகட்ட முயற்சிகளை நாம் மேற்கொண்டோம். இந்த முயற்சிகளின் உந்துசக்தியாகப் பேராசிரியர் சி. மௌனகுரு செயல்பட்டமை குறிப்பிடத் தக்கதாகும். 1998இல் கிழக்குப்பல்கலைக் கழக நாடக விழாவில் வடிவமைக்கப்பட்ட இன்னிய கருத்துரு, 1999இல் பல்கலைக்கழகப் பட்டமளிப்பு விழாவில் இன்னிய அணி பயன்படுத்தப்படுகின்றது. இன்னியம் என்பது ஈழத்தமிழர் கலை பாரம்பரிய இசை நடன மரபுகளை இணைத்ததான ஒரு தமிழ்ப்பாடு என்று சொல்லலாம். நமது அடையாளத்தைத் தாங்கிய இவ்வகையான ஒரு கலாச்சார இசையணி புலம்பெயர் நாடுகளில் அவசியமான ஒன்றாகும். அவ்வகையில் பிரான்சில் 2008ஆம் ஆண்டு தைத் திங்களில் நடைபெற்ற தமிழர் திருநாள் என்னும் பொங்கல் விழாவில் இன்னிய அணி அறிமுகப்படுத்தப்பட்டது. பிரான்சின் சிலம்பு அமைப்பின் வழிகாட்டலில் பல்வேறு தமிழர் அமைப்புகளின் ஒருங்கிணைப்பில் இத் தமிழர் திருநாள் கொண்டாடப் பட்டது.

புலம்பெயர் தேசமொன்றில் இன்னிய அணிக்குக் கால்கோள் இட்டது பிரான்சு என்றே கொள்ளலாம். இதில் நடன ஆசிரியை அனுஷாவினையும் அவர்தம் மாணவியரையும் இணைத்து இன்னிய அணியை வடிவமைத்து அறிமுகப்படுத்தினேன். உண்மையில் இந்த முயற்சியைக் கருத்தியலாக முன்னெடுப்பதிலும் அறிமுகப் படுத்துவதிலும் தமிழர் திருநாள் நெறியாளர்களுள் ஒருவரான கி.பி. அரவிந்தனினதும் சிலம்பு அமைப்பின் செயலாளரான க. முகுந்தனினதும் பங்களிப்புகள் முக்கியமானவையாகும். தொடர்ந்து 2008 வைகாசித் திங்களில் இலண்டனில் தேம்சு தமிழ்ச் சங்கம் நடாத்திய தமிழர் விளையாட்டு விழாவிலும் இன்னியம் அறிமுகமானது. இலண்டன் வாழ் தமிழ் மாணவர்கள் இதில் பங்கு பற்றினர். திரு. வரன், திரு. சீலன் ஆகிய இருவரின் முயற்சியால் இது சாத்தியமானது. இதன் தொடர்ச்சியாக 2009ஆம் ஆண்டு நோர்வேயில் இடம் பெறவுள்ள பொங்கல் விழாவில் இன்னியம் அறிமுகப்படுத்தப்படுகின்றது. ஏறத்தாழ 50 மாணவர்கள் பங்கேற்கின்றனர். நோர்வே தமிழர் வள நிலையத்தார் இதனைச் செயற்படுத்துகின்றனர். இதில் குறிப்பாகப் பாஸ்கரன், ஆசிரியை மல்லிகா குழுமத்தினர் அக்கறையுடன் செயற்படுகின்றனர்.

இந்தப் பின்னணியில் விடிய விடிய ஆடப்பட்ட கூத்து மரபின் தனியான ஆட்ட மரபுகளை இணைத்து ஈழத்தமிழரின் நடனத்தைக் கட்டமைப்பதற்கான முயற்சிகள் தற்போது மேற்கொள்ளப்படுகின்றன. நோர்வேயில் நடன ஆசிரியர் திருமதி மாலதியின் நடனப் பள்ளியின் பதினைந்தாவது ஆண்டு விழாவில் (08.11.2008) இம்முயற்சி எமது நெறியாள்கையில் அரங்கேறியது. வடமோடியின் அரச வரவு ஆட்டத்தினை இருபதுக்கும் மேற்பட்ட மாணவர்கள் நிகழ்த்திக் காட்டினர். ஒரு பரதநாட்டியப் பள்ளி முதல் முறையாகக் கூத்தை அடிப்படையாகக் கொண்ட ஈழத்தவர் நடனத்தை அரங்கேற்றியது முக்கிய அம்சமாகும். இதுவோர் வரலாற்றுப் பதிவாகும். இதன் அடுத்த கட்டமாகப் பரத நாட்டிய அரங்கேற்றத்தில் கூத்து ஓர் உருப்படியாக இணைக்கப்பட்டமையாகும். இந்த அதிசயமும் நோர்வேயிலேயே நிகழ்ந்தது. பரதநாட்டிய ஆசிரியை மேர்சியின் மாணவி ராகவி இதனை நிறைவேற்றினார். இதுவும் உலக அளவில் முதல்முறையாக நிகழ்ந்த ஒரு பாடமாக மாணவர்களுக்குக் கற்பிக்கப்பட உள்ளது. இதனைத் திருமதி வாசுகி ஜெயபாலன் பொறுப்பேற்று நடாத்த உள்ளார். இலண்டனிலும் நடன ஆசிரியை திருமதி ராஜினியின் மாணவிகள் தங்களது பள்ளி ஆண்டு விழாவில் ஈழத்தமிழர் நடனமாகக் கூத்தினை அறிமுகப்படுத்தினர். ஈழத்து நடனம், அதன் வடிவம் என்பவற்றிற்கான ஆரம்ப விதைகள் கருத்தியலாகவும், செயல் வடிவமாகவும் புலம்பெயர் நாடுகளில் தூவப்பட்டு விட்டன என்றே கொள்ளலாம். ஈழத்து நடனம் முழுமை பெற நாம் பயணிக்க வேண்டிய தூரம் நிறையவே உள்ளது. தடைகளைத் தாண்டி உலகப் பரப்பில் நம் அடையாளத்தை நிறுவ இணைந்தே பயணிப்போம்.

❖

# ஆழ்வார்கள் அருந்தமிழின் தனித்தன்மைகள்

மாண்புமிகு மத்திய இணை அமைச்சர்
டாக்டர் எஸ். ஜெகத்ரட்சகன்



### தோற்றுவாய்

உலகத் தொன்மொழிகள் சிலவற்றுள் காலப் பழைமையும், சாலப் பெருமையும் கொண்டிலங்கும் உயர் தனிச் செம்மொழி நம் தாய்மொழியாகிய தமிழ் மொழி. தமிழ் மொழியின் இந்த உயர்ச்சிக்கு அதன் இலக்கிய இலக்கண வளங்களே பின்புலங்களாக நிற்கின்றன.

அன்னைத் தமிழ் 'செம்மொழி' என்ற உலகளாவிய அங்கீகாரத்தைப் பெறுவதற்குப் பின்புலமாக நின்ற பலருள் குறிக்கத்தக்க சிறப்பினர் ஆழ்வார் பெருமக்கள். அவர்களால் அருளிச்செய்யப்பெற்ற, திருமாலைப் பாடுபொருளாகக் கொண்ட பாசுரங்களின் தொகுப்பே 'நாலாயிர திவ்யப் பிரபந்தம்' எனத் தொகுக்கப்பெற்றது. ஆழ்வார் பெருமக்களின் விலைமதிப்பற்ற இந்த உயரிய வெளிப்பாடுகள், வைணவத்தை வளர்த்து, வாழவைத்ததோடு அமையாது தமிழ் மொழிக்கும் அளவற்ற சிறப்புகளைச் சேர்த்தன. அவற்றுள் சிலவற்றை ஆராய்ந்து தனி எடுத்துக்காட்டும் நோக்கில்; "ஆழ்வார்கள் அருந்தமிழின் தனித்தன்மைகள்" என்ற இந்தக் கட்டுரை நடையிடுகிறது.

### தமிழகத்தில் திருமால் வழிபாடு

தமிழ்நாட்டின் தொன்மையான வழிபாடுகளுள் ஒன்று திருமால் வழிபாடு. இன்றைக்கு 2750 ஆண்டுகளுக்கு முற்பட்டது என்று உறுதி செய்யப்பட்ட தொல்காப்பியப் பொருளதிகாரத்தின் முதல் நூற்பாவின் முதல் தொடரே, 'மாயோன் மேய காடுறை உலகமும்' என்று அமைகிறது. காடும் காடு சார்ந்த நிலமும் என்று கருதப்படும் முல்லை நிலத்தின் தலைவனாக–இறைவனாகத் திருமால் போற்றப்பட்டமை தெளிவாகிறது. படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழில்களுள் 'காத்தல்' என்ற தொழிலை மேற்கொண்ட அருளாளனாக முன்னோர் திருமாலை முன் நிறுத்தினர். சங்க இலக்கியங்கள் மாயோனை, 'மால்' என்றும், அவன் 'விண்ணுயர் புட்கொடியை' (கருடன் எழுதிய கொடி) ஏந்தியவன் என்றும், நீல வடிவினன் என்றும், சக்கரப் படையை ஏந்தியவன் என்றும் பல குறிப்புகளைத் தருகின்றன. எட்டுத்தொகை நூல்களுள் காலத்தால் முற்பட்ட, இசை வடிவில் அமைந்த பரிபாடலிலும், தமிழின் முதல் நாடக இலக்கியமாகிய இளங்கோவடிகளின் சிலப்பதிகாரத்திலும் திருமால் வழிபாடு குறித்த உயரிய பதிவுகள் நிறைவாக அமைந்துள்ளன.

### நாலாயிரம் தோற்றம்

இந்த நீண்ட பாரம்பரிய திருமால் வழிபாட்டின் தொடர்ச்சியாகத் தமிழ்நாட்டில் ஆயிரக்கணக்கான திருமால் விண்ணகரங்கள் தோற்றம் கொண்டன. ஆழ்வார்கள் வாழ்ந்திருந்த காலத்தில் தமிழ்நாட்டில் சிறியனவும் பெரியனவுமாக ஆயிரத்திற்கும் மேலான மாலவன் ஆலயங்கள் நிலவியிருந்ததை ஆய்வாளர்கள் உறுதி செய்கிறார்கள். இத்தகு திவ்ய தேசங்களுக்கு நேரில் சென்று கி.பி. 7ஆம் நூற்றாண்டின் பிற்பகுதிக்கும், 10ஆம் நூற்றாண்டின் முற்பகுதிக்கும் இடைப்பட்ட காலத்தில் வாழ்ந்திருந்த ஆழ்வார் பெருமக்கள் பாடித் துதித்த பனுவல்களின் தொகுப்பே பிற்காலத்தில் 'நாலாயிர திவ்யப் பிரபந்தம்' எனப் போற்றப்பெற்றது. ஆழ்வார் பெருமக்கள் பன்னிருவர். அவர்களுக்குப் பிற்காலத்தே வந்த நாதமுனிகள் என்பார் ஆழ்வார்களின் அமுத மொழிகளைத் திரட்டி நாலாயிர திவ்யப் பிரபந்தம் என்று பெயரிட்டு உலகுக்கு உபகரித்தார். இத் தொகுப்பு ஆழ்வார்களின் காலமுறை பற்றி அமையாது, பெரியாழ்வாரின் திருப்பல்லாண்டை முதலாகக் கொண்டும், நம்மாழ்வாரின் திருவாய்மொழியை நிறைவாகக் கொண்டும் தொகுக்கப் பெற்றுள்ளது நினைவுகூரத்தக்கது. இத் தொகுப்புக்கான காரணம் புலப்படவில்லை.

### ஆழ்வார்களும் அருளிச்செயல்களும்

'ஆழ்வார்களின் அருந்தமிழ்' என்று போற்றப்பெறும் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,

1) பொய்கை ஆழ்வாரின் முதல் திருவந்தாதி
2) பூதத்தாழ்வாரின் இரண்டாம் திருவந்தாதி
3) பேயாழ்வாரின் மூன்றாம் திருவந்தாதி
4) திருமழிசை ஆழ்வாரின் திருச்சந்த விருத்தம், நான்முகன் திருவந்தாதி.

5) மதுரகவி ஆழ்வாரின் கண்ணிநுண் சிறுத்தாம்பு.
6) நம்மாழ்வாரின் திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி.
7) குலசேகர ஆழ்வாரின் பெருமாள் திருமொழி.
8) பெரியாழ்வாரின் பெரியாழ்வார் திருமொழி.
9) ஆண்டாள் பிராட்டியாரின் திருப்பாவை, நாச்சியார் திருமொழி.
10) தொண்டரடிப் பொடியாழ்வாரின் திருமாலை, திருப்பள்ளியெழுச்சி.
11) திருப்பாணாழ்வாரின் அமலனாதிபிரான்.
12) திருமங்கை ஆழ்வாரின் பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருவெழுகூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல்.

என ஆழ்வார் பன்னிருவர் அருளிச்செய்த சிறியனவும் பெரியனவுமாகிய 23 நூல்கள் இடம் பெற்றுள்ளன. நாலாயிரம் என்ற எண்ணிக்கையை நிறைவு செய்வதற்காகத் திருவரங்கத்தமுதனார் அருளிய இராமாநுசர் நூற்றந்தாதியின் 108 பனுவல்களும் இதனுடன் இணைக்கப்பெற்றுள்ளன. பின்வந்த ஆசாரியப் பெருமக்களுள் சிலர், ஆண்டாள் பனுவல்கள் யாவும் பெரியாழ்வாரின் பெண்ணாகத் தம்மைப் பாவித்துக்கொண்டு பாடிய பாடல்களின் தொகுதிகள் என்றும், மதுரகவி ஆழ்வார் நூல் ஏதும் செய்திலர் என்றும் வாதிட்டு ஆழ்வார்கள் பதின்மரே என்று சாதிக்கின்றனர்.

### சில அளவுகோல்கள்

'ஆழ்வார்கள் அருந்தமிழின் தனித்தன்மைகள் என்பது இவ்வாய்வின் முதன்மைப் பொருள். தனித்தன்மை என்பது ஒரு நூல் அல்லது நூல் தொகுதி, தமக்கு முன்போ தனது சமகாலத்திலோ தோற்றம் கொண்ட நூல்களிலிருந்து சிறப்புத் தகுதிகளால் வேறுபட்டு நிற்பதையே குறிப்பதாகும். தனது சமகாலத்தில் வடமொழியில் தோற்றம் கொண்ட வடமொழி இலக்கண நூலாகிய பாணினி வியாகரணத்தில் இல்லாத பொருள் இலக்கணத்தைக் கொண்டிலங்குவது தொல்காப்பியத்தின் தனித்தன்மை. கடவுளர்களை மையப்படுத்தி எழுந்த முதல் இசைப் பாடல்களின் தொகுதி என்பது பரிபாடலின் தனித்தன்மைகளுள் ஒன்று. உலகவர்களுக்கெல்லாம் பொதுப்பட நின்று சாதி, மத, இன, மொழி பேதங்களைத் தவிர்த்துப் பொது அறம் சொன்னது திருக்குறளின் சிறப்பு. சமகாலத்தில் உலகமொழி ஒன்றிலும் காணப்படாத, மானுடத்தை மையப்படுத்தி எழுந்த வீரயுகப் பாடல்களும், தன்னுணர்ச்சிப் பாடல்களுமாகத் திகழ்வது நம் சங்க இலக்கியங்களின் தனித்தன்மை. இத்தகு அளவுகோல்களை நெஞ்சில் நிறுத்தி அளவிடும்போது ஆழ்வார்களின் அருந்தமிழின் தனித்தன்மைகள் அளவிறந்தன என்ற மெய்ம்மை புலனாகின்றது.

### எண்ணல் அலங்காரத்தின் உச்சம்

முதலாவதாகக் குறிக்கத்தக்க தனித்தன்மை, நாலாயிரம் என்ற எண்ணிக்கை இட்டுத் தொகுக்கப்பெற்ற தொகுப்பு. ஒருவர் பாடியன அல்லது பலர் பாடியனவற்றைத் தொகுத்து அவற்றுக்கு ஒரு பெயர் சூட்டுவதோடு அமையாது, எண்ணிக்கை இட்டுக் குறிப்பது தமிழில் சங்ககாலம் முதலே காணப்படுகின்றது. சிலவகை அறநூல்களுக்கு இன்னா நாற்பது, இனியவை நாற்பது என்று பெயர் சூட்டினர். எழுபது பரிபாடல் என்று உரைகாரர்கள் குறித்துச் சென்றனர். பத்துப் பத்தாக அடுக்கிய பத்துப் பகுதிகள் கொண்ட பாடல் தொகுப்புக்குப் பதிற்றுப்பத்து எனப் பெயர் வைக்கப்பெற்றது. இவற்றைப் போல் திணைமாலை நூற்றைம்பது, புறநானூறு, அகநானூறு, ஐங்குறுநூறு, முத்தொள்ளாயிரம் எனப் பண்டை நூல் தொகுதிகளுக்குப் பெயர்கள் அமைந்தன. எண்ணிக்கை இட்டுத் தொகுப்பது ஒருவகைப் பாதுகாவல்; ஒன்றிரண்டு குறைந்தாலும் தேடி இணைக்க வேண்டும் என்ற எண்ணத்திற்கு அது தூண்டுகோலாயிற்று. இவ்வகையில் நாலாயிரம் பனுவல்களை ஒன்று திரட்டி, நாலாயிர திவ்யப் பிரபந்தம் என்று பெயரிட்ட சிறப்பு ஆழ்வார்களின் அருந்தமிழின் தனித்தன்மையைப் பறைசாற்றுவதாக அமைகிறது. இந்த அருஞ்சாதனையை இயற்றியவர் நாதமுனிகள் என்பது முன்னரும் குறிக்கப்பெற்றது.

### ஆண்டவனுக்கு நிகராக ஆசாரியர்கள்

திருமாலை அன்றி வேறு ஒரு தெய்வத்தைத் தொழாத ஒரு தெய்வக் கோட்பாட்டில் தலைநின்றவர்கள் வைணவர்கள். வைணவ சம்பிரதாயத்தில் ஆழ்வார்களை அடியொற்றி, அவர்கள் அருளிச் செயல்களின் மீது கொண்ட ஆராக் காதலால் வைணவத்தில் ஆசாரிய பரம்பரை தோற்றம் கொண்டது. ஆசாரியர்களை ஆழ்வார்களுக்கு நிகராகவும், ஆழ்வார்களை ஆண்டவனுக்கு நிகராகவும், சில நேரங்களில் மேலாகவும் வைத்து வழிபட்டு வணங்கும் பாவனை, வைணவத்தின் தனித்தன்மைகளுள் குறிக்கத்தக்க ஒன்றாகும். இதற்கு ஓர் எடுத்துக்காட்டு வேண்டும் என்றால் திருமாலைப் போற்றிச்செய்த ஆழ்வார்களின் பாசுரத் தொகுதியில், ஆசாரிய பரம்பரையின் மூலவராகக் கருதத்தக்க இராமானுசரின் புகழ்பாடும், திருவரங்கத்தமுதனாரின் இராமானுச நூற்றந்தாதியை இணைத்துப் போற்றியதை முன்வைக்கலாம். தமிழகத்தில் ஆழ்வார்களின் சம காலத்தில் தோன்றி வளர்ந்த சமயங்களுள் காணப்படாத பெருமிதங்களுள் இஃது ஒன்றாகக் கருதப்பட வேண்டுவது. இதன் திறம் விரிக்கின் பெருகும்.

### எத்தனை எத்தனை உத்திகள்

ஆழ்வார்களின் அருளிச்செயல்களான நாலாயிரத்தில் இடம்பெற்றுள்ள இலக்கியங்கள் பல்வேறு பெயர்களால் வழங்கப்படுகின்றன. ஓர் இலக்கியத்திற்குப் பெயர் சூட்டும்போது, பல்வேறு ஏதீடுகளைக் கருத்தில்கொண்டு அதற்கு உரிய பொருத்தமான பெயரைச்

சூட்ட வேண்டும். அவ்வகையில் இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ள இலக்கியங்களுக்கு ஒன்பது வகை ஏதீடுகளை உளங்கொண்டு பெயர்கள் சூட்டப்பட்டுள்ள அருமைப்பாட்டை ஆய்வாளர்கள் எடுத்துக் காட்டியுள்ளனர். அவற்றுள் பல முதன்முதலாக நாலாயிரத்தில் அமைவது இதன் தனித்தன்மைக்குக் கட்டியம் கூறுவதாக அமைந்துள்ளது.

1) முதற்குறிப்பால் பெயர் சூட்டப்பெற்றது – திருப்பல்லாண்டு, அமலனாதிப்பிரான், கண்ணிநுண் சிறுத்தாம்பு என்பன.
2) அந்தாதித் தொடையால் பெயர் பெற்றவை – முதல், இரண்டு, மூன்றாம் திருவந்தாதிகள்.
3) முதற்குறிப்பும், அந்தாதி அமைப்பும் கொண்டது – நான்முகன் திருவந்தாதி.
4) பாடியவர்களால் பெயர் பெற்றவை – பெரியாழ்வார், நாச்சியார் திருமொழிகள்.
5) அளவால் பெயர் பெற்றவை – பெரிய திருமொழி, திருஎழு கூற்றிருக்கை என்பன.
6) பாவால் பெயர் பெற்றவை – திருவாசிரியம், திருவிருத்தம், திருமாலை, முதல், இரண்டு, மூன்று திருவந்தாதிகள், நான்முகன் திருவந்தாதி.
7) செயலால் பெயர் பெற்றவை – திருப்பாவை, திருப்பள்ளியெழுச்சி.
8) தன்மையால் பெயர் பெற்றவை – திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், சிறிய திருமடல், பெரிய திருமடல் முதலியன.
9) சிறப்பால் பெயர் பெற்றது திருவாய்மொழி. இவற்றுள் திரு எழுகூற்றிருக்கை, அந்தாதி நூல்கள், தாண்டகங்கள் தவிர எஞ்சிய நூல்வகைகள் ஆழ்வார்கள் தமிழ் மொழிக்கு வழங்கிய புதிய வகை நூற்கொடைகளாகும்.

**முப்பது பண்களில் முகிழ்த்த இசைத்தமிழ்**

தமிழ் இயல், இசை, கூத்து என மூன்றாகப் பகுத்து ஆராயப்படும். ஆழ்வார்களின் பாசுரங்களில் சிலவற்றைத் தவிர எஞ்சியன யாவும் தூய தமிழ் இசை வடிவங்களாகும். பண்டைப் பண் அடைவுகளைப் பெற்ற பாமாலைகள் அவை என்பதை ஆழ்வார்களும் தம் பாசுரங்களில் ஆங்காங்கே குறித்துச் சென்றுள்ளனர். தமிழ் இலக்கிய வரலாற்றை நூற்றாண்டு வரிசையில் எழுதிய அறிஞர் மு.அருணாசலம் அவர்கள், "சைவத் திருமுறைகளில் இடம் பெற்றிருக்கும் பண்டைய பண்களினும் கூடுதலாக ஆழ்வார்கள் பாசுரங்களில் பண்கள் மிகுந்து காணப்படுகின்றன" என்று குறிக்கிறார். தேவார மூவர் கையாண்ட பண்கள் 23 மட்டுமே. பிரபந்தத்தில் ஆழ்வார்கள் 30 பண்களைக் கையாண்டுள்ளனர். நமது தவக்குறை, முன்னோர் இப்பாசுரங்களுக்குப் பண் அமைக்காது விடுத்தனர். அதன் காரணம் நன்கு புலப்படவில்லை. ஒருவேளை, தமிழ் வேதம் என்றும், வேதத்துக்கெல்லாம் வித்து என்றும் கூறப்பட்ட ஆழ்வார்களின் பாசுரங்களை வேத விற்பன்னர்கள், வேதத்தை ஓதும் அதே ஓசையால் நாலாயிரத்தையும் ஓதுதலே சிறப்பென்று கருதிப் பண் அடைவு வகுப்பதில் நாட்டம் இல்லாதிருந்திருக்கலாம். காரணம் யாதாயினும் நாம் கவலை கொள்ள வேண்டுவதின்று.

இவை சங்க காலத்தில் நிலவியிருந்து, களப்பிரர் காலத்தில் சிதைந்து போன 103 தமிழ்ப் பண்களில் 30 பண்களுக்குப் புத்துயிர் தந்தவர்கள் ஆழ்வாராதிகளே என்பதில் ஐயமில்லை. தற்போதுகூட இசை அறிஞர்களின் உதவியோடு, நாலாயிரப் பனுவல்களுக்கு நாம் பண் அடைவுகளை அமைக்கலாம். சென்னைத் தமிழ் இசைச் சங்கம் போன்றவை இம் முயற்சியை மேற்கொள்ளலாம்.

**பேதா பேதமற்ற சமய நல்லுறவு**

ஆழ்வார்கள் அருந்தமிழின் தனித்தன்மைகளுள் குறிக்கத்தக்க பிறிதொரு பண்பு அதன் சமயப் பொறையாகும். சங்க காலத்தில் தமிழ் மக்கள் தத்தம் நிலத்தெய்வங்களை வழிபட்டு வந்தனர். பூம்புகார், மதுரை முதலாகிய நகரங்களில் பிற இறையவர் கோயில்கள் இருந்தன. சமண பௌத்தர்களின் வருகைக்குப் பின்னரே சமயச் சண்டைகள் தமிழகத்தில் நுழைந்தன. காலப்போக்கில், சமண, பௌத்த மதங்களோடு போராட்டங்களைத் தொடங்கிய சைவம், திருமாலையும் பிரமனையும் பழித்துரைக்கத் தொடங்கியது. இக்கண்டனம், பதிகம் தோறும் முதல் மூன்று திருமுறைகளில் பதிவாகியுள்ளன. காலத்தால் முற்பட்ட முதலாழ்வார்களின் பாசுரங்களை ஆழ்ந்து நோக்கினால், அன்னார் சிவன்–திருமால் என்ற பேதம் பாராட்டாது ஓர் உருவில் அன்னார் ஈர் உருவும் இருப்பதாகப் பதிவு செய்தனர். முதல் திருவந்தாதியில் பொய்கை ஆழ்வார்,

**அரன், நாரணன்–நாமம்; ஆன்விடை புள் – ஊர்தி;**
**உரை – நூல் மறை; உறையும் கோயில்–வரை நீர்;**
**கருமம் – அழிப்பு, அளிப்பு; கையது – வேல், நேமி**
**உருவம் – எரி, கார்; மேனி ஒன்று.**

(நாலாயிரப் பாடல் எண் 2086)

என சிவன், திருமால் இருவரையும் ஒன்றாகவே காணும் பெருமிதம் நிழலாடுகிறது. இப் போராட்டம் எல்லை கடந்தபோது பின்வந்த ஆழ்வார்களும் தங்கள் எதிர்பார்ப்பைப் பதிவு செய்ய வேண்டியதாகிவிட்டது.

**கருவறைக்குள் பாசுரங்கள்**

சங்க காலத்தில் கோயில்கள் இன்றுள்ள கட்டுமான எழிலுடன் இருந்திருக்க வாய்ப்பில்லை. கி.பி.5ஆம் நூற்றாண்டுக்குப் பிறகே குடைவரைக் கோயில்களும், கல் அடுக்கிக் கட்டும் கோயில்களும் தோன்றி வளர்ந்தன. வளர்ச்சி பெற்ற நிலையில் கருவறைக்குள் எழுந்தருளியிருக்கும் இறைவனை வழிபடுவதில் வேதம் வல்ல அந்தணர்களுக்கும், தமிழ் வல்ல இறைவழி பாட்டாளர்களுக்கும் இடையே உரசல் மூண்டது. ஸ்ரீவைணவப் பெருமக்கள் ஆழ்வார்களின் அமுத

மொழிகளே நால்வேதங்கள் என்று திடமாக நம்பினர். சிவாலயங்களில் கருவறையுள் வடமொழி வேதமந்திரங்கள் ஓதி வழிபட்டபோது, தேவாரத்தை – தமிழ்ப் பண்ணிசையை ஓதுவாமூர்த்திகள் கருவறையின் வெளியே நின்று ஓதுவதற்கே அனுமதிக்கப்பெற்றனர். பழுத்த தமிழ்ப்பற்றில் தலைநின்ற வைணவர்கள் அன்றுதொட்டு இன்றுவரை, நாலாயிரத்தைக் கருவறையில் நின்று ஓதி, தமிழ் அமுதப் பெருமையை நிலை நாட்டினர்; நிலைநாட்டியும் வருகின்றனர்.

**மலைபோல் குவிந்த உரை மாலைகள்**

ஆழ்வார்களின் அருளிச் செயல்களில் குறிக்கத்தக்க சிறப்பு நிலை ஒன்று உண்டென்றால், பிரபந்தத்திற்குப் பிற்காலத்தே ஆசாரியர்களும், அறிஞர்களும் எழுதிக் குவித்த உரைக் குவியல்களையே சொல்ல வேண்டும். சமயநூல்களுக்கு உரை காணுதல் கூடவே கூடாது என்று சைவம் கூறி முயற்சி ஏதும் தொடங்காத காலத்தே, வைணவத்தில் உரை வெள்ளம் கரைபுரண்டு ஓடியது. ஓர் எடுத்துக் காட்டுத் தரலாம். நம்மாழ்வாரின் திருவாய்மொழிக்கு மட்டும் 12ஆம் நூற்றாண்டின் தொடக்க காலம் முதல் 13ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதிவரை ஏராளமான உரைகள் எழுதப்பெற்றன. 1. ஆறாயிரப்படி (திருக்குருகைப்பிரான்பிள்ளான்), 2. ஒன்பதாயிரப்படி (நஞ்சீயர்), 3. பன்னீராயிரப்படி (வாதிகேசரி அழகிய மணவாள ஜீயர்), 4. இருபத்து நாலாயிரப்படி (பெரியவாச்சான்பிள்ளை), 5. முப்பத்தாறாயிரப்படி என்னும் ஈடு (வடக்குத் திருவீதிப் பிள்ளை) 6. அடைய வளைந்தான் அரும்பதம் (ஆத்தான் ஜீயர்), 7. ஜீயர் அரும்பதவுரை (குணசரம்பாக்கம் இராமனுச சீயர்) என்போர் தமிழும்– வடமொழியும் கலந்த மணிப்பிரவாள நடையில் உரை எழுதிக் குவித்தனர். ஆழ்வார்களின் அமுதத் தமிழை அணுஅணுவாக அவர்கள் இரசித்தனர். இப்படி ஒரு பேருரை, தமிழ் மொழியில் வேறு எந்த ஒரு தோத்திர நூலுக்கும் அமைந்ததில்லை. இதில் வருத்தம் ஒன்று உண்டு. இன்றுவரை அவ்வுரைகள் முற்றாகத் தமிழ்ப் படுத்தப்பட்டுத் தமிழ் மக்களுக்கு வழங்கப்படவில்லை என்பதே.

**நம்மாழ்வார் வழங்கிய அருட்கொடை**

நிறைவாக ஆழ்வார்கள் அருந்தமிழின் தனித் தன்மை ஒன்றை விரித்துரைத்து இக் கட்டுரையை நிறைவு செய்யலாம். வைணவம் என்பது ஒரு தத்துவக் கொள்கையாக வரையறுக்கப்பட்டது இராமாநுசரால்தாம் என்பர். இக்கோட்பாட்டை அவர் உருவாக்கத் துணைநின்ற நூல்கள் பல. அவற்றுள் குறிக்கத்தக்கன:

1. பகவத்கீதை, 2. உபநிடதங்கள், 3. பிரமசூத்திரம் என்பன. இவற்றைப் பிரஸ்தானத் திரயம் என்பர். இவற்றுள் ஒன்றான பிரமசூத்திரத்திற்குத் தென்னாட்டு அறிஞர் நால்வர் கண்ட உரை வேறுபாடுகளே தென்னாட்டுச் சமயத் தத்துவங்களாக விரிந்தன. நீலகண்டர் சைவப்பரமாக உரைகண்டார். சங்கரர் கண்ட உரை அத்வைதம் எனப்பட்டது. மத்வர் கண்ட உரை துவைதம் ஆயிற்று. இராமாநுசர் கண்ட வடமொழிப் பேருரை விசிட்டாத்வைதம் எனப்பட்டது. அதுவே வைணவமாக–வைணவத் தத்துவமாக மலர்ந்தது. இக் கோட்பாட்டை இராமாநுசர் உருவாக்கப் பெரிதும் அடிப்படையாக அமைந்தவை நம்மாழ்வாரின் நான்கு நூல்களே என்பர். அவை நான்கும் நால் வேதங்களின் சாரமாக அமைந்தன. மேற்குறித்த மூன்று நூல்களும், நாலாயிர திவ்யப் பிரபந்தமுமே இராமாநுச சித்தாந்தம் தோன்ற மூலமாய் நின்றன. இது பற்றியே அந்த மூன்று நூல்களையும், தமிழ்ப்பிரபந்தத்தையும், உபயவேதாந்தம் என்று வைணவர் போற்றினர். இவ்வாறு நாலாயிரம் தந்த நற்பேறுகள் பலவாகும்.

**பெருமிதங்கள் ஒன்றா? இரண்டா?**

ஆழ்வார்களின் அமுதத் தமிழின் தனித் தன்மையாக எடுத்துரைக்க ஒவ்வோர் ஆழ்வார் நூல்களிலும் நிறைவான செய்திகள் உண்டு. ஆண்டாள் நாச்சியாரின் திருப்பாவை கிருஷ்ணதேவராயரால் தெலுங்கில் மொழி பெயர்க்கப்பட்டதும், திருப்பதி திருமலையில் திருவேங்கடவன் திருமுன், வேத மந்திரங்களோடு, தமிழ்த் திருப்பாவை ஓதி வழிபாடு நிகழ்த்தப்பெறுவதும், தொல்காப்பியம் மற்றும் திருக்குறள் முன்வைத்த அகப்பொருள் மரபுகளை உடைத்துக் கொண்டு, தமிழகப் பெண் ஒருத்தி மடலேறத் துணிவதைப் பாடும் சிறிய, பெரிய திருமடல்களும், ஆழ்வார் அமுத மொழிகளுக்காக அவர் விரும்பியவாறு காஞ்சி திருவெஃகாவில் தன் பாம்புப் படுக்கையைச் சுருட்டிக்கொண்டு திருமழிசை ஆழ்வார்க்குப்பின் நாரணன் நடந்ததும் எல்லாம், ஆழ்வார்கள் அமுதத் தமிழில்தான் உள்ளன. ஒரு சிறு கட்டுரைக்குள் சிலவற்றை மட்டுமே அடையாளப்படுத்த முயன்றுள்ளேன்.

**யார் தருவார் இந்த அரியாசனம்**

பிறந்து மொழி பயின்ற காலந்தொடங்கி 'நாரணன்' திருநாமம் ஒன்றைத் தவிர வேறு ஒன்றை அறியாத எளியேனுக்கு, நாலாயிரத்திற்கு நயவுரை காணவும், ஆங்கில உரையாக்கத்துடன் ஐந்து முறை பதிப்பித்து வெளியிடவும் அவன் அருள் வாய்த்தது. இன்று தமிழன்னையைச் செம்மொழிச் சிங்காதனத்தில் அமர்த்தி நவரத்தின மகுடத்தைக் கோவையில் சூட்டி மகிழும் தமிழக முதல்வர் தலைவர் கலைஞர் அன்பில் இக்கட்டுரை எழுதும் பேறு வாய்த்தது; நெகிழ்ந்து நின்று நன்றி பாராட்டி வணங்குகின்றேன்.



# சங்கத் தமிழ் நெறியும்
## சமய இலக்கியங்களும்

அருள்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார்



தமிழ்மொழி செந்தமிழ், வண்தமிழ், முத்தமிழ், நற்றமிழ், கன்னித்தமிழ் என்றெல்லாம் சான்றோர்களால் போற்றப்பெற்ற சிறப்புக்குரியது. தொல்காப்பியமும் சங்க இலக்கியங்களும் தமிழ் மொழியின் பழமைக்கும், வளத்திற்கும் சான்றுகளாக உள்ளன. தொல்காப்பியம் கவிதைக் கட்டுக்கோப்புக்கு உரிய எழுத்து, சொல், பொருள், யாப்பு ஆகியவற்றுக்குரிய வரையறைகளை வகுத்துள்ளது. வாழ்வியலுக்குரிய அகம், புறம் ஆகிய நெறிமுறைகளை வகுத்துக் கூறுகின்றது. அங்கங்கே மனமாசற்று வாழ்வதற்குரிய அருளியல் கூறுகளையும் நுட்பமாகச் சுட்டிச் செல்கின்றது.

சங்ககாலத்தில் உயிர்க்கு உறுதிபயக்கும் சிறந்த உண்மைகளையும், மெய்யியல் கோட்பாடுகளையும் திருமுருகாற்றுப்படை, பரிபாடல், புறநானூறு முதலிய நூல்கள் எடுத்துரைப்பதைக் காணமுடிகின்றது. பிற சங்க நூல்களிலும் இவை ஆங்காங்கே சுட்டப் பெறுகின்றன.

சங்ககாலத்திற்குப் பின்னர்த் தமிழர்நெறிக்கு மாறான அயல் சமயங்களின் வளர்ச்சி தமிழகத்தில் பெருகத் தொடங்கியது. அயலவர் போக்கு, மொழியையும் பண்பாட்டையும் தடுமாறச் செய்தது. ஆட்சியாளர் துணை பெற்று அயல் சமயங்கள் வளர்ச்சி பெற்றன.

அயலவர் தாக்கம் சங்கத் தமிழரின் அன்பு நெறிப்பட்ட வாழ்வியல் முறைகளில் மாற்றங்களை ஏற்படுத்தியது. சிலஹி நூற்றாண்டுகள் இவர்களின் பிடியில் தமிழகம் இருண்டிருந்தது. பாண்டியர்களுடைய எழுச்சி இருண்ட காலத்தை ஒளிபொருந்திய நெறியின்பால் செலுத்தத் தொடங்கியது. இந்நிலையில் தமிழ்நெறியைத் தழைத்தோங்கச் செய்த பக்தி இயக்க காலம் தொடங்கியது.

திருமூலர்,

> **''என்னை நன்றாக இறைவன் படைத்தனன்**
> **தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே''**

எனத் தமிழர் வழிபாட்டு நெறிகளை மீட்டுருவாக்கம் செய்தார். "யாவர்க்குமாம் இறைவர்க்கொரு பச்சிலை என" வழிகாட்டி "அன்பு நெறியே சிவம்" என்று வலியுறுத்தினார். உடம்பினை இழுக்காகக் கருதிய அயற்கொள்கையர் பிறந்தமேனியாகத் திரிவது தமது சமயக் கொள்கை என்று உடம்பைப் பேணாதவராய் வீதிகளில் நடந்து வந்தனர். அன்பு, நாண், ஒப்புரவுடைய மகளிர் அவர்களைக் கண்டு நாணிக் கதவடைத்தனர். திருமூலர், ''உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே'' என வழிகாட்டினார். மாசறு மேனியாக உலகியலை வெறுக்கும் செய்திகளைப் பரப்பிய அயற்கொள்கையை மாற்றி,

> **"உடம்பார் அழியின் உயிரார் அழிவர்**
> **திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்**
> **உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே**
> **உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே"**

எனவும்,

"அன்பும் சிவமும் இரண்டென்பார் அறிவிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்து இருந்தாரே"

எனவும் மூவாயிரந் தமிழ் அருளிய திருமூலர் வழிகாட்டினார்.

கூத்தரும் பாணரும் விறலியருமாக வளர்த்த இசை – நாடகத் தமிழ் ஆகியவை இருண்டகாலத்தில் அழிவின் விளிம்பிற்குச் சென்றன. பக்தியியக்க முன்னோடியான காரைக்காலம்மையார் கூத்தப் பெருமான் சிறப்பை அற்புதமாகப் பாடியவர். அம்மையார் இசையைச் சமயநெறியோடு இணைத்துவிட்ட சிறப்புக்குரியவர். பண்ணார் இன்தமிழைப் பாடித் தமிழர்தம் அருளியலைத் தழைக்கச் செய்தார். குழல், யாழ், தாளம், வீணை, கொக்கரி, சச்சை, குடமுழா, முழவு, கரடிகை, துந்துமி, துடி முதலிய இசைக் கருவிகளை அம்மையார் குறிப்பிடுகின்றார்.

"நீரும் நிலனும் தீயும் வளியும்
மாக விசும்போ டைந்துட னியற்றிய
மழுவாள் நெடியோன் தலைவன் ஆக"

என்று மதுரைக்காஞ்சி சிவபெருமான் இயல்பினைக் கூறும். ஐம்பெரும் பூதங்களாலான உலகினைப் படைத்த முழுமுதற் கடவுளான சிவத்தின் இத்தன்மையைக் காரைக்காலம்மையார்,

"இறைவனே எவ்வுயிரும் தோற்றுவிப்பான் தோற்றி
இறைவனே யீண்டிறக்கஞ் செய்வான்"

என்று அற்புதத் திருவந்தாதியில் காட்டுகின்றார்.

திருநாவுக்கரசராகிய அப்பரடிகள் பல இடர்ப்பாடுகளைக் கடந்து ''தமிழோடு இசை பாடல் மறந்தறியேன்'' எனப் பண் இசைப் பாடல்களை அருளி ஊர் ஊராகச் சென்றார். அடியவர் திருக்கூட்டம் எழுச்சியுடன் கூடினர். உழவாரத் தனிப் படையை உடையாராகத் திருக்கோயில்களிலும் திருவீதிகளிலும் ''என் கடன் பணி செய்து கிடப்பதே'' என முழங்கிப் ''பண்ணின் இசையாகி நின்றாய் போற்றி'' எனப் போற்றித் திருத்தல வழிபாட்டை மேற்கொண்டார். தலையாரக் கும்பிட்டுக் கூத்தும் ஆடிப் போற்றினார். மெய்ந்நெறி பரவச் செய்தார்.

சங்கத் தமிழர் பறவைகளையும், விலங்குகளையும் மதித்த மாண்புடையவர்கள். பொருளீட்டச் சென்ற ஒரு தலைவன் தன் ஊர் திரும்பி வருகின்றான். அவ்வாறு வருகின்றபோது மலர்களிலே வண்டுகள் மொய்த்திருப்பதைக் காண்கிறான்.

''எல்லா வுயிர்க்கும் இன்பம் என்பது
தானமர்ந்து வரூஉ மேவற் றாகும்''

என்னும் தொல்காப்பிய நெறியை உணர்ந்தவன் அத் தலைவன். எனவே தேர்மணிகளின் நாவுகளை ஒலிக்காத வண்ணம் கட்டிவிடுகிறான். அம் மணிகளின் ஒலியால் அவ்வண்டுகளின் இன்பம் தடைபட வேண்டா என்பதே அவ்வாறு அவனைச் செய்யத் தூண்டுகிறது.

தமிழர்தம் இத்தகைய அருள் உணர்வு நெறியை அப்பர் பெருமான் பாடிய, ''மாதர்பிறைக் கண்ணியானை'' எனத் தொடங்கும் திருவையாற்றுப் பதிகத்திலும் விரிவாகக் கண்டு மகிழ்கிறோம்.

திருஞானசம்பந்தர் ஞானத்தின் திருவுருவாகத் தோன்றி ''முத்தமிழ் விரகன்'', ''தமிழ் ஞானசம்பந்தன்'' எனத் தமிழ் உணர்வை வெளிப்படுத்தும் வகையில் பதிகம் தோறும் பாடி மறுமலர்ச்சியை உருவாக்கினார். முழுமுதலாகிய சிவம், ''பண்ணும் பதம் ஏழும் பலவோசைத் தமிழுமாக'' விளங்குகிறார் எனப் பாடினார். நாடெங்கும் சென்று,

''அசைவில் செழுந்தமிழ் வழக்கே அயல்
வழக்கின் துறைவெல்ல''

என்று செந்தமிழ் நாடு செழிக்க அருளிய அமுதப் பாடல்களைப் பொழிந்தார்.

சங்க காலத்தில் மக்கட்பேறு வாய்க்கப் பெறாதவர்கள் கடவுளைக் கருதி வணங்கி நிற்பர். இறையருள் வாய்க்கப் பெற்றோர் நன்மக்கட்பேறு பெறுவர். சங்கத்தமிழரின் இந் நம்பிக்கை

''குன்றக் குறவன் கடவுட்பேணி
இரந்தனன் பெற்ற எல்வளைக் குறுமகள்''

என வரும் ஐங்குறுநூற்று அடிகளால் அறியப்பெறுகிறது.

ஞானசம்பந்தப் பெருமானும்,

''பேயடையாப் பிரிவெய்தும் பிள்ளையினோடு உள்ள நினைவு
ஆயினவே வரம்பெறுவர் ஐயுறவேண்டா ஒன்றும்''

என்று இச் சங்கநெறியைத் தம் பக்திப் பனுவலில் போற்றி உரைத்துள்ளார். உடன்போக்கு மேற்கொண்ட ஒரு வணிகன் திருமருகல் எனும் தலத்தில் விடந்தீண்டி இறந்தபோது அவனுடைய காதலி அரற்றி அழுததைக் கண்டு பதிகம் பாடி அவனை உயிர்ப்பித்து, அப்போதே திருமணமும் செய்து வைத்த சம்பந்தப் பெருமான் சங்கத்தமிழ் நெறி காத்தவர் என்பதில் ஐயமுண்டோ? பிறர் வருத்தந் தீர இறைவனிடம் வரம்பெற்ற சம்பந்தரின் மனித நேயம் இதனால் வெளிப்படுகிறது.

நம்பியாரூராகிய சுந்தரர், இறைவன் தமிழ்ப் பாடல்களுக்கு இரங்கும் தன்மையாளன் என்பதை,

**''நல்லிசை வல்ல ஞானசம்பந்தன் நாவினுக்கரையன்
சொல்லியவே சொல்லி ஏத்துகப்பான்''**

என்றும், இறைவன் திருவீழிமிழலையில் ''தமிழ் கேட்கும் இச்சையால் காசு நித்தம் நல்கினார்'' என்றும் அருளினார். எனவே நமது சமயநெறி மக்கள் துயர்தீர்க்கும் அறநெறியுடையது என்பதை உணரலாம்.

சங்ககாலத்தில் மலைவாழ்நர் தம் நிலத்து விளைவு பெருக மழை பொழியவும், போதிய அளவு பெய்தபின் விளைவு கெடாதவாறு மழை நீங்கவும் இறைவனை வேண்டி வழிபடுவர் என்பதும், இறைவன் அருளால் விளைந்த தினையினை உவகையுடன் பகுத்துண்டு மகிழ்வர் என்பதும்,

**''மலைவான் கொள்கென உயர்பலி தூஉய்
மாரியான்று மழைமேக் குயர்கென
கடவுட் பேணிய குறவர் மாக்கள்
பெயல்கண் மாறிய உவகையர் சாரற்
புனத்தினை அயிலும் நாட''**

என வரும் புறநானூற்று அடிகளால் அறியப்படுகின்றது. இம்மரபை ஏயர்கோன் கலிக்காம நாயனார் வரலாற்றிலும் காண்கிறோம். பஞ்சம் வந்த காலத்தில் மழை பெய்ய வேண்டுமென சிவபெருமானுக்குப் பன்னிரு வேலி நிலத்தை அருட்கொடையாக அளித்து வேண்டுதல் செய்கின்றார். பெருமழை பெய்கின்றது. மழையை நிறுத்தி அருள வேண்டுமென்று மீண்டும் பன்னிருவேலி நிலத்தை இறைவனுக்கு அளித்து வேண்டிக் கொள்கின்றார். மழை நிற்கின்றது. சங்க காலப் பண்பாடான இது பிற்காலத்திலும் தொடர்ந்ததைச் சுந்தரர் தம்முடைய திருப்புன்கூர் பதிகத்தில்,

**"வையகம் முற்றும் மாமழை மறந்து
வயலில் நீரிலை மாநிலம் தருகோம்
உய்யக் கொள்க மற்று எங்களை என்ன
ஒளிகொள் வெண்முகிலாப் பரந்து எங்கும்
பெய்யும் மாமழை பெருவெள்ளம் தவிர்த்துப்
பெயர்த்தும் பன்னிரு வேலி கொண்டருளும்
செய்கை கண்டு நின் திருவடி அடைந்தேன்
செழும்பொழில் திருப்புன் கூருளானே"**

என்னும் பாடலில் உரைத்துள்ளார்.

மாணிக்கவாசகர், சிவபிரானைத் ''தண்ணார் தமிழளிக்கும் தண்பாண்டி நாடன்'', ''பண்சுமந்த பாடல் பரிசு படைத்தவன்'' எனப் பாடினார். அப் பாடல்களை அம்பலவாணர் தமது திருக்கரத்தால் எழுதித் தில்லைப் பொன்மன்றில் வைத்தார்.

மணிவாசகர் பாடிய திருவெம்பாவைப் பாடல்கள் சங்கத் தமிழரின் வழிபாட்டு மரபை ஒட்டி வந்தனவேயாகும். மார்கழித் திங்கள் வானோர்க்கு வைகறைப் பொழுதாகக் கருதப்படும். சிவபெருமான் திருவுருப்போன்று ஒளிரும் செம்மீனாகிய திருவாதிரை நிறைமதியுடன் கூடும் திங்கள் மார்கழியாகும். எனவே மார்கழித் திருவாதிரை சங்ககாலம் தொடங்கி இன்று வரை சிறப்பாகக் கொண்டாடப் பெற்று வருகின்றது. இத்திருவிழாவொடு தொடர்புடையது மார்கழி நீராடல். இது சங்ககாலத்தில் அம்பாவாடல் என்று குறிப்பிடப் பெறுகின்றது.

இது குறித்துப் பரிபாடல்,

**''ஞாயிறு காயா நளிமாரிப் பிற்குளத்து
மாயிருந் திங்கள் மறுநிறை ஆதிரை
விரிநூல் அந்தணர் விழவு தொடங்கப்
புரிநூல் அந்தணர் பொலங்கலம் ஏற்ப
வெம்பா தாக வியனில வரைப்பென
அம்பா வாடலின் ஆய்தொடிக் கன்னியர்
முனித்துறை முதல்வியர் முறைமை காட்டி''**

என்று விரிவாக எடுத்துரைக்கின்றது.

இவற்றையடுத்து வந்த சமய இலக்கியங்கள், ''அசைவில் செழுந்தமிழ் வழக்கே அயல் வழக்கின் துறை வெல்ல'' எழுந்தன. தேவாரம் ஆதிய திருமுறைப் பாடல்கள் ''அருச்சனைப் பாட்டேயாகும்; ஆதலால் மண்மேல் நம்மைச் சொற்றமிழ் பாடுக'' என்று முழுமுதலாகிய இறைவனே விரும்பிக் கேட்ட சிறப்புக்குரியன எனத் தெய்வச் சேக்கிழார் திருத்தொண்டர் புராணத்தில் எடுத்துரைத்துள்ளார். திருமுறைப் பாடல்கள் 'தமிழ்மறை ஆகமங்கள்' என்று போற்றப்பெறுகின்றன. திருமுறைகளும் சைவ சித்தாந்த நூல்களும் சொற்பாவின் வகை தெரிந்து சிந்திப்பவர்க்குச் சிறந்து செந்தேனாகத் திகழ்ந்து சிவனெனும் நாமம் தமக்கேயுடைய செம்மேனி எம்மானை அடைவதற்குத் தெள்ளத் தெளிந்து சிந்திப்பனவாகக் கிடைத்த கருவூலங்கள்.

**''நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப''**

என்னும் தொல்காப்பியர் வாக்கிற்கேற்ப இவை நிறைமொழி மாந்தர் ஆணையின் வழிவந்த பெருமந்திரங்களாகத் திகழ்கின்றன. இதனை உமாபதி சிவம் ''கண்ட பெருமந்திரமே மூவர் பாடல்'' எனத் திருமுறை கண்ட புராணத்தில் காட்டுகிறார்.

சங்கத் தமிழுக்குப் பிறகு உயர்தனிச் செம்மொழிக்கு வளம் சேர்த்தது பக்தி இலக்கியங்களேயாகும். திருமுறைப் பாடல்களும், ஆழ்வார் பாடல்களும் அயல் வழக்கைப்

புறந்தள்ளி எழுந்த தனிச் சிறப்புக்குரியன. சென்ற நூற்றாண்டுகளில் வாழ்ந்த சான்றோர்கள், இவற்றை 'மொழிக்கு மொழி தித்திப்பவை, மலங்கரைந்து மனம் ஒடுங்க வழிகாட்டுபவை, தீஞ்சுவை கலந்த பாடல்கள்' என்றெல்லாம் தெளிவுறுத்தினர்.

உலகம் வியந்து போற்றும் மெய்யியலையும் வாழ்வியலையும் அருளியலையும் இணைக்கும் திருமுறைகளையும் உயர்தனிச் செம்மொழி எனும் விழுமிய நிலையை உருவாக்க அறிஞர்கள் முயல வேண்டும். உயர்தனிச் செம்மொழியாக விளங்கும் தெய்வப் பாடல்களை இணைத்து மன நிறைவுக்குரிய வழிபாட்டு நெறிகளை உலகறியச் செய்வது நமது கடப்பாடாகும்.

திருமுறைப் பாடல்களின் சிறப்புகளையுணர்ந்த தமிழ் மன்னர்களும் பாடல் பெற்ற திருத்தலங்களில் இறைவனுக்குக் கலை நிறை கோவில்களை எழுப்பினர். விண்ணை முட்டும் விமானங்கள், கோபுரங்கள், நூற்றுக்கால் மண்டபங்கள், ஆயிரங்கால் மண்டபங்கள், செப்புத் திருமேனிகள் முதலியவற்றை உருவாக்கினர். இவை வரலாற்றுக்குரிய கல்வெட்டுகளையும் தாங்கி நிற்கின்றன. திருக்கோயில்கள் மக்களை நெறிப்படுத்தும் அறச்சாலைகளாக விளங்கின. மருத்துவம், கல்வி, நீதி வழங்கல் ஆகியன கோவில்களில் நடைபெற்றன. கோவிலையொட்டிய குடிகளும், குடிகளை இணைத்து வாழ்வளிக்கும் கலைக் கருவூலங்களாக விளங்கின.

தஞ்சை, கங்கை கொண்ட சோழபுரக் கோவில்கள் ஓராயிரம் ஆண்டுக்கு முன்னரே நுண்மாண் நுழைபுலம் மிக்க கலைஞர்களால் உலகம் வியப்ப வடித்த கருவூலங் களாக, தமிழர்களின் திறமையை அறிவிப்பனவாய் விளங்குகின்றன. இவற்றைப் பாதுகாத்துப் பேணுவதும், தமிழ்ப் பண்பாடு, கலை, ஓவியம், ஆகியவற்றை உயர்த்த செம்மொழிச் செழுமையை உலகறியச் செய்யும் பணியாகும். நமது சமயம் வாழ்வோடு இயைந்தது. அனைத்திலும் கடவுள் தன்மையைக் காண்பது என்பதை அப்பரடிகள்,

''அப்பன் நீ அம்மை நீ ஐயனும் நீ
அன்புடைய மாமனும் மாமியும் நீ
ஒப்புடைய மாதரும் ஒண்பொருளும் நீ
ஒரு குலமும் சுற்றமும் ஒரூரும் நீ
துய்ப்பனவும் உய்ப்பனவும் தோற்றுவாய் நீ
துணையாய் என்னெஞ்சம் துறப்பிப்பாய் நீ
இப்பொன் நீ இம்மணி நீ இம்முத்தும் நீ
இறைவன் நீ ஏறூர்ந்த செல்வன் நீயே''

என்னும் பாடலில் காட்டுகின்றார். தாய், தந்தை, மனை, மக்கள், ஊர், உறவு, பொன், மணி என அனைத்தும் இறையாக இப்பாடலில் காட்டுகிறார்.

''நீலமணிமிடற்று ஒருவன் போல'' இறைவனது திருநீலகண்டமே மந்திரச் சொல். அதனை வெளிப்படுத்தும் வகையில் "காவினை இட்டும் குளம் பல தொட்டும் மன மகிழ்வோடு வழிபாடு செய்தால் தீவினை தீண்டாது" என்று தொண்டு செய்யும் நன்நெறியைக் கூற வந்த திருநீலகண்டப் பதிகத்தில் சம்பந்தர் குறிப்பிடுகிறார். இத்தகைய தெய்வப் பாடல்களைக் கொண்டிருப்பது உயர்தனிச் செம்மொழியான தமிழின் சிறப்பாகும்.

"துங்கமிகு பொங்கரவு தங்குசடை
நங்களிறை துன்றுகுழலார்
செங்கயல்கண் மங்கையுமை நங்கையொரு
பங்கனமர் தேவூரதன் மேல்
பைங்கமலம் அங்கணிகொள் திண்புகலி
ஞானசம்பந்தன் உரைசெய்
சங்கமலி செந்தமிழ்கள் பத்துமிவை
வல்லவர்கள் சங்கையிலரே"

என்று தமது பனுவல்கள் சங்கநெறியின்பாற்பட்டது என்பதை ஞானசம்பந்தரே குறிப்பிடுவதையும், ஆண்டாள் திருப்பாவையில் ''சங்கத்தமிழ் மாலை'' எனத் தனது பாடல்களைச் சுட்டுவதையும் சிந்திக்க வேண்டும்.

எனவே நாயன்மார்கள், ஆழ்வார்கள் அருளிய தெய்வப் பனுவல்களையும் செம்மொழி இலக்கியங்களில் இணைத்துப் போற்றுவது சிறப்புக்குரியதாகும்.



# சமயம் வளர்த்த தமிழ்

தவத்திரு குன்றக்குடி **பொன்னம்பல அடிகளார்**



உயர்தனிச் செம்மொழியாம் தமிழ்மொழி, எழுத்துக்கும் சொல்லுக்கும் மட்டும் இலக்கணம் பேசிய மொழி அன்று. வாழ்க்கைக்கு இலக்கணம் பேசியது; வாழ்வாங்கு வாழும் நெறிமுறைக்கு வழிகாட்டியது. தமிழர்களின் வாழ்வியலைப் பொறுத்தவரை சமயம் மொழியொடு பின்னிப் பிணைந்திருக்கிறது.

ஏழாம் நூற்றாண்டில் ஞானசம்பந்தப் பெருமான் நடத்த இருந்த சொற்போரின் வெற்றியை,

> **"அசைவில் செழுந்தமிழ் வழக்கு**
> **அயல்வழக்கின் துறை வெல்ல"**

என்றும்,

> **"திசைஅனைத்தின் பெருமை எல்லாம்**
> **தென்திசையே வென்றுஏற"**

என்றும் சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.

> **"செழுந்தமிழ் வழக்கு"**

என்பது தமிழ்ப் பண்பாட்டை விழி எனப் போற்றிய வாழ்க்கைத் தடத்தின் வழி!

தமிழர் சமயத் தடத்தில், வாழ்வியல் நிலையாமை அறிவுறுத்தப்படுவது வீட்டை விட்டு விலகி ஓடுவதற்கன்று. வீடுபேற்றை அடைவதற்கு மாத்திரம் அன்று. வாழ்க்கையை வாழ்வாங்கு வாழ்ந்து, வாழ்நெறிமுறைப்படி வாழ்ந்து, பண்ணொடு கலந்த பைந்தமிழை வெறுக்காமல், இசையொடு கலந்த இன்பத் தமிழை ஒதுக்காமல் நுகர வேண்டியவற்றை முறையாய் நுகர்ந்து, தன்னல வட்டத்தின் பிடியில் சிக்கிச் சுழன்று உழலாமல், உலகம் வாழ வாழ்வதே உண்மைச் சமய வாழ்வு ஆகும்.

இதைத்தான் நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தர் அருமையாய்க் குறிப்பிடுவார்:

> **"மண்ணில் நல்லவண்ணம் வாழலாம் வைகலும்**
> **எண்ணில் நல்ல கதிக்கு**
> **யாதுமோர் குறைவிலை!"**

மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம்! நல்ல வண்ணம் வாழத்தான் வேண்டும்! வாழ்வதற்கு என்ன தேவை? மாடமாளிகைகளா? கூட கோபுரங்களா? வங்கியின் மூலதனமா? அல்ல! பிறகு என்ன தேவை?

இதயத்தில் நல்ல எண்ணம் தேவை! நான் வாழ்ந்தால் போதாது! நாம் வாழ வேண்டும் என்று எண்ண வேண்டும்!

உலகம் உண்ண உண்டு, உலகம் உடுத்த உடுத்தி வாழ வேண்டும்!

வாழ்வதற்குப் பொருள் தேவை! அதைப் போல நாம் வாழ்வதிலும் பொருள் தேவை. வாழ்க்கை, பொருள் உடையதாக வேண்டும். உறவுகளுடன் கலந்து வாழப் பழக வேண்டும். அப்பர் பெருமான் அருமையாகப் பாடுவார்:

> **"அப்பன்நீ அம்மைநீ ஐயனும்நீ**
> **அன்புடைய மாமனும் மாமியும்நீ**
> **ஒப்புடைய மாதரும் ஒண்பொருளும்நீ**
> **ஒருகுலமும் சுற்றமும் ஓரூரும்நீ**
> **துய்ப்பனவும் உய்ப்பனவும் தோற்றுவாய்நீ**
> **துணையாய் என்நெஞ்சம் துறப்பிப்பாய்நீ**
> **இப்பொன்நீ இம்மணிநீ இம்முத்தும்நீ**
> **இறைவன்நீ ஏறூர்ந்த செல்வன் நீயே"**

என்று தந்தையாக, தாயாக எல்லா உறவுகளுடனும் கலந்து வாழ்வதுதான் தமிழர் காட்டும் ஆன்மிகத் தடம்!

இறைவன் நம்மைப் பொறுத்தவரை வாழ்த்துப் பொருள் அல்லன்! வாழ்வுப் பொருள்! தாயாக, தந்தையாக, தமக்கையாக, உடன்பிறப்பாக எல்லா உறவுகளுமாகக் கலந்து பழகுகின்றான்!

அவன் தாயில்லாப் பன்றிக் குட்டிக்குத் தாயாக வந்த தயாபரன்!

திருச்சிராப்பள்ளியில் குடி இருக்கும் இறைவன் தாயின் துணை அற்ற நிலையில் ஏழைப் பெண்ணுக்கு

மகப்பேறு வைத்தியம் பார்த்துத் தாயாகிவிட்ட தாயும் ஆனவன்! இயற்கை நியதிப்படி கருப்பையைச் சுமந்து நிற்கும் பெண்தான் தாயாக முடியும்! ஆண் எப்படித் தாயாக முடியும்? இதயத்தில் கருணையைச் சுமந்தால் ஆணும் தாயாக முடியும்!

அதைத்தான் மணிவாசகப் பெருமான் அருமையாய்க் குறிப்பிடுவார்!

**"நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்த"**

பேரன்பு இறைவனின் அன்பு என்று குறிப்பிடுகிறார்.

குழந்தை பசித்தபொழுதுகூடப் பால் புகட்டாத தாய்மார்கள் இருக்கிறார்கள். குழந்தைக்குப் பசிப்பொழுது வந்துவிடுமே என்று வேளை அறிந்து இமைப்பொழுதும் மறவா நினைவு உடையவளாய், குழந்தையின் பசியை இதயத்தில் சுமந்து இருப்பவள் தான் "நினைந்து ஊட்டும் தாய்". நினைந்து ஊட்டும் தாய் சாலப் பரிவுடையவள்!

அந்தத் தாய்மை உணர்வைப் போற்றித்தான் இறைவனையும் இறைவியையும் ஒருசேரப் போற்றுகின்ற நிலை தமிழர் சமய மரபில் ஏற்பட்டது!

**"ஒருவனுக்கும் ஒருத்திக்கும்**
**உருவொன்றால் அவ்**
**வுருவையிஃ தொருத்தன் என்கோ?**
**ஒருத்தி என்கோ?**
**இருவருக்கும் உரித்தாக**
**"ஒருவர்" என்றோர்**
**இயற்சொல்இல தெனின்யான்மற்**
**றென்சொல் கேனே!"**

என்பார் குமரகுருபர அடிகள்.

ஆணும் பெண்ணும் இணைந்த வாழ்வைத் தனித்தனியாய் விளிக்காமல் ஒருசேர அம்மையப்பராய்ப் போற்றும் மரபு, மங்கைபாகனாய் வழிபடும் நெறிமுறை தமிழர் சமய நெறியின் சிறப்பு ஆகும்!

தமிழர் நாகரிகத்தையும், கலாச்சாரத்தையும், பண்பாட்டையும் உயர்த்திப் பிடித்த பெருமை சமய உலகில் தமிழகப் பெண்டிருக்கு அமைந்திருந்தது தனிச்சிறப்பு! வீழ்ந்து கிடந்த தமிழர் பெருமையை, தமிழர் நாகரிகத்தை, பண்பாட்டை உயர்த்திப் பிடித்த மாதரசியை, மங்கையர்க்கு அரசியைச் சேக்கிழார் செந்தமிழில் சிறப்புறக் குறிப்பிடுவார்.

**"மங்கையர்க்குத் தனியரசி எங்கள் தெய்வம்**
**வளவர்திருக் குலக்கொழுந்து வளைக்கை மானி**
**செங்கமலத் திருமடந்தை கன்னி நாடாள்**
**தென்னர்குலப் பழிதீர்த்த தெய்வப் பாவை**
**எங்கள்பிரான் சண்பையர்கோன் அருளி னாலே**
**இருந்தமிழ்நா டுற்றஇடர் நீக்கித் தங்கள்**
**பொங்கொளிவெண் திருநீறு பரப்பி னாரைப்**
**போற்றுவார் கழல்எம்மால் போற்ற லாமே!"**

என்று மங்கையர்க்கரசியாரைப் பாடிப் பரவுவார் சேக்கிழார் பெருமான். 'இருந் தமிழ்நாட்டின் இடர் நீக்கிய மங்கையர் குல விளக்கினைப் போற்றுவோர் அனைவரின் திருவடிகளையும் நான் தலையில் தாங்குவேன்' என்று சேக்கிழார் குறிப்பிடும்பொழுது தமிழர் பெருமையைக் காத்த பெண்ணின் பெருமையை எவ்வளவு போற்றினாலும் தகும்!

தம் உயிரையும், உடலையும் தமிழுக்கே தந்த அம்மையை, காரைக்கால் அம்மையாரை இறைவனே தம் அம்மையாய்ப் போற்றிய பெருமையை எண்ணி எண்ணி வியக்காமல் இருக்க இயலாது.

**சலம்பூவொடு தூபம் மறந்தறியேன்**
**தமிழோடு இசைபாடல் மறந்தறியேன்**

என்று அப்பர் பெருமான் பாடும்போது வழிபாட்டோடு, பூசனையோடு பின்னிப் பிணைந்தது அருமைத் தமிழ்மொழி என்பதை உணர முடிகின்றது. நாளும் பொற்காசு கொடுத்து இறைவன் இன்பத் தமிழை விரும்பிக் கேட்டார் என்று பேசும் பெரிய புராணம்.

இறைவன், நற்றமிழ்ச் சுந்தாரின் சுந்தரத் தமிழால் தோழனாய்த் தூது போனார்! நற்றமிழ்ச் சுந்தரரின் பாடலில் இறைவன் தாம் கொண்ட விருப்பத்தைத் தாமே ஒப்புதல் வாக்குமூலமாய்த் தருகின்றார்.

**"வன்தொண்டன் ஒன்றும் உணர்வால் நமைப்போற்றி**
**உரைசேர் பதிகம் பாடுதலால்**
**நின்று கேட்டு வரத் தாழ்த்தோம்!"**

என்றார்.

சுந்தரரின் பாடல்கள் தம்மை எப்படி ஆட்படுத்தி உள்ளது!

சுந்தரர் தோழமை நிலையில் இடுகின்ற ஆணையை இறைவன் எப்படி ஏற்கின்றார்?

**"நாயன் நீரே நான் உமக்கிங்கு அடியேனாகில் நீர் எனக்குத்**
**தாயின் நல்ல தோழருமாம் தம்பிரா னாரேயாகில்**
**ஆயஅறிவும் இழந்து அழிவேன் அயர்வுநோக்கி அவ்வளவும்**
**போய் இவ்விரவே பரவையுறு புலவி தீர்த்துத் தாரும்"**

என்ற தம் தோழரின் ஆணையைச் சிரமேற்கொண்டு இறைவன் சென்ற காட்சியை எந்த எழுத்துகளால் எழுதிக்

காட்ட முடியும்? சேக்கிழார் மட்டுந்தான் செழுந்தமிழ் ஓவியமாய் அந்தக் காட்சியைத் தீட்டினார்.

"பண்சுமந்த பாடற் பரிசு படைத்தருளும்
பெண் சுமந்த பாகத்தன் பெம்மான் பெருந்துறையான்
விண்சுமந்த கீர்த்தி வியன்மண் டலத்தீசன்
கண்சுமந்த நெற்றிக் கடவுள் கலிமதுரை
மண்சுமந்து கூலி கொண் டக்கோவால் மொத்துண்டு
புண்சுமந்த பொன்மேனி பாடுதுங்காண் அம்மானாய்!"

என்பது திருவாசகம்.

'பண்சுமந்த பாடல்களுக்காக இறைவன் மண் சுமக்கின்றான்! அவன் பொன்மேனி புண் சுமக்கின்றது. அனைவரும் உழைக்க வேண்டும்! உழைக்கத் தவறியோர் யாராய் இருந்தாலும் தண்டிக்கப்படுவர்' என்பதையும் இந்தத் திருநிகழ்வு உணர்த்துகின்றது. யார் சதுரர்? யார் வல்லவர்? என்ற ஒரு கேள்வியை மணிவாசகர் எழுப்புகின்றார்:

**"தந்ததுன் தன்னைக் கொண்டதென் தன்னைச்**
**சங்கரா ஆர்கொலோ சதுரர்?**
**அந்தமொன் றில்லா ஆனந்தம் பெற்றேன்**
**யாதுநீ பெற்றதொன் றென்பால்**
**சிந்தையே கோயில் கொண்ட எம்பெருமான்**
**திருப்பெருந் துறையுறை சிவனே**
**எந்தையே ஈசா உடலிடம் கொண்டாய்**
**யான் இதற் கிலன்ஓர் கைம்மாறே!"**

இறைவனொடு தனக்கு ஏற்பட்ட உறவால், 'யாருக்கு ஆதாயம்' என்று மணிவாசகர் கேள்வி எழுப்புகின்றார். மணிவாசகர் கடைக்கோடி ஆன்மாவான தான் பேரின்பப் பெருவெள்ளத்தில் நீந்தித் திளைப்பதாக மகிழ்கின்றார்!

இறைவனுக்குத் தன்னிடம் இருந்து பெற்றுக் கொள்ள எதுவும் இல்லை என்று மணிவாசகர் எண்ணுகின்றார்! மணிவாசகரிடம் இருந்து பெறப்பட்ட திருவாசகம் ஊழிக்காலத்தில் தன் தனிமைத் துயரத்தைத் தவிர்க்கும் என்று இறைவன் கருதுகின்றார்! ஆன்மாவை ஈடேற்றுவது இறைவனின் கடமை! உலகத்தில் உள்ள ஆன்மாக்களை ஈடேற்ற வேண்டிய பெரும் பொறுப்பு உலகத் தலைவனின் பொறுப்பு!

திருவாசகத்தை ஓதுகின்ற உயிர்கள் பிறவிப் பெருங்கடலில் நீந்திக் கரைஏறும்! திருவாசகம் ஓத ஓத மனத்தின் குற்றங்கள் விலகும்! மலங்கள் ஒடுங்கும்! ஆணவம் அகலும்! பிறவாப் பெருவாழ்வுக்கு ஒளி கிட்டும்! திருவாசகம் ஓதுகின்ற உயிர்கள் பேரின்பப் பெருங்கடலில் நீந்தித் திளைக்கும். மணிவாசகர் தந்த திருவாசகத்தால் தம் கடமை எளிதானதால் தாமே பயன் பெற்றதாய் இறைவன் கருதுகின்றார்!

**ஒருமொழியால் அறிவைப் பெறலாம்!**

**ஒருமொழியால் ஞானத்தைப் பெறலாம்!**

**ஒரு மொழியால் வீடுபேற்றை அடைய இயலும்!**

வீடுபேற்றைக்கூட அடைய இயலும் என்று வழிகாட்டுவது சமயத் தமிழ்!

திருமயிலையில் எலும்புச் சாம்பலை மீண்டும் பெண்ணாக்கிய பெருமை திருஞானசம்பந்தரின் திருமுறைக்கே உண்டு. அப்பூதி அடிகளின் அருமைப் புதல்வர் மூத்த திருநாவுக்கரசை உயிர்ப்பித்த பெருமை திருநாவுக்கரசர் திருமுறைக்கு உண்டு! அவிநாசியில் முதலை உண்ட பாலகனை உயிர்ப்பித்த பெருமை சுந்தரர் பெருமானின் தீந்தமிழுக்கு உண்டு!

**"நிறைமொழிமாந்தர் ஆணையிற் கிளந்த**
**மறைமொழி தானே மந்திரம் என்ப"**

என்ற நிலையில், தொழுத கை துன்பம் துடைக்கும் தோழமையோடு அருளாளர்கள் தேனினும் இனிய திருமுறைகளை அருளினார்கள்!

**ஓர் இல்லத்தில் அழுகை! இன்னோர் இல்லத்தில் மகிழ்ச்சி!**

**ஒருபுறத்தில் துன்பம்! மறுபுறத்தில் இன்பம்!**

**ஒருபுறத்தில் அவலம்! மறுபுறத்தில் ஆனந்தம்!**

இந்த முரண்பாடுகளைக் களைந்து இன்னாத உலகத்தை இனியதாக ஆக்குவதுதான் உண்மையான சமயத் தடம்! எல்லோருக்கும் எல்லாம் கிடைக்கும் இன்பப் பொதுமையைப் பெற "சேரவாரும் செகத்தீரே" என்று அறைகூவி அழைத்ததுதான் சமயத் தமிழ்த் தடம்!

சேக்கிழார் காட்டிய செழுந்தமிழ் வழக்கு என்பது

"வாழ்க்கையை மறுதலிப்பது அல்ல! வாழ்வாங்கு வாழ்ந்து காட்டுவது!

**"வாய்த்தது நந்தமக்கு ஈதோர்பிறவி மதித்திடுமின்"**

என்று மதித்து வாழ்ந்து காட்டிய வாழ்நெறி முறைப்படி வாழ்வாங்கு வாழ்ந்து நம்மைத் தெய்வ நிலைக்கு உயர்த்துவது.

மனிதகுலம் இருளில் சிக்கித் தடுமாறாமல் வாழ்வாங்கு வாழ ஒளிவிளக்காய் வழிகாட்டும் **சமயம் வளர்த்த செந்தமிழைப் போற்றுவோம்!** ❖

# மடங்கள் வளர்த்த தமிழ்

தவத்திரு ஊரன் அடிகளார்



**சைவமும் தமிழும்**

தமிழ் ஒரு மொழி. உலக முதன்மொழி. உலக மொழிகளுக்கெல்லாம் தாய்மொழி. சைவம் ஒரு சமயம். உலக முதற்சமயம். உலக சமயங்களுக்கெல்லாம் தாய்ச் சமயம்.

தமிழ் தொன்மையான மொழி. கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே முன்தோன்றி மூத்தகுடி தமிழ்க்குடி. கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே முன்தோன்றி மூத்த மொழி தமிழ், கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே முன்தோன்றி மூத்த சமயம் சைவம்.

தமிழ், உலக சமயம். ஒரு காலத்தில் சிவ வழிபாடு (சிவலிங்க வழிபாடு) உலக முழுவதும் பரவியிருந்தது. சைவத்தையும் தமிழையும் பிரிக்க இயலாது. சைவத்துக்கு மொழி தமிழ். தமிழின் சமயம் சைவம். "என்னை நன்றாக இறைவன் படைத்தனன், தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே" என்கிறார் திருமூலர். "சைவமும் தமிழும் தழைத்தினிதோங்குக" என்றொரு பழமொழியும் முன்னாளிலேயே ஏற்பட்டுவிட்டது.

தமிழ்மண்ணின் சமயம் சைவம். வைணவம் சைவத்தின் சகோதர சமயம். வேதாந்தம், சைவம் வைணவம் ஆகிய இவ் இரண்டிற்கும் பொது. சைவம் வைணவம் வேதாந்தம் ஆகிய இம்மூன்றையும் சேர்த்தே பொதுவாக இந்துமதம் இந்துசமயம் என வழங்கிவருகிறோம்.

வள்ளுவரும் வள்ளலாரும் தமிழ்மண்ணில் சைவத்தில்தான் தோன்றமுடியும். காந்தியடிகள் இந்திய மண்ணில் இந்துசமயத்தில்தான் தோன்றமுடியும். சைவம் அன்பு சமயம்; அனைத்துச் சமயங்களையும் படி நிலைகளாகக் கொண்டு அதீதமாக விளங்கும் சமயம். சமயாதீதம் என்ற நிலை சைவத்திற்கே உரிய தனிச்சிறப்பு.

தமிழை வளர்க்கத் தமிழ்ச் சங்கங்கள் தோன்றின. சங்ககாலம், சங்க இலக்கியம் என்ற பெயர்கள் ஏற்பட்டு நிலைத்தன. சைவத்தை வளர்க்க மடங்கள் தோன்றின. சைவத்தையும் தமிழையும் வளர்த்தன. சைவமும் தமிழும் தழைத்தினிதோங்குக என்ற வசனம் ஏற்பட்டது.

**சைவ மடங்கள்**

சைவ மடங்கள் பதினெட்டு என்றொரு பட்டியல் வழங்குகிறது. பதினெட்டு மடங்களில் பதினேழு மடங்கள் தமிழ்நாட்டில் உள்ளவை. ஒரே ஒரு மடம் "வரணி ஆதீனம்" இலங்கை யாழ்ப்பாணத்தில் உள்ளது. பாடல் பெற்ற சிவத்தலங்கள் இருநூற்றெழுபத்தைந்தில் இரண்டு தலங்கள் திரிகோணமலை, திருக்கேதீச்சுரம் இலங்கையில் உள்ளன. பட்டியலிடப்பெற்ற சைவ மடங்களில் ஒரு மடம் இலங்கையில் உள்ளது. இலங்கையைச் சிவபூமி என்கிறார் திருமூலர் (திருமந்திரம்). இலங்கைத் தமிழர்களுக்குத் தமிழ்ப்பற்று மிகுதி. இலங்கைச் சைவர்களுக்குச் சைவப்பற்று மிகுதி. சைவமும் தமிழும் தழைத்தினிதோங்குக என்ற மொழி இலங்கையில் சைவக்கோவில் வாயில்களிலும் சைவசபைகளின் வாயில்களிலும் பளிச்சென எழுதப்பெற்று விளங்குவதை இன்றும் காணலாம். இவ்வளவு துன்பக் காலத்திலும் புலம் பெயர்ந்த ஈழத்தமிழர்கள் உலக முழுவதும் தமிழையும் சைவத்தையும் வளர்க்கிறார்கள்.

பாடல் பெற்ற சிவத்தலங்களில் சிறந்த ஒன்றான வேதாரண்யம் கோவில், சம்பந்தரும் அப்பரும் வழிபட்டுத் திருக்கதவம் திறக்கவும் அடைக்கவும் பாடிய கோவில். இலங்கை யாழ்ப்பாணம் வரணி ஆதீனத்தின் நிருவாகத்தார் வேதாரண்யத்தில் கிளை மடத்தில் இருந்துகொண்டு நிருவகிக்கிறார்கள். இவைபோன்ற அரிய செய்திகள் இன்னும் பல உண்டு. இவற்றையெல்லாம் தமிழர்களும் சைவர்களும் அறியவேண்டும். விரித்துரைக்க இஃது இடமன்று. ஆதலின் விரிவை விடுத்து மேற்செல்வோம்.

### மடங்கள் வளர்த்த தமிழ்

மடங்கள் அனைத்துமே தமிழை வளர்த்தன. எனினும் சில பெரிய மடங்களின் பணி பெரிய அளவினது. அவற்றை மட்டும் மிகச் சுருக்கமாகச் சில சிறு குறிப்புகளாகக் காண்போம்.

### திருவாவடுதுறை ஆதீனம்

சைவ மடங்களின் பட்டியலில் முதலாவது திருவாவடுதுறை ஆதீனம். "தில்லை பாதி திருவாசகம் பாதி" என்றொரு பழமொழி. திருவாசகம் ஐம்பத்தோரு பதிகங்களில் இருபத்தைந்து பதிகங்கள் தில்லையைப் பற்றியவை. இதைப்போலவே, "பிள்ளை பாதி திருவாவடுதுறை பாதி" என்று கூறலாம். திருவாவடுதுறை ஆதீன வரலாற்றில் மகாவித்துவான் திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களுக்குப் பெரியதோர் இடமுண்டு. மாதொருபாகன் என்பதுபோலத் திருஆவடுதுறையில் பிள்ளை ஒரு பாகம். பிள்ளையவர்களைத் திருவாவடுதுறை ஆதீனம் வளர்த்தது. ஐயரவர்களைப் பிள்ளையவர்கள் வளர்த்தார். ஆவடுதுறை இன்றேல் பிள்ளையவர்கள் இல்லை. பிள்ளையவர்கள் இன்றேல் ஐயரவர்கள் இல்லை. ஐயரவர்கள் (டாக்டர் உ.வே.சாமிநாதையர்) இன்றேல் இன்று சங்க இலக்கியங்கள் இவ்வளவு பரவியிரா. உ.வே.சா. அவர்களின் சங்க இலக்கியப் பதிப்புகளுக்கெல்லாம் ஆதாரம் திருவாவடுதுறை ஆதீன ஏட்டுச் சுவடிகளும், தருமபுரம், திருப்பனந்தாள், குன்றக்குடி முதலிய ஏனைய சில ஆதீனங்களின் சுவடிகளுமே.

திருக்குறள் மூலபாடம் முதற்பதிப்பை 1812இல் முதன்முதலாக அச்சிட்டு வெளியிட்ட பதிப்பாசிரியர் திருவாவடுதுறை ஆதீனத்தின் சென்னைக் கிளைமடத்தில் விளங்கிய அம்பலவாணத் தம்பிரான் சுவாமிகள் அவர்களே.

### தருமபுர ஆதீனம்

திருவாவடுதுறைக்கு அடுத்து இரண்டாவதாக விளங்குவது தருமபுர ஆதீனம். இதன் நூலகம் மிகப் பெரியது. "தமிழ் வளர்க்கும் தருமபுரம்" என்றே பேராசிரியர் இரா.செல்வக்கணபதி அவர்கள் ஒரு நூலை எழுதினார். தேவார பாடசாலை நிறுவிச் சைவத்தையும், தமிழ்க்கல்லூரி நிறுவித் தமிழையும் வளர்த்து வருவது தருமபுர ஆதீனம். தருமபுரம் சுவாமிநாதன் உலகப் புகழ்பெற்ற தமிழிசைவாணர், திருமுறை இசைவாணர். அவர் தருமபுர ஆதீன ஓதுவார். தருமபுர ஆதீன தேவார பாடசாலையில் பயின்றவர். பயிற்றுவிக்கும் ஆசிரியராக விளங்கியவர்.

### திருப்பனந்தாள் காசித் திருமடம்

இது, தருமபுர ஆதீனத்தின் சீடமடம். இதனை நிறுவிய குமரகுருபரர், புலவர், கவிஞர், மடாதிபதி (ஆதீன நிறுவனர்) எனப் பல்வேறு பெருந்தகுதிகளைப் பெற்றவர். "பிரபந்த வேந்தர்" என்று பெயர் பெற்றவர். பிரபந்தத் திரட்டுகளில் குமரகுருபரர் பிரபந்தத் திரட்டு, சிவப்பிரகாசர் பிரபந்தத் திரட்டு ஆகிய இரண்டுமே மிகுபுகழ் பெற்றவை. இரண்டிலும் குமரகுருபரர் பிரபந்தத் திரட்டே பெருவழக்காயது. மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் ஒன்று போதுமே. "தொடுக்கும் கடவுட் பழம்பாடல் தொடையின் பயனே, நறை பழுத்த துறைத்தீந்தமிழின் ஒழுகு நறுஞ்சுவையே" என்று அவர் மீனாட்சியம்மையைப் பாடியுள்ளது அப்படியே தமிழன்னைக்கும் பொருந்தும்.

குமரகுருபரரும் சிவப்பிரகாசரும் சைவ உலகில் மட்டுமன்றித் தமிழ் இலக்கிய உலகிலும் ஒரு பெரிய இடத்தைப் பெற்றவர்கள், பெரிதும் மதித்துப் போற்றப் பெறுபவர்கள். குமரகுருபரர் பிரபந்தங்களில் பக்திக்கு ஒரு கந்தர்கலிவெண்பா, நீதிக்கு ஒரு நீதிநெறி விளக்கம் என இரண்டும் விஞ்சி நிற்பவை. "சாகும்வரை நான் நாத்திகன்" என்று எழுதி வைத்துக்கொண்டு வாழ்ந்த புரட்சிக்கவிஞர் பாவேந்தர் பாரதிதாசன், பிரபந்தவேந்தர் குமரகுருபரரைப் போற்றி நூலாக்கம் செய்தார். நாடக ஆக்கமும், திரைப்பட ஆக்கமும் செய்தார் (குமரகுருபரர். எதிர்பாராத முத்தம்). "நீரில் எழுத்தாகும் யாக்கை" என்ற குமரகுருபரரின் நீதிநெறி விளக்க வரியைக் காந்தியடிகள் தமிழில் தம் கைப்பட எழுதி மகிழ்ந்தார்.

குமரகுருபரர் நிறுவிய திருப்பனந்தாள் காசித் திருமடத்தின் தமிழ் வளர்ப்புப் பணிகள் பற்பல. அவற்றுள் முக்கியமானவை மூன்று. 1. அண்ணாமலை பல்கலையில் தமிழ்நூற் பதிப்பு அறக்கட்டளை, 2. ஆயிரம் ரூபாய்த் தமிழ்ப் பரிசு, 3. செந்தமிழ்க் கல்லூரி.

அண்ணாமலை பல்கலைக்கழகத்திற்கு 118 ஏக்கர் நிலம் எழுதிவைத்துத் தமிழ் நூல் வெளியீட்டுக்கு ஓர் அறக்கட்டளையைத் திருப்பனந்தாள் காசித் திருமடத்தின் 19ஆம் அதிபர் காசிவாசி சாமிநாத சுவாமிகள் ஏற்படுத்தினார். ஏறத்தாழ 500 நூல்களைப் பட்டியலிட்டு அட்டவணையாக்கி, அவற்றைப் பதிப்பிக்கச் சொல்கிறார். ராயல் அளவில் நூலகப் பதிப்புகளாக பதிப்பிக்க வேண்டும் என்றும், அவற்றை அடக்கவிலையில் நான்கில் ஒரு பங்குக்கு (கால் விலைக்கு) விற்கவேண்டும் என்றும், நாளடைவில் மூலதனம் பெருகியபின் எட்டில் ஒரு பங்குக்கு (அரைக்கால் விலைக்கு) விற்கவேண்டும் என்றும் எழுதிவைத்துள்ளார். அப்படியே இன்றும் நடந்துவருகிறது. இப்படி ஓர் அறக்கட்டளை எங்கும் யாராலும் இதற்குமுன் நிறுவப்பட்டதில்லை. இதற்குப் பின்னும் நிறுவப்பட்டதில்லை.

காசி இந்துப் பல்கலைக்கழகத்திலும் அலகாபாது பல்கலைக்கழகத்திலும் சைவ சித்தாந்தச் சொற்பொழிவு அறக்கட்டளைகளை நிறுவி, ஆங்கிலத்தில் நிகழ்த்தப்பெற்ற அவ்வறக்கட்டளைச் சொற்பொழிவுகள் நூல்களாகவும் வெளிவந்துள்ளன.

"வித்துவான்" பட்டப்படிப்பில் மாநிலத்திலேயே முதல்வராகத் தேர்ச்சி பெறுபவர்களுக்குத் "தமிழ்ப்பரிசு" ரூ.1000 (ஆயிரம்) என்று ஒரு பரிசளிப்புத் திட்டத்தைச் சென்னைப் பல்கலையில் ஏற்படுத்தினார். அந்நாளில் ஆயிரம் ரூபாய் என்பது பெருந்தொகை, இந்நாளில் இலட்ச ரூபாய்க்குச் சமம், அதற்கு மேலும்கூட மதிப்புடையது. ஒரு

தமிழ் மாணவர் வாழ்நாளில் காணற்கு அரியது. அமரர் கி.வா.ஜகந்நாதன், இன்று நம்மிடையே பேரோடும் புகழோடும் சிறந்து விளங்கும் பேராசிரியர் முனைவர் இரா.செல்வக்கணபதி முதலியவர்கள் ரூ.1000 பரிசு பெற்றோர் ஆவர்.

சென்னை, அண்ணாமலை, காசி, அலகாபாது ஆகிய நான்கு பல்கலைக்கழகங்களிலும் திருப்பனந்தாள் காசித் திருமடத்தின் அறிவுசால் அறக்கட்டளைகள் சிறந்து விளங்கித் தமிழும் சைவமும் வளர்த்து வருகின்றன.

### குன்றக்குடி ஆதீனம்

"குன்றக்குடி அடிகளார்" என்றால் எல்லாருக்கும் தெரியும். "குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனம் 45ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ தெய்வசிகாமணி அருணாசலதேசிக பரமாசாரிய சுவாமிகள்" என்றால் சிவநேயச் செல்வர் சிலரே அறிவர். ஒரு காலத்தில் "அடிகளார்" என்றாலே அது குன்றக்குடி அடிகளார்தாம் என்ற நிலை விளங்கிற்று.

சென்ற தலைமுறையில் திருப்பாதிரிப்புலியூர் (கடலூர்) ஞானியார் அடிகளும், இன்றைய நம் தலைமுறையில் குன்றக்குடி அடிகளாரும் புரட்சி மடாதிபதிகள், மாதிரி (மாடல்) மடாதிபதிகள், ஞானியாரடிகளின் பல்லக்கும் அடிகளாரின் உந்தூர்தியும் நாட்டில் செல்லாத இடமில்லை. தனிச் சொற்பொழிவு, தொடர் சொற்பொழிவுகளில் தலைமையுரைகளில் ஞானியார் மன்னர். பட்டிமன்றம், மேடைப் பொழிவுகளில் அடிகளார் மாமன்னர்.

குன்றக்குடி அடிகளார் சமயப்பணிகள் அனைத்தையும் சமுதாய நோக்குடன் செய்தார். சமயத்தலைவராகிய அவர் "சமுதாய முனிவர்" என்றே தமிழ்ச் சமுதாயத்தாற் போற்றப்பெற்றார். முன்னை ஞானியாரும் பின்னை அடிகளாரும் பெரியார் ஈ.வே.ரா. அவர்களால் பாராட்டப்பெற்ற இருபெரும் சான்றோர்களாவர். பெரியாரின் தோள்கள் ஞானியாரின் பல்லக்கைச் சுமந்த தோள்கள். இதைப் பெரியாரே அடிகளாரிடம் சொன்னதுண்டு (ஆதாரம்: அடிகளார் எழுத்து "மண்ணும் மனிதர்களும்"). சம்பந்தர் பல்லக்கை அப்பர் சுமந்தார். ஞானியாரின் பல்லக்கைப் பெரியார் சுமந்தார். பெரியார் "குடியரசு" இதழைத் தொடங்கிவைக்க ஞானியாரடிகளையே அழைத்தார். பெரியார் கறுப்பு. ஞானியாரும் அடிகளாரும் காவி. கறுப்பும் காவியும் சமுதாயப் பணியில் சீர்திருத்தத்தில் ஒன்றுபட்டன. சமயவிடயங்களில் பக்தியில் வேறுபட்டன. வேற்றுமையில் ஒற்றுமை வாழ்க!

குன்றக்குடி அடிகளார் இல்லாவிட்டால் தமிழ் அருச்சனை என்ற பேச்சுக்கே இடமில்லாமற் போயிருக்கும். அடிகளார் தமிழ்மாமுனிவராகத் திகழ்ந்தார். இன்று அவரது வாரிசு பொன்னம்பல அடிகளாரும் அப்படியே சமுதாய முனிவராக, தமிழ் மாமுனிவராக, அதே சமயம், சமயநெறிக் காவலராகத் திகழ்ந்து வருகிறார்.

### மடங்கள் வளர்த்த தமிழிசை

உலக மொழிகளில் தமிழ் ஒன்றுதான் இயல் இசை நாடகம் என முத்தமிழாக வழங்குவது. இடையே உள்ள இசைத்தமிழை, இடைக்காலத்தில் பெரிதும் வளர்த்தவை சைவ மடங்களே.

சங்க நூல்களில் பரிபாடல் போன்றவை இசைத் தமிழ்ப் பாடல்கள். சங்க மருவிய நூல்களில் சிலப்பதிகாரம் முத்தமிழ்க் காப்பியம். சங்க காலம், சங்க மருவிய காலம் இவ்விரண்டன் பின்னர் வருவது சமய எழுச்சிக் காலம், சைவ எழுச்சிக் காலம். இவ்விடைக்காலத்தில் நாளும் இன்னிசையால் தமிழ் வளர்ப்பதில் முதல்வராக விளங்கியவர் திருஞானசம்பந்தர். பக்திநெறியில் "பதிகப் பெருவழி" என்னும் ஒரு புதிய வழியை முதன்முதலில் கண்டவர் திருஞானசம்பந்தர். தமிழின் அருமை பெருமைகளை அதிகம் பேசியவர், மிகுதியாகச் சாதித்தவர். "தமிழ்ஞான சம்பந்தன்" என்றே தன்னை வழங்கிக் கொண்டவர். "அருள்நெறியில் முதல் அரசு இயற்றிய துரை" என்று அவரைப் போற்றுகிறார் எங்கள் வள்ளலார்.

திருஞானசம்பந்தர் மதுரைக்குச் சென்றிருந்தபோது அவரைத் தங்கவைத்த இடம்தான் மதுரை ஆதீனம், திருஞானசம்பந்தர் மடம். அந்த மடம் முன்னரே இருந்தது. அமைச்சர் குலச்சிறையாரும் அரசி மங்கையர்க்கரசியாரும் அதில் சம்பந்தரைத் தங்க வைத்தனர். சம்பந்தர் தங்கியிருந்த மடம் அவர் பெயரால் திருஞானசம்பந்தர் மடம், மதுரை ஆதீனம் என வளர்ந்தது. இன்று 292ஆவது பட்டம் குருமகாசந்நிதானம் அருணகிரிநாத ஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள் ஆதீனகர்த்தராய்ச் சைவத் தமிழ்ச் செங்கோலோச்சி வருகிறார்கள். திருஞானசம்பந்தர் வழியில் மதுரையாதீனம் தமிழ் வளர்த்து வருகிறது.

முன்னைத் தமிழிசையே இசைத்தமிழே பின்னாளில் கருநாடக சங்கீதமாக ஆயிற்று. பண்கள் மங்கின. இராகங்கள் பிரகாசிக்கத் தொடங்கின. இப்போது பழையபடி, பண்கள் ஒளிவீசத் தொடங்கியுள்ளன. பண்ணிசையின் தொடக்ககாலப் பொற்காலம் சங்ககாலம். இரண்டாவது பொற்காலம் சம்பந்தர் காலம். மூன்றாவது பொற்காலம் தற்காலம்.

பண்ணிசை ஓதுவாமூர்த்திகளால் வளர்ந்தது. நூற்றுக்கணக்கான ஓதுவாமூர்த்திகள் ஆதீனங்களின் தேவார பாட சாலையால் உருவாக்கப் பெற்றவர்களே.

இந்நாளில் இசை நிகழ்ச்சிகள், முந்திய தலைமுறையில் சங்கீதக் கச்சேரிகள். பெரிய சங்கீத வித்வான்கள் எல்லாரும் ஆதீனங்களால் ஆதரிக்கப் பெற்றவர்களே, ஆதீன வித்துவான்களே. நாதசுர வித்துவான்களில் திருவாவடுதுறை இராசரத்தினம் பிள்ளையை விஞ்சியவர் யாருமிலர். அவர் திருவாவடுதுறை ஆதீன வித்துவான். புகழ்பெற்ற இசைப்புலவர் சீர்காழி கோவிந்தராசனார் தருமபுர ஆதீன வித்துவான். அவர் மகனார் சீர்காழி சிவசிதம்பரம் இன்று தருமபுர ஆதீன வித்துவான்.

மிகப் பெரிய தமிழறிஞர், ஐயரவர்களின் மாணவர், அண்ணாமலை பல்கலைக்கு முன்னோடியான மீனாட்சி கல்லூரியின் தமிழ்ப் பேராசிரியர் மகாவித்துவான் ச.தண்டபாணி தேசிகர் சில காலம் திருவாவடுதுறை ஆதீனப் புலவராகவும் சில காலம் தருமபுர ஆதீனப் புலவராகவும் விளங்கியவரே.

**மடங்கள் வளர்த்த தமிழ்க் கல்வி**

முன்னாளில் கல்வி குருகுல முறையாக இருந்தது. பின்னாளில் ஐரோப்பியக் கல்விமுறை வந்தவுடன் பள்ளிகள், கல்லூரிகள், பல்கலைக்கழகங்கள் தோன்றின. இந்நிலையில் சைவ ஆதீனங்கள் தமிழ்க் கல்லூரிகளைத் தோற்றுவித்துத் தமிழ்க் கல்வியை வளர்த்தன.

முதன்முதலில் ஒரு தமிழ்க் கல்லூரியை நிறுவிய சைவமடம் மயிலம் பொம்மபுர ஆதீனமாகிய வீரசைவமடமே; "சிவஞானபாலய சுவாமிகள் தமிழ்க் கல்லூரி" 1938இல் மயிலத்தில் நிறுவப் பெற்றது. சென்ற தலைமுறைத் தலைவர் 18ஆம் பட்டம் சுவாமிகள் அதை நிறுவினார். இன்றைய 19ஆம் பட்டம் சுவாமிகள் அதிற் படித்தவரே. பேரூராதீனம் சாந்தலிங்க இராமசாமி அடிகளார் மயிலம் தமிழ்க்கல்லூரி மாணவரே. அன்று அவருடன் படித்தவர் பேராசிரியர் வித்துவான் முனைவர் வை.இரத்தினசபாபதி அவர்களாவார். பேரூரடிகளாருக்குச் சென்னைப் பல்கலைக்கழகம் அண்மையில் 2007இல் முதுமுனைவர் பட்டம் வழங்கிச் சிறப்பித்துள்ளதை நாடறியும். சென்னைப் பல்கலையில் பாடத்திட்டக் குழு உறுப்பினராகவும் அகாடமிக் கவுன்சில் உறுப்பினராகவும் விளங்கியவர் பேரூரடிகளார்.

ஆதீனத் தமிழ்க் கல்லூரிகளில் இரண்டாவதாகத் தோன்றியது திருப்பனந்தாள் காசித் திருமடத்தின் சாமிநாத சுவாமிகள் செந்தமிழ்க்கல்லூரி (1945). மூன்றாவதாகத் தோன்றியது தருமபுர ஆதீனத்தின் தமிழ்க் கல்லூரி (1946). இன்றைய தருமபுர ஆதீனகர்த்தரும், குன்றக்குடி அடிகளாரும், திருப்பனந்தாள் காசித் திருமடத்து அதிபரும் தருமபுரஆதீனத் தமிழ்க் கல்லூரியில் படித்து வித்துவான் பட்டம் பெற்றவர்களே. குன்றக்குடி அடிகளாரும் தருமபுர ஆதீனகர்த்தரும் வகுப்புத் தோழர்கள். ஒன்றாகப் படித்தவர்கள். புகழ்பெற்ற புலவர் கீரன் திருப்பனந்தாள் கல்லூரி மாணவரே. இக்கல்லூரி முதல்வராகப் பணியாற்றிய முதுபெரும்புலவர் முத்து சு.மாணிக்கவாசக முதலியார் பின்னாளில் காஞ்சிபுரம் தொண்டமண்டல ஆதீனத்தின் மடாதிபதியாக ஆனார்.

வீரசைவ மடமாகிய பேரூராதீனத்தில் 1953இல் "சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரி" தோற்றுவிக்கப்பெற்றது. புலவர் புலமைப்பித்தன் பேரூர் ஆதீனக் கல்லூரி மாணவரே. அந்நாளில் தமிழ்க்கல்விக்கு இடங்களாக இருந்தவை மதுரை, கரந்தை தமிழ்ச்சங்கங்களின் தமிழ்க்கல்லூரிகளே. திருவையாறு அரசர் கல்லூரி வடமொழிக் கல்லூரியாகத் தஞ்சை மன்னரால் தொடங்கப்பெற்றுப் பின்னாளில் தமிழ்க் கல்லூரியாயிற்று. இக் கல்லூரிகளில் படித்தோர் சென்னைப் பல்கலைக்கழகத்தின் "வித்துவான்" பட்டத்தைப் பெற்றனர். மதுரைத் தமிழ்ச் சங்கக் கல்லூரி "பண்டித" பட்டத்தை அளித்தது. கரந்தைத் தமிழ்க்கல்லூரி சில காலம் தொய்வுற்ற நிலையில் திருவாவடுதுறை ஆதீனத்தின் ஆதரவில் நடந்து புத்துயிர் பெற்றது.

இந்நிலையில் ஆதீனக் கல்லூரிகள் தோன்றின. ஆதீனக் கல்லூரிகள் தோன்றிய பின்னர்த் தமிழ் வளர்ச்சி பன்மடங்கு மிகுந்தது. ஆதீனக் கல்லூரிகளின் ஆசிரியர் அனைவரும் தமிழ்ப்புலமை சைவப்புலமை இரண்டும் மிக்கவராகத் திகழ்ந்தனர். பல்கலைக்கழகங்களிலும் கல்லூரிகளிலும் தமிழ்ப் புலமை மட்டும்தான். ஆதீனக் கல்லூரிகளில் தமிழ்ப் புலமையொடு சைவப்புலமையும் நிரம்பி வழிந்தது. பழுத்த தமிழ்ப் புலமையும் அழுத்தமான சைவப்புலமையும் பாலித்தவை சைவ ஆதீனக் கல்லூரிகள். ஆயிரம் ஆயிரம் புலவர் பெருமக்களை, ஆதீனக் கல்லூரிகள் உருவாக்கின. ஆதீனக் கல்லூரிகளில் படித்துப் புலவர் பட்டம் பெற்றவர்கள் கல்லூரிகளிலும் பல்கலைக்கழகங்களிலும் பேராசிரியர்களாக ஆயினர்; இன்று அவர்களது மாணவர்களின் மாணவர்கள் பேராசிரியர்களாக விளங்குகின்றனர்.

இன்று நம்மிடையே பேரோடும் புகழோடும் சிறந்து விளங்கும் தமிழ்ப் பேராசிரியர்கள் சைவத் தமிழறிஞர்கள், பண்டித வித்துவான் முனைவர் கு. சுந்தரமூர்த்தி, முனைவர் வை. இரத்தினசபாபதி, முனைவர் இரா.செல்வக்கணபதி, முனைவர் மு.சிவச்சந்திரன் முதலியோர் ஆதீனக் கல்லூரிகளில் மாணவர்களாகப் படித்து, ஆசிரியர்களாகப் பணியாற்றி, ஓய்வு பெற்று, அதன் பின்னரும் தமிழ்ப் பணியும் சைவப் பணியும் செய்து வருபவர்களே.

**தமிழறிஞர்களுக்குப் பட்டம் வழங்கிச் சிறப்பித்தல்**

தகுதிமிக்க அறிஞர்களுக்குப் பட்டம் வழங்கிச் சிறப்பிப்பது ஆதீனங்கள் செய்துவரும் வளர்ச்சிப் பணிகளில் ஒன்று. பொருத்தமானவர்களுக்குப் பொருத்தமான பட்டங்கள் வழங்கிச் சிறப்பிக்கப் பெறுவது ஆதீன விழாக்களில் ஒரு அங்கமாகவே நிகழும். ஒருவர் பல்வேறு பட்டங்களைப் பெற்றிருந்தாலும் ஆதீனங்கள் வழங்கியருளிய பட்டமே பெரிதும் வழங்கி வருகின்றன. எடுத்துக்காட்டு: "சொல்லின் செல்வர்" (ரா. பி. சேதுப்பிள்ளை). "பல்கலைச் செல்வர்" (தெ.பொ.மீ.). இவர்கள் பல பட்டங்களைப் பெற்றிருந்தாலும் இப்பட்டங்கள்தாமே சிறந்து விளங்கி வருகின்றன. இப்பட்டங்களாலேயே இவர்கள் அறியப் பெறுகிறார்கள். இவை தருமபுர ஆதீனம் வழங்கிய பட்டங்கள்.

**மடங்களின் நூல் வெளியீட்டுப் பணிகள்**

திருவாவடுதுறை, தருமபுரம், திருப்பனந்தாள் ஆதீனங்கள் சொந்தமாகவே அச்சகங்களை நிறுவி, பன்னிரு திருமுறை, பதினான்கு சித்தாந்த சாத்திரங்கள் ஆகியவற்றையும் மற்றும் பற்பல சைவத்தமிழ் நூல்களையும், அச்சிட்டுக் குறைந்த விலைக்கு வழங்கி வருகின்றன. திருக்குறள் உரைவளம், திருமந்திரப் பேருரை, திருவாசக உரை முதலிய பெரிய பெரிய நூல்கள் தண்டபாணி தேசிகர் முதலிய பெரும்புலவர்களைக்

கொண்டு வெளியிடப் பெற்றுள்ளன. தமிழ் வளர்ச்சிப் பணியில் ஆதீன வெளியீடுகள் முக்கியப் பங்கு வகிப்பவை. ஆயிரத்துக்கு மேற்பட்ட நூல்கள் வெளிவந்துள்ளன. தமிழ்நூற்பரப்பில் சைவ நூல்களே மிகுதி. அவற்றுள் ஆதீன வெளியீடுகள் சிறப்பிடம் பெறுபவை.

ஞானசம்பந்தம், குமரகுருபரர், மெய்கண்டார், சிவசிவ, தத்துவப் பிரகாசம், சிவசாந்தலிங்கர், கௌமார அமுதம் முதலிய திங்களிதழ்கள் ஆதீனங்களிலிருந்து வெளிவருகின்றன. இவை சைவத்திற்கு மட்டுமன்றித் தமிழுக்கும் பணிசெய்கின்றன. சைவத்தோடு தமிழையும் வளர்த்து வருகின்றன. குன்றக்குடி ஆதீன மடத்திலிருந்து, மக்கள் சிந்தனை, அறிக அறிவியல் என இரண்டு இதழ்கள் வெளியாகின்றன. இவ்விரண்டும் சைவத்தமிழ்ப் பணிகளோடு சமுதாயப் பணியிலும், அறிவியற் பணியிலும் பொதுமக்களிடையே சிறந்து விளங்குகின்றன.

**கௌமார மடங்கள்**

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் என்று ஒருவர். வள்ளலாரின் சமகாலத்தவர். தமிழ்ப் புலமையொடு தமிழ்வீறும் மிக்கவர். தலபுராணங்களே மிகுதியாக விளங்கிய அக்காலத்தில் இவர் "புலவர் புராணம்" பாடினார். அகத்தியர் முதலாக வள்ளலார்வரை தம் சமகாலப் புலவர்கள் ஈறாக (கண்கண்ட புலவர் சருக்கம்) இவர் புலவர் புராணம் என்ற பெயரில் பாடியுள்ளார். முதன்முதலில் தோன்றிய புலவர் வரலாறு இதுவே எனலாம். பிற்காலத்தில் தோன்றிய புலவர் வரலாறுகள் உரைநடை. இது செய்யுள். புலவர் வரலாற்றுக்கு வண்ணச்சரபர் ஒரு முன்னோடி. ஐந்திலக்கணம் பழைமையானது. இவர் ஆறாவது இலக்கணம் பாடினார் "வண்ணத்திலக்கணம்". ஏழாவது இலக்கணம் ஒன்றும் இயற்றினார் – அது "புலமை இலக்கணம்". "தமிழ்மொழிக்கு உயர்மொழி தரணியுள் உளது எனின் வெகுளியற்று இருப்போன் வெறும் புலவோனே" என்பது இவர் கூறும் புலமை இலக்கணம்.

தமிழைவிட வடமொழி உயர்ந்தது என்று யாரோ சொல்லிவிட்டார்கள். கேட்ட இவருக்குக் கடுஞ்சினம் எழுந்தது. "வடமொழியே உயர்ச்சி" என்று 99 சீட்டுகளும், "தமிழே உயர்ச்சி" என்று ஒரே ஒரு சீட்டும் எழுதிப்போட்டுக் குலுக்கி எடுக்கச் செய்தார். தமிழே உயர்ச்சி என்ற அந்த ஒரே ஒரு சீட்டு, குலுக்கலில் எடுக்கப்பட்டது. மகிழ்ந்த வண்ணச்சரபர் 'தமிழலங்காரம்' என்று 100 பாடல்கள் பாடினார்.

வண்ணச்சரபரின் தமிழ்ப்புலமை பெரிதா, தமிழ்வீறு பெரிதா என்று ஒரு பட்டிமன்றமே நடத்தலாம். விழுப்புரத்திற்கு அருகிலுள்ள திருவாமாத்தூரில் கௌமார மடம் என்று ஒரு மடத்தை இவர் நிறுவினார். இவர்தம் சீடர் இராமானந்த சுவாமிகளால் கோவை அருகில் சிரவணம்பட்டியில் நிறுவப்பெற்ற கௌமார மடத்தில் (சிரவை ஆதீனத்தில்) வண்ணச்சரபரின் ஏட்டுச்சுவடிகள் அனைத்தும் பாதுகாக்கப்பெறுகின்றன, பதிப்பிக்கப்பெற்றும் வருகின்றன.

**கோவிலூர் ஆதீனம்**

காரைக்குடிக்கு அருகில் கோவிலூரில் வேதாந்த மடம் ஒன்று உள்ளது. ஏறத்தாழ இருநூறு ஆண்டுக் காலத்துக்கு மேற்பட்ட மடம். இப்போது பன்னிரண்டாவது பட்டம் மடாதிபதியாக விளங்குபவர் அருள்திரு நாச்சியப்ப ஞானதேசிக சுவாமிகள் அவர்கள். ஆதீன நிறுவனரின் நேர் பரம்பரையில் வருபவர்கள். மிக அண்மைக் காலத்தில் சங்கத் தமிழ்ச் செம்மொழி இலக்கியத்திற்கு இச்சுவாமிகள் அரிய பெரிய பணியொன்றை ஆற்றியுள்ளார்கள். பத்துப்பாட்டு எட்டுத்தொகை ஆகிய சங்க இலக்கிய நூல்கள் பதினெட்டையும் பதினொரு நூல்களாக உரையுடன் மக்கள் பதிப்பாக வெளியிட்டுள்ளார்கள். முனைவர் தமிழண்ணலும் முனைவர் சுப. அண்ணாமலையும் பொறுப்பாசிரியர்கள். பத்துப்பாட்டுக்கு முனைவர் ச.வே. சுப்பிரமணியன் உரை. எட்டுத்தொகை நூல்கள் எட்டுக்கும் வெவ்வேறு அறிஞர்கள் உரை.

இவ்வொரு செயலுக்காகவே இவர்களைத் தமிழக அரசும், தமிழ்ச் செம்மொழி மாநாடும் பாராட்டவேண்டும். முனைவர் சுப.அண்ணாமலை அவர்களைக் கொண்டு, திருமந்திரம் மூல பாட ஆய்வுப் பதிப்பு ஒன்றை நாச்சியப்ப சுவாமிகள் முன்பே வெளியிட்டிருக்கிறார்கள்.

**வேதாந்தத் துறவி தயானந்த சரசுவதி சுவாமிகள்**

வேதாந்தத்தையும் குறிப்பாக பகவத் கீதையையும் உலகெங்கும் பரப்பி வருபவர் வேதாந்தத் துறவி தயானந்த சரஸ்வதி சுவாமிகள் அவர்கள்; கோவை மாவட்டம் ஆனைகட்டியில் ஆசிரமம் அமைத்துப் பணியாற்றி வருகிறார்கள். வேதாந்தத் துறவியான சுவாமிகள் அண்மைக்காலமாக, தமிழுக்கும் சிறந்த பணியாற்றி வருகிறார்கள். ஆண்டுதோறும் மூன்றுநாள்கள் திருமுறை விழாவைச் சிறப்பாக நடத்திவருகிறார்கள். மூன்று ஆண்டுகள் தஞ்சைப் பெரியகோயிலில் நடத்தினார்கள். சென்ற ஆண்டு தஞ்சை மாவட்டம் குடவாயில் கோவிலில் நடத்தினார்கள். குடவாயில் பாலசுப்பிரமணியம், அறிஞர் டி.என்.இராமச்சந்திரன் முதலியோர் உரையாற்றினர். ஓதுவாமூர்த்திகளின் திருமுறை அரங்கம் இதன் சிறப்பு. சிறந்த ஓதுவா மூர்த்திகளுக்குச் சுவாமிகள் ஆயிரக்கணக்கில் நன்கொடை வழங்கி உதவுகிறார்கள். சைவத் திருமுறை வளர்ச்சிக்கு வேதாந்தத் துறவி ஒருவர் செய்யும் பெரும் பணி இது.

**நிறைவுரை**

இப்படி இன்னும் எவ்வளவோ சொல்லிக்கொண்டு போகலாம். சைவ ஆதீனங்கள், வீரசைவ ஆதீனங்கள், கௌமார மடங்கள், வேதாந்த மடங்கள், வைணவ மடங்கள் ஆகிய அனைத்துமே ஒவ்வொன்றும் ஒவ்வொரு பல்கலைக்கழகம்போல முன்னாளில் திகழ்ந்தன. சமய வளர்ச்சிப் பணிகளொடு, கல்வி, கலை, இலக்கியம், இசை முதலியவற்றின் வளர்ச்சிப் பணிகளும் பெரிய அளவில் செய்யப் பெற்றன, இன்றும் செய்யப் பெற்று வருகின்றன. விரிக்கின் பெருகும், தொகுப்பின் எஞ்சும் என்பதற்கேற்ப, விரிவின்றி, இங்கு சுருக்கமாகத் தொகுத்துக் கூறலாயிற்று. சமயப்பணிகளைத் தவிர, தமிழ்ப் பணிகளை மட்டுமே இக்கட்டுரையில் சிறுசிறு குறிப்புகளாக வழங்கியுள்ளோம். சைவ ஆதீனங்கள், வீர சைவ ஆதீனங்கள் என இரண்டு பெருநூல்களை நாம் எழுதி வெளியிட்டுள்ளோம்; விரிவை அவற்றுட் காணலாம். ❖

# திருமுறைகள்

## காட்டும் சமுதாய உண்மைகள்

பேராசிரியர் வை. இரத்தின சபாபதி



**இருவகைச் சமுதாயம்**

உலகம் என்பது இருவகைச் சமுதாயங்களைத் தன்னுட் கொண்டது; அவை அகச் சமுதாயம், புறச் சமுதாயம் என்பன.

உலகில் வாழும் தனிமனிதன் தன்னுடைய வாழ்வியல் அமைப்பில், 'சமுதாயம்' என்ற சொல் ஆவணப்படுத்தப் பெறுமானால், அது அவனுக்குப் புறத்தேயுள்ள சமுதாயம்தான்.

தனிமனிதன் தன்னளவில் ஒரு சமுதாயமே. உடல், மனம் முதலிய அகக் கருவிகள், ஆன்மா அல்லது உயிர், இறைநிலை என்ற நான்கன் கூட்டமே தனிமனிதன். அதனால் அவன் ஒரு சமுதாயமே. இறைநிலை என்பதை உளங்கொளாதவர்கள் மனச்சாட்சி எனக் கொள்வர். எவ்வாறாயினும், உயிரானது வரையறைக்கு உள்ளடங்கிய செயல்முறையும், விரிவான விளக்கம் இல்லாததாகவும் காணப்படுதலின், அவையெல்லாம் உடைய ஒன்று தனிமனிதனின் உள்ளேயே நிறைந்து நின்று செயல்படுவதாகக் கொள்ள இடந்தருகிறது.

மேலே குறிப்பிடப்பெற்ற நான்கன் கூட்டமே – சமுதாயமே தனிமனிதன்தான். அவ்வகையில் அவன் ஓர் அகச் சமுதாயவாதி ஆகின்றான்.

புறச் சமுதாயத்தை விரிவாக விளக்க வேண்டிய தேவை இல்லை. இயங்குதிணை, நிலைத்திணைப் பொருள்கள் அனைத்தையும் உள்ளடக்கிய நிலையில் மனிதன் தன்னுடைய உள்ளத்தில் அமைத்துக் கொள்ளும் கருத்தமைவே (CONCEPT) புறநிலைச் சமுதாயம்.

**அகச் சமுதாயவாதியின் வெற்றி**

புற உடல், மனம் முதலிய அகக் கருவிகள், உயிர் அல்லது ஆன்மா, இறைநிலை என்ற நால்வகைக் கூறுகள் அடங்கிய அகநிலைச் சமுதாயக் கூட்டுறவில் செயல் தலைமை தாங்குவது உயிர். அது தன்னுடைய செயன்மைத் திறத்தால் ஏனைய கூறுகளை அடக்கி ஆளலாம்; அல்லது அடங்கித் தானே அவற்றுக்கு அடிமை ஆகலாம்.

செயல்தன்மையை ஏற்ற ஆன்மாவானது யாருக்கு அடிமையாகின்றதோ அதற்கேற்பப் பெயர் பெறுகிறது. உடலுக்கு அடிமை யாகும்போது விலங்கு அல்லது மிருகம் ஆகிறது. மனத்துக்கு அடிமை ஆகும்போது குரங்கு ஆகிறது. தானே தன்னை அடக்கி ஆளும்போது ஐந்தவித்தான் ஆகிறது. ஐந்தடக்கி, மனம் அடக்கி வாழும்போது ஏதேனும் ஒரு சமயத்தில் அனைத்தையும் இழந்து ஆன்மா அனைத்துக்கும் அடிமையாகி விடுகிறது.

ஆனால், செயன்மைத் தலைமை ஏற்ற ஆன்மாவானது அல்லது உயிரானது தன்னுடைய செயல் தன்மையை முழுமையாக, தன்னுள் இருக்கும் இறைத் தன்மைக்கு – இறைநிலைக்குத் தாழ்ந்து அடிமையாக்கி விடுமேயானால், இறைநிலையானது தலைமை யேற்றுத் தன்னுடைய செயன்மையைத் தொடங்கிவிடும். இறைநிலையின் தலைமைத் தன்மைச் செயன்மைப் பாட்டில் தன்னை ஒடுக்கிக்கொண்டு, தலைமைச் செயன்மையைத் தன்மூலம் வெளிப்படுத்து மேயானால், அந்த ஆன்மாவானது தலையால் நடக்கும் பேற்றினை அடைகிறது.

இதை நிகழ்த்திக் காட்டியவர் காரைக்கால் அம்மையார். திருமுறை ஆசிரியர்கள் அனைவரும் தலையால் நடந்தவர்களே. இது அகத்தவச் சமுதாய வெற்றி.

இத்தகு வெற்றிக்காக ஒருவன் பெருமுயற்சி செய்ய வேண்டுவதில்லை. இது ஒரு குடும்பத் தலைவனுக்கு அக் குடும்ப உறுப்பினர்கள் அடங்கி நடப்பது போலத்தான். அகச் சமுதாயத்தில் உடலும் மனமும் அறிவற்றவை. இறைவனும் ஆன்மாவும் அறிவுடைப் பொருள்கள். ஆன்மாவானது தன்னுடைய குணங்களில், ஆற்றல்களில் நிறைவு பெறவில்லை. இறைநிலை அவ்வகைகளில் நிறைவு பெற்றதாகிறது; அவ்வளவே.

**அகத்தவ சமுதாய வெற்றிக்கு வழி**

ஆன்மாவானது அல்லது உயிரானது தனக்குக் கருவிகளாக அமைந்த உடலையும், மனம் முதலிய அறிகருவிகளையும் தனித்தனியே இறையாண்மைக்கு அடிமைப்படுத்த வேண்டும். அவற்றையெல்லாம் தனக்குக் கருவிகள் என நினைத்தல் கூடாது. பின்னர், ஆன்மாவானது தன்னை முழுமையாக இறையாண் மைக்கு அடிமையாக்குதல் வேண்டும். அப்போது இறை அல்லது இறையாண்மையானது ஆன்மா, மனம், உடல் ஆகிய அனைத்தையும் தன்மயமாக்கி விடும். ஆன்மாவின் மூலம், ஆன்ம மனத்தின் மூலம், ஆன்ம உடலின் மூலம் இறையாண்மையே வெளிப்படும். தனிமனிதன் வழியாக இறையாண்மைச் செயல்கள் வெளிப்படும். அப்படி நின்று இறையாண்மைச் செயல்களைத் தன் மூலம் வெளிப்படுத்தியவர்களே திருமுறை ஆசிரியர்கள்; அவர்கள் மூலம் வெளிப்பட்ட இறைவன் மொழிகளே திருமுறைகள்.

அகச் சமுதாய வெற்றியில் திளைத்தவர்களையே திருவள்ளுவர் 'நீத்தார்' என்றார். அவர்கள் இல்லறத்தாரும் அல்லர் துறவறத்தாரும் அல்லர். இருமையையும் நீத்த அருளாளர்கள். இவர்கள் நிலையைத் திருஞானசம்பந்தர், தாம் அருளிய 'திரு எழுகூற்று இருக்கை' என்னும் பதிகத்தில்,

> **"இருமையில் ஒருமையும்**
> **ஒருமையின் பெருமையும்"**

என்று எடுத்துக் கூறிச் சிறப்பித்தார்.

**அகநிலைச் சமுதாய வெற்றியின் பயன்**

அகநிலைச் சமுதாய வெற்றியின் பயன் இரண்டு.

ஒன்று: இறைவனை நேர்நிறுத்திக் காணுதலும், காட்டுதலும்.

இரண்டு: புறநிலைச் சமுதாயச் சீர்கேட்டினை உணர்தலும், சமன்மைப்படுத்துதலும்.

அகநிலைச் சமுதாய வெற்றிபெற்ற திருமுறை ஆசிரியர்கள் இறைவனை நேர்நிறுத்திக் கண்டார்கள்; காட்டினார்கள்.

திருஞானசம்பந்தர் தாம் கண்டார்; தம் தந்தைக்குக் காட்டினார்.

காரைக்கால் அம்மையார் "காண்பார்க்குக் காணலாம் தன்மையனே" என்று தம் அற்புதத் திருவந்தாதியில் கூறினார்.

**"கண்ணால் யானும் கண்டேன் காண்க"** என்றும்;
**"சிவனென யானும் தேறினன் காண்க"**

என்றும், தேமதுரத் திருவாசகத்துள் மணிவாசகர் அருளியுள்ளார்.

இறைநிலையைத் தம் உடம்பினுள் ஆறு இடங்களில் ஒளிப் பொருளாகக் கண்டு, ஞான விளக்கம் கண்டு, ஆறையும் கடந்த ஏழாம் இடத்தில் இறைநிலையை இன்பமயமாகக் கண்டு அதன்மேல் இருந்தும், கிடந்தும், அதனுள் அமிழ்ந்தும் துய்த்த அநுபவத்தைத் தமிழாக்கி, புறச் சமுதாயம் செழிப்புறுமாறு தந்தவர்கள் திருமுறை வாணர்கள்.

**அகநிலைச் சமுதாய வெற்றியாளர்கள்**

தம் உடலில் அமைந்த ஏழு நிலைகளிலும் சோதியாகவும், ஞானமாகவும் இறுதியில் இன்பமாகவும் கண்டும் துய்த்தும் பெற்ற அனுபவத்தைப் புறச் சமுதாயம் செம்மையும் சீர்மையும் வண்மையும் வாய்மையும் வான்மையும் வன்மையும் பெறுமாறு செயலாலும் மொழியாலும் வெளிப்படுத்தினார்கள். அவையே திருமுறைகள். திருமுறைகளைத் திருநெறிய தமிழ் எனவும் திருநின்ற செம்மைத் திருமொழி எனவும் பெயர்ப் படுத்தினார்கள். திருநெறிய தமிழ் அநுபவத்தைச் செம்மை நலம் என்றார் மாணிக்கவாசகர்.

தமிழ் நெடுங்கணக்கில் மெய் எழுத்துகளில் 'த்' என்பது ஏழாவது எழுத்து. தகரம் என அது சுட்டப் பெறும். 'த்' என்ற ஏழாம் எழுத்தாகிய தகரத்தில் 'இருத்தல்' என்பதைத் 'திரு' எனவும் தகரத்தில் அமிழ்வதைத் 'தமிழ்' எனவும் அநுபவ விளக்கம் அமைத்தார்கள்.

**"என்னையும் இருப்பது ஆக்கினன்"**

என்றார் மாணிக்கவாசகர்.

**"என்னை நன்றாக இறைவன் படைத்தனன்**
**தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே"**

என்றார் திருமூலர். தமிழ் செய்தல் என்றால் மொழி பெயர்த்தல் அன்று. இறை இன்பத்தில் ஆழ்ந்து நின்று பெற்ற இன்பத்தைப் பிறர் துய்க்குமாறு மொழியால் வழங்குதல் என்பது பொருள்.

**புறச் சமுதாயச் சீர்கேடும் செம்மையும்**

பொதுவாக, திருமுறைகளிற் காணும் சமுதாய வளமைகள் என்ற தலைப்பில் சிந்திப்பவர்கள் நாயன்மார்கள். திருமறைக் காட்டில் கோவிற் கதவு திறத்தல், திருவீழிமிழலையில் படிக்காசு பெற்றுப் பசிப்பிணி தீர்த்தல், அரவு தீண்டி இறந்தவனை எழுப்பித்துத் திருமணம் செய்து வைத்தல், அவிநாசியில் முதலை உண்ட பாலகனை அழைப்பித்தல் போன்ற அற்புதச் செயல்களை எடுத்துக் காட்டுவது உண்டு. அவை இங்கே குறிக்கப் பெறவில்லை. சமுதாய உண்மைகள் எனத் தலைப்பு அமைக்கப்பெற்றதால் ஆய்வில் மாற்றம் அமைந்தது.

1. புறநிலைச் சமுதாயம்: நில அடிப்படையில் பலவேறாக அமைந்துள்ளது. திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் உலக ஒருமைச் சமுதாயம் அமைய வேண்டும் என்று கருதி வித்திட்டுள்ளார்கள்.

உலகின் எந்த ஒரு பகுதியில், எந்த ஓர் உடலில் ஓர் உயிர் பிறந்தாலும் அந்த உயிரானது திருவாரூரின் குடியுரிமை பெற்றது என்று கொள்ள வேண்டும்.

**'பாரூர் எல்லாம் ஓரூர் என்னும் ஆரூர்'**

என்பது அப்பரடிகள் திருவாக்கு. அமெரிக்க நாட்டில் ஒரு சிவன் கோவில் இருந்தால், அந்த நாட்டை வளமைப் படுத்துவதற்குரிய சிவகலையானது ஆரூரிலிருந்து காலையில் புறப்பட்டு அங்கே சென்று பகற் பொழுது முழுவதும் தங்கியிருந்து, அக்கோவிலில் வழிபடு பவர்களைச் செழுமைப்படுத்திவிட்டு, இரவில் தமிழகத்துத் தில்லைச் சிதம்பரத்தில் வந்து நிறைவு பெற்றுவிடும் என்பதைத் திருவாரூர்ப் பதிகங்களிலும் திருத்தாண்டகத்திலும் அப்பரடிகள் விளக்குகின்றார். இக்கருத்தை மேலும் விளக்கலாம்.

2. வாழ்வியல் சீர்கேடு: இன்றுள்ள புறநிலைச் சமுதாயத்தில் உள்ள குறை ஒன்றுண்டு. சமுதாய மக்கள் சமன்மை நிலையில் இல்லாமல் இருமை நிலையில் உள்ளனர். இருமைநிலை என்பது கொடுப்பவன், ஏற்பவன்; ஆள்வோன், ஆளப்படுபவன்; முதலாளி, தொழிலாளி; கற்போன், கற்கப்படுபவன் என எல்லா நிலைகளிலும் இருமை உண்டு. இருமை நிலைகள் கெட்டு ஒருமைநிலை உண்டானால்தான் சமுதாயம் சமன்மை பெறும் என்பது திருமுறைச் சமுதாய உண்மை. அதை எப்படிப் பெறுவது ?

'தொண்டு' என்ற வகையில் ஒரே குலம் அமைய வேண்டும். இறைவன் மக்களுக்குத் தொண்டன். மக்கள் ஒருவர் மற்றவருக்குத் தொண்டு செய்யும் தொண்டர். "குலம் கொடுத்துக் கோள் நீக்க வல்லான் தன்னை" என்று பாடிய அப்பரடிகள், 'புற உலகச் சமுதாயம் தொண்டுக் குலம் என்ற ஒருமைக் குலத்தைக் கொண்ட சமுதாயமாக அமைதல் வேண்டும்' என எடுத்துக் காட்டுவதோடு உழைத்தும் காட்டுகிறார்.

3. புனிதர் பேரவை அமைப்பு : அகச் சமுதாய நெறியில் நின்று வெற்றிபெற்று இறை இன்பத்தைத் துய்த்தவர்களே புனிதர்கள். அவர்களைக் கொண்ட ஒரு குழு அமையப் பெறல் வேண்டும். புறநிலைச் சமுதாயத்தில் குற்றம் இழைப்பவர்களை உடனுக்குடன் ஒறுத்து, புறநிலைச் சமுதாயத்தைச் செழுமைப் படுத்துதல் வேண்டும். இறைவனே குற்றம் செய்யினும் 'புறகு' என்று தள்ளக்கூடிய ஆளுமைத்திறம் அக்குழுவுக்கு இருத்தல் வேண்டும்.

சுந்தரரும் திருவாரூர் புற்றிடங் கொண்ட பிரானும் புனிதர் பேரவை முன்பு வந்து நின்று, குற்ற நீக்கம் பெற்ற வரலாறு விரிக்கிற் பெருகும். அப்போது இறைவன் சுந்தரரிடம் "என்னை அடைவது என்பது ஒரு பொது வழக்கு. இவர்களையே அடைந்து பேணித் தொண்டு செய்ய வேண்டும் நீ" என்று இறைவனே எடுத்துக் கூறிய வரலாறு திருமுறைகளில் உள்ளது. விரிவாக இதை ஆராய்ந்து புறச் சமுதாயத்துக்கு அளிக்க வேண்டும்.

**முடிப்புரை**

தனிமனிதன் தன்னுடைய வாழ்வியலமைப்பில் அக, புறச் சமுதாயங்களை நேர்நிறுத்திக் கண்டு வாழ வேண்டியவனாகிறான். அகநிலைச் சமுதாய வெற்றியே முதன்மை வெற்றி. அகநிலைச் சமுதாய வெற்றி பெற்றவன் புனிதன் ஆகிறான். அவனே புறநிலைச் சமுதாயச் சீர் கேட்டை உணரவும் செம்மைப்படுத்தவும் உரியவனாகிறான் என்பவை திருமுறைகள் காட்டும் சமுதாய உண்மைகள் என்று கண்டு புனிதத்தன்மை பெறுவோமாக.

❖

# தமிழ் இலக்கிய இலக்கண வளர்ச்சியில் சமணத்தின் பங்களிப்பு

திரு. சு. ஸ்ரீபால்



### சமணர் தொண்டு

சமணம் இந்தியா முழுமையும் மிகப் பழைமையான காலத்தில் வேதகாலத்திற்கு முன்பே-பரவி இருந்த ஒரு சமயம் என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். அவர்கள் வணங்கும் முதல் தீர்த்தங்கரர் விருஷபநாதர், ஆதிபகவன் உலக நாகரிகத்தைத் தோற்றியவர் என்றும் ஆராய்ச்சிக் கட்டுரைகள் உள்ளன. மகாவீர வர்த்தமானரை இருபத்து நான்காவது தீர்த்தங்கரர் என்றும், அவருக்கு முன்னாலே இருபத்து மூன்று தீர்த்தங்கரர்கள்-வழிகாட்டிகள்-இருந்தனர் என்றும் சமண சமயத்தைச் சார்ந்தவர் இயம்புவர். மகாவீரருக்கு முன்னால் இருபத்து மூன்றாவது தீர்த்தங்கரராக இருந்த பார்சுவ நாதரை இப்போது சரித்திரம் ஏற்றுக் கொள்கிறது. முதல் தீர்த்தங்கரர் ஆதிநாதர் – ரிஷபதேவர், ஆதிபகவன் என்ற பல பெயர்களில் அழைக்கப்படுவார். இவரைப் பற்றிய குறிப்புகள் பல பழைய புராணங்களிலும், வேதங்களிலும், ஆரண்யக நூல்களிலும் இருக்கின்றன. கி.மு. எட்டாம் நூற்றாண்டில் வால்மீகி இராமாயணம் எழுந்ததாகக் கூறுவர். தென்னிந்தியாவில் சமணக் கருத்துகள் பரவி இருந்ததைப் பற்றிக் குறிப்புகள் இந்த நூலிலும் உள்ளன.

கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் தமிழ்நாட்டில் சமணம் பெரும் அளவில் ஏற்கப்பட்டு இருந்தது. அப்போது தமிழ்நாட்டில் படிப்பறிவு 100% இருந்தது. சமணர்கள் அங்கு, இங்கு எனாதபடி ஏறக்குறைய இந்தியா முழுமையும், வாழ்ந்து வருகின்றனர், இவர்கள் திகம்பரர், ஸ்வேதாம்பரர் என்னும் இரு பெரும் பிரிவினர். திக்கையே ஆடையாக அணிபவர் திகம்பரர்; வெள்ளையாடையுடுப்பவர் ஸ்வேதாம்பரர்.

திகம்பர சமணர்கள் சாவகர், சாரணர் என்று பிரிக்கப்படுகின்றனர், இதைச் சிலப்பதிகாரத்தின் மூலமும் அறியலாம். சாவகர்-இல்லறத்தார்; சாரணர்-துறவறத்தார். புலால் உண்ணாமையும், தேன் உண்ணாமையும், இரவில் உண்ணாமையும் சாவகரின் இலக்கணம். மீன் பிடித்தல், வேட்டையாடுதல் தவிர மற்றத் தொழில்களைச் செய்வர். அவா அறுத்தல் சாரணரின் முக்கியக் கொள்கை. அகிம்சை, வாய்மை, கள்ளாமை, மிகுபொருள் விரும்பாமை, பிறன்மனை நோக்காமை ஆகியவை இவர்களுடைய அடிப்படையான நெறிகள்.

"Romain Rolland, a philosopher, would comment thus on Ahimsa"

"The ancient rishis who innovated the concept of Ahimsa in the midst of a climate of Himsa are greater innovators than Newton and greater warriors than Wellington"

பிறப்பினால் உயர்வு, தாழ்வு கருதாத சிறந்த பண்பு இவர்களுடையது. இதை,

> "பறையன் மனனெனினும் காட்சி யுடையான்
> இறைவன் என உணரற் பாற்று"

என்ற அருங்கலச் செப்பினால் அறியலாம். பண்டைக் காலத்தில் சமண சமயம் தமிழ்நாடு முழுவதும் பரவி நிலைபெற்றுச் செல்வாக்குப் பெற்றிருந்தமைக்கு இதுவும் ஒரு காரணம். சமண சமயம் செழித்து வளர மற்றொரு காரணம் அவர்கள் மேற்கொண்டிருந்த தமிழ்மொழிப் பற்று; இதனால் மதமும் வளர்ந்தது. தமிழும் வளர்ந்தது. மேலும், உணவு, கல்வி, மருந்து அடைக்கலம் இவற்றை எந்தப் பலனையும் எதிர் பாராமல் அளித்தமை இவர்கள் வளர்ச்சிக்கு உறுதுணையாயிருந்தது.

இந்தச் சமணம் முதன் முதலில் வடக்கே தோன்றியது என்றும் கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் சந்திரகுப்தர் காலத்தில், பத்திரபாகு முனிவர் மூலம் தமிழகம் வந்து படிப்படியாக வளர்ந்தது என்றும் கூறுவர். இருபத்து நான்கு தீர்த்தங்கரர்கள் இவர்கள் வழிபாட்டிற்கு உரியவர்கள். அதில் பார்சுவ நாதர் நூறு ஆண்டுகள் வாழ்ந்ததாகக் கூறப்படுகிறது. இவர்கள் சிறந்த பெரியோர்களாகவும் கருதப்படுகின்றனர். இந்த இருபத்து நான்கு தீர்த்தங்கரர்கள் பாதங்களும் செஞ்சி மலையில் உள்ளன.

இனி இவர்கள் இலக்கியத் தொண்டினைக் காணலாம். இலக்கியத்தைப் பொறுத்தவரை இவர்கள் எடுத்து எழுதாத பகுதியே இல்லை எனலாம். இலக்கணம் இவர்களால் வளர்ந்தது; நிகண்டுகள் படைத்ததும் இவர்களே; பிரபந்தங்கள் பல படைத்து, புராணங்கள் பல பாடி, காப்பியங்கள் பல இயற்றி, நீதி நூல்களைப் பெருமளவில் படைத்து, வாய்பாடு, வானநூல், சோதிடம் போன்ற பல வகையிலும் சமணர்கள் பணிபுரிந்தனர் என்றால் மிகையாகாது. பள்ளி என்ற சொல்லே இவர்கள் காலத்தில்தான் வழக்கில் வந்தது.

தமிழ்ச்சான்றோர் கூறியுள்ள கருத்துகளையும், மேனாட்டு அறிஞர் கூறியவற்றையும் பார்ப்பதற்கு முன்னால் சமணர் ஆற்றிய தொண்டு, எழுதிய நூல்கள் பற்றி ஒரு பட்டியலைக் கீழே தருகிறேன்.

காப்பியங்கள்: சிலப்பதிகாரம், சீவக சிந்தாமணி, வளையாபதி, பெருங்கதை

சிறு காப்பிங்கள்: சூளாமணி, நீலகேசி, யசோதர காவியம், நாக குமார காவியம், உதயணகுமார காவியம்.

புராணங்கள்: சாந்தி புராணம், மேரு மந்தரபுராணம், ஸ்ரீபுராணம், நாரத சரிதை.

பிரபந்தங்கள்: திருக்கலம்பகம், திருநூற்றந்தாதி; அச்சில் வராத பிரபந்தங்கள் பல உண்டு.

நிகண்டுகள்: சூடாமணி, பிங்கலம், திவாகரம்.

இலக்கணம்: அவிநயம், யாப்பருங்கல விருத்தி, யாப்பருங்கலக் காரிகை, வச்சணந்திமாலை, நேமி நாதம், நன்னூல், நம்பியகப்பொருள்.

கணிதம்: எண்சுவடி, நெல் இலக்க வாய்பாடு, சிறு குழி; பல கிடைக்கவில்லை.

சோதிடம்: சினேந்திர மாலை, சோதிட நீதி, வான நூலும் ஒன்று உள்ளதாகக் கூறப்படுகிறது.

நீதிநூல்கள்: நாலடியார், பழமொழி நானூறு, சிறு பஞ்சமூலம், ஏலாதி, அருங்கலச் செப்பு, அறநெறிச்சாரம்.

அறநெறிக் கதைகள்: கிளி விருத்தம், எலி விருத்தம், நரி விருத்தம்.

உரையாசிரியர்கள்: இளம்பூரணர், நேமிநாதர், அடியார்க்கு நல்லார், மயிலைநாதர், கலிங்கத்துப் பரணி எழுதிய சயங்கொண்டார், தீபங்குடிச் சமண வகுப்பைச் சார்ந்தவர்.

இவற்றைப் பார்க்கும் பொழுது இவர்கள் இலக்கியத் தொண்டினை நன்கு அறிகிறோம் இத்தகு பெருமையுடைய இலக்கியச் செல்வத்தை நாம் பெற்றிருப்பது பெருமையல்ல, போற்றிக் காப்பதுதான் பெருமை. அந்த மரபு இன்றும் தொடர்கிறது. மரபுக் கவிதையில் 23ஆவது தீர்த்தங்கரர் பார்சுவநாதர் பற்றிப் புலவர் தோ. ஜம்புகுமாரன் எழுதிய மரபுக் கவிதைக் காவியத்துக்குத் தமிழ்நாடு அரசு பாராட்டும் பரிசும் அளித்தது.

அகம், புறம் என்று இருந்த தமிழ் இலக்கிய வடிவத்தை அறம், பொருள், இன்பம் என்று வடிவம் மாற்றிய பெருமை சமணர்க்கு உண்டு. பெறுவது பொருள் என்றாலும் உறுவது இன்பம் என்றாலும் அறவழி வரவேண்டும் என்பதைச் சமணர் வலியுறுத்தினர்.

திருமதி N.R. குசேவா (Guseva) என்ற உருசிய நாட்டு ஆராய்ச்சியாளர், கோல்புரூக் (Colebrooke) செருமனிய அறிஞர் ஹென்றி ஜீம்மர், ஜே.சி. பர்லாங், மோகன்லால் மேத்தா ஆகியோர் சமணத்தின் தொன்மையைத் தம் நூல்களில் விளக்கிக் காட்டி உள்ளனர். பல பழைய கருத்துகளைச் சமணம் ஏற்கவில்லை என்பதை இரஷ்ய அறிஞர் குசேவா குறிப்பிடுகிறார். கடவுள் படைப்பு, வேள்வி செய்தல், சாதிப் பாகுபாடு போன்ற கருத்துகளைச் சமணம் எதிர்த்தது என்பதை "JAINISM" என்ற தன்னுடைய நூலில் எடுத்துக்காட்டுகிறார். கொல்லாமைக் கொள்கையை உலகுக்கு ஈந்த சிறப்பு சமணத்தையே சாரும் என்று மேனாட்டு வரலாற்று ஆசிரியர் பலர் செப்புவர். ஆசிரியர் ஒருவர் எழுதுகிறார் : The history of ancient India is a history of thirty centuries of human culture and progress. It divides itself into several distinct periods, each of which, for a length of several centuries, will compare with the entire history of many a modern people. In these thirty centuries of human culture and progress, the jaina contribution is a solid synthesis of many-sided developments in art, architecture, religion, morals and science; but the most important achievement of the Jaina thought is its ideal of Ahimsa."

தென்னிந்தியாவில் அதுவும் குறிப்பாகத் தமிழகத்தில் சமணம் பரவியிருத்தைப் பற்றி ஆராய்ச்சியாளர்கள் பலர் கூறும் கருத்துகளைக் காணுவது நலம் என்று நினைக்கிறேன்.

A note on Bhagavata Purana in Wilson's Vishnu Purana has it: "That work enters much more into detail on the subject of Rishaba's devotion and particular circumstances not found in any other Purana. The most interesting of these are the scenes of Rishaba's wanderings, which are said to be Konka, Venkata, Kutaka and Southern Karnataka or the western part of the peninsula; and the adoption of the Jaina belief by the people of those countries."

பல்கலைச் செல்வர் திரு. தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் அவர்கள் நவில்வார்:

சமண சமயம் இன்று தமிழ்நாட்டில் குறுகி இருந்தாலும் ஒரு காலத்தில் தமிழ் நாடு முழுதும் சீருஞ் சிறப்புமாகப் பரவி இருந்தது என்பதற்குக் கல்வெட்டுகளும், வயலோரத்திலும், மூலை முடுக்கிலும் காட்சியளிக்கும் சமண விக்கிரகங்களும், அமணப்பாக்கம் அருகத்துறை, நமணசமுத்திரம், ஜீனாலயம், பஞ்சபாண்டவமலை, அமண்குடி, சமணர்திடல், சமணமலை, அருகமங்கலம், பஸ்திபுரம் முதலிய இடங்களின் பெயர்களும் சைன மடத்தின் பெயராகிய பள்ளி என முடியும் இடப் பெயர்களும் இன்று சான்று பகர்கின்றன.

பேராசிரியர் அறவாணன் அவர்கள் கூறுவார்:

"கி.மு. 322–185 என்ற கால இடை வெளியில் வடபுலத்தில் ஆட்சிபுரிந்த மோரியர், வடுகரைத் துணையாகக்கொண்டு தமிழ் நாட்டின்மேல் படை எடுத்தனர். இச்செய்தியை அகநானூறு(281)என்ற சங்க இலக்கியம் சுட்டுகிறது.

"முரண்மிகு வடுகர் முன்னுற மோரியர்
தென்திசை மாதிரம் முன்னிய வரவு"

இவ்விலக்கியக் குறிப்பு, பத்திரபாகு முனிவரை ஆசானாகக் கொண்ட சந்திரகுப்த மோரியனுடைய படையெடுப்பைப் பற்றியதாகலாம்.

"முடிவாக, பத்திரபாகு முனிவரின் காலத்தில் சைனம் தென்புலம் வந்த செய்தியும், அவரால் சைனம் தமிழகத்தில் பரவி இருக்கும் என்ற செய்தியும், கல்வெட்டுகளாலும், செவிவழிச் செய்திகளாலும், வடமொழி, கன்னட, தமிழ் இலக்கியச் சான்றுகளாலும் தெரிய வருகின்றன; தெளிவாகின்றன."

தமிழகத்தில் சைனம் கி.மு.மூன்றாம் நூற்றாண்டிற்கு முன்பிருந்தே இருந்து வருகிறது என்பதை வலியுறுத்தும் 79 கல்வெட்டுகள் பல இடங்களில் தமிழ்நாட்டில் கண்டெடுக்கப்பட்டுள்ளன. இவை, மதுரை, திருநெல்வேலி, புதுக்கோட்டை, திருச்சி, வட ஆர்க்காடு, தென் ஆர்க்காடு ஆகிய மாவட்டங்களில் கிடைக்கப் பெற்றுள்ளன. இந்தக் கல்வெட்டுகளின் காலம் கி.மு மூன்றாம் நூற்றாண்டில் இருந்து கி.பி. பதினெட்டாம் நூற்றாண்டு வரை என்று கணக்கிடப்பட்டுள்ளது.

தமிழுக்குச் சமணர் ஆற்றிய தொண்டைப் பற்றிப் பேராசிரியர் அறவாணன் பின்வருமாறு குறிப்பிடுவார்.

"தமிழ்நாட்டைப் பொறுத்தவரை, தமிழின் மீது சைனர்கள் காட்டிய அக்கறை பெரிது, பிற நாட்டு நல்லறிஞர் சாத்திரங்களைத் தமிழில் கொண்டு வந்தார்கள். தமிழிலேயே புதியன படைத்தார்கள். அவர்கள் ஆற்றிய தொண்டு நான்கு வகைப்பட்டது.

1. இலக்கணத் தொண்டு.
2. இலக்கியத் தொண்டு.
3. அற இலக்கியத் தொண்டு.
4. உரைத் தொண்டு.

இலக்கணத் தொண்டு பற்றிப் பல்கலைச் செல்வர் தெ.பொ.மீ. அவர்கள் கூறுவார்கள்:

"சிறந்த இலக்கண நூல்களில் பெரும்பான்மை சமணர்கள் எழுதியவையேயாம். தொல்காப்பியம் சமணநூல் என உறுதி கூற முடியாமற் போனாலும், சமணம் பரவிய காலத்தெழுந்த தமிழ் வழக்கிற்கே இலக்கணம் கூறுகிறதெனலாம். இறையனார் அகப்பொருள், புறப்பொருள் வெண்பாமாலை, வீரசோழியம், இலக்கண விளக்கம், தொன்னூல் விளக்கம், பிரயோக விவேகம் நீங்கிய மற்றைய இலக்கணப் பரப்பெலாம் சமணர் இட்ட பிச்சையே எனலாம். இவையும் சமண இலக்கணங்களின் துணை கொண்டு விளங்குவனவேயாம். பாட்டுகளை எல்லோரும் ஒப்புக்கொள்ளும் வகையில் சீர் பிரிப்பதற்குப் பொது வழி ஒன்று காட்டியவர் யாப்பருங்கலக்காரரே ஆவர். எழுத்து, சொல் ஆராய்ச்சியைச் சிறுவரும் கொண்டு விளையாடும் படியாகச் செய்தவர் நன்னூல் எழுதிய பவணந்தி ஆவார். நிகண்டிற்குக் கடைக்காலிட்டுக் கோட்டை கட்டியவரெல்லாம் சமணர்களே ஆவர். மேனாட்டார் அகராதி தொடங்குமுன் சமணர் முயற்சியே சிறந்து விளங்கியது.

அவிநயம், அவிநயனார் யாப்பு, அவிநயனார் புறனடை, அவிநயனார் களவியல், அவிநயனார் புறத்திணைப்படலம், இந்திரகாளியம், யாப்பருங்கலக் காரிகை, அமுத சாகரம், நேமிநாதம், வெண்பாப் பாட்டியல், நன்னூல், அகப்பொருள் விளக்கம் ஆகிய இலக்கண நூல்கள் சமணர் இயற்றியவை என்பது இப்போது பலரால் ஏற்றுக்கொள்ளப்படுகிறது.

இலக்கியத் தொண்டைப் பற்றித் தெ. பொ. மீ. அவர்கள் உரைப்பார்கள்:

"இலக்கியத்தில் பழைய காப்பியங்கள் மணிமேகலை, குண்டலகேசி நீங்கலாக, வழங்கியவையெல்லாம் சமணக் காப்பியங்களேயாம். காப்பிய வழியினைக் கம்பர் முதலோர்க்குச் செவ்வனே அமைத்துத் தந்தவர்களும் அவர்களேயாம். அறவழி நூல்களைச் செய்தவர்கள் பெரும்பான்மையினும் சமணர். பிறர் எழுதிய அற நூல்களும் சமணர்களிட்ட அறநூல் திட்டத்தைப் பின்பற்றுவனவேயாம். திருவள்ளுவர் சமணர் அல்லர் என்று கொள்வோரும் சமண அடிப்படையாம் அருளறத்தின் மேலேதான் திருவள்ளுவர் எக்காலத்துக்கும் எந்நாட்டினர்க்கும் தக்கதானதோர் அறக்கோவிலை எழுப்பியுள்ளார் என்று ஒப்புக் கொள்ளுதல் வேண்டும்." நாலடியார், பழமொழிநானூறு, சிறுபஞ்சமூலம், ஏலாதி, அறநெறிச்சாரம், அருங்கலச் செப்பு போன்ற அற இலக்கியங்கள் சமணச் சார்புடையவை என்பர். நீலகேசி என்ற சமய தர்க்க நூலும் சமண ஆசிரியரால் எழுதப்பட்டது. பெருங்கதை, யசோதர காவியம், மேரு மந்திர புராணம், கலிங்கத்துப்பரணி போன்ற நூல்களும் சமணப் புலவர்களால் தோற்றுவிக்கப்பட்டவை என்று உரைப்பர். கவுந்தி, அம்மை, கன்னி, பம்மை, ஐயை, குறத்தி போன்ற சொற்கள் சமணப் பெண்துறவிகளைக் குறிக்க வருகின்றன. சமணப் பெண்புலவர்கள் இருந்தார்கள் என்றும் தெரிய வருகிறது.

சிலப்பதிகாரத்திற்கு உரை எழுதிய அடியார்க்கு நல்லாரும், தொல்காப்பியத்திற்கு உரை எழுதிய இளம்பூரணரும் சமணத்தைச் சார்ந்தவர் என்று கூற காரணங்கள் இருக்கின்றன.

சமணர் தீட்டிய ஓவியங்களைப் புதுக்கோட்டைக்கு அருகே சித்தன்னவாசலில் காணலாம். குகைக் கோவில்களும், சில மலைக் கோவில்களும் சமணர் கலை ஆர்வத்தைக் காட்டுவனவாக அமைந்துள்ளன. இத்தகைய சான்றுகள் பல, பல்வேறு காரணங்களால் இடைக்காலத்தில் அழிந்துபட்டிருக்கலாம் என்று அறிஞர் எடுத்துக் காட்டுவர்.

சமணர் எழுதிய நூல்களில் எல்லாம் பல பொதுமையான பண்புகளைக் காணலாம். உறவில் தொடங்கித் துறவில் முடியும் காப்பிய இலக்கியங்களைக் காணலாம். சிலப்பதிகாரமும், சிந்தாமணியும் இதற்குச் சான்று எனலாம். ஊழ்வினை அருவப் பாத்திரமாக ஆனால் வில்லனாக வருகின்ற புதுமையைச் சிலப்பதிகாரத்தில் பார்க்கிறோம். வண்ணகச் சிறப்பைச் சிந்தாமணியில் சுவைக்கிறோம். கொல்லாமை, பொய்யாமை, களவாடாமை, மிகுபொருள் விரும்பாமை, பிறன்மனை நோக்காமை ஆகியவை சமணர் போற்றிய ஐம்பெரும் விரதங்கள். வினைப்பயன், நிலையாமை, உயிர்களை ஓரறிவு உயிர் முதல் ஆறறிவு உயிர் வரை பகுத்தல், உலகம் கடவுளின் படைப்பன்று–நிலம், நீர், தீ, வளி, விசும்போடு ஐந்தும் கலந்த மயக்கம்– ஆகியன பற்றிப் பெரிதாகப் பேசும் நூல்கள் சமணச் சார்புடையவை என்று எண்ண இடம் இருக்கிறது. பொருட்பெண்டிரை வெறுத்து ஒதுக்கி ஆனால், ஊடல் சுவையை இழக்காமல் திணை வகுத்த புரட்சியில் பெரும் பங்கு சமணரைச் சாரும் என்று சொன்னால் அது தவறாகாது. பரத்தையர் தொடர்பால் ஊடல் என்ற நிலையை மாற்றி 'தும்முகிறான் யாரையோ நினைந்து' என்று கற்பனையால் ஊடலைக் காட்டும் பாங்கு போற்றுதற்குரியது.

அணு ஆராய்ச்சி முதல் ஆண்டவன் அருள் வரையில் அருகனை வழிபடும் சமணர்கள் கைபடாத இடமே இல்லை. எனவே, தமிழும் சமணமும் ஒன்றோடொன்று பிரிக்கமுடியாத அளவு பிணைந்துள்ளன. பாலும், சுவையும் போல், பாற்கடலும், பரமனும்போல், மலைமகளும் அவளுக்குத் தன்னுடலில் சரிபாதி தந்த அவள் தலைவனும் போல், கண்ணனும் வெண்ணெயும் போல், தமிழும் அதன் இனிமையும் போல், தமிழொடு பிணைந்துள்ள சமயம் சமணம் என்று கூறுவது பொருந்தும்.

எங்களைச் சார்ந்தது உங்களைச் சார்ந்தது என்ற வாதத்தைத் தவிர்த்து, தமிழ் மொழி சிறக்க, அம்மொழியின் வளம் அவனியெலாம் பரவ நாம் அனைவரும் பாடுபட வேண்டும். இத்தனை நேரம் பேசப்பட்ட கருத்துகள் வரலாற்றுக் கோணத்தில் கூறப்பட்ட கருத்துகளே அன்றி வேறு காரணங்களுக்காகக் கூறப்பட்டவை அல்ல. தமிழ்த் தென்றல் திரு.வி.க. அவர்கள் பாடிய கவிதையை இங்கே நினைவுகூர்தல் பொருந்தும்:

**அந்நெறி எதுவோ செந்தண் சைனம்**
**சைனம் ஒருமத சார்பின தன்று**
**சைனம் எதுவெனச் சாற்றுவன் இங்கே**
**ஐம்புலன் வெல்லும் செம்மை சைனம்**
**ஒழுக்கம் காக்கும் விழுப்பம் சைனம்**
**கொலைகளை வொழிக்கும் நிலைபெறல் சைனம்**
**கள்பொய் காமம் தள்ளல் சைனம்**
**ஊனுண் ணாத மேனிலை சைனம்**
**வெறியா வேசம் முறியிடம் சைனம்**
**சாந்த அமுதம் மாந்தல் சைனம்**
**நல்லெண்ணம் நல்மொழி நற்பணி சைனம்**
**பிறர்க்கென வாழும் திறத்துறை சைனம்**
**தேவை அளவை மேவல் சைனம்**
**அகிம்சா தருமம் அனைத்தும் சைனம்**
**இந்தச் சைனம் எந்த மதமோ?**
**மக்கட் குரிய தக்கப் பொதுமை.**

❖

# பௌத்தமும்

## தமிழரின் வாழ்வியல் கோட்பாடுகளும்

முனைவர் சோ. ந. கந்தசாமி



### 1. முன்னுரை

வாழ்வியல் என்பது வாழ்வின் இலக்கணம் என்ற பொருண்மை உடையது. வாழ்வியலை விளக்குவதற்கு முன்னர் இருத்தல், வாழ்தல் என்ற சொற்களின் பொருளை விளங்கிக் கொள்ளுதல் வேண்டும். ‘அவர் இருக்கிறார்’ என்று கூறின், யாருக்கும் பயனின்றி வறிதே இருந்து வருகிறார் என்று பொருள் கொள்ளுதல் வேண்டும். இவர்களைத்தாம் “உளர் என்னும் மாத்திரையர்” என்று ஐயன் திருவள்ளுவர் அறிந்து கூறினார். ‘அவர் வாழ்கிறார்’ என்று கூறின், தமக்கும் பிறர்க்கும் பயன்தரும் பாங்கில் செயலாற்றி வருகிறார் என்று அறிதல் வேண்டும். இவர்களைத்தாம், ‘வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவர்’ என்று திருவள்ளுவர் சுட்டியுள்ளார்.

### 2. வாழ்வியல்

முழுமையான வாழ்விற்குரிய நெறிகளையும், தகவுகளையும் (Values), அறங்களையும் (Virtues) பண்புகளையும் அனைவரும் பின்பற்றுதற்குரிய கோட்பாடுகளாகச் சான்றோர் வரையறை செய்து வழங்கியுள்ளனர். கோட்பாடு – கொள்ளப்படுதல், கொள்கை என்ற பொருள் பயப்பது. வாழ்வின் இலக்கணமாக மதிக்கப்பெறும் இந்நல்லியல்புகள் மனிதனை, தலையாய மனிதனாக உயர்த்தவல்லன. வாழ்வின் இலக்கணமே வாழ்வியல் எனப்படும்.

### 3. ஆசியப் பேரொளி

வாழ்வியல் கோட்பாடுகளை வரையறை செய்து வழங்கிய சான்றோர்களில் முதல் நிலையில் வைத்து எண்ணப் பெறுபவர் ஆசியப் பேரொளி எனப் போற்றப்பெறும் புத்தர்பிரானும் ஐயன் திருவள்ளுவரும் ஆவர். கி.மு. 6ஆம் நூற்றாண்டில் கபிலவத்துவில் தோன்றிய புத்தர் பிரான் அரசமரபினர். அவர் காலத்துச் சமுதாயச் சீர்கேடுகளையும் மூட நம்பிக்கைகளையும் ஏற்றத் தாழ்வுகளையும் கடுமையாகச் சாடிய புரட்சியாளர். சமுதாயச் சமத்துவத்திற்கு முதன்முதல் குரல் கொடுத்தவர். வேத வேள்விகளையும், உயிர்க் கொலையினையும், சடங்குகளையும், சம்பிரதாயங்களையும் உடன்படாத உரவோர். அருள் உள்ளம் கொண்ட ஆன்றோர். பகுத்தறிவுக்கு முதன்மை தந்தவர். அவர் வழங்கிய மெய்ப்பொருட் சிந்தனைகளும் வாழ்வியல் அறக்கோட்பாடுகளும் திரிபிடகம் என்ற பாலித்தொகை நூலில் பொதிந்து வைக்கப் பெற்றுள்ளன. புத்தர் பிரானின் போதனைகளையே பௌத்தம் என்ற குறியீட்டினால் வழங்கி வருகிறோம். இந்நெறி தமிழகம், இலங்கை, பர்மா, தாய்லாந்து, சீனம், சப்பான், மலேசியா, இந்தோனேசியா முதலிய கீழை நாடுகளில் மட்டுமன்றி, எகிப்து, கிரேக்கம் முதலிய மேலை நாடுகளிலும் மாமன்னர் அசோகரின் முயற்சியாலும் பெருந்தேரர்களின் அரும் பணியாலும் பரவிய சிறப்புக்குரியது.

### 4. ஐயன் திருவள்ளுவர்

கி.மு. 50 – கி.பி. 50 என்ற காலப் பகுதியில் தமிழகத்தில் ஒளி வீசிய சமுதாய ஞானி ஐயன் திருவள்ளுவர். தென்னாட்டுப் புத்தராகத் திகழ்பவர். பன்னூற் பயிற்சியாலும், நுணுகி நோக்கி அறியும் நுண்ணறிவாலும், பலர் வாழ்வியலையும் பார்த்தறிந்த பட்டறிவாலும் தமிழரின் வாழ்வியல் கோட்பாடுகளை வரையறை செய்து வழங்கியுள்ளார். தனி மனிதனின் வாழ்வு, சமுதாய மனிதனின் வாழ்வு, அரசியல் மனிதனின் வாழ்வு என்று மூன்று நிலைகளிலும் மாந்தரின் வாழ்வியல் மேம்பாட்டிற்குரிய விழுமியங்களை (Values) ஏழுசீர்களில் பொதியவைத்து யாவரும் வியக்கும் வகையில் திருக்குறள் என்னும் உலகப் பொதுமறையினை இயற்றியவர். இப்பெருந்தகையார் அரசர்க்கு உற்றுழி உதவும் உள்படுகருமத் தலைவராக விளங்கியவர் என்பர்

நாவலர் ச.சோ. பாரதியார். புத்தரின் நெறி உலகநெறியாகப் பரவியது போலவே, திருவள்ளுவரின் வாழ்வியல் நெறி உலக மொழிகள் பலவற்றின் வழியே ஞாலம் எங்கும் பரவிய மாட்சிக்கு உரியது. இப்பின்புலத்துடன் பௌத்தமும் தமிழரின் வாழ்வியல் கோட்பாடுகளும் குறித்து உருப்பெறும் இக்கட்டுரை பக்க எல்லையைக் கருத்திற் கொண்டு மையக் கோட்பாடுகள் சிலவற்றை மட்டுமே விளக்குதற்கு முற்படுகிறது.

**5.1 குடும்பம் - ஒரு நிறுவனம்**

ஒரு நாட்டின் அடிப்படை அலகாக விளங்குவது குடும்பம் என்னும் நிறுவனம் ஆகும். கணவன், மனைவி, மக்கள் என்பவரால் உருப்பெறுவது குடும்பம். ஆதலின், இந்நிறுவனம் வலிமையும் மாண்பும் உடையதாய் அமையின், நாட்டிற்கும் சமுதாயத்திற்கும் நலம் பயக்கும். சமுதாய அக்கறை கொண்ட புத்தர் பிரானும் திருவள்ளுவரும் குடும்பத்தின் உறுப்பினர்கள் குறித்துக் கூறும் கருத்துகளைக் காண்போம்.

புத்தரின் பொன்மொழிகள் அடங்கிய மங்கல சுத்தம், மகாமங்கல சுத்தம் என்னும் சுத்தபிடகப் பகுதிகள் குறிக்கோள் உடைய கணவன், மனைவி, மக்கள் குறித்து மொழிவனவற்றை முதலில் நோக்குவோம். எஞ்ஞான்றும் மனைவியிடம் இன்சொல் பகர்ந்து இனியனாய் நடத்தல், உண்மையுள்ளவனாக ஒழுகுதல், ஆளும் உரிமையினை முழுமையாக மனைவிக்கு வழங்குதல், அவளுடைய தேவைகளை நிறைவு செய்தல் முதலியவை கணவனின் கடமையாகும். கணவனிடம் எஞ்ஞான்றும் நம்பிக்கைக்கு உரியவளாக நடத்தல், சுற்றத்தாரைப் பேணுதல், குடும்பப் பொருளாதாரத்தை வளர்த்தல், குடும்பக் கௌரவத்தினைக் காத்தல், சமுதாய நன்மதிப்பினைப் பெறுதல் முதலியவை மனைவியின் கடமையாகும். பெற்றோர் தம் பிள்ளைகளுக்கு ஆற்ற வேண்டிய கடமைகளையும் புத்தர் பிரான் புகன்றுள்ளார். மேலான கல்வியை வழங்குதல், நல்வழியில் நடக்கச் செய்தல், நல்ல நங்கையினை மணம் முடித்தல் என்பன பெற்றோர்க் குரிய கடமைகளாகும். தன்னைப் பேணிக் காத்த பெற்றோரைத் தானும் ஓம்புதல், குலம்தரு வான் பொருளைச் சிதையாமல் காத்தல், அவர்தம் வாரிசாக இருத்தற்குரிய தகுதியைப் பெருக்குதல், அவர்கள் மறைந்த பின், அவர்தம் நினைவினை மதித்து வழிபடுதல் என்பன பிள்ளைகள் பெற்றோர்க்குச் செய்ய வேண்டிய கடமைகள் என்றார் புத்தர்.

ஐயன் திருவள்ளுவர் இல்வாழ்க்கை, வாழ்க்கைத் துணைநலம், மக்கட்பேறு என்ற அதிகாரங்களில் தமிழர்க்குரிய குறிக்கோள், குடும்பக் கட்டமைப்பினைச் சிறப்பாகவும் விளக்கமாகவும் பேசியுள்ளார். கணவன் மனைவி ஆகிய தலைமக்கள் அன்பும் அறனும் மேற்கொண்டு வாழ்தலே இல்வாழ்க்கையின் பண்பும் பயனும் ஆகும் என்றார். பழிச்செயலுக்கு அஞ்சுதல், பகுத்துண்டு வாழ்தல் இவர்தம் இயல்பு. மறைந்த முன்னோர், இறை, விருந்தினர், உறவினர் என்னும் இவருடன் தம் குடும்பத்தார் என்ற ஐவரையும் பேணி ஒழுகுதல் தலையாய கடமையாகும். மனைமாட்சி, கற்பென்னும் திண்மை உடையவள் தலைவி. தம் நிலையினைக் காத்துத் தம் கணவனையும் பேணிப் புகழையும் காத்துச் சோர்வின்றி வாழ்பவளே மனைவி. இலட்சியத் தலைவியும் தலைவனும் ஈன்று வளர்க்கும் மக்களுக்குப் பண்பும் அறிவுமே சிறந்த தகுதி என்றார் வள்ளுவர். தம்மினும் தம் மக்களை அறிவுமிக்கவராக வளர்த்தலே யாவர்க்கும் இனிமை தரும். பழிபிறங்காப் பண்புடை மக்களைப் பெறுதற்கரிய பெருஞ் செல்வமாக மதித்தனர்.

**5.2 ஒழுக்கம் உடைமை**

சமுதாயம் ஒப்புக்கொண்ட நன்னெறியில் நடத்தலை ஒழுக்கம் என்றனர். சுத்தபிடகத்தில் ஆச்வலாயணன் என்னும் அந்தண இளைஞன் புத்தமதத்திற் சரண் புகுந்த செய்தியும் அவனுக்குப் போதனை புரியும் புத்தர் பிரான் 'பார்ப்பனர்க்கு வேதக் கல்வியைவிட ஒழுக்கமே விழுப்பம் தரும்' என்று விளக்கிய செய்தியும் இடம் பெற்றுள்ளது. வள்ளுவப் பெருந்தகை,

> **மறப்பினும் ஒத்துக் கொளலாகும் பார்ப்பான்**
> **பிறப்பொழுக்கம் குன்றக் கெடும் (குறள் 134)**

என்று பிறப்பினையும் வேதப் படிப்பினையும் (ஒத்து) விட பார்ப்பாற்கு ஒழுக்கமே உயர்வு தரும் என்று அறிவுறுத்தியிருத்தல் நோக்கத்தக்கது. இல்வாழ்வார்க்கு வேண்டப்படும் அடிப்படைத் தகுதிகளில் ஒழுக்க முடைமையினைச் சிறப்பாக வள்ளுவர் எண்ணியுள்ளார். உலகத்தவரின் நடைமுறைக்கு ஒத்துப் போதலே ஒழுக்கம் என்றும், அங்ஙனம் ஒத்துப் போகாதவர் எவ்வளவுதான் கல்வித்தகுதி பெற்றிருப்பினும் அறிவில்லாதார் என்றும் அறிவுறுத்தினார். ஒழுக்கம் உயிரைவிட மேம்பட்டதாகப் பேணப்பெறுதல் வேண்டும் என்பது திருவள்ளுவரின் கோட்பாடு (குறள் 131).

**5.3 ஒப்புரவும் ஈகையும்**

பிறர்க்குப் பயன்படவும் கைம்மாறு கருதாமலும் சமுதாயக் கடமைகளை ஆற்றுதலை ஒப்புரவு என்றும், வறியவர்க்கு வழங்குதலை ஈகை என்றும் இரண்டு அதிகாரங்களில் தமிழரின் வாழ்வியல் கோட்பாடாகத் திருவள்ளுவர் வரையறுத்துக் கூறியுள்ளார். மகாவத்து

(2.36.12), சிட்சா சமுச்சயம் (34.5), போதிசத்துவ அவதான கல்பலதா (1.877.25) முதலிய பௌத்த நூல்களில் முகில், அகில், மருந்துமரம், கற்பகத்தரு, சிந்தாமணி ஆகியவற்றைப்போல மற்றவர்க்கு வாரி வழங்கும் வள்ளலைத் தானபதி என்று சொல்லப்பெற்றுள்ளது. மாரி, ஊருணி, பழுத்தமரம், மருந்து மரம் என்பன போலச் செல்வர்கள் ஒப்புரவாளராக வாழ்தல் வேண்டும் என்று வள்ளுவர் அறம் கூறியுள்ளார் (குறள் 211, 215, 216, 217). சமுதாய நல்லியக்கத்திற்கு இந்த அறச்செயல் பெரிதும் வேண்டப்படுவது.

தேவையாளர்க்கும், ஏழையர்க்கும், பிணியாளர்க்கும், துன்புறுவோர்க்கும், உதவியற்ற வர்க்கும் அளிப்பதுதான் விழுமிய கொடை என்று போதிசத்துவ அவதான கல்பலதா உள்ளிட்ட புத்த நூல்கள் புகல்கின்றன. பட்டம், பரிசு, பாராட்டு என்பனவற்றை எதிர்பார்க்காது ஒருவர் வழங்கும் தன்னலமற்ற கொடையே ஈகை என்று மகாவத்து, பிரஞ்ஞாபாரமிதை, இலலிதவித்தரம் என்னும் பௌத்த நூல்கள் பாரித்துப் பேசுகின்றன. திருவள்ளுவர், 'வறியார்க்கொன்று ஈவதே ஈகை' (221), 'மேல் உலகம் இல்லெனினும் ஈதலே நன்று' (222), 'ஈத்துவக்கும் இன்பம்' (228) என்று ஈகையின் சிறப்பினைப் பாடியுள்ளார். சுத்தபிடகம் அங்குத்தர நிகாயத்தில் பசியைவிடப் பெரிய நோய் இல்லை என்றும், பசி போக்குவதைவிடப் பெரிய அறம் இல்லை என்றும் கூறப்பெற்றது. ஐயன் திருவள்ளுவர்,

> **அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்**
> **பெற்றான் பொருள்வைப் புழி (குறள் 226)**

என்று பசிபோக்கும் பேரறத்தைப் பேசியுள்ளார்.

### 5.4 உண்மை, வாய்மை, மெய்ம்மை

எண்ணங்கள் சுரப்பதற்கு இடமாவது உணர்வு மயமான உள்ளம். சொற்கள் பிறப்பதற்கு இடமாவது வாய். செயல்கள் மெய்யின் இடமாகத் தோன்றும். ஆதலின், ஒருவரின் எண்ணம், சொல், செயல் தூய்மையும் செம்மையும் உடையதாய்த் திகழ்தலின் தேவையை அறம் கூறிய ஆன்றோர் வலியுறுத்தியுள்ளனர். உள்ளம், வாய் மெய் இவற்றின் தூய்மையினை முறையே உண்மை, வாய்மை, மெய்ம்மை என்று வழங்கினர். மனித இயந்திரத்தில் ஒவ்வொரு கருவியும் பழுதுபடாமலும் வழுவுறாமலும் செயற்படுதல் வேண்டும் என்பதைப் புத்தர்பிரான் நன்றாக எண்ணியுள்ளார். சுத்தபிடகம், மச்சிம நிகாயம், சம்மாதிட்டி சுத்தத்தில் மெய்ம்மை, வாய்மை, உண்மை பற்றிப் புத்தர் போதித்துள்ளார்.

கொலை, களவு, காமத்தீ விழைவு என்பன மூன்றும் உடலைப் பற்றியும்; பொய், புறங்கூறுதல், கடுஞ் சொல், பயனில் சொல் என்பன நான்கும் வாயினை இடமாகக் கொண்டும்; வெஃகுதல், வெகுளுதல், பொல்லாக் காட்சி என்பன மூன்றும் உள்ளத்தினின்றும் தோன்றும் தீவினைகள் என்றும், இவற்றைத் தவிர்த்து ஒழுகுதலே நன்னெறி என்றும் கூறியுள்ளார். மேற்கூறிய பத்து வகைத் தீவினைகளை நீக்கி ஒழுகுதலே தனிமனித வாழ்விற்கும் பொது வாழ்விற்கும் சிறப்புத் தரும் என்று ஐயன் திருவள்ளுவரும் கருதியுள்ளார். திருக்குறளில் கொல்லாமை, கள்ளாமை, பிறனில் விழையாமை, வரைவின் மகளிர் முதலிய அதிகாரங்கள் மெய்யின் தூய்மையினைப் பேசுவன. வாய்மை, புறங்கூறாமை, இனியவை கூறல், பயனில சொல்லாமை என்ற நான்கு அதிகாரங்களும் சொல்லின் தூய்மையினை (வாய்மையினை)ப் பாரித்துரைப்பன. வெஃகாமை, வெகுளாமை, மெய்யுணர்தல் என்பன மூன்றும் உள்ளத்தின் தூய்மையினை உணர்த்துவன என்க. வாழ்வியல் கோட்பாடுகள் அனைத்துமே இப்பத்துக் கூறுகளில் செறிவாகவும் சிறப்பாகவும் பொதிந்துள்ளன என்பதை எண்ணிப்பார்த்து இன்புறலாம்.

### 5.5 செய்ந்நன்றி அறிதல்

நன்றியுணர்ச்சியைப் பிடகத்தின் பல பகுதிகள் வலியுறுத்துகின்றன. சாவகர் (இல்லறத்தில்) இல்லத்தில் ஐயம் ஏற்ற தேரர்கள் நன்றி நவிலுதலை ஒரு விதியாகக் கொள்ளுதல் வேண்டும் என்று விநயபிடகம் விளம்புகிறது (2.212). அறக்கொடைகள் வழங்குங்கால் புலப்படுத்தும் நன்றியினை அனுமோதனம் என்று இப்பிடகம் பேசுகிறது. இச்சொல்லிற்குப் பிறர்புரியும் அறச்செயல் கண்டு கனிவுமிக்க இன்ப அன்பினைப் புலப்படுத்துதல் என்று பொருள் கூறுவர். சுத்தபிடகத்தின் ஒரு பகுதியாகிய சிங்கலோவாத சுத்தந்தம் பெற்றோர், பிள்ளைகள், கணவன், மனைவி, நண்பர், பணிமக்கள் முதலாகப் பலநிலை மாந்தரும் ஒருவருக்கொருவர் புரியும் உதவிக்கு நன்றியுடையவராக விளங்குதல் வேண்டும் என்று வற்புறுத்திக் கூறுகிறது. திருவள்ளுவர் செய்ந்நன்றி அறிதல் என்றே ஓர் அதிகாரம் வகுத்துள்ளார். இதனுள்,

> **எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்; உய்வில்லை**
> **செய்ந்நன்றி கொன்ற மகற்கு. (குறள் 110)**

என்று ஐயன் திருவள்ளுவர் அறிவுறுத்துதல் நோக்கத் தக்கது.

### 5.6 பொறையுடைமை

வாழ்க்கைப் போராட்டத்தில் எதிர்ப்படும்

இடையூறுகளையும் துன்பங்களையும் பொறுத்தாற்றிக் கொள்ளும் மனவலிமை ஒருவர்க்குத் தேவை என்பதைப் புத்தர் வலியுறுத்தியுள்ளார். சுத்தபிடகத்தின் ஒரு பகுதியாகிய தம்மபதத்தில் (184, 185) பொறுமைதான் மேலான தவம் என்றும், பிறரைத் துன்புறுத்தலும் இகழ்தலும் கூடாது என்றும் புத்தர் போதித்துள்ளார். பிறர் இழைத்த கொடுமைகளையும் அவமதிப்பினையும் கூட மன்னித்து மறந்துவிடுதலே பொறை என்று போதிசத்துவ பூமி (796) என்ற நூல் புகட்டுகிறது. திருவள்ளுவர் பொறையுடைமை எனத்தனி அதிகாரம் பாடியுள்ளார். நல்வாழ்வு மேற்கொள்ளுபவனுக்கு இதனை ஒரு தகுதிப்பாடாகக் கருதியுள்ளார். வரம்பின்றிப் பிறர் புரியும் தீவினையினைப் பொறுத்துக் கொள்ளுவதும், அவற்றை அறவே மறந்துவிடுதலும் சிறப்பளிக்கும் என்றார் (152). தம்மபதத்தில் (95) நிலம் போல் ஒருவர் பொறுமையினைப் பெற்றிருத்தல் வேண்டும் எனக் கூறப்பட்டது.

திருவள்ளுவர்,

> "அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
> இகழ்வார்ப் பொறுத்தல் தலை" (குறள் 151)

என்று அறம் கூறுதல் எண்ணத்தக்கது. தன்னைத் தோண்டுவோரைக் கீழே விழாமல் தாங்கிக் காக்கும் நிலத்தைப் போல, தம்மை இகழ்வாரின் தகாச் சொற்களைப் பொறுத்துக் கொள்ளுவதுடன் அவர்கட்கு ஆதரவளித்தலும் தலையாய அறம் என்றார். இத்தகைய பொறுமை பிழைபுரிவோரைத் திருத்தி நல்வழிப்படுத்தும் என்று சான்றோர் எதிர்பார்த்தனர்.

### 5.7 கல்வியின் சிறப்பு

சுத்தபிடகத்தில் தீகநிகாயம் லோகிச்ச சுத்தத்தில், மூவகை நல்லாசிரியர்களின் இயல்புகளும், கல்வி புகட்டும் முறைகளும் சொல்லப் பெற்றுள்ளன. பல்வகைக் கலைகள், கைத் தொழில்கள், வானநூல், கணிதம், அரசியல், மருந்தியல், அறுவையியல், கட்டடக் கலை – இன்னோரன்ன பல்வேறு கல்வித் துறைகள் கூறப்பெற்றன. திருவள்ளுவர் கல்வி, கல்லாமை, கேள்வி முதலிய அதிகாரங்களில் 'அனைவர்க்கும் கல்வி' என்ற கோட்பாட்டினை உடன்பாடு, எதிர்மறை ஆகிய இரு முறைகளினாலும் தெளிவுறுத்தியுள்ளார். கல்வி அதிகாரத்தில்,

> "யாதானும் நாடாமால் ஊராமால்; என்ஒருவன்
> சாந்துணையும் கல்லாத வாறு" (குறள் 397)

> "கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
> மாடல்ல மற்றை யவை" (குறள் 400)

எனவரும் குறள் வெண்பாக்கள் எண்ணத்தகுவன.

### 5.8 நல்ல நட்பு

நல்ல நண்பருடன் பழகுதலையே சிறந்த வாழ்வியல் கோட்பாடாக அறவோர் மதித்துள்ளனர். தம்மபதத்தில் (76, 77) குற்றங்களை எடுத்துக்காட்டி இடித்துக் கூறும் ஒருவரைச் செல்வப் புதையலின் இருப்பிடத்தைச் சுட்டிக் காட்டும் சிறந்த நண்பர் எனக் கருதி நட்புக் கொள்ளுதல் வேண்டும்; தீமைகளைக் கண்டித்து அறிவுரை பகர்பவர் நல்ல நண்பர்கள் என்று இயம்பப் பெற்றது. திருக்குறளில் நட்பு, நட்பாராய்தல், பழைமை, தீ நட்பு, கூடா நட்பு முதலிய அதிகாரங்களில் பிடகங்களில் கூறப்பெற்ற செய்திகளைவிடக் கூடுதலான சிந்தனைகள் கூறப் பெற்றுள்ளன என்பது குறிப்பிடத் தக்கது.

திருவள்ளுவர்,

> "நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்
> மேற்சென் றிடித்தற் பொருட்டு" (குறள் 784)

> "உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
> இடுக்கண் களைவதாம் நட்பு" (குறள் 788)

என்று இயம்புதல் வாழ்வியல் செம்மைக்கு வழிகாட்டும்.

### 5.9 ஊக்கமுடைமை

மனிதனின் உழைப்பிற்கும் முயற்சிக்கும் முதன்மை தந்தவர் புத்தர்பிரான். போதிசத்துவர்க்குரிய முதல் தகுதி சிரத்தை (முயற்சி, ஊக்கம்) எனப்படும். தம்மபதத்தில் அப்பமாதவக்கத்தில், சோம்பலினால் விளையும் தீமைகள் குறித்தும் ஊக்கத்தாலும் முயற்சியாலும் உண்டாகும் நன்மைகள் குறித்தும் புத்தர் போதித்தார். திருக்குறளில் மடியின்மை, ஆள்வினை யுடைமை, ஊக்கமுடைமை, பொச்சாவாமை என்ற அதிகாரங்களில் மனித உழைப்பின் உயர்வு போற்றப்படுகிறது.

திருவள்ளுவர்,

> "ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா
> ஊக்கம் உடையான் உழை" (குறள் 594)

> "உள்ளுவது எல்லாம் உயர்வுள்ளல் மற்றது
> தள்ளினும் தள்ளாமை நீர்த்து" (குறள் 596)

என்று அறிவுறுத்துவன வாழ்வில் பின்பற்றுதற்குரிய விழுமிய கோட்பாடுகளாகும்.

### 5.10 சமத்துவ உணர்வு

பிறப்பினால் உயர்வு தாழ்வு கற்பித்தது வைதிக மதம். அதனை உடன்படாது பிறப்பினால் யாவரும் சமானரே என்ற சமத்துவ உணர்வினை முதன்முதல் முழக்கிய அருளாளர் புத்தரே என்பது மக்கன்சி, ரிஸ்டேவிட்ஸ், மோனியர் வில்லியம்சு, ஷேர்பட்ஸ்கி, அண்ணல்

அம்பேத்கர், டாக்டர் ச. இராதாகிருட்டினர் உள்ளிட்ட பௌத்தப் பேரறிஞர்களின் துணிபு. சுத்தபிடகத்தில் 'ஒருவனைப் பற்றி உசாவுங்கால் அவன் பிறப்பைப் பற்றிக் கேட்காதே; அவன் நடத்தையைப் பற்றிக் கேட்பாயாக' என்று புத்தர் கூறியுள்ளார்.

மச்சிமநிகாயத்தில் நால்வேறு மரங்களின் சுள்ளிகளை எரிப்பதால் வெளிப்படும் சுடர் ஒரே மாதிரியாக இருத்தல்போல, அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் ஆகிய நால்வகை மக்களும் புரியும் நற்செயல்களினால் சரிநிகர் சமானரே என்று இயம்பியுள்ளார். அங்குத்தர நிகாயத்தில் (4.202), கங்கை, யமுனை, அசிரவிதி, சரயு, மகி என்னும் ஆறுகள் கடலிற் கலந்த பிறகு தம் பழைய பெயர்கள் நீங்கிக் கடல் என்ற ஒரே பெயரினால் அழைக்கப் பெறுதல்போல அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் ஆகிய பல இனத்தவர்களும் புத்தரின் நெறியைப் பின்பற்றுவரேல் பழைய குலம் கோத்திரப் பெயர்கள் நீங்கி எல்லோரும் சமானராகிச் சாக்கியப் புத்திரர்கள் ஆகிவிடுகின்றனர் என்று புத்தர் கூறும் போதனை இடம் பெற்றுள்ளது. புத்தரைச் சரண் புகுந்தவர் வரிசையில் மருத்துவர், தொழிலாளிகள், கொள்ளையர், பொதுப்பெண்டிர், அந்தணர், அரசர், வணிகர் எனப் பல தரத்தினரும் இடம் பெற்றிருத்தல் எண்ணத்தக்கது. திருவள்ளுவப் பெருந்தகை,

**"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்;சிறப்பொவ்வா**
**செய்தொழில் வேற்றுமை யான்" (குறள் 972)**

**"மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர்; கீழிருந்தும்**
**கீழல்லார் கீழல் லவர்" (குறள் 973)**

என்று சமத்துவச் சமுதாயத் தோற்றத்திற்கு வழி காட்டியுள்ளார். 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற கணியன் பூங்குன்றனாரும், 'யாயும் ஞாயும் யாராகியரோ' எனக் காதல் உணர்வால் சாதி பேதம் அகலும் எனப் பாடிய செம்புலப்பெயனீராரும்; 'கீழ்ப்பால் ஒருவன் கற்பின் மேற்பால் ஒருவனும் அவன்கட் படுமே' எனக் கல்வியறிவால் வருணபேதம் அகலும் எனப் பாடிய பாண்டியன் நெடுஞ்செழியனும் 'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்' என்ற திருக்குறள் கருத்திற்கு விளக்கம் கண்டவர்களாகவே தோன்றுகின்றனர். மனித நேயத்தினால் மட்டுமே சமத்துவம் மலரும்.

### 5.11 பகுத்தறிவு

புத்தர் அறிவுக்குச் சிறப்பிடம் தந்தவர். புத்தி – புத்தர் – அறிஞர் எனப் பொருள் கூறுவர். அவர் போதித்த பன்னிரு சார்புகளில் பேதைமை (அவிச்சை) என்னும் தளை முதலாவதாக எண்ணப்பெற்றது. அறிவு என்னும் ஒளியினால்தான் பேதைமை என்னும் இருளைப் போக்க முடியும் என்றார். அழிவினின்றும் ஒருவனைக் காப்பதும் பகைவர்களால் கூட அழிக்க முடியாததும் ஆகிய படைக்கருவியாக அறிவினைத் திருவள்ளுவர் கருதியுள்ளார் (421). தீயநெறிக்கு இழுத்துப் போய்விடாமல் நல்ல வழியில் ஒருவனை நடக்கத் தூண்டுவதுதான் அறிவு (422). அறிவு பெற்றவர் அனைத்தும் பெற்றவர் ஆவர் (430). அறிவினைப் பெறுவதற்குக் காட்சி, கருதல், நூல், உவமை உள்ளிட்ட அளவைகள் உதவுதல் உண்டு. என்றாலும் எதனையும் பகுத்து, ஆராய்ந்து, தேர்ந்து உண்மையினைத் தெளிதற்கு உதவுவதே அறிவு என்னும் ஆற்றல். எந்தப் பொருளையும் எவ்வளவு பெரியவரிடம் கேட்பினும் அதனைப் பலமுறை ஆராய்ந்து சிந்தித்து உண்மையினை அறிந்து கொள்ளுதற்கு ஆற்றுப்படுத்துவதே அறிவின் வேலை. ஞானசார சமுச்சயம் என்ற பௌத்தப் பனுவலில் பின்வரும் புத்த வசனம் காணப்படுகிறது.

"பிட்சுக்களே! நன்றாக உருக்கிப் பார்த்தும், நறுக்கிப் பார்த்தும், கட்டளைக் கல்லில் உரைத்துப் பார்த்தும் பொன்னின் மாற்றினைச் சோதித்து அறியும் பொற்கொல்லரைப்போல, என் சொற்களையும் நன்றாக அலசி ஆராய்ந்து பார்த்த பிறகுதான் நீங்கள் ஏற்றுக் கொள்ளுதல் வேண்டும். என்னிடம் கொண்டுள்ள மரியாதை காரணமாக என் சொற்களை ஏற்கவேண்டா."

எனவே, வழிவழியாக வழங்கி வருதலைக் காரணம் காட்டி அறிவுக்கு ஒவ்வாத மூடநம்பிக்கைகளை ஏற்கவேண்டா என்பதுவே புத்தர் பிரானின் அறிவுரை. ஐயன் திருவள்ளுவர்,

**"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்ப தறிவு" (குறள் 423)**

**"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்ப தறிவு" (குறள் 355)**

என்று கூறும் பகுத்தறிவுக் கோட்பாடு அனைவரும் பின்பற்றுவதற்குரிய வாழ்வியல் கோட்பாடாகப் போற்றுதற்கு உரியது.

### 6 நிறைவுரை

உலக மாந்தரின் வாழ்வியல் மேம்பாட்டிற்கு வழிகாட்டிய பெருமக்கள் எல்லா நாடுகளிலும் எல்லாக் காலங்களிலும் தோன்றியுள்ளனர். ஆயினும் இந்தியத் திருநாட்டின் வட கோடியில் தோன்றிய புத்தர் பிரானும் தென்பகுதியில் தோன்றிய ஐயன் திருவள்ளுவரும் வகுத்துக் கூறியுள்ள வாழ்வியல் கோட்பாடுகள் சிலவற்றை இங்குச் சுருக்க விளக்கமாகக் கண்டோம். இவற்றைப் பயின்று, புரிந்து கொண்டு நடைமுறைப் படுத்தினால் சமுதாயம் மேம்பாடு அடையும் எனத் தெளியலாம்.

❖

# கிறித்தவத்தின் தமிழ்க் கொடை

முனைவர் சூ.இன்னாசி



தமிழும் சமயமும் இரண்டறக் கலந்தவை. ஒன்றோடொன்று என்றும் தொடர்புடையவை. தமிழால் சமயங்களும், சமயங்களால் தமிழும் இணைகோடுகளைப் போன்று அமைந்தவை. தொடர்வண்டி ஓடும் தண்டவாளங்களைப்போல் அமைந்து, ஒன்றால் ஒன்று வளர்ச்சி பெற்றவை. அறிய வந்திருக்கின்ற தமிழ்மொழி வரலாற்றில் தொடக்கத்தில் சமணமும், பின்னர் பௌத்தமும், அதற்குப் பின்னர் சைவ, வைணவ சமயங்களும் தமிழை வளர்த்ததில் பெரும்பங்கு கொண்டுள்ளன. இவையெல்லாம் இந்நாட்டுச் சமயங்கள் ஆகும். இவற்றுக்குப் பின்னர்ப் பிறநாட்டில் தோன்றிய சமயங்கள் தமிழகத்தில் செல்வாக்குப் பெறத் தொடங்கின. அவற்றுள் முன்னது இசுலாமியமும், பின்னது கிறித்தவமும் ஆகும்.

கால அளவில் நோக்கினால், சமண சமயத்தின் பணி ஈராயிரம் ஆண்டுகளுக்குக் குறையாது. பௌத்தத்தின் பணி ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளுக்குக் குறையாது. சைவத்தின் பணி ஆயிரத்தறுநூறு ஆண்டுகளாகவும், வைணவத்தின் பணி ஆயிரத்து முந்நூறு ஆண்டுகளாகவும் கொள்ள இடனுண்டு. இசுலாமியத்தின் பணிக்காலம் எண்ணூறு ஆண்டுகள் எனவும், கிறித்தவத்தின் பணியை நானூறு ஆண்டுகளாகவும் கொள்ளலாம். கிறித்தவம் தூய தோமாவால் ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னாலேயே தமிழகத்தில் தோற்றம் பெற்றுள்ளது என்றாலும், கி. பி. பதினாறாம் நூற்றாண்டுக்குப் பின்னர்தான் எழுத்துச் சான்றுகள் உள்ளன. அவ்வகையில், பிற சமயங்களை நோக்கத் தமிழ்ப்பணியின் கால அளவு மிகக் குறைவாகப் பெற்றிருப்பது கிறித்தவந்தான். கால அளவு குறைவாக இருப்பினும், பிற எச்சமயப் பணிக்கும் குறையாத அளவுக்குத் தமிழுக்குப் பணியாற்றிக் கொடை வழங்கியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

மொழி என்பது மொழிக் கட்டமைப்பு, இலக்கியப் படைப்பு என்னும் இரு தன்மைகளைக் கொண்டது. கட்டமைப்பின்றி மொழி இல்லை. ஆனால் படைப்பின்றி மொழி இருக்கலாம். சொற்கள், அவற்றின் பொருள்கள், அவை தொடரும் முறைகள் என்பன கட்டமைப்பில் அடங்கும். படைப்பாளனுக்குரிய சிந்தனை வளத்திற்கேற்பக் கற்பனையும் கலந்து வெளிப்படுவது படைப்பில் அடங்கும். கற்றறிந்தவர் மட்டுமன்றி, மொழி பேசுவோர் அனைவரும் தம்மை அறியாமலேயே வழக்கால் உணர்ந்திருப்பது கட்டமைப்பு என்றால், கற்றறிந்தவர்கள் மட்டுமே புரிந்து மகிழ்வது படைப்பாகும். பார்த்து மகிழ்வதற்கு அழகாகத் தோன்றும் கட்டடத்தைப் போன்றது படைப்பு என்றால், வெளிப்படாமல் அதனைத் தாங்கியிருக்கும் அடிப்படை போன்றது கட்டமைப்பு எனலாம். ஒரு மரத்தின் இலை, பசுமையாய்ப் பார்க்கக் குளிர்ச்சியாய் நிழலைத் தருகிறது. அதன்கண் உள்ள மலர்கள் கண்களைக் கவர்கின்றன. மணத்தையும் தேனையும் தருகின்றன. எனவே, அவை போற்றத் தகுந்தன. ஆனால் அவற்றுக்கெல்லாம் உயிர் தந்து கொண்டிருக்கும் மண்ணுக்குள் மறைந்திருக்கும் வேர்கள் கண்ணுக்குத் தெரிவதில்லை.

கட்டமைப்பில் ஒரு மொழியின் இலக்கணம், அகராதி, உரைநடை முதலியவை அடங்கும். படைப்பில் காப்பியங்கள், சிற்றிலக்கியங்கள் போன்ற இலக்கிய வகைகள் அடங்கும். கட்டமைப்புப் பயிற்சி இல்லாமல் ஒருவன் மொழியைப் பேச முடியாது. இலக்கியம் போன்ற படைப்புப் பயிற்சி இல்லாமல் ஒருவன் மொழியைப் பேச இயலும். அத்தகைய அடிப்படையான கட்டமைப்புப் பணிகளில் பிற சமயங்களை நோக்கக் கிறித்தவர் ஆற்றியுள்ள பணிகள் மிகுதியாகும். எனவே, கிறித்தவம் தமிழுக்கு வழங்கியுள்ள கொடை கட்டடத்திற்கு அடிப்படை போன்றது. மரத்தைத் தாங்கி நிற்கும் வேர் போன்றது. பிற சமயங்கள் செய்யாத இக்கொடையை முதலில் தமிழுக்கு வழங்கியது கிறித்தவம் என்பது சிந்தனைக்கு உரியது.

மற்றைச் சமயங்கள் வழங்காத சில மொழிக் கொடைகளைத் தமிழுக்கு வழங்கிய பெருமை கிறித்தவத்திற்கு உண்டு. அவற்றை (அ) முதன்மைக் கொடை, (ஆ) பெருமைக் கொடை, (இ) புதுமைக் கொடை, (ஈ) பகுத்தறிவுக் கொடை, (உ) அண்மைக் கொடை, (ஊ) தனியொரு கொடை எனப் பகுத்துக் காணலாம். முன்னரே இக் கட்டுரையாசிரியரின் சில கட்டுரைகளும், நூல்களும் விரிவாகக் காட்டியுள்ள இவற்றைச் சுருக்கித் தொகுத்துப் பின்வருமாறு பட்டியலிடலாம்:

(அ) முதன்மைக் கொடை

(1) தமிழ் வடமொழியினின்று கிளைத்தது என்று கருதிக்கொண்டிருந்த காலத்தில் அவ்வாறன்று. அம்மொழி திராவிட மொழிக் குடும்பத்தைச் சார்ந்தது மட்டுமன்றி அவற்றுள் தலைமை சான்ற மொழி. தனித்து நின்று விளங்கக் கூடிய செம்மொழி என்று உலகத்தார் முன் தம் நூலின்வழி நிலைநிறுத்திய பெருமை கால்டுவெல் என்னும் கிறித்தவரையே சாரும்.

(2) பழங்காலத்திலேயே உரைநடை தமிழில் அமைந்திருந்தாலும், அவ் வுரைநடை கற்றறிந்த தமிழ்ப் புலவர்களால் மட்டுமே புரிந்தகொள்ளத் தக்கதாக இருந்தது.

இறையனார் களவியலுரை, முற்கால இலக்கிய இலக்கண உரையாசிரியர்களின் உரைநடைகளை அதற்குச் சான்றுகளாகக் கொள்ளலாம். தற்பொழுது வழங்கிவரும் உரைநடைப் போக்குக்குக் கால்கோளிட்டவர் கிறித்தவரே. அவர்களுள் நானூறு ஆண்டுகட்கு முற்பட்டவராகிய ஆன்றீக் அடிகளாரை உரைநடையின் தந்தை என்றே ஆய்வுகள் சுட்டுகின்றன.

(3) சொற்களுக்குப் பொருள் கூறும் தொல்காப்பிய உரியியல் நிகண்டுகளுக்கு வழி வகுத்தது. நிகண்டுகள் செய்யுள் அமைப்பின. அதிலிருந்து மாறி, உரைநடை வடிவில் எல்லாச் சொற்களுக்கும் பொருள் தருவது அகராதி யாகும். அதனை, 1732இல், முதன் முதல் தமிழுக்கு வழங்கியவர் கிறித்தவராகிய வீரமாமுனிவர்.

பழங்கால நிகண்டுகள் முகவரியின்றி ஒருவரது வீட்டைத் தேடும் முயற்சியென்றால், அகராதி தக்க முகவரியைக் கையில் வைத்துக்கொண்டு அடையாளம் காண்பதாகும். அகராதிகளுள் பல வகைகளுண்டு. ஒரு மொழி அகராதி, இரு மொழி அகராதி, பன்மொழி அகராதி, பேச்சு மொழி அகராதி எனப் பல வகைப்பட்ட அகராதிகளையும் படைத்துக் கிறித்தவர் வழங்கியுள்ளனர்.

(4) இலக்கண விதிகளை நூற்பா வடிவில் தந்த நிலை மாறி, எளியோரும் எளிதில் புரிந்து கொள்ளுமாறு உரைநடை வடிவில் தந்தவரும் கிறித்தவரே. அது மட்டுமன்று. பேச்சுமொழி வேறு, இலக்கிய மொழி வேறு என வேறுபடுத்திக் காட்டி, ஒவ்வொரு மொழிக்கும் தனித் தனி இலக்கண அமைப்பு உண்டு என எடுத்துக் காட்டித் தனித்தனி இலக்கணங்கள் எழுதித் தமிழுக்குத் தந்துள்ளவர் கிறித்தவரே. வீரமாமுனிவர் எழுதிய 'செந்தமிழ் இலக்கணம்', 'கொடுந்தமிழ் இலக்கணம்' போன்றவை அதற்குச் சான்றுகள் ஆகும்.

(5) பழங்காலக் கூத்து வேறு, பிற்காலத் தெருக்கூத்துகள் வேறு. தற்காலத்தில் நடிக்கப்படும் மேடை நாடகங்கள் வேறு. இத்தகைய மேடை நாடகங்களுக்கு முன்னோடி கிறித்தவர்கள் என்பதனை நாடக ஆய்வாளர்கள் குறிப்பிட்டுள்ளனர். நானூறு ஆண்டுகளுக்கு முன்னரே கடற்கரைப் பகுதிகளில், இயேசுவின் பாடுகள், உயிர்ப்பு ஆகியவற்றை நடத்தியவர்கள் கிறித்தவத் திருமறைத் தொண்டர்கள் ஆவர். அவற்றின் வளர்ச்சியே தற்கால மேடை நாடகங்கள் எனலாம். மேலும் நாடகம் பற்றிய இலக்கணக் குறிப்பினையும் கூத்து, நாடகம், வாசகப்பா ஆகியவற்றுக்கான விளக்கங்களையும் முதலில் தருவது வீரமாமுனிவர் எழுதிய 'செந்தமிழ் இலக்கணம்' என்னும் நூலேயாகும்.

(6) தற்காலத்தில் வழங்கிவரும் உயிர்மெய் எகர ஏகாரங்கள், ஒகர ஓகாரங்கள் ஆகியவற்றின் வரிவடிவங் களை ஏற்படுத்திச் 'செடி–சேடி', 'கொடி–கோடி' போன்ற சொற்கள் ஒன்றுபோல் எழுதப்பட்டு வந்த நிலைமையை மாற்றப் புதிய வரி வடிவங்களை உண்டாக்கி மாற்றங்களைச் செய்தவர் வீரமாமுனிவர் ஆவார்.

(7) தமிழ்விடு தூது, முக்கூடற் பள்ளு போன்றவற்றின் ஆசிரியர்களின் பெயர்கள் தெரிய வராமல் போனதற்குக் காரணம், நூல் எழுதிய ஆசிரியர் பெயர், நூல் வெளிவந்த ஆண்டு போன்ற செய்திகள் கொண்ட தலைப்புப் பக்கம் நூல்களில் இல்லாமற் போனதுதான். இக்குறையை நீக்கித் தலைப்புப் பக்கம் அமைக்கும் முறையைத் தமிழுக்கு அறிமுகப்படுத்திய பணி கிறித்தவரையே சாரும்.

(8) தற்கால ஆய்வாளர்கள் பயன்படுத்தும் மேற்கோள் காட்டும் முறை, பொருட்குறிப்பகராதி போன்றவற்றைத் தமிழில் முதலில் கையாண்டு, ஆய்வு நெறிகட்கு வழியமைத்துக் கொடுத்தவர் கிறித்தவர் என்பதில் ஐயமில்லை. மேலும், பழங்காலச் செய்யுள் இலக்கியங்களில் சீர் பிரிப்பு இருந்ததே தவிர, உரைநடையில் மேற்கொள்ளும் பத்தி பிரிப்பு, புள்ளி, காற்புள்ளி, அரைப்புள்ளி, மேற்கோள் குறியீடு போன்றவை பயன்படுத்தப் பெறவில்லை. அவற்றை யெல்லாம் பயன்படுத்தி, தொடர்களில் இயல்பாக எழும் மயக்கங்களையும் ஐயங்களையும் போக்கிப் பொருளைத் தெளிவாகத் தெரிந்துகொள்ள உதவிய பணி குறிப்பிடத் தக்கது.

(9) மொழிபெயர்ப்புப் பணியில் கிறித்தவரது கொடை அளப்பரியது.

> **"வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து**
> **வான்புகழ் கொண்ட தமிழ்நாடு"**

என்று பாரதி பாடியதற்கு 250 ஆண்டுகளுக்கு முன்பாகவே, திருவள்ளுவர் புகழை உலகம் அறியும் வண்ணம், அறத்துப்பாலையும், பொருட்பாலையும் அப்பொழுது செல்வாக்குப் பெற்றிருந்த இலத்தீன் மொழியில் மொழிபெயர்த்து உலகறியச் செய்தவர் கிறித்தவராகிய வீரமாமுனிவர் ஆவார்.

(10) தமிழில் முறையான பாடநூல் முறையை அறிமுகப்படுத்த எண்ணிச் செந்தமிழ் உரைநடைக்கு வாமன் சரித்திரத்தையும், பேச்சுத் தமிழுக்குப் பரமார்த்த குரு கதையையும் எழுதியவர் வீரமாமுனிவர் ஆவார்.

(1) எழுத்தறிவு உடையோர் மட்டும் படித்துப் புரிந்துகொள்ளுமாறு பேச்சு மொழியில் உரை எழுதும் வழக்கம் தமிழில் இருந்ததில்லை. அதற்கு மாறாக 208 திருக்குறட்பாக்களைத் தேர்ந்து தொகுத்து, அவற்றுக்குப் பேச்சு மொழியில் உரை எழுதியுள்ளார் வீரமாமுனிவர். அதன் நோக்கம் பாமர மக்களுக்கும் திருக்குறள் கருத்துகளைப் பரப்ப வேண்டும் என்னும் உயரிய சிந்தையே ஆகும். தமிழ் இலக்கிய வரலாற்றில், பாமரருக்கும் திருக்குறள் கருத்துகளை உரைவடிவில் பரப்ப வேண்டும் என்ற சிந்தனை, கிறித்தவ சமயத்தாரைத் தவிர வேறு எவருக்கும் தோன்றியதாகத் தெரிய வந்திலது.

### (ஆ) பெருமைக் கொடை

மேற்குறிப்பிட்ட பணிகள் எல்லாம் மொழியின் கட்டமைப்புப் பணிகளே எனலாம். பிற சமயத்தினரைவிட கிறித்தவரே இப் பணிகளில் முதன்மையானவர்களாகவும், பலவகை நூல்களைப் படைத்தவர்களாகவும் இருப்பதோடு மட்டும் அமையாமல், படைப்புப் பணிகளிலும் பிற சமயத்தினருக்குச் சற்றும் குறையாமல் படைத்துள்ளனர். இலக்கியப் படைப்புகளில் சில புதிய முயற்சிகளையும் மேற்கொண்டு தமிழுக்குப் பெருமை சேர்த்துள்ளனர். அவற்றுள் சில மட்டும் பின்வருமாறு சுட்டிக் காட்டப் படுகின்றன:

(1) 3615 பாடல்களையே கொண்ட காப்பியத்தில், 90 சந்தங்களைப் புகுத்தித் தமிழிலேயே அதிகமான சந்தங்களைக் கொண்டதாகத் தேம்பாவணியை ஆக்கிக் காட்டியுள்ளவர் வீரமாமுனிவர். கம்பனுடைய படைப்புகளில் அமைந்திருப்பன 87 சந்தங்களே என்பர்.

(2) கீர்த்தனை நாடகங்களிலேயே பாடல்களின் எண்ணிக்கை அளவாலும், பயன்படுத்தப் பெற்ற இராக வகைகளாலும் அதிகமாக அமைந்ததும், 1858இல், சென்னையில் பலர்முன் அரங்கேற்றம் செய்யப்பெற்று, 23 பெரும்புலவர்களால் சாற்றுக் கவிகள் பாடப்பெற்றதுமாகிய 'தேம்பாவணிக் கீர்த்தனை'யே தமிழில் எழுந்த கீர்த்தனை நாடகங்களுள் மிகப் பெரியதாகும். இதனை இயற்றியவர் புதுச்சேரியைச் சேர்ந்த ஆரோக்கிய நாயகர் ஆவார். இந்நூல் 1861இல் வெளிவந்தது.

(3) தமிழ் அம்மானை நூல்களிலேயே அதிகமான கண்ணிகளைக் கொண்ட பெரிய அம்மானை நூல் 'முத்திவழி அம்மானை' யாகும். இதனை எழுதியவர் சுவீகர நாடார் ஆவார்.

(4) 'தக்கயாகப் பரணி' போன்ற முற்றுருவகச் சிற்றிலக்கியங்கள் தமிழில் இருந்தாலும், முற்றிலும் முற்றுருவகமாக அமைந்த காப்பியம் இரட்சணிய யாத்திரிகம் ஆகும். இதனைப் படைத்தவர் எச். ஏ. கிருட்டிணப் பிள்ளை யாவார்.

(5) பெண்களைச் சுட்டுங்கால், சிறந்த அடைமொழி களைக் கொடுத்துப் பாடுவது தமிழ்க் கவிஞர்களின் மரபாக இருந்துவருகிறது. ஆனால் மற்றவர்கள் கொடுத்த அடைமொழிகளையெல்லாம் விட, பாடற்பகுதியின் ஒரே இடத்தில் அதிகமான அடைமொழிகளை வழங்கிப் பாடியவர் கிறித்தவப் புலவராவார். திருமணத்தில் மணமக்களை வாழ்த்தி எவரையும் பழிக்காமல் பாடவேண்டி, வேத நாயக சாத்திரியார் 'கலியாண வாழ்த்துதல்' என்னும் தலைப்பில் ஒரு நூலை 1919இல் இயற்றியுள்ளார். அதன் முதற் பகுதி அம்மானைப் பகுதியாகும். அதனுள் உள்ள 'பெண் வாழ்த்து' என்னும் தலைப்பில் பெண்ணை விளிக்கும்பொழுதில்,

> **"மானை, மரகதத்தை மாதர்கள் சிரோமணியை,**
> **தேனை, திகட்டாத செங்கரும்பை, தெள்ளமுதை**

எனத் தொடக்கம் பெற்று,

> **"வரிசைத் துரையை, மணம்புணர வந்தாளை,**
> **திருவசனமே யிலங்கு சீயோன் குமாரியினை**
> **மொய்குழலை ................................"**

என்றவாறு முடியும்வரை நூற்றுக்கு மேற்பட்ட அடை மொழிகளைத் தந்து பாடிய தன்மை வேறெங்கும் காணப்பட்டிலது.

(6) தொடர் சிறிதானால் பொருட்குழப்பம், இலக்கணக் குழப்பம் ஏற்பட வாய்ப்பில்லை.

பெரிதாகப் பெரிதாகச் சிக்கல்கள் ஏற்பட வழியுண்டு. நீளமாக நீளமாகப் பொருட்குழப்பம் ஏற்பட வாய்ப்புண்டு. பெருந்தொடரில் சிறு குழப்பம் ஏதுமின்றிச் சொற்களை அமைத்து எழுதுவது எல்லோருக்கும் கைவரப் பெறாது. எனவே அம்முயற்சியில் யாரும் ஈடுபடுவது இல்லை. பழங்கால உரையாசிரியர்களுக்கு அது கைவந்த கலையாகத் தோன்றுகிறது. என்றாலும், இதுவரையிலும் வெளிவந்துள்ள நீண்ட தொடரைக் கொண்டது கிறித்தவர் எழுதியுள்ள ஒரு நூலில் காணப்படுவதுதான். இராமலிங்க அடிகளாரின் 'மனுமுறை கண்ட வாசக'த்தில் வரும் ஒரு தொடர், ஒரு பத்தியாகவே அமைந்துள்ள சிறப்பைக் கொண்டது. அம் முற்றுத் தொடரைப் போல ஏறத்தாழ இருமடங்குள்ள ஒரு முற்றுத் தொடரைப் படைத்துத் தமிழ் உரைநடை வரலாற்றில் தனி இடத்தைத் தமிழுக்குப் பெற்றுத் தந்தவர் 'தத்துவ போதகர்' எனச் சுட்டப்படும் இராபர்ட் டி நொபிலி ஆவார். அவருக்குக் கண்ணொளி குன்றியபொழுதில், அவர் சொல்ல மற்றவர் எழுதிய 'ஞானோபதேசம்' – இரண்டாம் காண்டத்தில் வரும் அத்தொடர் பின்வருவதாகும்: "அப்படிப்பட்ட ஸ்தலத்திலே நிர்மல சலமுள்ள நதிகள் நிரம்பி ஓட... '' எனத் தொடங்கி, "...பரிபூரணக் காரணமாயிருந்தது என்று அங்கீகரிக்கக் கடவோம்!'' என்று முடிகிறது. அத்தொடர் 'டெம்மி' எனப்படும் தாளில் 56 வரிகளைக் கொண்டு அச்சிடப்பட்டுள்ளதெனில் அதன் நீளத்தைத் தெளியலாம்.

(7) திருவள்ளுவரைப் பாராட்டித் 'திருவள்ளுவ மாலை' வெளிவந்துள்ளது. வேறு பல ஆராய்ச்சியாளர்களும் பாராட்டி நூற்றுக்கணக்கான நூல்களை எழுதியுள்ளனர். என்றாலும்,

வீரமாமுனிவர் தம் இலக்கண நூலாகிய 'தொன்னூல்' விளக்கத்தில் பாராட்டியுள்ளது போன்று எவரும் சுருங்கக் கூறி விளங்க வைத்ததாகத் தெரியவில்லை. 'மனத்துக்கண் மாசிலனாதல்...' என்னும் திருக்குறளைத் தம் இலக்கணக் கருத்துக்கு மேற்கோள் காட்ட விரும்புகிறார். அதற்கு இக்குறளை மட்டும் எடுத்துக்காட்டினால் போதும். அல்லது திருவள்ளுவரது இக்குறள் என்று மட்டும் சொல்லியிருக்கலாம். அவ்வாறில்லாமல், இவ்வாய்ப்பைப் பயன்படுத்தித் திருவள்ளுவரைக் குறித்துச் சில வரிகள் கூறி, 'உயர்ந்த திருவள்ளுவர்' என்கிறார்.

"வேத நூன் முதல் எவ்வகை நூலுங் கல்லாதுணரவுஞ் சொல்லாதுணர்த்தவும் வல்லவராகி, மெய்ஞ்ஞானத் திருக்கடலாகியவொரு மெய்க்கடவுள் தன் திருவடி மலரே தலைக்கணியெனக் கொண்டேத்தி, இருளிராவிடத்து விளங்கிய வொருமீன் போலவும் பாலைச் சுரத்தரிதலர்ந்த பதுமம் போலவும் மெய்யாஞ் சுருதி விளக்காதிருளே மொய்த்த நாட்டின் கண்ணுங் கடவுளேற்றிய ஞானத் திருவிளக்கெரிப்ப தெளிந்துணர்ந்து ஓங்குமொரு விளக்கென நின்றுயர்ந்த திருவள்ளுவருரைத்த பலவற்றொன்றை நான் தெரிந்துரைப்பத் துணிந்தேன்" என்று கூறுவதிலிருந்து திருவள்ளுவர்பால் அவர் கொண்டிருக்கிற மதிப்பு விளங்கும். இது போன்று சுருங்கச் சொல்லி விளக்கும் பாராட்டு மொழிகள் திருவள்ளுவருக்கு எவரும் தந்ததில்லை எனத் துணியலாம்.

**(இ) புதுமைக் கொடை**

மேற்கண்டவற்றைப் போன்று விரிந்த அளவில் செய்த முயற்சிகளோடு தமிழுக்குக் கிறித்தவர்கள் வழங்கிய கொடைகளுள் குறிப்பிடத் தக்கவை, அவர் தமிழில் படைத்துத் தந்த புதிய இலக்கிய வகைகளே யாகும். அவற்றுள் சில பின்வருவனவாம்:

(1) முதற் பள்ளு இலக்கியங்களான 'செண்பகராமன் பள்ளு', 'ஞானப் பள்ளு' ஆகியவற்றைப் படைத்தவர்கள் கிறித்தவர்கள் ஆவர். அது மட்டுமன்று. பள்ளுக்கான இலக்கணத்தைக் கூறுவதும் வீரமாமுனிவர் படைத்த சதுரகராதிதான். அதன் தொகையகராதியில், பிரபந்தங்கள் தொண்ணூற்றாறு என்று வகைப்படுத்திக் கூறும்பொழுது, 'பள்ளு' என்று கூறாமல் 'உழத்திப் பாட்டு' எனச் சுட்டி, அதற்குக் கூறப்பட்ட இலக்கணத்தையே பின்னர் வந்த பிரபந்த இலக்கண நூல்கள் 'பள்ளு' என்னும் இலக்கியத்திற்கு இலக்கணமாகக் கூறின.

(2) 'பரமார்த்த குரு' கதை தமிழில் வெளிவந்த முதல் ஏளன இலக்கியமாகக் கருதப்படுகிறது.

(3) தமிழில், புத்திலக்கிய வகையில் முதற் புதினமாகிய பிரதாப முதலியார் சரித்திரத்தை எழுதிய வேதநாயகம் பிள்ளை கிறித்தவர். அப்புதினத்தில், ஏறத்தாழ 134 ஆண்டுகளுக்கு முன்னரே, 'ஆட்சிமொழி தமிழாக இருத்தல் வேண்டும்' என்ற தம் எண்ணத்தைக் கதைமாந்தர் வழியாக வெளிப்படுத்தியிருப்பது சிந்தனைக்குரியது.

(4) பாரதிக்குரிய சிறப்புகளிலேயே கண்ணனைப் பல்வடிவில் பார்த்த சிறப்பும் ஒன்றாகும்.

இறைவனைத் தொழிலாளர்களின் பிரம்மாவாகப் பார்த்த பார்வையும் குறிப்பிடத் தக்கது.

பாரதி பிறப்பதற்கு இருபது ஆண்டுகளுக்கு முன்னர்த் தோன்றி, அவருக்குப் பின்னரும் வாழ்ந்த ஒரு கிறித்தவப் புலவர், அவரினும் மேலாக இறைவனைப் பல்வேறு தொழிலாளர்களாக உருவகித்துப் பாடியுள்ளார். திட்டூர் தேசிகர் என்னும் அப்புலவர் இறைவனை வேளாளனாக, வண்ணானாக, செம்மானாக, செட்டியாக, தட்டானாக, குலாலனாக, கோனாராகக் கண்டதோடு மட்டுமல்லாமல், வாரணம், சிங்கம் போன்ற விலங்குகளாகவும் உருவகித்துப் பாடியுள்ளார். அவர் கூறியிருப்பதைப் போன்று தமிழ் இலக்கிய வரலாற்றில் எவரும் பாடியதில்லை. சான்றுகளாகச் சில பாடல்களைக் காணலாம்:

வண்ணானாகப் பாடுங்கால்,

**"உத்தமத் திரு அவஸ் தையுவர் முறுக்கி**
**உயர்மத் தியஸ்த வெள்ளா விவைத்து**
**சுத்தநின் திருரத்த நீரில் தோய்த்து**
**துய்யதாய் வெளுத்தளி வண்ணானே!"**

என்று பாடுபவர், செட்டியாகப் பாடும்பொழுது.

**"ஞானச் சரக்கு விற்பான் நம்ம செட்டி**
**நல்லா தாயங் காண்பான் நம்ம செட்டி**
**ஈனச் சரக்க ளிக்கான் நம்ம செட்டி**
**இயேசு கிறிஸ்தெனும் நம்ம செட்டி"**

என்கிறார். தட்டானாகப் பாடும்பொழுது,

**"பாவக் களிம்பு நீங்கி உள்ளம்**
**பத்தரை மாற்றுத் தங்க மாகத்**
**தேவ நீதிக் குகையினற் புடந்தான்**
**செய்குவன் கருத்துடன் ஞானத் தட்டான்"**

என்கிறார். கோனாராகப் பாடும்பொழுது,

**"கறவலாட்டை மெதுவாய் நடத்தும் கோனார்**
**கால்முடத்தைத் தோளில் சுமக்கும் கோனார்**
**திறமுடன் நம்மந்தை மேய்க்கும் கோனார்**
**சீவனையும் மாடுகட்காய்க் கொடுக்கும் கோனார்"**

என்று பாடியுள்ளார். இவை போன்று சமுதாயத்தில் காணப்படும் அனைத்துத் தொழிலாளர்களாகவும் பாடியதோடு அமையாமல், அனைத்துப் பிரிவினர்களாகவும் பாடியுள்ளார். பறையனாகவும் பாடியுள்ளார், பார்ப்பானாகவும் பாடியுள்ளார். குறத்தியாகவும் பாடியுள்ளார், அறிவியலறிஞராகவும் பாடியுள்ளார். யானையாகப் பாடுங்கால், வாரணம் என்ற சொல்லைப் பயன்படுத்தி,

**"ஆருக் குமடங் காத வாரணம்**
**அண்ட கோளங்க ளசைக்கும் வாரணம்**

போருக் கோரிணை யற்ற வாரணம்
பொருபி சாசைப் பொடிசெய் வாரணம்''

என்று பாடுகிறார். சிங்கமாக உருவகித்துப் பாடும்பொழுது,

"சீவர் கட்கெலாம் மேலாம் சிங்கம்
சித்தக் களிற்றை அடக்கிய சிங்கம்
பாவர் கடைத்தேறத் தாங்கிய சிங்கம்
பட்சமிகு யூதா கோத்திரச் சிங்கம்''

என்கிறார்.

**(ஈ) பகுத்தறிவுக் கொடை**

தமிழகத்தில் பகுத்தறிவு என்றால் உடன் நினைவிற்கு வருபவர் பெரியார் என்பதில் மாற்றுக் கருத்துக்கு இடமில்லை. சாதியொழிப்பு, பெண் கல்வி, பெண்ணடிமை, குழந்தைத் திருமணக் கொடுமை, விதவைத் திருமணத் தேவை, மூடப் பழக்கங்களை ஒழித்தல் போன்ற கொள்கைகளை வீறுடன் எடுத்துச் சொல்லிய பெருமை அவருக்குண்டு. அவருக்கு முன்னரும், அவர் காலத்திலும் தத்தம் படைப்புகளில் அக்கருத்துகளைப் பாடிய கவிஞர்களும், எடுத்துச் சொல்லிய பெருமக்களும் வாழ்ந்துள்ளனர். அவர்களுள் பாரதியார், பாரதிதாசன் போன்றோர் கவிஞர்களில் குறிப்பிடத் தக்கோர் ஆவர். அவர்களுடைய கவிதைச் சொற்கள் வெடிகுண்டு போல மக்கள் மனத்துள் வெடித்துச் சிதறியது உண்மைதான். ஆனால், அவ்வெடிகுண்டுகளுக்கு மருந்து போன்று அமைந்து, அவர்களுக்கு முன்னரே பாடியுள்ள கவிஞர்கள் கிறித்தவர்கள் என்பது சிந்தனைக் குரியது. அதற்குச் சான்றுகளாகப் பின்வருவனவற்றைக் கொள்ளலாம்:

(1) சாதி வேறுபாடுகள் குறித்து வேதநாயக சாத்திரியார் தம்முடைய 'ஞானத் தச்சன்' நாடகத்தில்,

"பள்ளன் உயர்த்தியோ ? பறையன் உயர்த்தியோ ?
பாப்பான் உயர்த்தியோ ? மூப்பான் உயர்த்தியோ ?
கள்ளன் உயர்த்தியோ ? வெள்ளன் உயர்த்தியோ ?
கண்டவன் ஆரதைக் கேட்டவன் ஆர்சொலும் ?''

என்று பாடியுள்ளார். திட்டூர் தேசிகர் என்னும் புலவர்,

" மேற்சாதி கீழ்ச்சாதி – அகப்பேய்!
விதிக்க ஞாயமென்ன ?
ஏற்குமோ வித்தியாசம் – அகப்பேய்!
எருமை பசுப்போல''

என்று பாடியுள்ளார். அவரே மற்றொரு நூலில் 'பறையனும் பார்ப்பானும்' என்னும் தலைப்பில்,

"பறையு மெவனும் பறைய னன்றோ ?
பறைய னென்றெனைப் பறைவானேன் ?
பறையும் நீயும் பறைய னல்லோ ?
பார்க்காமற் பறைவாயோ பார்ப்பானே!''

என்று பாடியுள்ளார்.

(2) பெண் கல்வி, முன்னேற்றம் குறித்துப் பத்தொன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த வேதநாயகம் பிள்ளை பெண்கல்வி, பெண் மானம், பெண்மதி மாலை போன்ற நூல்களைப் படைத்துள்ளார்.

(3) குழந்தைத் திருமணத்தைக் கடிந்தும், விதவைத் திருமணத்தை வேண்டியும், திட்டூர் தேசிகர் என்னும் கிறித்தவப் புலவர் தம் நூல்களில்,

"கைம்மைக் கட்டாயம் – அகப்பேய்!
கனகொலைக் காதாரம்''
"சிரார்த்தம் வீண்சிலவு – அகப்பேய்!
சிசுமணம் புத்தியீனம்''
"பாரழியச் சிசுமணம்செய் பழிப்புக் காலம்
பரிதாப விதவைகளைப் படுத்தும் காலம்''
"படிகெடுக்கும் சிறுபிள்ளை விவாகம் வேண்டாம்
பழிபெருக்கும் விதவை கட்டாயம் வேண்டாம்''

என்று தம்முடைய நூல்களில் பாடிச் சென்றுள்ளார்.

(4) மக்களுடைய மூடப் பழக்கங்களைக் களையும் ஆர்வத்தில் முன் நின்றவர்கள் கிறித்தவர்கள் என்பதற்கு, வேதநாயக சாத்திரியார் எழுதிய 'சாத்திரக் கும்மி' என்னும் நூலே சான்றாகும்.

"காக்காய் கத்துதல் ஆந்தை கத்துதல்
காரி யத்தைக் கெடுத்துப் போட்டால்
போக்காய் மற்ற குருவிகள் கத்தலில்
புண்ணியம் உண்டாமோ ஞானப் பெண்ணே!''
"மாட்டைத் தொட்டுத் தலைமுழு காதநீ
மனுஷனைத் தொட்டு ஸ்நானம் செய்தாய்
மாட்டைப் பார்க்க மனுஷன் இளப்பமோ
மறுமொ ழிகொடு ஞானப் பெண்ணே!''

என்பன சான்றுக்குச் சிலவாம்.

**(உ) அண்மைக் கொடை**

தமிழ் இலக்கிய வரலாற்றில் சில புதிய வடிவ மாற்றங்களையும் கிறித்தவர்கள் புகுத்தியுள்ளனர். அவற்றுள், சிலவற்றைப்பற்றி அறிந்து கொண்டால் எதிர்காலத்தில் கிறித்தவரின் கொடைகளாக அவற்றையும் கருதத் தூண்டுதல் தரும். இத்தகைய புதிய வடிவ மாற்றங்கள் எல்லாம் இருபத்தோராம் ஆண்டின் தொடக்கப்பகுதியில் ஏற்பட்டனவாகும்.

(1) தமிழ் இலக்கிய வரலாற்று நூல்கள் நூற்றுக்கணக்கில் தமிழில் வெளிவந்துள்ளன. அவற்றுள் பெரும்பாலானவை சங்க காலம், சங்கம் மருவிய காலம், பல்லவர் காலம், பிற்காலச் சோழர் காலம், நாயக்கர் காலம், ஆங்கிலேயர் காலம், தற்காலம் என்றாற்போன்று தமிழகத்தை ஆட்சி செய்தவர்களின் காலத்தை அடிப்படையாகக் கொண்டு வெளிவந்தவை எனலாம். அவ்வாறில்லாவிட்டால், நூற்றாண்டு வாரியாக வெளியிடப்பட்டிருக்கலாம். ஆனால், அவ்வாறின்றித் தமிழ் மரபினையொட்டி இயல், இசை, நாடகம் எனப் பகுத்துக்கொண்டு, அப்பகுப்புகளில் அடங்கியுள்ள இலக்கியவகைகளின் அடிப்படையில் எழுதப்பட்ட இலக்கிய வரலாற்று நூல்கள் கிறித்தவரால் படைக்கப்பட்டுள்ளன. அவற்றுள் 'Dimensions on Tamil Christian Literature' என்னும் ஆங்கில நூல் 1994இல்

வெளிவந்துள்ளது. அந்நூல் முன்னுரை, தமிழகத்தில் கிறித்தவம், கிறித்தவர்களின் பங்களிப்பு, இயற்றமிழ்ப் படைப்புகள், இசைத்தமிழ் நூல்கள், நாடகத் தமிழ் வகைகள், புனைகதை இலக்கியங்கள், எதிர்பார்ப்புகள் ஆகிய எட்டு இயல்களைக் கொண்டது. பின்னர் 2001இல், 'கிறித்தவத் தமிழ்க் கொடை' என்னும் நூல் விரிந்த அளவில் இரு பகுதிகளாக 80 தலைப்புகளில் வெளிவந்துள்ளது. முதல் பகுதி 41 தலைப்புகளிலும். இரண்டாம் பகுதி 39 தலைப்புகளிலும் அமைந்துள்ளது. இந்நூல் முதலில் மொழியமைப்பு, இலக்கியப்படைப்பு என இரண்டாகப் பகுத்து, அவற்றுக்கிடையேயுள்ள வேறுபாடுகளைச் சுட்டிக்காட்டி, முதன்முதலில் மொழியின் கட்டமைப்பில் உள்ள தமிழின் வளர்ச்சியில் கிறித்தவரின் கொடைகளை விரித்துக் காட்டிவிட்டுப் பின்னர் இலக்கியப் படைப்புகளை இயல், இசை, நாடகம் என்று பகுத்துக் கொண்டு, அவற்றில் அடங்கும் இலக்கிய வகைகளைத் தனித்தனியே விரித்து விளக்குகிறது. ஒவ்வொரு தலைப்பின் இறுதியிலும், அவ்வகைப் படைப்புகளின் தாக்கத்தால் தமிழ் பெற்ற பயன்கள் யாவை என்ற செய்திக் குறிப்புகளும் சுட்டப்படுகின்றன. இவ்வகையான இலக்கிய வரலாற்றுக் கொடைபற்றிய நூல்களை, இதற்கு முன்னர் எவ்வாசிரியரும் தந்ததில்லை என்பதனால், அவ் வரலாற்று வரைவியல் முறையே கிறித்தவரின் தமிழ் இலக்கியத் தனிக்கொடை எனக் கருதத்தக்கதாகும்.

(2) காப்பியம் என்று சொல்வது பொருந்தாது. காவியம் என்ற சொல்தான் பொருந்தும் என்ற வையாபுரிப்பிள்ளையின் கூற்றை மறுத்து, முப்பது ஆண்டுகட்கு முன்னரே மறுப்புரை எழுதியும், அது பலருக்கு அறியவராமலேயே போனதன் காரணமாக, காப்பியம் என்ற சொல்லையே தலைப்பிட்டுத் 'திருத்தொண்டர் காப்பியம்' என்ற ஒரு காப்பியத்தை வெளியிட்டவர் ஒரு கிறித்தவர். அதுமட்டுமன்று. காப்பியம், சிறுகாப்பியம், காவியம், பாவியம், புராணம் என்பன வெவ்வேறு எனக் குறிப்புக் காட்டியிருப்பவரும் அவ்வாசிரியரே ஆவார். மேலும், கிறித்தவர் படைப்புகளில், காப்பியம் என்ற இலக்கணத்திற்குப் பொருந்தி வருவன தேம்பாவணி, இரட்சணிய யாத்திரிகம், திருத்தொண்டர் காப்பியம் என்ற மூன்று மட்டுமே. அவற்றுள்ளும், முன்னவை இரண்டும் அகத்துறை இலக்கணத்திற்கு முற்றும் பொருந்தவில்லை எனக் கூறுவோருக்கு மனநிறைவளிக்கும் வகையில் திருத்தொண்டர் காப்பியம் அமைந்துள்ளது நோக்கத் தக்கது. மேலும், 4135 பாடல்கள் கொண்ட இக்காப்பியத்தில் 2000க்கு மேற்பட்ட உவமைகள் அடங்கியுள்ளன என்பதும், அவற்றுள் 200க்கு மேற்பட்டவை புதிய உவமைகள் என்பதும், அதனால் இது 'உவமைக் காப்பியம்' என்ற பெயராலேயே எதிர்காலத்தில் நிலைபெறும் என ஆய்வறிஞர்கள் கூறுவதும், இதனையும் கிறித்தவர்களின் கொடை என்றே கொள்ளலாம்.

(3) 2007ஆம் ஆண்டில் 'அவன் அவனானான்' என்ற ஒரு புதினம் வெளிவந்துள்ளது. இதுவும், ஒரு புதிய முயற்சி யாகும். தலைமாந்தர் பெயரோ, ஊர்ப்பெயரோ, எதிர்நிலை மாந்தரோ இன்றிப் படைக்கப்பட்ட புதினமாகும். இம்முயற்சியில் எவரும் இதுவரை ஈடுபட்டதில்லை யாதலின், இதுவும் கிறித்தவர்களின் கொடையில் அடங்கும்.

(4) துன்ப மிகுதியில் எழும் இலக்கியம் 'புலம்பல்' ஆகும். ஈழத்தமிழர்களின் அவலங்களை மனத்திருத்தியதோடு, தமிழகத்தில் உள்ள பிற அவல நிலைகளையும் எண்ணிப் புலம்பியவாறு எழுதப்பட்ட 'ஒரு தமிழனின் புலம்பல்' என்னும் நூலும் 2008இல் வெளிவந்துள்ளது. காப்புச் செய்யுள் நீங்கலாக 667 கண்ணிகள், அஃதாவது 1334 அடிகளில் அமைந்துள்ள இப் புலம்பல், பாதிக்குமேல் ஈழத்தமிழரின் பரிதாப நிலையைப் படம்பிடித்துக் காட்டுகிறது. தமிழகத்தில் இருபத்தோராம் நூற்றாண்டில் வெளிவந்தது மட்டுமன்று. தம்முடைய இயலாமையையும் இடையிடையே வெளிப்படுத்தும் தன்மை இப் 'புலம்பல்' இலக்கியத்தில் புதுவதாக அமைந்ததாகும். இதுவும் இந்நூற்றாண்டின் கிறித்தவர்களின் கொடையாகவே கருதத்தகும்.

**(ஊ) தனியொரு கொடை**

இவையெல்லாவற்றுக்கும் மேலாகக் கிறித்தவர்களின் தமிழ்க்கொடை ஒன்று உள்ளது. அது, வேறு எச்சமயத்திலும் காணப்படாத கொடை யாகும். கிறித்தவச் சமய வழிபாடுகளில்மட்டுந்தான், தமிழகத்தில் எவ்விடத்தும், எக் கிறித்தவப் பிரிவினரிடத்தும், எவ்வகை வழிபாட்டு நிகழ்ச்சிகளிலும், தாய்மொழியாம் தமிழிலேயே நடைபெறுவதாகும் எனலாம்.



# இன்பத் தமிழுக்கு இசுலாமியரின் பங்களிப்பு

டாக்டர் கம்பம் சாகுல் அமீது



“இசுலாம் எங்கள் வழி; இன்பத் தமிழ் எங்கள் மொழி”– இது இசுலாமியத் தமிழர்களின் முழக்கம்.

தமிழுக்கு ‘இன்பத் தமிழ்’ எனக் கொடுத்திருக்கும் அழுத்தம் அவர்களது தமிழ்ப் பற்றைக் காட்டுகிறது.

நம் தாய்மொழியாம் தமிழ்மொழி ஒன்றில்தான் சைவம், வைணவம், சமணம், பௌத்தம், கிறித்தவம், இசுலாம் ஆகிய எல்லாச் சமயத்தாருக்கும் இலக்கியம் உண்டு. வேறெந்த மொழிக்கும் இத்தகைய சிறப்பு இல்லை. எல்லாச் சமயத்தாரும் தமிழுக்குத் தொண்டாற்றியதைப் போலவே, இசுலாமியத் தமிழர்களும் தமிழ்த்தொண்டு, தமிழ்ப்பற்று ஆகியவற்றில் முன்னோடியாகத் திகழ்கின்றனர். தமிழ் இலக்கியத்தில் உள்ள அனைத்து இலக்கிய வகை இலக்கியங்களையும் படைத்துப் பெருமை சேர்த்துள்ளனர். அதனுடன் பல்வேறு புதிய இலக்கிய வகைமைகளையும் அறிமுகம் செய்துள்ளனர்.

இசுலாமியத் தமிழ் இலக்கிய வரலாற்றில் முழுமையாகக் கிடைக்கும் முதல் இலக்கியமாக வண்ணப் பரிமளப் புலவர் எழுதிய ‘ஆயிரம் மசலா’ என்னும் நூல் திகழ்கிறது. இந்நூல் கி.பி. 1572ஆம் ஆண்டு இயற்றப்பட்டது. இந்நூலுக்கு அதிசயப் புராணம், ஆலம் நபி புகழ் கூறும் காவியம் என்ற பெயர்களும் உள்ளன. இந்நூல் வினா – விடை முறையில், யூதர் ஒருவர் கேள்வி கேட்க, அதற்கு நபிகள் நாயகம் பதில் கூறுவதாக அமைந்துள்ளது. எனவே, இசுலாமியத் தமிழ் இலக்கிய வரலாறு கி.பி. 16ஆம் நூற்றாண்டிலேயே தொடங்கிவிட்டது எனலாம்.

இசுலாமியத் தமிழர்கள், தமிழுக்கு அறிமுகப் படுத்திய புதிய இலக்கிய வகைகளாக

**(1) படைப்போர், (2) மசலா, (3) நாமா, (4) கிஸ்ஸா, (5) முனாஜாத்து, (6) திருமண வாழ்த்து, (7) நொண்டி நாடகம், (8) மகுடி நாடகம்** ஆகியவற்றைத் தமிழ் அறிஞர்கள் கருதுகின்றனர்.

மேற் கூறிய இலக்கிய வகைகளில் படைப்போர் இலக்கிய வகை சில சிறப்புக் கூறுகளைப் பெற்றுத் திகழ்கிறது. படைப்போர் என்பதன் பொருள் படைகள் செய்கின்ற போர் என்பதாகும். ஓரிறைக் கொள்கையை ஏற்றும், எதிர்த்தும் முறையே இருவேறு படைப் பிரிவுகள் செய்கின்ற போர் நிகழ்ச்சிகளைக் கூறுவதாகும். போரில் பெண்கள் பங்கு பெறுதல், போருக்குப் பெண்கள் தலைமை தாங்குதல், தலைமை தாங்கிய பெண்ணின் பெயரை நூலுக்குத் தலைப்பாக வைத்தல், போரில் காயம் பெற்றவர்களின் எண்ணிக்கையைக் கூறுதல், காயங்களின் எண்ணிக்கையைக் கூறுதல் ஆகியவற்றைச் சிறப்புக் கூறுகளாகச் சொல்லலாம். போர் நிகழ்ச்சிகள் நேர்முக வருணனை போல் கூறப்படுகின்றன.

குஞ்சுமூசு புலவர் என்பவர் படைத்த சல்கா படைப்போர், செய்தத்துப் படைப்போர் ஆகிய இரண்டும் பெண்ணின் பெயரையே தலைப்பாகக் கொண்டவையாகும்.

தலைமை வகித்த பெண்ணின் பெயரையே தலைப்பாகக் கொண்டு அமைந்துள்ள முதல் தமிழ்ப் போர்க் காப்பியமாக சல்கா படைப்போர் விளங்குகிறது.

தமிழ் இலக்கிய வரலாற்றில் விதவைத் திருமணக் கருத்து முதன்முதலில் படைப்போர் இலக்கியத்தில்தான் காணமுடிகிறது. காளை அசனலிப் புலவரின் இந்திராயன் படைப்போர் என்ற நூலில், போர்க்களத்தில் இறந்த வீரர்களின் மனைவிமார்களுக்கு மறுமணம் செய்து வைப்பதைக் காணமுடிகிறது.

> **“தாலி இழந்தவளைத்தான் அலியார் அங்கு அழைத்துக்**
> **கோலியொரு மாப்பிள்ளைக்குக் கொள்கையுடன் தாலிகட்டி”**

என்ற பாடல் தாலி இழந்தவருக்கு மறுமணம் செய்து வைப்பதைக் கொள்கையாகக் கருதியதை உணரலாம். இந்நூல் 1737ஆம் ஆண்டு இயற்றப் பெற்றது. 273 ஆண்டுகளுக்கு முன்னால் விதவைத் திருமணக் கருத்து இடம் பெற்றிருப்பது உற்றுநோக்கத்தக்கதாகும்.

கி.பி. 14ஆம் நூற்றாண்டில் இருந்து 17ஆம் நூற்றாண்டு வரையில் தமிழில் காப்பியங்களே தோன்றவில்லை என்று மு. அருணாசலம், டாக்டர் மு. வரதராசன் ஆகியோர் கூறுகின்றனர். இந்த நிலையில், செய்கு நயினார்கான் என்ற புலவர் “கனகாபிஷேக மாலை” என்ற காப்பியத்தைப் படைத்து, தமிழ் இலக்கியத்தில் இடையில் ஏற்பட்ட தேக்க நிலையை நீக்கி மேலும் வளர வழிவகுத்தார். 19ஆம் நூற்றாண்டில் மட்டும் இசுலாமியத் தமிழர்கள் 12 காப்பியங்கள் படைத்துள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது. புலவர் நாயகம் எனப் போற்றப்படும்

செய்து அப்துல்காதர் நயினார் லெப்பை ஆலிம் என்பவர் மட்டும் 4 காப்பியங்கள் படைத்துள்ளார். ஒரே புலவர் நான்கு காப்பியங்கள் படைத்துள்ளமை ஒரு வியப்பான செய்தியாகும்.

தமிழுலகம் சீறாப்புராணத்தைத்தான் இசுலாமியர்களின் முதல் காப்பியம் எனக் கருதி வந்தது.

செய்கு நயினார்கான் என்ற புலவரின் கனகாபிஷேக மாலை என்பதுதான் முதல் இசுலாமியத் தமிழ்க் காப்பியம் என்று இப்போது அறிய முடிகிறது. இந்நூலின் ஆண்டு 1648 ஆகும். ஆனால், அச்சேறிய முதல் தமிழ்க் காப்பியம் சீறாப்புராணம் ஆகும். இந்நூல் 1842ஆம் ஆண்டில் அச்சேறியது. இதற்குப் பிறகுதான் சிலப்பதிகாரம், சீவகசிந்தாமணி முதலிய காப்பியங்கள் அச்சேறின.

பல்வகை இலக்கியங்கள் படைத்த இசுலாமியத் தமிழ்ப் புலவர்களில் இருந்து வேறுபட்ட இதுவரை இலக்கியத்தில் இல்லாத, திரைப்படத்திலும் சொல்லாத புதுமையான புதுவகையான காதல் கதையைப் படைத்திருக்கிறார் புலவர் முகம்மது உசேன். நூலின் பெயர் சந்திரபதன் கதை. ஓலைச் சுவடியிலிருந்து நூலாகப் பதிப்பித்தவர் ஆய்வு மாணவர் கலிபுல்லா. இந்நூலை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் வெளியிட்டுள்ளது.

ஒரு முசுலிம் மன்னன் ஒரு பெண்ணை உயிருக்கு உயிராய் விரும்புகிறான். ஆனால், அப் பெண் மன்னனை விரும்பவில்லை என்று கூறுகிறாள். உனக்காக உயிரையும் விடுவேன் என்று கூறுகிறான் மன்னன். அப்படியா உயிரை விட்டுவிடு பார்க்கலாம் என்று சொல்லிவிடுகிறாள். காதலி சொன்னதை மனத்தில் வைத்து அவள் சொல்லியதைப் போலவே தன் உயிரை மாய்த்துக் கொள்கிறான் மன்னன். மன்னனுடைய உடலை அடக்கம் செய்வதற்காகச் சந்தூக்கில் (சவப்பெட்டி) எடுத்துச் செல்கிறார்கள். அப்பெட்டி காதலி வீட்டருகே வந்ததும் நகர மறுக்கிறது. மக்கள் எவ்வளவோ முயன்றும் தள்ளிப் பார்த்தும் அந்தச் சவப்பெட்டி நகரவில்லை. உடனே காதலி வீட்டினுள்ளே மக்கள் சென்று மன்னன் உடல் நகர மறுப்பதைக் காதலியிடம் கூறுகிறார்கள். காதலி துடிதுடித்துப் போய் மன்னனை உயிருக்கு உயிராகக் காதலிக்கிறேன் என்று கூறுகிறாள். கூறியவுடனே சவப்பெட்டி நகரத் தொடங்குகிறது. அடக்கம் செய்யும் இடம் வந்ததும் பெட்டியைக் கீழே இறக்கி வைத்து மன்னனை அடக்கம் செய்வதற்காகப் பெட்டியைத் திறக்கிறார்கள். பெட்டியின் உள்ளே மன்னனை ஒட்டிக் காதலியும் பிணமாய்ப் படுத்து இருக்கிறாள். மக்கள் வியப்பும் அதிர்ச்சியும் அடைந்து தனித்தனியே அடக்கம் செய்ய இருவரையும் எடுக்கிறார்கள். ஆனால், இருவரையும் தனித்தனியே பிரிக்க முடியவில்லை. வேறு வழியின்றி இருவரையும் ஒரே குழியில் அடக்கம் செய்கிறார்கள்.

உள்ளம் இரண்டும் ஒன்று; நம் உருவம்தானே இரண்டு என்ற நிலையை மாற்றி, உயிரும் உடலும் ஒன்றான கதையாய் இது அமைந்துள்ளது. இப் புதிய காதல் கதை படிப்பவர்களின் எண்ணங்களை எத்தனையோ கோணங்களில் சிந்திக்கத் தூண்டும்.

தமிழின் முதல் நாடகமாகக் கருதப்படுவது டம்பாச்சாரி விலாசம் (1867) ஆகும். ஆனால், வண்ணக் களஞ்சியப் புலவர் எழுதிய அலிபாதுஷா நாடகம் 1820ஆம் ஆண்டில் வெளிவந்ததை அறிய முடிகிறது. எனவே, அலிபாதுஷா நாடகம், வெளிவந்த நாடக நூல்களில் முதல் நூலாகக் கருத முடிகிறது. இசுலாமியத் தமிழர்கள் நொண்டி நாடகம், மகுடி நாடகம் என்ற புதிய வடிவங்களை வழங்கியுள்ளனர். மகுடி நாடகத்தை 1897ஆம் ஆண்டு ஜீவரத்தின கவி செய்து மீரா லெப்பை என்பவர் இயற்றியுள்ளார். இசுலாமியக் கருத்துகளை மோடி வித்தை காட்டுகின்ற அமைப்பில் விளக்குவதாக இந்நாடகம் அமைந்துள்ளது. பள்ளு இலக்கியத்தில் தலைசிறந்ததாகக் கருதப்படும் முக்கூடற்பள்ளு என்னயினார் புலவர் என்ற இசுலாமியரால் எழுதப்பட்டது என்று எம்.எஸ். பூரணலிங்கம் பிள்ளை குறிப்பிடுகிறார்.

தமிழ் மக்களின் மனத்தைக் கவர்ந்து இழுக்கும் முதல் உரைநடை நூலாக 'விக்கிரமாதித்தன் கதை' விளங்குகிறது. இந்நூலின் ஆசிரியர் இப்ராகீம் ராவுத்தர் என்பவர் ஆவார். உரைநடைக்குச் சிறப்புச் செய்தது போலவே மொழிபெயர்ப்புத் துறையிலும் தங்கள் பங்கினை இசுலாமியர்கள் முந்திக்கொண்டு செய்துள்ளனர். ஆங்கிலத்தில் G.W.M. Reynolds (ரைனால்ட்ஸ்) என்பவர் எழுதிய OMAR (ஓமர்) என்ற வரலாற்று நாவலை 'உமறுபாஷா யுத்த சரித்திரம்' என்ற பெயரில் தமிழில் மொழிபெயர்த்துள்ளார் குலாம் காதிறு நாவலர். 900 பக்கங்கள் கொண்ட இந்நாவல் 4 பாகங்களாக 1889ஆம் ஆண்டில் வெளிவந்தது. பேராசிரியர் முரளி அரூபன் பதிப்பித்த இந்நூலைக் கல்தச்சன் பதிப்பகம் செம்பதிப்பாக 2001ஆம் ஆண்டில் வெளியிட்டது.

வாழ்க்கையில் வெற்றி, வாழ்வைத் துவங்கு போன்ற நாற்பதுக்கும் மேற்பட்ட தன்முன்னேற்ற வாழ்வியல் நூல்களை எழுதியவர் எம்.ஆர்.எம். அப்துற்றஹீம் ஆவார். வாழ்வியல் நூலாசிரியர்களான தமிழ்வாணன், எம்.எஸ். உதயமூர்த்தி ஆகியோருக்கு முன்னோடியாகத் திகழ்ந்துள்ளார் இவர் என்பதை அறியமுடிகிறது.

தமிழின் முதல் நாவல் மாயூரம் வேதநாயகம் பிள்ளை எழுதிய பிரதாப முதலியார் சரித்திரமாகும். இதன் ஆண்டு 1879 ஆகும். இவருக்கு அடுத்து நாவல் எழுதியவர் சித்திலெப்பை மரைக்காயர் ஆவார். இவரது நாவலின் பெயர் அசன்பே சரித்திரம் என்பதாகும். இந்நாவல் வெளியான ஆண்டு 1885. ஈழத்தில் தோன்றிய முதல் நாவல் என்ற பெருமையும் தமிழ்நாட்டில் தோன்றிய இரண்டாவது நாவல் என்ற பெருமையும் இதற்குண்டு. இதனைப் போன்று கம்பம் பீர்முகம்மது பாவலர் 1930ஆம் ஆண்டில் எழுதி வெளியிட்ட 'முத்தண்ணா' என்ற நாவல் குறிப்பிடத்தக்கது. இந்நாவல் செந்தமிழ் நடையில் எழுதப்பட்டுள்ளது கூடுதல் சிறப்பாகும்.

1935ஆம் ஆண்டில் நூர் முகம்மது என்பவரால் எழுதப்பட்ட 'சம்மதமா?' என்ற இசுலாமியத் தமிழ்ச் சிறுகதை முன்னோடிச் சிறுகதையாகத் திகழ்கிறது. இக்கதையை எழுதிய நூர்முகம்மது, இராவணன் என்ற புனைபெயரில் பல்வேறு கட்டுரைகளும் கதைகளும் எழுதியுள்ளார். அதனுடன் புரட்சிக்கவிஞர் பாரதிதாசனின் நெருங்கிய நண்பரும் ஆவார். பாரதிதாசனின் மூத்த மகளுக்கு மாப்பிள்ளை பார்க்கச் சென்ற பாரதிதாசன் நண்பர்களுள் இடம் பெற்றவர் என்பதும் குறிப்பிடத்தக்கது.

திரைப்பட முன்னோடிப் பாடலாசிரியர்களான உடுமலை நாராயணகவி, பாபநாசம் சிவன், கண்ணதாசன் போன்றோருக்கு இணையாகப் புகழ் பெற்றவர் கவி கா.மு. சரீபு. இவரது 'ஏரிக்கரையின் மேலே போறவளே பெண்மயிலே', 'நான்பெற்ற செல்வம் நலமான செல்வம்', 'வாழ்ந்தாலும் ஏசும் தாழ்ந்தாலும் ஏசும்' போன்ற பாடல்கள் புகழ் பெற்றவை. இவரை அடுத்து குடியிருந்த கோயில் படத்தில் "குங்குமப் பொட்டின் மங்கலம்" என்ற அழியாத பாடலை எழுதிப் புகழ் பெற்றவர் ரோஸனா பேகம். தமிழ் சினிமாவின் முதல் பெண் பாடலாசிரியர் இவரே. இவரைத் தொடர்ந்து தாமரை என்ற பெண் திரைப்படப் பாடலாசிரியர் பாடல் எழுதிவருகிறார். தாமரைக்கு முன்னோடி 'ரோசா' என்பது குறிப்பிடத்தக்கது. புதுக்கவிதை முன்னோடிகளுள் ஒருவரான கவிஞர் மு. மேத்தா 400க்கும் மேற்பட்ட திரைப்படப் பாடல்கள் இயற்றியுள்ளார். 'கற்பூர பொம்மை ஒன்று', 'நட்சத்திர ஜன்னலில் வானம் எட்டிப் பாக்குது', 'என் மன வானில் சிறகை விரிக்கும் வண்ணப் பறவைகளே' போன்று இவரது ஏராளமான பாடல்கள் புகழ் பெற்று விளங்குகின்றன. கவிஞர் காதல்மதி என்ற காதர் மைதீன் 100க்கும் மேற்பட்ட திரைப்படப் பாடல்களை எழுதியுள்ளார். இத்துடன் பல்வேறு ஆல்பங்களுக்கும் பாடல்கள் எழுதியுள்ளார். 'வால்பாறை வட்டப்பாறை' முதலிய புகழ்பெற்ற பாடல்களை இயற்றியுள்ளார்.

தமிழ்ப் புதுக்கவிதை உலகிலும் இசுலாமியர்கள் சிறப்பிடம் பெற்றுள்ளனர். புதுக்கவிதைப் படைப்பாளர்களுள் இன்று விரல்விட்டு எண்ணத் தக்கவர்களில் கவிக்கோ அப்துல் ரகுமான், கவிஞர் மு. மேத்தா, கவிஞர் இன்குலாப் (சாகுல் அமீது), கவிஞர் அபி (அபிபுல்லா), கவிஞர் மனுஷ்யபுத்திரன் (சாகுல் அமீது), கவிஞர் சல்மா ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள்.

கவிக்கோ அப்துல் ரகுமான், கவிஞர் மு. மேத்தா ஆகியோர் கவிதைக்கான சாகித்ய அகாதெமி விருது பெற்றோர் ஆவர். இதில் கவியரங்க உலகில் தனிமுத்திரை படைத்த கவிக்கோ அப்துல் ரகுமான் கவிதைக்கென்று முதன்முதலில் சாகித்ய அகாதெமி விருதுபெற்ற தமிழ்க் கவிஞர் ஆவார் என்பது குறிப்பிடத்தக்கது.

இதனைப் போன்று நாவலுக்கான சாகித்ய அகாதெமி விருது பெற்றவர் தோப்பில் முகமது மீரான் என்பவர். இவர் சாகித்ய அகாதெமி விருது பெற்ற முதல் இசுலாமிய நாவலாசிரியர் என்பது கருதத்தக்கது.

இசுலாமியப் பெண் எழுத்தாளர்களும் தமிழுக்குச் சிறப்பாகப் பங்களித்துள்ளனர். நாகூரைச் சேர்ந்த சித்திஜுனைதா பேகம் 1938ஆம் ஆண்டில் 'காதலா? கடமையா?' என்ற நாவலைப் படைத்திருக்கிறார். தமிழில் பெண் நாவல் ஆசிரியர்களில் முன்னோடியாகவும் இசுலாமியப் பெண் நாவல் ஆசிரியர்களில் முதல்வராகவும் விளங்குகிறார். இவரது நூலுக்கு உ.வே. சாமிநாதய்யர் அவர்கள் முன்னுரை வழங்கியுள்ளார் என்பதும் இதனைப் போன்று வேறெந்தப் பெண் நாவல் ஆசிரியருக்கும் முன்னுரை வழங்கவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது.

இவர் எழுதிய 'காதலா? கடமையா?' என்ற நாவல்தான் எம்.ஜி.ஆர். நடித்த 'நாடோடி மன்னன்' திரைப்படக் கதைக்கு முன்னோடியாக அமைந்தது. 'நாடோடி மன்னன்' திரைப்படத்தில் வரும் அரசவைக் காட்சியில் மன்னன் இயற்றும் சட்டதிட்டங்கள் அனைத்தும் 'காதலா? கடமையா?' நாவலில் இடம் பெற்றுள்ள சட்டதிட்டங்களை ஒத்துள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. இவரைத் தொடர்ந்து பாத்திமுத்து சித்திக், ஜெய்புனீசா போன்றோர் தனிமுத்திரை பதித்து வருகின்றனர். இவர்கள் அனைவருக்கும் முன்னோடியாகக் ஸூஃபி கவிஞர்களான கீழக்கரை செய்யது ஆசியா உம்மாள், தென்காசி ரசூல் பிவி, இளையான்குடி கச்சிப்பிள்ளை அம்மாள், மைமூன் ஆகிய பெண்பாற் புலவர்கள் திகழ்ந்தனர் என்பதை அறிய முடிகிறது.

தமிழ் இலக்கியத்தில் இசுலாமியத் தமிழர்கள் கொண்ட ஆளுமையும், தமிழ் மீது கொண்ட அடங்காப் பற்றும் குறிப்பிடத்தக்கதாகும்.

1938ஆம் ஆண்டில் தந்தை பெரியாரால் நடத்தப்பட்ட இந்தி எதிர்ப்புப் போராட்டத்திற்குப் பக்கபலமாக இருந்து தலைமையேற்று நடத்தியவர்கள் திருப்பூர் மைதீன், கலீஃபுல்லா ஆகியோர் ஆவர்.

1949ஆம் ஆண்டு அரசியல் நிருணய சபையில் "இந்தியாவின் ஆட்சிமொழியாகும் தகுதி பெற்ற ஒரே மொழி என் தாய்மொழி தமிழ்" எனக் குரல் எழுப்பியவர் கண்ணியமிகு காயிதே மில்லத் என்பது கவனிக்கத்தக்கது.

இசுலாமிய நிறுவனங்களும் தமிழுக்குத் தொண்டாற்றியுள்ளமை எண்ணத்தக்கதாகும்.

தமிழறிஞர்களைப் பெருமைப்படுத்தியதில் முன்னோடியாகத் திகழ்ந்தது உத்தமபாளையம் ஹாஜி கருத்த ராவுத்தர் கல்லூரி ஆகும். 50 ஆண்டுகளுக்கு முன்பே இக்கல்லூரி நிருவாகம் இறையருட் கவிமணி கா. அப்துல்கபூர் என்ற தமிழ்ப் பேராசிரியரைக் கல்லூரி முதல்வராக்கிப் பெருமைப்படுத்தியது. இவ்வகையில் முதன்முதலில் முதல்வரான தமிழ்ப் பேராசிரியர் அப்துல் கபூர்தான். இவரையடுத்தே சி. இலக்குவனார், ஏ.சி. செட்டியார், வ.சுப. மாணிக்கம், சுப. அண்ணாமலை, தமிழ்க்குடிமகன் ஆகியோர் கல்லூரி முதல்வரானார்கள். டாக்டர் மு.வ., பொற்கோ போன்றோர் துணைவேந்தராகவும் வரமுடிந்தது. இதனைத் தொடர்ந்து திருச்சி ஜமால் முகம்மது

கல்லூரி, இளையான்குடி ஜாகிர் உசேன் கல்லூரி, அதிராம்பட்டணம் காதர் மொய்தீன் கல்லூரி, பாளையங்கோட்டை சதகத்துல்லா அப்பா கல்லூரி, சென்னை புதுக்கல்லூரி ஆகிய கல்லூரிகளில் 10 தமிழ்ப் பேராசிரியர்கள் கல்லூரி முதல்வர் ஆனார்கள்.

யுனெஸ்கோ கூரியர் என்ற அறிவியல் தமிழ்ப் பத்திரிகைக்கு 36 ஆண்டுகளுக்கு மேலாக ஆசிரியராகப் பணியாற்றியவர் மணவை முஸ்தபா. இவர் அறிவியல் தமிழ்க் கலைச்சொல்லாக்க முன்னோடியாகத் திகழ்கிறார். தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்கள் இவரைத் தமிழக அறிவியல் கழகத்தின் தலைவராக்கினார். இதுவே இவர் அறிவியல் தமிழுக்கு முன்னோடி என்பதற்குச் சான்றாகிறது. சொற்பிறப்பியல் ஆராய்ச்சியில் ஈடுபட்டுத் தமிழ்த் தொண்டாற்றும் எம்.ஆர்.எம். முகம்மது அனிபா அவர்களின் பணி குறிப்பிடத்தக்கது. 'சொற்பிறப்பியல் வியத்தகு உண்மைகள் உலகத் தாய்மொழி – தமிழ்' என்று அண்மையில் வெளியான இவரது நூலில் "உலகத் தாய்மொழி நம் செம்மொழி தமிழ்தான்" என்பதை உணர்த்தியுள்ளார். திருக்குறளை முதன்முதலில் இதழின் முகப்பு அட்டையில் வெளியிட்டவர்கள் இசுலாமியத் தமிழர்களே என்பது குறிப்பிடத்தக்கது. 1886ஆம் ஆண்டில் இலங்கையிலிருந்து வெளியான 'சர்வஜன நேசன்' என்ற பத்திரிகையின் முகப்பு அட்டையில்,

> **"ஊழி பெயரினும் தாம்பெயரார் சான்றாண்மைக்கு**
> **ஆழி எனப்படு வார்"** (குறள் - 989)

என்ற குறளும்,

1887ஆம் ஆண்டில் சிங்கப்பூரில் இருந்து வெளியான 'சிங்கை நேசன்' பத்திரிகையின் முகப்பில்,

> **"தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றம் காண்கிற்பின்**
> **என்குற்றம் ஆகும் இறைக்கு"** (குறள் - 436)

என்ற குறளும் அச்சடிக்கப்பட்டுள்ளதைக் குறிப்பிட வேண்டும்.

ஆற்றுப்படை இலக்கியங்கள் படைப்பதிலும் இசுலாமியத் தமிழ்ப் புலவர்கள் தங்களின் தமிழ்ப் பற்றைக் காட்டுவதில் தனித்து நிற்கின்றனர்.

மகாவித்துவான் நாகூர் வா. குலாம் காதிறு நாவலர் 'மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் புலவர் ஆற்றுப்படை' என்ற நூலை இயற்றியுள்ளார். இவரைத் தொடர்ந்து காரை இறையடியானின் (முகமது அலி) செந்தமிழ்த் தொண்டர் ஆற்றுப்படை என்ற நூலும், முனைவர் மு.இ. அகமது மரைக்காயரின் அறிஞர் ஆற்றுப்படை என்ற நூலும் சிறப்புக்குரியனவாக விளங்குகின்றன. இறைவனை, மன்னர்களை அடைவதற்கு 'ஆற்றுப்படை' எழுதியதை மாற்றி, தமிழுக்கு ஆற்றுப்படுத்துகின்ற புதிய வழியை இந்நூல்கள் காட்டுகின்றன.

தமிழுக்குத் தொண்டாற்றிய குலாம் காதிறு நாவலர், கவி கா.மு. சரீபு, செய்குதம்பிப் பாவலர், மணவை முஸ்தபா, கமால் ஆகியோரின் படைப்புகள் தமிழக அரசால் நாட்டுடைமை ஆக்கப்பட்டுள்ளன. இவ்வாறு, இசுலாமியத் தமிழ்ப் படைப்பாளிகள் தமிழ்ப் பற்றிலும் தமிழிலக்கியப் படைப்புகளிலும் ஒன்று முன்னோடியாக இருந்திருக் கிறார்கள் அல்லது முன்னோடிக்கு அடுத்த நிலையில் இருந்திருக்கிறார்கள்.

செய்குதம்பிப் பாவலர், இராமலிங்க அடிகளாரின் பாடல்கள் மருட்பா அன்று அருட்பா என்று வாதிட்டு வென்றார். கம்பராமாயணச் சொற்பொழிவாற்றி 'கம்பராமாயண சாயபு' எனப் பெயர் பெற்றார் பா. தாவூது ஷா. சென்னைக் கம்பன் கழகத் தலைவராக நீண்டகாலம் பணியாற்றியுள்ளார் நீதியரசர் மு.மு. இசுமாயீல். மகாபாரத அம்மானை என்ற நூலை இயற்றிப் பெருமை சேர்த்துள்ளார் செய்யது முகம்மது அண்ணாவியார். சீறாப்புராணச் சொற்பொழிவாற்றிச் சீறாச் செல்வர் எனப் போற்றப்பட்டார் சிலம்பொலி செல்லப்பனார். நாயன்மார்களைப் பற்றிச் சொற்பொழிவாற்றிய உடுமலை நயினார் முகம்மது, 'நாயனார் முகம்மது' எனப் போற்றப்பட்டார். 'நாயகம் ஒரு தாயகம்' என்ற நூலைப் படைத்துச் சிறப்புச் செய்துள்ளார் வலம்புரிஜான். கண்ணதாசன் 'இயேசு காவியம்' என்ற நூலைப் படைத்து ஏற்றம் பெற்றார். கவிஞர் ஈரோடு தமிழன்பன் 'இடுகுறிப் பெயரல்ல இசுலாம்' என்று புதுக்கவிதைத் தொகுப்பைப் படைத்துச் சிறப்பித்துள்ளார்.

இப்படி எல்லாச் சமயத்தாரையும் மொழியால் செம்மைப்படுத்திய நம் தமிழ்மொழியைச் செம்மொழி என்று அழைக்காமல் வேறு எம்மொழியைச் செம்மொழி என்பது ?

> **"ஒரு சமயத்தைச் சார்ந்தவர்கள் மற்றச் சமயத்தவரின் இலக்கியங்களை விருப்பத்தோடு படித்து, அதன் சிறப்புகளை மனம் திறந்து பாராட்டிப் போற்றும் மனப்பக்குவம் என்று உருவாகிறதோ அன்றுதான் உண்மையான ஒருமைப்பாட்டு உணர்வு மக்களிடையே வலுவாகக் காலூன்ற முடியும்"**

என்று கூறினார் மௌலானா அப்துல் கலாம் ஆசாத். ஆனால், தமிழர்கள் பிற சமய இலக்கியத்தைப் பாராட்டமட்டுமல்ல; படைக்கவும் செய்கிறார்கள். எனவேதான், தமிழ்மொழி எல்லாச் சமயத்தாரையும் தமிழன் என்ற ஒரே இனத்தாராக்கிய பெருமைக்குரியதாக விளங்குகிறது.

❖

# சமயமும் தமிழும்

முனைவர் இரா. இராஜேஸ்வரன்



**முன்னுரை**

சமயம் என்பது மானிட சமுதாயத்தை நல்வழியில் வாழ வழிகாட்டும் தன்மை உடையதாகும். உலகமெல்லாம் ஒரே சமயம் என்ற நிலை இல்லாமல், இந்து சமயம், கிறித்துவ சமயம், இசுலாம் சமயம், பௌத்த சமயம், சமண சமயம் என்று பலவாறாக உள்ளன. எல்லாச் சமயத்திற்கும் அடிப்படையானது இறை நம்பிக்கை. 'அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்'...... என்ற திருமூலரின் கருத்தின் மூலம் 'அன்பே சிவம்' (Love is God) என்கிற தாரக மந்திரமே சைவ சமயத்தின் ஆணிவேர், இந்தச் சமயக் கொள்கைகள், கோட்பாடுகள், சிந்தனைகள் போன்றவற்றைப் பரப்பவும் மனிதனிடம் செல்லவும் மொழி என்கிற கருவி தேவைப்படுகிறது,

ஒரு மொழியை வளப்படுத்தும் திறமை, ஆற்றல் மனிதனுக்கு மட்டுமே உண்டு. மொழி வளம் பெறும்போது சிந்தனையும், அறிவும் வளம் பெறும். பின்னர் அது வலுப்படும். பல்வேறு மொழிகள் இருப்பினும் தமிழ்மொழி எந்த வகையில் சைவ சமயத்திற்குத் தொண்டாற்றியுள்ளது என்பதை மட்டுமே ஆய்வதே கட்டுரையாளரின் நோக்கமாகும்.

**சைவ சமயத்தின் தொன்மை**

சமயம் ஒரு தத்துவம்; ஒரு மதக் கோட்பாடு; ஒரு வாழ்வியல் நெறி. சமயம் பற்றிக் காந்தியடிகள் குறிப்பிடுகையில், 'சமயம் இல்லாமல் மனிதன் உயிர் வாழ முடியாது' என உறுதியுடன் மொழிகின்றார். அந்தளவுக்குச் சமயம் மானுட வாழ்வில் முக்கிய பங்கு வகிக்கிறது. சமயங்கள் இறை நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டவைகளாகும். சமயங்களிடையே சடங்குகள், வழிபாட்டு முறை போன்றவைகள் மாறுபட்டாலும், அடிப்படையில் சமயக் கொள்கை ஒன்றே எனக் கருதலாம். உலகில் இன்று கிறித்துவம், இசுலாம் சமயங்களுக்கு அடுத்ததாக இந்து சமயம் (சனாதன தர்மம்) உலகம் முழுவதும் பரவியுள்ளது.

சைவம், வைணவம் என இரு பிரிவுகளைக் கொண்ட இந்து சமயம் உலகில் தோன்றிய பழைமையான சமயம் ஆகும், அதில் குறிப்பாக சைவ சமயம் தொன்மை வாய்ந்தது எனக் கூறலாம்.

சங்க இலக்கியங்களான பத்துப்பாட்டு, எட்டுத் தொகை, பதினெண் கீழ்க்கணக்கு போன்ற நூல்களில் சிவனைப் பற்றிய செய்திகள் பல உள்ளன. புறநானூற்றில்

**பால்புரை பிறைநுதல் பொலிந்த சென்னி**
**நீலமணி மிடற்று ஒருவன்**

எனச் சிவபெருமானைப் பற்றி ஔவையார் கூறியுள்ளார். தமிழ் இலக்கியங்களில் சிறந்த காப்பியமான சிலப்பதிகாரத்தில் 'பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்...' என சிவபெருமானைப் பிறவா யாக்கைப் பெரியோனாக இளங்கோவடிகள் கூறியுள்ளார்.

சைவ சமயம் சிவனோடு தொடர்புடையது. இச்சயமே உலகில் தோன்றிய முதற்சமயம் ஆகும்.

**சிவனோடு ஒக்கும் தெய்வம் தேடினும் இல்லை**
**அவனோடு ஒப்பார் இங்கு யாவரும் இல்லை**
**புவனம் கடந்தன்று பொன்னொளி மின்னும்**
**தவளச் சடைமுடித் தாமரை யானே!**

என்ற திருமந்திரத்தின்படி சைவத்தின் முழு முதற்கடவுள் சிவபெருமான் ஆவான்.

'சைவ சமயமே சமயம்' என்று தொடங்கும் தாயுமானவரின் தமிழ்ப்பாடல் சைவ சமயத்தின் மாண்பை உலகெங்கும் பறைசாற்றுவதாக அமைகிறது. 'சைவத்தின்மேற் சமயம் வேறில்லை அதில் சார் சிமாம் தெய்வத்தின்மேல் தெய்வம் வேறில்லை' என்று சைவ எல்லப்பநாவலர் குறிப்பிட்டுள்ளது சிந்திக்கத்தக்கது.

சிந்துவெளி நாகரிக காலத்தின்போதே சிவலிங்க வழிபாடு இருந்தமையை நிரூபிக்க சிந்துவெளி அகழ்வாராய்ச்சியின்போது கிடைத்த பொருட்களில் சிவலிங்கமும் ஒன்றாகும். மொகஞ்சதாரோ அகழ்வாராய்ச்சியின்போது பண்டைய காலத் தமிழ் எழுத்துகள் பல கிடைத்துள்ளன.

சிவலிங்க வழிபாடு என்பது நம் பாரத நாட்டில் மட்டுமேயன்றி எகிப்து, சிரியா, பாரசீகம், ஆப்பிரிக்கா, திபெத்து, அமெரிக்கா, சுமத்ரா, ஜாவா தீவுகள் போன்ற உலகின் பல பகுதிகளிலும் ஒரு கால கட்டத்தில் பரவியிருந்தது என்பதை மேலைநாட்டு வரலாற்று அறிஞர்கள் எச்.எம். வெஸ்ட்ராப், இ.டி. டெய்லர் ஆகியோர் தங்களின் நூலில் விளக்கியுள்ளனர். அதேபோன்று இலங்கைக்கும் சைவ சமயத்திற்கு மிக நெடிய வரலாற்றுத் தொடர்பு உண்டு. இராமேசுவரம், திருக்கேதீசுவரம், கோணேசுவரம், முன்னேசுவரம், நகுலேசுவரம் போன்ற சிவாலயங்கள் புராதனப் பெருமையும், சிறப்பும் பெற்றவை. இவற்றில் இராமேஸ்வரம் தவிர்த்து மற்ற ஏனைய நான்கும் இலங்கையில் உள்ளன.

தமிழ்க் கடவுளான முருகன் தமிழர் தம் தெய்வம் என்பதற்குக் கீழ்க்கண்ட சங்க நூல்களே சான்றாகும்.

**'மணிமயில் உயரின மாறா வென்றிப்**
**பிணிமுக வூர்தி ஒண்செய் யோனும்'**
(புறநானூறு)

**'முருகு ஒத்தியே முன்னியது முடிந்தலின்'**
(புறநானூறு)

**'முருகன் அன்ன சீற்றத்து...'**
(அகநானூறு)

**'முருகற் சீற்றத்து உருகெழு குரிசில்'**
(பொருநராற்றுப்படை)

முருகப் பெருமானும், தமிழும் வேறில்லை. முருகனே தமிழ்; தமிழே முருகன்.

சங்க காலத்திலேயே தமிழகத்தில் இந்து சமயம், சமண சமயம், பௌத்த சமயம் போன்ற மூன்று சமயங்கள் தோன்றின. இந்தக் காலகட்டம் சைவ சமயத்திற்கு ஓர் இருண்ட காலம் என்றே கூறலாம். காரணம் சமண சமயத்தையே களப்பிரர்கள் ஆதரித்து வந்தனர். அதன் பின்னர், சமய குரவர்களின் வருகையால், சைவப்பயிர் செழுமையாக வளர்ந்தது. பல்லவர்கள், பாண்டியர்கள், சோழர்கள் போன்ற மன்னர்கள் சைவ நெறியைச் சிறப்பாக வளர்த்தனர்.

ஏழாம் நூற்றாண்டில் சைவ நெறிக்கு ஒரு மறுமலர்ச்சி ஏற்பட்டது என கூறலாம். காரணம், இந்தக் காலத்தில்தான் இறைவனின் தூதர்களான திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் போன்ற நால்வர்கள் தோன்றிக் காலத்திற்கும் அழியாத அரிய செயல்களைச் செய்தனர். இவர்களால் சைவமும் வளர்ந்தது. தமிழும் வளர்ந்தது. பின்னர்த் தென்னிந்தியாவில் (கேரளா) தோன்றிய ஆதிசங்கரரால் சைவ சமயம் தழைத்தோங்கியது. இந்து மத வழிபாட்டைக் காணபத்தியம் (கணபதி வழிபாடு), கௌமாரம் (முருகன் வழிபாடு), சாக்தம் (சக்தி வழிபாடு), சௌரம் (சூரியன் வழிபாடு), வைணவம் (திருமால் வழிபாடு), சைவம் (சிவன் வழிபாடு) என ஆறு வகையாகப் பிரித்து இறையின்பம் பெற வழிகாட்டினார். 'ஆறுவகைச் சமயத்தில் அருந்தவரும்...' என்கிற பெரிய புராணம் மற்றும் 'அறுவகைச் சமயத் தோர்க்கும் அவ்வவர் பொருளாய்' என்கிற சிவஞான சித்தியார் பாடல் மூலம் நாம் அறியலாம். ஆதிசங்கரர் தமது வேதாந்தக் கொள்கையான அத்வைதத்தைப் போதித்து, அதைத் தொடர்ந்து நிலைநாட்டவும், இந்தியாவில் சிருங்கேரி, பூரி, பத்ரி, துவாரகை போன்ற புண்ணிய தலங்களில் திருமடங்களை நிறுவினார்.

பின்னர்ச் சைவ சமயம் சற்று நிலைகுன்றிய நிலையில் இருந்தபோது அருளாளர்கள் தோன்றி ஆதீனங்கள் (சைவத்திருமடம்) மூலம் சமயத்தைக் காத்தனர். புராணங்கள் பதினெட்டு, சித்தர்கள் பதினெண்மர் போன்று சைவ ஆதீனங்கள் பதினெட்டு ஆகும். இவற்றைச் 'சுத்த சைவ பதினெண் ஆதீனங்கள்' என்றும் கூறுவர். இவற்றில் முதலில் தோன்றியது திருவாவடுதுறை ஆதீனம், அடுத்துத் தோன்றியது தருமபுர ஆதீனம் ஆகும். பத்தொன்பதாம் நூற்றாண்டில் மீண்டும் இந்து மதத்திற்குச் சுவாமி விவேகானந்தர் மூலம் இளம் ரத்தம் செலுத்தப் பட்டது எனக் கூறலாம்.

சைவ சித்தாந்தத் தத்துவத்தை விளக்கும் திருமந்திரம் பதி, பசு, பாசம் என்னும் மூன்றை வலியுறுத்துகிறது.

**'பதிபசு எனப்பகர் மூன்றில்**
**பதியினைப் போல்பசு பாசம் அனாதி**
**பதியினைச் சென்று அணுகாப் பசுபாசம்**
**பதிஅணுகில் பசுபாசம் நிலாவே'**

ஆன்மாவைப் பசுவாகவும், இறைவனைப் (சிவன்) பதியாகவும், அவனை அடைவதற்குப் பாசத்தை விடுவதுவும் இந்தத் தத்துவ விளக்கம். தமிழ்நாட்டில் சைவ சமயம் அறுபத்து மூன்று நாயன்மார்களின் திருத் தொண்டினால் புத்துயிர் பெற்று நன்கு வளர்ந்தது.

**தமிழ் மொழியின் பங்களிப்பு**

தகவல் பரிமாற்றத்திற்கு மொழி அவசியம். மனிதன் தோன்றிய காலம் முதலே மொழி எனும் கருவி

நடைமுறையில் இருந்தது. மனித உறவுக்கு ஒரு பாலமாக அமைவது மொழி ஆகும். ஒரு சமுதாயத்தின் கலை, கலாச்சாரம், பண்பாடு, வரலாறு, இலக்கியம் போன்ற அனைத்தும் மொழியைச் சார்ந்தே அமைகிறது. உயிருக்கும், இறைவனுக்கும் உள்ள தொடர்பை அறிவதற்கு மொழி அவசியம் தேவைப்படுகிறது.

சைவ சமயத்தின் வளர்ச்சிக்கு உறுதுணையாக இருந்தது தமிழ் மொழியும் சமற்கிருதமும் ஆகும். தமிழ் அறிஞர் டாக்டர் வா.செ. குழந்தைசாமி இதுபற்றிக் கூறுகையில், 'தமிழும் சமற்கிருதமும் இந்தியப் பண்பாட்டின் இரு தூண்கள்' எனத் தனது ஆழ்ந்த அனுபவத்தின் முதிர்ச்சியால் தெரிவிக்கிறார். தமிழும், வடமொழியும் கி.மு. 5000 ஆண்டுகளுக்கு முற்பட்டவை எனத் தமிழாராய்ச்சி அறிஞர் க. வெள்ளைவாரணனார் தெரிவிக்கிறார்.

**'மன்னுமா மலை மகேந்திர மதனிற்**
**சொன்ன வாகமந் தோற்று வித்தருளியும்'**

எனும் திருவாசக வரிகள் மூலம் தமிழ்மொழியின் இலக்கணத்தைச் சிவபெருமான் முதன்முதலில் அகத்திய மாமுனிக்கு உபதேசித்தார் என்பதை அறியலாம்.

மேலைநாட்டு மொழிகளான கிரேக்கம், இலத்தீன், சீன மொழிகளுக்கு நிகரான பழைமையும், சிறப்பும் தமிழ் மொழிக்கு மட்டுமே உண்டு. 'கல்தோன்றி மண் தோன்றாக் காலத்தே முன்தோன்றி...' என்கிற சிறப்பு தமிழ்மொழிக்கே உண்டு. சைவ சமயம் தழைக்க அரும்பாடுபட்ட சமய அருளாளர்களான சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்க வாசகர், திருமூலர், சேக்கிழார், அருணகிரிநாதர், குமர குருபரர், இராமலிங்க அடிகளார் மற்றும் பல சிவனடியார்களின் வழிவழியாக வந்து இறைவன் மீது தெய்வத் தமிழால் பாடியருளினார்கள்.

சுந்தரர், 'இறைவன் தமிழை ஒத்தவன்' என்றும், நாவுக்கரசர், 'பண்ணின் இன்மொழி கேட்கும் பரமன்' என்றும், 'தமிழோடு இசைபாடல் மறந்தறியேன்' என்றும், சேக்கிழார், 'ஞாலமளந்த மேன்மைத் தெய்வத்தமிழ்' என்றும் இறைவனைத் தமிழாகவே போற்றியுள்ளார்கள்.

தமிழில் சைவ சமயத்தின் தோத்திரப் பாடல்களை அருளிச் செய்தவர்கள் திருஞான சம்பந்தர் முதல் சேக்கிழார் வரை உள்ள சமயகுரவர்கள் ஆவர். அவை பன்னிரண்டு திருமுறைகளாக வகுக்கப் பெற்றுத் தொகுக்கப் பெற்றன. இவற்றைப் 'பன்னிரு திருமுறை' என அழைப்பர். இவை முதலாம் இராசராசன் காலத்தில் வாழ்ந்த நம்பியாண்டார் நம்பி என்பவரால் தொகுக்கப் பெற்றன.

**'தோடுடைய செவியன் விடையேறியோர்தூ வெண்மதிசூடிக்**
**காடுடைய சுடலைப் பொடிபூசி என்னுள்ளங் கவர்கள்வன்**
**ஏடுடைய மலரான் முனைநாட் பணிந்தேத்த அருள்செய்த**
**பீடுடைய பிரமா புரமேவிய பெம்மான் இவனன்றே!**

என்று தொடங்கும் முதலாம் திருமுறை (1469 பாடல்கள்), இரண்டாம் திருமுறை (1331 பாடல்கள்), மூன்றாம் திருமுறை (1358 பாடல்கள்), யாவும் திருஞான சம்பந்தர் அருளிய தேவாரப் பாடல்கள் ஆகும். நான்காம் திருமுறை (1070 பாடல்கள்), ஐந்தாம் திருமுறை (1015 பாடல்கள்) மற்றும் ஆறாம் திருமுறை (981 பாடல்கள்) அனைத்தும் திருநாவுக்கரசர் அருளிய தேவார பாடல்கள் ஆகும்.

**'பித்தாபிறை சூடிபெரு மானேயரு ளாளா**
**எத்தான்மற வாதேநினைக் கின்றேன்மனத்துன்னை**
**வைத்தாய் பெண்ணைத் தென்பால்**
**வெண்ணெய்நல்லூ ரருட்டுறையுள்**
**அத்தா உனக் காளாய்இனி அல்லேன் எனலாமே'**

என்று தொடங்கும் ஏழாம் திருமுறை (1025 பாடல்கள்) சுந்தரர் அருளிய தேவாரப் பாடல்கள் ஆகும். எட்டாம் திருமுறை மாணிக்கவாசகர் அருளிய திருவாசகம், திருகோவையார் ஆகும். திருவிசைப்பா, திருப்பல்லாண்டு ஒன்பதாம் திருமுறை; பத்தாம் திருமுறை திருமூலரின் திருமந்திரம்; பதினோராந் திருமுறை திருவாலவாயுடையார், காரைக்காலம்மையார் போன்றோர் முதல் நம்பியாண்டார் நம்பி வரை பன்னிருவர் பாடிய திருப்பாடல்கள்; பன்னிரண்டாம் திருமுறை சேக்கிழார் பெருமான் அருளிய 'திருத்தொண்டர் புராணம்'; 12 திருமுறைகளில் சுமார் 18 ஆயிரம் பாடல்கள் உள்ளன. அவை இறைவனை அடையச் செய்யும் தோத்திரப் பாடல்கள் ஆகும்.

திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், சிவஞான போதம், சிவஞான சித்தியார், இருபா இருபஃது, உண்மை விளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினாவெண்பா, போற்றிப் பஃறொடைவெண்பா, கொடிக்கவி, நெஞ்சு விடு தூது, உண்மை நெறி விளக்கம் மற்றும் சங்கற்ப நிராகரணம் என்னும் பதினான்கு சாத்திர நூல்கள் சைவ இறை நெறியை உணர்த்தும் நூல்கள் ஆகும்.

தமிழைப் போற்றி, தமிழ் வழியே சைவ சமயத்தைப் பரப்பச் செய்த தவச் சான்றோர்களால் செந்தமிழும் வளர்ந்தது; சிவநெறியும் வளர்ந்தது.

**முடிவுரை**

இவ்வாறு உயர்தனிச் செம்மொழியாகிய தமிழும், சைவமும் சிறப்புடன் பொலிவு பெற சைவச் சான்றோர்கள் பலர் பாடுபட்டுள்ளனர். தமிழர்கள் சைவத்தையும், தமிழையும் இரு விழிகளாய்ப் போற்றிக் காத்து வருகிறார்கள். சனாதன தர்மம் எனும் இந்து மதத்தின் உயிர்நாடியாகச் சைவசமயம் விளங்குவது போலச் சைவசமயத்தின் உயிர்நாடியாகச் செந்தமிழ் விளங்குகிறது. கிறித்தவர்களுக்கு பைபிள் புனித நூல் (Holy Book) போல, இசுலாமியர்களுக்குத் திருக்குர்ஆன் புனிதநூல் போல, சைவர்களுக்குச் சமயகுரவர் அருளிய தேவாரம் புனித நூல் என்றே கூறலாம்.

**'தென்னாடுடைய சிவனே போற்றி;**
**எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி!'** ❖

# தமிழர் மெய்யியலில் - "இன்மை"

முனைவர் க.நெடுஞ்செழியன்



இந்திய மெய்யியல் வரலாறு வேதத்திலிருந்து தொடங்குவதாக ஆய்வாளர்கள் எழுதியும், பேசியும் வந்தனர். என்றிச் சிம்மர் முதலான இந்தியவியலாளர்கள் (Indologist) 'ஆரியர் வருகைக்கு முற்பட்டதும், வேதங்களுக்கு மாறானதுமான சிந்தனை மரபு ஒன்று உண்டு' என உறுதி செய்தனர். அந்தச் சிந்தனை மரபே ஆசீவகமாகவும் சைனமாகவும் பௌத்தமாகவும் கிளைத்தது என்றும் தெளிவுபடுத்தினர். அந்த ஆய்வின் தொடர்ச்சியில் இந்தியச் சிந்தனையில் கடவுள் மறுப்புக் கோட்பாடாகவும், அணுக்கோட் பாடாகவும் திகழும் எண்ணியம் (சாங்கியம்), உலகாயதம், சிறப்பியம் (வைசேடிகம்) முதலான பொருள்முதல் கோட்பாடுகள் வேத நெறிக்கு மாறாகவும், எதிராகவும் அமைந்தவை என்பதை அடையாளம் காட்டியவர் பேராசிரியர் தேவி பிரசாத் சட்டோபாத்தியாயா. அவரின் 'உலகாயதம்' (Lokayata), 'இந்திய நாத்திகம்' (Indian Atheism) முதலான நூல்களின் அடிப்படையில் சங்க இலக்கியங்களில் பொருள்முதல் கோட்பாடுகள் அடிப்படையாய் இருப்பதைப் பேராசிரியர் நா.வானமாமலை நல்லவண்ணம் ஆய்ந்துரைத்தார். மேற்காட்டிய அறிஞர்களின் ஆய்வுநெறிகளை அடிப்படையாய்க் கொண்டு தமிழர் மெய்யியலை ஆராய்ந்தபோது இந்தியச் சிந்தனை மரபின் குறிப்பாகப் பொருள்முதல் கோட்பாட்டின் (Materialism) மூலவடிவங்கள் யாவும் தமிழிலேயே – தொல்காப்பியத்திலேயே – உள்ளமையை அறிய முடிந்தது. அந்த அடிப்படையில் இந்திய மெய்யியலில் அணுக்கோட்பாடாக – ஐம்பூதக்கோட்பாடாக – இயல்புக் கோட்பாடாக அறியப்படும் அறிவியல் மரபில் ஒரு கூறாகத் திகழும் "இன்மை" (Negation)யைப் பற்றி – அதன் இடம் பற்றி அக் கோட்பாடு யாருக்கு – எம்மொழிக்கு உரியது என்பதைப் பற்றி ஆராய்வது இக் கட்டுரையின் நோக்கம்.

தமிழ்ச் சிந்தனை மரபின் காலமுறைப் பட்டியலை அமைத்துக் கொள்ளுதல் அதன் வரலாற்றை விளங்கிக் கொள்ளவும் – கோட்பாடுகளே சமய வடிவங்களாக மாறிய தன்மையைப் புரிந்து கொள்ளவும் பெருந்துணையாகும். பொருள்முதல் கோட்பாடுகளுக்கு மூலவடிவமாகத் 'தந்திர வழிபாட்டு' முறைகளே அடிப்படையாய் அமைந்தன. ஒவ்வொரு மனிதனும் தன்னை, தன் ஆற்றலை அறியத் துணைபுரியும் ஒருவகை ஓகப்பயிற்சியே தந்திரம் ஆகும். தன் + திரம் = தந்திரம் என அச் சொல் பிரியும். காலப்போக்கில் வளமை வழிபாடாக – வெற்றிக்குரிய – கொற்றவை வழிபாடாக – இத் தந்திரமுறை மாறியபோது இது ஆண் – பெண் புணர்ச்சிச் சடங்குகளைத் தழுவிக் கொண்டது. வேத நெறிக்கு மாறான இக் கோட்பாட்டினை,

"இந்தியப் பண்பாட்டில் இரண்டு போக்குகள் உள்ளன. ஒன்று வேத வழிப்பட்டது. மற்றது வேதநெறிக்கு மாறானது. பின்னதில் தெளிவாக இல்லையென்றாலும் கூட முகாமையான பங்களிப்பைச் செலுத்துவது தந்திரமே ஆகும். 'பகுதி'யை (மூல அணு – பிரகிருதி) அல்லது பெண்மையை மூலமாகக் கொண்டதே இதுவாகும்" என விளக்குவார் தேவி பிரசாத் சட்டோபாத்தியாயா (Lokayata).

தொல்காப்பியர் குறிப்பிடும் கொடிநிலை, வள்ளி முதலான சடங்குமுறைகள், வெறியாட்டு முதலான வழக்காறுகள் யாவும் தந்திர வழிபாட்டின் பல்வேறு கூறுகளாகும். பொருள்முதல் கோட்பாட்டின் மூல ஊற்றாகக் கருதப்படும் இத்தந்திர முறைகளில் இருந்தே மருத்துவ அறிவியலின் அடிப்படையாகிய 'தேக வாதம்' தோன்றியது. இத் தேக வாதத்திலிருந்தே பிற அறிவு மரபுகள் கிளைத்தன. அதனால் அச் சிந்தனை வரலாற்றைப் பின்வருமாறு வகைப்படுத்தலாம்:



**ஐந்திரம்**

இப் பேரண்டமும் – அதன் ஒரு கூறாய் விளங்கும் இவ்வுலகும் அணுக்களால் ஆனவை என்றும், அவ் அணுக்கள் நிலம், நீர், தீ, வளி, விசும்பு என ஐவகைப்படும் என்றும் கூறுவதே ஐம்பூதக் கோட்பாடாகும். ஒவ்வொரு பூதமும் அதததற்குரிய அணுக்களால் ஆனது என்றும், ஒவ்வோர் அணுவும் அதததற்குரிய இயல்புகளையும் – செயல்பாடுகளையும் கொண்டு விளங்குகின்றது என்றும் அக்கோட்பாடு விளக்கியது. அணுக்களின் பண்புகளையும் – செயல்களையும் பால் – சீர் எனப் பகுத்தனர். ஐந்து பூதங்களின் திரத்தை – இயல்பை நுணுகி ஆராய்ந்ததால் இக்கோட்பாடு ஐந்திரம் என்றும் அழைக்கப்பட்டது. நிலவணு, நீரணு, காற்றணு, தீயணு என அணுக்கள் – பூதங்கள் நான்காயினும் இவை தோன்றவும் வளரவும் காரணமாக விசும்பு (வெளி) திகழ்வதால் தமிழ் மரபில் விசும்பையும் ஒரு பூதமாகவே தமிழர் ஏற்றுக் கொண்டனர். இதனைத்

**'தீயும் வளியும் விசும்பு பயந்தாங்கு'**

எனத் தொடங்கும் நற்றிணைப் பாடலால் அறியலாம். விசும்பைப் பற்றிய அறிவியலே தொல்காப்பியர் குறிப்பிடும் முதற்பொருளாகும்.

**'முதலெனப் படுவது நிலம்பொழு திரண்டின்**
**இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே'**

எனும் நூற்பா, இன்றைய சார்பியல் கோட்பாட்டின் பிழிவாகும். நிலம் – பொழுது (Space & Time) இரண்டையும் முதல் பொருள் என்னாது அவ் விரண்டின் 'இயல்புகளை' முதல் பொருள் எனக் குறிப்பது ஆழ்ந்த அறிவு மரபின் அடையாளம் ஆகும். இடம் – பொழுது இரண்டின் இயல்புகள் யாவை ?

"1915க்கு முன்னதாக வெளியும் காலமும் நிகழ்ச்சிகள் நடைபெறும் ஒரு நிலையான அரங்கம் என்றும் அந்த அரங்கம் அதில் நடப்பனவற்றால் பாதிக்கப்படுவதில்லை என்றும் கருதப்பட்டது. சிறப்புச் சார்பியல் கோட்பாடுங்கூட இவ்வாறே கருதியது. உருக்கள் நகர்ந்தாலும் விசைகள் கவர்ந்தாலும் விலக்கினாலும் காலமும் வெளியும் எவ்விதப் பாதிப்பும் இல்லாமல் அப்படியே தொடர்ந்து செல்கின்றன என்றது. வெளியும் காலமும் என்றென்றும் சென்ற வண்ணம் இருப்பதாகக் கருதுவது இயல்பானதாயிருந்தது.

ஆனால் பொதுச் சார்பியல் கோட்பாட்டில் கதையே வேறு. இங்கு வெளியும் காலமும் இயக்கத் துடிப்புள்ள அளவுகளாகும். ஓர் உரு நகரும்போது அல்லது ஒரு விசை செயல்படும்போது அது வெளி – காலவளைவைப் பாதிக்கிறது. வெளி – கால கட்டமைப்பு தன் பங்கிற்கு உருக்கள் நகரும் விதத்தையும் செயற்படும் விதத்தையும் பாதிக்கிறது. வெளியும் காலமும் அண்டத்தில் நிகழும் ஒவ்வொன்றையும் பாதிப்பதோடு அந்த ஒவ்வொன்றாலும் பாதிக்கப்படவும் செய்கின்றன. அண்டத்தில் நடைபெறும் நிகழ்ச்சிகளைப் பற்றி எப்படி வெளியையும் காலத்தையும் பற்றிய கருத்துகள் இல்லாமல் பேச முடியாதோ அதைப்போன்றே பொதுச் சார்பியலில் அண்டத்தின் எல்லைகளுக்குப் புறத்தே வெளியும் காலமும் பற்றிப் பேசுவது பொருளற்றதாகிவிட்டது.

அடுத்து வந்த பத்தாண்டுகளில் வெளியும் காலமும் பற்றிய இந்தப் புரிதல் அண்டம் பற்றிய நமது பார்வையைப் புரட்சிகரமாக மாற்றியமைக்க இருந்தது. அடிப்படையில் மாறாத அண்டம் என்றென்றைக்கும் இருந்திருக்கக் கூடியது, இருக்கப் போகிறது என்பது அண்டத்தைப் பற்றிய பழைய கருத்தியலாகும். சாரத்தில் மாறாத ஒன்றாகவும் என்றென்றைக்கும் இருந்திருக்கக் கூடியதும், தொடர்ந்து இருந்துவரக் கூடியதுமான ஒன்றாகவும் அண்டத்தைப் புரிந்துகொள்ளும் பழைய கருத்து ஒழிந்து, இயங்காற்றலுடன் விரிவடைந்து கொண்டிருக்கும் ஒன்றாகவும், ஒரு திட்டமான காலம் முன்பு தொடங்கியதாகத் தோன்றுவதும், எதிர்காலத்தில் ஒரு திட்டமான நேரத்தில் முடியக் கூடியதுமான ஒன்றாகவும் அண்டத்தைப் புரிந்துகொள்ளும் கருத்து பிறந்தது. அந்தப் புரட்சியே அடுத்த அத்தியாயத்திற்குக் கருவாகிறது... அண்டத்திற்கு ஒரு தொடக்கம் இருக்க வேண்டும், ஒரு முடிவும் இருக்கக்கூடும் என்பதையே ஐன்ஸ்டீனின் பொதுச் சார்பியல் கோட்பாடு குறிப்பதாக நானும் ரோஜர் பென்ரோசும் காட்டினோம்" என விளக்குவார் ஸ்டீபன் ஆக்கிங். (A Brief History of Time and Space from Big Bang to Black Holes)

அண்டம் விரிவடைந்து கொண்டிருக்கிறது என்பதும் காலமும் கூட ஒரு தொடக்கத்தையும் முடிவையுங் கொண்டது என்பதும் இருபதாம் நூற்றாண்டின் கடைசியில் உணர்ந்த மிகப் பெரிய கண்டுபிடிப்புகளாகும். இக்கோட்பாடுகளின் குறியீட்டு வடிவமே தொல்காப்பியர் குறிப்பிடும் 'இடம் – காலம்' – எனும் முதற்பொருளின் இயல்பாகும். இத்தகைய விரிவான ஆய்வு நுணுக்கத்தை அறியாததாலோ வேறு காரணத்தாலோ தெரியவில்லை. வடநாட்டுப் பூதவியல் கோட்பாட்டினர் விசும்பை ஒரு பூதமாக ஏற்றுக் கொள்ளவில்லை. ஆனால், தமிழ் அறிவு மரபில் விசும்பும் காலமும் முதற்பொருளாகும். இம் முதற்பொருளின் நுட்பத்தை விளக்குவதே ஸ்டீபன் ஆக்கிங்கின் மேற்காட்டிய கூற்றாகும்.

**அண்டத்தின் தோற்றம்**

ஐன்ஸ்டின், சார்பியல் கோட்பாட்டைக் கண்டுபிடித்த பின்னரும்கூட, அண்டம் நிலையானது என்றும் அது என்றென்றைக்கும் விரிவடைந்து கொண்டே இருப்பது என்றும் அறிஞருலகு நம்பி வந்தது என்பதை ஸ்டீபன் ஆக்கிங் தெளிவுபடுத்தக் கண்டோம். அந்தக் கருத்தை அவரும் அவர்தம் நண்பர் பென்ரோசும் மாற்றியதையும் கண்டோம். இருபதாம் நூற்றாண்டின் இறுதியில்தான் அந்த உண்மையை அவர்கள் கண்டுணர்ந்தனர். ஆனால் தமிழர் வகுத்த எண்ணியமும் – அதனை உள்ளடக்கமாகக் கொண்ட ஆசீவகமும் அண்டத்திற்குரிய தோற்றத்தை

விளக்குவதுடன் அதன் முடிவையும்கூட விளக்கின. 'கருந்துளையால் ஏற்பட்ட முடிவிலாப் பெரும் பாழில் இருந்தே அணுக்கருச் சிதைவு என்னும் பெருவெடிப்பு நிகழ்ந்தது; அந்நிகழ்வே பேரண்டத்தின் தோற்றத்திற்கு அடிப்படையாயிற்று' என்பது பரிபாடலின் (இரண்டாம் பாடல்) செய்தியாகும்.

'ஐம்பூதங்களும் வெவ்வேறு அளவில் ஒன்று மற்றொன்றுடன் கலப்பதால் மலைகளும் மரங்களும் தோன்றி உலகாக உருக்கொண்டன; அவை யாவும் எந்த இயற்கையிலிருந்து எப்படித் தோன்றினவோ அவ்வாறே இறுதியில் சிதைந்து முடிந்துவிடும்' என்பது எண்ணியம் ஆகும். இதனை,

> **'பூத விகாரத்தால் மலைமரம் முதல்**
> **ஓதிய வெளிப்பட்டு உலகாய் நிகழ்ந்து,**
> **வந்த வழியே இவைசென்று அடங்கி,**
> **அந்தமில் பிரளயமாய் இறும் ......'**

எனும் சாங்கியன் (எண்ணியம்) கூற்றாய் வரும் மணிமேகலைப் பாடலடிகளால் அறியலாம்.

இவ்வாறு 'இப் பேரண்டம் – இப் பேரண்டத்தின் தோற்றத்தோடு தொடங்கிய காலம் – இடம் ஆகிய இவை யாவும் ஒரு தொடக்கத்தைக் கொண்டன; தோன்றும் எந்தப் பொருளும் அழியும்; அந்த இலக்கணம் இந்தப் பேரண்டத்திற்கும் பொருந்தும்' என்பதே எண்ணியம். இப் பேரண்டம் அழியும்போது இடமும் காலமும் (விசும்பும் காலமும்) கூட இல்லாமல் போய்விடும். தொல்காப்பியர் 'நிகழ்ச்சி என்பது இல்லாமல் போனால் காலம் என்பதும் இல்லாமல் போய்விடும்' எனக் கூறுவதையும் (செய்யுளியல்) இங்கே ஒப்பிட்டுக் காணவேண்டும்.

**இன்மை**

இப்பேரண்டத்திற்குத் தோற்றமும் முடிவும் உண்டு. இதனால் அண்டம் தோன்றுவதற்கு முன்னுள்ள நிலை என்ன ? அழிந்தால் அழிவிற்குப் பின் ஏற்படும் விளைவுகள் யாவை ? எனும் கேள்விகள் எழுகின்றன, இக்கேள்விகளுக்கான விடையைத் தருவதே 'இன்மை' எனும் கோட்பாடாகும். இந்த உலகம் கடவுளால் படைக்கப் பட்டது; அது என்றென்றைக்கும் நிலை பெற்றிருப்பது (நிற்றியமானது) என்னும் கடவுள் கோட்பாட்டிற்கு மாறாக, இந்தப் பேரண்டத்திற்கு ஒரு தோற்றம் இருப்பதைப் போலவே ஒரு முடிவும் இருக்கும் எனக் கூறியதால் இன்மைக் கோட்பாடு பொருள்களின் இலக்கணங்களுள் ஒன்றாக – இன்றியமையாத ஒன்றாகக் கருதப்பட்டது. இந்தியச் சிந்தனை மரபில் இன்மையைப் பொருள் கூறு ஏழனுள் ஒன்றாக வைத்து விளக்கியவர் பக்குடுக்கை நன்கணியார் என்பது அறிஞர்களின் கருத்தாகும். சங்கப் புலவராகிய இவரின் பாடல் புறநானூற்றில் ஒன்றே ஒன்றுதான் (புறம் 194) இடம் பெற்றுள்ளது. ஆயினும் அப்பாடலே இந்திய மெய்யியலில் எண்ணியக் கோட்பாட்டின் கடவுள் மறுப்பிற்கும், ஆசீவகத்தின் கடவுள் மறுப்பிற்கும் எடுத்துக்காட்டாய்க் காட்டப்படுவதாகும். ஆசீவகம், சைனம், பௌத்தம் ஆகிய சமயங்கள் தோற்றம் கொள்வதற்கு முன்னர் வைதிகக் கருத்துகளை எதிர்த்தும் மறுத்தும் பணியாற்றிய சங்கங்களில், பக்குடுக்கை நன்கணியாரின் சங்கமே மிகப் பெரியதும், இந்தியத் துணைக் கண்டம் முழுவதும் அதிகச் செல்வாக்கைக் கொண்டிருந்ததும் ஆகும். பாலி மொழியில் இவர் 'பக்குடர்' எனவும், 'பக்குடக் காச்சாயனா' எனவும் *பக்குடுக்கைக் காச்சாயனா' எனவும், 'கணியாரா' எனவும் குறிக்கப்பட்டுள்ளார். 'பொருள்களின் இயல்பை – அணுவியலை அடிப்படையாகக் கொண்ட இவரின் கோட்பாட்டை.

"சாமண்ண பால சூக்தம் குறிப்பதுபோல் பக்குடரின் கோட்பாடு நிலம், நீர், தீ, வளி, உயிர், இன்பம், துன்பம் ஆகிய ஏழு பொருள்களாகும். மற்கலிகோசாலரின் (ஐயனார்) ஊழியலின் ஒரு பகுதியாகப் பக்குடரின் கொள்கை இருப்பதாக மச்சிம நிகாயம் குறிப்பிடுகிறது. சாமண்ண பாலசூக்தத்தின் சீனப் பதிப்போ பக்குடரையும் ஊழியலுக்குரியவராகவே குறித்துள்ளது. ஆனால் இவரது கொள்கைகள் தனித்தன்மை வாய்ந்தனவும், இந்திய அணுக்கோட்பாட்டில் மிகவும் தொன்மை சான்றது என்பதும் தெளிவு" என விளக்குவார் ஏ.எல். பாசாம். இத்தகைய பேறிஞர் தம் கோட்பாட்டை ஆசீவக (Ajivika)த்துடன் இணைத்தது ஒரு வரலாற்றுத் திருப்பம்.

**ஏழு பொருள்கள்**

பக்குடுக்கை நன்கணியாரின் அணுக்கொள்கையே கணி ஆதன் (கணி + ஆதன் = கணியாதன் > கணாதன் – கணாதர்) எனும் தமிழ் அறிவரால் சிறப்பியமாக வளர்த்தெடுக்கப்பட்டது. இதனை,

"பக்குடுக்கை நன்கணியாரின் ஒருமையியம் (அந்நியோன்னிய வாதம்) வைசேடிக தரிசனத்தோடு ஒப்புமை உடையது. ஆனால் அவருடைய ஏழு பொருள்களுக்கும் வைசேடிகர்கள் கூறும் ஏழு பொருள்களுக்கும் ஒற்றுமை மிகக் குறைவு. நன்கணியாரின் (காச்சாயனரின்) சிரமணச் சங்கம் மிகப் பெரியதாக இருந்தது; ஆயினும் அவரின் பரம்பரை நிலைக்கவில்லை. பிற்காலத்திய வைசேடிக தரிசனம் அவரது தத்துவ ஞானத்திலிருந்தே தோன்றியதாக இருக்க வேண்டும்" எனும் தருமானந்த கோசாம்பியின் கூற்றால் தெளியலாம்.

பக்குடுக்கை நன்கணியாரின் அணுக்கொள்கையே கணிஆதனால் சிறப்பியமாகக் கிளைத்தது என்றால் பக்குடுக்கையார் விளக்கிய ஏழு பொருள்களுக்கும் – கணி ஆதனின் ஏழு பொருள்களுக்கும் எப்படி உறவில்லாமல் போகும்? மேலும் கணிஆதனின் சிறப்பியம் கூறும் ஏழு பொருள்களையும் பௌத்த இலக்கியமாகிய மணிமேகலையோ, சைன நூலாகிய நீலகேசியோ, சமற்கிருத

மொழியின் வட மரபு அல்லது புதிய மரபைக் குறிப்பிடும் தருக்க நூல்களோ ஏற்றுக் கொள்ளவில்லை. மாறாகத் தமிழ் மரபில் மட்டுமே பொருள்களை ஏழாக வகைப்படுத்தும் மரபு இருந்துள்ளது. இத் தமிழ் மரபைத் 'தருக்க பரிபாடை' எனும் வடமொழி தருக்கவியல் நூலின் ஆசிரியர் கேசவமிஸ்ரா 'பழமரபு' என்றும், 'தருக்க சங்கிரகம்' எனும் வடமொழி நூலை இயற்றிய அன்னம் பட்டர், 'தென்மரபு' அதாவது தமிழ் மரபு என்றும் குறித்துள்ளனர். இதனால் பொருள்களை ஏழாக வகைப்படுத்திய முறை தமிழில் மட்டுமே இருந்துள்ளது என்பதும் அதுவும் மிகவும் தொன்றுதொட்டே இருந்து வந்துள்ளது என்பதும் தெளிவாகும். அப்படியானால் அந்த ஏழு பொருள்கள் யாவை?

### அகத்தியத் தருக்க நூற்பா

தமிழரின் அறிவு மரபு எத்தகு செறிவானது என்பதற்கும், அம் மரபு எப்படி மாற்றாரால் சிதைக்கப்பட்டது என்பதற்கும் ஒரே சான்றாக விளங்குவது அகத்தியத் தருக்க நூற்பாக்கள் ஆகும். 20 நூற்பாக்கள் அடங்கிய அகத்தியத் தருக்க நூற்பாக்களை இயற்றியவர் யாரெனத் தெரியவில்லை. இதில் உள்ள முதல் ஏழு நூற்பாக்களுக்கு மட்டும் எழுதிய உரையே இந்தியத் தருக்கவியல் வரலாற்றில் சிறப்பானதோர் இடத்தைப் பெற்றுள்ள அன்னம்பட்டரின் 'தருக்க சங்கிரகம்' ஆகும். மிகச் சிறிய நூலான இதற்கு 35க்கும் மேற்பட்ட உரைகள் உள்ளன என்பதால் அந்நூலின் பெருமையை அறியலாம். இந்த 20 நூற்பாக்களும் கோ. வடிவேலு செட்டியார் தமிழாக்கம் செய்து வெளியிட்ட 'தருக்க பரிபாடை' என்னும் நூலின் தொடக்கத்தில் இடம் பெற்றிருந்தன. இதனைப் பாவாணர் தம் 'ஒப்பியன்மொழி நூலில்' அடையாளம் காட்டிய பின்னரே தமிழுலகு அறியத் தொடங்கியது. அகத்தியத் தருக்க நூற்பாக்களில் பொருள்களின் இலக்கணத்தை வரையறை செய்யும் முதல் நூற்பா,

'பொருள்குணங் கருமம் பொதுச்சிறப் பொற்றுமை
யின்மையுடன் பொருளேழென மொழிப'

என்பதாகும். இந் நூற்பாவின் பொருள்,

ஒவ்வொரு வடிவுடைய பொருளும் ஏழு உட்கூறுகளைக் கொண்டுள்ளது. அவை,

- ★ பொருண்மைத் தன்மையைக் கொண்டிருத்தல் (பொருள்)
- ★ பண்புகளைப் பெற்றிருத்தல் (குணம்)
- ★ செயல்களுக்கு – புடைபெயர்ச்சிக்குத் – தகுதி உடைத்தாதல் (கருமம்)
- ★ பொது இயல்புகளைக் கொண்டிருத்தல் (பொது)
- ★ தனக்கென்று தனித்த இயல்புகளையும் பெற்றிருத்தல் (சிறப்பு)
- ★ ஒன்றிணைந்த தன்மையைக் கொண்டிருத்தல் (ஒற்றுமை)
- ★ ஒன்று மற்றொன்றாகும் திரிபாக்கத்திற்குக் (Evolution) காரணமாதல் – அதாவது இன்மைக்கும் காரணமாய் இருப்பது எதுவோ அது பொருளாகும் (இன்மை)

என்பவையாகும்.

தமிழ் அறிவு மரபில் இன்மையுடன் பொருள்களை ஏழாக வரையறை செய்திருக்கும்போது பௌத்த, சைன, வைதிக நூல்கள் இன்மையை – திரிபாக்கத்திற்குக் காரணமாகிய ஓர் அடிப்படைப் பண்பை – ஏன் புறக்கணித்தன? இக் கேள்வி மிகவும் நுட்பமானதாகும்.

### இன்மை

இருக்கும் ஒரு பொருள் இல்லாமற் போவதே இன்மையாகும். ஒரு மரம் – விலங்கு – மனிதன் என எந்த ஒன்றையும் இதற்குச் சான்றாகக் காணலாம். இன்றைக்கு நிழல் தந்து கொண்டிருக்கும் ஒரு மரம் – பால் தந்து கொண்டிருக்கும் ஒரு பசு, வாழ்ந்து கொண்டிருக்கும் ஒரு மனிதன் – நாளை இல்லாமற் போகலாம். இந்த விதி உயிரினங்களுக்கு மட்டுமல்ல; இந்த உலகிற்கும் ஏன், இப் பேரண்டத்திற்கும் கூடப் பொருந்தும். ஞாயிற்றின் ஒளி இன்னும் 500 கோடி ஆண்டுகளுக்கு மட்டுமே கிடைக்கும் என்ற அறிவியல் கூற்று ஞாயிற்றுக்கும் ஒரு முடிவு இருப்பதை உணர்த்தவில்லையா? அவ்வாறே தோன்றும் பொருள் – அது எதுவானாலும் மறைந்து இல்லாமற் போகும் என்பதே அவ் 'இன்மையின்' அறிவியல் பாடம்.

'இவ்வுலகும் பேரண்டமும், உயிர்களும் யாராலும் படைக்கப்பட்டவை அல்ல' என்பதையும், அவை ஒன்றிலிருந்து ஒன்று எனப் புதிதாய்த் தோன்றியும் கிளைத்தும் செறிந்தன என்னும் திரிபாக்க முறைகளை விளக்கப் பொருள்முதல் கோட்பாட்டினரான அறிஞர் களுக்குக் கைவிளக்காய் அமைந்ததே இன்மையாகும். இவ் இன்மையை, முன்னின்மை, பின்னின்மை, முற்றுமின்மை, ஒன்றில் ஒன்றின்மை என நான்காக வகைப்படுத்துவர். அகத்தியத் தருக்க நூற்பா இதனை,

'முன்னின்மை பின்னின்மை முற்று மின்மை
யொன்றினொன் றின்மையென் றின்மை நான்கே'

என விளக்கும். இவ் இன்மையை வட மொழியாளர் அபாவம் என்பர். தண்டி அலங்காரம் இதனை 'அபாவ அணி' என அணி இலக்கணமாக விளக்கும்.

### முன்னின்மை

ஒரு மட்குடத்தை எடுத்துக்கொள்வோம். மண்ணிலிருந்துதான் குடம் வனையப்படுகிறது. என்றாலும் மண்ணை நீர்விட்டுக் குழைத்து வைத்துள்ள நிலையில் குடம் இல்லை. குடம் வனையப்படுவதற்கு முன் குடம் இல்லாத நிலையே முன்னின்மையாகும். அணுச் செறிவால் பூதங்களும், பூதங்களின் கலப்பால் மலை, மரம் முதலானவை தோன்றுவதற்கும் இந்த விதி பொருந்தும். ஒன்றிலிருந்து ஒன்று கிளைக்கும் திரிபாக்கத்தின் (Evolution) முதல் நிலையே முன் இன்மையாகும்.

### பின்னின்மை

மண்ணால் வனையப்பட்ட குடத்தை ஒருவன் தடியால் அடித்தோ, கைதவறி கீழே போட்டோ உடைத்து விடுவதாக

வைத்துக் கொள்வோம். அப்போது குடம் என்பதே இல்லாமல் போய்விடும். வெறும் ஓடாகத்தான் அது காட்சியளிக்கும். இவ்வாறு குடம் குடமாக இல்லாத நிலைதான் பின்னின்மையாகும். அணுக்களின் – பூதங்களின் – சேர்க்கையால் உருவான இப் பேரண்டம், கருந்துளைக்குள் (Black Hole) மோதி இல்லாமல் போய்விடும். இந்த அண்டவியலை விளக்குவதால் இப் பின்னின்மை கடவுள் மறுப்பிற்கும் அடிப்படையாகும்.

**முற்றும் இன்மை**

ஒரு பொருளின் நிலைத்த தன்மை அப்பொருளின் இயல்பிற்கும் எடுத்துக்காட்டாகும். அதேவேளை வேறொரு பொருளோடுள்ள முரண்பட்ட தன்மைக்கும் அது எடுத்துக்காட்டாகும். ஒரு பொருளின் இந்த முரண்பட்ட இயல்பே அதாவது எதிர்மறைப் பண்பே முற்றும் இன்மையாகும். சான்றாகத் தண்ணீரை எடுத்துக் கொள்வோம். குளிர்ச்சியும், நீர்மையும், நீரின் நிலைத்த பண்புகள். அதேபோல் நெருப்பை அணைக்கும் தன்மையும் அதன் நிலைத்த பண்புதான். கொதிக்கும் நீர், தீக்காயம் போலப் புண்களை உண்டாக்கவல்லது. நெருப்பைப் போலக் கொதித்தாலும் அந்த வெந்நீரை நெருப்பில் ஊற்றினால் நெருப்பு அணையுமே தவிர எரியாது. தண்ணீரை எவ்வளவுதான் கொதிக்க வைத்தாலும் நெருப்பை அணைக்கப் பயன்படுமே தவிர நெருப்பை எரிக்கப் பயன்படாது. இவ்வாறு நெருப்பை எரிக்கப் பயன்படாத எதிர்மறைத் தன்மையானது நீரின் நிலைத்த தன்மையுமாகும். அதாவது நெருப்பை எரிக்கத் துணைபோகாத நீரின் இயல்பே முற்றும் இன்மையாகும். இப்பண்பு நீரில் அமைந்த நிலைத்த பண்பாகலின் இதனை நிற்றியம் என்றனர்.

**ஒன்றில் ஒன்றின்மை**

ஒரு பொருளில் வேறு ஒரு பொருளின் பண்புக் கூறுகள் இல்லாதிருத்தலே 'ஒன்றில் ஒன்றின்மை' என்பதாகும். 'அவரையைப் போட்டால் துவரையா முளைக்கும்?' எனும் பழமொழி இக்கருத்தினை விளக்க வந்ததாகும். மண்ணிலிருந்து நூலையோ, நூலிலிருந்து குடத்தையோ செய்ய முடியாது என்பதும் இதற்கான எடுத்துக்காட்டாகும். அண்டவெளியில் உள்ள ஒவ்வொரு கோளும் ஒவ்வொரு வகை. 'ஒன்றை ஒன்று சேராது; ஒன்றை ஒன்று பார்க்காது' எனக் கூறுவதெல்லாம் ஒன்றில் ஒன்றின்மை என்பதன் அடையாளமாகும்.

'அகத்தியத் தருக்க நூற்பா' விளக்கும் அனைத்துக் கருத்துகளும் பொருள்களுக்குரிய ஏழு பண்புகளை – பொருள் தன்மைகளை – அடிப்படையாய்க் கொண்டவை. இக் கோட்பாடே சிறப்பியமாக வடிவம் கொண்டது. கணி ஆதன் உருவாக்கியதாகக் கூறப்படும் சிறப்பியம் பக்குடுக்கையாரின் ஏழு பொருள்களை அடிப்படையாகக் கொண்டது என்பதால், பக்குடுக்கையார் விளக்கிய அவ் ஏழு பொருள்களே,

> **'பொருள்குணம் கருமம் பொதுச்சிறப் பொற்றுமை**
> **இன்மை யுடன்பொரு ளேழென மொழிப'**

எனும் நூற்பாவாக வடிவம் கொண்டது என்பது உறுதி. இவ் இன்மை, தொல்காப்பியராலும் சுட்டப் பெற்றுள்ளது என்பது இதன் தொன்மைக்கும் சிறப்பிற்கும் எடுத்துக்காட்டாகும். அதனுடன் தமிழ் மரபுக்கே உரிய பெருமையைக் கொண்டதும் இக்கோட்பாடாகும். கிரேக்க மெய்யியலிலும் 'இன்மை'க்குத் தனித்த இடம் உண்டு. கிரேக்க மெய்யியலில் இக்கோட்பாட்டை விளக்கியவர்கள் டெமாக்கிரட்டசும் எம்பிடாக்கிள்சும் ஆவர். 'டெமாக்கிரட்டசு இந்தியா வந்து இங்குள்ள யோகிகளிடம் அணுவியலைக் கற்றுச் சென்றார்' என்பதைக் காரல்மார்க்சு தம் முனைவர் பட்ட ஆய்வேட்டில் உறுதி செய்வார். எம்பிடாக்கிள்சுக்கும் பக்குடுக்கை நன்கணியாருக்கும் உள்ள ஒற்றுமையை அறிஞர் பருவா விளக்குவார். எண்ணியக் கோட்பாட்டில் அணுக்களின் சேர்க்கையை 'இன்பம்' என்றும் பிரிதலைத் 'துன்பம்' என்றும் குறிப்பர். இங்கு இடம்பெற்றுள்ள 'இன்பம் – துன்பம்' இரண்டும் அறிவியல் கலைச்சொற்கள் ஆகும். இவ் இன்பத்தையும் துன்பத்தையும் அதே பொருளில் எம்பிடாக்கிள்சு Love, Strife எனக் குறித்துள்ளார். எம்பிடாக்கிள்சின் காலம் கி.மு. 692–632 ஆகும். இவர் பக்குடுக்கை நன்கணியாரைவிட காலத்தால் பிற்பட்டவராவார். இக்காரணங்களால் கிரேக்க மெய்யியலில் இடம் பெற்றுள்ள "இன்மை", தமிழக அறிவு மரபின் கொடை என்பது விளங்கும்.

இந்திய மெய்யியல் வரலாற்றில் இன்மை பற்றிய கருத்து தென்னக மரபிற்கு மட்டுமே உரியது என்பதாலும், இது மிகவும் தொன்மையான மரபு என்று கூறப்படுவதாலும், சைன, பௌத்த, வைதிக மரபுகள் இன்மையை ஏற்றுக் கொள்ளாததாலும் இவ் இன்மை சார்ந்த அணுக் கோட்பாடுகள் யாவும் தமிழர்களுக்கு மட்டுமே உரியவை என்பது தெளிவாகும்.

'இவ் இன்மையை உள்ளடக்கிய பொருள் திணைகள் ஏழு' என்னும் வகைப்பாடு பக்குடுக்கை நன்கணியாருக்கு உரியது; இவர் பாடிய,

> **'ஓரில் நெய்தல் கறங்க'** ...............

எனத் தொடங்கும் புறப்பாடல், கடவுள் மறுப்பின் பிழிவாக அமைந்தது. இவற்றால் இந்தியச் சிந்தனை மரபில் பொருள்முதல் கோட்பாடு எனப்படும் இவ் அறிவியல் கூறுகள் யாவும் தமிழகத்தில் விளைந்து செழித்தவை என்பது தெளிவு. தமிழ் அறிவு மரபின் நுட்பத்தை நடுவு நிலையோடு ஆராய்ந்தால் வியக்கத்தக்க பல முடிவுகளை எட்டலாம். அத் திசைநோக்கி அறிஞர்கள் பயணம் மேற்கொள்வார்களாக. ❖

# அற்றம் காக்கும் கருவி

காரைக்குடி லெ. நாராயணசாமி



மாந்தரின் வாழ்க்கை இடையறாது அறிவு வழிப்பட்டே இயங்குகிறது. அறிவு என்பது என்ன? சந்திர மண்டலத்து இயல் கண்டு தெளிவதா? செயற்கைக் கோள்களால் செப்பரிய விந்தைகள் புரிவதா? இந்த அறிவு மாந்தனுக்கு எங்கிருந்து கிடைக்கிறது? அறிவு வேறு – பகுத்தறிவு வேறா? – அறிவைப் பற்றி அறிந்து கொள்ளவே நாம் இவ்வளவு சிந்திக்க வேண்டியுள்ளது.

'அறி' என்ற சொல், 'அறிந்துகொள்', 'தெரிந்துகொள்', 'உணர்ந்துகொள்' எனும் பொருள்களை யுடையது. அறிவு என்பதே அறிவதற்குக் கருவியாகிறது; புலன்கள் புலனாய்வு செய்தளித்த முடிவாகிறது; எண்ணத்தால் எய்தும் பயனாகிறது; சிந்தனையின் தெளிவாகிறது; ஆய்வின் முடிவாகிறது. இத்தகைய அறிவையும் பகுத்தறிவையும் தந்தை பெரியார், "உயிர்ப் பிராணிகளின் சிந்தனைச் சக்தியும், சிந்திப்பின் உணர்ச்சியும்தான் அறிவு என்று சொல்லப்படுகின்றது. அது சிந்திக்கும் தன்மையின் கூர்மையைப் பகுத்தறிவு என்று சொல்லலாம்" எனத் தெளிவுபடுத்துகிறார். மேலும் "பகுத்தறிவு என்பதைப் பெரிதும் மனிதனுடைய சிந்திக்கும் தன்மைக்கும், சிந்திப்பின் கூர்மைக்குமே குறிப்பிட்டுச் சொல்லப்படுகின்றது. மனிதனுடைய எந்தச் சக்தியைக் காட்டிலும், பகுத்தறியும் சக்திதான் அவனை மற்ற எல்லா உயிர்களினின்றும் மேம்பட்டவனாக்கி வைக்கிறது" என்கிறார். சிந்திக்கும் ஆற்றலும் – தன்மையும் 'அறிவு' என்றால், அதனைக் கூர்மைத் திறனோடு முறையாகப் பயன்படுத்தும்போதுதான் அது பகுத்தறிவாக மலர்கிறது.

அறிவின் திறம் கொண்டு அவனியைப் புரிந்து கொள்வதும், அனைவரும் புரிந்து கொள்ளக்கூடிய முடிவுகளைக் கண்டறிவதும் பகுத்தறிவின் ஆற்றலால் மட்டுமே இயலும். பகுத்தறிவைப் பயன்படுத்தும் அளவுக்கேற்பவே மனிதத் தன்மையின் வளர்ச்சியும் அமையும்.

சமயங்களைக் கடந்த சிந்தனையாளரான வள்ளுவப் பெருந்தகை, 'அறிவு', 'உண்மை அறிவு', 'ஒட்பம்', 'மதிநலம்', 'மதிநுட்பம்', 'நுண்பொருள் காணும் அறிவு', 'நூலறிவு', 'ஆயும் அறிவு', 'மெய்ப்பொருள் காணும் அறிவு', 'செம்பொருள் காணும் அறிவு' எனப் பல பகுப்புகளில் அறிவைப் பற்றிப் பேசுகின்றார். இத்தகைய அறிவு மனிதனுக்கு எவ்வகையில் கிட்டுமென்றால் அவன் சார்ந்திருக்கும் சமுதாயத்திலிருந்தே கிடைக்கும் என்கிறார் வள்ளுவர்.

**மனத்து உளதுபோலக் காட்டி ஒருவற்கு**
**இனத்துளது ஆகும் அறிவு.**

இங்கே 'இனம்' என்பது 'சாதி'யைக் குறிக்கும் குறும்பொருள் கொண்டதன்று. சாதி, சமயம் கடந்த மனிதப் பேரினத்தைக் குறிப்பதாகும். சமுதாயத்தில் முன்னேறத் தடைபோடும் மூடநம்பிக்கைகள் இருக்குமாயின் அவை தனிமனிதனின் அறிவையும் செயலிழக்கச் செய்கின்றன. அவன் அறிவும் மயங்குகிறது, நிலத்தின் இயல்பிற்கேற்ப நீரின் தன்மை மாறுவதைப் போலத் தெளிந்த நெறியில் செல்ல வேண்டிய அறிவு தடுமாற்றம் உறுகிறது. அறிவைக் கொடுக்கும் சமுதாயமே, அறிவைக் கெடுக்கவும் வல்லது என்பதை உணர்ந்த வள்ளுவர் மனிதனை இந்த இடர்ப்பாட்டிலிருந்து காப்பாற்றப் பல வழிகளைக் காட்டுகிறார். தான் பெற்ற அறிவை மனிதன் கூர்மையாக்கிக் கொள்வதே சிறந்த வழி என்பது வள்ளுவர் ஆய்ந்துரைத்த வழி.

**எப்பொருள் யார்யார் வாய்க்கேட்பினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்பது அறிவு.**
**சென்ற விடத்தால் செலவிடாது தீதுஒரீஇ**
**நன்றின்பால் உய்ப்பது அறிவு.**

என்கிறார். திருவள்ளுவர் குறிப்பிடும் அறிவை இன்றைய நிலையில் கல்வி அறிவிலோ, பட்டறிவிலோ அடக்கிவிட முடியாது. இவற்றைக் கடந்து மக்கட் பண்பு, நல்லவைபால் செலுத்தும் தன்மை, மற்றவர் துன்பத்தையும் தன் துன்பமாக எண்ணும் உணர்வு, பிறர் பொருளுக்கு ஆசைப்படாத இயல்பு, எதிலும் நுட்பம் கண்டறியும் திறன், குற்றம் செய்யாத தன்மை, அஞ்சுவதற்கு அஞ்சல், வருவதையும் இனி ஆவதையும் உய்த்து உணரும் ஆற்றல், பகுத்தறியும் சிந்தனைக் கூர்மை, புல்லறிவாண்மையின்மை போன்ற பேரெல்லைகளைக் கொண்டது.

ஒரு மனிதன் தான் வாழும் சமுதாயத்திலிருந்து பெறும் இயல்பான அறிவால் மட்டுமே இப் பேரெல்லைகளைத் தொட்டுவிட முடியாது. தான் பெற்ற அறிவைக் கூர்மையாக்கும்போதுதான் இவற்றையும் பெற இயலும். எளிய அறிவு வழிப்படும் மனிதன் குற்றங்களுக்கு ஆட் படுவது இயல்பு. எத்துணைதான் ஆற்றல் பெற்றிருந்தாலும் அறிவைக் கூர்மையாக்கிக் கொள்ளாவிடில் பெற்றதை இழக்கவும் நேரிடும். எனவே, கூர்மையாக்கிக்கொண்ட அறிவே மனிதனைக் குற்றங்களிலிருந்து காக்கும் கருவியாகிறது. பகைவர் உட்புகுந்து அழிக்க முடியாத மனிதனுக்குள்ளே அமைந்த அரணாகிறது.

**அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்**
**என்னுடைய ரேனும் இலர்.**
**அறிவுஅற்றங் காக்கும் கருவி செறுவார்க்கும்**
**உள்ளழிக்கல் ஆகா அரண்.**

சமுதாயத்திலிருந்து நாம் பெறும் அறிவைக் கூர்மையாக்கிப் பகுத்தறிவாக மலரச் செய்வதும், அதன் வழி உலகுய்யச் செய் வதும் வள்ளுவச் சான்றோர் நமக்கிட்ட கட்டளைகளாகின்றன.

❖

# பாட்டும் படமும்

"எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது
தான்அமர்ந்து வரூஉம் மேவற் றாகும்"

– தொல்காப்பியம்

(பொருள் : நூற்பா – 27)

தொட்டும் துவண்டும்
பட்டும் படர்ந்தும்
விட்டும் தொடர்ந்தும்
இன்பம் என்பது
உயிரை உயிர்ப்பதா?
இந்த
உலகம் என்பதே
இன்பம் வளர்த்ததா?

மெல்விரல் சிவப்பப் பல்வேறு பசுங்காய்
கொடுவாய்க் குயத்து விடுவாய் செய்யத்
திருமுகம் வியர்த்தது; செங்கண் சேந்தன;
கரிபுற அட்டில் கண்டனள் பெயர
வைஎரி மூட்டிய ஐயை தன்னொடு
கையறி மடை மையிற் காதலற்கு ஆக்கித்...

– சிலப்பதிகாரம்

(கொலைக்களக் காதை : 29–34)

நெடு நாளாயிற்றே
கணவனுக்குச் சோறாக்கி...
கண்ணகி சமைக்கிறாள்...
காலம் அவளைக்
கற்புக் கடம்பூண்ட
பொற்புடைத் தெய்வமாய்ச்
சமைத்துக் கொண்டிருந்தது...

“சிறப்புடைக் கம்மியர் தம்மொடும் சென்று
மேலோர் விழையு நூல்நெறி மாக்கள்
பால்பெற வகுத்த பத்தினிக் கோட்டத்து
இமையவர் உறையும் இமையச் செவ்வரைச்
சிமையச் சென்னித் தெய்வம் பரசிக்
கைவினை முற்றிய தெய்வப் படிமத்து
வித்தகர் இயற்றிய விளங்கிய கோலத்து
முற்றிழை நன்கலம் முழுவதும் பூட்டிப்
பூப்பலி செய்து காப்புக்கடை நிறுத்தி”

– சிலப்பதிகாரம்

(நடுகற்காதை : 223–231)

கனக விசயரைக்
கல்சுமக்க வைத்து
வீரமானம் சுமந்தான்
சேரன் செங்குட்டுவன்
கால்கோள் நடாத்தக்
கண்ணகியின் சிலையுடன்
மன்னனைச் சுமக்கும்
வேழப் பெருமிதம்.

“ ‘ஊனுடை மாக்கட்கு உயிர்மருந்து’ இதுவென
‘யான் செயற் பாலதென் இளங்கொடிக்கு’ என்று
வேந்தன் கூற மெல்லியல் உரைக்கும் –
‘சிறையோர் கோட்டம் சீத்துஅருள் நெஞ்சத்து
அறவோர்க் காக்கும் அதுவா ழியரென’
அருஞ்சிறை விட்டாங்கு ஆயிழை உரைத்த
பெருந்தவர் தம்மால் பெரும்பொருள் எய்தக்,
கறையோர் இல்லாச் சிறையோர் கோட்டம்
அறவோர்க்கு ஆக்கினன் அரசாள் வேந்தென்” –

– மணிமேகலை ;

(சிறைக்கோட்டம் ... 154–162)

மாற்றுத் திறனாளிகளின்
பசிப்பிணி போக்கிய
மணிமேகலையைக்
கொற்றவன் அழைத்தான்
“யான்செய் கடமை யாதென”க் கேட்டான்
“சிறைக் கோட்டத்தை
அறக்கோட்டமாய் ஆக்குக” என்றே
செப்பினள் இளங்கொடி
சீத்தலைச் சாத்தனார் செந்தமிழ் நூற்படி

"முதிர்காய் வள்ளிஅம் காடு பிறக்குஒழிய,
துனைபரி துரக்கும் செலவினர்
வினைவிளங்கு நெடுந்தேர் பூண்ட மாவே."

– முல்லைப் பாட்டு : 101–103

என் முகம்
அவர் நினைவில்....
இனி என்னைக் காணாமல்
அவர் மனம் ஓயாது...
ஆனால்
காற்றாய்ப் பறப்பினும்
கடுகி ஓடினும்
இந்தக் குதிரைகளின் வேகம்
இதற்குப் போதாது!

"வான்மு கந்த நீர்மலைப் பொழியவும்,
மலைப்பொ ழிந்த நீர்கடல் பரப்பவும்,
மாரி பெய்யும் பருவம் போல
நீரி னின்றும் நிலத்து ஏற்றவும்,
நிலத்தி னின்று நீர்ப்பரப்பவும்"

– பட்டினப்பாலை : 126–130

நண்டு நல்லிறால் நயந்திடு கடலிடைச்
சென்று திரும்பிய கலங்கள்....
விலைகொளக் கண்டோர் வாங்கிக்
களிப்புறப் பல்பொருள்
ஏற்றவும் இறக்கவும்
எண்ணிலா ஏவலர்
காவிரிப் பூம்பட்டினப் பெருமைக்குக்
கடியலூர்ப் பெருங்கவி புனைந்த
பொன் வரிகளே!

"............... ஒன்றிய
கேளிர் போல, கேள்கொளல் வேண்டி,
வேளாண் வாயில் வேட்பக் கூறி,
கண்ணில் காண நண்ணுவழி இரீஇ,
பருகு அன்ன அருகா நோக்கமோடு,
உருகு பவைபோல் என்பு, குளிர்கொளீஇ,
ஈரும் பேனும் இருந்து இறைகூடி,
வேரொடு நனைந்து, வேற்றுஇழை நுழைந்த
துன்னற் சிதாஅர் துவர நீக்கி,
நோக்கு நுழைகல்லா நுண்மைய, பூக்கனிந்து
அரவுஉரி அன்ன, அறுவை நல்கி...."

– பொருநராற்றுப்படை : 74–83

அண்மையில் அமர்த்தி
அகம்குளிர முகம்நோக்கி
உண்மையன்பில் உளமுருகிப்
பாம்புத் தோலனைய பட்டுடையும்
பசிப்பிணி போக்கிட உணவும்
வாரி வழங்கிய
கரிகால் பெருவளத்தான்
நிதியளித்து நித்தமும்
புலவர் துயர்துடைக்கும்
மழை மனத்தான்....

நாள்மகிழ் இருக்கை காண்மார், பூணொடு
தெள்அரிப் பொற்சிலம்பு ஒலிப்ப, ஒள்அழல்
தாஅற விளங்கிய ஆய்பொன் அவிர்இழை
அணங்கு வீழ்வுஅன்ன பூந்தொடி மகளிர்
மணம்கமழ் நாற்றம் தெருவுடன் கமழ,
ஒண்குழை திகழும் ஒளிகெழு திருமுகம்
திண்காழ் ஏற்ற வியல்இரு விலோதம்
தெண்கடல் திரையின், அசைவளி புடைப்ப
நிரைநிலை மாடத்து அரமியம் தோறும்
மழைமாய் மதியின் தோன்றுபு மறைய

– மதுரைக் காஞ்சி : 443–452

மாடங்கள்,வீதிகள்
மற்றுள இடத்தி லெல்லாம்
மங்கையர்.. மங்கையர்..
வழிபடச் செல்கிறார்
வழியெலாம் மணக்குதங்கே...
விழிபடும் இடத்திலெல்லாம்
விளைவுகள் என்னவாகும்?
கொடி சொல்கிறது...
“ஒரே இடத்தில்
நின்று காணமுடியவில்லை
என்னை
அசைத்துக் கொண்டே இருக்கிறது
காற்று!”

நீள்அரை இலவத்து அலங்கு சினை பயந்த
பூளைஅம் பசுங்காய் புடைவிரிந் தன்ன
வரிப்புற அணிலொடு, கருப்பை ஆடாது,
யாற்றுஅறல் புரையும் வெரிநுடைக் கொழுமடல்,
வேற்றலை அன்ன வைந்நுதி, நெடுந்தகர்,
ஈத்துஇலை வேய்ந்த எய்ப்புறக் குரம்பை.

– பெரும்பாணாற்றுப்படை : 83–88

பஞ்சும் பச்சையுமாய்
வெடித்த இலவங்காயென
அணில் முதுகின் கோடுகள்
அலைந்து அலைந்து
வளைந்து வளைந்து நின்ற
ஆற்று மணலாய்க்
குடிசையின் கூரை;
கூரையின் ஈந்தில்
வேலின் கூர்மை
எய்ப்பன்றியின் முதுகென
எழில்காட்டும் எயிற்றியர் குடிசை
உருத்திரங் கண்ணனார்
உரைத்த நல்லோவியம்.....

"கொடிபாடித் தேர்பாடிக்
கொய்தண்தார் மாறன்
முடிபாடி முத்தாரம்
பாடித் – தொடியுலக்கை
கைம்மனையில் ஓச்சப்
பெறுவெனோ? யானும்ஓர்
அம்மனைக் காவல் உளேன்."

– முத்தொள்ளாயிரம் : 69

மாமன்னன் பாண்டியனின்
புகழ்பாட வேண்டும்
மனம்போல அவனழகைக்
கொண்டாட வேண்டும்
குத்துலக்கைக் கையேந்திக்
குதித்தாட வேண்டும்
மொத்தத்தில் சத்தமிட்டுச்
சதிராடவேண்டும்....
அடியேய்... கட்டுப்படுத்தடி உன்னை
அங்கே பார்: காவலுக்கு அன்னை!

வட்டமாய்க் கட்டில் வைத்து
  வாட்டத்தில் இவளை வைத்து
தொட்டவன் சென்ற நாளாய்த்
  தொடியிழை துயின்றா ளில்லை
பட்டுடன் மணியும் பொன்னும்
  பாலுடன் தேனும் பாகும்
எட்டியாய் மாறும் காலம்
  எழிலெலாம் கலையும் கோலம்!

தனிமையாம் துன்பந் தன்னை
  தணிக்குமோ தோழிக் கூட்டம்?
இனியவன் இருந்தா லன்றி
  இனிக்குமோ பகலும் அல்லும்?
நுனிக்கரும் பான காதல்
  நுவன்றிடும் கண்கொண் டாளை
நினைத்துடன் தலைவன் வந்தால்
  நிச்சயம் பிழைப்பாள் நங்கை!

தோகைமயில் பேடையினை நெருங்கி – ஆடும்

தொல்தமிழர் தோன்றிவந்த குறிஞ்சி!

வாகைகண்ட மானிரண்டும் கொல்லை – மகிழும்

மலர்ந்துமணம் பரப்புகின்ற முல்லை!

தேகமெங்கும் வியர்வைமழை ஒழுகும் – உழவர்

தேய்ந்துழைத்தே உணவளிக்கும் மருதம்!

மேகமெங்கும் கதிரொளியைப் பெய்தல் – போற்றும்

மேன்மைமிக்க அலைதவழும் நெய்தல்!

# தந்தை பெரியாரும் திருக்குறளும்

**திரு. கி. வீரமணி**



தந்தை பெரியார் அவர்கள் ஓர் ஒப்பற்ற சுய சிந்தனையாளர்; ஈடு இணையற்ற முழு பகுத்தறிவுவாதி; தலைசிறந்த மனிதநேயப் பற்றாளர்.

தனக்கு எவ்விதப் ''பற்றும்'' கிடையாது; அறிவுப் பற்று, வளர்ச்சிப் பற்று என்ற மானிடப் பற்றுதான் என்று பலமுறை சொல்ல – எழுத, தவறாத தலைவர் ஆவார்!

உயர் எண்ணங்கள் மலரும் சோலையாம் அய்யா அவர்கள் திருக்குறளையே பெரிதும் விரும்பிய தமிழ் இலக்கிய நூலாக மதித்தார்; அதனைப் பரப்பிட ஆக்க ரீதியான அருந்தொண்டாற்றியதனால், அதன் அரிய பலனைத் தமிழ்கூறும் நல்லுலகம் அறுவடை செய்தது.

அறிவை விரிவு செய்து, அகண்டமாக்குவது மட்டும் போதாது; அதனை ஆழமான ஆய்வுக்குப் பயன்படுத்துவதும் மிக மிகத் தேவையாகும்.

திருவள்ளுவரின்,

**“எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்பது அறிவு.”** (குறள் 355)

**“எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்பது அறிவு.”** (குறள் 423)

மேலே காட்டிய இரண்டு குறள் வழிதான் தந்தை பெரியார் கண்ட சமூகப்புரட்சி இயக்கமான சுயமரியாதை இயக்கத்தினுடையது (Self-respect movement) ஆகும்.

மேற்காட்டிய இரு குறள்களும்கூட ஒரே அதிகாரத்தில் உள்ள குறள்கள் அல்ல!

முன்னது ‘மெய்யுணர்தல்’ என்ற அதிகாரத்திலும், பின்னது ‘அறிவுடைமை’ என்ற அதிகாரத்திலும் உள்ள குறள்கள்!

அறிவின் ஆற்றல், அறிவுச் செல்வம் என்று மதிக்கப்படல் வேண்டும் என்று கருதியதால்தான் இருவேறு நிலைகளில் இருவேறு குறள்களாக ஆக்கப்பட்டுத் தரப்பட்டுள்ளது.

ஒரு பொருளைத் தோற்றப் பொலிவு கண்டுமட்டும் எடை போட்டுவிடக் கூடாது; அது மயக்கம் தரும் என்பதனால்,

ஒரு பொருளைப்பற்றி எவர் எவர் என்ன என்ன சொல்லக் கேட்பினும், கேட்டதனை அப்படியே ஏற்றுக் கொள்ளக் கூடாது; ‘அதன் உண்மைப்பொருளை அறிவதே அறிவுடைமை’ என்று குறிப்பிடுகிறார்.

மதங்களும், வேத, புராண, சாத்திரங்களும் கேள்வி கேட்காமல் அப்படியே நம்புங்கள் என்று கட்டளை இடுபவை; இன்றேல் நீங்கள் நரகத்திற்குப் போவீர்கள் என அச்சுறுத்துபவை. அவற்றை மறுத்த வள்ளுவரின் துணிவின் வெளிப்பாடே மேற்காட்டிய இரண்டு குறட்பாக்களும்!

''அறிவினால் உய்த்துணர்ந்து ஒப்புக்கொள்ளக் கூடியனவும், இயற்கையொடு விஞ்ஞானத்துக்கு ஒப்ப இயைந்திருக்கக் கூடியனவுமான கருத்துகளையே கொண்டு இயக்குகிறது வள்ளுவர் குறள்'' என்பார் தந்தை பெரியார்!

மிகுந்த தன்னடக்கத்தொடு, பகுத்தறிவுப் பகலவன் தந்தை பெரியார் அவர்கள் மேலும் கூறுகிறார்கள்:

''என்னைப் பொறுத்தவரையில் திருக்குறளைச் சிறிதாவது ஆராய்ச்சி செய்தவன் என்று என்னால் கூறிக்கொள்ள முடியாவிட்டாலும், அதன் பொருளை நான் ஓரளவுக்காவது உணர்ந்திருக்கிறேன் என்பதனையும் அதன்மீது எனக்கு அளவற்ற பற்றுண்டு என்பதனையும் நான் தெரிவித்துக் கொள்கிறேன்;

''இராமாயணத்தில் 100 பாட்டும், பெரியபுராணத்தில் 200 பாட்டும் படிப்பதைக் காட்டிலும், திருக்குறளில் 10 பாட்டுப் படிப்பது எவ்வளவோ மேலாக இருக்கும்;

''திருவள்ளுவர் நூல் ஒன்றே போதும் இந்நாட்டு மக்களுக்கெல்லாம் அறிவை உண்டாக்க;

''நமக்கு வேண்டிய முழு அறிவையும் கொடுக்கக் கூடியதாக ஒரு நூல் வேண்டுமானால் அது திருக்குறள் தான் என்பதை நீங்கள் உணருங்கள்''

என்று கூறியிருக்கிறார்.

தனக்குத் திருக்குறளில் ஈடுபாடு உண்டாக்கிடப் பெரிதும் காரணம் ஆனவர் காலஞ்சென்ற பொறியாளர் பா.வே.மாணிக்க நாயக்கர் அவர்கள்தாம் என்று குறிப்பிடு கிறார்கள்.

(திரு பா.வே.மாணிக்க நாயக்கர் மிகப் பெரிய பொறியாளர்; இங்கிலாந்து சென்று படித்துத் திரும்பியவர் அக்காலத்தில்! மேட்டூர் அணைக்கான இடத்தைத் தேர்வு செய்ததில் இவர்தம் பங்கு பெரும்பங்கு. தமிழில் ஆராய்ச்சி அறிவு மிகுந்த ஆங்கிலப் புலமையாளர். தமிழ் வரிவடிவ ஆராய்ச்சியில் முன்னோடி; நீதிக்கட்சியின் மிகப் பெரிய ஆதரவாளர். பழைய சேலம் மாவட்டப் பாகல்பட்டி என்பதே இவரது ஊர். தந்தை பெரியாரும் இவரும் இளமைக் கால நண்பர்கள்.)

''எனக்குக் குறளில் ருசியை உண்டாக்கியவர் நண்பர் காலஞ்சென்ற பா.வே.மாணிக்க நாயக்கரவர்கள்தாம். அவர் என்னிடம் நகைச்சுவையாகப் பேசுவதற்கும் கூட குறளையே கையாளுவார்''.

1929லேயே தமது பச்சை அட்டை 'குடிஅரசு' வார ஏட்டில் 'சித்திரபுத்திரன்' என்ற புனை பெயரில் எழுதும் போது தந்தை பெரியார் அவர்கள்,

''தற்காலம் நமது தமிழ்நாட்டில் வழங்கப் பெறும் நீதி நூல்களிலெல்லாம் திருவள்ளுவரால் இயற்றப்பட்டது என்று சொல்லப்படும் குறள் என்னும் நீதி நூலே மிகவும் மேலானது என்று சொல்லப்படுகின்றதனாலும் அதனையும் பார்ப்பனர்களோ, சைவர்களோ, வைணவர்களோ மற்றும் எந்தப் பிரிவினர்களோ அடியொடு காரியத்தில் ஒப்புக்கொள்வதென்றால் முடியாத காரியமாகவே இருக்கும்'' என்று குறிப்பிட்டுள்ளார்.

'குடிஅரசு' நடத்தி சுயமரியாதை இயக்கத்தின் தொடக்க காலம் முதல் திருக்குறள் என்கிற இந்த அரிய அறிவுப் பெட்டகத்தை, தமிழ்மக்கள் மத்தியில் பரவலாகப் படித்து, சிந்தித்து, செயலாற்றப்படுவதாக ஆக்கிட வேண்டும் என்கிற விழைவின் வெளிப்பாடுதான் 1948இல் சென்னையில் அய்யா அவர்கள் திராவிடர் கழகத்தின் சார்பில் 15.1.1948, 16.1.1948 ஆகிய இருநாள்களிலும் பிராட்வே பகுதியில் சிறப்பான பந்தல் அமைத்து நடத்திய திருப்பம் ஏற்படுத்திய மாநாடு என்றால் அது மிகையன்று!

அம் மாநாட்டிற்குத் தந்தை பெரியார் அவர்கள் தந்த பெயர் ''வள்ளுவர் குறள்–மாநாடு'' (தமிழர் நெறி விளக்க மாநாடு) என்று பெயரிட்டார்கள்!

இரு நாள்களிலும் தமிழ்ப் பேரறிஞர்களும் பெரும் புலவர்களும் பங்கேற்கச் செய்யப்பட்டது. மாநாட்டிற்கு நுழைவுக் கட்டணம் வைத்து அழைத்தார். பல்லாயிரக் கணக்கில் மக்கள் பங்கேற்றனர்.

தமிழ்ப் பெரியார் திரு.வி.க., பன்மொழிப் புலவர் தெ.பொ.மீனாட்சிசுந்தரம், நாவலர் ச.சோமசுந்தர பாரதியார், பேராசிரியர் சி.இலக்குவனார், சாத்தூர் வழக்குரைஞர் தமிழ்ப்புலவர் கந்தசாமி (முதலியார்), திருக்குறளார் வீ.முனுசாமி, பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரை, புலவர் குழந்தை போன்ற அறிஞர் பலர் பங்கேற்றனர்.

திருநெல்வேலி தி.பி.சுப்பிரமணியதாசு, அவர்தம் இளவல் சு.இராமதாசு ஆகியோர்தம் குறள் விரிவுரை, குறள் அவதானம் ஏற்பாடு செய்யப்பட்டதோடு, அறிஞர் அண்ணா எழுதி நடித்த ''சந்திர மோகன்'' (''சிவாஜி கண்ட இந்து ராஜ்ஜியம்'') நாடகமும் முதல் நாள் இரவு ஏற்பாடு செய்யப்பட்டது.

அம் மாநாட்டில் வரவேற்புரை நிகழ்ந்திட்டபோது, தமிழ்ப் பெரியார் திரு.வி.க., ''புலவர் வீட்டு அலமாரியினுள்ளே சிறைவாசம் செய்த திருக்குறளைப் பொதுமக்கள் அரங்கிற்குக் கொணர்ந்து பரப்பிடும் பயன், பெரியார் முன்னின்று முயற்சி செய்வதனால் ஏற்படுவது உறுதி'' என்றார்கள்.

''யார் யாரோ குறளைப் பாராட்டினார்கள், போற்றினார்கள். ஆனால், அவர்களின் தொண்டின் பயனாக எல்லாம் திருக்குறள் தனக்குரிய இடத்தை அடைந்ததில்லை. இன்று பெரியார் குறளை ஏந்தியிருக்கிறார்; இனி மிக விரைவில் குறள் தன் சிறப்பிடத்தை எய்துவது உறுதி'' என்று உரைத்தார்.

அம் மாநாட்டில் பேசிய தந்தை பெரியார் அவர்கள் திருக்குறளின் மேன்மை தம் அருமை நண்பர் பா.வே.மாணிக்க நாயக்கர் காலத்திலேயே தமக்கு ஓரளவுக்குப் புலப்பட்டது என்றாலும், இன்றைய நாள் வரை அதைப்பற்றி அதிகம் பேசாமல் இருந்தமைக்குக் காரணம், நீண்ட நாள்களாகவே நம்மிடையே ஆரியத்தால் புகுத்தப்பட்டு நம் வாழ்வைக் கெடுத்துக் கொண்டுவரும் கடவுள், மதம் சம்பந்தப்பட்ட மூட நம்பிக்கைகள் அறவே ஒழிக்கப்படும்வரை, திருக்குறளை மக்களிடையே பரப்புவதனால் பயனில்லை என்பதனைத் தெளிவாக உணர்ந்ததன் காரணத்தால் தான் என்றும், இன்று சுயமரியாதைப் பிரச்சாரத்தால் மூடநம்பிக்கைகளும், ஆரிய மாயையும் பெரும் அளவுக்கு நீங்கி, தாம் எடுத்துக் கூறும் சீர்திருத்தக் கருத்துகளையும் ஒப்புக்கொள்ளவும், அவற்றை மக்களிடையே பரப்பவும் போதுமான ஆதரவாளர்கள் ஏற்பட்டுவிட்டனர் என்றும், நமது பிரச்சாரம் வெற்றி பெற்றுவிட்டது என்பதனை உள்ளபடி அறிந்த

பிறகே, அதனைத் துணிவுகொண்டு மாநாட்டைக் கூட்டும் முயற்சியில் ஈடுபட்டதாகவும் குறிப்பிட்டார்கள்.

அம் மாநாட்டில் பேசிய அறிஞர் அண்ணா அவர்களும் இதனை வழிமொழிவது போல ஆணித்தரமாக விளக்கிடத் தவறவில்லை.

''மக்கள் வாழ்வு நலிந்திருக்கக் கண்ட பெரியார், அவர்தம் வாழ்வை நலப்படுத்த நூல்கள் பல தேடிப்பார்த்தபோது, தான் கண்ட பாரதம், பகவத் கீதை, இராமாயணங்கள், வேதங்கள், உபநிஷதங்கள் இவை யாவும் பல கேடுகளைத் தம்மிடத்தே கொண்டு, ஆரியப் பிரச்சாரத்தால் புரட்டுகள் வெளித்தோன்றாமல் இருந்து வருபவை – திராவிடர் வாழ்வுக்கு உண்மையில் பெரிதும் கேடு செய்து வருபவை இவைகளே என்று கண்டுதான், இதுகாறும் அவைகளின் புரட்டுகளை எடுத்தோதி வந்து இன்று மக்களுக்கு அவற்றின் மீதுள்ள பற்றுதல் வெகுவாகக் குறைந்திருக்கும் இந்த வேளையில், திருக்குறள் என்ற ஒப்பற்ற நீதி நூலை மாநாடு கூட்டித் திராவிடர்களுக்கு–எல்லாத் தமிழர்களுக்கும் தருகிறார் தந்தை பெரியார். இனி, திராவிடன் ஒவ்வொருவன் கையிலும் குறள் எப்போதும் இருத்தல் வேண்டும்......

.........பெரியார் இம் மாநாட்டின்மூலம் நல்லதோர் செயல் திட்டத்தைத் தருகிறார். பெரியார் கொடுத்த எத் திட்டத்தையும் கைவிட்டறியாத நாம், பெரியார் ஒரு நல் உழவர் என்பதனை நன்கு உணர்ந்துள்ள நல் பண்ணையாளர்களாகிய நாம், அவர்தம் முயற்சி வெற்றி பெற எல்லா வகையிலும் பாடுபடுவோம்'' என்றார் அண்ணா.

இந்த மாநாடு ஒரு மறுமலர்ச்சியை நாட்டில் தோற்றுவித்தது. பெரியார் மேலும் மேலும் அவ்வுணர்ச்சிகளை ஆழப்படுத்தி, அகலப்படுத்தத் தவறவில்லை. அதனால்தான் திராவிடர் கழகச் சிறப்பு மாநாடு அறிஞர் அண்ணா தலைமையில் நடைபெற்றது. அம் மாநாட்டில் (24.10.1948) திருவள்ளுவர் படத்தை அய்யா பெரியார் அவர்கள் திறந்து வைத்து அரியதோர் உரையாற்றினார்கள்.

1949 ஏப்ரல் 12ஆம் நாள் (12.4.1949இல்) தமிழ்நாடு முழுவதும் திராவிடர் கழகத்தவர் உள்பட எல்லாத் தமிழ்மக்களும் அவசியம் தவறாமல் ஒவ்வோர் ஊரிலும் ''திருவள்ளுவர் நாள்'' கொண்டாடிட வேண்டும் என்றார்.

(பிறகு தி.மு.க. ஆட்சிக்கு வந்தவுடன் முதல்வர் கலைஞர் இவர்தம் ஆணைக்குச் செயலுரு கொடுத்து ஒவ்வோர் ஆண்டும் பொங்கலுக்கு மறுநாள் திருவள்ளுவர் நாளாகக் கொண்டாடப்படுகிறது.)

ஆங்காங்குத் திருவள்ளுவர் படிப்பகங்களை ஏற்படுத்தி மக்களுக்கு சாதி ஒழிப்பு, மூடநம்பிக்கை ஒழிப்பு, சமதருமக் கருத்துகள், பெண்ணடிமை ஒழிப்பு, ஒழுக்கத்தை வளர்த்தல் முதலியவற்றைத் திருக்குறள் என்னும் இந்த அறிவு நூலைப் பரப்பி முன்னேறிடுவதற்கு வழி செய்ய வேண்டும் என்றார்கள்.

சுயமரியாதைக்காரர்கள் பேசுவதைச் செயலில் நாட்டுபவர்கள்; வெறும் மேடைப் பேச்சு வீரர்கள் அல்லர். தந்தை பெரியார் திருக்குறளைப் பொதுமக்கள் – பாமர மக்கள் படிக்க வசதியாக 2 அணா விலையில் இலட்சக்கணக்கில் அச்சிட்டுப் பரப்பிட வேண்டுமென்று பேசியதனைச் செயல்படுத்தி, பல இலட்சக் கணக்கில் ''விடுதலை'' வெளியீடாக அதனை அச்சிட்டுப் பரப்பிடத் தவறவில்லை!

திராவிடர் இயக்கத்தின் அறிவுப்பணி, ஒப்புரவுப்பணி, ஜாதி ஒழிப்புப் பணி எல்லாம் அதனையொட்டியே இன்றும் தொடர்ந்து நடைபெறுகிறது!

தந்தை பெரியார்தம் பகுத்தறிவுச் சிந்தனைக் கணைகள் குறள் ஆராய்ச்சியில் மற்றவர்களுக்கு வழிகாட்டியவை ஆகும்!

எவ்வளவோ கூறலாம் என்றாலும் ஒரு சில எடுத்துக்காட்டுகள் இதோ:

'கடவுள் வாழ்த்து' உள்ளதை எப்படி பெரியார் இவ்வளவு உயர்த்திப் பிடிக்கிறார் என்ற அய்யம் இயல்பாகவே எவருக்கும் வரும்.''

இதுபற்றித் தந்தை பெரியார்தம் ஆராய்ச்சிக் கருத்தின் சுருக்கம் இதோ:

**கடவுள் வாழ்த்து**

குறளில் முதலாவது அதிகாரத்துக்குக் கடவுள் வாழ்த்து என்ற தலைப்புக் கொடுத்திருப்பது, குறள் ஆசிரியரால் கொடுக்கப்பட்டதா? அல்லது வேறு யாராலாவது கொடுக்கப்பட்டதா என்பது ஒருபுறமிருந்தாலும், அந்த அதிகாரத்துக்கு அப்பெயர் பொருத்தமற்றதாகும் என்பது என் கருத்தாகும்.

ஆசிரியர் குறளில் 1330 பாட்டிலும் எந்த ஓர் இடத்திலும் கடவுள் என்கின்ற பெயரைக் கையாளவே இல்லை.

அன்றியும் அவ்வதிகாரத்தில், அதில் கண்டுள்ள 10 பாடல்களிலும்கூட ஓர் இடத்திலும் கடவுள் என்ற சொல் காணப்படவில்லை.

1. பகவன்
2. வாலறிவன்
3. மலர்மிசை ஏகினான்
4. வேண்டுதல் வேண்டாமையிலான்
5. இறைவன்
6. பொறிவாயில் அய்ந்தவித்தான்

7. தனக்குவமை இல்லாதான்
8. அறவாழி அந்தணன்
9. எண் குணத்தான்
10. இறைவன் என்பவையாக 10 சொற்களைக் குறிப்பிட்டிருக்கிறார்.

**பகவன்**

இனிக் குறள் முதல் அதிகாரத்தில் முதலாவது குறளில் பகவன் என்ற சொல் ஆசிரியரால் கையாளப் பட்டிருப்பதனால், அச் சொல்லைக் கடவுள் என்ற சொல்லுக்கு மாற்றுச் சொல்லாகப் பயன்படுத்தினார் என்று சொல்லவும் சிறிதும் இடம் இல்லை.

குறளாசிரியர் குறளில் சொற்களைக் கையாளுவதில் மிகக் கவலை கொண்டு, முன் வழங்கி வந்த அளவு தூய தமிழ்ச் சொற்களையே ஆண்டு இருக்கிறார். எடுத்துக்காட்டாக, குறளில் உள்ள சுமார் 12,000 சொற்களில் ஒரு 50 சொற்களுக்கும் (சிலர் 35 சொற்களிலும் குறைவாக என்கிறார்கள்) குறைவாகவே வேற்றுமொழிச் சொற்களை ஆண்டு இருக்கிறார்.

அன்றியும் குறளாசிரியர் அவர்கள், குறளில் ஆண்ட ஒட்டுமொத்த சொற்களில் 100க்கு 33 சொற்களுக்கு மேலாக உயிரெழுத்தை முதலாக உடைய சொற்களாகவே கையாண்டு இருக்கிறார்.

ஆகவே, இந்தப் பகவன் என்ற சொல் தூய தமிழ்ச் சொல் என்றோ உயிரெழுத்தை முதலாகக் கொண்ட சொல் என்றோ சொல்வதற்கில்லாமல் இருப்பதோடு, இந்த அதிகாரத்தில் மற்றக் குறள்களில் ஆசிரியர் கையாண்டு இருக்கிறபடி இச்சொல்லை ஒரு காரணப் பெயராய் இல்லாமல் இடுகுறிப் பெயராக ஆண்டு இருக்கிறார்கள் என்றும் தெளியக் கிடக்கிறது.

'பகவன்' என்ற சொல் தமிழ்ச் சொல் என்று சொல்ல அந்த உச்சரிப்புக்கூட இடம் தரவில்லை. ஏனெனில் பகரத்தை அடுத்துவரும் ககரத்தை உடைய சொல்லைத் தமிழில் உச்சரிப்பதனால் பகவன், பகவான், பகவத்கீதை, பகவதி, பகவத் கைங்கர்யம், பகவத் செயல் என்பன போன்ற சொற்களை உச்சரிப்பது போன்று, வடமொழி எழுத்து ஒலியில் உச்சரிக்கும்படியான சொல் வேறு எதுவுமே எளிதில் தமிழில் காண முடிவதில்லை. ஆதலால், பகவன் என்ற சொல் தமிழில் ஓர் இடுகுறிப் பெயராக இருக்கவும் முடியாது என்பதொடு, காரணப் பெயரான, தமிழ்ச் சொல்லாக இருக்கும் என்று சொல்லுவதற்கு வழிகாண முடியவில்லை.

அன்றியும் குறளாசிரியர் கடவுளைப்பற்றிக் குறளில் வேறு எந்த இடத்திலும் கவலை கொண்டு கடவுள் என்ற சொல்லுக்கு ஒரு மாற்றுச் சொல்லையாவது ஆண்டு அதை வணங்கும்படியாகவோ, நினைக்கும்படியாகவோ, பூசனை செய்யும்படியாகவோ அல்லது அதற்கு ஏதாவது அசைக்க முடியாத – உவமை கொள்ள முடியாத உயர் குணமுள்ளதாகவோ ஓர் இடுகுறிப்பெயரை ஆண்டு இருப்பதாகவும் தெளிவுகொள்ளக் காண முடிவதில்லை.

**இறைவன்**

இவற்றான் இரண்டு இடங்களில் இறைவன் என்ற சொற்கள் குறிப்பிட்டு வருகின்றன. என்றாலும், ஒட்டு மொத்தத்தில் குறள் முழுவதிலுமே இறைவன் என்ற சொல் அய்ந்து இடங்களில்தான் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. ஆதலால், இந்த இறைவன் என்ற சொல்லைப் பற்றி முதலில் ஆராய்வோம். ஏனெனில் இச்சொல் இந்த அதிகாரத்தில் இரண்டு இடங்களில் கையாளப்பட்டிருப்பதோடு, இறைவன் என்ற சொல் கடவுள் என்ற சொல்லுக்கு நேரான – சரியான தமிழ்ச்சொல் என்று வழங்கப்படுகிறது. ஆதலால், அதைப்பற்றி முதலில் ஆராய்வோம்.

இறைவன் என்ற சொல் குறளில் எவ்வெவ்விடங்களில் ஆளப்படுகிறது என்றால், மேலே குறிப்பிட்டபடி, முதலதிகாரத்தில் அய்ந்தாம் குறளிலும், பத்தாம் குறளிலும் குறிப்பிடப்பட்டிருக்கின்றது.

இந்தப்படி குறிப்பிட்டிருக்கிற இறைவன் என்ற சொல்லுக்கு உரைகாண வேண்டுமானால், அதுவும் நாயனார் எந்தக் கருத்தில் அச்சொல்லைப் பயன்படுத்தி இருக்கிறார் என்று கண்டு, அவரது கருத்துப்படி உரைகாண வேண்டுமானால், தெளிவாய் அய்யமற அச்சொல்லுக்குப் பொருள் காணத்தக்க வண்ணமாக, இருந்து தீர வேண்டிய வண்ணமாகக் குறளில் வேறு எந்த இடங்களிலே அச்சொல் காணப்படுகின்றது என்று கண்டோமானால், அதன் மூலம் சரியான உரை என்பது மாத்திரமல்லாமல் அச்சொல்லுக்கு ஆசிரியர் கருத்துகளையும் தவறாது காண வழி கிடைக்கலாம்.

ஆகவே, குறளாசிரியர் இறைவன் என்ற சொல்லைக் குறளில் முதலதிகாரம் மாத்திரமல்லாமல், மற்றும் 60ஆம் அதிகாரத்தில் 10ஆம் பாட்டிலும், 74ஆம் அதிகாரத்தில் 8ஆம் பாட்டிலும் ஆண்டு இருக்கிறார். இங்கே குறிப்பிட்ட இந்த மூன்று–அதனிலும் முறையே தூது, நாடு, படைச்செருக்கு என்கின்றதான தலைப்பின் கீழுள்ள அதிகாரங்களில் குறிப்பிடப்பட்டிருக்கிறது என்பதோடு, அந்தந்த அதிகாரத் தலைப்புப் பெயராகிய சொற்களை அநேகமாக அந்தந்த அதிகாரங்களின் கீழ் வரும் பல குறள்களில், பல இடங்களில் ஆண்டிருக்கிறார்.

ஆனால், இந்தக் கடவுள் வணக்கம் அதிகாரம் என்ற தலைப்புப் பெயரில் உள்ள 'கடவுள்' என்ற சொல், அந்த அதிகாரத்திலோ, அல்லது குறளில் வேறு எந்த அதிகாரத்திலோ எங்கும் கையாளவே இல்லை.

அன்றியும் இறைவன் என்ற சொல்லைக் கடவுள் என்ற சொல்லுக்குப் பிரதி சொல்லாகக் கையாண்டிருக்கிறார் என்று சொல்லுவதற்கும் சிறிதும் இடம் இல்லாத தன்மையிலேயே மேற்குறிப்பிட்ட மற்ற அதிகாரங்களில் கையாண்டு இருக்கிறார்.

எப்படி எனில், முன் குறிப்பிட்ட மற்ற மூன்று– அதாவது தூது, நாடு, படை என்கின்ற தலைப்புப் பெயருள்ள அதிகாரங்களில் இறைவன் என்ற சொல்லை அரசன் என்ற சொல்லுக்கு மாற்றுச் சொல்லாகவே நன்றாகத் தெளிவாகவும், வேறு எப்பொருளும் கொள்ளச் சிறிதும் இடம் இல்லாத தன்மையிலும் கையாண்டு இருக்கிறார். ஏனெனில், அரசன் என்ற சொல்லைவிட இறைவன் என்ற சொல்லே சரியான தமிழ்ச் சொல்லாகக் காணப்படுகிறது.

அதற்கு ஆதாரமாக இறைவன் என்ற சொல்லை எங்குமே பயன்படுத்தவில்லை என்பதோடு, அரசர் என்ற சொல்லைக் குறளில் ஒரே ஓர் இடத்தில்தான் ஆண்டு இருக்கிறார். அதுவும் ஏன் என்றால் இறைவன் என்ற சொல்லை உண்மையில் குறிப்பிட வேண்டிய தேவை வந்தபோது பன்மைப் பொருள் காட்ட எளிதாய் இருப்பதற்காக ''அரசருள் ஏறு'' – அரசர்களுக்குள் சிறந்த வலிமை யுடையவன் என்ற பொருளுக்குக் கையாண்டிருக்கிறார். இறைவன் என்ற சொல் கடவுள் என்னும் பொருளில் இல்லை. அரசு என்ற சொல்லும் குறளில் மூன்று இடங்களில்தாம் கையாளப்பட்டிருக்கின்றது. என்றாலும், அரசு என்ற சொல்லுக்கு அப்பொருளுக்கு ஏற்ற வேறு தமிழ்ச் சொல், எளிதில் காணத்தக்க சொல் இல்லை. ஆதலால், அரசு என்ற சொல்லை ஆண்டிருக்கிறார் என்று சொல்லலாம். ஏனெனில், அரசனை இறைவன் என்று சொல்லுவதுபோல், அரசை அந்த மூலக் கருத்தில் சொல்ல இயலவில்லை. ஆதலால், குறளாசிரியர் முதல் அதிகாரத்தில் இறைவன் என்ற சொல்லைக் கையாண்டு இருப்பது கடவுள் என்ற கருத்திலோ பொருளிலோ அன்று என்று துணிந்து கூறலாம் என்கிறார் தந்தை பெரியார்.

தந்தை பெரியார் அச்சுப்போட்டு விற்ற திருக்குறள் புத்தகத்தில் கூட கடவுள் வாழ்த்து என்பதற்குப் பதிலாக 'பண்புச் சிறப்பு' என்றே குறிப்பிட்டுள்ளார் என்பது கருத்தில் கொள்ளத்தக்கதாகும்.

**ஊழ் என்பது பற்றித் தந்தை பெரியார்**

ஊழ்பற்றித் தந்தை பெரியார் கூறும் சரியான விளக்கம் இதோ:

விதி என்பதையும் வள்ளுவர் நன்றாக விளக்கிக் காட்டியிருக்கிறார். உன் அறிவைக் கொண்டு உன் முயற்சியின்படி நட! மக்களுக்கு நன்மை செய்! அறத்தை வளர்! என்று கூறியிருக்கிறாரேயன்றி, உன் விதிப்படி– கடவுள் இஷ்டப்படி நீ நட! என்பதாக எந்த இடத்திலும் கூறவே இல்லை.

குறளில் ''ஊழ்'' என்ற தலைப்புக்குப் பொருள் கூற வந்த புலவர்கள், அவரின் கருத்துக்கு மாறுபாடாகவே கூறியிருக்கின்றார்கள். மனிதனுடைய சரீர அமைப்பின் பயனாய் ஏற்படும் சில தனிப்பட்ட குணங்களுக்குத்தான் ஊழ் என்ற பெயரை அவர் கொடுத்திருக்கிறார். ஊழ் என்பது பிறவிக்குணம், இயற்கைக்குணம், மனித சுபாவத்தின் தனிப்பட்ட குணம் என்கின்ற கருத்துகளேயாகும்.

உதாரணமாக, இரண்டுபேர் உடன் பிறந்த அண்ணன் தம்பி. ஒருவன் சாதாரணக் காரியங்களுக்குக்கூடச் சிரிப்பான்; ஒருவன் பெரிய ஆச்சரியமான காரியங்களுக்குக் கூட சிரிப்பதில்லை. ஒருவன் சாதாரணக் காரியத்துக்கும் கோபிப்பதேயில்லை; ஒருவனுக்குப் பனிக்கட்டியில் கால் பட்டால் ஜலதோஷம்; மற்றவனுக்கு, அவன் அதிலேயே சதா இருந்தாலும் ஒன்றும் செய்வதில்லை. ஒருவனுக்கு 40இல் கண்பார்வை மங்கல்; ஒருவனுக்கு 60லும் வருவதில்லை. ஒருவன் ஒரு சிறுதொகையையும் திருடுவான்; ஒருவன் பெருந்தொகையையும் திருடுவதில்லை. ஒருவன் சிறு விஷயத்திலும் பொய் பேசுவான்; ஒருவன் பெரிய விஷயத்திற்கும் பொய் பேசான். இரண்டு பேரும் உடன் பிறந்த அண்ணன், தம்பிகளாயிருந்தும்கூட ஏன் இப்பேர்ப்பட்ட வேற்றுமைகள்?

இவர்கள் இருவர் தலையிலும், இந்த இந்த மாதிரிதான் தனித்தனியாக நடக்க வேண்டும் என்று கடவுள் எழுதிவிட்டாரா? அல்லாது அவரவர்களின், போன ஜன்மத்தில் நடந்து கொண்ட கருமத்தின்படி கடவுள் விதித்த விதியா? இல்லவே இல்லை. மற்றென்னவெனில் இவற்றிற்கு அவரவர்களின் உடற்கருவிகள் –கரணங்கள் அமைந்த தன்மை–உடலமைப்பு. எது போல என்றால், ஒரு டன் வெண்கலத்தை உருக்கி 10 ராத்தல் வீதம் 200 மணிகளை வார்த்தெடுக்கிறோம். பிறகு ஒவ்வொரு மணியையும் அடித்தால் அவற்றின் ஓசையில் ஒன்றுக்கொன்று வித்தியாசமிருக்கிறதே, ஏன்? நாம் மணிக்காக வார்ப்படம் ஊற்றும்போது அவைகளுக்குள் கடவுள் புகுந்து, மணிகளின் தலையில் எழுதிவிட்டாரா– உனக்கு இவ்வளவுதான் ஓசை, இன்னொரு மணிக்குச் சற்று அதிக ஓசை என்று? இப்படி வேறுபட்ட ஓசைகளுக்குக் காரணம், ஒவ்வொரு மணியையும் வார்க்கும்போது இருக்கும் இயற்கை வசதிகள், வார்ப்பட அமைப்பு, காற்றுப் போக்கு, சீதோஷ்ணத் தன்மை ஆகிய இவைதாமே! மற்றும் ஒரு குழலை ஊதினால், அதிலுள்ள ஓட்டைகளுக்கு ஏற்ப – ஓட்டைகள் அமைப்புக்கு ஏற்ப – ஒலி (சப்தம்) ஏற்படுகிறதே ஒழிய, அந்த மரத்தின் பிறவியின்படி ஏற்படுகிறதா? அதுபோலவே, மனிதனுடைய உடல் அமைப்புக்கு ஏற்றபடிதான், சிலர் அனாவசியமான காரியங்களுக்கும் பொய் பேசுவதும், சிலர் உயிர் போகும்

அவசியமான காரியத்துக்கும் பொய் பேசாதிருப்பதுமாய் ஒருவர்க்கொருவர் மாறுபட்டிருக்கிறார்கள் என்றுதானே காண முடியும்?

சாதாரணமாகக் காற்றை எடுத்துக்கொள்ளுங்கள். அது ஒரு வாழை இலையை முள்ளின் மீது பட வைத்து அதனை எப்படிக் கிழிக்கிறது? அதே காற்று மற்றொரு இலையை எவ்வாறு கிழியச் செய்கிறது என்பதனை. அது போலவே மனிதனுடைய சரீரத்திலுள்ள சில மாறுபாடுகளே, அவனது சில தனிப்பட்ட குணங்களுக்குக் காரணமாகியதேயன்றி, புறம்பான விதியோ, கடவுள் எழுதியதோ ஆன செயல் காரணம் அல்ல.

இவ்விதப் பிறவிக் குணங்களில் சிலவற்றைத் திருத்தலாம். ஆனால், பெரும்பாலானவற்றைத் திருத்த முடியாது. அவற்றைத்தான் ''ஊழ்'' என்று, 'ஊழ் முந்துறும்' என்று வள்ளுவர் குறிப்பிடுகிறார். ஆக, இவ்வித இயற்கைக் குணங்களைக் கருமம், முற்பிறவியின் பயன் என்பதெல்லாம் மதவாதிகளுடைய வீண் கற்பனைகளேயாகும்.

**எழுபிறப்பு என்பது என்ன?**

இவ்விதமாகவே, பிறவியைப் பற்றியும் வள்ளுவர் வழி வகுத்துள்ளார். ஒருவனுடைய வாழ்வில் ஏற்படும் புதுப்புதுக் கருத்துகள், குணமாற்றங்களையே பிறப்பு என்று அவர் கூறியிருக்கிறார். அதாவது பல காரணங்களால் ஒருவன் கொண்டுள்ள கருத்துகள் குணமாற்றங்களையே பிறப்பு என்று அவர் கூறியிருக்கிறார். அதாவது பல காரணங்களால் ஒருவன் கொண்டுள்ள கருத்துகள் மாற்றமடையலாம். அக்கருத்து மாற்றமே மறுபிறப்பு அதாவது வேறு பிறப்பு என்று சொல்லப்படுவதாகும். ஒருவனைப் பார்த்து நாம் அவன் புதிய பிறவி ஆகி விட்டான் – புது மனிதனாகி விட்டான் என்று நாம் சொல்லுகிறோமல்லவா, அது போல்தான்.

இத்தகைய உண்மைக் கருத்துகளைக் கொண்டு நாம் குறளை ஆராய்ந்து பார்க்காமல், பரிமேலழகரும் அவரைப் போன்றவர்களும், மூடநம்பிக்கையுடைய புராண மதவாதிகளும் எழுதிய உரைகளைக் கொண்டு பார்த்தால், குறளின் உண்மைத் தத்துவங்களை நாம் எப்படி உணர்ந்து கொண்டுவிட முடியும்?

(நூல்– திருக்குறளும் திராவிடர் கழகமும் 1949)

**உலக ஞானப் பொது நூல்**

''100 ரூபாய்க்கும் 200 ரூபாய்க்கும் 'டெக்ஸ்ட்' புத்தகங்கள் வாங்கிப் படித்து மடயர்களாவதைவிட'' 3 அணாவுக்குத் திருக்குறள் வாங்கிப் படித்து அறிவாளியாவது மேல் என்றுதான் கூறுகிறேன். திருக்குறள் ஒன்றே போதும் உனக்கு அறிவு உண்டாக்க, ஒழுக்கத்தைக் கற்பித்துக் கொடுக்க, உலக ஞானம் ஏற்பட. அப்படிப்பட்ட குறளைத்தான் நாம் இதுவரை அலட்சியப்படுத்தி வந்திருக்கிறோம். ஒரு தாசில்தார், ஒரு மாஜிஸ்ட்ரேட், ஒரு நீதிபதி, ஒரு சப்–இன்ஸ்பெக்டர் இவர்களுக்குக் கூடத் திருக்குறள் ஒன்றே போதும். தமது வேலையைச் சரியாகச் செய்ய, அவர்களை உத்தியோகத்திற்குத் தேர்ந்தெடுக்கப் பரீட்சை வைக்கும் போதுகூடத் திருக்குறளிலிருந்து தான் கேள்விகள் கேட்கப்பட வேண்டும். திருக்குறளை நன்கு உணர்ந்திருந்தால் போதும் என்று அவர்களுக்கு உத்தியோகம் வழங்க வேண்டும். அவர்கள் உத்தியோகத்திற்கு அவர்கள் படிக்கும் சாத்திரங்கள் பயன் படுவதில்லை என்பதனை நீங்கள் உணர வேண்டும்.

அனைவரும் திருக்குறளைப் படித்து அறிவுள்ள மக்களாகி இன்புற்று வாழ வேண்டும் என்பதுதான் எனது ஆசை'' என்கிறார் தந்தை பெரியார்.

திருக்குறளை மட்டுமே எடுத்துக் கொண்டு அதிலுள்ள எல்லாத் தலைப்புகளின் கீழ் வருவனவற்றை இரண்டு மூன்று பிரிவுகளாக, அதாவது படித்த மாத்திரத்தில் எளிதில் பொருள் விளங்குவனவற்றைக் கீழ் வகுப்புகளுக்கும், சற்றுக் கடினமான குறள்களை நடுத்தர வகுப்புக்கும், மிகுந்த புதை பொருள் கொண்டு, கூட்டிப் பொருள் காண வேண்டியவற்றை மேல் வகுப்புக்கும் வைத்தால் மதப் படிப்போ, ஒழுக்கப் படிப்போ தனியாக வைக்க வேண்டிய அவசியமே இராது.

'ஒரு மாணவன் தன்னுடைய பரிட்சைக்குள் திருக்குறள் முழுமையையும் உணரும்படி செய்யப்பட்டால் அது எவ்வளவோ நன்மை. அதாவது ஒரு பி.ஏ. படித்தவனுடைய உலக ஞானத்துக்கு மேற்பட்ட அறிவு அனுபவத்துடன் பயப்பதாக அமையும்' என்பது தந்தை பெரியாரின் துணிபு.

**திருக்குறள் பற்றித் தந்தை பெரியாரின் திரண்ட கருத்துகள்**

திருவள்ளுவரின் குறளை மெச்சுகிறார்களே ஒழிய, காரியத்தில், அதோடு, அதற்கு நேர் விரோதமான கீதையைப் போற்றுகிறார்கள். *('குடிஅரசு' 2.6.1935)*

அறிவினால் உய்த்துணர்ந்து ஒப்புக்கொள்ளக் கூடியனவும் இயற்கையொடு விஞ்ஞானத்துக்கு ஒப்ப இயைந்திருக்கக் கூடியனவும் ஆன கருத்துகளையே கொண்டு இலங்குகிறது வள்ளுவர் குறள். *('குடிஅரசு' 13.11.1948)*

குறளை ஊன்றிப் படிப்பவர்கள் எல்லோரும் நிச்சயம் சுயமரியாதை உணர்ச்சி பெறுவார்கள். அரசியல் ஞானம், சமூக ஞானம், பொருளாதார ஞானம் ஆகிய எல்லாம் அதில் அடங்கியுள்ளன. *('குடிஅரசு' 13.11.1948)*

மனித சமுதாயத்திற்கே நல்வழிகாட்டி, நன்னெறியூட்டி, நற்பண்புகளையும் ஒழுக்கங்களையும் கற்பிக்கும் வகையில் எழுதப்பட்ட நூல்தான் திருக்குறள். எனவேதான் எல்லா மக்களும் எல்லா மதத்தவரும் 'எங்கள் குறள்' 'எங்கள் மதக் கருத்தை ஒப்புக்கொள்ளும் குறள்' என்றெல்லாம் அதைப் போற்றி வருகிறார்கள். ('குடிஅரசு' 13.11.1948)

ஆரியக் கலை, பண்பு, ஒழுக்கம், நெறி முதலியவை யாவும் பெரிதும் தமிழர்களுடைய கலை, பண்பு, நெறி, ஒழுக்கம் முதலியவைகளுக்குத் தலைகீழ் மாறுபட்ட தென்பதும் அம்மாறுபாடுகளைக் காட்டவே சிறப்பாகக் குறள் உண்டாக்கப்பட்டது என்பதும் எனது உறுதியான கருத்தாகும். ('விடுதலை' 10.1.1949)

வள்ளுவரையும் நாம் ஒரு மனிதராக மதித்தே– மக்களிடையே காணப்படும் இழிவு நீங்கி மனிதத் தன்மை வளர்ந்தோங்கவேண்டும் என்ற கருத்தோடு பாடுபட்ட ஒரு பெரியாராக மதித்தே – குறளை ஒப்புக்கொள்கிறோமே ஒழிய, அதை நாம் கடவுள் வாக்காகவோ அசரீரி வாக்காகவோ ஏற்றுக் கொள்ளவில்லை. ('விடுதலை' 20.2.1950)

நீங்கள் என்ன சமயத்தவர் என்று கேட்டால் ''வள்ளுவர் சமயம்'' என்று சொல்லுங்கள்; உங்கள் நெறி என்னவென்றால், ''குறள்நெறி'' என்று கூறுங்கள்; அப்படிச் சொன்னால் எந்தப் பிற்போக்குவாதியும், எப்படிப்பட்ட சூழ்ச்சிக்காரனும் எதிர்நிற்க மாட்டான். யாரும் குறளை மறுக்க முடியாததே இதற்குக் காரணம். ('விடுதலை' 18.4.1950)

மூடநம்பிக்கை யொழிந்து, அறிவு செம்மைப்பட திருக்குறள் செம்மையான வழிவகுத்துக் கொடுக்கும். குறள் கருத்துகள் நன்கு நாடெங்கும் பரப்பப்படுதல் வேண்டும். கல்வி என்றாலே திருக்குறள் கல்வி, அறிவு என்றாலே திருக்குறள் அறிவு என்றுதான் கருதப்பட வேண்டியுள்ளது. ('விடுதலை' 19.11.1961)

குறளாசிரியர் கடவுளையும், மோட்ச–நரகத்தையும் ஒத்துக்கொள்ளவில்லை. குறளில் நீங்கள் அறம், பொருள், இன்பம் என்ற அளவில்தான் காண முடியுமே தவிர, ''வீடு மோட்சம்'' பற்றி அவர் கூறி இருப்பதாக இல்லை.

''கடவுள் வாழ்த்து'' என்று அதிகாரம் இருக்கிறது. அதில் உருவ வணக்கக் கொள்கைகள் இடம் பெறவில்லை. மனிதன் எப்படியிருக்க வேண்டும் என்பதைக் காட்டுவதற்காகத்தான் வாழ்வின் நெறியை, நிலையை உணர்த்துவதற்காகத்தான் எட்டு, ஒன்பது கருத்துகளை வைத்து வள்ளுவர் கடவுள் வாழ்த்து கூறியிருக்கிறார். ('விடுதலை' 29.5.1950)

குறள் பக்தி நூலல்ல; கடவுளைக் காட்டும் எந்த விதமான மத நூலும் அல்ல; மதப்பிரச்சாரம் செய்யும் மதக்கோட்பாட்டு நூலும் அல்ல. உண்மையான ஒழுக்கத்தை, அதாவது யாவருக்கும் பொருந்தும் சமத்துவமான ஒழுக்கத்தைப் போதிப்பதற்காகவே இருக்கின்றது. (விடுதலை 13.1.1951)

அறிவு பெற்றவன், அறிவையே முதன்மையாகக் கொண்டவன், ஆலோசித்துப் பார்க்கும் ஆராய்ச்சித் தன்மை கொண்டவன் எவனும் குறளை மதித்தே தீருவான்; குறளைப் பாராட்டியே தீருவான்; சிறிதாவது பின்பற்றிக் குறளை வழிகாட்டியாகக் கொண்டே தீருவான்.

குறள் வெறும் ஒழுக்கத்தையும், நல்வாழ்க்கைக்கு வேண்டிய அனுபவபூர்வமான பிரத்தியட்ச வழியையும் கொண்டதாகும். (விடுதலை 13.1.1951)

குறள் ஓர் அறிவுக் களஞ்சியம்; பகுத்தறிவு மணிகளால் கோக்கப்பட்ட நூல். (விடுதலை 1.12.1955)

## வள்ளுவர் வழங்கிய முத்துக்கள்

தெள்ளு தமிழ்நடை,
சின்னஞ் சிறிய இரண்டடிகள்,
அள்ளு தொறுஞ்சுவை
உள்ளுந் தொறும்உணர் வாகும்வண்ணம்
கொள்ளும் அறம், பொருள்,
இன்பம் அனைத்தும் கொடுத்த திரு
வள்ளுவ னைப்பெற்ற
தாற்பெற்ற தேபுகழ் வையகமே!

வெல்லாத தில்லை
திருவள்ளு வன்வாய் விளைத்தவற்றுள்
பொல்லாத தில்லை
புரைதீர்ந்த வாழ்வினி லேஅழைத்துச்
செல்லாத தில்லை
பொதுமறை யான திருக்குறளில்
இல்லாத தில்லை
இணையில்லை முப்பாலுக் கிந்நிலத்தே!

– பாவேந்தர் பாரதிதாசன்

# பொருளாதார அறிஞர் கில்பர்ட் சிலேட்டரின் தமிழ்த்தொண்டு



பேராசிரியர் மு.நாகநாதன்

பேராசிரியர் கில்பர்ட் சிலேட்டர் 1915ஆம் ஆண்டு சென்னைப் பல்கலைக்கழகத்தின் முதல் பொருளாதாரப் பேராசிரியராகவும், துறைத் தலைவராகவும் பொறுப்பேற்று 1922ஆம் ஆண்டுவரை பணிபுரிந்துள்ளார். பொருளாதாரப் பேராசிரியர் பணியை ஏற்பதற்கு முன்பு இங்கிலாந்து நாட்டின் ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகத்தின் உறுப்புக் கல்லூரியான ஜான் ரஸ்கின் கல்லூரியில் முதல்வராகப் பல ஆண்டுகள் பணிபுரிந்தார். பல தமிழ்ப் புலவர்கள், அறிஞர்களின் நட்பைப் பெற்றுத் தமிழைக் கசடறக் கற்றார். தமிழகத்தின் பல பகுதிகளுக்குச் சென்று, தமிழ் மக்களுடன் தங்கி மொழி, சமய, பண்பாடு, பொருளாதாரக் கூறுகளை ஆய்ந்தார். கள ஆய்வு முறையை (Field Study) முதன்முதலாகப் பின்பற்றி, தாம்பரத்திற்கு அருகே உள்ள சேலையூருக்கும், தென்னார்க்காடு மாவட்டத்தில் உள்ள இருவேலிப் பட்டினத்திற்கும் மாணவர்களோடு சென்று புள்ளிவிவரங்களைத் தொகுத்து "ஊர்ப்புறங்கள் ஆய்வு" (Village Studies) என்ற அரிய பொருளாதார ஆய்வு நூலினைப் படைத்தார். வரலாறு, சமூகவியல், மானுடவியல், தொல்லியல், மொழியியல் ஆகிய துறைகளில் புலமை பெற்றிருந்த கில்பர்ட் சிலேட்டர், "இந்தியப் பண்பாட்டில் திராவிடக் கூறுகள்" (The Dravidian Elements in Indian Culture) என்ற ஆய்வு நூலைப் படைத்தார். பல்துறை ஆய்வின் களமாக இச் சிறிய நூல் விளங்குகிறது.

தமிழர் வாழ்வியலும், தமிழும் பன்னாட்டு அறிஞர்களை 16ஆம் நூற்றாண்டிலிருந்தே ஈர்த்து வந்துள்ளன. தமிழைப் பயின்று, தமிழின் தொன்மையை, வளமையை, ஆளுமையை உலகறியச் செய்த வெளிநாட்டு அறிஞர்களின் படைப்புகளும், பட்டியல்களும் நீண்டு இன்றும் தொடர்கின்றன. கிறித்துவ சமயப்பணிக்காகத் தமிழகத்திற்குப் பயணித்த அருள்தந்தையர் இராபர்ட்–டி–நொபிலி, ஜி.யு.போப்பு, பெஸ்கி, கால்டுவெல், சீகன்பால்கு, ஆட்சிப்பணிக்காக வந்த பிரான்சிஸ் ஒயிட் எல்லிஸ், அறிஞர் காரல் கிரால் ஆகியோர் குறிப்பிடத்தக்க சிலர் ஆவர்.

தமிழ், கிரேக்கம், இலத்தீன், சீனம், ஹீப்ரு, சமற்கிருத மொழிகள் 2500 ஆண்டுகளுக்கு முற்பட்ட தொன்மைச் சிறப்புடையன. காலத்தின் தொன்மையைப் பற்றிய முடிவுகள், கருத்துகள் புதிய புதிய ஆய்வுகளாலும், தொல்லியல் கண்டுபிடிப்புகளாலும் மாறிக்கொண்டு வருகின்றன. பண்டைய எழுத்து, வரி வடிவங்களை மிகத் துல்லியமான முறையில் படங்கள் எடுக்கவும், அதனை மேன்மேலும் நுட்பமான முறையில் ஆய்வதற்கும் தகவல்,

தொழில்நுட்பப் புரட்சி வழிகோலுகிறது. கடலுக்கு அடியில் புதைந்துபோன ஆறுகளையும், நிலப்பகுதிகளையும் கண்டு தெளியும் ஆற்றலைச் செயற்கைக்கோள்கள் வழியாகத் தொலையுணர்வு நுட்பவியல் (Remote Sensing Technique) வழங்கி வருகிறது. ஈடோபோ (Etopo) என்ற செயற்கைக்கோளின் தரவுகளை வைத்து, "தமிழ்நாட்டின் தெற்கில் இந்தியப் பெருங்கடல் பகுதியில் 5000 மீட்டர் ஆழத்தில் மடிப்பு மலைகள் தென்படுகின்றன. குமரிக்கண்டம் இருந்ததற்கும், அங்குப் பஃறுளி ஆறு பாய்ந்ததற்கும் சாத்தியக்கூறுகள் நிரம்ப உள்ளன" என்று காந்திகிராமப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தரும், புவியியல் தொலையுணர்வு நுட்பவியல் ஆய்வாளருமான பேராசிரியர் இராமசாமி குறிப்பிட்டுள்ளார். 20ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலும், 2004ஆம் ஆண்டிலும் ஆதித்தநல்லூர் அகழ்வாய்வுக் கண்டுபிடிப்புகளில் கிடைத்த பல்வேறு உலோகங்கள், பாண்டங்கள், கருவிகள், பொருள்கள், மண்டை ஓடுகள் ஆகியனவும், 1920ஆம் ஆண்டு சிந்துசமவெளி நாகரிக அகழ்வாய்வின் தரவுகளும் தமிழர்களின் தொன்மை பற்றிப் பல உறுதியான சான்றுகளைப் பகர்கின்றன. அறிஞர் ஐராவதம் மகாதேவன், தென்னிந்தியப் பகுதிகளில் கிடைத்த பிராமி, வட்டெழுத்துகள் பற்றிய புதிய கருத்துகளைத் தமது ஆய்வில் பதித்துள்ளார். தமிழ் பிராமி எழுத்து வடிவத்தின் காலத்தை இது இன்னும் முன்னெடுத்துச் செல்கிறது. பின்லாந்து நாட்டின் பன்மொழி அறிஞர் ஆஸ்கோ பார்ப்போலா (Asko Parpola), சிந்து சமவெளிக் குறியீடுகள் திராவிட மொழியின் முந்தைய வடிவங்களே என்று சுட்டியுள்ளார். உயர் ஆய்விற்கு வழிகோலுகிற கருதுகோள்கள் (Hypotheses) அடிப்படையில் சில முடிவுகளை முன்னிறுத்திய முந்தைய நூற்றாண்டுகளில் வாழ்ந்த அறிஞர்களின் கருத்துகள் இன்றைய அறிவியல் தொழில்நுட்ப வளர்ச்சியால் தென்படும் புதிய கருத்துகளோடு ஒத்தும், சற்று விலகியும் அமைகின்றன.

தமிழ் மொழி, சமய, பண்பாட்டு, சமூக, பொருளாதார, அரசியல், வாழ்வியல் கூறுகளைப் பற்றிய கருத்துகளை வியக்கத்தக்க வகையில் கில்பர்ட் சிலேட்டர் எடுத்துரைத்துள்ளார். இதற்கு சான்று பகர்கின்ற வகையில் ஆதித்தநல்லூர் அகழ்வாய்வின் போது வெளிவந்த ஒளிப் படங்களையும் இணைத்துள்ளார். திராவிட நாகரிகம் உலக நாகரிகங்களில் முதன்மையானது, உலகின் மற்ற தொன்மை நாகரிகங்களோடு தொடர்புடையது என்று ஆணித்தரமாகச் சுட்டுகிறார்.

நூலின் முதல் பகுதியின் முதல் வரியிலேயே, "திராவிடர் என்ற சொல்லை ஓர் இனக்குறியீட்டின் அடையாளம் என்பதைவிட ஒரு மொழியினத்தைக் குறிப்பதாகக் கொள்வதே சிறந்தது (The word 'Dravidian' indicates a linguistic rather than a racial section of the people of India)... திராவிட மொழிக்குடும்பத்தில் 15 மொழிகள் உள்ளன. 1911ஆம் ஆண்டு மக்கள்தொகை புள்ளிவிவரக் கணக்கின்படி, 6 கோடியே 20 இலட்சம் மக்கள் இந்த 15 மொழிகளைப் பேசுகிறார்கள். திராவிட மொழிகளுள் தலைசிறந்ததும், தூய்மை மிக்கதும் தமிழே" (Tamil is the most cultured, and also the purest). தமிழ்நாடு, இலங்கை உட்பட்ட பகுதிகளிலும் அசாம், பர்மா, மலேசியா பகுதிகளிலும் வாழும் 1 கோடியே 80 இலட்சம் மக்களால் தமிழ் மொழி பேசப்படுகிறது. தமிழ் மொழி வியக்கத்தக்க அளவிற்கு நுண்ணயத்தையும் தருக்க உணர்வுகளையும் உள்ளடக்கிய மொழியாகும் (The Tamil Language is extraordinary in its subtlety and sense of logic). தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய மொழிகள் மிகுதியான சமற்கிருதச் சொற்களைப் பெருமளவில் கடன் பெற்றுள்ளன. திராவிட மொழிக்குடும்பத்தின் மற்ற 11 மொழிகள் இலக்கியச் சிறப்பு இல்லாதவை" என்று குறிப்பிட்டு மொழி சார்ந்த புள்ளிவிவரங்களை அளித்துள்ளார்.

2001ஆம் ஆண்டு புள்ளிவிவரப்படி, தமிழ்நாட்டின் மொத்த மக்கள் தொகையான 6 கோடி 23 இலட்சத்தில், 5.6 கோடி மக்கள் தமிழ் மொழியையும், 35 இலட்சம் மக்கள் தெலுங்கு மொழியையும், 27 இலட்சம் மக்கள் மலையாள மொழியையும், 10 இலட்சம் மக்கள் கன்னட மொழியையும் பேசுகிறார்கள். இந்தி உட்பட மற்ற மொழிகளைப் பேசுபவர்கள் சில இலட்சம் மக்கள் தொகையினரே என்பது குறிப்பிடத்தக்கது. உலகின் பல நாடுகளில் ஏறக்குறைய இரண்டு கோடி தமிழ் மக்கள் வாழ்ந்து வருகிறார்கள். 1956ஆம் ஆண்டு மொழிவழி மாநிலங்கள் அமைக்கப்பட்ட பிறகும், வட மாநிலங்களைவிட தென்மாநிலங்களில்தான் தமிழர்கள் எண்ணிக்கையில் அதிகமாக உள்ளனர் என்பதும் குறிப்பிடத்தக்கது. நகரமயமாதல், இடம் பெயர்வு, குடியமர்தல் போன்ற பொருளாதாரக் காரணிகளையும் கடந்து, திராவிட இன மொழிக் குடும்பங்களைச் சேர்ந்த மக்கள் கேரளம், கர்நாடகம், ஆந்திரம் ஆகிய தென் மாநிலங்களிலேயே 90 விழுக்காட்டிற்கும் மேல் வசிப்பது திராவிட இனப் பண்பாட்டுக் கூறுகள் இன்றும் சிதறாமல் தொடர்வதைச் சான்று பகர்கின்றது.

பேராசிரியர் கில்பர்ட் சிலேட்டர் தனது நூலுக்கு இங்கிலாந்து நாட்டின் புகழ்மிக்க மானுட இயல் அறிஞர் பேராசிரியர் புளுர் (Fleure) அவர்களிடம்தாம் அணிந்துரை பெற்றுள்ளார். புளுரின் ஆய்வுரையில் இருந்து பின்வரும் சில கருத்துகளையும் தமது நூலில் இணைத்துள்ளார். 1) சிறிதளவு கருநிறக் கூறும், நீண்ட தலைவடிவமும் உடைய

மனிதஇனம் ஐபீரிய தீபகற்பம் தொடங்கி வடஆப்பிரிக்கா, தென்மேற்கு ஆசியா, தென்னிந்தியா ஆகிய இடங்கள் அடங்கிய ஒரு மண்டலத்தில் பரவி இருந்தனர் என்று கொள்ளலாம், 2) யூப்ரடீஸ், டைக்ரிஸ் ஆற்றுத்தாழ் நிலங்களில் பிற்காலங்களில் பேரளவில் நாகரிக முன்னேற்றங்கள் ஏற்பட்டிருப்பதை நோக்க, இந்தியாவில் உருவான திராவிட நாகரிகத்தின் மீது தொன்றுதொட்டுப் பாபிலோனிய நாகரிகத்தின் தாக்குதல் விளைவுகள் ஏற்பட்டிருக்க வேண்டும் என்று எண்ணுவது தவறன்று, 3) ஆரியர் வருகைக்குக் குறைந்தது ஆயிரம் ஆண்டு களுக்கு முன்பாகவே இங்ஙனம் இந்தியா வந்தடைந்த பண்பாட்டுக் கூறுகள் ஏற்கெனவே இந்தியாவில் குடிபுகுந்திருந்த மற்ற உயர் இனங்களுடன் கூடிக் கலப்புற்றன என்றும், திராவிடப் பண்பாடு அக்கலப்பின் வழி ஏற்பட்டதே என்றும் கூறுவது பொருந்துவதாகும்.

மானுட இயல், வரலாற்று இயல் கருத்துகளையும், கூறுகளையும் நன்கு ஆய்ந்த கில்பர்ட் சிலேட்டர், அறிஞர் புளூருடன் சற்று மாறுபட்டுப் பின்வரும் கருத்துகளைத் தமது நூலில் பதித்துள்ளார். "திராவிடர்கள் நுட்பமான கருவிகளைப் பயன்படுத்தி வேட்டையாடுவதில் வல்லமை பெற்றிருந்திருக்கலாம். மேலும், இன்றிருக்கும் மொழிகளிலிருந்தே வேட்டைத் தொழிலை மேற்கொண்டிருந்த பண்டைய திராவிட இனமக்களின் மனநிலைகளைப்பற்றிச் சில நுண்ணிய, ஓரளவு தெளிந்து கொள்ளக்கூடிய விளக்கம் கிட்டுகிறது. திராவிட மொழிகளில் தமிழே தூய்மை மிக்கது என்பதால், அதன் வழியாகவே சில கருத்துகளைப் பெறமுடியும்; நாம் காணும் தமிழ், மிகப் பரந்த ஒரு நாகரிகத்தின் நீண்டகால வளர்ச்சியின் விளைவே ஆகும். அந்நாகரிகத்தைத் தோற்றுவித்து, அம்மொழியை முழுதும் செம்மைப்படுத்திய மனப்பண்பு திராவிடர்கள் வேட்டையாடுதலைத் தொழிலாகக் கொண்டிருந்த தங்களின் மூதாதையரிடத்தில் (Hunting Ancestors) இருந்தே வந்திருக்க வேண்டும். அத்தகைய மனப்பண்பு ஒருவேளை அந்த மூதாதையர்களிடம் முழுமையாக வளர்ச்சியடையாமல் இருந்திருக்கலாம். தமிழ் மொழி அதன் நயநுட்ப வகையிலும், அறிவுத்திட்பங்கள் வகையிலும் எல்லையற்ற தனிச்சிறப்புடையது. தமிழைச் சொல்லடுக்கு மொழி (Agglutinative) என்பர். ஆயினும் தொடக்க நிலையில் திரிபியல் படியில் (Initial Inflexional Stage) உள்ளது. தமிழ் யாப்பு முறை, கிரேக்க, இலத்தீன் மொழிகளைப் போலவே அளவு அடிப்படையிலானது. அதில் எதுகை உண்டு. ஆனால், இவ்வெதுகை அடியீற்றில் அன்று, அடியின் முதலில் இடம் பெறுகிறது. மோனை உண்டு, ஆனால் இது யாப்பு அடிகளை இணைப்பது அன்று, அடியினுள் இயல்வது. தமிழ் இசை காற்சுரங்கள் அடிப்படையிலானது. அதாவது இசை நிலையில் உள்ள ஏழு சுரங்களினிடத்தில் அதற்கு இருபத்தெட்டு சுரங்கள் உண்டு. நுட்ப ஆராய்ச்சித்திறமும், முழுநிறை விளக்கப் பண்பும் இந்தியப் பண்பாட்டின் தனிச்சிறப்புப் பண்புகள். இப்பண்புகளை இயற்றவும், இயக்கவும் வல்ல ஆளுமை மிக்க மக்களிடமிருந்தே தோன்றியிருக்க வேண்டும். இவ்வாற்றல் அதன் மொழி வளர்ச்சியிலும் இடம் பெற்றிருத்தல் இயல்பு. திராவிட மொழிகளில் தூய்மை மிக்க தமிழ் இதனை உச்ச அளவில் கொண்டு இலங்குகிறது – வேறு எந்த இந்திய மொழியையும்விட இதில் இப்பண்பு மிகுதி". (Tamil versification is based on quantity, like Greek and Latin; it also employs rhyme, but at the beginnings, not the endings of verses; and alliteration, but within the verse and not as a link between verses. Tamil music is based upon quarter-tones, i.e. there are twenty eight divisions of the octave instead of seven. Indian culture, with its special characteristic of systematic and subtle philosophical thought, must have come from people capable of originating and developing it. That capacity would naturally be exhibited also in the evolution of language, and the purest Dravidian language does exhibit it in the highest degree - in a higher degree than any other Indian language.)

பல்துறைக் கருத்துகளைச் சிறந்த முறையில் பெறும் வாய்ப்பும், பரந்த ஆய்வு முறையை மேற்கொள்ளும் திறனும் இங்கிலாந்தில் பயின்ற ஒரு பொருளாதார அறிஞருக்கு இயற்கையாகவே கிடைத்தன. உலகின் பல கண்டங்களை இங்கிலாந்து தன் ஆளுகைக்குள் வைத்திருந்ததாலும், தொழில்புரட்சியை நிகழ்த்திய நாடு என்பதாலும், பொருளாதார இயலின் அடிப்படைகள் இந்நாட்டிலேயே உருப்பெற்றன. எனவே, சமூக இயல்கள் (Social Sciences) இங்கிலாந்தில் வளர்ச்சி பெற்று, நுணுகி ஆயும் நடுநிலையான மனப்பாங்கும் ஆய்வாளர்களிடம் நிலைபெற்றிருந்தது. சிந்தனைத் தளமாக இருந்த இங்கிலாந்து நாட்டில், தொன்மை அரசியல் பொருளாதாரம் (Classical Political Economy) படைத்த பொருளாதாரத் தந்தை ஆதம் சுமித், ரிகார்டோ, ஜே.எஸ்.மில், மால்தஸ் போன்ற ஆங்கிலப் பொருளாதார அறிஞர்கள் வரலாறு, சமுதாயம், அரசியல் கூறுகளை ஆய்ந்து அவற்றின் பின்னணியில் பொருளாதார இயலை உலகிற்கு வழங்கினர். பேரறிஞர் காரல் மார்க்சு, தொன்மைப் பொருளாதார இயலை மேலும் ஆய்வு செய்து, விமர்சனம் செய்து அறிவியல் முறையில் மூலதனம், மிகை மதிப்பு

நூல்களைப் படைத்தார். எனவே, கில்பர்ட் சிலேட்டருக்குப் பொருளாதாரத்தின் அடிப்படைகளை நன்கு பயின்று, பல்துறை ஆய்வுகளை மேற்கொள்ளும் ஆளுமை ஓங்கியிருந்தது. எனவே திராவிடப் பண்பாட்டினைப் பொருளாதாரத்தின் அடிப்படையில் ஆய்வு செய்ய முற்பட்டார். இவருக்கு முன்பு பல பொருளாதார அறிஞர்கள், இந்திய சமூக, பண்பாட்டுக் கூறுகளை அங்குமிங்குமாகத் தொட்டுதான் சென்றிருக்கின்றனர். ஆனால் அறிஞர் கில்பர்ட் சிலேட்டர்தான் முதன்முதலாக ஆணித்தரமான முறையில் திராவிடர்கள் கண்ட பொருளாதார அடிப்படைகளை (The Economic basis of Dravidian Culture) எடுத்துரைத்துள்ளார்.

"நெல் பயிரிடுதலே திராவிட நாகரிகத்தின் பொருளியல் அடிப்படை என்பது தெளிவு. நெல்லுடன் கூட வேறு பல்வகைத் தினைப் பயிர்களும் உற்பத்தி செய்யப்பட்டன. ஆனால் இவை நெல்லுக்கு அடுத்தபடியாக இரண்டாம் நிலையில்தான் வைக்கப்பட்டன. அதனுடன் தினைப்பயிர்களைப் பயிரிடும் போதும் நெற்பயிரிடுவதற்கு மிகவும் உகந்தவையான கலப்பை முதலிய கருவிகள் பெறப்பட்டுப் பயன்படுத்தப்பட்டன" (The rice growing is obviously the economic basis of Dravidian culture. Many sorts of millets are grown in additiion to rice but only as a pis aller, and the ploughs and other implements used for cultivating the millets are borrowed from rice cultivation, for which they are much suitable) என்று குறிப்பிட்டு, வேளாண்மையோடு நெசவு, பட்டு, அணிகலன் தொழில்களின் நுட்பங்களையும் தொன்மைக் காலத்திலேயே திராவிடர்கள் அறிந்து இத்தொழில்களை வளர்த்ததையும் விளக்கியுள்ளார்.

சீன நாட்டின் பொருளாதார அடிப்படையையும், அரிசி உற்பத்தியையும், பண்பாட்டுக் கூறுகளையும் திராவிடப் பண்பாட்டுக் கூறுகளோடு ஒப்பிட்டுள்ளார். "இந்திய நாகரிகம், சீன நாகரிகம் ஆகிய இரண்டிற்கும் பொருளியல் அடிப்படை நெற்பயிர்த் தொழிலே ஆகும். ஆயினும், சீன சமூகத்தின் உழவர் குடும்பங்களின் உறுதி வழுவாத பயிற்சியின் விளைவாக உளவியல் அடிப்படையிலான தாய்–தந்தையர் பற்று மேலோங்கியுள்ளது. இந்திய சமூகத்தின் அடிப்படைகள் என்னவென்றால் உடல் உழைப்பாளர் மனதாரத் தம்மினும் மேலான நிலையில் உள்ளவரிடம் அடக்க ஒடுக்கமாய் இருக்கும் நிலையும், அவர்கள் உடல் உழைப்பைப் பயன்படுத்திக்கொண்டே அவர்களுக்கும், அவர்களை அடிமைகளாகப் படைத்த கடவுளர்க்கும் இடையே தரகராகக் கருதப்படும் பிராமணர்களுக்கு அஞ்சி, அடங்கிப் பணியும் நிலையும் ஆகும்" (The economic basis both of Indian and of Chinese culture then is rice cultivation; but while the psychological basis of Chinese society is filial obedience, acquired by the training of peasant families in steady and meticulous industry, that of Indian society is the humble and conscientious obedience paid by the castes of manual workers to their superiors, and the reverence paid by all other castes to the priestly intermediaries between humanity and the gods).

தொழில் பகுப்பு அடிப்படையிலும், உழைப்பின் தன்மையிலும் சமூகப் பிரிவுகள் திராவிட நாகரிகத்தில் தோன்றின. இது திராவிட நாகரிகத்தின் தனித்தன்மையாகும். ஆரியர்களுக்கு முன்பே இவ்வகை சமூக அமைப்பு நிலவியது. ஆனால், ஆரியர்கள் இந்தியாவிற்கு வந்த பிறகு இருவகை மாற்றங்கள் இவ்வமைப்பில் ஏற்பட்டன. ஏற்றத் தாழ்வுகளை உடைய சாதி அமைப்பு முறை புகுத்தப்பட்டது. நிற அடிப்படையில் மக்களைத் தாழ்த்தும், உயர்த்தும் போக்கும் உருவானது. இவ்வகைக் காரணங்கள் சாதிய அமைப்பை மேலும் சிக்கலுக்கு உள்ளாக்கின.

கடவுள், சமயக் கொள்கைகளிலும் திராவிடர் போற்றிய பண்புகள் தனித்தன்மையானவை என்பதை இந்நூலில் விரித்துரைக்கிறார். ஆரியர்கள் இந்தியாவிற்கு வந்தபின், திராவிடர்கள் பின்பற்றிய சிலை வழிபாட்டு முறைகளை, தனித்த சமய அடையாளங்களைத் திராவிடரிடமிருந்தே எடுத்துக்கொண்டனர் என்பதை, 1920ஆம் ஆண்டுகளில் ஊர்ப்புறங்களில் நிலவி வந்த, குல தெய்வ வழிபாடு, நாக வழிபாடு, பெண் தெய்வ வழிபாடு, அதனை ஒட்டிய சமயக்கொள்கைகள், மந்திரங்கள், பழக்கவழக்கங்கள் ஆகியவற்றைச் சான்றுகளாகக் காட்டி விளக்குகிறார். 1.திராவிடர், 2. ஆரியர், 3.திராவிட நாகரிகத்தின் தொல் பழைமை, 4.சமயக் கருத்துகளின் வளர்ச்சி முறை, 5.பொருளியல் அடிப்படை, 6.திராவிட நாகரிகத்தின் சிறப்புக்கூறுகள், 7.திராவிடர்கள் சந்திக்கும் இன்றைய அறைகூவல்கள் ஆகிய ஏழு பகுதிகளை இந்நூலில் இணைத்துச் சிறந்த ஆய்வின் அடிப்படையில் ஒரு மாபெரும் படைப்பினை கில்பர்ட் சிலேட்டர் தமிழ்நாட்டிற்கும், தமிழ் ஆய்வுத் தளத்திற்கும் கொடையாக அளித்துள்ளார்.

19ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு அய்ரோப்பிய நாடுகளிலும், மற்றைய நாடுகளிலும் ஆய்வுத் தளங்களில் மேலோங்கியிருந்த தருக்கவியல் முறை (Logical Method) இந்நூலின் எல்லாப் பகுதிகளிலும் மிகச் சிறப்பான முறையில் இழையோடியிருக்கிறது.

கில்பர்ட் சிலேட்டரின் படைப்பு, பின்பு தமிழ்நாட்டில் வேரூன்றிய திராவிட இயக்கச் சிந்தனைகளுக்கு முன்னோடியாக அமைந்து, கருத்துக் கருவூலமாக ஓங்கி உயர்ந்து, கலங்கரைவிளக்கமாக இன்றும் தமிழர்களுக்கு வழிகாட்டுகிறது. இப்படைப்பு வெளிவந்து நாற்பது ஆண்டுகளுக்குப்பின் கில்பர்ட் சிலேட்டரின் எண்ண ஓட்டத்தைப் பேரறிஞர் அண்ணா அவர்கள், 1962ஆம் ஆண்டு இந்திய நாடாளுமன்ற மேலவையில் தமது முதல் உரையில், "நான் திராவிட சமுதாயத்தைச் சேர்ந்தவன். நான் திராவிடன் என்று என்னை அழைத்துக்கொள்வதில் பெருமிதம் கொள்கிறேன். இப்படிக் குறிப்பிடுவதால், ஒரு குஜராத்திக்கோ, ஒரு மராட்டியருக்கோ அல்லது ஒரு வங்காளிக்கோ நான் எதிரானவன் என்று பொருள் கொள்ளக்கூடாது. இராபர்ட் பர்ன்ஸ் அவர்கள் குறிப்பிட்டது போல எல்லா வகையிலும் ஒரு மனிதன், மனிதனே ஆவான். நான் திராவிட சமுதாயத்தைச் சார்ந்தவன் என்று குறிப்பிடுவதற்குக் காரணம் என்னவென்றால் திராவிடர்கள் சில தனித்தன்மை மிக்க, வேறுபாடுகள் உடைய, ஆக்கப்பூர்வமான கருத்துகளைப் பெருமளவிற்கு இந்திய நாட்டிற்கு வழங்கும் வல்லமை பெற்றவர்கள் என்பதே ஆகும்" (I belong to the Dravidian stock. I am proud to call myself a Dravidian. That does not mean that I am against a Bengali or a Maharashtrian or a Gujarati. As Robert Burns has stated, "A man is a man for all that". I say that I belong to the Dravidian stock and that is only because I consider that the Dravidians have got something concrete, something distinct, something different to offer to the nation at large) என்று வியப்புறும் வகையில் குறிப்பிட்டார்.

இடஒதுக்கீடு என்னும் சமூகநீதிக்காகப் போர் முழக்கமிட்ட சி.சங்கரன் நாயர், நீதிக்கட்சியைச் சார்ந்த மருத்துவ மேதை டி.எம். நாயர், பெருமகனார் ஏ. இராமசாமி (முதலியார்) ஆகியோரின் அறிவாற்றல், ஆளுமைத்திறன் பற்றியும், கூட்டுறவு இயக்கம், தொழிலாளர் இயக்கம், நிதி நிறுவனங்கள் ஆகியவற்றுக்கு முன்னோடித் தளமாகச் சென்னை இருந்தது பற்றியும், தென்னாட்டவர்கள், குறிப்பாகத் தமிழர்கள் ஆங்கில மொழிப் புலமையில் ஆங்கிலேயர்க்கு இணையாக விளங்கியது பற்றியும் கில்பர்ட் சிலேட்டர் குறிப்பிட்டுள்ளார். அய்ரோப்பிய நாடுகளுக்கு இணையாகச் சென்னையில் மட்டுமே ஆறு ஆங்கில இதழ்கள் வெளிவந்தன என்பதைக் குறிப்பிட்டு வியந்துள்ளார்.

சென்னை மாகாணச் சட்டமன்ற மேலவையில் மிகக் குறுகிய காலமே இடம்பெற்றிருந்த கில்பர்ட் சிலேட்டர் "இம்மாகாணத்தின் தாய் மொழிகள் எல்லாவற்றுக்கும் ஒரு 'பொது எழுத்து முறையை' மேற்கொள்வது நடைபெறக் கூடியதா அல்லது விரும்பத்தக்கதா என்பது பற்றி ஆராய ஒரு குழு அமைக்க வேண்டும் என்று ஒரு தீர்மானத்தை முன்மொழிந்தேன். இத்தீர்மானம் மிகப் பெரிய பெரும்பான்மையால் தோற்றது. பொது எழுத்து முறையில் எழுதப்பட்டால், தமிழில் எழுதப்பட்ட நூல் மிகுதியான தொல்லையில்லாமலே தெலுங்கராலும், கன்னடியராலும், மலையாளிகளாலும் உணரப்பட முடியும்" என்றும் தமது விழைவினைக் குறித்துள்ளார். மொழிவழி மாநிலங்கள் அமைந்த பிறகு, திராவிட மொழிகளான தெலுங்கு ஆந்திரத்தில் 7.6 கோடி மக்களாலும், கன்னடம் கருநாடகத்தில் 5.3 கோடி மக்களாலும், மலையாளம் கேரளத்தில் 3.1 கோடி மக்களாலும் பேசப்பட்டு அம்மொழிகளுக்கென்று தனித்த அடையாளங்கள் வளர்ந்துள்ளதால் கில்பர்ட் சிலேட்டர் தெரிவித்த ஒரு பொது வரிவடிவம் தேவையில்லை என்பதைக் காலம் மெய்ப்பித்துள்ளது. ஆனால், திராவிட மொழிகள், பண்பாட்டுக் கூறுகள் பற்றி ஆய்வதற்காகத் தென்னக மாநிலங்கள் இணைந்து ஆந்திரத்தில் திராவிடப் பல்கலைக் கழகத்தை 1997ஆம் ஆண்டு தோற்றுவித்துள்ளன. இது ஒருவகையில் கில்பர்ட் சிலேட்டரின் கனவை நனவாக்கும் நன்முயற்சியாகும்.

மற்றொரு கருத்தையும், கவலையையும் கில்பர்ட் சிலேட்டர் குறிப்பிட்டுள்ளார். "நேரடியாகக் கண்டு திராவிடரின் மனிதப் பண்பாற்றலை மதிப்பிட விரும்புபவர்கள், அவர்கள் காணும் திராவிடரில் மிகப் பெரும்பாலோர் உள்ளூர் நோயாளிகள் என்பதனைக் கவனித்துப் பார்க்க வேண்டும். இதற்குக் காரணம் கொக்கிப் புழு நோய் பெருமளவில் பரவியிருந்ததுதான்" என்றும் குறிப்பிட்டுள்ளார். 1996ஆம் ஆண்டு நான்காவது முறையாகக் கலைஞர் ஆட்சிப் பொறுப்பேற்றவுடன், 'வாழ்வொளித்திட்டம்' மருத்துவ மேதை சாலமன் விக்டர் அவர்களின் பங்களிப்போடு வெற்றிகரமாக நிறைவேற்றப்பட்டு, அதன் வாயிலாகத் தமிழ்நாட்டில் இளஞ்சிறார்களிடம் காணப்பட்ட இந்தக் கொக்கிப்புழு நோய் பெருமளவில் கட்டுப்படுத்தப்பட்டு கில்பர்ட் சிலேட்டர் தெரிவித்த கவலையும் நீக்கப்பட்டது.

இந்திய மாநிலங்களில் தமிழ்நாடு, மக்கள் நல்வாழ்வுத் துறைகளில் பல்வேறு சாதனைகளைப் படைத்து வருகிறது. குறிப்பாக, தமிழக முதல்வராகக் கலைஞர் பொறுப்பேற்றபோதெல்லாம் அனைவருக்கும் கல்வி, பாதுகாக்கப்பட்ட குடிநீர், தரமான மருத்துவ வசதி ஆகியன பல்வேறு சமூக நலத்திட்டங்கள் வழியாக அளிக்கப்பட்டு வருகின்றன. இதன் விளைவாக மனித மேம்பாட்டுக் குறியீடுகளில் தமிழகம் இந்திய மாநிலங்களில் மூன்றாம்

இடத்தைத் தொடர்ந்து பெற்றுச் சாதனை படைத்து வருகிறது.

தந்தை பெரியார், பேரறிஞர் அண்ணா, கலைஞர் ஆகியோரின் தொண்டால் தமிழகம் அறிவியலிலும் மருத்துவ உயர் கல்வியிலும் உயர்ந்து வருகிறது. கில்பர்ட் சிலேட்டர் தனது நூலின் முடிவில், "செல்வத்தையும் ஆற்றலையும் வழிபட்டு மேலைநாட்டவர் உலக நாடுகளிடையே அமைதியையும் ஒற்றுமையையும் நிலைநாட்டத் தவறி இருக்கின்றனர். ஒரே நாட்டின் பல வகுப்பினரிடையே, தனிமனிதரிடையேகூட, அவர்கள் உள்ளத்தின் அகத்தே கூட, அவர்களால் அமைதிகாண முடியவில்லை. எனவே, மொத்தத்தில் இந்தியா மேலை உலகினரிடமிருந்து பெறுவதைவிட மேலை உலகு இந்தியாவிடமிருந்து மிகுதியாகக் கற்கவேண்டி வரலாம். அதனுடன் கீழ்த் திசைக்கும் மேல் திசைக்குமிடையே அறிவு வாணிகம் எப்புறமிருந்து எப்புறம் ஒழுகினாலும், ஆங்கிலம் பேசும் திராவிடர் அதன் மிகச் சிறந்த இடைப்பட்ட பங்களிப்பை அளிப்பார்கள் என்பதில் ஐயமில்லை" என்ற வைர வரிகளைப் பதித்து, என்றென்றும் போற்றத்தக்க அறிவுசார்ந்த நெறிகளைத் திராவிடப் பண்பாட்டிற்கு வழங்கியுள்ளார் என்றால் மிகையாகாது.

இந்தியாவில், தமிழ்நாட்டில் திராவிடர் இயக்கம்தான், கில்பர்ட் சிலேட்டர் சுட்டிய சமூக ஏற்றத்தாழ்வுகளைக் களைவதற்கு, 20ஆம் நூற்றாண்டில் நீதிக்கட்சியாக, திராவிடர் கழகமாக, திராவிட முன்னேற்றக் கழகமாக முகிழ்த்தது. சாதிய, ஆதிக்கச் சக்திகளைத் தகர்த்து ஒரு பகுத்தறிவு சார்ந்த பண்பாடு, பொருளாதாரப் புரட்சியை நிகழ்த்தியது. திராவிட இயக்க ஆட்சியின் தனிப்பெரும் தலைவரான மாண்புமிகு முதல்வர் கலைஞர் அவர்கள், 87 அகவை எட்டியும் தனது சலியாத உழைப்பால், அளப்பரிய பணிகளால் தமிழர் நிலையை உயர்த்தி வருகிறார். செம்மொழி என்ற தகுதியைத் தமிழுக்குப் பெற்றுத்தந்து அம்மொழி மேலும் செம்மையுற உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு சூன் திங்களில் காண விழைகிறார். தமிழர்களின் உலகளாவிய மாண்பையும், பண்பாட்டையும் 2010ஆம் ஆண்டின் உலகத்தமிழ்ச் செம்மொழி மாநாடு மேலும் ஒளிரச் செய்யும், உணர்வை அளிக்கும், தமிழை வளர்க்கும்.

கில்பர்ட் சிலேட்டரின் தமிழ்த் தொண்டினைப் போற்றுவோம்!

தமிழ், தமிழர் உரிமையைப் பேணிக் காப்போம்!

## இலக்கிய பஞ்சகம்

வள்ளுவர் தந்த திருமறையைத் – தமிழ்
மாதின் இனிய உயிர்நிலையை
உள்ளம் தெளிவுறப் போற்றுவமே – என்றும்
உத்தம ராகி ஒழுகுவமே.

பாவின் சுவைக்கட லுண்டெழுந்து – கம்பன்
பாரிற் பொழிந்ததீம் பாற்கடலை
நாவின் இனிக்கப் பருகுவமே – நூலின்
நன்னய முற்றுந் தெளிகுவமே.

தேனிலே ஊறிய செந்தமிழின் – சுவை
தேரும் சிலப்பதி காரமதை
ஊனிலே எம்முயிர் உள்ளளவும் – நிதம்
ஓதி யுணர்ந்தின் புறுவோமே.

கற்றவர் மெச்சும் கலித்தொகை – யாமின்பக்
கற்பனை சேருங் களஞ்சியத்தை
முற்ற அளந்து தெரிவோமே – காதல்
மூழ்கும் துறைகண்டு வாழ்வோமே.

பண்டை இயற்கை வளங்களெல்லாம் – பத்துப்
பாட்டின் வளத்தினிற் கண்டறிந்து
மண்டல மெங்கும் கமழும் – அருந்தமிழ்
வாசம் நுகர்ந்து மகிழ்வோமே.

- கவிமணி தேசிய விநாயகம்

# தமிழ் இலக்கியத்தில்
# புதுமையும் மரபும்



**திரு. த. ஜெயகாந்தன்**

புதுமையும் மரபும் ஒன்றுக்கு ஒன்று எதிரும் புதிருமாய் மோதிக் கொள்கிற நிலை இலக்கியப் பிரச்சினை மட்டுமல்ல; வாழ்க்கையில் எது எது பிரச்சினை ஆகிறதோ அதெல்லாம் இலக்கியத்திலும் பிரச்சினை ஆகிவிடுகிறது.

நவீன இலக்கியம் என்பது பெரும்பாலும் நடைமுறை வாழ்க்கையை மையமாகக் கொண்டது. நடைமுறை வாழ்க்கையில் ஏற்படுகிற பிரச்சினைகள் இரண்டு வர்க்கத்துக்கிடையே ஏற்படுவன. அந்த வர்க்கங்கள் சமயம், சாதி, பொருளாதார உயர்வு – தாழ்வு ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டவை. மேலும், மாற்றங்களின் தேவையும், மாறாதிருப்பதில் உள்ள வசதியும் அதைக் கூர்மைப்படுத்துகின்றன.

'பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல கால வகையினானே' என்பது இங்கு எப்போதும் கருத்தில் கொள்ளத்தக்கதாகும். இது நடைமுறையில் பழையன கழித்தலும் புதியன புகுத்தலும் என்று ஆகிவிடுவதனால் தான் பிரச்சினைகள் கூர்மை பெறுகின்றன. அப்போதுதான் இலக்கியத்தின் பாத்திரம் முக்கியமாகிறது. உதாரணமாக,

வைதவ்யம் என்பது நமது மண்ணில் மரபு சார்ந்த ஒரு விஷயம். அதுவும் மேல்வர்க்கத்துப் பண்பாட்டு வளர்ச்சியில் ஒரு சமூகத்தில் இயல்பாகவே ஏற்பட்டு வளர்ந்தது. இதற்கு வேதத்திலோ சாத்திரத்திலோ அறநெறிக் கொள்கையிலோ எங்கேயும் ஆதாரம் இருப்பதாகத் தெரியவில்லை. ஆயினும் இது எவ்விதம் ஒரு மரபாக வந்து நெடுநாள் நிலவி இருக்க முடியும் என்று ஆராயுமிடத்து, பல வரலாற்றுச் சான்றுகளும், கதைகளும் இது பெண்மக்கள் தாமே முன்வந்து ஏற்றுக்கொண்ட நெறியாகக் காணக் கிடைக்கிறது. இதனைப் பெண்கள் ஒரு நோன்பாகவே ஏற்றிருந்தனர். நோன்பு என்பது பிறருடைய வற்புறுத்தலால் ஒரு சமூகக் கொடுமையாகத் திணிக்கப்படுவது அன்று. மணிமேகலை இளமையில் துறவு பூண்டதும், அவ்வைப் பிராட்டி இளமைப் பருவத்திலேயே முதுமைக் கோலம் பூண்டதும், காரைக்கால் அம்மையார் இல்லற வாழ்க்கையைத் துறந்ததும், திலகவதியார் திருமணத்துக்கென்று நிச்சயிக்கப்பட்டவன் இறந்ததும் திருமணம் ஆகாமலேயே வைதவ்யத்தை ஏற்றதும், அந்நிய அரசர்களின் முற்றுகைக்கு ஆளானபோது அரசகுலப் பெண்கள் தீக்குளித்ததும் சமூகக் கொடுமைக்குப் பலியானதனால் அல்ல. அவை அவர்களுடைய சுயேச்சையான உயர்பண்புகளின் விளைவே ஆகும்.

பிற்காலத்தில் இந்தப் பெருமைக்குரிய தனிமனித குணநலன்களை உயர்குலத்தோர் என்று தங்களைக் கருதிக்கொண்டிருந்தவர்கள் தங்கள் பெண்மக்கள் மீது வலிந்து சுமத்தியதால் இவை வன்கொடுமைகள் ஆயின. இதனை எதிர்த்துக் காலங்காலமாகப் புதிய சிந்தனா வாதிகள் போராடி வந்ததை அக்கால இலக்கியங்கள் பிரதிபலித்தன. இஃது இலக்கியத்தில் ஒரு புதிய மரபைத் தோற்றுவித்தது.

மரபும், மரபை மாற்றுதலும், ஒரு புதிய மரபைத் தோற்றுவிப்பதும் இலக்கியப் பணி ஆயிற்று. இதில் எது சரி, எது தப்பு என்று பொது விவாதத்தில் ஈடுபடுவது அநாகரிகமாகும். இங்கே தனிமனித சுதந்திரம்தான் இலக்கிய தருமம். அதாவது இலக்கியத்தில் வரும் பாத்திரங்களின் சுதருமம். இதையே சமூக தருமம் ஆக்குவதுதான் ஒரு கலைஞனின் நோக்கம்.

'நீதி, உயர்ந்த மதி, கல்வி, அன்பு நிறைய உடையவர்கள் மேலோர்' – இவர்கள் எந்தக் குறிப்பிட்ட சாதியையும் சேர்ந்தவர்களாக இல்லை. இவர்கள் தனி மனிதர்களாகவே இருப்பர். மானிடரில் கீழோர் – மேலோர் என்பது சாதியை வைத்துத் தீர்மானிக்கப்படுவது இல்லை என்பதே தமிழ் இலக்கிய தருமமாக எக்காலத்தும் இங்கு நிலவி வரும் கொள்கை.

இந்த நற்பண்புகளை வலிந்து திணிப்பதோ, தனிமனித சுதந்திரத்தை இதற்குப் பலியிடுவதோ சமூகக் கொடுமை ஆகும்.

'பழைமை பழைமை என்று பாவனை பேசலன்றிப் பழைமை இருந்த நிலை பாமரர் ஏதறிவார்' – என்று புதுமைக் கவி பாரதி பழைமையின் சிறப்பினையும் மறக்காமல் இருக்கிறார்.

பழசோ, புதுசோ – ஒரு கருத்து இக்காலத்துக்கு ஏற்றதுதானா என்று பார்ப்பதுதான் முக்கியம். பழைமை என்பதனால் எல்லாவற்றையும் தள்ளி விடவும் முடியாது; புதுமை என்பதால் எல்லாப் பைத்தியக்காரத்தனங்களையும் ஏற்றுக் கொள்ளவும் முடியாது.

சமூக மரபுகள், தனிமனிதப் பண்புகளை – உயர் பண்புகளை மதித்து ஏற்றுக் கொள்ளுதல் வேண்டும். இதனை நவீன தமிழ் இலக்கியம் சிறப்பாகப் பிரதிபலிக்கிறது.

இது தமிழருக்குப் பொற்காலம்! உலகப் பொதுமனிதனாக இன்றைய தமிழன் உருவாகி வருகிறான். உலக மனிதனுக்கு உகந்த பொது நூல் திருக்குறள். இதில் கூறப்படும் கருத்துகள் உலகெங்கும் உள்ள சமூகத்தினருக்கு உதவும் சீரிய பண்புகள் உடையவை.

திருக்குறள் தமிழில் படைக்கப்பட்ட போதிலும் அது தமிழருக்கு மட்டுமே உரியதன்று; ஒரு சாதிக்கு, ஒரு இனத்துக்கு, ஒரு மொழிக்கு, ஒரு நாட்டுக்கு மட்டும் உரியதாக அது குறுகிய நோக்கமோ பார்வையோ கொண்டதாக இல்லை.

மன்னர், அமைச்சர், வணிகர், அறவோர், துறவோர், மக்கள் என்று உலகப் பொது அடையாளங்களே அதில் குறிப்பிடப்படுகின்றன. தமிழுக்கு இவ்வளவு பெருமையைச் சேர்க்கிற இந்த நூலில் 'தமிழ்' என்ற சொல்லே காணப்படாதது இதன் பொதுத் தன்மையைச் சிறப்பாகக் குறிக்கின்றது.

உலகில் உள்ளோர் அனைவரும் அவரவர் காலத்துக்கும், அவரவர் நிலத்துக்கும், அவரவர் வரலாற்றுப் பின்னணிக்கும் ஏற்ப எக்காலத்தும் புரிந்து செயலாற்றும்படி தூண்டும் ஒரு நூல் திருக்குறள் என்பதால் அது நவீன மார்க்சிசத்துக்கு இணையானது என்பார் தோழர் ஜீவா. அது என்றும் புதியது!

'மரபுக்கு மரபு, புதுமைக்குப் புதுமை' என்ற வரையறுப்புக்கு ஏற்ப எதிர்காலத் தமிழ் இலக்கியம் உருவாகும் என்பது எனது நம்பிக்கை. இந்த நம்பிக்கையை உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாட்டுப் பிரதிநிதிகளோடு பகிர்ந்து கொள்கிறேன்.

தமிழையும், தமிழின் உயர்வையும், தமிழின் உலகளாவிய தன்மையையும் தனது வாழ்க்கை இலட்சியமாகக் கொண்டிருக்கும் தமிழக முதல்வர் கலைஞருக்குத் தமிழ் உலகமும், உலகத் தமிழரும் இந்தப் பெரும்பணி சிறப்படைய வாழ்த்தி நிற்கிறார்கள். அவர்களுள் ஒருவனாக எனது வாழ்த்தினையும் பணிவன்போடு சமர்ப்பணம் செய்கிறேன்.

❖

## தமிழரின் பெருமை

தமிழா! உனக்கிது தருணம் வாய்த்தது
தரணிக் கெல்லாம் வழிகாட்ட.
'அமுதாம் என்மொழி; அறமே என்வழி;
அன்பே உயிர்நிலை' என்றுசொலும் (தமிழா!)

உலகின் மதமெலாம் ஒவ்வொரு காலத்தில்
ஓடிப் புகுந்ததிந்தத் தமிழ்நாட்டில்;
கலகம் சிறிதுமின்றிக் கட்டியணைத் தவற்றைக்
காத்து வளர்த்தவர்கள் தமிழ்நாட்டார். (தமிழா!)

தன்னுயிர் நீப்பினும் பிறர்கொலை அஞ்சிடும்
தருமம் வளர்த்தவர்கள் தமிழ்நாட்டார்;
மன்னுயிர் யாவையும் தன்னுயிர் என்றிடல்
மண்டிக் கிடப்பதுன்றன் தமிழ்மொழியே. (தமிழா!)

உலகம் முழுவதும் கலகம் உறுதுபார்!
உன்பெருங் கடமைகள் பலவுண்டு;
விலகும் படிசெய்யும் வெறிகொண்ட பேச்செல்லாம்
விலக்க விழித்தெழு வாய்தமிழா! (தமிழா!)

நாமக்கல் கவிஞர் இராமலிங்கனார்

# புலமைச் செல்வியர்

முனைவர் ஒளவை நடராசன்



ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியர் ஆடவர் மகளிர் ஆகிய இருபாலார்க்கும் அறிவொப்புமை கூறியதோடு அமையாது, 'கிழவனுங் கிழத்தியும் சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே' என்பதால், ஏமஞ்சான்றவற்றை இருபாலாரும் இயற்றி உயர்ந்தனர். தமிழ்மக்கள் இருபாலாரையும் கல்வியிலும் அறிவிலும் வளர்ந்தோங்க வேற்றுமையின்றிப் பயில்வித்தனர். இத்தகைய பயிற்சியாலேயே புலவர் போற்றும் புகழ்ச் செல்வியர் பலரை நாம் சங்க இலக்கியங்களில் நல்லிசைப் புலமை மெல்லியலராகக் காண முடிகிறது. கோப்பெருஞ்சோழற்கு உயிர்த்துணைவராகிய பிசிராந்தையார் யாண்டு பலவாகவும் தமக்கு நரையிலவாதற்குக் காரணமாகத் தம் மனைவியும் மக்களும் அறிவு நிரம்பினராயிருத்தலைக் கூறியதும் குறிக்கத்தக்கது. 'இல்லதென் இல்லவள் மாண்பானால்' என்பதனையும் ஈண்டுப் பொருத்திக் காணலாம்.

மகளிராற் பயிலப்படும் யாழ் முதலிய இசைக் கருவிகள் ஆண்மக்களானும் பயிலப்படுமாறு போல, ஆண்மக்களாற் பயிலப்படுவனவும் மகளிராற் கற்கப்படுவனவாகும். மகளிர்க்கோதிய யாழ்க் கலையில் திறன் மிக்க அடநூலைப் போலவே இயற்றமி ழறிவில் நல்லிசைப்புலமை மகளிரும் புகழொடு வாழ்ந்தனர். ஆண் பெண் இருபாலார்க்கும் அவயவ வேற்றுமையல்லது அறிவு வேற்றுமையை எவ்விதத்திலும் எந்நிலையிலும் முன்னோர் கருதியதில்லை.

ஆடவர் மகளிர் ஆகிய விருபாலாரும் இணைந்தியற்றும் வாழ்வே வாழ்வெனக் கருதப்பட்டதால், இருபாலாரும் ஒத்த உரிமையும் மதிப்புமுடையராய் வாழ்ந்தனர்.

'ஆர்' எனுஞ் சிறப்பு ஈறு, ஆடவர் பெயரீற்றில் மாமூலனார், கல்லாடனார், மருதனிளநாகனார் என வருதல் போன்றே, மகளிர் பெயரீற்றிலும், ஒளவையார், நக்கண்ணையார், பொன்முடியார், வெள்ளிவீதியார் என அச்சிறப்பு விகுதி ஆளப்பெறும் மரபுண்டு. மேலும் மக்கள் என்பது அறிவுடைய ஆடவரையும், மகளிரையும் குறிக்கும் பொதுச்சொல். 'மக்கள் தாமே ஆறறிவுயிரே' என்ற நூற்பாவிற்குப் பேராசிரியர், 'முப்பத்திரண்டு அவயவத்தான் அளவிற்பட்டு அறிவொடு புணர்ந்த ஆடூஉ மகடூஉ மக்களெனப்படும்' எனக் கூறுதலால் அறியலாம்.

மக்கள் வாழ்வியல் நாகரிகத்தை, பண்பாட்டுப் பாங்கை மொழிச் சொற்களிலும் காணலாம். தலைவன்–தலைவி, காதலன்–காதலி, கிழவன்–கிழத்தி, உழவன்– உழத்தி, நுளையன்– நுளைச்சி, குறவன்–குறத்தி முதலிய பால் நிகர் சொற்கள் புலவரைக் குறிக்கின்றன. 'இருபேராண்மை செய்த பூசல்' என்று ஒளவையார் பாடியது ஆண்மை பெண்மைக்கும் உண்டெனவும், எண்ணத்தை ஈடேற்றும் பெருந்தகைமையும் பீடும் இருபாலார்க்கும் உரியதாகக் கருதியதும் அறியலாம். அறிவறிந்த மக்கட்பேறு, நன்மக்கட்பேறு, பேதையார் கேண்மை, மடவார்ப்பொறை, பேதையார் சொன்னோன்றல் என்னுமிவற்றில் ஆண் பெண் இருபாலார்க்கும் பொதுப்படவே உரை வழக்குகள் உள்ளன. 'ஒருபாற் கிளவி ஏனைப்பாற் கண்ணும் வருவகைதானே வழக்கென மொழிப' என்னும் நூற்பாவின்படி ஆண்பாற்காகும் அறவுரைகள் பெண்பாற்கும் பொருந்துமாற்றைத் தொல்காப்பியம் காட்டும். "வீரமிக்க ஆண்மக்களைப் பெற விரும்பியது போலத் தட்சர் பெண் மக்களையும் பெற விரும்பினர். 'குன்றக் குறவன் கடவுட் பேணி இரந்தனன் பெற்ற எல்வளைக் குறு மகள்'' எனக் கபிலரும், 'அவரும் பைந்தொடி மகளிரொடு சிறுவர்ப் பயந்து நன்றி சான்ற கற்பொடு எம்பாடாதல்'' என ஆலங்குடி வங்கனாரும் குறித்தனர்.

**கல்வி மாட்சி**

விலங்கினின்று மக்களை மன உணர்வாலும், அறிவின் சிறப்பாலும் வேறு பிரித்து உயர்த்தி நிற்பது கல்வி. எண்ணூல்களை ஓதும் முறையினை 'வாயினால் வகுத்த பக்கம்' எனவும், இயல் நூல்களின் கருத்துணர்ந்து வினைகளைக் கையால் இயற்றும் முறையினைக் 'கையால்

வகுத்த பக்கம்' எனவும் கல்வியை வகை செய்திருந்தனர். இக்கல்வி இருபாலார்க்கும் உரியதாய் இருந்தது. ஆடூஉ முன்னிலையும் மகடூஉ முன்னிலையும் இருபாலார்க்கும் கல்வி கற்பித்த நிலைமையைப் புலப்படுத்தும்.

கபிலர் பாரிமாட்டு அவைப் புலவராக அமர்ந்திருந்தது போல, அதியன்பால் ஔவையார் வீற்றிருந்ததும், குறமகள் குறியெயினி அவைக்களப் புலவராக ஏறைக்கோனைப் போற்றிச் சிறப்பிப்பதும், மடல் பாடிய மாதங்கீரனார், பாலை பாடிய பெருங்கடுங்கோ, மருதனிளநாகனார் போல ஒரு துறைப் புலமையில் ஓங்கிய புகழ் பெற்றவராக வெறிபாடிய காமக்கண்ணியார் விளங்குவதும், போரிட்ட வேந்தர்க்கிடையில் பூசல் தவிர்த்த புல்லாற்றூர் எயிற்றியனார், ஆலத்தூர் கிழார் முதலாய புலவர்களைப் போல ஔவைப் பெருமாட்டியாரும் தூது சென்று அறிவுரை கூறுவதும், வெண்ணிக்குயத்தியார் வேந்தன் முன்கூறிய அங்கதப் பாட்டும், காக்கைபாடினியாரின் அஞ்சாமையும், மூதின்முல்லைத் துறையைத் தமக்கே உரிமையாக்கிக் கொண்ட புலமைச் செல்வியர் தனி மாண்பையும் நோக்குங்கால் ஆடவர்க்கும் மகளிர்க்கும் வேறுபாடு கண்டு விலக்கும் நெறி பாட்டுலகிலோ, பாட்டுலகில் பயின்ற திணை துறைகளிலோ, அரசர் அவைக்களங்களிலோ ஆடுகளங்களிலோ யாண்டும் இல்லை. இவ்வுரிமைப் பெருமிதம் தமிழ்மகளின் தகுதியைப் பறை சாற்றும்.

கல்வி நலத்தொடு கலையுணர்ச்சியும் மகளிர்க்கு இயல்பாய் அமைந்த பெருமிதமாகும். எதனையும் வனப்புறச் செய்வதும், அழகுறக் காட்டுவதும் பெண்களுக்கே அமைந்த திறமாகும். அதனாலேயே 'மாதர் – காதல்' எனக் கூறப்பட்டது.

ஈரமனத்தின் இயல்பை வியப்பதொடு வீரப் பெருமிதத்தை வியந்து புகழும் வழக்கமும் நிலவியது. புறப்பொருளில் இது மூதின் முல்லை என்று கூறப்படும். கொல்லும் வேலினையுடைய வீரர்க்கல்லது அந்த மறக்குடியில் பிறந்த அரிவைமார்க்கும் வீரத்தைச் சிறப்பிப்பது இத்துறையாம். இவ்வீர மகளிரின் செய்கைகளாகத் தமிழ் நூல்களில் கண்ட பாடல்கள் பலவும் நல்லிசைப் புலமை மகளிராலேயே பாடப்பட்டிருத்தல் வியக்கத்தக்கதாகும்.

மறவர்குலத் தாயின் இயல்பைப் பற்றிப் பூங்கணுத்திரையார் பாடுங்கால், 'மீன் உண் கொக்கின் தூவி அன்ன, வால் நரைக் கூந்தல் முதியோள் சிறுவன் களிறு எறிந்து பட்டனன் என்னும் உவகை ஈன்ற ஞான்றினும் பெரிதே' என உரைப்பதாகக் காட்டியுள்ளார். இதனால் அக்காலத்தே வீரத் தாயரான பெண்டிர் தாம் புதல்வரைப் பெறுதல் மறங்குன்றா மானமுடைமையை வளர்த்து மகிழ்வதற்கே என்று கருதினார் எனவும், இளையோர் எய்திய வீரச்சாவில் அவர்க்கு மன மகிழ்ச்சியே அன்றி வருத்தமில்லை என்பதும் விளங்கும்.

ஒரு மகனல்லாது இல்லோளாகிய வீரத்தாயொருத்தி தன் செல்வச் சிறுவனைப் போர்க்கு அனுப்பும் மாட்சிமையை ஒக்கூர் மாசாத்தியார் வனப்புறப் பாடியுள்ளார்.

காக்கைபாடினியார் நச்செள்ளையார் பாடலில் தாயொருத்தி தன் மகனைப் பற்றிய பொய்யுரையைக் கேட்டுப் பொறாளாய்

**மண்டு அமர்க்கு உடைந்தனன் ஆயின் உண்ட என்**
**முலைஅறுத் திடுவேன், யான்எனச் சினைஇ**
**கொண்ட வாளொடு படுபிணம் பெயரா**
**செங்களம் துழவுவோ ளாக.......**

எனக் காட்டப்பெறுகிறாள். இவ்வாறே ஔவையார் காட்டும் தாயொருத்தி, 'வருபடை போழ்ந்து வாய்ப்பட விளங்கி, இடைப்படை அழுவத்துச் சிதைந்து வேறாகிய சிறப்புடைய மாண்பு கண்டருளி, வாடு முலை ஊறிச் சுரந்தனளாக நிற்கிறாள்.

புறநானூற்றில் நும்மகன் யாண்டுளன் என்று கேட்டாருக்குத் தாய் கூறிய விடையாக ஓர் அழகிய பாடலைக் காவற்பெண்டாகிய பெருமாட்டியார் யாத்துள்ளார். இதனால் இப்பாடல் பாடியவர் மறக்குடிப் பெண்டிராதல் வேண்டுமென்பதும், புலியொத்த போர் வீரனை மகனாக உடையவராவர் என்பதும், அத்தகைய வீரமகனைப் போர்க்களத்தே போக்கியபின் அவனைப் பெற்ற தம் வயிற்றைப் புலி கிடந்து போன கன்முழையாகக் காட்டினார் என்பதும் அறியலாம்.

இவ்வாறு நிகழும் வீரத்தாயரின் கூற்றுகள் தொல்காப்பியத்தில் தாய்தப வரூஉம் தலைப்பெயல் நிலை என்று குறிக்கப்பட்டுள்ளது. அஃதாவது போர்க்களத்துப் பொருதுமாயும் சிறப்பிற்றீர்ந்து தன் மகன் புறங் கொடுத் தானாக, அது கேட்டுத் தாய் சாக்காடு துணிந்து சென்று, மகனைக் கூடும் கூட்டம் என நச்சினார்க்கினியர் பொருளுரைத்தார்.

இன்பத்துறைகளை இயம்புவனவாகப் புலமைச் செல்வியர் பாடல்கள் இருப்பனவெனினும் ஒழுக்க நீதிகளும், உண்மை அறங்களும் இடையிடையே உணர்த்தப்பட்டுள்ளன. இவர் நிரலில் காலந்தோறும் இவ்வாறு காதலும் அறமும் வீரமும் கனிந்த திருப்பாடல்களைப் பாடிய புலமை மெல்லியலாரை நாற்பதின்மருக்கு மேலாகச் சங்க இலக்கியத்தில் காணலாம். புலமைச் செல்வியர் புனைந்து வழங்கிய பாடல்களில் அறிவுரைகளும் அழகுப் புனைவுகளும் மனத்தைக் கவரும் மரபுத் தொடர்களும் பயில்வனவாகும் சிலவற்றை நிரலாகக் காணலாம்:

குடிநன்கு உடையன் கூடுநர்ப் பிரியலன்
கெடுநா மொழியலன் அன்பினன். (அகம். 352)

விருந்து எதிர் பெறுகதில் யானே என்னையும்
வேந்தனொடு நாடுதரு விழுப்பகை எய்துக! (புறம். 306)

இளமை பாரார் வளம்நசைஇச் சென்றோர்
நகுமே தோழி நறுந்தண் காரே. (குறுந். 126)

செய்வினை முடித்த செம்மல் உள்ளம். (குறுந். 275)

கெடுக சிந்தை கடிதிவள் துணிவே,
மூதின் மகளிர் ஆதல் தகுமே. (புறம். 279)

நம்மனத்து அன்ன மென்மை இன்மையின்
நம்முடை உலகம் உள்ளார் கொல்லோ. (அகம். 273)

என்னொடு பொருங்கொல் இவ்வுலகம் உலகமொடு
பொருங்கொல் என் அவலமுறு நெஞ்சே. (நற். 348)

பொருளே மன்ற பொருளே
அருளே மன்ற ஆரும் இல்லதுவே. (குறுந். 174)

அறந்தலைப் பிரியா தொழுகலும் சிறந்த
கேளிர் கேடுபல ஊன்றலும் நாளும்
வருந்தா உள்ளமோடு இருந்தோர்க்கு இல். (அகம். 173)

சினமிகு தானை வானவன் குடகடல்
பொலந்தரு நாவாய் ஒட்டிய அவ்வழி
பிறகலம் செல்கலாது அனையேம். (புறம். 126)

சொல்வலை வேட்டுவன். (புறம். 252)

நசையாகும் பண்பின் ஒருசொல்
இசையாது கொல்லோ காதலர் தமக்கே. (குறுந். 48)

சென்றோர் உள்ளிச் சில்வளை நெகிழ
பெருநசை உள்ளமொடு வருநசை நோக்கி. (அகம். 163)

தமர்தன் தப்பின் அது நோன்றல்லும்,
பிறர் கையறவு தான் நாணுதலும், படைப்பழி
தாரா மைந்தின னாகலும் வேந்துடை
அவையத்து ஓங்குபு நடத்தலும். (புறம். 157)

ஈன்ற வயிறோ இதுவே
தோன்றுவன் மாதோ போர்க்களத் தானே. (புறம். 86)

ஈன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே. (புறம். 278)

தேட்கடுப் பன்ன நாட்படு தேறல்
கோண்மீன் அன்ன பொருங்கலத் தளைஇ
ஊன்முறை யீத்த லன்றியும் கோல்முறை
விருந்திறை நல்கி யோனே. (புறம். 392)

ஆர்வலர் குறுகின் அல்லது காவலர் களவிலும்
குறுகாக் கடியுடை வியனகர். (புறம். 390)

வாழ்தல் வேண்டும் இவண் வரைந்த வைகல். (புறம். 367)

வாழச் செய்த நல்வினையல்லது ஆழுங்
காலைப்புணை பிறிதில்லை. (புறம். 367)

வானத்து வயங்கித் தோன்று மீனினும் இம்மென
பரந்து இயங்கு மாமழை யுறையினும்
உயர்ந்துமேந் தோன்றிப் பொலிக நுந்நாளே. (புறம். 367))

எத்திசைச் செலினும் அத்திசைச் சோறே (புறம். 206)

வரிசைக்கு வருந்தும் இப்பரிசில் வாழ்க்கை. (புறம். 206)

எவ்வழி நல்லவர் ஆடவர், அவ்வழி
நல்லை வாழிய நிலனே. (புறம். 187)

போற்றார் அம்ம பெரியோர் தம்கடனே. (புறம். 140)

அலத்தற் காலை யாயினும் புரத்தல்
வல்லன் வாழ்க அவன் தாளே. (புறம். 103)

வள்ளியோர் செவிமுதல் வயங்கு மொழி வித்தித்தாம்
உள்ளியது முடிக்கும் உரனுடை உள்ளத்து (புறம்.206)

நரந்த நாறுந் தன் கையாற்
புலவு நாறு மென்றலை தைவரு மன்னே
அருந்தலை யிரும்பாண ரகன்மண்டைத் துளையுரீஇ
இரப்போர் கையுளும் போகிப்
புரப்போர் புன்கண் பாவை சோர
அஞ்சொனுண் டேர்ச்சிப் புலவர் நாவிற்
சென்று வீழ்ந் தன்றவன்
அருநிறத் தியங்கிய வேலே

**ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ**
**இனிப்,பாடுநருமில்லைப் பாடுநர்க் கொன்**
**றீகுநருமில்லை**

(புறம்.235)

**ஒருநாள் செல்லலம் இருநாள் செல்லலம்**
**பலநாள் பயின்று பலரொடு செல்லினும்**
**தலைநாள் போன்ற விருப்பினன் மாதோ**

(புற.101 ஔவையார்)

**யாழொடுங் கொள்ளா பொழுதொடும் புணரா**
**பொருளறி வாரா வாயினும் தந்தையர்க்கு**
**அருள்வந் தனவாற் புதல்வர்தம் மழலை**

(புற.92 ஔவையார்)

இவ்வாறு புலமை நலம் பொலியச் செல்வியர் பலர் சங்க காலத்தில் புகழொடு வாழ்ந்தவர்.

1. அஞ்சி அத்தைமகள் நாகையார்
2. அஞ்சில் அஞ்சியார்
3. அள்ளூர் நன்முல்லையார்
4. ஆதிமந்தியார்
5. ஊண்பித்தையார்
6. ஒக்கூர் மாசாத்தியார்
7. ஔவையார்
8. கச்சிப்பேட்டு நன்னாகையார்
9. கழார்க்கீரன் எயிற்றியார்
10. காக்கைபாடினியார் நச்செள்ளையார்
11. காமக்கணி நப்பசலையார்
12. காவற் பெண்டு
13. குமிழிஞாழலார் நப்பசலையார்
14. குறமகள் இளவெயினி
15. குறமகள் குறியெயினி
16. குன்றியாள்
17. தாயங்கண்ணியார்
18. நக்கண்ணையார்
19. நல்வெள்ளியார்
20. நன்னாகையார்
21. நெடும்பல்லியத்தை
22. பாரிமகளிர்
23. பூங்கண் உத்திரையார்
24. பூதப்பாண்டியன் தேவி பெருங் கோப்பெண்டு
25. பெருங்கோழிநாய்கன் மகள் நக்கண்ணையார்
26. பேய்மகள் இளவெயினி
27. பொன்மணியார்
28. பொன்முடியார்
29. போந்தைப் பசலையார்
30. மதுரை மேலைக்கடையத்தார் நல்வெள்ளையார்
31. மாற்பித்தியார்
32. மாறோக்கத்து நப்பசலையார்
33. முள்ளியூர்ப்பூதியார்
34. வருமுலையாரித்தி
35. வெண்ணிக்குயத்தியார்
36. வெண்பூதியார்
37. வெண்மணிப்பூதியார்
38. வெள்ளிவீதியார்
39. வெறிபாடிய காமக் கண்ணியார்
40. பொதும்பில் புல்லாளங்கண்ணியார்
41. வெள்ளைமாளர்

இந்நிரலில் இடம்பெறுவாரை ஒருவாறு தொகுத்துள்ளோம். தாம் பாடிய செய்யுள்களில் வழங்கிய அருஞ்சொற்றொடர்களைப் பற்றிப் பெயர் பெற்றாருள்ளும் நல்லிசைப் புலமைப் பெருமாட்டியர் பெயர் கரந்திருக்கலாம் என்று கருதவும் இடமுண்டு. நல்லிசைப் புலமைச் செல்வியர் பாடல்கள் இன்றைய தமிழர்க்குக் கைவிளக்காகவும் நம் தொல்மரபுக்குக் கலங்கரை விளக்காகவும் ஒளிர்கின்றன.

**பெண்மைப் பெரும்புலமை பேணுந் தனியறமே**
**வண்மைத் தமிழுயர்த்தும் வாய்ப்பு.**

❖

# கம்பரும் உடலசைவு மொழிகளும்

முனைவர் வெ. இறையன்பு இ.ஆ.ப.



**முன்னுரை**

காப்பியத்தைப் படைக்கிறபோது வாசிக்கிறவர்கள் விழிகளின் முன் அவை காட்சிகளாக விரிய வேண்டும் என்கிற அக்கறை சிறந்த படைப்பாளிகளுக்கு அவசியமாகிறது. உன்னத படைப்பு, பாத்திரங்கள் ஒருவரோடொருவர் உரையாடும்போது அவர்கள் தோற்றத்தையும், உடலசைவுகளையும் நுணுக்கமாகப் பதிவு செய்வது நாடகத்தைப் போன்ற வடிவத்தை ஏற்படுத்திவிடுகிறது. கம்பராமாயணம் போன்ற இலக்கிய வடிவத்தை ஒரு சில மாற்றங்களோடு எளிதில் நாடகமாக்கிவிட முடியும். ஆனால், அதை நடிப்பதற்குத் தேவைப்படும் கால அளவைக் கருத்தில்கொண்டு வாசிப்பவர்களின் வசதிக்கேற்ப காப்பியமாகவே உருவாக்கிவிட கம்பரைப் போன்ற படைப்பாளிகள் முடிவு செய்வதில் வியப்பில்லை.

நாடகத்தைப் போன்ற தாக்கத்தைக் காப்பியம் ஏற்படுத்த வேண்டும் என்கிறபோது, அதில் நுட்பமாக உடலசைவு மொழிகளை வெளிப்படுத்துவது இன்றியமையாத கூறாக ஆகிவிடுகிறது. அதைத் தன்னுடைய படைப்பில் பல இடங்களில் கம்பர் கவனமாகக் கையாண்டிருக்கிறார். அது நமக்கு முன்னாலேயே முழு இராமாயணமும் நடப்பது போன்ற உணர்வை ஏற்படுத்துகிறது. கம்பராமாயணத்தில் பாலகாண்டத்தில் மாத்திரம் பயன்படுத்தப்பட்டிருக்கும் உடலசைவு மொழிகளை இக் கட்டுரை சுட்டிக்காட்டும் நோக்கோடு எழுதப்பட்டுள்ளது.

**உடலசைவு மொழிகள்**

மனிதன் சொற்களால் பேசுவதைக் காட்டிலும், உடலால் பேசுவது அதிகம். அவன் ஏழு விழுக்காடு மட்டுமே வார்த்தைகளால் பேசுகிறான். மீதி 93 விழுக்காடு சொற்களற்ற தகவல் பரிமாற்றத்தின் மூலம் நிகழ்கிறது. அதில் 55 விழுக்காடு உடலசைவின் மூலமும், 38 விழுக்காடு குரலின் மூலமும் வெளிப்படுகிறது. உடலசைவு மொழி என்பது தொடுதல், அருகிருக்கும் தன்மை, அமர்ந்திருப்பவர்களின் திசைகள், கையசைவு, தலை இசைவு, நிற்கும் தொனி, முக வெளிப்பாடு, கண் ஜாடை ஆகியவற்றை உள்ளடக்கியதாக இருக்கிறது. சொற்களால் பரிமாறுகிற விதம் வேறுபடலாம். ஆனால், சொற்களற்ற பரிமாற்றம் பல்வேறு இன மக்களிடையே ஒரே மாதிரியாக இருப்பதைக் காணமுடிகிறது. பால் எல்க்மேன் என்கிற மனவியல் வல்லுநர் நியூகினியா என்கிற பகுதியில் இன்றும் கற்கால மனிதர்களைப்போல வாழுகிற ஆதிவாசிகளின் வாழ்க்கையை ஆய்வு செய்தார். அவர்கள் உணர்ச்சிகளை வெளிப்படுத்தும் விதம் நம்மைப்போலவே இருப்பதைக் கண்டு பிடித்தார்.

இன்று நுனி நாக்கில் ஆங்கிலம் பேசுபவர்களுடைய உடலசைவு மொழியும், ஆதிவாசிகளுடைய முக உணர்ச்சிகளும் ஒரே மாதிரியாக இருப்பது நமக்கு வியப்பைத் தரும். பேச்சு பின்னால் வந்தது. அதற்கு முன்பே உணர்ச்சிகளை வெளிப்படுத்தும் விதம், பரிணாம வளர்ச்சியின் ஓர் அங்கமாகப் பெறப்பட்டது. அதனால்தான் பேச்சு ஆடையாக இருக்க, உடலசைவு மொழி தோலாக நம் இயல்போடு ஒன்றியிருக்கிறது. நம்முடைய படிப்பு, சூழல், நாகரிகம் ஆகியவை நம் பேச்சில் ஏற்படுத்திய மாற்றத்தை உடலசைவு மொழியில் உண்டாக்க முடியவில்லை. கோபம் வரும்போது நாடுகளின் எல்லைகளைத் தாண்டி கண்கள் சிவப்பதும், மகிழ்ச்சி வருகிறபோது படிப்புப் பின்னணியைத் தாண்டி சிரிப்பதும் இயல்பாக இருக்கின்றன.

நாம் சொற்களை எச்சரிக்கையோடு பின்னினாலும் நம் உடலசைவு மொழி நம் உண்மையான உள்ளக் கிடக்கையை வெளிப்படுத்திவிடுகிறது.

ரே பேர்ட் விசல் என்பவர் மனித முகம் 2,50,000 முக பாவங்களை வெளிப்படுத்தும் ஆற்றல் உள்ளது என்று அறிந்தார். மூளையை ஈ.ஈ.ஜி. கொண்டு அளப்பதைப் போல, முக பாவங்களையும் அளக்க முடியும் என்று விஞ்ஞானிகள் நம்புகிறார்கள். அப்படிப்பட்ட கருவி கண்டுபிடிக்கப்பட்டால், ஷேக்ஸ்பியரின் 'மேக்பத்' நாடகத்தில் கூறப்படுவதுபோல முகத்தைக் கொண்டு மனிதனின் எண்ணத்தை அறிவது சிரமமாக இருக்காது.

**தமிழ் இலக்கியமும், உடலசைவு மொழிகளும்**

தமிழில் குறிப்பறிதலைப்பற்றியும், சொற்களற்ற தகவல் பரிமாற்றத்தைப்பற்றியும் திருக்குறளிலேயே அழுத்தந் திருத்தமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அடுத்தவர்கள் உள்ளத்தில் என்ன இருக்கிறது என்பதை உன்னிப்பாகக் கவனித்து உள்வாங்கிக் கொண்டு அவர்கள் இயல்பைத் தம்முடைய மேலதிகாரிக்கு உணர்த்துகிற பணியாளர்கள், அந்த நிறுவனத்தைச் செழிக்கச் செய்கிற ஆற்றல் பெற்றவர்கள் என்பதைத் திருவள்ளுவர் குறிப்பிடுகிறார்.

**கூறாமை நோக்கிக் குறிப்பறிவான் எஞ்ஞான்றும்**
**மாறாநீர் வையக்கு அணி.**

காதலிலும் குறிப்பறிவது முக்கியம் என்பதால், கண்கள் குறித்தும், பார்வைகள் பரிமாற்றம் குறித்தும் விளக்கிப் பல குறட்பாக்களை வள்ளுவர் எழுதியிருக்கிறார். விழிகளின் பரிமாற்றத்தின் மூலமே இதயத்தில் இருப்பவற்றை உணர்த்திவிட முடியும் என்கிறபோது, பேசுவது ஆடம்பரமாக ஆகிவிடுகிறது.

**கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்**
**என்ன பயனும் இல.**

சங்கப் பாடல்கள் பலவற்றில் வீரம், காதல், மானம், விருந்தோம்பல் போன்றவற்றின் உடல் வெளிப்பாடு பற்றியும், முக உணர்ச்சிகள்பற்றியும் தெளிவாகக் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. சங்கம் மருவிய பாடல் ஒன்றில், பெண் மான் நீர் அருந்துவதற்காக ஆண் மான் தான் அருந்துவதைப் போல பாவனை செய்தது காட்சிப்படுத்தப்பட்டுள்ளது. சிலப்பதிகாரத்தில் எண்ணற்ற இடங்களில் உடலசைவு மொழிகள் நுணுக்கமாகக் கையாளப்பட்டிருக்கின்றன.

## கம்பராமாயணமும் உடலசைவு மொழிகளும்

கம்பராமாயணத்தில் சொற்களற்ற தகவல் பரிமாற்றம் என்று சொன்னால், கம்பர் பயன்படுத்திய பரிமாற்றத்தையும் குறிக்கும். கம்பரின் பாத்திரம் குறித்த பரிமாற்றங்களையும் குறிக்கும்.

மனித இயல்பு, பண்பாடு, தனித்துவம் ஆகிய மூன்றின் விதமாக மனிதர்களின் நடத்தையைப் பகுக்க முடியும்.

நியூகினியாவிலிருக்கும் கற்கால மனிதர்களின் உடலசைவு, பெரும்பாலும் தற்கால மனிதர்களை ஒத்திருப்பதற்குக் காரணம் மனித இயல்பு ஆகும். உலகம் முழுவதும் கவலை வந்தால் கண்ணீர் சிந்துவதும், மகிழ்ச்சி ஏற்படுகிறபோது புன்னகை பூப்பதும் இயல்பு. மனித மூளையைப்பற்றி எழுதிய அறிஞர் ராமச்சந்திரன் புன்னகை எப்படி பரிணாம வளர்ச்சியின்மூலம் பெறப்பட்டது என்று சான்றுகளோடு விளக்குகிறார். குரங்கினங்கள் தங்கள் வலையில் வேறோர் எல்லைக்குட்பட்ட விலங்கைக் கண்டால் தங்கள் வன்மத்தை உணர்த்த, பற்களைக் காட்டிப் பயமுறுத்துவது உண்டு. உடனே அந்தக் குரங்குகளும் தற்காப்பாகத் தங்கள் பற்களைக் காட்டி எல்லை மீறும் செயலை நியாயப்படுத்துவது ஏற்பட்டது. ஆகவே, பரிணாம வளர்ச்சியின் புன்னகையாக வளர்ச்சி பெற்றது என்று அவர் குறிப்பிடுகிறார். மனித இயல்புக்கு இன்னோர் எடுத்துக்காட்டையும் கூறலாம். உலகம் முழுவதும் ஆண்கள் உடையணிகிறபோது வலக்கையை முதலில் சட்டையில் நுழைப்பதும் பெண்கள் இடக்கையை உடையில் நுழைப்பதும் வழக்கம் என்று கண்டுபிடித்திருக்கிறார்கள்.

பண்பாடு சில உடலசைவு மொழிகளைத் தீர்மானிக்கிறது. வட இந்தியர்களுக்கும் தென் இந்தியர்களுக்கும் தலையசைப்பதில் வேறுபாடு இருக்கிறது. வடக்கில் 'வேண்டாம்' என்று அசைப்பது, தெற்கில் 'வேண்டும்' என்று அசைப்பதைப் போல அமைந்திருக்கிறது. ஜெர்மானியர்கள் கால்மேல் கால் போடும் விதமும், அமெரிக்கர்கள் போடும் விதமும் மாறுபட்டிருந்ததால், ஜெர்மனிக்கு இரண்டாம் உலக யுத்தத்தின்போது வேவு பார்க்கச் சென்ற அமெரிக்கர்கள் மாட்டிக் கொண்டதாக ஒரு தகவல் உண்டு. தமிழ்மொழியில்தான் 'கால்' என்ற சொல்லிற்கும் கால் இருக்கிறது. கல் இடித்தால் கால் உடையும்.

ஒவ்வொரு மனிதனுக்கும் சில குறிப்பிட்ட உடலசைவு மொழிகள் இருக்கின்றன. ஒவ்வொருவர் நடையும் ஒவ்வொரு மாதிரி இருக்கிறது. பேசும் விதம், கையசைக்கும் விதம் ஆகியவற்றில் தனித்தன்மை உண்டு. மகிழ்ச்சியில் சிரிப்பது பொதுவான உடலசைவு. ஆனால், சிரிக்கிறபோது சிலருக்கு வெடிச்சிரிப்பாக அது வெளிப்படும். சிலருக்குக் குப்பியைத் திறப்பதுபோல ஒசையெழும். புன்னகையில்கூடப் போலிப் புன்னகைகள் உண்டு. உதடுகள் மட்டுமே பிரிந்தால் அது போலிப் புன்னகை. பொய்யாகச் சிரிக்கிறபோது இடப்பக்க உதடுகள் அதிகமாகப் பிரிகின்றன. உதடுகளின் இருபக்கங்களும் சமநிலையில் விரிய, கண்களின் இருபக்கங்களிலும் சுருக்கங்கள் விழச் சிரிக்கும்போது தான் அது உள்ளத்திலிருந்து வருகிற உள்ளார்ந்த புன்னகையாக இருக்க முடியும். உதட்டை இறுக்கிச் சிரிப்பது, சுழித்துச் சிரிப்பது, தாடையைக் கீழே இறக்கிச் சிரிப்பது, பக்கவாட்டில் பார்த்துச் சிரிப்பது, எப்போது பார்த்தாலும் சிரிப்பது என்று ஐந்து புன்னகைகள் அடையாளம் காட்டப்பட்டுள்ளன.

ஓர் ஆணும் ஒரு பெண்ணும் ஒருவரையொருவர் கடந்து போகிறபோது, அவர்களை அறியாமலேயே வயிற்றை உள்ளே இழுப்பதும், மார்பை முன்னே கொண்டு வருவதும் உலகம் முழுவதும் அனிச்சையாக நடக்கின்ற உடலசைவு மொழி. தன்னை இன்னும் இளமையாக, திடகாத்திரமாக, வனப்புமிக்கவராகக் காண்பிக்க மனித மனம் எல்லாக் காலங்களிலும் சிந்தித்திருக்கிறது. கம்பர், ஆற்றுப் படலத்தில் "ஆசலம்புரி ஐம்பொறி வாளியும், காசலம்பு முலையவர் கண்" என்று குறிப்பிடுகின்றார்.

## கம்பரும் புன்னகையும்

புன்னகையைப் பற்றிப் பல இடங்களில் கம்பர் குறிப்பிட்டுள்ளார். அவை இன்று மேல்நாட்டு அறிவியல் கூறுகிற உடலசைவு மொழிகளை உள்ளடக்கியனவாக இருக்கின்றன. கம்பர், "முளைப்பன முறுவல் அம்முறுவல் விளைப்பன" என்று நாடக மகளிரின் புன்முறுவலைக் குறிப்பிடுகிறார். அந்த முறுவல், அரும்புகிற முறுவல் அன்று, முளைக்கிற முறுவல். ஆழத்தில் வேரூன்றுவதுதான் வெளியே முளைக்க முடியும். தென்றலில் திளைக்க முடியும். கம்பர் காட்டுகிற நாடக மகளிருடையது உண்மையான முறுவல். அதனால்தான் அதைக் காண்பவர்கள் இதயத்தை அவை தீப்பிடிக்கச் செய்கின்றன.

மகிழ்ச்சி வருகிறபோது, தன்னை மறந்து குதிக்கிற பழக்கம் எல்லோருக்கும் உண்டு. எல்லா நாகரிகங்களிலும், மகிழ்ச்சியுறுகிறபோது மகிழ்ந்து ஆடுவது உண்டு. திருமாலின் திருவடிகளை வணங்குகிறவர்கள் மகிழ்ச்சி

மிகுதியால் "ஆடினர் பாடினர் அங்குமிங்குமாய் ஓடினர்" என்று கம்பர் குறிப்பிடுவது அதை உணர்த்துகிறது.

**வடிவமைத்தல்**

மனவியலில் 'வடிவமைத்தல்' என்கிற கருத்தாக்கம் ஒன்று உண்டு. அது கற்றுக்கொள்வதில் முக்கியப் பங்கு வகிக்கிறது. உதாரணமாக, ஒரு குழந்தை அம்மா என்று சொல்ல வேண்டும் என்று விரும்பினால் 'அ' சொன்ன உடனேயே அதைக் கட்டிப்பிடித்துப் பாராட்டுவது முதல் முறை. அடுத்த முறை 'அம்' என்று சொன்னால் அதற்கு இனிப்பு வழங்குவது. அடுத்த முறை 'அம்மா' என்று சொன்னால் மட்டுமே அதற்கு விருப்பமான பொருளைத் தருவது என்று படிப்படியாக அக் குழந்தையை 'அம்மா' என்ற சொல்லை உச்சரிக்க வைப்பது நாம் கடைப்பிடிக்கும் நடைமுறை உத்தியாகும். கலைக்கோட்டு முனிவனை, நடன மாதர் உத்தானபாதன் நாட்டிற்கு அழைத்து வருவது வடிவமைத்தல் உத்தியில் அமைக்கப்பட்டுள்ளது.

**எல்லை அறிதல்**

எல்லை என்பது விலங்குகளுக்கு மட்டுமல்ல, மனிதர்களுக்கும் உண்டு. தங்கள் வீட்டில் அனைவருமே வசதியாக இருக்க முடியும். எவ்வளவு நெருங்கியவராக இருந்தாலும், அடுத்தவர் வீட்டில் சற்று படபடப்பு ஏற்படும். ஒரு நிறுவனத்தில், பதவி உயர உயர அலுவலர்களின் மேசையின் அகலம் அதிகரிப்பதைப் பார்க்கலாம். தம் முன்னே அமர்பவர்களை ஒரு தூரத்தில் வைப்பதற்கு, அவர்களையும் அறியாமல் அவர்கள் கையாளும் உத்தி அது. இரண்டடுக்கு வீடுகளில் படுக்கையறை மேல்மாடியில் இருப்பதைப் பார்க்கலாம். அது கூட்டில் இருக்கின்ற பாதுகாப்பு உணர்வை மனிதர்களுக்கு ஏற்படுத்துகிறது. பெரும்பாலும் அடுக்ககங்களில் இருக்கும் அலுவலகங்களில், உச்ச அதிகாரி மேல்மாடியில் பணியாற்றுவதைப் பார்க்கலாம். அவர் உயரத்தில் இருக்கிறார் என்பதை மறைமுகமாக உணர்த்தும் பாங்கு அது. இவையெல்லாம் தன்முனைப்பின் வெளிப்பாடுகள். ஒருவரை அவருடைய இடத்திற்குச் சென்று பார்க்கும்போது தன்முனைப்பு தானாகக் குறைந்துவிடுகிறது. ரோமபாதனைக் கண்ட தசரதன் தேரிலிருந்து இறங்கியபோதே ரோமபாதனின் தன்முனைப்பு நீர்த்துவிட்டது. அவன், தசரதனை வணங்குகிறான். அவனைத் தழுவி "நாம் இருவரும் சமம்" எனத் தசரதன் உணர்த்துகிறான்.

"யார் வாகனத்தின் எந்தப் பக்கம் அமர்கிறார்கள்" என்பது, அரசு நடைமுறையில் முக்கியம். "இடதுபக்கம் அமருபவர்களே உயரதிகாரி" என்பது அலுவலக அதிகார வரைமுறையில் உள்ள நடைமுறை. தசரதன் எதிரே வந்த ஜனகனைத் தன்னுடைய தேரில் ஏறுமாறு உணர்த்தி, அமரவைத்துக் கொள்கிறான். "யார் யாருடைய தேரில் ஏறுவது" என்பது ஒருவகையில் அதிகாரத்தை வெளிப்படுத்தும் செய்கை.

> **"எய்த அத் திரு நெடுந் தேர் இழிந்து இனிய தன்**
> **மொய் கொள் திண் சேனை நிற்க முன் சேறலும்**
> **கையின் வந்து ஏறு எனக் கடிதின் வந்து ஏறினான்,**
> **ஐயனும் முகம் மலர்ந்து அகம் உறத் தழுவினான்."**

ஒரு மாபெரும் தலைவரின் நூற்றாண்டு விழாவிற்கோ, சுதந்திர தின விழாவிற்கோ கைதிகளை விடுதலை செய்வது அரசின் செயல்பாடாக இருக்கிறது. இதைச் சிலர் எதிர்த்து வழக்குக்கூடத் தொடுத்தார்கள். இது இன்று நேற்று நடப்பதல்ல. தசரதன் காலத்திலேயே நடந்திருக்கிறது. தனக்குப் புதல்வர்கள் பிறந்த செய்தியைக் கேட்டதும், தன்னிடம் தோற்று அடிமைகளாய் இருந்த அரசர்களையெல்லாம் தசரதன் சிறையிலிருந்து விடுவித்தான். "படையொழிந்திடுக தம் பதிகளே விடைபெறுக முடிவேந்தர்" என்று அவர்களை எல்லாம் விடுவிக்கின்றார்.

வசிஷ்ட முனிவர், "இராமன்" என்கிற பெயரைப் பரம்பொருளுக்குச் சூட்டுவதை, "ஆதிமூலமே" என்று கஜேந்திரன் ஆபத்து ஏற்பட்டபோது அழைத்ததைத் தொடர்புபடுத்திப் பல செய்திகளைக் குறைந்த சொற்களுக்குள் திணிக்கிறார் கம்பர். இன்றோ பலர், பல சொற்களைக் குறைந்த கருத்துக்குள் திணிக்கும் முயற்சியை மேற்கொள்கிறார்கள். நாம்தாம் பரம்பொருளுக்கு எத்தனை பெயர்களை வைத்து அழைக்கிறோம். வைத்த பெயர்களுக்கிடையே எது பெரிது என்று சமர்புரிந்து ஓய்கிறோம்.

கம்பர், பல இடங்களில் சில சொற்களில் பல குறிப்புகளை உணர்த்தியிருக்கிறார். அவற்றை விரிவுபடுத்தியிருந்தால், வால்மீகியினும் நீண்ட காவியம் உருவாகியிருக்கும். ஆனால், வாசகனுக்கு என்று எதுவும் விட்டு வைக்காத யதேச்சதிகார மனப்பான்மை அவருக்கு இல்லை. வசிஷ்டரை, "பொய்வழி இல்முனி" என்று குறிப்பிடுகிறார். இந்தக் காலத்தில் மட்டுமல்ல, கம்பர் வாழ்ந்த காலத்திலேயே பொய்யான பல முனிவர்கள் இருந்திருக்கிறார்கள் என்று புலப்படுகிறது.

**அவநம்பிக்கையை அகற்றி வைத்தல்**

ஆங்கில இலக்கியத்தில் "willing suspension of disbelief" என்று ஓர் உத்தி உண்டு. கம்பர், தசரதனுக்குப் பிள்ளைகள் பிறந்ததை 288ஆம் பாடலில் குறிப்பிடுகிறார்.

> **"ஓடினர் அரசன்மாட்டு உவகை மாறி நின்று**
> **ஆடினர் சிலதியர் அந்தணாளர்கள்**
> **கூடினர் நாளொடு கோளும் நின்றமை**
> **நாடினர் உலகுஇனி நவைஇன்று என்றனர்."**

அவர்கள் இளைஞர்கள் ஆனதை, 314ஆம் பாடலிலேயே முடித்துக் காட்டுகிறார்.

> **"இப் பரிசு அணிநகர் உறையும் யாவரும்**
> **மெய்ப்புகழ் புனைதர இளைய வீரர்கள்**
> **தப்புஅற அடிநிழல் வழுவி ஏத்துற**
> **முப்புரம் பொருளினும் முதல்வன் வைகுறும்"**

திரைப்படத்தில் முதல் காட்சியில் ஒரு சிறுவன் ஓடுவதையும், பெயர் போடுகிறபோதே ஓடுகிற அவன் கால்கள் சிறிது சிறிதாகப் பெரிதாகி, இயக்குநர் யார் என்பதைக் காட்டுகிறபோது, அவன் இளைஞனாய் இருப்பதைக் காண்பிப்பார்கள். நாம் யாரும் மூன்று

நிமிடத்திற்குள் அவன் எப்படி முதிர்ச்சியடைய முடியும் என்று வினவுவதில்லை. அதே உத்தியைத்தான் கம்பர் கையாளுகிறார்.

நடைமுறையில் நிகழும் ஒரு நெறிமுறை உற்றுநோக்கக் கூடியது. பல குழந்தைகள் இருக்கின்ற வீட்டில் அடுத்தடுத்துப் பிறக்கிற குழந்தைகளுக்குள் நெருக்கம் ஏற்படுவதில்லை. முதல் குழந்தைக்கும், இரண்டாம் குழந்தைக்கும் உள்ள நெருக்கத்தைவிட, முதல் குழந்தைக்கும் மூன்றாம் குழந்தைக்கும் இருக்கிற நெருக்கம் அதிகம். இடைவெளி கூடுகிறபோது நெருக்கம் அதிகமாகிறது. இரண்டு குழந்தைகளே இருந்தாலும், இடைவெளி அதிகமானால் நெருக்கம் ஏற்பட வாய்ப்புண்டு. அதனால்தான் இராமாயணத்தில், இராமனும் இலக்குவனும் இணை பிரியாது இருந்ததைப் போலவே பரதனும் சத்துருக்கனனும் இருந்தார்கள்.

எல்லை என்பது "அதிகாரத்தை நாட்டும் இடம்" என்று அறியப்படுகிறது. அதனால்தான் எல்லைகள் முக்கியமானவையாகக் கருதப்படுகின்றன. ஓர் அரசனின் எல்லை அவன் நாடு முழுவதும் விரிகிறது. தலைநகரைத் தாண்டியும், அவன் போகிற இடங்களில் எல்லாம் குடிமக்கள், அவன் முன் நடுங்கியே நிற்கிறார்கள். இராமன் இதை உணர்ந்திருந்த காரணத்தால், அவனாக முன்சென்று எதிர்வருகின்ற ஏழை எளியோரிடம், தானாக வலிய நலம் விசாரித்து அவர்கள் இறுக்கத்தைத் தளர்த்துகிறான்.

**"எதிர்வரும் அவர்களை எமையுடை இறைவன்**
**முதிர்தரு கருணையின் முகமலர் ஒளிரா**
**எது வினை இடர் இலை இனிதும் நும் மனைவியும்**
**மதி தரு குமரரும் வலியர்கொல் எனவே.."**

**குறிப்பறிதல்**

கோபம் என்பது கசப்பை உணர்த்தும் உடலசைவு மொழி. கண் சிவப்பதும், முகம் கடுப்பதும், தசைகள் இறுகுவதும், புருவம் அசைவதும் கோபத்தின் வெளிப்பாடு. கோபத்தை வெளிப்படுத்துகிற போதெல்லாம் அதுவரை செய்த தவம் விரயமாகி விடுகிறது. முனிவர்களின் தவம் சிதைவது, அழகிய பெண்கள் மீது ஏற்படும் மயக்கத்தால் அல்ல, தம் கவனத்தைத் திருப்பிவிட்டார்களே என்கிற கோபம் சாபமாக ஆகும்போது, அவர்கள் செய்த தவம் விழலுக்கு இறைத்த நீராகிவிடுகிறது. ஒருவருக்கு நல்லது செய்கிற நாம், அவர்கள்மீது கோபப்படுகிறபோதே அந்த நன்மையை நீர்த்துப்போக வைத்துவிடுகிறது.

தசரதன், இராமனை விசுவாமித்திரருடன் அனுப்பத் தயங்குகிறபோதே, விசுவாமித்திரருடைய கோபம் அதிகரித்துவிடுகிறது. ஆனால், அதைச் சொற்களால் வெளிப்படுத்தும் முன்பு, முகபாவங்கள் காட்டிக் கொடுத்துவிடுகின்றன. விசுவாமித்திரருக்கு சினத்தினால் சிரிப்பும் உண்டாகிறது. அந்தச் சினத்தை வசிஷ்டர் குறிப்பால் உணர்த்துகிறார். "கொழுங்கடைப் புருவம் நெற்றி முற்ற சென்றன. வந்தது நகையும், சிவந்தன கண், இருண்டன போய்த் திசைகள் எல்லாம்."

பாலை நிலத்தின் தன்மையைப் பற்றிச் சொல்லுகிறபோது கம்பர், அதன் வெப்பத்தைச் சொன்னால் "நாக்கு முற்றிலும் வெந்து போகும்" என்று ஒரே வரியில் நம் கண்முன்னே பாலை நிலத்தைக் குறிப்பிட்டுக் காட்டுகிறார். இந்தக் கடுமையான வெப்பத்தில், மென்மையான இராமனும் இலக்குவனும் வருத்தமடைவார்களே என்று விசுவாமித்திரர் மனத்திலே நினைத்தார். அதை இருவரும் குறிப்பிலே உணர்ந்தார்கள். "நோக்கினான் அவர்முகம் நோக்க நோக்குடை கோக்குவரும் அடிகுறுக." அவர் இருவருக்கும் சொல்லிக் கொடுத்த மந்திரம் ஒருவகையில் சுய மனோவசியம். உடலின் வலிமையை மனம் தீர்மானிக்கிறது. மனம் முன்மொழிவதை உடல் நிறைவேற்றுகிறது. விலங்குகளில்கூட அளவில் பெரிதாக இருப்பவை வெற்றி பெறுவதில்லை. மனத்தில் வேகமாக இருப்பவையே வேட்டையாடுகின்றன.

அதைப்போலவே, தாடகையைப் பெண் என்று இராமன் கொல்லத் தயங்குவதையும் விசுவாமித்திரர் குறிப்பினால் உணர்கிறார். பெண்கள், கோபம் கொண்டால் அது ஆண்களின் கோபத்தைவிட அதிகமாக இருக்கும். அவர்கள் அடிக்க ஆரம்பித்தால், ஆண்களையும் மிஞ்சிவிடுவார்கள். நீட்சே மனிதனைப் பற்றிக் குறிப்பிடும்போது, 'மனிதனிடம் இருக்கும் குரங்குத்தனம் குரங்கிடம் இருக்கும் குரங்குத் தனத்தைவிட அதிகம்' என்கிறார். ஏனென்றால், குரங்கிடம் இருக்கும் குரூரத்திற்கு அளவு உண்டு. ஆனால், கற்பனை செய்ய முடியாத அளவிற்குக் குரங்குத்தனத்துடன் மனிதன் செயல்பட முடியும். ஏனென்றால், அவன் செய்கை மனத்தோடு தொடர்புடையது. தாடகையை, விசுவாமித்திரர் "ஆண்மை என்னும் அது ஆறிடைவைகுமே" என்று கூறி இராமனுக்குப் புரிய வைக்கிறார்.

விதி என்பது முன்பு நடந்தவற்றையும் கருத்தில் கொண்டு பேணப்படுவது. இன்றுகூட வழக்குகளுக்காக வாதாடும்போது, முந்தைய தீர்ப்புகளை மேற்கோள் காட்டுவதுண்டு. அதனடிப்படையில்தான் திருமால், பிருகு முனிவரின் மனைவி கியாதியைக் கொன்றதை, இந்திரன் குமதியைக் கொன்றதை முந்தைய நிகழ்வுகளாக விசுவாமித்திரர் மேற்கோள் காட்டுகிறார்.

நம் கால் ஒருவர்மீது தெரியாமல் பட்டுவிட்டால், உடனே தொட்டு வணங்குவது நமக்குள் நம்மையும் அறியாமல் தொற்றிக்கொண்ட பண்பாட்டு உடலசைவு மொழி. இவ்வாறு தொட்டு வணங்கும் பழக்கம் இராமனிடமிருந்துதான் உருவானது. கல்லிலிருந்து அகலிகை பெண்ணாக மாறியதும், அவளை வணங்குகிறான் இராமன். கல்மீது தன் கால் பட்டதாக நினைக்காமல், கல்லாக அதுவரை இருந்த பெண்மீதே பட்டதாக நினைத்ததால், வணங்குகிறான் இராமன். அவள் குற்ற உணர்விலிருந்து நீங்க வேண்டுமென்பதற்காக 'அன்னை' என்றும் அழைக்கிறான். "அன்னை என்னப் பொன்னடி வணங்கிப் போனான்" என்று கம்பர் கூறுகிறார்.

## விழிகளின் மொழிகள்

காதல் பரிமாற்றத்தில் கண்களுக்குப் பெரும்பங்கு இருக்கிறது. "கண் களவுகொள்ளும் சிறுநோக்கம், காமத்தில் செம்பாகம் அன்று பெரிது" என்று திருக்குறளும், "காசில் காமம் செப்பிக் கண்ணினால் இரப்பர்" என்று சீவக சிந்தாமணியும் கண்களின் மகத்துவத்தை எடுத்தியம்புகின்றன. அடுத்தவர் பார்வையை ஐந்து நொடிகளுக்கு மேல் தக்கவைத்துக் கொண்டால், அது விருப்பத்தை வெளிப்படுத்தும் வழி. ஆர்வமுள்ள ஒருவரைப் பார்க்கிறபோது கண்களில் உள்ள பாப்பா விரிவடைகிறது. அதனால்தான், அதிகமாக விற்கின்ற குழந்தை பொம்மைகளுக்குப் பெரிய பாப்பா இருக்கும் கண்கள் செய்யப்படுகின்றன. பல நூற்றாண்டுகளுக்கு முன்பு விலை மகளிர் பாப்பாவை விரிவடையச் செய்யும் மருந்துகளை விழிகளில் பயன்படுத்தி வந்தனர். பெண்களுக்குக் கண்களில், ஆண்களைக் காட்டிலும் வெள்ளைப் பகுதி அதிகமாக இருக்கிறது. உயிரினங்களிலேயே வெண்மைப் பகுதி அதிகமாக இருப்பது மனித விழிகளில்தான். காதலில் கண்கள் பேசும், உதடுகள் சந்திக்கும்.

கம்பனில் இராமனும் சீதையும் திருமணத்திற்கு முன்பே சந்தித்துக் கொள்கிறார்கள். அவர்கள் விழிகள் ஒன்றையொன்று கவ்விக் கொள்கின்றன.

> **"எண்ண அரு நலத்தினாள் இனையள் நின்றுழி**
> **கண்ணொடு கண் இணை கவ்வி ஒன்றை ஒன்று**
> **உண்ணவும் நிலைபெறாது உணர்வும் ஒன்றிட**
> **அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள்."**

கம்பர் பார்வையைக் குறித்து எழுதியுள்ள ஒவ்வொரு குறிப்பும் உடலசைவு மொழியின் உன்னத வெளிப்பாடு. "இருவரும் மாறிப் புக்கு இதயம் எய்தினர்" என்று அன்று கம்பர் எழுதிய வரிகள் இன்று பல திரைப்பாடல்களில் பல்லவிகளாகப் பரிமளிக்கின்றன. "பிரிந்தவர் கூடினால் பேசவும் வேண்டுமோ" என்பது கண்கள் உணர்த்தும் மொழியைக் குறிக்கின்றன. பார்வைகளில் பொது நோக்கு, நெருக்க நோக்கு, ஓர நோக்கு, அதிகார நோக்கு என்று பலவிதம் உண்டு. கண்களுக்கும் நெற்றிக்கும் இடையே இருக்கிற பகுதியைப் பார்ப்பது அதிகார நோக்கு. நம் கீழே பணி செய்பவர்களை அவ்வாறு அதிகார நோக்கில் பார்க்கிறபோது, அவர்கள் பணிந்து நம் கட்டளைகளுக்குக் கட்டுப்படுவார்கள்.

சீதைபற்றிப் பேசுகிறபோது இராமன், உலகில் உள்ள அத்தனை பெண்களும் அவளையே பிரதிபலித்ததாகப் பேசுகிறான். "வாழ்பொருள் எலாம் அவள் பொன்உரு ஆயவே" எவ்வளவு செறிவான கருத்து! சொற்களுக்கிடையே பொருள்களைப் புதைத்து வைக்கும் கலை.

விசுவாமித்திரர் இராம இலக்குவனர்களை ஜனகனுக்கு அறிமுகப்படுத்துகிறபோது, "இவர்கள் உன் வேள்வியைக் காண வந்தனர். வில்லும் காண்பர்" என்று சொல்லுவது படைப்புத் திறனின் அழகிய வெளிப்பாடு.

பல இடங்களில் அடுத்தவர்கள் குறிப்பறிந்து பேசுகிறவாறு தன்னுடைய காப்பியத்தைக் கம்பன் வடிவமைத்திருக்கிறார். விசுவாமித்திரர் குறிப்புக் காட்ட, இராமன் வில்லை உடைக்கிறார். வில்லை உடைத்ததைக் கூடக் கம்பன் Fast Forwardல் எடுத்துச் செல்லுகிறார். "எடுத்தது கண்டனர் இற்றது கேட்டார்" என்று குறிப்பிடுகிறார்.

இராமன் வில்லையுடைத்த செய்தியைச் சொல்ல வருகிற தோழி, சீதையின் உயர்ந்த நிலையை மறந்து அவளுக்குச் சமமாக ஆரவாரம் செய்கிறாள். இவையெல்லாம் உடலசைவு மொழிக்கு எடுத்துக்காட்டுகள்.

ஜனகன், திருமணத்தைப்பற்றி விரைவில் முடிவெடுக்க விரும்புகிறான். அவனுடைய முடிவெடுக்கும் தன்மையைக் குறிப்பிட வந்த கம்பர், 'மல்வலான்' என்று அவனைக் குறிப்பிடுகிறான். மற்போரில் வல்லவன் என்று குறிப்பது விரைவில் முடிவெடுக்கும் தன்மையைக் குறிக்கிறது.

## படையினரை ஊக்கப்படுத்துதல்

திருமணத்திற்குத் தசரதன் தன்னுடைய சேனையையும் அழைத்துச் செல்கிறான். போருக்கு மாத்திரம் படை வீரர்கள் என்று இருந்தால், அது அவர்களை உற்சாகப்படுத்தாது. அவர்கள் திருமணம் போன்ற மகிழ்ச்சியான நிகழ்வுகளிலும் பங்கேற்றால்தான் தங்கள் நாடு, தங்கள் மன்னர் என்கிற நெருக்க உணர்வு ஏற்பட்டு, அது நேச உணர்வாக மாறி தேச உணர்வாக ஒளிரும் என்பது கம்பரின் கருத்து. கம்பர், படையில் உள்ள ஆடவனின் நிலையை விளக்குகிறார். மனைவியை விட்டுச் செல்ல மனம் வராத படைவீரன் பற்றிப் பல பாடல்கள் எழுதியிருக்கிறார். அன்பு உணர்வை மறுதலிக்கிறபோது அது கோபமாகவும் வெறுப்பாகவும் மாறிப் பகைவர்களை அழிக்க உதவும் என்பதுதான் படை வீரர்களைத் தனிமைப்படுத்தும் நோக்கத்திற்குக் காரணம்.

தசரதன் புறப்படுகிறபோது மன்னர்கள் எல்லோரும் வரிசையாக நின்று அவன் பார்வையில் விழமாட்டோமா என்று தவிக்கிறார்கள். இன்றுகூட மேலதிகாரிகள் வாகனத்தில் ஏறும்போது, அவர் கீழ் பணியாற்றுபவர்கள் வரிசையாக நின்று தங்கள் முகத்தை எப்படியாவது அவருக்குத் தெரியப்படுத்திவிட வேண்டும் என்று முயற்சி செய்வதைப் பார்க்கலாம்.

## முடிவுரை

இவ்வாறு கம்பர் படைத்த காவியத்தில் உடலசைவு மொழிகள் உன்னத இடம் பெறுகின்றன. 'கண்டனன் கற்பினிக்கினியை கண்களால்' என்கிற பாடலில் தகவல் பரிமாற்றத்தின் இயல்பை அழகாகக் கம்பர் வெளிப்படுத்துகிறார். கம்பராமாயணத்தில் இருக்கும் உடலசைவு மொழிகள் முழுமையாக ஆய்வு செய்யக்கூடிய பரந்து விரிந்த பொருண்மை என்பது நிலைநாட்டப்பட்ட உண்மை.

❖

# தேசியம் வளர்த்த தமிழ்



திரு. ஆ. கோபண்ணா

**விடுதலைப் போரில் தமிழின் நிலை**

மூன்றாம் நூற்றாண்டு தொடங்கி ஒன்பதாம் நூற்றாண்டு வரையிலும், அதன்பின் கி.பி. 13ஆம் நூற்றாண்டு தொடங்கி 20ஆம் நூற்றாண்டு வரையிலும் அடுத்தடுத்து வேற்று மொழியினர் தமிழ்நாட்டில் ஆதிக்கம் செலுத்தினர். தமிழ்நாட்டில் ஆலயங்களில் வடமொழி – சமற்கிருதமும், அரசிலே உருது, அரபு, தெலுங்கு, மராத்தி, ஆங்கிலம் ஆகிய மொழிகளும் கோலோச்சின. வழக்காட நீதிமன்றம் போனால் அங்கே ஆங்கிலம்! இப்படிப் பல நூற்றாண்டுகள் எங்கும் எதிலும் தமிழ் புறக்கணிக்கப்பட்டிருந்த தமிழகத்திலே, அந்நிய மொழிகளின் ஆதிக்கங்களை எதிர்த்துப் போர் முரசு கொட்டத் தமிழ்ப் புலவர்கள் எவரும் முன்வரவில்லை. அதற்கு மாறாக, அரசர்களையும் செல்வர்களையும் போற்றிப் பாடி வெகுமதிகளைப் பெற்றுக்கொண்டு வாழ்க்கையை நடத்துகிற நிலைதான் காணப்பட்டது.

**பாரதியும் தமிழ் மறுமலர்ச்சியும்**

பாரதி, தமிழ்க் கவிஞரானாலும் 'தேசியக் கவிஞர்.' தம் பாட்டுத் திறத்தால் இவ் வையத்தைப் பாலித்திட வந்த பாரதியார், பண்டிதரிடம், அறிஞர் பெருமக்களிடம் சிக்கிக் கொண்டிருந்த தமிழைப் பாமரர் மொழியாக்கி மக்களின் உள்ளக் கிளர்ச்சிகளையும், எண்ணங்களையும், எழுச்சி களையும், சேட்டைகளையும் வெளிப்படுத்தும் வளம்பெற்று வாழும் மொழியாகத் தமிழை வளர்த்த பெருமையும் பாரதிக்குத்தான் உண்டு. பாரதியார் தோன்றுவதற்கு முன்பே, பாரதப் பெருநாடு முழுவதும் வெள்ளையருக்கு அடிமைப்பட்டிருந்தது.

ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் அடிமைப்பித்தம் தலைக்கேறித் தலைவிரித்தாடிய அவலம். பழைமையை மறந்து, பெருமையைப் பறிகொடுத்து, அரசுரிமை தவறவிட்டு, அடிமையில் மோகம் கொண்டு, ஆங்கில மொழி மயக்கத்தில் லயித்திருந்த மக்களைக் கண்டு மனம் வருந்தினார் பாரதி. தாய் மொழியில் பேசுவது தாழ்வென்று கருதியவர்கள் அரைகுறை ஆங்கிலத்தில் தட்டுத் தடுமாறிப் பேசுவதில் ஆர்வம் மிகுந்திருந்த காலத்தில், 'வேறு வேறு பாஷைகள் – கற்பாய் நீ, வீட்டு வார்த்தை கற்கிலாய்' என்று சபித்துப் பாடினார்.

பாரதியார், தமது நண்பர் பரலி சு. நெல்லையப்பருக்கு எழுதிய கடிதமொன்றில், "தமிழ், தமிழ், தமிழ் என்று எப்போதும் தமிழை வளர்ப்பதே கடமையாகக் கொள்க! அதனால், புதிய புதிய செய்தி, புதிய புதிய யோசனை, புதிய புதிய உண்மை, புதிய புதிய இன்பம் ஆகியவற்றைத் தமிழில் ஏற்றிக் கொண்டே போக வேண்டும். தம்பி! நான் ஏது செய்வேனடா? தமிழைவிட இன்னொரு பாஷை சுகமாக இருப்பதைப் பார்க்கும்போது எனக்கு வருத்தமுண்டாகிறது" என்று குறிப்பிட்டார்.

தமிழ்ப்பற்றுக் குறித்துத் தமது பத்திரிகையில் "தமிழ்ப் பண்டிதர்களே! தமிழ் மகா ஜனங்களே! ஜாக்கிரதை, ஜாக்கிதை! உங்களுடைய பாஷையைக் காப்பாற்றுங்கள். ஒரு சமூகத்திற்கு, அதன் உயிர் பாஷைதான்! தமிழ்ப் பாஷை அழிந்துவிட்டால், தமிழர்களின் சிறப்பும் சீரழிந்துவிடும்.

உங்கள் நா தமிழே பேசுக! நீங்கள் கையிலேந்தும் இறகு தமிழே எழுதுக! உங்களுடைய இருதயம் தமிழையே நாடுக! உங்களையெல்லாம் தமிழ் மாதா தயையுடன் ரட்சித்திடுக!" என்று எழுதியது தமிழ் மொழியின்பால் அவருக்கிருந்த அளவற்ற பற்றையே வெளிப்படுத்துகிறது.

பாரதியார், "யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல் இனிதாவது எங்கும் காணோம்" என்று பாடியதோடு, தமிழினம் சேமமுற வேண்டுமெனில், "தெருவெல்லாம் தமிழ் முழக்கம் செழிக்கச் செய்வீர்" என்று கட்டளை பிறப்பித்தார். ஆம்! தமிழர் வாழ்விலே, தமிழ்நாட்டிலே, 'எங்கும் தமிழ்! எதிலும் தமிழ்!' என்ற நிலை தோன்ற வேண்டும் என்பதில் அவர் பிடிவாதமாக இருந்தார்.

**சுப்பிரமணிய சிவா**

சுப்பிரமணிய பாரதியோடும், வ.உ. சிதம்பரம் பிள்ளையோடும் இணைந்து, தேசிய உணர்வைத் தமிழ்மொழி மூலம் வளர்த்தவர் சுப்பிரமணிய சிவா. இவர் தமிழ்நாடு முழுவதிலும் ஆயிரக்கணக்கான அரசியல், இலக்கிய, சமய மேடைகளில் பேசியும் கவிதைகள் புனைந்தும் தம் தாய்மொழியான தமிழையும் தேசியத்தையும் வளர்க்கும் அரும்பணியை மேற்கொண்டார். 'ஞானபாநு' என்னும் பெயரில் தமிழ் மாத இதழ் ஒன்றைத் தொடங்கி நடத்தினார்.

**வ.வே.சு. ஐயர்**

மேலைநாட்டுக் கல்வியைத் தேடிச் சென்று, பின்னர்ப் புரட்சிக்காரராக மாறிப் பாரதத்தின் விடுதலைக்குப் போராடிய மாவீரராகிய வ.வே.சு. ஐயர் 'பாலபாரதி' என்ற பெயரில் தமிழ் மாத ஏடு ஒன்றை நடத்தினார். அதிலே, கம்பராமாயண ஆராய்ச்சிக் கட்டுரைகளைத் தொடர்ச்சியாக எழுதி, தேசியத்தையும் தமிழையும் வளர்த்தார். தமிழின் வளர்ச்சிக்குப் பாடுபட்டவர்களில் மகரிஷி வ.வே. சுப்பிரமணிய ஐயர் முக்கியமானவர்.

சமற்கிருதம், ஆங்கிலம், பிரெஞ்சு, ஹிந்தி, வங்காளி, கிரேக்கம், இலத்தீன், தெலுங்கு, கன்னடம் ஆகிய மொழிகளிலே தாம் பெற்றிருந்த புலமையைத் தமிழ் மொழியின் வளத்திற்கும் வளர்ச்சிக்கும் பயன்படுத்தினார். பன்மொழிகள் அறிந்தபோதிலும் தமிழையே உயர்வாகக் கருதிப் போற்றினார்.

**பரலி சு. நெல்லையப்பர்**

பாரதி நடத்திய வார இதழான 'இந்தியா'விலும், சிவா நடத்திய மாத ஏடான 'ஞானபாநு'விலும், வ.வே.சு. ஐயர் நடத்திய 'பாலபாரதி'யிலும், திரு.வி.க. ஆசிரியராகப் பொறுப்பேற்று வெளிவந்த 'தேசபக்தன்', 'நவசக்தி' ஆகிய நாளேடுகளிலும் கவிதைகளையும் கட்டுரைகளையும் எழுதித் தமிழ் வளர்க்கும் பணியோடு தேசியத்தையும் வளர்த்தவர். 'லோகோபகாரி' என்ற வார இதழ் வாயிலாகத் தமிழ் மொழி வளமும் வாழ்வும் பெறத் தொண்டாற்றியவர் பரலி சு. நெல்லையப்பர்.

**வ.உ. சிதம்பரம் பிள்ளை**

தம் வாழ்க்கையை ஒரு தியாகக் காவியமாகப் படைத்த தேசியச் செம்மல் வ.உ. சிதம்பரனார் செந்தமிழ்க் கவிதைகளும் பாக்களும் புனையும் ஆற்றல் பெற்றிருந்தார் என்பது பலர் அறியாத புதிரான செய்தியாகும். கோவைச் சிறையில் பட்ட கொடுமைகளுடன் தற்சரிதையின் இரண்டாம் பகுதி தொடங்குகிறது. சிறையின் துணை அதிகாரி இட்ட ஆணைப்படி சணல்கிழி இயந்திரத்தைச் சுற்றியதுபற்றி அவர் கூறுகிறார். "அவன் என்னைச் சணல்கிழி யந்திரம் சுற்றெனச் சுற்றினேன். என் கைத்தோலுரிந்து ரத்தம் கசிந்தது. என்னிரு கண் நீர் பெருகவே!" தோன்றலின் தோலுரிந்த; துரைத்தனத்தார் தோலுரியும் நாள் வெகுதொலைவில் இல்லை என்ற தெளிவுதானே அவருக்குத் துணை நின்றிருக்கும்.

**காந்தி சகாப்தம்**

இந்திய தேசிய அரசியலில் 1919இல் தோன்றிய 'காந்தி சகாப்தம்' இந்திய மொழிகள் பலவற்றில் இலக்கிய ஆளுமை கொண்ட படைப்பாளர்களை உருவாக்க வழிவகுத்தது. தமிழ் மொழிப் படைப்புகளில் காந்தியத்தின் தாக்கம் குறிப்பிடத்தக்க அளவிற்குப் பரவியது. அரசியல் ஆளுமையும் இலக்கிய ஆளுமையும் வாய்த்த தேசபக்தர்களின் படைப்பாற்றல் சிறுகதைகள், கவிதைகள், நாடகங்கள், புதினங்கள், கட்டுரை இலக்கியங்கள், மொழிபெயர்ப்புகள் முதலானவையாக மலர்ந்தன. புதிய எழுத்து இயக்கம், இதழ்கள் வாயிலாக வீறுபெற்றது.

காந்தியடிகள் காங்கிரசு மகாசபைக்குப் பொறுப்பேற்றதும் பிரதேச மொழிகளை வளர்ப்பது காங்கிரசின் கொள்கையாக அமைந்தது. நாகபுரி காங்கிரசு மகாசபைக் கூட்டத்தில், மாநிலங்களை மொழிவாரியாகத் திருத்தி அமைக்கத் தீர்மானித்ததோடு, சுதந்திர இந்தியாவிலே ராஜ்ஜியங்கள் மொழிவாரியாகப் பிரித்தமைக்கவும் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டு நாட்டு மக்களுக்கு உறுதி அளிக்கப்பட்டது.

**காந்தியக் கவிஞர்**

தேசிய இயக்கம் விரைந்து செயலாற்றிய காலத்தில், தமிழகத்தில் இரு பெரும் கவிஞர்கள் தோன்றினர். ஒருவர் – மகாகவி சுப்பிரமணிய பாரதியார். மற்றொருவர் – நாமக்கல் வெ. இராமலிங்கம் பிள்ளை. பாரதியார், திலகர் சகாப்தத்தைச் சேர்ந்தவர்! நாமக்கல் கவிஞர், காந்தி சகாப்தத்தைச் சேர்ந்தவர்! இந்த இருவருமே தேசியம் வளர்க்கத் துணை புரிந்ததோடு, தமிழின உணர்வையும் வளர்க்க அரும்பணியாற்றினர்.

பாரதியின் வழித்தோன்றலாக, காந்தியக் கவிஞராக விளங்கிய நாமக்கல் இராமலிங்கம் பிள்ளை, "தமிழன் என்றோர் இனமுண்டு. தனியே அவர்க்கொரு குணமுண்டு" என்று உறுதி தோய்ந்த குரலில், இன உணர்ச்சி பொங்கப் பாடினார்.

1930இல் காந்தியடிகள் நடத்திய உப்புச் சத்தியாக்கிரகப் போராட்டத்தில் பங்கு பெற்றோர் வழிநடைப் பாடலாகப் பாடிக்கொண்டு செல்லவே, "கத்தியின்றி, ரத்தமின்றி, யுத்தமொன்று வருகுது! சத்தியத்தின் நித்தியத்தை நம்பும் யாரும் சேருவீர்" என்ற பாடலை நாமக்கல்லார் பாடினார். "பாரதியார் இல்லாத குறையை நாமக்கல்லார் போக்கிவிட்டார்" என்று இராஜாஜியே பாராட்டுமளவுக்குப் பெருமை பெற்றார்.

தூய தேசியவாதியான கவிஞர், தமிழன் என்ற இன உணர்ச்சியை வெறுக்காமல், அனைவரும் விரும்பும் வகையில் பாடல்களை இயற்றி வழங்கினார்.

**"தமிழனென்று சொல்லடா!**

**தலைநிமிர்ந்து நில்லடா!"**

என்ற வரிகள் தமிழரிடையே இன உணர்ச்சியைப் பெருக்கி, உரிமைக்கு ஊக்கம் தந்தன.

**"இந்திய நாடிது என்னுடைய நாடே**

**என்று தினந்தினம் நீயதைப் பாடு"**

என்றும் பாடினார்.

**தமிழிசை**

சமற்கிருதத்தில் பற்றும் பயிற்சியும் உள்ளவராக இருந்தாலும், தமிழகத்து இசையரங்கிலே அந்நிய மொழிகள் ஆதிக்கம் செலுத்துவதைப் பாரதியார் வெறுத்தார். தமிழிசைப் பாடல்களே தமிழகத்தில் முதலிடம் பெற வேண்டுமென விரும்பினார். பாரதியாரைப் போலவே நாவலர் சோமசுந்தர பாரதியார், சத்தியமூர்த்தி ஆகியோர் தொடங்கி வைத்த தமிழிசைக் கிளர்ச்சியின் தொடர்ச்சிதான் 1941இல் தோன்றிய தமிழிசை இயக்கம். ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார், ராஜாஜி, கல்கி, டாக்டர் தெ.பொ. மீனாட்சி சுந்தரனார், சின்ன அண்ணாமலை ஆகியோர் இவ்வியக்கத்தில் பங்கேற்றதைக் குறிப்பிடாமல் இருக்க முடியாது. தமிழிசையால் தேசியம் வளர்ந்தது! தேசியத்தால் தமிழிசை வளர்ந்தது!

**தமிழ் உரைநடை**

இருபதாம் நூற்றாண்டின் தொடக்க காலத்திலேயே தமிழ் உரைநடையில் வேகத்தையும் விறுவிறுப்பையும் கலந்த தேசியவாதிகளில் மகாகவி பாரதியாரே முதன்மை பெறுகிறார்.

பாரதி, சுதந்திரம் என்பதனை 'விடுதலை' என்றும் 'கம்யூனிசம்' என்பதனைப் 'பொதுவுடைமை' என்றும் தூய தமிழ்ச் சொற்களால் குறிப்பிட்டுள்ளார்.

வ.உ. சிதம்பரம் பிள்ளை, திரு. வி. கலியாணசுந்தரனார் ஆகியோர் தமிழ் உரைநடையில் புதுமையை, புரட்சியை அறிமுகப்படுத்திப் பழைமைக்கும் புதுமைக்கும் பாலமாக விளங்கினர்.

தமிழ் எழுத்துலகில் திரு.வி.க.வின் வழித்தோன்றலாக விளங்கியவர் கல்கி ரா. கிருஷ்ணமூர்த்தி. உரைநடைத் தமிழைக் கருவியாகக் கொண்டு அவர் அரசியல், இலக்கியம், விமர்சனம், நகைச்சுவை எனப் பல துறைகளைத் தொட்டார்.

**நாடகம்**

இந்திய விடுதலைப் போரைக் காந்தியடிகள் தலைமையேற்று நடத்துவதற்கு முன்பே நாடக அரங்கில் ஏகாதிபத்திய எதிர்ப்புப் போரைச் செயல்படுத்தியவர்கள் தெருக்கூத்துக் கலைஞர்கள்! தமிழ் நாடகத் துறையிலே புதுமை பல நிகழ்த்திய புரட்சியாளராக விளங்கியவர் கிருஷ்ணசாமிப் பாவலர். எஸ்.எஸ். விசுவநாத தாஸ், டி.கே.எஸ். சகோதரர்கள் ஆகியோர் முன்னிலைப் பங்கு வகித்து நாடகக் கலையை வளர்த்தனர்.

வெள்ளை நிற ஆங்கில அரசின் அதிகாரிகளைக் 'கொக்கு'களாகக் கற்பனை செய்து இவர் பாடிய, 'கொக்கு பறக்குதடி பாப்பா' என்ற பாடலை நாட்டு மக்கள் எல்லாரும் பாடி எழுச்சி பெற்றனர். 'இராட்டைப் பாட்டு' பாடாமல் அந்நாளில் எந்த நாடகமும் தொடங்கப்பட்டதில்லை. 'கதர்க் கப்பல் கொடி தோணுதே' என்ற பாடல் மிகுந்த வரவேற்பைப் பெற்றது.

நாட்டின் விடுதலைப் போரை முன்னின்று நடத்துகிற பெருந்தலைவர் ஒருவர் இறந்துவிட்டால், உடனே எங்கோ எவராலோ இயற்றப்பட்ட தமிழ்ப் பாடல், நாடகக் கலைஞர் மேடைகளில் பாடியதால், அது நாடு முழுவதிலும் உள்ள பாமர மக்களாலும் பாடப்படும் பாடலாகப் புகழ் பெற்றுவிடும்.

பண்டித மோதிலால் நேரு இறந்தபோது, "பண்டித மோதிலாலை நாம் பறிகொடுத்தோமே!" என்ற பாடலும், "ஞானப் பண்டித மோதிலால் நம்மைப் பிரிந்தாரே" என்ற பாடலும் தமிழகமெங்கும் ஒலித்தது. வடபுலத்து இந்தி பேசும் மோதிலால் இறந்ததற்காக நம் செந்தமிழ் அழுததை என்னவென்று சொல்லி வருணிப்பது? தேச பக்தியிலும் தமிழ்ப் பக்தியிலும் கைகோத்துக் கூத்தாடிய காலம் அது! தமிழுக்கு ஊறு நேர்ந்தால் தேச பக்தி அழும்! தேசத்திற்குக் கேடு நேர்ந்தால் தமிழ் மொழி அழும்! அந்தப் பண்பு இனி எப்போது வருமோ?

நாடகத்தின் நடுவே காட்சிக்குக் காட்சி இடையில் தேசியப் பாடல்களைப் பாடி, தேசிய உணர்வைத் தட்டி எழுப்பிய பெருமை இக் கலைஞர்களைச் சாரும்.

கவிப்பெருக்கெடுத்தோட, உணர்ச்சி ஓங்கி நிற்க, உயிர்த் துடிப்புத் ததும்ப நாட்டுப்பற்றை நாடக மேடையில் பரப்பிய நயமிக்க நாடகம் கவிஞர் எஸ்.டி. சுந்தரம் எழுதிய 'கவியின் கனவு'. காலத்திற்கேற்ற கதையாகவும், காலத்தை வென்று நிலைக்கக்கூடிய படைப்பாகவும் விளங்கியது கல்கியின் 'தியாக பூமி'.

எஸ்.ஜி. கிட்டப்பா, கே.பி. சுந்தராம்பாள் தம்பதிகள் நாடக உலகில் புகழ்மிக்க நடிகர்களாக விளங்கித் தேசியத்தைத் தமிழ்ப்பாட்டாலும் உரையாலும் வளர்த்தனர். எப்போதும் எஸ்.ஜி. கிட்டப்பா தூய கதராடை அணிந்து காந்தி குல்லாவுடன்தான் காட்சியளிப்பார். கிட்டப்பாவின் 'வந்தே மாதரமே, வாழ்வுக்கோர் ஆதாரமே' என்ற பாடல் தமிழ் மக்களிடையே மிகுந்த வரவேற்பைப் பெற்றது.

**நாட்டுப் பாடல்கள்**

நாட்டுப் பாடல்கள் பல கும்மிப் பாடல்களாகவும் கூட்டுப் பாடல்களாகவும் உருவாகியுள்ளன. கட்டபொம்மன் – ஜான்சனுடன் உரையாடிய நிகழ்ச்சி, "வானம் பொழியுது பூமி விளையுது கும்பினிக்கு ஏது தீர்வைப் பணம்? தானம் தெரியாமல் வந்து தலையிட்டால் மானம் அழிந்து மடிந்திடுவீர்" என்று நாட்டுப் பாடலாகப் பாடப்பட்டது.

தேசிய முழக்கத்தைத் தெருவெல்லாம் பரப்பி, சந்து பொந்துகளிலும் பட்டிதொட்டிகளிலும் பாடப்பட்ட பாமரப் பாடல்கள் பல, ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் எழுச்சி கொண்டு பாடப் பெற்றன.

**பத்திரிகைகள்**

திரு.வி.க.வின் தமிழால் தேசியம் வளர்ந்தது; தமிழ் தழைத்தது. தம் வாழ்வாலும் வாய்மையாலும் தொண்டாலும் தூய்மையாலும் தமிழகத்துக்கு வாழ்வளித்த அறிஞர்களுள் ஒருவர் திரு.வி.க. அக் காலத்தில் பெயரளவில் பத்திரிகைகள் தமிழில் வெளிவந்த போதிலும் தமிழ் உணர்வோ, மொழி வளமோ, நடைத் தெளிவோ இன்றி, ஆங்கிலத்திலேயே சிந்தித்து, அதைத் தமிழில் அரைகுறையாய் வெளியிட்டுக் கலப்பும் களங்கமும் நிறைந்த தமிழ் நடையில் தூக்கிப் பிடித்துக் கொண்டிருந்தன. அந்நிலையை மாற்றித் தமிழ் ஆர்வத்தை ஊட்டி, தெள்ளு தமிழ் நடையில் மனத்தை அள்ளும் வகையில் பத்திரிகைகளில் எழுத இயலும் என்பதை நிலைநாட்டியவை திரு.வி.க.வின் 'தேச பக்தன், நவசக்தி' ஆகிய தேசிய இதழ்களாகும்.

**டாக்டர் வரதராஜுலு நாயுடு**

"தேச பக்தியையும் தமிழ்ப் பற்றையும் வளர்த்தது டாக்டர் வரதராஜுலு நாயுடு தமிழ்நாட்டுக்குச் செய்த இரண்டு பெரிய நன்மைகள்" என்று அவரிடம் பத்திரிகைத் தொழில் பயின்ற டி.எஸ். சொக்கலிங்கம் பாராட்டியுள்ளார். தமது, 'தமிழ்நாடு' பத்திரிகைப் பாசறையில் பண்பட்ட எழுத்தாளர்கள் பலரைப் பக்குவப்படுத்திப் பேனாமுனைப் படைவீரர்களாகத் தமிழகத்திற்கு அளித்த பெருமை டாக்டர் வரதராஜுலு நாயுடுவுக்கு உண்டு. எழுத்தாளர்களுக்கிடையே மிகச் சிறந்த எழுத்தாளராய் விளங்கியவர் அவர்.

தமிழ் மரபோடு ஒட்டிய சொற்களைப் பயன்படுத்த வேண்டு மென்பதில், தளராத ஆர்வம் கொண்டவர் அவர். 'வாட்டர் ஃபால்ஸ்' என்ற ஆங்கிலச் சொல்லை மொழிபெயர்த்து 'நீர் வீழ்ச்சி' என்று எழுதாமல் 'அருவி' என்ற அருமையான தமிழ்ச் சொல்லையே கையாண்டு தமிழாக்கம் செய்ய வேண்டுமென விரும்பியவர் வரதராஜுலு நாயுடு.

**வ. ரா.**

விறுவிறுப்பான தமிழ் நடையில் வேகமான கட்டுரைகள் பல எழுதி, சீர்திருத்தக் கருத்துகளைப் புகுத்தி, சிந்தனையைத் தூண்டி, உரைநடைக்கு உயர்வு கொடுத்தவர் வ. ரா. என்ற வ. ராமசாமி ஐயங்கார். 20ஆம் நூற்றாண்டுத் தமிழ் எழுத்துலகில் இணையற்ற புகழை ஈட்டிய பெருமை இவருக்கு உண்டு.

இவரால் எழுத்துலகத்துக்கு அறிமுகப்படுத்தப்பட்டுச் சிலர் அதன் பயனாய்ச் செல்வாக்குப் பெற்று உயர்நிலைக்குச் சென்றதுண்டு. அதனைக் கண்டு மகிழ்ந்தவர் வ.ரா. டி.எஸ். சொக்கலிங்கம், ஸ்டாலின் சீனிவாசன் ஆகியோருடன் சேர்ந்து வ.ரா. நிறுவி நடத்திய 'மணிக்கொடி' சிறிது காலமே கொடிகட்டிப் பறந்தாலும் மணிமணியாக எழுதக்கூடிய பலரைப் பக்குவப்படுத்தித் தயார் செய்து தமிழ்ப் பத்திரிகை உலகில் 'மணிக்கொடி' என்ற புதிய பரம்பரையை உருவாக்கியது.

**டி.எஸ். சொக்கலிங்கம்**

கொள்கை குலையாது, உறுதி தளராது தமிழ்ப் பத்திரிகை உலகத்துக்குத் தொண்டாற்றி, தேசிய உணர்வை மக்களுக்கு ஊட்டியவர்களுள் தலைசிறந்தவர் டி.எஸ். சொக்கலிங்கம். இவரைப் 'பேனா மன்னன்' என்ற அடைமொழியுடன் அழைப்பர். 'தமிழ்நாடு, காந்தி, தினமணி, தமிழ்ச் செய்தி' ஆகியவை அவர் அலங்கரித்த பத்திரிகைகள். இவருடைய அரசியல் விமர்சனங்கள், ஆணித்தரமான கட்டுரைகள், விளக்கமான குறிப்புகள், வெட்டு ஒன்று துண்டு இரண்டு என்ற தமிழ் நடை மக்களிடையே மிகுந்த வரவேற்பைப் பெற்றன. கனல் கக்கும் எழுத்து, கருத்தாழம் கொண்ட கட்டுரைகள், கவர்ச்சிமிக்க நடை ஆகியவை சொக்கலிங்கத்தின் தனி முத்திரைகளாகும்.

**கல்கி ரா. கிருஷ்ணமூர்த்தி**

வளமான நடையில் தமிழ்ப் பற்றையும், தேசிய உணர்வையும் குழைத்து, அடிமைத்தனத்துக்கு மருந்தாகவும், ஆர்வத்துக்கு விருந்தாகவும் அளித்துப் பாமரருக்கும் படித்தோருக்கும் இடையே பலமான பாலமாகப் பத்திரிகையைப் பயன்படுத்தியதில் இணையற்ற வெற்றி கண்டவர் 'கல்கி' என்கிற ரா. கிருஷ்ணமூர்த்தி.

கவிதைத் துறையில் பாரதியால் தோற்றுவித்த திருப்பத்தை உரைநடை இயலில் உண்டாக்கியவர் கல்கி. அவர் நடை செந்தமிழ் நடை அல்ல; எனினும் செழிப்பான நடை! வழக்கு நடையே எனினும் வளமான நடை! மண்டிக்கிடந்த சிந்தனையை, செயலை, மாண்பை மக்களுக்கு நினைவூட்டி எழுச்சி பெறச் செய்து, ஏற்றம் பெற வைத்துப் பீடுநடை போடப் புதுமைப் பரணி பாடியவர் கல்கி.

**ஆனந்த விகடன்**

மக்களைச் சிரிக்க வைத்து, சிந்திக்கச் செய்து, விடுதலை வேட்கையை, அரசியல் உணர்வைப் பரப்பிய 'ஆனந்த விகடனி'ன் தொண்டு தமிழ்ப் பத்திரிகை உலகில் தலையாய இடம் பெறும் என்பதில் ஐயமில்லை. கொத்தமங்கலம் சுப்பு முதலானவர்கள் தேசியத்தையும் தமிழையும் குழைத்து எழுத விகடன் வழிவகுத்தது.

வேகமான எழுத்தாலும், விளக்கமான குறிப்பாலும் நாட்டுப் பாடல்களையும் நயத்தோடு கையாண்டு தேசிய உணர்வைத் துணிவுடன் பரப்பிய ஏடுகளில் சிறப்பான இடம் பெற்றது 'சுதந்திரச் சங்கு'. இந்தப் பெருமை அதன் ஆசிரியர் சுப்பிரமணியத்திற்கே உண்டு.

பத்திரிகை உலகில் பாரதியின் 'இந்தியா', திரு.வி.க., வ.வே.சு. தலைமையில் 'தேச பக்தன்', திரு.வி.க.வின் 'நவசக்தி', டாக்டர் வரதராஜுலு நாயுடுவின் 'தமிழ்நாடு', ரங்கசாமி ஐயங்காரின் 'சுதேசமித்திரன்', டி.எஸ். சொக்கலிங்கம் தலைமையில் 'தினமணி', கல்கி தலைமையில் 'ஆனந்த விகடன்' ஆகியவை தமிழைப் பரப்பவும் தேசிய உணர்வை உறுதிப்படுத்தவும் தொண்டாற்றிய பத்திரிகைகளில் மிக முக்கியமானவையாகும். இவை தவிர டி.எஸ். சொக்கலிங்கத்தின் 'காந்தி', ம.பொ.சி.யின் 'தமிழ் முரசு', 'செங்கோல்', சங்கு சுப்பிரமணியத்தின் 'சுதந்திரச் சங்கு', பரலி சு. நெல்லையப்பரின் 'லோகோபகாரி', ராய. சொக்கலிங்கத்தின் 'ஊழியன்', கிருஷ்ணசாமிப் பாவலரின் 'தேசபந்து' என எண்ணற்ற தமிழ்ப் பத்திரிகைகள் 'தேசிய முரசு' கொட்டின!

ஆங்கில ஆட்சியாளரின் அடக்குமுறையைத் துணிவுடன் எதிர்த்துக் கொண்டு அன்றைய பத்திரிகைகள் தமிழுக்கும் தாய்நாட்டுக்கும் மகத்தான தொண்டாற்றியுள்ளதை எவரும் மறுத்துவிட இயலாது.

விடுதலைக்கு முன்பு பத்திரிகைகளில் எழுதப்பட்ட தமிழ் நடையைவிட இன்று பத்திரிகைகளின் தமிழ் நடை செம்மையானதாகவும் செழிப்பானதாகவும் அமைந்துள்ளது என்பதை மறுப்பதற்கில்லை. தமிழ் வளரும்போது தமிழ் நடையும் வளரத்தானே செய்யும்!

**மேடைத் தமிழ்**

விடுதலைப் போராட்டக் காலத்தில் பத்திரிகைகள் மிகக் குறுகிய வட்டாரத்தையே கவர்ந்த நிலையில், பட்டிதொட்டியெங்கிலும் தேசிய முழக்கம் செய்யப் பெரிதும் பயன்பட்டது மேடைப் பேச்சே! அந்தக் காலத்தில் ஒலிபெருக்கி வசதியோ சுவரொட்டி விளம்பரமோ இல்லாமல் பெரும்பாலான கூட்டங்கள் நடைபெற்றன.

வெண்கலக் குரலில் விடுதலை முழக்கம் செய்து, கனல் கக்கும் பேச்சால் பிரிட்டிஷ் ஆட்சியாளரைக் கதிகலங்க வைத்தவர் சுப்பிரமணிய சிவா! அதேபோல, மேடையில் ஏறிவிட்டால் உணர்ச்சிவசப்பட்டுத் தம்மை அறியாமல் பேசிப் பல்வேறு துன்பங்களுக்கு ஆளானவர் வ.உ. சிதம்பரம் பிள்ளை. இவரது ஆவேசப் பேச்சுகளால் தேசபக்திக் கனல் தமிழகத்தில் கொழுந்துவிட்டு எரிந்தது. வ.வே.சு. ஐயர், பாரதியார், ஜீவானந்தம், திரு.வி.க., பெரியார் ஈ.வெ.ரா., வரதராஜுலு நாயுடு, சத்தியமூர்த்தி, ராஜாஜி, முத்துராமலிங்கத் தேவர், ம.பொ.சி. போன்ற தலைவர்கள் புகழ்பெற்ற மேடைச் சொற்பொழிவாளர்களாகத் திகழ்ந்தனர். அந்த வரிசையில் தொடர்ந்து கோவை அய்யாமுத்து, கோடையிடி குப்புசாமி முதலியார், நெல்லை எஸ்.என். சோமயாஜுலு, மதுரை சிதம்பர பாரதி, எஸ்.ஏ. ரகீம், கோவை சி.பி. சுப்பையா, வேலூர் உபயதுல்லா, டி. செங்கல்வராயன் உள்ளிட்ட எண்ணற்றவர்கள் மேடைத் தமிழ் மூலம் தேசிய உணர்வை ஊட்டி விடுதலை வேட்கையை மக்களிடையே உருவாக்கினார்கள்.

**தமிழ் வளர்ச்சிக் கழகம்**

பாரதம் விடுதலை பெறுவதற்கு முன்பே, தமிழ் வளர்ச்சிக் கழகம் 1946 திசம்பரில் உருவாக்கப்பட்டது. சென்னை மாகாண அரசின் கல்வி அமைச்சராக இருந்த தி.சு. அவினாசிலிங்கம் செட்டியார் கழகத்தின் தலைவராகப் பொறுப்பேற்றுச் செயல்பட்டார்.

'தமிழில் எழுதப் பெற்ற சிறந்த நூல்களுக்கு ரொக்கப் பரிசும் பரிசுப் பத்திரமும் வழங்கித் தமிழ்

எழுத்தாளர்களுக்கு ஊக்கம் அளித்தல், ஆண்டுதோறும் வெவ்வேறு இடங்களில் தமிழ் விழா நடத்துதல், தமிழ் மொழியில் கலைக் களஞ்சியம் தயாரித்து வெளியிடல்' என்பன தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் குறிக்கோள்களாக இருந்தன.

அன்றைய நிலையில், தமிழில் முழு அளவில் கலைக் களஞ்சியம் தயாரித்து முடிக்க 14 லட்ச ரூபாய் செலவாகும் என மதிப்பிடப் பெற்றது. ஆண்டுக்கு ஒரு லட்சம் ரூபாய் என ஐந்து லட்ச ரூபாய் வழங்க ஒருங்கிணைந்த சென்னை மாகாண அரசு இசைந்தது. அப்போதைய மத்திய அரசின் நிதியமைச்சராக இருந்த டாக்டர் ஆர்.கே. சண்முகம் செட்டியார் ஆண்டுக்கு 75 ஆயிரம் ரூபாய் என நான்கு ஆண்டுகளுக்கு நிதியளிக்க வழிசெய்தார். திருப்பதி தேவஸ்தானம் 50 ஆயிரம் ரூபாய் வழங்கியது. தமிழ் மக்கள் வழங்கிய விருப்ப நிதியுதவி 1 லட்சம் ரூபாய் சேர்ந்தது.

மக்கள் படித்து அறிய வேண்டிய முக்கியமான துறை சார்ந்த பொருள்களை ஒட்டிய தலைப்புகளைத் தொகுத்து, விளக்கக் கட்டுரைகளாகக் கலைக் களஞ்சியம் உருவாக்கத் திட்டமிடப்பட்டது. இதனை ஆங்கில மொழியில் 'என்சைக்ளோப்பீடியா' என்றழைப்பர்.

❖ பிரிட்டிஷார் வெளியேறுவதற்கு முன்பே 1947 சனவரியில் தமிழகத்தில் உள்ள பள்ளிகளில் திருவள்ளுவர் விழாவைக் கொண்டாடுமாறு சென்னை மாகாண அரசின் கல்வித்துறை சுற்றறிக்கை அனுப்பியது. இதற்குக் காரணமானவர் அன்றைய கல்வி அமைச்சர் தி.சு. அவினாசிலிங்கம் செட்டியார்.

❖ 1947 அக்டோபர் மாதம் விஜயதசமி நாளில் கலைக் களஞ்சியப் பணி சென்னையில் பல்கலைக் கழகக் கட்டடத்தில் தொடங்கப் பெற்றது. ம.ப.பெரியசாமித் தூரன், கலைக் களஞ்சிய ஆசிரியராக நியமிக்கப் பெற்றார்.

❖ 1951 மார்ச்சு 21இல் சென்னை இராயப்பேட்டையில் உள்ள சத்தியமூர்த்தி பவனில் சிலப்பதிகார மாநாடு தமிழரசுக் கழகத்தினரால் நடத்தப் பெற்றது. காங்கிரசும் கழகமும் இணைந்து தமிழ் வளர்த்த காலம் அது. அவ்விழாவில் காமராசர் உள்ளிட்ட தலைவர்கள் பங்கேற்றனர். திருவாரூர் வி.எஸ். தியாகராஜ முதலியார் வரவேற்புக் குழுத் தலைவராக இருந்தார்.

❖ 1948 செப்டம்பர் 11 அன்று எட்டையபுரத்தில் கல்கி ரா. கிருஷ்ணமூர்த்தியால் உருவாக்கப்பட்ட பாரதியார் நினைவு மண்டபம் திறப்பு விழாவில் உரையாற்றிய முதலமைச்சர் ஓமந்தூர் பி. ராமசாமி ரெட்டியார், "தமிழ்மொழிக் கவிஞர் ஒருவருக்கு 'அரசவைக் கவிஞர்' தகுதி சென்னை மாகாண அரசால் வழங்கப்படும்" என்று அறிவித்தார். இது கூடியிருந்த தமிழ் அன்பர்களால் மிகுந்த கரவொலியுடன் வரவேற்கப் பெற்றது. இவ்விழாவில் கலந்துகொண்டு பாரதி மண்டபத்தைத் திறந்து வைத்தவர் சுதந்திர இந்தியாவின் முதல் கவர்னர் ஜெனரல் ராஜாஜி ஆவார்!

இந்த அறிவிப்பு வந்த ஆறாவது மாதம் 1949 மார்ச் 22 அன்று நாமக்கல் கவிஞர் வெ. இராமலிங்கம் பிள்ளை அரசவைக் கவிஞராக நியமிக்கப் பெற்றார். தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய மொழிகளுக்கும் அரசவைக் கவிஞர்கள் சென்னை மாகாண அரசால் நியமிக்கப் பெற்றனர்.

தமிழுக்குப் பெருமை சேர்த்தவர்களுள் திருவள்ளுவருக்கு 15.2.1960 அன்றும், சுப்பிரமணிய பாரதிக்கு 11.9.1960 அன்றும் மத்திய அரசு அஞ்சல் தலை வெளியிட்டுச் சிறப்புச் செய்தது.

**தமிழ் விழா**

1948இல் நடைபெற்ற முதல் தமிழ் விழாவிற்கு பி.டி. ராஜன் வரவேற்புக் குழுவின் தலைவராக இருந்தார். அன்றைய முதலமைச்சர் ஓ.பி. இராமசாமி ரெட்டியார் தலைமை வகிக்க நிதியமைச்சர் டாக்டர் ஆர்.கே. ஷண்முகம் செட்டியார் தொடங்கி வைத்து உரையாற்றினார். இதனைத் தொடர்ந்து 1953 வரை நடந்த தமிழ் விழாக்களில் பல முக்கியத் தலைவர்களும் தமிழறிஞர்களும் பங்கேற்றுச் சிறப்பித்தனர்.

பன்மொழிப் புலவர் தெ.பொ. மீனாட்சி சுந்தரனார், திரு.வி.கலியாணசுந்தரனார் ஆகியோர் 'சென்னைத் தமிழ்ச் சங்கம்' என்ற பெயரில் ஓர் அமைப்பை நிறுவி உயர்நிலைப் பள்ளிகளில் இலக்கியக் கூட்டங்கள், மாநாடுகள், நினைவுச் சொற்பொழிவுகள் நடத்தினர். ராய. சொக்கலிங்கனார், சா. கணேசன் ஆகியோர் காரைக்குடியில் கம்பர் விழா கொண்டாடிக் கவியரங்கம், பட்டிமன்றம், கருத்தரங்கம் நடத்தித் தமிழ் வளர்த்தனர். கம்பர் மறைந்த ஊராகக் கருதப்படும் நாட்டரசன் கோட்டையிலுள்ள கம்பர் சமாதி முன்பு வழிபாடும் நடத்தப்பட்டு வந்தது.

**தேசியத்தால் தமிழ் வளர்ந்தது**

விடுதலை பெறுவதற்கு முன்பும் பின்பும் எழுத்து, பேச்சு, நாடகம், பத்திரிகை, இலக்கியம் என அனைத்துத் துறைகளிலும் தமிழை வளர்த்ததில் தேசியத்துக்குப் பெரும் பங்கு உண்டு. கல்வி நிலையங்களில் பயிற்று மொழியாகவும், நிருவாகத் துறைகளில் ஆட்சி மொழியாகவும் தமிழைத் தமிழ்நாட்டில் கொண்டுவர காங்கிரசு தலைமையிலான அரசுகள் பல்வேறு முயற்சிகளை மேற்கொண்டதை யாரும் மறுக்க முடியாது. நாட்டுப் பற்றையும், மொழிப் பற்றையும் இரு கண்களாகக் கருதிய தேசியவாதிகளின் பங்களிப்பு மகத்தானது.

தேசியத்தால் தமிழ் வளர்ந்தது! தமிழால் தேசியம் வளர்ந்தது! வளமான தமிழகம்! வலிமையான பாரதம்! இவையே தேசியத்தின் குறிக்கோள்! தேசியத்தால் தமிழ் வளர்ந்தது! தமிழால் தேசியம் வளர்ந்தது! வளமான தமிழகம்! வலிமையான பாரதம்! இவையே தேசியத்தின் குறிக்கோள்!

❖

# சிற்றிலக்கியச் செல்வம்

முனைவர் ச.வே.சுப்பிரமணியன்

சிறு + இலக்கியம் – சிற்றிலக்கியம் ஆகிறது. பழங்காலத்தில் பிரபந்தம் என்று கூறியதை இப்போது சிற்றிலக்கியம் என்று கூறுகிறோம். தொல்காப்பியர் புதிதாகத் தோன்றும் எல்லா இலக்கியங்களுக்கும் ஒரு நூற்பா செய்துள்ளார்.



**விருந்தே தானும்**
**புதுவது புனைந்த யாப்பின் மேற்றே** (தொல். 1495)

விருந்து என்ற சொல்லுக்குப் புதுமை, புதிது என்று பொருள். புதிதாக வருகின்ற இலக்கியங்கள் அனைத்தையும் இந்நூற்பாவில் அமைக்கிறார் தொல்காப்பியர்.

தொல்காப்பியர் காலத்துச் சிற்றிலக்கியங்கள் பற்றிய குறிப்புகள் உள்ளன. ஆற்றுப்படை என்பது ஒரு சிற்றிலக்கியம். அதனைப் புறத்திணையியலில் தெளிவாக ஒரு நூற்பாவால் குறிப்பிடுகிறார்.

**கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்**
**ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்**
**பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்**
**சென்று பயன்எதிரச் சொன்ன பக்கமும்**

(தொல். 1037. 3-6)

தொல்காப்பியத்தில் ஏறத்தாழ 20க்கு மேல் சிற்றிலக்கிய வகைகள் பற்றிய குறிப்புகள் உள்ளன. ஆற்றுப்படை நூல்கள் தமிழில் 40க்கு மேல் உள்ளன.

பிற்காலத்தில் சிற்றிலக்கியங்கள் மிகுதியாக வளர்ந்தன. தொடக்கத்தில் பிரபந்த வகைகள் 96 என்று கூறினர். இன்று, சிற்றிலக்கியங்கள் 300 வகைக்கு மேல் உள்ளன.

இலக்கியங்கள் மனிதத்தை உருவாக்க முடியும் என்பதைச் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன. சிற்றிலக்கியங்களும் சிறந்த மனிதரை உருவாக்க முடியும்.

நாம் பொதுநிலையில் தெரிந்த அகவல், அந்தாதி, தூது, பரணி, பிள்ளைத்தமிழ், உலா போன்ற பல சிறு இலக்கியங்கள் தமிழகத்தில் மிகுதியாகச் செய்யப் பெற்றன. வளர்ந்துள்ளன.

**பரணி**

பரணியில் பிறந்தவர் தரணியாள்வார் என்பது பழமொழி. பரணி என்பது நட்சத்திரப் பெயர். பரணி நாளில் கொற்றவையாகிய காளிக்குப் போர்க்களத்தில் மடிந்தோரின் உடல் உறுப்புகளைக் கொண்டு கூழ் சமைத்துப் படைத்துத் தாமும் உண்டு மகிழ்ந்தன பேய்கள். இந்நிகழ்ச்சியைப் பாடுவது பரணி.

**ஆனை ஆயிரம் அமரிடை வென்ற**
**மானவ னுக்கு வகுப்பது பரணி.**

என்பது இலக்கண விளக்கப்பாட்டியல் பரணிக்குத் தரும் இலக்கணம். போர்க்களத்தில் ஆயிரம் யானைகளைக் கொன்று குவித்து வெற்றி பெற்றவனுக்குப் பரணி பாடுவது மரபு.

பரணிப் பாடல்கள் ஓசை இன்பம் பொருந்த தாழிசைப் பாடல்களால் அமையும். முதலில் கடவுள் வாழ்த்துப் பாடி. பின்பு போர் வீரர்களுக்கு அந்நாட்டு மகளிரை வாயிலைத் திறக்கும்படி கடைத்திறப்புப் பாடி, கொற்றவை வாழும் நிலமாகிய பாலையைப் பாடி, பின்பு அவள் வீற்றிருக்கும் கோயிலைப் பாடி, பேய்கள் காளிக்குத் தம் வேண்டுகோளைப் பாடி, பாட்டுத் தலைவன் சிறப்பு. அவனது போர் வெற்றி இவைகளைப் பாடி, பின்பு பேய்கள் இணைந்து கூழ் சமைத்து உண்டதைக் கூறுவர்.

தமிழில் இன்று கிடைக்கும் பரணி நூல்களில் முதல் நூல் கலிங்கத்துப் பரணி. இதனைப் பாடியவர் கவிச்சக்கரவர்த்திப் பட்டம் பெற்ற செயம்கொண்டார். காலம் பதினோராம் நூற்றாண்டு. சோழ அரசன் குலோத்துங்க சோழனின் படைத் தலைவனாகிய கருணாகரத் தொண்டைமான் அனந்தவர்ம சோடகங்கன் ஆண்டுவந்த கலிங்க நாட்டை வென்றதைப் பாடுவது கலிங்கத்துப்பரணி. தோற்றவன் நாட்டுப் பெயரைப் பரணிக்கு வைப்பது பொது மரபு.

ஓசை நயமும் இலக்கியச் சுவையும் உடையவை பரணித் தாழிசைகள். வெற்றி பெற்ற வீரர்கள் வீட்டுக்கு வருகின்றனர். அவரை வரவேற்க வீட்டைத் திறக்குமாறு பாடுகிறார் கவிஞர்.

**செக்கச் சிவந்த கழுநீரும்**
**செகத்தில் இளைஞர் ஆருயிரும்**
**ஒக்கச் செருகும் குழல்மடவீர்**
**பசும்பொன் கபாடம் திறமினோ**

சிவந்த கழுநீர் மலர்களைத் தம் கூந்தலில் வைக்கும்போது இளைஞர் உயிரையும் சேர்த்துச் செருகுகிறார்களாம் அம் மடந்தையர். நயமான கற்பனை. இதுபோன்ற கடைதிறப்புத் தாழிசைகள் 54 உள்ளன. மிகுந்த கற்பனைச் சுவையுடையன.

போர்க்களத்திற்கு ஒரு வீரமகள் செல்கிறாள். அவள் கணவன் களத்தில் மார்பில் புண்பட்டு மடிகிறான். அவன் மண்ணில் விழுமுன் தான் தாங்கிக் கொள்கிறாள். மண்ணில் வீழ்ந்தால் மண்மகளோடு அவன் சேர்ந்து விடுவானாம். பின்பு அவன் உயிர் போய், மேலுலகம் செல்லும்போது மேலுலக மகளிர் அவனை வரவேற்கக் காத்திருப்பார்களாம். அதனால் அவனுக்கு முன் தன் உயிரை விட்டு, இவளே மேலுலகம் சென்று இவனுக்காகக் காத்திருக்கிறாள். என்ன சுவையான கற்பனை.

**தரைமகள் தன்கொழுநன் தன்உடலந் தன்னைத்**
**தாங்காமல் தன்உடலால் தாங்கி விண்நாட்டு**
**அரமகளிர் அவ்வுயிரைப் புணரா முன்னம்**
**ஆவிஒக்க விடுவாளைக் காண்மின் காண்மின்.**

இப்பாடல் பண்பாட்டின் அடிப்படையில் அமைந்துள்ளது. தன் கணவனைப் பிறபெண்டிர் தொடக் கூடாது என்பது இத் தமிழ்ப் பெண்ணின் எண்ணம், நோக்கம்.

போர்க்களப் பாடல்கள் மிகுந்த நடை ஒட்ட மிடுக்குடையன, வல்லோசை மிகுந்து வளம் சேர்க்கின்றன. 'எடும் எடும் எடும் என எடுத்ததோர் இகல் ஒலி கடல் ஒலி இகக்கவே. விடு விடு விடு பரி கரிக் குழாம் விடும் விடும் என ஒலி மிகைக்கவே, விளை கனல் விழிகளில் முளைக்கவே, மினல் ஒளி கனலிடை பிறக்கவே, வளை சிலை உரும் என இடிக்கவே, வடிகணை நெடுமழை சிறக்கவே,' என வருவன சான்று.

ஒட்டக்கூத்தரின் தக்கயாகப் பரணியும், ஆசிரியர் பெயர் தெரியாத இரணிய வதைப் பரணியும், தத்துவராயரின் அஞ்ஞவதைப் பரணியும், மோகவதைப் பரணியும், நாத தேசிகரின் பாசவதைப் பரணியும், சீனிப் புலவரின் திருச்செந்தூர்ப் பரணியும் படித்துச் சுவைத்து இன்புறத் தக்கன.

### பிள்ளைத் தமிழ்

பிள்ளைக் கவி, பிள்ளைப் பாட்டு என்றும் இதனை அழைத்தனர். குழவி மருங்கினும் கிழவதாகும் (தொல். 1030) என்ற பாடாண்திணைத் தொல்காப்பிய நூற்பா பிள்ளைக்கவி பற்றிக் குறிக்கிறது. ஆழ்வார்களில் பெரியாழ்வார், கண்ணனின் குழந்தைப் பருவத்தை மிகச் சிறப்பாகப் பாடியுள்ளார். அது பிள்ளைத் தமிழுக்கு அடித்தளமாக அமைந்தது. தமிழில் இன்று கிடைக்கின்ற பிள்ளைத்தமிழ் நூல்களுள் முதல் நூல் ஒட்டக்கூத்தர் கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் இயற்றிய குலோத்துங்கன் பிள்ளைத் தமிழ். இவர் சந்தங்களை நல் ஓசையுடன் கையாளுகிறார். பின் வந்தோர் கூத்தரைப் பின்பற்றினர்.

ஆண்பால் பிள்ளைத் தமிழ், பெண்பால் பிள்ளைத் தமிழ் எனப் பிள்ளைத் தமிழ் இரு வகைப்படும். ஒவ்வொன்றும் பத்துப் பருவங்களையுடையது. காப்பு, தால், செங்கீரை, சப்பாணி, பதினொரு மாதத்தில் அது முத்தத்தை அனுபவிக்கும் முத்தம். பதின்மூன்று மாதத்தில் நடக்கத் தொடங்கும் வருகை. பதினைந்து மாதத்தில் நிலாவைப் பார்த்துச் சிரிக்கும் அம்புலி ஆகிய பருவங்கள் குழந்தைகளின் இயல்பாக உள்ள செயல்களோடு அமைவன. ஒன்றரை வயதில் ஆணுக்குச் சிறுபறையும், பெண்ணுக்குக் கழங்கும் ஒண்ணேமுக்கால் வயதில் ஆணுக்குச் சிற்றிலும், பெண்ணுக்கு அம்மானையும், 2 வயதில் முறையே சிறு தேரும், ஊசலும் என அமைத்துள்ளனர். குழந்தையின் இயல்பான வாழ்க்கையோடு இப்பருவங்களைப் பொருத்தியுள்ளனர்.

பிள்ளைத் தமிழில் முதல் நிலையாகப் போற்றப் பெறுவது குமரகுருபரர் இயற்றிய மீனாட்சியம்மைப் பிள்ளைத் தமிழ். ஐந்து வயதுவரை பேசாத ஊமைக் குழந்தையாயிருந்த குருபரர் தமிழ் அருவியைக் கொட்டத் தொடங்கினார் தம் பாக்களில். திருமலை நாயக்கர் காலத்தில் மதுரையில் மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ் அரங்கேறியது. மீனாட்சியம்மையே கேட்டு மகிழ்ந்து அருள் புரிந்தாள் என்பது செய்தி. தமிழ் படித்தோர் அனைவரும் படித்துச் சுவைத்து மகிழும் இனிய பாடல்.

**தொடுக்கும் கடவுள் பழம்பாடல்**
**தொடையின் பயனே! நறைபழுத்த**
**துறைத் தீந்தமிழின் ஒழுகுநறும்**
**சுவையே! அகந்தைக் கிழங்கைஅகழ்ந்து**
**எடுக்கும் தொழும்பர் உளக்கோயிற்கு**
**ஏற்றும் விளக்கே! வளர்சிமய**
**இமயப் பொருப்பில் விளையாடும்**

**இளமென் பிடியே! எறிதரங்கம்**
**உடுக்கும் புவனம் கடந்து நின்ற**
**ஒருவன் திரு உள்ளத்தில் அழுகு**
**ஒழுக எழுதிப் பார்த்திருக்கும்**
**உயிரோவியமே! மதுகரம்வாய்**
**மடுக்கும் குழல்காடு ஏந்தும்இளம்**
**வஞ்சிக் கொடியே! வருகவே**
**மலையத் துவசன் பெற்றபெரு**
**வாழ்வே வருக வருகவே!**

தமிழினிமையும், தத்துவச் செறிவும், பொருளினிமையும், ஒலியினிமையும் உள்ள இப்பாடல் படிப்போர் உள்ளக் கிழியில் எழுதிய உயிரோவியமாகத் திகழும் என்பதில் எந்தவித ஐயமும் இல்லை.

குமரகுருபரர் இயற்றியுள்ள மற்றொரு பிள்ளைத் தமிழாகிய முத்துக்குமார சுவாமி பிள்ளைத் தமிழ், மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ்போல் இன்பம் பயப்பது. அமுதாம்பிகை பிள்ளைத் தமிழ், செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத் தமிழ், சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர், சேக்கிழார் இவர்களைப் பற்றிப் பாடிய பிள்ளைத் தமிழ் நூல்கள், பகழிக் கூத்தரின் திருச்செந்தூர் பிள்ளைத் தமிழ், காந்தி மதியம்மை பிள்ளைத் தமிழ் போன்றவை படித்து இன்புறத்தக்கன. தற்காலத்துப் பாரதிதாசன் பிள்ளைத் தமிழ், மறைமலையடிகள் பிள்ளைத் தமிழ் போன்றன வந்துள்ளன. பத்தொன்பதாம் நூற்றாண்டில் மட்டும் 76 பிள்ளைத் தமிழ் நூல்கள் தோன்றியுள்ளன. இன்று மொத்தத்தில் 300 பிள்ளைத் தமிழ் நூல்களுக்கு மேல் இருக்கலாம்.

**பள்ளு**

உழத்திப்பாட்டு என்றும் அழைப்பர். பள்ளரின் வாழ்க்கை பற்றி விரிவாக விளக்கும் நூல். நாட்டுப்புறப் பாடல் வழி வளர்ந்த இலக்கிய வகை பள்ளமான இடத்தில் வேளாண்மை செய்வது எளிது. இயல்பு, பள் – பள்ளன் – பள்ளி போன்ற சொற்கள் தொடர்புடையன.

கடவுள் வணக்கம், பள்ளன், பெருமை, பள்ளிகள் இருவரின் வரலாறு, நாட்டுவளம், மழை வேண்டி நிற்றல், மழைக்குறி அறிதல், ஆற்று வெள்ளத்தைப் போற்றியுரைத்தல், பண்ணையார் வருகை, பள்ளன் தன் செயல்கள் பற்றிக் கூறுதல், மூத்த பள்ளி முறையீடு, பள்ளனைத் தொழுவின் அடைத்தல், மூத்த பள்ளி அவனை மீட்டல், காளை அவனை முட்டித் தள்ளுதல், பள்ளிகள் புலம்பல், உழவன் எழுதல், விதை வளம் கூறல், நாற்று நடுதல், பயிர் காத்தல், நெல் அளத்தல், பள்ளிகள் ஒருவரை ஏசல், இறுதியில் பாட்டுடைத் தலைவன் பெருமை பேசி, சிந்தும் விருத்தமும் விரவிப் பாடுவது பள்ளின் இலக்கணமாக உள்ளது.

கிடைப்பனவற்றுள் முதல் பள்ளாக, கமலை ஞானப் பிரகாசரால் இயற்றப் பெற்ற திருவாரூர்ப் பள்ளாக இருக்கலாம் என்பது பொதுக் கருத்து. இதன் காலம் கி.பி. 1585 என்பது கணிப்பு.

பள்ளு இலக்கியத்தில் சிறந்ததாகக் கருதப் பெறுவது முக்கூடற்பள்ளு. இதன் காலம் கி.பி. 1680. முக்கூடல் என்பது மூன்று ஆறுகள் கூடும் இடம். தாமிரபரணி, சிற்றாறு, ஒரு காட்டாறு மூன்றும் கலக்கும் இடம் முக்கூடல். நெல்லை மாவட்டத்தில் இவ்வூர் இன்று சீவலப்பேரி என்று வழங்கப் பெறுகின்றது. நெல்லு வகை எண்ணினாலும் பள்ளு வகையை எண்ண முடியாது என்ற பழமொழியைக் கொண்டு, பள்ளு இலக்கியங்கள் மிகுதி என்று கூறுவர். தெரிந்தவரையில் 52 பள்ளு இலக்கியங்கள் உள்ளன.

மூத்த பள்ளி ஆற்றின் வடகரையிலும், இளைய பள்ளி ஆற்றின் தென்கரையிலும் வாழ்கின்றனர். பள்ளு இலக்கியத்தின் வழி, சித்திரக்காலி வாலான். சிறைமீட்டான், மணல்வாரி, செஞ்சம்பா, கருஞ்சூரை, பொற்பானை, கத்தூரி, வாணன், பூம்பானை, கருங்குறுவை, புனுகுச் சம்பா போன்ற நெல் வகைகளையும், குடைச் செவியன், குற்றாலன் கூடுகொம்பன் போன்ற மாட்டு வகைகளையும் தெரிகிறோம்,

பள்ளியர் ஏசல் பகுதி மிகச் சுவையான பகுதி. மூத்த பள்ளி திருமாலை வழிபடுபவள். இளைய பள்ளி சிவனை வழிபடுபவள்.

மூ – மாதொருத்திக்கு ஆசைப்பட்டுப் பொன்னியின் மயமாம் பனி
மலையேறிப் போனான் உங்கள் உன்மத்தன் அல்லோடி!

இ – காதலித்துத் தம்பியுடன் சீதைபொருட்டால் அன்று
கடலேறிப் போனான் உங்கள் கண்ணன் அல்லோடி!

மூ – சுற்றிக் கட்ட நாலுமுழத்துண்டும் இல்லாமல் புலித்தோலை உடுத்தான் உங்கள் சோதி அல்லோடி!

இ – கற்றைச் சடைக்கட்டி மரவுரிஞ் சேலைதான் – பண்டு கட்டிக் கொண்டான் உங்கள் சங்குக் கையன் அல்லோடி!

மூ – நாட்டுக்குள் இரந்தும் பசிக்கு ஆற்றமாட்டாமல் வாரி நஞ்சை எல்லாம் உண்டான் உங்கள் நாதன் அல்லோடி!

இ – மாட்டுப் பிறகே திரிந்தும் சோற்றுக்கில்லாமல் வெறும் மண்ணையுண்டான் உங்கள் முகில் வண்ணன் அல்லோடி!

மூ – ஏறவொரு வாகனமும் இல்லாமையினால் – மாட்டில் ஏறியே திரிந்தான் உங்கள் ஈசன் அல்லோடி!

இ – வீறு சொன்னதென்ன மாடுதானும் இல்லாமல்
– பட்சி மீதில் ஏறிக் கொண்டான் உங்கள் கீதன் அல்லோடி!

சமயங்களைத் தாக்குவது போன்று சமய எண்ணங்களையும் கதைகளையும் கதையாகத் தருவது கவிஞனின் நோக்கம் போலும். முக்கூடற் பள்ளின் ஆசிரியர் பெயர் தெரியவில்லை என்றும் பலரும் கடிகை முத்துப்புலவர் அல்லது என்னயினாப் புலவராக இருக்கலாம் என்று சிலரும் கருதுகின்றனர்.

**குறவஞ்சி**

இச் சொல்லுக்குப் பெயர் குறப்பெண் என்பது. குறிஞ்சி நிலத்தில் வாழ்பவர் குன்றவர். அது குறவர் ஆகி, குறிஞ்சி நிலத்தில் குறி சொல்லும் பெண் குறத்தி என ஆகியிருக்க வேண்டும்.

தலைவன் உலா வருதல், தலைவி அவனைக் கண்டு காதல் கொள்ளுதல், அவனையே நினைத்துக் கொண்டிருப்பதால் திங்கள் தென்றல் போன்றவை அவளுக்குத் துன்பம் தருவதாக நினைத்து அவற்றைப் பழித்தல், தலைவனிடம் தோழியைத் தூது அனுப்பல், இதற்கிடையில் குறத்தி தன் மலைவளம் பாடி வருதல், தலைவியின் கையைப் பார்த்து, நீ விரும்பிய தலைவனை அடைவாய் என்று குறி சொல்லுதல், தலைவி அவளுக்கு ஆடை, அணிகலன்கள் கொடுத்து அனுப்பல், குறவன் குறத்தியைத் தேடி வருதல், குறத்தியின் அணிகலன்களைக் கண்டு வியந்து, ஐயுற்றுக் காரணம் கேட்டல், குறத்தியின் அலட்சிய விடை இவற்றை உறுப்புகளாகக் கொண்டு ஆசிரியப்பா, கலிப்பா, வெண்பா, சிந்து, கண்ணி ஆகிய பாவும் இனங்களும் கலந்து பாடப் பெறுவது குறவஞ்சி. இயற்றமிழோடு, இசைத்தமிழும் நாடகப் பாங்கும் அமைவதால் இது முத்தமிழ் இலக்கியமாகின்றது. இலக்கிய மொழியும் சேரிமொழியும் இயைந்து இணைந்து பாடப் படுவது. இதற்கு அடிப்படையாக அமைவது குறம். குமரகுருபரர் இயற்றிய மீனாட்சி அம்மை குறத்தில், குறவஞ்சியின் தொடக்கத்தைக் காணலாம்.

கிடைக்கின்ற குறவஞ்சிகளுள் மிகச் சிறந்ததாக உள்ளது திருக்குற்றாலக் குறவஞ்சி. இதனை இயற்றியவர் திரிகூடராசப்பக் கவிராயர். பதினெட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த புலவர். இவர் காலத்தில் மதுரையை ஆண்ட முத்துவிசயரங்க சொக்கலிங்க நாயக்கர், இவர் இயற்றிய குறவஞ்சி நாடகத்தைக் கண்டு மகிழ்ந்து குறவஞ்சிமேடு என்னும் நிலப்பகுதியை இனாமாக வழங்கிப் பாராட்டியுள்ளார். குற்றாலத்திற்கு அருகேயுள்ள மேலகரத்தில் வாழ்ந்த புலவர். குற்றாலம் பற்றித் தலபுராணம், மாலை, சிலேடை வெண்பா, யமக அந்தாதி, உலா, ஊடல், பிள்ளைத் தமிழ் முதலிய நூல்களையும் எழுதியுள்ளார்.

எளிய சொற்கள் இனிய சந்தம், இதயத்தை இழுக்கும் எதுகை, மோனை, காந்தக் கற்பனை, உள்ளத்தைக் கவரும் கவிதையமைப்புகள் படிக்கும் தோறும் பந்துபோல் துள்ளும் உள்ளம், அத்தகைய சுவையுடையது குற்றாலக் குறவஞ்சி. சான்றுக்கு ஒரு பாடல்.

**வானரங்கள் கனிகொடுத்து மந்தியொடு கொஞ்சும்**
**மந்திசிந்து கனிகளுக்கு வான்கவிகள் கெஞ்சும்**
**கானவர்கள் விழிஎறிந்து வானவரை அழைப்பர்**
**கவனசித்தர் வந்துவந்து காயசித்தி விளைப்பர்**
**தேனருவித் திரைஎழுப்பி வானின்வழி ஒழுகும்**
**செங்கதிரோன் தேர்க்காலும் பரிக்காலும் வழுகும்**
**கூனல்இளம் பிறைமுடித்த வேணி அலங்காரர்**
**குற்றாலத் திரிகூட மலைஎங்கள் மலையே.**

குற்றாலக் குறவஞ்சிக்கு அடுத்த நிலையில் புகழ் பெறுவது சரபேந்திர பூபாலக் குறவஞ்சி. பாட்டுடைத் தலைவர் கி.பி. 1798–1832 வரை தஞ்சையை ஆண்ட மராட்டிய மன்னர் சரபோஜி. இதனை இயற்றியவர் சிவக்கொழுந்து தேசிகர். இவ்விரண்டு குறவஞ்சிகளும் நாடகமாக நடிக்கப் பெற்று புகழ் பெற்றவை. பெயரளவில் அறியப் பெறுகின்ற குறவஞ்சி நூல்கள் 111 உள்ளன.

**நிறைவுரை**

தொல்காப்பியர் காலத்திலிருந்து இன்றுவரை ஏறத்தாழ 380க்குமேல் சிற்றிலக்கியங்கள் உள்ளன. சில சிற்றிலக்கியங்களுக்கு மிகுதியான நூல்கள் உள்ளன. அந்தாதி இலக்கியம் 1000க்கு மேல் உள்ளதாகத் தெரிகிறது. இவற்றில் அச்சில் வந்தவை 800க்கு மேல் இருக்கலாம். சுவடிகள் 200 இருக்கலாம். தமிழ்ச் சுவடிகளிலிருந்து அச்சாகாத நூல்களும் இன்னும் உள்ளன. தமிழில் தலபுராணங்கள் 800க்கு மேல் உள்ளன. இவற்றில் பாடல்களாக அமைந்தவை 400 வரை இருக்கலாம். உரைநடையில் அமைந்தவை 400 இருக்கலாம். இதுவரை வந்துள்ள தமிழ் நூல்கள் பற்றிய சரியான அட்டவணை இல்லை. அதை உருவாக்குதல் வேண்டும். தமிழ்நாடு மிகுந்த வளமுடையதாக இருந்த காரணத்தால் மிகுதியான இலக்கியங்கள் தோன்றியுள்ளன. இலக்கியங்களை ஆதரிக்கும் நிலையில் வசதியுடையவர்கள் மிகுதியாக இருந்தனர். ஒரு நாட்டில் மிகுதியான இலக்கியங்கள் தோன்றினால் அந்த நாடு வளமுடையதாக இருந்திருக்க வேண்டும் என்பது பொது விதி.

தமிழில் இதுவரை வந்துள்ள 380க்கு மேற்பட்ட சிற்றிலக்கியங்கள் அனைத்தையும் தொகுத்து வெளியிட்டால் தமிழின் பெருமை, தமிழர்க்கே தெரியும் வாய்ப்பு அமையும். அதை நாம் செய்ய முயலலாம். ❖

# தனிப்பாடல்கள் மரபும் மாற்றமும்

கவிஞர் ஈரோடு **தமிழன்பன்**



தமிழின் செவ்வியல் இலக்கியமாகச் சிறப்பித்துப் பேசப்படும் தொன்மைய சங்க இலக்கியங்கள் தனிப்பாடல்களாகவே கருதத்தக்கன. நெடியவும் குறியவும் – இடைநிலையவுமாக அவற்றை நாம் அளவு கருதி வகைப்படுத்தும் பாங்கில் காண நேரிடினும் பாடல்களின் புலப்பாட்டுப் பொருண்மைத் தன்மையில் தனிப்பாடல்களாகவே அவை தரப்படுத்தத் தக்கவையாக உள்ளன.

தொல்காப்பியர் செய்யுளியலில் வரையறை செய்யும் இலக்கணம், உரையாசிரியர்களின் உரை வேறுபாடுகள் தாண்டிய நிலையில் – தனிப்பாடல்கள் குறித்ததாகவே எஞ்சுவதை ஆய்வு வழி எவரும் உணர முடியும். தொல்காப்பியர் காலத்தில் தமிழ்ப் பாடல்களாகத் தனிப்பாடல்களே புனையப் பெற்றிருக்க வேண்டும் என்பதனையும் அப்பாடல்களே பெருவழக்குப் பெற்றிருக்க வேண்டும் என்பதனையும் ஒருசேரப் பார்த்தால் தனிப்பாடல்களின் புனைவு நெறிக்கும் தேவைக்கும் இருந்து வந்த இலக்கியச் சூழலை உணர முடியும்.

தண்டியலங்காரம்தான் (கி.பி. 12ஆம் நூற்றாண்டு என்பர்) தொல்காப்பியத்தில் உவமையியல் என்னும் ஒற்றைத் தலைப்புக்குள் மிளிர்ந்த அணிநிலை அழகியலை விரிவாக எடுத்துரைக்கும் நோக்கில் பேசும்போது முதன்முதலாகக் காப்பிய அமைப்புப் பற்றியும் கருத்துகள் சிலவற்றையும் திரட்டித் தருகிறது. ஆயின் அந்நூலும்கூடப் பொருள் தொடர்நிலைச் செய்யுள் என்னும் பிரிவைத் தவிர மற்றப் பிரிவுகளில் தனிப்பாடல்களைக் குறித்தே தனது இலக்கணத்தை வளர்த்துச் செல்கிறது.

தனிப்பாடல்கள் தனியன், முத்தகம், தனிநிலை, தனிநிலைச் செய்யுள் ஆகிய பல பெயர்களால் சுட்டப்படுகின்றன. வைணவப் பனுவல்களில் தனியன் என்று தனிப்பாடல் அழைக்கப்படும்போது 'தனி' என்பது நிகரற்றது என்ற பொருளைத் தருகிறது. பொதுவாகவும், பெருவழக்கிலுமாக 'தனி' என்னும் அடைமொழி தனித்தது, ஒற்றையானது என்கிற பொருளையே தருகிறது.

காவியங்களும் – சிற்றிலக்கியங்களும் பல்கிப் பெருகி வளர்ந்த பிற்காலத்தில்தான் அவற்றினின்றும் வேறுபட்டதாகிய ஒற்றைநிலைச் சிறு பாடலை அல்லது நெடும்பாடலைச் சுட்டிக்காட்டத் 'தனி' என்னும் அடைமொழி புணர்த்துச் சொல்லும் நிலைமை உண்டாயிற்று என்று கருதலாம்.

தனிப்பாடல்களின் வைகறைப் பொழுதாகவும் – வளரொளிப் பருவமாகவும் நாம் சங்க காலத்தைப் பார்க்க முடிகிறது. 'திணைக்கோட்பாடு' என்னும் விழுமிய அடித்தளத்தைக் கொண்டு கட்டமைக்கப்பட்ட – நாடக வழக்கும் உலகியல் வழக்கும் தழுவு நெறியறிந்து தழுவிய – சங்கப் பாடல்களின் அகமும் புறமும் தமிழரின் வாழ்வியலை மட்டுமன்றி – இலக்கியச் செம்மாப்பையும் எடுத்துக் காட்டவல்லன. இன்றுவரையிலான தமிழின் தனிப்பாடல்களை எல்லாம் தொகுத்து வகுத்து ஆராய்ந்து பார்ப்பினும் – சங்கத் தனிப்பாடல்களின் தலைமையிடத்தைப் பிறிதொன்று பெற முடியாது என்று உறுதிப்படச் செல்லலாம்.

சங்க காலத்திற்குப் பிறகு – இறைநேயப் பனுவல்களும், கதைபொதி காவியங்களும், பிரபந்தங்கள் என்னும் சிற்றிலக்கியங்களும் தம் காலகட்டங்களைத் தமிழ் இலக்கியப் பரப்பில் ஏற்படுத்தின. இக்காலகட்டங்களில் மீண்டும் புலவர்கள் தனிப்பாடல்களின் இருப்பை நிறுவினர் – காவியக் காலங்களில் அருகிய நிலையிலும், சிற்றிலக்கியக் காலங்களில் பெருகிய நிலையிலும், இவற்றின் தொடர்ச்சியில் புது நெறி காட்டிய புலவனாம் சுப்பிரமணிய பாரதியும், மாயூரம் வேதநாயகமும், மற்றும்

சிலரும் தனிப்பாடல்களைப் புதிய வழித்தடங்களில் இயக்கினர். பாரதிக்குப் பிறகான தனிப்பாடல்களின் ஆட்சி நீட்சி பாரதிதாசனிலிருந்து இன்றுவரை தொடர்கிறது. காவியங்கள் என அவ்வப்போது சிற்சில வெளிப்படினும் – இடைக்காலச் சிற்றிலக்கியங்களின் தொடர்ச்சி ஆங்காங்குத் தென்பட்டாலும் – அடையாளம் துலங்கத் தன்னை இன்றுவரை நிலை நிறுத்திக் கொண்டிருப்பது தனிப்பாடல் என்றே துணியலாம்.

தனிப்பாடல் திரட்டு, தனிப்பாசுரத் தொகுதி, தனிச் செய்யுட் கோவை, தனிப்பாமஞ்சரி, தனிப்பாமாலை, தனிச் செய்யுட் கொத்து, தனிச் செய்யுட் சிந்தாமணி என்னும் பெயருடைய தொகுப்புகளால் நிரம்பி வழியும் தனிப்பாடல்கள், பாரதியார் கவிதைகள், பாரதிதாசன் கவிதைகள், கவிமணி கவிதைகள் எனத் தனித்தனிப் பாவலர் பெயரொடு கூடிய தொகுப்புகளிலும், வெவ்வேறு பெயரினவாகிய தொகுதிகளிலும் பொங்கிப் பெருகுவதைத் தமிழ் இலக்கிய வரலாற்று நூல்கள் வழி எளிதாக அறிய முடியும்.

தமிழ் நாட்டில் 16, 17, 18 ஆம் நூற்றாண்டுகளில் வேற்றவர் நுழைவுகள் தொடக்கம் கண்டு, சிறிது சிறிதாக வேரூன்றியதன் விளைவாகத் – தமிழ் மக்களின் வாழ்வியல், பண்பாட்டுச் சூழல்கள் தடுமாற்றம் கண்டன. பேராதரவு தந்த பேரரசுகள் சரிவு கண்டதால் புலவர்களைப் போற்றுவாரும், தமிழ் மொழியை வளமார்ந்த வழித் தடத்தில் வளர்ப்பாரும் இல்லாது போன சூழ்நிலையில், "புலமை வெள்ளம் சிறு சிறு பிரபந்தங்களிலும், தனிப்பாடல்களிலும், தேங்குவதாயிற்று" என்பார் க. கைலாசபதி. சங்கத் தனிப்பாடல்களுக்குப் பிந்தைய தனிப்பாடல்கள் ஒருவகையின எனில், பாரதியாருக்குப் பிறகு புனையப் பெற்ற தனிப்பாடல்கள் பிறிதொருவகையின என்பதனை மனம் கொள்ளும் போது – காலந்தொறும் தனிப்பாடல்கள் வெவ்வேறு பரிமாணம் கொள்ளத்தக்க அரசியல், சமூக வாழ்வியல் – பண்பாட்டுச் சூழல்கள், பின்னின்று இயக்கிய இயங்கியல் ஆற்றல்களாக இருந்தன என்பதும் தெற்றென வெளிப்படும்.

சங்க இலக்கியத்துத் தனிப்பாடல்கள் தொல்காப்பியர் வழியாகவே இதுவரை புரிந்து கொள்ளப்படுகின்றன. திணைக் கோட்பாடுகளின் அடிப்படையிலேயே அன்றைய தமிழரின் இலக்கியம் பற்றிய புரிதலும் – வாழ்வியல் நெறிகள் பற்றிய புரிதலும் நமக்கு ஏற்படுகின்றன. அன்பின் ஐந்திணை மட்டுமே தகுதியான பாடுபொருளாக இருக்க, கைக்கிளை, பெருந்திணை என்பன வாழ்வியல் தளத்தில் இல்லாமல் இல்லை என்பதனைக் கோடிட்டுக் காட்டும் அளவிற்கே இலக்கியத்தில் இடம் பெற்றிருந்தன.

தனியொருவரின் காதல் இன்பத்தினைப் பெயரொடு சுட்டிப் பாடுகிற மரபு அன்றில்லை என்பதனால் புலவரின் நேரடி அனுபவக் குரலுக்கு உரிமைப் பறிப்பு நேரிடுகிறது என்று கருதலாம். ஆயின் மக்கள் அனைவருக்கும் பொதுவான நிலையில் – சமுதாய நிலைக் களத்தில் காதல் உணர்வுகளைப் பொதுமைப்படுத்தும் விழுமிய நிலையில் அக்காதல் தனிப்பாடல்கள் அரும்பி மலர்ந்து மணம் பரப்பின என்பதனை மறுத்தல் இயலாது. பழந்தமிழ்ப் புலவர்கள் இலக்கணக்காரர்கள் ஆகியோர் பேணிய இலக்கியத் தூய்மை வாதம் தொடர்ந்து விவாதிக்கத்தக்கது.

அரசர்கள், வள்ளல்கள் பெயர் சுட்டிப் பாடிய புறப்பாடல்களில் அவர்களுடைய வீரம், கொடை ஆகியன பாடுபொருள்களாக இருந்தன. அவர்களுடைய அகவாழ்வோ, பரத்தமை ஒழுக்கப்பான்மைகளோ புலவர்களின் பாடுபொருள் பட்டியலில் இடம் பெற முடியவில்லை.

காதல் தேர்வு – காதலிக்கும் பெண்ணின் உரிமை – ஆண் தலைமை – அரசியலின் மறைமுக நேர்முகச் செயற்பாடுகள் எனப் பல பரிமாணங்களில் பார்க்கத் தக்கது அன்றைய காதல் வாழ்க்கை. எனினும், திணைக் கோட்பாட்டின் அடிப்படையிலான நாடக வழக்கை ஊடுருவி வெளிப்படும் சங்கப் பாடல்களின் உண்மை நிலைமைகள் – அவற்றில் படிந்துள்ள மரபு வழியான தமிழ்ப்பண்பாட்டுச் சாரம் – ஆகியவற்றில் போற்றத்தக்க கூறுகள் பல்கிக் கிடக்கின்றன.

பிற்காலத்தில் தனிப்பாடல்கள் தொல்காப்பிய விதிமுறை ஆணைகளை விலக்கிக் கொண்டு வெளிப்பட்டிருப்பதனையும் – விதிமுறை சார்ந்து வெளிப்பட்டிருப்பதனையும் காண முடிகிறது. ஆயின் முனைப்பாகவும் தெறிப்பாகவும், மிகுதியாகவும் – தனிப்பாடல்களில் காணப்படுவன புலவர்கள் தம்மைப் புரந்த வள்ளல்களை மையப்படுத்திப் பாடிய காம மிக்க கழிபடர் கிளவிகளே ஆகும். பாட்டுடைத் தலைவர்களாக மட்டுமின்றிக் கிளவித் தலைவர்களாகவும், பிரபுக்களும், வள்ளல்களும், பாளையக்காரர்களும் இடம் பெற்றுவிட்டனர்.

இடைக்காலத்தனவாகிய தனிப்பாடல்களில் காதலைப் பொறுத்தவரை – கடவுளர் மீது பாடப்பட்டவை – மன்னர்கள், வள்ளல்கள் ஆகியோர் மீது பாடப்பட்டவை – மரபு வழிப்பட்ட நெறிமுறையில் பாடப்பட்டவை என்று மூன்று வகைகளைக் காணமுடிகிறது. சங்கத் தனிப்பாடல்கள் அன்பின் ஐந்திணை அடிப்படையிலான இயற்கை நெறிக் காதலை வெளிப்படுத்துவனவாகவே உள்ளன. பிற்காலத் தனிப்பாடல்களில் சங்க இலக்கிய அகத்துறைகள் அங்கங்குப் பின்பற்றப்பட்டிருப்பினும் – அவற்றின் மூலம் காதலின் மென்மையும் மேன்மையும் இடம்

பெறுவதற்கு மாறாக வரம்பிகந்த வருணிப்புகளும், நெறிபிறழ்ந்த காமப் பிதுக்கங்களும் – பாடல்களைப் படாதபாடு படுத்தியுள்ளன.

புறத்துறை சார்ந்த பாடல்களில் வீரம், கொடை முதலிய அரும்பண்புகளும் வாழ்வியல் உண்மைகளும் – பண்டைய தனிப்பாடல்களில் வெளிப்பட்டன. அனுபவங்களைக் கட்டற்ற தன்மையில் கவிதையாக்குவது என்பதே இடைக் காலப் புலவர்களின் தனித்தன்மையாக இருந்திருக்கின்றது. பாடுபொருள்களிலும் மாற்றங்கள் உண்டான நிலையில் – அரசு அலுவலிலிருந்து ஓய்வு பெற்றதனை மாயூரம் வேதநாயகர் – ஒரு பாடலில் வெளிப்படுத்தியிருப்பதனைக் காண முடிகிறது. அவ்வாறே கைக்கூலி பெற்றுக் கொண்டு வழக்குத் தீர்வு காண முடியாத படி முறிப்பதற்குப் பொய் கூறிய நிலையைப் பாடலாக்கி அவர் வெளியிட்டிருப் பதனையும் தனிப்பால் திரட்டில் பார்க்க முடிகிறது.

இடைக்காலத் தமிழ்ச் சமூகத்தின் வரலாற்று மூலங்கள் தனிப்பாடல்கள் என்று கருதத்தக்க வகையில் சமுதாயத்து, இன, குல, சாதி அடுக்குகள் அவற்றின் பல்வேறு நிலைகள் – பழக்க வழக்கங்கள், கலை, பண்பாட்டுச் செம்மைகள், சிதைவுகள் முதலிய பலவற்றையும் நாம் பல்வேறு தமிழ்த் தனிப்பாடல் திரட்டுகள் வழிக் காண முடியும்.

மூவர் கோவையும் மூவிளங்கோவையும் பாடிய பனுவல் வாயால் முடிவெட்டும் தொழிலாளியையும், கீரை விற்கும் பெண்ணையும் புலவர்கள் பாடியுள்ள திறம் – வாழ்வின் பயன்பாட்டில் இடம் பெற்ற சிறுசிறு பொருள்களாகிய பாக்கு வெட்டி, கைத்தடி, கைக்குடை, செருப்பு, புகையிலை, மாவடு முதலியனவெல்லாம் பாட்டின் கருப்பொருள்களாகிய தன்மை – எல்லாம் இடைக்காலத் தனிப்பாடல்கள் கண்ட இலக்கிய விடுதலை என்று கூடச் சொல்லலாம்.

ஆயின், இப்படிப் பெற்ற இலக்கிய விடுதலையை இடைக்காலப் புலவர்கள் உரிய முறையிலேயே பயன் படுத்தினர் என்று கருத முடியாது. மானுட விழுமியங்களைப் பேணவோ – வாழ்வியல் சிக்கல்களை வெளிப்படுத்தவோ – தீர்வுகளை நாடிப் பாடல்களை இயக்கவோ முற்பட்டனர் என்று முடிவு சொல்ல முடியாது. வள்ளல்கள், புலவர்கள் மீது வரம்பு கடந்த நிலையில் போற்றிப் புனைவுகளைச் செய்ய முற்பட்டதும் – ஒளிபடர்ந்த காதலைக் காட்டிலும் இருண்மை கொப்புளிக்கும் காமத் தெறிப்புகளை வார்த்தை முற்றங்களில் இடம் பெறச் செய்ததும் – இறைமைப் பாடல்களில்கூட, இறை நேயமும் இதயக் காதலும் கசிவும் இடம் பெறுமாறு செய்யாமல் – கிண்டலும் கேலியும் தலைதூக்கக் கிளர்ச்சிக் கிறுகிறுப்புக்கு ஆட்பட்டதும் – தனிப்பாடல்களில் மேலோங்கி நிற்கக் காண்கிறோம்.

சொந்த அனுபவங்களைத் தடையில்லாமல் வெளிப்படுத்தும் வாய்ப்பைப் பெற்றிருந்தும், புலவர்கள் அதனைத் தவறான தடத்திலும் பயன்படுத்தியுள்ளனர். பாடல் இயற்றுவது ஒரு புலமை விளையாட்டாக மாறியதனால் – சொந்த அனுபவங்களைப் பாடுவதனைக் காட்டிலும், பிறர் விருப்புக்குப் புலவர்கள் புனையும் அதிரடிப் பாடல்களே தனிப்பாடல்களின் தனிப் பண்புகளில் தலைமையானதாக – இடைக் காலத்தில் முகம் காட்டியுள்ளது. எனினும், கவிதைக் கலை வளர்ச்சிப் போக்கில் பல வண்ணங்களைத் தமிழ் இலக்கியம் சந்தித்த காலகட்டம் இது என்பது பேருண்மை.

புதுவகை இலக்கியம் உருவாகத் துடித்துக் கொண்டிருந்த ஒரு காலகட்டம் என்று தனிப்பாடற் காலத்தைக் குறிக்கலாம். மகாகவி சுப்பிரமணிய பாரதியிலிருந்து தொடங்கும் மாற்றுவகைத் தமிழ்த் தனிப்பாடல் புனைவு நெறி – இந்திய விடுதலைக்கு முன்னும் பின்னுமாகத் தொடர்ச்சி கண்டு ஆற்றலோடு இயங்கி வருகிறது. அரசியல் பார்வை, பெண் விடுதலை – உழைப்பாளர் உரிமைகள் – சாதி ஒழிப்பு – மூட நம்பிக்கைத் தகர்ப்பு – பகுத்தறிவுப் பார்வை – சமத்துவச் சமநிலை – என்று பாடுபொருள்களில் புதுமைப் புரட்சியும் கொண்ட தனிப்பாடல்கள் இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியத்தின் விழுமியமாகக் கருதத் தக்கவை.

இடைக்காலத் தனிப்பாடல்களில் உள்ளடக் கத்தைக் காட்டிலும் உருவப்பாங்கே ஈடுபாட்டுக்குரிய முக்கியத்துவம் பெற்றிருந்தது. மெல்லிய காதல் உணர்ச்சியை – மேன்மை மிக்கதாகக் கருதப்படும் இறை நேயத்தைப் புனையும் போது கூட, புலவர்கள் சிலேடை, யமகம், மடக்கு, திரிபு என்று வித்தைகள் காட்டுவதிலேயே பெரிதும் நாட்டம் உடையவர்களாக இருந்திருக்கின்றனர். சங்கத் தனிப்பாடல்களில், ஒப்பனைமிக்க யாப்புக் கவர்ச்சியைக் காட்டிலும் – பொருண்மையை – உணர்வை முதன்மைப்படுத்திய எளிய யாப்பின் இயல்புத் தன்மையே முதன்மை பெற்றிருந்தது.

மூன்றாவது தனிப்பாடல் காலகட்டத்தை வகுத்த தலைமைப் படைப்பாளி பாரதியின் தனிப்பாடல்களில், பழைய யாப்புவழிப் புனைவுகளோடு – எளிய, இனிய மக்கள் வாய்மொழிப்பாடற் சந்தங்கள் வழியான கட்டமைப்பும் – மெட்டமைப்பும் மேலோங்கி நின்று புதுநெறி காட்டின என்று சொல்லலாம்.

தனிப்பாடல்கள் என்று சொன்ன அளவில் எவருக்கும் இடைக்காலத் தமிழ்ப் புலவர்களின் புனைவுகளே நினைவுக்கு வரும். சங்கத் தனிப்பாடல்களுக்கும் – இக்காலத் தனிப்பாடல் களுக்கும் – இடையில் இருக்கும் அவை, இன்றும்கூட, காளமேகத்தின் – ஔவையின் – கம்பரின் – இப்படி இன்னும் பலரின் கருத்து நலனும், கவர்ச்சி நயமும் கலந்த ஆக்கங்கள் மூலம் தமது இருப்பைத் தொடர்ந்து தக்க வைத்துக் கொள்ளப் போராடி வருகின்றன.

❖

# திருக்குறளைப் போற்றிய எல்லீசரும் ஆல்பர்ட் சுவைட்சரும்

முனைவர் இ. சுந்தரமூர்த்தி

**பிரான்சிஸ் ஒயிட் எல்லிசு**



திருக்குறளை மொழிபெயர்த்த முன்னோடிகளுள் ஒருவர் பிரான்சிஸ் ஒயிட் எல்லீசு (Francis Whyte Ellis, 1777–1819) என்பவர். இங்கிலாந்து நாட்டில் பிறந்த இவர் இந்திய ஆட்சிப் பணியாளராக விளங்கியவர். ஆங்கிலேய அரசு இவரைச் சென்னை வருவாய்த் துறையின் செயலராக நியமித்தது. நிலவுடைமை பற்றிய அரிய விளக்கங்களைத் தந்தவர் எல்லீசு. சென்னை மாவட்ட ஆட்சித் தலைவராகவும் விளங்கியவர்.

ஆட்சிப் பணியில் சிறந்து விளங்கிய இவர் தமிழ் மொழியிலும் ஏனைய திராவிட மொழிகளிலும் தம்புலமை முத்திரையைப் பதித்தவர். எல்லீசு துரை என்று பலர் அவரை அழைத்தபோது தன்னைத் தமிழ் மரபிற்கேற்ப எல்லீசன் என்றே அழைத்துக் கொண்ட தமிழ் ஆர்வலர்.

இன்றைய கால கட்டத்தில் திருவள்ளுவரின் உருவத்தைப் பலவாறு பல்வேறு நிலைகளில் போற்றி ஓவியமாக்கியும் சிலையாக்கியும் வணங்கி மகிழ்கின்றோம்.

இருநூறு ஆண்டுகளுக்குமுன் திருவள்ளுவர் உருவத்தைப் பொறித்தவர் யார் என்று கேட்டால் நாம் எல்லீசரைச் சுட்டிக்காட்டலாம். அரசாங்க நாணயச் சாலையின் பொறுப்பில் இருந்தவர் எல்லீசு. அப்பொழுது திருவள்ளுவரின் உருவம் பொறித்த நாணயங்களை வெளியிட்டுப் புகழ் பெற்றவர் எல்லீசு. இரண்டு வராகன் தங்க நாணயங்கள் திருவள்ளுவர் உருவத்தால் மேலும் பொலிவு பெற்றது. அறிஞர் ஐராவதம் மகாதேவன் இந்நாணயங்கள் குறித்து விரிவாக எழுதியுள்ளார்.

1810–11ஆம் ஆண்டில் திருக்குறளை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தவர் அறிஞர் எல்லீசு. இந்நூல் இப்பொழுது, பார்ப்பதற்கும் அரிய நூலாக விளங்குகின்றது. பின்னர் இந்நூலைச் சென்னைப் பல்கலைக் கழகத்தில் பேராசிரியர் சேதுப்பிள்ளை பதிப்பித்து (1957) வெளியிட்டார்.

ஆயிரத்து எண்ணூறுகளில் தமிழ் இலக்கிய நூல்கள் அச்சுப் பெறாத நிலையில் எல்லீசு அவர்கள் ஓலைச் சுவடிகளைக் கொண்டே திருக்குறளைப் பதிப்பித்து ஆங்கிலத்தில் அரிய விளக்கங்களுடன் வெளியிட்டார். 1812இல் திருக்குறளின் முதல் அச்சு நூலினைத் தஞ்சை ஞானப்பிரகாசரும், அம்பலவாணத் தம்பிரானும், சென்னை மாசமதினச் சரிதை அச்சுக்கூட வாயிலாக வெளியிட்டனர். இந்த நூல் அவர் பார்வையில் பட்டதா என்பது தெரியக்கூடவில்லை.

எல்லீசு பதிப்பித்த திருக்குறள் மொழிபெயர்ப்பில் அக்காலத்தில் அச்சாகாத பல நூல்களையும், சித்தர் பாடல்களையும் அவர் நன்கு பயின்றிருந்தமை அவர் காட்டும் மேற்கோள் விளக்கச் செய்யுள்களால் நன்கு புலனாகின்றன. திருக்குறள் நூலுக்கு முழுமையான மொழிபெயர்ப்புப் பணியை அவரால் செய்ய முடியவில்லை என்றாலும் கிடைத்துள்ள பகுதிகளிலிருந்து அவருடைய ஆழமான தமிழ்ப் புலமை வெளிப்படுகின்றது.

இராமச்சந்திர கவிராயரும் சாமிநாதப் பிள்ளையும் இவருக்குத் தமிழைக் கற்பித்தனர். தமிழ்மீது ஆழமான பற்றுக் கொண்ட அவர் மொழிபெயர்ப்புப் பணி மட்டுமேயன்றி இலக்கிய ஆக்கத்திலும் ஈடுபாடு கொண்டவர். எல்லீசு மொழிபெயர்த்த திருக்குறள் பதிப்பு விளக்கத்தினின்றும் அவர் எழுதியதாகக் கருதப்பெறும் ஐந்து பாடல்கள் அவர்தம் புலமையைக் காட்டும். சமயப் பயிற்சிமிக்க அவர் எழுதிய பாடல்களை நமசிவாயப் பாட்டு எனக் குறிப்பிடுவர்.

**வாய்மை யொன்று மாயை யொன்றும் வாருளத்தில்<br>வேறறியாய்<br>நீயெல்லா மெல்லாநீ நின்னுளில்லாப் பொருளுமில்லை<br>நீயெல்லா யிருவேநீ நீயுயர்ச்சி நீயாழம்<br>வாயொன்றிட் டுலகெல்லாம் வணங்குகவே நமசிவாய.**

என்னும் பாடல் அவர் எழுதிய ஐந்து பாடல்களுள் ஒன்றாகும்.

எல்லீசர் எழுதிய ஐந்து பாடல்களுக்கு ஆங்கில மொழிபெயர்ப்பும் அவர் தந்துள்ளார். 'நமசிவாய' என்னும் சொல்லால் அழைத்து வணங்கிய இவருடைய சமயப் பொதுமை நெறி வியப்பிற்குரியது. 'பிறவிப் பெருங்கடல் நீந்துவர்' என்னும் குறட்பாவிற்கு அளித்துள்ள ஆங்கில விளக்கமும், உரை மேற்கோள் விளக்கமும் அவருடைய

அகன்ற தமிழறிவையும், சமய அறிவையும், இலக்கியப் பயிற்சியையும் காட்டும்.

திருவாய்மொழி (ஐந்து பாடல்கள்), திருவாசகம் (நான்கு பாடல்கள்), சிவவாக்கியம் (ஐந்து பாடல்கள்), தேம்பாவணி (ஏழு பாடல்கள்); அவர் எழுதிய பாடல்கள் (ஐந்து நமசிவாயப் பாட்டு) என ஏராளமான பாடல்கள் ஓலைச் சுவடிகளினின்றும் அவர் பயின்று சான்றுகள் காட்டியவை என எண்ணும்போது அவருடைய ஆழமான புலமை நம்மை வியப்பின் எல்லைக்கு அழைத்துச் செல்லும்.

காலத்தால் புதையுண்டு கிடந்த அரிய நூல்களைத் தமிழறிஞர்களின் உதவியோடு வெளிச்சத்திற்குக் கொண்டு வந்தவரும் அவரே. பழம் இலக்கியங்களைத் தேடி அவற்றை அச்சிட்டு அறிஞர் உலகிற்கு அறிமுகம் செய்ய விழைந்தவர்க்குப் பொருளுதவி செய்தவரும் அவரே. வீரமாமுனிவர் தம் கைப்பட எழுதிய தேம்பாவணிக் காப்பிய ஏட்டினைப் பெற்றுப் பாதுகாத்தவரும் அறிஞர் எல்லீசு அவர்களே.

இங்கிலாந்து நாட்டிலிருந்து வந்த ஆங்கிலேய அலுவலர்கள் தமிழையும் திராவிட மொழிகளையும் கற்றுக்கொள்ள வேண்டும் என்னும் உயர்ந்த நோக்கத்தோடு ஒரு கல்வி நிறுவனத்தையும் (சென்னைக் கல்விச் சங்கம்) இவர் தோற்றுவித்தார். புனித ஜார்ஜ்கோட்டைக்குள் தோன்றிய கல்வி நிறுவனத்தில் அக்காலத்தில் புகழ் பூத்துப் பொலிந்த தமிழறிஞர்கள் பணியாற்றினர். முத்துசாமிப் பிள்ளை, அ. தாண்டவராய முதலியார், திருவாசகத்தை முதன்முதலில் பதிப்பித்த கோட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர் முதலானோர் அந்நிறுவனத்தில் தமிழுக்காக உழைத்தனர்.

இலக்கண நூல்களும், அகராதிகளும், உரைநடை நூல்களும் இந்நிறுவனத்தால் தமிழுக்குக் கிடைத்தன. இவற்றுள் சென்னைக் கல்விச் சங்கத்தில் தமிழ்ப்புலமை நடாத்திய தாண்டவராய முதலியாரின் இலக்கண வினா விடையும், அவரே மொழிபெயர்த்த பஞ்சதந்திரக் கதையும் குறிப்பிடத்தக்கன.

தமிழறிஞர் எல்லீசு அவர்கள் திருக்குறள்மீது கொண்ட ஆர்வம் எல்லையற்றது. வள்ளுவர் உருவத்தைக் காசில் பொறித்த அவருடைய ஆர்வம் திருவள்ளுவரின் குறட்பாக்களைக் கிணறுகளின் சுவர்களில் கல்வெட்டாகவும் பதிக்கச் செய்தது.

எல்லீசு காலத்தில் சென்னையில் கொடிய குடிநீர்ப் பஞ்சம் நிலவியபோது அவர் பல கிணறுகளை வெட்டி மக்களின் குடிநீர்ப் பஞ்சத்தைப் போக்கினார். அக் கிணறுகளின் கைப்பிடிச் சுவர்களில் கல்வெட்டையும் பதித்தார். 1818ஆம் ஆண்டில் வெட்டுவிக்கப்பெற்ற கல்வெட்டில்,

**'இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்**
**வல்லரணும் நாட்டிற் குறுப்பு'**

என்னும் குறள் பொறிக்கப் பெற்றுள்ளது (திருக்குறள் பழையவுரை, ச. கிருஷ்ணமூர்த்தி – 1993)

**....நெடுநிலந்தாழ நிமிர்ந்திடு சென்னைப்**
**பட்டணத் தெல்லீச னென்பவன் யானே**
**பண்டார காரிய பாரஞ் சுமக்கையிற்**
**புலவர்கள் பெருமான் மயிலையம் பதியான்**
**தெய்வப் புலமைத் திருவள் ளுவனார்**
**திருக்குற டன்னிற் றிருவுளம் பற்றிய**

**இருபுலனும் வாய்ந்த மலையும் வருபுனலும்**
**வல்லரணு நாட்டிற் குறிப்பு**
**என்பதின் பொருளை யென்னுளாய்ந்து**
**.....புண்யாஹவாசநம்**
**பண்ணுவித்தேன்**

என்று எல்லீசு தம்முடைய குறளார்வத்தையும், உதவும் பண்பையும் தம் கல்வெட்டால் புலப்படுத்துவார்.

எல்லீசு தந்த மேற்கோள் பாடல்கள் பலவும் இன்று பாட வேறுபாடு ஆராய்ச்சிக்கும் துணை நிற்கக்கூடும். 'ஆன்முலையறுத்த அறனிலோர்க்கும்' என்னும் புறநானூற்றுப் பாடலில் 'குரவர்த் தப்பிய கொடுமை யோர்க்கும்' என்னும் பாடத்தைக் கொண்டுள்ளார். இன்று பல பதிப்புகளிலும் 'பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்' என்று எடுத்தாளப் பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

திருக்குறள் உரை விளக்கத்தில் கிறித்தவத் தோத்திரப் பாடல்கள் பலவும் விவிலிய நூல் கருத்துகளும் எடுத்தாளப்பட்டுள்ளன. 'எப்பொருள் எத்தன்மைத் தாயினும்' என்னும் குறள் விளக்கத்திற்குக் காட்டும் குறள் யாப்பில் அமைந்த பாடல் ஒன்றும் குறிப்பிடத்தக்கது.

**செய்யுற வேண்டிய வண்ணஞ் செயலியார்க்குஞ்**
**செய்கடன் மீதிது சேண்**

என்னும் மேற்கோள் பாடல் குறள் யாப்பிலேயே அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது. இச்செய்யுளின் ஆசிரியர் யார் என்பது தெரியவில்லை என்பார் டாக்டர் கா. மீனாட்சி சுந்தரம்.

இந்திய ஆட்சி அலுவலராக விளங்கிய எல்லீசின் தமிழ்ப்பணியும், திருக்குறட் பணியும் போற்றி நினைவுகூரத்தக்கன. எனவேதான், சென்னையில் அமைந்துள்ள 'எல்லீசு சாலை' அவர்தம் அரிய பணியை இன்றும் எடுத்துரைக்கின்றது.

**கல்வி யறிவிலாக் காரிரு ளிரியச்**
**செல்வச் சங்க செழுங்கதிர் விரித்தருள்**
**எல்லீசன் என்னும் இயற் பெயருடையோன்**

**இத்தேயத் திலியன் றபல சொற்களில்**
**முத்தமி ழாரிய முதற்பல கசடறக்**
**கற்றறிந் தவற்றுள் கலைபல உணர்ந்தேன்.**

என்று எல்லீசின் கல்லறைக் கல்வெட்டு கூறும்.

தமிழின் தொன்மை குறித்தும் வளம் குறித்தும் ஆராய அரிய தகவல்களைத் திரட்டியிருந்த அவர் நஞ்சுணவு உண்டு உரிய மருத்துவ வசதி இல்லாத நிலையில் இராமநாதபுரத்தில் மார்ச்சு திங்கள் 10ஆம் நாள் (1819) மறைந்தார். அவருடைய ஆய்வுத்தரவுகள் அண்மையில் கண்டறியப்பட்டுள்ளன. 'திராவிடச் சான்று – எல்லீசும் திராவிட மொழிகளும்' என்னும் நூல் அவரைப் பற்றிய புதிய தகவல்களைத் தருகின்றது.

திருவள்ளுவரை ஐரோப்பிய உலகிற்கு அறிமுகப்படுத்திய தமிழறிஞர் எல்லீசர் பழந்தமிழ் அறிஞர்களோடு உறவாடித் தமிழின் செம்மொழி ஆற்றலை உலகிற்குப் புலப்படுத்தியவர். அவர் திரட்டிய சுவடிகளும் குறிப்புகள் பலவும் இன்றிருந்தால் பல புதிய செய்திகள் தமிழாராய்ச்சிக்குக் கிடைத்திருக்கக் கூடும்.

நாட்டை ஆளவந்த அவரைத் தமிழும் குறளும் ஆட்கொண்டதால் தமிழும் திருவள்ளுவமும் புதிய வளத்தைப் பெற்றன.

**ஆல்பர்ட் சுவைட்சர்**

இந்திய ஆட்சியராக விளங்கிய எல்லீசைப்போலவே மருத்துவ மாமேதையாக விளங்கிய ஆல்பர்ட் சுவைட்சரும் திருக்குறளைப் போற்றி வாழ்ந்தவர்.

மனிதநேய மருத்துவராக விளங்கிய ஆல்பர்ட் சுவைட்சர். மருத்துவப் பணியின்மூலமும் சமூகத் தொண்டின்மூலமும் ஆப்பிரிக்க நீக்ரோ மக்களுக்கு அரும் பணியாற்றிய பெருமகனார். ஆல்பர்ட் சுவைட்சர் ஆப்பிரிக்காவில் உள்ள லேம்பர்னேயில் அரை நூற்றாண்டிற்குமேல் தொண்டாற்றிய பெருமைக்குரியவர். தமது தூய்மையான தொண்டினால் அமைதிக்குரிய நோபல் பரிசு (1953) பெற்றுச் சிறந்தவர் சுவைட்சர்.

இந்தியத் தத்துவ நூல்களை ஒப்பிட்டு ஆராய்ந்தவர். இந்தியச் சிந்தனை மரபின் வளர்ச்சியை நுட்பமாக ஆராய்ந்த அறிஞர் சுவைட்சர், தமிழர்தம் பண்பாட்டு அடையாளமாக விளங்கும் திருக்குறளின் சிறப்பை உணர்ந்து வியந்து போற்றிப் பாராட்டி மகிழ்ந்தார். 'பிற இந்திய மொழி நூல்கள் வாழ்வின் நிலையாமையை வலியுறுத்துகின்றன. ஆனால், திருக்குறளோ வாழ்க்கை வாழ்வதற்கே என்ற உடன்பாட்டினை உணர்த்தும் நூல்' என்பார்.

'புத்தநெறி, கீதை நெறியைவிட மாந்தரின் முயற்சி அறம் செய்வதையே குறிக்கோளாகக் கொண்டிருக்க வேண்டும்' என்னும் வள்ளுவரின் அன்புநெறி சிறந்தது என்பார்.

**நல்லாறு எனினும் கொளல்தீது மேலுலகம்**
**இல்லெனினும் ஈதலே நன்று**

என்னும் வள்ளுவக் கோட்பாட்டை வியந்து போற்றுகின்றார்.

கடந்த நூற்றாண்டில் அறிஞர் கிரால் திருக்குறளைச் செருமனி மொழியில் மொழிபெயர்த்தார். அம்மொழி பெயர்ப்பின்மூலம் திருக்குறளின் மேன்மையையும் மெய்யறிவுத் திறத்தையும் அறிந்து மகிழ்ந்தார் சுவைட்சர்.

திருக்குறட் சிந்தனைகளைப் பிற நூல்களோடு ஒப்பிட்ட அறிஞர் ஆல்பர்ட் சுவைட்சர் அதன் தனித்தன்மையைப் பலவாறு விளக்கியுள்ளார்.

**இருந்தோம்பி இல்வாழ்வது எல்லாம் விருந்தோம்பி**
**வேளாண்மை செய்தற் பொருட்டு**
**தாளாற்றித் தந்த பொருள்எல்லாம் தக்கார்க்கு**
**வேளாண்மை செய்தற் பொருட்டு**

என்னும் குறட் கருத்துகளின் சிந்தனை அவர்தம் உள்ளத்தைத் தொட்டது. 'உழைப்பும் அதன் பயனால் வரும் பொருளும் மானுடத்திற்கு நன்மை செய்வதற்கே' என்னும் உயரிய நிலை அவரை ஈர்த்தது.

'இல்லறத்தில் ஈடுபட்டுப் பொருளீட்டி வாழ்வதும் மற்றவர்க்கு நன்மை செய்யவே' என்னும் கருத்தினைக் கண்டு வியந்தார் சுவைட்சர். பிற இந்திய நூற்கருத்துகளோடு இதனை ஒப்பிட்டு எண்ணிப் பார்த்துப் பின்வருமாறு கூறுவார்: "பகவத் கீதையைப் போன்று வருண சாதி அடிப்படையில் மானுடக் கடமை வரையறுக்கப்படவில்லை! 'அனைவருக்கும் பயன்படும் வண்ணம் நன்மை புரிவது தான் மாந்தரின் கடமை' எனக் குறளில் வரையறுக்கப்பட்டுள்ளது. இத்தகைய குறட்பாக்கள் உலகு, உயிர், வாழ்வு ஆகியவற்றின் உடன்பாட்டுக் கொள்கையாக விளங்குவன".

'திருக்குறள் நெறிக்கும் மனுநெறிக்கும் என்ன வேறுபாடு..' எனத் தொடங்கி அவர் ஒப்பீட்டு முறையில் திருக்குறளின் தனிச் சிறப்பை விளக்கும்போது நாம் வியப்படைகின்றோம்.

'In the laws of manu under the dominance of the Brahmaanic spirit world and life affirmation is still tolerated alongside world and life negation.

In the kural world and life negation is only like distance cloud in the sky.'

எனக் குறிப்பது குறிப்பிடத்தக்கது.

"திருவள்ளுவர் உயர்ந்த நோக்கோடு வாழும் மனிதருக்கு உலக ஏற்பு மனத்துடன் நூல் எழுதியவர்; உலக வெறுப்பும் மறுப்பும் அவர் கூறாதது" என்பார் சுவைட்சர்.

1875ஆம் ஆண்டு (14, சனவரி) பிறந்த ஆல்பர்ட் சுவைட்சர் 1965ஆம் ஆண்டு (4, செப்டம்பர்) மறைந்தார்.

ஏறத்தாழ தொண்ணூறு ஆண்டுகள் வாழ்ந்தார். அவர் 1952ஆம் ஆண்டு நோபல் பரிசு பெற்றார். 'Reverence for life' என்னும் தத்துவத்திற்காகச் சிறப்பிக்கப் பெற்றார். மருத்துவ இயல், இசையியல், தத்துவ இயல், இறை இயல் ஆகிய துறைகளில் புலமை பெற்றிருந்த அவர் 'உலக அறக் கோட்பாட்டை' (Universal Ethical Philosophy) விரும்பியவர். திருக்குறளின் தாக்கம் அவருடைய அருள் வாழ்வில் பொதிந்திருப்பதை அவருடைய நூல் நன்கு காட்டும்.

'இந்தியச் சிந்தனை மரபும் அதன் வளர்ச்சியும்' (Indian thought and its development) என்னும் நூலினை 1935ஆம் ஆண்டில் செருமனி மொழியில் எழுதினார். திருக்குறளின் சிறப்பை அந்நூலில் புகழ்ந்தார். திருக்குறள் நெறிப்படி வாழ்ந்த பெருமகனார் ஆல்பர்ட் சுவைட்சரின் சிந்தனைகள் மானிட மேம்பாட்டைக் குறிக்கோளாகக் கொண்டவை.

வாழ்ந்த காலம் முழுவதும் பிறருக்கெனவே வாழ்ந்த பெருந்தகையாய்த் திகழ்ந்தவர். 'அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார் என்பும் உரியர் பிறருக்கு' என்னும் குறள் நெறிக்கு உரியவராக வாழ்ந்தவர். 'வாழுகின்ற அனைத்து உயிர்களிடத்தும் அன்பும் பரிவும் காட்டாதவர்கள் அமைதியைக் காண முடியாது' (Until he extends his circle of compassion to include all living things man will not himself find peace) என்னும் கோட்பாட்டைக் கொண்டவர்.

'பிறருக்கு எப்படித் தொண்டு செய்ய வேண்டும் என்பதை அறிந்தவர்கள்தாம் உண்மையான மகிழ்ச்சியை அடைவார்கள்' (I don't know what your destiny will be, but one thing I do know; the only ones among you will be really happy are those who have sought and found how to serve) என்பது சுவைட்சரின் உயர்ந்த சிந்தனையாகும். 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்னும் பொருள் பொதிந்த மொழி நம் சிந்தனைக்கு வரும்.

'நம்மை நாமே எண்ணிப் பார்க்கும் போதுதான் நம்முயிரின் விலையில்லா மதிப்பையும், வாழ்க்கையின் நோக்கத்தையும் சிந்திக்கத் தொடங்குவோம். இச்சிந்தனையின் விளைவு பிற உயிர்களை மதிக்கத் தூண்டும்; பிறரை உறவினராக நேசிக்கத் தோன்றும்; எல்லோரும் சமம், ஓர்நிலை எனும் எண்ணம் தோன்றும்.'

'மனிதன் மனித இனம் முழுமைக்கும் உரியவன்; ஒவ்வொருவரும் மற்றவனுக்குக் கடமைப் பட்டவன்'

'நாம் கொண்டுள்ள இயல்பான அன்பை வெளிப்படுத்தவும் தயங்குகின்றோம்; எந்த நேரத்திலும் பிறருக்கு உதவும் தன்மை வேண்டும்' என அறிஞர் ஆல்பர்ட் சுவைட்சர் மனித நேயத்தையே மாண்புமிக்க அறமாகக் கொண்டு வாழ்ந்தவர்.

இத்தகைய சீரிய சிந்தனைகளை இயல்பாகவே கொண்டிருந்த அறிஞர் ஆல்பர்ட் சுவைட்சருக்குத் திருக்குறளின் அறச் சிந்தனைகள் மேலும் உரமூட்டியது.

'உள்ளுவது எல்லாம் உயர்வுள்ளல், வறியார்க் கொன்றீவதே ஈகை, ஒத்ததறிவான் உயிர்வாழ்வான்; அன்பின் வழியது உயிர்நிலை, வையத்து வாழ்வாங்கு வாழ்தல் வானுறையும் தெய்வத்திற்கு நிகர்' என்னும் கருத்தமைந்த குறள்களின் சிந்தனை வளர்ச்சியைத் தம் நூலில் ஒப்பிட்டு மகிழ்ந்து குறளை வியந்து போற்றுகின்றார். எனவேதான் திருக்குறளை அறிஞர் ஆல்பர்ட் சுவைட்சர் இவ்வாறு போற்றுகின்றார்.

**'ஒழுக்கமே மனிதனுடைய உயர்ந்த குறிக்கோளாக இருக்க வேண்டும் என்பதை மிகுந்த உறுதிப்பாட்டோடு வள்ளுவர் அறிவிக்கிறார். ஒவ்வொருவரும் தமக்குத் தாமே செய்துகொள்ள வேண்டிய கடமை என்ன? மற்றவருக்குச் செய்ய வேண்டிய கடமை என்ன? என்பவற்றையெல்லாம் சிறந்த பண்பாட்டோடும் மதிநுட்பத்தோடும் வள்ளுவர் பேசுகிறார். உலக இலக்கியத்தில் இத்தகைய மாண்புமிக்க மெய்யறிவு வேறு எந்நூலிலும் இத்துணைச் சிறப்பாகப் பொலிவுறுவதில்லை'**

என்பது 'வள்ளுவ வாழ்க்கை' வாழ்ந்த அறிஞர் ஆல்பர்ட் சுவைட்சரின் கருத்தாகும் (Indian Thought and its development, Tr.by. Mrs. Charles E.B. Russel, 1936)

'வெள்ளித் தட்டில் வைத்த தங்கக்கனி' என்று மேலைநாட்டாரால் போற்றப் பெற்ற திருவள்ளுவத்தை எல்லீசும் சுவைட்சரும் போற்றியதைப் போலவே உலக அறிஞர் பலரும் போற்றித் திருக்குறளை மொழிபெயர்த்தனர். உலக மொழிகள் பலவற்றிலும் திருக்குறள் மொழிபெயர்க்கப் பெற்றுள்ளமை திருக்குறள் பொருட் சிறப்பையும் மொழிச் சிறப்பையும் காட்டும்.

# தமிழ் இலக்கியங்களில் கல்வியியல் சிந்தனைகள்

முனைவர் ச. முத்துக்குமரன்

## 1. முன்னுரை

தமிழ் இலக்கியங்கள் காலம் காலமாக அனைவரும் கல்வி கற்க வேண்டும் என்று அறிவுறுத்தி வந்துள்ளன. ஏன் வேண்டும் கல்வி? என்ற கேள்விக்கு அதிவீரராமபாண்டியர்

**எக்குடி பிறப்பினும் யாவரே ஆயினும்**
**அக்குடியில் கற்றோரை மேல்வருக என்பர்.**

(வெற்றி வேற்கை 38)

**அறிவுடை ஒருவனை அரசனும் விரும்பும்**

(வெற்றி வேற்கை 39))

என்று விடையளிக்கிறார்.

சங்க காலத்தில் இருந்தே கல்வி தேவை என்பதைத் தமிழ்ச் சான்றோர் முழுமையாக உணர்ந்திருந்தனர்.

**ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே**
**சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே**

(புறநானூறு 312, வரிகள் 1, 2)

என்று மக்களை வளர்த்தலும், கல்வி கற்கச் செய்வதும் பெற்றோர் கடமை என்பதைத் தெளிவுபடுத்தினார் சங்கப் புலவர் பொன்முடியார்.

ஒருவன் வறுமையால் வாடினாலும் கற்க வேண்டும். இன்று பள்ளிக்கு வரும் மாணவரில் சிலர் இடைநின்று விடுகின்றனர். இதற்குக் காரணம் வறுமை என்று சொல்லப்படுகிறது. அதை நம் முன்னோர் ஒப்புக் கொள்ளவில்லை. அதிவீரராமபாண்டியர்,

**கற்கை நன்றே கற்கை நன்றே**
**பிச்சை புகினும் கற்கை நன்றே**

(வெற்றிவேற்கை 35)

என்று அறிவுறுத்தினார்.

ஔவையார் 'கல்வியால் என்ன பயன்? என்று எண்ணிக் கற்காது வாழாதே, பின்னர்ப் படிக்கலாம் என்று



இருக்காதே, இளமையிலேயே கல்வி கற்க வேண்டும், நிறையப் படிக்க வேண்டும், கண் எப்படி ஒருவர்க்கு முக்கியமோ அதுபோல கல்வியும் அவசியம் தேவை' என்ற கருத்துகளைத் தமது பாடல்களில் விவரித்துள்ளார்.

**எண்ணெழுத்து இகழேல்** (ஆத்திசூடி 7)

**இளமையில் கல்** (ஆத்திசூடி 29)

**நூல் பல கல்** (ஆத்திசூடி 71)

**எண்ணும் எழுத்தும் கண்எனத் தகும்**

(கொன்றை வேந்தன் 7)

முழுமையாக நோக்கினால், கல்வியால் நிரம்பியவரை அனைவரும் போற்றுவர், அரசனும் விரும்பும். ஆகவே, கல்வி பெறச் செய்வது பெற்றோர் கடமை. வறுமையால் வாடினாலும் கற்க வேண்டியது மைந்தனின் கடமை. பின்னர்ப் படிக்கலாம் என்று இருக்காமல் இளமையிலேயே கற்க வேண்டும். மேன்மேலும் நூல்களைப் படிக்க வேண்டும் என்பன பெறப்படும்.

## 2. கற்றவரது சிறப்பை உணர்ந்து வாழ்

'பாம்பறியும் பாம்பின் கால்' என்றது பழமொழி நானூறு. கற்றவாது சிறப்பைக் கற்றவரே காமுறுவர்' என்றது மூதுரை. வள்ளுவர் இன்னும் ஒருபடி மேலே போய்,

**கற்றதனால் ஆய பயன்என்கொல் வாலறிவன்**
**நற்றாள் தொழாஅர் எனின்.** (குறள் 2)

கற்றதன் பயனே, தன்னை விட அதிகம் கற்றவரைப் போற்றுவது என்று சொன்னார்.

**கற்ற அறிவினரைக் காமுறுவர் மேன்மக்கள்**
**மற்றையர் தாம் என்றும் மதியாரே.**

(நன்னெறி 35: 1, 2)

நூல்களைக் கற்ற அறிவுடையோரை உயர்ந்தோர் விரும்புவர். கீழோர் எப்போதும் மதிக்க மாட்டார் என்பார் சிவப்பிரகாசர்.

ஔவையாரும்,

**சான்றோர் இனத்து இரு**
**பெரியாரைத் துணை கொள்**
**மேன்மக்கள் சொற் கேள்** (ஆத்திசூடி 45, 83, 95)

என்று சொல்லிப் போந்தார்.

கற்றவரை இனம் காணும் அளவுக்காவது அறிவு வேண்டும். அந்த அறிவு உன்னை, கற்றவரை அணுகிப் போற்றி வாழ உதவும். அதன் வழி நீ உனது அறிவைப் பெருக்கிக் கொண்டு உனது வாழ்க்கையை மேம்படுத்திக் கொள்ள முடியும் என்பதே தமிழ் இலக்கியங்களின் முடிபு.

### 3. கல்வியின் சிறப்பு

தொன்றுதொட்டுத் தமிழ் இலக்கியங்கள் கல்வியின் சிறப்பைப் பலவாறு விளக்கியுள்ளன. எடுத்துக்காட்டாக,

**கற்றறி வாளர் கருதிய காலத்துக்**
**கற்றறி வாளர் கருத்திலோர் கண்ணுண்டு**
**கற்றறி வாளர் கருதி உரைசெயும்**
**கற்றறி காட்டக் கயலுள ஆக்குமே.**

(திருமந்திரம் 291)

என்பது திருமூலர் வாக்கு. கல்வி கற்ற அறிவுள்ளவர் கல்வி பெற்ற அறிவினையுடையவர் உள்ளத்தில் சிறப்பாக ஒரு கண் இருப்பதை உணர்வர். அக் கல்வி கற்றவர் ஆராய்ந்து சொல்பவை பாலை நிலத்திலே கயல்மீனை பிறழச் செய்தாற்போல நன்மை உருவாக்கும். அதாவது, கல்வியால் நிறைந்தவர் வாழும் நாடு வளமில்லாது இருப்பினும், அதை வளமாக்கும் திறமை அவர்களுக்கு உண்டு. கல்வி திறமைகளை வளர்க்கும் அல்லது திறமைகளை வளர்ப்பதே கல்வியின் சிறப்பு.

### 4. கல்வியினால் வரும் பெருமை, பெருமிதம்

**கல்வி தறுகண் புகழ்மை கொடைஎனச்**
**சொல்லப்பட்ட பெருமிதம் நான்கே.**

(தொல்காப்பியம், மெய்ப்பாட்டியல் 9)

கல்வி, அஞ்சாமை, புகழ்மை, கொடைத் தன்மை ஆகிய நான்கும் ஒருவனுக்குப் பெருமிதம் தரும் என்றார் தொல்காப்பியர்.

ஔவையார் மன்னனைவிடக் கல்வி அறிவு பெற்றவனே சிறப்புடையவன் என்றார்.

**மன்னனும் மாசறக் கற்றோனும் சீர்தூக்கின்**
**மன்னனில் கற்றோன் சிறப்புடையன் -**
**மன்னற்குத்**
**தன்தேசம் அல்லால் சிறப்பில்லை கற்றோர்க்குச்**
**சென்றஇடம் எல்லாம் சிறப்பு.** (மூதுரை 26)

ஒருவனுக்குக் கல்வியானது அறம், பொருள், இன்பம், வீடும் அளிக்கும்; புகழையும் தரும்; துன்பம் வந்தால் அத்துன்பத்தினைப் போக்க உதவும். ஆகவே, கல்வியே ஒருவர்க்குச் சிறந்த துணை என்றார் குமரகுருபரர்.

**அறம்பொருள் இன்பம் வீடும் பயக்கும்**
**புறங்கடை நல்லிசையும் நாட்டும் - உறும் கவலொன்று**
**உற்றுழியும் கைகொடுக்கும் கல்வியின் ஊங்கில்லை**
**சிற்றுயிர்க்கு உற்ற துணை.**

(நீதி நெறி விளக்கம் 2)

மேலும் அவர், கல்வி தொடக்கத்தில் துன்பம் தருவது போல அமைந்தாலும் பின்னர் இன்பம் தரும் என்பார்.

**தொடங்குங்கால் துன்பமாய் இன்பம் பயக்கும்**
**மடம் கொன்று அறிவு அகற்றும் கல்வி.**

(நீதிநெறி விளக்கம் 3, வரிகள் 1, 2)

அதாவது கல்வி பெருமை தரும், பெருமிதம் அளிக்கும். எல்லா இன்பத்தையும் சேர்க்கும்; சிறந்த துணையாகவும் அமையும்.

### 5. கல்வியினால் வரும் பயன்கள்

**கற்றாங்கு அறிந்துஅடங்கி தீதொரீஇ நன்றாற்றிப்**
**பெற்றது கொண்டு மனம்திருந்திப் - பற்றுவதே**
**பற்றுவதே பற்றிப் பணியற நின்று ஒன்று உணர்ந்து**
**நிற்பாரே நீள்நெறிச்சென் றார்.**

(நீதிநெறி விளக்கம் 101)

'நூல்களைக் கற்றவாறு உணர்ந்து, அடங்கி, தீயவற்றை விலக்கி, நல்லவற்றைச் செய்து கிடைத்ததைக் கொண்டு மனத்தை ஒருமைப்படுத்தி வீட்டு நெறியையும் அதற்குரிய முறையையும் உணர்ந்து மனத்துள் கொண்டு, செயல்களிலும் அடங்கி நின்று இறைவனை அறிந்து நிற்பவரே வீட்டு வழியில் செல்பவர்' என்பது குமரகுருபரர் வாக்கு. இதன்மூலம் கல்வியின் பயன் அடக்கம், தீயவற்றை விலக்கல், நல்லவற்றைச் செய்தல், மனத்தை நேர்வழியில் செலுத்தல் போன்ற நற்பண்புகளைப் பெறுதல், அதன் வழி நல்வாழ்வு வாழ்தல் என்பது பெறப்பட்டது.

**கல்விக்கழகு கசடற மொழிதல்** (வெற்றி வேற்கை 2)

**அறிஞர்க்கு அழகு கற்று உணர்ந்து அடங்கல்**

(வெற்றி வேற்கை 14)

என்பன அதிவீரராமபாண்டியர் கூற்றுகள். அதாவது கல்வி அடக்கத்தைத் தருவதுடன் மற்றவர் ஐயங்களைத் தீர்க்கும் ஆற்றலையும் தரும்.

கல்வி நல்லறிவும் நல்லொழுக்கமும் தரும் என்பதைப் பின்வருமாறு எதிர்மறையாகக் கூறுவார் ஔவையார்.

**ஓதாதார்க்கு இல்லை உணர்வொடும் ஒழுக்கம்**

(கொன்றைவேந்தன் 91)

மூதுரையில் ஔவையார், தான் கற்ற நூல் அளவே ஆகுமாம் நுண்ணறிவு என்று சொல்லி, கல்வி அறிவைத் தரும் என்பதை உணர்த்துகிறார். (மூதுரை 7. வரி 2)

சான்றோர் கூடிய சபையில் நூலைப் படித்து விளக்கம் சொல்லவும், விவாதிக்கவும், அவர் நினைப்பதைக் குறிப்பால் உணரவும் திறமை பெறுவது கல்வியின் பயன்கள் என்பதைக் கீழ்வரும் பாடல் நமக்கு உணர்த்துகிறது.

**கவையாகிக் கொம்பாகிக் காட்டுஅகத்தே நிற்கும்**
**அவையல்ல நல்ல மரங்கள் - சபைநடுவே**
**நீட்டோலை வாசியா நின்றான் குறிப்பறிய**
**மாட்டா தவன்நன் மரம்.** (மூதுரை 13)

உயர்கல்வி கற்றவர்க்கு அழகு பொதுப் பிரச்சினைகளில் ஈடுபாடு கொண்டு பிறர் துன்பத்தைப் போக்குவது ஆகும்.

**பேரறிஞர் தாக்கும் பிறர்துயரம் தாங்கியே**
**வீரமொடு காக்க விரைகுவார் - நேரிழாய்**
**மெய்சென்று தாக்கும் வியன்கோல் அடிதன்மேல்**
**கைசென்று தாங்கும் கடிது.** (நன்னெறி 31)

உடலில் அடி விழுந்தால் எவ்வாறு இயற்கையாகக் கை விரைந்து சென்று தன்மீது ஏற்றுக் கொள்ளுமோ அவ்வாறே கற்றோர் மற்றவர் துன்பத்தைக் கண்டவிடத்துத் தாம் இயல்பாக விரைந்து ஏற்றுக் கொள்வர்.

அதாவது கல்வியினால் நல்லொழுக்கம் நற்பண்புகள் போன்ற நல்லனவற்றை அறியலாம்; திறமைகள் பலவும் பெறலாம். பொதுப் பிரச்சினைகளில் ஈடுபாடு கொண்டு நல்ல குடிமகனாக வாழலாம்.

## 6. கல்வி அற்றம் காக்கும் கருவி

**அறிவுஅற்றம் காக்கும் கருவி செறுவார்க்கும்**
**உள்ளழிக்கல் ஆகா அரண்.** (குறள் 421)

அறிவு அழிவு வாராது காக்கும் கருவி, மேலும் பகைவராலும் அழிக்க முடியாதது கல்வி. வறுமை வாராது காக்கும், வேறு எவராலும் அழிக்க முடியாது என்பதால் எக்காலத்திலும் தனது வாழ்க்கைக்குத் தேவையான பொருளைச் செய்யத் துணை நிற்கும்.

**துணையதுவாய் வரும் தூய நற் சோதி**
**துணையதுவாய் வரும் தூய நற் சொல்லாம்**
**துணையதுவாய் வரும் தூய நற் கந்தம்**
**துணையதுவாய் வரும் தூய நற் கல்வியே.**

(திருமந்திரம் 294)

ஒருவனுக்கு என்றும் துணையாக வருவது விளக்கு. அதாவது இருட்டில் வழி தெரியச் செய்வது சோதி (சைவர்கள் சோதி வடிவாய் நின்ற இறைவன் என்று கூறுவர்). அதுபோல, நல்லாசிரியரால் கற்பிக்கப்படும் நல்ல உறுதியான சொல் என்றும் ஒருவனுக்குத் துணையாகும். மலரோடு ஒட்டி வரும் மணம் போல நல்ல ஆசிரியரது வாய்ச் சொல்லும் தூய நல்ல கல்வியுடன் துணையாக வரும். இந்தக் கருத்தை உலகநாதர்,

**கற்றவரை ஒரு நாளும் பழிக்க வேண்டாம்**

(உலகநீதி 4, வரி 2)

என்றார். ஏன் எனில் கற்றவரிடம் இருந்து நல்லனவற்றைத் தெரிந்து கொள்ளலாம்.

அதாவது தனி மனிதனையும், நாட்டையும் கல்வி அழிவு வாராது காக்கும்.

## 7. கல்வி என்பது யாது?

அவரவர்க்குத் தேவையானவற்றைக் கற்பதே கல்வி.

**கற்க கசடு அற** (குறள் 391, வரி 1)

என்றார் வள்ளுவர். தனது ஐயங்கள் நீங்குமாறு கற்க வேண்டும். அதாவது கற்க வேண்டியவற்றைக் கற்பதே கல்வி. இன்று அனைவருக்கும் கல்வி அளிக்க விரும்பும் நாம், நாம் விரும்பியதைக் கற்பிக்காது வள்ளுவர் அறிவுறுத்தியவாறு அவரவர்க்குத் தேவையானவற்றைக் கற்பிப்பதே ஏற்புடைத்து.

திருமூலரும்,

**குறிப்பறிந்தேன் உடலோடு உயிர் கூடிச்**
**செறிப்பறிந்தேன்** (திருமந்திரம் 289 வரிகள் 1, 2)

என்பது ஒப்பு நோக்கத்தக்கது. மாசில்லாத உயர் கல்வியை யான் கற்றேன், ஆதலால் உயிர் உடலோடு கூடி நின்று அறிய வேண்டியவற்றை அறிந்தேன் என்கிறார் திருமூலர்.

கம்பரும் அயோத்தியை வருணிக்கும்போது,

**கல்லாது நிற்பார் பிறர் இன்மையின்,**
**கல்வி முற்ற வல்லாரும் இல்லை,**
**அவை வல்லர் அல்லாரும் இல்லை**

(பால காண்டம், நகரப் படலம், பாடல் 74 வரிகள் 1, 2)

என்பார். அங்கு கல்லாதவர் எவரும் இலர். எனவே அவரைவிட இவர் கல்வியால் சிறந்தவர் என்று கூறும் நிலையும் அங்கு இல்லை. அதாவது எல்லோருமே சமமான கல்வி அறிவு பெற்று இருந்தனர்! அனைவரும் அவரவர்க்குத் தேவையானவற்றை முழுமையாகக் கற்றறிந்திருந்தனர் என்பதே இதன் கருத்து.

## 8. கற்க வேண்டியதைக் கற்க வேண்டும் (பாடத் திட்டம்)

கற்க வேண்டியதைக் கற்காது வேறு எவற்றையாவது கற்றால் என்னவாகும்?

**நூலொன்று பற்றி நுனியேற மாட்டாதார்**
**பாலொன்று பற்றினால் பண்பின் பயன் கெடும்**
**கோலொன்று பற்றினாற் கூடா பறவைகள்**
**மாலொன்று பற்றி மயங்குகின்றார்களே.**

(திருமந்திரம் 295)

சரியான கயிற்றைப் பற்றியவர் மதிலின் உச்சியை அடைந்து கோட்டையைப் பிடிப்பார். அப்படிச் செய்ய மாட்டாதவர் எதையாவது பற்றி இடையிலே நிற்பார், பயன் ஏதும் பெறார். அதேபோல நுண்ணிய கற்க வேண்டிய நூலைக் கற்றவர் மேன்மை அடைவார். அதைவிடுத்து, தேவையில்லாதவற்றைக் கற்றவர் பெற வேண்டிய பயன்களைப் பெறமாட்டார். மேலும், உணவுப் பொருளை வைத்திருப்பவர் கையில் கோல் ஒன்றும் வைத்திருந்தால் பறவைகள் அவ்வுணவுப் பொருளைக் கவர மாட்டா. அதுபோல நிறைவாகக் கல்வியைப் பெற்றவரைக் கள்வரும் மற்ற தீயவரும் அணுக முடியாது. இவற்றை அறியாதவர் மயங்கி நிற்பார். அவர்கள் இரங்கத் தக்கவர்கள்.

நமது பள்ளிப் பாடத்திட்டத்தை வகுப்போரின் கடமை, யார் யார் எதை எதைக் கற்க வேண்டுமோ அவரவர் அதை அதைக் கற்கச் செய்வதே ஆகும் என்பது திருமூலர் வாக்கு.

## 9. கற்றவர் நெஞ்சத்தில்தான் கடவுளும் இருப்பார்

**கடலுடையான் மலையான் ஐந்துபூதத்து**
**உடலுடையான் பலஊழி தொறூழி**
**அடல் விடையேறும் அமரர்கள் நாதன்**
**இடமுடையார் நெஞ்சத்தில் இருந்தானே.**

(திருமந்திரம் 299)

இறைவன் ஊழிகள் பலவற்றிலும் கடல், மலை இவற்றுடன் ஐம்பூதங்களின் உருவங்களில் கலந்து இருப்பினும், கல்வி பெற்றோர் நெஞ்சத்தில்தான் வாழ்கிறான்.

மெய்யறிவு பெறுவது என்பதில் இறைவனைக் கண்டு கொள்ளுதலும் அடங்கும் என்பதே இதன் கருத்து.

## 10. கேள்வி

கல்வியைப் போலக் கேள்வியும் தேவை. ஏன் எனில் ஒழுக்கமுடைய சான்றோரின் வாய்ச்சொல் சேற்று நிலத்தில் ஊன்றுகோல் உதவுவது போல, வாழ்க்கையில் சறுக்கல் நேரும்போது உதவும் (குறள் 415). நல்லனவற்றைக் கேட்க வேண்டும். கேட்டது சிறிதளவே ஆயினும் கேட்ட அளவுக்குப் பயனும் பெருமையும் தரும். (குறள் 416) ஆகவே,

**கற்றிலன் ஆயினும் கேட்க அஃதொருவற்கு**
**ஒற்கத்தின் ஊற்றாம் துணை.** (குறள் 414)

நூல்களைக் கற்கும் வாய்ப்பு இல்லாதவன் கற்று அறிந்தவரிடத்தில் கேட்டறிய வேண்டும். அஃது அவனுக்கு வாழ்க்கையில் தளர்ச்சி வந்தபோது ஊன்றுகோல் போல உதவும்.

திருமூலரும்,

**உறுதுணையாவதும் உயிரும் உடம்பும்**
**உறுதுணையாவது உலகுறு கேள்வி**

(திருமந்திரம் 307, வரிகள் 1, 2)

என்றார். உடம்பும் உயிரும் ஒன்றுக்கொன்று உறுதுணையானவை. அவை அவ்வாறு நிற்றற்கு உறுதுணையாவது கேள்வி.

அதாவது உயிரும் உடலும் ஒன்றி நிற்கப் பொருள் தேட வேண்டும். அதற்குக் கேள்வி ஞானம் தேவை என்பது பெறப்படும்.

## 11. கல்லாமை ஒரு குற்றம், இக் குற்றத்தைக் கடிதல் அரசின் கடமை

கல்லாமை எவ்வாறு நோக்கினாலும் குணமாகாது; கடியப்பட வேண்டிய குற்றமாகும்.

**உளர்என்னும் மாத்திரையர் அல்லார் பயவாக்**
**களர்அனையர் கல்லா தவர்.** (குறள் 406)

கல்லாதவர் உயிரோடு இருக்கின்றார் என்று சொல்லலாமே தவிர அவர்கள் ஒன்றுமே விளையாத களர் நிலத்துக்கு ஒப்பானவர். திருமூலர் கல்லாதவரைப் பற்றிக் கூறும்போது அவர்கள் மெய் நெறியைப் பலவாகக் கண்டு தடுமாற்றம் எய்தி ஒன்றிலும் நில்லாது தாழ்ந்து போவார்கள் என்று கூறுகிறார்.

**வல்லார்கள் என்றும் வழி ஒன்றி வாழ்கின்றார்**
**அல்லாதவர்கள் அறிவு பல என்பார்.**

(திருமந்திரம் 311, வரிகள் 1, 2)

மேலும் அவர், கல்லாதவரைப் புல்லறிவாளர் என்பார். அவர்களுக்கு நிலைபெற்ற பொருளுக்கும் நிலைபெறாத பொருளுக்கும் வேறுபாடு தெரியாது. நிலையில்லா தவற்றை நிலைபெற்றவை என்று தவறாகக் கருதுவர் (திருமந்திரம் 311, வரிகள் 1, 2). இதற்கெதிராக, கல்வியில் வல்லவர் அச்சம் இன்றி வாழ்வர் என்பார் (திருமந்திரம் 312). கல்லாதவர் கற்றவரை அறிவில்லாதவர் என்று தவறாகக் கருதி இகழ்வார். இக் கருத்தை வள்ளுவர்,

**சிறியார் உணர்ச்சியுள் இல்லை பெரியாரைப்**
**பேணிக்கொள் வேம்என்னும் நோக்கு.** (குறள் 976)

பெரியோரின் சிறப்பை உணராத கல்வி அறிவில்லாத சிறியோர் அவர்களைப் போற்றுவோம் என்ற நோக்கம்

இல்லாது இருப்பர் என்பார். கல்வி இல்லாதவரைக் கண்ணில்லாதவர் என்றே நமது இலக்கியங்கள் சொல்லும்.

**கண்உடையர் என்பர் கற்றோர், முகத்துஇரண்டு**
**புண்உடையர் கல்லா தவர்.** (குறள் 393)

என்றார் திருவள்ளுவர்.

**விண்ணினின் உள்ளே விளைந்த விளங்கனி**
**கண்ணினின் உள்ளே கலந்தங்கு இருந்தது**
**மண்ணினின் உள்ளே மதித்து மதித்து நின்று**
**எண்ணி எழுதி இளைத்து விட்டாரே.**

(திருமந்திரம் 315)

நன்கு கனிந்த இனிக்கக்கூடிய விளாம்பழம் உயர்ந்த கிளையில் இருக்கும். கண் உடையவர் அதைக் கண்டு பறித்து உண்டு களிப்பர். கண் இல்லாதவர் நல்ல கனி எது என அறியப்படாதவர். ஆகவே கீழே கிடக்கும் கருக்காய், வெதும்பிய பிஞ்சு முதலியவற்றைக் கனிகள் என்று எண்ணி உண்டு துன்புறுவார். அதாவது அறியாமையின் காரணமாக கல்லாதவர்களுக்கு நல்லதற்கும் தீயதற்கும் வேறுபாடு தெரியாது. மேலும், கல்லாதவரை மூடர் என்றே வருணிக்கிறார் திருமூலர்.

**கல்லாத மூடரைக் காணவும் ஆகாது**
**கல்லாத மூடர் சொல் கேட்கக் கடன்அன்று**
**கல்லாத மூடர்க்குக் கல்லாதார் நல்லராம்**
**கல்லாத மூடர் கருத்தறி யாரே.**

(திருமந்திரம் 317)

கல்லாதவர் மூடர். அவர் உறுதியானவை எவையும் அறியார். ஆகவே அவர்களைக் காணுதல், அவர் சொல் கேட்டல் கூடாது. அவருக்கு அவர் போன்ற கல்லாதவரே தக்கவராகத் தோன்றுவார். கற்றறிந்த மேலோர் தக்கவராகத் தோன்றார்.

சுருங்கச் சொல்வது என்றால், எவ்வாறு நோக்கினாலும் கல்லாமை குற்றம். குற்றம் அழிவைத் தரும் என்பதால் தக்கவரிடம் சென்று கல்வியும் கேள்வியும் நிரம்பி இக் குற்றத்திலிருந்து தன்னைக் காத்துக் கொள்ள வேண்டும். குற்றம் நிகழாது காப்பது அரசின் கடமை என்பதால், அனைவரும் கல்வி கற்கச் செய்வது அரசின் கடமை என்பது பெறப்படும்.

**12. ஆசிரியர்**

**எழுத்தறிவித்தவன் இறைவன் ஆகும்.**

(வெற்றி வேற்கை 11)

ஆசிரியரைக் கண் கண்ட தெய்வமாகப் போற்ற வேண்டும் என்பது இதன் பொருள். அறியாமை என்ற இருளைப் போக்கிக் கண்ணைத் திறந்த ஆசிரியரைத் தெய்வமாகப் போற்ற வேண்டும் என்பதில் என்ன ஐயம் ?

**உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்**
**பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே.**

(புறநானூறு 183, வரிகள் 1, 2)

பாண்டியன் நெடுஞ்செழியன் ஆசிரியருக்குத் துன்பம் வந்தால் உதவி, மிகுந்த பொருளையும் தந்து அவரை வழிபடுவதை வெறுக்காது கற்பது நன்று என்றார். அதாவது ஆசிரியரைத் தன்னைவிட மேலான நிலையில் வைத்துப் போற்ற வேண்டும் என்பது பெறப்படுகிறது. மேலும், பொருள் கொடுத்துக் கற்க வேண்டும் என்பதை வலியுறுத்துகிறார். இதே கருத்தை உலகநாதரும் தன் பாடல்களில் வலியுறுத்துகிறார்.

**வாத்தியார் கூலியை வைத்திருக்க வேண்டாம்**

(உலக நீதி 6, வரி 3)

**அஞ்சுபேர் கூலியைக் கைக் கொள்ள வேண்டாம்**
**அது ஏது இங்கு என்னின் நீ சொல்லக் கேளாய்**
**தஞ்சமுடன் வண்ணான் நாவிதன் தன் கூலி**
**சகலகலை ஓதுவித்த வாத்தியார் கூலி**

(உலக நீதி 11, வரிகள் 1, 2)

ஆசிரியரின் இலக்கணத்தை பவணந்தி முனிவர்,

**குலம் அருள் தெய்வம் கொள்கை மேன்மை**
**கலைபயில் தெளிவு கட்டுரை வன்மை**
**நிலம்மலை நிறைகோல் மலர்நிகர் மாட்சியும்**
**உலகியல் அறிவோடு உயர்குணம் இனையவும்**
**அமைபவன் நூல்உரை ஆசிரி யன்னே.**

(நன்னூல் 26)

என்று உரைத்தார்.

இப்பாடலில் நிலம், மலை, நிறைகோல், மலர் ஆகியவை ஆசிரியருக்கு உவமையாகச் சொல்லப்பட்டதற்கு அவரே தரும் விளக்கம் பின்வருமாறு: பிறர் அறியாத உருவப் பெருமையும், எதற்கும் கலங்காத வலிமையும், தன்னைத் தோண்டுதல் முதலிய குற்றங்கள் செய்தாலும் பொறுக்கும் பொறுமையும், பருவத்தில் உழவர் செய்யும் முயற்சிக்கு ஏற்ப பயன் தருவதாலும் நிலம் ஆசிரியருக்கு உவமையாகச் சொல்லப்பட்டது. அளவிட முடியாத கல்வியும், பலவகை நூற்பொருளும், எவராலும் அசைக்க முடியாத கல்வி அறிவும், நெடும் தொலைவில் உள்ளோரும் அறியக்கூடிய உயர்வும், பொருள் வரவு குறைந்தாலும் தன்னைச் சார்ந்த மாணவர்க்குக் கல்வி அளிக்கும் கொடையும் ஆசிரியனது குணங்கள் என்பதால் மலை அவனுக்கு உவமை ஆயிற்று. ஐயங்கள் தீருமாறு பொருள் உணர்த்தலும், மாறுபட்ட இருவர் இடையே நடுவாக நிற்பதும் ஆசிரியர் குணங்கள் என்பதால் நிறைகோல் அவனுக்கு உவமை ஆகியது. நன்னிகழ்ச்சிக்கு உரியவராகவும், செயல்கள் சிறக்க

இன்றியமையாதவராகி யாவரும் தன்னை மேலானவராக ஏற்றுக் கொள்ளத்தக்க குணமுடையவராகவும் முகம் மலர்ச்சியுடன் காணப்படுவதாலும் மலர் ஆசிரியருக்கு உவமை ஆயிற்று.

ஆசிரியர் ஆகாதவர் இலக்கணமும் பவணந்தி முனிவர் கூறியுள்ளார். அதை நன்னூல் பொதுப் பாயிரத்தில் (31) காணலாம்.

### 13. கற்பிப்பது, கற்பது

**ஈதல் இயல்பு இயம்பும் காலைக்**
**காலமும் இடனும், வாலிதின் நோக்கிச்**
**சிறந்துழி இருந்து தன் தெய்வம் வாழ்த்தி**
**உரைக்கப்படும் பொருள் உள்ளத்து அமைத்து**
**விரையான் வெகுளான் விரும்பி முகம் மலர்ந்து**
**கொள்வான் கொள்வகை அறிந்து அவன் உளம் கொளக்**
**கோட்டமில் மனத்தின் நூல் கொடுத்தல் என்ப**

(நன்னூல் 36)

என்று பவணந்தி முனிவர் பாடம் சொல்லும் முறையைக் கூறுவார். கற்பிக்க வேண்டியதை மனத்தில் அமைத்து வேகமாகச் செல்லாது, வெகுளாது, ஆவலுடன் முகம் மலர்ந்து மாணவனுக்கு விளங்கும் வகையில் அவன் உளம் கொளச் சொல்லுவது என்பது நோக்கத்தக்கது. கற்பிப்பதற்கு சிறந்த முறை ஒன்றல்ல பல என்பதும், மாணவரைப் பொறுத்தும், பாடத்தைப் பொறுத்தும் கற்பிக்கும் முறை மாறும் என்பதும் இங்கு சொல்லப் படுகிறது.

ஆசிரியர் சொல்வதைக் கேட்கும் முறைபற்றி மிகத் தெளிவாக முனிவர் சொல்லியுள்ளார். அதில் அவர் ஆசிரியர் குறிப்பை அறிந்து அவர் சொன்னவாறு படித்து, நல்ல பசியுடையவர் பருகுவதுபோலப் பாடம் கேட்டலில் ஆவலுடன் சித்திரம் போல அசைவற்று இருந்து, காது வாயாகவும், மனம் கொள்ளும் இடமாகவும் மீண்டும் மீண்டும் கேட்டு உள்ளத்து அமைத்து, ஆசிரியர் போகலாம் என்றபோது போகவேண்டும் என்பார்.

மேலும், அவர் மூன்று முறை கேட்ட பின்னரே முறை அறிந்து மற்றவர்க்கு உரைக்க முடியும் என்றும், ஆசிரியரிடமிருந்து கற்பது கால் பங்கும், மற்ற மாணவருடன் உரையாடுவதால் கால் பங்கும், அடுத்தவருக்கு விரித்து உரைப்பதால் அரைப் பங்கும் ஆக நூலில் புலமை முழுமை அடையும் என்கிறார்.

தமிழ் மரபுப்படி தென்திசைக் கடவுள் (தட்சிணா மூர்த்தி) தான் ஆசிரியருக்கெல்லாம் ஆசிரியர். அவரைப் பாடிய பரஞ்சோதி முனிவர்

**கல்லாலின் புடையமர்ந்து நான்மறை ஆறு அங்க**
**முதல் கற்ற கேள்வி**
**வல்லார்கள் நால்வருக்கும் வாக்கு இறந்த**
**பூரணமாய் மறைக்கு அப்பாலாய்**
**எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனை**
**இருந்தபடி இருந்து காட்டி**
**சொல்லாமல் சொன்னவரை நினையாமல்**
**நினைந்து பவத்தொடக்கை வெல்வாம்**

என்பார். நல்லாசிரியர் வாய்திறந்து பேச வேண்டியதில்லை. அவர் எதைக் கற்பிக்க எண்ணுகிறாரோ அதுவாகவே மாறி இருந்து காட்டுவதால் அவர் அருகில் அமர்ந்தாலே அறிவைப் பெறலாம் என்பது பரஞ்சோதி முனிவர் வாக்கு. கற்பிக்கும் முறைகளிலே இது ஒன்று என்பதை நாம் அறிய வேண்டும்.

### 14. மாணவர்

பவணந்தி முனிவர் மாணவர்களை மூன்று வகையாகப் பிரித்து அவர்களைப் பின்வருமாறு வருணிக்கிறார்:

தலை மாணாக்கர் அன்னத்தையும் பசுவையும் போன்றவர். அன்னம் பாலையும் நீரையும் பிரித்துப் பாலை மட்டும் உண்ணும். பசு நிறைந்த புல்லைக் கண்டால் வயிறு நிறைய உண்டுப் பின்னர் ஓரிடத்தில் நின்று அசைபோடும். அவற்றைப் போல தலைசிறந்த மாணாக்கர் குணத்தை மட்டுமே கொள்வார். ஆசிரியரிடமிருந்து நிறைவாகக் கேட்டுக் கொண்டு பின்னர் நினைவில் கொண்டு சிந்தனை செய்வார்.

இடை மாணாக்கர் மண்ணையும் கிளியையும் போன்றவர். மண் பயிர் செய்பவர் முயற்சிக்கு ஏற்பப் பலன் தரும். கிளி தனக்குக் கற்பித்ததைத் திரும்பச் சொல்லும். அதற்கு மேல் வேறு ஒன்றையும் அது அறியாது. ஆசிரியர் கற்பிக்க எடுத்துக் கொண்ட முயற்சி அளவுக்கு ஏற்ப அறிவு பெற்று, அவர் கற்பித்தவற்றை மட்டுமே இடை மாணாக்கர் அறிவார்.

கடை மாணாக்கர் ஓட்டைக் குடம் எவ்வாறு பெய்த நீரை ஒழுகவிடுமோ அவ்வாறு கற்பித்தவற்றை நினைவில் கொள்ள மாட்டார், மறந்து விடுவார். ஆடு ஒரு செடியில் தழை நிறையவே இருந்தாலும், செடிதோறும் போய் சிறிது சிறிது மேயும். அதுபோல் ஓர் ஆசிரியரிடம் மிகுந்த கல்வி இருந்தாலும், அவரிடமே அனைத்தையும் கற்றுக் கொள்ளாது பலரிடத்தும் சென்று பாடம் கேட்பார். எருமை குளத்து நீரைக் கலக்கிக் குடிக்கும். அதுபோல, கடை மாணாக்கர் ஆசிரியரை வருத்திப் பாடம் கேட்பார். மேலும் பன்னாடை தேனைக் கீழே விட்டுவிட்டு கசடை மட்டுமே பற்றிக்கொள்ளும். அதுபோல கடை மாணாக்கர் ஆசிரியர் கூறியவற்றில் நல்லனவற்றை விட்டுவிடுவார், தீயவை இருப்பின் பற்றிக் கொள்வார்.

**அன்னம் ஆவே மண்ணொடு கிளியே**
**இல்லிக் குடம் ஆடு எருமை நெய்யரி**
**அன்னர் தலை இடை கடை மாணாக்கர்.**

(நன்னூல் 38)

மேலும், கள்ளுண்டு களிப்பவனும், சோம்பேறியும், செருக்குடையவனும், காமம் உடையவனும், திருடனும், நோயாளியும், அறிவில்லாதவனும், மாறுபாடு உடையவனும், மிகுந்த உறக்கம் உடையவனும், அறிவு நுட்பம் இல்லாதவனும், அஞ்சத் தக்கவற்றைக் கண்டு அஞ்சாதவனும், பாவியும், பொய்யனும், இப்படிப்பட்ட குற்றத்தை உடையவர்கள் நன் மாணாக்கர் ஆக மாட்டார் என்பது நன்னூலாசிரியர் கருத்து.

குமரகுருபரர் வீண் பொழுது போக்கும், விளையாட்டுத் தன்மை மிகுதியாகக் கொண்டவர் கல்வி பெறத் தகுதி அற்றவர் என்பார்.

**போக்கு அறு கல்வி புலம் மிக்கார் பால் அன்றி**
**மீக் கொள் நகையினார் வாய்ச் சேரா.**

(நீதிநெறி விளக்கம் 24, வரிகள் 1, 2)

இவற்றால் தலை இடை கடை மாணாக்கர் இயல்பும் மாணவர் ஆகாதவர் இயல்பும் நாம் அறியலாம்.

### 15. கற்ற பின்

கற்ற பின் நிற்க அதற்குத் தக (குறள் 391) என்றார் வள்ளுவர். குமரகுருபரரும் பின்வருமாறு கூறுவார்:

**கற்றுப் பிறர்க்கு உரைத்துத்**
**தாம்நில்லார் வாய்ப்படூஉம் வெற்றுரைக்கு உண்டோ**
**வலியுடைமை - சொற்ற நீர் நில்லாதது என்னென்று**
**நாணுறைப்ப நேர்ந்தொருவன் சொல்லாமே சூழ்ந்து சொலல்.**

(நீதிநெறி விளக்கம் 21)

நூல்களைக் கற்று அதன்படி ஒழுக வேண்டும் என்று மற்றவர்க்கு எடுத்துச் சொல்லிவிட்டு தான் அதன்படி நிற்காதவரின் சொல்லுக்கு வலிமை இல்லை. ஆகவே பிறர்க்கு அறிவுரை கூறும்போது தான் எண்ணிப் பார்த்துக் கூற வேண்டும்.

### 16. ஆயுள் முழுவதும் கற்க வேண்டும்

**ஓதாமல் ஒருநாளும் இருக்க வேண்டாம்**

(உலகநீதி 1, வரி 1)

ஒவ்வொரு நாளும் அறிவு நூல்களைக் கற்க வேண்டும் என்றார் உலகநாதர். இக் கருத்தை ஔவையார் 'ஓதுவது ஒழியேல்' (ஆத்திசூடி 11) என்று சொல்லுவார். அதாவது காலம் முழுவதும் கற்க வேண்டும். கற்றுக் கொண்டிருப்பவனே வாழ்பவன் ஆவான்.

### 17. முடிவுரை

இதுவரை தமிழ் இலக்கியங்களில் கல்வியியல் சிந்தனைகளில் சில எடுத்துக்காட்டுகளாக அளிக்கப்பட்டன. இடமின்மை காரணமாகப் பல சிந்தனைகள், கருத்துகள், கோட்பாடுகள் இங்கு இடம் பெறவில்லை. மேற்சொன்னவற்றையும் இங்கு இடம் பெறாதவற்றையும் ஆழ்ந்து படிக்க வேண்டியது ஒவ்வொரு தமிழரின் கடமை. முக்கியமாகக் கல்வியாளர்கள், ஆசிரியர்கள் கற்க வேண்டும். அவ்வாறு கற்ற நமது நாட்டுக் கல்வியை நமது இலக்கியப் பண்பாட்டு அடிப்படையில் அமைத்தால், நம் குழந்தைகள் அவர்களுக்கு ஏற்ற கல்வியைப் பெறுவார்கள். நன்குடிமக்களாக மலர்வர். அவர்களும் நல்வாழ்வு வாழ்ந்து நாட்டையும் வாழ வைப்பார்கள்.

**தமிழ்த் தாய்**

உலகம் ஊமையா உள்ளஅக் காலையே
பலக லைப்பயன் பாங்குறத் தாங்கியே
இலகி இன்றுநான் என்னும் மொழிக்கெலாம்
தலைமை யாம்தமிழ் தாயினைப் போற்றுவாம்.

மூவர் மன்னர் முறையொடு முன்புதம்
ஆவி என்ன அருமையில் போற்றிய
நாவின் மீது நடம்பயில் நாணயத்
தாவில் நற்றமிழ்த் தாயினைப் போற்றுவாம்.

எழுத்துச் சொல்பொருள் யாப்(பு)அணி ஐந்தினும்
பழுத்த வாய்மொழிப் பாவலர் பண்புற
இழைத்த பாத்தொகை எண்ணில வாய், வளம்
தழைத்த முத்தமிழ்த் தாயினைப் போற்றுவாம்.

இனித்த பாலினும் தேனினும் இன்சுவைக்
கனித்தொ கையினும் கட்டிக் கரும்பினும்
நினைத்த வாயும்சொல் நெஞ்சும் இனித்திடும்
தனித்த மிழ்ப்பெரும் தாயினைப் போற்றுவாம்.

– புலவர் குழந்தை

# புதுக்கவிதை யுகத்தின் முன்

# இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிதை

**முனைவர் சிற்பி பாலசுப்பிரமணியம்**



**19ஆம் நூற்றாண்டு**

இருபதாம் நூற்றாண்டின் வெற்றிகளுக்கும் சாதனைகளுக்கும் கட்டியம் கூறும் தோரண வாயிலாக அமைந்தது பத்தொன்பதாம் நூற்றாண்டு. உலக அரங்கில் தேக்கங்களை உடைத்து மாற்றங்களுக்கு வழி வகுத்ததும் பத்தொன்பதாம் நூற்றாண்டு.

அறிவியலின் பொற்காலம் என அறிஞர் வா.செ. குழந்தைசாமி குறிப்பிடும் இக்காலப் பகுதியில்தான் தொழில் புரட்சியின் விதைகள் தூவப்பட்டன. நீராவி யந்திரம் கண்ட ஜேம்ஸ் வாட் முதல் மின்காந்த ஆற்றல்களை நிறுவிக் காட்டிய மாக்ஸ்வெல், ஃபாரடே, பரிணாம வளர்ச்சி பற்றிய கோட்பாட்டை நிறுவிய டார்வின் ஆகியோர் வரை அறிவியலை வளர்த்தோரின் காலம் பத்தொன்பதாம் நூற்றாண்டு.

உலக இலக்கிய வரலாற்றோடு தமிழ் இலக்கிய வளர்ச்சியை இணைக்கும் முயற்சியைத் தொடங்கிய படைப்பாளிகளை இனம் கண்டு கொண்ட காலமும் பத்தொன்பதாம் நூற்றாண்டு.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் சி.வை.தாமோதரம் பிள்ளையும், உ.வே.சாமிநாதையரும் பழந்தமிழ்க் கருவூலங்களைக் கண்டெடுத்து அறிமுகம் செய்யும் முயற்சியில் ஈடுபட்டனர். பண்டை மரபில் திளைத்தாலும் தமிழை எளிமையின் தலைவாசலுக்கு அழைத்து வந்தவர்கள் இராமலிங்க அடிகளும், (1823–1874) நந்தனார் சரித்திரக் கீர்த்தனை வரைந்த கோபால கிருஷ்ண பாரதியாரும் எனலாம். இவர்கள் மரபுக் கவிதையில் திளைத்தாலும் ஏழ்மை, பசிப்பிணிக் கொடுமை, சாதிய எதிர்ப்பு என்ற புதிய பொருண்மைகளை முன்வைத்த முன்னோடிகள் ஆவர்.

இதே நூற்றாண்டில் நவீன ஆங்கில இலக்கியங்களைக் கற்றும் உணர்ந்தும் தமிழ்க் கவிதையை இன்னொரு தளத்துக்கு இட்டுச் சென்றவர்கள் மாயூரம் முன்சீப் வேதநாயகம் பிள்ளையும் (1826–1889) மனோன்மணீயம் சுந்தரம் பிள்ளையும் (1855–1897) ஆவர். முன்னவர் பெண் விடுதலைக்கான பெண் மதி மாலை, சமய சமரசக் கீர்த்தனைகள் பாடியவர் மட்டுமல்லர், தமிழுக்குப் புதிதான நாவல் என்ற இலக்கிய வடிவைப் பிரதாப முதலியார் சரித்திரத்தால் வழங்கியவரும்கூட. பின்னவரோ தமிழ்த் தேசியத்தின் ஊற்றுக் கண்ணாகத் தமிழ்த்தாய் வாழ்த்தினை அளித்தவர். பெண் உரிமைக்குத் தம் நாடகத்தில் வாணி என்ற பாத்திரத்தைப் படைத்தவர். அறிவியல் சிந்தனைக்கு அடையாளமாய் நடராசன் என்ற பாத்திரத்தை நடமாட விட்டவர். நாட்டுப் பற்றைத் தூண்டிவிடும் வண்ணம்,

**'சுதந்தரம் அவர்க்குயிர் சுவாசம் மற்றன்று'**

என்று அடிக்கோடிட்டுச் சொன்னவர்.

இந்த நான்கு ஆற்றல்மிகு புரவிகளின் நடையில் பயணித்த கவிதைத் தேரோட்டம்தான் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் பிறந்து புதிய தமிழ்க் கவிதையைத் தனக்குத் தொட்டில் ஆக்கிக் கொண்ட பாரதியின் வரவுக்குப் பாதை அமைத்துத் தந்தது.

பாரதி இவர்களை அறிந்து உணர்ந்திருந்ததற்கான அகச்சான்றுகளைப் பாரதி படைப்புகளில் காணமுடியும்.

**நீடு துயில் நீக்கப் பாடி வந்த நிலா**

பதமும் பக்குவமும் மிகுந்த நிலம் தயாராக இருந்த இருபதாம் நூற்றாண்டின் தொடக்க காலச் சூழலில் ஒரு வீரிய விதையாகப் பாரதி விழுந்ததும் தமிழ்க் கவிதை புத்தம் புது விளைச்சலாய், 'வேலி ஆயிரம் விளையுள்' ஆகக் குவிந்தது. புதிய தமிழ்க் கவிதையின் பேரியக்கம் பாரதி. தன் கவிதையைச் சுப்பிரமணிய பாரதியார் (1882–1921),

**'சுவை புதிது பொருள் புதிது வளம்புதிது**
**சொல் புதிது சோதிமிக்க நவ கவிதை'**

என்று அனுபவித்து உணர்ந்தே அறிமுகம் செய்திருக்கிறார்.

'உயிர்த் தீயினிலே வளர் சோதி' என்று காதலை அறிமுகம் செய்த போதும், 'மின்னல் சுவை' என்று குயிலின் பாடலை உரைத்த போதும், 'பிள்ளைக் கனியமுது' என்று குழந்தையைக் கொஞ்சுகிறபோதும் எழுகிற புதிய சுவையை இதற்குமுன் தமிழ்க் கவிதை கண்டதில்லை.

தெய்விகம் இருந்த இடத்தில் தேசியத்தை வைத்ததாலும், 'விடுதலைக்கு மகளிரெல்லாம் வேட்கை' கொண்டதை உணர்த்தியதாலும், 'சாதி நூறு சொல்லுவாய் போ போ போ' என்று வீறு கொண்டதாலும் புதிய பொருளைத் தமிழ்க் கவிதை சந்தித்தது.

அழகின் அறைகூவலாகப் படைக்கப்பட்ட குயில் பாட்டும், உருவகக் காப்பியமாய் ஓங்கும் பாஞ்சாலி சபதமும், மனித உறவுகளை மெல்லிய தெய்விகத்தில் பின்னிய கண்ணன் பாட்டும், பாரதி தந்த வளம் புதிதாய் ஓங்குகின்றன. புதுக் கவிதைக்கு மின்னோட்டமான முன்னோட்டம் தந்த 'காட்சி' கவிதைகளும் வளம் புதிது என அடையாளம் காட்டுகின்றன.

'வேடிக்கை மனிதர்', 'பொய்ம்மைப் பாம்பு', 'பொங்கி வரும் பெருநிலவு', 'வானொளி என்னும் மது', 'சோதிச் சூறை', 'சித்த சாகரம்', ஆன்ம ஒளிக்கடல்', 'உடற் பூந்துகள்', 'வெள்ளிப் பனிமலை', 'அன்னம் ஊட்டிய தெய்வ மணிக்கை', 'நிமிர்ந்த நன்னடை', 'திமிர்ந்த ஞானச் செருக்கு', 'நறிய பொன்மலர் மென்சிறுவாய்', 'மின்னல் விளக்கு', 'மனச்சிறுபுள்', 'அக்கினிக் குஞ்சு', 'ஒட்டும் இரண்டுளத்தின் தட்டு', 'சுட்டும் விழிச்சுடர்', 'பேசும் பொற்சித்திரம்', 'காலை இளம்பரிதி', 'நாதக் கனல்', 'நெருப்புச் சுவை', 'மாமாயத் தீம்பாட்டு'...... இப்படி எண்ணத் தொலையாத சொல்வளம் தந்தவர் பாரதி.

'புரட்சி' என்ற சொல்லைத் தந்த புரட்சிக் கவிஞர் பாரதி. 'பொதுவுடைமை' என்ற சொல்லைத் தம் தனியுடைமை ஆக்கிக் கொண்டவர் பாரதி.

பாவேந்தர் பாரதிதாசன் பரவசமாய் உரைத்தபடி 'நீடு துயில் நீக்கப் பாடி வந்த நிலா' பாரதியார்.

**'தமிழகம் தமிழுக்குத் தகும் உயர்வளிக்கும்**
**தலைவனை எண்ணித் தவம் கிடக்கையில்'**

பாரதி தோன்றித் தமிழுக்கு ஒரு கவிதைப் பட்டாளத்தைத் தோற்றுவித்தார். அவருள் நிகரில்லாதவர் பாரதிதாசன்.

**புதுவைக் குயில்**

தேசியம் ஒலித்த பாரதியின் கவிதா மண்டலத்திலிருந்து பிறந்த 'நெருப்புக் குரல்' பாரதிதாசன்.

இருபதாம் நூற்றாண்டின் இரண்டு மகாகவிகளில் பாரதி ஒருவர்; பாரதிதாசன் மற்றொருவர்.

நவீன தமிழ்க் கவிதைக்கு ஆழமும் அழுத்தமும் வரலாற்றுப் புதுமையும் உலகப் பார்வையும் தந்தது மட்டும் பாரதியின் பெருமை அன்று. பாரதிதாசன் என்ற களஞ்சியத்தையும் அவரே தந்தார்.

'எங்கெங்குக் காணினும் சக்தியடா' என்ற இளம் கவிக்குரலை எட்டுத் திசைக்கும் அர்ப்பணித்தார் பாரதியார். இயல்பான கவிமனமும், புலமை நிறைவும் கனக சுப்புரத்தினத்திடம் மண்டிக் கிடந்தன. அவற்றைப் புதிய பாதையில் திசை திருப்பினார் பாரதியார்.

**"பாடலில் பழமுறை பழ நடை என்பதோர்**
**காடு முழுவதும் கண்டபின் கடைசியாய்ச்**
**சுப்பிர மணிய பாரதி தோன்றியென்**
**பாட்டுக்குப் புதுமுறை புதுநடை காட்டினார்"**

என்று பாவேந்தரே மொழிந்திருப்பது குறிப்பிடத் தக்கது.

மயிலம் சுப்பிரமணியர் மீது பஞ்சரத்நம், துதியமுது, வண்ணப்பாட்டு என்று பாடிக் கொண்டிருந்த கனக சுப்புரத்தினம் அடுத்த கட்டமாகத் தேசியப் பாடல்கள் புனைந்தார். கதர் இராட்டினப்பாட்டு, சிறுவர் சிறுமியர் கீதம் என முப்பதுகளில் எழுதிக் குவித்தார்.

**"கன்னலடா எங்கள் காந்தி உரைத்த சொல்**
**கழறுகிறேன் அதைக் கேளே"**

என்று பாடிய அதே காலப் பகுதியில் பாரதிதாசன் சுயமரியாதைச் சுடர் என்ற மூட நம்பிக்கை ஒழிப்புக் கவிதைகளை நோக்கிப் பயணமானார் (1931). சஞ்சீவி பருவதத்தின் சாரல், புரட்சிக்கவி, பாரதிதாசன் கவிதைகள் முதல் தொகுதி ஆகியன முறையே 1930, 1937, 1938 ஆம் ஆண்டுகளில் வெளிவந்த போது, தெய்விகம் பாடி, தேசியத்தில் திளைத்த கவி பெரியாரின் பெருந் தொண்டராய் மாறிவிட்ட வரலாற்று வியப்பு நிகழ்ந்தது.

அதே சமயம் பாரதியாரிடமிருந்து வேறுபட்டு தனித்துவம் கொண்ட முதிர்ச்சியையும் கவிதைப் பரிணாமத்தையும் பாரதிதாசன் நிறுவிய காலமும் அதுவே எனலாம்.

**"உள்ள பகுத்தறிவுக்கு ஒவ்வா ஏடுகளால்**
**எள்ளை அசைக்க இயலாது"**

என்ற கருத்தாக்கம் பாரதிதாசனிடம் ஊற்றம் கொண்டதாய் வெளிப்பட்டது.

**"சாணிக்குப் பொட்டிட்டுச் சாமியென்பார் செய்கைக்கு**
**நாணி நீ கண்ணுறங்கு நகைத்து நீ கண்ணுறங்கு"**

என்று தொட்டில் குழந்தையின் உதடுகளில் சொட்டுத் தேனாய்க் கடவுள் மறுப்புக் கொள்கையை ஊட்டிய பாரதிதாசன் அக்காலப் பகுதியில் பொதுவுடைமைக் கொள்கையிலும் உறுதி காட்டினர்.

1937இல் பொதுவுடைமை இயக்க வார ஏடாக வெளிவந்த 'ஜனசக்தி'யில்தான்

**"பொதுவுடைமைக் கொள்கை திசை எட்டும் சேர்ப்போம்**
**புனிதமோடு அதை எங்கள் உயிரென்று காப்போம்"**

என்ற அவர் கவிதை வரிகள் பொறி சிதறின.

திராவிட இயக்கம்சார் கொள்கைப் பிரகடனங்களான கவிதைகளை எழுதிக் குவித்த பாரதிதாசனைப் பிரச்சாரக் கவிஞர் என்று முத்திரை குத்தி ஒதுக்கி விடுகிற முயற்சியும் நடைபெற்றது. ஆனால் புதுமைப்பித்தன், கு.ப.ரா., பேராசிரியர் கே. சுவாமிநாதன் ஆகியோர் அந்த நாளிலேயே பாரதிதாசனிடம் ஒன்றிக் கிடந்த கவித் திறத்தைச் சுட்டிக் காட்டினார்கள்.

"தமிழ் நாட்டில் இன்று உயிருடனிருக்கும் கவிகளுள் உண்மைக் கவி யார்? உயிர்க் கவி யார்? சிரஞ்சீவிக் கவி யார்? என்று கேள்விகள் கிளம்பினால் சற்றும் சந்தேகமின்றிப் பாரதிதாஸன் என்ற ஒரு விடைதான் நம்மால் கொடுக்க முடியும்" (1938)

என்று பேராசிரியர் கே.சுவாமிநாதன் ஆணித்தரமாகச் சொன்னார் (பாரதிதாசன் கவிதை இலக்கியங்கள் – ய. மணிகண்டன், 2005)

இயற்கையில் ஒரு தத்துவம் காண முயலும் அழகின் சிரிப்பு, அரிய சொல்லாட்சிகளாலும் கற்பனை வளத்தாலும் நம்மை ஆட்கொள்ளும் பாரதி தாசன் கவிதைகள் 1, 2 தமிழ் மரபும் புரட்சிக் கூறுகளும் கொண்ட குடும்ப விளக்கு, வசியம் செய்யும் வண்ணத்தமிழ் கொண்ட இசையமுது, குறுங் காவியங்களான எதிர்பாரா முத்தம், பாண்டியன் பரிசு ஆகிய படைப்புகளால் பாரதிதாசன் நம்முள் வாழ்ந்து வருகிறார்.

**"அக்கா வந்து கொடுக்கச்**
**சுக்கா மிளகா சுதந்தரம் கிளியே"**

என்ற அழுத்தமான வினாவிலும்,

**"இனிமைத் தமிழ்மொழி எமது – எமக்**
**கின்பம் தரும்படி வாய்த்த நல்லமுது"**

போன்ற தமிழுணர்வு வீச்சுகளிலும்,

**"காதல் அடைதல் உயிரியற்கை"**

என்ற கடைசல் பிடித்தது போன்ற வரிகளிலும்

**"மெல்லென அதிர்ந்த மின்னல் அந்தச்**
**செல்லக் குழந்தையின் சிரிப்பு"**

போன்ற உணர்வுச் சித்திரங்களிலும், இவை போன்ற ஏராளமான வைர வரிகளிலும் பாரதிதாசன் என்ற மகாகவி கம்பீரமாய்ப் பவனி வந்துகொண்டே இருப்பார்.

**பாரதி மரபு வளர்கிறது**

வைதிகச் சிந்தனை மரபு பாரதியாரிடம் ஓரளவு இருந்தது. அதனின்றும் பாரதிதாசன் பெருமளவு மாறுபட்டாலும் பாரதி மரபு என்ற வரிசையில் முதலிடம் அவருக்கே உண்டு.

சமகாலத்தில் பாரதி என்ற ஆல மரத்தின் கிளைகளாகத் திகழ்ந்தவர்கள் என நாமக்கல் கவிஞர் (1888–1972), கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை (1876–1954) ஆகிய இருவரையும் கருதலாம். பன்முகம் கொண்ட பாரதியாரின் தேசியம் நாமக்கல் கவிஞராகவும், குழந்தைக் கவிமனம் கவிமணியாகவும் விரிவாக்கம் பெற்றது எனலாம்.

**"கவிபாடிப் பெருமை செய்யக் கம்பனில்லை**
**கற்பனைக் கிங்கில்லை அந்தக் காளிதாசன்"**

எனக் காந்தியடிகளின் வாழ்வியலைப் பேசும் கவிதைகள் நாமக்கல் கவிஞரின் தனிச் சிறப்பு.

**"அம்மா என்குது வெள்ளைப் பசு – அதன்**
**அண்டையில் ஓடுது கன்றுக் குட்டி"**

என்று குழந்தைமை கொஞ்சும் பாடல்களில் கவிமணி வாழ்கிறார்.

கவிமணியின் மற்றொரு சிறப்பு அவருடைய தெள்ளுதமிழ் வெண்பாக்கள். அவருடைய மொழியாக்க ஆற்றல் புலனாவது உமர்கய்யாம் பாடல்களில் என்பதையும் குறிப்பிட வெண்டும்.

**"எழுதிச் செல்லும் விதியின் கை**
**எழுதி எழுதி மேற்செல்லும்"**

என்பது வெறும் மொழி பெயர்ப்பல்ல – உயிரைச் சுமந்த உயிர். ஆசியஜோதி இன்னொரு மகத்தான மொழியாக்கம்.

பாரதி மரபுக்கு வளம் சேர்த்தவர்கள் எனக் கம்பதாசன் (1916–1973) ச.து.சு. யோகி (1904–1963) பெரியசாமித் தூரன் (1908–1987), திருலோக சீதாராம் (1917–1973), சுத்தானந்த பாரதியார் (1897–1989) ஆகியோரைக் குறிப்பிடலாம்.

'சந்திர சூரியர்கள் என் கைத் தாளங்கள் ஆகுமடா' என்ற பிரம்மாண்டமான கற்பனைக்குச் சொந்தக்காரரான

கம்பதாசன், 'சூரியனும் ஒரு தொழிலாளி' என எழுதிய சமதருமச் சிந்தனைக் கவிஞர் – பா உலகில் ஒரு பருந்து.

சக்தி உபாசனையில் திளைத்த ச.து.சு. யோகி 'தமிழ்க் குமரி' கவிதைகளால் என்றும் பேசப்படத் தகுந்தவர். யோகியாரின் அகலிகை, மேரி மக்தலேனா, உமர்கய்யாம் மொழி பெயர்ப்பு, கண்மணி ராஜம் ஆகியவை தமிழுக்கு வைத்த சீர்வரிசைகள்.

'கலைக் களஞ்சியத்'தால் புகழ் பெற்ற பெரியசாமித்தூரன் இளந்தமிழா, மின்னல் பூ, நிலாப் பிஞ்சு கவிதை நூல்கள் தந்தவர். மென்மையின் இழைகளால் நெசவு செய்யப்பட்டவை இவருடைய கவிதைகள்.

கவிதைச் செறிவு மிகுதியும் படைத்த திருலோக சீதாராம் மிகுதியாய் எழுதவில்லை. ஆயினும் அவருடைய உதயம், கந்தர்வ கானம் தொகுப்புகள் பல நல்ல கவிதைகளின் பதிவுகள் கொண்டவை.

பாரதியாருடன் பழகும் வாய்ப்புப் பெற்ற கவியோகி சுத்தானந்த பாரதியார் பாரத சக்தி மகா காவியம் படைத்து ராஜராஜன் பரிசும் பெற்றவர். 'எப்படிப் பாடினரோ' போன்ற இனிய கீர்த்தனைகள் இவர் புகழைக் காக்கும் கரங்கள்.

**பாவேந்தர் மரபு**

பொதுவாகத் திராவிட இயக்கச் சார்பான கவிஞர்கள் அனைவருமே பாவேந்தர் பாரதிதாசன் மரபினர் எனக் கூறிவிடலாம்.

இம் மரபின் நேரடி விழுதுகள் எனப் பலர் இருந்த போதிலும் மு. அண்ணாமலை, கண்ணதாசன், சுரதா, தமிழ் ஒளி, புலவர் குழந்தை ஆகியோரைச் சிறப்பாகக் குறித்தல் தகும்.

'தாமரைக் குமரி' என்ற முதல் தொகுதியால் புகழ்பெற்ற மு. அண்ணாமலை அழகிய உவமைகளாலும், காதலைப் பாடும் மென்மையாலும் அறியப்பட்டவர். 'ஓடாத மண்குதிரை காதல்' என்ற அவருடைய வரி பெரிதும் பேசப்பட்டது.

கனியை 'விதைக் குடும்பம்' என்றும் பனியை 'நிலா வடிக்கும் வியர்வை' என்றும் புத்தம் புதிய உவமைகளால் அடையாளமிட்ட சுப்புரத்தினதாசன் (சுரதா) உவமையணியாக இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிதையில் தம்மை நிலை நிறுத்திக் கொள்கிறார்.

ஓசைகளைக் கொஞ்சும் சதங்கைளாய்க் கவிதையில் ஒலிக்கவிட்ட தமிழ் ஒளி (1924–1965) சமூக சீர்திருத்தம் நிரம்பிய பல குறுங்காவியங்கள் தந்தவர். (விதியோ வீணையோ, கோசலைக்குமரி, வீராயி)

'விழுது விரல்களாலே எழுதும் ஆல மரங்கள்' என்பது போன்ற சந்த இனிமை நிரம்பிய உருவகங்கள் மண்டிய களஞ்சியம் தமிழ்ஒளி. இராமகாவியம் போல் 'இராவண காவியம்' வடித்துத் திராவிட இயக்கத்துக்கு ஒரு காவியக் கொடை நல்கியவர் புலவர் குழந்தை.

திராவிட இயக்கக் கவிஞர்களில் பாரதிதாசன் மரபைச் செழுமைப்படுத்தித் தனிச்சிறப்பு மிக்க இடத்தை வகிர்ந்தெடுத்துக் கொண்டவர் கண்ணதாசன் (1927–1981)

எங்கும் தங்காத நீரைப் போல் ஓடி மனம் என்னும் மாயக் கடலில் இயல்பாகக் கலப்பவை கண்ணதாசன் எழுத்துகள். தொடக்க காலத்தில் திராவிட இயக்கக் கொள்கைகளைப் பாடிக் கொண்டிருந்த கவிஞர் மெல்ல மெல்ல வாழ்வின் கொடைகளான காதலையும் துயர இழைகளையும் அனுபவத் தத்துவங்களையும் நோக்கி நகர்ந்தார்.

இவருடைய மாங்கனி, ஆட்டனத்தி ஆதிமந்தி குறுங்காவியங்கள் தொடக்க நாள்களில் கவனத்தை ஈர்த்தன. தனிப் பாடல்களில் புனைவியல் மயக்கக் காதல் சொக்க வைத்தது. ஜனனமும் மரணமும் தத்துவங்களைச் செதுக்க முனைந்தன. மெல்லிய கோட்டுச் சித்திரங்களும் புலப்படலாயின.

> **"முத்து மணிப் பல்லக்கு**
> **முளைத் தெழுந்த சிறுகீரை**
> **தத்தும் கிளி தேவ**
> **தாரு உதிர்த்த இலை"**

என்று இவர் குழந்தையைப் பாடும் அழகே அழகு.

பிறப்பின் வருவது, இறப்பின் வருவது பற்றியெல்லாம் இறைவனிடம் கேள்வி எழுப்பப் பிறந்து பார், இறந்து பார் என அவன் கூறினானாம்.

> **"அனுபவித்தே தான் அறிவது வாழ்வெனில்**
> **ஆண்டவனே நீஏன் எனக்கேட்டேன்**
> **ஆண்டவன் சற்றே அருகில் நெருங்கி**
> **அனுபவம் என்பதே நான்தான் என்றான்"**

எனக் கண்ணதாசன் மொழியும் நேர்த்தியில் மெல்லிய தத்துவம் இழையோடுகிறது.

எனினும் கண்ணதாசனின் கவித்துவத்தை முழுமையும் உள் வாங்கிக் கொண்டவை இவருடைய திரைப்பாடல்களே. இன்று வரை அவற்றை வென்ற பாடல்கள் இல்லை என்று துணிந்து கூறலாம்.

'மலர்ந்தும் மலராத பாதி மலர் போல', 'காலங்களில் அவள் வசந்தம்', 'போனால் போகட்டும் போடா', 'ஆலயமணியின் ஓசையை நான் கேட்டேன்' – என இசை மழையில் அனுபவத் துளிகளாகத் தெறித்துக் கொண்டே இருக்கின்றன கண்ணதாசன் பாடல்கள்.

கடைசியாக இவர் எழுதிய 'இயேசு காவியம்' முழுமையான கவித்துவம் கொண்டதாக அமையவில்லை. ஆயினும் திரைப்பாடல் ஒவ்வொன்றும் காவியமாய் மனங்களைக் கௌவுகின்றன.

**"படைப்பதனால் என் பேர் இறைவன்"**

என்று இவர் எழுதிய வரி தமக்கே எழுதிவைத்துக் கொண்ட கவிதைத் தீர்ப்பாக நின்று நிலைக்கிறது.

திராவிட இயக்கக் கவிகளென நாரா. நாச்சியப்பன், சாமி. பழனியப்பன், பெரி. சிவனடியான் என்பவர்களும் குறிக்கத் தக்கவர்களே.

தொடர்ந்து இந்த மரபில் வந்த அப்துல் ரகுமான், மீரா, தமிழன்பன், நா. காமராசன் ஆகியோர் புதுக் கவிதையிலும் சாதித்தவர்கள். ஆதலால் பின்னர் இவர்களைக் காணலாம்.

**பொதுவுடைமை இயக்கக் கவிஞர்கள்**

ஜீவா (1907–1963), ரகுநாதன் (1923–2001), கே.சி.எஸ். அருணாசலம் (1921–1999), பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் (1930–1959) ஆகியோர் பொதுவுடைமை இயக்கத்தில் தீவிரமாக இயங்கியவாறு கவிதைகள் படைத்தவர்களில் முக்கிய மானவர்கள்.

ஜீவா இயக்கப் பிரசாரத்துக்காகக் கவிதைகள் புனைந்தவர். கண்ணீரால் மக்களை மூழ்கடித்த இவர் பாடல்களில் ஒன்று :

**"காலுக்குச் செருப்பு மில்லை**
**கால் வயிற்றுக் கூழும் இல்லை**
**பாழுக் குழைத்தோமடா – தோழனே**
**பசையற்றுப் போனோமடா"**

ரகுநாதனின் கவியரங்கப் பாடல்கள் சிற்றம்பலக் கவிராயர் என்ற பெயரில் பரவலாய் வரவேற்புப் பெற்றவை. எனினும் இவருடைய 'ஒற்றையடிப் பாதை', 'ஆறுதனைக் காதலித்தேன்' கவிதைகள் இனிமை மிக்கவை – அருமையானவை.

நாட்டுப்புற நளினங்களின் ஒயிலைத் தம் கவிதைகளில் கொலு வைத்தவர் கே.சி.எஸ். அருணாசலம். 'கவிதை எனக்கொரு கைவாள்' இவருடைய புகழைப் பறைசாற்றிக் கொண்டிருக்கும் தொகுதி.

**"சின்னச் சின்ன மூக்குத்தியாம்**
**செகப்புக் கல்லு மூக்குத்தியாம்"**

போன்ற கிராமிய அழகுக் கவிதைகளைப் படைத்தவர் கே.சி.எஸ்.

இருபத்தொன்பதே ஆண்டுகள் வாழ்ந்த போதிலும் படிப்பவர் நெஞ்சில் மிக இயல்பாய்ப் படிந்துபோன கவிதைகளை வடித்தவர் பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம். வலுவான இயக்கப் பற்றில் விளைந்த பாடல்களும் கவிதைகளும் விரிவாக ஆராயத் தக்கவை. வயலுக்குத் தண்ணீர் தர மறுத்த பண்ணையாரின் வரப்பில் துளையிட்டுத் தண்ணீரைப் பாய வைக்கிறது நண்டு. 'நண்டு செய்த தொண்டு' என்பது இதனைச் சொல்லும் அழகிய கவிதை.

**"காடு வௌஞ்சென்ன மச்சான் – நமக்குக்**
**கையுங் காலுந் தானே மிச்சம்"**

என்பன போன்ற பேச்சு நடைப் பாடல்களில் பட்டுக் கோட்டையை மிஞ்ச எவரும் இல்லை. கொள்கைகளைத் தவறவிடாத கலை இவருடையது.

பொதுவுடைமை இயக்கம் சார்ந்த கவிதைகளைப் பரிணாமன், புவியரசு, சிற்பி, வெ.நா. திருமூர்த்தி, தணிகைச் செல்வன் ஆகியோரும் படைத்துத் தந்துள்ளனர். இவர்களுள் சிலர் புதுக்கவிதையிலும் முத்திரை பதித்திருக்கின்றனர்.

இக்குழுக்களில் சாராது ஒரு வண்டின் ரீங்காரமெனக் கவிதைகள் படைத்தவர்களுள் 'நாணல்', தமிழழகன் ஆகியோர் பெயர்களை மறந்துவிட முடியாது. பாரதி மரபில் கிளைத்து அறிவியல் நோக்கில் செழித்த குலோத்துங்கன் தன் தனித்தன்மைகளால் முகமுயர்த்தி நிற்கிறார். இவருடைய 'மானிட யாத்திரை' ஒரு புதுமைக் காவியம்.

பாரதி, பாரதிதாசன் என்ற மூலவர்களிடமிருந்து நெடுந்தூரம் பயணமாகிவிட்டது தமிழ்க் கவிதை. உலகமயப் பொருளாதாரச் சூழலில் பெட்டிக் கடையையும் ரொட்டிக் கடையையும் 'மால்'கள் விழுங்கிக் கொண்டிருக்கும் உக்கிரமான காலத்தில் தமிழ்க் கவிதை என்ன செய்யப் போகிறது? ஒரு பாரதியையோ பாரதிதாசனையோ தருமா என்பது ஒரு கோடி ரூபாய்க் கேள்வி. ❖

# தமிழ் எங்கள் உயிர்

முனைவர் மு.பி. பாலசுப்பிரமணியன்



பழைமையான மொழி – பண்பட்ட மொழி, நம் பைந்தமிழ் மொழி! தென்னவன் மொழி – தென்பாங்கு மொழி, தேனினும் இனிய நம் தீந்தமிழ் மொழி! தமிழ் என்றால் இனிமை; தமிழ் என்றால் எளிமை; தமிழ் என்றால் அழகு; தமிழ் என்றால் அமிழ்தம். இனிமையான – எளிமையான – ஈடு இணையற்ற அழகுமொழி, நம் அமுதமொழி! தமிழ் மொழி, நம் கருவிழி! தன்மானத் தமிழே, நம் தாய்த்தமிழ்! ஊனோடு ஊனாக, உயிரோடு உயிராக, உணர்வோடு உணர்வாக ஒன்றிவிட்ட மொழி, நம் உயர்தனிச் செம்மொழியாம், ஒண்டமிழ் மொழி!

எத்தனையோ மொழிகள் உலகத்தில் தோன்றியுள்ளன. காலவெள்ளத்தைக் கடக்க முடியாமல் எத்தனையோ மொழிகள் அழிந்துபட்டன. உலகிலேயே பழைமையான மொழிகள் எனப் பாராட்டப்படுபவை இலத்தீன், கிரேக்கம், எபிரேயம், சீனம், தமிழ், சமற்கிருதம் ஆகிய ஆறு மொழிகள்தாம். அவற்றுள் இன்று இலத்தீன் இல்லை; கிரேக்கம் இல்லை; எபிரேயம் இல்லை; அவ்வளவு ஏன்? சமற்கிருதம்கூட இன்று இல்லை. அது தெய்வத்தோடே ஒன்றிவிட்டது. பேச்சு வழக்கில் குன்றிவிட்டது. எஞ்சியிருப்பவை இரண்டே. ஒன்று தமிழ்; மற்றொன்று சீனம்! பழைமை வாய்ந்த சீனமொழி, பெரும்பான்மை மக்களால் பேசப்படும் மொழியாக, இன்று உயிர் வாழ்கிறது. அதுவும், 'வாழும் மொழி'யாகத்தான் வையத்தில் இலங்குகிறதே ஒழிய 'வளமான மொழி'யாக விளங்க இயலவில்லை. பெரும்பான்மை மக்கள் அதனைப் பேசுகிறார்களே ஒழிய, பெருமைப்படத்தக்க அளவுக்கு அதில் இலக்கணமோ, இலக்கியமோ அமையவில்லை என்பர்.

ஆனால், அழியாத மொழியாக, சிதையாத மொழியாக, அன்று முதல் இன்று வரை ஒரே நிலையில் உயிர்ப்புடன் வாழ்ந்து கொண்டிருக்கும் ஒரே மொழி நம் தமிழ்மொழிதான். காலத்தின் சுடுவேகத்திலும் தன் கோலத்தின் எழில் சிறிதும் குன்றாத சீலத்திருமொழி நம் செழுந்தமிழ் மொழியாகும். இன்றும் தமிழர்தம் இல்லத்தின் மொழியாக, வெல்லத்தின் இனிமையுடன் விளங்குவது தமிழ்தானே! ஆம்! தம்+இல்+மொழி= தமிழ் (தம்முடைய இல்லத்து மொழி) என்பது மொழி நூலறிஞர் பாவாணர் கருத்தாகும்.

> **"ஆரியம்போல் உலகவழக்கு அழிந்து ஒழிந்து சிதையாஉன்**
> **சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துதுமே!"**

என அன்னைத் தமிழின் கன்னித் தன்மையை நினைந்து வியந்து போற்றுகிறார் பேராசிரியர் சுந்தரம்பிள்ளை. எல்லையிலாப் பரம்பொருளைப்போல் இலங்கும் தமிழ் அன்னையின் இளமைத் தன்மையினை எண்ணித் தன்னை மறந்து வாழ்த்துகிறார். தமிழ் அன்னை, 'மக்கள்' ஆகிய நம்மை மட்டும் ஈன்றெடுக்கவில்லை. 'மொழி'களையே ஈன்றெடுத்த 'முதல்வி' அவள்!

தமிழர்களாகிய நமக்கு மட்டுமா, அவள் அன்னை? கன்னடம், தெலுங்கு, மலையாளம், துளு போன்ற மொழிகளுக்கும் அவள் அன்னையன்றோ! பல மொழிகளை ஈன்றெடுத்த பெருமை தமிழைப்போல் இன்னொரு மொழிக்கும் உண்டு; அம்மொழிதான் வடமொழி! ஆனால், ஒரு வேறுபாடு! பல மொழிகளை ஈன்றெடுத்த பின்னும் ஒப்பற்ற மொழியாக இன்றும் உயிர் வாழ்வது தமிழ்! அதனாற்றான், செந்தமிழ் அன்னையின் சீரிளமைத் திறம் வியந்து செயல்மறந்து வாழ்த்துகிறார் சுந்தரம்பிள்ளை.

"என்றுமுள தென்தமிழ்" என்பது கவிஞன் நோக்கு. கம்பன் வாக்கு. என்றைக்குமே அழியாத தமிழ் – யாராலும் அழிக்க முடியாத தமிழ் – நம் இன்பத் தமிழ்! ஆம்! ஓங்கு புகழ்கொண்டு பாங்குடன் திகழும் பைந்தமிழுக்குத் தீங்கு என்பதே இல்லை.

தமிழைப் போன்றதோர் இனிய மொழி இத்தரணியிலேயே இல்லை. "யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழி போல் இனிதாவ தெங்கும் காணோம்'' என மாத்தமிழின் மாண்பினை மாநிலம் அறியப் பாடுகிறார். பன்மொழி அறிந்த பாரதியார். தமிழின் இனிமைக்கு அதன் உச்சரிப்பு எளிமையும் ஒரு காரணம் ஆகும். ஆங்கிலம் 26 எழுத்துகளைக் கொண்டதுதான். ஆனால், உச்சரிப்போ, எண்ணிக்கையில் அடங்காதது. தமிழ் 247 எழுத்துகளைக் கொண்டது. (தேவையில்லா எழுத்துகளையும் சேர்த்து) ஆனால், உச்சரிப்பு முறை மிக எளிது. எழுத்துகளின் ஒலிகளுக்கேற்ப நாம் தமிழில் உச்சரிக்கலாம். அதனால்தான், செக்கோசுலாவாக்கிய நாட்டைச் சேர்ந்த தமிழ் அறிஞர் கமில்சுவெலபில், "உலகில் எந்த மொழி வரிவடித்திலும் காணப்படாத தனிச் சிறப்புகளைத் தமிழ் வரிவடித்தில் காணலாம். ஆங்கிலத்தில் அத்தகைய அழகு கிடையாது. தமிழில் ஓர் எழுத்தினை உச்சரிக்கும்போது எழுகின்ற ஓசை நயத்திற்கேற்ப அதன் வரிவடிவமும் அமைந்திருக்கும்'' என, அருந்தமிழ் மொழியின் உச்சரிப்பு அழகினை வியந்து பாராட்டுகின்றார். இந்த உச்சரிப்பு எளிமைக்காகத்தான் இலக்கண நூலார் 'மாத்திரை அளவும்' வகுத்துள்ளனர்.

எழுத்துகளை 'உயிர்' என்றும், 'மெய்' என்றும், இரண்டும் இணைந்தால் 'உயிர்மெய்' என்றும் பாகுபாடு செய்திருக்கும் சிறப்புத் தமிழ் மொழிக்கே உரியது. வல்லினம், மெல்லினம், இடையினம் என்ற மூவகை இனத்தின் மொத்த உருவாகத் 'தமிழ்' என்னும் சொல்லே இலங்குகின்றதன்றோ ?

(த – வல்லினம்; மி – மெல்லினம்; ழ் – இடையினம்)

'தமிழ்' என்ற சொல் மட்டுமா ? தமிழ் மொழியில் உள்ள அத்தனைச் சொற்களுமே முத்துகள்தாம்.

**"சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே – அதைத்**
**தொழுது படித்திடடி பாப்பா''**

என்பது பல்வேறு மொழிச் சொற்களை அறிந்து, பாரதி சொன்ன அமுத வாக்கன்றோ ?

பண்டைத் தமிழர்தாம் பேசும் மொழியைத் 'தமிழ்' என்னும் சொல்லால் மட்டுமா வழங்கினர் ? மூவகைத் தமிழ் உண்டு என உணர்ந்து 'முத்தமிழ்' எனவும் முழங்கினர்.

**"எங்கள் வாழ்வும் எங்கள் வளமும்**
**மங்காத தமிழென்று சங்கே முழங்கு"**

என்ற பாவேந்தரின் சங்கநாதம், இலக்கியமாக ஏட்டிலிருக்கும்போது, 'இயற்றமிழ்' ஆகிறது; அதுவே இனிய ஓசையோடு இசையமைத்துப் பாடப்படும்போது, 'இசைத் தமிழ்' ஆகிறது; நாடக நாயகனின் நாவில் உணர்ச்சியோடு உரையாடலாக வெளிவரும்போது 'நாடகத்தமிழ்' ஆகிறது.

தமிழ் 'ஒன்று'தான்; ஆனால், வெளிப்படும் முறை 'மூன்று' அல்லவா ? உலகில் வேறு எந்த மொழியும் இங்ஙனம் அழைக்கப்படுவதில்லை. அம்மொழிகளில் இயல், இசை, நாடகம் இருக்கலாம். ஆனால், அப்பாகுபாடுகளைப் பகுத்து அறிந்து மொழியோடு சேர்த்துப் பயன்படுத்தும் முன்னோடி அறிவுத்திறன் அவர்களிடம் இல்லை என்பது வெள்ளிடை மலை!

மேலும் இலக்கண அமைப்பிலும் 'புதுமை' கண்ட பெருமை தமிழ் மொழிக்கே உண்டு. தொல்காப்பியர் எழுத்து, சொல், பொருள் என மூன்று அதிகாரங்களாக அமைத்துத் தமிழுக்கு இலக்கணம் வகுத்தார். தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் வரும் 'செய்யுளியல்' பிற்காலத்தில் 'யாப்பு' எனவும், 'உவமவியல்' விரிவடைந்து 'அணி' எனவும், தனித்தனி இலக்கணங்களாக ஆயின. இங்ஙனம் தமிழ்மொழியானது எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என ஐந்திலக்கணங்களைக் கொண்டு, அவனியில் சுடர்விடலாயிற்று. உலகில் உள்ள ஏனைய மொழிகளில் எழுத்துக்கு இலக்கணம் உண்டு; சொல்லிற்கு இலக்கணம் உண்டு; யாப்பு, அணிகளுக்குக்கூட இலக்கணம் உண்டு; ஆனால், 'பொருளுக்கு' இலக்கணம் வேறு எம்மொழியிலும் இல்லை. 'பொருள்' என்னும் இலக்கணத்தின் பொருளே வேற்று மொழியினருக்குப் புரியாது. தமிழ் மொழி ஒன்றுதான், 'வாழ்வுக்கே இலக்கணம்' அமைத்து வையத்தில் சிறந்து மிளிரும் வளமான மொழியாகும். மானிட வாழ்க்கையையே 'அகம்', 'புறம்' என இருவகைப்படுத்தி இலக்கணங் கண்ட பெருமை தமிழ்மொழி ஒன்றுக்குத்தான் உண்டு.

தொல்காப்பியம் அகத்திணையியலும், நம்பியகப் பொருளும் 'அகப்பொருள்' இலக்கணங் கூறும் அருந்தமிழ்க் களஞ்சியங்கள்! தொல்காப்பியம் புறத்திணையியலும், புறப்பொருள் வெண்பாமாலையும் 'புறப்பொருள்' இலக்கணங் கூறும் பைந்தமிழ்ப் பெட்டகங்கள்! காதல் வாழ்வுக்கு அகப்பொருளும், வீர வாழ்வுக்குப் புறப்பொருளும் என, வாழ்க்கைக்கே இலக்கணம் வகுத்த பெருமை வையத்தில் வண்டமிழ் மொழிக்குத்தான் உண்டு. இதுவும் வேறு எம்மொழியிலும் இல்லாத தனிச் சிறப்பு ஆகும். வேற்றுமொழி இலக்கியங்களில் காதலும், வீரமும் கூறப்பட்டிருக்கலாம். ஆனால், இலக்கண அடிப்படையில் கூறப்பட்டிருக்காது. இலக்கணக் கண்கொண்டு வாழ்வை ஆய்ந்து நோக்கிய பெருமைக்குரிய ஒரே இனம், தமிழினம்தான்!

வாழ்வுக்கே இலக்கணம் வகுத்த வண்டமிழ் மொழியில், பழந்தமிழர் வாழ்வைப் படம் பிடித்துக் காட்டும் வளமான இலக்கியங்களுக்கும் குறைவில்லை. இலக்கியம் என்னும்

சஞ்சீவியால்தான் தமிழ்மொழி இன்றளவும் 'சிரஞ்சீவி'யாக வாழ்ந்து கொண்டிருக்கிறது. தமிழ் மொழியில் உள்ள இலக்கியங்களைப் படித்த வெளிநாட்டார் வியந்து பாராட்டுகின்றனர். 'சோவியத்து நாடு' இதழில் (அக்டோபர் 1961) அறிஞர் செலிஷேவ், "இந்தியாவின் தொன்மைசால் மொழியான தமிழ் மொழியும், தமிழ் இலக்கியங்களும் ரஷ்ய மக்களிடம் மிகவும் பிரபலம் அடைந்து வருகின்றன!" என்று குறிப்பிட்டுள்ளார். ஆந்திர மாநிலத்தைச் சேர்ந்த திரு. சி.ஆர். ரெட்டி, "ஈடு இணையற்ற சிலப்பதிகாரம், மணிமேகலை என்னும் இரண்டு காவியங்களைப் பெற்றுள்ள 'தமிழ்' மீது, ஆந்திரன் என்ற முறையில் பொறாமைப்படுகிறேன். மொழிபெயர்ப்பில்கூட அழகோடும் உயிர்ப்போடும் அவை சிறந்து மிளிர்கின்றன. அப்படியாயின் மூலத்தில் (தமிழில்) எத்துணைச் சிறப்போடு மிளிரும்?" எனச் செந்தமிழ் இலக்கியங்களான சிலப்பதிகாரத்தையும் மணிமேகலையையும் பாராட்டுகின்றார்.

இத்துணைச் சிறப்புகளோடு தமிழ்மொழி இலங்குகின்ற காரணத்தால்தான், தம் மதத்தைப் பரப்ப வந்த மேலைநாட்டார், மறத் தமிழின்பால் மாறாக் காதல் கொண்டு தமிழ் இன்பம் துய்த்தனர். கால்டுவெல், வீரமாமுனிவர் போன்றோரைக் காந்தம்போல் கவர்ந்து இழுத்த பெருமை தமிழ்மொழிக்குத்தானே உண்டு. தன் கல்லறை மீது 'தமிழ் மாணவன்' எனப் பொறித்திட விழைந்த போப்பு பாதிரியார் வெளிநாட்டைச் சேர்ந்தவர் தாமே! வெளிநாட்டினர் மட்டும்தானா தமிழைப் போற்றினர்? நம் நாட்டில் வெளிமாநிலத்தார் கூடத் தமிழ் மொழியின் சிறப்பினை உணர்ந்து போற்றியுள்ளனர். அகில இந்திய எழுத்தாளர் மாநாட்டில் வெளிமாநில அறிஞர் ஹஸ்ரட் சுகர்வர்த்தி, "இந்தியாவிலேயே மொழி என்ற நிலையில் உயர்வின் உச்சத்தை அடைந்துள்ள ஒரே மொழி தமிழ்தான். அதனால், அதனை மிகவும் மதிக்கிறேன். அது வளரவேண்டிய ஒரு மொழி அன்று. கனிந்த முதிர்ச்சியைப் பெற்றுவிட்ட முழுமையான மொழி" என்று, தமிழின் மாண்பினைத் தெள்ளத் தெளிவாக எடுத்து மொழிந்துள்ளார்.

இங்ஙனம் வெளிநாட்டவரும் வெளிமாநிலத்தவரும் வணங்கிப் புகழும் வண்டமிழ் மொழியினை, இருபதாம் நூற்றாண்டுப் 'புதுயுக' மொழியாக வளர்க்க வேண்டியது நம் பொறுப்பாகும். மெய்ஞ்ஞானம் நிறைந்த தமிழ் மொழியை, விஞ்ஞானம் நிறைந்த மொழியாக – அறிவு இலக்கியங்கள் மலிந்துள்ள தமிழ் மொழியை, அறிவியல் நூல்கள் மலிந்துள்ள 'நவீன' மொழியாக ஆக்க வேண்டியது நம் கடமையாகும். அதற்குரிய வழிகளில் ஒன்று, கல்லூரிப் பயிற்று மொழியாக அதனை ஆக்குவதாகும்.

ஏனைய மொழிகளெல்லாம் பயிற்றுமொழி எனும் தகுதியுடன் அவனியில் பவனி வரும்போது, ஆற்றலுள்ள மொழியான தமிழ்மொழிக்கு இன்னும் அத் தகுதியினை 'முழு அளவில்' வழங்காமல் இருத்தல் முறையன்று. டாக்டர் மு.வ. அவர்கள், "காலத்திற்கு ஏற்ற மாறுதல் செய்துகொண்டு முன்னேறுவதே கடமை. தமிழைப் பயிற்சி மொழி ஆக்குவதை நெடுநாள் தள்ளிப்போட முடியாது. என்றேனும் ஒருநாள் அது முழுமை பெற்றே தீரும்" என்று உறுதியுடன் அறுதியிட்டு உரைக்கின்றார். உணர்ந்து செயற்பட வேண்டியது, ஒவ்வொரு தமிழனின் கடமையாகும்.

அமிழ்தத்தைக் கடைந்தால் அதிலிருந்து கிடைக்கும் அரிய சொல்லே 'தமிழ்' என்று போற்றுகின்றார் நாமக்கல் கவிஞர். "இருந்தமிழே உன்னால் இருந்தேன் இமையோர் விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன்" என்றார் தமிழ் உணர்வுமிக்க 'தமிழ்விடுதூது' ஆசிரியர். "தெள்ளுற்ற தமிழமுதின் சுவை கண்டார், இங்கமரர் சிறப்புக் கண்டார்" எனத் தமிழை அமிழ்தமாகச் சுவைத்தார் பாரதியார்.

> **"தமிழுக்கு அமுதென்று பேர் – அந்தத்**
> **தமிழ்இன்பத் தமிழ்எங்கள் உயிருக்கு நேர்"**

என்று தமிழை அமிழ்தமாகவும் உயிராகவும் மதித்தார் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன்.

அமிழ்தமான தமிழை அகத்தில் நினைப்போம்! உயிரான தமிழை உள்ளத்தில் கொள்வோம்! "தமிழ் எங்கள் உயிர்" என்ற உணர்வோடு வாழ்வோம்! உயிர் இன்றேல் உடல் இல்லை! தமிழ் இன்றேல் நாம் இல்லை!! தமிழ் மானம் காப்போம் – நம் தாய்மானம் காப்போம்! எத்தனையோ இலக்கியங்களை ஈன்றெடுத்த நம் முத்தனைய தமிழ் மொழியை, நாம் நெஞ்சாரப் போற்றுவோமாக.

❖

# அண்ணாவும் மாணவ அரும்புகளும்

**பேராசிரியர் மா. செல்வராசன்**



மாட்டு வாலைவிட மூக்கணாங் கயிறு நீளம் குறைவுதான்! ஆனால், மூக்கணாங் கயிற்றைப் பிடித்தால்தான் முரட்டு மாடும் வலிமை அடங்கி வழிக்கு வரும்! பதினைந்து பேர் தி.மு.க.வினர் வெற்றி பெற்றுச் சட்டமன்றம் வந்துவிட்டால் அவர்களால் என்ன செய்ய முடியும் என்று காங்கிரசார் பரிகசிக்கிறார்கள். உண்மையில் காங்கிரசு மாட்டுக்குக் கழகம்தான் மூக்கணாங் கயிறு!

அறிஞர் அண்ணா முதல்முறை சட்டமன்ற உறுப்பினர் ஆனபோது காஞ்சிக்கு அருகில் உள்ள மானாம்பதி (வானவன் மாதேவி என்பது சோழர் காலப் பெயர்) என்னும் எங்கள் ஊரில் அவருக்குப் பாராட்டுக் கூட்டம் ஒன்று நடந்தது. அதில் சிரிப்புக்கிடையே சிந்தனையைத் தூண்டுமாறு அவர் பேசியது சிறிதும் மறக்கவில்லை; பள்ளி மாணவன் ஆன என் உள்ளத்தில் பதிந்துவிட்டது ஆழமாக! அழகிய உவமையும் அது உணர்த்தும் அரிய கருத்தும் மாடு கன்று வளர்க்கும் மக்கள் மனங்களில் வேரூன்றிவிட்டன.

சிற்றூரும் பேரூரும் நகரும் நாடும் என அண்ணா செல்லாத இடம் உண்டா? சொல்லாத கருத்து உண்டா? வெல்லாத நெஞ்சு உண்டா? அவர் பேச்சால் மக்கள் மயங்கினார்கள்; மாணவர்கள் மதிகொண்டார்கள்; மாற்றுக் கட்சியினரோ மருண்டார்கள்; மமதை கொண்டவர்கள் மடங்கினார்கள்!

அண்ணா எனும் உழவன் விதைத்ததெல்லாம் விளைந்தன; அரசியலில் வியந்தார்கள்! ஆனால் நல்ல உழவன் கட்டாந் தரையிலோ, களர் நிலத்திலோ, பாலை வனத்திலோ, பாறைக் கூட்டத்திலோ உழுவதில்லை; உழைப்பதில்லை! நாடாமல் கிடக்கும் நல்ல நிலத்தில் நல்லாறு பாயும் நன்செய்ப் புலத்தில் உழுகிறான்; விதைக்கிறான்; உழைக்கிறான்; விளைக்கிறான்!

பண்பறிந்து மட்டும் அன்று, பருவம் அறிந்து பாடுபடும் நல்ல உழவன்போல் அண்ணா கருத்துமணிகளை விதைத்தார்; கவனமாக நாற்றங்காலை வளர்த்தார்; காலம் அறிந்து நட்டார்; களை சேராமல் காத்தார்; காவிரியாய் நீர் வார்த்தார்; கருகருவெனப் பயிர் செழிக்கக் கதிர்மணிகளைக் களம் சேர்த்தார்!

அண்ணா எனும் அறிவுமிக்க உழவன் ஆராய்ந்து தேர்ந்ததெல்லாம் அரிய மாணவ நிலம்! பச்சையப்பன் கல்லூரியில் படித்தபோது அவர் கற்ற கல்வி, பெற்ற அறிவு, பதவி நாடவோ பணம் தேடவோ அன்று; பைந்தமிழ் நாட்டுப் பாமர மக்களுக்குப் பகுத்தறிவு ஊட்ட! பாட்டாளிக் கூட்டத்தைப் பதப்படுத்த, பண்படுத்த, பயன்படுத்த! அவருக்குப் பயன்பட்ட படைக்கலன்கள் மாணவ மறவர்கள்!

அவருடைய அணிவகுப்பில் ஆயுதம் ஏந்தியவர்கள் இலர்; அறிவு ஏந்தியவர்களே பலர்! எனவே, கல்லூரிகள் களங்கள் ஆயின; பல்கலைக்கழகம் பாசறை ஆயிற்று! மாணவர்களை அடுக்குமொழிப் பேச்சால் மயக்குகிறார் என்று கூக்குரல் இட்டது ஒரு கும்பல்; அரசியலுக்கு இழுக்கிறார் என்று அலறியது ஒரு கூட்டம். ஆனால், பள்ளியிலும் சரி, கல்லூரியிலும் சரி, படிப்பே நாடித் துடிப்பாய்ப் பயின்றவர் அண்ணா. அதேபோல் படித்து முடித்த பிறகே அரசியலில் பங்கேற்கலாம் ஆர்வம் இருந்தால், என மாணவர்களுக்கு அறிவுறுத்தினார்.

"இளமைப் பலி என்னும் கட்டுரை திராவிட நாடு ஏட்டில் வரைந்தவர் இந்த ஊரில் இருக்கிறார்; அவரை நான் பார்க்க வேண்டும்; அழைத்து வாருங்கள்" என்று அவாவிய அண்ணா முன், திருவாரூர்ப் பள்ளிச் சிறுவனாகச் சென்று நின்றார் கலைஞர். அயர்ந்துபோன அண்ணா "இளைஞராக இருப்பீர்கள் என்று எண்ணினேன்; மாணவராக இருப்பீர்கள் என்று நினைக்கவில்லை; கட்டுரை நன்றாகவே இருந்தது கருத்துடன்; ஆயினும் கற்று முடியுங்கள், அதுவரை கட்டுரை அனுப்ப வேண்டாம்" என்று கனிவுடன் சொன்னவர் அண்ணா. படிப்பைப் பாதியில் விட்டுப் பாழாகப் போகவா பாடம் பகர்வார் மாணவர்களுக்கு? அடுத்தவர் தோளில் அமர விரும்பாதவர் அண்ணா; அரசியலுக்கு மாணவர்கள் ஆசைப்பட்டாலும் அணை போட்டவர் அண்ணா என்பது அறிய வேண்டிய உண்மை. அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பயின்றுவந்த இன்றைய பேராசிரியர் – அன்றைய அன்பழகன், மாணவ நெடுஞ்செழியன், மதியழகன் முதலான பலரும் படித்து முடித்துப் பட்டம் பெற்ற பிறகே அரசியலுக்கு அணியம் ஆயினர்; அண்ணா பின் அணிவகுத்தனர்.

இளைஞர்கள் ஒரு நாட்டின் எதிர்காலம் என்ற எண்ணத்தை எழுப்பியவர் அண்ணா! அந்தக் காலத்து இளைஞர்கள் மாணவர்களாக இருந்தார்கள்; மாணவர்கள் சிந்தனையாளர்களாக மாற வேண்டும் என்று மனங்கொண்டார் அண்ணா!

"தமிழ்ச் சமுதாயம் தாழ்ந்தது ஏன்? வீழ்ந்தது ஏன்? தலைதூக்குவது எப்படி? தழைத்தோங்குவது எப்போது? என மாணவர்கள் சிந்திக்க வேண்டும்; திட்டமிட வேண்டும்; செயற்பட வண்டும்; தியாகங்கள் ஏற்க வேண்டும்" என்று பேசினார், எழுதினார் பெரிதாக! வகுப்பறை ஆசிரியர்களைவிட வகுத்துரைக்கும் வல்லமைமிகு ஆசிரியராக அண்ணா வையத்து நிகழ்வுகளை, அதன் வளர்ச்சிகளை, வரலாற்றுத் தழும்புகளை ஏடுகளாக வரைந்து காட்டினார் வருங்கால மேன்மைக்கு!

மாணவர்களை நம்பினார்; மாற்றம் ஏற்படுத்தும் ஆற்றலர்கள் என மதித்தார். மாணவர் கூட்டங்களில் மகிழ்ச்சியுடன் கலந்துகொண்டார். மடைதிறந்த வெள்ளம்போல் கருத்து மழை பொழிந்தார். தடையற்ற பேச்சால் தடைகளைத் தகர்த்தார். பேச்சுக்குத் தடை, எழுத்துக்குச் சிறை எனப் பிறந்தது அரசாணை! ஏச்சுக்கும் வீச்சுக்குமே அஞ்சாதவர், மூச்சுள்ளவரை முழங்குவேன் என்றார். பெருவெள்ளம் பெருகிப் பாய்வது போல் மாணவர் கூட்டம் வேணவாக் கொண்டு விரைந்தது அவர்பின்!

பச்சையப்பன் கல்லூரி ஒரு காலத்தில் கொள்கைப் பாசறையாகப் பளிச்சிட்டது. அண்ணா பயின்ற கல்லூரி என்பதே இளைஞர்களிடம் பேரீர்ப்பை ஏற்படுத்திவிட்டது. படித்தால் பச்சையப்பன் கல்லூரியில்தான் படிப்பு என்று குமரி, நெல்லை, மதுரை, திருச்சி, தஞ்சை, கோவை, சேலம் எனத் திசையெங்குமிருந்து மாணவர்கள் திரண்டனர். கருமான் செய் படை வீடாகக் காட்சியளித்த பச்சையப்பனில் கல்விமானாகப் பேராசிரியர் க. அன்பழகன் கொள்கைவேல் கொடுத்துச் செல்கென விட்டவர்; பேராசிரியர் மு.வ. எழுத்து அக் கல்லூரியைப் பெருமைப்படுத்தியது.

கல்லூரி விடுதியில் பகலுணவின்போது எல்லோர்க்கும் கேட்கும் வண்ணம் பாடல்கள் ஒலிபரப்புவார்கள். எல்லாம் திரையிசைப் பாடல்கள் ஒன்று தவிர! அதுதான், 'அழைக்கின்றார் அழைக்கின்றார் அண்ணா' எனும் அனீபாவின் இடியோசைக் குரலில் எழும் பாட்டு. ஒவ்வொரு நாளும் அப்பாட்டைக் கேட்டுக் கேட்டு உணர்ச்சி பெற்ற மாணவர் கூட்டம் மளமளவென வளர்ந்தது. அவர்களுள் நானும் ஒருவன். என்னைப்போல் நண்பர் அ. இராமசாமி (இன்றைய தமிழ்நாடு மாநில உயர்கல்வி மன்றத் துணைத் தலைவர் ஒருவர்). பள்ளி மாணவனாக இருந்தபோது காஞ்சியில் அண்ணாவைக் கண்டதுண்டு; கேட்டதுண்டு; அவரிடம் கையெழுத்தும் வாங்கியதுண்டு. கண்ணால் தவிர வாயால் பேசிட வழியில்லை. அரைக்காற் சட்டை வயதில் அதுதானே இயலும்? காஞ்சித் தங்கவேலர் தோட்டத்தில் கழகக் கலந்துரையாடல் ஒன்று நிகழ்ந்தது. என்னைப் போன்ற பள்ளிச் சிறுவர்கள் உள்ளே போக வாய்ப்பில்லை. வெளியில் கூடிநின்று போவோர் வருவோரைப் பார்த்துப் பூரித்த காலம் அது. வேலியோரத்து அரும்பு, அண்ணாவொடு பேசவும் ஏன் வாதாடவும் பச்சையப்பன் கல்லூரிக்கு அழைத்துப் பெருமிதம்கொண்ட உறவும் முடிந்தது பின்னாளில்!

1965 இந்தி எதிர்ப்புப் போராட்டம் உலகெலாம் உலுக்கிய ஒன்று – மாணவர் பங்கு மலையாக உயர்ந்தது; வானாக வளர்ந்தது; கடலாக ஆழ்ந்தது; மாபெரும் அறப்போராட்டம் வரலாறாக மாறிவிட்டது. 1938 முதல் இந்தியை எதிர்த்துப் போராடிக் கொண்டிருந்த அண்ணா 1965இல் மாணவர் போராட்டத்தை ஆதரித்தார். கல்வி நிலையங்கள் மூடவும் சிறைக்கூடங்கள் திறக்கவும் காரணமான போராட்டத்தில் துடித்தெழுந்த மாணவர்களை, இளைஞர்களைத் துப்பாக்கிகள் துளைத்தபோது வெடித்தெழுந்து அவர்கள் விழுப்புண்களோடு விழுந்தபோது கலங்கிப்போன அண்ணா கண்ணீர் வேண்டுகோள் விடுத்தார். கைவிடுங்கள் போராட்டத்தை என்று! இளம் பிஞ்சுகள் சிதறி விழுவது அவர் இதயத்தில் இரத்த ஊற்றை மிகுதியாக்கிற்று!

சென்னை அரசினர் பொது மருத்துவமனையில் ஒரு முறை தங்கியிருந்தார் அண்ணா உடல் நலக் குறைவால்! ஒருநாள் முன்னிரவு 7 மணிக்குப் பச்சையப்பன் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த நாங்கள் நால்வர் அவர் தங்கியிருந்த சிறப்புப் பகுதிக்குப் பார்க்கச் சென்றோம். வழக்கம்போல் காவலர்கள் உள்ளேவிட மறுத்தனர். அவர்களுடன் வாதிட்டுக் கொண்டிருந்தபோது எதிர்பாராத விதமாகக் கைகளைக் கழுவுவதற்கு அண்ணா தாழ்வாரம் வந்தவர் எங்களைப் பார்த்ததும் உள்ளே விடுமாறு கையசைத்தார். உயரே பறப்பதுபோல் உவகை கொண்டோம். பழங்களைக் கொடுத்துவிட்டுப் பச்சையப்பன் கல்லூரி முத்தமிழ் விழா பற்றிப் பகர்ந்தேன். "நாளை சட்டமன்றம் நடக்கும்போது

அவைத் தலைவர் அறைக்குப் பத்து மணி அளவில் வா; அப்போது சொல்கிறேன்'' என்றார். "அண்ணா! எங்களை உள்ளே விட மாட்டார்களே? எப்படி வரமுடியும்?'' என்று கேட்டேன். வா பார்க்கலாம் என்றார்.

மறுநாள் பத்து மணிக்குத் தலைமைச் செயலகப் பேருந்து நிறுத்தத்தில் இறங்கினோம். எங்களுக்குப் பழக்கமான உளவுத்துறை ஆய்வாளர் ஒருவர் கையைப் பிடித்தார்; அண்ணா அழைத்து வரச்சொன்னார் என்றதும், எப்படித் தெரியும் என்றேன். எங்களுக்கு ஆணை என்றார் அவர். ஆகா அண்ணாவே அண்ணா! மருத்துவமனையில் நேற்றுச் சொன்னதை மறவாமல் இன்று நிறைவேற்றி இருக்கிறாரே; முன்னேற்பாடு செய்திருக்கிறாரே, மாணவர்கள் மீது எவ்வளவு அன்பு, மதிப்பு என்று அயர்ந்து வியந்து மகிழ்ந்து நெகிழ்ந்து போனோம்.

அவைத் தலைவர் அறையில் அண்ணா இருந்தார். முத்தமிழ் விழா மலரில் அண்ணாவின் எழுத்தோவியம் ஒன்று இடம்பெற வேண்டும் என்று ஆவல் கொண்டோம்; ஆனால், கல்லூரி மலருக்கு அண்ணாவை எழுதுமாறு கட்டாயப்படுத்தலாமா? கடும் பணிகளுக்கிடையே தொல்லையாகும் எனக் கருதிக் கொண்டோம். தம்பிக்கு அண்ணா எழுதிய கடிதங்களில் ஒன்றைத் தேர்ந்தெடுத்து வெளியிட அவரிடம் இசைவை வேண்டலாம் என்று முடிவு செய்தோம். இந்தக் கடிதத்தை வெளியிட இசைவு தாருங்கள் என்று கையிலிருந்த புத்தகத்திலிருந்து ஒரு தலைப்பை எடுத்துக் காட்டினேன். உனக்குப் பிடித்த பொருள் பற்றியது என்பதனால் கேட்கிறாயா என்று சிரித்துக் கொண்டே சொன்னார். ஆமாம், அண்ணா என்றேன். சரி, போட்டுக்கொள் என்றார். கிளிக்குப் பச்சை பூசுவதா எனும் தலைப்பில் தம்பிக்கு அண்ணா தீட்டிய கடிதம் அது. தனித்தமிழின் அருமையையும் தமிழிலக்கியப் பெருமையையும் எடுத்துரைக்கும் சான்றுகள் மிக்க ஒப்பற்ற ஆய்வு மடல் அது.

மாணவர்களைச் சந்திப்பதிலும் அவர்களுடன் உரையாடுவதிலும் மட்டிலா மகிழ்ச்சி கொள்பவர் அண்ணா; மணிக்கணக்காக மாணவர்கள் பேசுவதை, சமயத்தில் பிதற்றுவதை ஆர்வமாகக் கேட்டுக் கொண்டிருப்பார். இரண்டாம் உலகத் தமிழ் மாநாடு நடைபெற்றுக் கொண்டிருந்த 1968 சனவரித் திங்கள் 5ஆம் நாள் தமிழ்நாடு முழுவதும் இருந்து வந்திருந்த ஐம்பதுக்கும் மேற்பட்ட மாணவர் தலைவர்களுடன் இரவு 11 மணி முதல் பின்னிரவு 3 மணி வரை கலந்துரையாடினார். இறுதியில் அண்ணா சொன்னபடி இந்தி எதிர்ப்புப் போராட்டத்தைக் கைவிடுவதாகக் கூறிக் கலைந்தனர். வேகமாகப் பேசியவர்கள், விடுதலை பெறாமல் வீடு திரும்புவதில்லை என வீரம் காட்டியவர்கள் அண்ணாவின் பேச்சில் அமிழ்ந்து விட்டார்கள். அடங்கிவிட்டார்கள். அண்ணா சொன்னால் ஆட்படுவோம் என்று ஆரவாரம் செய்தார்கள். அண்ணாவிடம் அப்படி என்ன ஆளுமையோ, அவர் பார்வையிலே பணிந்தார்கள்; பேச்சிலே இசைந்தார்கள். கையும் காலும் தூக்கும் ஆடிப் பாவை போல் ஆனார்கள்!

நிலையான தீர்வு அன்றைய கலந்துரையாடலில் நேரவில்லையே என்று என் நெஞ்சம் வருந்தியது. அப்போது கல்லூரிகள் மூடப்பட்டிருந்தன. காரணம் இந்தி எதிர்ப்புப் போராட்டத்தைத் தவிர்க்க. பொங்கலுக்குப் பிறகு கல்லூரி திறக்கும்போது – போராட்டம் தொடரும்; பச்சையப்பன் கல்லூரி தொடங்கும் என்று ஒரு நாள் முரசொலி செல்வம் அவர்களிடம் (சனவரி 12, மாலை 5 மணி அளவில்) தொலைபேசியில் உரையாடும்போது உறுதியாக உரைத்தேன். அன்று இரவு 9 மணிக்குக் கல்லூரி விடுதியில் தூங்கிப் போன என்னைத் தொட்டு எழுப்பினர்; நண்பர்கள் முரசொலி செல்வம், துரைமுருகன் (இன்றைய அமைச்சர்) ஆகிய இருவரும், "அண்ணா அழைத்துவரச் சொன்னார், உடனே கிளம்புங்கள்'' என்றனர். என்னையா, எதற்காக, இந்த நேரத்திலா என்று தொடுத்த வினாக்களுக்கு விடையிறுத்தனர், ஆமாம் என்று! மாணவ நண்பர் க.அ. நடராசன் என்பவரைத் துணைக்கு அழைத்துக் கொண்டு வந்திருந்த வாடகை ஊர்தியில் புறப்பட்டோம். அண்ணாவோடு அவர் இல்லத்தில் கலைஞர், நாவலர், ஆசைத்தம்பி, மதி ஆகியோர் இருந்தனர்.

"போராட்டத்தைக் கைவிடுவதாக ஒப்புக்கொண்டு போனபின், மீண்டும் தொடங்குவதாகச் சொன்னாயாமே'' என்று அண்ணா தொடங்கினார். "ஆமாம் அண்ணா! அன்று மாணவர் தலைவர்கள் தங்களை மறுத்துப் பேசக் கூடாது என்று போய்விட்டனர் – நிலையான தீர்வின்றேல் போராட்டத்தை நிறுத்தக் கூடாது என்று நினைக்கின்றனர். உண்மை நிலை இதுதான்'' என்றேன். 1½ மணிநேரம் உரையாடல் வளர்ந்தது – அண்ணா வருத்தமும் சினமும்கூட அடையுமாறு வாதாடி விட்டேன். "இவ்வளவு பேசுகிற நீ எதிர்காலத்தில் அரசியலிலா இருக்கப் போகிறாய், வேலைக்குப் போய்விடுவாய், இதையெல்லாம் விட்டுவிட்டு! என் செயலாளர் சொக்கலிங்கம் போல'' என்றார் அண்ணா. "இல்லை அண்ணா, செல்வராசு அப்படி அல்ல, நம்மோடுதான் இருப்பார்'' என்று எனக்காக இடையில் பரிந்து பேசினார் கலைஞர். அவரைத் தவிர வேறு யாரும் குறுக்கிட்டுப் பேசவில்லை.

இரண்டு நாள் கழித்து, "என்ன தசரதன், உங்கள் மாணவன் ஒரே பிடிவாதம் பிடிக்கிறான்; போராட்டம் நடத்துவேன் என்கிறான்; சொன்னால் கேட்க மாட்டேன் என்கிறான்; நல்ல மாணவன் என்று சொன்னீர்களே" என்று பச்சையப்பன் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராக இருந்த மா.கி. தசரதன் அவர்களிடம் அண்ணா கேட்டிருக்கிறார்.

1. ஒருநாள் சட்டமன்றத்தைக் கூட்ட வேண்டும். தமிழ், ஆங்கிலம் என்னும் இருமொழிக் கொள்கை அரசின் கொள்கை ஆதல் வேண்டும். இந்தி எந்த வகையிலும் தமிழ்நாட்டில் இடம் பெறுவதைத் தமிழ்நாடு அரசு தடுத்தல் வேண்டும்.

2. அடுத்து ஐந்து ஆண்டுகளில் கல்லூரிகளிலும் பல்கலைக்கழகங்களிலும் தமிழே எல்லா நிலைகளிலும் பயிற்று மொழி ஆதல் வேண்டும்.

3. அடுத்த ஐந்து ஆண்டுகளுக்குள் நிருவாகத்திலும், உயர்நீதிமன்றம் உட்பட்ட எல்லா நீதிமன்றங்களிலும் முழுமையும் தமிழே செயல்மொழி ஆதல் வேண்டும்.

இந்த மூன்று கோரிக்கைகளைக் குறித்தே நீண்ட கலந்துரையாடல் நெடுநேரம் சென்றது.

அண்ணா ஆராய்ந்திருப்பார்; அரசியல் வல்லுநர்களின் கருத்து அறிந்திருப்பார். 23.01.2008 ஒருநாள் சிறப்புச் சட்டமன்றம் கூடும் என்று அறிவிப்பு வந்தது. அன்று நடைபெற்ற சட்டமன்றத்தில் மேற்காணும் மூன்று கோரிக்கைகள் உள்ளடங்கி முழுமை பெறுமாறு ஒருமனத்துடன் தீர்மானங்கள் நிறைவேற்றினார். யார் சொல்கிறார் என்பதைவிட என்ன சொல்கிறார் என்பதையே அண்ணா எப்போதும் கவனிப்பார்; கருத்து உகந்தது என்றால் கட்டாயம் ஏற்பார்.

**எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்**

**மெய்ப்பொருள் காண்பது அறிவு.**

எனும் குறள் அண்ணாவிடம் இலக்கணமாகவே இருந்தது.

இவற்றைப்போல் எத்தனையோ நிகழ்ச்சிகள் என்னோடு தொடர்புடையவை நினைவில் நிற்கின்றன. பச்சையப்பன் கல்லூரி நிறுவனர் நாள் விழாவில் கோரிக்கைப் பட்டியல் ஒன்றை நான் படித்துக் கொடுத்தபோது ஒவ்வொன்றுக்கும் அண்ணா தந்த மறுமொழியே அன்றைய அருமையான உரையாயிற்று. அவற்றுள் இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் ஈடுபட்டுப் பேராசிரியர் பணி பறிக்கப்பட்ட தமிழறிஞர் இலக்குவனார் அவர்களுக்கு மாநிலக் கல்லூரியில் தலைமைத் தமிழ்ப் பேராசிரியர் பணி வழங்கல் வேண்டும் என்பது ஒன்று. இரண்டு மாதங்களுக்குப் பின் அப்பணியை அண்ணா அவருக்கு வழங்கினார் என்பது வரலாறு.

அவலம் என்பதற்கு உலக வரலாற்றில் அடையாளம் ஒன்று காட்ட வேண்டுமானால் அண்ணாவிற்கு ஏற்பட்ட முடிவுதான் அது! புகழ் முகட்டிற்குப் போய்க் கொண்டிருந்த அண்ணாவிற்குப் புற்றுநோய் என்றது பூமி தாங்க முடியாத ஒரு புயல், புவிநடுக்கம்! கல் கரையும் என்று கற்பனை நயத்திற்காகக் கவிதை தீட்டுவர். ஆனால், அண்ணாவின் மறைவால் கல் கரைந்தது என்பது கண்கண்ட காட்சி! கடல் இரைந்தது; காரணம் இதுதானோ! வான் அழுதது; இதற்குத்தானோ! அறியாதவர் யாருண்டு அண்ணாவை இந்த அகிலத்தில்; அழாதவர் யாருண்டு அண்ணாவின் மறைவில்!

கழகம் ஒரு குடும்பம் என்றார் அண்ணா. தந்தை பெரியார், அண்ணன் – அண்ணா; தம்பியர் – தொண்டர், மாணவர், மனங்கவர்ந்த மழலையர்; வளரும் பயிர் என்றே மதித்தார்; அன்பு செய்தார்; அரவணைத்தார்; அறிவுப் பால் ஊட்டினார். மாணவர்களைச் சொந்த மழலைகளாக, மக்களாகக் கருதி மகிழ்ந்தார் அண்ணா! அந்த மாணவர்களின் குருதியையும் ஏற்றுக்கொண்டு மறையாமல் வாழவில்லை என்பதே பேரவலம்! ஏனெனில், அண்ணா எப்போதும் எதையும் எவரிடமிருந்தும் ஏற்பதில்லை; அந்த அளவு எளிமை அவர் வலிமை என்பதே ஐயமற்ற உண்மை!

**மாணவ அரும்புகள் மலர்ந்துகொண்டே இருக்கும்!**

**அண்ணா எனும் மணம் பரவிக்கொண்டே இருக்கும்!** ❖



# பாரதி படைப்பில் மேனாட்டுச் சிந்தனைகள்

**முனைவர் திருமதி சாரதா நம்பி ஆரூரன்**



பாரதியைத் தேசிய மகாகவி என்கிறோம். பாரத நாட்டின் அடிமைத்தளை நீங்க வேண்டுமென்று எண்ணுவதோடு மட்டும் அவர் நினைக்கவில்லை. உலக மக்கள் அனைவரின் நலம் பற்றி நினைத்தார்.

> **"கூட்டி மானுடச் சாதியை ஒன்றெனக்**
> **கொண்டு வையம் முழுதும் பயனுறப்**
> **பாட்டிலே அறங்காட்ட"**

விழைந்த உலக மகாகவி அவர்.

"நான் சாதிபேதத்துக்கு நண்பன் அல்ல; இந்தியர்கள் எல்லோரும் அல்லது இந்துக்கள் எல்லோரும் ஒரே சாதி என்ற சாதாரண இங்கிலீஷ் படிப்பாளிகளின் கொள்கையை நான் ஆதரிக்கவில்லை. உலகத்து மனிதர்கள் எல்லோரும் ஒரே சாதி. 'வசுதைய குடும்பம்' என்ற பத்ருஹரியின் கொள்கையைத் தழுவியுள்ளேன்" என்கிறார்.

இப்படிப்பட்ட உலகந் தழுவிய பார்வை பாரதிக்கு இருந்ததால்தான், உலகின் பல நாடுகளிலும் சர்வாதிகாரம் ஒழிந்து மக்களாட்சி மலர்ந்தபோது அதை வாழ்த்திப் பாட அவரால் முடிந்தது!

பைரன் கிரேக்க நாட்டின் உரிமைக்காகப் பாடினார். பாரதியோ உலகெங்கிலும் உள்ள அடிமை மக்கள் விடுதலை பெற வேண்டுமென விரும்பினார்.

1906ஆம் ஆண்டில் ருஷ்யாவைப் பற்றி இந்தியா பத்திரிகையில் ஐந்து கட்டுரைகள் எழுதினார் பாரதி.

"ஜார் சக்கரவர்த்தியின் அநீதிச் சிங்காதனம் சிதைந்து, கொடுங்கோன்மை துண்டு துண்டாகக் கழிவு பெற்று வரும் ருஷியாவில் அமைதி நிலைக்க வழியில்லை" (இந்தியா 30.06.1906)

"ருஷ்ய ஜனங்களாகிய ஆடுகள் மீது அரசேற்றும் கடுவாய் அரசனும் அவனது ஓநாய் மந்திரிகளும் நெடுங்காலம் தரித்திருக்க மாட்டார்கள். அவர்களின் இறுதிக்காலம் வெகுசமீபமாக நெருங்கிவிட்ட தென்பதற்குத் தெளிவான பல சின்னங்கள் புலப்படுகின்றன. நீதி ஸ்வரூபியாகிய சர்வேசனது உலகத்திலே அநீதியும் ருஷ்ய ஓநாய்த் தன்மைகளும் நிலைக்கமாட்டா" என்கிறார். (இந்தியா 21.07.1906)

1917ஆம் ஆண்டு ருஷ்யாவிலே மாபெரும் புரட்சி தோன்றியது. ஜார் மன்னனின் கொடிய ஆட்சி ஒழிந்தது. மக்கள் புரட்சி வெற்றி கண்டது!

> **"இரணியன்போ லரசாண்டான் கொடுங்கோலன்**
> **ஜாரெனும் பேரிசைந்த பாவி"**

எனவும்,

> **"தருமந் தன்னைத் திரணமெனக்**
> **கருதி விட்டான் ஜார் மூடன்"**

எனவும் வசைபாடுகிறார். இமயமலை வீழ்ந்ததுபோல வீழ்ந்துவிட்டான் ஜாரரசன்; கலி வீழ்ந்தது; கிருதயுகம் எழுந்தது என்று பரவசப்படுகிறார்.

ருஷ்ய நாட்டில் குடிமக்கள் சொன்னபடி குடிவாழ்வு மேன்மையுறக் குடிமை நீதி எழுந்தது; குடியரசு மலர்ந்தது; இந்த முடிவைப் பத்தாண்டுகளுக்கு முன்பே அதாவது 1906லேயே தம் தீர்க்க தரிசனத்தால் கண்டு கூறினார் பாரதி!

பாரதம் விடுதலையடைவதற்கு முன்பே 'ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோம்' என்று ஆடிப் பாடியவர் அல்லவா?

ருஷ்யப் புரட்சியாளர் மீது அவர் கொண்ட அன்பும் தோழமையும் வாழ்த்தாக மலர்ந்தது!

> **"மாகாளி பராசக்தி உருசிய நாட்**
> **டினிற் கடைக்கண் வைத்தாள் ஆங்கே**
> **ஆகாவென் றெழுந்தது பார் யுகப்புரட்சி**
> **கொடுங்கோலன் அலறி வீழ்ந்தான்"**

என்று துள்ளிக் குதித்துப் பாடுகிறார்.

உலக வரலாற்றில் ருஷ்ய புரட்சி ஒரு மாபெரும் சம்பவமாகவும் மனித சமுதாயத்தின் மலர்ச்சிக்கு அது ஒரு திருப்புமுனையாகவும் பாரதிக்குத் தோன்றுகிறது. அதனால்தான் ருஷ்யப் புரட்சி என்று சொல்லாமல் 'யுகப்புரட்சி' என்கிறார்.

ருஷ்ய மக்களின் விடுதலையிலே ஆசிய மக்களின் விடுதலையைக் கண்டார் பாரதி. ருஷ்யப் புரட்சியின் எதிரொலி ஏனைய நாடுகளிலும் கேட்கும். அதனால் உலகத்துக்கே நன்மை ஏற்படப் போகிறது என்கிறார்.

"பூமியில் நல்ல யுகம் தோன்றப் போகிறது. மனித சாதி முழுவதிற்கும் விடுதலை உண்டாகப் போகிறது. ருஷ்யாவில் ஏற்பட்ட புரட்சியானது இனிவரப் போகின்ற நற்சமுதாயத்தின் நல் அடையாளங்களில் ஒன்று. பூமி தூளாகாது. மனிதர்கள் ஒருவருக்கொருவர் செய்து வரும் அநீதி தூளாகும்" என்று உறுதியாகக் கூறுகிறார்.

விடுதலை பெற்ற இந்திய சமுதாயம் எப்படியிருக்க வேண்டும் என்பதை ருஷ்யப் புரட்சி பாரதிக்கு உணர்த்திற்று.

**"முப்பது கோடி ஜனங்களின் சங்கம்**
**முழுமைக்கும் பொதுவுடைமை**
**ஒப்பில்லாத சமுதாயம் உலகத்துக்கொரு புதுமை"**

என்கிறார். "பாரத சமுதாயம் பொதுவுடைமைச் சமுதாயமாக மலர வேண்டும் என்ற சிந்தனையை அவர் பெற்றது ருஷ்யப் புரட்சியால்தான்" (மகாகவி பாரதியார் புதுமைக் கண்ணோட்டம் – சத்திதாசன் சுப்பிரமணியன் – பக். 215)

உலகில் எந்த நாடு விடுதலையடைந்தாலும் மகிழும் பாரதி, ஒரு நாடு நியாயமற்ற முறையில் அடிமைப் படுத்தப்படும்பொழுது அதை எதிர்த்துக் குரல் கொடுக்கிறார்.

ஜெர்மனியின் தலைவனான கெய்சர் பெரும் படையைத் திரட்டிக் கொண்டு வந்து பெல்ஜியத்தை முற்றுகையிடுகிறான். சிறிய நாடான போதிலும் பெல்ஜியம் ஜெர்மனியுடன் எதிர்த்துப் போராடுகிறது. ஆனால் தோல்வியடைகிறது.

பெல்ஜியத்தின் தன்மான உணர்வும், வீரமும் பாரதியைக் கவர்கின்றன. ஒவ்வொரு நாடும் தன் சுதந்திரத்திற்காகப் பெல்ஜியத்தைப் போலவே போராட வேண்டுமென்கிறார்.

**அறத்தினால் வீழ்ந்து விட்டாய்**
**அன்னியன் வலிய னாகி**
**மறத்தினால் வந்து செய்த**
**வன்மையைப் பொறுத்தல் செய்வாய்!**
**முறத்தினால் புலியைத் தாக்கும்**
**மொய்வரைக் குறப்பெண் போலத்**
**திறத்தினால் எளிமை யாகிச்**
**செய்கையால் உயர்ந்து நின்றாய்!**

என்று வீழ்ந்துவிட்ட பெல்ஜியத்தைப் பாராட்டி வாழ்த்துகிறார்.

அயர்லாந்து நாட்டுக்குப் பிரிட்டிஷ்காரர்கள் சுதந்திரம் கொடுக்க மறுப்பது குறித்து 1920இல் பாரதி ஒரு கட்டுரை எழுதினார். அயர்லாந்துக்குச் சுதந்தரம் கொடுத்தால்கூட, கடற்கரைத் துறைமுகங்களின் கட்டுப்பாட்டைத் தாங்களே வைத்துக் கொள்ளப் போவதாக இங்கிலாந்து மந்திரி லாயட் ஜார்ஜ் ஓர் அறிக்கை வெளியிட்டார். அதைக் கேலி செய்து பாரதி கூறுகிறார்.

"அயர்லாந்து இறுகப் பிடித்துக் கொண்டிருக்கும் கைப்பிடியை நெகிழவிடப் போவதில்லையென்று மிஸ்டர் லாயட் ஜார்ஜ் சொல்லுகிறார்.

இங்கு, 'மீதெழும் மொக்குளன்ன யாக்கையை விடுவதல்லால் சீதையை விடுவதுண்டோ இருபது திண்தோள் உண்டாக' என்று இராவணன் சொல்லியதாகக் கம்பர் எழுதியிருக்கின்ற வரிகள் எனக்கு ஞாபகத்துக்கு வருகின்றன. இராவணனுடைய கதி மிஸ்டர் லாயட் ஜார்ஜுக்கு வரக்கூடாதென்று நான் மனப்பூர்வமாகக் கடவுளை வேண்டுகிறேன்" என்கிறார்.

சீதையை விரும்பிய இராவணனுடன் அயர்லாந்தை விரும்பிய லாயட் ஜார்ஜை ஒப்பிட்டுக் கூறுவது நகைப்பைத் தருகிறது.

ரஸத்திரட்டு என்ற பகுதியில் அயர்லாந்தின் உள்நாட்டு விவகாரம் குறித்துப் பாரதி எழுதியுள்ள கட்டுரை அவருடைய மேனாட்டு அரசியல் ஞானத்தை விளக்கும். அதனுடன் அவர் பயன்படுத்தும் உவமைகள், பழமொழிகள், வாழைப்பழத்தில் ஊசியேற்றுவது போன்ற வார்த்தைகள், நையாண்டிச் சொற்கள் அனைத்தும் இவரது அரசியல் கட்டுரைகளுக்குச் சுவை கூட்டுகின்றன.

1906ஆம் ஆண்டில் மக்கள் பிரதிநிதிகளை வைத்து ஆட்சி நடத்தும் மேல்நாட்டு முறையைச் சீன நாட்டில் கொண்டு வருவது குறித்து ஆலோசனை நடந்தது. இச்செய்தி பாரதிக்கு மிக்க மகிழ்ச்சியளித்தது. சீன நாட்டின் விழிப்புணர்ச்சியால் கீழ்த்திசை நாடு முழுவதும் உன்னத நிலைக்கு வருமென்கிறார்.

ஆனால் இடையில் சீன நாட்டுச் சக்கரவர்த்தி, "தேச ஜனங்கள் பக்குவநிலை அடைந்தவுடனே பிரதிநிதியாட்சி முறையை ஏற்படுத்தத் தான் தயாராக இருப்பதாக ஓர்

அறிக்கை வெளியிட்டார். அதைப் படித்த பாரதி "சுயாதீனம் கொடுத்துத்தான் ஜனங்களைச் சுயாதீனத்துக்குத் தகுதியாக்க வேண்டும். அவர்கள் தகுதியடையும் வரை பார்த்திருந்து பிறகு கொடுக்கலாம் என்பது மூடத்தனமான யோசனை. நீச்சுத் தெரிந்த பிறகுதான் தண்ணீரில் இறங்கலாமென்பது எவ்வளவு மடைமை?" என்று பொருத்தமான உவமை மூலம் கேட்கிறார். (பாரதி தரிசனம் – முதற்பாகம்)

1907இல் பாரசீகம் தேசத்திலும் ஜப்பானிலும் அடுத்தடுத்துப் பிரதிநிதி ஆட்சி முறைமை உருவாயிற்று. பாரதி கூறுகிறார்: "கீழ்த்திசை நாடுகள் எல்லாம் ஒன்றன்பின் ஒன்றாக அபிவிருத்தியடைந்து கொண்டு வருகின்றன. இந்தியாகூட பிரதிநிதியாட்சி வேண்டு மென்கிறது. சும்மா சொல்வது மட்டுமா? சீக்கிரம் பெற்றுவிடவும் செய்யும் என்று தோன்றுகிறது. ஸர்வலோக நாயகர்களாகிய வெள்ளை ஜனங்களுக்கு இவ்வாறு அடிக்கடி துக்கங்கள் நேர்ந்து வருவது பற்றி நாம் மிகவும் அனுதாபம் தெரிவிக்கின்றோம்". (பாரதி தரிசனம் – இரண்டாம் பாகம்) என்று ஆங்கிலேயர்களைக் கேலி செய்து எழுதுகிறார்.

அவர் எழுதியது போலவே சுய ஆட்சியை நாம் பெற்றோம். அவருடைய தீர்க்க தரிசனம் நம்மை வியப்பில் ஆழ்த்துகிறது!

இதுவரை ருஷ்யா, பெல்ஜியம், சீனா, பாரசீகம், ஜப்பான் போன்ற மேனாடுகளின் அரசியலைப் பற்றிப் பாரதியின் கருத்துகளைக் கண்டோம்.

பொருளாதாரத் துறையிலும் அவர் பல நாடுகளை ஒப்பிட்டு ஆராய்கிறார். செல்வம் என்ற தலைப்பில் ருஷ்யாவில் கூட்டுறவுக் கொள்கையை விளக்கி அக்கொள்கை இந்தியாவில் ஏன் பரவவில்லை என்பதை நுட்பத்துடன் விளக்குகிறார்.

"லண்டன் நகரத்தில் பிச்சைக்காரனைப் போலீஸ்காரன் பிடித்துக் கொண்டு போவான். பிச்சை எடுத்த குற்றத்திற்காக மாஜிஸ்டிரேட் தண்டனை விதிப்பார். நமது தேசத்தில் 'தேஹி' என்று கேட்பவனுக்கு 'நாஸ்தி' என்று சொல்கிறவனை எல்லோரும் சண்டாளன் என்று தூஷிப்பார்கள்" என்கிறார். (பாரதியும் உலகமும் – பெ. தூரன், பக். 80)

பிச்சைக்காரனைச் சோம்பேறி என்று திட்டுகிறோம். பிச்சைக்காரன் மாத்திரம்தானா சோம்பேறி? பணம் வைத்துக்கொண்டு வயிறு நிறைய தின்று தின்று யாதொரு தொழிலும் செய்யாமல் தூங்குபவனும் சோம்பேறிதானே? அவனையல்லவா முதலில் திருத்தம் வேண்டும்?" என்கிறார்.

ஏழைகள் செய்யும் அநியாயம் குறைவு. செல்வர்கள் செய்யும் அநியாயம் அதிகம். இதைக் கருதியே பரூதோம் என்ற பிரெஞ்சு தேசத்து அறிஞர் 'உடைமையாவது களவு' என்றார்.

முதலாளிகளின் உடைமைகளையும், நிலச் சொந்தக் காரர்களிடமிருந்து பூமியையும் வலுக்கட்டாயமாகப் பிடுங்கித் தேச உடைமையாக்கும் கொள்கை ருஷ்யாவில் வெற்றி பெற்றதற்குப் பாரதி கீழ்வரும் காரணத்தைக் கூறுகிறார். "நெடுங்காலமாகவே ருஷியா தேசத்தில் ஆட்சி புரிவோரின் நிகரற்ற கொடுங் கோன்மையாலும், அநீதங்களாலும், செல்வர்களின் குரூரத் தன்மையாலும் பல இராஜாங்கப் புரட்சிகள் நடந்து வந்திருக்கின்ற படியால் இந்த மாறுதல் அங்கு அமைப்பது சுலபமாயிற்று" என்கிறார் (பாரதியும் உலகமும், ப. 94).

கொலையாளிகளை அழிக்கக் கொலையைத்தான் கைக்கொள்ள வேண்டும். அநியாயம் செய்வோரை அநியாயத்தால் அடக்க வேண்டுமென்று லெனின் கூறுவது முற்றிலும் தவறான கொள்கை என்கிறார் பாரதி.

"கொலை, கொலையை வளர்க்குமே ஒழிய, அதை நீக்க வல்லதாகாது. அநியாயம் அநியாயத்தை விருத்தி பண்ணுமேயொழியக் குறைக்காது. பாவத்தைப் புண்ணியத்தாலேதான் வெல்ல வேண்டும். பாவத்தைப் பாவத்தால் வெல்லுவோமென்பது அறியாதவர் கொள்கை. அதர்மத்தைத் தர்மத்தால் வெல்ல வேண்டும். தீமையை நன்மையாலேதான் வெல்ல வேண்டும்; கொலையையும், கொள்ளையையும் அன்பினாலும் ஈகையாலும்தான் மாற்ற முடியும்" என்கிறார்.

ருஷ்யாவிலும்கூட கூட்டுறவுக் கொள்கை நிலைத்து நிற்கும் என்ற நம்பிக்கை பாரதிக்கு இல்லை.

இனிப் பாரதியை ஒரு கவிஞனாகக் காண்போம். வால்ட் விட்மன் என்ற மேனாட்டறிஞன் கவிஞர்களின் கடமையைப் பற்றிக் கூறுகிறான். "இல்லாததைத் தந்து இருப்பதைச் சரியானபடி உபயோகப்படுத்துபவன் கவிஞனே. தடுக்க வேண்டியதைத் தடுத்துப் புதிய விதி தருபவனும் கவிஞனே" என்றார் வால்ட் விட்மன். விட்மனை நன்றாகப் பயின்று அறிந்த பாரதி தமிழும் தமிழரும் வாழும் வகையைக் கூறுகிறார்.

மெத்த வளரும் மேற்கத்திய கலைகளோடு போட்டியிடுமளவுக்குத் தமிழ் உயர வேண்டும். இதற்கான முயற்சிகளில் ஈடுபடாமல் பாமரராய், விலங்குகளாய் உலகனைத்தும் இகழ்ச்சி சொலத் தமிழர் வாழும் நிலைகண்டு கொதிக்கிறார். மேனாட்டாரின் புத்தம் புதிய கலைகளையும் சாத்திரங்களையும் தமிழில் கொண்டு வரவேண்டும். பழங்கதைகளால் பெருமை இல்லை என்கிறார்.

"பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்
தமிழ்மொழியிற் பெயர்த்தல் வேண்டும்"

என்கிறார்.

'தமிழில் சாஸ்தர பாஷை' என்ற கட்டுரையில் கூறியதாவது:

"பஞ்ச பூதங்களின் இயற்கையைப் பற்றின ஆராய்ச்சி களிலே, நம்மைக் காட்டிலும் ஐரோப்பியர் முன்னே நிற்பது தெரிந்த விஷயம். ஆதலால் ஐரோப்பாவில் வழங்கும் லௌகிக சாஸ்திரங்களைத் தமிழில் எழுத வேண்டும்" என்கிறார் (பாரதியும் தமிழகமும் – பெ. தூரன் ப. 63).

மிஸ்டர் ஆர்ச்செர் என்பவர் இலண்டன் பத்திரிகையில் கல்வி குறித்து எழுதும்போது "இங்கிலாந்திலே கல்விக்கு மூலாதாரமாக வசன காவியங்களையும், செய்யுட் காவியங்களையும் வைத்திருப்பது சரியில்லை. ஸயன்ஸ் (இயற்கை நூல்) படிப்புத்தான் மூலாதாரமாக நிற்க வேண்டும்" என்கிறார். மிஸ்டர் ஆர்ச்செர் கூறியதைப் பாரதி அப்படியே ஏற்றுக்கொள்கிறார். "கற்பனையும் அலங்காரமும் எனக்குக்கூட மிகவும் பிரியந்தான். ஆனால், நெல் எப்படி விளைகிறது? என்பதைக் கற்றுக்கொடுக்காமல் அன்மொழித் தொகையாவது யாது? என்று படிப்புச் சொல்லிக் கொடுப்பதை நினைக்கும்போது கொஞ்சம் சிரிப்புண்டாகிறது. அன்மொழித் தொகை சிலரைக் காப்பாற்றும்; ஊர் முழுதையும் காப்பாற்றாது. நெல்லு தான் ஊர் முழுதையும் காப்பாற்றும். அன்மொழித் தொகையைத் தள்ளிவிட வேண்டுமென்று நான் சொல்லவில்லை. ஆனால், அன்மொழித் தொகையைப் பயிர் செய்து நெல்லை மறந்துவிடுவது சரியான படிப்பில்லையென்று சொல்லுகிறேன். அவ்வளவுதான்" என்கிறார் (பாரதி தமிழ் – 'கிச்சடி' – ப. 146).

தமிழ் வளர மொழிபெயர்ப்பு நூல்கள் தேவை. அறிவு வளர அறிவியல் கல்வி தேவை என்பதைத் தெளிவாகக் கூறுகிறார்.

தமிழகத்துக்குள்ளேயே அல்லது இந்தியாவுக் குள்ளேயே படித்துக் கொண்டிருந்தால் பயனில்லை. நம்மைக் காட்டிலும் வளர்ந்துள்ள தேசங்களுக்குச் சென்று அறிவைப் பெருக்கி வரவேண்டும் என்று 'ஜப்பான் தொழிற்கல்வி' என்ற கட்டுரையில் எழுதுகிறார் (பாரதி தமிழ், ப. 148).

நம்மைக் காட்டிலும் மேன்மை அடைந்திருக்கின்ற தேசங்களில் ஜப்பானும் ஒன்று. "புத்தகங்களாலும், பத்திரிகைகளாலும், யாத்திரைகளாலும் நாம் ஜப்பான் விஷயங்களை நன்றாகத் தெரிந்து கொள்ளுதல் பயன்படும். கூடியவரை பிள்ளைகளை ஜப்பானுக்கு அனுப்பிப் பலவிதமான தொழில்களும் சாத்திரங்களும் கற்றுக்கொண்டு வரும்படி செய்வதே பிரதான உபாயமாகும். தொழிற்கல்வியிலும் லௌகிக சாத்திரப் பயிற்சியிலும் நாம் மற்ற ஜாதியாருக்கு ஸமானமாக முயலுதல் அவசரத்திலும் அவசரம்" என்கிறார்.

பாரதி கனவு கண்ட வண்ணமே இன்று இளைஞர்கள் வெளிநாடு செல்கின்றனர்; தொழிற்கல்வி பயில்கின்றனர்.

"பெண் விடுதலைப் பாடல்களை பொறுத்தவரையில் ஷெல்லியும் விட்மனுமே பாரதியின் கற்பனையைத் தூண்டுவோராக அமைந்தனர்" (கா. மீனாட்சிசுந்தரம் – பாரதி பாநிலை, ப. 159).

மேனாட்டறிஞரான விட்மன் வருணிக்கின்ற பெருநகரம் எங்ஙனம் அமைந்தது தெரியுமா?

"தெருக்களில் போகும் ஊர்வலங்களில் ஆண்களைப் போலவே பெண்களும் சரி நிகர் சமானமாகவே நடந்து போகின்றனர். பொது மன்றங்களிலேயும் நுழைந்து ஆண்கள் அமரும் இடங்களிலேயே பெண்களும் அமர்கிறார்கள்."

விட்மனின் இவ்வரிகள் பாரதியின் கற்பனையைத் தூண்டுகின்றன. பெண்களுக்கு விடுதலை வேண்டுமென்ற உணர்வைப் பொங்கியெழச் செய்கின்றன.

"பட்டங்க ளாள்வதும் சட்டங்கள் செய்வதும்
பாரினிற் பெண்கள் நடத்த வந்தோம்
எட்டு மறிவினில் ஆணுக்கிங் கேபெண்
இளைப்பில் லைகாண் என்று கும்மியடி"

என்று பாரதியைப் பாட வைத்தன!

பெண் விடுதலை குறித்துப் பல மேனாட்டறிஞர்களின் சிந்தனைகளைத் தம் கட்டுரை வாயிலாக நம்முடன் பகிர்ந்து கொள்கிறார் பாரதி.

'விடுதலை என்றால் என்ன? பிறருக்குத் தீங்கில்லாமல் அவனவன் தன் இஷ்டமானதெல்லாம் செய்யலாம் என்பதே விடுதலை' என்று ஹெர்பர்ட் ஸ்பென்ஸர் சொல்லுகிறார். இந்த விதிப்படி உலகத்தில் பெரும்பான்மையான ஆண்மக்களுக்கே விடுதலை உண்டாகவில்லை. ஆண்மக்கள் ஒருவருக்கொருவர் அடிமைப்பட்டிருப்பதைவிடக் கொடுமையானது பெண்களை ஆண்கள் அடிமையாக வைத்திருத்தலே என்கிறார்.

"பெண்கள் தனியாகச் சஞ்சாரம் செய்ய இடங்கொடுத்தால் அண்டங்கள் கட்டாயம் இடிந்து போகும். ஒருவிதமான நியதியும் இருக்காது. மனுஷ்யர் மிருகப் பிராயமாய் விடுவார்கள் என்று சில தமிழ்நாட்டு வைதிகர் நினைக்கலாம். அப்படி நினைப்பது சரியில்லை. ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் பெண்கள் இஷ்டப்படி எங்கு வேண்டுமானாலும் போகலாமென்று வைத்திருக்கிறார்கள். அதனால் பூகம்பமொன்றும் நேர்ந்து விடவில்லையே?" என்று வினவுகின்றார். (பெண் விடுதலை – பாரதி தமிழ் வசனத்திரட்டு – ப. 94)

மேனாட்டு இலக்கியங்களைக் கற்றுத் தேர்ந்தவர் பாரதி. சேக்ஸ்பியர், வேர்ட்ஸ்வொர்த், கீட்ஸ், ஷெல்லி, பைரன், விட்மன் ஆகியோரின் படைப்புகளில் ஈடுபட்டு அவர்தம் சிந்தனைகளைப் பொன்னே போல் போற்றியுள்ளார் பாரதி.

பாரதியின் குயில் பாட்டினையும், கீட்ஸின் நைட்டிங்கேல் உணர்ச்சிப் பாவையும் (ode of the Nightingale) ஆய்வோமெனில் குயில் பாட்டு ஆங்கிலப் பாடலின் போக்கை ஒட்டியே அமைந்துள்ளது என்றறியலாம்.

நைட்டிங்கேல் என்ற பறவையின் பாடலைக் கேட்டுக் கீட்ஸ் என்ற கவிஞன் கூறுகிறான்.

"தொலைவில் நீ மிக்க மகிழ்ச்சியில் உணர்ச்சியைக் கொட்டிப் பாடிக் கொண்டிருக்கும் பொழுதே நள்ளிரவில் எந்தத் துன்பமும் இல்லாமல் அமைதியாக நான் இறந்து போவதற்கு ஏற்ற நேரம் இதுவே என்று தோன்றுகிறது" என்பார்.

"நாதக் கனலில் நம்முயிரைப் போக்கோமோ" என்று குயிலின் மூலம் குரல் கொடுக்கிறார் பாரதி.

இரண்டு பாடல்களின் கடைசி வரிகள் பெரிதும் ஒத்துள்ளன. கீட்ஸ் தம் பாடலைக் கீழ்க்கண்ட வண்ணம் முடிக்கிறார்.

"அது மனக் கற்பனையா? அல்லது விழித்துக் கொண்டிருக்கும் பொழுது காணும் கனவா? இசை மறந்து போயது. விழித்துக் கொண்டிருக்கிறேனா? உறங்குகிறேனா?"

குயிற்பாட்டில் கடைசி வரிகள் இதே முறையில் அமைந்துள்ளன.

**"சோலைக்குயில் காதல் சொன்னகதை யத்தனையும்**
**மாலை யழகின் மயக்கத்தால் உள்ளத்தே**
**தோன்றியதோர் கற்பனையின் சூழ்ச்சியென்றே**
**கண்டுகொண்டேன்"**

எனவே கீட்ஸ், பாரதி இரு புலவர்களும் ஒரே பார்வைத் திறன் பெற்றிருந்தமை புலனாம்.

காதல் வழிதான் கரடுமுரடாமென்பர் என்று குயில் பாட்டில் பாரதி கூறுவது, "காதல் வழி கரடு முரடானது; மென்மையானதன்று" என்ற ஷேக்ஸ்பியர் (வேனிற்கால நள்ளிரவுக் கனவு) கருத்தை ஒத்துள்ளது.

இயற்கையில் நிலைபேற்றைக் காண்பவர் வேர்ட்ஸ்வொர்த். சிற்றோடைகள் எழுப்பும் இன்னிசையில் இறைவன் குரலையே கேட்கிறார். அதேபோல வேத விழுப் பொருளைக் கரையில் வந்து மோதும் வேகத் திரைகளில் உணர்கிறார் பாரதி.

**"வேகத் திரைகளினால்**
**வேதப் பொருள்பாடி**
**வந்து தழுவும் வளஞ்சார் கரை"**

என்று பாடிப் பரவசமாகிறார்!

வால்ட் விட்மன் பற்றிப் பாரதி எழுதியுள்ள கட்டுரையில் பாரதியின் மேனாட்டிலக்கியங்களின் புலமை புலனாகும். விட்மனின் உள்ளம், இயற்கையுடன் இணைந்த உள்ளமாகும்.

"படைப்புப் பொருள் ஒவ்வொன்றிலும் இறைவன் குரலைக் கேட்கிறேன்; இறைவன் தோற்றத்தைக் காண்கிறேன்" என்கிறார். இக்கருத்தின் எதிரொலியாக,

**"காக்கை குருவி எங்கள் ஜாதி - நீள்**
**கடலு மலையு மெங்கள் கூட்டம்**
**நோக்குந் திசையெல்லாம் நாமன்றி வேறில்லை**
**நோக்க நோக்கக் களியாட்டம்"**

என்ற பாடல் அமைகிறது.

மேனாட்டாரிடமிருந்து நல்லவற்றை நாம் பெறுவது போல நம்மிடமுள்ள நல்லனவற்றை மேனாட்டார் கொள்ள வேண்டும் என்கிறார். உலகத்துக்கு ஞான மார்க்கத்தைக் காட்டவும் நல்லுபதேசம் செய்யவும் நாமே தகுதியுடையோர் என்பது பாரதி கருத்து.

"மத விஷயங்களில் நமது முன்னோர் மிகவும் உயர்ந்த ஆராய்ச்சிகள் செய்து வைத்திருக்கிறார்கள். இவற்றை நாம் நன்றாகத் தெரிந்து கொண்டு உலகத்தாருக்கெல்லாம் உபதேசம் செய்ய வேண்டும். இவ்விஷயத்தில் அமெரிக்கா, ஐரோப்பா முதலிய வெளிதேசத்தார் நமது உதவியை எதிர்பார்த்து நிற்கின்றனர்.

நமது முன்னோர்கள் உணர்ந்த தெய்வீக உண்மைகள் பெறுதற்கரிய செல்வமாகும். இச் செல்வத்தை உலகத்தாருக்கு வாரிக் கொடுத்து இவ்வுலகின் அறியாமைகளைப் போக்கி மேம்படுத்த வேண்டுமென்கிறார்.

இப் பணியில் ஈடுபட்டுச் செருமனி சென்று இந்து மதத்தின் பெருமையை உணர்த்திய இரவீந்திரநாத் தாகூரைப் பாராட்டி, 'ஸ்ரீ ரவீந்திரர் திக்விஜயம்' (25 ஆகஸ்டு 1921 – சுதேசமித்திரன்) என்ற கட்டுரையை எழுதினார் பாரதி. அதில் பிரெஞ்சுப் புரட்சிக்குக் காரணமாக இருந்த சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் (Liberty, Equality, Freternity) என்ற கொள்கைகளை வற்புறுத்துகிறார்.

"ஆசியாவும் ஐரோப்பாவும் சமத்துவம், சகோதரத்துவம், அன்பு என்ற தளைகளாலே கட்டுப்பட்டாலன்றி, உலகத்தில் சமாதானத்துக் கிடமில்லை." (பாரதி தமிழ் ப. 514)

அமெரிக்காவில் தாகூர் பேசும்பொழுது, "எல்லாத் தேசத்தாரும் சகோதரரென்றும், மனுஷ்ய ஜாதி முழுவதும் ஒன்றேயென்றும், ஆதலால் தேச வேற்றுமை காரணமாக ஒருவரையொருவர் அவமதிப்பதும் அழிக்க முயல்வதும் பிழைகள்" என்றார்.

அமெரிக்காவில் இக் கொள்கையை அவர் கூறிய பொழுது ஒருவன் எழுந்து "இவ்விதமான கொள்கை யிலிருந்தது பற்றியே உங்கள் தேசத்தை அந்நியர் வென்று கைப்பற்றிக் கொள்ள நீங்கள் தோற்றுக் கிடக்கிறீர்கள்" என்றான்.

"நாங்கள் இப்போது புழுதியோடு புழுதியாக விழுந்து கிடந்தாலும் எங்கள் பூமி புண்ணிய பூமி. உங்களுடைய செல்வத்தின் மேலே தெய்வ சாபமிருக்கிறது" என்றாராம்.

அதாவது, இந்த நிமிடத்தில் செல்வத்திலும் பெருமையிலும் நம்மைக் காட்டிலும் அமெரிக்கர் உயர்வு பெற்றிருந்த போதிலும் இந்த நிலைமை எப்போதும் மாறாமலிருக்கும் என்று அமெரிக்கர் நினைப்பது பிழை. தெய்வத்தையும் தருமத்தையும் நம்பியிருக்கும் இந்துக்கள் கீழே விழுந்தால் எழுந்து விடலாம். அமெரிக்கர் விழுந்தால் அதோ கதிதான்!

அன்பே சிறந்த வழி என்று கூறும் பாரதி நம் சமயக் கருத்துகளை வெளிநாட்டார் அறியும் வண்ணம் சொற்பொழிவாளர்களை அனுப்ப வேண்டுமென்கிறார்.

"என்றைக்குமே ராஜ்ய தந்திரத்தில் வாளைக் காட்டிலும் எழுதுகோலுக்கே மகிமை அதிகம்" (பாரதி தமிழ் ப. 454) என்பது பாரதியார் நம்பிக்கை. "வாள் சிறிது காலத்துக்குக் காப்பாற்றுவது போல நடிக்கும். பிறகு ஸர்வ நாசத்தில் கொண்டு சேர்க்கும். இந்தியாவுக்கு வாள் பலமோ பீரங்கிப் பலமோ இல்லையே. நாம் எப்படி விடுதலை அடையப் போகிறோம் என்று ஏங்க வேண்டாம். தைரியமும் ஒற்றுமையும் தந்திரமும் சேர்ந்தால் இவற்றுக்கெதிரே கோடி பீரங்கிகள் நிற்பினும் அஃதோர் பொருட்டன்று" என்று உற்சாகப்படுத்துகிறார்.

பத்திரிகைகளின் பலமறிந்தவர்கள் மேனாட்டினர். காலவாரியாக அவற்றைத் தொகுத்தலிலும், தொகுத்தவற்றைப் பாதுகாப்பதிலும் வல்லவர்கள். அவர்களின் இத்தன்மையைப் பாராட்டி நாமும் இதைமேற்கொள்ள வேண்டுமென்கிறார் பாரதி.

"இங்கிலாந்தில் இவ்வருஷம் லண்டன் டைம்ஸ் பத்திரிகையை உலகச் சரித்திரத்திற்கு ஆதாரமாகச் சேகரித்து வைத்தார்களென்று அறிகிறோம். தமிழ்நாட்டில் அதே போல சுதேசமித்திரனைப் பாதுகாத்து வைத்தல் வரலாற்றை அறிய உதவும்" என்கிறார். உண்மை! பாரதியின் வரலாற்றையும் படைப்புகளையும் இன்று நாம் அறிந்து கொள்ள உதவும் சுதேசமித்திரனை அன்றே பாதுகாத்து வைக்கச் சொன்ன பாரதியின் உணர்வு நம்மை வியப்பில் ஆழ்த்துகிறது!

இங்ஙனம் அரசியல், பொருளாதாரம், கல்வி, பெண் விடுதலை, சமயம், போர், எழுத்துப் பணி போன்ற பல துறைகளில் மேனாட்டார் பற்றி நன்றாக ஆராய்ந்து அறிந்து, இவற்றுள் தள்ளத்தக்கது, கொள்ளத்தக்கது குறித்து இந்தியாவுடன் ஒப்பிட்டுக் கூறியுள்ளார். இன்று உலகில் உள்ள பல்வேறு பிரச்சினைகளையும் பற்றி ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பே மகாகவி பாரதியார் சிந்தித்து அவைகளைத் தீர்ப்பதற்குத் தக்க வழிகளையும் காட்டியுள்ளார். அவருடைய தீர்க்க தரிசனத்தை எண்ணி வியக்கின்றோம்! உண்மையில் பாரதியார் உலக மகாகவி என்று உள்ளம் இறும்பூதடைகின்றோம்! ❖

# சங்க இலக்கியத்தில் தோழியின் ஆளுமைத் திறன்

பேராசிரியர் (திருமதி) கலியாணி அன்புச்செல்வன்



**முன்னுரை**

**எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது**
**தானமர்ந்து வரூஉம் மேவற்றாகும்**

என்பது தொல்காப்பியம். உயிர்ப் பொதுமை வாய்ந்தது காதல்; விழியின் புணர்ச்சியால் தோன்றுவது. 'அது அணங்கும் அன்று நோயும் அன்று.... விருந்தே காமம்' என்பது சங்க இலக்கியம் காதலுக்கு வகுக்கும் இலக்கணம். காதல் பாடல்கள் அனைத்தும் சங்க இலக்கியங்களில் அகப்பாடல்கள் என்று பெயர் பெறுகின்றன. 2381 பாடல்களில் அகம் சார்ந்த பாடல்கள் 1862. அகப்பாடல்கள் நாடக வழக்காலும் உலகியல் வழக்காலும் இயன்ற புலனெறிப் பாடல்கள். முதல், கரு, உரி என்ற கட்டமைப்பிலே இயல்கின்ற பாடல்கள். திணை, கூற்று, கேட்போர், பயன் மெய்ப்பாடு, முன்னம் முதலியன அகப்பாடலுக்கு உரிய உறுப்புகள். சங்க அகப்பாடல்கள் அனைத்தும் திணைப் பின்புலத்தில் கூற்று அடிப்படையிலே அமைந்தவை. கூற்றிற்கு உரியவர்கள் அகப்பாடல் மாந்தர்கள். அவர்களுள் முதன்மை இடம் பெறுபவர்கள் தலைவனும் தலைவியும். இவ்விருவரையும் அடுத்து முதன்மை மாந்தராகத் திகழ்பவள் தோழி. செவிலி, நற்றாய், பாணர் முதலியோர் துணை மாந்தர்கள்.

செவிலியின் மகளாகத் தோழியைக் காட்டுவர் தொல்காப்பியர். தலைமகனைத் தலைமகளுக்கு உரியவனாக ஆக்கித் தருபவள் தோழி. அவர்கள் இருவரின் உள்ள ஆர்வத்தை உணர்ந்து அவர்கள் காதல் முயற்சிக்குத் துணை நிற்பவள் தோழி. காதலுக்குத் தடை ஏற்படுகின்றபோது அத்தடைகளை உடைத்தெறிந்து வெற்றிக்கு வழி வகுத்துக் கொடுப்பவளும் தோழி. களவைக் கற்பாக்கித் தரும் வன்மை சான்றவள் தோழி. கற்பு வாழ்க்கையில் தலைமகன் வாழ்வியல் காரணங்களுக்காகப் பிரிந்து செல்லும்போது தலைமகளின் உடனுறைந்து செயலாற்றுபவள் தோழி. தலைமகன் தவறிழைக்கும் போது அவனை இடித்து அறிவுரை கூறித் தகுதிசார்ந்த தலைமகனாக மாற்றித் தருபவள் தோழி. இவ்வண்ணம், தலைமகன் தலைமகள் வாழ்க்கைப் பயணம் முழுவதும் இணைந்து அவர்கள் வாழ்க்கை நலத்திற்காக வாழும் 'தோழியின் ஆளுமை' வியக்கத்தக்கவாறு விளங்குகிறது.

**மறுக்க இயலாச் சொல்லாடல் திறன்**

தன் காதலை முடித்துத் தர வேண்டி நிற்கும் தலைமகனைத் தோழி மறுக்க நினைக்கின்றாள். வேண்டி நிற்கும் தலைமகனிடம் தன்னுடைய மறுப்பில் இருக்கும் உண்மையை உணர்த்துகிறாள். அவன் எதிருரை நிகழ்த்தாமல் இருக்கும் வகையிலே சொல்லாடுகின்றாள்.

**செங்களம் படக்கொன்று அவுணர்த் தேய்த்த**
**செங்கோல் அம்பிற் செங்கோட்டு யானைக்**
**கழற்றொடிச் சேஎய் குன்றம்**
**குருதிப் பூவின் குலைக்காந் தட்டே**

என்னும் குறுந்தொகைப் பாடல் (எண் 1) தோழி கையுறை மறுத்தல் துறையில் அமைந்துள்ளது. இப்பாடலில் தலைமகன் செங்காந்தள் மலரைக் கையுறையாக ஏந்தித் தன் காதலை முடித்துத் தருமாறு தோழியிடம் வேண்டுகின்றான். தலைமகனை முன்பின் அறியாத தோழியின் அறிவு அவன் வேண்டலை உடனே ஏற்றுக் கொள்ள மறுக்கின்றது. மறுக்க வேண்டும் என்ற உணர்வு; அதே நேரம் தலைமகன் மனம் புண்படக் கூடாது என்ற எண்ணம்; இரண்டுக்கும் இடையில் ஊஞ்சலாடும் தோழியின் மனம் தன்னை அவன் மீண்டும் வற்புறுத்தா வகையில் சொல்லாட நினைக்கின்றது. என்ன சொல்லி அவனைத் தவிர்ப்பது என்று எண்ணுகின்றாள்.

காரணம் சொல்லாமல் மறுத்தால் மீண்டும் வற்புறுத்துவான். காரணத்தோடும், தன் மறுப்பில் உள்ள உண்மையை உணர்த்தும் வகையிலும் அவனிடம் பேசுகின்றாள். அவன் தன் கையுறையாகக் கொண்டு வந்த செங்காந்தள் மலர்கள் தங்களுக்கு அரியன அல்ல என்றும் அவை தங்கள் குன்றத்திலேயே மிகுதியாக உள்ளன என்றும், எனவே அவன் கொண்டு வந்தவை தங்களுக்கு மிகையானவை என்றும் தங்களுக்கு அவை வியக்கத்தக்கன அல்ல என்றும் கூறுகின்றாள்.

தன் உணர்வில் உள்ள உண்மையைத் தலைமகனும் உணர்ந்து மீண்டும் அவன் தன்னை வற்புறுத்தாத வாறும், அவன் மனம் புண்படாவாறும் உரையாடும் தோழியின் ஆளுமைத் திறம் அழகாக வெளிப்படுகின்றது.

**வாழ்வியல் உணர்திறன்**

தலைமகளைத் தனக்கு உரியவளாய் ஆக்கித் தருமாறு வேண்டுகின்ற தலைமகனிடம் தோழி, அவன் குடிப்பெருமையை அவனுக்கு எடுத்துக் காட்டி, அந்த எண்ணத்தினின்றும் அவனை நீக்கி நிறுத்த முனைகின்றாள்.

பிறப்பு, குடிமை, ஆண்மை, ஆண்டு, உரு, காமம், நிறை, அருள், உணர்வு, திரு ஆகிய பத்துக் குணங்களால் தலைமகனும் தலைமகளும் ஒத்தியல்தல்வேண்டும். (தொல். மெய்ப்பாட்டியல் 25)

நற்றிணைப் பாடல் (எண் 45) ஒன்று தோழி நயமுற மொழிவதை நவில்கிறது.

தலைமகள் கடல் மேற்சென்று மீன்பிடித்து வாழும் பரதவனுடைய மகள். கடற்கரை ஓரமாக விளங்குகின்ற சிறுகுடியிலே வாழ்கின்றவள். சுறாமீனின் துண்டுகளைக் காய வைக்கும்போது அவற்றைக் கொத்த வரும் பறவைகளை ஓட்டும் வாழ்க்கை இயல்பினள். நிற்பதற்கே கூசும் புலால் நாற்றம் வீசும் சுற்றுப் புறத்தையும் மேனியையும் உடையவள். ஆனால், தலைமகனோ மிக விரைவாகச் செல்லும் தேரினை உடைய செல்வனுடைய மகன். அவளுடைய அன்புக்கு ஆளானவன்; இளமையானவன்; அழகானவன்; வழிவழியாகப் பல்லோர் வாழ்ந்த ஊரிலே வாழ்பவனின் மகன். பெரிய நீர் நிலையான கடலில் சென்று கிடைத்ததைக் கொண்டு வாழும் சிறிய நல்ல வாழ்க்கையோடு அவனுடைய வாழ்க்கை முறை ஒத்து வராது. அதுமட்டுமன்று; கடல்மேற்சென்று வாழும் வாழ்க்கையையுடைய செம்மல்கள் பலர் உளர் என்று குடிப்பெருமை மிக்க தலைமகனுக்குத் தலைமகள் ஏற்புடையவள் அல்லள் என்று தலைமகனை உயர்த்திக் காட்டி மறுக்கின்றாள்.

இப் பாடலில் தலைமகன் உயர்ச்சியைத் தோழி அறிந்திருந்தாலும் தலைமகளையும் அவள் குறைவாக மதிப்பிடவில்லை. தலைமகள் தம் பெற்றோர் வாழும் வாழ்க்கையும் நல்ல வாழ்க்கைதான் என்பதை 'எம் சிறு நல்வாழ்க்கை' என்று சொல்வதன் மூலம் உணரலாம். 'எங்களுக்குரிய வாழ்க்கை எங்களுடையது. செல்வர்க்குரிய வாழ்க்கை உங்களுடையது' என்று கூறி, இருவருக்கும் குடிமையால், பொருளால், அழகால், மேனியால் உள்ள ஏற்றத் தாழ்வை எடுத்துக்காட்டி அவனைப் பெயர்க்கும் தோழியின் உலகியல் வாழ்வியல் அறிவுத் திறம் வியப்பிற்குரியது. வேண்டியதும் உடன்பட்டுவிடும் விரைந்த போக்கினள் அல்லள் தோழி. எதையும் ஆராய்ந்து பார்த்து முடிவெடுக்கும் ஆய்வறிவினள் என்பதையும் உணரலாம்.

**பொய்வழி மெய்காணல் திறன்**

குறுந்தொகைப் பாடல் (எண்176) தலைமகளைத் தோழி குறைநயப்பக் கூறியது என அமைந்தது. குறை நயப்பக் கூறல் என்றால் தலைமகள் தலைமகனை ஏற்றுக் கொள்ளுமாறு செய்தல். இப்பாடலில் தலைமகளின் காதற் குறிப்பை அறிந்து தலைமகனை ஏற்றுக் கொள்ளுமாறு செய்ய முயற்சி செய்கின்றாள் தோழி. தலைமகளின் காதற் குறிப்பை மெய்யாகவும் பொய்யாகவும் பலவற்றைப் படைத்துக் காட்டி அறிந்து கொள்வாள் தோழி என்று இலக்கணம் வகுப்பார் தொல்காப்பியர்.

பலநாள் வந்து தன்னெஞ்சைத் தலைமகன் நெகிழ வைத்ததாகத் தோழி சொன்னது பொய்; தலைமகனைக் காணாமல் வேறுபுல நன்னாட்டிலே பெய்த மழைபோல நெஞ்சம் கலங்குவது என்பது மெய். பல நாள் வந்து பணிமொழி பயிற்றித் தன்னெஞ்சத்தை நெகிழ்த்திய தலைமகன் சென்ற இடம் தெரியவில்லை என்று தோழி கூறக் கேட்டவுடன், தோழி சுட்டிய தலைமகனும் தான் விரும்பிய தலைமகனும் ஒருவன்தான் என்ற உண்மை புலப்படும். வேற்றுப் புல நன்னாட்டிலே பெய்த மழை போலத் தன்னெஞ்சம் கலங்குகின்றது என்ற தோழி கூற்றில்தான் உண்மை பொதிந்து உள்ளது. ஓர் இடத்தில்

மழை பெய்யும்போது அந்த மழைநீர் தெளிவாக இருக்கும். அதுவே அடுத்த இடத்திற்குச் செல்லும்போது கலங்கிக் காட்சியளிக்கும். அதைப் போல் தலைமகளுக்குரிய தலைமகனைத் தனக்கு உரியவனாகச் சொன்ன பொய்யால் தன் நெஞ்சம் கலக்கம் அடைந்ததை வேறுபுல நன்னாட்டில் பெய்த மழைக்கு உவமிக்கின்றாள். 'நன்னாடு' என்பதில் தன் களவில்லாத் தன்மையைக் குறிக்கின்றாள்.

தோழி தலைமகளின் காதற்குறிப்பை அறிந்து கொள்ள ஓர் உத்திமுறையைக் கையாண்டாலும் தன் பெண்மையை இழிவுபடுத்திக் கொள்ளாமலும் தலைமகள் உண்மை உணர்கின்ற வகையிலும் பேசும் அறிவுத்திறம் அறியத்தக்கது.

**மனஇயல் உணர் திறன்**

தோழி, தலைவனும் தலைவியும் கொண்ட காதலைத் தன் அறிவால் உடம்படுதல் 'மதியுடம்படுதல்' ஆகும். ஒரு மனிதனின் உள்ளத்தை அறிதல் அரிது. தோழியோ இருவரின் உள்ளத்தையும் உணர்வையும் அறிந்து கொள்ளும் அறிவார்ந்தவளாகத் திகழ்கின்றாள். தோழியும் தலைமகளும் தினைப்புனம் காத்துக் கொண்டுள்ளனர். தலைமகன் அவ்விடத்து வந்து அவர்களிடம் மான் போந்ததோ என வினவி நிற்கின்றான். வினா மானைப் பற்றியதாக இருந்தாலும் தலைமகனின் உள்ளம் தலைமகளைச் சார்ந்ததாக இருக்கின்றது. தலைவன் தலைவி இருவரின் உள்ள மகிழ்ச்சியையும் விழிகள் பேசும் காதல் மொழிகளின் நுட்பத்தையும் உணர்கின்றாள் தோழி.

இவள் தினைப்புனம் காப்பவளும் அல்லள். இவன் மான் வினவி வருபவனும் அல்லன். தம்மை மறைக்கும் இவர்கள் உள்ள நிகழ்ச்சி வேறு ஏதோ ஒன்று உள்ளது என்று ஐயப்படும் தோழி அவர்களின் மறை மகிழ்ச்சிக்கு மதுவை மறைந்துண்போன் மகிழ்ச்சிக்கு ஒப்பிட்டுக் காட்டுவது சூழல் மனிதர்களைப் புரிந்துகொண்ட அவள் அறிவின் வெளிப்பாடாகத் திகழ்கிறது.

**தகு இடன் அறி திறன்**

காதல் வயப்பட்ட தலைமகன் தலைமகள் இருவரும் சந்திக்கத் தோழி அமைத்துத் தரும் இடம் 'குறியிடம்' என்று கூறுவர். குறியிடம் அமைத்துத் தந்த தோழி அந்த இடத்தை மாற்றி அமைக்க முற்படுகின்றாள்.

குறுந்தொகைப் பாடல் (எண் 113) இதுபற்றிக் குறிப்பிடுகின்றது. ஊருக்குப் பக்கமாக அமைந்தது ஒரு பொய்கை. அந்தப் பொய்கைக்குப் பக்கமாக அமைந்தது ஒரு காட்டாறு. அதற்குப் பக்கமாக அமைந்தது ஒரு பொழில். அந்தப் பொழில் இரைதேடும் வெண்குருகைத் தவிர வேறு ஒன்றனாலும் குறுக முடியாதது. எம் கூந்தலுக்கு எரு மண் கொணர்தற் பொருட்டுச் செல்கின்ற அவ்விடத்திற்குத் தலைமகளும் வருகின்றாள் என்று கூறுகின்றாள். தங்களுக்குத் தெரிந்த இடம் தலைமகனுக்குத் தெரிய வாய்ப்பில்லை. அவ்விடம் தங்கள் கூந்தலுக்கு எரு மண் கொணரும் இடம் என்பதை உணர்த்துகின்றாள். தலைமகன் சரியான இடத்திற்குச் சரியான வழியில் வந்து சேர வேண்டும் என்ற தன் எண்ணத்தின் ஆர்வத்தையும், தலைமகனுக்கு ஐயம் ஏற்படாவகையில் அவர்களுக்கு அந்த இடம் தெரிந்திருந்ததன் பான்மையையும் வெளிப்படுத்தும் தோழியின் திறம் இப் பாடலில் வெளிப்படுகிறது. தலைவனைச் சந்திப்பதற்கான தலைவியின் உடன்பாடும் குறிப்பாய் உணர்த்துகிறாள் தோழி.

**நுண்ணிய வெளிப்பாட்டுத் திறன்**

தலைமகளிடத்துத் தோன்றும் மாறுபாடுகளுக்குக் காரணம் அறிந்துகொள்ள முடியாமல் தவிக்கும் தாய் மேற்கொள்ளும் முயற்சிகளில் ஒன்றுதான் கட்டுவிச்சியை அழைத்துக் கட்டுக் காணல்.

குறுந்தொகைப் பாடல் 23 இத்துறையை நன்கு விளக்குகின்றது. அகவன் மகளை அழைத்துத் தன் மகளின் மாறுபாட்டிற்குக் காரணம் அறிய முனைகின்றாள் தாய். காரணத்தைத் தவறாகச் சொல்லி விடுவாளோ அகவன் மகள் என்ற அச்சம் தோழிக்கு. அகவன் மகள் பாடத் தொடங்கும்போதே இடையே புகுந்து தலைமக்களின் காதல் ஒழுக்கத்தைக் குறிப்பால் உணர்த்துகின்ற வகையிலும், 'பாடுக பாட்டே' 'இன்னும் பாடுக பாட்டே' 'அவர் நன்னெடுங்குன்றம் பாடிய பாட்டே' என்கிறாள் தோழி. திருப்புரையில் அகவன் மகள் பாடும் பாட்டின் குன்றத் தலைவன்தான் தலைமகளின் காதலுக்கு உரியவன் என்பதைத் தாய் அறியும் வகையிலும் மிக நுட்பமாக வெளிப்படுத்துகின்றாள்.

**ஒழுக்கம் விளக்கும் திறன்**

தலைமக்களின் களவொழுக்கத்தைத் தோழி தலைமகளின் உடன்பாட்டொடு வெளிப்படுத்துதல்

'அறத்தொடு நிற்றல்' எனப்படும். குறிஞ்சிப் பாட்டில் தோழி தலைமக்களின் காதல் ஒழுக்கத்தை வெளிப்படுத்துதற்கு முன் அதற்கு ஒரு பீடத்தைச் சமைக்கின்றாள். தலைமகள் தன் ஒழுக்கத்தினின்று வழுவிவிடவில்லை என்பதைச் செவிலிக்கு உணர்த்த விழைகின்றாள். அப்போது பேசுகின்றாள். "பொன்னாலும், முத்தாலும், மணியாலும் செய்யப்பட்ட கலன்களில் ஏதேனும் குற்றமோ குறையோ நேரிடின் அவற்றை மாற்றிப் புதுப்பித்துக் கொள்ளலாம். ஆனால் சால்பும் வியப்பும் குன்றிப் போனால் அதை மீண்டும் நிலைநிறுத்திக் கொள்வது என்பது குற்றமற்ற காட்சியையுடைய தலைவர்க்குக்கூட இயலாத ஒன்று" என்று கூறுகின்றாள்.

இப்பகுதியில் தலைமகள் தன் கற்புத் திறத்தினின்று வழாமல் இருக்கும் திறத்தைச் செவிலி வளர்த்த மகள் அவள் மகளாகத் திகழும் திறத்தைப் பின்னால் உணரும் வகையில் முன்னாலேயே ஓர் அடித்தளம், ஒரு பீடம் அமைத்துப் பேசத் தொடங்கும் தோழியின் அறிவுக் கூர்மை வெளிப்படக் காணலாம்.

### பெண்ணியல் உணர் திறன்

ஓர் ஆண் ஒரு பெண் இருவரின் காதல் ஒழுக்கத்தை அறிந்தால் ஊர் சும்மா இருக்காது. திருக்குறள் தலைமகள் தன் களவு கற்பாக மாறுவதற்கு ஊரவரின் அலர் எழட்டும் என்று விரும்புகின்றாள். ஊர்மக்கள், அதுவும் பெண்கள் தலைமக்களின் களவொழுக்கத்தை அறிந்தால் கண்டிப்பாக அலர் தூற்றுவர் என்பதைத் தோழி அறிந்து வைத்திருக்கின்றாள். அலர் தூற்றுவது மட்டும் அன்று, அவர்கள் எவ்வாறு தூற்றுவர் என்பதையும் உணர்ந்து வைத்திருப்பவள் தோழி.

**சிலரும் பலரும் கடைக்கண் நோக்கி**
**மூக்கின் உச்சி சுட்டு விரல் சேர்த்தி**
**மறுகின் பெண்டிர் அம்பல் தூற்ற**

என்னும் நற்றிணைப் பாடற்பகுதியில் ஊரவர் பெண்கள் தூற்றும் அலர் முறையைக் காட்சிப்படுத்துகின்றாள். தலைமக்களின் களவொழுக்கத்தினை அறிந்த தெருப்பெண்டிர் மூக்கின் நுனியில் சுட்டுவிரலைச் சேர்த்துக் கடைக்கண்களால் பேசுவர் என்று கூறுவதன் மூலம் அவள்தன் பெண்ணியலறிவை உணரலாம்.

### பொறுப்பு உணர் திறன்

இரவு பகற் குறிகளில் சந்திப்பதற்கு இடையீடு, வரைவு நீட்டிப்பு, இற்செறிப்பு, நொதுமலர் வரைவு போன்ற சூழல்களில் தலைமக்களின் களவு வாழ்க்கை நிறைவேறா நிலை ஏற்பட்டுவிடுமோ என்ற ஐயம் – அச்சம் ஏற்படும் சூழலில் தோழி தலைமக்கள் இருவரையும் உடன்போய்விடத் தூண்டிவிடுகிறாள். அதற்குரியனவற்றிற்கும் ஆவன செய்கிறாள். திருமணம் ஆகாத நிலையில் தன் அணுக்கத் தோழியைத் தலைமகனுடன் அனுப்பி வைக்கின்றாள். உடன் போக்கிற்கு உடன்படுத்துகிறாள்.

**அண்ணாந் தேந்திய வனமுலை தளரினும்**
**பொன்னேர் மேனி மணியிற் றாழ்ந்த**
**நன்னெடுங் கூந்தல் நரையொடு முடிப்பினும்**
**நீத்தல் ஓம்புமதி பூக்கேழ் ஊர!**

என்னும் பாடல் அடிகளில் தலைமகளின் கறுத்த கூந்தல் நரைத்து நிற்கும் காலத்தும் உடல் தளர்ச்சி ஏற்பட்ட காலத்தும் அவளைப் பிரியாமல் வாழ்நாள் முழுவதும் அவளை வைத்துக் காப்பாற்ற வேண்டும் என்னும் தன் மொழிகளை அறிவுரை மொழிகளாக வெளிப்படுத்தும் போது தலைமகளுக்கு எந்தப் பாதிப்பும் ஏற்படா வகையிலும் தலைமகனுக்கும் வெறுப்பு ஏற்படா வகையிலும் அவள் பேச்சு அமைகின்ற திறத்தைத் தெளியலாம்.

### இயற்கைவழி காலம் உணர்த்தும் திறன்

பகல், இரவுக் குறிகளில் தலைமகளைச் சந்தித்து மகிழும் தலைமகனுக்குத் தலைமகளை மணம்புரிந்து உரிமையொடு மகிழ வேண்டும் என்ற உணர்வு தோன்றவில்லை. இந்தச் சூழலில் தலைமகனுக்குத் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தைத் தூண்டி அவர்கள் களவு ஒழுக்கத்திற்கு ஒரு முற்றுப் புள்ளி வைத்து அவர்களை இல்லறப்படுத்த வேண்டும் என்று நினைக்கின்றாள். முதலில் தலைமகனுடைய நாட்டுச் சூழலைச் சொல்லி அவனைச் சிந்திக்க வைத்துத் தன்வயப்படுத்துகின்றாள்.

அகநானூற்றுப் பாடல் (எண் 2) தோழியின் கூற்றை அழகுறப் புனைகின்றது. தலைமகன் நாட்டில் வாழும் குரங்கு எய்திய மகிழ்வைக் காட்டித் தலைமகனைச் சிந்திக்க வைக்கின்றாள்.

இப்பாடலின் அடுத்த பகுதியில்தான் அவளுடைய ஆளுமைத் திறம் வெளிப்படுகின்றது.

தலைமகளின் இற்செறிப்பு, இரவுக்குறியில் சந்திக்கலாம் என்னும் தலைமகனின் எண்ண வோட்டத்திற்கு ஏற்படும் தடை, திருமணத்திற்குரிய காலம் ஆகியவற்றை எடுத்துரைத்துத் தலைமகனைத் திருமணம் செய்துகொள்ள வகை செய்கின்றாள்.

தலைமகனும் தலைமகளைப்போல் சந்தித்தலில் ஆர்வம் உடையவளாக இருக்கின்றாள். ஆனால், அவளால் சந்திக்க இயலாது. காரணம் அவள் தந்தையினுடைய கடுமையான காவலுக்கு ஆட்பட்டுள்ளாள். எனவே, பகற்குறியில் அவளைச் சந்திக்க இயலாது என்பதை முதற்பகுதியில் தெரிவிக்கின்றாள். பகற்குறியில் இயலாது என்றால் இரவுக்குறியில் சந்திக்கலாம் என்று தலைமகன் எண்ணுவான் என்பதை முன்கூட்டியே உணர்ந்தது முழுநிலாக் காலம் ஆதலின் அதற்கும் வாய்ப்பில்லை என்பதை உணர்த்துகின்றாள். இரண்டு குறிகளாலும் சந்திக்க வாய்ப்பில்லை என்றால் என்ன செய்வது என்னும் தலைமகனின் உள்ளத்து வினாவிற்கு விடை சொல்லுகின்ற வகையில் 'வேங்கையும் ஒள்ளிணர் விரிந்தன' என்னும் தொடரை விடையாக வைக்கின்றாள். தலைமகனுக்குக்கூட இந்த விடையில் வினா அல்லது ஐயம் எழலாம். இங்குதான் தோழியின் கூர்த்த மதி வெளிப்படுகிறது. தமிழர்களுடைய திருமணத்திற்குரிய காலம் வேங்கைமலர்கள் பூத்துச் சொரியும் இளவேனிற் காலம். எனவே அவர்கள் களவு முற்றுப் பெறவும் இல்லறம் தொடங்கவும் ஏற்றதொரு காலம்; அதற்குரிய பாலமாக அமைவது திருமணம். எனவே விரைவில் திருமணம் செய்து கொள். இந்தக் காலத்தை விட்டால் மீண்டும் இப்படியொரு காலத்திற்குக் காத்திருக்க வேண்டும். வாய்ப்பை வகையாகப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும் என்னும் தோழியின் கால அறிவு எண்ணி வியத்தற்குரியது.

### மீள் மனிதனாக்கல் திறன்

களவிலே இனித்த தலைமகள் கற்பிலே கசக்கும் பான்மையளாக மாறிவிடுகின்றாள். தலைமகனது மனமாற்றத்தை அவனுக்கு உணர்த்தி மீண்டும் அவனை மனிதனாக்க முயற்சி செய்கின்றாள். அப்போது அவனுடைய களவுக்கால ஒழுகலாற்றையும், கற்புக்கால ஒழுகலாற்றையும் ஒப்பிட்டுக் காட்டி அவனைப் பழைய மனிதனாக்க முனைகின்றாள்.

**வேம்பின் பைங்காய் என்தோழி தரினே**
**தேம்பூங் கட்டி என்றனிர் இனியே**
**பாரி பறம்பின் பனிச்சுனைத் தெண்ணீர்**
**தைஇத் திங்கள் தண்ணிய தரினும்**
**வெய்ய உவர்க்கும் என்றனிர்**
**ஐய அற்றால் அன்பின் பாலே.**

இக் குறுந்தொகைப் பாடலில் (எண் 196) களவுக் காலத்தில் வேம்பின் பைங்காயையே தந்தாலும் தேம்பூங் கட்டி என்று உண்டவன் கற்புக் காலத்தில் பாரியின் பறம்பு மலையின் தெளிந்த, தண்ணிய தை மாதத்துத் தண்ணீரைத் தந்தாலும் உவர்க்கும் என்று சொல்லும் தலைமகனின் மன இயல்பு காட்டி இதுதான் அன்பின் தன்மை போலும் என்று வருந்தி இரங்கியுரைத்து அவனைப் பழைய தலைவனாக்க முயற்சி செய்கின்றாள்.

### கொள்கைத் திறன்

இல்லற வாழ்க்கையில் ஈடுபட்ட பின்னர்த் தலைமகன் புறத்தொழுக்கத்திலே ஈடுபட்டு நீண்ட நாள் தலைமகளை மறந்து ஒழுகி மீண்டும் அவளைச் சேர்கின்றான். புறத்தொழுக்கத்தில் தான் ஈடுபட்டிருந்த காலத்துத் தலைவியும் தோழியும் கொண்ட நினைப்பைக் குறித்து வினா எழுப்புகின்றான்.

தலைமகள் நாட்டைப் பற்றிச் சிந்திக்க, தான் தலைமகன் மார்பு பழனமாக மாறக் கூடாது என்று விரும்பியதாகக் கூறுகின்றாள் தோழி. வயல் என்பது பலரும் இறங்கி வேலை செய்யக் கூடிய ஓர் இடம். அதுபோல் தலைமகனின் மார்பு பலருக்கும் ஆகாமல் தலைமகளுக்கு மட்டுமே உரியதாக இருக்க வேண்டும் என்னும் தோழியின் ஆர்வத்தை ஐங்குறுநூற்றுப் பாடல் (எண் 1) அழகுறப் புனைகின்றது. ❖



# பாரதிதாசனின் கவிதை நடை செல்நெறிகள்

முனைவர் ச.சு. இளங்கோ



நடை, கருத்தின் சட்டை என்று போப்பு குறிப்பிடுவார். ஆனால் கார்லைல், நடை என்பது எழுத்தாளனின் சட்டையாகாது, அது அவனின் தோல் என்பார். திறனாய்வாளர் கார்லைலின் கருத்தினை இன்று ஆய்வுலகம் ஏற்றுக் கொண்டுள்ளது.

மிகச் சிறந்த எழுத்தாளனின் நடை படிப்பவனைத் தன்வயப்படுத்தும் ஆற்றல் உடையது. எழுத்தாளனின் ஆளுமையை வெளிப்படுத்துவது நடை. பொருத்தமான இடத்தில் பொருத்தமான சொற்களைக் கையாளுகின்ற படைப்பாளர்கள் எழுத்துலகில் நின்று நிலைப்பர்.

படைப்பாளியின் முகத்தைக் காட்டும் கண்ணாடி அவன் நடையாகும். முகம் எல்லோருக்கும் ஒன்றாக அமைவதில்லை. அதனைப் போலப் படைப்பாளியின் நடையும் ஒருவருக்கு இருப்பது போலப் பிறிதொருவருக்கு இருப்பதில்லை. பாரதிதாசனின் கவிதை நடை தனிச்சிறப்பு வாய்ந்தது. அவர் நடைச்சிறப்பு பற்றிப்,

**"படைநடத்தல் போல்நடக்கும் நடையும்; சங்கப்**
**பழந்தமிழ்நூல் அடையாள நடையும்; பாட்டின்**
**இடையிடையே இசையசைவு நடையும்; ஓடை**
**ஏந்திவரும் அலைநடையும் கூட்டி''**

என்று கவிஞர் சுரதா தம் ஆசானின் கவிதை நடையழகை விளக்குவார். மேலும் விரைந்து செல்லும் பேராற்றினைப் போன்றது பாவேந்தரின் நடை. "தடை நடையே அவரெழுத்தில் இல்லை. வாழைத் தண்டுக்கா தடுக்கின்ற கணுக்கள் உண்டு?'' என்று நடையமைப்பை மதிப்பிடுகின்றார்.

வல்வில் ஓரியின் அம்புபோல் ஆற்றல் மிக்கது பாரதிதாசனின் நடை.

"வெறிகொண்ட மன எழுச்சியைச் சித்திரிப்பதிலும், வார்த்தைகளைக் கொட்டும் ஆவேசத்திலும், வாழ்க்கை சார்ந்த பல அம்சங்களையும் இலட்சியங்களையும் கவிதைப் பொருளாக அமைத்துக் கொள்வதிலும், கருத்து வன்மையிலும், அனல்தன்மை பெற்ற தற்காலத் தமிழ்க் கவிதைகளைப் படைப்பதிலும் பாரதிதாசன் தற்காலத் தமிழ்க் கவிஞர்களுள் மிகச் சிறந்தவர்'' என்று ஏ.வி. சுப்பிரமணிய அய்யர் குறிப்பிடுவார்.

"பாரதிதாசன் உண்மைக் கவி. உயர்ந்த கவி. அவர் பாடல்களில் தெளிவான எண்ணத்தையும் தெளிவான சொல்நடையையும் காண முடிகிறது'' என்று பேராசிரியர் சுவாமிநாதனும், "கவிஞரின் வீரமும் உறுதியும் கலந்த சொற்கள் சாவை எதிர்பார்த்து நிற்கும் கிழத்தமிழனையும் வீரனாக்கும்'' என்று கோவை அய்யாமுத்துவும், "இக் காலத்திற்கும் இந் நாட்டிற்கும் ஏற்றவாறு பொது மக்களுக்கு விளங்கும் எளிய, இனிய இலக்கண நடையில் சீர்திருத்தக் கருத்துகளையும் முன்னேற்ற வழிகளையும் எழுதுபவர் பாரதிதாசன்'' என்று தேவநேயப் பாவாணரும் பாரதிதாசனின் நடை குறித்துக் கூறும் கருத்துகள் இங்கு நினைக்கத்தக்கன.

பாரதியார் எளிய நடையில் எழுதும் பாங்கினைப் பல இடங்களில் பாவேந்தர் சுட்டியுள்ளார்.

**"பண்டைய தமிழ்நடை இன்றைக்கு வேண்டாம்**
**பலர்க்கும் புரியப் பாடுங்கள் என்றால்**
**நொண்டி நடக்கும் பண்டிதர் நடைதான்**
**நூலுக்கு வேண்டும் என்றார்கள் அந்தப்**
**பகைநடுங்கச் செய்த பாரதி''**

(தேனருவி)

ஒரு கவிஞர் கவிதை இயற்றினால் அந்தக் கவிதையின் பொருள் அவருக்கும் அவர் போன்ற கவிஞர்களுக்கும் விளங்க வேண்டும்.

அந் நாளில் பொருள் விரியும் தமிழ்ச் செய்யுள்கள் இருந்தன. பொருள் புரியும் தமிழ்ச் செய்யுள்கள் இருந்ததில்லை. புரியாத பாட்டைக் கேட்டுக் கேட்டு மக்கள் புரியும் பாட்டைக் காட்டி இதோ, என்று அழைத்தால் அவர்கள் பாலைச் சூடாகக் குடித்த தெனாலிராமனின் பூனை போல் ஓடுவார்கள்.

தமிழ்ப் பாட்டு என்பது தமிழர்களுக்கு வெறுப்பூட்டும் பொருளாயிற்று. பன்னிரண்டாம் நூற்றாண்டில் வீழ்ந்த தமிழகம் பாவேந்தர், பாரதி பாட்டு வரும் வரைக்கும் எழுந்திருக்கவில்லை. "கொட்டை நீக்கிக் கோது நீக்கி இந்தாவென்று தந்த பலாச்சுளை, மக்களுக்கு அன்று பாரதியார் அருள்புரிந்த பொருள் விளங்கும் பாட்டுகள்'' என்று எழுதியுள்ளமையாலும் (ஆனந்தவிகடன் 3.5.1964, பாரதிதாசன், பாடிப் பறந்த குயில்) பன்மொழிப் புலவர் கா. அப்பாதுரையின் கவிதையைப் படித்த பாரதிதாசன், பாரதி பிறப்பதற்கு முன்னர்த் தாங்கள் பிறந்திருக்க வேண்டும். பாரதியின் எளிமை உங்களுக்கெல்லாம் சுட்டுப்

போட்டாலும் வராது என்று கூறியுள்ளமையாலும் (சுடர் – பாரதிதாசன் மலர், பன்மொழிப்புலவர் கா. அப்பாதுரை, கட்டுரை) பாரதியாரின் எளிய நடை ஆளுமை பற்றிப் பாரதிதாசன் போற்றிப் புகழ்ந்துள்ளார்.

**எளிய நடை**

"பொருள் விளங்கும் பாட்டு என்றால் கவிஞர் கவிபாடும் காலத்தில் மக்கட்கு வேண்டிய உண்மையை எளிதில் விளக்கக்கூடிய பாட்டு என்பதே பொருள். எளிய நடைப்பாட்டு என்று இதைக் கூறுவர். அப்படி என்றால் எளிதில் அரிய பொருளை மக்கள் புரிந்து கொள்ளக்கூடிய வகையில் அமைந்த பாட்டு என்று பொருள்" என உயரிய கருத்தை எளிய நடையில் எழுதுவது இலக்கியத்தில் மகத்தான சாதனை என்பதனைப் பாரதிதாசன் ஓர் எடுத்துக்காட்டு மூலம் பின்வருமாறு விளக்குகிறார்:

**"வில்லாள மாவரசன் மனைவியைச்**
**சிவனடியார்க்கு அளித்துச் சிவனடி அடைந்தார்''**

என்ற கதையை ஆயிரம் பாடல்களில் பாடி முடித்தார் என் நண்பர் துரைசாமி வாத்தியார். இது காலத்திற்கு ஏற்றது அல்ல. பாட்டின் நடையும் சிக்கலானது என்றனர் பலர். துரைசாமி வாத்தியார் தவறுணர்ந்து புராணத்தைத் தணலில் போட்டுக் கொளுத்தினார். துரைசாமி வாத்தியார் அரிய கருத்தை எளிய நடையில் எழுதுவது செயற்கரிய செயல் என்று அப்போதுதான் தெரிந்து கொண்டார் (3.5.1964 ஆனந்தவிகடன்) என்று குறிப்பிட்டுள்ளார்.

பாரதிதாசன், பாரதியார் வகுத்த பாட்டுப் பாதையில் நடந்து எளிய நடையில் பாடல்களைப் பாடினார். இதனை,

**"பாடலிற் பழமுறை பழநடை என்பதோர்**
**காடு முழுதும் கண்டபின் கடைசியாய்ச்**
**சுப்பிர மணிய பாரதி தோன்றியென்**
**பாட்டுக்குப் புதுமுறை புதுநடை காட்டினார்''**

எனும் பாவேந்தர் கூற்றால் அறியலாம்.

பாரதி வழியைப் பின்பற்றி அவர் எழுதிய தொடக்க காலப் பாடல்களில் வடமொழிச் சொற்கள் நிறைந்து காணப்படுகின்றன. அவர் பாடல்களில் உள்ள வடசொற்களை நீக்கித் தூய தமிழில் எழுதவேண்டும் என்ற உணர்வினைத் தோற்றுவித்தவர், தனித்தமிழ் இயக்கத்தின் தந்தை மறைமலை அடிகளாவார். எனவே, பாரதிதாசன் நடையில் நிகழ்ந்த மூன்றாவது திருப்பத்திற்கு அடிப்படையாக மறைமலை அடிகளார் அமைகின்றார்.

பாரதியாரும் மறைமலையடிகளாரும் பாரதிதாசன் கவிதை நடைமாற்றத்திற்குக் காரணிகளாக அமைந்திருந் தார்கள் என்பதனை நான்கு எடுத்துக்காட்டுகள் மூலம் அறியலாம்.

காதலன் காதலியின் அழகை,

**ஸ்ரீமதிஇவ ளார் ?உலகிடை**
**மானிடமதி லேதிவள் ?**
**ஒருசேலிணையிணை நேரிருவிழி**
**கோகனகவி நோத அதரம்**
**மாமதிநிகர் ஓரிளமுகம்**
**வானுறுமழை தானிருள்குழல்**
**வாழ்மதுகரம் ஊதிடுமலர்**
**சூடியமுடி யோடிவளிரு**
**மத்தக மொத்த தனத்தொடு சித்தமி**
**னித்திட நிற்பது மிக்கவும் அற்புதம்**
**மலர்வாய் திறந்தொரு வார்த்தை சொல்லாளோ ?**

(முல்லைக்காடு - கண்டதும் காதல்)

என்று புனைந்திருக்கிறார். புதுவையிலிருந்து 1935இல் வெளிவந்த திங்கள் இதழான ஸ்ரீ சுப்ரமண்ய பாரதி கவிதாமண்டலத்தில் வெளிவந்த இப் பாடல் பிற்காலத்தில் முல்லைக்காடு எனும் கவிதைத் தொகுப்பில் சேர்க்கப்பட்டுள்ளது. 'வண்ணம்' என்ற இலக்கணத்தில் எழுதப்பட்ட இப்பாடலின் நடையும், மொழியும் நோக்கும்போது பாரதியாரின் தொடர்புக்கு முன்னர் 'மயிலம் சுப்பிரமணியர் துதியமுது' பாடிய சுப்புரத்தினக் கவிராயர் எழுதிய பாடலாகத் தோன்றுகிறது. அழகை வருணித்தல் என்ற பொருளமைவில் பாரதியார் தொடர்பிற்குப் பின்னர்ப் பாரதிதாசன் நடையில் ஏற்பட்ட மாற்றத்திற்குப் புரட்சிக் கவியில் உள்ள பாடலை மேற்கோளாகக் காட்டலாம்:

**என்ன வியப்பது ? வானிலே – இருந்**
**திட்டதொர் மாமதி மங்கையாய்**
**என்னெதிரே வந்து வாய்த்ததோ ? – புவிக்**
**கேதிது போலொரு தண்ஒளி**
**மின்னற் குலத்தில் விளைந்ததோ ? – வான்**
**வில்லின் குலத்திற் பிறந்ததோ ?**
**கன்னற் றமிழ்க்கவி வாணரின் – உளக்**
**கற்பனை யேஉருப் பெற்றதோ ?**
**பொன்னின் உருக்கிற் பொலிந்ததோ ? – ஒரு**
**பூங்கொடி யோமலர்க் கூட்டமோ ?**

(புரட்சிக்கவி - சிந்து கண்ணி)

என்று கவிஞன் உதாரன் அமுதவல்லியின் அழகை வருணிக்கின்றான். எளிய சந்தத்தில் அமைந்த இப்பாடல் முன்னர்ச் சுட்டிக்காட்டிய பாடலைக் காட்டிலும் மிக எளிமையாகவும் எல்லோர்க்கும் புரியும் வகையிலும் அமைந்துள்ளது. இதனால் பாரதியின் தாக்கத்தினால் பாரதிதாசனின் கவிதை நடையில் ஏற்பட்ட மாற்றத்தை அறியலாம்.

இனிப் பாரதிதாசன் தனித்தமிழ் இயக்கத் தந்தை மறைமலை அடிகளின் தாக்கத்திற்குப் பிறகு பாடிய பாடலைக் காண்போம். இதுவும் காதலன் காதலியின் அழகினைப் புனையும் பகுதி ஆகும். வேடப்பன் நகைமுத்தின் அழகைக் கண்டு வியப்படைகிறான்.

...................... இதுவரைக்கும்

இறந்திருக்கும் மங்கையரி லேனும் மற்றும்

இனிப்பிறக்கும் மங்கையரி லேனும், அந்த

நிறைந்திருக்கும் அழகுநகை முத்தாள் போன்றாள்

இல்லையென நினைக்கின்றேன் ? பேசும் பேச்சால்

சிறந்திருக்கும் செந்தமிழ்க்கும் சிறப்பைச் செய்தாள்

சிற்பத்திற் பெரும்புரட்சி செயப்பிறந்தாள்

காணுதற்குக் கருவியோ கயற்கண் இன்பக்

காட்சிதரும் பொருளன்றோ! வீழ்ந்தார் வாழ்வைப்

பூணுதற்கே இதழோரப் புன்ன கைத்தான்!

பூவாத புதுக்காதல் பூக்க நோக்கி

ஆணினத்தைக் கவர்கின்றாள்! நிலாமு கத்தாள்

தனியழகை அணிமுரசம் ஆர்க்கின் றாளே!

(கு.விளக்கு - விருந்தோம்பல்)

என்று வடசொற்கள் கலவாத நடையில் பாடியுள்ளார். இப்பாடலில் தனித்தமிழ் உணர்வை வெளிப்படையாகக் காணலாம். அருஞ்சொற்கள் இல்லாமல் எளிபநடையில் இப்பாடல் எழுதப்பட்டுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

**இரண்டாவது எடுத்துக்காட்டு**

மேலும் சுப்ரமண்ய பாரதி கவிதாமண்டலத்தில் வெளிவந்த உதயசூரியன் எனும் கவிதையில்,

உலகமிசை உணர்வெழுப்பிக் கீழ்த்திசையின் மீதில்

உதித்துவிட்டான் செங்கதிரோன், தகத்தகா யம்பார்

விலகிற்றுக் காரிருள்தான், பறந்ததுபார் அயர்வு,

விண்ணிலெலாம் பொன்னொளியை ஏற்றுகின்றான் அட்டா!

மிலையும்எழிற் பெருங்கடலில் அமுதப்ர வாகம்

மேலெல்லாம் விழி அள்ளும் ஒளியின்ப்ர வாகம்!

நலம்செய்தான், ஒளிமுகத்தைக் காட்டிவிட்டான், காட்டி

நடத்துகின்றான் தூக்கத்தில் ஆழ்ந்திருந்த உலகை!

(பாரதிதாசன் முழுத்தொகுதி 158)

எனும் பாடற் பகுதியில் 'ப்ரவாகம்' எனும் வடசொல்லைப் பயன்படுத்தியுள்ளார். பாரதிதாசன் தமிழியக்கக் கவிஞராக மாறிய பின்னர்,

பொங்கியும் பொலிந்தும் நீண்ட

புதுப்பிடர் மயிர்சி லிர்க்கும்

சிங்கமே! வான வீதி

திகுதிகு எனஎ ரிக்கும்

மங்காத தணற்பி ழம்பே!

மாணிக்கக் குன்றே! தீர்ந்த

தங்கத்தின் தட்டே! வானத்

தகளியிற் பெருவி ளக்கே!

கடலிலே கோடி கோடிக்

கதிர்க்கைகள் ஊன்று கின்றாய்

நெடுவானில் கோடி கோடி

நிறைசுடர்க் கைகள் நீட்டி

இடைப்படு மலையோ காடோ

இல்லமோ பொய்கை ஆறோ

அடங்கநின் ஒளிஅ ளாவ

அமைந்தனை! பரிதி வாழி!

என்று வடசொல் கலவாமல் எழுச்சியுடன் எழுதுகின்றார்.

**மூன்றாவது எடுத்துக்காட்டு**

1935இல் ஸ்ரீ சுப்ரமண்ய பாரதி கவிதாமண்டலம் என்ற கவிதைத் திங்களிதழில் காதலி காதலனுக்கு எழுதிய காதல் கடிதம் பின்வருமாறு அமைகிறது:

“என் அன்பே

இங்குள்ளார் எல்லோரும்

க்ஷேமமாய் இருக்கின்றார்கள்

என்தோழியர் க்ஷேமம்

வேலைக்காரர் க்ஷேமம் இதுவுமன்றி

உன்தயவால் எனக்காக உன்வீட்டுக்

களஞ்சியநெல் மிகவு முண்டே,

உயர் அணிகள் ஆடைவகை ஒவ்வொன்றில்

பத்துவிதம் உண்டு மற்றும்

கன்னலைப்போற் பலவகைப் பதார்த்தவகை

பக்ஷணங்கள் மிகவு முண்டு”

இக் கடிதத்தில் க்ஷேமம், பக்ஷணம் என்னும் இரண்டு வடமொழிச் சொற்களைப் பயன்படுத்துகிறார். மேலும் க்ஷேமம் என்ற சொல் பாடல் நெடுகவும் இடம் பெற்றுள்ளது.

1941இல் வெளிவந்த எதிர்பாராத முத்தம் என்னும் நூலில் பூங்கோதை பொன்முடிக்கு எழுதிய காதல் கடிதம் எளிய இனிய சொற்களால் உணர்வு பொங்கி அமைந்துள்ளது. அக்கடிதம் வருமாறு:

அத்தான் என் ஆவி உங்கள்
அடைக்கலம்! நீர்மறந்தால்
செத்தேன்! இஃதுண்மை, இந்தச்
செகத்தினிலே உம்மை அல்லால்
சத்தான பொருளைக் காணேன்
சாத்திரம் கூறு கின்ற
பத்தான திசைபரந்த
பரம்பொருள் உயர்வென் கின்றார்!
அப்பொருள் உயிர்க் குலத்தின்
பேரின்பம் ஆவ தென்று
செப்புவார், பெரியார் யாரும்
தினந்தோறும் கேட்கின் றோமே
அப்பெரி யோர்க ளெல்லாம்
வெட்கமாய் இருக்கு தத்தான்
கைப்பிடித் தணைக்கும் முத்தம்
ஒன்றேனும் காணார் போலும்!

காதல் கடிதம் என்ற ஒரு பொருளில் அமைந்த இரு கடிதங்கள் இங்குத் தரப்பெற்றன. அவற்றுள் முதல் காதல் கடிதம் வடசொற்கள் மிகுந்தும் இரண்டாவது காதல் கடிதம் வடசொற்களின்றி எல்லோரும் படித்து உவப்பு அடையுமாறும் அமைந்துள்ளது.

**நான்காவது எடுத்துக்காட்டு**

பாவேந்தருடைய பாட்டு நடையில் மட்டுமன்றிச் சொற்களை ஆளுவதிலும் மாற்றம் ஏற்பட்டுள்ளது. சுப்புரத்தினக் கவிராயர் பாரதியின் தாசனாக மாறிய பிறகு டில்லி என்னும் ஊர்ப்பெயரை,

செங்கதிரும் கதிமாறிக் கிடக்கும் டில்லி

(எதிர்பாராத முத்தம்)

என்று எழுதினார். டில்லி என்பதைத் தமிழ் ஒலிப்புக்கு ஏற்ப அமைக்காமல் இயல்பாகவே ஊர்ப்பெயர் எழுதுகின்ற போக்கைக் கவிஞரிடம் காண்கின்றோம்.

மறைமலையடிகளாரின் செல்வாக்கிற்குப் பின்னர் டில்லி என்ற ஊர்ப்பெயரைத் தமிழ் ஒலிப்புக்கு ஏற்பத் தில்லி என்று எழுதியுள்ளார். இதேபோலப் பாதுஷா என்ற பிறமொழிச் சொல்லைத் தமிழ் முறைக்கு ஏற்பப் பாதுசா என்று குறித்துள்ளார்.

இதனை,

"தில்லியில் பாதுசா செங்கோல் செலுத்தினான்" எனும் தமிழச்சியின் கத்தி என்ற நூலின் வரியால் அறியலாம்.

வடமொழிக் கலப்பின்றித் தனித்தமிழில் பாடல் எழுத வேண்டும் என்று கவிஞர் முடிவு எடுத்த பின்னர், அந்நெறியைப் பின்பற்றிப் பாடல் எழுதினார்.

சொற்களைத் தேர்ந்தெடுப்பதில் அதிகக் கவனம் செலுத்தியதால் கவிதைத் தன்மையின் வேகம் சற்றுக் குறைந்தது. இக் கருத்தைக் கவிஞர் ஏற்றுக் கொண்டுள்ளார் (சாலை, புதிய தமிழ்க் கவிதை, ப. 78). ஆயினும், சிறிது காலத்தில் அத்தடையை வென்றுவிடலாம் என்று நம்பினார்.

இக் கால கட்டத்தில் எழுதப்பட்ட நூல்களான, 'காதலா? கடமையா?', 'இளைஞர் இலக்கியம்', 'கண்ணகி புரட்சிக் காவியம்', 'மணிமேகலை வெண்பா' ஆகிய நூல்களுக்குக் கவிஞர் வழங்கிய முன்னுரையைப் படித்தால் அவர் சொற்களைத் தேர்ந்தெடுப்பதில் எடுத்துக் கொண்ட அக்கறையை நாம் அறியலாம்.

"இந்நூலின் நடை சிறிது கடினமாகத் தோன்றலாம். படிப்பவர்க்கு அருகிலிருக்கும் மொழிகளையே அறிமுகப்படுத்திக் கொண்டிருந்தால் மட்டும் போதாது, சிறிது தொலைவில் குவிந்திருக்கும் அரிய மொழிகளில் சிலவற்றையேனும் புலப்படுத்தத்தான் வேண்டும்" என்று, காதலா? கடமையா? எனும் நூலுக்கு எழுதிய முன்னுரையிலும் "இதிலுள்ள பாடல்களில் அருஞ்சொற்கள் காணப்படலாம். ஒவ்வொரு பாட்டாலும் மாணவர் இரண்டோர் அருஞ்சொற்களேனும் அறிந்து கொள்ளாராயினும் பாட்டினால் ஏற்படும் பயன்தான் என்ன? என்று கேட்கிறேன்" என்று இளைஞர் இலக்கியத்திற்கு எழுதிய முன்னுரையிலும், "வெண்பா ஆதலின் எண்ணிய அளவு எளிய நடையில் தர முடியவில்லை. ஆதலின், உரை ஒன்று சேர்க்கப்பட்டிருக்கிறது" என்று மணிமேகலை வெண்பாவிற்கு எழுதிய முன்னுரையிலும் குறித்துள்ளார்.

தனித்தமிழில் சிலபாட்டால் அடிகள் உள்ளம்
கலப்பற்ற பசுப்பாலே யாக மக்கள்
கவிந்துண்ணத் தருகஎனச் சொன்ன தாலே
சொலப்புகுந்தேன் என்தமிழர் இருந்து கேட்பார்
தூயதமிழ்ச் சுவைகண்டு வாழ்வார் நன்றே!

(க.பு.கா. இயல் 3)

என்று கண்ணகி புரட்சிக் காப்பியம் எழுத நேர்ந்தமைக்கான சூழல் குறித்தும் கூறியுள்ளார்.

இம்முன்னுரைகள் மூலம் அறியப்படும் செய்திகள் வருமாறு: எளிய நடையில் ஓரளவு எழுத்து வாசனையுள்ள தமிழனையும் சிறக்க வைப்பதுதான் இலக்கியப் படைப்பின் பயன் என்று கருதியவர் பாவேந்தர். அருஞ்சொற்களைத் தெரிந்து கொள்வதுதான் பாட்டின் பயனெனக் கூறியிருப்பதும் சுட்டிக்காட்டத்தக்கது.

தனித்தமிழ்ப் பற்றாளராக மாறிய பிறகு குறிஞ்சித் திட்டிலும் அருஞ்சொற்களையே கையாண்டுள்ளார். எவரேனும் அகராதியைப் புரட்டிப் பொருள் காண முற்படுவர் எனக் கருதி அவரே அச் சொற்களுக்குப் பொருளும் கூறியுள்ளார். கண்ணகி புரட்சிக் காப்பியம், மணிமேகலை வெண்பா ஆகிய இரண்டிலும் அருஞ்சொற்கள் பலவற்றிற்குப் பொருள் கூறும் பண்டிதர் முறையைப் பின்பற்றியுள்ளார்.

❖

# தடைக்கற்கள் உண்டென்றாலும்...

தமிழ்மாமணி **மன்னர்மன்னன்**



அண்ணல் காந்தி அடிகளின் வாழ்க்கை நிகழ்வுகளைப் படக்காட்சிகளாகத் தொகுத்து ஆவணப் படமாக்கி உலகுக்கு அளித்த பெருமை தமிழ்நாட்டின் எழுத்தாளர் ஏ.கே. செட்டியாருக்கே உண்டு. 'உலகம் சுற்றிய தமிழர்' என்ற முதற்பெருமையும் அவரையே சாரும். ஏ.கே. செட்டியார் அவர்கள், சென்னையினின்று வெளிவந்த 'சக்தி' மாத இதழில் இடம் பெறச் செய்ய 'நேர்காணல்' வடிவத்தில் கட்டுரை எழுத நினைத்துப் புதுச்சேரிக்கு வந்தார். 1942ஆம் ஆண்டு நவம்பர் இதழில் அந்த நேர்காணல் வெளிவந்தது.

புதுச்சேரியில் "வாத்தியார் வீடு'' என்று விசாரித்தால் பாரதிதாசன் வீட்டைக் காட்டுவார்கள் என்று தொடங்கும் அறிமுகத்துடன் அக் கட்டுரை வெளி வந்தது.

பாரதிதாசனாரிடம் நலம் உசாவி முடித்தபின் சில வினாக்களை எழுப்பினார் ஏ.கே. செட்டியார்.

**அப்படி ஒரு வினா**

"பழைய காலத்துத் தமிழ் நூல்களைத் திருத்தியோ அல்லது மாற்றியோ வெளியிடுகிறார்களே அது சரியா ?''

இது ஏ.கே. செட்டியார் விடுத்த வினா. பாரதிதாசனார் அளித்த விடை இது.

"எந்தப் பழைய நூலையும் இந்தக் காலத்துக்கு ஏற்ற விதமாகவும் அவர்களுக்குத் தோன்றிய திருத்தத்தோடும் மாற்றியோ, சேர்த்தோ, குறைத்தோ புதிய வெளியீடாக வெளியிடுவதில் நன்மையுண்டு.''

திரு. ஏ.கே. செட்டியார் அவர்கள் இப்படி ஒரு வினா எழுப்பிடக் காரணம் ஒன்றிருந்தது.

ஏறத்தாழ 1913இல் பாரதியார் மகாபாரதக் கதையின் உச்சகட்டப் பகுதியை 'பாஞ்சாலி சபதம்' என்ற வடிவமாற்றத்துடன் தம் காலத்து நாட்டுணர்வுக் கருத்துப் பரப்பு முயற்சியாகப் படைத்தார்.

1936இல் நரசிம்மாவதாரப் பழம் புராணம் 'இரணியன் அல்லது இணையற்ற வீரன்' எனும் சுயமரியாதைப் பிரசார மேடை நாடகமாக உருமாற்றம் செய்து அரங்கேற்றப்பட்டது. பாரதிதாசன் எழுதிய இந்த நாடகம் இரணியனைத் தமிழ் வீரனாகவும் அந்தப் பேரரசனை வீழ்த்த அவன் மகனான பிரகலாதனையே படைக் கலமாகக் கொண்டனர் என்ற புதுக் கருத்தை எழுதியிருந்தார் பாவேந்தர்.

எந்த அளவுக்கு இது தமிழரிடையே விழிப்பை ஏற்படுத்தியது எனில், அக்கால "சென்னை மாகாண சர்க்கார்'' இந்த நாடகம் படிக்கப்படக் கூடாது, நடிக்கப்படலாகாது என்று தடை விதிக்கும் கட்டாயம் ஏற்படும் அளவுக்குச் சென்றது ?

மேடை நாடகத்துக்குத் தடை இருந்த நாள்களில், பேரறிஞர் அண்ணா அவர்களின் கட்டளைப்படி திருவத்திபுரம் நண்பர்கள், தடையை மீறி மேடையில் நடித்தபோது, இரண்யன், பிரகலாதன், லீலாவதி, காங்கேயன் என்கிற கதை மாந்தர் வேடத்திலேயே காவலரால் பிடிக்கப்பட்டு, அவர்கள் அந்தந்தப் பாத்திர வடிவங்களிலேயே நீதிமன்றத்தில் நிறுத்தப்பட்டனர். வியப்பு இது மட்டும் அன்று. நீதிமன்றத்தில் தீர்ப்பு வழங்கப்பட்டபோது அந்தத் தோற்றங்களிலேயே இருந்தனர்!

காஷ்மீரத்துக் கவிஞன் பில்கணன் தன் சொந்த வரலாற்றைக் காப்பியமாக வடித்தான். அந்த நாட்டு இளவரசி "யாமினி பூரணதிலகை" மீது கொண்ட காதல் நிறைவேறாமல் போகும் ஏக்கத்தையும், அரசன் தனக்குப் பின் ஆட்சிப் பொறுப்பேற்றிட யாரும் இல்லாமல் போகக் கூடாதே என்கிற கவலையால், கவிஞனின் காதலை ஏற்றுக் கொண்டான் என்ற முடிவுடன் காப்பியத்தை நிறைவு செய்கிறான்.

பில்கணீயம் எனும் வடமொழிக் காப்பியத்தைப் "பில் ஹணீயம்'' எனும் தலைப்புடன் யாழ்ப்பாணத்துப் புலோலி மகாவித்துவான் வ. கணபதிப்பிள்ளை தமிழாக்கம் செய்து 1928ஆம் ஆண்டில் வெளியிட்டார்.

இதை நம் புரட்சிக் கவிஞர் படித்திருக்கலாம். உறுதியாகக் கூறத் தடயம் ஏதுமில்லை.

ஆனால் 1937இல் "புரட்சிக்கவி'' என்கிற சிறுகாப்பியத்தைப் பாரதிதாசனார் வெளியிட்டார்.

'பில்கணன்' காப்பியத்துக்கும் புரட்சிக்கவிக்கும் மிகுந்த வேறுபாடு. தமிழ்க் கவிஞனின் வழக்காடும் திறம், தமிழ்ப் பற்று, இந்த இணைவினால் இளவரசி அமுதவல்லி எழுச்சியுற்று வழக்குரைத்து வெற்றி பெறும் வேளையில், முடியாட்சி துறந்து குடியாட்சி மலரும் பெரும் புரட்சி உருவாகிறது! இச் சிறுகாப்பியம் பெற்ற வெற்றி, பாரதிதாசனாரையே "புரட்சிக்கவி'' என்று மக்கள் அழைத்து மகிழும் நிலையை உருவாக்கிற்று!

'பில்ஹணன்' என்ற வடமொழி நூலைத் தழுவிப் பாரதிதாசனார் ஏன் நூல் படைக்க வேண்டும் என்கிற சலசலப்பும் தலைதூக்கிற்று.

இதற்கு என்ன விளக்கம் அளித்தார் பாரதிதாசன்?

அவரின் பேச்சு நடையிலேயே சொல்கிறேன்:

"முண்டம்! கம்பராமாயணம் ஏதுடா? வால்மீகியைத் தழுவித் தமிழ்நாட்டின் வளங்களையும் நலங்களையும் தமிழ்மொழி மேம்பாட்டையும் கம்பன் எழுதவில்லையா? சீறாப்புராணம், தேம்பாவணி இதெல்லாம் நீ படிச்சிருக்கியா? அந்தந்த நாட்டுக் கதையைக் கொண்டு, தமிழிலக்கிய வடிவத்தில் செழிப்பூட்டும் படைப்புகள் அல்லவா?...''

இந்த விளக்கம் நல்ல விளைவைத் தமிழ்நாட்டில் ஏற்படுத்தியதில் வியப்பில்லை.

பாரதிதாசனாரே சக்தி, குமரிமலர் போன்ற இதழ்களில் சங்க இலக்கியப் பாக்களைத் தம் நடையில் வடித்துத் தந்திருக்கிறார்.

கருத்துரைப் பாட்டு எனும் தலைப்புடைய அப்பாடல்கள் மாணவரிடையே பெரும் விழிப்புணர்வை ஏற்படுத்தியது எனலாம்.

'தேனருவி' எனும் பாடல் தொகுப்பில் கருத்துரைப் பாட்டுகள் இடம் பெற்றிருக்கின்றன.

**1. வருத்தம் தொலையும் அன்றோ? – குறிஞ்சித் திணை 1**
**2. முருகனால் வந்த நோயாம் – குறிஞ்சித் திணை 2**
**3. இசையாயோ தோழி? – குறிஞ்சித் திணை 3**
**4. வருவது நலமா? பாலைத் திணை 1**
**5. தேய்ந்த புரிக்கயிறு – பாலைத் திணை 2**
**6. கூவின இன்பக் குயில்கள் – பாலைத் திணை 3**
**7. கடிய ஓட்டடா தேரை! – முல்லைத் திணை**
**8. ஏனத்தான் இந்தப் பொய்! – மருதத் திணை**
**9. அதோ வந்தாண்டி – நெய்தற்றிணை 1**
**10. பூவால் அணி செய்த இல்லம் – நெய்தல் 2**
**11. விரைந்தனர் விரைந்தனர் – வெட்சித் திணை**
**12. கரந்தை சூடுவீர் – வாகைத் திணை**
**13. மறவேந்தன் வஞ்சி சூடினான் – வஞ்சித் திணை**
**14. காஞ்சி சூடினானே – காஞ்சித் திணை 1**
**15. கடலொன்று வந்ததுபோலே... காஞ்சித் திணை 2**
**16. சூழ்ந்தது பகைப்படை – நொச்சித் திணை**

பழந்தமிழ்த் திணை வகையில் அமைந்த இப்பாடல்கள் மட்டுமன்றி, 'கருத்துரைப் பாட்டு' என்கிற தலைப்பில், 'இசையமுது' இரண்டாம் பகுதி நூலில் வந்துள்ளவை:

1. குறுந்தொகை 43. ஔவையார் பாடற் கருத்து
2. குறுந்தொகை 37. பாலை பாடிய பெருங்கடுங்கோ பாடற் கருத்து
3. குறுந்தொகை 16. பாலை பாடிய பெருங்கடுங்கோ பாடற் கருத்து
4. குறுந்தொகை 40. செம்புலப்பெயல் நீரார் பாடற் கருத்து

பாரதிதாசன் கவிதைகள் இரண்டாம் தொகுதியில் உள்ளவை:

1. குறுந்தொகை – 189ஆம் பாடல். மதுரை ஈழத்துப் பூதன்றேவன்.

2. குறுந்தொகை – 186ஆம் பாடல் – ஒக்கூர் மாசாத்தியார்.

இன்னும் பல உண்டு. இவை தம் காலத்து மாணவரிடையே சங்க இலக்கியத்தின் மீது ஆவல் கொள்ளச் செய்யும் என்று பாரதிதாசன் எண்ணினார்.

பிசிரந்தையார் இலக்கியச் சான்றின் அடிப்படையில் பாரதிதாசனார் "பிசிராந்தையார்" நயத்தைத் தம் 'குயில்' இதழில் வெளியிட்டார், இதுவே பாரதிதாசனாருக்கு சாகித்திய அகாதெமி விருதினைப் பெற்றுத் தந்தது.

புகழேந்தி இயற்றியதுபோல் முழுக் காப்பியம் ஒன்றனை வெண்பாவில் இயற்றிட உங்கள் வாத்தியாரால் முடியுமா? புதுச்சேரி தமிழறிஞர் ஒருவர் கேட்க, அடுத்த சில நாள்களில் உருவானது கண்ணகி புரட்சிக் காப்பியமும், மணிமேகலை வெண்பாவும்! சத்திமுத்தப் புலவர் சந்தம் ஒலிக்கும் குறுங்காப்பியமாய் உருவெடுத்தது. இன்னும் கழைக்கூத்தியின் காதல், சேரதாண்டவம் போன்ற உரைநடை நாடகங்களும் இலக்கியத் தரம் வாய்ந்தவை. தமக்கே உரிய பாச்சுவையில் முந்தைய வடிவங்களை விஞ்சும் வகையில் படைத்திருக்கிறார். தீந்தமிழ் வளர்த்த சமயகுரவர் குமரகுருபரரின் பாக்களில் திளைத்த பாரதிதாசனார் தமது 'எதிர்பாராத முத்தம்' குறுங்காப்பியத்தின் பிற்சேர்க்கையாகக் குமரகுருபரரைச் சித்திரித்துள்ளார்.

முதற்படைப்பான இரணியனுக்கு ஏற்பட்ட தடையை உடைத்தபின் புதிய வடிவங்களைப் புரட்சிக்கவிஞர் அள்ளிக் கொடுத்துள்ளமை கருதத் தக்கது.

மாற்று வடிவமைப்பு, கருத்துத் தழுவல், பண்பாட்டுப் படப்பிடிப்பு இப்படிப் பல நல்விளைச்சல் கண்டோம்.

புலவர் குழந்தை "இராவண காவியம்'' படைத்துப் புதுமை செய்தவர். நம் முத்தமிழறிஞர் கலைஞர் அவர்கள் முனைந்து எழுதிய "சங்கத்தமிழ்", "குறளோவியம்'' முதலானவை நம் காலத்து மக்களை ஈர்த்துள்ளமையும் நம் கவனத்துக்குரியன.

தம் படைப்பிலக்கியத்தில் பல்வேறு புதுமைகளைச் செய்துவரும் கலைஞர் அவர்கள், பாரதிதாசன் முற்காலத்தில் குறிப்பிட்டபடி "கிளம்பிற்றுக்காண் தமிழ்ச்சிங்கக் கூட்டம்'' என இலக்கிய உலகு பூரிக்கிறது.

**தடைகளைக் கடந்திடத்**
**தமிழச் சாதிக்குத் தடந்தோள்**
**உண்டு என்பது**
**இப்போது நிலை நாட்டப் பெறுவது**
**தமிழர்களின் நற்பேறாகும்!**

❖

# திருக்குறள் ஆங்கில மொழிபெயர்ப்புகள்

முனைவர் கு. மோகனராசு

**நுழைவாயில்**



வையத்தை வாழ்விக்க வந்த வள்ளுவத்தின் அருமைகளையும் பெருமைகளையும் வையத்திற்கு அறிமுகப்படுத்திய அருமையும் பெருமையும் திருக்குறள் மொழிபெயர்ப்புகளுக்கு உண்டு. அந்தத் திருக்குறள் மொழிபெயர்ப்பு என்பது சுமார் 415 ஆண்டுக் கால வரலாற்றை உள்ளடக்கியதாக அமைகின்றது; அந்த வரலாற்றில் திருக்குறள் ஆங்கில மொழிபெயர்ப்பு வரலாறு என்பது சுமார் 215 ஆண்டுகளை உள்ளடக்கியதாக அமைகின்றது. அந்த 215 ஆண்டுக்கால வரலாற்றில் ஆக்கம் பெற்றனவாக அறியப்படும் 91 திருக்குறள் ஆங்கில மொழிபெயர்ப்புகளை வகை தொகை செய்து, முதன்முதலில் உலகிற்கு அறிமுகம் செய்யும் நோக்கில் இந்த ஆய்வு அமைகின்றது.

திருக்குறளுக்கான முதல் ஆங்கில மொழிபெயர்ப்பு வெளிவருவதற்கு முன்னர்ப் பிற மொழிகளில் நிகழ்ந்த மொழிபெயர்ப்புகள் பற்றிப் பின்வரும் குறிப்புகள் கிடைத்துள்ளன.

கி.பி. நான்காம் நூற்றாண்டு அளவில், திருக்குறளில் சிறப்பானவை எனக் கருதப்பட்ட சில குறட்பாக்கள், கிரேக்க மொழியில் மொழிபெயர்க்கப் பட்டதாகக் கூறுவர். ஆனால் அதற்கான சான்றுகள் தற்போது கிடைத்தில. கி.பி. 16ஆம் நூற்றாண்டில், இலங்கையில் கோட்டே என்னும் பகுதியைப் புவனேகுபாகு என்னும் அரசன் ஆண்ட காலத்தில், அவனுடைய அரசவையில் போர்ச்சுகீசிய பாதிரியார் ஒருவர் திருக்குறளைக் குறிப்பிட்டுள்ளதாகக் கூறுகின்றனர் (க.த. திருநாவுக்கரசு, சான்றோர் கண்ட திருவள்ளுவர், மணியகம், சென்னை, 1979, ப. 226).

மலையாள ஒலிபெயர்ப்பும் மொழிபெயர்ப்பும் கொண்டு, 1595இல் எழுதப்பட்ட திருக்குறள் மொழிபெயர்ப்புச் சுவடி ஒன்று இருந்துள்ளது; அந்த அரிய மொழிபெயர்ப்பு, எல்.வி. இராமசாமி ஐயரால், 'The Bulletin of the Rama Varma Research Institute' வழி, பகுதி பகுதியாக முறையே 1938, 1940, 1941ஆம் ஆண்டுகளில் பதிப்பிக்கப்பட்டு, அறிமுகப்படுத்தப்பட்டுள்ளதை அறிகிறோம். இதுதான், உலகு அறியப்படும் முதல் மொழிபெயர்ப்பு ஆகும்.

வீரமாமுனிவர் என்னும் ஜெ.சி. ஜோசப் பெஸ்கி என்பவர்தாம் முதன்முதல் (1730) திருக்குறளில் அறம் பொருள் என்னும் இரண்டு பகுதிகளையும் இலத்தீன் மொழியில் மொழிபெயர்த்துத் திருக்குறளை மேலை நாட்டவர்களுக்கு அறிமுகப்படுத்தி வைத்துள்ளார். கி.பி. 1747 அளவில் பிரஞ்சு மொழியில் திருக்குறள் திரட்டு ஒன்று இருந்துள்ளதாக அறியப்படுகிறது.

**தொடக்க கால ஆங்கில மொழிபெயர்ப்புகள்**

1794இல் என்.எச். கிண்டர்ஸ்லி என்பவர் தாம் வெளியிட்ட 'Specimens of Hindu Literature' என்னும் நூலில், 'திருவள்ளுவர் குறள் அல்லது அறிவுக் கடல்' ('Teroovalluvar Kural or the Ocean of Wisdom') என ஒரு பகுதி அமைத்து, ஆங்கிலக் கவிதை வடிவில், தாம் தேர்ந்த பல குறட்பாக்களை மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளார். இது இலண்டனில் வெளியிடப் பட்டுள்ளது. இதுதான், உலக அளவில் வெளிவந்த முதல் ஆங்கில மொழிபெயர்ப்பு.

1812இல், எஃப். டபிள்யூ. எல்லீஸ் என்பவர், திருக்குறள் அறத்துப்பாலில் முதல் 13 அதிகாரங்களில் 69 குறட்பாக்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து அவற்றிற்கு விரிவான குறிப்புகளையும் மேற்கோள்களையும் தந்துள்ளார். இவருடைய இறப்பின் காரணமாக இவருடைய முயற்சி முழுமை பெறவில்லை. இவருடைய இறப்பிற்குப் பின் இதனை முதலில் பதிப்பித்தவர் இராமானுஜ கவிராயர். எஸ்.ஐ.எஸ்.எஸ். டபிள்யூ.பி. சொசைட்டி வெளியிட்டுள்ள டாக்டர் ஜி.யூ. போப் அவர்களின் ஆங்கில மொழிபெயர்ப்பு நூலின் இணைப்பில், எல்லீஸ் அவர்களின் மேற்சுட்டிய

69 குறட்பாக்களுக்கான மொழிபெயர்ப்புகளோடு அவர் வழங்கிய ஆங்கில மொழிபெயர்ப்புகளாக 51 குறட்பாக்களுக்கான மொழிபெயர்ப்புகளும் இணைக்கப்பட்டு, மொத்தம் 120 குறட்பாக்களுக்கான மொழிபெயர்ப்புகள் இடம் பெற்றுள்ளதாக அறிய முடிகிறது. இவற்றில், விரிவான குறிப்புகளோ மேற்கோள்களோ இடம் பெறவில்லை; வெறும் ஆங்கில மொழிபெயர்ப்புகள் மட்டும் இடம் பெற்றுள்ளன என்றும் அறிகிறோம். 1980ஆம் ஆண்டில், தில்லியில் உள்ள ஏசியன் எஜுகேஷன் சர்வீஸ் வெளியிட்டுள்ள டாக்டர் ஜி.யூ. போப்பு அவர்களின் திருக்குறள் ஆங்கில மொழிபெயர்ப்பின் கடைசியிலும் எஃப்.டபிள்யூ. எல்லீஸின் 120 குறட்பாக்களுக்கான ஆங்கில மொழிபெயர்ப்புகள் இடம் பெற்றுள்ளன.

1840இல் இராமானுஜ கவிராயர், முதல் 24 அதிகாரங்களுக்குப் பரிமேலழகர் உரையும், தம்முடைய வெள்ளுரையும் புத்துரையும் சேர்த்துப் பதிப்பித்த நூலில், அந்த 24 அதிகாரங்களுக்கு டபிள்யூ.எச்.துரு (W.H. Drew) அவர்களின் கவிதை வடிவிலான ஆங்கில மொழிபெயர்ப்பையும் இணைத்து வெளியிட்டுள்ளார். 1873இல் இராமானுஜ கவிராயர், அறத்துப்பாலில் துறவறவியல், பொருட்பாலில் அரசியல் ஆகிய அதிகாரங்களுக்குப் பரிமேலழகர் உரையும், தம்முடைய வெள்ளுரையும் புத்துரையும் சேர்த்துப் பதிப்பித்த நூலில், அந்த இயல்களில் உள்ள அதிகாரங்களில் உள்ள குறள்களுக்கு டபிள்யூ.எச். துரு செய்த ஆங்கில மொழிபெயர்ப்பையும் இணைத்து வெளியிட்டுள்ளார். இந்த வகையில் மொத்தம் 63 அதிகாரக் குறள்களுக்கு டபிள்யூ.எச். துரு ஆங்கில மொழிபெயர்ப்புத் தந்துள்ளார்.

1872இல் சார்லஸ் இ. கோவர் என்பவர் 'The Folk Songs of South India' என்னும் நூலில், தேர்ந்தெடுத்த சில குறள்களைக் கவிதை வடிவிலான ஆங்கில மொழிபெயர்ப்பாக்கி ஓர் இயலாகத் தந்துள்ளார். 1873இல் எட்வர்ட் ஜீவிட் இராபின்சன் என்பவர், தாம் வழங்கிய 'Tamil Wisdom' என்னும் நூலில் ஓர் இயலாக, திருக்குறளில் வரும் முதல் 24 அதிகாரக் குறட்பாக்களுக்கு ஆங்கில யாப்பு வடிவில் மொழிபெயர்ப்பு வெளியிட்டுள்ளார். இவரே, 1886இல் அறத்துப்பால், பொருட்பால் ஆகிய இரண்டிற்குமான 108 அதிகாரங்களுக்கு ஆங்கில யாப்பு வடிவில் மொழிபெயர்ப்பு வெளியிட்டுள்ளார்; இரண்டிலும் திருவள்ளுவர் பற்றி வழங்கும் கதையையும் குறிப்பிட்டுள்ளார்.

1885இல், 'திருக்குறள் மூலமும் பரிமேலழகர் செய்த உரையும்' என்னும் முருகேச முதலியாரின் நூலில், ரெவரெண்டு ஜே. லாசரஸ் அவர்களின் ஆங்கில மொழிபெயர்ப்பும் வெளிவந்துள்ளது.

ரெவரெண்டு டபிள்யூ.எச். துரு அவர்கள் எழுதிய முதல் 63 அதிகாரங்களுக்கான ஆங்கில மொழிபெயர்ப்புகளில் ரெவரெண்டு ஜே. லாசரஸ் சில திருத்தங்கள் செய்தும், எஞ்சிய அதிகாரங்களுக்கு (64–133) தாம் மொழிபெயர்ப்பு வழங்கியும் நிறைவு செய்துள்ளார்.

1886இல் டாக்டர் ஜி.யூ. போப்பு, திருக்குறள் முழுமைக்கும் வடித்த கவிதை வடிவிலான ஆங்கில மொழியாக்கம் இலண்டனில் வெளியிடப்பட்டுள்ளது. இந்த மொழிபெயர்ப்பில் அறிமுக உரை, இலக்கணக் குறிப்புகள், முதற்குறள் அகராதி ஆகியன இடம் பெற்றுள்ளன. இதுதான் திருக்குறள் முழுமைக்குமான முதல் ஆங்கில மொழிபெயர்ப்பு ஆகும்.

இந்த மொழிபெயர்ப்பு நூலின் இணைப்புப் பகுதியில், ரெவரெண்டு டபிள்யூ.எச். துரு எழுதிய முதல் 63 அதிகாரங்களுக்கான ஆங்கில மொழிபெயர்ப்பும் (ரெவரெண்டு ஜே.லாசரஸ் செய்த திருத்தங்களோடு), ரெவரெண்டு ஜே. லாசரஸ் வழங்கிய எஞ்சிய 70 அதிகாரங்களுக்கான ஆங்கில மொழிபெயர்ப்பும் இணைப்பாக வெளிவந்தன. பின்னர் இந்த இருவர் மொழிபெயர்ப்புகளும் 1956இல் ஆசிரியர் நூற்பதிப்புக் கழகத்தாரால் தனி நூலாக வெளியிடப்பட்டன.

திருக்குறளுக்குப் படிப்படியாக ஆங்கில மொழி பெயர்ப்புகளை வெளியிட்டு, அந்தப் பணியை முழுமை செய்ய வேண்டும் என்னும் முனைப்புடையவர்களாகப் பலரும் இருந்துள்ளதை மேற்சுட்டிய குறிப்புகளிலிருந்து அறிய முடிகிறது.

### இருபதாம் நூற்றாண்டில் திருக்குறள் ஆங்கில மொழிபெயர்ப்புகள்

பத்தொன்பதாம் நூற்றாண்டில், மேலைநாட்டவர் திருக்குறளுக்கு வழங்கிய மொழிபெயர்ப்புகளாலும் திருக்குறளுக்கு அவர்கள் வழங்கிய போற்றுதல் உரைகளாலும் ஏற்பட்ட எழுச்சி, இருபதாம் நூற்றாண்டில், தமிழர்களிடையே திருக்குறள் ஆங்கில மொழி பெயர்ப்புகள் பற்றிய ஒரு விழிப்புணர்வை உருவாக்கம் செய்துள்ளது.

இருபதாம் நூற்றாண்டில் வெளிவந்துள்ள திருக்குறள் ஆங்கில மொழிபெயர்ப்பு நூல்களை,

1. திருக்குறள் முழுமைக்குமான ஆங்கில மொழிபெயர்ப்பு நூல்கள்
2. பால் அளவிலான ஆங்கில மொழிபெயர்ப்பு நூல்கள்
3. அதிகாரங்கள் அளவிலான ஆங்கில மொழிபெயர்ப்பு நூல்கள்

4. தேர்வு பெற்ற குறட்பாக்கள் அளவிலான ஆங்கில மொழிபெயர்ப்பு நூல்கள்

5. திருக்குறள் தொடர்கள் அளவிலான ஆங்கில மொழிபெயர்ப்பு நூல்கள்

6. தமிழ் உரையொடு பிறருடைய ஆங்கில மொழிபெயர்ப்புகளைப் பெற்ற நூல்கள்

எனப் பாகுபடுத்திக் காணலாம்.

**திருக்குறள் முழுமைக்குமான ஆங்கில மொழிபெயர்ப்பு நூல்கள்**

இருபதாம் நூற்றாண்டில், திருக்குறள் முழுமைக்குமான ஆங்கில மொழிபெயர்ப்பை முதன்முதல் தந்தவராக – முதன்முதல் தந்த தமிழராக – வ.வே. சுப்பிரமணிய ஐயர் (வி.வி.எஸ். ஐயர்) விளங்குகிறார். இவருடைய திருக்குறள் ஆங்கில மொழிபெயர்ப்பு நூல் 1915இல் வெளிவந்துள்ளது. இந்த நூலில் இவர் தமிழில் திருக்குறள் மூலம், சில குறள்களுக்குத் தமிழில் குறிப்புரைகள் ஆகியவற்றோடு ஆங்கில மொழிபெயர்ப்பையும் தந்துள்ளார்.

ஆ. அரங்கநாத முதலியார் அவர்களின் 'திருக்குறள் – மூலமும் உரையும், ஆங்கில மொழிபெயர்ப்பும்' என்னும் நூல் 1933இல் வெளிவந்துள்ளது. இதில் திருக்குறள் மூலமும் ஆசிரியரின் உரையும் அந்த உரைக்கான ஆங்கில மொழிபெயர்ப்பும் இடம் பெற்றுள்ளன. இந்த ஆங்கில மொழிபெயர்ப்பினை ஆ. அரங்கநாத முதலியார், பி.எல். அரங்கநாத ஐயர், ஆர். ஸ்ரீநிவாச தேசிகன் ஆகிய மூவர் சேர்ந்து செய்துள்ளனர்.

எம்.எஸ். பூர்ணலிங்கம் பிள்ளை, 1929ஆம் ஆண்டில், தேர்ந்தெடுத்த சில குறள்களுக்கும் அதிகாரங்களுக்கும் ஆங்கில மொழிபெயர்ப்பு மட்டும் தந்துள்ளார். பின்னர் இவர், 1939இல் திருக்குறளுக்கான ஆங்கில மொழிபெயர்ப்பை மட்டும் எழுதி வைத்திருந்தது (முன்னுரை வழி அறிய முடிகின்றது), அதனை 1942இல் வெளியிட்டுள்ளார். இந்த நூலில், அதிகாரத் தலைப்புகளின்கீழ், மணக்குடவரின் வைப்புமுறை எண்களையும் குறிப்பிட்டுள்ளார்; ஆங்கிலத்தில் அடிக்குறிப்புகளும் தந்துள்ளார்.

எஸ்.எம். மைக்கேல் என்பவர், முதலில் தேர்ந்தெடுத்த சில குறள்களுக்கு மட்டும் 1928இல் ஆங்கில மொழிபெயர்ப்பு வழங்கியுள்ளார். 1944இல் அறத்துப்பால் முழுமைக்கும் ஆங்கில மொழிபெயர்ப்பு வழங்கியுள்ளார். 1946இல் திருக்குறள் முழுமைக்கும் ஆங்கில மொழிபெயர்ப்பு வழங்கியுள்ளார். இவருடைய மொழிபெயர்ப்பு, தமிழ் மூலத்தோடு கவிதை நடையிலான ஆங்கில மொழிபெயர்ப்பாக அமைந்துள்ளது. இதில் ஒரு புதுமையைக் கையாண்டுள்ளார்; ஆங்கிலக் கவிதையைக் குறள் வெண்பா போல் ஒன்றே முக்கால் அடியில் கொண்டு வந்து தொடை அமைவுகள் பொருந்துமாறு யாத்துள்ளார். அதற்கு 'The Coupletette' என்று புதிய பெயரும் சூட்டியுள்ளார்.

வி.ஆர். இராமச்சந்திர தீட்சதர், 1949ஆம் ஆண்டில் திருக்குறள் ஆங்கில மொழிபெயர்ப்பை எழுதி வெளியிட்டுள்ளார். இதில், திருக்குறள் மூலம், உரை, ஆங்கில மொழிபெயர்ப்பு ஆகியன இடம் பெற்றுள்ளன. இதில் முதன்முதலாக ஆங்கில ஒலி பெயர்ப்பும் இடம் பெற்றுள்ளது என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

1950இல் பேராசிரியர் எம்.ஆர். இராசகோபால ஐயங்கார், தம் திருக்குறள் ஆங்கில மொழிபெயர்ப்பை அதன் மூலத்துடன் வெளியிட்டுள்ளார்; இது கையடக்கப் பதிப்பாக வெளிவந்துள்ளது.

திருக்குறள் மூலம், ஆங்கில ஒலிபெயர்ப்பு, ஆங்கில மொழிபெயர்ப்பு, விளக்கவுரை என ஆக்கம் செய்து, பேராசிரியர் அ. சக்கரவர்த்தி நயினார் 1953இல் ஒரு நூலைப் படைத்துள்ளார். இதில் நீண்ட முன்னுரையும் இடம் பெற்றுள்ளது.

திருவாசகமணி கே.எம். பாலசுப்பிரமணியம், 1962இல் திருக்குறள் மூலத்துடன் ஆங்கில மொழிபெயர்ப்பைக் கவிதை வடிவில் உருவாக்கம் செய்து வெளியிட்டுள்ளார். பின் இணைப்பாக 256 பக்கங்களில் ஆங்கிலத்தில் குறளுக்கான விரிவான குறிப்புரைகளும், தமிழ் இலக்கியங்கள் மற்றும் பிற நூல்களில் காணும் ஒப்புமைக் கூறுகளும், பிற மொழிகளாலான திருக்குறள் மொழிபெயர்ப்புகள் பற்றிய விவரங்களும், உலகத்து நல்லறிஞர்கள் பலரும் திருக்குறள் பற்றிக் கூறிய மதிப்புரைகளும், சேக்சுபியர் படைப்புகளிலும் திருக்குறளிலும் காணும் ஒப்புமைக் கூறுகள் சிலவும் இடம் பெற்றுள்ளன.

இரண்டாம் உலகத் தமிழ் மாநாடு 1968இல் பெரும் எழுச்சியை உருவாக்கிய பின்னர்த் தமிழில் திருக்குறள் உரை நூல்கள் பலவாகப் பெருகியது போலவே, ஆங்கில மொழிபெயர்ப்புகளும் பலவாக வெளிவந்துள்ளன.

இரா. கன்னியப்ப நாயக்கர் (1968) பரிமேலழகர் உரையைத் தந்து, அதற்குத் தெளிவான பதவுரையும்

கருத்துரையும் தந்து, ஆங்கில மொழிபெயர்ப்பும் தந்துள்ளார்; அந்த ஆங்கில மொழிபெயர்ப்பை ஆர். சவுந்தரராசன் எழுதியுள்ளார். அதாவது, உரை ஒருவருடையது, அந்த உரைக்கான ஆங்கில மொழிபெயர்ப்பு வேறு ஒருவருடையது.

யோகி சுத்தானந்த பாரதியார், 1968இல் திருக்குறள் ஆங்கில மொழிபெயர்ப்பைக் கவிதை நடையில் யாத்து வெளியிட்டுள்ளார்; அதனையே உரைநடையிலான ஆங்கில மொழிபெயர்ப்பாக்கி 1970இல் வெளியிட்டுள்ளார். இவரைத் தொடர்ந்து திருக்குறளை ஆங்கிலத்தில் முழுமையாக மொழிபெயர்த்து வழங்கியவர்களைப் பார்ப்பின், மூலத்தை வழங்காமல் டி. முத்துசாமி (1965), ஜி. வான்மீகநாதன் (1969) ஆகியோர் உரைநடையில் ஆங்கில மொழிபெயர்ப்புகளை மட்டும் வழங்கியுள்ளனர். கஸ்தூரி சீனிவாசன் (1969), இ.வி. சிங்கன் (1975), பி.எஸ். சுந்தரம் (1990) ஆகியோர் கவிதை நடையிலான ஆங்கில மொழிபெயர்ப்புகளை மட்டும் வழங்கியுள்ளனர். பி.எஸ். சுந்தரம் இணைப்பில் ஆங்கிலக் குறிப்புரைகளும் தந்துள்ளார்.

டாக்டர் எஸ். ஜகத்ரட்சகன், 1985இல் 'திருக்குறள் கருத்துரையும் ஆங்கிலத் தொகுப்புரையும்' என்னும் நூலை வழங்கியுள்ளார். இதில் பல திருக்குறள் மொழிபெயர்ப்பாளர்களின் மொழிபெயர்ப்புகளைத் தந்துள்ளார். 1998இல் தாம் எழுதிய திருக்குறள் ஆங்கில மொழிபெயர்ப்பை மட்டும் வழங்கியுள்ளார். 1999இல் திருக்குறள் மூலம், உரை, ஆங்கில மொழிபெயர்ப்பு என மூன்றையும் ஒருங்கிணைத்து வழங்கியுள்ளார்.

திருக்குறள் மூலத்தைத் தந்து, ஆங்கில மொழிபெயர்ப்புகள் வழங்கியவர்கள் என்று பார்ப்பின், டாக்டர் எம். சுவாமிநாதன் (1992), டி.வி.ஜி. இராமரத்தினம் (1995), திருக்குறள் கே. கலியபெருமாள் (1999) ஆகியோர் ஆங்கில மொழிபெயர்ப்பை உரைநடையில் தந்துள்ளனர். டி.ஆர். கள்ளபிரான் (1995), கே.சி. அகமுடைநம்பி (1999) ஆகியோர் ஆங்கில மொழிபெயர்ப்பில் சற்றுக் கவிதை நடையையும் இணைத்துத் தந்துள்ளனர். டி.எஸ். இராமலிங்கம் பிள்ளை (1987), டாக்டர் ஏ. அந்தோணி செல்வதாஸ் (2000) ஆகியோர் திருக்குறள் மொழிபெயர்ப்பை ஆங்கிலக் கவிதை நடையில் தந்துள்ளனர்.

திருவாசகமணி கே.எம். பாலசுப்பிரமணியம் போல், குறளுக்கு ஆங்கிலத்தில் விரிவான விளக்க உரை வழங்கியவர் டாக்டர் சி.ஆர். ஆச்சார்யா (1999). இவர் ஒவ்வொரு குறளுக்கும் அறிமுக உரை, குறள் மூலம், ஆங்கில ஒலிபெயர்ப்பு, கவிதை நடையிலான ஆங்கில மொழிபெயர்ப்பு, விளக்க உரை எனத் தம் மொழி பெயர்ப்புப் போக்கை வரையறுத்துக் கொண்டுள்ளார்.

அடுத்ததாகக் குறள்களுக்கு ஆங்கிலத்தில் விரிவான விளக்கவுரை வழங்கியவர் டாக்டர் எஸ். டயஸ் (2000). இவர் ஒவ்வொரு குறளுக்குமான மூலம், மூலத்தின் சொற்பிரிப்பு வகை, ஆங்கில ஒலிபெயர்ப்பு, கவிதை நடையிலான ஆங்கில மொழிபெயர்ப்பு, விரிவான விளக்க உரை எனத் தம் மொழிபெயர்ப்புப் போக்கை அமைத்துக் கொண்டுள்ளார். இவர் வழங்கிய அறத்துப்பாலுக்கான மொழிபெயர்ப்பு மட்டும் 1982இல் வெளிவந்துள்ளது. பின்னர் 2000இல் முப்பாலுக்குமான ஆங்கில மொழி பெயர்ப்பு இரண்டு தொகுதிகளாக வெளியிடப்பட்டுள்ளது.

சிரோமணி எஸ்.என். ஸ்ரீராமதேசிகன் அவர்கள் ஆங்கிலம், சமற்கிருதம் ஆகிய இரு மொழிகளிலான மொழிபெயர்ப்புகளோடு தமிழ் உரையும் தந்துள்ளார். இக்கூறுகளொடு பொருட்பாலுக்கான மொழிபெயர்ப்பு 1978லும், அறத்துப்பால் மற்றும் காமத்துப்பால்களுக்கான மொழிபெயர்ப்பு 1979லும் வெளிவந்துள்ளன. இந்த நூல்கள் சமற்கிருத மொழிபெயர்ப்பு, திருக்குறள் மூலம், ஆங்கில மொழிபெயர்ப்பு, தமிழில் உரை என்னும் முறையில் அமைக்கப்பட்டுள்ளன. இவரே, பொருட்பாலுக்கு ஆங்கிலம் மற்றும் சமற்கிருத மொழிபெயர்ப்புகளோடு நூல் வெளியிட்டுள்ளதையும், ஆங்கில மொழிபெயர்ப்போடு தமிழ் உரையும் சேர்த்து வெளியிட்டுள்ளதையும் ஆசிரியரின் நூல்கள் என்னும் பகுதியில் இருந்து அறிய முடிகின்றது.

ஏசியன் எஜுகேஷனல் சர்வீஸ் வழி 1980இல் ஓர் ஆங்கில மொழிபெயர்ப்பு வெளிவந்துள்ளதாக அறிய முடிகின்றது; ஹவாயில் உள்ள சத்குரு சிவாய சுப்பிரமணியசுவாமி 1999இல் திருக்குறளுக்கு ஓர் ஆங்கில மொழிபெயர்ப்பை எழுதி வெளியிட்டுள்ளதாகவும் அறிய முடிகின்றது.

**பால் அளவிலான ஆங்கில மொழிபெயர்ப்புகள்**

டி. ஐசக் தங்கையா, 1955இல் அறத்துப்பாலில் முதல் இரண்டு அதிகாரங்களுக்கு மட்டும் பரிமேலழகர் உரையுடன் தம் ஆங்கில மொழிபெயர்ப்பையும் வழங்கியுள்ளார் என்று பலர் குறிப்பிட்டுள்ளனர். ஆனால், அதே ஆண்டில் அவர், 'Thirukkural Virtue & Wealth' என்னும் நூலில் அறத்துப்பால், பொருட்பால் ஆகியவற்றிற்கான ஆங்கில மொழிபெயர்ப்பு வழங்கியுள்ளார் என்பதைக் காண முடிகின்றது.

சி. நடேசன், ஏ. பாண்டுரங்கன் (1990) ஆகியோர் அறத்துப்பாலுக்கு மட்டும் ஆங்கில மொழிபெயர்ப்புகள் வழங்கியுள்ளதாக அறிய முடிகின்றது.

### அதிகாரங்கள் அளவிலான மொழிபெயர்ப்புகள்

பால் அளவிலான திருக்குறள் ஆங்கில மொழிபெயர்ப்பு முயற்சி இந்த நூற்றாண்டில் நடந்துள்ளது போன்றே, அதிகார அளவிலான சில மொழிபெயர்ப்பு முயற்சிகளும் நடைபெற்றுள்ளன.

ஐ.டி. தங்கசாமி (1954) அறம், பொருள் ஆகிய இரண்டு பால்களிலும் 27 அதிகாரங்களைத் தேர்வு செய்து அவற்றிற்கான ஆங்கில மொழிபெயர்ப்பை மட்டும் எழுதி, நூலாக்கம் செய்துள்ளார்; ஆங்கில மொழிபெயர்ப்புக் கவிதை நடையில் அமைந்துள்ளது.

ஏ. கஜபதி நாயகர் (1969) பாயிரவியலில் இடம் பெற்ற நான்கு அதிகாரங்கள் உட்பட, ஒன்பது அதிகாரங்களைத் தேர்வு செய்து, அவற்றிற்கு மூலமும் மொழிபெயர்ப்பும் வழங்கியுள்ளார்; சில குறள்களுக்கு விரிவான விளக்கவுரைகளும் வழங்கியுள்ளார்.

புலவர் என்.இ. இராமலிங்கம் (1992) ‘பொதுமறை புகட்டும் உடைமைகள் பத்து’ என்னும் நூலில் உடைமை என முடியும் பத்து அதிகாரங்களைத் தேர்வு செய்து, அவற்றிற்கு மூலம், உரை, ஆங்கில மொழிபெயர்ப்பு என்னும் போக்கில் மொழிபெயர்ப்பு நூல் வழங்கியுள்ளார்.

டி.கே. ஓமன் என்பவர் 127 அதிகாரங்களுக்கான ஆங்கில மொழிபெயர்ப்பு ஒன்றைப் பதிப்பித்துள்ளார். அந்தப் பதிப்பில் ஆண்டும் இல்லை, மொழிபெயர்ப்பாளர் பெயரும் இல்லை.

### தேர்ந்தெடுத்த குறள்களுக்கான மொழிபெயர்ப்புகள்

ஒரு சில மொழிபெயர்ப்பாளர்கள், தத்தம் நோக்கிற்கு ஏற்பக் குறட்பாக்களைத் தேர்வு செய்து, அவற்றிற்கு ஆங்கில மொழிபெயர்ப்புகளைத் தந்துள்ளதைக் காண முடிகின்றது.

எச்.ஏ. பாப்லே (1931), சின்னராஜன் (1967), இ. எம்மான்ஸ் ஒயிட் (1968), வி.கே. பரமேஸ்வரன் பிள்ளை ஆகியோர் தத்தமக்குப் பிடித்தமான – தம்மைப் பெரிதும் ஈர்த்த குறட்பாக்களைத் தேர்வு செய்து, அவற்றிற்குக் கவிதை வடிவிலான ஆங்கில மொழிபெயர்ப்புகளை வழங்கியுள்ளார்.

திருமதி டி. திருநாவுக்கரசு (1915), எஸ். சபாரத்தின முதலியார் (1920), ஏ. மாதவையா (1925), டி.வி. பரமேஸ்வரன் ஐயர் (1928), குமரன் கம்பெனி (1928), சக்கரவர்த்தி சி. இராஜகோபாலாச்சாரியார் (1935), குறள் இயக்கம் (1964), லியோ பதிப்பகத்தார் (1978), மு. திரவியம் (1992), இ.வி. சிங்கன் (1994), என்.சி. நாயுடு (தென் ஆப்பிரிக்கா, 1995), மார்கன் ஏகாம்பரம் (1999) ஆகியோர் தத்தமக்குப் பிடித்தமான – தம்மைப் பெரிதும் ஈர்த்த குறட்பாக்களைத் தேர்வு செய்து, அவற்றிற்கு உரைநடையில் ஆங்கில மொழிபெயர்ப்புகளை வழங்கியுள்ளனர்.

சக்கரவர்த்தி சி. இராஜகோபாலாச்சாரியாரின் மொழிபெயர்ப்புகளில் முதலில் திருக்குறள் பொருட்பாலில் தேர்ந்தெடுத்த குறள்களுக்கான ஆங்கில மொழிபெயர்ப்பு மட்டும் வெளிவந்தது (1935); பின்னர் 1947இல் அறத்துப்பாலில் சில அதிகாரங்களில் குறள்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு அவற்றுக்குமான ஆங்கில மொழிபெயர்ப்புகள் இடம் பெற்றன. இவர், அதிகார விளக்கங்களும் தம் மொழிபெயர்ப்புகளொடு வழங்கியுள்ளார்.

### தொடர்கள் அளவிலான மொழிபெயர்ப்புகள்

இரு சீர்கள், மூன்று சீர்கள், நான்கு சீர்கள் அளவில் நின்று பொருள் தரும் தொடர்களைத் தேர்ந்து அவற்றிற்கு உரை காணும் முயற்சிகள் அவ்வப்போது மேற்கொள்ளப் பட்டு வந்துள்ளன. அத்தகைய தொடர்களுக்கு ஆங்கில மொழிபெயர்ப்புக் காணும் முயற்சி ஒரு சிலரிடம் காணப்படுகின்றது.

1969இல் கல்லை தே. கண்ணன் இத்தகைய முயற்சியைச் சிறிய அளவில் மேற்கொண்டார். அதனையே சற்று விரிவு செய்து இ.வி. சிங்கன் (சிங்கப்பூர்) 1999இல் இம்முயற்சியை மேற்கொண்டார்.

### இருபத்து ஒன்றாம் நூற்றாண்டில் திருக்குறள் ஆங்கில மொழிபெயர்ப்புகள்

இருபத்து ஒன்றாம் நூற்றாண்டில், திருக்குறளை ஆங்கிலத்தில் முழுமையாக மொழிபெயர்த்து வழங்கியவர்களைப் பார்ப்பின், திருக்குறள் மூலத்தைத் தமிழில் வழங்காமல், வி.பி. பலம் (வி. பேரம்பலம், 2005) ஆங்கிலப் புதுக்கவிதை நடையில் விரிவான முறையில் மொழிபெயர்ப்பை மட்டும் வழங்கியுள்ளார். இளவரசர் ஆர். சபா (2002), ஆர். சபாரத்தினம் (2005), வி. சீனிவாசன் (2007) ஆகியோர் கவிதை நடையிலான ஆங்கில மொழிபெயர்ப்புகளை மட்டும் வழங்கியுள்ளனர்.

திருக்குறள் மூலத்தைத் தமிழில் தந்து, ஆங்கில மொழிபெயர்ப்புகள் வழங்கியவர்கள் என்று பார்ப்பின்,

கே. கண்ணன் (2003), எஸ். இரத்தினகுமார் (2006) ஆகியோர் ஆங்கில மொழிபெயர்ப்பை உரைநடையில் தந்துள்ளனர். வி. பத்மநாபன் (2004) ஆங்கில மொழிபெயர்ப்பில் சற்றுக் கவிதை நடையையும் இணைத்துத் தந்துள்ளார். கே.சி. அகமுடைநம்பி, தம் மொழிபெயர்ப்பில் ஒரு சில திருத்தங்களுடன் மீண்டும் ஒரு மொழிபெயர்ப்பை 2004இல் வெளியிட்டுள்ளார். லெப்டினெண்ட் கர்னல் சி.ஆர். சுந்தர் (2001) திருக்குறள் மொழிபெயர்ப்பை ஆங்கிலக் கவிதை நடையில் தந்துள்ளார். எம். இராஜாராம் (2009) தம் ஆங்கில மொழிபெயர்ப்பைக் கவிதை நடையிலும் உரைநடையிலுமாக இரண்டு முறைகளிலும் தந்துள்ளார்.

திருக்குறள் மூலமும் உரையும் வழங்கி, அதற்கு ஆங்கில மொழிபெயர்ப்பும் வழங்குதல் என்ற கோணத்தில், ஜே. நாராயணசாமி (2002), குறள்மாமணி பிரதாப் (2006), கலைமாமணி கல்லாடன் (2007) ஆகியோர் ஆங்கில மொழிபெயர்ப்பு நூல்கள் வழங்கியுள்ளனர். குறள்மாமணி பிரதாப் திருக்குறள் மூலமும் உரையும் ஆங்கில மொழிபெயர்ப்பும் வழங்கியதொடு, குறள் உரைதொறும் சில சொற்களுக்குப் பொருள்களும் தந்து, அவற்றோடு ஒரு வரி உரையும் தந்துள்ளார். நூலின் இணைப்பாக 57 பக்கங்களில் ஆங்கிலக் குறிப்புரைகளும் வழங்கியுள்ளார்.

திருமதி செல்லையா யோகரத்தினம் (2008), பசுபதி தனராஜ்(2009) ஆகியோர் திருக்குறள் மூலமும் உரையும் வழங்கித் திருக்குறள் மூலத்திற்கான ஆங்கில ஒலிபெயர்ப்பும் உரைக்கான ஆங்கில மொழிபெயர்ப்பும் வழங்கியுள்ளனர்.

**பால் அளவிலான ஆங்கில மொழிபெயர்ப்புகள்**

2004இல் திருக்குறள் அறத்துப்பால், பொருட்பால் ஆகிய இருபால்களுக்கும் ஒ.ஆர். கிருஷ்ணசாமி ஆங்கில மொழிபெயர்ப்பு வழங்கியுள்ளார். இந்த நூலில், குறட்பாக்களுக்கான ஆங்கில ஒலிபெயர்ப்பும், மொழிபெயர்ப்பும், ஒவ்வொரு அதிகாரத்திற்கும் ஆங்கில முன்னுரையும் விரிவான விளக்க உரையும் வழங்கியுள்ளார். காமத்துப்பாலுக்கான சுருக்கத்தை முன்னுரையில் வழங்கியுள்ளார்.

பேராசிரியர் சு.ந. சொக்கலிங்கம், 2006இல் அறத்துப்பாலுக்கும், 2007இல் காமத்துப்பாலுக்கும் ஆங்கில மொழிபெயர்ப்பு வழங்கியுள்ளார். இந்த மொழிபெயர்ப்பு நூல்களில் திருக்குறள் மூலம், உரை, ஆங்கில மொழிபெயர்ப்பு ஆகியனவும், தமிழில் பல குறள்களுக்குக் குறிப்புரைகளும் அவற்றிற்கான ஆங்கில மொழிபெயர்ப்புகளும் இடம் பெற்றுள்ளன.

ஆர். பாலகிருஷ்ணன் என்னும் இரா. இளங் கண்ணனார் திருக்குறள் மூலம், உரை, ஆங்கில மொழிபெயர்ப்பு என அறத்துப்பாலுக்கும் பொருட்பாலுக்கும் ஆங்கில மொழிபெயர்ப்புக் கண்டுள்ளார் (2008). இந்த இரு பால்களில் பிறன்இல் விழையாமை, பெண்வழிச் சேறல், வரைவின் மகளிர் என்னும் அதிகாரங்களையும் 402ஆவது குறளையும் தவிர்த்து ஏனைய 1049 குறள்களுக்கு ஆங்கில மொழிபெயர்ப்புத் தந்துள்ளார்.

**தேர்ந்தெடுத்த குறள்களுக்கான மொழிபெயர்ப்புகள்**

கடந்த நூற்றாண்டுகளில் தந்துள்ளது போலவே சான்றோர் சிலர், தத்தம் நோக்கிற்கு ஏற்பக் குறட்பாக்களைத் தேர்வு செய்து, அவற்றிற்கு ஆங்கில மொழிபெயர்ப்புகளைத் தந்துள்ளதைக் காண முடிகின்றது.

என். பாஸ்கரன் (2001) 65 அதிகாரங்களில் ஒவ்வோர் அதிகாரத்திலும் நான்கு நான்கு குறள்கள் தேர்வு செய்துள்ளார். அவற்றிற்கு ஆங்கில மொழிபெயர்ப்புகள் மட்டும் வழங்கியுள்ளார். விளக்கப் பகுதியில் நடைமுறை நிகழ்வுகள் / வரலாற்றுச் செய்திகளையும் அதிகாரத் தொடக்கத்தில் விவிலியம், குர்ஆன், வடமொழித் தத்துவங்கள் போன்றவற்றிலிருந்து தொடர்புடைய மேற்கொள்களையும் சுட்டியுள்ளார்.

டாக்டர் ஆ. கந்தையா, பேராசிரியர் வ. ஜெயதேவன் அவர்களுடன் இணைந்து 100 குறட்பாக்களுக்கும் (2002) லெவிஸ் பகிங்காம் அவர்களுடன் இணைந்து 118 குறட்பாக்களுக்கும் (2003) மூலம், ஆங்கில ஒலிபெயர்ப்பு, உரை, ஆங்கில மொழிபெயர்ப்பு என்னும் முறைப்படி நூல்கள் வழங்கியுள்ளார்.

கவிமாமணி கல்லாடன் (2003) ஒவ்வோர் அதிகாரத்திலும் முதல் குறள், கடைசி அதிகாரத்தில் கடைசிக் குறள் என 133 குறட்பாக்களைத் தேர்வு செய்து, அவற்றிற்கு மூலம், உரை, ஆங்கில மொழிபெயர்ப்பு என்னும் முறையில் நூல் வழங்கியுள்ளார்.

மு. அண்ணாமலை (2006) முப்பாலிலும் 422 குறட்பாக்களைத் தேர்வு செய்து மூலம், உரை, ஆங்கில மொழிபெயர்ப்பு என்னும் போக்கில் நூலாக்கம் செய்து வெளியிட்டுள்ளார்.

**திருக்குறள் தொடர் அளவிலான மொழிபெயர்ப்பு முயற்சி**

இந்த நூற்றாண்டில், தொடர் அளவிலான ஆங்கில மொழிபெயர்ப்பு முயற்சியை டாக்டர் சேயோன் (2001) மேற்கொண்டுள்ளதைக் காணமுடிகின்றது. இவர், தாம்

தொகுத்து உரை கண்ட திருக்குறள் ஆத்திசூடி என்னும் நூலுக்கு என்.வி. சுப்பராயன் அவர்களின் மொழிபெயர்ப்பினைப் பெற்று, ஆங்கில ஒலிபெயர்ப்பு, ஆங்கில மொழிபெயர்ப்பு, தொடர் மூலம், பதவுரை, கருத்துரை என்னும் போக்கில் நூலாக்கம் செய்து வெளியிட்டுள்ளார்.

**பிறரின் ஆங்கில மொழிபெயர்ப்புகளைச் சேர்த்து வெளிவந்த உரைகள்:**

கோ. வடிவேலு செட்டியார் (1904), காசிமடம் (1957, 1959), கிப்ட் சிரோமணி எஸ். கோவிந்தராஜுலு மற்றும் சந்திரசேகரன் (1980), திருக்குறள் மு. அன்வர்பாட்சா (1999), பிராகிருத் பாரத் அகாதமி (ஜெய்ப்பூர், 1999), உலகத் தமிழ் அறக்கட்டளை (சிகாகோ, 2000), யாதுமாகி பப்ளிகேஷன் (2003), ஸ்ரீசண்பகா பதிப்பகம் (2003, 2008), டாக்டர் சேயோன் (2003), திருக்குறள் பயிற்சி மேம்பாட்டு மையம் (கோலாலம்பூர், 2005), தாமரைப் பதிப்பகம் (2008) ஆகியோர் திருக்குறள் முழுமைக்கும் பிறர் யாத்த ஆங்கில மொழிபெயர்ப்புகளைப் பயன்படுத்தியுள்ளனர்.

சி. வேலுசாமி (கோலாலம்பூர், 1964), சைசி.நூ. கழகம் (1968), ஆர். இரத்தினசாமி (1998), திருக்குறள் பூவை கு. அரியரன் ஆகியோர் தாம் தேர்ந்தெடுத்த குறள்களுக்குப் பிறர் யாத்த ஆங்கில மொழிபெயர்ப்புகளைப் பயன்படுத்தியுள்ளனர்.

**தொகுப்புரை**

திருக்குறளுக்கு சுமார் 100 ஆங்கில மொழி பெயர்ப்புகள் வெளிவந்துள்ளன என்பதைப் புள்ளி விவரங்களொடு முதன் முதல் அறிமுகம் செய்யும் கட்டுரையாக அமைவது இந்தக் கட்டுரை.

திருக்குறள் ஆங்கில மொழிபெயர்ப்புகள் என்று பார்க்கும்போது, 98 மொழிபெயர்ப்புகள் வெளிவந்துள்ளன. அவற்றுள் நூல் முழுமைக்கும் வெளிவந்த மொழி பெயர்ப்புகள் 47. ஏனைய பகுதி அளவில் வெளிவந்தவை.

தம் உரையில் பிறருடைய மொழிபெயர்ப்புகளை இணைத்து, திருக்குறள் மற்றும் ஆங்கில மொழிபெயர்ப்பு நூல்கள் வெளியிட்டவர்கள் 15 பேர் – 17 மொழிபெயர்ப்புகள்.

முதன்முதல் ஆங்கில மொழிபெயர்ப்புக்கு வித்திட்டவர் என்.எச். கிண்டர்ஸ்லி (1794).

முதன்முதல் திருக்குறள் முழுமைக்கும் ஆங்கில மொழிபெயர்ப்புச் செய்தவர் டாக்டர் ஜி.யூ. போப்பு (1886); தமக்கு முன் திருக்குறள் ஆங்கில மொழிபெயர்ப்பு வழங்கிய பலரின் மொழிபெயர்ப்புகளைத் தம் நூலின் இணைப்பில் வழங்கிய பெருமையும் அவற்றைக் காப்பாற்றிய பெருமையும் டாக்டர் ஜி.யூ. போப்பு அவர்களையே சாரும்.

திருக்குறளுக்கு முதன்முதல் ஆங்கில மொழிபெயர்ப்புத் தந்த பெருமைக்கு உரிய தமிழர் வ.வே.சு. ஐயர் (1915).

ஆங்கில மொழிபெயர்ப்பினை, குறள் அமைப்பை யொட்டி வடிவமைக்க முயன்றவர் எஸ்.எம். மைக்கேல் (1946).

ஆங்கில மொழிபெயர்ப்பில் ஆங்கில ஒலிபெயர்ப்பையும் முதன்முதல் வழங்கியவர் வி.ஆர். இராமச்சந்திர தீட்சதர் (1949).

இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டினை ஒட்டியும், கன்னியாகுமரியில் திருவள்ளுவர் திருவுருவச் சிலை நிறுவியதையொட்டியும் திருக்குறள் ஆங்கில மொழிபெயர்ப்பு நூல்கள் கூடுதலாக வெளிவந்துள்ளன.

திருக்குறள் ஆங்கில மொழிபெயர்ப்புகளை மிகுதியாகக் கண்டுவரும் நூற்றாண்டு, 21ஆம் நூற்றாண்டே. இந்த நூற்றாண்டில் கடந்த 9 ஆண்டுகளில் 25 திருக்குறள் ஆங்கில மொழிபெயர்ப்பு நூல்கள் வெளிவந்துள்ளன.

திருக்குறளுக்குப் பகுதி அளவில் மொழிபெயர்ப்புகள் வழங்கிய பலரும், திருக்குறள் முழுமைக்கும் மொழிபெயர்ப்புக் காண வேண்டும் என்னும் வேட்கை உடையவர்களாக இருந்திருப்பினும், பல்வேறு சூழல்களால் அந்த வேட்கையை அவர்களால் நிறைவேற்ற முடியாது போயிற்று என அறிய முடிகின்றது.

❖



# தாய்மொழி போற்றுவோம்



முனைவர் கா. செல்லப்பன்

**'தாய்மொழியைப் போற்றிய நாடு வீழ்வதில்லை
தாய்மொழியைப் பழித்த நாடு வாழ்வதில்லை'**

என்பார் பேராசிரியர் முத்துசிவன். ஆனால், இன்றைய உலகமயத்தில் ஒவ்வொரு நாளும் சில தாய்மொழிகள் சிதைந்து செத்துக்கொண்டிருக்கின்றன. ஒரு மொழியின் சாவு ஒரு நாகரிகத்தின், ஒரு வரலாற்றின், வாழ்க்கை நெறியின் சாவு. அண்மையில், நமக்கு அருகில் அந்தமானில் அடுத்தடுத்து இரு மொழிகள் இறந்து போயின. முதலில் **போரோ** இறந்தபோது **கோரா** மொழியும், பிறகு கடந்த நவம்பரில் **போவா** இறந்தபோது **போ** மொழியும் மறைந்து போயின. இப்படி ஒருவரோடு, ஒரு மொழியும் ஓர் உலகப் பாரம்பரிய அடையாளமும் தொலைந்து விடுகின்றன. இவற்றை மனத்தில் கொண்டு, உலகின் மூலை முடுக்குகளில் பேசப்படும் அனைத்துத் தாய்மொழிகளும் காக்கப்பட வேண்டும், வளர்க்கப்பட வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்த 1999 பிப்பிரவரி 21ஆம் நாளைச் சர்வதேசத் தாய்மொழித் தினமாக யுனெஸ்கோ அறிவித்தது. பிறகு 2001இல் செப்டம்பர் 26, உலக மொழிகள் தினமாகக் குறிக்கப்பட்டது.

உலகத் தாய்மொழிகள் தினம் உருவாவதற்குக் காரணம் 1952 பிப்பிரவரி 21இல்தான் பங்களா (Bangla)வை அப்போது பாகிஸ்தானின் பகுதியாக இருந்த (பிற்காலப் பங்களாதேஷ்) பகுதியில் அரசு மொழியாக அறிவிக்கக் கோரி ஐந்து மாணவர்கள் உயிர் நீத்தனர். மொழிக்காக உயிர்நீத்த தியாகிகளை ஜனவரி 25இல் நினைவுகூரும் தமிழகத்துக்கு இச்செய்தி உரம் ஊட்டுவதாகும். மொழிப் பன்மையையும், பன்மொழி வழிக் கல்வியையும் பாதுகாப்பதுதான் யுனெஸ்கோவின் அறிவிப்பின் நோக்கம்.

ஒரு மொழி பேசும் குழுமத்தின் கடைசிப் பிரதிநிதி சாகும்போது, அந்த மொழியும் செத்துவிடுகிறது. இன்னும் துல்லியமாகச் சொன்னால் இரண்டாவது கடைசிப் பேச்சாளன் சாகும்போதே ஒரு மொழி செத்துவிடுகிறது. ஏனென்றால், இறுதிப் பிரதிநிதி யாருடன் பேசுவான்? இங்கேதான் ஒரு மொழியின் அடிப்படையே இருக்கிறது. ஒருவருக்கொருவர் பேசும்போதுதான் மொழி உயிருள்ளதாக உள்ளது. போவாவின் ஒரே நண்பர் இறந்தபோது அவர் தனிமையின் வெறுமையை உணர்ந்தார். போவா மொழியில் பாடல்களைப் பாடினாலும், அதை யாரும் புரிந்துகொள்ள முடியாது. கேட்பவர் இருந்தால்தான் பேசுபவர் இருக்க முடியும். இப்படிப் பேசும் மக்கள் குறையும்போது இந்த அவலம் ஏற்படுகிறது. அந்தமானில் முதலில் (வெள்ளையர்கள் நுழையும்போது) பத்துக் குழுக்களாக 5000 பேரிருந்தனராம். இப்போது 50 பேர்தாம் எஞ்சியிருக்கின்றார்கள். இவர்களுக்குப் பிறகு, இந்தியாவின் இரண்டு மொழிக் குடும்பங்களே இருந்த இடம் தெரியாமல் போய்விடும் என்கிறார்கள். அப்போது பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முந்திய ஒரு மூத்த பண்பாடு, ஒரு நீண்ட நெடும் பாரம்பரியம், பொய்யாய்ப் பழங்கதையாய் மங்கி மறைந்துவிடும்.

இதேபோல் அலாஸ்காவுக்கு மேற்கேயுள்ள அலேஷியன் தீவுகளில், அலேயுட் மொழி ஒரு கிராமத்தில் மட்டும்தான் பேசப்படும் மொழி. 1990இல் 60 பேர்தாம் அம்மொழியைப் பேசினார்கள். 1994இல் அது 44 ஆகக் குறைந்தது. 2010இல் அது முற்றிலும் மறைந்துவிடும் என்று டேவிட் கிரிஸ்டல் என்ற மொழியறிஞர் தனது 'மொழிப்புரட்சி' என்னும் நூலில் கூறியுள்ளார்.

இவைகளேயன்றி வெல்ஷ், கேலிக், காடலான் போன்ற மொழிகளும் வழக்கிழந்து வாழ்விழக்கும் நிலையில் உள்ளன. மொத்தத்தில் இரண்டு வாரத்தில் ஒரு மொழி என மொழிகள் இறந்து கொண்டிருப்பதாகக் கூறுகிறார்கள். அவற்றுள் பல இந்தியாவிலும், ஆப்பிரிக்காவிலும், தென் அமெரிக்காவிலும் உள்ளன. இனம் அழிந்தால் மொழி அழிவது போல், மொழி அழிந்தால் இனம் அழியும் என்பதைப் பலர் உணராததால் ஆதிக்க மொழிகளின்பால் கொண்ட மோகத்தாலும், பண்பாட்டுத் தன்வயப்படுத்தல், நவீனமயம், இயந்திரமயம், உலகமயம் போன்றவற்றால் இயற்கை வளங்களோடு சேர்ந்து, மனித வளத்தின் மையமான தாய்மொழிகளும் அழிக்கப்படுகின்றன. ஆங்கிலம், ஸ்பானிஷ், சைன மொழிகள் உலக அளவிலும்

தேச அளவிலும் உயர் மொழிகளாக, பொது மொழிகளாக உருவாக்கப்பட்டமையால், வட்டார மொழிகள் பல வழக்கிழந்து வருகின்றன. அரசியல் ஆதிக்கத்தால் அழிந்த மொழிகள் பல. ஆதிவாசிகளின் மொழிகள் உலகம் முழுதும் உருக்குலைந்து வருகின்றன.

உயிரினங்களின் பன்மையைக் (bio-diversity) காக்க காட்டும் அக்கறை, உணர்வுகளின், பண்பாடுகளின், செய்திகளின் மூலச் சுரங்கங்களாக உள்ள மொழிகளின் சாவு பற்றி, மொழிகளின் சூழலியல் (linguistic ecology) பற்றி யாரும் காட்டுவதாகத் தெரியவில்லை. வட்டார மற்றும் மைனாரிட்டி மொழிகளுக்கு ஐரோப்பியப் பிரகடனம் (1992) மொழி உரிமைகளுக்கான பார்சிலோனா பிரகடனம் (1996) போன்ற சில முயற்சிகளும் உரிய பலனைத் தரவில்லை. தாய்மொழியில் பேசும், கற்கும் உரிமை மனித உரிமைகளுள் ஒன்றாக ஏற்கப்படவில்லை.

மொழிகளின் சாவுகள் குறித்துக் கவிஞர்கள் கவலையைக் கவிதையாக்கியிருக்கிறார்கள்.

**'கறுத்த மெல்லிய மொழிகள்**
**மௌனமாக்கப் படுகின்றன.**
**தாய்மொழி, தாய்மொழி, தாய்மொழி**
**ஒன்றன்பின் ஒன்றாக நிலவுக்குள் மறைகின்றன'**

எனக் கனேடியக் கவிஞர் ஆட்வுடும், 'வாக்கியங்க ளிலிருந்து ஒரு மூச்சு போகிறது, மறுபடி வரவே இல்லை, இருந்தாலும், தங்களால் சொல்ல முடியாத ஒன்றை, முதியவர்கள் சிலர் நினைக்கிறார்கள்' என்று அமெரிக்கக் கவிஞர் மெர்வினும் கூறுகின்றனர். நினைப்பதைச் சொல்ல முடியாதது, வேதனையிலும் வேதனையே. வெல்ஷ் மொழி பேசுபவர்கள், ஒவ்வொருவராய் மறைவதை ஆர்.எஸ். தாமஸ் பாடுகிறார். 'அவர்கள் செத்து, மண்ணுக்கு உரமாகிக் கவிதையும், விந்தைப் பாடல்களும், பசுமையான கவிதைகளும் பூத்துக் குலுங்கச் செய்கிறார்கள்' என்கிறார். அவரே, "தொழிலதிபர்கள் வந்தனர். ஒரு தேசத்தின் பிணத்தை அதன் உறைந்த இரத்தத்துக்காகத் தோண்டி எடுத்தனர். அவர்கள் ஊட்டிய உணவை உண்ணவும், என்னுடைய தாயின் நோய்க் கிருமிகள் கலந்து பாலுடன் அவர்கள் பேச்சை உறிஞ்சவும் பிறந்தேன். அதனால், நான் பேசுவதெல்லாம், அவர்களதாகி விடுகிறது'' என்று கூறும்போது, களங்கப்பட்ட தாய்மொழி, களங்கப்பட்ட தாய்ப் பாலாகி விடுவதைக் காட்டுகிறார். பிறர் மொழியில் பேசும்போது, நமதையெல்லாம் நாம் இழந்துவிடுகிறோம், ஏன் நம்மையே இழந்துவிடுகிறோம். ஒரு நாடகத்தில் ஒரு கற்பனைப் பாத்திரம் பேசுகிறான்.

"நான் காலையில் எழுந்தபோது, என் மொழியின் சந்தங்கள் என் தலையில் இல்லை. இப்போது, அந்நியச் சந்தங்களில் என்னைப் பேச வைத்து, என்னுடைய எண்ணங்களை அவற்றிற்குள் அடக்க வேண்டி யிருக்கிறது. ஒவ்வொரு நாளும் என் மொழி என்னை விட்டு நழுவிச் செல்கிறது. என் உயிராயிருந்த என் சொற்கள் என்னை விட்டு விலகுகின்றன. எங்கள் கதைகளை இனிமேல் என்னால் நன்றாகச் சொல்ல முடியாது.''

உள்ளத்தின் ஆழ்மன உணர்வுகளைத் தாய்மொழியால்தான் வெளிக்கொணர முடியும். அதை இழந்தவனுக்கு அவன் முந்தையர் ஆயிரம் ஆண்டுகள் கூறி மகிழ்ந்த கதைகள்கூட காணாமற் போய்விடுகின்றன. ஒரு பாரம்பரியத்தின் தொடர் சங்கிலியிலிருந்து துண்டிக்கப்பட்டு, பண்பாட்டு அனாதையாகிவிடுகிறான். அதனோடு, இந்த உலகத்தைச் சுயமாகக் காண வைக்கும் அகக் கண்களையும் இழந்துவிடுகிறான். அதனால்தான், விட்கன் ஸ்டைன் என்ற தத்துவஞானி, "என்னுடைய மொழியின் எல்லைகள்தாம் எனது பிரபஞ்சத்தின் எல்லைகள்'' என்கிறார்.

டாகெஸ்தான் கவிஞரான ரசூல் கம்சதோவ், யாருமறியாத படுகுழியில் மயங்கி வீழ்ந்து கிடக்கும்போது, பாதையில் நடந்து சென்ற இருவர் அவரது அவார் மொழியில் பேசுவதைக் கேட்டு, சக்தி மீண்டும் பிறந்ததாகக் கூறுகிறார்.

**"மற்றவர்கள் மொழி மற்றவர்களை**
**அவர்களது தனிவழியில் குணப்படுத்தட்டும்,**
**ஆனால் அவார் மொழி நாளை மடியுமானால்**
**நான் இன்றே இறந்து விடுவேன்!''**

என்று கூறிவிட்டுத் தன்மொழிப் பாடல்களைத் தனது சந்ததியினர் மொழிபெயர்ப்பில்தான் படிப்பார்களா? 'நான்தானா அவாரில் எழுதி மற்றவர்கள் புரிந்து கொள்ளும் கடைசிக் கவிஞன்' எனக் கவலைப் படுகிறார்.

'தமிழைப் பழித்தவனை என் தாய் தடுத்தாலும் விடேன்' என்ற பாவேந்தரைப்போலத் தாய்மொழியைப் போற்றிப் பாடிய கவிஞர்கள் உலகில் வேறெங்கும் இருப்பதாகத் தோன்றவில்லை. ஆனால், அவர் பிறந்த தமிழகத்தில் இல்லங்களிலும், பள்ளிகளிலும், தமிழ்த் தெருக்களில் தமிழ்தானில்லை என்பதை நினைக்கும்போது 'மெல்லத் தமிழ் இனிச் சாகுமோ?' என்ற அச்சம் ஏற்படத்தான் செய்கிறது.

தடை பல தாண்டி நிலைத்து நிற்கும் தமிழின் உயிர்ப்பாற்றலில் ஐயமில்லாவிடினும், அடிப்படை உணர்வுகளை வெளிப்படுத்துவதிலும், அன்றாட வாழ்விலும் வாழும் மொழியாக இருந்தால்தான், உண்மையாக வாழும் மொழியாகும். புலம் பெயர்ந்த

தமிழர்களின் இளைய தலைமுறைக்குத் தமிழ் தெரிவதாகத் தெரியவில்லை. மொரீஷியஸில் தமிழ்ப் பக்திப் பாடல்களைப் பிரெஞ்சு எழுத்துகளில் எழுதித்தான் படிக்கிறார்கள். தாய்த் தமிழகத்திலேயே, தாய், மகவினைத் தமிழில் கொஞ்சுவதோ, மழலையர் 'அம்மா' என உணர்வோடு அழைப்பதோ இல்லை.

தாய்தான் மொழியால் உலகையும், உலகால் மொழியையும் குழந்தைக்கு அறிமுகப்படுத்த வேண்டும். இந்த அனுபவ அறிவுதான் (existential knowledge) பகுத்தாயும் அறிவாக (conceptual knowledge) பள்ளியில் வளர்கிறது. இந்த அறிவு வளர்ச்சிக்கு ஆரம்பக் கல்வியாவது தாய்மொழிக் கல்வியாக இருக்க வேண்டும். அப்போதுதான் தாய்மொழியால் வாழ்வும், வாழ்வால் தாய்மொழியும் வளம் பெறும்.

இதற்கு முதற்படியாகத் தமிழக அரசு, அனைத்துப் பள்ளிகளிலும் தமிழை முதல் மொழியாகக் கற்பிக்க ஆணை பிறப்பித்தது. ஆனால், தமிழ்வழிக் கல்வி தழைக்க, தமிழை அறிவூற்றாக ஏற்கும் மனப்பாங்கு தமிழரிடையே பெருக வேண்டும்.

அது மட்டுமன்றி, தமிழ்மொழி பன்னெடுங் காலத்துக்கு முன்பே பண்பட்ட செம்மொழி என்பதை, 'முந்தை இருட்காட்டில் முகிழ்த்த முழுநிலவு' எனப் பாவேந்தர் போன்றோர் கவிதையில் காட்டியிருந்தாலும், தமிழக முதல்வர் கலைஞர் அவர்களின் பெரு முயற்சியால், சில ஆண்டுகளுக்கு முன்புதான் தமிழைச் செம்மொழியாக மத்திய அரசு அறிவித்தது. இது நம் மூத்த முதல் மொழிக்குக் கிடைத்த முக்கிய அங்கீகாரம்.

இதனைக் கால்டுவெல் முதலான பல அயல்நாட்டு மொழியியல் அறிஞர்கள் குறிப்பிட்டிருந்தாலும், சிறந்த மொழியறிஞரும், கவிஞரும், செனகல் நாட்டுத் தலைவருமாக விளங்கிய சென்கார் சிறப்பாகக் குறிப்பிட்டுள்ளமையை நினைவுகூர்ந்தால் நாம் நம் தாய்மொழியைப் போற்றுதலுக்கு மேலும் வலுவூட்டும்.

'திராவிட மொழியும், செனகல் மொழியும் பல நிலைகளில் பொதுத்தன்மை பெற்றுள்ளன. முதல் மூன்று வரிவடிவங்கள் (scripts) ஆப்பிரிக்காவிலும் இந்தியாவிலும் குறிப்பாகத் திராவிட மொழியிலும்தாம் உருவாகின. அடுக்கியலான சொல்லுருபுகளைக் கொண்ட (agglutinated) மொழிகளைப் பேசும் தென்புல மக்களிடமிருந்துதான் நாகரிகம் தோன்றியது – ஆப்பிரிக்காவும், இந்தியாவும்தான் நாகரிகத்தை உருவாக்கிய கண்டங்கள். துல்லியமாகக் கூறுவதானால், மனித நாகரிகம் தென்னிந்தியாவில் திராவிடர்களிடமிருந்துதான் தோன்றியது' என்பார் சென்கார்.

இத்தகைய முதல் நாகரிகத்தின் மூலச்சுரங்கமான செம்மொழித் தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட நாம், அதைப் போற்றுவதன் மூலம் பண்பாட்டு மீட்சியைப் பெறுவதோடு புதியதோர் உலகுக்கு வீறு நடைபோட முடியும். உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு, உலகளவில் தமிழர்களை இணைப்பதோடு, அவர்களின் இதயங்களில் தமிழுணர்வும் அறிவும் கங்கையைப்போல், காவிரிபோல் பெருகிடச் செய்து, உலகமே தமிழின் உயிர்ப்பாற்றலை, அமைப்பின் பெருமையை, அதன் மனிதமைய இலக்கியச் செழுமையை உணரவைக்கும் என உறுதியாக நம்புவோம்.

**தமிழ் - தமிழர்**

'தொல்காப்பியர் எல்லாவற்றையும் அறிந்தவர். ஆனால், அவரை அறியாதவர்கள் தமிழ்நாட்டிலே அதிகம். இது தமிழர்களுக்கு ஒரு மானக்கேடு. தம்மிடம் களஞ்சியம் இருக்க, கருவூலம் இருக்கப் பிறரிடம் பிச்சை கேட்கும் இரவலர்களாகத் தமிழர் இருப்பது பெரிதும் வருந்துதற்குரியது'.

'தமிழ் நெடுங்கணக்கிலுள்ள முப்பது எழுத்துகளும் முப்பது ஒலிகளுமே மக்களுக்கு இயற்கையாகத் தோன்றக் கூடியவையென்றும், முப்பது தமிழொலிகளைக் கொண்டே உலகத்திலுள்ள எல்லா மொழிகளின் எல்லா ஒலிகளையும் எளிதில் தெரிவிக்கலாமென்றுங் காலஞ்சென்ற திரு. பா.வே. மாணிக்கநாயக்கர் அவர்கள் மிகவும் நுட்பமாக ஆராய்ச்சி செய்து நன்கு விளக்கிக் காட்டியிருக்கவும், அவைகளையெல்லாம் ஆராய்ந்து பாராது தமிழ் நெடுங்கணக்கைக் குறுக்க வேண்டுமென்றும் பிறமொழிச் சொற்களையும் ஒலிகளையும் தமிழிற் சேர்க்க வேண்டுமென்றும் சொல்வது மிகவும் வருந்தத் தக்கது'.

– தனித்தமிழ்த்தந்தை மறைமலையடிகள்

# புறநானூறு

## ஒரு தமிழ்ப் பண்பாட்டுக் கருவூலம்

பேராசிரியர் **பி.விருத்தாசலம்**



தமிழில் உள்ள எட்டுத்தொகை நூல்களுள் எட்டாவது நூலாக இருப்பது புறநானூறு. பாரதம் பாடிய பெருந்தேவனாரின் கடவுள் வாழ்த்துச் செய்யுள் உட்படப் புறநானூற்றில் நானூறு பாடல்கள் உள்ளன. சங்ககால மக்களது பண்பாடு, நாகரிகம் ஆகியவற்றைத் தெள்ளத் தெளிவாகப் புறநானூறு எடுத்துக் கூறுகின்றது. "பண்டைத் தமிழ்ச் சங்கத்து நல்லிசைப் புலவர்கள் தேடித் தொகுத்தவற்றுள் புறநானூறு என்னும் ஒரு நூலால் மட்டும் நாம் எய்தலாகும் உணர்ச்சி "நிலத்தினும் பெரிது; வானினும் உயர்ந்தது; கடலினும் அளத்தற்கரிது" என்று நாவலர் ந.மு. வேங்கடசாமி நாட்டார் பெருமிதத்துடன் கூறுவார்.

அவர், புறநானூற்றை முதன் முதலில் பதிப்பித்த உ.வே.சா. பற்றி, "மகாமகோபாத்தியாய டாக்டர் உ.வே.சாமிநாதையரென்னும் பேரறிஞரொருவரால் தமிழ்மொழி எத்துணை நலம் பெற்றுள்ளது. நாம் இங்ஙனமெல்லாம் நமது பழந்தமிழைப் பற்றியும், பழந்தமிழ்ப் பெருமக்களைப் பற்றியும் பேசுதற்கு வாய்தந்த வள்ளல் அவரன்றோ ?" என்று மனம் திறந்து பாராட்டுவார்.

டாக்டர் உ.வே. சாமிநாதையர் அவர்கள் புறநானூற்றில் கூறப்பெற்றுள்ள கருத்துகள் பற்றி அந்நூலின் மூன்றாம் பதிப்பின் முகவுரையில் கூறுவன பின்வருமாறு, "பண்டைக் காலத்தே இத்தமிழ் நாட்டிலிருந்த சேர சோழ பாண்டியர்களாகிய முடியுடைவேந்தர், சிற்றரசர், அமைச்சர், சேனைத் தலைவர், வீரர் முதலிய பலருடைய சரித்திரங்களும், கடையெழு வள்ளல்களின் சரித்திரங்களும், கடைச்சங்கப் புலவர் பலருடைய வரலாறுகளும், அக்காலத்துள்ளாருடைய நடை முதலியனவும், இன்னும் பற்பலவும் இந்நூலால் நன்கு புலப்படும். இந்நூற் செய்யுள்களாற் பாடப்பட்டவர்கள் ஒரு காலத்தாரல்லர்; ஒரு குலத்தாரல்லர்; ஒரு சாதியாரல்லர்; ஓரிடத்தாருமல்லர். பாடியவர்களும் இத்தன்மையரே. இவர்களுள் அந்தணர் சிலர்; அரசர் பலர்; வணிகர் பலர்; வேளாளர் பலர்; பெண்பாலாரும் உளர்".

மக்கள் வையத்துள் வாழ்வாங்கு வாழ்வதற்கு நல்ல கல்வியைக் கற்க வேண்டுவது இன்றியமையாத தாகும்.

வள்ளுவப் பெருந்தகை,

**"கற்க கசடறக் கற்பவை கற்றபின்**
**நிற்க அதற்குத் தக"**

என்று கூறியிருப்பது நோக்கத்தக்கதாகும்.

**"கற்கை நன்றே கற்கை நன்றே**
**பிச்சை புகினும் கற்கை நன்றே"**

என்று அதிவீரராம பாண்டியன் பாடிய நறுந்தொகை கூறுகின்றது. ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் கல்வி கற்க வேண்டிய முறை குறித்தும், அவ்வாறு கற்றாரின் பெருமை குறித்தும் கூறும் புறநானூற்றுப் பாடல் பின்வருமாறு:

**"உற்றுழி யுதவியு முறுபொருள் கொடுத்தும்**
**பிற்றைநிலை முனியாது கற்ற னன்றே**
**பிறப்போ ரன்ன வுடன்வயிற் றுள்ளும்**

**சிறப்பின் பாலாற் றாயுமனந் திரியும்**

**ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்**

**மூத்தோன் வருக வென்னா தவருள்**

**அறிவுடை யோனா றரசுஞ் செல்லும்**

**வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்**

**கீழ்ப்பா லொருவன் கற்பின்**

**மேற்பா லொருவனு மவன்கட் படுமே"**

நாடாளும் வேந்தனும் கல்வி கற்ற சான்றோர் பிறந்த குடி எது, குலம் எது, என்று பார்க்காமல் அவர் கூறும் அறிவுரைகளைத் தலைவணங்கி ஏற்றுக்கொள்வான் என்பது இப்பாடலின் கருத்தாகும்.

புறநானூற்றைத் தொகுத்த புலவர்கள் நாடாளும் மன்னர்களைவிடக் கற்றறிந்த சான்றோர்களுக்கு மக்கள் மதிப்பளித்து வாழ்ந்தார்கள் என்பதனை உணர்ந்திருந்தார்கள். அதனால், புறநானூற்றில் இந்தப் பாடல், இவனை இவர் பாடியது என்று குறிக்கும்போது, நாடாளும் மன்னனுக்கு உயர்திணை ஆண்பால் ஒருமை விகுதியாகிய அன், ஆன் ஆகிய விகுதிகள் கொடுத்தும், புலவர்களுக்கு உயர்திணைப் பலர்பாலுக்குரிய அர், ஆர் ஆகிய விகுதிகளைக் கொடுத்தும் எழுதினர்.

எடுத்துக்காட்டாக,

1. பாரதம் பாடிய பெருந்தேவனார் பாடியது. (புறநானூறு 1)
2. பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் பாட்டு. (புறநானூறு 183)
3. சேரமான் பெருஞ்சோற்றுதியஞ் சேரலாதனை முரஞ்சியூர் முடிநாகராயர் பாடியது. (புறநானூறு 3)
4. சோழன் கரிகாற் பெருவளத்தானைக் கருங்குழலாதனார் பாடியது. (புறநானூறு 7)
5. சேரமான் கடுங்கோ வாழியாதனைக் கபிலர் பாடியது. (புறநானூறு 8)
6. பாண்டியன் நெடுஞ்செழியனைக் குடபுலவியனார் பாடியது. (புறநானூறு 18)

என்று பெயர்களைக் கூறுவதனைக் குறிப்பிடலாம்.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் போர்க்களத்தில் நின்று வஞ்சினம் கூறியபோது, "இப்போரில் நான் என்னுடைய பகைவர்களை வென்று புறமுதுகிட்டோடும்படிச் செய்வேன்; அவ்வாறு செய்யேனாயின் ஓங்கிய சிறப்பினையும், மிக உயர்ந்த கேள்வியினையும் உடைய மாங்குடிமருதனாரைத் தலைவனாகக் கொண்டவர்களும், இந்த உலகம் அழியும் வரையிலும் நின்று நிலைத்திருக்கக்கூடிய புகழ்பூத்த பாடல்களைப் பாடவல்லவர்களுமாகிய புலவர் பெருமக்களும் என்னையும் என் நாட்டையும் புகழ்ந்து பாடாது நீங்குவார்களாக" என்று சூளுரை செய்தான். புறநானூற்றின் 72ஆம் பாடலில் இடம் பெற்றுள்ள,

**"ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி**

**மாங்குடி மருதன் தலைவனாக**

**உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின்**

**புலவர் பாடாது வரைகஎன் நிலவரை"**

என்னும் அடிகள் நம் நெஞ்சில் பெருமிதத்தைத் தோற்றுவிக்கின்றன. அவன் புலவர் பெருமக்கள் தன்னையும் தன் நாட்டையும் புகழ்ந்து பாடுதலைப் பெருஞ்சிறப்பாகக் கருதினான் என்பதும், புலவர்கள் தன்னைப் புகழாது தன் நாட்டை வீட்டு நீங்குதலை மிகவும் குறைபாடுடையதாகக் கருதினான் என்பதும் இதனால் அறியப்படுகின்றன.

சேரமான் குட்டுவன் கோதையின் நாட்டிலும், தலைநகரத்திலும் அரண்மனையிலும் அவை தமக்குச் சொந்தமாக உரியனபோல யாரிடமும் கேட்காமல், அவற்றின் உள்ளே தலைநிமிர்ந்து செல்லுதல் புலவர் பெருமக்களுக்கு இயல்பாகும். ஆனால், வலிமிகுந்த பெரிய கையையுடைய அவனுடைய நாடு, பகை மன்னர்களுக்கோ தங்களுடைய சிறிய தலைகளையுடைய ஆட்டு மந்தைகளோடு செல்லும் இடையனுக்குப் புலி தங்கியிருக்கும் காடு போன்றது. சேரமான் குட்டுவன் கோதையைக் கோனாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக் குமரன் பாடிய அந்தப் பாடல் வருமாறு:

**எங்கோ னிருந்த கம்பலை மூதூர்**

**உடையோர் போல விடையின்று குறுகிச்**

**செம்ம னாளவை யண்ணாந்து புகுதல்**

**எம்மன வாழ்க்கை யிரவலர்க் கெளிதே**

**இரவலர்க் கெண்மை யல்லது புரவெதிர்ந்து**

**வான நாண வரையாது சென்றோர்க்கு**

**ஆனாது ஈயுங் கவிகை வண்மைக்**

**கடுமான் கோதை துப்பெதிர்ந் தெழுந்த**

**நெடுமொழி மன்னர் நினைக்குங் காலைப்**

**பாசிலைத் தொடுத்த வுவலைக் கண்ணி**

**மாசு ணுடுக்கை மடிவா யிடையன்**

**சிறுதலை யாயமொடு குறுகல் செல்லாப்**

புலிதுஞ்சு வியன்புலத் தற்றே
வலிதுஞ்சு தடக்கை யவனுடை நாடே.

உலகாளும் மன்னர்கள் புலவர்களின் நட்பையே பெரிதும் போற்றினர் என்பதற்குக் கோப்பெருஞ் சோழன் பிசிராந்தையாரிடமும், பாரி கபிலரிடமும், அதியமான் நெடுமான் அஞ்சி ஔவையாரிடமும் கொண்டிருந்த நட்பு மிகச்சிறந்த எடுத்துக்காட்டுகளாகும். புலவர்கள் பாடுதற்குரிய சிறப்பமைந்த பெருநில வேந்தர்களையும் குறுநில மன்னர்களையும், வள்ளல்களையும் புகழ்ந்து பாடி, நாட்டில் நல்லறச் செயல்கள் நாடொறும் வளர்ந்து ஓங்குவதற்கு ஆவன செய்தார்கள். அதே நேரத்தில் தகுதி யில்லாதவர்களை அவர்கள் புகழ்ந்து பாடமாட்டார்கள்.

"பீடில் மன்னர்ப் புகழ்ச்சி வேண்டிச்
செய்யா கூறிக் கிளத்தல்
எய்யா தாகின்று எம்சிறு செந்நாவே"

என்னும் பாட்டு இதற்குச் சான்றாகும். நாடாளும் வேந்தர்கள் பொறாமை காரணமாகவும், தம்முடைய நாட்டை விரிவுபடுத்த வேண்டும் என்பதற்காகவும், பகைவர் நாட்டு ஆனிரைகளையும் பிற செல்வங்களையும் கவர்ந்துகொள்ள வேண்டும் என்னும் விருப்பம் காரணமாகவும், பகைவர்களைப் பகைப்பதும், அவர்கள் நாட்டின்மீது படையெடுத்துச் செல்வதும் உண்டு. பக்கத்து நாடுகளில் செங்கோலாட்சி நடைபெறாமல் கொடுங்கோலாட்சி நடைபெறும்போது, தம்முடைய நாட்டு மக்களைப் போலவே அந்த நாட்டு மக்களும் அமைதியும் செல்வமும் நிரம்பி இன்புற்று வாழவேண்டும் என்னும் அருள் நோக்கம் காரணமாகப் படையெடுத்துச் செல்வதும் உண்டு. இப்படி மன்னர்களிடையே போரும் பகைமையும் ஏற்படுதலைப் புரிந்துகொள்ள முடிகிறது. ஆனால், கற்றறிந்த புலவர்கள்

"கல்வி தறுகண் இசைமை கொடையெனச்
சொல்லப்பட்ட பெருமிதம் நான்கே"

என்னும் தொல்காப்பியர் கருத்துப்படி கல்வியால் பெருமிதம் கொள்வதோடு அமையாமல், பல நேரங்களில் தங்களுக்குள் பகைமையை வளர்த்துக்கொண்டு பிறரைப் பழிதூற்றுகின்றனர். இக்கொடுமை அன்றும் இருந்தது; இன்றும் உள்ளது. ஆனால், இதற்கு விதிவிலக்காகச் சங்ககாலத்தில் புலவர்கள் வேந்தர்களை மதித்ததை விடவும் கூடுதலாகத் தம்மை ஒத்த புலவர்களை மதித்தனர். சேரன் மாந்தரஞ் சேரல் இரும்பொறையைப் பொருந்தில் இளங்கீரனார் பாடிய பாடலில் (புறநானூறு 53)

புலனழுக்கற்ற பெரும்புலவரும் அந்தணரும் ஆகிய கபிலரை,

"............தாழாது
செறுத்த செய்யுள் செய்செந் நாவின்
வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன்"

என்று புகழ்ந்து பாடுகிறார். அதுபோலவே, அதியமான் நெடுமானஞ்சியை ஔவையார் பாடிய புறநானூறு 99ஆம் பாட்டில் மலையமான் திருமுடிக்காரிக்குரிய திருக்கோவலூரை மிகவும் பாடுபட்டு அதியமான் நெடுமானஞ்சி அழித்துவிட்டதாகவும், இந்த வெற்றியைப் பெரும்புலவராகிய பரணர் தம்முடைய பெரும்புலமை காரணமாகப் புகழ்ந்து பாடியதாகவும், பிற புலவர்களால் அந்த வெற்றியைப் புகழ்ந்து பாடமுடியாது என்பதாகவும் கூறப்படுகின்றது. அப்பாட்டுப் பின்வருமாறு.

"அன்றும் பாடுநர்க் கரியை இன்றும்
பரணன் பாடினன் மற்கொல் மற்றுநீ
முரண்மிகு கோவலூர் நூறிநின்
அரணடு திகிரி ஏந்திய தோளே"

இவ்வாறு தகுதியுடைய புலவர்களைப் பாராட்டுவது மிகச்சிறந்த பண்பாடாகும்.

கலித்தொகையில் 133ஆம் பாட்டில் ஆசிரியர் நல்லந்துவனார் மக்கள் போற்றிப் பின்பற்றி நடக்கவேண்டிய பல ஒழுகலாறுகளுக்குத் தக்க விளக்கம் கூறுகின்றார்.

"ஆற்றுதல் என்பதொன் றலந்தவர்க் குதவுதல்
போற்றுதல் என்பது புணர்ந்தாரைப் பிரியாமை
பண்பெனப் படுவது பாடறிந்து ஒழுகல்"

இவற்றில் நச்சினார்க்கினியர் பண்பு என்னும் சொல்லுக்கு, மக்கட் பண்பு என்று சொல்லப்படுவது உலக ஒழுக்கம் அறிந்து ஒழுகுதலை என்று விளக்கம் கூறுவர். பரிமேலழகர், "பண்புடைமை அஃதாவது பெருமை சான்றாண்மைகளில் தாம் வழுவாது நின்றே எல்லாரியல்புகளும் அறிந்து ஒத்தொழுகுதல். பண்பெனப் படுவது பாடறிந்தொழுகல் என்றார் பிறரும்" என்று கூறினார். இதனால் பண்பாடு என்பது மற்றவர் இயல்பறிந்து, யாரையும் பகைத்துக் கொள்ளாமல், தீமைக்குத் துணைபோகாமல், உலகத்துச் சான்றோர் நடக்கும் வழியில் தாமும் நடத்தல் என்பது பொருளாகும்.

புறநானூற்றுக் காலத்தில் வாழ்ந்த புலவர்கள் தமக்குச் சாக்காடு நேரினும் கவலையில்லை என்று கருதி, மன்னர்கள் தவறுகளைச் செய்யும்போது அத்தவறுகளை எதிர்த்துப் போராடினர். கிள்ளிவளவன் மலையமான் திருமுடிக்காரியின் மக்களைப் பிடித்துவந்து அவர்களை

யானைக்காலால் நசுக்கிக் கொலைசெய்ய முயன்றபோது அக்கொடுஞ்செயலைக் கோவூர்கிழார் தடுத்தார். அண்ணன் தம்பி ஆகிய நலங்கிள்ளியும் நெடுங்கிள்ளியும் நேருக்குநேர் நின்று போரிட முயன்றபோது அப்போரையும் கோவூர்கிழார் தடுத்தார்.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் இளந்தத்தன் என்னும் புலவனை ஒற்றறிய வந்தான் என்று குற்றம் சாற்றிக் கொல்விக்க முயன்றபோது, கோவூர்கிழார் சென்று, பழுத்த மரத்தை நாடிச் செல்லும் பறவைகள் போலப் புரவலர்களை நாடி, நாடுவிட்டு நாடு செல்லும் புலவர்கள் இயல்பினை எடுத்துரைத்து, இளந்தத்தன் புலவனே தவிர ஒற்றன் அல்லன் என்னும் உண்மையைக் கூறி அவனைக் காப்பாற்றினார். அதியமான் நெடுமானஞ்சி நாட்டின்மீது தொண்டைமான் இளந்திரையன் போர் தொடுப்பதற்குரிய முயற்சிகளை மேற்கொண்டிருந்தபோது, அவனிடம் ஔவையார் தூதுசென்று, அதியமான் ஆற்றலையும், அவன் படைமறவர் போர்ப் பயிற்சியையும் விளங்கக் கூறித் தொண்டைமான் படையெடுக்காதபடி தடுத்தார். வேந்தர் வேந்தனாகிய கோப்பெருஞ் சோழன் தன் மக்கள்மேல் படையெடுத்துச் செல்ல முயன்றபோது அவனுக்குத் தேவையான அறிவுரைகளைப் புல்லாற்றூர் எயிற்றியனார் எடுத்துக் கூறி அப்போர் நடைபெறாமல் செய்தார்.

பாண்டியன் அறிவுடைநம்பி மக்களை அச்சுறுத்தி மிகுதியான வரி வாங்கினான். அரசன் மக்கள் வருவாயில் ஆறிலொன்றுதான் வரி வாங்க வேண்டும். படைகளை அனுப்பிக் கூடுதலாக வரி வாங்குவது, கொள்ளையர்கள் வேலைக் காட்டி வழிப்பறியில் ஈடுபடுவது போன்ற கொடுஞ்செயலாகும். இதனைத் திருவள்ளுவர்,

> **"வேலொடு நின்றான் இடுவென் றதுபோலும்**
> **கோலொடு நின்றான் இரவு"**

என்று பாடுவார். இதனை மன்னனிடம் எடுத்துரைக்க இயலாமல் மக்கள் அஞ்சி நடுங்கியபோது பிசிராந்தையார் என்னும் பெரும்புலவர் அவனிடம் சென்று

> **"காய்நெல் லறுத்துக் கவளங் கொளினே**
> **மாநிறை வில்லதும் பன்னாட் காகும்;**
> **நூறுசெறு வாயினுந் தமித்துப்புக் குணினே**
> **வாய்புகு வதனினுங் கால்பெரிது கெடுக்கும்;**
> **அறிவுடை வேந்தன் நெறியறிந்து கொளினே**
> **கோடி யாத்து நாடுபெரிது நந்தும்;**
> **மெல்லியன் கிழவ னாகி வைகலும்**
> **வரிசை யறியாக் கல்லென் சுற்றமொடு**
> **பரிவுதப எடுக்கும் பிண்டம் நச்சின்**
> **யானை புக்க புலம்போலத்**
> **தானும் உண்ணான் உலகமுங் கெடுமே"**

என்னும் பாடலைப் பாடினார்.

"காய்த்த நெல்லையறுத்துக் கவளமாகக் கொள்ளின் ஒருமாவிற் குறைந்த நிலத்திற் கதிரும் பல நாளைக்காகும்; நூறு செய்யாயினும் யானை தனித்துப் புக்கு உண்ணுமாயின் அதனது வாயின்கட்புகுந்த நெல்லினும் கால் மிகவும் கெடுக்கும்; அப்பெற்றியே அறிவுடைய அரசன் இறை கொள்ளும் நெறியை அறிந்துகொள்ளின் அவன் நாடு கோடி பொருளினை ஈட்டிக்கொடுத்துத் தானும் மிகவுந் தழைக்கும்; வேந்தன் அறிவால் மெல்லியனாகி நாடொறும் தரமறியாத உறுதி கூறாது அவன் விரும்புவதனையே தானுங் கூறும் ஆரவாரத்தையுடைய சுற்றத்தொடு கூடி அன்புகெடக் கொள்ளும் பொருட்டொகுதியை விரும்பின் அந்த யானை புக்க புலம்போலத் தானும் உண்ணப்பெறான், உலகமுங் கெடும்" என்பது மேற்கூறிய பாட்டின் பொருளாகும்.

வெள்ளைக்குடி நாகனார் சோழன் குளமுற்றுத்துத் துஞ்சிய கிள்ளிவளவனுக்காகப் புறநானூற்றில் 35ஆம் பாட்டைப் பாடினார்.

> **"மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்**
> **இயற்கை யல்லன செயற்கையிற் றோன்றினும்**
> **காவலர்ப் பழிக்குமிக் கண்ணகன் ஞாலம்**
> **அதுநற் கறிந்தனை யாயின் நீயும்**
> **நொதும லாளர் பொதுமொழி கொள்ளாது**
> **பகடுபுறந் தருநர் பார மோம்பிக்**
> **குடிபுறந் தருகுவை யாயினின்**
> **அடிபுறந் தருகுவ ரடங்கா தோரே"**

அப்பாட்டைக் கேட்டுச் சோழன் உண்மை உணர்ந்து, வெள்ளைக்குடி நாகனாரின் பழஞ்செய்க் கடனை (பழைய வயல் வரியை)த் தள்ளுபடி செய்தான். இவ்வாறு அக்காலப் புலவர்கள் தம்முயிர்க்கு இறுதி எண்ணார் தலைமகன் வெகுண்டபோதும் அறநெறியையே எடுத்துக் கூறி வாழ்ந்தனர்.

பண்பாடுதான் உலகை வாழவைக்கிறது. பண்பாடு இல்லாத நிலை உருவாகுமானால் உலகம் அழியும், இதனைப்

> **"பண்புடையார்ப் பட்டுண் டுலகம்; அதுவின்றேல்**
> **மண்புக்கு மாய்வது மன்"**

என்னும் திருக்குறள் தெளிவாகக் கூறுகிறது. இந்தக் குறட்பாவின் கருத்தை உள்ளடக்கிய புறநானூற்றுப் பாட்டு ஒன்று உள்ளது. பாண்டிய மன்னனாகிய கடலுள் மாய்ந்த இளம் பெருவழுதி பாடிய அந்தப் பாட்டுப் பின்வருமாறு:

**உண்டால் அம்மவிவ் வுலகம்; இந்திரர்**
**அமிழ்தம் இயைவ தாயினும் இனிதெனத்**
**தமியர் உண்டலும் இலரே முனிவிலர்;**
**துஞ்சலும் இலர்பிறர் அஞ்சுவது அஞ்சிப்**
**புகழெனின் உயிருங் கொடுக்குவர் பழியெனின்**
**உலகுடன் பெறினுங் கொள்ளலர் அயர்விலர்;**
**அன்ன மாட்சி அனைய ராகித்**
**தமக்கென முயலா நோன்றாள்**
**பிறர்க்கென முயலுநர் உண்மை யானே.**

''உண்டோரை நெடுங்காலம் வாழவைப்பதும், சுவைமிகுந்ததும் ஆகிய இந்திரர் உலகத்து அமிழ்தமே தமக்குக் கிடைப்பினும் அதனைத் தாம்மட்டும் தமியராய் உண்டலும் இலர்; பலர்க்கும் பகுத்துக் கொடுத்தே உண்பர். வாழ்க்கையில் எக்காலத்தும் எதனாலும் வெறுப்புக் கொள்வதிலர், மடிந்திருத்தல் இன்றித் திருவினையாக்கும் முயற்சியை இடையீடின்றி மேற்கொண்டொழுகுவர், சான்றோர்கள் அஞ்சுகிற பழிபாவங்களுக்குத் தாமும் அஞ்சி அவற்றைச் செய்யார், தாம்செய்யும் செயலால் தமக்குப் புகழ்வரும் என்று தெரிந்தால் அதற்காகத் தம்முடைய உயிரையும் கொடுப்பர், உலகமே கிட்டுவதாக இருப்பினும் பழிதரும் பாவச் செயல்களைச் செய்யார், தமக்கென வாழாது பிறர்க்கெனவே வாழ்கின்ற அத்தகைய பண்பாடு மிக்க சான்றோர்கள் வாழ்வதால்தான் நாம் வாழும் உலகம் அழியாது நிலைபெற்றுள்ளது'' என்பது மேலே கூறிய அந்தப் பாட்டின் பொருளாகும்.

பாவேந்தர் பாரதிதாசன் தமிழச்சியின் கத்தியில் (பாட்டு 2)

**விருந்தினரை வரவேற்பான் தமிழன், அந்த**
**விருந்தினர்க்கு நலஞ்செய்வான் தமிழன், சாவா**
**மருந்தேனும் வந்தவர்கள் பசித்தி ருக்க**
**வாயிலிடான் தமிழன்,இது பழமை தொட்டே**
**இருந்துவரும் பண்பாகும், எனினும், வந்தோன்**
**எவன், அவனை ஏன்நம்ப வேண்டும் என்று**
**துரும்பேனும் நினையாத தாலே இந்நாள்**
**தூய்தமிழன் துயருற்றான் ! வந்தோர்வாழ்ந்தார் !**

என்று பாடியுள்ள பாடலையும் இங்கே நாம் கருத்தில் கொள்ள வேண்டும். நாம் விருந்தோம்புதலும் வேண்டும், விழிப்போடிருத்தலும் வேண்டும் என்பது இதன் கருத்தாகும்.

கணியன் பூங்குன்றனார் பாடிய 'யாதும் ஊரே' என்று தொடங்கும் புறநானூற்றுப் பாடல் தமிழனின் மிக உயர்ந்த பண்பாட்டையும் நாகரிகத்தையும் உலகுக்கு எடுத்துரைப்பதாகும்.

''உலகம் ஒன்று, உலகில் உள்ள ஊர்கள் அனைத்தும் எம்முடைய சொந்த ஊரேயாகும். உலக மக்கள் அனைவரும் எம்முடைய உற்றார் உறவினரேயாவார், நமக்கு நேரும் தீதும் நன்றும், துன்பமும் இன்பமும் பிறர் தருவதால் நமக்கு வருவனவல்ல, அவை ஒருநாளின் முற்பகற் பொழுதில் நாம் பிறர்க்குச் செய்த வினையின் பயனாகப் பிற்பகற் பொழுதில் நமக்கு விளைந்தனவே, உலகில் பிறந்தோர் இறப்பதும் புதுமையானது அன்று, எனவே, சான்றோர் இன்பம் வந்தபோது வாழ்க்கை இனிதென்று மகிழ்வதும், துன்பம் வந்த காலத்தில் அஃது இன்னாதது என மொழிதலும் இலர்; மழை மேகங்கள் மலை முகடுகளில் சென்று பெருமழை பொழிவதால், உருவான அருவிகளின் தொகுப்பாகிய வளந்தரும் நீர் நிறைந்த பேராறு கற்பாறைகளில் மோதிப் பேரொலி எழுப்பி ஓடிவரும்போது, அதில் அகப்பட்டுக்கொண்ட தெப்பம் நீர் செல்லும் வழியே செல்வது அல்லது அதனை எதிர்த்துப் போக இயலாதவாறுபோல, மக்கள் உயிர்களும், வினையின் வந்தன வினைக்கு விளைவாவன என்னுமாறு விதிவழியே செல்லுமே தவிர அதனை மீறி எதிர்த்துச் செல்லும் ஆற்றல் இலவாகும். எனவே, நாங்கள் உலகில் சிறப்புற்று விளங்கும் பெரியோரை மிக உயர்வாக மதித்துப் புகழ்ந்து பாராட்டுதலையும் செய்யமாட்டோம் அதைவிடச் சிறியோரை மதிக்காது இகழ்தலையும் செய்யமாட்டோம்'' என்னும் கருத்தமைந்த அந்தப் புறநானூற்றுப் பாடல் வருமாறு:

**யாதும் ஊரே யாவரும் கேளிர்;**
**தீதும் நன்றும் பிறர்தர வாரா**
**நோதலும் தணிதலு மவற்றோ ரன்ன;**
**சாதலும் புதுவ தன்றே; வாழ்தல்**
**இனிதென மகிழ்ந்தன்றும் இலமே; முனிவின்**
**இன்னா தென்றலு மிலமே; மின்னொடு**
**வானந் தண்டுளி தலைஇ யானாது**
**கல்பொருது இரங்கு மல்லற் பேர்யாற்று**
**நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்**
**முறைவழிப் படூஉம் என்பது திறவோர்**
**காட்சியிற் றெளிந்தன மாகலின் மாட்சியிற்**
**பெரியோரை வியத்தலு மிலமே;**
**சிறியோரை யிகழ்தல் அதனினும் இலமே.**

உலகம் தமிழைச் செம்மொழியாக ஏற்று அறிவித்ததில் இந்தப் பாடலுக்கும் பங்குண்டு. ஆதலின், புறநானூறு ஒரு தமிழ்ப்பண்பாட்டுக் கருவூலம் என்பது முற்றிலும் பொருள் பொதித்த பொன்மொழியாகும்.

❖

# வரலாற்றுப் புதினங்கள்

முனைவர் தி. இராசகோபாலன்



ஐரோப்பாவில் தோன்றிய தொழிற்புரட்சிக்குப் பின், இலக்கிய உலகிலும் சில மாற்றங்கள் நேர்ந்தன. கவிதையிலேயே படைக்கப்பட்டு வந்த வாழ்வியல் கலைகள், உரைநடைக்கு வடிவம் மாறின. உரைநடை வகையில் மற்றத் துறைகளுக்குக் கிட்டாத செல்வாக்குப் புதினத்திற்குக் கிட்டியது. புதுமை அல்லது புதிது எனப் பொருள் தரும், 'நாவெல்லா' எனும் சொல்லிலிருந்து பிறந்ததால், 'புதினம்' (Novel) எனப் பெயர் பெற்றதாகக் கூறுவார் ஸர் ஹேரி ஜான்ஸ்டன்.

இயந்திரமயமாகிவிட்ட காலத்தில், அரிதின் முயன்று படிக்கவேண்டிய காப்பியங்கள் செல்வாக்கு இழந்ததால், அந்த இடத்தைப் புதினங்கள் பற்றிக் கொண்டன. நிகழ்கால வாழ்க்கையிலேயே வாசகர்களின் நாட்டம் இருந்த காரணத்தால், சமூகப் புதினங்களே தொடக்கத்தில் படைக்கப்பட்டன. ஆனால், 18ஆம் நூற்றாண்டில் ஏற்பட்ட பிரெஞ்சுப் புரட்சி, வரலாற்றுப் புதினங்களுக்குத் தோற்றுவாய் செய்தன. பிரெஞ்சு மண்ணில் 'வரலாற்றுப் புதினங்கள்' ஏற்படுத்திய தாக்கமும் செல்வாக்கும், மற்ற ஐரோப்பிய நாடுகளுக்கும் எட்டலாயின.

"1789 ஆம் ஆண்டுக்கும் 1814ஆம் ஆண்டுக்கும் இடைப்பட்ட காலத்தில் ஏற்பட்ட பிரெஞ்சுப்புரட்சி, அதனைத் தொடர்ந்து ஏற்பட்ட புரட்சிகரப் போர்கள், நெப்போலியனின் எழுச்சி வீழ்ச்சிகள், அவற்றின் தாக்கம் ஆகியவை ஏனைய ஐரோப்பிய நாடுகளிலும் தேசிய வரலாறு பற்றிய உணர்வு, அதுபற்றிய விளக்கம், விழிப்புணர்ச்சி ஆகியவற்றை ஏற்படுத்தின" என எழுதுகின்றார் ஜார்ஜ்லூகாஸ். இங்கிலாந்து, ஜெர்மனி, இந்தியா போன்ற நாடுகளிலே தேசிய உணர்வு பொங்கி எழுந்தபோது, அதனை மேன்மேலும் வளர்ப்பதற்கு, அந்தந்த நாடுகளின் பழம் பெருமைகளைக் கலைகளின் மூலம் மக்களுக்கு உணர்த்த விரும்பினர். அன்றைய அரசியல், சமூகத் தாக்கங்களையும் பழம்பெருமை களையும் உணர்த்துவதற்கு வரலாற்றுப் புதினங்களே வாய்ப்பளித்தன.

பிரெஞ்சு மொழியிலே 'வில்லியம் பால்சாக்' எழுதிய வரலாற்றுப் புதினங்களும், ஆங்கிலத்திலே ஸர் வால்ட்டர் ஸ்காட் எழுதிய வரலாற்றுப் புதினங்களும் இந்திய, தமிழகப் படைப்பாளிகளுக்கு ஊட்டச்சத்து ஆயின. ஆங்கில ஏகாதிபத்தியத்தை எதிர்ப்பதற்குரிய தேசிய உணர்வை வங்க மக்களுக்கு ஊட்டுவதற்காகப் பங்கிம் சந்திர சட்டர்ஜி, 'ஆனந்தமடம்', 'துர்க்கேச நந்தினி' போன்ற வரலாற்றுப் புதினங்களைப் புனைந்தார். அமரர் கல்கி, 'பார்த்திபன் கனவு', 'பொன்னியின் செல்வன்' போன்ற வரலாற்றுப் புதினங்களைப் படைத்தார்.

தொடக்க காலத்தில் 'இராஜா–ராணி' கதைகள் எல்லாம் வரலாற்றுப் புதினங்கள் எனும் வில்லைகளை(லேபில்ஸ்) ஒட்டிக்கொண்டு பிறந்தன. அதனால், ஆராய்ச்சி அறிஞர் எஸ். வையாபுரிப்பிள்ளை அவர்கள், நடைமுறைக்கு ஒவ்வாத வீர சாகசங்களைக் கொண்டு எழுதப்பட்ட புதினங்களை 'அற்புத நவீனங்கள்' (செமி ஹிஸ்டாரிக்கல் நாவல்ஸ்) என்றும், உண்மை வரலாற்றை அடிப்படையாகக் கொண்டு எழுந்த புதினங்களை, 'வரலாற்றுப் புதினங்கள்' (ஹிஸ்டாரிகல் நாவல்ஸ்) என்றும் பிரித்தார்கள்.

வரலாற்றுப் புதினங்களுக்குரிய இலக்கணம் என்ன? ஒரு படைப்பாளி தாம் வாழ்கின்ற காலத்திலிருந்து 60 ஆண்டுகளுக்கு முன்னர் நிகழ்ந்த வரலாற்று நிகழ்ச்சியை வைத்து, உண்மையின் அடிப்படையில் எழுதப்படுகின்ற புதினங்களை, வரலாற்றுப் புதினங்களாகக் கருதலாம் என்பது ஏறத்தாழ அயல்நாட்டு, உள்நாட்டு ஆராய்ச்சியாளர்கள் அனைவராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட உண்மை. என்றாலும், ஒரு வரலாற்று நிகழ்ச்சி, வலுவுள்ளதாக – உலகத்து மக்கள் அனைவருடைய கவனத்தையும் ஈர்க்கக்கூடிய ஒன்றாக அமைந்துவிடுமானால், அந்த அண்மைக்கால வரலாற்று நிகழ்ச்சியை வைத்து ஒரு புதினம் எழுமானால், அதனையும் வரலாற்றுப் புதினமாக ஏற்கலாம் எனக் கேத்லீன் டில்லோட்சன், ஆவ்ரன் ப்ளிஸ்மென் போன்ற திறனாய்வு வல்லுநர்கள் கருதுகின்றனர். அந்த வரலாற்றுப் புதினத்தை 'அண்மைக்கால வரலாற்றுப் புதினமாக' (ரீசென்ட் பாஸ்ட் ஹிஸ்டாரிகல் நாவல்ஸ்) வரையறுக்கின்றனர். அந்த வகையில் வியட்நாம் போரை அடிப்படையாக வைத்து எழுதப்பட்ட புதினத்தை,

அண்மைக்கால வரலாற்றுப் புதினமாகக் கருதுகின்றனர். நம்நாட்டிலும், கீழ்வெண்மணி நிகழ்ச்சியை வைத்துக் 'குருதிப்புனல்' எனும் தலைப்பில் இந்திரா பார்த்தசாரதி எழுதிய புதினத்தைச் சேர்க்கலாம். 'கோவா' விடுதலைப் போராட்டத்தை மையமாக வைத்து திருமதி இராஜம் கிருஷ்ணன் 'வளைக்கரங்கள்' எனும் புதினத்தைத் தீட்டியுள்ளார்.

பேராசிரியர் கா. சிவத்தம்பி, "19ஆம் நூற்றாண்டுக் காலத்துத் தமிழ்க் கலைஞர் குடும்பத்தின் வாழ்க்கையையோ, 20ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் நடந்த சுதந்திரப் போராட்டத்தையோ ஒரு நாவல், தனது கதைப் பொருளாகக் கொள்ளுமேல், அதனையும் வரலாற்று நாவலாகக் கொள்ளுதல் வேண்டும்" என நவில்கின்றார். கதைப் பாத்திரங்களில் சிலர் கற்பனை மாந்தர்களாக இருந்தாலும், ஒரு முழுமையான வரலாற்றுக் காலத்தை மீள்கொணர்வதாக ஒரு புதினம் அமையுமானால், அதனை வரலாற்றுப் புதினமாக ஏற்கலாம் என்பது பெரும்பாலோரால் ஏற்கப்பட்ட ஒரு கருத்தாகும். படைக்கப்பட்ட புதினத்தில், பல பாத்திரங்கள் கற்பனைப் பாத்திரங்களாக அமைந்து, ஒரே ஒரு பாத்திரம் மட்டும் வரலாற்று மாந்தராக அமைந்து, அது வரலாற்றுக் காலத்தை அப்படியே படம் பிடிக்குமானால், அதனையும் வரலாற்றுப் புதினமாக ஏற்கலாம் என்பது, ஒரு சில ஆய்வாளர்களின் கருத்தாகும்.

### தமிழில் வரலாற்றுப் புதினங்கள் வளர்ந்த வகை

தஞ்சை–திருச்சி நாயக்கர் கால வரலாற்றை அடிப்படையாக வைத்து, 'மோகனாங்கி' எனுந் தலைப்பில் திரு. தி. த. சரவணமுத்துப் பிள்ளை 1895இல் முதன்முதலில் ஒரு வரலாற்றுப் புதினத்தை எழுதினார். நாயக்கர் வரலாற்றையும் – இராஜபுத்திரர் வரலாற்றையும் பின்னணியாகக் கொண்டு, 1903இல் 'மங்கம்மாள்' எனுந் தலைப்பில், இரண்டாவது புதினம் கூடலிங்கம் பிள்ளை அவர்களால் எழுதப்பெற்றது. அதே வரலாற்றுச் சூழலில், குழந்தைசாமி பிள்ளை என்பவர் 1910இல், 'சத்தியவல்லி' எனும் வரலாற்றுப் புதினத்தைப் படைத்துள்ளார். பின்னர், 'பிரிதுளை', 'வித்யாரண்ய நகரம்' எனும் இரண்டு வரலாற்றுப் புதினங்கள் வெளியிடப்பட்டன. 1934இல் 'மஞ்சுளா' எனும் புதினம், வேங்கடாசலம் என்பவரால் பத்திரிகையில் தொடர்கதையாக எழுதப்பட்டது.

முற்கால வரலாற்றுப் புதின ஆசிரியர்களில், வரலாற்றுக்கு முரண் இல்லாமலும், வரலாற்றை எழுதுவதற்குச் சில சான்றுகளைத் தரக்கூடியதாகவும் எழுதியவர், தி. த. சரவணமுத்துப் பிள்ளை. இவருடைய பணியே, அருங்காட்சியகக் காப்பாளராக அமைந்ததால் வரலாற்றுத் துல்லியம் வெளிப்படையாக அமைந்து கிடக்கிறது. தெலுங்கில் 'தட்சிண இந்திய சரித்திரம்' எழுதிய பகடாலு நரசிம்மலு நாயுடு, "சங்க கால இலக்கியங்களிலிருந்து தமிழ் வரலாற்றைச் சலித்தெடுப்பதுபோல் சரவணமுத்துப் பிள்ளையின் மோகனாங்கி என்ற புதினத்திலிருந்து தஞ்சை நாயக்க மன்னர்களின் வரலாற்றையும், அந்தச் சமஸ்தானத்தில் நடந்த சூழ்ச்சிகள் முதலிய சம்பவங்களையும் நாம் அறிந்துகொள்ள முடிகிறது. வரலாற்று நாவல் வகையில், சரவணமுத்துப் பிள்ளை ஒரு தனிப்பட்ட சிறந்த முன்னோடியாக உள்ளார்" எனப் பாராட்டுகின்றார். வரலாற்றுப் புதினம் 19ஆம் நூற்றாண்டின் இறுதியிலிருந்து தோன்றி வளர்ந்து வந்தாலும், இத்துறை மிகவும் செல்வாக்குப் பெற்றது, கல்கி ரா. கிருஷ்ண மூர்த்தி அவர்களுக்குப் பிறகுதான். தமிழில் இதுவரை வெளிவந்த வரலாற்றுப் புதினங்கள்(பெயரளவில்) 267 ஆகும். ஏறத்தாழ எண்பது படைப்பாளிகள் வரலாற்றுப் புதினங்களைப் படைத்திருக்கிறார்கள். கதையிலக்கியத்தில், வரலாற்றுக்கும் புதினத்துக்கும் பெருமை சேர்ப்பவர்களாக எழுதிப் பேரும் புகழும் பெற்றவர்கள்: 1. கல்கி, 2. மீ.ப. சோமு, 3. கலைஞர் மு. கருணாநிதி, 4. சாண்டில்யன், 5. அகிலன், 6. விக்கிரமன், 7. நா. பார்த்தசாரதி, 8. கோவி. மணிசேகரன், 9. ஜெகசிற்பியன், 10. ர.சு. நல்லபெருமாள், 11. கௌதம நீலாம்பரன் ஆகியோரைச் சொல்லலாம்.

சான்றுகள் கிடைக்காத தொல் பழங்காலத்தையோ, சங்க காலத்தையோ வைத்து வரலாற்றுப் புதினம் எழுதுவது, கத்தியின் மேல் நடப்பது போன்றதாகும். அதனால் 'கடல் கண்ட கனவு' எனும் தலைப்பில் மீ.ப. சோமு, 'கபாடபுரம்' எனுந்தலைப்பில் நா. பார்த்தசாரதி, 'தென்குமரித் தெய்வம்' எனுந்தலைப்பில் வழித்துணைவன் ஆகிய மூவர் மட்டுமே சங்ககாலப் பின்னணியில் வரலாற்றுப் புதினங்களை எழுதியுள்ளனர். கௌதம நீலாம்பரன் இலங்கை வரலாற்றுப் பின்னணியில், 'பல்லவன் தந்த அரியணை', 'ஈழவேந்தன் சங்கிலி' என இரண்டு வரலாற்றுப் புதினங்களை எழுதியுள்ளார். மேலும், கோவி. மணிசேகரன் ருசிய வரலாற்று அடிப்படையில் 'தென்றல் காற்று' எனும் புதினத்தைப் படைத்துள்ளார். ஆட்சியாளராகவும் எழுத்தாளராகவும் திகழ்கின்ற கலைஞர் மு. கருணாநிதி அவர்கள் நான்கு வரலாற்றுப் புதினங்களை வரைந்திருக்கிறார்கள். 1. ரோமாபுரிப் பாண்டியன், 2. தென்பாண்டிச் சிங்கம், 3. பாயும் புலி பண்டாரக வன்னியன், 4. பொன்னர்–சங்கர் ஆகியன அந்நான்கு புதினங்களாம். ரோமாபுரி மன்னனுக்குப் பாண்டி மன்னன் ஒரு தூது அனுப்பினான் எனச் சங்க இலக்கியத்தில் ஒரு குறிப்பு உண்டு. அகஸ்டஸ் சீசருக்குப் பாண்டி மன்னன் அனுப்பிய தூதை வைத்துக்கொண்டு, அந்த வரலாற்றுக் காலத்தையே மீள் உருவாக்கம் செய்கிறார், புதின ஆசிரியர்.

**தென்குமரித் தெய்வம்:** சிவகங்கை மாவட்டம் – திருப்பத்தூர் வட்டாரத்தில், வீரத்தின் விளைநிலமாகத் திகழ்ந்தவை பாகனேரி – பட்டமங்கலம் பகுதிகள். அக்காலத்து வட்டார வழக்கை ஆதாரப் பூர்வமாகத் தீட்டிச் செல்கிறார், வழித்துணைவன்.

**பாயும் புலி பண்டாரக வன்னியன்:** பூலித் தேவனைப் போல் – வீரபாண்டிய கட்டபொம்மனைப் போல், இலங்கை மண்ணிலிருந்து ஆங்கிலேயரை எதிர்த்துப் போராடியவன் பண்டாரக வன்னியன். கண்டியிலிருந்து ஓர் அமைச்சன்(சிங்களவன்) அன்றைக்கும் காட்டிக் கொடுத்ததால், வீழ்ந்தது வன்னியரசு.

**பொன்னர்–சங்கர்:** கொங்குச் சீமையிலே காலம் காலமாக வழங்கி வருகின்ற வாய்மொழி வரலாறு, பொன்னன்–சங்கர் அல்லது அண்ணன்மார் கதை. கலைஞர் அவர்கள் சம்பவங்கள் நிகழ்ந்த இடங்களை எல்லாம் கள ஆய்வு செய்து, வேளாண்குடியில் விளைந்த பங்காளிச் சண்டையைப் பாங்காக வெளிப்படுத்தியிருக்கிறார்.

பெரும்பாலும் சோழ, பாண்டிய, பல்லவ, சாளுக்கிய, சேர, விஜயநகர நாயக்க வம்ச, இலங்கை, இந்திய வரலாற்றுப் பின்னணியில்தாம் வரலாற்றுப் புதினங்கள் தமிழில் படைக்கப்பெற்றிருக்கின்றன. விஜயநகர வரலாற்றுப் பின்னணியில், 1. மங்கம்மா, 2. அழகரசி, 3. மோகனாங்கி, 4. பொற்காலப் பூம்பாவை, 5. ஆலவாய் அரசி, 6. வெற்றித் திருநகர், 7. வல்லத்து இளவரசி போன்றவை செம்மையாகப் படைக்கப்பெற்ற புதினங்கள் எனலாம். இவ்வாறாக, வரலாற்றுப் புதினங்கள் தமிழுக்கு ஆற்றியிருக்கும் பங்களிப்பை, "தற்காலத் தமிழ் இலக்கியம், வரலாற்றுப் புதினங்களால் வளம் பெற்றிருக்கிறது. முற்காலத் தமிழக வரலாற்று நிகழ்ச்சிகளையும், இடைக்காலத் தமிழக வரலாற்று நிகழ்ச்சிகளையும் அடிப்படையாய் வைத்து எழுதப்பட்டிருக்கின்றன" எனப் பேராசிரியர் ந. சஞ்சீவி, பேராசிரியர் க.த. திருநாவுக்கரசு ஆகிய இருவரும் சேர்ந்து எழுதியிருக்கின்ற கட்டுரையில் உறுதி செய்கின்றனர். வரலாற்றுப் புதினங்கள் சமூகத்திற்கு நான்கு அரும்பணிகளை ஆற்றுகின்றன. 1. முதலாவதாக வரலாற்றைப் படிப்பதற்குரிய ஆர்வத்தை வரலாற்றுப் புதினங்கள் உருவாக்குகின்றன. 2. நூல்களைக் கவிதையைப்போல, நாடகத்தைப் போல கதை இலக்கியத்தால் தமிழுக்கு வளம் சேர்க்கின்றன 3. வரலாற்றியலில் தொடர்பு அறுந்த இடங்களை இணைத்துத் தருகின்றன. 4. நாட்டுக்கு ஒரு நெருக்கடி, ஒரு சோதனை வரும்போது, அனைத்துத் தரப்பினரையும் ஒருங்கிணைப்பதற்கும் ஒருமைப்பாட்டை உருவாக்குவதற்கும் உறுதுணை செய்கின்றன.

ஒரு நாட்டினுடைய வரலாற்றைப் படிக்க வேண்டியது ஒவ்வொரு குடிமகனுடைய கடமை ஆகும். ஆனால், வரலாறு, இலக்கியத்தைப் போலச் சுவை தரக்கூடிய ஒன்றன்று. வரலாற்றைப் படிக்கும்போது ஒரு சோர்வு, ஓர் அயர்வு, ஒரு வெறுமை தோன்றும். கதைப் பின்னல்களால் வரலாற்று நிகழ்ச்சிகள் தீட்டப்படும் போது, அயர்வும் சோர்வும் நீங்கி வரலாற்றைப் படிப்பதற்கு ஓர் ஈர்ப்பு ஏற்படும். சம்பவங்களும் உரையாடல்களும் அழகிய விகிதாசாரத்தில் கலந்திருப்பதால், எட்ட நின்று நிகழ்ச்சிகளைக் காணும் போதே நாடகத்திலுள்ளது போல், அந்நிகழ்ச்சிக்குக் காரணமானவர்களின் கிட்டத்திலிருந்து பாத்திரங்களின் சுகதுக்கங்களில் பங்கு கொள்கிறோம்" எனத் திரு. ரா. கணபதி அவர்கள் கௌதமனின் 'பாமினிப்பாவை' எனும் வரலாற்றுப் புதினத்திற்கு எழுதிய அணிந்துரையில் குறிப்பிடுகின்றார்.

மேற்சொன்ன கருத்தை வலியுறுத்த வந்த மறைமலையடிகளாரும், "வரலாற்றுப் புதினங்கள், வரலாற்றுக் கல்வி பயிற்றும் திறன் உடையனவாகவும், வரலாற்று உணர்வையும் வரலாற்றின் மீது வேட்கையையும் ஊட்டுவனவாகவும் அமைகின்றன" என எழுதுகின்றார். வில்லியம் பால்சாக்கினுடைய 'காமெடி ஹியுமென்' எனும் வரலாற்றுப் புதினத்தைத் திறனாய்வு செய்த பிரடெரிக் ஏங்கெல்ஸ், "... பிரெஞ்சு சமூகத்தின் வியக்கத்தக்க வரலாறு இது. பொருளாதார விவரங்கள் முழுவதும் இதில் இடம் பெற்றிருக்கின்றன... நான் பொருளாதாரப் பேராசிரியர்களிடம் கற்றதைவிட, வரலாற்றுப் பேராசிரியர்களிடம் கற்றதைவிட, புள்ளியியல் பேராசிரியர்களிடம் கற்றதைவிட, இந்நாவல் மூலம் அதிகம் கற்றிருக்கிறேன்" என்றெழுதுகிறார்.

அமரர் கல்கியினுடைய 'பொன்னியின் செல்வன்' புதினத்தைப் பத்திரிகையில் தொடர்ந்து படித்து வந்த ஆசிரியர்களும் மாணவர்களும், அவரை விழுப்புரத்திலுள்ள மகாத்மா காந்தி பாடசாலைக்கு அழைத்து, ஒரு வரவேற்பிதழ் வாசித்துக் கொடுத்தனர்.

> **"பொன்னியின் செல்வனும் பூங்குழலி அம்மையும்**
> **வந்தியத் தேவனும் வானதியும் குந்தவையும்**
> **பழுவூர் நந்தினியும் பழுவேட்டரையர்களும்**
> **பாடாய்ப் படுத்துகின்றனர், படிக்கும் போதெல்லாம்"**

என்பதுவே அவ் வரவேற்பிதழில் கண்ட கவிதை. இதனால், பொன்னியின் செல்வன் கதை மட்டுமன்று, சோழ வரலாறும் வாசகர்களின் நெஞ்சத்தில் ஆழப் பதிந்திருப்பதனை உணரலாம்.

அடுத்து, வரலாற்றில் தொடர்பு அறுந்த இடங்களைப் பின்னுபவர்களாகவும் புதின ஆசிரியர்கள் திகழ்கிறார்கள்.

இரண்டாம் பராந்தகனாகிய சுந்தரசோழனின் மூத்த மகன் ஆதித்த கரிகாலன் இளமைக்காலத்திலேயே வீராதி வீரனாகத் திகழ்ந்தவன். ஆதித்த கரிகாலன் பாண்டிநாட்டு மன்னன் வீரபாண்டியனைப் போரில் தோற்கடித்து, அவனைக் கொன்றதால், ஆதித்த கரிகாலனுக்கு 'வீரபாண்டியன் தலைகொண்ட கோப்பரகேசரி' எனவொரு பட்டம் கிடைத்ததைக் கல்வெட்டுக் குறிக்கின்றது. அப்பேர்ப்பட்ட மாவீரன் ஆதித்த கரிகாலனுக்குக் கி.பி. 966இல் சுந்தரசோழன் 'இளவரசு' பட்டமும் கட்டுகிறான். ஆனால், அந்த இளவரசன் கி.பி. 969இல் நான்கு அந்தணர்களால் நயவஞ்சகமாகக் கொல்லப்படுகிறான். தம்முடைய அருமந்த புத்திரன் ஆதித்த கரிகாலனை இழந்த சோகத்தில், சுந்தரசோழன் தன் மகன் காஞ்சிபுரத்தில் கட்டிய பொன்மாளிகையிலே தனித்திருந்து உயிரைத் துறக்கிறார். அதனால், சுந்தரசோழனைப் 'பொன்மாளிகைத் துஞ்சின தேவர்' எனக் கல்வெட்டு அழைக்கின்றது. ஆதித்த கரிகாலன் கொலை செய்யப்பட்டதைக் கே.ஏ. நீலகண்ட சாஸ்திரி, ஆர். சத்தியநாதய்யர், கே.கே. பிள்ளை போன்ற வரலாற்றாசிரியர்கள் குறிக்கின்றார்களே தவிர, கொலை செய்யப்பட்டதற்குரிய காரணத்தை யாரும் குறிப்பிடவில்லை. வரலாற்றில் இதுவோர் இழையறுந்த இடமாகவே இருந்து வருகிறது.

பிற்காலச் சோழர் வரலாற்றை எழுதிய டி.வி. சதாசிவப் பண்டாரத்தார், சிதம்பரம் தாலுகா, காட்டுமன்னார் கோயிலுக்கு அருகிலுள்ள உடையார்குடியில் காணப்படும் ஒரு கல்வெட்டைக் கண்டுபிடித்து, கொலைக் குற்றவாளியைக் கண்டறிகிறார். "ஆதித்த கரிகாலனைக் கொன்றவர்கள் 1. சோமன், 2. ரவிதாசனான பஞ்சவன் பிரமாதிராஜன், 3. பரமேசுவரனான இருமுடிச் சோழ பிரமாதிராஜன், 4. ரேவதாசக் கிரமவித்தன் ஆகிய நால்வருமே! உடன்பிறந்த அந்தச் சகோதரர்களே ஆதித்த கரிகாலனைக் கொன்றவர்கள். அந்த அந்தணர்கள் அரசாங்க அதிகாரிகளாக இருந்தும், இளவரசனைக் கொன்றதற்குரிய காரணம் புலப்படவில்லை" என்று சான்று காட்டி நிறுவுகிறார், பண்டாரத்தார்.

பண்டாரத்தார் விடையை நெருங்கி வந்தாரே தவிர, முழுமையாக விடை காண முடியவில்லை. ஆனால், வரலாற்றுப் புதின ஆசிரியர்களாகிய கல்கியும், விக்கிரமனும், பொன்னியின் செல்வன், நந்திபுரத்து நாயகி எனும் புதினங்களின் மூலம் ஏற்கக்கூடிய ஒரு தொடர்பைக் கண்டறிந்திருக்கிறார்கள். ஆதித்த கரிகாலன் காஞ்சிபுரத்தில் பொன்மாளிகை ஒன்றைக் கட்டுகிறான். "பல்லவச் சக்கரவர்த்திகள் தலைமுறையாக வாழ்ந்து, ராஜ்யபாரம் புரிந்த அரண்மனைகள் ஆதித்த கரிகாலனுடைய அந்தஸ்துக்குப் போதவில்லையாம். பொன்னிழைத்த அரண்மனை கட்டுகிறார். இரத்தினங்களையும் வைடூரியங்களையும் அப் பொன்மாளிகைச் சுவர்களில் பதிக்கிறார். கங்கபாடி, நுளம்பபாடி, குடகு முதலிய நாடுகளில் கைப்பற்றிக் கொணர்ந்த பொருளில் ஒரு செப்புக்காசாவது தலைநகரிலுள்ள பொக்கிஷத்திற்கு அவர் இதுவரை அனுப்பவில்லை" எனப் பாத்திரங்கள் மூலம் பேச வைக்கிறார் கல்கி.

நந்திபுரத்து நாயகியில் ஆசிரியர் விக்கிரமன், "பொன்னி நதிக்கரையில் பல்லவன் ஒருவன் கோட்டை கட்டி, நந்திபுரம் என்ற நகரம் அமைத்தான்; நான் பாலாற்றங்கரையில் சோழர் பெருமையைப் பறைசாற்றும் பொன்மாளிகையைக் கட்டியுள்ளேன்" என்று ஆதித்த கரிகாலனையே பேச வைக்கிறார். ஆதித்த கரிகாலன் கட்டிய பொன்மாளிகையே அந்தணர்களுக்கு வெறுப்புத் தந்து, விரோதத்தையும் ஏற்படுத்தி, கொலைசெய்கிற அளவிற்குக் கொண்டு சென்றிருக்க வேண்டும். அவ்வாறு எண்ணிப் பார்க்க வரலாறும் இடம் தருகிறது. சோழ மன்னர்கள் யாருமே திருக்கோயில்களுக்குப் பொன்வேய்ந்திருக்கிறார்களே தவிர, தமக்கென்று யாரும் பொன்மாளிகை கட்டிக் கொண்டதில்லை.

முதல் பராந்தகன் தில்லைத் திருக்கோயிலுக்குப் பொன்வேய்ந்தான். முதலாம் இராசராசன் தன்னுடைய 29ஆம் ஆட்சியாண்டில், தஞ்சைப் பெருவுடையார் கோயிலுக்குப் பொன்னும் சொத்தும் அளித்தான். இராசராசன் போர் வெற்றிகள் மூலம் கிடைத்த 41,500 கழஞ்சுப் பொன்னையும் 50,650 கழஞ்சு வெள்ளியையும் பெருவுடையார் கோயிலுக்கே கொடுத்திருக்கிறான். இரண்டாம் குலோத்துங்கன் தன்னுடைய முடிசூட்டு விழாவையே தில்லைத் திருக்கோயிலிலேயே நிகழ்த்தியிருக்கிறான். சோழ மன்னர்கள் அனைவரும் திருக்கோயில்களுக்கே பொன்னையும் பொருளையும் அளித்திருக்கும்போது, ஆதித்த கரிகாலன் மட்டுமே தனக்குப் பொன்மாளிகை கட்டிக்கொண்டது, அந்தண அதிகாரிகளின் மனத்தில் உறுத்தலை உண்டாக்கியிருக்க வேண்டும். ஆதித்த கரிகாலன் செய்கை, பின்னால் வரும் மன்னர்களுக்கு முன்னுதாரணமாக அமைந்துவிட்டால் என்செய்வது என்று, அந்தணர்கள் அஞ்சியிருக்க வேண்டும். கொலையாளிகள் அந்தணர்களாக இருந்ததோடு அதிகாரிகளாகவும் இருந்ததால், சமயமும் ஆட்சியும் குலையுமே என்று ஆதித்த கரிகாலனைக் கொலை செய்திருக்க வேண்டும் எனும் யூகத்தை நமக்கு விட்டுச் செல்கிறார்கள். வரலாற்றியலுக்கும் தருக்கவியலுக்கும் பொருத்தமாகவே, இடையறுந்த

இழைகளைப் புதின ஆசிரியர்கள் பின்னியிருக்கிறார்கள். இவ்வாறு வரலாற்றில் தொடர்பறுந்த இடங்களை, வரலாற்றுப் புதின ஆசிரியர்கள் மனோவேகத்தின் மூலம் அவ் வரலாற்றுக் காலத்திற்கே சென்று, விடை தேடுவதை, ஆர்.ஜி. கோலிங்வுட் எனும் தத்துவ வரலாற்றாசிரியர், A Priori Re-enactment என்பதன் மூலம் அங்கீகரிக்கின்றார்.

மூன்றாவதாக, வரலாற்றுப் புதினங்கள் நாட்டுக்குச் சோதனை வந்த நேரத்தில், ஒருமைப்பாட்டை உருவாக்குவதற்குரிய கருவிகளாகச் செயல்படுகின்றன. இந்திய நாட்டின் விடுதலைப் போராட்ட வீரராகத் திகழ்ந்த வ.வே.சு. அய்யர் மேற்சொன்ன கருத்துக்கு அரண் சேர்க்கின்றார். "நான் ஒரு பெரிய நோக்கம் வைத்திருக்கிறேன். அதாவது, அலெக்சாண்டர் டூமாஸ் பிரெஞ்சு சரித்திரம் அனைத்தையும் கற்பனைக் கதைகளாகச் சரிபண்ணி, ஒவ்வொரு பிரெஞ்சுக்காரனையும், தன் தேச சரித்திர விசயத்தில் கற்றவனாயும் உற்சாகியாகவும் ஆக்கிவிட்டதைப் போல, தமிழ்நாட்டுச் சரித்திரம் அனைத்தையும் கற்பனைக் கதைகளாகச் செய்ய வேண்டுமென்றிருக்கிறேன். ...வீரதீரர் பிறந்து வளர்ந்து இறந்த நாட்டில், நம்மைப் பிறக்கச் செய்தது புண்ணியமென்றும், நாம் அவர்களுக்கேற்ற சந்ததியாகக் கடவோம் என்றும் எண்ணுங்கள். தமிழருள் தோன்றி மற்ற மாகாணங்களில் பிறந்துகொண்டிருக்கும் தீரயுகம் இன்னும் பிறக்க வழிகாட்டியாக அமைந்துவிடுவோம்'' என வரலாற்றுப் புதினத்தின் மூலம் சுதந்திர உணர்வை ஊட்ட நினைக்கிறார், வ.வே.சு. அய்யர்.

1965ஆம் ஆண்டு பாகிஸ்தான் இந்தியாவின் மீது படையெடுத்தபொழுது, எழுத்தாளர் அகிலன் அவர்களுக்கு ஏற்பட்ட தேசிய உணர்வினால், 'வெற்றித் திருநகர்' எனும் வரலாற்றுப் புதினத்தை எழுதுகிறார். 16ஆம் நூற்றாண்டில், சுல்தானியர்கள் படையெடுப்பால் விஜயநகரப் பேரரசு அழிந்தது. "துங்கபத்திரா நதிக்கரையில் இன்றைக்கு அதன் அழிக்கப்பட்ட கோட்டைகளையும், இடிக்கப்பட்ட மாளிகைகளையும், சின்னாபின்னப்படுத்தப்பட்ட கோயில் குளங்களையும் பார்ப்பவர்கள் இரத்தக் கண்ணீர் விடாமல் இருக்க முடியாது. உலகில் வேறு எந்த நகரமும் அவ்வளவு செல்வச் சிறப்போடும், உல்லாசக் களிப்போடும், வீரச்செருக்கோடும் வாழ்ந்ததுமில்லை; வேறு எந்த நகரமும் அவ்வளவு பயங்கரமான முறையில் அழிக்கப் பெற்றதும் இல்லை என வரலாறு கூறுகின்றது'' எனப் புதினத்தின் முன்னுரையில், அகிலன் எழுதுவது, அன்றைய ஆக்கிரமிப்பாளர்கள் மீது ஆத்திரம் கொள்வதற்கும், தேசத்தின் மீது பற்றுக் கொள்வதற்குமே ஆகும்.

வரலாற்றுப் புதினங்களால் தமிழுக்கும் வரலாற்றியலுக்கும் பெரும் பங்களிப்பு இருந்தாலும், இன்றைக்குக் கௌதம நீலாம்பரன் எனும் ஓர் எழுத்தாளரைத் தவிர வேறு யாரும் வரலாற்றுப் புதினங்கள் எழுதுவதில்லை; வாசகர்களிடமும் பெரும் வரவேற்பும் இல்லை. 1943இல் கல்கி 'பார்த்திபன் கனவு' எழுதியதற்குப் பிறகு வேகமாக வளர்ந்த வரலாற்றுப் புதினங்கள் இன்று தேக்கமடைந்தது ஏன்? எனும் கேள்வி நா. பார்த்தசாரதிக்கு முன் வைக்கப்பட்டது. சமூகப் புதினங்கள், வரலாற்றுப் புதினங்களை இடம்பெயரச் செய்துவிட்டன என்பதை, அவர் "சமூக, அரசியல், பொருளாதார நிலைமைகளை நானும் என்னைப் போன்ற பிற எழுத்தாளர்களும் கூர்ந்து கவனிக்கவேண்டிய காலம் வந்துவிட்டது. கதவைத் தட்டிக் கொண்டிருக்கும் நிகழ்காலச் சமுதாயத்தின் பிரச்சினைகளைத் திரும்பியே பார்க்காமலும், பார்த்தாலும் சிந்தனையில் ஏற்றுக்கொள்ளாமலும் விட்டுவிடுகின்ற அளவுக்குக் கடந்த காலச் சமுதாயப் பிரச்சினைகளுக்கு முக்கியத்துவம் தரவேண்டியது அவசியம்தானா என்பதைச் சிந்திக்க வேண்டுகிறேன். என் சொந்த அனுபவத்தில் சமுதாய விழிப்பும் நோக்கமும் வளர வளரச் சரித்திர நாவல்கள் எழுதவேண்டும் என்ற முனைப்பே போய்விட்டது'' எனும் கூற்றின் மூலம் விளக்குகிறார்.

இலக்கிய வகைகளின் தோற்றத்திற்கும் எழுச்சிக்கும் அந்தந்தத் தலைமுறைகளே விளைநிலங்களாக இருப்பதால், வரலாற்றுப் புதினங்களுக்குரிய காலம் உருவாகும்போது, அவற்றின் மறுமலர்ச்சி தொடரும்! நாட்டு வரலாறுகளின் மீதே வாசகர்களுக்கு ஒரு நாட்டம் இல்லாமலிருக்கும்போது, வரலாற்றுப் புதினங்கள் மீது ஆர்வம் பிறப்பதற்கு இப்போதைக்கு வாய்ப்பில்லை.



# சித்தர் சிந்தனை மரபு

முனைவர் அரங்க. இராமலிங்கம்



தமிழ்ச் சித்தர் சிந்தனை மரபு சங்க காலம் தொடங்கி இன்று வரை தொடர்ந்து வந்து கொண்டிருக்கிறது. வாழையடி வாழையென வளர்ந்து வரும் இச் சித்தர் சிந்தனை மரபிற்குத் தமிழ் இலக்கியங்கள் சான்று பகர்கின்றன. எண்வகை யோகங்கள், எண் வகைச் சித்திகள், மணி, மந்திரம், மருந்து, சோதிடம், வான நூற்கலை, இரசவாதம், வர்மம், தொலைவில் உணர்தல், காலம் கடந்து நிலைபெறுதல், எல்லைகளைக் கடந்து உணர்தல் எனப் பலநிலைகளில் தம் ஆளுமைகளைச் செலுத்தியவர் தமிழ்ச் சித்தர். சித்தர்களின் இப் பல்வேறு ஆளுமைத் திறன்களை எல்லாம் அறிஞர் பலர் ஆராய்ந்து நூற்றுக்கு மேற்பட்ட நூல்களை எழுதியுள்ளனர். அவற்றில் நூற்றியெட்டு (108) நூல்கள் மட்டும் இங்கே பின்னிணைப்பாகக் கொடுக்கப்பட்டுள்ளன. ஆய்வாளர்கள் இந்நூல்களைப் படித்து உண்மை உணர்வார்களாக! எனவே, இக்கட்டுரையில் சிறப்பாகக் குறிக்கத்தக்க தமிழ்ச் சித்தர்களின் பத்துச் (10) சிந்தனைகள் மட்டுமே குறிப்பிடப் பெறுகின்றன.

**1. நிறுவன அமைப்பு இன்மை**

தமிழ்ச் சித்தர் மரபில் நிறுவனங்களை உருவாக்கிக் கொண்டதாகச் சான்றுகள் இல்லை. இன்று சமயவாதிகள், சித்தர்கள் என்று சொல்லிக் கொள்வோர் உருவாக்கியிருப்பது போல் மிகப் பெரிய நிறுவன அமைப்பையோ, தங்களுக்கென்று ஆயிரக்கணக்கான சீடர்களையோ, கோடிக்கணக்கான செல்வத்தையோ தமிழ்ச் சித்தர் சேர்த்துக் கொள்ளவில்லை. இவையெல்லாம் ஞானத்திற்குத் தடையெனக் கருதினார்கள். தன்னை நாடிவந்த தகுதியுள்ள சீடனுக்கு மெய்ப் பொருளைக் கண்ணாரக் காட்டிக் கொடுத்து விட்டு, நாடோடிகள் போல் சென்றுகொண்டேயிருந்தனர். அப்படிச் சென்று கொண்டேயிருந்த தமிழ்ச் சித்தர்களைத் தேடிப் பிடித்துத் தான், ஞானத்தைப் பெற்றுச் சீடர்கள் உருவாயினர். இன்றைய காலகட்டத்தில் இந்தத் தமிழ்ச் சித்தர் மரபிற்கு நேர்மாறாக மிகப் பெரிய அளவில் நிறுவனங்களை உருவாக்கிக் கொண்டும் கோடிக்கணக்கில் செல்வங்களைச் சேர்த்துக் கொண்டும் சித்தர் என்ற பெயரில் பலர் வாழ்வதால்தான் இடர்ப்பாடுற்று இன்னலுறுகின்றனர்.

**2. மூர்த்தி, தலம், தீர்த்தம்**

தமிழ்ச் சித்தர்கள் தங்களுக்கென்று குறிப்பிட்ட மூர்த்தியையோ (கடவுள் உருவம்), குறிப்பிட்ட தீர்த்தத்தையோ (காசி, ரிஷிகேஷ், திரிவேணி சங்கமத்தில் நீராடுவோர்), தங்களுக்கென்று குறிப்பிட்ட தலத்தையோ (கோயில்கள்) வைத்துக்கொண்டு வழிபடுவதில்லை. கி.பி. ஆறாம் நூற்றாண்டில் தொடங்கிய பக்தி இயக்கத்தின் வழிவந்த அருளாளர் (நாயன்மார்—ஆழ்வார்) பல்வேறு தலங்களுக்குச் சென்றனர். அத்தலங்களில் எழுந்தருளிய இறைவனைப் புகழ்ந்து பாடல்கள் இயற்றினர். ஆறுகளிலும், குளங்களிலும் புனித நீராடினர். நடந்தே சென்று பல்வேறு தலங்களின் பெருமைகளைப் புகழ்ந்து பாடல்கள் புனைந்தனர். இதுபோன்று தமிழ்ச் சித்தர்கள் செய்யவில்லை. தமிழ்ச் சித்தர் மரபுக்கு மாறாக இன்றைய வழிபாட்டு முறையும் மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்றும் முக்கிய இடம் பெற்றதால் பல்வேறு இடர்ப்பாடுகளும், துன்பங்களும் சமய வாழ்க்கையில் ஏற்பட்டுவிட்டன. மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்றையும் முறையாக வழிபடத் தொடங்கியதன் நோக்கம் ஒரு சற்குருபிரானை அடைவதற்குத்தான். ஆனால், உண்மையைக் காணவேண்டும் என்ற நோக்கில் உருவாக்கப்பெற்ற இந்நெறி வெற்றுச் சடங்காக மாறி மக்களைச் சங்கடத்திற்கு உள்ளாக்கிவிட்டது.

**3. சடங்குகள்**

தமிழ்ச் சித்தர் மரபில் சடங்குகளுக்கு இடமில்லை. சடங்கு, மரபு வழிப்பட்ட வழிபாடு, சம்பிரதாயம் என்ற சொற்களுக்குள் புகுந்து கொண்டு இடைத் தரகர்கள் மிகப் பலர் பொதுமக்களின் பணத்தை, அவர்களின் நேரத்தைக் கொள்ளையடிப்பதனை இன்று காண்கிறோம். தமிழ்ச் சித்தர் மரபில் சடங்குகளுக்கோ, சம்பிரதாயங்களுக்கோ, மரபு வழிப்பட்ட வழிபாட்டு முறைக்கோ, சிறுதெய்வ வழிபாட்டுக்கோ இடமில்லை. இவற்றை அடியொற்றி இன்று சமய வழிபாடு என்ற பெயரில் நடைபெறும் மூடத்தனங்களுக்கோ, குருட்டு நம்பிக்கைகளுக்கோ சித்தர் மரபில் இடமில்லை. சித்தர் என்ற பெயரைப் பயன்படுத்திக் கொண்டு இற்றை நாளில் மிகத் தவறான சடங்கு முறைகளைப் பின்பற்றியும், ஆடல், பாடல் கேளிக்கைகளில் மக்களை ஈடுபடுத்தி வருவதும் கண்டிக்கத்தக்கது. தமிழ்ச் சித்தர் சிந்தனை மரபில் இதுபோன்ற கேளிக்கைகளுக்கோ, மூடத்தனங்களுக்கோ, வெற்று ஆரவாரச் சடங்குகளுக்கோ இடமில்லை.

### 4. ஒன்றே கடவுள்

தமிழ்ச் சித்தர் சிந்தனை மரபில் கடவுள் ஒருவரே. 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்றார் திருமூலர். ஏகன் அடி போற்றி, என மாணிக்கவாசகரும் 'ஒன்றென்றிரு தெய்வம் உண்டென்றிரு' எனப் பட்டினத்தாரும் போற்றுகின்றனர். அசைவற்ற நிலையில் பெருவெளியாய், நிராதாரமாய் (அண்ட சராசரங்கள் அனைத்திற்கும் ஆதாரமாக இருக்கும் அம்மெய்ப்பொருளுக்கு எதுவும் ஆதாரமில்லை. அது நிராதாரம்) பூரணமாய் இருக்கும் மெய்ப்பொருள் ஒன்று எனக் கண்டுரைத்தவர் தமிழ்ச் சித்தர். இடம், காலம், சூழல், செயல்நிலை நோக்கி ஒரே பரம்பொருளுக்குப் பல்வேறு உருவங்களையும், பெயர்களையும் கற்பித்து வழிபட்டனர் தமிழர். அன்றும் இன்றும் என்றும் இருப்பது ஒரே மெய்ப்பொருளான செம்பொருள்தான் என்பதனைக் கண்டுணர்த்தியவர் தமிழ்ச் சித்தர். இதன் விரிவான விளக்கத்தினைக் கட்டுரையாளரின் திருவடி, சித்தர் இறைநெறி நூல்களில் காணலாம்.

### 5. உடம்பு ஆலயம்

அண்டத்தையும் (புறநிலை) பிண்டத்தையும் (அகநிலை) ஒரே பரம்பொருள்தான் ஆட்சி செய்கிறது என்று கண்டுரைத்தவர் தமிழ்ச் சித்தர். ஆதியும் அந்தமும் இல்லாத அரும்பெரும் சோதியாக ஒளிரும் இறைவனைப் புறத்தில் சென்று காண இயலாது. எனவே, எல்லையற்ற பரம்பொருளை மனித உடம்பிற்குள் கண்டு களித்தனர். தாமே வந்து தண்ணளி பெய்து, கண்ணொளி காட்டி, கருத்தினுள் ஒளிரும் மெய்ப்பொருளைச் சிக்கெனப் பிடித்தனர் சித்தர். எனவே, உடம்பாலயம் எனப்படுகின்ற உடம்பினுள் கோடி சூரியப் பிரகாசமாக, பிரம்மப் பிரகாசமாக, சிவப் பிரகாசமாக, அணுவுள் அமைந்த பேரொளியாக ஒளிரும், அருட்பெருஞ்சோதியைக் கண்டவர் சித்தர். காடு, மலை அலையாமல், சடைமுடி வளர்க்காமல், சமயச் சின்னங்கள் அணியாமல் உடம்பெனும் ஆலயத்தில் உள்ளமெனும் கருவறையுள் அருட்பெருஞ்சோதி ஆண்டவனைக் கண்டு அருள் பெற்றவர் தமிழ்ச் சித்தர். நினைவு எனும் ஆலயத்தில் தன்னை மறந்த இலயத்தில் தலைவனொடு ஒன்றியிருக்கும் யோகநிலையை எய்தினர் தமிழ்ச் சித்தர். இப்பேருண்மைகளை திருமந்திரப் பாடல்களில் (724, 725, 1823) கண்டுணர்க.

புறத்தில் கல்லால் கட்டப்பட்ட ஆலயத்தில் சடங்குகளும், சம்பிரதாய முறைகளும் மரபு வழிப்பட்ட வழிபாட்டு முறைகளும் இருக்கும்; இடைத்தரகர்களும் இருப்பர், வெற்று ஆரவாரச் சடங்கினால் மக்கள் படும் துன்பத்தைக் கண்ட சித்தர் ஊனுடம்பே ஆலயம் என்றனர். இருந்த இடத்தில் அமைதியாக இருந்தே இறைவனை வழிபடலாம், காணலாம். அமைதியான மிகப்பெரிய சமுதாய மாற்றத்தினைத் தமிழ்ச் சித்தர்கள் செய்தனர். உயிரே கடவுள் எனப் போற்றி (திருமந்திரம் 2017) வழிபட்டனர். இந்த அக வழிபாட்டிற்குச் சாதியோ, செல்வமோ, தகுதியோ இன்ன பிறவோ தடையில்லை. அவரவர் மனம் விரும்பியபடி



அமைதியாக முழு ஈடுபாட்டுடன் இந்த அக வழிபாட்டினைச் செய்யலாம். தமிழ்ச் சித்தர் கண்ட புரட்சிகரமான உடம்பாலய வழிபாடு போற்றி வரவேற்கத்தக்கது. அனைவரும் பின்பற்றத்தக்கது.

### 6. கருவறை

உடம்பெனும் ஆலயத்திற்குள் உள்ளமாகிய கருவறையுள் இறைவன் எழுந்தருளியிருக்கிறான் என்பதனைத் தமிழ்ச் சித்தர்கள் கண்டு உரைத்தனர். உள்ளம் என்றாலும், நெஞ்சம் என்றாலும், மனம் என்றாலும், இருதயக் கமலம் என்றாலும் உடம்பினுள் ஓர் இடத்தைத்தான் குறிக்கும்.

**நெற்றிக்கு நேரே புருவத்து இடைவெளி**
**உற்றுஉற்றுப் பார்க்க ஒளிவிடும் மந்திரம்**
**பற்றுக்குப் பற்றாய்ப் பரமன் இருந்திடம்**
**சிற்றம்பலம் என்று தேர்ந்து கொண்டேனே.**

(திருமந்திரம் 2770)

எனத் திருமூலர் கூறுவதுபோல் புருவ மையமாகிய இருதயக் கமலத்தில் சிவப்பிரகாசமாகிய அருட்பெருஞ்சோதி தெய்வம் அனைவரையும் ஆட்சி செய்து கொண்டிருக்கிறது. நாளும் இச் சோதி தெய்வத்தைக் கண்ணாரக் கண்டு வழிபாடு செய்வதே வழிபாடு. இவ்வழிபாட்டின் நிறைவில் அருட்பெருஞ்சோதி ஆண்டவரோடு இணைந்து அம் மயமாகி, தான் அதுவாதலே சித்தர் நெறியின் முடிந்த முடிபு. எனவே, உடம்பில் இறைவன் புருவ மையமாகிய இருதயக் கமலமெனும் சுழி முனையில் ஒளிவீசிக் கொண்டிருக்கிறான் என்பதனை உணர்ந்து உணர்த்தியவர் தமிழ்ச் சித்தர். மனித உடம்பிற்குள் தலைப் பகுதியில் புருவ மையத்தில் இருக்கும் சுழிமுனையில் அனைத்து இறை இரகசியங்களும் அடங்கியுள்ளன.

### 7. குரு நெறி

தமிழ்ச் சித்தர் சிந்தனை மரபில் குருவுக்குத் தனியிடம் உண்டு. 'தொட்டுக் காட்டாத வித்தை சுட்டுப் போட்டாலும் வராது' என்பது பழந்தமிழ்ச் சித்தர் மொழி.

**குருவே சிவமெனக் கூறினன் நந்தி**
**குருவே சிவமென்பது குறித்தோரார்**
**குருவே சிவனுமாய்க் கோனுமாய் நிற்கும்**
**குருவே உரையுணர் வற்றதோர் கோவே**

(திருமந். 1581)

என்பன போன்ற குருநெறியைப் போற்றும் பாடல்கள் (திருமந்திரம் 139) பலப்பல உள்ளன. மெய்க் குருபிரான் சீடனின் புருவ மையத்தைத் தொட்டுக் காணாதன காட்டித்துக் கேளாதன கேட்பித்துக் கண்ணில் கனலேற்றி மெய்ப்பொருளை ஊனுடம்புக்குள்ளே காட்டிக் கொடுப்பார்.

**கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்**
**மற்றீண்டு வாரா நெறி** (குறள் 356)

**பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்**
**செம்பொருள் காண்பது அறிவு** (குறள் 358)

எனத் தெய்வப் புலவர் திருவள்ளுவரும் உணர்த்தியிருப்பதனை உணர்வுடையார் உணர்க. தமிழ்ச் சித்தர் சிந்தனை மரபில் குருநெறி சிறப்பான இடத்தைப் பெறுகிறது. இதனையே வடலூர் வள்ளல் பிரானாகிய இராமலிங்க வள்ளலார் 'சிகரத்திலேற்றி என்னைச் சிவமாக்கிக் கொண்டது பாரீர்' எனக் குருபிரான் தனக்கு ஏற்படுத்திய அனுபவத்தை உரைக்கின்றார்.

### 8. தன்னை அறிதல்

தமிழ்ச் சித்தர் சிந்தனை மரபில் மணிமுடியாகத் திகழ்வது தன்னை அறிதல். தான் என்பது உடலல்ல என்பதனை உணர்ந்து இந்த உடலை உருவாக்கிய அறிவுப் பொருளாக உயிராக இருக்கிற மெய்ப்பொருளை அறிவதுதான் தன்னை அறிதல்.

**தன்னை யறியத் தனக்கொரு கேடில்லை**
**தன்னை யறியாமல் தானே கெடுகின்றான்**
**தன்னை யறியும் அறிவை அறிந்தபின்**
**தன்னையே அர்ச்சிக்கத் தானிருந் தானே.**

(திரும. 2355)

**தன்னை யறிந்திடுந் தத்துவ ஞானிகள்**
**முன்னை வினையின் முடிச்சை யவிழ்ப்பார்கள்**
**பின்னை வினையைப் பிடித்துப் பிசைவார்கள்**
**சென்னியில் வைத்த சிவனரு ளாலே.**

(திரும. 2611)

எனச் சித்தர்கள் உரைத்திருப்பதிலிருந்து தன்னை அறிதலே தமிழ்ச் சித்தர்தம் தலையாய நெறி. தன்னை அறிந்த உயிர் காலத்தை வென்று காலாதீதனாக மாறும். அவ்வாறு முக்காலத்தையும் வென்றவர்தாம் தமிழ்ச் சித்தர்.

### 9. தொண்டு

தமிழ்ச் சித்தர் ஏதேனும் ஒரு வகையில் மக்கள் தொண்டினை வாழ்நாள் முழுவதும் செய்துகொண்டே இருந்தனர். மக்களின் உயிர்ப்பிணியாக இருக்கும் பசிப்பிணியைப் போக்கும் மாபெரும் தொண்டினையும், உடற்பிணியாகிய நோய்களை நீக்கும் மருத்துவத்தையும்,



தன்னை அறியும் தவத்தால் நீங்கும் பிறவிப் பிணியைப் போக்கும் தொண்டினையும் செய்தனர்.

**யாவர்க்கு மாம்இறை வற்கொரு பச்சிலை**
**யாவர்க்கு மாம்பசு வுக்கொரு வாயுறை**
**யாவர்க்கு மாம்உண்ணும் போதொரு கைப்பிடி**
**யாவர்க்கு மாம்பிறர்க் கின்னுரை தானே.**

(திருமந். 252)

**படமாடக் கோயிற் பகவற்கொன் றீயில்**
**நடமாடக் கோயில் நம்பர்க்கங் காகா**
**நடமாடக் கோயில் நம்பர்க்கொன் றீயில்**
**படமாடக் கோயில் பகவற்க தாமே.**

(திருமந். 1857)

என்ற திருமூலரின் பாடல்கள் மனிதநேயத்தொடு தமிழ்ச் சித்தர் செய்த தொண்டினை விளக்குனவாகும்.

### 10. மரணமிலாப் பெருவாழ்வு

மரணத்தில் ஐந்து வகை உண்டு. ஐந்தாவது வகைதான் மரணமிலாப் பெருவாழ்வு அல்லது மரணத்தை வென்றுவிடல். குறிப்பாகச் சொல்வதென்றால், சீவசோதி (உயிர்) சிவசோதியோடு (பரம்பொருள்) இணைதல். இவ் இணைதல் பல்வேறு வகையின. மாணிக்கவாசகர் தில்லையில் இணைந்தது போல; திருஞானசம்பந்தர் நல்லூர் பெருமணத்தில் (ஆச்சாள்புரம்) கலந்தது போல; ஆண்டாள் திருவரங்கத்தில் கலந்தது போல; சுந்தரர் சோதி வடிவத்தில் கயிலை சென்றதுபோல; பட்டினத்தடிகள் திருவொற்றியூரில் அருஉருவத் திருமேனியாகக் கலந்தது போல; வடலூர் வள்ளல் பெருமானாகிய இராமலிங்க அடிகள் வடலூர் மேட்டுக் குப்பத்தில் தம் அறையில் திருக்காப்பிட்டுக் கொண்டு சிவசோதியில் கலந்தது போல மரணத்தை வென்றவர் தமிழ்ச் சித்தர்.

### நிறைவுரை

தமிழ்ச் சித்தர்களின் பல்வேறு ஆளுமைகளை அல்லது பல்வேறு திறன்களைப்பற்றிப் பல ஆய்வு நூல்கள் வெளிவந்துள்ளன. அந்நூல்களில் அனைத்துச் செய்திகளும் விரிவாகவும், விளக்கமாகவும் கூறப்பட்டுள்ளன. எனவே, இக்கட்டுரையில் கூறியது கூறல் ஆகிவிடும் என்ற அச்சத்தால் பத்துச் செய்திகள் மட்டுமே சுட்டப்பெற்றன.

❖

# வேர்களும் விழுதுகளும்

முனைவர் ஆறு. அழகப்பன்



ஓர் ஆலமரம் விழுதுகள் படர்ந்து நாற்படையும் தங்கும் நிழலைத் தந்து கொண்டிருக்கிறது. அந்த ஆலமரத்தைத் தோற்றுவித்தவர் யார்? விதை ஊன்றி உரமிட்டு – பாத்திகட்டி தண்ணீர் பாய்ச்சிட – தோட்டக்காரன் ஒருவன் பொறுப்பிலா அந்த ஆலமரம் வளர்ந்தது? ஒரு பறவை இட்ட எச்சத்திலிருந்து மண்ணில் விழுந்த விதை ஆலமரமாக கிளர்ந்து எழுந்து வளர்ந்து ஆயிரம் ஆண்டுகள்கூட இந்த மண்ணில் வாழும் வயதை எட்டுகிறது.

ஆலமரத் தோற்றத்தின் வரலாறு இப்பொழுது அனைவரும் தேடிச் செல்லும் மக்கள் இலக்கிய வகையான நாட்டுப்புறப் பாடல்களுக்கும் பொருந்தும்.

ஆலமர வித்தை விதைத்தவர் யார்? நாட்டுப்புறப் பாடல்களைப் பாடிய கவிஞன் யார்? இக்குழப்பமற்ற ஒப்புவமை நாட்டுப்புறப் பாடல்களின் தன்மையைக் காட்டுவதாக இருக்கிறது.

### ஐம்பது ஆண்டுகளுக்கு முன்

சுமார் ஐம்பது ஆண்டுகளுக்கு முன் தமிழகத்தில் நாட்டுப்புறப் பாடல்கள் – அல்லது அதனைச் சார்ந்த கலைகளின் நிலை என்ன? கல்வியாளர்கள், கல்லூரிகள், ஆய்வாளர்கள், பாடகர்கள், பதிப்பகத்தார்கள் தேடாத துறையாக இருந்தது. குறிப்பாகச் சொன்னால் 'காட்டு நிலா' போல ஒளிப் பயனற்று உலவி வந்தது.

இன்று நாட்டுப்புறக் கலைகள் முற்றத்து நிலாவாகத் திகழ்கின்றன.

நாட்டுப்புறக் கலைகள் – கல்லூரிகளில் பாடத் திட்டத்தில் சேர்க்கப்படுகின்றன. பட்டய வகுப்புகள் நடக்கின்றன. பாடல்கள் ஒலிப்பதிவு நாடாக்களாக வருகின்றன. மேடைகளில் பாடல்களாகவும், ஆடற்கலையாகவும் வளர்ந்து வருகின்றன. அரசு – இக்கலையை வளர்ப்பவர்களுக்கு ஆதரவாகப் பண உதவி செய்து வருகிறது. பதிப்பகத்தார் போட்டி போட்டுக் கொண்டு ஆண்டுதொறும் பல நூல்களைக் கொண்டு வருகின்றனர். மத்திய, மாநில அரசுகள் கருத்தரங்கு, களப்பணிகள் நடத்தப் பேருதவி செய்து வருகின்றன. இத்துறை வல்லுநர்களுக்கு விருதுகள் அளிக்கப் படுகின்றன. குறிப்பாகச் சொன்னால் சமய இலக்கியங்கள் பெற்ற சிறப்பினை இத்துறையும் பெற்றுவிட்டது. ஐம்பது ஆண்டுகளில் இத்துறை எப்படி ஆலமரம் விழுதுகளை விட்டு வளர்ந்தது? இப்படி வளரக் காரணம் என்ன என்று கண்டறிவது ஓர் இலக்கிய இன்பமாகவே இருக்கும்.

### பல பிரிவுகள்

நாட்டுப்புற இலக்கியம் என்று பொதுமையாக அழைக்கப்படும் இத்துறையில் பலவகை இலக்கியக் கூறுகள் அடங்கியுள்ளன. பாடல்கள், கதைப் பாடல்கள், விடுகதை, பழமொழி, ஆடற்கலைகள் எனப் பல வகைகள் உண்டு. இப்பிரிவுகளில் அதிகம் மக்கள் இலக்கியமாக விளங்கும் நாட்டுப்புறப் பாடல்களின் பரிணாம வளர்ச்சியை அறிந்தால் அனைத்துத் துறைகளையும் கண்டறிந்ததற்கு ஒப்பாகும்.

'Folk Songs' என்ற சொல்லில் 'Songs' என்பதற்குப் 'பாடல்கள்' என்ற ஏற்புடைய மொழி பெயர்ப்பு அமைந்துவிட்டது. Folk என்பதற்கு ஆங்கில அகராதியில் நாட்டுப்புறம் (Country side) என்றே குறிப்பிடப்படுவதால் இப்பெயர் நிலைத்து விட்டது. 'சங்க இலக்கியம்' என்ற பெயர் ஆய்விற்குரியதாக இருந்தாலும், சங்க இலக்கியம் என்ற பெயர் நிலைபெற்றதைப் போல இதனையும் கொள்ளலாம்.

### வகைகள்

பெயருக்குப் பிறகு இப்பாடல்களின் ஆய்வில் பரிணாம வளர்ச்சியாக வரையறுக்கப்பட்டது இப்பாடல்களின் வகையாகும். நாட்டுப்புறப் பாடல்கள் சேகரிக்கப்பட்டவுடன் அறிஞர்கள் வகைப்படுத்தாமல் பாடல் தலைப்புகள் அல்லது பொருள் அடிப்படையில் பெயர்கள் சூட்டினர். இப்பாடல்களில் இலங்கை – தமிழக நாட்டுப்புறப் பாடல்களைப் பதிப்பித்த நூல்களில் முறையான தொகுப்பு இருந்தாலும் வகைகள் இல்லை. இந்நிலையில் 1968இல் நான் மேற்கொண்ட ஆய்வில் அனைத்தையும் அலசி ஆய்ந்து நாட்டுப்புறப் பாடல்கள் ஆறு வகைத் தன்மை கொண்டன எனத் தெளிவுபடுத்தினேன். அவை, குழந்தைப் பாடல்கள், பக்திப் பாடல்கள், தொழிற்பாடல்கள், கொண்டாட்டப் பாடல்கள், உணர்ச்சிப் பாடல்கள், பன்மலர்ப் பாடல்கள். இவ்வகையை இன்று பெரும்பாலான ஆய்வாளர்கள் ஏற்றுக் கொண்டுள்ளனர்.

### விழுதுகளும் வேர்களும்

நாட்டுப்புறப் பாடல்களின் மூல வடிவத்தை யாரும் கண்டதில்லை. ஆதலால் உலகப் பொதுச் சொத்தாகிவிட்ட

நாட்டுப்புறப் பாடலில் வேறுபாட்டைக் கண்டு உண்மையான பாடல் எது என்று உறுதியாகக் கூற முடியாது. கிடைக்கும் பாடல்களின் வடிவம் அறிய வேண்டும் என்றால் இவ் வடிவ அமைப்பே ஏற்றுக்கொள்ளத்தக்கதாக இருக்கும்.

இலக்கியங்கள் விழுதுகள் என்றால் நாட்டுப்புறப் பாடல்கள் வேர்கள் என்பதே சாலப்பொருத்தமாகும்.

## தமிழ் இலக்கியங்களில் நாட்டுப்புறப் பாடல்கள்

நாட்டுப்புறப் பாடல்கள் ஒரு மொழியானது வரி வடிவம், இலக்கியம், இலக்கணம் இவற்றைப் பெறுவதற்கு முன்பு அம்மக்களிடம் வாய்மொழியாக வழங்கிவரும் நெடிய வரலாற்றினை உடையனவாகும். வாய்மொழி இலக்கியத்திற்கும், எழுத்து இலக்கியத்திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. சிலர் நாட்டுப்புறப் பாடல்களைத் தாயென்றும் எழுத்திலக்கியத்தைச் சேயென்றும் வருணிப்பார்கள். நாட்டுப்புறப் பாடலுக்கும் இலக்கியத்திற்கும் உள்ள தொடர்பினை இக்காலத்தில் எல்லா நாடுகளிலும் ஆராய்ச்சியாளர்கள் ஆராய்ந்து வருகின்றார்கள். எனவே, இத்தலைப்பை ஒட்டித் தமிழ் இலக்கியங்களில் நாட்டுப்புறப் பாடல்களின் நிலையை அறியும் முன்பு, ஆங்கில இலக்கியத்தோடு நாட்டுப்புறப் பாடல்களுக்குரிய தொடர்பினைச் சிறிது அறிந்து மேலே செல்லுவோம். ஜெர்மன் நாவலாசிரியர் தாமஸ்மான் என்பவர் நாட்டுப்புறப் பாடலுக்கும் இலக்கியத்திற்கும் உள்ள தொடர்பினைக் கூறும்பொழுது நாட்டுப்புறப் பாடல் என்ற மண்ணிலிருந்து தோன்றிய செடி 'இலக்கியம்' என்று கருதுகிறார்.

மேலைநாட்டு இலக்கியத் திறனாய்வாளர்களின் கண்ணோட்டத்தில் நாட்டுப்புறப் பாடல்கள் உயர்ந்த மதிப்பீட்டை ஆரம்ப காலத்தில் பெறவில்லை. நாட்டுப்புற இலக்கிய வகையைச் சேர்ந்த தெருக்கதைப் பாடல்களை (Street Ballad) கீழ்த்தரமான செய்யுள் (Doggere) என்று கூறி வந்தனர். ஆனால், காலப்போக்கில் இலக்கியத்தைப் போலப் பாமரர் இலக்கியமும் கருதத்தக்கது என்றும் நானூறு ஆண்டுகளாக வாழும் ஆங்கிலக் கவிதைகளுக்கு அவையே உயிராகும் என்றும் கூறலானார்கள். ஆங்கிலப் பெரும் புலவர்களான Shakespeare, Marvell, Rochester, Swift, Cowper, Wordsworth, Byron, Shelley, Kipling, Yeats, Auden முதலியவர்கள் தங்கள் இலக்கியங்களில் நாட்டுப்புறப் பாடல்களை எடுத்துக் கையாண்டிருக்கின்றனர் என்றும் அறிந்தார்கள்.

## தொல்காப்பியம்

மொழிக்கும், வாழ்க்கைக்கும், இலக்கியத்திற்கும் இலக்கணம் வகுத்த தொல்காப்பியத்திற்கு முற்பட்ட காலத்தில் இலக்கியங்கள் மட்டுமன்றி நாட்டுப்புறப் பாடல்களும் உண்டு என்பது அனைவரும் ஒப்பிய கருத்தாகும்.

தொல்காப்பியர் செய்யுளியலில் கூறிய நூற்பாக்களில் ஏதாவது ஒரு நூற்பா நாட்டுப்புறப் பாடல்களின் அமைப்பிற்குப் பொருந்துகிறதா என்று பார்ப்போமானால் அவ்வியலில் கூறப்பட்டுள்ள எண்வகை வனப்பினுள் 'புலன்' என்னும் வனப்பு பொருந்துவதாகப் படுகிறது.

> **"தெரிந்த மொழியாற் செவ்விதிற் கிளந்து**
> **தேர்தல் வேண்டாது குறித்தது தோன்றிற்**
> **புலனென மொழிப புலனுணர்ந் தோரே."**

(தொல். செய். 233)

என்ற இந்நூற்பாவிற்கு இளம்பூரணர் உரையில் "வழக்குச் சொல்லினானே தொடுக்கப்பட்டு ஆராய வேண்டாமற் பொருள் தோன்றுவது புலனென்னுஞ் செய்யுளாம் என்றவாறு" என்று எழுதுவார். இவ்வுரை நாட்டுப்புறப் பாடலின் அமைப்பிற்குப் பொருந்துவதாக இருக்கிறது எனலாம். செய்யுளியலின் இறுதிப் பகுதியில் இந்நூற்பா அமைந்திருப்பதும் குறிப்பிடத்தக்கதாகும். மேலும் இந்நூற்பாவிற்குப் பேராசிரியர் கொண்டிருக்கும் பாட வேறுபாடு இக்கருத்திற்கு அரணாக அமைகிறது. "தெரிந்த மொழியான்" என்ற தொடரைப் பேராசிரியர் "சேரிமொழியான்" என்று பாடம் கொள்ளுவார். இந்நூற்பாவிற்கு உரை எழுதும்பொழுது "சேரிமொழி என்பது பாடிமாற்றங்கள். அவற்றானே செவ்விதாகக் கூறி ஆராய்ந்து காணாமைப் பொருள் தொடரானே தொகுத்துச் சொல்வது புலனென்று சொல்வர், "புலன் உணர்ந்தோர் என்றவாறு: அதை விளக்கத் தார் கூத்து முதலாகிய நாடகச் செய்யுள்கள் வெண்டுறைச் செய்யுள் போல்வன என்பது கண்டு கொள்க" என்று எழுதுகிறார். ஆதலின், பண்ணத்தி என்பது நாட்டுப்புறப் பாடல்களைச் சுட்டுகின்றது என்பதனைவிட, சேரி மொழியால் என்ற நூற்பா, நாட்டுப்புறப் பாடல்களின் அமைப்பைத் தொல்காப்பியத்தில் குறிப்பதாக இருக்கின்றது எனக் கொள்ளலாம். முதுபெரும் இலக்கண நூலான தொல்காப்பியத்தில் நாட்டுப்புறப் பாடல்கள் தொல்காப்பியரால் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றன என்று இதன்மூலம் நாம் கருதலாம்.

## சங்க இலக்கியங்கள்

### தெய்வப் பாடல்கள்

தமிழர்கள், தெய்வ சிந்தனை நிரம்பப் பெற்றவர்கள். ஐவகை நிலத்திற்கும் உரிய தெய்வங்களைத் தனித் தனியாகப் பிரித்து வணங்கியிருக்கின்றனர். குறிஞ்சி நிலத்திற்கு முருகன், பாலை நிலத்திற்குக் கன்னி (துர்க்கை), முல்லை நிலத்திற்கு நெடுமால், மருத

நிலத்திற்கு இந்திரன், நெய்தல் நிலத்திற்கு வருணன் ஆகிய தெய்வங்கள் மக்களால் வணங்கப் பட்டிருக்கின்றன. இத்தெய்வங்களை மனத்திற்குள் நினைத்து வணங்குவதனைவிட வாய்விட்டுப் பாடி வணங்கும் பழக்கத்தினைத் தமிழ்ச் சமுதாயத்தினர் கொண்டதால் இத்தெய்வங்கள் மீது நிறையப் பாமாலைகள் சூட்டியிருக்கின்றனர். புலவர்களால் படைக்கப்பட்ட பாமாலைகளை மட்டுமன்றிப் பொதுமக்களும் பாடல்கள் மூலம் தெய்வங்களை வணங்கியிருக்கின்றனர். உடுக்கு அடித்துப் பாடும் பூசாரிப் பாடல், துர்க்கையைப் பற்றிப் பாடும் வரிப்பாடல், முல்லை நிலக் கடவுள் மாலினைப் பற்றிப் பாடும் குரவைப் பாடல் முதலியன மக்களால் பாடப்பட்டிருக்கின்றன. வாழ்வின் அடிப்படையாக நீர் அமைவதால் நெய்தல் நிலத் தெய்வமான வருணனை நெய்தல் நிலத்தார் மட்டுமன்றி மற்ற நிலத்தாரும் வணங்கிப் பாடியிருப்பார்கள். இந்திரனுக்கு விழா எடுத்த நாடாதலால் மருத நிலக் கடவுள் இந்திரனைப்பற்றி எண்ணிறந்த பாடல்கள் பாடப்பட்டிருக்கக் கூடும். எனவே, நாட்டுப்புறப் பாடல்களில் தெய்வங்களை நினைத்துப் பாடப்பட்ட தெய்வப் பாடல்கள் சங்க நூல்களில் நிறைந்திருக்கின்றன என்று கூறலாம்.

### தொழிற் பாடல்கள்

ஐவகை நிலத்திற்குரிய தெய்வங்களைப் பகுத்துக் கொண்டது போலத் தொழில்களையும் பகுத்திருக்கின்றனர். குறிஞ்சி நிலத்துக்குரிய தொழில்கள் வெறியாடல், மலைநெல் விதைத்தல், தினைகாத்தல், தேனழித்தெடுத்தல், கிழங்கு கிளந்தெடுத்தல் போன்றவையாகும். பாலை நிலத்திற்குரிய தொழில்கள் போர் செய்தல், பகலில் சூறையாடுதல் போன்றவையாகும். மருத நிலத்திற்குரிய தொழில்கள் விழாச் செய்தல், வயற் களைகட்டல், நெல்லரிதல், உட்புண்டாக்கல், விற்றல், மீனுணக்கல், மீனுண்ண வரும் பறவைகளை ஓட்டுதல் போன்றவையாகும். நாட்டுப்புறப் பாடல்களில் தொழிற் பாடல்கள்தாம் எண்ணிக்கையில் முதலிடம் வகிப்பனவாயினும், தொழில் நிகழும் போது நோயும், மலைப்பும் ஏற்படாமல் இருக்க ஒரு கருவியாகப் பயன்படும் நாட்டுப்புறப் பாடல்கள், சங்க கால மக்களிடம் எப்படி இல்லாமல் போகும்? வேளாண்மைப் பாடல் வகைகளில் நீர் இறைப்பார் பாட்டு, ஏற்றம் இறைப்பார் பாட்டு, பறவைகளை விரட்டும் பாட்டு முதலியவற்றை மதுரைக்காஞ்சியால் அறிய முடிகிறது. “அகவினம் பாடுவோம் வா தோழி” என்ற உலக்கைப் பாட்டான் வள்ளைப் பாட்டைப் பாட அழைப்பதைக் கலித்தொகையிலும், தினைப்புனம் காக்கும் மகளிர் தானியங்களைத் தின்ன வரும் கிளிகளை விரட்டி எழுப்பப் பாடும் பாடல்களைக் குறிஞ்சிப்பாட்டு, மலைபடுகடாம் முதலிய நூல்களிலும் அறியலாம். கிளி விரட்டும் பொழுது பாடப்படும் பாடல், இக்காலத்தில் ‘ஆலோலம்’ என்று அழைக்கப்படுகிறது.

### காதற் பாடல்கள்

சங்க இலக்கியங்களின் மொத்தப் பாடலகள் 2,381 எனக் கணக்கிடப்படுகிறது. அவற்றுள் 1,862 காதற் பாட்டுகள் என்று பிரித்துக் காட்டியிருக்கின்றனர். காதலர்கள் ‘கண்ணொடு கண்ணிணை’ என்ற குறளுக்குத் தக்க எடுத்துக்காட்டாக இருந்தார்கள் என்பதைவிட அவர்களும் பல காதற் பாட்டுகளைப் பாடியிருப்பார்கள் என்றே கொள்ள வேண்டும். காதல் நிறைவேறாத தலைவன் காதலில் வெற்றிபெறப் பின் பற்றும் மடலேறுதலின்போது பாடல் பாடியிருக்கிறான் என்ற செய்தியினை அறிகிறோம்”. அது நாட்டுப்புறப் பாடல்களில் காதல் பாட்டுகளில் வரும் தலைவன் சோககீதம் எனலாம். தொழிலாளிகள் களைப்பைப் போக்கிக் கொள்ளப் பாடல் பாடுவதனைப் போல், குறமக்களுக்குப் புலி தாக்கியதால் ஏற்பட்ட காயத்தின் வலி தெரியாதிருக்கக் குறத்தியர்கள் அருகில் வந்து இனிய பாடல்கள் பாடிப் பண் இசைத்தார்கள் என்ற செய்தியினை மலைபடுகடாம் தெரிவிக்கிறது. தலைவனது ஒழுக்கக் கேட்டைப் பொய்கைச் சென்ற பெண்கள் பாடிக் குரவை ஆடியிருக்கின்றனர் (கிண்டல் முறையில்) என்பதனை அகநானூற்றில் அறிகிறோம்.

இப்படிச் சங்க இலக்கியங்களை நோக்கும் நமக்கு நாட்டுப்புறப் பாடல்கள் பண்டைத் தமிழ் மக்களுள் பொதுமக்களால் பாடல்கள் பாடப்பட்ட செய்தியைச் சங்க இலக்கியங்கள் குறிக்கின்றன. பொதுமக்களின் இந்தப் பாடல்களில் புலவர்களும் மனம் பறிகொடுக்க ஆரம்பித்தனர். நாட்டுப்புறப் பாடல்களுக்கு மதிப்பளித்துத் தாங்கள் படைக்கும் இலக்கியத்திலும் அப்பாடல்களுக்கு நல்ல இடத்தைத் தர முற்படலாயினர். அப்படித் தம் படைப்பில் நாட்டுப்புறப் பாடல்களுக்குச் சிறப்பான இடத்தைக் கொடுத்த முதல்வராகக் கருதும்படி பெருமையை அடைந்தவர், காப்பியத் தந்தை இளங்கோவடிகளேயாவார்.

### சிலப்பதிகாரம்

நாட்டுப்புறப் பாடல்கள் நல்ல செல்வாக்கைப் பெற்ற காலம் சிலப்பதிகார காலம் எனலாம். பாமரர் பாடல்களாக இருந்த பாடல்கள் இலக்கியங்களில் பேரிடம் பெற்ற காலம் இக்காலமே. பொதுமக்கள் பாடல்களாக வழங்கி வந்த பாடல்கள் அவர்கள் மொழியிலேயே அப்படியே இடம் பெறாமல், இளங்கோவடிகளால் இலக்கிய வடிவும், மெருகும் கொடுக்கப்பட்டுக் காப்பியத்தில் சேர்க்கப் பெற்றன. சிலப்பதிகாரத்தில் காணப்படும் கானல்வரி, வேட்டுவவரி, ஆய்ச்சியர் குரவை, அம்மானை வரி, வள்ளைப்பாட்டு ஆகியவை நாட்டுப்புறப் பாடல் தன்மையிலிருந்து இலக்கிய உருவம் பெற்றன என்று

கருதுகின்றார்கள். நாட்டுப்புறப் பாடல் வகைகளில் ஒன்றான ஒப்பாரியை இடம் பெறச் செய்தவர் இளங்கோவடிகளேயாவார். இளங்கோவடிகளுக்கு இத்தகைய நாட்டுப்புறப் பாடல்கள் மீது கண்ணோட்டம் உண்டு என்பதனை அவர்தம் காப்பியத்தில் குறிப்பிடும் சில வேளாண்மைப் பாடல்கள் மூலம் உணரலாம்.

**"விளங்கு கதிர்த் தொடுத்த விரியல் சூட்டிப்**
**பாருடைப் பனர்போற் பழிச்சினர் கைதொழ**
**ஏரோடு நின்றோ ரேர்மங் கலமும்**
**அரிந்துகால் குவித்தோ ரரிகடா வுறுத்த**
**பெருஞ்செய்ந் நெல்லின் முகவைப் பாட்டும்"**

என்ற இவ்வரிகளில் ஏரைப் பூட்டிநின்றோர் பாடும் முகவைப் பாட்டும், நெல்லை முகந்து அளக்கும்பொழுது பாடும் முகவைப் பாட்டும் குறிப்பிடப்படுகின்றன. முகவைப் பாட்டை அரும்பத உரையாசிரியரும் அடியார்க்கு நல்லாரும் "பொலிபாடுதல்" என்று கூறுகின்றனர். இன்றும் வயற்புறங்களில் நெல் அளக்கும் பொழுது பாடும் பாட்டை "பொலிப்பாட்டு" என்று அழைக்கின்றனர். எனவே, நாட்டுப்புறப் பாடல்களைத் தம் நூலில் எடுத்துக் கையாண்ட முதல் தமிழ்ப் புலவராக இளங்கோவடிகள் விளங்குகிறார் எனலாம்.

## ஆழ்வார் பாடல்கள்

இளங்கோவடிகளுக்குப் பிறகு நாட்டுப்புறப் பாடற் பிரிவில் அனைவரின் உள்ளத்தையும் கவரும் தாலாட்டினைத் தமது பாடல்களில் கையாண்டவர் பெரியாழ்வாராவார். புலவர்கள் தெய்வங்களைக் குழந்தையாக்கி அவர்களைத் தூங்கவைத்துத் தாலாட்டுப் பாடல்கள் பாடுவதில் மிகுந்த ஆசை கொண்டிருந் திருக்கின்றனர். பெரியாழ்வார் தம்மை யசோதையாகக் கற்பனை செய்து கொண்டு கண்ணனைக் குழந்தை யாக்கிப் பாடும் தாலாட்டுப் பாடல்களில் கண்ணனின் அவதாரச் சிறப்பு, மேனியழகு முதலியவற்றைப் பாடுகின்றார். கீழ்க்கண்ட அவர் பாடலில் கண்ணனுக்குத் திருமுழுக்காட்டுவதற்குப் பல பொருள்கள் வைக்கப்பட்டிருக்கின்றன என்றும் கண்ணனை அழாதே" என்றும் பாடுவதைக் காணலாம்.

**"மெய் திமிரும் நானப்**
**பொடியொடு மஞ்சளும்**
**செய்ய தடங்கண்ணுக்கு**
**அஞ்சனமும் சிந்துரமும்**
**வெய்ய கலைப்பாகி**
**கொண்டு உவளாய் நின்றாள்**
**ஐயா அழேல் அழேல்**
**தாலே லோ**
**அரங்கத்தணை யானே**
**தாலே லோ"**

தாய், தாலாட்டில் "அழாதே நீயுறங்கு" என்று பாடுவதைப் போல ஆழ்வார் "அழேல்" "அழேல்" என்று சொல்வது ஒத்துநோக்குதற்குரியது. தாய்மார்கள் 'ஆராரோ' என்று இசைப்பதைக் கவிஞர் 'தாலேலோ' என்று இசைக்கின்றார்.

தாய்மார்கள் இராம வரலாற்றைச் சுருங்கிய முறையில் தாலாட்டில் பாடுவது போலக் குலசேகர ஆழ்வார் இராமன் வரலாற்றைப் பத்துப் பாடல்களாக இயற்றியிருக்கிறார். பிள்ளைத் தமிழில் 'தாலப்பருவம்' என்பது ஒரு பிரிவாகவே அமைந்துவிட்டது.

## கம்பராமாயணமும் கந்தபுராணமும்

ஒப்பாரிப் பாடல்கள் சிலப்பதிகாரத்தில் இடம் பெற்றிருப்பதை முன்பு கண்டோம். கம்பர், இராம காவியத்தில் இராவணன் இறந்தபின் மண்டோதரியின் புலம்பலிலும், கச்சியப்ப முனிவர் கந்த புராணத்தில் மன்மதன் இறந்த பின் இரதியின் புலம்பலிலும் ஒப்பாரியினை அழகுறக் காட்டியுள்ளார். தாய்மார்கள் வைத்த ஒப்பாரிக்கு இளங்கோவடிகளுக்குப் பின் கம்பரும் கச்சியப்பரும் நல்ல வடிவம் கொடுத்தவர்கள் எனலாம்.

மேற்குறிப்பிட்ட இலக்கியங்களில் மட்டும்தான் நாட்டுப்புறப் பாடல்களின் வேர்கள் உள்ளன என்று கருத வேண்டாம். நம் இலக்கியங்களில் உள்ள நாட்டுப்புற இலக்கியக் கூறுகளை ஆராய முற்பட்டால் விழுதுகளுக்கு மூலமான வேர்கள் இருப்பதைக் காணலாம். இலக்கியங்களில் உள்ள வருணனை கற்பனை, உவமை, நீதிகள் – நாட்டுப்புற இலக்கியங்களில் வற்றாத சுனைகளாகும். பிற இலக்கியங்களுக்கு இல்லாத ஒரு தனிப்பெருமை நாட்டுப்புறப் பாடல்களுக்குண்டு. கம்பராமாயணம் – கம்பன் விழாவில் பேசப்படும். பெரியபுராணம் பக்திக் கூட்டங்களில் பேசப்படும். சங்க இலக்கியங்கள் கல்லூரிகளில் பாடங்கள் நடத்தும் பொழுதும் கருத்தரங்குகளிலும் கற்றுக் கொடுக்கப்படும். இப்படி அனைத்து இலக்கியங்களுக்கும் ஓர் காலநேர வரையறை உண்டு.

நாட்டுப்புறப் பாடல்களைப் பாடியவர் யார் என்று அறிய முடியாத சிறப்பும், உலகில் எந்த இடத்திலும், எந் நிகழ்விலும் பாடப்படும் சிறப்பும் நாட்டுப்புறப் பாடல்களுக்கு உண்டு.

நாட்டுப்புறப் பாடல்கள் என்னும் வேர்களைக் காயவிடாமல் காப்பாற்றுவது தலையாய கடமை. ❖

# தமிழ் இலக்கிய வகைமையும் க்கோட்பாடும்

முனைவர் வீ. அரசு



உலகில் உள்ள மொழிகள் ஒவ்வொன்றிலும் உருவாகும் கலை இலக்கிய ஆக்கங்களை மதிப்பீடு செய்வது அவசியமாகும். அவ்வகையில் மதிப்பீடு செய்யும்போது அம்மொழியின் பழமை மற்றும் அம்மொழி பேசும் இனக்குழு தொடர்பான பல்வேறு சமூகக் காரணிகள் ஆகியவை கணக்கில் கொள்ளப்பட வேண்டும். இவ்விதம் மதிப்பீடு செய்யும்போது குறிப்பிட்ட மொழியில் உள்ள கலை இலக்கிய, இலக்கணங்கள் எவ்வகையான பின்புலத்தில் உருப்பெற்று வளர்ந்து வந்தன என்பதை அறிந்துகொள்ள முடியும். இவ்விதம் குறிப்பிட்ட மொழியில் உள்ள கலை இலக்கிய, இலக்கணங்கள் தொடர்பான மதிப்பீட்டை முறையே கலைக் கொள்கை, இலக்கியக் கொள்கை, இலக்கணக் கொள்கை என்று நமது வசதிக்காக வரையறுத்துக் கொள்ள முடியும். ஒரு மொழியில் தோன்றிய ஆக்கங்கள் உருப்பெற்ற பின்புலம், வளர்ச்சிப் போக்குகள், நிலைபேறுகள் ஆகியவற்றின் அடிப்படையில் செய்யும் தர்க்கப்பூர்வமான மதிப்பீடே அம்மொழியின் கலை/இலக்கிய/இலக்கணக் கொள்கையாகும்.

தமிழ் இலக்கியத்துக்கான கொள்கையை மேற்குறித்த பின்புலத்தில் எவ்வகையில் மதிப்பீடு செய்வது என்ற உரையாடல் நமக்குத் தேவைப்படுகிறது. சுமார் இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுக்கால வரலாற்றுத் தொடர்ச்சியை உடைய தமிழ் இலக்கிய மரபின் கொள்கையை உருவாக்குவதற்குக் கீழ்காணும் அடிப்படைகளை நாம் கவனத்தில் கொள்ள வேண்டும்.

– தமிழில் உள்ள இலக்கிய ஆக்கங்களின் வரலாறு, வடிவம், காலந்தோறும் உருவான மாற்றங்கள் ஆகியவை குறித்த விவரணங்கள்.

– தமிழ்ச் செம்மொழி மரபை உடைய மொழியாக விருப்பதால் இதற்கென உரிய தனித்தன்மைகளைக் கவனத்தில் கொண்டு வரையறை செய்தல்.

மேற்குறித்த பின்புலத்தில் தமிழ் இலக்கிய ஆக்கங்களின் தொன்மை வடிவங்களாக நமக்குக் கிடைப்பவை தொகை நூல்கள் என்றறியப்படும் நற்றிணை, குறுந்தொகை போன்ற தொகுப்புகளில் உள்ள பழம் தனிப்பாடல்கள் ஆகும். இப்பாடல்கள் முழுமையாகப் பொருள் அறியும் வகையில் தனித்தே அமைந்துள்ளன. தொகுப்பாளர்களால் கொடுக்கப்பட்ட கூற்றுவகை இத்தனிப்பாடல்களை மேலும் விளங்கிக் கொள்ள உதவுகின்றன. எனவே தமிழ் இலக்கிய ஆக்கத்தின் தொடக்கம் என்பது இத்தனிப்பாடல்கள் என்றே நாம் வரையறை செய்யலாம். இவ்வகைப் பாடல்கள் கவிதை என்ற வடிவத்தின் அடிப்படைத் தன்மையான உணர்ச்சி வெளிப்பாட்டை முதன்மையாகக் கொண்டிருப்பதைக் காண்கிறோம். உலகச் செம்மொழிகள் அனைத்திலும் இவ்வகையான உணர்ச்சி நிலையை அடிப்படையாகக் கொண்ட கவிதைகளே உருப்பெற்றுள்ளதைக் காண்கிறோம்.

குறிப்பிட்ட சூழலில் உருவான உணர்வை, உணர்ச்சி மொழியில் வெளிப்படுத்துவதே இக்கவிதைகளின் அடிப்படைப்பண்பு ஆகும். இதனை ஆங்கிலத்தில் லிரிக்கல் (Lyrical) என்று குறிப்பிடுவர். Lyrical Poetry என்பது ஆங்கிலத்தொடர். Lyer என்ற கிரேக்கச் சொல்லுக்கு இசைக்கருவிகளோடு பாடுதல் என்பது பொருள். அந்தச் சொல்லில் இருந்துதான்( Lyrical) என்ற சொல் உருவாகியுள்ளது.

இவ்விதம் இசையோடு பாடும் பாடகர்களின் உணர்ச்சி வெளிப்பாடுகளே வாய்மொழி மரபில் உருவான தனிப்பாடல்களாகும். இவ்வகைப் பாடல்கள்

உலகச் செம்மொழிகள் அனைத்திலும் காணக் கிடைக்கின்றன. எனவே, தமிழ் இலக்கிய ஆக்கத்தின் முதல் நிலையாக இவ்வகைத் தனிப்பாடல்களைக் கூறமுடியும்.

நற்றிணை, குறுந்தொகை ஆகிய தொகுப்புகளில் உள்ள பாடல்கள் தொடங்கிப் பின்னர் உருவான விருத்தமரபில் உள்ள அனைத்துப் பாடல்களும் இவ்வகை உணர்ச்சித் தனிப்பாடல்களே ஆகும் (Lyrical Poetry). பக்திப் பாடல்கள் என அறியப்படும் தேவாரம், திருவாசகம், ஆழ்வார் பாடல்கள் ஆகிய அனைத்திலும் இவ்வகையான உணர்ச்சி மரபு முதன்மையாக இடம்பெற்ற இசைப்பாடல்களே ஆகும். இவ்வகைப் பாடல்களின் அமைப்பை யாப்பாகக் கட்டமைத்தவர்கள், பல்வேறு இசைக்கூறுகளைச் சார்ந்து பல பெயர்களைக் கொடுத்துள்ளார்கள். அருணகிரிநாதர், தாயுமானவர், இராமலிங்க வள்ளலார் ஆகியோரது இசைப்பாடல் ஆக்கங்களில் மேற்குறித்த மரபின் தொடர்ச்சியை நாம் கண்டுகொள்ள முடியும்.

இருபதாம் நூற்றாண்டில் உருவான புத்தொளி மரபு சார்ந்த தன்னுணர்ச்சிக் கவிதைகளிலும் இப்பண்பை நாம் கண்டறிய முடியும். பாரதி, பாரதிதாசன், நாமக்கல் இராமலிங்கம்பிள்ளை, கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை ஆகியோர்தம் கவிதையாக்கங்கள் மேற்குறித்த மரபின் தொடர்ச்சியே ஆகும். பின்காலனிய காலத்தில் இம்மரபு மிகச்செழுமை பெற்று உணர்ச்சிக் கூறுகளைப் படிமங்கள் என்னும் கவிதைக்கான வடிவத்தில் வெளிப் படுத்துவதையும் காண்கிறோம்.

நற்றிணை தொடங்கி இன்றைய பெண் கவிஞர்களின் கவிதைகள் வரையிலான இத்தொடர் மரபை நாம் தன்னுணர்ச்சிப் பாட்டு அல்லது தனிப்பாட்டு என்று வரையறை செய்யலாம். நீண்ட வரலாறு உடைய தமிழ்க் கவிதையின் அறுபடாத இத்தொடர்ச்சியைத் தமிழ்ச் செம்மொழி மரபின் தனித்தன்மையாக நாம் இனங்காண முடியும்.

இவ்வகையான ஆக்கத்தைக் கோட்பாடு ரீதியாக எவ்வகையில் வரையறை செய்வது என்ற உரையாடல் நமக்குத் தேவை. ஆங்கிலக் கவிதை உலகில் இவ்வகையில் உருப்பெற்ற கவிதைகளைக் குறிப்பிட்ட கால நிகழ்வுகளோடு இணைத்துப் பெயரிட்டுள்ளனர்.

ரொமாண்டிக் கவிதை (Romantic Poetry), போர்க்காலக் கவிதை (War Poetry) எனப் பல வடிவங்களில் அழைப்பதை நாம் பார்க்கிறோம். இப்படியான பெயர்களில் தமிழ்க் கவிதை மரபை வரையறை செய்வது சிக்கலானது. எனவே, இக் கவிதையைத் தனிப்பாடல் கவிதை வகைமை (Genre) என்று அழைக்கலாம்.

ஒரு மொழியில் உள்ள ஆக்கங்களைக் கோட்பாட்டு ரீதியாகக் கண்டறிய அம்மொழியில் உருப்பெற்றுள்ள வகைமைகளைக் கண்டறிவது அவசியமாகும். எனவே, தமிழ்க் கவிதை/இலக்கிய மரபின் முதன்மையான வகைமையாகத் தனிப்பாடல் வகைமையைக் கருதலாம். இவ்வகைமை உணர்ச்சி என்ற தளத்தை அடிப்படையாகக் கொண்டது. வடிவத்தில் குறைந்த அளவு கவிதை வரிகளைக் கொண்டவையாக அமைகின்றன. ஒருவகையான நெடும்பாடல் உருவாக்கத்திற்கு இத்தனிப்பாடல்கள் அடிப்படையாக அமைகின்றன.

தமிழ் இலக்கிய ஆக்கங்களைக் கோட்பாடு அடிப்படையில் வரையறை செய்ய முயலும்போது வகைமை குறித்த புரிதல் அவசியமாகும்.

தனிப்பாடல் மரபிலிருந்து தமிழில் நெடும்பாடல் மரபு உருப்பெற்றுள்ளதை அறிகிறோம். இதனை நெடும்பாட்டு, நெடுஞ்செய்யுள், தொடர்நிலைப்பாட்டு, தொடர்நிலைச் செய்யுள் என்ற சொற்புழக்கங்களின் வழியாக அறிந்துகொள்ள முடியும். வாய்மொழி மரபில் குறிப்பிட்ட உணர்ச்சியைப் புலப்படுத்தும் தன்னுணர்ச்சிப் பாடல்களில் நெடுந்தொடர்ச்சியான கதைமரபு இடம்பெறாது. குறிப்பிட்ட பாத்திரத்தின் கூற்று/உணர்ச்சியே அப்பாடல்களில் சொற்கள் வடிவில் இடம்பெறும். ஆனால், நீண்ட நெடுங்கதைகளைப் பாடல் வடிவில் சொல்லும் மரபும் உருப்பெற்றுள்ளது. வாய்மொழிப் பாரம்பரியத்தில் இவ்வகையில் உருப்பெறும் நெடும்பாடல் மரபை நாம் கதைப்பாடல் (Ballad) என்று அழைக்கிறோம். இக்கதைப்பாடல்களுக்குள் சுருள்சுருளான கதைகளும் (Legend) இடம்பெற்றிருக்கும். தமிழ் இலக்கிய/கவிதையாக்க மரபில் இவ்வகையில் உருவான நீண்ட தொடர்ச்சியை நாம் காண்கிறோம்.

பாணர்கள்/விறலியர் தங்கள் வாழ்வில் சந்திக்கும் உணர்வுகளைத் தன்னுணர்ச்சிப் பாங்கில் வெளிப் படுத்தும் தனிப்பாடல்களைத் தங்களது கூற்றுகளாக

வெளிப்படுத்தும் அதே வேளை தம் நாடோடி வாழ்க்கைப் பயணங்களையும் கவிதைகளில் பதிவு செய்துள்ளனர். வாய்மொழி மரபில் அமையும் கதைப்பாடல்களுக்கு இணையாக நமது பாட்டும் தொகையும் என்ற தொடரில் உள்ள பாட்டுகள் அமைகின்றன. பத்துப்பாட்டில் உள்ள ஆற்றுப்படைப் பாடல்களை இவ்வகையில் புரிந்து கொள்ளலாம். தொகைப்பாடல்களில் உள்ள ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து ஆகியவற்றிலேயே இக்கூறுகள் இடம்பெறத் தொடங்கிவிட்டன.

வாய்மொழி மரபின் கதைப்பாடல்களின் செம்மையாக்க மரபான இந்நெடும்பாடல்கள் தமிழ்க் கவிதை வளத்தில் மிகச் செழுமையாக இடம்பெற்றிருப்பதைக் காண்கிறோம். ஆற்றுப்படைப் பாடல்கள், முல்லைப்பாட்டு, நெடுநல்வாடை, மதுரைக்காஞ்சி எனத் தொடங்கும் இந்நெடும்பாடல் மரபு சிலப்பதிகாரத்தின் வழியாக முழுமைபெறுகிறது என்று சொல்லமுடியும். இவ்வகையான பாடல் மரபை நெடும்பாட்டு என்று வகைமைப் (Genre) படுத்தலாம்.

இவ்வகைப் பாடல் வகைமையில் அமைந்த, கதைப்பாடல்கள், காப்பியங்கள் ஆகியவை தமிழ் இலக்கிய ஆக்க வகைமைகளில் முக்கியத்துவம் வாய்ந்த ஒன்றாகக் கருதலாம். இவ்வகையான நெடும்பாடல் மரபு பிற்காலங்களில் புராணக்கதை மரபுகளை உள்வாங்கிப் புராணங்களாயின. தமிழ் இலக்கிய உருவாக்க மரபில் கம்பன் காலத்திற்குப் பிறகு இவ்வகையான பெரும்புராணங்கள் உருவாகி இருப்பதைக் காண்கிறோம். தமிழ் நெடும்பாடல் மரபில் பாட்டிலும் தொகையிலும் உள்ள பாட்டுகளை இளங்கோவடிகள், சீத்தலைச்சாத்தனார், திருத்தக்கதேவர், கொங்குவேளிர், கம்பர் ஆகிய பலர் செழுமையான தனிப்பாடல் மரபின் உணர்ச்சிக் கூறுகளை நெடுங்கதையாக உருவாக்கித் தந்ததைக் காண்கிறோம். ஆனால், கம்பனுக்குப் பிறகு தனிப்பாடல் மரபில் உருவான அருணகிரிநாதர், தாயுமானவர், வள்ளலார் போன்றவர்கள் உருவாக்கிய மரபு புராண வடிவில் அமைந்த நெடும்பாடல் மரபிற்குள் உணர்ச்சி சார்ந்த நிலையில் காணமுடியவில்லை. தமிழ் நெடும்பாடல் வகைமையில் இவ்வகையான வரலாற்றுத் தொடர்ச்சியை நாம் புரிந்து கொள்ள வேண்டும்.

பத்தொன்பது மற்றும் இருபதாம் நூற்றாண்டுகளில் இவ்வகையான நெடும்பாடல் மரபு ஏறக்குறைய இல்லாமலே மறைந்து விட்டதை நாம் அறிகிறோம். இதே நூற்றாண்டுகளில் தனிப்பாடல் மரபு வெவ்வேறு புதிய கூறுகளுடன் வளம்பெற்று உருவாகியுள்ளதை இங்கு இணைத்துப் பார்க்க வேண்டும். தமிழ் இலக்கிய ஆக்கமரபின் வகைமைகளாகத் தனிப்பாடல், நெடும்பாட்டு என்ற இரு வகைமைகளை நாம் அடையாளப்படுத்திக் கொள்ள வேண்டும்.

தனிப்பாட்டு, நெடும்பாட்டு ஆகிய வகைமைகளில் தமிழில் உருவாகியுள்ள பிரபந்தங்கள் என்னும் இலக்கிய ஆக்கங்கள் பற்றிய உரையாடல் தேவைப்படுகிறது. பிராகிருதம், பாலி, சமற்கிருதம் ஆகிய மொழிகளோடு பண்பாட்டுத்தளத்தில் தமிழ் இணைந்து செயல்பட்டுள்ளது. தொல்காப்பியர் காலத்தில் தொடங்கிய இம்மரபு கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டிற்குப் பிறகு மிக வளமையான மரபாகத் தமிழில் உருப்பெற்றது. நிகண்டுகள் உருவாக்கம், உரையாசிரியர்களின் செயல்பாடுகள், சாத்திர நூல் உருவாக்கம், கலை வடிவங்களுக்கான வரையறைகளான ஆகமநூல் உருவாக்கம், யாப்பு மற்றும் அணிநூல் உருவாக்கம், பாட்டியல் நூல் உருவாக்கம் ஆகியவற்றை மேற்குறித்த பின்புலத்தில் நம் உரையாடலுக்கு உட்படுத்த வேண்டும். இவ்வகையான மரபு தமிழ் இலக்கிய வகைமைகளான தனிப்பாடல் மற்றும் நெடும்பாடல் மரபைத் தமக்குள் எவ்வகையில் உள்வாங்கிக் கொண்டன என்பது அவசியமாகும். இலக்கிய/இலக்கண உருவாக்கத்தில் மேற்குறித்த வகைமைகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. தனிப்பாடல், நெடும்பாடல் என்ற வகைமைகளில் உருவாக்கப்பட்டுள்ள பிரபந்த ஆக்கங்களை நாம் தமிழ் மரபின் இலக்கிய உருவாக்க வளமாகக் கருதவேண்டும். அதனைச் 'சிறு' என்ற அடை கொடுத்து அழைக்கும் சிற்றிலக்கியம் என்ற சொல்லாட்சி அடிப்படைத் தர்க்கத்தன்மை அற்றது. தனித்தமிழாக்கம் என்ற பெயரில் பொருள்மரபில் குழப்பம் உண்டாக்கப்பட்டுள்ளது. இதனை இலக்கிய ஆக்கங்களின் வரலாறு குறித்துப் பேசுவோர் கவனத்தில் கொள்வது அவசியம்.

வரலாற்றுக்கு முந்தைய காலம் தொடங்கி உருவான தனிப்பாடல், நெடும்பாடல் மரபு ஐரோப்பியப் புத்தெழுச்சியைத் தொடர்ந்து தம்முள் பெரும் மாற்றத்தை எதிர்கொள்ளத் தொடங்கியது. இலக்கிய ஆக்கத்தின் பதிவு என்பது பாடல்/கவிதை/செய்யுள் என்ற முறைமைகளில்தான் பதிவு செய்யப்பட்டன. தமிழ்ப் பதிவு வரலாற்றில் தமிழ்ப் பண்பாட்டின் பல்வேறு துறைகள் இவ்வகையில் பாடல்/செய்யுள் மரபில்தான்

பதிவுசெய்யப்பட்டுள்ளன. வரலாறு பேசும் மெய்க்கீர்த்தி, கட்டட விதிமுறைகளைக் கூறும் ஆகமங்கள், மருத்துவத்தைச் சொல்லும் சித்த மருத்துவம், நம்பிக்கை சார்ந்து அமைந்துள்ள பல்வேறு துறைகள், கிணறு தோண்டுதல், வீடுகட்டுதல் ஆகிய அறிவியல் தர்க்கம் சார்ந்த துறைகள் அனைத்தும் பாடல்/செய்யுள் மரபில்தான் பதிவு செய்யப்பட்டுள்ளன. எனவே நமது பதிவு மரபு என்பது பாடல்/செய்யுள் மரபுதான். கல்வெட்டுகள், ஓலைச்சுவடிகள் ஆகிய அனைத்திலும் இவ்வகைப் பதிவுகளையே நாம் காண்கிறோம். இவற்றைப் பாடல், நெடும்பாடல் வகைமைகளில் நாம் புரிந்து கொள்கிறோம்.

மேற்குறித்த மரபிலிருந்து பாடலாகப் பதிவு செய்வதை மறுத்துப் பேசுவதைப் பேச்சாகவே பதிவு செய்யும் மரபு உருவானது. இதனை வசனம்/உரைநடை ஆகிய பல பெயர்களில் அழைக்கிறார்கள். தமிழ் இலக்கிய ஆக்க வகைமைகளுள் இதனைப் புதிய வகைமையாக (Genre) நாம் புரிந்துகொள்ள வேண்டும்.

தனிப்பாடல் மரபிற்கு உணர்ச்சி/கூற்று அடிப்படையாக அமைகிறது. நெடும்பாடல் மரபிற்கு உணர்ச்சி/கூற்று/கதை அடிப்படையாக அமைகிறது. இவ்வகையான உணர்ச்சியும் கதைகளும் கூற்றுகளாகவும்/பேச்சுகளாகவும் அமைவன தமிழில் புதிய வகைமையாகும். இவ்வகைமை அச்சு எந்திரக் கருவியால் சாத்தியமாகிறது. பேசுவதை எழுதக்கூடாது என்ற மரபை மறுத்துப் பேசுவதை எழுதும் இம்மரபு வரலாற்றில் மிகப்பெரிய மடைமாற்றம் ஆகும். பல செம்மொழிகளில் தனிப்பாட்டு, நெடும்பாட்டு என்ற வகைமைகள் மட்டும் இடம்பெற்றிருக்கும். புத்தொளி மரபில் உருவான வசன மரபு அச்செம்மொழிகளில் உருப்பெறுவதற்கு முன்பே அவை புழக்கத்திலிருந்து விடுபட்டிருக்கும். தமிழ் மட்டுமே தொடர்ச்சியாக இருந்து வரும் செம்மொழி என்பதால் புதிதாக உருவான புத்தொளி வகைமையையும் இம்மொழி உள்வாங்கிக் கொண்டது. தொல்பழம் புலவர்கள் பலரும் வசன மரபை ஏற்றுக்கொள்ளாதது நாம் அறிந்த ஒன்றே. வசன மரபில் அமைந்த புனைகதைகளை இலக்கிய ஆக்கமே இல்லை என்று கூறிய இருபதாம் நூற்றாண்டில் வாழ்ந்த சில தமிழ்ப் பேராசிரியர்களின் நிலைப்பாட்டினை நாம் இங்கு நினைவுபடுத்திக் கொள்ளலாம். ஒரு மொழியில் உருவாகும் புதிய வகைமைகளை அம்மொழியில் உள்ள பழைய வகைமைக்குள் ஈடுபாடு கொண்டவர்கள் ஏற்றுக்கொள்ளத் தயங்குவது இயல்பாக எதிர்பார்க்கக் கூடியதுதான்.

தமிழில் உருவான புதிய வகைமையான வசனத்தின் வழி உருப்பெற்ற புனைவுகளே இருபதாம் நூற்றாண்டில் மிக முக்கியமான இலக்கிய வகைமையாகச் செயல்படுவதைக் காண்கிறோம். தமிழ் கலை/இலக்கிய ஆக்கங்கள் குறித்த கோட்பாடு அடிப்படையிலான புரிதலுக்குத் தனிப்பாட்டு-நெடும்பாட்டு–வசனம் என்னும் இவ்வகைமைகள் அடிப்படைகளாக அமைகின்றன. தமிழ்க் கலை/இலக்கியம் தொடர்பான கோட்பாட்டு வரையறைகளை மேற்கொள்ளும் போது மேற்குறித்த வகைமைகளை அடிப்படையாகக் கொள்ளவேண்டும். ஒரு மொழியில் உருவான வகைமைகள் (Genre) சார்ந்துதான் அம்மொழியின் கலை/இலக்கியக் கோட்பாடுகள் (Theories) உருவாக்கப்பட வேண்டும். தமிழ் கலை/இலக்கியக் கோட்பாட்டினை உருவாக்குவதற்கு மேற்குறித்த வகைமைகளை அடிப்படையாகக் கொண்ட இலக்கிய வரலாறு எழுதுதலும் அவசியம்.

ஆனால், தமிழில் இலக்கிய வரலாறுகள் என்பவை காலப் பின்புலத்தில் எழுந்த இலக்கிய விவரணங்கள் (எ–டு: சங்க இலக்கியம், பல்லவர்கால இலக்கியம், பிற) மற்றும் இலக்கிய வடிவங்கள்சார் விவரணங்கள் (எ–டு: காப்பிய இலக்கியம், பிரபந்த இலக்கியம், பிற) ஆகியவை சார்ந்தே எழுதப்பட்டுள்ளன. வெறும் விவரணங்கள் மட்டுமே வரலாறு ஆகிவிட முடியுமா? தமிழ் வகைமைகளுக்குள் அடங்கியுள்ள விவரணங்களின் விரிவான உரையாடலே இலக்கிய வரலாறாக அமையும். இலக்கிய வகைமைகள் பற்றிய உரையாடல், இலக்கியக் கோட்பாடு பற்றிய புரிதலுக்கு வழிவகுக்கும். அக்கோட்பாடுகள் இலக்கிய வகைமைகளை வாசிக்கும் அணுகுமுறைகளைச் சார்ந்து பல பரிமாணங்களில் வெளிப்படுவது என்பது தவிர்க்க முடியாது. இவ்வகையான தமிழ்க் கலை/இலக்கியக் கோட்பாடுகளைக் கட்டமைக்க முதலில் தமிழ் இலக்கிய வகைமைசார்ந்த இலக்கிய வரலாற்றை எழுதுவோம். அதற்குப் பின் தமிழ் இலக்கியக் கோட்பாட்டைக் கண்டறிவதற்கான புரிதல் ஏற்படும். இத்தன்மையின்றி ஐரோப்பியப் பின்புலத்தில் உருவான இலக்கியக் கோட்பாடுகளை நமது இலக்கியங்கள் பற்றிய புரிதலுக்கான கோட்பாடுகளாகக் கட்டமைக்க இயலுமா? என்பது நம் உரையாடலுக்குள் வரவேண்டிய ஒன்றாகும். ❖

# ஒரு திருக்குறளின் ஆங்கில மொழிபெயர்ப்புகள் - ஒரு மதிப்பீடு

முனைவர் அ.அ. மணவாளன்



தமிழ் நூல்களுள் திருக்குறள்தான் மிக அதிகமான மொழிபெயர்ப்புகளைப் பெற்றுள்ளது. ஆங்கில மொழியில் மட்டும் சுமார் 50க்கும் மேற்பட்ட மொழிபெயர்ப்புகள் வெளிவந்துள்ளன. இவற்றுள் பல முழு மொழிபெயர்ப்பு, சில பகுதி மொழிபெயர்ப்பு. நடுவுநிலைமை அதிகாரத்தில் உள்ள நான்காவது குறள் இங்கே ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படுகிறது. இந்தக் குறள் இதுவரை 42 ஆங்கில மொழிபெயர்ப்புகளைப் பெற்றுள்ளது. இவை நடுவுநிலைமை என்னும் அதிகாரத் தலைப்பையும், தக்கார் தகவிலர் எனத் தொடங்கும் நான்காவது குறளையும் எவ்வாறு மொழி பெயர்த்துள்ளன என இக்கட்டுரை ஆராய்கிறது.

மொழிபெயர்ப்பாவது தருமொழிப் பாடத்தை (SLT) பெறுமொழிப் பாடமாக (TLT) மாற்றியமைக்கும் பணி என்பது வரையறை. இவ்வாறு மாற்றியமைக்கும் பணி இயந்திர கதியாக நடைபெறுவதில்லை. தருமொழிப் பாடப் பொருளை உணர்ந்து கொள்ளுதல், உணர்ந்த பொருளைப் பெறுமொழிக்கு மாற்றியமைத்தல் என்னும் இரு பணி நிலைகளில் மொழிபெயர்ப்புப் பணி நடைபெறுகிறது. இவ்விரு நிலைகளில் முன்னது வாசக நிலை, பின்னது எழுத்தாளன் நிலை. தருமொழி பாடத்தை உணர்ந்து கொள்வதில் உடன் காலச் சமுதாயப் பண்பாட்டுச் சூழல்கள் வாசகனைக் கட்டுப்படுத்துகின்றன. இந்நிலை உரையாசிரியர்க்கும் ஒக்கும். கால மாற்றமும், பண்பாட்டு மாற்றமும் ஏற்படுத்தும் தாக்கத்தால் தருமொழிப் பாடத்தை உணர்ந்து கொள்வதில் வேறுபாடுகள் தோன்றுவது இயற்கை. எல்லா வகையான இலக்கியங்கட்கும் இது பொருந்தும். எனவே, உரைகள் பல தோன்றுவது போலவே, மொழிபெயர்ப்புகளும் பல தோன்றுகின்றன. இனியும் தோன்றும். அதாவது, மொழிபெயர்ப்பாளனும் ஒரு வாசகனாக, ஓர் உரையாசிரியனாகச் செயற்படுகிறான் என்பது கருத்து. ஒரு மொழி வழக்கு, பன்மொழி வழக்கு என்பதே இவரிடையே வேறுபாடு. இந்தக் கோட்பாட்டின் அடிப்படையில் மேற்குறித்த குறளுக்குரிய மொழி பெயர்ப்புகளை அவற்றிடையே காணப்பெறும் வேறுபாடுகளுடன் ஆராயலாம்.

**அதிகாரத் தலைப்பின் மொழிபெயர்ப்பு**

நடுவுநிலைமை என்னும் தலைப்பை மொழி பெயர்ப்பாளர்கள் பின்வருமாறு மொழி பெயர்த்துள்ளனர்.

அ) எல்லிஸ், ட்ரூ, ராபின்சன், அரங்கநாத முதலியார், தீட்சிதர், முத்துசாமி, சௌந்தரராஜன், சுத்தானந்த பாரதியார், சக்கரவர்த்தி ஆகியோர் 'Equity' எனவும்,

ஆ) போப்பு, பூரணலிங்கம் பிள்ளை, மைக்கேல், சக்கரவர்த்தி, பாலசுப்பிரமணியம், வான்மீகநாதன், இராகவாச்சாரி, சிங்கன் ஆகிய எண்மரும் 'Impartiality' எனவும்,

இ) பாப்லி, இராஜகோபாலன், கஸ்தூரி சீனிவாசன், புனரபி பாரதி ஆகிய நால்வரும் 'Fairness' எனவும்,

ஈ) இராஜாஜி, டயஜ் ஆகிய இருவரும் 'Rectitude' எனவும்,

உ) வி.வி.எஸ். அய்யர் 'Uprightness of Heart' எனவும்,

ஊ) திருமதி திருநாவுக்கரசும், பூரணலிங்கம் பிள்ளையும் 'Justice' எனவும்,

எ) கே.ஆர். சீனிவாச ஐயங்கார் 'equality' எனவும்

மொழிபெயர்த்துள்ளனர். இவர்களுள் பூரணலிங்கம் பிள்ளை 'Justice or Impartiality' என்றும், சக்கரவர்த்தி 'Impartiality or Equity' என்றும் இரண்டிரண்டு வகையாக மொழியாக்கம் செய்துள்ளனர்.

திருவள்ளுவர் நடுவுநிலைமை அதிகாரத்துள் தகுதி, செப்பம், கோடாமை என்னும் சொற்களையும், குடிமை அதிகாரத்துள் செப்பம் (951) என்னும் சொல்லையும் தெரிந்து வினையாடல் அதிகாரத்துள் கோடாமை (520) என்னும் சொல்லையும் நடுவுநிலைமை என்னும் பொருளில் கையாளுகிறார். இவற்றுள் நடுவுநிலைமை, கோடாமை

என்னும் இரு சொற்களும் ஒருபாற் சாயாது நடுவுநிற்றல் என்னும் செயற்பாட்டையும் (action) தகுதி, செப்பம் என்னும் இரு சொற்களும் அச் செயற்பாட்டிற்கு அடிப்படையான உளப்பாங்கை அல்லது மனச் செம்மையையும் (equipoise or spirit of justice) உணர்த்துகின்றன. மேலே குறித்த மொழிபெயர்ப்புகளுள் 'equity' என்பதும், 'fairness' என்பதும் மனச்செம்மையைக் குறிப்பன. Impartiality என்னும் சொல் ஒருபாற் கோடாமையைக் குறிப்பது. Justice என்பது கூர்மையற்ற பொதுச் சொல், rectitude என்பது நடுவுநிலைமைப் பண்பின் ஒரு கூறை மட்டும் குறிப்பது, வேறு பொருளும் தருவது. எனவே, திருவள்ளுவர் பயன் படுத்தும் நான்கு சொற்களுக்கும் உரிய பொருண்மையைக் குறிப்பதாக equity என்னும் சொல்லும் fairness என்னும் சொல்லும் அமைகின்றன. செயற்பாட்டு நிலையில் impartiality என்னும் சொல் அமைகிறது.

இம்மூன்று ஆங்கிலச் சொற்களுக்குள் equity என்னும் சொல்லின் பொருண்மை மிகவும் ஆழமானது. நம் அதிகாரப் பொருளோடு தொடர்புடையதாக உள்ள பொருண்மையை,

i) Moral Justice, of which laws are the imperfect expression,

ii) The spirit of justice which enables us to interpret laws rightly

என்று ஆங்கில அகராதி விளக்குகிறது. (Chambers Twentieth Century Dictionary, 1974, edn.) ஒருபாற் கோடாமைக்கேதுவாகிய மனச் செப்பத்தைக் குறித்தலின் equity என்னும் மொழிபெயர்ப்பையும் fairness என்னும் மொழிபெயர்ப்பையும் பொருத்தமுடையதாகக் கொள்ளலாம். பகுதியான் பாற்பட்டு ஒழுகப்பெறின், நெஞ்சத்துக் கோடாமை, நெஞ்சம் நடுவொரீஇ அல்ல செயின், உட்கோட்டம் இன்மை என வரும் திருக்குறள் தொடர்கள் மேலே காட்டிய equity என்னும் சொல்லின் பொருண்மையோடு ஒன்றிநிற்கக் காணலாம்.

**ஒரு குறளின் மொழிபெயர்ப்பு**

**தக்கார் தகவிலர் என்பது அவரவர்**
**எச்சத்தாற் காணப் படும்.** **(114)**

என்னும் குறளுக்குரிய மொழிபெயர்ப்புகளை இனி ஆராயலாம்.

**உரையாசிரியர்கள்**

ஒருவர் நடுவுநிலைமைப் பண்பு உடையவரா இல்லையா என்பதை அவருடைய மக்களால் அறிந்து கொள்ளலாம் என்பது இக்குறளின் பொதுக்கருத்து. இக்குறளில் வழங்கும் தக்கார், தகவிலர், எச்சம் என்னும் மூன்று சொற்களும் வாசகர்களால் வெவ்வேறு வகையாகப் பொருள் கொள்ளப்படுகின்றன. தக்கார், தகவிலர் என்னும் சொற்களுக்கு நடுவுநிலைமையுடையார், நடுவு நிலைமையிலார் என்றே எல்லாப் பழைய உரைகாரர்களும் பொருள் கண்டுள்ளனர். எச்சம் என்னும் சொல்லுக்குப் பரிமேலழகரும் பாரதியாரும் 'மக்கள்' என்று பொருள் கொள்ள, மணக்குடவர் 'ஆரவாரத் தொழில்' என்றும் காளிங்கர் 'ஒழுக்கம்' என்றும் பொருள் கொண்டுள்ளனர். எச்சம் என்னும் சொல் திருக்குறளில் ஏழு இடங்களில் (112, 114, 238, 674, 1004, 1012, 1075) வழங்குகிறது. இவற்றுள் மூன்றிடங்களில் (112, 114, 1012) மக்கள் என்னும் பொருளிலும் ஏனைய இடங்களில் ஒழிந்தது. எஞ்சியது என்னும் பொருளிலும் இச்சொல் வழங்குகிறது.

இந்தக் குறளில் எச்சத்திற்கு ஆரவாரத் தொழில் எனப் பொருள் கொள்ளும் மணக்குடவர், எச்சத்திற்கு ஏமாப்பு உடைத்து என்றும், 112ஆவது குறளில் மக்கள் என்றும் பொருள் காண்கிறார். மேலும்,

**"இற்பிறந்தார் கண்ணல்லது இல்லது இயல்பாகச்**
**செப்பமும் நாணும் ஒருங்கு"** **(951)**

என்னும் குறளுக்கு உயர்குடிப்பிறந்தார்க்கே நடுவு நிலைமை இயல்பாக அமையும் என்று இவர் பொருள் காண்பதால் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப் பெற்ற குறளில் (114) எச்சம் என்பதற்கு மணக்குடவர் காணும் பொருள் பொருந்தவில்லை, போலியுரை என்று அதனைக் கருதினும் தவறில்லை.

இனி மக்கள் என்று பொருள் கொண்ட பரிமேலழகரும் பரிதியாரும் அதனை விளக்குவதில் வேறுபடுகின்றனர். அதாவது நடுவுநிலைமை யுடையார்க்கு மக்கள் உண்டாவர், இல்லார்க்கு உண்டாகார், எனவே, மக்கள் உண்மையானும் இன்மையானும் தக்காரைக் கண்டறிவோம் என்கிறார் பரிமேலழகர். பரிதியாரோ மக்களது சற்குணத்தால் அதாவது அவரும் நடுவு நிலைமையுடையராய் இருத்தல் கண்டு பெற்றோரையும் அன்னர் என்று உணரலாம் என்கிறார்.

**மொழிபெயர்ப்புகள்**

மொழிபெயர்க்கத் தொடங்கும் முன் தருமொழிப் பாடப் பொருளை உணர்ந்துகொள்ளும் பணியைச் செய்ய முனையும் மொழிபெயர்ப்பாளர்க்கு இலக்கிய மரபும் உடன்காலச் சமுதாயப் பண்பாட்டு மரபும் வழிகாட்டி களாக அமையுமாதலின் உரைகாரர் பொருள் கொள்ளும் முறையை இதுவரை ஆராய்ந்தோம். ஆராயவே தக்கார்,

தகவிலர், எச்சம் என்னும் சொற்களுக்குப் பொருள் காண்பதில் காணப்படும் வேறுபாடுகள் தெளிவாயின. இனி, இக்குறளுக்கு அமைந்த 24 மொழிபெயர்ப்புகளைக் காணலாம்.

**தக்கார், தகவிலர்**

தக்கார், தகவிலர் என்னும் தொடரை,

அ) எல்லிஸ், ராபின்சன், திருமதி திருநாவுக்கரசு, மைக்கேல், தீட்சிதர், இராஜகோபாலன், சக்கரவர்த்தி, பாலசுப்பிரமணியம், முத்துசாமி, சௌந்தரராஜன், கஸ்தூரி சீனிவாசன், டயஜ், பாரசி முதலியோரும் Just, unjust என்றும்,

ஆ) ட்ரூ, பூர்ணலிங்கம் பிள்ளை, இராகவாச்சாரி ஆகிய மூவரும் upright, crooked என்றும்,

இ) வி.வி.எஸ். அய்யரும் சுத்தானந்த பாரதியாரும் worthy, unworthy என்றும்,

ஈ) இராஜாஜி rectitude என்றும்,

உ) வான்மீகநாதன் unbiased, biased என்றும்,

ஊ) சிங்கன் partial, impartial என்றும்,

எ) அரங்கநாத முதலியார் noble, wicked என்றும்

மொழிபெயர்த்துள்ளனர். பாப்லி இந்தக் குறளை மொழிபெயர்க்கவில்லை.

மேற்காட்டிய மொழிபெயர்ப்புகளுள் just, unjust, partial, impartial என்னும் இருவகை மொழிபெயர்ப்புகளும் முறையே பொருத்தமானவை. upright, crooked என்னும் மொழிபெயர்ப்பு உருவக அமைப்புடையது. biased, unbiased என்பதும் rectitude என்பதும் இரண்டாம் தரத்தன. worthy, unworthy என்பது தருமொழி மூலத்தின் அகராதி மொழிபெயர்ப்பு. பெறுமொழி வழக்கில் அது நடுவு நிலைமையை நேரடியாக உணர்த்தாது. எனவே, பொருத்தமற்றது. Noble, wicked என்பனவும் கூர்மையற்ற பொருத்தமில்லாத மொழிபெயர்ப்பு.

நடுவுநிலைமை என்னும் தலைப்பில் மொழி பெயர்ப்புகளை ஒருமுறை மீண்டும் நோக்கினால் மொழிபெயர்ப்புப் பணிக்கே உரிய சில சுவையான சிக்கல்களைக் காணலாம்.

அ) 'equity' என்ற தலைப்பை மொழிபெயர்த்த எண்மருள் யாரும் குறள் மொழிபெயர்ப்பில் அச்சொல்லைப் பயன்படுத்தவில்லை. மாறாக just or unjust என்னும் சொற்களைப் பயன்படுத்தியுள்ளனர். இவ்வாறே impartial என்னும் சொல்லைத் தலைப்புக்கு மொழி பெயர்த்தவர்களுள் பலர் குறளில் அதனைப் பயன்படுத்தாமல் just என்னும் சொல்லையே பயன்படுத்தியுள்ளனர். சிங்கன் மட்டுமே இரண்டிடங்களிலும் ஒரே சொல்லைப் பயன் படுத்தியுள்ளார்.

ஆ) இந்த மாற்றம் ஏன் நிகழ்கிறது? இரண்டு காரணங்களைச் சுட்டலாம். ஒன்று பெறுமொழியின் செய்யுள் வடிவத்தைக் கையாளுதல். Just என்னும் ஓரசைச் சொல் ஆங்கில யாப்பில் எளிமையாகப் பயன்படுவதுபோல் equity என்னும் மூவசைச் சொல்லோ impartiality என்னும் ஆறசைச் சொல்லோ பயன் படுவதில்லை. எனவே, ஆங்கில யாப்பில் மொழி பெயர்த்தவர்கள் equity என்னும் சொல்லைக் குறள் மொழி பெயர்ப்புக்குப் பயன்படுத்தவில்லை. உரைநடையிலும் இதே சிக்கல் எழுவதால் சிலர் அதனை விட்டு just என்னும் சொல்லைக் கையாண்டுள்ளனர்.

இரண்டாவது காரணம், தலைப்பு பெயர்ச் சொல்லாக இருப்பதால் equity என்னும் பெயரைப் பொருளாழம் நோக்கி மொழிபெயர்த்தவர்கள், குறளில் பெயரடையாக அல்லது வினையாலணையும் பெயராக வரும்போது அந்தச் சொல்லைப் பயன்படுத்தத் தயங்குவர். equitable என்னும் பெயரடை வழக்கிலிருப்பினும் தக்கார் என்ற சொல்லுணர்த்தும் நடுவு நிலைமையுடைய, செப்பமுடைய என்னும் பொருளை அது தராது. இதனாலும் மொழி பெயர்ப்பாளர்கள் அதனைக் கைவிட்டு வழங்குவதற்கு எளிய சொல்லாகிய Just என்பதைக் கையாண்டுள்ளனர் என உணர்கிறோம்.

**எச்சம்**

அ) எச்சம் என்னும் சொல்லை எல்லிஸ், ட்ரூ, ராபின்சன், போப், வி.வி.எஸ். அய்யர், திருமதி திருநாவுக்கரசு, அரங்கநாத முதலியார், இராஜாஜி, பூரண லிங்கம் பிள்ளை, மைக்கேல், தீட்சிதர், இராஜகோபாலன், சக்கரவர்த்தி, சௌந்தரராஜன், சுத்தானந்த பாரதியார், கஸ்தூரி சீனிவாசன், இராகவாச்சாரி, சிங்கன் ஆகிய பதினெட்டுப் பேரும் 'மக்கள்' எனப் பொருள் தரும் children, offspring, progeny, posterity என்னும் சொற்களால் மொழிபெயர்த்துள்ளனர்.

ஆ) பாலசுப்பிரமணியம் முத்துசாமி, டயஜ், K.R. சீனிவாச ஐயங்கார் ஆகிய நால்வரும் எச்சத்திற்குப் புகழ் எனப் பொருள் கொண்டு neputation, fame என்னும் ஆங்கிலச் சொற்களால் மொழிபெயர்த்துள்ளனர்.

இ) வான்மீகநாதன் மட்டும் 'எச்சம்' என்னும் சொல்லை residuum என்று மொழிபெயர்த்துள்ளார். இவர்

எச்சம் என்பதற்கு எஞ்சி நிற்பது என்னும் பொதுப்பொருள் கொண்டு அதற்கு இணையான ஆங்கிலச் சொல்லைப் பெய்துள்ளார்.

ஈ) புனரபி பாரதி எச்சம் என்பதை legacy என்று மொழிபெயர்த்துள்ளார்.

இந்த நால்வகை மொழிபெயர்ப்புகளில் 'மக்கள்' என்னும் பொருள்படச் செய்யப் பெற்ற பதினெட்டு மொழிபெயர்ப்புகள் பொருத்தமானவை.

**செப்பம் உடையவன் ஆக்கம் சிதைவின்றி**

**எச்சத்திற்கு ஏமாப்பு உடைத்து. (112)**

**ஊண்உடை எச்சம் உயிர்க்கெல்லாம் வேறல்ல**

**நாணுடைமை மாந்தர் சிறப்பு. (1012)**

ஆகிய குறட் கருத்துகளுடன் ஒப்பிட்டு நோக்குமிடத்து 114ஆவது குறளில் வள்ளுவரின் கருத்தும், பண்டைய உரைகாரர்களின் கருத்தும் மக்கள் என்றே பொருள் கொள்ளக் கிடக்கின்றன என்பது வெள்ளிடைமலை.

நான்கு மொழிபெயர்ப்பாளர்களின் எச்சத்திற்குப் புகழ் என்று பொருள் கொண்டுள்ளனர். நால்வரும் தமிழ் மரபினர். இந்த நால்வரும் 112 ஆம் குறளில் வரும் எச்சம் என்னும் சொல்லிற்கு மக்கள் என்று பொருள் கொண்டு பாலசுப்பிர மணியமும் முத்துசாமியும் 'Posterity' என்றும், டயஜ்'heirs' எனவும், ஐயங்கார் 'Progeny' என்றும் மொழி பெயர்க்கின்றனர். எனவே, இவர்கள் இந்தக் குறளில் மட்டும் புகழ் என்று பொருள் கொண்டது இக்காலப் பண்பாட்டு அனுபவ நோக்கில் இருக்கலாமா என்று தோன்றுகிறது. பொருத்தமற்ற மொழிபெயர்ப்பு என்று இதனை ஒதுக்க இயலாதெனினும், இது மேலும் சிந்திக்கத்தக்கது.

வான்மீகநாதன் ஒருவர் மட்டும் இந்தச் சிக்கலிலிருந்து விடுபடக் கருதியோ என்னவோ எச்சம் என்னும் சொல்லை residuum என்று மொழிபெயர்க்கின்றனர். எஞ்சி நிற்பது என்னும் பொருளில் குலம், உருபு, குணம், ஒழுக்கம், புதல்வர், பொருள், பூமி எனப் பல பொருண்மைகள் தமிழில் வழங்குமேனும் 'residuum' என்னும் ஆங்கிலச் சொல் மிச்சம், மீதி என்னும் பொருள்களைத் தவிர வேறு பொருள்களில் வழங்குவதில்லை. எனவே வெறும் அகராதிப் பொருளாக உள்ள இச்சொல்லை ஒரு நல்ல மொழி பெயர்ப்பாளராகிய வான்மீகநாதன் பயன்படுத்தியிருப்பதும், 112 ஆம் குறளில் வரும் எச்சத்தை இவரே மக்கள் என்னும் பொருள்பட progeny என்று மொழிபெயர்த்திருப்பதும் வியப்புக்குரிய செய்திகளாகக் காணப்படுகின்றன. 112ஆம் குறளில் வரும் எச்சம் என்னும் சொல்லை descendants என்று மொழிபெயர்க்கும் பாரதி இந்தக் குறளில் (114) legacy என்று மொழிபெயர்க்கின்றனர். இதுவும் பொருத்தமாகப் படவில்லை. ஒரு மொழிபெயர்ப்பாளன் எதிர்கொள்ளும் சிக்கல்களை இவை நமக்குப் புலப்படுத்துவதாகக் கொள்ளலாம்.

மக்கள் என்ற பொருள் கொண்ட பதினெண்மருள், பதினான்கு மொழிபெயர்ப்பாளர்கள் வாளா மக்கள் என்னும் பொருளுடன் மொழிபெயர்த்துள்ளனர். ட்ரூ, இராஜாஜி, சக்கரவர்த்தி, இராகவாச்சாரி என்னும் நால்வர் மட்டும் மக்களின் ஒழுக்கமுடைமையால் பெற்றோர்களின் நடுவுநிலைமைப் பண்பை உணர்ந்து கொள்ளலாம் என்று மொழிபெயர்த்துள்ளனர். நடுநிலையாளர்க்கு எச்சம் உண்டாதலும், அஃதில்லார்க்கு இல்லையாதலும் ஒருதலை என்னும் பரிமேலழகரின் விளக்கம் பொருத்தமுடையதாகப் படவில்லை. பதினான்கு மொழிபெயர்ப்பாளர்கள் பரிமேலழகரின் விளக்கத்தால் ஈர்க்கப்பட்டனர் போலும். மக்களது ஒழுகலாற்றால் பெற்றோரை இனங்கண்டு கொள்ளலாம் எனக் கருதும் நான்கு மொழிபெயர்ப்புகளும் பொருத்தமாகத் தோன்றுகின்றன.

நடுவுநிலையாளரின் மக்கட்கு நன்மையே விளையும். நடுவுநிலையற்றவர்களின் மக்கட்குத் தீமையே விளையும். இதைக் கொண்டு, அதாவது மக்களுக்கு ஏற்படும் நன்மை தீமைகளைக் கொண்டு தக்காரையும் தகவிலாரையும் அறிந்து கொள்ளலாம் என்னும் பொருள்பட எழுந்துள்ள எல்லிஸ், திருமதி திருநாவுக்கரசு ஆகிய இருவரின் மொழிபெயர்ப்புகள் சற்று விளக்கமான விரிவுரைபோல் அமைந்துள்ளன. மேல்சென்ற 112ஆம் குறளை மனத்துள் கொண்டு இந்த மொழிபெயர்ப்புகள் செய்யப்பட்டனவாகத் தோன்றுகின்றன. இவற்றையும் பொருத்தமான மொழி பெயர்ப்பென்றே கூறலாம்.

பொதுவாகக் கணிக்குமிடத்து 24 மொழி பெயர்ப்புகளுள் 18 மொழிபெயர்ப்புகள் இக்குறளின் (114) பொதுக் கருத்தை நன்கு வெளிப்படுத்துகின்றன. இவற்றுள்ளும் ஆறு மொழிபெயர்ப்புகள் (எல்லிஸ், ட்ரூ, திருமதி திருநாவுக்கரசு, இராஜாஜி, சக்கரவர்த்தி, இராகவாச்சாரி) வள்ளுவரின் கருத்தாழத்தை நன்கு வெளிப்படுத்துவனவாக அமைந்துள்ளன. படிப்பினிமை (readability) என்னும் மொழிபெயர்ப்புத் திறனாய்வு நோக்கில் காணுமிடத்துச் செய்யுள் வடிவ மொழி பெயர்ப்புகளைவிட உரைநடையாகச் செய்யப் பெற்ற மொழிபெயர்ப்புகளே திருக்குறள் கருத்தை முழுமையாகத் தருவதில் வெற்றி பெற்றிருக்கக் காண்கிறோம். ❖

# பழந்தமிழ் அச்சு நூல்கள்

**திரு. இரா. முத்துக்குமாரசாமி**



உலகளாவிய அளவில் அச்சுப் புரட்சிக்கு வித்திட்டவர் ஜோஹன் கூட்டன்பர்க்கு. களிமண்ணிலும் கல்லிலும் ஓலையிலும் மக்கள் தங்களது எண்ணங்களைப் பதிவு செய்து கொண்டிருந்த சூழ்நிலையில் மரக்கட்டைகளில் எழுத்துகளைச் செதுக்கிப் புத்தகங்களைத் தாளில் அச்சிட்ட நிலையில் கூட்டன்பர்க்கு உலோகத்தால் அச்செழுத்துகளை வார்த்தெடுத்து அச்சிடும் முறையினைக் கி.பி. 1450இல் கண்டுபிடித்தார்.

கி.பி. 16ஆம் நூற்றாண்டிலேயே தமிழ்மொழியின் பெருமையினைத் தெரிந்திருந்த போர்ச்சுகீசியர், தமிழ் மொழியும் போர்ச்சுகீசியமும் கலந்த கிறித்தவ சமய வினா – விடைப் புத்தகத்தை "கார்டில் ஹா" (Cartil Ha) லிஸ்பனில் 1554இல் அச்சிட்டனர்.

1555இல் கோவாவில் உருவாக்கிய தமிழ் எழுத்துகளைக் கொண்டு 'டாக்ட்ரினா கிரிஸ்டம்' என்ற தமிழ் நூலை ஜான் கோன்சால்வஸ் அச்சிட்டார். 1556இல் தமிழ் உலோக எழுத்துகளை உருவாக்கக் கோன் சால்வசுக்கு ரோட்ரிகசு உதவினார்.

1557இல் டாக்டர் ஜெஃபரியா என்ற பாதிரியாரால் தமிழ் அச்செழுத்துகள் உருவாக்கப்பட்டன.

அண்ட்ரிக்கு பாதிரியார் 1547இல் புனித சவேரியார் (St. Xavier) வழிகாட்டுதலின் பேரில் தமிழ்நாட்டிற்கு வந்து தமிழ்மொழியைக் கற்றுக் கிறித்தவ சமய நூல்களை உருவாக்குவதுடன் தமிழ் இலக்கண நூலையும், தமிழ் – போர்ச்சுகீசிய மொழி அகராதியையும் உருவாக்கும்படி கட்டளை இட்டார். முதன்முதலில் போர்ச்சுகீசிய மொழியில் தமிழிலக்கண நூலான ஆர்ட்டி லிங்குவா மலபார் (Arte De Lingua Malabar) என்ற நூல் 1547இல் அச்சிடப்பட்டது.

கொல்லத்தில் ஜான்ஃபிரியா உருவாக்கிய தமிழச்சுகளைக் கொண்டு தமிழ்நாட்டின் புன்னைக்காயலில் அச்சுப் பணியைத் தொடங்கினார். கொல்லம் சேவியர் கல்லூரியில் 1578இல் 'தம்பிரான் வணக்கம்' (Doctrina Christam en Lingua Malaur Tamil) அண்டிறிக்கு அண்டிறிக்கு (Henrique Henriques) பாதிரியாரால் தமிழில் அச்சிடப்பட்டது.

தமிழ்நாட்டிலுள்ள மருத்துவ மூலிகைகளைப் பற்றிய ஹார்ட்டி இண்டிகி மலபாரிகி (Horti Indici Malabarici) என்ற நூல் ஆம்ஸ்டர்டாமில் தமிழ் அச்செழுத்துகளால் 1678இல் அச்சிடப்பட்டது.

புரொயென்சா தமிழ் – போர்ச்சுகீசிய அகராதியை 1679இல் அச்சிட்டார். இதை அச்சிட தமிழ் எழுத்துகள் இக்னேசியஸ் ஐச்சிமோனி (Ignatius Aicho Moni) என்பவர் மர அச்சுகளால் தமிழ் எழுத்துகளை உருவாக்கினார். போர்ச்சுகீசிய மொழிச் சொற்கள் உலோகத்தாலான ரோமன் எழுத்துகளால் அச்சிடப் பெற்றன. இந்த அகராதியின் ஒரு படி மட்டும் 'வாடிகன்' நூலகத்திலுள்ளது.

தமிழ்நாட்டில் அச்செழுத்துகள் உருவாவதற்கு முன்னரே செருமனியில் சாசோனிலே இருக்கும் ஆலை (Halle) என்ற நகரில் தமிழ் அச்சு எழுத்துகள் உருவாயின.

1710இல் மேற்சொன்ன ஆலையிலும் தரங்கம்பாடியிலும் அச்சிடப் பெற்றன. 1713இல் கிறித்தவ மத பிரார்த்தனை நூலான (Simbolum Apostalicum) ஆலையில் (Halle) அச்சிடப் பெற்றது.

செருமனியில் உருவான தமிழ் அச்செழுத்துகளைத் தரங்கம்பாடிக்கு 1706இல் கொண்டு வந்து 1712இல் தமிழ் அச்சகத்தை நிறுவியவர் செருமன் பாதிரியாரான சீகன் பால்கு ஆவார். அந்த அச்சகத்தில் டாக்ட்ரினா கிறிஸ்டம் என்ற கிருசித்தியான வணக்கத்தைத் தமிழில் சீகன்பால்கு அச்சிட்டார். 1714இல் பைபிளை அச்சிட்டார். அதே 1714இல் தரங்கம்பாடியிலேயே தமிழ் அச்செழுத்துகளைச் சீகன் பால்கு உருவாக்கினார். அதனுடன் அச்சுத்தாள் உருவாக்கும் ஆலையினையும் நிறுவினார்.

சீகன்பால்கு இலத்தீன் மொழியில் கிராமாடிகா டமுலிகா (Gammatica Damulica) என்ற பெயரில் தமிழ் இலக்கண நூல் ஒன்றினை 1716இல் வெளியிட்டார்.





உதயதாரகை — MORNING STAR

Published Semi-Monthly at one shilling a Quarter.

DEVOTED TO

EDUCATION, SCIENCE, AND LITERATURE

AGRICULTURE, GOVERNMENT, AND

SUMMARY OF IMPORTANT

JAFFNA.

சென்னையில் வேப்பேரி மிசியோன் சார்பில் அச்சுக்கூடம் நிறுவப்பட்டு 'பாப்பு மார்க்கம்' என்ற கிறித்தவ மார்க்க நூல் 1718இல் அச்சிடப்பட்டது.

1730இல் தரங்கம்பாடியில், வீரமாமுனிவர் இலத்தீனில் எழுதிய கொடுந்தமிழ் இலக்கண நூல் (Grammatica Latino Tamulica: The Grammar for the Common Tamil) அச்சிடப்பட்டது.

'ஞான மந்திர செல்வ பூங்காவனம்' என்ற கிறித்தவ போதனை நூல் 1749லும், முதல் தமிழ் – ஆங்கில அகராதி, 'தமிழும் இங்கிலீசுமாய் இருக்கிற அகராதி' என்ற பெயரில் (A Malabar and English Dictionary) 1778லும் வெளியிடப்பட்டன.

1812இல் எல்லீசு சென்னைக் கல்லூரியைத் தொடங்கினார். அதில் அப்பாவுப் பிள்ளை முதல் தமிழாசிரியராக ஆனார். தமிழ் மொழிக்கு அக் கல்லூரியில் முக்கியத்துவம் கொடுக்கப்பட்டதால் தலைசிறந்த தமிழாசிரியர்கள் ஆசிரியர்களாக அமர்த்தப்பட்டனர். அக்



VOCABVLARIO TAMVLICO.

COM A SIGNIFICAÇAM PORTVGUEZA.

COMPOSTO PELLO P. ANTAM DE PROENCA, DA COMPANHIA DE IESV

MISSIONARIO DA MISSAM DE MADVREY.

Com todas as licenças necessarias da santa Inquisiçaõ, & dos Superiores.

Na impressaõ Tamulica da Provincia do Malabar, por Ignacio Archamoni impressor della, Ambalacatta em 30. de Iulho, 1679 annos.

கல்லூரிக்கு ஒரு தனி அச்சகம் சொந்தமாக அமைக்கப் பெற்றது. வீரமாமுனிவரின் கொடுந்தமிழ் இலக்கணம், செந்தமிழ் இலக்கணம் ஆகிய நூல்களும், சிதம்பர பண்டாரம் எழுதிய தமிழ்ச் சுருக்க விளக்கம், இராமாயணத்து உத்தரக் காண்டக் கதை வியவகார சங்கிரகம் எனும் நூல்களும் அச்சிடப் பெற்றன.

இவற்றுடன் எல்லீசு திருக்குறளில் 12 அதிகாரங்களுக்கு உரை எழுதி அச்சாகிக் கொண்டிருந்த நிலையில், எல்லீசு மறைந்ததால் அப்பணி இடையில் நின்று போனது.

1813இல் 'திருச்சிற்றம்பல தேசிகர்' எழுதிய 'இலக்கணச் சுருக்கம்' என்ற நூலையும், 1822இல் வீரமாமுனிவரின் 'பரமார்த்த குரு கதை'யையும், 1824இல் வீரமாமுனிவரின் சதுரகராதியையும் தாண்டவராய முதலியாரும் இராமச்சந்திர கவிராயரும் பதிப்பித்தனர்.

தாண்டவராய முதலியார், 1825இல் 'இலக்கண வினா – விடை', 'பஞ்ச தந்திர கதை' ஆகிய நூல்களும், 1826இல் 'கதா மஞ்சரி' நூலும் அதே ஆண்டில் மதுரை கந்தசாமிப் புலவர் எழுதிய 'தரும நூல்' எனும் 'வியவகார சங்கிரகம்' என்ற நூலும் வெளிவரத் துணை நின்றார்.

அயல் நாட்டிலிருந்து வந்தவர்கள் தமிழ் பயிலும்போது நீண்ட சொற்றொடர்களைப் படிப்பதற்குச் சிரமப்படுவர் என்று கருதி 'டிரிம்மர்' என்ற அம்மையார் 29 ஆங்கிலக் கதைகளைத் தேர்ந்தெடுத்து சாமியப்ப முதலியார், கந்தசாமி முதலியார் ஆகியோரிடம் தந்து தமிழில் மொழி பெயர்த்து, 'சென்னைக் கல்விச் சங்க புத்தகச் சபை'யாருக்காகக் 'கல்வி ஏணி' என்ற பெயரில் (The Ladder of Learning) 1827இல் பதிப்பித்தார்.

1832இல் தமிழ் ஐந்திலக்கண நூலை, சிதம்பரப் பண்டாரம் பதிப்பித்தார். 1840இல் நன்னூல் காண்டிகை உரையைத் திருத்தணிகை விசாகப் பெருமாள் ஐயர் பதிப்பித்தார்.

திருக்குறள் அறத்துப்பாலில் 24 அதிகாரமும், பரிமேலழகர் உரையும், இராமனுசக் கவிராயரின் உள்ளுரையும், புத்துரையும் துறு (Rev-Drew) செய்த ஆங்கில மொழிபெயர்ப்பும் கொண்ட திருக்குறள் நூல் அமெரிக்க மிசியோன் அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது. இதுவே 'துறு'வின் முதல் பதிப்பாகும்.

1853இல் தொல்காப்பிய – நன்னூல் ஜோய்ஸ், சாமுவேல் பிள்ளை ஆகியோரால் வெளியிடப்பட்டது.

ஆங்கிலேயர் ஆட்சியில் தனியார் அச்சுக்கூடம் நடத்தக் கூடாது என்ற கடுமையான சட்டம் இருந்தது. சர் சார்லஸ் மெட் கஃபே (Sir Charles Met Calfe) என்பவர் ஆளுநர் பொறுப்பில் இருந்தபோது இச்சட்டத்தை நீக்கி, யார் வேண்டுமானாலும் அச்சகம் வைத்துக் கொள்ளலாம் என்ற சட்டத்தைக் கொண்டு வந்தார். அதன் பின் அருமையான தமிழ் நூல்கள் அச்சிடப் பெற்று தொடர்ந்து வெளிவந்தன.

# சிறுகதை மரபுகள்

முனைவர் இராம. குருநாதன்



கதை கூறும் மரபு மிகவும் தொன்மையானது. புனைகதை மரபு தமிழில் மிகப் பழமையானது என்பதற்குச் செம்மொழி நூலான தொல்காப்பியத்திலிருந்து சான்று காட்டலாம். தொல்காப்பியர் புனைவகைக் கதைகளைப் 'பொருளொடு புணர்ந்த பொய்ம்மொழி' எனச் சுட்டுகிறார். உரையாசிரியரான பேராசிரியர், 'யானையும் குருவியும் தம்முள் நட்புக் கொண்டு இன்ன இடத்திற்குப் போய், இன்னவாறு செய்தன என்று ஒருவன் புனைந்துரைக்கும் வகையெல்லாம் இதன்பால் அடங்கின' என அத்தொடருக்கு உரிய விளக்கத்தைக்காட்டுவர். வழிவழியாகச் சொல்லப்பட்டு வந்த கதை மரபினையே இது காட்டுகிறது. 'குறியவும் நெடியவும் உரைபல பயிற்றி' என்று வரும் நெடுநல்வாடைத் தொடர், கூடியிருந்து கதை சொல்லும் மரபு தமிழரிடையே அன்று இருந்தமைக்குரிய அகச்சான்றாகும். நச்சினார்க்கினியர் இதற்குப் 'பொருளொடு புணராப் பொய்ம்மொழியும் மெய்ம் மொழியுமாகிய உரைகள் பலவற்றைப் பலகாலும் சொல்லி' என்றே பொருள் கண்டுள்ளார். இதிலிருந்து உரை என்பது பொய்ம்மையாகவும், மெய்ம்மையாகவும் உரைத்தல் என்பதில் அடங்கிற்று எனத்தெளியலாம்.

தமிழில் கதை கூறும் மரபு இருந்திருப்பினும், பண்டைக் காலத்தில் செய்யுள் வடிவமே ஏட்டில் இடம் பெற்றிருந்தது. சங்கப் பாடல்களில் மாந்தர் கூற்றாக வரும் நிகழ்ச்சிகள் இடம்பெற்றிருப்பினும் அவற்றைக் கதைக் குரிய உரைநடை வடிவத்தோடு இயைபுபடுத்தவியலாது. காதல், வீரம் ஆகிய இரண்டன் பொருண்மைகளில் அடங்கிய சங்க கால மரபை நினைவூட்டிச் செல்லும்படியான போக்கினைத் தொடக்க காலச் சிறுகதைகளின் பொருண்மை மரபின் தொடர்ச்சியாகக் காணலாம். அவற்றில் புராண மரபு, நாட்டுப்புறக் கதையமைப்பு, கதை கூறுவதில் நேரடித் தன்மை, நீண்ட வருணனை, அங்கதம் முதலியனவும் காணப்படுகின்றன. வீரமாமுனிவர், தாண்டவராய முதலியார், வீராசாமி செட்டியார், பண்டித நடேச சாத்திரியார் முதலியோர் படைத்துள்ள கதைகளில் இம்மரபினை அறியமுடிகிறது.

பாரதி கால கட்டத்திற்கு முன் திருமணம் செல்வ கேசவராய முதலியார், மாதவையா, வ.வே.சு ஆகியோர் கதை எழுதினர். இவர்களில் செல்வகேசவராயர் மேனாட்டுப் போக்கிலான தமிழ்ச் சிறுகதை முயற்சியில் ஈடுபட்டு அபிநவக்கதைகள் என்ற கதைத்தொகுதியை வெளியிட்டார். சிறுகதையின் வடிவ முயற்சிக்கு வித்திட்ட வ.வே.சு ஐயருக்கு முன் செல்வகேசவராய முதலியாரால் கதைகள் எழுதப்பட்டதை நினைவு கூரவேண்டும்.

பாரதியார், வ.வே.சு. ஐயர், மாதவையா ஆகியோர் தமிழ்ச்சிறுகதையின் தொடக்க காலத்தவர்கள் எனலாம். தாகூரின் தாக்கத்தால் சிறுகதை முயற்சியில் இறங்கியவர்கள் பாரதியும், வ.வே.சு ஐயரும் என்று சொல்வாருண்டு. தாகூர் கதைகளை மொழிபெயர்த்து வெளியிட்ட பாரதி சிறுகதை முயற்சியிலும் இறங்கினார்.

அக்காலத்தில் நிலவிய சமூகப்போக்குகளைப் பாரதி பாடுபொருளாக்கினார். வடிவ நேர்த்தியில் அவ்வளவாகக் கவனம் செலுத்தாவிட்டாலும் அன்றிருந்த சமூகத்தின் பிற்போக்குத்தனத்தைச் சாடுவதற்குச் சிறுகதை அவருக்குக் கைக்கொடுத்தது. மரபு வழியிலான கதை சொல்லலும், நேரடித் தன்மையிலுமாக அவரது கதைகள் இயங்கின. சமூகத்தில் நிகழும் கொடுமைகள் எடுத்துக் காட்டப் பட்டுள்ளதைப் பாரதியாரின் பல கதைகளில் காணலாம். இதே போக்கில் அவரது சம காலத்தவரான மாதவையா கதைகளைத் தீட்டினார்., வ.வே.சு. ஐயரும் புதுமை படைக்க வேண்டும் என்ற நோக்கில் முன்னிருவரை விட வடிவச் சோதனையில் இறங்கிக் கதைகள் எழுதியவர் ஆவார்.

வ.வே.சு. ஐயரின் குளத்தங்கரை அரசமரம் ஒரு கட்டுக் கதையின் வடிவத்தைப் பெற்றது. ஆயின் அக்கதை தாகூரின் தாக்கத்தால் எழுதப்பட்டது என்று திறனாளிகள் சுட்டினாலும் கூட, அது உள்ளூர்ப் பாட்டிமார் கதைகளின் சாயலில்தான் சொல்லப் பட்டிருக்கிறது. வ.வே.சு. ஐயர் தாம் எழுதிய கதை களுக்கு சூசிகை என்ற பெயரில் முன்குறிப்பு ஒன்றனை மொழிகிறார்.

சூசிகைகளைப் படிக்காமல் கதைகளையே தொடங்கிப் படித்தால் சுவை அதிகமாகத் தெரியும். ஆனால், ரீதி புதிதாகையால் சிலருக்கு விளங்காமல் போனாலும் போகலாம் என்று சூசிகையைச் சேர்த்திருக்கிறேன் எனச் சுட்டியிருப்பது அன்றைய நிலையில் சிறுகதைக்குரிய சிறு விளக்கமாகச் 'சூசிகை' தேவைப்பட்டது போலும்! சிறுகதை என்ற இலக்கிய வகையை மேனாட்டுப் பாணியில் எழுதத் தொடங்கியதால் அவருக்கு 'ரீதி புதிது' என்று சொல்ல வேண்டியிருந்தது.

தொடக்க காலச் சிறுகதையாசிரியர்களில் பாரதி சமூகக் கொடுமைகளைச் சாடியதையும், மாதவையா கருத்து முழக்கத்திற்குக் குரல் கொடுத்ததையும், வ.வே.சு. ஐயர் கலை நுட்பத்தில் கவனம் செலுத்த முயன்றதையும் காணலாம். தமிழ்ச்சிறுகதையின் வளர்ச்சியின் புதிய வாயிலைத் திறந்து வைத்த பெருமை இம்மூவருக்கும் உண்டு.

இவர்களுக்குப் பின் வந்த எழுத்தாளர் பலரும் பல்வேறு வகைகளில் தத்தம் தனித்தன்மையை உணர்த்தும் விதத்தில் எழுதத் தொடங்கினர். விடுதலைக்கு முன்னரும் பின்னருமான கால கட்டங்களில் சிறுகதை எழுதியோர்க்குப் பத்திரிகைகள் பெரிதும் உறுதுணையாக இருந்தன. சிறுகதை வளர்ச்சிப் பாதைக்கு இதழ்கள் உந்து சக்தியாக இருந்து உதவிய கால கட்டத்தில் சிறுகதைகளின் பெருக்கம் கூடிற்று. மணிக்கொடி, காந்தி, சுதந்திரச் சங்கு, ஊழியன், கலாமோகினி, ஆனந்த விகடன், கலைமகள், கல்கி, சக்தி, தேனீ, பொன்னி, சரசுவதி, ஜனசக்தி முதலிய இதழ்கள் சிறுகதைகளுக்கு முதன்மை தந்து வெளியிட்டதோடு அவற்றில் நல்ல தரம் வாய்ந்த சிறுகதைகள் பல வெளிவந்தன.

முப்பதுகளில் சிறுகதை என்ற இலக்கிய வகை வேரூன்றி வளர இடம் கொடுத்தது மணிக்கொடி இதழ். உருவம், உத்தி, உள்ளடக்கம் இவற்றில் கவனம் செலுத்திய பல கதைகளைக் கலை நயத்தோடு வெளிப்படுத்திய கால கட்டமாக மணிக்கொடிக் காலம் விளங்கியது. பி.எஸ். இராமையா, சி.சு.செல்லப்பா ந.பிச்சமூர்த்தி, ல.சா.ராமாமிர்தம், மௌனி, கு.ப.ரா, புதுமைப்பித்தன், கி.ரா, சிதம்பர சுப்பிரமணியன் சிட்டி, எம்.வி. வெங்கட்ராமன் முதலியோர் மணிக்கொடியில் எழுதிய கதைகள் தரத்தோடும் புனைகதைத் திறத்தோடும் அமைந்திருந்தன.

சிறுகதைக்குப் பெரும் மதிப்பளித்த மணிக்கொடி இதழ் அத்துறையில் பலரை ஈர்ப்பதற்குக் காரண மாயிற்று. மணிக்கொடி எழுத்தாளர்களில் ஒருவரான புதுமைப்பித்தன் செய்து பார்த்த சோதனை முயற்சிகள் புதியனவாக இருந்தன. உள்ளடக்கம், உத்தி, கதை சொல்லும் முறை, எள்ளல், புராணக் கதைகளை மறுபரிசீலனைக்கு உள்ளாக்குதல் போன்றவற்றால் சிறுகதை வளர்ச்சியில் ஒரு புது அணுகுமுறையைப் புகுத்தியவராவார். அவர் கதைகள் அவர் காலத்திலேயே விவாதத்தை உண்டாக்கின.

'என் கதைகள் ஒவ்வொன்றும் ஒரு விவகாரத்தைப் பற்றியதாக இருக்கும். ஆனால் என் கதைகளில் பொதுத்தன்மை நம்பிக்கை வறட்சி'

என்று அவரே தம் கதைகளைப் பற்றிய இயல்பினைக் குறிப்பிட்டுள்ளார். கதைகள் பற்றிய வன்மையான திறனாய்வுகளும் அவர்காலத்தில் இருந்து தொடர்ந்து வந்துகொண்டிருந்தது. இதன் தொடர்ச்சி போல, புதுமைப்பித்தனின் பாதிப்பினைப் பெற்று எழுத வந்த ஜெயகாந்தன் கதைகளுக்கும் நேர்ந்ததுண்டு. இது பின்னால் சிறுகதை ஆராய்ச்சிக்கு வித்திட்ட திறனாய்வு மரபாக உருவானது.

மணிக்கொடியில் எழுதி வந்த மற்றொரு சிறுகதை யாசிரியரான கு.ப.ரா.வால் ஆண், பெண் மன அசைவுளை உணர்ச்சியோடும், உயிர்த்துடிப்பான உரையாடலோடும் கவித்துவமாகக் கதை சொல்ல முடிந்தது. தாம் எழுதும் நடையில் புதுவிதத்தன்மை பற்றி அவரது கருத்தாவது,

'கருத்தின் வேகத்தையே பிரதானமாகக்கொண்டு தாவித் தாவிச் செல்லும் நடை ஒன்றை நான் அமைத்தேன். அது தானாக எனக்குள் வகுத்துக் கொண்ட ஒரு பாதை. அது தமிழ்ப் பண்புக்கு முற்றிலும் புதிது' எனச் சுட்டியிருப்பது அவர் நடையைப் பின்பற்றி எழுத வந்தவர்களுக்கு ஓர் உந்து சக்தியாகத் திகழ்ந்தது. கு.ப.ரா வின் பாதிப்பினை அவருக்குப் பின்வந்த சி.சு.செல்லப்பா, ஆர்.சண்முகசுந்தரம், எம்.வி.வெங்கட் ராமன் ஆகியோர் பெற்றிருந்தனர்.

மணிக்கொடியில் ந.பிச்சமூர்த்தி, மௌனி முதலியோர் எழுதி வந்த கதைகள் தனித்தன்மை பெற்றிருந்தன. ந.பிச்சமூர்த்தி சிக்கனமான சொற்செட்டும், தத்துவார்த்தமான உணர்வும் வெளிப்பட எழுதியவர். புதுமைப்பித்தன் மௌனியைத் 'தமிழ்ச் சிறுகதையின் திருமூலர்' என்று பாராட்டியதுண்டு. மணிக்கொடி இதழ் வணிக நோக்கின்றிக் கலையின் மீது கொண்ட ஆர்வ நாட்டத்தைப் புலப்படுத்தினாலும், பல்வேறு சிரமங்களுக்கிடையே அவ்விதழை நடத்திவந்தனர். இது புறமிருக்க, இதனினின்றும் வேறொறு தளத்தில் கல்கி வணிகநோக்குக்கு ஏற்பக் கதைகள் எழுதி வந்தார். வாசகத்தன்மை, காந்தியப் பின்னணி, விடுதலை நாட்டம், எளிதில் புரியும்படியான நடை, நகைச்சுவை உணர்வு, கற்பனா வாதம், ஆசிரியர் குறுக்கீடு, எதிர்பாராத திருப்பம் முதலியவற்றால் தம்மை அடையாளப்படுத்தித் தமக்கென்று ஏராளமான வாசகர்களைக் கொண்டிருந்தார். கல்கி மரபு என்று சொல்லக்கூடிய அளவிற்கு அவர் பாணியில் எழுத்தாளர்கள் பலரும் உருவானார்கள். அவர்கள் பெரும்பான்மையும் காந்திய நெறியைக் கதைகளில் பரப்பவேண்டும் என்ற சிந்தனையைப் பின்புலமாகக் கொண்டிருந்தனர். நாடு விடுதலை அடைந்த கால கட்டத்தில் அகிலன், நா.பார்த்தசாரதி, இராஜம் கிருஷ்ணன் முதலியோர் கல்கியின் பாதையைப் பின்பற்றிக் காந்தியப் பின்னணியில் கதை எழுதும் மரபினைத் தொடர்ந்தவர்கள் ஆவர்.

மணிக்கொடி காலத்திற்கு முன்னரும், கல்கி காலத்திற்கு முன்னரும் நாரண. துரைக்கண்ணனும் தி.ஜ. ரங்கநாதனும் சமூகச் சிக்கல்களை மையப்படுத்திய கதைகளை எழுதிவந்தனர். ஆயினும், கல்கி மரபு ஒரு குறிப்பிட்ட காலம் வரையில் நீடிக்க வாசகத் தன்மை ஒரு காரணமாக இருந்துள்ளது. இது அறுபதுகள் வரை நீடித்தது.

மணிக்கொடி கால கட்டத்தை அடுத்து, இயக்க அளவிலான பார்வையில் திராவிட இயக்கத்தினர் சிலர் இலக்கியத் துறையில் கால் பதிக்கத் தொடங்கினர். அவர்களுக்குத் தங்கள் இயக்கத்தின் வழியே கொள்கை முழக்கத்தை வெளிப்படுத்த சிறுகதை ஆயுதமாகப் பயன்பட்டது. சிறுகதை, நாடகம், நாவல் ஆகியவற்றில் திராவிட இயக்கக் கொள்கையை வெளிப்படுத்தினர். திராவிட இலக்கிய மரபு என்ற ஒன்று உருவாகி வளர்வதற்கு அதன் முன்னணித் தலைவர்கள் நடத்திவந்த இதழ்களும் காரணமாக இருந்தன.

அறிஞர் அண்ணா, கலைஞர் கருணாநிதி, டி.கே.சீனிவாசன், தில்லை வில்லாளன் முதலியோர் எழுதிய கதைகள் பெரும்பாலும் சமூகச் சீர்திருத்தத்தை முன்னிருத்தின. மூடநம்பிக்கை, பண்ணையார் இழைக்கும் கொடுமைகள், போலிச்சாமியார்கள் சமயத்தின் பேரால் இழைக்கும் தீங்கு, விதவா மணம், கைம்பெண் கொடுமை வடவர் எதிர்ப்பு, ஆரியர் சூழ்ச்சி, சாதிய எதிர்ப்பு, பெண்கள் நிலை முதலியவற்றை வெளிப் படுத்தவும், தங்கள் இயக்கத்தின் கொள்கைகளைப் பரப்பவும் சிறுகதை வடிவத்தைப் பயன்படுத்தினார்கள். சிறுகதை இலக்கிய வகையை ஒரு சமுதாயத் திறனாய்வுக் கண்ணோட்டத்திற்குரிய கருவியாகக் கொண்டிருந்ததைக் காணலாம். திராவிட இயக்கம் பெரும்பான்மையும் மரபுவழிச் சார்ந்த சிறுகதை வடிவத்தையே கையாண்டாலும், உத்திமுறை, வடிவ நேர்த்தி ஆகியவற்றைக் காட்டிலும் சமூகச் சீர்திருத்தக் கருத்துகளுக்கும், பகுத்தறிவுச் சிந்தனைகளுக்கும் முதன்மை அளித்தது அன்றைய கால கட்டத்தின் தேவையாக இருந்தது. இருப்பினும் சிறுகதையின் வடிவச் செழுமையைப் போற்றிய படைப்புகளையும் சில சிறுகதை வார்ப்புகளில் காணமுடிகிறது. சமூக சீர்திருத்தத்தைத் தொடக்க காலச் சிறுகதைகளில் சிறுகதை முன்னோடிகள் எடுத்துக் கூறியதற்கும், திராவிட இயக்கத்தினர் அவற்றை எழுத்தில் தீவிரமாக்கியதற்கும் வேறுபாடு இருந்துள்ளது. அழுத்தந்திருத்தமாகவும், வீறுணர்ச்சிப் படவும் சொல்லி இருப்பது, திராவிட இயக்கச் சிறுகதையாசிரியர்களின் தனித்தன்மையைக் காட்டுகிறது. தமிழ் உரைநடையில் ஒரு மறுமலர்ச்சிப் போக்கை உருவாக்கியதில் அவ்வியக்கத்திற்குப் பங்கு உண்டு என்பதனை அவர்கள் படைத்தளித்த சிறுகதைகள் உணர்த்திக் கொண்டிருக்கின்றன.

நாட்டுப்புறச் சாயல் கொண்ட தொடக்க கால மரபு, காந்தியமும் விடுதலை உணர்வும் கைகோத்த மரபு, கலைநுட்பஞ்செறிந்து கலையைக் கலையாகப் பார்த்த மணிக்கொடி மரபு, கொள்கை முழக்கத்திற்குக் கதைகளைக் கருவியாகக் கொண்ட திராவிட இயக்க மரபு என்பனவற்றின் தொடர்ச்சியாக முற்போக்குக் கொள்கையை வெளிப்படுத்திச் சமூக நடப்பியல் சார்ந்த பொதுவுடைமை இயக்க மரபு மார்க்சின் சிந்தனையில் இயங்கத்தொடங்கியது.

பொதுவுடைமைக் கொள்கையால் ஈர்க்கப்பட்ட எழுத்தாளர்கள், சமூகத்தின் அவலங்களையும், அன்றாட வாழ்க்கைச் சிக்கல்களையும் யதார்த்த உணர்வுடன் கையாள்வதனை நோக்கமாகக்கொண்டு கதைகளைப் படைத்தளித்தனர். விந்தன், ஜெயகாந்தன், தொ.மு.சி. ரகுநாதன், சுந்தர ராமசாமி, தனுஷ்கோடி ராமசாமி, சு.சமுத்திரம், அசுவகோஷ், பா. செயபிரகாசம், பொன்னீலன், கந்தர்வன் மேலாண்மை பொன்னுசாமி, ச.தமிழ்ச்செல்வன் தேனி. சீருடையான், ப. ஜீவ காருண்யன் முதலியோர் பொதுவுடைமை இயக்கச் சார்பில் நின்று சிறுகதைகள் எழுத வந்தவர்களாவர். இவர்களிடம் வாழ்க்கை பற்றிய தனிப்பார்வை இருந்தது.

கிராமியப் பின்புலம், நகரியச் சீரழிவு, அன்றாடங் காய்ச்சிகளின் அவல வாழ்க்கைச் சித்திரிப்பு, மண்வாசனை, வட்டார வழக்கு முதலியவற்றை இவ்வியக்கத்தினர் பயன்படுத்திச் சிறுகதைகளைப் படைத்தனர். விந்தனின் வழித்தோன்றலாக எழுதவந்த ஜெயகாந்தன் அறுபதுகளிலும், எழுபதுகளிலும் படைத்தளித்த கதைகள் சிறந்து விளங்கின. வெகுசனப்பத்திரிகையிலும் கூடத் தம் எண்ணத்திற்கும் கொள்கைக்கும் உகந்தவாறு ஏழை எளிய மக்களின் அன்றாட வாழ்க்கையை யதார்த்தமாகப் படைத்துத் தமக்கென்று ஓர் அடையாளத்தைப் பெற்றிருந்தார் ஜெயகாந்தன். நடைபாதை மனிதர்களைப் பற்றி ஆழமாகச் சித்திரிப்பதனை விரிவுபடுத்திய மரபு ஜெயகாந்தனுடையது. இந்த மரபு இன்றளவும் பொதுவுடைமை எழுத்தாளர்களின் சிறுகதைகளில் அடித்தளம் இட்டுவருகிறது. புதுமைப்பித்தன், விந்தன் ஆகியோருக்குப்பிறகு படைப்புக்கலையில் சமரசம் செய்துகொள்ளாத போக்கும், சிறுகதை வார்ப்பில் செழுமையும் கொண்டு கதைகளைப் படைத்தளித்த ஜெயகாந்தன் சிறுகதை உலகில் மிகுதியும் பேசப்பட்டவர்.

பொழுதுபோக்கு, எளிதில் கதை சொல்லும் போக்கு, உள்ளத்தில் கவனம், வாசகத்தன்மை ஆகிய இவற்றை உள்ளிட்டுக் கதைகள் படைத்தோருள் அழகிரிசாமி, வல்லிக்கண்ணன், தி.ஜானகிராமன். தாமரைமணாளன், வையவன், பிரபஞ்சன், பாலகுமாரன், தாமரை

செந்தூர்பாண்டி முதலியோர் குறிப்பிடப்பட வேண்டியவர் களாவர். இவர்களில் வல்லிக்கண்ணன், தி. ஜானகிராமன், அழகிரிசாமி, பிரபஞ்சன் ஆகியோர் பாடு பொருள்களில் புதுமை காண முற்பட்டவர்களாவர்.

கு.ப.ரா.வின் பாதிப்பினைப் பெற்றுக் கதை எழுதி யோருள் கு.அழகிரிசாமியும் ஒருவர். தி.ஜானகிராமன் வட்டார மொழியில் கதை சொல்லும் மரபைப் போற்றியவர். பாத்திர வார்ப்பின் அழுத்தமும், உரையாடல் செறிவும் இவரது தனித்தன்மையைக் காட்டும். வட்டார வழக்கில் கதை கூறும் மரபு புதுமைப்பித்தன் காலத்தில் தோன்றியது. அவர் திருநெல்வேலி மொழிநடையைப் பின்பற்றினார். வட்டார வழக்கினைப் பயன்படுத்தியதற்கு அவர் முன்னோடி எனலாம். பின்னர் வந்த ஜானகிராமன் தஞ்சை மக்களின் பேச்சினையும், கி. ராஜநாராயணன் தெலுங்கு பேசும் மக்களின் மொழி நடையையும், எம்.வி. வெங்கட்ராமன் சௌராஷ்டிர மொழிநடையையும் ஆங்காங்கே பேச்சு வழக்கில் கையாண்டனர். ஜெயகாந்தன் சென்னைத் தமிழை இலாவகமாகக் கையாண்டுள்ளதையும் எண்ணிப் பார்க்கலாம்.

சிறுகதை வளர்ச்சியில் மரபுமாற்றமும் புதுமையும் அவ்வப்போது நிகழ்ந்து வந்துள்ளதெனினும் பெருவாரியாக அறுபதிலும், அதற்குப் பிறகும்தான் அது புதிய திசைநோக்கி நகர்வதாயிற்று. இலக்கிய நுட்பம், கலை உணர்வு, உளவியல் அணுகுமுறை, அடித்தட்டு மக்களின் வாழ்வியல் கண்ணோட்டம், மேனாட்டுப் பாணி முதலியவற்றில் புதிய பார்வைகளை ஆழமாகப் பதிவு செய்த காலகட்டம் அறுபதிலும், அதற்குப் பின்னரும்தான் எழுந்தது. எழுத்தாளர் பலரும் புதுமைநோக்கில் கதை சொல்வதிலும், உத்தி, உருவம், உள்ளடக்கம், ஆகியவற்றில் கவனம் செலுத்தியதிலும் முனைப்போடு இயங்கத் தொடங்கியது. தமிழ்ச் சிறுகதையில் ஒரு புதிய தடத்தை உருவாக்கிய கால கட்டமாகவும் விளங்கிற்று.

க.நா.சு., லா.ச. ராமாமிர்தம், இந்திரா பார்த்தசாரதி, அசோக மித்திரன், சுஜாதா, நீல.பத்மநாபன், சா.கந்தசாமி, வண்ணதாசன், வண்ணநிலவன், மாலன், ஜெயந்தன், சுப்பிரமணிய ராஜு, ஆதவன், நகுலன், கிருஷ்ணன் நம்பி, ஜி.நாகராஜன், ஆ.மாதவன், திலீப் குமார், கோபி கிருஷ்ணன், நாஞ்சில் நாடன், பால குமாரன், ஜெயமோகன் முதலியோர் புதுமையான போக்கில் கலை நுட்பத்தோடும், உத்திமுறைகளில் புதிய பொலிவோடும் கதை எழுதியவர்கள் ஆவர்.

மனத்தின் சலனங்களை எடுத்துரைத்தல், கதை மாந்தரின் உணர்வுகளை உரையாடலின் அழுத்தத்தோடு காட்டுதல், கதைக்குள் கதை, கதையில்லாமல் எண்ணங்களை நனைவோடையில் கூறுதல், ஆங்கிலக் கலப்பு நடை முதலிய போக்குகளை இக்கால கட்டத்தில் காணமுடிகிறது.

இவர்களில் சிலருக்கு முந்தைய காலகட்ட எழுத்தாளர்களின் பாதிப்பும் இருந்துள்ளது. புதுமைப்பித்தன், கு.ப.ரா., மௌனி, தி.ஜானகிராமன் ஆகியோரின் தொடர்ச்சியை இவர்களிடம் காணமுடிந்தாலும் சில புதிய அணுகுமுறையையும், கதை கூறும் நேர்த்தியையும் நாளடைவில் வளர்த்துக்கொண்ட இவர்களில் சிலர், தமக்குரிய அடையாளங்களைச் சிறுகதை உலகில் பதிவு செய்துள்ளனர்.

ஆங்கில இலக்கிய வாசிப்புத் தளத்தில் மிகுந்த கவனம் செலுத்தித் தமிழ்ச் சிறுகதை உலகில் பாதிப்பை ஏற்படுத்தியவர்களில் குறிப்பிடத்தக்கவர் சுஜாதா. அறிவியல் கருத்துகளைப் பொழுதுபோக்குத் தன்மையில் கலந்து புதிய மரபினைத் தொடங்கிவைத்தவர் அவர். அறுபதுகளுக்குப் பின்னர் சுமார் இருபதாண்டு காலமாக, எல்லா இதழ்களிலும் தவறாது இவர் கதைகள் இடம் பெற்றிருந்தன. இவரது கதைகளில் காணப்பட்ட உத்தியும், சொல்லும் முறையும், மொழிநடையும் அதற்குரிய காரணங்களாக இருந்துள்ளன. இந்த மரபைப் பேணியவர்களில் இரா. முருகன், ஜெயமோகன், சாரு நிவேதிதா ஆகியோரையும், தொண்ணூறுகளுக்குப் பின்னர் எழுத வந்த படைப்பாளர்கள் சிலரையும் குறிப்பிடவேண்டும். தமிழ் நடையில் ஒரு புதிய போக்கினைப் புகுத்தியதன் மூலம் படைப்புக்குரிய நடையில் சில பொலிவுகளை ஏற்படுத்தியவர் சுஜாதா என்பதை மறுக்கவியலாது.

அறுபதுகளுக்குப் பின் உள்ள கால கட்டங்களில் கலை இலக்கிய உணர்வுக்கு மதிப்பளித்து வெளிவந்த எழுத்து, கணையாழி, தாமரை, இலக்கிய வட்டம், தீபம், யாத்ரா, கசடதபற, கண்ணதாசன், சுவடு முதலிய இதழ்கள் சிறுகதை முயற்சியில் புதிய போக்கினைக் காட்டுதற்கு உறுதுணையாக இருந்துள்ளன. இதன் தொடர்ச்சியாக எண்பதுகளிலும், தொண்ணூறுகளிலும் காலச்சுவடு, கல்குதிரை, சுபமங்களா, காலக்குறி, அட்சரம், புதுப்புனல், புதிய விருட்சம், ஆரண்யா, தீராநதி முதலிய சிற்றிதழ்களும் அப்பணியைத் தொடர்ந்தன, தொடர்கின்றன. இவற்றில் சில இதழ்கள் மேனாட்டுப்பாணிக் கதைகளையும், மொழிபெயர்ப்புக் கதைகளையும் வெளியிட்டுச் சிறுகதைகளின் தளத்தை விரிவுபடுத்தக் காரணமாக இருந்துவருகின்றன.

பிற மதங்களின் வாழ்க்கைப் போக்குகளை எடுத்துச் சொல்லும் மரபினைச் சிறுகதைகளில் காணலாம். இசுலாமிய மதத்தைச் சார்ந்தோரால் அச்சமயப் பின்னணியோடு சமுதாய வாழ்க்கையை எதார்த்தமாகப்

படைத்துக் காட்டியவருள் மஹதி, மகுதூம், ஜே. எம். சாலி ஆகியோர் முன்னோடியாக இருந்து எழுதிவந்தனர். அவர்களுக்குப் பின்னர், தோப்பில் முகமது மீரான், மல்லாரி, களந்தை பீர்முகமது, மீரான், நத்தார் ஷா முதலியோர் இசுலாமியப் பின்னணியில் தங்கள் படைப்புகளை எழுதிவருகின்றனர். அதுபோல, கிறித்துவச் சமயப் பின்னணியில் ஆர். எஸ். ஜாக்கப், டேவிட் சித்தையா, ஐசக் அருமைராஜன், கார்த்திகா ராஜ்குமார் முதலியோர் எழுதிவருகின்றனர். சமயப் பின்னணியில் எழுதுவோர் தங்கள் சமய நெறிகளை ஏற்றும், சில போக்குகளில் மதக்கொள்கைகளைத் திறனாய்வு செய்தும் வந்திருப்பதனை ஒரு மரபாகவே கொண்டிருப்பதனை அவர்களின் படைப்புத் தளத்திலிருந்து அறியமுடிகிறது.

சிறுவர்க்கான சிறுகதை எழுதி வந்ததையும் சிறுகதை மரபில் சேர்த்துக் காணுதல் வேண்டும். சிறுவர்க்கான சிறுகதைகளில் பாடுபொருள்கள் பெரும்பாலும் நல்ல பண்புகளை வளர்த்தல் என்ற அடிப்படையில் எழுதப்பட்டன. சிறுவர்கள் துப்பறிதல், அவர்களின் நுண்ணறிவை வெளிப்படுத்துதல், வியத்தகு நிகழ்ச்சிகள், வீரதீரச் செயல்கள் முதலிய பாடுபொருள்களில் சிறுவர் கதைகள் இயங்கின. வாண்டுமாமா, ஆர்வி, அழ.வள்ளியப்பா, பூவண்ணன், ரேவதி, பூவை.அமுதன், கே.பி.நீலமணி முதலியோர் சிறுவர்க்கான சிறுகதைகள் படைத்தோருள் குறிப்பிடப்படவேண்டியவர்களாவர். சிறுவர்க்கான இதழ்கள் ஒரு கால கட்டத்தில் சிறப்பிடம் பெற்றிருந்தன. கண்ணன், பாலர் மலர், டிங்டாங் முதலிய இதழ்கள் அவ்வகையில் சுட்டிக்காட்டத்தக்கன.

அயல் நாடுகளில் வாழும் புலம் பெயர் தமிழர்களின் சிறுகதைப் படைப்புகளில் அவர்களின் சமூக, வரலாற்றுப் பின்னணியோடு கூடிய வாழ்க்கை முறைகளைக் காணமுடிகிறது. அவர்களின் தனிப்பட்ட வாழ்க்கை மரபு, பிற மதத்தவராலும், அங்குள்ள அரசியல் சூழலாலும் பாதிக்கப்படும் நிலை முதலியவற்றைப் பதிவு செய்திருப்பதனைக் காணலாம்.

தமிழ்ச் சிறுகதைப் படைப்பாளர்களில் இன்றைய தலைமுறை சார்ந்த எஸ். இராமகிருஷ்ணன், சுரேஷ்குமார், யுவன் சந்திரசேகரன், யவனிகா ஸ்ரீராம், பாவண்ணன், பால்நிலவன், பாரதி பாலன், சங்கரநாராயணன், ஏ.ஹெச்.ஏ. கோரி, சுப்ரபாரதி மணியன், சுரேஷ்குமார், இந்திரஜித், பவா.செல்லத்துரை முதலியோர் குறிக்கத்தக்க சிறுகதையாசிரியர்கள் ஆவர். புதிய பாடுபொருள், நகரிய நாகரிகம், கிராமிய வாழ்வின் சிக்கல்கள், மாறிவரும் உலகின் புதிய கோணங்கள் முதலியவற்றை நோக்கமாகக் கொண்டு புதிய மரபினைச் சிறுகதைகளில் தோற்றுவித்துள்ளனர்.

இந்த நூற்றாண்டிலும், சென்ற நூற்றாண்டிலும் பெண்ணியம், தலித்தியம் ஆகிய இருபெரும் நிலைகளில் இலக்கிய உலகம் இயங்கத்தொடங்கியது. பெண்ணிய எழுத்துகள் மலர்வதற்கு முன்னரே பெண் எழுத்தாளர்கள் சிலர் மரபின்வழிக் கதைகளைப் படைத்துவந்துள்ளனர். லட்சுமி, சூடாமணி, லஷ்மி சுப்பிரமணியம், அனுராதா ரமணன், ஜோதிர் லதா கிரிஜா, இந்துமதி, சிவசங்கரி, வாஸந்தி முதலியோர் இவ்வகையில் முன்னோடிகளாவர். மரபு சார்ந்த கதைகளை இவர்கள் படைப்பதற்கு வெகுசன இதழ்கள் உதவின. அம்பை, திலகவதி, க்ருஷாங்கினி, செண்பகம் இராமசாமி, புதிய மாதவி முதலியோரிடம் பெண்ணியம் சார்ந்த கதைகளை ஆழமாக உணர்த்தும் போக்கு இருந்துள்ளது; இருந்தும் வருகிறது.

தலித்தியம் சார்ந்த கதைகள் தொண்ணூறு களுக்குப் பிறகு வீறு பெற்று வருகிறது. விளிம்புநிலை மாந்தர்களின் அடிப்படையான சிக்கல்களையும், அவர்களின் அன்றாட வாழ்க்கை அவலங்களையும் தலித்தியப் பார்வையுடன் கதைகளில் பதிவு செய்து வருவதனைப் புதிய மரபு என்று சொல்லலாம். பூமணி, இமயம், சிவகாமி, சோ. தர்மன், ரவிக்குமார், விழி. பா. இதயவேந்தன், பிரதிபா ஜெயச்சந்திரன், பாமா, அழகிய பெரியவன், அபிமானி, பெருமாள், முருகன் முதலியோர் தலித்தியப் பார்வையில் சிறுகதைகள் படைத்துவருகின்றனர். தலித்திய இளம் படைப்பாளர்கள் தலித் இலக்கியம் என்ற கருத்தியலை உருவாக்கினர். அத்தகைய இலக்கியம் வளர்வதற்கு மனுசங்க, தலித், தலித் முரசு, தலித் முழக்கம், புதிய கோடாங்கி முதலிய இதழ்கள் உறுதுணையாக இருந்துள்ளன.

இற்றை நாளில் நவீனத்துவம் என்ற பெயரில் சிறுகதைகளைப் புதிய அணுகுமுறையில் எழுதிவருகின்றனர். தீவிரமான தளத்தில் சிறுகதை உலகம் இன்றைய நாளில் இயங்கிவருகிறது. கதையை நேர்த்தியானதொரு சிற்பம் போலச் செதுக்கும் பாணி பின்பற்றப்படுகிறது. உருவ அழகு கிடைத்த அளவிற்கு உள்ளடக்கம் பற்றிய சிந்தனை அரிதாகி வருகிறது. கற்பனையும் போலிப்பூச்சும் அற்ற கதைகள் ஒருபுறம், அதே சமயத்தில் கதையைக் கதையிலிருந்து வெளியேற்றும் பின் நவீனத்துவப் பாணி, தொன்மத்தை மீட்டெடுத்தல், கதைப் பின்னலை எளிதாகப் புலப்படாவண்ணம் சொல்லுதல், கதையில் மையம் என்ற ஒன்றில்லாமல் கதை கூறல், படிம வழியிலான வகையில் கதை சொல்லுதல், பின் நவீனத்துவமான போக்கில் மரபினைக் கட்டுடைத்தல், மாயாவாத நடப்பியல், நடுவிலிருந்து கதையின் மையத்தை எடுத்துக்கூறல், இனம் புரியாத ஒருவகை மொழிநடை முதலிய

போக்குகளை அண்மைக் காலச் சிறுகதைகளில் சிலர் முன்னெடுத்துச் செல்வதைக் காணலாம். இத்தகையோரிடம் இடாலோ கால்வினோ, ஹோர்ஸே லூயிஸ் போர்ஹே, கேப்ரியல் கார்சியா மார்க்விஸ் போன்ற மேற்கத்திய படைப்பாளிகளின் பாதிப்பினைத் தமிழ் எழுத்தாளர்களிடம் காணமுடிகிறது. கோணங்கி, கௌதம சித்தார்த்தன், எம்.ஜி. சுரேஷ், சாரு நிவேதிதா, ரமேஷ் பிரேம், ச. ராசநாயகம், ஸ்ரீராம் முதலியோரின் படைப்புகளில் மேற்கூறிய போக்குகள் காணப்படுகின்றன. இந்த வகையான கதைகளில் ஒரு புதிரான தன்மை காணப்படுதற்குத் திறனாய்வாளர்களில் சிலர், அவற்றின் புரியாமையைக் காரணமாகக் காட்டுகிறார்கள். இந்தப் புதுவகை மரபிற்குப் பொதுவான வரவேற்பு வெகுசன வாசகர்களிடமிருந்து கிடைப்பது அரிதெனினும், இதற்கென்று வாசகர்கள் இருப்பதை உணர்ந்து, இத்தகைய கதைகள் சிற்றிதழ்களில் வெளிவந்து ஒரு புதிய வழித்தடத்தைத் தமிழ்ச் சிறுகதை உலகில் பரப்பிவருகின்றன.

இன்றைய சிறுகதை வளர்ச்சி பெரும்பாலும் வெகுசன இதழ்களை விட்டு விலகிச் சிற்றிதழ்கள் வழியே தம் இருப்பை உணர்த்திக்கொண்டு வருகிறது. சிறுகதைகளுக்குச் சிற்றிதழ்கள் தருகின்ற ஆதரவை வெகுசன இதழ்கள் தருவதில்லை. இன்னும் சொல்லப்போனால், சிறுகதை வடிவங்களை வெகுசன இதழ்கள் மிகவும் குறுக்கி அரைப் பக்கக் கதை, கால் பக்கக் கதை என்றெல்லாம் சுருக்கிச் செல்பேசிபோலக் கைக்குள் அடக்கமாகிவிட்டது.

முன்பெல்லாம் வெகுசன இதழ்கள் சிறுகதைகளுக்கென்று முதன்மை அளித்து இதழ்களின் மதிப்பைக் கூட்டின. அத்தகைய நிலை இன்று வெகுசன இதழ்களில் இல்லை எனக் கூறலாம். ஆயின், சிற்றிதழ்கள் பல பெருகிவிட்ட இன்றைய சூழலில் புதிய வகையிலான சிறுகதைகளை அவை வெளியிட்டுப் புதுமைக்கு வழிவகுக்க முயல்வதற்குத் துணைசெய்வனவாய் உள்ளன.

தொண்ணூறுகளின் இறுதியிலும், அண்மைக் காலத்தும் புதிய பாணியிலான நவீனக் கதை மரபு தோன்றுவதற்கு இன்றைய கணினி யுகமும் ஒரு காரணமாக இருந்துவருகிறது. வலைத்தளத்தில் கதை கூறும் போக்கு இன்று வளர்ந்து வருகிறது. அதில் சுதந்திரமாக இயங்கும் போக்கு இருப்பதால் தங்கள் எண்ணப்படி எழுதி வருவதும் புது மரபாக உள்ளது.

❖

**செம்மொழி பற்றி மேலைச் சிவபுரி சன்மார்க்க சபையாரின் செயற்பாடு**

இச்சபையின் ஒன்பதாவது ஆண்டு நிறைவு விழா காலயுக்தி, சித்திரைமீ 23, 24உகளில் முன்னே தேவகோட்டையில் டெப்டிக் கலெக்டராக இருந்து, இதுசமயம் உபகாரச் சம்பளம் பெற்று வரும் ராவ்பகதூர் சைவத்திருவாளர், **T.N.** சிவஞானம் பிள்ளையவர்கள் தலைமையின்பால் மிகவுஞ் சிறப்பாக நடைபெற்றது. அக்காலத்தில் மாணாக்கர்களுக்குப் பரிசளிக்கப்பட்டதோடு, தமிழ்வித்துவான் ப்ரம்ம ஸ்ரீ. சுந்தரேஸ்வரய்யரவர்கள்; தூத்துக்கடி வக்கீல் ஸ்ரீமான் **S.S.** பாரதி அவர்கள் M.A., B.L., மதுரை வக்கீல் ஸ்ரீமான் **J.M.** நல்லசாமிப்பிள்ளையவர்கள் B.A., B.L., இருமொழிப்புலமைப் பெருமைசால் புலவர் ஸ்ரீமான் மு. கதிரேசச்செட்டியாரவர்கள், பலவான்குடிஆசிரியர் ஸ்ரீமான் குமாரவீரய்யரவர்கள் முதலியோர் பல உயர்ந்த பிரசங்கங்கள் செய்தார்கள். இன்னுந் தமிழ் உயர்தனிச் செம்மொழியாகக் (Classical Language) கருதப்பட வேண்டுமெனவும், அஃது ஐ.சி.எஸ். பரீட்சைக்குப் பாடமாக ஏற்படுத்தப்பட வேண்டுமெனவுந் தீர்மானங்கள் செய்யப்பட்டு, அவைகள் மாட்சிமிக்க அரசப்பிரதிநிதியார்க்கும், சென்னை கவர்னரவர்கட்கும், சென்னை, கல்கத்தா, பம்பாய், அலகபாத், காசி, பஞ்சாப் முதலிய பல்கலைக்கழகங்கட்கும் (University) அனுப்பப்பட்டன. எல்லா இடங்களினின்றும் தீர்மானங்கள் கவனிக்கப்படுமென்று விடைகளும் வந்துள்ளன.

தகவல் : முனைவர் தா. மணி,
முதல்வர், கணேசர் கலை அறிவியல் கல்லூரி,
மேலைச் சிவபுரி.

# தமிழ்ச் சிறுகதைகளும் ஒடுக்கப்பட்ட பெண் குரலும்

முனைவர் க. பஞ்சாங்கம்



இன்றுவரை இந்த உலகத்தை– மனித வாழ்வை–அறிதல் என்கிற செயல்பாடு ஆண்களின் பார்வையில், ஆண்களுக்கான மொழியால் நிகழ்த்தப்பட்டுக் கொண்டிருக்கிறது. மனிதவாழ்வு எனும் இயக்கத்தில் சரிபாதியாகப் பங்கெடுக்கும் பெண்ணின் பார்வையும் அவர்களுக்கான மொழியாடலும் இல்லாமல் ஆக்கப்பட்டிருக்கின்றன அல்லது உறைந்து போகுமாறு செயல்பட்டிருக்கின்றன என்ற உண்மையை இன்றைய பெண்ணியச் சிந்தனையாளர்கள் வெளிக்கொண்டு வந்திருக்கின்றனர். இத்தகைய புதிய சூழலில் இதுவரை அறிந்தவை எனச் சொல்லப்பட்டவைமேல், மறுவாசிப்பு நிகழ்த்த வேண்டிய சூழல் ஏற்பட்டிருக்கிறது. இத்தகைய முயற்சிகளுக்குத் துணையாகச் சிதைவாக்கத் திறனாய்வு, பின்–நவீனத்துவத் திறனாய்வு ஆகிய திறனாய்வுகள் சார்ந்த சிந்தனை முறைகளும் வந்து சேர்ந்திருப்பதால், மானுட சமூகத்தின் சிந்தனை வரலாறே புதிய ஒரு போக்கில் நகரத் தொடங்கியிருக்கிறது. இத்தகைய சூழலில் ஏறத்தாழ ஒரு நூற்றாண்டு வரலாறு உடைய தமிழ்ச் சிறுகதைகளில் பெண்ணியம் சார்ந்த சொல்லாடல்கள் எவ்வாறு புனையப் பட்டுள்ளன என்பதை விளக்குவதற்கு இந்தக் கட்டுரையில் முயற்சி மேற்கொள்ளப்படுகிறது.

தமிழ்ச் சிறுகதையினை வரலாற்றுப் போக்கில் விளக்க முயன்ற சிட்டி மற்றும் சிவபாதசுந்தரம் ஆகியோர், அதை நான்கு கட்டங்களாக வகுக்கிறார்கள்.

1. 1850 முதல் 1925 வரை– முதல் கட்டம்.
2. 1926 முதல் 1945 வரை– இரண்டாம் கட்டம்.
3. 1946 முதல் 1960 வரை– மூன்றாம் கட்டம்.
4. 1960 முதல் 1978 வரை– நான்காவது கட்டம்.

( தமிழில் சிறுகதை–வரலாறும் வளர்ச்சியும் (1989) முன்னுரையில்)

நாமின்று குறிப்பிடத்தக்க ஐந்தாவது கட்டமாக 1980–முதல் இன்றுவரை உள்ளவற்றைத் தனியாக வகுத்துக் கொள்ளலாம்.

முதல்கட்ட சிறுகதை எழுத்தாளர்களாக இலக்கிய வரலாற்றில் அறியப்பட்டவர்களாகப் பாரதியார் (1882–1921), வ.வே.சு.ஐயர் (1881–1925),

அ. மாதவையா (1872–1925), திருமணம் செல்வக் கேசவராய முதலியார் (1864–1921) முதலியோர் விளங்குகின்றனர்.

இவர்கள் காலத்தில் இந்தியத் தேசியம் சார்ந்த சொல்லாடல்களும், இந்துமதம் சார்ந்த சீர்திருத்த நோக்குடைய சொல்லாடல்களும் பெருகுவதற்கான அமைப்புகள் பல தோன்றின. இந்தியத் தேசிய காங்கிரஸ் (1855) பிரம்ம சபை (1828) பிரம்ம சமாஜம் (1843) இந்திய பிரம்ம சமாஜம் (1857) பிரார்த்தனா சமாஜம் (1867) ஆரிய சமாஜம் (1875) பிரம்ம ஞானசபை (1875) முதலிய பல அமைப்புகள் தோன்றின. இந்துப்பெண்கள் வாழ்வு குறித்த கருத்தாக்கங்களில் செய்ய வேண்டிய பல புதிய சட்டங்களாக, சதி தடுப்புச் சட்டம், விதவை மறுமணச் சட்டம் (1859) திருமண உடன்பாடு வயதுச்சட்டம் (1891) முதலிய சட்டங்கள் கூடத் தோன்றின. இத்தகைய சூழலில் பிறந்த தமிழ்ச் சிறுகதைகளில் மேற்கண்ட சீர்திருத்தக் கருத்துகளுக்குச் சார்பான சொல்லாடல்கள் கதைகளாய், நிகழ்ச்சிப் பின்னல்களாய், உரையாடல்களாய்ப் புனையப்பட்டுள்ளன.

செல்வக் கேசவராயரின் அபிநவக்கதைகள் என்ற தொகுப்பிலுள்ள கோமளம் ஒரு பதிவிரதையின் கதையாகும். அ. மாதவையாவின் குசிகர் குட்டிக் கதைகள் என்ற தொகுப்பில் வரும் திரௌபதி கனவு, குழந்தைத் திருமணக் கொடுமையைச் சித்தரிப்பதாகும். மாதவய்யா பொறுப்பேற்று நடத்திய தமிழர் நேசன் என்ற இதழின் கொள்கைப் பிரகடனத்தில் இப்படியொரு புள்ளி விவரம் தரப்படுகிறது:

"சம்சார வாழ்க்கையைப் பற்றிப் பேசுமிடத்து, ஒரு வயது நிறையாத பெண் சிசுக்களுள் 31 விதவைகளும், ஒன்றுக்கு மேல் இரண்டு வயதுக்குள் 34 விதவைகளும், இரண்டுக்கு மேல் மூன்று வயதுக்குள் 85 விதவைகளும், மூன்றுக்கு மேல் நான்கு வயதுக்குள் 149 விதவைகளும், நாலுக்கு மேல் ஐந்து வயதுக்குள் 383 விதவைகளும் மொத்தம் 15 வயதுக்குள் 23,068 விதவைகளும் 1911ஆம் வருட ஜனசங்கியைப்படி நம்முள் இருக்கின்றனர்'' (மே.நூ.ப.31).

பாரதியாரும் ஆறில் ஒரு பங்கு என்ற கதையில் பிரம்ம சமாஜத்தைச் சேர்ந்த இளைஞன், வைதிகக் குடும்பத்தைச் சேர்ந்த பெண்ணைக் காதலித்து அது நிறைவேறாது என்று நம்பிய நிலையில் தேசிய விடுதலைக்காகத் தியாகம்

மேற்கொள்கிறான். காதல் பின் நிறைவேறுகிறது என்றாலும், தேசியப் போராட்டத்தை முன்வைத்து உரையாடலை உருவாக்குவதே கதையின் அடிப்படையாக இருக்கிறது.

பூலோக ரம்பை என்ற அவருடைய மற்றொரு கதை தேவதாசி முறையைச் சாடுவதாக அமைகிறது.

காந்தாமணி என்ற கதையில் பாரதி மரபார்ந்த பார்வையாளர்களுக்கு அதிர்ச்சி தரும்படி பின்னுகிறார். வைதிகப் பெண்ணான காந்தாமணி ஒரு மலையாளப் பையனைக் கிறித்தவக் கோயிலில் திருமணம் செய்து கொள்ளும் காட்சியையும், இளமையில் நிறைவேறாத காதலைச் சுமந்த இரு கிழவர்கள் (பார்த்தசாரதி ஐயங்காரும், மொட்டைக் கிழவியும்) ரங்கூனுக்கு ஓடிப் போய்க் கணவன், மனைவியாக வாழ்கிற செய்தியையும், காந்தாமணியின் தந்தை, ஜோதிடர் பேச்சைக் கேட்டுத் தனக்கு ஆண்பிள்ளை வேண்டும் என்பதற்காக அன்றைய வழக்குப்படிச் சடங்காகி மூன்று ஆண்டுகள் ஆகியும் கலியாணம் ஆகாமல் இருந்தால் ஊரில் கேவலமாகக் கருதப்படக்கூடிய ஒரு பெண்ணைக் 'குட்டி ஏராளமாக அழகு' என்று இரண்டாவது கல்யாணம் முடிக்கும் காட்சியையும் காட்டி இந்து சமூகத்தில், குறிப்பாக பிராமண சமூகத்தில் பெண்ணுக்கு இழைக்கப்படும் கொடுமைகளைச் சொல்லுவதற்குச் சிறுகதை வடிவத்தைப் பயன்படுத்திக் கொள்கிறார்.

இதுபோலவே வ.வே.சு.ஐயரின் குளத்தங்கரை அரசமரம் கதையும் அந்தச் சமூகத்தில் நிலவிய வரதட்சணைக் (ருக்குமணியின் கதையில் தவற்றை உணர்ந்து கனவில் துறவு பூணுகிறான்) கொடுமையை விவரிப்பதுதான் (இது சிறுகதையா எனக் கேட்கின்றனர் சிட்டி மற்றும் சிவபாதசுந்தரம்).

இதே போக்கு இரண்டாவது கட்டத்தைச் சேர்ந்த நாரணதுரைக்கண்ணன், தி.ஜ.ரங்கநாதன் (1901–1974), கல்கி, இராஜாஜி, பி.எஸ்.இராமையா முதலியோரின் சிறுகதைகளிலும் தொடர்வதைக் காணலாம். இக்கால கட்டத்துக் கதைகளில் வெளிப்பட்ட பெண்ணுரிமைச் சிந்தனைகளை இந்தியத் தேசியப் பெண்ணியம் அல்லது இந்துப் பெண்ணியம் என்ற இன்றைய திறனாய்வாளர்கள் வழங்கும் சொற்களால் சுட்டுவதற்கு வாய்ப்பு இருக்கிறது. பெண்ணுரிமை என்பது, பெண் நலத்திற்காக என்பதைவிட, இந்திய தேசத்தின் நலத்திற்காக, இந்துமத வளர்ச்சிக்காக என்ற பார்வையே இக்காலச் சிறுகதைகளில் அழுத்தமாகப் பதிவாகியுள்ளது. இந்தத் தேசியப் பண்பாட்டுணர்வு காரணமாகத்தான் பாரதியார்கூட, ஐரோப்பாவில் பேசப்பட்ட விடுதலைக் காதலைக் கடுமையாக விமர்சிப்பதையும் பார்க்கிறோம்.

இந்த முதற்கட்டத்தில் பேசப்பட்ட இந்துப் பெண்ணியத்தையும் ஆண்களே தங்கள் சிறுகதைகளில் முன்வைத்துள்ளனர். அன்றைய பெண் எழுத்தாளர்களின் சிறுகதைகள் இன்றுவரை இலக்கிய வரலாற்றில் பதிவாகவில்லை. இராசாத்தி அம்மாள் (1891) பண்டிதை விசாலாட்சி அம்மாள் (1905) தேவகுஞ்சரி அம்மாள் (1907) சரஸ்வதி அம்மாள், கௌரி அம்மாள், கிருபை சத்தியநாதன் அம்மாள், குமுதினி, சாவித்திரி அம்மாள் எனப் பெண் நாவலாசிரியர் பெயர்கள் இன்றைக்கு விரிவாக அறிமுகமாகியுள்ளன. இதேபோல் அன்றைய காலத்துப் பெண் எழுத்தாளர்களின் சிறுகதைகள் இனிமேல் தான் கண்டுபிடிக்கப்பட வேண்டிய சூழல் நிலவுகிறது என்று நான் நம்புகிறேன்.

அன்றைய காலகட்டத்து இதழ்களான விவேகசிந்தாமணி, விவேக போதினி போன்ற இதழ்களில் பெண்கள் சிறுகதைகள் எழுதியுள்ளனர். அவர்களுள் சங்கல்பமும் சம்பவமும் என்ற கதையை எழுதிய அம்மணி அம்மாளை மட்டும் சிட்டி மற்றும் சிவபாத சுந்தரம் சுட்டிச் செல்ல இந்த இடத்தில் சுட்டத்தக்கது. (ப.225)

"இதுவரை உலக சிருஷ்டியானது முதல், மனிதனே பேசிக் கொண்டிருந்தான். இப்பொழுது பெண் பேசுகிறாள். இத்தனை யுகங்களாகக் கட்டிக் கிடந்த அவள்குரல், இளவேனிற் காலத்துக் குயிலின் குரல் போல இன்று ஒலி கொள்ளுகிறது. இனி மனிதன் வாய் அடைபட்டுப் போகும். புதுமைப் பெண்ணின் போக்கின் அர்த்தம் இதுதான். மனிதனுடைய காதல் அவளுக்குக் கர்ண கொடூரமாகி விட்டது. அதைக் காது கொடுத்துக் கேட்கச் சகியாது ஓடுகிறாள். அவள் அன்பின் அடிமைத்தனத்திலிருந்து விடுதலை பெற்றுவிட்டாள் போதுமென்று துடிக்கிறாள்." (சி.சு.செல்லப்பா, தமிழ் இலக்கிய விமர்சனம் ப. 326–329)

இவ்வாறு மணிக்கொடிக் காலத்தைச் சேர்ந்த கு.ப.ரா. புதிய பெண்ணின் புதிய குரலைச் சிறுகதை வரலாற்றின் இரண்டாவது கட்டத்தில் அடையாளம் காணுகிறார். கு.ப.ரா., ஆண்–பெண் பாலியல் உறவுச் சிக்கல்களை மூடி மறைக்காமல் வெளிக் கொணர்ந்தார். அந்த உறவைப் பின்புலமாக வைத்துக் கொண்டு, இதுவரை இலக்கியத்தில் பெண்ணால் மொழிப்படுத்தப்படாத பல விஷயங்களைப் பெண் வாயிலேயே பேச வைத்தார். யார் மேல் பிசகு என்ற கதையில் வரும் ராஜம் தன்னைச் சந்தேகப்படும் கணவனைப் பார்த்து இப்படிக் கேட்கிறாள்:

"வெளிப்படையாகச் சொல்ல வேண்டுமா சொல்கிறேன்.

என்மேல் எதற்காகச் சந்தேகம் கொண்டீர்கள் ? என்

நடத்தை கெடாதபடி என்னை முற்றும் உடையவளாக

ஆக்கிக் கொண்டதாக உங்களுக்கு உங்களிடத்திலேயே நம்பிக்கை இல்லை. ஆமாம். அதுதான் அர்த்தம்.

என் மனத்தைக் கவரவில்லை என்று உங்களுக்கே சந்தேகம்".

இத்தகைய குரல்கள் தமிழில் புதிது. தனபாக்கியத்தின் தொழில் என்ற கதையிலும் தேவதாசி குலத்தொழிலைச் சார்ந்த ஒரு பெண் தனக்கென நிலையாக ஒரு கணவனைத்

தேர்ந்தெடுத்து வாழும் நிகழ்வினைக் கதையாக்கியுள்ளார். கு.ப.ரா.வின் பாலியல் சார்ந்த எழுத்துமுறைகள், நமது நாட்டுப் பெண்ணுக்கே ஒரு அநீதி செய்துவிட்டார் என்ற சமகாலத்தைச் சேர்ந்த எழுத்தாளர் சிதம்பர சுப்பிரமணியன் விமர்சிக்கிற அளவிற்கு (சிட்டி மற்றும் சிவபாதசுந்தரம், ப.136) அமைந்துள்ள தன்மையைப் பார்க்கிறோம். ஆனால் இன்றைக்குப் பேசப்படும் கலகம் சார்ந்த பெண்ணியக் குரலின் தொடக்கத்தைக் கு.ப.ரா.விடம் ஒருவர் மறுவாசிப்புச் செய்து பெறமுடியும் என்றுதான் கருதமுடியும். (கோ.கேசவன், தமிழ்ச் சிறுகதைகளில் உருவம், ப.68)

மணிக்கொடி எழுத்தாளர்களுள் ஒருவரான புதுமைப்பித்தன் எழுத்துகளிலும் பெண்ணுரிமையின் அழுத்தமான இலக்கிய வெளிப்பாட்டை ஒருவர் எளிதாகக் காணலாம். சாபவிமோசனம் என்ற கதையில் சீதையை இராமன் சந்தேகப்பட்டான் என்று கேள்விப்பட்ட உடனேயே அவர், அவனாக மாறுவதும், அவன் கால்பட்டா நான் மீண்டும் மனுஷி ஆனேன். கூடாது என்று முடிவெடுத்தவளாய் அகலிகை தனக்குத்தானே சாபம் இட்டு மீண்டும் கல்லாகிப் போகும் காட்சியைப் புதுமைப்பித்தன் இலக்கியப் பிரதியாக ஆக்கியிருக்கும் பாங்கு, இரண்டாவது கட்டத்துச் சிறுகதைகளில் பெண்ணியல் சொல்லாடல் வேறொரு தளத்திற்கு நகர்ந்துவிட்டது என்பதை அறிவித்து விடுவதாகத் தோன்றுகிறது.

இவ்வளவு மாற்றத்திற்குப் பிறகும் பெண்கள் எழுதுவதற்கு முன்வரவில்லை என்றும், அதற்குச் சான்றாக, பி.எஸ்.இராமையா பெண்கள் மட்டும் எழுதிய கதைகளைக் கொண்டு மணிக்கொடியில் ஓரிதழைக் கொண்டு வர முயன்றதாகவும், யாரும் அதற்கு எழுதவில்லை என்பதால் பெண்கள் பெயரில் ஆண்களே எழுதி இதழைக் கொண்டுவந்ததாகவும் பதிவு செய்துள்ள தகவலையும் வழங்குகிறார் சிட்டி. (மே.நூ.ப.226) ஆனால் மணிக்கொடிக்கு எழுதவில்லை என்பதனாலேயே பெண்கள் யாரும் எழுதவில்லை என்ற ஒரு முடிவுக்கு வர இயலுமா என்ற ஒரு வினாவை எழுப்பி இன்றைய பெண்ணிய இலக்கிய வரலாற்று ஆசிரியர்கள் விடை காண வேண்டுமெனத் தோன்றுகிறது.

மேலும் மணிக்கொடிக் காலத்தை அடுத்த மூன்றாவது கட்டத்தின் தொடக்கத்தில் பல பெண் எழுத்தாளர்கள் சிறுகதைகள் எழுதியுள்ள வரலாற்றை அறியமுடிகிறது. கு.ப. சேது அம்மாள் (கு.ப.ரா.வின் சகோதரி), கமலா விருத்தாசலம் (பு.பி.மனைவி), விசாலாட்சி அம்மாள், சாவித்திரி அம்மாள், குமுதினி, குகப்பிரியை முதலியோர் எழுதியுள்ளனர்.

ஆனந்த விகடனிலும் கலைமகளிலும் லஷ்மி, அநுத்தமா, வசுமதி ராமசாமி முதலியோரும் சிறுகதை எழுதியுள்ளனர். ஆனால், இவர்களின் கதைகள் எல்லாம் சிறுகதைகள் என்ற பெயரில்தான் இருந்தன. இவ்வடிவத்தைப் பற்றிய உணர்வே அன்றைய பெண் எழுத்தாளர்களிடம் இருக்கவில்லை என்றொரு விமர்சனத்தையும் சிட்டி மற்றும் சிவபாதசுந்தரம் ஆகியோர் முன்வைக்கின்றனர் (ப.226). இந்த விமர்சனத்தையும் இன்றைய பெண்ணியலாளர்கள் மறுவாசிப்பிற்கு உட்படுத்த வாய்ப்பிருப்பதாகவே நான் நம்புகிறேன். இதுபோலவே பெண் சிறுகதை எழுத்துகளைக் குறித்துப் பிரபஞ்சன்(1), செந்தில்நாதன்(2) வைத்துள்ள கருத்துகளையும் ஆராய வேண்டும்.

மூன்றாவது கட்டத்திலும், நான்காவது கட்டத்திலும் பல சிறுகதை எழுத்தாளர்கள் பெண்ணின் பிரச்சினைகளை முன்வைத்து நல்ல கதைகளைப் படைத்துள்ளனர். ஜெயகாந்தன், தி.ஜா.ரா., அசோமித்திரன், அண்ணாதுரை, இந்திரா பார்த்தசாரதி, சுந்தர ராமசாமி, கருணாநிதி, கி.ரா., சு.நாராயணன், நீலபத்மநாபன், வண்ணதாசன், வண்ணநிலவன், பூமணி, பா.செயப்பிரகாசம், பாலகுமரன், கரிச்சான் குஞ்சு, இராசேந்திர சோழன், சுஜாதா, பிரபஞ்சன், சா.கந்தசாமி, பாவண்ணன் என்று அந்தப் பட்டியல் மிக நீண்ட ஒன்றாகும்.

இதே காலகட்டத்தில் சிறுகதை எழுதிய பெண் எழுத்தாளர்கள் பலரும் இலக்கிய வரலாற்றில் பதிவாகியிருப்பது குறிப்பிடத்தக்க ஒரு செய்தியாகும். சூடாமணி, ராஜம் கிருஷ்ணன், அம்பை, கிருத்திகா, வாஸந்தி, சிவசங்கரி, இந்துமதி, கோமகள், தாமரை, விமலாராணி, திலகவதி (எழுபதுகளில் கலை இலக்கியம் 1982 ப.14) முதலியோர் இக்காலகட்டத்தில் குறிப்பிடத்தக்க பெண் எழுத்தாளர்கள் ஆவர்.

குடும்பம், ஆணாதிக்கம், தாய்மை, புனிதம், காதல் முதலிய ஆண் எழுத்தாளர்கள் கட்டமைத்துவிட்ட புனைவுக்குள் இருந்தே இவர்களுள் பெரும்பாலோர் இயங்கியுள்ளனர். பெரும்பாலான இவர்களின் பெண்ணியல் சிந்தனைகளை மிதவாதப் பெண்ணியம் அல்லது சீர்திருத்தப் பெண்ணியம் என்ற இன்றைய சொல்லாக்கத்திற்குள் அடக்கிவிடலாம். அம்பை, கிருத்திகா போன்ற ஒரு சிலரின் எழுத்துகள் மட்டும் தீவிரத்தன்மை கொண்டு வெளிப்பட்டுள்ளன. ஒரு வீட்டின் மூலையில் சமையலறை, அம்மா ஒரு கொலை செய்தாள் போன்ற அம்பையின் கதைகள், வெறுமனே ஆணாதிக்கத்திற்கு எதிராகப் பிரச்சாரத் தொனியில் எழுதுதல் என்பதையும் தாண்டிப் பெண் உடம்பை எழுதுதல், பெண்ணுக்கே உரிய அனுபவங்களைப் பதிவு செய்தல் அதன் மூலம் பெண் மொழியை உற்பத்தி செய்தல் என்ற தளத்தில் இயங்கி உள்ளார் அம்பை என்பதை நிரூபிக்கின்றன.

இந்தக் காலகட்டத்தில் பெண்ணின் பொருளாதார விடுதலையை மையப்படுத்தி மார்க்சியம் அடிப்படையில் பெண்ணியல் சிந்தனைகளை முன்வைத்த ரகுநாதன், ராஜம் கிருஷ்ணன், சுந்தரராமசாமி, ஜெயகாந்தன் முதலியோரின் சிறுகதைகளை மார்க்சியப் பெண்ணியம் அடிப்படையில் விளக்குவதற்கு வாய்ப்பிருக்கிறது. இதுபோலவே திராவிட இயக்கத்துச் சீர்திருத்தக் கருத்துகளையும் பிராமண, ஆரிய இன எதிர்ப்புக் கருத்துகளையும் மையப்படுத்தி எழுதிய

அண்ணாதுரை, கருணாநிதி, டி.கே.சீனிவாசன் ஆகியோரின் சிறுகதைகளைத் தமிழ்த் தேசியப் பெண்ணியம் என்ற அடிப்படையில் ஆராய்வதற்கு வாய்ப்பு இருப்பதாக நான் கருதுகிறேன்.

80களுக்குப் பிறகு ஐந்தாவது கட்டத்தில் பெண்ணியம், தலித்தியம் குறித்த சிந்தனைகள் இந்திய அளவிலும் உலக அளவிலும் பெருஞ் சொல்லாடலாகப் பெருகிவிட்ட சூழலில், பெண்ணினத்தின் போக்கே தீவிரப்பட்ட நிலையில் சிறுகதைகளிலும் அத் தன்மைகள் வெளிப்படுவதைப் பார்க்க முடிகிறது.

மரபார்ந்த கருத்துகளைத் தலைகீழாக மாற்றிப் போடும் பின்–அமைப்பியல், பின்–நவீனத்துவம் ஆகிய கோட்பாடுகள் இத்தகைய தீவிரப் பெண்ணியம் பேசுவதற்கான வாய்ப்பை அதிகமாகப் பெருக்கிக் கொடுத்துள்ளன. எனவே பிரெஞ்சுப் பெண்ணியலாளரான ஹெலன் சிக்சு வலியுறுத்தும் பெண் உடலை எழுதுதல் என்கிற போக்குக் கவிதைகளில் வெளிப்படுவது போலவே சிறுகதைகளிலும் வெளிப்பட்டுள்ளது. அதுபோலவே ஜூலியா கிறிஸ்துவா முன் வைக்கும் உளவியல் பெண்ணியம் அடிப்படையில் பெண்ணின் ஆழ்மன உளவியலை நுட்பமாகச் சித்திரிக்கும் சிறுகதைகளும் தோன்றியுள்ளன. கறுப்பு நிறம் என்கிற ஒரு நிறத்தை வைத்துக் கொண்டு, பெண்ணைக் குறித்த பாவனைகள் இங்கே எந்த அளவிற்கு ஆழமாக ஒவ்வொருவர் இதயத்திலும் போய்ச் சேரும்படி பின்னப்பட்டிருக்கிறது என்பதைக் காவேரி (லட்சுமி கண்ணன்) அழகாகச் சித்திரிக்கிறார். கதையின் பெயர் நிறமி என்பதாகும். (காவேரி, எங்கும் வானம், 2001– காவ்யா)

பெண் உடம்பை எழுதுதல் என்ற நவீன பெண்ணியத்தின் போக்கை கிருஷாங்கினி, தமயந்தி, வைகைச் செல்வி, உமாமகேஸ்வரி முதலியோரின் கதைகளில் பெரிதும் காணமுடிகிறது.

கிருஷாங்கினியின் மலரினும்... என்ற சிறுகதை பிரசவ வேதனை, உடம்பின் உறுப்புக் கிழிபடுதல், ஆப்பரேஷன் என்கிற சூழலை வைத்துக் கொண்டு, பெண் உடம்பின் தனித் தன்மைகளை முன் வைக்கிறது. அதுபோலவே புஷ்பித்தல் என்ற கதை, சடங்காகும் பெண்படும் அவஸ்தைகளை இலக்கியமாக முன்வைக்கிறது. கூடவே கருக்கலைப்பு நிகழ்வில் பெண் உடம்பு படும் பாட்டையும் பேசுகிறது. இவையெல்லாம் பெண் மொழியால் மட்டுமே சாத்தியமாகக்கூடியவை.

இவ்வாறு இக்காலப் பெண்ணியச் சொல்லாடல்களில் லெஸ்பியன் பெண்ணியம் உட்பட பெண் எழுத்துகளில் பலவிதமான போக்குகள் இடம் பெற்றுள்ளன. மரியா என்கிற அத்தகைய ஒரு கதையை எழுதிய காவேரி, அந்தக் கதையைத் தமிழ்வாசகர் உலகம் எவ்வாறு எதிர்கொண்டது என்பதைக் குறித்துக் கூறும் கருத்து, இந்த இடத்தில் குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

"சென்னை, மதுரை, முதலான பெருநகர வாசகர் மத்தியிலும், சிற்றூர் மற்றும் குக்கிராமங்களில் உள்ள வாசகர் மத்தியிலும் மரியா உருவாக்கியிருந்த பரிவும் பாதிப்பும் ஆச்சரியப்படும்படியாக இருந்தது. இந்தக் கதையின் உள்ளடக்கத்தை முன்பே பத்திரிகை ஆசிரியருக்கு எழுதி, இதை வெளியிட முடியுமா? என்று கேட்டுத் தெரிந்துகொண்ட பிறகே, பெரும் தயக்கத்தோடும் அச்சத்தோடும் இக்கதையைப் பத்திரிகைக்கு அனுப்பி வைத்தேன். பழமைவாத, மரபுவாதத் தமிழ்வாசகர்கள் மத்தியில் மரியா பாத்திரம் பரிகாசத்துக்கு ஆளாகுமோ எனக் கவலைப்பட்டேன். தமிழ் வாசகர்கள் ரொம்ப தாராள மனமுள்ளவர்கள். அவர்களின் புரிதலைக் குறைத்து எடை போட்டதற்காக நான் மிகவும் வருந்தினேன்." (எங்கும் வானம் முகப்பில்– கிறிஸ்டின் கோமேஸ்– லட்சுமி கண்ணனுடன் ஒரு பேட்டி–தமிழில் அ.மாரியப்பன்)

தமிழ்ச் சூழலில் மரபார்ந்த பண்பாட்டு வாதிகளின் கண்காணிப்பும், வாசகர்களின் யதார்த்தத் தளமும் எவ்வாறு வேறு வேறாக இருக்கின்றன என்பதை இந்தப் பேட்டி உணர வைத்துவிடுகிறது.

90களில் நரசிம்மராவ் அரசாங்கம் சந்தைப் பொருளாதாரத்தைத் திறந்துவிட்ட நிலையில் பெண் எழுத்து என்பது இன்று உலகம் தழுவியதாக விரிந்திருக்கிறது. அதன் கதைத்தளமும், இலண்டன், பிரான்சு, அமெரிக்கா, செருமனி, கனடா, ஆஸ்திரேலியா என்று இந்த வானத்திற்குக் கீழே உள்ள அனைத்து வகையான மனிதப் பண்பாட்டையும் உட்கொண்டதாகப் பரந்திருக்கிறது. இலங்கை சார்ந்த பெண் எழுத்தாளர்கள் மட்டுமல்லர். காஞ்சனா தாமோதரன் போன்ற இந்தியத் தமிழகத்தைச் சார்ந்த பெண் எழுத்தாளர்களும் பெண்ணின் பிரச்சினைகளை மொழிப்படுத்துவதில் முனைப்பாகச் செயல்படுகின்றனர். ஆனால் அவர், சந்தைப் பொருளாதாரம் இத்தகைய எதிர்கலாச்சார நடவடிக்கைகளையும் சந்தைச் சரக்காக்கி விற்றுக் காசாக்கிவிடும் கொடுமையைச் சுட்டிக்காட்டுவதையும் கவனமாக எண்ணிப்பார்க்கத் தோன்றுகிறது. (புதிய புத்தகம் பேசுது – நேர்காணல், ஏப்ரல்–மே–2005, ப.20) தமிழ்ச் சூழலிலும் அத்தகைய போக்குப் பரவுவதைப் பார்க்க முடிகிறது.

90களில் அம்பேத்கர் நூற்றாண்டை ஒட்டித் தலித்தியம் தமிழ் இலக்கியச் சூழலில் பெருஞ் சொல்லாடலாக வளர்ந்திருக்கிறது. தலித் என்ற கட்டுமானத்தில் முழுக்க முழுக்க வினைபுரிந்திருப்பது மனித அரசியல்தான். ஆனால், பெண்மை என்ற கட்டுமானத்தில் மனித அரசியலோடு இயற்கையின் பங்களிப்பும் இடம்பெற்றுள்ளது. ஆனாலும் இருவரையும் ஒடுக்கிய ஆதிக்க சமூகத்தின் செயல்பாட்டுத் தந்திரம் இரண்டிலுமே ஒன்றுபோலத்தான் அமைந்துள்ளது. பொருள் ஆதாரத்தைப் பறிப்பது, வேலைப் பிரிவினை அமைப்பது, நடமாடும்

வெளியை வரையறுத்துக் கண்காணிப்பது, மொழியைப் பறிப்பது, உடலை ஒடுக்குவது முதலிய பலப்பல தந்திரங்கள் ஒன்றுபோல் கடைப்பிடிக்கப்பட்டுள்ளன. இந்தப் புரிதல் நிகழும்போது விடுதலைக்கான முயற்சிகள் வலுப்பெறுகின்றன.

இந்தியச் சமூக அமைப்பில் சாதியம் என்கிற அடுக்கு முறை அதிகாரக் கட்டமைப்புப் பெரிய உண்மையாக நிலை கொண்டிருக்கிறது. எனவே பெண்ணியத்திலும் அது தலித் பெண்ணியமாக வெளிப்படுகிறது.

மேலை நாட்டில் எவ்வாறு வெள்ளை இனப் பெண்களிடமிருந்து தனித்துக் கறுப்பினப் பெண்ணியம் தோன்றியதற்கான சாத்தியப்பாடு யதார்த்தத்தில் நிலவியதோ அதுபோல் இங்கேயும் உயர்சாதிப் பெண்களிடமிருந்து தனித்துத் தலித் பெண்ணியம் பேசுவதற்கான ஞாயங்கள் இருக்கின்றன.

உயர்சாதிப் பெண்ணின் பிரச்சினைகளும் தேவைகளும் வேறு. தலித் பெண்ணின் பிரச்சினைகளும் தேவைகளும் வேறு. ஒரு தலித் பெண் இரண்டு முறையில் ஒடுக்குமுறைக்கு உள்ளாகிறாள். ஒன்று தன் சாதி காரணமாக உயர்சாதிக்காரர்களால் (அவள் பெண்ணாகக்கூட இருக்கலாம்) ஆளப்படுகிறாள். மற்றொன்று பால் வேறுபாடு காரணமாகத் தன் சாதியைச் சார்ந்த ஆண்களால் கொடுமைக்கு உள்ளாகிறாள். எனவே தலித் பெண்ணியம் நடைமுறைக்கு வருகிறது.

பெண்ணியத்தைப் பொத்தாம் பொதுவாகப் பொதுமைப்படுத்திவிட முடியாது. அதையும் சாதி ரீதியாக அணுகியாக வேண்டும். ஆளப்படும் சாதிப் பெண்ணும் ஆளுகிற சாதிப் பெண்ணும் ஒரே குரலில் பேசிவிட முடியாது என்கிற யதார்த்தத் தளத்தைப் பெண்ணியல்வாதிகள் புரிந்து, செயல்தளத்தில் இறங்க வேண்டும் என்பதுதான் தலித் பெண்ணியத்தின் அடிப்படை அறமாக விளங்குகிறது.

பாமா, சிவகாமி போன்ற புனைகதை எழுத்தாளர்கள் இத்தகைய சொல்லாடலைச் சிறுகதை இலக்கியம் வழியாகவும் வளர்த்தெடுக்க முயலுகின்றனர். பாமாவின் கிசும்புக்காரன், சிவகாமியின் சிறுகதைகள் முதலியவற்றில் இந்தத் தன்மையைப் பார்க்கலாம்.

இவ்வாறு இந்தியத் தேசியம்/இந்துமதம்/ தமிழ்த்தேசியம்/மார்க்சியம்/ சாதியம் சார்ந்தும், மேலை நாட்டுப் பெண்ணியல் கோட்பாடுகள் சார்ந்தும் தமிழ்ச் சிறுகதைகள் இயங்கியுள்ளன. இயங்கிக் கொண்டும் இருக்கின்றன என ஓரளவு அடையாளப்படுத்த முடிகிறது.

**அடிக்குறிப்பு**

1. பெண் எழுத்தாளர்கள் மீது எனக்கு நம்பிக்கை இல்லை. இவர்கள் கதைகள் என்றும் என்னைக் கவர்ந்ததில்லை. ஜனரஞ்சகப் பத்திரிகைகளில் பெண் பேராலும் பெண்களாலும் எழுதப்பட்ட கதைகளில் ஒரு பாரா கூட என்னால் படிக்க முடிந்ததில்லை. ஆயிரம் அசட்டுத்தனங்களின் புகலிடம் என்னும் சுந்தர ராமசாமியின் கருத்தை நான் ஏற்கிறேன். எனக்கு அம்பையின் மீதும் கிருத்திகா மீதும் மரியாதை உண்டு.

பெண்களை ஒரு போகப் பொருளாக, கருவியாக, பல்லாயிரம் ஆண்டுக்காலம் அடக்கிக் கொண்டு வந்த ஆண்களின் மீது இவர் கோபம், வணக்கத்துக்குரியது. அவர் சொடுக்கிய சாட்டையின் நுனி என் மேலும் பட்டது. வலித்தது. (இலக்கு (தொ.பு) எழுபதுகளில் கலை இலக்கியம் (1990) காவ்யா வெளியீடு, பக்கம்–41)

2. பெண் எழுத்தாளர்களைப் பற்றி ஒரு சொல். அவர்கள் பெண்களுக்கே எழுதுகிறார்கள் போலும். பெண்மையின் பெருமையையும் சிறப்பையும் அவர்கள் கதைகளிலே காணலாம். ஒரு குறிப்பிட்ட வரையறைக்குள் தங்கள் பார்வையை நிறுத்திக் கொண்டு, குடும்பக் கதை எழுதுகிறார்கள். பெரும்பாலும் நடுத்தரப் பிராமணக் குடும்பங்களைச் சுற்றியே இவர்கள் கதை அமைந்திருக்கிறது. குடும்பச் சூழ்நிலையையும், பாசம் முதலிய மனித இயல்புகளையும் பின்னணியாகக் கொண்டு, ஓரளவு உறுதியான உருவத்தோடு கதை எழுதினாலும் உருவத்தில் கவர்ச்சி இல்லை. சொல்கின்ற முறையிலும் அவ்வளவு சுவை இல்லை. பெண் எழுத்தாளர்களின் சில கதைகள் நன்றாக இருக்கின்றன என்பதை மறுப்பதற்கில்லை. ஆனால், சிறந்த சிறுகதை ஆசிரியை என்று சுட்டிக் காட்டுகிறார்போல் யாரும் இல்லை. மாமியார், மனைவி, மருமகள் முதலியவர்களின் மன இயல்பையும், ஆண்களின் கண்ணோட்டத்தையும் பெண் எழுத்தாளர்கள் தெளிவாகப் படம்பிடிக்கலாம். சிந்தனைக் கருத்துகள் ஆங்காங்கே சிதறலாம். ஆனால், அவை ஆழமானவையாகத் தெரியவில்லை. வாழ்க்கையைப் பல கோணங்களில் பார்க்கும் ஆற்றலும் பிரச்சினைகளின் அடிப்படைகளைப் புரிந்து கொள்ளும் திறனும் உணர்ந்ததாக இல்லை. தமிழ் நடையிலும், உருவத்திலும், உத்தியிலும் ஒரு பெண் எழுத்தாளரை மற்றொரு பெண் எழுத்தாளரிடமிருந்து வேறுபடுத்த முடியவில்லை. ஒரே அடியாகப் பெண் எழுத்தாளர்களை மட்டம் தட்டிவிட்டதாக யாரும் எண்ண வேண்டாம். உள்ள நிலை யைத்தான் தெளிவுபடுத்தி இருக்கிறேன். (ச.செந்தில் நாதன், தமிழ்ச் சிறுகதைகள் ஒரு மதிப்பீடு, இரண்டாம் பதிப்பு–1993, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், ப.93)

# அண்மைக்காலச் சிறுகதைகள்

## – ஒரு பார்வை

**இமையம்**



மொழி என்ற தொடர்புச் சாதனம் உருவானபோதே கதை சொல்வது என்ற செயலும் உருவாகியிருக்க வேண்டும். மனிதனால் எவ்வாறு பேசாமல் இருக்க முடியாதோ அவ்வாறே கதை சொல்லாமலும் இருக்க முடியாது. கதை சொல்லும் முறை கற்பனையை உருவாக்கிற்றா, கற்பனை என்பது கதையை உருவாக்கிற்றா என்றால் இரண்டும் ஒரே சமயத்தில் உருவாகியிருக்க வேண்டும். மனித சமூகம் பல்வேறு நிலைகளைக் கடந்து படிப்படியாகப் பல வளர்ச்சிகளைப் பெற்று இன்றும் பெரும் நம்பிக்கையுடன் பூமியில் காலூன்றி நிற்பதற்குக் கற்பனையும் கதை சொல்லும் முறையும் முக்கியமான பங்காற்றி இருக்கின்றன. கதையில்லை என்றால் கற்பனை இல்லை. கற்பனை இல்லை என்றால் வாழ்க்கை இல்லை. வாழ்க்கைக்கு உயிர்ச்சத்தாக இருப்பது கற்பனையும் கதையும்.

ஒவ்வொரு தேசத்திலும், ஒவ்வொரு காலகட்டத்திலும் ஒவ்வொரு விதமான கதைகள் உருவாகியிருக்கின்றன. பல கதைகள் தேச எல்லைகள் கடந்து உலகப் பொதுக் கதையாகவும் பேசப்படுகிறது. எழுத்து மரபில் பேசப்பட்ட கதைகளைவிட வாய்மொழி மரபில் பரவிய கதைகளே இன்றும் பெரும்பான்மை மக்களால் பேசப்படுவதாக இருக்கிறது. வாழ்க்கை நெறியாக மேற்கொள்ளப்படுகிறது. வாய்மொழி மரபு கதைகளை விஞ்சும் வகையில் எழுத்தில் கதைகள் உருவாக்கப்படவில்லை என்பது நம் கவனத்திற்குரியது. தமிழ் மரபு காவியங்களை அடிப்படையாகக் கொண்டது. அதுவும் பதினாறாம் நூற்றாண்டோடு முடிந்துவிட்டது. 20ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில்தான் தமிழில் உரை நடை இலக்கியம் அறிமுகமாகிறது. குறிப்பாக சிறுகதை வடிவம். அதற்கு முன் தமிழில் சிறுகதை வடிவமே இல்லையா என்றால் இருந்தது. அதுவும் சிறந்த வகையில் இருந்தது. “ஒரு ஊருல ஒரு நரி, கதை அதோட சரி”. “ஒரு ஊருல ஒரு சிங்கம், அந்தக் கதைய சொன்னா அசிங்கம்”. “ஒரு ஊருல ஒரு பரி, கதை அதோட சரி” என்று ஒரே ஒரு வாக்கியத்திலேயே கதை சொன்னது தமிழ் மரபு.

வாய்மொழி மரபையும் ஆங்கில இலக்கியத்தின் வழியாகப் பெறப்பட்ட வடிவத்தையும் கொண்டு உருவானதுதான் நவீன சிறுகதை வடிவம். கடந்த ஒரு நூற்றாண்டுக் காலத்தில் சிறுகதை என்ற வடிவம் பெற்றுள்ள மாற்றம், செழுமை, வளர்ச்சி, வடிவச்சோதனைகள், பரிசோதனை முயற்சிகள் போன்றவை பெரும் பாய்ச்சலை நிகழ்த்தியுள்ளன. தமிழில் இவ் வடிவத்தின் முன்னோடியாக வ.வே.சு.ஐயரைக் குறிப்பிடலாம். அவரைத் தொடர்ந்து பி.எஸ். இராமையா, கு.ப.இராஜகோபாலன், ந.பிச்சமூர்த்தி, புதுமைப்பித்தன், சி.சு.செல்லப்பா, கா.சிவத்தம்பி, பி.எம்.கண்ணன், இளங்கோவன், சிதம்பர சுப்பிரமணியன், மௌனி போன்றவர்கள் சிறுகதை வடிவத்தைப் பயன்படுத்தி பல்வேறு ஆக்கங்களை உருவாக்கியதோடு இவ்வடிவம் தமிழில் பரவலாகவும், ஆழமாகவும் வேர் ஊன்றச் செய்ததோடு பல முன்மாதிரிகளையும் உருவாக்கிக்காட்டினார்கள். இவர்களையடுத்து வந்த கு.அழகிரிசாமி, தி.ஜானகி ராமன், லா.ச.ராமாமிர்தம், த.ஜெயகாந்தன், சுந்தர ராமசாமி போன்றவர்கள் தமிழ்ச் சிறுகதையை அடுத்த கட்டத்திற்கு நகர்த்தினார்கள். உருவம், உள்ளடக்கம், மொழி, செய்நேர்த்தி போன்றவற்றில் இவர்கள் கூடுதல் கவனம் செலுத்தினர். இவர்களுடைய எழுத்து அகவுலகத் தேடல் எனலாம். இவர்கள்தாம் தனிமனித வாழ்க்கையின் வழியே, தனிமனித சிக்கல்களினூடே சமூகத்தை உற்று நோக்கியவர்கள். இவர்களையடுத்தும் இவர்களோடு சேர்ந்தும் வந்த அசோகமித்திரன், ந.முத்துசாமி, கி.ராஜநாராயணன், நாஞ்சில் நாடன், சா.கந்தசாமி, பிரபஞ்சன், வண்ணநிலவன், வண்ணதாசன், அம்பை, பூமணி, தோப்பில் முகமது மீரான் போன்றவர்கள் தமிழ்ச் சிறுகதைக்கு ஒரு மறுமலர்ச்சியை உருவாக்கித் தந்தார்கள். இந்த மறுமலர்ச்சியை வளர்த்தெடுக்கும் விதமாகத் தற்காலத்தில் எழுதிக்கொண்டிருப்பவர்கள் திலிப்குமார், ஜெயமோகன், எஸ்.ராமகிருஷ்ணன், கோணங்கி, பெருமாள் முருகன், தேவிபாரதி, சு.வேணுகோபால், பாவண்ணன், சுப்ரபாரதிமணியன், பிரேம் ரமேஷ், சோ.தர்மன், கௌதம சித்தார்த்தன், எம்.ஜி.சுரேஷ், ச.தமிழ்ச்செல்வன், கண்மணி குணசேகரன், பாமா, சிவகாமி, அழகியபெரியவன், ஆதவன் தீட்சண்யா, யுவன்சந்திரசேகர், அன்பாதவன், விழி.பா.இதய வேந்தன், ஜீ.முருகன், காலபைரவன், சு.தமிழ்ச்செல்வி, சல்மா, உமா மகேஸ்வரி, அ.வெண்ணிலா, சந்திரா, புகழ், ஜே.பி.சாணக்யா, எஸ்.செந்தில்குமார், கே.என்.செந்தில்... என்று இன்னும் பலர் தமிழ்ச் சிறுகதைக்கு தங்களுடைய பங்களிப்பின் வழியே வளம் சேர்த்து வருகின்றனர்.

1980–90களுக்குப் பிறகு படைப்பு சார்ந்தும், படைப்பு மொழி சார்ந்தும், தமிழ்ச் சிறுகதையில் பெரியமாற்றம் நிகழ்ந்தது. அடித்தட்டு மக்களும், விளிம்புநிலை மக்களும், அவர்களுடைய மொழியும் இலக்கியமாக்கப்பட்டது. இக்கால

கட்டத்தில்தான் சமூகத்தின் பலதரப்பு வாழ்க்கை முறையும் இலக்கியமாயின. பழைய எழுத்தாளர்களிடம் காணப்பட்ட உத்தி சார்ந்த மயக்கங்கள், பிரமைகள், உதிர்ந்து போயின. கதைப் பரப்பும், அனுபவமும் விரிந்த தளத்தில் இருந்தது. புதிய புதிய கதைக் களன்களைத் தேடி எழுத்தாளர்கள் நகர்ந்தவாறே இருக்கின்றனர். வாய்மொழி மரபும், வட்டார வழக்கும், இனக்குழு வரலாறுகளும் கூடுதல் கவனம் பெற்றதோடு அதிகமாக எழுதவும்படுகின்றன. எல்லாவற்றுக்கும் மேலாகத் தலித்தியம், பெண்ணியம் என்ற கோட்பாடுகளால் எழுச்சிபெற்று எழுந்த இலக்கியங்கள் தமிழ் சிறுகதைக்கு புதிய முகத்தைக் கொடுத்துள்ளது. தற்காலத்தில் தமிழ்ச் சிறுகதை வடிவம் காட்டாறு வெள்ளம்போலப் பெருக்கெடுத்து ஓடுகிறது. அவ்வாறு ஓடுகிற வெள்ளத்தில் ஒரு கையளவு நீரை மட்டுமே அள்ளி உதாரணம் காட்ட விரும்புகிறேன். அதுவும் கடந்த பத்தாண்டுகளில் வந்த சிறுகதையின் வழியே மொத்த தமிழ்ச் சிறுகதைகளைப்பற்றிய சித்திரத்தை அறிய முடியும்.

தற்காலத்தில் தமிழில் எழுதப்படும் சிறுகதைகளை ஐந்து வகையாகப் பிரிக்கலாம். 1.பொதுவான சிறுகதைகள், 2.புதுவகைச் சிறுகதைகள், 3.தலித்தியச் சிறுகதைகள், 4.பெண்ணியச் சிறுகதைகள், 5. வாய்மொழி மரபுச் சிறுகதைகள்.

### பொதுவான கதைகள்

'ஒரு மனிதனைப்பற்றிய வெள்ளை அறிக்கை' (உயிர்மை பிப். 2010) என்ற பிரபஞ்சனின் சிறுகதை பல விதங்களில் முக்கியமானது. கதை எலிகளைப் பற்றிப் பேசுகிறது. உண்மையில் எலிகளைப்பற்றி அல்ல மனிதர்களைப்பற்றிதான் பேசுகிறது. எலிகளுக்கும் மனிதர்களுக்குமான உறவு என்ன, ஏன் அவர்களுக்கிடையே ஓயாமல் போராட்டம் நிகழ்கிறது, அந்தப் போராட்டத்தில் வெற்றி பெறுவது யார், மனிதர்களால் அழிக்கப்பட்ட, அழிக்கப்பட்டுவரும் உயிரினங்களில் எண்ணிக்கை எவ்வளவு என்று சூசகமாகப் பல ஆழமான கேள்விகளைக் கேட்கிறது கதை. அப்படிக் கேட்கப்படுகிற கேள்விகளில் ஒன்று: "மனிதர் சங்கதியும், எலிகளின் சங்கதியும் ஒன்றா என்ன?"

"பொதுவாக என் மீது ஒரு புகார் இருக்கிறது. ஏதாவது ஒன்றைச் சொல்ல ஆரம்பித்துவிட்டு எங்கெங்கோ அலைந்து திரிய ஆரம்பித்துவிடுகிறேன். இந்தமுறை அந்தத் தவறு நடக்காமல் பார்த்துக் கொள்ளப் போகிறேன்" என்று ஆரம்பிக்கிற யுவன் சந்திரசேகரனின் 'சொன்னால் நம்ப மாட்டீர்கள்' (உயிர்எழுத்து – டிசம்பர் – 09) என்ற கதை ரயில் பயணத்தில் தொடங்குகிறது. பயணம் முடியும்போது கதையும் முடிந்துவிடுகிறது. கதையை எழுதுகிற எழுத்தாளருடைய நண்பரைப்பற்றிய கதை. கதையில் வரும் நாயகனும் எழுத்தாளரே. அதிக பிரபலமில்லாத, அதிகம் எழுதாத எழுத்தாளர். காரணமின்றிப் பலருக்கு வாழ்க்கை தொடர்ந்து நெருக்கடிகளையும் சங்கடங்களையும் தந்துகொண்டிருக்கிறது. ஓயாமல் நெருக்கடிக் குள்ளாகிற மனிதனைப்பற்றி விவரிக்கிறது 'சொன்னால் நம்ப மாட்டீர்கள்' என்ற கதை. ஒவ்வோர் எழுத்தாளரும் தன்னையே உணரலாம் இக்கதையில். தன்னுடைய அனுபவத்தை வாசக அனுபவமாக மாற்றம் செய்வதுதானே கலைப்படைப்பின் நோக்கம்.

ஜி.முருகனின் 'கள்ளத் துப்பாக்களின் கதை' (அடவி மாத இதழ் பிப். 2010) என்ற கதை சுப்ரமணியன் என்ற மனிதனுடைய மொத்த வாழ்க்கையுமே சொல்கிறது. தர்மாபுரத்தில் வசிக்கிற ஆசாரியின் இரண்டாம் தாரத்து மகன் சுப்பிரமணியன். முதல் தாரத்து நான்கு மகன்களாலும் ஓயாமல் விரட்டப்படுகிற சுப்ரமணியன் ஒரு கட்டத்தில் ஊரைவிட்டே போகிறான். பல ஆண்டுகள் கழித்து ஒரு பெண்ணுடன் ஊருக்கு வந்து ஊரின் ஒதுக்குப்புறமாக வாழ்கிறான். பறவைகளை வேட்டையாடுவது அவனது தொழிலாகிறது. அவனைக் காவல்துறை தேடுகிறது. பிறந்தது முதல் இறக்கும்வரை அவன் ஓடிக்கொண்டேயிருக்கிறான் என்பதை மிகுந்த வலியுடன் சொல்கிறது கதை. கதாநாயகன் இறந்தாலும் அவன் உருவாக்கிய துப்பாக்கிகள் சாகவில்லை என்பதை, கதையின் கடைசி வரிகள் காட்டுகின்றன. "கள்ளத் துப்பாக்கிகளோ அவன் பெயரை உச்சரித்தபடி இன்னும் காடுகளுக்குள் இரைச்சலிட்டுக் கொண்டே யிருக்கின்றன."

எஸ்.ராமகிருஷ்ணனின் பி.விஜயலட்சுமியின் சிகிச்சைக் குறிப்புகள் (உயிர்மை – ஆக. – 06) என்ற சிறுகதை திருமணமான குறைந்த காலத்திலேயே சித்திரவதைக்குட்பட்டு மனச்சிதைவுக்கு உள்ளான பெண்ணினுடைய கதையைச் சொல்கிறது. மொத்த குடும்பமே ஒரு இளம் பெண்ணின் மீது துவேசத்தைக் கக்குகிறது. சிறு தவறு செய்தாலும் அடிக்கிறது. கணவனே மனைவியை வன்புணர்ச்சி செய்கிறான். இச்செயல் தொடர் நிகழ்வாக நடக்கிறது. வேலைக்குச் செல்வதற்கும், மேல் படிப்பு படிப்பதற்கும் மற்றவர்களோடு சேர்ந்துகொண்டு கணவனும் எதிர்க்கிறான். சான்றிதழ்களைக் கிழித்தெறிகிறான். இப்படியான ஒரு சூழலில் மனச்சிதைவு ஏற்படாமல் இருந்தால்தான் ஆச்சரியப்பட வேண்டும். ஆனால், விஜயலட்சுமியின் மனச்சிதைவுக்கு அவனுடைய கணவனும், மாமனார் மாமியார் கூறும் காரணங்கள் விநோதமானவை.

"மூளக்கோளாறு ரொம்ப நாளாகவே இருந்திருக்கனும். நம்ம தலையில் கெட்டி வச்சிட்டாங்க. இனிமே இவ செத்தாலும், பிழைச்சாலும் நமக்கென்ன? விடு."

பெருமாள் முருகனின் 'வெள்ளி மீன்கள்' (காலச்சுவடு அக் – 07) என்ற கதை ஆடு திருடனைப் பற்றியது. ஆடு திருடப்போய் மாட்டிக்கொண்டு ஒரு இரவு முழுவதும் மோசமான புதருக்குள் மாட்டிக்கொண்டு அவஸ்தைப்படுகிற பசுபதி என்கிற திருடனுடைய மனஉளைச்சலையும், படுகிற துன்பத்தையும் விவரிக்கிறது. மற்றவர்களுக்கு வேண்டுமானால் அவன் திருடனாக இருக்கலாம். அவனுக்கு வயிற்றுப் பிழைப்புக்கான வழி அது. ஒரு மனிதனைச் சாப்பிடாமல் இரு என்று எப்படிச்

சொல்வது. பிறருக்குக் கஷ்டம்தான். திருட்டு அவனுக்குச் சோற்றுக்கான வழி. அதைச் செய்யாதே என்று எப்படிச் சொல்வது என்று மிக அழகாகக் கேட்கிறது இக்கதை:

"பூபதிக்கு ஆடு திருடுவதை பழக்கிவிட்டவர் அவன் அப்பன்தான். அவரோடு ஒப்பிட்டால் தன் திருட்டு ஒன்றுமேயில்லை என்றுபடும். அவர் ஒருநாளும் இப்படி மாட்டிக்கொண்டதில்லை. அவர் அழைத்துப்போக ஓராள் வண்டியில் காத்திருக்கவில்லை. எவ்வளவு தூரமானாலும் தோள்மீது போட்ட ஆடு சிறு சத்தமும் இல்லாமல் வரும். ஆடு திருட தோதான நேரத்தை அவர்தான் அவனுக்குச் சொல்லித்தந்தார்."

ஊமை செந்நாய் (உயிர்மை நவ – 08) என்ற ஜெயமோகனின் கதை சென்ற நூற்றாண்டில் நடக்கிறது. ஒரு வெள்ளைக்காரத் துரைக்கும் நாய் மாதிரி நடத்தப்படுகிற இந்தியனுக்கும் இடையே நடக்கிற கதை இது. துரைக்கு வேட்டையாடுதல்தான் பொழுதுபோக்கு. வேட்டைக்கு உதவியாளுமான வழிகாட்டியாக இருக்கிற வனின் மன உளைச்சல் என்ன என்பதையும் அவன்படுகிற அவஸ்தைகளையும் தத்ரூபமாக விவரிக்கிறது. அவன் துரையின் தொல்லை தாங்க முடியாமல் கடைசியில் மலையிலிருந்து விழுந்து சாவதையும் உயிரோட்டமாக விவரிக்கிறது கதை.

**பெண்ணியச் சிறுகதைகள்**

1980க்குப் பிறகு தமிழில் ஏற்பட்ட பெண்ணியச் சிந்தனையால் ஊக்கம் பெற்றுப் பலர் மரபார்ந்த முறைக்கு எதிரான சிந்தனையோடும், புதிய எழுச்சியோடும், பெண்மொழி, பெண் உடல்மொழி, பெண் புழங்கும் வெளி என்ற முழக்கங்களோடும் புரிதலோடும் எழுதினர். அச்சு ஊடகம் ஒரு ஜனநாயகத் தன்மையை உருவாக்கிற்று. யார்வேண்டுமானாலும் தன்னை வெளிப்படுத்திக் கொள்வதற்கான சுதந்திரத்தையும் ஊக்கத்தையும் அது அளித்தது. அதன் அடிப்படையில் 'எங்களுக்கும் சொல்வதற்கு கதை உண்டு' என்று எழுத ஆரம்பித்தனர். உக்கிரமான மொழியில் பெண்கள் தங்களை வெளிப்படுத்தினர். போன நூற்றாண்டில் வை.மு.கோதைநாயகி அம்மாள், மூவலூர் இராமாமிர்தம் அம்மாள், ஆர். சூடாமணி, ராஜம் கிருஷ்ணன் என்று ஆரம்பித்த பட்டியல் சிவகாமி, ஆண்டாள் பிரியதர்ஷினி, பாமா, தமயந்தி, உமா மகேஸ்வரி, இந்திரா, அ.வெண்ணிலா, சு.தமிழ்ச்செல்வி, அம்பை, கிருஷாங்கினி, சல்மா என்று பட்டியல் நீள்கிறது.

அம்பையின் 'வற்றும் ஏரியின் மீன்கள்' (பனிக்குடம் – ஏப்-ஜூன் 07) கதை முக்கியமானது. இளம் வயதிலேயே தாயை இழந்துவிட்டு, தங்குவதற்காக – வாழ்வதற்காகப் பாதுகாப்பான இடம்தேடி மாறிமாறி இடம் பெயர்கிற ஓர் இளம்பெண், இடம் பெயர்ந்ததால் ஏற்படுகிற மன உளைச்சல்களை, நெருக்கடிகளை மிகுந்த வலியோடு சொல்கிறது இக்கதை. பெண்ணியம் என்பதை அதன் உண்மையான பொருளில் புரிந்துகொண்டவர் அம்பை. அதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாக இருக்கிறது இக்கதை. இந்த வரிகளே கதை என்ன என்பதை வாசகருக்குக் கூறும்.

"பயணங்கள் அவளுடைய வாழ்க்கையின் குறியீடாகிவிட்டன. இலக்குள்ள பயணங்கள். இலக்கில்லாப் பயணங்கள், அர்த்தமுள்ள பயணங்கள், நிர்ப்பந்தப் பயணங்கள், திட்டமிட்டு உருவாக்காத பயணங்கள், திட்டங்களை உடைத்த பயணங்கள், சடங்காகிப்போன பயணங்கள்".

"இந்தக்குட்டி பாப்பாவை நன்றாகத் தேய்த்து வெள்ளை ஆக்குங்கள், வெள்ளை ஆக்குங்கள், என் சின்ன பாப்பாவை சுத்தமாகக்கழுவி வாசனையாக்குங்கள், வாசனையாக்குங்கள்" என்று உமாமகேஸ்வரி 'ரணகள்ளி' (மரப்பாச்சி தொகுப்பு – 02) என்ற சிறுகதையில் எழுதுகிறார். போற்றி வளர்க்கப்படுகிற பெண் குழந்தை பிற்காலத்தில் என்னவாக மாறுகிறாள், பெண்கள் ஏன் ஓயாமல் ஏக்கத்துடனேயே வாழ்கிறார்கள் என்பதை மிக அழகாகச் சொல்லும் கதை இது. பெண், வீடு இதுதான் இவருடைய எழுத்துலகம். இவருடைய எழுத்தில் வரும் பெண்கள் நாம் தினந்தோறும் சந்திக்கிற பெண்கள்தாம்.

அ.வெண்ணிலாவின் கதைகள் மிகவும் எளிமை யானவை. நேரடியாகப் பேசுபவை. சமூகத்தின் மொத்த குரலாகவும் ஒலிப்பவை. இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாக இருப்பது அவருடைய 'பூமிக்குச் சற்றுமேலே' (ஆனந்தவிகடன் 22-02-02) என்ற கதை. இந்த உரையால் கதையின் மொத்த சாரத்தையும் சமூகத்தின் மனப் போக்கையும் அப்படியே காட்டுகிறது.

"இவளக் கட்டிக்கிட்டுப் போனா குடும்பத்துக்குச் சரிபடாது. எம்புள்ளய கையில போட்டுக்குவா"

"காலப்பாரு வீச்சு வீச்சா, சொழட்டிப் போட்டுருவா எல்லாத்தையும்"

"ஆம்பள காலுள்ளவ, வாத்தியார் மாதிரிதான் இருப்பா, வணக்கமே இல்லாம"

"வரன்கள் நிராகரித்தன. அம்மாவுக்குச் சிரிப்பு தொலைந்து போயிற்று"

சு.தமிழ்ச்செல்வி, 'சாமுண்டி' (சாமுண்டி–தொகுப்பு–2006) என்ற கதையில் விவரிக்கிற உலகம் மண் சார்ந்தது. கிராமப்புறங்களில் வாழ்கிற மக்களுடைய நம்பிக்கைகள் நம்மை வியப்பிலாழ்த்துகின்றன. கனகம் என்ற பெண்ணின் உடம்புக்குள் சாமுண்டி என்ற பாம்பு குடி புகுந்துள்ளது. அதனால் அப் பெண் படுகிற துன்பம் சொல்லிமாளாது. ஆனால் கனகம் அதை மரியாதையாக, கௌரவமாக கருதுகிறாள். அவள் அப்படித்தான் வளர்க்கப் பட்டிருக்கிறாள். நம்முடைய சமூகத்தினுடைய விருப்பமும் அதுதான். பல நேரங்களில் நாம் வாழ்வை – வாழ்க்கையின் வழியாகவேதான் பார்க்க வேண்டும். விஞ்ஞானத்தின் வழியாக அல்ல என்று சொல்கிறது சாமுண்டி கதை.

**"கனகத்தின் உடம்புக்குள் புகுந்திருந்த சாமுண்டிப் பாம்புதன் சட்டையை உரிக்க ஆரம்பித்தது" (ப-44)**

"என் இருப்பை நீ உணராதது போல் இருந்தாலும் உன் உணர்வுகளில் என் இருப்பு பதியப்பட்டுள்ளது. எனது

இருப்பை அங்கீகரிக்கும் உனது செயல்பாடுகள்தான் என்னை உன்னுடனான இந்த வாழ்க்கையில் நிலைப்பெறச் செய்கிறது. இருப்பினும் அங்கீகரிப்பது வாழ்க்கையில் கிடைக்கும் பெறும் ஏற்பு ஆகிவிடுமா" (நெற்குஞ்சம் தொகுதி–டிச – 09) என்று கேட்கிற தேன்மொழி அதே 'கடல்கோள்' என்ற கதையில் "எல்லாம் விடுதலைக்கான இசைபோல் ஒலிக்கிறது. யாருக்கான விடுதலை, யாருக்கு வேண்டிய விடுதலை?" (ப–22) என்று கேட்கிறார். இக்கேள்விகள் கதையிலிருந்தும் உருவாகவில்லை. வாழ்க்கையிலிருந்தும் உருவாகவில்லை. கேள்விகள் கதை யாவதில்லை. வாழ்க்கைதான் கதையாகும், கேள்வி யாகும். மிகச்சிறந்த கதை மதிப்பு வாய்ந்த கேள்விகளை எழுப்பும்.

கிருஷாங்கினியின் 'வெள்ளை யானையும் குளிர்சாதனப் பெட்டியும்' என்ற கதை, ஆண்டாள் பிரியதர்ஷினியின் 'கழிவு', தமயந்தியின் 'மழையும் தொலைவும்', சந்திராவின் 'பூனைகள் இல்லாத வீடு' போன்ற கதைகள் மிகவும் மதிப்பு வாய்ந்தவை.

### தலித் சிறுகதைகள்

அம்பேத்கார் நூற்றாண்டை ஒட்டி எழுந்த தலித் அரசியல் என்ற செயல்பாட்டால் இலக்கியத்திலும் தலித் இலக்கியம் என்ற ஒருவகை உருவாயிற்று. 1980க்குப் பிறகு தமிழ் இலக்கியத்தின் முகம் தலித் இலக்கியத்தின் முகமாகத்தான் இருக்கிறது. இதை உருவாக்கியவர்கள், பூமணி, சிவகாமி, பாமா, அழகிய பெரியவன், ஆதவன் தீட்சண்யா, சோ.தர்மன், ஸ்ரீதரகணேசன், அபிமானி, ஜே.பி.சாணக்யா, புதிய மாதவி, அன்பாதவன், விழி.பா.இதயவேந்தன், பாப்லோ அறிவுக்குயில், என்.டி.ராஜ்குமார், மு.ஹரிகிருஷ்ணன், வெ.வெங்கடாசலம், பிரதிபா ஜெயச்சந்திரன், சந்ரு, ரவிக்குமார் என்று பலரையும் சொல்லலாம். இவர்கள் இல்லையென்றால் தமிழில் தலித் இலக்கியம் இல்லை. ஒடுக்கப்பட்ட மக்கள் சந்தித்த, நாள்தோறும் சந்தித்துவரும் சாதிய கொடுமைகளுக்கு, இழிவுகளுக்கு, புறக்கணிப்புகளுக்கு எதிர்ச் செயலாகத் தலித் சிறுகதைகள் எழுதப்படுகின்றன. சூழலைப் பிரதிபலிக்கக்கூடிய நடைமுறை வாழ்க்கையை, உண்மையை வாழ்வின் முரண்களைச் செறிவான மொழியில் எழுதுவதைவிட கதையே முக்கியம் என்று எழுதுவதுதான் இவர்களுடைய கொள்கை. இலக்கியம் வாழ்க்கையிருந்து மட்டுமே உருவாக்கப்பட முடியும். கற்பனையிலிருந்து அல்ல. அவ்வாறு உருவாக்கப் படுவது இலக்கியம் அல்ல. பரிதாப உணர்வு இலக்கியமாகாது.

தமிழ்நாட்டில் தலித்களுக்கென்று உள்ளாட்சி நிர்வாகத்தில் இடஒதுக்கீடு தந்தாலும் அதில் போட்டியிட முடியாத நிலையையே இன்றும் காண்கிறோம். பாப்பாப்பட்டி, கீரிப்பட்டியில் நடந்த மோதல்களை நாம் அறிவோம். அதேமாதிரி லிங்கம்பட்டி என்ற கிராமத்தில் பொதுத்தொகுதியில் தலித் ஒருவர் வேட்புமனு செய்ததால் கலவரம் ஏற்படுகிறது. அந்த கலவரத்தை "எகத்தாளம்" (வல்லினம் மாத இதழ்–மே–ஜீன்–02) என்ற பெயரில் கதையாக்கியிருக்கிறார் பாமா. கதையில் வரக்கூடிய இந்த வரிகளே கதையின் முக்கியத்துவத்தை உணர்த்தும்.

"அங்கங்க தனித்தொகுதிக்குள்ளேயே இவஞ் சாதிக்காரனுங்க நிக்க முடியாம கெடக்கயிலே..... இவனுங்களுக்கு எம்புட்டுக் கொழுப்புன்னா பொதுத்தொகுதியில, அதுவும் நம்பளுக்குப் போட்டியா நிப்பானுங்க".

விழி.பா.இதயவேந்தனுடைய சிறுகதை 'பறை' (புதிய கோடாங்கி மாத இதழ்–ஆக.–02) "சாவு வீட்டில் ஒரே களேபரமாக இருந்தது. அழுகையும் கூச்சலுமாக இருந்தது. அதிகாலையில் இறந்துபோன நாட்டாமைக்கு சுற்றுவட்டாரம் முழுக்கப் போய் தகவல் சொல்லிவர கோல்க்காரனை அனுப்பியிருத்தார்கள்" என்று ஆரம்பிக்கிற கதை, ஒரு சாவின் வழியே, சாவு நிகழ்ந்த இடம், அங்குள்ள மக்கள், அவர்களுடைய வாழ்க்கை முறை, சடங்குகள் என்று விரிகிறது. சாவைப்பற்றி சொல்வதைவிட அங்குள்ள மக்களின் வாழ்க்கையைப் பற்றியே சொல்கிறது 'பறை' கதை.

மு.ஹரிகிருஷ்ணன் எழுதிய 'பாதரவு' (மணல் வீடு – ஜன., பிப்.–09) என்ற சிறுகதை தெருக்கூத்துக் கலைஞர்களின் அன்றாட வாழ்வைச் சித்திரிப்பது. இவருடைய எழுத்து வாய்மொழி மரபுக் கதை சொல்லும் முறையைப் பின்பற்றுவது. இவருடைய எல்லாக் கதைகளுமே இந்த அடிப்படையில் எழுதப்பட்டுள்ளது. வட்டார வழக்கும், பேச்சு வழக்கும் எந்தப் பிசிறுமின்றி அப்படியே இவருடைய கதைகளில் பதிவாகின்றன.

"ஈனச்சாதி பயலே – திருட்டு அயோக்கிய ராஸ்கல். எவ்வளவு தைரியமிருந்தா ரெட்டியார் லாரி டிப்போவுக் குள்ளார நுழைவே" என்று "நாளும் தொடரும்" என்ற கதையில் ப.சிவகாமி எழுதியிருக்கிறார். அந்தநிலைதான் இன்றும் தொடர்கிறது. சமூகத்தில் மாற்றம் இல்லை என்று இக்கதை சொல்கிறது. சிறுவன் ஒருவன் ரெட்டியார் வீட்டு லாரி நிறுத்துகிற இடத்தில் நுழைந்ததற்காக அடித்துத் துரத்தப்படுகின்றான். லாரி நிற்கிற இடத்திற்கு மனிதன் ஏன் குழந்தைக்கூட போக முடியாத நிலைதான் தீட்டு என்ற பெயரில் இன்றும் நம் சமூகத்தில் இருக்கிறது.

அழகிய பெரியவனின் 'கறி', அபிமானியின் 'முரண்' சோ.தர்மனின் 'தழும்பு', அன்பாதவனின் 'சர்டிபிகேட்', ஆதவன் தீட்சண்யாவின் 'கதையின் தலைப்பு கடைசியில் இருக்கக்கூடும்' போன்றவை தலித் சிறுகதைகளின் மிகச்சிறந்த கதைகளாக மதிக்கப்படுகின்றன.

### வாய்மொழி மரபுச் சிறுகதைகள்

எழுத்துவடிவச் சிறுகதைக்கு வாய்மொழி மரபுச் சிறுகதைகள்தாம் முன்னோடி. அந்தமரபு தற்போது தமிழில் குறைந்துவிட்டது. ஆனால் புகழ், அமலநாயகம், மு.ஹரிகிருஷ்ணன், கண்மணி குணசேகரன் போன்ற சிலர் வாய்மொழி மரபுச் சிறுகதைகளையே இன்றும் எழுதி வருகின்றனர், அதனுடைய செழுமை குன்றாமல்.

'முக்தி', 'மாங்கொட்டசாமி' என்ற இரண்டு சிறுகதைத்

தொகுப்புகளிலுமே புகழ் வாய்மொழி மரபுச் சிறுகதைகளைத்தாம் எழுதியுள்ளார். இந்த முறையைப் பின்பற்றி எழுதுகிற ஒரே எழுத்தாளரும் இவர்தாம்! 'உறமுறை' (மாங்கொட்டசாமி – டிச–09) என்ற கதையில் வாய்மொழி மரபுச் சிறுகதையின் உச்ச பட்ச எல்லையைத் தொட்டிருப்பதைக் காண முடியும். "உழுத காடு வெள்ளாம போட ஆளில்லாமக் கெடக்கிறது தெரிஞ்சு வாரத்துக்கொருக்க வர்ற பய தெனம்வந்து நின்னுப் பாக்க ஆரம்பிச்சிட்டான். லேசா சாடமாடயா ஆரம்பிச்ச பேச்சுப் பழக்கம் காலப்போக்குல ஆளு இல்லாத நேரம்பாத்து வூட்டுக்குள்ளேயே போயிப் புழங்குற அளவுக்கு வந்துடுச்சி" (ப.55)

அமலநாயகத்தின் 'ஒட்ட மண்டயன்' (பழஞ்சோறு– தொகுப்பு டிச.–08) என்ற சிறுகதை வாசகர் கவனத்திற்குரியது. அதிகம் அறியப்படாதவர். ஆனால் அறியப்பட வேண்டியவர் என்பதற்கு 'ஒட்ட மண்டயன்' சிறுகதையில் வரக்கூடிய இந்த வரிகளே காட்டும்.

"ஊருல எப்ப எந்தப் பொருள் திருட்டுப் போனாலும் மொதல்ல சனங்க சந்தேகப்படுகிறது ஒட்ட மண்டயனத்தான். ஏன்னா, அவன் அந்த மாதிரி ஆளு. ஏதோ நகய காணும், நட்டக்காணும்ன்னா அவன நெனக்க மாட்டாங்க, அண்டாவக் காணும், குண்டானக் காணுமின்னா அவன்பேருதான் மொதல்ல வரும்".

கண்மணி குணசேகரன் வாய்மொழி மரபுக் கதை சொல் முறையையும், எழுத்து மரபையும் இணைத்து எழுதக் கூடியவர். எழுத்து வடிவத்திற்கும், வாய்மொழி மரபுக்குமான இடைவெளியை அவர் அறிந்தால் நல்லது. பேச்சு வழக்கு இவருடைய எழுத்தின் பலம் என்பதற்கு அவருடைய 'சாட்டை' (மணல் வீடு இதழ் – செப். – அக்.–08) கதையே உதாரணம்.

## புதிய வகைச் சிறுகதைகள்

இவ்வகையான சிறுகதைகள் கிட்டத்தட்ட கவிதை நடையிலேயே எழுதப்படுகிறது. கதையை நேரடியாகச் சொல்லாமல் புதிய அதே நேரத்தில் குழப்பமான முறையில் சொல்வது, ஒருவகையில் புரியாத மொழியில், அடுக் கடுக்கான வாக்கியங்களைக் கொண்டு சொல்லப்படுவது ஒரு புதிய போக்காக இருக்கிறது. இவ்வகையான எழுத்துக்கு ஆங்கில வழிப் படிப்பும், வெளிநாடுகளில் பின்பற்றப்படும் முறையை அப்படியே பின்பற்றுவதும்தான் காரணம். இந்தவகை எழுத்துதான் தற்போது தமிழ்ச் சிறுகதை உலகில் புகழ்பெற்றுள்ளது. இதற்கு வித்திட்டவர் மௌனி, கோணங்கி. இவர்களைத் தொடர்ந்து பா.வெங்கடேசன், ச.முருகபூபதி, க.சீ.சிவக்குமார், பிரேம்–ரமேஷ் ஜே.பி.சாணக்யா, தேவி பாரதி, சுரேஷ்குமார் இந்திரஜித், அரவிந்தன், போன்ற எழுத்தாளர்களும் இந்தப் போக்கில் எழுதிவருகின்றனர். இவர்களுடைய நோக்கமே சிடுக்குகள் உள்ள மொழியில் எழுதுவது. இவர்களுக்கு கதை முக்கியமல்ல. வாசகன் முக்கியமல்ல. அலங்காரமான வார்த்தைகளே முக்கியம். கதையைவிட மொழியே முக்கியம்.

'பிறகொரு இரவு' (காலச்சுவடு – ஜனவரி – 08) என்ற கதையை எழுதியுள்ள தேவிபாரதி வரலாற்றை கதையின் வழியே மீட்டுருவாக்கம் செய்து காந்தியைப்பற்றிப் புதிய சித்திரத்தை வாசகருக்கு தந்துள்ளார். இந்தக் கதையில் நாம் இதுவரை அறியாத காந்தியை சந்திக்கிறோம். கடந்தகாலம் நிகழ்கால அரசியலுடன் இணைத்துப் பார்க்கப்படுகிறது. காந்தியை நாம் எவ்வாறு புரிந்துகொள்வது, அவருடைய ஆளுமை என்ன, நாம் தெரிந்து வைத்திருக்கிற காந்தி என்பவர் யார் என்று பல அரிய கேள்விகளை இக்கதை வாசகனுக்குள் எழுப்புகிறது. அதற்கு இந்த வரிகளே உதாரணம்.

"தங்களுக்கு என்றுமே மரணமில்லை பாபுஜீ, இந்தத் தேசத்தின் எதிர்காலம் கருணை மிகுந்த தங்கள் கரங்களில் பத்திரமாக ஒப்படைக்கப்பட்டிருக்கிறது".

கோணங்கி – யின் 'நாடோடி ரயில் கள்ளன் சேக்கு' (கல்குதிரை – ஜன. 2010) என்ற கதை எங்குத் தொடங்குகிறது, எங்கு முடிகிறது? கதை நிகழும் காலம் எது? பரசுராமன் – என்பவரின் வழியாக விரிகிறது கதை. எல்லைகள் கடந்து கதைக்குள் பழைய காலம் பதியப்படுகிறது. புதியகாலம் பதியப்படுகிறது. கோணங்கியின் மனம் பின்னோக்கி மட்டுமே பாய்ந்து ஓடிக்கொண்டிருக்கிறது. பழைய காலம் குறித்த சித்திரங்கள் அடுக்கடுக்காகக் கொட்டப்படுகின்றன. பலவாழ்க்கை முறைகள் இந்தக் கதையின் வழியே காட்சிப்படுத்தப் படுகின்றன. கதாசிரியர் கடக்கிற தூரம் நம்பத் தகுந்ததாக இல்லை. கதை தொடர்ந்து நமக்குப் பல செய்திகளைச் சொல்லிக்கொண்டேயிருக்கின்றது. அவை தகவல்களாக மட்டுமே இருக்கின்றன என்பதற்கு இந்த வரிகளே சான்று.

"தையல்காரர்கள் கையில் வறுமையும் கிழிந்த வாழ்வைத் தைக்கவும் இருட்டைக் கீறி மூட்டுகிறார்கள். துவைத்தெடுத்த கல்லில் அடிபட்டு சாயம்போன பழைய துணி. இறந்து ஒடியும் ஆடைகள் மூச்சுவிடும் கனவு".

தலித்திய சிறுகதைகள், பெண்ணிய, நவீன, வாய்மொழி மரபுச் சிறுகதைகள் என்று பல பெயர்களில், பல அடையாளங்களில் எழுதப்பட்டாலும் எல்லாக் கதைகளுமே தமிழ் வாழ்வைத்தான் எழுதுகின்றன. மற்றக் காலங்களைவிட இக்காலத்தில்தான் சிறுகதைக்கானக் கூறுகள், வடிவம் குறித்த மொழி உள்ளடக்கம், எல்லை, கதாசிரியரின் நிலை குறித்த தெளிவு ஏற்பட்டுள்ளது. புதியவகை முயற்சிகள் இப்போது கூடுதலாக ஏற்பட்டுள்ளது. எல்லாவற்றுக்கும் மேலாகப் பலதரப்பினரும் பலதரப்பு வாழ்க்கை குறித்தும் எழுதுகின்றனர். சமூகத்தால் புறக்கணிக்கப்பட்ட மக்களுடைய வாழ்க்கையும், பெண்களுடைய வாழ்க்கையும் அக்கறையுடன் எழுதப்படுகின்றன. இதுவரை சமூகம் அறியாத பல வாழ்க்கை முறைகள் இப்போதுதான் கதைகளாகின்றன. சிடுக்குகள் நிறைந்த மொழியில் எழுதப்படுகிற முறையும், எளிய சொற்களில், எளிய மொழியில் எழுதப்படுகிற முறையும் தற்போது உள்ளன. இதற்கு மேற்குறிப்பிட்ட பல கதைகளே மாதிரிகள். தமிழ்ச் சிறுகதைகள் என்ற பெரிய கடலில் அண்மைக்காலச் சிறுகதைகள் ஒரு பார்வை என்பது – ஒரு கைப்பிடி அளவு நீர்தான். அந்தக் கைப்பிடி அளவு நீரும் உண்மையாக மட்டுமல்ல காலத்தின் கண்ணாடி யாகவும் இருக்கிறது. இதன் வழியே மொத்த தமிழ்ச் சிறுகதையின் செழுமையை உணர முடியும். இன்றைய கதைகள் நாளைய கதைகளுக்கு வாசல்களைத் திறந்துவிடும்.

# சிலப்பதிகாரம் அல்லது மகளிர் காப்பியம்

முனைவர் நயம்பு. அறிவுடைநம்பி



**முன்னுரை**

தமிழ் இலக்கிய வரலாற்றில் சிலப்பதிகாரம் முதற் காப்பியமாகவும், முதன்மைக் காப்பியமாகவும் விளங்குகிறது. பிற காப்பியங்கள் எல்லாம் ஏதேனும் ஒரு சமயத்தை அடிப்படையாகக் கொண்டு பாடப்பட்டவை. சிலப்பதிகாரம் அனைத்துச் சமயங்களையும் பாராட்டிப் பாடி, சமயச் சார்பின்மையை உணர்த்துகிறது. தமிழரின் பண்டை மரபு, பண்பாடு, வாழ்க்கை முறை, அரசியல் ஆகியவற்றைக் காட்டும் இலக்கியக் கண்ணாடியாகும். இதனை முத்தமிழ்க் காப்பியம், குடிமக்கள் காப்பியம், கற்புக் காப்பியம் எனப் பெயரிட்டு அழைப்பர். இதனை மகளிர் காப்பியம் என்பதே பொருத்தமானதாகும். இதில் கண்ணகி, மாதவி, மணிமேகலை, கவுந்தியடிகள், சாலினி, மாதரி, ஐயை, கோப்பெருந்தேவி, தேவந்தி, வேண்மாள், தெய்வம் மதுராபதி, புகார் மகளிர், மதுரைமகளிர், வஞ்சிமகளிர் மற்றும் ஐவகை நிலத்து மகளிர் எனக் காப்பியத்தின் தொடக்கம் முதல் முடிவுவரை மகளிரே மிகுதியாக இடம் பெற்றுள்ளனர். இது பெண்ணின் பெருமைகளைப் பேசும் மகளிர் காப்பியமாகும். "பெண்ணின் பெருந்தக்க யாவுள" என்ற திருக்குறளில் ஆழங்கால் பட்ட இளங்கோவடிகள் மகளிரின் மாண்புகளை எடுத்தியம்பவே இதனைப் படைத்தார். உரைசால் பத்தினியை உயர்ந்தோர் ஏத்துவர் என்பதே இக் காப்பியத்தின் அடிப்படை நோக்கமாகும். தொல்காப்பியம் "கற்பும் காமமும், நற்பால் ஒழுக்கமும் / மெல்லியல் பொறையும், நிறையும் வல்லிதின் / விருந்துபுறந் தருதலும், சுற்றம் ஓம்பலும் / பிறவும் அன்ன கிழவோள் மாண்புகள்" (தொல் : கற் : 11) என்று பெண்ணுக்குரிய பண்புகளையும், கடமைகளையும் எடுத்துரைக்கிறது. மகளிரின் இப் பண்புகளும், கடமைகளும் இக் காப்பியத்தில் வரும் மகளிரிடம் காணலாம். திருக்குறளில் உள்ள இல்வாழ்க்கை, வாழ்க்கைத் துணைநலம் என்னும் அதிகாரங்களுக்கு இக் காப்பிய மகளிர் இலக்கியமாகத் திகழ்கின்றனர். சிலப்பதிகாரத்தில் வரும் இல்லற மகளிராகிய கண்ணகி, மாதவி, மாதரி, கோப்பெருந்தேவி, இருங்கோ வேண்மாள் ஆகியோரின் பெருமைகளை இக் கட்டுரை சுருக்கமாகக் கூறுகிறது. "மங்கையராய்ப் பிறப்பதற்கே நல்ல மாதவம் செய்திட வேண்டுமம்மா" என்ற கவிமணியின் பாடல் இம்மகளிரின் ஏற்றம் கண்டு பாடப்பட்டது எனலாம்.

**கற்பென்னும் திண்மை பெற்ற கண்ணகியின் மாண்புகள்**

இளங்கோவடிகள் பெண்ணின் பெருமையை உலகிற்கு உணர்த்தவே சிலப்பதிகாரம் படைத்தார். உலக இலக்கிய வரலாற்றில் பெண்ணை முதலில் அறிமுகம் செய்த பெருமை அடிகளாரைச் சாரும். கண்ணகியைப்

> "போதிலார் திருவினாள் புகழுடை வடிவென்றும்
> தீதிலா வடமீனின் திறம்இவள் திறமென்றும்
> மாதரார் தொழுதேத்த வயங்கிய பெருங்குணத்துக்
> காதலாள் பெயர்மன்னும் கண்ணகி என்பாள் மன்னோ"
> (1 : 26–29)

என அறிமுகப்படுத்துகிறார். திருமகளின் மிக்க அழகும், அருந்ததியின் மிக்க கற்பும் உடையவள் என்பது கருத்தாகும். உயர்ந்த பண்புகள் எல்லாம் அவளை விரும்பி அடைந்தனவாம். மகளிர் அனைவரும் போற்றிப் பாராட்டும் சிறப்புகளை உடையவள். விண்ணுலகக் கற்பரசி அருந்ததி. மண்ணுலகக் கற்பரசி கண்ணகி என்பதை "அங்கண் உலகின் அருந்ததி அன்னாளை" (1 : 63) எனப் போற்றுவார். "கண்ணகியை முற்கூறினார், பத்தினியை ஏத்துதல் உட்கோள் ஆகலான்" என்று அடியார்க்கு நல்லாரும், "அவளை முற்கூறிற்று கதைநாயகி ஆகலான்"

என்று அரும்பத உரையாசிரியரும் பாராட்டியுள்ளனர். இதிலிருந்து இக்காப்பியம் பெண்ணின் பெருமை பேசும் மகளிர் காப்பியம் எனலாம். மேலும் அடிகளார் கண்ணகி, கோவலன் இருவரை ஒருங்கே கூறும்போது கண்ணகியை முன்னிலைப்படுத்துகிறார். வீடும், நாடும் பெண்ணைப் போற்ற வேண்டும் என்பதே அவரது எண்ணம். "கயமலர் கண்ணியும், காதல் கொழுநனும்'' (2 : 11) "அனநடை மாதரும் ஐயனும் தொழுது'' (13 : 175) என்றும் இன்னும் பல்வேறு இடங்களிலும் கண்ணகியை முன்னிலைப்படுத்துவதை அறியலாம். இல்லறத்து மகளிரை முன்னிறுத்தி, துறவற மகளிரை பின்னிறுத்துவார். இதனை, "புனமயில் சாயற்கும் புண்ணிய முதல்விக்கும்'' (11 : 119) என்று வனதேவதை வாயிலாக உணர்த்துகிறார். ஏனெனில் அறனெனப்பட்டதே இல்வாழ்க்கை என்பதாகும்.

கோவலன் மனையறம்படுத்தகாதையில் கண்ணகியின் நெற்றி, புருவம், கண், இடை ஆகியவற்றிற்குக் கடவுளரது பிறை, கரும்புவில், வேல், வச்சிராயுதம் இவற்றை ஒப்புமையாகக் கூறுவதிலிருந்து அவள் தெய்வப் பெண்ணாகக் காட்சியளிக்கிறாள். கண்ணகியை அளவு கடந்து பாராட்டுகிறான். "ஆருயிர் மருந்தே'' (2 : 75) என்று பாராட்டுவது எண்ணத்தக்கது. உயிர்க்கு ஊதியம் ஈதல் என்பார் வள்ளுவர். கோவலனின் ஆன்மா வீடுபேறு அடைய கண்ணகி மருந்தாக அமைந்தாள். இளையோர், அடியார், ஆயத்தார் இவர்களக் கைவிட்டு நாண், மடம், நல்லோர் ஏத்தும் கற்பு இவற்றைத் துணையாகக் கொண்டு "என்னோடு போந்து ஈங்கு என்துயர் களைந்த'' (16 : 88) என்று மதுரையில் கோவலன் கூறுவதை இதனுடன் ஒப்புநோக்கி உணர வேண்டும். தற்கொண்டானை உணவாலும், இன்பத்தாலும் மகிழ்வித்தவள். தற்காத்து என்ற திருக்குறளுக்கு இலக்கியமானவள்.

"கழிபெரும் காவுந்தி'' (10:170), "தவமுதல் காவுந்தி'' (10:192), "தவப்பெரும் சிறப்பின் காவுந்தி'' (10:245) என்றெல்லாம் இளங்கோவடிகளால் போற்றப்பட்டவர் சமணத்துறவி கவுந்தியடிகள். பரத்தரை நரிகளாகச் சபித்த ஆற்றல் உடையவர். அருகனைத் தவிர மனத்தால் பிற தெய்வங்களை நினையாதவர். அத்தகைய கவுந்தியடிகள் மதுரையில் மாதரியிடம்,

**"கற்புக் கடம்பூண்ட இத்தெய்வம் அல்லது**
**பொற்புடைத் தெய்வம் யாம்கண்டி லமால்''**

**(15 : 143–144)**

என்று மனம் திறந்து பாராட்டுகிறார். இவரைப் போன்றோரால் நாட்டில் வானம் பொய்க்காது, வளம் குறையாது, அரசுமுறை தவறாது (15:145–146) என்கிறார். சமணப் பெருந்துறவி இங்ஙனம் கண்ணகியின் கற்பின் திண்மை, மாண்புகள் இவற்றைப் பாராட்டிப் பொற்புடைத் தெய்வம் என்று போற்றுவதிலிருந்து பெண்ணின் பெருமை குன்றின் மேலிட்ட விளக்காகியது.

வேட்டுவவரியில் தெய்வமேறிய சாலினி கண்ணகியை,

**"இவளோ கொங்கச் செல்வி; குடமலையாட்டி;**
**தென்தமிழ்ப் பாவை செய்தவக் கொழுந்து;**
**ஒருமா மணியாய் உலகிற்கு ஓங்கிய திருமாமணி''**

**(12:47–50)**

எனப் பாராட்டுகிறாள். பின்னாளில் கோசர், சேரர், பாண்டியர், இலங்கை கயவாகு ஆகியோர் கண்ணகியை வழிபட்டனர். சாலினியின் தெய்வக் கூற்று உண்மையாயிற்று. கண்ணகியை அடைக்கலமாகப் பெற்ற முல்லைநில மக்களாகிய மாதரியும், ஐயையும் கண்ணகி கோவலன் உடனிருந்த காட்சியைக் கண்ணகியை நப்பின்னையாகவும், கோவலனைக் கண்ணனாகவும் (16:50–51) கண்டுமகிழ்ந்தனர். குறிஞ்சி நிலத்தில் வேங்கை மரத்தடியில் நின்று கணவனுடன் விண்ணுலகம் சென்ற கண்ணகியை அப்பெண்கள் "இவள் போலும் நம்குலக்கோர் இருந்தெய்வம் இல்லை சிறுகுடியீரே!'' (24 : பாடல் 2) என்றும், **"பரவலும் பரவுமின்''** என்றும், **"வள்ளி போல்வீர்''** என்றும் பாராட்டுகின்றனர். நாட்டுப்புற மக்கள் கள்ளம் கபடம் இல்லாதவர்கள். இவர்கள் பாராட்டில் எளிமையும், உண்மையும் புலப்படுகிறது.

கணவனுடன் உயிர்துறந்த கோப்பெருந்தேவி, இங்கு வந்த கண்ணகி இருவரில் வியக்கும் சிறப்புடையோர் யார் என வினவிய செங்குட்டுவனுக்கு வேண்மாள் "நம் அகல்நாடு அடைந்த பத்தினிக் கடவுளைப் பரசல் வேண்டும்'' (25:111–114) என்கிறாள். அவளின் விருப்பத்தை நிறைவேற்றவே செங்குட்டுவன் இமயத்தில் கல்லெடுத்துக் கங்கையில் நீராட்டி, வஞ்சியில் கோயில் கட்டி வழிபட்டான். தொல்காப்பியர் காலத்திலும் அதற்கு முன்னும் வீரர்க்கு நடுகல் நாட்டி வழிபடும் வழக்கம் இருந்தது. இதனைக்

**"காட்சி, கால்கோள், நீர்ப்படை, நடுதல்**
**..........................................................................**
**இருமூன்று வகையில் கல்லொடு புணர''**

**(தொல் : 1006:19–21)**

எனத் தொல்காப்பியம் கூறுகிறது. இதனை உள்வாங்கிய இளங்கோவடிகள் காட்சிக் காதை, கால்கோள் காதை, நீர்ப்படைகாதை, நடுகற்காதை என நான்கு காதைகளை அமைத்தார். புறத்திணை கூறுவது புறவீரம். கண்ணகியின் வீரம் அகவீரம். ஆகவேதான் அனைவரும் கண்ணகியைப் பத்தினி என்றும் வீரபத்தினி என்றும் பாராட்டினர். "வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும் தெய்வத்துள் வைக்கப் படும்'' (குறள் : 50) என்ற குறளுக்கு மண்ணிலும், விண்ணிலும் இலக்கியமாகத் திகழ்ந்தாள். இறைவன் மேலிருந்து கீழிறிங்கி வருவது அவதாரமாகும். ஒருவர் தம் பண்பால், செயலால் மண்ணிலிருந்து

விண்ணுலகத் தெய்வமாகச் செல்வது பல அவதாரமாகும். அங்ஙனம் விண்ணுலகத் தெய்வமாகச் சென்றோரில் கண்ணகி முதன்மையானவள்.

புகார் நகரக் கண்ணகியின் ஆயத்தார் இவளைத் "தேவமகள்'' (29 : பாடல் 2) என்றும், மதுரை மக்கள் "பெருந்தெய்வம்'' (19: பாடல் : 9) என்றும், வஞ்சி மகளிர் "செம்சிலம்பால் வென்றாள்'' (29 : பாடல் 11) என்றும் போற்றுகின்றனர். பாண்டியனின் வாயிற்காவலன் கண்ணகியைக் கொற்றவை, பிடாரி, துர்க்கை, பத்திரகாளி என மலைமகளின் உருவமாகப் பார்க்கிறான். தீமையை மற்றும் தீயோரை அழிப்பதே கொற்றவையின் செயல். அதைப்போன்று முறை தவறிய பாண்டியனையும், தீயோரையும் அழிக்கவே கண்ணகி அங்கே தோன்றினாள். "தீமையை எதிர்க்காமல் இருப்பது கோழைத்தனம்'' என்பார் அண்ணல் காந்தியடிகள். தன் கணவனுக்கு ஏற்பட்ட களங்கத்தைப் போக்கவே கண்ணகி, பாண்டியனைத் தண்டித்தாள். தவறு செய்த பாண்டியன் இவளைக் கண்டபோதே தோற்றான். இவள் சொல் செவியில் புகுந்தபோதே விழுந்து உயிர் துறந்தான். பாண்டியன் தனக்குத் தானே தண்டனை விதித்துக் கொண்டான். கண்ணகியின் இச்செயல் தற்கொண்டான் பேணும் முறைகளுள் ஒன்றாகும். பெண்ணுக்கு வேண்டிய நற்குணங்களில் இதுவும் ஒன்றாகும்.

மண்ணுலக மங்கையரும், மக்களும் கண்ணகியின் பண்புகளைப் பெருமைகளைப் பேசினர். கண்ணகி தெய்வங்களை ஏவல் கொள்ளும் தெய்வப் பெண்ணாவாள். கண்ணகி கதிரவனிடம் "காய்கதிர்ச் செல்வனே கள்வனா என் கணவன்'' (18 : பாடல் : 11) எனக் கேட்டாள். அதற்குக் கதிரவன் "கள்வனோ அல்லன் கடுங்கயற்கண் மாதராய்'' (18 : பாடல் : 12) என்றது. மேலும் கோவலனைக் கள்வனென்ற இவ்வூர் தீக்கு இரையாகும் என்றது. இவளின் சீற்றம் கண்டு நான்கு பூதங்களும் நடுங்கி மதுரையை விட்டு அகன்றன. அக்கினிக்கடவுள் "மாபத்தினி" என்றது. "நல்லோரைவிட்டுத் தீயோரை அழிக்க'' என்ற கண்ணகியின் ஏவலை ஏற்றுத் தீக்கடவுள் தீயோரை மட்டுமே அழித்தது. மதுரையின் காவல் தெய்வமும், பாண்டியனின் குலமுதல் கிழத்தியுமான மதுராபதித் தெய்வம் எரியும் நெருப்புக்கு அஞ்சியது. கண்ணகியின் முன்னேவரப் பயந்து பின்னால் வந்ததை "ஆயிழை நங்கைமுன் ஈயாள் பின்னிலை தோன்றி'' (23:15–16) என்பதால் அறியலாம். வனதேவதை கோவலனிடம் தன்வரவைக் கண்ணகியிடம் கூற வேண்டாம் என்றது, கண்ணகியின் ஆற்றலுக்கு அஞ்சியதேயாகும். இங்ஙனம் தெய்வங்கள் போற்றவும், ஏவல் செய்யவும் செய்தன.

கண்ணகியின் பண்புகளைப் பெருமைகளை நூலாசிரியர் வாயிலாகவும், பிற பாத்திரங்கள் வாயிலாகவும் அறிந்தோம். இனி, கண்ணகியின் வாய்ச்சொற்கள் வாயிலாக அவளின் உயர்குணங்களை, இல்லறக் கடமைகளை அறியலாம். தேவந்தியிடம் "பீடன்று'' என்ற ஒரே சொல்லால் குலமகளின் பண்பை வெளிப்படுத்தினாள். "தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள் பெய்யெனப் பெய்யும் மழை'' (குறள் : 55) என்ற குறளுக்கு இலக்கியமாகத் திகழ்ந்தாள். மாதவியிடம் பிரிந்து வந்த கோவலனிடம் "சிலம்புள கொண்மின்'' என்பதால் கணவனின் துன்பத்தில் பங்கு கொள்ளும் காரிகையாக விளங்கினாள். புகாரின் எல்லையைக் கடப்பதற்கு முன்பே "மதுரை மூதூர் யாது'' (10 : 91) என வினவுகிறாள். ஒடியும் இடையுடைய கண்ணகி நடந்த களைப்பால் மூச்சுவிட்டு மழலைச் சொல்லால் வெண்மையான பற்கள் சிரிக்கக் கேட்டாள் என்பதால் இவளின் மெல்லியல் தன்மை விளங்கும். கவுந்தியடிகள் மாதரியிடம் "வண்ணச்சீறடி மண்மகள் அறிந்திலள்'' என்று கூறுவதிலிருந்து இவளின் மெல்லியல் இயல்பு அறியலாம். கவுந்தியடிகளிடம் பரத்தயரை மன்னிக்குமாறு வேண்டியதால் இவளின் அருள் உள்ளம் புலனாகும். தன்சொல்லாற்றலால், பாண்டியன் தவற்றை உணரச் செய்தவள். கதிரவனிடம் பேசியதால் இவளது தெய்வத்தன்மை தெரிகிறது. அக்கினிக் கடவுளிடம் பசு, பத்தினிப் பெண்டிர், பார்ப்பார், முதியோர், குழவி இவர்களை விட்டு தீத்திறத்தார் பக்கமே சேர்க என்றது, இவளின் சீற்றத்திலும் அறவுணர்ச்சி மேலோங்கியிருப்பதைக் காணலாம். இறுதியில் "தென்னவன் தீதிலன்" என்றபோது இவள் தன்குற்றம் காண்பவள். பிறர் குற்றம் பொறுப்பவள் என்பதைப் புலப்படுத்துகின்றன. இவளின் இவ்வாய்ச் சொற்கள் இவளின் உயர் பண்புகளை இங்ஙனம் வெளிப்படுத்தின. மதுரையில் கோவலன் கண்ணகியிடம் "எழுகென எழுந்தாய் என் செய்தனை'' என்றபோது

> **"அறவோர்க்கு அளித்தலும் அந்தணர் ஓம்பலும்**
> **துறவோர்க்கு எதிர்தலும் தொல்லோர் சிறப்பின்**
> **விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை''**
>
> **(16:71–73)**

என்றாள்.

இதிலிருந்து கோவலன் பிரிவிற்காக வருந்தவில்லை. இல்லறக் கடமைகள் ஆற்றாமைக்காக வருந்துவதாகக் கூறுகிறாள். சுற்றத்தார் பேணல், அறநெறியாளர் பாதுகாத்தல், விருந்து உபசரித்தல் ஆகிய இல்லறக் கடமைகளை மேற்கொண்டதாக (2:85–88) மனையறம்படுத்த காதையால் அறியலாம். "இல்பெருகிழமையின் காண்தகு சிறப்பின் கண்ணகி'' (2:89–90) என்பதால் கண்ணகி இல்லறக் கடமைகளை இனிதே நிறைவேற்றியதை அறியலாம். இங்ஙனம் கண்ணகியின் வாய்ச்சொற்கள் வாயிலாக அவளின் உயர்வான பண்புகளும், கடமைகளும் உள்ளங்கை நெல்லிக்கனி என உணரலாம்.

**மாசற்ற மாதவியின் மறுவற்ற மாண்பு**

சிலப்பதிகாரத்தில் கற்பரசி கண்ணகிக்கு அடுத்து, சிறப்பைப் பெறும் பெண் மாதவியாவாள். சிலப்பதிகாரத்தில் பத்துக்காதைகளில் மாதவி பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. அரங்கேற்றுகாதையில் இளங்கோவடிகள்,

> **"சிறப்பின் குன்றாச் செய்கையோடு பொருந்திய**
> **பிறப்பின் குன்றாப் பெருந்தோள் மடந்தை**
> **தாதவிழ் புரிகுழல் மாதவி''** (3:5–7)

என்று மாதவியை அறிமுகப்படுத்துகிறார். மாதவி மாசுமறுவற்ற சிறப்பினள். குறைகளற்ற செயல்களைச் செய்பவள். பிறப்பில் குறையற்றவள் என அறிமுகப்படுத்துகிறார். இவளது அறிமுகமே அவளின் மாண்பைப் புலப்படுத்துகிறது. பிறந்த குலம் முக்கியமன்று. ஒழுக்கமும், செய்கையும்தான் ஒருவனை உயர்த்துவன என்பதை இதனால் அறியலாம். மாதவி விண்ணுலக மங்கை ஊர்வசியின் தோன்றல் என்பதை அரங்கேற்றுக்காதை (1:4), கடலாடுகாதை (18:25) இவற்றால் அறியலாம். அறிமுகத்தை அடுத்து, அவள் கற்ற கல்வியைக் கூறுகின்றார். மாதவி ஆடல், பாடல், அழகு என்ற மூன்றிலும் நிறையுடையவள். தன் ஐந்து அகவை முதல் பன்னிரெண்டாவது அகவை முடிய ஏழாண்டுகள் ஆடல், பாடல், இசை ஆகியவற்றை முறையான ஆசிரியர்களிடம் கற்றாள். பின் சோழ அரசன் முன்னிலையில் அரங்கேற்றம் நடைபெற்றது. அவளது கலைக்கல்வியை, அரங்கேற்றத்தை,

> **"ஆடலும் பாடலும் அழகும் என்றிக்**
> **கூறிய மூன்றின் ஒன்று குறைபடாமல்**
> **ஏழாண்டு இயற்றியோர் ஈராறு ஆண்டில்**
> **சூழ்கழல் மன்னற்குக் காட்டில் வேண்டி''**
> (3:8–11)

என்றார்.

அரங்கேற்றுகாதை ஓர் அருங்கலைச் சுரங்கம். அதனைப் பலமுறை கற்றுணர்ந்தால் மாதவியின் கலைமாண்புகளை உணரலாம். சுருங்கக் கூறின்,

> **"எண்ணும் எழுத்தும் இயலைந்தும் பண்நான்கும்**
> **பண்ணின்ற கூத்துப் பதினொன்றும் – மண்ணின்மேல்**
> **போக்கினாள் பூம்புகார் பொற்றொடி மாதவிதன்**
> **வாக்கினாள் ஆடரங்கில் வந்து''**
> (3 : வெண்பா)

என்ற பாடலால் அவளது அளவற்ற கலை ஞானத்தை அறியலாம். பூம்புகார் பொற்றொடி என்று மாதவியைப் போற்றுவதை எண்ணிப் பார்த்தால் அவள் உயர்வு விளங்கும். மாதவி கண்ணகிக்கு நிகரானவள் என்பதைச் சிலம்பு உணர்த்துகிறது. மாதவி நாட்டிய நன்னூல் காட்டும் இலக்கணங்களை நன்கு கடைப்பிடித்து ஆடிக் காட்டினாள். அதனால் சோழ மன்னன் அந்நாட்டு அரச முறைகளின்படி, பச்சைமாலை, தலைக்கோல் என்ற பட்டமும், ஆயிரத்தெட்டுக் கழஞ்சுப்பொன் ஆகியவற்றையும் பரிசாக அளித்தான். (3: 157–183). அக்காலத்தில் அரசனே இணைவேந்தராகத், துணைவேந்தராக அமைந்து பட்டமளிப்பதைச் சிலம்பு அறிவிக்கிறது.

மாதவியின் மாலை வாங்கிய கோவலன், அவள்மனை புகுந்து அவளுடன் இணைந்து வாழ்கிறான். அவளது எல்லையற்ற அன்பில் வீழ்ந்து, அவளை விட்டு நீங்க இயலாதவனாய், அவளிடம் அளவற்ற விருப்பமுடையவனானான். "வடுநீங்கு சிறப்பின்தன் மனையகம் மறந்து'' (93:175) என்பதால் மாதவியின் அன்பின் ஆழத்தை, அகலத்தை, உயர்வை உணரலாம். கண்ணகி இல்லற வாழ்விற்கு அளிக்காத ஒரு சிறப்பை, மாதவி இல்லற வாழ்வில் காட்டுகிறாள். இல்லற வாழ்வில் ஊடலும், கூடலும் வேண்டுமென்பது இல்லற நுட்பமாகும். உணவிற்கு உப்புபோல் கூடலுக்கு ஊடல் என்பது வள்ளுவர் கூறும் இல்லற நுட்பமாகும். அடிகளார் இதனைக் "கலவியும் புலவியும் கோவலற்கு அளித்து'' (4:32) என்று கூறியுள்ளார். "ஊடல் கோலமோடு இருந்து உவப்ப'' (6:74) அழகுடன் விளங்கினாள் என்கிறார். கானல்வரியில் "கலவியால் மகிழ்ந்தாள் போல் புலவியால் யாழ்வாங்கி'' பாடத் தொடங்கினாள். இங்கேயும் கலவி, புலவி இரண்டையும் அடிகளார் கூறுகிறார். ஆகவே அடிகளார் வள்ளுவர் கூறிய இல்லற நுட்பத்தை மாதவி வாழ்க்கையில் திரும்பத் திரும்பக் கூறியவர். கண்ணகி வாழ்வில் ஓரிடத்திலும் கூறாதது ஏனோ என்பது இன்னும் புதிராகவே உள்ளது. "மாதவி மடந்தை வரிநவில்பாணியொடு / ஊடல் காலத்து ஊழ்வினை உருத்து எழக் / கூடாது பிரிந்து'' (27:58/6) என்று மாடலன் செங்குட்டுவனிடம் மாதவியின் ஊடலைக் குறிப்பிடுகிறான். ஊடுதல் காமத்திற்கு இன்பம் என்பார் வள்ளுவர். அது உணவிற்கு உப்பு போன்றது என்பார். ஆனால் கானல்வரியில் ஊடலென்னும் உப்பு சற்று மிகுதியாகிவிட்டது. கானல்வரியில் மாதவி பாடிய பாடல்களால் அவளின் இசைப்புலமை நன்கு விளங்கும். அவளின் உரிமை உணர்வு அங்கே வெளிப்படுகிறது. இவ்வகையில் புரட்சிப் பெண்ணாகப், புதுமைப் பெண்ணாக விளங்குகிறாள். இதனால் இவளின் பெருமை உலகில் இன்றும் பேசப்படுகிறது.

மேலே கண்ட கண்ணகி, மாதவி போன்று இடைக்குல மடந்தை மாதரி; பாண்டியன் மனைவி கோப்பெருந்தேவி, சேரநாட்டு அரசி இருங்கோவேண்மாள் முதலிய பெண் பாத்திரங்கள் சிலப்பதிகாரத்தில் – அறிவிலும் அழகிலும் குணத்திலும் தலைசிறந்து விளங்கியவராகக் குறிக்கப் பெற்றுள்ளனர் என்பது போற்றத் தகுந்தது.

❖

# அண்ணாவின் படைப்பியம்





முனைவர் இரா. சேது

அண்ணா என அன்புடன் மக்களால் அழைக்கப்பட்ட அண்ணாதுரை எனும் இயற்பெயர் கொண்ட அவர், இருபதாம் நூற்றாண்டின் தலைசிறந்த சிந்தனையாளராகத் திகழ்ந்தார்.

அருந்தமிழையும் ஆங்கிலத்தையும் பாங்குறப் பயின்றார். நாட்டின் அரசியல், பொருளியல், சமூக இயல் ஆகியவற்றைக் கற்றுத் தேர்ந்த அறிஞராக விளங்கினார். தமிழ், ஆங்கிலம் ஆகிய இரு மொழிகளிலும் பேசவும் எழுதவும் திறம் பெற்றவராகத் திகழ்ந்தார். தொடக்க காலத்தில் தம் பொதுவாழ்க்கையைச் சமூக நீதிக்காகப் போராடிய நீதிக் கட்சியிலும், சமூக விடுதலையைக் குறிக்கோளாகக் கொண்ட தன்மான இயக்கத்திலும் ஈடுபடுத்திக் கொண்டார். பெரியாரைத் தலைவராகக் கொண்டு திராவிடர் கழகத்தில் இருந்து சமுதாயக் கேடுகளைச் சாடினார். பின்னர்ப் பெரியாரிடம் கொண்ட கருத்து வேறுபாடு காரணமாகப் பிரிந்து 17.9.1949இல் திராவிட முன்னேற்றக் கழகமெனும் அமைப்பை உருவாக்கினார். அவ்வமைப்பு அரசியல் சார்ந்ததாகவும், வாக்குச்சீட்டின் மூலம் ஆட்சியைக் கைப்பற்றுவதாகவும் செயல்படத் தொடங்கியது. கழகம் தொடங்கிய பதினெட்டாவது ஆண்டில் அண்ணா தமிழ்நாட்டின் முதலமைச்சர் எனும் பொறுப்பினை ஏற்றார்.

தமிழ் மருத்துவர் மாசிலாமணி முதலியார் நடத்திய 'தமிழரசு' எனும் வார இதழில் அண்ணாவின் 'மகளிர் கோட்டம்' எனும் கட்டுரை 1931ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 19ஆம் நாள் வெளிவந்தது. 1932ஆம் ஆண்டு பச்சையப்பன் கல்லூரியில் நடைபெற்ற சேசைய சாத்திரியின் கட்டுரைப் போட்டியில் கலந்துகொண்டு 'மாஸ்கோ மக்களின் அணிவகுப்பு' (Moscow Mob Parade) எனும் தலைப்பில் கட்டுரை வரைந்து முதல் பரிசினைப் பெற்றார். 1934ஆம் ஆண்டு ஆனந்த விகடன் இதழில் 'கொக்கரக்கோ' என்ற தலைப்பில் சிறுகதை ஒன்றினை எழுதி அக் கதைக்கு நன்கொடையாக ரூபாய் இருபதை (20)ப் பெற்றார். மேலே குறிப்பிட்ட தகவல்களெல்லாம் அண்ணா கருவிலேயே படைப்புத் திறன் பெற்றுள்ளார் என்பதனை உள்ளங்கை நெல்லிக்கனியாக்கிக் காட்டுகின்றன.

தமிழ்நாட்டில் தலைசிறந்த பேச்சாளராகவும், எழுத்தாளராகவும் விளங்கித் தமிழ் இலக்கியத் துறைக்கு அருந்தொண்டு புரிந்துள்ளார். அவரது படைப்புத் திறனால் தமிழ் புதிய எழுச்சியையும், ஏற்றத்தையும் பெற்றது.

அண்ணா பேச்சுக் கலைக்குப் புதிய உருவம் கொடுத்தார். அவர் பேச்சைக் கேட்ட மக்கள் மகுடிக்கு மயங்கிய நாகம்போல் கட்டுண்டு கிடந்தனர். தமிழின் சொற்பொழிவுக் கலைக்குத் தந்தையாக விளங்கிய தமிழ்த்தென்றல் திரு.வி.க., அண்ணாவின் பேச்சினைச் சென்னைத் தீவுத்திடலில் கேட்ட பின்னர், 'இனி வருங்காலத்தில் அண்ணாதுரை நடை, அண்ணாதுரை தமிழ், அண்ணாதுரையின் பேச்சு முறை, அண்ணாதுரையின் எழுத்து முறை என்றுதான் வரப்போகின்றன' என மனம் திறந்து பாராட்டியுள்ளார். எந்தப் பொருளைப் பற்றியும் எப்பொழுதும் பேசும் வல்லமை படைத்த அவரைச் சுற்றி இளைஞர்களும் மாணாக்கர்களும் அணிவகுத்து நின்றனர். தொடக்க காலத்தில் அண்ணாவின் பேச்சுகளைத் தமிழ்நாட்டு ஏடுகள் வெளியிடாது புறக்கணித்து வந்தன. பின்னர் அண்ணாவின் பேச்சோ எழுத்தோ இல்லாமல் தமிழ் இதழ்கள் வெளிவர முடியாதென்ற நிலை ஏற்பட்டது. பிற்காலத்தில் அண்ணாவின் பேச்சையே தமிழகம் வழிகாட்டியாகக் கொண்டு நின்றது. எண்ணற்ற இளைஞர்கள் அண்ணாவின் மேடைப் பேச்சையே முன் மாதிரியாகக் கொண்டு அண்ணாவின் பேச்சுகளை மனப்பாடம் செய்துகொண்டு தமிழ் மேடைகளில் உலா வந்தனர். அண்ணாவின் பேச்சுக் கலை, மக்களின் வாழ்வோடு பொருந்தி இருந்ததால் படைப்பியல் துறைக்கு வழிகாட்டியாக அமைந்ததெனலாம்.

அண்ணா எழுத்துத் துறையில் இதழாசிரியராக, சிறுகதை, புதினப் படைப்பாளராக, கட்டுரையாளராக, கவிதை புனைபவராக, நாடக ஆசிரியராக, நாடக நடிகராக, ஓவியம் புனைபவராக எனப் பல தளங்களில் படைப்பாளராக இருந்து தமிழுக்குத் தொண்டு செய்துள்ளார். மக்களின் கவனத்திற்கு எளிதில் வராத அரசியல் விவகாரங்களையும், சமுதாயச் சீர்கேடுகளையும் 'கேமிராவுக்குத் தப்பிய காட்சிகள்' என்ற தலைப்பில் ஓரங்க நாடகமாகப் படைத்துள்ளார். ஊரார் உரையாடல், பரதன், வீண்வாதங்கள் என்ற தலைப்புகளில் சிந்தனையைக் கிளரும் செய்திகளைத் தந்துள்ளார். அரசியல் அறிவை அரிவையரும் பெற வேண்டுமென்ற நோக்கோடு மூன்று பெண்களைப் பாத்திரமாகக் கொண்டு உரையாடல் முறையில் 'அந்திக் கலம்பகம்' என்ற தலைப்பில் உருவாக்கித் தந்துள்ளார். பெர்னாட்சா, இர்விங் வாலஸ், இப்சன் போன்ற மேலை நாட்டுப் படைப்பாளிகளின் படைப்புகளைத் தமிழில் தந்துள்ளார். 8.5.1955 திராவிட நாட்டில் 'தம்பிக்கு' என்ற பகுதியைத் தொடங்கி 14.1.1969 காஞ்சி பொங்கல் மலரில் வந்த கடிதப் பகுதி முடிய எழுதிய 261 கடிதங்களும் அவரது படைப்பியல் திறனுக்குச் சான்று பகருகின்றன. 'கைதி எண்

6342' என்ற தலைப்பில் காஞ்சி இதழில் வரைந்த சிறை நினைவுகள் பத்தொன்பதும் அண்ணாவின் சிந்தனையின் வெளிப்பாடாக அமைந்துள்ளன.

அண்ணா படைப்புத் திறனை வளர்த்துக் கொள்வதற்கு அவரது இதழியல் பணி முதன்மையாக அமைந்தது. கல்லூரிப் படிப்பை முடித்து வெளிவந்த பின் நீதிக் கட்சியின் தலைவராக இருந்த பாசுதேவோடு இணைந்து 'பாலபாரதி' என்ற வார ஏட்டிற்கு ஆசிரியராக இருந்தார். அவ் ஏட்டில் தொழிலாளர் நலம் பேணும் கட்டுரைகளை வரைந்தார். பின்னர்க் காஞ்சி மணிமொழியார் தொடங்கிய 'நவயுகம்' என்ற வார ஏட்டிற்கு ஆசிரியராக இருந்து பணிபுரிந்தார். 1938இல் 'விடுதலை', 'குடிஅரசு' முதலான ஏடுகளுக்குத் துணையாசிரியராக இருந்தார். 1942இல் 'திராவிட நாடு' வார இதழைக் காஞ்சிபுரத்தில் தொடங்கி அதன் ஆசிரியராக இருந்தார். 1949இல் 'மாலைமணி' நாளேட்டின் ஆசிரியராகவும் 1953இல் 'நம் நாடு' நாளேட்டின் ஆசிரியராகவும் பொறுப்பேற்றார். 1957இல் 'Home Land', 1962இல் 'Home Rule' என்ற ஆங்கில வார ஏடுகளுக்கு ஆசிரியரானார். 1963இல் காஞ்சிபுரத்தில் காஞ்சி எனும் வார ஏட்டைத் தொடங்கித் தம் வாழ்நாளின் இறுதிவரை எழுதி வந்தார். இவ்விதழ்களொடு கட்சித் தலைவர்கள் நடத்திய ஏடுகளிலும் எழுதினார். எழுத்துப் பணிக்கே தம்மை ஒப்படைத்துக் கொண்ட அண்ணாவால் எழுத முடியாத நிலை ஏற்பட்டது குறித்துக் காஞ்சியில் கடிதம் வரைந்தார். முதலமைச்சரானதும் எழுத்துப் பணியைத் தொடர முடியாமை குறித்துக் காஞ்சி வார ஏட்டில் 14.1.1969இல் வரைந்த இறுதி மடலில் –

'எந்தப் பணி எனக்கு இனிப்பும் எழுச்சியும் தந்து வந்ததோ, எந்தப் பணியிலே நான் ஆண்டு பலவாக மிக்க மகிழ்ச்சியுடன் ஈடுபட்டு வந்தேனோ, எந்தப் பணி மூலம் நீ என்னை உன் அண்ணனாக ஏற்றுக்கொண்டு பெருமிதத்துடன் உலகுக்கு அறிவித்து வந்தாயோ, எந்தப் பணி வாயிலாக என் கருத்துகளை உனக்கு அளித்து உன் ஒப்புதலைப் பெற்று அந்தக் கருத்துகளின் வெற்றிக்கான வழியினைக் காண முடிந்ததோ, எந்தப் பணி மூலம் தமிழகத்தை அறியவும், உலகத்தை உணரவும் தமிழ்ப் பண்பை நுகரவும் வழி கிடைத்து வந்ததோ, எந்தப் பணி மூலம் எப்போதும் உன் இதயத்தில் எனக்கோர் இடம் கிடைத்து அதுகுறித்து நான் அளவற்ற அகமகிழ்ச்சி பெற முடிந்ததோ – அந்தப் பணியினை முன்போலச் செய்ய முடியாதவன் ஆக்கப்பட்டு – முடியவில்லையே என்ற ஏக்கத்தால் தாக்கப்பட்டு – சூழ்நிலையின் கைதியாக்கப் பட்டுக் கிடக்கிறேன் என்பதனை அறிவாய்' என வருத்தத்துடன் கூறியுள்ளார். தமிழக முதல்வர் எனும் பெரிய பதவியிலிருந்தபோதும், படைப்புத் திறனை வளர்க்கும் எழுத்துப் பணியை இழக்க விரும்பாத அவரது உள்ளக் கிடக்கையை இக்கடிதம் வெளிப்படுத்துகின்றது.

அண்ணா வரலாற்றுக் கட்டுரைகள் வரைவதில் வல்லவராக விளங்கினார். மற்ற எழுத்தாளர்களைப் போல, பொழுதுபோக்கிற்காக எழுதவில்லை. வரலாற்றில் மறைக்கப்பட்டுள்ள உண்மைகளை வெளிப்படுத்தத் தம் பேனா முனையை ஒரு போர்க் கருவியாகப் பயன்படுத்தினார். 'இலட்சியம் இல்லாத எழுத்து மணம் இல்லாத மலர் போன்றது' என்ற குறிக்கோள் கொண்டவராக இருந்தார். நாட்டில் நல்ல கருத்துகளும் நல்ல நிலையும் உண்டாக்குவதற்காக எழுதுகோலைப் பயன்படுத்துபவர்கள் போர்வீரர்களிலே முதன்மையானவர்கள் எனக் கூறி அதன் வழிச் செயல்பட்டார்.

பதினாறாம் லூயி பிரான்சை ஆண்டுவந்தான். அவன் மனைவி இட்டதே சட்டமாக இருந்தது. மக்கள் வறுமையில் வாடினர். அரசின் செயல் தகாதது எனக் கூறியவர்கள் பாஸ்டில் என்னும் கொடிய சிறையில் அடைக்கப்பட்டனர். வாலிபர்களாகப் போனவர்கள் நரைத்த தலையோடு உடல் மெலிந்து நடைப்பிணமாக வயோதிகர்களாகப் பாஸ்டில் சிறையிலிருந்து வெளிவந்தனர். சிலர் சிறைச்சாலையிலே மடிந்தனர். அரசியின் கொடுஞ்செயல்கள் எல்லை கடந்தன. மக்கள் அஞ்சி நடுங்கினர். வால்டேர் எனும் ஒரு மனிதன்தான் ஆட்சியை எதிர்த்துப் போர் முழக்கம் இட்டான். அவனது எழுத்துகள் மக்கள் நெஞ்சில் புரட்சிக் கருத்துகளை விதைத்தன. அடங்கி ஒடுங்கிக் கிடந்த மக்கள் கிளர்ந்தெழுந்தனர். கொடிய பாஸ்டில் சிறை தகர்க்கப் பட்டது. 1789ஆம் ஆண்டு ஜூலை 14ஆம் நாள் பாஸ்டில் சிறையைப் புரட்சிப் படை தகர்த்தெறிந்தது. புரட்சியின்போது பாஸ்டில் சிறைக் கூடத்தை மக்கள் தாக்கியபோது வால்டேர் வாழ்கவென முழக்கமிட்டனர். அந்த வால்டேரைப் பற்றி 'வால்டேர் வீசிய வெடிகுண்டு' என்ற கட்டுரையில் அண்ணா பின்வருமாறு குறிப்பிடுகின்றார்:

'வால்டேர் போர் வீரரல்லர். ஆனால், பொறுத்துப் பொறுத்துத் தன்மான உணர்வு மரத்துப்போகும் நிலையிலே இருந்த மக்களைத் தட்டி எழுப்பிய புரட்சிக்காரர், பகுத்தறிவுத் தந்தை! பாமரரின் சக்தியை அவர்கள் உணரும்படி செய்த சிந்தனைச் சிற்பி! பேனா முனைகொண்டு அரண்மனைகளை, அஞ்ஞானிகளின் இருப்பிடங்களை, பழைமையான கோட்டைகளைத் தாக்கிய வீரர். கேலியால், கண்டனத்தால், ஆராய்ச்சியால், அறிவுரையால், வைதிக மூடுபனியைச் சிதறடித்த புது உலகத் தூதர். வீரரின் வாளை விலைக்கு வளைக்க முடிந்தது. எதிர்த்து ஒடிக்க முடிந்தது. வஞ்சித்து வளைக்க முடிந்தது! வால்டேரின் பேனாவை அடக்குமுறை, சிறை, நாடு கடத்தல் எனும் எவையாலும் வளைக்க முடியவில்லை. வால்டேர் தயாரித்த புரட்சிக் கருத்துகள் பொதுமக்கள் உள்ளத்தில் ஒன்று பத்து நூறாக வளர்ந்தன. 'அந்தப் புரட்சிக் கருத்துகளே பாஸ்டில் சிறையைப் பொடிப் பொடியாகத் தகர்த்தெறிந்தது' என்னும் அண்ணாவின் எழுத்து அவரது உரைநடைப் படைப்புத் திறனுக்கு நல்ல சான்றாகும்.

‘பழைமை புதுமை என்ற இரு சக்திகளுக்கும் போர் நடக்கிறது. எழுத்தாளர்களின் பேனா முனைகளே அப்போரிலே உபயோகமாகும் போர்க்கருவிகள்’ என வரைந்த அண்ணா பாழான பழைமையைச் சாடினார். பழைய சமுதாயத்தில் மலிந்துள்ள சாதி வெறி, சமயப் பொய்ம்மை, மூடநம்பிக்கை, பெண்ணடிமைத்தனம், போலி வாழ்க்கை இவற்றைத் தம் எழுத்துகளால் கண்டித்துள்ளார்.

மாத்தமிழன் இராவணனை இரக்கமெனும் ஒரு பொருளில்லா அரக்கன் எனக் கூறிய குற்றச்சாட்டை மறுத்துக் கம்பனைக் குற்றவாளிக் கூண்டிலே நிறுத்தி இலக்கியத் திறனாய்வை நாடக வடிவில் ‘நீதி தேவன் மயக்கம்’ எனும் பெயரில் நடத்திக் காட்டினார். அந்த நாடகத்தில் தாமே ஒரு கதை மாந்தராக இருந்து கம்பர் கூறிய குற்றச்சாட்டிற்குப் பதில் அளிக்குமாறு அடுக்கடுக்கான வினாக்களைத் தொடுத்தார். இதனைக் கேட்ட நீதிபதி மயக்கமுற்றார். இந்நாடகம் சென்னையிலும், தி.மு.க. மாநாடு நடைபெறும் இடங்களிலும் நாடகமாக நடித்துக் காட்டப்பட்டுள்ளது. கம்பன் காப்பியத்தை வழிபடுபொருளாகக் கொண்டு போற்றியவர்களை இந்த நாடகத்தின் வாயிலாகச் சிந்திக்கத் தூண்டியுள்ளார். இந்திய வரலாற்றில் பல பேரரசுகளும் சிற்றரசுகளும் வீழ்ச்சியுற்றதற்குக் காரணம் ஆரியர்களின் இரண்டகச் செயலே என்பதனை வரலாற்றுக் கண்கொண்டு நிலை நாட்டியுள்ளார். அதற்குச் சான்றாக, ‘தஞ்சை வீழ்ச்சி’, ‘திருமலை கண்ட திவ்ய ஜோதி’, ‘புலிநகம்’, ‘ஒளியூரில்’ என்ற சிறு கதைகளில் தெளிவுற எடுத்துக் காட்டியுள்ளார். மராட்டிய மாவீரன் சிவாஜி படை நடத்தி நாடுகள் பலவற்றை வென்று வெற்றி வீரனாகத் திகழ்ந்தான். மராட்டியத்தின் மன்னனாக முடிசூட்ட அவனது குலப்பிறப்பைச் சுட்டிக் காட்டித் தடை செய்தனர். சூத்திரன் நாடாளும் மன்னனாக வருவதற்குத் தகுதியில்லாதவன் என மனு தரும சாஸ்திரம் கூறுவதாகக் கூறி வஞ்சகர் வலை விரித்தனர். அந்நாடகத்தில் அண்ணாவின் கற்பனைப் பாத்திரமான சந்திரமோகன் இந்த வருணாசிரம தரும முறையை எதிர்த்தான். அண்ணா அந்த நாடகத்திற்குச் ‘சந்திரமோகன் அல்லது சிவாஜி கண்ட இந்து சாம்ராஜ்யம்’ என்ற தலைப்பைச் சூட்டினார். இந்த நாடகத்தில் அண்ணா காகப்பட்டர் வேடமேற்று நடித்தார். இந்த நாடகத்தில் வி.சி. கணேசன் சிவாஜி வேடம் தாங்கி நடித்தார். சிவாஜியாக நடித்த வி.சி. கணேசனின் நடிப்பைப் பாராட்டித் தந்தை பெரியார் ‘சிவாஜி’ என்ற சிறப்புப் பட்டத்தை அளித்தார். அதுவே கணேசனுக்கு அழியாப் புகழைத் தேடித் தந்தது. வி.சி. கணேசனுக்கு எவ்வளவோ விருது கிடைத்தபோதிலும் ‘சிவாஜி விருதே உயிருள்ளவரை அவருக்கு நிலைத்து நின்றது’. சூத்திரனைச் சத்திரியனாக்கக் காசியிலிருந்து காகப்பட்டர் அழைக்கப்படுகிறார். காகப்பட்டரின் எடைக்கு எடை தங்கத்தை அளித்து அவரின் காலில் விழுந்து சிவாஜி வணங்கினார். இதுகண்ட சந்திரமோகன் கடுஞ்சினங் கொண்டான்.

‘மராட்டியரின் தோள் வலிமையும், அவர்கள் ஏந்திய வாளின் கூர்மையும் அப்போது தேவைப்பட்டது. இப்போது, மன்னர்களை மண்டியிட வைத்த மாவீரனுக்குச் சாஸ்திரத்தைக் காட்டுகிறார்கள் – சாஸ்திரத்தை! அறிவுலகத்திலே அனைவரும் இதைக் கண்டித்தே பேசுவர். முடி நமது சிவாஜி மன்னனிடம், பிடி இந்த வேதம் ஓதியிடம்.’ ஆரியரின் சூழ்ச்சி வலையில் சிக்கித் தவிக்கும் தமிழர்கள் விழிப்புணர்வு பெறவே இந்நாடகத்தை அண்ணா எழுதினார். உலகில் எங்கும் இல்லாத சாதிமுறைகளையும் வருணாசிரம தருமங்களையும் உருவாக்கிப் பிழைப்பு நடத்தும் வைதிகக் கூட்டத்தின்மீது வீசப்பட்ட கருத்துக் கணைகளே இந்த நாடகமாகும்.

சிறுகதை 20ஆம் நூற்றாண்டில் பிறந்த புதிய கலைச் செல்வம். இந்திய மொழிகளில் முதன்முதலாகச் சிறுகதைகளைப் பங்கிம் சந்தரும், கவி இரவீந்திரநாத தாகூரும் படைத்தளித்தனர். தமிழில் வ.வே.சு. ஐயர் ‘குளத்தங்கரை அரசமரம் சொன்ன கதை’ என்ற சிறுகதையைத் தமிழில் முதன்முதலில் வரைந்தார். இவரது சிறுகதைகள் அனைத்தும் தொகுக்கப் பெற்று 1927இல் ‘மங்கையர்க்கரசியின் காதல்’ என்ற தலைப்பில் நூலாக வெளிவந்தது. மாதவையா, புதுமைப்பித்தன், கு.ப.ரா., கல்கி முதலானோர் தமிழில் சிறுகதை இலக்கியத்தை வளப்படுத்தினர். இக்காலகட்டத்தில் அண்ணா சிறுகதைகள் எழுதத் தொடங்கினார். அவரது முதல் சிறுகதையான ‘கொக்கரக்கோ’ ஆனந்த விகடன் இதழில் வெளிவந்தது. ‘கொக்கரக்கோ’ தொடங்கிக் காஞ்சி இதழில் வெளிவந்த ‘உடையார் உள்ளம்’, ‘பொங்கல் பரிசு’ ஈறாக எண்பத்தொன்பது (89) சிறுகதைகள் வரைந்துள்ளார். அச்சிறுகதைகள் அனைத்தும் சமுதாய விடுதலையைக் குறிக்கோளாகக் கொண்டு தீட்டப்பட்டுள்ளன. தொடக்க காலத்தில் அண்ணாவின் சிறுகதைகளைச் சிறந்த படைப்புகளாக ஏற்க மறுத்தவர்கள் காலப்போக்கில் தங்கள் அறியாமை உணர்ந்து எண்ணப் போக்கை மாற்றிக் கொண்டனர். கஸ்தூரிரங்கன் ‘தீபம்’ திங்களிதழில், ‘இன்றைய சிறுகதை, நாவல் இலக்கியம் – மணிக்கொடி மரபு, கல்கி மரபு, அண்ணாதுரை மரபு என்ற மூன்று பிரிவுகளில் அடங்கும்’ எனக் குறிப்பிட்டுள்ளார். சிறுகதை வரலாற்றில் அண்ணா பெற்றுள்ள இடத்தை யாராலும் புறக்கணிக்க முடியாதென்பதற்குக் கஸ்தூரிரங்கனின் கருத்துகள் சான்றாக விளங்குகின்றன. அண்ணாவைப் பின்பற்றிப் பல எழுத்தாளர்கள் தமிழில் சிறு கதைகளைப் படைத்து ஏற்றம் பெற்றனர்.

சிறுகதைகள் அளவில் சிறியதாகவும் விரைவில் படித்துவிடக்கூடியதாகவும் இருப்பதால், மக்கள் அதனை விரும்பிப் படிக்கின்றனர். அதனால் அண்ணா வாய்ப்புக் கிடைக்கும் போதெல்லாம் சிறுகதைகளைத் தம் கருத்துகளைப் பரப்பும் கருவியாகக் கொண்டார். சோவியத்து எழுத்தாளரான மார்க்சிம் கார்க்கி தாம் எழுத்தாளராக மாறிய காரணத்தைக் குறிப்பிடும்போது, ‘நான் எழுதத் தொடங்குவதற்கு முதற் காரணம் அமுக்கிச்

சொல்கிற சாரமற்ற வாழ்க்கை என்னை நிர்ப்பந்திப்பது. இரண்டாவது காரணம் என்னுள் காட்சிக் கருத்துப் பிம்பங்கள் நிறைந்திருத்தலால் என்னால் எழுதாமல் இருக்க முடிய வில்லை' என்கிறார். இந்தப் பேருண்மை அண்ணாவுக்குப் பொருந்துவதாகும்.

அண்ணா எழுதத் தொடங்கிய காலத்தில் நாட்டில் சமீன்தார்களின் ஆட்சிமுறை இருந்தது. அவர் முதலில் பணியாற்றிய நீதிக் கட்சியிலும் சமீன்தார்கள் (நிலக்கிழார்கள்) நிறைந்திருந்தார்கள். அதனால் அந் நிலக்கிழார்களின் ஆடம்பரத்தையும், இறுமாப்பையும், கழிகாமச் செயல்களையும் நேரில் காணும் வாய்ப்பினைப் பெற்றார். அவர்களது ஆணவத்தையும், கழிகாமச் செயல்களையும் அண்ணா தொடக்க காலக் கதைகளில் படைத்துக் காட்டினார். ஏறத்தாழப் பதினெட்டுச் சிறுகதைகளில் நிலக்கிழார்களின் அட்டூழியங்களையும், அதிகாரப் போக்கையும், ஆடம்பர வாழ்க்கையையும், பெண்களின் கற்பைச் சீரழிக்கும் சிறுமையையும், பரத்தையர் உறவையும் எடுத்துக் காட்டியுள்ளார். வயது முதிர்ந்த நிலக்கிழார்கள் தம்முடைய பணத்தினாலும், செல்வாக்கினாலும் இளம்பெண்களை மணந்து கொள்வதையும், அப்பெண்கள் இளமை காரணமாக வழிதவறி நடப்பதையும் சுட்டிக்காட்டியுள்ளார். 'ஓர் இரவில்' வரும் கருணாகரத் தேவர் மூலமாக நிலக்கிழார்கள் பெண்களைப் போகப் பொருளாக மட்டுமே வைத்துக்கொள்ள விரும்பும் அவலத்தை எடுத்துக்காட்டியுள்ளார். வேலைக்காரியில் வரும் வட்டியூர் வேதாசல முதலியாரின் பணத்தாசையையும், ஆணவப் போக்கையும் வெளிப்படையாகவே கூறி மக்களைச் சிந்திக்க வைத்துள்ளார். பார்வதி பி.ஏ.வில் வரும் ஆலால சுந்தர முதலியார் உறவினருக்கோ ஏழைகளுக்கோ உதவிட மனம் இல்லாதவர்; பரத்தையரிடம் செல்வத்தையெல்லாம் கொடுத்து அடிமையாகச் செயல்படும் சிறுமையைச் சித்திரித்துள்ளார். அண்ணாவின் கதைகளை நன்கு படித்தறிந்த எழுத்தாளர் ஒருவர், 'அண்ணாவின் கதைகளில் உலவும் பாத்திரங்கள் வெறும் கற்பனைப் பாத்திரங்களாக இருக்க மாட்டார்கள். உண்மைப் பாத்திரங்களாகவே நம் கண்முன் நடமாடுவதை நிதர்சனமாக உணர முடியும் அவரது சிறுகதைகளைப் படிக்கும்போது' எனக் குறிப்பிட்டுள்ளார். அண்ணா தம் கதைகளில் கற்பனை மாந்தர்களைப் படைப்பதைவிட தம்மைச் சூழ்ந்துள்ள சமுதாயத்தில் தாம் அறிந்த மனிதர்களையே படைத்துள்ளார். இதனை அண்ணா தம்முடைய 'குமரிக் கோட்டம்' எனும் புதினத்திற்கு எழுதிய முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார்:

'இதிலே காணப்படும் வாதிடும் மகன், வசீகர மங்கை, ரோஷம் நிரம்பிய அண்ணன் இவர்களை நீங்கள் எங்கு வேண்டுமானாலும் காணலாம். பெயர்கள் குழந்தைவேலர் என்றிராது. குமரி என்று இருக்காது. ஆனால், இவ்விதமான நிலைமையிலுள்ளவர்களை நாட்டிலே காணமுடியும்' எனக் குறிப்பிட்டுள்ளார். அண்ணாவின் கதைகளில் காணப்படும் மாந்தர்கள் நம்மிடையே அன்றாடம் காணப்படும் சாதாரண மக்களாகவே இருக்கின்றனர். தம் காலச் சமூக மக்களையே சிறந்த படைப்பாளிகள் கதைகளில் படைக்கின்றனர். நோபெல் பரிசு பெற்ற எமிங்வே, 'சிறந்த எழுத்தாளர்கள் கதை மாந்தர்களைப் படைப்பதில்லை. வாழும் மக்களையே படைத்துவிடுகின்றனர்' என்கின்றார்.

இது அண்ணாவின் கதைமாந்தர்களுக்கு முற்றிலும் பொருந்துவதாகும்.

தமிழகத்தில் இடைக்காலத்தில் பெண்கள் அடிமைப் படுத்தப்பட்டனர். ஆண் ஆதிக்கச் சமுதாயத்தில் பெண்கள் கொடுமைப்படுத்தப்பட்டதை 'ரங்கோன் ராதா' என்ற புதினம் தெளிவுறக் காட்டுகிறது. 'ரங்கோன் ராதா'வில் வரும் ரங்கம் தருமலிங்க முதலியாரின் ஆசை மனைவியாக இருந்தாள். முதலியாரின் பேராசை வளர்ந்தது. ஆண் வாரிசு இல்லாத ரங்கம் பிறந்த வீட்டில், அவளது தங்கை தங்கத்தையும் மணந்துகொண்டால் அவ்வீட்டிலுள்ள சொத்துகள் அனைத்தையும் அடைந்துவிடலாமெனத் திட்டம் தீட்டினார். தருமலிங்க முதலியார் தங்கத்தை மணந்துகொள்வதை ரங்கம் எதிர்த்தாள். அதனால் ரங்கத்துக்குப் பேய் பிடித்து விட்டதாகத் தருமலிங்க முதலியார் வதந்தியைப் பரப்பி விட்டார். ஊராரும் உற்றாரும் நம்பினர். இரண்டு ஆண்டுகளாகத் தொடர்பில்லாத உடலுறவு தருமலிங்கத்திற்கும் ரங்கத்திற்கும் ஏற்படுகிறது. பேய் பிடித்துள்ளதெனக் கூறி ரங்கத்தைப் பக்கத்துக் கிராமத்திலுள்ள மந்திரவாதியிடம் அனுப்பி வைத்தார். "தலைமுழுகாமல் இருக்கிறேன்" எனத் தான் கருவுற்ற செய்தியை ரங்கம் தருமலிங்க முதலியாருக்குத் தெரிவித்தாள்.

தருமலிங்க முதலியார் 'தலைமுழுகிவிட்டேன்' என்ற செய்தியைக் கடிதம் மூலம் ரங்கத்திற்குத் தெரிவிக்கிறார். குணமடைந்த ரங்கம் வீடு திரும்பினாள். இந்நிலையில் பொருளாசையால் கேட்டதெல்லாம் தரும் சிந்தாமணிக் குளிகை தேடி ஒரு முரடனின் வலையில் தருமலிங்க முதலியார் விழுந்தார். அம்முரடன் அவ் வீட்டிலிருந்த கிழவியைக் கொன்றுவிட்டு அக்கொலைப் பழியைத் தருமலிங்க முதலியார் மீது சுமத்தி அச்சுறுத்தினான். புழக்கடைப் பக்கம் வந்த ரங்கம் அம்முரடனைத் தடியால் அடித்துக் கொன்றாள். தான் இறந்துவிட்டதாகக் கூறுமாறு சொல்லிவிட்டு, நடந்த சம்பவங்கள் அனைத்தையும் தருமலிங்க முதலியார் கைப்பட எழுதி வாங்கிக் கொண்டு வீட்டை விட்டு வெளியேறினாள். ஆண் வேடத்தில் ஒரு சத்திரத்தில் தங்கிய ரங்கம் காய்ச்சலால் அல்லல்பட்டாள். அங்கிருந்த நாயுடு அவளைப் பெண்ணென அறிந்து கொண்டான்.

தருமலிங்க முதலியாரால் வீட்டை விட்டு வெளியேற்றப் பட்ட ரங்கம் சூழ்நிலையால் கற்பை இழக்கின்றாள். கற்பை இழந்த ரங்கம் சீற்றத்தோடு 'ஒரு பெண்ணின் விபசாரம் சாத்தியமாவது ஒரு ஆணினால் தானே ?' எனக் கூறுகிறாள்.

ஆண் துணையில்லாமல் பெண்கள் வஞ்சிக்கப்பட்டதைப் 'பிரார்த்தனை', 'அவள் விபசாரியானாள்' என்ற சிறு கதைகளிலும் சுட்டிக் காட்டியுள்ளார். பெண்கள் காலங் காலமாக ஆண்களின் கொடுமைக்கு ஆளாக்கப்படுவதைக் கண்டு இந்த உலகத்தில் யாரும் கவலைப்படாததைக் கண்டு ரங்கம் வேதனையடைந்தாள். ஆண்களின் கையில் பெண்களின் வாழ்வைக் காக்கும் பொறுப்பு இருக்கும் வரை பெண்ணினம் விடுபட முடியாதென அண்ணா தம் கதைகளில் வலியுறுத்தியுள்ளார். பெண்கள் கற்போடு இருக்க வேண்டுமானால் ஆடவர்களுக்குக் கற்பின் மீது கவலை பிறக்கும்படி அறிவு இஞ்செக்சன் கொடுக்க வேண்டுமெனப் பார்வதி வாயிலாகப் 'பார்வதி பி.ஏ.' எனும் புதினத்தில் வலியுறுத்தியுள்ளார். பெண்களின் விடுதலைக்குப் பெண்களே போராட வேண்டுமேயன்றி ஆண்களின் தயவை எதிர்நோக்கியிருப்பது அறியாமையென அண்ணா சுட்டிக்காட்டியுள்ளார். அண்ணாவின் கதைகளில் வரும் பெண்கள் அனைவரும் அவர் காலத்தில் கண்ட உண்மை உருவங்களேயாவர்.

பெண்ணைப் பெற்றவர்களைப் பெரிதும் கவலைக்கு ஆட்படுத்தும் வரதட்சணைக் கொடுமை குறித்து 'குமாஸ்தாவின் பெண் அல்லது கொலைகாரியின் குறிப்புகள்' என்ற புதினத்தை வரைந்தார். அறுபது வயது முதியவர் பதினாறு வயதுப் பெண்ணை இரண்டாந்தாரமாக, நான்காந்தாரமாக மணந்து கொள்ளும் செயலைக் கண்டித்துக் 'கபோதிபுரக் காதல்', 'கன்னி விதவையான கதை', 'ரங்கோன் ராதா', 'பிரார்த்தனை', 'வீங்கிய உதடு', 'குமாஸ்தாவின் பெண் அல்லது கொலைகாரியின் குறிப்புகள்', 'குற்றவாளி யார்?' என்ற கதைகளில் வரைந்துள்ளார். இளவயதில் விதவையாகி ஆண்களின் வஞ்சகத்தால் வழுக்கி விழுந்தவர்களையும் தம்முடைய தொடக்க காலக் கதைகளில் படைத்துள்ளார். கணவனை இழந்த கைம்பெண்கள் மறுமணம் செய்துகொள்வதே சாலச் சிறந்த வழியெனக் கூறி விதவைகளின் மறுமணத்தைப் 'பேரன் பெங்களூரில்', 'பாமா விஜயம்', '1938–40 ஒரு வசீகர வரலாறு' என்ற கதைகளில் போற்றியுள்ளார். விலை மகளிர் அவலத்தை 'என் வாழ்வு', 'அவள் விபசாரியானாள்', 'கோமளத்தின் கோபம்' முதலிய கதைகளில் படம் பிடித்துக் காட்டியுள்ளார். இந்திய நாடாளுமன்றத்தில் பெண்களுக்குச் சொத்துரிமை உண்டென மசோதா வந்தபோது 'உண்ணா விரதம் ஒரு தண்டனை' என்ற சிறுகதை வாயிலாகவும், தமிழகச் சட்டமன்றத்தில் மாநில முதல்வர் ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் இருதாரத் தடைச் சட்டத்தைக் கொண்டு வந்தபோது, 'வள்ளி நாயகியின் கோபம்' என்ற சிறுகதை வாயிலாகவும் வரவேற்றார். பெண்கள் எல்லாத் துறைகளிலும் செயல்பட்டு உரிமையோடு வாழத் தம்முடைய எழுத்துகளைப் பயன்படுத்தினார். அண்ணாவின் படைப்புகள் சீர்திருத்தப் போக்கில் பொருந்தா மணத்தைக் கண்டித்தல், கலப்பு மண ஆதரவு ஆகிய பொருள் பற்றிய பல புதினங்களையும், கட்டுரைகளையும் வரைந்துள்ளார். அவையனைத்தும் இளைஞர்களிடையே விழிப்புணர்வைத் தோற்று வித்துள்ளன. 'ஏழை அழுத கண்ணீர் மட்டுமல்ல, ஏந்திழையார் சிந்திடும் கண்ணீரும் நமது சமுதாயத்தை நாசமாக்கும் நச்சு நீராக மாற்றும்' எனத் தம் படைப்புகளில் எச்சரித்துள்ளார்.

'தமிழ்ச் சமுதாயத்தை அரித்துக் கொண்டிருக்கும் வேர்ப்புழுக்களான பெண்ணடிமைத்தனம், சமயப் பொய்ம்மை, சாதிக் கொடுமை, மூட நம்பிக்கை, போலித்தனம் ஆகிய கொடுமைகளைத் தம் படைப்புகளில் சாடினார். சாதி ஒழிப்பு, கைம்பெண் மறுமணம், கலப்பு மணம், சம்பிரதாயச் சடங்குகளின் மறுப்புப் போன்றவை சி.என். அண்ணா துரையின் சிறு கதைகளில் தலை தூக்கி நிற்கின்றன என அகிலன் கூறியுள்ளார். மக்கள் வாழ்வில் நாள்தோறும் நடைபெறும் நடப்பியல் போக்கினை நுண்மாண் நுழை புலத்துடன் அண்ணா நோக்கினார். அண்ணா தம்முடைய படைப்புகளில் நோயினை மட்டும் சுட்டிக்காட்டி அமைதியடையாமல் நோயை அகற்றும் மருத்துவராகவும் விளங்கினார். அண்ணா கண்ட மருத்துவ முறையைச் சொல்லின் செல்வர் டாக்டர் ரா.பி. சேதுப்பிள்ளை, 'தமிழ்நாட்டைப் பிடித்த பீடைகள் ஒழிய வேண்டுமாயின் நோய் நாடி நோய் முதல் நாடி அது தணிக்கும் வாய் நாடி வாய்ப்பச் செயல்' என்ற வள்ளுவர் வகுத்த மருத்துவ முறையைத் தயங்காது தமிழர்கள் கையாளுதல் வேண்டும் என்பது அவர் கொள்கை. புண்ணுற்ற மேனியைப் புறம் பொதித்து மூடுதலால் பயன் என்ன? என்பது அவர் கேள்வி' எனக் குறிப்பிட்டுள்ளது சிந்திக்கத்தக்கதாகும்.

அண்ணா தம் படைப்புகளைப் பொன்னுக்காகவோ, புகழுக்காகவோ, பொழுதுபோக்கிற்காகவோ உருவாக்க வில்லை. இலக்கியம் படைப்பது அவரது நோக்கமன்று; வாழ்க்கையைச் சித்திரித்துக் காட்டுவதே அவரது குறிக்கோள். மக்கள் வாழ்வில் இன்பத்தைப் பெருக்க வேண்டும். வேதனையைக் குறைக்க வேண்டும் என்ற தெளிவான சமூகக் குறிக்கோள் உள்ள எழுத்தாளராக விளங்கினார். அந்தச் சமூக உறவே அவரைப் படைப்பாளிகளில் முதன்மையானவராகச் செய்தது; அவரைப் பின்பற்றிப் பல எழுத்தாளர்கள் உருவாகவும் வழி தோன்றியது. அண்ணாவின் படைப்பியல் சமுதாய விடுதலையை அடிப்படையாகக் கொண்டதென்பதில் இரு வேறு கருத்துகள் இல்லை.





# மறைமலை அடிகளாரின் தனித்தமிழ் இயக்கம்

முனைவர் நா. செயப்பிரகாசு



அயலவர் வரவாலும் உறவாலும் அரசியல் – சமய – சமுதாய மாற்றங்கள் நிகழ்ந்ததனைப் போலவே, மொழியிலும் சில மாற்றங்கள் நிகழ்ந்தன. தொடக்க காலத்தில் தமிழ் பிற மொழிக் கலப்பின்றித் தூயதாகவும், தனித்தியங்கும் தன்மை வாய்ந்ததாகவும் விளங்கியது. அனைத்து நிலையிலுமான மாற்றங்களும், காலப்போக்கில் பண்பாட்டுக் கலப்பிற்கும் மொழிக் கலப்பிற்கும் காரணமாயின. போலி மயக்குகளாலும் பொல்லாச் சேர்க்கைகளாலும் தமிழின் தனித்தன்மையையும், தனித்தியங்கும் வல்லமையையும் நிலைகுலையச் செய்தன. இங்கிருந்தவர்களின் எதையும் ஏற்றுப் போற்றும் ஏமாளித்தனமும், ஏழைமையும், இயலாமையும், பிற மொழி – சமய வேட்கையும் விருப்பும், அயல்மொழி ஆர்வலரின் திட்டமிட்ட சூழ்ச்சியும் தமிழனின் – தமிழின் தளர்வுகளுக்கும் தடுமாற்றங்களுக்கும் வழிகோலின. தமிழால் தனித்தியங்க இயலாது என எதிர்க்குரல் கொடுக்கும் அளவுக்குத் தமிழில் கலப்புகள் மிகுந்தன. எனினும், அவ்வப்போது தமிழின் தனித்தன்மையைப் பேணிக் காக்கும் முயற்சியும், தனித்தியங்கவல்ல தன்மையையும் தகுதியையும் மெய்ப்பிக்கும் முயற்சிகளும் நடந்து வந்தன. காலப்போக்கில் இம்முயற்சி பெரிதும் வீறுகொள்ளத் தொடங்கி இயக்கமாகவே மாறிச் செயல்பட வேண்டியதாயிற்று.

செந்தமிழ், தண்டமிழ், வண்டமிழ், ஒண்டமிழ், அருந்தமிழ், முத்தமிழ், நற்றமிழ் எனப் பல நிலைகளில் தமிழின் தொன்மை, தூய்மை, வலிமை, இனிமை போன்றவற்றைக் குறிக்கும் அடைமொழிகளைக் கொண்டு தமிழ் போற்றப்பட்டுள்ளது. தொல்காப்பியர், இளங்கோவடிகள், ஞானசம்பந்தர், சேக்கிழார், குமரகுருபரர், தண்டபாணி அடிகளார், பாரதிதாசன் போன்றோர் தமிழின் அருமை பெருமைகளை அழகுறப் பதிவு செய்துள்ளனர். பெயர்களிலும் படைப்புகளிலும் வடமொழிக் கலப்பு மிகுதியாக இடம்பெற்றிருந்தாலும் கம்பர், திருத்தக்கதேவர், வில்லியார், அருணகிரியார் போன்றோர் வடமொழிப் பயிற்சியும் தேர்ச்சியும் கொண்டிருந்ததால் தம் படைப்புகளில் தமிழ்மொழி மரபு காத்தமை குறிப்பிடத்தக்கதாகும்.

பிற்காலத்தில் வடமொழிக் கலப்பு மட்டுமல்லாமல், உருது, தெலுங்கு, ஆங்கிலம் போன்ற பிற மொழிச் சொற்களும் தமிழில் கலந்து கையாளப்பட்டன. பின்னர் வந்த இலக்கண நூல்களும் மொழிக் கலப்புக்குப் பெரிதும் இடம் தந்தன. உரையாசிரியர்களில், குறிப்பாகச் சமயப் பின்னணியுடையவர்களின் நடையில் கலப்பு மிகுந்து அமைந்தது. பல சமயங்களின் வருகையும் ஆட்சி மாற்றங்களும் தமிழின் தனித்தன்மையைச் சீர்குலைத்தன. தமிழறிவும் ஆற்றலும் இருந்தாலும் தமிழ்ப்பற்று இல்லாததால் சாமிநாத தேசிகர் போன்ற சிலர், 'தமிழால் வடமொழியின் துணையின்றித் தனித்து இயங்க முடியாது' என்னும் நச்சுக் கருத்தைப் பரப்பினர்.

வள்ளலார், பேராசிரியர் சுந்தரனார் போன்றோர் தமிழின் தகுதி போற்றி, அதனை நிலைக்கச் செய்யப் பெரிதும் முயன்றனர். இந்நிலையில் கால்டுவெல்லின் தமிழின் தொன்மை தனித்தியங்கும் தகைமை தொடர்பான கருத்துகள் தமிழன்பர்களுக்குப் பேரூக்கம் தருவதாயமைந்தன.

1901இல் தொடங்கப்பட்ட மதுரைத் தமிழ்ச் சங்கம் சார்பில் 1903இல் வெளிவந்த முதல் இதழான, 'செந்தமிழில்' பரிதிமாற் கலைஞரால் எழுதப்பட்ட 'உயர்தனிச் செம்மொழி' என்னும் கட்டுரை, தமிழின் சிறப்புகளை நிலைநிறுத்தும் வகையில் அமைந்ததாகும்.

1908இல் விருதை சிவஞான யோகிகள் அவர்களால் குற்றாலத்தில் தோற்றுவிக்கப்பட்ட 'திருவிடர் கழகத்தின்' நோக்கம் தொடர்பான குறிப்புகள், கட்டளைகள் போன்றவற்றில் இடம்பெற்றுள்ள இனிய தமிழ்ச் சொற்கள் ஆகியவற்றைக் காணும்போது, இவ்வமைப்பே, தனித்தமிழ் இயக்கத்திற்கான முன்னோடி முயற்சி மேற்கொண்டது என்பது உறுதியாகிறது.

பாரதியார், வ.உ.சி., திரு.வி.க. போன்றவர்களின் தமிழ் உணர்வும் முயற்சிகளும் குறிப்பிடத் தக்கனவாயுள்ளன. பெருமளவு பிறமொழிச் சொற்களைக் கலந்து எழுதும் அப்போதைய சூழ்நிலையை மாற்றி, இயன்றவரை தமிழ்ச் சொற்களைக் கையாள இவர்கள் முயன்றுள்ளனர். 1915இல் வெளியான சுப்பிரமணிய சிவாவின் 'ஞான பானு' இதழில், தனித்தமிழ் முயற்சிகளை ஊக்கப்படுத்தும் வகையில் பரிசுத் தொகை அறிவிக்கப்பட்டுள்ளதும், 'உங்கள் நா தமிழே பேசுக; நீங்கள் கையிலேந்தும் இறகு தமிழே எழுதுக' என வேண்டுகோள் விடுக்கப் பட்டுள்ளதும் குறிப்பிடப்பட வேண்டியவை.

1916இல் பல்லவபுரம் மாளிகைத் தோட்டத்தில் அடிகளார் தம் மகள் நீலாம்பிகையாருடன் உலவி வரும்போது, இராமலிங்க அடிகளாரின் பாடலில் அமைந்திருந்த 'தேகம்' என்ற சொல்லுக்கு மாற்றாக, 'யாக்கை' என்னும் தனித்தமிழ்ச் சொல்லைப் பயன்படுத்தியிருக்கலாமே என எண்ணியதை அடுத்து, அன்றுமுதல் இருவரும் தனித்தமிழிலேயே பேசுதற்கும் எழுதுதற்கும் உறுதி பூண்டது 'தனித்தமிழ் இயக்கம்' புத்துணர்வுடன் வீறுகொள்ளத் தொடங்கியதற்கான அடிப்படை நிகழ்வாகும். அடிகளாரின் அடிமனத்திலிருந்த தனித் தமிழ் உணர்வு மேலோங்கிச் சிறக்கவும் மேன்மையுறவும் இந்நிகழ்வு துணையாயிற்று எனலாம். அடிகளார் தம் இருபத்தோராம் அகவைக்குள் கொண்ட பழந்தமிழ் இலக்கியக் கல்வி, அவருள் பெருந்தமிழாற்றலைக் கொட்டிக் குவித்திருந்தது; பேராசிரியர் சுந்தரனாரின் தொடர்பும் அடிகளாரின் தமிழ் உணர்வுகளுக்கும் உந்துதல்களுக்கும் துணையும் தூண்டு கோலுமாயின. கிறித்தவக் கல்லூரியில் பணியாற்றியபோது பரிதிமாற்கலைஞரிடம் அடிகளார் கொண்ட தொடர்பும் தமிழன்பும் அடிகளாரின் தமிழுணர்வுகள் வலுப்பெற வழியமைத்தன.

அடிகளாரின் ஆசிரியர் சூளை சோமசுந்தர நாயகர், "நீ தனித் தமிழிலேயே எழுது. உனக்குத் தனித் தமிழிலே எழுதும் ஆற்றலை இறைவன் ஆக்கியுள்ளான். உன் தனித்தமிழைப் படிக்கப் படிக்க என் காதுகளுக்கு இன்பமாயிருக்கிறது... தனித்தமிழில் எழுதுவதை விடாதே. நீ தனித் தமிழிலே எழுதுவதே எனக்கு விழிப்பையும் கிளர்ச்சியையும் உண்டுபண்ணுகிறது" எனக் கூறியுள்ளமை அடிகளாருக்கு அமைந்த ஊக்கமொழிகளாம். தம் ஆசிரியரைப் போலவே, வடசொற்கலப்பு மிகுதியாக உள்ள ஓர் உரைநடையை எழுத அடிகளார் இளமையில் விருப்பங் கொண்டிருந்தாலும், தமிழ் உரையாசிரியர்களின் தனித்தமிழ் உரைகளும், தன்னதாசிரியர் நாயகரின் அன்புரையும் அவரைத் தடுத்துத் தனித்தமிழின் பக்கமே இருக்கச் செய்ததென்பதை அடிகளாரே குறிப்பிட்டுக் கூறியுள்ளார், முல்லைப்பாட்டு ஆராய்ச்சியுரை, பட்டினப்பாலை ஆராய்ச்சியுரை ஆகிய ஆய்வுரை நூல்களிலும், மதுரைத் தமிழ்ச் சங்கப் பொழிவிலும் (1905) அடிகளாரின் தனித்தமிழ் அன்பு–ஆர்வம்–ஆற்றல் ஆகியன வெளிப்படுதலைக் காணலாம்.

தொடக்க காலங்களில் அவ்வக்காலச் சூழ்நிலை களுக்கும், வெளிப்படுத்தும் கருத்துகளுக்கும் படைப்புகளுக்கும் ஏற்ற மொழிநடையையே கையாண்டார் அடிகளார். மொழிக்கலப்பு என்பது தவிர்க்க முடியாததெனவும், கற்ற கல்விக்கான அடையாளமெனவும் பலர் எண்ணியிருந்தனர். பெரும்பாலானவர்களின் பேச்சிலும் எழுத்திலும் பிறமொழிச் சொற்கள் – குறிப்பாக வடமொழிச் சொற்கள் பெருமளவு கலந்தே இருந்தன. அதனைக் குறையெனக் கருதாது, பெருமையாகவே கருதும் மனநிலையும் இருந்தது. அடிகளாரின் பேச்சிலும் எழுத்திலும் மொழிக்கலப்பு இடம்பெற்றிருந்த நிலை மாறி – தனித்தமிழ் உணர்வு மலர்ந்தபின், முழுக்க முழுக்கத் தமிழ்ச் சொற் கையாளுகை இடம்பெற்றது. தன் முந்தைய படைப்புகளிலும் பதிப்புகளிலும் தம் கைப்படவே திருத்தங்களை அடிகளார் ஆக்கியுள்ளார்.

"நமது இனிய செந்தமிழ் மொழியை அயன்மொழிச் சொற்கள் விரவாமற் பாதுகாத்துத் தூயதாய் வழங்கி அதனை வளம்பெறச் செய்வது தமிழராயினார் ஒவ்வொருவர்க்கும் இன்றியமையாத கடமையாம். எல்லா நலங்களும் ஒருங்குடைய நமதருமைச் செந்தமிழ் மொழியை நம்மனோர் பயிலாதும் பாதுகாவாதும் கைவிட்டிருத்தல் நிரம்பவும் இரங்கற்பாலதொன்றாம். இனியேனும் அவர் அங்ஙனம் மடிந்திராமைப் பொருட்டு, நம்மனோரிற் கற்றவரா யிருப்போர் ஆரியம், ஆங்கிலம் முதலான பிறமொழிச் சொற்களைக் கலவாமற் றனித்தமிழில் பேசவும் எழுதவும் கடைப்பிடிப்பாய்ப் பழகிவரல் வேண்டும். இதனை முன் நடந்து காட்டும் பொருட்டு இதற்கு முன் யாம் எழுதிய நூல்களிற் புகுந்த சில அயன்மொழிச் சொற்களையும் அந் நூல்களைத் திரும்பப் பதிப்பிட்டு வரும் இப்போது முழுதுங் களைந்துவிட்டு, அவை நின்ற இடத்தில் தூய தமிழ்ச் சொற்களையே நிரப்பிவருகின்றோம்" என்கிறார் அடிகளார்.

தனித்தமிழ்க் கொள்கையில் அடிகளார் உறுதியுடன் இருந்து பேசியும் எழுதியும் முனைப்புடன் செயல்பட்டார். “பண்பட்ட பழைய மொழிகள் எல்லாவற்றிலும் தமிழ்மொழி ஒன்றுதான் இன்றும் தன் பண்டை நலஞ்சார்ந்த புகழொடு வாழ்கின்றது. பிறமொழிக் கலப்பு அதன் தூய தன்மையைக் கெடுக்குமென்றும் அதன் வளர்ச்சியினைக் குன்றச் செய்யுமென்றும் யாம் உறுதியாக நம்புகின்றோம். ஆதலால் எமது தனித்தமிழ்க் கொள்கையினைக் கடைப்பிடிக்காத உங்களுடைய மாநாட்டிலே கலந்து கொள்ள முடியாமையினைப் பொறுத்துக் கொள்வீர்களாக” என அடிகளார் தனித்தமிழ் முயற்சிகளுக்கு முரணான நிகழ்ச்சிகளில் பங்கேற்பதனைத் தவிர்த்தார். பிறமொழிக் கலப்புடனிருந்த நூல்களுக்கு அணிந்துரையும் வழங்க அவர் மறுத்தார். கல்லாதவர்கள் இயல்பான தமிழில் பேச, கற்ற சிலர் மொழிக் கலப்பில் முனைந்து நிற்றலைப் பெருங்கேடு எனவும் கொடுஞ்செயல் எனவும் சுட்டிக் காட்டியுள்ளார் அடிகளார்.

சுவாமி வேதாசலம், மறைமலை அடிகள் எனவும், சமரச சன்மார்க்க நிலையம் – பொதுநிலைக் கழகம் எனவும், ஞானசாகரம் – அறிவுக்கடல் எனவும் மாற்றம் பெற்றன. தனித்தமிழ் முயற்சிகள், பிறமொழி வெறுப்போ, மறுப்போ, புறக்கணிப்போ ஆகாது என்னும் அடிகளாரின் கருத்து இங்கு நினைக்கத் தக்கதாகும்.

தன் மக்களுக்கு இடப்பட்டிருந்த வடசொற் பெயர்களை யெல்லாம் அழகிய தமிழ்ப் பெயர்களாக்கினார் அடிகளார். அடிகளாரின் தனித்தமிழ்க் கொள்கைகளுக்குப் பெரிதும் உறுதுணையாயிருந்தனர் அவர்தம் மக்கள். குறிப்பாக அவர்தம் மகள் நீலாம்பிகையார் “தம்மை வளர்க்கும் தாய்மொழியைக் குறைகூறித் திரியும் அவர்களைத் தமிழ்ப்புலவர்கள் என்றழைத்தலைவிடத் தமிழ்ப் பகைஞர் என்றழைத்தலே பொருந்தும். நாம் கருத்தொடு முயன்று பிறமொழிச் சொற்களாகிய நச்சுப் புழுக்களைத் தமிழாகிய தண்ணீரினின்றும் வடிகட்டித் தெளிந்த தீந்தமிழ்ப் புனலைப் பருகுதற்குக் கடமைப்பட்டிருக்கின்றோம்” எனக் குறிப்பிட்டிருப்பது அவர்தம் தனித்தமிழ்ப் பற்றையும் ஈடுபாட்டையும் காட்டும்.

“சொற்களையும் பொருள்களையும் தூயவாக்கி வகுத்தலே நூல் யாக்குமுறை என்பதனைச் சிறிதும் ஆய்ந்து பாராத இஞ்ஞான்றைக் கதை நூல்காரர்கள் வடசொல்லும், ஆங்கிலச் சொல்லும், கொச்சைத் தமிழ்ச் சொல்லும் விரவிய மிகச் சீர்கெட்ட நடையில் அவை தம்மை வரைந்து நூன் மாட்சியினைப் பாழ்படுத்துகின்றனர்” எனக் கூறி வருந்தும் அடிகளார், தமது நூற் பதிப்புகளிலிருந்து பிறமொழிச் சொற்களைக் களைந்து அவற்றிற்கு ஒத்த தூய தமிழ்ச் சொற்களைப் பெய்து மறுபதிப்புகளை வெளியிட்டார். அடிகளாரின் இத்தகு முன்னோடி முயற்சிகளால், ஆங்காங்கே தமிழ்ப் பாதுகாப்புக் கழகங்கள் நிறுவப்பட்டன. தமிழ் உணர்ச்சி மாநாடுகள் நடத்தப்பட்டன. தமிழறிஞர் கழகங்கள் தோன்றின. தனித்தமிழ் மாட்சி குறித்த துண்டுத் தாள்கள் வெளியிடப்பட்டன. வழக்கிலிருந்த வடசொற்களுக்கு இணையாகத் தமிழ்ச் சொற்களின் பட்டியல்கள் வெளியிடப்பட்டன. அறிக்கைகளின் வழி, உருமாறியிருந்த ஊர்ப் பெயர்கள் மீண்டும் தமிழில் வழங்கப்பட்டன.

ஆட்சிச் சொல் அகரவரிசை போன்ற நூல்கள் வெளிவந்தன. தமிழ் – தமிழக வரலாற்று நிகழ்வுகள் குறித்த ஏடுகள், தாளிகைகள் வெளிவந்தன. பல்வேறு துறைசார்ந்த பொருள்களில் தனித்தமிழ்க் கட்டுரைகள் எழுதப்பட்டு இதழ்களில் வெளியாயின. செந்தமிழ்ச் செல்வி, செந்தமிழ், தமிழ்ப் பொழில், தென்மொழி, தமிழ்நாடு, தமிழ்ப்பாவை போன்ற தனித்தமிழ் இதழ்களும் ஏடுகளும் வெளிவந்தன. தமிழின் சிறப்புகளுணர்ந்து அரசியலாரும் கல்வித் துறையினரும் உரியன செய்யக் கிளர்ச்சிகள் நடத்தப்பட்டன.

தனித்தமிழின் மாட்சி குறித்தும், தமிழில் பிறமொழிக் கலப்பால் நேரும் தீங்குகள் குறித்தும் மிகப் பல சான்றுகளுடன் அடிகளார் தொடர்ந்து பேசியும் எழுதியும் வந்தார். தன் தனித்தமிழ்க் கொள்கை சார்ந்த முயற்சிகளுக்குத் தமிழன்பர்களும் தமிழ் அறிஞர்களும் ஒத்துழைப்புத் தந்து உறுதுணையாகுமாறு வேண்டினார். அடிகளாரின் முயற்சிகளுக்கு அரணாகச் சிலர் இருந்ததைப் போலவே முரணாகவும் சிலர் இருந்தனர்.

“நமது செந்தமிழாகிய ஒலியுடம்பும் பழுதுபடாமற் செவ்வையாகப் பாதுகாக்கப்படுமானால், அஃது இன்னும் பல நூறாயிரம் ஆண்டு உயிரோடு உலவித் தன்னைப் போற்றி வழங்கும் மக்களுக்கு அரிய பல நலங்களையும் நன்மைகளையும் பயக்கும். தமிழ் வளர்ச்சிக்கு மாறான மாறுதல் என்னவென்றால் தூய தமிழ்ச் சொற்கள் இருப்பவும் அவற்றை விடுத்து அயன்மொழிச் சொற்களை அதன்கட் கொண்டு வந்து புகுத்தலேயாம்... எல்லா நிறைவும் உடைய தமிழ் மொழிக்கோ அங்ஙனம் பிறமொழிச் சொற்களின் உதவி சிறிதும் வேண்டப்படுவதில்லை” என்னும் கருத்தினர் அடிகளார்.

“முயற்சியும் அறிவும் உடையவர்கள் கருத்து வைத்தால் எத்தகைய புதுப்பொருள்கட்கும் தமிழிலேயே பெயரமைக்கலாமென்பதே நமது கொள்கை. உயிரோடுலவி வரும் மொழிகள் எவையாயிருப்பினும், அவை எத்தனை ஏழைமையுடையவாயிருப்பினும், அவற்றிற்குரியோர்

உண்மைப் பற்றுடையராய் அவற்றை அங்ஙனம் வளம்பெறச் செய்து வருகுவராயின் அதனால் அவர் உரமான அறிவும், நன்முயற்சியும் மேன்மேல் மிகப் பெற்றுத் தாமுந் தம்மினத்தாரும் உயர்வர்" என அடிகளார் தனித்தமிழ் வழியிலான உயர்வுக்கு வழி கூறுகிறார்.

மறைமலை அடிகளாரின் தனித்தமிழ்க் கொள்கையாலும் முயற்சியாலுமே தமிழில் பிறமொழிக் கலப்பு பெருமளவு தடுக்கப்பட்டுத் தமிழ் காக்கப்பட்டதெனக் கூறலாம். தமிழ் அன்பர்கள், அறிஞர்களிடையே மொழிசார்ந்த விழிப்புணர்வை வீறுகொள்ளச் செய்தவர் அடிகளார். தமிழால் முடியும் எனத் தமிழ்ப் படைப்பாளிகளிடையேயும் தன்னம்பிக்கையை விளைவித்தவர் அடிகளார். அவரது வழிகாட்டுதலால் தமிழ் மீட்பும் காப்பும் வளர்ப்பும் சிறந்து விளங்குதல் வெளிப்படை. ❖

## தமிழ் மறவர் புலவர் வை. பொன்னம்பலனார்
## (1904 - 1973)



புலவர் வை. பொன்னம்பலனார் அவர்கள் அரியலூர் மாவட்டம் கீழமாளிகை என்னும் சிற்றூரில் 30.01.1904 இல் அன்று பிறந்தவர். திருவையாறு அரசர் கல்லூரியில் புலவர் பட்டம் பெற்று அந்நாளைய சேலம் (வேலூர், சேலம்), திருச்சி (முசிறி, செந்துறை, அரவக்குறிச்சி, பொன்பரப்பி, தோகைமலை) மாவட்டங்களில் தமிழாசிரியராகப் பணியாற்றியவர். பகுத்தறிவு, தனித்தமிழ் இயக்கப் பணிகளோடு தம்மைப் பிணைத்துக் கொண்டவர். தந்தை பெரியார், மறைமலையடிகள், தேவநேயப் பாவாணர், புரட்சிக் கவிஞர் பாரதிதாசன், திரு.வி.க., வ.உ.சி., நெ.து.சு. ஆகிய சான்றோர்களுடன் நெருக்கமாகப் பழகியவர். அவர்களுடைய பாராட்டுகளையும் பெற்றவர். கனகசபை என்னும் தமது இயற்பெயரைப் பொன்னம்பலம் என மாற்றிக்கொண்டதோடு நில்லாமல் நூற்றுக்கணக்கான தம் மாணவர்களின் பெயர்களைத் தனித்தமிழ்ப் பெயர்களாக மாற்றியமைத்த பெருமைக்குரியவர்.

பகுத்தறிவு, சாதி ஒழிப்பு, தனித்தமிழ்க் கொற்றன், செந்தமிழ்க் கொற்றி போன்ற பெயர்களைத் தம் மக்களுக்குச் சூட்டியவர். வாழ்நாள் முழுவதும் தனித்தமிழிலேயே எழுதியும் பேசியும் வந்ததோடு தம்மைச் சூழ்ந்தவர் அனைவரையும் அவ்வாறே செயற்படவைத்தவர். பாடம் கற்பிக்கும்போதும் சொற்பொழிவாற்றும் போதும் சொல்லாராய்ச்சியில் திளைத்தவர். இலக்கியப் புலமையும் நுட்பமான சொற்பொருள் அறிவும் கூர்மையான சொல்லராய்ச்சித் திறமும் கொண்ட இவர்தம் திட்பமான, தெளிவான, துணிவான செயல்முறைகளின் மூலம் அனைவரையும் கவர்ந்தவர். தமிழ் மூதறிஞர் சிலம்பொலி செல்லப்பனார், பெரியாரியல் பேரறிஞர் வே. ஆனைமுத்து போன்றவர்கள் இவருடைய தலைமாணாக்கர்கள் என்பது குறிப்பிடத்தக்கதாகும். இவர் விளிம்பு நிலைச் சமுதாயத்தைச் சேர்ந்த ஆயிரக்கணக்கானவர்களுக்குக் கல்வியறிவுடன் தன்மான உணர்வையும் தமிழ் உணர்வையும் ஊட்டியவர்.

புலவர் பொன்னம்பலனாரின் அஞ்சாமையையும் தமிழ்த் தொண்டையும் பாராட்டித் தந்தை பெரியார் அவர்கள் 1957இல் சேலம் நிகழ்ச்சியொன்றில் **'தமிழ் மறவர்'** என்னும் அடைமொழியை அவருக்கு வழங்கிச் சிறப்பித்தார். பயன் கருதாப் பொதுத் தொண்டில் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக்கொண்ட தமிழ் மறவர் புலவர் வை. பொன்னம்பலனார் அவர்கள் 02.12.1973 புகழுடல் எய்தினார்.

நன்றி – தமிழ் மறவரின் மாணவர்
பேராசிரியர் க. இராமசாமி
செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனம்
சென்னை

# சங்க நூற்பாதையில் பெரியபுராணம்

பேராசிரியர் ம.வே. பசுபதி



### கருவில்

அருண்மொழித் தேவராகிய சேக்கிழார், திருத்தொண்டர் புராணமாகிய பெரிய புராணத்தை இயற்றிப் பொன்றாப் புகழ் பெற்றார். சேக்கிழாரின் காலம் இரண்டாம் குலோத்துங்க சோழனின் காலம் (கி.பி. 1113–1150) என்பதே முடிந்த முடிபாகும். பதினொன்றாம் நூற்றாண்டுவரை தமிழில் தோன்றிய அனைத்துத் தமிழ் இலக்கண இலக்கியங்களை முற்றக் கற்றுணர்ந்த பேரறிவாளர் இவர் என்பதனை இவர்தம் காவியம் நன்கு மெய்ப்பிக்கின்றது.

தொண்டு என்னும் தூய பண்பைக் கருவாகக் கொண்டெழுந்த காவியம் பெரியபுராணம். தொண்டு என்னும் சொல் மிக விரிவான பொருளழுத்தம் உடையதாகும்.

**..................யாஅம் இரப்பவை**

**பொருளும் பொன்னும் போகமும் அல்ல, நின்பால்**

என்பது கடுவன் இளவெயினனாரின் பரிபாடல் தொடர். தொண்டின் அடிப்படைகள் இத்தொடரில் உள்ளன. அருள் பொதிந்த நெஞ்சினோனின் அன்பு செறிந்த செயற்பாடாக அமையும் அறனே தொண்டெனப்படும். அருளை அன்பூஈன் குழவி என அறத்தில் கற்பித்தார் தேவர். இத்தகைய தொண்டு செய்வோர் பொருளும் பொன்னும் போகமும் நாடாது தொண்டைத் தொழிலாகவே கருதி,

**'செல்வம் மேவிய நாளில் இச்செயல்**

**செய்வதன்றியும் மெய்யினால்**

**அல்லல் நல்குர வான போதிலும் வல்லர்'**

ஆக விளங்கிய தொண்டர்களின் அணிவகுப்பைப் பெரியபுராணத்துள் காணலாம்.

'தனக்கென முயலா நோன்தாள் பிறர்க்கென முயலுநர்' என்ற புறப்பாட்டுத் தொடருக்குச் சான்றாக, 'பசிப்பிணி மருத்துவன்' எனப் புறப்பாட்டு வழங்கும் பட்டத்திற்கு உரியவர்களாகத் தொண்டர்களின் வரலாறுகள் சேக்கிழார் எடுத்த கருவுக்கு நல்ல உருவளித்தன.

மனத்தாலும், மொழியாலும், உடலாலும் செய்யும் உதவிகள் அனைத்தும் தொண்டின் பாற்பட்டவையே ஆகும். ஆயினும், கொடைப் பண்பே தொண்டின் பெரும் பகுதியாக அமைகிறது. கொடையில், அருட்கொடை, பொருட்கொடை என இரு பகுப்புகள் உள்ளன. சங்க கால மன்னர்களும் மக்களும் பொருட் கொடை செய்தார்கள். சங்க காலப் புலவர்கள் அருட்கொடை செய்தார்கள். அருள் என்பது தொடர்பு பற்றாதார் மாட்டும் விரிவது. அப்புலவர் பெருமக்கள் தம் மனைவி, தம் மக்கள் பெயர்களை நிலைநிறுத்தவில்லை. மன்னர்களின் பெயர்களை – புலவர்களின் பெயர்களை நிலைநிறுத்தினார்கள். 'புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின் வலவன் ஏவா வானவூர்தி எய்தினும் எய்துப' என்றபடி, புலவர்களின் பாக்கொடையே பெரும் பயன் நல்கியது. 'தம்புகழ் நிறீஇத் தாம்மாய்தல்' என்பதே மனிதப் பிறப்பின் வெற்றியாகும். அவ்வெற்றியை மன்னர்கட்கு – புரவலர்களுக்கு வழங்கி ஈடேற்றிய பெருந்தொண்டர்கள் புலவர்கள் எனில் அது மிகையன்று. அதனால்தான் அருட்கொடையாளர்கள் ஆகிய – பாக்கொடையாளர்களாகிய புலவர்களை 'அவர்' என்றும், நிலையாமை கொண்ட பொருட் கொடையாளர்களாகிய புரவலர்களை 'அவன்' என்றும், சங்க நூல் தொகுப்பாசிரியர்கள் குறிப்பிட்டனர். இவ்வழக்குக்கு அடிகோலியதும், பாடற்சான்றாக அமைந்ததும் 'இரவலர் புரவலை நீயும் அல்லை' என்ற பெருஞ்சித்திரனாரின் தொடர் எனலாம். புரவலை என்பது ஒருவரைச் சுட்டியது. அடுத்த அடியில் 'புரவலர் இரவலர்க்கு இல்லையும் அல்லர்' எனப் பலரைக் குறிக்கப் பன்மை விகுதியாக 'அர்' என்னும் விகுதி புணர்க்கப்பட்டது.

இச் சங்க நூற் கோட்பாட்டின்படி அருட் கவிக் கொடையாளராகிய சுந்தரரைச் சேக்கிழார் காவியத் தலைவராக அமைத்துக் கொண்டார். 'பிள்ளை பாதி புராணம் பாதி' என்னும் பழமொழி தோன்றுவதற்கு ஏதுவாகச் சம்பந்தர் புராணத்தை விரிவாகப் பெரிதாகப் பாடினார். நாவுக்கரசர் வரலாற்றை உருகியும் வியந்தும் போற்றினார். 'திருத்தொண்டின் உறைப்பாலே வென்றவர்' என்றும், 'உலகத்தில் அறியாதார் தாம் உளரே' என்றும், வரம்பாகிய சொற்களைப் பெய்து வழுத்தினார்.

### மொழிநடையில்

சேக்கிழாரின் விருத்தப் பாக்கள் ஆற்றொழுக் கானவை, செஞ்சொல் ஆட்சிகளால் சீர் பெற்றவை.

**'சீரின் நீடிய செம்பியர் பொன்னிநன் னாட்டுக்**

**காரின் மேவிய களிஅளி மலர்ப்பொழில் சூழ்ந்து,**

**தேரின் மேவிய செழுமணி வீதிகள் சிறந்து**

**பாரின் நீடிய பெருமைசேர் பதிபழை யாறை'**

என ஒற்றைக் கலிவிருத்தத்தில் சோழர் தலைநகரின் பல்வகை மேன்மைகளையும் செஞ்சொற்களால், ஆற்றொழுக்காக அறிமுகம் செய்யும் அழகே அழகு! சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் இத்தகு நலஞ்செறிந்த பாடல்கள் நூல் முழுதும் நிறைந்துள்ளன.

'எழுத்தொடு புணர்ந்த எழுத்தானந்தமும், சொல்லொடு புணர்ந்த சொல்லானந்தமும், பொருளொடு புணர்ந்த பொருளானந்தமும்' எனக் கவிக்குற்றங்கள் மூன்று. ஒருவன் பெயர் கூறும்போது 'ஓ' என்ற எழுத்தைச் சேர்க்கக் கூடாது; அது அமங்கலமாகும். 'தம்பிக்கு முன் பிறந்தான்' எனக் கூறலாகாது. அது அண்ணன் என்ற பொருளைத் தருமாயினும், தம்பிக்கு முன்பு இறந்தான் என்ற பொருளையும் கொடுக்கும். எல்லாக் குற்றங்களும் தீர்ந்த செய்யுட்கு ஒரு சான்றாக,

**'தாமரை புரையும் காமர் சேவடி**
**பவழத் தன்ன மேனித் திகழொளிக்**
**குன்றி யேய்க்கும் உடுக்கைக் குன்றின்**
**நெஞ்சுபக எறிந்த அம்சுடர் நெடுவேல்**
**சேவலம் கொடியோன் காப்ப**
**ஏம வைகல் எய்தின்றா லுலகே'**

என்னும் குறுந்தொகை, கடவுளின் வாழ்த்துச் செய்யுளைக் குணசாகரம் காட்டும். சங்கச் செய்யுள்களில் செவியறிவுறூஉ, வாயுறை வாழ்த்து என்னும் துறைகளமைந்த செய்யுள்கள் பல உள்ளன. அறிவுரை கூறும்போதும் வாழ்த்தும்போதும் மேற்காண் குற்றங்கள் கலவாமல் செய்யுள் செய்வது மிகவும் இன்றியமையாததாகும். புதல்வரைப் பெறுதல், மன்றல் அணிவிழா முதலிய மங்கல நிகழ்வுகள் பற்றிய பாடல்களிலும், கவர்பொருட்பேறு வரலாகாது; நச்செழுத்துகள் கலவாமல் செய்யுள் புனைதல் வேண்டும்.

காரிகிழார், வாழ்த்தியல் என்னும் துறையமைப் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைப் பாடினார். 'வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும்' என்னும் அச்செய்யுளில்,

**'தண்கதிர் மதியம் போலவும், தெறுசுடர்**
**ஒண்கதிர் ஞாயிறு போலவும்**
**மன்னுக பெருமநீ நிலமிசை யானே'**

என அவனை வாழ்த்தினார். மதி, தண்கதிர் கொண்டு குளிர் செய்வதாயினும் தேய்தல் உடையது; ஞாயிறு பயிர்களையும் உயிர்களையும் வாழ்விப்பதாயினும் தெறுதல் – சினத்தல் – சுடுதல் உடையது என அவரே குறிப்பிடுகிறார். இவ்வாழ்த்து, உனக்குத் தேய்தலும் வரும் காய்தலும் வரும் எனக் கூறியதாகாதோ என ஐயப்படுதல் ஆகாது. திங்களும், ஞாயிறும் உலகுள்ளளவும் இருக்கும். அதுபோல நீயும் நின்புகழும் உலகுள்ளளவும் சிறந்தும், திங்கள் ஞாயிறு போல மேம்பட்டும் விளங்க வேண்டும் என்பதே இதன் கருத்தாகும். தெறுசுடர் என்றும், ஒண்கதிர் என்றும் ஞாயிற்றுக்கு இரண்டு அடைகள் புணர்த்தமைக்கும் காரணம் உண்டு. பகைவர்க்குத் தெறுசுடர் ஞாயிறாகவும், தன் குடிகட்கு ஒண்கதிர் ஞாயிறாகவும் விளங்கி நிலைபேற்றுடன் வாழ வேண்டும் என்பதே அது.

இத்தகு நுணுக்கங்கள் பெரியபுராணத்துள்ளும் நிறைந்துள்ளன. குழந்தை அழுதது எனப் பாடுவது அமங்கலமாகாது. குழந்தைகளுக்கு அழுகை என்பது பண்பு. ஏனையோர்க்கு அழுகை என்பது மெய்ப்பாடு.

**'இளிவே இழவே அசைவே வறுமையென**

**விளிவில் கொள்கை அழுகை நான்கே'**

என்பது தொல்காப்பியம்.

**'இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்**
**நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்**
**மயக்குறு மக்கள்'**

எனச் சங்கப் பாடல் வருணித்ததுபோலச் சேக்கிழார் குழந்தையை வருணிக்க வாய்ப்பில்லை. அதன் அழுகையைச் சுட்டிச் சொல்ல வேண்டிய கட்டாயம் அமைந்தது. வேதநெறி குன்றிய சூழலில், சைவத்துறை தேயும் சூழலில் திருஞானசம்பந்தப் பிள்ளையார் தோன்றினார். எனவே, குழந்தையின் இயற்கையான அழுகைக்கு மூன்று காரணங்களைத் தற்குறிப்பேற்றமாக அமைத்து, பண்பழுகையை மெய்ப்பாட்டழுகையாகக் காட்டுகிறார். மெய்ப்பாட்டழுகை அவலத்தில் அடங்கும் என்பதனால் – குழந்தையை அறிமுகம் செய்யும் முதற்பாடலிலேயே அவலச்சுவை ஆகாது என்பதனால், 'சீத, வள, வயல்புகலி' என்றும், 'புனிதவாய்'என்றும், 'மலர்ந்து' என்றும் மங்கல அடைமொழிகளை அடுக்கடுக்காக வைக்கிறார். தழைத்து, ஓங்க, விளங்க, பொலிய என்பனவும் மிகுமங்கலச் சொற்கள் ஆகும்.

**'வேதநெறி தழைத்தோங்க**
**மிகுசைவத் துறைவிளங்க**
**பூதபரம் பரைபொலியப்**
**புனிதவாய் மலர்ந்தழுத**
**சீதவள வயற்புகலித்**
**திருஞான சம்பந்தர்**
**பாதமலர் தலைக்கொண்டு**

**திருத்தொண்டு பரவுவாம்'**

என்பது அப்பாடல். இவ்வாறான உயர்சொற்புணர்ப்பு நடையை வேத்தியல் மொழிநடை என்பர் நாடக நூலார். சங்கப் புலவர்களின் பெயர்கள் ஒருவரைக் குறிக்கும் பன்மைக்கிளவியால் வெண்ணிக்குயத்தியார், விழுத்தண்டுன்றினார் என வருதல்போலச் சேக்கிழாரும் நூல் முழுதும் பெயர்களை அமைத்துள்ளமையும் சான்றோர் வழக்கு மொழியாகிய வேத்தியல் மொழிநடையே ஆகும்.

### நானில உரிப்பொருளமைப்பில்...

தொல்காப்பியம் உலகை நான்காகப் பகுக்கிறது. முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்னும் நானிலத்தில் சில காலங்களில் காட்டு நிலமும், மலை நிலமும் பாலையாகும் என்று கணித்த இளங்கோவடிகளின் அறிவியல் நுட்பம் வியக்கத்தக்கதாகும்.

அகப்பொருள் நூல்கள், புறப்பொருள் நூல்கள் அனைத்தும் நானிலச் செய்திகள் கூறுவதில் ஒருமுகப் படுகின்றன. முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்ற நானிலங்களுக்கு உரியதான மூன்று பொருள்களில் அகநூல்கள் உரிப்பொருளை மையப்படுத்தி விதந்தோதுவன; முதற்பொருளையும் கருப்பொருளையும் மையப்படுத்தி விதந்தோதுவன புற நூல்கள். அகப்பொருள் பாடல்களில் திணை கண்டறிய ஐந்நிலப் பெயர்கள் தேவைப்படுகின்றன. புறப்பொருட் பாடல்களுக்கு அவ்வாறில்லை.

அகம் என்பது சுவையுணர்வை 'இப்படித்து' எனச் சொல்லலாகாதது, சொல்ல ஒண்ணாதது. பெயர் கூறலாகாது. 'கிளவித் தலைவன் பெயர் வரைந்துரையார்' என்பது தொல்காப்பியம். தலைவன் பெயரையோ தலைவியின் பெயரையோ அறியும் வண்ணம் செய்யுள் அமையுமாயின் அகப்புறம் எனத் தலைப்பிட்டு, அச் செய்யுளைப் புறநூலில் அடக்குவது மரபாகும்.

முக்காவல் நாட்டு ஆமூர் மல்லனைப் பொருது நின்ற போர்வைக்கோப் பெருநற் கிள்ளியை, ஒருதலைக் காமமாகிய கைக்கிளைத் திணையில், பெருங்கோழி நாய்கன் மகள் நக்கண்ணையார்,

**'என்ஐ புற்கை உண்டும் பெருந் தோளன்னே**
**யாமே புறஞ்சிறை இருந்தும் பொன்னன் னம்மே**
**போர் எதிர்ந்து என்ஐ போர்க்களம் புகினே**
**கல்லென் பேரூர் விழவுடை யாங்கண்**
**ஏமுற்றுக் கழிந்த மள்ளர்க்கு**
**உமணர் வெரூஉம் துறையன் னன்னே'**

என்று பாடினார். காட்சி, ஐயம், துணி, குறிப்பறிதல் என்ற கைக்கிளை, தலைவன் மாட்டு நிகழும் கைக்கிளை. இக் கைக்கிளைப் பாடலில் தலைவியின் கைக்கிளை வெளிப்படுகிறது, கற்பனையாகாமல் நிகழ்வாகவும் அமைந்துள்ளது. எனவே, குறுந்தொகையுள் அமைய வேண்டிய இப்பாடல் புறநானூற்றில் அடங்கியது.

ஒரு பெண், தன் காமத்தை வெளிப்படுத்திச் சொல்வது அதிசயமாகும். நக்கண்ணையார் பாடலைச் சேக்கிழார் நன்கறிந்திருந்தமையால், தலைமகனுக்கு உரியதாகிய ஐயம் என்ற துறையில், சுந்தரரைப் பார்த்து விரும்பி அதிசயித்துப் பரவை நாச்சியார்,

**'முன்னேவந்து எதிர்தோன்றும்**
**முருகனோ ? பெருகு ஒளியால்**
**தன்நேரில் மாரனோ ?**
**தார்மார்பின் விஞ்சையனோ ?**
**மின்ஏர்செஞ் சடையண்ணல்**
**மெய் அருள்பெற் றுடையவனோ ?**
**என்னேஎன் மனம்திரித்த**
**இவன்யாரோ எனநினைத்தார்.'**

பெண், ஆணைப் பார்த்து ஐயுற்று நினைத்ததாக வேறெந் நூலிலும் பாடலில்லை. இலக்கண மரபில் தன்படைத்து மொழிதலைச் சேக்கிழார் செய்ததில்லை. இதனால் சங்க நூற்பாதையிலேயே சேக்கிழார் புராணம் செய்தார் எனத் தெளியலாம்.

### பண்பாட்டில்...

பழந்தமிழரின் பண்பாட்டில் முதலிடம் பெற்றது விருந்தோம்பலேயாகும். பொற்கலம் பரப்பி மன்னனே விருந்தூட்டிய நிகழ்வுகளையும், 'நும்மில்போல' என உரிமை அளித்து விருந்தினரை உறவினராகக் கொண்ட மக்களியல்புகளும் நம்மை வியப்பில் ஆழ்த்துவனவாகும்.

நாடகக் கலைஞர்களைக் கரிகாற்பெருவளத்தான், 'அவிழ்பதம் கொள்க' என்று 'இரப்ப' – யாசித்தானாம். நல்லியக்கோடன் நாட்டில் எயிற்றியர், கானவர்கள், கோவலர்கள், மருத நில மக்கள் என எல்லாத் தரப்பினரும் விருந்தூட்டிய வரலாறுகள் பல. காவிரிப்பூம்பட்டினத்தில் வாழ்ந்த வணிகப் பெருமக்கள்,

**'பண்ணியம் அட்டியும்**
**பசுபதம் கொடுத்தும்**
**புண்ணியம் முட்டாத்**
**தண்ணிழல் வாழ்க்கை'**

வாழ்ந்தார்கள். குறிஞ்சிப் பாட்டின் தலைவி, களவுக் காலத்திலேயே,

**'பைந்நிணம் ஒழுகிய**
**நெய்ம்மலி அடிசில்**
**விருந்துண்டு எஞ்சிய**
**மிச்சில், பெருந்தகை**
**நின்னோடு உண்டலும்**
**புரைவது'**

என்கிறாள். இல்லறத்தின் பெருங்கடமையாக உணர்ந்திருக்கிறாள். உணர்த்தப்பட்டிருக்கிறாள். பத்துப்பாட்டில் மட்டுமன்றி எட்டுத்தொகை நூல்களிலும் விருந்தோம்பல் செய்திகள் நிறைய வருகின்றன. கரும்பனூர் கிழார் என்னும் புலவர் பெருமானின் புறநானூற்றுப் பாடல்,

**'ஊனும் உணும் முனியின் இனிது எனப்**
**பாலில் பெய்தவும் பாகில் கொண்டவும்**
**அளவு கலந்து மெல்லிது பருகி**
**விருந்து உறுத்து ஆற்றி'**

என விருந்தினர்கள் நிறைய உண்ணுமாறு செய்யும் உபாயத்தைக் கற்பிக்கிறது.

வறுமை வந்தால் விருந்தினர்க்கு உணவளிக்க முடியாது. அதனால் விருந்தினரைக் கண்டால் ஒளிந்து கொள்ள நேரிடும். எனவே, அந்த வாழ்க்கை திருந்தா வாழ்க்கை என்கிறார் பெருங்குன்றூர்கிழார்.

'வல்லே களைமதி அத்தை; உள்ளிய
விருந்துகண் டொளிக்கும் திருந்தா வாழ்க்கைப்
பொறிபுணர் உடம்பில் தோன்றிஎன்
அறிவுகெட நின்ற நல்கூர் மையே'

என்பது அவரின் புறப்பாட்டடிகள்.

விருந்தூட்டலுக்கு எதிரியாக வரும் வறுமை, தடையாக வரும் அசம்பாவித நிகழ்வுகள், விருந்தினர் விபரீதமாக நிபந்தனை செய்தல் ஆகியவற்றையெல்லாம் திருத்தொண்டர்கள் எவ்வாறு எதிர்கொண்டு வென்றேறினர் எனப் பெரியபுராணம் விளக்குகிறது. இளையான்குடி மாறர், அப்பூதியடிகள், சிறுத்தொண்டர் ஆகியோர் வாழ்க்கையில் முறையே மேற்காண் தடைகள் ஏற்பட்டன.

விருந்தூட்டலுக்கு இலக்கணமாகவே,

'கொண்டு வந்து மனைப்புகுந்து
குலாவு பாதம் விளக்கியே
மண்டு காதலின் ஆத னத்திடை
வைத்து அருச்சனை செய்தபின்
உண்டி நாலு விதத்தில், ஆறு
சுவைத் திறத்தினில் ஒப்பிலா
அண்டர் நாயகர் தொண்டர் இச்சையில்
அமுது செய்ய அளித்துளார்'

என்று சேக்கிழார் வாக்கு அமைந்துள்ளது. சங்க இலக்கியங்களில் மக்கட் பண்பாக அமைந்த விருந்தூட்டல், பெரியபுராணத்தில் வழிபாடாக வளர்ந்துள்ளமையையும் கவனிக்க வேண்டும்.

**அரசியலறத்தில்**

'மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்' என்பது மன்னராட்சிக் காலங்களில் நிலைமை. அரசரை உயிராக மக்கள் மதித்து நேசித்தனர்; மன்னரும் 'குடிபுறங் காக்கும் கோலோராகப்' பல திறங்களுடன் விளங்கினர்.

'வழிபடுவோரை வல்லறிதீயே
பிறர்பழி கூறுவோர் மொழிதே றலையே'

என இளஞ்சேட்சென்னியின் குணநலனை ஊன்பொதி பசுங்குடையார் உருகி உரைக்கிறார். புகழ்ச்சியோ, புறங்கூற்றோ, கூறுவோரின் நோக்கத்தை உடனே அறிந்து கொள்ளும் ஆற்றலே வல்லறிதலாகும். துன்பத்தில் துவளும்போது, சிக்கலில் முக்குளிக்கும் போது வல்லறியும் ஆற்றல் செயல்படலரிது.

மன்னன் அறம் சொல்ல வேண்டியவன். நீதி என்பது, நெளிவு சுளிவுகளுக்கு இடனுள்ளது. அறம் அப்படிப் பட்டதன்று. மன்னர்களின் அவை அறங்கூறவை எனப்பட்டன. நாட்டின் கடைக்கோடி மாந்தனுக்குக் கிடைக்கும் அதே தீர்ப்பு, தன் மகனுக்கும் தரப்பட வேண்டும். நீதியில் பரிகாரங்கள் உண்டு; அதாவது, 'உய்தி' உண்டு. அறத்தில் பிழை செய்தோருக்கு உய்தியில்லை.

சேக்கிழார் தம் காப்பியத்துள் முதலில் அறிமுகம் செய்யும் மன்னனிடம் வல்லறிதல் என்ற இளஞ்சேட்சென்னியின் குணத்தைப் பதிக்கிறார். மனுநீதிச் சோழனின் மகன் தேரோட்டுகிறான். 'இளைய ஆன் கன்று' ஒன்று, தேர்க்கால் இடைப்புகுந்து இறந்தது. தாய்ப்பசு அரண்மனை வாயிலுக்கு வந்து ஆராய்ச்சி மணியை அடித்தது. மன்னன் அறங்கூற வேண்டும். மன்னன் மந்திராலோசனை செய்கிறான். மந்திரிமார்கள் மன்னனை வழிபடுவோர்கள்; குற்றவாளி மன்னனின் மகன். மனுமன்னன்,

'மன்னுயிர் புரந்து வையம்
பொதுக்கடிந்து அறத்தில் நீடும்
என்நெறி நன்றால்!'

என்றான். மன்னனின் இம் முதலுரையிலேயே,

'வையம் காவலர் வழிமொழிந் தொழுகப்
போகம் வேண்டிப் பொதுச்சொல் பொறா அன்'

என்ற கபிலரின் புறப்பாட்டடிகளின் சாரம் அமைந்தது. இதன் அடுத்த புறப்பாட்டு 'வழிபடுவோரை' எனத் தொடங்குவது. 'என் செய்தால் தீரும்' என்று மந்திரிகளை மன்னன் வினவுகிறான்.

'கொந்தலர்தார் மைந்தனைமுன்
கோவதைசெய் தார்க்கு,மறை
அந்தணர்கள் விதித்தமுறை
வழிநிறுத்தல் அறம்'

என்ற மந்திரிகளின் பதிலுரையில் பல தடுமாற்றங்கள் அமைந்தன. அரசனின் 'வல்லறிதிறன்' அத்துன்பச் சூழலிலும் செயற்பட்டது.

'இழக்கின்றேன் மைந்தனை என்று
எல்லீரும் சொல்லிய, இச்
சழக்குஇன்று நானிசைந்தால்
தருமம்தான் சலியாதோ ?'

என்கிறான் மனுமன்னன். அத்துடனமையாமல், 'அரசன், தன்குடை நிழற்கீழ் வாழும் யாவருக்கும் – யாவற்றுக்கும் பயம் தீர்த்து அறங்காக்க வேண்டாமா' என்கிறான். 'வேறொருவன் ஓர் உயிர் கொன்றான் என்று வழக்கு வந்திருக்குமானால் நான் அவனைக் கொன்றிருப்பேன். அவனுக்கு ஓர் அறம், என் மகனுக்கு மற்றோர் அறமா? நீங்கள் இந்த வழக்கை எனக்குப் பழிவரும்படியாக முன் வைக்கிறீர்கள்:

'தொன்மனுநூல் தொடைமனுவால்
துடைப்புண்டது எனும் வார்த்தை
மன்னுலகில் பெறமொழிந்தீர்
மந்திரிகாள்! வழக்கு' என்றான்.

பின்னரும் 'முன்னுதாரணமில்லை; மறைமொழிந்த அறம்புரிதல் தொன்றுதொடு நெறியன்றோ?' என்கிறார் ஓர் அமைச்சர். இப்பொழுதும் மன்னனின் 'வல்லறிதிறன்' மழுங்கவில்லை. 'இதுபோல் முன் நிகழ்ந்ததால்' என்ற அமைச்சரின் உரை, பரிகாரம் செய்யப்பட்ட முன்னுதாரணம் உண்டு, மகனைக் கொன்ற முன்னுதாரணமில்லை' என்ற பொருளுடன் கூறப்பட்டதனை மன்னன் வல்லுணர்கிறான். பரிகாரம் செய்ததாக மந்திரி மொழிந்தது பிறிதோர் அரசனைப் பற்றிய புறங்கூறலாகவும் உணர்கிறான். 'பிறப்பழி கூறுவோர் மொழி தேறலையே' என்ற புறப்பாட்டுத் தொடரின்படி அவ்வமைச்சனின் பேச்சை முற்றிலுமாகப் புறக்கணிக்கிறான்; 'இவ்வண்ணம் பழுதுரைத்தீர்' என்கிறான். சேக்கிழார் இந்த இடத்தில், அரசனின் 'வல்லுணர்திறனை' 'மெய்வண்ணம் தெரிந்து உணர்ந்த' எனக் குறிப்பிட்டுப் பாராட்டுகிறார்.

பெரியபுராணத்தில், கூன்பாண்டியன், நின்றசீர் நெடுமாறனார், மங்கையர்க்கரசியார் என இரு பாண்டிய மரபினரும், கோச்செங்கட்சோழன் புகழ்ச்சோழர் என இரு சோழ மரபினரும், சேரமான் பெருமாள் என்ற சேர மரபினரும், ஐயடிகள் காடவர்கோன், கழற்சிங்கன் என இரு பல்லவ மரபினரும் கூற்றுவநாயனார் என்ற களப்பிர மரபினரும் ஆக எட்டுப் பெருநில மன்னர்கள் திருத்தொண்டர்களாக வைத்து அவர்களின் வரலாறுகள் கூறப்பட்டுள்ளன. மெய்ப்பொருள் நாயனார், நரசிங்க முனையரையர், பெருமிழலைக்குறும்பர், இடங்கழியார் என்னும் நான்கு சிற்றரசத் தொண்டர்களின் வரலாறுகளும் பேசப்பட்டுள்ளன. அவ்விடங்களிலெல்லாம் சங்க நூல்கள் கூறும் அரசறங்களை ஒப்பிட்டுக் காணுதல் சுவை நலம் பயப்பிப்பதாகும்.

**பொதுவாக...**

சங்கத் தமிழ் இலக்கியங்களாகிய பத்துப் பாட்டும் எட்டுத் தொகையுமாகிய மேற்கணக்கு நூல்கள் பல நல்ல பண்புகளை, வாழ்வியல் அணுகுமுறைகளை நமக்குக் கற்பிப்பனவாகும். வறுமையும் வளனும் பிணைந்த, அக்கால இலக்கியங்கள் ஆணவம் கலவாத தன்மான உணர்வை வற்புறுத்துகின்றன.

சோழனின் நல்லமைச்சராக விளங்கிய சேக்கிழார் சங்க இலக்கியங்களில் ஆழங்காற்பட்ட அறிவுத் தெளிவைப் பெரியபுராணத்தில் நன்கு பதித்துள்ளார். ஆய்ந்தாய்ந்து அவற்றைக் கண்டறியும்தோறும், அளப்பரும் இன்பம் மனத்தில் நிறைகிறது.

❖

## அடைமொழிகளில் தமிழ்

1. ஆரா அருந்தமிழ்
2. இசைமலி தமிழ்
3. இன்புறுந் தமிழ்
4. இன்றமிழ்
5. உருவாகும் ஒண்டமிழ்
6. உரையார் தமிழ்
7. ஏரினார் தமிழ்
8. ஏழிசை இன்றமிழ்
9. ஒண்டமிழ்
10. ஒண்தீந் தமிழ்
11. ஒளிர்பூந் தமிழ்
12. கலைமலி தமிழ்
13. கலைவளர் தமிழ்
14. குலமார் தமிழ்
15. குற்றமில் செந்தமிழ்
16. குன்றாத் தமிழ்
17. சங்கமலி செந்தமிழ்
18. சந்த நிறை தண்டமிழ்
19. சந்தமார் தமிழ்
20. சந்தமார்ந்தழகிய தண்டமிழ்
21. சந்தமாலைத் தமிழ்
22. சந்தமின்றமிழ்
23. சந்துலாந் தமிழ்
24. சீர்மன்னு செந்தமிழ்
25. சீர்மிகுந்த தமிழ்
26. சீரின்மலி செந்தமிழ்
27. செஞ் சொற்றமிழ்
28. செந்தண்டமிழ்
29. செந்தமிழ்
30. சொல்லார் தமிழ்
31. ஞாலமிக்க தண்டமிழ்
32. ஞானத்தமிழ்
33. தகைமலி தண்டமிழ்
34. தண்ணார் தமிழ்
35. தவமல்கு தமிழ்
36. தன்னார்வம் செய்தமிழ்
37. திருநெறிய தமிழ்
38. தீந்தமிழ்
39. துய்ய தமிழ்
40. துளங்கில் தமிழ்
41. தூய தமிழ்
42. தெய்வத் தமிழ்
43. தென்னன் தமிழ்
44. தேக்குறு தமிழ்
45. தேமரு தமிழ்
46. தேனேரார் தமிழ்
47. நல்லவாய இன்றமிழ்
48. நல்லிலைத் தமிழ்
49. நலங்கொள் தமிழ்
50. நற்றமிழ்
51. நிகரில்லன தமிழ்
52. படமலி தமிழ்
53. பண்ணாருந் தமிழ்
54. பண்பட்ட செந்தமிழ்
55. பந்தமார் தமிழ்
56. பரவார் தமிழ்
57. பரவிய தமிழ்
58. பலமிகு தமிழ்
59. பழுத்த செந்தமிழ்
60. பாரினார் தமிழ்
61. புகழ் நின்ற தமிழ்
62. பூந்தமிழ்
63. பொய்யாத் தமிழ்
64. பேரியல் இன்றமிழ்
65. மருவிய தமிழ்
66. மறையிலங்கு தமிழ்
67. மறை வளரும் தமிழ்
68. முடிவிலின் தமிழ்
69. முத்தமிழ்
70. மூவாத் தமிழ்
71. மேன்மைத் தமிழ்
72. வளமார் தமிழ்
73. வியன் தமிழ்
74. விலையுடை அருந்தமிழ்

தொகுப்பு – இலக்குவனார் திருவள்ளுவன்

# திரு.வி.க.வின் மேடைத் தமிழ்

முனைவர் ப. மகாலிங்கம்



தமிழ்நாட்டின் பட்டிதொட்டிகள்தொறும் மேடையில் ஓயாது ஒலித்து வந்த உயிர்த் தமிழ் முழக்கம்...! தமிழ்நாட்டுப் பத்திரிகை உலகில் நல்ல தமிழால் சுவடு பதித்த பீடுநடை...! அன்னியப்பட்டிருந்த தாய்நாட்டு அரசியலைத் தமிழுக்குச் சொந்தமாக்கித் தந்த சுதேசிய நாதம்...! தொழிலாளர் இயக்கம் – சமூகச் சீர்திருத்தம் – பெண்ணுரிமைக் கூட்டம் – இளைஞர் ஈட்டம் – சமயக் கோட்டம் – இயற்கை நாட்டம் என வாழ்வியல் துறைகள் எத்தனை எத்தனை உண்டோ அத்தனையிலும் புதுமைக் கால் பதித்துத் தமிழ் மொழியின் கை பிடித்து மக்களின் மன மேடையில் உலவி வந்த பொதுமைத் தென்றல்...! அவர்தாம்... அவர்தாம்... மேடைத் தமிழ் நடையில் நின்றுயர் நாயகராம் தமிழ்த் தென்றல் திரு.வி.க....!

### தமக்குத் தொழில் உரைநடைப் பேச்சும் - எழுத்தும்

'எமக்குத் தொழில் கவிதை; நாட்டுக்கு உழைத்தல்!' என்றார் மகாகவி பாரதி. அதேகாலச் சூழலில் வாழ்ந்த திரு.வி.க., 'தமக்குத் தொழில் உரைநடைப் பேச்சும் – எழுத்தும்; நாட்டுக்கு உழைத்தல்...!' என்னும் கோட்பாட்டின் வழிநின்று வெற்றி கண்டவர் என்பது மிகவும் பொருத்தமுடையது...! இலக்கியங்களுக்கு உரைவிளக்கம் பொருந்தும்வண்ணம் படைப்பது தொடங்கி, இளைஞர் கூட்டம் இசையும்வண்ணம் பேசுவதுவரையில் உரைநடையால் திரு.வி.க. நடத்திக்காட்டிய அத்தனையும் தமிழ் உரைநடையின் வரலாற்றுப் பெட்டகங்கள்...!

### அரசியல் மேடையில் வீசிய தமிழ்த் தென்றல்

அரசியலையும் வாழ்வியலையும் மேடையிலே தமிழால் பேச ஒவ்வாது என ஒதுக்கி, ஆங்கில மொழி ஆட்சியே தமிழ்நாட்டு அரசியல் மேடைகளிலும் நிகழ்ந்துவந்த அந்த அநீதிக் காலம்...! அந்தக் காலத்து ஆதிக்க வெறியைத் தவிடு பொடியாக்கித் தமிழன் தலைநிமிர்ந்திட – தமிழை அரசியல் மேடையில் அரங்கேற்றி, மக்கள் எல்லோரும் தமிழ்மொழி உணர்வும் – நாட்டு விடுதலை உணர்வும் ஒருசேரக் கொண்டிட வித்திட்டவர் திரு.வி.க....!

### எல்லோர்க்கும் உரிய எளிய தமிழ்நடை

தமிழ் மொழியின் பண்டைய மரபுச் செல்வமாம் உரைவீச்சை, காலச் சூழலுக்கு ஏற்பப் புதுக்கிப் பெருவழக்காக்கி, மக்கள்தம் வாழ்வியல் துறைகள்தோறும் இயல்பாய் அது மலர்ந்து மணம் வீசச்செய்த பெருமைக்கு உரியவர்களுள் முதன்மையானவர் திரு.வி.க...! பல்லுடைக்கும் பண்டித நடை என்னும் அருமைப்பாட்டிலிருந்து தமிழை விடுதலை செய்து, பாட்டாளி மக்களும் பாமரரும் கூடப் புரிந்துகொள்ளும் வகையில் தமிழ் நடையின் போக்கை எளிதாக்கி, அதனை எல்லோர்க்கும் உடையதாக்கி உரிமையாக்கியவர் திரு.வி.க....!

### இதுவையா பேச்சு

சிலம்பொலியைத் தேன் தமிழாய் மக்கள் வெள்ளத்திற்கிடையே திரு.வி.க. வழங்கிய புதுவைச் சொற்பொழிவு, மகாகவி பாரதியைக் கைகொட்டி ஆரவாரித்து மகிழ்ந்து பாராட்டச் செய்ததாகவும், 'இதுவையா பேச்சென்று' தம்மைக் கொண்டாடச் செய்ததாகவும் பாரதிதாசனார் தம் கவிதையில் பதிவு செய்துள்ளமை சிறப்பிற்குரியது.

**பொதுவினர்க்குச் சிலப்பதிகாரச் சுவையை**
**நடையழகைப் புகலும் போதில்**
**இதுவையா பேச்சென்பேன்; பாரதியார்**
**கைகொட்டி எழுவார், வீழ்வார்.**

என்னும் பாவேந்தரின் இந்தக் கவிதை முழக்கத்தின் வழி, திரு.வி.க. தம் மேடைத் தமிழின் எழிற்கோலம் இதயக் காட்சியாகின்றது... இனிய சாட்சியாகின்றது....!

**அண்ணாவின் மேடைத் தமிழ் முன்னோடி**

தமிழ்நாட்டு அரசியலில் பேரறிஞர் அண்ணா அவர்களால் நிகழ்த்தப்பட்ட வரலாற்றுப் புரட்சி – அதுதான் 'பேச்சு மேடையையே தமிழ் ஆட்சி மேடையாக' ஆக்கிக் காட்டிய புரட்சி...! இத்தகு பேச்சாற்றல் ஆளுமை நிலையில் தமக்கு உவமை இல்லாத அண்ணா அவர்கள், தமிழ்த் தென்றல் திரு.வி.க.வின் மேடைத் தமிழே, தம் இளமைக் காலத்துத் தமக்கு முன்மாதிரியாக விளங்கியதாகவும் தம்மைப் பேச்சாளனாகச் சிறக்கச் செய்ததாகவும் நன்றிப் பெருக்குடனும் பெருமிதத்துடனும் குறிப்பிடுவது இவண் மகிழ்ந்து எண்ணத்தக்கது...!

**மக்களை நாடிடும் நடைமலர்ச்சி**

திரு.வி.க.வின் வாழ்வுப் பயணத்தைத் தொடக்கம் முதல் கூர்ந்து கூர்ந்து நோக்கும்போது, அது படிப்படியே எல்லா மக்களையும் நாடிச்சென்று தொடுகின்ற – வெகுசனத் தொடர்பு நிலையை நோக்கியதாக வளர்ந்து கொண்டே செல்வதாகின்றது...! அந்தச் சூழலுக்கும் தேவைக்கும் ஏற்ப, திரு.வி.க.வின் மொழிநடையும் எளிமையும் ஆற்றலும் கொண்ட திறன்மிகு நடையாக உருக்கொண்டு வளர்வதனை – மலர்வதனை, முனைவர் இர. குழந்தைவேலுவின் ஆய்வின்வழி அறிய முடிகிறது...!

**புதுமைசேர் மொழிநடை**

திரு.வி.க. தம் காலத்தில் கொச்சையாக நிலவிவந்த மேடைத் தமிழுக்குச் சீர்மையும் செம்மையும் சேர்த்தார். நீண்ட நெடிய வாக்கிய அமைப்புகளொடு கடினமாக இருந்த உரைநடை எழுத்துத் தமிழுக்கு எளிமை கூட்டினார். மேடைப் பேச்சுக்கும் எழுத்து நடைக்கும் இடையே நிலவிய இடைவெளியைக் குறைக்க முற்பட்டார்...! 'பேசுவது போலவே எழுதுவது; எழுதுவது போலவே பேசுவது' என்னும் தமிழின் புதுமைசேர் மொழிநடையைத் தோற்றுவித்து, வழிநடத்தி, நடைமுறைப்படுத்தி வெற்றிகண்ட சிறப்பு திரு.வி.க.வுக்கு உரியது...!

**மூவகை நடை**

தம் வாழ்வில் தமக்கு அமைந்த மொழிநடை குறித்துக் கூறிடும் திரு.வி.க.,

"என்னுடைய வாழ்வில் மூவித நடைகள் மருவின. ஒன்று இளமையில் உற்றது; இன்னொன்று சங்க இலக்கியச் சார்பு பெற்றபோது பொருந்தியது; மற்றொன்று பத்திரிகையுலகை அடைந்த நாளில் அமைந்தது. இறுதியே எனக்கு உரியதாய் – உடையதாய் நிலைத்தது. இந்நடை எளியது; சிறு சிறு வாக்கியங்களால் ஆவது" என அவர்தம் நடைபற்றிய தெளிவான கண்ணோட்டத்தை வெளிப்படுத்துகின்றார்.

**தமிழ்ப் பேச்சாளுமை**

'நவசக்தி' இதழில் திரு.வி.க.வோடு அவர்தம் நம்பிக்கைக்குரிய இளைஞராக – துணையாசிரியராக இணைந்து பணியாற்றியதொடு, திரு.வி.க.வைத் 'தமிழ்த் தந்தை'யாகப் போற்றிடும் பேராசிரியர் கல்கி அவர்கள்,

"கவிதை மூலமாகப் பாரதியார் தமிழுக்கும் தமிழ் நாட்டுக்கும் செய்த அரும்பணியைத் திரு.வி.க. தமிழ் வசன நடைமூலமாகச் செய்தார். எழுத்தினாலும் பேச்சினாலும் அத்திருப்பணியை அவர் ஆற்றினார். இனிய எளிய செந்தமிழ்ச் சொற்களைக் கொண்டும் அதிக நீளமில்லாத சிறிய வாக்கியங்களை அமைத்தும் திரு.வி.க. நிகழ்த்திய சொற்பொழிவுகள் மெத்தப் படித்த அறிவாளிகளையும், ஏட்டுக் கல்வியே பயிலாத தொழிலாளிகளையும் ஒரே சமயத்தில் கவர்ந்து மெய் மறந்து கேட்டுக் கொண்டிருக்கும்படி செய்தன" எனத் திரு.வி.க.வின் தமிழ்ப் பேச்சாளுமைத் திறத்தைச் சொல்லோவியமாகத் தீட்டிப் பாராட்டுகின்றார்...!

**பேச்சுக் கலைக்கு ஒரு பல்கலைக்கழகம்**

திரு.வி.க. அவர்கள் தம் பேச்சுக் கலையின் நிகழ் முறையைக் காட்சிப்படுத்திடும் 'கலைமகள்' ஆசிரியர் கி.வா. ஜகந்நாதன் அவர்கள் "நுட்பமும் மென்மையும் உடைய கலைஞராகிய திரு.வி.க. பேசும்போது இடது கை ஆட்காட்டி விரலை உயர்த்திக் கையை அசைத்துப் பேசுவார்" எனக் குறிப்பிடுகின்றார். எடுத்துக்கொண்ட பொருளைத் தெளிவாகச் சொல்லிவிட்டு, அதனை முடிக்கும்போது உணர்ச்சி விஞ்ச வேகமாகப் பேசுவார். கடைசியில் முத்தாய்ப்பாகத் தொடரை மூன்று முறை சொல்லி முடிப்பார். 'சிந்திக்கற்பாற்று! சிந்திக்கற்பாற்று! சிந்திக்கற்பாற்று!' என்றோ, 'பெண்ணுரிமை பேணுக! பெண்ணுரிமை பேணுக! பெண்ணுரிமை பேணுக!' என்றோ முடிப்பது அவர் வழக்கம். சொற்பொழிவின் முடிவிலே தாம் பேசிய அனைத்தையும் சுருக்கி, மாலை தொடுப்பது போல வைத்து முடிப்புரை கூறும் அருமை கேட்டவர்களுக்குத் தெரியும். அவர் பேச்சை அப்படியே எழுதிப் படிக்கலாம். அழகும் உணர்ச்சியும் கெடாமல் இருக்கும்" எனக் கி.வா.ஜ. அவர்கள் திரு.வி.க.வின் மேடைத் தமிழ்க் கூறுகளின் சிறப்புகளை ஒவ்வொன்றாக நினைவுகூர்ந்து போற்றுகின்றார். இவற்றை ஒருங்கு வைத்து எண்ணும்போது பேச்சுக் கலைக்கு ஒரு பல்கலைக்கழகமாகவே திரு.வி.க. விளங்கியதை அறியமுடிகிறது...!

**மேடைச் சூழலும் ஆளுமைத் திறமும்**

திரு.வி.க.வின் தமிழ்மேடைச் சூழல் எப்படி இருக்கும் என்பது குறித்தும் கால மேலாண்மைத் திறம் பற்றியும் உளவியல் அணுகுமுறையொடு கூடிய அவர்தம் பேச்சின் உன்னத ஆளுமை குறித்தும் திரு.வி.க.வை 'நாவலர்' எனப்

போற்றிடும் திருவாளர் குகன், கருத்தோவியமாக்கிக் காட்டுகின்றார். "தம்முடைய பேச்சுத் திறத்தாலே இத் தமிழ்நாட்டை ஆண்டவர் திரு.வி.க. அவர் தமது சொல்லாற்றலாலே நாவன்மையினாலே கோழைகளை வீரராக்குவர்; பாம்புபோல் சீறும் குண்டர்களைப் பெட்டிப் பாம்புபோலாக்குவர்; கோப ஆவேசத்துடன் இருப்போரைக் கண்ணிமைப் போதில் சாந்தமூர்த்தி யாக்குவர்" என அவர் வியந்துரைக்கின்றார். பரபரப்பும் பதற்றமும் எதிராளிகளின் சதித்திட்டமும் கவ்விய சூழலில் நடைபெற்ற திரு.வி.க.வின் மேடை ஒன்றை திருவாளர் குகன் இங்கே காட்சியாக்குகின்றார்:

மணி ஆறடித்தது. மாலை தாங்கிய கழுத்துடன் எழுந்தார் திரு.வி.க. 'படபட'வென்று புளியம்பழம் உதிர்வதுபோல ஐந்து நிமிஷம் கரகோஷம். "அன்பர்களே சகோதரர்களே சகோதரிகளே" என்று தொடங்கினார் திரு.வி.க. "கீதை பிறந்தது போர்க்கூடம். கீதாசாரியன் பிறந்தது சிறைக்கூடம். இவ்விரு கூடத்திற்கும் அஞ்சாதவன் யான். ஆகவே, கீதையின் ரகசியத்தை உங்களுக்கு உணர்த்தவே போந்திருக்கிறேன் யான்" என உரைவீச்சின் தொடக்கமே உரத்த குரல் வளத்தால் பெருமிதத்தோடும் எடுப்போடும் அமைந்திட, அரங்கத்தில் திரண்டிருக்கும் மக்கள் கூட்டத்தைத் தன்வயப்படுத்திடும் பேராற்றலும், அஞ்சா நெஞ்சமும், மக்களை நோக்கிய கனிவும் ஆகிய இவையே அவர்தம் மேடைத் தமிழின் வெற்றிக் கூறுகளாக இலங்கின எனலாம்...!

**ஆராயத்தக்க முரண்பாடு**

திரு.வி.க.வின் உருவத்தையும் வாழ்வையும் அருகிருந்து நோக்கி, அவரையே தம் வழிகாட்டியாகவும் கொண்ட பேராசிரியர் மு. வரதராசன் அவர்கள், திரு.வி.க.வை அவர்தம் மொழிநடைப் போக்கோடு ஒப்பிட்டுப் பார்த்துக் காணக்கிடக்கும் முரண்பாட்டை எண்ணி எண்ணி வியக்கின்றார்.

"எளிய வாழ்க்கை வாழ்ந்த திரு.வி.க்.வினுடைய தமிழ்நடை பெருமிதம் நிறைந்து விளங்கியது. அவருடைய தோற்றம் அமைதிக்கு எடுத்துக்காட்டாய்த் திகழ அவர் எழுதிய தமிழும் மேடையில் பேசிய தமிழும் கிளர்ச்சிமிக்க தமிழாக இருந்தன. இத்தகைய முரண்பாடு ஆராயத்தக்கதாக விளங்கியது"எனப் பேராசிரியர் மு.வ. குறிப்பிடுகின்றார்.

**கவின்மிகு கலைச்சொல்லாக்கம்**

திரு.வி.க.வின் உரைநடையில் 'விழுப்பம்', 'நடாத்தல்', 'சால்பு' முதலிய பழந்தமிழ்ச் சொற்கள் ஆங்காங்கே பயின்று வந்திடும். புதிய சொல்லாக்கங்களிலும் திரு.வி.க. ஆர்வம் கொண்டிருந்தார்; 'உலகவன்' 'வள்ளுவம்' 'காந்தியம்' 'ஈடுகாணம்' என்பன அவருடைய கலைச்சொற் கொடைகளே...! சொற்களை ஏவல்கொள்ளும் திறம் திரு.வி.க.விடம் நிரம்ப உண்டு. அவரது எழுதுகோல் சொற்களுக்கு ஆணையிடும்; கட்டளை பிறப்பிக்கும்...! ஒரு பொருட் பன்மொழிகளைக் கையாண்டு திரு.வி.க. தம் நடைக்கு மெருகும் வனப்பும் சேர்த்துள்ளமை சிறப்புக்குரியது...!

**மொழி வெளிப்பாட்டில் கலையொளிர் காட்சிகள்**

"திரு.வி.க.வின் மொழிநடை எளிமைக்குள், அடுக்குத் தொடர்களும், மரபுத் தொடர்களும், வழக்குத் தொடர்களும், வினா – விடைப் போக்கும் அங்கதச் சுவையும் உணர்ச்சிக் குறிப்புகளின் பெருக்கமும் இடம்பெற்றிடும்! நகைச்சுவைப் பொறிகள் அங்கங்கே மின்னிடும்...! அணிநலன்கள் கவிதைக்கு மட்டுமே என்னும் போக்கை மாற்றி, தமிழ் இயல்புக்கும் மரபுக்கும் ஏற்ப ஆங்காங்கே அழகிய அணி நலன்களைக் கையாண்டு, திரு.வி.க. தம் உரைப் போக்கை அமைத்துச் செல்கின்றார். திரு.வி.க.வின் உரை வீச்சில், உவமை, உருவகம், எதுகை, மோனை, பழமொழிகள், மேற்கோள்கள் ஆகியன அமைந்திடும். திரு.வி.க.வின் நடைக்கிடையில் அந்தாதிப் போக்கும், வந்த சொல்லே வருதலும், முன்னிலை விளியும், சொல்விளையாட்டும் தேவைக்கு ஏற்ப வெளிப்பட்டு அணி செய்திடும்.

உயர்ந்த மிடுக்கோடு உணர்ச்சியை ஊட்டி, மக்களைத் தட்டியெழுப்பும் நடை திரு.வி.க.வின் நடை; ஆழ்ந்த கருத்துகளையெல்லாம் எளிதில் விளக்கும் தெளிவும் அங்கு உண்டு. வேண்டிய சிலவிடத்துச் செய்யுள் நடைபோலவும் அது செல்லும்" எனப் பேராசிரியர் தெ.பொ. மீனாட்சிசுந்தரனார் குறிப்பிடுகின்றார்.

ஆழ்ந்த உள்ளத்து உணர்ச்சிகளை வெளியிடும் போதும், இயற்கையின் வனப்புகளை வருணிக்கும்போதும் திரு.வி.க.வின் நடையில் கவிதை மணம் கமழ்வதைப் பேராசிரியர் இரா. மோகன் உணர்ந்து உரைக்கின்றார்.

**மணிவிழா தந்த மாணவரியக்கம்**

தமிழ் நாட்டையே மேடையாக்கித் தம் வாழ்நாள் முழுவதும் தமிழ் முழக்கம் செய்து, அதனையே தம் வாழ்வியல் வேள்வியாகக் கொண்டு தமிழ் அறம் ஓம்பிய திரு.வி.க.வின் உண்மை ஒளிவீசிடும் உரைப்பெருக்குத் தமிழகத்து மூலை முடுக்குகளிலெல்லாம் சென்று எட்டியது...! எல்லோரையும் சென்றடைந்த அவர்தம் சிந்தனைகள் இளைஞர்களையும் மாணவர்களையும் தம்பால் ஈர்த்து, அவர்தம் நெஞ்சங்களில் எதிர்காலம் குறித்த நம்பிக்கையை விதைத்தன...!

மாணவ இளைஞர்களைத் தம்பால் ஈர்த்திடும் திரு.வி.க.வின் பேராற்றலுக்குச் சான்றாகிடும் ஓர் உரைவீச்சு இதோ...

"வருங்கால உலகில் ஒரு பெரும் மாறுதல் நிகழப்போதல் உண்மை. அதனை இயற்கை அன்னையின் நோக்கைக் கொண்டும், தற்கால உலக நிலையைக் கொண்டும் அளந்து கூறல் கூடும். அம்மாறுதலை அன்புவழியில் நிகழ்த்தற்குரிய இயக்கம் எதுவாயிருக்கலாம்? இப்போதுள்ள இயக்கங்களைப் பார்த்தால், அது மாணாக்கரியக்கமாகவே யிருக்கலாம்."

என முழங்கிடும் திரு.வி.க. உள்ளத்து இளைஞர்கள் குறித்த 'தொலைநோக்கு' இங்கு உறுதிப்படுகின்றது...!

**பேச்சுநடையில் கவிதை வீச்சு**

தூத்துக்குடியில் சைவ சித்தாந்த சபையின் ஆண்டு விழாவில் பண்டித கிருஷ்ணவேணி அம்மையார் சொற்பொழிவாற்றியதனைப் பற்றிக் குறிப்பிடும் திரு.வி.க.விடத்தில் அழகிய கவிதை நடையே வெளிப்படுகின்றது...

ஓர் அமைதிப் பெண் தெய்வம் வந்தது; மேடையில் நின்றது; வாய் திறந்தது; மேகந் திரண்டது; தேங்கியது; மின்னியது; உருமியது; மழை பொழிந்தது; மழையொலி சுவர்களை முட்டியது; மோதியது; துளைத்தது; பெருக்கம் ஒரே கங்கை; பொன்னும் மணியும் முத்தும் அகிலும் தேக்கும் சந்தும் சுழன்ற மிதவைகளின் ஓட்டம். மழை நின்றது. கிருஷ்ணவேணி அம்மையார் தமது இருக்கை சேர்ந்தார்.

இங்கே ஒலித்திடும் இந்தச் சொல்லோவியத்தை என்னென்று புகல்வது? திரு.வி.க. தந்த கவிதை என்பதா? உரைநடை என்பதா? இரண்டும் கலந்த ஒன்று என்பதா? பேச்சானாலும் எழுத்தானாலும் திரு.வி.க.வின் கவித்துவ உரைநடை, ஆற்று வெள்ளமெனப் பெருக்கெடுத்து ஓடும் அழகே பேரழகு...!

**பேச்சும் எழுத்தும் தேனருவி**

திரு.வி.க.வின் பேச்சிலும் எழுத்திலும் தம் உள்ளத்தைப் பறிகொடுத்துத் தோய்ந்து நிற்பதொடு, திரு.வி.க.வின் பேச்சாற்றல்மிகு திருவாயை, 'முத்தமிழ்வாய்' என்றும் போற்றிடும் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன்,

**"செந்தமிழ்ப் பேச்சும் எழுத்தும் இன்பத்**

**தேனருவி திரு.வி.க...."**

என வழங்கிடும் கவிதைப் பாராட்டு, நெஞ்சில் நிலைப்பது...!

**எழுத்திலும் பேச்சிலும் மிடுக்கு**

திரு.வி.க.வின் எழுத்தும் பேச்சும் ஏறக்குறைய ஒரே நடையில் அமைந்தவை; திரு.வி.க.வின் வாழ்க்கையில் நடிப்பு இல்லை; நடக்கை இருந்தது. ஆதலால் எழுதும்போது இருந்த பண்பாடு பேசும்போதும் வந்தது; பேசும்போது வந்த மிடுக்கு எழுதும்போதும் அமைந்தது எனப் பேராசிரியர் மு.வ. ஆய்ந்துரைக்கின்றார்.

**மேடைத் தமிழால் எழுத்து நடை**

திரு.வி.க.வின் கையில் 'மேடைத் தமிழ்' என்ற நூல் ஒன்று வந்து சேர்ந்தது; அவருடைய முன்னுரை பெறுவதற்காக வந்த நூல் அது; சொற்பொழிவுக் கலை பற்றிய நூலுக்கு அவர் எழுதிய நீண்ட முன்னுரை நாடக பாணியில் சொற்பொழிவாகவே அமைந்துவிட்டது...

"தோழர்களே! உங்கள் முன்னிலையில் யான் நிற்கிறேன். ஏன் நிற்கிறேன் தெரியுமா? 'மேடைத்தமிழ்' என்னும் நூலுக்கு அணிந்துரை கூறப்போகிறேன். இக்கூற்று உங்கட்கு வியப்பூட்டலாம். அணிந்துரைக்கா மேடை! தோழர்களே என்ற விளிப்பு! நன்று; நன்று! என்று உங்களிற் சிலர் நகைக்கலாம். சிலர் எண்ணலாம்..."

எனத் திரு.வி.க. பேச்சு வடிவில் அமைந்திடும் எழுத்து நடைக்கு ஆக்கம் தேடுகின்றார்.

**ஆற்றல் மிகுந்த பேச்சு**

திரு.வி.க.வின் கெழுதகை நண்பரும் பொதுவாழ்வுத் தோழருமாகிய தந்தை பெரியார் அவர்கள், திரு.வி.க.வின் பேச்சாற்றல் குறித்துக் கூறிய கருத்துகள் இங்கே ஆழ்ந்து எண்ணத்தக்கன...!

"திரு.வி.க.வின் பேச்சு மிகவும் சக்தி வாய்ந்தது. அந்தக் காலத்தில் அவர் பேசுகிறார் என்றால்தான் கூட்டம் வரும். அவரை முன்மாதிரியாக வைத்து அவர் நடையில் பலர் பேசவேண்டும் என்ற அளவுக்கு அவர் தமிழ்ப் பேச்சால் மக்களுக்கு உணர்ச்சி உண்டாயிற்று."

என நெஞ்சம் நிறைந்து கூறிடும் பெரியார், தமிழகத்து மக்களைத் தட்டியெழுப்பிய திரு.வி.க. வின் மேடைத் தமிழின் மேன்மையைப் பாராட்டிப் புகழாரம் சூட்டுகின்றார்...!

**நூல் வடிவு தாங்கிய சொற்பொழிவுகள்**

மக்கள் மனங்களிலெல்லாம் பசுமை தவழ் நினைவுப் பதிவுகளாக நிலைத்துள்ள திரு.வி.க.வின் சொற்பொழிவுகளுள் சில, அவர்தம் முயற்சியிலேயே பதின்மூன்று நூல்களாக உருக்கொண்டுள்ளன... அவை முறையே சைவத்தின் சமரசம், தமிழ்த் தென்றல் அல்லது தலைமைப் பொழிவு, சமசரதீபம், தமிழ் நூல்களில் பௌத்தம்,

சைவத் திறவு, இராமலிங்க சுவாமிகள் திருவுள்ளம், சீர்திருத்தம் அல்லது இளமை விருந்து, நினைப்பவர் மனம், இமயமலை அல்லது தியானம், சித்தமார்க்கம், உள்ளொளி, ஆலமும் அமுதமும், தமிழ்க்கலை ஆகியன.

**ஒலிக்கீற்றாகத் தமிழ்க்கலை**

திரு.வி.க.வின் வாழ்வுக் கால நிறைவுப் பகுதியில், பச்சையப்பன் கல்லூரி உள்ளிட்ட இடங்களில் அவர் ஆற்றிய சொற்பொழிவுகள் ஆறன் தொகுப்புதான் அவர்தம் இசைவுடன் வெளியிடப்பட்ட 'தமிழ்க்கலை' (1953) என்னும் நூல். திரு.வி.க.விடம் பெருமதிப்பும் நெருக்கமும் கொண்டிருந்த மாண்புமிகு தமிழக நிதியமைச்சர் பேராசிரியர் க. அன்பழகனார் அவர்கள் உள்ளிட்ட அன்றைய இளைஞர்களின் முன் முயற்சிகளோடும், அவர்தம் அணிந்துரையோடும் வெளிவந்து, திரு.வி.க.வின் மேடைத் தமிழுக்கு நல்லதொரு பதிவாகித் திகழ்வதுதான் 'தமிழ்க்கலை' என்னும் நூல் என்பது நன்றியோடு எண்ணத்தக்கது...!

**வானொலிப் பேச்சு**

தமிழ்த்தென்றல் திரு.வி.க.வின் வெண்கலக் குரலில் கணீரென ஒலித்திடும் உரைப் பெருக்கிற்கு ஒரே அடையாளமாக இன்றும் ஒலித்துக் கொண்டிருப்பது, திருச்சிராப்பள்ளி வானொலி நிலையத்தின் முயற்சியில் இனிது ஒலிபரப்பான திரு.வி.க.வின் 'வானொலிப் பேச்சு' மட்டும்தான்...!

**அண்ணா வியக்கும் எழில் தமிழ்ப் பெருமிதம்**

திரு.வி.க.வின் உரைத்திறம் அனைத்தையும் ஒருசேரக் குறிப்பிட்டு, அத்துறையின் முன்னோடியாக அவர் திகழ்கின்ற நிலையைச் சுட்டிக்காட்டும் அறிஞர் அண்ணா அவர்கள்,

"தமிழ்நாட்டிலே நல்ல தமிழிலே மேடையில் பேச முடியும் என்பதனை முதன்முதலில் பேசிக் காட்டியவர் திரு.வி.க.

அரசியலில் புயலாகவும் தமிழில் தென்றலாகவும் இருப்பவர் நம் திரு.வி.க.

எதிர்கால உலகத்திற்காகச் சிறந்த ஏடுகளைத் தயாரிப்பவர் நம் திரு.வி.க."

எனத் தமக்கே உரித்தான சொற்சுவையொடும் கருத்தாழத்தொடும் கூறியிருப்பது, திரு.வி.க.வின் எழில் திறத்தை நன்கு உணர்த்தி நிற்பதாகின்றது...!

**மேடைத் தமிழுக்கு ஒரு திரு.வி.க.**

திரு.வி.க. அவர்களைத் 'தீஞ்சுவைப் பேச்சின் தந்தை' எனக் கவிஞர் வாணிதாசன் அவர்களும், 'இருபதாம் நூற்றாண்டின் தமிழ் உரைநடை வளர்ச்சியின் ஆணிவேர்' எனப் பேராசிரியர் அ.ச. ஞானசம்பந்தனார் அவர்களும், 'நயத்தகு நடையாளர் திரு.வி.க.' எனப் பேராசிரியர் மா.ரா. இளங்கோவன் அவர்களும் போற்றிப் பெருமை கொள்வது பொருத்தமுடையது...!

உரைநடைக் காலமென விளங்கும் இற்றை நாளில், வற்றாத ஊற்றெடுத்துக் கவிச்சுவைசேர் உரைச் சோலையாகத் திகழ்ந்திடும் திரு.வி.க.வை, அறிஞர் அ.கி. பரந்தாமனாரின் வழிநின்று, 'உரைநடைக் கம்பர்' எனப் போற்றுவது காலத்திற்கு உகந்த சிறப்பாகும்...!

இன்று தமிழ்நாட்டில் வாழும் பலரைப் பேச்சாளராக உருவாக்கித் தந்திருப்பது, திரு.வி.க.வின் உரைத் திறத்து ஏற்றமிகு ஆற்றலே எனலாம்...!

'தமிழ் உரை வீச்சுக்கலை' எனும் வானுயர்ந்த கோபுரத்தின் உன்னதக் கலசமாகத் திகழ்ந்து, நடையில் நின்றுயர் நாயகராக விளங்கிடும் தமிழ்த் தென்றலை, 'மேடைத் தமிழுக்கு ஒரு திரு.வி.க.' என நெஞ்சில் நிறுத்தி நன்றியொடு பரசுவோமாக...!

❖

**முகங்காட்ட முடியா ஆறு**

கரையோரம் அலைக்கையால் வாரி விட்ட
கருமணலால் சுருள்கூந்தல் காட்டி, வெள்ளை

நுரைசேரும் புனல்தள்ளும் சங்கி னத்தின்
நுண்சினையால் பல்காட்டி, ஓடி ஓடி,

இரைதேடும் கயல்மீனால் கண்கள் காட்டி,
இறுமாந்து செல்லுங்கால் தன்பால் செந்தா

மரையின்றி முகங்காட்ட முடியா ஆறு
மாய்வதற்குக் கடல்நோக்கி ஓடு தல்பார்!

– கவிஞர் முடியரசன்

# தமிழில் சிற்றிதழ்கள்

ஏர்வாடி எஸ். இராதாகிருஷ்ணன்



தமிழில் இப்போது சிற்றிதழ்கள் நிறைய வெளிவருகின்றன. இவற்றிற்கு அதிகமான பக்கங்கள் இல்லையென்றாலும் விளம்பரங்களைச் சுமந்தே விரிந்துகொண்டு போகிற பெரிய இதழ்களைக் காட்டிலும் தரமான, நல்ல படைப்புகளொடு வெளிவருகிற சிற்றிதழ்களை நம் கருத்திலிருந்து அகற்ற முடியாது.

தமிழிலக்கிய வரலாற்றில் சிற்றிதழ்களின் வளர்ச்சியும், பங்கும் குறிப்பிடத்தக்கவை. தமிழில் சிற்றிதழ்களின் தோற்றம் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலேயே நிகழ்ந்துவிட்டது. இதனைத் தொடங்கியவர்களும் தொடர்ந்தவர்களும் சாதாரணமானவர் அல்லர். மறைமலையடிகள், வ.உ.சி., மகாகவி பாரதி, வ.வே.சு. ஐயர், பூர்ணலிங்கம் பிள்ளை, கனகசபாபதி போன்ற பெருமக்கள் சிற்றிதழ்களின் வரலாற்றில் சிறப்பான இடம் பிடித்தோராவர்.

விவேக சிந்தாமணி, பஞ்சாமிர்தம், பாலபாரதி, சுதந்திரச் சங்கு, காந்தி, ஜெயபாரதி இவையெல்லாம் முன்னோடிச் சிற்றிதழ்களுள் சிலவாகும். 1930ஆம் ஆண்டுவாக்கில் தோன்றிய மணிக்கொடி இதழ், இதழாக மட்டுமல்ல, ஓர் இயக்கமாகவே இயங்கியது. 'மணிக்கொடி காலம்' என்றே தமிழ் இலக்கிய வரலாற்றில் பேசப்படுவதுண்டு. ஊழியன் இதழ்கூட இந்தக் காலகட்டத்தில்தான் வந்தது. தொடர்ந்து எழுத்து, சூறாவளி, கலாமோகினி, சரஸ்வதி, தீபம், வானம்பாடி, கசடதபற, ஞானரதம், ஃ, நீலக்குயில், பிரக்ஞை, கணையாழி இவையெல்லாம் அளவிற் சிறிய இதழெனினும் அளப்பரிய தமிழ்த் தொண்டில் தமிழர் தம் நெஞ்சில் ஆழமாய்ப் பதிந்தவை. ''மணிக்கொடி காலம்'' என்ற பி.எஸ். இராமையாவும், ''எழுத்து காலம்'' என்று சி.சு. செல்லப்பாவும், ''சரஸ்வதி காலம்'' என்று வல்லிக்கண்ணனும் எழுதிப் பெருமை சேர்த்துள்ளார்கள். எனவே, சிற்றிதழ்களைச் சாதாரணமாய்க் கருதிவிட முடியாது. இது சிறுதேர் உருட்டி விளையாடும் சிறுபிள்ளைத் தனமன்று. சிறிய அளவில் சீரிய பணி. இவற்றிற்கும் மற்றெல்லா இதழ்களைப் போலவும் – சொல்லப் போனால் இன்னும் அதிகமாகவே இலக்கிய நோக்கு உள்ளதென நிரூபிக்கப்பட்டுள்ளது.

தமிழில் சிற்றிதழ்கள் பெரும்பாலும் கதை, கட்டுரை, கவிதைத் துணுக்குகளையே அதிகமாக வெளியிடுகின்றன. இவற்றில் எழுதுகிறவர்கள் பொதுவாக, புதியவர்கள் மட்டுமே என்கிற எண்ணம் பலருக்குப் பரவலாக இருக்கிறது. விளம்பரம் பெற்றுவிட்ட பெரிய இதழ்களில் எழுத வாய்ப்பில்லாதவர்களின் இலக்கியத் தாக்கத்தைத் தீர்த்துக் கொள்ளவே சிற்றிதழ்கள் தோன்றின என்றும் சிலர் கருதிக் கொண்டிருக்கிறார்கள்.

இதை முற்றிலுமாய் மறுத்து மூலையில் தள்ள முடியாது. ஆனால், அதற்காக மட்டுமே சிற்றிதழ்கள் அல்ல. புதியவர்களுக்காகவும், வளர்கிறவர்களுக்காகவும் இவ்விதழ்கள் நடை வண்டியாய் உதவுகின்றன என்பதென்னவோ உண்மைதான். எனினும் அடிக்கடி இல்லையென்றாலும் அவ்வப்போதாகிலும் சிற்றிதழ்களுக்குச் சிறப்பைச் சேர்க்கப் புகழ்வாய்ந்த பிரபலமான எழுத்தாளர்களும் கவிஞர்களும் முன்வரத் தவறுவதில்லை.

பிரபலமான வார, மாத, பிற பருவ இதழ்கள் ஒரு குறிப்பிட்ட கலவையைக் கவனமாகத் தீர்மானித்துக் கொள்கின்றன. அரசியல், சினிமா, இலக்கியம் என்று எல்லாவற்றையும் அவியலாகத் தருபவை இவை. ஆனால், சிற்றிதழ்கள் அவ்வாறன்று. கவிதை, கட்டுரை, துணுக்கு, சாதி, தொழில், தொழிற்சங்கம், நிதி, ஆன்மிகம், அரசியல், அறிவியல் என்று எடுத்துக் கொண்ட அல்லது தீர்மானித்த துறையில் சிறப்பான ஈடுபாட்டுடன் இவையெல்லாம் வெளிவருகின்றன என்பதனால் எடுத்துக்கொண்ட துறையில் செறிவான செய்திகளை இவை வெளியிடுகின்றன. அத்துணைச் சிற்றிதழ்களையும் பெயரிட்டுக் குறிப்பிட (எண்ணிக்கை அதிகமென்பதனால்) வாய்ப்பில்லையெனினும் ஒவ்வொரு வகையிலும், சிலவற்றையேனும் குறிப்பிடுதல் அவசியம்.

கவிதைக்காகவே தெசிணியின் 'கவிதை', பெருங்கவிக்கோவின் 'தமிழ்ப்பணி', பொன்னடியானின் 'முல்லைச்சரம்' (இப்போது வடிவம் மாறிவிட்டது), ஏர்வாடி இராதாகிருஷ்ணனின் 'கவிதை உறவு' ஆகிய இதழ்கள் தொடர்ந்து வெளிவருகின்றன. பண்ணுருட்டி பரமசிவனின் 'எழிலோவியம்'

கபிலவாணனின் 'காவியப்பாவை', சுரதாவின் 'சுரதா', 'ஊர்வலம்', நா. காமராசனின் 'சோதனை', கண்ணதாசனின் 'கண்ணதாசன்' ஆகியவை தரமான கவிதை இதழ்களாய் வெளிவந்தவை. நினைவில் நின்றுவிட்டுப் போன இவ்விதழ்களின் பழைய இதழ்கள் இன்றும் இனிக்கும். இவற்றைப் போலவே வானம்பாடி, தமிழ்த்தேன், கவிக்குயில் ஆகியவை கவிதைக்கு வரவேற்பளித்த இதழ்களாகும். கவிக்கொண்டல் மா. செங்குட்டுவனின் 'மீண்டும் கவிக்கொண்டல்' அருகோபாலனின் 'எழுகதிர்' ஆகிய மாத இதழ்களும் கவிதைக்குச் சிறப்பிடம் தருகிற இதழ்களாகும்.

முகம், கணையாழி, கவிதாசரண், செம்மலர், தாமரை, ஊற்று, தமிழ்ப்பாவை, காகிதம், கண்ணியம் போன்ற இதழ்களும் கவிதைகள் அச்சேறத் தளமாகவும் களமாகவும் விளங்குகின்றன. தனித்தமிழ் முயற்சிக்குத் தலையாய இடம் தந்து இலக்கியப் பணியாற்றுகிற இதழ்களான தமிழியக்கம், வல்லமை, செந்தமிழ்ச் செல்வி, தென்மொழி, பொதுமை, குறளியம், குறள்வழி, வள்ளுவர் வழி, செந்தமிழ் ஆகியன குறித்தும் இங்கே அவசியம் குறிப்பிட வேண்டும்.

பகுத்தறிவாளர்களுக்கான இதழ்களாக உண்மை, சிந்தனையாளன் ஆகிய இதழ்கள் உள்ளன. சிவப்பிலக்கிய இதழ்களாகத் தாமரை, செம்மலர் போன்றவை வெளிவருகின்றன. தலித் இலக்கியத்திற்கும் தனியே இதழ்கள் மலர்கின்றன.

ஆன்மிக இதழ்களும் சிற்றிதழ்ப் பேரணியில் பெயர்ப் பதிவு செய்துள்ளன. அமரபாரதி, திருக்கோவில் வரலாறு, பூக்கடை, பிறை, முஸ்லீம் முரசு, பிஸ்மி போன்ற இதழ்கள் புகழ்மிக்க ஆன்மிக இதழ்களாகும். அறிவியல் துறையிலும் சிற்றிதழ்கள் உண்டு. சுற்றுப்புறச் சூழல் பாதுகாப்புக்குக்கூட சில சிற்றிதழ்கள் வெளிவருகின்றன.

சாதிச் சங்கங்களும் அவற்றிற்கென்று சிற்றிதழ்களை நடத்துகின்றன. நகரத்தார் குரல், நகரத்தார் மலர், நாடார் முரசு, விஸ்வ முரசு, தங்க நட்சத்திரம் என்று சாதியிதழ்களும் இப்பட்டியலில் உண்டு. தொழிற்சங்கங்கள் கூடச் சிற்றிதழ்களை வெளியிடுகின்றன. என்.ஜி.ஓ. குரல், பல்லவ முரசு போன்றவை இவ்வரிசையில் வருபவை.

தமிழ்நாட்டில் வெளியாகிற தமிழ்ச் சிற்றிதழ்களைப் போலவே உலகளாவிய தமிழிதழ்களும் உண்டு. பிரான்ஸ், இங்கிலாந்து, ஜெர்மனி, இலங்கை, அமெரிக்கா, மலேசியா, சிங்கப்பூர், நெதர்லாண்ட், ஸ்விட்சர்லாந்து, கனடா நாடுகளிலிருந்து வெளிவரும் சிற்றிதழ்கள் சிறந்த தமிழ்த் தொண்டு செய்து வருகின்றன. இவற்றில் பெரும்பான்மையான இதழ்கள் உலகெங்கும் பரவி வாழ்கிற இலங்கைத் தமிழ் அகதிகளின் விடுதலைத் தாகத்தினால் உந்தப்பட்டவை.

இவையெல்லாம் உலகத் தமிழர்களுக்கிடையே பாலமாய் விளங்குகின்றன. கூடவே தமிழர்களின் பிரச்சினையை, குறிப்பாக இலங்கைத் தமிழர் பிரச்சினையை உலக மக்களின் பார்வைக்கு வைக்கின்றன. ஈழமணி, ஈழநாடு, எரிமலை, ஓசை, ஐரோப்பிய முரசு, சுவடுகள், தமிழ் ஏடு, தமிழன், தேடல், நிழல், மனிதம், மௌனம், சங்கநாதம், உயிர்ப்பு, சக்தி, சமர், தூண்டில், தேனீ, தமிழ்ச்சுடர் என்று உலகத் தமிழ்ச் சிற்றிதழ்களின் பெயர்களைப் பட்டியலிடலாம்.

பல்வேறு அலுவலகங்களும், அமைப்புகளும், நிறுவனங்களும், சங்கங்களும் இதழ்கள் நடத்துகின்றன. இவற்றிற்கு அலுவலக இதழ்கள் (House Magazine) என்று பெயர். இவற்றிற்கு இலக்குகள் அதிகமாய் இல்லையெனினும் மனிதநேயம் மிகுந்து காணப்படும். அலுவலக ஊழியர்கள், அதிகாரிகளின் சாதனைகளையும், சிறப்புகளையும், நிறுவன, வாணிக மேம்பாட்டையும், பணியாற்றுவோரின் படைப்புகளையும் இவ்விதழ்கள் தாங்கிவரும்.

உலகத் தமிழர் நலம் நாடும் இதழ் (சர்வதேசத் தமிழர்) உடல் ஊனமுற்றோர் நலம் நாடும் இதழ் (உதவிக்கரம், தன்னம்பிக்கை) எழுத்தாளர் நலம் நாடும் இதழ் (உலகத் தமிழ் எழுத்தாளர் ஒற்றுமை) சமூக அமைப்புகளின் இதழ் (லயன்ஸ் டச்) போன்றவை ஒவ்வோர் ஊரின் சிறப்புகளையும், செய்திகளையும் தாங்குகிற இதழ் (அண்ணாநகர் டைம்ஸ், அண்ணாநகர் டாக், அடையாறு டைம்ஸ், மாம்பலம் டைம்ஸ், பெரம்பூர் செய்திகள், குரோம்பேட்டைக் குரல், வள்ளியூர் டைம்ஸ், நீலகிரி நியூஸ் இத்யாதிகள்), மாணவர்களுக்காக வரும் இதழ் (மாணவர் தாகம், தேன்மழை) இப்படி எண்ணற்ற சிற்றிதழ்கள் பவனி வருகின்றன.

சிற்றிதழ்களைப் பற்றிய ஆய்வுகளைப் பலர் நிகழ்த்தியுள்ளனர். பல மாணவர்களின் ஆய்வுப் பட்டங்களுக்குச் சிற்றிதழ்கள் பெரிதும் தளம் அமைத்துள்ளன. மூத்த எழுத்தாளர் வல்லிக்கண்ணன் அவர்கள் சிற்றிதழ்களைப் பற்றிய செய்திகளைத் தெரிந்து மட்டுமல்ல, தொகுத்தும் சுவையாகச் சொல்லியும் இவ்விதழ்களைப் பற்றிய மதிப்பை மிகுத்திருக்கிறார். பொள்ளாச்சி நசன் என்கிற பாராட்டிற்குரிய நண்பர் 'சிற்றிதழ்ச் செய்தி' என்ற பெயரில் ஒரு சிற்றிதழ் நடத்துகிறார். இவ்விதழ் சிற்றிதழ்களின் வளர்ச்சிக்குச் செய்து வருகிற தொண்டு போற்றுதற்குரியது. ஆண்டுதோறும் இவர் சிறந்த சிற்றிதழுக்குச் சான்றிதழும் விருதுமளித்துச் சிறப்பிக்கிறார். சிற்றிதழ்களுக்கென்று சங்கங்களும் உள்ளன.

வாணிக இலக்குகளொடு வருகிற பத்திரிகைகள் குறிப்பிட்ட ஒரு பாணியில் உள்ளீடுகளைத் தீர்மானித்துக் கொள்ளும் அரசியல், சினிமா, சமூகம், இலக்கியம் குறித்த செய்திகளையும், விமர்சனங்களையும் குறிப்பிட்ட விகிதாசாரப்படி ஒரு கலவையை நிருணயித்துக் கொள்ளும். இவற்றிற்கு எழுதுகிறவர்கள்கூட அந்தந்தப் பத்திரிகைக்குத் தேவையான பாணியைப் பிடித்துக் கொள்வார்கள். இந்தக் கதை இந்தப் பத்திரிகைக்குப் பொருத்த மாயிருக்குமென்று பழகிய எழுத்தாளர்களுக்குப் புரியும். இதுவோர் தொழில் இரகசியமாகவும் அறியப்படும்.

ஆனால், சிற்றிதழ்களில் எழுதுவோர்க்கு இதுபோன்று எல்லைகளோ அளவுகோலோ கிடையாது. சுதந்திரமாய்ச் சிந்திப்பவர்கள் என்கிற சிறப்பு இவர்களுக்குண்டு. என் நண்பர் கவிஞர் அரு. கோபாலன் குறிப்பிட்ட ஓர் அரசியல் கட்சியின் அனுதாபிதான். ஆனால், குறை காணுகிறபோது கொதிப்பதிலும் கருத்தினைத் தன்னிச்சையாய்த் தருவதிலும் பெற்றுள்ள கனமும், கௌரவமும் குறிப்பிடத்தக்கது. விற்பனைச் சரிவை ஏற்படுத்திவிடக் கூடாதென்பதனாலும் குறிப்பிட்ட சிலரது ஆதரவை இழந்துவிடக் கூடாதென்பதாலும் சிலர் சற்று நெளிவதுண்டு. ஆனால் நிமிர்ந்து நிற்கிற இதழ்கள் என்கிற பெருமை சிற்றிதழ்களுக்கு உண்டு. இருந்தபோதிலும் ஆயிரம் அல்லது ஐந்நூறு பிரதிகள் மட்டுமே போகிற இவ்விதழ்களில் வெளிவருகிற கருத்துகள் எத்தனை பேரைப் போய் எட்டிவிடப் போகின்றன என்பதனால் யாருக்கும் சிற்றிதழ்களைப் பற்றிச் சிறிதும் கவலையிராது. ஆனால், காலம் இந்தக் கருத்துகளைப் பதிவு செய்து கொள்ளும். சிற்றிதழ்கள் கூட சரித்திரம் படைக்கும் என்பதனை மறுக்கவோ, மறைக்கவோ முடியாது. வல்லிக்கண்ணன் 'தமிழில் சிறு பத்திரிகைகள்' என்று எழுதிய நூலில் மிக விரிவாகச் சிற்றிதழ்கள் குறித்த செய்திகள் காணப்படுகின்றன.

இதழ்களைப் பொதுவாக வெள்ளை யானை என்பார்கள். 'யானையைக் கட்டித் தீனி போடுவது போல்' என்றுகூட ஒரு பழமொழி உண்டு. இது சிற்றிதழ்களுக்கும் பொருந்தும். சிற்றிதழ்கள்கூட கையைக் கடிப்பவைதாம். பெரிய இதழ்களுக்கு இருப்பதுபோல் முகமைகளும், விற்பனை விழுதுகளும் சிற்றிதழ்களுக்குக் கிடைப்பதில்லை. உறுப்பினர்களை மட்டுமே நம்பி இவை நடக்க வேண்டும். ஏதோ நட்புக்காக அல்லது தமது படைப்புகள் வருமென்ற நம்பிக்கையொடு நண்பர்கள் உறுப்பினராவர். ஆனால் அவர்கள் புதுப்பிப்பது கிடையாது. சிற்றிதழ்களுக்குக் குறைந்தது ஐந்நூறு உறுப்பினர்கள் தேறினாலே வெற்றிதான். ஆயுள் உறுப்பினர்கள் தேறினாலோ மாபெரும் வெற்றி எனலாம். ஆயுள் உறுப்பினர்களைச் சேர்க்கச் சொல்கிற ஆசிரியர்கள் ஆயுள் என்பது உறுப்பினர்களின் ஆயுளா அல்லது பத்திரிகையின் ஆயுளா என்ற கேள்விக்கும் பதிலைத் தயாராக வைத்திருக்க வேண்டியதிருக்கிறது. உறுப்பினர்கள் அதிகமில்லையென்றாலும், ஆர்வமுள்ளவர்கள் செலவுகளைப் பகிர்ந்துகொண்டு பத்திரிகைகளைத் தொடர்ந்து வெளிக்கொணர்வதுமுண்டு.

இலக்கிய உணர்வு மிக்க வணிகர்களும், தொழிலதிபர்களும், நிறுவனத் தலைவர்களும், சில சிற்றிதழ்களுக்கு ஆதரவுக்கரம் நீட்டி உதவுகிறார்கள். ஓர் இதழ் வெளிவருவதென்பது பிரசவம் நடந்து முடிவது போன்றது. ஒவ்வோர் இதழின் வருகையும் ஒரு சுகப்பிரசவத்தின் சுகத்தை அதன் ஆசிரியர்களுக்கு வழங்குகிறது. அச்சிட்டும், தட்டச்சு செய்தும், உருட்டச்சு செய்தும், எழுதியும், ஒளிநகல் எடுத்துமாய் இச்சிற்றிதழ்கள் வெளிவருவது வேலையாக இல்லாமல் ஒரு வேள்வியாகவே இவர்களுக்கு இருக்கிறது. அதற்காகவேனும் தமிழ்ச் சமுதாயம் சிற்றிதழ்களின் ஆர்வத்தைக் காப்பாற்ற வேண்டும். அவர்களது தமிழ்ப் பணியைப் போற்ற வேண்டும்.

தமிழில் சிற்றிதழ்களுக்கென்று சில சங்கங்கள் தமிழ்நாட்டில் உள்ளன. இவை அரசு ஆதரவு பெறுவதற்காகப் பாடுபடுவது குறிப்பிடத்தக்கது. அவ்வப்போது மாநாடுகள் கருத்தரங்குகளும் இவற்றால் நடத்தப் பெறுகின்றன.

எதிர்பார்ப்பு என்பது சமுதாயத்திடமிருந்து இதழ்களுக்கு மட்டுமல்ல, இதழ்களிடமிருந்து சமுதாயத்துக்கும் இருக்கிறது. சிற்றிதழ்களோ பேரிதழ்களோ குறிப்பிட்ட சில கால எல்லைகளில் வெளிவந்து எழுத்துகளால் மகிழ்வித்துவிட்டு அல்லது உணர்ச்சிவயப்படுத்திவிட்டுப் போகிற பொழுது போக்குச் சாதனமாக மட்டுமே முடிந்துவிடக் கூடாது. மக்களின் நிலை, பண்பாடு, உணர்வுகள், கலை, இலக்கிய, அரசியல் சிந்தனைகள் ஆகியவற்றின் வரலாற்றுச் சான்றாகவும் விளங்க வேண்டும்.

வளரும் பருவத்திலுள்ள ஒரு மகனிடம் தந்தை நடந்து கொள்கிற அல்லது நடத்துகிற பொறுப்பினை எழுத்திலும் காட்ட வேண்டும். "என்னுடைய எழுத்தை என்னுடன் அமர்ந்துகொண்டு என் மகன் படிக்கிறபோது நான் நெளியக் கூடாது'' என்கிற பொறுப்பும் அக்கறையும் எழுதுகிறவர்களுக்கு இருந்தால், சமுதாயம் எந்த எழுத்தையும் வாழ்த்தி வரவேற்கும். வளம் பெறும். நமது கையில் ஒரு தொழில் இருக்கிறது அல்லது பொழுதுபோக்கு இருக்கிறது என்று நினைப்பதனைக் காட்டிலும், தமிழ் இருக்கிறது என்று நினைக்க வேண்டும். நம்மவர்கள் மட்டுமல்ல, நம்மையறிய விழையும் எதிர்காலமும் இவ்விதழ்களைப் பார்க்கையில் தமிழும், தமிழகமும், தமிழ்ச் சமுதாயமும் சிறந்தவற்றைச் சிந்தித்ததற்கான சான்றாக விளங்க வேண்டும்.

**"காரிருள் அகத்தில் நல்ல**
**கதிரொளி நீதான், இந்தப்**
**பாரிடைத் துயில்வோர் கண்ணில்**
**பாய்ந்திடும் எழுச்சி நீதான்**
**ஊரினை நாட்டை இந்த**
**உலகினை ஒன்று சேர்க்கப்**
**பிறந்த பத்திரிகைப் பெண்ணே''**

என்று பாவேந்தர் பாடிய பத்திரிகைப் பெண்ணை, அவள் பேரிதழாக இருந்தாலும், சிற்றிதழாக இருந்தாலும் காப்பது நமது பொறுப்பு. பேச்சு, எழுத்து, சிந்தனைச் சுதந்திரங்கள் சரியாகப் பயன்படுத்தப்பட வேண்டும். சிற்றிதழ்களின் மூலம் சீரிய சிந்தனைகளை வழங்க வேண்டும். மானுடம் உய்வதற்கான செய்திகளைச் சொல்ல வேண்டும். சிற்றிதழ்களுக்கு விற்பனை மற்றும் பரப்பு தொடர்பாகச் சிற்றிதழ்கள் என்று பெயரமைந்து போனாலும் சிறந்த தமிழ்த் தொண்டாலும் எழுத்துப் பணியாலும் சீரிதழ்கள் என்ற சிறப்புக்கு உரியனவாகும். அரசும் பொதுமக்களும் இவற்றிற்கு ஆதரவுக்கரம் நீட்டுவது அன்னைத் தமிழுக்குச் செய்கிற அரிய தொண்டாகும்.

# திராவிட இயக்கம் வளர்த்த தமிழ்



திரு.க. திருநாவுக்கரசு

நீதிக்கட்சி, சுயமரியாதை இயக்கம், திராவிடர் கழகம் திராவிட முன்னேற்றக் கழகம் ஆகிய இவ்வமைப்புகளின் பொதுப் பெயரே திராவிட இயக்கம். இவ்வமைப்புகள் தமிழை வளர்த்தெடுக்க ஆற்றிய மிக முக்கியப் பணிகளை மட்டுமே இனி பார்க்க இருக்கின்றோம். இப்பணிகளையே 'திராவிட இயக்கம் வளர்த்த தமிழ்' என்று கூறுகின்றோம்.

திராவிட இயக்கம் தோன்றுவதற்கு முன்பாக ஏடறிந்த வரலாற்றுக் காலத்திலிருந்தே தமிழ் – சமற்கிருதக் கருத்துப்போர் நிகழ்ந்து வந்து இருக்கிறது. 14ஆம் நூற்றாண்டிலிருந்து 19ஆம் நூற்றாண்டுத் தொடக்கம் வரை தமிழகத்தில் நிலையான பேரரசுகளோ சிற்றரசுகளோ இல்லை. நாயக்கர்களின் ஆட்சியின் விளைவால் தெலுங்கு 300 ஆண்டுகளுக்கு மேலாகத் தமிழகத்தின் ஆட்சிமொழியாக இருந்திருக்கிறது. இந்நிலையிலும் தமிழ், பேச்சு மொழியாக விளங்கியும் தமிழர்களின் தாய்மொழியாகவும் திகழ்ந்து வந்து இருப்பது வரலாற்று வியப்புகளில் ஒன்றாகும். இனி, திராவிட இயக்கம் வளர்த்த தமிழைப் பார்ப்போம்.

**தமிழ்த் தெய்வ வணக்கப் பாடல்**

(1) 18ஆம் நூற்றாண்டின் இறுதியிலும் 19ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் தென்னிந்திய மொழிகளுக்குள் ஒரு நெருங்கிய உறவு இருப்பதை முதன்முதலாக அய்ரோப்பிய அறிஞர்கள் வெளிப்படுத்தினர். இதற்கடுத்து இராபர்ட்டு கால்டுவெல் 'சமற்கிருதத்தின் துணையில்லாமல் தமிழ்மொழி தனித்து இயங்கும் ஆற்றலுடையது' என்பதைத் தமது ஒப்பிலக்கண நூலில் ஆய்ந்தறிந்து கூறினார். இக்கருத்தையொட்டிப் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை தாம் இயற்றிய மனோன்மணீயம் காப்பியத்தில் 'நீராருங் கடலுடுத்த' எனும் தமிழ் வாழ்த்துப் பாடலாகப் பாடியதைத் தமிழ்நாடு அரசு ஏற்றுப் பயன்படுத்தி வருகிறது.

இப்பாடலின் சாரம் 'தமிழ், திராவிட மொழிகளை ஈன்றெடுத்த பிறகும் இறைவன் எப்படிப் பிறப்பும் இறப்புமின்றி என்றும் இளமையாய் விளங்குகிறாரோ அப்படித் தமிழ் இளமை குன்றாமல் விளங்குகிறது. 'இளமையைக் காப்பதில் இறைவனும் தமிழும் ஒன்றே' என்பதாகும். இப்பாடலைத் தேர்வு செய்து தமிழ்நாடு அரசின் மொழி வாழ்த்துப் பாடலாக அறிவித்தவர் முதல்வர் கலைஞர் அவர்கள் ஆவார். பேராசிரியர் சுந்தரம் பிள்ளையின் 'தமிழ்த் தெய்வ வணக்கப் பாடலைத்' தமிழ் வாழ்த்தாக அரசு பயன்படுத்தி வருவது மொழியியல் சார்ந்த ஆழமான காரணிகளில் ஒன்றாகும்.

**மருத்துவக் கல்வியில் சமற்கிருதம் நீக்கம்**

(2) நீதிக்கட்சி ஆட்சிக்கு வருமுன் சமற்கிருதப் படிப்பு கட்டாயம் ஆக்கப்பட்டு இருந்தது. சமற்கிருத மொழி அறிவு இல்லாத ஒருவரை மருத்துவத் துறைக் கல்விக்குத் தேர்வு செய்யாத நிலைமை தமிழ்நாட்டில் இருந்தது. இந்நிலைமையை அகற்றினார் பனகல் அரசர் இராமராய நிங்கார். அதனால்தான் மருத்துவக் கல்விக்குச் சமற்கிருதம் படிக்க வேண்டிய தேவையில்லை என அரசு முடிவெடுத்து அறிவித்தது.

**தமிழ் வித்துவான்**

(3) மருத்துவத் துறைப் படிப்புக்குச் சமற்கிருதம் தேவை என்று வற்புறுத்தியதைப் போலவே தமிழ் மற்றும் எந்தத் திராவிட மொழிகளுள் ஒன்றில் அல்லது எல்லாத் திராவிட மொழிகளிலும் ஒருவர் புலமை பெற்றிருந்தாலும் சமற்கிருத மொழி தெரியவில்லை என்றால் அவர் 'மொழிப் புலமை' உடையவராக ஏற்றுக் கொள்ளப்படவில்லை. இதனால் சமற்கிருதம் படிக்க வேண்டிய கட்டாயம் இருந்தது. இதனை டாக்டர் சி. நடேசனாரின் திராவிடர் சங்கம் எதிர்த்துத் தீர்மானம் நிறைவேற்றிச் சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு அனுப்பியது. நாடு தழுவி ஆங்காங்கே தமிழ்ப் புலவர்களின் சங்கங்கள் உருவாக்கப்பட்டன.

இதன் விளைவால் தமிழுடன் ஓர் இணை மொழியோ துணை மொழியோ இல்லாமல் தமிழ் மொழியை மட்டுமே தனியாகப் பயின்று பட்டம் பெறும் நிலையை நீதிக்கட்சி வலியுறுத்தியது. இதனால் 1927–28இல் சென்னைப் பல்கலைக் கழகம் நீதிக்கட்சியின் கோரிக்கையை ஏற்றுக்கொண்டது. இதன் பிறகே தமிழை மட்டும் பயின்று 'வித்துவான்' பட்டம் பெற முடிந்தது. இதனைத் தொடர்ந்து 1935, 1937ஆம் ஆண்டுகளில் பி.ஓ.எல்., எம்.ஓ.எல். பட்டப் படிப்புகள் ஏற்படுத்தப்பட்டன.

(4) சென்னைப் பல்கலைக் கழகம் தொடங்கிய காலத்திலிருந்தே தமிழ் மொழிக்குச் செம்மொழித் தகுதி மறுக்கப்பட்டு வந்தது. திராவிட இயக்கத்தின் ஆதரவு அமைப்புகளான சைவ சித்தாந்தப் பெருமன்றமும், கரந்தைத் தமிழ்ச் சங்கமும், பார்ப்பனர் அல்லாதார் மாநாடுகளும் 1918, 1919, 1920 ஆகிய ஆண்டுகளில் தமிழுக்குச் செம்மொழித் தகுதி வழங்கத் தீர்மானங்களை நிறைவேற்றின. அத்தீர்மானங்களில் பாரசீகம், அரபி, சமற்கிருத மொழிகளுக்கு இணையாகச் செம்மொழித் தரத்தில் தமிழ் மொழியையும் ஆட்சிப் பணித் தேர்வுகளில் வைக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டனர்.

தமிழ் செம்மொழி என்பதை முதன் முதலில் அறிந்து கொள்ளப் பரிதிமாற்கலைஞர், டாக்டர் இராபர்ட்டு கால்டுவெல், வீரமாமுனிவர் ஆகியோரின் ஆய்வுகளே காரணமாக அமைந்தன. சமற்கிருத மொழிக்கு மட்டுமே ஆங்கில ஆட்சியின்போது செம்மொழித் தகுதி வழங்கப்பட்டது. தமிழ்க்கடல் மறைமலையடிகள், மொழி ஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர், பன்மொழிப் புலவர் கா. அப்பாதுரையார் ஆகியோரின் ஆய்வுகள் தமிழ்ச் செம்மொழித் தகுதி பெற வேண்டும் என வலியுறுத்தின. ஆங்கிலப் பெருங்கவிஞராகத் திகழ்ந்த ஏ.கே. இராமானுஜன், 'இந்தியாவில் இப்போதுள்ள இரண்டு செம்மொழிகளுள் தமிழ் மட்டுமே தொய்வில்லாமல் தொடர்ந்து தனது செம்மொழிப் பழைமையை முழுமையாகப் பேணி வருகிறது' என்கிற கருத்தைத் தெரிவித்தார். அறிஞர் கமில்சுவலஃபில் சங்க இலக்கியங்களைச் செவ்விலக்கியங்கள் என்று ஒப்புக் கொள்ளக்கூடிய மூன்று காரணிகளை எடுத்துரைத்தார். இவ்விரண்டு அறிஞர்களின் கூற்றுகள் 1960களிலும் 1970களிலும் வெளிப்படுத்தப்பட்டவை.

அறிஞர்களிடையே தமிழ் மொழிக்குச் செம்மொழித் தகுதி வழங்கப்படவில்லையே என்கிற குறைபாடு தொடர்ந்து இருந்து வந்தது. 1995இல் தஞ்சையில் நடைபெற்ற 8ஆம் உலகத் தமிழ் மாநாட்டின்போது மணவை முஸ்தபா அவர்களை உள்ளடக்கிய வல்லுநர் குழு தமிழைச் செம்மொழியாக்கக் கோரி அன்றைய முதல்வர் ஜெயலலிதாவிடம் அறிக்கை ஒன்றைத் தந்தது. அதனால் பயனேதும் ஏற்படவில்லை. 1996இல் கலைஞர் முதல்வரானார்.

1996ஆம் ஆண்டு ஜூன் 15ஆம் நாள் 'செம்மொழிப் பட்டியலில் தமிழ்' எனத் தலைப்பிட்டுத் தினமணி நாளேடு தலையங்கம் ஒன்றை எழுதியிருந்தது. அதில், மத்திய அரசின் பரிசீலனைக்குத் தமிழுக்குச் செம்மொழித் தகுதி வழங்கும் கோரிக்கையை எடுத்துச் செல்லுமாறு கேட்டுக் கொண்டதோடு அரசு இந்தச் சமயத்தை நழுவவிடக் கூடாது என்றும் எச்சரித்து இருந்தது. இதனைத் தொடர்ந்து கலைஞரின் அரசு மணவை முஸ்தபா, வா.செ. குழந்தைசாமி, ஜான் சாமுவேல், பொற்கோ ஆகியோரைக் கொண்ட ஒரு குழு அமைத்தது. ஆவணங்கள் தயாரிக்கப்பட்டன. மத்திய அரசுக்குத் தமிழைச் செம்மொழியாக்கக் கோரி ஒரு கடிதம் அனுப்பி வைக்கப்பட்டது. மத்திய அரசு அந்தக் கடிதத்தை மைசூரிலுள்ள இந்திய மொழிகளின் நிறுவனத்திற்கு அனுப்பி வைத்தது. அந்நிறுவனம் தமிழைச் செம்மொழியாக்கலாம் எனப் பரிந்துரைத்தது.

இதன்பிறகு சிறு சிறு அமைப்புகளும் சில அரசியல் கட்சிகளும் செம்மொழி பற்றிய கோரிக்கையை முன் வைத்து மத்திய அரசை வலியுறுத்திப் போராட்டங்களை நடத்தின; பலன் இல்லை. மீண்டும் தி.மு.க. தலைவர் கலைஞர் அவர்கள் 22.04.2003இல் பிரதமர் வாஜ்பாய்க்குத் 'தமிழைச் செம்மொழியாக அறிவிக்க வேண்டும்' எனும் கோரிக்கையை வலியுறுத்திக் கடிதம் எழுதினார். 2006இல் கலைஞர் மீண்டும் ஆட்சிப் பொறுப்பை ஏற்றார். அவரின் வலியுறுத்தலால் தமிழ்ச் செம்மொழி என அறிவிக்கப்பட்டது. நம் மொழியைச் செம்மொழியாக்குவதில் கலைஞர் இமாலய வெற்றியைப் பெற்றுவிட்டார். நம் தாய்மொழியாம் தமிழுக்குச் செம்மொழித் தகுதி ஒன்றரை நூற்றாண்டுக்குப் பிறகு கிடைக்கச் செய்த பெருமை திராவிட இயக்கத்தின் மாபெரும் சாதனை அல்லவா?

**தமிழ்ப் பேரகராதி**

(5) தமிழ்ப் பேரகராதி தொகுக்கும் பணி 1912ஆம் ஆண்டு தொடங்கப்பட்டது. இப்பணி 24 ஆண்டுகள் நடைபெற்றது. இப்பணி நிறைவடைய வேண்டும்; விரைவில் பேரகராதி வெளியிடப்பட வேண்டும் என்பதில் நீதிக்கட்சி பெரிதும் அக்கறை எடுத்துக் கொண்டது. தமிழ்ப் பேரகராதி திராவிட மொழியியலுக்கு வழங்கப்பட்ட தன்னிகரற்ற காணிக்கையாகும். திராவிட இயக்கத்தின் தூண்டுகோலினாலேயே இப்பணி சிறப்பாக நிறைவடைந்தது என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

**அண்ணாமலையில் தமிழுக்கென்று தனித் துறைகள்**

(6) 'தமிழ், திராவிடத் தென்னிந்திய மொழியாக மட்டுமன்று, ஆரியர் வருகைக்கு முன்னரே அது இந்திய மொழியாக இருந்தது. 'காசுமீர் முதல் கன்னியாகுமரி வரை தமிழ் பேசப்பட்டது' என டாக்டர் அம்பேத்கர் குறிப்பிடுவார். அப்படிப்பட்ட பழம்பெரும் மொழிக்கு ஒரு பல்கலைக் கழகம்கூட இல்லை. ஆனால், சமற்கிருதத்திற்கு வாரணாசியில் ஒரு பல்கலைக் கழகத்தை அமைத்து இருந்தார்கள். 1920களில் தமிழர்களுக்கு இது பெருங்கவலை தருகிற பிரச்சினையாக இருந்தது. 1926இல் ஆந்திரப் பல்கலைக் கழகமும் அமைக்கப்பட்டுவிட்டது. தமிழ்ப் பல்கலைக் கழகம் வேண்டுமா? வேண்டாமா? என்கிற சிக்கல் தொடர்ந்தது. 1929–30 கல்வியாண்டில் அண்ணாமலைப் பல்கலைக் கழகம் தோற்றுவிக்கப்பட்டது. இது ஒரு தமிழ்ப்

பல்கலைக் கழகம் அல்லவென்றாலும் சில துறைகள் தமிழுக்கென்று தோற்றுவிக்கப்பட்டன. அவை நீதிக்கட்சியின் சாதனைகள் என்றால் மிகை இல்லை. அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழுக்கென்று புதிய ஆராய்ச்சிப் பிரிவுகள் தோற்றுவிக்கப்பட்டன. சமற்கிருதப் படிப்புக்கு உள்ளது போன்று சித்தாந்த வித்துவான், இலக்கண வித்துவான், இலக்கிய வித்துவான் எனப் பாடத் திட்டங்கள் அறிமுகப் படுத்தப்பட்டன. அண்ணாமலைப் பல்கலைக் கழகம் தோற்றுவிக்கப்பட்ட குறுகிய காலத்திலேயே தமிழ்மொழித் துறையில் கிளை பரப்பிப் பல புதுப் பிரிவுகளை அறிமுகப்படுத்தியது. இதன் பின்புலத்தில் நீதிக்கட்சி இருந்தது.

**நீதிக்கட்சிக் காலத்தில் சட்டமன்றத்தில்...**

(7) டாக்டர் சி. நடேசனார் முதல் சட்டமன்றக் கூட்டக் காலத்திலேயே (1920–1923) தமிழ் இலக்கியங்களின் செவ்வியல் தன்மையைக் குறித்தும் பழம்பெருமையைப் பற்றியும் உரையாற்றினார். தமிழ்மொழி கவனிக்கப்படாமல் இருப்பது குறித்துத் தமது வருத்தத்தை அவர் பதிவு செய்தார். இரண்டாவது சட்டமன்றக் கூட்டக் காலத்தில் (1923–1926) ஒரு படி மேலே சென்று, 'வழக்கில்லாத செத்த மொழியான சமற்கிருதத்தைக் கற்பிக்கப் பாடசாலைகள் நடத்தப்படுகின்றன. ஆனால், எல்லாச் சமயங்களாலும் போற்றப்படுகின்ற தமிழைப் புறக்கணிக்கிறார்கள் என்று இடித்துரைத்தார். டாக்டர் சி. நடேசனாரின் இப்பேச்சுக் குறித்து இந்து ஏடு கடுமையாக விமர்சனம் செய்து எழுதி இருந்தது. தமிழுக்கு உரிய இடம் வழங்கப்படவேண்டும் என்பதே நடேசனாரின் கோரிக்கையாக இருந்தது.

**பகுத்தறிவின் வழி தமிழ் மறுமலர்ச்சி**

(8) சுயமரியாதை இயக்கக் காலத்தில் தமிழ்ப் பணி சற்று வேறுபாடான முறையில் அமைந்தது. இதிகாச, புராண ஆபாசங்களை எடுத்துரைக்கிறபோது கம்ப இராமாயணம், பெரிய புராணம் போன்றவற்றில் உள்ள பகுத்தறிவுக்குப் பொருந்தாத கருத்துகளை மக்களிடையே அவ்வியக்கம் எடுத்துரைத்தது. சுயமரியாதை இயக்கக் கொள்கைகளையும், கருத்துகளையும், கட்டுரைகளாகவும், கவிதைகளாகவும், எழுத்தாளர்களும் கவிஞர்களும் எழுதினர். பலவித உரைநடைகளும் செழுமைமிக்க உள்ளீடு நிறைந்த சிறந்த கவிதைகளும் தமிழுக்குக் கிடைத்தன.

பெரியார், தங்கபெருமாள் பிள்ளை, பண்டித முத்துசாமி, சுவாமி கைவல்யம், இ.மு. சுப்பிரமணிய பிள்ளை என்கிற சந்திரசேகரப் பாவலர், கோவை அய்யாமுத்து, சா. குருசாமி, ரா. சௌரிராஜன், பாரதிதாசன், ப. ஜீவானந்தம் என நூற்றுக்கு மேற்பட்ட எழுத்தாளர்களும் கவிஞர்களும் சுயமரியாதை இயக்கத்தின் மூலம் அறிமுகமாயினர். இதனால் தமிழுக்குப் புதிய சிந்தனை கிடைத்ததுடன் ஒரு மறுமலர்ச்சி ஊழி சமுதாயத் துறையிலும் மொழித் துறையிலும் தோன்றிற்று. சுயமரியாதை இயக்க எழுத்தாளர்கள் 'வாழ்க்கையின் எல்லாச் சிக்கல்களையும் பகுத்தறிவுக் கண்ணோட்டத்தின் வழி அணுக வேண்டும்' என்று எழுதினர். இதனால் தமிழ் மறுமலர்ச்சியும் பகுத்தறிவின் வழியே நிகழலாயிற்று.

**எழுத்துச் சீர்திருத்தம்**

(9) தமிழ் எழுத்துகள் மிக அதிக எண்ணிக்கையில் இருப்பது அதன் வளர்ச்சிக்குத் தடையாக இருப்பதைப் பெரியார் சுட்டிக் காட்டினார். இதற்காக அவர் தமிழ் எழுத்துகளின் எண்ணிக்கையைக் குறைக்க வேண்டும் என்றார். அனைத்துத் தமிழ் எழுத்துகளும் 64 இருந்தால் போதுமானது என்கிற கருத்தைப் பெரியார் முன் வைத்தார். தமிழ் மொழியியல் வரலாற்றில் எந்த ஓர் அறிஞரும் இப்படியொரு கருத்தை இதற்கு முன்போ பின்போ கூறியது இல்லை. இதன் அடிப்படையில் முதல் கட்டமாக ஏழு சீர்திருத்த எழுத்துகளைப் (ணா, றா, னா, ணை, ளை, லை, னை) பெரியார் 1935 முதல் பயன்படுத்தத் தொடங்கினார். இச் சீர்திருத்த எழுத்துகளை 1978 முதல் அனைவரும் இப்போது பயன்படுத்தி வருகின்றோம்.

**முதல் இந்தி எதிர்ப்புப் போரால் (1937-40)**

**தமிழ்மொழிக்கு விளைந்த நன்மை**

(10) முதல் இந்தி எதிர்ப்புப் போராட்டம் சமற்கிருதம் – தமிழ் என்கிற பழைய வேறுபாட்டின் நிலையைத் தமிழ் – இந்தி என்று ஆக்கிற்று. இதனால் 'தமிழியக்கம்' தோன்றிற்று. முதல் முறையாகத் தமிழ்நாட்டின் வரலாற்றில் மொழி அடிப்படையில் தமிழர்கள் ஒரே பதாகையின் கீழ் ஒன்றாகத் திரண்டனர். திராவிட இயக்கத்தின் ஆதரவு அமைப்பாகத் தமிழ்ப் பாதுகாப்புக் கழகம் ஒன்று உருவாயிற்று. 'தமிழ்ச் சொற்களைப் பிழை நீக்கி எழுதும் முயற்சி' என்பன போன்ற துண்டறிக்கைகளை அவ்வமைப்பினர் வெளியிட்டனர். அதுமட்டுமன்று, சென்னை மாகாண நிருவாகத்தில் வாய்ப்புள்ள இடங்களில் எல்லாம் தமிழைப் பயன்படுத்த வேண்டும். அதற்காக நன்றாக ஆங்கிலம் தெரிந்த தமிழ் வித்துவானைப் பணிக்கு அமர்த்திக் கொள்ள வேண்டும்' எனும் சுற்றறிக்கையை அவ்வமைப்பினர் நாடு தழுவி அனுப்பிப் பரப்பினர். தமிழ் மொழி வளர்ச்சிக்கு இப்பணி மிகவும் உதவிற்று என வரலாற்றுப் பதிவுகள் கூறுகின்றன.

**திராவிட இயக்கத்தின் பிற தமிழ்ப் பணிகள்**

(11) திராவிட இயக்கத்தினர் கூடுமானவரை வடமொழிச் சொற்களை நீக்கி எழுதினர். ஒரு புதிய உரைநடையைப் படைத்தனர். நாள், வாரம், மாதம் இருமுறை, மாத ஏடுகள் என முந்நூறு இதழ்களுக்கு மேலாக வெளியிட்டுத் தமிழையும் இயக்கத்தையும் அவர்கள் வளர்த்தனர். ஆராய்ச்சி இதழின் ஆசிரியர் நினைவில் வாழும் நா. வானமாமலை திராவிட இயக்கத்தினரின் உரைநடை 'செயற்கை நடை' என்று கடுமையாக விமர்சனம் செய்திருந்தார். ஆனால், அவ்வுரைநடை ஏற்படுத்திய விளைவையும்,பயனையும்

அவரால் மறுக்க முடியவில்லை. வடமொழிச் சொற்களுக்குரிய தமிழ்ச் சொற்களைப் பயன்படுத்திய திராவிட இயக்கத்தினரின் வீச்சு காரணமாக சுதேசமித்திரன், கல்கி, ஆனந்தவிகடன் முதலிய இதழ்களின் உரைநடைப் போக்கே மாறிற்று. அவர்களுக்கு என்று இருந்த நடையிலிருந்து அவ்வேடுகள் மாறுபட்டு எழுதின.

(12) தமிழர்களின் இல்லத்து நிகழ்ச்சிகளின் தலைப்புகள் தமிழில் மாறின. கீழ்க்காணும்படியான 'சமற்கிருதத்' தலைப்புகள் தமிழில் இனிமையாக ஒலிக்கத் தொடங்கின.

வீட்டு நிகழ்ச்சிகள் தமிழில் மாறியதொடு நிற்கவில்லை. தமிழ் அரசியல் மேடைகளில், நிருவாகத்தில் புகுந்தது. தனித் தமிழ் இயக்கமும் அதற்குத் துணை நின்றது.

| | |
|---|---|
| அக்ராசனர் – | அவைத் தலைவர் ஆனார். |
| காரியதரிசி – | செயலாளர் ஆனார். |
| பொக்கிஷதார் – | பொருளாளர் ஆனார். |
| அபேட்சகர் – | வேட்பாளர் ஆனார். |

திராவிட இயக்கத்தால் துறைதோறும் புதிய சொல்லாக்கம் இடம் பெற்றது. 'வேட்பாளர்' என்கிற சொல்லைத் தி.மு.க. பயன்படுத்தத் தொடங்கியபோது 'ஆனந்த விகடன்' துணைத் தலையங்கம் ஒன்றை எழுதிப் பாராட்டியது. திராவிட இயக்கத்தின் இத்தமிழ்ப் பணியை எதிர்த்தவர்களும் உண்டு. இதுகுறித்து அறிஞர் அண்ணா தமது கருத்தைப் பின்வருமாறு பதிவு செய்தார்:

'சுவாமி வேதாசலம் தமது பெயரை மறைமலையடிகள் என்று மாற்றிக் கொண்டபோது உரத்த குரலில் எதிர்த்தார்கள்.

மந்திரிகளை – அமைச்சர்கள் என்று சொன்னதை எதிர்த்தார்கள்.

மகாஜனங்கள் வேண்டாம் பொதுமக்கள் என்று சொல்லலாம் என்றபோது எதிர்த்தார்கள், உபன்யாசத்தைச் சொற்பொழிவு என்று கூறினால் எதிர்த்தார்கள். அக்ராசனரை அவைத்தலைவர் என்று சொன்னபோது எதிர்த்தார்கள். கடந்த தேர்தலுக்கு முன்வரை அபேட்சகர் என்றுதான் சொன்னார்கள். கடந்த தேர்தலின் போதுதான் வேட்பாளர் என்று சொல்லத் தொடங்கினர்.

தமிழை வாழ வைப்பார்களா என்று அய்யம் இருக்கிறது. நெருப்பு எரிகிற வரைதான் குளிர் தெரியாமல் இருக்கும். அணைந்துவிட்டால் குளிர் நடுங்கும். தமிழ் மொழி மீது ஆர்வமும் சுறுசுறுப்பும் இருந்தால்தான் தமிழ் வாழும், இல்லாவிட்டால் மறுபடியும் மகாஜனம் வந்துவிடும், பொதுமக்கள் வராது' என்று அண்ணா குறிப்பிட்டது கொண்டு திராவிட இயக்கம் இல்லையென்றால் சமற்கிருதக் குளிர் தமிழர்களைப் பீடித்துக் கொள்ளும் என்று மறைமுகமாகச் சொன்னார்.

தி.மு.கழகம் தொடங்கப்பட்டதற்குப் பிறகு பல சொற்களைத் தமிழுக்கு அது வழங்கியது. 'அறிவாலயம்' என்கிற சொல்லை அறிஞர் அண்ணா 1940களிலேயே வெளிப்படுத்தினார். பொதுக்குழு, செயற்குழு, அமைப்புக் குழு, கலந்துரையாடல், வட்டம், மாவட்டம், படிவம், பணிமனை, கழகக் கிளை என்பன போன்ற சொற்களைக் கழகத்தினர் பயன்படுத்தினர். சில சொற்களைக் கழகத்தினர் உருவாக்கியும் பயன்படுத்தினர். கழகத்தினர் புதிய தமிழ்ப் பெயர்களைச் சூட்டிக் கொண்டதொடு குழந்தைகளுக்குத் தமிழ்ப் பெயர்களைச் சூட்டினர். இல்லங்களுக்கும் தமிழ்ப் பெயர்களை வைத்தனர்.

நீதிக்கட்சி காலத்திலிருந்து திராவிட இயக்க ஆதரவாளராகத் திகழ்ந்த கு.மு. அண்ணல்தங்கோ பெயர் மாற்றத்தையும் புதிய பெயர் சூட்டுவதையும் தனித் தமிழில் உரையாடுவதையும் ஓர் இயக்கமாகவே கொண்டார். மறைமலையடிகள், பாவாணர் போன்றோர் தனித்தமிழ் ஆய்வை, சொற்பிறப்பை நிலைநாட்டியவர்கள் என்றால் அண்ணல்தங்கோ போன்றவர்கள் அக்கொள்கையைச் செயல்படுத்தும் தீரர்களாக விளங்கியவர்கள். இந்த அடிப்படையை ஒவ்வொரு தமிழரும் மேற்கொண்டு பணியாற்றினால் தமிழ்ப்பணி மேலும் சிறப்பும் செழுமையும் அடையும். தமிழறிஞர்களின் ஆய்வுகளையும், இலக்கிய இலக்கணச் செழுமைகளையும் பொதுமக்களிடையே முழங்கித் தாய் மொழியுணர்வை ஏற்படுத்திய ஒரே இயக்கம் – திராவிட இயக்கமே ஆகும்.

### தனித்தமிழ் மற்றும் தமிழிசை இயக்கங்கள்

(13) நீதிக்கட்சி தோன்றிய காலகட்டத்திலேயே 1916இல் தனித்தமிழ் இயக்கமும் ஆப்ரகாம் பண்டிதரின் இசை ஆய்வுகளும் தோன்றின. 1940களில் அண்ணாமலை அரசரும், சர் ஆர்.கே. சண்முகம் செட்டியாரும் தமிழிசை இயக்கத்தை மேலும் செழுமையாக்கினர். இப்பணிகளெல்லாம் திராவிட இயக்கத்தின் தமிழ்ப் பணிகளே ஆகும். அண்ணாமலை அரசரின் இசை இயக்கம் குறித்து சர் ஆர்.கே. சண்முகம் செட்டியார் பணியாற்றி வருகையில் ஒரு கருத்தை முன் வைத்தார். அக்கருத்தைப் பதிவு செய்தால்தான் திராவிட இயக்கத்தின் தேவையைப் பற்றித் தமிழர்கள் அறிந்து கொள்ள ஓர் அடிப்படைக் காரணத்தைத் தெரிந்து கொள்ள முடியும். சர் ஆர்.கே.எஸ். கூறுகிறார்:

'தமிழ்மொழியின் நிலை எப்படி இருக்கிறது கேளுங்கள். வயிற்றுப் பிழைப்பிற்கு ஏதாவது உத்தியோகம் பார்க்க வேண்டுமானால் ஆங்கிலம் படிக்க வேண்டும்.

கல்யாணம், கருமாந்திரம் செய்ய வேண்டுமானால் சமற்கிருதத்தில் செய்ய வேண்டும். சங்கீதத்தைக் கேட்க வேண்டுமானால் தெலுங்கு மொழியைப் படிக்க வேண்டும்.

இதுபோல் எந்த நாட்டிலாவது தாய்மொழிக்கு ஆபத்து ஏற்பட்டு இருக்கிறதா? நம்முடைய தாய்மொழி தமிழுக்குத்தான் இத்தனை ஆபத்தும் ஏற்பட்டு இருக்கிறது. இந்த ஆபத்தைத் தடுத்துத் தமிழ் மொழியைக் காக்கவே தமிழ் இசைச் சங்கம் தோற்றுவிக்கப்பட்டுள்ளது.'

சர் ஆர்.கே.எஸ். குறிப்பிட்டிருக்கிற குறைகளைத் திராவிட இயக்கம் நீக்கி இருக்கிறது. தமிழுக்குச் சிறப்பான இடத்தை வழங்கி இருக்கிறது என்பதை உணரலாம். அதேபோல மறைமலையடிகளாரின் தனித் தமிழ்ப் பணியை ஒல்லும் இடங்களில் எல்லாம் நடைமுறைப்படுத்தியதோடு அவருக்கு நாகையில் சிலை அமைத்ததும் நகரை இணைக்கும் பாலத்திற்கும் புறநகரில் இருக்கும் ஒரு பகுதிக்கும் மறைமலையடிகள் பெயரைச் சூட்டியதும் திராவிட இயக்கமே ஆகும். இவையெல்லாம் திராவிட இயக்கத் தமிழ்ப் பணிகளின் புற அடையாளங்கள் ஆகும்.

**கலை, இலக்கியமும் மொழி வளர்ச்சியும்**

**(14)** திராவிட இயக்கத்தினருள் உயர்ந்த, தேர்ந்த தமிழ்ச் சொற்களைக் கொண்டு புதிய உரைநடை வளத்தால் சிறுகதை, நெடுங்கதை, நாடகங்கள், திரைப்படங்கள், இசைப்பாடல்கள், கவிதைகள் ஆகியன மக்களைப் பெரிதும் கவர்ந்தன. மக்கள் எழுச்சியும் தமிழ்வீறும் நாட்டுப் பற்றும் கொண்டனர். திராவிட இயக்கத்தாரின் படைப்பு இலக்கியங்கள் எவையானாலும் அவற்றின் மொழி அமைப்பு, அதைப் படிக்கிறபோது ஏற்படுகிற ஓசை இன்பம், மேலும் அதனை அப்படியே பிறரிடம் கூறுகிறபோது அல்லது பேசிக் காட்டுகிறபோது கேட்போரை ஈர்க்கிற ஆற்றல் ஆகியவை மக்களிடம் கருத்தைக் காலம் தாழ்த்தாமல் கொண்டு சேர்த்தது.

திராவிட இயக்கம் செய்த மாபெரும் சாதனை, இராமாயணத்திற்கு மாற்று இலக்கியமாகப் புலவர் குழந்தையின் 'இராவண காவியம்' படைத்தது ஆகும். கவிதையுலகில் பாரதிதாசனின் பரம்பரையினர் தோன்றினர். பெரியார், அண்ணா, கலைஞர் தொடங்கி திராவிட இயக்கத்தின் கடைசி எழுத்தாளர்கள் வரை புதுத் தமிழைப் படைத்து மறுமலர்ச்சி ஊழியை உண்டாக்கினர்.

1940க்கு முன்பு நாடக உலகின் முடிசூடா மன்னர்களாக சங்கரதாஸ் சுவாமிகள், தெ.பொ. கிருஷ்ணசாமிப் பாவலர், பம்மல் சம்பந்த முதலியார், எம். கந்தசாமி முதலியார், தி. இலக்குமணப் பிள்ளை முதலானோர் விளங்கினர். டி.கே.எஸ். சகோதரர்கள் மற்றும் பல குழுவினர் நாடகங்களை நடத்தி வந்தனர். இந்நாடகங்கள் எப்படி இருந்தன என்பதை அவ்வை டி.கே. சண்முகம் கீழே விளக்குவதைப் பாருங்கள்:

'20ஆம் நூற்றாண்டு மலர்ந்து, முதல் நாற்பது ஆண்டுக்கால நாடகங்கள், கலப்பியற் கலை வடிவங்களாகவே காணப்பட்டன. உயிர் ததும்பும் நாடக மாண்புகளைக் காட்டிலும், இரு நாகரிகக் கலப்பு, வெறும் பொழுதுபோக்கு நிலையே மிகுதியும் இடம் பெற்றன. பழங்கதைகளான புராணக் கூத்துகள், கால மாற்றத்தால் வாழ்வியலில் வளர்ந்த சுவை மிகுந்த நையாண்டிப் பண்புகளும் நிறைந்தனவாக அவை படைக்கப் பெற்றன.

உண்மையான கருத்து வன்மையும் சீர்திருத்தப் பண்பும் அவற்றில் இடம் பெறாத சூழலே இருந்தது. வாழ்க்கைச் சிக்கல்களுக்குத் தீர்வு காணத் தூண்டி மக்கள் உள்ளத்தில் மாற்றத்தைத் தோற்றுவிக்கும் நாடகங்களோ அக்காலத்தில் பரவலாக உருவாகவில்லை. எனினும் நாடகங்கள் வாழ்வின் முழுமையை விளக்க முடியாமல் எளியோரின் உள்ளங்களை ஈர்க்காமல் செல்வ வாழ்வின் சீர்க்கேட்டை ஓரளவு காட்டி வந்தன.'

அவ்வை டி.கே. சண்முகம் கூறும் இந்நாடகப் பண்பைத் திராவிட இயக்கத்தாரின் தமிழும் கதையும் மாற்றிக் காட்டின. அது மட்டுமன்று, அறிஞர் அண்ணா அவர்கள் விடுதலை (14.06.1940) ஏட்டில் 'குமாஸ்தாவின் பெண்' எனும் நாடகத்திற்கு எழுதிய நீண்ட விமர்சனம் நாடக உலகில் ஒரு திருப்பு முனையை ஏற்படுத்தியது. இதைத் தொடர்ந்து திராவிட இயக்கத்தாரின் நாடகங்கள் மக்களால் பெரிதும் வரவேற்கப்பட்டன.

நாடக உலகத்திற்கு அடுத்தபடியாக உள்ள மாபெரும் ஊடகம் திரைப்படத் துறையாகும். இத்துறையில் முதன்முதலாகத் திராவிட இயக்கத்தவராக அடியெடுத்து வைத்தவர் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்களே ஆவார். அறிஞர் அண்ணாவின் திரைப்பட நுழைவே மக்களைப் பெரிதும் கவர்ந்தது. இதன் பிறகே கதை, உரையாடல் ஆசிரியரின் பெயரை வெளியிட்டுத் திரைப்படங்களைத் தயாரிக்கப் பட அதிபர்கள் முன் வந்தனர். அறிஞர் அண்ணாவுக்கு அடுத்து கலைஞர் திரைப்படத் துறையைத் தம் எழுத்தின் ஆதிக்கத்தில் வைத்து இருந்தார். அதனை அவர் ஓர் ஊழியாகவே உருவாக்கிக் காட்டினார். கலைஞரைத் தொடர்ந்து பல கதை, உரையாடல் ஆசிரியர்களும், தொடக்க காலத்தில் கவிஞர் கண்ணதாசன் போன்ற பாடல் ஆசிரியர்களும் திரைப்படத் துறையில் மாபெரும் புதுமைகளைச் செய்து மக்களைக் கவர்ந்தனர். நாடகம் மற்றும் திரைப்படத் துறையைச் சேர்ந்த நடிகமணி டி.வி. நாராயணசாமி, நடிப்பிசைப் புலவர் கே.ஆர். இராமசாமி, நடிகவேள் எம்.ஆர். இராதா, சிவாஜிகணேசன், புரட்சி நடிகர் எம்.ஜி. இராமச்சந்திரன், இலட்சிய நடிகர் எஸ்.எஸ். இராசேந்திரன், வளையாபதி முத்துக்கிருஷ்ணன் என நடிகர்களின் பட்டாளத்தையே கலை, இலக்கியமும் மொழி வளர்ச்சியும் தமிழியக்கமாகவே ஆக்கிற்று.

**திருக்குறள் - திருவள்ளுவர்**

**(15)** திருக்குறள் பற்றிய பரப்புரையைச் சுயமரியாதை இயக்கம் 1927 முதல் செய்துவருகிறது. 1946 சனவரி 14, 15 தேதிகளில் சென்னையில் திராவிடர் கழகம் திருக்குறள்

மாநாட்டை முதன்முதலாக நடத்தியது. இதன் பிறகுதான் திருக்குறள் பற்றிய விழிப்புணர்வு தமிழகத்தில் மிகப் பெரிய அளவில் தோன்றியது. திராவிட இயக்க வழியில் புத்துரைகள் எழுதப்பட்டன. பிற அறிஞர்களும் தெளிவுரைகள், விளக்கவுரைகள், திருக்குறள் விளக்கக் கதைகள், ஆய்வுரைகள் என நிரம்ப எழுதினர். பாடத் திட்டத்தில் திருக்குறள் இடம் பெற்றது. இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டின்போது மூன்று பல்கலைக் கழகங்களில் அறிஞர் அண்ணா அவர்களால் ரூ. 9 இலட்சம் செலவில் திருக்குறள் இருக்கைகள் ஏற்படுத்தப்பட்டன. அறிஞர் அண்ணாவின் அமைச்சரவையில் பொதுப்பணித் துறை மற்றும் போக்குவரத்துத் துறை அமைச்சராக இருந்த கலைஞர் அவர்கள் ஒவ்வொரு பேருந்திலும் மக்கள் பார்வையில் படும்படி திருவள்ளுவர் படத்தோடு ஒரு திருக்குறள் இடம் பெறச் செய்தார்.

திருவள்ளுவர் படத்தினை ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதத்தில் பயன்படுத்தி வந்தார்கள். ஓவியர் வேணுகோபால் சர்மா மயிலாப்பூரில் ஒரு வீட்டில் தங்கித் திருவள்ளுவரின் ஓவியத்தை வரைந்து முடித்து இருந்தார். இப்படத்தினை அவர் வீட்டிற்குச் சென்று அறிஞர் அண்ணா, கலைஞர், பாரதிதாசன் முதலான தலைவர்கள் பார்வையிட்டு ஓவியம் சிறப்பாக இருக்கிறது எனத் தமது ஒப்புதல்களை வழங்கினர். இப்படத்தினையே பின்னாளில், தமிழ்நாடு அரசு ஏற்று அரசு வெளியீடாக இன்றளவும் பயன்படுத்தி வருகின்றது. இவ்வோவியத்தினையே சிலையாக வடித்துத் தி.மு.க. ஆட்சிக்கு வருவதற்கு முன்பே மயிலாப்பூரில் அப்போதைய குடியரசு தலைவர் டாக்டர் எஸ். இராதாகிருஷ்ணனைக் கொண்டு சென்னை மாநகராட்சி தி.மு.க. நிருவாகம் திறந்து வைத்தது. சென்னை நுங்கம்பாக்கத்தில் வள்ளுவர் கோட்டமும் குமரி முனையில் 133 அடி உயர வள்ளுவர் சிலையும் முதல்வர் கலைஞரால் அமைக்கப்பட்டன.

திருக்குறளைப் போற்றுவதும் பரப்புவதும் திருவள்ளுவரைச் சிறப்புச் செய்வதும் தமிழ்ப் பணியே ஆகும். ஆகவேதான் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் திருவள்ளுவரைத் 'தமிழ் இறைவனார்' என்றார். இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டின்போது திருவள்ளுவருக்கு நிற்கும் நிலையில் சென்னைக் கடற்கரையில் சிலை அமைத்ததொடு மேலும் 9 சிலைகள் பழந்தமிழ் வித்தகர்களுக்கும் புதுத் தமிழ் முன்னோடிகளுக்கும் வைக்கப்பட்டன.

**தமிழ் ஆட்சிமொழியாக...**

15 (1) நீதிக்கட்சி, தமிழ் ஆட்சி மொழியாக்கப்பட வேண்டும் என வற்புறுத்தியதோடு ஸ்ரீ / ஸ்ரீமதிக்கு மாற்றாகத் திரு / திருமதி பயன்படுத்தப்பட வேண்டும் என்று தனித் தீர்மானத்தின் மூலம் அரசைக் கேட்டுக் கொண்டது. திராவிடர் கழகமாகப் பெயர் மாற்றம் செய்த சேலம் மாநாட்டில் 'தமிழை வளர்க்கவும் சமற்கிருதத்திற்கு எதிராகப் போராடவும் எப்போதும் ஆயத்தமாக இருப்பது' என்கிற தீர்மானத்தை நிறைவேற்றித் தனது தமிழ்ப் பணிக்கு ஒரு தொடர்ச்சியை உருவாக்கியது – திராவிட இயக்கம்!

**தமிழின் தனித்தன்மையை நிலைநாட்டும் பணிகள்**

(16) 1967ஆம் ஆண்டு அறிஞர் அண்ணா ஆட்சிப் பொறுப்பை ஏற்றவுடன் பயன்பாட்டில் இருந்த சமற்கிருத ஆங்கில நிருவாகச் சொற்களை நீக்கிவிட்டு அவ்விடங்களில் தமிழ்ச் சொற்களை ஒளிரச் செய்தார். அனைத்துத் தமிழ் பேசும் மக்கள் வாழும் நிலப்பகுதிக்குத் 'தமிழ்நாடு' எனும் பெயரினைச் சூட்டி உள்ளீடு நிறைந்த மாபெரும் சாதனையை நிகழ்த்தினார். தமிழ், ஆங்கிலம் என இருமொழிக் கொள்கையை அரசின் அறிவிப்பாக வெளியிட்டார். இவை தமிழ் மொழியின் தனித்தன்மையை நிலைநாட்டும் மிக உயரிய பணிகளாகும்.

அறிஞர் அண்ணாவைப் போலவே கலைஞரும் தமிழின் தனித் தன்மைகளை நிலைநாட்டும் பணிகளைச் செய்தார். தமிழைப் பயிற்று மொழியாக அறிவித்தார். தேவநேயப் பாவாணரின் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் 'அகர முதலிக்கு ஓர் இயக்ககம்' ஏற்படுத்தினார். கோவில்களில் தமிழில் அருச்சனை செய்ய ஆணை பிறப்பித்தார். செம்மொழிக்கு அலுவலகம் கண்டார்.

இப்படித் திராவிட இயக்கம் ஆற்றிய தமிழ்ப் பணிகளை விவரித்துக் கொண்டே செல்லலாம். இவற்றுள் சிலவற்றில் தடைகள் இருக்கும். குறைபாடுகளும் இருக்கக்கூடும். சில பணிகள் புதுப்பிக்கப்படாமல் இருக்கலாம். அரசு மீண்டும் வெளியிட வேண்டிய முக்கிய நூல்கள் வெளியிடப்படாமல் இருக்கலாம். சில தமிழ் ஆய்வுகளை நெறிப்படுத்த வேண்டி இருக்கும். இதுபோல நம்முன் எஞ்சியிருக்கும் ஆற்ற வேண்டிய தமிழ்ப் பணிகள் குறித்துத் திராவிட இயக்கத்திற்குப் பெரும் பொறுப்பும் சுமையும் உண்டு. அதனை எந்தவிதத் தயக்கமுமின்றி நிறைவேற்றுவோம்.

**தமிழுண்டு தமிழ்மக்க ளுண்டு - இன்பத்**
**தமிழுக்கு நாளும் செய் வோம் நல்ல தொண்டு**
**தமிழ்என்று தோள்தட்டி ஆடு - நல்ல**
**தமிழ்வெல்க வெல்க என்றே தினம்பாடு!**

– புரட்சிக்கவிஞர் பாரதிதாசன்

❖

# குறுந்தொகையில் தலைவி

முனைவர் சரளா இராசகோபாலன்



சங்க இலக்கிய எட்டுத்தொகைப் பாடல்களுள் 'நல்ல' என்ற அடைமொழியைப் பெற்றது குறுந்தொகைப் பாடல்களே. இப்பாடல்கள் உண்மை நிறைந்த கருவூலம்; கருத்து வளமும் கற்பனைச் சிறப்பும் பொருந்திய அழகான களஞ்சியம்; ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னே தமிழர் வாழ்ந்த வாழ்க்கையின் சிறப்பினை விளக்கும் எழுத்தோவியம். நவில்தொறும் நூல்நயம் போலும் என்ற வள்ளுவரின் குறளுக்கு எடுத்துக்காட்டாக அமையத்தக்க சிறப்புடையது.

சங்ககாலச் சமுதாயத்தில் ஆடவரே செல்வாக்கு மிக்கவராய்த் திகழ்ந்தனர். ஆனால், சங்க இலக்கியங்களில் மகளிரின் செல்வாக்குச் சிறந்து காணப்படுகிறது. 2379 சங்கப் பாடல்களில் 1864 அகம் பற்றியன; முழுமையாய்க் கிடைப்பன 1859 பாடல்களாகும். அவற்றுள் தலைவி, தோழி, நற்றாய், செவிலி, பரத்தை ஆகியோர் கூற்றாக அமைந்தவை 1458 பாக்களாகும். எஞ்சிய 409 பாடல்கள் தலைவனையும் பிறரையும் பற்றியனவாகும். இதனால் மகளிர் பெற்றிருந்த ஏற்றம் புலனாகிறது.

"அகமாந்தர்களுள் தலைமை தலைவிக்கே என்றும் பிறமாந்தர்கள் தலைவி வழிப்பட்டவர்களே என்றும் தலைவியின் பண்புகளுள் முதலாவது கற்புடைத் திண்மையே என்றும் பிற பண்புகள் கற்பினைச் சார்ந்து பொலிவனவே என்றும் நாம் தெளிய வேண்டும்'' என்பர் டாக்டர் வ.சுப. மாணிக்கம் அவர்கள். (தமிழ்க்காதல் ப.31)

**"அச்சமும் நாணும் மடனும் முந்துறுதல்**
**நிச்சமும் பெண்பாற் குரிய என்ப"**

(தொல்.1045)

**"கற்பும் காமமும் நற்பால் ஒழுக்கமும்**
**மெல்லியற் பொறையும் நிறையும் வல்லிதின்**
**விருந்து புறந்தருதலும் சுற்றம் ஓம்பலும்**
**பிறவும் அன்ன கிழவோள் மாண்புகள்''**

(தொல்:1098)

என்று, தொல்காப்பியம் பெண்ணின் பண்பு நலன்களை வரையறுத்துள்ளது. குறுந்தொகையில், தலைவியின் பெண்மை நலன்கள், தொல்காப்பியர் காட்டும் பெண்மையுடன் பெரிதும் ஒத்திருப்பது சுட்டத்தக்கது. எட்டுத்தொகை அகநூல்களில், குறுந்தொகையில் மட்டுமே தோழி கூற்றினும் தலைவி கூற்றுப் பாடல்கள் (180) அதிகமாக இருக்கின்றன. மற்ற அக நூல்களில், தோழி கூற்றுப் பாடல்களே அதிகமாகக் காணப்படுகின்றன.

## கடவுட் கற்பினள்

சங்க இலக்கியங்கள், தலைவி தலைவனுடன் ஊடுவதை, மருதத்திணையின் உரிப்பொருளாகக் கூறுகின்றன. தொல்காப்பியம்,

**"கற்புவழிப் பட்டவள் பரத்தைமை ஏத்தினும்**
**உள்ளத் தூடல் உண்டென மொழிப"**

(தொல்.பொருளியல்:37)

என்று தலைவியின் ஊடல் உணர்வை இயல்பாக்குகிறது. இதற்கு உரையெழுதப் புகுந்த இளம்பூரணர், ''பரத்தமைக்குத் தலைவி உடன்பட்டாலும், தலைவியின் உள்ளத்தில் ஊடல் இருக்கும்'' என்கிறார் (தொல். பொருள். இளம். உரை. ப. 348). நச்சினார்க்கினியர், 'தலைவன் பரத்தையைப் புகழ்ந்து கூறினும் உள்ளத்து ஊடல் உண்டென மொழிப'' என்று கூறுகிறார் (தொல். பொருள். நச்சி. உரை. ப. 319). இவ்வூடல் உணர்வுடன் கூடி வாழ்தலைக் கற்புடைமையாகத் தொல்காப்பியம் இலக்கணம் வகுக்கிறது (தொல்.செய்யுளியல் ப. 178). ஊடுவதாலேயே கற்பு சிறப்பதாகப் பரிபாடல் உரைக்கிறது (9:116).

ஆயினும் கணவன் பரத்தையின் வீட்டிலிருந்து வந்தால், அவனுடன் புலவாதிருத்தலைக் 'கடவுட் கற்பாகக்' கொண்டனர். இதைக் குறுந்தொகைப் பாடலொன்று நன்கு விளக்குகிறது.

"நெடிய திரண்ட தோள்வளை ஞெகிழ்த்த
கொடிய னாகிய குன்றுகெழு நாடன்
வருவதோர் காலை இன்முகந் திரியாது
கடவுட் கற்பி னவனெதிர் பேணி
மடவை மன்றநீ..." (குறுந். 252:1–5)

எனத் தோழி இடித்துரைக்கும் நிலையில் கடவுட் கற்பின் இலக்கணம் விளக்கப்படுகிறது. இதற்கு உரையெழுதிய உ.வே.சா. அவர்கள், ''மழை தருதல் முதலிய தெய்வத்தன்மையுடைய கற்பு. அருந்ததி போன்ற கற்பு எனினும் ஆம்'' என்று குறித்துள்ளார் (குறுந்.252, உ.வே.சா.உரை. ப.474). தொல்காப்பியர் கூறிய 'கற்பு' இலக்கணத்திற்கு இலக்கியமாகக் குறுந்தொகைத் தலைவி விளங்குவது குறிப்பிடத்தக்கது. குறுந்தொகை காட்டும் இக்கடவுட் கற்பைச் சிலப்பதிகாரம் பெருங்கற்பாகக் குறிப்பிடுகிறது. குறுந்தொகைத் தலைவியின் கற்பே கண்ணகியின் 'பெருங் கற்பாகச்' சிலப்பதிகாரம் போற்றுகிறது.

**அன்பு வாழ்வினள்**

தலைவி, தலைவனிடம் பேரன்பினள். அவனும் தன்னிடம் பேரன்பு கொண்டவன் என்பதில் பெருநம்பிக்கை கொண்டவள். தோழி தலைவனைப் பழித்தாலும் தலைவி பழிக்காமல், அவன் அன்பினைத் தோழிக்கு எடுத்துரைக்கிறாள். தலைவனின் அன்பிற்கு அகலம், உயரம், ஆழம் என்று முப்பரிமாணங்களைக் காட்டுகிறாள். தலைவனின் அன்பு, நிலத்தினும் பெரியது. வானினும் உயர்ந்தது. கடலினும் ஆழமானது என்கிறாள்.

"நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று
நீரினும் ஆரளவு இன்றே சாரல்
கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே" (குறுந்.3)

என்று தேவகுலத்தார் தலைவியின் அன்பைச் சிறப்பாகக் காட்டுகிறார்.

தலைவன் தலைவி உறவுக்கே அடிப்படையானது ஒருவர் மற்றவர் மீது கொள்ளும் பெருநம்பிக்கைதான். தலைவன் கார்காலத்தில் மீண்டும் வருவேன் என்று கூறிப் பொருளீட்டச் சென்றான். காரோ வந்தது. அவனுடைய தேர் வரவில்லை. இயற்கை பொய் கூறலாம். புதுப்பூங் கொன்றை மலரும் பொய்க்கலாம். கானம் பொய்க்கலாம். ஆனால், தன் தலைவர் பொய் கூறார் என்று பெருநம்பிக்கையுடன் தோழியிடம் கூறினாள்.

"கதுப்பின் தோன்றும் புதுப்பூங் கொன்றைக்
கானம் கார்எனக் கூறினும்
யானோ தேறேன்அவர் பொய்வழங் கலரே" (குறுந்:21)

என்றாள் குறுந்தொகைத் தலைவி. இவள் தன் அன்பினால் தலைவனைப் பிணிக்கிறாள். படிப்போரையும் பிணித்துவிடுகிறாள்.

**ஈருடல் ஓருயிர் நட்பினள்**

தலைவியும் தோழியும் உயிர்பகுத்தன்ன மாண்பினர்; உயிர்ஓர் அன்ன செயிர்தீர் நட்பினர். இன்னுயிரன்னர். சிறுவயதிலிருந்தே உடன் விளையாடும் நட்புச் சிறப்பினர். இருவரும் பிரிவு என்பதை அறியாத அளவுக்கு ஒன்றாக இயைந்தவர்கள். இருதலைப் பறவையைப் போல உடம்பால் இருவராய் உயிரால் ஒருவராய் ஆனவர். இவ்வாறு தோழியே அகநானூற்றில்,

"யாமே பிரிவின்றியைந்த துவரா நட்பின்
இருதலைப் புள்ளின் ஒருயி ரம்மே" (அகம்: 12)

என்னும் நிலையில் உவர்த்தல் இல்லாத நட்பினர். சிறைக்குடி ஆந்தையார் என்னும் புலவர், தோழிக்கும் தலைவிக்கும் உள்ள ஆழ்ந்த நட்பைத் தலைவன் கூற்றில் அமைத்துப் பாடுகிறார்.

"தலைப்புணைக் கொளினே தலைப்புணைக் கொள்ளும்
கடைப்புணைக் கொளினே கடைப்புணைக் கொள்ளும்
புணைகை விட்டுப் புனலோ டொழுகின்
ஆண்டும் வருகுவள் போலும்..." (குறுந்.222)

என்று தலைவன் கண்டுணர்ந்த நட்புச் சிறப்பினர். தலைவி செல்லுமிடமெல்லாம் நிழலெனத் தொடர்பவள் தோழி (குறுந்.322) என்னும் அளவிற்கு அவர்களின் நட்புச் சிறப்பைக் குறுந்தொகை படம் பிடித்துள்ளது.

**உயிரினும் சிறந்த நாணினள்**

'உயிரினும் சிறந்தன்று நாணே' என்று தொல்காப்பியம் தலைவியின் நாணத்திற்கு இலக்கணம் வகுத்துள்ளது. தலைவி தலைவனைக் காணும்வரை, நாணத்தைத் தன் உயிரினும் சிறந்ததாக ஓம்பி வந்தாள். தலைவனைக் கண்டதும் காமம் மிகுந்தது. காம வெள்ளத்தால் நாணத்தை விடுவதா? நாணத்தால் காமத்தை விடுவதா என்ற போராட்டத்திற்கு ஆளானாள். வெள்ளிவீதியாரின் தலைவி, நாணம் மிகுந்தவள். காமம் மிகுதிப்படுவதால், தலைவனுடன் போக விரும்பினாள். அதனால் நாணம் அழியுமே என்றும் இரங்கினாள்.

"அளிதோ தானே நாணே நம்மொடு
நனிநீ டுழந்தன்று மன்னே இனியே
வான்பூங் கரும்பின் ஓங்குமணற் சிறுசிறை
தீம்புனல் நெரிதர வீந்துஉக் காஅங்குத்
தாங்கு மளவைத் தாங்கி
காமம் நெரிதரக் கைந்நில் லாதே" (குறுந். 149:1–6)

என்று வருந்தினாள். நெடுங்காலமாகத் தலைவியுடன் சேர்ந்து நாணமும் வருந்தியது. வெண்பூக்கள் நிறைந்த

கரும்புகள் வளர்ந்த சிறுகரை, வெள்ளம் அடித்தலால் அழிந்து வீழ்வது போல, காமம் மேன்மேலும் நெருக்க நாணம் என்பால் நில்லாது போய்விடும். அந்த நாணம் இரங்கத் தக்கது எனத் தலைவி வருந்தினாள்.

**யாய் ஆகியள்**

வறியனாக இருந்த தலைவனை, உயர்த்தியவள் தலைவிதான். தலைவி வருவதற்கு முன் தலைவன், 'ஓர் ஆள் வல்சிச் சீரில் வாழ்க்கை' யனாக இருந்தான். தலைவியின் மனையறப் பாங்கினால், அவனுடைய இல்லம் விழாக்கொண்டாடும் நிலையைப் பெறுகிறது.

> **"ஓர்ஆன் வல்சிச் சீரில் வாழ்க்கை**
> **பெருநலக் குறுமகள் வந்தென**
> **இனிவிழவு ஆயிற்று என்னும்இவ் வூரே"** (குறுந்.295)

என்று தோழி, தலைவன் தலைவியால் செல்வம் பெற்றமையைக் குறிப்பிடுகிறாள்.

**காம ஒள் எரியினள்**

தலைவிக்குரிய இலக்கணம் கூறவந்த தொல்காப்பியர், அவளுடைய பண்புகளில் ஒன்றாகக் காமத்தையும் குறிக்கிறார். குறுந்தொகையில், தலைவி தன் காமம் மீதூர்தலைத் தோழியிடம் கூறுவதாகப் பல பாடல்கள் உள்ளன. வரைவு கடாவும் நிலையில், தோழி தலைவனிடம் தலைவியின் காமம் மீதூர்தலை எடுத்து மொழிந்து தலைவன் விரைவில் திருமணம் செய்யத் தூண்டுகிறாள். தலைவியின் காம ஓவியங்கள் குறுந்தொகையில் அதிகமாகவே உள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

சிறைக்குடி ஆந்தையாரின் தலைவி, நீங்காத காம உணர்வினை மகன்றிற் புணர்ச்சிக்கு ஒப்பிடுகிறாள்.

> **"பூவிடைப் படினும் யாண்டுகழிந் தன்ன**
> **நீருறை மகன்றிற் புணர்ச்சி போலப்**
> **பிரிவரி தாகிய தண்டாக் காமம்"** (குறுந்:57:1–3)

என்று குறிப்பிடுகிறாள். மதுரைக் கண்ணனாரின் தலைவி, யாணர் ஊரனோடு உறங்கிய இன்துயிலிலிருந்து வைகறைப் பொழுதை அறிவிக்கும் சேவல் எழுப்பி விட்டதற்காகத் தன் ஆற்றாமை தோன்ற அந்தச் சேவல், காட்டுப்பூனைக்கு இரையாக வேண்டும் என்று சபிக்கிறாள். (குறுந்.107:1–5.) அள்ளூர் நன்முல்லையாரின் தலைவி, தோள்தோய் காதலரைப் பிரிக்கும் வைகறைப் பொழுது வந்ததைக் 'குக்கூ' என்று சேவல் கூவி எழுப்பியது. அதனால் தன் தூய நெஞ்சம் அஞ்சுகிறது என்கிறாள். (157)

குப்பைக் கோழியாரின் தலைவி, தலைவனைக் கண்ட கண்களால் காம நெருப்பு உண்டானதாகக் கூறுகிறாள்.

> **"கண்தர வந்த காம ஒள்ளரி"** (குறுந்: 305)

என்பது தலைவி தீட்டும் சொல்லோவியம்.

காமமாகிய பகையானது ஆர்கலி வெற்பன் வருந்தொறும் வெளிப்படும். அவன் அகன்றாலும் போகாது. இது என்ன வியப்பு என வியக்கிறாள் உறையூர் சிறுகந்தனின் தலைவி.

> **"ஆர்கலி வெற்பன் வருதொறும் வருஉம்**
> **அகலினும் அகலா தாகி**
> **இகலும் தோழிநம் காமத்துப் பகையே"** (குறுந் 257:3–5)

என்னும் பாடலில், தலைவி காமத்தைப் பகையாகக் குறிப்பிடுகிறாள். தங்கால் முடக்கொற்றனாரின் தலைவி, 'ஐதே காமம்' (குறுந்.217) என்னும் நிலையில் நுண்மையான காம உணர்வினளாகக் குறிக்கப்படுகிறாள். தலைவியின் காமத்தைப் பெரிதாகக் காட்டித் தலைவனிடம் வரைவு கடாவுகிறாள் கபிலரின் தோழி.

> **"சிறுகோட்டுப் பெரும்பழம் தூங்கி யாங்கிவள்**
> **உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே.** (குறுந் : 18)

என்பது தலைவியின் காம ஓவியம். கங்குல் வெள்ளத்தாரின் தலைவி, தன் காமம் 'கங்குல் வெள்ளம் கடலினும் பெரிதே' என்கிறாள் (387:5). வெள்ளி வீதியாரின் தலைவி, வெள்ளம் பெருக்கெடுக்கும்போது, வெண்ணிறப் பூக்கள் உள்ள கரும்பு நடப்பட்டிருந்த மணல்கரை இடிந்து விழுந்து அழிவதுபோல, காம வெள்ளத்தால் தலைவியின் நாணம் அழிவதாகக் குறிப்பிடுகிறாள். அதனால் 'அளிதோ தானே நாணே' என நாணழிவிற்காக இரங்குகிறாள். (குறுந்.149). மாடலூர் கிழாரின் தலைவி, 'ஓங்கு'மலை நாடனின் சந்தனம் பூசிய மார்பை நினைத்தால் காமநோய் மிகும். தழுவினால் அந்நோய் இல்லையாகிப் போகிறதே' என வியக்கிறாள் (குறுந் 150:3–5). 'காமம் ஆற்றுகிலை' என இடித்துரைத்த தோழியைப் பார்த்து, கிள்ளி மங்கலங் கிழாரின் தலைவி, தன் காம நிலையை எடுத்துரைக்கிறாள். தாய்முகம் பார்த்து வளரும் ஆமையின் பார்ப்பைப் போலத் தலைவரைக் காண்பதால் தலைவியின் காமம் வளர்கிறது. தாயில்லாத பார்ப்பு மண்ணில் கிடந்து மாய்வது போலத் தலைவியின் காமம் உள்ளத்துக்குள்ளே கிடந்து மெலிந்து அழியும் என்கிறாள்.

> **"தாயின் முட்டை போலஉட் கிடந்து**
> **சாயின் அல்லது பிறிதுஎவன் உடைத்தோ**
> **யாமைப் பார்ப்பின் அன்ன**
> **காமம் காதலர் கையற விடினே"** (குறுந் 152:2–5)

என்பது தலைவியின் காம ஓவியம். பாலை பாடிய பெருங்கடுங்கோவின் தலைவி, காமத்தால் நல்லறிவு இழந்ததாகவும் நாணம் அழிந்ததாகவும் குறிப்பிடுகிறாள் (231:4–5). கல்பொரு சிறுநுரையாரின் தலைவி,

> **"செறிதுனி பெருகிய நெஞ்சமொடு பெருநீர்க்**
> **கல்பொரு சிறுநுரை போல**
> **மெல்ல மெல்ல இல்லா குதுமே"** (குறுந் : 290:3–5)

என்கிறாள். இவ்வாறு குறுந்தொகையின் தலைவி, தன் காமநிலையைப் பலநிலைகளில் தோழியிடம் கூறி வரைவு முயற்சிக்குத் தூண்டுகிறாள். தன் காமநிலையைத் தோழியிடம் கூறும் முகமாகத் தன் துன்பத்திற்கு ஆறுதல் தேடுகிறாள்.

**விருந்து ஓம்பும் பண்பினள்**

தமிழர்களின் சிறந்த பண்புகளில் ஒன்றாகிய விருந்தோம்பல், முன்பு புதுமைக்கு உரியதாயிருந்தது. "விருந்தே தானும் புதுவது புனைந்த யாப்பின் மேற்றே'' என்பது தொல்காப்பியம் (செய்:231). அன்று புதியவர்களைக் குறித்த இச்சொல், இன்று பழைமையுடன் உறவு கொண்டுவிட்டது.

கற்பு வாழ்வில், தலைவியின் உயர் பண்புகளைக் கூறவந்த தொல்காப்பியர்,

> **"கற்பும் காமமும் நற்பால் ஒழுக்கமும்**
> **மெல்லியற் பொறையும் நிறையும் வல்லிதின்**
> **விருந்து புறந்தருதலும் சுற்றம் ஓம்பலும்**
> **பிறவும் அன்ன கிழவோள் மாண்புகள்"** (தொல்; கற்பி:11)

என்று விருந்து புறந்தருதலையும் சுட்டியுள்ளார். தலைவன் தலைவியரின் ஊடல் தீர்க்கும் வாயிலாகக் குறிக்கப்படும் பன்னிருவரில் விருந்தினரும் அடங்குவர் (தொல்.பொருள். இளம்.நூ.191).

குறுந்தொகையில், தலைவிக்குரிய உயர் பண்புகளில் ஒன்றாக விருந்தினரை ஓம்புதல் குறிக்கப்படுகிறது. சமையல் தொழில் மகளிர்க்கு உரியதாகக் கருதப்பட்டதால், விருந்தோம்புதலும் மகளிருக்குரிய கடமையாக நினைக்கப்படுகிறது.

குறுந்தொகையில் தோழி, தலைவனை வரைவு கடாவும் நிலையில் பகற்குறியை இரவுக்குறியாக மாற்றும் முயற்சியில் விருந்தோம்பல் அமைகிறது (குறுந்.118, 179, 345). இளைய உள்ளங்கள் சமுதாயப் பண்பாட்டைத் தங்கள் காதலுக்காக ஏமாற்றும் நிலையும் காணப்படுகிறது. செல்வ வளம் மிக்க தலைவியின் வீட்டில், விருந்தினர் பலர் வந்து உண்ணுவர். ஆதலின் அவர் தடையின்றிப் புகும் வாயிலைப் 'பலர்புகு வாயில்' என்றாள். அதனால் வீட்டில் உள்ளோர் 'விருந்தினர் உளரோ?' எனக் கதவடைப்பதற்கு முன் வினவும் நிலையில், தலைவன் விருந்தினனாக வரவில்லையே எனத் தலைவி வருந்துவதைக் காணமுடிகிறது (குறுந்.118).

இரவில் வந்த விருந்தினரை ஓம்பும் சமுதாயப் பண்பாடு, இளைய தலைமுறையினருக்குத் தலைவனைக் காணும் வாய்ப்பினைத் தருகிறது. பகற்குறியில் வந்தவனை இரவிலும் விருந்தினனாகத் தங்குக என வேண்டி வரைவு கடாவும் முறை, அக்காலச் சமுதாயத்தினைக் காட்டுகிறது. இதை 'வேளாண் பெருநெறி வேண்டிய இடத்தினும்' என்பர் தொல்காப்பியர் (பொருள்.இன்பம்.112:23). இப் பாடல்களில், தலைவனிடம் தோழி எந்த முறையில் விருந்தோம்புவர் என்று கூறவில்லை. 'பகற்பொழுது கழிந்து விட்டது. நாய்களும் வேட்டையாடிக் களைத்தன. அதனால் தங்கிச் செல்க' என வேண்டும் முறையில் பாடல் அமைகிறது. குறுந்.179ஆம் பாடலில், குறிஞ்சித் தலைவனிடமும் 345ஆம் பாடலில் நெய்தல் தலைவனிடமும் தோழி வேண்டுகிறாள். குறுந்தொகை, தலைவியின் காதல் நாடகத்தை வளர்ப்போராக விருந்தினரைப் படைக்கிறது. தலைவனும் விருந்தினனாகவே கருதப்படுகிறான்.

தலைவியின் கற்பு வாழ்வில், வினைவயிற் பிரிந்த தலைவனையும் அவனுடன் வந்த பாகனையும் வரவேற்கும் நிலையில் பாடல் அமைகிறது (குறுந்:233). விருந்தினர் வருகையைக் காக்கை கரைந்து அறிவிப்பதாக ஒரு நம்பிக்கை சங்க காலத்தில் இருந்தது. காக்கை கரைவதால், தலைவனும் பாகனும் விருந்தினராக வருவர் என்று கூறித் தோழி தலைவியை ஆற்றுவிக்கிறாள். தலைவன் வருகையை அறிவித்த காக்கைக்கும் சோறு அளிப்பதாகக் காக்கைபாடினியார் பாடியதாலேயே இயற்பெயர் மறைந்து சிறப்புப் பெயர் பெற்றார் புலவர்.

> **"திண்டேர் நள்ளி கானத் தண்டர்**
> **பல்லா பயந்த நெய்யில் தொண்டி**
> **முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெஞ்சோறு**
> **எழுகலத் தேந்தினுஞ் சிறிதென் தோழி**
> **பெருந்தோள் நெகிழ்த்த செல்லற்கு**
> **விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே"** (குறுந்:210)

என்பது காக்கைக்கும் விருந்து வைக்கும் விருந்தோவியமாகிறது. நள்ளியின் கானத்தில் உள்ள பசும்பாலிலிருந்து கிடைத்த நெய்யுடன் தொண்டி என்னும் துறைமுகத்தில் விளைந்த வெண்ணெய் அரிசிச் சோற்றைப் பிசைந்து, ஏழு கிண்ணத்தில் காக்கைக்குக் கொடுத்தாலும் போதாது என்கிறாள். தலைவன் வராத நிலையில் விருந்தோம்ப முடியவில்லையே எனத் தலைவி வருந்துகிறாள் (குறுந்:155, 398).

குறுந்தொகையில் மட்டுமே தலைவி கூற்றுப் பாடல்கள் அதிகமாக உள்ளன. தொல்காப்பியர் கண்ட 'தலைவி' இலக்கணத்திற்கு இலக்கியமாகத் திகழ்பவள்; இவள் கடவுட் கற்பினள்; இவள் தலைவனிடம் கொண்ட அன்பு பெரிது, ஆழமானது, உயர்ந்தது. இயற்கை பொய் கூறினாலும், தலைவன் பொய் கூறான் என்ற பெரு நம்பிக்கையினள்; தலைவன் செய்த தவற்றையும் தன்மேலிட்டு, தெய்வம் பரவும் அருள் உள்ளத்தினள்; தோழியிடம் ஈருடல் ஒருயிர் அன்ன நட்பினள்; உயிரினும் சிறந்த நாணத்தைக் கடைப்பிடிப்பவள்; தலைவி வந்த பிறகே வறுமையிலிருந்த தலைவன் செல்வனானான். ஆயினும் செருக்குக் கொள்ளாதவள்; அவன் பரத்தமை மேற்கொண்டபோது, பொறுமை மேற்கொண்டு இல்லறக் கடமைகளை ஆற்றுபவள்; தலைவனின் பிரிவில் 'காம ஒள் எரியால்' துடிப்பவள்; விருந்து புறந்தரும் வாழ்க்கையினள். குறுந்தொகையில், தலைவி தலைவனைவிட உயர்ந்தவளாகத் திகழ்கிறாள் என்று கூறல் பொருத்தமானது. ❖

# பெண்ணியல் அன்றும் இன்றும்

முனைவர் தாயம்மாள் அறவாணன்



### தமிழகப் பெண்ணியல் அன்று

சங்க காலத்தைத் தோராயமாகக் கி.மு. 10ஆம் நூற்றாண்டுக்கு முன்பிருந்து கி.பி. முதல் நூற்றாண்டு வரை நாம் கொள்ளலாம். சங்க இலக்கியத் தொகுப்புகளான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகியவற்றையும் அவற்றில் இடம் பெற்றுள்ள பரிபாடல், கலித்தொகை, திருமுருகாற்றுப்படை, பதிற்றுப்பத்து ஆகியவற்றையும் உள்ளத்தில் கொண்டு நோக்கும்போது அரசியல், சமூகவியல், பொருளியல் நிலைகளில் முதற் சங்ககாலம், இடைச் சங்ககாலம், கடைச் சங்ககாலம் என்று வகைப்படுத்திக் கொள்ள இடம் இருக்கிறது. இக்காலங்களுக்கு இடையே திட்டவட்டமான கோடுகளை நம்மால் வரைந்துகொள்ள இயலாது. எனவே சங்ககாலப் பெண்டிர்நிலை அல்லது சங்ககாலப் பெண்ணியல் எனும் நோக்கில் பின்வரும் செய்திகளைப் பார்ப்போம். அவற்றைத் தொடர்ந்து இக்காலப் பெண்டிர் நிலையுடன் ஒப்பிட்டு நோக்கலாம்.

### பெண் குழந்தைப் பேற்றை விரும்புதல்

ஆண் குழந்தையை விரும்புவது போலவே பெண் குழந்தையைப் பெண் பெரிதும் விரும்பியுள்ளாள். தெய்வத்தை வேண்டி நோன்பிருந்து பெற்றுள்ளாள். இச் செய்தியைப் பின்வரும் பா உறுதி செய்யும்:

**குன்றக் குறவன் கடவுட் பேணி**

**இரந்தனன் பெற்ற எல்வளைக் குறுமகள்**

**ஆய்அரி நெடுங்கண் கலிழ**

**சேயதால் தெய்ய - நீ பிரியும் நாடே**

(ஐங்குறு 257)

### குழந்தையைப் பெற்று வளர்த்தல்

பெண் மக்கள் வேண்டும் எனக் குலத்தெய்வம் முருகனை வழிபட்டுக் குறை இரந்து குறவன் பெற்ற இளைய மகள் போற்றப் பெற்றுள்ளாள். குழந்தைகளைப் பெறுதலும் வளர்த்தலும் தாயின் கையிலேயே இருந்துள்ளன. இதனைப் பெண் புலவராகிய பொன்முடியார் 'ஈன்று புறந்தருதல் என்தலைக்கடனே' என்று பாடுவதிலிருந்து அறியலாம். குழந்தையைப் பெற்றெடுத்தல் மட்டுமன்றி அக்குழந்தையைச் சிறப்பாக வளர்க்கும் பொறுப்பும் தாயின் கையிலேயே இருந்தது என்பது தலைக்கடன் என்ற சொல்லாட்சியால் பெறப்படுகிறது.

### மகனை நாட்டுத் தியாகியாக வளர்த்தல்

பெற்றெடுத்த மகனைப் போருக்கு அஞ்சா வீர மகனாகவும் போர் கண்டு அஞ்சாத, புறங்கொடாத மகனாகவும், நாட்டுக்காக உயிரையே கொடுக்கும் தியாக மகனாகவும் இருத்தலைத் தாய் விரும்பினாள். அவற்றுக்காகத் தாய் ஆற்றிய கடமைகள் பெரிதும் பேசப் பெறுகின்றன. இவற்றைச் சில பாடல்கள் பதிவு செய்துள்ளன. ஒக்கூர் மாசாத்தியார் எனும் பெண் புலவர், வீரத்தைப் பெரிதாக நினைக்கும் மறக்குடி மகளிரின் மாண்பைப் புலப்படுத்துகிறார்:

**கெடுக சிந்தை கடிது இவள்துணிவே**

**மூதின் மகளிர் ஆதல் தகுமே**

**மேனாள் உற்ற செருவிற்கு இவள்தன்னை**

**யானை எறிந்து களத்து ஒழிந் தனனே;**

..................

..................

**இன்றும் செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி**

**வேல்கைக் கொடுத்து வெளிது விரித்து உடீஇ**

**பாறுமயிர்க் குடுமி எண்ணெய் நீவி**

**ஒரு மகன் அல்லது இல்லோள்**

**'செருமுகம் நோக்கிச் செல்க' என விடுமே.**

(புறம் 279)

### பெண்ணின் தொழில் பங்கு

பெண்டிர் பொருள் உற்பத்தியில் பங்கேற்றிருந்தனர் என்பதை வேளாண் விளைபொருளான தினைப்புனம் காத்தலில் இளம்பெண்களின் பங்கேற்பு நமக்குக் காட்டுகிறது. மாடுகள் வளர்த்தலிலும், அவற்றின் பால், தயிர், மோர், நெய் ஆகியவற்றின் உற்பத்தியிலும், விலைப்படுத்தலிலும் பெண்ணின் பங்கு முன்னிலையில் இருந்தது. நெய்தல் நிலப்பெண், மீன் விற்றல், உணக்கல், உப்பு விளைத்தல், விற்றல் ஆகியவற்றில் பங்கேற்றிருந்தாள்.

### பூப்புச் சடங்கு

பெண் பூப்படைதல் பற்றிக் குறிப்புகள் இருப்பினும் அதற்காகத் தனிச் சடங்குகள் எதுவும் நடத்தப் பெறவில்லை. பூப்புக் காலத்தில் ஒய்வுக்காகத் தனிமைப்படுத்தி இருத்தப்பட்டிருந்தாள்.

### காதல் மணம்

பெண் ஒருவனைத் தன் காதலனாகத் தெரிவு செய்து கொள்ளும் உரிமை பெற்றிருந்தாள். பருவம் எய்திய பெண் தினைப்புனம், கானகம், மலைப்பகுதி ஆகியவற்றுக்குச் செல்லும்போதும் நீராடும்போதும் தினைப்புனம் காக்கும்போதும் இளைஞனைச் சந்திக்க நேரிடும். அவனைக் காதலனாகத் தெரிவு செய்துள்ளாள். குடிப்பிறப்போ, திணை நிலப் பிரிப்போ, இன்னபிற தொழில் பிரிப்போ அவளுக்குத் தடையாக இல்லை. அது அன்பொடு புணர்ந்த ஐந்திணை எனப்படும். இச்செய்தியைப் பல பாடல்கள் பதிவு செய்துள்ளன.

**யாயும் ஞாயும் யாரா கியரோ**

**எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்**

**யானும் நீயும் எவ்வழி அறிதும்**

**செம்புலப் பெயனீர் போல**

**அன்புடை நெஞ்சம் தாம்கலந்தனவே.** (குறுந். 40)

தலைவனொடு கொண்ட காதல் நன்றாகப் பொருந்தியது; கட்டப்பட்டது. அது அவிழ்த்தற்கு அரிது, முடிக்கப்பட்டு அமைந்தது. பலரும் கூறுக அஃது அறியாதாரே (குறுந். 170) என்று காதலின் ஆழம் சொல்லப்படுகிறது.

பெண் தன் காதலனிடம் கொண்ட பேரன்பு நிலத்தைவிடப் பெரியது, நீரைவிட ஆழமானது, வானத்தைவிட உயர்ந்தது. சான்று:

**நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று**

**நீரினும் ஆரளவின்றே சாரற்**

**கருங்கோல் குறிஞ்சிப் பூக்கொண்டு**

**பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே** (குறுந். 3)

### பெண் சுதந்திரமாக வெளியே செல்லுதல்

தினைப்புனம் காத்தலுக்கும் அருவியில் குளித்தலுக்கும், கடலில் குளித்தலுக்கும் வெளியே சென்றனள் என்பதைக் கீழ்வரும் சான்றுகள் உணர்த்துகின்றன:

தினை காத்தலை,

**வளைவாய்ச் சிறுகிளி விளைதினைக் கடீஇயர்**

**செல்கென் றோளே அன்னை** (குறுந். 141)

என்றும்,

**தினைப்புன மருங்கிற் படுகிளி ஓப்பியும்** (குறுந். 346)

என்றும், மகளிர் கடலாடுதலை

**கழிய காவி குற்றுங் கடல**

**வெண்டலைப் புணரி யாடியும்** (குறுந். 144 : 1–2)

என்றும், அருவியில் நீராடுதலை

**பூசலாயம் புகன்று இழி யருவி** (குறுந். 367 : 5)

என்றும் சங்க இலக்கிய அடிகள் சுட்டும்.

### பெண்ணின் அச்சம் மடம் நாணம்

பெண் காதல் வாழ்வில் அச்சம், மடம், நாணம் மிக்கவளாகச் சொல்லப்படுகிறாள். திருமணம் ஆன கற்பு வாழ்வில் அச்சம், மடம், நாணம் நிறைந்தவளாகவும், இல்லற உரிமை மிக்கவளாகவும் மனையற ஒழுக்கத்தில் சிறந்தவளாகவும் காட்டப் பெறுகிறாள்.

### மடல் ஏறுதல்

மடல் ஏறுதல் என்றால், தலைவன் தான் விரும்பும் பெண்ணை அவள் பெற்றோர் தர மறுப்பின் பனங் கருக்கால் செய்யப் பெற்ற குதிரை மீது ஊர்ந்து உடல் கிழியக் குருதி சிந்தி, தன் வேட்கையை வெளிப்படுத்துவது ஆகும். பெண் மடல் ஏறக்கூடாது என்பது தொல்காப்பிய விதி.

**எத்திணை மருங்கினும் மகடூஉ மடல்மேல்**

**பொற்புடை நெறிமை இன்மையான.** (அகத் – 38)

**கடலன்ன காமம் உழந்தும் மடல்ஏறாப்**

**பெண்ணிற் பெருந்தக்கது இல்.** (குறள் 1137)

கைக்கிளை முதல் பெருந்திணை வரையுள்ள ஏழு திணைகளிலும் தலைவி மடல் ஏறினாள் எனக் கூறும் நிலை இல்லை.

### கற்பு எனும் திண்மை

கற்பு என்று கூறப் பெறுவது, திருமணச் சடங்குகளுடன் ஆடவனுடன் உரிய பெண்ணுக்கு ஒருவர் கொடுக்க மற்றவர் கொள்வதாகும். களவு நிகழ்ந்து, கற்பு மணம் நிகழ்தல் உண்டு. களவு நிகழாமல் பெற்றோர்வழிக் கற்பு மணம் நிகழ்தலும் உண்டு. பழங்காலத்தில் பெண்ணுக்குப் பெருமை சேர்த்ததே கற்பு என்ற திண்மைதான். சான்றுகள் வருமாறு:

**கற்பெனப் படுவது கரணமொடு புணர**

**கொளற்கு உரிமரபின் கிழவன் கிழத்தியைக்**

**கொடைக்கு உரி மரபினோர் கொடுப்பக்**

**கொள்வதுவே.**

(தொல்–கற்பு 1)

கற்பு, செயிர்தீர் கற்பின் சேயிழை (புறம் 3:6) என்றும், கற்புடைய மடந்தை (புறம் 384:14) என்றும், கடவுள் சான்ற கற்பின் சேயிழை (புறம் 198:3) என்றும் சங்க இலக்கியங்களில் பயின்று வந்துள்ளது.

**................பணைத்தோள்**

**விளங்குநகர் அடங்கிய கற்பின்**

**நலங்கேழ் அரிவை புலம்பு.** (குறுந். 338)

## கணவனே உயிர்

இல்வாழ்க்கைக்கு உரிய பெண்ணுக்குத் தன் கணவனே உயிர் போன்றவள் எனக் கருதப் பெற்றது. கணவனைத் தாயாகவும் தந்தையாகவும் போற்றியவள் பெண் என்பதை,

**இன்னுயிர் கழியினும் உரைய லவர்நமக்கு**

**அன்னையும் அத்தனும் அல்லரோ**

**புலவியஃதெவனோ அன்பிலங் கடையே.** (குறுந். 93)

என்று சுட்டுகிறார் அள்ளூர் நன்முல்லையார் என்ற பெண் கவிஞர். கணவனை மறுமையிலும் அடைய விரும்பினாள் ஒரு பெண்.

**இம்மைமாறி மறுமையாயினும்**

**நீயா கியரென் கணவனை**

**யானா கியர்நின் நெஞ்சுநேர் பவளே.**

(குறுந். 49)

கணவன் என்ற பெயரீடும் வழங்குகிறது. ஒடுங்கீரோதிக் கொடுங்குழை கணவ (ப. பத்து 14), மங்கையர் கணவ (தி. முருகு. 264) மலர்போன் மழைக்கண் மங்கையர் கணவன் (மலைபடு. 58)

## மாப்பிள்ளை வீட்டார் கொடை வழங்குதல்

பெண்ணுக்கும் ஆணுக்கும் நிகழும் மண நிகழ்வின் போது தாய்க்கூலி (முலைக்கூலி) எனும் நிகழ்வு நடந்துள்ளது. பெண்ணை மணங்கொள்ளும் தலைமகனின் பெற்றோர், பெண்ணைப் பெற்றுப் பாலூட்டி வளர்த்த தாய்க்கு அன்பளிப்பு நல்குவர். இவ்வன்பளிப்பே தாய்க்கூலி என்று அழைக்கப் பெற்றது.

நறுநுதல் அரிவைக்குப் பாசிழை விலையாக நியமம் எனும் ஊரையே கொடுப்பினும் கொள்வார் அல்லர் (மருதனிள நாகனார் – அகம் 90). மணம் பேச வரும் மாப்பிள்ளையை மணமகளுக்குப் பிடிக்கவில்லை என்றால் மாப்பிள்ளை வீட்டார் கொண்டு வந்ததை ஏற்க மறுத்து, மகளைக் கொடுக்க மறுத்தலும் உண்டு (புறம் 343).

## விருந்தோம்பல்

விருந்து புறந் தருதலும் தம் சுற்றத்தினருக்கு வேண்டுவன அளித்தலும் பெண்ணின் கடமைகள். இரவு நேரமாயினும் விருந்து வரின் மகிழுபவள் பெண்.

**அல்லிலாயினும் விருந்து வரின் உவக்கும்**

**முல்லை சான்ற கற்பின் மெல்லியல் குறுமகள்**

(நற். 142)

பண்டைத் தமிழ்ப் பெண்கள் இரவில் வாயிலை அடைப்பதற்குமுன் புதிய விருந்தினர் வந்துள்ளார்களா என்று ஆராய்ந்து அறிந்து வாயிலை அடைக்கும் பழக்கம் உடையவர் (குறுந். 118).

## பரத்தமை கண்டிக்கப் பெறல்

தலைவனின் பரத்தையர் ஒழுக்கம் கண்டிக்கப் பெற்றது. தனிமனித வாழ்விலும் அரசர் வாழ்விலும் கண்டிக்கப் பெற்றது. தன் மனைவி கண்ணகியைப் பிரிந்து பரத்தை வாழ்வு வாழ்ந்த பேகனைப் புலவர் பெருமக்கள் கபிலர், பரணர், அரிசில்கிழார், பெருங்குன்றூர் கிழார் ஆகியோர் இழித்தும் பழித்தும் பேசியதாகச் சான்றுகள் உள்ளன (புறம் 143, 144, 145, 146).

## மறுமணம் இல்லை

மறுமணம் என்ற பேச்சுக்கே சங்ககாலத்தில் இடம் இல்லை. மனைவியை இழந்த கணவன் பிற்காலத்தைப் போல் அக்காலத்தில் பிறிதொரு பெண்ணை மணம் முடிக்காமல் இருந்த நிலை (புறம் 251, 252) இடம் பெற்றுள்ளது. அதேபோல் கணவனை இழந்த பெண்ணும் மறுமணம் முடித்தலுக்கான சான்றுகள் இல்லை. கணவனை இழந்த தாபதநிலைப் பாடல்களைப் பாடிய தாயங்கண்ணியார், மாறோக்கத்து நப்பசலையார், பூதப்பாண்டியன் மனைவி பெருங்கோப் பெண்டு வியக்கப் பெற்றனர்.

## பெண்டிரின் பங்கே மிகுதி

அகஇலக்கியத்தில் தலைவி, தோழி, நற்றாய், செவிலி, பாடினி, பரத்தை எனப் பெண்டிரே பெரும் பங்கு பெற்றுள்ளனர். தலைவி கூற்றும், தோழி கூற்றும் நிரம்பி உள்ளன. தலைவன், பாங்கன் கூற்றுகளில் தலைவன் கூற்றுப் பாடல்களே மிகுதி. தந்தை, அண்ணன், ஏனைய உறவினர் பற்றிய விரிவான செய்திகள் இடம் பெறுவதில்லை.

## பெண் போற்றிக் காக்கப் பெற்றனள்

பெண்டிர் போற்றப் பெற்றனர். போரில் அழிக்கப் பெறாமல் காப்பாற்றப் பெற்றனர். பசு, பெண்டிர், பிணி உடையவர், தென்புல வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும் புதல்வர் பெறாத ஆண் பெண் இருவருக்கும் போரில் விலக்கு அளிக்கப் பெற்றது (புறம் 9).

**ஆவும் ஆனியல் பார்ப்பன மாக்களும்**

**பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்**

தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்

பொன்போற் புதல்வர்ப் பெறாஅதீரும்

எம்மம்பு கடிவிடுதும் நும்மரண் சேர்மினென

அறத்தாறு நுவலும் பூட்கை மறத்திற்

கொல்களிற்று மீமிசைக் கொடிவிசும்பு நிழற்றும்

எம்கோ வாழிய குடுமி தம்கோ (புறம் 9)

குழந்தை பெற்றுத் தரப் பெண் தேவைப்படுகிறாள். பசுவின் தேவையை ஒரு பெண்ணால்தான் உணர முடியும். பிணியுடையோரைக் கவனித்தலும் பெண்ணால்தான் இயலும். எனவே பெண்ணின் இன்றியமையாமை உணர்த்தப் பெற்றது.

### பெண் கல்வி

அரசனுக்கு ஆலோசனைகளையும் வழங்கியவள் பெண் என்பதற்கு அவ்வையார் அதியமானுக்காகத் தூது சென்றதும் அரசியலில் ஈடுபட்டதும் சான்றுகள். நாற்பத்தைந்து பெண் புலவர்கள், அரசப் பெண் கவிஞர்களான ஆதிமந்தியார், பாரிமகளிர், பெருங்கோப் பெண்டு வாழ்ந்து கவிதை படைத்தனர். ஔவையார், வெள்ளிவீதியார், வெண்ணிக் குயத்தியார், குறமகள் குறிஎயினி, பொன்முடியார், நக்கண்ணையார், ஒக்கூர் மாசாத்தியார் முதலாய பெண் புலவர்கள் கல்வி கற்றுக் கவிதைகள் பாடினர்.

### பெண்ணின் கலை அறிவு

கலைகளுக்காக அர்ப்பணித்த கூத்தர், பாடினி விறலியர் இசைக்காக வாழ்ந்தனர். நெடும்பல்லியத்தை என்ற பெண் புலவர் பல்லியம் என்ற இசைக் கருவியை இசைக்கும் குடும்பத்தைச் சேர்ந்த பெண் ஆவர்.

### தாய்வழி மரபு

பண்டைத் தமிழரிடம் தாய்வழி மரபே இருந்துவந்தது என்பதைக் காக்கைபாடினியார் நச்செள்ளையார் எழுதிய பதிற்றுப்பத்தின் வழி அறியலாம். ஆன்றோள் கணவ (ப. பத்து 55 : 1) தேவி ஈன்ற மகன் (ப. பத்து 60) இவை சான்றுகள். காக்கைபாடினியாரால் பாடப் பெற்ற அரசன் சேர நாட்டு ஆடுகோட்பாட்டுச் சேரலாதன், பெண்ணுக்கு முதன்மை தரும் சேர நாட்டில் பெண் போற்றப் பெற்றமைக்குச் சான்று ஆன்றோள் கணவ என்ற அடியால் உறுதியாகிறது.

### பெண்ணிற்கு முதன்மை

சங்ககாலத்திற்கு அடுத்த நிலையில் திருக்குறளில் பெண்ணியல் உயர்வாக இருந்தது. பெண்டிருக்குச் சமன்மையும் முதன்மையும் இருந்தன. பெண்டிரை முன்நிறுத்தாத சைன சமயத் தத்துவம் பரவிய காலத்தில் பெண் பிறப்பு இழிபிறப்பு என்று பேசப் பெற்ற காலத்தில் மறுதலையாகப் பெண்ணின் பெருந்தக்க யாவுள (குறள் 54) என வள்ளுவரால் பேசப் பெற்றது. பெண்டிரை முன்னிறுத்தி வாழ்க்கைத் துணைநலம், காமத்துப்பால் என்ற தனிப்பாலையும் வகுத்ததோடு, பெண்கள் தொடர்பான கருத்துகள் வரைவின் மகளிர், பெண் வழிச்சேறல், கற்புடை மகளிர் மழை பெய்விப்பர் (55), பெண் தெய்வம் 1081, 1082, பெண்டிரால் பெண்மை உடைத்து (1280), மகளிர் பற்றிய செய்திகள் (147, 150, 1258, 54, 56, 402, 906, 907, 909, 910, 1083, 1084, 1137, 1272, 1311, 137, 913, 822, 918, 1007 போன்ற குறள்களில் எல்லாப் பெண்களும் சுட்டிச் சொல்லப் பெறுகின்றனர். பெண்ணின் இல்லற நிலை, கற்பு நிலை சிறப்பாக விளக்கம் பெறுகின்றன.

தாய் பட்டினியால் வாடாமல் காப்பது மகன் கடமை, மகன் சான்றோனாக இருத்தல், மகன் வறுமையுற்றால் தாயால் பொறுத்துக் கொள்ள இயலாது. இவை வள்ளுவர்காலப் பெண்டிர் நிலை. பெண் துறவி பற்றிய செய்தி, விதவை பற்றிய செய்தி, மறுமணம், பலதார மணம் பற்றிய செய்தி வள்ளுவர் காலத்தில் பேசப் பெறவில்லை. வரைவின் மகளிரை வள்ளுவர் பழிக்கிறார். பரத்தையர் உறவும், மது அருந்துதலும், சூதாடுதலும் கண்டிக்கப் பெற்றன.

### தமிழகப் பெண்ணியல் - இன்று காதல் உரிமை

சாதி என்பது பிறப்பால் தீர்மானிக்கப்படுகிறது. மதம் என்பது பிறப்பாலும் வளர்ப்பாலும் தீர்மானிக்கப் பெறுகிறது. ஆகச் சாதி, மதம் என்பன மக்களின் நிலையைப் பிரித்துவிட்டன. இவற்றின் விளைவாகச் சாதிக்குள்ளேதான் திருமணம் முடிக்க வேண்டும், மதத்திற்குள்ளேதான் திருமணம் முடிக்க வேண்டும் என்ற இரண்டும் நூற்றாண்டுகளாகக் கெட்டியாகி விட்டன. எனவே பெண் தனக்குரிய கணவனைத் தாமே தேர்ந்தெடுத்துக் காதலிக்க முடியாது. மணம் முடிக்க முடியாது. அப்படி நிகழ்ந்தால் அது சாதிக் கட்டுமானத்தை மீறிய மரபு மீறலாகவே கருதப் பெறுகிறது. சாதி விட்டுச் சாதி என்பதோடு மட்டுமல்லாமல் ஒரு சாதிக்குள்ளேயே பிறந்த பெண்ணும் ஆணும் காதலிக்கும் உரிமை முற்றுமாக மறுக்கப்பட்டிருக்கிறது. சாதியின் அளவுக்கு மதப்பிடிப்பு அத்துணை இல்லை. எனினும் மதத்திற்குரிய ஆளுமை தொடரவே செய்கிறது.

### பெற்றோர் வழி ஏற்பாட்டு மணங்கள்

காதல் திருமணங்கள் பொதுவாகக் குறைவு. குடும்பத்தினரோ, சமூகத்தினரோ ஏற்றுக் கொள்வதில்லை. எனவே, பெற்றோர் வழித் திருமணங்களே மிகுதியாக உள்ளன. பண்டைய காலம் போல உடன்போக்குச் சென்றோரைக் குடும்பமும்

சமூகமும் இயல்பாக ஏற்றுக் கொள்வதில்லை. ஓடிப் போனவள் என்ற அவமுத்திரை அந்தப் பெண்ணுக்கு மரணம் வரை தொடர்கிறது. அவள் மரணத்திற்குப் பின்னும் அவளுடைய மக்கள்வழிப் ஓடிப் போனவளின் மக்கள் என்ற முத்திரை தொடர்கிறது.

காதல் மறுக்கப்படுவதால், கணவன் இறந்தபின் கணவனை இழந்தோர்க்குக் காட்டுவது இல் என்று தானே மாய்வதும் மிகமிக அருகிவிட்டன. விதவையாகவே தொடர்வதும் விதவை மறுமணமும் தடையின்றித் தொடர்கின்றன. மறுமணம் சட்டப்படி ஒப்புதல் அளிக்கப் பெறுகின்றது. சமூக ஒப்புதலும் இயல்பாகி விட்டது.

காதல் திருமணத் தோல்வியும் பெற்றோர் ஏற்பாட்டுத் திருமணத் தோல்வியும் மணவிலக்கில் முடிகின்றன. மணவிலக்கும் இயல்பாகி விட்டது. சட்டப்படி ஏற்றுக் கொள்ளப் பெறுகிறது. மணவிலக்குப் பெற்றோர் சட்டப்படி மறுமணம் செய்வதும் இயல்பாகிவிட்டது.

அண்மைக் காலமாக அமெரிக்கத் திரைப்படங்கள், தொலைக்காட்சி நிகழ்வுகள் அமெரிக்காவில் நிகழ்ந்து வரும் ஆண் பெண் தனித்து வாழும் சுதந்திர முறையைப் பரப்பி வருகின்றன. ஆங்கில மொழிவழிக் கல்வியும் அம் மொழிவழிக் கல்வியால் வரும் இறக்குமதிச் செய்தியும் பெண் வாழ்வில் பெரிய அளவு பாதிப்பை ஏற்படுத்தி வருகின்றன. விளைவாகத் திருமணம் செய்து கொள்ளாமலே தனித்து வாழ்வதும் அவ்வப்போது விரும்பும் ஆணுடன் விரும்பும்வரை வாழ்ந்து விட்டு விடுவதும் படித்த தமிழ்ப் பெண்களிடையே மெல்ல அறிமுகம் ஆகி வருகின்றது.

## குழந்தையைப் பெறுதல், வளர்த்தல், ஆளாக்குதல்

பழைய தமிழகத்தில் மேற்கண்ட பொறுப்புகள் மிகுதியாகத் தாயிடமும் ஓர் அளவினதாகத் தந்தையிடமும் இருந்தன. தற்போது இந்நிலை மாறிவிட்டது. மூன்று வயதிலேயே குழந்தைகளை மழலையர் பள்ளிக்கு அனுப்புதல், பெற்ற பிள்ளைகளைத் தொலைதூரத்தில் உள்ள உறைவிடப் பள்ளிகளில் தங்க வைத்துப் படிக்க வைத்தல் முதலாய நவீனப் பழக்கங்கள் பெண்ணிடமிருந்து பெற்ற பிள்ளைகளை அந்நியப்படுத்தி வருகின்றன.

### பெண் கல்வி

முன் எக்காலத்தையும் விடப் பெண் கல்வி தற்போது மிகப் பெரிய அளவில் பெருகியுள்ளது. தனியே பெண்களுக்கென்று பள்ளிகள், கல்லூரிகள், பல்கலைக் கழகங்கள் உருவாகிவிட்டன. தொழில்நுட்பக் கல்லூரி எனப் பெறும் பொறியியல் கல்லூரிகள், வேளாண் கல்லூரிகள், கால்நடை அறிவியல் கல்லூரிகள், வனத்துறைக் கல்லூரிகள் முதலானவற்றிலும் பெண்கள் சமபங்கு படிக்கத் தொடங்கிவிட்டனர்.

## பெண்கள் வேலைக்குச் செல்லுதல்

கற்ற கல்வியின் விளைவாகப் பெண்கள் ஊர்களிலும், அயலூர்களிலும், அயல் மாநிலங்களிலும், அயல் நாடுகளிலும் கூட மிகுந்த ஊதியம் தரும் வேலைகளுக்குச் செல்லத் தொடங்கிவிட்டனர். மேசை சார் வேலை மட்டுமன்றிக் கார் ஓட்டுதல், விமானம் ஓட்டுதல், தொழிற்சாலையை நிருவகித்தல் போன்ற வேலைகளிலும் பெண்கள் அமரத் தொடங்கிவிட்டனர்.

## தற்சார்புப் பொருளாதாரம்

குடும்பத்தை விட்டுத் தனியாகத் தொலைவில் வேலை செய்யும் துணிவும் அதற்காகத் தனி ஊதியம் பெறும் வாய்ப்பும் பெண்களுக்கு வந்துவிட்டன. இதன்வழித் தமக்குத்தாமே தம் பொருளாதாரத்தை அமைத்துக் கொள்ளும் சம நிலையைப் பெண்கள், குறிப்பாகக் கற்ற பெண்கள் அடையத் தொடங்கி விட்டனர்.

நிறைவாக இன்று பெண்களை அச்சுறுத்தி வருவன என்று பின்வருவனவற்றைப் பட்டியல் இடலாம்:

1. சுதந்தரமாகப் பெண் பருவம் எய்திய பிறகும் வெளியே செல்லச் சமூக ஒப்புதல் முழுமையாகக் கிடைத்திருப்பினும் அவளுக்கும் அவள் பெண்மைக்கும் நம்பிக்கையான பாதுகாப்பு இல்லை.

2. இதன் விளைவாக அவள் திருமணம் குடும்பம் என்ற நிறுவனங்களுக்குள் நிழல் காண விரும்பினும், திருமணத்திற்காக முன்மொழியப் பெறும் வரதட்சணை பணமும், நகைகளும் பொருள்களும், சொத்துகளும் அவளுக்குப் பேரச்சத்தைப் மூட்டிவிடுகின்றன. இதனால் அவள் மட்டுமன்றி அவள் பெற்றோரும் பெண்ணைப் பெற்றதைச் சுமையாகவும் கவலையாகவும் கருதி வாழவேண்டி இருக்கிறது.

3. பெண் அடைந்துள்ள கல்வி முன்னேற்றம் அதனையொட்டி அவளுக்குக் கிடைக்கும் வேலை வாய்ப்பு, அதனால் கிடைக்கும் ஊதியம் முதலாயின இன்னும் பெண்ணை முழுத் தன்னம்பிக்கை உடையவளாக ஆக்கிவிடவில்லை. சார்ந்து வாழும் நிலையில் இருந்து இன்னும் அவளுக்குக் கவுரவமான முழு சுதந்திரம் கிடைக்கவில்லை. அவளது வேலைச் சுமைகளைப் புதிய புதிய ஊதியம் ஈட்டும் பொறுப்பு பல மடங்கு அடிமையாக்கிவிட்டது. முன்பு வீட்டில் மனைக் கிழத்தியாக இருந்து கணவனையும், குழந்தையையும், தன்னையும் பேணிக் கொண்டிருந்த அவளுக்குத் தற்போது முன்னைய பொறுப்புகளின் மேல் அலுவலகப் பணி செய்தல், அதற்காக நாளும் பயணப்படுதல், இல்லம் திரும்பி எல்லோருக்கும் சமைத்தல், வீட்டைப் பேணுதல் ஆகியவை மூச்சுவிடவும் முடியாதபடி அழுத்துகின்றன.

❖

# புதுக்கவிதை நோக்கும் போக்கும்



முனைவர் பத்மாவதி விவேகானந்தன்

தமிழில் கவிதை என்பது இரண்டாயிரம் ஆண்டுக்காலப் பழைமையுடையது, ஆயினும் புதுக்கவிதை என்னும் இலக்கியம் மேலைநாட்டுத் தாக்கத்தின் காரணமாகத் தமிழில் வேர்விட்டு வளர்ந்து நின்று கொண்டிருக்கின்றது.

**சமூக வரலாற்றை ஒட்டியே கவிதை வரலாறு உருவாகிறது**

என்னும் கூற்றில் நம்பிக்கையுடைய அமெரிக்கக் கவிஞர் வால்ட்விட்மனின் புல்லின் இதழ்கள் என்னும் தொகுப்பு, உலகெங்கிலும் கவிதையுலகில் பெரும் புரட்சியைச் செய்தது.

**"தோழனே இது ஒரு புத்தகம் அல்ல**
**இதைத் தொடுபவன் ஒரு மனிதனைத் தொடுகிறான்"**

என்று பாடிய விட்மன்,

"உள்ளடக்கத்தை ஒட்டியே வடிவம் உருவாவதையும், பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதி நெருங்குகிற நேரத்தில்.... மக்களுடைய தேசிய உணர்வின் எழுச்சியும், புரட்சிகளும்... உள்நாட்டுப் போரும் புதிய கவிதை வடிவங்களைத் தவிர்க்க முடியாததாக்கி விட்டன" என்றார். அமெரிக்க மக்களுக்கு ஜனநாயகத்தின் மீதான நம்பிக்கையை ஏற்படுத்துவதும் விட்மனின் நோக்கங்களில் ஒன்றாக இருந்தது. விட்மன் தன்னைச் சமத்துவத்தின் கவிஞனாகவும், எதார்த்தத்தின் கவிஞனாகவும் கூறிக் கொண்டார். விட்மனின் கட்டற்ற கவிதைப்போக்கு ஐரோப்பாவெங்கிலும் பரவியது. பிரான்சில் விடுநிலைப்பா என அழைக்கப் பெற்று, ரசியா, கிழக்கு ஜெர்மனி போன்ற நாடுகளைச் சேர்ந்த மயாகாவ்ஸ்கி, பெர்டோல்ட் பிரக்ட் போன்ற

கவிஞர்களால் புதிய கவிதை (New verse) என்றும் வழங்கப் பெற்று, உலகெங்கிலும் உள்ளடக்கத்திலும், உருவத்திலும் பெரும் மாற்றங்களை ஏற்படுத்தியது.

ஆங்கிலத்தில் New poetry, Modern poetry என்பதே தமிழில் புதுக்கவிதை என வழங்கப்படுகிறது. தொடக்கத்தில் வசன கவிதை, யாப்பில்லாக் கவிதை, இலகு கவிதை, கட்டிலடங்காக் கவிதை என்றெல்லாம் அழைக்கப்பட்டு, தற்போது புதுக்கவிதை என்றே வழங்கப்படுகிறது.

**சுவை புதிது**
**பொருள் புதிது**
**வளம் புதிது**
**சொற் புதிது**
**சோதிமிக்க**
**நவகவிதை**

என்று பாடிய பாரதியே வசன கவிதை முயற்சியில் முதன்முதல் ஈடுபட்டவராவார். பாரதிக்கு அமெரிக்க முன்னோடியான விட்மனைப் பற்றியும், அவரது குடியாட்சி, குடிமக்கள் அதிகாரம் போன்ற கொள்கைகளைப் பற்றியும் தெரிந்திருந்தது. இந்தியாவின் அடிமை நிலை, சமத்துவம், மக்கள் ஒற்றுமை, பெண்ணடிமை, வறுமை எனச் சமூகக் கேடுகளுக்கெதிரான குரலாகப் பாரதியின் குரல் ஒலித்தது.

பாரதிக்குப் பின்னர் ந. பிச்சமூர்த்தியும், கு.ப.ரா.வும் புதுக்கவிதை எழுதும் முயற்சிகளில் ஈடுபட்டனர். ந.பி., விட்மனின் புல்லின் இதழ்களும், பாரதியின் முன் முயற்சியுமே தனக்கு முன்னோடியாக அமைந்தது எனக் குறிப்பிட்டுள்ளார். ந.பி.யின் சமகாலத்தவரான கு.ப.ரா. பெண்ணின் அகச்சித்திரிப்புகளை உள்ளடக்கமாகக் கொண்டு பல கவிதைகளை எழுதினார். க.நா.சு. மயன் என்ற பெயரில் சூறாவளி இதழில் எழுதினார். அச்சமயம் புதுக்கவிதையை ஆதரித்தும் எதிர்த்தும் பெரும் விவாதங்கள் எழுந்தன. அக்காலத்துச் சிற்றிதழ்களான கிராம ஊழியனும், கலாமோகினியும், எழுத்தும் புதுக்கவிதை வளர்ச்சியில் முக்கியப் பங்காற்றின. புதுக்கவிதையின் காலக்கட்டத்தைப் பற்றிக் கூறவரும் கவிஞர் மீரா,

1930–40 வரையிலான காலத்தை முதற் கட்டம் என்றும் (மணிக்கொடியும், கலாமோகினியும் புதுக்கவிதைக்கு மேடை அமைத்த காலம்), 1960–70 வரையிலான காலத்தை இரண்டாவது கட்டம் என்றும் (எழுத்தும், நடையும் புதுக்கவிதைக்கு ஒத்திகை நடத்திய காலம்), எழுபதுக்குப் பிறகு மூன்றாவது கட்டம் என்றும் (கசடதபறவும், வானம்பாடியும் புதுக்கவிதையை அரங்கேற்றிய காலம்) பிரித்திருக்கிறார். யாப்பு மரபிலிருந்து விடுபட வேண்டும் என்பது 20ஆம் நூற்றாண்டுக் கவிஞர்கள் பெரும்பாலோரின் கருத்தாக இருந்தது. புதுக்கவிதையை விளக்க வந்த கவிஞர் மு.மேத்தா,

**"இலக்கணச் செங்கோல்**
**யாப்புச் சிம்மாசனம்**
**எதுகைப் பல்லக்கு**
**மோனைத் தேர்கள்**
**தனிமொழிச் சேனை**
**பண்டித பவனி**
**இவை எதுவுமில்லாத**
**கருத்துகள் தம்மைத் தாமே**
**ஆளக் கற்றுக் கொண்ட**
**புதிய மக்களாட்சி முறையே**
**புதுக்கவிதை"**

என்றார்.

முதற்கட்ட கவிஞர்கள் மணிக்கொடியிலும், கலாமோகினியிலும் எழுதினர். மணிக்கொடியில் எழுதியவர்களில் பாரதிதாசன், ந.பி., கு.ப.ரா., புதுமைப்பித்தன், சி.சு. செல்லப்பா முக்கியமானவர்கள். மணிக்கொடி, 'பாரதிக்குப்பின் பாரதிதாசனே மிகச் சிறந்த கவி' எனக் கொண்டாடியது. மணிக்கொடி எழுத்தாளரான தி.ஜ.ரா. 'பாரதிதாசன் ஜனநாயக உலகத்தின் கவி; உலகெங்கிலுமுள்ள நவயுகக் கவிஞர்களில் அவரும் ஒருவர்' எனப் பாராட்டினார். புதுமைப்பித்தனும், கு.ப.ரா.வும், பாரதிக்குப் பின்னர் பாரதிதாசனைப் பெரும் கவிஞனாகக் கண்டனர். பாரதிதாசன் கவிதையை அடுத்த தளத்திற்குக் கொண்டு சென்றதுடன், தமிழ், தமிழர் முன்னேற்றம், தமிழ்ப் பண்பாடு, பகுத்தறிவு, பெண் விடுதலை, பொதுவுடைமை, தொழிலாளர் முன்னேற்றம் போன்ற முக்கியமான சமுதாயப் பிரச்சினைகளைத் தமது கவிதைகளின் உள்ளடக்கமாகக் கொண்டார்.

**"உடலைக் கசக்கி உதிர்த்த வியர்வையின்**
**ஒவ்வொரு துளியிலும் கண்டேன்**
**இவ்வுல குழைப்பவர்க் குரியதென் பதையே"**

எனக் கொள்கை முழக்கம் செய்தார். 'புதியதோர் உலகம் செய்வோம்; கெட்ட போரிடும் உலகத்தை வேரோடு சாய்ப்போம்' என வீரத்துடன் பாடினார்.

பாரதி, பாரதிதாசனைப் போலவே சாதிய மேலாதிக்க நிலையைச் சாடியவர் புதுமைப்பித்தன். அவரது கவிதைகளின் அங்கதம் பெரும் பங்கு வகித்தது. மக்கள் வாழ்வியலும், சமுதாயமும் அவரது கவிதைகளின் உள்ளடக்கமாக விளங்கியது. 1959 ஜனவரியில் எழுத்து இதழ் வெளிவந்தபோது அதில் க.நா.சு., சி.சு. செல்லப்பா, தி.சொ. வேணுகோபாலன், டி.கே. துரைஸ்வாமி, பசுவய்யா, எஸ். வைத்தீஸ்வரன், ரா. மீனாட்சி, நா. காமராசன், தருமு சிவராமு, மா. இளையபெருமாள், சி. பழனிசாமி, சி. மணி போன்றோர் எழுதினர். புதுக்கவிதை தன்னை நிலைநிறுத்திக் கொண்ட காலமாக எழுத்து காலத்தைக் கூறலாம்.

**1920–30களில் மேல்நாட்டு புதுக்கவிதை ஒரு உந்துதல் ஃபிராய்டியம், மார்க்ஸியம் இரண்டிலிருந்தும் மனோதத்துவ, லோகாயுத தத்துவ ரீதியாகவும் ஏற்பட்டது**

என்று குறிப்பிடும் செல்லப்பா தமது இதழில் ஃபிராய்டிய உந்துதல் பெற்ற தனிமனிதப் போக்கை மையப்படுத்தும் கவிதைகளையே தொடர்ந்து வெளியிட்டார். மார்க்சீயமும் புதுக்கவிதை உள்ளடக்கத்துக்கு உந்துதல் தந்த சக்திகளில் ஒன்று என்று ஏற்றுக் கொள்ளும் ஆசிரியர், அந்தப் போக்கிற்கு எதிரான தத்துவ அடிப்படையையும் நடைமுறையையும் கொண்டு கவிதைகளுக்கே தம் இதழில் முன்னுரிமை அளித்தார். மேலும் எழுத்து கவிதைகளில் உள்ளடக்கம், வாழ்வின் பல்வேறு நிலைகளை நடுத்தர மக்களின் பார்வையிலேயே சித்திரிக்கப்பட்டிருந்தன.

**நவீன வாழ்வின் மதிப்பீடுகள், பழைய வாழ்வின் மதிப்பீடுகளுடன் முரண்படுகிறபோதும், புதிய சமுதாய அமைப்பின் நியதிகள் பழைய நியதிகளுடன் மோதும்போதும் உண்டாகிற மோதல், குழப்பம், சிக்கல், நெருக்கடி போன்றவையே எழுத்தில் வெளிவந்த புதுக்கவிதையின் உள்ளடக்கமாகும்"**

என பேரா. சு. அரங்கராசு தமது ஆய்வில் தெரிவித்துள்ளார்.

**அவநம்பிக்கையும், நம்பிக்கையும், சமுசயமும், கவலையும், உறுதியும், ஆசையும், ஆதங்கமும், இலட்சியமும், யதார்த்தமும், உண்மையும், போலியைக் கண்ட ஆத்திரமும் இவர்களின் குரலில் ஒலிக்கின்றன**

என்கிறார் சி.சு. செல்லப்பா. பேரா. நா. வானமாமலை தனது புதுக்கவிதை முற்போக்கும் பிற்போக்கும் எனும் நூலில் எழுத்து கவிதைகளின் உள்ளடக்கத்தை வாழ்க்கை, சாவு, இணை விழைச்சுத்தன்மை, நிராசை, தனிமனிதம், உணர்வுத்தாரை, கவிஞன் தொழில், எழுத்தாளன் தொழில் என எட்டு வகைகளாகப் பிரித்திருக்கிறார். தமிழவன் போன்ற திறனாய்வாளர்களும் ஏறத்தாழ இதே கருத்தைக் குறிப்பிட்டுள்ளனர்.

1968இல் வெளிவந்த நடை இதழில் எழுத்து இதழில் எழுதிய ஒரு சில கவிஞர்களும் ஞானக்கூத்தன், அசோகமித்திரன், நகுலன், கோ. ராஜாராம், ந. முத்துசாமி போன்றோரும் எழுதினர். சரஸ்வதி, தாமரை, சாந்தி போன்ற இதழ்களும் தீவிர இலக்கியச் சூழலில் செயலாற்றி வந்தன. 1970 அக்டோபரில் தொடங்கப்பட்ட கசடதபற இதழும் புதுக்கவிதையின் வளர்ச்சிக்குப் பெரும் பங்களிப்பினைச் செய்தது. கசடதபற இதழில் நகுலன், எஸ். வைத்தியலிங்கம், தருமு, ஞானக்கூத்தன், ஷண்முக சுப்பையா, ஆத்மாநாம், கலாப்ரியா, கல்யாண்ஜி, பாலகுமாரன், சுப்ரமண்ய ராஜு, நீலமணி போன்ற பலரும் எழுதினர். கசடதபற கவிதைகள் பெரும்பாலும் சமூக விமர்சனமாகவே அமைந்தன. அதே சமயம் இக்கவிதைகள் சமூக நிகழ்வுகளிலிருந்து தன்மை அந்நியப்படுத்திக் கொள்ளும் போக்கிலும் ஈடுபட்டன. பாரதிதாசன் மரபை நிராகரிக்கும் போக்கும் இருந்தது.

தமிழ்நாட்டில் 1920களில் தொடங்கி வளர்ந்த மக்கள் இயக்கமான திராவிட இயக்கங்களில் வரலாற்று ரீதியான ஆக்கக் கூறுகளைப் புறக்கணிப்பதன் மூலம் குறுகிய சாதி அணுகுமுறைகளுக்கு உள்ளானார்கள்.

1971 அக்டோபரில் வானம்பாடி இயக்கத்தினர் 'வானம்பாடி' இதழை வெளியிட்டனர்.

**" 'புதியதோர் உலகு செய்வோம்' என்ற அறைகூவலுக்கு செவிமடுத்தத் தமிழக மக்கள் ஆதிக்க சாதிய எதிர்ப்புடன் தமிழ்த் தேசிய இன விடுதலைக்கான போராட்டத்தையும் மேற்கொண்டனர். பெரியார் கருத்துகள் தமிழகம் முழுதும் பரவின. 1965இல் ஆடவர் எதிர்ப்பின் விளைவாக நடந்த இந்தி எதிர்ப்புப் போராட்டம் சாதி சாதியாக பிரிந்த தமிழர்களை ஓர் இனத்தினராக மாற்றியது. பாரதி, பாரதிதாசன் வழியே உயிர் பெற்ற தமிழ்ச் சிந்தனை அறுபதுகளின் இறுதியில் தி.மு.க.வை ஆட்சியில் அமர்த்தியது. வர்ணப் போராட்டத்துடன் வர்க்கப் போராட்டத்தை இணைத்தாக வேண்டிய வரலாற்று நிர்ப்பந்தத்தின் விளைவே வானம்பாடி இயக்கமாகும். தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தின் இலக்கிய விளைச்சலாக அறுவடையானதே இவ்வியக்கம். தமிழ்ச் சிந்தனை மார்க்சியச் சிந்தனையுடன் இரண்டறக் கலந்த போதே இவ்வியக்கம் தோன்றியது. தமிழ்ப் புத்துணர்வுக் கவிதையின் தொடர்ச்சியாகவும், வானம்பாடி இயக்கம் தோன்றியது குறிப்பிடத்தக்கது"**

என வானம்பாடி முன்னோடிகளில் ஒருவரான சு. அரங்கராசு (கவிஞர் அக்கினிபுத்திரன் தற்போது கனல்மைந்தன்) தமது ஆய்வு நூலில் திட்டவட்டமாகத் தெரிவித்திருக்கிறார்.

1971 முதல் இதழுக்கு அக்கினி புத்திரனும், முல்லை ஆதவனும் பொறுப்பேற்றிருந்தனர். வானம்பாடிகள் ஒன்றாகச் சேர்ந்து 9 மடல்களை வெளியிட்டனர். 10ஆவது மடலிலிருந்து சிற்பியும் புவியரசும் இதழைத் தமது பொறுப்பில் வெளியிடத் தொங்கினர். வானம்பாடி இதழில் ஞானி, சிற்பி, புவியரசு, இளமுருகு, அக்கினிபுத்திரன், ஜனசுந்தரம், தமிழன்பன், பொ. துரையரசன், மீரா, தமிழ்நாடன், நா. காமராசன், கை. திருநாவுக்கரசு, சக்திக்கனல், பாலா, அப்துல் ரகுமான், தேனரசன், இன்குலாப் எனப் பலரும் எழுதினர். இவர்களில் நா. காமராசனின் கறுப்பு மலர்கள் தொகுப்பு 1971இல் வெளியாயிற்று. பகுத்தறிவு, சோசலிசம்,

சமுதாயப் பிரச்னைகளை உள்ளடக்கமாகக் கொண்டு வெளியிடப்பட்ட நா.கா.வின் கறுப்பு மலர்கள் இலக்கிய வாசகர்களிடையே பெரும் வரவேற்பினைப் பெற்றது. விபச்சாரிகளும், அரவாணிகளும் நா.கா.வின் படைப்பில் இடம் பெற்றுச் சாகாவரம் பெற்றனர்.

இந்திய தேசியத்தை வென்றெடுக்க அந்நிய ஆதிக்கத்தை எதிர்த்ததுடன், சாதீயக் கொடுமைகளையும் எதிர்த்த பாரதியின் வழியைப் பின்பற்றுவதுடன், பாரதியின் வழியில் உள்ளடக்க ரீதியாக மேலும் பல கவிதைச் சாளரங்களைத் திறந்த பாரதிதாசனையும் பின்பற்றப் போவதாக முதல் இதழிலேயே பிரகடனம் செய்த வானம்பாடிகள் இறுதிவரை அப்போக்கிலிருந்து மாறவில்லை என்பது பாராட்டுக்குரியதாகும். சமூகத்தின் அன்றாடப் பிரச்சினைகளும், அரசியல் சமூகத்தின் அன்றாடப் பிரச்சினைகளும், அரசியல் போக்குகளும், பால், வர்ண, வர்க்க பேதங்களும், பெண் விடுதலையும் இவர்களின் உள்ளடக்கங்களாக வெளிப்பட்டன. வானம்பாடி கவிஞர்களில் பலரும் ஒன்றுக்கு மேற்பட்ட கவிதைத் தொகுதிகளை வெளியிட்டிருக்கின்றனர். சிற்பி, தமிழன்பன், இன்குலாப், அப்துல் ரகுமான், தமிழ்நாடன், புவியரசு போன்ற கவிஞர்களின் பல்வேறு கவிதைகள் இன்றளவும் உயிர்த் துடிப்புள்ள கவிதைகளாக மக்கள் செல்வாக்குடன் விளங்கி வருகின்றன.

சமுதாயத்தில் மக்களுக்கு எதிரான கொடுமைகளை விமர்சன ரீதியாக வெளியிட்டமையை வானம்பாடி கவிதைகளின் போக்காகக் கொள்ள முடியும். வானம்பாடி இயக்கக் கவிஞர்கள் உலகளாவிய பார்வையுடன் தற்காலச் சமூக அரசியல் போக்குகளையும் விமர்சித்தனர். வர்க்க ஒற்றுமையும் வர்க்கப் போராட்டமும்கூடக் கவிதைகளாயின.

**"வானத்தைக் கீறியே வைகறைகள் பறித்தெடுப்போம்!**
**நமது சிறகசைப்பால் ஞால நரம்பதிரும்**
**இமயப் பறவைகள் நாம்**
**எரிமலையின் உள்மனம் நாம்**
**அக்கினிக் காற்றிலே இதழ் விரிக்கும் அரும்புகள் நாம்!**
**திக்குகளின் புதல்வர்கள் தேசவரம்பற்றவர்கள்**
**நம்மைப் பார்த்து**
**விதியென்றும் வினையென்றும்**
**பயணத்தில் மிரட்டுகின்ற**
**சதிகளுக்குச் சஞ்சலப்பட மாட்டோம்"**

தமிழன்பனின் இந்தக் கவிதை வர்க்க ஒற்றுமையைக் குறிப்பதாகவும் வேறு பல செய்திகளை உள்ளடக்கியதாகவும் இருக்கிறது. சிற்பியின் சர்ப்ப யாகம் கவிதையின் இறுதியில்

**"... அதனால் நாங்கள் அழிக்கும்**
**யாகங்கள் தொடங்கினோம் கொடிய சர்ப்பயாகம்"**

என்று பாடியிருப்பதும் வர்க்கப் போராட்டத்தை முன்னிறுத்தித்தான் என்பதைப் புரிந்து கொள்ள முடியும். சக்திக்கனலின் 'ஒரு ரோடு ரோலரின் பவனி' கவிதையும் என்றோ ஒரு நாள் வரப்போகும் புரட்சியைக் குறியீடாகக் கொண்டிருப்பதைக் காணலாம். இந்த வகையில் ஏ. அரங்கநாதனின் 'சுதந்திரம்', அப்துல் ரகுமானின் 'திட்டங்கள்', ஞானியின் 'மேய்ந்த கதை', அக்கினிப் புத்திரனின் 'புதிய போர்வை', சிற்பியின் 'சிகரங்கள் பொடியாகும்', தமிழன்பனின் 'கடப்பை காந்தம்மா' போன்ற கவிதைகள் முக்கியமானவை. இன்னும் விரிந்த பார்வையில் வானம்பாடி கவிஞர்களின் கவிதைகளில் ஏராளமானவற்றை எடுத்துக்காட்ட இயலும். பழைமையென்னும் நிலத்தில் காலூன்றி கொண்டு புதுமை வானத்தின் நிகழ்வுகளை முழு மனத்துடன் வரவேற்றவர்களே வானம்பாடி கவிஞர்கள் ஆவர். அவர்கள் புதுக்கவிதையை ஜனநாயகப்படுத்தினார்கள். அவர்களின் புதுமையான உள்ளடக்கங்கள் தமிழ்ப் புதுக்கவிதை வரலாற்றில் பல புதிய பக்கங்களைத் திறந்து வைத்தன. அந்தப் போக்கு இன்று வரையிலும்கூடச் செல்வாக்குடன் திகழ்வதைக் காணமுடியும். அந்த வகையில் கவிஞர் பழமலய் கிராமத்து மக்களின் வாழ்க்கையைத் தமது கவிதைகளில் மையப்படுத்தி ஒரு புதிய பாணியைத் தோற்றுவித்தார்.

பொதுவுடைமை இயக்கத்தில் ஈடுபாடு கொண்ட பல முற்போக்குக் கொள்கையாளர்களும் புதுக்கவிதை எழுதியுள்ளனர். அவர்களில் ஜீவா, தொ.மு.சி. ரகுநாதன், செவ்வண்ணன், கே.சி.எஸ். அருணாசலம், இளவேனில், செவ்வியன், பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம், தமிழ் ஒளி, கந்தர்வன், தணிகைசெல்வன் போன்றோர் முக்கியமானவர்கள் ஆவர். அரசியல் மாற்றத்தின் மூலம் சமூகத்தில் ஏற்பட வேண்டிய சீர்திருத்தங்களைப் பற்றிப் பேசுவது இவர்களின் போக்காக இருந்தது.

**விடியல் கீதங்கள் பாடுகிறோம்**
**விலங்குகள் நொறுங்கட்டும் – கனவு**
**விலங்குகள் நொறுங்கட்டும்**
**வேர்வையின் மக்களே விழித்தெழுவீர்**
**வேள்விகள் தொடங்கட்டும் – ரத்த**
**வேள்விகள் தொடங்கட்டும்**

என்று இன்குலாப் நாளைய விடியலுக்கான புரட்சி கீதமிசைத்தார். இதுபோன்ற பாடல்களைப் பல்வேறு கவிஞர்களும் பாடியுள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது.

**நாளும் கிழமையும் நலிந்தோர்க்கில்லை**
**ஞாயிற்றுக்கிழமையும் பெண்களுக்கில்லை**

என வருந்துகிறார் கவிஞர் கந்தர்வன்.

வானம்பாடிகளின் தொடர்ச்சியாக இன்றைய இளம் தலைமுறையினர் பலரும் புதுக்கவிதைகள் எழுதி வருகின்றனர். சமூகச் சீர்திருத்தமும், எதிர்காலத் தமிழகத்தைப் பற்றிய கனவுகளும் இவர்களின் பாடுபொருளாக உள்ளன. இவர்களின் வெளியீட்டுத் தளங்களாகப் பல்வேறு இதழ்களும், சிற்றிதழ்களும் விளங்குகின்றன.

பிரம்மராஜன், அறிவுமணி, அறிவுமதி, பழனிபாரதி, நா. முத்துக்குமார், சுகுமாரன், இளையபாரதி, பச்சியப்பன், வசந்தகுமாரன், அமிர்தம் சூர்யா எனப் பலரும் புதுக்கவிதை எழுதி வருகின்றனர்.

தமிழ்ப் புதுக்கவிதையில் அதன் தொடக்கம் முதல் இன்றுவரை பலரும் பெண் பிரச்சினைகளை மையமாகக் கொண்டு எழுதி வருகிறன்றனர் என்றாலும் பெண்களின் பிரச்சினைகளை, வலிகளைப் பெண்களே பதிவு செய்வது என்பது அண்மைக் காலத்தில் பெண்ணியக் கவிதைகள் என்ற தனித்த மரபு தோன்றக் காரணமாக இருக்கிறது. பேரா. லீலாவதி கூறியது போல 'ஆண் பெண் இலக்கிய முயற்சிகளில் அடிப்படையான, நுண்ணிய வேறுபாடுகள் தவிர்க்க முடியாத கலையாகத் திறன்வழிப் பட்டக் கூறுகளாக அமைந்து விடுகின்றன.' பெண் எழுத்து என்று ஒன்று இருக்கிறது என்றால் பெண்மொழி என்ற ஒன்றும் இருந்துதானே ஆக வேண்டும். பெண் மொழி – கவிதை மொழி குறித்த தேடல் தமிழில் சற்றுக் குறைவாக இருந்த போதிலும் அதுகுறித்த விழிப்புணர்ச்சி பரவலாகி இருக்கிறது.

தமிழில் சங்ககாலம்முதல் இன்றுவரையிலும் பெண்கள் கவிதை எழுதி வருகின்றனர். வேத காலத்திலும் பெண்களில் சிறந்த கவிஞர்கள் இருந்திருக்கின்றனர். கடந்த இருபது ஆண்டுகளில் கவிதை எழுதும் பெண்களின் எண்ணிக்கை அதிகமாக இருக்கிறது. அதில் சிலர் மிகச் சிறந்த புதுக் கவிதைகளையும் படைத்திருக்கின்றனர் சுகந்தி சுப்பிரமணியம், சல்மா, மாலதி மைத்ரி, குட்டி ரேவதி, கனிமொழி, தமிழச்சி, வெண்ணிலா, இளம்பிறை, தேன்மொழி, தாமரை, லீனா மணிமேகலை, சுகிர்தராணி, அரங்க மல்லிகா, விஜயலட்சுமி போன்றோர் தரமான, செறிவான புதுக்கவிதைகளை எழுதியிருக்கின்றனர்.

**"பார்வையைச் சந்தித்தவுடன்**
**சரியாய் இருக்கும்**
**முந்தானையைக் கூட**
**இழுத்துவிட்டுக் கொள்ள வைக்காத**
**குழந்தைக்குப் பாலூட்டும்**
**விநாடிகளில்**
**தரைபிறந்து உள்நுழையும்**
**அரைப்பார்வை வீசாத..**
**ஆண்களுக்கு**
**நண்பர்கள் என்று பெயர்"**

என்று இலக்கணம் கூறுகிறார் கவிஞர் வெண்ணிலா. பெண்கள் மீது நிகழ்த்தப்படும் உடல் ரீதியான வன்முறைகளை ஒரு சிலர் பதிவு செய்திருக்கின்றனர்.

**"நடப்பதற்குக்**
**காலைத் தூக்கும் போதெல்லாம் கூட**
**உதைப்பதற்கோ என**
**ஒடுங்கியிருக்கிறேன்"**

என்றஞ்சுகிறது இளம்பிறையின் கவிதை. தன் மண் சார்ந்த மனிதர்களை ஓர் ஓவியம்போல் சொற்சித்திரமாய் தந்திருக்கும் தமிழச்சி, தன் ஆசைகளையும், ஏக்கங்களையும் கவிதைகளாய்த் தந்திருக்கிறார்.

**"எனதூர்**
**கரிசல் மண்ணில் மல்லாந்து**
**வட்டார மொழி சுழிக்க**
**வடிவங்களில்**
**முகம் தொலைந்து**
**நதிநீராய்**
**புரண்டோட வேணுமெனக்கு**
**இலக்கின்றி"**

எனத் தளைகளற்ற விடுதலையை வேண்டி நிற்கிறார் தமிழச்சி.

இன்றைய காலக்கட்டத்தில் அலுவலகம், வீடு ஆகிய இரண்டு நிலைகளிலும் வேலைப் பளுவை அதிகமாக அனுபவிக்கும் பெண்கள் நிலையைப் பலரும் கவிதைகளாகத் தந்திருக்கிறார்கள். வேலைக்குப் போகும் பெண்களில் முதிர்கன்னிகளாக நின்றுபோகும் பெண்களின் அவலத்தை சுகிர்தராணி படைப்பாக்கி இருக்கிறார். பொதுவாகக் குடும்ப நிறுவனத்தில் ஏற்படும் பல்வேறு பிரச்சினைகளையும் பெண் கவிஞர்களின் படைப்புகளில் காண முடிகிறது. ஆண் பெண் சமத்துவ சமுதாயத்தை உருவாக்குவதே பெண் கவிதையின் நோக்கம் எனலாம். ஒரு வகையில் பெண் கவிதைகளும் விடுதலைப் பாக்களே.

**"எமக்கு என்று**
**சொற்கள் இல்லை**
**மொழி எம்மை**
**இணைத்துக் கொள்வதுமில்லை**
**உமது கதைகளில்**
**யாம் இல்லை"**

என்று மொழியில் பெண்ணுக்கான இடம் வெறுமையாய் இருப்பதைக் கவிதையில் சுட்டிக் காட்டுகிறார் கவிஞர் கனிமொழி.

1990ஆம் ஆண்டிற்கு முன்னும் பின்னும் தலித் சமுதாயத்தில் ஏற்பட்ட விழிப்புணர்ச்சியின் காரணமாகத் தலித் இலக்கியம் எழுச்சியுடன் வெளிவரத் தொடங்கியது. நாவல் சிறுகதை போன்ற இலக்கியங்களைப் போலவே தலித் கவிதைகளும் ஆழமான உள்ளடக்கங்களுடன் வெளிப்படத் தொடங்கின. தலித் மக்கள் மீதான ஒடுக்குமுறைகள், வறுமை, பசி, எதிர்ப்புக் குணம், காவல் துறையினரின் வன்முறை, பெண்கள் அனுபவிக்கும் பாலுணர்வு வன்கொடுமைகள், தீண்டாமை வன்கொடுமை போன்ற பிரச்சினைகளை மையமாகக் கொண்டு கவிதைகளை எழுதினர். விழி.பா. இதயவேந்தன், அழகிய பெரியவன்,

மதிவண்ணன், ப்ரதீபா, ஜெயச்சந்திரன், மதியழகன், ரவிக்குமார், அன்பாதவன், சிவகாமி, இந்திரன், என்.டி. ராஜகுமார், தலித் சுப்பையா, தய். கந்தசாமி, யாக்கன், யாழன் ஆதி போன்றோர் தலித்திய கவிதை படைத்தவர்களில் முக்கியமானவர் ஆவர்.

**"இந்த வெற்று வாய்ப்புரட்சிக்காரன்**
**தாலிக்கட்டிக் கூட்டி வரப்போகும் நீயாவது**
**மூஞ்சியில் உமிழத் துணிவுள்ளவளாய் வா!**
**குறைந்தபட்சம் மூணுநாலு அபார்ஷன்களுடனாவது"**

என்னும் ம. மதிவண்ணனின் கவிதை பெரும் அதிர்ச்சியலைகளை ஏற்படுத்துகிறது.

**'சிவன் கோயில் கலசங்கள்**
**முகம் பார்க்கும் ஊர்க்குளத்தில்**
**பீத்துணி அலசலாம்,**
**... கழுவலாம்**
**நாங்கள் மட்டும்தான்**
**தண்ணிமொள்ளக் கூடாது"**

என்னும் கவிஞர் ரவிக்குமாரின் கவிதை வரிகள் தலித் மக்களின் மனவலியை வெளிப்படுத்துவதாக இருக்கின்றன. இந்திரனின் 'தோற்றவன் குரல்' கவிதை வாக்குரிமை என்னும் ஆயுதத்தின் மூலம் சமூகத்தை வெற்றி கொள்ள முடியும் என்ற நம்பிக்கையை ஏற்படுத்துகிறது.

**"சேரிகளுக்குக் கோவணம் கூட இல்லை**
**வெட்கம் கெட்டுப் பறக்கிறது தேசியக்கொடி"**

என்கிறது பாரதி வசந்தனின் கவிதை. கருத்தம்மாவின் கவிதை மகாத்மாவை நோக்கிக் கேள்விகளைத் தொடுக்கிறது.

**". . . பதிலேதுமில்லை யெனில்**
**யாருமிங்கே**
**தேசப்பிதா இல்லை"**

என்று முடிகிறது கவிதை. அபிமானியின் தாமிரபரணி ஆற்று நிகழ்வுக் குறித்த கவிதையும், அன்பாதவனின் 'இடியின் குரல்'.

**"நிறுவப்பட்ட எல்லாவற்றிக்கும் எதிராக**
**எழுகிறது எங்கள் எழுதுகோல்கள்**
**கடப்பாரைகளாய்"**

என தலித் கவிதை எழுதப்படுவதற்கான காரணங்களை முன்வைக்கிறது. யாக்களின் கவிதையொன்று,

**". . . பறிபோன உரிமைகளை வென்றெடுக்கும்**
**நீயே ஆயுதமாகு"**

என அறிவுறுத்துகிறது. தலித் கவிதைகள் அம்பேத்கரின் 'கற்பி, கலகம் செய், ஒன்று சேர்' என்னும் தாரக மந்திரத்தின் அடிநாதமாய் ஒலித்து வருகின்றன.

இன்றைய தமிழகத்தில் மட்டுமல்லாது உலகம் முழுவதுமே சுற்றுப்புறச் சூழல் மாசு காரணமாகப் பெரும் பிரச்சினைகளைக் கண்டு வருகின்றன. தொழிற்சாலைக் கழிவுகளும், சுகாதாரமின்மையும், கடல்கள் கழிவுநீர் குளங்களாக மாற்றப்பட்டு வரும் கொடுமையும், நிலம் – நீர் – காற்று என மூவகை இருப்புகளும் மாசடையப் பெரும் காரணங்களாக இருந்து வருகின்றன. அறிவியலின் நீண்ட ஆராய்ச்சியின் வெளிப்பாடான அணுசக்தியின் கொடிய பின்விளைவுகள் மனிதர்களைப் பெரும் அச்சத்திற்கு உள்ளாக்கியுள்ளன. சுற்றுப்புறம் குறித்த விழிப்பு நிலையை மக்களிடம் ஏற்படுத்த வேண்டும் என்ற நோக்கில் பல கவிஞர்கள் கவிதை படைத்துள்ளனர். கவிஞர் அறிவுமதியின் 'அணு திமிர் அடக்கு' என்ற கவிதைத் தொகுதியில் இடம் பெற்றுள்ள,

**"தொழில்கள் / துப்பும் / நச்சுக் / காற்று**
**பெருகும் / வறட்சி / விரியும் / பாலை**
**திணரும் / பருவம் / வாழ்க்கையை / மலர்த்து /**
**காடுகள் / வளர்த்து"**

என்னும் இந்தக் கவிதை இயற்கையைக் காப்பாற்ற வேண்டியதன் அவசியத்தை உணர்த்துகிறது.

**"ஆற்றின் தூய்மைதான் அதற்குள்ள கற்பு**
**அசுத்தம் கலவாமல் தடுப்பதே பொறுப்பு"**

என நீர்நிலைகளைத் தூய்மையாக வைத்துக் கொள்ள வேண்டியதன் அவசியத்தைச் சொல்கிறார் கவிஞர் அரிமதி தென்னகன்.

**"இப்போது / ஆதிக்க நாடுகளின் கழிவுகள் /**
**கப்பலேறிப் புதிய கரைகளுக்காக /**
**அலைகின்றன / . . . குப்பைத் தொட்டியாகிறது**
**மார்ஷல் தீவு / இனி மரணத்தீவு"**

என எச்சரிக்கிறார் கவிஞர் நீலமணி. இப்படி இயற்கையைப் பாதுகாப்பதன் இன்றியமையாமையைப் பற்றிப் பல்வேறு கவிஞர்களும் எழுதியிருக்கின்றனர்.

புதுக்கவிதை வரலாறு தொடங்கிய நாள் முதல் இன்று வரை சமுதாய மேம்பாடே அதன் நோக்கமாய் இருப்பதைக் காண முடிகிறது. கவிஞர் அப்துல் ரகுமான் கூறியதைப்போல, 'கவிதை மனித வாழ்க்கையைப் பற்றிப் பிரபஞ்சத்தைப் பற்றி, புது தரிசனங்களைத் தருவதாக இருக்க வேண்டும்.' புதுக்கவிதையின் நோக்கமும் போக்கும் இன்று வரையிலும் இப்படித்தான் இருந்து வருகிறது என்பது பெருமைக்குரியது.

❖

# சங்க இலக்கியங்களில் திணைசார் மக்கள்



முனைவர் வீ. ரேவதி

நமது பழந்தமிழ்ச் சமூக அமைப்பில் அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் எனும்படியான நான்கு வகை இனத்தாரைக் குறித்துக் காணமுடிகிறது. இவர்களே சமூக அமைப்பில் மேம்பட்டவர்களாக அறியப்படுகின்றனர். எயினர், பாணர், பறையர், வேளிர், ஆயர், வேட்டுவர் எனும் இவ்வின மக்கள் நம் பழந்தமிழ் இலக்கியங்களில் பரவலாகச் சுட்டப்படுகின்றனர். இவர்கள் சங்ககாலச் சமூக அமைப்பில் இனக்குழு மக்களாக வேட்டையாடியும், மேய்ச்சல் தொழில் செய்தும் 'புன்புலம்' எனும் புன்செய் நிலங்களில் வரகு, சாமை, தினை, கொள் போன்ற பயிர்களை விளைவித்துப் பிழைப்போராகவும் காட்டப்படுகின்றனர். இம்மக்கள் அக்காலச் சமூக அமைப்பில் சமூக மதிப்பு நிலை குறைந்தோராகவே காட்டப்படுகின்றனர். மேற்குறிப்பிட்ட இன மக்கள் குறித்து நம் தமிழ் இலக்கியங்கள் பின்வருமாறு விளக்குகின்றன: இவ்வினப் பிரிவுகள் கி.மு 5ஆம் நூற்றாண்டு முதல் கி.மு 2 ஆம் நூற்றாண்டு முடிய உள்ள காலப்பகுதிகளில் இருந்திருக்கின்றனர் எனத் தொல்லியல் அறிஞர் நடன காசிநாதன் குறிப்பிடுகின்றார்.

ஆயர், வேட்டுவர், பாணர், கூத்தர், பொருநர், விறலி என்போர் குறித்துத் தொல்காப்பியம் பின் வருமாறு குறிப்பிடுகிறது.

**ஆயர் வேட்டுவர் ஆடூஉத் திணைப்பெயர்**

**ஆவயின் வரூஉம் கிழவரும் உளரே.**

(தொல்-967)

**கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்**

**ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றி.**

(தொல்-பொருள்-1037)

## சங்க காலம்

பழந்தமிழ் இலக்கியங்களில் மேற்குறிப்பிட்ட இனத்தார் இன்றி வேறுபல இனத்தாரும் உண்டு. இவ்வின மக்கள் வாழும் இடத்தாலும், அவர்கள் செய்யும் தொழிலாலும் இவர்கள் அடையாளப்படுத்தப்பட்டுள்ளனரே அன்றிச் சாதியின் பெயரால் தீண்டாமை எனும் சேறு இவர்கள் மீது சங்க காலத்தில் படிந்திருக்கவில்லை.

**இழிபிறப் பாளன் கருங்கை சிவப்ப**

**வலிதுரந்து சிலைக்கும் வன்கண் கடுந்துடி.**

(புறம்-170, 5-6)

**துடியெறியும், புலைய**

**எறிகோல் கொள்ளும் இழிசின.**

(புறம்-287, 1-2)

எனும் புறநானூற்றுப் பாடல்கள், வருணாசிரம விதியை உணர்ந்தவாறு எழுதப்பட்டவை அல்ல என உறுதி கொள்ளலாம். அக்காலச் சமூகத்திலே அரசர், வணிகர், விவசாயம் செய்யும் நிலக்கிழார்கள் எனும் வேளாண் குடி மக்கள் போன்றோர் கொண்டிருந்த சமூக மதிப்பு நிலைகளும் கூடுதலானவையாகும். மேற்குறிப்பிட்ட மக்களோடு ஒப்பிடும்போது துடி இசைப்போர் நாடோடி வாழ்க்கை கொண்டு இயங்கிய பாணர் குடியினர். பிறப்பால், அவர்கள் கொண்டிருந்த வாழ்க்கை முறைகளால் குறைத்து மதிப்பிடப்படுபவர்களாகவே விளங்கினர். 'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்' (குறள்–972) என்னும் வள்ளுவர் வரி இங்கு மனங்கொள்ளத் தக்கதாகும்.

குறிஞ்சி நிலப் பகுதியில் குறவர், குன்றவர், வேட்டுவர் போன்ற இனத்தாரும் காடு சூழ்ந்த பகுதிகளான முல்லை நிலங்களில் ஆயர், ஆய்ச்சியர், வேளிர், பொறையன் போன்ற இனத்தாரும் மருத நிலப்பகுதிகளில் வேளாளர், வண்ணான், கம்மாளர், பறையர், குயவர், நெசவாளர் போன்ற இனத்தாரும் நெய்தல் நிலப்பகுதியில் பரதவர் போன்றவரும் பாலை நிலத்தில் எயினர், மறவர் போன்றோரும் வாழ்கின்றனர். இவர்களைத் தவிர அனைத்து நிலப்பகுதிகளிலும் இயங்குகின்ற பாணர், கூத்தர், வயிரியர், கண்ணுளர், துணங்கையர், கோடியர், விறலியர், பாடினி போன்ற கலைஞர் பெருமக்கள் குறித்தெல்லாம் சங்க இலக்கியங்களில் பரந்த நிலையில் பதிவுகளுக்கு ஆட்பட்டுள்ளன.

மேற் குறிப்பிட்ட மக்கள் அனைவரும் வாழும் வாழ்க்கை முறை என்பது நிலம் சார்ந்த முறை, அவர்கள் செய்கின்ற தொழில் சார்ந்த முறை எனும் நிலைகளில் இவர்களுக்கான பெயர்களும் அடையாளங்களும் பெறப்பட்டுள்ளன. பொருளாதாரம், உணவு முறை, சமூக மைய நீரோட்டத்தில் இருக்கும் நெருக்கமான உறவு முறை போன்ற பல்வேறு சமூகக் காரணிகளால் தொல்குடி மக்களாகவும், பழங்குடி மக்களாகவும், இனக் குழு மக்களாகவும் அறியப்பட்டவர்கள் பிற்கால வளர்ச்சியில் அரசியல், சமூகம், சமயம், நாடு பொருளாதாரம், நாகரிகம் போன்றவற்றால் சாதி அடையாளங்கள் பெற நேர்ந்துள்ளது.

### பாணர்

சேரி என்பது மக்கள் குடியிருக்கும் குடியிருப்புப் பகுதியைக் குறிப்பதாக அமைகிறது. பாணர் குடியைச் சார்ந்த ஒரு பிரிவினர் பெரும்பாண் சேரி என்று சொல்லத்தக்க குடியிருப்பில் தங்கி இருந்துள்ள குறிப்பினை மதுரைக்காஞ்சியில் காண்கிறோம்.

**பல்வேறு பூத்திரள் தண்டலை சுற்றி**
**அழுந்து பட்டிருந்த பெரும்பாண் இருக்கையும்.**

(மதுரைக்காஞ்சி 341-42)

பல்வேறு பூத்திரளையுடைய பூந்தோட்டங்கள் சூழ்ந்துள்ளன. அவற்றைச் சூழ்ந்து, நெடுங்காலமாய் அந் நிலப்பகுதியில் வாழும் பெரிய பாண்சாதியின் குடியிருப்புகள் உள்ளன. இப்பாணர்களுள் சில பிரிவினர் நிரந்தரமாக ஓர் இடத்தில் தங்கி வாழாது நாடுகள் தோறும் பயணப்பட்ட நாடோடி சமூகமாக விளங்கியுள்ளனர். மலைபடுகடாம் பாணர்கள் நன்னனைத் தேடி மலைப் பாதையில் சுற்றத்தாரோடு பயணப்பட்ட பதிவினைத் தருகிறது.

**துறைபல முற்றிய பைதீர் பாணரோடு**
**உயர்ந்து ஓங்கு பெருமலை ஊறுஇன்று ஏறலின்.**

(மலைபடுகடாம் 40-41)

இப்பாணர்கள்தாம் மன்னரின் திருவோலக்கத்தில் (பாணர் நாள் அவை., பதிற்றுப்பத்து 38,–9) பக்கமாக இருந்து பாடியுள்ளனர், போர்ப்பாசறையில் பாடிப் பரிசில்கள் பெற்றுள்ளனர்.

### எயினர்

எயினர் பற்றிய குறிப்புகளை நம் சங்கப் பாடல்கள் குறித்திருக்கின்றன. செல்வச் செழிப்புடன் இவ்வகை மக்கள் வாழவில்லை என நாம் அறியினும்,

**மான்தோல் பள்ளி மகவொடு முடங்கி**
**ஈன்பிணவு ஒழியப் போகி,நோன்காழ்**
**இரும்புதலை யாத்த திருந்து கணை விழுக்கோல்**
**உளிவாய்ச் சுரையின் மிளிர மிண்டி**

**இருநிலக் கரம்பைப் படுநீறு ஆடி**
**நுண்புல் அடக்கிய வெண்பல் எயிற்றியர்**

(பெரும்பாணாற்றுப்படை 89-94)

என்று பத்துப்பாட்டில் உள்ள பெரும்பாணாற்றுப்படை எயினர் இனமக்களின் வாழ்க்கை குறித்துப் பதிவு செய்துள்ளது. எயினர் இனத்துக் குடும்பத் தலைவி மகவு ஈன்ற நிலையில், மான் தோல் விரித்த படுக்கை விரிப்பில் தம் குழந்தையை அணைத்துப் படுத்திருக்கும் காட்சியைக் காண்கிறோம். எயினன் காட்டெறும்புகள் சேமித்து வைத்துள்ள அரிசியைக் கண்டறிந்து அவற்றைச் சேகரித்துக் கொண்டு வந்து சமைத்து உண்பதாக அவர்தம் வாழ்க்கை காட்டப்படுகிறது.

### குறவர்

**நறவுநாட் செய்த குறவர்தம் பெண்டிரொடு**
**மான்தோற் சிறுபறை கறங்கக் கல்லென**
**வான்தோய் மீமிசை அயரும் குரவை.**

(மலைபடுகடாம், 320-23)

குறவர், மான் தோல் போர்த்திப் பறையை முழக்கித் தம் பெண்டிரொடு மலை உச்சியிலே குரவைக் கூத்தாடுவர். குறவர்களும் பறை இசைக் கருவியைச் செய்து இசைத்துப் பாடி ஆடியுள்ளனர் எனும் செய்தி இங்குக் குறிப்பிடத் தகுந்தது.

### கோவலர்

**எருமை, நல்ஆன், கருநாகு பெறூஉம்**
**மடிவாய்க் கோவலர் குடிவயிற் சேப்பின்**
**இருங்கிளை ஞெண்டின் சிறுபார்ப்பு அன்ன**
**பசுந்தினை மூரல் பாலொடும் பெறுகுவிர்.**

(பெரும்பாணாற்றுப்படை 165-68)

ஆனிரைகளை மேய்க்கும் தொழில் கொண்ட இம் மக்கள் ஆனிரைகள் வழி கிடைக்கப்பெற்ற பால், நெய் போன்ற பொருள்களைப் பண்ட மாற்றம் செய்து பொன், மணிகளை விடுத்துப் பசுவையும் கன்றையும் விரும்பிப் பெற்று வந்து செல்வம் என வாழ்கின்றனர். விருந்தினர் செல்வாராயின் பாலுடன் கலந்த சோற்றினை வழங்கி மகிழும் விருந்தோம்பல் வாழ்க்கை கொண்டோர் எனக் காட்டப்படுகின்றனர்.

### பறையர்

ஒவ்வொரு நிலத்திற்கும் பறை இசைக் கருவியை இசைப்போர் பறையர் எனச் சுட்டப்பட்டுள்ளனர்.

**முல்லைக்கு – ஏறுகோட் பறை**
**குறிஞ்சிக்கு – தொண்டகப் பறை**
**மருதத்திற்கு – நெல்லரி கிணை**
**நெய்தற்கு – மீன் கோட் பறை**
**பாலைக்கு – சூறைகோட் பறை**

எனப் பறையை நிலத்தொடு பொருத்திக் காணும் பார்வை இருந்துள்ளது. போர்க் காலங்களில் போர்ப்பறை இசைக்கும் தொழிலை மன்னர்களோடு இயைந்து செய்துள்ள பதிவினை நம் பழந்தமிழ் இலக்கியங்களில் காண முடிகிறது. ஆக சங்க இலக்கியங்களுள் பிற இனத்தாரைப் போன்றே பறையர் இனத்தாரும் சமூக மதிப்பு நிலை பெற்று விளங்கியுள்ளனர். ஆரியர் வருகையும், பிற மொழி பேசக்கூடிய மக்களின் கலப்பும் விரவி இருந்தபோதிலும் சங்க காலச் சமூக அமைப்பில் இன்றைய பார்வையில் பார்க்கப்படும் சாதியப் பார்வை எங்கும் பதிவாகி இருக்கவில்லை. இனி சங்கம் மருவிய காலத்தில் விளங்கிய இலக்கியங்கள் வழிநின்று காண முற்படலாம்.

## சங்கம் மருவிய காலம்

சிலம்பும் மணிமேகலையும் ஆன இரு காப்பியங்களும் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களும் பறை பற்றியும், பறையர் பற்றியும் சரிவரக் குறிப்பிடவில்லை. சிலம்பில் மட்டும் பறை பற்றியும், பறையர் பற்றியுமான குறிப்புகள் இடம் பெறுகின்றன. சாதியின் பெயரால் தீண்டாமை பாராட்டப்படவில்லை எனும் கருத்திற்கு வந்து சேர முடிகிறது.

**பறைக்கட் பேய்மகள் பாணிக் காடப்**

**பிணஞ்சுமந் தொழுகிய நிணம்படு குருதியிற்**

(சிலம்பு, கால்கோட் காதை-208)

மேற்சுட்டிய சிலப்பதிகாரப் பாடலில் பறை இசைக் கருவி பிற இசைக் கருவிகளோடு இணைந்து வாசிக்கப்படுகிறது. இந்த இசைக் கருவிகளின் வாசிப்புக்கு ஏற்ப ஆட்டம் நிகழ்த்தப்படுகிறது. ஆக பறை இசைக் கருவி வாசிக்கக் கூடிய பறை இன மக்கள் பறையர் இனத்தார் எனும் குறிப்பு இடம் பெறுகிறதே அன்றி இவ்வினத்தார் தீண்டத் தகாதார் எனும் நிலை குறித்த எந்த ஒரு சான்றும் இல்லை.

## பக்தி இயக்கக் காலம்

கி.பி 6,7ஆம் நூற்றாண்டுகள் தொடங்கி 12ஆம் நூற்றாண்டு வரையிலான காலம் பக்தி இயக்கக் காலம் ஆகும். இக்கால கட்டங்களில் கோயில்கள், குளங்கள், கோபுரங்கள் சுற்றுச் சுவர்கள் எனும்படியான கோயில்சார் வாழ்க்கையை மக்கள் மேற்கொண்டபின் பேரரசுகளால் முன் மொழியப்பட்டு ஓதுவார்கள் என முன் எப்போதும் இல்லாத சமய நெறிமுறை அரசுடன் உறவு கொண்டு வளர்ச்சி கொள்ளத் தொடங்கியது. சமய நடவடிக்கைகளுள் ஒன்றாகக் கலையும் பங்களிப்புச் செய்ய நேரிட்டது. சமயத்துக்கான கலை எனும் புது நெறிமுறை பின்பற்றத் தொடங்கியதனால் கலைஞர்களும் தனித்த நிலை வளர்ச்சி கொள்ளத் தொடங்கினர். அரசு, சமயம், கலை வாழ்க்கை எனும் சுழற்சி வட்டத்துக்குள் இணைய முடியாத மக்களும், கலையும், கலைஞர்களும் புறந்தள்ளப்பட்டனர். ஆகம நெறிமுறைகள் பல கலைகளையும், கலைஞர்களையும், மக்களையும் ஒதுக்கின. ஆகம நெறிமுறைசார் கலைகளும், கலைஞர்களும் கோயில்சார் கலைகளாகவும் கலைஞர் களாகவும் அரவணைக்கப்பட்டனர். சாதியும் அது வளர்த்த தீண்டாமையும் கைவினைஞர் பலரை அதாவது உடல் உழைப்பு சார்ந்த உழைக்கும் மக்கள் பலரை ஒதுக்கிவைத்தன. கைவினைஞர் வகை சார்ந்த பறையர், துடியர், போன்றோர் சமூக மதிப்புக் குறைந்தோராக ஓரம் தள்ளப்பட்டனர்.

பக்தி இலக்கியங்களில் இப்படி ஓரந்தள்ளப் பட்டவர்கள் பதிவுக் குள்ளாக்கப்படாது போயினர். பதிவு செய்ய நேர்ந்தாலும் மதிப்பு நிலை குறைந்தவர்களாகவே காட்டப்பட்டனர். 13ஆம் நூற்றாண்டுக் கால கட்டத்தில் விளிம்பு நிலை மக்கள் குறித்த இவர்கள் பற்றிய பதிவுகள் ஆங்காங்குக் கல்வெட்டுகளில் பதிவுக்கு உள்ளாயின.

பறையர்கள்தாம் களங்கூட்டுதற்கு அதாவது கதிர் அறுவடை செய்த இடத்தில் சிந்தியுள்ள நெல்மணிகளைக் கூட்டி அள்ளிக் கொள்ளலாமேயன்றி மரக்கால் பிடித்து நெல் அளக்கும் தகுதியில்லை எனும் முறைமை 13ஆம் நூற்றாண்டிற்குப் பின் ஏற்பட்டுள்ள விதியாகும். மேலும் பறையர்கள் மற்றுமுள்ள இசைக் கருவி முழக்குவோர்க்குச் சில கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டிருந்தன.

**..... .....பேரையூர் நாகநாத சுவாமி யார் சன்னதியில் கல்வெட்ட –**

**விராச்சிலை கல்வெட்டுப்படி.... (இர)ரண்டு தவிலும் இரு முரசும்**

**...... சேமக்கலமும் ...... மத்தளமும் கொட்டிக் கொள்ளவும்.**

எனும் கல்வெட்டுச் செய்தி வழியே அறிய முடிகிறது.

**கானாடு படை பத்து(பற்று) விருத ராச பயங்கர வளநாட்டு கானாட்டு வெள்ளாழரும், ஆமாந்தூர் படைபற்று னாட்டாரும் யிதுக்குள்பட்ட கிராமத்துப்பள்ளர் பறையரும் மொழி வித்தியாசமாக சச்சை நடந்து தெக்காட்டூர் விராச்சிலை லம்பலகுடி கல்வெட்டுப் படித்த படியினாலேயும் வியாச்சியம் நடந்தி படியினாலே, ரெகுநாதராய தொண்டமானார் அவர்கள் ஆணையில் முறைமை வகுக்கப்பட்டுள்ளதன்படி** – எனும் பகுதியால் பறையர்கள் இசைக் கருவிகள் எவை எவற்றைப் பயன்படுத்தி வாசிக்கலாம் என வரையறை செய்யப்பட்டுள்ள பதிவுகளை கல்வெட்டுகள் வழியே காணமுடிகிறது. எனினும் சங்க காலத்திலோ, சங்கம் மருவிய காலத்திலோ இவர்களுக்கு இருந்த சமூக மதிப்பு நிலை இவ்வாறன்றிக் கூடுதலாகவே இருந்துள்ளது.

சங்க காலத்திலும் சங்கம் மருவிய காலத்திலும் தோன்றிய பழந்தமிழ் இலக்கியங்களிலும் கைவினைஞர்கள் என்று சொல்லத்தக்க உடல் உழைப்பினர் சமூக அமைப்பில் விளிம்பு நிலை மக்களாகவே இருந்துள்ளனர். சமூக அமைப்பின் மைய நீரோட்டத்தில் விளிம்பு நிலை மக்களின் பங்களிப்பு முதுகெலும்பாக இருந்துள்ளது எனினும் சமூக மதிப்பு நிலை குறைந்தவர்களாகவே கருதப்பட்டனர். சாதியின் பெயரால் இவர்களுள் ஒரு சிலர் தீண்டாமைக்கு உள்ளான வரலாறு என்பது தமிழ்ச் சமூகத்தில் ஆரியர் கலப்பும் அவர்தம் கருத்தியலும் வலுப்பெற்ற பின்னரே ஆகும். திராவிட இயக்க காலகட்டம் விளிம்பு நிலை மக்களின் சமூக மதிப்பு உயர்வதற்கு அடிகோலியது எனில் இக்கருத்து மிகை இல்லை.

❖

# மணிமேகலையில் அறம்

முனைவர் பா. வேலம்மாள்



மனித இனத்தின் நலத்திற்காகவும், முன்னேற்றத்திற்காகவும் மனித சமுதாயம் வரையறுத்துக் கொண்ட ஒழுக்க நெறியே அறமாகும். வரலாற்றின் தொடக்க காலம் முதல் மனிதன் தன் வாழ்க்கையை ஒரு போராட்டமாக நடத்தி வருகின்றான். பொருளாதார, சமுதாய, அரசியல், கலாச்சார அவலங்கள் மானுடத்தின் முறையான வளர்ச்சிக்குத் தடையாக இருந்து வருகின்றன. இந்நிலையில் மனிதன் எப்படியும் வாழலாம் என்ற மேம்போக்கோ, இப்படித்தான் வாழ வேண்டும் என்ற ஆணையோ இன்றி, இப்படி வாழ்ந்தால்தான் இயல்பு வாழ்க்கை சுவைக்கும் என்பதை மணிமேகலைக் காப்பியம் ஆழமாகப் பதிக்கின்றது. இலக்கியம் என்பது வெறும் பொழுது போக்கிற்காக மட்டுமல்லாமல் சமூகத்திற்குத் தேவையான கருத்துகளையும் செய்திகளையும் வெளிப்படுத்தும் கருவியாக அமைய வேண்டும். மனிதனைப் பற்றிய கண்ணோட்டம் மனிதப் பிரச்சினைகளைப் பற்றிய கண்ணோட்டமாக இருக்க வேண்டும். மனித குலத்தின் சவால்களுக்குப் பதில் சொல்லும் உத்திகளையும், உபாயங்களையும் உள்ளடக்கியதாக இருக்க வேண்டும் எனும் கூற்றிற்கேற்ப சாத்தனார் தமது எழுத்தைப் பயன்படுத்தியுள்ளார்.

சொல்லின்பமும், பொருளின்பமும், சொட்டும் தமிழ் அமுதமாக மணிமேகலையைச் சீத்தலை சாத்தனார் வடிவமைத்துள்ளார். கோவலனுக்கும், மாதவிக்கும் பிறந்தவள் மணிமேகலை. மாதவியும், மணிமேகலையும் துறவறம் பூண்ட கதையை மணிமேகலை விரித்துரைக்கின்றது.



மணிமேகலை, பௌத்த சமயத் தத்துவங்களை விளக்குகின்றது. துறவின்பத்தை உட்பொருளாகக் கொண்டு அருளைப் பற்றிச் சொல்கின்றது. அமுத சுரபியைக் கையிலேந்திப் பசித்தோர்க்கெல்லாம் அள்ளி அள்ளி வழங்கி உலகத்தார்க்கு உண்மையான பேரின்பம் எது என்பதனை விளக்கி நிற்கும் நூலாக இருக்கின்றது.

கி.மு. ஆறாவது நூற்றாண்டிலே இந்திய நாட்டில் சமயக் கிளர்ச்சிகள் பெரிய அளவில் நிகழ்ந்து வந்தன. புதுச் சமயங்களும், தத்துவங்களும் பரப்பப்பட்டு வந்தன. அத்தகைய சமயங்களில் ஒன்றான பௌத்த மதம், கௌதம புத்தரால் தோற்றுவிக்கப்பட்டது. கௌதம புத்தர் இன்றைக்கு 2500 ஆண்டுகட்கு முன்னே தோன்றியவர். புத்தர் மனிதரே எனினும், அவர் தம் பேரறிவால் உலகத்தின் இயல்பையும், பிறவியெடுத்த எல்லா உயிர்களின் இயல்பையும் உணர்ந்து நிலையில்லாத உலகில் நிலையான இன்ப நிலையில் திளைத்துக் கொண்டிருக்கும் வழியை அறிந்திருந்தார்.

ஆசைக் காட்டை அடியோடு அழித்துப் பிறவிக்கு முற்றுப்புள்ளி வைத்திருந்தார். ஆகவே மானிட உருவிலிருந்து கொண்டே அவர் அழியாத பெருவாழ்வாகிய புத்தநிலையை அடைந்திருந்தார்.

புத்தர் எல்லாச் சமயங்களையும் சமமாகக் கருதினார். எல்லா மக்களிடத்தும், ஏனைய உயிர்களிடத்தும் அவர் கருணை கொண்டிருந்தார். உண்மை, கருணை, ஈகை முதலிய பண்புகள் மக்களிடையே பெருகி வளர, மழையாக உதவினார். தனி மனிதர்களின் ஒழுக்கமே, சமுதாய ஒழுக்கமாக மலரும் என்றார். ஒருவன் தானாகவே பாவம் செய்கிறான், தானே, தனக்குக் கேடு தேடுகிறான். ஒருவன் தானாகவே பாவத்தை விலக்குகிறான். தானே தன்னைப் புனிதமாக்குகிறான். சுத்தமும், அசுத்தமும் அவன் செயலே, எவனும் பிறனைப் புனிதமாக்குவதில்லை என்று பல முக்கிய அறக்கருத்துகளை முன் வைத்தார்.

'அறம்' என்னும் சொல்லிற்கு 'அறுத்துச் செல்வது' வழியை உண்டாக்குவது என்பன நேரான பொருள்களாகும். மனித இனத்தின் நலத்துக்கும், முன்னேற்றத்திற்கும் மனித சமுதாயம் வரையறுத்துக் கொண்ட ஒழுக்க நெறி அறம் என்பதாகும். மனித வாழ்க்கை செம்மையும், அமைதியும், பயனும் உடையதாக அமைய வேண்டுமெனில் அன்றாட வாழ்க்கையில் பின்பற்றக்கூடியவை அறம் என்ற மெய்ம்மை நெறியாகும்.

தனி மனிதனின் உணர்ச்சி வெளிப்பாடுகளில் எழுவன முரண்பாடுகள், முரண்பாடுகளை நீக்குவதற்கும், மாற்றுவதற்கும், போக்குவதற்கும் அனுபவம் வாய்ந்த சான்றோர்களால் வகுத்துக் கொடுத்த வாழ்க்கை நெறி அறமாகும். அறம் எனும் சொல்லிற்கு வழக்கம், முறைமை, நீதி, கடமை, ஈகை, புண்ணியம் என்ற பல பொருள்கள் உண்டு.

மணிமேகலைக் காப்பியம் முழுவதும் பௌத்த மதக் கருத்துகள் வலியுறுத்தப்படுகின்றன. பற்றற்ற முனிவரான அறவண அடிகள் இக்காப்பியம் முழுவதும் புத்த மதத் துறவியாக வந்து பல அறிவுரைகளைக் கூறுகின்றார். கோவலன் கொலையுண்டது கேட்டு வருந்திய மாதவிக்கு இவரே வாய்மை நான்கும், சீலம் ஐந்தும் உணர்த்தித் தவக்கோலம் பூணச் செய்கிறார். கோவலன் இறந்த பின் கடுந்துயரடைந்த மாதவி அறவண அடிகளின் திருவடிகளில் வீழ்ந்து கதறினாள். அதற்கு அவர்,

**"பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம்**
**பிறவார் உறுவது பெரும்பே ரின்பம்**
**பற்றின் வருவது முன்னது, பின்னது**
**அற்றோர் உறுவது அறிக"**

(மணி. 2:64-67)

என்றருளி, "ஐவகைச் சீலத்து அமைதியும் காட்டி, நீ உய்வதற்கான வகைகள் இவைதாம், இவற்றை மேற்கொள்வாயாக" என்று உரைத்து அருளினார். ஐவகைச் சீலத்து அமைதியாவது கொலை, களவு, கள், காமம், பொய் என்பவற்றிலே மனத்தைச் செல்லவிடாது கட்டுப்படுத்திக் கொள்ளும் ஒழுக்கநிலை.

மனிதன் ஆசையை விட்டொழித்து அறச் செயல்களைச் செய்து, நன்னெறியில் வாழ வேண்டும் என்ற கருத்தே மணிமேகலைக் காப்பியம் முழுவதும் வலியுறுத்தப்படும் செய்தியாகும். உலகில் உறையும் உயிர்களுக்கெல்லாம் உணவும், உடையும், உறைவிடமும் அளித்தலே அறம் எனப் பகர்கின்றது மணிமேகலை.

**"அறம்எனப் படுவது யாதுஎனக் கேட்பின்**
**மறவாது இதுகேள் மன்உயிர்க் கெல்லாம்**
**உண்டியும், உடையும், உறையுளும் அல்லது**
**கண்டதுஇல்"**

(மணி. 25: 228-231)

உயிர்களுக்கெல்லாம் உணவளிப்பதே உயர்ந்த அறம் என்பது மணிமேகலை வலியுறுத்தும் முழுமுதற் கொள்கையாகும். பசிப்பிணி என்னும் பாவி ஆட்சி புரியும் சமுதாயத்தில் ஒழுக்கம், நிலைத்திருக்காது. இன்பத்திற்கு இடம் இல்லை. மகிழ்ச்சி தரும் வாழ்வில்லை ஆதலால் எவ்வுயிரையும் பட்டினிக் கொடுமையிலிருந்து காக்க வேண்டும் என்று வலியுறுத்துகின்றது இக்காப்பியம். 'பசிவந்திடப் பத்தும் பறந்துபோம்' என்ற முதுமொழிக்கு ஏற்ப பசிக்கொடுமையால் மனிதன் எதையும் செய்யத் தொடங்குவான். பசி மனிதத் தன்மையையே மாற்றிவிடும் வல்லமை உடையது. பசிப்பிணி என்னும் இப்பாவி, தான் பற்றியவருடைய உயர் குடிப்பிறப்பை அழிக்கும், சிறந்த புகழைச் சிதைக்கும். கற்ற கல்வியை நீக்கும். நாணத்தையும் அழகையும் நலிக்கும். மனைவியுடன் மற்றவர் மனைவாயிலில் நிறுத்தும் என்று பசியின் கொடுமைகளை,

**"குடிப்பிறப்பு அழிக்கும், விழுப்பம் கொல்லும்**
**பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉம்**
**நாண்அணி களையும், மாண்எழில் சிதைக்கும்**
**பூண்முலை மாதரொடு புறங்கடை நிறுத்தும்**
**பசிப்பிணி என்னும் பாவி."**

(மணி. 11:76-80)

பசிப்பிணியின் இயல்பினைப் படிப்போர் மனத்தை உருக்கும்படியாக வேறு எந்த இலக்கியமும் இத்துணை அளவிற்கு எடுத்துரைக்கவில்லை.

கைம்மாறு செய்யும் தகுதியுடைய செல்வர்க்கு ஒன்றைக் கொடுப்பது விலை கூறுவதாகும்; எதுவும் இல்லாத வறியவர்களின் கடும் பசியைப் போக்குவதே உண்மையான அறமாகும். அத்தகைய அறமுடையவர்களைச் சார்ந்தே உலகம் நிற்கும். மண்செறிந்த இந்நில உலகத்தில் வாழ்பவர்கட்கெல்லாம் உணவு கொடுப்பவர் உயிரையே கொடுப்பவர் ஆவர்!

**ஆற்றுநர்க்கு அளிப்போர் அறவிலை பகர்வோர்**
**ஆற்றா மாக்கள் அரும்பசி களைவோர்**
**மேற்றே உலகின் மெய்ந்நெறி வாழ்க்கை**
**மண்திணி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லாம்**
**உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே!**

(மணி. 11. 92-96)

‘சோறில்லை என்பார்க்குச் சோறு தருவதுதான் அறங்கள் எல்லாவற்றின் ஒட்டுமொத்த கூட்டு’ என்பதே மணிமேகலைக் காப்பியம் கூறும் அற முதற் கோட்பாடு.

மேலும் இப்பசியாற்றுதலின் நன்மையினை எடுத்தியம்பும் விதமாக உணவை, ‘ஆருயிர் மருந்து’ என்றே மணிமேகலை குறிப்பிடுகின்றது.

**“மக்கள் தேவர் எனஇரு சார்க்கும்**

**ஒத்த முடிவின் ஓரறம் உரைக்கேன்**

**பசிப்பிணி தீர்த்தல் என்றே அவரும்**

**தவப்பெரு நல்லறம் சாற்றினர் “**

(மணி. 12:116-119)

**“பார்அகம் அடங்கலும் பசிப்பிணி அறுக”**

(மணி. 16:134)

**“தீப்பசி மாக்கட்குச் செழுஞ்சோறு ஈத்து”**

(மணி 18:116)

**“பலர்பசி களையப் பாவைதான் ஒதுங்கிய உலக அறவி”**

(மணி. 20:19-20)

**“பசிப்பிணி என்னும் பாவிஅது தீர்த்தோர்**

**இசைச்சொல் அளவைக்கு என்நா நிமிராது”**

(மணி. 11:80-81)

**“செல்உலகு அறிந்தோர்**

**வருந்தி வந்தோர் அரும்பசி களைந்தோர்”**

(மணி. 23:134-135)

**“காணார், கேளார், கால்முடப் பட்டோர்**

**பேணுநர் இல்லோர் பிணிநடுக் குற்றோர்**

**யாவரும் வருக என்று இசைத்துடன் ஊட்டி”**

(மணி. 13:111-113)

என மக்களுக்கு உணவளிப்பதே சிறந்த தருமம், சிறந்த அறம் என்கிறது மணிமேகலைக் காப்பியம். உணவு அளித்தல் என்ற அறத்தைச் செய்தால் பிறவாப் பெருநிலை அடைவர்,

**“அந்நாள் அவன்உண்டு அருளிய அவ்வறம்**

**நின்ஆங்கு ஒழியாது நின்பிறப்பு அறுத்திடும்.”**

(மணி. 10:40-41)

என்பதனையும், எப்பிறப்பிலும் நிலையான அறம் பசிப்பிணி தீர்த்தலே என்பதனையும் மணிமேகலை உலகத்தார்க்கு நிலை நிறுத்திக் கூறுகின்றது.

பசிப்பிணி தீர்த்தல் முக்கிய அறமாக மணிமேகலையில் சொல்லப்பட்டாலும் முக்கியமான முற்போக்குச் சிந்தனையினையும், மணிமேகலையில் சாத்தனார் காட்டுகின்றார். ‘உரைசால் பத்தினியை உயர்ந்தோர் ஏத்துவர்’ என்பது மட்டுமல்லாமல் பத்தினியாக வாழ்ந்த கணிகை குலத்துப் பெண்ணையும் உயர்த்திக் காட்டுகின்றார். பரத்தமை ஊடுருவியிருந்த சமுதாயத்தில் அதனை மாற்றிக் கணிகைப் பெண்ணும், கற்புப் பெண்ணாக வாழ முடியும், காமத்தை அவளும் விலக்க முடியும் என்று புதிய அறச் சிந்தனையைச் சாத்தனார் முன் வைக்கின்றார்.

மேலும் பரத்தமை நிலையைத் ‘திருந்தாச் செய்கை’ என்றும் தீத்தொழில் என்றும் மாதவி மூலமாகச் சொல்லச் செய்வதோடு தன்னை நாடிவரும் உதயகுமரனிடம் “இவ்வுடம்பு முன் செய்த வினையின் பயனினாலே வாய்த்தது. இதுவே இனிவரும் நல்வினை, தீவினைகளாகிய புண்ணிய, பாவங்கட்கும் உரிய விளைநிலமாக அமைந்தது. ஆபாசத் தன்மையினை உடையது. அழிந்து போகும் தன்மை கொண்டது” என்று அறிவுரை கூறித் தன் துறவு வாழ்க்கையை உறுதிப்படுத்துகின்றாள் மணிமேகலை. பரத்தை குலம் ஒழிந்து, சமுதாயம் மேல் ஓங்கி நிற்க வேண்டும் என்ற ஆசிரியரின் உணர்வு தெரிகின்றது.

ஒரு நாட்டை ஆளக்கூடிய மன்னவன் சிறந்தவனாக இருந்தால்தான் மக்கள் சிறந்தோராக இருப்பர் என்பதால் அரசர்க்குரிய அறத்தினை,

**“மன்னவன் மகனே !**

**கோல்நிலை திரிந்திடின் கோள்நிலை திரியும்**

**கோள்நிலை திரிந்திடின் மாரிவறங் கூரும்**

**மாரி வறங்கூரின் மன்உயிர் இல்லை**

**மன்னுயி ரெல்லாம் மண்ணாள் வேந்தன்**

**தன்னுயிர் என்னும் தகுதிஇன் றாகும்**

**தவத்திறம் பூண்டோள் தன்மேல் வைத்த**

**அவத்திறம் ஒழிக!”**

(மணி. 7 : 8-14)

என மணிமேகலை அரசறம் கூறுகின்றது.

காமம், வெகுளி, மயக்கம் இவை மூன்றுமே தீமைக்குக் காரணம். பொருள்கள் நிலையில்லாதவை, துன்பம் தருபவை, எனவே பற்றினை அறுத்திடல் வேண்டும். சினத்தை நீக்க வேண்டும், மன மயக்கத்தைப் போக்குதல் வேண்டும். உயிர்கள் அனைத்தின்பாலும் அன்பு கொண்டு பசிப்பிணி போக்க வேண்டும். உயிர்கள்பால் இரக்கம் கொண்டு அவர்களை வளமுடையவர் ஆக்க முயல வேண்டும். எல்லா உயிர்களையும் சமமாகப் பாவிக்க வேண்டும். விருப்பு வெறுப்பின்றி உலகில் எல்லாச் செயல்களையும் செய்து இறைவனடி சேர்ந்து பிறவாநிலை அடைதல் வேண்டும் என்ற புத்த மத அறக்கருத்துகள் மணிமேகலைக் காப்பியத்தில் அறமாக உணர்த்தப்பட்டுள்ளன.

❖

# நமது பண்டைய இலக்கியமும் இன்றைய நாட்டுப்புற இலக்கியமும்

முனைவர் கொ. மா. கோதண்டம்



கடின உழைப்பின் துயரத்தை மறப்பதற்கும், காதல், அன்பு, மகிழ்ச்சி போன்ற உணர்வுகளை வெளியிடவும், துன்ப நிகழ்வுகளை வெளித்தள்ளி மனச்சுமையை இறக்கி வைத்திடவும், கவலைகளை வெளிக்காட்டி ஆறுதல் பெறவும், கைக்குழந்தைகளைத் தூங்க வைத்திடவும், கிராமத்துப் படிக்காத பாமர மக்கள் தாமாகவே உள்ளத்து உணர்வுகளை வாய்விட்டு இசையோடு பாடும் பாடல்களே நாட்டுப்புறப் பாடல்கள் என வழங்கப்படுகின்றன.

வழிவழியாகக் கேட்ட அல்லது தாமே புனைந்த கதைகளைச் சொல்லுவதும், சிலர் சேர்ந்து கொண்டு, புராண இதிகாசக் கதைகளை அதில் வரும் கதாபாத்திரங்களாகத் தாமே வேடமிட்டு அல்லது வேடமிடாமல் நடித்துக் காட்டுவதும், சமுதாயத்தில் வீர தீர சாகசங்களைச் செய்த வீரர்களைப் பற்றியும் நடித்துக் காட்டுவதும் ஆன நாடகங்கள், இவை யாவுமே நாட்டுப்புற இலக்கியம் எனப்படுகின்றன.

ஒரு சமுதாயத்தின் நாகரிகம், பண்பாடு, வரலாறு இவை பற்றி அறிந்து கொள்வதற்குக் கல்வெட்டுகளும், புதை பொருள்களும் எவ்வாறு உதவுகின்றனவோ அவ்வாறே நாட்டுப்புற இலக்கிய வகைகளும் உதவுகின்றன.

இன்று கற்றறிந்த அறிஞர்கள் சாதாரண பட்டிக்காட்டு உழைப்பாளனிடம் சென்று நாட்டுப்புற இலக்கியம், பாடல்கள் இவற்றைக் கேட்டறிந்து எழுதி ஆய்வு செய்து முனைவர் பட்டமும் ஊதிய உயர்வும் பெற்று விடுகின்றனர். அந்த உழைப்பாளிப் பாடகனோ உழைத்துக் கொண்டும் பாடிக் கொண்டும் என்றும் போலச் சாதாரணமாகவே இருக்கிறான். நாட்டுப்புற இலக்கியத்தில் இன்று வாய்மொழிப் பாடல்களே முக்கியப் பங்கு வகிக்கின்றன. ஒரு மொழியின் இயல்பை அறியாத, எதுகை மோனை போன்ற செய்யுள் முறைகளைத் தெரியாத, யாப்பிலக்கணம் புரியாத, ஒரு கிராமத்தான் தனது இன்பத்திலோ துன்பத்திலோ மன உளைச்சல்களை வெளியிடப் பாடலாகப் பாடுகிறான். அதிலே மிகச் சிறந்த கவித்துவமும் உவமை நயங்களும் உணர்ச்சிப் பிரவாகங்களும் கருக்கொண்டு மிளிர்கின்றன.

புகழ்பெற்ற கவிஞனின் கவிதைகளுக்கு ஈடாக இந்தப் பாடல்களும் திகழ்கின்றன. உள்ளத்து உள்ளது தான் உண்மையான கவிதையல்லவா! இதனை ஒரு பாடல் மூலமே அறியலாம்.

**"பாட்டறியேன் படிப்பறியேன்**
**பள்ளிக்கூடம் நானறியேன்**
**ஏடறியேன் எழுத்தறியேன்**
**எழுத்திலுள்ள வகையறியேன்**
**ஏட்டிலே எழுதவில்லை**
**எழுதிநான் படிக்கவில்லை**
**வாயிலே வந்தபடி வகையுடனே நான் படிப்பேன்''**

ஏதும் அறியாத பாமரன் வாயிலே வந்தபடி பாடினான்.

ஆயினும், வகையுடனே நான் படிப்பேன் என்ற வரியில் எத்தனை உறுதியும் உண்மையும் இருக்கின்றன என்பதை நாம் உணர்ந்து பார்க்க வேண்டும்.

மனிதன் பேச்சு மொழியைக் கடைப்பிடித்த காலத்திலேயே நீட்டிக் கூவும் அவன் மொழியில், ஒரு இதமான இசை கலந்திருப்பதை உணர்ந்தான். அதனை மேலும் நீட்டி ஒலித்துச் சுவைத்திருக்கிறான்.

மழை பெய்து முடிந்திருக்கிறது கூரையிலிருந்து மழை நீர் ஒவ்வொரு சொட்டாகக் கீழே தேங்கியுள்ள தண்ணீரில் 'தளக்' 'தளக்' என்று தாள லயத்துடன் விழுகிறது. ஒரு சொட்டுக்கும் அடுத்த சொட்டுக்கும் உள்ள இடைவெளி பிசகாமல் ஓசை மாறாமல் சொட்டுகின்ற நீர்த்துளிகள் இயற்கை அளிக்கும் இனிய தாளமல்லவா!

வேலை முடிந்து குளித்துவிட்டுத் துவைத்த வேட்டியைத் தலைக்குமேல் இரு கைகளையும் தூக்கிப் பிடித்து, வேட்டியைக் காற்றில் காய வைத்துக் கொண்டு வருகிறான். 'சடக்', 'சடக்' என்ற ஓசை எழும்புகிறது ஒரு வாத்திய இசைபோல. சிறுவன் ஒருவன் பனை ஓலையில் செய்த காற்றாடியைக் கையில் பிடித்திருக்கிறான். அது காற்றில் சுழல்கிறது. 'ஹீ...ம்' என்று குழல் ஓசை போன்ற ஒலி கிடைக்கிறது, இசையைத் தருகிறது. இதுதானே பாட்டுக்கு மூலவித்து. இதில் மயங்கிய மனிதன் வாயைத் திறந்து இசையோடு பாடினான்.

இன்றைய உலகின் அனைத்து மொழிகளிலும் தோன்றிய காவியங்கள் செய்த மகா கவிகளுக்கு எல்லாம் முதலடி எடுத்துக் கொடுத்தவன், ஏன் மூலக் குருவாகி நின்றவன், இந்தப் பாமர உழைப்பாளிப் பாடகன் அல்லவா? அவனின்றி இந்த இலக்கியங்கள் ஏது?

நாட்டுப் பாடல்கள் பூமியை, மலைகளை, நதிகளை, கடலை, தாவர வண்ணங்களை,நட்சத்திரங்களை , சூரியசந்திர அழகுருவங்களை, இயற்கையின் எழிலை, இனிய பொழில்களை இவற்றை எல்லாம் அழகாக வருணிப்பதோடு மனித மனத்தில் உந்தி எழுகின்ற மாறுபட்ட உணர்ச்சி பாவனைகளையும் வெளிப் படுத்துகிறது. உண்மையான அன்பும், மனிதாபிமானத்தைத் தழைக்கச் செய்யும் இசையும் அதில் கலந்துள்ளன. ஆகவேதான் அப் பாடல்கள் உலகளாவிய வகையில் இலக்கியமாக ஏற்றுக் கொள்ளப்படுகிறது.

"நாட்டுப் பாடல்களின் இசை அவற்றின் வளத்தையும் கம்பீரத்தையும் அதிகப்படுத்துகிறது'' என்று கூறுவார் ஜே.சி. ஹாட்காட் என்ற மேலை நாட்டு ஆய்வாளர்.

"உலக முழுவதிலுமுள்ள நாட்டுப் பாடல்களிடையே விளக்கிக் கூற முடியாத ஓர் ஒற்றுமை நிலவுகிறது. அவற்றின் மொழிகள் வேறு வேறாக இருப்பினும் அவை எடுத்துக் கொள்ளும் பொருள், சொல்லும் முறை கருத்தில்கூட ஒற்றுமை காணப்படுகிறது'' என்று கூறுவார் W.P. ஹெர் என்ற சிந்தனையாளர்.

"மிக்க ஒளிபொருந்திய, விலைமதிக்கவொண்ணா எத்தனையோ மாணிக்கங்கள் ஆழமறிய முடியாத கடல் குகைகளின் அடியில் மறைந்து கிடக்கின்றன. சுகந்த மணத்தோடு கூடிய மெல்லிய மலர்கள் காடுகளில் மலர்ந்து அவற்றின் மணத்தை யாரும் நுகர முடியாமலேயே வாடி உதிர்ந்து விடுகின்றன. அதேபோல் மில்டனைப் போன்று கவிதை உள்ளம் படைத்த பலர் கிராமங்களில் பிறந்திருக்கலாம். அவர்களைச் சார்ந்த சூழ்நிலைகள் அவர்களின் கவிதை உள்ளங்களை உலகிற்குத் திறந்து காட்டும் வாய்ப்பை அளிக்கவில்லை'' என்று சொன்னார் ஆங்கிலக் கவிஞர் கிரே.

இது உண்மைதான். 'மூங்கிலிலை மேலே தூங்கும் பனிநீரே' என்ற ஏற்றக்காரனின் பாடலின் அடுத்த அடிக்கு, கவிச்சக்கரவர்த்தி கம்பன் எத்தனை நாள் தவங்கிடந்தான்! கம்பனைப் போல, பாரதிபோலக் கவிதாவேச உள்ளங்கொண்டவர் ஆனாலும் அவற்றை வெளியிட வாய்ப்புகள் கிடைக்காத எத்தனை பாமர நாட்டுப்புறக் கவிஞர்கள் நம் தமிழ் மொழியில் இருந்தார்களோ... யார் கண்டது ?

இராமாயணம், மகாபாரதத்தோடு ஒப்பிட்டுப் பேசப்படும் உலகப் பேரிலக்கியங்களான 'ஒடிசி', 'இலியட்' இவைகூட ஒரு காலத்தில் மக்கள் மத்தியில் கதைப் பாடல்களாக வழங்கி வந்தன என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

தமிழின் முதல் காப்பியமான 'சிலப்பதிகாரக்' கதையும் எழுதப்படுமுன் மக்களிடத்தே கதைப் பாடலாக உலவி வந்திருக்க வேண்டும் என்று கருதவும் இடமுண்டு.

நமது சங்கத் தொகைப் பாடல்களில் ஐந்திணை தழுவிய அகப் பாடல்களுக்கு நாட்டு மக்களிடையே வழங்கி வந்துள்ள காதல் பாட்டுகளே முன்னோடியாக இருக்க வேண்டும் எனவும் இலக்கிய ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

"அக்கச்சி அச்சோ, அப்பூச்சி, அம்மானை, ஆற்றுவரி, இம்பில், உந்தியார், ஊசல், எம்பாவை, கானல்வரி , கிளிப்பாட்டு, குதம்பை, குரவை, குறத்தி, கூடல், கொச்சகச்சார்த்து, கோத்தும்பி, சாழல், செம்போத்து, தாலாட்டு, திணை, நிலைவரி, திருவங்கமாலை, திருவந்திக்காப்பு, தெள்ளேணம், தோனாக்கம், நிலைவரி, நையாண்டி, பகவதி, படைப்புலரி, பந்து, பல்லாண்டு, பல்லி, பள்ளியெழுச்சி, பாம்பாட்டி, பிடாரன், பொற்சுண்ணம், மயங்குதிணை நிலைவரி, முகச்சாந்து, வள்ளைப்பாட்டு என்பனவும் ஆனந்தக்களிப்பு, கண்ணி, கீர்த்தனம், கும்மி, கோலாட்டம், சிந்து, நொண்டிச் சிந்து முதலிய இசைப் பாட்டுகளும், நாட்டுப் பாடல் வகைகள்'' என்று பேராசான் உ.வே. சாமிநாதய்யர் கூறுவார்.

மகாகவி பாரதியின் பாஞ்சாலி சபதம் நாட்டுப்பாடலின் நடையைப் பின்பற்றிய புதிய காவிய மரபாகும். பாரதியின் பல்வேறு பாடல்களில் நாட்டுப் பாடலின் அமைப்பையும் சந்தத்தையும் காணலாம். கோபாலகிருஷ்ண பாரதியார், இராமலிங்க சுவாமிகள் போன்ற பல கவிஞர்களும் பல வகை நாட்டுப்பாடல் வடிவங்களைக் கையாண்டுள்ளனர்.

இவ்வாறு பல்வேறு வாய்மொழிப் பாடல்கள் ஏட்டிலக் கியங்களுக்கு அழகும் உயிரும் ஊட்டி வளர்த்திருக்கின்றன.

"நாட்டுப் பாடல்கள் எளியவை, பகட்டில்லாதவை, பொய்க்கலப்பற்றவை, நேரானவை, உள்ளத்தை ஈர்க்கும் இனிமையும், இசையொலியும் நிறைந்தவை, செழுமைமிக்க மனோபாவமும், கற்பிக்கப்படாத கட்டுப்பாடற்ற கற்பனையும் நிறைந்த களஞ்சியங்கள் அவை. தீங்கற்ற கலைக் கருவூலங்கள் என்றே அவற்றைக் கூறலாம்''

எனச் சிறப்பித்துக் கூறுவார், ஆய்வாளர் அன்னகாமு.

நாட்டுப் பாடல்கள் பாமர மக்களின் ஆன்மா ஆதலின், அங்கே சத்தியத்தைத் தவிர வேறு என்ன குடியிருக்க முடியும் ?

"உலகெங்கிலுமுள்ள நாட்டுப் பாடல்களை ஊன்றிப் பார்த்தால் வால்மீகி, கம்பன், இளங்கோ, காளிதாசன், சேக்ஷ்பியர், மில்டன், வோர்ட்ஸ்வொர்த், தாகூர் போன்ற உலகக் கவிஞர்களின் உள்ளங்களில் கவிதை வித்திட்டு அவர்களின் கவிதைப்பொழில் செழிக்க உரமானது அவைகளே என்பதை உணரலாம். அவர்களின் தாய்மார்களின் தாலாட்டுகள் அவர்களின் மனங்களில் அடைபட்டிருந்த கவிதை ஊற்றைத் திறந்திருக்க வேண்டும். அவர்களின் கவிதைகளில் நயமானவற்றை எடுத்துச் சில கற்பனை நிறைந்த நாட்டுப் பாடல்களுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் அவை தெரிய வரும்''என்று ஆய்ந்து கூறுவார் ஆர். அய்யாச்சாமி.

"நாட்டுப் பாடல்கள் முன்னிருப்பவர்கள் கேட்கப் பாடுவது, கேட்பவர்கள் மனத்தில் மகிழ்ச்சி, சோகம், பெருமை, பணிவு, பெருமிதம், ஆர்வம், வியப்பு, வெறுப்பு முதலிய உணர்ச்சிகளை எழுப்பும் நிகழ்ச்சிகளையோ கவிதைகளையோ சொல்லுவது வழக்கமாக இருந்தன. அல்லது வேலை செய்யுங் காலத்தில் களைப்பைப் போக்க அவர்கள் கூட்டு முயற்சியை ஊக்குவிக்கப் பாடப்படும்

பாடல்களும் உள்ளன. எப்படியும் ஒரு குழுவினரின் மனத்தில் ஏககாலத்தில் சமமான உணர்ச்சியை உண்டுபண்ணுவது பெரும்பான்மையான நாட்டுப் பாடல்களின் நோக்கமாகும்'' என்று கூறுவார் தமிழகத்தில் நாட்டுப்புற இலக்கிய ஆய்வுக்குப் பெரும் பணியாற்றி வழிவகுத்த பேராசிரியர் நா. வானமாமலை அவர்கள். எந்த ஒரு காரியமும் சமுதாய நன்மைக்கே என்று இருந்தால்தானே அது மக்கள் மத்தியில் நிலைத்து நிற்கும். அந்த வழியில் நாட்டுப்புற இலக்கியப் பாடல்களும் உழைப்பின் களைப்பை நீக்கி நல்லுணர்வுகளை வளர்த்து மனித உள்ளங்களுக்குக் கலை உணர்வுகளை ஆர்வமுடன் விருப்பங் கொள்ளச் செய்து ஆத்மார்த்த ரீதியாக உள்ள நிறைவும் விருந்தும் அளிப்பதாலல்லவா பன்னெடுங் காலமாக இப் பாடல்கள் வாழ்ந்து வருகின்றன.

புகழ்பெற்ற இலக்கியக் கவிதைகளுக்கு ஏதும் அறியாத அப்பாவிப் பாமரனின் பாடல்கள் இணையாக இருக்கின்றன என முன்பே கூறப்பட்டது.சான்றாக ஒன்றிரண்டு இங்குக் காண்போம்.

**“வெயில்நுழை பறியா குயில்நுழை பொதும்பர்'**

(மணிமேகலை)

அடுக்கடுக்கான மரங்கள், நெருக்கமான கிளைகளுடன் இடைவெளியற்ற இலைகளுடன் அடர்ந்த வனம், சூரியனின் வெயில் நுழைந்து போகக்கூட இடமில்லை.

“மந்தியும் பயிலா மரன்பயில் அடுக்கம்'' திருமுருகாற்றுப்படை, மந்திகள் நுழைவதற்குக்கூட இடமில்லாத அளவு காடு அடர்ந்து உள்ளதாம்.

இனி ஒரு நாட்டுப் பாடலைக் காண்போம்.

**“ஈப்புகுந்தால் இறகொடியும்**
**இண்டமுள்ளுக் காடு**
**கொசுப் புகுந்தால் இறகொடியும்**
**குறிஞ்சி மலைக்காடு.''**

உள்காடு அல்லது கருங்காடு என்று சொல்லப் படுகின்ற அடர்ந்த மலை சார்ந்த காடுகளில் சென்று பார்த்தவர்களுக்கு இந்த உண்மை புரியும். ஈயோ, கொசுவோகூட நுழைந்து சென்று பறந்தால் முள் கிளைகளில் பட்டு அவைகளின் இறகுகள் ஒடிந்து விடுமாம். மிகுந்த கற்பனையானதாக இருந்தாலும் அருமை நயத்துடன் அமைந்துள்ளது. இப்பாடல், மணிமேகலை, திருமுருகாற்றுப்படை வரிகளுக்கு ஈடாக அமைந்துள்ளதல்லவா!

அடுத்ததாக வள்ளுவரின் குறளடி ஒன்றைக் காண்போம்.

**“மோப்பக் குழையும் அனிச்சம்''**

மலர் என்றாலே மெல்லிய தன்மையுடையது. அதனினும் மென்மையாம் அனிச்சமலர்; எடுத்து முகர்ந்து பார்த்தாலே வாடிவிடுமாம். இதோ ஒரு நாட்டுப் பாடல்:

**“கையாலே பூ எடுத்தால்**
**காம்பழுகிப் போகுமின்னு**
**விரலாலே பூ எடுத்தால்**
**வேரழுகிப் போகுமின்னு**
**பொன்னூசி கொண்டு**
**பூத்த மலரெடுத்து**
**வெள்ளூசி கொண்டு**
**வெளுத்த மலரெடுத்து.''**

இந்த மலர் கையாலோ விரலாலோ தொட்டு எடுத்தாலே அழுகிப் போய்விடுமாம். அதனால் பொன் அல்லது வெள்ளியால் செய்த ஊசிகளால் (ஊசிமுனையின் மிகச் சின்னப் பகுதியில்) தொட்டு எடுக்க வேண்டுமாம். இரண்டு இலக்கியங்களுக்குமுள்ள ஒற்றுமையை நினைத்து வியக்காமல் இருக்க முடியவில்லை அல்லவா!

**“கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய் மற்றாங்கே**
**எடுப்பதூஉம் எல்லாம் மழை''**

என்பார் திருவள்ளுவர்.

**“இந்த மழையை நம்பி**
**இருங்குச்சோளம் நாவெதச்சேன்**
**வந்தமழை போகுதில்லை**
**வருண பகவானே''**
**“கோடைமழை பெய்யாதோ**
**குறும்பாடு சாகாதோ**
**துட்டுக்கு எட்டாடு**
**தூக்கிக் கொடுக்காரோ**
**மாசிமழை பெய்யாதோ**
**மலையில் வெள்ளம் சாயாதோ**
**ஏத்தமீனு ஏறாதோ**
**எங்கபஞ்சம் தீராதோ''**

மழை அதிகமாகப் பெய்து சோள விளைச்சலை – சாமை விளைச்சலைக் கெடுக்கிறது.

மழை பெய்யாமல் பஞ்சம் தீர வழியில்லாமல் போகிறது என்பதனை இந்நாட்டுப் பாடல்கள் அழகாகத் தெரிவிக்கின்றன.

இனி நாட்டுப் பாடல்கள் சிலவற்றைக் காண்போம்.

**தாலாட்டுப் பாடல்**

குழந்தையைத் தூங்கச் செய்ய, குடும்பப் பெருமைகளை, ஆசைகளை, எதிர்காலக் கனவுகளைச் சொல்லி, தாய் பாடலாகப் பாடுகிறாள்–அந்த இனிய இசையில் குழந்தை தூங்கிவிடுகிறது.

''மலை மீதிருந்து பாயும் வெள்ளருவிபோல பனிபடர்ந்த புலர் விடியலிலே மலரும் கதிரொளிபோல, மணல்வெளியில் மதிவார்க்கும் நிலவொளிபோல, தேன் சொட்ட மலரும் பூக்கள் போல, இனிமை தரும் தென்றல்போல உள்ளங்கவரும் இசை தாயுள்ளத்தில் ஊற்றாகிறது. தாலாட்டு, இலக்கியத்தின் தாயூற்றாகும்''

என்று கூறுவார் தமிழண்ணல்.

இதோ ஓர் ஏழை வீட்டுத் தாலாட்டு

எத்தனையோ சீமாட்டி
ஏங்கித் தவங்கிடக்க
என்வயிறு தேடிவந்து
ஏன்பிறந்தாய் செல்லமுத்தே!
கதிறுக்கும் நேரத்திலே
கட்டியுனைத் தோளிலிட்டால்
மதியத்து வெயிலிலே
மயக்கமுந்தான் வாராதோ?
வயலிலே வேலைசெய்வேன்,
வரப்பிலே போட்டிடுவேன்.
வயலைவிட்டு ஏறுமுன்னம்
வாய்விட்டு அழுவாயோ?''

குழந்தையை வைத்துக் கொள்ள வீட்டில் ஆளில்லை, வேலைக்குப் போகும் போதும்கூட குழந்தையைக் கொண்டு வந்து வரப்பில் படுக்க வைத்து வயல் வேலை செய்கிறாள் தாய். தான் வரும்வரை அழாமல், கொத்தனாரிடம் பேச்சு வாங்கித் தராமல் இருப்பாயா என்று ஏக்கத்துடன் பாடுகிறாள்.

"வடகடல் முத்தை
வாரிஉமி கூட்டித்
தென்கடல் மாணிக்கம்
திரட்டி அடுப்பாக்கி
வெண்கலப் பானை
விளக்கி அடுப்பில் வைத்து
சந்தனக் கட்டை
தரிச்சு அடுப்பில் வைத்து
வெள்ளிக் குழல்கொண்டு
வெள்ளாட்டி தீஊத
தங்க அகப்பையாலே
தாயுனக்குப் பாலாற்ற''

செல்வர் வீட்டுக் குழந்தை போலும். சீரான தாலாட்டு, இந்தச் செல்வத் தாயின் கற்பனையாகக்கூட இருக்கலாம்.

காதல் பாடல்கள்

உள்ளத்தால் உணரப்படுவது காதலின்பம். உள்ளத்தின் மலர்ச்சியிலிருந்து வெளிப்படும் தேன்தான் அது. காதல் வயப்படும் ஆணும் பெண்ணுமாகிய இருவரின் உள்ளத்துணர்ச்சிகள் தேனாய், தீங்கனியாய், அமுதமாய் வெளியிடும் சொல்லோவியங்களே கவிதைகள்.

"தண்ணிக் குடமெடுத்துத்
தனிவழியே போறகண்ணே!
தண்ணிக் குடத்தினுள்ளே
தளும்புதடி எம்மனசு.''

அவள் தண்ணீர் எடுத்து வருகிறாள். அவளைக் கண்டதும் அவன் மனம் தத்தளிக்கிறது. அரைகுடத்து நீர் தளும்புவதற்குச் சொல்லும் உவமை நயம் அருமையாக இருக்கின்றது, தனிவழியே என்பதில் நானும் கூட வருவேன் எனும் கருத்து தொனியாக உள்ளது.

"சந்தன மரத்தடியில்
சந்திப்போம் மாலையிலே
பூவலடிக்கு மச்சான்
பொழுதுபட வந்திடுங்க.''

இப்போது வந்தால் யாரும் பார்த்துவிட்டால் ஆபத்து, பின்மாலைப் பொழுதில் வரச்சொல்லிக் குறியிடம் காட்டுகிறாள் அவள்.

"தேமல் மார்பழகும்
தேனினிக்கும் செவ்வுதடும்
வாழை உடலும் என்னை
வாட்டுதடி நித்திரையில்.''

காதலியின் அழகுருவம் அவனை நித்திரையிலும் சித்திரவதை செய்கிறது.

சிறுவர் விளையாட்டுப் பாடல்

சிறுவர்கள் விளையாடும்பொழுது அந்த விளை யாட்டையே பாடலாகப் பாடுவதும், தின்பண்டங்கள் பற்றிப் பாடுவதும் கிராமங்களில் கொஞ்சிப் பேசும் பிஞ்சு உள்ளங்களிலே தோன்றுவதைக் காணலாம்.

"புங்கஇலை பிச்சிப்பூ எங்கிருக்குது
பொன்னப்பன் தோட்டத்துலே பூத்திருக்கிறது.
அங்கேபோயி கண்ணாமூச்சி விளையாடலாம்
அய்யய்யோ தோட்டத்துல பூச்சியிருக்கும்
பூச்சிக்கு எங்கிட்ட மருந்திருக்குது
பூத்தொடுத்து சாமிக்கிப் போட்டிடலாமே.''

நாடோடிப் பாடல்களை இன்று உலகத்தின் பல நாடுகளில் பல்கலைக் கழகங்களில் பாடமாகவும் ஆய்வுப் பொருளாகவும் வைத்துள்ளார்கள். இன்றைய நாகரிக மோகத்தில் தாலாட்டுப் பாடல்கள் பாடுவது தாய்மார்களால் மறக்கப்பட்டு வருகிறது. இழவு வீடுகளில் ஒப்பாரிப் பாடல்கள் பாடுவது அனேகமாய் நின்றுபோய்விட்டது.

சேகரித்து அச்சாக்காமல் இன்னும் நம் கிராமங்களில் ஆயிரக்கணக்கான பாடல்கள் வழங்கி வருகின்றன. மெல்ல மெல்ல மறைந்தும் வருகின்றன. இவ்வரிய இலக்கியச் செல்வத்தை இழந்துவிடாமல் இலக்கிய ஆர்வமுள்ள இளைஞர்கள் முன்வந்து இவற்றைச் சேகரித்துத் தொகுத்து ஆய்வு முறையில் நூலாக வெளியிட முயல வேண்டும். வெளியீட்டாளர்களும் இதற்குத் துணை செய்ய வேண்டும். இலக்கிய மன்றங்களும், பல்கலைக் கழகங்களும் இன்னும் தீவிரமாக இப்பணியில் பாடுபட வேண்டும்.

# தமிழ் இலக்கியங்களில் நீதிமுறை

முனைவர் வி.ஆர்.எஸ். சம்பத்



தொல்காப்பியம், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க்கணக்கு, ஐம்பெருங்காப்பியங்கள், ஐஞ்சிறுங்காப்பியங்கள், சைவ மற்றும் வைணவ பக்தி இலக்கியங்கள், சிற்றிலக்கியங்கள், சித்தர் பாடல்கள், தல புராணங்கள் என்று பதினெட்டாம் நூற்றாண்டு வரையிலான தமிழ் இலக்கியப் பரப்பு மிகவும் விரிந்ததாகும். இந்த நீண்ட நெடிய காலப் பகுதியில் தோன்றி வளர்ந்துள்ள, பல்வேறு வகைப்பட்ட இலக்கியங்களுக் குள்ளும், தமிழ்நாட்டு நீதி நிர்வாக முறைகள் குறித்த விரிவான மற்றும் சுவையான பல அகச் சான்றுகள் காணப்படுகின்றன. அவை அனைத்தையும் தொகுத்துக் காட்டுவது, இங்கு நோக்கமன்று. மாறாக மிகவும் குறிப்பிடத்தக்க சிலவற்றை மட்டும் எடுத்துக்காட்டுவதும், அவற்றின் வழியாகத் தமிழ் இலக்கியங்கள் காட்டும் நீதிமுறை குறித்துச் சில கருத்துகளைப் பகிர்ந்து கொள்வதும் இக்கட்டுரையின் நோக்கங்களாகும்.

**அவை – மன்றம் – பொதியில் – அம்பலம்**

பழந்தமிழகத்தில் நீதி வழங்குவதற்காக ஏற்பட்டிருந்த இடம், 'அவை' என்ற பெயரால் கூறப்பட்டதாக அறிகிறோம். அவை என்ற சொல்லுக்கு, 'மாந்தர் கூட்டம், அறிஞர் கூட்டம், சபா மண்டபம், புலவர், நாடக அரங்கு, பன்மைச்சுட்டு, அப்பொருள்கள்' என்று தமிழ் – தமிழ் அகர முதலி பொருளுரைக்கின்றது. இந்த அளவிற்குப் பரந்து விரிந்த பொருளுடைய 'அவை' குறித்துப் பழந்தமிழ் இலக்கியப் பனுவல்களில் ஏராளமான செய்திகள் காணப்படுகின்றன.

தமிழ்நாட்டில் நீதி வழங்குவதற்குத் தொன்றுதொட்டு 'அவை' என்னும் ஓர் அமைப்பு இருந்தது என்பதற்குத் தொல்காப்பியம் சான்று கூறுகின்றது.

**"எட்டு வகை நுதலிய அவையத்தானும்"**

என்பது தொல்காப்பியப் பொருளதிகார நூற்பாவாகும். இந்த நூற்பாவின் மூலம், அவையைச் சிறப்புச் செய்யும் அவையத்தாருக்கு உரிய எட்டுவகைப் பண்புகள், தொல்காப்பியரால் குறிப்புணர்த்தப்படுகின்றன. இவ்வெட்டு வகைப் பண்புகளை நச்சினார்க்கினியர், "குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம், வாய்மை, தூய்மை, நடுவு நிலைமை, அழுக்காறின்மை, அவாவின்மை" என்று சிறப்பாக விளக்கி 'உரை' வரைந்துள்ளார். இந்த எட்டு வகை நுதலிய அவையத்தார்களின் இயல்புகளை,

**"நவை நீங்க நடுவு கூறும்**
**அவை மாந்தர் இயல்பு உரைத்தன்று"**

என்று புறப்பொருள் வெண்பாமாலையும் சுட்டுவது அறிதற்குரியதாகும். இவ்வாறு புறப்பொருள் வெண்பா மாலை சுட்டுவதற்கேற்ப, 'குற்றம் நீங்குமாறு நடுவுநிலையில் நின்று நீதி கூறும் அவையத்தார்' கூடும் இடங்கள் யாவும், பழந்தமிழ் இலக்கியங்களில் 'அவை' என்ற பொதுப் பெயரால் மட்டும் வழங்கப்படவில்லை. பழந்தமிழகத்தில் அறம் கூறும் இடங்கள் மன்றம், பொதியில், அம்பலம் என்னும் சொற்களாலும் குறிக்கப் பெற்றுள்ளமையைக் காண முடிகின்றது.

மேற்குறித்த மூன்று சொற்களும், மக்கள் கூடும் பொதுவான இடங்களையே குறிப்பனவாகும். இருப்பினும் கருத்து வேறுபட்டு உரைப்பாரும் உள்ளனர். மன்றம், பொதியில், அம்பலம் ஆகியன ஊர் நடுவில் அமைந்த இடங்களென்று ஒரு கருத்தும், அம்பலமும் பொதியிலும் ஒரு மாளிகையில் அமைந்திருந்தன என்று மற்றுமொரு கருத்தும் இருந்ததாகக் கே.கே. பிள்ளை சுட்டுகிறார்.

அக்கருத்து வேறுபாடு குறித்து அவர், "ஊர்களில் கூடின கூட்டத்திற்கு மன்றம், பொதியில், அம்பலம், அவை என்னும் பெயர்கள் வழங்கியிருந்தனவாகப் பண்டையத்தமிழ் இலக்கியங்களிலிருந்து அறிகிறோம். இவை யாவும் ஊர்க் கூட்டத்தின் பெயர்களெனவே கருதலாம். திருமுருகாற்றுப்படையில் மட்டும் மன்றமும் அம்பலமும் வேறுபடுத்திக் கூறப்பட்டுள்ளன. – அதன் உரையாசிரியர் பின்வருமாறு கூறியுள்ளார்: மன்றம் என்பது ஊர் நடுவிலுள்ள மக்கள் கூடிய இடம் எனவும், அம்பலம், பொதியில் என்னும் இரண்டும் ஒரு சிறு மாளிகையைக் குறிப்பிட்டன என்றும், அதன் நடுவில் ஒரு பீடம் இருந்ததாகவும் கருதுகின்றார். இதையொட்டிப் பலர் பல ஊகங்களை வெளியிட்டு உள்ளனர்" – என்று இரு வேறு கருத்துகள் இருந்தமையைத் தெளிவுபடுத்துகின்றார்.

எனினும் விசாரணைக்கு எடுக்கப்படும் வழக்கின் நிகழ்வுகளைக் காண்பதற்கு ஊர் மக்கள் அனைவரும் திரண்டு வருவதே மரபானதால், அவ் வழக்குசார் கூட்டங்கள் தனி மாளிகைகளிலோ, நான்கு சுவர்களுக்கு நடுவிலோ கூடியிருக்க வாய்ப்பில்லை என்றே கருத வேண்டியுள்ளது. எனவே மன்றம், பொதியில், அம்பலம் என்னும் மூன்றும் ஊருக்குப் பொதுவான இடங்களில் மக்கள் அனைவரும் காணும் வகையில் கூடிச் சிறப்பாக நடைபெற்றன என்று கொள்வதே பொருத்தமுடையது எனலாம்.

பொதுவாக மரத்தடியில் கூடிய நீதி அமைப்புகள் 'மன்றம்' என்ற பெயராலும், பிற பொது இடங்களில் கூடியவை பொதியில் என்ற பெயராலும் வழங்கப்பட்டு வந்துள்ளமையைப் பழந்தமிழ் இலக்கியங்களில் காண முடிவதாகக் கூறலாம். அவ்வாறு கூறும்போதும், ஒரு பொது இடத்தில் மக்கள் கூடும் வழக்கம், எவ்வாறு ஏன் முதலில் ஏற்பட்டது என்று கேள்வி எழலாம். அந்தக் கேள்விக்குத் திடடவட்டமான விடையென்று ஒன்றினைச் சொல்லிவிட முடியுமென்று தோன்றவில்லை. என்றபோதிலும் ஒவ்வொரு சிற்றூரிலும் ஆடவர், மகளிர், சிறார் அனைவரும் ஒரு பொது இடத்தில் பொழுதுபோக்கும் விளையாட்டுகள் உட்படப் பல்வேறு செயல்களுக்காகப் பெரியதொரு மர நிழலில் கூடியதாகக் கருதலாம். அப்படி அம்மக்கள் கூடியதற்குச் சில அரசியல் நோக்கங்கள் கூடக் காரணங்களாக இருந்திருக்கலாம். ஆனாலும் அம்மரத்தடி ஒன்றுகூடல் முறையின் ஒழுங்கமைவான வடிவமே நீதித் துறை அமைப்புகளின் தோற்றமாதல் வேண்டுமெனலாம்.

பிற்காலச் சோழர்களின் காலத்தில் புகழ் பெற்று விளங்கிய ஊராட்சிமன்ற நீதிமுறையின் முன்னோடிகளாகச் சங்க காலத்தில் தோன்றிய மரத்தடி நீதிமன்றங்களைக் கூறலாம். அந்த மரத்தடி நீதிமன்றங்கள், எந்த மரத்தின் அடியில் அமைந்திருந்தனவோ, அந்த மரத்தினுடைய பெயராலேயே விளிக்கப்பட்டு வந்ததற்குச் சான்றுகள் பல காணப் படுகின்றன.

"**மன்ற வேம்பின்**" என்றும்,

"**மன்றப் பலவின்**" என்றும்,

"**மன்ற விளவின்**" என்றும்,

புறநானூற்றில் 'மன்றம்' குறித்துச் சில தொடர்கள் பயின்று வருகின்றன. அத்தொடர்களிலிருந்து வேப்ப மரம், பலா மரம், விளா மரம் ஆகியவற்றின் கீழ், சங்க கால மன்றங்கள் செயல்பட்டமையைத் தெளியலாம்.

பொதியில் என்னும் பெயரில், அறம் வழங்கும் அமைப்புகள் இருந்தன என்பதற்கான சான்றுகளாகப் பின்வரும் பாடல் வரிகளைக் கூறலாம்.

"**அவையிருந்த பெரும் பொதியில்**"

என்று பத்துப்பாட்டு நூலான மதுரைக்காஞ்சியும்,

"**முன்னூர்ப் பொதியில்**"

என்று எட்டுத்தொகை நூலான புறநானூறும், பொதியில் என்னும் நீதி கூறும் அமைப்புக் குறித்துக் கூறுகின்றன. மணிமேகலையிலும்,

"**மாதவர் இடங்களும் மன்றமும் பொதியிலும்**"

என்றொரு தொடர் காணப்படுகின்றது. மேலும்,

"**ஆயிழை இருந்த அம்பலம் எய்தி**" என்றும்,

"**அம்பலம் அணைந்து**" என்றும்,

மணிமேகலையில் சில தொடர்கள் காணப்படு கின்றன.

மேற்காட்டப்பட்ட சான்றுகளின் மூலம் மன்றம், பொதியில் என்ற சொற்களைப் போல் அம்பலம் என்னும் சொல்லும், பொதுவான இடத்தைக் குறிக்கும் சொல்லாகவே, தமிழ் இலக்கியங்களில் பயன்படுத்தப்பட்டு வந்துள்ளதைத் தெளிவாக அறிய முடிகிறது.

அம்பலம் மற்றும் அம்பலக்காரன் என்ற சொற்களுக்கு முறையே, 'பலர் கூடும் வெளியிடம், ஊர்ச்சபை, கழகம், தில்லையம்பலம், அம்பலகாரன்' என்றும், 'ஊர்த் தலைவன், ஊர்ச்சபைத் தலைவன்' என்றும் தமிழ் – தமிழ் அகர முதலி பொருளுரைக்கின்றது. எனவே அம்பலம் என்பது பொது இடத்தைக் குறிக்கும் சொல் என்று எளிதாகத் தெளியலாம்.

பொதியில், மன்றம் என்னும் சொற்கள்போல் 'அம்பலம்' என்ற சொல்லால் குறிக்கப்படும் பொதுவிடமும், நீதிமன்றத்தைக் குறித்து நிற்கிறதெனலாம்.

**அவையும், அறங்கூறவையமும்**

பழந்தமிழகத்தில் அறம் வழங்கும் இருவேறு நீதி அமைப்புகளாக அவையும், அறம்கூறும் அவையமும் இருந்துள்ளன. 'அவை' என்ற சொல்லால் ஊர்ப்புறங்களில் இருந்த நீதிமன்றங்கள் குறிக்கப்பட, நகர்ப்புறங்களிலும் நாட்டின் தலைநகரங்களிலும் இருந்த நீதிமன்றங்கள் முறையே அவையம் மற்றும் அறங்கூறவையம் என்ற சொற்களால் குறிப்பிடப் பெற்றதாகக் கருதலாம். அவையம் என்ற சொல்லுக்கு "அறிஞர் கூட்டம், நியாயம் உரைக்கும் சபையோர், அவைக்களம்" என்னும் பொருள்கள் கூறப் பெறுகின்றன.

அவை என்னும் ஊர்ப்புற நீதி அமைப்பு, 'சபை' என்ற வடமொழிப் பெயராலும், பிற்காலத்தில் வழங்கப்பட்டதாக ஆய்வறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். வடமொழியைப் பெரிதும் விரும்பிய பல்லவ மன்னர்கள் காலத்தில், அம்மாற்றம்

நிகழ்ந்துள்ளதாக அறிய முடிகின்றது. தமிழரின் மொழியிலும், பண்பாட்டிலும் வடமொழி ஆதிக்கத்தைப் பல்லவர்கள் புகுத்தியதாகக் கருதுவதற்கு இடமுள்ளது. அதன் காரணமாகவே 'ஊர் அவை' என்பது 'கிராம சபை' என்று பெயர் மாற்றம் பெற்றதாகவும் எண்ண வேண்டியுள்ளது.

பெயரளவில் வேறுபாடு இருப்பினும், செயலளவில் ஊரவையின் அமைப்பிலும், பணிகளிலும் ஆகப் பெரிய மாறுதல்களேதும் நிகழ்ந்து விடவில்லை. பழந்தமிழகத்தின் ஊர்ப்புறங்களில் நிலை பெற்றிருந்த கிராம அவைகளே சபைகளானது குறித்துச் சதாசிவப் பண்டாரத்தார், "பல்லவர் ஆட்சிக் காலங்களில் கிராம சபைகள் தோன்றுவதற்கு முதற்காரணமாக அவைகளே இருந்தன என்பது திண்ணம்" என்று கூறும் கருத்து, ஆட்சி மாற்றத்தால் பெயர் மாற்றம் விளைந்தது என்பதற்குரிய, மிக வலுவான வாதமாகத் திகழ்கின்றது.

பழந்தமிழ் இலக்கியங்களில் 'அவை' பற்றிய குறிப்புகள் மிகுதியாகக் காணப்படுகின்றன.

**"முறையுடை அரசன் செங்கோல் அவை"**

என்று குறுந்தொகை குறிப்பிடுகின்றது.

பாண்டியர்களின் தலைநகரமான மதுரையில் அமைந்திருந்த அவையினை,

**"சிறந்த கொள்கை அறங்கூறவையம்"**

என்று மதுரைக் காஞ்சி மதிப்புரைக்கின்றது.

**"அரைசுகோல் கோடினும் அறம் கூறும்அவையத்து**
**உரைநூல் கோடி ஒருதிறம் பற்றினும்"**

என்று சிலப்பதிகாரம் சிறப்பிக்கின்றது. மேலும் சோழரின் உறந்தை நகரில் அமைந்திருந்த அவையம் என்னும் அறம் கூறும் அமைப்பினைப் போற்றி,

**"மறங்கெழு சோழர் உறந்தை அவையத்து**
**அறம் நின்று நிலையிற்று"**

என்று புறநானூறு புகழ்ந்துரைக்கின்றது.

சங்க காலத்து நீதிமன்றங்கள், தற்போது காணப்படுதல் போன்று நிலையான கட்டடங்களாக அமைந்திருக்கவில்லை என்று கூறலாம். எனினும் மன்னன் வீற்றிருந்த அவை, நீதி வழங்கவும் பயன்படுத்தப்பட்டதற்குச் சான்றுகள் உள்ளன.

தலைநகரில் அரசன் அரண்மனையில் அரசவைகள் இயங்கின. அரசவைகள் இயங்கிய இடங்கள், அவைக் களங்கள் எனப்பட்டன. அதற்கு மாறாகப் பொது இடங்களான குளக்கரை, ஆற்று ஓரம், மரத்தடி, கோயில் ஆகிய பகுதிகளில் ஊரவைகள் இயங்கியதாகத் தெரிகின்றது.

அறம் கூறும் அவை அல்லது ஊர்ப் பேரவை அல்லது மகாசபை என்று பல்வேறு பெயர்களால் கூறப்படும் நீதிமன்ற அவைகளின் அவையத்தாரை, அப்பணியில் மன்னனே அமர்த்தினான் என்றும், அறம் வழங்கும் அவையத்தார் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் என்றும், ஆய்வுலகில் இரு வேறு கருத்துகள் நிலவுகின்றன. அறம் கூறுகின்ற அவையத்தார், நாடாளும் மன்னனாலும் நியமிக்கப் பெற்றார்கள் என்பதற்குப் பின்வரும் புறநானூற்றுப் பாடலைச் சான்றாகக் காட்டலாம்.

**"அறன்நிலை திரியா அன்பின் அவையத்துத்**
**திறனில் ஒருவனை நாட்டி முறைதிரிந்து**
**மெலிகோல் செய்தேன் ஆகுக"**

என்று ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் என்னும் மன்னன், தன் பகைவர்களுக்கு வஞ்சினமுரைக்கும் புறநானூற்றுப் பாடலிலிருந்து, அறம் கூறும் அவையத்திற்குத் தகுதியான உறுப்பினர்களை நியமிக்கும் அதிகாரம், அரசனிடம் இருந்தது என்பதைத் தெளிவாக அறியலாம். அத்துடன் அறம் கூறும் அவையத்தில் அறநெறியை நன்கறிந்த ஒருவரை அமர்த்துவதே வழி வழி வந்த மரபு என்பதையும், அறத்தின் திறப்பாட்டை அறியா ஒருவனை அவையத்தான் ஆக்குவது அரசனின் பெருமைக்குத் தாழ்வு என்பதையும் அறியலாம்.

என்ற போதிலும், அறம் கூறும் அவையில் அமரும் அறிஞர்கள், நாட்டு மக்களால் தேர்ந்தெடுக்கப் பட்டவர்களே என்று கே.கே. பிள்ளை கூறுவதும் இங்குக் கருதத் தக்கதாகும். அறம் கூறும் அவை உறுப்பினர்களின் தேர்வு முறை குறித்துக் கே.கே. பிள்ளை,

"ஊராண்மையும் நாட்டாண்மையும் குழுக்கள்பால் ஒப்படைக்கப்பட்டிருந்தன. இக்குழுக்களின் உறுப்பினர்கள் குடிமக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டனர். உடன்பாடு தெரிவிக்கும் தகுதியுடையவர்கள் பலரும், தத்தமக்கு விருப்பமானவர்களின் பெயர்களை ஓலைகளில் எழுதி அவற்றைக் குடங்களில் இடுவார்கள். ஓலைகள் போட்டு முடிந்தவுடனே குடங்களை மூடி அரசாங்க இலச்சினைகளை அவற்றின் மேல் பொறிப்பார்கள். ஓலைகளை எண்ணத் தொடங்கும்போது, முதலில் இலச்சினைகளை நீக்கிப் பிறகு கயிற்றை அவிழ்த்து, மூடியைத் திறந்து குடத்துக்குள்ளிருந்து ஆவணமாக்கள் ஓலைகளை வெளியில் எடுப்பார்கள். அதிக ஓலைகளைப் பெற்றவர்கள் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றனர். இவ்வோலைகட்குக் குடவோலைகள் என்று பெயர்" என்று குறிப்பிடுகின்றார். அக்கருத்தை உறுதி செய்யும் வலுவான சான்றாக,

**"கயிறு பிணி குழிசியோலை கொண்மார்**
**பொறி கண்டழிக்கும் ஆவண மாக்களின்"**

என்னும் அகநானூற்றுப் பாடல் வரிகளைக் காட்டலாம்.

எனவே அறங்கூறும் அவையத்தின் உறுப்பினர்களை மன்னன் நியமிப்பதோடு, மக்கள் தேர்ந்தெடுக்கும் முறையும் சங்க காலச் சமுதாயத்தில் நிலவியதாகக் கொள்ளலாம்.

### அறமும் சட்டமும்

பழங்காலத் தமிழ்ப் புலவர்கள், அறம் என்றவொரு சொல்லாலேயே, "நீதிமுறை" என்னும் பொருளையும் உணர்த்தியுள்ளதாகக் கூறலாம்.

**"அறந்துஞ்சு செங்கோல்"**

**"அறம்புரி செங்கோல்"**

என்றெல்லாம் வரும் இலக்கியத் தொடர்களில், அறம் என்ற சொல்லால் அரசனின் நீதி வழுவாப் பண்பு குறிப்புணர்த்தப் பெற்றுள்ளதாகக் கூறலாம்.

அந்நாள்களில் பயன்படுத்தப்பெற்ற 'அறம்' என்ற சொல்லிற்கும், இந்நாள்களில் வழங்கப்படும் 'சட்டம்', 'நீதி' என்ற சொற்களுக்கும் இடையே சில ஒப்புமைக் கூறுகள் உள்ளமையைக் காண முடிகின்றது.

**"நிலம்புடை பெயர்வ தாயினும் ஒருவன்**
**செய்தி கொன்றோர்க்கு உய்தி இல்லென**
**அறம் பாடின்றே ஆயிழை கணவ"**

என்னும் புறநானூற்றுப் பாடலில் வரும் அறம் என்ற சொல், சட்டக் கருத்துகளின் முழுத் தொகுப்பான அறநூலைக் குறிப்பதாகக் கருதலாம். சில இடங்களில் அறம் என்னும் சொல், இயற்கை நீதியைக் குறிப்பதாகவும் பயன்படுத்தப் பெற்றுள்ளது. எடுத்துக்காட்டாகச் சிலப்பதிகாரப் பதிகத்தில்,

**"அரசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்று ஆவதூஉம்"**

என்று வரும் தொடரில், அறம் என்பது தீயோரை அழிக்கும் ஆற்றல் கொண்ட இயற்கை நீதி என்னும் பொருளில் ஆளப் பெற்றிருப்பதாகக் கூறலாம்.

இதுகாறும் கூறியவற்றிலிருந்து 'அறம்' என்ற சொல் குறித்து நின்ற பொருள்கள் யாவும், ஏதோ ஒரு வகையில் சட்டத்தோடும் நீதியோடும் ஆழ்ந்த தொடர்புற்றிருப்பதைத் தெளியலாம்.

### அவையத்தார் ஓலை

பழந்தமிழகத்தில் மரபுரிமையான முடியரசு சார்ந்த ஆட்சி முறையே வழக்கில் இருந்தது. எனவே அரசுரிமைப் போராட்டக் குறிப்புகளும், உள்நாட்டு நிலைமைகளும், வீரத்திலும் காதலிலும் மூழ்கியிருந்த மக்கள் மற்றும் அவர்தம் வாழ்நிலைச் சிக்கல்களுமே, அக்கால இலக்கியங்களில் முக்கிய இடம் பிடித்திருந்தன.

கலித்தொகையில் காணப்படும் பொருந்தாக் காமப் பாடலொன்று குறித்து எண்ணிப் பார்ப்பது, இந்நோக்கில் மிகுந்த பயனுடையதாக இருக்கும் என்று தோன்றுகிறது. சங்க காலத்தில் அறங்கூறும் அவையத்தார் கூடித் தங்கள் முன் கொண்டு வரப்படும் வழக்குகளை விசாரித்து, அவற்றின் மெய்ம்மை பொய்மைகளைக் கண்டறிந்து வழங்கிய தீர்ப்புகள் எழுத்து வடிவில் பாதுகாத்து வைக்கப்படும் மரபும் தமிழ் நாட்டில் இருந்தது என்பதற்குச் சான்று தருவதாகக் கீழ்வரும் பாடல் அமைந்திருக்கின்றது.

**"தண்டாத் தகடு உருவ! வேறாகக் காவின் கீழ்ப்**
**போதர்; அகடு ஆரப் புல்லி முயங்குவேம்**
**துகள் தபு காட்சி அவையத்தார் ஓலை**
**முகடு காப்பு யாத்து விட்டாங்கு"**

என்னும் பாடல் வரிகளிலிருந்து எழுத்து வடிவில் தீர்ப்பைப் பாதுகாக்கும் அவையத்தார் ஓலை என்பதைப் பற்றித் தெளிவாக அறியமுடிகின்றது.

அக் கலித்தொகைப் பாடலில் வருகின்ற தலைவி, தான் தலைவனோடு இறுகப் புல்லிக் கிடக்கும் தன்மைக்கு உவமை கூறுமிடத்துக் குற்றமற்ற அறிவினையுடைய அவையோர், திரட்சி பொருந்திய ஓலையின் தலையைக் கட்டி அதன் தலையிலே அரக்கு இலச்சினை பொறித்து விட்டாற்போல என்று குறிப்பிடுகின்றாள்.

"எழுதப்பட்ட அரசியல் சட்டங்களோ (Constitution) மேற்கொள்ள வேண்டி இயற்றப்பட்ட பிற சட்டங்களோ (Legislations) இல்லாத நிலையிலும், அறத்தின் வலிவும் கனிவும் புரிந்து, தமிழகத்தையே அறம் விளை நிலமாகப் பண்படுத்திச் சங்ககால மன்னர்கள் ஆட்சி செய்து வந்திருப்பது பெருமைக்குரியதாகும்" என்று கூறுவர்.

### அறமும் முறைமையும்

தமிழில் அறம் என்ற சொல், வெறும் அறநூல்களையும் அவற்றில் விதிக்கப்பட்ட கட்டுப்பாடுகளையும் மட்டும் குறிப்பதாகப் பொருள் தருவதில்லை. அவற்றோடு, வழக்கில் செம்மையடைந்த மரபு நெறிகளையும் அறம் என்ற சொல், குறித்து நிற்பதாகக் கூறலாம். அறநெறியின் வழிப்பட்ட சட்டத்தைத் தெய்விக ஆணையாகவும் இயற்கை நீதியாகவும் எண்ணும் போக்குச் சங்ககாலத்தில் இருந்திருக்க வேண்டும் எனக் கருதப்படுகின்றது.

எழுதப்படாத சட்டங்களாக வாழ்வியல் நெறிகள் உள்ளமை குறித்து,

**"அன்னை என்னை என்றலும் உளவே**
**தொன்னெறி முறைமை சொல்லினும் எழுத்தினும்**
**தோன்றா மரபின என்மனார் புலவர்"**

என்று தொல்காப்பியம் சுட்டுகிறது. இந்நூற்பாவில் வழக்கில் செம்மையடைந்த எழுதப்படாத மரபு நெறிகள், 'முறைமை' என்னும் ஒரு சொல்லால் குறிக்கப்பட்டிருப்பது, கவனத்திற்கு உரியதாகும். மேலும் தொல்காப்பியத்திலேயே பல்வேறு

இடங்களிலும், 'என்மனார் புலவர்' என்ற சொல்லாட்சி, திரும்பத் திரும்பக் காணப்படுகின்றது. அச்சொல்லாட்சியின் மூலம் மரபு நெறிகளின் தொடர்ச்சியைக் குறிப்புணர்ந்து கொள்ள முடிவதாகக் கூறலாம்.

எனவே வழிவழியாகத் தமிழரின் வாழ்வியலில் தொடர்ந்து வரும் அறநெறிகள், அக்கால மக்களால் மதித்துப் போற்றப்பட்டுள்ளன என்று துணியலாம். அவை எழுதப் பெற்றும், எழுதப் பெறாமலும் அக்கால வழக்கிலிருந்தது தெளிவு. எழுதப்பட்டபோது, அவ்வற நெறிகளின் தொகுப்பு, 'நூல்' என்ற பெயரால் குறிக்கப்பட்டிருந்திருக்க வேண்டும்.

**"பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்**
**தொகுத்தவற்றுள் எல்லாம் தலை"**

என்னும் குறட்பாவிலிருந்து, நூல் என்ற பெயரால், அறநெறிகளின் தொகுப்பு குறிக்கப்பட்டிருப்பதைத் தெளிய முடிகின்றது. அந்த நூலே அறநூல் என்பது நுணுகிப் புரிந்து கொள்ள வேண்டியதாகும். அத்தகையதான அறநூல்களில் அல்லது நீதி கூறும் இலக்கியங்களில் கூறப்பட்டிருக்கும் கருத்துகளை அடிப்படையாகக் கொண்டே, அந்நாள்களில் அரசன், குற்றத் தீர்ப்புக் கூறியிருந்திருக்கக் கூடும்.

அறநூலும் நீதிநூலும் கூறும் நல்ல நெறிகளைப் பின்பற்றி நீதி வழங்குவதை முறையென்ற சொல்லால் பழந்தமிழர் வழங்கினர். அது குறித்துத் திருவள்ளுவர்,

**"ஓர்ந்து கண்ணோடாது இறைபுரிந்து யார்மாட்டும்**
**தேர்ந்துசெய் வஃதே முறை"**

என்று அழகாக விளக்குகின்றார். முறை என்பதற்கு,

**"முறை : அறநூலும் நீதிநூலும் சொல்லும் நெறி"**

என்று பரிமேலழகர் கூறும் நுண்பொருள் இங்கு எண்ணிப் பார்ப்பதற்கு உரியதாகும்.

இருவர் கூறும் முறையீட்டையும் கேட்டறிந்து, செல்வர்க்கும் வறியவர்க்கும் நடுவு நிலைமையினின்று மாறுபடாது நின்று மன்னன் கூறும் தீர்ப்பு, அறநூல் கோட்பாடுகளுக்குப் பொருத்தமான வகையினில், முறை தெரிந்து அருளப்பட்டதாக இருக்க வேண்டும் என்று பழமொழி நானூற்றுப் பாடல் ஒன்று கூறுகின்றது.

### அறநெறி முதற்றே அரசின் கொற்றம்

நாட்டு மக்களுக்கு உண்டாகும் நெருக்கடிகளிலிருந்து அவர்களைப் பாதுகாத்தருளுவது, வேந்தரின் முதற் கடமையாகும். அக்கடமையைச் செய்யும் மன்னனின் தன்னாட்சி முறைமை (Autocracy), கற்றறிந்த மூதறிஞர் களின் அறிவுரைகளால், சங்க காலத்தில் செம்மையுற்றிருந்தது.

தக்க நேரத்தில் அமைச்சரின் உறுதியான தலையீடு, புலவர்கள் மற்றும் சான்றோர்களின் கருத்துகள், அரசனை நல்வழிப்படுத்தின. அரசனை வெறும் தலைவனாக மட்டும் கருதாமல், வழிகாட்டும் மகானாகவும் கண்டு மக்கள் போற்றினர். அது குறித்துப் பழந்தமிழ் இலக்கியங்களில் பற்பலக் குறிப்புகள் காணப்படுகின்றன.

**"நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே**
**மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்"**

என்று மண்ணுலகின் இயக்கத்திற்கு மையமான, எல்லா உயிர்களுக்கும் உயிராய்த் திகழும் முழுமுதற் பொருள் என்று கருதத் தக்க வகையில் மன்னனைப் போற்றிப் புறநானூறு கூறுகின்றது.

**"பகல்செய் மண்டிலம் பாரித்தாங்கு"**

என்று உலகத்து மக்களுக்குள் வேற்றுமை பாராட்டாமல், அனைவரும் ஒன்றென நினைத்துக் கதிரவன் காய்வது போல் அரசனும், குடிமக்கள் அனைவரையும் ஒன்றெனக் கருதித் தக்கவாறு முறை செய்ததாகப் பெரும்பாணாற்றுப் படை குறிப்பிடுகின்றது.

ஆக்கல் மற்றும் அழித்தல் என்னும் ஆற்றல்கள் கொண்டு குடிமக்களின் கண்களாகவும் உயிராகவும் திகழும் பெருவலிமை படைத்த மன்னர்கள் குறித்துப் பெரிய புராணம்,

**"மண்ணில் வாழ்தரு மன்னுயிர்கட்கு எல்லாம்**
**கண்ணும் ஆவியும் ஆம் பெருங்காவலான்"**

என்று சிறப்பிக்கின்றது. அப்பெருங்காவலனைக் காலத்தால் பெரியபுராணத்திற்குப் பல நூற்றாண்டுகள் முற்பட்ட நூலான திருக்குறள்,

**"முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு**
**இறைஎன்று வைக்கப் படும்"**

என்று கூறிக் கடவுளாகவே அறிவித்துப் போற்றுகின்றது. மன்னனால் காப்பாற்றப்படும் மக்களால், அவன் கடவுளாகக் கருதப்படுவது குறித்துத் திருவாய் மொழியிலும்,

**"திருவுடை மன்னரைக் காணில்**
**திருமாலைக் கண்டேனே என்னும்"**

என்றொரு குறிப்புக் காணப்படுகின்றது.

**"கடுஞ்சினத்த கொல்களிறும் கதழ்பரிய கலிமாவும்**
**நெடுங்கொடிய நிமிர்தேரும் நெஞ்சுடைய புகல்**
**மறவருமென**
**நான்குடன் மாண்டது ஆயினும் மாண்ட**
**அறநெறி முதற்றே அரசின் கொற்றம்"**

என்று அறநெறியின் சிறப்பை வலியுறுத்தி புறநானூற்றில் கூறியிருப்பது இங்குக் குறிப்பிடுவதற்குரியதாகும்.

❖

# குறிஞ்சிப் பாட்டு - மலர்கள்

............................ வள்இதழ்
ஒண் செங்காந்தள், ஆம்பல், அனிச்சம்,
தண்கயக் குவளை, குறிஞ்சி, வெட்சி,
செங்கொடுவேரி, தேமா, மணிச்சிகை,
உரிதுநாறு அவிழ்தொத்து உந்தூழ், கூவிளம்,
எரிபுரை எறுழம், சுள்ளி, கூவிரம்,
வடவனம், வாகை, வான்பூங் குடசம்,
எருவை, செருவிளை, மணிப்பூங் கருவிளை,
பயினி, வானி, பல்இணர்க் குரவம்,
பசும்பிடி, வகுளம், பல்இணர்க் காயா,
விரிமலர் ஆவிரை, வேரல், சூரல்,
குரீஇப் பூளை, குறுநறுங் கண்ணி,
குருகிலை, மருதம், விரிபூங் கோங்கம்,
போங்கம், திலகம், தேங்கமழ் பாதிரி,
செருந்தி, அதிரல், பெருந்தண் சண்பகம்,
கரந்தை, குளவி, கடிகமழ் கலிமா,
தில்லை, பாலை, கல்இவர் முல்லை,
குல்லை, பிடவம், சிறுமாரோடம்,
வாழை, வள்ளி, நீள்நறு நெய்தல்,
தாழை, தளவம், முள்தாள் தாமரை,
ஞாழல், மௌவல், நறுந்தண் கொகுடி,
சேடல், செம்மல், சிறு செங்குரலி,
கோடல், கைதை, கொங்குமுதிர் நறு வழை,
காஞ்சி, மணிக்குலைக் கள்கமழ் நெய்தல்,
பாங்கர், மராஅம், பல்பூந் தணக்கம்,
ஈங்கை, இலவம், தூங்குஇணர்க் கொன்றை,
அடும்பு, அமர் ஆத்தி, நெடுங்கொடி அவரை,
பகன்றை, பலாசம், பல்பூம் பிண்டி,
வஞ்சி, பித்திகம், சிந்துவாரம்,
தும்பை, துழாஅய், சுடர்பூந் தோன்றி,
நந்தி, நறவம், நறும் புன்னாகம்,
பாரம், பீரம், பைங் குருக்கத்தி,
ஆரம், காழ்வை, கடிஇரும் புன்னை,
நரந்தம், நாகம், நள்ளிருள்நாறி,
மாஇருங் குருந்தும், வேங்கையும், பிறவும்,
அரக்குவிரித் தன்ன பருஏர்அம் புழகு.... அடி. (61–96)



1. செங்காந்தள்



2. ஆம்பல்



3. அனிச்சம்


4. குவளை


5. குறிஞ்சி


6. வெட்சி


7. செங்கோடுவேரி


8. தேமா


9. மணிச்சிகை (செம்மணி)


10. உந்தூழ் (பெருமூங்கில்)


11. கூவிளம் (வில்வம்)


12. எறுழம்


13. சுள்ளி


14. கூவிரம்


15. வடவனம்



16. வாகை



17. குடசம் (வெட்பாலை)



18. எருவை (கோரை)



19. செருவிளை (காக்கணம், சங்கு)



20. கருவிளை



21. பயினி



22. வானி (ஓமம்)



23. குரவம்



24. பசும்பிடி (இளமுகிழ்)



25. வகுளம் (மகிழம்)



26. காயா



27 ஆவிரை



28. வேரல் (சிறுமூங்கில்)



29. சூரல்



30. பூளை



31. கண்ணி (குன்றிமணி)



32. குருகிலை (முருக்கிலை)



33. மருதம்



34. கோங்கம்



35 .போங்கம்



36. திலகம்



37. பாதிரி



38. செருந்தி



39. அதிரல் (புனலி)



40. சண்பகம்



41. கரந்தை



42. குளவி (காட்டுமல்லிகை)



43. கலிமா



44. தில்லை



45. பாலை



46. முல்லை



47. குல்லை



48. பிடவம்



49. மாரோடம்



50. வாழை



51. வள்ளி



52. நெய்தல்



53. தாழை (தென்னம்பாளை)



54. தளவம்



55. தாமரை



56. ஞாழல்



57. மௌவல்



58. கொகுடி



59. சேடல் (பவளமல்லிகை)



60. செம்மல்



61. செங்குரலி



62. கோடல்



63. கைதை (தாழை)



64. வழை (சுரபுன்னை)



65. காஞ்சி



66. நெய்தல்



67. பாங்கர்



68. மரா (கடம்பு)



69. தணக்கம் (நுணா)



70. ஈங்கை



71. இலவம்



72. கொன்றை



73. அடும்பு



74. ஆத்தி



75. அவரை


76. பகன்றை


77. பலாசம்


78. பிண்டி


79. வஞ்சி


80. பித்திகம்


81. சிந்துவாரம் (நொச்சி)


82. தும்பை


83. துழாய் (துளசி)


84. தோன்றி


85. நந்தி (நந்தியாவட்டம்)


86. நறவம்


87. புன்னாகம்



88. பாரம் (பருத்தி)



89. பீரம் (பீர்க்கு)



90. குருக்கத்தி



91. ஆரம் (சந்தனம்)



92. காழ்வை (அகில்)



93. புன்னை



94. நரந்தம் (நாரத்தம்)



95. நாகம்



96. நள்ளிருள்நாறி (இருவாட்சி)



97. குருந்து (காட்டெலுமிச்சை)



98. வேங்கை



99. புழகு (மலை எருக்கு)

# தொல்காப்பியச் செய்யுளியலில் அசை என்னும் உறுப்பு

அறிஞர் அடிகளாசிரியன்



**தோற்றுவாய்**

தொல்காப்பியச் செய்யுளியலில் செய்யுளுக்கு உறுப்பாகக் கூறியுள்ள "அசை" என்னும் மூன்றாம் உறுப்பைப் பற்றி இக்கட்டுரை எடுத்துரைக்க முற்படுகின்றது.

**மூன்றாவது அசைவகை**

மாத்திரை வகையும் எழுத்தியல் வகையும் உலக வழக்கு, செய்யுள் வழக்கு என்னும் இரண்டிற்கும் பொதுவாகும். அதனால்தான் தொல்காப்பியர் மாத்திரை வகையும், எழுத்தியல் வகையும் மேற்கிளந்தனவே என்று கூறிவிட்டார். அசை முதலியன அவ்வாறின்றிச் செய்யுள் வழக்கிற்கே சிறந்தனவாக இருத்தலின் ஒவ்வொன்றிற்கும் இலக்கணம் கூறத் தொடங்குகிறார். அவற்றுள் அசையிலிருந்தே செய்யுளுக்கு அடிப்படையான ஓசை தொடங்குகிறது. இவ்வசை இயற்றமிழ்ச் செய்யுளுக்கும், செந்துறை என்னும் இசைத் தமிழ்ப் பாடல்கட்கும் வெண்டுறை என்னும் நாடகத் தமிழ்ப் பாடல்கட்கும் உரியது.

அடியார்க்கு நல்லார் சிலப்பதிகார உரையுள் (13.110.112 அடி) மூவகைத் தானம் என்பன எழுத்தும் அசையும் சீரும் எனினும் அமையும். என்னை ? எழுத்தே யசையே சீரே என்றிவை இழுக்கி லவைமூன்றிற்கு மென்ப என்பர். இதனால் பண் தோன்றுவதற்குரிய மூவகைத் தானங்களில் அசையும் ஒன்று என்பது புலனாம்.

இசைநூலுள் அசை என்பது தாள வகையுள் ஒன்றாக ஓதப்பட்டுள்ளது. அதற்கு வடிவு 'எ' அளவு ஒரு மாத்திரை. அதன் தொழில் தாக்கி எழுதல் என்பர். புறப்பொருள் வெண்பா மாலையுள் தும்பைப் படலத்தில் பின்றேர்க் குரவைக்கு எடுத்துக்காட்டான வெண்பா,

> **கிளையாய்ந்து பண்ணிய கேள்வியாழ்ப் பாணும்**
> **வளையா வயவரும் பின்னாக் –கொளையாய்ந்து**
> **அசைவிளங்கும் பாடலோ டாட வருமே**
> **திசைவிளங்கும் தானையான் தேர்.**

என்பதாகும். பின்தேர்க் குரவை என்பது, கருங்கழல் மறவரொடு வெள்வளை விறலியர் பெருந்தகை தேரின் பின் ஆடுவதாகலின் இதற்குரிய பாட்டை அசை விளங்கும் பாடல் என்று கூறுகிறார். பாணும் வயவரும் அசை விளங்கும் பாடலோடு அதற்கேற்ப குரவைக் கூத்தினை ஆடா நிற்ப பெருந்தகை தேர் வரும் என்பர். வெண்பாமாலை உரையாசிரியர் அசை என்பதற்குத் தூக்கு என்பர். அவ்வெண்பா மாலையுள் நீடவும் குறுகவும் நிவப்பவும் தூக்கிப் பாடிய புலவர்க்கு என்னும் கொளுவில் தூக்கிப் பாடிய என்பதற்கு இசையை அளந்து பாடிய புலவர் என்பர். இதனால் அசை என்பதற்குத் தூக்கு என்றும் அளத்தல் என்றும் பொருள் இருத்தலை உணரலாம்.

பெருங்கதை : அசையும் சீரும் அளந்து நொடி போக்கி இசை கொள் பாடலின் இயைந்துடனொழுக (வத்தவக் காண்டம் 5 அடி 5, 6) என்று கூறுதலையுங் காண்க.

இனி இயற்றமிழில் அசை என்னும் சொல்லைக் காரணப் பெயராகக் கொண்டு அசைத்து இசை கோடலின் அசையே (யா.க.வி. எழுத்தோத்து) என்பர்.

அசைத்தல் என்னும் சொல்லினுக்குத் தொடர்ந்து வரும் எழுத்தோசையை நேரசை ஓசை என்னும் தனி ஓசையாகவும் நிரையசை ஓசை என்னும் இணையோசையாகவும் அளந்து பிரித்தல் என்று பொருள் கொள்ள வேண்டும்.

எறும்பொழுங்கு போன்ற எழுத்தின் இசைத் தொடர் வரிசையைக் கருதும் முறையினாற் துணிந்து அளவுப்படி ஒலிக்க வைப்பது அசையாகும் என்னும் பொருளில்.

> **வழுக்கா இயல்வகையின் வாய்மையால் வேறாய்**
> **இழுக்கின் எறும்பொழுங்கே போலும் – எழுத்தின்**
> **இசைத் தொடர்ச்சி மாலையை எண்முறையாற் கண்டித்து**
> **அசைத்திசைய வைப்ப தசை**

என்னும் வெண்பா ஒன்று யாப்பருங்கல விருத்தியில் எடுத்துக்காட்டாக வந்துள்ளது.

சிவஞான முனிவரும் தொல்காப்பிய முதற் சூத்திர விருத்தியுள் எழுத்திற்கு மாத்திரை கோடலும்

அசைத்தலும் சீர்செய்தலும், தளை அறுத்தலும் ஓசை பற்றியல்லது எழுத்துப் பற்றியல்ல என்பர்.

தொல்காப்பியரும் அசையும் சீரும் இசையொடு சேர்த்தி, வகுத்தன ருணர்த்தல் வல்லோராறே என்று கூறியுள்ளார். அசையையும் சீரையும் பொருள் நோக்காது ஓசை ஒன்றினையே நோக்கிப் பிரித்தலை, யாப்பிலக்கண நூலார் வகையுளி என்பர். இதுவரை அசையைப் பற்றிப் பொதுவாகக் கூறினோம். இனி அசை எவ்வாறு வரும் அது எவ்வளவு என்று கூறுவோம்.

பிற்காலத்து யாப்பிலக்கண நூலாரெல்லாம் நேரசை நிரையசை என்று இரண்டே அசை கொண்டனர். ஆனால், தொல்காப்பியர் இயலசை உரியசை என்று அசையை இரண்டு வகையாகக் கூறி, இயலசை நேர் நிரை எனவும் உரியசை நேர்பு நிரைபு எனவும் நான்காக வரும் என்று கூறுகின்றார்.

**அவற்றுள் இயலசை**

குறில் தனித்து வந்தும் நெடில் தனித்து வந்தும் அவை இரண்டும் தனித்தனி ஒற்றடுத்து வந்தும், நேரசை என்று பெயர் பெறும். திவாகர நிகண்டு நேர் என்ற சொல்லிற்குத் தனிமை என்று பொருள் கூறும். உயிர்க் குறிலோ, உயிர்மெய்க் குறிலோ, உயிர் நெடிலோ, உயிர்மெய் நெடிலோ, தனித்தும் ஒற்றடுத்தும் வரின் நேரசையாகும். குறில் இரண்டு இணைந்தும், குறில் நெடில் இணைந்தும், அவ்விரண்டும் தனித்தனி ஒற்றடுத்தும் வரின் நிரையசை என்று பெயர் பெறும். இதற்கு இணையசை என்றும் பெயர் உண்டு. இதனை,

> **குறிலே நெடிலே குறிலிணை குறினெடில்**
> **ஒற்றொடு வருதலொடு மெய்ப்பட நாடி**
> **நேரும் நிரையும் என்றிசிற் பெயரே.**
>
> (தொல். செய். 3)

என்று தொல்காப்பியர் கூறியுள்ளார்.

நேரசை நான்கிற்கும், நிரையசை நான்கிற்கும் இளம்பூரணர் கோழி வேந்தன் என்றும், வெறி சுறா நிறம் குரால் என்றும் எடுத்துக்காட்டு கூறியுள்ளார். இவற்றுள் கோழி வேந்தன் உறையூர்ச் சோழரைக் குறிப்பதாகும். இளம்பூரணர் தாம் செய்த தொல்காப்பிய உரையுள் பலவிடங்களில் சோழநாடு உறையூர் சோழர் இவர்களைச் சிறப்பாகக் குறிப்பிட்டுள்ளார். சொல்லதிகாரத்தே

| | | |
|---|---|---|
| நாடெனப்படுவது சோணாடு | – | 162 |
| சோணாடு | – | 16 |
| சோழநாடு | – | 16 |
| ஊரென்று சொல்லப்படுவது உறையூர் | – | 162 |
| சாத்தா உறையூர்க்குச் செல்லாயோ | – | 14 |
| சோழன்; சோழ | – | 54 |
| சோழன் நலங்கிள்ளி | – | 31 |
| வடுகரசர்க்குச் சிறந்தார் சோழிய அரசர் | – | 58 |
| வெண்ணுக்கரை எழுத்ததிகாரம் | – | 307 |

என்ற எடுத்துக்காட்டுகளை அவர் உரையிற் காணலாம். குரால் என்ற ஊரொன்று தென்னார்க்காடு மாவட்டத்தில் உள்ளது.

**உரியசை**

மேற்சொல்லப்பட்ட நேர், நிரை என்னும் இரண்டசைகளும் குற்றியலுகரத்துடனாவது முற்றியலுகரத் துடனாவது பொருந்தி வரின் நேர்பு நிரைபு என்னும் உரியசையாகக் கூறப் பெறும்.

அங்ஙனம் கொள்ளும்பொழுது தனிக் குற்றெழுத்தொடு பொருந்தின உகரம் வரின் அதனை நேர்பு என்னும் அசையாகக் கொள்ளாமல் நிரை என்னும் இயலசையாகவே கொள்ளப்படும் என்பர்.

> **இருவகை உகரமோ டியைந்தவை வரினே**
> **நேர்பும் நிரைபும் ஆகும் என்ப**
> **குறிலிணை உகரம் அல்வழி யான.**
>
> (செய்யுளியல் 4)

இந்நூற்பாவுரையுள் பேராசிரியர் இயைந்து என்றான். இருவகை உகரமும் இருபிளவு படாது ஒன்றாகி வரல் வேண்டும், அங்ஙனம் அசையாங்கால் என்றற்கு என்பர்.

இந்நூற்பாவுரையில் இளம்பூரணர் "அஃதேல் நேர்அசை நிரையசை யெனக் காக்கைப் பாடினியார் முதலாகிய ஒரு சாராசிரியர் கொண்டிலாரெனின் அவர் (நேர்பு அசை நிரைபு அசைகளை) அதனை முடிய நிறுத்தாது வெண்பா ஈற்றின் கண் (அவர் கருத்துப்படி) வந்த குற்றுகர நேரியற் சீரைத் தேமா புளிமா என்னும் உதாரணத்தால் ஓசையூட்டின், செப்பலோசை குன்றுமென் றஞ்சிக் காசு, பிறப்பு என உதாரணம் வேறு காட்டியமையானும், சீரும் தளையும் கெடும்வழி குற்றியலுகரம் அலகு பெறாது என்றமையானும், வெண்பா ஈற்றினும் முற்றுகரமும் சிறுபான்மை வருமென உடன்பட்டமையானும் நேர்பு அசை, நிரைபு அசை என்று வருதல் வலிவுடைத்தெனக் கொள்க என்பர்.

அறிஞர் சொல்லின் ஈற்றில் வரக்கூடிய இருவகை உகரத்தினால் ஓசை அறுதி உண்டாவதைக் கூர்ந்து கருதி அவ்வுகரங்களை வைத்து நேர்பு, நிரைபு என்று அசை வகுத்துக் கொள்ளுதலே நன்றெனக் கூறுவர்.

ஆனால் இங்ஙனம் நேர், நிரை, நேர்பு, நிரைபு என்று அசை கொள்ளும் முறை எளிதாக இல்லை என்று கருதி இக்காலத்துப் பலரும் நேர் நிரை என்று இரண்டசையே கொள்கின்றனர்.

**இளம்பூரணர் :** நேர்பில் குற்றியலுகர வீற்றிற்குக் காது காற்று கன்று என மூன்றும், முற்றியலுகர வீற்றிற்குக் காவு சார்வு கல்லு என மூன்றும் நிரைபில் குற்றியலுகர வீற்றிற்கு வரகு, அரக்கு, மலாடு, பனாட்டு என நான்கும்; முற்றியலுகர வீற்றிற்குக் கதவு, புணர்வு, உருமு, வினாவு என நான்கும் உதாரணமாகக் காட்டுவர்.

நேர்நிரை: நேர்பு நிரைபு என்னும் இவ்வசைகளை இரண்டு நூற்பாவால் உணர்த்திய பின் இயலசை முதலிரண் டேனவை உரியசை என்னும் ஐந்தாவது நூற்பா நேர்நிரை என்னும், இரண்டும் இயலசை என்றும் நேர்பு நிரைபு என்னும் இரண்டும் உரியசை என்றும் வேறு பெயர் பெறும் என்பதை உணர்த்துகிறது.

மேற்காட்டிய நூற்பா வேறு வடிவத்திலும் வழங்கும் போலும். யாப்பருங்கல விருத்தியுரையில் (கழகப் பதிப்பு பக். 445) நேரசையும் நிரையசையும் இயலசை எனப்படும். நேர்பசையும் நிரைபசையும் உரியசை எனப்படும். என்னை ?

"முதலிரண் டியலசை ஏனைய உரியசை என்ப வாகலின்" என்று ஒரு நூற்பா காணப்படுகின்றது. இது மேற்கண்ட தொல்காப்பிய நூற்பாவின் வேறு பாடம் போலும்.

**அசைப் பெயர் தொகுப்பு**

எனவே அசைகள் நேர், நிரை, நேர்பு, நிரைபு எனவும், நேர் தனியசை, நிரைபு இணையசை எனவும் நேர் நிரை இரண்டும் இயலசை நேர்பு நிரைபு இரண்டும் உரியசை எனவும் பெயர் பெறும் என்க.

**அசை மரபுகள்**

**தனிக்குறில் முதலசை மொழிசிதைந் தாகாது**
**ஒற்றெழுத் தியற்றே குற்றிய லிகரம்.**

(செய்யுளியல் 6, 7)

என்னும் இரண்டு நூற்பாக்கள் அசை மரபு சிலவற்றைக் கூறுகின்றன.

1. தொடர் மொழிக்கண் மொழி சிதைந்து தனிக்குறில் நேரசை யாகாது. மொழி சிதைத்தலாவது ஒற்றுமைப் பட்டிருக்கின்றதனைப் பிரித்தல், அஃதாவது புளிமா என்ற வழி நிரை நேராக அலகிடாமல் முதல் நின்றதனை நேரசையாக்க இடை நின்றதும் இறுதி நின்றதும் நிரையசையாதல்.

அவ்வழிப் புளி என்னும் சொல்லைப் பிரிக்க வேண்டுதலின் நிரையசையாகவே கோடல் வேண்டும் என்றவாறு இனி மொழி சிதையாக்கால் நேரசையாம். அது விட்டிசைத்து நிற்றல்.

அ. உ. அறியா அறிவிலிடை மகளே என நேரசையாம்.

2. இருவகை உகரமும், நேர் நிரை என்னும் இயலசையோடு பொருந்தி நேர்பு நிரைபு என்னும் உரியசை ஆயினாற்போல குற்றியலிகரமும் நேர், நிரை என்னும் இயலசையோடு பொருந்தினால் யாதாகும் எனின்? குற்றியலிகரத்தை ஒற்றெழுத்தியல்பிற்றாய் வைத்து இக் குற்றியலிகரம் அசைகளோடு பொருந்தின் ஒற்றடுத்த அசைகளைப் போலக் கொள்க என்பார் ஒற்றெழுத்தியற்றே குற்றியலிகரம் என்றார்.

நச்சினார்க்கினியர் குற்றியலிகரம் ஒற்றெழுத்து இயல்பிற்று அன்று என்று உரை கூறுவர்.

**அசை பற்றிய கருத்து**

யாப்பருங்கலம் 10ஆம் நூற்பாவில் மயக்கற வகுத்த என்ற மிகையால்

1. நேரசையும் நிரையசையும் நேர்பசையும் நிரைபசையுமென நான்கசையும் வேண்டினார் தொல்காப்பியர் முதலிய ஒரு சாராசிரியர்.

2. நேர்பசை நிரைபசை வேண்டாது நேரசை நிரையசைகளை மட்டும் வேண்டி நாலசைப் பொதுச்சீர் வேண்டினார் காக்கைப் பாடினியார் முதலிய ஒரு சாராசிரியர்.

3 .நேர், நிரை, நேர்பு, நிரைபு என்னும் நாலசையும் வேண்டி நாலசைப் பொதுச்சீரும் வேண்டினார் பல்காயனார் முதலிய ஒரு சாராசிரியர்.

4. இந்நூலுடையார் (யாப்பருங்கல நூலாசிரியர்) நேர்பசையும் நிரைபசையும் வேண்டாது நாலசைப் பொதுச்சீரும் வேண்டாமே நடப்பதோர் உபாயங் கண்டாரேனும் காக்கைப் பாடினியார் மதம் பற்றி நாலசைச் சீர் வேண்டினார் என்னும் பகுதியைக் கருதுக (யாப்பருங்கலவிருத்தி, கழகப் பதிப்பு பக். 58)

**அசைக்கும் சீர்க்கும் உரிய செய்தி (வகையுளி)**

**"அசையும் சீரும் இசையொடு சேர்த்தி**
**வகுத்தன ருணர்த்தல் வல்லோ ராறே"**

அசையினையும் சீரினையும் பொருளுக்குத்தக பிரித்துக் கொள்ளாமல் ஓசையோடு சேர்த்திப் பிரித்து உணர்த்துதல் புலனெறி வழக்கில் வல்லோர் நெறியாகும்.

அஃதாவது பொருள் தோன்றச் சொல்லைப் பிரித்தவழி அசையாலும் சீராலும் உண்டாகும் இசை சிதையும். ஆகையால் அவ்வழி ஓசையை நோக்கி, அதன் வழி அசையையும் சீரையும் கொள்க என்றனர்.

மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்.

என்ற திருக்குறளில் ஈற்றில் வாழ்வார் எனப் பொருள் நோக்கிச் சீராயின் ஓசை கெடும். அதன்கண் வாழ் என்பதனை முதல் நின்ற சீரோடு ஒட்டக் கெடாதாம். சீர்வயின் பொருள் பயந்து நிற்பன சிறப்புடைச்சீர், வகையுளி சேர்ந்து நிற்பின் சிறப்பில் சீர் என்பர். (யாப்பருங்கலவிருத்தி, கழகம், பக்கம் 58)

இத்துணையும் கூறப்பட்டவை அசை பற்றிய செய்திகளாம்.

**அசைக் குறிப்பு**

வடமொழியைப் பின்பற்றி விருத்தங்களைப் படைத்துக் கொள்ளும் மலையாள மொழியில் 1. மாத்ரா 2. வர்ணம் அல்லது அட்சரம் (எழுத்து) 3. லகு, குரு (அசை), 4. கணம் (சீர்), 5. பாதம் (அடி), 6. பிராசம் (தொடை), 7. யதி (வகையுளி), 8. தாளம் என்பன. விருத்தம் என்னும் பாட்டிற்கு உறுப்பாகக் கூறப்பட்டுள்ளன.

**லகு, குரு**

தமிழில் வடமொழி முறையைப் பற்றி இலக்கணம் செய்யப் புகுந்த வீரசோழியம் லகு குருவைக் கூறுகின்றது. தமிழில் நேர் நிரை என்பனவற்றிற்கு அசை என்னும் பொதுப் பெயர் இருத்தல் போல லகு குருவிற்கு வழங்கும் பொதுப் பெயரை அவர் கூறவில்லை.

ஏறிய நெட்டெழுத் தேநெடி லொற்றே யெழில்வட நூல்
கூறிய சீர்க்குறி லொற்றே குருவாம் குறிலதுவே
வேறியல் செய்கை இலகுவென் றாகும் வியன் குறிலும்
ஈறிய விற்பிறி தாமொரு காலென் நியம்புவரே.

என்னும் காரிகை லகு குரு இலக்கணத்தைக் கூறுவதாகும்.

தனிக்குறில் ஒற்றினால் ஆனது லகுவாம். தனிக்குறில் ஒற்றடுத்தாலும் நெடில் தனித்து வந்தாலும் நெடில் ஒற்றடுத்து வந்தாலும் குருவென்று கூறப்படும். ஈற்றிலே லகு வரின் குருவாகவும் கருதப்படுவதும் உண்டு.

**லகு, குரு என்ற பெயர்க்காரணம்**

தமிழில் நேர் என்றால் மெலிந்தது, தனித்தது என்று பொருள். அவ்வகையான ஓசையை உடைய அசைக்கு நேரசை என்று பெயர். அதுபோல வடமொழியில் அற்ப ஓசைக்கு லகுவென்றும் அதிக ஓசைக்குக் குருவென்றும் பெயர் வைத்துள்ளனர். அட்டமா சித்தியில் நொய்மையாயிருக்கும் சித்திக்கு லகிமா என்றும் கனமா இருக்கும் சித்திக்குக் கரிமா என்றும் வழங்கும் வழக்கத்தினை ஓர்க. இவை லகுத்வம் குரத்வம் என்பதன் அடியாகப் பிறந்தன.

தரையினை இலக்கதாக எறிந்தகல் தவறாதற்றே
அரனையும்குறித்துச் செய்த வினைபழு தாகா வற்றே
பரமனும் செய்தார் செய்திப் பலத்தினைக் கொடுப்பன் பாங்கால்
குருலகு என்னும் பேதம் வினைதொறும் குறித்துக் கொண்டே

என்னும் சிவதருமோத்ர பாடலில் இறைவன் உயிர்கள் செய்த நல்வினையை இலகுவினை குருவினை எனப் பகுத்துக் கொண்டு உயிர்கட்குப் பயன் தருவான் என்று கூறுமிடத்தில் லகு அற்பம் என்ற பொருளிலும் குரு அதிகம் என்ற பொருளிலும் வந்திருத்தலைக் காண்க.

**முடிவுரை**

1. இவர் நேர், நிரை, நேர்பு, நிரைபு என்னும் நான்கு அசைகளைக் கொள்கிறார். பிறர் நேர், நிரை என்னும் இரண்டசையினையே கொள்கின்றனர்.
2. இவர் ஈரசைச் சீர், மூவசைச் சீர், அசைச்சீர் என்னும் மூன்று வகையான சீர்களில் எண்பத்து நான்கு சீர்கள் கொள்கின்றனர். பிறர் ஈரசைச் சீர், மூவசைச்சீர், நான்கசைச் சீர், அசைச்சீர் என நான்கு வகைச் சீர்களைக் கொண்டு முப்பது சீர்களைக் கொள்கின்றனர்.
3. இவர் நாற்சீர் கொண்ட நேரடியினையே சிறந்த அடியெனக் கொண்டு அவ்வடியை எழுத்தளவு பற்றிக் குறளடி சிந்தடி அளவடி நெடிலடி கழிநெடிலடி என ஐவகை அடியாகக் கொண்டு அவற்றுள் அறு நூற்றிருபத்தைந்தடி ஆக்கிக் கொள்கின்றனர்.

❖

**தமிழரின் பெருமை**

தமிழா! உனக்கிது தருணம் வாய்த்தது
தரணிக் கெல்லாம் வழிகாட்ட;
'அமுதாம் என்மொழி; அறமே என்வழி;
அன்பே உயிர்நிலை' என்றுசொலும்
(தமிழா)

தன்னுயிர் நீப்பினும் பிறர்கொலை அஞ்சிடும்
தருமம் வளர்த்தவர்கள் தமிழ்நாட்டார்;
மன்னுயிர் யாவையும் தன்னுயிர் என்றிடல்
மண்டிக் கிடப்பதுன்றன் தமிழ்மொழியே.
(தமிழா)

– நாமக்கல் கவிஞர் இராமலிங்கம்

# தொடரியல் அடிப்படையில் பால் பாகுபாட்டுக் கோட்பாடு

முனைவர் பொற்கோ



தமிழில் உள்ள பால் பாகுபாட்டைப் பற்றி இருவிதமான கருத்துகள் உலவுகின்றன. ஒன்று, இந்தப் பாகுபாடு இயற்கை வழியில் அமைந்த பால் பாகுபாடு என்பது. இரண்டு, இந்தப் பாகுபாடு இலக்கணக் கோட்பாட்டின் அடிப்படையில் அமைந்த பால் பாகுபாடு என்பது. இலக்கணக் கோட்பாட்டின் அடிப்படையில் அமைந்த இந்தப் பால் பாகுபாட்டின் பெரும்பகுதி இயற்கை வழிப் பால் பாகுபாடு போலத் தோன்றுகிறது. முழுக்க முழுக்க இயற்கை வழிப் பால் பாகுபாடாக இந்தப் பால் பாகுபாடு அமைந்திருந்தால் அஃறிணையிலும்கூட ஆண்பால், பெண்பால் குறிக்கப்பட்டிருக்க வேண்டும். தமிழிலக்கணம் அஃறிணையில் களிறு, பிடி, சேவல், பெடை முதலான ஆண்பால், பெண்பால் சொற்கள் இருந்தும் அஃறிணையில் ஆண்பால் பெண்பால் பற்றிப் பேசவில்லை. ஏன்? இந்த வினாவுக்கும் இக்காலத் தமிழில் பால்கள் ஐந்தா, ஆறா என்ற வினாவுக்கும் இந்தச் சிறு கட்டுரை விடையும் விளக்கமும் அளிக்கும்.

தமிழில் உள்ள சொற்களையெல்லாம் பழைய மரபிலக்கணப் புலவர்கள் ஐந்து வகையாகப் பாகுபடுத்தியிருக்கிறார்கள். பால் என்ற சொல்லுக்கே பகுப்பு அல்லது பகுதி என்று பொருள். நாளடைவில் பால் என்ற சொல் ஆண், பெண் என்ற சொற்களோடு சேர்ந்து பயின்று வந்த காரணத்தால் இக்காலத்தில் நாம் வழங்குகிற பாலுணர்ச்சி என்ற பொருளும் அதில் உருவாகிவிட்டது. நமது தமிழ் இலக்கணங்கள் கூறும் பால் பாகுபாட்டைப் புரிந்து கொள்ளப் பால் என்ற சொல்லின் வேர்ப்பொருளை உணர்ந்து கொள்வது இன்றியமையாதது. பகு என்ற அடிச்சொல்லும் அல் என்ற விகுதியும் சேர்ந்து பகல் என்ற சொல்லும் பால் என்ற சொல்லும் உருவாகியிருக்கிறது. பால் என்ற சொல்லின் வேர்ப்பொருள் பகுப்புதான் என்பதை மீண்டும் நினைவு கூர்ந்து மேலே செல்வோம்.[1]

பழைய மரபிலக்கண நெறியில் சொற்கள் பொதுவாக ஐந்து பாலாகப் பிரிக்கப்படும் என்று நூல்கள் கூறினாலும் இந்தப் பால் பகுப்பும் திணைப் பகுப்பும் சிறப்பாகப் பெயர்கட்கே உரியன என்பது எல்லோருக்கும் தெளிவாக விளங்கிய செய்தி. அப்படியானால் பெயர்ச் சொற்களை இருதிணை என்றும் ஐம்பால் என்றும் பிரித்ததற்குரிய அடிப்படை என்ன? இந்த வினாவிற்குரிய விடையை நாம் விளங்கிக் கொண்டால் தமிழிலக்கணப் புலவர்களின் பால் பாகுபாட்டுக் கோட்பாடு நமக்குத் தெளிவாக விளங்கும். பால் பாகுபாட்டின் அடிப்படையைத் தெளிவாக ஆராய்ந்த பிறகு திணைப் பாகுபாடு பற்றியும் சிந்திப்போம்.

பழந்தமிழ் இலக்கிய வழக்கில் நாம் காணும் பெயர்ச் சொற்களில் இடப்பெயர்கள் தவிர ஏனையவற்றை யெல்லாம் அவன், அவள், அவர், அது, அவை முதலாகிய ஐந்து பெயர்களையும் கொண்டு பதில் மாற்றம் (அல்லது பதிலீடு) செய்யலாம். அப்படிப் பதில் மாற்றம் செய்யும்போது அவன் என்ற சொல்லால் பதில் மாற்றம் செய்யத்தக்க பெயர்கள் எல்லாவற்றையும் ஆண்பால் என்ற பெயரால் சுட்டினர். அவ்வாறே, அவள் என்ற சொல்லால் பதில் மாற்றம் செய்யத்தக்க எல்லாப் பெயர்களையும் பெண்பால் என்றும்; அவர் என்ற சொல்லால் பதில் மாற்றம் செய்யத்தக்க பெயர்கள் எல்லாவற்றையும் பலர்பால் என்றும்; அது என்ற சொல்லால் பதில் மாற்றம் செய்யத்தக்க பெயர்கள் எல்லாவற்றையும் ஒன்றன்பால் என்றும் அவை என்ற சொல்லால் பதில் மாற்றம் செய்யத்தக்க பெயர்கள் எல்லாவற்றையும் பலவின்பால் என்றும் பிரித்தனர். அஃறிணையில் ஆண்பால், பெண்பால் என்று இரு பிரிவை அமைக்காமல் ஒன்றன்பால் என்று ஒரு பிரிவை மட்டுமே அமைத்ததற்குக் காரணம் என்ன என்பது இப்போது விளங்கும். இதையே மேலும் விளக்கமாகக் காண்போம்.

களிறு, பிடி ஆகிய சொற்கள் முறையே ஆண் யானையையும், பெண் யானையையும் குறிக்கும். இப்படி ஒரு சில அஃறிணைப் பெயர்கள் தனித்தனியே ஆணையும், பெண்ணையும் சுட்டுவதாக அமைந்திருந்தாலும்கூட நமது இலக்கணங்கள் அஃறிணைப் பெயர்களில் ஆண், பெண் பால் பகுப்பை அமைக்கவில்லை. ஏனென்றால், களிறு, பிடி, சேவல், பெடை ஆகிய பெயர்கள் அதுவென்றும் பெயரால் பதில் மாற்றம் செய்யத்தக்கன. ஆகவேதான் அஃறிணை ஆண்பால், பெண்பால் இரண்டையும் ஒன்றன்பால் என்ற ஒரு பகுப்பிலேயே அடக்கிக் கொண்டனர்.[2]

நாம் இதுகாறும் விளக்கிய இந்த அடிப்படையினைப் பதில் மாற்றக் கொள்கை அல்லது பதிலீட்டுக் கொள்கை என்று குறிக்கலாம். தமிழில் காணும் பால் பாகுபாடு பதில் மாற்றக் கொள்கையின் அடிப்படையில் அமைந்துள்ளது என்பது இப்போது நன்கு விளங்கியிருக்கும்.

பால் பாகுபாட்டிற்கு இந்தக் கொள்கையோடு தமிழிலக்கண மரபில் இன்னொரு கொள்கையும் துணையாக அமைந்திருக்கக் காண்கிறோம். அந்தக் கொள்கை பதில் மாற்றக் கொள்கையோடு ஒரு வகையில் தொடர்புடையதே எனலாம்.

பின்வரும் சொற்றொடர்களைக் கவனித்துப் பாருங்கள்.

1. அவன் வந்தான்
2. அவள் வந்தாள்
3. அவர் வந்தார்
4. அது வந்தது
5. அவை வந்தன

மேற்காட்டிய தொடர்களில் எழுவாய்க்கும் பயனிலைக்கும் இடையே ஒருவிதமான இயைபு அமைந்திருக்கிறது. இந்த இயைபு சிதையுமானால் மேற்கண்ட தொடர்கள் பிழைபட்ட தொடர்களாக ஆகிவிடும். இதைத்தான் தொல்காப்பியர்,

**வினையின் தோன்றும் பாலறி கிளவியும்**
**பெயரின் தோன்றும் பாலறி கிளவியும்**
**மயங்கல் கூடா தம்மர பினவே**

எனக் குறிப்பிடுகிறார்.[3]

தெரிநிலைவினை காலமும் எதிர்மறையும் ஏற்றுப் பாலிட விகுதிகளோடு வரும்போது வினையில் தோன்றும் பாலிட விகுதிகளுக்கும் அவற்றிற்குரிய எழுவாய்க்கும் ஒருவித இயைபு அமைந்திருக்கக் காண்கிறோம். கால இடைநிலைகளை ஏற்காத குறிப்பு வினைக்கும் இந்த இயைபு உண்டு.[4] தெரிநிலை வினைகள் கால இடைநிலையையும் எதிர்மறை இடைநிலையையும் ஏற்காமல் செய்க, செய்யட்டும், செய்யலாம் என்னும் வாய்பாடுகளில் வரும்போதும் அவை எச்ச வினைகளாக வரும்போதும் இத்தகைய இயைபுகள் அமைவதில்லை என்பது இங்கே குறிப்பிடத்தக்க செய்தி.

படர்க்கைப் பெயர்கள் மேற்காட்டிய முறையில் இலக்கியத் தமிழில் ஐந்து வகையான இயைபுகளைப் பெற்றிருக்கின்றன. இந்த இயைபினை எழுவாய் பயனிலை இயைபு என்று குறிக்கலாம். தமிழ் மொழியில் காணும் பால் பாகுபாட்டிற்கு நாம் இங்கு விளக்கிய எழுவாய் பயனிலை இயைபும் ஒரு அடிப்படை எனலாம்.[5]

பதில் மாற்றக் கொள்கை, எழுவாய் பயனிலை இயைபுக் கொள்கை ஆகிய இவற்றின் துணை கொண்டே நமது பழந்தமிழ் இலக்கணப் புலவர்கள் பெயர்களை ஐந்து பாலாகப் பகுத்திருக்கிறார்கள். இன்றைய இலக்கியத் தமிழை இந்தக் கொள்கைகளின்படி ஆராய்ந்தால் பால் பகுப்பை நாம் ஆறு என்று கொள்ள வேண்டி நேரும். இன்றைய இலக்கியத் தமிழுக்குரிய பால் பகுப்பு பின் வருமாறு:–

1. அவன் – ஆண்பால்
2. அவள் – பெண்பால்
3. அவர் – உயர்பால்
4. அவர்கள் – பலர்பால்
5. அது – ஒன்றன்பால்
6. அவை – பலவின்பால்

இன்றைய இலக்கியத் தமிழில் காணும் எல்லாப் பெயர்களையும் மேலே காட்டிய ஆறு பெயர்களைக் கொண்டு பதில் மாற்றம் செய்ய முடியும். ஆகவே மேலே சுட்டிக் காட்டியபடி இன்றைய இலக்கியத் தமிழில் ஆறு பால்கள் உள்ளன எனலாம். எழுவாய் பயனிலை இயைபுக் கொள்கையும் இதே கருத்தை வலியுறுத்தும் என்பது கீழ்க்காணும் தொடர்களால் இனிது விளங்கும்.

1. அவன் வந்தான்
2. அவள் வந்தாள்
3. அவர் வந்தார்
4. அவர்கள் வந்தார்கள்
5. அது வந்தது
6. அவை வந்தன

பழந்தமிழில் காணும் பலர்பால் சொல்லாகிய அவர் இப்போது உயர்பாலுக்கு உரியதாகவும் அவர்கள் என்பது பலர்பாலுக்கு உரியதாகவும் அமைந்தமையால் பால் பகுப்பு விரிவு பெற்றமை காண்க.

பதில்மாற்றக் கொள்கையின் அடிப்படையில்தான் உயர்திணை, அஃறிணை என்று திணைப் பகுப்பும் அமைந்திருக்கிறது என்பது நன்கு பெயர்களை ஆராயும்போது தெளிவாகிறது. யார் என்ற வினாப் பெயரால் பதில் மாற்றம் செய்யத்தக்க எல்லாப் பெயர்களும் ஒருவகை என்றும் என்ன என்ற வினாப் பெயரால் பதில் மாற்றம் செய்யத்தக்க எல்லாப் பெயர்களும் இன்னொரு வகை என்றும் கொள்ளுவோம்.[6] இந்த இரண்டு பெரும் பிரிவுக்குள் தமிழில் உள்ள எல்லாப் பெயர்களையும் அடக்கலாம். முதலாவது வகைக்குரிய பெயர்களை உயர்திணை என்றும் இரண்டாவது வகைக்குரிய பெயர்களை அஃறிணை என்றும் பிரித்திருக்கிறார்கள்.

தமிழிலக்கணங்களில் காணும் திணை, பால் பாகுபாட்டிற்கு மிக இன்றியமையாத இலக்கணக் கொள்கை சார்ந்த அடிப்படை உண்டு என்பது இப்போது நன்கு விளங்கியிருக்கும். இப்படிப்பட்ட இலக்கணக் கோட்பாடுகளைப் பற்றி ஏதும் தெரியாதவர்களும் தெரிந்து கொள்ள முயலாதவர்களும் இன்றைய தமிழில் பால்கள் ஆறு என்று சொன்னவுடனேயே எதையோ பறி கொடுத்தவர்கள் போல அமைதி இழந்து இலக்கண எல்லை மீறித் தாறுமாறாக எழுதித் தவிக்கிறார்கள். பால் பாகுபாட்டைப் பொறுத்தவரை இக்காலத் தமிழ் இந்த வகையில் பழந்தமிழைவிட நுட்பமும் தெளிவும் பெற்று உயர்ந்திருக்கிறது. உயர்பாலும் பலர்பாலும் ஒன்றாக இருந்த நிலைமை மாறி இன்றைய தமிழில் அவற்றுக்குத் தனித்தனி இடம் கிடைத்திருக்கிறது. இலக்கணக் கோட்பாடுகளைப் புரிந்துகொண்ட நல்ல இலக்கண அறிஞன் வளர்ச்சிக் கூறுகளுக்கு இடம் கொடுக்க வேண்டும். இடம் கொடுக்காமல் இருப்பது பாதுகாப்பாகாது. மொழி வளர்ச்சிக்குச் செய்கிற கேடு என்பதை உணரவேண்டும். 'பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல கால வகையி னானே' என்ற நன்னூலார் வாக்கை இக்கால இலக்கண மேதைகள் மறந்துவிடக் கூடாது. கல்லாதவரும் நனி நல்லர் கற்றார்முன் சொல்லாதிருக்கப் பெறின் என்ற குறளையும் கற்றறிந்தோர் அவையில் வாயைத் திறக்கும் முன்பு நாம் நன்கு நினைவில் கொள்ள வேண்டும்.

குறிப்புகள்

1. பகுதி, பாதி : புழுதி, பூதி – இந்தச் சொற்களை ஊன்றிக் கவனியுங்கள். மொழியிடை உயிர்மெய் மறைவினால் மொழிமுதல் உயிர்மெய்க் குறில் நெடிலாக மாறியது. இத்தகைய மாற்றத்தால்தான் பகல் என்பதும் பால் என்று மாறிற்று.

2. தூத்துக்குடியிலிருந்து சென்னை வந்து ஒரு இலக்கண ஆய்வாளர் எழுபதுகளில் என்னை அடிக்கடிச் சந்திப்பார். அவர் பெயர் திரு. நடராசன். அவர் அஃறிணையிலும் ஆண்பால் பெண்பால் என்று வாதிட்டார். அதோடு ஒன்றன்பாலும் இருக்க வேண்டும் என்பார். பால் பாகுபாட்டுக் கோட்பாட்டை அவருக்கு விளக்கி அஃறிணையில் ஆண்பால் பெண்பால் தேவையில்லை என்பதைப் புரிய வைத்தேன்.

3. காண்க. (தொல் சொல்) 11.

4. காண்க டாக்டர் பொற்கோவின் இலக்கண உலகில் புதிய பார்வை. பக்கம் 60–61.

5. காண்க. Linguistic Studies in Tamil by Pon. Kothandaraman, pp. 11-18.

6. இக்கால வழக்கில் உள்ள என்ன என்ற சொல்லுக்குப் பதிலாகப் பழந்தமிழில் எவன் என்ற சொல் வழங்கியிருக்கிறது. இன்சொல் இனிதீன்றல் காண்பான் எவன்கொலோ வன்சொல் வழங்குவது என்ற குறளில் உள்ள எவன் என்ற சொல்லாட்சியைக் காண்க. என்ன என்பதனோடு எவன் என்பதையும் இங்கே ஒப்ப வைத்துக் காண்க.

❖



## தமிழ் வளர்ச்சி

எளிய நடையில் தமிழ்நூல்
எழுதிடவும் வேண்டும்.

இலக்கணநூல் புதிதாக
இயற்றுதலும் வேண்டும்.

வெளியுலகில், சிந்தனையில்
புதிது புதிதாக

விளைந்துள்ள எவற்றினுக்கும்
பெயர்களெலாங் கண்டு

தெளியுறுத்தும் படங்களொடு
சுவடியெலாம் செய்து

செந்தமிழைச் செழுந்தமிழாய்ச்
செய்வதுவும் வேண்டும்.

எளிமையினால் ஒருதமிழன்
படிப்பில்லை யென்றால்

இங்குள்ள எல்லோரும்
நாணிடவும் வேண்டும்.

– பாவேந்தர் பாரதிதாசன்

# தொல்காப்பியர் உணர்த்தும் மூன்றாம் வேற்றுமை உருபுகள்!

புலவர் வெற்றியழகன்



**முன்னுரை**

**"தொன்று நிகழ்ந்த தனைத்தும் உணர்ந்திடு**
**சூழ்கலை வாணர்களும் - இவள்**
**என்று பிறந்தவள் என்றுணராத**
**இயல்பினளாம் எங்கள் தாய்!"**

என்று சுப்பிரமணிய பாரதியார் தமிழின் தொன்மையைக் கால அளவின்றிக் கூறுகின்றார்.

**"திங்களொடும் செழும்பரிதி தன்னோடும்**
**விண்ணோடும் உடுக்க ளோடும்**
**மங்குல்கடல் இவற்றோடும் பிறந்ததமி**
**ழுடன்பிறந்தோம்"**

என்று புரட்சிக்கவிஞர் பாவேந்தர் தமிழின் தொன்மைக் காலத்தை அளவிட்டுப் பாடுகின்றார்.

**"உலக முதன்மொழி தமிழே"**

என்று மொழிஞாயிறு பாவாணர் கூறுகின்றார். இந்தச் சிறப்புமிக்க தமிழ் மொழியின் இலக்கணமே தொன்மை மிக்கதுதான். மிகத் தொன்மைமிக்க இலக்கண நூலான தொல்காப்பியம் மூன்றாம் வேற்றுமை உருபுகளை எவ்வாறு உணர்த்துகின்றது – தொல்காப்பியர் எவ்வாறு உணர்த்துகின்றார்; அவற்றை நன்னூல் எவ்வாறு உணர்த்துகின்றது; திருக்குறளில் எவ்வாறு போற்றிப் பாதுகாக்கப் பெற்றுள்ளன என்பதனை ஆராய்வதே நோக்கம்.

**வேற்றுமைகள்**

வேற்றுமை என்பது பெயர்ச் சொல்லை வேற்றுமைப்படுத்துவது என்பர். இது பொருந்தாது. பெயர்ச் சொல்லை வேற்றுமைப்படுத்துவதில்லை; பெயரை உடைய பொருளை வேற்றுமைப்படுத்துவது – அதாவது இயங்கச் செய்கின்றன வேற்றுமை உருபுகள். அந்தப் பொருளின் செயலையே வேற்றுமை உருபுகள் வேறுபடுத்துகின்றன.

அவை: முதல் வேற்றுமை அல்லது எழுவாய் வேற்றுமை அல்லது பெயர் வேற்றுமை; இரண்டாம் வேற்றுமை அதாவது செயப்படுபொருள் வேற்றுமை; மூன்றாம் வேற்றுமை அதாவது கருவி வேற்றுமை; நான்காம் வேற்றுமை அதாவது கொடை வேற்றுமை; அய்ந்தாம் வேற்றுமை அதாவது நீங்கல் வேற்றுமை; ஆறாம் வேற்றுமை அதாவது கிழமை வேற்றுமை; ஏழாம் வேற்றுமை இடவேற்றுமை; எட்டாம் வேற்றுமை விளிவேற்றுமை.

முதல் வேற்றுமைக்கு உருபு இல்லை. பெயரே – பெயர்ச் சொல்லே முதல் வேற்றுமையாகும். இரண்டாம் வேற்றுமைக்கு உருபு ஐ, மூன்றாம் வேற்றுமைக்கு ஒடு, ஆன் மட்டும்தாம் தொல்காப்பியத்திற் கூறப் பெற்றுள்ளன. நன்னூலார்தாம் ஒடு, ஓடு, ஆன், ஆல் என்னும் நான்கு உருபுகளைக் கூறுகின்றார். நான்காம் வேற்றுமைக்கு உருபு கு; அய்ந்தாம் வேற்றுமைக்கு உருபு இன்; ஆறாம் வேற்றுமைக்கு உருபு அது; ஏழாம் வேற்றுமைக்கு உருபு கண்; எட்டாம் வேற்றுமை விளி வேற்றுமை.

மூன்றாம் வேற்றுமையைக் கூற வந்த தொல்காப்பியர், வேற்றுமை இயலில்,

**"மூன்றாகுவதே**
**ஒடுஎனப் பெயரிய வேற்றுமைக் கிளவி**
**வினைமுதற் கருவி அனைமுதற் றதுவே!"**

(தொல். சொல். 73)

என்கிறார் தொல்காப்பியர்.

"மூன்றாம் வேற்றுமை ஒடு என்னும் உருபைக் கொண்டு அமையும். வினை முதலும் கருவியுமாகிய அவ்விரண்டு அடிப்படைகளைக் கொண்டு வரும்" என்று கூறிய தொல்காப்பியர்,

"அதனின் இயறல் அதன்தகு கிளவி
அதன்வினைப் படுதல் அதனின் ஆதல்
அதனின் கோடல் அதனொடு மயங்கல்
அதனோடு இயைந்த ஒருவினைக் கிளவி
அதனோடு இயைந்த வேறுவினைக் கிளவி
அதனோடு இயைந்த ஒப்பல் ஒப்புரை
இன்ஆன் ஏது ஈங்குஎன வரூஉம்
அன்ன பிறவும் அதன்பால என்மனார்"

(தொல். சொல். 74)

ஒடு உருபு உயர்வுப் பொருளொடு சேர்ந்து வரும். எ.டு.: அரசனொடு குதிரை வந்தது.

ஓடு – என்பது முதற்பொருள், கருவிப்பொருளில் வரும். அவளோடு எல்லாம்போம் – முதற்பொருள். வீணையொடு வந்தாள் – இது கருவிப் பொருள்.

மூன்றாம் வேற்றுமையின் விரிவுப் பொருளாகப் பத்துப் பொருள்களைக் கூறுகின்றார்.

1. அதனின் இயறல் – மண்ணால் செய்த குடம்
2. அதன் தகு கிளவி – அறிவால் வந்த பேருரை
3. அதன் வினைப்படுதல் – உடல் உறுதியால் வென்றான்.
4. அதனின் ஆதல் – அரிசியால் செய்த உப்பு மா
5. அதனிற் கோடல் – கயிற்றால் பிணிக்கப்பட்டான்.
6. அதனொடு மயங்கல் – சூதினால் கெட்டான்.
7. அதனோடு இயைந்த ஒருவினைக் கிளவி – அரிசியொடு மஞ்சள் கலந்தார்.
8. அதனோடு இயைந்த வேறு வினைக் கிளவி – மலையொடு யானை மோதியது.
9. அதனோடு இயைந்த ஒப்பல் ஒப்புரை – தேவரோடு ஒப்பர் கயவர்.
10. இன், ஆன் – முயற்சியின் (இன்) கிடைத்த வெற்றி; (ஏது எங்கு என வரும்) காலான் முடவன்.

இங்கே கூறப்பெற்றவை அனைத்தும் மூன்றாம் வேற்றுமைப் பொருள்களே அன்றி, உருபுகள் அல்ல. இவையெல்லாம் மூன்றாம் வேற்றுமை உருபுகள் இன்னின்ன பொருள்களில் வரும் என்பனவே.

**"குஐஆன்என வரூஉம் இறுதி**
**அவ்வொடும் சிவணும் செய்யு ளுள்ளே"**

(தொல். சொல். 104)

செய்யுளில் கு, ஐ, ஆன் என வருகின்ற மூன்று உருபுகளும் அகர ஈறாகி நிற்கும்.

**"அவற்றுள்,**
**அஎனப் பிறத்தல் அஃறிணை மருங்கில்**
**குவ்வும் ஐயும் இல்லென மொழிப"**

(தொல். சொல். 105)

மேலே சொன்னவற்றுள் குவ்வும் ஐயும் அஃறிணைப் பொருளில் அகர ஈறாகா. ஆன் உருபு அஃறிணையிலும் உயர்திணையிலும் அகர ஈறாகும். வேற்றுமை இயலில் ஒடு மட்டுமே மூன்றாம் வேற்றுமைக்குக் கூறிய தொல்காப்பியர், வேற்றுமை மயங்கியலில் மூன்றாம் வேற்றுமைக்கு 'ஆன்' உருபைக் கூறுகின்றார்.

**தொல்காப்பியர் உணர்த்தும்**
**மூன்றாம் வேற்றுமை உருபுகள்**

ஒன்று, இரண்டு என்னும் எண்ணின் பெயர்ச் சொல்கள், வரும் சொல்லின் முதலெழுத்து உயிரெழுத்தாக இருக்குமெனில், ஓர், ஈர் என்றும்; உயிர்மெய்யெழுத்தாக இருக்குமெனில் ஒரு, இரு என்றும் வரும் என்று கூறிய தொல்காப்பியர், மூன்றாம் வேற்றுமை உருபுகளாகிய ஒடு, ஓடு; ஆல், ஆன் ஆகியவை உயிரெழுத்துக்கு முன்னால், உயிர் மெய்யெழுத்துக்கு முன்னால் இவ்வாறு இவ்வாறு வரும் என்று எந்த இடத்திலும் குறிப்பிட்டுக் கூறவில்லை; ஆனால், எழுதப்படாத சட்டமாக – கூறப்படாத இலக்கணமாக அவர் தாம் இயற்றிய நூற்பாக்களில் – உயிர் எழுத்துக்கு முன்பு ஓடு, ஆன் என்றும்; உயிர்மெய்யெழுத்துக்கு முன்பு ஒடு, ஆல் என்றும் தவறாமற் கடைப்பிடித்துக் காட்டி உணர்த்தியுள்ளார்.

"மெய்**யோடு இ**யையினும் உயிரியல் திரியா"

(தொல். எழுத்து - 10)

மேலே காட்டப் பெற்ற எடுத்துக்காட்டு நூற்பாவில் வரும் சொல்லின் முதலெழுத்து உயிரெழுத்தாக இருப்பதனால், உடனிகழ்ச்சிப் பொருளில் வந்த மூன்றாம் வேற்றுமை உருபாகிய ஒடு – ஓடு என்று நீண்டுள்ளது; நீட்டியுள்ளார் தொல்காப்பியர்.

"மெய்யின் இயற்கை புள்ளி**யொடு நி**லையல்"

(தொல். எழுத்து - 15)

இதில், வரும் சொல்லின் முதலெழுத்து உயிர்மெய்யாக இருப்பதனால், ஒடு – என்பது இயற்கையாகவே நிற்கிறது. நெடிலாக நீளவில்லை. நீட்டாமல் இயற்கையாகவே கொடுத்துள்ளார் தொல்காப்பியர்.

"தாய்க்கும் உரித்**தால் போ**க்குடன் கிளப்பின்"

(தொல். பொருள் 196)

இந்த நூற்பாவில் போக்குடன் என்று உயிர்மெய் வருவதனால், உரித்தால் – என்று ஆல் உருபினை அமைத்துள்ளார் தொல்காப்பியர்.

"வாரா மரபின வரக்கூ றுதலும்
என்னா மரபின எனக்கூ றுதலும்
அன்னவை எல்லாம் அவற்றுஅவற்று இயல்**பான்**
**இ**ன்ன என்னும் குறிப்புரை ஆகும்"

(தொல். சொல். 416)

இந்த நூற்பாவில் இயல்பால் என்று வரவேண்டிய மூன்றாம் வேற்றுமைக் கருவிப்பொருள் உருபு ஆல் – இன்ன என்னும் உயிரெழுத்தினை முதலாவதாகக் கொண்ட சொல் அடுத்து வந்ததனால் "ஆன்" என்று புணர்த்தியுள்ளார் தொல்காப்பியர்.

**உரையாசிரியர்**

தொல்காப்பியரின் இந்த முறைமையினை உணர்ந்து கொண்ட முதல் உரையாசிரியரான இளம்பூரணர் – தமது உரையினில் இம் முறையினைச் சரியாகக் கடைப்பிடித்துள்ளார்.

"மெய்**யோடு இ**யையின்றி நின்ற உயிர்"

(தொல். உரை. எழுத்து - 10)

"புள்ளி**யொடு** நிற்றல்" (தொல். உரை. எழுத்து - 15)

"நெறியியல் என்ற**தனால்** குறியதன் முன்னர்"

(தொல். உரை. எழுத்து - 161)

"உயிரீறு புள்ளியீறு" என்ற**தனானே ஏ**என்"

(தொல். உரை. எழுத்து - 165)

"ஏ - சாரியை"

என்றும் – உரையாசிரியர் இளம்பூரணனாரும் தொல்காப்பியரைப் பின்பற்றியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

**நன்னூலார்**

இதுவரை தொல்காப்பிய நூற்பாக்களின் சான்றுகளைப் பார்த்தோம். இனி, நன்னூல் நூற்பாக்களின் சான்றுகளைப் பார்ப்போம். நன்னூலிலும் உயிரெழுத்துக்கு முன்பு ஒடு, ஆன் வருதல் வேண்டும்; உயிர் மெய்யெழுத்துக்கு முன்பு ஒடு, ஆல் வருதல் வேண்டும் என்று வெளிப்படையாகக் கூறவில்லை. நன்னூலாரும் தமது நூற்பாக்களில் தொல்காப்பியரைப் பின்பற்றி அவ்வாறே உணர்த்துகிறார்.

"குறியதன் முன்னர் ஆய்தப் புள்ளி
உயி**ரொடு** புணர்ந்தவல் லாறன் மிசைத்தே"

(நன். எழுத்து - 90)

என்று ஒரு நூற்பாவிலும் –

"நெடி**லோடு ஆ**ய்தம் உயிர்வலி மெலியிடைத்
தொடர்மொழி யிறுதி வன்மையூ ருகரம்
அஃகும் பிறமேல் தொடரவும் பெறுமே"

(நன். எழுத்து – 94)

என்று ஒரு நூற்பாவிலும் –

"புள்ளிவிட் டவ்**வொடு மு**ன்னுருவு ஆகியும்
ஏனை உயிரோடு **உ**ருவு திரிந்தும்
உயிரளவு ஆய்தன் வடிவொழித்து இருவயின்
பெயரோடும் **ஒ**ற்று முன்னாய்வரும் உயிர்மெய்"

(நன். எழுத்து - 89)

என்று ஒரே நூற்பாவில் ஒடு, ஒடு இரண்டினையும் சரியாகக் கடைப்பிடித்துக் காட்டியுள்ளார்.

"ஒருநெறி யின்றி விரவிய பொரு**ளால்**
**பொ**துமொழி தொடரின் அதுபடல மாகும்"

(நன். பாயிரம் - 17)

இந்நூற்பாவில் – பொதுமொழி என்று உயிர்மெய் வந்துள்ளதனால், பொருளால் – (ஆல்) என்று நன்னூலார் ஆல் உருபைப் பயன்படுத்தியுள்ளார்.

"ஆயிர முகத்**தான் அ**கன்ற தாயினும்
பாயிர மல்லது பனுவல் அன்றே"

(நன். பாயிரம் - 54)

இந்த நூற்பாவில் – அகன்ற – என்று உயிரெழுத்து வருவதனால். முகத்**தான்** – (ஆன்) என்று நன்னூலார் ஆன் உருபைப் பயன்படுத்தியுள்ளார்.

**திருக்குறளார்**

தொல்காப்பிய இலக்கணத்திற்கு இலக்கியமாகத் திகழ்ந்து கொண்டிருக்கின்ற திருக்குறளில் – திருவள்ளுவர் மிக மிகச் சரியாகவே – தொல் காப்பியனாரின் இந்த மூன்றாம் வேற்றுமை உருபுகளின் முறைமைமையினைக் கடைப் பிடித்துள்ளார்.

"சிறப்**பொடு பூ**சனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு"(திருக். 18)

என்று – ஒரு குறளில் தனியாக – உயிர்மெய்யெழுத்துக்கு முன்னதாக **ஒடு** என்றும்;

"அன்**போடு இ**யைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு
என்**போடு இ**யைந்த தொடர்பு" (திருக். 73)

என்று, ஒரு குறளில் ஈரிடத்தில் உயிரெழுத்திற்கு முன்னதாக **ஓடு** என்றும்; கடைப்பிடித்துக் காட்டிய திருவள்ளுவர்,

"விலங்**கொடு ம**க்களனையர் இலங்குநூல்
கற்றா**ரோடு ஏ**னை யவர்" (திருக். 410)

என்று, ஒரே குறளில் மேலடியில் உயிர்மெய்க்கு முன்னதாக **ஒடு** என்றும்; அடுத்த கீழடியில் உயிர்க்கு முன்னதாக **ஓடு** என்றும் சரியாகக் கடைப்பிடித்துக் காட்டியுள்ளார்.

"வான்நின்று உலகம் வழங்கி வருத**லால்**
**தா**னமிழ்தம் என்றுணரற் பாற்று" (திருக். 11)

என்று, தானமிழ்தம் என்ற சொல்லின் முதலெழுத்து உயிர்மெய்யாய் இருப்பதனால், "**ஆல்**" என்று அமைத்துள்ளார்.

"உரனென்னுந் தோட்டி**யான் ஓ**ரைந்துங்காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து"(திருக். 24)

என்று, ஓரைந்தும் என்னும் சொல்லின் முதலெழுத்து உயிரெழுத்தாக இருப்பதனால், தோட்டியால் என்பதனைத் தோட்டியான் என்று "ஆன்" உருபைக் கொடுத்துள்ளார்.

இவ்வாறு, ஒரு குறளில் தனியாக ஆல் – உருபினையும்; மற்றொரு குறளில் – தனியாக ஆன் – உருபினையும் பயன்படுத்திக் காட்டிய திருவள்ளுவர்,

"புறந்தூய்மை நீரான் **அ**மையும் அகந்தூய்மை
வாய்மை**யால் கா**ணப் படும்" (திருக். 298)

இந்தக் குறளில், முதலடியில் அமையும் என்று உயிரெழுத்து வருவதனால், நீரான் (ஆன்) என்றும்; இரண்டாவது அடியில் காணப்படும் என்று உயிர்மெய்யெழுத்து வருவதனால், வாய்மையால் (ஆல்) என்று ஒரே குறளில் ஆன், ஆல் இரண்டு உருபுகளையும் கடைப்பிடித்துத் தொல்காப்பியர்க்குப் பெருமை சேர்க்கின்றார் திருவள்ளுவர்.

இதுவரையில் தொல்காப்பியரின் கொள்கையினை – திருவள்ளுவரும் பவணந்தியாரும் கடைப்பிடித்த முறைமையினைப் பார்த்தோம்; இனி, மற்ற இலக்கியங்களைப் பார்ப்போம்.

**மற்ற நூல்கள்**

"தாழிக் குவளை**யொடு த**ண்செங் கழுநீர்"
"உடைப்பெருங் கொழுந**ரோடு ஊ**டற் காலத்து"
(சிலப். அந்தி. 64, 68)

"யானை**யொடு பு**னைதேர்" (புறம். 12)

"முறை**யொடு நா**ற்றுமின்" (மணி. 1-49)

"ஈங்கிவள் தன்**னோ டெ**ய்திய காரணம்" (மணி. 5-30)

"அவ்வேற்றை - இனத்**தொடு பு**னத்தேற்றி" (கலித். 106)

"நல்லா**னொடு ப**கடு ஓம்பியும்" (பட்டினப். 201)

"உவமை**யோடு எ**திர்உள்ளுறுத்தல்" (மாறன் 123)

"புல**னொடு பு**லன்அலன்" (திருவாய். 2901)

"தகமை**யோடு ஒ**ழிவுஇலன்" (திருவாய். 2907)

"தன்**னொடு செ**ல்வது" (நான்மணிக். 17)

"உரு**போடு அ**றிவுடையான்" (நான்மணிக். 55)

"ஏ**றொடு பெ**ளவம்" (கார்நாற்பது - 17)

"ஏ**ரோடு அ**ருமேனி" (கார்நாற்பது - 18)

"கேடகத்**தோடு அ**ற்ற" - (களவழி நாற்பது -28)

"தொட**ரொடு கோ**ணாய்" - (களவழி நாற்பது - 34)

"பரி**வோடு எ**ன்றுஉனை" (வில்லிபாரதம் - 12)

"குறிப்**பொடு நோ**க்கி" (வில்லிபாரதம் - 20)

"வடக்**கொடு தெ**ற்கு" (திருமந்திரம் - 2015)

"குருட**ரோடு ஆ**கியே" (திருமந்திரம் - 2024)

"குக**னோடு ஐ**வர் ஆனேம்
முன்புபின் குன்று சூழ்வான்
மக**னோடு அ**றுவர் ஆனேம்
எம்முறை அன்பின் வந்த
அகனமர் காதல் ஐய!
நின்**னோடு**ம் **எ**ழுவர் ஆனேம்!
புகலருங் கானம் தந்து
புதல்**வரால் பொ**லிந்தான் நுந்தை!

(கம்ப இராமாயணம்)

**முடிவுரை**

இதுவரை மூன்றாம் வேற்றுமை உருபுகளை உயிரெழுத்துக்கு முன்னர் ஒடு, ஆன் என்றும்; உயிர்மெய்க்கு முன்னர் – ஒடு, ஆல் என்றும் தொல்காப்பியர் ஓதாது உணர்த்தியவற்றைத் திருக்குறளாரும், நன்னூலாரும் மற்றச் சங்க இலக்கியங்களும் கடைப்பிடித்து வந்துள்ளன என்பதனைக் கண்டோம். திருக்குறளில் பல இடங்களில் இம்முறை மாறுபட்டிருக்கின்றன. அவை திருவள்ளுவரின் கவனக் குறைவன்று; பதிப்பித்தோரும் பிழை திருத்தியோரும் இந்த முறைமையினை உணராமற் செய்த தவறேயாகும். ❖

**வெற்றிக்கு வழி**

கற்பனை பெருக வேண்டின்
கல்வியைப் பெருக்க வேண்டும்
வெற்றியைப் பெருக்க வேண்டின்
மேன்மேலும் முயல வேண்டும்
அற்பமாய் முயன்றார் யாரும்
அறிவினாற் பழுத்தா ரில்லை
கற்பூரத் தீயி னாலே
கற்சூளை வெந்தா போகும் ?

புதுமையே அறிவின் ஆக்கம்
புதுமையே புகழுண் டாக்கும்
புதுமையே தலைமை தாங்கும்
புதுமையே நிலைத்து நிற்கும்
புதுமையே இன்றிப் பாடல்
புனைந்திடல் ; உயிரில் லாத
பதுமையின் மீது சுற்றும்
பட்டுடை போன்ற தாகும்!

– உவமைக் கவிஞர் சுரதா

# தமிழ் யாப்பியல்

முனைவர் ய. மணிகண்டன்



தமிழ்ச் செய்யுள்களின் வடிவ அமைப்பை ஆராயும் இலக்கணத் துறையாக யாப்பியல் ஈராயிரம் ஆண்டுகளாகத் திகழ்ந்து வருகின்றது. செய்யுள் வடிவங்களும் நாட்டுப்புறப் பாடல் வடிவங்களும் இசைப்பாடல் வடிவங்களும் ஒலிநலன்களின் ஏற்றத்தால் கற்போர் நெஞ்சில் பதிவனவாகவும் ஓசையின்பம் பயப்பனவாகவும் கட்டமைப்பு வாய்ந்தனவாகவும் விளங்கி வருகின்றன. தமிழில் செய்யுள் அமைப்பில் இலக்கியங்கள் மட்டுமல்லாமல் மருத்துவம் முதலிய அறிவுத்துறைப் படைப்புகளும் பத்தொன்பது, இருபதாம் நூற்றாண்டுகளில் உரைநடை தோற்றமும் ஏற்றமும் பெறுகின்ற காலகட்டம்வரை படைக்கப் பட்டன. இச்செய்யுள் வடிவங்களின் அமைப்பினைக் குறித்து எடுத்துரைக்கும் தமிழின் தொன்மையான அறிவுத் துறையாக யாப்பியல் என்பது அமைந்துள்ளது.

மூன்றிலக்கணமென்றும் ஐந்திலக்கணமென்றும் வகைமையால் வளர்ச்சி பெற்ற தமிழ் இலக்கணத்தின் நான்காம் பெரும்பிரிவாய் அமையும் துறை யாப்பியல் ஆகும். எழுத்து, சொல், பொருள் என்னும் முப்பெரும் பகுப்புள் தமிழ் இலக்கணத்தை வகுத்தளிக்கும் தொல்லிலக்கணமாகிய தொல்காப்பியம் பொருளிலக்கணத்துள் செய்யுளியலில் தமிழ் யாப்பியலின் பன்முக மாட்சியை எடுத்துரைத்துள்ளது. தொல்காப்பியச் செய்யுளியலானது பிற்கால யாப்பியல் இலக்கண நூல்களைப்போல் வடிவநிலை இலக்கணங்களை மட்டுமன்றிக் கவிதையியலின் – இலக்கியவியலின் – பரந்துபட்ட படைப்பியலின் ஒருங்கிணைந்த நோக்கு நிலையில் இலக்கணங்களை வழங்கியுள்ளது. தொல்காப்பியச் செய்யுளியலிலேயே அத்தொல்லிலக் கணத்திற்கும் முற்பட்ட காலத்தின் யாப்பியல் வல்லாரைக் குறிக்கும் 'யாப்பறி புலவர்' முதலான ஆட்சிகள் இடம்பெற்றுள்ளன. தொல்காப்பியச் செய்யுளியலில் யாப்பு என்பது செய்யுள் உறுப்புகள் முப்பத்துநான்கனுள் ஓர் உறுப்பு என்னும் நிலையிலும், அதனினும் விரிவான பொருள்படும் நிலையிலும், பல்வகைப் பா வடிவங்களின் வடிவ அமைதிகளை ஆராயும் இலக்கணத்துறை என்னும் நிலையிலும் குறிக்கப்பெற்றுள்ளது. எழுத்து, அசை, சீர் எனப் பகுக்கத்தக்கதாய் உள்ள அடியமைப்புக்குள் குறிப்பிட்ட பொருளினை எடுத்துரைக்கும் செய்கையினைக் குறிப்பதாகவும் யாப்பு என்பது செய்யுளியலில் அமைகின்றது. யாப்பு, யாப்பியல், யாப்பறி புலவர் முதலிய ஆட்சிகள் மிகப்பலவாகத் தொல்காப்பியச் செய்யுளியலில் பரக்க இடம்பெற்றுள்ளன. தமிழ் யாப்பியலின் பண்டைப் பெருவளத்தையும், தொன்மை இலக்கண ஆக்கத்தையும், நுட்ப நோக்கு நிலையினையும் தொல்காப்பியச் செய்யுளியல் நாம் அறியத் தருகின்றது. கிடைக்கின்ற இலக்கிய நூல்களுள் தொன்மைசான்றனவாகிய சங்கப் பழம்பனுவல்கள் தமிழ் யாப்பியலின் இலக்கிய நிலைப்பட்ட பண்டைப் பெருவளத்தைக் காட்டி நிற்கின்றன.

தமிழுக்கேயுரிய தனித்தன்மை, பிறமொழித் தொடர்பற்ற தூய நிலை, நுட்பஞ்சான்ற வளம் ஆகியன தமிழ் யாப்பியலின் தனிப்பெரும் தகுதிப்பாடுகள் என்பதனைத் தமிழ் மொழியின் தொன்மைவாய்ந்த இலக்கண, இலக்கியப் படைப்புகளான தொல்காப்பியமும் சங்கப் பனுவல்களும் தெளிவுபடுத்துகின்றன; உறுதிசெய்கின்றன.

தமிழ் ஆராய்ச்சி உலகின் முன்னோடி அறிஞர் பெருமக்களுள் தனித்துக் குறிப்பிடத்தக்க சிறப்புக்குரியவர் வையாபுரிப்பிள்ளை ஆவார். பொதுவாகத் தமிழின் தொன்மை நூல்களின் காலத்தைப் பின்தள்ளிக் குறிப்பிடுபவர் என்றும், வடமொழியைத் தொடர்புபடுத்திக் கூறுபவர் என்றும் கொள்ளப்படும் வையாபுரிப்பிள்ளையே தமிழ் யாப்பியலில் பழம்பெரும் வடிவங்களாக அமைந்துள்ளவை, வடமொழித் தொடர்பற்றவை என்பதையும் தமிழுக்கே தனித்த உரிமை படைத்தவை என்பதையும் தமிழ் மக்களது கருத்து நிகழ்ச்சிக்கும் தொன்றுதொட்டு வந்த தொடரமைதிக்கும் தமிழ் மக்களின் செவியுணர்விற்கொத்த இசையினிமைக்கும் பொருந்துமாறு அமைந்த சிறப்புக்குரியன என்பதையும் பின்வருமாறு அழுத்தந் திருத்தமாக எடுத்துரைத்துள்ளார்.

"தெலுங்கு முதலிய பிறமொழிக்குரிய ஆதியிலக் கியங்கள் வடமொழி யிலக்கணங்களைப் பின்பற்றிய செய்யுள்களால் இயன்றுள்ளன. ஆனால் தமிழ் மொழியிலுள்ள ஆதியிலக்கியங்களாகிய எட்டுத்தொகை நூல்களோவெனின், தமிழிற்கே சிறந்துரியவாய் வடமொழியிலக்கண இலக்கியங்களிற் காணப்பெறா தவாயுள்ள இலக்கணமமைந்த செய்யுள் வகைகளால் இயன்றுள்ளன. அகவற்பா, கலிப்பா, வெண்பா முதலியன தமிழிற்கே தனித்துரிய செய்யுள் வகைகளாம். இவை தமிழ் மக்களது கருத்து நிகழ்ச்சிக்கும், தொன்றுதொட்டு வந்த வழக்கு நிரம்பிய தொடரமைதிக்கும், தமிழ் மக்களது செவியுணர்விற்கொத்த இசையினிமைக்கும் பொருந்துமாறு அமைந்தன; தமிழிற்கே தனியுரிமையென முத்திரையிடப் பெற்று வெளிப்போந்து வீறுற்று உலவின." (தொல்காப்பியமும்

மொழிவளர்ச்சியும், பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை நூற்களஞ்சியம், தொகுதி ஏழு, ப. 205).

பிறமொழித் தாக்கமற்றுத் தொன்மைவளம் – தொடர்வளர்ச்சி கொண்ட தமிழ் யாப்பியல் தனித் தன்மைகள் வாய்ந்ததாகவும் நுட்பங்கள் ஆர்ந்ததாகவும் திகழ்கின்றது.

**தமிழ் யாப்பு வடிவங்கள்**

தமிழில் யாப்பு வடிவங்கள் பாக்கள், பாவினங்கள், இனவினங்கள் என வகைப்படுத்தப் பெறுகின்றன. தொல் காப்பியம் ஆசிரியப்பா, வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பா ஆகிய நால்வகைப் பாக்களை முதன்மை நிலையில் முன் வைக்கின்றது. ஆசிரியப்பாவும் வெண்பாவும் இணைந்து உருப்பெறும் மருட்பாவை அவற்றையடுத்து வைக்கின்றது. பாக்களைத் தொல்காப்பியம் நால்வகைப்படுத்தினும் தமிழ் யாப்பின் அடிப்படைப் பா வடிவங்களாக ஆசிரியப் பாவையும் வெண்பாவையும் அது குறிக்கின்றது. இப்பா வடிவங்களில் காணப்பெறும் வகைகளையும் அமைப்புகளையும் அது விரிவாக விளக்கியமைகின்றது. பாக்களில் இடம்பெறும் பொருண்மையையும் அது சுட்டி நிற்கின்றது. பாக்களின் அடியெல்லைகளையும் எடுத்துரைக்கின்றது. பாக்களின் தனித்த ஓசைகள், பாக்களுள் இடம்பெறும் வண்ணவோசை அமைப்புகள், இலக்கியவியல் நோக்குப் பொதிந்த வனப்பு நிலைகள் முதலியவற்றையெல்லாம் பரந்துபட்ட நிலையில் தொல்காப்பியம் எடுத்துரைக்கின்றது.

யாப்பு வடிவங்கள் குறித்த தொல்காப்பிய இலக்கணங்களுள் கலிப்பா வகைகள் குறித்த இலக்கணங்கள் விதந்து குறிப்பிடத்தக்கன. தொல்காப்பியம் விளக்குகின்ற கலிப்பா வகைகளும் அமைப்புகளும் பிற்காலத்தில் வளர்ச்சி பெற்ற பல்வேறு பா வடிவங்களுக்குக் கலிப்பாவே அடிப்படை எனக் கருத வைக்கின்றன. இதனைக் கலித்தொகையில் காணப்பெறும் கலிப்பாக்களின் அமைப்புகளும் உறுதி செய்கின்றன. இதனைக் கருத்தில்கொண்டு மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர் "எல்லாப் பாவினங்களும் கலிப்பாவினின்றே தோன்றியவாகும்" ('பாவினம்', தமிழ்ப்பொழில், துணர் 9, மலர் 4, ப. 122), என்றும், அறிஞர் வ.சுப. மாணிக்கனார் "கலிப்பாவின் உறுப்புகள் பின்னர்த் தனியே பிரிந்து மனையறம் படுத்த மகன் குடும்பம் போலத் தனிப்பா நிலை எய்தின என்று கொள்ளலாம். பின்னர்ச் செய்யுள் வளர்ச்சிக்குக் கலிப்பா ஓர் அடிப்படை என்பது தெளிவான உண்மை" ('பாவின் இனங்களா ?', தொல்காப்பியக் கடல், ப. 228) என்றும் எடுத்துரைத்துள்ளமை எண்ணத்தக்கன. தொல்காப்பியம் பாட்டின் தன்மையைக் கொண்டது எனக் குறிப்பிடும் பண்ணத்தி என்னும் வடிவம் மிகுபழமை வாய்ந்த யாப்பு வடிவமாக இருத்தல் வேண்டும். இவ்வடிவத்திற்கான சான்று சங்கப் பனுவல்களில் காணக் கிடைக்கவில்லை. வெண்பா யாப்பினவாகக் கூறப்படும் பரிபாடல் தனித்துக் கூறத்தக்க பிறிதொரு பண்டைய யாப்பு வடிவமாகும். தொல்காப்பியம் தருகின்ற யாப்பு வடிவ இலக்கணங்களை நுணுகி நோக்குங்கால் அவை இன்று சங்க இலக்கியங்கள் எனக் குறிக்கப்பெறும் இலக்கியங்களினும் முற்பட்ட காலப் படைப்புகளை ஆதாரங்களாகக் கொண்டு வகுக்கப்பெற்ற இலக்கணங்களாகவே தோன்றுகின்றன.

நாற்பாக்கள், அவற்றின் வகைகள், மருட்பா ஆகியவற்றொடு காலப்போக்கில் பற்பல வடிவங்கள் இலக்கியங்களில் ஆட்சி பெற்றன. அவை இசைப்பாங்கு மிக்கனவாக இலங்கின. யாப்பிலக்கண உலகம் இவற்றைப் பாவினம் என்ற பெயரால் வகைப்படுத்தியது. நாற்பாக்களும் மும்மூன்று இனங்களைப் பெறுகின்றனவாக இவ்வரையறை அமைந்தது. தாழிசை, துறை, விருத்தம் என்பன பொதுவான மூன்று இனங்களாகும். இப்பாவினப் பாகுபாட்டில் சில பொருந்தாமைகள் இருப்பினும் காலவோட்டத்தில் தமிழில் யாப்பு வடிவங்கள் பல்கிப் பெருகின என்பதனையும் அவ்வாறு பல்கிப்பெருகிய வடிவங்களுக்கு இலக்கண நோக்கில் ஒரு வரையறை தருகின்ற முயற்சியே பாவினப் பாகுபாடு என்பதனையும் கருத்தில் கொள்ளல் தகும். இளங்கோவடிகளின் சிலப்பதிகாரத்திலேயே இத்தகைய வடிவங்களுக்கான தெளிவான ஆட்சிகளைக் காண இயல்கின்றது.

பாக்கள், பாவினங்கள் ஆகியவற்றின் வகைப்பாட்டு வரையறைக்குள் அடங்காத பல வடிவங்கள், தேர்ந்த புலவர்களால் பிற்காலத்தில் படைக்கப்பட்டன. இவற்றுள் குறிப்பிடத்தக்கவையாக வண்ணம், சிந்து முதலியன அமைந்தன. இவ்வாறு ஆக்கம் பெற்ற வடிவங்களைப் பாவினத்தின் இனம் என்னும் பொருள்பட இனவினம் என்னும் சொல்லால் வ.சுப. மாணிக்கனார் குறிப்பிட்டுள்ளார்.

தொல்காப்பியம் முதலான இலக்கண நூற்பதிவுகளின் வாயிலாகவும், சங்கப் பனுவல்கள் முதலான இலக்கிய ஆட்சிகளின் வாயிலாகவும் தமிழில் தோன்றி வழங்கும் தமிழ் யாப்பு வடிவங்களுள் முதன்மையானவையாக ஆசிரியப்பா, வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பா, மருட்பா, பரிபாடல், ஆசிரியத் துறை, ஆசிரியத்தாழிசை, ஆசிரிய விருத்தம், குறள் வெண் செந்துறை, குறட்டாழிசை, வெண்டுறை, வெள்ளொத்தாழிசை, வெளிவிருத்தம், கலித்தாழிசை, கலித்துறை, கலி விருத்தம், வஞ்சித் தாழிசை, வஞ்சித்துறை, வஞ்சி விருத்தம், ஆசிரிய விருத்தவழிப்பட்ட இரட்டை ஆசிரிய விருத்தம், கலித்துறை வழிப்பட்ட கட்டளைக் கலித்துறை, காப்பியக் கலித்துறை ஆகியன, கட்டளைக் கலிப்பா, தரவிணைக் கொச்சகக் கலிப்பா வழிப்பட்ட ஒரெதுகைபெற்ற எட்டடி வெண்டளைத் தரவிணைக் கொச்சகக் கலிப்பா, பரணிக் கலித்தாழிசை, வண்ணம், சிந்து, சிந்தின் வழிப்பட்ட காவடிச் சிந்து, கும்மி, கண்ணி, மேல்வைப்பு, உருப்படி முதலியன அமைகின்றன. இவற்றுள் வெண்பா, ஆசிரியப்பா, ஆசிரிய விருத்தம், சிந்து, கண்ணி ஆகிய வடிவங்கள் தொடர்ந்து செல்வாக்குப் பெற்று இக்காலக் கவிதையுலகிலும் தனித்த ஆட்சியைப் பெற்று வழங்குகின்றன.

**தமிழ் யாப்பியல் தொடைகள்**

பா வடிவங்களில் ஒலிநல அழகினையூட்டும் கூறுகள் தொடைகள் என இலக்கண நிலையில் குறிக்கப்பெறுகின்றன.

தமிழ் யாப்பின் முதன்மையான தொடைகளாகிய எதுகை, மோனை, இயைபு ஆகியன பாட்டமைப்பில் இயல்பாக ஓசை நலத்தைத் தருவனவாகும். தொல்காப்பியம் மோனை, எதுகை, இயைபு, முரண், அளபெடை, இரட்டைத்தொடை, நிரல்நிறை, செந்தொடை ஆகியவற்றையும்; விகற்ப நிலையில் பொழிப்பு, ஒரூஉ ஆகிவற்றையும் குறிப்பிட்டுள்ளது. பிற்காலத்தில் அந்தாதித்தொடை ஏற்றம் பெற்றது. தொடை வகைகளில் பல உள்வகைகள் பேசப்பட்டன; ஆட்சி பெற்றன. விகற்ப நிலையில் இணை, கூழை, மேற்கதுவாய், கீழ்க்கதுவாய், முற்று ஆகியன ஆட்சிபெற்று இலக்கணம் கண்டன.

எனினும் நாற்சீரடிகளுக்கு மேற்பட்ட சீர்அடிகளில் இவ்வடிப்படைத் தொடைகளின் வழிப்பட்ட பல அழகிய தொடை அமைப்புகள் ஆட்சிபெற்றன. அவற்றிற்கு இலக்கண வரையறை தரும் முயற்சிகள் செழுமை பெறவில்லை. தமிழ் யாப்பியலில் தொடைநல அழகுகள் தனிக்கவனத்திற் குரியனவாகவும் பிறமொழிகளில் இல்லாத எதுகைத்தொடை முதலிய கூறுகளைக் கொண்டனவாகவும், பிற மொழிகளுக்குத் தொடைக்கொடையினை வழங்கிய பெருமைக்குரியனவாகவும் அமைந்து திகழ்கின்றன. தொல்லிலக்கணமாகிய தொல்காப்பியம் தொடை வகைகளின் எண்ணிக்கையை 13,699 எனவும், அவை மேலும் 'தெரிந்தனர் விரிப்பின் வரம்பில வாகும்' (செய்.நூ. 98) எனவும் கூறியுள்ளமை பண்டை யாப்பியலாரிடையே தொடை அமைப்புகள் குறித்த பார்வை பல்கிப்பெருகி விரிந்து செயற்பட்டமையை உணர்த்துகின்றது.

**இலக்கியங்களும் யாப்பும்**

நெடும்பரப்பை உடைய தமிழ் இலக்கியங்கள் காலம், பாடுபொருள் முதலிய சில அடிப்படைகளில் சங்க இலக்கியங்கள், பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள், காப்பியங்கள், பத்தி இலக்கியங்கள், பிரபந்தங்கள், தனிப் பாடல்கள் எனவெல்லாம் வகைப்படுத்தத்தக்க வகையில் ஒளிர்கின்றன. இவற்றின் வடிவ நிலைப்பட்ட வரலாறும் தனித்தெழுதத்தக்க தகைமையொடு திகழ்கின்றது. இலக்கியங்களின் பொருளுக்கும் நோக்குக்கும் போக்குக்கும் இசைந்த நிலையில் யாப்பு வடிவங்களை மரபு தழுவியும் புதியன புனைந்தும் புலவர் பெருமக்கள் காலந்தொறும் படைத்துள்ளனர்.

சங்க இலக்கியங்களில் ஆசிரியப்பா, கலிப்பா ஆகியன பெருகிய நிலையிலும், வெண்பா அமைப்புகளும் கலிப்பாக்களும், ஓரளவு வஞ்சிப்பாக்களும், பரிபாடலும் இடம்பெற்றுள்ளன. ஆசிரியப்பா யாப்பு, கலிப்பா யாப்பு முதலியன பழங்காலத்திலேயே செழுமையுற வார்க்கப்பெற்ற சீர்த்திமிக்க நிலையினைச் சங்க இலக்கியங்கள் நமக்குக் காட்டுகின்றன. கீழ்க்கணக்கு நூல்கள் வெண்பா யாப்பின் மிகு ஆட்சியைக்கொண்ட நூற்றொகுதியாக விளங்குகின்றது. காப்பியங்கள் விருத்தம், துறை முதலிய பாவின வடிவங்களாலான இலக்கியங்களாக அமைந்து சிறக்கின்றன. பத்தி இலக்கியங்கள் பாக்கள், பாவினங்கள், புதிய பல இசைநலம் சான்ற வடிவங்கள் ஆகியவற்றின் பெட்டகமாகப் பிறங்குகின்றன. பிரபந்தங்கள் பாக்களிலும் பாவினங்களிலும் பல்வகை அமைப்புக் கோலங்களைக் கொண்டனவாகவும் யாப்பு நேர்த்தி மிக்கனவாகவும் சிறக்கின்றன.

வெண்பா வகைகளிலேயே குறுவடிவமாகிய குறள்வெண்பா யாப்பில் தமிழில் தலைசிறந்த படைப்பாக இன்றுவரை கொண்டாடப்பெறும் திருக்குறளைத் திருவள்ளுவர் யாத்தமை தமிழ் யாப்பு வரலாற்றில் தனித்த கவனத்திற்குரியதாகின்றது. அறங்கூறும் இலக்கியங்கள் பலவும் வெண்பா யாப்பில் அமைந்து திட்ப நுட்பம் சான்ற வகையில் அறம் கூற ஏற்ற யாப்பு வடிவம் வெண்பா என்னும் நிலையை நிலைநிறுத்தியுள்ளன. வரிப்பாடல் அமைப்புகளான விருத்தங்கள், தாழிசைகள் முதலிய இசைநலம் தழுவிய யாப்பு வடிவங்களை முதன்முதலாகப் படைத்தளித்துத் தமிழ் யாப்பு வரலாற்றில் சிலப்பதிகாரம் முன்னோடி நிலையில் தனித்த இடத்தைப் பெறுகின்றது. நெடுங்கதையை எடுத்துரைக்க ஏற்ற யாப்பு வடிவங்களாக விருத்தத்தையும் கலித் துறையையும் ஆண்டு சீவகசிந்தாமணி, கம்பராமாயணம் முதலியன தனி வழியைக் காட்டியுள்ளன. பல்வகையான பண்கனிந்த பாடல்களாக யாப்பு வடிவங்களை வளர்த்தெடுத்த பெருமையைத் தேவாரமும் நாலாயிரமும் புரிந்துள்ளன. வெண்டளைக் கலிவிருத்தத்தின் வீறார்ந்த வனப்பினைத் திருமந்திரம் வழங்குகின்றது. கட்டளைக் கலித்துறை என்னும் யாப்பு வடிவத்தின் உச்ச அழகைக் கோவை இலக்கியங்கள் வெளிப்படுத்துகின்றன. கலிவெண்பா யாப்பில் அமைந்த உலா, தூது, மடல் முதலிய பிரபந்தங்கள் ஒற்றைப் பாவாலேயே ஓர் இலக்கியத்தை அழகுறத் தரும் பெருமைக்குரியன. அவற்றுள்ளும் பல நூறு அடிகள் ஒரே எதுகைத்தொடையால் அமைந்த சில மடல் இலக்கியங்கள் தொடை நிலைப்பட்ட சாதனையின் உச்சமாகத் திகழ்கின்றன.

சிலப்பதிகாரத்தைப் போலவே திருவாசகம் இசைநலம் கொண்ட நாட்டார் பாடல் வழிப்பட்ட யாப்பு வடிவங்களையும் கொண்டு திகழ்கின்றது. தரவுக் கொச்சகக் கலிப்பா யாப்பின் தனித்த அழகைச் சேக்கிழாரின் பெரியபுராணம் தருகின்றது. இரட்டை ஆசிரிய விருத்தத்தின் சரளமான ஆட்சியைச் சதக நூல்களும், தாயுமானவர் பாடல்களும், இராமலிங்க அடிகளார் பாடல்களும் முன்வைக்கின்றன. சிந்து, கும்மி, கண்ணி முதலிய எளிய இனிய இசைநலமிக்க வடிவங்களின் அழகைச் சித்தர் பாடல்களும் குற்றாலக் குறவஞ்சி, முக்கூடற்பள்ளு முதலிய பிரபந்தங்களும் தாயுமானவர் பாடல்கள் முதலியனவும் பெற்று ஒளிர்கின்றன. இலக்கண நூல்களுள் வைத்தெண்ணப்படும் இலக்கிய நூலாகிய புறப்பொருள் வெண்பா மாலையுள் வெண்பாவோடு மருட்பாவும் கவினுற மலர்ந்து மணக்கின்றது. அறவிலக்கிய யாப்பாகப் பெரிதும் கருதப்படும் வெண்பாவில் காப்பியம் படைத்த புகழேந்தியால் நளவெண்பா வெண்பா யாப்பில் தனிவரலாறு படைத்துள்ளது. தமிழ் யாப்பு வரலாற்றில் விருத்தங்களில் பாதி எனுமாறு சந்த நயம் விளங்க அமைந்த ஈரடிப் பாக்களை (பரணிக் கலித்தாழிசை) ஆண்டு பரணி இலக்கியங்கள் புது முயற்சி புரிந்துள்ளன. வண்ணம் என்னும் யாப்பு வடிவில் திருப்புகழ் படைத்துப் பெரும்புகழ்பெற்ற அருணகிரிநாதர் சாதித்த

சாதனைகளும் சிந்து வகைகளுள் ஒன்றாகிய காவடிச்சிந்தில் கவினார்ந்த கைவண்ணம் காட்டி அண்ணாமலை ரெட்டியார் சாதித்த சாதனைகளும் யாப்பு வரலாற்றில் தனித்து விளங்குகின்றன. அருணாசலக் கவிராயர் முதலியோரின் நாடகக் கீர்த்தனை இலக்கியங்களும் திரிகூடராசப்பக் கவிராயரின் குற்றாலக் குறவஞ்சியின் கீர்த்தனைப் பாக்களும் உருப்படி வடிவின் உயரிய தகைமையை வெளிப்படுத்துகின்றன.

தமிழ் யாப்பு வடிவங்கள் ஒவ்வொன்றிலும் சிறந்தமைந்த பல இலக்கியங்கள் உள்ளன. ஒவ்வொரு யாப்பு வடிவிலும் உயர்திறம் – தனித்திறம் காட்டிய புலவர் பெருமக்கள் பலர் உளர். குறிப்பிட்ட யாப்பு வடிவிற்கும் குறிப்பிட்ட உணர்வுக்கும் குறிப்பிட்ட பொருண்மைக்கும் தொடர்புண்டு என உணர்ந்து உணர்த்திய புலவர் பெருமக்கள் பலர் உளர். இத்தகையோரால் தமிழ் இலக்கியங்களின் வெற்றிக்கும் செல்வாக்கிற்கும் நிலைபேற்றிற்கும் யாப்பு வடிவங்கள் களமாகவும் காரணமாகவும் அமைந்துள்ளன. குறிப்பிட்ட யாப்பு வடிவங்களில் தனித்திறம் காட்டிய பெருமக்கள் குறித்து மொழிஞாயிறு ஞா. தேவநேயப்பாவாணர் ஒரு பாடலில் படைத்துள்ள தொடர்களான 'விரியும் அகவற்கு இளங்கோவே', 'கலியே பெருங்கடுங்கோ', 'வஞ்சி உருத்திரங்கண்ணன்', 'குறள்வெண்பாவில் திரு வள்ளுவன்', 'பஃறொடை உமாபதிசிவம்', 'கலிவெண்பா கூத்தன்', 'கொச்சகத் தரவருள்மொழித்தேவன்', 'கோவைத் துறை மணிவாசகனார்', 'கலித்துறை திருத்தக்கார்', 'தாழிசைத் தலைவன் சயங்கொண்டான்', 'தகும்பல் மண்டிலம் பெருங்கம்பன்', 'மருட்பா ஆரிதனார்', 'பரிபாடல் நல்லந்துவனார்', 'வண்ணத்திற்கே அருணகிரி' ஆகியவற்றால் தமிழ் யாப்பு வடிவங்களில் சாதனை நிகழ்த்திய பெருமக்களை வரலாற்று நோக்கில் நினையலாம்; யாப்பு நெறியில் முயலும் படைப்பாளிகள் அடிபொற்றலாம்.

இத்தகைய பல்வகை யாப்பு வடிவச் சாதனைகளால் வளம்பெற்ற தமிழ் இலக்கியப் பெரும்பரப்பில் பத்தொன்பதாம், இருபதாம் நூற்றாண்டுகளில் புதுமையையும் புரட்சியையும் கவியுலகில் படைத்த பாரதியும் பாரதிதாசனும் இம்முந்து வளங்களை உணர்ந்து உள்வாங்கிக் கொண்டு அவற்றின் வழிநின்று மேலும் பல யாப்பியற் புதுமைகளையும் சாதனைகளையும் புரிந்தனர். கட்டளைக் கலிப்பா யாப்பில் உணர்வு கொப்புளிக்கும் சுயசரிதைப் படைப்பு, வெண்டளைக் கண்ணிகளால் தொடர்ந்தமையும் நெடுங்கதைக் குயில்பாட்டுப் படைப்பு, சிந்து யாப்பு முன்னிலை வகிக்கும் பாஞ்சாலி சபதக் காப்பியப் படைப்பு எனப் பண்டை யாப்பு வடிவங்களைப் புதிய உணர்வுக்கும் புதிய தேவைக்கும், புதிய பொருண்மைக்கும் பயன்படுத்திய பாரதியின் யாப்பியல் முயற்சிகளும், இன்னிசைக் கலிவெண்பாக்களால் பல குறுங்காப்பியப் படைப்புகள், படைப்பு முழுவதும் இயைபுத்தொடை நலம்பயிலும் சத்திமுத்தப் புலவர் நாடகப் படைப்பு எனப் பல்வேறு தனித்துவம் மிளிரும் பாரதிதாசனின் யாப்பாளுமை முயற்சிகளும் தமிழ் இலக்கியங்களின் யாப்பியல் வரலாற்றில் இருபதாம் நூற்றாண்டின் தனித்தன்மை மிக்க பங்களிப்பு களாகப் பளிச்சிடுகின்றன.

யாப்பு மீறிய கவிதைகள் என்னும் வசன கவிதைகளிலும், புதுக்கவிதைகளிலும், கற்றறிந்த புலவர் பெருமக்களால் கட்டப்படாதவை என்னும் நாட்டார் பாடல்களிலும், இசை மெட்டுக்கு ஏற்ப எழுதப்பெறுவன என்னும் திரையிசைப் பாடல்களிலும் தமிழ் யாப்பியலின் மேன்மைமிக்க பல கூறுகள் மிளிர்கின்றன. காலங்காலமாய்ப் படைக்கப் பெற்றுவரும் புலமை நிலைப்பட்ட இலக்கியங்கள், நாட்டார் பாடல்கள் முதலிய தமிழ்ச் சமூகத்தின் நாவிற்கும் மனத்திற்கும் கருத்திற்கும் இசைந்த பல நிலைப் பா வடிவங்களிலும் தமிழ் யாப்பியலின் கூறுகள் பெருகிய நிலையிலும் அருகிய நிலையிலும் பொதிந்து பொலிகின்றன. யாப்பியல் என இலக்கண வரையறைபெற்ற இவ்வடிவக் கூறுகளும் ஒலிநலக் கூறுகளும் பாடப்பெறும் பாடலுக்கு இயல்பாகவே அமைகின்ற அமைப்புகளே என்பதனை மரபான இலக்கியங்கள் அன்றி வசன, புதுக் கவிதைகளிலும் நாட்டார் பாடல்களிலும் திரையிசைப் பாடல்களிலும் அமைந்து சிறக்கின்ற யாப்பியற் கூறுகள் உறுதிசெய்கின்றன. இவற்றால் யாப்பியற் கூறுகள் என்று வரையறை பெற்றவை செயற்கையான அமைப்புகள் அல்ல என்பதும் தமிழ்க் கவிதை மொழிக்கு இயல்பாய் அமைந்த கூறுகளும் புலமைத் துணையால் செழுமைப் படுத்தப்பட்ட வளர்ச்சி நிலைகளும்தாம் என்பதும் தெளிவா கின்றன.

**நிறை நிலை**

தமிழில் இலக்கியங்களிலும் பிறதுறைப் படைப்புகளிலும் இடம்பெற்றுள்ள செய்யுள் வடிவங்களின் அமைப்பை விளக்கும் – ஆராயும் துறையாக யாப்பியல் விளங்குகின்றது. தமிழில் யாப்பியல் என்னும் துறை தொல்காப்பியர் காலத்திலேயே செழுமையும் வளமும் கொண்டதாகக் காட்சி தருகின்றது. காலந்தோறும் தமிழ்ச் செய்யுள் வடிவங்களில் அடிப்படை மரபு பிறழாமல் மாற்றங்களும் வளர்ச்சிகளும் புதுமைகளும் தோன்றியுள்ளன. தமிழின் தன்னிகரற்ற புலவர் பெருமக்கள் தங்கள் ஆற்றலால் யாப்பு வடிவங்களுக்கு உயிர்ப்பும் வனப்பும் செல்வாக்கும் ஊட்டியுள்ளனர்.

தமிழ் யாப்பு வடிவங்கள் இயற்கையோடு இயைந்தவை; கவிதை மொழிக்கு இசைந்த இயல்பான ஒலிக்கூறுகளை உட்கொண்டவை; கவிதைக் கலையில் கைதேர்ந்த புலவர்பெருமக்களின் புலமைத்திறத்தால் செதுக்கப்பெற்றுச் செழுமைபெற்றவை – முழுமைபெற்றவை – சீர்த்திபெற்றவை; ஓசைநலமும் இசைநலமும் பெற்று ஒளிர்பவை; நுட்பமான அமைப்பொழுங்கு கொண்டு அறிவுத்துறை வல்லாரால் வியக்கப்பெறும் பான்மைகொண்டவை; எவ்வகையான உணர்வையும் உயர்கருத்தையும் எடுத்துரைக்க ஏற்ற ஊடகமாய் ஒளிர்பவை; பிறமொழி அறிஞர்களாலும் மொழியியல் வல்லாராலும் விதந்து பாராட்டப்பெறும் வித்தகம் கொண்டவை.

இத்தகு பெருமையும் பெருமிதமும் கொண்ட தமிழ் யாப்பியலின் தொன்மை வளமும் தொடர்ந்த வரலாறும் நுட்பத் திறனும் உலக மொழியரங்கில் மேலும் கவனம்பெறுதல் காலத்தின் தேவையும் நமது கடமையும் ஆகும்.

❖

# தமிழ் உயிர்மெய் எழுத்து சில ஐயங்களும் தெளிவும்

கவிஞர் செ. சீனி நைனா முகம்மது,
பினாங்கு, மலேசியா



அண்மைக் காலத்தில், நமது தொழில்நுட்ப வல்லுநர்களுக்கிடையே, தமிழ் உயிர்மெய் எழுத்துப் பற்றி எழுந்த சில ஐயங்களால் சிக்கல் ஏற்பட்டுள்ளது பற்றிச் செவியுற்றதன் விளைவாக, அந்த ஐயங்களைத் தெளிவிக்கும் நோக்கத்தில் இக்கட்டுரை எழுதப்பட்டுள்ளது.

அவர்களிடையே எழுந்துள்ள ஐய வினாக்கள் இவை:

1. 'தமிழில், உயிர்போல, மெய்போல, உயிர்மெய்யும் தனிவகை எழுத்தா?
2. 'மெய்யின் மாத்திரையும் உயிரின் மாத்திரையும் சேர்ந்ததுதானே உயிர் மெய்க்கு உரியது. உயிரின் மாத்திரையே உயிர் மெய்க்கும் என்பது சரியா? காட்டாக: க் = ½ மாத்திரை; அ = 1 மாத்திரை. க் + அ = க ஆவதால், 'க'வுக்கு ½ +1=1½ மாத்திரை தானே. 'அ'வுக்கும் 1 மாத்திரை; 'க'வுக்கும் 1 மாத்திரை என்பது எவ்வாறு பொருந்தும்?

இந்த வினாக்களை ஒவ்வொன்றாக அணுகுவோம். தமிழில் உயிர்மெய் தனிவகை எழுத்தா என்ற முதல் வினாவுக்குத் தமிழின் தாய்நூலான தொல்காப்பியம் கூறும் விடையை முதலில் காணலாம்.

**எழுத்தெனப் படுப**
**அகரமுதல் னகர இறுவாய்**
**முப்பஃ தென்ப**
**சார்ந்துவரல் மரபின் மூன்றலங் கடையே.**

(எழுத்து 1)

**அவைதாம்,**
**குற்றிய லிகரம் குற்றிய லுகரம்**
**ஆய்தம் என்ற**
**முப்பாற் புள்ளியும் எழுத்தோ ரன்ன.**

(எழுத்து 2)

முதல் நூற்பா, தமிழில் எழுத்து எனப்படுபவை, அகர உயிர் முதல் னகர மெய் முடிய உள்ள முப்பது எழுத்துகளே என்கிறது; சார்ந்துவரும் மரபினை உடைய மூன்று எழுத்துகள் இந்த முப்பது எழுத்துகளுடன் ஒரு தரத்தன அல்ல என்பதனால், அவற்றைத் தனியாகப் பிரித்துக் காட்டுகிறது.

அடுத்த நூற்பாவில், சார்ந்துவரும் அம்மூன்றும் குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆய்தம் என்ற மூவகைப் புள்ளிகள் என்றும், இவை முழு எழுத்தல்ல; எழுத்தைப் போன்ற தன்மையுடைன என்றும் விளக்குகிறது.

முதல் நூற்பாவில் 'அகரம் முதல் னகர இறுவாய்' என்று தொகுத்துக் கூறிய தொடருக்கு,

**ஔகார இறுவாய்ப்**
**பன்னீ ரெழுத்தும் உயிரென மொழிப.**

(எழுத்து 8)

**னகார இறுவாய்ப்**
**பதினெண் ணெழுத்தும் மெய்யென மொழிப.**

(எழுத்து 9)

என்ற இரு நூற்பாக்கள் விளக்கம் சொல்கின்றன. அகரம் முதல் னகர இறுவாய் என்ற தொடரில், அகர முதல் என்றவை ஔகாரத்தில் முடியும் 12 உயிர்கள் என்றும்; னகர இறுவாய் என்றவை. ககரம் முதல் னகரம் வரை 18 மெய்கள் என்றும் விளக்குகின்றன.

'எனப்படுப' என்பது வரைவிலக்கணம் (definition) கூறப் பயன்படும் தொடர் (குறளில், 'வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும் தீமை இலாத சொலல்' என்று வாய்மைக்கு வரைவிலக்கணம் கூறுவதற்கு, 'எனப்படுவது' என்ற தொடர் பயன்படுவது இதனுடன் ஒப்புநோக்கத்தக்கது). எனவே, தமிழில் எழுத்து என்று குறிக்க முழுத் தகுதியுடையவை மேற்கூறிய முப்பது எழுத்துகள் மட்டுமேயாகும்.

குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆய்தம் என்ற மூன்றுக்குங்கூட எழுத்துக்குரிய நிறைவான தகுதியில்லை. அதனாலேயே, அவற்றை 'எழுத்தெனப் படுப' என்ற தரத்தில் சேர்க்காமல், 'எழுத்தோரன்ன' – எழுத்துப் போன்றவை என்கிறது தொல்காப்பியம். 'அன்ன' என்பது 'போல' இருப்பதையே குறிக்கும். 'மலரன்ன கன்னம்' என்றால், கன்னம் மலராகாது; மலரைப் போன்றதுதான். எனவே, தமிழில் எழுத்தெனப் படுப முப்பது; எழுத்தோரன்ன மூன்று; அவ்வளவே.

எழுத்ததிகாரத்தில் எழுத்துகளைப் பற்றியே கூறும் முதல் இயலில், எழுத்து, எழுத்துப் போன்றது என்ற இரு தகுதிகளிலுமே உயிர்மெய் ஒரு தனியெழுத்தாகக் கூறப்படவே இல்லை. எனவே, உயிர்மெய் என்பது, அடுத்தடுத்து ஒலிக்கும் மெய்யும் உயிருமாகிய இருதனி ஒலிகள் சேர்ந்தநிலையே அன்றித் தனி எழுத்தன்று.

ஆங்கில முறையைவிடத் தமிழ்முறை சிக்கனமானது. Canada என்ற சொல்லில் 6 எழுத்துகள் உள்ளன. இதனைத் தமிழில் ஆங்கில முறைப்படி க்அன்அட்ஆ என எழுதாமல், கனடா என மூன்றே வடிவங்களில் எழுதுகிறோம்; எழுதும் இடம் நேரம் உழைப்பு மூன்றுமே குறைவு. இரு சொற்களிலும் ஒலிப்போ ஒலிகளோ வேறுபடவில்லை. இரண்டிலுமே 3 மெய்யொலிகளும் 3 உயிரொலிகளுந்தான் உள்ளன. ஒரு மெய்யொலியும் அதனைத் தொடர்ந்து ஓர் உயிரொலியும் இடைவெளியின்றி அடுத்தடுத்து ஒலிக்கும்போது, அவை சேர்ந்தொலிப்பது செவியில் புதிய ஒலிபோல் கேட்கிறது. 'பயன் இல்லை' என்ற சொற்களை, நிறுத்திச் சொன்னால் முதற்சொல்லின் இறுதி 'ன்'னும் அடுத்த சொல் முதலிலுள்ள 'அ'வும் ன்அ எனத் தனித்தனி ஒலிகளாகக் கேட்கும்; சேர்த்துச் சொன்னால் 'பயனில்லை' என்று ஒரே சொல்லாகி, மெய்யும் உயிரும் சேர்ந்து 'னி' என ஒலிக்கும்.

இதனையே தொல்காப்பியம்,

**புள்ளி ஈற்றுமுன் உயிர்தனித் தியலாது**
**மெய்யொடுஞ் சிவணும் அவ்வியல் கெடுத்தே.**
(எழுத்து 138)

(மெய்யீற்றை அடுத்து வரும் உயிர் தனித்து ஒலிக்காது; அம் மெய்யின் தனியொலிப்பை மறைத்து அதனுடன் பொருந்தி ஒலிக்கும்)

**மெய்யுயிர் நீங்கின் தன்னுரு வாகும்**
(எழுத்து 139)

(பொருந்திய பிறகும், உயிர் நீங்கினால் மெய் மீண்டும் புள்ளியுடன் தனியொலியாகும்)

என்று விளக்கிக் காட்டுகிறது.

மெய்யொலியும் உயிரொலியும் இல்லாத மொழியில்லை; அவை சேர்ந்து உயிர்மெய்யாக ஒலிக்காத மொழியுமில்லை. ஆனால், உயிர்மெய் என்பது எந்த மொழியிலும், உயிர்போல, மெய்போலத் தனி எழுத்தொலியாவதில்லை. ஏனெனில் உயிர்மெய் என்பது தனிப் பண்பு மாறாத (mixture) சேர்க்கை; இரண்டற இயைந்த (compound) கலவையன்று. இது தமிழுக்கு மட்டுமே உரிய மரபு சார்ந்த கருத்தன்று; ஒலியியல் என்ற அறிவியல் சார்ந்த உலகப் பொது உண்மை.

இனி, இரண்டாம் வினாவைக் காண்போம்.

இந்த வினா உயிர்மெய்யின் மாத்திரை பற்றியது. உயிர்மெய்யின் மாத்திரையளவு பற்றிய ஐயம் புதிது அன்று; மிகப் பழையதுதான். உரையாசிரியர்களே இவ் வினாவை எழுப்பி விடையும் கூறியுள்ளனர்.

**மெய்யோ டியையினும் உயிரியல் திரியா.**
(எழுத்து 19)

இந்த நூற்பா, மெய்யுடன் சேர்ந்தாலும் உயிரியல்பு மாறாது என்கிறது. உயிரின் இயல்பு மாறாது என்பதில் மெய்யின் இயல்பு மாறும் என்ற குறிப்புமுண்டு.

"உயிரும் மெய்யும் கூடுகின்ற உயிர்மெய்க் கூட்டத்தினை, 'மெய்யோடு இயையினும் உயிரியல் திரியா' என்று உயிர்மேல் வைத்துக் கூறியது, அவ் வுயிரின் மாத்திரையே இதற்கு மாத்திரையாகக் கூறுகின்றமை நோக்கிப் போலும்" என்பது இளம்பூரணர் விளக்கம். உயிர்மெய்யின் மாத்திரை உயிரின் மாத்திரையளவே என்பதை இஃது உறுதிசெய்கிறது.

**மெய்யின் வழியது உயிர்தோன்றும் நிலையே.**
(எழுத்து 17)

இந்த நூற்பா உயிர்மெய் ஒலிக்கும்போது, மெய் முந்தியும் உயிர் பிந்தியும் ஒலிப்பதை உணர்த்துகிறது.

உயிரும் மெய்யும் சேர்ந்திருப்பதை, "........... அக்கூட்டம் பாலும் நீரும்போல உடன்கலந்ததன்றி, விரல் நுனிகள் தலைப் பெய்தாற்போல வேறுநின்று கலந்தனவல்ல..." என்று விளக்குகிறார் இளம்பூரணர்.

"..... ஒன்றரை மாத்திரையும் இரண்டரை மாத்திரையும் உடையன ஒரு மாத்திரையும் இரண்டு

மாத்திரையும் ஆயவாறு என்னை எனின், நீர் தனித்து அளந்துழியும், நாழியாய் அரைநாழி உப்பில் கலந்துழியும், கூடி ஒன்றரை நாழியாய் மிகாதவாறு போல்வதோர் பொருட்பெற்றி...'' என்கிறார் நச்சினார்க்கினியர்.

"..... மாத்திரை கொள்ளுங்கால் உப்பும் நீரும்போல ஒன்றேயாய் நிற்றலும், வேறுபடுத்துக் காணுங்கால் விரலும் விரலும் சேர நின்றாற்போல வேறாய் நிற்றலும் பெற்றாம். நீர் உப்பின் குணமேயாயவாறுபோல உயிரும் மெய்யின் குணமேயாய் வன்மை மென்மை இடைமை எய்தி நிற்றல் கொள்க'' என்றும் அவர் மேலும் விரிவாய் விளக்குகிறார்.

தமிழில், ஒலிப்பும் புணர்ச்சியும் ஒலியியல் என்ற அறிவியல் சார்ந்தே இயங்குவதை அன்றே உணர்ந்து உவமை கூறி விளக்கும் உரையாசிரியர் பெருமக்களின் நுண்ணறிவு நமக்கு உவகை தருகிறது.

'பயன் இல்லை' எனப் பிரிந்து ஒலிக்கையில் ன் + இ எனும் மெய்யும் உயிரும் விரலும் விரலும் சேர்ந்திருந்தாற் போலச் சேர்ந்திருப்பதாகவும், 'பயனில்லை' எனச் சேர்ந்து ஒலிக்கையில் பாலும் நீரும் போலக் கலந்துவிடுவதாகவும் இளம்பூரணர் விளக்குகிறார்.

அரைநாழி உப்பை ஒருநாழி நீரில் கலந்தால் அஃது அளவால் (volume) ஒன்றரை நாழியாகாது. இரண்டும் கலந்ததால் மாற்றம் உண்டுதான்; ஆனால் அந்த மாற்றம் அளவில் (volume) நிகழ்வதன்று; மாறாக, அடர்த்தியில் (density) நிகழ்கிறது; எப்படியெனில் ஒருநாழி நீரினும் ஒருநாழி உப்புநீர் அடர்த்தி கூடுவதுபோல என்று நச்சினார்க்கினியர் விளக்குகிறார்.

உயிர்மெய் அளவில் கூடாமல்; அடர்த்தியால் கூடியது எவ்வாறு ? அடர்த்தி ஏதுமில்லாதிருந்த உயிர், உயிர்மெய் யானபின், தான் சேர்ந்த மெய்யைச் சார்ந்து வல்லினம் மெல்லினம் இடையினம் என்ற தன்மை பெறுவது அடர்த்தி என்று அவர் உணர்த்துகிறார்.

மெய்யும் உயிரும் சேரும் முறையை இளம்பூரணர் விளக்கினார்; சேர்வதால் நிகழும் மாற்றத்தை நச்சினார்க்கினியர் விளக்கினார். எனவே, உயிரின் மாத்திரையளவே உயிர்மெய்யின் மாத்திரையளவாம்.

தொல்காப்பியத்தின் இம் முடிவை, இக் கால ஒலியியலின் உதவிகொண்டு மேலும் ஆராயலாம்.

மொழியியல் வல்லுநர்கள், குரல்வளையில் புறப்படும் ஒலிக்காற்று, வாய்வழியிலுள்ள நாக்கு, இதழ், பல் போன்ற ஒலியுறுப்புகளின் தடையின்றி அல்லது மிகக் குறைந்த தடையைக் கடந்து, வெளிப்படுவதால் எழுபவை உயிரொலிகள் என்றும்; அதே ஒலிக்காற்றுக்கு, வழியிலுள்ள ஒலியுறுப்புகள் ஏற்படுத்தும் தடைகளால் விளைபவையே மெய்யொலிகள் என்றும் அவற்றின் வேறுபாட்டை விளக்குகின்றனர்.

உயிரொலிகள் அ இ உ எ ஒ என்றவாறு, தங்களுக்கிடையிலேயே வேறுபடுவதற்குக் காரணம் ஒலிக்காற்று வெளிப்படும்போது, வாய் திறத்தல் குவிதல் போன்ற வாயின் அமைப்பு நிலைகளே அன்றி, வழியிலுள்ள ஒலியுறுப்புகளின் தடைகள் அல்ல.

எழுத்துகள் அடிப்படையில் ஒலிக்கூறுகளே. அவற்றின் ஒலிப்பும், அவை ஒன்றோடொன்று கலப்பதால் ஏற்படும் மாற்றமும், அவற்றை ஒலிக்கும் மனித ஒலியுறுப்புகளின் இடையிலேயே நிகழ்கின்றன.

எனவே, உயிர்மெய்யின் மாத்திரை பற்றி ஆராயும்போது, அதன் ஒலிப்பில் ஒலியுறுப்புகள் செயற்படும் முறையையும் சற்று விளக்கமாக அறிதல் வேண்டும். ஒலியுறுப்புகளில், இதழ்களின் செயற்பாடே புறத்தே நடப்பதாகவும் எளிதில் உணரக்கூடியதாகவும் இருப்பதால், இதழ் முயற்சியில் பிறக்கும் 'ம்' என்ற மெய்யையும், வாய்திறந்து பிறக்கும் 'அ' என்ற உயிரையும் எடுத்துக்காட்டுகளாகக் கொண்டு உயிர் மெய்யின் ஒலிப்பில் ஒலியுறுப்புகளின் பங்கைப் பற்றி விளக்கமாக அறிய முயலுவோம்.

'ம்' என்ற மெய்யைத் தனியாக ஒலிக்கும்போது, நம் இதழ்கள் இரண்டும் இணைகின்றன. இதழ்கள் இணைந்த நிலையில் வாய்வழியாக ஒலி வெளிப்பட முடியாது. எனவே, இதழ்களின் இணைப்பால் தோன்றும் மெய் செவிக்குப் புலப்படும்படி, நுண்ணிய ஒலி மூக்கைச் சார்ந்து வெளிப்படுகிறது. இதழ் இணைப்பும் மூக்கொலி வெளிப்பாடும் ஒரே தருணத்தில் நிகழ்கின்றன. இது நிகழ்வதற்கு மிகச் சிறிய அளவு நேரம் ஆகிறது. இந்த நேரமே மெய்க்கு உரிய ½ மாத்திரை என்று கணிக்கப்படுகிறது.

'அ' என்ற உயிரைத் தனியாக ஒலிக்கும்போது, நம் வாய் இயல்பாகத் திறந்த நிலையில் குரல் வளையிலிருந்து

ஒலி வெளிப்படுகிறது. வாய்திறத்தலும் குரல்வளை ஒலி வெளிப்படுதலும் ஒரே தருணத்தில் நிகழ்கின்றன. இது நிகழ்வதற்காகும் நேரமே உயிர்க் குறிலுக்குரிய 1 மாத்திரை என்று கணிக்கப்படுகிறது.

மேற்கூறியவை, ம் என்ற மெய்யும் அ என்ற உயிரும் தனித்தனியே ஒலிக்கும்போது நடந்த நிகழ்ச்சிகள். ஆனால், ம என்ற உயிர்மெய்யை ஒலிக்கும்போது, இந்த இரு நிகழ்ச்சிகளும் ஒரே தருணத்தில் (simultaneously) நிகழ்கின்றன. அவை தனித்தனியாகவோ, ஒன்றன்பின் ஒன்றாகவோ நிகழ்வதில்லை. இன்னும் விளக்கமாகச் சொன்னால் ) ½ மாத்திரை நேரம் எடுத்துக்கொண்டு ம் என்ற மெய் ஒலித்து, அப்புறம் 1 மாத்திரை நேரம் எடுத்துக் கொண்டு அ என்ற உயிர் ஒலிப்பதில்லை.

அ என்ற உயிரை ஒலிப்பதற்காகக் குரல்வளையிலிருந்து ஒலி வெளிப்படத் தொடங்கும் அதே தருணத்தில் ம் என்ற மெய்யை ஒலிப்பதற்கான இதழ் இணைப்பும் தொடங்குகிறது. உயிரொலி வாயின் உட்பகுதியைத் தாண்டி வருமுன் இதழ் இணைந்து திறந்து உயிரொலி வெளிப்பட வழியமைந்துவிடுகிறது. இதனால், அ என்ற உயிரொலி ஒலிப்பதற்குத் தேவையான 1 மாத்திரை நேரத்திலேயே ம் என்ற மெய்யும் அ என்ற உயிரும் சேர்ந்து ஒலித்துவிடுகின்றன; ம என்ற உயிர்மெய் பிறக்கிறது.

நாம் உணவுண்ணும்போது, வாயைத் திறப்பதற்கு 5 நொடிகள் ஆகின்றன என்றும், உணவைக் கையில் எடுத்து வாயருகில் கொண்டு வருவதற்குப் 10 நொடிகள் ஆகின்றன என்றும் வைத்துக் கொள்ளுவோம். இவை தனித்தனியே நிகழ்வதற்கு 5 + 10 = 15 நொடிகள் ஆகும் என்பது சரிதான். ஆனால், நாம் உண்ணும்போது இந்த இரண்டையும் செய்வதற்குப் 15 நொடிகள் எடுத்துக் கொள்ளுவதில்லை. ஏனென்றால், நாம் வாயைத் திறந்து வைத்துக் கொண்டு பிறகு உணவைக் கையால் எடுக்கத் தொடங்குவதில்லை; உணவை வாயருகில் கொண்டு வந்த பிறகு வாயைத் திறக்கத் தொடங்குவதுமில்லை. நாம் உணவைக் கையில் எடுத்து வாயருகில் கொண்டு வரும்போது வாய் திறந்து அணியமாக இருக்கிறது. உணவை எடுத்து வாயருகில் கொண்டுவருவதற்கு ஆவதைவிட, வாய் திறப்பதற்குக் குறைந்த நேரமே தேவைப்படுவதால், உணவைக் கையில் எடுக்கும் வேலை தொடங்கியதும், பொருத்தமான நேரத்தில் வாய் திறக்கும் வேலையும் தொடங்கி, அந்த உணவு அருகில் வரும் நேரத்தில் சிறிதும் முந்தாமல் பிந்தாமல் சரியான தருணத்தில் வாய்திறத்தல் நிறைவுறுகிறது.

குழந்தைப் பருவமுதலே திரும்பத் திரும்பச் செய்த பயிற்சியால் உண்ணல் என்ற செயலை நமது கையும் வாயும் இவ்வாறு பொருத்தமாகச் செய்கின்றன. எழுத்துகளின் ஒலிப்பும் அப்படித்தான். குழந்தைப் பருவத்தில் ம என்ற உயிர்மெய்யை நாம் ம்ம என்று சொல்லிப் பயின்றிருக்கலாம். ஆனால், பயிற்சி பெற்றுவிட்ட நமது ஒலியுறுப்புகள் இன்று சொல்லும் ம என்ற உயிர்மெய்க்கு ஒருபோதும் 1½ மாத்திரை நேரம் ஆகாது; ஒரே ஒரு மாத்திரைதான்!

இதே முறையில், 2 மாத்திரையுடைய உயிர்நெடில்களுடன் மெய் சேர்ந்து ஒலிக்கும்போது உயிர்மெய்யின் மாத்திரை 2 மாத்திரையேயாகும். ½ மாத்திரை கொண்ட ம் என்ற மெய்யும் 2 மாத்திரை கொண்ட ஆ என்ற உயிரும் சேர்ந்த மா என்ற உயிர்மெய்யின் ஒலிப்பளவு 2 மாத்திரைதாம்!

எனவே, மெய்யும் உயிரும் சேர்ந்து ஒலிக்கும் உயிர்மெய்யின் மாத்திரையளவு அதிலுள்ள உயிரின் மாத்திரையளவே என்பது, தமிழுக்கு மட்டுமே உரிய மரபு சார்ந்த கருத்து அன்று; அறிவியல் சார்ந்த உலகப் பொது உண்மையே!

மெய்யும் உயிரும் சேர்ந்தபின், மெய்யின் மாத்திரை மறைந்து உயிரின் மாத்திரையே உயிர்மெய்யின் மாத்திரை யாவதற்கான காரணத்தை முன்னரே விளக்கினோம். மெய், குற்றியலுகரத்துடன் சேர்ந்த பின்னும் ½ மாத்திரையே பெறுவதற்கான காரணமும் அதுவேயாம். குற்றியலுகரம் வல்லின மெய்யைப் புலப்படுத்த வந்த நுண்ணிய ஒலியாயினும் அஃது உயிரொலியே. எனவே மெய்யுடன், உயிர் சேர்வதும் குற்றியலுகரம் சேர்வதும் ஒருநிலையே!

❖



# பட்ட மரம்!



மொட்டைக் கிளையொடு நின்று தினம்பெரு
மூச்சு விடுமரமே!
வெட்டப் படுமொரு நாள்வரு மென்று
விசனம் அடைந்தனையோ?

குந்த நிழல்தரக் கந்த மலர்தரக்
கூரை விரித்தஇலை!
வெந்து கருகிட இந்த நிறம்வர
வெம்பிக் குமைந்தனையோ!

கட்டை எனும்பெயர் உற்றுக் கொடுந்துயர்
பட்டுக் கருகினையே!
பட்டை எனும்உடை இற்றுக் கிழிந்தெழில்
முற்றும் இழந்தனையே!

காலம் எனும்புயல் சீறி எதிர்க்கக்
கலங்கும் ஒருமனிதன்
ஓல மிடக்கரம் நீட்டிய போல்இடர்
எய்தி உழன்றனையே!

பாடும் பறவைகள் கூடி உனக்கொரு
பாடல் புனைந்ததுவும்
மூடு பனித்திரை யூடு புவிக்கொரு
மோகம் கொடுத்ததுவும்

ஆடுங் கிளைமிசை ஏறிச் சிறுவர்
குதிரை விடுத்ததுவும்
ஏடு தருங்கதை யாக முடிந்தன!
இன்று வெறுங்கனவே!

**- கவிஞர் தமிழ் ஒளி**

# சிந்துவெளித் தமிழ் எழுத்துகள்

பேராசிரியர் இரா. மதிவாணன்





உலகத் தொன்மிகு நாகரிகங்களில் முன்முது நாகரிகமாக விளங்குவது சிந்துவெளி நாகரிகம். சுமேரிய, எகுபது, பாபிலோனியம் போன்ற தொன்மிகு நாகரிக நாடுகளைவிட சிந்துவெளி நாகரிகம் இடப்பரப்பில் பெரியது. அண்மைக் காலக் கண்டுபிடிப்புகளின் வாயிலாக, சிந்துவெளி எழுத்து இந்தியா முழுவதும் பரவியதாகவும் ஈழத்திலும் நிலைகொண்டதாகவும் கண்டறியப்பட்டுள்ளது.

கடந்த ஒரு நூற்றாண்டுக் காலமாக சான் மார்சல் போன்ற அறிஞர்களின் முயற்சியால் கண்டுபிடிக்கப்பட்ட அகழாய்வுப் பொருள்கள் இந்த நாகரிகம் திராவிடருக்கே உரிய நாகரிகம் என்னும் உண்மையைப் புலப்படுத்தியது. சிந்துவெளிப் பகுதியில் நாகரிக இடங்களாகச் சுட்டப்பட்டவற்றுள் 75% இடங்கள் இந்தியாவில் உள்ளன. எஞ்சியவை பாகித்தானில் உள்ளன. இவற்றின் 22 இடங்களில் மட்டும்தாம் அகழாய்வு செய்துள்ளனர். இவற்றில் கிடைத்த பானை ஓடுகளிலும், முத்திரைகளிலும் பொறிக்கப்பட்ட எழுத்துருவங்களே சிந்துவெளி எழுத்து எனப் பெயர் பெற்றுள்ளது. சற்றொப்ப 5000 எழுத்துச் சான்றுகள் பின்லாந்து நாட்டுப் பேராசிரியரான அசுகோ பர்போலா அவர்களால் Corpus of Indus Seals and Inscriptions என்னும் தலைப்பில் இரண்டு தொகுதிகளாக வெளியிடப்பட்டுள்ளன.

இவற்றை, எழுத்துகளே அல்ல என்றும் வெறும் அடையாளக் குறியீடுகள் என்றும் 2004ஆம் ஆண்டில் அமெரிக்க நாட்டு ஆய்வாளர் மூவர் குறிப்பிட்டுக் கட்டுரை எழுதியுள்ளனர். அக்கருத்துகள் முற்றிலும் தவறானவை எனவும் அவை மக்களால் பேசப்பட்ட மொழியின் எழுத்து வடிவங்களே எனவும் பேராசிரியர் ஆசுகோ பர்போலா, அறிஞர் ஐ. மகாதேவன் ஆகியோர் பல்வேறு கட்டுரைகளை எழுதி நிலை நிறுத்தினார்கள். சோவியத்து நாட்டு அறிஞர் நரசோ அவர்கள் கணிப்பொறி வாயிலாகச் சிந்துவெளி முத்திரையிலுள்ள எழுத்துகளை அடைவுபடுத்தி அதன் கட்டமைப்பு முற்றிலும் திராவிட மொழிக்குரியது என நிலைநிறுத்தினார். ஆனால், இதுவரை உலக அறிஞர்கள் எவரும் ஒரு நூற்றாண்டு கழிந்த பிறகும் சிந்துவெளி எழுத்துகளைப் படித்துக் காட்டவில்லை. படிக்கப்படாத காரணங்கள் பின்வருமாறு:

**சிந்துவெளி எழுத்து படிக்கப்படாத காரணங்கள்**

1) உலகத் தொன்மிகு நாகரிக எழுத்துகள் பட எழுத்து, கருத்தெழுத்து, தனியெழுத்து என மூவகைப்படும். சிந்துவெளி எழுத்துகள் 417 குறியீடுகளைக் கொண்ட அசையெழுத்துகள் என்று வகைப்படுத்தியிருக்கிறார்கள். பட எழுத்தாக இருந்தால் ஆயிரக்கணக்கான குறியீடுகள் இருக்க வேண்டும். தனியெழுத்தாக இருந்தால் 50க்குட்பட்டவையாக இருக்க வேண்டும். கருத்தெழுத்து பட எழுத்தில் அடங்குவதால் அதனைத் தனியாக வகைப்படுத்த முடியாது. சிந்துவெளி எழுத்து பட எழுத்திலிருந்து கருத்தெழுத்துக்குச் செல்லாமல் அசையெழுத்து வடிவில் நின்றுவிட்டது என்பதை உலக அறிஞர்கள் பலர் ஊன்றிக் கவனிக்கவில்லை. பட எழுத்தாகப் படித்துத் திணறுகின்றனர். ஐ. மகாதேவன் பட எழுத்தாகப் படித்துப் பொறையர் – மூட்டை சுமப்பவர் என்கிறார். தமிழரசர்கள் மூட்டை தூக்கிச் சுமப்பவர்கள் என்பது ஏற்கத்தக்கதன்று. ஆசுகோ பர்போலா

மீன்படமும் ஆறுகோடுகளும் பார்த்து அறுமீன் – கார்த்திகை – முருகன் என்கிறார். வணிகர் முத்திரையில் கடவுள் பெயர் பொறிக்க மாட்டார்கள்.

மூன்று சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த பாண்டியர் காலத்தில் இசைத் தமிழுக்கு மாத்திரை அளவில் எழுத்துக் குறியீடு அமைக்க வேண்டியிருந்ததால் இசைத் தமிழின் தேவைக்கேற்ப மாத்திரை அளவுகள் காட்டி அசையெழுத்துக் குறியீடுகளை உண்டாக்கினார்கள். அவற்றில் தனியெழுத்துக் குறியீடுகள் அடங்கியுள்ளன. கண்ணன் என்னும் சொல்லில் 'ண்ண' என்பதற்கு ஒரு குறியீடும் 'அன்' என்ற ஆண்பால் ஈற்றுக்கு ஒரு குறியீடும் அமைத்துக் கொண்டனர். இந்த நுட்பத்தைக் கண்டறிந்த நான் இந்த நுட்பத்தின் உதவி கொண்டு சிந்துவெளி முத்திரைகள் அனைத்தையும் தமிழாகப் படித்துக் காட்டியுள்ளேன். 1994இல் புதுதில்லியில் நடைபெற்ற உலகத் தொல்பொருள் ஆய்வு மாநாட்டிலும், 'சிந்துவெளி எழுத்துப் படிப்பது எப்படி' என ஆய்வுக் கட்டுரை படித்துள்ளேன். என்னைப் போன்றே உலக அறிஞர்கள் சிந்துவெளி எழுத்தை அசையெழுத்தாகப் படித்தால் அனைத்து முத்திரைகளையும் படிக்கலாம். சிந்துவெளி எழுத்து படிக்க முடியாத எழுத்து என்னும் காலம் மலையேறிவிட்டது. சிந்துவெளி எழுத்து தமிழரின் சொந்த மொழி எழுத்து என்பது உறுதியாகிவிட்டது. பல்கலைக்கழக ஆய்வுத்துறை மாணவர்கள் 150 பேருக்கு வகுப்பு நடத்தி சிந்துவெளி எழுத்துப் படிக்கும் முறையைக் கற்றுக் கொடுத்து இருக்கிறேன். தென் பிராமி எனத் தவறாக அழைக்கப்படும் தமிழி எழுத்திலிருந்தே அசோகனின் பிராமி தோன்றியது என்பதை என் நூலிலும் எடுத்துக் காட்டியுள்ளேன்.

2) சிந்துவெளி எழுத்தை அரேபிய மொழியைப் போல் வலமிருந்து இடமாகப் படிக்க வேண்டுமென்று உலக அறிஞர்கள் முடிவு எடுத்திருப்பது முற்றிலும் தவறானது. இந்தத் தவறான முடிவால் எவராலும் சிந்துவெளி எழுத்தைப் படிக்க முடியவில்லை. எகுப்து, சுமேரியம், இலத்தீனம், கிரேக்கம், சீனம், சமற்கிருதம் உள்ளிட்ட மொழிகளனைத்தும் இடமிருந்து வலமாக எழுதப்பட்டிருக்கின்றன. கி.மு. 1600 அளவில் வடஇந்தியப் பகுதியில் இடக்கைப் பழக்கம் உடைய வணிகனால் வலமிருந்து எழுதும் எழுத்து முறை உலகில் இருந்ததே இல்லை. எனவே வலமிருந்து இடமாக எழுதும் முறை சிந்துவெளியில் இருந்திருக்கவே முடியாது. சிந்துவெளி நாகரிகத்தின் முக்கால் பகுதி இந்தியாவில் உள்ளது. இந்திய மொழிகள் அனைத்தும் இடமிருந்து வலமாக எழுதப்படுகின்றன. வலமிருந்து இடமாக எழுதிப் பழகிய மக்கள் திடீரென இடமிருந்து வலமாக எழுதும் முறையாகத் தங்கள் எழுத்து முறையை மாற்றிக் கொண்டிருக்க முடியாது. தம் எழுத்து முறையைத் திசை மாற்றிக் கொண்ட மக்கள் உலகில் எந்த நாட்டிலும் இல்லை.

உலக மொழிகளில் எழுத்துகளே எண்ணுக்குரிய குறியீடுகளாக அமைகின்றன. நான் அறிந்த மட்டில் சிந்துவெளி முத்திரைகளிலும் எழுத்துகளே தேவைப்படும் இடங்களில் எண் குறியீடுகளாக அமைந்துள்ளன. சிந்துவெளி எழுத்திலிருந்து பிராமி எழுத்துத் தோன்றியதையும் சிந்துவெளி எண்களுக்குரிய குறியீடுகள் தமிழ்நாட்டுப் பிராமிக் கல்வெட்டில் இடம் பெற்றிருப்பதையும் அவை இடமிருந்து வலமாக எழுதப்பட்டிருப்பதையும் நான் சுட்டிக்காட்டியிருக்கிறேன். அரேபியர்கள் இந்தியாவில் இடமிருந்து வலமாக எழுதப்படும் எண் குறியீடுகளைக் கடனாகப் பெற்றனர். ஆனால், இன்றளவும் வலமிருந்து இடமாக எழுதும் அரபி போன்ற மொழிகளில் எண் குறியீடு மட்டும் இடமிருந்து வலமாக எழுதப்படுவது ஏன் என்பதை அறிஞர்கள் நினைத்துப் பார்க்க வேண்டும். 625 என்று நாம் இடமிருந்து எழுதுவதை அவர்கள் 526 என வலமிருந்து இடமாக மாற்றி எழுத வேண்டுமல்லவா? நம்மைப் போன்றே இடமிருந்து வலமாக 625 என்று எழுதுவது ஏன்? இது ஒன்றே சிந்துவெளிக் காலத்திலிருந்து இந்திய மொழிகளில் இடையீடின்றித் தொடர்ந்து வந்த சிந்துவெளி எண் குறியீடுகள் இடமிருந்து வலமாகவே எழுதப்பட்டிருக்கின்றன என்பதை உறுதிப் படுத்துகின்றது. எண்கள் இடமிருந்து வலமாக எழுதப்பட்டால் மொழிக் குறியீடான எழுத்தும் இடமிருந்து வலமாக எழுதப்பட்டது என்பது ஐயத்திற்கு இடமின்றி உறுதிப்படுகின்றது. எனவே, சிந்துவெளி எழுத்து வலமிருந்து இடமாக எழுதப்பட்டது என்பது முற்றிலும் தவறாகும்.

3) சிந்துவெளி முத்திரைகளில் முதல் வரியை எழுதிய பின் எஞ்சிய எழுத்துகள் மேல் வரியின் கீழ் வலப்பக்க ஓரத்தில் குறிக்கப்பட்டிருப்பதாலும் பெரிய எழுத்தில் தொடங்கி வலப் பக்கத்தில் சிறிய எழுத்தில் முடிவதாலும், வலப்பக்கத்திலிருந்தே எழுதியிருக்கின்றனர் என்னும் கருத்து தவறானது. கருவிகளிலும் முத்திரைகளிலும் எழுத்துகளைப் பதித்தவர்கள் பெரும்பாலும் படிப்பறிவு இல்லாத தொழிலாளர்கள். ஆகவே, அவர்கள் எஞ்சிய எழுத்துகளைத் தாங்கள் விரும்பிய இடத்தில் பொறிப்பது வழக்கம். ஆதலால் எழுத்துகளைப் பொறிப்பதில் உள்ள தவறே இத்தகைய ஐயப்பாட்டிற்கு அடிப்படையாக உள்ளது. ஆக, இந்தக் கருத்தும் ஏற்றுக்கொள்ளத்தக்கது அன்று.

4) பி.பி. லால் என்னும் அறிஞர் பானையோட்டு எழுத்துகளை ஆராய்ந்து ஒட்டின் மேல் கோடு விழும் திசையை உன்னித்துப் பார்த்து இந்த எழுத்துகள் வலமிருந்து இடமாக எழுதப்பட்டவை என்னும் கருத்தை வெளியிட்டார். இதனை அடிப்படையாகக் கொண்ட அறிஞர்கள் சிந்துவெளி எழுத்து வலமிருந்து இடமாக எழுதப்பட்டது என்ற கருத்தை உடும்புப் பிடியாகப் பிடித்துக் கொண்டனர். எனவே, இந்தக் காரணமும் ஏற்கத்தக்கதன்று.

**நான் படித்த முறை**

சோவியத்து அறிஞர் நாரசோவின் வழிகாட்டுதலைப் பின்பற்றித் தமிழில் மொழி முதல், மொழியிடை, மொழியிறுதியில் வரும் எழுத்துக் கட்டமைப்புகளைச் சிந்துவெளி முத்திரையெழுத்துகளில் பொருத்திப் பார்த்தேன். எனக்குப் பெருவெற்றி கிடைத்ததால் ஆசுகோ பர்போலா வெளியிட்ட 5000 முத்திரைகள், தமிழ்நாட்டில் பாறை ஓவியம் பானை ஓடுகளில் கிடைத்த 500 சிந்துவெளி எழுத்துகள் ஆக 5500 எழுத்துச் சான்றுகளை முற்றிலும் தமிழாகப் படித்துக் காட்டி என் நூல்களில் புலப்படுத்தியிருக்கிறேன்.

என் ஆய்வின் வண்ணம் பாண்டிய மன்னன் காய்சினவழுதியால் அமைக்கப்பட்ட முதல் தமிழ்க் கழகத்தில் ஓவிய எழுத்தான பட எழுத்தும், வெண்தேர்ச் செழியன் அமைத்த (கி.மு. 6000) இரண்டாம் தமிழ்க் கழகத்தில் சிந்துவெளி எழுத்து என்னும் அசையெழுத்தும், பாண்டியன் முடத்திருமாறன் அமைத்த (கி.மு. 1850) தமிழி (தென்பிராமி) எழுத்தும் வழக்கிலிருந்தன என நிலைநாட்டியுள்ளேன். எனவே சிந்துவெளி எழுத்து என்று சொல்லாமல் இடைக்கழகத் தமிழ் எழுத்து எனவும் பிராமி என்று சொல்லாமல் மூன்றாம் கடைக்கழகத் தமிழி எழுத்து எனவும் குறிப்பிடுவதே பொருந்தும்.

**காலவகையாலும் இடவகையாலும் கொண்டு வரப்படும் எழுத்துப் பிரிவுகள்**

உலக மொழிகளில் எழுத்தின் வடிவம் காலந்தோறும் திரிபடைகின்றன. ஒரே நாட்டில் பல்வேறு இடங்களில் வெவ்வேறு கையெழுத்துப் பாங்குகள் அமைவது இயல்பு. சீன மொழிப் பட எழுத்துகளில் காலந்தோறும் ஒரே ஒலிப்புக்குரிய வெவ்வேறு வடிவங்கள் மாறி மாறி வந்திருப்பதை அறிஞர்கள் சுட்டிக் காட்டியுள்ளனர். சுமேரிய அரபு எழுத்துகளிலும் எகுப்திய மொழியின் பட எழுத்துகளிலும் கால வகையாலும் இடவகையாலும் திரிபுற்ற வரிவடிவங்களைப் பட்டியலிட்டுக் காட்டியிருக்கிறார்கள். சிந்துவெளி எழுத்தின் காலம் கி.மு. 3000 முதல் கி.மு. 1800 எனக் கூறினாலும் குறிப்பாக எழுத்துக்குரிய வரிவடிவம் காலந்தோறும் அல்லது இடந்தோறும் எப்படியெல்லாம் திரிபடைந்துள்ளது என்பதைச் சிந்துவெளி எழுத்து ஆராய்ச்சியாளர்கள் எவரும் வகைப்படுத்திக் காட்டவில்லை. நான் அம்முயற்சியில் ஈடுபட்டுச் சிந்துவெளி எழுத்து காலந்தோறும் பெற்ற வரிவடிவத்தினைப் பட்டியலிட்டுக் காட்டியுள்ளேன்.

**மருங்கூர் முதுமக்கள் தாழியில் "அம்மூவன்"**

விழுப்புரம் மாவட்டத்து மருங்கூரில் கிடைத்த முதுமக்கள் தாழியில் முதலிரு எழுத்துகள் "அம்" (தென்பிராமி) தமிழியிலும் அடுத்த மூன்று எழுத்துகள் "மூவன்" சிந்துவெளி எழுத்திலும் அமைந்துள்ளன. இதனை அம்மூவன் எனப் படித்தல் வேண்டும்.



மருங்கூர் முதுமக்கள் தாழி

**கீறல் (Graffiti) குறியீடுகள்**

கீறல் எழுத்துகள் சிந்துவெளி எழுத்துகளே. சிந்துவெளி அகழ்வாராய்ச்சிகளிலும் தமிழ்நாடு, ஈழம் உள்ளிட்ட தென்னிந்தியப் பகுதிகளிலும் ஏராளமான கிராபிட்டி எனப்படும் கீறல் குறியீடுகள் ஏராளமாகக் கிடைக்கின்றன. இவற்றை வெறும் அடையாளக் குறியீடுகள் என ஒதுக்கிவிட்டனர். தமிழ்நாட்டில் கொடுமணல் உள்ளிட்ட அகழ்விடங்களில் காணப்பட்ட கீறல் வெளியீடுகள் சொல் வடிவிலே இருப்பதைப் பேராசிரியர் குருமூர்த்தியும் சுட்டிக்காட்டியிருக்கிறார். இவற்றில் சிந்துவெளி எழுத்துகளே உள்ளன என பி.பி. லால் குறிப்பிட்டிருக்கிறார். தமிழ்நாட்டில் கிடைத்த 300 கீறல் குறியீடுகளையும் சிந்துவெளி முத்திரைகளிலுள்ள கீறல் குறியீடுகளையும் சிந்துவெளி எழுத்தாகவே நான் படித்துக் காட்டியிருக்கிறேன். கீறல் குறியீடு என்பது தனி மாந்தரின் கையெழுத்து வேறுபாடாகவே (Varied individual handwriting form) உள்ளது என இவற்றை நான் காட்டியிருக்கிறேன். எனவே, கீறல் குறியீடுகளைச் சிந்துவெளி எழுத்து என்றே குறிப்பிட வேண்டும்.

**கலப்பு எழுத்துகள்**

சிந்துவெளி எழுத்திலிருந்து தென்பிராமி என்னும் தமிழ் எழுத்து உருவாக்கப்பட்ட பிறகு பழைய எழுத்து முறையை உடனே மாற்றிக் கொள்ள முடியாதவர்கள் இருவகை எழுத்துகளையும் கலந்து எழுதிய கலப்பு எழுத்து முறை (mixed type) எழுத்துச் சான்றுகள் தமிழ்நாட்டில் கிடைத்துள்ளன. சில எடுத்துக்காட்டுகள் கீழே தரப்பட்டுள்ளன.

**சிந்துவெளி எழுத்திலிருந்தே தமிழி (பிராமி) தோன்றியது என்பதற்கான காரணங்கள்**

சிந்துவெளி எழுத்தில் இன்றைய தமிழைப் போலவே 12 உயிர்களும் 18 மெய்களுமாகிய 30 எழுத்துகள் இடம் பெற்றுள்ளன. ஏனையவை கோடுகளாகவும் காலந்தோறும் மருவிய திரிபு எழுத்துகளாகவும் உள்ளன என்பதை என் நூல்களில் புலப்படுத்திக் காட்டியுள்ளேன். சிந்துவெளி







அசையெழுத்து முறையை மாற்றித் தனி எழுத்து முறையாகத் தமிழ்ப் புலவர்கள் கி.மு. 1850 வாக்கில் அமைத்திருக்கிறார்கள். அதைப் பின்பற்றி ஐந்திரனார் எழுதிய ஐந்திரம் எனும் தமிழ் இலக்கணம் சிந்துவெளி எழுத்திலிருந்து பிறந்த தமிழி (பிராமி) எழுத்து அமைப்புகளுக்கு இலக்கணம் சொல்கிறது. இதனை வடஇந்தியப் பாலி, பிராகிருதம், திபெத்து, தமிழ் ஆகிய நான்கு மொழிகளும் பின்பற்றியுள்ளன. பிராகிருத மொழியின் காதந்திர இலக்கணமும் பாலிமொழியின் கச்சாயண இலக்கணமும் திபெத்திய மொழியின் சன்–சு–பா இலக்கணமும் தமிழில் தொல்காப்பியமும் ஐந்திரம் எனும் தமிழ் இலக்கணத்தைப் பின்பற்றியதாகக் குறிப்பிட்டுள்ளனர். வடஇந்திய மொழிகளில் சிந்துவெளி மொழியினுடைய இலக்கணக் கட்டமைப்பும் ஐந்திர இலக்கணத்தின் வாயிலாக இன்றளவும் கட்டிக் காக்கப்பட்டு வருகிறது. சிந்துவெளி மொழியிலுள்ள தமிழ் இலக்கணக் கட்டமைப்பும் கி.பி. 5ஆம் நூற்றாண்டு வரை இந்தியாவின் எழுத்து முறையாக இருந்த தமிழி இலக்கணக் கட்டமைப்பு எழுத்தமைப்புகளும் ஒன்றாக உள்ளன என்பதற்கான எடுத்துக்காட்டுகள் என் நூல்களில் தரப்பட்டுள்ளன. இதிலிருந்து தமிழி எனப்படும் தமிழ் பிராமி எழுத்தே வட இந்திய அசோகனின் பிராமி போன்றவற்றுக்கு மூலமாக அமைந்தது என்பது உறுதிப்படுகின்றது.

**தமிழ் எழுத்துகளின் தொன்மை வரலாறு**

சுவசுதிக் எனப்படும் ஓங்காரக் குறியீடு சிந்துவெளிக் காலத்திலிருந்து இன்றுவரை தொடர்ந்து நீடிக்கிறது. இதனைத் தமிழ் எழுத்துகளாகப் பிரித்து ஓம் என்று படித்துக் காட்டியிருக்கிறேன். இந்தக் குறியீடு கி.மு. 6000 சார்ந்த மெகர்கார் அகழ்வாராய்ச்சியில் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. இதிலிருந்து சுவசுதிக் எனப்படும் ஓங்கார எழுத்து கி.மு. 6000 முதல் தமிழ் மொழி எழுத்தாக வழங்கியது என்று காட்டுவதற்குச் சான்றாக உள்ளது. உலகில் கி.மு. 6000 முதல் தொடர்ந்த எழுத்து வரலாறு கொண்ட மொழி தமிழ் அன்றி வேறெதுவுமில்லை. எனவே, தமிழ் எழுத்தின் தொடர்ச்சி இன்றுவரை 8000 ஆண்டுக் காலமாகத் தொடர்ந்து வந்திருக்கிறது. இதனை மேலும் உறுதிப்படுத்த தமிழ் எழுத்துகளின் வரலாறு தனி நூலாக எழுதப்பட வேண்டும்.

சிந்துவெளி எழுத்து தமிழ் எழுத்தே என்பதையும், சிந்துவெளி எழுத்திலிருந்தே தமிழி (தென் பிராமி) எழுத்து ஐந்திரனார் காலத்தில் உருவாக்கப்பட்டது என்பதையும் தென் பிராமி எனும் தமிழி எழுத்திலிருந்தே பாலி மொழிக்காக அசோகனின் பிராமி தோன்றியது என்பதையும் நான் எழுதியுள்ள ஆய்வு நூல்களில் தெளிவுபடுத்தியுள்ளேன்.

❖

# தமிழர்களின் பழங்காசுகள்

முனைவர் இரா. கிருஷ்ணமூர்த்தி



ஒரு நாட்டின் வரலாற்றை எழுத இலக்கியம், கல்வெட்டு, செப்பேடு, காசுகள் ஆகியவை பெரிதும் உதவுகின்றன. காசுகளைப் பற்றிய ஆய்வுத்துறை, வரலாற்றை அறிந்துகொள்ளப் பெரிதும் உதவுகிற துறை. காசுகளை வெளியிட்ட மன்னர்களின் பெயர்கள், பரம்பரை, அவர்கள் பின்பற்றிய சமயம், அவர்கள் வணங்கிய தெய்வங்கள், அத்தெய்வங்களின் வடிவமைப்புகள், ஆட்சி மொழி, அம்மொழியின் வளர்ச்சி, எழுத்து வகை, அதன் வடிவமைப்பு, உள்நாட்டு வாணிக நிலை, வெளிநாட்டு வாணிக நிலை, பெருமளவில் வாணிகம் நடந்த இடங்களை வைத்து மன்னர்களின் ஆட்சிப் பரப்பு ஆகியவற்றைக் காசுகளைக் கொண்டு அறிய முடியும்.

சேர, சோழ, பாண்டியர் என்னும் தமிழகத்தில் தொன்மை அரச மரபினருள், பாண்டியரே முதன்முதலில் காசுகள் வெளியிட்டனர் என்பது என் கருத்து.

இந்தியாவில் வெள்ளி முத்திரைக் காசுகளைத் தான் தொடக்க காலக் காசுகளாக அறிஞர்கள் கருதுகின்றனர், அவற்றின் காலம் கி.மு. 6ஆம் நூற்றாண்டில் இருந்தோ, அதற்குச் சற்று முன்போ தொடங்கி, கி.மு. 2ஆம் நூற்றாண்டு வரை இருந்திருக்க வேண்டும். 'கர்ஷப்பணம்' என்று அழைக்கப்படும் வெள்ளி முத்திரைக் காசுகளில், ஒரு பக்கத்தில் ஐந்து முத்திரைகள் இருக்கும். அவற்றின் எடை சுமார் 3.4 கிராம். நந்தர்களும், மௌரியர்களும் இந்தியாவின் பெரும்பகுதிகளை நீண்ட காலம் ஆட்சி செய்ததனால் அவர்களது கர்ஷப்பணம், சுமார் 400 ஆண்டுக்காலம் இந்தியாவின் வெள்ளிக் காசுகளாக வழக்கில் இருந்தது. நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் அவை கண்டெடுக்கப் பட்டுள்ளன.

வடமேற்குப் பகுதியிலிருந்து தென் கோடியிலுள்ள திருநெல்வேலி மாவட்டம் வரை முத்திரைக் காசுப் புதையல்கள் கிடைத்துள்ளன. அப் புதையல்கள் கிடைத்த பகுதிகளில் அக் காசுகள் புழக்கத்திலிருந்தன என்பதை உணர முடிகிறது.

இந்த முத்திரைக் காசுகளின் தோற்றம் குறித்து ஒருமித்த கருத்து இல்லை. கி.மு. ஆறாம் நூற்றாண்டுக்கு முன்பே அவை வெளியிடப்பட்டிருக்க வேண்டும் என்று சில அறிஞர்கள் கருதுகின்றனர்.

முத்திரைக் காசுகளில் பலவகைக் குறியீடுகள் உள்ளன. அவற்றுள் கதிரவன், மலை, மரங்கள், கிளைகள், மனித வடிவங்கள், முயல், நாய், தேள், பாம்பு முதலியன குறிப்பிடத்தக்கவை. பண்டைக் காலத்தில் நம் முன்னோர் கதிரவன், மலை, மரம், விலங்கு, பாம்பு போன்றவற்றை வழிபட்டு வந்தனர்.

மௌரியப் பேரரசின் முத்திரைக் காசுகளைத் தவிர உள்ளூர் முத்திரைக் காசுகளும் அந்தந்தப் பகுதிகளில் வழங்கி வந்தன. வடக்கே பேரரசன் அசோகன் ஆட்சி செய்தபோது தெற்கே தமிழகத்தில் சேர, சோழ, பாண்டியர் என்ற மூவேந்தர் ஆட்சி புரிந்தனர். இம்மூவரில் பாண்டியரே வெள்ளி முத்திரைக் காசுகளை வெளியிட்டுள்ளனர். இதுவரை சேரர்களோ, சோழர்களோ வெளியிட்ட வெள்ளி முத்திரைக் காசுகள் கிடைக்கவில்லை.



## 1. பாண்டியர் காசுகள் (வெள்ளி)

நந்தர்களும், மௌரியர்களும் வெளியிட்ட வெள்ளி முத்திரைக் காசுகளின் முன்புறத்தில் ஐந்து சின்னங்களும், பின்புறத்தில் பல சிறுசிறு முத்திரைகளும் இருக்கும்.

சங்ககாலப் பாண்டியர் வெளியிட்ட வெள்ளி முத்திரைக் காசுகளில் முன்புறம் ஐந்து சின்னங்கள் இருந்தாலும் பின்புறம் ஒரே சின்னம்தான் உள்ளது.

மேலும் இந்த ஐந்து சின்னங்களும் தனித்தன்மை யுடையனவாக உள்ளன.

படம் 1இல் காணப்படும் காசின் எடை 2.8 கிராம். அதனை அடிப்படையாகக் கொண்டு பார்க்கும்போது பாண்டியர் வெளியிட்ட காசுகள் நந்த, மௌரியர் வெளியிட்ட காசுகளிலிருந்து வேறு பட்டுள்ளதை உணரலாம். இந்தக் காசுகளின் காலம்

கி.மு. 3ஆம் நூற்றாண்டினதாக இருக்கலாம் என்று அறிஞர்கள் கருதுகின்றனர்.

காசின் அளவு : 1.4 செ.மீ. x 1.3 செ.மீ.

எடை : 2.8 கிராம்

முன்புறம் : சூரியன், ஆறு கை கொண்ட சதச்சக்கரம் (இதில் இரண்டு கைகள் தாம் தெரிகின்றன) மரக்கிளை, பாம்பு, வாத்து முதலிய சின்னங்கள் உள்ளன.

பின்புறம் : கோட்டு வடிவுடைய மீன் சின்னம். இக்காசு வைகை ஆற்றில் கிடைத்ததாகும்.

**2. பெருவழுதி காசு (செம்பு)**



பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி பாண்டிய மரபில் மிகத் தொன்மையானவன் என்பதையும், பெருவழுதி மன்னர் பலர் இருந்தமை குறித்தும் சங்க இலக்கியங்கள் விரிவாகப் பேசுகின்றன.

சங்ககாலச் செப்பேடுகள் எதுவும் இதுவரை கிடைக்கவில்லை. மதுரை மாவட்டம் மாங்குளத்திலுள்ள குகைத்தளத்தில் கடலன்வழுத்தி என்ற பெயர் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டு ஒன்று மட்டும் கிடைத்துள்ளது. இக்கல்வெட்டைத் தவிர வழுதி பரம்பரையைக் குறிக்க, படம் 2–இல் விளக்கப்படும் காசுதான் முக்கியமான சான்று. இந்தக் காசே பெருவழுதி மன்னர்களின் கால ஆய்விற்கு அரியதோர் ஊன்றுகோலாக உதவி வருகிறது.

காசின் அளவு : 1.7 செ.மீ. x 1.7 செ.மீ.

எடை : 2.900 கிராம்

முன்புறம் : இடப்புறம் நோக்கி ஒரு குதிரை நின்று கொண்டிருக்கிறது. அக்குதிரையின் முகத்திற்குக் கீழே இரண்டு தொட்டிகள் உள்ளன. குதிரை முகத்தின் அருகிலிருந்து பெருவழுதி என்ற சொல் தொடங்குகிறது. அச்சொல் தொன்மையான தமிழ் – பிராமி எழுத்து வடிவில் இருமுறை பொறிக்கப்பட்டுள்ளது.

பின்புறம் : கோட்டு வடிவுடைய மீன் சின்னம்.

இந்தக் காசின் காலம் கி.மு. 3ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாக இருக்கலாம். இக்காசு வைகை ஆற்றில் கிடைத்ததாகும்.

## 3. மங்கலச் சின்னங்கள் கொண்ட காசு (செம்பு)

காசின் அளவு : 4.7 செ.மீ. x 2.2 செ.மீ.

எடை : 9.450 கிராம்

முன்புறம் : வலப்பக்கம் நோக்கி யானை நின்று கொண்டிருக்கிறது. அதற்கு முன் ஒரு திரிசூலம். அதனை அடுத்து ஒரு மனிதன் நின்று கொண்டிருக்கிறான். யானையின் மேல் இடப்பக்கத்திலிருந்து வலப்பக்கமாக வேலியிட்ட மரம், உடுக்கு போன்ற ஒரு சின்னம், இலைகளுடன் கூடிய கும்பம், பிறைச்சந்திரன், திருவஸ்தம், சங்கு, சக்கரச் சின்னங்கள்.

பின்புறம் : கோட்டு வடிவுடைய மீன் சின்னம்.

இந்தக் காசின் காலம் கி.மு. முதல் நூற்றாண்டைச் சார்ந்ததாக இருக்கலாம். இக்காசு வைகையாற்றில்



கிடைத்ததாகும். சங்ககாலப் பாண்டியர்கள் சைவ மதத்தைப் பின்பற்றியவர்கள் என்று உணர முடிகிறது.

## 4. மன்னர் தலை பொறிக்கப்பட்ட காசு (செம்பு)

காசின் அளவு : 2 செ.மீ., x 1.7 செ.மீ.

எடை : 6.400 கிராம்.

முன்புறம் : பாண்டிய மன்னனின் முகம் பொறிக்கப்பட்டுள்ளது, நீண்ட மூக்கும், தடித்த உதடுகளும் கொண்ட முகம்.



பின்புறம் : கோட்டு வடிவுடைய மீன் சின்னம். இந்தக் காசின் காலம் கி.பி. முதல் நூற்றாண்டைச் சார்ந்தது என்று கொள்ளலாம். இக்காசு பழனி அருகே ஆற்றில் கிடைத்ததாகும்.

இதுவரை வெளியான மன்னர் தலை பொறிக்கப்பட்ட பாண்டியர் காசுகளில் பின்புறம், நீள் சதுரத் தொட்டியில் இரண்டு ஆமைகள் அல்லது நான்கு ஆமைகள் இருக்கும்.

நான்கு ஆமைகள் இருக்கும் தொட்டியின் மேல் வலப்பக்கம் நோக்கி நிற்கும் யானைச் சின்னம் இருக்கும். கோட்டு வடிவமுள்ள மீன் சின்னக் காசு, இதுவரை கண்டெடுக்கப்படவில்லை. இங்கு வெளியாகியிருக்கும் காசுதான் முதல் கண்டுபிடிப்பு.

### 5. சங்ககாலச் சேரர் காசு (செம்பு)

1986ஆம் ஆண்டில் முதன் முறையாகச் சங்க காலச் சேரர் காசு கரூரில் கண்டுபிடிக்கப்பட்டது. அதன் பின் சங்ககாலச் சேரர்களின் எழுத்துப் பொறிக்கப்பட்ட செப்பு, வெள்ளி காசுகள் கிடைக்கத் தொடங்கின. கீழே கூறப்பட்டுள்ள எல்லாக் காசுகளும் கரூர் அமராவதி ஆற்றில் கண்டெடுக்கப்பட்டவையாகும்.

**காசு 1**

காசின் அளவு : 1.9 செ.மீ. x 1.8 செ.மீ.

எடை : 7.7 கிராம்

முன்புறம் : இடப்பக்கம், வளைந்த வடிவில் பாம்பின் வடிவம். அதற்கடுத்து வில் அம்பு; அதற்கடுத்து கோடரி,



கோடரியின் கீழ் யானையின் உருவம் தெளிவாக இல்லை. இச்சின்னங்களின் ஊடே 'டவுரின்' என்றழைக்கப்படும் சின்னங்கள். நீரில் மீன் மிதப்பது போல் எல்லாப் பகுதிகளிலும் பரவிக் காணப்படுகிறது.

பின்புறம் : வில், அம்பு.

இவ்வகையான காசுகள் தொன்மையான வெள்ளி முத்திரைக் காசுகளில் காணப்படும் சின்னங்களை அடிப்படையாகக் கொண்டு செய்யப்பட்டவை. இக்காசின் காலம் கி.மு. 2ஆம் நூற்றாண்டு.

**காசு 2**

காசின் அளவு : 2 செ.மீ. x 2 செ.மீ.

எடை : 9.9 கிராம்

முன்புறம் : கீழ்ப்பகுதி இட ஓரம், வேலியிட்ட மரம், அதற்கடுத்து வலப்பக்கம் நோக்கி நின்று கொண்டிருக்கும் யானை; யானையின் தலைக்குமேல் ஆறு இதழ்களைக் கொண்ட பூப்போன்ற சின்னம்.

காசின் தலைப்பகுதியில் இடமிருந்து, முதலில் ஆமை, அதனை அடுத்து மூன்று வளைவு கொண்ட முகடு, அதன்மேல் ஒரு பிறைச்சந்திரன். அதற்கு அடுத்து கொடிச் சின்னம். அதற்கு அடுத்து கோடரிச் சின்னம். அதற்கு அடுத்து சங்கு. மூன்று வளைவு முகட்டிற்குக் கீழ் ஏர் வடிவம்

இந்தக் காசில் காணப்படும் மூன்று வளைவு முகடும், அதன்மேல் பிறைச்சந்திரனும், வரலாற்றுச் சிறப்பு வாய்ந்தவை. இச்சின்னம் மௌரிய அரசின் சின்னம் என்று கருதப்படுகிறது. இராம்பூர்வா என்ற இடத்தில் அசோகர் நிறுவிய தூணில், தூணையும் அதற்குமேல் வைக்கப்பட்டு இருந்த பெரிய சிங்க உருவத்தையும் இணைப்பதற்குப் பயன்பட்ட செப்பு ஆணி ஒன்று கிடைத்துள்ளது. அந்த ஆணியின் தலைப்பகுதியில், பிறையும் மூன்று வளைவு முகடும் கொண்ட சின்னம் பொறிக்கப்பட்டு இருந்ததால், அச்சின்னம் மௌரியரின் சின்னம் என்று உறுதிப்படுத்தப்பட்டது. சங்ககாலச் சேரரின் இந்தக் காசில் மௌரிய இலச்சினையைப் பதித்து உள்ளமை மௌரியர்களுடன் ஏற்பட்ட இறுகிய நட்பின் அடையாளமாக இருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகிறது. மௌரியரின் ஆட்சிக்காலம் கி.மு. 320 முதல் கி.மு. 175 வரையிலான காலமாகும். இதனால் இந்தக் காசின் காலத்தைக் கி.மு. 2ஆம் நூற்றாண்டு என்று கொள்ளலாம்.

**காசு 3**

### 6. கொல் இரும்புறையன் காசு (செம்பு)

காசின் குறுக்களவு : 2.1 செ.மீ.

எடை : 6.5 கிராம்

முன்புறம் : ஒரு தோரணவாயில், வாயிலின் நடுவே ஒரு போர் வீரன். வீரன் அணிந்திருக்கும் குல்லா மேலைநாட்டுப் பாணியில் உள்ளது. இரு கைகளையும்



இடுப்பில் வைத்திருக்கிறான். சுற்றி விளிம்பில் தமிழ் – பிராமி எழுத்து முறையில், 'கொல்இரும்புறைய்' என்று பொறிக்கப்பட்டுள்ளது. தோரணவாயில் அருகே வேலியிட்ட மரச்சின்னம்.

பின்புறம் : காசின் அடிப்பகுதியில் வில்லும் அம்பும் காணப்படுகின்றன. இதன் அருகே இடப்பக்கத்தில் ஆறு வளைவு முகடு உள்ளது. வில்லின் அருகே வலப்பக்கத்தில்

ஒரு சதுரத் தொட்டியும் அதில் இரண்டு மீன்களும் உள்ளன. காசின் இடப்பக்கத்தில் மேல்பகுதியில் ஓர் ஆற்றின் கரை போன்ற கோடு உள்ளது. ஆற்றில் இணையாக இரண்டிரண்டு மீன்கள், ஒவ்வொன்றும் ஒன்றையொன்று பார்க்கும் நிலையில் அமைக்கப்பட்டுள்ளன.

**காசு 4.**

**7. கொல்லிப்புறை காசு (செம்பு)**

காசின் குறுக்களவு : 1.5 செ.மீ.

எடை : 2.5 கிராம்

முன்புறம் : ஒரு தோரணவாயில். வாயிலின் நடுவே ஒரு போர் வீரன். போர் வீரன் அணிந்திருக்கும் குல்லா மேலை நாட்டுப் பாணியில் உள்ளது. அவனது உடையும் அவ்வாறே உள்ளது. ஒரு கையில் வாளும், மறு கையில்



கேடயமும் இருக்கின்றன. சுற்று விளிம்பில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் வழக்கிலிருந்த தமிழ் – பிராமி எழுத்து முறையில் 'கொல்லிப்புறை' என்னும் பெயர் பொறிக்கப்பட்டுள்ளது,

பின்புறம் : வில்லும் அம்பும் நடுவில் காணப்படுகின்றன. இடப்பக்கம் மீன் சின்னங்களும், ஆமைச் சின்னமும் உள்ளன. வலப்பக்கத்தின் தலைப்பகுதியில் ஆறு வளைவுகள் கொண்ட முகடு, வில்லின் அருகே கீழ்ப்பகுதியில் வலப்புறமாக 'டவுரின்' இலச்சினை. ஆறு வளைவுகள் கொண்ட முகட்டிற்கும், டவுரின் இலச்சினைக்கும் இடையே ஒரு சதுர வடிவ தொட்டி உள்ளது. இதற்குள் எவ்விதக் குறியீடும் இல்லை.

சங்கத்தமிழ் இலக்கியங்களில் சிறப்பாகக் குறிக்கப்பட்டுள்ள கொல்லிமலையின் காவலனான பொறையனின் காசு இஃது என்பது தெரிகிறது. இலக்கியத்தில் தோன்றும் 'பொறை' என்னும் சொல் காசில் 'புறை' என்று பொறிக்கப்பட்டுள்ளது.

**காசு 5**

**8. மாக்கோதை காசு (வெள்ளி)**

காசின் குறுக்களவு : 1.7 செ.மீ.

எடை : 2.280 கிராம்

முன்புறம் : வலப்புறம் நோக்கிய அரசனின் மார்பளவுத் திருவுருவமும், காசின் தலைப்பகுதியில் தொன்மையான தமிழ் – பிராமி எழுத்தில் 'மாக்கோதை' என்ற சொற்றொடரும் பொறிக்கப்பட்டுள்ளன. மன்னனின் தலை முழுமையாக மழுங்கிய நிலையில் உள்ளது. நீண்ட மூக்கும், மேட்டு நெற்றியும் உள்ளன.

பின்புறம் : எந்தவிதச் சின்னமும் பொறிக்கப்படாமல் வழுவழுப்பாக உள்ளது.

ரோமானியக் காசுகளில் காணப்படும் மன்னரின் தலை உருவத்தைப் போன்ற அமைப்பு இந்தக் காசில் உள்ளது. கி.பி. முதல் நூற்றாண்டைச் சார்ந்த ரோமானியப் பேரரசர்களான அகஸ்டஸ், டைபீரியஸ் ஆகியோரது வெள்ளிக் காசுகள், கோவை அருகிலும், கரூரிலும் பெருமளவு கிடைத்துள்ளன. அவர்கள் வெளியிட்ட காசுகளில் அணிகலன்களே இல்லை. அதைப் போன்றே இந்தக் காசும் அணிகலன்கள் இல்லாமல் வெளியிடப்பட்டுள்ளது. இந்தக் காசின் காலத்தைக் கி.பி. முதலாம் நூற்றாண்டு என்று கூறலாம்.



**காசு 6**

**9. குட்டுவன் கோதை காசு (வெள்ளி)**

காசின் குறுக்களவு : 1.9 செ.மீ.

எடை : 2.3 கிராம்.

முன்புறம் : வலப்பக்கம் நோக்கிய அரசனின் மார்பளவுத் திருவுருவம். காசின் தலைப்பகுதியில் தொன்மையான தமிழ் – பிராமி எழுத்தில், 'குட்டுவன் கோதை' என்னும் சொற்றொடர் உள்ளது. இச்சொற்றொடரில் உள்ள ஐந்தாவது எழுத்தான 'ன்' தலைகீழாகப் பொறிக்கப்பட்டுள்ளது. இந்தக் காசிலும் மன்னன் தலை முழுமையாக மழுங்கிய நிலையில் உள்ளது. ரோமானியப் பேரரசர்கள் அணிந்தது போல் கவசம் அணிந்திருக்கலாம். அகன்ற கண்ணும், நெடிய மூக்கும், தடித்த உதடும் தெளிவாகத் தெரிகின்றன. கழுத்தில் ஆடை காணப்படுகிறது.

பின்புறம் : எந்தச் சின்னமும் பொறிக்கப்படாமல் வழுவழுப்பாக உள்ளது.

இந்த காசின் காலம் கி.பி. முதல் நூற்றாண்டு ஆகலாம்.



## 10. சங்ககாலச் சோழர் காசு (செம்பு)

சங்ககாலச் சோழர் வெளியிட்ட ஈய, செப்புக் காசுகள் பல கிடைத்திருப்பினும் பெயர் பொறிக்கப்பட்ட காசு எதுவும் இதுவரை கிடைக்கவில்லை.

### காசு 1

அளவு : 1.9 செ.மீ. x 2.1 செ.மீ.

எடை : 7.100 கிராம்

முன்புறம் : வலப்பக்கம் நோக்கி யானை நிற்கிறது. அதன்மேல் சதுர வடிவில் ஒரு தொட்டி. தொட்டியில் நான்கு மீன்கள் உள்ளன. தொட்டியின் மேல், தலைகீழாக மூன்று வளைவு முகடு. யானைச் சின்னத்தின் கீழ் இடமிருந்து வலமாக வரிசையாக மீன்கள். காசின் இட ஓரத்தில் வேலியிட்ட மரம். அதற்கு மேலே மற்றொரு மூன்று வளைவு முகடு. அதன் அடிப்பாகமான இரண்டு வளைவுகள் மட்டும் தெரிகின்றன.

பின்புறம் : வாலை உயர்த்திய நிலையில் உள்ள புலி.

முத்திரைக் காசுகளில் காணப்படும் சின்னங்கள் இந்தக் காசிலும் இருப்பதால் இது தொன்மையான காசு என்பது உறுதியாகிறது. இதன் காலம் கி.மு. 2ஆம் நூற்றாண்டாக இருக்கலாம்.



### காசு 2

அளவு : 2.2 செ.மீ. x 1.8 செ.மீ.

எடை : 4.800 கிராம்.

முன்புறம் : வலப்பக்கம் நோக்கி நிற்கும் கொம்பன் யானை. அதன் முன்னே குதிரை பூட்டிய தேர்.

பின்புறம் : இடப்பக்கம் நோக்கிப் பாயும் புலி. முன் வலக்கால் தூக்கி, வாய் பிளந்து, வால் உயர்த்தி நிற்பதைக் காணலாம்.



### காசு 3

### மன்னர் தலை பொறிக்கப்பட்ட காசு (செம்பு)

அளவு : 1.5 செ.மீ. x 1.3 செ.மீ.,

எடை : 2.76 கிராம்.

முன்புறம் : வலப்பக்கம் நோக்கியுள்ள அரசரின் மார்பளவு உருவம். தலையில் கிரீடம் இருப்பது தெரிகிறது. காதில் பெரிய காதணி உள்ளது.



பின்புறம் : வலப்பக்கம் நோக்கிப் பாயும் புலி.

## சங்ககால மலையமான் காசு (செம்பு)

அளவு : 2 செ.மீ. x 1.7. செ.மீ.

எடை : 3.350 கிராம்

முன்புறம் : குதிரையொன்று வலப்பக்கம் நோக்கி நின்று கொண்டிருக்கிறது. மலையமான் என்ற பெயர் தொன்மையான தமிழ் – பிராமி எழுத்து முறையில் காணப்படுகிறது. மலைய என்ற பகுதி குதிரைக்கு மேலும், மான் என்ற பகுதி கீழ்ப்பகுதியிலும் உள்ளன. 'மா' என்ற எழுத்து முன்னங்காலுக்கு அருகிலும், 'ன்' என்ற எழுத்து குதிரையின் வாலுக்குப் பக்கத்திலும் உள்ளன.

இந்தக் காசு திருக்கோவலூருக்கு அருகிலுள்ள தென்பெண்ணை ஆற்றங்கரையில் கிடைத்ததாகும்.



சங்ககாலச் சேர, சோழ, பாண்டிய மன்னர்களின் காசுகளும், மலையமான் காசுகளும் அதிக எண்ணிக்கையில் பல காசு சேகரிப்பாளர்களிடம் உள்ளன.

❖

# தமிழ் மாந்தர் தோற்றம்

முனைவர் ந.க. மங்கலமுருகேசன்

தமிழகம் மிகப் பழைமை வாய்ந்த நாடு. தமிழ்மொழி மிகப் பழைமை வாய்ந்தது என்பதனைக் கவிஞர் பாரதி,

**'தொன்று நிகழ்ந்ததனைத்தும் உணர்ந்திடு**
**சூழ்கலை வாணர்களும் - இவள்**
**என்று பிறந்தவள் என்று உணராத**
**இயல்பினளாம் எங்கள் தாய்'**

என்றார்.

தமிழகத்தைக் குறித்த பழைய வரலாறுகள் மறைக்கப்பட்டுப் பழங்கதைகள் சிலவே வரலாறாய் வலம் வரும் நிலையில், மேலை நாட்டு அறிஞர் பெருமக்களுள் சிலரின் அயராத உழைப்பின் பயனாயும், நம்மவர் சிலரின் முயற்சியாலும் தமிழகத்தைக் குறித்த உண்மைகள் சிறிது சிறிதாய் வெளிவரலாயின. அகழ்வாய்வும், தொல்பொருள் ஆய்வும் உண்மைகள் பலவற்றை வெளிச்சத்திற்குக் கொண்டு வந்ததன் பயனாய்த் தமிழ் மண்ணின் பண்டைப் பெருமை, தனிச்சிறப்பு மிக்க வரலாறு படிப் படியாக வளரலாயிற்று.

தமிழ் மாந்தர் தோற்றத்தின் வரலாற்றைக் கால்டுவெல், வி. கனகசபை, எம். சீனிவாச அய்யங்கார், ஆ. முத்துப்பிள்ளை, சேஷ அய்யங்கார், பி.டி. சீனிவாச அய்யங்கார், சர் ஜான் மார்ஷல், வி.ஆர். இராமச்சந்திர தீட்சதர், பாவாணர் முதலியவர்களின் நூல்களை நோக்கினால் தமிழ்நில வரலாறு எவ்வாறு படிப்படியே வளர்ச்சி அடைந்துள்ளது என்பது நன்கு வெளியாகும்.

உலகின் தொன்மையான நாகரிகங்களில் ஒன்று தமிழர் நாகரிகம். மிகப் பழைமை வாய்ந்த இனம் தமிழினமாகும். முன்னைப் பழைமைக்கும் பின்னைப் புதுமைக்கும் ஈடு கொடுத்து இலக்கணச் செறிவும் இலக்கிய வளமும், சீரிளமைத் திறனும் குன்றாமல் இன்றளவும் நின்று நிலவுவது தமிழ் மொழி. ஏனைய பண்டைய மொழிகளான இலத்தீன், கிரேக்கம், சமற்கிருதம் முதலானவை வழக்கொழிந்துவிட்ட நிலைமையில் தமிழ் புதுமைப் பொலிவோடு திகழும் மொழியாய்த் தமிழர்க்குச் சிறப்புச் சேர்ப்பதாய் விளங்குகிறது.

சிறப்புமிக்க தமிழர்களின் – தமிழ் மாந்தர்களின் பூர்விகம் குறித்து எழுப்பப்பட்டு வரும் வினாக்கள் இரண்டு. அவை:

1. தமிழ் மாந்தர் இந்திய நாட்டில் ஆதியிலிருந்து வாழ்ந்து வருகிறார்களா ? அல்லது
2. பிற நாடுகளிலிருந்து வந்து இந்திய நாட்டில் குடியேறியவர்களா ?



**பிற நாடுகளிலிருந்து வந்து குடியேறியவர்கள் எனும் கருத்து தவறானது**

தமிழர்களின் பூர்விகம் குறித்த கருத்துகள் ஆய்வுகள் பல ஆங்கில மொழியிலேயே எழுதப்பட்டு வெளிவந்துள்ளன.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இந்த வரலாற்று ஆராய்ச்சியினை மேற்கொண்ட மேல்நாட்டுக் கிறித்தவர்கள், ஏசுவின் கோட்பாடுகளையும் விவிலிய நூலையும் பின்பற்றினர். (இவர்களிலே டார்வின் ஒரு விதி விலக்கு.)

ஆதிநாளில் ஆதாம் என்ற முதல் மனிதன் தோன்றி வாழ்ந்ததாகச் சொல்லப்படும் 'ஏதேன் தோட்டம்' மேற்கு ஆசியாவில் உள்ளது எனவும், அம்மனிதனின் வாரிசுகள் மேற்கு ஆசியாவில் பெருகிப் பல நாடுகளைச் சென்றடைந்தனர் என்றும் அவர்கள் விவிலியத்தின் அடிப்படையில் நம்பிக்கை கொண்டனர்.

எகிப்து, பாபிலோன், அசிரிய நாகரிகங்களே பழைமையானவை என்றும், மேற்கிலிருந்து கிழக்கு நோக்கி ஆதி மனிதர்கள் வந்தார்கள் என்றும் இதனால் அழுத்தமாக நம்பினர்.

1921–1922இல் சிந்துவெளி நாகரிகம் அகழ்வாய்வின் வழி வெளிப்பட்டு, அது மேற்கு நாகரிகத்தைக் காட்டிலும் பழைமையான நாகரிகம் என்பது வெளிப்பட்டு மேற்கு ஆசிய மக்கள் இந்திய மக்கள் எனவும், இங்கிருந்துதான் அவர்கள் அங்குச் சென்றார்கள் எனவும் கருத்து வேரூன்றியது. மேற்கு ஆசியாவரை வாழ்ந்தவர்கள் ஓர் இன மக்களே.

**கிழக்கு நாட்டில்தான்**

எனவே, மாந்தரின் தோற்றம் மேற்கில் அன்று – அய்ரோப்பாவிற்குக் கிழக்கில் – தென்னகத்தில் என்று ஓர் ஒளி வழி காட்டியது.

விவிலியக் கோட்பாட்டுக்கு மாற்றாக மாந்தரின் தோற்றம் குறித்து அறிவியல் இத்தகவலை ஈந்தது.

"நாம் வாழும் இப்பூமி ஆதியில் உயிர்த் தோற்றமில்லாத அனற்பிழம்பாக விழுந்தது. அது வானவெளியில் எண்ணிலாக் காலஞ் சுழன்றுகொண்டிருந்தது. அப்பொழுது அதன் மேலோடு ஆறத் தொடங்குகிறது. ஓரளவு ஆறிய பின் சிறிய நீர் வாழ் உயிரிகளும், தாவரங்களும் தோன்றின. காலத்திற்குக் காலம் பூமி அடைந்திருந்த பல்வகை வெப்ப தட்ப நிலைக்கேற்ப வாழக்கூடிய எத்தனையோ வகை உயிரினங்கள்

காலந்தோறும் தோன்றி வாழ்ந்து மறைந்தன. அவ்வகை உயிர்களின் என்புக் கூடுகள் இப்பூமியின் ஆழத்திற் கண்டெடுக்கப்பட்டன. ஆதியில் தோன்றிய நீர் வாழ் உயிர்களே படிப்படியாக வளர்ந்து தரைவாழ் உயிரிகளாகிப் பின் மனிதன் வரையில் வளர்ச்சியடைந்தன.

இந் நிகழ்வு நடந்த காலம் எது ? மனிதன் இப் பூமியில் வாழ ஆரம்பித்துப் பத்து அல்லது இருபது இலட்சம் ஆண்டுகளாகின்றன என்பர் இக்கால ஆய்வாளர். ஆதிகால மனிதன் இக்கால மனிதனைவிடத் தோற்றத்தில் சிறிது மாறுபட்டவனாயிருந்தான்; சிறிது சிறிதாக மாற்றமடைந்து இன்றைக்கு 50,000 ஆண்டுகளுக்கு முன்னர் இக்கால மனிதனின் தோற்றத்தை அடைந்தான் எனக் கூறி மக்கள் நூல் ஆராய்ச்சியாளர் மிகப் பழங்காலத்தே வாழ்ந்த மக்களின் மண்டை ஓடுகளை ஆதாரமாகக் காட்டுவர்.

**மனிதனின் தொடக்கக் காலம்**

கேரள மாநிலத்து இராமவர்ம ஆராய்ச்சி நிலைய வெளியீடு ஒன்றில், தமிழர்களான திராவிடரின் நாகரிகப் பண்புகளை விளக்கும் சிறந்த கட்டுரை ஒன்றனை எழுதிய மேனன் எனும் பெயருடைய அறிஞர் கூறியவை இவை:

(1) தென்னிந்தியாவே மக்களின் தொட்டில்.

(2) இன்றைக்கு இருபதினாயிரம் ஆண்டுகளுக்கு முன் இந்தியாவில் பேசப்பட்ட மொழி இன்றைய இனத்தவரின் தமிழுக்கு முற்பட்ட பழந்தமிழ்.

(3) சுமேரிய இனத்தவர், திராவிட இனத்தவரின் ஒரு கிளையினர்.

(4) மொகஞ்சொதாரோ நாகரிகம் அய்யத்துக்கு இடமின்றித் திராவிடருடைய நாகரிகம் ஆகும்.

(5) பிலிப்பைன்சு தீவுகளில் இந்திய நாகரிகத்தின் அடையாளங்கள் காணப்படுகின்றன.

(6) சுமத்திரா, ஜாவா முதலிய தீவுகளின் நாகரிகத்தில் இந்தியப் பண்பாடுகள் ஊறியுள்ளன.

(7) மய்ய அமெரிக்காவில் வாழும் மாயா மக்களின் நாகரிகத்தில் திராவிட நாகரிகத் தொடர்பு உள்ளது.

(8) இந்தியச் சமயம் என்பது திராவிட சமயமே.

ஆகிய கருத்துகள் தெளிவுபடுத்தப்பட்டுள்ளன.

மேனன் எழுதிய அக்கட்டுரைக்குக் கருத்துரை வழங்கிய எஸ்.டி.கே. கிருஷ்ண மேனன் என்பவர்,

“இவ்வாசிரியர் தமது கருத்துகளைத் தக்க ஆதாரங்கள் கொண்டு வலியுறுத்தியிருக் கின்றார். நாம் ஆரிய நாகரிகம்தான் மேலானது என்று நீண்ட காலமாக நினைத்துப் பழகிவிட்டோம். இந்தப் பிற்போக்கான மாயையால் திராவிட மக்கள் மறைக்கப்பட்டிருப்பதால் மேனன் அவர்கள் வலிய சான்றுகள் கொண்டு நிறுவிடும் உண்மைகளை நம்புவதற்கு எவன் ஒருவனும் இன்று பின்னடையான்” என்று கூறுகிறார்.

தொல்லியல் ஆய்வு முடிவுகள் கிடைக்காத காலத்திலேயே மனோன்மணீயம் ஆசிரியர் பேராசிரியர் சுந்தரனார்,

“சதுமறை ஆரியம் வருமுன் சகமுழுதும் நினதாயின்
முதுமொழி நீயனாதியென மொழிகுவதும் வியப்பாமே”

என்றார்.

மேலும் அவர்:

“வட இந்தியாவில் சமற்கிருதத்தையும் அதன் வரலாற்றையும் படித்து நாவல (இந்திய) நாகரிகத்தின் அடிப்படைக் கூற்றைக் காண முயல்வதானது, அப்புதிரை மிகக் கேடானதும் மிகச் சிக்கலானதுமான இடத்தில் தொடங்குவதாகும்.

விந்திய மலைக்குத் தெற்கிலுள்ள இந்தியத் தீபக்குன்றமே இன்றும் சரியான இந்தியாவாக இருந்து வருகின்றது. இங்குள்ள மக்களுட் பெரும்பாலார், ஆரியர் வருமுன்பு தாங்கள் கொண்டிருந்த கூறுபாடுகளையும், மொழிகளையும், சமுதாய ஏற்பாடுகளையுமே இன்னும் தெளிவாகக் கொண்டிருந்து வருகின்றனர். இங்குக்கூட வரலாற்றா சிரியனுக்கு உள்நாட்டுப் பாவினின்று அயல்நாட்டு உடையை எளிதாய்ப் பிரித்தெடுக்க இயலாதவாறு ஆரியப்படுத்தம் பேரளவு நிகழ்ந்துள்ளது. ஆயின், எங்கேனும் ஓரிடத்தில் அதை வெற்றிபெறப் பிரித்தெடுக்க இயலுமாயின், அது தெற்கில்தான். எவ்வளவு தெற்கே போகின்றோமோ அவ்வளவு பிரித்தெடுக்கும் வசதி மிகும்.”

இதனால் அறிவியல் முறைப்படி இந்திய வரலாற்றைக் கங்கைச் சமவெளியினின்று தொடங்காமல் கிருட்டிணா, காவிரி, வைகையாற்றுப் பாய்ச்சலில் இருந்து தொடங்க வேண்டும் என்றார். இக்கருத்தை வின்சென்ட் சுமித் தம்முடைய பண்டைய இந்திய வரலாறு நூலில் அதுவே சரியான முறை என்று சுட்டிக் காட்டினார்.

எனவே, திராவிடர் எனப்படும் தமிழ்ப் பெருங் கூட்டத்தினரே உலக வரலாற்றில் பழைமை பெற்று விளங்கினர்.

**தமிழகம்தான்**

தமிழகத்திலிருந்துதான் மாந்தர்கள் பிற பகுதிகளுக்கு ஏற்றம் ஆயினர் என்னும் முடிவை வெளிப்படுத்தியவர் களுள் எச்.ஆர். ஹால், ஈராசுப் பாதிரியார், பி.டி. சீனிவாச அய்யங்கார், வி.ஆர்.ஆர். தீட்சதர், கா.சு. பிள்ளை, மறைமலை அடிகள், யு.ஆர். எல்லிசு, தனிநாயக அடிகள், கே.கே. பிள்ளை, ந.சி. கந்தையா, பாவாணர் எனப் பெரும் பட்டியலே இருக்க கமில்சுவலபில், கே.ஏ. நீலகண்ட சாஸ்திரி 'அங்கிருந்து இங்கு வந்தோர்' (அதாவது வடக்கிலிருந்து) எனும் கோட்பாடுடையவர்களாயுள்ளனர். சுவிரா ஜெயஸ்வால் அம்மையார், பர்ட்டன் ஸ்டெயின் ஆகியோர் இப்போது முடிவு கூறுவதற்கில்லை எனும் கருத்துடையவர்கள் ஆவர்.

'உலக முதல் மொழி தமிழே. உலக முதலினம் தமிழினமே' என்பதனை நம் தமிழ்த் திருநாட்டின் அறிஞர் பெருமக்களில் ஒருவரான வி.ஆர். இராமச்சந்திர தீட்சதர் எடுத்துக் காட்டுகிறார்.

"தமிழர் தென்னிந்தியாவின் தொல்குடிகளே. அவர்கள் மெசபடோமியா பகுதியிலிருந்து இங்கு வந்து குடியேறியவர் என அறிஞர்கள் சிலர் கூறுவது தவறு. தொல் தமிழரே பழங்காலத்தில் தென்னிந்தியாவிலிருந்து உலகெங்கும் பரவினர். சிந்துவெளி, எலாம், சுமேரியா, எகிப்து முதலிய பண்டைய நாகரிகங்களை உருவாக்கியவர்கள் இங்கிருந்து அங்குப் பரவியவர்கள்" எனத் தெளிவுபடத் 'தமிழர் தோற்றமும் பரவலும்' என்னும் தம் நூலில் கூறுகிறார். மேலும் அவர்,

"தென்னிந்தியாவையும், ஆப்பிரிக்காவையும் இணைக்கிறதும், சிந்து கங்கைச் சமவெளி உருவாவதற்கு முன் இருந்ததுமான கடல்கொண்ட தென்னாடுதான் திராவிடரின் தாயகம். அக்கடல் கொண்ட தென்னாட்டின் பகுதியாகிய தென்னிந்தியாவில்தான் நண்ணிலக்கம், இனம் என்று அழைக்கப்படும் இனம் உருவாகியது என்பதே நம் முடிவு. திராவிடப் பண்பாட்டின் கூறுகள் இந்தியப் பண்பாட்டில் மட்டும்தான் காணப்படுகின்றன என்று கூற முடியாது. பெருமளவுக்குத் திராவிடப் பண்பாட்டைக் கிரீட், ஈஜியன் பகுதி, சுமேரியா, பாபிலோனியா, எகிப்து, பசிபிக் முதலான பண்டை உலகின் பல்வேறு நாகரிகங்களில் காணலாம். இதனை வலுவாக நிறுவ வேண்டுமானால் தென்னிந்தியாவில் விரிவான அகழ்வாய்வுகள் செய்ய வேண்டும்"

என 1940களிலே கூறியுள்ளார்.

**இலெமூரியா**

தமிழரின் தொன்மையை உலகுக்கு அறிவித்தவர்களுள் கால்டுவெல் குறிப்பிடத் தக்கவர். அடுத்துப் பாவாணர், உலகின் முதல் மாந்தர் தமிழர் எனவும், தமிழர் தோன்றிய இடம் குமரிக் கண்டமே எனவும் குறிப்பிட்டுள்ளார். பாவாணர் மேலும் கூறுகையில்,

"உயிரினங்களின் இடப்பெயர்வும் பரவலும்" பற்றிய பகுதியில் ஞாலத்தின் மேற்பரப்பில் அடிக்கடி மாறிக் கொண்டிருக்கும் நீர்நிலைப் பாதிப்பைக் குறிப்பிடுகையில் எக்கேல் "இந்து மகா சமுத்திரம் ஒரு காலத்தில் சந்தாத் தீவுகளினின்று தொடங்கி, ஆசியாவின் தென்கரை வழியாய் ஆப்பிரிக்காவின் கீழ்க்கரை வரைக்கும் பரவியிருந்த ஒரு கண்டமாயிருந்தது. கிளேற்றர் இப்பழங்காலப் பெருங்கண்டத்திற்கு அருகில் வாழ்ந்த குரங்கொத்த உயிரி பற்றி இலெமூரியா என்று பெயரிட்டிருக்கிறார். இக்கண்டம் மாந்தனின் பிறந்தகமாயிருந்திருக்கக் கூடும். ஆதலின் மிக முதன்மையானதாகும்" என்று கூறுகின்றார்.

மனித இனத்தின் தொட்டில் இலெமூரியா என்பார் ஹெக்கல் (எக்கேல்). தொல்காப்பியம் உலகில் இறுதியாய்த் தோன்றிய உயிரினம் ஆறறிவு கொண்ட மனிதனே என்பதை,

**'மக்கள் தாமே ஆறறிவுயிரே'** (தொல். பொ. 512)

எனக் கூறுவதையும் இங்கே சுட்டலாம்.

குமரிக் கண்டம் குறித்துப் பலர் இவ்வாறாக எழுதியிருப்பினும் வரலாற்று நோக்கில் முழுமையாக ஆய்ந்து 'குமரிக் கண்டம்தான் தமிழன் பிறந்தகம்' எனும் உண்மையை நிலைநாட்டியவர் பாவாணர்.

பி.டி. சீனிவாச அய்யங்கார் 1929ஆம் ஆண்டில் வெளியிட்ட தமிழர் வரலாறு எனும் தம் நூலில் தமிழர் தொன்மை குறித்துக் கூறியபோதும் போதிய அளவு மொழிநூற் சான்றினைக் காட்டவில்லை.

"தமிழர்கள் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என நிலத்தைப் பாகுபாடு செய்திருந்தனர். அந்தப் பாகுபாடு மனிதனின் நாகரிக நிலைகளையும் குறிக்கும் பாகுபாடுகளாய் அமைந்தன. விலங்கு, பறவைகளை வேட்டையாடி வாழ்வதற்கு ஏற்ற இடம் குறிஞ்சி. அதற்கு அடுத்தபடியாக ஆடு, மாடுகளைச் சிறப்பாக வளர்த்து வாழ்வதற்கு ஏற்ற இடம் முல்லை. அதற்கு அடுத்துப் பயிர்த் தொழில் செய்து வாழ்வதற்கு ஏற்றது மருதம். அதற்கு அடுத்தபடியாக மரக்கலங்களைச் செய்து கடல் வாணிகம் நடத்திட ஏற்ற இடம் நெய்தல். இந்நான்கு நிலங்களும் மாந்தர் நாகரிக வளர்ச்சிக்கு ஏற்றவாறு அடுத்தடுத்து இருந்தன அல்லது இருப்பது குமரி நாடும் அதோடு இணைந்த இன்றைய தமிழகமே" என்பார் பாவாணர்.

**தாவரப் பெயர் வழி குமரிக்கண்டம்**

'எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே' (தொல். சொல். 157) என்பார் தொல்காப்பியர்.

தாவரப் பெயர்களுள் பல கண்டப் பெயராகவும், நாட்டுப் பெயராகவும் வழங்கி வந்தன என்பதனை இன்றும் அவற்றுக்கு வழங்கும் பெயர்களால் அறியலாம். குமரி – குமரிக் கண்டம் (குமரி என்பது சோற்றுக் கற்றாழை என்பர்).

பனை – பனை நாடு, திருப்பனந்தாள்,
பனைமரத்துப்பட்டி, பனையூர்
தெங்கு – தெங்கநாடு
பாலை – பாலையூர், பாலை நாடு
நாவல் – நாவலம் பொழில், நாவலந் தீவு,
நெல்லி – திருநெல்லிக்கா
மா – மாவூர், மாங்காடு
ஆல் – திருவாலங்காடு
பலா – பலாத் தோப்பு
தென்னை – தென்னை மரக்குடி

அறிஞர்கள் பலர், 'இலெமூர்' என்னும் குரங்கினம் வாழ்ந்த இலெமூரியா என வழங்கிற்று என்பதனைவிட இலைமூலி – இலைமூர் – இலெமூரி – இலெமூரியா என வழங்கப்பட்டது சாலப் பொருத்தம் என்பர்.

மாந்தர் தோற்றத்தில் மொழியின் பங்கினைத் தமிழின் பண்புகள் கொண்டும் காட்டலாம்.

**பதினாறு பண்புகளுடைய தமிழ்**

இயல்பாகத் தோன்றிய இயன் மொழிக்குப் பதினாறு பண்புகள் இருக்க வேண்டும். அப்பதினாறும் அமைந்த மொழி தமிழ் ஒன்று மட்டுமே என்பர். அப்பதினாறு இயல்புகள்.

"தொன்மை, முன்மை, எளிமை, ஒளிமை, இளமை, வளமை, தாய்மை, தூய்மை, செம்மை, மும்மை, இனிமை, தனிமை, பெருமை, திருமை, இயன்மை, வியன்மை."

முதன் மனிதனுக்கு மொழி தேவையில்லை. அவன் மக்களைப் பெற்றுப் பெருகிய பின்னர்க் கூடி வாழத் தலைப்பட்டபோது தன் எண்ணத்தைக் குறியாலும், முகக் குறியாலும், படக் குறியாலும் பிறர்க்குப் புலப்படுத்தினான். இக்குறிகளை இரவிலும், தொலைவிலும் பயன்படுத்த இயலாமையால் மொழி தோன்றியது" என்பார் தஞ்சைப் பெரும் புலவர் நீ. கந்தசாமிப் பிள்ளை. இவ்வாறு

"வையமீன்ற தொன்மக்கள் உளத்தினைக்
கையி னாறுரை காலம் இரிந்திடப்
பைய நாவையசைத்த பசுந்தமிழ் அய்யை
தாள்தலைக் கொண்டு பணிகுவாம்.

என்பார்.

**பாவாணர் காட்டும் ஆதாரங்கள்**

"தமிழன் என்னும் இனம் தமிழ் பற்றியதே யாதலால் தமிழ் தோன்றிய இடமே தமிழன் பிறந்தகமாம். அது தென்வாரியில் மூழ்கிப் போன குமரி நாடே" என்று கூறும் பாவாணர் காட்டும் சான்றுகள் இவை.

1. தமிழும் அதனொடு தொடர்புள்ள திராவிட மொழிகள் நாவலந் தேயத்திற்குள் வழங்குதலும், தென்மொழி வடக்கில் செல்லச் செல்ல இலக்கிய மற்றும் இடையீடு பட்டும், தெற்கில் வரவர மெல்லோசை கொண்டும் திருந்தியும், விரிந்தும் இலக்கியமற்றும் செறிந்தும் இருந்தது.
2. தென் சொற்கட்கெல்லாம் தமிழிலேயே வேர் அல்லது வேர்ப் பொருளிருத்தல்.
3. நாற்பெரு மொழிகள் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகியன தொன்று தொட்டுத் தென்னாட்டில் வழங்குதல், முழுத் தூய்மையுள்ள தமிழ் தென்கோடியிலிருத்தல்.
4. தெற்கே செல்லச் செல்ல தமிழ் திருந்தியும், சொல்வளம் மிக்கும் ஒலி எளிமையுற்றும் இருத்தல், திருத்தக் கல்விக்குத் தெற்கிட்டுப் பிறந்தவன் எனும் வழக்குண்மை.
5. பிராகிருத மொழிகளிலும், தெலுங்கு மொழியிலுமுள்ள வன்மெய்கள் இல்லாமல் தமிழில் 18 மெய்களே இருத்தல், எட்டும், பத்தும் பன்னிரண்டுமாக மெய்யொலிகள் கொண்ட மொழிகள் ஆஸ்திரேலியாவிலும், அதனை அடுத்த தீவுகளிலும் வழங்குதல்.
6. தமிழ்ச் சங்கம் மதுரையில் இருந்ததும், குமரிக் கண்டம் தொன்மையுடைத்தாயும், வரலாற்றுக் காலத்திற்கு முன்பே மூழ்கியது என்பதும்.
7. குமரிக் கண்டத்தில் ஏழ்தெங்க நாடிருந்ததையும் தென் என்னும் சொல் தென்னை மரத்தையும், தெற்குத் திசையையும் குறித்தல்.
8. பண்டைத் தமிழ்ச் செய்யுள்களில் கூறப் பெற்ற நீர் நாயும், உரையாசிரியர் கூறும் காரன்னமும் இன்றும் தாஸ்மேனியத் தீவில் இருத்தல்.
9. தென்னாட்டிற்கு இயற்கையாக இன்றும் உரியவை, பண்டைத் தமிழ் இலக்கியத்தில் கூறப் பட்டிருந்தவை, இரண்டோர் அயல் விலங்குகள், தாவரங்கள் தவிர்த்து அனைத்து கருப் பொருள்களும், காலவகைகளும், நிலவகை களுமாகிய முதற்பொருளும் ஆகும்.
10. தென்னாடு, தென்னர், தென்னவர், தென்மொழி, தென் கலை முதலிய பெயர்கள் தொன்றுதொட்டு வழங்கி வருதல்.
11. தென் வடல், தெற்கு வடக்குத் தெரியாதவன், தெற்கும் வடக்குமாய்த் திரிகின்றவன், தென்பல்லி, வடபல்லி முதலிய வழக்குகளில் தென்திசை முன் குறித்தல்.
12. கடைச் சங்கத்தவர் தம் முன்னோர்களைத் தென்புலத்தார் எனக் கூறுதல், தென்திசைக் கிழவன், தென்திசை முதல்வன், தென்புலக்கோன் எனப் பெயர் பெற்றிருத்தல்.
13. தென்மொழி வளர்ச்சியின் முற்று நிலைகளைத் தமிழே காட்டி நிற்றல்.
14. கோதுமை, வாற்கோதுமை, உறைபனி, பனிக்கட்டி முதலிய குளிர் நாட்டுப் பொருள்கள் பண்டைத் தமிழ் இலக்கியத்தில் கூறப்படாமை.
15. கடைச்சங்கப் புலவர் 49 பேர், இடைச் சங்கப் புலவர் 59 பேர், ஆனால் தலைச்சங்கப் புலவர் 549 பேர். தலைச்சங்கம் பாண்டிய நாடு தெற்கே ஈராயிரம் கல் தொலைவு நீண்டிருந்ததற்கேற்பப் புலவர் தொகையும் மிகுந்திருந்தது.
16. தமிழ் உலகின் நடுவிடமாகத் தில்லைச் சிதம்பரம், குமரி நாட்டுப் பாண்டியனால் அமைக்கப் பெற்றவை. அதாவது வடபாற் பனிமலைக்கும் தென்பாற் குமரி மலைக்கும் நடுவிடையே அமைந்தது. அதனால் நடுநாயகமாகக் கருதப் பெறுகிறது.

**குமரிக் கண்ட இருப்பு**

"மறைந்த குமரிக் கண்டம் (Lost Lemuria) எனும் ஆங்கில நூலில் காணப்படும் படத்தில், பெரிய மலை ஒன்று மேலைக் கடலில் தொடங்கி, வடக்குந் தெற்குமாகக் குமரிக்குத் தென் பகுதியிலே உள்ள நிலப்பகுதியிலே நெடுந்தொலைவு சென்று பின் தென்மேற்காகத் திரும்பி மடகாசுக்கர் எனும் ஆப்பிரிக்கத் தீவு வரை சென்றதாகத் தெரிகின்றது. அம்மலைக்குக் கீழ்ப்பக்கம் உள்ள நாட்டில் பெருமலை ஒன்று இருந்ததாகத் தெரியவில்லை. இந்த மலையானது தென் கிழக்கு முதல் வடமேற்கு வரை செல்லுகின்ற இமயமலை போல வடமேற்குத் தொடங்கித் தென்கிழக்கிற் செல்லுகின்ற 30 பெருமலைத் தொடராய் இருப்பதாகத் தெரிகின்றது" எனப் பேரா. கா.சு. பிள்ளை எழுதியுள்ளார். தெற்கில் மூழ்கிப் போன குமரிக் கண்டம் எனும் நிலப் பகுதி ஏறத்தாழ 2,500 கல் தெற்கு வடக்காக நீண்டு இருந்தது எனவும் அதன் மேற்குப் பகுதி நெடுகிலும் ஒரு பெருமலைத் தொடர் தொடர்ந்திருந்ததென்றும் அறியப்படும்.

### கற்பனை அன்று

"முந்நீர் விழவின் நெடியோன்
நன்னீர்ப் பஃறுளி" (புறம் 9)

என நெட்டிமையாரும்,

"பஃறுளியாற்றுடன் பன்மலையடுக்கத்துக்
குமரிக்கோடும்"

என இளங்கோ அடிகளும் பாடியிருப்பதால் குமரிக் கண்டமும் அதன் தென்கோடியில் மேலைப் பகுதியிலிருந்த குமரி மலைத் தொடரும், அதிலிருந்து பாய்ந்து ஓடிய பஃறுளியாறும் கற்பனைச் செய்திகளன்று, உண்மை என உணரலாம்.

பாண்டிய நாட்டைப் பகுத்துக் கூறிய அடியார்க்கு நல்லார், 'தொடியோள் பௌவமும்' என்னும் சிலப்பதிகாரத் தொடரின் உரையில் 'தென்பாலி முகத்திற்கு வடவெல்லையாகிப் பஃறுளி யென்னும் ஆற்றிற்கு குமரி என்னும் ஆற்றிற்குமிடையே எழுநூற்றுக் காவதம் இவற்றின் நீர்மலிவானென மலிந்து ஏழ்தெங்கநாடும், ஏழ்மதுரை நாடும், ஏழ்முன் பாலை நாடும், ஏழ்பின் பாலை நாடும், ஏழ்குன்ற நாடும், ஏழ்குணகாரை நாடும், ஏழ்குறும்பனை நாடும் என்னும் இந்த நாற்பத்தொன்பது நாடும், குமரி, கொல்லம் முதலிய பன்மலை நாடும், காடும், நதியும் பதியும்" என்று கூறியிருப்பதைக் கற்பனையெனத் தள்ளிவிட இயலாது.

### மாந்த இனங்களின் கொடி வழியும் பொது இடமாற்றங்களும் பற்றிய கருதுகோள்

"மாந்தரின் முந்திய இருப்பிடம் இன்று சிந்துமாக்கடலில் மூழ்கியுள்ள ஒரு கண்டம் எனவும், அது இன்றுள்ளவாறு ஆசியாவின் தென்கரையை நெடுகவும் அடுத்து, அதனொடு சிலவிடங்களில் இணைந்து கிழக்கில் தொலைவில் இந்தியாவும், சண்டாத் தீவுகளும் வரையும், மேற்கில் மடகாசுகரும் ஆப்பிரிக்காவின் தென்கீழ்க்கரை வரையும் பரவியிருந்ததெனவும் கருதுவிக்கும் பல சூழ்நிலைகள் உள்ளன. விலங்குகளும், தாவரங்களும் குறித்த பல உலக உண்மைகள் அத்தகைய தென்னிந்தியக் கண்டமொன்று முன்னிருந்ததென்பதைப் பெரிதும் காட்டுகின்றன. அக்கண்டத்திற்குச் சிறப்பாக உரியனவாயிருந்த முந்திய மக்களால் அது இலெமூரியா எனப் பெயர் பெற்றது. அதை முற்கால மாந்தரின் உறைவிடமாகக் கொண்டால் மனித இனங்கள் இடம் பெயர்ந்து ஆங்காங்குக் குடியிருக்கும் தாவர நிலை விளங்கும்.

தமிழ் மக்களின் தாயகம் தென்னிந்தியாவின் மிக மிகப் பழங்காலத்தில் கன்னியாகுமரிக்குத் தெற்கில் பெரிய நிலப்பரப்பு விரிந்து கிடந்தது. தென் இந்தியா அதன் ஒரு பகுதியாக இலங்கைத் தீவை உட்படுத்திக் கொண்டு இந்தியக் கடலுள் வெகுதூரம் பரந்து கிடந்தது.

அதன் பரப்பு தெற்கே நியூசிலாந்து வரையும் கிழக்கே தென் சீனா வரையும் மேற்கே கிழக்கு ஆப்பிரிக்கா வரையும் பரவிக் கிடந்தது. அப்போது இமயமலை எழவில்லை. கங்கை, சிந்து முதலாய பேராறுகள் தோன்றவில்லை. விந்திய மலைக்கு வடக்கே கடல் கிடந்தது. அதனைப் புவியியலார் இரெதெ கடல் எனக் கூறுவர்.

பிற்காலத்தில் இமயமலை கடலிலிருந்து எழுந்தது. அம்மலையிலிருந்து கங்கை, சிந்து, அவ்வாறுகளிலிருந்து சிந்து கங்கைச் சமவெளிகள் தோன்றின. பின்னும் விந்திய மலைக்கு வடக்கே ஒரு கடல் கிடந்தது. புவியியலார் அதனை இராசபுதனக் கடல் என்றனர்.

கன்னியாகுமரிக்குத் தெற்கே குமரி, பஃறுளி எனும் ஆறுகள் ஓடிக் கொண்டிருந்தன. தமிழகத்தில் பெரும்பகுதி இவ்வாறுகளுக்கிடையில் கிடந்தன.. கன்னியாகுமரிக்குத் தெற்கில் நாற்பத்தொன்பது தமிழ்நாடுகள் கிடந்தன.

இந்தியக் கடலில் கிடந்த பெரிய நிலப்பரப்பில் ஆதி மக்கள் தோன்றிப் பெருகினார்கள். மேல்நாட்டார் இப்பூகண்டத்தை இலெமூரியா எனப் பெயரிட்டனர்.

'இலெமூர்' எனும் சொல் முதலில் அங்குத் தேவாங்கு போன்ற உயிர்கள் வாழ்ந்தன எனக் கொண்டு அவர்களின் நிலப்பரப்புக்கு இலெமூரியா எனப் பெயர் பெற்றதாகப் புராணங்கள் கூறின.

கடல் பெருக்கெடுப்பு, எரிமலை முதலிய இயற்கை விளைவுகளால் பெரிய நிலப்பரப்புப் பகுதிகள் கடலுள் மறைந்து போயின. அங்கு வானுற ஓங்கி நின்ற மலைகளின் சிகரங்களே இந்தியக் கடலுள் கிடக்கும் தீவுக் கூட்டங்கள் எனக் கூறுகின்றனர்.

இலெமூரியாக் கண்டம் மிக அகன்று பரந்து கிடந்தது. ஆகவே அதன் பகுதிகளின் வெப்ப தட்ப நிலைகள் மாறுபட்டிருந்தன. வெப்ப தட்ப நிலைக்கேற்ப நிறம், மயிரின் தன்மை உடற்கூறுகளால் மாறுபட்ட மக்களுள் அங்கு வாழ்ந்து கொண்டிருந்த இவர்களே பின் மங்கோலியர், ஆஸ்திராயிடுகள், ஆரியர் போன்று நிறத்தாலும் உடல் கூற்றாலும் மாறுபட்டனர்.

இலெமூரியாக் கண்டம் இயற்கைக் குழப்பங்களால் அழிவெய்தவே அங்கே வாழ்ந்து கொண்டிருந்த மக்களில் பலர் உயிர் பிழைத்தனர். அவர்களில் சிதறிப் பல நாடு, பல திசைகளில் ஒருவருக்கொருவர் தொடர்பு இல்லாமல் நீண்ட காலம் வாழ்ந்தனர்.

காலப் போக்கில் இவர்கள் வெவ்வேறு தொடக்கத்தினர் எனச் சொல்லும் வகையில் மாறுபட்டார்கள். இவ்வாறு மாறுபட்டுப் பல்கிய பல கூட்டத்தினரின் நாகரிகம், சமயம், மொழி, பழங்கதைகள் முதலியன அவர்கள் ஒரு மய்யத்தினின்று பிரிந்து சென்றவர்கள் என்பதை அறிவிக்கின்றன.

உலக மக்கள் அனைவரிடையேயும், கடல் கோள் தமைப் பற்றிய பழங்கதை ஆகியன குறித்தும் நினைவிலிருந்தன. அப்பழங்கதையின் முக்கியப் பகுதிகள் ஒரே மாதிரியில் உள்ளன. இப்பழங்கதையும் அவர்கள் பிரிந்து சென்றவர்கள் என்பதைத் தெரிவிக்கின்றன.

இலெமூரியாக் கண்டம் இருந்த காலத்தில் வடக்கே கடலிலிருந்த இலெமூரியா அழிவெய்திய போது இமயமலை கடலாழத்திலிருந்து எழுந்தது. இதனால், அதன்

சிகரங்களில் கடல் வாழ் உயிர்களின் படிவங்கள் காணப்படுகின்றன. அவை இம் மலைத் தொடர் கடலாழத்தினின்றும் எழுந்ததென்பதைத் தெரிவிக்கும் சான்றாகும். இதனைக் கருணாம்ருத சாகர சிறப்புப்பாயிரம் கூறுகிறது.

இலெமூரியாக் கண்டத்தின் அழிவின் பின்னரும் குமரிக்குத் தெற்கில் இலங்கையை உட்படுத்திய நிலப்பரப்புக் கிடந்தது. இதன் நிலப்பரப்பில் பஃறுளியாறும் வடக்கில் குமரியாறும் ஓடிக் கொண்டிருந்தன.

இப்போதுள்ள கன்னியாகுமரியை அடுத்துச் சிறிது தெற்கில் இருந்ததாக உள்ள தாமிரபரணி ஒரு காலத்தில் இலங்கைத் தாமிரபரணி நாடு என அறியப்பட்டதென்றும் தாமிரபரணி என்பதே தமிரபேன் எனச் சிதைந்து வழங்கியதென்றும் சிலர் கூறுவர்.

. குமரிக்குத் தெற்கே கிடந்த நாடுகளைக் கடல் கொண்டது. இதனைப்,

> **"பஃறுளியாற்றுடன் பன்மலை**
> **அடுக்கத்துக் குமரிக்கோடும் கொடுங்கடல் கொள்ள"**

எனச் சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது.

கடல் கோளுக்குப் பிழைத்தோர் வடக்கு நோக்கிச் சென்று குடியேறினர். காலச் செலவில் மக்கள் பெருக்கம் அதிகப்பட்டது. மக்கள் மேலும் மேலும் வடக்கு நோக்கிச் சென்று வாழ்வாராயினர்.

### தண்டகம்

வடக்கில் தண்டகம் என்று அறியப்பட்ட பெரிய நாடானது இன்றைய ஆந்திரப் பிரதேசம், மத்திய பிரதேசம், ஒரிசா முதலிய நாடுகளை அடக்கியிருந்தது. இம்மூன்று நாடுகளின் பரப்பு ஏறத்தாழ எண்பதினாயிரம் சதுர மைல் அளவு கொண்ட பெரிய காட்டையும், மலைத் தொடரையும் கொண்டிருந்தது. ஆதலால் அதனைத் தாண்டி மேலும் வடக்கு நோக்கிச் சென்று அவர்களால் குடியேற இயலவில்லை.

கடற்கரையை அடுத்து வாழ்ந்த மக்களில் கட்டு மரங்களிலும், ஓடங்களிலும் கடலில் செல்லும் பழக்கம் பெற்றிருந்த அவர்களில் சிலர் மேற்குக் கடற்கரை வழியாகக் கடலில் சென்று செழிப்பு மிக்க சிந்துநதிச் சமவெளிகளில் குடியேறினர். இவர்கள் அங்கிருந்து கங்கைச் சமவெளி வரை சென்று தங்கினர்.

### வடக்கிலும் தமிழ்

எனவே, வடக்கிலும் தெற்கிலும் தமிழ் மொழியைப் பேசும் மக்கள் அப்போது வாழ்ந்தனர். வடக்கில் வாழ்ந்தவர்களில் ஒரு பிரிவினர் பலுசிச்தானம் வழியே மேற்கு ஆசியாவை அடைந்தனர்.

### பிராகூய்

பலுசிச்தானத்தில் பிராகூய் எனும் மக்கள் வாழ்கின்றனர். அவர்கள் குல வழியில் திராவிட இனத்தினர். அவர்கள் பேசும் பிராகூய் மொழி தமிழ் இனம் சார்ந்தது. அம்மொழிக்குரிய பல சொற்கள் தமிழ்ச் சொற்களாக உள்ளன. நம் தாய்த்தமிழ், அன்னைத் தமிழ் அங்கே வடக்கில் வாழ்ந்தது என்பதற்குச் சான்றாக பிராகூய் மொழி உள்ளது. பிராகூய் மக்கள் இந்தியாவினின்று வெளியே சென்றவர்களில் பின்தங்கியவர்கள் எனக் கருதப் பெறுபவர்கள்.

கைபர் கணவாய் வழியே ஆரியர் வருவதற்கு முன்னர்த் தமிழினத்தவர் பாரசீகம், ஸ்பெயின், இத்தாலி, மேற்கு ஆசியா, ஆசியா மைனர் முதலிய நாடுகளில் எல்லாம் சென்று வாழ்ந்தனர்.

அபிசீனியர், பிரிட்டனின் கெல்டிக் மக்கள், எகிப்தியர் முதலானவர்களும் இந்திய நாட்டினின்றும் சென்றவர்களாகவே பண்டைய வரலாற்று வல்லுநர் கூறுவர்.

### சிந்துவெளியில் தமிழர்

பேராசிரியர் எஸ்.ஆர். இராவ், லோத்தாலில் அகழ்வு ஆய்வு நடத்தி அங்கும் அரப்பா – மொகஞ்சொதாரோ நாகரிகத்தினை ஒத்த பண்டைய நாகரிகத்தை உலகுக்கு அறிவித்தார்.

இதனால் தமிழ்க் குடியினர் வட இந்தியாவின் பெரும் பகுதியிலும் பரவி வாழ்ந்து பண்டைய சிந்து நாகரிகத்தைத் தோற்றுவித்தனர் எனலாம்.

எனவே, "மாந்தன் தோற்றமும் மக்கள் குல மலர்ச்சியும் பழந்தமிழகமே; ஆதி மக்கள் தமிழகத்திலிருந்து வாழ்ந்து பெருகியவர்களே; ஆதிமக்களின் தொட்டில் பழந்தமிழ் நாடே; நாகரிக உச்சியிலிருந்த சுமேரியா, எகிப்து நாகரிகங்களுக்கு முந்தைய நாகரிகம் தமிழர் நாகரிகமே" என்பதும் உலகில் உள்ள அனைத்துத் தமிழர் நாகரிகத்தினின்றும் கிளைத்துச் செழித்தவை என்பதும் பல்வேறு ஆய்வு முடிவுகளால் அறியப் பெறும் செய்திகளாம்.

இந்துமாக் கடலில் மூழ்கிய நிலப்பரப்பு தமிழர்தம் நிலப்பரப்புதான் என்பதை மறந்திடாத நம் தமிழ்ப் பெருங்குடியினர், நிலநூல், மாந்த நூல் ஆய்வு முடிவுகள் தலையெடுக்கு முன்னர் இளங்கோவடிகளும், இறையனார் அகப்பொருள் உரையில் நக்கீரரும், நச்சினார்க்கினியரும் நம் தமிழர் தொன்மையை எடுத்துக் கூறினர்.

வடமலை என்பது மேற்குத் தொடர் மலை என்பதையும், எபிரேய மொழியில் வழங்கிய பெயர்கள் தமிழுக்கு உரியன என்பதையும் கால்டுவெல் எடுத்துக் காட்டி நிறுவியுள்ளது சான்றாகின்றது.

உலக மொழிகள் கிளைத்துப் பெருகுவதற்கும் அடிமரமாய் ஆணிவேராய் அமைந்தது இளமை குன்றாத நம் தாய்மொழி என்பதனைப்

> **"பல்லுயிரும் பல உலகும்**
> **படைத்தளித்துத் துடைக்கினும்**
> **இளமை குன்றா**
> **இயல்பினளாம்"**

என்று தமிழ் குறித்த சுந்தரனார் வாக்கு மெய்ப்பிக்கிறது. தமிழர்கள் மண்ணின் மைந்தர்கள். தமிழர்கள் வாழ்க்கையைப் பழங்கற்காலம் முதல்தான் அடையாளம் காண முடிகிறதென்பதும் பத்தாயிரம் ஆண்டளவிலேயே அதாவது ஆரியர் வருகைக்கு எண்ணாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே நாகரிகப் பழைமை எய்தி விட்டனர் என்பதும் வரலாற்று உண்மைகள். ❖

# தமிழக நில அகழாய்வுகள்

முனைவர் நடன காசிநாதன்



தூத்துக்குடி மாவட்டம், ஆதிச்சநல்லூர், திருநெல்வேலி – திருச்செந்தூர் சாலையில் திருநெல்வேலியிலிருந்து 24 கி. மீட்டர் தொலைவில், தென்கிழக்குத் திசையில் அமைந்துள்ளது. இவ்வூரின் மேற்குப் பகுதியில் தாமிரபரணி ஆற்றின் தென் பகுதியில் ஒரு மேட்டுப் பகுதி காணப்பெறுகிறது. இம்மேட்டுப் பகுதியில் முதுமக்கள் தாழிகள் அதிக அளவில் காணப்படுவதால், இது ''தாழிக்காடு'' என்று அழைக்கப்படுகிறது.

இத் தாழிக்காட்டில் முதன் முதலில் 1876ஆம் ஆண்டிலும், பின்னர் 1899, 1903, 1904, 1906, 1914 ஆகிய ஆண்டுகளிலும் வெளிநாட்டினரால் அகழாய்வு மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. அண்மையில் 2004–லிருந்து இந்திய நடுவண் அரசு தொல்லியல் துறை இங்கு இரண்டு ஆண்டுகள் அகழாய்வை நடத்தியது.

இவ்வகழாய்வின் இயக்குநராகச் செயல்பட்ட முனைவர் சத்தியமூர்த்தி, இங்குக் கிடைக்கப் பெற்ற பொருள்களையும், தாழி அமைப்பெற்றிருந்த பாள நிலைகளையும் கருத்தில் கொண்டு, கீழ்க்காணும் முடிவுகளைத் தெரிவித்திருக்கிறார். “இந்த இடம் தமிழகத்தில் மிகவும் பழைமை வாய்ந்த இடம். இதன் காலம் கி.மு. 1000 அளவுக்குச் செல்லும். இந்த அகழாய்வில் பெருங்கற்காலப் பண்பாட்டைவிட முந்தைய பண்பாட்டைக் காண முடிகிறது. இப்பண்பாடு சரியான பாள நிலையில் உள்ளது. இங்குக் கிடைத்துள்ள பானை ஓடுகள் பெருங்கற்காலப் பானையோடுகளிலிருந்து வடிவத்தில் வேறுபட்டவை.''

ஆதிச்சநல்லூரில் வெளிநாட்டார் மேற்கொண்ட அகழாய்வுகளில் வெளிக் கொணரப் பெற்ற வெண்கலப் பொருள்களான எருமை, புலி, செம்மறி ஆடு, ஆடு, சேவல், மான் போன்ற விலங்குகளின் உருவங்களும், பறவை உருவங்களும், மகாராட்டிர மாநிலத்திலுள்ள அரப்பன் நாகரிக இடமான டைமாபாத்தில் கிடைத்திருக்கும் செம்பாலான எருமை, யானை, காண்டா மிருகம் போன்ற விலங்குகளும், ஆதிச்சநல்லூருக்கும், டைமாபாத்துக்கும் யாதோ ஒருவகையில் ஒற்றுமை உள்ளது என்பதைப் புலப்படுத்துகின்றன என்று கலாநிதி சி.க. சிற்றம்பலம் கூறியிருக்கிறார்.

கலாநிதி சி.க. சிற்றம்பலத்தின் அநுமானத்துக்கு வலிமை கூட்டும் வகையில் முனைவர் எஸ். குருமூர்த்தி கூறியிருப்பது ஈண்டு நோக்கத்தக்கது.

திருநெல்வேலி மாவட்டத்தைச் சுற்றியுள்ள பகுதியில் செப்புக் காலத்திலிருந்து இரும்புக் காலத்திற்கு மாறும் பண்பாட்டு மாற்றம் நிகழ்ந்திருக்கும் என்று தெரிவித்து, அதற்கான சான்றுகளாகக் கொற்கை மற்றும் ஆதிச்சநல்லூர் அகழாய்வில் கிடைத்துள்ள கறுப்பு, சிவப்புப் பானை வகையைச் சார்ந்த கெண்டி போன்ற குவளைகளைக் குறிப்பிட்டிருக்கிறார். அதனோடு அவை மத்திய இந்தியா மற்றும் அரப்பன் நாகரிக காலப் பானை வகைகளைப் போன்றுள்ளன என்றும் தெரிவித்திருக்கிறார்.

முதுமக்கள் தாழி புதைப்பு வழக்கம் பற்றிக் குறிப்பிடுகையில், அவை தென்னிந்தியாவில் புதிய கற்காலம் அளவுக்குப் பழைமை வாய்ந்தது என்றும் மற்றோர் இடத்தில் அவர் எழுதியிருக்கிறார்.

ஆதலால், ஆதிச்சநல்லூர் பண்பாட்டுக் காலம் தென்னிந்தியாவில் வேறு எங்கும் காண இயலாத செப்புக் காலம் தொடங்கிப் பின்னாப் புதிய கற்காலம், அதற்குப் பின்னர் இரும்புக் காலமான பெருங்கற்காலத்தின் தொடக்க காலத்தைச் சார்ந்தது என்று கொள்வதே சரியாகப்படுகிறது. புதிய கற்காலத்தின் தடயமான வழவழப்பான கற்கோடரிகள் அண்மையில் மேற் கொண்ட அகழாய்வில் கிடைத்திருப்பது இப்பகுதியில் செப்புக் காலமும், புதிய கற்காலமும் இணைந்தே நிலவியிருக்கிறது என்பதைப் புலப்படுத்துகிறது. கொடுமணல் பகுதியும் இதைப் போன்ற பண்பாடு நிலவிய பகுதியே ஆகும். ஆதலால்தான் அங்கும் செம்பினால் செய்யப் பெற்ற புலி உருவம் மற்றும் சாம்பிராணிக் கிண்ணம் போன்றவை இரும்புப் பொருள்களோடு கிடைத்திருக்கின்றன.

**கொற்றவைத் தெய்வம்**

மேற்கூறப்பெற்ற கருத்துக்கு மேலும் அரணாக விளங்குபவை ஆதிச்சநல்லூரில் கிடைத்துள்ள தங்க அணிகலன்கள், செப்புத் தாய்த் தெய்வத் திருமேனி, வளர்ச்சி பெற்ற உருவ எழுத்துகள் பொறிக்கப்பெற்ற பானையோடுகள் (Graffiti), ஒரு பானையில் பதிக்கப் பெற்றுள்ள பெண் உருவம் மற்றும் மான், நாரை, முதலை, வாழை மரம் உருவங்கள். அவை புதிய கற்கால மக்கள் வாழ்க்கையைப் பிரதிபலிப்பவை ஆகும். ஆற்றோர நாகரிகத்தை உணர்த்துபவையாகும். ஆற்றோரங் களிலும், ஆற்றிலும் காணப்பெறும் வாழை மரம், நாரை முதலைகள் இதற்குச் சான்றாக விளங்குகின்றன. பெண் உருவம் கொற்றவையாகவோ அல்லது தாமிரபரணி ஆற்றின் தெய்வமாகவோ இருக்கலாம். கொற்றவையாக இருப்பதற்கு அதிக வாய்ப்புள்ளது. ஏனெனில், பெண் உருவத்துக்கு அருகில் மான் உருவம் காணப்

பெறுவதாலாகும். மான் கொற்றவையின் ஊர்தி. கொற்றவை உருவம் இங்குக் காணப்படுவதனால் இவ்விடத்தில் ஒரு போர் நடைபெற்று, அதில் உயிர்நீத்த போர் வீரர்களின் உடல்களைத் தாழியில் வைத்து அடக்கம் செய்யப்பெற்ற இடமாக “இத் தாழிக்காடு” இருந்திருக்கலாம். இக்கொற்றவை உருவம்தான் தமிழகத்தில் இதுவரை கிடைத்துள்ள கொற்றவை உருவங்களில் மிகப் பழைமையானதாக இருக்கும். இச் சிற்பக் காட்சி அகத்தையும் புறத்தையும் ஒரு சேரக் காண்பிக்கும் மிகச் சிறந்த ஒரு காட்சியாக அமைந்திருக்கிறது. இதுபோன்ற அகத்தையும், புறத்தையும் ஒரே நேரத்தில் காண்பிக்கக்கூடிய ஒரு சிற்பமோ அல்லது ஓவியமோ இதுவரை தமிழகத்தில் கிடைத்ததாகத் தெரியவில்லை.

ஆதிச்சநல்லூர் செம்பு, வெண்கலம், தங்கம், இரும்பு ஆகியவை கொண்டு பொருள்கள் செய்யப் பெற்று, உள்நாட்டு வாணிகத்தில் தமக்கென ஒரு தனி இடத்தை ஏற்படுத்திக்கொண்ட வணிக நகரமாக விளங்கியிருக்கிறது.

### முதுமக்கள் தாழிகள்

அண்மையில் நிகழ்த்தப் பெற்ற அகழாய்வில் 150க்கும் மேற்பட்ட முதுமக்கள் தாழிகள் கிடைக்கப் பெற்றதோடு அவை அமைக்கப் பெற்றிருந்த முறையும் அந்நாகரிகத்தின் பழைமையைப் பறைசாற்றுவதாக உள்ளது. குன்றில் பத்து மீட்டர் ஆழம் தோண்டி, முதல் பண்பாட்டுத் தாழிகளைப் புதைத்திருப்பது அப்பண்பாட்டு மக்கள் தொடக்கத்தில் மலையையொட்டின வாழ்க்கை முறையில் பழக்கப்பட்டவர்கள்தாம் என்பதை மெய்ப்பிக்கிறது. அதுதான் புதிய கற்கால வாழ்க்கை முறை. ஆற்றோர நாகரிகத்தை அவர்கள் தொடங்கிவிட்டாலும், தங்களது பண்டைய பண்பாட்டு முறையை மறக்காமல் இருந்திருக்கின்றனர் என்பதைக் காட்டுவதாக அம்முறை உள்ளது.

### மிகப் பழைய தமிழ்க் கல்வெட்டு

ஆதிச்சநல்லூரில் கிடைத்திருக்கும் தாழிகளில் ஒன்றின் உட்புறத்தில் தொன்மைத் தமிழ் மொழியில் ஒரு சொல் தொன்மைத் தமிழ் எழுத்தில் எழுதியிருப்பது மிகமிக முக்கியமான கண்டுபிடிப்பாகும். இக் கண்டுபிடிப்புப் பற்றி அவ் வகழாய்வை நடத்திய முனைவர் சத்தியமூர்த்தியும், நடுவணரசு கல்வெட்டியல் துறை மேனாள் இயக்குநர் முனைவர் எம்.டி. சம்பத்தும் தங்கள் கருத்துகளைப் பதிவு செய்திருப்பதும், அக் கல்வெட்டோடு உடைய தாழியின் படமும் தமிழகத்தின் தலைசிறந்த நாளிதழான ‘இந்து’ பத்திரிகையில் வெளிவந்திருக் கின்றன. அக் கல்வெட்டின் காலம் தார்மோலூமினசென்சு கணிப்புப்படி கி.மு. 500–க்குப் பின்பாகக் கொண்டு வர முடியாது என்று முனைவர் சத்தியமூர்த்தி கூறியிருக்கிறார். இக் கண்டுபிடிப்புமூலம் நம் தமிழ் எழுத்தும், தமிழ் மொழியும் இன்றைக்கு 2600 ஆண்டுகள் பழைமை வாய்ந்தவை என்பது தெரிய வந்துள்ளது.

இங்கு மக்கள் வாழ்விடப் பகுதியும், அண்மைக்கால அகழாய்வில் கண்டுபிடிக்கப் பெற்றிருக்கிறது. அப்பகுதியில் வீட்டின் தரைப் பகுதியையும், மேற்கூரையையும் தாங்கும் மரத்தூண்கள் நடுவதற்காகத் தோண்டப் பெற்ற குழிகளும் தெரிய வந்துள்ளன.

### எண் குறியீடு

இங்கு நிகழ்ந்த மற்றொரு முக்கியக் கண்டுபிடிப்பு கருப்பு சிவப்புப் பானையோட்டின் மீது காணப்பெறும் ஒரு குறியீடாகும். இது தலைகீழாக வரையப் பெற்றுள்ளது. இக்குறியீட்டை ஒளிப்படத்தில் இவ்வாறு காணமுடிகிறது. இக்குறியீடு அரப்பன் நாகரிகக் கால உருவங்களோடு ஒப்பிடக் கூடியதாக உள்ளது. மேலும் அழகன் குளத்தில் கிடைத்திருக்கும் பானையோட்டுத் தாயக்கட்டையில் காணப்பெறும் உருவங்களுக்கும் இதற்கும் ஒற்றுமை காணப்படுகிறது. இத் தாயக் கட்டை உருவங்களை இக் கட்டுரை ஆசிரியர் எண் 1, 2, 3 என்று கணித்திருக்கிறார். இக்குறியீடும் அதைப் போன்ற ஓர் எண்ணைக் குறிப்பதாக இருக்கலாம். பெரும்பாலும் எண் 5 ஐக் குறிப்பதாகலாம்.

### மனித முகம்

இங்குக் கிடைத்துள்ள மற்றொரு தாழியின் வெளிப்புறத்தில் பந்து போன்ற இரு புள்ளிகளும், அவற்றின் நடுவிலிருந்து மூன்று கோடுகளும் வரையப் பெற்றிருக்கின்றன. இதையும் ஒரு குறியீடு (Graffiti) என்று கூறப் பெற்றிருக்கிறது. அது குறியீடு அல்ல, ஒரு முகத்தின் இரு கண்களும், மூக்கும் ஆகும்.

மேற் கூறப்பெற்ற பல வகைகளில் இவ்வாதிச்சநல்லூர் பண்பாடு தமிழகத்தில் நிலவிய செப்புக் கால, புதிய கற்கால, பெருங்கற்காலப் பண்பாடுகளை வெளிப்படுத்தும் பண்பாடாகும். இது ஆற்றங்கரை நாகரிகத்துக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும். இற்றைக்கு மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பாகத் தமிழர்கள் வாழ்ந்த வாழ்க்கையை நம் கண் முன்னே கொண்டு வரும் ஒரு வரலாற்றுச் சிறப்புமிக்க பகுதியாக ஆதிச்சநல்லூர் விளங்கி வருகிறது.

## ஆதிச்சநல்லூர், அரப்பன் நாகரிகம் ஒற்றுமை

உலக அளவில் மிகப் பழைமையான நாகரிகம் என்று மெசபொடோமிய நாகரிகத்தையும் (இற்றைக்கு 5100 ஆண்டுகளுக்கு முந்தையது) இதற்கடுத்த நிலையில் எகிப்திய நாகரிகத்தையும் (5000 ஆண்டுகளுக்கு முந்தையது), தொடக்க எலமைட் நாகரிகத்தை அதற்கடுத்த நிலையிலும் (5000 ஆண்டுகள் பழைமையுடையது) தொல்லியலாளர்கள் கணித்துள்ளனர் மேற்கூறியவற்றுக்கு அடுத்த நிலையில் சிறந்து விளங்கிய நாகரிகம்தான் அரப்பன் (ஹரப்பன்) நாகரிகம் என்று கூறிவந்தனர்.

ஆனால் இந்தியத் திருநாட்டையடுத்து வடமேற்குப் பகுதியில் அமைந்துள்ள பலுசிஸ்தான் நாட்டு மெஹர்கரில் அகழாய்வு மேற்கொண்டதில் அங்கு அரப்பன் நாகரிகத்தின் தொடக்க நிலை இற்றைக்கு 9000 ஆண்டுகளுக்கு முன்பாகவே ஏற்பட்டிருக்கிறது என்பது தெரியவந்துள்ளது. ஆதலால் உலகிலுள்ள அனைத்து நாகரிகங்களிலும் அரப்பன் நாகரிகம்தான் பழைமையான நாகரிகம் என்றாகிவிட்டது.

இதுவரை கண்டறியப்பட்டுள்ள அரப்பன் நாகரிக இடங்களைக் கணக்கில் கொண்டு பார்த்தால், அரப்பன் நாகரிகம் பரவியுள்ள இடமானது பரப்பளவில் எகிப்திய நாகரிகமும், மெசபொடோமிய நாகரிகமும் பரவியுள்ள இடங்களைக் காட்டிலும் இரு மடங்கு உள்ளதாகவும், உலகிலுள்ள பிற நாகரிக இடங்களின் பரப்பை ஒப்பிடுகையில் அரப்பன் நாகரிகப் பரப்பளவு அதிகமானது என்றும் கருதப்பெறுகிறது.

ஆனாலும், அரப்பன் நாகரிகம் உள்நாட்டிலே தோன்றிய நாகரிகம்தான் என்றும், இது ஆரியரல்லாதாரின் நாகரிகம் என்றும் பிற சான்றுகளைக் கொண்டு அறிய முடிகிறது என்று அறிஞர்கள் தெரிவித்துள்ளனர். மேலும் இது தமிழர்தம் நாகரிகம்தான் என்பதும் சில தடயங்களால் உறுதிப்படுகிறது.

**முதலில் இந் நாகரிகம் ஆரியருடையது அல்ல என்பதற்குக் கீழ்க்காணும் காரணங்கள் கூறப் படுகின்றன.**

1. இது நகர நாகரிகம். ஆரியருடையது போன்று கிராமிய, நாடோடி நாகரிகமல்ல.
2. அரப்பன் நாகரிகக் களிமண் தகடுகளில் பலவித விலங்குகளின் உருவங்கள் காணப்பெறுகின்றன. ஆனால், குதிரை உருவம் காணப்பெறவில்லை.
3. குறுக்குக் கால்களையுடைய சக்கரங்கள் பொருத்தப் பெற்று இரதங்கள் காணப்படவில்லை. ஆரிய நாகரிகத்துக்குக் குதிரையும், குறுக்குக் கால்களையுடைய சக்கரம் பொருத்தப்பெற்ற இரதங்களும்தாம் முக்கிய அடையாளங்கள்.
4. ஆரியரின் முக்கிய வழிபாட்டு முறையான தீக்குண்டம் (ஹோமகுண்டம்) வழிபாடு காணப் பெறவில்லை.

அரப்பன் நாகரிகம் தமிழர்களின் நாகரிகம்தான் என்பதற்கான காரணங்கள் பின்வருமாறு:–

1. எருமைக் கொம்புகள் போன்ற தலையணியுடன் காணப்பெறும் ஆண் உருவம் (இவ்வுருவம் பிற்கால மூவிலைச் சூல வழிபாட்டுக்கு முன்னோடியா கலாம்).
2. பெண் தெய்வங்கள் பல வடிவங்களில் காணப் பெற்றுத் தாய் வழிபாட்டு முக்கியத்துவம் தெரிவது.
3. தமிழர்கள் இன்றும் வழிபட்டு வரும் அரச மரம் மற்றும் பாம்பு வழிபாடு.
4. முக்கால் வட்ட கட்டடப் பகுதி (பனாவலி, அரியானா), (தமிழ்நாட்டில் பல்லவர் காலத்தில் கட்டப் பெற்றுள்ள பெரும்பாலான கோயில்கள் முக்கால் வட்ட வடிவிலேயே உள்ளன).
5. இலிங்க வழிபாடு.
6. சுடுமண் உருவங்கள் (குறிப்பாகப் பெண் உருவங்கள்) (இவையும் தாய் வழிபாட்டின் சிறப்பையே உணர்த்துவனவாகக் கருதப்பெறுகிறன).
7. மதகுருக்கள் சிற்பங்கள் காணப்படுபவை.
8. நீரில் மூழ்கி வழிபடுதல் (தமிழ்நாட்டில் கோவில்களின் முன்புள்ள குளங்களில் மூழ்கி வழிபட்டு வருதல்)
9. நகர அமைப்புகளில் இரு பகுதிகள் காணப் படுபவை (பூம்புகார், மருங்கூர்ப்பட்டினம் போன்ற நகரங்கள் போன்று).
10. சிற்ப அமைப்புகளில் திராவிடர் கலைப்பாணி காணப்பெறுதல்.
11. தமிழ்நாட்டுக் கணித முறை அரப்பன் நாகரிகத்தில் காணப்பெறுதல்.
12. கோவில் இறைவன் முன்பாக அரசர் உருவங்கள் அமைந்திருப்பது. (மாமல்லை குடைவரைக் கோவில்களிலும், பிற கட்டுமானக் கோயில்களிலும் உண்ணாழிக்கு முன்பாக அரசர்கள் உருவங்கள் இறைவனை வணங்கும் நிலையில் காணப்படுகின்றன).

மேலே கூறியவற்றுக்கு மேலும் அரண் சேர்ப்பது போன்று, தமிழ்நாட்டில் அண்மைக் காலங்களில் கண்டறியப்பட்டுள்ள தொல்லியல் சான்றுகள் விளங்குகின்றன.

1. அரப்பன் நாகரிக உருவ எழுத்துகள் பொறிக்கப் பெற்றுள்ள புதிய கற்காலக் கருவி (நாகை மாவட்டம், செம்பியன் கண்டியூர்).
2. விழுப்புரம் மாவட்டம், கீழ்வாலை, இரத்தப் பாறையில் தீட்டப்பட்டுள்ள அரப்பன் நாகரிக உருவ எழுத்துகள்.
3. கோவை மாவட்டம், சூலூரில் கண்டறியப்பட்டு, தற்போது பிரித்தானிய அருங்காட்சியகத்தில் (British Museum) காட்சிக்கு வைக்கப் பெற்றுள்ள சுடுமண் தட்டில் காணப்பெறும் அரப்பன் நாகரிக உருவ எழுத்துகள்.
4. கரூரில் கிடைக்கப் பெற்ற மோதிரத்தில் காணப்பெறும் அரப்பன் உருவ எழுத்துகள்.
5. தமிழ்நாட்டில் வெளிப்படுத்தப்பட்டுள்ள பெருங் கற்காலப் பானையோடுகள்மீது காணப்பெறும் கீறல் உருவங்கள் (இவற்றில் 89 விழுக்காடு அரப்பன் உருவ எழுத்துகள் போன்றே உள்ளன).

6. இராமநாதபுரம் மாவட்டம், அழகன்குளத்தில் மேற்கொண்ட அகழாய்வில் கிடைக்கப் பெற்றுள்ள பானையோட்டில் காணப்பெறும் உருவ எழுத்து மற்றும் தாயக்கட்டையில் காணப்பெறும் அரப்பன் நாகரிக எண் உருவங்கள்.

7. இலங்கை யாழ்ப்பாணத்துக்கு அருகிலுள்ள ஆனைக்கோட்டையில் கிடைத்த செப்பு முத்திரை மீதுள்ள உருவ எழுத்துகள் மற்றும் கேரள மாநிலம் எடக்கலில் காணப்பெறும் தொன்மைத் தமிழ்க் கல்வெட்டோடு காணப்பெறும் அரப்பன் நாகரிக உருவ எழுத்து.

8. தமிழகத் தொன்மைத் தமிழ்க் கல்வெட்டுகளோடு காணப்பெறும் உருவ எழுத்துகள் ஆகியவை யாகும்.

இவ்வனைத்துக்கும் மேலாகத் திருநெல்வேலி மாவட்டம், ஆதிச்சநல்லூரில் சென்ற ஒரு நூறு ஆண்டுக் காலத்தில் நான்கு அல்லது ஐந்து முறை நிகழ்த்தப் பெற்ற அகழாய்வுகள், தமிழ்நாட்டில் ஆதிச்சநல்லூர் வரை அரப்பன் நாகரிகம் பரவியிருந்திருக்கும் என்ற உண்மையைப் புலப்படுத்தும் வகையில் பல சான்றுகளை வெளிப்படுத்தியிருக்கிறது. அவற்றின் பட்டியல் கீழ்வருமாறு:

1. இதுவும் ஒரு ஆற்றோர நாகரிகம்.

2. இதுவும் நகர நாகரிகம், தொழில் மலிந்த நகரம்.

3. பெருங்கற்காலத்தைச் சாராத புதிய வகைப் பானையோடுகள். இவை கி.மு. 2000–த்தின் இறுதிக் காலத்தைச் சார்ந்தவை.

4. மண் குவளைகளின் தோள் பகுதியில் துளையுடையவை (Spouted vessels).

5. வெண்கலப் பொருள்கள் (தாய்த்தெய்வம் மற்றும் விலங்குகளின் உருவங்கள்).

6. அரப்பன் நாகரிகத்தைச் சேர்ந்த வெண்கலப் பொருள்களிலும் (டைமாபாத்), ஆதிச்சநல்லூர் வெண்கலப் பொருள்களிலும் ஒரே அளவுள்ள ஆர்செனிக் (Arsenic) கலவை.

7. பானையோடுகளில் அரப்பன் உருவக் குறியீடுகள்.

8. துர்க்கை என்று கருதப்பெறும் தாய்த் தெய்வ மண் ஒட்டுருவம்.

9. ஆதிச்சநல்லூர் நாகரிகம் காலம் சுமார் கி.மு. 1500 – 500 (optically stimulated Luminiscence date conducted at Manipur) மேலே கூறப்பெற்றுள்ள அனைத்து வகைக் காரணங்களைக் கொண்டும் பார்க்கையில் தமிழகத்துக்கும், அரப்பன் நாகரிகத்துக்கும், குறிப்பாக ஆதிச்சநல்லூர் நாகரிகத்துக்கும் நெருங்கிய தொடர்பு இருந்திருக்கும் என்பது உறுதியாகிறது. ஆதலால், அனைத்து வகைச் சான்றுகளாலும் (அரப்பன் நாகரிக உருவ எழுத்து அமைப்பு உட்பட) அரப்பன் நாகரிகம் தமிழரின் நாகரிகமே என்பது குன்றின் மேலிட்ட விளக்காகிறது.

### பூம்புகார் நில அகழாய்வு

1962–63ஆம் ஆண்டுகளில் நடுவண் அரசு தொல்லியல் துறை எஸ்.ஆர். ராவ் தலைமையில் கே.வி. இராமன் என்னும் தொல்லியலாளர் உதவியால் காவிரிப்பூம்பட்டினத்தைச் சுற்றியுள்ள கீழையூர் மற்றும் வெள்ளையனிருப்பு என்னும் ஈரிடங்களில் முறையான அகழாய்வைத் தொடங்கியது.

#### படகுத்துறை வெளிப்படுத்தப்பட்டது

கீழையூரில் 18.28/7.62 மீட்டர் அளவுடைய மிகப் பெரிய செங்கல் தளத்தை வெளிப்படுத்தியது. இத்தளத்தின் ஒரு மூலையில் இரு மரக்கம்பங்கள் தளத்தையொட்டிய நிலையில் நடப்பட்டிருந்தது தெரிய வந்தது. இக் கட்டடம் இயற்கையாக அமைந்திருந்த மணற்பரப்பின் மீது கட்டப் பெற்றிருப்பதைப் பார்க்கையில், இது உப்பங்கழிப் பகுதியில் அமைந்திருந்த படகுத்துறையாக இருக்கலாம் போன்று தோன்றுகிறது. இத்துறைக்கு முன்பாகப் படகுகளை நிறுத்தி வைப்பதற்காகக் கயிற்றால் இங்குள்ள மரக்கம்பங்களில் படகுகளைக் கட்டி வைத்திருப்பர் என்று ஊகிக்க முடிகிறது.

இக் கட்டடத்தில் உபயோகப்படுத்தப்பட்டுள்ள செங்கற்களின் அளவு இக்ஷுவாகுவின் காலத்து நாகார்ஜுன கொண்டா கட்டடங்களில் காணப்பெறும் செங்கற்களின் அளவுக்கிணையாக உள்ளன. படகுத்துறை அமைந்துள்ள பாள நிலையில் (லேயர்) பெருங் கற்காலக் கறுப்பு சிவப்புப் பானையோடுகள் சேகரிக்கப்பட்டுள்ளன. இப் படகுத் துறையின் காலம் கி.மு. ஐந்தாம் நூற்றாண்டாகும்.

#### நீர்த்தேக்கம் கண்டுபிடிப்பு

1963–64ஆம் ஆண்டுகளில் மேலே குறிப்பிட்டுள்ள தொல்லியல் துறையே காவிரிப்பூம் – பட்டினத்துக்கருகிலுள்ள வானகிரி, பல்லவனேஸ்வரம், கீழையூர், மணிக்கிராமம் ஆகிய இடங்களில் ஆய்வுக் குழிகளைத் தோண்டியது. வானகிரியில் இரண்டு மீட்டர் உயரமுள்ள செங்கல் சுவரினையும், எட்டு மீட்டர் உள்பரப்பிடத்தையும் கொண்ட அரைவட்ட வடிவச் செங்கல் கட்டடம் வெளிப்படுத்தப்பட்டது. இது 83 செ.மீட்டர் அகலமுடைய நீர்வரத்துக் குமிழியை (inlet sluice)யுடைய நீர்த்தேக்கமாக இருக்கலாம் எனத் தோன்றுகிறது. காவிரியாற்றிலிருந்து இந் நீர்த்தேக்கத்துக்கு நீர் கொண்டு வரப்பட்டிருக்கும் என்று கருதப்படுகிறது. இது கி.பி. முதல் – இரண்டாம் நூற்றாண்டைச் சார்ந்தது.

**புத்த விகாரை வெளிப்படுத்தப் பெற்றது**

1964–65ஆம் ஆண்டு பல்லவனேஸ்வரத்தில் அகழாய்வு மீண்டும் தொடரப்பட்டது. 1963–64ஆம் ஆண்டில் அவ்விடத்தில் வெளிப்படுத்தப்பட்ட கட்டடத்தின் பெரும்பகுதி 1964–65ஆம் ஆண்டில் வெளிப்படுத்தப்படவே, அக் கட்டடம் ஒரு புத்தவிகாரை என்பதும், அது ஐந்து சதுர அறைகளையும் ஒரு பொதுக் கூடத்தையும் கொண்டுள்ளது என்பதும் தெளிவாயிற்று.

ஒரு பகுதியே வெளிப்படுத்தப்பட்டுள்ள துணைக் கட்டடங்களுள் ஒன்று முக்கால் வட்ட சைத்யத்தைப் போன்று பல குறுக்குச் சட்டங்களைக் கொண்ட அமைப்பில் காணப்பெறுகிறது.

**புத்தர் திருமேனி, புத்தர் பாதம் கண்டுபிடிப்பு**

விகாரையின் ஓர் அறையில் தியான நிலையிலுள்ள ஒரு புத்தரின் திருமேனியும், ஒரு பெண் தெய்வத்தின் உடைந்த சுடுமண் உருவமும் சேகரிக்கப் பெற்றன. பெரும்பாலும் பிற்காலத்தியது என்று கருதக்கூடிய ஒரு துணைக் கட்டடப் பகுதியில் சுண்ணாம்புக் கல்லால் செய்யப் பெற்ற புத்தர் பாதம் ஒன்று கண்டுபிடிக்கப்பட்டது. பக்கத்து முன் கூடத்தில் அதே பாள நிலையில் ஓர் அழகான சுதை உருவின் தலைப்பாகம் கிடைத்தது. அனைத்துப் பொருள்களையும் கொண்டு பார்க்கையில் இவ் விகாரை கி.பி. 4–5ஆம் நூற்றாண்டினது எனக் கொள்ளலாம்.

**தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறை நடத்திய அகழாய்வு**

தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை 1994 – 1995ஆம் ஆண்டில் இக்கட்டுரை ஆசிரியரின் தலைமையில் பூம்புகாரில் அகழாய்வை மேற்கொண்டது.

**படகுத்துறை கண்டுபிடிப்பு**

1995–96ஆம் ஆண்டில் மணிக் கிராமத்தை அடுத்துள்ள கிழார்வெளியில் தரைமட்டத்திலிருந்து ஒரு மீட்டர் ஆழமுள்ள வயலில் பி.எம்.ஆர்.4.ஏ. (PMR4A) என்னும் குழி தோண்டப் பெற்றது. இக்குழி நான்கு மீட்டர் சதுரத்தில் அமைந்தது. இதில் 20 செ.மீட்டர் ஆழத்தில் முதல் பாள நிலையிலேயே செங்கற்சுவர் தென்பட்டது. மேலும் கல் வரிசைகள் ஒவ்வொன்றாகத் தெரியலாயின. மொத்தம் ஒன்பது கல்வரிசைகள் காணப்பெற்றன. இச்சுவரில் இருந்த செங்கற்கள் 45x40x10 சென்டி மீட்டர் அளவில் இருந்தன. சுவர் வடகிழக்குத் திசையிலிருந்து தென்மேற்காகச் சென்றது. சிறிது இடைவெளி விட்டுக் கிழக்குப் பக்கத்தில் மற்றொரு சுவரும் அதே திசையமைப்பில் அமைந்திருப்பது வெளிக் கொணரப்பட்டது. மேற்குப் பக்கத்தில் ஒரு மீட்டர் உயரமும் கிழக்குப் பக்கத்தில் 55 சென்டி மீட்டர் உயரமும் உடையதாக இருந்தன.

இக்கட்டடமும் ஒரு படகுத்துறையாக இருக்கும் என்பது தெரிய வந்தது. இப் படகு துறையின் தெற்குப் பக்கத்தின் முன்பாகவும் வடக்குப் பக்கத்தின் முன்பாகவும் 50 செ. மீட்டர் நீளத்தில் தரையில் தளம் அமைக்கப் பெற்றிருப்பதும், தெற்குப் பக்கம் மேற்குப் பக்கச் சுவரையொட்டி ஒரு முளையும், அதன் முன்பாகச் சிறிது தொலைவில் மற்றொரு முளையும், கிழக்குப் பக்கச் சுவருக்கு முன்பாக ஒரு முளையும், வடக்குப் பக்கத்தில் மேற்குப் பக்கச் சுவருக்கு முன்பாக ஒரு முளையும் இரு சுவர்களுக்கு இடையில் தண்ணீர் செல்லும் வழியில் வடமுனைக்கு ஒரு மீட்டர் உள்பக்கத்தில் மேற்குச் சுவரை ஒட்டியவாறு ஒரு முனையும் நடப்பெற்றிருப்பதும் தெரிந்தன. தென் முனைக்கு எதிரேயுள்ள முளைகள் இலுப்பை மரத்தாலும் வடமுனைக்கு எதிரிலும் நீர் செல்லும் வழியிலும் உள்ளவை பனை மரத்தாலும் ஆனவை. இம் முளைகளும் படகுத்துறைக்குக் கொண்டு வரும் படகுகளைக் கயிறு கொண்டு கட்டி நிறுத்தி வைப்பதற்காக அமைக்கப்பட்டவையாக இருக்கலாம்.

பூம்புகாரில் "கழாஅர் முன்துறை" இருந்தது என்று இலக்கியங்களில் குறிப்பிடப்படுவது இதுபோன்ற துறைகளைத்தான் என்று கருதலாம். இப்படகுத் துறையின் நீளம் 7.20 மீட்டர். மேற்குப் பக்கச் சுவரின் அகலம் 2.90 மீட்டர். கிழக்குப் பக்கச் சுவர் அகலம் 3.50 மீட்டர். நீரோடும் இடைவெளி 65 செ.மீட்டர் ஆக மொத்தம் அகலம் 7 மீட்டர் 5 செ. மீட்டர் ஆகும். இக் கட்டடத்தின் மிகப் பெரிய செங்கல் 61/40.5/10 க செ.மீட்டர் அளவில் காணப்பெறுகிறது.

படகுத்துறையின் காலம் கி.மு. ஐந்தாம் நூற்றாண்டாக இருக்கலாம். ஏனெனில் நடுவண் அரசு கண்டுபிடித்த படகு துறையில் இருந்த செங்கற்களும் இந்தப் படகு துறையில் பயன்படுத்தப்பட்டுள்ள செங்கற்களும் ஒரே அளவில் காணப்பெறுவதாலும், கிட்டத்தட்ட சம ஆழங்களில் இரு படகுத்துறைகளும் கண்டுபிடிக்கப் பட்டதாலும் கூறலாம். மேலும் நடுவண் அரசு வெளிப்படுத்தியுள்ள படகுத்துறையில் காணப்பெற்ற படகு கட்டும் மரத்திலிருந்து ஒரு துண்டு எடுத்துக் "கரிமம் 14 முறை இரசாயனக் கணக்கீட்டின்படி கி.மு. 316 + –/–103 என்று காலம் கணக்கிடப்பட்டது. அதாவது அதிக அளவில் கி.மு. 316+103=கி.மு. 419 என்றோ அல்லது குறைந்த அளவில் கி.மு. 306–103= கி.மு. 213 என்றோ கொள்ளலாம்."

**எழுத்துப் பொறித்த பானையோடு கண்டுபிடிப்பு**

இவ்வாண்டே பூம்புகாரின் தென்பகுதியில் உள்ள வானகிரி தோசகுளம் பகுதியிலும் அகழாய்வு செய்யப்பட்டது. இங்கு நான்கு குழிகள் தோண்டப் பெற்றன. இக்குழிகளுள் ஒன்றில் பி.எம்.ஆர்–12 (PMR12) இதுவரை பூம்புகாரில் கிடைக்கப் பெறாத ஓர்

அரிய தொல்பொருள் கிடைத்தது. சிவப்பு நிறப் பானையோட்டின் மீது அசோகன் காலப் பிராகிருதத் தமிழ் எழுத்தில் ஆறு எழுத்துகள் எழுதப்பட்டிருக்கிறது. இவ்வெழுத்துகளைப் படிப்பது சிரமமாக உள்ளது. ஆனாலும் புத்தமதப் பெண் துறவி ஒருவரின் பெயரைக் குறிப்பதாக இருக்கலாம் எனக் கருதப்படுகிறது.

பூம்புகாரில் நில அகழாய்வு இன்னும் சற்று பரவலான முறையில் மேற்கொள்ளப்பட வேண்டிய நிலையிலுள்ளது. அவ்வாறு மேற்கொள்ளப்பட்டால், பண்டைய பூம்புகாரின் முக்கியத்துவம் வாய்ந்த மேலும் பல கட்டடப் பகுதிகளையும், பூம்புகாரின் பெருமையை மேலும் ஐயத்துக் கிடமின்றி நிலைநாட்டும் பல அரிய தொல்பொருள்களையும் கண்டறியக் கூடிய வாய்ப்புக் கிட்டும்.

## அழகன்குளம் அகழாய்வு

அழகன்குளம் என்ற ஊர் இராமநாதபுரத்திலிருந்து 24 கி.மீ. தொலைவில் வைகை ஆற்றின் வடகரையில் அமைந்துள்ளது. வைகை ஆறு இவ்வூருக்கு அருகில் ஆத்தங்கரை என்ற இடத்தில் கடலோடு கலக்கிறது. இந்த இடத்தில் 'கோட்டைமேடு' என அழைக்கப்படும் மண்மேட்டில் மேற்பரப்பு ஆய்வு மேற்கொள்ளப்பட்டது. இவ்வாய்வில் இவ்வூரின் தொன்மைக்குச் சான்றாக ரோமானியப் பானை ஓடுகள், காசுகள், கல்மணிகள், அறுத்த சங்குகள், சங்கு வளையல் துண்டுகள் போன்ற தொன்மையான பொருள்கள் கிடைத்தன.

இப்பகுதியின் தொன்மை வரலாற்றுச் சிறப்பினை அறிந்து கொள்ள தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை 1986–87, 1990–91, 1993–94, 1995–96, 1996–97, 1997–98ஆம் ஆண்டுகளில் கோட்டைமேடு (அழகன்குளம்) புதுக் குடியிருப்புப் பகுதிகளில் அகழாய்வினை மேற்கொண்டது. அகழாய்வின் மூலம் அழகன்குளம் கி.மு. 500 முதல் கி.பி. 1200 வரை தலைசிறந்த துறைமுகமாக விளங்கியிருக்கிறது என்பதை அறிய முடிகிறது.

அழகன்குளம் அகழாய்வு தமிழக நாகரிகத்தின் தொன்மைச் சிறப்பினைக் கூறும் முக்கிய ஆய்வாக விளங்குகிறது. அழகன்குளம் அகழாய்வில் 60க்கும் மேற்பட்ட பண்டைத் தமிழ் (பிராமி) எழுத்துப் பொறிக்கப்பட்ட பானை ஓடுகள் கிடைத்துள்ளன. சாம்பல் நிற பானை ஓடு, கறுப்பு சிவப்புப்பானை ஓடு, சிவப்பு நிற பானை ஓடு, செம்பூச்சு பூசப் பெற்ற பானை ஓடுகள், ரௌலடட் பானை ஓடுகள் ஆகியவற்றில் பண்டைத் தமிழ் எழுத்துகள் காணப்படுகின்றன.

அழகன்குளம் அகழாய்வில் இரண்டு சங்ககாலச் செப்புக் காசுகள் கிடைத்துள்ளன. இக்காசு ஒன்றில் ஒரு பக்கத்தில் யானையும் அதன் மேற்பகுதியில் மங்கலச் சின்னங்களும் காணப்படுகின்றன. பின்பக்கம் மீன் உருவம் உள்ளது. இக்காசு சங்க கால பாண்டிய மன்னர்களால் வெளியிடப்பட்டதாகும். இக்காசுகள் கி.மு. 4ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகும். காசுகள் கிடைத்த மண் அடுக்குகள் C14 என்ற அறிவியல் முறையில் காலம் நிர்ணயிக்கப்பட்டதாகும்.

இவ்வகழ்வாய்வில் மூன்று ரோமானியக் காசுகள் கிடைத்தன. முதல் காசு இரண்டாம் வாலண்டியன் காலத்தையும், இரண்டாவது காசு டியோடிஷியல் காலத்தையும், மூன்றாம் காசு ஆர்கேடியஸ் காலத்தையும் சேர்ந்ததாக விளங்குகின்றன. இவை அனைத்தும் கி.பி. 4 – 5ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவையாகும். தமிழகம் ரோமானிய நாட்டுடன் கொண்டிருந்த வர்த்தகத் தொடர்புக்கு இவை சான்றாக விளங்குகின்றன.

அழகன்குளம் அகழாய்வில் கிடைத்த பானை ஓடுகள் சிலவற்றில் படகு உருவம் காணப்படுவது குறிப்பிடத் தக்கது. ரௌலடட் வகை ரோமானிய பானை ஓடு ஒன்றின் கழுத்துப் பகுதியில் படகின் உருவம் காணப்படுகிறது. கி.பி. 2ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ரோமானியப் படகு போன்று இவ்வடிவம் காணப்படுகிறது எனத் தொல்லியல் அறிஞர்கள் கூறியுள்ளனர்.

இங்கு நடைபெற்ற அகழாய்வின்போது சேகரிக்கப் பெற்ற கரித்துண்டுகளைக் கொண்டு C14 காலக் கணிப்பு செய்ததில்:

1. 1.40 மீட்டர் ஆழத்தில் சேகரித்தது — இற்றைக்கு 2090±100 ஆண்டுகள் பழமை வாய்ந்தவை
2. 1.55 மீட்டர் ஆழத்தில் சேகரித்தது — இற்றைக்கு 2140±100 ஆண்டுகள் பழமை வாய்ந்தவை
3. 1.90 மீட்டர் ஆழத்தில் சேகரித்தது — இற்றைக்கு 2240±100 ஆண்டுகள் பழமை வாய்ந்தவை
4. 2.80 மீட்டர் ஆழத்தில் சேகரித்தது — இற்றைக்கு 2260±100 ஆண்டுகள் பழமை வாய்ந்தவை

என்ற காலக் கணிப்பு தெரியவந்தது. இதன்மூலம் அழகன்குளத்தில் மக்கள் வாழ்ந்த காலம் 2260 + 100 = 2360க்கு முன்பு என்று கொள்ள வேண்டியுள்ளது. அதாவது கி.மு. 4ஆம் நூற்றாண்டு அளவுக்கு அழகன்குளத்தின் பழைமையைக் கொண்டு செல்ல முடிகிறது. பிற தொல்பொருள்களான முத்திரை குத்தப் பெற்ற காசு, கறுப்பு பளபளப்பு பானையோடு ஆகியவை கிடைக்கப் பெற்றுள்ளதால் அழகன்குளத்தின் காலம் கி.மு. 5ஆம் நூற்றாண்டளவுக்குச் செல்லும் என்று உறுதியாகக் கூறலாம்.

தமிழகத்தின் கிழக்குக் கடற்கரையில் பல துறைமுகப் பட்டினங்கள் இருந்ததைப் பண்டைய நில இயல் அறிஞர்கள் குறிப்பிட்டுள்ளனர். குறிப்பாக ரோமானிய நாட்டுடன் கொண்டிருந்த வாணிகத் தொடர்புக்கு வசவ சமுத்திரம், மரக்காணம், காரைக்காடு, பூம்புகார், கொற்கை போன்ற இடங்களில் நடைபெற்ற தொல்லியல் ஆய்வுகளால் அறிய முடிகிறது. மேலும் புதுச்சேரி மாநிலத்தில் அரிக்கமேடு என்ற இடத்தில் நடைபெற்ற அகழாய்வு மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததாகக் கருத முடிகிறது. அதுபோன்று அழகன்குளம் அகழாய்வுத் தொல்பொருள்கள் தமிழர் நாகரிகத்தின் தொன்மைச் சிறப்பினையும், அயல்நாட்டு வாணிக உறவினையும் எடுத்துக் கூறும் மிக முக்கியச் சான்றாக விளங்குகின்றன. ❖

# அரிக்கமேடு அகழாய்வு

முனைவர் சு. இராசவேலு



பண்டைத் தமிழகத்தின் கிழக்குக் கடற்கரையில் பல துறைமுகங்கள் இருந்துள்ளதனையும் அத் துறைமுக நகரங்களிலிருந்து கடல்வழி வாணிகம் பெரிதும் நடைபெற்றதனையும் சங்க இலக்கியங்களும் அயல் நாட்டார் குறிப்புகளும் தெரிவிக்கின்றன. குறிப்பாகப் "பெரிப்ளஸ் ஆப் எரித்ரியன் ஸீ" என்ற கிரேக்கப் பயண நூலில் 'பொதுகே' என்ற கடற்கரைத் துறைமுகத்தைப் பற்றிய குறிப்பு காணப்படுகிறது. தாலமி என்னும் கடல் வழிப் பயணி தமது குறிப்பில் 'கபேரிசு' (காவேரிப் பூம்பட்டினம்) துறைமுகத்திற்கு வடக்கே 'பொதுகே' அமைந்திருந்தது என்பதனையும் குறித்துள்ளார். இத் துறைமுகப்பட்டினம் யவனர் வாணிகத்துடன் தொடர்புடையது என்றும் இக்குறிப்புகள் குறிப்பிடுகின்றன. இக்குறிப்புகளில் குறிக்கப்படும் 'பொதுகே' என்னும் துறைமுக நகரம் இன்றைய அரிக்கமேடு என்னும் பகுதியே எனக் கண்டறியப்பட்டு அகழாய்வுகள் நடைபெற்றன.

### அரிக்கமேடு - அமைவிடம்

அரிக்கமேடு என்று தற்பொழுது வழங்கப்படும் பகுதி அருகன் மேடு என்பதன் திரிபாகும். புதுச்சேரியிலிருந்து கடலூர் செல்லும் சாலையில் புதுச்சேரிக்குத் தெற்கே 4 கி.மீ. தொலைவில் அரியாங்குப்பம் ஆற்றின் வலக் கரையில் அரிக்கமேடு அமைந்துள்ளது. அகநானூற்றில் 'வீரை' என்ற கடற்கரைப்பட்டினம் குறித்துக் குறிப்புகள் உள்ளன. இது வேலூர் சிற்றரசர்களின் துறைமுக நகரமாக விளங்கியது. அரிக்கமேட்டிற்குச் சற்றுத் தொலைவில் வீராம்பட்டினம் என்னும் ஊரும் உள்ளது. சங்க இலக்கியங்கள் சுட்டும் வீரையே தற்பொழுது வீராம்பட்டினம் என ஆய்வாளர்கள் கருதுகின்றனர். இப்பட்டினத்தின் ஒரு பகுதியே அரிக்கமேடு எனவும் ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

### லீஜென்டில் ஆய்வுகள்

இக் கருதுகோளை மெய்ப்பிக்கும் வகையில் பழைமைமிக்க மண்மேடுகள் கடற்கரை ஒட்டிய இப்பகுதியில் இருப்பதனை 18ஆம் நூற்றாண்டிலேயே பிரான்சு நாட்டின் ஆய்வாளர்கள் கண்டறிந்தனர். அரியாங்குப்பம் ஆற்றுப் பெருக்கால் இம் மண்மேடு அரிக்கப்பட்டுப் பழைமையான எச்சங்கள் வெளிப்பட்டதை முதன் முதலில் லீஜென்டில் (1768–71) என்பவர் குறிப்பிட்டுள்ளார். தொன்மையான கட்டடச் சிதைவுகளும் உறைகிணறுகளும் இப்பகுதியில் இருப்பதனை அவர் கண்டறிந்தார். இங்கு நிலக்கிழாராக விளங்கிய கிருஷ்ணசாமி கவுண்டர் என்பார் தம் நிலத்தினை அகழ்ந்தபொழுது பல கட்டடச் சிதைவுகள் மற்றும் அரும்பொருள்கள் இருப்பதனைக் கண்டறிந்தார். இதனை துப்ராயில் என்ற ஆய்வாளருக்குத் தெரிவித்தார். இதற்கிடையில் சென்னை அருங்காட்சியகத்தின் அலுவலர் அய்யப்பன் என்பாரும் குறுகிய அளவில் இப்பகுதியில் ஆய்வுகள் மேற்கொண்டார். இவ்வாய்வுகளிலும் பல அரும்பொருள்கள் வெளிப்பட்டன.

### ஜுவ்யோ துப்ராயில்

இப்பகுதியின் சிறப்பினை அறிந்த துப்ராயில் என்னும் ஆய்வாளர் இங்கு 1937ஆம் ஆண்டு கள ஆய்வுகள் மேற்கொண்டார். இவருடன் பாதிரியார் போஷே என்பவரும் இணைந்து ஆய்வுகள் மேற்கொண்டனர். இக்கள ஆய்வுகளில் துப்ராயிலுக்குப் பல அரும்பொருள்கள் கிடைத்தன. அவற்றுள் குறிப்பிடத்தக்கது உரோமானியப் பேரரசன் அகஸ்டஸ் சீசரின் தலை பொறிக்கப்பட்ட மணிக்கல் ஒன்றாகும். இதன் அடிப்படையில் கிறித்தவ ஆண்டின் தொடக்க காலத்தில் உலக அளவில் மிகச் சிறந்த பன்னாட்டு வாணிக நகரமாக அரிக்கமேடு விளங்கியிருந்திருக்க வேண்டும் எனத் துப்ராயில் கருதினார். தொடர்ந்து இங்குப் பெலிகூ என்பாரும் ஆய்வுகள் மேற்கொண்டு இப்பகுதி ஒரு சிறந்த துறைமுக நகரமாக இருந்திருக்க வேண்டும் என உறுதி செய்தார்.

பௌசெக்ஸ் என்னும் பிரெஞ்சு ஆய்வாளர் 1941 முதல் 1944 ஆண்டுகளில் சிறிய அளவில் அகழாய்வுகளை இப்பகுதியில் மேற்கொண்டார். இப்பகுதியில் இரண்டு இடங்களில் குழிகள் இடப்பட்டு அரும்பொருள்கள் பலவற்றை இவ்வாய்வாளர் கண்டுபிடித்தார்.

### மார்டிமர் வீலர் மற்றும் விமலா பெக்ளி

இவ்வாய்வுகளின் விளைவாக அரிக்கமேட்டுப் பகுதியில் அறிவியல் சார்ந்த அகழாய்வினை இந்தியத் தொல்லியல் துறையின் தலைமை இயக்குநராக விளங்கிய சர் மார்டிமர் வீலர் என்பார் 1945ஆம் ஆண்டு மேற்கொண்டார். இவ்வகழாய்விற்குப் புதுவை ஆளுநராக விளங்கிய பான்வின் என்பார் பெரிதும் உதவி புரிந்தார். பென்சில்வேனியாப் பல்கலைக் கழகத்தின் பேராசிரியை விமலா பெக்ளி என்பார் 1989–92ஆம் ஆண்டுகளில் இங்கு மீண்டும் அகழாய்வுகளை மேற்கொண்டார். இவ்வகழாய்வுகளில் பல முக்கியப் பொருள்களும் கட்டடச் சிதைவுகளும் கண்டுபிடிக்கப் பட்டன.

வீலர் மேற்கொண்ட அகழாய்வுகளில் இப்பகுதியில் செங்கற்களால் கட்டப்பட்ட பல கட்டடங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. வடக்குப் பகுதியில் நடந்த அகழாய்வில் இங்கு ஒரு பண்டசாலை இருந்துள்ளது கண்டுபிடிக்கப்பட்டது. உள் நாட்டில் இருந்து அனுப்ப வேண்டிய ஏற்றுமதிப் பொருள்களையும் வெளிநாட்டில் இருந்து வரும் பொருள்களையும் அடுக்கி வைக்க இப்பண்டசாலை பயன்படுத்தப்பட்டுள்ளது. இப்பண்டசாலை 45 மீட்டர் நீளமும், 11 மீட்டர் அகலமும் உடையது. இக்கட்டடத்தின் வடக்குப் பகுதியில் தானியக் கிட்டங்கி ஒன்றின் கட்டடச் சிதைவுகளும் அகழாய்வில் கண்டுபிடிக்கப்பட்டது. உறுதியான செங்கற்கள் கொண்டு குழைத்த களிமண் கொண்டு இக் கட்டடங்கள் கட்டப்பட்டன. வெளிப்பகுதியில் சுண்ணாம்புக் காரையால் பூசப்பட்டு இக் கட்டடங்கள் விளங்கியுள்ளன. இப்பகுதியில் பல உறைக்கிணறுகளும் கண்டுபிடிக்கப் பட்டன.

### சாயத் தொட்டி

அரிக்கமேட்டின் தென்பகுதியில் அகழாய்வில் இரண்டு சாயத் தொட்டிகள் கண்டுபிடிக்கப்பட்டன. தொட்டிகள் இரண்டும் 3 மீ. x 4 மீ. அளவினை உடையவை. ஒரு தொட்டியின் தென்பகுதியில் அறை ஒன்றும் கண்டுபிடிக்கப்பட்டது. மற்றொரு தொட்டியின் தெற்குப் பகுதியில் முற்றம் ஒன்றும் காணப்படுகிறது. இக் கட்டடங்கள் யாவும் தரைப்பகுதியுடன் காணப்பட்டன. இவ்விரு தொட்டிகளின் உள்ளே தேங்கும் நீரை வெளியேற்ற இரண்டு கால்வாய்ப் புழைகள் இருந்துள்ளமையை அகழாய்வில் கண்டுபிடித்தனர். முற்றப் பகுதியில் கதவு நிலை இருந்ததற்கான எச்சங்கள் கண்டுபிடிக்கப்பட்டன.

அரிக்கமேட்டில் நெசவுத் தொழில் சிறந்து விளங்கியிருந்துள்ளமையை இங்குக் கிடைத்துள்ள சாயத்தொட்டி புலப்படுத்தியது, இக்கட்டடத்தின் பயன்பாட்டின் மூலம் அறிய முடிகிறது. துணிகளைச் சாயங்கள் தோய்க்க இத் தொட்டிகள் பயன்படுத்தப் பட்டுள்ளமையை அறிய முடிகிறது.

விமலா பெக்ளி மேற்கொண்ட அகழாய்வு வீலர் மேற்கொண்ட வடக்குக் கட்டடப் பகுதிக்கு அருகிலேயே மேற்கொள்ளப்பட்டது. இவ்வகழாய்விலும் கட்டடத்தின் சிதைவுகள் பல கண்டுபிடிக்கப்பட்டன.

### மட்கலன்கள்

அரிக்கமேடு அகழாய்வில் உள் நாட்டில் தயாரிக்கப்பட்ட மட்கலன்களும் வெளிநாடுகளிலிருந்து தயாரிக்கப்பட்டுக் கொண்டுவரப்பட்ட மட்கலன்களும் பெருமளவில் கண்டுபிடிக்கப்பட்டன. குறிப்பாக உரோமாபுரியைச் சார்ந்த மட்கலன்களான அரிட்டைன், ஆம்போரா மதுக் குடுவைகள், ரௌலட்டட் எனப்படும் தட்டு வகைகள் பெருமளவில் கிடைத்தன. ஆம்போரா வகைக் குடுவைகள் கைப்பிடியுடன் காணப்பட்டன. இவ்வகைச் சாடிகள் உரோமாபுரியிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட உயர் வகை மதுக்களைக் கொண்டு வருவதற்காக அக்காலத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளன. இவ்வகழாய்வில் உள்ளூரில் வனையப்பட்ட மதுக் குடுவைகளும் கண்டுபிடிக்கப்பட்டன. அரிட்டைன் எனப்படும் மட்கலன்கள் இத்தாலியில் அரிசோ என்ற இடத்தில் இருந்த சூளையில் தயாரிக்கப்பட்டு முத்திரை குத்தப்பட்டுக் காணப்படுகிறது. இம் மட்கலன்கள் மிக நேர்த்தியான மண்ணால் குழைத்து செய்யப்பட்டுள்ளன. இம்மட்கலன்களின் காலம் கி.பி. 20லிருந்து கி.பி. 50 வரை ஆகும். பல வகை சுடுமண் விளக்குகளும், கூரை ஓடுகளும் அகழாய்வில் கிடைத்தன.

பேராசிரியர் விமலா பெக்ளி நடத்திய அகழாய்வில் டெர்ரா சிகிலிட்டா என்ற பகுதியில் தயாரிக்கப்பட்ட மட்கல ஓடுகளும் கண்டுபிடிக்கப்பட்டவை குறிப்பிடத்தக்கது. இம்மட்கலக் கண்டுபிடிப்புகள் மூலம் மத்திய தரைக்கடல் வணிகர்கள் இத்துறைமுகத்திற்கு வருகை புரிந்துள்ளமையை அறிய முடிகிறது. குறிப்பாக யவனர்கள் இங்கு பெருமளவில் வந்து தங்கியுள்ளனர்.

### தொல்பொருள்கள்

அரிக்கமேடு அகழாய்வில் அரிய கல்மணிகள், தங்கத்திலான மணிகள், சங்கு வளையல்கள், சுடுமண் மணிகள் பெருமளவில் கிடைத்தன. அரிய கல்மணிகள் இந்நகரத்திற்கு அருகிலிருந்த மணிக்கொல்லை என்ற பகுதியில் தயாரிக்கப்பட்டு வெளிநாடுகளுக்கு இத்துறைமுகத்தின் வாயிலாக ஏற்றுமதி செய்யப்பட்டன. இவ்வகழாய்வில் சுடுமண் உருவங்களும் கண்டுபிடிக்கப் பட்டன. சுடுமண் உருவங்களில் அழகும் வனப்பும் மிக்க பெண் உருவம் குறிப்பிடத்தக்கது. இப் பெண் தன் ஒரு கையைத் தொடையில் இருத்தியவாறு மறு கையில் கூடை ஒன்றனைத் தாங்கியவாறு காணப்படுகிறாள். உடலின் மீது உள்ள ஆடை மிக அழகாகக் காட்டப்

பட்டுள்ளது. இவற்றைத் தவிர சதுரங்கக் காய்கள், காதணிகள் போன்றவையும் அகழாய்வில் கிடைத்தன. தேர் உருவம் பொறிக்கப்பட்ட முத்திரை ஒன்றும் இங்குக் கிடைத்தது. இதன் நீளம் 5.5 செ.மீ. அகலம் 5.0 செ.மீ. களிமண்ணால் உருவாக்கப்பட்ட இம் முத்திரையில் தேரினை இரண்டு குதிரைகள் இழுக்க அதன் மீது நின்ற நிலையில் தேரோட்டி உருவம் பொறிக்கப்பட்டு மிக நேர்த்தியாக வடிவமைக்கப்பட்டுள்ளது.



**நாணயங்கள்**

அரிக்கமேட்டுப் பகுதியில் நடைபெற்ற கள ஆய்வுகளிலும் அகழாய்வுகளிலும் பல்வகை நாணயங்கள் கிடைத்தன. குறிப்பாக உரோமானிய நாணயங்களையும் சங்க காலச் சோழர் நாணயத்தையும் குறிப்பிடலாம். டைபிரியன் தினாசரிஸ் நாணயமும், காண்ஸ்டான்டைன் மன்னரின் செப்பு நாணயமும் சதுர வடிவில் அமைந்த சங்க காலச் சோழர் நாணயமும் குறிப்பிடத்தக்கவை. சங்க காலச் சோழர் நாணயத்தின் ஒருபக்கம் யானை உருவமும் மற்றொரு பக்கம் புலியின் உருவமும் காணப்படுகிறது. இவற்றின் மூலம் உரோமானியத் தொடர்புடைய வாணிக நகரமாகச் சங்க காலத்தில் அரிக்கமேடு விளங்கியிருந்தமையை அறிய முடிகிறது.



**தமிழி எழுத்துப் பொறிப்புகள்**

அரிக்கமேடு அகழாய்வுகளில் தொன்மையான தமிழி எழுத்துப் பொறிப்புகள் கொண்ட மட்கல ஓடுகள் பல கண்டுபிடிக்கப்பட்டன. முதன் முதலில் தமிழி எழுத்துப் பொறிக்கப்பட்ட மட்கல ஓடுகள் அகழாய்வில் கிடைத்த இடமாக அரிக்கமேடு விளங்குகிறது. அரிக்கமேட்டில் கிடைத்த ஓடுகளில் உள்ளவை பெரும்பாலும் ஆட்பெயர்களாகும். தமிழ்ப் பெயர்களும் இவற்றுடன் சில வட இந்தியப் பிராகிருதப் பெயர்களும், இலங்கைப் பகுதியில் இருந்த பெயர்களும் இவற்றில் காணப்படுகின்றன.



**சிறப்புகள்**

தமிழகத்தின் கிழக்குக் கடற்கரையில் பல துறைமுகங்கள் சங்க காலத்தில் சீரும் சிறப்பும் பெற்று விளங்கியிருந்தமையை சங்க இலக்கியங்கள் சுட்டுவதனை அறிவியல் முறை அடிப்படையில் நடத்தப்பட்ட அகழாய்வுகள் பல உறுதி செய்து வருகின்றன. தமிழர்கள் கடல் கடந்து வாணிகம் மேற்கொண்டு தமிழகத்தின் நறுமணப் பொருள்களையும் பட்டாடைகளையும் அணிமணிகளையும் ஏற்றுமதி செய்ததனையும் மேலை நாடுகளின் பல பொருள்களைத் தமிழகத்திற்கு இறக்குமதி செய்ததனையும், குறிப்பாக யவனர்கள் தமிழகத்துடன் பெரிதும் வாணிகத் தொடர்பு கொண்டிருந்தனர் என்பதனையும் மெய்ப்பிக்கும் வகையில் தமிழகத்தில் கடற்கரைப் பகுதிகளில் நடந்த அகழாய்வுகள் உறுதி செய்கின்றன. ❖



# தமிழகக் கடலகழாய்வுகள்

முனைவர் ந.அதியமான்



தமிழகம் பழங்காலந்தொட்டு பிற நாடுகளுடனான மேம்பட்ட வாணிக உறவைக் கொண்டு விளங்கி வருகிறது. சங்ககாலத்தில் மத்தியதரைக்கடல் நாடுகளுடனான வாணிக உறவிற்குப் பல சான்றுகள் உள்ளன. இவ்வாணிகம் கடல்வழியாக நிகழ்ந்தமையால் காலப்போக்கில் பல கப்பல்கள் கடலில் மூழ்கியுள்ளன. சரியாக அறியப்படாத காரணங்களால் அக்காலத்திலிருந்து இக்காலம்வரை பல துறைமுகங்கள் உருவாகியும் அழிந்தும் வந்துள்ளன. இவ்வகையில், இந்தியக் கடற்கரைப் பகுதிகளில் பல எண்ணிக்கையிலான கப்பல்கள் மூழ்கியுள்ளமைக்குச் சான்றுகள் உள்ளன.

இவ்வாறு மூழ்கிய கப்பல்களைக் கண்டுபிடித்து வெளிக்கொணர்தலும், கடலில் மூழ்கிய பண்டைய துறைமுக நகரங்களைக் கண்டு ஆராய்வதும் கடல்சார் தொல்லியலின் குறிக்கோளாகும். இத்தொல்லியல் பணியின் ஊடகம் நீர் என்பதால் பல இடர்ப்பாடுகளைக் கடந்து இப்பணியினை மேற்கொள்ள வேண்டியுள்ளது. எனவே, இத்துறை உலக அளவில் இன்னும் வளரும் நிலையிலேயே உள்ளது.

தமிழகக் கடல்பகுதி நீண்ட ஒரு வரலாற்றைத் தன்னகத்தே கொண்டுள்ளதால் தமிழகக் கடல்சார் வரலாற்றைக் கண்டறிய கடலகழாய்வுகள் மேற்கொள்ளுதல் தேவையான ஒன்றாகிறது. மூழ்கிய நகரங்கள் குறிப்பாக, பூம்புகார், மூழ்கிய பண்டைய கப்பல்கள் மற்றும் நங்கூரங்கள் போன்றன குறித்த ஆய்வுகள் வரலாற்றை மீட்டுருவாக்கம் செய்ய ஏதுவாக அமையும்.

இந்நிலையில் தமிழகக் கடல்பகுதியில் தொல்லியல் ஆய்வுகளை மேற்கொள்ளும் முயற்சியின் விளைவாக 1984ஆம் ஆண்டு கடலகழாய்விற்கென நிரந்தரமான துறை ஒன்று இந்தியாவிலேயே முதன்முதலாகத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் தொடங்கப்பெற்றது. இதன் பிறகே இந்தியாவில் கடலகழாய்விற்கென மேலும் நான்கு நிறுவனங்கள் தோற்றுவிக்கப்பட்டன. கோவாவிலுள்ள தேசியக் கடலாய்வு நிறுவனம், புதுதில்லியிலுள்ள மைய தொல்லியல்துறை, விசாகப்பட்டினத்திலுள்ள ஆந்திரப் பல்கலைக் கழகம், சென்னை தேசியக் கடல் தொழில்நுட்ப நிறுவனம் ஆகியன இப் பணியை மேற்கொள்கின்றன. தமிழகக் கடல் பகுதியைப் பொறுத்தவரை ஆந்திரப் பல்கலைக்கழகம் தவிர பிற நான்கு நிறுவனங்களும் தொல்லியல் ஆய்வுகளை மேற்கொண்டு வருகின்றன. மேலும், இந்தியாவில் நிகழ்ந்த கடல்சார் தொல்லியல் ஆய்வுகளில் தமிழகக் கடல் பகுதியிலேயே அதிகம் நிகழ்த்தப் பெற்றுள்ளன என்பது இங்கு குறிப்பிடத்தக்கது.

பூம்புகார், மகாபலிபுரம், அரிக்கமேடு, இராமநாதபுரம் கடல்பகுதிகளில் மேற்கண்ட நிறுவனங்களால் கடலகழாய்வுகள் மேற்கொள்ளப் பெற்றுள்ளன. இவ்வாய்வுகள் குறித்துக் கீழேக் காணலாம்.

## பூம்புகார் கடலகழாய்வு

காவிரியின் முகத்துவாரத்தில் அமைந்துள்ள பூம்புகார், சங்ககாலத்தில் சோழர்களின் சிறந்த துறைமுகமாக விளங்கியது. பல்வேறு பண்டங்களின் ஏற்றுமதி, இறக்குமதி இத் துறைமுகம் வழியே நடைபெற்றது. இதற்கு இலக்கியங்கள், அயலவர் பயணக் குறிப்புகள், அங்கு நடைபெற்ற தொல்லியல் அகழாய்வுகள் சான்று பகர்கின்றன. இப்பகுதியின் மேன்மையை அறிந்த மைய அரசின் தொல்லியல் துறை 1960களில் பூம்புகாரில் நிகழ்த்திய அகழாய்வில் கி.மு.3ஆம் நூற்றாண்டைச் சார்ந்த செங்கற் கட்டுமானப் படகுத்துறை ஒன்றும், கிறித்தவக் காலத்தைச் சார்ந்த செங்கற் கட்டுமான நீர்தேக்க முகப்பும் கி.பி. 4ஆம் நூற்றாண்டைச் சார்ந்த புத்தவிகாரக் கட்டடப் பகுதியும் வெளிக்கொணரப்பட்டன. மேலும் சங்க காலத்தைச் சார்ந்த பல அரிய தொல்பொருள்களும் கண்டெடுக்கப் பட்டன. 1990களில் தமிழக அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை மேலும் ஒரு படகுத் துறையை அகழாய்வு செய்து வெளிக் கொணர்ந்துள்ளது.

இந்நகரைக் கடல்கொண்டதாக மணிமேகலை (24:63–9, 25:198–202, 29:33–5) குறிப்பிடுவதால் பூம்புகாரின் கீழைப்பகுதி தற்போது கடலில் மூழ்கியிருக்கலாம் என்ற கருத்தின் அடிப்படையிலும் கடலில் கிடைக்கும் சான்றுகளை மீனவர்கள் கூறக் கேட்டதன் அடிப்படையிலும் மூழ்கிய பகுதியான பூம்புகார் பற்றி அறியும் நோக்கில் 1980களில் தமிழக அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை கோவாவிலுள்ள தேசியக் கடலாய்வு நிறுவனத்தின் துணையுடன் கீழ்க்காணும் தொலையுணர்வுக் கருவிகளைக் கொண்டு பூம்புகார் கடல்பகுதியில் ஆய்வை மேற்கொண்டது.

**பக்க வரைபட மானி** (Side Scan Sonar)

எதிரொலி ஆழமானித் தத்துவத்திலேயே இக்கருவி இயங்குகிறது. இக்கருவியிலிருந்து பல ஒலி அலைகள் கப்பலின் இரு பக்கங்களிலும் அனுப்பப்பட்டு ஒவ்வோர் ஒலி அலையும் திரும்பி வரும் நேரத்தைக் கணக்கிட்டு நிழற்படம் போலக் கடலின் தரைப் பகுதியை வரைந்து காட்டும். இப் படங்களில் கிடைக்கும் தரவுகளைக் கொண்டு கடலடியில் மூழ்கிய கப்பல்கள், கல் கட்டடங்களின் பகுதிகளைக் கண்டுபிடிக்க இயலும். இக்கணிப்புகளை இப்படங்களைப் பற்றிய அறிவில் தேர்ச்சி பெற்றோரே செய்ய இயலும். கடலில் மூழ்கிய புகழ் பெற்ற மேரி ரோஸ் கப்பல், டைட்டானிக் கப்பல் ஆகியவற்றை இக்கருவி மற்றும் கீழ்க்காணும் பிற கருவிகளின் உதவியுடனேயே முதலில் கண்டுபிடிக்க முடிந்தது.

**கடல் காந்தப்புலமானி**
(Marine Magnetometer)

இக்கருவி கடலில் மூழ்கிய கப்பல்கள், கட்டடப் பகுதிகள் ஆகியவற்றைக் கண்டுபிடிக்க உதவுகிறது. பூமியில் இடத்திற்கிடம் காந்தப்புலம் வேறுபட்டுள்ளது. ஆனால் ஒரு பகுதியில் காந்தப்புல மாறுபாடு ஒரே அளவில் இருக்கும். அப்பகுதியில் வேறு பகுதியிலிருந்து வந்த அளவில் பெரிய பொருள்கள் காணப்பட்டால் அப்பொருள்களால் அப்பகுதியிலுள்ள இயல்பான காந்தப் புலம் மாறுபடும். காட்டாக, கடலடியிலுள்ள தரைப்பகுதியின் காந்தப்புலம் அப்பகுதியில் மூழ்கியுள்ள கப்பலால் மாறுபடும்.

கப்பலின் பின்புறம் மின் கம்பிகளால் இணைக்கப் பட்ட காந்தப்புல அளவீட்டுக் கருவி பொருத்தப்பட்டுக் கப்பலில் இழுத்துச் செல்லப்படும். கருவி உள்ள இடத்தின் காந்தப்புலம் கப்பலில் உள்ள கருவிக்கு மின் கம்பி மூலம் அனுப்பப்பட்டு அது வரைபடமாக வரைந்து காட்டும். கப்பல் மூழ்கிய பொருள்களின் மீது செல்லும்போது காந்தப்புலத்தின் தன்மை வேறுபடும். இதைக் கொண்டு கப்பல் சென்ற பகுதியின் கீழ் கப்பலோ, மூழ்கிய கட்டடங்களின் பகுதிகளோ உள்ளன என்பதை அறியலாம்.

**மண்ணடி எதிரொலிமானி**
(Sub Bottom Profiler)

பல நூற்றாண்டுகளுக்கு முன் மூழ்கிய கப்பல்கள், கட்டடப் பகுதிகள் கடலில் ஏற்படும் இயற்கை மாற்றங்களாலும், நதிகளால் கொணரப்படும் வண்டல்களாலும் மண்ணுக்குள் புதைந்து போயிருக்கலாம். இக்கப்பலைப் பக்க வரைபட மானியைக் கொண்டு கண்டுபிடிக்க இயலாது. மண்ணுக்கடியில் உள்ள பொருள்களையும் கண்டுபிடிக்கும் வண்ணம் உருவாக்கப்பட்டதே மண்ணடி எதிரொலிமானியாகும். இதுவும் எதிரொலியின் தத்துவத்திலேயே இயங்குகிறது. இதன் ஒலி அலைகள் மண்ணுள் புகுந்து அதன் கடினப் பாறைவரை சென்று திரும்பும் ஆற்றல் கொண்டவை. மூழ்கிய பொருள்கள் மண்ணடியில் புதைந்தால் அப்பொருளைத் தெளிவாகக் கண்டுபிடிக்க இக்கருவி உதவுகிறது.

மேற்கண்ட கருவிகளைப் பயன்படுத்தி ஆய்வு செய்ததில் பல புதிய பொருள்கள் கடலுக்கடியில் காணப்படுவதாகவும் அவற்றை நீர்மூழ்கி ஆய்வு செய்தால் கடலில் மூழ்கிய பூம்புகாரின் ஒரு பகுதியினைப் பற்றிய சான்றுகள் கிட்டும் எனவும் கண்டறிந்துள்ளனர்.

கோவா தேசிய கடலாய்வு நிறுவனம் அளித்த அறிக்கையின் அடிப்படையில் 1990–91இல் கடலில் மூழ்கி ஆய்வுகளை மேற்கொள்ள மாண்பமை முதலமைச்சர் கலைஞரின் தலைமையில் அமைந்திருந்த தமிழக அரசு ரூ.2.2 கோடி ஒதுக்கீடு செய்து முதல் தவணையாக ரூ10.00 இலட்சம் ஒதுக்கப்பட்டு ஆய்வுகள் மேற்கொள்ளப்பெற்றன.

பூம்புகார் கடல்பகுதியில் கடலாய்வுத் தொலை யுணர்வுக் கருவிகளின் துணைகொண்டு மீண்டும் ஆய்வுகள் மேற்கொள்ளப்பெற்றுச் சான்றுகள் இருக்கலா மெனக் கருதிடும் 8 இடங்கள் கண்டறியப்பட்டு அவற்றில் இரண்டு இடங்கள் நீர்மூழ்கி ஆய்வு செய்யத் தெரிவு செய்யப்பெற்றன. வானகிரி மற்றும் காவிரியின் முகத்துவாரத்திற்குக் கிழக்கே 7 மீட்டர் ஆழத்தில் நீர்மூழ்கி ஆய்வுகள் மேற்கொள்ளப்பெற்றன. இங்கு மூன்று அடுக்குகள் கொண்ட கல்லாலான கட்டடப் பகுதிகள் கண்டறியப் பெற்றன. இக்கற்கள் 30 x 20 x 5 செ.மீ. அளவுகளிலிருந்து 65 x 40 x 10 செ.மீ. அளவுவரையிலும் இருந்தன. மேலும் 65 x 55 x 10 செ.மீ. அளவிலான கற்களும் பயன்படுத்தப் பட்டிருந்தன. அக் கட்டடப் பகுதியின் அருகில் கிடைத்த கறுப்பு–சிவப்புப் பானையோடுகள் மற்றும் சிவப்புப் பானையோடுகள் ஆகியவற்றைக் கொண்டு இக் கட்டடப் பகுதியைக் கி.மு.2 – கி.பி.4ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகக் கருதப்படுகிறது.

மேலும், பூம்புகாரிலுள்ள கடைக்காடு பகுதிக்கும் தெற்கே கடலில் 5 மைல் தொலைவில், 23 மீ. ஆழத்தில் குதிரை இலாட வடிவக் கட்டடப் பகுதியைக் கண்டாய்ந்தனர். அப்பகுதியில் கடல் தாவரங்கள் மற்றும் பாசிகள் மிகையாகப் படிந்து இருந்தமையால் அது குறித்த ஆய்வு முயற்சி 1997ஆம் ஆண்டு மேற்கொள்ளப் பெற்றது. இக் கட்டடப் பகுதியின் மேற்பகுதியை சுத்தம் செய்தபின் அக் கட்டுமானம் செம்பராங்கற்களால் ஆனது எனக் கண்டறிந்தனர். எனினும் இப்பகுதி மேலும் ஆய்வுக்கு உட்படுத்தப்பட வேண்டும் என முடிவு செய்யப்பெற்றது.

இதனைத் தொடர்ந்து 2006ஆம் ஆண்டு சென்னையிலிலுள்ள தேசிய கடல் தொழில்நுட்ப நிறுவனம், தமிழ்ப் பல்கலைக் கழகத்துடன் இணைந்து கடலகழாய்வுப் பணிகளை மேற்கொண்டது. கடல்சார் தொலையுணர்வுக் கருவிகள் மீண்டும் பயன்படுத்தப் பெற்று, சான்றுகள் உள்ள இடங்கள் தெரிவு செய்யப்பெற்றன. இலாடவடிவக் கட்டடப்பகுதியில் பல முறை நீர்மூழ்கி ஆய்வுகள் மேற்கொள்ளப் பெற்றன. அக் கட்டடப்பகுதியின் மேலுள்ள மாசுகளை அகற்றினால் மட்டுமே அதன் பயன்பாட்டைப்பற்றி அறிய இயலும் என முடிவு செய்யப்பெற்றது. அது 80 மீ. நீளமும் 25 மீ. அகலமும் கொண்ட பகுதி என்பதும் கண்டறியப்பட்டது. மேலும் ஆழம் குறைந்த சான்றுகளுள்ள பகுதிகளில் ஆய்வு மேற்கொண்டபோது நீரின் தெளிவின்மை காரணமாக ஆய்வு மேற்கொள்வதில் இடர்ப்பாடுகள் ஏற்பட்டதை யடுத்து மீண்டும் தகுந்த பருவத்தில் ஆய்வை மேற்கொள் வதென முடிவு செய்யப்பெற்றது. இக்கட்டுமானப் பகுதியில்தாம் நீர்மூழ்கி ஆய்வு செய்ததாகவும் இக் கட்டுமானம் மிகப் பழைமையானதென்றும் மேலைநாட்டைச்சேர்ந்த ஒருவர் இணைய தளத்தில் தந்துள்ள தகவல் ஆய்வுக்குரியதாகப் பெரும்பாலான தொல்லியலாளர்கள் கருதுகின்றனர்.

மூழ்கிய பூம்புகாரின் பகுதிகளை முழுமையாகக் கண்டறிவதில் கீழ்க்காணும் இடர்ப்பாடுகள் உள்ளன. கடற்பகுதியின் நீரோட்டம் அதிகம் உள்ளதால் தரைப்பகுதியிலுள்ள களிமண் கலக்கப் பெற்றுக் கட்டடப் பகுதிகளை நன்கு காண்பதில் இடர் ஏற்படுகிறது. 2000 ஆண்டுகளுக்கு முன்பு மூழ்கியமையால் கட்டடப் பகுதிகளின் மேல் காவிரியின் வண்டல் பரவுகள் ஏற்பட்டு மூடப்படுகின்றன. எனவே, கட்டடப் பகுதியின் மேல்பகுதியைக் காண்பதில் இடர்ப்பாடு ஏற்படுகிறது. எனவே, பூம்புகார் கடல்பகுதியில் தொல்லியல் ஆய்வுகள் ஆண்டில் சில நாள்களே மேற்கொள்ள இயலுமென் பதாலும், இப்பகுதிகளை நீர்மூழ்காமல் கருவிகள் மூலமாகவே ஆய்வு மேற்கொள்ள தொழில்நுட்ப வளர்ச்சியடைய இன்னும் சில ஆண்டுகளாகலாம். அது வரை பல நிறுவனங்கள் தொடர்ந்து தங்களது ஆய்வுகளை மேற்கொண்டவண்ணம் உள்ளன.

பண்டைய புகார் நகர்ப் பகுதிகளை ஆய்வு செய்தபோது கோவா தேசிய கடலாய்வு நிறுவனத்தினர் தரங்கம்பாடிக்குக் கிழக்கே 19 மீ. ஆழத்தில் 50 மீ. நீளமும் 15 மீ. அகலமும் கொண்டு மூழ்கிய 18ஆம் நூற்றாண்டைச் சார்ந்த கப்பலொன்றைக் கண்டறிந்தனர். மேலும் ஆய்வு செய்ததில் இக்கப்பல் மரத்தாலான அடிப்பகுதியைக் கொண்டது எனக் கண்டறியப்பட்டது. இக்கப்பலில் மிகுந்த எடை மற்றும் விலையுயர்ந்த ஈயக் கட்டிகள் பெருமளவில் கண்டெடுக்கப்பட்டன. மேலும் கப்பலின் பகுதிகள் மண்ணுக்குள்ளும் புதைந்துள்ளமை கண்டறியப்பட்டது. இக்கப்பலில் 2.1 மீ. நீளமுள்ள பீரங்கியும் இருந்தது கண்டறியப்பட்டது. மேலும் பல பொருள்களும் கண்டறியப்பட்டன. ஈயக் கட்டிகள் ஒவ்வொன்றும் 68.5 கிலோ எடையைக் கொண்டனவாக உள்ளன. 87–90 செ. மீ. நீளமும் 15–18 செ.மீ. அகலமும் 6 செ.மீ. உயரமும் உடையதாக உள்ளன. இக்கட்டிகளில் ஒரு பக்கத்தில் W BLACKETT என்ற எழுத்துப் பொறிப்பு காணப்படுகிறது. மறுபக்கத்தில் ஒற்றை ஆங்கில எழுத்துகளின் பொறிப்புகள் காணப்படுகின்றன. மேலும் VIEC என்னும் ஆங்கில எழுத்துகளும் கண்டறியப் பட்டன. இந்த ஈயக்கட்டிகள் இங்கிலாந்தில் செய்யப் பெற்று ஆங்கிலேயக் கிழக்கிந்தியக் கம்பெனிக்கு அனுப்பப்பட்டவையாக இருக்கலாம் என அறியப் படுகிறது.

### மகாபலிபுரம் கடலகழாய்வு

பல்லவர்களின் துறைமுக நகராக விளங்கிய மார்க்கோபோலாவால் குறிக்கப்பட்ட ஏழு கோயில்களைக் கொண்ட மகாபலிபுரத்தில் கடலினுள் உள்ளதாகக் கருதப்படும் கட்டடப் பகுதிகளைக் கோவாவிலுள்ள தேசியக் கடலாய்வு நிறவனம் ஆய்வு மேற்கொண்டது. மகாபலிபுரத்திற்கு கிழக்கே 24 இடங்களில் நீர்மூழ்கி ஆய்வுகள் மேற்கொள்ளப்பெற்றன. இவற்றில் ஐந்து இடங்களில் கட்டடக் கூறுகள் இருப்பதாகக் கண்டறியப் பட்டுள்ளன.

முதற்பகுதியில் கட்டடப் பகுதிகளின் எச்சங்கள் கண்டறியப்பட்டன. பெரிய அளவிலான கட்டடப் பகுதி கடற்கரைக் கோயிலிலிருந்து 700 மீட்டர் தொலைவில் 6 மீ. ஆழத்தில் உள்ளது. இக்கட்டடப் பகுதி 75 மீ நீளமும் 35 மீ. அகலமும் உடையதாகும், வடக்கு தெற்காக அமைந்த இப்பகுதி பெரும்பாலும் கிரானைட் வகைக் கற்களால் ஆனவை. இக்கட்டடப் பகுதியில் 25 மீ. நீளமுள்ள 4அடுக்குகள் கொண்ட சுவர்ப்பகுதி ஒன்று காணப்படுகிறது. பெரிய அளவிலான கற்களைக் கொண்டவையாக இப்பகுதி விளங்குகிறது. கற்களின் ஒரு பக்கத்தில் முகடுபோல் உள்ளது. இது அடுத்த கற்களுடன் நல்ல இணைப்பை ஏற்படுத்தப் பயன்பட்டுள்ளது.

இரண்டாவது பகுதியில் 60 மீ. நீளமும் 0.6 மீ. அகலமும் உள்ள கல்லாலான சுவர்ப் பகுதி காணப்படுகிறது. மூன்றாவது பகுதியில் 'ட' வடிவிலான கட்டடப் பகுதி கண்டறியப்பட்டது. இப்பகுதியில் கிரானைட் கற்கள் பாறையிலிருந்து பெயர்த்தெடுக்கப்பட்டிருக்கலாம் என்பதற்கான சான்றுகள் காணப்படுகின்றன. நான்காவது பகுதியில்

முதற் பகுதியில் கண்ட கட்டடப் பகுதிகள் போன்றே கல்லாலான கட்டடப் பகுதிகள் கண்டறியப்பட்டன. ஐந்தாவது பகுதியில் 2மீ. நீளமும், 1.5மீ. உயரமும் 65 மீ. அகலமும் உடையதாக விளங்குகிறது. மேற்கண்ட அனைத்துப் பகுதியிலும், வேலை நுணுக்கம் உடைய கற்கள் கட்டடப் பகுதிகளாக இருப்பதாலும் சான்றுகளின் அடிப்படையிலும் இவை கி.பி 4–5ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை எனவும் அறியமுடிகிறது. மேலும் இப்பகுதியில் புதுதில்லி மையத் தொல்லியல் துறையும் ஆய்வுகளை மேற்கொண்டு அதே கட்டடப் பகுதிகளைப் பதிவு செய்துள்ளது.

### அரிக்கமேடு கடலகழாய்வு

சங்க காலத்தில் ரோமானியருடன் வாணிக உறவு கொண்டிருந்த பாண்டிச்சேரிக்கருகில் உள்ள அரிக்கமேடு என்னும் துறைமுக ஊரைக் குறித்த தொல்லியல் ஆய்வுகள் பலராலும் நிகழ்த்தப்பட்டுள்ளன. வீலர், கசால், பெக்லே போன்றோர் விரிவான அகழாய்வை மேற்கொண்டு பல தொல்லியல் சின்னங்களை வெளிக் கொணர்ந்துள்ளனர். இப்பகுதி துறைமுக நகராக விளங்கியதாலும் தற்போதைய கடற்கரைப் பகுதியால் மாற்றம் ஏற்பட்டிருக்கலாம் எனக் கருதப்படுவதாலும் இக்கடல் பகுதியை புதுதில்லி மையத் தொல்லியல் துறை அரிக்கமேடுவை ஒட்டிய அரியாங்குப்பம் ஆற்றுப் பகுதி மற்றும் கடல் பகுதியை ஆய்வு செய்தது.

தற்போதைய ஆற்றிலும் சில கட்டடப் பகுதிகள் கண்டறியப்பட்டன. மேலும் ஆற்றுப்பகுதியில் பழங்கால மட்பாண்டத் துண்டுகளும் கண்டறியப்பட்டன. இத் துறைமுகம் குறித்த கடலாய்வைக் கடந்த சில ஆண்டுகளாக கோவா, தேசியக் கடலாய்வு நிறுவனம் தொடர்ந்து நிகழ்த்தி வருகிறது. ஆய்வு முடிவுகள் குறித்த அறிக்கைகள் இன்னும் வெளியிடப் பெறவில்லை.

### இராமநாதபுரம் கடற்பகுதி ஆய்வுகள்

மன்னார் வளைகுடாவையும், பாக் விரிகுடாவையும் இணைக்கும் இராமநாதபுரம் கடற்கரைப் பகுதியிலிலுள்ள வைகை ஆற்றின் முகத்துவாரத்தில் அமைந்துள்ள அழகன்குளம் சங்ககாலத்தில் உரோமானியருடன் தொடர்பு கொண்டிருந்தது. அப்பகுதியில் பல கப்பல்கள் தொடர்ந்து வந்து சென்றமைக்கான சான்றுகள் பல உள்ளன. அவ்வகையில் கடலில் கப்பல்களால் விட்டுச் செல்லப்படும் நங்கூரங்கள் கடல்சார் நடவடிக்கை குறித்த போதிய சான்றுகளைத் தருவனவாக அமைகின்றன. தமிழ்ப் பல்கலைக்கழகம் இக்கடல் பகுதியில் ஆய்வை மேற்கொண்டு பல நங்கூரங்களைக் கண்டுபிடித்து வெளிக்கொணர்ந்துள்ளது. இராமேசுவரம் கடற் பகுதியில் தமிழ்ப் பல்கலைக்கழகம் சிறிய அளவிலான பல அகழாய்வுகளை நிகழ்த்தியுள்ளது. இந்த ஆய்வுகளில் இரண்டு இரும்பு நங்கூரங்களும் நான்கு கல் நங்கூரங்களும் கடலில் கண்டெடுக்கப்பட்டன.

### இரும்பு நங்கூரங்கள்

1986 ஆம் ஆண்டு தொண்டி கடல்பகுதியில் 10 மீ. ஆழத்தில் ஒரு டன் எடையுள்ள 19ஆம் நூற்றாண்டைச் சார்ந்த இரும்பு நங்கூரம் அகழ்வு செய்யப்பட்டு வெளிக்கொணரப்பட்டு மேற்புறங்கள் சுத்தப்படுத்தப்பட்டன. நங்கூரத்தின் நீளம் 2 மீ. ஆகும். நங்கூரத்தின் ஒரு பகுதி தரையில் புதைந்திருந்ததால் அதன் ஒரு நங்கூரப் பல் பகுதி அரிக்கப்பட்டிருந்தது. நங்கூரத்தின் இருபுறங்களிலும் GUERIGNY 1864 என்று பொறிக்கப்பட்டுள்ளது. GUERIGNY என்பது பிரான்ஸ் நாட்டின் மையப் பகுதியிலுள்ள ஒரு நகரமாகும். இந்நகரம் பழங்காலத்திலிருந்தே இரும்புப் பொருள் உற்பத்தியில் சிறந்து விளங்கியது. இந்நங்கூரம் இந்நகரிலேயே செய்யப்பட்டிருத்தல் வேண்டும்.

இதே போன்ற உருவ அமைப்புடைய ஆனால் சிறிய இரும்பு நங்கூரம் ஒன்று முல்லைத் தீவிற்கு அருகிலுள்ள கடலில் எடுக்கப்பட்டது. இது மிகவும் துருப்பிடித்த நிலையில் உள்ளதால் இந்நங்கூரம் சுமார் 300 ஆண்டுகளுக்கு முற்பட்டதாக இருக்கலாம் என அறிஞர்கள் கருதுகின்றனர். இந்நங்கூரம் சிதைந்த நிலையில் உள்ளதால் பெயர் பொறித்த எழுத்துகள் எவையும் கண்டுபிடிக்கப்படவில்லை. இந்நங்கூரங்கள் இரண்டும் தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக்கழக அருங்காட்சியகத்தில் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன.

### கல் நங்கூரங்கள்

இராமேஸ்வரத்திற்கருகிலுள்ள குருசடித் தீவுக் கடலில் தெற்கே 2.4 மீ. ஆழத்தில் உலகில் மிகப் பெரிய கல் நங்கூரங்களில் ஒன்று கண்டெடுக்கப்பட்டது. செவ்வகப் பட்டை வடிவம் கொண்ட இந்நங்கூரம் சுமார் 3மீ. நீளமும் அடிப்பகுதி 60 செ.மீ. X 60 செ.மீ. அளவும் கொண்டது. கீழ்ப்பகுதியில் மரக்கட்டைகள் அடிப்பதற்கு ஏதுவாக இரு செவ்வக வடிவத் துளைகள் இடப்பட்டுள்ளன. நங்கூரத்தின் மேற்பகுதியில் கயிற்றுடன் கட்டுவதற்கான வட்டத்துளை ஒன்று உள்ளது. கலவைப்பாறை வகைக் கல்லாலான இந்நங்கூரம் இடைக்காலத்தைச் சேர்ந்தது எனவும், பிற துறைமுகத்திலிருந்து வந்த கப்பலில் இருந்து விடப்பட்டதாக இருக்கலாம் எனவும் கருதப்படுகிறது.

இதுபோன்றே கலவைப் பாறையிலான சிறியவகை நங்கூரம் ஒன்று பூமரிச்சான் தீவுக் கடலில் 10.5. மீ ஆழத்தில் கண்டெடுக்கப்பட்டது. இந் நங்கூரத்தில் கயிறு கட்டும் துளையில்லை. கிரானைட் கல்லால் ஆன

மற்றொரு கல் நங்கூரம் வேதாளை என்னும் கிராமத்தில் கண்டெடுக்கப்பட்டது. இந்நங்கூரத்திலும் கயிறு கட்டப்படும் துளைகள் காணப்படவில்லை. மேலும் இடைக்காலத் துறைமுகமான பெரிய பட்டினத்தில் கப்பலாறு என்னுமிடத்தில் சாய்சதுர வடிவப் பட்டைக் கல் நங்கூரம் கண்டுபிடிக்கப்பட்டது. இந் நங்கூரத்தில் ஒற்றைத் துளைமட்டும் காணப்படுகிறது. இவை யாவும் இடைக்காலத்தைச் சார்ந்தவையாக கருதப்படுகின்றன.

மேற்கண்ட கல்நங்கூரங்களில் பெரிய நங்கூரம் 1650 டன் எடையுள்ள கப்பலுக்கும், இரண்டாவது நங்கூரம் 70 டன் எடையுள்ள கப்பலுக்கும், கிரானைட் நங்கூரம் 330 டன் எடையுள்ள கப்பலுக்கும் பயன்பட்டிருக்கலாம் எனக் கணக்கிடப்பட்டுள்ளது.

தமிழ்ப் பல்கலைக்கழகம் 1980களின் இறுதிப் பகுதியில் மண்டபத்திற்கு அருகேயுள்ள தோணித்துறை என்னுமிடத்தில் 3மீ. ஆழக் கடல் பகுதியில் நீர்மூழ்கி ஆய்வுகள் மேற்கொண்டு இடைக்காலத்தைச் சார்ந்த பானையோடுகள் மற்றும் இரும்பாலான பொருள்கள் ஆகியனவற்றைக் கண்டெடுத்தது. இதுதவிர, தமிழ்ப் பல்கலைக்கழகம் மரபுவழி கப்பல்கள் கட்டுதல், செலுத்துதல், இராமேசுவரம் மற்றும் தூத்துக்குடி கடல் பகுதிகளில் மரபுவழி முத்து மற்றும் சங்கு குளித்தல் போன்றன குறித்த கடல்சார்ந்த தொழில் ஆய்வுகளையும் தொடர்ந்து மேற்கொண்டு வருகிறது.

கடலகழாய்வுகள் பல காரணங்களால் உலக அளவில் தொடக்க நிலையிலேயே உள்ளன. அவற்றுள் தொழில் நுட்ப வளர்ச்சித் தேவை, குறைந்த எண்ணிக்கையிலான நீர்மூழ்கத் தெரிந்த தொல்லியல் வல்லுநர்கள், கடலில் உள்ள இடர்ப்பாடுகள், குறைந்த நிதி வசதி மற்றும் ஊக்கமின்மை ஆகியவற்றைக் காரணங்களாகக் கொள்ளலாம். இருப்பினும், இந்தியாவைப் பொறுத்தவரை தமிழகம் சங்ககாலத்திற்கு முன்பிருந்தே பிறநாடுகளுடன் தொடர்பு கொண்டு விளங்குவதால் தமிழகக் கடற்பகுதியில் வரலாற்றுச் சான்றுகள் அதிகம் கிடைக்கின்றன. எனவேதான் இந்தியாவின் கடலகழாய்வு நிறுவனங்கள் தமிழகப் பகுதியில் ஆய்வுகள் மேற்கொண்டு வருகின்றன. வல்லுநர்களுக்குப் பயிற்சியளித்து, நிதிவசதியைக் கூட்டினால் இவ்வாய்வுகளை மேலும் உலகம் உற்றுநோக்கும் அளவிற்கு விரிவாக்கம் செய்ய இயலும். ❖




தமிழகக் கடலகழாய்வு நிகழ்ந்த இடங்கள்

# தமிழகக் கல்வெட்டுகளிலும் செப்பேடுகளிலும் கிடைக்கும் புதிய வரலாற்றுச் செய்திகள்

புலவர் செ. இராசு



ஆய்வாளர்களால் புதிய கல்வெட்டுகளும், செப்பேடுகளும் கண்டுபிடிக்கப்படும்போது புதிய வரலாற்றுச் செய்திகள் கிடைப்பதும், பழைய செய்திகள் விளக்கம் பெறுவதும் இயல்பேயாகும். அவற்றுள் சில செய்திகளைக் காணலாம்.

**தஞ்சைப் பெருவுடையார் கோயில்**

பெருமன்னன் இராசராசன் (கி.பி. 985 – 1014) தஞ்சைப் பெருவுடையார் கோயிலைக் கி.பி. 1004இல் கட்டத் தொடங்கி 7 ஆண்டுகளில் பணியை முடித்து 22–04–1010 அன்று குடமுழுக்கு விழாவை நடத்தினான்.

இராசராசன் புதிய இடத்தில் கோயில் கட்டினானா ? அல்லது பழைய கோயில் இருந்த இடத்தில் கோயிலைப் பெரிதாகக் கட்டினானா ? என்பது குறித்து அறிஞர்களிடையே கருத்து வேறுபாடுகள் உள்ளன. செங்கல் சுவரில் பதித்தது போன்ற அமைப்புடைய நான்கு கல்வெட்டுத் துண்டுகள் அண்மையில் பெருவுடையார் கோயில் பராமரிப்பின்போது கிடைத்துள்ளன. அக்கல்வெட்டுகள் நான்கும் இராசராசன் காலத்துக்கு முற்பட்டவை.

அ) 1) (பா)ண்டியன் தலைகொண்ட கோப்பரகேச(ரி)....

2) (நாய)னார்ச்சீ தளிக்குள தேவர்க்கு பொன்னமரைய(ர்)...

3) (கோ) விராசகேசரி பன்மற்கு யாண்டு 11 வது....

4) (நா) கராசன் திருவடிகள் கையில....

ஆ) 1) (எரி)ப்பதாக நொந்தா விளக்கு ஒ(ன்று)

2) வைத்த எண்ணை உழக்கும் எரிப்....

3) தளி திருக்கோயிலுடையார் சந்

4) (ப)ன் மாகேஸ்வரர் ரக்ஷை

என்பன இரு கல்வெட்டுத் துண்டுகள். மற்ற இரு கல்வெட்டுகளில் 'தஞ்சாவூர் தளிக்குளமுடைய மகாதேவர்'' "தளிக்குளத்து மகாதேவர்" என்ற தொடர்கள் காணப்படுகின்றன. இன்று தஞ்சையில் இப்பெயரில் வேறு எந்தக் கோயிலும் இல்லை.

திருஞானசம்பந்தர், ''குளம் மூன்றும் களம் ஐந்தும் பாடி நான்கும்'' என்று தம் பதிகத்தில் பாடியுள்ளார். சமய ஆய்வாளர்கள் திருப்புகலூர், உடையார்கோயில், தஞ்சை ஆகிய மூன்று இடங்களில் 'குளம்' என்ற பெயரில் சிவாலயங்கள் இருந்தன என்பர். திருநாவுக்கரசர்,

> 'அஞ்சைக் களத்துள்ளார் ஐயாற்று உள்ளார்
> ஆரூரார் பேரூரார் அழுந்தூர் உள்ளார்
> தஞ்சைத் தளிக்குளத்தார் தக்க ளூரார்"

என்று கூறியுள்ளார். சமய குரவர் இருவரும் குறிப்பிடும் தளிக்குளச் சிவாலயமே கல்வெட்டுகளில் குறிக்கப்பட்ட கோயில் என்பதில் எந்த ஐயமும் இல்லை.

1007ஆம் ஆண்டு இராசராசன் மேலைச் சளுக்கிய மன்னன் சத்தியாசிரயனை வென்று இரட்டபாடி ஏழரையிலக்கம் நாட்டிலிருந்து கவர்ந்துவந்த பொற்குவியலைப் பொன்மலராக்கித் தஞ்சை இறைவர் பாதங்களில் அபிடேகம் செய்து வணங்கினான் என்று கல்வெட்டுக் கூறுகிறது. சிலர் "1010இல் பெருவுடையார் கோயில் குடமுழுக்கு நடைபெற்றது. வழிபாடு முன்னரே தொடங்கிவிட்டது" என்று கூறுவது பொருத்தமாக இல்லை.

கல்வெட்டுக் கற்கள் சுவரில் பதித்த அமைப்பிலிருந்து தளிக்குளத்தார் கோயில் செங்கல் தளியாக இருந்தது என்பதை அறிகின்றோம். இராசராசன் 'பாண்டி குலாசனி வளநாட்டுத் தஞ்சாவூர்க் கூற்றத்துத் தஞ்சாவூர் நாம் எடுப்பிச்ச திருக் கற்றளி'' என்று தன் கல்வெட்டில் பெருவுடையார் கோயிலைப் பற்றிக் குறிப்பிடுகின்றான்.

முன்பு இருந்த தளிக்குளத்தார் கோயில் 'செங்கல்தளி''. இராசராசன் கட்டியது 'கற்றளி''. பெருவுடையார் கோயில் கல்வெட்டுகளில் 'தஞ்சைஅழகர்'' 'தஞ்சை விடங்கர்'' என்ற பெயர்கள் வருவதும், தஞ்சை வெண்ணாற்றங்கரை வடபுறம்

இலட்சுமிராசபுரம் அக்கிரகாரம் அருகே 'தளிகேசுவரர்'' கோயில் என ஒரு கோயில் இருப்பதும் 'தளிக் குளத்தார்'' தொடர்பானவைகளா ? என்பது ஆய்வுக்குரியது.

### கொங்கு வஞ்சிகள்

சங்க காலச் சேரர் தலைநகர் மேலைக் கடற்கரை வஞ்சியா அல்லது கொங்கு நாட்டுக் கருவூர் வஞ்சியா என்பது பற்றிய விவாதம் கடந்த நூறாண்டுகளாக அறிஞரிடையே நடந்துவருகிறது. சேரர்கள் கொங்கு நாட்டில் நான்கு வஞ்சி நகர்களை ஏற்படுத்தினர் என்று ஒரு தனிப்பாடல் கூறுகிறது.

**'மாந்தரார்க்கும் மற்றுவரு மன்னவர்க்கும் கொங்குவஞ்சி**
**ஏந்துபுகழ் சேர்தலைமை ஏந்துபதி – சார்ந்திலகு**
**சேலமொடு தாரா புரியும் திகழ்கருவூர்**
**மூலனூர் ஆக மொழி"**

என்பது அப்பாடலாகும்.

அண்மையில் கிடைத்த அனுப்பப்பட்டிச் செப்பேட்டில் ஒரு வெண்பா பொறிக்கப்பட்டுள்ளது. அப் பாடல்,

**"கொங்கு மலைநாடும் குளிர்ந்தநதி பன்னிரண்டும்**
**சங்கரனார் தெய்வத் தலம்ஏழும் – பொங்கொளிசேர்**
**வஞ்சிநகர் நாலும் வளமையால் ஆண்டருளும்**
**கஞ்சமலர்க் கையுடையோன் காண்"**

என்பதாகும். உரைநடைப் பகுதியில் 'நாலு வஞ்சியும் சேரப் படைத்த சேரமான்'' என்ற தொடர் வருகிறது.

எனவே சேரர் தலைநகர் மேலைக் கடற்கரை வஞ்சியில் இருந்தது என்றும், சேரர்கள் தங்கள் தலைநகர் வஞ்சியின் பெயரில் தாம் வென்று ஆட்சி செய்த கொங்கு நாட்டில் நான்கு வஞ்சிகளைப் படைத்தனர் என்றும் இச் செப்பேட்டுப் பாடல் மூலம் தெரிகிறது.

தாராபுரம், கரூர், மூலனூர் ஆகிய மூன்று ஊர்களில் இன்றும் வஞ்சியம்மன் கோயில்கள் இருப்பது சிறப்புக்குரியதாகும். இவை சேரர் வஞ்சி பற்றிய புதிய செய்தியாகும்.

### கொங்கில் சேரர் மெய்க்கீர்த்தி

கொங்கு நாட்டை ஆட்சிபுரிந்த சேரர்கட்கு ஒரு மெய்க்கீர்த்தியே இருந்துள்ளது. நீலம்பூர்ச் செப்பேட்டில் அந்த மெய்க்கீர்த்தி பொறிக்கப்பட்டுள்ளது. அம் மெய்க்கீர்த்தி

**"அக்கினி கோத்திரன் அம்பு விக் குடையான்**
**பனைவித்தார் மார்பன் பவள மாலிகையான்**
**அன்னக் கொடியான் ஆறுநன் மலையான்**
**செம்பொன் கிரியான் சீரங்கித் தேவேந்திரன்**
**மணிமுடி மவுலி விளங்கிய ராசேந்திரன்**
**கொல்லி மலையான் கோட்டைநற் கரையான்**
**வஞ்சிநற் பதியான் வளர்காவிரி வல்லவன்**
**ஆவிநன் பதியான் ஆன்பொருநை யாறன்**
**விருதூர் வஞ்சியில் விளங்கிய கோமான்**
**வெள்ளிநற் பொருப்பு விளங்கிய தேவேந்திரன்**
**தலைமலை சூழ்ந்த களப்படை வீரன்**
**குளித்தலை அளவும் கொங்கன் ஆனோன்"**

என்பதாகும். சேரரின் கொங்கு நாட்டுத் தொடர்புகளை ஆய்வு செய்ய அண்மையில் கிடைத்த இச்சேரருடைய மெய்க்கீர்த்தி மிகவும் பயன்படும்.

### கங்கர் பற்றிய செய்திகள்

சங்க காலத்திற்குப் பின் கொங்கு நாட்டை இரட்டர் ஆண்டனர். இரட்டருக்குப் பின் கொங்கில் அதிகாரம் செலுத்தியவர்கள் கங்கர்கள் ஆவர். கி.பி.189இல் ஆட்சிப் பொறுப்பேற்ற முதல் கங்க மன்னன் கொங்குணிவர்ம மகாதிராயர் முதற் கொண்டு இருபது கங்க அரசர்கள் கொங்கு நாட்டை ஆட்சி புரிந்தனர். இச்செய்தி 'கொங்கு தேச ராசாக்கள்'' என்ற பண்டைய வரலாற்று நூலில் கூறப்பட்டுள்ளதேயன்றிக் கங்கர் ஆவணம் எதுவும் கொங்கு நாட்டில் இதுவரை கிடைக்காமல் இருந்தது.

அண்மையில் கொங்கு நாட்டுப் பகுதியில் கங்கர் ஆட்சி பற்றிய செப்பேடுகளும், கல்வெட்டுகளும் கிடைத்துள்ளன.

சேலம் மாவட்டம் ஆத்தூர் வட்டம் செந்தாரப்பட்டி என்னும் ஊரில் கிடைத்த ஒரு கல்லில் 'கங்கரைசரு சேவகன் சாகாட நக்கன்'' என்ற எழுத்துப் பொறிக்கப் பட்டுள்ளது.

கங்க மன்னன் இரண்டாம் மாதவ மகாதிராயன் காலச் (கி.பி.436 – 458) செப்பேடு ஒன்று அண்மையில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. கோவையை அடுத்துள்ள இன்றைய பேரூர் அன்று "கங்கபேரூர்'' என்று அழைக்கப்பட்டுள்ளது. கங்க மன்னன் பாஞ்சடிக சேத்திரம் என்ற இடத்தில் உள்ள 4 கண்டகம் விதை விதைக்கக் கூடிய நன்செய் நிலத்தைக் **கங்கப்பேரூர் சமணப் பள்ளிக்குக் கொடையாக வழங்கினான்.** ரக்கத் தடாக ஏரி நீர் அந்நிலத்திற்குப் பாய்கிறது. அரசன் மனைவி நந்தவ்வை 500 கர்ஷபணம் கொடுத்து தோட்டம் ஒன்றை வாங்கிச் சமணப் பள்ளிக்கு அளித்துள்ளாள்.

கோவை மாவட்டக் காரமடையிலும் கொங்கு நாட்டில் கங்கர் ஆட்சி முறையைக் கூறும் முதல் மாதவர்ம மகாதிராயன் செப்பேடு கிடைத்துள்ளது. இவை "கொங்கு தேச ராசாக்கள்'' செய்திகளை உறுதிப் படுத்தும் புதிய ஆவணங்களாகும்.

**மராட்டிய மன்னர்கள் கூட்டாட்சி**

தஞ்சை மராட்டியர் மரபில் முதல் மன்னன் ஏக்கோசி (1676 – 1684). ஏக்கோசிக்கு மூன்று மக்கள். சகசி (1684–1711), முதல் சரபோசி (1711–1729), துக்கோசி (1729–1739) ஆகியோர் ஆவர். சில காலம் மூன்று மக்களும் கூட்டாக ஆட்சி நடத்தினர் என்று மராட்டிய வரலாற்றில் கூறப்படுகிறது. ஆனால், சான்றுகள் எவையும் அளிக்கப் பெறவில்லை.

6.2.1695இல் கொடை கொடுக்கப்பட்ட சகசியின் திருவாரூர்ச் செப்பேட்டில் மூன்று சகோதரர்களும் அரசுத் திருக்கோலத்தில் வரிசையாக நிற்பதுவரை கோட்டு ஓவியமாகத் தீட்டப்பட்டுள்ளது. வரலாற்று ஆசிரியர்கள் கூறுவதை உறுதிப்படுத்துகிறது. வயது வேறுபாட்டுடன் உருவங்கள் உள்ளன.

**வரலாற்றில் புதிய அரசர்கள்**

அண்மைக் காலத்தில் கிடைத்த கல்வெட்டுகள், செப்பேடுகள் மூலம் தமிழகத்தில் புதிய அரச மரபும், புதிய பல அரசர்களும் அறியப்பட்டுள்ளனர்.

**சேலம் நாயக்கர்**

விசயநகர மன்னர் ஆட்சிக் காலத்தில் மதுரை, தஞ்சாவூர், செஞ்சி ஆகிய இடங்களில் நாயக்க அரச மரபுகள் ஏற்படுத்தப்பட்டதைப் போலவே சேலத்திலும் நாயக்கர் மரபு ஒன்று ஆட்சியில் அமர்த்தப்பட்டது.

"மதிரை தஞ்சாவூர் செஞ்சி சேலம் நாலாம் வீடு" என்று சில ஆவணங்களில் குறிக்கப்பட்டுள்ளன. உத்தண்டப்ப நாயக்கர் முதல் அரசராக மின்னக்கல் கல்வெட்டில் (கி.பி.1563) குறிக்கப் பெறுகிறார். அவர் மகன் சின்னம நாயக்கரும் அவர் மக்கள் மூவரும் சேலத்தைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்தனர்.

பேளூர், செக்கடிப்பட்டி, மின்னக்கல், வெண்ணந்தூர், சீலநாயக்கன்பட்டி போன்ற பல இடங்களில் சேலம் சின்னம நாயக்கர் கல்வெட்டுகள் உள்ளன. அனந்தகிரி, வெளியூர் போன்ற இடங்களில் கோட்டைகள் கட்டியதாகக் கல்வெட்டு உண்டு. சேலத்தில் அவர்கள் கோட்டை இருந்தது. 'சின்னமசமுத்திரம்' 'இராம சமுத்திரம்' போன்ற பல ஏரிகள் அமைத்தனர். சேலம் நாயக்கர் வரலாறு தமிழக வரலாற்றில் இடம் பெற வேண்டும்".

**கொல்லிமலை ஆவணங்களில் இரு அரசர்கள்**

அண்மையில் ஆய்வாளர் வெ.இரா.துரைசாமி கண்டுபிடித்த கொல்லிமலைச் செப்பேட்டில் 'பொன் மாடத்தாண்ட மணிமுடி மகாராசா' என்பவரும், கொல்லிமலை அறப்பளீசுவரர் கோயில் கல்வெட்டில் 'பொன்நேரிபன்பர்' என்ற அரசரும் ஆட்சி புரிந்ததாக ஆட்சியாண்டுடன் குறிக்கப்பட்டுள்ளனர்.

சேரர் தலைநகர் வஞ்சியில் சேரர் அரண்மனை 'ஆடகமாடம்', 'தமனிய மாளிகை', 'கனக மாளிகை' எனப் பல இடங்களில் இலக்கியங்களில் சுட்டிக் கூறப்பட்டுள்ளது. சேரர் 'நார்முடி' 'மணிமுடியும்' புகழப்பட்டுள்ளன. எனவே கொல்லிமலைச் செப்பேட்டில் குறிக்கப்பட்ட பொன்மாடத்தாண்ட மணிமுடி மகாராசர் சேரருடைய ஆட்சியாளராக இருக்கலாம். இடைக் காலத்திலும் கொல்லி சேரருக்குரிய மலையாகக் கூறப்பட்டுள்ளது.

நேரிமலை சேரருக்கு உரிய மலை. 'நீரிமிழ் வெற்பின் நேரியோன்' என்று களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலும், 'கல்லுயர் நேரிப் பொருநன்' என்று செல்வக் கடுங்கோ வாழியாதனும் புகழப்படுகின்றனர். பல பெயர்கட்குப் பொன் என்பதை அடைமொழியாகக் கூறுவது தமிழ் மரபு. எனவே கொல்லிமலைக் கல்வெட்டு குறிக்கும் 'பொன்நேரிபன்மரும்' சேர மரபினராக இருக்கலாம்".

**தஞ்சை நாயக்க மரபில் ஓர் அரசர்**

தஞ்சை நாயக்கர் மரபில் இரகுநாத நாயக்கருக்குப் பின் (1614 –1640), விசயராகவ நாயக்கர் (1640–1674) அரசு புரிந்ததாகத் தஞ்சை நாயக்கர் வரலாறு கூறுகிறது. இரகுநாத நாயக்கர் மீது பாடப்பட்ட தெலுங்கு இலக்கியம் 'இரகுநாத நாயக்காப்யுதயமு" மூத்தவர் இராமபத்ர நாயக்கரையும் இளையவர் விசயராகவ நாயக்கரையும் இளவரசர்களாகக் கூறுகிறது.

பிரதாபசிங் என்ற மராட்டிய மன்னன் (1663–1739) செப்பேடொன்று விசயராகவ நாயக்கருக்கு முன்பு இராமபத்திர நாயக்கர் அரசு புரிந்ததாகக் கூறுகிறது. தஞ்சை சுப்பிரமணியர் கோயில் செப்பேடும் இராமபத்திர நாயக்கரைக் குறிக்கிறது. இது தஞ்சை நாயக்கர் வரலாற்றில் புதிய செய்தியாகும்".

சென்னை அருங்காட்சியகச் செப்பேடு ஒன்றில் தஞ்சை நாயக்க மன்னர் விசயராகவ நாயக்கர் (1640–1674) ஆட்சி புரியும்போது சோழமண்டலத்தில் வெங்கிடபதி நாயக்கர், குருமூர்த்தி நாயக்கர், இராச கோபால நாயக்கர் ஆகியோர் சுயேச்சைப் பாளையக்காரர்களாக ஆட்சி புரிந்தனர் என்று கூறப் பட்டுள்ளது. இதுவும் சோழ மண்டல வரலாற்றில் புதிய செய்தியாகும்.

கண்டுபிடிக்கப்படும் புதிய செய்திகள் எதிர்கால வரலாறு எழுதும்போது உரிய இடங்களில் சேர்க்கப்பெற வேண்டும்.

❖

# அயல் நாடுகளில் தமிழ்க் கல்வெட்டுகள்

முனைவர் சோ. கோவிந்தராசு



தமிழ்நாட்டில் கல்மேல் பொறிக்கப்பட்ட எழுத்துகள் ஏறக்குறைய கிறித்துவுக்கு ஐந்து நூற்றாண்டுக்கு முன்பு தொடங்கி அண்மைக் காலம் வரை காணப்படுகின்றன. ஆறாம் நூற்றாண்டு வரை கல்வெட்டுகள் எண்ணிக்கையில் குறைவாகவே உள்ளன. மேலும் அவை ஓரிரு வரிகள் கொண்டவையாகவே பெரும்பாலும் காணப்படுகின்றன. கி.பி. 550க்குப் பின் தமிழகத்தின் வடக்கில் பல்லவ அரசும், தெற்கில் பாண்டியர் அரசும் வளர்ந்த நிலையில், கல்வெட்டுகளும் செப்பேடுகளும் எண்ணிக்கையிலும் வகையிலும் வளர்ந்தன. பல்லவ பாண்டியர் மறைவுக்குப் பிறகு ஆட்சிக் கட்டில் ஏறிய சோழர் காலத்தில் அஃதாவது 9 – 13 ஆம் நூற்றாண்டுகளில் கல்வெட்டுகளின் எண்ணிக்கை உலகில் வேறு எங்கும், எப்பொழுதும் கண்டிராத அளவுக்கு உயர்ந்தது. 13 ஆம் நூற்றாண்டுக்குப் பின் அவற்றின் எண்ணிக்கை படிப்படியாகக் குறைந்தது. விசய நகர மன்னர்களின் ஆட்சிக் காலத்தில் கல்வெட்டுகளைப் போன்று செப்பேடுகளும் ஏராளமாக வெளியாயின. நாயக்கர், மராட்டியர், சேதுபதி மற்றும் பிற குறுநில அரசர்களும் தமிழ்க் கல்வெட்டுகள் பொறிப்பதில் வல்லவராய் இருந்தனர்.

இவ்வாறு தமிழில் எழுதப்பட்ட கல்வெட்டுகள் தமிழகம் மட்டுமின்றிப் பிற நாடுகளிலும் காணப்படுகின்றன. சீனா, இலங்கை, பர்மா, தாய்லாந்து இன்னும் பிற நாடுகளிலும் காணப்படும் தமிழ்க் கல்வெட்டுகள், தமிழ் மொழி, தமிழ்ப் பண்பாடு பிற நாடுகளில் பரவியதோடு மட்டுமின்றி அவற்றின் தாக்கத்தையும் எடுத்து இயம்புகின்றன என்றால் மிகையாகாது.

தென்கிழக்கு ஆசியாவிலும் சீனாவிலும் காணப்படும் கல்வெட்டுச் சான்றுகள் இந்தியாவுடன் அவர்களுக்கு இருந்த வாணிகத் தொடர்பை உறுதிப்படுத்துகின்றன. அங்குக் காணப்படுபவற்றில் அதிக விழுக்காட்டில் எழுதப்பட்டவை சமற்கிருத மொழியில்தான் என்றாலும் ஏழு கல்வெட்டுகள் தமிழ் மொழியிலேயே உள்ளன. இவற்றைக் கால வரிசைப்படுத்திப் பார்த்தால் வாட் காங்க் தாம் என்னும் கோயில் அருங்காட்சியகத்தில் கண்டது காலத்தால் முந்தையது. தெற்குத் தாய்லாந்தில் இருக்கும் கிராபி மாநிலத்தில் அமைந்துள்ள அருங்காட்சியகத்தில் வைக்கப்பட்டிருக்கும் இந்தக் கல்லில் எட்டுத் தமிழ்ப் பிராமி எழுத்துகள் உள்ளன. அது பெரும்பட்டன் கல் என்றுள்ளது. அதன் பொருள், இது பெரும் பட்டனின் கல் (அஃதாவது பெரிய பொற்கொல்லனின் கல்) என்பதாகும். இதுதான் காலத்தால் முதலாவதாகக் கருதப்படும் கல். கண்டுபிடிக்கப்பட்ட கல்லின் காலம் கி.பி. இரண்டாவது அல்லது மூன்றாவது நூற்றாண்டாக இருக்கலாம் என்று கருதப்படுகிறது. இந்தக் கல்லானது 7.5 செ.மீ. நீளமும் 3.7 செ.மீ. அகலமும் 3 செ.மீ. பருமனும் உள்ள பச்சை வண்ணக் கல். இது கண்டுபிடிக்கப்பட்ட இடம் மணிக்குன்று என்று வழங்கப்படுகிறது. இதிலிருந்து தமிழகத்திலிருந்து பொற்கொல்லர் ஒருவர் தாய்லாந்துக்குக் குடிபெயர்ந்ததை அறிகிறோம்.

அடுத்த தமிழ்க் கல்வெட்டுச் சான்று ஒன்பதாவது நூற்றாண்டைச் சார்ந்ததாகும். இது டாக்கு வா பா என்ற இடத்தில் கண்டுபிடிக்கப்பட்டது. இந்த இடம்தான் தாலமியால் தக்கோலா என்று குறிப்பிடப்பட்ட இடமாய் இருக்கலாம் என வரலாற்று வல்லுநர்களால் கருதப்படுகிறது. கல்வெட்டின் அடிப்படையில் இவ்விடத்தில் அவனி நாரணம் எனும் ஓர் ஏரி கட்டப்பட்டது என்றும் அதை மணிக்கிராமத்தார் மற்றும் சேனா முகத்தார் போன்றோர் காத்து வந்ததாக அறிகிறோம். வங்கக் கடல் கடந்து வெகு தூரத்துக் கரையில் நிரந்தரம் பெற்ற ஒரு குழு அமைத்து அதன் சக்தியைக் காட்டுவது போல விஷ்ணு கோயிலையும் கட்டினார்கள் எனில் அந்த ஒரு செயலிலிருந்தே அவர்களது திறமை நன்கு புலப்படும். இக்கல்வெட்டு பல்லவ அரசன் மூன்றாம் நந்திவர்மன் (கி.பி. 846 – 869)

காலத்தைச் சார்ந்ததாகும் எனப் பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரி குறிப்பிடுவதை அடிப்படையாக வைத்து உற்று நோக்கும்போது பல்லவர்களுக்கும் கிழக்கு ஆசிய நாடுகளுக்கும் இடையே நிலவிய வாணிகத் தொடர்பு மட்டுமன்றி அதனால் ஏற்பட்ட தாக்கத்தையும் உணர முடிகிறது.

இதையடுத்த தமிழ்ச் சான்று, பாருஸ் (வடமேற்கு சுமத்ரா) என்ற இடத்திலிருந்து கிடைக்கப் பெற்றதாகும். இது பதினொன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்தது. ஜாகர்த்தா தேசிய அருங்காட்சியகத்தில் வைத்துப் பாதுகாக்கப்படும் இக்கல்வெட்டு உடைந்த நிலையில், மூன்று பகுதிகளில் 26 வரிகளை உள்ளடக்கியதாகும். தமிழில் எழுதப்பட்ட இக்கல்வெட்டில் சமற்கிருதச் சொற்களும் காணப் படுகின்றன. சுமத்ராவில் நிலை நிறுத்தப்பெற்ற தமிழ்க் குடியேற்றங்களைப் பற்றி விவரிப்பதோடு, வணிகக் குழுக்கள் பற்றியும் இக்கல்வெட்டுக் கூறுகிறது.

கி.பி. 1992 மற்றும் 1994 ஆகிய ஆண்டுகளில் அதுவரை குறிக்கப்பெற்ற இரண்டு தமிழ்க் கல்வெட்டுகள் தற்போது தெரியவந்துள்ளன. அவற்றுள் ஒன்று தாய்லாந்தில், வாட் போரோமாதட் எனும் பௌத்தக் கோயிலில் உள்ளது. இத்தமிழ்க் கல்வெட்டு கி.பி. 1183 அல்லது கி.பி. 1283 சார்ந்ததாக இருக்கலாம் எனக் கருதப்படுகிறது. கல்வெட்டு அதிகம் சிதிலம் அடைந்துள்ளதால் முழுவதும் படிக்க இயலவில்லை. அது தன்ம சேனாபதி என்ற வணிகன் பிராமணர்களுக்குச் சில பங்குகள் அளித்ததாகக் கூறுகிறது.

மற்றுமொரு கல்வெட்டு ஜாகார்த்தாவில் உள்ள தேசிய அருங்காட்சியகத்தில் வைக்கப்பட்டுள்ள ஒரு கல்லில் நடனக் கலைஞரின் உருவம் போல் எழுதப்பட்டுள்ளது; 130 செ.மீ. உயரமுள்ள இதன் தலைப்பாகம் விநாயகர் போல் அமைந்துள்ளது. தமிழிலும் பண்டை ஜாவா மொழியிலும் எழுதப்பட்டுள்ள இக்கல்வெட்டு ஒரே பொருளைத்தான் குறிப்பிடுகின்றது; சேனாபதி ராகன் தீபன்கரா என்பவர் பெரிது ஸ்ரீமகராஜா என்பவருக்கு ஏற்படுத்திய அறக்கட்டளையைக் குறிப்பிடுகிறது. தீபன்கரா ஒரு தமிழராக இருக்கலாம் எனக் கரோஷிமா கருதுகிறார். கல்வெட்டில் கூறப்பட்டுள்ள பஞ்சாங்கக் கால நிர்ணயப்படி அது கி.பி. 1187, 1258, 1265 ஆகிய ஆண்டுகளுள் ஒன்றாய் இருக்கலாம் எனக் கருதப்படுகிறது.

பர்மா மற்றும் தமிழகம் இடையே நிலவிய உறவு பற்றி அறிவதற்கான சான்றுகள் பல கிடைத்துள்ளன. அதில் முக்கியமானது மியான்மரில் உள்ள கல்வெட்டுச் சாசனமாகும். முதல் பகுதி சமற்கிருதத்திலும் மற்றப் பகுதி தமிழிலும் செதுக்கப்பட்டுள்ளன. முதல் பகுதி ஒரு நன்னடத்தை வைணவ மந்திரம். அடுத்ததாக உள்ள தமிழ்ப் பகுதி, கோயிலில் ஒரு மண்டபம் கட்டப்பட்டதை அறிவிக்கிறது. அதற்கு ஒரு கதவு வைத்ததையும் விளக்கு ஒன்று அளிக்கப்பட்டதையும் கூறுகிறது. இதை அளித்தவர் மலை மண்டலத்தின் மகோதயர் பட்டினம், குலசேகர நம்பி என்றறியப்பட்ட இராயிரன் சிறியன் என்றும் உள்ளது. அந்தக் கோயிலின் பெயர் நானாதேசி விண்ணகர் (நானாதேசி விஷ்ணு கோயில்) என்பதாகும். நானாதேசி என்பது ஒரு வணிகக் குழு. இதையே ஐந்நூற்றுவர் என்றும் கூறுவர்.

மகோதயர் பட்டணம் என்பது (மலைமண்டல) சேரர்களின் தலைநகரமாகும்.

கீழை நாட்டுக் கல்வெட்டுகளுள் கடைசியானதாய் எண்ணுவது, சீன நாட்டின் குவான்சு, தெற்குத் துறைமுகப் பட்டினத்தில் கண்டுபிடிக்கப்பட்டதாகும். இது 1956இல் கண்டுபிடிக்கப்பட்டது. முதன் முதலில் இதன் பெருமையை உலகிற்கு உணர்த்தியவர் டி.என். சுப்பிரமணியன் என்பவராவார். ஒரு கல்லில் எழுதப்பட்ட அது இரண்டாக உடைந்துவிட்ட காரணத்தால் இரு பகுதிகளாகப் பிரித்துப் படிக்கப்பட்டது.

கி.பி. 1281இல் சம்பந்தப் பெருமாள் என்ற தமிழ்நாட்டவர் (தவச் சக்கரவர்த்தி என்றும் அறியப்பட்டவர்) செக்கா சைக்கான் (குப்ளாகான்) அனுமதியுடன் ஒரு சிவபெருமானின் உருவத்தை அங்குள்ள அரசனின் நன்மைக்காக நிறுவியதாகத் தெரிகிறது. அது ஒரு சிவன் கோயில் கட்டுவதற்காக இருக்கலாம் என்பதை எளிதில் உணரலாம். அக்கோயிலின் பெயர் திருக்காணீச்சுவரம். அந்த நாட்டு அரசனின் பெயரைக் கொண்டதாகவே தெரிகிறது. இன்றைய நாளில் அவ்விடத்தில் பல சான்றுகள் (இந்தக் கோயில் கட்டமைப்புக்கானவை) காணப் படுகின்றன. இங்குக் கிடைக்கப் பெற்ற சைவ சமய உருவங்களும், தூண்களும் அங்குப் பெரிய இந்துக் கோயில் இருந்ததை எடுத்துக் காட்டுகின்றன. மேற்கண்ட சான்றுகளிலிருந்து அவ்விடத்தில் தமிழர்கள் சிறந்த முறையிலும் கணிசமாகவும், பதின்மூன்றாம் நூற்றாண்டு வாக்கில் வாழ்ந்திருக்கிறார்கள் என்று தெரியவருகிறது.

பண்டைய தமிழ்க் கல்வெட்டுகள் சீனா, பர்மா, தாய்லாந்து போன்ற நாடுகள் மட்டுமல்லாது தமிழகத்திற்கு அருகில் உள்ள இலங்கையிலும் கண்டெடுக்கப் பட்டுள்ளன. இலங்கையில் காணும் தமிழ்க் கல்வெட்டுகள் தமிழரின் நாகரிகம், பண்பாடு, கலை மற்றும் கட்டடக் கலை போன்றவை கடல் கடந்து பரவியதோடுமன்றி வாணிகம், சமுதாயம் மற்றும் சமய ஒற்றுமைகளைக் கூடப் பறைசாற்றுகின்றன என்றால் மிகையாகாது.

இலங்கையில் காணும் தமிழ்க் கல்வெட்டுகளில் தலையாயது வட இலங்கையில் மத்தலா மாவட்டத்தில் விகரிகினா என்னுமிடத்தில் கண்டுபிடிக்கப்பட்டதாகும்.

இக்கல்வெட்டு 3 மீட்டர் நீளம், 1 மீட்டர் அகலம், 20 செ.மீ. பருமன் கொண்டதாகும். இங்குள்ள பௌத்த விகாரத்தில் காணப்படும் இக்கல்வெட்டு கால நிலை மாற்றத்தால் சற்றுச் சிதிலம் அடைந்துள்ளது. 1971இல் அ. வேலுப்பிள்ளை என்பவரால் முதலில் கண்டறியப்பட்ட இக்கல்வெட்டு ஒய். சுப்பராயலு மற்றும் என். கரோஷிமா போன்றோரால் பொருள் மெருகூட்டப்பட்டு வெளியிடப் பட்டுள்ளது. இக்கல்வெட்டு பன்னிரண்டாம் நூற்றாண்டின் முதல் பாதியைச் சார்ந்ததாக இருக்கலாம் எனக் கருதுகின்றனர்.

இங்கு நிலைகொண்ட மாசேன காமம் அல்லது தன்ம சக்கர பட்டணம் எனும் வணிகக் குழுவிற்கு ஏரி வீரதானம் எனும் பட்டம் வழங்கவும் வரி வசூல் செய்யவும் பதினெண் பூமிவீரர் என்போருக்கு அனுமதி வழங்கப்பட்டதை எடுத்து இயம்புகிறது.

வரலாற்றுப் புகழ் மிக்க மற்றொரு தமிழ்க் கல்வெட்டு கண்டி மாவட்டத்தில் உள்ள லங்காதிலகக் கோயில் கல்வெட்டாகும். இதனை 42 ஆண்டுகளுக்கு முன்பு முதலில் கண்டுபிடித்து, மொழியாக்கம் செய்து வெளியிட்டவர் எஸ். பரனவிதானா என்பவராவார். தற்போது எஸ். பத்மநாதன் என்பவர் இக்கோயிலுக்கு வணிகக் குழு ஒன்று அறக்கட்டளை ஏற்படுத்தியதைப் புதிய செய்தியாகத் தெரிவித்துள்ளார்.

பதினெண் விஷயம் என்ற வணிகக் குழு ஏற்றுமதி மற்றும் இறக்குமதியாளர்களிடம் இருந்து கால் விழுக்காடு வரியாகப் பெற்று இவ்வறக்கட்டளையை ஏற்படுத்தியது என்பதை அறிகிறோம். சோழர் காலத்து நாகப்பட்டினத்தில் விளங்கிய சூடாமணி விகாரத்தில் இருந்த இராசராசப் பெரும்பள்ளிக்கூடப் பதினெண் விஷயத்தோடு தொடர்புடைய கலைஞர்களின் பெயரினைக் கொண்டது என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

அனுராதபுரம் ஒரு காலத்தில் இலங்கையின் தலைநகராக விளங்கிற்று. 1200 ஆண்டுகள் இலங்கையின் தலைநகராக விளங்கிய இந்நகரம் பிற்காலச் சோழர் படையெடுப்பின்போது சிதிலமடைந்து தனது வரலாற்று முக்கியத்துவத்தை இழந்தது. இங்குக் கண்டுபிடிக்கப்பட்ட வரலாற்றுச் சின்னங்களில் காணப்பட்ட இரு தமிழ்க் கல்வெட்டுகள், தமிழக வணிகர்கள் மற்றும் அவர்களது வாணிகம் பற்றிக் கூறுவதோடு மட்டுமல்லாது செட்டிமார்கள், முப்பது ஈழக் காசுகளைத் தானமாகக் கொடுத்து நந்தா விளக்கு எரிக்க ஏற்பாடு செய்ததைப் புலப்படுத்துகிறது. குமார கானம் எனும் அமைப்பு மேற்கண்ட செயல்களைக் கவனித்தது என்பதும் குறிப்பிடத்தக்க செய்தியாகும்.

அனுராதபுரத்தில் கண்டுபிடிக்கப்பட்ட மற்றொரு தமிழ்க் கல்வெட்டு "நான்கு நாட்டு'' எனும் வணிகர்களைப் பற்றி எடுத்து இயம்புகிறது. இவர்கள் தென்னிந்தியாவைக் குறிப்பாகத் தமிழகத்தைச் சேர்ந்தவர்கள் என்பதற்குச் சான்றுகள் கிடைத்துள்ளன. தமிழ் மற்றும் கிரந்தத்தில் கலந்து எழுதப்பட்ட இக்கல்வெட்டு கி.பி. எட்டு அல்லது ஒன்பதாம் நூற்றாண்டைச் சார்ந்ததாகும். நான்கு நாட்டார், மாக்கோட்டைப் பள்ளிக்குத் தானம் அளித்ததையும் 'பள்ளி'யின் ஊழியர்கள் அத்தானத்தை நிருவாகம் செய்த செயலையும் அறியலாம். மாக்கோட்டைப் பள்ளி, கேரள நாட்டுடன் நெருங்கிய தொடர்புடையது எனலாம். சுந்தரமூர்த்தி நாயனார்கூடத் தமது பாடலில் மாக்கோட்டை என்ற ஊர் திருவஞ்சைக்களத்திற்கு அருகில் உள்ளது எனக் குறிப்பிட்டுள்ளார். பெரிய புராணத்தை அடிப்படையாக வைத்து உற்று நோக்கும்போது மாக்கோட்டை என்பது தற்போதைய கிராங்கனூர் என்பது தெளிவு பெறும். சோழர் படையெடுப்புக்குப் பிறகு 'நான்கு நாடு' தனது செல்வாக்கை இழந்திருக்கலாம் என்பதையும் உணர முடிகிறது.

பூதமுட்டுவா என்னும் கிராமத்தில் கண்டுபிடிக்கப் பட்ட மூன்று தமிழ்க் கல்வெட்டுகள் ஈ. முல்லர் என்பவரால் முதலில் கண்டுபிடிக்கப் பட்டபோதிலும் இதனைத் தெளிவுற உலகிற்கு உணர்த்தியவர் பரனவிதானா என்பவரேயாவார்.

இக்கல்வெட்டுகளுள் ஒன்று, சுந்தமல்லி என்ற சோழர்குல இளவரசி விக்ரம சாளமேக ஈஸ்வரம் எனும் சைவ ஆலயத்திற்குத் தானம் அளித்ததைக் குறிப்பிடுகிறது. இரண்டாவது கல்வெட்டு கம்மாளர் மற்றும் வண்ணார் போன்ற கலைஞர்களுக்கு இடையே ஏற்பட்ட சச்சரவை அரசு அதிகாரிகள் தீர்த்து வைத்ததைக் குறிப்பிடுகிறது.

மூன்றாவது கல்வெட்டு ஐந்நூற்றுவர் மற்றும் அவர்களோடு தொடர்புடைய போர்வீர இனங்களைப் பற்றிக் குறிப்பிடுகிறது. மேலும் இக்கல்வெட்டு விக்ரம சாளமேகபுரம் பெருமக்களுக்கும் வீரகோட்டிகளுக்கும் இடையிலான உறவினையும் எடுத்து இயம்புகிறது.

அயல் நாடுகளில் காணும் தமிழ்க் கல்வெட்டுகளில் இருந்து தமிழர்கள் பண்டைய காலத்திலேயே கடல் கடந்து சென்று வாணிகம் புரிந்தது மட்டுமன்றி, தமது நாட்டை மறக்காமல் கொடைகள் வழங்கி வந்தனர் என்பவற்றையும் அரசியல், பண்பாடு, கலை, சமயம், சமூகம் மற்றும் பொருளாதாரத் துறைகளில் அயல்நாடுகளில் ஏற்பட்ட உறவு, வளர்ச்சி மற்றும் தாக்கம் ஆகியவற்றையும் விவரிப்பதோடு, தமிழ் மொழியின் செம்மையையும் உலகிற்கு உணர்த்துகின்றன என்றால் மிகையாகாது.

# கல்வெட்டில் தமிழ்ச் செம்மொழி ஆட்சி

முனைவர் பெ. அர்த்தநாரீசுவரன்



ஒரு நாட்டின் வரலாற்றிற்கு இன்றியமையாத சான்றுகளை வழங்குவன இலக்கியங்களும் கல்வெட்டுகளும் ஆகும். கல்வெட்டுகள் கோயில்களின் சுவர்கள், பாறைகள் ஆகியவற்றில் பொறிக்கப்பட்டுள்ளன. செப்புத் தகடுகளில் பொறிக்கப்பட்டவை செப்பேடுகள் என்றழைக்கப்பட்டன. தமிழ்நாட்டில் காணப்பெறும் கல்வெட்டுகள் தொன்மையான தமிழி எழுத்திலும், பிராமி எழுத்திலும், பெரிதும் வடமொழிக்குப் பயன்பட்ட கிரந்த எழுத்திலும், நாகரி எழுத்திலும் தற்பொழுது பயன்படுத்தி வரும் தமிழ் எழுத்துகளிலும் அமைந்துள்ளன. கல்வெட்டுகள் தமிழரின் பண்பாடு, கொடை, வீரம், அரசாட்சி, நீதி முதலியவற்றைத் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றன. தமிழ்நாட்டில் சோழர் காலத்தில்தான் ஆயிரக் கணக்கான கல்வெட்டுகள் கோயிற்சுவர்களில் பொறிக்கப்பட்டன.

### கல்வெட்டின் அமைப்பு

கல்வெட்டுகளில் காணப்பெறும் செய்திகளைப் பெரும்பாலும் ஐந்து பகுதிகளாகப் பிரித்துவிடலாம்.

1. கல்வெட்டின் தொடக்கம் அல்லது மங்கல வாசகம்
2. கல்வெட்டு எழுதப்பட்ட காலம்
3. கல்வெட்டுச் செய்தி
4. கையெழுத்துகள்
5. முடிவு அல்லது ஓம்படைக் கிளவி

### கோயில் நிருவாகத்தில் தமிழ்ச் செம்மொழி ஆட்சி

சோழராட்சியின் நிருவாக முறைகளைக் கோயில் நிருவாகம், ஊரவை நிருவாகம், அரசு நிருவாகம் என மூன்றாகப் பகுக்கலாம். கோயிலை வழிபாட்டிற்குரிய தலமாக மட்டும் கருதாமல் ஊரவை நிருவாகத்தின் செயலகமாகவும் கருதினர். கோயிலுள் இருக்கும் மண்டபத்தைத் 'திருவோலக்கம்' என்ற சொல்லால் குறித்துள்ளனர். அரண்மனையில் உள்ள இராச சபையை 'உள்ளாலை' என்று குறிப்பிட்டனர். கோயில் சபையை 'மன்று' என்றும், 'அம்பலம்' என்றும் குறித்துள்ளதைக் காண முடிகின்றது. கோயிலில் இருந்த மருத்துவமனை 'ஆதுலர் சாலை' என அழைக்கப்பெற்றுள்ளது. கோயில் மூலவர் திருமேனி முன் நடனம் ஆடுபவர்களையும், பாடுபவர்களையும் 'பதியிலார்' என்னும் சொல்லால் குறிப்பிட்டுள்ளனர். பூசை வழியாகப் படைக்கப்படும் நைவேத்தியங்கள் 'அமுதுபடி' என்னும் சொல்லால் குறிக்கப்பட்டன. உணவை 'அடிசில்' என்ற சொல்லால் வழங்கியுள்ளனர்.

### நிலம், நீர்ப்பாசனங் குறித்த தமிழ்ச் செம்மொழி ஆட்சி

சோழர் காலத்தார் நிலங்களை அளந்தும் நீர்ப்பாசனத் தன்மைக்கேற்றபடி அவற்றைப் பிரித்தும் வகைப்படுத்தினர். நிலத்தின் தன்மைக்கேற்ப அதனைப் பல வகையாகக் குறித்தனர். ஊர் நத்தம், களர்பாழ், ஆறிடுபடுகை போன்ற சொற்கள் காணப்படுகின்றன. விளைச்சலுக்குப் பயன்படாத நிலத்தை ஆமை தவழிடம், தோட்டப்பாழ், நெடுங்களர், நத்தப்பாழ், ஊர்க்கரம்பை முதலிய சொற்களால் குறித்தனர். விளைச்சல் நிலங்களை மருதஞ்செறுவு, பூ போன்ற பெயர்களில் வழங்கினர்.

ஆறுகளில் தண்ணீர் தேக்கிய மதகுகளின் வழியாக விளைச்சலுக்குத் தகுந்த முறையையும் சோழர் கல்வெட்டில் காணமுடிகின்றது. தலை மதகினைக் கூற்றன்வாய் என்ற சொல் குறிக்கின்றது. நீரோடுகால், தோட்டக்கால் போன்ற தமிழ்ச் சொற்கள் வாய்க்காலைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டவையாகும். நீர்கொள்ளி, நீர்நிலை என்பன ஏரியை உணர்த்தும் சொற்களாகும்.

### வரிப்பெயர்களில் தமிழ்ச் செம்மொழி ஆட்சி

அரசுக்குச் செலுத்த வேண்டிய கட்டாய வரிகள் கடமை, பாட்டம் போன்ற சொற்களால் வழங்கப் பெற்றன. உல்கு, குடிமை, இறை என்பன சுங்கம் வழியாகச் செலுத்திய வரிகளாகும். புரவு, காணி முதலியன நிலத்தின் வரியாகச் செலுத்திய வரிகள். வரி பற்றிய கணக்குகள் எழுதி வைத்திருந்த புத்தகத்தை ஊர்ச் சபையார் தண்டாளர் முதல் என்ற தமிழ்ச் சொல்லால் குறித்தனர். வரித்துறை அலுவலர்கள் பாட்டமாளன் வரியிலீடு போன்ற சொற்களில் குறிக்கப் பெற்றனர். உழவர்கள் விளைவில் ஒரு பகுதியை வரியாகச் செலுத்தியதை உழுதான்குடி என்னும் சொல் குறிக்கின்றது.

ஆடை நெய்வோரிடமிருந்து வாங்கப்பட்ட பணம் தறிப்பொன், தறிக்கடமை போன்ற சொல் வடிவங்களைப் பெறுகின்றன. வண்ணாரிடமிருந்து ஈரங்கொல்லி என்னும் வரி பெறப்பட்டது. ஆற்றின் கரைகளை, உடையாமற் பாதுகாக்கக் குடிமக்களிடமிருந்து 'செந்நீர் வெட்டி' என்னும் வரி பெறப்பட்டதாக லால்குடி கல்வெட்டு குறிப்பிடுகின்றது.

பாக்குமர விளைவிலிருந்து வாங்கப் பெற்ற வரி கமுகுக் கடமை ஆகும். கோயிலைச் சூழ்ந்துள்ள பூஞ்சோலையில் பயன் தரும் மரங்களையும்,

மலர்களையும் பராமரிப்பதற்காக இறுக்கப்பட்ட வரி நந்தவனக் கடமை எனக் குறிக்கப்படுகிறது. குவளை மலர்களைப் பயிரிடக் கொடுத்த வரி குவளைக் காணம்[31] ஆகும். இலைக் கூலம் என்பது வெற்றிலை பயிரிடுவோர் செலுத்திய வரியாகும். வாங்கப்படும் வரிப்பணம் நேரடியாகக் கையில் அளிக்கப்பட்டது இறைகரத்தூட்டு என்னும் சொல்லால் குறிக்கப்பட்டுள்ளது. ஊரவை விதிக்கும் வரிமுறை ஊடுவரிப்பாடு என்ற சொல்லால் வழங்கப்பட்டுள்ளது.

**பதவிப் பெயர்களில் தமிழ்ச் செம்மொழி ஆட்சி**

சோழ மன்னர்களுக்கு அணுக்கத் தொண்டாற்றிய ஆடவரும் மகளிரும் அணுக்கமார், அணுக்கியர் என வழங்கப்பட்டனர். பெருந்தர அதிகாரிகள், சிறுதர அலுவலர்கள் என்று பணியாளர்கள் பாகுபாடு செய்து குறிக்கப்பட்டுள்ளனர். பெருந்தர அதிகாரிகளின் ஆணைக்குப் பணிபவர்கள் கல்வெட்டில் பணிமகன் என்னுஞ் சொல்லால் குறிக்கப்பட்டுள்ளனர். இவர்கள் தாங்கள் செய்த பணிகளுக்குக் கூலியாக நிலக்கொடைகளைப் பெற்றனர்.

பெருந்தர அலுவலர்களுக்குரிய பதவிப் பெயர்களும் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளன. அமைச்சர்களுக்கு ஒத்த அதிகாரம் உடையவர்களைக் குறிக்க உடன் கூட்டம் என்ற சொல் பயன்படுத்தப் பட்டுள்ளது. உடையார் என்னும் பெயர் பொதுப்படையாய் மரியாதைக் குரியவர்களான அரசர், உயரதிகாரிகள், இறைவன் ஆகியோரைக் குறிக்கப் பயன்படுத்தப் பட்டுள்ளது. அரசனது ஆணைகளைக் கேட்டறிந்து கூறுபவன் ‘திருவாய்க்கேள்வி’ என்று அழைக்கப் பட்டான். அரசனது ஆணைகளை ஓலையில் எழுதி உரியவருக்குச் சான்று மூலமாகத் தருகின்றவன் ‘ஓலைநாயகம்’ என்று குறிக்கப்பட்டான். ஓலைநாயகம் கூறுவனவற்றை நிறைவேற்றும் அதிகாரி ஆணத்தி என்பவனாவான். அரசரை அருகிருந்து பாதுகாக்கும் அதிகாரி மெய்க்காப்பாளன் எனக் குறிக்கப்பட்டுள்ளான்.

சபையில் அடங்கிய பெருந்தரத்து அதிகாரிகள் மன்றாடிகள் என்றழைக்கப்பட்டனர். இறைவன் முன் நின்று இசைக் கருவிகளைக் கொட்டியும் பாடியும் வந்தவர்களைத் திருப்பதிகம் பாடுவார் என்று கல்வெட்டுக் குறிக்கின்றது. திருப்பதிகம் பாடுவோருள் பார்வைத் திறன் அற்றவர்களும் இருந்தனர். அவர்களை அழைத்துச் சென்று திருப்பதிகம் இசைக்கத் துணையாய் நிற்போர் கண்காட்டுவார் எனப்பட்டனர். ஆடல் பாடல் வல்லாரையும் தட்டழி கொட்டும் இசை வல்லாரையும் மேற்பார்வையிடும் அதிகாரி தளிகை ஆழ்வார் எனச் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளனர்.படைமுதலி என்பது சேனைத் தலைமை ஏற்றுக் கொண்டோரைக் குறிக்கும் சொல்லாகும். காலாட் படையில் சிறப்பிடம் பெற்ற படையைக் குறிக்கக் கைகோளப் பெரும் படை என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது.

**அளவைகளில் தமிழ்ச் செம்மொழி ஆட்சி**

சோழர் கல்வெட்டுகளில் முகத்தல் அளவை, நிறுத்தல் அளவை, நீட்டல் அளவை பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. நெல் எடை, குன்றிமணி, கழஞ்சு முதலியன நிறுத்தல் அளவைகளாகப் பயன்படுத்தப் பட்டுள்ளன. பொன், வெள்ளி, இரத்தினங்கள் முதலியவற்றை நிறுக்கக் கழஞ்சு என்னும் பெயர் இருந்ததைக் கல்வெட்டுகளால் அறிய முடிகின்றது.

முகத்தல் அளவைப் பெயர்களாக உழக்கு, ஆழாக்கு, பதக்கு முதலியவை காணப்படுகின்றன. தொல்காப்பிய எழுத்ததிகாரத்தில் வழக்கு என்பது முகத்தல் அளவையைக் குறிப்பிடப் பயன்படுத்தப் பட்டிருக்கிறது. பதக்கு என்னும் சொல்லும் தொல் காப்பியம், நாலடியார் ஆகியவற்றில் குறிப்பிடப் பட்டுள்ளதைக் காணலாம்.

விரல், சாண் முதலியன நீட்டல் அளவைக்குப் பயன்படுத்தியிருப்பதைக் கல்வெட்டால் உணர முடிகின்றது. பன்னிரண்டு விரல் கொண்டது ஒரு சாண் ஆகும். சிலப்பதிகாரத்தில் அரங்க அமைப்புப் பற்றிக் கூறும்பொழுது விரல், சாண் அளவுகள் குறிக்கப் பட்டுள்ளன.

அளவைப் பெயர்களாக அளவுகோல்களும் பயன்படுத்தப்பட்டிருப்பதைக் கல்வெட்டுகளால் அறிய முடிகின்றது. பன்னிரண்டு கோல், பதினாறடி கோல், பதினெட்டடிகோல் முதலியன அளவுகோல்களாக இருந்துள்ளன. தொலைதூரத்தைக் குறிப்பிடக் காதம் என்ற சொல் பயன்படுத்தப்பட்டிருப்பதைக் கல்வெட்டுகள் மூலம் அறிய முடிகின்றது. காதம் என்ற சொல்லுக்குப் பத்து மைல் என்னும் விளக்கத்தை அகராதி தருகின்றது.

**அணிகலன்களில் தமிழ்ச் செம்மொழி ஆட்சி**

ஆடல் மகளிர் விரும்பியணியும் அணிகலன்களாகச் சுட்டி குறிப்பிடப்படுகிறது. பட்டம், பொற்பூ ஆகியன தலையணி ஆகும். சோழர்களது கல்வெட்டில் குதம்பை என்னும் காதணி அதிகமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. தோடு மகளிர் காதணியாகக் குறிக்கப்பட்டுள்ளது. கண்டிகை என்னும் கழுத்தணி பெரிதும் பேசப் படுகின்றது. முத்து மாலையைத் தனிவடம் என்னும் சொல்லால் கல்வெட்டுக் குறிக்கின்றது. தோளணியாகப் பரிபாடல் குறிப்பிடும் வாகுவலயம் கல்வெட்டில் பாகுவலயம் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. கையணி கலன்களில் காப்பு, கடகம், ஆடகம் ஆகியன பற்றிக் கல்வெட்டுகள் மிகுதியாகக் குறிப்பிடுகின்றன. இடையணி அரைப்பட்டிகை என்று கல்வெட்டுகளில் குறிப்பிடப்பட்டுள்ளது. காலில் அணியும் அணிகலன் காற்காறை என வழங்கப்பட்டது. கால் விரலணியாக வட்டப்பூ என்னும் அணிகலன் இருந்ததையும் கல்வெட்டால் அறிய முடிகின்றது.

**முடிவுரை**

கல்வெட்டுகளில் தமிழ்ச் செம்மொழிச் சொற்கள் பல இடம் பெற்றுத் தமிழ் மொழிக்குச் சிறப்புச் செய்திருப்பதை நம்மால் அறிய முடிகின்றது. கல்வெட்டுச் சொற்களை ஆய்வதன் மூலம் தமிழர்களின் சமுதாயப் பண்பாட்டுச் செய்திகளையும் அறிந்துகொள்ள முடிகின்றது.

❖

# அயலக அகழாய்வுகள்

தமிழ் மக்கள் தொன்றுதொட்டுக் கடல்வழி வாணிகம் செய்து வருகின்றனர். திரைகடலோடிய தமிழ் மக்கள் பற்றியும் தமிழ் நாட்டில் மற்ற நாட்டவர் வந்து வாணிகம் செய்தமை பற்றியும் தமிழ் இலக்கியங்களில் மட்டுமன்றி, மேல் நாட்டவரின் பயணக் குறிப்புகளிலும் விவரிக்கப்பட்டுள்ளன.

அண்மைக் காலங்களில் மற்ற நாடுகளில் மேற்கொள்ளப்பட்ட அகழ்வாராய்ச்சிகளின் மூலம் தமிழ் மக்களும், தமிழும் அந்நாடுகளுக்குச் சென்றடைந்ததை அறிகிறோம். குறிப்பாக, இவ்வகையில் அறியப்பட்ட தமிழ் எழுத்துகள் சங்க காலத்தைச் சார்ந்தவை. இவற்றின் எடுத்துக்காட்டுகள் சிலவற்றைக் கீழ்க் காணலாம். எழுத்துப் பொறிப்புகள் கிடைத்துள்ள இடங்கள் வரைபடத்தில் குறிக்கப்பட்டுள்ளன.



### இலங்கை

**(அ) யாழ்ப்பாணம்**

தமிழ் பேசும் மக்கள் இலங்கையின் யாழ்ப்பாணப் பகுதியில் பண்டைய காலம் முதல் வாழ்ந்து வருவதால், இப் பகுதியில் தமிழ்ப் பிராமி எழுத்துகள் பொறிக்கப்பட்டுள்ள பானை ஓடுகள் கிடைத்திருப்பதில் வியப்பு ஏதுமில்லை. யாழ்ப்பாணத்தின் பூநகரி பகுதியில் மேற்கொண்ட அகழ்வாராய்ச்சியில் எழுத்துக் குறிகளுடன் கூடிய ஏராளமான பானை ஓடுகள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. இவற்றுள் ஒன்று "வேள(ா)ன்" எனப் படிக்கப்பட்டுள்ளது. இங்குக் கண்டெடுக்கப் பட்ட பானை ஓடுகளில் பெரும்பாலானவை சிறு துண்டுகளாகிவிட்டாலும், அவற்றில் காணப்படும் தமிழுக்கே உரிய 'ழ', 'ள', 'ற', 'ன' எழுத்துக் குறிகள், இப் பானை ஓடுகளில் எழுதப் பட்டிருக்கும் மொழி தமிழ்தான் என்பதற்குச் சான்றாக உள்ளன. இப் பானை ஓடுகள் கி.மு. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தவை எனக் கருதப்படுகின்றன.





**(ஆ) திஸமஹரம, தென் இலங்கை**

தென் இலங்கையின் ருகுணா பகுதியில் உள்ள திஸமஹரமவில் நடைபெற்றுவரும் அகழ்வாய்வில் ஏராளமான பண்டைய நாணயங்களும் எழுத்துப் பொறித்த பானை ஓடுகளும் கிடைத்துள்ளன. கி. மு. முதல் நூற்றாண்டைச் சார்ந்த ஒரு மண்பாண்டத் தட்டு இங்குக் கிடைத்துள்ளது. அதில் ஐந்து தமிழ்ப் பிராமி எழுத்துகளும் இரண்டு குழுக் குறியீடுகளும் காணப்படுகின்றன.

இவ்வெழுத்துகளை ஆராய்ந்த ஐராவதம் மகாதேவன் அவற்றைத் "திரளி முறி" எனப் படித்துள்ளார். திரளி என்பது திரள் (கூட்டம் கூடுதல்) என்ற சொல்லின் மரூஉ; முறி என்றால் ஒப்பந்தம். இந்தப் பானைக்குள் ஒரு குழுவினரின் ஒப்பந்தம் முறியில் எழுதி வைக்கப் பட்டிருக்கலாம் என்பது அவர் கருத்து.

இக் கண்டுபிடிப்பால் அக்காலத்திலேயே (கி.மு. முதல் நூற்றாண்டு) தமிழ், இலங்கையின் தென்பகுதியிலும் வழங்கிவந்ததையும், அம் மொழி நீதித்துறையில் பயன்படுத்தப்பட்டதையும் அறிகின்றோம் என செர்மானிய தொல்லியல் அறிஞர் ஹாரி பாக் குறிப்பிடுகின்றார்.

### 2. எகிப்திய செங்கடல் பகுதியில் ரோமக் குடியிருப்புகள்

**(அ) க்வெஸிர் அல் காதிம்**

க்வெஸிர் அல் காதிம் என்பது எகிப்தின் செங்கடற்கரையில் அமைந்துள்ள ஒரு தொன்மையான துறைமுக நகரம். இங்கு நடந்த அகழ்வாராய்ச்சியில் தமிழ் எழுத்துகள் பொறிக்கப்பட்ட பானை ஓடுகள் மூன்று கண்டெடுக்கப்பட்டுள்ளன. அவற்றில் க(ண்)ணன் என்றும், சா(த்)தன் என்றும், பானை ஒறி (உறி)



படம் -4



படம்-5

என்றும் தமிழில் தமிழ்ப் பிராமி எழுத்துகளில் எழுதப்பட்டுள்ளன. இப்பொறிப்பை - நடனகாசிநாதன் 'பனை ஒறி' என்று படித்துள்ளார். இப் பானைப் பொறிப்புகள் கி. பி. முதல் நூற்றாண்டைச் சேர்ந்தவை.

**(ஆ) பெரெனிகெ**



படம் -6

செங்கடற்கரையில் அமைந்துள்ள தொன்மையான துறைமுகம் பெரெனிகெ. இங்குள்ள தாலமிய–ரோமக்குடியிருப்பு ஒன்றில் 1995இல் நிகழ்ந்த அகழ்வாய்வில் கிடைத்த ஒரு மட்பாண்டத்தில் தமிழ்ப் பிராமி எழுத்துகளால் "கொ(ற்)றபூமான்" என்று எழுதப்பட்டுள்ளது. இது கி.பி. முதல் நூற்றாண்டைச் சார்ந்தது. இதை நடன காசிநாதன் - 'குற பூமாந்தோர்' என்று படித்திருக்கிறார்

## 3. தாய்லாந்து

**(அ) பூ கா தாங்**



படம் -7

தாய்லாந்து நாட்டின் தலைநகரம் பாங்காங்கின் அருகில் உள்ள பூ கா தாங் என்னுமிடத்தில் பிரெஞ்சு மற்றும் தாய்லாந்து அகழ்வாராய்ச்சியாளர்கள் கி. பி. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த பானை ஓட்டை அகழ்ந்தெடுத்துள்ளார்கள். அதில் தமிழ்ப் பிராமி எழுத்துகள் பொறிக்கப்பட்டுள்ளன.

ஐராவதம் மகாதேவன் இவ்வெழுத்துகளை "துற– ஓ–––" என்றும் படித்துள்ளார். (எஞ்சிய எழுத்துக்கள் கிடைக்கப்பெறவில்லை). இச்சொல் "துறவோன்" (முனிவர்) என்று இருக்கலாம்.

இது பற்றிக் கருத்துத் தெரிவித்த அமெரிக்கக் கல்வெட்டறிஞர் ரிச்சர்ட் சாலமன் எகிப்து மற்றும் தாய்லாந்து நாடுகளில் கிடைத்த பானைப் பொறிப்பு ஆதாரங்களைக் கொண்டு சங்க காலத்தில் இருந்த பன்னாட்டு வாணிகத் தொடர்பு பற்றி அறிய முடிகிறது என்று கூறினார்.

**(ஆ) குவான் லுக் பாட்**



படம் -8

இந்தோ–சப்பானியத் தொல்பொருள் ஆராய்ச்சிக் குழு 1992–1993இல் தாய்லாந்து நாட்டிற்குச் சென்றிருந்த போது, அங்குள்ள தொன்மை வாய்ந்த துறைமுக நகராகிய குவான் லுக் பாட்–இல் உள்ள அருங் காட்சியகத்தில் உரைகல்லில் "பெரும் பத்)தன் கல்" எனத் தமிழ்ப் பிராமி எழுத்துகளில் பொறிக்கப் பட்டிருப்பதைக் கண்டார்கள். "பத்தன்" என்ற சொல்லுக்குப் "பொற்கொல்லன்" என்ற பொருள் உள்ளமையால், இக் கல் ஒரு பொற்கொல்லரின் உரைகல் எனக் கொள்ளலாம். இவ்வெழுத்துகள் கி. பி.3 அல்லது 4ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை.

**முடிவுரை**

கடந்த சில ஆண்டுகளாக எகிப்து, இலங்கை மற்றும் தாய்லாந்து போன்ற நாடுகளில் நடைபெற்றுவரும் அகழ்வாய்வுகளால், தமிழ் நாட்டிற்கும் இந்நாடுகளுக்கும் இருந்த வாணிகத் தொடர்பு குறித்தும், தமிழ் மொழி எவ்வாறு இவ்விடங்களுக்குப் பரவியிருந்தது என்பதற்கும் வலுவான சான்றுகள் கிடைத்துள்ளன. இவ்விடங்களில் அகழ்வாராய்ச்சிகள் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன. இதன் மூலம் தமிழ் மொழியின் தொன்மை மற்றும் தாக்கம் குறித்தும், தமிழர்களின் பன்னாட்டு வாணிகத் தொடர்பு குறித்தும் மேலும் வலுவான சான்றுகள் கிடைக்கும் என்பது திண்ணம்.

இக் கட்டுரைத் தொகுப்பிற்குப் புகைப்படங்களும் செய்திக் குறிப்புகளும் தந்துதவிய முனைவர் ஐராவதம் மகாதேவன் அவர்களுக்குச் சிந்துவெளிப் பண்பாட்டு ஆய்வு மையத்தின் நன்றி.

**படங்களின் தலைப்புகள்**

படம்–1: தமிழ் எழுத்துக்கள் கிடைத்துள்ள இடங்களை குறிக்கும் ஆசியக் கண்டத்தின் வரைபடம்.

படம்–2: வேள(ா)ன் என்ற பெயர் பொறித்த சில்லு. யாழ்ப்பாணம், இலங்கை. கி.மு. 2ஆம் நூற்றாண்டு.

படம்–3: திரளி முறி என்று பொறித்த மட்பாண்டத் தட்டு. திஸமஹாரம, இலங்கை. கி.மு. முதல் நூற்றாண்டு.

படம்–4: சா(த்)தன் என்ற பெயர் பொறித்த மட்கலத்துண்டு. க்வெஸிர் அல் காதிம், எகிப்து. கி.பி. முதல் நூற்றாண்டு.

படம்–5: பானை ஒறி என்று பொறித்த மட்கலத்துண்டு. க்வெஸிர் அல் காதிம், எகிப்து. கி.பி. முதல் நூற்றாண்டு.

படம்–6: கொ(ற்)றபூமான் என்ற பெயர் பொறித்த சில்லு. பெரெனிகெ, எகிப்து. கி.பி. முதல் நூற்றாண்டு.

படம்–7: துறவோ(ன்) என்று பொறித்த சில்லு. பூ கா தாங், தாய்லாந்து. கி. பி. இரண்டாம் நூற்றாண்டு.

படம்–8: பெரும் பத்)தன் கல் என்று பொறித்த உரைகல். குவான் லுக் பாட், தாய்லாந்து. கி. பி.3 அல்லது 4ஆம் நூற்றாண்டு.

(நன்றி : ரோஜா முத்தையா ஆராய்ச்சி நூலகம்) ❖

# பழம்பானைக் குறியீடுகளும் தமிழர் பண்பாடும்



முனைவர் சா. குருமூர்த்தி

பண்டைய காலப் பானைகளும், உடைந்த பானை ஓடுகளும் பண்டைத் தமிழர் வரலாறு, பண்பாடு ஆகியவற்றை எழுதுவதற்குப் பயன்படும் முக்கியச் சான்றுகளாம். ஏனெனில் மட்பாண்டக் கலை தோன்றிய காலம் முதல் இன்றுவரை தமிழ்ச் சமுதாயத்தில் ஓர் இன்றியமையா இடத்தைப் பெற்றிருக்கிறது என்பதை யாவரும் அறிவர். புதிய கற்காலத்தில் தோன்றி, படிப்படியாக வளர்ச்சியடைந்து சங்க காலத்தில் இக்கலை உன்னத இடத்தை எட்டிப் பிடித்தது.

ஆதி மனிதனின் நாகரிக வளர்ச்சியை எடுத்துக் காட்டும் சான்றுகளுள் மட்பாண்டக் கலையும் ஒன்றாகும். தொல் பழங்காலத்திலிருந்து இன்றுவரை தோன்றி மறைந்த பல்வேறு பண்பாடுகளை அடையாளங் காணச் சான்றுகளை அள்ளித் தெளிக்க வல்லன பானைகளும், பானை ஓடுகளுமாகும். அகழ்வாராய்ச்சிகளில் மட்பாண்டங்களே பெரும் எண்ணிக்கையில் கிடைக்கின்றன. ஏனெனில் சமுதாயத்தில் மிகச் சாதாரண மக்கள் அதிக அளவில் இவற்றைப் பயன்படுத்தினார்கள் என்பதுதான். மட்பாண்டக் கலை தோன்றிய பிறகுதான் மனிதன் களிமண் கலங்களை உருவாக்கித் தனது அன்றாட வாழ்க்கையில் பயன்படுத்தத் தொடங்கினான். தனக்குத் தேவையான உணவுப் பொருட்களையும், தண்ணீரையும் சேகரித்து வைத்துக்கொள்ள இக்கலங்கள் அவனுக்குப் பயன்பட்டன. அதன் காரணமாக ஆதி மனிதனுக்கு ஒரு நிலையான வாழ்க்கை அமையத் தொடங்கியது என்று கூறலாம்.

தமிழகத்தில் முதன் முதலில் மட்பாண்டக் கலை புதிய கற்காலத்தில்தான் தோன்றியது. (கி.மு. 5000). பண்டைய மட்பாண்டத் தொழில்கள் பல வகைப்படும். அவை யாவன: சிவப்பு, கறுப்பு, கறுப்பு – சிவப்பு மட்பாண்ட வகைகள் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தவையாகும். இவற்றின் காலம் கி.மு. 1000 முதல் கி.பி.300 வரை எனக் கணக்கிடலாம். குறிப்பாக சங்க காலத் தமிழர்கள், மேற்கூறிய மட்பாண்ட வகைக் கலயங்களையே அதிக எண்ணிக்கையில் பயன்படுத்தினார்கள். தொல் பழங்காலம் முதல் பாமர மக்களின் சொத்துகளாகவே மட்பாண்டங்கள் கருதப்பட்டன. அன்றாட வாழ்க்கையில் சாதி, சமய வேறுபாடின்றி, ஏழை, பணக்காரர் பாகுபாடின்றி மக்கள் மட்பாண்டங்களைப் பயன்படுத்தினார்கள்.

கடந்த 50 ஆண்டுகளாக நிகழ்த்தப்பட்ட அகழ்வாராய்ச்சிகளின் மூலமாக எண்ணிக்கை யிலடங்கா பானைகளும், பானை ஓடுகளும் கிடைத்துள்ளன. அக்கால மக்கள் பயன்படுத்தி விட்டுச் சென்ற செல்வங்களே அவையாகும். மட்பாண்டங்களுடன், மக்கள் பயன்படுத்திய மணிகள், மணி மாலைகள், சுடுமண் உருவங்கள், காசுகள், கற்கருவிகள், உலோகப் பொருட்கள், இறந்தவர்களைப் புதைக்கும் தாழிகள், கட்டட இடிபாடுகள் ஆகியவையும் கிடைத்துள்ளன. இவற்றைத் துல்லியமாக ஆய்வு செய்தால், பண்டைய தமிழர்களின் வரலாறும், பண்பாட்டுச் சிறப்பியல்புகளும் தெரிய வரும்.

பழம் பானைகளின் மீதும், பானை ஓடுகளின் மீதும் பல்வேறு குறிகள் பொறிக்கப்பட்டுள்ளன. தவிர, பண்டைய எழுத்து முறையை எடுத்துக்காட்ட வல்ல எழுத்துகளும் காணப்படுகின்றன. குறிப்பாக சிந்துவெளி எழுத்துகளும், பிராமி எழுத்துகளும் பொறிக்கப்பட்ட பானை ஓடுகள் அகழ்வாராய்ச்சி களில் கண்டெடுக்கப்பட்டுள்ளன.

பிராமி எழுத்துகள்

பொறிக்கப்பட்ட பானை ஓடுகள் தமிழகத்தில் உறையூர், காஞ்சிபுரம், அழகரை, கொடுமணல் போன்ற ஊர்களில் நிகழ்த்தப்பட்ட அகழ்வாராய்ச்சிகளின் வாயிலாகக் கிடைத்துள்ளன. மற்றும் புதுச்சேரியில் இத்தகைய பானை ஓடுகள் முதன்முதலில் சர். மார்ட்டிமா வீலர் என்ற மேனாட்டு அறிஞர் அவர்களால் கண்டெடுக்கப்பட்டன. இவற்றின் காலம் கி.மு. 300 முதல் கி.பி. 200ம் ஆண்டுவரை எனக் கணக்கிடலாம். எனவே அந்தக் கால கட்டத்தில் தமிழகத்தில் சாதாரண மக்களிடையே நிலவிய எழுத்து வடிவத்தைத்தான் இப்பானை ஓடுகள் தெரிவிக்கின்றன. சங்க காலத் தமிழர்கள் பயன்படுத்திய எழுத்து வடிவங்களுள் தமிழ்ப் பிராமியும் ஒன்றாகும்.

இந்தியா முழுவதிலும் நமக்குக் கிடைக்கப் பெற்ற குறியீடுகள் தாங்கிய பானைகளும் பானை ஓடுகளும் ஏறக்குறைய 5000க்கும் மேலாகும். தமிழகத்தில் மட்டும் ஏறக்குறைய 2000 குறியீடுகளை இரு வகையாகப் பிரிக்கலாம். (1) தனிக் குறியீடுகள், (2) குழுக் குறியீடுகள். இவை சிறிதும் பெரிதுமாகக் காட்சியளிக்கின்றன. சிறிய குறியீடுகள் சராசரி 0.5 செ.மீ.லிருந்து 2 செ.மீ. நீளம் உள்ளன. அதுபோன்று பெரிய குறியீடுகளின் நீளம் சராசரி 2 செ.மீ.லிருந்து 6 முதல் 10 செ.மீ. வரை உள்ளன.

பெரும்பாலும் கிண்ணம், தட்டு, மூடி, கலயம், சாடி போன்ற பாத்திரங்களின் கழுத்து, வயிறு, தோள் போன்ற பகுதிகளின்மீது இக்குறியீடுகள் காணப் படுகின்றன. மட்கலயங்களைச் சுடுவதற்கு முன்பும் பின்பும் இவை பொறிக்கப்பட்டுள்ளன.

தமிழகத்தில் அகழ்ந்தெடுக்கப்பட்டுள்ள குறியீடுகளின் தன்மைகளையும் அளவுகளையும் நோக்கும்பொழுது அவை சிந்துவெளிக் காலக் குறியீடுகளையும், எழுத்துகளையும் ஒத்திருக் கின்றன எனக் கருதலாம். இத்தகைய குறியீடுகள் மக்கள் வாழ்ந்த ஊர்களில் மட்டுமன்றி, அவர்கள் புதைக்கப்பட்ட சவக்குழிகளிலும், முதுமக்கள் தாழிகளிலும் கண்டெடுக்கப்பட்டுள்ளன.

பிராமி எழுத்துகள் தோன்றுவதற்கு முன்பே, தமிழகத்தில் உறையூர், காஞ்சிபுரம், கரூர், கொற்கை, வல்லம், கொடுமணல், அழகன்குளம் போன்ற ஊர்களிலிருந்து குறியீடுகள் நூற்றுக்கணக்கில் கண்டெடுக்கப்பட்டுள்ளன. ஏறக்குறைய 250க்கும் மேற்பட்ட தனிக் குறியீடுகள் உள்ளன. அவை பல்வேறு வடிவங்களில் வரையப்பட்டுள்ளன. ஒரே குறியீடு பல்வேறு ஊர்களிலிருந்து கண்டெடுக்கப்பட்டுள்ளது. அவற்றை ஆய்வு செய்கையில் ஒவ்வொரு குறியீடும் ஒரு பொருளை, கருத்தைத் தெரிவிக்கும் வகையில் உருவாக்கப்பட்டுள்ளன. அவற்றை ஈண்டுக் காண்போம்.

அவற்றுள் ஒரு வகை: குறிப்பாக ஞாயிறு, எழுஞாயிறு, பிறைநிலா, விண்மீன், கோள் போன்றவை வானத்தில் காணப்படும் இயற்கைச் சக்திகளைக் குறிப்பனவாகும். அதாவது அக்கால மக்கள் அத்தகைய இயற்கைச் சக்திகளை வணங்கி வந்தார்கள் என்பதையே அவை குறிப்பதாக நாம் எடுத்துக்கொள்ள வேண்டும். உலகில் முதன்முதலில் தோன்றிய இறை வழிபாடு என்பது இயற்கை வழிபாடேயாகும். எனவே மேற்கண்ட குறியீடுகள் சமயச் சார்புடைய மட்டுமல்லாமல், பண்டைத் தமிழர்களின் இயற்கை வழிபாட்டைக் குறிப்பவையாகும்.

அதுபோன்றே நிலம், நீர், மலை, மரம், செடி, கொடிகள் ஆகியவற்றைக் குறிக்கும் குறியீடுகள் பூமியில் உள்ள இயற்கைச் சக்திகளைக் குறிப்பவையாகும். அவற்றையும் அக்காலத் தமிழர்கள் வழிபட்டு வந்திருக்கிறார்கள் என்பதை அவை தெரிவிக்கின்றன. இன்றும் மேற்கூறிய இயற்கைச் சக்திகளை நம்மக்கள் வணங்கி வழிபட்டு வருகிறார்கள்.

சிவ வழிபாட்டைக் குறிக்கும் இலிங்கம் போன்ற குறிகளும் உண்டு. புத்த சமயச் சின்னங்களான சயித்யம், புத்தரடி, வேலிக்குள் மரம், வேலி போன்றவையும் குறியீடுகளாகக் காட்சியளிக் கின்றன. சமண சமயச் சின்னமான சுவத்திகமும் பொறிக்கப்பட்டுள்ளது. எனவே பண்டைய தமிழர்கள், இயற்கை வழிபாடு மற்றும் சைவ, புத்த, சமண, சமய வழிபாடுகளிலும் ஆர்வமுடைய வர்களாக இருந்திருக்கிறார்கள் என்பது இக்குறியீடுகளின் மூலம் தெரியவருகின்றது.

குறியீடுகளுள் ஒருவகை அக் காலத் தமிழர்களின் மரபு, பெயர், ஊர் போன்றவற்றைக் குறிப்பிடுகின்றது என்று கூறலாம். அவற்றுள் மீன், நண்டு போன்றவை குறிப்பிடத்தக்கவை.

தனிக் குறியீடுகள் பொருளற்றவை என்றும், அவை வெறும் கீறல்கள் என்றும் கூறப்பட்டு

வந்தன. ஆனால் அண்மை ஆராய்ச்சியில் அவை ஒவ்வொன்றும் வடிவெழுத்திற்குச் சமமானவை என்பது தெரிய வந்துள்ளது. தமிழர்கள், அசோகர் காலத்திற்கு முன்பிருந்தே எழுதும் கலையில் தேர்ச்சி பெற்றிருந்தனர். தென்னிந்தியாவில் வழக்கில் இருந்துவந்த எழுத்து வடிவத்திற்குத் திராவிட லிபி அதாவது திராவிடர் எழுத்து வடிவம் என்று பெயர். பௌத்த நூலான லலிதவிஸ்தரா தென்னக எழுத்து வடிவத்தைத் திராவிட லிபி என்றும், சமண நூலான பன்னவான சூத்திரத்தில் இதனைத் தமிலி என்றும் கூறப்பட்டுள்ளது. இந்தத் தமிலியே பண்டைய திராவிட மொழிகளை எழுதுவதற்குப் பயன்படுத்தப்பட்டிருக்க வேண்டும். தமிலி என்ற சொல் தமிழ் எழுத்தையே குறிக்கும் என்று கூட எடுத்துக் கொள்ளலாம்.

ஆனால், தமிலி எழுத்துத் தமிழ்ப் பிராமியையே குறிக்கும் என்று அறிஞர்கள் கூறுகின்றனர். அதற்குக் காரணம் பண்டைய தமிழகத்தில் முதன்முதலில் வழக்கில் இருந்த எழுத்து வடிவம் பிராமியே என்பதாகும். ஆனால், இந்தக் கருத்தை நம்மால் ஏற்றுக் கொள்ள முடியாது. ஏனெனில் பிராமிக்கு முன்பும், சிந்துவெளி எழுத்து வடிவத்திற்குப் பின்பும் உள்ள இடைக்காலத்தில் ஒருவகை எழுத்து வடிவம் தமிழகத்தில் வழக்கில் இருந்திருக்க வேண்டும். அதனை நாம் இக் குறியீடுகளின் மூலமாகக் காணமுடிகிறது. எனவே, பானைகள் மீது காணப்படும் கூட்டுக் குறியீடுகள் ஒருவகை எழுத்து வடிவத்தையே குறிக்கின்றன என நாம் எடுத்துக் கொள்ளலாம். இதனையே தொல் பழங்காலத் தமிழ் எழுத்து வடிவம் என்று கருதுவதில் தவறில்லை. இக் கருத்தை ஈண்டுக் காண்போம்.

முன்பே கூறியது போலத் தனிக் குறியீடுகள் ஏறக்குறைய 200க்கும் மேற்பட்டவை சிந்துவெளி எழுத்துகளை ஒத்துள்ளன. அடுத்து, கூட்டுக் குறியீடுகள் மூன்று வகைப்படும். அவை யாவன:

1. சிந்துவெளி எழுத்துகளை மட்டுமே உள்ளடக்கிய கூட்டுக் குறியீடுகள். இவை வலமிருந்து இடமாகப் பொறிக்கப்பட்டுள்ளன. இக்குறியீடுகள் தொல் தமிழ் மொழியில் எழுதப்பட்டுள்ளன.

2. சிந்துவெளி எழுத்துகள், தமிழ்ப் பிராமி எழுத்துகள், பொருளற்ற வெறும் குறியீடுகள் ஆகியவை அடங்கிய கூட்டுக் குறியீடுகள்.

3 எந்தவித எழுத்து வகையிலும் சேராத வெறும் குறியீடுகளையே அடக்கிய கூட்டுக் குறியீடுகள்.

மேற்கண்ட மூவகை எழுத்து வடிவங்களும் சங்க காலத்திற்கு முந்தைய தொல் பழங்காலத்தில் தமிழகத்தில் வழக்கில் இருந்திருக்க வாய்ப்புள்ளது.

ஆகையால், தமிழகத்தில் திருக்காம்புலியூர், அலைகரை, உறையூர், கொற்கை, வல்லம், கொடுமணல், காஞ்சிபுரம், சானூர், ஆதிச்சநல்லூர் போன்ற ஊர்களில் நிகழ்த்தப்பட்ட அகழ்வாய்வுகளில் மேற்கூறிய கூட்டுக் குறியீடுகள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. அவை தொல் பழந்தமிழகத்தில் சிந்துவெளி எழுத்து வடிவம் வழக்கில் இருந்திருக்கிறது என்பதை முதன் முதலில் வெளிப்படுத்தியுள்ளன. அதுவும் சாதாரண ஏழை, எளிய மக்கள் பயன்படுத்திய மட்கலங்கள் மீது அவை பொறிக்கப்பட்டுள்ளன என்பது வியக்கத்தக்க உண்மையாகும். ஏனென்றால் கல்வெட்டுகளும், செப்பேடுகளும் நின்ற, மறைந்த பேரரசர்களையும், பேரரசுகளையும் பற்றிய செய்திகளை மட்டுமே கூறவல்லன. ஆனால் ஏழை, எளிய மக்களால் பயன்படுத்தப்பட்ட இம் மட்பாண்டக் கலங்கள் சிந்துவெளி எழுத்து வடிவத்தைத் தாங்கியுள்ளன. எனவே, தொல் பழந்தமிழர்கள் சிந்துவெளிப் பண்பாட்டையும் சிந்துவெளி எழுத்து வடிவத்தையும் கடைப்பிடித்து வந்திருக்கிறார்கள் என்று கருத இந்த மட்கலயக் குறியீடுகள் சான்றுகளைப் பகர்கின்றன. அது மட்டுமன்றி, உடைந்த பானை ஒடுகள் மீது பொறிக்கப்பட்டுள்ள செய்திகள் பண்டைத் தமிழர்களின் பொருளாதார, வாணிக நடவடிக்கை களைத் தாங்கிய அழிக்க முடியாத ஒரு வகை ஆவணங்கள் என்றும் கருதலாம்.

எனவே, பானைகள் மீது காணப்படும் குறியீடுகள் பண்டைத் தமிழர்களின் பண்பாட்டுச் சிறப்பியல்புகளை இயம்பும் ஆவணங்கள் என்று கருதுவதில் தவறில்லை. தமிழர் பண்பாட்டையும், சிந்துவெளிப் பண்பாட்டையும் இணைக்கும் ஒரு பாலமாக இக் குறியீடுகளை எடுத்துக் கொள்ளலாம். அது மட்டுமன்றிச் சிந்துவெளி எழுத்து வடிவத்தைப் படித்துப் பொருளறியப் பயன்படும் ஒரு திறவுகோல் என்றும் கருதலாம்.

# ஆட்சித் தமிழ் வளர்ச்சி

முனைவர் த. பெரியாண்டவன்



**நுழைவாயில்**

ஆட்சித் தமிழ் என்னும் சொல்லாக்கம் ஆழமான பொருளுடைத்து. நம் தாய் மொழியாம் தமிழ், மூத்ததும் தலைமைத் தன்மை கொண்டதும் இனியதுமான தாய்மைச் செம்மொழி. 'தமிழில் ஆட்சி' எனின் தமிழை எழுத்திலும், சொல் வழக்கிலும், இசையிலும் எங்கும் ஆளுதல் எனக் கொள்ளலாம். எனவே, தமிழாட்சி என்பதற்கு எல்லாத் துறையிலும் ஒல்லும் வகையெல்லாம் தமிழை ஆட்சி செய்ய வைத்தல் என்பதே பொருளாகும். எனினும், 'ஆட்சித் தமிழ்' என்னும் தொடர், அரசின் நிருவாகத்தில் தமிழைப் பயன்படுத்துதல், தமிழைக் கருவியாகக் கொண்டு அரசின் பணிகளை மேற்கொள்ளுதல் என்று பொருள் தருகிறது. இவ்விரண்டனுள், முன்னது சிறந்தால், அஃதாவது எல்லாத் துறையிலும் தமிழ் ஆட்சி செய்தால் – தெருவெல்லாம் தமிழ் முழங்கினால் – பின்னது எளிதாகும்; நிருவாகத்தில் தமிழ் ஆளுதல் எளிதாகக் கைகூடும் என்பதாகும்.

தமிழ் ஆட்சிமொழி என்கையில் தமிழக அரசையும் தமிழ்நாட்டு மக்களையும் இணைக்கும் பாலமாக அது அமையும் தன்மையையே குறிக்கிறது. இதனை டாக்டர் மு.வரதராசனார் அவர்கள், மக்கள் ஆட்சியில் மக்களின் விருப்பம் ஆள்வோரை நாடிப் பாயும் எனப் பகுக்கிறார். சர்வாதிகார ஆட்சியில் ஆளும் தலைவனுடைய ஆணை மக்களை நோக்கிப் பாயும். மக்கள், தங்களைத் தாங்களே ஆண்டுகொள்ள வேண்டுமானால் அவர்கள் தங்கள் கருத்துகளைத் தாய் மொழியில் உணர்த்தும் வாய்ப்பு இருக்க வேண்டும். மக்களின் மொழிவழி ஆட்சியில்தான், அவர்களின் விருப்பம் ஆள்வோரைப் பிணிக்க வல்லதாக இருக்க முடியும் எனத் தெளிவு படுத்துகிறார். ஆனால், இசை கேட்கப் போனால் வடுகு, வழிபடச் சென்றால் வடமொழி, வழக்காட நீதிமன்றம் ஏறினால் ஆங்கிலம் என நாற்புறமும் அயன்மொழிகள் ஆதிக்கம் செலுத்திய நெருக்கடிச் சூழலிலிருந்து, தாய் மொழியை மீட்டு ஆட்சிக் கூடங்களில் அமர வைப்பது அத்துணை எளிதாயிருக்கவில்லை. அந்த முயற்சிகளின் முளைப்பு, முனைப்பு, முன்னேற்ற வளர்ச்சிகள் குறித்து அகன்றும் ஆழ்ந்தும் இங்கு ஆய்வோம்.

**வரலாற்று நிலையில்**

பண்டைத் தமிழகத்தில், தமிழ் முழுதாண்ட மூவேந்தர்களின் மன்னராட்சியில், 'எங்கும் தமிழ் எதிலும் தமிழே' என இயல்பாக முழங்கிற்று. கல்வியிற் சிறந்த தமிழ்நாடாய் விளங்கிய பொற்காலம் அது. பெண்பாலரும் புலவர்; எத்தொழில் செய்வோரும் புலவர் எனச் சிறந்து விளங்கியதைச் சங்கப் பாடல்கள் சாற்றுகின்றன. வெண்ணிக் குயத்தியார், தண்கால் பூண் கொல்லனார், சாத்தனார், கூத்தனார், கணியனார் என்னும் சான்றோர் பெயர்களே சான்று பகரும். இயற்கை வழிபாடு, இயற்கை சார்ந்த நிலத் தெய்வ வழிபாடு என்று ஆதிக்கமில்லா இயையுடன் விளங்கிய தமிழகத்தில், தமிழ் மன்னர்கள் தமக்குள் போரிட்டுக் கொண்டாலும், வெல்வதும் தோற்பதும் தமிழ்க்குடியே என்று, தமிழுக்குத் தாழ்வு ஏற்படாது நிலவிய தெளி நிலையில், பல்லவர் வருகை ஒரு சலனத்தை ஏற்படுத்தியது.

பல்லவர்கள், தங்களோடு வடமொழியையும் வடமொழி வாணர்களையும் கொண்டு வந்தார்கள். சமணம், வைணவம், பின்னர் சைவ மறுமலர்ச்சி எனப் பெருஞ்சமயங்களும் வேரூன்றி வேற்றுமை பரப்பின. ஆட்சி நிலையிலும், வடமொழி ஊடுருவிற்று. செப்பேட்டு அரசாணைகளும் மெய்க்கீர்த்திகளும் வடமொழி, தமிழ் என இரண்டிலும் இணைத்து வெளியிடப்பட்டன. பிற்காலச் சோழர் பாண்டியர் காலத்திலும் இவ்விருமொழி நிலை நீடித்தது என்றாலும், அடிப்படை ஆட்சி நிலையில் தமிழே நிலைத்திருந்தது. வளநாடு, கோட்டங்கள், கூற்றங்கள் என்ற ஆட்சிப் பரப்பு வரையறைகள், கழஞ்சு, காணி முதலிய அளவை நிலைகள், எண்பேராயம் ஐம்பெருங்குழு போன்ற அரசமைப்புகள், குடவோலைத் தேர்தல் முறை என்பன தமிழ் அரசாண்டமைக்குச் சான்றாவணம் கூறுகின்றன. அடுத்து, நாயக்க மன்னர் ஆட்சி, சமய நிலையில், தெலுங்கு கன்னடக் கலப்புடன் சில மாற்றங்களை ஏற்படுத்தியது. முகமதியர் படையெடுப்பும் அவர்கள் ஆட்சியும் தாசில், உசூர், கிஸ்தி, சிரஸ்தார் போன்ற சில உருது, பாரசீகச் சொற்களைத் தமிழக நிருவாகத்தில் பயிலச் செய்தன. நாயக்கர் முகமதியர் வருகை ஆட்சிக் கட்டமைப்பைப் பெரிதாகக் குலைக்காமல் தங்களுக்குப் பொருள் திரட்டிக் கொள்ளுதல் என்ற அளவில், சுரண்டலுக்கு வாய்ப்பாகச் செய்த சில மாற்றங்கள் பெரிய விளைவுகளை ஏற்படுத்தவில்லை. ஆனால், ஆங்கிலேயர் நுழைவு, முழு ஏற்பாட்டையும் புரட்டிப் போட்டுவிட்டது எனலாம்.

**அடிமை இருளில்**

உட்பகை காரணமாக, மாற்றாருக்கு வழிவிட்ட தமிழகம் சிதறுண்டு கிடந்த சூழலில், ஐரோப்பியர் நுழைந்தனர். வாணிகம் செய்ய வந்தவர்கள், அதன் துணை விளைவாகத் தங்கள் சமயம் பரப்ப முனைந்து, பின்னர் இரண்டினையும் விஞ்சி நாடு பிடித்து ஆட்சி செய்தனர்.

பிரஞ்சு, டச்சுக்காரர்களைப் பின்னுக்குத் தள்ளி, ஆங்கிலேயர் கி.பி.1600 முதல் 1947 வரை இந்தியா முழுமைக்கும் அரசாண்ட காலத்தில், தென் மாநிலம் 'சென்னை மாகாணம்' என்ற பெயரில் பெரிய ஆட்சிப் பரப்பாக அமைந்தது.

தங்கள் சுரண்டல் வாய்ப்புகளை ஆங்கிலேயர் திட்டமிட்டு உருவாக்கிக் கொண்டனர் என்றாலும் நாடு பல வளர்ச்சிகளை விரைந்து கண்டது. மன்னராட்சிக் காலத்தில் ஆட்சி என்பது நாடு காவல், வரி வசூல், நீதி வழங்குதல் என்று மட்டும் இருந்த நிலை மாறிப் பல்துறை நிருவாகம் என மலர்ந்தது. இருப்புப் பாதை, துறைமுகம், தொழிற்சாலைகள், அஞ்சல் வசதி, ஊர்திப் போக்குவரத்து, காவல்துறை, படைத்துறை என மேம்பாடுகள் பல்கின. அறிவியல் புரட்சி வெடித்து, எழுதுகோலும், தாளும், நூல்களும், அச்சகங்களும், தந்தித் தொடர்புகளும் ஏற்பட்டன. இவை அனைத்திலும் தவிர்க்க இயலாமல், ஆங்கிலம் வந்து அரியணையிட்டு அமர்ந்துகொண்டது. மேற்கண்ட அமைப்புகளை ஆட்சியாளர் நிருவாகம் செய்ய ஆங்கிலமே பயன்படுத்தப்பட்டது. ஆங்கிலக் கல்வி கற்றவரே நிருவாகப் பதவிகளில் நியமிக்கப்பட்டனர். ஆங்கிலம் கற்ற சிலர் மேல்தட்டினரெனவும், ஆங்கிலம் கல்லாப் பெரும்பகுதி மக்கள் கீழ்த்தட்டினரெனவும் உணர் வளவிலும் வாழ்முறை அளவிலும் பாகுபடுத்தப்பட்ட பிரிவினை உண்டாயிற்று. "தமிழ் பல கற்றும், ஆங்கிலம் கல்லார் அறிவிலாதார்" என்ற மாயை தோற்றுவிக்கப்பட்டது. பொதுமக்களை ஆட்சிக்குத் தொலைவில் நிறுத்தி நாட்டைச் சுரண்டுவதற்கு ஆங்கிலம் சிறந்த கருவியாகப் பயன்பட்டது. இதுவே மெக்காலேவின் கல்வித் திட்டம்.

**புலர் காலையில்**

அடக்கி ஆள்வதற்கென்று வெள்ளையர் ஏந்திய ஆங்கிலம் என்னும் கத்தி இருபுறமும் கூர்மையானது என்று முதலில் அவர்கள் அறிந்திருக்கவில்லை. மேல் தட்டினரிடம் அனைத்துலக அறிவையும் அடிமைத் தளைக்கு எதிரான விழிப்புணர்ச்சியையும் ஆங்கிலக் கல்வியே ஊட்டியது. மேல் தட்டினரிடம் கனன்ற விடுதலை எழுச்சியைத் தாய்மொழிகளை ஊக்குவித்ததன் வழி பொதுமக்களிடம் கொண்டு சேர்த்துப் பேரியக்கமாக மாற்றினார் காந்தியடிகள். தமிழகத்திலும் ஆங்கிலம் சிலரை வல்லுநராக்கியது; எனினும், அக்கல்வியே பலர் நெஞ்சில் தமிழின் மறுமலர்ச்சிக்கும் புது வளர்ச்சிக்கும் வித்தூன்றியது. வடமொழியும் அரபும் ஆங்கிலமும் கைப்பற்றிய அரியணையை மீட்டு, அதில் அன்னைத் தமிழை அமர்த்த அறிஞர்கள்–புலவர்கள்–தமிழ்த் தலைவர்கள் அயராது உழைத்தனர். 19ஆம் நூற்றாண்டில் வேதநாயகம் பிள்ளையும் தண்டபாணி சுவாமிகளும் தொடங்கி, பரிதிமாற் கலைஞரும் மறைமலை அடிகளாரும், தமிழ்த் தென்றல் திரு. வி. க. வும் எனத் தொடர்ந்து, பாரதியார் – பாவேந்தர் – பேறிஞர் அண்ணா–பாவாணர்–முத்தமிழறிஞர் கலைஞர் என இன்றுவரை தமிழின் மீட்சிக்கும் ஆட்சிக்கும் உயர்வுக்கும் பாடுபட்டோர் பாடுபடுவோரின் பட்டியல் நீள்கிறது.

தண்டபாணி சுவாமிகளின் (1838–1896) 'ஆங்கிலேயர் அந்தாதி' என்ற நூலும் அவரது தன் வரலாற்றுப் பாடல் நூலும் ஆங்கில எதிர்ப்புணர்ச்சியைப் பதிவு செய்துள்ளன. மாயூரம் வேதநாயகம் பிள்ளை, தமிழின் முதல் புதினமான தமது 'பிரதாப முதலியார் சரித்திரத்தில் தமிழ் ஆட்சி மொழியாக வேண்டியதன் இன்றியமையாமையை ஒரு கதை மாந்தரின் கூற்றாக வலியுறுத்தியுள்ளார்.

வடமொழியையும் ஆங்கிலத்தையும் மிகையாகக் கலந்து இதழ்கள் வெளிவந்த போக்கினை மொழி உணர்வுடன் எதிர்த்து உரைநடையிலும் பாட்டிலும் அருந்தமிழ் ஆற்றலைக் காட்டினார் பாரதியார். 'பாரதியின் தொண்டு பிற பத்திரிகைகள் திருந்துவதற்குக் காரணமாக இருந்தது.' 1942இல் கிளர்ந்தெழுந்த ஆட்சிமொழிக் கிளர்ச்சியின்போது பாவேந்தர் தீட்டிய 'தமிழியக்கம்' என்னும் நூல் தமிழ் வளர்ச்சிக்கும் ஆட்சிமொழித் துறைக்கும் கையேடு எனும்படியும், அடிப்படை வரைபடம் எனும்படியும் அமைந்தது. தமிழ் அறிந்தவர்கள்தாம் அரசுப் பணியில் ஈடுபட வேண்டும் என்று பாவேந்தர் விரும்பினார்.

**'தமிழ்க் கல்வி தமிழ்நாட்டில் கட்டாயம் என்பதொரு சட்டம் செய்ய'**

விழைந்தார் பாவேந்தர்.

வடமொழிவாணர் தமிழகம் நுழைந்த பின்னர், திட்டமிட்டுத் தமிழ்ப் பெயர்களை வடமொழியில் மாற்றி வழங்கினர். தமிழும் வடமொழியும் விரவிக் கலந்த மணிப்பிரவாளம் என ஒரு நடையைத் தோற்றுவித்துப் பயிலவிட்டனர். அப்போக்கு, மெல்ல அல்ல – விரைந்து தமிழ் சாகும் என்ற நிலையைத் தோற்றுவித்தது. அதனை எதிர்த்துத் தனித் தமிழ் இயக்கம் கண்ட மறைமலை அடிகள், வேதாசலம் என்ற தம் பெயரைத் தமிழாக்கினார். நூலஞ்சல், பதிவஞ்சல், அகவை, தொலைவரி, வானூர்தி, ஒளிப்படம் முதலிய செஞ்சொற்களை அமைத்தெழுதி மறுமலர்ச்சியை உருவாக்கினார்.

நூற் சுவடிகளிலும், புலவர் வழக்கிலும், தமிழறிஞர் நடையிலும் என, எட்டாத பரணில் தங்கியிருந்த தமிழைத் தன் எழுத்தாலும் உரையாலும் தொழிலாளர்களிடையேயும் பொது மக்களிடமும் தென்றலெனத் தவழவிட்டவர் திரு. வி. க. அவருடைய எளிய, ஆனால் உணர்வுமயமான நடை, தொழிலாளர்களிடையே தேசிய எழுச்சியைத் தூண்டியது. காங்கிரசு பேரியக்கச் செயற்குழுக் (காரிய கமிட்டி) கூட்டங்களில் அதுவரை இல்லாத வழக்கமாக உரைகளும் செயற்பாடுகளும் தமிழில் அமைய முயன்று, வென்றார். அவருடைய 'தேசபக்தன்' தமிழுக்கும் தேசியத்துக்கும் சிறந்த தொண்டாற்றியது.

நாநலம் என்னும் மேனலத்தால் தமிழகத்தைத் தட்டி எழுப்பியவர் பேரறிஞர் அண்ணா. "எங்கும் தமிழ் எதிலும் தமிழ்" என முழங்கித் தமிழ்நாட்டின் முதலமைச்சராக உயர்ந்த அண்ணா சென்னை மாகாணத்துக்குத் 'தமிழ்நாடு' என்று பெயர் சூட்டினார். செகரடேரியட் (secretariat) தலைமைச் செயலகமானது. 'சத்யமேவ ஜெயதே', 'வாய்மையே வெல்லும்' என்ற வடிவம் கண்டது. 'தமிழின் வளம் கெடாமலும் மேலும் வளருமாறும் செயல்களைச் செம்மையாக்கித் தருவது நமது கடமை' என்று அண்ணா அறிவுறுத்தினார்.

சிலம்புச் செல்வர் ம.பொ.சி., நாம் தமிழர் இயக்கம் கண்ட சி.பா. ஆதித்தனார், முன்னாள் கல்வி அமைச்சர்கள்

அவிநாசிலிங்கம் செட்டியார், சி. சுப்பிரமணியும் என அரசியலாளர்கள் நிலையிலும், டாக்டர் மு.வ., பெரியசாமித் தூரன், கீ. இராமலிங்கனார், முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ., கா.அப்பாதுரையார், தேவநேயப் பாவாணர், கோ.முத்துப்பிள்ளை எனத் தமிழறிஞர்கள் அளவிலும் தமிழ் ஆட்சியேற அரும்பாடு பட்டோர் மிகப் பலர்.

இவர்களே அன்றியும், சங்கங்களும் கழகங்களும் எனப் பல்வேறு அமைப்புகள் ஆற்றியுள்ள பணிகள் அளவிடற்கரிய பண்டைய முச்சங்கம் தொட்டு, மதுரைப் பாண்டித்துரைத் தேவரின் நான்காம் தமிழ்ச் சங்கம், கரந்தைத் தமிழ்ச் சங்கம், நாகைத் தமிழ்ச் சங்கம், தலைநகர்த் தமிழ்ச் சங்கம் போன்ற சங்கங்கள் தமிழின் வளர்ச்சிக்குப் பெருந் தொண்டாற்றியுள்ளன. இன்றும், தொண்டாற்றி வருகின்றன. இன்னும் நீதிக் கட்சிக் காலந்தொட்டு திராவிட இயக்கக் கழகங்கள் ஆட்சிப் பொறுப்புக்கு வருமுன்னரும் வந்த பின்னரும் தமிழின் உயர்வுக்கும் மாட்சிமைக்கும் தொடர்ந்து தொண்டாற்றி வெற்றியும் கண்டுள்ளன. ஐந்தாம் முறையாகத் தமிழக முதல்வர் பொறுப்பேற்ற கலைஞரும், கலைஞரின் அரசும் அவர் தலைமையில் தி.மு.கழகமும் தமிழுக்குச் செம்மொழி ஏற்பினைப் பெற்றது இணையற்ற பேறாகும்.

**விடிந்த வெளிச்சத்தில்**

1947இல் இந்தியா விடுதலை அடைந்ததும் நமக்கென ஆட்சி முறையை அமைக்கவும், ஆட்சி மொழியைத் தேர்வு செய்யவும் இந்திய அரசமைப்புப் பேரவை ஒன்று நிறுவப்பெற்றது. நடுவணரசின் ஆட்சி மொழியாக இந்தி இருக்கும் என அப்பேரவை முடிவு செய்தது. அரசமைப்புச் சட்டம் நடைமுறைக்கு வந்த 10 ஆண்டுகளுக்குள் அந்தந்த மாநிலச் சட்டமன்றத்தில் மாநிலத்தின் ஆட்சி மொழி எது என்பது பற்றிச் சட்டம் இயற்றிக் கொள்ளவும் வழிவகை செய்யப்பட்டது. இதற்கிணங்க தமிழ்நாட்டில் தமிழை ஆட்சி மொழியாக்கிட வகை செய்த தமிழ்நாடு ஆட்சி மொழிச் சட்டத்தை 1956ஆம் ஆண்டு தமிழ்நாடு சட்டமன்றம் நிறைவேற்றியது. இச்சட்டம் 1957ஆம் ஆண்டு சனவரி 23ஆம் நாள் தமிழ்நாடு அரசிதழில் வெளியிடப்பட்டு நடைமுறைக்கு வந்தது. இச்சட்டம் சட்டமன்றத்தால் நிறைவேற்றப்பட்டு முறைப்படி அரசிதழில் வெளியானதை ஒரு சிறிய விதை ஊன்றப்பட்டதற்கு ஈடாகக் கொள்ளலாம். ஆனால், ஒரு தேர்ந்த விதையைக் கட்டாந் தரையிலோ புதர் மண்டிய களர் தரிசிலோ பாறை நிலத்திலோ தூவிவிட்டு வந்து, உரிய பலனை எதிர்பார்க்க முடியாது. நிலம் வளமானதாகப் பண்படுத்தப்பட்டிருக்க வேண்டும். விதைக்கப் படுவதற்கான தேவை உணரப்பட்டிருக்க வேண்டும். வளைத்துப் போட்டுப் பாழ்படுத்தியிருப்போர் எளிதில் விட்டுத் தந்து விடுவார்களா?

**தடைகள் வழி விடுதல்**

இந்தச் சட்ட ஏற்பாடு நிறைவேறுவதற்கு முன்பிருந்தே இதற்கான கருத்தோட்டங்கள் பல்வேறு தளங்களில் முகிழ்த்துப் பல்வேறு வடிவங்களில் வெளிப்பட்டு வந்திருக்கின்றன. அம்முயற்சிகளின் நிறைவாகவே இச்சட்டம் உருவாயிற்று எனலாம். 1919ஆம் ஆண்டைய அரசியல் சட்டப்படியான இரட்டை ஆட்சி முறையின் வழி சென்னையில், தென் மாநில சட்டசபை அமைந்தது. ஐந்து மொழி உறுப்பினர்கள் கொண்ட சட்டமன்றம் பெரிதும் ஆங்கிலத்திலேயே நடைபெற்றது. மொழிப் பற்றுள்ளவர்கள் தொடர்ந்து தம் குரலைச் சட்டமன்றத்தில் ஒலித்துக்கொண்டே இருந்தனர். தமிழ் தெலுங்கு மலையாளம் கன்னடம் ஒரியா மொழி பேசும் உறுப்பினர்கள் தங்கள் தாய் மொழியில் பேச விரும்பினர். 1921இல் திரு. பி.சி. முத்துச் செட்டியார் என்ற தமிழர் முதலில் தாய் மொழியில் பேசும் உரிமையைப் பயன்படுத்திப் பேசியுள்ளார். திரு. டி. சிவசங்கரம் பிள்ளை மக்கள் பயனடையும் வகையில் சட்டங்களை வட்டார மொழிகளில் கொண்டுவரத் தீர்மானம் கொணர்ந்தார். திரு.ஏ.அரங்கநாத முதலியார் வழி மொழிய, திரு.டி.ஏ.இராமலிங்க செட்டியார் வலியுறுத்திப் பேசினார். வட்ட, நகர் மன்ற அளவில் செயற்படுத்துதற்குப் பனகல் அரசரின் ஆதரவு இருந்துள்ளது.

பின்னர், மொழி வழி மாநிலப் பிரிப்புக் கோரிக்கை தோன்றி வளர்ந்தது. தென் மாநில முதலமைச்சரா யிருந்த திரு. சி. இராசகோபாலாச்சாரியார் மொழிவழி மாநிலப் பிரிவினையை விரும்பவில்லை. இந்துஸ்தானி தான் பொது மொழி என்ற எண்ணம் கொண்டிருந்த அவர், மொழிவழி மாநிலக் கோரிக்கையைத் திசை திருப்ப, இந்தியைக் கொண்டு வந்தார். பெருத்த எதிர்ப்பினால் அவர் முயற்சி தோற்கடிக்கப்பட்டது. 1948இல் ஆட்சி மொழிக்கான எண்ணம், முன்னாள் முதல்வர் இராசகோபாலாச்சாரியாரின் கருத்துக்கு மாறாக ஓங்கிற்று. 1952இல் மக்களரசு ஏற்பட்டதும் மொழிவழி மாநிலப் போராட்டம் வெற்றி கண்டது. 1953ஆம் ஆண்டு ஆந்திரமும் அடுத்தடுத்துக் கருநாடகமும் கேரளாவும் பிரிந்தன.

கல்வி அமைச்சராயிருந்த திரு. அவினாசிலிங்கம், பள்ளிகளில் தமிழ் வளர்ச்சிக்கான புதிய திட்டங்களைச் செயற்படுத்தினார். கலைக்களஞ்சிய ஏற்பாடுகளைச் செய்து வெற்றி கண்டார். மீண்டும் திரு. சி. இராச கோபாலாச் சாரியார் முதலமைச்சரானபோது திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் தமிழ் ஆட்சி மொழியாக, முன்னோட்டத் திட்டம் தீட்டப்பட்டது. ஆட்சி மொழிக் காவலர் கீ. இராமலிங்கனார் அத்திட்டத்திற்கு ஒத்துழைப்பு நல்கினார்.

திருவாளர்கள் ம.பொ.சிவஞானம், ஏ. கஜபதி நாயக்கர், ப.ஜீவானந்தம், ஏ.சுப்பிரமணியம், ஏ.சீனிவாசன், டி.எம். நாராயணசாமிப் பிள்ளை, என். அண்ணாமலை முதலிய உறுப்பினர்கள் தமிழ் ஆட்சி மொழியாக நடைமுறைப் படுத்துவதற்காகத் தீர்மானங்களைக் கொண்டு வந்தும், வழி மொழிந்தும், வலியுறுத்தியும் அவ்வப்போது சட்டமன்றத்தில் பேசி வந்துள்ளனர். இப்படிப் பல உணர்வாளர்களாலும் செயலூக்கம் உள்ளவர்களாலும் தடைகளை உடைத்து, முட்புதர்களைக் களைந்து, ஆழக்கீறிப் பண்படுத்தப்பட்ட நிலத்திலேயே 1956ஆம் ஆண்டைய தமிழ்நாடு ஆட்சி மொழிச் சட்டம் என்ற விதை யூன்றப்பட்டது.

**தவழ் நடைகள்**

"பார்க்காத பயிரும் கேட்காத கடனும் பாழாகுமே." ஊன்றிய விதை முளையாகி வளர்கையில், பாத்தி கட்டி, நீர்பாய்ச்சி, மேலுரமிட்டுக் காத்தல் வேண்டும் அல்லவா? அந்த நோக்கத்தில்தான், தமிழ் ஆட்சி மொழிச் சட்டத்தைச்

செயற்படுத்துவதில் அரசுக்கு அறிவுரை வழங்க, ஆட்சி மொழித் திட்ட நிறைவேற்றக் குழு 1957இல் அமைக்கப் பட்டது. திரு. எஸ். வெங்கடேசுவரன் இ.ஆ.ப. அதன் தலைவராகவும் பிற உயர் அலுவலர்கள் உறுப்பினர்களாகவும் நியமிக்கப்பட்டனர். மாநிலம் முழுவதும் உள்ள அலுவலகங்களில் தமிழில் அலுவல்கள் நடப்பதை ஆய்வு செய்யவும், செயற்பாட்டிலுள்ள சிக்கல்களை நீக்கவும், மொழி பெயர்ப்புப் பணிகளை மேற்பார்வையிடவும் தனி அலுவலர் (மொழி பெயர்ப்பு), தனி அலுவலர் (ஆய்வு) என்ற பணியிடங்கள் ஏற்படுத்தப்பட்டன.

1968ஆம் ஆண்டில் ஆட்சி மொழிக் குழு என்ற இவ்வமைப்பு மாற்றியமைக்கப்பட்டுத் தமிழ் வளர்ச்சி இயக்கமாக உருக்கொண்டது. இயக்குநர் ஒருவரும் நியமிக்கப்பட்டார். எல்லாத் தொடக்கங்களும் எளிமையானவையே. மீன் சினையளவு, சிறுபழத்தொரு விதை, மாமன்னர் தன் நாற்பெரும்படையுடன் வந்து தங்கி இளைப்பாற நிழல் கொடுக்கும் பேராலமரமாக வளர்ந்து இடம் தருவதில்லையா? அதுபோலச் சிறிய அளவில் தொடக்கம் கண்ட தமிழ் வளர்ச்சி இயக்ககம் இன்று கிளை பரப்பி விழுதூன்றித் தமிழ்நாட்டின் மாவட்டம் தோறும் உதவி இயக்குநர்கள், சென்னை, சேலம், நெல்லையில் மண்டலத் துணை இயக்குநர்கள், சென்னை எழும்பூரில் தனியே தமிழ் வளர்ச்சி வளாகம், ஆய்வுப் பணிக்குச் சீருந்துகள், ஈப்புகள், கணினி இணைப்புத் தகவல் தொடர்புகள் என, அளவிலும் திறனிலும் விரிந்து வளர்ந்து ஆட்சி மொழிச் செயலாக்கத்தில் செம்பயன் விளைத்து வருகிறது.

**சீரான செலவு**

திசை மறந்து நடை பயின்றவர்களை நெறிப்படுத்தி ஒழுங்குபடுத்த வழிகாட்டுதல்கள் மட்டுமன்றிக் கட்டுப்பாடான சட்டங்களும் ஆணைகளும் தேவைப்பட்டன. ஆக்கமும் ஊக்கமும் அளிக்க வேண்டுதல் போலவே, மீறினால் கண்டனமும் தண்டனையும் கிட்டும் என்ற அச்சமும் தேவைதான். அப்படிப் பல அரசாணைகள் பிறப்பிக்கப்பட்டு ஆட்சி மொழித் திட்டம் நிறைவேற்றப்பட்டு வருகிறது. தமிழை அலுவல் மொழியாகச் செம்மையாய்ப் பயன்படுத்தும் பொருட்டுப் பல கருவிகள் உருவாக்கித் தரப்பட்டுள்ளன. அவை:

1. ஆட்சிச் சொல்லகராதி நிருவாகப் பயன்பாட்டில் இருந்து வந்த ஆங்கில / பிற மொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்ச் சொற்களை மொழி பெயர்த்தும், புதியனவாகக் கலைச் சொற்களைப் படைத்தும், அலுவலக நடைமுறைகளில் ஒரு சீர்மைத்தாகப் பயன்படுத்த வாய்ப்பாக 'ஆட்சிச் சொல்லகராதி' உருவாக்கி அரசு செலவில் வெளியிடப்பட்டு எழுத்தர்களுக்கும் அலுவலர்களுக்கும் வழங்கப்பட்டது. மேலும், பல புதியன புகுத்தி மறுபதிப்புகளும் வந்துகொண்டுள்ளன.

2. சிறப்புச் சொல்லகராதிகள் : பொதுவில் எல்லா அலுவலகங்களில் பயன்படும் சொற்களன்றித், துறைகள் தோறும் அவ்வத் துறைக்கென்றே பயன்படும் சிறப்புச் சொற்கள் பல உள்ளன. அத்தகு 15000க்கும் மேற்பட்ட கலைச் சொற்களைத் திரட்டி 74 துறைகளுக்குரிய சிறப்புச் சொல்லகராதிகளை உருவாக்கி அவ்வத்துறையின் தனிப் பயன்பாட்டுக்கு வழங்கப்பட்டுள்ளது.

3. பணியில் இருந்த தமிழ்த் தட்டச்சு அறியாத தட்டச்சர்கள் தமிழில் தட்டச்சு பயில, பயிற்சி மையம் அமைத்துப் பயிற்சி அளிக்கப்பட்டது. அடுத்து, தனியார் பயிற்சி நிலையங்களில் தமிழ்த் தட்டச்சு பயின்று கொள்ள ஊக்கத் தொகை வழங்கப்பட்டது. அடுத்த நிலையில், பணி நியமனம் செய்வதற்கே தமிழ்த் தட்டச்சுப் பயிற்சி ஒரு தகுதியாக நிருணயிக்கப்பட்டது.

4. அலுவலகங்களில் இருந்த ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகள் படிப்படியாக விலக்கிக் கொள்ளப்பட்டுப் புதிதாக தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் வழங்கப்பட்டன. பல நிறுவனத் தட்டச்சுப் பொறிகளின் மாறுபட்ட தன்மைகளை நீக்கி ஒரே தரமான தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் வழங்க ஏற்பாடு செய்யப்பட்டன. இன்று அனைத்துமே கணினிமயமாக்கப் பட்டுள்ளன.

5. தொடக்க காலத்தில் தமிழ் அறியாத எழுத்தர்களும், அலுவலர்களும் தமிழில் தகுந்த மொழி அறிவு பெறப் போதிய கால அளவும் பயிற்சிகளும் அளிக்கப்பட்டன.

அவ்வாறே, மூவாண்டு முனைப்புத் திட்டம் வகுத்து வருவாய்த் துறை, வேலை வாய்ப்புத் துறை முதலிய 8 துறைகளில் சார்நிலை அலுவலகங்களின் அலுவல்கள் தமிழ் நடைமுறைக்குக் கொண்டுவரப்பட்டன. அடுத்த நிலையில், காவல் துறை வணிகவரித் துறை முதலிய மேலும் 5 துறை அலுவல்கள் தமிழ்ச் செயற்பாட்டுக்குக் கொண்டு வரப்பட்டன. பின்னர், ஏனைய துறைகளிலும் மாவட்ட அளவில் தமிழ் ஆட்சி மொழித் திட்டம் செயலாக்கப்பட்டது.

துறைத் தலைமை அலுவலகங்களைப் பொறுத்த வரையில் நான்கு நிலைகளில் செயல் திட்டம் வகுக்கப்பட்டது:

(1) முதல் நிலையில் பொது மக்களுக்கு எழுதப்படும் அனைத்துக் கடிதங்கள் தமிழில் வரைதல் வேண்டும்.

(2) இரண்டாம் நிலையில் சார்நிலை, மாவட்ட அலுவலகங்களுக்கு அனுப்பப்படும் கடிதங்களில் தமிழ் பயன்படுத்தப்படல் வேண்டும்.

(3) பிற துறை அலுவலகங்களுக்குத் தமிழில் கடிதங்கள் எழுதப்பட வேண்டும்.

(4) நான்காம் நிலையில் அரசுச் செயலகத் துறைகளுக்கு எழுதப்படும் கடிதங்களில் தமிழ் பயன்படுத்தப்பட வேண்டும்.

இத்தனை மட்டங்களில் தமிழ் அலுவல் மொழியாகச் செயற்படுத்தப்படுகிறது என்ற நிறைவின் ஊடே தலைமைச் செயலகத்தின் பல துறைகளில் ஆட்சி மொழித் திட்டம் இன்று முழு வீச்சில் நடைபெற்று வருகிறது.

இன்னும், தந்தை பெரியார் தம் இதழியல் பட்டறிவால் வெளியிட்ட தமிழ் எழுத்துச் சீர்திருத்தத்தைத் தமிழக அரசு ஏற்றுக்கொண்டு தமிழ் வளர்ச்சித் துறை வாயிலாக நடைமுறைப்படுத்தியுள்ளது. இச்சீர்திருத்தம் இன்றைக்கு நிலைபெற்று அரசு அலுவலகங்களையும் தாண்டிப் பொதுமக்கள் எழுது முறையிலும், நூல்கள் வெளியிடலிலும், இதழ்ப் பணிகளிலும் பெருவழக்காயிற்று. இது, தமிழ் வளர்ச்சி இயக்கக மகுடத்தில் பதித்த ஒரு வெற்றிச் சின்னம் என்றே கருதலாம்.

மேலும், பல நிலைகளில் உள்ள எல்லா அலுவலகங்களிலும் தமிழ்ப் பயன்பாட்டினை ஆய்வு செய்தல், கருத்தரங்குகள் நடத்துதல், துறைகளின் நடைமுறை நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்தல், நிலையான படிவங்களைத் தமிழில் வடிவமைத்தல், அரசு அலுவலர்களுக்கான புத்தாக்கப் பயிற்சி வகுப்புகளில் பங்கு கொண்டு ஆட்சி மொழி விளக்கங்கள் அளித்தல், சிறந்த வரைவுகள் எழுதுவோருக்குப் பரிசளித்தல் எனப் பல திட்டங்களை இயக்ககம் நடைமுறைப்படுத்தி வருகிறது.

அரசு அலுவலகங்கள் மட்டுமன்றி, பொதுமக்கள் நலன் கருதி உருவாக்கப்பட்ட வாரியங்கள், கழகங்கள், ஆணையங்கள், கூட்டுறவு இணையங்கள், மாநகராட்சிகள் போன்ற தன்னாட்சி நிறுவனங்களிலும் ஆட்சி மொழித் திட்டம் செயற்படுத்தும் முனைப்பினையும் கொண்டுள்ளது நமது அரசு. இன்று மாவட்டங்கள் தோறும் பயிலரங்குகள், கருத்தரங்குகள் நடத்தப்பட்டுவருகின்றன.

விதையூன்றி முளைவிட்ட 'ஆட்சித் தமிழ்', தமிழ் வளர்ச்சி இயக்ககத்தின் முனைப்பான திட்டங்களால், நல்லுரமிட்டுக் கவனமாகப் பாதுகாக்கப்பட்டுச் செழிப்பான பயிராக வளர்ந்து பூத்தும் காய்த்தும் கனிந்தும் வளம் தருவதைக் காண்கிறோம்! இங்கேதான் கூடுதல் விழிப்புத் தேவை. விளைந்த கதிர்மணிகள் வீடுவந்து சேர வேண்டுமே! மக்கள் பயன் பெறுதல்தானே இறுதி இலக்கு. தவழ்கிற குழந்தையைத் தூக்கிச் செல்லலாம். தத்தி நடக்கிற மழலையைக் கைலாகு கொடுத்து நடை பயில்விக்கலாம். துள்ளிக் குதிக்கிற சிறுவனை அறிவுறுத்தி நெறிப்படுத்தலாம். ஆனால், வளர்ந்து பெரியவனான இளைஞனுக்கு எந்நேரமும் துணை சென்று கொண்டிருக்க இயலுமா? அவனே பொறுப்பாக நடந்துகொள்ள வேண்டும். எனினும் நம் கண்காணிப்புத் தளர்ந்து விடக்கூடாது.

**தளர்ச்சி நீங்கி விரைக**

வெள்ளையர் ஆட்சியில் ஆங்கிலம் அலுவல் மொழியாக இருந்த காலத்தில் பொது மக்கள் தள்ளிவைக்கப்பட்டு ஒடுக்கி வைக்கப்பட்டிருந்தனர். அரசுப் படிக்கட்டு அவர்களுக்கு எட்டாத உயரத்தில் இருந்தது. நாடு விடுதலை அடைந்த உடனடிக் காலத்தில் தமிழ் அலுவல் மொழியாக மக்களுக்கு அரசு அலுவலகங்கள் அண்மையாயின. தப்பும் தவறுமாகவேனும் அவர்கள் அலுவலகங்களுக்குக் கடிதம் எழுதத் தலைப்பட்டனர். தந்தி வந்தால் அழுது ஒப்பாரி வைத்த ஆங்கிலக் கல்வியற்ற மக்கள், தமிழில் ஒரு கடிதம் வந்ததும் படித்துப் பதில் எழுதுகிறார்கள்.

அரசு அலுவலகங்கள் அல்லாமல் தனியார் நிறுவனங்களில் வேலை வாய்ப்புகள் மிகப் பெருகி அவை ஆங்கிலக் கல்வி பெற்றவர்களை இருகரம் நீட்டி ஏற்றுக் கொள்கின்றன. ஆட்சி மொழித் திட்டச் செயலாக்கத்தில் தோன்றும் சிக்கலை நோக்குங்கால், சிலம்புச் செல்வர் ம.பொ. சி. அவர்களின் கூற்று இன்றும் பொருந்துகிறது. "தமிழில் ஆட்சிமொழிச் சட்டம் முழுமையாக அமல்படுத்தப்பட வேண்டுமானால் முதலில் கல்லூரிகளில் பட்டப்படிப்பில் தமிழ் பயிற்று மொழியாக்கப்பட வேண்டும். இரண்டாவது, உயர் அதிகாரிகள் தமிழ் படித்தவர்களாக மட்டுமல்லாமல் தமிழின் மூலம் படித்தவர்களாகப் பட்டம் பெற்றவர்களாக இருக்க வேண்டும்". ஆட்சி மொழிச் செயலாக்கத்திற்கு மாநில சுயாட்சி மத்தியில் கூட்டாட்சி முறை தேவை என்னும் நோக்கில் சிலம்புச் செல்வர் கூறுவது பொருத்தமாக உள்ளது.

"இந்தக் கோப்புகள் எல்லாம் டெல்லி வரை போய் வருகின்றன. அங்கு வேற்று மொழியாளர் கைக்குப் போகிற இந்தக் கோப்புகளில் தமிழ் இருக்குமானால் இதிலும் சிக்கல்கள்தான் ஏற்படும். இது மிகப் பெரும் தடை. ஆகவே பாதுகாப்பு, போக்குவரத்து, அயல்நாட்டுறவு, சுங்கம் போன்ற சில ஐந்தாறு இலாகாக்களை மத்தியில் வைத்துக்கொண்டு மற்ற இலாகாக்களை மாகாணங்கள் வைத்துக் கொள்ளாவிட்டால் தமிழை ஆட்சி மொழியாக்கி முழுமைப்படுத்துவதற்குத் தடை இருக்கத்தான் செய்யும்."

முத்தமிழ்க் காவலர் கி.ஆ.பெ. விசுவநாதம் அவர்களும் தமிழ் வழிக் கல்வி வேண்டும் என்றே வலியுறுத்துகிறார். "எல்லா நிலைகளிலும் தமிழ்தான் பயிற்று மொழியாக இருக்க வேண்டும்" என்று ஐராவதம் மகாதேவன் அவர்களும் கருத்துரைக்கிறார்.

ஆனால், இன்றைக்குக் கல்வி என்பது ஆங்கில வழிக் கல்வியைக் குறிப்பதாகவே, அதனை வலுப்படுத்துவதாகவே இருக்கிறது. ஆங்கிலக் கல்வி பயின்று கணினிப் பணி, பொறியியல் பணி, வங்கிப் பணி முதலியன ஏற்பவர்கள் முதல்தர மக்களாகவும், தமிழ் வழி பயின்று எழுத்தர் பணியேற்போர் இரண்டாம் தர மக்களாகவும் ஆகி, இன்னொரு ஆங்கில வல்லாண்மைக்கு ஆட்படுகிறோமோ என்ற அச்சம் மேலோங்குகிறது. தமிழக அரசின் சமச்சீர் கல்வி முறை இத்தகு அச்சத்தைப் போக்கும் என்பது நம் துணிபு. அண்ணா பல்கலைக்கழகம் பொறியியலைத் தமிழ்வழி கற்பிக்கும் என்ற செய்தி தேனாய் இனிக்கிறது. இம் முயற்சி தொடர்க. முளைத்துச் செழித்து வளர்ந்த ஆட்சித் தமிழ் என்னும் பயிர் முதிர்ந்த நெல்மணிக் கதிர்களாகவும், சுவை ததும்பிப் பழுத்த கனிகளாகவும் விளைந்து உள்ளன. அவற்றைப் பயன்கொள்ளும் மக்களும், பரிமாறும் பணியாளர்களும் தமிழ்ப் பசி உணர்வாளர்களாக இருந்தால் மட்டுமே இத்திட்டம் வெற்றி பெற்றதாகும். அவர்கள் தமிழுணர்வு பெறத், தமிழ் வழிக் கல்வியை முழுவீச்சில் அளித்தலே சிறந்த சீரிய வழி என்று நல்லோர் வழி நின்று நாமும் நவில்கிறோம்.

நல்லிசையில், நாநடைப் பேச்சில், எழுத்தில், வழிபடலில், பொதுவாகச் சொன்னால் மக்கள் நெஞ்சங்களில் தமிழ் ஆட்சி செய்தால், ஆட்சித் தமிழ் விரைந்து நிமிர்ந்தோங்கி, நிறைந்து நலம் பயக்கும். தமிழாய்ந்த தமிழ் மகன் முதலமைச்சர் முத்தமிழறிஞரின் அரசாணைகள் – சட்டங்கள் – ஊக்குவிப்புகள் என்னும் தமிழ் வளர்ச்சி இயக்ககச் செயல்திட்டங்கள் ஒரு கரையாகவும், பணியாளர்கள் பயனாளிகள் பொது மக்கள் தமிழார்வலர் ஆகியோரின் – நுகர்வுப் பசி இன்னொரு கரையாகவும் அரண் செய்ய 'ஆட்சித் தமிழ்' என்னும் பொங்கு நன்னீர் அருவி நீ 'நடப்பாய் வாழி' என வாழ்த்துவோம். ❖

# கலைச் சொல்லாக்கம்

பேராசிரியர் இலக்குவனார் மறைமலை



## முன்னுரை

அற்றைப் புதிதான அறிவியற்புனைவுகளும் அவற்றிற்கு அடிப்படையாக அமையும் புத்தம் புதிய கோட்பாடுகளும் நாளும் தோன்றிக் கொண்டே உள்ளன. பல்வேறு நாடுகளில் முகிழ்த்தெழும் இக் கண்டுபிடிப்புகளை பல்வேறு மொழிகளின் வழி அறியும் வாய்ப்பினைப் பெற்ற அறிஞர் பெருமக்கள் இவற்றைத் தமிழிலே எடுத்துரைக்கும்போதுதான் கல்வி வளர்ச்சியும் அறிவு மலர்ச்சியும் சிறந்தோங்கும். இப் பணி வெற்றி பெறப் புதிய சொல்லாக்கங்கள் உரிய அடித்தளம் அமைக்கும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

ஆங்கிலேயர் ஆட்சியில், கல்வி வாய்ப்பு பரவலாக்கப்பட்ட சூழலில், தொழிற்புரட்சிக்குப் பிந்தைய அறிவியல் எழுச்சிக் காலத்தில் சொல்லாக்கத்தின் தேவை பெரிதும் உணரப்பட்டது. தமிழில் சொல்லாக்க முயற்சிகளின் வரலாற்றினைத் தொகுத்துரைப்பது இக்கட்டுரையின் நோக்கமன்று. எனினும் ஆங்கில மருத்துவத்தைத் தமிழிலே கற்பிக்க முனைந்த அமெரிக்க மருத்துவர் ச.பி. கிறீன் தமிழ்க்கலைச் சொல்லாக்க முன்னோடி என்பதும், மனோன்மணீயம் பெ. சுந்தரம்பிள்ளை, பாரதியார், பா.வே. மாணிக்கநாயகர், பரிதிமாற்கலைஞர், இராசாசி, புலவர் இ.மு. சுப்பிரமணியப் பிள்ளை, வையாபுரிப் பிள்ளை முதலான அறிஞர் பலரின் சொல்லாக்கச் சிந்தனைகள் முன்மையும் முதன்மையும் வாய்ந்தன என்பதும் குறிப்பிடத்தக்கன. புலவர் இ.மு. சுப்பிரமணியப் பிள்ளையால் நிறுவப்பட்டுச் செயலாற்றி வந்த சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தின் பணி பெரிதும் சொல்லாக்க முயற்சிகளுக்கு ஊக்க ஊற்றாகவும், உந்து ஆற்றலாகவும் விளங்கியது. 20.9.1936இல் தமிழ்க் கலைச் சொல்லாக்க மாநாடு நடத்தித் தமிழ்க் கலைச் சொல்லாக்க முயற்சிகளுக்குக் கால்கோள் நிறுவிய இவ்வமைப்பு அக் காலத்தில் அரசு வெளியிட்ட கலைச்சொற்களில் காணப்பட்ட மொழிக்கலப்பு, இலக்கண வழு ஆகியவற்றைக் களைந்து இனிமையும் எளிமையும் வாய்ந்த சொற்களைப் பரிந்துரைத்து வெற்றியும் கண்டது. எடுத்துக்காட்டாக 1932ஆம் ஆண்டு அரசு வெளியிட்ட கலைச்சொற் பட்டியலிலிருந்து சில சொற்களையும் அதற்கு மாற்றாகச் சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கம் பரிந்துரைத்த சொற்களையும் காண்போம்:

| ஆங்கிலக் கலைச்சொற்கள் | 1932இல் அரசினர் வெளியிட்ட கலைச்சொற்கள் | சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தார் வெளியிட்ட கலைச்சொற்கள் |
|---|---|---|
| Census | குலஸ்திரீ புருஷ பாலவிருத்த ஆயவ்ய பரிமாணம் | குடிமதிப்பு |
| Electrolysis | வித்யுத் விஸ்லேஷணம் | மின்பகுக்கை |
| Nitrate | பாக்கியமிகஜம் | காலகை |
| Oxygen | பிராணவாயு | தீயகம் |
| Hydrogen | அப்ஜனகம் | நீரகம் |
| Latent Heat | அந்தர்ய உஷ்ணம் | மறைகனல் |
| Disinfectant | பூதிநாசினி | நச்சுநீக்கி, தொற்றுநீக்கி |
| Excretory organs | விசர்ஜன இந்திரியங்கள் | கழிவுறுப்புகள் |
| Spinal cord | கசேருலதை | முதுகு நடுநரம்பு |
| Tendon | ஸநாயு | தசைநார் |
| Evaporation | பரிசோஷணம் | ஆவியாதல் |

தமிழ்ச் சொல்லாக்க முயற்சியில் மொழிக் கலப்பும் இலக்கண வழுவும் நீக்க வேண்டும் என்பதற்காக அக்காலத்தில் பெரிய போராட்டமே நடத்த வேண்டியிருந்தது என்பதனைச் சுட்டிக்காட்டவே இவ்வெடுத்துக்காட்டு வழங்கப்பட்டுள்ளது. மொழியியல் ஞாயிறு தேவநேயப்பாவாணர், கீ. இராமலிங்கனார், கா. அப்பாத்துரையார் முதலான தமிழ் மறுமலர்ச்சி யாளரும், பெ.நா. அப்புசாமி, பெரியசாமித்தூரன், பொ. திரிகூடசுந்தரனார் முதலான அறிவியல் கட்டுரையாளரும் முனைந்து பாடுபட்டதன் பலனாகத் தமிழ்நாட்டில் கலைச்சொல்லாக்க முயற்சி எழுச்சி பெற்று வளர்ந்தது.

**சொல்லாக்கம் - வரையறை**

இதற்கு முன் வழக்கிலில்லாத புதிய பொருளைக் குறிக்கும் வகையில் ஒரு சொல் மற்றொரு சொல்லுடன் இணைந்தோ அல்லது முன்னொட்டுகளையோ பின்னொட்டுகளையோ பெற்றோ புதிய சொல் உருவாக்கப்படுவதே சொல்லாக்கம் எனப்படுகிறது. இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட சொற்கள் இணைவதும், இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட ஒட்டுகள் இணைவதும், ஒரு சொல்லிலேயே முன்னொட்டும் பின்னொட்டும் இணைந்து வருவதும், ஒரு சொல்லின் குறுக்கம் அல்லது ஒரு தொடரிலமைந்துள்ள சொற்களின் முதலெழுத்துகள் இணைந்த மற்றொரு புதிய சொல்லாகவே வழங்கி வருவதும், வழக்கிலிருக்கும் ஒரு சொல்லின் ஒலியமைப்பைப் பின்பற்றிப் பிறிதொரு சொல் உருவாக்கப்படுவதும், இதுபோன்ற பிற உத்திகளும் சொல்லாக்க நெறிமுறைகள் எனப்படும். இவ்வடிப் படையில் நம் வரையறையை அமைக்கலாம்.

ஒரு புதிய பொருளில் ஒரு புதிய சொல்லை உருவாக்கி வழங்குவது சொல்லாக்கம் எனப்படும். அச்சொல் உருவாகுதற்குக் காரணமாய் விளங்கும் உத்தி அல்லது வழிமுறைச் சொல்லாக்க நெறிமுறை எனப்படும். சொல்லாக்கங்களுக்கு அடிப்படையாக விளங்கும் சொல்லாக்க நெறிமுறைகளைக் கண்டறிந்து அவற்றின் அடிப்படையில் பல்வேறு சொல்லாக்கங்கள் பெருகுதற்கு வழிவகுக்கும் அறிதுறையே சொல்லாக்கவியல் ஆகும்.

**சொல்லாக்கம் : வகைப்பாடு**

ஒட்டுவழிச் சொல்லாக்கம், தொகைச் சொல்லாக்கம், கூட்டுச் சொல்லாக்கம் என முப்பெரும் பிரிவுகளாகச் சொல்லாக்க நெறிமுறைகளை வகைப்படுத்தலாம். (இவ்வகைப்பாட்டில் அடங்காத ஏனைய சிறுபான்மைச் சொல்லாக்கங்கள், இக் கட்டுரையின் பிற்பகுதியில் 'ஏனைய சொல்லாக்கங்கள்' எனும் துணைப் பிரிவில் ஆயப்பட்டுள்ளன.)

**ஒட்டுவழிச் சொல்லாக்கம்**

தனித்துநின்று பொருள் பயவாமல் தான் சார்ந்து நிற்கும் சொல்லின் பொருளில் மாறுபாடு தோற்றுவிக்கும் செயலைச் செய்வதே 'ஒட்டு' என வழங்கப்பெறும். ஒரு சொல்லின் முன் சார்ந்து அல்லது ஒட்டி அச்சொல்லின் பொருளில் மாற்றத்தை ஏற்படுத்துவது முன்னொட்டு எனவும், இதுபோலவே சொல்லின் பின்சார்ந்து அல்லது ஒட்டி அதன் பொருளில் மாற்றத்தை ஏற்படுத்துவது பின்னொட்டு எனவும் வழங்கப் பெறும். ஏற்கெனவே வழக்கில் உள்ள சொற்களுடன் முன்னொட்டு அல்லது பின்னொட்டு ஒன்றோ பலவோ சேர்ந்து புதிய பொருள் பயக்கும் புதிய சொற்களை உருவாக்கும் நெறிமுறையே ஒட்டுவழிச் சொல்லாக்கம் எனப்படும்.

**முன்னொட்டு வழிச் சொல்லாக்கம்**

அசந்தப்பம், அனாவசியம், துரதிருஷ்டம், துஷ்பிரயோகம், நிசப்தம், நிராசை ஆகிய வடசொற்களில் வரும் அ, அன், துர், துஷ், நி, நிர் ஆகியவை தமக்கெனத் தனித்த செயற்பாடு இல்லாமல் சொல்லைச் சார்ந்தே இயங்க வேண்டிய நிலையில் உள்ளமையால் முன்னொட்டுகள் என அறுதியிட்டுரைக்கும் பான்மைய வாய் உள்ளன. ஆயின், தமிழில் முற்றிலும் சார்ந்து இயங்க வேண்டிய நிலையில் அமைந்துள்ள முன்னொட்டுகள் மிகமிகக் குறைவே.

நக்கீரன், நச்செள்ளை, நப்பசலை, நப்பின்னை, நப்பூதன் ஆகிய சொற்களில் வரும் 'ந' தெள்ளத் தெளிவாக முன்னொட்டு எனக் கூறும் வகையிலேயே அமைந்துள்ளது. அஃறிணை, அல்வழி, அன்மொழி என்னும் சொற்களில் அல் என்னும் எதிர்மறை முன்னொட்டு இடம் பெற்றுள்ளது.

தனித்து நின்றால் 'இலக்குமி, கண்டாரால் விரும்பப் படும் தன்மை, செல்வம்' என்னும் பொருள்களைப் பயக்கும் 'திரு' என்னும் சொல் கடவுள், சமயம் தொடர்பான பெயர்களுடன் தெய்வத் தன்மையைக் குறிக்கும் முன்னொட்டாகச் செயற்படுகிறது. இத்தகைய முன்னொட்டுகளை இற்றைச் சொல்லாக்கத்தில் காணல் அரிது.

முன்னேற்றம், கீழ்ப்படி, வழிமொழிதல் ஆகிய சொற்களில் இடம் பெற்றுள்ள முன், கீழ், வழி ஆகிய சொற்களை முன்னொட்டுகளாகவே கொள்ளலாம். எனினும் இவை தனித்து நின்று பொருள் வழங்குவதனால் இவற்றைச் சொற்கள் என்றே கருதவேண்டும் என்னும் கருத்தும் நிலவுகிறது. மீண்டும் மீண்டும் பயன்படுத்தப் பெற்றுப் பல்வேறு சொற்கள் உருவாகுதற்குக் காரணமாக விளங்கும் இடைச்சொற்களை ஒட்டுகளாகவே கருத வேண்டும். கால ஓட்டத்தில் ஏற்பட்ட வளர்ச்சியாக இதனைக் கருதுவதே குழப்பத்தைப் போக்க வழி வகுக்கும் எனலாம்.

| | | |
|---|---|---|
| முன் ஆய்வு | முன் தணிக்கை | முன் விசாரணை |
| முன் இருப்பு | முன் பணம் | முன்னேற்பாடு |
| முன் உசாவல் | முன் பற்று | முன்னிகழ்ச்சி |
| முன் ஒப்பளிப்பு | முன் மதிப்பீடு | முன்னுரிமை |
| முன் கோப்பு | முன் மரபு | |
| முன் தகவல் | முன் முடிவு | |

என்னும் சொற்களை உருவாக்கத் துணை புரிந்து இன்னும் இதுபோலப் பல்வேறு சொற்களை உருவாக்க உறுதுணை பயக்கும் 'முன்' என்பதனை இச் சொல்லாக்க நெறிமுறையைப் பொறுத்தவரை ஒட்டு எனக் கருதுதல் பிழையன்று.

இதுபோலவே இணை ஆணையர், துணைப் பதிவாளர், சார் பதிவாளர் ஆகிய சொற்களில் இடம் பெறும் இணை, துணை, சார் ஆகியவற்றை இச் சொல்லாக்க நெறிமுறையைப் பொறுத்தவரை முன்னொட்டுகள் எனக் குறிப்பிடலே பொருத்தமாகும்.

**பின்னொட்டு அல்லது விகுதி வழிச் சொல்லாக்கம்**

இடைநிலை, விகுதி ஆகியவை ஒரு சொல்லின் எண், இடம், காலம், திணை, பால் ஆகியவற்றை மாறுபடுத்திக் காட்டத் துணை புரிவன ஆகும். இவற்றை இலக்கணப் பின்னொட்டுகள் என்பர்.

சொல்லாக்கப் பின்னொட்டுகள் அல்லது சொல்லாக்க விகுதிகள் ஒரு சொல்லிலிருந்து முற்றிலும் வேறுபட்ட புதிய சொல்லை உருவாக்கத் துணை புரியும்.

எ-டு. செயல்.......... செயலாளர்

நடத்து..........நடத்துநர்

வீடு.... வீட்டுக்காரன்

சொல்லாக்க விகுதிகளை அவை சேரும் சொற்களை அடிப்படையாகக் கொண்டு

1) பெயருடன் சேரும் விகுதிகள்
2) வினையுடன் / எச்சத்துடன் சேரும் விகுதிகள்
3) பெயருடனும் வினையுடனும் சேரும் விகுதிகள்

என்று மூவகையாகப் பிரிக்கலாம்.

அவற்றால் உருவாக்கப்படும் சொற்களின் தன்மையை அடிப்படையாகக் கொண்டு சொல்லாக்க விகுதிகளைப் பின்வருமாறு வகைப்படுத்தலாம்.

1) ஆண்பால், பலர்பால், இருபாற்பொதுப் பெயராக்க விகுதிகள்
2) பொருட்பெயராக்க விகுதிகள்
3) இடப்பெயராக்க விகுதிகள்
4) தொழிற்பெயராக்க விகுதிகள்

**தொகைச் சொல்லாக்கம்**

தமிழிலக்கண மரபு நெறியில் இருபெயர்த்தொகைச் சொல்லமைப்பிலும் பல்பெயர்த்தொகைச் சொல்லமைப்பிலும் சொற்கள் உருவாக்கப்படுகின்றன.

**அ) இருபெயர்த்தொகைச் சொல்லாக்கம்**

எ-டு: மகரந்தப்பை (வேற்றுமைத் தொகை)

மணல் மேடு (வேற்றுமைத் தொகை)

மரஎண்ணெய் (வேற்றுமைத் தொகை)

கருங்கல் (பண்புத் தொகை)

எழுதுபொருள் (வினைத்தொகை)

வரவுசெலவு (உம்மைத்தொகை)

இருபெயர்த் தொகைச் சொல்லாக்கத்தில் தொகைச் சொல்லின் உறுப்புச் சொற்களாக அமைவன,

பெயர்+பெயர் அல்லது

வினையடி+பெயர் என இருவகைப்படும்.

இவ்வமைப்பை ஆழ நோக்கினால் பின்வரும் முறைகளில் இருபெயர்த் தொகைச் சொற்கள் அமைகின்றன எனலாம்.

தனிச்சொல் + தனிச்சொல் (பாசனத் திட்டம்)

தனிச்சொல் + ஒட்டுவழிச்சொல் (மாதிரி வடிவமைப்பு)

ஒட்டுவழிச் சொல் + ஒட்டுவழிச் சொல் (பங்கீட்டு அலுவலர்)

தனிவினையடி + பெயர் (எரிபொருள்)

கூட்டுவினையடி + பெயர் (கருவுறுவீதம்)

**ஆ) பல்பெயர்த் தொகைச் சொல்லாக்கம்**

பல்பெயர்த் தொகைச் சொற்கள் பின்வருமாறு அமைகின்றன.

1) தொகைச் சொல் + பெயர்ச் சொல் (நெளிகுழாய்த் துடைப்பான்)
2) தொகைச் சொல் + தொகைச் சொல் (உறிஞ்சு குழாய்த் திருகுகோல்)
3) பெயர்ச் சொல் + பெயர்ச் சொல் + பெயர்ச் சொல் (வட்டாரப் போக்குவரத்து அலுவலர்)
4) தொகைச் சொல் + பெயர்ச் சொல் + பெயர்ச் சொல் (எழுதுபொருள் கோப்பு அட்டை)
5) பெயர்ச் சொல் + தொகைச் சொல் + பெயர்ச் சொல் (வாடகை மிதிவண்டி நிலையம்)

இரண்டு தனிச்சொற்கள் இணைந்தோ, இரண்டு ஒட்டுவழிச் சொற்கள் இணைந்தோ, ஒரு தனிச் சொல்லும் ஒட்டுவழிச் சொல்லும் இணைந்தோ இருபெயர்த் தொகைச் சொற்கள் உருவாகின்றன.

இரண்டுக்கு மேற்பட்ட தனிச்சொற்கள் இணைந்தோ, இரண்டுக்கு மேற்பட்ட ஒட்டுவழிச் சொற்கள் இணைந்தோ, ஒரு தொகைச் சொல் மற்றொரு தொகைச் சொல்லுடன் இணைந்தோ, ஏனைய சொல்லாக்கங்களுடன் இணைந்தோ பல்பெயர்த் தொகைச் சொல் உருவாகின்றது.

இங்ஙனம் தொகைச் சொல்லாக்கத்தின் வழி, பல்வேறு அறிதுறைகளில் எண்ணற்ற சொல்லாக்கங்கள் தோன்றிச் சொற்கோவையை விரிவுபடுத்தி வருகின்றன.

### கூட்டுச் சொல்லாக்கம்

ஒட்டுவழிச் சொல்லாக்கம், தொகைச் சொல்லாக்கம் எனும் இரண்டனுள் பொருத்திப் பார்க்க இயலாவண்ணம் மாறுபட்ட நெறியிலமைந்த சொல்லாக்கம் கூட்டுச் சொல்லாக்கம் எனப்படும். இவ்வமைப்பில் எச்சச் சொற்கள் பெயர்ச் சொற்களுடன் சேர்ந்து உருவாகும் சொற்களும் பெயர்ச்சொற்கள் வினையடிகளுடனும் 'இ'கர விகுதியுடனும் சேர்வதனால் உருவாகும் சொற்களும் அடங்கும்.

எ–டு: கூட்டுச்சேராக் கொள்கை
வட்டியில்லாக் கடன்
ஈட்டா விடுப்பு
எதிர்பாராச் செலவுக் கணக்கு
அரசிதழ் பதிவுறா அலுவலர்
நாளமில்லாச் சுரப்பி
கிருமிகொல்லி
நீர்விசை அழுத்தி

### ஏனைய சொல்லாக்கங்கள்

குறைத்துமொழிச் சொல்லாக்கம், முதலெழுத்துச் சுருக்கம், கடன் நீட்சி, கடன் ஒட்டு (கடன் கலவை), குறிப்பு வினையாலணையும் பெயர்கள் முதலிய சிறுபான்மைச் சொல்லாக்க நெறிகளும் சொல்லாக் கங்கள் பெறப் பயன்படுகின்றன.

### குறைத்துமொழிச் சொல்லாக்கம்

முழுச் சொல்லைக் குறைத்துக் குறுக்கி அந்தக் குறுக்கத்தையே முழுச் சொல் போலப் பயன்படுத்தும் நெறியினைக் குறைத்து மொழிச் சொல்லாக்கம் என்பர்.

எ–டு: அகநானூறு.......அகம்
புறநானூறு.........புறம்

மின்சாரம் என்னும் முழுச் சொல்லின் பொருளை 'மின்' என்னும் சொல்லாலேயே குறித்துவிடலாம்.

எ–டு: மின் அடுப்பு, மின் அமைப்பு, மின் அழுத்தம், மின் ஆய்வு, மின் இணைப்பு, மின் கம்பி இத்தகைய சொல்லாக்கங்கள் ஆங்கிலத்தில் செல்வாக்குப் பெற்றுள்ள அளவு தமிழில் செல்வாக்குப் பெறவில்லை.

### முதலெழுத்துச் சொல்லாக்கம்

பல்பெயர்த் தொகைச் சொற்களின் முதலெழுத்துகளின் சேர்க்கையே நாளடைவில் ஒரு சொல் போல ஆளப்படுவதே முதலெழுத்துச் சொல்லாக்கம் எனப்படும்.

திரு.வி.க., மு.வ., ஈ.வெ.ரா. என நாடறிந்த சான்றோர்களின் பெயர்களும், தி.க., தி.மு.க., அ.தி.மு.க., என இயக்கங்களின் பெயர்களும் முதலெழுத்துச் சொல்லாக்கம் பெற்று வழங்குகின்றன. ஆயின் இ.ஆ.ப. (இந்திய ஆட்சிப் பணிமம்) என்றோ இ.கு.ச. (இந்தியக் குற்றவியல் சட்டம்) என்றோ மி.வா. (மின்சார வாரியம்) என்றோ வழங்கப் பெறுவதில்லை.

### கடன் நீட்சி

கடன் பெறும் மொழியில் ஏற்கெனவே உள்ள சொல்லுக்குப் புதிய பொருளைக் கற்பித்து வழங்குதலே கடன்நீட்சி எனப்படும்.

எ–டு: Matron ... மூதாய்
Nurse ... செவிலி
Division ... கோட்டம்
Board ... வாரியம்

### கடன் ஒட்டு (கடன் கலவை)

பிறமொழிச் சொல்லுடன் தமிழ்ச் சொல்லும் சேர்ந்து உருவாக்கப்படுவது கடன் ஒட்டு அல்லது கடன் கலவை எனப்படும்.

1) இரசாயன எரு 2) பெக்மடைட் பாறை
3) பிட்யூட்டரி சுரப்பி

### ஒப்பொலியாக்கம்

பிறமொழிச் சொற்களைத் தமிழாக்கும்போது அச் சொற்களின் ஒலியமைப்புக்கு ஏற்பத் தமிழ்ச் சொற்களை உருவாக்கி வழங்குதல் ஒப்பொலியாக்கம் எனப்படும்.

எ–டு: Tutorial college - தோற்றோரியல் கல்லூரி
Mud guar ... மட்காப்பு
Quorum ... கோரெண்

### குறிப்பு வினையாலணையும் பெயர்

செயல், தொழில், தன்மை ஆகியவற்றைக் குறிக்கும் குறிப்பு வினையாலணையும் பெயர்கள் பல சொல்லாக்கங்களை வழங்கியுள்ளன.

செயல் ....... நுகர்வோர், துய்ப்போர்
தொழில்...... மதிப்பிடுபவர், பயிரிடுபவர்
தன்மை ....... நொடித்தவர்

சுருங்கக் கூறினால் சொல்லாக்கங்கள் ஒட்டுவழிச் சொல்லாக்கம், தொகைச் சொல்லாக்கம், கூட்டுச் சொல்லாக்கம் என்னும் மூன்று முதன்மையான சொல்லாக்க நெறிகள் வழி உருவாகின்றன. ஏனைய சொல்லாக்க நெறிகளும் மிக அருகிக் காணப்படுகின்றன. மொழிப் பயன்பாடு பல்வேறு அறிதுறைகளிலும் மிகுதியாகும்போது தேவைக்கேற்பப் புதிய சொற்கள் உருவாக்கப்படுவதும் அவை பெருவழக்குப் பெறுவதும் மொழியின் வளர்ச்சிக்கு அடித்தளமாக அமைவன. தமிழிலே சிந்தித்துத் தமிழிலே எழுதும் முனைப்பும் முயற்சியும் ஓங்குக. தமிழில் சொல்வோம்; தமிழால் வெல்வோம். ❖

# ஆட்சித் துறையில் தமிழ் மொழிபெயர்ப்பு

முனைவர் மு. வளர்மதி



மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசு ஆட்சியை நடத்த மக்களுக்கான தேவைகளை, கடமைகளை நிறைவேற்றப் பயன்படுத்தும் மொழி ஆட்சி மொழி எனப்படும். 07.10.1956 அன்று குளித்தலையில் தமிழ் ஆட்சிமொழி மாநாடு நடைபெற்றது. 1.11.1956 முதல் சென்னை மாகாணம் என்பதிலிருந்து ஆந்திரம், கேரளம் ஆகியவற்றின் பகுதிகள் பிரிந்து தனித்தனியே மொழிவாரி மாநிலங்கள் அமைந்ததனால் அந்நாள் முதல் தமிழ் வழங்கும் பகுதி தனி மாநிலமாகச் 'சென்னை மாநிலம்' எனத் தோன்றியது. அதனைத் தொடர்ந்து தமிழ் ஆட்சி மொழிச் சட்டம் 27.12.1956 அன்று தமிழகத்தில் நிறைவேற்றப்பட்டது.

இச்சட்டத்தின்படி (த.நா. சட்டம் 39/1956) அவ்வப்போது அறிவிப்புகளும் அறிக்கைகளும் தமிழில் வெளியிடப்பட்டு மாநில அரசின் கீழ் இயங்கும் பல்வேறு ஆட்சித்துறை அலுவலகங்களில் அறிமுகப்படுத்தப் பட்டது. 1966ஆம் ஆண்டு முன்னாள் முதலமைச்சர் திரு. பக்தவத்சலம் அவர்கள் தலைமையில் ஆட்சி மொழி தமிழ் என்பதனைச் செயற்படுத்தும் வகையில் ஆட்சிமொழிக் குழுவின் தொடக்க விழா நடைபெற்றது. 1967ஆம் ஆண்டில் கழக அரசு அமைந்த பின் 'சென்னை மாநிலம்' என்பதனை அறிஞர் அண்ணா 'தமிழ்நாடு' எனப் பெயர் மாற்றம் செய்தது முதல் பல்வேறு தமிழ் வளர்ச்சிப் பணிகள் தமிழ் ஆட்சி மொழிப் பணிகளாக மேற்கொள்ளப்பட்டன.

27.09.1969ஆம் நாள் அரசின் ஒரு துறையிலிருந்து பிற துறைகளுக்கு எழுதப்படும் கடிதங்கள் தமிழில் எழுதப்பட வேண்டும் என்று ஆணை பிறப்பிக்கப்பட்டது. இதனைப்போன்றே 02.12.1971ஆம் நாள் அரசுச் செயலகத் துறைகளுக்கு எழுதப்படும் கடிதங்கள் தமிழில் எழுதப்படுதல் வேண்டும் என்று ஆணை வெளியிடப்பட்டது. சென்னை உயர்நீதிமன்றத்திற்குச் சார் நிலையில் அமைந்திருக்கின்ற அனைத்து நீதிமன்றங்களிலும், தீர்ப்பாயங்களிலும் 14.01.1970 முதல் நீதிமன்ற சாட்சியங்களைத் தமிழில் பதிவு செய்து கொள்ளலாம் என 13.11.1969ஆம் நாள் ஆணை யிடப்பட்டது.

அரசு நிருவாகம் முழுவதிலும் தமிழ்மொழி பயன்படுத்தப்படுவதனை விரைவுபடுத்தும் நோக்குடன் 28.05.1971 அன்று தமிழ் வளர்ச்சி இயக்ககம் எனத் தனி ஓர் அலுவலகம் உருவாக்கப்பட்டது. அனைத்து நிலையிலும் படிப்படியாகத் தமிழை ஆட்சிமொழியாக உயர்த்திடும் முயற்சியின் உயர்நிலைப் பணியாக 13.05.1996 அன்று தமிழ் ஆட்சிமொழித் துறை தனி அமைச்சகமாக உருவாக்கப்பட்டது. தொடர்ந்து ஆட்சிப் பணிகளில் தமிழ் முழுமையாக இடம்பெறும் வகையில் விரைவுபடுத்தப்பட்டு வருகின்றன. கல்வி நிலையிலும் தொடர் முயற்சிகள் நடைபெற்று வருகின்றன.

எங்கும் ஆங்கிலம் எதிலும் ஆங்கிலம் என்ற நிலையை மாற்றி எங்கும் தமிழ் எதிலும் தமிழ் என்ற குறிக்கோளை நோக்கிச் செயற்பட்டு வரும் நிலை உருவாகியுள்ளது. ஏற்கனவே ஆங்கிலத்தின் வழியாக செயற்படுத்தப்பட்டு வந்த ஆட்சிப் பணிகள் அனைத்தும் தமிழில் எழுதப்பட வேண்டும் எனும் பொழுது மொழிபெயர்ப்பு என்ற ஒரு பெரும் பணி இன்றியமையாததாகிறது..

துறைச் செயற்பாடுகள் தமிழில் அமைவதற்கு அடிப்படைத் தேவையாக உள்ள நிருவாகம் தொடர்பான நூல்கள் பல மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. துறைகளில் பயன்படுத்தப்படும் படிவங்கள் முழுமையாகத் தமிழாக்கம் செய்யப்பட்டுத் துறைகளின் பயன்பாட்டுக்கு வழங்கப் பட்டுள்ளன. 1. மாவட்ட அலுவலக நடைமுறை நூல், 2. வருவாய் வாரிய நிலையாணைகள், 3. காவல்துறை நிலையாணைகள், 4. தமிழ்நாடு தலைமைச் செயலக நடைமுறை நூல், 5. தமிழ்நாடு அரசு அலுவல் விதிகள் தலைமைச் செயலக அறிவுறுத்தங்கள், 6. தமிழ்நாடு தனிநிதி விதித் தொகுப்பு, 7. தமிழ்நாடு ஊராட்சிச் சட்டம், 8. தொழில்களுக்கான அரசு நிதியுதவிச்சட்டம், 9. நில அபிவிருத்திச் சட்டம் மற்றும் விதிகள், 10. தமிழ்நாடு சாலைப் போக்குவரத்து விதித் தொகுப்புகள், 11. தமிழ்நாடு நிதிவிதித் தொகுப்பு, 12. சிறைச்சாலை சீர்திருத்தப்பள்ளி நடைமுறை நூல், 13. தாலுகா கணக்கு நடைமுறை நூல், 14. மீன் துறை நடைமுறை நூல், 15. தமிழ்நாடு தற்காலிகக் கடன்கள் நடைமுறை நூல், 16. தமிழ்நாடு ஊழியர்கள் நடைமுறை நூல். இவை மட்டும் இல்லாமல் பின்னர் ஏனைய துறைகளுக்குரிய நடைமுறை நூல்களும் தமிழாக்கம் செய்து அச்சிடப்பட்டன. இம்மொழி பெயர்ப்புப் பணிகள் பலரால் செய்யப்படுவதனால் மொழி அமைப்பிலும் சொற்களின் பயன்பாட்டிலும் ஒருமைப்பாடு இல்லாமல் போவது இயல்பு. இவற்றை ஆய்வு செய்து ஒழுங்கமைவு செய்ய மேலும் பணியிடங்கள் தோற்றுவிக்கப்பட்டுப் பணிகள் நடைபெறுகின்ற முறைமை உருவாகியது.

அனைத்துத் துறைகளுக்கும் உரிய நடைமுறை நூல்களும் விதிகளும் விதித் தொகுப்புகளும் அனைத்துப் படிவங்களும் ஆங்கிலத்திலேயே இருந்தன. தமிழ் ஆட்சி மொழித் திட்டத்தைச் செயற்படுத்துவதற்கு இவற்றைத் தமிழில் மொழி பெயர்க்க வேண்டிய ஒரு சூழல் உருவாகியது. தமிழ் வளர்ச்சித் துறை இப்பணிகளை மேற்கொண்டது. மேலும் கல்வி நிலையில் பல்துறை நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிடத் தமிழ் வளர்ச்சிக் கழகம் ஒன்று நிறுவப்பட்டு மிகச் சிறந்த நூல்களை வெளியிட்டது. இது தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் என்று தனிப்பெயருடன் வழங்கப்பட்டது. மொழிபெயர்ப்புக்குத் தேவையான அகராதிகள் தயாரித்தல், மொழிச் சிறுபான்மையினருக்குப் பயிற்சி அளித்தல் போன்ற தேவையான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன.

சட்டமன்றம், ஆட்சி, நீதி என்ற மூன்று பெரும் பகுதிகளைக் கொண்டு விளங்குகின்ற அரசின் பணிகளில் தலைமைச் செயலகத்தில் உள்ள தமிழ் வளர்ச்சிப் பண்பாட்டுத் துறையின் மொழிபெயர்ப்புப் பிரிவின் பணிகள் குறிப்பிடத்தக்கனவாகும். மக்களுடைய அன்றாட வாழ்க்கையில் உடனடியாக மாற்றங்களை உருவா க்குகின்ற பணி தலைமைச் செயலக மொழிபெயர்ப்புப் பிரிவின் பணிகளாகும்.

தலைமைச் செலயகத் துறைகளிடமிருந்து தமிழில் மொழிபெயர்த்து அளிக்க வேண்டிய ஆணைகள், கூட்ட முன் வரைவுகள், அவசர அரசாணைகள், சட்டமன்ற விவாதங்கள், வரவு செலவுத் திட்ட அறிக்கை (Budget), பொதுக் கணக்காய்வுக்குழு அறிக்கைகள் (Public Accounts Committee Reports), பொது நிறுவனங்கள் குழு அறிக்கை (Public Undertakings Committee Reports), சட்டம், ஒழுங்கு நடவடிக்கைகள் (Law and Order), அவ்வப்போது அரசு அமைக்கும் குழு தரும் அறிக்கைகள், துறைகளின் கொள்கை விளக்கக் குறிப்பு, சுற்றோட்டக் குறிப்பு (Policy Note), அறிவிக்கைகள் (Notifications), மத்திய அரசிடமிருந்த பெறப்படும் கடிதங்கள் உரிய அமைச்சர் களுக்குத் தமிழாக்கம் செய்தல், அவ்வப்போது தேவையான பத்திரிகைச் செய்திகளைத் தமிழாக்கம் செய்தல் போன்ற பல்வேறு நடவடிக்கைகள் அரசுப் பணி மொழிபெயர்ப்பில் அடங்குவனவாகும். இம்மொழி பெயர்ப்புப் பணியைச் செய்வது அவ்வளவு எளிதானதல்ல,

"Learning the art of translation is not an easy joke. It has to be cultivated by hard work followed by dedication. In Government, we adopt a method of true translation or faithful translation. 'Nothing shall be omitted, nor added' shall be the principle. Translation has to be expressive and explicit so that we never land in ambiguity" என்று குறிப்பிடுகிறார் அறிஞர் திரு. கு. பாலசுப்பிரமணியன்.

தலைமைச் செயலக மொழிபெயர்ப்புத் துறையில் நீண்டகாலம் பணியாற்றிய அறிஞர் திரு. கு. பாலசுப்பிரமணியன் தம் பட்டறிவின் வாயிலாக மூலத்திற்கு நேர்பெயர்ப்பாக எதனையும் நீக்காமல் அல்லது எதனையும் சேர்க்காமல் அய்யத்திற்கிடமின்றி மொழிபெயர்க்கப்படுகின்ற முறையைப் பின்பற்றுவதாக மேற்குறிப்பிட்டுள்ள கருத்துரையின் மூலம் அறிகிறோம். நேர்பெயர்ப்பாக அமையும்பொழுது எல்லா ஆங்கில மொழிச் சொற்களுக்கும் தமிழ்ச் சொற்கள் அமையாத நிலையில் மொழியாக்கம் அல்லது கலைச்சொல்லாக்கம் செய்ய வேண்டியுள்ள அறிஞர் பலரும் தங்கள் பட்டறிவின் வாயிலாக எடுத்துக்காட்டியுள்ளனர். நேர் மொழிபெயர்ப்பு என்ற நிலையிலும் சொல்லுக்குச் சொல் பெயர்ப்பது அன்று என்பது பட்டறிந்த உண்மையாகும்.

உள்ளதனை உள்ளவாறே பெயர்ப்பது மொழிபெயர்ப்பு. உள்ளதனை உணர்ந்தவாறு பெயர்ப்பது மொழியாக்கம். உள்ளதனை உருமாற்றிப் பெயர்ப்பது தழுவல். இம்மூன்று நிலைகளும் மொழிபெயர்ப்பில் பின்பற்றக் கூடியவையாகும். ஆட்சித் துறை மொழிபெயர்ப்பு என்பது உள்ளதனை உள்ளவாறே பெயர்க்கின்ற நேர்பெயர்ப்பு முறையாகும். நேர் பெயர்ப்பு எனும் பொழுது அதற்குரிய பொருளுடன் உரிய தன்மையை உணர்த்தும் வகையில் பெயர்ப்பது என்பது கவனிக்கத் தக்கதாகும்.

(எ–டு) "அரசுப் பணியில் அரசுப் பணியாளர்களுக்குக் கடன்கள் வழங்குவதில் சில வரன்முறைகள் உண்டு. சில கடன்கள் மூன்று நான்கு முறைகளுக்கு மேல் வழங்கப்படக் கூடாதென வரையறுக்கப்பட்டுள்ளது. அத்தகு நிலையில் கடன் ஒப்பளிப்புச் செய்யப்படும்போது சுட்ட வேண்டும். அதற்கு ஆங்கிலத்தில் This should be his last loan என்ற தொடர் வருகிறது. இதனை அப்படியே மொழிபெயர்த்தால் 'இதுவே இவருக்கு இறுதிக் கடனாக இருக்கும்' என அமையும். Last என்பதற்கு இறுதி என்பதும் loan என்பதற்குக் கடன் என்பதும் தனித் தனி நிலையில் சரியான மொழிபெயர்ப்பாகும். ஆனால், இவ்விரு சொற்களும் இணைந்து 'இறுதிக் கடன்' என்று வரும் போது அது ஈமக்கடன், நீத்தார் கடன் என்ற வகையில் முரண்பட்ட பொருளைத் தந்து நிற்கின்றது. எனவே இதனை 'இதுவே இவருக்கு வழங்கப்படும் இறுதியான கடன் தொகையாகும்' என்று மொழிபெயர்ப்பது நலம் பயக்கும். கருத்து முரண் ஏற்படாத வகையில் மொழிபெயர்க்க வேண்டியது இன்றியமையாததாகிறது." ஆகையால், நேருக்கு நேரான சொல் இருந்தபோதிலும் மொழியின் நிலையறிந்து மரபு அறிந்து இடத்திற்கேற்றவாறு பொருத்தமான மொழிபெயர்ப்பை வழங்குதல் வேண்டும் என்பதனை அறியலாம்.

தற்காலத்தில் ஆட்சிமுறை பல்வேறு துறைகளாகப் பல்கிப் பெருகி விரிவடைந்துள்ளதனால் ஆட்சித்துறை

மொழிபெயர்ப்பில் ஈடுபடுகின்ற மொழிபெயர்ப்பாளருக்கு மேலும் மேலும் புதிய புதிய சொற்கள் தேவைப் படுகின்றன. ஆகையால், இதனை நிறைவு செய்து கொள்ளும் வகையில் பேச்சு வழக்குச் சொற்கள், இலக்கிய வழக்குச் சொற்கள், கல்வெட்டில் உள்ள சொற்கள், புதிய சொல்லாக்கம் என்ற வழிமுறைகளில் சொற்களைத் தேர்வு செய்துகொள்ளலாம் என்று கருதி அவ்வாறு தமிழில் பல நூறு சொற்களை அரசுப் பணிகளில் பயன்படுத்தி வருகின்றனர்.

'Department' என்ற சொல்லை 'இலாகா' என்று வழங்கி வந்தனர். ஆட்சித் துறையில் தமிழ் என்னும் திட்டம் செயல் வடிவம் பெறும் நிலையில் இச்சொல் துறை என்று இடம் பெற்றது. 'Pension' என்ற சொல் அப்படியே வழங்கப்பட்டது. பின்னரே 'ஓய்வூதியம்' என வழங்கப்பட்டது. 'Salary' என்ற சொல் 'சம்பளம்' என்று வழங்கும் நிலை மாறி 'ஊதியம்' எனப்பட்டது. இவ்வாறு ஆட்சித் துறையில் பயன்படுத்தப்படும் சொற்கள் உரிய தமிழ்ச் சொற்களாக இடம் பெறும் போக்கு உருவாகியது.

1. House rent allowance - வீட்டு வாடகைப்படி

2. Conveyance allowance - வண்டிப்படி

3. Traveling allowance - பயணப்படி

4. Daily allowance - தினப்படி

5. Fixed Traveling allowance - வரையறுக்கப்பட்ட பயணப்படி

ஆட்சித்துறையில் பயன்படுத்தப்படும் இதுபோன்ற கலைச் சொற்களுக்கு உரிய தமிழ்ச்சொற்கள் வழங்கப்பட்டன. 1. Assistant, 2. Deputy, 3. Vice. இம்மூன்றையும் தமிழில் எழுதும்பொழுது 'துணை' என்ற ஒரே சொல்லைப் பயன்படுத்துவது பெருவழக்காக இருந்துவந்தது.

1. Assistant Director - உதவி இயக்குநர்

2. Deputy Collector - துணை ஆட்சியர்

3. Vice Chairman - துணைத் தலைவர்

ஒரே பொருளைக் குறிக்கும் இத்தகைய சொற்கள் அந்தந்த இடத்திற்கும் துறைக்கும் ஏற்றவாறு பயன்படுத்தப்படும் வகையில் மொழிபெயர்ப்பில் வழங்கப்பட்டன. இவற்றைப் போன்றே 1. Board, 2. Council, 3. Corporation, 4. Assembly, 5. Parliament போன்ற சொற்கள் பின்வருமாறு இடம் பெற்றுள்ளன.

1. Panchayat Board - ஊர்மன்றம்/ஊராட்சிமன்றம்

2. Municipal Council - நகரமன்றம்

3. Madras Corporation - சென்னை மாநகராட்சி

4. State Assembly - மாநிலச் சட்டமன்றம்

5. Council of the State - அரசு மன்றம்

6. Parliament - நாடாளுமன்றம்

ஒரு துறையில் வழங்கப்படும் ஒருநெறிப்பட்ட இத்தகைய சொற்கள் ஒரே சொல்லில் குறிப்பிடாமல் ஏற்ற சொற்கள் வழங்கும்போது உரிய பொருளோடு ஒவ்வொன்றுக்கும் இடையே உள்ள வேறுபாட்டினை அறிய முடிகிறது.

'பழம்படி', 'இசைந்த விலை', 'ஆவணம்', 'ஆவணக்களரி', 'பெருவழி', 'இறையிலி நிலம்' ஆகிய, கல்வெட்டிலிருந்து பெறப்பட்ட சொற்களைத் தற்காலத்தில் பயன்படுத்தி வருவதனைக் காணலாம்.

சில சொற்றொடர்கள் மொழிபெயர்ப்பில் எவ்வாறு வழங்கப்படுகின்றன என்பதனைச் சில சான்றுகள் மூலம் அறியலாம்.

1. It has not seen the light of the day அந்தப் புகார் மீது நடவடிக்கை ஏதும் எடுக்கப்படவில்லை.

2. Interested testimony தன்னலம் பேணும் சாட்சியம் / பற்றுள்ள சாட்சியம்

3. Got the relief without prejudice நிவாரணத் தொகை பெற்றுக் கொண்டவர் அப்போது அதுபற்றி எவ்விதக் கருத்து முரண்பாடும் தெரிவிக்கவில்லை.

4. Untoward incident விரும்பத்தகாத நிகழ்ச்சி

இவை பொருளுணர்ந்து அதற்கேற்றவாறு தமிழில் வழங்கப்பட்டுள்ளதனைக் காணலாம். மூலத்தில் உள்ளதனை உணர்ந்தவாறு பெயர்த்தல். இதனை contextual expressions and meaning என ஆங்கிலத்தில் வழங்குகிறோம். இதுபோன்று பொருளறிந்து மொழிபெயர்க்கும் தன்மை ஆட்சித்துறை மொழிபெயர்ப்பில் பின்பற்றக் கூடிய ஒரு வழிமுறையாகவும் உள்ளது. (எ–டு)

"The land reforms policy over the successive plans aimed at removing such impediments to agricultural development as arisen from agrarian structure inherited from the past and elimination of exploitation and social injustice within the agrarian system so as to ensure equality of tenurials status and opportunity to all"

இதன் தமிழாக்கம் பின்வருமாறு:

"கடந்த பல ஐந்தாண்டுத் திட்டங்களின்போது தொடர்ச்சியாக அரசு மேற்கொண்டிருந்த நிலச் சீர்திருத்தக் கொள்கை பன்னெடுங்காலமாக வழி வழி வந்துள்ள நமது வேளாண்மைச் சமுதாய

கட்டமைப்புகளிலிருந்து தோன்றக்கூடிய வேளாண்மை வளர்ச்சிக்கு எதிரான தடைகளை அகற்றுவதனையும் நில குத்தகை உரிமையில் சம தகுதி நிலை வழங்குவதில் அனைவருக்கும் சம வாய்ப்பு வழங்குதல் ஆகியவற்றிற்கு உறுதி செய்யும் வகையில் வேளாண்மை அமைப்பினுள் காணப்படும் சுரண்டலையும் சமூக அநீதியையும் ஒழிப்பதனையும் நோக்கமாகக் கொண்டது.''

ஆட்சித் துறையில் தமிழ் மொழியின் இயல்புடன் இத்தகைய மொழிபெயர்ப்புகள் இடம் பெறுகின்றன என்பதனை அறியலாம். ஆட்சிச் சொல்லகராதிகள் இப்பணிக்கு உறுதுணையாக உள்ளன. ஆட்சித் துறையின் ஒரு பெரும் பகுதியாக அமைவது சட்டத்துறை. சட்டத் தமிழில் அகராதியைத் தயாரிக்கும் பணி அரசு சார்பாக 1957ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் தொடங்கி இன்றுவரை நடந்துவருகின்ற பெரும் பணியாகும். சட்டத் தமிழ், ஆட்சித் தமிழ், அறிவியல் தமிழ் என்று மூன்று துறைகளில் தமிழ் காலத் தேவைக்கேற்ப வளர்ச்சியுற்று வருகின்றது. தற்காலத்தில் ஆட்சிமொழிக்கெனத் தனியே (1996) அமைச்சகம் உருவான பின்னர்க் கோப்புகள் மிகுதியாகத் தமிழில் இடம்பெறுகின்றன. பல நேர்வுகளில் ஆங்கிலச் சொற்களைத் தமிழில் கொண்டு வரும்போது தமிழ்ச் சூழலுக்குப் புதுப் பொருள் கிடைக்கின்ற அநுபவத்தையும் இப்பணியில் ஈடுபடுவோர் பெறுகின்றனர்.

"1968ஆம் ஆண்டு முன்னாள் முதலமைச்சர் அறிஞர் அண்ணா அவர்கள் காலத்தில் வெள்ளோட்டப் பணியாக ஆங்கிலச்சொற்களிலிருந்து மொழிபெயர்த்துச் சட்டச் சொல் அகராதி வெளியானது.'' சட்டத்துறை அகராதி தயாரிப்பில் ஈடுபடுவோர், "தூய தமிழில், கலப்புத் தமிழ், எளிய தமிழ் எனும் மொழிநடைகள் சட்டத் தமிழிலும் புகுந்து கணிசமான மாற்றத்தையும் ஏற்படுத்தியுள்ளன. ஆனால், சட்டத்துறை உட்பட பல துறைகளில் புதிய புதிய தமிழ் நூல்கள் வெளிவந்துள்ளவற்றை அரசுப் பணியாளர்கள், மாணவர்கள், அலுவலர்கள் இன்னும் போதிய அளவில் ஊன்றிப் படிக்கும் வாய்ப்பில்லை. அலுவலர்களின் ஆட்சித் தமிழின் தரம் இன்னும் வளர்ந்தாக வேண்டும். இதற்காகத் தமிழ் வளர்ச்சித் துறை, ஆட்சித் தமிழ்ப் பயிலரங்குகளை நிகழ்த்துகிறது. சட்டம் சொல்லும் கருத்தினில் பல பொருளிருக்கும் சட்டத் துறையிலும் தற்போது கணிசமான அளவில் தமிழ் ஆட்சி மொழியாகப் பயன்படுத்தப்படுகின்றது'' என்ற கருத்தினை வழங்கியுள்ளனர்.

'தமிழில் ஆட்சிச் சொற்கள்' எனும் தலைப்பில் ஆய்வு செய்துள்ள சி. செல்வராஜ்தமிழில் ஆட்சிச் சொற்களுக்கான ஆராய்ச்சி மூலங்கள் எனத் தொடங்கி, பண்டைய சங்க, சங்கம் மருவிய காலத்து இலக்கியங்களிலுள்ள ஆட்சிச் சொற்கள், பல்லவ, பிற்காலச் சோழ, பாண்டிய சேரர் காலத்து ஆட்சிச் சொற்கள், முகலாயர் காலத்து ஆட்சிச் சொற்கள், விடுதலைக்குப் பின் ஆட்சிச் சொற்கள் என்று பகுத்து ஆராய்ந்துள்ளனர். இதில் ஆங்கிலத்தில் மிக நுணுக்கமாக வழங்கப்படும் சொற்களுக்கு நேரான தமிழ்ச் சொற்களை வழங்க முடியும் என்பதனை எடுத்துக்காட்டியுள்ளார்.

அசல் (மூலம், முதல்), அமல் (செயல்படுத்துதல்), கஜானா (கருவூலம்), கிஸ்தி (ஆண்டு நிலத் தீர்வைத் தவணை), ஜாமீன் (பிணையம்), ஜப்தி (கைப்பற்றுதல்), ஜவாப் (மறுமொழி) போன்ற பல அரபுச் சொற்கள் / குமாஸ்தா (எழுத்தர்), சராசரி (நிரல்), பந்தோபஸ்து (காப்புச் செய்தல்), பினாமி (இரவல் பெயர்), வாபஸ் (மீளப்பெறல்), தஸ்தாவேஜி (ஆவணம்), மனுதாரர் (விண்ணப்பதாரர்) போன்ற பாரசீக மொழிச் சொற்கள் / ஆஸாமி (ஆள்), சாயா (தேநீர்), டேரா (கூடாரம்), டோபிகானா (வெளுப்பகம்), பைஸா (காசு), மேஸ்திரி (மேற்பார்வையாளர்) போன்ற பல இந்துஸ்தானிச் சொற்கள் / சர்க்கார் (அரசு), ஜாபிதா (பட்டியல்), ராஜிநாமா (பதவி விலகல்), பாக்கி (நிலுவை), மாகாணம் (மாநிலம்) போன்ற உருது மொழிச் சொற்கள், அப்பட்டம் (வெளிப்படையானது), எக்கச்சக்கம் (மிகுதி), சந்தடி (இரைச்சல்), ஒட்டாரம் (பிடிவாதம்), தொந்தரவு (தொல்லை), சோலி (வேலை), பண்டிகை (பெருநாள்), மச்சு (மேல்தளம்) போன்ற பல தெலுங்குச் சொற்கள் / அக்கறை (கவனம்), அக்கடா (வாளா), எகத்தாளம் (பரிகாசம்), குட்டு (மறைபொருள், மறையம், மந்தனம்) போன்ற கன்னடச் சொற்கள் / வில்லங்கம் (களங்கம்), ராத்தி (இரவு) போன்ற மராத்திச் சொற்கள் / அக்கிராசனாதிபதி (அவைத் தலைவர்), அங்கீகாரம் (உடன்பாடு), அதிகாரி (தலைவன், முதல்வன்) போன்ற சமஸ்கிருதச் சொற்கள் போன்று ஏராளமான சொற்கள் தமிழில் பேச்சு வழக்கிலும், ஆட்சி முறைகளில் இடம் பெற்றுள்ளதனைச் சுட்டிக்காட்டி அதற்கிணையான தமிழ்ச் சொற்கள் தமிழில் ஆட்சித் துறையில் பயன்பட்டு வருவதனையும் சிக்கல்கள், தீர்வுகள் சிலவும் சுட்டிக் காட்டியுள்ளார். இன்றும் ஆட்சியில் தொடர்ந்து இருந்துவரும் பிற மொழிச் சொற்களையும் எடுத்துக் காட்டியுள்ளார். பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்ச் சொற்கள் வழங்கும் முயற்சி தொடர்ந்து நடைபெற்று வருகிறது என்பதனை இதன் மூலம் அறியலாம்.

தமிழக அரசின் பல்வேறு துறைகளின் கீழ், பல்வேறு புதுப்புது வளர்ச்சித் திட்டங்கள் செயல்பாட்டிற்கு வருவதனால் ஆட்சி முறையிலும் அலுவலக மேலாண்மையிலும் புதிய ஆங்கிலச் சொற்கள் நாள்தோறும் பயன்பாட்டுக்கு வந்த வண்ணம் உள்ளன. அதற்கேற்ற தமிழ்ச் சொற்களை உருவாக்கும் தேவையும் மிகுதியாக உள்ளது. குறிப்பாக சட்டத் துறையில் மொழிபெயர்க்க வேண்டிய கட்டாயச் சூழலால் 'சட்டத் தமிழ்' என்றே ஒரு கலைச்சொல் உருவாகியுள்ளதனைக் காணலாம்.

சட்ட மொழிபெயர்ப்பைப் பொறுத்தமட்டில் செய்தியும் அதன் அமைப்பும் மிகவும் முக்கியமானதாகக் கொள்ளப்படுகிறது. மூலத்தில் உள்ள சட்டத் தொடரைப் பெயர்ப்பு மொழியில் நுணுக்கமாக, தெளிவாக, பொருள் மாறுபடாமல் வெளிப்படுத்த வேண்டும். சட்டத் தொடரில் எதனையும் சேர்க்கவோ, தவிர்க்கவோ, விலக்கவோ கூடாது என்பது முக்கியமானதாகக் கருதப்படுகின்றது. ஓர் ஆங்கிலச் சட்டச் சொற்றொடர் இரண்டு அல்லது மூன்று விளக்கங்களை உடையதாக இருந்தால் மொழிபெயர்ப்பிலும் அதேபோன்ற கருத்துடைய சொற்றொடரை வழங்க வேண்டும். வேறுபட்ட விளக்கங்கள் அளிக்க எவ்வித முயற்சியையும் எடுக்கக் கூடாது. மொழிபெயர்ப்பில் பொருள் மற்றும் உணர்வின் ஒவ்வொரு சாயலும் மாற்றிக் கொடுக்கப்பட வேண்டும் என்பது ஒரு நெறியாகப் பின்பற்றப்படுகிறது.

(எ–டு) Alternative – இரண்டிலொன்றாக

Act - சட்டம்

Abscond - சட்டத்திற்குத் தப்பி ஓடு

Adultery - மணமுறை பிறழ்ந்த புணர்ச்சி

Bill - சட்ட முன்வரைவு

Bye-law - துணை விதி

Civil surgeon - குடியியல் அறுவை மருத்துவர்

Code - தொகுப்புச் சட்டம்

Custom - வழக்காறு

Enactment - இயற்றுச் சட்டம்

Habitual Offender - வாடிக்கைக் குற்றவாளி

Law - சட்ட நெறி

Notification - அறிவிக்கை

Ordinance - அவசரச் சட்டம்

Refreshing one's - நினைவுபடுத்து

Regulation - ஒழுங்குமுறை விதி

Rule - விதி

Statute - செய்சட்டம்

சில ஆங்கிலச் சொற்களுக்கு இவ்வாறு பொருள் வழங்கும் முறையில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. ஆங்கில மொழிக்கே உரிய சில தனிச் சிறப்பான சட்டக் கருதுகோள்கள் மொழிபெயர்ப்புக்குத் தடையாக உள்ளன. இவ்வகையில் புதிய சொற்கள் உருவாக்குதல் தேவையாகின்றது.

Legal Language எனப்படும் சட்டமொழி வளர்ச்சிக்காக நம் அரசு ஆவன செய்து வருகின்றது என்பதனை நாம் நன்கறிவோம். சட்டமொழி ஓர் அறிவியல் நுட்பமானது வழக்குரைஞர்களும், நீதிபதிகளும் சட்டத்துறை வல்லுநர்கள் மட்டுமே தெரிந்துள்ள பல சொற்களையுடையது. சட்டக் கருத்துகளைக் கூறும் பல அரிய சொற்களஞ்சியங்கள் இன்று ஆங்கிலத்தில் கிடைப்பது போல் தமிழில் போதிய அளவில் இல்லை. இக்குறை தீர மாநில ஆட்சிமொழி ஆணையம் பல காலம் அரிய சட்டச் சொல் அகராதிகளை வெளியிட்டு அருந்தொண்டாற்றியுள்ளது. சட்டத் தமிழ் வரைவு செய்வதற்கு இவை அடிப்படையாக உள்ளன.

(எ–டு)

Minority - சிறுபான்மை

Majority - பெரும்பான்மை

Proposal - கருத்துரு / முன்மொழிவு

Disfigurement - உருக்குலைவு

Payment - செலுத்தம்

Stipulation in a contract - ஒப்பந்தத்தில் ஓர் உடன்படுகை

Probate - உயில் மெய்ப்பிதழ்

எனும் சொற்கள் சட்ட மொழிபெயர்ப்பில் புதுமையாக்கமாக இடம் பெறுவதனைக் காணமுடிகிறது.

தமிழக அரசின் இசைவுடன் சென்னை உயர்நீதிமன்றம் வெளியிடும் திங்களிதழான 'தீர்ப்புத் திரட்டு' இதழிலும் ஆங்கிலத்தில் உள்ள தீர்ப்புகளில் கையாளப்பட்டிருக்கும் ஆங்கிலச் சட்டச் சொற்களின் நேரிணையான தமிழுருவம் இடம் பெற்றுவருகிறது.

1. Authoritarianism அதிகார ஆதிக்கம்; ஆட்சி ஆதிக்கம்; சுதந்திரத்தை அடக்கும் ஆதிக்கம்.
2. Solemnly சிறப்புடன், மனப்பூர்வமாக, வினைமையுடன், மதிப்பார்வத்துடன், அச்ச அமைதியுடன், வீறார்ந்த பெருமிதத்துடன்
3. Struck down (Law) அடித்து அகற்றப்பட்டது (சட்டம்)

இவ்வாறு தீர்ப்புகளில் பயன்படுத்தப்படும் தமிழாக்கம் செய்யப்படுகின்ற சொற்களை வெளியிட்டு அறிமுகப்படுத்தும் முயற்சி நடைபெற்று வருகிறது.

சட்ட மொழிபெயர்ப்பு எவ்வாறு அமைகிறது என்பதனை ஓர் எடுத்துக்காட்டு மூலம் அறியலாம். இந்திய தண்டனைச் சட்டத்தின் பிரிவு **149** பின்வருமாறு:

"149. Every member of unlawful assembly guilty of offence committed in prosecution of common object:-

If an offence is committed by any member of an unlawful assembly in prosecution of the common object of that assembly or such as the members of that assembly known to be likely to be committed in prosecution of that object, every person who at the time of the committing of that offence, is a member of the same assembly is guilty of that offence."

இதன் தமிழாக்கம் பின்வருமாறு:

"149 பொதுவான நோக்கத்தை நிறைவேற்றுகையில் செய்யப்பட்ட குற்றத்திற்குச் சட்டவிரோதமான கும்பலின் உறுப்பினர் ஒவ்வொருவரும் குற்றவாளியாவார்.

சட்ட விரோதக் கும்பல் ஒன்றின் உறுப்பினர் எவராலேனும், அந்தக் கும்பலின் பொதுவான நோக்கத்தை நிறை வேற்றுகையில் ஒரு குற்றம் அநேகமாகச் செய்யப்படுமானால் அல்லது அந்த நோக்கத்தை நிறைவேற்றுகையில் செய்யப்படக் கூடுமென்று அந்தக் கும்பலின் உறுப்பினர்கள் அறிந்திருந்த தன்மையதான ஒரு குற்றம் செய்யப் படுமானால் அந்தக் குற்றம் செய்யப்படும் காலத்தில் அதே கும்பலின் உறுப்பினராக இருக்கும் ஒவ்வொருவரும் அக்குற்றத்தைச் செய்தவராவார்"

இவ்வாறு சட்ட மொழிபெயர்ப்பு என்பது ஆங்கிலத்தில் வழங்கப்பட்டுள்ள சொற்கள் குறிக்கும் பொருளை உரிய முறையில் கூட்டுதலோ குறைத்தலோ இன்றித் தமிழில் இடம் பெற்று வருவதனைக் காணலாம்.

இதனைப்போன்றே அரசு வெளியிடுகின்ற ஆணைகளும் இடம் பெறுகின்றன என்பதனை ஒரு எடுத்துக்காட்டு மூலம் அறியலாம். 02.01.2009 தேதியிட்ட ஆதித்திராவிடர் மற்றும் பழங்குடியினர் நலத் (சா–மெ.1) துறையின் அரசாணை (நிலை) எண் 1 இன் ஒரு பகுதி எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம்.

"Based on the opinion given by the Advocate General of Tamil Nadu and Additional Advocate General, High Court of Madras the Government have issued favourable orders in certain cases, considering the individuals born to Christian Adi Dravidar parents converted to the Hinduism at a later date and accepted by their cast people, are entitle for the privileges conferred under the Constitution of India and therefore the Government have issued orders to them for appointment against the Schedule Caste Quota, in the recruitment made by the Tamil Nadu Public Servcie Commission."

இதன் தமிழாக்கம் பின்வருமாறு:

"ஆதித்திராவிடர் கிறித்தவப் பெற்றோர்களுக்குப் பிறந்தோர், பின்னாளில் இந்துவாக மதம் மாறினால் அவர்களுடைய இனமக்களால் ஏற்றுக் கொள்ளப் பட்டால், இந்திய அரசியலமைப்புச் சட்டத்தின் கீழ் ஆதித்திராவிடர் இன மக்களுக்கு அளிக்கப்பட்டுள்ள சலுகைகளைத் துய்க்கத் தகுதி உடையவர்கள் ஆவார்கள் என்கின்ற அடிப்படையில், கிறித்தவப் பெற்றோர்களுக்குப் பிறந்த சிலருக்கு (Born Christain), அரசுத் தலைமை வழக்குரைஞர் மற்றும் கூடுதல் அரசு தலைமை வழக்கறிஞர் ஆகியோரின் கருத்துரையின் பேரில் தமிழ்நாடு அரசுப் பணியாளர் தேர்வாணையம் மூலமாக ஆதித்திராவிடர் (Schedule Caste) மக்களுக்கான இட ஒதுக்கீட்டில், பணி நியமனம் செய்வதற்கு ஆணைகள் வெளியிடப்பட்டுள்ளன."

இவ்வாறு அரசு ஆணைகள் ஆங்கிலத்திலும் தமிழிலும் இடம்பெறும் வகையில் தற்காலத்தில் வெவ்வேறு தளங்களில் மொழிபெயர்ப்பு முயற்சிகள் நடைபெற்று வருகின்றன. இவை நேர்பெயர்ப்பு என்றளவில் பொருள் பெயர்ப்பாக இடம் பெறுவதென்பது ஆட்சித் துறையில் இடம் பெறுகின்ற வழி முறையாகும் என்பதனை மேற்கண்ட எடுத்துக்காட்டுகள் மூலம் அறியலாம்.

"அரசுத் துறைகளிலெல்லாம் தமிழைப் பயன்படுத்த எல்லோரும் உறுதுணையாக இருக்க வேண்டும். தமிழ் நம் இரத்தத்தோடு இரத்தமாகக் கலந்துவிட்ட மொழி. நாம்தாம் அதனை மறந்திருந்தோமே தவிர தமிழ் நம்மை மறக்கவில்லை" எனப் பேரறிஞர் அண்ணா அவர்கள் தலைமைச் செயலகத்தில் திருவள்ளுவர் திருவுருவப் படத்தைத் திறந்து வைத்து அரசு அலுவலர்களிடையே ஆற்றிய கருத்துரையை மனத்திற் கொண்டு ஆட்சி மொழித் திட்டத்தைச் செவ்வனே நிறைவேற்ற வேண்டியது அரசு அலுவலர் – பணியாளர் தம் கடமையாகும். பேரறிஞர் அண்ணாவின் கனவு நனவாக நம்பிக்கையுடன் உழைப்போம், உயர்வோம்.

❖

# கால்நடை மருத்துவ அறிவியல் கலைச் சொல்லாக்கம்

முனைவர். பெரு.மதியழகன்



அறிவியல் துறைகளில் எண்ணற்ற புதியபுதிய துறைகள் நாளும் பொழுதும் கிளைத்தும் தழைத்தும் வளர்ந்து வருகின்றன. பிற துறைகளை எல்லாம் விட மக்கள் உயிர்வாழ்வதற்கு இன்றிமையாப் பால், முட்டை, இறைச்சி ஆகிய புரத உணவை உற்பத்தி செய்து தருவன கால்நடைகள். தமிழர்களின் வாழ்வோடும் வளத்தோடும் பண்பாட்டோடும் ஒன்றிக் கலந்திருப்பவை கால்நடைகள். கால்நடை வளர்ப்பு காலங்காலமாக தமிழர்களால் மேற்கொள்ளப்பட்டு வந்தாலும், கால்நடை வளர்ப்பையே முதன்மையான பெருந்தொழிலாக மேற்கொள்ளும் அளவிற்கு வளர்ந்திருப்பது அண்மைக்கால அறிவியல் தொழில் நுட்ப மேம்பாட்டினால்தான். ஆனால் அத்தகைய தொழில்நுட்பங்கள் இன்னும் சாதாரண மக்களைச் சென்றடைய அவற்றை அனைத்துக் கால்நடை அறிவியல் தொழில்நுட்பங்களையும் தமிழில் கொணர்ந்திட வேண்டும். அவ்வாறு செய்திட வேண்டுமாயின் முதற்கட்டமாக கால்நடை மருத்துவ அறிவியல் துறை சார்ந்த கலைச் சொற்கள் தமிழ்மொழியில் உருவாக்கப்பட வேண்டும்.

**கலைச்சொற்கள்:** கலை என்ற தமிழ்ச் சொல்லுக்கு ஆங்கிலத்தில் ஆர்ட்ஸ் (Arts) எனலாம். கலைத் தொடர்பான சொற்களைத் தமிழில் ஆக்குவதை கலைச்சொல்லாக்கம் எனலாம். ஆனால் கால்நடை மருத்துவ அறிவியல் சொற்களை தமிழில் எழுதுவதை அறிவியல் நுட்பச் சொல்லாக்கம் என்று கூறாமல் கலைச்சொல்லாக்கம் என்று குறிப்பிடுவது சரியா என்ற கேள்வி எழுகிறது. இருப்பினும் கலைச்சொல்லாக்கம் என்றால் துறை சார்ந்த சொற்களை உருவாக்குதல் என்ற பொருளிலேயே இந்தக் கட்டுரையில் விவரிக்கப் படுகிறது. அறிவியல் தொழில் நுட்பச் சொற்களுக்கு ஏற்ற தமிழ்ச் சொற்களை வழங்குதல் மொழிபெயர்ப்பு. அதாவது கருத்துகளை மொழிபெயர்ப்பது. சான்றாக .... Wild Animals – வனவிலங்குகள், Naturopathy – இயற்கை மருத்துவம்.

மொழி பெயர்க்க முடியாத சொற்களுக்குப் புதிய சொற்களைப் படைக்கும் சொல்லாக்கமே கலைச் சொல்லாக்கம் (கந்தசாமி இல.செ.க.1981).

| | |
|---|---|
| Computer | – கணினி |
| Random Selection | – பாகுபாடற்ற தேர்வு |
| Gobargas | – சாணவாயு |

"கலைச் சொல் என்ற கருவியை உருவாக்குவதன் மூலமாக மட்டுமே அறிவியல் தொழிலியல் செய்தித் தொடர்புகளை மேம்படுத்த முடியும் என்பதை உலகிற்கு உணர்த்தியவர் பேராசிரியம் யூஜின் ஊஸ்டர் (Eugen Wuster)".

**கலைச்சொல்லாக்க வரலாறு:** முதன்முதலில் உயர்நிலைப்பள்ளியில் தமிழைப் பயிற்று மொழியாக ஏற்பது என்று அரசு முடிவு செய்த பொழுது கலைச் சொல்லாக்கத்தின் தீவிரம் தமிழகத்தில் தொடங்கியது. முதன்முதலில் தமிழ் நாட்டில் 1934–ஆம் ஆண்டு சென்னை மாகாணத் தமிழர் முதலாவது மாநாட்டில் தோன்றிய சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கம் 1938–ஆம் ஆண்டு கலைச் சொற்கள் பட்டியலை வெளியிட்டது. தமிழ்ப் பயிற்று மொழியான பின்பு வெளிவந்த நூற்றுக்கணக்கான பாடங்களும் கலைச் சொற்கள் பட்டியலை விரிவாக்கின. இவை தவிர கலைக்களஞ்சியங்களும் பெரும் பங்காற்றின. தமிழ்நாடு பாடநூல் நிறுவனம் தமிழில் பாடப் புத்தகங்களை வெளியிட்டதன் வாயிலாகப் பட்டப்படிப்புக்கு மட்டுமன்றி, பட்ட மேற்படிப்புக்கும் உரிய கலைச்சொற்கள் பட்டியல் நீண்டது. உலகத்தமிழ் மாநாடுகளிலும் கலைச்சொல்லாக்கம் தொடர்ந்து விவாதிக்கப்பட்டுள்ளது.

**கால்நடை அறிவியல் கலைச்சொல்லாக்க வரலாறு:** நாகரிகக் கலப்பு ஏற்பட்ட போது, இந்தியாவின் பிற பகுதிகளில் கடைப்பிடிக்கப்பட்ட கால்நடை வளர்ப்பு முறைகளும் தமிழகத்தில் அறிமுகமாயின. வாகட நூல்கள் பல எழுதப்பட்டன. கால்நடைக்கு ஏற்படும் நோய்கள், அவற்றுக்கான சிகிச்சை பற்றிய அறிவு வளர்ந்தது. ஆயினும் அது குறிப்பிட்ட சில சமூக மக்களோடு மட்டுமே நின்று விட்டது. ஐரோப்பியக் கால்நடை மருத்துவ அறிவியலும் இங்குக் கற்றுத் தரப்பட்டது. அதன் அடிப்படையில் பல கட்டுரைகளும் நூல்களும் எழுதப்பட்டன. அவற்றுள் இந்தியச் சூழலுக்கேற்ப எழுதப்பட்ட ஆங்கில நூல்களும் உண்டு.

அவ்வகை நூல்களுள் ஒன்று "The Indian Stock Owner's Manual" என்பது. இது முன்பு எடின்பரோ நகரத்து ஜேம்ஸ் மில்ஸ் எம்.ஆர்.ஸி.வீ.எஸ். ஏ.வி.டி என்பவரால் இயற்றப்பட்டது. இந்த நூல் வெ.ப. சுப்பிரமணிய முதலியாரால் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு "இந்து தேசத்துக் கால்நடைக்காரர் புஸ்தகம்'' என்ற தலைப்பில் 1885ஆம் ஆண்டு இந்தியாவிலுள்ள கால்நடைகளின் வியாதிகளைப் பற்றிய தெளிவான குறிப்புகள்(Plian hints on the diseases of cattle in India) என்னும் பெயரில் வெளியிடப்பட்டது. 'இந்து தேசத்துக் கால்நடைக்காரர் புஸ்தகம்' 10 அதிகாரங்களைக் கொண்டுள்ளது. இதில் கலைச் சொற்கள் கொண்ட தமிழ் அட்டவணையும் அருஞ்சொல் விளக்கமும் உள்ளன. இந்த நூலுக்கு முன்பே தமிழில் மருத்துவ நூல்கள் வந்துள்ளமையை இந்நூற் குறிப்புகளால் அறிய முடிகிறது.

அதன்பிறகு ஓர் அரை நூற்றாண்டு காலத்தில் வேறு கால்நடை அறிவியல் நூல்கள் ஏதும் வெளிவந்ததற்கான ஆதாரம் எதுவும் கிடைக்கப் பெறவில்லை. சென்னைக் கால்நடை மருத்துவக் கல்லூரியின் பவளவிழா ஆண்டு 1981இல் கொண்டாடப்பட்டபோது, விடுதி கலைமகள் கழகத்தின் செயலராக இருந்த இந்தக் கட்டுரை ஆசிரியர், 'கால்நடை மருத்துவ அறிவியல் தமிழரங்கம்' என்ற ஆய்வரங்கை நடத்தினார். அவ்வரங்கில் முனைவர் வே.ஞானப்பிரகாசம், டாக்டர் நாச்சிமுத்து(மினிமிக்ஸ்) ஆகியோர் கலந்து கொண்டனர். அவ்வமையம் "கால்நடை அறிவியல் கலைச்சொற்கள்" என்று கலைச் சொற்களைத் தொகுத்து, பெரு. மதியழகன் ஒரு கட்டுரையாகப் படித்தார். கால்நடை மருத்துவ அறிவியல் தமிழ் வரலாற்றில் கலைச்சொல் தொடர்பான முறையான முதல்முயற்சி இதுவே. 1981 ஏப்ரல் திங்கள் 12ஆம் நாள் நடைபெற்ற சென்னை கால்நடை மருத்துவக் கல்லூரியின் பவளவிழாவில் 'கால்நடைக்கதிர்' என்ற காலாண்டு இதழ் வெளியிடப்பட்டது. அவ்விதழில் தொடர்ந்து கட்டுரைகள் எழுதிய பேராசிரியர்கள் பல்வேறு கலைச் சொற்களைக் கையாண்டு எழுதத் தலைப்பட்டனர். பின்னாளில் அவ்விதழின் கடைசி பக்கத்தில் பேராசிரியர் ச.சண்முகசுந்தரம் அவர்களும் கால்நடைக்கதிர் இதழின் ஆசிரியராக இருந்த தமிழாசிரியர் சு.செயராசு நத்தானியல் அவர்களும் இணைந்து தொடர்ந்து கலைச்சொற்கள் பட்டியலை வெளியிட்டு வந்தனர்.

இந்தக் கட்டுரை ஆசிரியர் எழுதிய 'கால்நடை மருத்துவக் கலைச்சொல் அகராதி' என்ற குறுநூலை 1985இல் அதியமான் பதிப்பகம் வெளியிட்டது. தெற்கு ஆசியாவின் முதல் கால்நடை மருத்துவ அறிவியல் பல்கலைக்கழகமாம் தமிழ்நாடு கால்நடை மருத்துவ அறிவியல் பல்கலைக் கழகத்தை 1989–இல் மாண்புமிகு தமிழக முதல்வர் கலைஞர் தொடங்கி வைத்தார். அதன் பின்னர் அந்தப் பல்கலைக்கழகத்தின் துணை வேந்தராக டாக்டர்.வே.ஞானப்பிரகாசம் இருந்த போது பல்கலைக் கழகத்தின் அனைத்துத் துறைகளினின்றும் அந்தந்தத் துறை தொடர்பான கலைச் சொற்களின் பட்டியல்கள் அனுப்பி வைக்க ஆணையிடப்பட்டு, அந்தக் கலைச் சொற்களைத் தொகுத்துச் செழுமை செய்து தரப்படுத்த இந்தக் கட்டுரை ஆசிரியர் உள்ளிட்ட சிலரைக் கொண்ட ஒரு குழு அமைக்கப்பட்டு, பிறகு அது கால்நடை மருத்துவக் கலைச் சொற்களஞ்சியமாகப் பல்கலைக் கழகத்தால் வெளியிடப்பட்டது (1995).

சு.செயராசு நத்தானியல் அவர்கள் தொகுத்து வெளியிட்ட கால்நடை அறிவியல் கலைச்சொற்கள் (1995) என்ற நூலை நியுசெஞ்சுரி புத்தக நிலையம் வெளியிட்டுள்ளது. அதன்பிறகு தமிழ்நாடு கால்நடை மருத்துவ அறிவியல் பல்கலைக்கழகம் கலைச்சொற் களஞ்சியத்தில் மேலும் சொற்களை இணைத்து வளப்படுத்திட முனைவர்.இரா.பிராபாகரன் தலைமையில் ஒரு குழு அமைத்து அதை நூலாக வெளியிட்டது (2004).

ஆடு, பன்றி, முயல், காளை, புறா, ஈமு வளர்ப்புபற்றி 25க்கும் மேற்பட்ட சிறு குறு நூல்கள் வெளி வந்துள்ளன. இந்நூல்களில் பல்வேறு கால்நடைகள் தொடர்பான கலைச் சொற்களைக் கொண்டுள்ளன. அறிவியல் மாத இதழ்கள் மற்றும் நாளிதழ்களிலும் அவ்வப்போது வெளிவரும் கட்டுரைகளில் கலைச் சொற்கள் இடம் பெற்றுள்ளன. பல்கலைக்கழகமும், தமிழ் நாடு அரசின் கால்நடைப் பராமரிப்புத் துறை ஆகியன தொடர்ந்து மடிப்பிதழ்கள் மற்றும் மாத இதழ்களை வெளியிட்டுள்ளன. அவற்றில் கலைச் சொற்கள் இடம் பெற்றுள்ளன. ஆனால் அவ்வாறு எழுதப்படும் கட்டுரைகளில் கலைச் சொற்கள் ஒரே மாதிரியாக இருப்பதில்லை. அவரவர் அனுபவத்திற்கு ஏற்ப சொற்களைக் கையாண்டு எழுதுவதைக் காண்கிறோம். இத்தகைய குறைபாடுகளைத் தவிர்க்கப் பின்வரும் நெறிமுறைகளைக் கையாளலாம்.

**கலைச் சொல்லாக்கத் தனித்தன்மை:** அறிவியல் கருத்தின் சாயல் சிறிதும் மாறுபடாமல் வெளியிடுகின்ற சொற்களைத் தேடி அமைக்க வேண்டும். கலைச் சொற்களுக்குரிய பொருள் அச்சொற்களின் வழக்கிலிருந்து ஏற்படுகின்றது. 'Velocity' என்ற சொல்லைத் திசைவேகம் என்று குறிப்பிடுகிறோம். 'கதி' என்றும் குறிப்பிடலாம். இதை வேகம் என்றே நாம் குறிப்பிட நேர்ந்தாலும் அச்சொல் குறிக்கின்ற கருத்தில் திசையும் தொக்கி நிற்கும். இதுவே, கலைச் சொல்லுக்கும் சாதாரண சொல்லுக்கும் உள்ள வேறுபாடு (கண்ணபிரான் கே.1982).

1. இந்த அடிப்படையில் கலைச் சொற்கள் சுருக்கமாகவும், ஆனால் பொருட்செறியும் ஆழமும் உடையதாகவும் இருக்க வேண்டும். அவ்வாறு இருந்தால் அவை நாளடைவில் தமிழோடு தமிழாகக் கலந்திடும் இயல்பினதாய் வழக்கிலும் எளிதில் நிலைக்கும். சான்றாக......

| | | |
|---|---|---|
| Tablets | – | மாத்திரை |
| Fever | – | காய்ச்சல் |
| Molecule | – | மூலக்கூறு |
| Convex Mirror | – | குவிஆடி |

2. கலைச்சொல் ஆக்கத்தில் கருத்துகளுக்கே முதலிடம்; உணர்ச்சிகளுக்கு இடம் தருதல் கூடாது.

3. ஒரு சொல்லுக்கு இரு பொருள் என்ற நிலைக்கு இடந்தராவாறு கலைச்சொல்லாக்கம் அமைந்து ஒரு சொல் திட்டவட்டமாக ஒரு பொருளையே குறிக்க வேண்டும். தவிர்க்க முடியாத நிலையில் சிறு சிறு வேறுபாடுகளைப் படைத்துப் பொருளைத் தெளிவுப்படுத்த வேண்டும்.

4. கலைச்சொல்லாக்கம் அறிவியல் நுட்பங்களைத் தமிழில் வளர்ப்பதற்கான முயற்சியே அன்றி தமிழ் வளர்ச்சிக்கு அறிவியல் கலைச்சொல்லாக்கம் என்பதற்காக அல்ல. எனவே, கலைச்சொற்களை உருவாக்கும் போது உலகளாவிய பார்வை வேண்டும். பிறமொழி மக்கள் தமிழில் கால்நடை மருத்துவ அறிவியலைப் படித்தாலும் சொல்லும் மொழி தமிழேயன்றி நுட்பங்கள் எல்லாம் உலகம் தழுவிய நிலையிலேயே இருத்தல் வேண்டும்.

5. மொழி மரபு போற்றப்பட வேண்டும் என்பதில் இரண்டு கருத்துக்கு இடமே இல்லை. ஆனால் மரபுகளே வளர்ச்சிக்குத் தடையாக இருந்தால் 'பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல' என்ற கொள்கையில் முனைப்பாக இருத்தல் வேண்டும்.

**கலைச்சொல்லாக்க நெறிமுறைகள்:** மேற்கத்திய அறிவியல் சொல்லின் மூலச் சொல் என்னவென்று அகராதியில் பார்த்து அதற்கு நேரான தமிழ்ச் சொல் மூலத்தைக் கண்டறிந்து அதிலிருந்து புதுச் சொற்களைப் புனையலாம்.

| | | |
|---|---|---|
| Thyroid Gland | – | கேடயச் சுரப்பி |

பல சமயங்களில் மூலச்சொல்லின் அடிப்படையில் மொழிபெயர்ப்பது பொருந்தாது. அத்தகைய சூழலில் அச்சொல் குறிக்கின்ற அல்லது அடக்குகின்ற கருத்துக்களை மனதிற்கொண்டு, அந்தக் கருத்தை வெளிக்காட்டுமாறு சொல்லை அமைக்க வேண்டும்.

Electro Cardiography – இதயத் துடிப்பு மின் வரைவி எனச் சொல்லாக்கம் செய்வதே சரியாகும்.

2. ஒரு சில மூலச் சொற்களை உருவாக்கிக் கொண்டால் அதை அடிப்படையாகக் கொண்டு அதன் தொடர்புடைய சொற்களை உருவாக்கிக் கொள்வது எளிது.

| | | |
|---|---|---|
| Ova | – | சூல் |
| Ovary | – | சூல் முடிச்சு |
| Oviduct | – | சூல் குழல் |
| Cystic Ovary | – | நீர்சூழ் முடிச்சு |
| Corpuslutium | – | சூல் குமிழ் |
| Persistent Corpuslutium | – | நிலை சூழ் குமிழ் |

அதேபோல, 'Prolapse' என்ற சொல்லுக்கு 'கருப்பை இறக்கம்' , 'கருப்பை அடிதாழுதல்' என பல சொற்கள் கால்நடை அறிவியல் கட்டுரையாளர்களால் கையாளப் பெற்றுள்ளன. ஆனால், 'மாட்டுப்பண்ணை' என்ற எமது நூலில் prolapse என்பதற்கு 'பிதுக்கம்' என்ற சொல்லைக் கையாண்டதால் அதைக் கொண்டு தொடர்புடைய பல சொற்களை ஆக்குவது எளிதாயிற்று:

| | | |
|---|---|---|
| Utrine Prolapse | – | கருப்பை பிதுக்கம் |
| Rectal Prolapse | – | பெருங்குடல் பிதுக்கம் |
| Anal Prolapse | – | குதப் பிதுக்கம் |
| Veginal Prolapse | – | யோனிப் பிதுக்கம் |

3. பெயர்ச்சொற்களை மாற்ற முடியாது ஆகையால் அவற்றை அப்படியே ஏற்றுக்கொள்வதே முறை.

| | | |
|---|---|---|
| Penicellin | – | பெனிசிலின் |
| Ampicellin | – | ஆம்பிசிலின் |
| Erthyromycin | – | எரித்ரோமைசின் |
| Gumboro disease | – | கம்போரா நோய் |
| Johne's disease | – | ஜோன்ஸ் நோய் |
| Mendal's Law | – | மெண்டல் விதி |

'சோவியத் ரஷ்யா, ஜப்பான் நாடுகளில் அவரவர் தாய் மொழிதான் போதனா மொழியாக இருக்கிறது. 'பெனிசிலின்' போன்ற சொற்களை இவை ஆங்கிலச் சொல்லாயிற்றே என்றால் அதை அவர்கள் ஏற்க மறுக்கிறார்கள். ஒவ்வொரு அறிவியல் படைப்பும் முதன் முதலில் ஓர் அறிஞரால் கண்டுபிடிக்கப்பட்டு உலக சமுதாயத்திற்கு வழங்கப்படுகிறது. முதன் முதலில் கண்டுபிடிப்பவர் தன் படைப்புக்கு ஒரு பெயர் வைக்கிறார். அதுவும் அவருடைய படைப்பு. அதையும் உலகப் பொதுச் சொல்லாகத்தான் கொள்ள வேண்டுமேயன்றி, அதை ஆங்கிலச் சொல், ஜெர்மானியச் சொல் என்று மாற்றத் தலைப்படக் கூடாது என்பதே அவர்கள் கருத்து' (லலிதா காமேஸ்வரன், 1982).

4. வினைச்சொற்களையும், அவற்றினடியே பிறந்த சொற்களையும் மொழிபெயர்த்தல் வேண்டும். வினைச் சொற்கள் ஒவ்வொரு மொழிக்கும் உரிய சிறப்புச் சொற்களாகும். எனவே அவை மொழி பெயர்க்கப்பட்ட தமிழ்ச் சொல்லாகவே அமையும்.

| | | |
|---|---|---|
| Computer | – | கணினி |
| Computation | – | கணிப்பு |
| Evolution | – | பரிணாமம் |

5. அறிவியல் அலகுகள், குறியீடுகள், தனிமங்கள், சேர்மங்கள் ஆகியன உலக நாடுகள் அனைத்திற்கும் பொதுவானவை. பன்னாட்டு அறிஞர்கள் கூடி ஆய்ந்து ஏற்றுக் கொள்ளப்பட்ட இவற்றை அப்படியே ஏற்க வேண்டும்.

அலகுகள் – Wat – வாட்

சேர்மங்கள் – Plantinum - பிளாட்டினம்

தனிமங்கள் – Haemoglobin – கீமோகுளோபின்

வழக்கிலும், தமிழிலும் உள்ள தனிமங்களின் பெயர்களை வழக்கில் ஏற்றுக் கொண்டவாறு கலைச்சொல்லாக்கலாம்.

| | | |
|---|---|---|
| Sulpher | – | கந்தகம் |
| Silver | – | வெள்ளி |
| Gold | – | தங்கம் |

**6. துறைக்கேற்ற சொல்லாக்கம்:** துறைக்குத் துறை கலைச்சொற்கள் வரையறை மாறுபடும். ஒரு துறையில் வழங்கப்படும் கலைச் சொல் வேறு துறையில் வேறு பொருளில் வழங்க இடமுண்டு. அந்நிலையில் அதற்கேற்ற கலைச்சொல்லைக் கையாளுதல் வேண்டும்.

Medium – என்ற சொல் ஊடகம், பயிற்சிமொழி, நடுத்தர நிலை, சாதனம் ஆகிய பொருள்களைத் தரும். ஆதலால்

| | | |
|---|---|---|
| Medium of education | – | பயிற்றுமொழி |
| Micro Organism Culture Medium | – | நுண்ணுயிர் வளர் ஊடகம் |
| Medium student | – | நடுத்தர மாணவன் |
| Mass Medium | – | மக்கள்திறள் சாதனம் |

இதே போன்று 'Culture' என்ற சொல் பலவாறு பயின்று வரும் –

| | | |
|---|---|---|
| Tamil Culture | – | தமிழ்ப் பண்பாடு |
| Tissue culture | – | திசு வளர்ப்பு |

**தழுவல் கலைச்சொல்லாக்கம்**

வேற்று மொழியில் உள்ள தொழில்நுட்பச் சொற்களைக் கலைச்சொல்லாக்கச் சரியான தமிழ்ச் சொல் இல்லையாயின் அவற்றின் உச்சரிப்பைச் சற்று மாற்றி உள்ளது உள்ளவாறே ஏற்கலாம். (சண்முகசுந்தரம். ச. 1991). ஆனால் அவற்றை தமிழ்மரபு கெடாமல் எழுதவேண்டும். சான்றாக, விவிலிய மொழி பெயர்ப்பில் பெயர்களைத் தமிழாக்கம் செய்துள்ள முறை குறிப்பிடத்தக்கதாகும் (ஜோசப்,1992).

| | | |
|---|---|---|
| Joseph | – | யோசேப்பு/சூசையப்பர் |
| John | – | யோவான் |
| Peter | – | பேதுரு |
| Titus | – | தீத்து |
| Mary | – | மரியாள் |

இதை மனத்தில் கொண்டு அறிவியல் சொற்களையும் தமிழ் தழுவி எழுதலாம்.

| | | |
|---|---|---|
| Tissue | – | திசு |
| Cell | – | செல் |
| Hectare | – | எக்டேர் |

**7. மரபுக்கேற்ற சொல்லாக்கம்:** கலைச்சொல்லாக்கம் செய்யும் பொழுது இயன்றவரை தமிழ் மொழியின் மரபு போற்றுவது முக்கியம். 'Social Forestry' என்பதற்கும் சமூகக் காடுகள் என்றும், 'Minor Irrigation' என்பதற்குச் சிறு நீர்ப்பாசனம் என்றும் சொல்லாக்கங்கள் தருவது தமிழ் மரபுக்குப் பொருந்தா. எனவே, இத்தகைய சூழலில் 'சமுதாய நலக்காடுகள்' என்றும், 'சிறு பாசனம்' என்றும் சொல்லாக்கம் செய்யலாம்.

**8. பொருள் பெயர்ப்பு:** வேற்றுமொழிக் கலைச் சொற்களைத் தமிழில் அப்படியே பொருள் பெயர்த்துக் கொள்வதில் சில கலைச்சொற்களை உருவாக்கலாம். கலைச்சொற்கள் மொழிபெயர்ப்பாக மட்டும் இருக்கக் கூடாது. அச்சொல் குறிக்கின்ற பொருளுக்கு விளக்கமாகவும் இருக்க வேண்டும், கருத்து எளிதில் தெளிவாகப் புலப்பட வேண்டும்.

| | | |
|---|---|---|
| Mammals | – | பாலூட்டிகள் |
| Beef | – | மாட்டிறைச்சி |
| Castration | – | ஆண்மை நீக்கம் |
| Dehorning | – | கொம்பகற்றல் |

**9. இலக்கியச் சொற்கள்:** தமிழ் இலக்கியத்தில் பயின்று வரும் சொற்களைத் தேடி எடுத்துக் கலைசொற்களாகப் பயன்படுத்தலாம். தொல்காப்பியத்தில் மரபியலில் பயன்படுத்தப்படும் கால்நடைகளின் பெயர்கள், ஆண்பால், பெண்பால், இளமைப் பெயர்களையும் பயன்படுத்தலாம். (எ.கா.) போத்து, சேவல், மூடு.

திருக்குறளில் 'நோய் நாடி' என்ற சொல் பயன்படுத்தப்படுகிறது. இதை 'Diagnosis' என்ற சொல்லுக்குப் பொருத்தமாக 'நோய் நாடல்' எனப் பயன்படுத்தலாம். இலக்கியங்களில் காணப்படும் உதல் (ஆட்டுக்கிடால்), ஏறு, பகடு, ஆநிரை போன்றவற்றையும், மேலும் கல்வெட்டுகளில் காணப்படும் இசைக்கிடாய் (ஆட்டுக்கிடா) மற்றும் மாவடை (ஊரகத்தில் கால்நடை அடையும் இடம்) போன்றவற்றையும் பயன்படுத்தலாம்.

கருவுற்றபிறகு கருப்பையில் வளர்ந்து முதிர்ந்த கருவை 'Foetus' என்பர். 'பிண்டம்' என்ற சொல்லால் குறிக்கலாம். இது நற்றிணையில் (116) 'விழுவப்பிண்டம் நாப்பண் எழுற்று' என்ற அடியில் இடம் பெற்றுள்ளது. இதைக் கொண்டு –

Meconium – பிண்டமலம்

Foetal circulation – பிண்டச் சுற்றோட்டம்

போன்ற சொற்களை ஆக்கிக் கொள்ளலாம்.

அதேபோல அண்மையில், கன்று ஈன்ற பசுவைக் குறிக்க 'புனிற்றுஆ' (நற் – 290, அகம் – 15) என்ற சங்க இலக்கியத்தில் பயன்று வரும் சொல்லை, இந்தப் புனிற்று என்ற பழந்தமிழ்ச் சொல்லை 'Neonatal' என்பதற்கு இணையான கலைச்சொல்லாக ஏற்கலாம்.

இதைக்கொண்டு தொடர்புடைய பிற சொற்களை உருவாக்கலாம்.

Opthalmic Neonakorum – புனிற்றுக் கண்ணழல்

Neonatal Jaundice – புனிற்றுக் காமாலை

காற்கை வலிப்பு என்பதை 'Grandmal' என்று அறிவியல் மொழியும் இந்தக் குறைபாட்டை 'Epilepsy' என்று சொல்வர். மேலும் பெரியபுராணத்தில் சேக்கிழார், திருஞானசம்பந்தர் புராணம் உரைக்குமிடத்து, 'முயலகன்' நீக்கிய செய்தியைச் சொல்கிறார். 'Epilepsy' என்ற அறிவியல் சொல்லுக்கு இணையான சொல் 'முயலகன்' என்பதாகும். இதைக்கொண்டு பிறச் சொற்களை உருவாக்கிடலாம்.

Grandmal Epilepsy – காற்கை வலிப்பு முயலகன்

Petitmal Epilepsy – சிறுவலிப்பு முயலகன்

Psychomotor Epilepsy – உளவியக்க முயலகன்

**10. வட்டார வழக்குச் சொற்கள்:** நம் நாட்டில் இன்றும் நாட்டார் வழக்கில் தொழில் முறையில் எல்லாத் துறைச் சொற்களும் புழக்கத்தில் உள்ளன. கால்நடை வளர்ப்புத் தொழில் குறிப்பாக வானம் பார்த்த பூமிப்பகுதியில் வாழும் மக்களின் வாழ்வாதாரமாக இருப்பதால் ஏராளமான சொற்கள் உள்ளன. அவற்றைத் தொகுத்துப் பயன்படுத்தலாம். ஆனால் இன்றைய அறிவியல் வளர்ச்சியை நோக்க அத்தகைய சொற்கள் மிகமிகக் குறைவே ஆகும். இருப்பினும் இருக்கும் சொற்களைத் தொகுத்துப் பொருத்தமான சொற்களைப் பயன்படுத்தலாம். பல்வேறு வட்டார வழக்குச் சொற்களும் மங்கி மறைந்து வழக்கொழிந்து வருகின்றன. உடனே முயற்சியும் நடவடிக்கையும் மேற்கொண்டால் அரிய சொல்வளத்தை அழியாது காக்கவும் பயன்படுத்தவும் செய்யலாம்.

Input – முட்டுவழிச் செலவு, இடுமுதல்

Granary – களஞ்சியம், தானியக் கிடங்கு

Humidity – நமுக்கம்

Mouth gag – வாய்ப்பூட்டு

Mastigation – அசை போடல்

Grazing land – மேய்ச்சல் தரை

Ephimeral fever – குந்து

Chromic luction of pattaila – சுண்டு வாதம்

Foot and mouth disease – கோமாரி

ஒரு மொழியில் உள்ள சொற்களை முதலில் ஏற்பதும், பொருளுணர்ந்து ஏற்ற சொற்களைப் பிறகு படைப்பதுமே வளர்ச்சிக்கு வழிவகுக்கும்.

**11. வாகட நூல்கள் :** வாய்பேச இயலாத உயிரினங்களுக்குச் செய்யப்படும் மருத்துவம் வாகடம் எனப்படும். மேல்நாட்டு மருத்துவம் வரும் முன்னர் இங்கு பெரும்பாலும் கால்நடைகளுக்கு வாகடங்கள் கூறும் மருத்துவமே பார்க்கப்பட்டது. இதில் கூறப்படும் சொற்களையும் ஆய்ந்து பார்த்து உரியவற்றைக் கையாளலாம். குறிப்பாக.

Nasal schistosomiasis – மூக்கடைப்பான்

Artinobacilosis – நாக்கடைப்பான்

Heamorragic septicicemia – தொண்டையடைப்பான்

போன்ற சொற்களைக் கலைச்சொற்களாகப் பயன் படுத்தலாம்.

**12. அணுகுமுறைகள் :** சித்த மருத்துவ நூல்களில் கையாளப்படும் அணுகுமுறைகள் இந்த மேற்கத்திய மருத்துவ அணுகுமுறைக்குப் பொருந்திவராது ஆயினும் உடற்கூறுகள், உடலியங்குதல் தொடர்பாக அந்நூல்களில் பயின்று வரும் சொற்களில் பொருத்தமானவற்றைக் கலைச்சொல்லாக எடுத்தாளலாம். தோல் (Skin) தொடர்பாக ஆங்கிலத்தில் dermics, cutis போன்ற சொற்கள் கையாளப்படுகின்றன. ஆனால் தமிழில் பொதுவாக தோல் என்ற சொல்லையே பயன்படுத்துகிறோம். சித்த மருத்துவத்தில் 'சருமம்' என்ற சொல் கையாளப்படுகிறது. 'சர்ம' என்ற சமஸ்கிருத வேரிலிருந்து உருவான இந்தச் சொல்லைப் பயன்படுத்திக் கலைச்சொல் புனையலாம்.

Epidermic – மேல்சருமம்/மேல்தோல்
Hypodermic – சருமவடி/தோலின்கீழ்
Dermotology – சருமவியல்/தோலியல்
Dermatitis – சருமவழல்/தோல் நோய்

பிறகு செம்மையான தமிழ்ச்சொல் தமிழில் உருவாகும் போது இத்தகு சொற்களை ஒதுக்கிவிடலாம் அன்றி ஏற்பின் இதையே சொற்களாக்கலாம். இந்தத் தோல் தொடர்புடைய வேறு சில சொற்களும் கால்நடை அறிவியலில் பயன்படுத்தப்படுகிறது. அவை 'Hide' மற்றும் 'Leather' என்பதாகும். இவற்றை முறையே உரித்த தோல் மற்றும் பதப்படுத்தப்பட்ட தோல் என்று சொல்லாக்கினால்தான் அச் சொல் பொருளுடைய தாகவும் நிலைத்ததாகவும் விளங்கும்.

**13. மொழி பெயர்ப்பு நூல்கள் :** வெ.ப. சுப்பிரமணிய முதலியாரால் தமிழில் மொழி பெயர்க்கப்பட்ட 'இந்து தேசத்துக் கால்நடைக்காரார் புஸ்தகம்' எனும் நூலில் கலைச் சொற்கள் ஆக்கப்பட்டுள்ளன. அவற்றையும் பயன்படுத்திக் கொள்ளலாம்.

Anthrax – அடைப்பான்
Inflamation – அழற்சி
Slaughter house – ஆடுமாடடிக்குமிடம்

மேலும் இதுவரை வெளிவந்துள்ள கால்நடை பராமரிப்பு நூல்கள், இதழ்களில் வெளிவந்த கட்டுரைகள் ஆகியவற்றை ஆய்ந்து கலைச் சொற்களைத் தொகுக்கலாம்.

**14. ஒலி பெயர்த்தல்** (Transliteration): மற்ற உத்திகளைப் பயன்படுத்திக் கலைச் சொல்லாக்க வழியின்றிப் போனால் ஒலி பெயர்த்துக் கொள்ளலாம்.

Gene – ஜீன்
Oxygen – ஆக்சிஜன்
D.D.T. – டி.டி.டி.

பெரும்பாலும் மருத்துவப் பெயர்களைப் பொறுத்த அளவில் கண்டுபிடித்தவர் பெயர், நிறுவனத்தின் பெயர், பொருளின் தன்மை இவற்றை உள்ளடக்கிப் பெயரிடப்படுவதால் ஒலி பெயர்க்கும் நிலையிலேயே அமைந்துள்ளன. இவற்றை அப்படியே ஏற்றுக் கொள்வதுதான் சிறந்தது.

**15. ஒலிக் குறிப்புகள் :** இன்று வெளியாகும் பல்வேறு நுட்பமான கருவிகளின் பெயர்கள், பிற பொருள்களின் பெயர்கள் ஆகியவற்றைக் குறிப்பிட எல்லா மொழிகளிலும் போதிய ஒலிக் குறிப்புகள் இருக்குமென்று சொல்வதற்கில்லை. அதனால் நமது மொழியில் சொல்லத் தேவையான ஒலிக்குறிப்புகளுக்குரிய வரிவடிவங்களை உருவாக்க வேண்டும். இல்லாவிடின் பொருள் விளங்கும் அளவிற்கேனும் பிறமொழி ஒலிக் குறிப்புகளை ஏற்றே ஆக வேண்டும்.

Xrays – எக்ஸ் கதிர்கள்
Gama rays – காமாக் கதிர்கள்

மொழி பெயர்க்க இயலாத சொற்களை, அவற்றின் உச்சரிப்பை அப்படியே சிறிதும் மாற்றாமல், தமிழ் வரி வடிவில் எழுதிக் கொண்டு நூல்களைப் படைத்திட வேண்டும். இதனைத்தான் 'ஒலி பெயர்ப்பு முறை' என்று சொல்கிறோம்.

உலகக் குறியீடுகள், சமன்பாடுகள் ஆகியவற்றை அப்படியே வரி வடிவத்துடன் ஏற்றுக் கொள்ளலாம். குறிப்பாகக் கணிதக் குறியீடுகள் பொருட்சேர்க்கைகள் முதலியன.

$H_2O$

(a+b)2

**16. முன்னொட்டுகள் பின்னொட்டுகள்:** அறிவியல் நூல்களை எழுதும்பொழுதும் கலைச் சொல்லாக்கம் செய்யும்பொழுதும் ஒரு நூலில் வரும் முன்ஒட்டு (Prefix) பின்ஒட்டு (Suffix) சேர்த்தல், தொகைச் சொற்கள் போன்றவற்றை எல்லாம் தொகுத்து முறைப்படுத்திக் கொண்டு பின்னர் ஒரு பொது விதி அமைத்துக்கொள்ள வேண்டும்.

முன்னொட்டு – Micro என்பதை நுண் என்று கொண்டு சொற்கள் ஆக்கப்படுத்துதல் –

Microscope – நுண்ணோக்கி
Microbiology – நுண்ணுயிரியல்
Micro organism – நுண்ணுயிரி

பின்னொட்டு 'logy' என்ற பின்னொட்டுக்கு 'இயல்' என்ற சொல்லுடன் இணைத்து

Myology – தசையியல்
Neurology – நரம்பியல்
Ostiology – என்பியல்

இதுபோன்ற முன்னொட்டு, பின்னொட்டுகளை மொழியியல் அறிஞர்கள் ஆக்கித் தந்தால் கலைச் சொல்லாக்கம் மேலும் எளிமைப்படும். புதிய சொற்கள் படைப்பதற்குச் சில முன் ஒட்டுகள் (Prefix) பின் ஒட்டுகள் (Suffix) உருவாக்கப்பட வேண்டும். அவற்றை அடிப்படையாக வைத்தோ அன்றி கூட்டுச் சொற்களுடன் இணைப்பதன் மூலமோ புதுச் சொற்களைப் படைக்கலாம்.

**17. பகுதி விகுதிகள்:** சில கூட்டுச் சொற்களாக இருக்கும் சொற்களுக்குக் கலைச்சொல் உருவாக்கும் போது அவற்றின் பகுதி விகுதிகளுக்கு ஆங்கிலத்தில் metry, scopy மற்றும் graphy என்ற ஆங்கில விகுதிகளைக் கொண்டுள்ள சொற்களுக்குத் தமிழில் 'அளவி, நோக்கி, வரைவி' என்ற விகுதிகளைச் சேர்க்கலாம்.

| | | |
|---|---|---|
| Calorimetry | – | கனலளவி |
| Micrometry | – | நுண்ணளவி |
| Microscopy | – | நுண்ணோக்கி |
| Micrography | – | நுண்வரைவி |

**கலைச்சொல் தர மேம்பாடு**

கலைச்சொல்லாக்க மொழிபெயர்ப்பு செய்யப்படும் போது ஆர்வப் பெருக்கால் சிலர் இலக்கிய நோக்கில் சொல்லாக்கம் செய்வதும் உண்டு. இத்தகையவற்றை மறு ஆய்வு செய்ய வேண்டும். மருந்துகளும் நோய்களும் என்ற நூலின் ஆசிரியர் (டாக்டர் க.ரா.கிருஷ்ணன்) 'pathology' என்பதற்கு 'துயரியல்' என்று மொழி பெயர்த்துள்ளார். அதற்கு 'patho' என்ற மூலச்சொல் துயரைக் குறிப்பதாகும் எனக் கூறுகிறார். துயர் என்பது மனத்துன்பத்தையே பெரிதும் உணர்த்துவதாகும். அதனால் 'pathology' என்பதற்கு உடல் துன்பத்தைக் குறிக்கும் 'நோய்க்குறியியல்' என்பதே பெருவழக்காக உள்ளது. இவை போன்றவற்றைக் கருத்திற் கொண்டு உரிய துறை வல்லுநர்களையும் கலந்து இதுபோன்று உள்ள சொற்களை ஆய்வுக்கும், மேலும் மேம்படுத்துவதற்கும் கருதுவது அவசியமாகும்.

கால்நடை அறிவியல் கலைச்சொற்களை எல்லாம் தொகுத்து, தேர்ந்து, வேர்ச்சொல் காட்டி அகரவரிசையில் கால்நடை மருத்துவ அறிவியல் பேரகராதி உருவாக்க வேண்டும்.

சில நேரங்களில் கால்நடை அறிவியல் கட்டுரைகளை எழுதுகிற அறிஞர் பெருமக்கள் மொழிபெயர்த்து எழுதும் போது அவர்கள் முயன்று ஆக்கிய கலைச்சொற்கள் வழியாக என்ன சொல்ல விழைகிறார்கள் என்பதைப் புரிந்து கொள்வதே சிக்கலாகி விடுகிறது. தமிழ் மரபு இலக்கணங்களுக்கு ஒவ்வாமல் தெளிவு கெடவும் ஏதுவாகும் சூழல்களும் உண்டு. இத்தகைய சொற்களையும் இனங்கண்டு செழுமை செய்ய வேண்டும்.

இதுவரை கால்நடை அறிவியல் குறித்து எழுதியுள்ள பல கட்டுரை ஆசிரியர்கள், நூலாசிரியர்கள் அவரவர் புலப்பாட்டுக்கு ஏற்பக் கலைச்சொற்களை ஆக்கியிருப்பர். ஒரே ஆசிரியர் 'symptoms of the disease' என்பதை ஓர் இடத்தில் 'நோய்க்குறி' என்றும் பிரிதோர் இடத்தில் 'நோயின் அறிகுறி' என்றும் மற்றோர் இடத்தில் வேறு மாதிரியாகவும் ஒரு சொல்லுக்கு வெவ்வேறு காலகட்டத்தில் வேறுவேறு வகையாகச் சொல்லாக்கியிருப்பதைக் காண்கிறோம். எனவே ஓர் ஆங்கிலச் சொல்லுக்குப் பல தமிழ்ச் சொற்கள் இப்போது வழக்கில் இருப்பது இயல்பே. ஆகவே, ஆங்கிலச் சொற்களை வரிசைப்படுத்தி, ஒவ்வொரு சொல்லுக்கும் வழக்கிலுள்ள தமிழ்ச் சொற்கள் அனைத்தையும் எழுதி அகராதி ஆக்குவது மிக முக்கியமாகும். அப்போதுதான் கலைச்சொல் தர மேம்பாட்டின் அடுத்த படிக்குச் செல்ல இயலும்.

மேம்படுத்தப்பட்ட அகராதியில் ஒவ்வொரு சொல்லுக்கும் வழங்கி வரும் பல்வேறு சொற்களையும் ஆராய்ந்து சீர்தூக்கிப் பார்த்து சிறந்தவற்றைத் தேர்ந்தும், பிறவற்றை விலக்கியும் திருந்திய ஒருமித்த அகராதி செய்வது நலம் பயக்கும்.

கால்நடை மருத்துவ அறிவியல் கலைச் சொல்லாக்கத்திற்கென இதுவரை எடுக்கப்பட்ட முயற்சிகள் யாவும் மொழி, இன, மக்கள் சிந்தனையுடைய சிலரால் அவ்வப்போது நிகழ்ந்தவை. மாறாக கால்நடை மருத்துவ அறிவியல் புலமையும், தமிழ்மொழி வளமும் கொண்ட சிலரை இதற்கென்றே பணியமர்த்தி அர்ப்பணிப்போடு தீவிர முயற்சி மேற்கொண்டால் மட்டுமே கால்நடை மருத்துவ அறிவியல் கலைச் சொல்லாக்கப் பணியில் ஓரளவு வெற்றி பெற முடியும். வேறு பணியில் ஈடுபட்டு இருப்பவர்களை ஒரு சில நாட்கள் கலைச்சொல்லாக்கப் பணிக்கு அமர்த்திச் சொல்லாக்கம் செய்யப் பணிக்கும் முயற்சிகள் விரைவான வளர்ச்சி நிலை நல்கா. கடந்த முப்பது ஆண்டுகளாக மனம் சிந்தித்து 'hydrophobia' என்ற சொல்லுக்கு 'நீர் வெறுப்பு' என்ற மணியான சொல் அண்மையில் கிடைத்தது. கலைச்சொல் உருவாக்குவதும் கூட ஓர் ஆராய்ச்சிப் பணிதான். ஒரு சொல் ஆக்குவது கூட ஒரு சிறந்த படைப்புதான்.

கால்நடை மருத்துவ அறிவியலில் இதுவரையில் கலைச்சொல்லாக்கத்தில் தனி மனித முயற்சிகளும், அவ்வப்போது நடைபெற்ற நிறுவனம் சார்ந்த முயற்சிகளும் பாராட்டுக்குரியன என்றாலும் அவை போதா. இந்தத் துறையில் கலைச் சொல்லாக்கப் பணி மிக விரைவாக நடைபெற அரசும் பல்கலைக் கழகமும் ஒங்கி முயற்சிக்க வேண்டியது காலத்தின் கட்டாயம்.

கால்நடை மருத்துவ அறிவியல் கலைச் சொல்லாக்கம் தொடங்கி வளர்ந்த வரலாறு, கலைச் சொல்லாக்கத் தனித் தன்மைகள், கலைச் சொல்லாக் கத்தில் மேற்கொள்ளப்பட்ட, மேற்கொள்ளப்பட வேண்டிய பல்வேறு நெறிமுறைகள் சுருக்கமாகவே இங்கு உரைக்கப்பட்டுள்ளன. இன்னும் விரிவாக இந்த நோக்கில் எழுதப்பட வேண்டும் என்பதே எமது விழைவு.

❖

# பன்னாட்டுக் கலைச்சொல் தகவல் மையம் (பன்கலைத்தகமை)

பொறிஞர் உலோ. செந்தமிழ்க் கோதை



### 1.0 கலைச்சொல்லியல் குறித்த அறிமுகம்

கலைச்சொல்லியல் என்பது கலைச்சொல் ஆய்வும் பயன்பாடும் குறித்த அறிவியற் புலமாகும். கலைச்சொற்கள் என்பன குறிப்பிட்ட அறிவுப் புலச் சூழ்நிலைகளில் பயன்படும் சிறப்புப் பொருள் வாய்ந்த தனிச்சொற்கள், கூட்டுச் சொற்களின் தொகுப்பாகும். இந்தக் கலைச்சொல் ஆய்வு தனிமொழியிலோ இருமொழி உறவிலோ பன்மொழித் தொகுப்பிலோ மேற்கொள்ளப்படலாம். கலைச் சொல்லியல் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட புலங்களில் நிலவும் கருத்துருக்களை இனங்கண்டு (அடையாளப்படுத்தி) அவற்றை உரிய சொற்களால் குறிக்கும் முறையான ஆய்வுப் புலமாகும்.

கலைச்சொல்லியல் எனும் அறிவியற்புலம் தனக்கே உரிய பின்வரும் கோட்பாட்டு நெறிமுறைகளைக் கொண்டுள்ளது:

1. ஒரு குறிப்பிட்ட செயல்பாட்டுக் களத்திலோ அல்லது அறிவியற் புலத்திலோ பயன்படும் கருத்துருக்களையும் கருத்துருக் கட்டமைப்புகளையும் பகுத்தாய்தல்.

2. குறிப்பிட்ட கருத்துருக்களுக்கென வழங்கும் கலைச்சொற்களை இனங்காணல். இருமொழி, பன்மொழிக் களங்களில் பல்வேறு மொழிகளின் சொற்களுக்கிடையே உள்ள கருத்துருக்கள் சார்ந்த ஒப்புறவுகளைக் கண்டுபிடித்து நிறுவுதல்.

3. தரவுத் தளங்களில் நிரல்பட முறையாகக் கலைச்சொற்களைத் தொகுத்தல். கலைச்சொல் தரவுத்தள மேலாண்மை முறையியல் குறித்து ஆய்தல்.

4. தேவைப்படும்போது புதிய புதிய கலைச் சொற்களை உருவாக்குதல்.

### 1.1 கலைச்சொல்லியல் குறித்த ஆய்வின் வகைகள்

தனிச்சொல் அல்லது குறிப்பிட்ட சூழலின் சிறு தொகுப்புச் சொற்களை ஆய்தல் சூழற் சொல்லியல் எனப்படுகிறது. குறிப்பாக இத்தகைய ஆய்வுத்தேவை மொழிபெயர்ப்பின் போது உருவாகிறது.

குறிப்பிட்ட அறிவியல்புலம் அல்லது செயற் களத்தில் உள்ள அனைத்துக் கலைச் சொற்களையும் முறையாக ஆய்வு செய்தல் புலச் சொல்லியல் எனப்படுகிறது. இதை அமைப்புவழிக் கலைச்சொல்லியல் (Systems Terminology) என்றும் கூறலாம்.

(கலைச்) சொல்லியல் ஆய்வுப் புலம் பெரும்பாலும் மொழிபெயர்ப்புத் துறைகளிலேயே பல்கலைக் கழகங்களில் தற்போது நிலவினாலும் அனைத்துத் துறைகளிலும் ஒரு சிறு பிரிவாகக் கலைச்சொல்லியல் இதுவரை விளங்கி வந்திருப்பினும் உலகமயமாதலால் இனித் தனிப்புலமாக உலக அளவில் பல்கிப் பெருகி வளரும் வாய்ப்பு ஏற்பட்டுள்ளது என்பதே உண்மையான நிலவரமாகும்.

### 2.0 கலைச்சொல்லியலின் தேவை

இன்றைய அறிவுசார் சமூகத்தில் சிறப்பறிவுப் புலங்கள் தொடர்ந்து வளர்ந்துகொண்டும் விரிவடைந்து கொண்டும் உள்ளன. எனவே ஏராளமான, நுட்பமான புதிய கருத்துருக்கள் பல்கிப் பெருகிய வண்ணமே உள்ளன. எனவே கலைச் சொல்லியல் ஆய்வு பின்வரும் நிலைமைகளில் தொடர்ந்து தேவைப்படுகின்றன:

1. ஆராய்ச்சிவழிப் பொருள் உருவாக்கத்தால் புதிய கருத்துருக்களும் பொருள் வகைகளும் தோன்றல்.

2. அப்படித் தோன்றும் கருத்துரு, பொருள்களைப் பொருளியலாகச் சமூகத்தில் பயன்படுத்தும்போது உருவாகும் புதிய கருத்துருக்களும் நடைமுறைப் பண்பாட்டுக் கூறுகளும் தோன்றல்.

3. மேற்கூறிய வழிகளில் தோன்றும் அனைத்துக் கருத்துருக்களைக் கையாளலும் பதிவுசெய்தலும் (அதாவது தரவுத் தளங்களை உருவாக்குதலும்).

4. இந்தக் கருத்துருக்களைக் கற்பித்தல்.

மேலும் கலைச்சொல்லியல் ஆய்வு பின்வருவன வற்றிற்காக இன்றியமையாததாகிறது:

1. மொழிகளுக்கிடையிலும் பண்பாடுகளுக்கு இடையிலும் திறம்பட்ட துல்லியம் வாய்ந்த கருத்துப் புலப்பாட்டுக்கு

2. மொழிபெயர்ப்பாளர், மாற்று மொழி பொருளுரைப் பார், வட்டாரக் கருத்துப் பரப்புவார் போன்றவர்களுக்கு

3. தரப்படுத்தலும் ஒருங்கிணைத்தலும் சார்ந்த அனைத்துச் செயல்பாடுகளுக்கு

4. தொழில், வணிக நடைமுறைச் செயற்பாடுகளில் ஆக்கத்திறன், தரம், பயனர் மன நிறைவு நோக்கங்களுக்கு.

### 3.0 பன்னாட்டுக் கலைச்சொல் தகவல் மையம் (பன்கலைத்தகமை)

பன்னாட்டுக் கலைச்சொல் தகவல் மையம் 1971 ஆம் ஆண்டில் பன்னாட்டு நிறுவனத்தால் கலைச் சொல்லியல் புலத்தில் உலகளாவிய ஒத்துழைப்பை ஒருங்கிணைத்துச் செயல்படவைக்கும் நோக்கத்தோடு உருவாக்கப்பட்டது.

இம்மைய உறுப்பினரும் உறுப்பு அமைப்புகளும் பன்னாடு சார்ந்தமைகின்றன. உலகின் அனைத்து வட்டாரங்களும் கலைச்சொல் ஒருங்கிணைப்புப் பணியில் பங்கேற்கின்றன. பல நாடுகளைச் சார்ந்த கலைச்சொல் நிறுவனங்களும் மேலும் கலைச்சொல் சார்ந்த நடவடிக்கைகளில் ஈடுபட்டுவரும் அரசு சார்ந்தும் அரசு சாராமலும் மக்கள் சார்ந்தும் ஓரளவே மக்கள் சார்ந்தும் இயங்கும் நிறுவனங்களும் தனியார்க் குழுமங்களும் (Private Companies) தொழிலிணையங்களும் (Corporate companies), பணப்பயன் கருதாத அறக்கட்டளை அமைப்புகளும், தொழில் வணிக அமைப்புகளும் இம்மைய உறுப்பமைப்புகளாகச் செயல்படுகின்றன. மேலும் இம்மையத்தின் இணை உறுப்பினர்கள் உலகளாவிய நிலையில் ஆப்பிரிக்கா, அமெரிக்கா ஆசியா, ஐரோப்பா, ஆத்திரேலியா என எங்கும் பரவியுள்ளனர்,

தனது தொடர்ந்த செயல்பாடுகளின் வழியாக இம் மையம் பின்வரும் பணிகளில் வல்லுனர் திரளை உருவாக்கியுள்ளது.

1. கலைச்சொல் நிறுவனங்கள், அமைப்புகள், கலைச்சொல் இணையம் ஆகியவற்றுக்கிடையில் உயர்தர ஒத்துழைப்பையும் கூட்டுறவையும் உருவாக்கல்.

2. கலைச் சொல்லியல் கொள்கைகளையும் செயல்நெறிமுறைகளையும் உருவாக்கல்.

3. கலைச்சொல் தரவுகள் சார்ந்த சட்ட அறிவை உருவாக்கலும் சட்டநிலைச் சிக்கலாய்வும்.

4. கலைச்சொல் பொருண்மையியல் சார்ந்த கோட்பாட்டு முறையியலை உருவாக்கல்.

5. கலைச்சொல் உருவாக்கம், செந்தரமாக்கம் தொடர்பான முறைகள், நெறிமுறை விதிகள், வழிமுறைகள் பயன்பாடுகள் குறித்த ஆய்வுகளை மேற்கொள்ளுதல்.

### 4.0 பன்கலைத்தகமை - செயலிலக்கு அறிக்கை

பன்கலைத்தகமை உலகளாவிய பன்மொழி அறிவுச் சமூக உறுப்பினர் அனைவரும் களக் கருத்துப் பரிமாற்றம், அறிவுப் பரிமாற்றம், தரவுத் தளங்கள் அனைத்திலும் பங்கேற்பதை மேம்படுத்திட விரிவாக்கும் நோக்கத்தோடு கலைச் சொல் சார்ந்தியங்கும் அமைப்புகளையும் புதியதாக உருவாகும் அமைப்புகளையும் கலைச்சொல் இணையத்தையும் ஒருங்கிணைத்துச் செயல்படும் கூட்டுறவுக்கு ஆதரவு தந்து வளர்த்தெடுக்க முயல்கிறது.

இந்தக் குறிக்கோளை அடைந்திட பன்கலைத்தகமை உறுப்பினர்கள் உலகளாவிய கலைச்சொல், மொழி, தரவுத்தள நிறுவனங்களை ஒரே வலையமைப்பாகப் பின்வரும் வகைகளில் ஒருங்கிணைத்து அணி திரட்டுவதில் ஒத்துழைக்கின்றனர். கலைச்சொல் இணையத்தையும் உருவாக்கியுள்ளனர்.

1. கலைச்சொல் தகவல் பரவலாக்கல், வாழ்வின் அனைத்துக் களங்களிலும் திறமிக்க கருத்துப் புலப் பாட்டுக்குக் கலைச்சொல் தேவை பற்றிய விழிப்புணர்ச்சியை வளர்த்தல்.

2. சொல்லியல் வல்லுநர்கள் உதவியுடன் தனி அறிவியல் புல வல்லுநர்கள் பயன்பாட்டுக்கேற்ற கலைச்சொற்களை உருவாக்கிப் பயன்பாட்டுக்குக் கொண்டுவரல்.

3. கலைச்சொல் மேலாண்மைக்கான இசைவுமிக்க முறைகளும் வழிகாட்டுதலும், கலைச்சொல் மைய மேலாண்மை, கலைச்சொல் தரவுத் தளத்தைப் பயன் படுத்தல், சிறப்பறிவுத் தகவல் தேவைப்படும் பயன் பாடுகளில் கலைச்சொற்களைப் பயன்படுத்தும் முறைகளும் கருவிகளும் ஆகியவற்றைச் சார்ந்த வல்லுநர் அறிவு வளத்தை உலகளாவிய நிலையில் பகிர்ந்து கொள்ளுதல்.

மேற்கூறிய பணிகளை நிறைவேற்றப் பன்கலைத் தகமை அமைப்பு உரிய பன்னாட்டு, வட்டார, நாட்டக நிறுவனங்கள், அமைப்புகள், தனி உறுப்பினர்கள் ஆகியவற்றுடன் கூட்டுறவை ஏற்படுத்தப் பாடுபடுகிறது.

## 5.0 கலைச்சொல்லியல் புலக் கூட்டுறவும் ஒத்துழைப்பும்

பன்கலைத் தகமை அமைப்பின் முதன்மையான குறிக்கோளே கலைச்சொல் புலக் கூட்டுறவையும் ஒத்துழைப்பையும் தூண்டி வளர்த்து ஒருங்கிணைத்தலை வென்றெடுத்தலே எனலாம். பன்னாட்டுக் கல்வி, அறிவியல், பண்பாட்டு மையம் பன்கலைத் தகமையை ஆச்திரியச் செந்தர நிறுவனத்தோடு உருவாக்கியதற்கான ஒப்பந்த மிட்டதற்கான காரணமே கலைச்சொல் புலத்தில் 1950களிலும் 1960களிலும் உலக அளவில் நிலவிய சிதறிய, துண்டுத்துண்டான, செய்ததையே மீளச் செய்துவந்த நிலைமையும் ஒத்துழைப்பேதும் இல்லாமல் இருந்தது மேயாகும்.

பன்கலைத் தகமை 1971இல் சிறிய அளவில் எளிமையாகத் தொடங்கித் தொடர்ந்து விரிவடைந்து வரலாயிற்று.

1980களிலும் 1990களிலும் பல பன்னாட்டு, வட்டாரக் கலைச்சொல் ஆய்வு நிறுவனங்களும் வலையிணைப்பும் உருவாக்கப்பட்டன. பல நாட்டக நிறுவனங்களும் மையங்களும் வலையிணைப்பும் கலைச் சொல்லியலுக்காக வென்றெடுக்கப்பட்டன.

தொடக்கத்திலிருந்தே பன்கலைத்தகமை கலைச்சொல் வள ஆவணகமாகச் செயல்பட்டு வருகிறது. 2000 ஆம் ஆண்டளவில் கொஞ்சம் கொஞ்சமாகத் தன் கவனத்தையும் முயற்சியையும் குறைத்து இப்பணி பின்வரும் இரு வேறு நிறுவன அமைப்புகளுக்கு ஒப்படைக்கப்பட்டது.

1. கோலோன் பயன்முறை அறிவியல்புலப் பல்கலைக் கழகத்தின் கலைச்சொல் தகவல் ஆவண மையம்.

2. வியன்னாப் பல்கலைக் கழகத்தின் மொழிபெயர்ப்பு ஆராய்ச்சி மையம் (ஊச்டரின் ஆவணகம் அமைந்த மையம்).

மேலும் இப்பணி வைய விரிவு வலையில் பல கலைச் சொல்லியல் வல்லுநர்களின் கூட்டு முயற்சியாலும் மேற்கொள்ளப்பட்டு வருகிறது.

கடந்த சில பத்தாண்டுகளில் கலைச்சொல் புலம் வேகமாக விரிவடைந்து வளர்ந்து வருகிறது. பின்வரும் பல்வேறு செயல்பாடுகளால் பயன்பாடுகளும் மிகுந்து வருகின்றன.

1. தொழிலிணைய, தேசிய மொழிக் கொள்கைகள்.
2. மொழிபெயர்ப்பும் வட்டார அறிவுப் பரவலாக்கமும்.
3. தரப்படுத்தல்.
4. பொருள் தரவு மேலாண்மை.
5. பயில்வுத் தொழில்நுட்பங்கள்.
6. இருப்பியல் அல்லது இயற்பொருளியல் (ontology) ஆராய்ச்சியும் வளர்ச்சியும்.
7. பன்மொழி, பல பண்பாட்டுக் கருத்துப் பரிமாற்றம்.

அண்மையில் பன்கலைத் தகமை அமைப்பு தனது உறுப்பினர், பங்கேற்பு அமைப்புகளை மேற்கூறிய செயற்பாடுகளில் ஒருங்கிணைப்பை ஊக்குவித்து உலகக் கலைச்சொல் வளத்துக்கும் வல்லுநருக்கும் அரும்பணி புரிந்து வருகிறது.

## 6.0 கலைச்சொல் திட்டமிடலும் கொள்கை உருவாக்கலும் மேலாண்மையும்

### 6.1 கலைச்சொல் திட்டமிடல்

கலைச்சொல் திட்டமிடல் என்பது ஒரு புலத்தின் அறிவுத் தொகுப்பை உருவகிப்புச் செய்வதற்கான தேவைகளைப் பொறுத்து, குறிப்பிட்ட களக் கருத்துத் தொடர்பாடலை மேம்படுத்தவும் துல்லியப்படுத்தவும் மேற்கொள்ளும் திட்டமிடல் செயல்பாடாகும். அறிவை உருவகிக்கும் குறிப்பிட்ட கள மரபுகள், அக்களஞ்சார்ந்த மொழிசார் கூறுகளான கலைச்சொற்களை மட்டும் உள்ளடக்கு வதில்லை. மொழி சாராக் கூறுகளான வரைபடம், வாய்பாடுகள், எண்கள், குறிகள், காட்சி முறைகள் போன்றவற்றையும் உள்ளடக்குகின்றன. எனவே குறிப்பிட்ட கள அறிவைப் படிமமாக்கும் திட்டமிடற் செயற்பாடுகளின் போது இந்த மொழி சாரா உருவகிப்பு முறைகளையும் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டும்.

### 6.2 மொழி திட்டமிடலும் கலைச்சொல் திட்டமிடலும்

மொழி திட்டமிடல் அம்மொழி வழங்கும் சமூகக் கருத்துத் தொடர்பாடலை மேம்படுத்த மேற்கொள்ளும் திட்டமிட்ட மொழி வளர்ச்சிப் பணியாக அமைய, கலைச்சொல் திட்டமிடலே அம்மொழியின் குறிப்பிட்ட அறிவுப்புல எல்லைக்குள் கருத்துத் தொடர்பாடலை மேம்படுத்தித் துல்லியப்படுத்தும் நடவடிக்கையாகும்.

கலைச்சொல் திட்டமிடல் மொழி திட்டமிடலின் ஒரு பகுதியே என்றாலும் நிதிவள, செயல்திட்ட எளிமைக்காவும் நெகிழ்விற்காகவும் இரண்டையும் தனித்தனியாகப் பிரித்துக் கருதுதல் நல்ல நடைமுறைப் பயனையும் செயல் வேகத்தையும் உருவாக்கும். தற்கால எந்திர மொழிபெயர்ப்பிலும் இத்தகைய பிரித்த மொழிப் பகுப்பாய்வும் தொகுப்பாய்வும் நன்கு பயன்படுவது குறிப்பிடத்தக்கதாகும்.

மொழித்திட்டமிடலில் அகரநிரலி உருவாக்கமும் அறிவுப்புலக் கருத்துப் புலப்பாட்டில் கருத்துருக்களின் சொல், சொல்தொடர் வழியிலான மொழிநிலை உருவகிப்பும் அமைவதால் இருவகைத் திட்டமிடலிலும் பெரும்பகுதி ஒன்றன் மேலொன்று படிந்தமைதல் உண்மையே. இவ்விரண்டுக்கும் இடையில் நிலவும் மிகப் பெரிய வேறுபாடே அவற்றின் வரைவெல்லையும் பார்வை முறையும் அறுதியிலக்குமே எனலாம்.

### 6.3 கலைச்சொல்லியல் கொள்கை

கலைச்சொல் கொள்கை என்பது பல்வேறு நோக்கங்களுக்காக நிலவும் அல்லது உருவாகும் கலைச்சொற்களை மேம்படுத்திக் கட்டுப்படுத்தும் குறிக்கோளுக்காகத் தனித்த மொழி வழங்கும் சமூகத்தில் கொள்கை முடிவெடுக்க அரசியல் மட்டத்தில் உருவாக்கப்படும் பொதுச் செயல்பாட்டு நெறிமுறையாகும். பல்வேறு அறிவுப்புலக் கலைச்சொல் வரையறைச் செந்தரங்கள் பன்னாட்டளவிலும் உள்நாட்டளவிலும் பல வெளியிடப்பட்டே வருகின்றன.

1. பசெநி (ISO) 2424:2007 துகில் தொழிலகத் தரை மூடுறைகள் – கலைச்சொற்கள் தொகுதி
2. பசெநி (ISO) 3918:2007 பால்கறத்தல் எந்திரங்கள் நிறுவல் – கலைச்சொற்கள் தொகுதி
3. பசெநி (ISO) 23718 : 2007 பொன்மப் (Metallic) பொருள்கள் எந்திரவியல் சோதனைக் கலைச் சொற்கள் தொகுதி
4. பசெநி (ISO) 24098 : 2007 அறிதிறன் போக்கு வரத்து அமைப்பு, கட்டமைப்பு வகைபாடும் சொற்கள் தொகுதியும்

(பசெநி – பன்னாட்டுச் செந்தர நிறுவனம், (ISO - International Standard Organisation)

### 6.4 கலைச்சொல் திட்டமிடலுக்கான இலக்குக் குழுக்கள்

கலைச்சொல் பணி, கலைச்சொல் தரவுத் தளம் தொடர்பான செயல் நெறிமுறைகளைத் திட்டமிடல் பின்வரும் களங்களின் அல்லது இலக்குக் குழுக்களுக்கான கட்டாயத் தேவையாகிவிட்டது.

1. அரசுத் துறைகள்.
2. பொது ஆட்சியியல்.
3. அறிவியல் தொழில்நுட்பத் திட்டமிடல்.
4. சமூகத்தின் பல்வேறு களக் கருத்துத் தொடர் பாடல்.
5. தொழிலிணையங்களின் (Corporates) கருத்துத் தொடர்பாடல்.

அ) தொழில் வணிகத் தொடர்பாடல்.

ஆ) அறிவியல் தொழில்நுட்பத் தொடர்பாடல்.

இ) வணிகஞ்சாராத கருத்துத் தொடர்பாடல் (தொழிலுறவு, தொழிலமைதி போன்றன).

ஈ) தொழில் வணிகம் தொடர்பான மொழி பெயர்ப்பு பணிகள்.

இருந்தாலும் அமெரிக்க, ஐரோப்பியச் சமூகங்கள் தவிர்த்த பிற மொழி சமூகங்களில் கலைச்சொல் திட்டமிடல் தொடர்பான கொள்கை வகுப்புக்கான அடிப்படை முயற்சிகள் கூட தொடங்கப்படாமல் உள்ளமையே இன்றைய பொதுவான நிலவரமாகும். தமிழுக்கும் இது மிகவும் பொருந்தும்.

### 6.5 கலைச்சொல் திட்டமிடல் பணியும் மேலாண்மையும்

#### 6.5.1 கலைச்சொல் திட்டமிடல் பணி

பல்வேறு நோக்கங்களுக்காகப் பன்னாட்டளவில் பல நிறுவனங்களும் அமைப்புகளும் சமூகங்களும் கலைச்சொல் திட்டமிடல் செயல்பாட்டை மேற்கொண்டு வருகின்றன.

மொழி வளத் திட்டமிடலில் அகர நிரலியல் பணி முதன்மையான கூறாகவுள்ளது. அகரநிரலியல் பணி என்பது மொழிப்புலம் மட்டும் சார்ந்த பணியல்ல என்பது இன்னமும் தெளிவாக உணரப்படாமலே உள்ளது. இப்பணி பல்வேறு அறிவுப் புலங்களின் தொடர்புறவுப் பணியாகும். இப்பல்வேறு அறிவுப் புலங்களும் இலக்கியப் புலஞ்சார்ந்த நடைமுறையினின்றும் விலகிய நெகிழ்வான இலக்கண முறைமைகளைக் கொண்டு விளங்குகின்றன. எனவே முழுமையாக அகரநிரலியற் பணி நிறைவேற புறநடை அறிவுப் புலங்களில் கலைச்சொல் திட்டமிடல் தனித்ததொரு தொழிலாக, செயல்பாடாக உருவாக வேண்டிய கட்டாயம் ஏற்பட்டுள்ளது. இந்த அறிவுப் புலங்களின் மொழி சாரா குறிவழித் தொடர்பாடல் வடிவங்களைக் கருதும்போது, இத்துறைகளின் கலைச்சொல் திட்டமிடல் பொது மொழித் திட்டமிடலில் இருந்து பேரளவில் வேறுபடுவதை உய்த்துணரலாம்.

கலைச்சொல் திட்டமிடல் பெரிதும் கலைச்சொல் உருவாக்கல், செந்தரப்படுத்தல் செயல்பாடுகளோடு தொடர்புற்றிருப்பதை அறியலாம். இப்பணி உள்வட்டார நிலையிலிருந்து பன்னாட்டு நிலைவரை பல மட்டங்களில் செயல்படுத்தப்பட வேண்டும்.

அண்மையில் கலைச்சொல் திட்டமிடல் குறிப்பாக தொழிலிணைய மொழித் திட்டமிடலிலும் மேலாண்மையிலும் பெரிதும் தேவைப்படுகிறது.

### 6.5.2 கலைச்சொல் மேலாண்மை

கலைச்சொல் மேலாண்மை பல்வேறு அறிவியல் கோட்பாடு, அறிதல் அறிவியல் புலங்களைச் சார்ந்துள்ள பல கருதுகோள்களை அடிப்படையாகக் கொண்டு அமைகிறது.

மனிதச் சிந்தனை அடிப்படையில் கருத்துரு சார்ந்ததாகும். அது தொடர்ந்து பொருள்கள், நிகழ்வுகள் சார்ந்த தகவல்களைக் கையாள்கிறது. அத்தகவல்கள் எப்படி பெறப்படுகின்றன. பிறகு அவை எப்படி கருத்துருக்களாகவும் புலன்காட்சிகளாகவும் (perceptions) உருமாற்றப்படுகின்றன என்பதை அறிதல் சார்ந்த அறிவுப் புலங்கள் ஆய்கின்றன. இந்த மனநிகழ்வைக் கீழ்வரும் பொருண்மை முக்கோணம் தெளிவாக வரைகிறது.




**பொருள்கள் இயல் உலகப் பொருண்மைகள்**

எ.கா. உறழ்பொருள்கள் (Inert objects) உயிரிகள், நிகழ்ச்சிகள், இயற்கை நிகழ்வுகள், செயல்முறைகள், கருத்துப் பொருண்மைகள்.

கருத்துருக்கள் இயல் உலகப் பொருண்மைகள் சார்ந்த மனப் படிமங்கள், தன்மைகள்.

உருவகிப்புகள் சொல் சார்ந்ததும் சொல் சாராதுமான மரபுக் குறியீடுகள்.

எ.கா. 1. சொற்கள், கருத்துரு அறிவிக்கும் பிற தொடர்புக் குறிப்பீட்டு முறைகள்

எ.கா. 2. வரையறைகளும் கருத்துருக்களை விவரிக்கும் விளக்கங்களும்

எ.கா. 3. சொல் சாராத உருவகிப்புகள்

1. வரைபடக் குறியீடுகள்
2. காட்சிப் படங்கள்
3. விளக்கப் படங்கள்
4. ஒலிகள், குரல்நீழல்கள்
5. சைகைகள், உடலசைவுகள், பார்வைக் குறிப்புகள்

குறுகிய பொருளில் கலைச்சொல் மேலாண்மை என்பது பல்வேறு நோக்கங்களுக்கான கலைச்சொல் மேலாண்மை முறைகளைப் பயன்படுத்தும் கலைச்சொல் சார்ந்த பணியாகும்.

பரந்த பொருளில் கலைச்சொல் மேலாண்மை கலைச்சொல் திட்டமிட்டுச் செயல்பாட்டு நெறிமுறைக் கூறுபாடுகளை, அதிலும் குறிப்பாக தொழிலிணைய மொழி, அடையாளம், நிறுவனக் கட்டுக்கோப்புடன் தொடர்புடனான கூறுபாடுகளை உள்ளடக்கும்.

## 7.0 கலைச்சொல் தரப்படுத்தல்

### 7.1 அறிமுகம்

அனைத்துவகைத் தரப்படுத்தலிலும் ஒருங்கிசை வாக்கத்திலும் அடிப்படைக் கூறாக கலைச்சொல் தரப்படுத்தல் அமைகிறது. முதன்மைக் கருத்துருக்களை வரையறுக்காமல் குறிப்பிட்ட பொருள் / நிகழ்வின் தரப்படுத்தலைத் தொடர முடியாது. எனவே கலைச்சொல் தரப்படுத்தல் முதன்முதலில் அனைத்துத் தரப்படுத்தல் நிகழ்வுகளின் தனித்த உட்கூறாகவே தோன்றியது. கலைச்சொல் தரப்படுத்தலைப் பின்வரும் இரு கூறுகளாகப் பகுக்கலாம்:

1. கலைச்சொல் தரப்படுத்தல் நிகழ்வு
2. தரப்படுத்தலுக்கான நெறி முறைகளும் வழி முறைகளும்

### 7.2 கலைச்சொல் தரப்படுத்தல் நிகழ்வு

கிட்டத்தட்ட அனைத்து தரப்படுத்தலிலும் ஈடுபடும் தொழில்நுட்பக் குழுக்களும் கலைச்சொல் தரப்படுத்தலைச் செய்த பிறகே தமது இலக்குப் பணியை நிறைவேற்ற முடியும். எனவே பன்னாட்டளவில் ஏறத்தாழ 200 அளவுக்கும் மேற்பட்ட தொழில்நுட்ப அமைப்புகள் தரப்படுத்தலில் ஈடுபட்டு வருகின்றன. வட்டார அளவில் இயங்கிவரும் செந்தர அமைப்புகளில் ஒவ்வொன்றிலும் நூற்றுக்கும் மேற்பட்ட தொழில்நுட்பக் குழுக்கள் அமைந்துள்ளமையைக் கணக்கில் கொண்டால் ஏறத்தாழ 3000 தொழில்நுட்பக் குழுக்கள் கலைச்சொல் தரப்படுத்தலில் ஈடுபட்டு வருகின்றன.

இதுமட்டுமில்லாமல் தரப்படுத்தல் அமைப்புகளைச் சாராத பல ஆயிரக்கணக்கான அமைப்புகள் கலைச்சொல் ஒருங்கிணைப்பிலும் தரப்படுத்தலிலும் ஈடுபட்டு வருகின்றன. இவற்றில் சில தமது களத்தினைப் பொறுத்தமட்டில் உயர் தரமும் சான்றாதாரமும் வாய்ந்தனவாக உள்ளன. அடிக்கடி இவை பன்னாட்டளவிலும் வட்டார அளவிலும் உள்நாட்டளவிலும் ஒத்த அமைப்புகளின் வலையிணைப்புகளை உருவாக்கி வருகின்றன.

அதோடன்றி, பல பன்னாட்டு, வட்டார, தன்னாட்டு அதிகார ஆணையங்கள் ஒவ்வோர் அமைப்பிடையில் சட்ட நிலைச் சிக்கலோ கலைச்சொல் ஒருமையாக்கம் சார்ந்து கருத்து வேறுபாடோ தோன்றும்போதெல்லாம் தலையிட்டு கலைச்சொல் ஒருங்கிசைவை உருவாக்கி வருகின்றன.

### 7.3 கலைச்சொல்லியல் நெறிமுறைகளையும் வழிமுறைகளையும் தரப்படுத்தல்

பன்னாட்டு அடிப்படை., பயன்முறை வேதியியல் ஒன்றியம் போன்ற மிகுந்த அதிகார அமைப்புடைய பன்னாட்டு நிறுவனங்கள் ஏற்பட்டுள்ளன. அவை தத்தம் புலத்துக்கான கலைச்சொல் தரப்படுத்தல் சார்ந்த நெறிமுறைகளையும் வழிமுறைகளையும் தரப்படுத்தி உருவாக்கி உள்ளன.

பொதுவாக இத்தகைய அதிகாரஞ் செறிந்த நிறுவனங்களும் அமைப்புகளும் பசெநி / கசொகு 37 உருவாக்கியுள்ள தரப்படுத்தப்பட்ட கலைச் சொல்லியல் நெறிமுறைகளையும் வழிமுறைகளையுமே பின்பற்றி வருகின்றன என்பது இங்கே குறிப்பிடத்தக்கது. பசெநி / கசொகு 37 (பன்னாட்டுச் செந்தர நிறுவனத்தின் கலைச்சொல்லாக்கக் குழு – 37) அண்மையில் தன் பணியைக் கலைச்சொல்லியலில் மட்டுமன்றி பிற மொழியியல் வளங்களுக்கும் (உலக மொழிகள் தரவுத்தள உருவாக்கம் அகர நிரலி உருவாக்கம், களஞ்சிய உருவாக்கம், கலைச்சொல் இணைய உருவாக்கம் போன்றன) விரிவுபடுத்தி வருகிறது. பன்மொழித் தகவல் உலகில் உலகமய மாக்கமும் வட்டாரச் செறிவான வளர்ச்சியும் ஏற்படுத்தியுள்ள புதிய தேவைகளைச் சந்திக்கவும் மேம்படுத்தவும் இம்முயற்சிகளைப் பசெநி/கசொகு 37 மேற்கொண்டு வருகிறது. பிற ஆவண உள்ளடக்க வளங்களுடன் கலைச்சொல் வளம் அடிக்கடி இணையாக அல்லது உட்கூறாக அமையாத நிலைகளில் பசெநி/கசொகு 37 பின்வரும் ஒருங்கிணைப்புப் பணிகளை மேற்கொள்கிறது:

1. கலைச்சொல்வளம், பிற மொழியியல் சார் வளங்களையும் சார்ந்த மொழித் தொழில்நுட்ப மேலாண்மை புரிதல் அதோடு படிநிலை உள்ளடக்க ஆவண வளங்களின் உள்ளடக்க மேலாண்மையையும் மேற்கொள்கிறது.

2. கலைச்சொல், பிற மொழிவளஞ் சார்ந்துள்ள மொழிபெயர்ப்பு வட்டாரக் கருத்துப் பரவலாக்கம் போன்ற பயன்பாடுகளில் ஈடுபட்டுத் தரத்தை மேம்படுத்துகிறது.

3. அத்தகைய பயன்பாடுகளுக்குத் தேவைப்படும் முறையையும் அமைப்பையும் ஏற்படுத்தித் தரல், மின் வணிகம், மின் ஆளுகை, மின் மருத்துவம், மின் பயில்வு போன்ற பல புலங்களில் பசெநி/கசொகு 37 இன் செந்தரங்கள் பேரளவு தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளன. மேலும் மேற்கூறிய துறைகளின் நிறுவனங்களும் அமைப்புகளும் பசெநி/கசொகு 37 இன் கலைச்சொல், மொழி, ஆவண உள்ளடக்கம் சார்ந்த செந்தரங்களை உருமாற்றித் தகவமையச் செய்கின்றன.

### 8.0 பன்கலைத் தகமை அமைப்பின் திட்டப் பணிகள்

பன்கலைத் தகமை தன் உறுப்பினருடனும் உறுப்பமைவு களுடனும் பின்வரும் பல்வேறு திட்டப் பணிகளில் பங்கேற்கிறது.

#### நடப்புத் திட்டப் பணிகள்

1. OASIS - Open Achitecture for Accessible Service Integration and Standardisation.

2. CEN workshop on Multilingual catelöguing and e-Classification in eBusiness.

#### கடந்தகாலத் திட்டப் பணிகள்

1. Term Turk - Terminology for cross-cultural dialogue on specialised communication. (Zoology) (2008-2009)

2. ASK_IT-Ambient Intelligent System of agents for knowledge-based and Integrated for mobility impaired users (2004-2009)

3. In-Safety - Infrastructure and Safety (2005-2008)



# தமிழ் மருத்துவத்தின் தொன்மையும் தனித்தன்மையும்



மாண்புமிகு தமிழகத் துணை முதலமைச்சர்
**மு.க. ஸ்டாலின்**

பண்டைத் தமிழகத்தின் பண்பாட்டுச் சிறப்பு இன்றைய உலக அறிஞர்களால் பாராட்டப்படுகிறது.

சங்க இலக்கியங்களான பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க்கணக்கு என்பவை பழந்தமிழரின் பண்பாட்டுச் சிறப்புகளை உலகுக்குப் பறைசாற்றும் கருவூலங்களாகும்.

அந்த இலக்கியக் கருவூலங்களின் வாயிலாகத்தான் பண்டைத் தமிழகம், அரசியல், வர்த்தகம், பொருளாதாரம், கலை, பண்பாடு அனைத்திலும் சிறந்து விளங்கியுள்ளது என்பதனை வரலாற்று ஆய்வாளர்கள் உரிய சான்றுகளுடன் எடுத்துரைத்து நிறுவியுள்ளனர்.

அவற்றைப் போலவே மருத்துவத் துறையிலும் பழந்தமிழகம் சிறந்து விளங்கியிருக்கிறது என்பதற்கு எண்ணற்ற சான்றுகள் கிடைக்கின்றன.

பத்துப்பாட்டு இலக்கியங்களுள் ஒன்றான "நெடுநல்வாடை"யில் ஒரு காட்சி: தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன், பகைவரோடு போர் நடத்திவிட்டு இரவு நேரத்தில் பாசறையில் தங்கியிருக்கிறான்.

அப்போது போரில் காயம்பட்ட வீரர்களுக்கு மருத்துவச் சிகிக்கை அளிக்கக்கூடிய இடத்தைப் பார்வையிடும்போது, வாடைக்காற்று வீச, விளக்கின் சுடர் தென்திசையில் சாய்ந்தபடி ஒளி வீச, வேப்ப மாலை சூடிய வேலொடு முன்னே செல்லும் தளபதி காயம்பட்ட வீரர்களை ஒவ்வொருவராகக் காட்டிச் செல்ல, தோளிலிருந்து சரிந்து விழும் மேலாடையைச் சரிசெய்தபடியே அவர்களைக் கண்டு ஆறுதல் கூறியவண்ணம் செல்கிறான்.

நெடுநல் வாடையின் இக்காட்சி, போர்க்களத்தில் விழுப்புண்பட்ட வீரர்களைப் பராமரித்த பாங்கைக் கூறுவதன்மூலம் தமிழர்களின் மருத்துவ நுட்பம் புலப்படுகிறது.

அதேபோல எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றான பதிற்றுப்பத்து பல போர்க்களக் காட்சிகளையும், போர்வீரர் மாண்புகளையும் படம் பிடித்துக் காட்டுகிறது.

"பதிற்றுப்பத்து" இலக்கியத்தின்மூலம் அறுவை மருத்துவம் தமிழகத்தில் செய்யப்பட்டுள்ளது என்பதற்குச் சான்று கிடைக்கின்றது. சங்க காலத்தில் பல போர்கள் நிகழ்ந்தமையால் படைக் கருவிகளால் ஏற்படும் ஆழ்ந்த புண்களை ஊசி நூல் கொண்டு தைத்தனர் என்பது தெரிகிறது,

மீன்கொத்திப் பறவை நீரில் விழுந்து விரைந்து எழுவதைப்போல், கிழிந்த தோல், ஊசியால் குத்தித் தைக்கப்பட்டது என்பதனை,

**"மீன்தேர் கொட்பின் பனிக்கயம் மூழ்கிச்**
**சிரல் பெயர்ந்தன்ன நெடுவள் ளூசி**
**நெடுவசி பரந்த வடுவாழ் மார்பு!"**

எனக் கூறுகிறது.

போரில் ஏற்பட்ட புண்களின்மேல் பஞ்சு இடும் முறை பண்டைக்காலத் தமிழர்கள் உலகிற்குக் கற்றுக்கொடுத்த சிறந்த முறையாகும்.

**"கதுவாய் போகிய துதிவாய் எஃகமொடு**
**பஞ்சியும் களையாப் புண்ணர்..."**

எனப் புறநானூறு கூறுவதன் மூலம் புண்களைப் பஞ்சு கொண்டு தூய்மை செய்த பாங்கு புலப்படுகிறது.

போரில் விழுப்புண் பட்ட வீரன் ஒருவனுக்கு அவன் வீட்டிலிருந்த மகளிர் அவன் புண்ணை மருந்திட்டு ஆற்றி வந்தனர். மருத்துவம் செய்யும் இடம் தூய்மையாகப்

பராமரிக்கப்பட வேண்டும் என்பதற்காக வீட்டைத் தூய்மை செய்து வேப்ப மரத்தழைகளை வீடெங்கும் செருகி, வீரனின் மனம் அமைதியுறுமாறு இனிய இசைபாடினர்; நறுமணப் பொருள்களைப் புகைத்து மணம் வீசச் செய்தனர். அதனைக் கண்டு அரிசில்கிழார் என்னும் புலவர்,

**"தீங்கனி யிரவமொடு வேம்புமனைச் செரீஇ**

**வாங்குமருப்பு யாழொடு பல்லியம் கறங்கக்**

**கைபயப் பெயர்த்து மையிழுது இழுகி**

**ஐயவி சிதறி ஆம்பல் ஊதி**

**இசைமணி எறிந்து காஞ்சி பாடி**

**நெடுநகர் வரைப்பில் கடிநறை புகைஇக்**

**காக்கம் வம்மோ காதலந் தோழி**

**வேந்துறு விழுமம் தாங்கிய**

**பூம்பொறிக் கழற்கால் நெடுந்தகைப் புண்ணே"**

எனப் பாடுகிறார்.

இதன்மூலம் போரில் பெரும்புண்பட்டு வீழ்ந்த மறவர்க்கு மருத்துவம் செய்வோர், மனையைத் தூய்மை செய்து ஒப்பனை செய்வதும், இனிய இசை பாடுதலும், நறுமணப் பொருள்களைப் புகைத்து எங்கும் மணம் கமழுமாறு செய்வதும் பண்டைத் தமிழ் மக்கள் மரபு என்பதனை எடுத்துக் கூறுவதன் மூலம் இன்று மருத்துவமனைகளில் தூய்மை பராமரிக்கப்படுவதனை ஒப்பு நோக்கலாம்.

அய்யன் திருவள்ளுவர் திருக்குறளில் "மருந்து" எனும் ஓர் அதிகாரத்தின்மூலம் அந்நாளைய தமிழகத்தில் நிலவிய மருத்துவச் சிந்தனைகளை மிக அருமையாகப் புலப்படுத்துகிறார்.

உடலில் வாதம், பித்தம், சிலேத்துமம் ஆகிய மூன்றுள் ஒன்றேனும் அளவுக்கு அதிகமானாலும், குறைந்தாலும் நோய் உண்டாகும்.

**"மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்**

**வளிமுதலா எண்ணிய மூன்று"**

என நோய்க்குக் காரணமாக அமைபவை அவை என்கிறார்.

அடுத்து, உண்ணும் உணவே உடலுக்கு நோய் தரக்கூடியதாகவும் அமையும்; அளவறிந்து உண்டால் மருந்தே தேவையில்லை என்ற சிந்தனைகளை மக்களிடம் எடுத்துரைக்கும் நோக்கில் ஆறு குறட்பாக்களை அய்யன் திருவள்ளுவர் பாடியுள்ளார். அதாவது:

உண்ட உணவு செரிப்பதற்கான கால இடைவெளி தந்து, உணவு அருந்துகிறவர்களின் உடலுக்கு வேறு மருந்தே தேவையில்லை.

**"மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது**

**அற்றது போற்றி உணின்."**

உண்ட உணவு செரித்ததனையும், உண்ணும் உணவின் அளவையும் அறிந்து உண்பது நீண்ட நாள் வாழ்வதற்கு வழியாகும்.

**"அற்றால் அளவறிந்து உண்க அஃதுடம்பு**

**பெற்றான் நெடிதுய்க்கும் ஆறு"**

உண்டது செரித்ததா என்பதனை உணர்ந்து, நன்கு பசியெடுத்த பிறகே உடலுக்கு ஒத்துவரக் கூடிய உணவை அருந்த வேண்டும்.

**"அற்றது அறிந்து கடைப்பிடித்து மாறல்ல**

**துய்க்க துவரப் பசித்து."**

உடலுக்கு ஒத்து வரக்கூடிய உணவைக்கூட அதிகமாகும்போது மறுத்து அளவுடன் உண்டால், வாழ்வதற்குத் தொல்லை எதுவும் இல்லை.

**"மாறுபா டில்லாத உண்டி மறுத்துண்ணின்**

**ஊறுபா டில்லை உயிர்க்கு."**

அளவோடு உண்பவர் உடல் நலமுடன் வாழ்வர் அதிகம் உண்பவர் நோய்க்கு ஆளாவர்.

**"இழிவறிந்து உண்பான்கண் இன்பம்போல் நிற்கும்**

**கழிபேர் இரையான்கண் நோய்."**

பசியின் அளவு அறியாமலும், ஆராயாமலும் அதிகம் உண்டால் நோய்களும் அளவின்றி வரும்.

**"தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணின்**

**நோயள வின்றிப் படும்"**

என்கிறார். இவற்றைத் தொடர்ந்து,

நோய் என்ன ? நோய்க்கான காரணம் என்ன ? நோய் தீர்க்கும் வழி என்ன ? இவற்றை முறையாக ஆராய்ந்து சிகிச்சை செய்ய வேண்டும்.

**"நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்**

**வாய்நாடி வாய்ப்பச் செயல்"**

என்கிறார்,

நோயாளியின் வயது, நோயின் தன்மை, மருத்துவம் செய்வதற்குரிய நேரம் என்பனவற்றை எல்லாம் எண்ணிப் பார்த்தே மருத்துவர் செயல்பட வேண்டும்.

**"உற்றான் அளவும் பிணியளவும் காலமும்**
**கற்றான் கருதிச் செயல்"**

என்று மருத்துவர்கள் எப்படி மருத்துவம் செய்தல் வேண்டும் என்பதனை எடுத்துரைக்கிறார்.

இறுதியாக, உட்கொள்ளும் மருந்து மட்டும் ஒருவன் நோயைத் தீர்ப்பதில்லை. அவனோடு மருத்துவர், மருந்து, அருகிருந்து துணைபுரிபவர் ஆகிய நான்குமே மருந்தாகி ஒருவன் நோயைத் தீர்க்கும் என்பதனை,

**"உற்றவன் தீர்ப்பான் மருந்துஉழைச் செல்வான்என்று**
**அப்பால்நாற் கூற்றே மருந்து"**

என மருந்துக்கு இலக்கணம் உரைக்கிறார்.

இன்றைய மருத்துவ உலகம் பின்பற்றக்கூடிய அருமையான வழிமுறைகள் இவையல்லவா?

அடுத்து தமிழகத்தில் தமிழ் மருத்துவம், மூலிகைகளை அடிப்படையாகக் கொண்டே அமைந்திருந்தன என்பதனைப் பதினெண்கீழ்க் கணக்கு நூல்களுள் "திரிகடுகம்", "சிறுபஞ்சமூலம்" ஆகிய நூல்களின் பெயர்களே பறைசாற்றிக் கொண்டிருக்கின்றன.

"திரிகடுகம்" என்பது மூன்று மருந்துகள் என்னும் பொருளில் அமைந்துள்ளது. அதாவது, மருத்துவக் குணங்கள் கொண்ட சுக்கு, மிளகு, திப்பிலி ஆகிய மூன்றாலும் ஆகிய மருந்து ஒருவர் உடல் நோயை மாற்றி அவருக்கு சுகம் அளிப்பதுபோல் ஒவ்வொரு பாட்டிலும் அமைந்த மும்மூன்று கருத்துகளும் மாந்தரின் மனத்தில் உள்ள அறியாமையைப் போக்கி இன்பம் அளிக்கும் என்பதனை உணர்த்துகிறது.

அதேபோல, மருத்துவ நூலில் கூறப்பட்ட கண்டங்கத்தரிவேர், சிறுவழுதுணை வேர், சிறுமல்லிவேர், நெருஞ்சிவேர், பெருமல்லிவேர் ஆகிய ஐந்து வேர்களும் மக்கள் பிணிகளைத் தீர்ப்பதுபோல் "சிறுபஞ்ச மூலம்" நூலில் அமைந்த ஒவ்வொரு செய்யுளிலும் அடங்கியுள்ள ஐந்து ஐந்து கருத்துகளும் மக்களின் சிந்தனை வளத்தைப் பெருக்கி அறிவு வளர்ச்சிக்கு உறுதுணை புரியும் என உணர்த்துகிறது.

இந்த நூற்பெயர்களின் மூலம் மருத்துவ குணங்கள் இந்த மண்ணில் பரவியிருந்ததனை உணர முடியும்.

தமிழகத்தில் மூலைமுடுக்குகளில் எல்லாம் வாழும் மக்களிடையே வழங்கும் பழமொழிகள் தமிழ்ப் பண்பாட்டுக் கூறுகளைப் படம் பிடித்துக் காட்டுகின்றன. அவற்றுள்,

**"ஆலும் வேலும் பல்லுக்குறுதி"**

**"நோய்க்கு இடங்கொடேல்"**

**"நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்"**

**"பத்து மிளகு இருந்தால் பகைவன் வீட்டிலும் விருந்துண்ணலாம்"**

**"கண்ணுக்குத் தெளிவு பொன்னாங்கண்ணி"**

என்பன போலத் தமிழகத்தில் வழங்கும் பழமொழிகளை நோக்கும்பொழுது தமிழ் மக்கள் பெற்றிருந்த மருத்துவ அறிவாற்றல் நமக்கு வியப்பை ஏற்படுத்துகிறது.

தமிழ் மருத்துவத்தின் வித்தகர்களாகத் திகழ்ந்தவர்கள் சித்தர்கள்.

பத்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த திருமூலர் தமது திருமந்திரம் நூலின் மூலம் உடல் ஓம்பலையும், மருத்துவ நெறிகளையும் அருமையாகக் குறிப்பிடுகிறார்.

**"உடம்பார் அழியின் உயிரார் அழிவர்**
**திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்**
**உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே**
**உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே"**

என்று கூறுவதிலிருந்து நீண்ட கால உயிர் வாழ்வுக்கு உடலோம்பல் அவசியம் என்பதனை எடுத்துரைக்கின்றார்.

இவையெல்லாம் தமிழகத்தில் பழங்காலந்தொட்டு பின்பற்றப்பட்டு வந்த மருத்துவ நெறிகளை நமக்கு உணர்த்துகின்றன.

**"யாதும் ஊரே யாவரும் கேளிர்"**

என உலகுக்கு முதுமொழி தந்த தமிழ்ச் சமுதாயம் பின்பற்றிய மருத்துவம் இன்று, தமிழ் மருத்துவம் எனப் போற்றப்படுகிறது. அந்தத் தமிழ் மருத்துவமே பழங்காலத்தில் இந்திய மருத்துவமென அழைக்கப் பட்டுள்ளது.

பழங்கால கிரேக்க நாட்டில் கி.மு. 460 முதல் 370 வரை வாழ்ந்த மருத்துவ மேதை இப்போகிரேட்டசு. அவரது மருத்துவ ஆற்றலுக்கு மூல காரணமாக அமைந்தவர் பித்தகோரஸ். இதுகுறித்து, டாக்டர் பி. குடும்பயா என்பவர் கூறும்பொழுது,

"இப்போகிரேட்டசின் மருத்துவத்திற்கு அடித்தளம் அமைத்தவர் பித்தகோரசு எனும் தத்துவ ஞானிதான். நான்கு தாதுக் கொள்கையை இப்போகிரேட்டசு – பித்தகோரசின் மாணவர்களிடமிருந்துதான் கற்றார். பித்தகோரசு இந்தியாவிற்கு வந்து சென்றதற்கான குறிப்புகள் கிடைப்பதனால் பித்தகோரசு மூலமே இந்திய மருத்துவம் கிரேக்கம் சென்றது என்று கருத இடமுண்டு" என்கிறார்.

எனவே, கி.மு. 6 மற்றும் 5ஆம் நூற்றாண்டுகளில் நிலவிய இந்திய மருத்துவத்தையே கிரேக்க மருத்துவம் பின்பற்றியது என்பது தெரிகிறது.

இப்போகிரேட்டசின் நூல்களில் ஏலக்காய், மிளகு, இலவங்கம் போன்றவை இந்திய மருந்துகள் என்றே குறிப்பிடப்பட்டுள்ளதனையும் டாக்டர் பி. குடும்பையா சான்றாகக் காட்டுகிறார்.

இப்போகிரேட்டசு குறிப்பிடும் ஏலக்காய், மிளகு, இலவங்கம் போன்றவை தமிழ் மண்ணுக்கே உரிய தமிழகத்து மருந்துப் பொருள்கள் என்பதனால் தமிழக மருத்துவமே இப்போகிரேட்டசால் குறிப்பிடப்பட்டுள்ளது என்பதில் ஐயமில்லை.

உலகிலேயே முதன்முதல் மிளகு உற்பத்தியான இடம் தென்னிந்தியாவில் மேற்குத் தொடர்ச்சி மலைப்பகுதிதான்! மிளகு, நோய்த் தடுப்பு மருந்தாகவும், நோய் போக்கும் மருந்தாகவும் இப்போது உலகெங்கும் பெருமளவில் பயன்படுத்தப்பட்டுவருகிறது.

17ஆம் நூற்றாண்டு அளவில் வாணிகம் செய்ய இந்தியாவுக்கு வந்த ஆங்கிலேயர்கள் தூத்துக்குடி துறைமுகத்திலிருந்து, தென்பாண்டிச் சீமையின் கைத்தறி ஆடைகளுடன், மிளகு மூட்டைகளைக் கப்பலில் ஏற்றிக்கொண்டு தங்கள் நாடுகளுக்குச் சென்றனர் என வரலாறு கூறுகிறது.

இத்தகைய சிறப்பு வாய்ந்த இந்திய மருத்துவத்தைத் – தமிழ் மருத்துவத்தைத் தமிழகத்தில் போற்றி வளர்ப்பதற்காகப் புத்துயிர் அளித்து வருபவர் நம் மாண்புமிகு முதலமைச்சர் கலைஞர் அவர்கள்.

சித்த மருத்துவமான தமிழ் மருத்துவத்தின் பெருமையை நன்கு உணர்ந்துள்ள நம் தமிழினத் தலைவர் மாண்புமிகு முதல்வர் கலைஞர் அவர்களின் ஆணையின்படி தமிழ்நாட்டில் பல சித்த மருத்துவப் பிரிவுகள் தொடங்கப்பட்டு இயங்கி வருகின்றன. மகப்பேறு மற்றும் பெண்களின் நலன் பேண மூலிகை மருந்துகள் தமிழக அரசால் வழங்கப்பட்டுவருகின்றன.

அண்மைக் காலத்தில் சிக்குன் குனியா என்ற நோய் பரவியபோது "நிலவேம்புக் குடிநீர்" சிறப்பானதென்று சித்த மருத்துவர்கள் கூறினர். உடனடியாக அனைத்து மருத்துவமனைகளிலும் அம்மருந்தைச் சேமித்து வைக்க வேண்டும் என்று கலைஞர் அரசு ஆணை பிறப்பித்தது.

மேலும், இன்று தாம்பரத்தில் 1000க்கும் மேற்பட்ட புறநோயாளிகளுக்குச் சேவை செய்து வரும் தேசிய சித்த மருத்துவ நிறுவனத்திற்கு 1999ஆம் ஆண்டு தலைவர் கலைஞரின் பொற்கரங்களாலேயே அடிக்கல் நாட்டப்பட்டுப் பின்னர்த் திறக்கப்பட்டு சித்த மருத்துவ ஆராய்ச்சி நிலையமாகத் திகழ்கிறது.

தமிழ் மருந்துகளை அறிவியல்பூர்வமாக ஆராய்ச்சி செய்யத் தாம்பரம் அமிர்த நகரில் ஐந்து ஏக்கர் நிலத்தைக் கழக அரசு ஒதுக்கித் தந்துள்ளது.

மேலும், படப்பைக்கு அருகில் 25 ஏக்கரில் மூலிகைப் பண்ணை அமைக்க மத்திய அரசு நிலம் கேட்டுத் தமிழக அரசின் பரிசீலனையில் உள்ளது.

இவ்வாறாகத் தமிழ் மருத்துவத்தை வளர்க்கக் கலைஞர் தலைமையிலான அரசு பல சாதனைகளை நிகழ்த்தியுள்ளது என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

இந்த வேளையில் மக்கள் நலனைக் கருத்தில் கொண்டு நவீன மருத்துவர்களும் சித்த மருத்துவர்களும் பேதமின்றிப் பணியாற்ற வேண்டும்.

தமிழ் அறிஞர்கள் ஓலைச் சுவடிகளில் உள்ளவற்றை நூல்களாக்க முயற்சி எடுக்க வேண்டும். பல மொழிகளில் அந்த நூல்கள் வெளிவந்தால் தமிழ் மருத்துவத்தின் பெருமை தரணியெங்கும் பரவும்.

மூலிகைகளைப் பாதுகாப்பது, ஆராய்ச்சியில் ஈடுபடுவது போன்றவற்றைச் சித்த மருத்துவர்கள் தொடர்ந்து செய்ய வேண்டும்.

தமிழகத்தின் அனைத்து ஆரம்ப சுகாதார நிலையங்களிலும் சித்த மருத்துவப் பிரிவு தொடங்கத் தமிழக அரசு முயன்று வருகிறது.

செம்மொழித் தகுதியை நமது மொழிக்குப் பெற்றுத் தந்த முதலமைச்சர் கலைஞர் காலத்தில் பழந்தமிழ் மருத்துவமான சித்த மருத்துவத்திற்கு நாம் மகுடம் சூட்டுவோம்!

**தமிழ்மொழி, இனத்தின் பெருமையைக் காப்போம்!**

❖

# தமிழ் மொழி வளர்ச்சியில் இணையத்தின் பங்கு



முனைவர் மு. ஆனந்தகிருஷ்ணன்

கணினி வளர்ச்சி வரலாற்றில் கடந்த முப்பது ஆண்டுகளில் அனைவருக்கும் எளிதாகக் கிட்டும் வாய்ப்பு உருவாகி, கணினியின் பயன்பாடுகள் வேகமாக வளர்ந்தபோது ஆரம்பகாலக் கட்டத்தில், கணினியின் சேவைகளுக்கு ஆங்கில மொழி மட்டுமே தேவை என்ற கருத்து வலிவுற்றது. இத்தகைய மனப்பாங்கு தமிழறிஞர்களிடையே வேரூன்றினால், தமிழ்மொழி கற்கும் ஆர்வம் பின்னடைவு பெறும் என்ற நிலையில், உலகத்தின் பல்வேறு இடங்களிலிருந்த தமிழ் அறிந்த கணினி வல்லுநர்கள் கணினியில் தமிழ் மொழி எளிதாக முழுமையாகச் செயல்பட வேண்டிய கட்டாயத்தை உணர்ந்து அதற்கேற்ற பல முயற்சிகளை முப்பது ஆண்டுகளாக மேற்கொண்டு வருகின்றனர்.

ஆரம்பத்தில் இத்தகைய முயற்சிகளைத் தொடங்கியவர்களில் தமிழ்நாட்டைச் சேர்ந்தவர்கள் மிகக் குறைவு. பெரும்பாலும் இவர்கள் கனடா, வட அமெரிக்கா, பிரான்ஸ், ஜெர்மனி, சிங்கப்பூர், மலேசியா, ஸ்ரீலங்கா மற்றும் ஸ்விட்சர்லாந்து போன்ற நாடுகளைச் சேர்ந்த ஆர்வலர்கள். இவர்களில் பலர் கணினித் துறை அல்லாத மற்ற அறிவியல் தொழில்நுட்பத் துறையில் ஈடுபட்டு இருந்தாலும் கணினியின் பயன்பாட்டினை நன்கு அறிந்தவர்கள் இவர்கள் 1980களில் மேற்கொண்ட முயற்சிகள் பெரும்பாலும் தமிழ் எழுத்துகளைக் கணினிக்கு ஏற்றவாறு உருவாக்குவது, அவற்றைக் கணினியில் பயன்படுத்துவதும் அதற்கேற்ற மென்பொருட்களைத் தயாரிப்பது தொடர்பான ஆய்வுகளாகும். இவை யாவும் தனித்தனி முயற்சிகளாக மேற்கொள்ளப்பட்டதால், ஒருவருடைய படைப்பை மற்றவர்கள் பயன்படுத்துவது கடினமாக இருந்ததால் இவற்றைத் தரப்படுத்த வேண்டிய கட்டாய நிலை ஏற்பட்டது.

இந்தக் காலகட்டத்தில் இணையத்தின் செயல்பாடுகள் ஆரம்பமாகின. தமிழ் வல்லுநர்கள் இணையத்திலும் தமிழ் செயல்பட வேண்டும் என்ற ஆர்வத்தில் பல தமிழ் இலக்கிய நூல்களை இணையத்தில் அமைத்தனர். ஆனால் இதற்காக பயன்படுத்தப்பட்ட எழுத்துருக்கள் பல்வேறு வகைகளில் இருந்ததால் இவற்றை அனைவரும் பயன்படுத்துவதில் பல சிக்கல்கள் இருந்தன. இவற்றை எல்லாம் ஒழுங்குபடுத்தினால் மட்டுமே கணினித் தமிழும், இணையத் தமிழும் வளர முடியும் என்ற நோக்கத்தில் 1997இல் சிங்கப்பூரில் பேராசிரியர் நா. கோவிந்தசாமி அவர்களின் முயற்சியால் ஒரு சிறிய 'தமிழ் கணிப்பொறி மற்றும் இணைய ஆர்வலர்களின் மாநாடு' நடைபெற்றது. இவற்றில் பங்கெடுத்த சுமார் 40 பேரும் சிங்கப்பூர், மலேசியா, ஸ்ரீலங்கா மற்றும் இந்தியாவைச் சேர்ந்தவர்கள். அப்பொழுது கண்டறியப்பட்ட முக்கியக் குறைகளை நிவர்த்தி செய்வதற்கான முயற்சிகளைப் பற்றிய கலந்தாய்வு செய்ய 1999இல் சென்னையில் இரண்டாம் இணையத் தமிழ் மாநாடு நடைபெற்றது. அமரர் முரசொலி மாறன் அவர்களும், கலைஞர் கருணாநிதி அவர்களும் இம் மாநாட்டுக்கு முழு ஆதரவும் ஊக்கமும் அளித்தனர். அன்றைய நிலையில் கணினியிலும் இணையத்திலும் தமிழ்மொழியின் ஈடுபாடு வளர்ச்சி அடைய எடுக்கப்பட வேண்டிய முயற்சிகளைப் பற்றி ஒருமித்த கருத்து ஏற்படாத போதிலும், ஓரளவுக்குத் தமிழ் எழுத்துகளுக்குப் பயன்படுத்தப்படும் குறியீடுகளைத் தரப்படுத்த TAM, TAB என்ற இரு குறியீடுகள் ஒப்புக் கொள்ளப்பட்டன. அதனோடு கணினியில் பயன்படுத்தப்படும் விசைப்பலகையில் தமிழ் எழுத்துகளின் இடவரிசைகளை நிர்ணயிக்க வேண்டி Tamilnet 99 என்ற விசைப் பலகையின் அமைப்பு உருவானது. இம்முடிவுகளுக்குத் தமிழக அரசின் ஆணைகளும் அளிக்கப்பட்டன. இருப்பினும் இதுவரை இருந்த எழுத்துக் குறியீட்டு முறை மற்றும் விசைப் பலகை ஓரளவுக்குா பரவலாகத் தமிழ்நாட்டிலும், வெளிநாட்டிலும் பயன்படுத்தப்பட்ட போதும், முழுமையாக எவரும் செயல்படுத்தவில்லை.

தமிழகத்தில் நடந்த இணைய மாநாட்டினைத் தொடர்ந்து இணையத்தில் தமிழ்மொழியின் வளர்ச்சியைக் குறித்த பல்வேறு முயற்சிகளுக்கு அடிகோலும் வகையில் உலகத் தமிழ் தகவல் தொழில்நுட்ப நிறுவனம் (உத்தமம்) உருவாக்கப்பட்டது. இதனுடைய முக்கியக் குறிக்கோள் கணினித் தமிழிலும், இணையத் தமிழிலும் ஈடுபட்டுள்ள நிறுவனங்களையும், ஆர்வலர்களையும் ஒருங்கிணைப்பதுதான். அதனோடு கணினித் தமிழ் செயல்பாடுகளுக்கான விதிமுறைகளை வகுப்பது மற்றும்

தொடர்ந்து தமிழ் இணைய மாநாடுகளை உலகின் பல்வேறு பகுதிகளில் நடத்தித் தமிழ் ஆர்வலர்களின் கருத்தினைப் பெறுவது போன்றவை மற்றக் குறிக்கோள்களாகும்.

இதன் அடிப்படையில் பின்வரும் நாடுகளில் தமிழ் இணைய மாநாடுகள் நடைபெற்றன: சிங்கப்பூர் (2000), கோலாலம்பூர், மலேசியா (2001), சான்பிரான்சிஸ்கோ (2002), சென்னை – இந்தியா (2003), சிங்கப்பூர் (2004) மற்றும் கோலன் – ஜெர்மனி (2009). இந்தத் தொடரில் அடுத்த 9ஆவது இணையத் தமிழ் மாநாடு கோவையில் உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாட்டுடன் இணைந்து நடைபெற உள்ளது.

சென்ற 10 ஆண்டுகளில் இணையத் தமிழ் வளர்ச்சி எதிர்பாராத அளவிற்கு மிக வேகமாகவும், பயனுள்ள தாகவும் நிகழ்ந்து உள்ளது. அவற்றில் குறிப்பிடத்தக்க பின்வரும் வளர்ச்சிகளைக் காணலாம்.

1. மின்அஞ்சல் மூலம் தமிழைப் பயன்படுத்தி மடல்கள் அனுப்புவது பெருகி வருகிறது. மின் அஞ்சல் சேவைகள் இலவசமாகக் கிடைக்கின்றன. முன்பெல்லாம் ஆங்கிலத்தில் மட்டுமே மடல்களில் பரிமாற்றம் நிகழ்ந்தது மாறி, தற்பொழுது தமிழிலேயே பரிமாற்றம் செய்து கொள்ள முடியும். இதற்கு முக்கியக் காரணமாகத் தமிழ் எழுத்துகள் யூனிகோடு (Unicode) குறியீட்டு முறையில் பயன்படுத்தப்படுவதால் அனைவரும் தங்கு தடையின்றி மடல்கள் பரிமாற்றம் செய்து கொள்ள முடிகின்றது.

2. யூனிகோடு (Unicode) முறையைப் பயன்படுத்தி நூற்றுக்கணக்கான இணைய இதழ்கள் உலகின் பல்வேறு பாகங்களில் உருவாக்கப்பட்டு எளிதாக அனைவருக்கும் கிடைக்கின்றது. இவற்றில் நாளிதழ், வார இதழ், மாத இதழ் மற்றும் பலவகையான தனி இதழ்கள் இணையத்தில் கிடைக்கின்றன. தமிழ்நாட்டிலிருந்து தினமலர், தினமணி, தினகரன், குமுதம், ஆனந்தவிகடன் போன்றவை அடங்கும். யூனிகோடு பயன்படுத்தாத இதழ்களை இணையத்தில் படிப்பதற்கு அதற்கான தனியாக எழுத்துருக்கள் உள்ளிறக்கம் (Download) செய்ய வேண்டும்.

3. நூற்றுக்கணக்கான தமிழ் நூல்கள் இணையத் தின் மூலமாகக் கிடைக்கப் பெறுகின்றன. சென்னையில் 1999இல் நடைபெற்ற தமிழ் இணைய மாநாட்டின் விளைவாக, கலைஞர் அவர்களின் அறிவுரையின் அடிப் படையில் உருவாகிய தமிழ் இணையப் பல்கலைக்கழகம் நூற்றுக்கணக்கான நூல்களையும், தமிழ்ப் பாடங்களையும் உலகெங்கும் உள்ள தமிழர்கள் இலவசமாகப் பெற வழி வகுத்துள்ளது. இதனையும் UNICODE முறையில் மாற்றுவதற்கு முயற்சிகள் எடுக்கப் பட்டு வருகின்றன. அதேபோன்று ஓலைச்சுவடிகளிலும், கல்வெட்டுகளிலும், பழைய கையெழுத்துப் பிரதிகளையும், மிக அரிதான அச்சுப் பிரதிகளில் இருக்கும் தமிழ் நூல்களையும், மின்னுருவாக்கி (DIGITIZE) இணையத்தில் பலரும் பெறுவதற்குப் பல்வேறு இணைய தளங்கள் உருவாகி உள்ளன.

4. தற்பொழுது வேகமாகப் பரவிவரும் தமிழ் வலைப்பூக்கள் (Blogs) பல்வேறு தகவல்களையும், நூல்களையும், ஒலி ஒளி கோப்புகளையும், ஓவியங்கள், படங்கள் போன்றவற்றையும் குறிப்பிட்ட பதிவாளர்கள் பரிமாற்றம் செய்துகொள்ளப் பயன்படுகின்றது.

5. தமிழில் விக்கிப்பீடியா (WIKIPEDIA) மிக வேகமாக வளர்ந்து வரும் கலைக்களஞ்சியமாகும். ஆங்கில மொழியில் பத்து ஆண்டுகளுக்கு முன்பு தொடங்கப்பட்ட இந்த கலைக்களஞ்சியத் திட்டம் உலக அளவில் பல்வேறு மொழிகளில் வேகமாக விரிவடைந்து வருகிறது. தற்பொழுது தமிழ் மொழியில் விக்கிப்பீடியாவால் 20,881 கட்டுரைகள் கொண்டு 68ஆவது இடத்தில் உள்ளது. கோவைத் தமிழ் இணைய மாநாட்டினைத் தொடர்ந்து இக்கட்டுரைகளின் எண்ணிக்கையைப் பலமடங்கு அதிகரிப்பதற்கு ஆயிரக்கணக்கான கல்லூரி மாணவர்களுக்குப் பயிற்சியும் ஊக்கமும் அளிக்க முயற்சிகள் எடுக்கப்பட்டுள்ளன.

தமிழ் மொழி வளர்ச்சிக்கென மற்றுமோர் இன்றியமையாத தேவை கணினி மொழியியலின் (Computational linguistics) அடிப்படையில் முதுநிலை பட்டப்படிப்புகளும், ஆய்வுகளும் மேற்கொள்ள வேண்டும். தற்போது மொழியியல் பட்டப்படிப்பு மற்ற இந்திய மொழிகளைக் காட்டிலும் தமிழில் குறைவாகவே உள்ளது. சென்னைப் பல்கலைக் கழகத்தில் வளர்ந்து வந்த இத்துறை தற்போது நலிவடையும் நிலையில் உள்ளது. இந்நிலை மாறி தமிழ்நாட்டில் கணிதம், புள்ளியியல் மற்றும் கணினித் தொழில் நுட்பத்தோடுகூடிய தமிழ் மொழி இயல் மையங்கள் இரண்டு பல்கலைக் கழகங்களில் செயல்பட வேண்டும்.

இந்த மையங்களில் தமிழ் தரவு தொகுப்பைக் கணினி வழியில் உருவாக்க வேண்டும்.

அரசுரிமையாக்கப்பட்ட அனைத்து நூல்களும் இணையதளத்தில் யூனிகோடில் இடம்பெற கல்லூரி மாணவர்களுக்குப் பயிற்சியளித்துப் பயன்படுத்த வேண்டும்.

இன்றைய முக்கியத் தேவை: சொற்பிழைத் திருத்தி (Spell Checker), இலக்கணப் பிழைத்திருத்தி (Grammar Checker), எழுத்து – பேச்சு மாற்றி (Text to Speech), பேச்சு – எழுத்து மாற்றி (Speech to Text) போன்ற மொழிச் சாதனங்களுக்குத் தேவையான மென்பொருள்களை உருவாக்கி அனைவரும் பயன்பெற வழிவகுக்க வேண்டும்.

இம்முயற்சிகளுக்கான ஆய்வுக் கட்டுரைகள் கோவை மாநாட்டில் விரிவாகக் கலந்தாலோசிக்கப்பட்டு தங்கு தடையின்றித் தமிழ் மொழியின் வளர்ச்சிக்கு இணையம் பெரிதும் கைகொடுக்கும் என்பது அனைவரின் நம்பிக்கை. கோவை மாநாடு தமிழ் மொழி வளர்ச்சியின் அடிச்சுவடாகத் திகழும் என்பதற்கு எந்த ஓர் ஐயமும் இல்லை.

❖

# கணினித் தமிழ் வளர்ச்சி





முனைவர் க. திருவாசகம்

## கலைஞரின் செம்மொழித் தமிழ்

ஒரு மொழியானது, தான் வழங்கும் சமுதாயத்தின் அனைத்து மொழித் தேவைகளையும் நிறைவேற்றித் தரும்போதுதான், சிறப்பான, வளமான மொழி என்று அழைக்கப்படும். பல்லாயிர ஆண்டுக்கால வரலாறு உடைய செம்மொழித் தமிழானது, தனது வரலாற்றில் தமிழ்ச் சமுதாயத்தின் தேவைகளை முறையாக, முழுமையாக நிறைவேற்றிக்கொண்டு வருவதனால் தான் சிறந்த மொழியாகக் கருதப்படுகிறது. அதன் பயனாகத்தான் செம்மொழித் தமிழானது இன்றுவரை தொடர்ச்சி அறுந்திடாத ஒரு மொழியாக வாழ்ந்துவருகிறது. அதன் பயனாகவே, மாண்புமிகு தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்களின் பெருமுயற்சியால் தமிழுக்குக் கிடைக்கப் பெற்றது செம்மொழித் தகுதியாகும்.

## தமிழின் மொழிப் பயன்பாடு

செம்மொழித் தகுதியைத் தமிழ் பெற்றதற்கு அதன் வரலாற்றுத் தொடர்ச்சி (Continuity) மட்டுமே காரணி இல்லை. வளர்ச்சியடைந்த தமிழ்ச் சமுதாயத்தின் உயர்நிலைத் தேவைகளாக அமைந்த தத்துவம், இலக்கியம் ஆகியவற்றின் படைப்பு அல்லது உருவாக்கத்திற்கும் ஏற்ற ஒரு மொழியாகத் தமிழ் அமைந்ததும் ஒரு முக்கியக் காரணியாகும். தமிழ்நாட்டில் அரசாண்ட அரசர்களின் செயற்பாடுகளை மக்களுக்கு அறிவிக்கும் ஊடகங்களாக அமைந்த கல்வெட்டுகள், செப்பேடுகள், ஓலைச் சுவடிகள் போன்றவற்றிலும் சிறந்த முறையில் பயன்படும் ஒரு மொழியாகத் தமிழ் திகழ்ந்தது. இவை எல்லாவற்றிலும் சிறப்பாகப் பயன்படும் வகையில், காலத்தின் தேவைக்கேற்ப தனது சொற்களஞ்சிய வளத்தையும் (Lexicon) இலக்கண வளத்தையும் (Grammar) தமிழ் வளர்த்துக்கொண்டே வந்துள்ளது.

அறிவியல் தொழில்நுட்ப வளர்ச்சியினால் அச்சுத் தொழில்நுட்பம் (Printing Technology) தோன்றியபோது, அதற்கும் ஈடுகொடுத்து, தமிழ் செயற்படத் தொடங்கியது. அதன் பயனாகவே இன்றைய தமிழ் மிக உயர்ந்த நிலையில் உள்ளது. உலகெங்கும் தமிழ்வழிப் பல்வேறு சிறந்த கருத்துகள் சென்றடைந்துள்ளன.

## கணினி யுகம்

இன்றைய யுகம் கணினி யுகம் (Age of Computer) ஆகும். தட்டச்சு செய்தல் போன்ற சாதாரண அடிப்படைத் தேவைகளிலிருந்து, விண்வெளியில் செயற்படுகிற ஏவுகணைகள், விண்வெளி ஆய்வுக்கூடங்கள் ஆகியவற்றைக்கூட நமது பூமியிலிருந்து கட்டுப்படுத்தி, செயற்படுத்தக்கூடிய உயர்மட்டப் பணிகள்வரை அனைத்துக்கும் பயன்படும் ஒரு கருவியாகக் கணினி திகழ்கிறது.

இன்றைய கணினி யுகத்தில் தனி மனிதராகட்டும் அல்லது பன்னாட்டுத் தொழில்நிறுவனமாகட்டும், கணினியின்றி அன்றாடச் செயற்பாடுகளை மேற்கொள்ள முடியாத ஒரு நிலை நீடிக்கிறது. கட்டுரைகள், கடிதங்கள் ஆகியவற்றைத் தட்டச்சு செய்தல் (Typing), தேவையான தகவல்களைத் தரவுகளாகச் சேமித்துவைத்தல் (Database Development), தேவைப்படும்போது தகவல்களைத் தேடியெடுத்தல் (Information Extraction and Retrieval), மின்னஞ்சல் அனுப்புதல் (e-mail), வினாடிகளில் உலகெங்கும் இணையத் தளம் (Internet and Web) மூலம் தொடர்புகொள்ளுதல், இணையத் தளம் மூலம் தொழில் மற்றும் வாணிகத் தொடர்புகளை மேற்கொள்ளுதல் (E-commerce) என்று கணினியின் பயன்பாடுகளை அடுக்கிக்கொண்டே செல்லலாம். இந்தியாவில் இன்று மின் ஆளுகை (E-Governance) நடைமுறையில் வந்துவிட்டது.

இணையத்தளத்தின் மூலம் மின்னணுக் கல்வி (E-learning), மின்னணுக் கருத்தரங்கம் (E-conference) ஆகியவைகூட இன்று நடைமுறையில் உள்ளன. பல்லூடகக் கருவியாகவும் (Multimedia) கணினி இன்று பரிணமித்துள்ளது. எனவே எழுத்து, பேச்சு, படம் என்று பலவகைப்பட்ட ஊடகங்கள் வழியே ஒருவர் உலகெங்கும் தொடர்புகொள்ளக்கூடிய ஒரு பிரம்மாண்டமான வளர்ச்சி இன்று ஏற்பட்டுள்ளது.

**மொழிசார் மென்பொருள்கள்**

மேற்கூறிய செயல்களைப் புரிவதற்காகக் கணினி மென்பொருள்கள் (Software) ஏராளமாக உருவாக்கப் பட்டுள்ளன. தட்டச்சு செய்வதற்கான எழுத்துருக்கள் (Fonts), விசைப்பலகைகள் (Keyboards) தொடங்கி, ஒருவர் கணினியில் தட்டச்சு செய்வதனைப் பேச்சாக மாற்றிக் கொடுக்கும் மென்பொருள் (Text to Speech - TTS), ஒருவர் பேசுவதனை எழுத்துவடிவில் மாற்றிக்கொடுக்கும் மென்பொருள் (Automatic Speech Recognizer - ASR), ஒரு மொழியில் எழுதுவதனை அல்லது பேசுவதனைச் சில வினாடிகளில் பிறமொழிகளில் மொழிபெயர்த்துக் கொடுக்கும் மென்பொருள் (Automatic Machine Translation) என்று பல்வேறு மென்பொருள்கள் இன்று பல மொழிகளுக்கு உருவாக்கப்பட்டுள்ளன.

**மொழிப் பிரச்சினைக்குத் தீர்வு**

இந்தியாவில் இன்று நிலவுகிற மொழிப் பிரச்சினையைத் தீர்க்க மேற்குறிப்பிட்ட மென்பொருள்கள் நிச்சயமாகப் பயன்படும். இந்திய மொழிகளுள் ஒன்றில் பேசினால் அல்லது எழுதினால், அது இந்தியாவின் பிற மொழிகளில் கணினியினால் சில வினாடிகளில் மொழிபெயர்க்கப்படும் என்ற ஒரு சூழல் ஏற்பட்டால், நம்மிடையே மொழிப் பிரச்சினை தோன்றுவதற்கே இடம் இல்லை.

**உலகமயமாக்கம்**

எந்த மொழிகளுக்கு மேற்கூறிய மென்பொருள்கள் உருவாக்கப்பட்டுள்ளனவோ அந்த மொழிகள் உலக அளவில் பயன்படுத்தப்பட்டுச் சிறப்புப் பெறுகின்றன. தனிமனிதரின் தேவைகளை நிறைவேற்றுவதோடு, ஒரு நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கும், பிற நாட்டுத் தொடர்புகளுக்கும் அந்த மொழிகள் மிகவும் பயன் படுகின்றன. குறிப்பாக, உலகமயமாக்கம் (Globalization) என்ற இன்றைய சூழலில் மேற்கூறிய பயன்பாடுகள் மிக முக்கியமானவையாக அமைகின்றன.

**டிஜிட்டல் டிவைட்**

கணினியைப் பயன்படுத்துவோர் உலகெங்கும் இருந்து பல்வேறுபட்ட அறிவுகளை, தகவல்களைப் பெறமுடிகிறது. தங்களது அறிவை மற்றவர்களோடு பகிர்ந்துகொள்ள முடிகிறது. ஆனால், கணினியைப் பயன்படுத்த இயலாதவர்களுக்கு இந்த வாய்ப்பு கிடைப்பதில்லை. இதனைத்தான் Digital Divide என்று அழைக்கிறார்கள். எனவே, ஒரு புறம் Digital Divide, மறுபுறம் உலகமயமாக்கம். இப்பிரச்சினைகளைத் தீர்க்கவேண்டும் என்றால், அனைவரும் கணினியைப் பயன்படுத்தும் ஒரு சூழல் உருவாகவேண்டும்.

மேற்கூறிய சூழல் ஒரு சமுதாயத்தில் உருவாக வேண்டும் என்றால், அச் சமுதாயத்தின் தாய்மொழியில் மேற்கூறிய கணினிப் பயன்பாடுகளுக்குத் தேவையான அனைத்து மென்பொருள்களும் உருவாக்கப்பட வேண்டும். அப்போதுதான் அச் சமுதாயத்தில் மட்டுமல்லாமல், உலகெங்கும் அம் மொழிக்குச் சிறப்பு ஏற்படும். அதன் பயன்பாடு அதிகரிக்கும். அந்த மொழி வளரும்.

தமிழகத்தில் தமிழர்கள் தங்களது கணினிசார் பணிகள் அனைத்துக்கும் பயன்படுத்தத் தமிழ் மென்பொருள்கள் உருவாக்கப்படவேண்டும். அவ்வாறு இல்லாமல், ஆங்கிலத்தில் உருவாக்கப்பட்டுள்ள மென்பொருள்களையே பயன்படுத்த வேண்டிய கட்டாயச் சூழல் இருந்தால், தமிழின் பயன்பாடு குறையத் தொடங்கும். ஆங்கிலத்தின் செல்வாக்கே நீடிக்கும். தமிழை அதனது அடுத்த கட்ட வளர்ச்சிக்கு நம்மால் இட்டுச் செல்ல முடியாது.

**கணினித் தமிழ் வளர்ச்சி**

25 ஆண்டுகளுக்கு முன்னர்க் கணினியில் தமிழ் எழுத்துகளைத் தட்டச்சு செய்ய இயலாத ஒரு நிலை நீடித்தது. ரோமன் எழுத்துகளில்தாம் தமிழை எழுதமுடிந்தது. பின்னர், ரோமன் எழுத்துகளில் தட்டச்சு செய்து, தமிழ் எழுத்துகளில் மாற்றிக் கொள்ளக்கூடிய ஒரு வளர்ச்சி ஏற்பட்டது. அடுத்த கட்ட வளர்ச்சியாகத் தமிழ் எழுத்துகளையே நேரடியாகத் தட்டச்சு செய்துகொள்ளக் கூடிய ஒரு வளர்ச்சி ஏற்பட்டது.

இருப்பினும் தமிழ் எழுத்துரு மற்றும் விசைப்பலகைகளில் தரப்படுத்தம் (Standardization) இல்லாமல் இருந்தது. அதன் விளைவாக, ஒரு குறிப்பிட்ட மென்பொருளைக் கொண்டு கணினியில் தட்டச்சு செய்த ஒரு உரையை வேறு ஓர் கணினியில் வேறு ஒரு தமிழ் மென்பொருளைக் கொண்டு வாசிக்க இயலாத நிலை நீடித்தது.

இப்பிரச்சினையைத் தீர்க்கும்பொருட்டு, 1999 ஆம் ஆண்டு டாக்டர் கலைஞர் அவர்களின் தலைமையிலான தமிழக அரசானது, தமிழ் இணையம்99 (TamilNet99) என்ற ஓர் உலக அளவிலான கருத்தரங்கை ஏற்பாடு செய்து, தமிழ் எழுத்துருக்களையும் (TAM, TAB) விசைப்பலகைகளையும் (TamilNet99 Keyboard) தரப்படுத்தியது. இம்முயற்சியில் மறைந்த மாண்புமிகு மத்திய அமைச்சர் திரு. முரசொலி மாறன் அவர்களின் உழைப்பை என்றும் மறக்கமுடியாது. மேலும் கணினித் தமிழ் வளர்ச்சிக்கான ஓர் உயர்மட்டக் குழு (IT Task Force) அமைக்கப்பட்டு, பல பணிகள் மேற்கொள்ளப் பட்டன.

அதையொட்டி, கலைஞர் அவர்களின் அரசு, கணினித் தமிழை மேலும் வளர்த்தெடுக்கும் பொருட்டு, தமிழ் இணையப் பல்கலைக்கழகத்தை (Tamil Virtual University) நிறுவியது. தமிழ்மென்பொருள் வளர்ச்சிக் கான (Tamil Software Development) பல்வேறு திட்டங்களை அறிவித்தது. அதன் பயனாக இன்று கணினித் தமிழ் அடுத்த கட்ட வளர்ச்சியை எட்டியுள்ளது.

கணினியில் ஒரே நேரத்தில் பல்வேறு மொழிகளை உள்ளடக்கிய உரைகளைத் தட்டச்சு செய்வதில் இருந்துவந்த சிக்கலைத் தீர்ப்பதற்காகத் தற்போது ஒருங்குறி (யூனிகோட் – UNICODE) எழுத்துரு முறை நடைமுறைக்கு வந்துள்ளது. அதற்கான உலக அளவிலான அமைப்பில் (Unicode Consortium) தமிழ்நாடு அரசு உறுப்பினராக இருப்பது குறிப்பிடத்தக்கது.

**கணினித் தமிழின் அடுத்த கட்ட வளர்ச்சி**

தமிழ் எழுத்துரு, விசைப்பலகை ஆகியவற்றில் நீடித்த பிரச்சினைகள் தற்போது தீர்க்கப்பட்டுவிட்டன. அதற்கு அடுத்த நிலையில் வேறு பல மென்பொருள்கள் தமிழுக்கு உருவாக்கும் முயற்சிகள் இன்று மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. ஒளிவழி எழுத்தறிவான் (Optical Character Recognizer - OCR), பேச்சு – எழுத்து மாற்றி (ASR), எழுத்து – பேச்சு மாற்றி (TTS), தானியங்கு மொழிபெயர்ப்பு (MT) போன்ற மென்பொருள்களைத் தமிழுக்கு உருவாக்குவதற்கான பல முயற்சிகளைப் பல்கலைக் கழகங்களும், தனியார் நிறுவனங்களும் மேற்கொண்டு வருகின்றன.

கணினியில் காணப்படும் தகவல்களைப் பேச்சாக மாற்றித் தரும் மென்பொருள் (TTS) தமிழுக்கு உருவாக்கப்பட்டால், பத்தாயிரக்கணக்கான பார்வைத்திறன் இழந்தவர்களுக்கு அது மிகவும் பயன்படும். அதுபோல நாம் தமிழில் பேசுவதனைக் கணினி உணர்ந்து, தட்டச்சு செய்து தருமேயானால் (ASR), நமக்கு மிகவும் பயன்படும்.

ஒளிவழி எழுத்தறிவான் (OCR) ஒன்று உருவாக்கப்பட்டால், நூல் பதிப்புக்கு மிகவும் பயன்படும். தானியங்கு மொழிபெயர்ப்பு மென்பொருள்களும் (MT) தமிழ்–ஆங்கிலம், ஆங்கிலம்–தமிழ் என்று பல மொழிகளை அடிப்படையாகக் கொண்டு உருவாக்கப்பட வேண்டும். மின்னகராதி (Electronic Dictionary), மின்நூல்கள் (E-books and Readers) போன்றவையும் தமிழுக்கு உருவாக்கப்படவேண்டும். கையடக்கத் தமிழ் அகராதிகள், சொல்லாளல்கள், மொழிபெயர்ப்பிகள் போன்றவையும் தமிழுக்கு உருவாக்கப்படவேண்டும்.

கணினி, இணையத்தளத்தில் மட்டுமல்லாமல், செல்பேசியிலும் தமிழ் இடம் பெறவேண்டும்.

**கணினி மொழியியல் மற்றும் மொழித் தொழில்நுட்பம்**

முன்குறிப்பிட்ட தமிழ் மென்பொருள்கள் சிறப்பாக உருவாக்கப்படுவதற்குப் பல அடிப்படை ஆராய்ச்சிப் பணிகள் தமிழில் மேற்கொள்ளப்படவேண்டும். இதற்கான அறிவியல், தொழில்நுட்பத் துறையாக ஒரு தனித்துறையே – கணினி மொழியியல் (Computational Linguistics) மற்றும் மொழித் தொழில்நுட்பத் துறை (Language Technology) – தோன்றியுள்ளது. மனித மூளைக்கே உரிய இயற்கைமொழி அறிவை எவ்வாறு கணினிக்கு ஏற்றவாறு மாற்றி அளிப்பது என்பது பற்றிய ஓர் அறிவியல் துறையாக அது அமைந்துள்ளது. அவ்வாறு அளிக்கும் போதுதான் கணினிக்கு இயற்கைமொழி சார்ந்த மேற்குறிப்பிட்ட மென்பொருள்களை உருவாக்க முடியும். கணினி மொழியியல் அடிப்படையில் மொழிசார் மென்பொருள்களை உருவாக்கும் துறையானது மொழித் தொழில்நுட்பத் துறை என அழைக்கப்படுகிறது.

மேற்கூறிய துறைகளின் அடிப்படையில் தமிழுக்குப் பல ஆராய்ச்சிப் பணிகள் மேற்கொள்ளப்பட வேண்டும். கணினித் தமிழ் இலக்கணம் (Computational Grammar of Tamil), கணினித்தமிழ் அகராதி (Computational Tamil Lexicon), தமிழ்த் தரவுத்தளம் (Electronic Tamil Corpus), கணினிவழி தமிழ்த்தரவு ஆய்வுக் கருவிகள் (Corpus Analysis Tools) ஆகியவையெல்லாம் உருவாக்கப்படவேண்டும். அப்போதுதான் தமிழ்மென்பொருள் வளர்ச்சி ஏற்படும். மேலைநாட்டு மொழிகளுக்கு இணையான வளர்ச்சியைத் தமிழ் பெறமுடியும்.

இந்திய நடுவண் அரசும் தனது தகவல் தொழில்நுட்பத்துறையின் அமைச்சகத்தின்கீழ் (Ministry of Information Technology) இதற்கென்று இந்திய மொழிகளுக்கான தொழில்நுட்ப வளர்ச்சி (Technology Development of Indian Languages - TDIL) என்ற ஒரு தனிப் பிரிவையே உருவாக்கியுள்ளது. பல்வேறு ஆராய்ச்சி ஒருங்கிணைப்பு மையங்களை (Consortiums) நிறுவியுள்ளது.

**சென்னைப் பல்கலைக்கழகத்தின் கணினித் தமிழ்ப் பணி**

சென்னைப் பல்கலைக்கழகத்திலும் தமிழ்மொழித் துறை மற்றும் மொழியியல் ஆய்வுப் பிரிவில் இதற்கான பல முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. கணினி மொழியியல் மற்றும் மொழித் தொழில் நுட்பத்தில் மனிதவளத்தை உருவாக்கும் நோக்கத்தில் ஒரு தனி முதுகலைப் பட்டப் படிப்பு நிறுவி நடத்தப்பட்டு வருகிறது. கணினி மொழியியல் ஆய்வுக்கூடம் (Computer Assisted Language Technology Lab - CALT) நிறுவப்பட்டுள்ளது. பல கணினித் தமிழ் ஆராய்ச்சித் திட்டங்கள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

**செம்மொழித் தமிழின் அடுத்த கட்ட வளர்ச்சி**

பல்லாயிரம் ஆண்டு வரலாற்றுப் பெருமையும் இலக்கிய, இலக்கண வளமும் உடைய செம்மொழித் தமிழ், இன்றைய கணினி யுகத்தில் உலக அளவில் மேலைநாட்டு மொழிகளுக்கு இணையாக நடைபோட, கணினித் தமிழாகவும் நன்கு வளர்ச்சியடையவேண்டும். தமிழ் மூலமே உலகில் எச் செயலையும் தமிழன் மேற்கொள்ளலாம் என்ற ஒரு நிலை உருவாகவேண்டும். செம்மொழித் தமிழுக்கு மேலும் சிறப்பூட்டும் வகையில், அதன் மற்றொரு மகுடமாகக் கணினித் தமிழ் அமையவேண்டும்.

இந்த உண்மையை அனைவருக்கும் உணர்த்தவேண்டும் என்ற நோக்கில்தான் மாண்புமிகு தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்கள் 2010 ஜூன் இறுதியில் உலகச் செம்மொழித் தமிழ்மாநாட்டோடு இணைத்து, ஒன்பதாவது உலகத் தமிழ் இணைய மாநாட்டையும் சிறப்பாக நடத்தத் திட்டமிட்டுள்ளார். தமிழர் அனைவரும் வரவேற்று, பாராட்டி, மகிழ்வடைய வேண்டிய ஒரு மாபெரும் தமிழ்ப் பணி கலைஞரின் இந்தத் தமிழ்ப் பணியாகும்.

❖

# கணினிக் கலைச்சொல்லாக்கம்

அறிவியலறிஞர் மணவை முஸ்தபா



ஒரு மொழியின் உண்மையான வளர்ச்சி, எந்த அளவுகோலைக் கொண்டு மொழியியல் வல்லுநர்கள் அளவிட்டுக் கணிக்கிறார்கள் என்பது மிக முக்கியமான கேள்வி.

காப்பியம் முதலான மரபுக் கவிதை வடிவிலான இலக்கியப் படைப்புகளைக் கொண்டா? அல்லது புதுக்கவிதை, சிறுகதை, புதினம், நாடகம் போன்ற நவீன புத்திலக்கியப் படைப்புகளைக் கொண்டா? அல்லது அம்மொழியில் பெரும் எண்ணிக்கையில் உருவாக்கப்படும் பல்வேறு துறைகளைச் சார்ந்த ஏராளமான நூல்களின் பெருக்கத்தை கொண்டா?

இவை மட்டுமே மொழி வளர்ச்சியின் முழுமையான அளவுகோல்கள் ஆகா. 'மொழியில் புதிது புதிதாக வந்து இணையும் சொல்வளத்தை, குறிப்பாக, கலைச்சொற்கள், கலைச்சொற்களின் பெருக்கத்தைக் கொண்டே ஒரு மொழியின் வளர்ச்சியின் அளவு கணிக்கப்படும்' என்பதுதான் உலக மொழியலார் தரும் முடிவு. இதிலிருந்து 'சொல் வளமே ஒரு மொழியின் உண்மையான மொழி வளம் ' என்பது தெளிவாகிறது.

இன்றைய அறிவியல் துறைகளின் வளர்ச்சி முழுக்க முழுக்க மேனாட்டவர்களால் உருவாக்கப்பட்டு வளர்க்கப்பட்டது. அவற்றிற்கான அறிவியல் கலைச்சொற்களும் அவர்களாலேயே ஆங்கிலத்தில் படைக்கப்பட்டுள்ளன. அவை உலகினரால் 'உலகப் பொதுமொழி' போன்று பயன்படுத்தப்பட்டு வருகின்றன. அவற்றை நாமும் ஆங்கில வடிவில் அப்படியே ஏற்றுப் பயன்படுத்த வேண்டியதுதானே? தமிழில் எதற்குப் பதிலாக கலைச்சொற்கள்? வேண்டுமானால் விளக்கங்களைத் தமிழில் எழுதிக் கொள்ளலாம். முழுமையாகத் தமிழிலும் இதற்கான கலைச் சொற்களை உருவாக்குவது வீண் வேலை அல்லவா? என்று கூறுவோரின் கூற்றில் ஓரளவு உண்மை இருப்பது போல் தோன்றிலும் இக்கூற்று முழுமையாக ஏற்றுக் கொள்ளத்தககதன்று!

அறிவியல் தொழில்நுட்பக் கலைச்சொற்களில் இரு வேறு தன்மை உண்டு முதலாவது சாதாரணமாகப் பொருளுணர்த்தும் கலைச் சொற்கள் மற்றொரு வகை அசாதாரணத் தன்மை 'பன்னாட்டுக் கலைச்சொற்கள்' (International Technical Terms) எனப்படும். இவ்வகைக் கலைச்சொற்கள் உலக முழுவதிலும் மொழி பெயர்க்கப்படாமலும் ஒலி பெயர்ப்பு உலக முழுவதிலும் மொழி பெயர்க்கப்படாமல் ஒலி பெயர்ப்பு மட்டும் செய்யப்பட்டு பயன்படுத்தப் படுவனவாகும். சான்றாக லேசர் (Laser) ரேடார் (Radar) போன்ற முதலெழுத்துச் சொற்களும் என்சைம், ஐசோடோப், ஓசோன் போன்ற சொற்களும் மற்றும் அறிவியலார் பெயரில் அமைந்த ஆம்பியர், ஓம் போன்ற சொற்களும் பன்னாட்டுக் கலைச்சொற்களாகும்.

ஆங்கில மொழியும் அறிவியலும் நன்கு அறிந்தோரே இவற்றின் பொருள்நுட்பம் அறிவர். மற்றவர்கட்கு இச்சொற்கள் வெறும் குழுஉக்குறிகள் போன்றே தோன்றும்.

இஃதன்னியில் 'டெலிவிஷன்' 'டெலஸ்கோப்' போன்ற சொற்களும் உலகளாவிய முறையில் மக்களால் பெரிதும் பயன்படுத்தப்படுகின்றன. அறிவியல் அறிவோ அல்லது படிப்பறிவோ இல்லாதவர்கள் இச்சொற்களைக் குழுஉக்குறிச் சொற்களாகவே பயன்படுத்தப் படுகின்றனர். இந்த ஆங்கிலக் கலைச்சொற்களுக்கு நேர்த் தமிழ்க் கலைச்சொற்களாக 'தொலைக்காட்சி', 'தொலைநோக்கி' எனத் தரும்போது தொலைவி லிருக்கும் காட்சிகளை அண்மையில் கொண்டு வந்து காட்டும் கருவியே 'தொலைக்காட்சி' என்றும் தொலைவிலிருப்பவைகளை நெருங்கிக் காண உதவும் கருவியே 'தொலைநோக்கி' என்றும் யாரும் விளக்காமலே தமிழ்க் கலைச்சொல் மூலம் பொருள் உணர்ந்து தெளிய முடிகிறது. இவ்வாறு ஆங்கிலம் அறியாத சாதாரண பாமர மக்களும் கேட்ட மாத்திரத்தில் தெளிவாகப் பொருள்புரியும் இத்தகைய வாய்ப்பை ஏற்படுத்தி தருவதால் ஏற்படும் இழப்பு எவுமில்லை. பயனோ ஏராளம்! ஏராளம்!

எனவே எழுத்தறிவின் உச்சத்தைப் பெறாத நம் மக்களிடையே அறிவில் அறிவையும் உணர்வையும் அதிகரிக்க தாய்மொழியாம் தமிழ் மூலம் சொல்வதே சாலச் சிறந்ததாகும்.

அறிவியல் நுட்பங்களைத் திறம்பட விளக்கவல்ல மொழியாகத் தமிழ் அமைந்திருக்கிறதா என ஐயுருவோரும் இருக்கவே செய்கின்றனர். மொழியியல் பேரறிஞர் டாக்டர் கிரியர்சன் 'உள்ளத்தில் உருவெடுக்கும் சிந்தனைகள் மிக நுட்பமான உணர்வுகளை, எண்ணிய எண்ணியாங்கு திறம்பட வெளிப்படுத்த வல்ல மொழியாகத் தமிழ் அமைந்திருக்கிறது' எனப் புகழ்ந்துரைத்ததற்கேற்ப எத்தகைய அறிவியல் நுட்பச் செய்தியாயினும் அவற்றைச் சொற்செறிவோடும் பொருட்செறிவோடும் தமிழில்

கலைச்சொல் வடிவில் சொல்ல முடிகிறது என்பதுதான் என் நாற்பதாண்டு காலக் கலைச் சொல்லாக்கப் பட்டறிவு உணர்த்தும் உண்மை. இதற்கு அடிப்படைக் காரணம் தமிழ் இயல்பிலேயே அறிவியல் மொழியாக அறிவியலைத் திறம்பட உணர்த்துவதற்கான ஆற்றல்மிகு மொழியாக அமைந்திருப்பதுதான். இது நாமே அறிந்துணரா உண்மை நிலை.

தமிழ்மொழி வரலாற்றை, வரலாற்று வழி நுணுகி ஆராய்ந்தால், காலந்தோறும் தமிழ் பல்வேறு துறை கலைச் சொற்களை உருவாக்கி வளர்ந்து வந்துள்ள வரலாறு தெள்ளத் தெளிவாகப் புலப்படும்.

காலத்தின் போக்குக்கும் தேவைக்கேற்ப ஒரு மொழி தன்னைக் தகவமைத்துக் கொள்வதன் மூலமே வளர்ச்சியும் வளமும் பெற முடியும் என்பது மொழியியல் வரலாறு, அவ்வகையில் சமயத்தாக்கம் ஏதுமில்லாத சங்க காலத்தில் அறிவியல் அடிப்படையில் சமுதாயப்பூர்வமாக அகம், புறம் என வளர்ந்த தமிழ், வைதீக சமய,சமண, பௌத்த, கிருத்துவ, இஸ்லாமியத் தமிழாக தத்துவம் சார்ந்த சித்தாந்தக் தமிழாக வளர வேண்டிய தவிர்க்கவியலா சூழல் ஆங்கிலேயர் வரவால் அறிவியல் அடிப்டையிலும் புதினம், சிறுகதை என்ற புத்திலக்கிய போக்கிலும் வளர வேண்டிய சூழ்நலை. இக்கால கட்டங்களிலெல்லாம் பதிய கருத்துக்களையும், சிந்தனைகளையும் வெளிப்படுத்த புதிய புதிய சொற்களை உருவாக்கிக் கொண்டு வளர, வளமையத் தவறவில்லை. ஆனால் தயக்கமெல்லாம் தமிழர்களிடம்தான். தொய்வு மனப்பான்மை படைத்த சிலர் தங்களால் இயலாது என்பதை வெளிப்படுத்த விரும்பாது. அஃது தமிழாலேயே இயலாது என விளம்ப முற்பட்டு விடுகின்றனர்.

அன்றைய சமற்கிருதச் செல்வாக்கு தமிழ்க் கலைச் சொல்லாக்கத்துக்கு ஏதோ ஒரு வகையில் முட்டுக்கட்டையாக அமைந்தது போன்றே, இன்று 'தூய தமிழ்' ஆர்வலர்களின் தனித் தமிழ்ப் போக்கும் அமைந்து விடுமோ என்ற அச்சத்தை வெளிப்படுத்தாமலிருக்க முடியவில்லை. இலக்கியத்தில் மொழி முதன்மை நிலை பெறலாம். அறிவியல் கலைச்சொற்களைப் பொறுத்தவரை மொழியைக் காட்டிலும் கருத்துணர்த்தும் திறனுக்கே முதலிடம். சொல்வழிக் கருத்தை வெளிப்படுத்த உதவும் துணைக்கருவி மட்டுமே மொழி என்பதை நாம் உணர்ந்து தெளியவேண்டும். அறிவியலில் மொழிக்கு முதன்மைதர முற்பட்டால் கருத்துச் சிதைவும் பொருட்பிறழ்வும் தவிர்க்க முடியாததாகி விடும்.

தமிழ்க் கலைச்சொல்லாக்கத்தில் மற்ற மொழிகளில் கான முடியாத ஒரு தனித்தன்மை தமிழ்க் கலைச்சொற்களுக்கு உண்டு. அதுதான் வேர்ச்சொல் தேடல்.

ஆங்கில மொழியில் ஒரு புதிய கலைச்சொல்லை உருவாக்க வேண்டுமெனில் அதற்கான வேர்ச்சொல்லை லத்தீன், கிரீக், ஹீப்ரு அல்லது வேறு மொழிகளில் தேடிப் பெறவேண்டும். ஆங்கில மொழியில் வேர்ச்சொல் கிடைப்பது மிக அரிது. ஏனெனில், ஆங்கில மொழி, மேற்கூறிய மொழிகளின் கூட்டுக் கலவையாகும்.

ஆனால் அதே சமயத்தில் இந்தியிலோ அல்லது மராத்தியிலோ ஒரு பதிய கலைச்சொல்லை உருவாக்க வேண்டுமெனில் அதற்கான வேர்ச்சொல்லை சமற்கிருத்திலோ, பாலி. பிராகிருத மொழிகளிலோ தேடிப் பெற வேண்டும். கன்னட, தெலுங்கு, மலையாள மொழிகளின் சொல் உருவாக்கத்துக்கான வேரை சமற்கிருதத்திலோ அல்லது தமிழிலோ தேடவேண்டும். ஆனால், தமிழில் ஒரு கலைச்சொல்லை உருவாக்க வேண்டுமெனில் அதற்கான வேர்ச்சொல்லைத் தமிழில் மட்டுமே காணமுடியும். வேறு எந்த இந்திய மொழிகளிலும் தேடிக் காணவே முடியாது.

இன்றையக் கலைச்சொல் தேவையை நிறைவு செய்யுமளவுக்குத் தமிழில் அறிவியல், தொழில் நுட்பக் கலைச் சொற்களுக்கான வேர்ச்சொற்கள், வேண்டுமளவு கிடைக்க வாய்ப்புண்டா? என வினா எழுப்பத் தோன்றலாம். இதற்கு நாம் விடை கூறுவதை விட தமிழை அறிவியல் பூர்வமாக, மொழியில் அடிப்படையில் ஆராய்ந்தவரும், 'மொழியியல் தந்தை' எனப் போற்றப்படுபவருமான டாக்டர் எமினோ "உலகத்து மொழிகளிலேயே மிக அதிகமான வேர்ச்சொற் களையுடைய மொழியாகத் தமிழ் அமைந்துள்ளது எனப் பாராட்டியுள்ளது இங்கு நினைவு கூரத்தக்கதாகும். வேர்ச்சொற்கள் தமிழ் இலக்கியங்களில் மட்டுமல்ல, அன்றாட வாழ்விலும் மிகுதியாக விரவிக் கிடக்கின்றன. அதையெல்லாம்விட, தமிழில் புதிய வேர்களை எளிதாக உருவாக்கவும் இயலும். அந்த அளவுக்கு நெகிழ்வுத் திறமுள்ள மொழியாகத் தமிழ் அமைந்துள்ளது.

கலைச்சொல்லாக்கப் பணியை மேற் கொள்வோருக்கு இருக்கவேண்டிய தகுதிப்பாடுகள் என்னென்ன என்பதிலும் நாம் கருத்தூன்ற வேண்டியவர்களாக உள்ளோம்.

முதற்கண் எந்தத் துறை சார்ந்த சொல்லாக்க முயற்சி மேற்கொள்ளப்படவிருக்கிறதோ அந்தத் துறையில் சிறப்பறிவு பெற்றிருக்க வேண்டும். துறை சார்ந்த ஆங்கிலக் கலைச்சொல் உணர்த்தும் பொருள்நுட்பத்தை நன்கு உணர்ந்து, தெளிந்து அதனைத் தமிழில் முழுமையாக வெளிப்படுத்தத்தக்க வகையில் தமிழ்ச் சொல்லாட்சி வல்லாவராகவும் இருத்தல்வேண்டும். இதற்கு ஏதுவாக தமிழ் வேர்ச்சொற்களை இனங்கண்டு தேர்வு செய்யுமளவுக்கு தமிழ் இலக்கியப் புலமை அலலது பயிற்சிமிக்கவராக இருத்தல் வேண்டும். சரியான கட்டுக்கோப்பில் இலக்கண வரம்புகளுடன் சொல்லை வடித்தெடுக்குமளவுக்கு இலக்கண அறிவும் அவசியம். இலக்கியங்களிலோ அல்லது அன்றாட வழக்காற்றிலோ உரிய சொல் அல்லது அல்லது வேர்ச்சொல்லை இனங்காணும் திறன் வேண்டும். உரிய

சொல்லோ அல்லது வேர்ச்சொல்லே கிடைக்காதபோது புதிய சொல்லை உருவாக்க மொழியியல் அறிவு ஓரளவு அவசியம். இவையே கலைச்சொல்லாக்க வல்லுநருக்கு இருக்க வேண்டிய அடிப்படைத் தகுதிகளாகும்.

கலைச்சொல்லாக்கத்தில் முதல் உரிமையும் பொறுப்பும் உடையவர்கள் அவ்வத்துறை வல்லுநர்களே என்பதில் இருகருத்துக்கு இடமில்லை. அவர்களில் போதிய தமிழறிவும் இலக்கியப் பயிற்சியும் இலக்கண அறிவும் உடையவர்கள் இப்பணியில் முழுமையாக ஈடுபடவேண்டும். அதிக அளவு இல்லையென்றாலும் ஒரு சில சொற்களையேனும் உருவாக்கும் முயற்சியில் ஈடுபடலாம். இப்பணியில் ஒரு சிலர் முனைப்புக் காட்டிய போதிலும் பெரும்பாலான தமிழறிந்த துறை வல்லுநர்கள் 'கலைச் சொற்கள் தமிழில்மிகுதியாக வேண்டும். அதில் நாம் உடனடிக் கவனம் செலுத்தவேண்டும்'' என வேண்டுகோள் விடுவதிலும் அறிவுறுத்துவதிலும் ஆர்வம் காட்டி, காலத்தை ஒட்டுகிறார்களே தவிர, அப்பணி தங்களுக்குரியது எனக் கருதி செயல்படத் துணிவதில்லை, மற்றவர்களைச் செய்யச் சொல்லும்முன், நான் அதில் முனைப்போடு, ஈடுபட்டு வழிகாட்ட வேண்டும் என்ற உணர்வு ஏனோ அவர்களிட் இல்லாமற் போய்விடுகிறது.

இந்நிலையில்தான், ஓரளவு துறையறிவு பெற்றவர்கள் முனைந்து மேன்மேலும் துறையிவை முனைப்போட வளர்த்துக் கொண்டு, அதனடிப்படையில் சொல்லாக்கம் செய்து, அதனை அவ்வத்துறை வல்லுநர்களின் மேற்பார்வையோடு செப்பனிட்டு, தகுதிமிக்க கலைச்சொற்களாக உருவமைத்து வெளிப்படுத்தும் முயற்சியில் ஈடுபட்டு வெற்றி பெறுகிறார்கள். இவர்களின் வெற்றி தமிழின் வெற்றியாகவும் அமைகிறது. என்போன்ற ஆர்வலர்கள் அம்முறையில் தான் வீறுநடைபோட்டு வருகிறோம். ஆர்வலர்கள் அம்முறையில் தான் வீறுநடைபோட்டு வருகிறோம். 'தோள் கண்டார் தோளே கண்டார்' என்றார்போல் துறை வல்லார்க்கு அவர் சிறப்பறிவு பெற்ற ஒரு துறை மட்டுமே களமாக அமைகிறது. ஆனால் என்போன்ற ஆர்வலர்கட்கு எதனையும் அறிந்து கொள்ள வேண்டும் என்ற பெருவேட்கையோடு முனைந்து கற்பதால், 'இதுதான் நம் துறை' என்ற வேறுபாடு இல்லாமல், இன்னும் சொல்லப்போனால் எல்லையே இல்லாமல், எல்லாத் துறைகளுமே களமாயமைகின்றன. இவ்வகையில் தான் உயிரியல் முதல் கணினி ஈராக அனைத்து அறிவியல், தொழில்நுட்பத் துறைகளுக்கான ஏழு கலைச்சொல் தொகுதிகளை வெளியிட முடிந்தது.

கலைச்சொல்லாக்க முயற்சியைப் பொறுத்தவரை. ஆர்வமுடையவர்கட்கு, சொல்லாக்க வாய்ப்பை உருவாக்கித் தர வேண்டும் என்ற நன்னோக்கில், ஆங்கிலக் கலைச்சொல்லுக்கு நேர்த்தமிழ்க் கலைச்சொல் சொல்வதோடு அமையாமல், சொல் விளக்கம் பொருள்விளக்கம், பொருள் விளக்கங்களைப் படத்தோடு தருவதை வழக்கமாகக் கொண்டுள்ளேன். இதைப் படித்துக் தெளிவுபெறும் சொல்லாக்க ஆர்வலர்கள் இதனினும் சுருங்கிய வடிவிலான சொற்செட்டும், பொருட்செறிவு முடைய, நியமிக்க கலைச்சொற்களை உருவாக்க வாய்ப்பேற்படுத்த வேண்டும் என்பதே என் நோக்கம்.

இனி. கணினி கலைச்சொல்லாக்கத்தைப் பொறுத்த வரை நான் மேற்கொண்டு வரும் வழிமுறைகள் சிலவற்றைப் பற்றி விவாதிக்க விரும்புகிறேன்.

எனது கணினி அகராதிகளை வெறும் ஆங்கிலம் – தமிழ்க் கலைச் சொல் பட்டியல்களாக (Glossaries) அமைக்காமல், களஞ்சியத் தன்மையும், அகராதித் தன்மையும் ஒருங்கிணைந்த, 'களஞ்சிய அகராதி'களாக அமைத்து வருகிறேன். காரணம், அவை சொல் விளக்கமும் பொருள் விளக்கமும் ஒருங்கிணைந்து படிப்போருக்குத் தெளிவைத் தரவேண்டும் என்பது தான் முக்கிய நோக்கம். அதற்காக ஒரு ஆங்கிலக் கலைச்சொல்லுக்கு இயன்றவரை பல கலைச் சொற்களைத் தருகிறேன். சான்றாக, Date : தகவல், தரவு, விவரம், செய்திக் குறிப்பு; Mouse : சுட்டி, சுட்டுக் குருவி, சுட்டுப்பொறி, சுட்டு நுண்பொறி; Key : விசை, திறவு, விறற்கட்டை, குமிழ், சாவி; Pixel : படக்கூறு, படப்பள்ளி, படத்துணுக்கு. இதில் ஏதாது ஒரு சொல் நலைபேற்றுத் தன்மையைப் பெறாதா என்ற எண்ணமும் நாளை தரப்படுத்தும் செய்ய விழையும் போது, ஒப்பீட்டாய்வு செய்வதற்கும் ஒன்றிற்கு மேற்பட்ட சொற்கள் தேவைப்படுமே என்பதும் காரணங்களாகும்.

கணினித்துறை போன்ற அறிவியலுக்கான கலைச்சொல்ல உருவாக்கத்துக்கு இலக்கியத் தரமான சொற்களைப் பயன்படுத்த சிலர் விழைவதில்லை. உரிய பொருளை விளக்க அவைகளால் இயலாது என்று கருதப்படுகிறது. ஆனால், தக்க மாற்ற திருத்தங்களுடன் பயன்படுத்தினால் கருதிய பொருளைத் திட்ப, நுட்பமாக விளக்கமுடியும் சான்றாக, Jergon : குழூஉச் சொல் ; Slug: பருங்குழை ; Finesse: நிய நுட்பம்; Host : ஓம்புநர், புரவலர்; Malfunction : பிறழ்வினை. எல்லாவற்றிற்கும் இலக்கியச் சொல்லைத் தேடி ஓட வேண்டியதில்லை. அன்றாட பேச்சு வழக்கில் பயன்படுத்தப்படும் சாதாரணச் சொற்களையே பயன்படுத்தி அறிவியல் செய்திகளை நுட்பமாக விளக்க முடியம். சான்றாக, Jaggies : பிசிறுகள்; Pad : திண்டு; Glaretilter: கூசொளி வடிகட்டி.

கலைச் சொல்லாக்கத்துக்கான வேர்ச்சொற்கள் வேண்டிய அளவுக்கு இலக்கிய நூல்களிலும் அன்றாட பேச்சு வழக்குச் சொற்களிலும் கிடைக்கின்றன. அவற்றைப் புதிய பகுதி, விகுதிகளோடு உருவாக்கினால் பொருளாழமிக்க சொற்களாக உருவாக்க இயலும். Quantum : துளியம்; Terminal : முனையம்; Bit : துண்மி; Robot : எந்திரன், தெளிவுக்காக இரு சிறு சொற்களை இணைத்துப் புதுச்சொல்லாக்கிப் பொருள் விளக்கம் பெறலாம், சான்றாக Antenna : அலைவாங்கி;

Virus : நச்சுநிரல்; Audio : கேட்பொலி கூடுமானவரை ஆங்கிலத்திலிருந்து சொல்லுக்குச் சொல் மொழிபெயர்ப்பு செய்வதைத் தவிர்க்கவேண்டும். ஆங்கிலச் சொல் உணர்த்தும் பொருளை நுட்பமாகப் புரிந்து கொண்டு, அதனைத் திட்பமாக உணர்த்தும் சொற்களைக் கொண்டு சொல்ல முற்படவேண்டும். சான்றாக, Handset : ஒலியுறுப்பு; Cold tault : உடன்தெரியம் பிழை; Creet : விளங்கா மொழி; Female Connector : துளை இணைப்பி; Gun : வீச்சுப் பொறி.

ஒரு கணினிச் சொல் தனியாக வரும் போதும் சொல் தொடருடன் இணைந்து வரும் போதும் சொல் மாறாமல் இடம் பெறச் செய்வதன் மூலம் பொருள் தெளிவை அளிக்க முடியும், சான்றாக Input : உள்ளீடு; Inputting : உள்ளீடுதல்; Input data : உள்ளீட்டுத் தரவு; Input Unit : உள்ளீட்டகம் எனக் குறிக்கலாம்.

தலைப்பெழுத்துக்களைக் கொண்ட குறும் பெயர்களை ஒலி பெயர்ப்பாக இணைந்து வரும் சொற்களுக்குப் பொருள் தரும் வகையில் அமைக்கலாம் சான்றாக Pert Chart : பெர்ட் வரைபடம்; Pet Computer :பெட் கணினி; மற்றபடி, நிறுவனப் பெயர்கள் மென்பொருள் தொகுப்பம் பெயர்கள், பொருட்பெயர்கள், அளவீடுகள் மற்றும் சிறப்புப் பெயர்களை ஒலி பெயர்ப்பாகக் குறிக்கலாம். Macpaint : மாக்பெய்ன்ட்; Herts : ஹெர்ட்ஸ்; Javlin Plus :ஜேவ்லின் பிளஸ்; Hentry : ஹென்றி; மற்றொன்று ஒலிக்குறைபாடு, ஸ,ஷ,ஜ,.ஹ,க்ஷ, ஒலிக்குறிகள் தமிழில் இல்லாததால் George–ஐ குறிப்பிடும்போது 'சார்க்' என்று தான் எழுத நேரும். இவ்வொலிக் குறைபாட்டை நீக்க 'ஜார்ஜ்' என்றே எழுதலாம். ஏனெனில் கிரந்த எழுத்துகள் எனக் கருப்படும் ஜ,ஷ,ஸ,ஹ,க்ஷ போன்ற எழுத்துகள் சமற்கிருத வரி வடிவங்கள் அல்லவே அல்ல. அவை ஒலி வடிவங்கள் மட்டுமே. சில சமற்கிருத ஒலிகளை உரிய முறையில் வெளிப்படுத்த தமிழில் எழுத்துகள் இல்லை என்ற குறைபாட்டை நீக்க பல்லவர்கள் காலத்தில் காஞ்சி மாநகரில் தமிழ் வரவடிவச் சாயலில் புதிதாக உருவாக்கப்பட்ட எழுத்துகளாகும். இவ்வெழுத்துக்கள் கன்னடத்திலோ, தெலுங்கிலோ இல்லை தமிழிலும் தமிழிலிருந்து கிளைத்த மலையாளத்திலும் மட்டுமே உள்ளன. அதிலும் கிரந்த எழுத்துகள் பலவாக இருந்தாலும் இந்த நான்கைந்து எழுத்துகளை மட்டுமே தமிழ் பட்டும் படாமலும் தன்னுடன் உறவாடி அனுமதித்து வருகிறது. எனவே, ஆங்கில எழுத்தொலியை ஒலி பெயர்ப்பின் போது முழுமையாகப் பெற இக்கிரந்த எழுத்துகளைப் பயன்படுத்துவதில் தவறேதும் இல்லை என்றே கருதுகிறேன்.

ஆங்கில அகராதிக்கும் முந்தி, தமிழ் அகராதியில் நேர்ச் சொல்லாக்கம் இயல்கிறதென்றால் தமிழ் இயல்பிலேயே ஆற்றல் மிக்க அறிவியல் மொழி என்பது தெளிவாகிறது. இயல்பிலேயே தமிழ் ஓர் அறிவியல் மொழியாக அறிவியலைச் சொல்வதற்கென்ற உருவான மொழியாக அமைந்தி ருக்கிறது.

நவீன சமுதாயத்தை அடையாளம் காட்டும் ஒரு கருவியாய்க் கணினி விளங்குகிறது. மனித வாழ்வின் பிரிக்க முடியாத ஓர் அங்கமாய்ப் பிணைந்து விட்டது. மக்களின் அன்றாட நடைமுறைகள் ஒவ்வொன்றிலும் கணினியின் ஆதிக்கம் தவிர்க்க முடியாதது ஆகிவிட்டது.

தமிழ்நாட்டின் சிற்றூரில் தமிழ் வழியாய்க் கல்வி கற்கும் மாணவனுக்கு, கணினி அறிவியல் அந்நியமாகி விடக்கூடாது. நவீன அறிவியலின் நாம் எவர்க்கும் சளைத்தவர்கள் இல்லை. ஆங்கிலத்தின் மூலமாகத்தான் கணினி அறிவைப் பெற முடியும் என்கிற மாயை உடைத்தெறியப்பட வேண்டும். கணினித் துறை சார்ந்த அனைத்து நுணுக்கங்களையும் எளிய தமிழில் எடுத்துக் கூற முடியும். எந்த அறிவியல் பாடத்தைக் கற்பவராயினும், எந்தத் தொழில்நுட்பத் துறையில் பயில்வாராயினும் கணினி அறிவியலையும் கற்றிருக்க வேண்டும் என்பது கட்டாயத் தேவையாகிவிட்டது.

மென்பொருள் உருவாக்கத்தில் உலகிலேயே இந்தியா முன்னணி இடம் வகிக்கிறது. அதில் தமிழ்நாட்டு இளைஞர்களின் பங்கு கணிசமானது. உலகின் அனைத்து முன்னணிக் கணினி நிறுவனங்களிலும் தமிழ்நாட்டு இளைஞர்கள் முக்கிய பதவிகளில் இருக்கின்றனர். பள்ளிகளும் கல்லூரிகளிலும் மாணவர்கள் கணினி அறிவியலைத் தேர்வுச் செய்து விரும்பிப் படிக்கின்றனர்.

அச்சுத்துறையில் நுழைந்த முதல் இந்திய மொழி தமிழ். அதுபோலவே இணையத்தின் நுழைந்த முதல் இந்திய மொழி தமிழ்தான். இந்திய மொழிகளிலேயே கணினிக்கென்று அறிவியல் பத்திரிகை வெளிவந்தது தமிழ்மொழியில்தான்.

கணினித் திரைகளில் தமிழ்மொழி உலாவந்து கொண்டிருக்கிறது. உரைத் தொகுப்பாளர்கள் (Text Editor), சொல் செயலிகள் (Word Processor), தகவல்தள மேலாண்மை (Database Management), இணை உலாவி (Browser), கணக்கியல் தொகுப்புகள் (Account Packages), குழந்தைகள், மாணவர்கட்குப் பயன்படும் பாடங்கள், வெளிநாட்டில் வாழும் மக்கள் தமிழ் கற்றுக் கொள்ள உதவும் தொகுப்பு, பல்லூடக விளையாட்டுகள் (Multimedia Games) இன்னும் இவை போன்ற மென்பொருள் தொகுப்புகள் தமிழ் மொழியிலேயே வெளிவந்து கொண்டிருக்கின்றன. இப்படிப்பட்ட காலத்தில்தான் நான்காம் தமிழாகிய அறிவியல் தமிழின் ஓர் அங்கமான 'கணினித்தமிழ்' செழுமை பெற்று வளரத் துடித்துக் கொண்டிருக்கிறது. ஆனால், கணினி அறிவியல் வளர்ந்த வேகத்தில் கணினித் தமிழ் வளரவில்லை என்றே கூற வேண்டும்.

பேச்சுத் தமிழில் நெல்லைத் தமிழ், கோவைத் தமிழ், சென்னை தமிழ் என்றெல்லாம் வழங்கப்படுவது போல கணினித் தமிழும் ஊருக்கு ஒரு வடிவம், நாட்டுக்கு ஒரு

வடிவம் என ஆகிவிடுமோ என அஞ்சவேண்டியுள்ளது. அறிவியல் என்பது அனைத்துலகுக்கும் பொதுவானது. அது போலக் கணினித் தமிழும் தமிழ்பேசும் சமுதாயம் எங்கும் ஒன்று போல் பயன்படுத்தப்பட வேண்டும். கணினித் தமிழ்ச் சொல்லாக்கம் தரப்படுத்தப்பட்டு, கணினித் துறைக்கான கலைச்சொல் களஞ்சியம் தொகுக்கப்பட்டு வெளியிடப்பட வேண்டும் என்பது காலத்தின் கட்டாயம்.

ஒவ்வொரு அறிவியல் துறையிலும் புதிய புதிய கலைச்சொற்களை உருவாக்க வேண்டும். இக் குறிக்கோளை நிறைவேற்றும் பொருட்டு, 'அறிவியல்' கலைச்சொல் 'களஞ்சியம்' என்ற தலைப்பில் இரண்டு தொகுதிகளை வெளியிட்டுள்ளேன். ஐம்பத்து நான்கு அறிவியல் தொழில்நுட்பப் பிரிவுகளுக்குரிய கலைச் சொற்களையும் பொருள் விளக்கத்தையும் உருவாக்கி வழங்கியுள்ளேன். அடுத்துப் பட விளக்கங்களோடு, 'மருத்துவ, அறிவியல், தொழில்நுட்பக் கலைச்சொல் களஞ்சிய அகராதி' என்னும் நூலை வெளியிட்டுள்ளேன். இந்நூலின் ஒவ்வொரு கலைச் சொல்லின் வாயிலாகவும், அறிவியல் தகவல்களைச் செய்தித் துணுக்குகளாகத் தந்துள்ளேன். இந்த வகையில் தமிழில் மட்டுமல்லாது இந்திய மொழிகளிலேயே முதலாவது வெளிவந்த முதல் நூல்கள் இவையெனில் மிகையாகாது.

இந்த நூற்றாண்டின் இணையற்ற அறிவியல் துறையாய் வளர்ந்து நிற்கும் கணினித்துறைக்கான கலைச்சொல் களஞ்சியத்தை உருவாக்க வேண்டும் என்பதும் எனது வேட்கையாக இருந்து வந்தது. தொலைநோக்குப் பார்வையுடன் இதற்கான பணியைத் தொடங்கினேன். இதற்காக, கணினி அறிவியலையும், நான் கற்கத் தயங்கவில்லை. நான் அமெரிக்கா, கனடாவுக்குப் பயணம் மேற்கொண்ட போது அப் பயணத்தைக் கணினிக் கலைச்சொல் களஞ்சியத்தை செம்மையாக உருவாக்கும் பணிக்காகவே அப்பயணத்தின் பெரும்பாலான நாட்களைச் செலவிட்டேன்.

கலைச்சொல் களஞ்சியங்கள் அனைத்திலும் ஒரு சிறப்புக் கூறு உண்டு. அகர வரிசையில் ஆங்கிலச் சொற்களுக்கு இணையான தமிழ்ச் சொற்களைத் தரும்போது அது அகராதி ஆகிறது. அத்தோடு நில்லாமல், உடன் சொல் விளக்கத்தையும் பொருள் விளக்கத்தையும் விரிவாகத் தருவதால் அது கலைக் களஞ்சியமாகப் பரிணமிக்கிறது. ஆங்காங்கே தேவையான இடங்களில் படங்களும் இடம் பெற்றிருப்பது சிறந்ததாகும்.

அகர வரிசையில் சொற்களின் பொருளைக் கூறும் நூலை 'அகராதி' என்கிறோம். ஒவ்வொரு சொல்லின் விளக்கத்தையும் விரிவாகத் தரும்போது 'கலைச்சொல் களஞ்சியம்' என்கிறோம். சொல்லின் பொருள், விளக்கம் இவற்றோடு நல்லாமல் சில எடுத்துக்காட்டுகளையும் கூறி விளக்குவதை என்னவென்பது ? ஒரு பாடநூலைப் படிப்பது போன்ற எண்ணம் நமக்கு ஏற்படுகிறது. எடுத்துக்காட்டாக Hexadecimal Notation என்பதை பதினாறிலக்க குறிமானம் என்று பொருள் கூறி இதில் 0 மதல் 9 வரையிலான இலக்கங்கள் A, B, C, D, E, F என்ற எழுத்துகள் பயன்படுத்தப்படுகின்றன என்று குறிப்பிட்டு, அதேபோல் Factorial என்ற சொல்லை விளக்கும்போது 41ன் மதிப்புக் கண்டறிவது எப்படி எனவும் விளக்கியுள்ளேன்.

Line Surge என்ற சொல்லுக்கு மின்சார வெள்ளம், மின்தொடர் எழுச்சி என்று பொருள் கூறி, திடீரென்று உயர்ந்த வோல்ட் மின்சாரம் பாயும் நிலை என்ற விளக்கம் கூறி உயர்வோல்ட் மின்சாரம் திடீரென்று குறுகிய காலத்திற்குப் பாய்வதால், தவறான பதிவு, தவறான செயல்பாடு, தகவல்கள் இழத்தல், சில சமயங்களில் கணினியில் மிகவும் நுண்ணிய இணைப்புகள், தகவல் உள்ளீட்டு முனையங்கள், தகவல் பரிமாற்றச் சாதனங்களின் அழிவு முதலியன ஏற்படுவதுண்டு என்று அதன் விளைவுகளைக் கூறி, திடீரென்று மின்சார டிரான்பார்மர்களை இயக்குதல் பிற துணைக் கருவிகளை இயக்குதல் மற்றும் பிற காரணங்களால் ஏற்படுவதுண்டு என்று அதன் காரணங்களையும் எடுத்துக் கூறுவதுடன் நில்லாமல், உயர்வோல்ட் மின்சாரம் திடீரென்று பாய்வதைத் தடுக்கும் சாதனங்களால் கருவிகளைப் பாதுகாக்கலாம் என்று பாதுகாப்பு வழிமுறையையும் கூறுவதைப் பார்க்கும் போது அகராதி, கலைக்களஞ்சியம் என்கிற வரம்புகளையும் உடைத்தெறிந்து ஒரு புதிய பரிமாணத்தையே எட்டி விடுகிறது என்றுதான் சொல்ல வேண்டும்.

நாகரிகமற்ற முறையில் கணினியைப் பயன்படுத்துவதை Geek என்று கூறுகிறார்கள். அதனை 'கற்றுக்குட்டித்தனம்' என்று நாகரிகமான முறையில் மொழி பெயர்த்துள்ளேன். Eavesdropping என்பதை 'ஒற்றுக்கேட்டல்' எனவும் Hacker– களை 'குறும்பர்' எனவும் செல்லமாகக் குறிப்பிடலாம். Paddle என்பதை தடுப்பு, மத்து என மொழி பெயர்க்கலாம். Menu Item என்பதைப் 'பட்டி உருப்படி' எனலாம். Packet என்பதைப் பொதிவு, பொட்டலம் என்று குறிப்பிடுகிறார். Pattern என்பதைத் தோரணி, தினுசு எனலாம். இவ்வாறு தமிழ்பேசும் மக்களிடையே பேச்சு வழக்கில் பயன்படுத்தக்கூடிய பொருள் பொதிந்த பொருத்தமான தமிழ்சொற்களை மொழியாக்கமாகக் கொடுத்திருக்கும் பாங்கு தனித்தன்மையாய் விளங்கும்.

Flexible என்பதன் பேச்சு வழக்குச் சொல் Floppy என்பதாகும். எனவே Floppy Disk 'நெகிழ் வட்டு' என மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. மெல்லியதாக இருப்பதால் 'மென் வட்டு' என்றும் குறிக்கலாம். செருகி எடுத்துப் பயன்படுத்துவதால் 'செருகு வட்டு' என்ற மூன்று சொற்களையுமே பயன்படுத்தலாம். Hard Disk என்பது பிரிக்க முடியாதவாறு தனிப்பொதியுறையில் நிரந்தரமாய் பிணைக்கப்பட்டுள்ளதால் அதனை 'நிலை வட்டு' என மொழியாக்கம் செய்யலாம். கல்தோன்றி மண் தோன்றாக் காலத்தே என்று பழம் பெருமை மட்டுமே பேசிக் காலம் கழிக்காமல் நல்ல தமிழை நல்ல அறிவியல் தமிழைப் புத்தம் புதுத் தமிழைப் பற்றி எந்த நேரமும் சிந்தித்துச் செயலாற்றி இந்திய மொழிகளில் முதலாவது நூலை எழுதியுள்ளேன். இன்னமும் எழுதுவேன்.

❖

# இணையத் தமிழ் வளர்ச்சி

முனைவர் ப. அர. நக்கீரன்



**முன்னுரை**

இயல், இசை, நாடகம் என்று மூன்றாக இருந்த தமிழ் அறிவியல் தமிழ் என்று நான்காகவும், கணினித் தமிழ் என்று ஐந்தாகவும் இன்று வளர்ந்திருக்கிறது.

கணினியின் வயது அறுபது ஆண்டுகள்தாம். ஆனால், அதன் வளர்ச்சி அறுபது ஆயிரம் ஆண்டுகளில் ஏற்பட்ட வளர்ச்சியைவிடப் பன்மடங்கு பெரியது. இன்றைய காலகட்டத்தைக் கணிப்பொறி யுகமென்றே கூறும் அளவுக்கு அதன் வீச்சு எல்லாத் துறைகளிலும் கலந்து கரைந்து மேம்பட்டிருக்கிறது. இதேபோல் இன்றைய தமிழின் வளர்ச்சியிலும் அது பெரும்பங்கு ஆற்றிவருகிறது.

தமிழைக் கற்பித்தல், தமிழ் இலக்கண இலக்கிய நூல்களை உள்ளடக்கிய மின்நூலகம் உருவாக்கி அளித்தல், தமிழ் மரபுகளையும், விழுமியங்களையும் காக்கும் பண்பாட்டுக் காட்சியகங்களை ஏற்படுத்துதல், தமிழில் மென்பொருள்களை உருவாக்குதல் என்பன இணையத் தமிழின் நான்முகப் பரிமாணங்களாகும். இவை நேரடியாகப் பயனாளர்களுக்குப் பயன்படும். ஆனால் இதற்குப் பின்னணியில் விசைப்பலகையை உருவாக்குதல், எழுத்துருக்களை உண்டாக்குதல், பயனாளர்களுக்குச் சிக்கலில்லாத, எளிமையான, விரைந்த பயன்பாட்டுக்கு ஏற்ற தேடுபொறிகளையும். செயற்பாடு அமைப்புகளையும் உருவாக்குதல், தொடர்ந்து மேம்பாட்டுக்கான வழிவகைகளைக் கண்டறிந்து அளித்தல் என்பன இடைவிடாத முயற்சிகளாக நடைபெற்று வருகின்றன. இவற்றைப் பற்றிக் கூறுவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**கணினியில் தமிழ் கடந்துவந்த பாதை**

1983–84களில் பயன்பாட்டுக்கு வந்த தனியாள் கணினிகளில், தமிழைப் புகுத்தும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. இதன் பயனாக ஆதமி (Adami) என்ற ஓர் ஆவணங்கள் எழுதும் மென்பொருள் உருவாக்கப்பட்டது. இதனால் ஓர் ஆவணத்தைத் தமிழில் எழுதி அதனை அச்சுப் பதிவு செய்துகொள்ள முடியும்.

இதன் தொடர்ச்சியாக ஆதமி என்ற மென்பொருளும், பாரதி என்ற மென்பொருளும் பயன்பாட்டுக்கு வந்தன.

1990களில் எழுத்துருக்களை உருவாக்கும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுப் பல எழுத்துருக்கள் பயன்பாட்டுக்கு வந்தன. இவை எந்த ஒரு தரப்பாட்டையும் (Standard) பெற்றிருக்கவில்லை. இதனால் பல சிக்கல்கள் ஏற்பட்டன.

இந்தக் காலகட்டத்தில்தான் கணினிகளின் வலைப்பின்னலின் பயனாக இணையம் ஏற்பட்டு, மின்னஞ்சலுக்கு வழி வகுத்தது. எழுத்துருக்களில் தரப்பாடு இல்லாததால் தமிழில் மின்னஞ்சல் அனுப்பும்போது, அதனுடன் எழுத்துருக்களையும் அனுப்ப வேண்டிய தேவை இருந்தது. இதற்குத் தீர்வாக வந்ததுதான் மதுரை என்ற மென்பொருள். ஒரு கோப்பில் தமிழ் ஒலிப்பை ஆங்கில எழுத்துகளில் எழுதி வைத்துக் கொண்டால், அதனைத் தமிழ் வடிவில் திரையில் காட்டும் தன்மை கொண்டது இம்மென்பொருள்.

மின்னஞ்சல் வசதி வாய்த்த நேரத்தில் இணைய யுகத்தின் தொடக்கமும் நிகழ்ந்தது. தமிழில் பல இணையத்தளங்கள் உருவாகத் தொடங்கின. பல வார, நாளிதழ்கள் இணையத்தளத்தில் உலா வர ஆரம்பித்தன.

90களின் இறுதியில் இயங்கு எழுத்துருக்கள் (dynamic fonts) பயன்பாட்டுக்கு வந்தன. இதன் மூலம் இணையத்தளங்கள் தங்கள் எழுத்துருவையும் சேர்த்தே பயனாளர்களுக்குத் தகவல்களை அளித்துவந்தன. இதனால், எந்தவோர் எழுத்துருவையும் இறக்கம் செய்யாமலேயே இணையத் தளங்களைப் பார்வையிட முடிந்தது.

இதன் அடுத்த கட்டமாக, மடலாடல் குழுக்கள் தொடங்கப்பட்டன. பலர் அதில் இணைந்துகொண்டு தமிழ், தமிழ்க்கணினி பற்றிக் கலந்துரையாடினர். பல அறிஞர்களைச் சந்திக்க வைத்த பெருமை இந்தக் குழுக்களுக்கு உண்டு. தமிழ்.நெட் (Tamil.Net.) இதில் முக்கியப் பங்கு வகிக்கிறது.

தரப்பாடு இல்லாமல் பல்வேறு எழுத்துகள் பயன்பாட்டில் இருந்த நிலையில், தரப்பாட்டின் தேவை பெரிதும் உணரப்பட்டது. இதன் பயனாக 1999ஆம் ஆண்டு தமிழ்நாடு அரசின் துணையுடன் ஓர் இணைய மாநாடு நடைபெற்றது. இந்த மாநாட்டில் TAB/TAM என்ற எழுத்துருவும், தமிழ் 99 விசைப்பலகையையும் தரப்பாடுகளாகத் தேர்வு செய்யப்பட்டன. பலர் இதனை ஏற்றுப் பயன்படுத்தத் தொடங்கினர்.

2000இல் ஒருங்குறிக் கூட்டமைப்பு (Unicode Consortium)என்ற நிறுவனம், உலகில் பெரும்பாலான

மொழிகளுக்கு அளித்த ஒருங்குறித் தரப்பாட்டைப் பலரும் ஏற்றுக்கொண்டு பயன்படுத்துகின்றனர். இணையத்தில் தமிழ் பயன்பாட்டுக்கும் ஒருங்குறித் தரப்பாடு ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. ஆயினும், நூல் வெளியீடு போன்ற மற்றப் பயன்பாடுகளுக்கு ஒருங்குறியைப் பயன்படுத்துவதில் சிக்கல்கள் உள்ளன. எனவே, தமிழ் அனைத்து எழுத்துரு –16 (Tace-16)என்ற குறியீட்டை உருவாக்கி, அதற்கு ஒருங்குறிக் கூட்டமைப்பின் ஒப்புதலைப் பெறும் முயற்சி இப்பொழுது மேற்கொள்ளப்பட்டுள்ளது.

**இணையத்தில் தமிழ்க் கல்வி**

தமிழை அரிச்சுவடி முதல் மேற்பட்டப்படிப்பு வரை படிப்பதற்கான வாய்ப்புகள் இணையம் வழியாக ஏராளமாகக் காணக் கிடக்கின்றன. 'தமிழ் கற்க' என்ற சொல்லையோ, 'தமிழ்க் கல்வி' என்ற சொல்லையோ கூகுள் (Google.com) போன்ற தேடு பொறிகளில் உள்ளீடு செய்தால், ஆயிரமாயிரம் தளங்கள் தமிழைக் கற்றுத்தர ஆயத்தமாக வரிசையில் நிற்கின்றன.

தமிழ் எழுத்துகளை அறிமுகப்படுத்தி, எழுதும் முறையைக் கூறிப் பயிற்சி அளிப்பதுடன், அதனை உச்சரிக்கும் முறையையும் ஒளி ஒலிப் பல்லூடகக் காட்சிகளாக இத்தளங்கள் தருகின்றன.

இக்கல்வித் திட்டங்களை வரைமுறைப்படுத்தி, தமிழ்க் கல்வியை அரிச்சுவடி முதல் ஆராய்ச்சி வரை வழங்கத் தமிழ் இணையப் பல்கலைக் கழகம் திட்டமிட்டுச் செயலாற்றி வருகிறது.

மழலைக்கல்வி, சான்றிதழ்க் கல்வி, பட்டயம், பட்டம் என்ற கல்வித் திட்டங்களை இணையம் வழியாக இப்பல்கலைக் கழகம் வழங்கி வருகிறது. பாடங்கள் அனைத்தும் பல்லூடக வசதிகளைப் பயன்படுத்தி, படிக்க ஆர்வம் ஊட்டும் வகையில், ஆசிரியர் துணையின்றி, எளிய முறையில், தன்மதிப்பீட்டுச் சோதனைகளுடன் கற்கும் வகையில் பாடங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

**இணைய வகுப்பறை**

தமிழை அடிப்படை நிலையிலிருந்து கற்பதற்கான முயற்சிகளுக்கு உதவும் வகையில் த.இ.ப இணைய வகுப்பறைகளைப் பயன்படுத்துகிறது. அதற்கான விரிவுகளைப் பதிவு செய்து இணையத் தளத்தில் இட்டுள்ளது. தமிழ் கற்கும் முயற்சியில் ஈடுபடுவோர் இரண்டு வகையினராவர். தமிழைப் பேச மட்டுமே தெரிந்து எழுதப் படிக்கத் தெரியாதவர்கள் ஒரு வகையினர். அப்படிப்பட்டவர்களுக்காக வாய்மொழிப் பயிற்சி, எழுத்துப் பயிற்சிகளைப் பேராசிரியர் மா. நன்னன் அவர்கள் வழங்குகிறார்.

தமிழ் பேசவோ எழுதவோ தெரியாத தமிழர்களும், தமிழ் கற்க விரும்பும் பிற நாட்டினரும் மற்றொரு வகையினர். இவர்களுக்கான எழுத்துப் பயிற்சி, இலக்கணப்பயிற்சி, மொழிப்பயிற்சி ஆகியவற்றை ஆங்கிலம் வழியாகப் பேராசிரியர்.தி.ப.சித்தலிங்கையா அவர்கள் வழங்குகிறார்.

தமிழ்க் கல்விக்குப் பயன்படும் வகையில் ஏராளமான குறுந்தகடுகளும் வெளியிடப்பட்டுள்ளன.

**இணையத்தில் மின் நூலகம்**

இணையத்தின் பயன்பாடு வளரத் தொடங்கிய காலத்திலேயே தமிழ் இலக்கண இலக்கிய நூல்களைத் தளத்தில் இடும் பணி தொடங்கிவிட்டது. 1998ஆம் ஆண்டு தமிழர் திருநாள் அன்று தொடங்கப்பட்ட 'மதுரைத் திட்டம்' மின்நூலகத்தின் முன்னோடி எனலாம். இதுவரை 200க்கும் மேற்பட்ட நூல்கள் மின் பதிப்புகளாக இதில் உள்ளன.

அதன்பின்னர்த் தமிழ் இணையப் பல்கலைக் கழகத்தின் மின்நூலகம் உருவாக்கப்பட்டது. இந்நூலகத்தில் பல்வேறு பிரிவுகளில் நூல்கள் அமைந்துள்ளன. இலக்கியப் பகுதியில் சங்க காலம் முதல் தற்காலம் வரையிலான இலக்கியங்களும், இலக்கணங்களும் உரையுடன் தரப்பட்டுள்ளன.

தொல்காப்பியம், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை ஆகிய நூல்கள் ரோமன் ஆங்கில எழுத்தில் தரப்பட்டுள்ளன. நூல்களின் பாடுபொருள், தேடுபொருள் போன்றவற்றை எளிய முறையில் தேடிப்பெறும் வகையில் அமைக்கப்பட்டிருப்பது இந்த மின்நூலகத்தின் சிறப்பாகும். இஃது ஆய்வாளர்களுக்குப் பெரிதும் உதவியாக இருக்கும்.

இம் மின்நூலகத்தில் ஆங்கிலம்–தமிழ், தமிழ்–தமிழ் அகராதிகளும், 2,50,000 கலைச்சொற்களும் உள்ளன.

இதே போன்று www.chennailibrary.com, www.dli.ernet.in, tamil heritage.org என்ற மின்நூலகங்களும் தமிழ் நூல்களைக் கொண்டு இயங்கி வருவதில் குறிப்பிட்ட சிலவாகும். மேலும் பல தமிழ் மின்நூலகங்களைத் தளத்தில் காணலாம்.

மின்நூலகங்கள் மட்டுமல்லாது, மின்நூல்களை விற்பனை செய்யும் இணையத் தளங்களையும் இன்று காணலாம்.

**இணையத்தில் பண்பாட்டுக் காட்சியகம்**

தமிழர்களின் பண்பாட்டு விழுமியங்களாக உள்ள நாட்டுப்புறக் கலைகள், விளையாட்டுகள், வரலாற்றுச் சின்னங்கள், வழிபாட்டுத் தலங்கள் ஆகியவற்றை நினைவில் இருத்துவதற்காக ஒலி ஒளிக் காட்சித் தொகுப்புகளைப் பதிவுசெய்து உருவாக்கப்பட்ட பண்பாட்டுக் காட்சியகங்களும் இணையத் தளத்தில் உள்ளன.

தமிழகத்துக் கலைகளான நாட்டியம், கரகம், காவடியாட்டம், மயிலாட்டம், கோலாட்டம், தப்பாட்டம், புரவியாட்டம், கும்மி, தெருக்கூத்து, தாலாட்டு ஆகியவற்றின் தரமான காலப் பதிவுகள் இதில் இடம் பெற்றுள்ளன.

**இணையத்தில் சுவடிக் காட்சியகம்**

தமிழ்த்தாத்தா உ.வே.சா. சேகரித்து வைத்திருந்த பழஞ் சுவடிகள் உ.வே.சா. நூலகத்தில் பாதுகாக்கப்பட்டுள்ளன. இவற்றுள் தொல்காப்பியம், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க்கணக்கு, இறையனார் களவியல்,

சீவகசிந்தாமணி முதலான நூற்சுவடிகள் இப்போது உள்ளீடு பெற்றுள்ளன.

வேண்டும் சுவடியைத் தேடிப்பெறும் வசதியும், ஒவ்வொரு சுவடியையும் தனியாகப் பெரிதாக்கிப் பார்க்கும் வசதியும் தரப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது.

**விக்கிபீடியா**

தமிழ் விக்கிபீடியா என்பது, இணையத்தில் வளர்ந்து வரும் தமிழ் அறிவுக் களஞ்சியமாகும். பல அறிஞர்களும், பொறியாளர்களும், தொழில்நுட்ப வல்லுநர்களும் கூட்டாகச் சேர்ந்து தமிழுக்குச் சேர்க்கும் அறிவுக் கருவூலம். இலக்கியம், அறிவியல், தொழில் நுட்பம், வரலாறு, புவியியல், பண்பாடு, கணிதம், சமூகம், மருத்துவம் சார்ந்த பல்வேறு தலைப்புகளில் இன்று 22000க்கும் மேற்பட்ட கட்டுரைகள் இணையத்தில் காணக்கிடக்கின்றன.

ஒரு நாளில் ஏறக்குறைய 1 இலட்சம் பேர் இதனைப் பயன்படுத்துகிறார்கள். இங்கு இந்திய மொழிகளுள் தமிழ் இரண்டாம் இடத்தில் உள்ளது என்பது குறிப்பிட வேண்டிய ஒன்றாகும்.

தமிழ் டிக்சனரி என்ற பன்மொழி அகராதி, தமிழ் விக்கி நூல்கள், தமிழின் மூல நூல்களை, அறிவு மூலங்களைக் கொண்ட விக்கிமூலம், என்பனவும் விக்கி பீடியாவில் அடங்கும்.

**வலைப்பதிவு/வலைப்பூ**

இணையம் வழங்கும் மின் அஞ்சல், இணைய அரட்டை, இணைய வாணிகம், இணையக் கோப்புப் பரிமாற்றம் உள்ளிட்ட மின் ஆளுமை போன்ற பல்வேறு பயன்களின் விரிவாக இன்று புகழ் பெற்றிருப்பது. வலைப்பதிவு அல்லது வலைப்பூ என்றழைக்கப்படும் Blogs ஆகும்.

தம் படைப்புகளைத் தாமே இணையத்தில் பதிப்பிக்கும் வசதியே வலைப்பதிவு ஆகும். பதிவுகளைப் படித்த வாசகர்கள் அதற்கான தம் கருத்துரைகளை உடனடியாக அவ்வலைப் பதிவில் பதிவு செய்து கொள்ளமுடியும். பின்னூட்டங்களுக்குப் பின்னூட்டம் என்று சங்கிலித் தொடர்போல் பதிவு தொடர்ந்து சென்று கொண்டேயிருக்கும்.

தமிழில் இத்தகைய வலைப்பதிவுகள் ஏராளமாக வந்து கொண்டிருக்கின்றன. கவிதைகள், கதைகள், இலக்கிய விமர்சனம், அறிவியல் கருத்தாடல் என்று தமிழுக்கு அணியாக இந்த வலைப்பதிவுகள் திகழ்கின்றன.

**இணைய இதழ்கள்**

அச்சு வடிவில் ஒரு குறிப்பிட்ட நில எல்லைக்குள் கிணற்றுத் தவளையாக இருந்த ஊடகங்கள், இணையத்தின் வழியாக இன்று உலகம் முழுவதற்கும் பயன்படத்தக்க படைப்புகளை, தகவல்களை உலகுக்கு அளித்து வருகின்றன.

மேலும் அச்சில் வரும் இதழ்களும், நாளேடுகளும் தங்கள் இதழ்களை மின்னிதழ்களாக வெளியிடுகின்றன.

இணைய இதழ்கள் அச்சுவடிவ இதழ்களைப் போலவே பல்வேறு செய்திகள், படைப்புகள், படங்கள் என்பவற்றைக் கொண்டு வெளிவருகின்றன. கீற்று, திண்ணை, பதிவுகள், நிலாச் சாரல், எழில் நிலா, அந்தி மழை முதலியன இணைய இதழ்களாகும்.

இலக்கியம், இலக்கணம், சார்ந்த படைப்புகளை உலகின் தலைசிறந்த தமிழறிஞர்கள் அளித்து வருகிறார்கள்.

**தமிழ் மென்பொருள்கள்**

இன்று ஆங்கிலத்திலும், பிற மொழிகளிலும் பல மென்பொருள்கள் பயன்பாட்டில் உள்ளன. ஆங்கிலத்தி லிருந்து பிறமொழிகளில் மொழிபெயர்க்கும் வசதி, எழுத்தைப் பேச்சாகவும், பேச்சை எழுத்தாகவும் மாற்றும் வசதி, எழுத்துப் பிழைகளைத் திருத்தும் வசதி, அச்சிட்ட பக்கங்களைப் படியெடுத்துப் பதிப்பிக்கும் வகையில் எழுத்துகளை அடையாளம் காணும் வசதி எனப் பல மென் பொருள்கள் ஆங்கில மொழியில் உண்டு. அவற்றைப் போலவே தமிழிலும் மென்பொருள்களைக் கொண்டுவரும் முயற்சிகள் பல ஆண்டுகளாகத் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன. இம்முயற்சியில் பல தனியார் நிறுவனங்களும், அரசு நிறுவனங்களும், தமிழ் இணையப் பல்கலைக் கழகமும் ஈடுபட்டுள்ளன.

தமிழக அரசும் தமிழ் மென்பொருள் வளர்ச்சிக்கெனத் தனியே நிதி ஒதுக்கியுள்ளது. அத்திட்டத்தின் கீழ்த் தமிழ் இணையப் பல்கலைக்கழகம் தமிழ் மென்பொருள்கள் உருவமைக்க நிதி வழங்கி வருகிறது. அதன் பயனாகப் பல மென்பொருள்கள் உருவாக்கப்பட்டுள்ளன.

**தமிழ் எழுத்துகளைப் படித்துப் பதிப்பித்தல்**
(OCR for Tamil Text)

அச்சிட்ட தமிழ்ப் பக்கங்களைப் பார்த்து, எழுத்துகளை அடையாளம் கண்டு, மீண்டும் அப்பக்கங்களைத் திருத்திப் பதிப்பிக்கும் வகையில் புதிதாகத் தட்டச்சு செய்ததைப் போலத் தருதல் (OCR for printed Tamil Text) இதனால் மீண்டும் தட்டச்சுச் செய்து பிழைதிருத்தும் பணி தேவைப்படாது.

**ஆங்கிலம் - தமிழ் மொழி பெயர்ப்பு**
(English - Tamil Translation)

தனிச் சொற்களையும், சிறு சிறு தொடர்களையும் மொழிபெயர்க்க, இம்மென்பொருள் பயன்படுகிறது. நீண்ட தொடர்களை மொழிபெயர்க்க முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

**தமிழ்ச் சொல்வலை உருவாக்குதல்**
(Tamil Word Net)

இஃது ஒரு தமிழ்ச் சொல்லில் உள்ள உருபன்களைப் பிரித்து ஆராயும் திறன் கொண்டது. நூல்கள் என்ற ஒரு சொல்லை நூல் + கள் என்று இரண்டு உருபன்களாகப் பிரிக்கும்.

மேலும் ஒரு சொல்லுக்கு ஈடான பல சொற்களையும், பல பொருள்களையும் தரவல்லது.

எடுத்துக் காட்டாக :

படி என்ற சொல்லுக்கு நான்கு பெயர்ச்சொல் பொருள்கள் உள்ளன. அவை,

படி – படிக்கட்டு, அளக்கும் படி, வழி, வரவு செலவு.

படி என்ற சொல்லுக்கு 2 வினைச்சொல் பொருள்கள் உள்ளன. அவை,

படி – படித்தல், படிதல்.

அகராதி முறையில், இணையத்தில் சொற்களைப் பார்க்கும் முறையில் இது அமைக்கப்பட்டிருக்கிறது.

**தமிழ்ச்சொல் தகவல் தளம்**

அகராதி தொடர்பான ஒரு தகவல் தளத்தை உருவாக்குவதே இம்மென்பொருளின் நோக்கமாகும். ஒரு சொல்லுக்கான பொருளைப் பெறும் வழக்கமான தேவைகளைத் தவிர, உருபன் ஆய்வு, சொல் அடிப்படையிலான அடுக்குகளைப் பெறுதல், ஒரு சொல்லுக்கான ஒலிப்பைப் பெறுதல், ஒரு பெயர் அல்லது வினைச்சொற்களைப் பெறுதல் போன்ற பல்வேறு பயன்களும் இதில் உண்டு.

எடுத்துக் காட்டாக, ஒரு சொல்லுக்கு இலக்கண விவரம், பொருள் – Meaning, ஒத்த பிற சொற்கள் – (Synonyms), அடிப்படை – (Paradigms) ஆகியவற்றைத் தரவல்லது.

**சொற்களஞ்சிய ஆய்வு** (Corpus Analysis)

தமிழ்த் தரவுத் தள ஆய்வுக் கருவிகளுள் ஒன்றான உருபன் பிரிப்பான் உருவாக்கப்பட்டுள்ளது. இது, தமிழில் பெயர், வினை, பெயரடை, வினையடை ஆகிய நான்கு வகைச் சொற்களையும் பிரித்து உருபன்களைத் தனித்தனியே எடுத்துக் கொடுக்கும். சுமார் 2000 சொற்களுக்கு இது செயற்படுத்திப் பார்க்கப்பட்டது.

இதற்காகத் தயாரிக்கப்பட்ட தரவுகளில் முக்கியமானது தமிழ் இலக்கண விதிகளாகும்.

உருபன் பிரிப்பான் உருபன்களாகப் பிரிப்பதோடு, அவற்றின் இலக்கண வகைப்பாட்டையும் காட்டும்.

மேலும் இதனால் ர – ற, ல – ள, ந–ண–ன எழுத்துகள் உண்டாக்கும் சொல் மயக்கங்களையும், வேறு காரணங்களால் ஏற்படும் பொருள் மயக்கத்தைத் தீர்க்கவும் முடியும்.

**பேச்சை எழுத்தாக மாற்றுதல்**
(Speech to Text synthesis for Tamil)

பேச்சைப் புரிந்துகொண்டு தட்டச்சு வடிவில் தருவதே இதன் நோக்கமாகும். இது 5000 சொற்களையும், சொற்றொடர்களையும் மாற்றவல்லது.

எடுத்துக்காட்டாக, ஒரு விவசாயி கூறுவதைப் புரிந்துகொண்டு இதனால் தட்டச்சுச் செய்ய முடியும்.

**கையெழுத்தைத் தட்டச்சாக மாற்றும் மென்பொருள்**

இம்மென்பொருள் கையெழுத்துப் படிவங்களைப் படித்து, எழுத்துகளை அறிந்துகொண்டு அவற்றைத் தட்டச்சு வடிவில் தரவல்லது. இது யாருடைய கையெழுத்தையும் புரிந்து கொள்ள வல்லது.

ஒரு பக்கத்தில் உள்ள கையெழுத்துப் படிவத்தின் ஒரு பகுதியையோ, படத்தையோகூட இதனால் தட்டச்சு வடிவில் தர முடியும்.

**செல்பேசிகளில் தமிழில் தகவல் அளித்தல்**

அனைத்துச் செல்பேசிகளிலும், தொடர்வண்டி, வானூர்தி, தொடர்பான நேர அட்டவணை, பதிவு விவரம், ஆகிய விவரங்களை இன்று ஆங்கிலத்தில் பெறுவதைப் போலத், தமிழிலும் பெறலாம். மேலும் பல்வேறு நிறுவனங்களின் தற்போதைய பங்குச்சந்தைத் தகவல்களையும் பெறலாம்.

**செல்பேசிகளில் தமிழ்**

செல்பேசிகளில் தமிழில், குறுந்தகவல்களை அளித்தல், பெயர்களைப் பதிவு செய்தல் போன்றவற்றுக்கான மென்பொருள் இது. இதற்கான விசைப்பலகை வடிவமைப்பும் இதில் செய்யப்பட்டுள்ளது. இம்மென்பொருளின் அடுத்தகட்டமாக, முதல் எழுத்தை உள்ளீடு செய்யும்போது அந்த எழுத்தில் தொடங்கும் சொற்களையும் கணித்துத் தரவல்ல மென்பொருளும் இப்போது உருவாகிக் கொண்டிருக்கிறது.

**தமிழ்க் கனினிகள்**

மைக்ரோசாப்ட், லினக்சு போன்ற செயலிகளை ஆங்கிலம் தெரியாதவர்களும், தமிழ், கொண்டே பயன்படுத்தும் பல மென்பொருள்கள் உருவாக்கப்பட்டுள்ளன.

**முடிவுரை**

மிக வேகமாக வளர்ந்து கொண்டிருக்கும் இணையத் தமிழின் சில பரிமாணங்கள் மட்டும் இங்கு சுருக்கமாகத் தொட்டுக் காட்டப்பட்டுள்ளன. மேல் விவரங்களுக்கு இணையத்தை அணுகப் பரிந்துரைக்கப்படுகிறது.

ஒரு மொழியின் வளர்ச்சி என்பது அந்த மொழியைப் பேசும் மக்களின் வளர்ச்சியைச் சார்ந்தே இருக்கும். மக்கள் வளராமல் மொழிமட்டும் வளர்ந்ததாக வரலாறு இல்லை. எனவே, மக்களை வளர்க்காமல், அவர்கள் பேசும் ஒரு மொழியை மட்டும் வளர்க்க முடியாது.

இன்றைய இணையத் தமிழின் வளர்ச்சிக்கும் தமிழர் சிலரின் பங்களிப்பே வேர்க் காரணமாக அமைந்திருக்கிறது. தமிழனால் தமிழ் வளர்வதும், தமிழால் தமிழன் வளர்வதும், முடிவில்லாத் தொடர் ஓட்டமாகும். காலத்தால் அழியாது நிலைத்திருக்கும் நம் தமிழ் மொழியை அறிவியல் வளர்ச்சிக்கேற்ப வளர்க்க வேண்டியது தமிழர்களாகிய நம் கடமையாகும்.

❖

# தமிழ் இலக்கியங்களில் அறிவியல் சிந்தனைகள்

முனைவர் ப. ஜயம்பெருமாள்



**முன்னுரை**

வாழ்க்கையோடு ஒட்டிய கருத்துகளைப் பரிமாறிக் கொள்ளத்தக்க வளமும் மொழி நலமும் பெற்ற தமிழ் ஓர் உயர் தனிச் செம்மொழி. பிற மொழிகளின் உதவியின்றிச் சிறப்பாகக் கருத்துகளை வெளிப்படுத்தும் அளவுக்குச் சொல்வளமும், கருத்துவளமும், இலக்கணக் கட்டுப்பாடும் கொண்ட தமிழ் ஒரு தனிமொழி. இயல்பான, அறிவியல் சிறப்பு மிக்க எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி ஆகிய ஐவகை இலக்கணச் சிறப்புடைய தமிழ் உயர் தனிச் செம்மொழியாகும்.

இலக்கியச் செழுமை மிகுந்த தமிழ் தனித்துவம் மிக்கது, பிறமொழியினின்று பிறந்தது அன்று. பிறமொழிகளைத் தோற்றுவித்தது; பிற செம்மொழிகளுக்கும் சொற்களை அளித்துள்ளது என நடுநிலையாளர்களான பிற நாட்டு அறிஞர்களும் கண்டுணர்ந்துள்ளனர். பல மொழிகள் கற்ற மாக்ஸ் முல்லர், "Tamil is the most highly cultivated language and possesses the richest stores of indigenous literature" என்கிறார்.

**இலக்கியங்களில் அறிவியல்**

திருவள்ளுவர் காலத்திற்குச் சில ஆயிரம் ஆண்டுகள் முன்னர் தொடங்கி, கிழக்கிந்தியக் கம்பெனி நம் நாட்டில் காலூன்றிய காலம்வரை தமிழர் பல துறைகளிலும் சிறந்தோங்கித் தனி ஆதிக்கம் செலுத்தி வந்துள்ளனர். அதே காலங்களில் இதுபோன்ற சிறந்த நாகரிகங்கள் உலகின் பல பகுதிகளிலும் தோன்றி வளர்ந்துள்ளன என்பது மறுக்க முடியாத உண்மை. என்றபோதும் இலக்கியங்கள் நமக்குணர்த்தும் தமிழர் என்ற இனமும் தனியே அவர்க்குள்ள குணமும் போற்றிப் புகழத்தக்கவை. நதிகளின் வெள்ளத்தைக் கட்டுப்படுத்துதல், பாசன முறை, நெருப்பை உண்டாக்கிக் கட்டுப்படுத்திப் பயன்படுத்தும் திறன், விலங்குகளை அடக்கியாண்டு அவற்றைப் பணிகளுக்குப் பயன்படுத்தும் நுட்பம், உலோகங்களைப் பிரித்தெடுத்துப் பயன்படுத்துதல், உழவு, உழவுக் கருவிகள், பயணங்களுக்குச் சக்கரங்கள் கொண்ட வண்டிகளை உருவாக்குதல், நெசவு, மண்பாண்டம் வனைதல், போர்த்துறை நுட்பங்கள், தற்காப்புக் கலைகள், நகரமைப்பு அரசாட்சி முறை, நாவாய் அமைத்தல் – செலுத்துதல், மொழியியல், மருத்துவம், காலநிலை அறிதல், வானவியல் போன்ற துறைகளிலும் இன்னபிற துறைகளிலும் நம் முன்னோர் ஆளுமை செலுத்தி வந்ததை அகழ்வாய்வுகள் வாயிலாகவும், இலக்கியங்களின் வாயிலாகவும் நாம் அறிகிறோம்.

சங்கத் தமிழிலக்கியங்களாம் எட்டுத்தொகை பத்துப்பாட்டு ஆகிய பதினெண்மேல்கணக்கு நூல்களிலும், அவற்றையொட்டிப் பிறந்த பதினெண் கீழ்க்கணக்கு நூல்களிலும், இவையல்லாத சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி ஆகிய ஐம்பெரும் காப்பியங்களிலும், நீலகேசி, சூளாமணி, உதயண குமார காவியம், யசோதர காவியம், நாககுமார காவியம் ஆகிய ஐஞ்சிறு காப்பியங்களிலும், பெருங்கதை, பெரியபுராணம், கம்பராமாயணம், கந்தபுராணம், நளவெண்பா, வில்லிபாரதம், அரிச்சந்திர புராணம் ஆகிய பிற காப்பியங்களிலும், பன்னிரு திருமுறைகளிலும், பிற பக்தி இலக்கியங்களிலும் எண்ணிறந்த அறிவியல் கருத்துகள் உள. தலைச்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் ஆகிய காலகட்டங்களில் இயற்றப்பட்ட சங்க இலக்கியப் பனுவல்களில் ஓரளவே இன்று நம்மிடையே உள. வெவ்வேறு காலகட்டங்களில் இயற்றப்பட்ட இப்பாக்கள் கொண்டு அக்காலத் தமிழர் பண்பாட்டை நாம் உணர்கிறோம்.

வானவியலில் வான்பொருள்களின் தொலைவை ஒளியாண்டுகளால் அளப்போம். பத்து ஒளியாண்டிற்கு அப்பால் உள்ள விண்மீன் என்றால் அந்த விண்மீனில் பத்து ஆண்டுகளுக்கு முன்னர்ப் புறப்பட்ட ஒளியை இன்று நாம் ஆராய்கிறோம் என்று பொருள். இதுபோல ஆயிரம் ஒளியாண்டுகள், பதினாயிரம் ஒளியாண்டுகள், பல கோடி ஒளியாண்டுகள் என வேறுபட்ட தொலைவுகளில் வான்பொருள்களை ஆய்வு செய்யும் போது இந்தப் பேரண்டம் பதினாயிரம் அல்லது பல கோடி ஆண்டுகளுக்கு முன்னர் எப்படியிருந்தது என உணரமுடியும். எனவே இத்தகு

வான்பொருள்களைக் 'கால இயந்திரங்கள்' எனக் கருதுவோம். இதுபோலவே சங்க இலக்கியங்கள் வெவ்வேறு காலகட்டங்களில் இயற்றப்பட்டிருப்பதால் அவற்றை ஆய்வு செய்யும்போது கால ஓட்டத்தில் நாம் பின்னால் சென்று முற்காலத்தை அடைகிறோம். எனவே இலக்கியங்களும் கால இயந்திரங்களே.

### அறிவியல் மொழி தமிழ்

அறிவியல் என்பதற்குப் பலவகையான வரையறைகள் உண்டு. "Systematized knowledge derived from observation, study and experimentation carried on in order to determine the nature or principles of what is being studied" என்பது ஒரு பொதுவான விளக்கம். இவ்வகை விளக்கங்களை ஆங்கில அகராதிகளில் காணலாம்.

தமிழ் அறிவியலுக்கும் உண்மையான வரையறை தருகிறது.

**எப்பொருள் யார்யார் வாய்க் கேட்பினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்பது அறிவு.** (குறள் - 423)

**எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்பது அறிவு.** (குறள் - 355)

பகுத்தறிவும் அறிவியல்தான். அறிவியல் மட்டுமன்று பொதுவாழ்வில் அறத்தையும் எடுத்தியம்புவது பண்டைத் தமிழ் இலக்கியங்கள். மனித இனம் பிரிவுகளுடன் ஒருவரது நெற்றியிலிருந்தோ, தோளிலிருந்தோ, மார்பிலிருந்தோ காலிலிருந்தோ பிறந்தது என்று அறிவியலுக்கும், பகுத்தறிவிற்கும், அறத்திற்கும் புறம்பாகப் பேசாது,

**பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்; சிறப்பொவ்வா**

**செய்தொழில் வேற்றுமை யான்.** (குறள் 972)

என அறிவியல் மனப்பான்மையுடன் எடுத்தியம்பியது செந்தமிழ் மொழியே. அறிவியல் மட்டுமன்று. கணிதத்திலும் கரைகண்டது தமிழினம். எண்ணையும், எழுத்தையும் கண்ணெனக் கொண்ட பண்டைத்தமிழ் நூல் தொகுப்புகளின் பெயர்கள்கூட எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண் மேல்கணக்கு, பதினெண் கீழ்க்கணக்கு, ஐங்குறுநூறு, புறநானூறு, அகநானூறு, இன்னா நாற்பது, இனியவை நாற்பது, நாலடியார், பதிற்றுப்பத்து என்று அமையக் காண்கிறோம். இப்போது உலகமெங்கும் பயன்படுத்தப்படும் எண்முறையும் தமிழ் முறையிலிருந்து அரபு நாடுகளுக்குச் சென்றதுதான் எனவும் ஒரு கருத்து உள்ளது. தமிழர் வழக்கத்தில் பின்ன முறையும் மிகவும் நுணுக்கமாய் அமைந்துள்ளதை நாம் காண்கிறோம். (தொல்காப்பியத் தமிழ், தேவநேயப் பாவாணர்).

ஒன்று (1), முக்கால் (3/4), அரை (1/2), கால் (1/4), மும்மாகாணி (3/16), அரைக்கால் (1/8), மாகாணி (1/16), அரை மாகாணி (1/32), கால் மாகாணி (1/64), நான்மா, மும்மா (3/20), இருமா (1/20), ஒருமாமுக்காணி (1/20), அரைமா (1/40), காணி (1/80), அரைக்காணி (1/160) மேல் முந்திரி (1/320), கீழ் முந்திரி, இம்மி, மும்மி, அணு, குணம், பந்தம், பாகம், விந்தம், நாக விந்தம், சிந்தை, கதிர் முனை, குரல்வளைப் பிடி, வெள்ளம், நுண்மணல், தேர்த்துகள் எனப் பின்னங்களை நுணுகி வரையறுத்துள்ளனர். ஒரு தேர்த்துகள் என்பது

1/232382453022720 000 000 0 ஆகும். (தொல்காப்பியத் தமிழ், தேவநேயப் பாவாணர்).

**இரண்டு முதல் ஒன்பான் இறுதிமுன்னர்**
**வழங்கியல் மாவென்கிளவி தோன்றின்**
**மகர வளவொடு நிகரலு முரித்தே** (480)

எனும் தொல்காப்பியக் குற்றியலுகரப் புணரியல் நூற்பாவில் மா வென்னும் அளவை கூறப்பட்டுள்ளதால் ஏனைய அளவுகளும் தொல்காப்பியர் காலத்தில் வழங்கின எனக் கொள்ளலாம்.

நீட்டலளவைகளிலும் வரையறை இருந்தது. 1 காதம் என்பது 4 கூப்பிடு, 1 கூப்பிடு என்பது 500 கோல்; ஒரு கோல் என்பது 4 முழம், 1 முழம் என்பது 2 சாண், 1 சாண் என்பது 12 பெருவிரல், 1 பெருவிரல் என்பது 8 நெல்; ஒரு நெல் என்பது 8 கடுகு, 1 கடுகு என்பது 8 நுண்மணல், 1 நுண்மணல் என்பது 8 மயிர், 1 மயிர் என்பது 8 பஞ்சிலை, 1 பஞ்சிலை என்பது 8 தேர்த்துகள், 1 தேர்த்துகள் என்பது 8 அணு. இவ்வகையில் தேர்த்துகள் (= $10^{-10}$ meter) என்பது தற்காலத்தில் நாம் கணித்துள்ள உண்மையான அணுவின் அளவை (diameter of the atom = $10^{-10}$ meter) ஒத்தது.

### இலக்கியங்களில் அறிவியல் தொழில்நுட்பக் குறிப்புகள்

பண்டைத் தமிழர்கள் அறிவியலின் பெரும்பாலான இன்றிமையாத துறைகளில் ஆழ்ந்த அறிவைப் பெற்றிருந்ததற்கான சான்றுகளை நாம் பண்டை இலக்கியங்களில் காண முடிகிறது. தனித்த அறிவியல் தொழில்நுட்ப ஏடுகளைப் பண்டைத் தமிழர் ஏற்படுத்தினார்களா என்பது ஆராயத்தக்கது. அப்படி ஏற்படுத்தி அவை பிற்காலத்தில் அழிக்கப்பட்டோ அழிந்துபட்டோ போயினவா என்பதுவும் புலப்படவில்லை. என்றபோதும் இலக்கியங்களில் ஆங்காங்கே நாம் காணும் குறிப்புகளால் தமிழர்தம் அறிவியல் தொழில்நுட்ப ஆற்றல் நன்கு விளங்குகிறது.

**வானவியல்**

தமிழர்தம் வானவியல் அறிவு தனித்துவம் வாய்ந்தது. புறநானூற்றுப் பாடலில் 'நிலவின் இளம்பிறை' என வான்பொருளின் பெயரால் தொடங்குகிறது. முடிவாக வரும் 400 ஆம் பாடலோ 'மாவிசும்பின் வெண்திங்கள் மூ–ஐந்தான்முறை முற்ற' என வானத்தையும் நிலவின் கலையையும் குறிப்பதாக அமைந்துள்ளது. அதுமட்டுமன்று. சொல்லோவியமாம் சிலம்பும் 'திங்களைப் போற்றுதும்' என்றும் 'ஞாயிறு போற்றுதும்' என்றுமே தொடங்குகின்றதன்றோ. நம் முன்னோர் தங்கள் வானவியல் அறிவினை அடிப்படையாகக் கொண்டே நாட்காட்டி முறையை அமைத்தனர்.

நமது பேரண்டத்தைப் பற்றியும், அதில் விரிவடைந்து விரைவாக ஒன்றை விட்டு ஒன்று விலகிச் செல்லும் அண்டங்களைப் பற்றியும் நாம் 20ஆம் நூற்றாண்டில் தான் அறியப்பெற்றோம். 16ஆம் நூற்றாண்டில்கூட புவிமையக் கொள்கையைப் பெரும்பாலான வானவியலாளர்கள் ஏற்றுக்கொண்டிருந்தனர். ஆனால், வியக்கத்தக்க வகையில் 8ஆம் நூற்றாண்டின் இறுதியில் அல்லது 9ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் திருவாதவூரில் பிறந்த மாணிக்கவாசகர் 658 பாடல்களுடன் இயற்றிய பக்தி இலக்கியமாம் திருவாசகத்தில் திருவண்டப் பகுதியில் இன்றைய நாளில் அறிவியல் அறிஞர்கள் ஒப்புக் கொண்டுள்ள பேரண்டவியல் கருத்துகளைத் தொலைநோக்குடன் எவ்வளவு அழகுற எடுத்தியம்புகிறார் என்பதைக் காண்போம்:

**அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்**
**அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி**
**ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்**
**நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன**
**இன்னுழை கதிரின் துன் அணுப் புரையச்**
**சிறியவராகப் பெரியோன் தெரியின்.**

ஒரு பொத்தலில் வீட்டுக்குள் வருகிற சூரிய வெளிச்சத்தில் அணுப்போன்ற தூசிகள் அலைந்து திரிவது தென்படுகிறது. அதுபோன்ற கோளங்கள் வானத்தில் மிதந்து கொண்டிருக்கின்றன. சிறியதாகிய அணுவிற்கும் பெரியதாகிய ஒன்றிற்கும் அமைப்பு ஒன்றேயாகும். ஆராய்ந்து பார்ப்பவருக்கு இவ்வுண்மை விளங்குகிறது (தெளிவுரை: எம்.நாராயண வேலுப் பிள்ளை, வர்த்தமானன் பதிப்பகம்).

பேரண்டத்தில் பலகோடி அண்டங்களும் அவற்றில் கணக்கற்ற விண்மீன்களும் இருப்பதைத் தற்காலத்தில் நாம் உணர்ந்திருக்கிறோம். ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்கள் கண்களுக்குப் புலனாகும் ஐந்து கோளங்களையே (புதன், வெள்ளி, செவ்வாய், வியாழன், சனி) அறிந்திருந்தனர். இவை தவிர சந்திர சூரியனையும் வானக் கூரையில் பதித்த சிறுபுள்ளிகள் என அவர்கள் அறிந்த விண்மீன்களையும் கொண்ட சிறிய அமைப்பே பிரபஞ்சம் என அவர்கள் எண்ணியிருந்தார்கள். அக்காலத்தில் எண்ணிறந்த கோளங்களை (விண்மீன்களை)க் கொண்டது பேரண்டம் எனப் பொருள்பட

**அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்**
**அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி**

என்று மாணிக்கவாசகர் இயம்புகிறார். இவை மட்டுமல்ல திருவண்டப் பகுதியில் நாம் காணும் வேறுபல வரிகளும் ஆழ்ந்த கருத்துகள் ஊறியவை. விண்மீன்கள் உவமையாக ஏராளமான பாடல்களில் பயன்படுத்தப் பட்டுள்ளன.

கோள்கள் விண்மீன் மண்டலங்களின் இடையில் நின்ற அமைவுகள் காலத்தின் பதிவுகளாக நம் பண்டை இலக்கியங்களில் காணப்படுகின்றன. கண்களுக்குப் புலனாகும் புதன், வெள்ளி, செவ்வாய், வியாழன், சனி ஆகிய ஐந்து கோள்களும் சந்திரனும் வானில் விண்மீன் களினிடையே இருந்தது பாடல்களில் குறிப்பிடப் பட்டுள்ளது. நாள் (திதி) என நம் முன்னோர் குறிப்பிடுவது சந்திரனின் பிறையின் அளவைக் குறிப்பதாகும்.

**மாவிசும்பின் வெண்திங்கள்**
**மூ – ஐந்தான் முறை முற்ற**
**கடல் நடுவண் கண்டன்ன . . .** (புறம் 400)

மாகமாகிய விசும்பின்கண் இயங்கும் வெண்மதியம் 15 நாள் திதி முறையே முடிய கடல் நடுவில் அதனைக் கண்டார் (விசும்பு என்பது வானம்).

**'சேயுயர் விசும்பின் நீர் உறு கமஞ்சூல்'** (குறுந்தொகை 314)

வானம் வான் என்ற குறிப்பும் பெறுகிறது.

**'வான்ஊர் மதியம் வரை சேரின்'**

(கலித்தொகை 39-8)

நட்சத்திரம் என ஒரு நாளைக் குறிப்பது வானில் சந்திரன் இருக்கும் இடத்திற்கு அருகில் இருக்கும் விண்மீனைக் குறிக்கும். சந்திரன் ஒரு விண்மீனின் அருகே நீண்டகாலம் இருக்குமென்பதால், மேலும் குறிப்பாக நேரத்தைக் குறிக்க அந்த நேரத்தில் கிழக்கில் உதிக்கும் விண்மீன் மண்டலத்தையும் குறித்தனர். இது இலக்கினம் என இப்போது வழங்கப்படுகிறது. இது 2 மணிக்கொன்றாய் மாறும். கம்பராமாயணம் கோசலையும், கைகேயியும், சுமித்திரையும் மகவுகள் பெற்ற நேரத்தை நட்சத்திரம் மற்றும் இலக்கினத்துடன் குறிக்கிறது (பாலகாண்டம் –284). கம்பராமாயணம் மட்டுமன்று, பரிபாடலின் பதினோராம் பாடலைக் கொண்டு அந்நிகழ்வு நடந்த நாளையே கணித்துவிடலாம். வைகையில் வெள்ளம் வந்த நாளாம் அது. பரிபாடல் 3 ஆம் நூற்றாண்டிற்கும் 7 ஆம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட காலத்தைச் சேர்ந்ததாக

இருக்கலாம் எனக் கருதுகிறார்கள். இது சங்க காலத்தின் கடைசிப் பகுதியில் பாடப்பட்டிருக்கலாம். மேலே நாம் காணும் பாடலில் விண்ணில் மூன்று வீதிகள் கூறப்படுகின்றன. கன்னி, துலாம், மீனம், மேஷம் ஆகியவற்றை அடக்கிய ரிஷபவீதி; விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம் ஆகிய இராசி மண்டலங்கள் கொண்ட மிதுன வீதி; ரிஷபம், மிதுனம், கடகம், சிம்மம் ஆகியன அமைந்த மேஷ வீதி ஆகிய மூன்றுமே அவை. மேலும் இந்த வீதிகள் ஒவ்வொன்றிலும் ஒன்பது நாள்களை நிலவு கழிப்பதாகக் கூறப்படுகிறது. இதில் ஒவ்வொரு இராசி மண்டலத்தையும் 25 நாள்களில் நிலவு கடக்கிறது. எனவே மொத்தம் 27 நாள்களில் இந்த மூன்று வீதிகளையும் கடப்பதாக இங்குக் கூறப்படுகிறது. உண்மையில் சந்திரன் பூமியை ஒருமுறை சுற்றிவர 27.33 நாள்கள் ஆகிறது. பரிபாடல் காட்டும் 27 நாள்கள் இதற்கு மிகவும் அருகில் பொருந்தி வருவதையும் முழு நிலவிலிருந்து முழு நிலவுவரை கணக்கிடும் 29.5 நாள்களை அவர்கள் எடுத்துக் கொள்ளாததும் கவனிக்கத் தக்கது.

**நாட்காட்டி முறையும் ஆண்டுக் கணக்கும்**

வானாராய்ச்சியில் சிறந்து விளங்கிய தமிழருக்கு நீட்டலளவைகளையும், பின்ன அளவைகளையும், துல்லியமாய்க் கணக்கிட்ட தமிழருக்கு, எண்ணும் முறையை உலகிற்குக் கூறிய தமிழருக்கு ஆண்டுக் கணக்கு முறை தெரியாமல் போயிருக்க வாய்ப்பில்லை. தமிழ் ஆண்டுகள் எனக் கூறப்படும் அறுபது ஆண்டுப் பெயர்களில் ஒன்றுகூடத் தமிழ் இல்லை.

போப் கிரிகாரி என்பவரால் சீரமைக்கப்பட்ட, உலகெங்கும் இப்போது பயன்படுத்தப்படும் ஆண்டுக் கணக்கு பொதுவான ஒரு காலத்திலிருந்து (Common Era - CE) தோன்றுகிறது. இதுவே இயேசு கிறித்து தோன்றிய ஆண்டு எனக் கொண்டு இதனை அடிப்படையாக வைத்துக் கிறித்துவுக்கு முன்னர் (கி.மு.) எனவும் கிறித்துவுக்குப் பின்னர் (கி.பி.) எனவும் குறிக்கின்றனர். கி.பி. என்பதை C.E. – Common Era எனவும் கி.மு. என்பதை B.C.E. – Before Common Era எனவும் ஒரு சாரார் குறிக்கின்றனர். அறுபது ஆண்டுக் கணக்கை வைத்துக் கொண்டால் வரலாற்று நிகழ்வுகளின் காலத்தைக் கணக்கிட முடியாது. இது புவியின் சுற்றளவை முழம் போட்டு அளப்பது போலக் கடினமான செயலாகிவிடும். எனவே திருவள்ளுவர் பிறந்ததாகக் கருதப்படும் கி.மு. 31 லிருந்து தமிழர்கள் தனியாண்டை அமைத்துக்கொண்டது சாலவும் சிறந்தது. தற்போது நடக்கும் கிரிகாரியன் ஆண்டுடன் (2010) 31ஐக் கூட்டினால் கிடைப்பது திருவள்ளுவராண்டு (2041).

விண்ணில் கதிரவன் பயணிப்பது போலத் தோன்றும் பாதையில் தென்கோடியில் உள்ள விண்மீன் கூட்டம் சுறவம் (Capricornus – மகரம்) அங்குத் தொடங்கி வடவெல்லையாகிய கடகம் சென்று மீண்டும் சுறவத்திற்குத் திரும்பும் காலம் ஓராண்டாக, பண்டைத் தமிழர்களால் வகுக்கப்பட்டிருக்கலாம்.

புவியின் சுழலச்சு புவி சுழலும் தளத்தின் நேர்குத்திற்கு சுமார் 23.5 பாகைக் கோணம் சாய்ந்துள்ளது. இந்த அச்சு மெல்லச் சுழலவும் செய்கிறது. சுமார் 26000 ஆண்டுகளில் இந்த அச்சு ஒரு சுற்று முடித்துவிடும். இதன் காரணமாக ஆண்டின் குறிப்பிட்ட ஓர் நாளில் பகலவன் விண்ணில் இருப்பதுபோலத் தோன்றும் விண்மீன் கூட்டம் காலத்திற் கேற்றாற் போல் மாற்றமடையும். திருவள்ளுவராண்டுத் தொடக்கமான கி.பி. 2041இல் (தற்காலக் கணக்குப்படி) டிசம்பர் மாத இறுதியில் கதிரவன் தென் அட்சமாகிய – 23.5 (மகர ரேகை) உள்ள பகுதியின் மேல் ஒளிர்ந்தது. அதாவது சுறவம் எனும் விண்மீன் தொகுதியில் அன்றிலிருந்து கதிரவன் நுழைந்தது. கதிரவனின் வட ஓட்டம் தொடங்கியது. சுழலச்சின் மாற்றத்தால் சுறவ விண்மீன் தொகுதியில் தற்காலத்தில் தை (சுறவம்) மாதத்தில் கதிரவன் நுழைகிறது. அந்த மாதத்தில் கதிரவன் மறைகையில் தலை உச்சியில் மேழ ராசியையும், கிழக்கு வானில் எழும் நிலையில் கடக ராசியையும் காணலாம். திருவள்ளுவர் காலத்தில் கதிரவனின் வடதிசை நகர்வு தொடங்கும் காலத்தில் கதிரவன் சுறவத்தில் அமையும் காலத்தில் ஆண்டு தொடங்கியிருக்கலாம் என்று அறிந்து தற்போதும் கதிரவன் சுறவத்தில் இலங்கும் காலமாகிய 'தை' மாதத்தை நாம் ஆண்டின் தொடக்கமாக ஏற்றுக்கொள்வது போற்றத்தக்கது.





கதிரவனைச் சுற்றிய நீள்வட்டப் பாதையில் புவி கதிரவனுக்கு அருகே மார்கழி– தை மாதங்களில் வரும். ஆனி, ஆடி மாதங்களில் வெகு தூரம் விலகிக் காணப்படும். கதிரவனுக்கு அருகே புவி வரும் காலத்தில் கதிரவனைப் போற்றும் தமிழர் திருநாள் அமைந்திருப்பது குறிப்பிடத்தகுந்தது.

இது இந்திர விழாவாக சோழநாட்டில் 28 நாள்கள் நடைபெற்றதாகக் குறிப்புகள் உள்ளன. (போகி– இந்திரன்)

**பசியும் பிணியும் பகையும் நீங்கி**
**வசியும் வளனும் சுரக்க**

தமிழர் திருநாளைப் போற்றுவோம்.

**இலக்கியங்களில் கதிரவன்**

**'ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும்**
**காவிரி நாடன் திகிரி போல் பொன்கோட்டு**
**மேருவலம் திரிதலான்'**

என இளங் கோவடிகளால் போற்றப்படும் கதிரவன், சுடர் என்ற ஆகுபெயராலும் கதிர் என்றும் வழங்கப்படுகிறது. எடுத்துக்காட்டாகச் சில பாடல்களை இங்குக் காண்போம்.

**எல்லைகழிய முல்லை மலர**

**கதிர்சினம் தணிந்த கையறு மாலை.**

(குறுந்தொகை 387)

தோலாமொழித்தேவரின் சூளாமணி சுயம்வரச் சருக்கம் (பாடல் 1699) கதிரவன் மறைவதை இவ்வாறு காட்டுகிறது:

**என்றவன் பெயர்த்துஞ் சொல்ல வின்பநீர் வெள்ள மூழ்கி**
**மின்றவழிலங்கும் வேலான் விஞ்சையனவனைப் போக்கிச்**
**சென்றுதன் கோயில் சேர்ந்தான் செங்கதிர் திகிரியானு**
**மன்றழல் சுருங்கமூழ்நீரவலை கடலமூவும் பாய்ந்தான்.**

இதனையே சிலப்பதிகாரத்தில் கானல்வரி இப்படிக் கூறுகிறது.

**கதிரவன் மறைந்தனனே; கார் இருள் பரந்ததுவே ......'**

(வரி 39)

**ஈண்டு நீர்மிசைத் தோன்றி இருள்சீக்கும் சுடரே போல்**

(கலித்தொகை 100 -1)

**அகன்ஞாலம் விளக்கும் தன் பல்கதிர் வாயாகப்**
**பகல் நுங்கியதுபோலப் படுசுடர் கல் சேர .....**

(கலித்தொகை 119 -1)

முன்னர் நாம் கண்ட பரிபாடலின் 11ஆவது பாடலும் கதிரவனை ' விரி கதிர்' என்றே குறிக்கிறது. கதிர் என்பது பயிரையும் குறிக்கும் 'இறங்கு கதிர் கழனி நின் இளையரும் கவர்க' என காரிக் கண்ணனார் குறிப்பிடுகிறார். (புறம் 57 ) சீவக சிந்தாமணி கதிரவனை இரவி எனவும் வழங்குகிறது.

**பால் நுரையின் நொய்ய அணைப்பைங்கதிர் சிந்தித்**

**தான் இரவி திங்களொடு சார்ந்திருந்ததே போல**

(சீவக சிந்தாமணி 2490

**இதர அறிவியற் குறிப்புகள் சில**

கருத்தைக் கவரும் ஏனைய சில அறிவியற் குறிப்பு களையும் இங்குக் காண்போம்:

ஒளிவிலகல் காரணமாக ஒளிவில்லைகளைக் (lens) கொண்டு பொருள்களை உருப்பெருக்கிக் காண்பதை ஒளியியலில் இயற்பியல் மாணவர்கள் பயில்கின்றனர். கபிலதேவர் சிறு புல்லின் மீது படிந்துள்ள பனித்துளியிலேயே ஒளிவில்லைகளின் உருப்பெருக்கத் திறனை ஆய்வு செய்கிறார்.

**தினையளவு போதாச் சிறுபுன்னீர், நீண்ட**
**பனையளவு காட்டும் படித்தால் ; – மனையளகு**
**வள்ளைக்கு உறங்கும் வளநாட வள்ளுவனார்**
**வெள்ளைக் குறட்பா விரி.**

(திருவள்ளுவ மாலை - கபில தேவர்)

நிகழும் ஆண்டை (2010) அகில உலகப் பல்லுயிர்ப் பெருக்க ஆண்டாக (International Year of Bio-Diversity) ஐக்கிய நாடுகள் சபை அறிவித்துள்ளது. தாம் வாழும் பகுதிகளிலும் வனங்களிலும் கண்ட தாவரங்களையும், பறவைகளையும், விலங்குகளையும் ஊன்றிக் கவனித்து அழகிய தமிழ்ப் பெயரிட்டு வகைப்படுத்தி இலக்கியங்களில் வழங்கியுள்ளனர் முற்காலத் தமிழர். தமிழிலக்கியங்கள் காட்டும் பல்லுயிர் வகைகளை இங்கு நாம் காண்போம்.

மரம், செடி, கொடி, அகில், அசோகு, அடும்பு, அத்திமரம், அரலைச்செடி, அவரை, அறுகு, ஆம்பற்கொடி, ஆலமரம், ஆவிரை, பொன்னோராவினை, இருப்பை, இற்றி, ஈங்கை உகாய், உடந்து, எருக்கு, எள், ஐயவி, ஐவனம், ஓமை மரம், கரும்பு, கருவிளை, கவலைக் கிழங்கு, கள்ளி, காஞ்சி, காந்தள், காயா மரம், குரவம் (குரா), குருந்த மரம், குவளை, குளவி, குறிஞ்சி, குன்றி, கூதனி, கொறுக்காந்தட்டை, கொன்றை, கோங்கு, சந்தன மரம், சிலை (குறிஞ்சி நில மரம்) சேம்பு, ஞாழல் (நெய்தல் மரம்), ஞெமை (பாலை மரம்), தடா, தாமரை, தாழை, தாளி (கொடி), தினை, நரந்தம், நெய்தல், நெருஞ்சி, நெல், நெல்லி, நொச்சி, பகன்றை, பஞ்சாய், பயறு, பருத்தி, பலாமரம், பலாசு, பவழம், பனை, பாதிரி, பிடா, பித்திகம், பிரம்பு, பீர்க்கு, புன்கு (நெய்தல் மரம்), புன்னை, மரல் (களை), மராம் (கடம்பு), மருதமரம், மாணைக்கொடி, மாமரம்,

மிளகுக்கொடி, முல்லை, முள்முருங்கை, முள்ளிச்செடி, மூங்கில், யாமரம், வரகு, வழை (குறிஞ்சிமரம்), வள்ளி (கொடி), வாகை, வாழை, வெட்சி, வேங்கை, வேம்பு.

விலங்குகள் : அணில், ஆடு, ஆமான்(காட்டுப்பசு), ஆமை, எருமை, எலி, எறும்பு, ஓந்தி (பாலை), கடமா, குதிரை, குரங்கு (முசு, மந்தி, கருங்குரங்கு), செந்நாய் (பாலை), தவளை, நண்டு, நாய், நீர்நாய், பசு, ஆனேறு, பல்லி, பாம்பு, புலி, மரையினம், மான், மீன் (ஆயிரை, ஆரல், இறா, கயல், கெண்டை, சுறா, வாளை), முதலை, யானை, வருடை (எண்கால் வருடைக் குட்டியை மறியென்பர்), வரையா (மலைப்பசு) வெருகு.

பறவைகள் : அன்றில், அன்னம், எழால் (புல்லூறு) கணந்துள் (பாலை), காக்கை, கிளி, குயில், குருவி, குரும்பூழ் கூகை, கொக்கு, கோழி, நாரை, நுளம்பு, பருந்து, புறா, மகன்றில் மயில், யானையங்குருகு, வங்கா, வண்டு, வௌவால்.

இடங்கள் (habitat) : மலைகள் அரலைக்குன்றம் இமயம், எழில் (குன்றம்), கொல்லி, பறம்பு, பொதியில், ஆறுகள், காவிரி, சோணை காடு.

**முடிவுரை**

உலக மக்கள் தொகை கணக்கெடுப்புகளின்படி 1000 ஆண்டுகளுக்கு முன்னர் இருந்த உலக மக்கள் தொகை இப்போது இருக்கும் மக்கள் தொகையில் சுமாராக 30இல் ஒரு பங்கே இருந்தது. 2000 ஆண்டுகளுக்கு முன்னர் சுமாராக 2000இல் ஒரு பங்கு அளவே இருந்திருக்கிறது. மதுரை மாவட்ட நகர்ப்புறத்தில் இன்றைய மக்கள் தொகை சுமார் 14 இலட்சத்து 45 ஆயிரம். சுமார் 2000 ஆண்டுகளுக்கு முன்னர் மதுரையின் மக்கள் தொகை ஒரு சில ஆயிரங்களாக மட்டுமே இருந்திருக்கும். ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் சுமார் 50,000 மக்களே நகரில் வசித்திருந்திருப்பர். 2000 ஆண்டுகளுக்கு முன்னர் ஒட்டு மொத்தத் தமிழகத்தின் மொத்த மக்கள் தொகையே 50,000க்கும் குறைவாக இருந்திருக்கும். (தற்போது 6 கோடியே 24 இலட்சம்–2001 கணக்கெடுப்பின்படி) அந்தக் காலகட்டங்களில் சமுதாயத்தில் அறிவியல், நுண்கலை வல்லுநர்களின் அளவு இப்போதிருப்பதைக் காட்டிலும் மிக அதிகமாக இருந்ததால்தான் தமிழரின் பண்பாடு உயரிய ஒன்றாக உலகெலாம் போற்றப்பட்டது. கோயில் சிற்பக்கலைகள், கட்டடக்கலைகள், நகர அமைப்பு ஆகியவற்றில் முற்காலத் தமிழறிஞர் தலை சிறந்து விளங்கியது இன்றும் அழியாது விளங்கும். கலைச்செல்வங்களால் நன்கு புலனாகிறது. சில ஆயிரம் மாந்தர் வாழ்ந்த மதுரை மாநகர அமைப்பு தாமரை மலரைப் போலவும் தாமரையின் மைய (பொகுட்டுப் பகுதி) மன்னனின் இருப்பிடமாகவும் பிற தெருப் பகுதிகள் இதழ்கள் போலவும் பரிபாடலில் காண்பிக்கப்படுகிறது.

**மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரைப்**

**பூவொடு புரையும் சீரும், பூவின்**

**இதழகத் தனைய தெருவம்; இதழகத்து**
**அரும்பொகுட் டனைத்தே அண்ணல் கோயில்.**

தற்போது சில ஆயிரம் மக்கள் தொகை கொண்ட சிற்றூர்கள் பல ஆயிரம் நம் தமிழகத்தில் உள. அவையெல்லாம் பண்டைத் தமிழரின் சாதனைகள் போன்ற சாதனைகளைப் படைத்த வண்ணமாகவா உள்ளன? தொழிற்புரட்சி என்பது இரண்டு நூற்றாண்டுகளுக்கு முன்னர்தான் மேற்கத்திய நாடுகளில் தொடங்கி உலகெங்கும் பரவியது. அதன் பலனாக இன்று மனிதகுலம் வசதிகள் பெற்றுள்ளது என்றபோதும் கடுமையாகச் சுற்றுச்சூழல் மாசடைந்துள்ளது என்பதுவும் உண்மை. முற்காலத்தில் காடுகளைத் திருத்தி வேளாண்மை உள்ளிட்ட பல தொழில்களில் ஈடுபட்ட மிகக் குறைந்த எண்ணிக்கை யிலான தமிழர்கள் ஊக்கமுடைமை காரணமாகச் சாதனைகள் பல படைத்துள்ளதுவும் அவர்தம் அறிவியல் அறிவாற்றலும் நுண்ணறிவும் இலக்கியங்களில் புலனாகிறது. சங்கப் பனுவல்களிலும் பிற்கால இலக்கியங்களிலும் பொதிந்துள்ள அறிவியல் சிந்தனைகளை முழுமையாக வெளிக்கொணர சீரிய ஆய்வுப் பணிகள் இன்னமும் தேவை. இளம் மாணவர்கள் தமிழிலக்கியங்களின் சுவையையும் பெருமையையும் உணர்ந்து சீரிய இப்பணிகளில் ஈடுபட முன்வரவேண்டும்.



# சிந்துவெளித் திராவிடர்களின்

# வானவியற் சிந்தனைகள்



**விஞ்ஞானி நெல்லை சு. முத்து**

ஏறத்தாழ 35 கோடி ஆண்டுகள் முன்னதாக வட அமெரிக்கா, தென் அமெரிக்கா, ஐரோப்பா, ஆசியா மற்றும் தென்கண்டத் தகடு ஆகிய 'பஞ்ச' (ஐந்து) கண்டங்களின் தொகுப்பாக 'பாஞ்ஜியா' (Pangaea) எனும் 'பஞ்ச' கண்டம் தோன்றியது என்பது அறிவோம். இந்த ஐந்து கண்டங்களும் மனித வரலாற்றில் சிறப்பிடம் வகிப்பவை. ஏனெனில் அங்கங்கு முறையே மாய இந்தியர்கள், சிவப்பிந்தியர்கள், ஈரானியர்கள், மங்கோலியர்கள், கறுப்பிந்தியர்கள் ஆகிய ஐந்து இனங்கள் தோன்றிப் பரிணமித்தனர். அதிலும் ஆப்பிரிக்கா, மடகாஸ்கர், இந்தியா, அண்டார்டிகா, ஆஸ்திரேலியா எனும் ஐந்து கண்டங்களின் தனித் தொகுதியாகிய தென்கண்டத் தகட்டினில் வாழ்ந்த இனம் பொதுவாக கறுப்பிந்தியர்கள் எனப்பட்டாலும் மானிடவியலார் இதனை 'ஆஸ்திரேலாய்டு இனம்' என்றே வழங்குகின்றனர். அவர்களுள்ளும் நீக்ரோக்கள், திராவிடர்கள், அபாரிஜின்கள் ஒத்த மனித இனங்கள் உருவாகி இருந்தன என்பது தனி வரலாறு.

அந்தக் காலகட்டத்தில் வடஅமெரிக்கப் பிராந்தியத்திலிருந்து இந்தியா வழி ஆஸ்திரேலியா வரை நடந்தே வர இயலும். அதனாலேயே அமெரிக்காவின் மாய இந்தியர்கள், ஆப்பிரிக்காவின் நீக்ரோக்கள், ஆஸ்திரேலியாவின் அபாரிஜின்கள், இந்தியாவின் சிந்துவெளி ஆதிமனிதர்கள் அனைவர்தம் வாழ்விலும் ஒரே மாதிரியான கலாச்சார, நாகரிகக் கூறுகள் படிந்திருக்க வாய்ப்புள்ளது.

ஆஸ்திரேலாய்டு இனம் சார்ந்த இந்தத் திராவிட இனத்தவர் இந்தியாவில் தெற்குப் பகுதியில் மேற்குமலைத் தொடரில் வளர்ந்து மெல்ல மெல்லக் கீழிறங்கி வடக்கே சிந்து நதிக்கரையில் மொகஞ்சதாரோ – அரப்பா ஆகிய இரு பெரும் நகரங்கள் அமைத்தனர்.

இமயமலையிலிருந்து ஒழுகி வரும் சிந்து நதியின் கிளை நதிகளுள் ஒன்றாகிய ரவி ஆற்றங்கரையில் இன்றைய பஞ்சாப் மாநிலத்தில் மான்ட்கோமரி (Montgomery) மாவட்டத்தில் ஒரு சிறு கிராமம் அரப்பா. அதிலிருந்து சுமார் 640 கி.மீ. தென்மேற்கில் சிந்து நதி தீரத்தில் சிந்தி மாகாணத்தின் லர்க்கானா மாவட்டத்தில் உள்ள மற்றொரு நகரம் மொகஞ்சதாரோ. சிந்தி மொழியினில் மொகஞ்சதாரோ என்றால் 'மரித்தோர் மஞ்சம்' (Mound of the dead) என்க.

சிந்துவெளி திராவிட இனத்தவர்தம் எச்சங்களாக இன்றும் இந்தியாவின் வடக்கு, கிழக்கு, வடகிழக்குப் பகுதிகளிலும், மத்திய இந்திய மலைப் பகுதிகளிலும், தென்னிந்தியாவில் மேற்குத் தொடர்ச்சி மலைப் பகுதிகளிலும் ஏறத்தாழ இரண்டு கோடி ஆதிவாசிகள் வாழ்ந்து வருகிறார்கள்.

ஐரோப்பாவை ஒட்டி இன்றைய உக்ரைன் – ஈரான் நிலப்பகுதிக்கும், காஸ்பியன் கடலுக்கும் நடுவில் 5633 கிலோ மீட்டர் உயரத்தில் எழுந்து நிற்கும் எல்பிரஸ் மலைகள் அடங்கிய பகுதி "காகசஸ்" (Caucasus) என்று வழங்குகிறது. உயிரியல் ரீதியில் வேதிவினை முடுக்கத்திற்குப் போதிய கதகதப்பு அல்லது வெப்பச் சமனிலை (thermal equilibrium) இங்கு இல்லை. இயற்கைதன் "குளிர்ப் பெட்டி" ஒத்த சூழலுக்குள் அடைபட்டுக் கிடந்த இந்தக் 'காகசாய்டு' மனித இனம் வெயில் படாத பொன்மேனியினர். அறிவாற்றலும் சற்றுக் குறைவுதான். ஆயினும் ஆக்கிரமிப்பு சுபாவம் அவர்தம் மரபணுவுக்குள் ஊறியது. இந்த மனித இனம் பாபிலோனில் யூஃப்ரட்டீஸ்–டைகரிஸ் (Euphrates-Tigris) ஆகிய இரு நதிகளுக்கு இடையே 'மெசபடோமியா' (Mesopatomia) என்னுமிடத்தில் நாகரிகம் கண்டவர்.

காகசாய்டு இனத்தின் மற்றுமொரு பிரிவினர் சிரியாவுக்கும் மத்தியதரைக்கடலுக்கும் இடைப்பட்ட ஃபொனீஷியா (Phoenicia) எனும் 160 கி.மீ. நீளமும், 160 கி.மீ. அகலமும் கொண்ட இடுங்கிய நிலப்பரப்பில் வாழ்ந்து வந்தனர். அந்நாட்டின் ஒருபுறம் பாதுகாப்பு அரணாக லெபனான் குன்றுகள், மறுபக்கம் மத்திய தரைக் கடல் மார்க்கம் ஃபொனீசியர் வாழ்வுத் தேவை ஆனது. பண்டைத் தமிழரோடு கடல் வாணிகத் தொடர்பு கொண்டிருந்த யவனர்கள் இவ்வினமே.

"சுமார் 5000 ஆண்டுகளுக்கு முன்னம் பாசன விவசாயம், நைல், டைகிரிஸ்–யூஃப்ரடிஸ், சிந்துச் சமவெளிகளில் மக்கள் தேவைக்கு உபரி தானியங்கள்

சக்கர வாகனங்கள் மூலமும், விலங்குகளின் உதவியாலும், பிற இடங்களுக்கு அனுப்பப்பட்டும் வந்தன. பழைய உலகின் நகரங்கள் பலவும் எகிப்து, மெசபடோமியா, சிந்து (மொகஞ்சதாரோ, அரப்பா) நகர்களுக்குப் பின் தோன்றியவையே" என்கிறார் சில்தி (Childe) எனும் வரலாற்றாசிரியர். ("The Urban Civilisation", Town Planning Review, Vol. 21, No.1)

அன்றியும், "கி.மு. 2300ஆம் ஆண்டு வாக்கில் முதிர்ந்தது சிந்து நாகரிகம் என்பதோடு அதே கால கட்டத்திலேயே எகிப்திய, மெசபடோமிய நாகரிகங்களும் நிலவின" என்பது லாம்பர்க் – கார்லோவ்ஸ்கி (Lamberg - Karlovsky) எனும் ரஷிய அறிஞர் கருத்து. ("Ancient Civilisations: The Near East Mesoamerica, California, 1937.)

"சிந்துவெளி நாகரிகத்தின் பரப்பளவு உலகின் வேறெந்த நாகரிகப் பரப்பளவை விடவும் பெரியதாகும் என்பதற்கான ஆதாரங்கள் உள்ளன. வடக்குப் பலுச்சிஸ்தானத்தின் பெரியனோ குந்தை (Periano Gundhai) என்கிற ஆப்கானிஸ்தானிய எல்லையும். சுட்கேகன் – தோர் (Sutkegan-Dor) எனுமிடம் உட்பட்ட மக்ரான் கடற்கரையாகிய ஈரானிய எல்லையும் முதற்கொண்டு – கிழக்காகவும், தென்கிழக்காகவும் விரிந்து மக்ரான் கடற்கரை முழுதும் உள்ளடக்கிய குஜராத்து, சிந்துப் பள்ளத்தாக்கு வரை விரிந்திருந்தது. ஏற்கெனவே காக்கர் – அக்ரா நதியினால் அடித்துச் செல்லப்பட்ட பஞ்சாப் சமவெளிக்கு அப்பால் கங்கை – யமுனை நதிச் சங்கமத்தில் தில்லிக்கருகே சிந்து நாகரிகம் கண்டறியப்பட்டுள்ளது. இவ்வளவு விரிந்த பரப்பினில் வெறும் 144 இடங்களில் மட்டுமே தொல்பொருள்கள் தோண்டி எடுக்கப்பட்டுள்ளன. கிழக்குப் பஞ்சாப் மற்றும் சஹரான்பூர் நதிக்கரைகளிலும் அரப்பா நாகரிகக் கூறுகள் சுமார் 27 இடங்களில் ஆராயப் பெற்றுள்ளன என்பது வேறு விஷயம்" என்கிறார் முகம்மது ரஃபிக் முகல் (Mohammed Rafique Mughal) தமது "சிந்துவெளிப் பழம் நாகரிகங்கள்" ("Ancient Cities of the Indus", Edited by Possehl, G.L., New Delhi, 1979)

மற்றுமொரு சிறப்பம்சம், சிந்துவெளி மட்பாண்டத் தடயங்களில் பொறிக்கப்பட்டுள்ள எழுத்துகள் வலமிருந்து இடமாகவே எழுதப்பட்டு உள்ளன. மொழியியல் ஆய்வில் மிக முக்கியமான ஆதாரம் இது.

முதலில் ஒரு கோடு காட்டுவதானால் – தொல்லாய்வர் பேராசிரியர் மகாதேவன் போன்றோர் சிந்துவெளி நாகரிக மொழி திராவிடத் தொடர்புடையது என நிறுவுவதனைச் சுட்டலாம். (The Study of the Indus Script Through Bilingual Parallels", Ancient Cities of the Indus, New Delhi, 1979). அவ்வாறே ஃபின்லாந்து நாட்டைச் சேர்ந்த அறிஞர் அஸ்கோ பார்போலா (Asko Parpola) "சிந்துவெளிக் குறியீடுகளில் திராவிட மொழி, மதக் கூறுகளுக்கான ஆதாரங்கள்" (Evidence for Dravidian Language and Religion in Indus Insciptions) எனும் தலைப்பினில் 1995 ஜனவரி 2 அன்று தஞ்சாவூரில் எட்டாவது உலகத் தமிழ் மாநாட்டில் ஆற்றிய சிறப்புரையும் இங்குக் குறிப்பிடத்தக்கது.

கி.பி. 1875ஆம் ஆண்டு 'அவாத்' நகர ஆணையாளராகிய கிளார்க் எனும் இராணுவ அதிகாரியிடமிருந்து அலெக்சாண்டர் கன்னிங்ஹாம் (Alexander Cunnigham) எனும் முதலாவது தொல்லாய்வு அறிஞர் பெற்றுக் கொண்ட முதலாவது சிந்துவெளி இலச்சினை முதல் இன்றுவரை சிந்துவெளியில் கண்டெடுக்கப்பட்ட 38,000 முத்திரைகளில் காளை, எருது, புலி, காண்டாமிருகம், யானை மற்றும் மூன்று தலைக் கற்பனை மிருகம் போன்றவையே அதிகம். ஒற்றைக்கொம்பு விலங்கும் சர்வசாதாரணம். ஆயின் சிங்கம், மாடு, குதிரை மற்றும் ஒட்டகம் போன்ற பாரசீக, ஈரானிய, அரபித் தொடர்புடைய விலங்குகள் குறித்து சிந்துவெளி மக்களுக்குத் தெரியவே தெரியாது என்று அடித்துச் சொல்லலாம்.

ஒரு முத்திரையில் இளங்காளை ஒருவன் இரண்டு புலிகளுடன் போராடும் வீரக் காட்சி சித்திரிக்கப்பட்டுள்ளது. கில்காமேஷ் (Gilgamesh) எனும் சுமேரியக் காவிய நாயகன் ஒருவன் சிங்கங்களுடன் சண்டையிடும் தோற்றத்துடன் இதனை ஒப்பிடுகிறார் ஆர். இராஜ கோபாலன். (The Secrets of Indus Valley, Children's Book Trust, New Delhi, 1995)

இதே கருத்தினை ஒட்டி அறிஞர் எஸ்.ஆர். ராவ் "ரஸ்– அல்–குவாலா, ஊர், கிஷ், அஸ்மர் மற்றும் தியாலா (Diyala) ஆகிய இடங்களில் கண்டெடுக்கப் பெற்ற சிந்துவெளி முத்திரைகள், எழுத்துகள் ஆகியவற்றை வைத்துக் கவனித்தால் பெஹ்ரைன் தீவுகளிலும், யூஃப்ரட்டீஸ் – டைகிரிஸ் பள்ளத்தாக்கிலும், தியாலா பகுதியிலும் சிந்துவெளி மக்கள் குடியேறி வாணிகம் செய்த செய்தி உணரப்படும். அவ்வாறே சிந்துவெளி எடைக் கற்களும், பாசிமணிகளும் தென் மெசபடோமியாவில் கிடைத்துள்ளன. பொன்மணிகளும், மெசபடோமிய வண்ண மட்பாண்டங்களும் சிந்துவெளியில் தோண்டி எடுக்கப் பெற்றுள்ளன. அத்தகைய சான்றாதாரங்களால் பண்டைக் காலத்தில் சிந்துவெளிக்கும், சுமேரியாவுக்கும் நிலவிய வர்த்தகத் தொடர்புகள் உறுதியாகின்றன" என்கிறார்.

சுமேரிய நாகரிகங்களிலிருந்தே பிற்காலத்தில் பாபிலோனிய, அசிரிய நாகரிகங்கள் பூத்தன. எனினும் அவற்றுள் எல்லாம் தொன்மை வாய்ந்தது சிந்துவெளி நாகரிகம் என்பது ஆராய்ச்சியாளர் முடிவு. கி.மு. 8000ஆம் ஆண்டுவாக்கில் புதிய கற்காலத்திலேயே அரும்பிற்று.

ஆயின் அன்றைய சிந்துவெளி வானம் எவ்வாறு காட்சியளித்திருக்க வேண்டும் என்று கொஞ்சம் அலசி விடுவோம்.

இந்தப் பூமி தன்னச்சில் சுழன்றபடி சூரியனையும் சுற்றி வருவது உலகறிந்த உண்மை. ஆயின் இந்தப் பூமியின் சுழற்றி அச்சு இன்று 'போலாரிஸ்' (Polaris) என்ற விண்மீனை நோக்கி இருக்கிறது. இந்தத் துருவ விண்மீன் இன்றைய கவிஞர்குழாம் பாடுவது மாதிரி வானில் திசை மாறாத நிலைத்த புள்ளி அன்று. தானும் விரைந்து நகர்ந்து கொண்டிருக்கிறது. நம் கண்களுக்குப் புலப்படவில்லை. இருந்தாலும் நமது பூமியும் தலையாட்டித் தள்ளாட்டம் போடுவதனால் அதன் சுழற்சி அச்சு வானில் வெவ்வேறு விண்மீன் கூட்டங்களிடையே வட்டமடிக்கிறது. இந்தச் சுழற்சி வட்டம் ஏறத்தாழ 26000 ஆண்டுகள் கொண்டது.

அதனால் ஒவ்வொரு 70 ஆண்டுகளுக்கு ஒரு முறையும் ஒரு நாள் வீதம் முன்னேறிய பருவங்கள் நகரும். பூமியில் பருவ காலங்களும் இடம் பெயரும். சராசரி ஒவ்வொரு 2000 ஆண்டுகளுக்கு ஒருமுறையும் இந்த வசந்த சமநோக்கு நாள் சராசரி ஒவ்வோர் உடுக்கணம் வீதம் முந்தி இடம் பெயர்வது போல் தோன்றும்.

நெடுநல்வாடை போன்ற சங்க இலக்கியங்களில் 'ஆடு' போல் தோற்றம் கொண்ட மேட (Aries) உடுக்கணமே முதலாவதாகச் சுட்டப்படுகிறது. 'ஆடு' என்ற பொருள் தரும் 'ஏறு' எனும் பழந்தமிழ்ச் சொல்லே கிரேக்கத்தில் 'ஏரீஸ்' (Aries) என்றானது. 'ஆரிய' வருகைக்குப் பின் நிகழ்ந்த அறிவியல் பரிமாற்ற விளைவு இது. சிந்துவெளி நாகரிகம் கி.மு. 2550 – கி.மு. 1750 ஆண்டுக் காலத்தில் அதன் உச்சத்தில் செழித்தோங்கி இருந்தது. எனினும் புதிய கற்கால ஆரம்பத்திலேயே கி.மு. 8000 ஆண்டு வாக்கில் தோன்றிவிட்ட தொன்மையான அறிவியல் நாகரிம் அது.

சூரியன் இயங்கும் 'பெண்கன்னி' (பங்குனி) (Virgo) உடுக்கணத்தின் பெரும்பகுதி அடங்கிய மாதத்தினை பங்குனித் திங்கள் என்கிறோம். சங்க காலத்தில் இந்த 'ஆடு' தலை கொண்ட 'மேழம்' உடுக்கணத்தில் சூரியன் இயங்கியதால் அம் மாதத்தினை வடநூலார் 'மேடம்' என வழங்கினர். ஆயின் அந்த மாதத்தில் முழு நிலா 'பெண்கன்னி' (Virgo) உடுக்கணத்தின் 'சித்திரை' (Spica) எனும் விண்மீனில் தோன்றுவதால் அதன் பெயரால் அத் திங்களினை 'சித்திரை' என்றே குறிக்கிறோம்.

சிந்துவெளி மக்களுக்கு ஆண்டு வசந்த சமநோக்கு நாள் வருடை ஆகிய இடப (Taurus) உடுக்கணத்தில் அமைந்தது. அதன்போது இரவு வானில் சந்திரன் சூரியனுக்கு அண்மையில் வசிக்கும் நாள் அமாவாசை. நாலுகால் விலங்காகிய 'வருடை' (இடபம்) கொம்பிலுள்ள உரோகிணி எனும் செம்பூத விண்மீன் அருகே முதல் வளர்பிறை தென்பட்டது. உரோகிணி விண்மீன் குறுக்களவு 512 இலட்சம் கி.மீ. சூரியனைவிட 37 மடங்கு பெரியது. இதனை 'ஊற்றுக்கால்' என்றும் வழங்குவர்.

'உமை'யாகிய பெர்சியஸ் (Perseus) விண்மீன் கூட்டத்திற்குத் தென்கிழக்கில் 'முசுண்டைப் பூக்கள்' (அகநானூறு 264:2) அல்லது மூக்குத்திப் பூக்கள் போல் கொத்தாகத் தோன்றும் விண்மீன் தொகுதி கார்த்திகை நட்சத்திரக் கூட்டம். 'சகடம் மண்டிய துகள்' என்ற அகநானூற்றுப் பாடல் (136:5) குறிப்பிடுவது 'சகடம்' என்னும் உரோகிணி விண்மீனை நெருங்கி நிற்கும் கார்த்திகை விண்மீன் தொகுதி.

'எரி' (பரிபாடல் – 11), 'அழற்குட்டம்' (புறநானூறு – 229), 'ஆஅல்' (மலைபடுகடாம் – 100) போன்ற சொல்லாட்சிகள் கார்த்திகை விண்மீன் கூட்டத்தினைக் குறிப்பதாகும். சீனர்கள் கி.மு. 2357ஆம் ஆண்டு வாக்கிலேயே இதனை அடையாளம் கண்டிருந்தனர்.

தீ வழிபாடு ஆதித்திராவிட மரபு. அதுவே பின்னாளில் சாமவேத கீதங்களுடன் எரியோம்பும் சம்பிரதாயம் ஆயிற்று. ஈரானியப் பார்சிகள் தம் பழைய மதத்தின் கோட்பாடு இது. பார்சிகள் இன்றும் தீயையே தெய்வமாக வழிபடுகின்றனர். ('பார்சி' என்ற சொல் பாரசீகரைக் குறிக்கும்.) வடநூலார் 'அக்னி' என்றும், இலத்தீனில் 'இக்னி' (Ignis) என்றும் சுட்டுவது இந்தத் தீயைத்தானே. கிருத்திகையை 'அக்னிர் தைவதம்' என்று வடமொழி வேதங்களும் குறிக்கும்.

உலகின் முதல் சொல் கூட 'திக்' என்பதாகக் கருதுகிறார் மெரிட் ரூலன் (Merritt Ruhlen) எனும் அறிஞர். இதுவே இன்றைய ஆங்கிலத்தில் 'டோ' (toe) என்றாகி – 'விரல்' எனப் பொருள்பட்டது. எண்ணிக்கைக்குத் தேவைப்படும் விரலின் பெயரால் 'டிஜிட்' (digit) என்ற சொல் இலக்கத்தினைக் குறிப்பதாயிற்று.

எப்படியோ, தமிழில் தோன்றிய 'தீ' எனும் ஒற்றைச் சொல்லே உலகின் முதல் தனிச்சொல்லாகும் எனவும் கருத இடமுண்டு. கிர்–தீ அதாவது மலைஉச்சி நெருப்புப் பிழம்பாகத் தோன்றும் கார்த்திகை விண்மீன் குறித்த சொல். (அல்லது சூரியனைச் சுட்டும் சொல்.) செங்குன்றம் அல்லது செங்கோடு என்றெல்லாம் சுட்டப் பெறும் மலை உச்சியினில்

'எரி' – தீப்பிழம்பான தோற்றம் – வடமொழியில் 'கிர்–தீ' எனும் வழக்காகி இந்தக் 'கிருத்திகை' ஆயிற்று.

'ஆதி அந்தணன் அறிந்து பரி கொளுவ... அமரர் வேள்விப் பாகம் உண்ட பைங்கண் பார்ப்பான் உமையொடு புணர்ந்து' (பரிபாடல் – 5: 22–28) என்ற வரிகளில் சிவனுக்கும், உமையாளுக்கும் பிறந்த தெய்வமகன் முருகன் பற்றிய செய்தி வருகிறது. இங்கும் 'சேஎ' என்ற பழந்தமிழ்ச் சொல்லாட்சியினை வைத்து அதனை 'கிரேக்கத்தின் சீயஸ்(ஸ்)' என்றும், 'சேயன்–பிதா'வான 'சீயஸ்–பிதர்' (Zeus-piter) என்கிற ஜூபிடர் 'குரு' அல்லது 'அந்தணன்' என்றும், அதுவே சிவன் என்றும் பல்வேறு கருத்துத் திரிபுகள் உதித்தன என்றோம்.

எனினும் 'சேயோன்', 'செவ்வேள்' போன்ற பெயர்ச் சொற்கள் கார்த்திகை விண்மீன் அருகிலுள்ள சிவந்த பூத விண்மீனான (Red Giant Star) உரோகிணி விண்மீனைச் சுட்டுவதாகவும் கொள்ளலாம். (எனினும் காலப்போக்கில் செவ்வாய்க் கோளுக்கும் செவ்வேளுக்கும் முடிச்சு போட்டனர்.)

சிந்துவெளி நாகரிகத்தில் மகன் எனப் பொருள்படும் 'சேய்அன்' ஆண் கடவுள் அல்லவா? பெண் தெய்வப் பெயர்கள் ஆண் தெய்வங்களுக்கு வழங்கும் சங்க மரபு உண்டு. எடுத்துக்காட்டாக – "வடவயின் விளங்கு ஆல் உறை எழு மகளிருள், கடவுள் ஒரு மீன் சாலினி ஒழிய, அறுவர் மற்றையோரும்" (பரிபாடல் 5: 43–45) என வரும் அடிகள் வடதுருவத்தை ஒட்டிக் காணப்படும் ஏழு விண்மீன் அடங்கிய 'பெருங் கரடி' (Ursa Major) அல்லது 'பெருங்கரண்டி' (Great Dipper) எனும் தோற்றங் கொண்ட சப்த ரிஷி உடுக்கணம். இதில் அடங்கிய 'மிசார்' (Mizar) எனும் வசிட்ட முனிவரை அதனோடு ஒத்து இயங்கும் 'அல்கோர்' (Alcor) எனும் அருந்ததி (சாலினி) எனும் கற்புத் தெய்வமாகப் போற்றுகிறோம்.

"அருந்ததி அனைய கற்பின்" (ஐங்குறுநூறு – 442), "வடமீன் புரையும் கற்பின்" (புறம் 122:8), "வடவயின் விளங்கால் உறையெழு மகளிருள் / கடவுளொரு மீன் சாலினி" (பரிபாடல் 5:43–44), "வடமீன்போல் தொழுதேத்த வயங்கிய கற்பினாள்" (கலித்தொகை – 1:21) போன்ற சங்கப் பாடல் வரிகள் இதற்கான ஆதாரங்கள்.

ஆயினும் உரோகிணி பொதுவாகப் பெண்ணாகவே உருவகிக்கப்படுகிறது. "விசும்பு வழங்கு மகளிருள்ளும் சிறந்த செம்மீன்" (பதிற்றுப்பத்து–31:27–28) என்றும், "அறு மீன் பயந்த அறம்செய் திங்கள் செல்சுடர் நெடுங்கொடி போல" (மலைபடுகடாம் 162–163) என்றும் இலக்கியங்கள் சுட்டுகின்றன. இங்கு 'அறுமீன்' எனப்பட்ட கார்த்திகை விண்மீன் தோற்றமே. இந்தப் 'பிளையாதிஸ்' (Pleiades) தொகுதியில் வெறும் ஆறு விண்மீன்கள் பொலிவுடன் தோன்றும். ஆறுமுகன் தொன்மம் இது. ஆயினும் ஏறத்தாழ 36 விண்மீன்கள் இத்தொகுதியில் அடக்கம்.

கிரேக்கர்கள் 'பிளையாதிஸ்' (Pleiades) என்னும் இந்தக் கார்த்திகைக் கூட்டத்தினை அட்லஸ் (Atlas) – பிளையோன் (Pleione) ஆகிய தெய்வத் தம்பதியர்க்குப் பிறந்த அல்சியோன் (Alcyone), மெரோப் (Merope), மையா (Maia), அஸ்டிரோப் (Asterope), தாகட்டே (Taygete), செலனோ (Celaeno), எலக்ட்ரா (Electra) ஆகிய ஏழு புதல்வியராகக் கருதுவர். அந்த நட்சத்திரக் கூட்டத்தில் அடங்கிய ஏழு விண்மீன்களும், வடதிசை சப்தரிஷிகளின் மனைவியர் – அம்பா, துலா, நிதத்னி, அபயந்தி, மேகயந்தி, வர்ஷயந்தி, சுபுணீகா எனவும் அவர்தம் ஊடல் தீர்க்கவே கார்த்திகை விண்மீன் தொகுதி நோக்கி எரியோம்புவதான நம்பிக்கையும் நம்மிடை உண்டு.

"சப்தரிஷி ஏழு விண்மீன்கள் வடதிசை உதிக்கும்போது, கிருத்திகை ஏழு விண்மீன்களும் கிழக்கில் உதிக்கின்றன" என்று சதபாத பிராமணம் (ii:1.2.3) குறிக்கிறது.

இன்று வான் நடுக்கோட்டில் 59 பாகை 47 நிமிடம் 24 வினாடிகள் அளவு நெடுவரையினில் கார்த்திகை விண்மீன் கூட்டத்தில் குறிப்பிடத்தக்க 'ஈட்டா டௌரி' (Eta Tauri) என்ற விண்மீன் அமைந்திருக்கிறது. ஆயின் வசந்த சமநோக்கு நாளன்று கிருத்திகை நேர்கிழக்கில் உதிக்க வேண்டுமானால் அது கி.மு. 2334 ஆம் ஆண்டாகத்தானிருக்கும். ஏனெனில் பூமியின் அச்சு 72 ஆண்டுகளுக்கு ஒரு பாகை வீதம் தலை சாய்வதால் இன்றிலிருந்து கணக்கிட்டால் ஏறத்தாழ கி.மு. 2334ஆம் ஆண்டுவாக்கில்தான் கிருத்திகை நேர்கிழக்கில் உதித்திருக்கும். அந்நாள் அரப்பா நாகரிகக் கால கட்டத்தினை ஒட்டி வருவது வியப்பான பொருத்தம். சிந்துவெளி மக்களின் எதார்த்த வானவியல் கவனிப்புக்குக் கட்டியம் கூறும் ஆதாரம் இஃது என்று கருதுகிறார் தேபி ப்ரசாத் சட்டோபாத்யாய. (History of Science and Technology, In Ancient India, FIRMA KLM PVT LTD., Calcutta, 1986) எனும் அறிஞர்.

ஆதலினாலேயே பண்டைய அடிப்படை வானவியல் பூமியின் 32.33 வடக்கு அட்சரேகையில் அமைந்துள்ள பாபிலோனியா உட்பட்ட மெசபடோமியா, எகிப்து, சீன நாகரிகங்களில் இருந்து உதிக்க வாய்ப்பே இல்லை என்று வலியுறுத்தி வருகிறோம். நில நடுக்கோட்டுப் பகுதியில் வாழ்ந்த சிந்துவெளி மக்களாலேயே சூரியனும், அதனைச் சுற்றி இயங்கும் கோளங்களும், விண்மீன் சஞ்சாரங்களும் துல்லியமாகப் பதிவாக்கப்பட முடியும். ஆதலால் வானவியல் சிந்தனையைச் சிந்துவெளி திராவிடர்களின் அடிப்படைத் திறனாக வற்புறுத்த விழைகிறோம்.

# தமிழ்நாட்டு அறிவியல் அறிஞர்கள்

டாக்டர் சு. நரேந்திரன்

அறிவியல் தொழில் நுட்பம், தகவல் தொழில் நுட்பம், உயிரித் தொழில் நுட்பம், வேளாண்மை, மருத்துவம் மற்றும் வானவியல் ஆகிய துறைகளில் உலக நாடுகள் அபரிமிதமான வளர்ச்சியை அடைந்து வருகின்றன. இத்துறையில் ஏற்பட்டுள்ள வளர்ச்சியானது, தனி மனிதப் பயன்பாட்டிற்கு மட்டுமன்றிச் சமுதாய மேம்பாட்டிற்கும் பெரிதும் துணை புரிந்து வருகின்றது. புதிய அறிவியல் அறிஞர்கள் தமக்கு மட்டுமன்றித் தாய்நாட்டிற்கும் பெருமை தேடித் தருகின்றனர். இந்த வரிசையில் இருபதாம் நூற்றாண்டின் வளர்ந்து வரும் அறிவியல் உலகின் சாதனைகள் நிகழ்த்திய உலகப் புகழ்பெற்ற தமிழ்நாட்டு அறிவியல் அறிஞர்களை இக் கட்டுரையில் காண்போம்.



### 1. சர் சி.வி. இராமன்

சர் சி.வி. இராமன் என்கிற சந்திர சேகர வெங்கடராமன் தஞ்சாவூர் மாவட்டம் பாபநாசம் அருகிலுள்ள மாங்குடி கிராமத்தில் பிறந்தவர். இவர் 1921இல் இயற்கை இதழில் கடல் வண்ணம் என்ற தலைப்பில் கட்டுரை வெளியிட்டார். இதில் சூரியனின் ஒளிக்கதிர்கள் காற்றில் ஊடுருவிச் செல்லும்போது காற்றிலுள்ள அணுக்களால் சிதறடிக்கப்படுகிறது. சிதறும்போது ஒளிக் கற்றையில் உள்ள ஏழு நிறக் (Vibgyor) கதிர்களில் அலைநீளம் குறைவான நீல நிறக் கதிர்கள் மட்டும் மற்றவற்றைவிட அதிகம் சிதறுகிறது. அதனால் வானம் நீலநிறமாகக் காட்சியளிக்கிறது. கடல் நீரில் சூரியனின் கதிர்கள் நுழையும்போது நீரில் உள்ள அணுக்களால் மிகுதியாக நீல நிறக் கதிர்கள் சிதறுகின்றன. எனவே அக்கதிர்கள் கடலை நீல நிறமாக்குகின்றன என்ற கோட்பாடுகளைக் குறித்து எழுதினார். மேலும், ''ஒளிக் கதிர் ஒரு பொருளினூடே நுழைந்து செல்லும்போது அப்பொருளிலுள்ள அணுக்களின் அமைப்பையும் தன்மையையும் பொறுத்து அது புதிய கதிராக மாற்றம் பெருகிறது'' என்ற கருத்தை வெளியிட்டார். இக்கருத்து பின்பு 'இராமன் விளைவு' எனப்பட்டது. இவ் விளைவைக் கொண்டு ஒரு பொருள் எத்தகைய அணு அமைப்பைக் கொண்டது எனக் கூறிவிட முடியும். இதற்காக 1930இல் இவருக்கு நோபல் பரிசு கிடைக்கப் பெற்றார்.

இந்திய அரசு அவரின் புகழை நிலைநாட்ட 'பாரத ரத்னா' என்ற மிகப் பெரிய விருதை அளித்துச் சிறப்பித்தது. இயற்கை, தத்துவ இதழ், இயற்பியல் ஆய்வேடுகளில் பல கட்டுகளை எழுதிய சர் சி.வி. இராமன் 1970இல் காலமானார்.

### 2. கே.எஸ். கிருஷ்ணன்

கம்பிகள், சுருள் கம்பிகள், வெற்றிடம் போன்றவற்றில் வெப்பமானது எவ்வாறு செயல்படுகிறது என்பதையும், பிளாஸ்டிக் பொருள்கள் உருவாகக் காரணமாக இருக்கும் சிந்தடிக் இயற்பியலின் அடிப்படை விதிகளையும் கண்டறிந்தவர்தான் கரிய மாணிக்கம் சீனிவாச கிருஷ்ணன் என்ற கே.எஸ். கிருஷ்ணன்.

இவர் திருநெல்வேலி மாவட்டம், திருவில்லி புத்தூருக்கு அருகில் வாதிராம் எனும் கிராமத்தில் 1898இல் பிறந்தார்.

#### ஆய்வு

படிக இயலையும் அவற்றின் காந்தத் தன்மை பற்றியும் ஆய்வுகள் மேற்கொண்டு முடிவுகளை அறிவித்து, அணுக்களின் அமைப்புமுறையை ஒட்டியே அழகான படிகங்களின் அமைப்பும் அமைகிறது என்று கண்டு பிடித்தார். பொருள்களில் அணுவின் மூலக்கூறுகள் அமைந்த விதத்தையும், அணுக்களுக்கிடையே உள்ள விசைகளைப்பற்றியும் கண்டறிந்து, கிரானைட் படிகத்தில் எலக்ட்ரான்களின் இயக்கத்தையும் அவற்றின் காந்தத் தன்மைபற்றியும் சோதனைகளை மேற்கொண்டார். சிந்தடிக் இயற்பியலின் அடிப்படை விதிகளைக் கண்டறிந்து, மின்காந்தக் கவர்ச்சி வேறுபாடுகளின் காரணங்களை ஆராய்ந்தார். கணிதத்தில் முடிவிலித் தொடர்பற்றிக் கட்டுரை எழுதினார்.

இவர் சர் சி.வி. இராமனின் முதன்மை மாணவர். இராமன் விளைவு கண்டுபிடிப்புக்கும் இவர் ஒரு காரணகர்த்தா என்பது குறிப்பிடத்தக்கது. இவர் சிறந்த தொழில்நுட்பத்தைப் பயன்படுத்தி இந்தியாவின் பயன்பாட்டை மாற்றி நவீனமாக்கிட வேண்டும் என்று கனவு கண்டவர்; 1961இல் காலமானார்.

### 3. சு. சந்திரசேகர்

நட்சத்திரங்களின் வடிவமைப்பு வளர்ச்சி பற்றிய ஆய்வுக்காகத் தம் பிறந்த நாளிலேயே 1973இல் இயற்பியலுக்கான நோபல் பரிசு பெற்றவர்தாம்

சுப்ரமணியன் சந்திரசேகர். பிரிட்டிஷ் இந்தியாவில் 1910ஆம் ஆண்டு லாகூரில் பிறந்த சந்திரசேகர், சர் சி.வி. இராமனின் அண்ணன் மகன்.

**ஆய்வு**

இங்கிலாந்து – டிரினிடியில் கேம்பிரிட்ஜ்பல்கலைக் கழகத்தில் மேற்படிப்பு படித்த போதுதான், உடுமண்டலங்களில் ஓடுகிற ஒரு விண்மீனின் திசை வேகத்தை அதைச் சுற்றியிருக்கிற விண்மீன்களின் நிறையீர்ப்பு குறைந்துவிடுகிறது. விண்மீன்கள் சூரியனிடமிருப்பதைப் போல 14 மடங்கு கிரிட்டிகள் மாஸ் (Critical mass) பெற்றிருக்கிறது; அது ஓர் எல்லையிலிருந்து குறைகிறது என்றார். இதுவே "சந்திரசேகரன் எல்லை'' எனப்படுகிறது. அதன் அணுத்துறை எரிபொருள் (Nuclear fuel) தீரும் நிலையில் அது பேரொளிப் பிழம்பாகக் காணப்படுகிறது. அதற்குச் சிவப்பு அரக்கன் (Red Giant) என்று பெயர்.

அந்நிலையில் தன் இழுப்பாற்றல் விளைவால் மடிகிறது. அதனால் அதன் பரப்பளவு சுருங்குகிறது. அதற்கு வெள்ளைக் குள்ளன் (White Dwarf) என்று பெயர். அதன் பிறகு அது கருந்துளை (Black hole) என்று பெயர் ஏற்று அடியோடு மறைந்துவிடுகிறது. இதுவே அவர் கேம்பிரிட்ஜ்பல்கலைக் கழகத்தில் டாக்டர் பட்டம் பெற உதவிய உண்மைகள். சந்திரசேகர் வான இயற்பியல் நட்சத்திரங்களின் எடையைக் குறித்து வரையறை செய்தார். அது தற்போது "சந்திரசேகர் வரையறை'' எனப்படுகிறது.

வெள்ளையான சிறிய நட்சத்திரம் அதிக எடையுடன் இருப்பதால் உட்கரு அணு குண்டுபோல் வெடித்துப் பிரகாசமான சூப்பர் நோவா என்ற நட்சத்திரங்களைத் தோற்றுவிக்கும் எனக் கண்டுபிடித்து விளக்கினார்.

நாம் வாழும் பூமி 25 கி.மீ. அளவுக்குச் சுருங்கினால் இதுவும் கருந்துளை நிலையைப் பெற்று விடும் என்று கருத்துக் கூறியவர். இவர் 1985இல் காலமானார்.

**4. ஏ.பி.ஜே. அப்துல் கலாம்**

"இந்தியாவின் ஏவுகணை மனிதன்'' என்று போற்றப்படும் ஏ.பி.ஜே. அப்துல் கலாம் 1931இல் ராமேஸ்வரத்தில் பிறந்தவர்.

**பணியும் சாதனையும்**

1958இல் மத்திய இராணுவ ஆராய்ச்சி நிறுவனத்தில் பணியில் சேர்ந்த பிறகு 1963இல் இந்திய விண்வெளி ஆராய்ச்சிக் கழக எஸ்.எல்.வி. திட்டத்தில் திட்ட இயக்குநராகப் பணியேற்றார். இவர் இயக்குநராக இருந்தபோது இந்தியாவின் முதல் விண்வெளிக் கலமான ரோகிணி 1980இல் ஏவப்பட்டது.

1983இல் ஒருங்கிணைந்த ஏவுகணைத் திட்டத்தில் திட்ட இயக்குநரான பிறகு நின்றுபோயிருந்த அர்ஜுன் திட்டத்தை வெற்றிகரமாக நிறைவேற்றினார். பிறகு பிரித்வி, அக்னி, திரிசூல், ஆகாஷ், நாக் போன்ற ஏவுகணைகள் இவருடைய திறமையால் உருவானவையே.

**கண்டுபிடிப்பு**

காவேரி என்ற ஆகாய விமானப் பொறியை உருவாக்கினார். கார்பன் கலவையிலான 3500 சி. டிகிரி வெப்பத்தைத் தாங்கக்கூடிய கலப்பு உலோகம் இவரால் கண்டுபிடிக்கப்பட்டு அது ஏவுகணைத் தயாரிப்பில் பயன்படுத்தப்படுகிறது.

கலாம் பாதுகாப்புத் துறையில் மட்டுமன்றிப் போலியோ நோயால் தாக்கப்பட்டவர்களுக்கு உதவும் வகையில் கனம் குறைந்த உலோகக் கருவியையும், இதய நோயால் பாதிக்கப்பட்டவர்களுக்கு உதவும் 'பேஸ் மேக்கர்' என்ற கருவியையும் உருவாக்கி உள்ளார்.

இவருக்கு 'பாரத ரத்னா' விருது இந்திய அரசால் 1997இல் வழங்கப்பட்டது. கலாம் பாதுகாப்பு அமைச்சரக அறிவியல் ஆலோசகராக இருந்தபோதுதான் மற்ற ஆய்வக நிபுணர்களுடன் இணைந்து அணுகுண்டு வெடிப்புச் சோதனையை பொக்ரானில் நடத்திக் காட்டினார்.

இவர் 2002ஆம் ஆண்டு அவரை எதிர்த்துப் போட்டியிட்ட காப்டன் லட்சுமியை வென்று இந்தியக் குடியரசுத் தலைவர் ஆனார்.

**5. டாக்டர் கி. கஸ்தூரி ரங்கன்**

ஆயிரம் கிலோ எடை கொண்ட செயற்கைக் கோளை விண்ணில் செலுத்தும் திறன் கொண்ட நாடுகளில் இந்தியாவையும் சேர்த்த பெருமைக்குரியவர் கிருஷ்ணசாமி கஸ்தூரி ரங்கன். பூர்விகம் நெல்லை மாவட்டம். விண்வெளியில் மற்றும் விண்வெளி இயற்பியலில் ஆய்வு செய்து டாக்டர் பட்டம் பெற்றவர். 1990இல் இருந்து இந்திய விண்வெளி ஆராய்ச்சித் துறை இயக்குநராக பெங்களூருவில் பணியாற்றினார்.

விண்வெளியில் செயற்கைக் கோள்களைச் செலுத்துவதில் முக்கியப் பங்காற்றிச் சாதனை படைத்தார். அவை இந்திய தேசிய வகை செயற்கைக் கோள் – 5, இந்தியத் தொலையுணர்வு செயற்கைக் கோள் – 4, தொழில்நுட்ப ஊர்தி – 3, ரோகிணி செயற்கைக் கோள் புவி ஆய்வு, அறிவியல் ஆய்வு, ஸ்ராஸ் 3–3, துருவ செயற்கைக் கோள் ஏவுகலம் – 3, பாஸ்கரா செயற்கைக் கோள்கள் – 3 ஆகும்.

**கண்டுபிடிப்பு**

எக்ஸ்ரே நுண்ணோக்கியை உருவாக்கினார். இதுவே ஆர்யபட்டாவில் பொருத்தப்பட்டுள்ளது. இவரின் சேவையைப் பாராட்டி 'பத்மபூஷண்' விருது 1952இல் வழங்கப்பட்டது.

**6. டி.ஆர். சேஷாத்திரி**

வேதியியலோடு தாவர அமைப்புகளை ஆராய்ந்து முடிவுகளை வெளியிட்டவர் குளித்தலையில் பிறந்த டி.ஆர். சேஷாத்திரி என்ற திருவேங்கட ராஜேந்திர சேஷாத்திரி ஆவார்.

இவர் மேற்கொண்ட இயற்கைப் பொருள்கள்பற்றிய வேதியியல் ஆய்வுகள்: மலர்களின் பல்வேறு வண்ணங்களுக்கான காரணங்கள், தேக்கு மரத்தைக் கரையான் அரிக்காமல் இருப்பது எதனால்; செடி கொடிகளின் மருத்துவக் குணங்கள், இலை, செடி கொடிகளில் காணப்படும் நச்சுத் தன்மைக்கான வேதியியல் காரணங்கள்.

**கண்டுபிடிப்பு**

இவர் செடிகொடிகளின் வேதியியல் அமைப்பைக் கண்டறிந்ததுடன், தாவரங்களையும் மரங்களையும் அரித்துப் பாழாக்கும் வேதியியல் சேர்மங்களைக் கண்டுபிடித்து அவற்றை நீக்கிப் பயிர்களைப் பாதுகாக்கும் முறையை அறிவித்தார். 'பத்மபூஷண்' விருது 1963இல் இந்திய அரசால் அளிக்கப்பட்டது. கரிம வேதியியலில் சாதனை படைத்த சேஷாத்திரி 1975இல் காலமானார்.

**7. எம்.எஸ். சுவாமிநாதன்**

கும்பகோணத்தில் பிறந்த மான்கொம்பு சாம்பசிவன் சுவாமிநாதன் என்ற எம்.எஸ். சுவாமிநாதன் இந்தியாவின் பசுமைப் புரட்சிக்கு வித்தூன்றி, தாவரக் கலப்பின வகைகளை அறிமுகப்படுத்தியவர்.

இவர் சாதித்தது, மெக்சிகோவில் உருவாக்கப்பட்ட வீரிய நாட்டு ரக கோதுமை விதைகளை இந்தியக் கோதுமை ரகங்களோடு ஒட்டி, பாரம்பரிய விவசாய அணுகுமுறைகளைக் காட்டிலும் விளைச்சலை அதிகமாகப் பெருக்கிக் காட்டினார். இதுவே இந்தியாவின் பசுமைப் புரட்சிக்கு வித்திட்டது.

**அரிசியில் ஆராய்ச்சி**

பிலிப்பைன்ஸில் உள்ள உலக அரிசி ஆராய்ச்சி நிறுவனத்தில் முதன்மை இயக்குநராகப் பதவி வகித்தபோது நெல்லில் பல ஆய்வுகளைச் செய்து பல உயர் ரக வீரிய நெல் வகைகளை அறிமுகப்படுத்தினார்.

இவருடைய அளப்பறிய சாதனையைப் பாராட்டும் முகமாக இந்திய அரசு 'பத்ம பூஷண்' விருதை வழங்கியது. தற்போது உலக அளவில் வேளாண்மையைப் பற்றி எடுத்துக் கூறும் அறிஞராகத் திகழ்ந்து கொண்டிருக்கிறார்.

**8. எஸ். இராமானுஜன்**

எண்ணறிவியலில் இந்தியாவைத் தலை நிமிர வைத்தவர்தாம் ஈரோட்டில் பிறந்த சீனிவாச ராமானுஜன். அவர் உயர்நிலைக் கல்வியைப் பெற கும்பகோணம் அரசு கல்லூரியிலும், சென்னை பச்சையப்பன் கல்லூரியிலும் முயற்சி செய்து, கணித பாடத்தில் மட்டும் கவனம் செலுத்தியதால் தேர்ச்சி பெறவில்லை. இருப்பினும் இவர் கணிதத்தில் எண்ணற்ற வகையான கணக்குகளையும் விடை தெரியாத அனுமானங்களால் எழுதப்பட்ட புதிய வகை கணக்குகளையும் மூன்று கணித நோட்டுப் புத்தகத்தில் எழுதினார். அது இராமானுஜத்தின் புகழ் பெற்ற "ஃபிரெய்ட் நோட் புக்ஸ்" என்று வழங்கப் பெறுகிறது.

**இராமானுஜனின் கண்டுபிடிப்புகள்**

இவர் பூஜ்ஜியத்தைப்பற்றி விளக்கம் அளித்தார். ஹைபர் ஜியோமெட்ரி தொடர் பற்றிய தேற்றங்களை வழங்கியவர். எண் கணிதம் தோன்றக் காரணமாக இருந்தார். ஜியோமெட்ரியின் உதவியால் பூமத்திய ரேகையின் சுற்றளவைக் கண்டார். அவரை எண்களின் தோழர் என்று சிறப்புடன் அழைப்பார்கள்.

இத்துணைப் புகழ் பெற்ற இவர் தனது முப்பத்து மூன்றாம் வயதில் காசநோய் காரணமாக சென்னையில் காலமானார்.

**9. சிவசங்கர நாராயணன்**

குற்றாலத்திற்கு அருகில் உள்ள வல்லம் சிற்றூரில் 1901ஆம் ஆண்டு சிவசங்கர நாராயணன் பிறந்தார். இவர் சென்னைப் பல்கலைக் கழகத்தில் ஆராய்ச்சி மாணவராகச் சேர்ந்து முதன்முதலில் கணித ஆய்வில் டி.எஸ்சி. பட்டம் பெற்றார்.

இவர் எண்ணியல்பற்றிப் பத்து ஆராய்ச்சிக் கட்டுரைகளை வெளியிட்டார். இங்கிலாந்தில் வெளியாகும் வாரிங் புதிர்களுக்கு விடை கண்டுபிடித்து நூலாக்கி வெளியிட்டார். திரிகோண மிதி (Trigonometry) விகிதங்களைக் கொண்ட சார்புகள், தொகுப்புகள் பற்றி ஆய்வுகள் மேற்கொண்டார்.

எண் கணிதத்தில் புகழ் பெற்றிருந்த அவர் அயல்நாடு செல்லும்போது 1950ஆம் ஆண்டு விமான விபத்தில் உயிரிழந்தார்.

**10. ஜி.டி. நாயுடு**

எடிசன் போன்று எல்லாத் துறைகளிலும் காலூன்றித் தடம் பதித்தார். கோபால்சாமி துரைசாமி நாயுடு என்ற ஜி.டி. நாயுடு, கோவை மாவட்டத்தில் உள்ள கலங்கல் கிராமத்தில் 1883இல் பிறந்தார்.

**கண்டுபிடிப்பு**

மோட்டாரில் ரேடியேட்டருக்கு அடிக்கடி நீர் ஊற்றாமல் ஓட்டுவதற்கு எந்திரம், மோட்டார் ஓடிக் கொண்டிருக்கும்போது அதன் துடிப்பை அறிய எந்திரம்,

முகம் மழிக்கச் செய்யும் மின்விசை கத்தி, கேமராவில் தூர வித்தியாசங்களைச் சரிப்படுத்தும் கருவி, ஒட்டுப் பதிவு செய்யும் இயந்திரம், இரும்புச் சட்டம் அல்லது பொருள்களில் உள்ள வெடிப்புகளை – நகக்கலைக் கண்டுபிடிக்கும் சோதனைக் கருவி, புதிய வகை பருத்தி விதை, அதிக மகசூல் கொடுக்கும் பருத்திச் செடி, ஆரஞ்சு மரம், சோளச்செடி, மாமரம், வாழைக்கனி, பரங்கிக்காய், பட்டாணி, துவரைச் செடி ஆகியவை யாவும் இவர் கண்டுபிடிப்புகளாகும்.

ஊக்குவிக்க ஆள்களின்றி எடிசன் ஹென்றி போர்டு வரிசையில் வந்த ஜி.டி. நாயுடு 1974இல் மரணமடைந்தார்.

### 11. ஸ்ரீதர் ஆனந்த கிருஷ்ணன்

அண்ணா பல்கலைக்கழக முன்னாள் துணைவேந்தர் பேராசிரியர் ஆனந்த கிருஷ்ணனின் நான்காவது மகனே 1962ஆம் ஆண்டு பிறந்த ஸ்ரீதர் ஆனந்த கிருஷ்ணன்.

#### ஆய்வு முடிவுகள்

அன்டார்டிகா பனி ஆறுகள் மட்டுமன்றி உலகின் மிகப் பெரிய இமயமலையின் பனி ஆறுகள், அன்டின் பனி ஆறு, வட அமெரிக்கப் பனி ஆறுகள் மற்றும் அலாஸ்கா பனி ஆறுகள் ஆகியவற்றின் அளவு குறைந்து கடல் மட்ட உயர்வுக்கு வழி வகுக்கின்றன என்பது இவரின் ஆய்வு முடிவுகள். மேலும் இவர் பூமியின் தரைப் பகுதியில் ஏற்படும் நில நடுக்கத்திற்கும், அன்டார்டிகா பனிப் பிரதேசத்தில் ஏற்படும் நில நடுக்கத்திற்கும் உள்ள வேறுபாடுகளை ஆய்வு செய்து வரையறுத்துள்ளார்.

இவர் தொடர்ந்து அமெரிக்காவில் அன்டார்டிகா ஆய்வுப் பணியில் ஈடுபட்டு வருகிறார்.

### 12. வெங்கட்ராமன் ராமகிருஷ்ணன்

செல்களின் டி.என்.ஏ.க்களில் உள்ள தகவல்களை வைத்து எப்படி உயிர்கள் உருவாகின்றன என்பதனைக் கண்டுபிடித்த, சிதம்பரத்தில் பிறந்த வெங்கட்ராமன் ராமகிருஷ்ணனுக்கு 2009ஆம் ஆண்டு வேதியியலுக்கான நோபல் பரிசு அளிக்கப்பட்டது.

உயிர்களில் உள்ள ஜீன்களில் உள்ள டி.என்.ஏ.க்கள் சொல்லும் தகவல்களை வைத்து ரிபோசோம்கள் உடலுக்குத் தேவையான ஆயிரக்கணக்கான புரதச் சத்துகளைத் தயார் செய்கின்றன. டி.என்.ஏ.க்களின் கட்டளைகளை இந்த ரிபோசோம்கள் எப்படிப் பெறுகின்றன? அந்தக் கட்டளைகளை வைத்துப் புரதங்களை எவ்வாறு தயார் செய்கின்றன என்பதனைக் கண்டுபிடித்துள்ளார். இவற்றின் மூலம் நோய்களுக்கு எதிரான மருந்துகள் உற்பத்தியில் இந்தக் கண்டுபிடிப்புகள் பேருதவியாக இருக்கும். மேலும் நோய் உருவாக்கும் பாக்டீரியாக்களில் உள்ள ரிபோசோம்களைக் கட்டுப்படுத்தி அவற்றின் நோய் தாக்கும் திறனை ஒழிக்கவும் இந்த ஆராய்ச்சி முடிவுகள் உதவும்.

### மயில்சாமி அண்ணாதுரை

அண்ணாதுரை கோவை மாவட்டம் பொள்ளாச்சி அருகே உள்ள கொத்தவாடி என்ற சிற்றூரைச் சேர்ந்தவர். 1982இல் சிறீஅரிக்கோட்டாவில் உள்ள இந்திய விண்வெளி ஆய்வுக் கழகப் பணியில் சேர்ந்தார். இந்திய மைய அரசு நிலவுக்குச் செயற்கைக் கோளை அனுப்ப முடிவு செய்ததும் "இசுரோ" எனப்படும் இந்திய விண்வெளி ஆய்வு நடுவம் அதற்கான நடவடிக்கைகளை முடுக்கிவிட்டது. இதற்காக உருவாக்கப்பட்ட தனிக் குழுவிடம் 'சந்திராயன்' விண்கலத்தை வடிவமைக்கும் பொறுப்பு விடப்பட்டது. இதற்கான தலைவர் – திட்ட இயக்குநர் அண்ணாதுரை. விண்கலத்தின் முக்கியப் பகுதிகளின் செயற்பாடுகளை இவரே தீர்மானித்தார். இந்த விண்கலத்தை மிகக் குறைந்த செலவில் வெற்றிகரமாக ஏவியதன் மூலம் அண்ணாதுரை உலகப் புகழ் எய்திவிட்டார்.

### நிறைவுரை

மனிதனின் வாழ்க்கை முறையைப் பெருமளவில் மாற்றி அமைக்கும் பணியைச் செய்து வருகிறது அறிவியல். இதன் வளர்ச்சிக்காகத் தம் வாழ்நாளெல்லாம் உழைத்த தமிழ்நாட்டு அறிவியல் அறிஞர்களின் அரும்பணியை என்றென்றும் உள்ளத்தில் நினைத்து அறிவியலை ஆக்கப் பணிக்கு மட்டும் பயன்படுத்தி வாழ்வில் வளம் பெறுவோம்.

❖

#### செந்தமிழ் - கொடுந்தமிழ்

குமரிநாட்டுத் தமிழ் மக்களுள் ஒரு சாராரும் அவர் வழியினரும் மக்கட் பெருக்கம், கடல்கோள் முதலிய கரணியம் (காரணம்) பற்றி மெல்ல மெல்லப் படிப்படியாய்ப் பனிமலை (இமயம்) வரை படர்ந்து பரவிய பின், வேங்கடக் கோட்டத்திற்கு வடக்கிலுள்ள நாவலந்தேயப் பகுதி, தட்பவெப்பநிலை, உண்டி, பழக்கவழக்கம், சுற்றுச் சார்பு முதலியவற்றின் வேறுபாட்டினாலும், பாண்டி நாட்டுத் தொடர்பின்மையாலும், நாளடைவில் சிறிது சிறிதாய் வடக்கு நோக்கி மொழி பெயர் தேயமாய் மாறிற்று. அங்குச் செந்தமிழ்ப் புலவரும் அவரைப் போற்றும் சீரிய புரவலரும் இன்மையால் மக்கள் மொழியுணர்ச்சியும் பலுக்கல் (உச்சரிப்பு) முயற்சியும் குன்றி முன்னோர் மொழியைப் பல்வேறு வகையில் திரித்தும் சிதைத்தும் பேசலாயினர். அதன்பின் திரியாத் தமிழ் செந்தமிழ் என்றும், திரிந்த தமிழ் கொடுந்தமிழ் என்றும் பெயர் பெற்றன.

**- மொழிஞாயிறு. ஞா. தேவநேயப் பாவாணர்**

# உலகம் போற்றும் தமிழரின் வர்மக்கலையும் வர்ம மருத்துவமும்

முனைவர் ந. சண்முகம்



தமிழ்நாட்டுச் சித்தர்கள் வெறும் ஆண்டிப் பண்டாரங்கள் அல்லர். ஆய்வுக் கூடங்கள் இல்லாமல் அண்டத்தை ஆராய்ந்த விஞ்ஞானிகள். தாம் கண்ட உண்மைகளைத் தரணி வாழத் தந்தனர், நம் தாய்மொழியாம் தமிழ்மொழியில். தமிழகத்தில் சித்தர்களின் பாரம்பரியம் திருமூலரில் தொடங்கி இன்றும் வாழையடி வாழையாய் வளர்ந்து வருகின்றது.

இவர்கள் தந்த நூல்கள் எண்ணிலடங்காதவை. செம்மொழியாம் தமிழ் மொழிக்குச் சித்தர்களின் நூல்களும் சீரிய சிந்தை அமைக்கும். பதினெட்டு அங்கங்களைக் கொண்ட சித்தர்களின் குருநூல் இன்று குறுநூற்களாய்த் தமிழகம் எங்கும் குறுநடை போடுகின்றது.

தெளிந்த சிந்தை உடையவர்கள் சித்தர்கள். தாம் கொண்ட பொருளைக் கொள்கைப் பிறழ்ச்சி இன்றி தமிழரிடையே ஊன்றிச் சென்றவர்கள் சித்தர்கள். வந்தாரை வாழவைக்கும் இனம் தமிழினம் என்பதால் தாம் கண்ட கருத்தைத் தந்தனர் தமிழருக்கு. சமூகம் காக்கச் சித்தர்கள் தந்த அறிவுக் கொடையால் உலகம் காக்கத் தமிழர்கள் தயாராக உள்ளனர்.

சித்த மருத்துவம், வர்ம மருத்துவம், கட்டு மருத்துவம், இரசவாதம், சோதிடம், யோகம், தந்திரம், மந்திரம், எந்திரம், மூலிகை ஜாலம் என்று எத்தனையோ அறிவுக்கும் அறிவியலுக்கும் சவால்விடும் கருத்துகளை வழங்கியவர்கள் நம் தமிழ்ச் சித்தர்கள்.

சித்தர்களின் அறிவுக் கொடைகளுள் ஒன்று 'வர்மக்கலையும் இக் கலை சார்ந்த மருத்துவமும்' ஆகும். இது ஒரு கலை சார்ந்த அறிவியலாகும். இதனை வெளிப்படுத்தினால் உலகம் திரும்பும் தமிழை நோக்கி. தரணி வாழும் தமிழ் மொழியால், தமிழர் வாழ்வார் தலைநிமிர்ந்து. தானும் வாழ்ந்து பிறரையும் வாழ வைக்கும், தமிழின் தரம் தெரியும் உலக அரங்கில்.

## வர்மக்கலையும் மருத்துவமும்

வர்மம் என்பது உடலுள் இயங்குகின்ற நுண்மையான ஆற்றலை விளக்கும் சொல்லாகும். இத்தகு நுண்மையான, உடலுள் இயங்கும் ஆற்றலைப் பற்றிய கல்விக்குச் சித்தர்கள் வர்மக்கலை எனப் பெயரிட்டனர். கலை என்பது பல்வேறு செயற்கூறுகளை, நுட்பங்களை, அறிவுத் திறத்தை உட்கொண்டது. வர்மக்கலையும் பல்வேறு நுண்பொருள் சார்ந்த அறிவுக் கூறுகளைச் செயல்படுத்தும் திறம் கொண்டது.

வர்மக்கலையின் மூலம் உடல் நோயைக் குணப்படுத்தலாம். வர்மக்கலை ஒரு மருத்துவக் கல்வியாகப் பண்டைய தமிழகத்தில் உலா வந்தது. ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியன் காட்டும் 'உந்தி முதலா முந்து வளித் தோன்றி' எனத் தொடங்கும் நூற்பா கூட வர்மக்கலையின் முத்தாய்ப்பு என்றால் தமிழனின்

மருத்துவத்தின் தொன்மையை எண்ணிப் பாருங்கள். மேற்காண் சூத்திரம் ஒலிப் பிறப்பிற்குக் காட்டப்பட்டது. அப்படியாயின் ஒரு மொழியைப் பேசுவதற்கும் வர்ம ஆற்றல்தான் அடிப்படைக் காரணம். இதைத்தான் நரம்பியக்க மொழியியல் (Neuro Linguistic) எனக் கூறுவர். ஒரு மொழியைக் கூட மருத்துவமாகப் பயன்படுத்திக் காட்டியவர்கள் தமிழர்கள் என்பதற்கு வர்மக்கலை பாடல்களும் தொல்காப்பிய நூற்பாக்களும் சான்று பகர்கின்றன.

தமிழருடன் ஒட்டிப் பிறந்த பண்புகளுள் ஒன்று ஆன்மிகத் தன்மை. ஆன்ம வளர்ச்சிக்குக் கூட வர்மக்கலை அடிப்பீடமாக உள்ளது. 'வேதசக்தி' என்ற ஒரு சொல்லைக் கி.பி. 5ஆம் நூற்றாண்டில் காட்டியவர் திருமூலர். இச்சொல் வர்ம ஆற்றலை உணர்த்தி நிற்கின்றது. உடலுள் இயங்கும் வர்ம ஆற்றலைத்தான் ஆன்ம வளர்ச்சிக்கு மூலமாகக் காட்டுகிறார் திருமூலர். வேதசக்தி என்ற இச்சொல்லின் முதலெழுத்தும் கடையெழுத்தும் சேர்ந்து வேதி என்ற சொல்லாய் நின்றது. வேதி என்றால் மாற்றம் அடைந்துகொண்டே இருப்பது என்பது பொருள். இந்த உலகம் வினாடிக்கு வினாடி மாற்றம் பெறும் தன்மையுடையது. மனித உடலும் இப்படித்தான் மாற்றம் பெறும் தன்மை உடையது. இன்றைய வேதியல் என்ற சொல்லுக்கும் 'வேதி'தான் அடிச்சொல். இறைவனையும் வேதி என்ற நுண்பொருளாகவே திருமூலர் கண்டார். வேதி என்ற வேதசத்திதான் இன்றைய வர்மம், வர்மக்கலை எனச் சொல்லலாம்.

மருத்துவமும் ஆன்மிகமும் கலந்த ஒரு கலை வர்மக்கலை. எனவே வர்ம மருத்துவத்தை ஆன்மிக மருத்துவம் எனவும் அழைக்கலாம். ஆன்மிகச் சாயம் பெருமளவில் பூசப்பட்டதனால் வர்மக்கலை பலருக்கும் கிடைக்காத எட்டாக் கனியாக ஆகிவிட்டது. இதனோடு ஆங்கிலேயரின் ஆதிக்கக் காலத்தில் இக்கலை முற்றிலுமாக மறைக்கப்பட்டது. மருத்துவ உலகத்திற்கே வர்மக்கலை மருத்துவம், மருந்துக்குக்கூட கிடைக்காமல் போய்விட்டது. இப்படி மறைக்கப்பட்ட தமிழரின் வர்ம மருத்துவத்தை உலகிற்குக் காட்ட வேண்டிய முக்கியக் கடமை தமிழனுக்கு உண்டு, தமிழ் இனத்திற்கு உண்டு, செம்மொழியாம் தமிழ் மொழிக்கும் இக்கடமை உண்டு.

### வர்ம மருத்துவம்

கலைகளின் கலைக்களஞ்சியம் வர்மக் கலையாகும். இக்கலையுள் வர்ம மருத்துவமும் ஒன்றாகும். இவ்வர்ம மருத்துவம் தமிழகத்திற்கு உரியது. இம்மருத்துவம் குமரி மாவட்டத்திலும் நெல்லை மாவட்டத்திலும் மட்டும் இன்றும் பரவலாகப் பயிற்சியில் உள்ளது. சில தன்னார்வ நிறுவனங்கள் இம் மருத்துவத்தைத் தமிழகம் முழுவதும் பரப்பி வருகின்றன.

இவ் வர்ம மருத்துவம் குருகுல முறையில்தான் போதிக்கப்பட்டு வருகின்றது. இன்றும் சில சிறந்த குருகுலங்கள் குமரி, நெல்லை, கோவை மாவட்டங்களில் செயல்பட்டு வருகின்றன. வர்ம மருத்துவத்தின் மூலம் இக் குருகுலங்கள் மக்கள் பணி செய்து வருகின்றன.

இவ் வர்மக்கலை, வர்ம மருத்துவத்தைப் போதிக்கும் குருக்களை ஆசான்கள் என்று அழைப்பர். வர்ம ஞானத்தை அறிந்தவர்கள் இவ் ஆசான்கள். எனவே, ஆசான்களை வர்ம ஞானிகள் எனவும் அழைப்பர். இவர்கள் தம் மனத்திற்குப் பிடித்த மாணவர்களான சீடர்களுக்கு வர்மக் கலை மருத்துவத்தை இன்றும் கற்றுக் கொடுத்து வருகின்றனர். இவர்களிடம் சீடர்கள் பன்னிரு ஆண்டுகள் தொடர்ந்து இக்கல்வியைக் கற்றுத் தேர்வார்கள். பன்னிரு ஆண்டுகள் கற்ற சீடர் ஒருவரே வர்ம ஆசானாகச் செயல்பட முடியும். இவ்வர்ம வித்தையைக் கற்க சீடருக்குப் பொறுமையும் அமைதியும் அடக்கமும் தேவையானவையாகும். இவர்கள்தாம் கி.மு.வில் தொடங்கிய வர்மக் கலை மருத்துவத்தை இன்றும் அழியாமல் பாதுகாத்த பெருமைக்கு உரியவராவர்.

வர்ம மருத்துவம் வாய்முறைக் கல்வி, செயல்முறைக் கல்வி என்ற இரண்டையும் அடிப்படையாகக் கொண்டது. இம் மருத்துவத்திற்குரிய ஆதாரபூர்வமான வர்ம நூல்களும் உள்ளன. இந் நூல்கள் அனைத்தும் சித்தர்கள் தமிழுக்கும் வர்ம மருத்துவத்திற்கும் தந்த கொடை எனக் கூறலாம். தமிழக மக்களே, ஏன் தமிழ் அறிஞர்களும் அறிந்திராத அரிய வர்மக் கலைத் தமிழ் நூல்கள் இன்றும் சுவடி நிலையில் கிடைக்கின்றன. தமிழ் இலக்கிய வரலாற்று நூல்கள்கூட இவ்வர்ம மருத்துவ நூல்கள் பற்றி ஒரு சிறிதும் குறிப்பிடாதது பெருவியப்பாக உள்ளது. தமிழ் நூல்களை அழியாமல் காத்த பெருமைக்குரியவர்கள்கூட இத்துறைசார் நூல்களைக் கவனிக்காமல் விட்டமை தமிழுக்கு இழப்புதான்.

தமிழ் நூலுக்கு அதுவும் இலக்கண நூலுக்கு உரிய அத்தனை நூலமைதிகளும் பெற்றுத் திகழ்கின்றன வர்ம நூல்கள். முதல் நூல், வழி நூல், புறநடை நூல் என வர்ம

நூல்கள் விரிந்து செல்கின்றன. தொகுத்து, பகுத்து, விரித்துச் சொல்லும் நூலுக்குரிய அத்தனை இலக்கணங்களும் வர்ம நூல்களுக்கும் பொருந்திக் காணப்படுகின்றன. இது தமிழ் நூல் மரபை எடுத்துக்காட்டுவதாக உள்ளது.

அழிந்தவை போக எஞ்சியவை சுமார் 150 தனித்தனித் தலைப்புகளிலான வர்மக்கலை – வர்ம மருத்துவ நூல்கள் இன்றும் கிடைக்கின்றன. சித்தர்களின் அறிவுக் கொடையைத் தமிழ் மொழி, தமிழர்கள் இத்தனை காலம் பாதுகாத்தனர். காரணம் உலகுக்கு வழங்க வேண்டிய அறிவுக் கொடையுள் ஒன்று வர்ம மருத்துவமாகும்.

இந்நூல்களின் பாடல்கள் தமிழ் விருத்தப்பா யாப்பு வடிவிலும், துறை யாப்பு வடிவிலும் உள்ளன. உரைநடை வர்ம நூல்களும் உள்ளன. சில நூல்கள் மலையாள மொழியிலும் கிடைக்கின்றன. மலையாள நூல்கள், எழுத்து மட்டும் மலையாளம் – சொற்கள் தமிழ் மொழிக்குரியன. எனவே இம் மலையாள வர்ம நூல்கள் தமிழில் இருந்து எழுதப்பட்டன என்பதற்கு இம் மலையாள வர்ம நூல்களே அகச்சான்றுகள் தந்து நிற்கின்றன.

கவுளி, அடப்பம், சிறுபுறம், கால்அன்னம் போன்ற புற உறுப்புகளின் பெயர்கள் எல்லாம் வர்ம நூல்களுள் இடம் பெற்றுள்ளன. இப் பெயர்கள் இன்றும் தமிழ்நாட்டில் பேச்சு வழக்கில் உள்ளன. இவையே வர்மக்கலை தமிழருக்கு, தமிழ் மொழிக்குரியது எனப் பறைசாற்றி நிற்கின்றன. இதுபோல மண்ணைநாக்கு, தொண்டைக்கோளம், நீர்க்கோளம், ஆனந்தமூளை, பித்துக்காய், குண்டிக்காய் போன்ற உடல் உள்ளுறுப்புகளின் தூயதமிழ்ப் பெயர்களையும் இவ்வர்ம நூல்கள் கொண்டுள்ளன. பஞ்சவர்ணகுகை, புலிஏறும்குகை போன்ற தொகுப்புறுப்பின் பெயர்களும் வர்ம நூல்களுள் இடம் பெற்றுள்ளன. பரிபாஷை என்ற நிலையில் கதளிவனத் தோட்டம், அருணகிரி, கொக்குக்கோட்டை என்பன போன்ற உடல் உறுப்புகளை உணர்த்தும் சொற்களும் வர்ம நூல்களில் உள்ளன. வர்ம நூல்கள் காட்டும் சொற்களை எல்லாம் தொகுத்தால் குறைந்தது ஒரு லட்சம் சொற்கள் புதிதாகத் தமிழ் அகராதிக்கு வந்து சேரும். இவ்வளவு சொல் வளம் உடையது வர்ம நூல்கள். இவ்வளவு சொல்வளத்தோடு ஒரு கலை திகழ வேண்டும் என்றால் பல்லாயிரக் கணக்கான ஆண்டுக்காலம் வர்மக்கலை மருத்துவம் தமிழ் மண்ணில் வேரோடிப் படர்ந்திருக்க வேண்டும். இந்த உண்மையை மொழியியலறிஞர்கள் அறிந்திருப்பர்.

பல்லாயிரக்கணக்கான ஆண்டுக்காலம் வளர்ந்த வர்ம மருத்துவம் எத்தனை அனுபவங்களைச் சுமந்து கொண்டிருக்கும். எத்தனை பலன்களைப் பொதிந்து வைத்திருக்கும். இம் மருத்துவ அனுபவங்களை மீட்டுருவாக்கம் செய்து கொடுக்க வேண்டியது தமிழறிஞர்களின் கடமை அல்லவா. தமிழ் அன்னைக்கும், உலக மக்களுக்குமாக இவ்வர்ம மருத்துவ நூல்கள் அனைத்தும் பதிப்பாக்கம் பெறுதல் வேண்டும்.

இன்று கிடைக்கின்ற வர்ம நூல்கள் அனைத்தும் வர்மம் என்பதை ஒரு நுண்மையான ஆற்றலாகவே கூறுகின்றன. எனவே வர்மம் என்பது ஆற்றல் அல்லது சத்தி எனக் கொள்ளலாம். இந்த நுண்மையான ஆற்றல் மனித உடலுள், பல்வேறு பரிணாமங்களுடைய ஆற்றல்களாகத் திகழ்கின்றன. இவ்வாற்றலை, பேரொளிசத்தி, காந்தசத்தி, மின்சாரசத்தி எனப் பல்வேறு நிலையில் சித்தர்கள் ஆராய்ந்துள்ளனர்.

உடலுள் இயங்கும் பல்வேறு விதமான ஆற்றல்கள் செயல்படும் இடங்களைச் சித்தர்கள் வர்ம இடங்கள் அல்லது வர்மப் புள்ளிகள் என வரையறை செய்தனர். உடலுள் 8000 வர்மப் புள்ளிகள் இருப்பதைச் சித்தர்கள் உணர்ந்தனர். இவற்றுள் 108 வர்மப் புள்ளிகளை அடிப்படை வர்மப் புள்ளிகளாக வகைப்படுத்தினர்.

வர்மப் புள்ளிகளை, தொடுவர்மம், படுவர்மம், பக்கவர்மம், இணைவர்மம், நாள்வர்மம் எனப் பல்வேறு வர்மங்களாகப் பகுத்தும் விரித்தும் வர்ம நூல்கள் பேசியுள்ளன. சுமார் 40க்கும் மேற்பட்ட வர்மப் பகுப்புகளைக் காணலாம்.

உடலில் நோய் வருவதற்கு இவ்வர்ம இடங்களில் உள்ள ஆற்றலின் சிதைவே காரணமாக அமையும். உடல் நோயைப் போக்குவதற்கு இவ்வர்ம இடங்களில் உள்ள ஆற்றலைச் சீரமைத்தல் வேண்டும். ஆற்றல் சிதைவு ஏற்பட்டு நோய் வரப் பல்வேறு காரணங்கள் இருக்கலாம். அவை கடின வேலை, அதிகத் தூக்கம், இடிபாடுகளுக்குள் சிக்குதல், வாகன விபத்து, உணவு ஒவ்வாமை போன்றவையாகும்.

வர்ம இடங்களில் உள்ள ஆற்றலைச் சீரமைக்க, தட்டல் ஊன்றல், அமர்த்தல், பிடித்தல் என்பன போன்ற

கைபாகம் செய்பாகம் முறைகளைப் பயன்படுத்த வேண்டும். இவ்வாறு ஆற்றலைச் சீரமைக்கும்போது வர்ம இடங்களில் மாத்திரை என்ற அழுத்த அளவில் தவறு வராமல் செய்தல் வேண்டும்.

வர்ம இடங்கள், கைபாகம் செய்பாக முறைகள், மாத்திரைக் கணக்கு, பதிகணக்கு, அளவுக்கணக்கு என்ற நுட்பமான அளவுகோல்களைக் கையாண்டு வர்ம மருத்துவம் செய்யப்படுகின்றது.

இந்த வர்ம மருத்துவத்தால் எந்தவித எதிர்விளைவும் பக்க விளைவும் இல்லை. ஒரு குழந்தை பிறந்து ஒரு மணி நேரத்திற்குள்ளாகவே வர்ம மருத்துவத்தைச் செய்யலாம். இன்று கிடைத்த அனுபவத்தின் மூலம் வர்மச் சிகிச்சையை 5 வயதில் எடுத்துக் கொண்ட ஒரு பெண் குழந்தை, உரிய வயதில் பூப்படைதல், குழந்தைப் பேறு போன்ற வாழ்வியல் வளர்நிலை இன்பங்களைத் தடை இல்லாமல் அனுபவித்துள்ளாள். இதுபோன்று பல்வேறு நிகழ்வுகளை இதற்குச் சான்று காட்டலாம்.

இவ் வர்ம மருத்துவம் இவை மட்டும்தான் பேசுகிறதா என்றால் இல்லை. இன்னும் மருத்துவம் சார்ந்த பல விஷயங்களையும் பேசுகின்றது. அவை வர்ம மருத்துவனின் இலட்சணம், நோய் அறிதல், நோய்க் குறியியல், நோய் நீக்கும் முறை போன்றன. மேலும் அவசரச் சிகிச்சை முறைகளும் வர்ம மருத்துவத்தில் உண்டு. இம்முறை வர்ம மருத்துவத்தின் சிறிப்புச் சிகிச்சைப் பகுதிகளுள் ஒன்று. மறுகாலம் செய்தல், எதிர்காலம் செய்தல், அடங்கள் செய்தல், திறவுகோல் செய்தல் எனப் பல்வேறு நிலைகளில் அவசரச் சிகிச்சைப் பிரிவு விரிந்துகொண்டே செல்லும்.

மேலும் எலும்பு சிகிச்சைப் பிரிவும் வர்மத்தில் சிறப்பிடம் பெற்றுத் திகழ்கிறது. எலும்பு கட்டுதல், அறுவைச் சிகிச்சை செய்து எலும்பைச் சரிசெய்தல் போன்ற இன்னபிற எலும்புச் சிகிச்சை முறைகளும் வர்ம மருத்துவத்தில் உண்டு. இதனோடு மூட்டுத் தேய்வைத் தடுத்தல், எலும்புச் சிதைவைப் பாதுகாத்தல் போன்ற சிகிச்சை முறைகளும் வர்ம மருத்துவத்தில் உண்டு.

நரம்பியல் சிகிச்சைக்கு வர்ம மருத்துவம் தலைசிறந்து விளங்குகின்றது. நரம்புகளின் பெயர்களை வகைதொகைப்படுத்தி வர்ம நூல்கள் போதிக்கின்றன. மூளை சார்ந்த நரம்பு நோய் முதல் அனைத்து நரம்பு நோய்களுக்கும் வர்மச் சிகிச்சை அளிப்பது குறிப்பிடத்தக்கது.

இவற்றொடு கரு உற்பத்தியியலில் கர்ப்ப உற்பத்தியில் ஏற்படும் சிக்கல்களைச் சரி செய்தல், குழந்தை மருத்தவம் என இப்பகுதியும் விரிந்து செல்கிறது. எல்லாவற்றிற்கும் மேலாக உடற்கூறியல் கல்வியும் வர்ம மருத்துவத்தில் உண்டு. உடல் செயற்பாட்டியல் கல்வியும் வர்ம மருத்துவத்தில் உண்டு.

வர்ம மருந்தியல் என்ற தனிப் பிரிவையும் சித்தர்கள் கூறியுள்ளனர். இந்த மருந்துப் பகுதி புறமருந்து, அகமருந்து என இரு பிரிவுகளாக உள்ளன. புறமருந்தில் பற்று, கிழி, ஒத்தடம், தப்பளம், கட்டு, தாரை எனப் பல்வேறு முறைகள் உள்ளன. அகமருந்தில் கசாய வகை, தூள்வகை, குளிகைவகை, லேகியவகை, கிருதவகை, தைலவகை, எண்ணெய் வகை, நெய்வகை, சுவாளவகை, வாற்றுவகை, கஞ்சிவகை, காடிவகை, மெழுகுவகை, நசியவகை, கலிக்கவகை, புகைவகை என இம்மருத்துவப் பிரிவு விரிந்து செல்லும். வர்ம மருத்துவ மருந்தியல் பிரிவில் மூலிகைகளும், விலங்கு, பறவைகளின் மாமிசம், கொழுப்பு முதலானவை மட்டும் சேரும். நேரடியான ரசாயனப் பொருள்களும், உலோகப் பொருள்களும், தாதுப் பொருள்களும் சேர்வதில்லை. எனவே, வர்ம மருத்துவ மருந்துகள் மிகமிகப் பாதுகாப்பானவை. இம் மருந்து முறைகளையும் செய்முறைகளையும் சித்தர்கள் தம் வர்ம நூல்களில் குறிப்பிட்டுள்ளனர்.

வர்ம மருத்துவத்தின் மற்றொரு சிறப்பு சிகிச்சைப் பிரிவு தடவல் முறை சிகிச்சை. இச் சிகிச்சையில் கண், காது, மூக்கு, நாக்கு, வாய், தாடை, தலை, கன்னம், கழுத்து, முதுகு, கை, கால், வயிறு, குறி என உறுப்பிற்கு ஏற்ப தனித்தனி தடவல் முறைகள் உண்டு. முழு உடல் தடவல், நரம்பிளக்கித் தடவல், எலும்புத் தடவல், சதைத் தடவல் எனத் தடவல் திருமல் முறைகள் விரிந்து செல்லும். வலசாரி தடவல், இடசாரி தடவல், நவவாசல் தடவல், நால்சதுரத் தடவல், தாரைத் தடவல், நெட்டங்கத் தடவல் எனத் தடவல் முறை மருத்துவம் விரிந்து பரந்து காணப்படுகிறது. மேலும் சட்டம் திருப்புதல், கட்டித் தூக்கல், தட்டித் தாழ்த்தல், மார்பணைத்துத் தூக்கல், பிடரிக்கட்டி ஏந்தல் என எத்தனையோ முறைகளை மனிதன் நல்வாழ்வுக்கு மருத்துவமாகச் சித்தர்கள் தந்துள்ளனர்.

இத்தகைய சிறப்புடைய வர்ம மருத்துவம் பல்வேறு துறைகளோடு இணைந்து செயல்படும் வல்லமை யுடையது. வர்மமும் உளவியலும், வர்மமும் சமூகவியலும்,

வர்மமும் வரலாற்றியலும், வர்மமும் புவியியலும், வர்மமும் குற்றவியலும், வர்மமும் மேலாண்மையியலும், வர்மமும் வேதியியலும், வர்மமும் இயற்பியலும், வர்மமும் உயிரியலும், வர்மமும் தாவரவியலும், வர்மமும் மூலிகையியலும் எனப் பல்வேறு நவீன துறைகளோடு வர்மக்கலை இணைந்து செயல்படும்.

இவைபோல வர்மமும் யோகமும், வர்மமும் ஆன்மீகமும், வர்மமும் சோதிடமும், வர்மமும் தந்திரமும், வர்மமும் அங்க சாஸ்திரமும், வர்மமும் தர்க்க சாஸ்திரமும் என வர்மம் விரிந்த பார்வையை உடையது.

எல்லாவற்றிற்கும் மேலாக, தமிழகம் – தமிழ்மொழி – சித்தர்களின் வர்மக்கலை உலகுக்குச் சொல்ல வேண்டிய ஓர் உண்மைக் கருத்தும் இங்கு உண்டு. அது என்னவெனில் நோய் வராமல் நோயைத் தடை செய்து வாழும் வாழ்க்கையை, நோயில்லா வாழ்க்கையைத் தருவது வர்ம மருத்துவம் ஒன்றே ஆகும். நோய்த் தடுப்பு முறை வர்ம மருத்துவத்தில் மட்டும் உள்ளது. நோயில்லா சமூகத்தைப் படைக்க சித்தர்கள் கண்ட ஓர் அற்புத படைப்பு வர்ம மருத்துவம் என்றால் இது மிகையாகாது.

இத்தகைய சிறப்பு வாய்ந்த வர்ம மருத்துவத்தை முதல் கட்ட வேலையாக, தமிழக மக்கள் அறிந்திருத்தல் வேண்டும். தமிழகத்தில் உள்ள அனைத்துத் துறை மருத்துவர்களும் இக் கலையை வர்ம மருத்துவத்தைக் கற்றுத் தேர்தல் வேண்டும். வர்ம மருத்துவத்தை இம் மருத்துவர்கள் தாம் சார்ந்த மருத்துவத் துறையொடு சேர்ந்து சிகிச்சை அளிக்கலாம். தமிழகம் போல இந்திய மக்களும் இந்திய பல்துறை மருத்துவர்களும் இவ்வர்ம மருத்துவத்தை நம் தாயகத்தின் மருத்துவம் என எண்ணிச் செயல்படுதல் வேண்டும்.

இவ் வர்மக் கலையைப் பரப்பப் பள்ளி, கல்லூரிகளில் இக் கலை நுணுக்கங்களை சிறு பாடப் பகுதிகளாக வைக்கலாம். இளஞ்சிறுவர்கள் இக் கலையைத் தெரிதல் வேண்டும். இந்தியாவினுள் இக் கலை பற்றிய அறிவைப் பரப்ப, செய்தி ஊடகங்கள் பாரபட்சம் இன்றிச் செயற்படுதல் வேண்டும்.

இரண்டாம் கட்டப் பணியாகச் சித்த மருத்துவக் கல்லூரி, ஆயுர்வேத மருத்துவக் கல்லூரி, அலோபதி மருத்துவக் கல்லூரி, இயங்குமுறை மருத்துவக் கல்லூரி, செவிலியர் கல்லூரி முதலான மருத்துவம் தொடர்புடைய கல்லூரிகளில் வர்ம மருத்துவத்தை ஒரு சிறப்புப் பட்டயக் கல்வியாக வைக்க வேண்டும். இதில் கற்றுத் தேர்ச்சி பெற்ற மருத்துவ மாணவர்கள் வெளிநாடுகளுக்குச் சென்று நம் இந்திய அறிவுச் சுடராம் வர்ம மருத்துவ அறிவைப் பரப்புதல் வேண்டும். இப்படிச் செய்தால் வர்ம மருத்துவத்தின் சிறப்பு உலகை எட்டும் நாள் வெகு அருகில் உள்ளது.

பல்வேறு சிறப்புச் சிகிச்சைகளைக் கொண்டது வர்ம மருத்துவம். இது சித்தர்களின் கண்டுபிடிப்பு. தமிழ் மொழியில் இதன் கருத்துகள் இன்று கிடைக்கின்றன. இம் மருத்துவத்தின் கருத்தனைத்தையும் தொகுத்துப் பார்க்கும்பொழுது தமிழைக் கற்றதன் மகிழ்ச்சி புலனெங்கும் பூரிக்கிறது.

இவ் வர்மக் கலை – வர்ம மருத்துவம் பக்க விளைவு, எதிர் விளைவு இல்லாதது. சிகிச்சைக்குப் பொருட் செலவு மிகக் குறைவு. நோயே வராமல் தடுக்கும் மருத்துவ முறை இவ் வர்ம மருத்துவத்தில் மட்டுமே உள்ளது. நோயற்ற உலகை உருவாக்க நினைத்தவர்கள் சித்தர்கள். அதனால் அவர்கள் படைத்தார்கள் வர்மக்கலை மருத்துவத்தை செம்மொழியாம் தமிழ் மொழியில்.

சித்தர்களின் வர்ம மருத்துவத்தால் நோயற்ற உலகை உருவாக்குவோம் என்று உலகுக்குச் சொல்வோம். வளர்க தமிழும் வர்ம மருத்துவமும்.

❖



# மருத்துவம் - தமிழரின் பங்களிப்பு



மருத்துவர் ச. சண்முகம்

**முன்னுரை**

மனித குலம் இவ்வுலகில் வாழும் உயிரினங்களில் சிறப்பு வாய்ந்த நிலையில் உள்ளது. இம் மனித குலத்திலும் சிறப்பு வாய்ந்த நிலையில் உள்ள ஓர் இனம், இந்தியத் துணைக் கண்டத்தின் தென்கோடியில் அமைந்துள்ள தமிழரினம் ஆகும். அவ்வினத்தின் தொடர்புச் சாதனமாக விளங்கிய, விளங்கும், விளங்கப்போகும் மொழி தமிழ்மொழி. இத்தகு தமிழ்மொழி, மனித குலம் நோயின்றி வாழவும், நோய் வந்தால் அதைக் கட்டுப்படுத்த அல்லது குணமாக்கப் பயன்படும் மருத்துவவியலின் வளர்ச்சிக்கு ஆற்றியுள்ள பலவிதமான பங்களிப்பு இங்குச் சில தடங்களில் ஆராய்ந்து இக் கட்டுரை படைக்கப்பட்டுள்ளது.

**மருத்துவவியல்**

மனிதன் முதன்முதலில் என்று நோய் வாய்ப்பட்டானோ அன்றே மருத்துவவியலின் விதை ஊன்றப்பட்டுவிட்டது. பல மேற்கத்திய நாடுகள், மருத்துவம் அந் நாடுகளில் தோன்றிய விதம்பற்றி வரலாற்றுக் குறிப்புகள் கொண்டுள்ள நிலையில், அவர்களின் பங்களிப்பு, உலகளாவிய அளவில் ஒத்துக் கொள்ளப்பட்டுள்ளது. ஆயின் தமிழ்மொழியின் சிறப்பு மருத்துவமாம் 'சித்த மருத்துவம்' மருத்துவவியலின் வளர்ச்சிக்கு ஆற்றியுள்ள பங்களிப்பு, நமக்கு மட்டுமே கேட்கும்படி பேசப்பட்டு, வெளி உலகின் காதுகளுக்கு எட்டாச் செய்தியாகவே திகழ்கின்றது. ஆயுர்வேதம் இன்று உலகளவில் அங்கீகாரம் பெற்றுள்ளது. ஆனால், சித்த மருத்துவம் இன்னும் அந்த நிலையை எட்டிக் கூடப் பார்க்கவில்லை.

**சித்த மருத்துவம்**

தமிழரின் பண்டைய மருத்துவமான சித்த மருத்துவம் தோன்றிய விதம், காலம், தோற்றுவித்தவர்கள், வளர்த்தவர்கள் பற்றிய முழுச் செய்திகள் இன்னும் கோவையாக, அறிவியலார் அனைவரும் ஒத்துக் கொள்ளும் வண்ணம் வடிக்கப்படவில்லை.

சித்த மருத்துவ நூல்கள் அனைத்தும் இலக்கண, இலக்கிய நூல்கள் போன்று தொகுக்கப்பட்டு 'மருத்துவத் தமிழியல்' என்ற ஒரு புதிய அமைவு, தமிழில் ஏற்படுத்தப்பட வேண்டும்.

**தமிழ் மருத்துவம் - பங்களிப்பு**

தமிழரின் மிகப் பெரும் அறிவியல் சிந்தனைகளின் முடிவான ஒருங்கிணைக்கப்பட்ட மருத்துவமே சித்த மருத்துவம். இந்தச் சித்த மருத்துவத்தின் முக்கியப் பங்களிப்புகள் என்று எண்ணுகின்றபொழுது அதன் ஆழமும், அகலமும் விரிவானவையாக இருந்தாலும், கீழ்க்காணும் செய்திகள் மிகவும் முக்கியமானவை:

(1) உலக முழுவதும் எளிதாகக் கிடைக்கும் செடி, கொடிகளான தாவரங்களின் மூலம் பெறப்படும் மருந்துகள் அதிகம் பயன் கொள்ளப்படுகின்றன. இயற்கையின் பங்களிப்பு அதிகமாக இருப்பதனால் உடலுக்கு வேதியியல் மருந்துகளால் ஏற்படும் பின்விளைவுகள் இங்கு மிகக் குறைவு.

(2) உலோக அலோகப் பொருள்களை மாற்றும் திறன் மூலம் புதிய மருந்துகள் பயன் கொள்ளப்படுகின்றன. இன்றைய தரம் வாய்ந்த வேதியியல் ஆராய்ச்சிக் கூடங்களில் கண்டுபிடிக்க முடியாத அளவில் புதிய மருந்துகள் அன்றே உருவாக்கப்பட்டுள்ளன.

(3) விலங்கினங்களின் கழிவுகள், உறுப்புகள் பயன் கொள்ளப்படுகின்றன.

(4) மனித உடலின் முக்கிய உடற்கூறுகள் நன்கு ஆராயப்பட்டு, அதன்மூலம் உருவாக்கப்பட்ட வர்மக்கலை, நம் தமிழரின் சிறந்த மருத்துவ அறிவியல் பங்களிப்பாக விளங்குகின்றது.

(5) வெளிப்பூச்சு மருத்துவம், சிறப்பு மருத்துவமாக விளங்குகின்றது.

(6) மனிதன் வாழும் முறையில் உள்ள குறைபாடுகள் களையப்பட்டு, நோயின்றி வாழும் மனிதத் தின வாழ்க்கை மாற்றங்கள் அன்றே கடைப்பிடிக்கப்பட்டுள்ள முறைகள் சிறப்பானவை.

(7) மனிதனால் இன்றும் முழுமையாக வெற்றி கொள்ள இயலாத அம்மை நோய்கள், மஞ்சள் காமாலை நோய் உண்டாக்கும் நுண்ணுயிர்க் கிருமிகளை வெற்றி கொள்ளும் மருத்துவ ஆராய்ச்சிகளின் அடிப்படையாக அமைவது.

(8) சித்த மருத்துவத்தின் பல பயன்பாடுகள் இன்றைய நுண்பொருள் மருத்துவம் (NANO Medicine) துணைக் கொண்டு விளக்கப்படும் வாய்ப்பு.

இன்றைய நவீன மருத்துவத்திற்கு, இந்த அறிவுக் களஞ்சியம் உறுதுணையாக இருக்கும் வாய்ப்பு இன்னும் சரியாக எடுத்துச் சொல்லப்பட வேண்டும் என்பதுதான் இக் கருத்தாக்கத்தின் முக்கிய நோக்கமாக அமைகின்றது.

**தாவரங்களிலிருந்து மருந்துகள்**

இன்று மிகவும் அதிகமாகப் பேசப்பட்டு வரும் 'ஏமக்குறைவு நோய்' என்னும் 'எய்ட்ஸ்' நோய்க்கு மருத்துவம் செய்ய 1990களில் முனைந்தபொழுது, ஒரு மருத்துவத் தாவரம் பயன்கொள்ள வாய்ப்பு இருக்கின்றது என்பது உறுதி செய்யப்பட்டு, கடந்த 16 ஆண்டுகளாக அந்த மருந்தின் பயன் நடைமுறையில் உறுதி செய்யப்பட்டுள்ளது. இந்த மருந்து, எதிர் விளைவுகள் அற்ற ஒரு மருந்தாக அமைவதுடன், சிறு குழந்தைகளுக்கும், கருப்பம் தரித்த பெண்களுக்கும் பயமின்றிக் கொடுக்க முடியும் என்பதுவும் உறுதி செய்யப்பட்டுள்ளது. இம் மருந்து காப்புரிமைக்கான முயற்சியில் உள்ளது. இம் மருந்து, சித்த மருத்துவத்தில் ஏற்கெனவே நுண்ணுயிர்க் கிருமி நோய்களுக்குப் பயன்படுத்துவதைக் கருத்தில் கொண்டே தேர்வு செய்யப்பட்டது.

இதேபோன்று இதய இரத்தக்குழாய்களின் அடைப்பு, நீரிழிவினால் ஏற்படும்கால் இரத்தக் குழாய்களின் அடைப்புச் சரி செய்ய ஒரு செடியிலிருந்து பெறப்படும் மருந்து பயன்கொள்ளப்பட்டு நல்ல பயன் கிடைக்கின்றது. சித்த மருத்துவ நூல்களில் இம்மருந்து 'குருதி அழுக்கை நீக்கும்' என்று குறிப்பிடப்பட்டுள்ளது இங்கு நோக்கத்தக்கது.

வல்லாரை என்ற மருந்து எத்தகைய நோய்களுக்குப் பயன்படுகின்றது என்று சித்த மருத்துவ குண பாடத்தில் உள்ளதோ, அதே நோய்களுக்காக வெளிநாடுகளில் வல்லாரை ஊசியாக, மாத்திரைகளாக, வெளிப்பூச்சாகத் தயாரிக்கப்பட்டுக் கடந்த இருபது ஆண்டுகளாக இத்தாலி, பிரான்சு நாடுகளில் பயன் கொள்ளப் படுகின்றது.

மேற்குறிப்பிட்ட செய்திகள் நமக்கு உணர்த்துவது, சித்த மருத்துவம் என்னும் அறிவுக் கருவூலம் சிறந்த முறையில் ஆராய்ச்சி செய்யப்பட்டு, இன்றைய நவீன மருத்துவர்களும் பயன்கொள்ளும்படி செய்வதன் மூலம் சித்த மருத்துவத்தின் பயன்பாடு பல மடங்குப் பெருகும்.

**உலோக, அலோகங்களின் பயன்கள்**

மூட்டு வலிக்கு அன்றே தங்கத்திலிருந்து மருந்து பயன்படுத்தப்பட்டது. இன்று நவீன மருத்துவத்திலும் பயன்படுத்தப்படுகின்றது தங்கத்திலிருந்து பெறப்பட்ட உப்பு ஒன்று.

இன்று உப்புக்கரைசல் மருத்துவம், வாந்திபேதி நோய்க்கு முக்கியக் கண்டுபிடிப்பு என்று புகழப்படுகின்றது. ஆயினும் உப்புச் சேர்த்த அரிசிக் கஞ்சி சிறந்த மருந்தாக அன்றே நம் நாட்டில் பயன்படுத்தப்பட்டிருந்தது, பயன்படுத்தப்படுவது சித்த மருத்துவத்தின் சிறப்பு எனலாம். வேதியியலின் மூலம் இன்று உருவாக்கப்படும் மருந்துகள், அன்றே எவ்விதக் கருவிகளும் இல்லாமல் உருவாக்கப்பட்டுப் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. இன்றும் ஆராய்ச்சியின் மூலம் பயன்படுத்த முடியும்.

**விலங்கின மருத்துவப் பொருள்கள்**

விலங்கினக் கழிவு மருந்தான கஸ்தூரி, மானிலிருந்து கிடைக்கும் பொருள் மருந்தாகப் பயன்படுத்தும் முறை மேலும் ஆராயப்பட்டால் சிறந்த மருத்துவப் பொருள்கள் உருவாக வழிவகுக்கும்.

**உயிர்க்கொல்லி மருந்துகள்**

தாவரங்களில் இருந்து பெறப்படும் உயிர்க்கொல்லி மருந்துகள், நுண்ணுயிரிகளுக்கு எதிராக மருந்தாகப் பயன்படும் என்பது இன்றைக்குப் பல ஆராய்ச்சிகளின் மூலமாக வெளிக் கொண்டு வரப்பட்டுள்ளது. இந்த ஓர் ஆராய்ச்சியை மேலும் சிறப்பாகப் பயன்படுத்துவதன் மூலம் இன்று உலகம் முழுவதும் உயிர்க்கொல்லி மருந்துகள் பயன் அற்றுப் போய்விடுமோ என்ற மிகப் பெரிய கவலையைப் போக்கும் வாய்ப்பு உருவாக்கப்படும்.

**வர்மக்கலை மருத்துவம்**

'வெறும் கையினால் முழம் போடுவது போல்' என்று ஒரு கூற்று தமிழகத்தில் உண்டு. ஆனால், வெறும் கையை வைத்து ஒரு மருத்துவ முறை உண்டு எனில் அது வர்மக்கலை மருத்துவம் எனில் மிகையன்று. நம் உடலில் தன்னிச்சைச் செயல் மண்டலம் (Autonomic Nervous System) ஒன்று இருப்பது நவீன மருத்துவத்தின் வெளிப்பாடு. ஆனால், இந்தத் தன்னிச்சைச் செயல் மண்டலத்திற்கு ஏற்படும் நோய்கள் பற்றியும், அதற்கான மருத்துவமும் இன்னும் ஆராய்ச்சி நிலையிலேயே இருக்கிறது நவீன மருத்துவத்தில்.

ஆனால், வர்மக்கலையின் அடிப்படையே தன்னிச்சைச் செயல் மண்டலச் செயல் இழப்பைச் சரி செய்யும் முறைதான்.

சீன மருத்துவத்தில் சிறப்பாகப் பேசப்படும் 'அக்குப் பங்சர்' (Acupuncture) ஊசிகளின் துணையுடன்தான் பயன்படுகின்றது. ஆனால், வர்ம ஆசான்கள் தங்கள் கைகளின் பயன் கொண்டு மருத்துவம் செய்வது உலகிலேயே தமிழ்நாட்டில் மட்டும்தான் உள்ளது என்பது மிகவும் சிறப்பு. இந்த வர்மக்கலை மிகவும் முக்கியமாக இரண்டு நோய்களுக்குப் பயன்படும் வாய்ப்பு ஆராயப்பட்டுள்ளது.

1) தலைக்காயம் காரணமாக மயக்க நிலையுற்ற ஒரு நோயாளி, சிறப்புப் பரிசோதனைகளால் மூளை பாதிக்கப்படவில்லையென்று கண்டுபிடிக்கப்பட்டாலும், மயக்க நிலை தெளியாமலேயே பல மாதங்கள் சிறப்புத் தீவிர மருத்துவப் பிரிவுகளில் வாழ்கின்றார்கள். அத்தகைய நோயாளிகளுக்கு வர்மக் கலையைத் துணைக் கொண்டு மயக்க நிலையிலிருந்து மீண்டு வரும் வாய்ப்பு உள்ளது.

2) வலிப்பு நோயைக் கட்டுப்படுத்த இன்று தன்னிச்சைச் செயல் மண்டலத்தின் துணைக் கொண்டு கருவிகள் பயன்படுகின்றன. வர்மக் கலையில், வலிப்பு வந்த ஒருவருக்கு வலிப்பை நிறுத்தச் சிறந்த வர்ம முறை சொல்லப்பட்டுள்ளது.

இதுபோன்ற செய்திகள் மேலும் ஆராயப்பட வேண்டும்.

**வெளிப்பூச்சு மருத்துவம்**

எண்ணெய் மருந்துகள் கொண்டு மருத்துவம் செய்யும் முறை சித்த மருத்துவத்தில் முக்கிய மருத்துவ முறையாகும். நவீன மருத்துவ முறையில் தோலின் சிறு துளைகள் மூலம் மருந்துகள் உட்செல்லும் என்று ஆராய்ச்சிகள் உறுதி செய்கின்றன. பக்கவாதம், எலும்புகள் சரியாகச் சேராத நிலை, இம் மருத்துவத்தின் மூலம் சரி செய்யப்படுவது சித்த மருத்துவத்தின் ஒரு மருத்துவம்.

**நோய்த் தடுப்பு முறைகள்**

உணவு பற்றிய தனி நூலான 'பதார்த்த குண சிந்தாமணி', இன்றைய உணவியலுக்கு ஈடாக நன்கு எடுத்துச் சொல்லப்பட்டுள்ளது சித்த மருத்துவத்தின் சிறப்பு.

**மஞ்சள் காமாலைக்கு மருத்துவம்**

இன்னும் மஞ்சள் காமாலை உண்டாக்கும் நுண்ணுயிர்க் கிருமிகளுக்குக் குணம் கிடைக்கும் முறையில் மருந்துகள் உருவாக்கப்படவில்லை. ஆனால், சித்த மருத்துவத்தில் பயன்படும் கீழ்க்காய் நெல்லி இன்றைய ஆராய்ச்சிகளின் மூலம் பயனாக இருப்பது உறுதியாகியுள்ளது.

**நுண்பொருள் மருத்துவமும் சித்த மருத்துவமும்**

பாத்திரங்களின் மருத்துவப் பயன்பாடுகள் இன்றைய நுண்பொருள் மருத்துவத்தின் மூலம் விளக்கப் படுகின்றன.

**முடிவுரை**

தமிழரின் சித்த மருத்துவம் மேற்கூறிய எடுத்துக் காட்டுகளின் மூலம் எவ்வாறு மருத்துவயியலுக்கு மிகவும் சிறப்பாகச் சேவை செய்து வருகின்றது என்பது பெறப்பட்டது. இத்தகைய சிறந்த மருத்துவ அறிவியல் மேலும் சிறப்பாகப் பயன்பட வேண்டும் எனில் அதற்கான முயற்சிகள் விரைந்து செய்ய வேண்டும். வர்மக்கலை மருத்துவத்திற்கு எனத் தனி ஆராய்ச்சி அமைப்பு ஏற்படுத்த வேண்டும். புது மருந்துகள் கண்டுபிடிக்கும் சிறப்புப் பரிசோதனைக் கூடங்கள் உருவாக்கப்பட வேண்டும். இதன்மூலம் தமிழகத்தின் பொருளாதார வளர்ச்சி, இன்றைக்கு மேற்காசிய நாடுகளில் ஏற்பட்டுள்ளது போன்ற நிலையைப் பெறும் என்பதில் ஐயமில்லை.

❖

**வாழ்க!**



தமிழனெங் கிருந்தா னேனும்
தமிழனே பிறப்பால், நெஞ்சால்
அமிழ்தெனும் மொழியின் பிள்ளை!
அவனெனும் பெருமை வாழும்!
குமிழ்நகைத் தமிழர் தங்கள்
குலஞ்செழிப் படைதல் காண்பார்!
உமிழ்திரைக் கடலும் தாண்டி
ஒளிபெற வாழ்வார்! வாழ்வார்!

- கவியரசர் கண்ணதாசன்

# கணினித் தமிழின் வளர்ச்சியும் சாதனைகளும்

திரு.மா. ஆண்டோ பீட்டர்



கணினி, மொபைல் கம்ப்யூட்டிங், தகவல் தொழில்நுட்பம், கணினிச் சேவைகள் (ITES) ஆகியவற்றில் தமிழின் வளர்ச்சி கடந்த 20 ஆண்டுகளில் பெரும் மாற்றத்தை ஏற்படுத்தியுள்ளது. 1980களில் கணினியின் பணிகள் துளிர்விடத் தொடங்கின என்று கூறலாம். தகவல் சேமிப்பிற்குக் கணினியைப் பயன்படுத்தும் காலம் வந்தபோது அமெரிக்காவின் பிலிப்பிடியா பல்கலைக்கழகத்தில் கணினித் தமிழ்ப் பயன்பாடு தொடங்கியது. அதையொட்டிக் கனடா நாட்டில் ஆதமி மற்றும் பெங்களூரில் பாரதி ஆகிய மென்பொருள்கள் தயாரிக்கப்பட்டு வெளியிடப்பட்டன. இந்தச் சொற் செயலிகளே பல ஆண்டுகளுக்குப் பயன்பாட்டில் இருந்தன. C, c++, java, ASP போன்ற மென்பொருள்கள் மற்றும் இயங்குதளங்கள் தமிழில் தேவை என்ற சிந்தனையாற்றல் வளர்ந்தது.

1997இல் முதன் முதலில் இணையத்திற்கான தமிழ் எழுத்துருச் சேவை செயற்படுத்தப்பட்டது. சிங்கப்பூரைச் சேர்ந்த காலஞ்சென்ற பேராசிரியர் நா. கோவிந்தசாமி முதன்முதலில் கணினித் தமிழைப் பயன்படுத்திக் கணியன் என்ற தமிழ் இணையத்தையும் நிறுவினார். தகவல் தொழில்நுட்பத்தில் மைக்ரோசாப்டின் விண்டோஸ் இயங்குதளம் தமிழ் வளர்ச்சிக்குப் பெருந்துணையாக இருந்தது. விண்டோஸ் மென்பொருளின் பல்வகைச் சிறப்புகள் மக்களைப் பெருமளவில் கவர்ந்தன. அதைச் சார்ந்து பல தமிழ் மென்பொருள் நிறுவனங்களும், ஆய்வாளர்களும் தமிழ் மென்பொருள்களைத் தயாரிக்கத் தொடங்கினர். இணையத்தின் வளர்ச்சியும் அசுர வேகத்தில் உலக அளவில் தமிழர்களை இணைத்ததெனக் கூறலாம். 1995களில் ஒவ்வொரு தமிழ் மென்பொருள் நிறுவனமும் பல்வகைக் குறியீடுகளில் தமிழ் மென்பொருள்களையும், எழுத்துருவையும் தயாரித்ததால் சிக்கல்களும் இருந்தன.

இந்த எழுத்துருச் சிக்கல்களுக்குத் தீர்வு காணும் வகையில் 1999ஆம் ஆண்டு பிப்பிரவரி 6, 7 ஆகிய தேதிகளில் இரண்டாம் தமிழ் இணைய மாநாடு நடைபெற்றது. முன்னாள் மத்திய அமைச்சர் முரசொலி மாறன் ஏற்பாட்டில், தமிழக முதல்வரின் தமிழ் இணைய மாநாடு கணினி உலகில் பல தொழில்நுட்பச் சீர்திருத்தங்களையும், வளர்ச்சியையும் ஏற்படுத்த வழிவகுத்துக் கொடுத்தது. பல தமிழ் மென்பொருள் நிறுவனங்கள் வெளியிட்டிருந்த சிக்கலான குறியீடுகளுக்குத் தீர்வு ஏற்பட்டது.

கணினி வழியாகத் தட்டச்சு செய்யப்பட்ட தகவல்களை ஒருவருக்கொருவர் பரிமாறிக் கொள்ளும்போது இவ்வகைச் சிக்கல்கள் ஏற்பட்டன. இச்சிக்கல்களுக்குத் தீர்வு காணும் வகையில் தமிழக அரசு புதியதாக இரு எழுத்துருக் குறியீட்டு முறைகளை உருவாக்கியது. அவை டாப் மற்றும் டாம் என்பவையாகும். இவற்றில் டாப் முறையில் தமிழ் மற்றும் ஆங்கிலம் ஆகிய இரண்டின் எழுத்துகளும் இருக்கும். இதனால் இணையப் பயன்பாட்டுக்கும், இருமொழிப் பயன்பாட்டுக்கும் ஏற்ற எழுத்துரு அமைப்பாக டாப் எழுத்துரு முறை இருக்கிறது. எழுத்துருவில் சீர்திருத்தத்தை ஏற்படுத்திய ஒரே மாநிலம் தமிழகம்தான் எனப் பெருமையாகக் கூறலாம். இதையொட்டித் தற்போது உலகின் பொதுவான தமிழ் ஒருங்குறி (யூனிக்கோட்)யிலும் தமிழக அரசு சீர்திருத்தத்தை ஏற்படுத்தக் கட்டுமானப் பணிகளைச் செய்து வருகிறது. யூனிக்கோட் தமிழ் எழுத்துரு வளர்ச்சியால் டிவிட்டர், பிளாக்ஸ், பச்ஸ், பேஸ்புக் ஆகியவற்றில் தமிழ்ப் பரிமாற்றம் சிந்தனைச் சிதறல்களாகப் படைக்கப்பட்டு வருகின்றன.

1999 தமிழ் இணைய மாநாட்டின் விளைவாகத் தமிழ் இணையப் பல்கலைக்கழகம் உருவாக்கப்பட்டது. உலகத் தமிழர்கள் அனைவரும் தமிழை இணையம் வாயிலாகக் கற்க சிறந்த தமிழ்ப் பேராசிரியர்கள் மற்றும் வல்லுநர்களின் செயற்பாட்டில் இப் பல்கலைக்கழகம் உருவாக்கப்பட்டது. உலகத் தமிழர்கள் யாவரும் பட்டம் மற்றும் சான்றிதழ்ப் படிப்பாக இணையம் மூலமாக தமிழைக் கற்கலாம். இதற்கென உலகெங்கும் தமிழ்ப் பயிற்சி மையங்களும் தொடங்கப்பட்டன.

இளைஞர்களின் தமிழ் மென்பொருள் ஆற்றலை மேம்படுத்த மற்றும் தமிழ் மென்பொருள் ஆராய்ச்சி ஆற்றலை வளப்படுத்தத் தமிழ் இணையப் பல்கலைக் கழகத்தில், 'தமிழ் மென்பொருள் மானியத் தொகை'யாக ரூபாய் 5 கோடி நிதி ஒதுக்கப்பட்டது. இம்மானியத் தொகையை ஆராய்ச்சியாளர்கள், மாணவர்கள் மற்றும்

தமிழ் மென்பொருள் நிறுவனங்கள் பெற்றுச் சாதனை படைத்தனர். இதன் மூலமாகத் தமிழ் ஒசிஆர், தமிழ்த் தரவுத்தளம் மற்றும் செல்பேசி அப்ளிகேஷன்கள் நம் மொழிக்காகத் தயாரிக்கப்பட்டன.

ஒரு பழைய தமிழ்ப் புத்தகத்தை நாம் மீண்டும் அச்சடிக்க வேண்டுமெனில் அதை மறுபடியும் டைப்பிங் செய்ய வேண்டும். ஓசிஆர் மென்பொருள் கருவி இருந்தால் நாம் அப்புத்தகத்தின் பக்கத்தை ஸ்கேனரில் திறந்து வைத்து வருடினாலே தமிழ் உரைகளாகக் கிடைத்துவிடும். நமக்குப் புத்தக வடிவமைப்பிற்கு ஏற்றபடி தேவையானவற்றை மாற்றிக் கொள்ளலாம். இவற்றைத் தமிழ்ப் புத்தகங்களுக்குச் செய்திடும் தொழில்நுட்பமே தமிழ் ஓசிஆர் ஆகும். தற்போது கையால் தமிழில் எழுதினாலே உரைகளாகக் கிடைத்திடும் ஓசிஆரும் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளது.

நாம் தமிழில் உரைக் கோப்புகளை அளித்தாலே தமிழில் பேசக்கூடிய வாய்ஸ் சிந்தசைசர் திட்டத்தையும் தற்போது பெங்களூரைச் சேர்ந்த அரசு கல்வி நிறுவனம் தயாரித்துள்ளது. கம்ப்யூடேஷனல் லிங்குவிஸ்டிக் அறிஞர்களும் தமிழில் வளர்ச்சி, ஆய்வு மற்றும் பெரிய மாற்றங்களை ஏற்படுத்தி வருகிறார்கள் என்று கூறலாம். பொதுவாகத் தமிழ் உரையில் அல்லது பாடத்தில் இடம்பெறும் உரைநடைகளைக் கீழ்காணும் முறைகளில் கணிப்பொறிவழி ஆய்வின் அடிப்படைகள் மேற்கொள்ளப்பட்டு வருகிறது.

1. கிராஃப்போஹாஜிக்கல் பகுப்பாய்வு
2. அகராதி தொகு பகுப்பாய்வு
3. ஒலிக்கட்டுப் பகுப்பாய்வு
4. தொடரியல் பகுப்பாய்வு
5. சொல்பொருள் பகுப்பாய்வு

இவற்றிற்கான மென்பொருள் கருவிகளை அறிஞர்களும், மாணவர்களும் இலக்கண விதிகளொடு தயாரித்து வருகின்றனர். தமிழ் மொழியில் தகவல்களைக் கணினியில் காணும் வகையில் பலவகையான படக்காட்சிகள் முதலானவற்றைக் கொண்டு வடிவமைக்கப்படுவது பல்லூடகக் குறுவட்டுகள் ஆகும். கணினிகள் மட்டுமன்றி இன்னும் பிற கணினி சாராத கருவிகளும் (தொலைக்காட்சி, செல்பேசிகள் போன்றவை) இன்றைய நவீன மின்னணுச் சாதனங்களும் தகவல்களைக் கொண்டு சேர்ப்பதில் பெரிய அளவில் உதவி புரிகின்றன. சாஃப்ட்வியூ, டோவ் மல்டிமீடியா, ஐ டியூட்டர், டிக் சாப்ட், சத்வத் ஆகிய நிறுவனங்கள் பல்லூடகத் தமிழ்க் குறுவட்டு தயாரிப்பில் முன்னணி வகித்து வருகின்றன. தமிழ் எழுத்துருக்கள் மற்றும் சொற்செயலிகள் தயாரிப்பில் சாஃப்ட்வியூ, லேர்ன்பன் சிஸ்டம்ஸ், மாடுலர் சிஸ்டம்ஸ், அனு கிராபிக்ஸ், சிகே டெக்னாலஜி, லாஸ்டெக், கேட்கிராப், வானவில் ஆகிய நிறுவனங்கள் புகழ் பெற்று விளங்குகின்றன. பழனியப்பா பிரதர்ஸ், நியூ ஹோரிஜான் மீடியா, அவான் டெக்னாலஜி, லிங்க்சாப்ட் ஆகிய நிறுவனங்களும் தமிழ்க் கணினித் தயாரிப்பில் ஈடுபட்டு வருகின்றன.

உலகின் முன்னணி நிறுவனங்களான மைக்ரோசாப்ட், ரெட்ஹாட், சன் மைக்ரோ சிஸ்டம்ஸ், யாகூ, கூகுல், அமெரிக்கன் ஆன்லைன் ஆகிய நிறுவனங்களும் தமிழ்க் கணினித் தயாரிப்பில் தற்போது ஈடுபட்டு வருகின்றன. பேச்சு, உரை மற்றும் குரலொலிப் பரிமாற்றம் ஆகியன இணையத் தளங்களில் நிறுவப்பட்டுத் தொழில்நுட்பம் எளிமைப்படுத்தப்பட்டது. தமிழ் மற்றும் இந்திய மொழிகளின் செயற்பாட்டை மக்களிடம் பரப்ப மைக்ரோசாஃப்ட் நிறுவனம் பாஷா இந்தியா என்ற இணையத்தை நிறுவியுள்ளது. பாஷா இந்தியா இணையத்தளம் மூலமாக 12 இந்திய மொழிகள் படைக்கப்பட்டன. மைக்ரோசாப்ட், விண்டோஸ் மற்றும் எம்.எஸ். ஆபீஸைத் தமிழில் பயன்படுத்த, ஒவ்வொருவரும் சர்வதேச அளவில் பயன்படுத்தத் தேவையான தமிழ்க் கணினி அப்ளிகேஷன்கள் பாஷா இந்திய இணையத்தளத்தில் இலவசமாக அளிக்கப்பட்டு வருகிறது.

பல்வேறு நாடுகளில் நடைபெற்ற உலகத் தமிழ் இணைய மாநாடுகளே தமிழ்க் கணினி வளர்ச்சிக்கு உறுதுணையாக இருந்தன. பன்னாட்டு நிறுவனங்கள் தமிழ் இணையம் மற்றும் தகவல் தொழில்நுட்பத்தில் ஆர்வம் காட்டி வருகின்றன. 2000ஆம் ஆண்டில் சிங்கப்பூரிலும், 2001ஆம் ஆண்டில் மலேசியாவிலும், 2003ஆம் ஆண்டு சென்னையிலும், 2006ஆம் ஆண்டு சிங்கப்பூரிலும், 2009ஆம் ஆண்டு செருமனியிலும் நடைபெற்ற தமிழ் இணைய மாநாடுகளால் தகவல் தொழில்நுட்ப உலகில் தமிழின் தரம் பெருமளவில் உயர்ந்துள்ளது.

பாரம்பரிய இலக்கியங்கள் கணினிக்குள் பொருந்துமாறு மாற்றியமைக்கப்பட்டு வருகின்றன. இவ்வாறான மாற்றங்கள் நம்முடைய இலக்கியங்களைப் பாதுகாக்கவும், அடுத்த தலைமுறைக்குக் கொண்டு செல்லவும் மிகவும் அவசியமான ஒன்றாகும். இவ்வாறு கணினிமயமாக்கப்படுதல் டிஜிட்டலைசேஷன் என்று அழைக்கப்படுகிறது. இணையத்தின் தமிழ் மரபு அறக்கட்டளை, தமிழ் இணையப் பல்கலைக் கழகத்தின் டிஜிட்டல் லைப்ரரி, சிடாக் நிறுவனத்தின் டிஜிட்டல் தகவல்கள் தமிழ் நூல்களையும் படைப்புகளையும் பாதுகாக்கும் பணியில் இறங்கிப் பணியாற்றுகின்றன.

டிஜிட்டலைசேஷன் என்பது பின்வரும் வழிமுறைகளை உள்ளடக்கியது. மின்பதிப்புகளாக அதாவது கணினியில்

பயன்படுத்தும் விதமாகத் தகவல்களைக் கணினி உள்ளீடு செய்வது, அவ்வாறு பெறப்பட்ட தகவல்களை வரிசைப்படுத்தி எளிதில் கையாளும் விதத்தில் வடிவமைப்பது, தரவுகளை எல்லா மக்களும் காணக்கூடிய வகையில் பொதுவான இணையத்தளம் போன்றவற்றில் தருவது போன்ற இவ்வகையான செயல்களைக் கொண்டுள்ள டிஜிட்டலைசேஷன் மூலம் பல பாரம்பரிய இலக்கியங்கள் இணையத்தில் வழங்கப்பட்டுள்ளன. உலகின் எந்த மூலையில் உள்ள தமிழரும் எளிதில் இணையத்திலிருந்து பெரும்பாலான தமிழ் இலக்கியங்களைப் படித்து, அச்செடுத்துப் பயன்படுத்திக் கொள்ளலாம். மேலும் தற்போது பெரும்பாலான நூல்களை இணையவழி வெளியிடுவதும், உருவாக்குவதும் பெருகியுள்ளன.

இவ்வாறு இணையவழி வெளியீடுகள் சங்க இலக்கியங்களைப் பல மடங்கு பாதுகாப்பாக, புது மெருகு குறையாமல் பல ஆண்டுகள்வரை வைத்திருக்க உதவுகின்றன. இவ்வாறான வெளியீடுகள் எல்லாச் சூழல்களிலும் எளிதில் பகிர்ந்தளிக்கக் கூடியனவாகவும் இருக்கின்றன. இவற்றினால் இலக்கிய உலகில் பல சிறப்பான முன்னேற்ற நிலைகள் நிலவுகின்றன. இன்றைய நிலையில் இணையத்தில் பெரும்பாலான சங்க இலக்கிய நூல்களும், பல இடைக்கால இலக்கிய நூல்களும், சில நவீன கால இலக்கிய நூல்களும் கிடைக்கின்றன. இவற்றை எந்த ஒரு தனி நபரும் உலகின் எந்த இடத்திலிருந்தும் எளிதில் படித்துக் கொள்ளலாம்.

கற்றது கை மண் அளவு, கல்லாதது உலகளவு என்பது ஆன்றோர் வாக்கு. இணையத்தில் மற்றும் அறிவியல் உலகில் தமிழுக்கு நாம் செய்ய வேண்டிய எண்ணற்ற பணிகள் இன்னும் உள்ளன. இப் பணிகளுக்கெல்லாம் அடித்தளம் இடுவதுபோல், வரும் செம்மொழி மாநாட்டின் ஒரு பகுதியாக நடைபெறும் தமிழ் இணைய மாநாட்டில் பல்வேறு செயற்பாடுகள் தொடங்கப்படும் எனக் கருதுகிறேன். செம்மொழி மாநாட்டின் ஒவ்வோர் ஆய்வரங்கு சீர்திருத்தங்களை ஆற்றுமென நம்புகிறேன். செம்மொழி மாநாட்டை நடத்திடும் தமிழக அரசிற்கு வாழ்த்துகள்! நன்றி!

❖

## எங்கும் தமிழ்! எதிலும் தமிழ்!

"நியாய சாஸ்திரங்களெல்லாம் இங்கிலீஷ் பாஷையிலிருப்பதாலும், இங்கிலீஷிலிருக்கிற நீதிவாக்கியங்களுக்குச் சரியான பிரதிபதங்கள் தமிழில் இல்லாமையாலும், தாங்கள் இங்கிலீஷ் பாஷையை உபயோகிப்பதாகச் சில வக்கீல்கள் சொல்லுகிறார்கள். இங்கிலீஷ் வார்த்தைகளுக்குச் சரியான பிரதிபதங்கள் தமிழில் இல்லையென்று வக்கீல்கள் சொல்வது அவர்களுடைய தெரியாமையேயல்லாமல் உண்மையல்ல. தமிழ் நூல்களைத் தக்கபடி அவர்கள் ஆராய்ந்தால், பிரதிபதங்கள் அகப்படுவது பிரயாசமா? அப்படித்தான் இரண்டொரு சங்கேத வார்த்தைகளுக்குத் தமிழிலாவது சமஸ்கிருதத்திலாவது பிரதிபதங்கள் அகப்படாத பக்ஷத்தில், அந்த வார்த்தைகளை மட்டும் இங்கிலீஷிலே பிரயோகித்தால் அவர்களை யார் கோபிக்கப் போகிறார்கள்? தமிழிலே வாதித்தால் இங்கிலீஷ் மறதியாய்ப் போகுமென்கிற பயத்தினால் சிலர் இங்கிலீஷிலேயே வாதிக்கிறார்கள். அவ்வளவு சொற்பத்தில் மறந்துபோகிற இங்கிலீஷ் இந்த வக்கீல்களுடன் எத்தனை நாள் கூடிவாழப் போகிறது? வக்கீல்கள் இங்கிலீஷில் வாதிப்பது அக்கிரமமென்று சில தமிழ் நியாயாதிபதிகளுக்குத் தெரிந்திருந்தும், அதைக் கண்டித்தால் தங்களுக்கு இங்கிலீஷ் தெரியாதென்று வக்கீல்களும் மற்றவர்களும் நினைப்பார்களென்று எண்ணி, இங்கிலீஷ் வாதத்துக்கு இடங்கொடுத்து வருகிறார்கள். பின்னும் அந்த நியாயாதிபதிகளும் கோர்ட்டுகளில் எப்போதும் இங்கிலீஷையே உபயோகப்படுத்தி, அநேக நடவடிக்கைகளை இங்கிலீஷிலே நடத்துகிறார்கள். சில சமயங்களில் வக்கீலும் நியாயாதிபதிகளும் இங்கிலீஷை நன்றாகப் படியாதவர்களானதால் ஒருவர் சொல்வது ஒருவருக்குத் தெரியாமல் கைச்சாடை செய்து கொண்டு சர்வ சங்கடப்படுகிறார்கள். அந்தக் கோர்ட்டுகள் நாடகசாலையாகத் தோன்றுகின்றனவேயல்லாமல் நியாய சபையாகத் தோன்றவில்லை. ஒவ்வொரு வழக்கிலும் உண்மையைக் கண்டுபிடித்து நீதி செலுத்த வேண்டியது கோர்ட்டாருடைய கடமையாயிருக்கிறது. ஜனங்களுக்குத் தெரிந்த பாஷையிலே வக்கீலினுடைய வாதமும் மற்ற நடபடிகளும் நடந்தால் மட்டும் உண்மை வெளியாகுமே தவிர, அவர்களுக்குத் தெரியாத பாஷையில் நடந்தால் எப்படி உண்மை வெளியாகும்?"

"இங்கிலீஷ், பிரான்சு முதலிய ராஜபாஷைகளைப் படிக்கிறவர்கள், தேசபாஷைகளையுந் தீர்க்கமாக உணர்ந்து இந்தத் தேசத்தைச் சூழ்ந்திருக்கிற அறியாமையென்னும் அந்தகாரம் நீங்கும்படி வசனகாவியங்களென்னும் ஞான தீபங்களை ஏற்றுவார்களென்று நம்புகிறோம். தமிழ் படிக்காதவர்கள் தமிழ்நாட்டில் வசிக்க யோக்கியர்கள் அல்லர். அவர்கள் எந்த ஊர்ப் பாஷைகளைப் படிக்கிறார்களோ, அந்த ஊரே அவர்களுக்குத் தகுந்த இடமாகையால் சுயபாஷையைப் படிக்காமல் இங்கிலீஷ் மட்டும் படிக்கிறவர்களை இங்கிலீஷ் தேசத்துக்கு அனுப்பிவிடுவோம். பிரான்சு மட்டும் படிப்பவர்களைப் பாரீசுப் (Paris) பட்டணத்துக்கு அனுப்புவோம். லத்தீனுக்குங் (Latin) சமஸ்கிருதத்துக்குங் சொந்த ஊர் இல்லாதபடியால் அந்தப் பாஷைகளைப் படிக்கிறவர்களை அநாமகரணத் தீவுக்கு அனுப்புவோம்."

– மாயூரம் வேதநாயகர்

# இதயம் காக்க வாழ்வாங்கு வாழும் வழி

டாக்டர் வி. சொக்கலிங்கம்

**நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்**



உடலினால் உயிரும், உயிரால் உடலும் இயங்குவதற்கு அவற்றைத் தாங்குகின்ற மனத்தை ஆறறிவு படைத்த மனிதன், தன் அறியாமையால் அவற்றைத் தாக்குகின்ற கருவியாக மாற்றித் தன் உடலை நலியச் செய்து, உயிரையும் இழக்கின்றான்.

இயற்கையால், சராசரி 100 ஆண்டுகள் வாழப் படைக்கப்பட்டுள்ள மானிட வாழ்க்கையின் பயணத்தைத் தவறான குறைபாடுள்ள வாழ்க்கை முறைகளினால், மனநலம், உடல்நலம் குன்றி வாழ்க்கைப் பயணத்தைக் குறைத்துக் கொள்கிறான்.

ஒருவர் நலத்துடன் வாழ்வது என்பது தனிமனிதனின் உடல் நோயற்ற ஆரோக்கியமான நிலை மட்டுமல்லாமல், அவனுடைய சீரான மனநலமும், சிறப்பான உடல்நலமும், அதனால் பயனடையும் அவனைச் சார்ந்த குடும்ப நலமும், சமுதாய நலமுந்தான். இன்று நாம் அடைந்துள்ள அறிவியல் வளர்ச்சியால், எல்லா வசதிகளையும் பெற்றுள்ள மனிதன், தன் மனத்தால் அடையும் அமைதியை இழந்து இயந்திர மனிதனாக மாறி, நாள் முழுவதும் இயற்கையுடன், மாறுபட்டு வாழ்வதனால், இயல்பான மன அமைதியை இழந்து, பலவகை உணர்ச்சிப் போராட்டங்களுக்கு ஆளாகிப் பல நோய்களுக்கு இடங்கொடுக்கிறான். மிகுந்த ஆற்றல் வாய்ந்த மனிதனின் 'மனம்', மூளையின் ஒரு பண்புக்கூறாக உணரப்பட்டாலும், மூளை, இதயம் மற்றும் உடலின் அனைத்து அக–புற உறுப்புகளையும் இயங்க வைப்பது மனம்தான்.

கண்ணால் பார்க்கவும், கையால் தொடவும் முடியாத பருவடிவமற்ற 'மனம்' மூன்று பகுதிகளாக இயங்குகின்றது.

1. ஐம்புலன்களின்வழி பெறும் உணர்வு
2. மூளையில் ஏற்படும் எண்ணங்களாலான சிந்தனை
3. அப்படிப் பகுத்தறிவதனால் விளையும் அறிவு

ஆகிய மூன்றின் பயனாக உருக்கொள்வதே மனம். அதுவே ஒருவனின் தனித்தன்மையை – இயல்பை நிருணயிக்கின்றது. இவ்வுலகில் வாழும் 600 கோடி மக்களும், அவர்கள் ஒவ்வொருவருமே பிறரிடமிருந்து உருவத்தாலும் உணர்வுகளாலும் வேறுபட்டவர்கள். ஒருவரைப் போன்று மற்றொருவரின் உணர்வு அமைவதில்லை. அப்படிப்பட்ட இயற்கையைப் புரிந்து கொண்டு, வேறுபடுவதை இயல்பெனக் கொண்டு மற்றவர் உணர்வை மதித்து வாழ்வதே, (பாதிப்புக்கு ஆளாகாத) மேன்மையான மனித குணமாகும்.

மாந்தர் – ஆணோ பெண்ணோ, செல்வரோ வறியவரோ எவராயினும், 'ஆவதும் மனத்தினால், அழிவதும் மனத்தினால்' என்பது மாற்றமில்லாத பேருண்மை. ஐம்பொறிகளை அவற்றின் விருப்பப்படி செல்லவிடாது அடக்கி ஆளும் வல்லமை படைத்த மனிதன், அந்த அடக்கத்தால் ஆமையைப் போன்று 100 ஆண்டுகள் கடந்தும் வாழ்கிறான்.

**"ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்க லாற்றின்
எழுமையும் ஏமாப் புடைத்து''**

என்பது குறள். அறிவு உணர்ந்தவாறு கருத்தின்படி மனமும், அந்த நெறியில் நிற்கும் மனத்தின் கட்டளையை உடம்பும் கேட்டால், உயிர் இயக்கம் – அமைதியான இதயத் துடிப்பு மூலம் நீடித்து இயங்கிக்கொண்டே இருக்கும். வாழ்நாளும் நீடிக்கும்.

மனிதனின் உணர்வுகளின்படி ஐந்து தனித்தன்மை உடையவராக மாந்தர்களைப் பிரிக்கலாம். அவை:

1. A. வகை தனித்தன்மை – ஆவேசம், ஆத்திரம், கோபம் (கடுஞ்சினம்) போட்டியில் வெற்றி பெறும் வெறி, பொறாமை – ஆகியவற்றையும்,

2. C. வகை தனித்தன்மை – பெண்களிடம் அதிகம் காணப்படுவதுதான் இந்த இயல்பு. மன இறுக்கம், மன உணர்வுகளை வெளியிடாது மூடிவைத்துப் புழுங்கல் (மனத்தை வெளிக்காட்டாமையின் விளைவு) – தமது விருப்பு வெறுப்புகளை மற்றவர்களிடம் பகிர்ந்து கொள்ளாமை ஆகியவற்றையும்,

3. D. வகை தனித்தன்மை – ஆண்களிடம் அதிகம் காணப்படுவதான இந்த இயல்பு கவலையில் மூழ்குவதனால் அமையும் மன அழுத்தம், மன உளைச்சல், எதிலும் அதிருப்தி (அனைத்திலும் வெறுப்பு) ஆகியவற்றையும்,

4. E. வகை தனித்தன்மை – இன்றைய 'E' மின் – ஆற்றல் மயமான உலகில் பலவகை உணர்வுத் தன்மைகளும் அடுத்தடுத்துத் தோன்றுவதனால் மன உணர்வு மாறி மாறி வெளிப்படுவது ஆகியவற்றையும் கொண்டதாகும்.

மேற்கூறிய பலவகை மன நிலைகளினால் மூளையின் செயற்பாடு சீராக அமையாததனால் உணர்ச்சி வயப்படும் உடம்பில், பல இரசாயன மாற்றங்களை ஏற்படுத்துகிறது. அதன் விளவாக,

- வேகமான இதயத் துடிப்பு
- இரத்த அழுத்த நோய்
- சர்க்கரை நோய்
- இரத்தக் கொழுப்பின் அளவு மிகுதல்

ஆகிய பிணிகள் ஏற்படுகின்றன. அதன் விளைவாக அது ஒருவரைத் தீய பழக்கங்களான புகை பிடித்தல், மது அருந்துதல் போன்றவற்றுக்கு ஆளாக்குகிறது. நாள்தோறும் உடற்பயிற்சியில் ஈடுபடுவதனையும் தவிர்ப்பதனால் உடல் பருமனும் எடையும் அதிகமாகி இதய இரத்தக் குழாய்கள் சுருங்குவதனால், இரத்த ஓட்டம் தடைப்பட்டு உயிர்க்கொல்லி நோயான மாரடைப்புக்கு ஆளாக்குகின்றது. ஒருவன் தனது இளம் வயதிலேயே, நெஞ்சு வலியால் துடிதுடித்து உடனடி சிகிச்சை வாய்ப்பு இல்லாத நிலையில் சில நிமிடங்களில் இறந்துவிடுகிறான்.

இந்நோயினால் மட்டும் இந்தியாவில் 1 மணி நேரத்திற்குக் குறைந்தது 90 பேர் உயிர் இழக்கின்றனர். நம் இந்திய நாட்டில் இந்நோயால் இறப்பவர்கள் தொகையைப் பிற நாடுகளுடன் ஒப்பிட்டுப் பார்த்தால், அமெரிக்கர்கள், ஐரோப்பியர்களைவிட 4 மடங்கும், சீனர்களைவிட 7 மடங்கும், சப்பானியர்களை விட 20 மடங்கும் மிகுதியாக உள்ளது. இந்த அதிர்ச்சி தரும் போக்கிற்கு முற்றுப்புள்ளி வைப்பதற்கான ஒரே வழி, மன இயல்பின் தன்மையை முறைப்படுத்துவதே! அதுதான் 'B' வகையாக மாறுவது. அவ்வகை என்பது அமைதி, மகிழ்ச்சி, சமநிலை எய்தும் வழி ஆகும்.

இந்நிலையை அடைய நம் முன்னோர்களான சித்தர்கள், பல காலமாகவே மக்களுக்குக் கூறி வருவது – 'தியான' முறைதான். தியானம், தன்னை உணர்தல் என்றும் தன்னிலை அறிதல் என்னும் கூறப்படும். அது மனத்தை ஒருமுகப்படுத்தி – எவ்விதச் சிந்தனையும் இன்றி, மன அமைதி கலையாது இருத்தலே. இந்த 'B' வகை மனநிலையில் இதயத் துடிப்பும், குருதி ஓட்டமும் சீராக அமைவதனால் – மனமும் அதனால் உடலும் பாதுகாக்கப்படுகிறது.

வாழ்க்கை ஓர் இனிய பயணமே தவிர போட்டிப் பந்தயமன்று. பயணம் இனிதே அமைய மூன்று அடிப்படைகளாகும் மந்திரங்கள் இவை:

- எண்ணும் எண்ணம் சீராக
- உண்ணும் உணவும் சீராக
- உடலுக்கான பயிற்சியும் சீராக

அமைய வேண்டும். நல்ல எண்ணம், அளவான உணவு, உரிய உடற்பயிற்சி நாளும் கொள்வோர் – மனத்தில் சமநிலை எய்தி அமைதி காத்து நெடிது வாழ்வார்கள்.

"வாழ்க்கையே பல வண்ணங்களுடன் காட்சிதரும் ஒரு வானவில்."

- வானவில் தோன்றி மறைவது போல் மனித வாழ்வும் எவ்வளவு சிறப்புடையதாயினும், தோன்றிப் பின் மறைவதுதான்.
- வானவில்லைத் தொலைவில் இருந்து கண்டு மனம் களிக்க முடியுமே தவிர அருகில் சென்று பார்க்கவோ தீண்டவோ முடியாது.
- வாழ்க்கையும் அதுபோன்றதே நாம் வெளியிலிருந்து ரசிக்க வேண்டிய வாழ்க்கையை உள்ளே சென்று பார்க்கக் கூடாது.
- வானவில்லின் ஏழு வண்ணங்களைப் போன்றதாக வாழ்க்கையைப் பயனுடையதாக்கும் மன இயல்பான பண்புகளையும் ஏழு ஆக நாம் பகுத்துக் கொள்ளலாம். அவை அந்த எண்ணங்களைத் திரும்பத் திரும்ப எண்ணி மனப் பயிற்சியாக்கிக் கொள்வதன் மூலம் உருவாகும்.

அவை முறையே அன்புடைமை, அறிவுடைமை, அடக்கமுடைமை, ஒழுக்கம் உடைமை, பொறை உடைமை, பொறாமை கொள்ளாமை, புறங்கூறாமை

எனலாம். எவரிடத்தும் அன்புடன் பழகி, மன அடக்கம் உடையராய், ஒழுக்கந் தவறாது, பொறுமை வளர்த்து, பொறாமைக்கு இடந்தராது எவரையும் புறத்தில் பழித்துப் பேசாது – நல்லெண்ணத்தையே நாளும் வளர்ப்பவர்கள் நிறைவான அமைதி காண்பர். பிறரை அரவணைத்து, சிறிது விட்டுக்கொடுத்து (வளைந்து கொடுத்து) மாறுபாடு தவிர்க்கும் மனப்பான்மை கொண்டால், 'அமைதி' நிலைக்கும்! அந்த வாழ்க்கையால் நாம் மகிழ்வதனைவிட அதிகமாக மற்றவர்களும் மகிழ்ச்சி அடைவார்கள்.

மேலும், நிறைவான இன்பம் அமைதியான வாழ்வில் விளைகின்றது. அமைதியான வாழ்வு நல்ல பண்பாட்டின் பயனாக வாய்ப்பது, அமைதியை நாடுவதே வாழ்வின் சிறப்பு! அதனால்தான் யோகம், தியானம் ஆகியவற்றைப் பயிற்றுவிக்கும் குருமார்கள் 'ஓம் சாந்தி – ஓம் சாந்தி' என்று கூறுகின்றனர். 'இசுலாம்' மதத்தின் பெயரான 'இசுலாம்' என்பதற்கே 'அமைதி' என்பதுதான் பொருள் என்பர். புத்தர், இயேசு, வள்ளுவர், வள்ளலார் முதலான பலரும் பேசிய குரலும் மொழியும், வாழ்ந்த நிலமும் காலமும் வேறு வேறாயினும்,

**"அமைதி, அமைதி, அமைதி,**

**உலகெங்கும் நிலவட்டும் அமைதி**

**உள்ளங்களில் எல்லாம் நிலைக்கட்டும் அமைதி"**

என்றுதான் அறிவுறுத்தினர்.

- வானவில்லின் ஏழு வண்ணங்களான ஊதா, கருநீலம், நீலம், பச்சை, மஞ்சள், ஆரஞ்சு, சிவப்பு ஆகிய பல வண்ணங்களையுடைய காய்கறி பழங்களையும், அவற்றின் உயிர்ச்சத்துமிக்க தோலை நீக்காது சேர்த்து உண்டால் மாரடைப்பு, புற்றுநோய் போன்றவை பெரிதும் தடுக்கப்படும் வாய்ப்பு மிகுதியாகும்.
- ஏழு வகையான உடற்பயிற்சிகள்தாம் நடத்தல், விரைந்து நடத்தல், ஓடுதல், நீந்துதல், சைக்கிள் ஓட்டுதல், யோகா பயிற்சி, தியானம் ஆகியவை.

மேற்கூறிய சீரான வாழ்க்கை முறையினால் மனநலம், உடல்நலம் (ஆரோக்கியம்) காப்பாற்றப்படுவதனால், எதிர்பாராத வகையில் தாக்கும் மாரடைப்பு நோயை வாராது தடுப்பது மட்டுமன்றி, மாரடைப்பு நோய்க்கு ஆளானவர்களும்கூட பூரண குணமடைவதற்குப் பெரிதும் உதவியாகும்.

மனம், வாக்கு, காயம் என்பவற்றின் செயல்களான "சிந்தனை, சொல், செயல்" ஆகியவற்றின் சீரான ஒழுங்குமுறையைக் கைக்கொண்டு வாழத் தவறினால்

- வயிற்றுப் புண்
- ஆஸ்துமா (மூச்சிரைப்பு நோய்)
- தோல் வியாதிகள்
- சர்க்கரை நோய்
- இரத்தக் கொதிப்பு
- மாரடைப்பு
- பக்கவாதம்
- புற்றுநோய்

முதலான கொடிய நோய்கட்கு ஆளாகி, வாழ்நாள் முழுதும், பல வண்ணங்களிலான மருந்து மாத்திரைகட்கும் ஊசி மருந்துக்கும் இரையாகி, உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு வாழும் நிலைக்குத் தள்ளப்படுவர். மூடிய கையளவு உள்ள இதயத்தைச் சீர்கெடாது காப்பது அவரவர் கையில் – பழக்கத்தில் – நடைமுறையில் மட்டுமேதான் இருக்கிறது. "ஒருவர் அறிவிற் சிறந்தவர் ஆவது என்பது, பலவற்றைக் கற்றுத் தெரிந்துகொள்வது மட்டும் அல்ல, அவற்றை அவரவர் வாழ்க்கையில் கடைப்பிடிப்பதனால்தான்" என்று விவேகானந்தர் கூறிய அறிவுரையை மறத்தலாகாது.

❖

**தாய்மொழி**

"ஈன்ற ஒருத்தியையும், பிறந்த நாட்டையும், பேசும் மொழியையும் ஒருவன், 'தாய்', 'தாய்', 'தாய்' என்று போற்றுகிறான். ஒருவனுக்குத் தன்னைப் பெற்ற தாயின்பால் எத்தகைய அன்புண்டோ, அத்தகைய அன்பு, அவனை அளித்த நாட்டினிடத்தும், அவனை வளர்க்கும் மொழியினிடத்தும் அவனுக்கு இருத்தல் வேண்டும். நாட்டையும் மொழியையும் நேசியாதவன், பெற்ற தாயையும் நேசியாத பாவியாவான். பெற்றதாயின் அன்புக்கும், பிறந்த நாட்டின் பற்றுக்கும் ஊற்றாயிருப்பது பேசும் மொழியேயாகும். பேசுந் தாய்மொழியின்மாட்டு அன்பில்லா ஒருவன் தாயையும் நாட்டையும் பழித்தவனாவான்."

– திரு.வி.கல்யாணசுந்தரனார்

